மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடு-18



ஸ்ரீ

# கம்பராமாயணம்

# ஆரணிய காண்டம்

பல பிரதிகளை ஆராய்ந்தும், ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்புக்களின் உதவியைக் கொண்டும் திருந்திய மூலபாடம், நூதனமாக எழுதிய பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன்

விலை ரூ. 12-00

நூல் நிலையத்தின் பதினாறாவது ஆண்டு மலராக வெளியிடப்பெற்றது.

விகாரி௵ சித்திரைமீ ஸ்ரீராமநவமி நன்னாள்

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்

அடையாறு :: சென்னை-20.

1959

உ

அருங்கலை விநோதரும், கல்வித்துறை போகிய ஆன்றோரும்,

பிரும்மஞான சமாஜத் தலைமை தாங்கியவரும்

இந் நூல்நிலையம் நிறுவினவர்களுள் ஒருவரும், சான்றோருமான

உயர்திரு. டாக்டர்

**ஜார்ஜ் ஸிட்னி அருண்டேல்,** எம். ஏ., LL. B.,

அவர்களின் நினைவுக்கு

மிகுந்த நன்றியுடன்

இப்பதிப்பு

ஸமர்ப்பணம் செய்யப்பெறுகிறது.



# உள்ளுறை


| | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | விராதன் வதைப் படலம் | .... | 1 |
| 2. | சரபங்கர் பிறப்புநீங்கு படலம் | .... | 61 |
| 3. | அகத்தியப் படலம் | .... | 102 |
| 4. | சடாயுகாண் படலம் | .... | 156 |
| 5. | சூர்ப்பணகைப் படலம் | ... | 197 |
| 6. | கரன் வதைப் படலம் | .... | 348 |
| 7. | சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலம் | .... | 503 |
| 8. | மாரீசன் வதைப் படலம் | .... | 662 |
| 9. | சடாயு உயிர்நீத்த படலம் | ... | 739 |
| 10. | அயோமுகிப் படலம் | .... | 948 |
| 11. | கவந்தன் வதைப் படலம் | .... | 1033 |
| 12. | சவரி பிறப்பு நீங்கு படலம் | ... | 1082 |

உ

ஸ்ரீராம்ஜயம்

# பதிப்புரை

மூவராகிய மூர்த்தியை முதன்
மூவர்க்கும் முதல்வன்றன்னை
சாவமுள்ளன நீக்குவானைத்
தடங்கடல்கிடந் தான்றன்னை
தேவதேவனைத் தென்னிலங்கை
யெரியெழச் செற்றவில்லியைப்
பாவநாசனைப் பங்கயத்தடங்
கண்ணனைப்பர வும்மினோ.

(திருவாய்மொழி)

மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் ஸ்ரீ ஐயரவர்கள் தம் வாழ்நாளில் பெரும்பாகத்தைக் கம்பராமாயண ஆராய்ச்சியிலேயே செலவிட்டார்கள். சுவடிகள் தோறும் பாடங்களில் மாறுபாடடைந்திருந்த இவ்வரிய நூலைச் செப்பனிட்டு முடிந்தவரையில் அதன் சிறந்த உருவத்தைக் காண அவர்கள் அரும்பாடு பட்டார்கள். நாட்டில் தமக்குக் கிடைத்த சிறந்த கம்பராமாயணச் சுவடிகளை அவர்கள் துருவி ஆராய்ந்து, தாம் கண்ட முடிவுகளைத் தம் கைப்புத்தகங்களிலும், தனிக்குறிப்பு ஏடுகளிலும் எழுதிவைத்ததோடு, மேலும் அத்துறையில் பணியாற்ற வழிகளையும் சுட்டி வைத்தார்கள். கல்வியிலும், ஆராய்ச்சியிலும் ஈடற்ற அவர்கள் காலத்திலேயே, அவர்களாலேயே, அந்நூல் பதிப்பிக்கப்பெறாமல் போனது தமிழகத்தின் துர்ப்பாக்கியமே.

எனினும், அவர்களின் காலத்துக்குப் பிறகு அவர்கள் தேடிவைத்த சுவடிகளைக் கொண்டு இந் நூல்நிலையத்தைத் தோற்றுவிக்க உதவிய அவர்களுடைய அருமைக் குமாரர் ஸ்ரீ கலியாண சுந்தரையர் இந்நிலையத்தின் சிறந்தபணி தம் தந்தையார் அவர்களின் ஆராய்ச்சிக் குறிப்புக்கள் அனைத்தினையும் தமிழகத்திற்குப் பயன்படுத்துவதே எனக் கொண்டு, இக் கம்பராமாயணப் பதிப்பைத் தொடங்கிப் பால, அயோத்யா, ஆரணிய, கிஷ்கிந்தா காண்டங்கள் என்ற முதல் நான்கு காண்டங்களையும் சிறந்த வல்லுநர்களைக் கொண்டு ஆராயச்செய்து, முதல் இரண்டு காண்டங்களையும் குறிப்புரைகளுடன் 1949, 1951, ஆண்டுகளில் வெளியிட்டார்கள்.

பிறகு, விரிந்த முறையில் இக் காண்டங்களின் ஆராய்ச்சியும், பதிப்பும் நடைபெற வேண்டுமென்று தீர்மானிக்கப் பெற்று, 1957ல் புதிய விரிந்த முறையில், பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன் சுந்தரகாண்டப் பதிப்பு இந் நூல் நிலையத்திலிருந்து வெளியாயிற்று.

இதற்கு, இங்குள்ள எல்லாக் கம்பராமாயணச் சுவடிகளோடு, வேறு பல வெளியிடங்களிலுள்ள சுவடிகளும் ஒப்பு நோக்கப்பெற்று, பாடபேதங்கள் முதலியன எடுத்தெழுதப் பெற்றன. ஸ்ரீ ஐயரவர்கள் பல் வேறிடங்களில் எழுதிவைத்திருந்த இக் காண்டத்திற்குரிய குறிப்புக்கள் யாவும் இப்பதிப்பில் இடம்பெற ஏற்பாடாயிற்று. நூதனமாகப் பதவுரையும் விளக்கங்களும் எழுதிச் சேர்க்கப் பெற்றன; ஸ்ரீ ஐயரவர்கள் மிக அருமையாகத் தேடிக் குறித்து வைத்திருந்த மேற்கோள்கள், ஒப்புமைகள் யாவும் இதனில் இடம் பெறலாயின; அவற்றை ஒட்டி மேலும் பல தேர்ந்தெடுக்கப் பெற்றுச் சேர்க்கப்பெற்றன. பாடபேதங்களில் சிறந்தனவற்றைத் தொகுத்து, அவற்றை வரிகளைக் குறித்து, ஒவ்வொரு பாடலுக்கும் கீழே அவை தரப்பெற்றன. பாடல்கள் முற்றிலும் பிறழ்ந்து சுவடிகளிற் காணப்பெற்றவை அவ்வாறே அடிக்குறிப்புக்களில் காட்டப்பெற்றன. பாடல்கள் இடம் மாறியுள்ள பகுதிகளும் சுட்டப்பெற்றன. ஒப்புக்கொள்ள ஏலாதனவும், சில சுவடிகளிலே மட்டும் காணப்படுவனவுமாக அமைந்த பல பாடல்கள் அதிகப்பாடல்கள் என்ற தலைப்பில் ஆங்காங்கே குறிக்கப்பெற்றன. அரும்பதங்கள், பொருள்கள் முதலியனவற்றைக் கொண்ட அகராதிகள் பதிப்புக்குப் பின்னும், நூலின் விமரிசனமாக அமைந்த நான்முகம் ஒன்று அதற்கு முன்னுமாக எழுதிச்சேர்க்கப்பெற்றன. வான்மீகம் முதலிய முன்னூல்களினின்று கம்பநாட்டாழ்வார் மாறிய இடங்களும், அவ்வாறு மாறியதால் அமைந்த புதிய நயங்களும் ஆங்காங்கே புலப்படுத்தப் பெற்றன. இயன்றவரையில் ஆசிரியரின் தனிச்சிறப்புக்களையும் அவர் அருளிய அரிய காவியத்தின மாண்புகளையும் படிப்பவர் உள்ளத்திற்குக் கொண்டுவரத் துணையாக வேண்டுமென்ற கருத்தே இப்பதிப்பின் குறிக்கோளாய்க் கொள்ளப்பெற்றது. இப்பதிப்பு ஸ்ரீ ஐயரவர்களின் 103ஆவது வெள்ளணிவிழாவும் இந் நிலையத்தின் 14ஆவது ஆண்டு நிறைவின் விழாவுமான 19-2-57 அன்று டாக்டர் ஸர் ஸி. பி. இராமஸ்வாமி ஐயரவர்களின் தலைமையில் ஏறக்குறைய 1100 பக்கங்கள் கொண்ட அளவில் வெளியிடப்பெற்றது; ஸ்ரீ இராமஸ்வாமி ஐயர் அவர்கள் நாட்டுக்கும், தமிழுக்கும், இந்நூல் நிலையத்திற்கும் செய்து வரும் அரும் பணிகளுக்கு நன்றியாக அப் பதிப்பு அவர்களுக்கே ஸமர்ப்பணம் செய்யவும் பெற்றது.

சுந்தரகாண்டப் பதிப்பின் முறையை அப்படியே பின்பற்றி ஆரண்ய காண்டத்தின் இப்பதிப்பு விகாரி ஆண்டு ஸ்ரீராமநவமி நாளாகிய இப் புனிதநாள் அன்று இறைவனருளால் வெளிவருகின்றது.

இதற்கு உதவியாயிருந்த சுவடிகளிலும், அச்சுப் புத்தகங்களிலும் சிறந்தவை பின்வருவனவாம் :

[ஏடுகள் முடிந்தவரையில் பிரதேசவாரியாகப் பிரிக்கப்பெற்று பகுப்பு எண் கொடுக்கப்பெற்றுள்ளது. ஆனால், இப்பகுப்பு முடிந்த கருத்தாகக் கொள்ளத்தக்கது அன்று முன் எண்கள் 'சுவடிகளின் விளக்கம்' என்றதிற் கண்டவை ; நக வளைவுகளுக்குள்ளுள்ளவை சுவடிகளின் மீது எழுதப்பெற்ற எண்கள்]

## ஏட்டுச் சுவடிகள்

| வரிசை எண். | சுவடிகளின் எண். | படலங்கள். | பாடல்கள் |
|---|---|---|---|
| | பகுப்பு I | | |
| 1 | 357 (980) | 16 | 1203 |
| 2 | 358 (483) | 15 | 1266 |
| 3 | 361 (8) | 15 | 1203 |
| 4 | 362 (991) | 16 | 1203 |
| 5 | 366 (993) | 15 | 1176(?) |
| 6 | 367 (994) | 14 | 1195 |
| 7 | 366 (484) | 15 | 1204 |
| 8 | 370 (990) | 16 | 1203 |
| 9 | சிறிய காகிதப்பிரதி | 16 | 1203 |
| | பகுப்பு II | | |
| 10 | பெரிய காகிதப்பிரதி | 15 | 1202 |
| 11 | 360 (36) | 15 | 1192 |
| 12 | 363 (992) | 16 | 1203 |
| 13 | 365 (536) | 15 | 1186 |
| | பகுப்பு III | | |
| 14 | 359 (981) | 11 | 1191 |
| 15 | 369 (505) | 11 | 1196 |
| 16 | 371 (485) | 13 | குறைப்பிரதி |
| | பகுப்பு IV | | |
| 17 | 364 (1013) | 11 | 1209 |
| 18 | 374 (978) | 12 | 1202 |
| | பகுப்பு V | | |
| 19 | 375 (3) | 21 | 1228 |

## அச்சிட்ட நூல்கள்

| | பதிப்பாசிரியர். | ஆண்டு. | படலம். | செய்யுள். |
|---|---|---|---|---|
| 20 | ஸ்ரீ கோபாலகிருஷ்ணமாசாரியார் | ப்லவங்க | 11 | 1204 |
| 21 | ௸ | 1935 | | |
| 22 | ஸ்ரீ க. இராமரத்னம் ஐயர் | 1926 | 11 | 1203 |
| 23 | ஸ்ரீ வெங்கடாசலமுதலியார் | உருத்ரோத்காரி | 11 | 1208 |
| 24 | ஸ்ரீ கந்தசாமிக் கவிராயர் | 1900 | 11 | 1203 |
| 25 | சென்னை செந்தமிழுரைச் சங்கம் | ? | 11 | 1204 |

**படலங்களும் செய்யுட்களும்**

இப்பதிப்பு 12 படலங்களில் 1196 செய்யுள்களைக் கொண்டுள்ளது. இவ்வெண்கள் சுவடிகளிலும் அச்சுப் புத்தகங்களிலும் காண்பனவற்றிலிருந்து மாறுபட்டுள்ளமைக்குக் காரணங்களை ஆங்காங்கே உரிய இடங்களில் குறித்துள்ளோம்.

**பிரதி பேதங்களும், அதிகப் பாடல்களும், விடுபட்ட பாடல்களும் :**

பிற தமிழ் நூல்களைப்போலன்றி, இந்நூல் பல்லோரால் பயிலப் பெற்றுவந்த காரணத்தால், இதன் பிரதிகள் தமிழகத்தில் நூற்றுக் கணக்காகப் பெருகிவிட்டன. இதனைப் படித்தும், பிரசாரம் செய்தும் வந்த புலவர்கள் தத்தம் சமயக் கோட்பாடுகளுக்கும், கல்விக்கும், மனோபாவங்களுக்கும் ஏற்றவாறு இதன் செய்யுள்களை மாற்றியும், கூட்டியும், குறைத்தும் படலங்களைத் தம் விருப்பப்படி வகுத்தும், அவற்றிற்குப் பெயர்களை அமைத்தும் வரலாயினர். முதனூலோடு ஒப்பிட்டுப் பார்த்து அங்குள்ளவற்றையும் இங்குச் சேர்க்க விரும்பியவர்கள் தாமே சில பாடல்களைப் பாடிச் சேர்த்தனர். வருணனைப் பகுதிகளில் தாமே சில செய்யுட்களைக் கூட்டிப் புகுத்தியவர்களும் உண்டு. இவ்வாறு இந்நூலைக் கையாண்டோர் பாடல்களை மாற்றவும் தொகையைப் பெருக்கவும் தூண்டிய காரணங்கள் இன்னும் பலவாம்.

இவ்வாறு கம்பராமாயணச் சுவடிகளில் ஒன்றில் உள்ளன போலவே பிறிதொன்றில் செய்யுள்களும், அவற்றின் பாடங்களும் அமைவது காண்பது அரிதாயிற்று. ஏதோ ஒரு சுவடியையோ, சில சுவடிகளையோ கொண்டு பதிப்பவர்களுக்கு அவ்வேலை எளிதாயிருந்திருக்கும். ஆனால், பல சுவடிகளைக் கொண்டு அவற்றுள் நேர்மையானவற்றை ஏற்று, அல்லாதனவற்றை நீக்கி ஒரு பதிப்பை வெளியிடுவது என்பது அரிய பணியாகி விட்டது. இத்துறையில் எவரும் எவ்வளவு முயன்றும் முடிவை எய்திவிடக்கூடும் என்ற துணிவும் உண்டாகவில்லை.

இந்நிலயத்தில் கிடைத்த சுவடிகளைக் கூடிய வரையில் பிராந்திய வாரியாகப் பிரித்து, அவை ஒவ்வொன்றிலும் காணப்பெறும் செய்யுட் பேதங்களையும், பாடபேதங்களையும், பிற அமைப்புப் பேதங்களையும் தொகுத்து, கம்பநாட்டாழ்வாரின் கொள்கைகளையும் கவிப் போக்கையும் நூல் முழுமையும் ஒருவாறு ஆராய்ந்து கண்டும், கூடியவரையில் சிறந்த புலவர்கள் கையாண்ட சுவடிகளைப் பின்பற்றியும் எம் அறிவுக்கும், ஆற்றலுக்கும் ஏற்ற வகையில் இப்பதிப்பை அமைக்கலானோம். இம்முயற்சியில் ஸ்ரீ ஐயரவர்கள் அரும்பாடுபட்டு வெகு காலமாக உழைத்து முடிவுசெய்து வைத்திருந்த முடிவுகள் எமக்கு முற்றிலும் பயன்படுவனவாயின. தமிழாராய்ச்சிக் கெனவே அவதரித்த அப்பெரியார் இத்துறையில் உழைத்துக் கண்டுள்ள இம் முடிவுகள் கிடைத்திராவிட்டால் இப்பெரிய தொண்டில் இந்நிலயம் இறங்கியிராது. பேராலயத் திருப்பணி போன்ற இக் கம்பராமாயணப் பதிப்பு வேலைக்கு, அஸ்திவாரமும் போட்டு, உருவத் திட்டமும் அமைத்து, கட்டடத்துக்கு வேண்டிய தளவாடங்களையும் அப்பெரியார் அமைத்து விட்டுச் செல்ல, கிடைத்த கற்களை அடுக்கி, சாந்தரைத்துப் பூசி ஓரளவில் இவ்வமைப்பைப் பூர்த்தி செய்யும் பணியையே இந்நிலயம் மேற்கொண்டுள்ளது என்பதை மிகுந்த பணிவுடன் கூறிக்கொள் கின்றது.

இவ்வாறமைந்த இப்பதிப்பில் முன் அச்சில் வந்த பாடங் களினின்று பல மாறுபாடுகள் செய்யுட்களில் காணப் பெறுவது இயற்கையே. சுவடிகளிற் கண்ட பிற பாடங்களுள் சிறந்தனவற்றைத் தொகுத்து ஒவ்வொரு செய்யுளின் கீழும், அடிகளைக் குறித்து, இடங்காட்டி அமைத்துள்ளோம். இவை மேலும் ஆராய்வார்க்குப் பயன்படும் என்பது எம் துணிவு. இன்னும் வேறு சுவடிகளை ஆராய அமையம் கிடைக்குமானால், யாம் கொண்ட பாடங்கள் திருந்தவும், இன்னும் அதிகமாகப் பிரதி பேதங்கள் காட்டவும் கூடும். சில சுவடிகளில் மட்டும் காணப்படும் செய்யுட்கள் அதிகப் பாடலென ஆங்காங்கே காட்டப் பெற்றுள்ளன.

இவ்வாறு யாம் கண்ட பிரதிபேதங்களையும் அதிகப் பாடல் களையும் காட்டியுள்ளமையால் அறிஞர்கள் தம் அறிவுக்கேற்றபடி உண்மையான கம்பநாடரைக் காண வழிசெய்துள்ளமையே எங்கள் தொண்டு; ஸ்ரீ ஐயரவர்களின் துணைகொண்டு யாம் கண்ட அப்பெருமானை இப்பதிப்பின் மூலமாக உலகின்முன் வைத்துள்ளோம்; இவையே இப்பதிப்பு செய்துள்ளவை.

ஸ்ரீ ஐயரவர்கள் இக்காண்டத்தில் பல செய்யுள்களைச் சந்தேக மானவை என்று குறித்திருக்கிறார்கள். அவற்றை ஆங்காங்கே காட்டி யுள்ளோம். ஆனால், ஸ்ரீ ஐயரவர்கள் திட்டமாக இவை அதிகப் பாடல்கள் என்று கூறாமையாலும், எம்மிடமுள்ள சுவடிகளில் எல்லாம் - ஒன்றுவிடாமல் - இப்பாடல்களும், பாடங்களும் காணப் பெறுகின்றமையாலும், வேறு வழியின்றி, அவற்றைப் பதிப்பில் காட்டியுள்ளோம். இவற்றோடு எம் அறிவிற்பட்ட வேறு செய்யுள் கள் சிலவும், சில செய்யுள்களில் சில பாடங்களும் கம்ப நாடரது போக்குக்குப் பொருத்தமற்றனவாக இருப்பதையும் ஆங்காங்கே குறித்துள்ளோம். சுவடிகளின் ஆதாரமின்றி யாமாக மூல பாடங் களில் சிறிதும் மாற்றத் துணியவில்லை.

பதவுரையும் விளக்கவுரைகளும்

இவை இப்பதிப்பிற்காக நூதனமாக எழுதிச் சேர்க்கப்பெற் றவை. முடிந்த வரையில் பதவுரைகள் செய்யுள்களில் ஆசிரியர் சொல்ல விரும்பும் செய்திகளை உள்ளவாறு தெரிவிக்க வேண்டுமென் பது எம் அவா. இப்பகுதியில் செய்யுளிலுள்ள சந்திகள் நன்கு பிரித்துக் காட்டப்பெற்றுள்ளமை, குறைந்த தமிழ்ப் பயிற்சியுள்ள வர்கட்கும் பயன்படுவதாகும்.

விளக்கவுரையில் வேறு இராமாயண நூல்களிலிருந்து ஒப்புமை வேற்றுமைகள் ஆங்காங்கே குறிக்கப் பெற்றுள்ளன. ஒப்புமை, மேற்கோள் முதலியன பண்டைத் தமிழ் நூல்களிலிருந்து முடிந்த வரையில் இடங்காட்டிக் கூறப்பெற்றுள்ளன. இவற்றைக் குறிப் பதே ஸ்ரீ ஐயரவர்களின் பதிப்புரைகளின் தனிச் சிறப்பு. இக்குறிப் புக்கள் பெரும்பாலும் அவர்களாலேயே குறித்துவைக்கப் பெற்றவை. இவை தமிழ் பயில்வார்க்குப் பெரிதும் பயன்படும் என்பது அவர்கள் கொண்ட கொள்கையாகும். விளக்க உரைகளில் பழையவுரை என்று காட்டப்பெற்றவை எம்மிடமுள்ள ஒரு சிறந்த குறிப்புரைச் சுவடியிலிருந்து எடுக்கப்பெற்றவை. அச்சுவடி, பாடங்களைத் திட்டப்படுத்தவும் ஒருவாறு உதவிற்று.

இக் காண்டத்தில் சிறந்த செய்யுட்கள் என்று ஸ்ரீ ஐயரவர்கள் குறித்துள்ளவற்றின் எண்கள் பின்வருமாறு: 4, 52, 53, 55, 57, 58, 60-1, 71, 86, 135-6, 140, 144, 147, 150, 158, 167, 170, 181, 197, 198-200, 206, 211-2, 220, 222, 232, 236-7, 242, 244, 252, 276, 278-80, 319-24, 326-331, 349, 351-2, 359, 361, 374-5, 417, 422, 424, 482, 494, 503, 508, 528-9, 538, 548-9, 552, 561, 611, 614, 617, 629, 630, 636, 638-9, 657, 692, 702-3, 716, 809,

*812, 816, 838, 858, 882-4, 890, 900-1, 923, 948, 963, 967, 986-990, 992, 997, 1006, 1015, 1020-1, 1026 7, 1033, 1045, 1058, 1098-9, 1106, 1113, 1116-8, 1127, 1134, 1153-4, 1158, 1165, 1192.*

**வேண்டுகோள்**

இரேக்க மொழியில் ஹோமரும், பாரஸீக மொழியில் உமார் காயனும், வடமொழியில் காளிதாசரும், ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியரும் போன்றவரே தமிழில் கம்பரும் என்பதை உலகம் அறியும். இவ்வுலக மகாகவிக்கு நாடெங்கும் கோயில் கட்டுவதில் குற்றமொன்றுமில்லை. அதோடு, இவ்வளவு சுவடிகள் வேறெந்த நூலுக்கும் தமிழில் இல்லையென்பதையும், சுவடிகள் இவ்வளவு மாறுபாடடைந்த பிறிதொரு தமிழ் நூல் எங்கும் காணக்கிடைக்காது என்பதையும் யாம் அறிவோம். உண்மையான கம்பராமாயணத்தை இனி நாம் காணப்பெறுவோமோ என்று ஏங்கக் கூடிய காலம் இது. அன்றியும், சுய ஆட்சி பெற்று, தமிழ் தன் ஆன்மாவைத் திரும்பவும் நன்னிலையில் அமைத்துக் காணவேண்டுமென்று அவாவுறும் காலமும் இதுவாகும். இந்நிலையில் இப் பெருங்காப்பியத்தின் ஆராய்ச்சிப் பதிப்புக்கள் எவ்வளவு வந்தாலும் அறிஞர்கள் அன்புடன் வரவேற்பார்களாக. ஸ்ரீ ஐயரவர்கள் தமிழுக்குச் செய்துள்ள அருந்தொண்டைத் தமிழகம் என்றும் போற்றி வரும். அத்தகைய பெரியோரின் ஆராய்ச்சிகளைப் பயன்படுத்திக் கொண்டு, அவர்கள் காட்டிய வழியிலேயே செல்ல வேண்டுமென்ற ஒரே குறிக்கோளுடன் வெளியிடப்பெறும் இப்பதிப்பினையும் அன்பர்கள் வரவேற்பார்கள் என்று நம்புகிறோம்.

**நன்றி**

இப்பதிப்பின் முயற்சியில் இந்நூல் நிலையம் இரண்டாண்டுகளாகத் தன் முழுக் கவனத்தையும் செலுத்தியிருக்கிறது. இதனில் ஈடுபட்ட நிலைய ஊழியர் யாவர்க்கும் நன்றி கூறுகிறோம். சிறப்பாக இப் பதிப்பிற்குப் பேருதவி புரிந்தவர் இந் நிலையத்தைச் சார்ந்த பண்டிதர் L. ஸ்ரீநிவாஸ ஐயரவர்கள். இராமாயணப் பதிப்புக்களையே தம் வாழ்க்கையின் பயனாக அவர்கள் கொண்டு இந்நிலையத்தில் பல ஆண்டுகளாக அருந்தொண்டு புரிந்து வருகிறார்கள். அவர்களுடைய இராமபக்தியும், கம்பநாட்டாழ்வாரிடம் அவர்களுக்குள்ள ஈடுபாடும், அதற்கேற்ற தமிழறிவும், இடைவிடா உழைப்பும் மிகவும் அரியன. இப்பதிப்பின் ஒவ்வொரு பகுதியிலும் அவர்களுக்குப் பெரும்பங்குண்டெனினும், பதவுரை, விளக்கவுரை இரண்டினையும்

உருவாக்குவதை அவர்கள் தமக்கே உரிய பணியாக மேற்கொண்டனர். இப்பேருதவிக்கு அவர்கள்பால் இந்நிலையம் அளவு கூற முடியாத நன்றி கொண்டுள்ளது.

இப்பதிப்பின் செலவுக்காக மதுரை நகர்த் தமிழ்ப்பெரும் வள்ளலான திருவாளர் கருமுத்து தியாகராஜ செட்டியார் அவர்கள் ரூபா ஐந்நூறு நன்கொடையாக்க் கொடுத்தருளினார்கள். இப்பேருதவியை இந்நிலையம் உச்சிமேற்கொண்டு போற்றுகின்றது. இவ்வாறே இன்னும் சில அன்பர்களேனும் உதவ முன்வரக் கூடுமானால் இந்நிலையத்தின் பதிப்பு முயற்சிகள் மிக்க ஊக்கமுறும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

கல்வி அபிவிருத்தியில் பெருநோக்கம் கொண்டவரும், இந்நூல் நிலைய அத்யக்ஷருமான ஸ்ரீமதி ருக்மிணி தேவியார் அவர்கள் அளித்து வரும் உதவியும் ஊக்கமும் பெரிதும் பாராட்டற்பாலன என்பதை இங்கு அறிவித்துக் கொள்கின்றோம்.

இரத்தினம் (பிரான்சுப்) பதிப்பகம் இப்பெரிய பதிப்பை மிக்க அன்புடன் ஏற்று அச்சிட்டுக் கொடுத்தது. அதன் தலைவரும் அங்குப் பணியாற்றும் பிறரும் தம் திறமைகளோடு இப்பதிப்பில் சிரத்தையும் அன்பும் காட்டி இதனை அழகுற அமைத்துக் கொடுத்தார்கள். அவர்களுக்கு மேன்மேலும் நன்மை பெருக வேண்டுமென்று இறைவனைப் பிரார்த்திக்கின்றோம்.

முடிவு

இப்பதிப்பிற்கு மூலதனம் இறைவன் அருளும், ஸ்ரீ ஐயரவர்களின் ஆசியும், பெரியோர்களின் அன்புமேயாகும். இப்பெரும் முயற்சிக்கு ஏற்ற தகுதியுடைமையை நாங்கள் பெறுமையை முக்காலும் அறிவோம்; அவ்வுணர்ச்சியும் பணிவுடைமையுமே எங்கள் கருவிகள். ஆகவே, நூலின் நன்மையையும் முயற்சியின் அளவையும் நோக்கி அன்பர்கள் இதனிற் காணும் குறைகளை எங்கட்கு எடுத்துக் காட்டி மேலும் இம்முயற்சி நலனுற அமைய உதவ வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

17—4—59.

ஸ்ரீராமஜயம்

# நூன்முகம்

வலிவணக்கு வரைநெடுந்தோள் விராதைக் கொன்று
வண்தமிழ்மா முனிகொடுத்த வரிவில் வாங்கிக்
கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை நீக்கிக்
கரனொடுதூ டணன்றன் னுயிரை வாங்கிச்
சிலைவணக்கி மான்மறிய வெய்தான் தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
தலைவணக்கிக் கைகூப்பி ஏத்த வல்லார்
திரிதலால் தவமுடைத்துத் தரணி தானே.

(பெருமாள்திருமொழி).

ஆரணிய காண்டம் என்பது, ஸ்ரீராமபிரான் தன் பிதுர்வாக்கிய பரிபாலனத்தின் பொருட்டு, தன் துணைத் தம்பி இலக்குவனுடனும், மனைவி சீதாப்பிராட்டியுடனும் தண்டக வனத்தில் காலங்கழித்த வரலாற்றைக் கூறும் பகுதியென விரியும். அயோத்தியை விட்டுப் புறப்பட்ட ஸ்ரீராமன் முதலியோர் சித்ரகூட மலையில் தங்கியிருந்த போது, பரதன் முதலியோர் அவர்களைக்கண்டு திரும்பினர். 'குன்றினி லிருந்தன னென்னுங் கொள்கையால், நின்றவர் நலிவரா னெயத் தாலெனுத், தன்றுணைத் தம்பியுந் தானுந் தையலும், தென்றிசை நெறியினைச் சேறன் மேயினுன்' என்பது கம்பராமாயணம் அயோத்தியா காண்டத்தின் இறுதிச் செய்யுள்.

இவ்வாறு 'மேய' இராமபிரான் முதலியோர் அத்திரி முனிவரைத் தரிசித்துப் பின் தண்டகவனம் புகுந்தனர். அவர்கள் தமக்கு எதிர்ப்பட்ட விராதன் என்ற கொடியோனை வதைத்துப் பின் தண்டக வன முனிவர்களால் உபசரிக்கப் பெற்று, அவர்களிடையே பத்தாண்டுகள் வதிந்து, பின்பு அகத்திய முனிவர் ஏவலால் பஞ்சவடியிற் சென்று அங்குத் தங்கலாயினர். அங்குத் தன்னைக் கண்டு பொருந்தாக் காமமுற்ற சூர்ப்பணகையின் காரணமாகக் கரன் முதலியோருடன் போரிட்டு இராமபிரான் அவர்களை மாய்த்தனன். அதனால் சூர்ப்பணகை இலங்கைக்குச் சென்று இராவணனைத் தூண்ட, அவன் மாரீசனை மாயமானகப் போந்து பிராட்டியை மருளச் செய்து, இராமபிரானும் இலக்குவனும் ஆச்சிரமத்தில் இல்லாத நிலையில், பிராட்டியை அபகரித்துச் சென்றனன்; வழியிலே அவனைத்

தடுத்து எதிர்த்த சடாயு அவன் வாளால் படுகாயப் படுத்தப்பட்டார். பிராட்டியைத் தேடி அலைந்த சகோதரர்கள் அச்சடாயுவைக் கண்டு, அவரிடமிருந்து இராவணன் பிராட்டியை எடுத்துச் சென்ற செய்தியை அறிந்தனர். பின் சடாயு உயிர் நீங்க, அவர்கள் அவருக்கு உரிய கிரியைகளைச் செய்து அப்பாலேகும் வழியில், கவந்தன் என்ற அரக்கனை வெட்டி வீழ்த்திச் சவரி என்ற தவமாதைக் கண்டு, அவள் கூறிய வழியை மேற்கொண்டு சுக்கிரீவன் என்ற வானர மன்னன் தங்கியிருந்த இரலையங்குன்றத்தின் அடியிலிருந்த 'புண்ணிய முருவிற்றன்ன பம்பையாம் பொய்கை' புக்கார் என்ற வரையில் இக்காண்டத்தின் வரலாறு செல்லுகின்றது.

இக் காண்டத்தில் இராமபிரான் முதலியோர் சித்திரகூடத்திலிருந்து கிட்கிந்தைக் கருகிலுள்ள இருசியமூக பர்வதம் வரையில் வந்தார்கள் என்பதும், அவர்கள் தங்கள் வனவாசத்தில் ஏறக்குறையப் பதின்மூன்றாண்டுகளை அக் காடுகளிற் கழித்தனரென்பதும் இக்காண்டவரலாற்றால் தெரியவருகின்றன. வனவாசம் தொடங்கியபோது இராமபிரானுக்குப் பிராயம் 27 என்றும், பிராட்டிக்கு 18 என்றும் அக்னிவேச்ய ராமாயணம் கூறுகின்றது. இராவணன் பிராட்டியை எடுத்துச் சென்றபோது அவர்களுக்குப் பிராயம் முறையே 40-ம் 31-ம் இக்கணக்கின்படி ஆகும் என்று கொள்ளலாம்.

கம்பநாட்டாழ்வார் தாம் எடுத்துக்கொண்ட இராமாயண வரலாற்றைத் தம்நாட்டின் பண்பாட்டுக்கும், தம் கொள்கைகளுக்கும், தாம் வாழ்ந்த காலத்துக்கும் ஒத்தவாறு பல இடங்களில் மூல நூலான வான்மீகத்தினின்று மாறிச் செல்கின்றார் என்பதை நாம் அறிவோம். (இவ்வாறே இராமாயணம் பாரதநாட்டின் பிற பகுதிகளிலும் பல மாறுபாடுகளுடன் வழங்கி வருவதையும் நாம் கேள்வியுறுகிறோம்). ஆனால், முதனூலினின்று மாறுபட்டுள்ள பகுதிகள் இவ்வாரணிய காண்டத்தில் அதிகமாகக் காணப்பெறுகின்றன என்பது சிந்திக்கத்தக்கது.

அவ்வேற்றுமைகளை நாம் ஆராயுமுன், இராமாயண காவியமும் அக்காவியத்தில் இக்காண்டமும் பெற்றுள்ள நிலையைக் காண்பது பயனுடையதாகும். 'அறம் நலிந்து மறம் ஓங்கும் காலங்களிலெல்லாம் கடவுள் பூமியில் அவதாரம் செய்கிறார்' என்ற ஆன்றோர் கூற்றுக்கு ஏற்ப, இராவணனாலும் அவனைச் சார்ந்தோராலும் அறநலிவு மூவுலகங்களிலும் உண்டாகத் தேவர்களின் வேண்டுகோட்கு இணங்கிப் பரம்பொருள் இராமபிரானாக அவதரித்தனர்; அவ்வாறே, தீயோரை நீக்குதலாகிய காரியம் உலகமாதாவின் மூலமாகவே அமைய வேண்டும் என்பது கடவுளின் ஸங்கல்பமாகை

யால், அப்பெருமாட்டியும் சீதாப் பிராட்டியாகத் தோன்றியருளினள். இவ்விருவர்களின் வழியாக அவதார நோக்கம் நிறைவேறிய வரலாற்றை அமைத்துச் செல்வதே இராமாயணமாகும். (அதுவன்றி, அந்நூல் இராமபிரானுடைய வாழ்க்கை வரலாறு கூறும் சரிதையென்று கொள்வது பொருந்தாது. இந்நோக்கத்திற்கு இன்றியமையாப் பாத்திரங்களே இந்நூலில் இடம் பெற்றுள்ளன என்பதையும், அப் பாத்திரங்களும் இவ்வவதார வரலாற்றைச் செலுத்தும் அளவோடு நின்றுவிடுகின்றன என்பதையும் நாம் உணரவேண்டும்.)

இவ்வாறு நிகழ்ந்த அவதாரத்தின் செயல் வளர்ச்சியே இராமாயணத்தின் ஆறு காண்டங்களும் கூறுவன ஆம். பாலகாண்டத்தில் இராமபிரானும் சீதாப்பிராட்டியும் ஒன்று கூடிய வரலாறு கூறப்படுகிறது; அயோத்யாகாண்டம் நகரத்தினின்று அவ்விருவரும் இலக்குவனுடன் காட்டுக்குப் புறப்பட்டதைக் கூறுகிறது; ஆரண்ய காண்டமே, அவதாரத்திற்கு மூல காரணனான இராவணனை இந்நிகழ்ச்சியில் ஈடுபடச்செய்து, அவன் தன் அழிவுக்குக் காரணமான கொடியசெயலிலே ஈடுபட்ட முறையை விளக்குவது. கிஷ்கிந்தா காண்டமும், சுந்தரகாண்டமும் இராவணனை இராமபிரான் கண்டு அவனைக் கொல்வதற்குரிய துணைவலிகளை அமைப்பன; கடைசியிலுள்ள யுத்த காண்டம் அவதார நோக்கமான இராவண ஸம்ஹாரத்தைக் கூறுவது.

இவ்வாறு பார்க்கும்போது, இராமாயணத்தின் மையமாகத் திகழ்வது ஆரணிய காண்டமே என்பது புலனாகும். அதன் முன்னுள்ள இரண்டு காண்டங்களும் அதன் விளை நிலங்களே; பின் உள்ளவை அதன் விளைவுகள். இராமாயணத்தை ஒரு நாடகமாக் கொள்ளும்போது அதன் முதல் இரண்டு காண்டங்களையும் அதன் முகமாகவும் பிரதிமுகமாகவும் கொண்டு, இக்காண்டத்தைக் கருப்பமாகவும், இதன் பின்னுள்ள இரண்டு காண்டங்களை விளைவாகவும், கடைசிக் காண்டத்தைத் துய்த்தலாகவும் கொள்ளலாகும்.

இவ்வாறு இராமகாதைக்கே மையமாக உள்ள இக் காண்டத்தையும், இதனில் நிகழும் நிகழ்ச்சிகளையும், இதனில் அமையும் பாத்திரங்களையும் கம்பநாடர் தம் முழுத் திறமையும் காட்டி வகுத்திருப்பது கண்டு இன்புறத்தக்கது. வான்மீக பகவான் கூறிய கதைப் போக்கில் கம்பர் சிறிதும் மாறினாரல்லர்; ஆனால் அதன் நுண்மைகளில் அவர் தம் வழியே சென்று, தம் சிறந்த கொள்கைகளையும், தம்க்கேயுள்ள கவிதா சமர்த்தியங்களையும் மிகத் திறமையுடன் கையாண்டுள்ளமையை நாம் காண்கிறோம். இவ்வாறு முத

னூலிருந்து கம்ப நாட்டாழ்வார் மாறுபட்ட இடங்களை யெல்லாம் உரைகளில் ஆங்காங்கே விளக்கியுள்ளோம். இங்குப் பொதுவாக அவற்றுட் சிலவற்றை மட்டும் சுருங்கக் கூறுவோம்.

அமைப்பு :

கதைப் போக்கில் நம் ஆசிரியர் சில திருத்தங்களைக் கையாண் டுள்ளமை முதலில் நோக்கத்தக்கது. அத்திரி முனிவரின் ஆச்சிர மத்திற்கு இராமபிரான் சென்றதை வான்மீகம் அயோத்யா காண் டத்தின் இறுதியில் அமைத்திருக்க, நம் ஆசிரியர் அதனை இக் காண்டத்தின் முகப்பில் அமைத்து, அதன் பின்பே விராதன் வதையைக் கூறுகின்றார். மங்கலகரமாகக் காண்டத்தைத் தொட்ங்க வேண்டியும், பின் 13 ஆண்டுகள் தவசிகளோடு இராமபிரான் தங்கப்போவதற்கு முகவுரையாக இதனைக் காட்டவேண்டியும், அவர் இவ்வாறு செய்திருக்கலாம். அன்றியும், முதலில் அத்திரி அநுஸூயை என்ற இரு தவத்தம்பதிகளின் அருளை முன் னிட்டு, அடுத்து விராதனை அமைத்தது, காண்டமுடிவில் கபந்தனையும் சவரியையும் அமைத்துள்ளமைக்குச் சீராகச் சமன் செய்யவும் ஆகலாம் என்க.

" விராதன் துதி, இந்திரன் துதி, கபந்தன் துதி " என்ற மூன்று துதிகளும் அத்யாத்ம ராமாயணத்தில் அமைந்துள்ள முறையைப் பின்பற்றி எழுந்தனவே யெனினும், அந்நூலில் அமைந்த துதி களுக்கும், கம்பநாடர் தம் நூலில் அமைத்துள்ள துதிகளுக்கும் பொருள் வேற்றுமையில் மிகுதியும் வேறுபாடு காண்கிறோம். இதன் நுட்பமும் ஆராயத்தக்கதே. தம் இராமாயணத்தில் பொதுவாகவும், இக்காண்டத்தில் சிறப்பாகவும் நம் ஆசிரியர் இராமபிரானின் பரத்துவத்தைப் பல விடங்களிலும் நிலை நாட்டு கின்றார். அக்கருத்துக் கொப்பவே இத்துதிகளை அவர் யாத்திருப் பது நோக்குவார்க்கு நன்கு புலனாகும். (அன்றியும், இந்திரன் சரபங்காச்சிரமத்திற்கு வந்த வரலாறே அத்யாத்மத்தில் கூறப் பெறவில்லை; வான்மீகத்தில் அவன் வந்த வரலாறு கூறப் பெற்றிருக்கும் முறை வேறு; கம்பர் கையாண்டுள்ள முறை வேறு; இதன் ஆராய்ச்சியும் கம்பர்பிரானின் கொள்கையை வலியுறுத்து வதாகும்.) அத்யாத்ம ராமாயணத்தில் அகத்தியர், சடாயு ஆகி யோரும் இராமபிரானைப் பலபடி துதித்தனராகக் கூறியிருக்க, அவ்விருவருடைய பெருமைகளையும் மிக விரித்துக் கூற வந்த நம் ஆசிரியர் அவர்களைத் துதிபாடச் செய்வது தம் கொள்கைக்குப்

பொருந்தாது என அவ்வாறு செய்யாமல் விட்டுவிட்டதும் நோக்கு தற் குரியதாம்.

அயோமுகிப் படலம் கம்பருடைய தனிப் படைப்பு; அதன் சிறப்பை அப்படல உரைகளிற் கூறியிருக்கிறோம்.

அகத்தியரைப் பற்றி நம் ஆசிரியர் கூறியன யாவும் அவருக் குள்ள தமிழ்ப் பற்றால் எழுந்தவை. அகத்தியர் இராமபிரானுக்குக் கொடுத்த வில் யாது? என்றமை ஆராயத்தக்கது. வான்மீகம் அகத்தியரின் உடன் பிறந்தார் ஒருவரைச் சுட்டியிருப்பதைக் கம்பநாடர் தம் நூலில் கூறவில்லை. இவ்வாறு, இக்காண்டத்தின் அமைப்பில் ஆசிரியர் கொண்ட மாறுபாடுகள் பலவாம்.

பாத்திரங்கள் :

இக்காண்டத்தில் வரும் பாத்திரங்கள் இராமபிரான், சீதாப் பிராட்டி என்ற காப்பியத்தலைவர்கள்; இலக்குவன், சடாயு என்ற சான்றோர்; அத்திரி, அநசூயை, சரபங்கர், சுதீக்கணர், அகத்தியர், சபரி என்ற தவமுனிவர்கள்; விராதன், கபந்தன் என்ற சாபம்பெற்ற தேவகணத்தவர்; சூர்ப்பணகை, அயோமுகி என்ற அரக்கியர்; கரன், தூடணன், திரிசிரா என்ற அரக்கர் தலைவர்கள்; இராவணன், மாரீசன் என்ற பேரரக்கர்கள் முதலினோர் ஆவர். இவர்களின் மனம், மொழி, செயல்களின் போக்குக்களும், அவற்றின் விளைவுகளுமே இக்காண்டத்தின் விரிந்த பொருள்களாம்.

இராம இராவண யுத்தம் என்பது அறத்துக்கும் மறத்துக்கும் நடந்த போரின் விமர்சனமாகும். அறத்தின்பால், காப்பியத் தலைவர்களான இராமபிரானும், பிராட்டியும், இலக்குவன், சடாயு என்ற அவர்களின் உறவினர்களும், முனிவர்களும், தேவர்களும் நிற்கின்றனர்; மிகவும் துன்பத்துக்குள்ளான அத் தேவர்களுள், இந்திரன் தன்னைச் சரபங்கர் ஆச்சிரமத்துள் காட்டிக்கொண்ட ஓரிடத்தையும், வருணன் யாருமறியாமல், ஒளிந்து நின்றே இராம பிரானுக்கு உதவியதுமான மற்றோரிடத்தையும் நாம் காண்கிறோம்; பிற தேவர்கள் வெளிப்படாமல் மறைந்து நின்றே கதையின் நிகழ்ச்சி களைக் காண்கின்றனர். முனிவர்கள் இராமபிரான் முதலியோரை வரவேற்று ஆசி கூறுவதும், தம் குறைகளை அவர்களிடம் தெரி விப்பதுமான செயலன்றி வேறு சரித்திர நேர்ச் செயல்களில் இறங்க வில்லை; அகத்தியர் ஒருவரே வில் முதலியனவற்றை இராமபிரானிடம்

கொடுத்து உதவியவர். அறத்திற் கெதிரில் நின்றவர்கள் இராவணனும் அவனைச் சார்ந்த சூர்ப்பணகை, கரன் முதலிய தலைவர், மாரீசன் என்ற உறவினன் ஆகியோர் ஆவர்.

**பரத்துவத்தையும் மானிடத் தன்மையையும் பிணைத்துக் கூறியது :**

இராமபிரானைப் பரம்பொருளாகவே கம்பநாட்டாழ்வார் கொண்டுள்ளார் என்பதை முன்பே குறிப்பிட்டோம். இக்கருத்தில் அவருக்கு உறுதியான நம்பிக்கையிருந்தது. நல்லோர்களும் ஞானிகளுமான தேவர்களும் முனிவர்களும் மட்டுமே இவ்வுண்மையை அறிந்ததாக ஆசிரியர் கூறவில்லை. இராமபிரானின் அணுக்கத் தொண்டனை இலக்குவனும், தயரதனுக்குப் பின் இராம லக்ஷ்மணர்களுக்குத் தந்தையாய் விளங்கிய சடாயுவும் அவ்வுண்மையை எடுத்துக் கூறியதாகச் சில இடங்களை ஆசிரியர் அமைத்துள்ளார். (இராமபிரான், பிராட்டி என்ற இருவர்மட்டுமே தம் நாவால் தம் அவதார இரகசியத்தை இயம்பாதவர் என்னலாம்;) பகைவர்களான சூர்ப்பணகை, மாரீசன், கரன், இராவணன் முதலானோர் கூட, தாம் அறியாமலே இராமனின் பரத்துவத்தைச் சில இடங்களில் உணர்ந்ததைக் கம்பநாட்டாழ்வார் கூறிச் செல்வது காணத்தக்கது. விராதன் முதலினோர் துதிகள் இவ்வுண்மையை வாய்விட்டுப் பறை சாற்றும் முறையில் அமைந்தன என்னலாம்.

குணம் குறி இல்லாத பரம்பொருள் இவ்வாறு பிரானாகவும் பிராட்டியாகவும் நிலத்தில் தோன்றியபோது, மாயைக் குள்ளான மானிட இயல்புகள் அவர்களிடமும் முற்றிலும் அமைந்திருக்கக் காண வைத்திருக்கும் திறன் நோக்கத் தக்கது. அன்பு, அச்சம், யோசனையின்மை, மயக்கம், கோபம், சோர்வு ஆகிய எல்லா மெய்ப்பாடுகளும் அவர்களிடம் ஒரோரிடத்தில் உச்சநிலை அடைகின்றன. பாசத்தால் அவர்கள் படும் இன்னல்களுக்கு எல்லையேயில்லை.

இலக்குவன் ஒருவனே காண்டம் முழுவதிலும் தன் நிதானம் இழக்காமல் ஒரே நிலையில் நிற்பவனாகக் காட்டப்பெறுகின்றான். இங்கும் நம் ஆசிரியர், பாத்திரங்களைக் கையாளும் முறையில் இலக்குவனையும் நிதானமிழந்து தவிப்பவனாகச் சிலஇடங்களிற் காட்டுகின்றார். பிராட்டியைத் தனியேவிட்டு வந்ததற்காக இராமபிரான் அவனிடம் நடந்துகொண்டதாகக் கம்பர் காட்டும் முறைக்கும், வான்மீகர் காட்டும் முறைக்கும் வேற்றுமை காணத்தக்கது. சூர்ப்பணகை வரலாறு கூறும்போது இலக்குவனை வான்மீக முனிவர் சித்தரிக்கும் முறைக்கும் கம்பநாடர் காட்டும் முறைக்கும் உள்ள வேற்றுமையும்

காண்க. கம்பநாடர் அவனைச் சிறிதும் மாறாத உறுதி நிலையில் நிறுத்தி வைத்தது அவர் தம் பாத்திரங்களை உருவாக்கும் அரிய முறைக்கு ஒரு சான்றாகும்.

இன்னும், முனிவராச்சிரமத்தில் பிராட்டி இராமபிரானுக்கு அவன் அரக்கர்களைக் கொல்லலாகாதென்று உபதேசம் செய்ததையும், அதற்கு அப்பிரான் கூறிய சமாதானத்தையும் கம்பநாட்டாழ்வார் அறவே விட்டுவிட்டதையும் நோக்குக. இத்தகைய நுண்ணிய மாற்றங்களால் கம்பநாடர் தம் பாத்திரங்களை உறுதியுடன் அமைக்கும் முறைகளை நாம் காணலாகும். இவ்வாறு பரத்வத்தையும் மானிடத் தன்மையையும் சமரஸப்படுத்திச் செல்வதே இக் கம்பராமாயணத்தின் தனிச் சிறப்பு.

பிராட்டி:

கம்பநாட்டாழ்வார் அமைத்துள்ள பிராட்டியின் பெருமை அளவிடற்கரியது. இக் காண்டத்தின் தொடக்கத்திலேயே விராதனால் அவள், 'சேவல் பிடியுண்ட சிறை யன்னமனையா' ளானாள்; இவ் வருணனை அவளுக்குப் பின் நிகழப்போகும் பெரும் பிணிப்புக்கு முன்னறிகுறியாகும். இடையிலே பதின்மூன்றாண்டுகள் முனிவராச்சிரமங்களிலும், கோதாவரிக்கரைப் பஞ்சவடியிலும் அவள் தன் தனித் தன்மை சிறிதும் புலப்படாது, இராமபிரான் நிழல்போல் அவனுள் அடங்கி வாழ்ந்து வந்தனள். பிறகு தேவர்தம் தவம் பலிக்கும் காலம் வந்தது; சூர்ப்பணகையின் கண்கள் அவள் மீது படலாயின; அன்று தொடங்கியது அவளுடைய கொடிய காலம். அவள் மானைக் கண்டு துவண்டதும், மாரீசன் பொய்க்குரலைக் கேட்டு மருண்டதும், விதியின் வயத்தால் அறிவு மயங்கித் தூய கொழுந்தனிடம் கொதிப்புக்கொண்டதும், இராவண சந்நியாசியிடம் அவள் தன் துயரை மறைத்துக் கொண்டு பரிந்ததும், அவனுக்குத் தாயாகவும் குருவாகவும் நின்று நல்லுரை புகட்டியதும், அவன் மாய வேடம் விட்டுப் பணம் விரித்தெழுந்த அரவம் போல் நின்றதைக் கண்டு பதைபதைத்ததும், அவன் கொடிய சொற்கேட்டு மனம் புழுங்கிப் பின்பு அவனெதிர் நின்று வீரத்துடன் வாதாடிப் பின்பு அவனாற் பிடியுண்டு செல்லும் நிலையில் கல்லுங் கரைந்துருகக் கூக்குரலிட்டதும், வழியில் தனக்காகப் போரிட்டுக் கீழே சாய்ந்த சடாயுவின் நிலைகண்டு ஏங்கியதும், ஆகிய பல நிகழ்ச்சிகளை ஒன்றன்பின்னொன்றாக நம் கண்முன் எழுப்பிச் செல்லும் ஆசிரியரின் அருந்திறனை யாம் யாதென்று கூறுவோம்!

கருவிகள் :

இவ்வாறு இக்காண்டம் முழுமையும் நம் கண்ணையும் கருத்தை யும் பிணிக்கும் காட்சிகள் அமைந்த ஒரு சோலையாகவே நாம் காண்கிறோம். பாத்திரங்களையும் அவர்களின் கருத்துக்களையும் சொற்களையும் செயல்களையும் நம் கண்முன் நிறுத்த ஆசிரியர் கையாளும் கருவிகள் பலவாகும். அவற்றுள் அவர்கள் கையாண்ட உவமைகளுள், சாலச் சிறந்தவற்றை முடிந்தமட்டும் திரட்டி அகராதி வரிசையில் அனுபந்தத்துள் அமைத்துள்ளோம். அவற்றின் தன் மைகளையும் பொருத்தங்களையும் சிறப்புக்களையும் ஆராய்வது ஒரு நல்விருந்தாகும்.

ஆசிரியர் கையாண்ட மற்றொரு கருவி, சுவைகளையும் மெய்ப் பாடுகளையும் அவர் தெரிவிக்கும் விதமாகும். எண்ணான்கென்றும், நாலான்கென்றும், நாலிரண்டென்றும் கூறப்படும் சுவைகள் அத் தனையும் இக் காண்டத்தில் இடம் பெற்றுள்ளன. நகைச் சுவைக்கு ஆசிரியர் சூர்ப்பணகையையே கொண்டார். இராமபிரானோடு அவள் பேசுமிடமெல்லாம் அவள் தன்னை அறியாமல் இராமபிரானால் நகைப் பிக்கப் படுகின்றாள்; அவள் விரகத்தில் கூறுவன யாவும் அவளை நாம் பரிகசிக்கச் செய்வனவேயாம். இராவணன் தான் கண்ட உருவெளி யோடு சூர்ப்பணகை தான் கண்ட உருவெளியைப் பரிமாறிக் கொள் ளும் இடம் நகைச்சுவையின் உச்சநிலை என்னலாம். பிரிவால் இராம பிரானும் பிராட்டியும் துன்புற்ற பகுதிகளெல்லாம் அவலத்திற்கு எடுத் துக் காட்டுக்களாகும்; இளிவரலென்னும் இழிவு சூர்ப்பணகை, இரா வணன் இவர்களின் விரகதாபங்களில் நன்கு கூறப்பெற்றுள்ளது; மாரீசன் இராவணனுக்குக் கூறியவற்றிலும் இச்சுவையைக் காண்க. மருட்கை என்னும் வியப்பு, விராதன், கபந்தன் இவர்கள் பால் இராமபிரான் முதலியோரிடம் உண்டாயிற்று; இராவணனின் சிறுமையைக் கண்ட மாரீசனும் மருட்கை கொண்டவனே; மாரீ சனைக் கண்ட பிராட்டியின் வியப்பும் இதனைச் சார்ந்ததே. அச்சம், காண்டம் முழுமையும் பரவிக் கிடக்கிறது; விராதனைக் கண்ட பிராட்டி அஞ்சினாள்; சூர்ப்பணகையின் அவலத்தைக் கண்ட இலங்கை மாந்தர் அஞ்சினர்; இராவணனின் கோபம் கண்ட மாரீசன் அஞ்சினான்; அவன் கொடுமையைக் கேட்டும் கோலத்தைக் கண்டும் பஞ்சவடிப் பிராணிகள் யாவும் வாயடைத்தன; பிராட்டி கொடிய அரவத்தைக் கண்டவள் போல அஞ்சி நடுங்கினாள். பெரு மிதத்தை அகத்தியரிடமும், சரபங்கரிடமும் காண்கிறோம்; சடாயுவின் வீரத்திலும் அதனைக் காண்கிறோம்; கரன் பேச்சிலும் காண்கிறோம். இராமபிரான் வெகுளி கொண்டு உலகையே அழிக்கத் தொடங்கின

நிலைகள் பல ; வெகுளியின்றிப் போரின்மையால், சடாயு புரிந்த போரிலும், கரதூடணரிட்ட போரிலும் வெகுளி தாண்டவமாடு கின்றன. உவகை, பஞ்சவடியில் கோதாவரிக் கரையில் இராமபிரா னும் பிராட்டியும் கூறிக்கொண்டவற்றில் காணப்பெறும். இவ் வெண்சுவைகளையேயன்றிக் கருணையை இராமபிரான் முனிவர்க்கு அபயம் கூறிய இடத்திலும், சமநிலையைச் சரபங்கர், சபரி முதலி னோரிடத்தில் நாம் காண்கிறோம். இவ்வாறு காவியத்தின் ஆன்மாவாக உள்ள சுவைகளை நம் ஆசிரியர் எவ்வெவ்வாறு காட்டுகின்றார் என்பதையும், அவற்றால் விளைந்த பயன்கள் யாவை என்பதையும் அறிஞர்கள் ஆராய்ந்துரைப்பது சாலப் பயன்றருவதாகும்.

காமத்தால் உண்டாகும் விரகத்தைப் பற்றி இராமபிரான், சூர்ப்பணகை, இராவணன் என்ற மூவர்பாலும் ஆசிரியர் தனித் தனியே அமைத்துக் காட்டும் திறமையை நாம் வியவாமல் இருத்த லியலாது. இராமபிரானின் தூய, மெல்லிய நிலைக்கேற்ப அவன் படும் தாபமும், கூறும் மொழிகளும், அவன் நிலைக்கேற்ப ஆசிரியர் உவமைகளை அமைத்துச் செல்லும் முறைகளும் காணத் தக்கன ; கொடுமையிற் சூழ்ந்த சூர்ப்பணகை தன் விரகத் துயரில் இயற்கைப் பொருள்களை நாசஞ் செய்ய விரும்பும் அவளின் கொடுமை யும் அஞ்சாமையும், ஆணவத்தில் தலை தெறித்து நின்ற இராவணன் இயற்கைப் பொருள்களான பருவகாலங்கள், இரு -சுடர்கள், காற்று முதலியவற்றை ஏவுவதும், அவற்றைத் தத்தம் நிலைகளி னின்று மாற்றுவதுமாகிய அவனது அரக்க ஆற்றலையும், இராமபிரா னின் தன்மைகளோடு ஒப்பிடும்போது, ஒரே மெய்ப்பாடு ஒவ்வொருவ ரிடம் அவரவர் நிலைகளுக்கு ஏற்ப, எவ்வெவ்வாறு மாறுபடுகிறது என்ற உண்மை நன்கு புலனாகும். இவ்வாறு கம்பராமாயணச் சுரங்கத் தில் ஆராய்பவர்க்கு அகப்படக்கூடிய அரதனங்கள் அளவில் அடங்கா என்பதை உணர்கிறோம்.

சடாயு இக்காண்டத்திற் காணப்பெறும் மிக உன்னதமான ஒரு பாத்திரம். 'தெய்வ மரணமென்றுதை பெற்றதென்வயின் வழக் கன்றோ' (யுத்த. விபீடணனடைக். 116) என்று இராமபிரானே கொண்டாடுமாறு அவர் இராமபிரானுக்காக உயிர் வழங்கிய வள்ளன் மையை என்னென்று கூறுவது! அவருடைய போர்த்திறமைக்கு இராமபிரான் கரன்மீது காட்டிய திறமையையே ஒப்பாகக் கூறலாம். முனிவர்களுள், சரபங்கர் இந்திரனையும் எதிர்த்துப் பேசிய காம்பீரியம் போற்றத்தக்கது ; (இங்கும் வான்மீகத்தினின்று கம்பர் மாறியது சரபங்கரின் பெருமையை நிலை நிறுத்தவேயாம்.)

கரன் முதலியோர் தம் கடமையைச் செய்து உயிர்விட்ட அரக்க வீரர்கள். விராதன், கபந்தன் ஆகியோர் சாபமயக்கால் கொடுமை யிழைத்து, நல்லறிவு பெற்றவுடன் உண்மை உணர்ந்தவர்கள். இவர்கள் யாவரும், கொடியவர்களாயிருந்தும், இராமபிரான் கைபட்டு மேலுலகடைந்த வரலாறுகளை ஆசிரியர் மிக விளக்கமாகக் காட்டியுள்ளார். அரக்கர் தேவராயினர் என்று கூறுமிடத்தில் ஆசிரியர் நகைச்சுவையைக் கையாண்ட அருமையைக் கரன்வதைப் படலத்தில் பரக்கக் காண்க.

இனி, இக் காண்டத்திற்கு முதுகெலும்பு போல் நிற்பவர்கள் சூர்ப்பணகையும் இராவணனுமேயாவர். இக்காவியத்திற்குக் கம்ப நாடகம் எனப்பெயர் அமைவதற்கு இவ்விரு பாத்திரங்களின் செயல்களே சிறந்த க்ாரணங்களாம். இவற்றை விளக்கிக் கூறுவது மிகப் பெரிய விமர்சனமாகுமாதலால் அதனை இங்கு மேற்கொள்ள இயலவில்லை.

கம்பநாடர் தாம் காட்ட விரும்பும் சுவைகளுக்கெல்லாம் இவர்களையே கேந்திர நிலைக்களன்களாகக் கொண்டனர். அச் சுவைகளுக் கேற்பச் சந்தங்களையும், அணிகளையும் அவர் அமைத்துக் கொண்டமையும் காணத்தக்கது. பல சுவைகள் ஒன்று சேர்வதையும், ஒன்றிலிருந்து ஒன்று பிறப்பதையும், ஒன்றையொன்று வெல்வதையும், ஒன்று மற்றொன்றாக மாறுவதையும் நாம் இந்நூலில் இப்பாத்திரங்களிடம் காண்பதுபோல் வேறெங்கும் காண வியலாது.

இராவணன், சூர்ப்பணகை ஆகிய இருவருமே இராமபிரானின் சிறந்த எதிரிகள். அவ்விருவரின் பொதுக்குற்றம் அவர்கள் கொண்ட தகாக் காமமே யாகும். அக்காமத்தோடு இராவணனிடம் ஆணவமும், சூர்ப்பணகையிடம் பொய்மையும் கூடிக் கொண்டன. இருவரும் வஞ்சனையைக் கையாண்டனர்; இவற்றின் பயனாக இராவணன், தன் உயிரியை இழக்கின்றான்; சூர்ப்பணகை, தன் மூக்கு முதலியவற்றின் இழப்போடு தப்பினாள்.

சூர்ப்பணகையைப் பற்றிக் கம்பநாடர் நமக்கு ஒன்றினை நினைப்பூட்டியே செல்கின்றார். அதாவது, தன் கணவனை இராவணன் கொன்ற பழிக்கு அவன்மீது பழி வாங்குவதாகவே அவள் செயல்கள் அமைந்தன என்பது; இக்கருத்தினைக் காவியச் சுவை கெடாமல் அவர் ஆங்காங்கு அமைத்துச் செல்லும் திறன் நோக்கி இன்புறத் தக்கது.

இராவணன் பிராட்டியைத் தன் கைகளினால் தொடவில்லை; சடாயுவால் அவன் தேரிழந்தபின்னும், தான் பெயர்த்தெடுத்த மண்

ளோடேயே அவன் பிராட்டியைச் சுமந்து சென்ருன். இலங்கையில் அவன்—வான்மீகம் கூறுவது போல—பிராட்டியை முதலில் தன் அரண்மனையில் கொண்டுபோய் வைக்கவில்லை; நேராக அசோக வனத்திலேயே அவளை இருத்தினன்; இவ்வாறு ஆசிரியர் தாம் மேற்கொண்ட இக்கதைத் திருப்பத்தை நூலின் இறுதிவரையில் கொண்டு செலுத்தி நிலைநாட்டுவது நோக்கத்தக்கது.

இவ்வாறு செய்தது, பிராட்டியின் கற்பின் பெருமையைக் காட்ட மட்டும் அன்று; (அவ்வாறிருக்குமாயின், கொடுமையும் பசியுமே கொண்ட விராதனையும், அவன் பிராட்டியைத் தூக்கிச் செல்லாதவாறு, ஆசிரியர் அமைத்திருக்கக் கூடும்); பின்னை அதன் காரணம் யாதெனில், இராவணனுடைய பெருமைக் குணத்தையும் காட்டவே அவர் அவ்வாறு செய்துள்ளனர் என்னலாம். அவன் பிராட்டியைத் தன் வலிமையால் அடைய விரும்பியதில்லை; தன்னை அவள் விரும்பச் செய்த பின்பே அவளைச் சாரவேண்டுமென்ற கொள்கையுடையவனுகவே வான்மீக முனிவரும் அவனைக் காண் கிருர். அத்யாத்ம ராமாயணத்தில் அதன் ஆசிரியர் உண்மையான சீதையை இராமபிரான் அக்னியில் பிரவேசிக்கச் செய்து, மாயா சீதை ஒருத்தியை வகுத்து வைத்து, அவளையே இராவணன் தான் தொடாமல், மண்ணோடு தூக்கிச்சென்றதாக அமைக்கின்ருர்; அவ்வாறு கொள்வது, புராணப் பண்பை ஒட்டியதாகும்; காப்பியப் போக்குக்கு ஒவ்வாததாகும். அவ்விரு வடமொழி மூல நூல்களின் கொள்கையை நம் ஆசிரியர் தழுவி, அவர்கள் வகுத்த முறையை நீக்கி, தாமாகவே ஒன்றைப் படைத்துக்கொண்டு, குறையும் ஏருமல், அழகும் தூய்மை மிகுதியும் அமையுமாறு கதையை யாத்தது பெரிதும் வியக்கப்பாலது.

அம்முறையிலேயே சூர்ப்பணகையின் போக்கும் சித்தரிக்கப் பெற்றமை காண்கிருேம். முதனூலில், அவள் இராமன்பால் மிக்க மையல் கொண்டவளாயினும், இலக்குவனையேனும் கொள்வதற்கு அவள் உடன்பட்டனள் என்பதாக விளக்கிக் காட்டப் பெற்றுள் ளது. அவ்வாறு அவளைக் கம்பநாடர் கொள்ளவில்லை. இராமபிரா னுக்கும் இலக்குவனுக்கும் இடையே அவள் அல்லலுறச்செய்த நகைச் சுவை மிகுந்த பகுதியை கம்பநாடர் அறவே நீக்கியதிலிருந்து இதனை அறியலாம். அரக்கி யாயினும் அரச குலத்திற் பிறந்த அவளைக் கண்டவரைக் கொள்ள விரும்பும் காமுகியாக்க அவர் விரும்ப வில்லை போலும்! இக்கருத்தைக் கொண்டே, இப்பதிப்பிலும் 358, 359-ஆம் செய்யுட்களை யாம் ஐயுறுவதைக் குறித்துள்ளோம். அன்றியும், அயோமுகி இலக்குவனைத் தூக்கிச் சென்றது போலக்

சூர்ப்பணகையும் இராமபிரானை வலியப் புணர முயற்சித்திருக்கலாம். அதன் விளைவு யாதாகும் என்பது நமக்கு விளக்கமாயினும், சூர்ப்ப ணகை அவ்வாறு செய்யத் துணியாமையும், அவளுடைய பல இழி குணங்களுக்குள்ளே அவளை ஒருபடி ஏற்றிவைத்தது அவளுடைய பிறப்புக்குணச் சிறப்பாகும்' என்பதை நாம் உணர்கிறோம்.

இவ்வாறு பாத்திரங்களைச் சீர்ப்படுத்தி நம் கண்முன் நிறுத்திய ஆசிரியரின் இணையற்ற பெருமை நாம் கண்டு இன்புறத்தக்கதாகும். எளிய, அடங்கிய வாழ்க்கையை உடைய சபரி முதல், ஆடம்பரமே உருவெடுத்த இராவணன் வரை இக் காண்டத்தில் வந்துள்ள பாத்திரங்கள் யாவும் அவற்றின் உள்ளும் புறமும் முற்றிலும் துலங் கும்படி மிக அற்புதமாகத் தீட்டப்பெற்ற ஓவியங்களாகும். ஸ்ரீராமன், அகத்திய முனிவர், சடாயு ஆகிய மூவரும் அறத்தின் முழுவடிவங் கள் ; இலக்குவன் அறிவும் கடமையும் கலந்த உருவம். பிராட்டியைப் 'கண் பிற பொருளிற் செல்லா ; கருத்தெனின் அஃதே' என்று சூர்ப்பணகை வாக்கால் இக்காண்டத்திலும், 'கல்லும் புல்லுங் கண்டுருகப் பெண்ணின் கனி நின்றாள்' என்று தம் வாக்கால் பால காண்டத்திலும் கூறியதற் கேற்ப, அமைந்த அத்திருவை யாம் எவ்வாறு உணர்ந்து கூறக் கடவோம் ?

இனி, இக் காண்டத்தில் கம்பநாடர் கையாண்டுள்ள அருஞ் சொற்களின் தன்மைகளையும், இவ்வரலாற்றின் வழியாக அவர் உலகுக்குக் காட்டும் உண்மைகளையும், நீதிகளையும், பிறவற்றையும் பதிப்பின் பிற்சேர்பாக அமைக்கப் பெற்றிருக்கும் அரும்பத முதலிய வற்றின் தொகுப்பிற் காண்க.

இவ்வாறு ஒப்பும் உயர்வுமற்ற ஒரு நாயகன் மீது, ஒப்பும் உயர்வு மற்ற ஒரு புலவர் இயற்றிய காவியத்தைப் பெறும் பேறு தமிழுக்குக் கிடைத்தது ; இது மொழி பெற்ற பேறோ? அன்றி, அம்மொழியிலே தோன்ற நூல் பெற்ற பேறோ அறியோம். அது யாதாயினும், அம் மொழியையும் நூலையும் பெற்ற நாமே பேறுடையோம். அப் பேற்றினை நாம் என்றும் போற்றி வாழ்வோமாக !

மனப்பரிப் போடழுக்கு மானிடச் சாதியிற் றன்பிறந்து
தனக்குவேண் டுருக்கொண்டு தான்தன சீற்றத் தினைமுடிக்கும்
புனத்துழாய் முடிமாலை மார்ப னென்னப்பன் றன்மாயங்களே
நினைக்குநெஞ் சுடையே னெனக்கினி யார்நிகர் நீணிலத்தே.

(திருவாய்மொழி)

சுபம்.

## இப்பதிப்பில் எடுத்தாளப் பெற்ற நூல்கள் முதலியவற்றின் முதற் குறிப்பகராதி

1 அக்நிவேசியராமாயணம்
2 அகநா - அகநானூறு
3 அத்யாத் - அத்யாத்ம ராமாயணம்
4 அயோத் - (கம்ப) அயோத்தியாகாண்டம்
5 அரிச் - அரிச்சந்திரபுராணம்
6 அழகரந்தாதி
7 அறநெறிச் - அறநெறிச்சாரம்
8 ஆக்நேயபுராணம்
9 ஆசிரியமாலை
10 ஆத்திசூடி
11 ஆனந்த ராமாயணம்
12 இயற்பா
13 இராசராச - இராசராச சோழனுலா
14 இராமசெயத் திருப்புகழ்
15 இராமாயணத் தனிச் செய்யுள்
16 இறை - இறையனாரகப்பொருள்
17 இன்னா - இன்னா நாற்பது
18 உத்தர - உத்தர காண்டம்
19 உபமானசங்கிரகம்
20 உயுத்த - (கம்ப) உயுத்த காண்டம்
21 கந்த - கந்தபுராணம்
22 கல் - கல்லாடம்
23 கலிங்கத்துப் - கலிங்கத்துப்பரணி
24 கலி, கலித் - கலித்தொகை
25 களவழி - களவழி நாற்பது
26 கிட்கிந்தா - (கம்ப) கிட்கிந்தா காண்டம்
27 குலோத் - குலோத்துங்க சோழனுலா
28 குற்றாலக்குற - குற்றாலக் குறவஞ்சி
29 குறள் - திருக்குறள்
30 குறுந் - குறுந்தொகை
31 கூர்ம - கூர்மபுராணம்
32 சிராப்பள்ளிக்கோவை
33 சிலப் - சிலப்பதிகாரம்
34 சிறுபஞ் - சிறுபஞ்சமூலம்
35 சிவசிவவெண்பா
36 சிறுபாண் - சிறுபாணாற்றுப் படை
37 சிவமஹாபுராணம்
38 சீவக - சீவகசிந்தாமணி
39 சுந்தர - (கம்ப) சுந்தரகாண்டம்
40 சுந்தர. தே - சுந்தர மூர்த்தி சுவாமிகள் தேவாரம்
41 சூடா - சூடாமணி நிகண்டு
42 சூளா - சூளாமணி
43 செவ்வைச் - செவ்வைச் சூடுவார் பாகவதபுராணம்
44 தக்க - தக்க யாகப்பரணி
45 தஞ்சை - தஞ்சை வாணன் கோவை
46 தண்டி - தண்டியலங்காரம்
47 தனிப்பாடல் - தனிப்பாடற்றிரட்டு
48 திரிகடுகம்
49 திருக்குற்றாலநாதருலா
50 திருக்குற்றாலப் - திருக்குற்றாலப் புராணம்
51 திருக்குறுந்தாண்டகம்
52 திருச்சிற் - திருக்கோவையார்
53 திருச்சந்த - திருச்சந்த விருத்தம்
54 திருஞா - திருஞான சம்பந்தர் தேவாரம்
55 திருப்பாவை
56 திருமாலை

57 திருவரங்கக் கலம்பகம்
58 திருவரங்கத் - திருவரங்கத் தந்தாதி
59 திருவரங்கமாலை
60 திருவருட்பா
61 திருவள்ளுவமாலை
62 திருவா - திருவாசகம்
63 திருவாய்மொழி
64 திருவிசைப்பா
65 திருவிருத்தம் - திவ்யப்பிரபந்தத் திருவிருத்தம்
66 திருவிளையாடற் - பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம்
67 திருவாலவாய் - திருவாலவாயுடையார் திருவிளையாடல்
68 திருவேங்கடமாலை
69 திவா - திவாகரம்
70 திவ் - திவ்யப்பிரபந்தம்
71 தொல் - தொல்காப்பியம்
72 நம்பி அகப் - நம்பியகப்பொருள்
73 நல்வழி
74 நள - நள வெண்பா
75 நற் - நற்றிணை
76 நறுந்தொகை
77 நன்னூல்
78 நன்னெறி
79 நாச்சியார் திருமொழி
80 நாலடி - நாலடியார்
81 நான்மணிக் - நான்மணிக் கடிகை
82 நீதிநெறி - நீதிநெறி விளக்கம்
83 நூற்றெட்டுத் - நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி
84 நைடதம்
85 பட்டினப் - பட்டினப்பாலை
86 பதிற்றுப் - பதிற்றுப்பத்து
87 பரி - பரிபாடல்
88 பழமொழி நானூறு
89 பாத்மபுராணம்
90 பாரதவெண்பா
91 பால - (கம்ப) பால காண்டம்
91 பிங் - பிங்கள நிகண்டு
92 பு. வெ. - புறப்பொருள் வெண்பாமாலை
93 புறநா - புறநானூறு
94 பெரிய திருமொழி
95 பெரிய - பெரிய புராணம்
96 பெரியாழ்வார் திருமொழி
97 பெருங் - பெருங்கதை
98 பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்படை
99 பெருமாள்திருமொழி
100 பொருந - பொருநராற்றுப் படை
101 பொன்வண்ணத்தந்தாதி
102 மகாநாடகம்
103 மணி - மணிமேகலை
104 மதுரைக் - மதுரைக்காஞ்சி
105 மலைபடு - மலைபடுகடாம்
106 மனுதருமசாஸ்திரம்
107 மீனாட்சி பிள்ளைத் - மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்
108 முத்தொள்ளாயிரம்
109 முதற்றிருவந்தாதி
110 முருகு, திருமுருகு - திருமுருகாற்றுப்படை
111 முல்லைப் - முல்லைப்பாட்டு
112 மூதுரை
113 வான்மீகம் - வான்மீக ராமாயணம்
114 விநாயக - விநாயகபுராணம்
115 வி. பா. - வில்லிபுத்தூராழ்வார் பாரதம்
116 வில்லைப்புராணம்
117 விறலிவிடு - விறலிவிடு தூது
118 ஸ்ரீமகாபாரதம்

உ

ஸ்ரீராமஜயம்

# கம்பராமாயணம்

# ௩. ஆரணிய காண்டம்

## 1. விராதன் வதைப் படலம்

கடவுள் வாழ்த்து

1. பேதி யாதுநிமிர் பேத வுருவம் பிறழ்கிலா
ஓதி யோதியுண ருந்தொறு முணர்ச்சி யுதவும்
வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா
ஆதி தேவ ரவரெம் மறிவினுக் கறிவரோ.

**விராதன் வதைப் படலம்** - விராதன் என்னும் அரக்கனை இராம பிரான் வதைத்து அவனுக்கு அருள்புரிந்த செய்தியைக் கூறும் படலம் என்று விரியும்.

பேதியாது - தன்னுடைய பரத்துவ நிலையினின்றும் தான் மாறுபடாமல், நிமிர் பேத உருவம் - தன்னிட மிருந்து தோன்றி எழுந்து வளர்கின்ற பல் வகைப்பட்ட சராசரப் பொருள்களின் வடிவங்களிலிருந்தும், பிறழ்கிலா - தான் வேறுபடாத, (அதாவது அவை ஒவ்வொன்றிலுங் கலந்து நின்று), ஓதி ஓதி உணரும் தொறும் - பலமுறை ஓதி ஆராயும்தோறும், உணர்ச்சி உதவும் - புதிய நல்லறிவை ஊட்டியருளும், வேதம் - நான்கு வேதங்களும், வேதியர் - அவ்வேதங்களை ஓதியுணரும் அந்தணர்களும், விரிஞ்சன் முதலோர் - பிரமன் முதலான தேவர்களும், தெரிகிலா - ஆராய்ந்து முற்றும் அறிந்துகொள்ள முடியாத, ஆதிதேவர் - முதற்கடவுளின் அவதாரமான இராமபிரான், எம் அறிவினுக்கு அறிவரோ—என்னு டைய சிற்றறிவுக்கு அறியக் கூடியராவரோ? (ஆகார் என்றபடி.)

கடவுள் தன் தன்மை மாறுபடாது, பிறபொருள் யாவற்றினும் கலந்து வியாபித்திருப்பவர் என்பது; "தோய்ந்தும் பொருளனைத் தும் தோயாது நின்ற சுடரே" (100); "ஒன்றாகி மூலத்துருவம் பல

வாகி '' (*103*) என்றமையால் இவ்வுண்மை விளங்குவது காண்க. பிறழ்கிலா, தெரிகிலா ஆதிதேவர் என இயைக்க.

வேதம், ஓத ஓத மென்மேலும், நல்ல மெய்ஞ்ஞானத்தை அறிவுறுத்தும்; அந்த வேதமும் பரம்பொருளின் உண்மை நிலையை நன்கு அறியவில்லை யென்பதும் பொருள்; ஓதி ஓதி: அடுக்கு, மிகுதிப் பொருளது; அதாவது, வேதம் பலகாலும் பாராயணம் செய்யத் தக்கது என்பதாம். உணருந்தோறும் உணர்ச்சி யுதவும் வேதம்; ''நவிறொறு நூனயம் போலும்'' (குறள். 783.) என்றது போல. வேதம், அவ் வேதங்களை யுணர்ந்த அந்தணர், அவ்வேதியருட் சிறந்த பிரமதேவர் என ஒன்றன்மேலொன்று சிறப்புடையவற்றை அடுக்கிக் கூறியது, மேன்மேலுயர்வுநவிற்சி யணி என்பதாம். விரிஞ்சன் முதலோர் என்றதால், பிரமன் முதலான மற்ற தேவர்களையுங் குறித்தபடி. ஆதி தேவர்; பரம்பொருளே இராமபிரானாக அவதரித்த உண்மை இந் நூலிற் பலவிடங்களில் ஆங்காங்கு வலியுறுத்தப் பெறுவது காணலாம். இனி, எம் அறிவினுக் கறிவு, அரோ (அசை) எனப் பிரித்து, அப் பரம்பொருளே என் அறிவினால் அறியத்தக்க பொருளாவர் எனவும், என் அறிவுக்குள்ளே யான் அறியக் கூடாதபடி சூட்சும நிலையில் இருந்து, அவர் அறிவு ஊட்டுவார்" எனவும் பொருள் கொள்ளலும் ஒன்றும். முதற் கடவுள் திருமால் என்பது; ''முதலாவார் மூவரே யம்மூவ ருள்ளும், முதலாவான் மூரிநீர் வண்ணன்'' (இயற்பா. முதற்திரு. 15);. ''பேதியாது நிமிர் பேத வுருவம்—பஞ்சபூதமும்; என்றும் பேதியாது நிமிரப்பட்ட பேதமான பல தனுக்கள்;'' என்பது பழைய உரை.

பா - ம். 1. 'பிறழ்கிலா தோதி' 3. 'முதலோர் வெளியிடா'
4. 'ஆதிநாதரவர்; நம்மறிவினுக்' (*1*)

இராமபிரான் முதலியோர் அத்திரிமுனிவர் ஆச்சிரமம் அடைதலும் அவரால் உபசரிக்கப் பெறுதலும் 2—5

2. முத்தி ருத்திய விருந்தனைய மொய்ந்ந கையொடும்
சித்தி ரக்குனி சிலைக்குமரர் சென்ற ணுகினார்
அத்தி ரிப்பெய ரருந்தவ னிருந்த வமைதிப்
பத்தி ரப்பழு மரப்பொழி றுவன்று பழுவம்.

சித்திர குனி சிலை குமரர் - அழகிய, வளைந்த வில்லை யேந்திய சக்கரவர்த்தி தனயர்களான இராம லக்ஷ்மணர், முத்து இருத்திய அனைய - முத்துக்களைப் பதிப்பித்த போலும், விருந்து அனைய -

காண்போர்க்கு அக்காட்சியே ஒரு விருந்தளிப்பது போலும் விளங்கும், மொய் நகையொடும் - நெருங்கிய பற்களோடு கூடிய பிராட்டியோடும், அத்திரி பெயர் அரும் தவன் - அத்திரி என்னும் பெயரையுடைய அரிய தவமுனிவர், இருந்த - தங்கியிருந்த, அமைதி - இடமாகிய, பத்திர பழ மர பொழில் - இலைகளும் பழங் களும் நிறைந்த மரங்களையுடைய சோலைகள், துவன்று - நிறைந்து விளங்கிய, பழுவம் - ஒரு வனத்தை, சென்று அணுகினர் - போய் அடைந்தனர்.

அத்திரி: இவர் ஸப்த ரிஷிகளுள் முன் வைத்து எண்ணப் பெறும் பெருமையுடையவர்; அத்திரி; திரிவர்க்க தோஷங்களாகிய, காம வெகுளி மயக்கங்களைப் போக்கியவர் என்பதாம். இனி, வேத அத்யயனம் செய்யாது மூன்று இரவுகளைப் போக்காதவர் என்று மகாபாரதம் பொருள் கூறும். இவர், பிரம குமாரர்களுள் ஒருவர். அத்திரி முனிவரை இராமபிரான் சந்தித்த இவ்வரலாறு வான்மீகத்தில் அயோத்தியாகாண்ட இறுதியில் அமைந்துள்ளது. இந்நூலிலும், உண்மையான ஆரணிய காண்டத் தொடக்கம், 'தண்டக வனம் புகுதலும்' என்று முடியும் (5) செய்யுளுக்குப் பிறகே தான் தொடங்குவது காணலாம். ஆனால், அத்திரி முனி வரை முன்னிட்டு இக்காண்டத்தைத் தொடங்கியது, மங்களகரத் தைக் கருதி என்க.

பி - ம். 1. முத்திருத்திய திருந்தனைய; திருத்தனைய; முத்திருத்திய தெனத்திகழும்; முத்திருத்திய திருத்தகைய.
3. னமைந்தவமைதி. 4. பலமரப் பொழிற்பழுவம்; துவன்ற பழுவம். (2)

3. திக்கு றுஞ்செறி பரந்தணிய நின்ற திரள்பொற்
கைக்கு றுங்கண்மலை போற்குமரர் காம முதலாம்
முக்கு றும்பற வெறிந்த வினையாண் முனிவனைப்
புக்கி றைஞ்சின ரறிந்தவ னுவந்து புகலும்:

திக்கு உறும் - எட்டுத் திக்குக்களிலும் பொருந்திய, செறி பரம் - நிறைந்த சுமை, தணிய நின்ற - தணிவு அடையுமாறு (அதாவது) குறைவுபடத் தாங்கிநின்ற, திரள் பொன் கை - திரண்டு விளங்கிய அழகிய துதிக்கைகளையும், குறும் கண் - சிறு கண் களையுமுடைய, மலைபோல் குமரர் - மலைகளை ஒத்த திக்கயங்களுக்கு ஒப்பான அந்த இராமலக்ஷ்மணர்கள், புக்கு - அந்த முனிவர் ஆச்சிர

மத்தில் புகுந்து, மு குறும்பு அற எறிந்த - காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்று குற்றங்களையும் அடியோடு ஒழிய அழித்த, வினை ஆள் முனிவனை - தவ வினையை ஆள்கின்ற அந்த அத்திரி முனிவரை, இறைஞ்சினர் - வணங்கினார்கள்; அவன் - அந்த முனிவரும், அறிந்து - அவர்கள் இன்னார் என்பதைத் தெரிந்து கொண்டு, உவந்து - மனம் மகிழ்ந்தவராய், புகலும் - பின்வருமாறு சொல்லலானார்.

'திக்குறும்......நின்ற', என்றதைக் 'குமரர்' என்பதனோடும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். குறுங்கண்மலை: பிற குறிப்பு. முக் குறும்பு - மூன்று பகைகள்: ஒன்றை அடைய வேண்டுமென்ற ஆசையும், அதனையடைய முடியாமல் இடையே வரும் ஊறுகளால் வரும் கோபமும், பின்னர் அதனை அடையாத நிலையில் உண்டாகும் மனத்தடுமாற்றமாகிய மயக்கமும் ஒருவரை நல்வழியில் செல்லவிடாது தடைசெய்து வருத்தும் இயல்பின வாதலின், அவை முக்குறும்பு எனப்பட்டன. அவற்றைக் கடந்து நீங்குவதே துன்ப நிவர்த்தியான பேரின்பமாகும்; இதனை, 'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றின், நாமங் கெடக்கெடும் நோய்' (குறள், 360) என்பதால் அறியலாம். இப்பகைகள் மூன்றையும் அழியச் செய்த தவச் சிறப்புடையவ ராகலின், அத்திரி எனும் பெயர் அம் முனிவருக்குக் காரணப் பெயராய் அமைந்ததென்பது தோன்ற, முக்குறும்பற வெறிந்த வினையாள் முனிவன் என்ற சொற்றொடரால் விளங்க வைத்த சிறப்பு உய்த்துணரப்பாலது. வினை - தவவினை; தவவினை, இவர் ஆளும் வண்ணம், இவரிடம் வந்தடைந்து தங்கியிருந்தது என்பது தோன்ற, 'வினையாள் முனிவனை' எனப்பட்டது.

பி - ம். 1. செறிமறந் தெரிய; செறிபரந் தெரிய நின்ற திரளில்.
2. கைக் குறுங்கணம் விலக்குமன்ன கரம்; கைக்குறுஞ் சிலை கொள்போர்க்குமரர்; குறுங்கண் வரைபோலுயர் காம முதலா.
3. வெறிந்த தவமா முனிவனை; வினையான் முனிவனைப்; வினைவால்.
4. அருந்தவனும் வந்து புகலும்; வந்து புகல்வான். (3)

4. குமரர் நீரிவ ணடைந்துதவு கொள்கை யெளிதோ
அமரர் யாவரொடு மெவ்வுலகும் வந்த தலவோ
எமரின் யார்தவ முயன்றனர் களென்று ருகினன்
தமரெ லாம்வர வுவந்தனைய தன்மை முனிவன்.

தமர் எலாம் வர உவந்து அணைய - தம் சுற்றத்தார் அனை வரும் வர, அது கண்டு மகிழ்ச்சியடைவதே போல, தன்மை முனிவன் - ஒரு மகிழ்ச்சி நிலையடைந்த அந்த அத்திரி முனிவர், (அவ் விராம லக்ஷ்மணர்களைக் கண்டு), "குமரர் நீர் இவண் அடைந்து உதவு கொள்கை - சக்கரவர்த்தி குமாரர்களாகிய நீங்கள் இவ்விடத் தில் தாமே வலுவில் விரும்பி வந்து சேர்ந்து யான் கண்டு பெரும்பேறு அடையுமாறு அருளிய நிகழ்ச்சி, எளிதோ - கிடைப் பதற்கு எளிதாகுமோ? (அரியது என்றபடி); அமரர் யாவரொடும் எவ்வுலகும் வந்தது அலவோ - சகல தேவர்களோடும், எல்லாப் புண்ணிய லோகங்களும் வந்தன போன்றது அல்லவோ? எம்மின் - தண்டக வனவாசிகளான எங்களைப் போல, யார் தவம் முயன்ற வர்கள் - யாரே தவஞ் செய்து சிறந்தவர்கள்?" என்று உருகினன் - என்று உள்ளம் உருகி மகிழ்ந்து துதித்தார்.

சுற்றத்தார் சுற்ற இருப்பது பெறற்கரிய பெரு மகிழ்வு பயக்கு மாதலால், தமரெல்லாம் வர வுவந்தணைய தன்மை முனிவன் எனச் சிறப்பிக்கப் பெற்றது. மேலும், "மாதா ராமோ மத்பிதா ராமசந் த்ரோ, ப்ராதா ராமோ மத்ஸஹா ராகவேச:" என்ற ஆன்றோர் அருளிப்பாட்டுக்கிணங்க, ஸகல சுற்றமும் இராமபிரானே என்பதை உணர்ந்து பெரு மகிழ்வு பூத்து நின்றார் முனி புங்கவர் என்பதும் போதரும்; 'நற்றுணையும் நீ தனிநா யகனீ வயிற்றிற், பெற்றாயு நீயே பிறரில்லை'; (அயோத். நகர்நீங்கு : 136) என்று அறுதியிட்டுக் கூறிய இளைய பெருமாள் வாக்காலும் இவ்வுண்மை நன்கு புலப் படுவது காணலாம். மேல் மூன்று செய்யுள்களிலும் இராமலக்ஷ்மணர் களைக் குமரர் என்ற சொல்லால் சிறப்பித்தது, நூலாசிரியரும், இம் முனிவர் பிரானும், அன்னோர் திவ்யமங்கள ஸௌந்தர்ய உருவங் களிற் கொண்ட ஈடுபாட்டைப் புலப்படுத்துவதாகும். அதுகாறும் காணப்பெறாத தமர்களையெல்லாம் கண்டவிடத்து, உண்டாகும் மகிழ்ச்சியால் ஆனந்தக் கண்ணீர் பெருக, உள்ளம் நெகிழ்தல் யாவர்க்கும் இயல்பாதலின், உருகினன் எனச் சிறப்பிக்கப் பெற்றது. எவ்வுலகும் வந்தது, என்றதால் மோட்ச பதவியும் தன்னெதிரில் வந்து உதவியது என்ற குறிப்பை எதிர்கூட்டி உணர்த்தியதும் ஆம். இனி, எல்லா வுலகும் வியாபித்தவனும், அவற்றைத் தன்னுள் அடக்கிக் கொள்பவனுமான பரம்பொருளே இராம்பிரான் என்பதை முனிவர் உணர்ந்து கூறியதுமாம்.

இதன்பின் ஒரு சுவடியில் ஐந்து அதிகப் பாடல்கள் உள்ளன. அவை, சந்தர்ப்பமும், பொருளும் பொருத்தமின்றி மாறுபட்டு இருத்தலால் அவற்றை இங்குக் குறிக்கவில்லை.

பி-ம். 2. வந்த வளவோ ; வந்துமளவோ.

3. யார்தவ முயர்ந்தவர்கள் ; முயன்றவர்கள். (4)

5. அன்ன மாமுனியொ டன்றவ ணுறைந்த வனரும்
பன்னி கற்பினன சூயை பணியா லணிகலன்
துன்னு தூசினொடு சந்திவை சுமந்த சனகன்
பொன்னொ டேகி யுயர்தண் டகவனம் புகுதலும்,

அன்ன - அத்தன்மை வாய்ந்த, மா முனியொடும் - மாட்சி பெற்ற அம் முனிவருடன், அன்று - அற்றைப் பொழுது, அவண் உறைந்து - (அவ்விராம லக்ஷ்மண சீதை ஆகியோர்) அவ் வாச்சிரமத்தில் தங்கியிருந்து, அவன் அரும் பன்னி - அம்முனிவ ருடைய அரிய சிறப்பமைந்த மனைவியான, கற்பின் அனசூயை - கற்பிற் சிறந்த அனசூயை என்பாளுடைய, பணியால் - நியமனப்படி, அணிகலன் - ஆபரணங்கள், துன்னு தூசினொடு சந்து - பொருத் தமான ஆடையுடன் சந்தனம் முதலிய மெய்ப்பூச்சுக் கலவை, இவை - ஆகிய இவற்றை, சுமந்த - தாங்கி ஏற்றுக் கொண்ட, சனகன் பொன்னொடும் - சனகராஜ குமாரியான பிராட்டியோடும், ஏகி - அவ்விடம் விட்டுச் சென்று, உயர் தண்டக வனம் புகுதலும் - சிறந்த தண்டகாரணியத்தில் புகுந்த பொழுது,

இச்செய்யுள், அடுத்துவரும் 19-வது செய்யுள்வரை தொடர்ந்து குளகமாகிப் பொருண்முடிவு பெறும். பன்னி - பத்நி என்ற வடசொல்லின் திரிபு. அனசூயை : பொறாமை அற்றவள் என்னும் பொருளது. இவள் தக்ஷப்பிரஜாபதியின் புதல்வியருள் ஒருத்தி. இவள், ஒருமுறை கங்கை நதியைப் பெருகச் செய்து நாட்டின் பஞ்சத்தைப் போக்கினாள் என்றும், பதினாயிரம் ஆண்டுகள் தவஞ் செய்து பெரும்பேறு பெற்றவள் என்றும், சீதையின் அருங்குணங் களைப் புகழ்ந்து அவளுக்குக் கற்பின் சிறப்பை உபதேசித்து, என்றும் மாசுபடியாத பட்டாடையையும் நறுமணங்குன்றாக் கலவைச் சாந்தையும், என்றும் மாறா இளமைத் தன்மையையும் அளித்தாள் என்றும் முதனூல் கூறும். அனசூயை, சீதைக்கு விசுவகர்மாவினால் செய்யப்பெற்ற திவ்யமங்களகரமான இரண்டு குண்டலங்கள், பொன்மயமான இரண்டு பட்டாடைகள், பரிமளக் கலவைப் பூச்சு முதலியனவற்றை, விரும்பி அளித்தாளென **அத்யாத்ம ராமாயணம்**

கூறுவதும் இங்கு நோக்கத்தக்கது. கற்பினனசூயை என்றதால், தன் கற்பு நிலையைச் சோதிக்கவந்த திரிமூர்த்திகளையும் அம்மங்கை நல்லாள், குழந்தைகளாக்கித் தொட்டிலிலிட்டு ஆட்டி வளர்த்த சிறப்பைக் குறிப்பிட்டதும் ஆம். தண்டகவனம்: இட்சுவாகுமன்னன், தன் மைந்தருள் ஒருவனான தண்டன் என்பானை அவனது தீய ஒழுக்கங் காரணமாகத் தன்னாட்டை விட்டு அகலுமாறு பணிக்க, அவன் தென்னாடு வந்து, ஆங்கோர் பகுதியைப் பற்றி ஆண்டு வருங்கால், அவன் சுக்கிராசாரியர் புதல்வி யொருத்தியைக் கண்டு தகாத முறையில் காதலிக்க, அதனை அறிந்த அம்முனிவர் அவன் அழியுமாறும், அவன் நாடு மணல்மாரி பெய்து பாழாகுமாறும் சபித்தனர். அப்பிரதேசமே பின்னர் நாளடைவில் பெருங்காடாகித் தண்டகாரண்ணியம் எனப் பெயர் பெற்றது என்பர். சீதைக்குப் பொன்; 288; சுந்தர. 654.

இதன்பின், ஒரு பிரதியில் ஐந்து பாடல்கள் அதிகமாக உள்ளன. அவை, சீர் தளை முதலியன பிறழ்ந்தும், பொருள் விளங்காமல் பதங்கள் சிதைந்தும் காணப்பெறுவனவால் அவற்றை இங்குக் குறிப்பிடவில்லை.

பி-ம். 2. கற்பினுயர் சூயை; கற்பினனுசூயை.

3. துன்னு தூசிவை சொரிந்தனள் சுமந்து. (5)

### விராதனின் வருகை 6—19

6. எட்டொ டெட்டுமத மாகரி யிரட்டி யரிமா
வட்ட வெங்கண்வரை யாளி பதினாறு வலியில்
கிட்ட விட்டிடை கிடந்தன செறிந்த தொருகைத்
தொட்ட முத்தலை யயிற்றொழின் மிடற்க முவொடே,

எட்டொடு எட்டு - பதினாறு, மத மா கரி - மதங்கொண்ட பெரிய யானைகள், இரட்டி அரிமா - அவ்வியானைகளுக்கு இருமடங்கு அதாவது முப்பத்திரண்டு சிங்கங்கள், வட்ட வெம் கண் - வட்டமான கொடிய கண்களையுடையனவும், வரை - மலையில் வாழ்வனவுமான, ஆளி பதினாறு - பதினாறு யாளிகள், வலியில் - தன் வல்லமையினால், கிட்ட இட்டு - நெருங்கக் கோக்கப்பட்டு, இடை கிடந்தன - இடையே நெருங்கிக் கிடந்தனவாக, செறிந்தது ஒரு கை தொட்ட - திரண்டதான தன் ஒரு கையிற்பற்றிய, மிடல் தொழில் - வலிய போர்த் தொழிலை மேற்கொண்ட, முதலை அயில்

கழு ஒடு - மூன்று தலைகளையுடைய கூரிய சூலப்படையுடனே, ஏ : ஈற்றசை.

தொட்ட - பெரிய, என்னும் திசைச்சொல்லும் ஆம். மூச்சிகைக்கழு ; 380 ; 395. ஆளி : யானைபோல் துதிக்கையும், சிங்கம்போல் வலிய எயிறுகளும் கூரிய நகங்களும் பிடரிமயிர்களும் இரு சிறகுகளும் கொண்ட ஒரு கொடிய விலங்கு. (6)

பி - ம். 1. மதமால்கரி ; யிரட்டி வயமா. 2. பதினாலு வலியிற்.
3. செறிந்தன கிடந்த தொருகைத் ; செறிந்த வொருகை.
4. யயற்றெழில் ; யயிற்செறி.

7. செஞ்சு டர்ச்செறி மயிர்ச்சுருள் செறிந்த செனியன்
நஞ்சு வெற்பு ருவுபெற்றிடை நடந்த தெனமா
மஞ்சு சுற்றிய வயங்குகிரி வாத விசையில்
பஞ்சு பட்டது படப்படி யின்மேன் முடுகியே,

செம் சுடர் செறி - சிவந்த ஒளிகள் நிறைந்த, மயிர் சுருள் செறிந்த செனியன் - சுருண்ட மயிர்கள் அடர்ந்த தலையை யுடைய அவ்வரக்கன், நஞ்சு வெற்பு உருவு பெற்று - விஷம் ஒரு மலை வடிவுகொண்டு, இடை நடந்தது என - அவ்விடத்தே நடந்து வந்தது என்று சொல்லும்படி, மா மஞ்சு - பெரிய மேகம், சுற்றிய - சுற்றிக் கொண்டதாய், வயங்கு - அங்கு விளங்கித் தோன்றும், கிரி - மலைகள், வாத விசையில் - அவனுடைய நடை வேகத்தில் உண்டாகும் காற்றின் விசையினால், பஞ்சு பட்டது பட - பஞ்சு அடைந்தது போல அலைவுற்றுச் சிதறிப் பறக்க, படியின்மேல் - தரையின்மீது, முடுகி - விரைந்து நடந்து,

செனி - சென்னி என்பதின் இடைக்குறை. அவ்வரக்கன் நஞ்சு போன்ற கொடுமையும், மலைபோன்ற வலிமையும் தோற்றமும் உடைமையால், 'வெற்புருவு பெற்ற நஞ்சு' எனக் கூறப்பெற்றான்; அவனது அடிப்பெயர்ச்சியின் வேகத்தின் எழுந்த பெருங்காற்றால் எதிர்ப்பட்ட மலைகள் பெயர்ந்து பஞ்சுபோலச் சிதறிப் பறந்தோடின என்பதாம். பாத விசையில் எனப் பாடங்கொண்டு, அவனது பாத நடையில் எழுந்த காற்றின் விசையினால் எனப் பொருள் கொள்வாரும் உளர். நடை, காற்றின் வேகத்திற்கும் ஆற்றலுக்கும் ; ஒப்பு : 'கிரிகள் பின் தொடர வந்தாள்' ; (பால. தாடகைவதைப். 48) ; வி. பா. புட்பயாத்திரை : 16 ; தக்க. 404. பஞ்சுபடுதல் ; அரிச்சந்திர புராணம். மயானகாண்டம் : 41.

பி-ம். 1. மயிர்ச் சுருளிலங்கு ; சுருடெரிந்த ; சுருணெறிந்த; சுருள் கிடந்த.
2. நஞ்சுதொட்டுருவு ; ந்ஞ்சுகட்டுருவு : பெற்றியி னடந்த ; கிடந்ததெனமா.
3. மஞ்சுகட்டிய ; மஞ்சுகிட்டிய ; மஞ்சுதட்டின : பாதவிசையில்
4. படியின் முன் முடுகியே. (7)

8. புண்டு ளங்கியன கண்களனல் பொங்க மழைசூழ்
விண்டு ளங்கிட விலங்கல்கள் குலுங்க வெயிலும்
கண்டு ளங்கதி குறைந்திட நெடுங்கடல் சுலாம்
மண்டு ளங்கமற வந்தகன் மனந்த ளரவே,

புண் துளங்கி அன - புண்கள் துடிக்கின்றன போல, கண்கள் அனல் பொங்க - கண்களில் நெருப்பு மேற்கிளம்ப, மழை சூழ் விண் துளங்கிட - மேகங்கள் சூழ்ந்த ஆகாயம் நடுங்க, விலங்கல்கள் குலுங்க - மலைகள் நடுங்கிட, வெயிலும் - சூரியனும், கண்டு - இவன் வரும் வேகத்தைக் கண்டு, கதி குறைந்திட - தனது வேகம் குறைந்து போக, நெடும் கடல் சுலாம் - பெரிய கடல்கள் சூழ்ந்த, மண் துளங்க - பூமி நடுங்க, மற அந்தகன் - கொடிய யமன், மனம் தளர - மனம் தளர்ந்துபோக, ஏ : ஈற்றசை.

கண்களினின்றும் அனல் பொங்கியது, புண்ணின்று செந்நிறம் விளங்கியது போன்றது. விலங்கல் : பூமியில் குறுக்கே தடையாய்க் கிடப்பதால் மலைக்குப் பெயராயிற்று. வெயில், மழை இவை முதலாகு பெயர்கள். அந்தகன் : எல்லாப் பிராணிகளுக்கும் முடிவை உண்டாக்குபவன். அந்தகனும் என்று உயர்வு சிறப்பை உணர்த்தும் உம்மை இங்குத் தொக்கது.

பி-ம். 3. கதிருறைந்திட ; கதிகுழைந்திட : கடல்சுலா, கடல்குலா.
4. வயவந்தகன் ; மறங்கிளரவே. (8)

9. புக்க வாளரி முழக்கு செவியின் பொறியுறப்
பக்க மின்னு மணிமேரு சிகரங் குழைபடச்
செக்கர் வான்மழை நிகர்க்க வெதிருற்ற செருவத்
துக்க வீரருதி ரத்திஞெளிர் செச்சை யினொடே,

(இவனது வருகையின் அதிர்ச்சியால்), செவியின் பொறி புக்க - இவன் செவிகளாகிய பொறிகளில் புகுந்து தங்கியிருந்த, வாள்

அரி - கொடிய சிங்கங்களின், முழக்கு - கர்ச்சனை, உற - மிக, பக்கம் மின்னும் - பக்கங்களில் ஒளிவீசும், மணி - இரத்தினங்கள் பொருந்திய, மேரு சிகரம் - மேருமலையின் கொடுமுடிகள், குழைபட - தளர்ந்து சாய, எதிர் உற்ற - தனக்கு எதிர்ப்பட்ட, செருவத்து - போரிடத்து, உக்க வீரர் உதிரத்தின் - அழிந்த வீரர்களுடைய இரத்தத்தால், செக்கர் வான் மழை நிகர்க்க - செவ்வான மழைபோல, ஒளிர் - விளங்கும், செச்சையின் ஒடு - செஞ்சந்தனப் பூச்சுடனே, ஏ : ஈற்றசை.

சிங்கம் முதலியன முழங்கு செவி ; தக்க. 123 ; பொன்வண்ணத் தந்தாதி. 75. எதிர்த்த வீரர்களின் உதிரம் மேற்படிந்து, அது செஞ் சந்தனப் பூச்சுப்போல் விளங்க ; வீரர்கள் பகைவர் உதிரத்தைச் செஞ்சந்தனப் பூச்சுப் போல அணிவது ; சுந்தர. 175 ; சீவக. 1080 ; தக்க. 742 ; பு. வெ. 204. செச்சை : வெட்சி மாலையும் ஆம்.

பி - ம். 1. முழங்கு செவியின் ; செவியன். 2. சிகரக் குழைபடச்.
3. செக்கவான் மழை ; நிகர்த்த.
4. வீரத்தினொளி : செச்சையுடையான் ; செச்சையொடுமே. (9)

10. படையொ டாடவர்கள் பாய்புரவி மால்க ளிறுதேர்
நடைய வாளரிகள் கோளுழுவை நண்ணி யவெலாம்
அடைய வாரியர வான்முடி யனேக விதவன்
தொடையன் மாலை துயல்வந் துலவுதோள் பொலியவே,

படையொடு ஆடவர்கள் - போர்ப் படையேந்திய வீரர்கள், பாய் புரவி - பாய்ந்து செல்லும் குதிரைகள், மால் களிறு - பெரிய யானைகள், தேர் - தேர்கள், நடைய - உலாவும் (அல்லது சஞ்சரிக்கும்), வாள் அரிகள் - கொடிய சிங்கங்கள், கோள் உழுவை - வலிய (அல்லது கொல்லும் கொடுமையுடைய) புலிகள், நண்ணிய எலாம் - இவ்வாறு தன்னையணுகிய யாவற்றையும், அடைய வாரி - ஒருசேரச் சேர்த்தெடுத்து, அரவால் முடி - பெரிய பாம்பால் தொடுத்துக்கட்டிய, அனேக வித வன் தொடையல் மாலை - பலவிதமான வலிதாய்த் தொடுக்கப்பட்ட மாலைகள், துயல் வந்து - தொங்கி, உலவு - அசைந்து கொண்டிருக்கும், தோள் பொலிய - தோள்கள் விளங்க, ஏ : ஈற்றசை.

மால் என்பதைத் தேருக்கும் கூட்டுக. படையொடாடவர்...... தேர் ; இதனல் சதுரங்க சேனைகள் கூறப்பெற்றன. வாரி - என்ற தால் பிரயாசையின்றி ஒருசேர அள்ளி எடுத்தமை விளங்கும்.

இவ்வரக்கன் அணிந்த மாலைக்கு: ஒப்பு. 1075; 1079., பால. தாடகைவதைப், 50. அரவை மாலை தொடுக்கும் நாராகக் கொண்டது ; தக்க. 267, 382, 411.

பி-ம். 1. மால்களிறு பாய்புரவி ; மாகளிறு.
2. வாளரிய : வாளியர் ; நண்ணினவெலாம்.
3. வாரியவை தன்னொடு மனைகவிதவன் : விதமாமால்.
4. தொடையமாலை. (10)

11. குன்று துன்றின வெனக்குமுறு கோப மதமா
ஒன்றி னொன்றிடை யடுக்கின தடக்கை யுதவப்
பின்று கின்ற பிலனிற் பெரியவாயி னொருபால்
மென்று தின்று விளியாது விரியும் பசியொடே,

குன்று துன்றின என - மலைகள் ஒன்று சேர்ந்து அடர்ந்தன போல, ஒன்றின் ஒன்று இடை அடுக்கின - ஒன்றன் மேல் ஒன்றாகத் தன்னிடம் அடுக்கப் பெற்ற, குமுறு கோப மதமா - பிளிறுகின்ற கோபத்தோடு கூடிய மதயானைகளை, தட கை உதவ - தனது பெரிய கை ஒவ்வொன்றாகக் கொடுக்க, பின்றுகின்ற - உவமையில் பின்னிடுவதான, பிலனில் - குகையைப் போன்ற, பெரிய வாயில் - தனது பெரிய வாயிடத்து, ஒருபால் மென்று தின்றும் - அவ்வியானைகளை அவ்வாயின் ஒரு புறத்தே மென்று தின்றுகொண்டிருந்தும், விளியாது - அதனால் அடங்காது, விரியும் - மேலும் மிகுகின்ற, பசி ஒடு - பெரும் பசியுடன், ஏ : ஈற்றசை.

ஒன்றின் ஒன்று இடை இருக்கிய தடக்கை எனப் பாடங் கொண்டு, ஒவ்வொன்றாகத் தன் விரல்களில் இடுக்கி வைக்கப் பெற்ற தடக்கை எனப் பொருள் கொள்வாரும் உளர். ஒருபால் மென்று என்றமையால், அவ்வியானைகள் அவன் வாயின் ஒரு புறத்துக்கே போதாமல் இருந்தன என்பதாம். விரியும் பசி என்றது : சிறு உணவு பசியை மேலும் மிகத்தூண்டும் ஆதலின், அவ்வியானைகள் அவனுக்குச் சிறிதும் பற்றாத சிற்றுணவேயாகி, அவன் பசியைப் பெரிதும் தூண்டின என்க. பின்றுகின்ற பிலனிற் பெரியவாய் என்பதற்கு, செல்லச் செல்லத் தொலையாது ஆழ்ந்து உட்செல்லும் இடத்தையுடைய பெரியவாய் என்று பொருள் கோடலும் அமையும். விளிதல் - கழிதல், நீங்குதல் ; பு. வெ. 15.

பி-ம். 1. கும்பமதமா ; கதறு கோப மதமா.
2. ஒன்றொடொன்றிடை; யிடுக்கின தடக்கை; யிடுக்கிய தடக்கை.
3. பின்று தின்ற. 4. விரியும் பசியினான். (11)

12. பன்ன காதிபர் பணுமணி பறித்த வைபுகுத்
தென்ன வானவர் விமான மிடையிட் டரவிடைத்
துன்னு கோளினெடு தாரகை தொடுத்த துழனிச்
சன்ன வீர மிடைமின்னு தடமார்பி னெடுமே,

பன்னக அதிபர் - பாம்புகளின் தலைவர்களான, வாசுகி முதலிய குல நாகங்களின், பணு மணி பறித்து - படத்தின் சூட்டில் உள்ள பெரிய நாகரத்தினங்களைப் பறித்தெடுத்து, அரவு இடை - ஒரு பெரிய பாம்பின் இடத்து, அவை புகுத்து என்ன - அவற்றை இடையே புகுத்திப் பதித்துவைத்தாற் போன்று, வானவர் விமானம் இடை இட்டு - தேவர்களுடைய விமானங்களை இடையிடையே தொங்கவிட்டு, துன்னு - நெருங்கி விளங்கிய, கோளினெடு - ஒன்பது கிரகங்களோடு, தாரகை - நட்சத்திரங்களை, தொடுத்த - வரிசையாகத் தொடுத்துக் கட்டிய, துழனி - ஒலியுடன் கூடிய, சன்ன வீரம் - சன்ன வீரம் என்னும் வெற்றி மாலை, இடை மின்னும் - இடையே கிடந்து பிரகாசிக்கின்ற, தட மார்பினெடு - விசாலமான மார்போடு, ஏ. ஈற்றசை.

பன்னகம் - பாம்பு: வடசொல். பன்னகாதிபர்: வாசுகி, அனந்தன், தட்சன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என்னும் அஷ்ட குலநாகங்களும் ஆம். பன்னகாதிபர் பணுமணி பறித்தமை, சுந்தர. 280. பணுமணி; வடமொழித் தொடர். பணம் - படம். சன்னவீரம் - ஒருவகை வெற்றிமாலை; சுந்தர. 414; தக்க. 341; பெரியபுராணம். கண்ணப்ப. 59. துழனி - ஒன்ருேடொன்று மோதுவதால் உண்டாகும் ஒலி. வானவர் விமானங்கள் மிக்க ஒளியுடையன வாதலின், அவை விராதன் சன்னவீர மாலையில் இடையிடை தொங்கவிடப் பெற்றன என்க; விமானம் ஒளியுடைமை; உயுத்த. மீட்சி. 322; சூளா. 900. விமானம், கோள், தாரகை இவற்றிற்குப் பணுமணி உவமை. இவை ஓர் அரவில் தொடுக்கப்பட்டன என்பது குறிப்பு.

பி - ம். 1. பன்னகாதியர்; தவைபகுத்.

2. தன்னவானவர்; தின்னவானவர்; தன்னவிண்ணவர்.

3. துன்னு தோளினெடு; தொடுத்த தொகுதிச் துன்னுதோளினெடு.

(12)

13. பம்பு செக்க ரொளி யொக்கு மயிர்பக்க மெரியக்
கும்ப முற்ற வுயர்நெற்றி யின்விசித் தொளிகுலாம்
உம்ப ருக்கரசன் மால்கரியி னோடை யெயிறுண்
கிம்பு ரிப்பெரிய தோள்வ ளையொடுங் கிளரவே,

பம்பு - பரவிய, செக்கர் ஒளி ஒக்கும் - செவ்வானத்தின் ஒளியைப் போன்ற, மயிர் பக்கம் எரிய - உரோமங்கள் பக்கங்களில் நெருப்பு எரிவது போல விளங்க, உம்பருக்கு அரசன் - தேவர்க்கு அரசனான, மால் - இந்திரனது, கரியின் - யானையாகிய ஐராவதத்தின், கும்பம் உற்ற - குடம் போன்ற மத்தகங்கள் பொருந்திய, உயர் நெற்றியில் விசித்து - உயர்ந்த நெற்றியில் கட்டப்பெற்று, ஒளி குலாம் - ஒளி வீசுகின்ற, ஓடை - நெற்றிப் பட்டம், எயிறு உண் - அவ்வியானையின் தந்தங்கள் கொண்ட, கிம்புரி - பூண்களாகிய, பெரிய தோள்வளையொடும் - பெரிய தோள்வளைகளுடன், கிளர - விளங்க, ஏ : ஈற்றசை.

அவ்வரக்கன், இந்திரனது ஐராவதமென்னும் யானையின் நெற்றிப்பட்டத்தைத் தன் நெற்றிப்பட்டமாகவும், அதன் கொம்புகளில் அலங்கரிக்கப் பெற்ற பூண்களைத் தனது தோள்வளைகளாகவும் கொண்டு விளங்கினான் என்க. பம்புதல் - பரந்து விளங்குதல்; பால. ஆற்றுப். 3; ஒலித்தலும் ஆம். மால் கரி - பெரிய ஐராவதம் என்னும் யானையெனவும் கொள்ளலாம். கரி - யானை, துதிக்கை யென்னும் கரமுடையதாதலின் யானை கரி என்னப் பட்டது. கரி-வடசொல்; இஃது ஆண் யானை என்னும் பொருளது. பெண் யானை கரிணீ எனப்படும். அரக்கன் உரோமம், செந்நிறமுடைமையால் செக்கர் உவமை. வீரர்கள் நெற்றிப் பட்டமும் தோள்வளைகளும் அணிவது மரபு. ஓடை - யானையின் நெற்றிப் பட்டம்; சுந்தர. 719.

பி-ம். 1. செக்கரென வொக்கு. 2. தொளிர் குலாம், தொளிர்குலா. 3. மால் களிறினோடை : யெயிறெண் ; யெயிறுங். (13)

14. தங்கு திண்கரிய காளிமை தழைந்து தவழப்
பொங்கு வெங்கொடுமை யென்பது புழுங்கி யெழமா
மங்கு பாதகம் விடங்கனல் வயங்கி நிமிரக்
கங்குல் பூசிவரு கின்றகலி கால மெனவே,

தங்கு - பொருந்திய, திண் கரிய - வலிமையும் பெருமையுமுடைய, காளிமை தழைந்து - கரு நிறம் அடர்ந்து, தவழ - விளங்க,

பொங்கு - மேற்கிளம்புகின்ற, வெம் கொடுமை என்பது - பெரும் கொடுமை என்னுமது, புழுங்கி எழ - அழன்று மேற்கிளம்ப, மங்கு மா பாதகம் - கேட்டை உண்டாக்கும் பெரும் பாபம், விடம் கனல் வயங்கி - விஷம், நெருப்பு இவற்றிரண்டும் சேர்ந்து விளங்கி, நிமிர - வளர, கங்குல் பூசி வருகின்ற - மேலே இருளைப் பூசிக் கொண்டு வருகின்ற, கலி காலம் என - கலிகாலம் எதிரில் உருவெடுத்து வந்தாற்போல, ஏ. ஈற்றசை.

காளிமை - கருமை ; 'காளிமை பிழம்பு போத' (உயுத்த. நாகபாசப். 217) ; இது, காளி, காளியம் எனவும் வழங்கும். அவ்வரக்கன், கருமை தழைந்து விளங்குவது போலும், கொடுமை என்பது அழன்று எழுந்து மேற்கிளம்ப, தீய பாதகமே விடத்தையும் கனலையும் வெளியிட்டு மேலெழுவது போலும், கலி காலம் கரியைப் பூசிக் கொண்டு வருவதே போலும் தோன்றினன் என்க. மங்கு பாதகம் ; வினைத்தொகை.

பி - ம். 1. தாளிழை, காளிழை : தழைக்கு முருவிற். 3. மங்குல் பாதகம் : வயங்குதிமிர ; வயங்குதிமிரம் ; வயங்கி நிமிரா. 4. கங்கு பூசி. (14)

15. செற்ற வாளுழு வைவன் செறியதட் டிருகுறச்
சுற்றி வாரண வுரித்தொகுதி நீவி தொடரக்
கொற்ற மேவு திசையானை யின்மணிக் குலமுடைக்
கற்றை மாசுணம் விரித்து வரிகச் சொளிரவே,

செற்ற - தான் கொன்ற, வாள் உழுவை - கொடிய புலியின், வன்செறி அதள் - வலிய உள்ளீடு உடைய, (அதாவது உள்ளடர்த்தியான) தோல், திருகு உற - தன் (மார்பில்) சுருண்டு விளங்க, சுற்றி - சுற்றிக் கட்டிக்கொண்டு, வாரணம் உரி தொகுதி, பல யானைகளின் தோற்கூட்டம், நீவி தொடர - அரையிற் கொசுவி யுடுத்த ஆடையாகத் தொடர்ந்திருக்க, கொற்றம் மேவும் - வலி பொருந்திய, திசையானையின் - திக்கயங்களின், மணி குலம் உடை - மணிக் கூட்டங்களைக் கொண்ட, கற்றை மாசுணம் விரித்து வரி கச்சு - பெரிய மலைப் பாம்பை விரித்து இழுத்துக் கட்டிய அரைக் கச்சு, ஒளிர - விளங்க, ஏ : ஈற்றசை.

வாள் உழுவை - கொடிய புலி ; வாளரி, வாளரக்கர் என்பன போல. செற்ற என்ற சொல்லை வாரணத்திற்கும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். நீவி - ஆடை அல்லது புடவை ; கொய்சகமும் ஆகும் ;

சுந்தர. 413. அவ்வரக்கன், தான் கொன்ற புலித்தோலை முறுக்கி மேலாடையாகவும், பல யானைத் தோல்களை அரைச் சல்லடம் அல்லது கொய்சகமாகவும் பெரிய மலைப்பாம்பொன்றில் திசை யானைகளுக்குக் கட்டியிருந்த மணிகளை கோத்து அதனை அவ்வாடையின் மீது அரைக்கச் சாகவும் அணிந்திருந்தான் என்பதாம்.

பி-ம். 1. யதட்டருகுற 4. மாசுண முரித்த. (15)

16. செங்க ணங்கவர வினம்பொரு வில்செம் மணிவிராய்
அங்க ணங்க வலயங்களு மிலங்க வணியச்
சங்க ணங்கிய சலஞ்சல மலம்பு தவளக்
கங்க ணங்களு மிலங்கிய கரம்பி றழவே,

செம் கண் அங்க அரவு இனம் - சிவந்த கண்களையும் (நீண்ட) உடலையும் உடைய பாம்புக் கூட்டங்களின், பொருவு இல் செம் மணி - ஒப்புமையற்று உயர்ந்த சிவந்த மாணிக்கங்களாகிய நாகரத்தினங்களை, விராய் - கலந்து அமைக்கப் பெற்ற, அம் கண் - இடமகன்ற அங்க வலயங்களும் - தோள் வளைகளும், விலங்க - அசைய, விரவி - ஒன்று சேர்ந்து, சங்கு அணங்கிய - சங்குகள் கண்டு அதன் பெருமையில் பகைகொண்ட, சலஞ்சலம் அலம்பு - சலஞ்சலம் என்னும் உயர்ந்த சாதிச் சங்குகளால் ஆகி ஒலிக்கின்ற, தவள கங்கணங்களும் - வெண்ணிறமான வளைகளும், இலங்கிய கரம் - விளங்கிய கைகள், பிறழ - விளங்க, ஏ : ஈற்றசை.

விலங்குதல் - அசைதல்; மாறுபட்டு ஒலித்தலும் ஆம். சலஞ்சலம் ; வலம்புரி ஆயிரம் சூழ்ந்த ஓர் உயர்ந்த சாதிச் சங்கு ; பால. நாட்டுப். 18 ; சீவக. 184. பின், கங்கணங்கள் தனியே குறிக்கப் பெறுவதால் முன் வந்த அங்க வலயம் என்பதைத் தோள்வளை எனக் கொள்ளப் பெற்றது. "வெங்கணங்கை - பொல்லாப்புக்கு இடமான கை. அம் - இகழ்ச்சி, சங்கு அணங்கிய சலஞ்சலம் - சங்கமும் அழகிய சலஞ்சலமும்" என்பன பழையவுரை.

பி-ம். 1. செங்கணங்கரவெனும் ; கரவினும்.
2. வெங்கணங்க வலயங்களுமிலங்க வணிய.
3. சங்கிணங்கிய ; மலம்பு தழுவக்.
4. கங்கணங்களு மிலங்கக். (16)

**17.** முந்து வெள்ளிமலை பொன்னின் மலையோடு முரணப்
பந்தி னுந்துகழல் பாடுபட வூடு படர்வோன்
வந்து மண்ணினிடை யோனெனினும் வானி னிடையோர்
சிந்தை யுள்ளும் விழியுள்ளு முளனென்ற திறலோன்,

முந்து - (மலைகளில்) முன் வைத்து எண்ணத்தக்க, வெள்ளி மலை-வெண்ணிறமான கயிலாய மலையோடும், பொன்னின் மலையோடு- பொன் மயமான மேரு மலையோடும், முரண - முன்பின்னாக மாறு பட்டுச் செல்ல, பந்தின் உந்து - பந்துகளைப் போல உந்தப்பட்டு, கழல் பாடுபட - தன் கால்களால் தடுமாற்ற முற்று அவதியுற, ஊடு படர்வோன் - அம்மலைகளின் இடையே நடந்து செல்வோனான அவ்வரக்கன், வந்து மண்ணின் இடையோன் எனினும் - வந்து பூமியினிடையே உள்ளான் என்றாலும், வானின் இடையோர் - ஆகாயத்தினிடத்துள்ளோர்களான தேவர்களின் மீது, சிந்தை உள்ளும் - மனத்தினுள்ளும், விழி உள்ளும் - கண்களினிடத்தும், உளன் என்ற திறலோன் - உள்ளவன் என்று சொல்லத்தக்க வலிமை யுடையவன்.

வெள்ளி மலை பொன்மலையோடு முரணுவன - அவன் காலினால் உந்தப் பெற்றமையால் ஏற்பட்ட நிலை மாறுபட்டால். பாடு படல் - நிலை தடுமாறி அவதியுறுதல். படர்தல் - விரைந்து செல்லுதல்; அயோத். 344. அவ்வரக்கன் புவியில் உள்ளான் எனினும் வானில் உள்ள தேவரும் அவனிடம் உள்ள அச்சத்தால், எப்பொழுது வருவானோ என்று மனத்தால் எண்ணியும், கண்களால் பார்த்தும் அஞ்சியிருப்பர் என்பதாம்.

பி - ம். 1. பொன்னின் மலை வெள்ளிமலை; யொத்த மலைகள்.
2. பந்தமுந்து. 3. வந்த மண்ணினிடை.
4. முனநின்ற திறலோன். (17)

**18.** பூத மத்தனையு மோர்வடிவு கொண்ட புதிதென்
றோத வொத்த வுருவத்த னுருமொத்த குரலன்
காத லித்தய னளித்த கடையிட்ட கணிதப்
பாத லக்கமத வெற்பவை படைத்த வலியான்,

பூதம் அத்தனையும் - ஐந்து பூதங்களும், ஓர் வடிவு கொண்ட - சேர்ந்து ஒரு வடிவு எடுத்துக்கொண்டதான, புதிது என்று - புதிதான ஒன்று என்று, ஓத ஒத்த உருவத்தன் - சொல்லத்தக்க உருவத்தையுடையவன்; உரும் ஒத்த குரலன் - இடிபோன்ற குர

லோசை யுடையவன், அயன் - பிரமதேவன், காதலித்து அளித்த - விரும்பி அளித்த, கடை இட்ட பாத லக்கம் - கணக்கிட்டு முடிவு செய்தருளிய கால் லக்ஷம், மத வெற்பு இடை படைத்த - மத யானைகள் தம் இடத்து அடைந்த, வலியான் - வலிமையை உடையவன்.

அவ்வரக்கன், ஐம் பெரும் பூதங்களும் ஒன்று சேர்ந்து ஓர் உருப்பெற்றாற் போன்ற வடிவத்தையுடையவன்; இடிபோன்ற வலிய குரலையுடையவன் ; பிரமதேவனால் வரமாகக் கொடுக்கப் பெற்ற கால் லக்ஷம் அதாவது இருபத்தையாயிரம் யானைகளின் வலி அமைந்தவன்.

பி - ம். 1. பூத மித்தனையு. 2. வுருவ னுருமொத்த.
4. பாதலத்த ; பாதலத்து ; வெற்பிடை. (18)

19. சார வந்தயல் விலங்கினன் மரங்க டரையில்
பேர வன்கிரி பிளந்துக வளர்ந்தி கல்பெரு
வீர வெஞ்சிலையி னோரெதிர் விராத னெனுமக்
கோர வெங்க ணுருமே றனகொடுந் தொழிலினான்.

விராதன் எனும் - விராதன் என்று சொல்லப்படும், அ கோர வெம் கண் - அந்தப் பயங்கரமான கொடிய கண்களையும், உரும் ஏறு அன - பேர் இடி போன்ற, கொடும் தொழிலினான் - கொடிய செயல் களையுமுடைய அவ்வரக்கன், மரங்கள் தரையில் பேர - (அண்டையி லுள்ள) மரங்கள் (அவனது கடிய நடையின் வேக அதிர்ச்சியால்) தரையில் தாம் நின்ற இடம் விட்டுப் பெயர்ந்து விழவும், வன் கிரி பிளந்து உக - வலிய மலைகள் பிளவுண்டு சிதறிப் போகவும், வளர்ந்து - பேருருக்கொள வளர்ந்து, இகல் பெரு வீர வெம் சிலையினோர் - அதுவரையில் போரை அடையாத வீரர்களும், கொடிய வில்லையுடையவர்களுமான அந்த இராம லக்ஷ்மணர்களின், அயல் சார வந்து - அருகே அடுத்து வந்து, எதிர் விலங்கினன் - எதிரே குறுக்கிட்டு நின்றான்.

இகல் பெரு வீர வெஞ் சிலையினோர் என்றமையால், அவ்வீரர் களான இராம லக்ஷமணர் போரை எதிர் நோக்கி அத்தண்டக வனம் புகுந்தனர் என்பது உணரப்பாலதாம். தொழிலினான் (19) கழு வொடே (6) வளர்ந்து (7) சார வந்து அயல் விலங்கினன் என இயைத்துப் பொருள் முடிவு செய்க. விலங்குதல் - குறுக்கிடுதல் ;

'ஆறுகெட விலங்கிய வழலவிராரிடை,'' (கலிங். 2.) விராதன் என்ப தற்கு, எதிலும் திருப்தி அடையாதவன் என்பது பொருள்.

பி-ம். 1. சார வந்தெதிர்; எதிர் விளங்கினன்; விலங்கின மரங்கள்.
4. னுருமேறெனக். (19)

விராதன் பிராட்டியை எடுத்தேகிப் பின் விடுத்தல் 20—25.

20. நில்லு நில்லுமென வந்து நிணமுண்ட நெடுவெண்
பல்லும் வல்லெயிறு மின்னு பகுவாய் முழைதிறந்
தல்லி புல்லுமல ரன்ன மனையாளை யொருகைச்
சொல்லு மெல்லையின் முகந்துயர் விசும்பு தொடர,

நிணம் உண்ட - மாமிசம் நிறைந்த, நெடு வெண் பல்லும் - நீண்ட வெண்ணிறமான பற்களும், வல் எயிறும் - வலிய பற்களின் மேல் ஓரங்களும், மின்னு பகுவாய் முழை - ஒளி விளங்கித் தோன்றும் பிளந்த வாயாகிய குகையை, திறந்து - திறந்து கொண்டு, "நில்லும் நில்லும் - நில்லுங்கள் நில்லுங்கள்" என சொல்லும் எல்லையில் - என்று அச்சொற்களைச் சொன்ன நேரத்திற் குள்ளேயே, அல்லி புல்லு மலர் - அகவிதழ்கள் நெருங்கிய தாமரை மலர் மீது விளங்கும், அன்னம் அனையாளை - அன்னப் பறவை போன்ற பிராட்டியை, வந்து - எதிர் வந்து, ஒரு கை முகந்து - ஒரு கையால் எடுத்துக்கொண்டு, உயர் விசும்பு தொடர - உயர்ந்த ஆகாயத்தில் தொடர்ந்து செல்ல,

எயிறு - பல்லின் விளிம்பும் ஆம்; (பிங்.). நில்லும் நில்லும்: அடுக்கு, விரைவுப் பொருளது. அல்லி புல்லும் மலரன்னம் அனையாள் - அக இதழ்கள் நிறைந்த தாமரை மலர்மீது விளங்கும் திருமகள் போன்றவள் எனவும் பொருள் கொள்ளலாம். நில்லு நில்லும் எனச் சொல்லுமெல்லையில் முகந்து என இயைக்க.

பி-ம். 1. நிணனுண்ட, நெடுவன்.
2. பின்று பகுவாய். 4. முகந்தகல் வனென்று தொடர. (20)

21. காளை மைந்தரது கண்டு கதம்வந்து கதுவத்
தோளில் வெஞ்சிலை யிடங்கொடு தொடர்ந்து சுடர்வாய்
வாளி தங்கிய வலங்கை யவர்வஞ் சனையடா
மீள்தி யெங்ககறி யென்பது விளம்ப வவனும்,

காளை மைந்தர் - இளம் இடபம்போன்ற வலிமையுடைய அந்த இராம லக்ஷ்மணர்கள், அது கண்டு - அவ்விராதனது அச்செயலைக்

கண்டு, கதம் வந்து கதுவ - கோபம் மேலிட, தோளில் வெம் சிலை இடம் கொடு - தோளில் மாட்டியிருந்த கொடிய வில்லைத் தம் இடக் கையில் கொண்டவர்களாய், சுடர் வாய் வாளி தங்கிய வலங்கை அவர் - ஒளி பொருந்திய அம்புகள் தங்கிய வலக் கையினராய், தொடர்ந்து - அவ்விராதனைப் பின்தொடர்ந்து சென்று, "அடா - ஏ அற்பனே! வஞ்சனை - நீ செய்யும் இச்செயல் வஞ்சகமானது; எங்கு அகல்தி - நீ எங்குச் செல்லுகிறாய்? மீள்தி - திரும்புவாயாக!" என்பது விளம்ப - என்னும் சொற்களைக் கூற, அவனும் - அவ் வரக்கனும்,

காளை : பெருமிதம், வலிமை, முதலியவற்றிற் சிறந்ததாதலின், சிறந்த ஆடவருக்கு உவமித்தல் கவிமரபு, 'கைவரை யெனத் தகைய காளை' (பால. தாடகை. 47). அடா : 22; குறிப். அகறி : அகல்தி : முன்னிலை ஏவல் ஒருமை வினைமுற்று.

பி - ம். 1. கதுவித்; கதழ்வந்து கதுவத்.
2. தோளின் வெஞ்சிலை: தொடர்ந்த சுடர்வாள்.
3. வலங்கையர்; வஞ்சனையெடா. (21)
4. மீளுகெங் ககறி: மீள வெங்ககறி யென்பது விளம்பி யவனும்.

22. ஆதி நான்முகன் வரத்தி னெனதாவி யகலேன்
ஏதி யாவதுவு மின்றி யுலகியாவு மிகலில்
சாதி யாதனவு மில்லை யுயிர்தந் தனெனடா
போதி மாதிவளை யுந்தி யினிதென்று புகல,

"ஆதி நான்முகன் - படைப்பின் முதலில் தோன்றிய பிரம தேவன், வரத்தினால் - எனக்கு அளித்த வரத்தினால், எனது ஆவி அகலேன் - என் உயிர் நீங்கமாட்டேன்; உலகு யாவையும் - உலகங் கள் யாவற்றிலும் உள்ளோர் அனைவரும், இகலில் - என்னோடு எதிர்த்துச் செய்யும் போரில், ஏதி யாவையும் இன்றி - ஆயுதம் ஒன்றும் இல்லாமலே, சாதியாதனவும் இல்லை - நான் செய்து முடிக் காத காரியங்களே இல்லை; உயிர் தந்தனன் - உங்களுக்கு இரங்கி உயிர் தந்துவிட்டேன், அடா : மாது இவளை உந்தி - இந்தப் பெண்ணை என்பால் விட்டுத் தள்ளிவிட்டு, இனிது போதி - இனிதே உயிர் தப்பிப் போவாயாக" என்று புகல - என்று அவ்விராதன் சொல்ல,

ஆதி நான்முகன் : 'மலரயனே முதலாக வுளராகி மாயாத வானவர்' 53; தேவர்களுள் முதலில் வைத்து எண்ணப்பெறும்

நான்முகன் என்னலும் ஒன்றும். நான்முகன் வரத்தினுல் என்றமை யால், விராதன் பிரமதேவரிடம் வரம்பெற்றவன் எனத் தெரிகிறது; இவன் பிரமதேவரைக் குறித்துத் தவஞ்செய்து வரம்பெற்றமைக்கு ஆதாரம் கிடைக்கவில்லை ; இஃது ஆராயப்பாலது. ஏதி - ஆயுதம்; சுந்தர. *209, 231*. அடா : இகழ்ச்சிக் குறிப்பு ; *21, 379, 522*. ஏதியாவையு மின்றி - காரணமில்லாமலே என் இஷ்டப்படி என்றும் பொருள் கூறலாம். போதி என்றது : இராமபிரானை நோக்கிக் கூறியது. இனிது போதி - உயிர் தப்பிப் பிழைத்தோம் என்ற மகிழ்ச்சி யோடு போ, எனவும் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 1. தாவி யளியேன்.
2. யாவதுவு மன்றி ; ஏதி யாலு மிதுவன்றி.
3. சாதியாததுவு.
4. போதிர் மாதிவளை ; யுந்தியென தென்று புகல ; யினி யென்று புகல ; புகல்வான். (22)

23. வீர னுஞ்சிறிது மென்முறு வல்வெண் ணிலவுகப்
போர றிந்தில னிவன்றனது பொற்பு முரணும்
தீரு மெஞ்சியென நெஞ்சிலுறு சிந்தை தெரியப்
பார வெஞ்சிலையி ஞணெலி படைத்த பொழுதே,

வீரனும்-வீரனை இராமபிரானும், மெல் முறுவல் சிறிது வெண் நிலவு உக - மென்மையான தன் பற்களினின்றும் சிறிது வெள்ளிய நிலாவொளி சிந்த, "போர் அறிந்திலன் - போர் செய்வதின் முறை அறியாதவனை, இவன் தனது பொற்பும் முரணும் - இவனது பொலிவும் வலிமையும், எஞ்சி தீரும் என - குறைந்து அழிந்து விடும்" என்று, நெஞ்சில் உறு சிந்தை தெரிய - (தான் போரிட வல்லன் என்ற) தன் மனத்தின் எண்ணம் வெளிப் படுமாறு, பார வெம் சிலை யின் - வலிய தன் பயங்கரமான வில்லின், நாண் ஒலி - நாணைத் தெறித்தலாகிய ஓசையை, படைத்த பொழுது - உண்டாக்கிய பொழுது, ஏ : ஈற்றசை.

போரிடாமல் வஞ்சகமாய்ப் பிராட்டியை விரைவில் அபகரித்துச் சென்றுனதலின், போரறிந்திலன் இவன் எனப்பட்டது. பொற்பு : "பொற்பே பொலிவு," (தொல்.) நெஞ்சினுறு சிந்தை தெரிய - அவ்வரக்கனது மன நிலையை அறிந்துகொள்ள, என்னலும் அமையும்.

பி-ம். 1. யெண் முறுவல்.
2. யிகற்றனது ; னினித்தனது ; பொற்பு முரணும்.
3. திரு மஞ்சியென ; திரு மிங்கிதனில் வஞ்ச முறு சிந்தை ;
திரு மிஞ்சிலணி னெஞ்சின. (23)

24\. இலைகொள் வேலட லிராம னெழுமேக வுருவன்
சிலைகொ ணுணெடிய கோதை யொலியேறு திரைநீர்
மலைக ணீடுதல நாகர்பிலம் வான முதலாம்
உலக மேழு முருமே றெனவொலித் துரறவே,

எழு மேக உருவன் - மேல் எழுகின்ற நீருண்ட மேகம் போன்ற திருவுருவை யுடையவனான, இலை கொள் வேல் அடல் இராமன் - அரசிலை போன்ற நுனியையுடைய வேலேந்திய வலிய இராமபிரானுடைய, சிலை கொள் - வில்லிடமாகக்கொண்ட, நெடிய கோதை நாண் ஒலி ஏறு - நீண்ட கோதை கொண்டு நாணிடத்தே உண்டாக்கும் பேரொலி. திரை நீர் மலைகள் நீடு தலம் - அலைகளோடு கூடிய கடல்களின் நீரும் மலைகளும் சூழ்ந்த நீண்ட புவி, நாகர் பிலம் - நாகர் வாழும் பாதலம், வானம் - சுவர்க்கலோகம், முதலாம் உலகம் ஏழும் - முதலாகிய ஏழு உலகங்களும், உரும ஏறு என - பெரிய இடியேறு போல, ஒலித்து உரற - பெருமுழக்கம் உண்டாக்க. ஏ : ஈற்றசை.

இலைகொள் வேல் - அரசிலை அல்லது வெற்றிலை போன்று அகன்று நுனி கூர்மையான வேல் ; 'சேயிலை வெள்வேல்' (குறுந். 15 : 5). வேல் இராமன் : இது, வேற்படை கொண்டு பொரும் சிறப்பினையுடைய தமிழ் வீரர் மரபுபற்றிக் கூறியது. இங்கு வேல் என்பது ஆயுதப் பொதுவைக் குறித்ததும் ஆம். கோதை - வில்லாளர் கையிற் பூணும் தோலுறை ; பிங் ; (746.) உலகம் ஏழு : மேலேழு, கீழேழு ஆகிய பதினான்கு உலகங்கள். உரறல் - எதிரொலி யுண்டாக்குதல் ; பேரொலி உண்டாக்குதல் ; சீவக. 865 ; மலைபடு கடாம். 357.

பி-ம். 1. னெழு தேமவுருவன் ; னெனுமேக வுருவன் ; வுருவான்.
2. திசைநீர் ; யொலி சென்று திசைநீர் ; கோதையின தேறு திசைநீர். 3. நீடுலக.................முதலா.
4. உலகம் யாவு முருமேறென. (24)

25. வஞ்ச கக்கொடிய பூசை நெடுவாயின் மறுகும்
பஞ்ச ரக்கிளி யெனக்கதறு பாவை யைவிடா
நெஞ்சு ளுக்கின னெனச்சிறிது நின்று நினையா
அஞ்ச னக்கிரி யனுனெதி ரரக்க னழலா,

அரக்கன் - அந்த இராக்கதனுகிய விராதன், வஞ்சக கொடிய பூசை நெடு வாயில் - வஞ்சத் தன்மையுடைய கொடிய பூனையின் பெரிய வாயிலே, மறுகும் - அகப்பட்டு மனம் வருந்தித் தவிக்கும், பஞ்சர கிளி என - கூட்டில் வாழும் கிளியேபோல, கதறு பாவையை விடா - கதறியழுத பிராட்டியைக் கீழே விட்டு விட்டு, நெஞ்சு உளுக்கினன் என - மனம் நடுக்கமுற்றவன் போல, சிறிது நின்று நினையா - சிறிது நேரம் செயலற்று நின்று ஆலோசித்து, அஞ்சன கிரி அனுன் எதிர் - கரிய மலைபோன்ற இராமபிரான் எதிரே நோக்கி, அழலா - கோபித்தவனுகி,

பூசை - பூனை ; 'பூசை முற்றவு நக்குபு புக்கென' (பால. பாயிரம். 4.) பஞ்சரக்கிளி - கூட்டினுள் வளர்க்கப்படும் கிளி ; பூனையைக் கண்ட கிளி ; 'பெரும் பூனை வந்தக்கால், கீச்சுக்கீச் சென்னுங் கிளி' (தனிப்பாடல். ஔவையார்) ; பஞ்சரக்கிளி ; அயோத். நகர்நீங்கு, 198. உளுக்குதல் - நெளித்துக் கொடுத்தல்; பால. கார்முகப் : 10. பாவை : உவமையாகுபெயராய்ப் பிராட்டியைக் குறித்தது. அஞ்சனக் கிரி - கரியமலை ; அஞ்சனம் - கருமை ; (பிங்.) இராமபிரானுக்கு அஞ்சனக்கிரி, 305 ; 702. அயோத். தைலமாட்டு. 52.

பி-ம். 1. பூசை வருவாயின் ; பூசை வரவாயின்.
2. பதறு பாவையை.
3. நெஞ்சுளுக்கின னதிற்சிறிது ; நெஞ்சுருக்கின னெனச்.
4. அழல ; விராத னழலா.

(25)

விராதன் இராமபிரானுடன் போரிட்டுச் சோர்வடைதல் 26—33

26. பேய்மு கப்பிணி யறப்பகைஞர் பெட்பி னுதிரம்
தோய்மு கத்தது கனத்தது சுடர்க்கு திரையின்
வாய்மு கத்திடை நிமிர்ந்து வடவேலை பருகும்
தீமு கத்திரி சிகைப்படை திரித்தெ றியவே.

(அவ்வரக்கன்), பேய் முக பிணிஅற - பேய்களிடத்து உள்ள பசியாகிய பிணி நீங்க, பகைஞர் - பகைவர்களுடைய, உதிரம் தோய் பெட்பின் முகத்தது - இரத்தம் தோயப் பெற்ற தன்மையதான

முகமாகிய நுனியையுடையதும், கனத்தது - வலிமையுடையதும், சுடர் குதிரையின் - தீச்சுடர் விட்டெரியும் குதிரையின் உருவில், வாய் முகத்து இடை நிமிர்ந்து - வாயையும் முகத்தையும் தன்னிடம் கொண்டு மேலோங்கி, வட வேலை பருகும் - வடதிசையில் உள்ள கடல் நீரைப் பருகும், தீ முக - வடவைத் தீயைத் தன்வாயினிடத்துக் கொண்டதுமான, திரி சிகை படை - மூன்று பிரிவான சுவாலைகளோடு கூடிய திரிசூலப்படையை, திரித்து எறிய - சுழற்றி இராமபிரான்மீது வீசியெறிய, ஏ : ஈற்றசை.

அவ்வரக்கனது திரி சூலப்படையில் எப்பொழுதும் இரத்தம் தோய்ந்துள்ளமையால் அதனைக் குடித்து, நீங்காப் பசியுடைய பேய்களும் தம் பசி நீங்கின ஆயின. வடவைத் தீ. இது, கடலில் வடபால் ஒரு பெண் குதிரையின் வடிவில் உள்ள தீ; இது கடல்நீரையுண்டு அதனை வற்றச் செய்யும் ஆற்றல் அமைந்தது; இது புராண வரலாறு. அவ்வடவைத் தீயே மூன்று நாவுடன் விளங்குவதுபோல அவ்விராதன் திரி சூலப்படை விளங்கியது என்க. திரி சூலம் : இது முத்தலை வேல்; மூவிலை வேல் எனவும் கூறப்பெறும்.

பி - ம். 1. பேய்முகத்தின் வரத்தமரர் பெட்பின்.
2. முகத்துறு; முகத்தெதிர்.

(26)

27. திசையும் வானவரு நின்ற திசைமாவு முலகும்
அசையு மாலமென வன்னவயின் மின்னி வரலும்
வசையின் மேருமுதல் மால்வரைக ளேழின் வலிசால்
விசைய வார்சிலை யிராமனொரு வாளி விடவே,

அன்ன அயில் - அந்தச் சூலப்படை, திசையும் - எட்டுத் திக்குக்களும், வானவரும் - அத்திக்குக்களுக்குக் காவலர் ஆகிய எட்டு திக்பாலர்களான தேவர்களும், நின்ற திசை மாவும் - அத்திக்குக்களில் நின்று உலகைத்தாங்கி நின்ற எட்டுத் திக்கஜங்களும். உலகும் - எல்லா உலகங்களும், அசையும் ஆலம் என - சஞ்சரிக்கும் ஒரு விஷமென்று (அஞ்சும்படி), மின்னி வரலும் - மின்னல் போல ஒளிவீசிக் கொண்டு வரவும், இராகவன் - இராம்பிரான், வசை இல் - குற்றம் அல்லது பழிப்பு இல்லாத, மேரு முதல் மால் வரைகள் எழின்-மேரு முதலாக உள்ள குலபருவதங்கள் ஏழைவிட, வலிசால்-வலிமை மிகுந்த, விசைய வார் சிலை - வெற்றிதரும் தன் நீண்ட வில்லினின்றும், ஒரு வாளி விட - ஓர் அம்பைத் தூண்டி எய்யவும், ஏ : ஈற்றசை.

திசையும் வானவரும் - திசைமாவும் உலகும், என்பதற்கு திகைக்கின்ற தேவரும், திக்கயங்களும் உலகங்களும் எனவும் பொருள் கொள்ளலாம்; திசைத்தல் - திகைத்தல்; ‘ திசைத்தது மில்லை’ (அயோத். கைகேசி சூழ்வினைப்: 18, 19); கானத் தீயிற் கடுகுபு திசைப்ப’ (பெருங். 1. 43 : 204). அசையும் ஆல மென - நடுங்குவதற்குக் காரணமான விஷமென்று, எனப் பொருள் கூறுவாரும் உளர். திசை யானைகள் எட்டு அவை: ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவ பௌமம், சுப்ரதீகம், என்பன; மால் வரைகள் ஏழாவன: கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி. விசயம் என்பது எதுகை நோக்கி, விசையம் எனத் திரிந்துள்ளது. இனி, வாளி விசைய விட்வே என இயைத்து அம்பை வேகமாக விட எனக்கொள்ளலும் ஏற்கும். அன்றி விசைய இராமன் என இயைத் தலும் ஒன்றும்.

பி - ம். 1. திசையாவு முலகும்.
2. மன்னி வரலும்; மின்ன வரவும்; மின்னி வரவும்.
3. வலிதாம்; வழிசால். (27)

28. இற்ற தின்றொடிவ் வரக்கர்குல மென்று பகலே
வெற்ற விண்ணினிடை நின்று நெடுமீன் விழுவபோல்
சுற்ற மைந்த சுடரெஃகம திரண்டு துணியா
அற்ற கண்டமவை யாசையின தந்த முறவே,

இ அரக்கர் குலம் - இந்த இராக்கதக் குலம், இன்றொடு இற்றது என்று - இன்றோடு அழிந்தது என்று, பகலே - பகற் போதிலேயே, வெற்ற விண்ணின் இடை நின்று - மேகமற்ற வெறும் ஆகாயத்தினிடமிருந்து, நெடு மீன் விழுவபோல் - பெரிய நக்ஷத்திரங்கள் தரையில் வீழ்வனபோல், சுற்று அமைந்த சுடர் எஃகம் அது - தன்னைச் சுற்றிலும் பொருந்திய ஒளியையுடைய அந்த (விராதனுடைய) சூலம், இரண்டு துணியா - இரண்டாகத் துண்டிக் கப்பட்டு, அற்ற கண்டம் அவை - அழிந்த அத்துண்டங்கள், ஆசையினது அந்தம் உற - திசைகளின் எல்லை முடிவில் போய் விழவும்,

‘ வெற்ற விண் - வெறும் விண்’, பழையவுரை. அதாவது, வேறு ஒன்றும் இல்லாத சூன்யமான விண். வான் மீன்கள் பகலில் விழா;

அவ்வாறு விழுமேல் அது இனிவரும் கேட்டிற்கு அறிகுறி ; அச் சூலத்தின் துண்டங்கள் வான் மீன்களாக விழ நேர்ந்ததால், அரக்கர் களுக்கு இனி வரப்போகும் அழிவுக்கு அஃது ஓர் உற்பாதகமாகவும் உவமிக்கப் பெற்றது ; சுந்தர. 372. இற்றது என்றது, உறுதியை அறிவிக்கவந்த காலவழுவமைதி. எஃகம் - எஃகு ; அம் : சாரியை ; எஃகின லானமையின் சூலத்தைக் குறிப்பது; இது முதலாகு பெயர். நெடுமின் விழுவபோல் எனப் பாடங் கொண்டு (மேகமற்ற வெறும் ஆகாயத்தினின்று) நெடிய மின்னல் விழுவது போல உற்பாதமாகக் கொள்ளலும் ஆம்.

பி-ம். 2, வெற்ற விண்ணிடையின். 3. துணியாய். (28)

29. சூரொ டுங்கயி றுணிந்திறுதல் கண்டு சிறிதும்
போரொ டுங்கலன் மறங்கொடு புழுங்கி நிருதன்
பாரொ டுங்குறு கரங்கொடு பருப்ப தமெலாம்
வேரொ டுங்கடி தெடுத்தெதிர் விசைத்து விடலும்,

நிருதன் - அவ்வரக்கன், சூர் ஒடுங்கு அயில் - கொடுமை தங்கி யுள்ள தன் சூலம், துணிந்து இறுதல் கண்டு - துண்டு ஆகி அழிந்ததைப் பார்த்தும், சிறிதும் போர் ஒடுங்கலன் போர் செய்வதில் சிறிதும் குறையாதவனாகி, மறம் கொடு - கொடிய தன்மையை மேற் கொண்டவனாய், புழுங்கி - கோபத்தால் மனம் வெதும்பி, பார் ஒடுங்குறு கரம் கொடு - பூமியும் உள்ளடங்கும் படியான தன் பெரிய கைகளைக் கொண்டு, பருப்பதமெலாம் (தன்னெதிர்ப்பட்ட) மலைகளை யெல்லாம், வேரொடும் கடிது எடுத்து - வேரோடு விரை வில் பறித்தெடுத்து, எதிர் - (இராமபிரானுக்கு) எதிரே, விசைத்து (விடலும்) - வேகமாக விடலும்,

சூரொடுங்கு அயில், என்பதற்குத் தேவரும் அஞ்சி ஒடுங்கும் சூலம் எனப் பொருள் கொள்வதும் உண்டு; சூர் - தேவர் ; சூரொடுங்கு அயில் - வஞ்சம் அல்லது கொடுமை அடைந்த வேல் எனவும் பொருள் கூறுவர். நிருதன் : தத்திதாந்தம்; நிருதி வழித் தோன்றினவன் ; சுந்தர : 824. பருப்பதம் : பர்வதம் என்ற வட சொல்லின் திரிபு. விசைத்தல் : 27.

பி-ம். 1. துணித்திடுதல் கண்டு.
2. போரொடுங்கிலன் ; புழுங்கு நிருதன்.
3. பாரொடுங் கரமொடு.
4. தெடுத்தவன் விசைத்து ; தெதிர் விரைந்து விடலும். (29)

30. வட்ட மிட்டுமிளிர் நெற்றியின் வயங்கு வயிரக்
கட்ட மைந்த கதிர்வாளி யெதிரே கடவலால்
விட்ட விட்டவரை மீளவவன் மெய்யின் விசையால்
பட்ட பட்ட விடமெங்கு முடலூறு படலும்,

வயங்கு வயிர கட்டு அமைந்த - விளங்குகின்ற உறுதியான கட்டுக்கள் பொருந்தப்பெற்ற, கதிர்வாளி - ஒளிவீசும் அம்பை, வட்டம் இட்டு மிளிர் நெற்றியின் - வட்டமாக விளங்கும் விராதன் நெற்றியின் எதிரே, கடவலால் - எதிராக இராமபிரான் செலுத்தினதால், விட்ட விட்ட வரை - ஒன்றன் பின் ஒன்றாக அவன் வீசியெறிந்த மலைகள், மீள - திரும்பிப் போக, அவன் மெய்யில் - அவ்விராதன் உடலில், உடன் - உடனே, விசையால் - வேகத்தால், பட்ட பட்ட இடம் எங்கும் - அம் மலைகள் மேன்மேலும் அவன் உடலிற் பட்ட இடங்கள் எங்கிலும், ஊறு படலும் - காயங்கள் உண்டாகவும்,

வயிரக் கட்டமைந்த கதிர்வாளி - வயிரத்தைப் பதித்து உறுதியாகக் கட்டப்பட்ட ஒளியுடைய அம்பு ; கதிர் வாளி - அவ்வயிரங்களால் ஒளி வீசும் அம்பு. வட்டமிட்டு என்பதை வாளிக்கும் கூட்டலாம். விட்ட விட்ட ; பட்டபட்ட : அடுக்குகள் மிகுதியைக் குறிப்பன. இனி, நெற்றியின் வயங்கு வயிரக் கட்டமைந்த கதிர்வாளி, எதிரே கடவலால், விட்ட விட்ட வரைமீள, விசையால் அவன் மெய்யில் வட்டமிட்டு, பட்டப்பட்ட இடமெங்கும் ஊறு படலும், என இயைத்துப் பொருள் கொள்ளலும் ஒன்றும். இவ்வாறு கொள்ளின், நெற்றியின் முகப்பில், வயிரங்களை வைத்து இழைக்கப்பெற்ற ஒளி வீசும் அம்பை எனப் பொருள் கொள்க ; அம்பின் நுனியில் வைரம் பதிப்பது ; வயிரம் எதையும் பிளந்து செல்லு முறுதியுடையதாதலின். வாளி அவன் மெய்யில் விசையால் வட்ட மிட்டுப் பட்ட பட்ட இடமெல்லாம் ஊறுபடலும் எனவும், அவன் எறிந்த மலைகள் அவன் மெய்யில் திரும்பி வந்து தாக்கினமையால் ஊறு படலும் எனவும் கொள்ளலாம். ஊறு - புண் ; ‘ஊறறியாமெய்’ (புறநா. *167 : 6*)

பா - ம். 1. வட்டமிட்ட திருநெற்றியன் ; திருநெற்றியின் ; மிடைநெற்றியன் ; மிடைநெற்றியில்.
2. கட்டமைத்த.
3. விட்டவம் மலைகள்: மெய்யின் விசையில்.

(30)

31. ஓம ராமரை யொருங்கு முணர்வோ ருணர்வுறும்
நாம ராமவரை நல்லற நிறுத்த நணுகித்
தாம ராவணை துறந்து தரைநின்ற வரையோர்
மாம ராமர மிறுத்தது கொடெற்ற வரலும்,

ஓம் அ ராமரை - ஓம் என்னும் பிரணவ மந்திரத்தின் பொருளாகிய இராமபிரானை அவரை, ஒருங்கும் உணர்வோர் - முற்றும் நன்குணர்ந்த பெரியோரே, உணர்வு உறும் - அறிந்து கொள்ளக் கூடிய, நாமர் ஆம் அவரை - ராம என்னும் திருநாமமுடைய அவரை, நல் அறம் நிறுத்த - சிறந்த தருமத்தை நிலை நிறுத்தும் பொருட்டு, தாம் அராவணை துறந்து - தமக்குரிய ஆதிசேடனாகிய அரவணைப் பள்ளியை விட்டு நீங்கி, தரை நணுகி நின்றவரை - பூமியில் வந்து அவதரித்து நின்றவரை, ஓர் மராமரம் இறுத்து - (அவ்வரக்கன்) ஒரு பெரிய ஆச்சாமரத்தைப் பிடுங்கி ஒடித்து, அது கொடு - அதனைக் கொண்டு, எற்ற வரலும் - தாக்கி அடிக்க வரவும்,

ஓம ராமரை - ஓமங்களால் விளங்கும் வேள்வியும், வேள்விப் பயனுமாய் உள்ள இராமபிரானை. உணர்வோர் உணர்வுறும் நாமம் - ராம நாமம் நல்லறிவுடையோர் அறியும் பொருளாக விளங்குவது என்பதாம்; இவ் வுண்மையை, ‘நிற்கின்ற செல்வம் வேண்டி நெறி நின்ற பொருள்களெல்லாம், கற்கின்ற விவன்றன் நாமம் கருதுவ திவனைக் கண்டாய்’ என்று வாலி, தன்னுயிர் நீங்கு நிலையில் தன் மைந்தன் அங்கதனுக்கு உபதேசமாக எடுத்துக் கூறுமுகத்தான் விளங்க வைத்தமை உணரப்பாலதாம்; கிட்கிந்தா. வாலி வதைப். 133. அறம் நிறுத்த......................தரை நின்றவரை: இராமபிரான் அறம் நிறுத்த அவதரித்தவன்; ‘அறை கழலிராமனாகி, அறநெறி நிறுத்த வந்த; (கிட்கிந்தா - வாலிவதை: 132); ‘அறந்தலை நிறுத்தி............ஈண்டுப் பிறந்தனன்’; (சுந்தர. 1123.) என்பனவற்றாலும், மேலும் இந்நூலில் பிறவிடங்களிலும் ஆங்காங்கு வலியுறுத்தியுள்ளமை நோக்குக.

குறிப்பு:— இராமர் என்ற சொல்லைக் கொண்டுள்ள, இச் செய்யுள், இடைச் செருகல் எனக் கருத இடந்தருகின்றது. ஆயினும் யாம் கண்ட பழைய ஏடுகள் அனைத்திலும், அச்சுப் பிரதிகளிலும் இது காணப்பெறுவதால் இது தொடர் எண் கொடுத்துச் சேர்த்தே பதிப்பிக்கப் பெற்றது.

பி-ம். 1. ஒம ராமவெனவே மறையுரைக்க வுணரும்.
2. ஙாம ராமரையவ் வல்லெனு நிறத்தனனுகி; நிறுத்தி நனுகி; நிறுத்தவனுகி: நாமராம பரனல்லற நிறுத்து நினைவால்.
3. நின்றதனியோர். (31)

32. ஏறு சேவக னிரண்டிரெ டிரண்டு கணையால்
வேறு வேறுதுணி செய்தது விழுத்தி விசையால்
மாறி மாறிநிமிர் தோளிடையு மார்பி னிடையும்
ஆறு மாறுமயில் வெங்கணை யழுத்த வவனும்,

ஏறு சேவகன் - நாளும் வளரும் வீரத்தன்மையுடைய இராம பிரான், இரண்டிரெடு இரண்டு கணையால் - நான்கு அம்புகளால், அது - அந்த மராமரத்தை, வேறு வேறு துணிசெய்து விழுத்தி - பல துண்டுகளாக வெட்டிக் கீழே விழத் தள்ளி, நிமிர் தோள் இடையும் - உயர்ந்து விளங்கிய அவ்வரக்கன் தோள்களினிடத்தும், மார்பின் இடையும் - மார்பினிடத்தும், மாறி மாறி - வெவ்வேருக, ஆறும் ஆறும் அயில் வெம் கணை - பன்னிரண்டு கூரிய கொடிய அம்புகளை, விசையால் அழுத்த - வேகத்தால் பதியும்படி ஏவ, அவனும் - அவ்வரக்கனும்.

ஏறு சேவகன் - ஒரு காலைக் கொருகால், வீரம் உயர நிற்பவன்; ஆண் சிங்கம் போன்ற வீரத்தன்மையுடையவன் என்பாரும் உளர்; அயோத். தைலமாட்டுப்: 42; சுந்தர. 625; உயுத்த. கும்பகருண. 343, 350; இராவணன்வதைப்: 174. இடை - இடம்; 'இடமு நுசுப்பு நடுவு மிடையெனல்' (பிங்).

பி-ம். 2. வேறுவேறு தனி.
3. மாறுமாறு தொளைப்ப; மார்பிடையினும். (32)

33. மொய்த்த முட்டன துடற்றலை தொளைப்ப முடுகிக்
கைத்த வற்றினிமிரக் கடிது கன்றி விசிறும்
எய்த்த மெய்ப்பெரிய கேழலென வெங்கும் விசையில்
தைத்த வக்கணை தெறிப்பமெய் சிலிர்த்து தறவே.

தனது உடல் தலை - தன் உடலினிடத்து, மொய்த்த - மிகுதி யான, முள் - அம்புகள், தொளைப்ப - துளைத்துச் செல்ல, முடுகி - வேகமாக, கைத்து - அதனல் மனம் வெறுப்புற்று, அவற்றின் நிமிர - அவ்வம்புகளினின்றும் விடுபட, கடிது கன்றி விசிறும் - விரை வாகக் கோபித்துச் (சிலிர்த்து) சிதறச் செய்யும், எய்த்த - வருந்திய,

பெரிய மெய் கேழல் என - பெரிய உடலையுடைய காட்டுப் பன்றியைப்போல, எங்கும் - (அவ்விராதன்) தன் உடல் எங்கும், விசையில் தைத்த அ கணை - வேகமாகப் பொத்திய இராமபிரானின் அந்த அம்புகள், தெறிப்ப - சிதறி விழுமாறு, மெய் சிலிர்த்து, உதற - அவன் தன் உடலை சிலிர்த்துக் கொண்டு உதறவும், ஏ : ஈற்றசை.

அம்பை முள் என்றது அதன் கூர்மை பற்றி. இராமன் அம்புகள் உடலில் தைக்கப் பெற்ற விராதனுக்கு எய்த்த கேழல் உவமை; எய்த்த கேழல் - முள்ளம் பன்றி என்பாரும் உளர்.

பி - ம். 1. மொய்த்து முட்டின வுடற்றலை முகத்தின் முடுகக்; முனைத்த முடுகிக்.
2. கைத்தலத்தி னிமிரக்; கைத்தலந்து நிமிரக்: கன்ற விசிறும்.
3. மெய்ப்பெயர்ப் பெரிய, எய்ப்பெயர்ப் பெரிய: விசையால்.
4. தைத்த வெங்கணை; மெய் சலித்துதறவே; சலித்துதறினன்.

**இராம லக்ஷ்மணர் விராதன் தோள்மேல் ஏறி அவனை வெட்டி வீழ்த்தல் 34—42.**

34. எரியின் வார்கணை யிராமன்விட வெங்கு நிலையா
துருவி யோடமற மோடு தல்செயா வுணர்வினன்
அருவி பாயும்வரை போற்குருதி யாறு பெருகிச்
சொரிய வேகவலி கெட்டுணர்வு சோர்வு றுதலும்,

எரியின் வார் கணை - நெருப்புப் போன்ற நீண்ட அம்புகளை, இராமன் விட - இராமபிரான் விட, எங்கும் நிலையாது - அவ்வம்புகள் எவ்விடத்தும் தங்கியிராது, உருவி ஓட - அவன் உடலில் ஊடுருவிச் செல்ல, மறம் ஓடுதல் செயா உணர்வினன் - தன் வீரத்தன்மை குறையாத உணர்ச்சியையுடைய அவ்வரக்கன், அருவி பாயும் வரை போல் - அருவிகள் பாய்ந்து ஓடும் மலைபோல, குருதி ஆறு பெருகி சொரிய - உதிரம் நதி போலத் தன் உடலினின்றும் பெருக்கெடுத்துச் சொரிந்து விழ, வேக வலி கெட்டு - வேகமாய் ஓடும் தனது வலிமை குறைந்து, உணர்வு சோர்வு உறுதலும் - அறிவு கெட்டுச் சோர்வடையவும்,

எரியின் வார்கணை - அக்கினியாத்திரமும் ஆம். விராதனுக்கு வரையும், அவன் மேலிருந்து ஒழுகிய இரத்தப் பெருக்குக்கு, அம் மலையீது வழிந்து வீழும் அருவியும் உவமைகள். அருவிபாயும் வரை, குருதி ஒழுக்குக்கு; (பு. வெ. 26.)

பி - ம். 1. நிலையா (வுருவி): மெய்யினிலையா.
2. செய்யா வுருவினன்; செய்யா வுணர்வினேன்.
4. சொரிய வெம்சம ரடுத்தவன் வெகுண்ட பொழுதே. (34)

35. மெய்வ ரத்தினன் மிடற்படை விடப்ப டுகிலன்
செய்யு மற்றுமிக லென்று சினவா ளுருவிவன்
கைது ணித்து மெனமுந்து கடுகிப் படர்புயத்
தெய்வின் மற்பொருவு தோளிருவ ரேற நிருதன்,

எய்வு இல் - சோர்வு இல்லாத, மல் பொருவு தோள் இருவர் - மற்போர் புரிவதிற் தேர்ச்சி பொருந்திய தோள்களையுடைய அந்த இராம லக்ஷ்மணர்களான அவ்விருவரும், "மெய்வரத்தினன் - (இவன்) அழியாத வரம் பெற்றவன்; மிடல் படை விட படுகிலன் - வலிய ஆயுதங்களான அஸ்திரங்களைத் தூண்டியும் அழியாதவனாய் இருக்கின்றான்; மற்றும் இகல் செய்யும் - மேலும் இவன் போர் புரிவான்; என்று - என்று கருதி, சின வாள் உருவி - கோபத்தோடு (ம்) வாள்களை உருவி, வன் கை துணித்தும் என - இவனுடைய வலிய கைகளை வெட்டி விடுவோம்" என்று, முந்து கடுகி - அவன் முன் விரைந்து சென்று, படர் புயத்து ஏற - அவனுடைய பரந்த தோள்களின் மீது ஏற, நிருதன் - அவ் விராதன்,

முன் செய்யுளில் கூறியபடி விராதன் சோர்வுற்ற நிலையில் இராம லக்ஷ்மணர்கள் இருவரும் அவன் கைகளைத் துணிக்கக் கருதி அவன் புயத்து ஏறினர் என்க. அதனை யுணர்ந்த அவ்வரக்கன் செயல் அடுத்த கவியிற் கூறப்பெறும். சினம் என்பதை வாளின் மேலேற்றி, போர்க்கு உரிய வாளை உருவி எனப் பொருள் கொள்ளலும் ஒன்றும். உருவி, ஏற, எனவும் கூட்டலாம். சினம் - போர், (திவாகரம்). எய் வில் மல் பொருவு தோளிருவர் - அம்புகளை எய்யும் விற்களையுடைய மற்பொருவு தோளினர் எனவும் பொருள் கொள்வர்.

பி - ம். 4. தெய்தமற் பொருவு; மார்பொருவு. (35)

36. உண்டெ ழுந்தவுணர் வவ்வயி னுணர்ந்து முடுகித்
தண்டெ ழுந்தனைய தோள்கொடு சுமந்து தழுவிப்
பண்டெ ழுந்தனது வன்கதி பதிற்றின் முடுகிக்
கொண்டெ ழுந்தனன் விழுந்திழி கொழுங்கு ருதியான்.

விழுந்து இழி கொழும் குருதியான் - கீழே விழுந்து சொரிகின்ற கொழுப்பு மிக்க இரத்தத்தையுடைய அந்த அரக்கன், அவ்வயின் - அந்நிலையில், உண்டு எழுந்த உணர்வு உணர்ந்து - (அதுகாறும்) அடங்கியிருந்து பின் மேற்கிளம்பிய உணர்ச்சியை அடைந்தவனாகி,

(அதாவது இராம லக்ஷ்மணர் இருவரும் அப்போது தன்மீது உள்ளார் என்றதை அறிந்தவனாய்), தண்டு எழுந்தனைய தோள் கொடு - தண்டு நிமிர்ந்தது போன்ற தன் தோள்களைக் கொண்டு, தழுவி சுமந்து - அவர்களை அணைத்துத் தூக்கி, பண்டு எழும் தனது வல் கதி பதிற்றின் முடுகி - பழமையில் தன்னிடம் உண்டாகும் வலிய வேகம் முன்னைவிடப் பதின்மடங்காக விரைவு கொண்டு எழுந்தனன் - அவர்களுடன் மேற்கிளம்பிச் செல்வானாயினன்.

தண்டு : தண்டம் என்னும் என்ற சொல்லின் திரிபு. ''உண்டெழுந்த உணர்வு - கெட்டுப்போய்வந்த உணர்வு'' பழைய உரை.

பி - ம். 1. உண்டிழந்த வுணர்; உண்டழிந்த வுணர்.
2. சுமந்து தவிராப்.
3. வன்கதி பயிற்றல் கருதிக்; பதிற்றிகடுகி; பதித்துமுடுகி; பதிற்றின் மிகவே. 4. விழுந்தழி கொழுங். (36)

37. முந்து வான்முக டுறக்கடிது முட்டி முடுகிச்
சிந்து சோரியொடு சாரிகை திரிந்த னனரோ
வந்து மேருவினை நாடொறும் வலஞ்செய் துழலும்
இந்து சூரியரை யொத்திரு வரும்பொ லியவே.

மேருவினை - மேரு மலையை, நாள்தொறும் - தினமும், வலம் செய்து வந்து உழலும் - பிரதக்ஷிணம் செய்து வந்து திரியும், இந்து சூரியரை ஒத்து - சந்திர சூரியர்களைப் போன்று, இருவரும் பொலிய - அந்த இராம லக்ஷமணர்கள் இருவரும் அவன் தோள்களின் மீது விளங்க, முந்துவான் முகடு உற - மேல் உள்ள வானத்தின் உச்சி மோட்டைப் பொருந்தும்படி, கடிது முட்டி - வேகமாக முட்டிக் கொண்டு, சிந்து சோரியொடு - வழியும் இரத்தத்தோடு, முடுகி சாரிகை திரிந்தனன் - (அவ்வரக்கன்) வேகமாக வட்டமிட்டுத் திரிந்தான். அரோ ; ஏ : அசைகள்.

சிந்து சோரியொடு திரியும் அரக்கனுக்கு மேரு மலையும், அவன் இரு தோள்களில் ஏறியிருந்த இராம லக்ஷ்மணர்களுக்கு இந்து சூரியர்களும் உவமை; 43. சந்திர சூரியர்கள் மேருவைத் தினம் வலம் வருவர் என்பது நூல் மரபு. சாரிகை திரிதல் - வட்டமாகச் சுற்றி ஓடுதல்; சுந்தர. 803; உயுத்த. கும்பகலைப். 104; சீவக. 2271; சூளா. 1367. இது சாரி எனவும் வழங்கும். இட சாரி வல சாரியாக மாறித் திரிந்தான் எனக் கொள்ளலும் ஒன்றும். முந்து

வான் : பஞ்ச பூதங்களுள் முன்வைத்து எண்ணப்பெறும் வான் என்றும் பொருள் கொள்ளலாம். 'வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பு' என்பதையும் நோக்குக; (அயோத். 1. கடவுள் வாழ்த்து).

பி-ம். 1. முட்ட முடுகிச்.
2. சோரிகொடு; சாரிதிரிந்தனனரோ; 3. துழல்வார். (37)

38. சுவண வண்ணனொடு கண்ணனிரு தோள்கள் பொலிய
அவண விண்ணிடை யெழுந்துபடர் கின்ற வனறம்
சிவண வன்னசிறை முன்னவரொ டேகு செலவத்
துவண வண்ணலெனு மன்னனையு மொத்த னனரோ.

சுவண வண்ணன் ஒடு - பொன் நிற மேனியுடைய லக்ஷ்மண னோடு, கண்ணன் - இராமபிரான், இரு தோள்கள் பொலிய - தன் இருதோள்களின் மீது விளங்க, அவண விண் இடை - அப்புறத் தான ஆகாயத்தினிடத்து, எழுந்து படர்கின்றவன் - எழுந்து செல் கின்றவனான அவ்வரக்கன், அறம் சிவண அன்ன - தருமம் பொருந்தி விளங்குவன போன்ற, சிறை - இறக்கைகளோடு, முன் அவரொடு ஏகும் செலவத்து - முன்னம் ஸ்ரீவைகுண் டத்தில், அந்த வாஸுதேவ ஸங்கருஷண மூர்த்திகளாகிய இருவ ரோடு, செல்லுவதை யுடைய, உவண அண்ணல் எனும் மன்ன வனை - கருடாழ்வான் என்னும் பெரியோனான பக்ஷிராஜனை, ஒத்தனன் - ஒத்து விளங்கினான்.

சிவணுதல் பொருந்துதல்; தொல். பொருள் : 27. இங்கு விராதனைக் கருடாழ்வானாகவும், இராம லக்ஷ்மணர்களை வாஸுதேவ, ஸங்கருஷண மூர்த்திகளாகவும் உவமிக்கப் பெற்றது. வாஸுதேவர் ஸங்கருஷணர், இவர்கள் திருமாலின் பஞ்ச வியூக மூர்த்திகளில் சிறந்தவர். கருடாழ்வான் தருமத்தின் வடிவானவன் ஆதலால் அறம் சிவண அன்ன சிறை உவண அண்ணல் எனப்பட்டான். கருடன் பெரிய திருவடி எனும் பெருமை நோக்கி அண்ணல் எனச் சிறப்பிக்கப் பெற்றானும் ஆம். லக்ஷ்மணன் பொன்னிறத்தன் என்பது; பால. குலமுறை. 22; அயோத். நகர்நீங்கு. 126, 142; இராமனைக் கண் ணன் என்பது கருணையுடைமைபற்றி; கண் - கருணை; 'கண்ணருள் செய் கண்ணன்' 254. இராமனுக்குக் கருணாகரன் என்ற பெயருண்மையும் நோக்குக. அறம் சிவணவன்ன, உவண

அண்ணல் எனவும், சிறை யுவணவண்ணல் எனவும் கூட்டிப் பொருள் கொள்க. உவணன் - இது சுபர்ணன் என்ற வடசொல் லின் திரிபு என்பர். "சுவண வண்ணன் - பொன் வண்ணனான சிவபெருமான்" என்பது பழையவுரை. இச் செய்யுளின் எதுகை ஒற்றுமை, உயுத்த. கும்பகருண : 345 இல் காண்க. சுவண வண்ண னொடு கண்ணன்: சங்கரநாராயண மூர்த்திக்கு உவமையாகவும் கொண்டு பொருள் கூறுவர்.

பி - ம். 1. கண்ணமிசை கொள்ள விசைதோய்; கண்ணனொடு தோள் கொள். 2. விண்ணிடை நிமிர்ந்து,
3. சிவணதன்ன சிவனு பொன்னுருவ முன்னவ னொடேகு சிறகார்.
4, உவணனென்னு நெடுமன்னவனை. (38)

39. மாத யாவுடைய தன்கணவன் வஞ்சன் வலியில்
போத லோடுமல மந்தனள் புலர்ந்து பொடியில்
கோதை யோடுமொசி கொம்பென விழுந்த னள்குலச்
சீதை சேவல்பிடி யுண்ட சிறையன்ன மனையாள்.

குலசீதை-உயர் குலத்துதித்த சீதை, மா தயா உடைய - பெருங் கருணையைத் தன்னிடங்கொண்ட, தன் கணவன் - தன் நாயகனான இராமபிரான், வஞ்சன் வலியில் - வஞ்சகமுள்ள அவ்வரக்கன் வலிமைக்குள்ளாகி, போதலோடும் - செல்லும் அளவில், அலமந்தனள் புலர்ந்து - மனம் கலங்கி வாடி, சேவல் பிடியுண்ட சிறை அன்னம் அனையாள் - ஆண் அன்னம் பிறரால் பிடிபட அது கண்டு வருந்தும் சிறகுடைய பெண் அன்னப்புள் போன்றவளாகி, ஒசி கொம்பு என - ஒடிந்து வீழும் ஒரு பூங்கொம்பு போல, கோதை யொடும் - தன் கூந்தலோடும், பொடியில் விழுந்தனள் - தரைப்புழுதி யில் விழுந்து வருந்தினாள்.

குலச்சீதை: நற்குலமாகிய சனகர் குலத்தில் உதித்தவளா தலின். கோதை - கூந்தல், (பிங்). கூந்தலொடு விழுதல்; ஒப்பு. 'தானுங் குழலுந் தனிவிழுந்தாள்' (நள. 2 : 114). இனி, கோதை யொடு ஒசி கொம்பு - காற்றினால் ஒடிந்து விழும் கொம்பு எனவும் பொருள் கொள்வதும் ஒன்றும்; கோதை - காற்று, (பிங்). சேவல் - பறவைகளின் ஆண். அன்னச் சேவல்; புறநா. 67 : 1; 128 : 4. தயா என்பது வடசொல்; இது தமிழில் தயை என வரப்பாலது, திரியாது தயா என்றே இயல்பாய் நின்றது. பொடி - புழுதி, (பிங்),

சேவல் பிடியுண்ட என்றமையால், சிறையன்னம் என்பது பெண் அன்னம் எனக் கொள்ளப்பட்டது.

பி - ம். 1. வஞ்சவினையில் ; வஞ்சன் வினையில். 2. போதலோடுளம். (39)

40. பின்னை யேதுமுத வுந்துணை பெருளு ரைபெருள்
மின்னை யேயிடை நுடங்கிட விரைந்து தொடர்வாள்
அன்னை யேயனைய வன்பினற வோர்க டமைவிட்
டென்னை யேநுகர்தி யென்றன ளெழுந்து விழுவாள்.

(அவ்விதம் விழுந்த பிராட்டி), எழுந்து - மீண்டும் எழுந்து, உதவும் துணை பின்னை ஏதும் பெருள் - தனக்கு உதவியளிக்கக் கூடிய துணை வேறு ஒன்றும் பெறுதவளும், உரை பெருள் - வேறு ஆறுதல் கூறக் கூடிய மொழியை அடையாதவளுமாகி, மின்னை ஏய் இடை - மின்னலை ஒத்த தன் இடை, நுடங்கிட - துவண்டு அசைய, விரைந்து - வேகமாய் அவனைத் தொடர்ந்து சென்று, (அவ்வரக்கனை நோக்கி), "அன்னையே அனைய அன்பின் - தாய் போன்று யாரிடத்தும் அன்பு காட்டும், அறவோர்கள் தமை விட்டு - தர்மவான்களான அவ்விருவரையும் (இராம லக்ஷ்மணர்களையும்) விட்டு விட்டு, என்னையே நுகர்தி என்றனன் - என்னை நீ கொண்டு போய் அருந்துவாயாக" என்று கூறி, விழுவாள் - அவன் முன் விழுந்து கேட்டுக்கொண்டாள்.

'பின்னை ஏதும்......நுகர்தி' என்றது, அவர்கள் அறமூர்த்திகள் ஆதலின், அவர்களால் உலகு பெரிதும் நலமடையும் என்ற பரந்த கருணையோடும, அரக்கன் தன்னையுண்டு ஆறுதல் அடையட்டும் என்ற உணர்ச்சியோடும் பிராட்டி அவனைக் கேட்டுக் கொண்டது என்னலாம். மின்னை ஏய் இடை : மின்னல் தன் ஒளியினுல் அது உண்டென்பதைத் தெரிவிப்பதேயன்றி, அதன் தனியுரு விளங்கல் இன்மையில், பிராட்டியின் இடைக்கு மின்னல் உவமையாயிற்று. அன்புக்கு அன்னை ; (பால. அரசியல் : 4 ; கிட்கிந்தா. வாலி வதைப் : 119 ; சுந்தர. 1169. அறவோர் ; அயோத். மந்திரப் : 37 ; சுந்தர : 1120.

பி - ம். 1. துணைபெரு ளுயிர்பெருள்.

4. யென்னையே யுணவுகொள்கென; வென்றழு தெழுந்து விழுவாள்.

41. அழுது வாய்குழறி யாருயி ரழுங்கி யுலையும்
எழுது பாவை யனையாணிலை யுணர்ந் திளையவன்
தொழுது தேவிதுயர் கூரவிளை யாட லொழிலோ
பழுது வாழியென வூழி முதல்வன் பகர்வுறும் :

வாய் குழறி அழுது - (வருத்த மிகுதியால்) வாய்ச் சொற்கள் குழறி அழுது, ஆர் உயிர் அழுங்கி - தன் அரிய உயிர் வருந்தி, உலையும் - தளர்ச்சியுடையும், எழுது பாவை அனையாள் - எழுதிச் சித்திரிக்கப் பெற்ற பதுமை போன்ற அப்பிராட்டியின், நிலை உணர்ந்து - சோக நிலையை அறிந்து, இளையவன் - இளைய பெருமானான இலக்குவன், தொழுது - (இராமபிரானை) வணங்கி, " வாழி - நீர் வாழ்வீராக ! தேவி துயர் கூர - தேவி இவ்வாறு பெருந்துயரில் வருந்த, விளையாடல் தொழிலோ - விளையாட்டாகக் கருதி இருப்பது நற்காரியம் ஆகுமோ? பழுது - இது குற்றமுடைத்தாகும் " என - என்று எடுத்துக் கூற, ஊழி முதல்வன் - பல ஊழிக்காலங்களுக்கும் முன்னுள்ள பரம் பொருளாகிய இராமபிரான், பகர்வுறும் - பின் வருமாறு சொல்வானானான்.

எழுது பாவை - சித்திரத்தில் எழுதப்பட்ட பெண் எனலும் ஒன்றும்: பாவை - பெண். இளைய பெருமான் வரக் கூடிய தீமை முதலியவற்றை முன்னறிந்து கூறும் கூரிய அறிவுடையவன் ஆதலின், அவன் இவ்வாறு எடுத்துக் கூறினான் என்க. வாழி : இது தேவர், அரசர் முதலிய பெரியோரிடம் பேசுமுன் கூறும் மரியாதைச் சொல்: ' பேசு வாழி கேசனே ', (திருச்சந்த : *61* ;); ' எங்கோன் வாழிய குடுமி ' (புறநா : *9 : 8*); இஃது அசை நிலையும் ஆம். இனி, பழுது என்று குறை கூறியதற்கு அபசார க்ஷமையாக வாழி என வாழ்த்தியது எனக் கொள்ளலும் ஏற்கும். இராமபிரான், ஊழி முதல்வன் :, *203* ; சுந்தர. *324*.

பி - ம். 1. யழுங்கி யுலையா ; நடுங்கி யுலையா.
2. நிலையறிந்திளையவன்.
4. வூழியொருவன் : வண்ணலொடு பன்னுமளவின். *(41)*

42. ஏக நின்றநெறி யெல்லைகடி தேறி யினிதில்
போகை நன்றென நினைந்தென னிவன்பொ ருவிலோய்
சாகை யின்றுபொரு ளன்றென நகுந்த கைமையோன்
வேக வெங்கழலி லுந்தினன் விராதன் விழவே,

"பொருவு இலோய் - ஒப்பு இல்லாதவனே! ஏக நின்ற நெறி-நாம் இவ்வனத்தில் செல்ல வேண்டிய வழியின், எல்லை - முடிவை, கடிது ஏறி இனிது போகை நன்று என - விரைவில் இவன் மீது ஏறி இனிதாய்ச் செல்வது நல்லது என்று, நினைந்தனென் - எண்ணினேன்; இவன் சாகை இன்று பொருள் அன்று - இவன் இன்று சாவது நமக்கு ஓர் அரிய காரியம் அன்று," என - என்று, நகும் தகைமையோன் - பரிகாசமாகக் கூறிய இராமபிரான், வேக வெம் கழலில் - வேகமாகத் தன் வலிய வீரக் கழல் அணிந்த பாதத்தால், உந்தினன் - உதைத்தனன்; விராதன் - அதனால் விராதன் என்னும் அவ்வரக்கனும், விழுவே - கீழே விழவும்,

'முன் (41) செய்யுளில் இலக்குவன் தன்னை நோக்கி, 'விளையாடலுறுழிலோ' என்று கூறியதற்கு ஏற்ப', 'ஏக நின்ற நெறி...போகை நன்றென நினைந்தனென்' என இராமபிரான் நகைச் சுவை தோன்றப் பரிகாசக் குறிப்பால் மறுமொழி பகர்ந்து, பின் தன் அரிய ஆற்றலை அவ்விளையோனுக்கு அறிப்பது போல, விராதனைத் தன் வேக வெங்கழலால் உந்திக் கீழே விழச் செய்தனன் என்க. வெம் கழல் - யாவரும்நாடி அடைய விரும்பும் ஸ்ரீபாதம் என்றும், முன் வேகமாய்த் திரிவிக்கிரமனாகி மண்ணையும் விண்ணையும் அளந்து கடந்த பாதம் என்றும் அதன் ஏற்றங் கூறியபடியும் ஆம். பொருவிலோய் - போர் புரிய வல்ல வில்லையுடையவனே! எனப் பொருள் கொள்ளலும் ஒன்றும். இங்கு, சாதல் என்பது சாகல் என்னும் பொருளில் சாகை என வந்தது. இது முதல் 46, முடியக் குளகமாய்த் தொடர்ந்து, 'விளங்கிலன்' என்னும் வினைகொண்டு முடியும். விழவே யுந்தினன், எனவும் வினைமுடிவு செய்யலாம்.

பி - ம். 1. கடிதெய்தி, கடிதேகி; நெறியின் கடிதினேகி.
3. சாய்கையின்று; சாகையொன்று பொருளன் றிவர்கடம்மை நகரும்.
4. கழலி லுந்தலும்; கழலினுந்திட; விராதன் விளிய. (42)

43. தோளி ரண்டும்வடி வாள்கொடு துணித்து விசையால்
மீளி மொய்ம்பினர் குதித்தலும் வெகுண்டு புருவத்
தேளி ரண்டுநெரி யச்சினவு செங்க ணரவக்
கோளி ரண்டு சுடருந் தொடர்வதிற் குறுகலும்,

மீளி மொய்ம்பினர் - வலிய தோள்களையுடைய அந்த இராம லக்ஷ்மணர்கள், விசையால் - வேகத்தோடு, வெகுண்டு - கோபித்து,

வடிவாள் கொடு - தம் கூரிய வாட்களைக் கொண்டு, தோள் இரண்டும் - அவ்விராதனுடைய தோள்கள் இரண்டையும், துணித்து - வெட்டித் துண்டமாகக் கீழே வீழ்த்தி, குதித்தலும் - (தாம் ஏறியிருந்த அவன் தோள்களை விட்டுக்) கீழே தாவிக் குதித்தவுடன், புருவதேள் இரண்டும் நெரிய - தேள் போன்ற தன்னிரு புருவங்களும் நெரியும்படி, வெகுண்டு - அவன் கோபங்கொண்டு, சினவு - சினங்கொண்ட, செம் கண் அரவ கோள் - சிவந்த கண்களையுடைய ராகு என்னும் கிரகம், இரண்டு சுடரும் தொடர்வதில் - இரண்டு சுடர்களாகிய சந்திர சூரியர்களையும் தொடர்ந்து வருவது போல, குறுகலும் - (அந்த இராம லக்ஷ்மணர்களை) நெருங்கி வரலும்,

மீளி மொய்ம்பினர் - கூற்றுவன் போன்ற வலிமை யுடையவர் என்னலும் பொருந்தும். புருவத்தேள் - தேளின் கொடுக்குப்போன்ற மேல் ஏறிய நுனியும், தேளின் பல கால்கள் போன்று அடர்ந்த உரோமமும் உடைமையால், புருவம் தேள் எனப்பட்டது; இவை கருந்தேள்கள் எனக் கொள்க. புருவம் நெரிவது சினத்திற் றோன்றும் மெய்ப்பாடு. இரு சுடரையும் அரவு ஒரே காலத்தில் தொடர்வதாக உவமித்தது, இல்பொருளுவமை. 'மொய்ம்பினர் குதித்தலும், அவர்கள் பிறகே அந்தத் தோள்கள் தொடர்ந்து வருகின்றது எத்தன்மைத்தெனில், சந்திர சூரியர் இருவரையும் இராகு கேது என்னும் கிரகங்களிரண்டும் தொடர்ந்து வருகின்றன போன்றது'. என்பது பழையவுரை. இடக்கையை இலக்குமணனும் வலக்கையை இராமபிரானும் துணித்தனர் என்று முதனூல் கூறும்.

பி - ம். 1. தோளிரண்டு வடிவாள்.
3. தோளிரண்டு நெரிய; தாளிரண்டு நெரியத்தழுவு செங்கணரவைக்.
4. தொடருஞ் சுடரதில் ; சுடரைத் தொடர்வதில். (43)

### அவர்கள் விராதனைப் புதைத்தல் 44—45.

44. புண்ணி டைப்பொழி கறைப்புனல் பொலிந்து வரவும்
விண்ணி டைப்படர்தல் விட்டெழு விகற்ப நினையா
எண்ணி டைக்குரிசி லெண்ணியினை யோயிவ னையிம்
மண்ணி டைக்கடிது பொத்துதல் வழக்கெ னலுமே,

புண் இடை பொழி - (விராதன் தன்) உடலிற்பட்ட புண்களிலிருந்து பெருகிப் பெய்த, கறை புனல் - இரத்த வெள்ளம், பொலிந்து வரவும் - விளங்கி ஓடி வரவும், விண் இடை படர்தல் விட்டு - வானிடத்துச் செல்வதை விட்டு, எழு விகற்பம் நினையா—

அவன் எழுந்து செல்லும் மாறுபாட்டை நினைத்து, எண் இடை குரிசில் - யாவர் மனத்திலும் சூட்சுமமாய் இருந்து விளங்கும் பரம் பொருளாகிய இராமபிரான், எண்ணி - உணர்ந்து, " இளையோய் - (இளைய பெருமானான இலக்குவனைப் பார்த்து) தம்பி ! இவனை இம் மண் இடை கடிது பொத்துதல் - இந்த விராதனை இம்மண்ணிடத்து விரைவில் புதைத்து மூடுதல், வழக்கு எனலும் - முறை " என்று கூறலும், ஏ : ஈற்றசை.

கறை - இரத்தம் ; (பிங்.). மண்ணிடைப் பொத்துதல் - இவன் எழுந்து ஓடாதபடி உயிருடன் ஒரு குழியில் புதைத்து மூடுதல் ; இவன் ஆயுதங்களால் இறந்து படா வரத்தினன் ஆதலின் ; (35). விராதன் தன்னைக் குழிவெட்டி மூடுமாறு கேட்டுக் கொண்டதால் இலக்குவன் குழிவெட்ட அதில் இராமபிரான் அவனைத் தன் காலால் உந்தித் தள்ளப் பின் அவனை இலக்குவன் மண் கொண்டு மூடினான் என்று வான்மீகம் கூறும்.

பி - ம். 1. புதுப்புனல் பரந்து விழவும் ; பொழியுடைப்புனல் பரந்து பொலியும்: புண்ணிடைப் படர் செழுங்குருதி பொங்க நிருதன்.
2. படர்தலில் விட்டெழு ; படர்தல்கண்டு.
3. எண்ணுடைக் குருசில்.
4. கடிது போக்குதல் வழக்கெனவே. (44)

45. மதநல் யானையனை யானிலம் வகிர்ந்த குழிவாய்
நதமு லாவுநளி நீர்வயி னழுந்த நவைதீர்
கதழ்வ மாய்நறுநெ யுண்டுலகி லன்பர் கருதிற்
றுதவு சேவடி யினலமல னுந்து தலுமே,

நவைதீர் - குற்றமற்ற, கதழ்வம் ஆய் - வைதிக யாக அக்னியாகி, நறு நெய் உண்டு - அங்கு மந்திர முகமாய் அளிக்கப்பெறும் மணமிக்க நெய்யை உண்டு, உலகில் அன்பர் கருதிற்று உதவு - உலகில் பக்தர்கள் நினைத்தவற்றை உதவுகின்ற, சே அடியினால் - சிவந்த தன் பாதத்தால், அமலன் - பரிசுத்தனான இராமபிரான், உந்துதலும் - அந்த அரக்கனை உந்தித் தள்ளவும், ஏ : ஈற்றசை. நல் மத யானை அனையான் - சிறந்த மதங்கொண்ட யானை போன்ற இளைய பெருமான், நளி நீர் உலாவு நதம் வயின் - மிகுதியாய் நீர் ஓடும் ஓர் ஆற்றின் அருகே, நிலம் வகிர்ந்த குழிவாய் - பூமியில் தோண்டிய குழியினிடத்து, அழுந்த - (அவ்வுடல்), அழுந்திப் பதிய.

மத நல் யானையனையான், என்பதை விராதனுக்கும் கூறலாம். நதம் - மேற்கு முகமாய்ச் செல்லும் ஆறு; ஆதலின் விராதனைப் புதைத்த இடம் நருமதை அல்லது தபதி நதி தீரம் எனப் பொருள் கொள்வதும் தகும். தண்டகவனம் விந்திய மலையை அடுத்துத் தெற்கே பரவியிருந்தமை என்பதும் நோக்கற்பாலது. நவை தீர் கதழ்வம்: நெருப்பே தூய்மையானது; அதனிலும் யாகத் தீ மிகத் தூயது என்க. திருமால் யாகத் தீயாய் விளங்கி அங்கு அளிக்கப் படும் நறுநெய்யை உண்பவன்; 'வேள்வியுண்பாய் நீ' கவந்தப்: *1811*; 'யக்ஞபுக்' என்ற பெயர் திருமால் ஆயிரம் நாமங்களில் ஒன்று என்பதும் நோக்கத்தக்கது. இனி, 'அதவ மார்நறு நெய் உண்டு' எனப்பாடங்கொண்டு, அத்திக் கட்டையால் செய்யப்படும் சுருவம் என்னும் யாக ஹோமக் கருவியான அகப்பையால் தந்த நறு நெய் உண்டு எனப் பொருள் கொள்வாரும் உளர்.

பி - ம். 1. மதலை யானை: யனையார் நிலம்: வகிர்ந்து குளிர்வரய்.
2. நனிர்நீர்; நதியுலாவு நளிநீர்; நனிநீர் நீரதி லமுந்த.
3. அதவமாய்; கதவமாய்.
4. சேவடியினுல் விழவுதைத்தன னரோ. (45)

விராதன் முன்னையுருப் பெற்று, இராமபிரானை அறிந்து போற்றுதல் 46—61.

46. பட்ட தன்மையு முணர்ந்து படர்சாப மிடமுன்
கட்ட வன்பிறவி தந்த கடையான வுடருன்
விட்டு விண்ணிடை விளங்கினன் விரிஞ்ச னெனவோர்
முட்டை தந்ததனில் வந்தமுதல் முன்ன வனினே.

(அவ்விராதன்), பட்ட தன்மையும் உணர்ந்து - அவ்வாறு தான் மண்ணில் புதைக்கப்பட்ட தன்மையை அறிந்து, முன படர் சாபம் இட - முன் (குபேரன் தனக்குப்) பெரும் சாபம் இட்டதால், கட்ட - துன்பத்திற்கு இடமாக, வன் பிறவி தந்த - கொடிய அரக்கப் பிறவி கொடுத்த, கடையான உடல் தான் விட்டு - கீழ்ப்பட்ட இழிந்த தன் உடலை நீக்கி, ஓர் முட்டை தந்து - ஹிரண்ய கர்ப்பம் என்ற ஒரு முட்டையை உண்டாக்கி, அதனின் வந்த - அதினின்றும் தோன்றிய, விரிஞ்சன் என முன்னவனில் - பிரமன் என்ற ஒரு பெரியோனைப் போல, விண்ணிடை விளங்கினன் - (தனது முன்னைக் கந்தருவ வடிவுடன் அவ்விராதன்) வானில் தோன்றி நின்றான். ஏ: ஈற்றசை.

முட்டைதனில் வந்த முதல் முன்னவன் - பிரமன்; சுந்தர. 44. திருமாலுக்கே இரணிய கருப்பன் என்ற பெயரும் உண்டு. அண்

டத்தினின்றும் பிரமன் உதித்ததுபோல விராதன் திவ்ய வடிவுடன் தோன்றினான் எனப் பொருள் கூறுவாரும் உளர். விராதன் முன் சாபம் பெற்றது : 66. கட்டவன் பிறவி ; கட்டம், கஷ்டம் என்ற வடசொல்லின் திரிபு. அவன் சாபம் நீங்கிய வரலாறு ; சுந்தர. 358. சாபம் நீங்கிய விராதன் விரிஞ்சன் போலத் தோன்றினான் என்க.

பி-ம். 3. விட்ட விண்ணிடை.

4. முட்டை நின்றதனில் ; முன்னவனினே. (46)

47. பொறியி னொன்றி யயல்சென்று திரிபுந்தி யுணரா
நெறியி னொன்றி நிலைநின்ற நினைவுண் டதனினும்
பிறிவி லன்புநனி பண்டுடைய பெற்றி தனினும்
அறிவு வந்துதவ நம்பனை யறிந்து பகர்வான் :

(அவ்விராதன்), பொறியின் ஒன்றி - ஐம்பொறிகளில் வயப் பட்டு, அயல் சென்று திரி - வெளியேயுள்ள பல்வகை விஷய நுகர்ச் சியில் ஈடுபட்டு அலையும், புந்தி உணரா - புத்தியினால் அறியமுடி யாத, நெறியின் ஒன்றி - நன்னெறியில் ஈடுபட்டு, நிலைநின்ற - நிலை பெற்று அதில் ஊன்றி நின்ற, நினைவு உண்டதனினும் - எண்ணம் உண்டானதாலும், பிறிவு இல் - மாறுபட்டுப் பிரிதல் இல்லாத, அன்பு - பக்தி, பண்டு நனி உடைய பெற்றிதனினும் - முன் மிகக் கொண்டிருந்த தன்மையாலும், அறிவு வந்து உதவ - உண்மை ஞானம் வந்து உதவுவது போலத் தூண்ட, நம்பனை அறிந்து - பெருமானான இராமபிரானைப் (பரம் பொருளாகிய திருமாலே என்று) அறிந்து, பகர்வான் - பின்வருமாறு துதி செய்வான் ஆயினன்.

அறிவு பஞ்ச இந்திரியங்களின் வயப்பட்டு அலைந்து திரியும் நிலையது என்பதும், அவ்வாறு இந்திரியங்களின் வயப்படாமல் விராதன் இப்பொழுது புத்தி நிலைபெற்று நல்வழிப் பட்டதோடு, அவன் முன் செய்த பக்தி, தவம் முதலியவை உதவி செய்ய, கடவுள் திருவருள் கைகூடிற்று என்ற உண்மை இச்செய்யுளால் அறி வுறுத்தப்பட்டது. இராமபிரானுடைய திருவடி தீண்டப்பெற்ற சிறப்பால், அதுகாறும் விராதனைப் பற்றியிருந்த தீவினைகள் நீங்க, பண்டை நல்வினையும் வந்து நல்லறிவை ஊட்ட, அவன் இராம பிரான் பரம்பொருள் என்பதை உணர்ந்து துதிப்பானாயினன். பிறிவு - பிரிவு : செய்யுள் விகாரம். நம்பன் - கடவுள் ; 'நம்பன் மாது லன் வெம்மையை நண்ணினான் ;' (பால. ஆற்றுப் : 3). 'நாதா வென வும் நக்காவெனவும் நம்பாவென நின்று.' (திருப்பழனத் தேவாரம்).

பி - ம். 1. புந்தியுணரான்.
2. நெறியி னென்று மிலை; யுண்டதெனினும். 3. பிறிவிலன்பு; பெற்றிதரலால்.
4. வந்துதவு; யறிந்து நவில்வான். (47)

வேறு

48. வேதங்க ளறைகின்ற வுலகெங்கும் விரிந்தனநின்
பாதங்க ளிவையென்னிற் படிவங்க ளெப்படியோ
ஓதங்கொள் கடலன்றி யொன்றினோ டொன்றொவ்வாப்
பூதங்க டொறுமுறைந்தா லவையுன்னைப் பொறுக்குமோ.

'நின் பாதங்கள் இவை - (என்னைப் பரிசித்து எனக்கு நல்லறிவை உண்டாக்கிய) இந்த உன்பாதங்கள், உலகு எங்கும் விரிந்தன - உலகங்கள் எங்கும் வியாபித்துள்ளன என்று, வேதங்கள் அறைகின்ற என்னில் - வேதங்கள் சொல்லுகின்றன என்றால், படிவங்கள் எப்படியோ - உன் திருவுருவின் மற்றை அங்கங்கள் எவ்வாறு அமைந்துள்ளனவோ? (அது எளியேனால் சொல்லும் திறத்ததன்று என்பதாம்); ஓதம் கொள்-நீரைத் தன்னிடம் கொண்டுள்ள, கடல் அன்றி - திருப்பாற்கடலில் நீ பள்ளிகொண்டிருப்பது மட்டுமன்றி, ஒன்றினோடு ஒன்று ஒவ்வா - ஒன்றுக் கொன்று முரண்பாடாய் உள்ள, பூதங்கள் தொறும் உறைந்தால் - மற்றைப் பூதங்கள் ஒவ்வொன்றிலும் நீ தங்கியிருந்தால், அவை உன்னை பொறுக்குமோ - அப்பூதங்கள் உன்னைத் தாங்கும் வலியுடையன ஆகுமோ? (ஆகா என்றபடி).

கடவுள் எதையும் கடந்தவர் என்பது இங்குக் கூறப்பெற்றது. வேதங்கள் உன் திருவடிச் சிறப்பைப் பெரிதும் கூறுகின்றன எனில், உன் மற்ற அங்கங்களின் சிறப்பை யார் அறிந்து கூற முடியும் என்பதாம். பாதம் உலகெங்கும் விரிந்தமை திரிவிக்ரமனாய் உலகளந்தபோது. ஓதம் - குளிர், ஒலி, அலை எனப் பல பொருள் கொள்ளும். ஒன்றினோ டொன்றொவ்வாப் பூதங்கள்: வெம்மையும், தட்பமும், உருவும், அருவும், வலிமையும் மென்மையுமாகிய பல வேறுபாடுகளைக் கொண்டுள்ள பஞ்சபூதங்கள். எப்படியோ என்பதில் உள்ள ஏகாரம் ஐயப்பொருளிலும், பொறுக்குமோ என்பதின் ஓகாரம் எதிர்மறைப் பொருளிலும் வந்தன.

பூதங்கடொறு முறைதல்; அயோத். 1: 1. இது முதல், பதினொரு செய்யுள்கள் விராதன் செய்த துதியாக உள்ளன. இவ்வாறு இந்நூலில் வரும் இந்திரன் துதி, கவந்தன் துதி, பிரமதேவர் துதி

முதலிடன வான்மீகத்தில் இல்லை. ஆனால், விராதன் துதியை மட்டும் சுருக்கமாக அந்நூல் கூறும். அத்யாத்ம ராமாயணத்தை ஒருவாறு பின்பற்றி இத்தகைய துதிகள் இந்நூலில் சில இடங்களில் அமைந்துள்ளன என்னலாம்.

பி-ம். 1. வேதங்களுறைகின்ற: விரிந்தனவுன்; விரிந்தது நின்; வுலகங்கள் விரிந்து நின்ற.
2. பாதங்க ளவையென்னிற்: படிவமிங் கதுவென்னே; படிவங்க ளெனப் பழையோர்.
3. கடலின்றி; கடலாதி. 4. பூதங்களொடு முறைந்தால். (48)

49. கடுத்தகராங் கதுவநிமிர் கையெடுத்து மெய்கலங்கி
உடுத்ததிசை யனைத்தினுஞ்சென் றொலிகொள்ளவுறுதுயரால்
அடுத்தபெருந் தனிமூலத் தரும்பரமே பரமேயென்
றெடுத்தொருவா ரணமழைப்ப நீயோவந் தேனென்றாய்.

'கடுத்த - கோப மேற்கொண்ட, கராம் கதுவ - முதலை தன் காலைப் பற்றிக்கொள்ள, ஒரு வாரணம் - கஜேந்திரன் என்னும் ஒரு யானை, உறுதுயரால் - தனக்குண்டான பெருந் துன்பத்தால், நிமிர் கை எடுத்து - தன் துதிக்கையை மேலே தூக்கி எடுத்துக்கொண்டு, மெய் கலங்கி - தன் உடல் தளர்ந்து, உடுத்த திசை அனைத்தும் சென்று ஒலி கொள்ள - சூழ்ந்த திக்குக்களெல்லாம் தன் கூவும் ஒலி சென்று நிறைய, ''அடுத்த - ஒவ்வொரு பொருளிலும் வந்து தங்கியிருக்கின்ற, பெரும் - பெருமைதங்கிய, மூலத்து அரும் பரமே பரமே - மூலப் பொருளான அரிய பரம்பொருளே! பரம் பொருளே!'' என்று எடுத்து - என்று எடுத்துக் கூவி, அழைப்ப - முன்னாள் கூப்பிட்டழைக்க, நீயோ அன்று ஏன் என்றாய் - நீதானே அன்று ஏன் என்று கூறி அதன் அருகு சென்று அதன் துயர்நீக்கி அதனைக் காப்பாற்றினாய்?.

இராமபிரான் பரம்பொருளே என்று இங்குக் கூறப்பெற்றது. உடுத்த திசை - உலகம் முழுவதும் உடுத்துக்கொண்ட ஆடை போலக் சுற்றி விளங்கும் திசைகள்: உடுத்தல் - சூழ்தல்; 'அருங் குறும் புடுத்த கானப் பேரெயில்'; (புறநா. 21 : 6). 'நீயோவந்தே னென்றாய்' ஒப்பு; புறநா. 10 : 1 உரை; தக்க. 298; 'வேழ முதலே யெனவழைப்ப, என்னென்றானெங்கட் கிறை' (நள : காப்பு).

பி-ம். 1. கருத்து நிமிர்கராங் கௌவக்; கராம்பற்றக்.
2. யனைத்தும் போயொலி.

3. தரும் பொருளே பரமாவென்; தரும்பொருளே பரமே யென்று; தரும் பரனே பரமேயென்று.

4. வாரண மழைக்க: நீயே யன்றே னென்ருய்; நீயோவன்றெதிர் நின்ருய்; நீயன்றே யென்னென்ருய். (49)

50. புறங்காண வகங்காணப் பொதுமுகத்தி னருணோக்கம்
இறங்காத தாமரைக்க ணெம்பெருமாஅ னியம்புதியால்
அறங்காத்தற் குனக்கொருவ ராருமொரு துணையின்றிக்
கறங்காகு மெனத்திரிய நீயேயோ கடவாய்தான்:

'பொது முகத்தின் - நடுநிலையில் இருந்து, அருள் நோக்கம் - அருட்பார்வை, இறங்காத - சிறிதும் குறையாத, தாமரை கண் எம்பெருமாஅன் - செந்தாமரை இதழ்போன்ற கண்களையுடைய எங்கள் பெருமானே! புறம் காண அகம் காண - ஒவ்வொரு பொருளின் உள்ளும் புறமும் கண்டு, (அதாவது, ஒவ்வொரு பொருளிலும் உள்ளும் புறமும் வியாபித்து), அறம் காத்தற்கு - அங்கங்குத் தருமத்தைப் பாதுகாப்பதற்கு, ஒருவர் யாரும் உனக்கு ஒரு துணையின்றி - உனக்கு வேறு ஒருவர் எவரும் ஒரு சிறு துணையும் செய்வதில்லாமல், கறங்கு ஆகும் என திரிய - காற்றுடி போலச் சுற்றித் திரிவதற்கு, நீயே ஓ கடவாய் தான் - நீ தானே கடமைப்பட்டாய் போலும்! இயம்புதி - எனக்கு இதனை அறிவிப்பாயாக! ஆல்: அசை.

கடவுள் பொருள்கள்தோறும் வியாபித்து, அறங்காத்தும் அருள்புரிந்தும் வருவதை இச்செய்யுள் விளக்குகின்றது. புறங்காண அகம்காணத் திரிபவன்; அதாவது எங்கும் வியாபித்து இருப்பவன்; 'உள்ளும் புறனு முளனென்ப (அயோத். 1.); இறங்காத - தாழாது துலாக்கோல் போல நடு நிலையில் இருந்த, என்னலும் ஆம். அறங்காத்தற்குக் கறங்காகுமெனத் திரிதல், எங்கெங்குத் தருமத்திற்குக் குறையுண்டாகிறதோ, அங்கங்கெல்லாம் கறங்கெனத் திரிந்து சென்று காப்பவன்; சுந்தர. 786; 1123. தாமரைக் கண் எம் பெருமான்: புண்டரீகாக்ஷன் என்ற பெயர் குறித்தபடி. தாமரையைக் கண்ணுக்கு உவமித்தது: மென்மையும் தண்மையும் வாய்ந்து, கண்டோர் மனமகிழத்தக்க நிறமும் வளப்பமும் பெற்றுள்ள சிறப்பு நோக்கி. எம் பெருமாஅன், அண்மை விளி அளபெடுத்து வந்தது. துணையின்றி அறங்காப்பவன்; தருமத்தின் தனிமூர்த்தி (53) என்றதை நோக்குக.

பி-ம். 1. புறங்காணு ரகங்காணர், புறங்காணு யகங்காணுப்; புறங்காணுப்; யகங்காணுய்; பொருண் முகத்தி; பொதி மூக்கின் நுதி நோக்கின்.
2. யியம்பாயால், யியம்புதியின். 3. அறங்காக்க நினக்.
4. நீயோ தான் கடவாயோ; கடவாய்தான்; கடவாயே. (50)

51. துறப்பதே தொழிலாகத்தோன் றிஞேர் தோன்றியக்கால்
மறப்பரோ நின்றன்மை யதுவாகில் மற்றவர்போல்
பிறப்பரோ யெவர்க்கும்யான் பெற்றபதம் பெறலரிதே
இறப்பதே பிறப்பதே யெனும்விளையாட் டுவந்தனையே.

இறப்பது பிறப்பது எனும் - இறத்தல், பிறத்தல் என்று சொல்லப்படும், விளையாட்டு - திருவிளையாட்டில் (லீலையில்) உவந்தனை - மகிழ்ந்து ஈடுபட்டுளோனே!, துறப்பதே தொழிலாகத் தோன்றினேர் - உலகப்பற்றை விட்டு நீங்குதலையே தம் தொழிலாகக்கொண்ட பிறவி ஞானியர், தோன்றியக்கால் - ஒருகால் பிறந்த விடத்து, நின் தன்மை மறப்பரோ - உன் இயல்புகளை மறந்து உலக மாயையில் ஈடுபடுவரோ? (மாட்டார் என்றபடி); அது ஆகில் - அவ்வாறு ஆகுமேல், மற்றவர் போல் பிறப்பரோ - அவர்கள் பிறர் போல் பிறப்பாரோ? (மாட்டார் என்றபடி); எவர்க்கும் யான் பெற்ற பதம் பெறல் அரிதே - அப்படிப்பட்ட துறந்த ஞானியர்க்கும் யான் இப்பொழுது உன் திவ்ய திருவடிகளாற் றீண்டப்பெற்று அடைந்த பெருவாழ்வைப் பெறுதல் அரிதே ஆகும்.

இறைவனின் திருவடிச் சிறப்பும், அவனை மறவாதார் பிறப்பறுப்பர் என்ற உண்மையும் இங்குக் கூறப்பட்டன. உன்னை மறவாதார் பிறவார், அவர்களைவிட யான் பெற்ற பயன் பெரிது என்று இராமபிரான் பேரருளை விராதன் பாராட்டினன் என்க. விளையாட்டு, முயற்சி அதிகம் இன்றி எளிதில் செய்வது; (54); பால. தனியன் 5. "ஒரு விளையாட்டி னுண்மை யொருவரா லுணராளும், பெருவிளை யாட்டைந் தாடும் பிஞ்ஞகன்" (திருவாலவாய். நாட்டு. 1.) என்றமையும் நோக்குக். முத்தொழில்களில் இறப்பு, பிறப்பு இரண்டைச் சொல்லியது மற்ற காத்தற் றொழிலையும் உபலக்ஷணத்தால் கூட்டிக் கொள்ள வைத்தது ஆகும். இனி இறப்பதே பிறப்பதே என்னும் விளையாட்டு வந்தனை எனக்கொண்டு, 'இறந்து அழிவதாக உள்ள இம் மானிட உருவத்தில் நீ அவதாரஞ் செய்தனை; இது உலக நலத்தின் பொருட்டு ஒரு விளையாட்டுப்

போலத் தானாக நீ ஏற்றுக்கொண்டதேயாகும்;' என்று விராதன் உண்மையை உணர்ந்து இராமபிரானை நோக்கிக் கூறியதுமாம்.

பி - ம். 1. தொன்மையோர்; துறப்பதே யரும்பிறவி.
2. மற்றவர்போய்த்: மறப்பரோ தம்மையது; யன்றாகி மற்றவர்.
3. பிறப்பரே லெவர்க்குந்; பெறலரிதோ; யெவர்தம்; யெவர்க்குந் தாம்.
4. விளையாட் டியைந்தனையால். (51)

52. பனிநின்ற பெரும்பிறவிக் கடல்கடக்கும் புணைபற்றி
நனிநின்ற சமயத்தோ ரெல்லாரு நன்றென்னத்
தனிநின்ற தத்துவத்தின் றகைமூர்த்தி நீயாகில்
இனிநின்ற முதற்றேவ ரென்கொண்டென் செய்வாரே.

தனி நின்ற தத்துவத்தின் - ஒப்பு உயர்வற்று நின்ற தத்துவ ஞானத்தினால் அறியப்படும், தகை மூர்த்தி - ஏற்ற கடவுளாகிய பரம்பொருள், நீ ஆகில் - நீயே தான் என்று இருக்கும் நிலையில், பனி நின்ற பெரும் பிறவி கடல் - துன்பமயமாய் நின்ற (கடத்தற் கரிய) பெரிய பிறவியாகிய கடலை, நனி நின்ற - உறுதிப்பாடுடன் பற்றி நின்ற, சமயத்தோர் எல்லாரும் - மற்றுமுள்ள பல சமயத் தோர் அனைவரும், கடக்கும் புணை - தாம் தாண்டுவதற்குத் துணை யான தெப்பம் என்று, நின்ற முதல் தேவர் - உறுதி கொள்ள நின்ற அவ்வச் சமயத் தலைமைத் தெய்வங்கள், நன்று என்ன - தாமே சிறந்தவை என்று நினைத்திருக்க, இனி என்கொண்டு என் செய்வார் - இனி என்ன ஆதாரத்தைக்கொண்டு எதைச் சாதிக்க வல்லவராவர்?

இச் செய்யுளால், வேதம் முதலிய உண்மைத் தத்துவ நூல் களை ஆராய்வதனால் அறியப்படும் பரம்பொருளே இராம்பிரான் என்பதும், அவனே பிறவிக்கடலைக் கடப்பதற்கு ஏற்ற புணை என்பதும், பிற சமயங்கள் கூறும் தெய்வங்களுக்கு இத்தகைய வல்லமை இல்லை யென்பதும் பெறப் பெற்றன.

பி - ம். 1. நெடும்பிறவி: பணைபற்றி; படிபற்றி.
3. தனிமூர்த்தி; தலைமூர்த்தி; நீயாகின்.
4. வகைத்தேவர்; ரென்கொண்டோ செய்வாரே; ரென் செய்வாரோ. (52)

53. ஓயாத மலரயனே முதலாக வுளராகி
மாயாத வானவர்க்கு மற்றொழிந்த மன்னுயிர்க்கும்
நீயாதி முதற்றாதை நெறிமுறையா லீன்றெடுத்த
தாயாவார் யாவரே தருமத்தின் தனிமூர்த்தி.

தருமத்தின் தனி மூர்த்தி - தருமத்தின் வடிவான ஒப்பற்ற மூர்த்தியாகிய இராமபிரானே! ஓயாத - படைத்தல் தொழிலில் ஓய்வில்லாத, மலர் அயனே முதல் ஆக் உளராகி - தாமரை மலர்மேல் உள்ள பிரமதேவன் முதலாக உள்ள, மாயாத - அழிவில்லாத, வானவர்க்கும் - தேவர்களுக்கும், மற்று ஒழிந்த மன் உயிர்க்கும் - அத்தேவரல்லாது உலகில் உள்ள சீவன்களுக்கும், நீ முதல் தாதை ஆதி - நீயே ஆதி பிதா ஆவாய்; (அப்படியானால்), நெறி முறையால் ஈன்று எடுத்த - உலக நெறிப்படி பெற்றெடுத்த, தாய் ஆவார் யாவரே - தாயாக உள்ளவர் யார்? (எல்லாவற்றையும் ஈன்ற தாயும் நீயேதான் என்றபடி.)

இதனால், மலரயன் முதலான யாவர்க்கும் ஆதித் தந்தையாவானும், தாயாவானும் திருமாலே என்பதாம். மாயாத வானவர்; அமுதம் உண்டவராதலின் இறவாத தேவர்கள். இராமன் தருமத்தின் தனிமூர்த்தி; அயோத். மந்திரப் : 37; சுந்தர. 1120.

பி - ம். 1. முதலாக வுற்றளவை. 3. நீயாகின்: நிறை முறையால்.
4. தாயாவாய் யாவரோ; தகைமூர்த்தி. (53)

54. நீயாதி பரம்பரமும் நின்னவே யுலகங்கள்
ஆயாத சமயமுநின் னடியவே யயலில்லை
தீயாரி லொளித்தியால் வெளிநின்றாற் றீங்குண்டோ
வீயாத பெருமாய விளையாட்டும் வேண்டுமோ.

ஆதி பரம்பரமும் நீ - ஆதி முதன்மையான தெய்வமும் நீயே; உலகங்கள் நின்னவே - எல்லா உலகங்களும் உன் ஆணைக்கு உட்பட்டனவே; ஆயாத - ஆய்ந்து அறியமுடியாது பலவகைப்பட்ட, சமயமும்-மதங்களும், நின் அடியவே-உன் திருவடிச் சிறப்பை பற்றிப் பேசுவனவே; (அல்லது உன்னை முதற் காரணமாகக் கொண்டுள்ளவையே); அயல் இல்லை - வேறு கொண்டவை அல்ல; (இங்ஙனம் நீ எங்கும் வியாபித்த மூல மூர்த்தியாய் எல்லாச் சமயங்களிலும் பரந்து நின்றும்), தீயாரின் ஒளித்தி - வஞ்சகரைப் போல வெளிப்படாது

மறைந்துள்ளாய் ; வெளி நின்ருல் தீங்கு உண்டோ - யாவரும் நன்கு அறியும்படி வெளிப்படையாய்க் காட்சியருளினுல், அதனுல் உனக்கோ அல்லது உலகுக்கோ தீங்கு உண்டாகுமோ? வீயாத - அழியாத, பெரு மாய விளையாட்டும் - பெரிய மாயையாகிய இத் திருவிளையாடல்களும், வேண்டுமோ - உனக்கு வேண்டுவன தாமோ?

பரம்பரம் - மேலானவற்றுளெல்லாம் மேலானது ; அதற்கு மேல் ஒன்று உயர்ந்தது இல்லை என்றபடி ; ஆயாத சமயமும் நின் அடியவே - உன் பரத்வத்தை ஆய்ந்தறியாத பிற சில சமயங்களும் உன் திருவடிச் சிறப்பைத் தான் கூறுகின்றன. ஏனெனில், நீ எங்கும் நிறைந்துள்ளாய், ஆதலின் ; எனப் பொருள் கோடலும் அமையும். தீயாரின் ஒளித்தி - தீயோர் கண்ணுக்கும் அறிவுக்கும் புலப்படாது நீ ஒளிக்கின்ருய் ; அத் தீயார்காண நீ வெளியே தோற்ற மளித்தால், அதனுல் உனக்குத் தீங்கு உண்டாகுமோ என்று பொருள் கோடலும் ஒன்றும். இனி, வீயாத பெருமாய, என்பதற்கு என்றும் அழியாத மாயனே என்று விளியாக்கியும், பொருள் கொள்ளலாம்.

பி - ம். 1. பரப்பிரமம் ; நின்னதே,
2. னடியனவே ; யடியளவே.
4. மாயா விளையாட்டும் ; மாமாய விளையாட்டும். (54)

55. தாய்தன்னை யறியாத கன்றில்லை தன்கன்றை
யாயுமறி யும்மிதிவ் வுலகின்ருய்க் கில்லையால்
நீயறிதி யெப்பொருளு மவையுன்னை நிலையறியா
மாயையிது வென்கொலோ வாராதே வரவல்லாய்.

வாராதே வர வல்லாய் - வழி கடந்து வராது, நினைத்த இடத்தில் வந்து தோன்றும் ஆற்றல் உடையவனே! தாய் தன்னை அறியாத கன்று இல்லை - தன் தாயைத் தெரிந்து கொள்ளாத கன்று இல்லை ; யாயும் தன் கன்றை அறியும் - (அதுபோல), தாயும் தன் கன்றை அறிந்து கொள்ளும் ; இது - இந்த இயற்கை உணர்ச்சி, உலகின் தாய்க்கு இல்லை - உலகெல்லாம் ஈன்ற தாயாகிய உன் திறத்திற் பொருந்துவதாய் இல்லை ; (ஏனெனில்), நீ அறிதி எப்பொருளும் - (நீ படைத்த) பொருள்கள் யாவற்றையும் நீ அறிகின்ருய் ; அவை - அப்பொருள்கள், உன்னை நிலை அறியா - உன் தன்மையை அறிய

மாட்டாதனவாய் இருக்கின்றன. மாயை இது என் கொலோ - இந்த மாயச் சூழ்நிலை யாதோ? யான் அறிய முடியவில்லையே!

வாராதே வரவல்லாய்: இறைவன் எங்கும் நிறைந்துள்ளவனாத லின், நினைத்த இடத்தில் நினைத்தவாறு தோன்றக் கூடியவன் என்ற தாம்; இது, 'வந்தாய் போல வாராதாய் வாராதாய் போல் வருவானே' (திருவாய்மொழி. *60 : 9*) என்ற ஆழ்வார் அருளிச்செயலை அடியொற்றி யதும் ஆம். பிரகலாதாழ்வானுக்காகத் தூணில் நரசிங்கமாய்த் தோன் றியது போல எனக் கொள்ளப்பாலது: இவ்வுண்மை **வில்லிப்புராணம் 5 : 274.** செய்யுளாலும் விளங்குவது காணலாம். தாய் தன்னைக் கன்று அறியும்; 'பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று, வல்லது தாந் தாய்நாடிக் கோடலை' (நாலடி. *101*). இது, மற்றைய பிராணி களுக்கும் ஏற்கும். இவ்வுண்மை உன் திறத்து இல்லை; ஏனெனில் உன்னால் உண்டாகப்பெற்ற ஜீவன்கள் நீயே தம் உற்பத்திக்குக் காரணம் என்ற உண்மையை அறியும் ஆற்றல் பெறவில்லை. நீ அறிதி எப்பொருளும்; நீசர்வசாக்ஷியாய் இருக்கின்றாய் என்றபடி யும் ஆம். மாய இது என் கொலோ - ஏ மாயனே! இது என்ன விபரீதம் என்றும், மாயமீது என்கொலோ-இந்த மாயச் சூழ்ச்சி ஏனோ என்றும் பாடங்கள் கொண்டும் பொருள் கூறலாம். யாய், ஆய் என் பதின் போலி.

பி - ம். 1. தாயையறியாத.
2. ஆயுமறிவுறு மாலிவ்வுல.
3. யவை நின்னை. 4. மாயவிது; மாயமிது. **(55)**

**56. பன்னலா மென்றுலகம் பலபலவு நினையுமால்**
**உன்னலாற் பெருந்தெய்வ முயர்ந்துளோ ரொழுக்கன்றே**
**அன்னவூர் தியைமுதலா மந்தணர்மாட் டருந்தெய்வம்**
**நின்னலா லில்லாமை நெறிநின்றார் நினையாரோ.**

உலகம் - உலகில் வாழும் மானிடர்கள், பன்னல் ஆம் என்று - துதிக்கலாம் என்று, பல பலவும் நினையும் - பலவகையான வேறு தெய்வங்களையும் நினைப்பார்; (ஆனாலும்) உன் அல்லால் - உன்னை அல்லாமல், பெரும் தெய்வம் - வேறு சிறந்த தெய்வம் உண்டென்று கருதுதல், உயர்ந்துளோர் ஒழுக்கு அன்று - உயர்ந்த ஞானி களுடைய செயல் அன்று; அன்ன ஊர்தியை முதல் ஆம் - அன்ன வாகனமுடைய பிரமதேவனை முதலாகக் கொண்ட, அந்தணர் மாட்டு அரும் தெய்வம் - அந்தணர்களால் ஆராதிக்கப் பெறும் தெய்வம், நின் அலால் இல்லாமை-உன்னையன்றி வேறு இல்லாதிருக்கும் உண்

மையை, நெறி நின்றார் - பிற பல சமய நெறிகளில் நின்றவர்கள், நினையாரோ - (சாஸ்திர ஆராய்ச்சி மூலம்) எண்ணிப்பார்க்கமாட்டார் களோ? (வீணாகப் பிறநெறி நின்று உண்மை அறியாது போகின்றார் களே, என்று இரங்கிக் கூறியது).

பன்னுதல்-விளக்கிச் சொல்லுதல், புகழ்தல். பலபல : அடுக்கு, மிகுதியைக் குறிப்பது ; இயல்பாய் நின்றது. ஆல், ஏ : அசை கள். ஒழுக்கு - ஒழுக்கம், நடை; ஆசாரமும் ஆம். அந்தணர் - அழகிய தட்பத்தை (அருளையுடைய) மேலோர் ; 'அந்தணர்தம் சிந்தை யானை' (தேவாரம்). நெறி நின்றார் நினையாரோ - நன்னெறியைக் கடைப் பிடித்து நின்ற ஆன்றோர் நினைக்கமாட்டார்களோ? (நினைத்திருப் பார் என்றபடி) எனவும் பொருள் கொள்வர் ; ஒப்பு ; அழகரந்தாதி : 22.

பி - ம். 1. பற்பலவு நினையுமால் ; நினையலுமற்; நிலையலுமா ; நினையாமல்.
2. உன்னலாம் பெருந்தெய்வம் ; உன்னிலார் பெருந்தெய்வம் : வொழுக்கன்றே ; வழக்கன்றே.
3. அன்னமூர்தியை ; அமரர் மாட்டருந்தெய்வம்.
4. நின்னலாதில்லாமை ; நின்னலாரில்லாமை ; நீ நின்றால் நினையாரோ.

(56)

57. பொருவரிய சமயங்கள் புகல்கின்ற புத்தேளிர்
இருவினையு முடையார்போ லருந்தவநின் றியற்றுவரால்
திருவுறையு மணிமார்பா நினக்கென்ன செயற்பால
ஒருவினையு மில்லார்போ லுறங்குதியா லுறங்காதாய்.

'திரு உறையும் அணி மார்பா - திருமாது தங்கியிருக்கும் அழ கிய மார்பையுடையவனே! பொருவு அரிய - ஒப்பு உரைக்க முடியாத, சமயங்கள் - பிற மதங்கள், புகில்கின்ற புத்தேளிர் - தத்தம் தெய்வம் என்று சிறப்பித்துச் சொல்கின்ற தெய்வங்கள், இருவினையும் உடையார் போல் - புண்ணிய பாவங்கள் என்னும் இருவினையும் பெற்ற சாதாரண ஜீவன்களைப் போல, அரும் தவம் நின்று இயற் றுவர் - அரிய தவம் செய்கின்றனர் ஆவர்; (ஆனால்), நினக்கு என்ன செயல் பால - உனக்குச் செய்ய வேண்டிய தவத் தொழில் என்ன இருக்கின்றது? ; (ஒன்றுமில்லை என்றபடி); (ஆயினும்) உறங்காதாய் - உறக்கம் என்பதின்றி எப்பொழுதும் ஜாக்ரதம் என்னும் நிலையில் இருப்பவனே ! ஒரு வினையும் இல்லார் போல் - ஒரு தொழிலும் இல்லாதவர் போல, உறங்குதியால் - உறங்குகின்றாய் ; ஆல் இரண்டு இடத்தும் அசை.

இரு வினையும் உடையார் போல் - புண்ணிய பாவங்களால் பிறந்த ஜீவன்களைப் போல ; இருவினையும் அற்றோரே முமுக்ஷுக் கள்; மற்றையோர் இருவினை வயப்பட்டவர் ; 'இருள்சேரிருவினையும் சேரா விறைவன், பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு' என்றதையும் நோக்குக ; (குறள். 5). மற்றைச் சமயத்தேவர் தவம் செய்கின்றார் ; ஆதலின், அவர்கள் இருவினைப்பட்டவர் போலும்! அவ்வாறாயின் அவர் பரம் பொருள் என்பது எவ்வாறு பொருந்தும்? என்பதாம். மணி மார்ப எனக்கொண்டு கௌத்துவமணி விளங்கும் மார்பனே, எனவும் பொருள் கொள்ளலாம். நினக்கென்ன செயற்பால; நீ செய்வது ஒன்றும் இல்லை ; எல்லாம் உன் ஆணைப்படி தானே நடைபெறுகின்றது என்பதாம். உறங்காதாய் உறங்குதி - உறங் காமல் உறங்குகின்றாய்; அதாவது யோக நித்திரை கொண்டுள்ளாய்; யோக நித்திரை - அறிதுயில் ; அறிதுயிலாவது உறங்குவது போல அமைதியாய் இருந்து யாவும் தத்தம் கருமங்களில் இயங்கிக் கொண்டிருக்கப் பார்த்துக் கொண்டிருப்பது. 'உறங்குவான் போல் யோகு செய்த பெருமானை'; என்ற ஆழ்வார் அருளிச் செயலையும் நோக்குக ; (திருவாய்மொழி. *5 - 4 : 11.*) இச் செய்யுள் திருமாலின் சயனத்தைக் கொண்டாடியது என்க. 'ஒருவினையு .மில்லார் போலுறங்குதி' என்றமையால் அவருக்கு வினை என்பதில்லை என்று கூறப்பெற்றது ; அன்றியும், அவர் யோகநித்திரை பிற தெய்வங்கள் ஒன்றைக் குறித்துச் செய்யும் தவம் போன்றது அன்று என்று குறித்ததும் ஆம்.

பி - ம். 1. சமயங்க ளறைகின்ற. 2. யிருந்தவ நின்.
3. வரைமார்பா ; வியன்மார்ப : செயற்பால(து).
4. தொரு வினையு மின்மையினால்; யுறங்குதியோ வுறங்காதாய். (57)

58. அரவாகிச் சுமத்தியா லயிலெயிற்றி னேந்துதியால்
ஒருவாயின் விழுங்குதியா லோரடியா லொளித்தியால்
திருவான நிலமகளை யிஃதறிந்தாற் சீறாளோ
மருவாருந் துழாயலங்கன் மணிமார்பின் வைகுவாள்.

'திரு ஆன நிலமகளை - அழகிய பூமிப் பிராட்டியை, அரவு ஆகி - ஆதிசேடன் என்னும் பாம்பாகி, சுமத்தி - தாங்கி நிற்கின் றாய் ; அயில் எயிற்றில் ஏந்துதி - (வராகாவதாரத்தில்) கூரிய உன் பல்லில் தாங்கிக் கொண்டுள்ளாய் ; ஒருவாமல் விழுங்குதி - பிரளய காலத்தில் அப்பூமியைச் சிறிதும் மிச்சப்படாமல் முழுவதும் விழுங்குகின்றாய் ; ஓர் அடியால் ஒளித்தி - திரிவிக்கிரமனாகி உன்

ஒரு பாதத்திற்குள் அடங்குமாறு மறைத்துள்ளாய்; மரு ஆரும் - மணம் நிறைந்த, துழாய் அலங்கல் மணி மார்பில் - திருத் துழாய் மாலையுடைய உன் அழகிய மார்பில், வைகுவாள் - தங்கியிருக்கின்ற திருமகளாகிய பெரிய பிராட்டி, இஃது அறிந்தால் - இச் செய்திகளை அறிந்தால், சீருளோ - உன்பால் சீற்றம் கொள்ளமாட்டாளோ? (சீறுவாள் என்றபடி).

திருமால் அரவானமை : ஸ்ரீநாராயணனின் பஞ்ச வியூக மூர்த்திகளில் ஒன்றான ஸங்கருஷணமூர்த்தியே ஆதிசேடனாய் இருப்பது என்னும் மரபுபற்றிக் கூறியது. மேலும், ‘நாகங்களில் நான் அனந்தனாய் இருக்கிறேன்’ என்ற கீதாவசனத்தை உட் கொண்டு கூறியதும் ஆம். துழாய் : துளஸீ என்னும் வடசொல் லின் திரிபு. மணி மார்பு - நீல மணிபோல் ஒளிவீசும் மார்பு என்றும், கௌஸ்துவ மணி விளங்கும் மார்பு என்றும் கொள்ளலாம். திருமால் - பாரை எடுத்து, அளந்து, உண்டு உமிழ்ந்தது முதலியன, ‘பாரை யிடந்தவனும், பாரை யளந்தவனும், பாரை யெடுத்தவனும் பண்பாகப் பாரைமணங் கொண்டவனு முண்டவனு கொண்டலென நின்றருளும், வண்டமருந் தண்டுளவ மால்’, என்ற செய்யுளால் விளங்குவது காண்க. சீருளோ என்றது; இது தலைவன், வேறு மாதினிடம் காட்டும் அன்புகண்டு தலைவி சீறுவது இயல்பு என்ற முறைபற்றிக் கூறியது.

பி - ம். 1. லணியெயிற்றின்.
2. ஒருவாமல் விழுங்குதி; விளங்குதி: ஓரடியி னொடுக்குதியால்.
3. திருமாஅ மகளறிந்தால்; யிவையறிந்தாற்.
4. மணிமார்பிற் றங்குவாள்; வைகுறுவாள். (58)

59. மெய்யைத்தான் சிறிதுணர்ந்து நீவிதித்த மன்னுயிர்கள்
உய்யத்தா னாகாதோ வுனக்கென்ன குறையுண்டோ
வையத்தார் வானத்தார் மழுவாளிக் கன்றளித்த
ஐயத்தாற் சிறிதையந் தவிர்ந்தாரு முளரையா.

‘ஐயா - ஐயனே! நீ விதித்த மன் உயிர்கள் - நீ படைத்து இயங்குமாறு நியமித்த வாழ்வினையுடைய ஜீவன்கள், மெய்யை தான் சிறிது உணர்ந்து - நீயே பரம்பொருள் என்ற உண்மையைச் சிறிது அறிந்து, உய்ய தான் ஆகாதோ - நற்கதியடைவது என்பதுதான் கூடாதோ? உனக்கு என்ன குறை உண்டோ - அவ்வாறு மன்னுயிர்கள் நற்கதி பெற்றால், அதனால் உனக்கு என்ன

குறை ஏற்படும்? மழு ஆளிக்கு - மழு என்னும் கோடாலியை ஆயுதமாகக் கொண்டுள்ள சிவபெருமானுக்கு, அன்று - அவன் உன்மத்தனாய் இருந்த காலத்து, அளித்த ஐயத்தால் - நீ அளித்த பிச்சையால், வையத்தார் வானத்தார் - பூமியில் உள்ள மானிடரும், வானிலுள்ள தேவர்களும், சிறிது ஐயம் தவிர்ந்தாரும் உளர் - பரம் பொருள் யார் என்றிருந்த சிறிய சந்தேகத்தையும் நீங்கினவர்களும் உண்டு.

சிவபிரான், பிரமனது ஐந்து சிரங்களில் ஒன்றைக் கொய்ய, அதனால் பிரமசாப முறவே, அந்தப் பிரமனது கொய்த சிரம் சிவபிரான் கையில் விடாது ஒட்டிக்கொள்ள, உன்மத்தனாகித் திரிந்தான்; பின் திருமால் அந்தப் பிரம கபாலத்தில் ஐயம் இடவே, அக் கபாலம் கைவிட்டு நீங்கச் சிவபிரானும் உன்மத்த நிலை நீங்கினான் என்பது புராண வரலாறு; இந்நிகழ்ச்சி திருக்கண்டியூர் என்னும் தலத்தில் நிகழ்ந்தமையால், அத்தலத்தில் எழுந்தருளியுள்ள திருமாலுக்கு, அரன் சாபந்தீர்த்த பெருமான் எனப்பெயர் வழங்கும்; கண்டியூர் ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற நூற்றெட்டுத் திருப்பதிகளில் ஒன்று. திருமாலிட்ட ஐயத்தால் அரன் சாபம் நீங்கினமையால், திருமாலே பரம்பொருள் என்பதில் இருந்த ஐயம் நீங்கிற்று என்பதாம். 'நீர் மறைந்திருந்த போதிலும், முன்னாலே சிவனுக்கு நீர் பிச்சையிட்டுக் கையிலிருந்த பிரம கபாலம் விட்டு நீங்கியதைப் பூலோகத்தாரிலும், தேவலோகத்தாரிலும் சந்தேகம் தெளிந்து உண்மை அறிந்திருக்கிறார்கள்' என்பது பழையவுரை.

பி - ம். 1. மெய்யத்தார் சிறிது; மெய்யத்தாற் சிறிதுணர்ந்து.
3. வய்யத்தார்; வானகத்தார்.
4. தையந் தெளிந்தாரு; தீர்ந்தாரும்: தமதையந், பிறிதையந் தெளிந்தாரு.

(59)

60. அன்னமா யருமறைக ளறைந்தாய்நீ யவையுன்னை
முன்னமா ரோதுவித்தா ரெல்லாரு முடிந்தாரோ
பின்னமா யொன்றுதல் பிறிந்தேயோ பிறியாதோ
என்னமா மாயமிவை யேனமாய் மண்ணிடந்தாய்.

'ஏனமாய் மண் இடந்தாய் - வராக உருவங்கொண்டு புவியைத் தன் கோட்டால் குத்தி எடுத்தருள்செய்த இராமபிரானே! நீ அன்னமாய் அருமறைகள் அறைந்தாய் - நீ அன்னப் பறவை வடிவை எடுத்து, பிரமதேவனுக்கு அரிய வேதங்களை உபதேசித்தாய்,

அவை - அவ்வேதங்களை, முன்னம் உன்னை யார் ஓதுவித்தார் - முன் உனக்கு யார் கற்பித்தார்? எல்லாரும் முடிந்தாரோ - (அப்படி உனக்கு ஓதுவித்தவர் இன்னார் என்று அறிய முடியாமையால்) அவர்கள் இறந்து ஒழிந்தார்களோ? பின்னமாய் ஒன்று ஆதல் - பின்னப்பட்டு வேருய் அமைந்துள்ளவை பின் ஒன்ருக அமையும் என்பது, பிறிந்தேயோ பிறியர்தோ - ஒன்றினின்று பிரிந்து வந்தவையோ அல்லது பிரியர்து தனித்துள்ளவையோ? என்ன மாமாயம் இவை - இவ்வாறு நீ செய்யும் மாயங்கள் விளங்க வில்லையே!

திருமால் அன்னமாகி வேதங்களைப் பிரமனுக்குச் சொன்னது: **பெரியதிருமொழி.** *2, 7 : 10, 9, 4 : 2*; தொல். செய். *146*. நச் உரை; வி. பா. துருவாச : *11*. உன்னை ஓதுவித்தார் ஆர் என்றது, நீ ஸ்வய அறிவினன் என்று கூறியது. பின்னமா...................... பிறியர்தோ :—பின்னமாய் உள்ளவை என்பன, ஒன்றினின்று பிரிவுபட்டுப் பின் ஒன்று சேர்வதோ அல்லது பிரிவுபடாது தாளுகவே இருப்பதோ? இது ஜீவாத்மா வேறு, பரமாத்மா வேறு என்ற கொள்கையை மறுத்து இரண்டும் ஒன்றே; அவை உலக நிலையில் பிரிந்துள்ளவை; பின் ஒன்றுசேரும் இயல்பின என்னும் உண்மைத் தத்துவத்தை அறிவுறுத்துவதாகும்; சுந்தர. *1215*, குறிப்., செவ்வைச். பாகவதம் 25.

பி - ம். 1. அவையுன்னி.
3. பிரிந்தேயோ பிரியாதோ; பெற்றதோ பிறிதேயோ; பிறிந்தாயோ பிறியாயோ. *(60)*

**61. ஒப்பிறையும் பெறலரிய வொருவாமு னுவந்துறையும்**
**அப்புறையுட் டுறந்தடியே னருந்தவத்தா லணுகுதலால்**
**இப்பிறவிக் கடல்கடந்தே னினிப்பிறவே னிருவினையும்**
**துப்புறநீத் தனையசுடர்த் திருவடியாற் றுடைத்தாய்நீ.**

இறையும் ஒப்பு பெறல் அரிய ஒருவா - சிறிதும் ஒப்பு வேறு பெற முடியாத பொருளே! முன் உவந்து உறையும் - முன்னே நீ மனமுவந்து பள்ளி கொண்டுள்ள, அப்பு உறையுள் துரந்து - திருப்பாற் கடலான இருப்பிடத்தை விட்டு நீங்கி, அடியேன் அரும் தவத்தால் - அடியேன் முன் செய்த அரிய தவப்பயனால், அணுகுதலால் - நீ என் முன் அணுகிக் காட்சியளித் தருளியதால், இ பிறவி கடல் கடந்தேன் - இந்த என் நீசப் பிறவியாகிய கடலைக் கடந்தவனானேன்; இனி பிறவேன் - இனி மறுபடி பிறக்கமாட்டேன்; இரு

வினையும் - என் நல்வினை தீவினைகள் அனைத்தையும், சுடர் அனைய திருவடியால் - நெருப்புப் போன்ற உன் சோதியுடைய திருவடியினால், துப்புற - தூய்மையுற, நீத்து - நீக்கி, நீ துடைத்தாய் - நீ துடைத்து அருள் புரிந்தாய்.''

உன் திருவடி என்மீது பட்டவிசேஷத்தால் என் இருவினையும் நீங்கிற்று ; இப்பிறவிக் கடல் கடந்தேன் ; இனிப் பிறவேன் என்று உண்மையை அறிந்து கூறினான் விராதன் என்க. திருவடியால் துடைத்தது ; இராம லக்ஷ்மணர்களைத் தோளில் சுமந்ததாலும், இராமபிரான் திருவடியால் உந்தப்பட்டதாலும் என்க. அனைய - நெருப்புப் போன்ற ; அனை - அனல், நெருப்பு (78). இச்செய்யுளில் பிரானின் இயற்கை நிலையையும், அவதார நிலையையும் கூறினார் என்க.

பி - ம். 1. பிறிதறியாய் ; வொருவினை நிறைந்துறையும்.
2. அப்பிறையும் பிறிதறியா ; அப்புறையும் ; அப்பொறையுந் துறந்தறியேன் ; அப்பொறையூ டுற்றறியேன்.
4. துப்பற நீத்தனைய ; நீர்த்தனைய, நீத்தனன். (61)

விராதன் தன் வரலாறு கூறுதல் 62—71

62. இற்றெ லாமி யம்பினான், நிற்ற லோடு நீயிவ்வா
றுற்ற வாறு ணர்த்தெனா, வெற்றி யான்வி ளம்பினான்.

இற்று எலாம் - இவ்விதமாய் யாவற்றையும், இயம்பினான் - சொன்ன விராதன், நிற்றல் ஓடு - அவ்வாறு சொல்லி நின்ற அளவில், 'நீ இ ஆறு உற்ற ஆறு - நீ இவ்விதம் அரக்கனாகப் பிறந்த வரலாற்றை, உணர்த்து எனா - தெரிவிப்பாயாக' என்று இராமபிரான் கேட்க, வெற்றியான் விளம்பினான் - (பிறவிக் கடல் கடந்த) வெற்றிச் சிறப்பையுடைய விராதன் பின்வருமாறு கூறுவானானான்.

வெற்றியான் - அவனை வென்ற வெற்றியுடைய இராமபிரான் என்னலும் ஆம். இராமபிரான் விராதன் மீது கொண்ட வெற்றியை, 'யாரே வீர விராதன்றனை வெய்யோர் ஐயோ போனா னம்பொடு மும்பர்க் கவனென்றால், உய்வார் யாரே !;' (738) என்று இராவணனுக்கு மாரீசன் உறுதி எடுத்துக் கூறிய முகத்தாலும் அறியலாம். இதனாலன்றோ, இராமபிரானை, 'விராத வத பண்டித:' என்று ஆன்றோர் சிறப்பிப்பாராயினர்.

பி - ம். 2. நீயிவண். 3. உற்ற வாறு.
4. வெற்றியோன் விளம்பினான், விளம்புவான். (62)

**63.** கள்ள மாய வாழ்வெலாம், விள்ள ஞானம் வீசுதாள்
வள்ளல் வாழி கேளெஞு, உள்ள வாறு ணர்த்தினுன்.

'கள்ள மாய வாழ்வு எலாம் - திருட்டுத்தனமும் வஞ்சகமு முடைய எனது இப்பிறவி வாழ்க்கையெல்லாம், விள்ள - விண்டு நீங்க, ஞானம் வீசு தாள் - ஞானத்தை வீசும் திருப்பாதங்களை யுடைய, வள்ளல் - பரமோபகாரியான இராமபிரானே ! கேள் எஞு - நீ கேட்டருள்வாயாக' என்று, உள்ளவாறு உணர்த்தினுன் - தன் வரலாற்றினை உள்ளபடி (விராதன்) கூறுவாணுயினன், வாழி : அசை.

இனி விராதன், தன்னைமட்டும் குறிக்காமல் சகல ஜீவன்களின் கள்ளமாய வாழ்வு எல்லாவற்றையும் குறித்தான் எனக் கூறியதாகக் கொள்ளலும் ஒன்றும். வீசுதல் - போய்ப்பரவி வீழச் செய்தல் ; வரையாது அருளுதலும் ஆம். (பிங்.) 'கொள்பத மொழிய வீசிய புலனும்' (புறநா. 23 ; 7). வாழி ; 41 குறிப்.

பி - ம். 1. ஞாலம்வீசுதாள். (63)

**64.** இம்ப ருற்றி தெய்தினேன், வெம்பு விற்கை வீரபேர்
தும்பு ருத்த னதன்சூழ், அம்ப ரத்து ளேனரோ.

'வெம்பு வில் கை வீர - கொடுமையையுடைய வில்லைக் கையிற் கொண்ட வீரனே ! இம்பர் உற்று இது எய்தினேன் - இப்புவியை அடைந்து இப்பிறவி பெற்ற எனது, பேர் - பெயர், தும்புரு - கந்தருவனுன தும்புரு என்பது; தனதன் சூழ் - குபேரன் ஆட்சிக்கு உட்பட்ட, அம்பரத்து உளேன் - வான் உலகில் உள்ளவனுவேன் ;

பேர், பெயர் என்ற சொல்லின் திரிபு. தனதன் தனத்திற்கு உரியவன்; தனத்தைத் தருபவன் எனலும் ஆம். அரோ : அசை. சில சுவடிகளில் இச்செய்யுள் பின்வருமாறு மாறிக் காண்கிறது :—

வெம்பு விற்கை வீரநீ, அம்ப ரத்து நாதனுர்
தும்பு ருத்தன் வாய்மையால், இம்ப ருற்ற தீதரோ.

பி - ம். 1. இம்பருற்ற தெய்தினேன், இம்பரிற்றி னெய்தினேன்.
2. வீரனே ; வீரமேல் வீரபோர் ; வீரவோர்.
3. தும்புருத்த னூழிவாழ் ; தும்புருற்ற சூழியால் ; தும்பெருத்த சூழியால்; தும்புரு செய் சூழ்ச்சியால்.
4. அம்பரத்து ளென்பரோ ; அம்பரத்தி னேனரோ; அம்பரத் துளானரோ. (64)

**65.** ஆட ரம்பை நீடரங்கு, ஊடு நின்று பாடலால்
ஊடல் வந்து கூடவிக், கூடு வந்து கூடினேன்,

'ஆடு அரம்பை - நடனம் செய்யும் அரம்பை என்னும் தேவ மாது, நீடு அரங்கு ஊடு - பெரிய சபையினிடத்து, நின்று பாட லால் - நின்று பாடினதால், ஊடல் வந்து கூட - அவளிடத்துக் காதல் உண்டாகி ஊடல் முதலியன என்னிடம் சேர, இ கூடு வந்து கூடினேன் - இந்த அரக்கன் உடலை வந்து அடைந்தேன்.

இச்செய்யுளில், பின்னிரண்டு அடிகள், 'ஊடல் வந்து கூடவக், கூடல் வந்து கூடினேன்' என்றிருத்தல் வேண்டுமோ என்று தோன்றுகின்றது. இவ்வாறு கொண்டால், அரம்பை பாடலால் எனக்கு அவள்பால் விருப்பம் உண்டாகிப் பின் அவளிடம் ஊடலும் கூடலும் பெற்றேன் எனப் பொருள் கிடைக்கும். 'ஊடுதல் காமத் திற்கின்பம்'; குறள். 1330. ஆதலின், ஊடலும் பின் கூடலும் அடைந் தேன், என்றான். இனி 'ஊடுவந்து கூடவக் கூடுவந்து கூடினேன்' எனப் பாடங்கொண்டாரும் உளர். ஊடு - ஊடல்; கூடு - கூடல்; கூடு, ஊடு, இவை இங்கு முதனிலைத் தொழிற் பெயர்களாய் நின்றன. தும்புரு, தான் காதல் கொண்ட அரம்பையின் ஊடலைக் கருதி மனஞ் சோர்ந்திருக்க, அவ்வேளை அங்கு வந்த குபேரன் அவன் தன்னை வணங்காமல் அவமதித்ததாகக் கருதிச் சபித்தனன் என்று வான்மீகம் கூறும்.

விராதனைப்பற்றிய மற்றை வரலாறுகள் :—

கோகர்ண க்ஷேத்திரத்தில் நியம நெறி விட்டு, கொடுஞ் செயல் புரிந்து வந்த ஓர் அந்தணன் நாரத முனிவரால் சபிக்கப் பெற்று, விராதன் என்னும் அரக்கனாயினன் என்பது சிவமஹா புராணம்.

துர்வாஸரால் தும்புரு சாபம் பெற்றதாக அத்யாத்ம, ஆனந்த ராமாயணங்கள் கூறும். இவ்விராதனே, இராம லக்ஷ்மணர்களைச் சரபங்காச்சிரமம் சேரும்படி கூறினான் என்பது, அத்யாத்ம ராமா யணத்தால் அறியப்பெறும்.

பி - ம். 3. ஊடுவந்து கூடவக்; ஊடுவந்து கூடவெய்ய.
4. கூடல் வந்து கூடினேன்; கூடுவந்து கூடினேன். (65)

**66. கரக்க வந்த காமநோய், துரக்க வந்த தோமினால்**
**இரக்க மின்றி யேயினான், அரக்கன் மைந்த னாகென.**

'கரக்க வந்த காம நோய் - (அறிவை) மறைக்கும்படி உண்டான காமப் பிணி, துரக்க - தூண்ட, வந்த - அதனால் ஏற்பட்ட, தோமி னால் - குற்றத்தால், 'அரக்கன் மைந்தன் ஆகு என - நீ ஓர் இராக்

கதன் மகனாய்ப் பிறக்கக் கடவாய்' என்று, இரக்கம் இன்றி எயினன் - இரக்கம் என்பதில்லாமல் (அக்குபேரன்) என்னைச் சபித்தான்.

கரக்க வந்த காமநோய்; காமம் அறிவை மறைக்கும் என்பதாம். காம நோய்: காமம் நிறைவேறாவிடில் அது பிணி போல் வருத்துவதாலும், அக்காமமே பெரும் பிணிகளுக்கு இடமாதல் பற்றியும் என்க. துரத்தல் - தூண்டுதல்; 'கோலொன்று வாங்கி..........ராகவன் துரந்தான்' (கிட்கிந்தா. வாலிவதைப் : 56); 'அம்பு, துரக்குவ தல்லால் வேறோர் சொல்லுண்டோ வென்னச் சொன்னான்' (உயுத்த. அங்கதன் றூது : 3).

பி-ம். 2. உரக்க வந்தோர்மினால் : தோகையால்.
3. மின்றியீயமால்.
4. அரக்கன் மைந்த னாயினேன். (66)

67. அன்ன சாப மேவிநான், இன்ன றீர்வ தேதெனா
நின்ன தாளி னீங்குமென், றுன்னு மெற்கு ணர்த்தினான்.

'நான் அன்ன சாபம் மேவி-நான் அந்தச் சாபத்தை அடைந்து, இன்னல் தீர்வது ஏது எனா - எனக்கு இச் சாபமாகிய துன்பம் தீர்வது எவ்வாறு, என்று நான் கேட்டுக்கொள்ள, 'நின்ன தாளில் நீங்கும் என்று - உன்னுடைய திருவடிபடும் மாத்திரத்தில், இச் சாபம் விட்டு நீங்கும்' என்று, உன்னலால் உணர்த்தினான்-ஆராய்ந்து நோக்கியதால் எனக்கு அந்தக் குபேரன் தெரிவித்தான்.

பி-ம். 1. அன்ன மூருமாகியான்; அன்னசாபமேயினான்; அன்னமாகு பேரினான்; அன்னயக்கனாகியாய்.
2. இன்னறீர வீகையான்; ஈசனும்; இன்னறீர்கை வாதெனா. தீருமீகையான்.
3. நின்னதாளில் வீயுமென்; னையுமென்; நீவுமென்; வீடுமென்,
4. றுன்னியாங் குணர்த்தினான்; றுன்னியெற் குணர்த்தினான். (67)

68. வலஞ்செய் திந்த வானெலாம், நலிஞ்சு தின்னு நாமவேல்
பொலிஞ்ச வென்றி பூணுமக், கிலிஞ்சன் மைந்த னாயினேன்.

'இந்த வான் எலாம் - இந்த வான மண்டலம் முழுவதும், வலம் செய்து - சுற்றிவந்து, நலிஞ்சு தின்னும் - யாரையும் வருத்திக் கொன்று தின்னுகின்ற, நாம வேல் பொலிஞ்ச - அச்சத்தைத் தரும் வேல் விளங்கிய, வென்றி பூணும் - வெற்றியைப் பூண்டவனான,

அ இலிஞ்சன் மைந்தன் ஆயினேன் - அந்தப் பிரசித்திபெற்ற இலிஞ்சன் என்னும் அரக்கன் மைந்தனுகப் பிறந்தேன்.

நலிஞ்சு, பொலிஞ்ச, என்பன, நலிந்து, பொலிந்த என்ற சொற்களின் போலிகள். அக்கிலிஞ்சன் : அ, என்றது உலகறி சுட்டு. இலிஞ்சன் என்பானை, ஐயன் என்ற பெயர் கொண்டு முதனூல் கூறும். ஐயன் என்ற பெயருக்கு ஏற்ப, வென்றி பூணும் இலிஞ்சன் எனச் சிறப்பிக்கப்பட்டதும ஆம். சில சுவடிகளில் இச் செய்யுள் இல்லை.

பி - ம். 1. வலிஞ்செதிர்ந்து வானெலாம்.

2. நலிஞ்சுநின்ற ; நலிஞ்சு நின்ற.

4. குலிஞ்சன் மைந்த.

69. அன்று மூல மாதியாய், இன்று காறு மேழையேன்
நன்று தீது நாடலேன், நின்று தீய நேடினேன்.

'ஆதியாய் - ஆதி மூலப் பொருளே ! அன்று மூலம் - அன்று முதற்கொண்டு, இன்று காறும் - இன்று வரைக்கும், ஏழையேன் - அறிவற்ற நான், நன்று தீது நாடலேன் - இது நல்லது, இது தீது என்று ஆராயாமல், நின்று - என் இச்சை வழி நின்று, தீய நேடினேன் - தீய காரியங்களையே தேடிச் செய்து வந்தேன்.

நேடுதல் - நெடுந்தூரம் தேடிச் செல்லுதலும் ஆம்.

பி - ம். 3. பொன்றுருத புன்மையின்.

4. தீய்மை நேடினேன் ; நின்று தீய தேடினேன் ; நின்ற நீசனுயினேன்.

(69)

70. தூண்ட நின்ற தொன்மைதான், வேண்ட நின்ற வேதநூல்
பூண்டநின்பொ லன்கொடாள், தீண்ட வின்று தேறினேன்.

'தூண்ட நின்ற - என்னைத் தூண்டுவதற்காக (என்னுள்ளே) நின்ற, தொன்மைதான் - என்பழைய நல்வினைதான், வேண்ட - விரும்ப, நின்ற - என் எதிர் வந்து நின்ற, வேத நூல் பூண்ட - வேத சாஸ்திரங்கள் தமக்கு அணிகலமாகப் பூண்டுள்ள, நின் பொலன் கொள் தாள் - உன் அழகிய பாதம், தீண்ட - என்னைத் தீண்ட,

இன்று தேறினேன் - இன்று என் சாபம் தீர்ந்து நல்லறிவு பெற்று உய்ந்தேன் ஆனேன்.

நின்ற நின் பொலன் கொள்தாள் என இயைக்க. நின்ற வேத நூல் - நிலைபெற்று நின்ற வேத நூல் எனப் பொருள் கொள்ளலும் ஆம். பொலன் கொள்தாள் - என்பதற்குப் பொற்கழல் அணிந்த பாதம் எனப் பொருள் கொள்ளலும் ஒன்றும்.

பி - ம். 1. தூண்டிநின்ற ; தூண்டநின்று.
2. வேண்டி நின்ற. 4. தீண்டலின்று. (70)

71. தெறுத்து வந்த தீதெலாம், அறுத்த வுன்னை யாதனேன்
ஒறுத்த தன்மை யூழியாய், பொறுத்தி யென்று போயினான்.

'ஊழியாய் - ஊழிக் காலத்திலும் அழியாதவனே! தெறுத்து வந்த தீது எலாம் - என் வலிமையால் யான் பகைத்துச் செய்து வந்த தீவினையனைத்தையும், அறுத்த உன்னை-அறுத்து அழித்த உன்னை. ஆதனேன் - அறிவில்லாத நான், ஒறுத்த தன்மை - பகைத்துச் செய்த அபசாரங்களை, பொறுத்தி என்று - பொறுத்தருள்வாயாக' என்று பிரார்த்தித்துக் கொண்டு, போயினான் - (விராதன்) தன் பண்டைத் தும்புரு என்னும் கந்தருவ வடிவுடன் வானுலகு சென்றான்.

ஆதன் - முடன்; 'முன் பொருள் செய்யாதா ராதரே' (சிறுபஞ்ச : *20*).

பி - ம். 1. தெறுத்த வந்த ; திறத்தின் வந்த.
2. அறுத்த புன்மை ; மறத்தி புன்மை ; இறுத்த வுன்னை. (71)

**இராமபிரான் முதலியோர் அவ்விடம்விட்டு அப்பால் செல்லுதல் 72—3**

72. தேவு காதல் சீரியோன், ஆவி போயி னானெனப்
பூவு லாவு பூவையோ, டேவ லாரு மேகினார்,

தேவு காதல் சீரியோன் - தேவர்களும் விரும்பத்தக்க சிறப்பை யுடைய அந்த விராதன், ஆவி போயினான் என - உயிர் நீங்கினான் என்று, பூ உலாவு - அணிந்துள்ள பூக்கள் அசையப் பெற்ற, பூவை யோடு - பிராட்டியோடு, ஏவலாரும் - அம்புகளைக் கொண்டு போர் செய்வதில் சிறந்த இராம லக்ஷ்மணர்களும், ஏகினார் - அவ்விடம் விட்டுச் சென்றனர்.

தேவு காதல் சீரியோன் - (முன்னுள்ள தன்) தெய்வத் தன்மையை அடைய விரும்பிய சிறப்புடைய விராதன் என்றும் பொருள் கொள்ளலாம். பூ உலாவு பூவை - ,தாமரை மலரில் வாழும் திருமகளான பிராட்டி எனலும், அழகு அல்லது பொலிவு பெற்ற பிராட்டி எனலும் ஒன்றும்; பூ - அழகு, பொலிவு. அதுகாறும் விராதன்பால் கொண்ட அச்சத்தால், பொலிவு குறைந்திருந்த பிராட்டி அவன் ஆவிபோனதறிந்து மீண்டும் பொலிவு பெற்ருள் என்க.

பி - ம். 1. தேவரான சீரியோன் : சீறியோன்.
4. ஏவில்லாரு மேகினர் ; ஏவலானு மேகினன். (72)

73. கைகொள் கால வேலினர், மெய்கொள் வேத மெய்யர்வாழ்
மொய்கொள் சோலை முன்னினர், வைக லா்னும் வைகினன்.

கை கொள் கால வேலினர் - கையில் ஏந்திய யமன் போன்ற (கொடிய) வேலையுடைய இராம லக்ஷ்மணர்கள், மெய் கொள் வேத மெய்யர் வாழ் - மெய்யாகிய வேதமே வடிவெடுத்துள்ளார்; போன்ற தவ இருடிகள் வாழும், மொய் கொள் சோலை முன்னினர் - அடர்ந்த சோலையை அணுகினர். வைகலானும் வைகினன் - பகலவனை சூரியனும் அத்தமித்தான்.

வைகல் - பகல் : வைகலான் - பகலவன் என்னும் பொருளில் சூரியனைக் குறித்தது. சூரியாத்தமயப் போதில் அவர்கள் அத்திரி ஆச்சிரமம் சென்றனர் என்பது அடுத்த செய்யுளில் - ‘ இரவங்கணுகும்பொழு தெய்தினரால் ’ என்பதாலும் விளங்கும். வேலினர் ; வேல் இங்கு ஆயுதப் பொதுப்பெயர் என்ற அளவில் வந்தது.

பி - ம். 2. மெய்கொள்வேத பாரகர்.
3. துய்ய சாலை துன்னினர்.
4. வைக லோனும் வைகினன் ; வைகருனும் வைகினர். (73)

## விராதன் வதைப்படலம் முற்றும்.

---

# 2. சரபங்கர் பிறப்பு நீங்கு படலம்

———

### இராமபிரான் முதலியோர் சரபங்கர் வனமடைதல்

74. குரவங்குவி கோங்கலர் கொம்பினொடும்
இரவங்க ணுகும்பொழு தெய்தினரால்
சரவங்க னிருந்து தவங் கருதும்
மரவங்கிளர் கொங்கொளிர் வாசவனம்.

இது, சரபங்க முனிவர் இராமபிரான் திருவருளால் பிறவி நீங்கி வீடு பேறெய்திய வரலாற்றைக் கூறும் பகுதி என்று விரியும். இப் படலம் சில சுவடிகளில், **சரபங்கன் பிறவி நீங்கு படலம்** எனவும், சில வற்றில் **சரபங்கப் படலம்** எனவும் குறிக்கப் பெற்றுள்ளது. சரபங்கன்- (மன்மத) பாணங்களைத் தோல்வியுறச் செய்தவன்; முக்குற்றங் களுக்கும் பிறப்பிடமான காமத்தை அழித்தவன்; 112; ஆதலின், மற்றை வெகுளி மயக்கங்களையும் இவன் தன்பால் அணுகாது ஒழித் தவன் என்பது பெறப்படும்.

குரவம், குவி கோங்கு அலர் - குரா மலரும், குவிந்த கோங் கரும்புகளும் மலர்ந்த, கொம்பினொடும் - ஒரு பூங்கொம்பு போன்ற பிராட்டியோடும், சரவங்கன் இருந்து தவம் கருதும் - சரபங்க முனிவர் இருந்து தவம் மேற்கொண்டிருந்த, மரவம் கிளர் கொங்கு ஒளிர் வாச வனம் - மராம் எனும் மரத்திலிருந்து வளர்ந்தோங்கும், தேன் விளங்குகின்ற வாசனையுடைய தவ வனத்தை, இரவு அங்கு அணுகும் பொழுது - இராக்காலம் அவ்விடத்து வந்து சேரும் மாலைப் பொழுதில், (அந்திப் பொழுதில்), எய்தினர் - (இராம்பிரான் முதலியோர்) அடைந்தனர். ஆல்: அசை.

பிராட்டி குராமலர் அணிந்தமை; சுந்தர. 680. குவி கோங்கு, குவிந்த தனங்களைக் குறிப்பதும் ஆம். இரவு அணுகும்பொழுது ஏகியது, வைகலானும் வைகினன், என்று முன் 73-வது செய்யுளில் கூறப் பெற்றமையாலும் விளங்கும். மரவம் - மராம் என்னும் ஒரு வகை மரம்; வெண் கடம்ப மரமும் ஆம்; குங்கும மரம் எனவும் கூறுவர். கொங்கு - தேன்; பூந்தாதும் ஆம். சரவங்கன் - சரபங் கன் என்பது எதுகை நோக்கித் திரிந்தது;

பி-ம். 1. குளிர்கோங் கலர்; குளிர் கோங்கவிழ்; கோங்கினெடு.
2. இரவங்கனுகும்பொழுது : எகினரால்.
3. தவம்புரியும்; தவஞ்செய்வனத்;
4. மரவங்குளிர் : கோங்கிளவாச; கோங்கலர்வாச; தரவங்கிளர் வெஞ்சிலையாண்ட கையோர்.

(1)

## இந்திரனின் வருகை 75—86

75. செவ்வேலவர் சென்றனர் சேரலுறும்
அவ்வேலையி னெய்தின னுயிரமாம்
தவ்வாதிர வும்பொலி தாமரையின்
வெவ்வேறலர் கண்ணினன் விண்ணவர்கோன்.

செம் வேல் அவர் - சிறந்த வேல் ஏந்திய அவ்விராம லக்ஷ்மணர், சென்றனர் சேரல் உறும் - சென்று அடைதலைக் கொண்ட (அதாவது அடைந்த), அ வேலையின் - அப்போதினில், தவ்வாது - தவருமல், இரவும் பொலி தாமரையின் - இரவும் மலர்ந்து விளங்கும் தாமரை மலர்களைப் போல, வெவ்வேறு அலர் - தனித்தனியே மலர்ந்து விளங்கும், ஆயிரம் ஆம் கண்ணினன் - ஆயிரம் என்று சொல்லக் கூடிய கண்களையுடையவனுன, விண்ணவர்கோன் - தேவர்க்கரசனுன இந்திரன், எய்தினன் - அங்கு வந்தடைந்தான்.

செவ்வேல் - இரத்தந் தோய்ந்ததால் செந்நிறமான வேல் என்றலும் ஆம்; வேல்: இங்கு, ஆயுதப்பொது எனும் அளவில் நின்றது. வேலை - வேளை என்பதன் திரிபு. இரவும் பொலி தாமரை; தேவர்கள் கண்கள் இமையாமல், எப்பொழுதும் மலர்ந்திருக்கும் தாமரை மலர்போன்றன. இஃது இல்பொருளுவமை. வெவ்வேறு அலர் கண்ணினன் - உடலில் பல உறுப்புக்களிலும் மலர்ந்துள்ள கண்களையுடையவன். இந்திரன் உடலெங்கும் கண்கள் அமையப் பெற்றமை, கௌதமர் சாபத்தால்; பால. அகலிகைப் : 78-81. இதனல், இந்திரன் ஸஹஸ்ராக்ஷன் எனும் பெயர் பெற்ருன். இந்திரன் ஆயிரங் கண்கள் உடையவன்; 97. தவ்வுதல் - தவறுதல்; 'எறிந்த வீச்சுத் தவ்விட' உயுத்த. அதிகாயன். 213;

பி-ம். 1. சேர்தலுறும்; செல்லலுறும்; சேறலுறும்.
2. னுயிரமும்.

(2)

76. அன்னச்செல விற்படி மேலயல்சூழ்
பொன்னிற்பொலி வாரணி பூண்முலையார்
மின்னிற்செறி கற்றை விரிந்தனபோல்
பின்னிச்சுட ரும்பிறழ் பேரொளியான் ;

படிமேல் - தரைமீது, அயல் சூழ் - தன் அருகே சூழ்ந்த, பொன்னில் பொலி - பொன் போன்ற (தேமல்) விளங்குகின்ற, வார் அணி - கச்சுக்கள் அணிந்த, பூண் முலையார் - ஆபரணங்கள் பூண்ட கொங்கைகளையுடைய தெய்வ மகளிர், மின்னில் செறி கற்றை - மின்னல்களால் அடர்ந்த ஒரு தொகுதி, விரிந்தனபோல் - பரவி விளங்கினபோலவும், அன்ன செலவில் - அன்னப் பறவைகள் செல்வன போலவும், பின்னி - ஒருவரோடொருவர் நெருங்கி இணைந்து, சுடரும் - ஒளி வீசும், பிறழ்பேர் ஒளியான் - விட்டு விட்டுப் பிரகாசிக்கும் சிறந்த தேக காந்தியையுடையவன் ;

அன்னச் செலவு - அன்ன நடை ; வார் அணி பூண் முலையார் - கச்சும், ஆபரணங்களும் பூண்ட முலையார் எனலும் ஆம். பொன்னிற் பொலி முலை, பொன்னிற் பொலி அணி, பொன்னிற் பொலி வார் எனவும் இயைத்துப் பொருள் கொள்ளலுமாம். மின்னிற் செறி கற்றை ; மகளிர் தொகுதிக்கு உவமை. சூழ்ந்துள்ள தெய்வ மகளிர் தம் தேக ஒளி மின்னற் கொடிகள் பல செறிந்து விரிந்தன ஆகி ஒன்றோடொன்று பின்னி மாறி மாறித் தன்மீது வீசப் பெறுவதால் உண்டாகும் பேரொளியை யுடையவன் என்க. இந்திரன் மேனியில் மகளிராகிய மின்னற் கற்றையின் ஒளி பிறழ்ந்து ஒளி வீசின என்றமையால், இந்திரன் கருநிறமுடைமையால் அவனை மேகத்திற்கு உள்ளுறை உவமையாகக் கொள்ளலும் ஏற்கும்; இந்திரனுக்கு மேகம். 84.

பி - ம். 1. பிடிமே லயல்சூழ்.
2. பூணெளியார் ; பூண்முலைமேல் ; பூவையின்மேல்.
4. பிழை பேரொளியன். (3)

77. வானிற்பொலி கோதையர் கண்மலர்வண்
கானிற்படர் கட்களி வண்டொடுதார்
மேனித்திரு நாரதன் வீணையிசைத்
தேனிற்படி யுஞ்செவி வண்டுடையான் ;

வானில் பொலி கோதையர் - தேவலோகத்தில் விளங்கும் அம் மகளிருடைய, கண் மலர் வண் கானில் -கண்களாகிய வளப்பமுள்ள

மலர்கள் பூத்து விளங்கும் காட்டில், படர் - படர்ந்து செல்லுகின்ற, கண்களி வண்டு ஒடு - தன் கண்களாகிய மயக்கமுற்ற வண்டுகளோடு, தார் மேனி திரு நாரதன் - மாலை அணிந்த திருமேனியையும் திருவினையுமுடைய நாரத முனிவர், வீணை இசை தேனில் - மகதி என்னும் அவர் வீணையில் உண்டாகும் இசையாகிய தேனிடத்து, படியும் - போய்ப் படிந்த, செவி வண்டு உடையான் - செவிகளாகிய வண்டுகளையுடையவனான இந்திரன்,

கண்மலர் வண்கான் : 'வாங்குவளைக் கையார் வதன மதிபூத்த, பூங்குவளைக் காட்டிடையே போயினான ;' நள. 1: 20. இந்திரன் தன்னைச் சூழ்ந்த தேவ மகளிர் கண்களாகிய கானில் படர்கின்ற தன் கண்களாகிய வண்டுகளையும், நாரத முனிவர் வீணையிசையாகிய தேனில் படிகின்ற செவிகளாகிய வண்டுகளையும் உடையவன் என்பதாம். மகளிர் கண்களாகிய வண்டுகளை நாடும் வண்டுகள் என்றமையால், இந்திரன் கண்களை ஆண் வண்டுகள் என்றும் தெய்வ மகளிர் கண்களைப் பெண் வண்டுகள் என்றும் கொள்ள இடமாகும். வண்டுகள் தேனை நாடும் இயல்புபற்றி, நாரத முனிவர் இசையாகிய தேனைப் பருகும் இந்திரன் செவிகள் வண்டுகளாகக் கூறப் பெற்றன என்க. கண் வண்டு, செவி வண்டு எனக் கொள்க. நாரதர் பிரம புத்திரர்களுள் ஒருவர் ; இசையிலும், பக்தியிலும் சிறந்தவர். நாரதன் - எனபதற்கு, ஆத்ம ஞானத்தைக் கொடுப்பவன் என்றும், அன்பை அருளுபவன் என்றும் பிறவாறும் பொருள் கூறுவர். (4)

பி - ம். 1. மங்கையர்கண் ; தோகையர்கண்.
2. படருங்களி : வண்டொடுகார்.
3. திருநாரதர் ; திகழ்நாரதன்.
4. தேனிற் பொலியும் ; தேனைப் பருகும் ;

78. அனையின்றுறை யைம்பதொ டைம்பதுநூல்
வினையின்றொகை வேள்வி நிரப்பியமா
முனைவன்முது தேவரின் மூவரலார்
புனையும்முடி துன்று பொலங்கழலான் ;

அனையின் துறை - (வைதீக) அக்கினியினிடத்து, நூல் வினையின் - சாஸ்திரங்களிற் சொல்லப்பட்ட செயலின்படி, ஐம்பது ஒடு ஐம்பது தொகை வேள்வி - நூறு என்னும் தொகை கொண்ட யாகங்களை, நிரப்பிய - செய்து முடித்ததைக் கொண்ட, மா முனைவன் - பெருமை வாய்ந்த தலைவன், முது தேவரின் - பழமையான

தேவர்களுள், மூவர் அலார் - பிரமன், மால், சிவன் என்னும் மூவர் அல்லாத மற்றைத் தேவர் எல்லாரும், புனையும் முடி துன்று - (அவர்கள்) தரித்துள்ள கிரீடங்கள் (வணங்குவதால்) நெருங்கிப் படிவதான, பொலன் கழலான் - அழகிய (அல்லது பொன்னாலாகிய) வீரக்கழல்களையுடையவன் ;

நூறு அசுவமேத யாகம் செய்தவனே இந்திர பதவி அடைபவன் ; ஆதலால் இந்திரன் ஐம்பதோடைம்பது வேள்வி நிரப்பிய மாமுனைவன் எனப்பட்டான் ; இதனாலேயே இந்திரனுக்குச் சதமகன் என்ற பெயரும் வழங்குவதும் ஆம். அனை - அனல்; 121. 'முதுதேவரின் ................கழலான்' என்றமையால், திரிமூர்த்திகளுக்கு அடுத்தபடி நாலாவது மூர்த்தியாக உள்ள பெருமையுடையவன் இந்திரன் என்பதாம்.

பி - ம். 1. அனவின்றுறை ; அனவின்றுணை ; அனவுண்டிணை.
2. நினையுந்துறை ; நினைவின்றுறை; நினைவின்படி.
3. முனிவன் ; மூரலாற் ; மூவரலோா.
4. புனையும்படி. (5)

79. செம்மாமல ராணிகர் தேவியொடும்
மும்மாமத வெண்ணிற முன்னுயர்தாள்
வெம்மாமிசை யான்விரி வெள்ளிவிளங்
கம்மாமலை யண்ணலை யேயனையான் ;

செம்மா மலராள் நிகர் தேவியொடும் - சிவந்ததும் மாட்சிமை பொருந்தியதுமான தாமரை மலர் மேல் உள்ள திருமகளுக்கு ஒப்பான தன் தேவியாகிய இந்திராணியோடும், மு மா மதம் - மூன்று பெரிய மதப் பெருக்குகளையுடையதும், வெண் நிறம் - வெண்மை நிறமுடையதும், உயர் முன் தாள்-உயரமான முன்னங்கால்களை யுடையதுமான, வெம் மா மிசையான் - அச்சந்தரும் ஐராவதம் என்னும் யானை மேல் ஏறி வருகிற அவ்விந்திரன், விரி வெள்ளி விளங்கு - ஒளி பரந்த வெள்ளி போல் விளங்கும், அம் மா மலை அண்ணலையே அனையான் - அந்த மகா கைலாஸ கிரிமேல் (பார்வதி தேவியொடு விளங்கும்) பரம சிவனையே ஒத்திருப்பவன் ;

மும்மதம் : கர்ண, கபோல, பீஜ மதங்கள். வெண்ணிறமான ஐராவதத்தின் மேல் தன் தேவியொடு விளங்கும் இந்திரனுக்கு வெள்ளி மலையாகிய கயிலையங்கிரியில் பார்வதி தேவியோடு விளங்கும் சிவபெருமான் உவமை. யானையை அதன் பருமனையும் உயர்ச்சி

யையும் கருதி மலைக்கு உவமிப்பது கவி மரபு : கைம்மலை, நடைமலை, மதமலை என்பன நோக்குக. முன்னுயர்தாள் - யானையின் முன்னங் கால்கள் பின்னங் கால்களை விட உயரமானவை ; அதனாலே யானை உடலின் பின்புறம் சரிந்திருப்பதுபோலக் காணப்படும். வெம்மா - விரும்பத்தக்க யானை என்னலும் ஆம். மும்மத வெண்ணிற முன்னுயர்தாள் வெம்மா என்க. (6)

பி - ம். 2. முன்னியதாள்.

80. தானின்றய னின்றொளிர் தண்கதிரோன்
யானின்றதெ னென்றொளி யெஞ்சிடமா
வானின்ற பெரும்பதம் வந்துருவாய்
மேனின்றென நின்றொளிர் வெண்குடையான் ;

அயல் நின்று - அயலில் அவ்வானிடத்தே நின்று, ஒளிர் - விளங்குகின்ற, தண் கதிரோன் - குளிர்ந்த கிரணங்களாகிய நிலவை வீசும் சந்திரன், 'யான் இன்று நின்றது என் என்று - நான் இப்பொழுது இவ்வானில் நின்று பிரகாசிப்பது என்ன பயனுடைத்தென்று', ஒளி எஞ்சிட - (நாணத்தால்) தன் ஒளி குறைந்துபோக, மா வான் நின்ற - மாட்சிமையுற்ற சுவர்க்கத்தில் நிலைபெற வைத்திருந்த, பெரும்பதம் - பெரும் சிறப்புடைய உணவாகிய தேவாமிர்தம், உருவாய் வந்து - ஒரு (குடை) உருவெடுத்து வந்து, மேல் நின்றென - அவனுக்கு மேலே நின்றது என்று சொல்லும் படி, நின்று ஒளிர் வெண் குடையான் - நின்று ஒளி வீசுகின்ற வெண்கொற்றக் குடையை உடையவன் ; தான் : அசை.

இச்செய்யுள் 'மண்ணிடை யுயிர்தொறும் வளர்ந்து' என்ற தொடக்கத்து, (பால : அரசியற் : 9 வது) செய்யுளை நினைப்பூட்டுகின்றது. சந்திரன் அமிர்தத்தோடு கூடப் பிறந்தவனாதலால் உலகில் தண் கதிர் பரப்பி வருகின்றான் ; அந்த அமுதமே இந்திரனுக்குக் குடையாக அமைந்ததால், இனித்தான் வானில் நின்று ஒளி பரப்புவது என் ? இஃது அவமானமான காரியம் என்று நாணித் தன் ஒளி குறைந்து போக, ஒளி வீசிய தேவ அமுதாகிய வெண் குடையை இந்திரன் அடைந்திருந்தான் என்க. ஒளி - புகழும் ஆம். பெரும் பதம் - உண்டோர் இறவாத பெருமையடையும் உணவு ; அதாவது, அமிர்தம். பெரும்பதம் - என்பதற்குச் சுவர்க்கலோகம் என்று பொருள் கூறிப்போந்தாரும் உளர். சுவர்க்கத்தைக் குடையாகக் கொண்டானெனில் அவன் இருந்தாளும் இடம் யாதோ. எனும்

சங்கைக்கு இடமாகும். ஆதலின், தண்மையும் அழியாது உயிர் அளிக்கும் சிறப்பும் உடைமையால் பெரும்பதம் என்பதற்குத் தேவ அமிர்தம் எனப்பொருள் கொள்ளப்பட்டது; பதம் - உணவு; புறநா. 2 : 16. தான், சந்திரனைக் குறித்ததாகவும் கொள்ளலாம்.

பி - ம். 1. நின்றொளி தண்கதிரோன்.
2. யானின்ற தெனென்றொளி ; யானென்றதே னென்றொழி : வெஞ்சிடமா ; யெஞ்சிடமால்.
4. மேனின்றனநின் ; நின்றுயர் வெண்குடையான். (7)

81. திசைகட்டின மால்கரி தெட்டமதப்
பசைகட்டின கிட்டின பற்பலபோர்
விசைகட்டழி தானவர் விட்டிகல்பேர்
இசைகட்டின வொத்திவர் சாமரையான் ;

திசை கட்டின - எட்டுத் திக்குக்களில் கட்டப்பட்ட, மால் கரி - பெரிய யானைகளின், தெட்ட - முற்றின, மத பசை - மதநீராகிய பசைகள், கட்டின - கட்டப்பட்டவை போல நெருங்கி உறைந்து போக, கிட்டின - நெருங்கி எதிர்ப்பட்ட, பற்பல போர் - பலபோர்களினிடத்து, விசை கெட்டு அழி தானவர் - வேகம் கெட்டழிந்த அசுரர்கள், இகல் விட்டு - போரைவிட்டு, பேர் - பெயர்ந்தோடும் படியாக, இசை கட்டின ஒத்து - கீர்த்தியை நிலைநாட்டினவை போல, இவர் சாமரையான் - மேலே எழுந்து விளங்குகின்ற வெண் சாமரைகளை யுடையவன் ;

தெட்ட மதம் - மதம் முற்றியதால் பெருகிய மதநீர் ; தெளிந்த அல்லது கனிந்த மதமும் ஆம். 'தெட்ட பழம் சிதைந்து'; (பெரிய திரு. 3 : 4 ; 8). அஷ்டதிக்குக்களில் உள்ள யானைகளின் மதமாகிய பசை தம் உடல்களில் பட்டுக் கட்டிப்போகும்படி தானவருடன் கிட்டின போர் என்க. இசை கட்டின ஒத்து - விஜய ஸ்தம்பங்கள் நாட்டினவை போல எனலும் அமையும். வெண் சாமரைக்கு வெற்றித் தம்பங்கள். தானவர் இந்திரனுக்குப் போரில் எதிர் நிற்க மாட்டாது, எட்டுத் திக்குக்களிலும் ஓடி ஒளிய, அங்குள்ள திக்கயங்களின் மதநீர் அவர் உடல்கள்மீதுபட்டு உறைந்து போயின என்பதாம். கீர்த்தியை வெண்ணிறமாகக் கூறுதல் மரபாதலின், சாமரைகள் வெற்றித் தூண்களாக உவமிக்கப் பெற்றன. சாமரை - சமரம் என்னும் ஒருவகை மானின் வால் மயிர்க்கற்றைகளால் செய்யப் படுவது. தானவர் - தனு என்னும் மாதினிடம் உதித்த மரபினர்.

பி-ம். 1. திசைகட்டிய : மாகரி. 2. பசை கட்டின.
3. விசை கட்டழி ; விசை கட்டிழி : தானவர் வெந்திடமேல் ; விட்ட கல்பேர் ; விட்டவர்போல்.
4. இசைகட்டிய. (8)

82. தேரிற்றிரி செங்கதிர் தங்குவதோர்
ஊரிற்றி தெனப்பொலி யொண்முடியான்
போர்வித்தக னேமி பொறுத்தவன்மா
மார்விற்றிரு விற்பொலி மாலையினான் ;

தேரில் திரி - (ஒற்றைச்சக்கரமுடைய தன்) தேரில் ஏறிச் செல்லும், செம் கதிர் - சிவந்த கிரணங்களையுடைய சூரியன், தங்குவது ஓர் - தங்குவதான ஒரு, ஊர் இற்றிது என - பரிவேடம் இதுவாகும் என்னும்படி அமைந்த, பொலி ஒள் முடியான் - விளங்கும் ஒளி பொருந்திய கிரீடத்தை யுடையவன் ; போர் வித்தகன் - போர்த் தொழிலிற் சிறந்தவனும், நேமி பொறுத்தவன் - சக்கராயுதத்தை ஏந்தியவனுமான திருமாலின், மா மார்வில் - மாட்சிமை பெற்ற திரு மார்பிலே வாழும், திருவில் - திருமகளைப் போல், பொலி - விளங்குகின்ற, மாலையினான் - இரத்தின மாலையையுடையவன் ;

ஊர் - பரிவேடம் ; அயோத். தைலமாட்டு : 57., சீவக. 1136. ‘பரிவேடத்துடன் பிரகாசிக்கிற சூரியனைப் போலக் கிரீடம் தரித்தவன்’ என்பது பழையவுரை. தேரொளிக்கு ஊரும், கிரீடத்திற்குச் சூரியனும் உவமைகள். நேமி பொறுத்தவன் - சக்கராயுதமுடைய இந்திரன் எனலும் ஆம் ; சக்கரமுடைமையால் இந்திரனுக்குச் சக்கிரி எனவும் நேமி எனவும் பெயர்கள் உள்ளமை நோக்குக. இந்திரன் மார்பின் மாலைக்குத் திருமால் மார்பிற்றிரு உவமை : மார்வு - மார்பு ; பு. வெ. 204 ; தக்க. 500.

பி-ம். 1. தீர்விற் றிரி, தீர்வற்றெரு.
2. ருற்றதெனப்.
3. பொறுத்த மால், பொறுத்தவர் தம்.
4. மார்பிற்றிருவில். (9)

83. செற்றிக்கதி ரிற்பொலி செம்மணியின்
கற்றைச்சுடர் விட்டெரி கஞ்சுகியான்
வெற்றித்திரு வின்குளிர் வெண்ணகைபோல்
சுற்றிக்கிள ருஞ்சுடர் தோள்வளையான்.

செற்றி கதிரில் பொலி - பதிப்பிக்கப் பெற்றுக் கிரணங்களால் விளங்கும், செம் மணியின் - சிவந்த மாணிக்கம் அல்லது குருவிந்தம் எனப்படும் இரத்தினங்களின், சுடர் கற்றை - சோதியின் தொகுதி, விட்டு எரி - வெளியே விட்டுப் பிரகாசிக்கின்ற, கஞ்சுகியான் - மேல் அங்கியையுடையவன் ; வெற்றி திருவின்-விஜய லக்ஷ்மியாகிய கொற்றவையின், குளிர் வெண் நகைபோல் - குளிர்ச்சியை உண்டாக்கும் வெண் நிறமான பற்களின் புன்சிரிப்பைப் போல, சுற்றி கிளரும் - (தோள்களை) சுற்றி விளங்குகின்ற, சுடர் தோள் வளையான் - ஒளி வீசும் தோள் வளையங்களையுடையவன் ;

செற்றி - ஒளி திகழுமாறு செதுக்கி எனலும் ஆம். தோள் வளைகளை வெண்ணகைக்கு உவமையாக்கினதால், அவை முத்துக்கள் பதிக்கப் பெற்றவை எனக் கொள்ளலாம். தோள்வளை - வாகு வலயம் ; இங்கு இந்திரன் அணிந்திருந்த முத்து வாகுவலயம் கூறப் பெற்றது. கஞ்சுகி - சட்டை.

பி ம். 2. விட்டொளிர் கஞ்சுகையான் ; விட்டெரி கண்டிகையான் ; வெண்ணகையான்.

• 4. சுற்றிச் சுடருங்கிளர்தோள். (10)

84. பல்லாயிர மாமணி பாடமுறும்
தொல்லாரணி கால்சுட ரின்றொகைதான்
எல்லாமுட னாயெழ லாலொருதன்
வில்லாலொளிர் மேக மெனப்பொலிவான்.

பல் ஆயிரம் மா மணி - பல ஆயிரக்கணக்கான சிறந்த இரத்தினங்கள், பாடம் உறும் - ஒளி வீசும், தொல் ஆர் அணி - பழமை பொருந்திய ஆபரணங்கள், கால்-வெளியிடுகின்ற, சுடரின் தொகை- ஒளியின் கூட்டம், எல்லாம் உடன் ஆய் - எல்லாம் ஒன்று சேர்ந்து, எழலால் - மேற்கிளம்புவதால், ஒரு தன் வில்லால் - ஒப்பற்ற தன் இந்திர வில்லென்று சொல்லப்பெறும் வானவில்லினால், ஒளிர் மேகம் என - விளங்குகின்ற ஒரு கருமேகத்தைப் போல, பொலிவான் - விளங்குபவன் ; தான் - அசை.

பாடம் - சோதி ; புறநா. 57 உரை ; தக்க: 27. இந்திர வில் ; பால. கடிமணப் : 24 ; சுந்தர. 726 ; உயுத்த. வீடணனடைக் : 135. 76-ஆம் செய்யுளின் உரையையும் காண்க. இந்திரனுக்கு மேகமும்,

அவன் அணிந்த இரத்தின அணிகளுக்கு இந்திர வில்லும் உவமைகள். இந்திரன் நிறம் கருமை.

பி-ம். 1. பாடலுறும். 2. தொகையால்;
3. முடனுயெழலா; முடனே யெழலா; யெழலா வயலே; விழலாலொருதன்.
4. எல்லாவொளிர்; ஒளிமேகம். (11)

85. மானுவுல கந்தனின் மன்றல்பொரும்
தேனுறு நலஞ்செறி தொங்கலினுன்
மீனேடு கடுத்துயர் வென்றியவாம்
வானுடியர் கண்ணெனும் வாளுடையான்;

உலகம் தனில் மானு - உலகத்தில் வேறு ஒப்புமை இல்லாத, மன்றல் பொரும் - தெய்வ மணம் வீசுகின்ற, நாறு தேன் நலம் செறி தொங்கலினுன் - மணம் வீசும் தேனின் சிறப்பு மிக்க மாலையுடையவன்; வான் நாடியர் - தெய்வ மகளிர்களுடைய, மீன் ஓடு கடுத்து - மீன்களைப் பகைத்து, உயர் வென்றி அவாம் - மேலான வெற்றியை விரும்பும், கண் எனும் - கண்கள் எனும், வாள் உடையான் - வாள்களைத் தன்மேல் பதியப் பெற்றவன்;

வான மகளிர் கண்களாகிய வாள்கள் படியப் பெற்றவன்; வென்றிய ஆம் கண், எனப் பிரித்து, வெற்றியை அடையக் கூடியனவான கண்கள் எனப் பொருள் கொள்ளலும் அமையும். அதாவது அவர்கள் கட்பார்வை அவர்கள் விரும்பிய வெற்றியைத் தருவது என்பதாம். வெற்றியாவது, இந்திரனைத் தம் கட்பார்வையால் கட்டுப்படுத்துவது. வெற்றியைத் தருவனபற்றிக் கண்களுக்கு வாள் உவமையாக்கப் பெற்றது. கண்களுக்கு வாட்படைகளை உருவகப்படுத்தினமையால், மீனேடு கடுத்து என்பதற்கு மீன்களை ஒத்து எனப் பொருள் கொள்ளாமல் தம் உருவால் மீன்களைப் பகைத்து எனப் பொருள் கொள்ளப்பட்டது: மீன் - வாளை மீன்; கண்ணுக்கு வாள்; 626. பால. உலாவியற்: 19; அயோத். சித்திர கூடப்: 2, 3. 'மானு உலகம் - பொன்னுலகம்' என்பது பழையவுரை.

பி-ம். 1. ஆனுவுலகெஞ்சினு மன்றவர்மேல்.
2. நறுஞ்செறி.
3. மீனேடு கெடுத்துயர்; மீனுறு கெடுத்துயர்; மீனேட வெறுத்துயர். 4. வானுடிவர். (12)

86. வெல்வானசை யால்விசை யால்விடுநாள்
எல்வான்சுடர் மாலை யிராவணன்மேல்
நெல்வாலு மருது நிறம்பிறழா
வல்வாய்மடி யாவயி ரப்படையான் ;

மேல் - முற்காலத்தில், எல் வான் சுடர் - சூரியனை ஒத்த மிக்க ஒளியையுடைய, மாலை - இரத்தின மாலைகள் அணிந்த, இராவணன் வெல்வான் நசையால் - இராவணன் இந்திரனை வெல்லும் ஆசையால், விசையால் விடுநாள் - வேகத்தோடு (தன் படைகளை) விட்ட அன்று, நெல்வாலும் அருத - நெல்லின் நுனியில் அமைந்த வால் போன்ற நுட்பப் பகுதியும் ஒடிந்து அழிந்து போகாததும், நிறம் பிறழா - ஒளி மாறுததும், வல் வாய் மடியா - வலிய அதன் வாயாகிய நுனியும் மடங்காததுமான, வயிர படையான் - வச்சிராயுதம் என்னும் போர்ப் படையையுடையவன் ;

நெல்வால் - நெல்லில் வால்போல் அமைந்த ஓர் நுட்பமான கூரிய பகுதி; 'கதிர் வாலின் செந்நெலுள'; 175. இராவணனாலும் சிறிதும் ஊறுபடுத்த முடியாத வயிரப்படை என்க; வயிரப்படை - வச்சிராயுதம் ; இஃது இருதலைச் சூலமாய் நடுவே பிடி அமைந்த ஓர் ஆயுதம்; இந்திரன் ததீசி முனிவரை வேண்ட அவர் விருப்பொடு அளித்த அவரது முதுகெலும்பினுற் செய்யப்பட்டது ; திருவிளையாடற் : இந்திரன் பழி : 25. 75-ஆம் செய்யுள் முதல், இச்செய்யுள் முடிய சரபங்கர் ஆச்சிரமத்திற்கு வந்த இந்திரன் சிறப்புகள் கூறப்பெற்றன ; இவை 87 - ஆம் செய்யுளில் நின்ருன் என்றதனேடு வினைமுடிவு கொள்ளும்.

பி - ம். 1. இசையால் விசையின் விடுவான்; நசையின்; விசையின்; விசையின் விசையால்; விசையாய் விடுநான்.
2. எல்வாள் சுடர். 3. நிறம்பிறிதாய்.
4. வல்வாள் மடியும்: மடிவாள் வயிரப். (13)

இந்திரன் முனிவரைப் பிரமலோகத்திற்கு அழைத்தலும், அவர் மறுத்தலும் 87-93

87. நின்ருனெதிர் நின்ற நெடுந்தவனும்
சென்ருனெதிர் கொண்டு சிறப்பமையா
என்ருனிவ ணெய்திய வாறெனலும்
பொன்ருத பொலங்கழ லோன்புகலும்.

நின்றான் - (மேற்கூறிய இந்திரன்), அந்தச் சரபங்க முனிவர் ஆச்சிரமத்தில் போய் நின்றான்; எதிர் நின்ற நெடும் தவனும் - அங்கு அவன் எதிரிலே நின்ற பெரும் தவசியாகிய சரபங்கரும், எதிர்கொண்டு சென்றான் - எதிர் வந்து அழைத்துக்கொண்டு சென்று, சிறப்பு அமையா - வந்த அதிதிக்குரிய உபசாரங்களைச் செய்து, 'இவண் எய்திய ஆறு என் எனலும் - இங்கு நீவிர் வந்த காரணம் யாதோ' என்று வினவலும், பொன்றாத பொலன் கழலோன் - கெடாத பொற்கழல் அணிந்த இந்திரன், புகலும் - பின் வருமாறு சொன்னான். தான் : அசை.

நின்றான் எதிர் - அந்த இந்திரன் சரபங்கர் எதிர் சென்று நின்றான்; நின்ற நெடுந்தவனும் - நிலைபெற்றுத் தளராது நின்ற பெருந்தவமுடைய அந்தச் சரபங்கரும் என இயைத்துப் பொருள் கோடலும் அமையும்.

பி-ம். 2. சிறப்பயர்வான்; சிறப்பமைவான் : சென்றேயெதிர் கொண்டு சிறப்பயர்வுற்று.

3. இன்றே யிவணெய்திய தென்னையெனப்.

4. கழல் மால்புகலும்; மால் புகல்வான்; பொன்றாய பொலன் கழல்.

(14)

88. நின்னாலியை நீதி நெடுந்தவமின்
றென்னாலும் விளம்பரி தென்றுணர்வான்
அந்நான்முக னின்னை யழைத்தனனால்
பொன்னார்சடை மாதவ போதுதியால்.

'பொன் ஆர் சடை மாதவ - பொன் நிறம் பொருந்தி விளங்கும் சடையையுடைய, பெரும் தவசியே! நின்னால் இயை நீதி நெடும் தவம் - உம்மால் செய்யப்பட்ட, முறை தவறாத பெரும் தவம், என்னாலும் விளம்ப அரிது என்று உணர்வான் - எவ்விதமேனும் எடுத்துக் கூறுவதற்கு அரியது ஆகும் என்று உணர்ந்தவனாகி, அ நான்முகன் - அந்த நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவர், நின்னை அழைத்தனன் ஆல் - உம்மைத் தம் உலகத்திற்கு வரும்படி அழைத்தனர் ஆதலின், போதுதி - நீவிர் அங்குப் போக எழுந்தருள்வீராக! ஆல் : ஈற்றசை.

'என்னாலும் விளம்பரிது - என்னாற்கூட விளம்ப முடியாது' எனப் பிரமதேவர் கூறினார் எனப் பொருள் கொள்ளலும் ஆம்; இனி, இதனை இந்திரன் மேலேற்றி அவன் கூற்றாகக் கொள்வாரும்

உளர்; இந்திரன், ஐந்திரம் என்னும் வியாகரணம் இயற்றிய அறிவாளி ஆதலின், என்னுலும் விளம்பரிது என்றுன் என்க. விளம்பரிது : இது தொகுத்தல் விகாரம்.

பி - ம். 1. நின்னுலியனீதி ; நெடுர்தவபின்.
2. கென்னுலும் விளம்பரிது ; கென்னுரு மியம்பரி தென்றுணரா
3. யழைத்துடனுல் ; (15)

89. எந்தாயுல கியாவையு மெவ்வுயிரும்
தந்தானுறை யுந்நெறி தந்தனனுல்
நந்தாத பெருந்தவ நாடதுநீ
வந்தாயெனி னின்னெதி ரேவருவான்.

'எந்தாய் - பெரியோய்! உலகு யாவையும் - உலகங்கள் அனைத்தையும், எ உயிரும் - அவற்றில் வாழும் எல்லாப் பிராணிகளையும், தந்தான் - படைத்தவரான பிரமதேவர், உறையும் - நித்யவாஸம் செய்கின்ற, நெறி - சத்திய லோகத்தில் வாழும் பதவியை, தந்தனன் - உமக்கு அருளினர்; அது நந்தாத பெரும் தவ நாடு - அந்தப் பிரமலோகம் அழியாத பெரும் தவத்தால் அடையப் பாலதாகும்; நீ வந்தாய் எனில் - நீவிர் அங்கு வருவீர் என்ருல், நின் எதிரே வருவான் - அந்தப் பிரமதேவர் நும்மெதிர் வந்து அழைத்துப் பெருமை செய்வர். ஆல் : அசை.

நந்தாத பெரும் தவ என்பதை முனிவர்க்கே விளியாக்கி, கெடாத பெருந் தவமுடையோய் எனப் பொருள் கூறலும் அமையும். எந்தாய் என்பது வழுவமைதி; சிறப்பின்பாலது. வந்தாய் : என்பது காலவழுவமைதி. நெறி - இடம்; 93. தவநாடு, தபோ லோகமும் ஆம்.

பி - ம். 3. பெரும்பத நாடதனில்; பெரும்பத நாடதுநீ.
4. வந்தாயென நின்னெதிரே ; வருமால். (16)

90. எல்லாவுல குக்கு முயர்ந்தமையான்
சொல்லாவகை நீயுணர் தொன்மையையால்
நல்லாளுட னேநட நீயெனலும்
அல்லேனென வாலறி வானறைவான்.

'எல்லா உலகுக்கும் உயர்ந்தமை - அந்தச் சத்தியலோகம் மற்ற எல்லா உலகங்களுக்கும் சிறந்ததென்பதை, யான் சொல்லா வகை -

யான் சொல்ல வேண்டாதபடி, நீ உணர் தொன்மையை - நீர் முன்னமே அறியும் பழமையை யுடையவராயிருக்கிறீர்; (ஆதலின், நான் உமக்குச் சொல்ல வேண்டுவதின்று என்றபடி); நல்லாள் உடனே நட நீ - உம் தேவியாகிய மனைவியுடன் நீவிர் வந்தருள்வீராக', எனலும் - என்று இந்திரன் கூறவும், வால் அறிவான் - சிறந்த ஞானியாகிய அம் முனிவர், 'அல்லேன் என - அதற்கு யான் மனம் இசையேன்' என்று, அறைவான் - மேலும் சொல்வாராயினர்.

நீ உணர் தொன்மையை என்றது: தன்னிலும் நன்ருக வெகு காலம் முன்னமேயே அறிந்துள்ளார் என்பதாம்; அதனல், அவர் அந்த இந்திரனும் அறியாத மிகத் தொன்மைக் காலங்கண்ட தவசி என்பது பெறப்படும். வாலறிவன் - மெய்யுணர்வினை உடையவன்; திவ்ய ஞானி; குறள்: 2; நல்லாளுடனே என்றது முனி பத்தினியுடன் என்றவாறு; பின் 115-ஆம் செய்யுளில், 'காதலியவளொடுங் கதழெரி முழுகி' என்றமையும் நோக்குக.

பி - ம். 1. எல்லாவுலகிற்கும்; உலகுக்கும்.
2. சொல்லால்வகை; தொன்மையையாய்; தொன்மையதால்.
3. நல்லாயுடனே. 4. யாலறிவாலறைவான்; னமைவான். (17)

91. சொற்றுந்தர மன்றிது சூழ்கழலாய்
பெற்றும்பெற லாயதொர் பெற்றியதோ
மற்றென்பல நீயிவண் வந்ததனல்
முற்றும்பக ருனு முடிந்துளதால்.

'சூழ் கழலாய் - கட்டிய கழலணிந்தவனே! இது சொற்றும் தரம் அன்று-நீ சொல்லும் இது பேசத்தக்க சிறப்புடையது அன்று; (ஏனெனில் அப்பதவி), பெற்றும் - அடைந்தாலும், பெறல் ஆயது ஓர் - பெறக் கூடியதான ஒரு, பெற்றியதோ - சிறப்புடையதாகுமோ? (ஆகாது என்றபடி); மற்று என் பல - வேறு பல கூறுவது என்? நீ இவண் வந்ததனல் - நீ இங்கு வந்ததால், பகல் தானும் முற்றும் முடிந்துளது - என் வாழ்க்கைக் காலம் முழுவதும் முடிந்ததே ஆகும். ஆல்: அசை.

பிரமன் அளிக்க எண்ணும் பதவி தனக்கு வேண்டா என்று முனிவர் கூறி, இந்திரன் வருகையால் பூமியில் தம் வாழ்நாட்காலம் முடிவுற்றமையைத் தாம் அறிந்ததாக அவர் தெரிவிக்கின்ருர். பகல் என்பது நேரத்திற்குப் பொதுப் பெயராய் இங்கு ஆயுட் காலத்

ஸ்தைக் குறித்து நின்றது. சிறந்த தவசியரின் தவமுடிவைத் தேவர் முதலியோர் வந்து தெரிவிப்பர் என்பது, (1194) செய்யுளாலும் விளங்கும்.

பி - ம். 1. கழலோய்.
2. பெற்றும் பெறுகில்லதோர் பெற்றியதே; பெறகில்லதோர்.
3. மற்றென்பயனீ; மற்றென்பல சொல்லிவண் வந்துதவம்; வந்தனனுல்.
4. முடித்தனனுல்; முடிந்தனவே. (18)

92. சொற்பொங்கு பெரும்புக ழோய்தொழின்மாய்
சிற்பங்களின் வீவன சேர்குவெனே
அற்பங்கரு தேனெ னருந்தவமோ
கற்பம்பல சென்றது காணுதியால்.

'சொல் பொங்கு பெரும் புகழோய் - சொற்களால் மேம்படும் பெரிய கீர்த்தியையுடையோனே! மாய் தொழில் - அழியும் தொழிலை யுடைய, சிற்பங்களின் - அற்பப் பொருள்களே போல, வீவன - அழியக்கூடிய பதவிகளை, சேர்குவெனே - யான் அடைவேனே? (மாட்டேன் என்றபடி); அற்பம் கருதேன் - அற்பமான இப்பதவியை யான் எண்ணி அடைய விரும்பமாட்டேன்; என் அரும் தவமோ - யான் செய்துள்ள அரிய தவமோ; கற்பம் பல சென்றன - பல கற்ப காலங்கள் சென்றவை ஆயின; காணுதி - இதனை நீ தெரிந்து கொள்வாயாக; ஆல்: அசை.

சொல் பொங்கு பெரும் புகழோய் - சொற்களால் மிகும் சிறப்பு மிக்க பெரிய புகழையுடையோனே; அதாவது வியாகரண சாஸ்திரங் களை நன்குணர்ந்தவனே என்பதாம்; 88. குறிப். சிற்பம் - அற்பம்; (184). தொழில்மாய் சிற்பம் என்றமையால், பிரமலோகமும் அழியுந் தன்மையையுடைய அற்பமானது என்று குறிக்கப்பெற்றது. தொழில் மாய் சிற்பங்களில் வீவன என்றது, வேலைப்பாடற்ற சிற்பங் கள் அழிவனபோல அழிவன என்றும் பொருள் கொள்ளலாம். கருதேன் - சிந்தையுள் கருதமாட்டேன் எனலும் ஒன்றும். கற்பம்: பல யுகங்கள் கொண்ட காலம். சரபங்கர் பல கற்பங்கள் தவம் செய் தவர் என்பது பெறப்படும்; கற்பம் - பிரம கற்பமும் ஆம்.

பி - ம். 1. தொழின்மா.
2. வீவது சேர்குவனே; தேர்குவனே.
3. கருதேனிருந்தவமோ; அவ்வருந்தவமோ; ஊயருந்தவமோ. (19)

93. சிறுகாபெரு காநிலை யோதிரியா
குறுகாநெடு காகுணம் வேறுபடா
உறுகால்கிளர் பூதமெ லாமுகினும்
மறுகாநெறி யெய்துவென் வானுடையாய்.

'வான் உடையாய் - சுவர்க்க நாட்டையுடைய இந்திரனே! சிறுகா - உள்ள உருவிற் சிறிதாகாததும், பெருகா - தன் அளவினும் பெரிதாகாததும், நிலை ஒ திரியா - இடம் விட்டுப் பேராததும், குறுகா - காலத்தில் குறுகிப் போகாததும், நெடுகா - அக்காலத்தில் மிக்கு அதிகம் நீளாததும், குணம் வேறுபடா - தன் தன்மையில் மாறுபடாததும், உறு கால் கிளர் பூதம் எலாம் - பொருந்திய காற்று முதல் விளங்கும் ஐம்பூதங்களும், உகினும் - விழுந்து அழிந்து போனாலும், மறுகா நெறி - அழியாது விளங்கும் முத்தி நெறியை, எய்துவென் - யான் அடைவேன்' (என்றான்.)

மறுகாநெறி - மாறுத மோட்ச பதவி : அதாவது, மற்ற பதவிகள் யாவும் உருவாலும் காலத்தாலும் குணங்களாலும் மாறுபடும் இயல்பின ; பரமபதம் அவ்விதமாறுபாடுகள் அடையாது ; பஞ்சபூதங்கள் அழியினும் அழியாது என்றும் நிலைபெற்றது என்பதும் விளங்கும். நெறி. 89. இது வீட்டின் இலக்கணம் கூறியது ; 'பூதங்கள் விளியு நாளும் போக்கிலா வுலகம் புக்கான்' (1021) என்றதையும் நோக்குக.

பி-ம். 1. சிறுகா லையிலா நிலையோ திரியா. 3. துறுகால். (20)

இராமபிரான், இந்திரன் அங்கு வந்திருத்தலை அறிந்து, தானே தனியனாய் அவனிடம் செல்லுதல் 94—6.

94. என்றின்ன விளம்பிடு மெல்லையின்வாய்
வன்றிண்சிலை வீரரும் வந்தணுகா
ஒன்றுங்கிள ரோசையி னாலுணர்வார்
நின்றென்னைகொ லின்ன தெனாநினைவார்.

என்று இன்ன விளம்பிடும் எல்லையின்வாய் - என்று இப்படி அம்முனிவர் கூறிய தருணத்தில், வன் திண் சிலை வீரரும் - வலிமையும், கனமுமுடைய வில்லுடைய வீரர்களான இராம லக்ஷமணர்களும், வந்து அணுகா - அவ்விடம் வந்து அணுகி, ஒன்றும் - அங்குப் பொருந்திய, கிளர் ஓசையினால் - மேலெழுந்த ஆரவாரத்

தினால், உணர்வார் - காரணத்தை ஊகித்தறிவாராய், நின்று - மேற் செல்லாமல் அங்கு நின்று, 'என்னைகொல் இது - இது என்னவோ' என்று, நினைவார் - கருதுவராயினர்.

இயம்பிடு மெல்லையின்வாய் - சொல்லி முடியும் நேரத்தில் எனலும் ஆம். வன்திண்: ஒரு பொருட்பன்மொழி. கொல், ஐயப் பொருளை யுணர்த்தி வந்த இடைச்சொல். கிளர் ஓசை - இந்திரனுடன் வந்த யானை முதலிய பரிவாரங்களினால் எழுந்த ஓசை. குறிப்பு :—இந்திரனுக்கும், சரபங்கருக்கும் நடந்த சம்பா ஷணை இன்னதென்று வான்மீகம் இந்த இடத்தில் விளக்கவில்லை. ஆனால், அந்த முனிவர் இராமபிரானிடம் பேசியபோது அதன் உண்மை வெளிப்படுகின்றது. அம்முனிவர் பிரமலோகத்தை அடைய விரும்பாது மறுத்தார் என்பதும் வான்மீகத்தில் இல்லை.

பி - ம். 3. ஓசையினை; னுணர்வான்.
4. கொலென்னதெனா; நின்றென்னகொல்; நின்றின்ன நினைந்தனர் நீள்விறலோர். (21)

95. கொம்பொத்தன நாலொளிர் கோள்வயிரக்
கம்பக்கரி நின்றது கண்டனமால்
இம்பர்த்தலை மாதவர் பாலிவணும்
உம்பர்க்கர செய்தின னென்றுணரா,

'நால் - நான்கு, ஒத்தன - ஒன்றுக்கொன்று வேறுபாடில்லாது ஒத்து விளங்குவனவான, ஒளிர் கோள் வயிர கொம்பு - ஒளி பொருந்திய வலிய வயிரம் போன்று உறுதியான கொம்புகளை யுடைய, கம்ப கரி - அசைந்தாடும் ஐராவதம் என்னும் யானை, நின்றது கண்டனம் ஆல் - நின்றதை நாம் பார்த்தோம் ஆதலின், இம்பர் தலை - இப் புவியிலே, மாதவர் பால் - பெரும் தவத்தினை யுடைய இச்சரபங்க முனிவரிடத்து, இவண் - இங்கே, உம்பர்க்கரசு எய்தினன் ஆம் - தேவர்க்கரசனான இந்திரன் அடைந்தனன் போலும்' என்று உணரா - என்று அறிந்துகொண்டு,

கம்பக்கரி - கம்பத்திற் கட்டப்படும் யானை; கண்டோர்க்கு நடுக்கத்தை உண்டாக்கும் யானை என்னலும் ஆம்; இம்பர்த்தலை மாதவர் - இப்புவியில் பெருந்தவத்தினைச் செய்த சரபங்கர்; 'என தருந்தவமோ கற்பம்பல சென்றன காணுதியால்' என்றமையால் அறிக; (92). ஐராவதம் நான்கு கொம்புகளையுடையது: 'ஈரிரு

மருப்புடைய வாரணம்' ; (கலிங்கத்துப் : 245). வயிரம் - கிம்புரியும் ஆம் ; நாலடி. 358 ; சீவக. 2275. வயிரக் கம்பமென இணைத்தலும் ஆம். கோள்வயிரம் - வயிரப் பூண் எனலும் பொருந்தும் ; கோள் - கோளகை, பூண் ; யானைக்கிம்புரி. இம்பர்த்தலை இவண் என இயைத்து, இவ்வுலகில் இம்முனிவர் ஆச்சிரமத்து எனலும் பொருந்தும் ; இவண் - இப்பொழுது எனக் காலத்தைக் குறிக்கும் சுட்டாகவும் கொள்ளலாம் : வயிரக்கம்பம் என இயைத்துப் பொருள் காண்பாரும் உளர். இந்திரன் ஓர் இரதத்தில் இங்கு வந்ததாகவும், அவனைச் சூழ்ந்து பரிவாரங்கள் பல நின்றன என்றும் வான்மீகம் கூறும்.

பி - ம். 1. கொம்பொத்தொரு, கொம்பொத்தொளிர் ; நாலது கொள் வயிரக் ; நாலொளி கோல்.

2. பாலிதபோ (லும்பர்த்) ; பாலிவனும்.

4. உம்பர்க்கிறை : உணர்வான். (22)

96. மானேயனை யாளொடு மைந்தனையப்
பூநேர்பொழி லின்புற னேநிறுவா
ஆனேறென வாளரி யேறிதெனத்
தானேயவ கன்பொழில் சாருதலும்,

மானே அனையாள் ஒடு - மான் போன்ற பிராட்டியோடு, மைந்தனையும் - இளையவனான இலக்குமணனையும், பூ நேர் பொழிலின் புறனே நிறுவா - பூக்கள் நிறைந்த அவ்வாச்சிரமச் சோலையில் வெளியே இருக்கச் செய்து, ஆன் ஏறு என - இடபம் போலவும், ஆள் அரி ஏறு என - வலிய ஆண் சிங்கம் போலவும், தானே - (இராமபிரான்) தான் ஒருவனாகவே நடந்து, அகன் பொழில் சாருதலும் - அந்த அகன்ற சரபங்க முனிவர் தவச்சாலையை அடைந்த அளவில், இது : அசை.

மைந்தன் : மைந்து - இளமை ; மைந்தன் என்றது, தம்பியைப் புதல்வன் போலவும் தமயனைத் தந்தை போலவும் கொள்ளும் முறைபற்றிக் கூறியதும் ஆம். மைந்தன் - பராக்கிரமத்தில் மிக்கோன் எனவும் கொள்ளலாம் ; மைந்து - வலிமை ; இங்கு மைந்தன் என்றது அன்புபற்றியும் ஆகலாம். இலக்குவனைச் சீதாப்பிராட்டி மைந்தன் என்றது ; சுந்தர : 505. இராமபிரான் நடைக்கு, ஆனேறு, அரி ஏறு நடைகள் உவமை; பால. கார்முகப் : 32;

சுந்தர : *160.* ஆள் - வீரமும்ஆம் ; மற்ற வன விலங்குகளை அடக்கி ஆள்கின்ற அரி எனலும் ஏற்கும். 'இராம பிரான், சீதையோடும் லக்ஷ்மணனோடும் சரபங்கரைத் தெரிசிக்க அவர் ஆச்சிரமத்தை யணுகினார். அப்போது அவர் அங்கு அதிசயிக்கத்தக்க ஒரு திவ்ய ஒளி தோன்றுவது கண்டு, அங்கு இந்திரன் வந்துள்ளமையை ஊகத்தால் அறிந்து, சீதாலக்ஷ்மணர்களைப் புறத்தே இருக்கச் செய்து, தான் மட்டும் சென்றார். அப்போது அங்கு இந்திரன் தன் பரிவாரங்களையெல்லாம் வானில் நிறுத்தித் தான் மட்டும் சரபங்க முனிவரிடம் வந்து, தன் கால் நிலந்தோயாமலே வானில் நின்றபடியே சம்பாஷிப்பதைக் கண்டார். அப்போது இந்திரன் அம்முனிவரை நோக்கி, 'இதோ ஸ்ரீராமபிரான் வருகின்றார், நான் இப்போது அவரிடம் பேசினால், அவருடைய தேவ ரகசியம் வெளிப்படும்; அதனால் இராவண சங்காரத்திற்குத் தடையும் ஏற்படலாம்; ஆதலால், நான் இப்பொழுது அவரைக் காணாமல் போவதே நலன்' என்று கூறித் தன் பரிவாரங்களுடன் சுவர்க்கலோகம் சென்றனன்' என்று வான்மீகம் கூறும்.

பி - ம். 1. மானே ரனையாளொடு மைந்தனையப்.
2. புறமே நிறுவா, புடையே நிறுவா.
3. யேறெனவும்.
4. தானே யினபேரெழில். (23)

### இந்திரன் இராமபிரானைக் கண்டு துதித்தல் 97—104.

97. கண்டாமவை யாயிர முங்கதுவக்
கண்டாமறை போற்கரு ஞாயிறெனக்
கண்டானிமை யோரிறை காசினியின்
கண்டானரு நான்மறை யின்கனியை.

இமையோர் இறை - தேவர்க்கரசனான இந்திரன், காசினியின் கண் - பூமியினிடத்து, கண் தாமரை போல் - கண்கள் தாமரை இதழ்கள் போலும், கரு ஞாயிறு என - நிறம் கரிய சூரியனே போலும் (விளங்கும்), அரு நான் மறையின் கனியை - அரிய நான்கு வேதங்களின் இனிய கனிபோன்ற பரம்பொருளாகிய திருமாலின் திருவவதாரமாய் வந்த ஸ்ரீராமபிரானை, கண் அவை ஆயிரமும் கதுவ - தன் ஆயிரங் கண்களும் பொருந்தி ஊன்ற, கண்டான் - பார்த்தான்,

இராமபிரான் ஞாயிறு போல் ஒளியும், கரிய நிறமும் உடைமையால் கரு ஞாயிறு எனப்பட்டான். இராமபிரானுக்குக் கரு ஞாயிறு; பால. கடிமணப் : 4; அயோத். கங்கைப் : 51; உத்தர. திருவோலக்க. 4. நான் மறையின் கனி - நான்கு வேதங்களின் முதிர்ந்த பயனாய் உள்ள பொருள் என்பதாம்; 'வேதத்தை வேதத்தின் சுவைப் பயனை' (பெரிய திருமொழி. 2-3 : 2) என்பதையுங் காண்க. இந்திரன் ஆயிரம் கண்களையுடையவன்; 75. இச் செய்யுள் யமக வணியில் அமைந்துள்ளது.

பி-ம். 1. 'கண்டானவை'. (24)

98. காணுமன ஞெந்து கவன்றனனால்
ஆணாதனை யந்தணர் நாயகனை
நாணாளும் வணங்கிய நன்முடியால்
தூணாகிய தோள்கொடு தாடொழுவான்.

காணு - (இந்திரன் அங்கு இராமபிரானைப்) பார்த்து, நொந்து - மனம் நோவுற்று வருந்தி, கவன்றனன் - கவலை மேற்கொண்டவனாக, ஆண் நாதனை - புருஷோத்தமனை, அந்தணர் நாயகனை - அந்தணர்களாகிய முனிவர்களுக்குத் தலைவனான திருமாலை, நாள் நாளும் - தினந்தோறும், வணங்கிய நல் முடியால் - வணங்கி வருகின்ற தன் உயர்வான சிரத்தினால், தூண் ஆகிய தோள் கொடு - தூண் போன்ற தன் புயங்கள் படப் பற்றிக்கொண்டு, தாள் தொழுவான் - இராமபிரான் பாதங்களை வணங்குவானானான். ஆல், அசை.

கண்டு மனம் நொந்து கவன்றனன் : ஸ்ரீ பரமபத வாழ்க்கையை விட்டு, தன் பொருட்டாக மானிட வடிவெடுத்ததோடு அமையாது, கொடிய வனத்தில் கால்கள் நோவ நடந்து திரியலாயிற்றே! என மனம் நொந்து வருந்தினான் என்க. 'காணு மனம் நைந்து கனிந்தனனால்' என்ற பாடங் கிடைப்பின் சிறக்கும். இராமபிரான் தாள்களில் தன் தலையும் தோள்களும் பட நீட்டி வணங்கினான் என்க; இது சாஷ்டாங்க நமஸ்காரம் எனப்படும். முக்கிய அங்கங்களான தோள்களையும் தலையையும் கூறியதால், மற்ற மார்பு, கால் முதலிய அங்கங்களும் உபலக்ஷணத்தால் அடங்கும்.

பி-ம். 1. நொந்து களித்தயரா(னு) 2. யந்தணநாயகனே.
3. வணங்கினன் நன்முடியால்.
4. தோள் கொடவற்றெழுதான. (25)

வேறு

99. துவசமார் தொல்லமருட் டுன்னுரைச் செற்றுஞ்
சுருதிப் பெருங்கடலின் சொற்பொருள்கற் பித்தும்
திவசமார் நல்லறத்தின் செந்நெறியி லுய்த்துந்
திருவளித்தும் வீடளித்துஞ் சிங்காமைத் தங்கள்
கவசமா யாருயிராய்க் கண்ணுய்மெய்த் தவமாய்க்
கடையிலா ஞானமாய்க் காப்பானைக் காணு
அவசமாய்ச் சிந்தையழிந் தயலே நின்ரு
னறியாதான் போல வறிந்தவெலாஞ் சொன்ஞன்.

துவசம் ஆர் தொல் அமர் உள் - கொடிகள் விளங்கும் பழைய தேவாசுரப் போர்களுள், துன்னுரை - பகைவர்களை, செற்றும் - அழித்தும், சுருதி பெரும் கடலின் - வேதமாகிற பெரிய சாகரத்தின், சொல் பொருள் கற்பித்தும் - பதங்களையும் அவற்றின் பொருள்களையும் கற்பித்தும், திவசம் ஆர் - தினம் அனுஷ்டிக்க வேண்டிய, நல் அறத்தின் - சிறந்த தருமங்களின், செம் நெறியில் உய்த்தும் - சிறந்த மார்க்கங்களில் கொண்டு செலுத்தியும், திரு அளித்தும் - செல்வத்தை அளித்தும், வீடு அளித்தும் - பரமபதமாகிய மோக்ஷத்தைக் கொடுத்தும், சிங்காமை - குறையாமல், (அல்லது தளர்ச்சியடையாமல்), தங்கள் - தங்களுக்கு, (அதாவது தேவர்களாகிய தங்களுக்கு), கவசமாய் - கவசம் ஆகியும், அருமை உயிராய் - அரிய உயிர் ஆகியும், கண்ணுய் - கண்ணுகியும், மெய் தவம் ஆய் - உண்மைத் தவம் ஆகியும், கடை இலா ஞானம் ஆய் - முடிவற்ற தத்துவமாய் ஆகியும், காப்பானை - காத்துவரும் பரம் பொருளாகிய இராமபிரானை, காணு - தெரிசித்து, அவசமாய் - தன் நிலை மறந்து, சிந்தை அழிந்து - மனம் அழிந்து, அயலே நின்ருன் - (அவன்) அருகே நின்றவன் ஆகி, அறிந்த எலாம் - தான் அறிந்து கொண்ட அப்பரமன் மகிமைகளை எல்லாம், அறியாதான் போல - அப்பெருமான் பெருமைகளை அறியாதவன் போல, சொன்ஞன் - சொல்லித் (இந்திரன்) துதிப்பாஞயினன்.

தொல் அமர் - பண்டு நடந்த தேவாசுரப் போர்கள். துன்ஞர் - பகைவர் ; அசுரர்கள். சுருதிப்........கற்பித்தும் ; முன் அன்னமாய் வேதம் அறைந்தமை ; 60 குறிப். சுருதிப் பெருங்கடல் : பெருமைபற்றிக் கடல் உவமை; வேதம் அனந்தமானது என்பர் ஆதலின். திவசம் - தினம். அறத்தின் சென்னெறி எனவும் பாடங்கொண்டு,

தருமத்தில் செல்லும் மார்க்கம் எனலும் ஒன்றும். சிங்குதல் - குறைதல் ; சுருங்குதல் ; ' சிங்காவண் புகழ்ச் சிங்கபுரத்து ' (சிலப். பதிகம் : 47.) கவசமாய் : கவசம், பகைவர் ஆயுதங்கள் பட்டு ஊறு உண்டாகாமல் அணியும் வலிய மெய்யுறை ; வெளியே கவசம் போன்றும், உள்ளே உயிர் ஆகியும் இருந்து உள்ளும் புறமும் காப்பவன் என்பது ; ' ஊனு முயிரு முணர்வும் போல் உள்ளும் புறத்து முளனென்ப '; (அயோத். 1 ;) ; " அந்தர் பஹிர்ச்ச தத்ஸர்வம் வியாப்ய நாராயணஸ்தித: " என்ற புருஷ ஸூக்த வாக்கியமும், இங்கு நோக்கத்தக்கது. கண்ணாய் : ' கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை ', ஆதலின். அவசம் - தன்வசம் அற்ற நிலை. இச்செய்யுளை, ' அறந்தலை நிறுத்தி ' என்று தொடங்கும், சுந்தர. 1123 உடன் ஒப்பிடுக. இச்செய்யுள் கவிக்கூற்று.

ஒரு சுவடியில் இச்செய்யுள் அடியிற்காணுமாறு மாறிக் காணப்படுகிறது.

துவசமார் தொல்லமருட் டுன்னாரைத் தொலைத்துஞ்
 சுருதிப் பெருங்கடலுட் டோயாது தோய்ந்தும்
திவசமார் நல்லறத்தின் செந்நெறியிற் சேர்த்துந்
 திருவளித்தும் வீடளித்துஞ் சிங்காமைத் தங்கண்
கவசமா யாருயிராய்க் கதவமாய்க் கண்ணாய்க்
 கடையிலா ஞானத்தைக் கண்ணிற் காணா
தவசமாய்ச் சிந்தையழிந் தன்புருக வழுத்திநின்
 றுங்கறிந் தறியான்போல வெடுத்தறைவ தானன்.

பி - ம். 1. துன்னாதார்ச் செற்றும் ; துன்னாரைத் தொலைத்தும் : பெருங்கடலுட்டோய்ந்து தோய்ந்தும்.

2. திவசமா நல்லறத்தின் ; செந்நெறியுய்ப்பித்தும் ; செந்நெறியிற் சேர்த்தும் ; சிந்தாமைத் ; சிங்காமற் றங்கள்; சிங்காமைத் தத்தம்.

3. ஆருயிராய்த் தவமாய்க் கண்ணாய் : மெய்த்தவமாய்க் கண்ணாய் ; ஆருயிரைக் கண்ணாய்க் கருத்தாய் : கடையிலா ஞானத்தைக் கண்ணிற்காணா(து) ; ஞானமாய்க்காணா : காண்பானைக் காண.

4. அறிந்ததெல்லாஞ் சொன்னான்.

(26)

100. தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாது நின்ற
தொல்சுடரே தொடக்கறுத்தோர் சுற்றமே பற்றி
நீந்த லரியநெடுங் கருணைக் கெல்லா
நிலையமே வேதநெறி முறையி னேடி
ஆய்ந்த வுணர்வி னுணர்வேவெம் பகையா
லலைப்புண் டடியே மடிபோற்ற வந்நாள்
ஈய்ந்த வரமுதவ வெய்தினையே யெந்தா
யிருநிலத் தவோநின் னிணையடித்தா மரைதாம்.

'பொருள் அனைத்தும் - எல்லாப் பொருள்களிலும், தோய்ந்தும் - கலந்தும், தோயாதும் - கலவாமல் தனித்தும், நின்ற தொல் சுடரே - நின்ற பழமையான ஒளியே! தொடக்கு அறுத்தோர் சுற்றமே - பற்றுக்களை முற்றும் அறுத்து விலக்கிய ஞானியர்கள் உறவானவனே! பற்றி நீந்தல் அரிய - புணையாகப் பற்றிக் கொண்டு நீந்திக் கடப்பதற்கு அரிதான, நெடும் கருணைக்கு எல்லாம் நிலையமே - நீண்ட கருணைக்கு இருப்பிடமானவனே! (அதாவது கருணைக் கடலே); வேத நெறிமுறையின் - வேத சாஸ்திரங்கள் கூறிய நன்னெறி முறைப்படியே, நேடி - தேடி, ஆய்ந்த உணர்வின் உணர்வே - ஆராய்ந்த உணர்ச்சியால் உணரப்படும் பொருளே! எந்தாய் - எங்கள் தந்தையே! அடியேம் - உமது அடியோமாகிய யாங்கள், வெம் பகையால் அலைப்புண்டு - கொடிய பகைவர்களான அரக்கர்களால் துன்புறுத்தப்பட்டு, அடி போற்ற - உமது திருவடிகளைச் சரணடைந்து துதிக்க, அ நாள் - அன்று, ஈந்த வரம் உதவ - கொடுத்த வரத்தின்படி எங்கட்கு உதவி செய்ய, எய்தினையே - இப்பொழுது எழுந்தருளினையே; நின் இணை அடி தாமரை - உமது இரு திருவடிகளாகிய தாமரை மலர்கள், இரு நிலத்தவோ - இப் பெரிய பூமியிற் படத்தக்கனவோ? தாம், அசை.

இதுமுதல் 5 செய்யுட்கள் இந்திரன் செய்த துதிகள். தோய்ந்தும் தோயாது நிற்றல் - எல்லாப் பொருள்களின் உள்ளே கலந்திருந்தாலும், அவற்றில் பற்றின்றி விலகியிருத்தல். தொல் சுடர்-சூரியன் அக்கினி முதலிய எல்லாச் சுடர்களுக்கும் ஒளியளிக்கும் ஆதிச்சுடர். தொடக்கு அறுத்தோர் சுற்றம் - பற்றற்றார் பற்று. கருணைக் கெல்லாம் நிலையம் - கருணைக்கடல்; 'கார்க்கடல் போற் கருணைக் கடல்,' (பால. கடிமணப்: 99); 'அருளின் ஆழியான்' **கிட்கிந்தா.** வாலிவதைப். 26; 'கருணையி னிலைய மன்னன்' (உயுத்த. அங்கதன்றூது: 2). அந்நாள்: நாங்கள் அரக்கரால் அடையும்

துயரைக் கூறி உம்மைச் சரணமடைந்த அக்காலப். ஈந்த வரம் : பால. திருவவதார. 20-23. இரு நிலத்தவோ நின்னிணையடித் தாமரை, என்றது கானிலந் தோயாக் கடவுளாகிய பெருமான், தம்பொருட்டுத் தரைமேற் சரணம்பட மானுடனாய் அவதரித்து வந்த பேரருளைச் சிந்தித்து வருந்திக் கூறியது.

பி - ம். 1. தோய்ந்து பொருளனைத் துந்தோயாதே நின்ற ; பொருளெனைத் துந் ; தோயாத தொரு : நின்ற சுடரே.

2. நீந்தவரிய ; நீந்தற்கரிய.

3. முறையின் நீங்காது நின்றுயர்ந்தோர் ; நெடுங் கருணைக்கடலே ; நிலைமையே வேத ; நின்வேத நெறி.

4. ஆய்ந்தவுணர் வேயருவினை வெம்பகையால் அலைவேலையுள் ளடியோ மடிபோற்ற வந்நாள் ; உணர்வே பகையால் ; உணர் வெம் பகையால் ; உணர்வே யருவினைவெம் ; வெம்வினையால் உணர்வேயடியோம் ; அடியேனடி போற்ற ; வன்றெமக் காங்(கு) வெய்தினையோ ; தாமரைத்தாள் ; தாமரையே. (27)

101. மேவா தவரில்லை மேவினரு மில்லை
வெளியோ டிருளில்லை மேல்கீழு மில்லை
மூவாமை யில்லை மூத்தமையு மில்லை
முதலிடையோ டீறில்லை முன்னொடுபின் னில்லை
தேவாவிங் கிவ்வோநின் றோன்றுநிலை யென்றாற்
சிலையேந்தி வந்தெம்மைச் சேவடிக ளேவக்
காவாது நீயொழியிற் பழிபெரிதோ வன்றேற்
கருங்கடலிற் கண்வளர்ந்தோய் கைம்மாறு முண்டோ.

‘தேவா - தேவர்களாகிய எங்கள் அனைவர்க்கும் தேவனே கரும் கடலில் கண் வளர்ந்தோய் - பெரிய பாற்கடலில் யோக நித்திரை கொண்டவனே ! மேவாதவர் இல்லை - (உனக்குப்) பகைவர் ஒருவரும் இல்லை ; மேவினரும் இல்லை - நண்பினரும் இல்லை ; வெளியோடு இருள் இல்லை - வெளிச்சம் என்பதும் இருள் என் பதும் இல்லை ; மேல் கீழும் இல்லை - உனக்கு மேற்பட்டதும் கீழ்ப் பட்டதும் இல்லை ; மூவாமையும் இல்லை மூத்தமையும் இல்லை - உனக்கு இளமையும் இல்லை ; மூப்பும் இல்லை ; முதல் இடை ஒடு ஈறு இல்லை - உனக்கு முதல், இடை, முடிவு என்பனவும் கிடையா; முன் ஒடு பின் இல்லை - காலத்தால் உன்க்கு முற்பட்டதும், பிற்பட்டதும் இல்லை ; நின் தோன்று நிலை - நினது தோற்ற நிலை,

யானது, இவ்வோ - இத்தன்மையனவோ ? என்ருல் - இவ்வாருகை யினவாஞல், நீ சிலை ஏந்தி - நீ கையில் வில்லேந்தினவனுய், சேவடிகள் நோவ - உன் சிவந்த பாதங்கள் வருந்த, வந்து காவாது ஒழியில் - இக்கானகம் வந்து அலைந்து எங்களைக் காவாது போனல், பழி பெரிதோ - உனக்குப் பெரும் பழி உண்டாகுமோ ? அன்றேல் - அஃதல்லாவிடில், கைமாறும் உண்டோ - இதனல் நீ அடையக் கூடிய பிரதியுபகாரம் ஏதேனும் உனக்கு உண்டோ ? ; (இல்லை என்றபடி).

மேவாதவரும் இல்லை ; என்றது ; கடவுள் எங்கும் நிறைந்திருப் பதால். மேவினர் இல்லை, என்றது, பிறர் தம் அறிவால் அடையக் கூடாத நிலையாய் இருப்பதால். வெளியோடு இருள் இல்லை ; அப் பரம்பொருள் வெளிச்சம் இருள் என்ற மாறுபாடு இன்றி ஒரே சோதி மயமாய் இருப்பதால். மேல் கீழும் இல்லை ; எங்கும் வியாபித் திருப்பவன் என்பதாம். முதல் இடை ஈறு இல்லை : ஆதி மத்யாந்த ரகிதன் என்பதாம். முன்னெடு பின் இல்லை - முன்புறம் பின்புறம் என்பதன்றி எங்கும் ஒரே சோதி வடிவானவன் என்னலும் ஒன்றும்; முன், பின் என்பன காலத்தையும் குறிக்கும். கருங்கடல் - பெரிய எல்லைப் புறக்கடல் என்றும், உலகமுடிவில் ஒரே பெருவெள்ளமாய் இருக்கும் மஹாபிரளயப் பெருங்கடல் என்றும் கொள்ளலாம் ; கருமை - பெருமை. கண் வளர்தல் - யோக நித்திரை செய்தல். கைமாறு முண்டோ : உனக்குப் பிரதியுபகாரம் அளிக்க யாரே தகுதியாக உள்ளார் ? உன்னிலும் மேலோர் ஒருவரும் இல்லையே என்றபடி. நீயே உலகுயிரனைத்தையும் காத்தளிக்கும் பெருங் கருணையை உனக்கு உரிமையாய்க் கொண்டவன் என்றதும் ஆம். கடவுளுக்குக் கடமை என்பதும், பயன் என்பதும் கிடையா ; அவன் திருவிளையாடல்கள் எல்லாம் அவன் கருணையால் விளைந் தனவே என்பது குறிப்பு. இச்செய்யுளுக்கு, ஒப்பு ; அயோத் : கைகேசிசூழ் : *91*. சுந்தர. *1122*.

பி - ம். 1. மேவு நருமில்லை.

2. மூவாதமை ; மூவாதவை ; மூத்தவையு.

3. தேவாவிங் கிவை ; வீங்கிதுவை ; தேவாவிவை ; கிவ்வோநின் ; கிவையைநின்; ஞென்றுநிலை ; உன்ரேன்று நிலை ; நிற்கொன்று மிலை ; சிலையேந்தி வந்தமைகின்ற ;

4. காவாதொழியிற் ; காவாதேநீ ; பழிபெரிதோவன்றே பகை பெரிதோ ; கண்வளர்வாய் ; கண்வளர்க்கை மாறு முண்டோ, கண் வளர்ந்தாய் ; கண்வளரிற். (28)

102. நாழி நவைதீ ருலகமெலா மாக
நளினத்து நீதந்த நான்முகனார் தாமே
ஊழி பலபலவு நின்றளந்தா லென்று
முலவாப் பெருங்குணத்தெ முத்தமனே மேனாள்
தாழி தரையாகத் தண்டயிர் நீராகத்
தடவரையே மத்தாகத் தாமரைக்கை நோவ
ஆழி கடைந்தமுத மெங்களுக்கே யீந்தா
யவுணர்கடா முனக்கடிமை யல்லாமை யுண்டோ.

'நீ நளினத்து தந்த - நீ உன் உந்தித் தாமரையினின்றும் அளித்த, நான் முகனார் தாமே - நான்கு முகங்களையுடைய பிரம தேவரே, நவைதீர் உலகம் எலாம் - குற்றமற்ற உலகங்கள் யாவும், நாழி ஆக - அளக்கும் படியாகக் கொண்டு, ஊழி பலபலவும் - அனேக ஊழிக்காலங்களும், நின்று அளந்தால் - விடாமல் அளந்தாலும், என்றும் உலவா பெரும் குணத்து - என்றைக்கும் குறையாத அரிய பெரிய கல்யாண குணங்களையுயுடைய, எம் உத்தமனே - எங்கள் புருஷோத்தமனான பெருமானே! மேல் நாள் - முற்காலத்தில், தரை தாழி ஆக - பூமியே தாழியாகவும், நீர் தண் தயிர் ஆக - கடல் நீரே குளிர்ந்த தயிராகவும், மத்து தட வரையே ஆக - மத்து பெரிய மந்தர மலையே ஆகவும், தாமரை கை நோவ - உனது தாமரை மலர்போன்ற கைகள் நோவுற, ஆழி கடைந்து - கடலைக் கடைந்து, அமுதம் - அதனின்று வந்த அமுதத்தை, எங்களுக்கே ஈந்தாய் - தேவர்களாகிய எங்களுக்கே கொடுத்தருள் செய்தாய்; அவுணர்கள் தாம் - எங்களோடு ஒருபுறம் இருந்து கடைந்த அசுரர்கள் தாம், உனக்கு அடிமை அல்லாமை உண்டோ - உனக்கு அடியவர் அல்லாதவர் என்பது உளதோ?

'ஊழி பல பலவு..................வுத்தமனே' என்பது; 'வரம்பிலூழியேத்தினும் வரம்பிலாத கீர்த்தியாய்' (திருச்சந்தவிருத்தம். 96) என்ற திருமழிசையாழ்வார் அருளிச் செயலை அடியொற்றி அமைந்தது என்னலாம். இங்குப் பாற்கடல் என்னாது, நீர்க்கடல் எனக் குறிப்பிட்டதால், உவர்க்கடல் நீரையே கடைந்தது, என்பார் கொள்கைக்கு இஃது ஆதாரமாகும்; 'கருங்கடலிற் கண்வளர்வாய்' என்றதையும் நோக்குக 101; தக்க: 234. உரை; அமுதுகடைந்தது. அயோத். கங்கைப். 27; சுந்தர: 960. இஃது உருவக அணி. 'நாழி நவை தீர் உலகெலாம் - குற்றந்தீர்ந்த உயர்ந்தோரெல்லோரும்;

ஒரு நாழியாகக் கொண்டு பிரமன் அளந்தாலும்' என்பது, பழைய உரை. தாழி - தயிர் கடையும் பானே.

ஒரு சுவடியில் இப்பாடல் அடியிற் காணுமாறு மாறிக் காணப் படுகிறது.

நாளு நவைதீர்த் துலகமெல்லா நயந்தளிக்க
நீதந்த நான்முகனு முதற் றேவர்
ஊழி பலபல வினுநின் றுணர்வுணர்வுக் கடங்கா
உத்தமனே பெருங்கு ணத்தோ யொருநீமேனுட்
டாழி தரையாகத் தண்டயிர் பாற்கடலாக
தடவரைதான் மத்தாகத் தாமரைக் கைநோவ
ஆழிகடைந் தமுத மெமக்கன் றளித்தாய்
அமரருனக் கடியையல்லா தயல்வே றுண்டோ.

பி - ம். 1. உலகமெலா முன்னுகி ; முன்னுக ; வாழிநவைதீ ருலகமெலாந் தருநின்னுந்தி வனசத்து நீதந்த மைந்தனுர் தாமே ; நளினத் தினிதிருந்த.

2. நின்றளந்துமென்றும் மருங்குணத் தெம்முத்தமனே.

3. நின்னடிமை யல்லாமை ; உன்னடிமை. (29)

103. ஒன்ருகி மூலத் துருவம் பலவாகி
யுணர்வா யுயிராகிப் பிறிதாகி யூழி
சென்ரு சறுங்காலேத் தன்னிலேய தாகித்
தீர்ந்துலகந் தானுகிச் செவ்வேதா னின்ற
நன்ருன ஞானத் தனிக்கொழுந்தே யெங்க
ணவைதீர்க்கு நாயகனே நல்வினேயே நோக்கி
நின்ருரைக் காத்தி யயலாரைக் காய்தி
நிலேயில்லாத் தீவினேயு நீதந்த தன்றே.

'மூலத்து - ஆதியில், ஒன்று ஆகி - ஒரே பொருளாகி இருந்தும், உருவம் பல ஆகி - பின் அவ்வொன்றினின்றும் பல உருவங் களாகப் பிரிந்தும், உணர்வு ஆய் - அறிவினுல் உணரக் கூடிய பொருள்களாகியும், (அன்றி, உணர்ச்சியாகவும் ஆகி), உயிர் ஆகி - அப்பொருள்களுக்கு உயிராகவும் விளங்கி, பிறிது ஆகி - இவ்வாறு பலவாகப் பிரிந்து, ஊழி சென்று ஆசு அறும் காலே - ஊழிக் காலம் கடந்து உலகம் முடியும் காலத்து, தன் நிலேயது ஆகி தீர்ந்து - எல்லாம் அழிந்து எஞ்சியுள்ள கடவுள் நிலேயொன்றே

கொண்டு ஒன்றாக முற்றுப் பெற்று, உலகம் தான் ஆகி - அந்நிலையில் தான் படைத்த உலகமெல்லாம் தன்னுள்ளே மறையத் தானே உலகமாகி, (மீண்டும் தான்) செவ்வே நின்ற - சிறப்புடன் விளங்கிய, நன்றாய ஞான தனி கொழுந்தே - மேலான ஞானத்தின் ஒப்பற்ற கொழுந்து போன்றவனே! எங்கள் நவை தீர்க்கும் நாயகனே - எம்போன்றவர் குற்றங்களைப் போக்கியாளும் தலைவனே! நல்வினையே நோக்கி நின்றாரை - நற்கருமங்களையே தம் நோக்கமாய்க் கொண்ட சாதுக்களை, காத்தி - நீ காப்பாற்றுகின்றாய்; அல்லாரை காய்தி - தீவினையுடையவரை அழிக்கின்றாய்; நிலை இல்லா தீவினையும் - எப்பொழுதும் நிலைத்திராத பாவச் செயல்களும், நீ தந்தது அன்றே - நீ படைத்தவைதாமே.

முதலில் எல்லாங் கலந்த ஒரு பிண்டமாய் இருந்த பரம்பொருள் உலக சிருஷ்டியைக் கருதிப் பல்வேறு பொருள்களாய் விரியும் என்பதும், பின் ஊழியில் அவை யனைத்தும் அழிய முன்னிருந்த ஒன்றான தன்மையை மீண்டும் அடையும் என்பதும், இதனால் படைத்தல், நிறுத்தல், அழித்தல், என்னும் முத்தொழில்களும் மாறி வருவனவாம் என்பதும், தீவினை நல்வினை என்பனவும் இறைவனாலேயே உண்டாக்கப் பெற்றவை என்பதும் இச் செய்யுளால் விளங்குவனவாம். தீவினையும் உன்னாற் படைக்கப் பெற்றிருக்க, அவற்றை உடையாரை நீ காய்வது என், என்றது வினா?

ஒரு சுவடியில் இச்செய்யுள் அடியிற்காணுமாறு மாறுபட்டும், சிதைந்தும் காணப்படுகின்றது:

ஒன்றாய் முதன்மூலத் துருவம்பல வாயுணர்வு
முயிரும் பிறிவாகி யூழியூழி
சென்று சறுங்காலைத் தன்னி லையதாகித்
தெளியும் பற்பல பொருளாகச் செகங்களாகி
நன்றாகு ஞானத் தனிக்கொழுந்தே..................
..................நாயகனே நல்வினையின் வழிக ணோக்கி
நின்றாரைக் காத்தி யல்லாரைக் காய்தி
....................தந்ததன்றே.

பி - ம். 1. ஒன்றான மூலத்து; ஒன்றாகு மூலத்து; ஒன்றாய் மூலத்து; ஒன்றாய் முன் மூலத்து: பலவா யுரையாயுயிராய்; யுணர்வா யுயிராகி: பலபலவுமாகி; யூழிபல கோடி.

2. சென்று சறுங்காலத்து; தந்நிலையதாகி; திறத்து கந்தானாகி: செஞ்சவே நின்ற.

3. நன்ருய் ஞானத் ; நன்ருய ஞானத் : நங்கணவை தீர்க்குந்; நல்வினையை நோக்கி.

4. யயற்பேரைக் காய்தி : நிலையலாத்தீவினையு ; நிலையாத தீவினையு; நிலையான தீவினையு; நிலையிலாச் செல்வமு; நீ தந்த தன்ருே. (30)

104. வல்லைவரம் பில்லாத மாயவினை தன்ஞன்
மயங்கினர் களோடே மதிமயங்கி மேனுள்
அல்லை யிறையவனீ யாதியெனப் பேதுற்
றலமரு வேமுன்னை யறப்பயனுண் டாக
எல்லை வலயங்கள் நும்முழையென் றந்நா
ளெரியோனைத் தீண்டி யெழுவ ரெனநின்ற
தொல்லை முதன்முனிவர் சூளுற்ற போதே
தொகைநின்ற வையந் துடைத்திலையோ வெந்தாய்.

'எந்தாய் - எங்கள் தந்தையே ! வல்லை - வலிமை வாய்ந்த, வரம்பு இல்லாத - எல்லை அல்லது வரையறையில்லாத, மாய வினை தன்ஞல் - அஞ்ஞானச் செயலால், மயங்கினர்கள் ஓடு - மயங்கிக் கிடந்த 'தேவர் முதலியவர்களோடு, மதி மயங்கி - அறிவு மயக்க முற்று, மேல் நாள் - முன்னெரு காலத்து, இறைவன் நீ அல்லை - நீ பரம்பொருளாகிய கடவுள் அல்லை என்றும், ஆதி என - நீயே கடவுள் ஆவாய் என்றும், பேதுற்று - தடுமாறி, அலமருவேம் - வருந்தி நின்ற எங்களுடைய, முன்னை அற பயன் உண்டாக - முன் செய்த அறத்தின் பயன் ஏற்பட, அந்நாள் - அக்காலத்து, எல்லை வலயங் கள் - எல்லையாக உள்ள உலகங்கள், நும் உழை என்று - உன் னிடமே தங்கியுள்ளன என்று, எழுவர் என நின்ற தொல்லை முதல் முனிவர் - எழுவராய் நிலைபெற்ற பண்டை ரிஷிச் சிரேஷ்டர்கள், (அதாவது சப்தரிஷிகள்;) எரியோனை தீண்டி - அக்னியைத் தீண்டி, சூள் உற்ற போதே - சபதஞ் செய்த போதே, தொகை நின்ற ஐயம் - யார் பரம் பொருள் என்று அறியாது திரண்டு நின்ற எங்கள் சந்தேகத்தை, துடைத்திலையோ - நீ நீக்கி அழித்தாய் அல்லவோ ?. ஏ : அசை.

மாய வினை - ராஜஸ தாமஸ குணங்களால் உண்டாகும் தீவினை. எழுவரென நின்ற முதல் முனிவரர் - முன் வைத்து எண்ணும் சிறந்த முனிவர்கள்: அன்னோர், அத்திரி, பிருகு, குப்ஸர், வஸிஷ்டர், கௌதமர், காசிபர், ஆங்கீரஸர், எனப்படுவர். சூளுற் றது, திருமாலே பரம் பொருள் என்று சபதம் கூறியது. இவ்

வரலாறு எங்குள்ளது என்று புலப்படவில்லை. இதன் உண்மை யறியாது பலர் பலவாருகத் தத்தம் மதக் கோட்பாட்டிற் கிணங்கத் திரித்துக் கூறினுரும் உளர். வலயம் - குவலயம் என்றதன் முதற் குறையும் ஆம். போது - பொழுது என்பதின் மருஉ.

இப்பாடல் ஒரு சுவடியில் சில மாறுபாடுகளுடன் பின்வருமாறு காணப் பெறுகின்றது.

வல்லவரம் பில்லாத வல்வினையான் மயங்கினுர்
    தம்மோடு மயங்கி மேனுள்
எல்லையில்லா விறையவனீ யெனமறை நான்
    கியம்பவுமற் றறியாதார் யாவர்களு மறியவாக
இல்லை மாயவலையங்க ளெம்முழை யென்
    றிசைத் தெண்ணு தெரிப்புகுந்தங் கெழுவோர்
        தெளியி லம்மாநின்ற
தொல்லை முனிவர்முதற் சூளுற்ற போதத்
    தொகைநின்ற மனத்தையுந் துடைத்திலையோ
        நீயெந்தாய்.

பி - ம். 1. வரம்பில்லா மாயவினை ; யெய்தி மயங்கி ; மதிமயங்குமேனுள்.

2. அல்லையிறை நீயாதி யென்னவே பேதுற்று; பெய்துற் ! றலமருவோர் முன்னே ; றலமருவேன் றனக்கு.

3. வலயங்க ணின்னுழை ; எம்முழை ; யென்றெண்ணு : இல்லை வலயங்க ளெம்முறையென் றெண்ணு.

4. தொல்லைமறை முனிவர் ; தொடைத்திலனோ வெந்தாய். (31)

## வேறு

### இந்திரன் முனிவரிடம் விடைபெற்றுச் செல்லல்

105. இன்னன பலநினைந் தேத்தின னியம்பாத்
துன்னுத லிடையுள தெனநனி துணிவான்
தன்னிகர் முனிவனைத் தரவிடை யென்னுப்
பொன்னெளிர் நெடுமுடிப் புரந்தரன் போனுன்.

பொன் ஒளிர் நெடுமுடி புரந்தரன் - பொன்னல் விளங்குகின்ற நீண்ட கிரீடத்தையுடைய இந்திரன், இன்னன பல - இவ்விதம் பல படித்தாக, நினைந்து - எண்ணி, இயம்பா ஏத்தினன் - இராம

பிரானை வாயால் சொல்லித் துதித்தனன் ; (பிறகு), இடை துன்னுதல் உளது என - நடுவில் ஸம்பவிப்பது ஒரு விசேடம் உளது என்று, நனி துணிவான் - நன்றாய் நிச்சயித்துக் கொண்டோனாய், தன் நிகர் முனிவனை - தனக்குத் தானே ஒப்பான சரபங்க முனிவரை நோக்கி, 'விடைதர என்னா - யான் செல்வதற்கு உத்தரவு அளிப்பீராக' என்று சொல்லி, போனான் - அவ்விடம் விட்டுச் சென்றான்.

துன்னுதல் இடையுளது என்றதால், இராமபிரான் அங்கு வந்தமையால் அங்கு நடக்கப் போவதை ஒருவாறு ஊகித்துணர்ந்தவனாய்ப் போனான் என்க. தர : தருவீராக ; அகரவீற்று வியங்கோள். தன்னிகர் முனிவன் : பிரமலோகப் பதவியை வேண்டாமென்றவரும், பிறிது ஒருவருக்கும் எட்டாத பரம்பொருளாகிய இராமபிரானே தம்மை நாடி வந்து அருள் புரிவதான பெரும்பேறு பெற்றவரும் ஆதலால் 94-ஆம் செய்யுளில் முனிவர் இந்திரனிடம் பேசிக்கொண்டிருந்த சமயத்தில், இராமபிரான் அங்கெய்திய செய்தி கூறப்பட்டது ; உடனே, இந்திரன் இராமபிரானை வணங்கித் தோத்தரிக்கத் தொடங்கினான். இது முனிவர் அறியாமல் நடந்திருக்கவேண்டும்; பின்பு அவன் முனிவரிடம் சென்று விடை பெற்றுச் சென்றான் என்று இச்செய்யுளால் ஏற்படுகிறது. இராமபிரான் தன்னை வணங்கித் துதித்த இந்திரனிடம் யாதும் கூறவில்லை. இச் செய்திகள் வான்மீகத்தில் இல்லை. இப்பகுதி சந்தேகத்துக்கிடமா யிருத்தலோடு, இதனிலுள்ள செய்யுளுக்கு எண்ணிறந்த பாடபேதங்கள் காணப்படுதலும் ஐயத்துக்கு அதிக இடம் தருகின்றது. ஆனால் எல்லாச் சுவடிகளிலும் இச்செய்யுள்கள் காணப்படுகின்றமையால் இங்குக் கொள்ளப்பெற்றன. இஃது ஆராயத்தக்கது.

பி - ம். 1. எத்தினனியம்பத் ;
2. துன்னுதலிடருளதென ; னுன்னுத வியல்பலவென ;
3. தவிருதியென்னாப் ; விடைதரு கென்னா.
4. பொன்னொளி மணிமுடிப். (32)

இராமபிரான் முதலினோர் முனிவரை அடைந்து அங்குத் தங்குதல் 106—8

106. போனவ னகநிலை புலமையி னுணர்வான்
வானவர் தலைவனை வரவெதிர் கொண்டான்
ஆனவ னடிதொழ வருள்வர முனிவன்
தானுடை யிடவகை தழுவின னுழைவான்,

போனவன் அகநிலை - அவ்வாறு சென்ற இந்திரன் மன நிலைமையை, புலமையின் - தன் ஞான திருஷ்டியால், உணர்வான் - அறிந்தவரான அம்முனிவர், வானவர் தலைவனை - தேவர்களுக்கெல்லாம் தலைமைத் தேவனான இராமபிரானை, வரவு எதிர்கொண்டான் - தன் எதிரே வரப்பெற்றவரானார்; ஆனவன் - அப்படி வந்த இராமபிரானும், அடிதொழ - அம் முனிவர் அடிகளில் வணங்க, முனிவன் அருள்வர - அம்முனிவர் அருள் மேலிட்டவராய், தழுவினன் - அந்த இராமபிரானைத் தழுவிக்கொண்டு, தானுடை இடவகை - தானிருக்கும் ஆச்சிரமத்தின் இடத்து, நுழைவான் - உட்புகுவாராகி, இது, அடுத்த செய்யுளிலுள்ள வருக என என்பதனோடு முடியும்.

புலமை - அறிவு: அல்லது ஞானம். வானவர் தலைவன் என்றது தேவதேவன் ஆதலால். இடவகை - இருப்பிடம்; வீடு, (பிங்). தானுடை இடவகை தழுவினன் நுழைவான் என்பதற்கு, தன்னடியாரிருப்பிடமே தனது வைகுந்தமாகக் கருதும் பெருமான் நுழைந்தான் எனப் பொருள் கொள்வாரும் உளர்.

பி - ம். 1. புலமையினுணரா. புலனிடையுணரும்.
2. வானவனிறைவனை.
3. வருள்புரிமுனிவன்; வருள்கனிபுரியான்; வருள்வர முனிவன்; தொழுதருள் வரவமுதான்; வருளொடு முனிவன்.
4. தானுவகை யின்மிசை தழுவினன் மகிழா. (33)

107. ஏழையு மிளவலும் வருகென வினிதா
வாழிய வவரொடு வள்ளலு மகிழா
ஊழியின் முதன்முனி யுறையுளை யணுக
ஆழியி லறிதுயி லவனென மகிழ்வான்.

வள்ளலும் - இராமபிரானும், 'ஏழையும் இளவலும் இனிதா வருகென - பிராட்டியும் இளைய பெருமானான இலக்குவனும் அங்கு இனிதாக வருக' என்று சொல்ல, அவரொடு - அவர்களோடு, மகிழா - மகிழ்ந்து, ஊழியின் முதன்முனி - ஊழிக்காலத்திற்கு முன்னமேயிருந்து விளங்கும் அம்முனிவரது, உறையுளை - வசிக்கும் ஆச்சிரமத்தை, அணுக - இராமபிரான் போய்ச் சேர, ஆழியில் அறிதுயில் அவன் என - இவனே திருப்பாற் கடலில் யோக நித்திரை புரியும் பரம்பொருளாகிய திருமால் என்று, மகிழ்வான் - (முனிவர்) கண்டு மகிழ்ச்சியடைவாராயினர்.

வாழிய - வாழ்விற்கு உரிய; அசை நிலையும் ஆம். ஏழை - பெண் என்ற அளவில் பிராட்டியைக் குறிப்பது; 'மழைக்கணேழை' (804). தனியே நின்றுகொண்டிருந்த பிராட்டியையும் தம்பியையும் இராமபிரான் அழைத்துக்கொண்டு முனிவர் ஆச்சிரமம் புக்கான் என்க.

ஒரு சுவடியில் இச்செய்யுள் பின்வருமாறு காணப்பெறுகிறது:

ஏழையு மிளவலும் வருகென விளியா
வாழிய வவரொடு மருவின ரதுபேர்
ஆழியி னறிதுயில் பவனென முனிவன்
ஊழியின் முதல்வனை யுறையுளி னுதவா.

பி - ம். 1. வினிதால்; விளியா.

2. வாழிய லவரொடு; மகிழ்வான்; வருகென வருவான்; அருகுற வருவான்.

3. ஊழியின் முதல்வனை யுறையுளியுதவா; யுறையுளி னுறைவான்; யுறையுளி யுறையா.

4. ஆழியி லறிதுயி லெனவக மகிழ்வான்; விழிதுயிலென; லமலனு மகிழ்வான்; லெனமன மகிழ்வான். (34)

108. அவ்வயி னழகனு வைகின னறிஞன்
செவ்விய வறிவுரை செவிவயி னுகரா
நவ்வியின் விழியவ ளொடுநனி யிருளைக்
கவ்விய நிசியொரு கடையுறு மளவில்,

அவயின் - அவ்வாச்சிரமத்தினிடத்து, அழகனும் - அழகிய திருமேனியுடைய இராமபிரானும், நவ்வியின் விழி அவளொடு - மான் விழிபோன்ற விழியுடைய பிராட்டியோடு, வைகினன் - தங்கி, அறிஞன் - மகா ஞானியாகிய சரபங்க முனிவருடைய, செவ்விய அறிவு உரை - சிறந்த ஞானத்தைத் தரும் தருமோபதேசங்களை, செவி வயின் நுகரா - தன் காதுகளின் வழியே கேட்டுணர்ந்து, இருளை நனி கவ்விய - இருட்டை மிகுதியும் பற்றிக் கொண்ட, நிசி - இரவுப்பொழுது, ஒரு கடை உறும் அளவில் - ஒரு முடிவை அடையும்போது,

(இது அடுத்த செய்யுளோடு சேர்ந்து குளகமாகி முடியும்.) இராமபிரானை அழகன் என்பது; அயோத்: குகப்: 42; ஆரண்ய. சூர்ப்பணகைப்: 17. இரவு முழுவதும் அறிவுரை கேட்டிருந்தனராதலின் இராம லக்ஷ்மணர் சீதை மூவரும் அன்றிரவு நித்திரை செய்யவில்லை எனப்பெறும். இலக்குவன் வனம்புக்க

நாள்முதல் தாங்காதவன் ஆதலின், அவனை விலக்கிக் கூறியதும் என்னலாம் ; உபலக்ஷணத்தால் அவனையும் உட்கொண்டு கூறியதும் ஆம்.

இச் செய்யுள் ஒரு சுவடியில் பின்வருமாறு அமைந்துள்ளது.

அவ்வயி னழகனு மிளவலு மருள்சேர்
நவ்வியின் விழியொடு நவையறு முனிவன்
செவ்விய வுரைசெவி நுகருன ரிருளைக்
கவ்விய நிசிகுலா கடையுறு மளவும்.

பி-ம். 2, அறவுறை ; செவியயினுதய : நவ்வியின் விழியொடு நவையறு முனிவன்.

4. அளவும் ; அளவின். (35)

## சூரியோதயம்

109. விலகிடு நிழலினன் வெயில்விரி யயில்வாள்
இலகிடு சுடரவ னிசையன திசைதோய்
அலகிட வரிதெனு மவிர்கர நிரையால்
உலகிடு நிறையிரு ளுறையினை யுரிவான்.

விலகிடு நிழலினன் - வியாபிக்கின்ற ஒளி யுடையவனும், இலகிடு சுடரவன் - விளங்கும் சுடருடையவனுமான சூரியன், இசை அன - தன் கீர்த்தியே போல, திசை தோய் - நான்கு திசைகளிலும் போய்ப் படிந்த, அலகு இட அரிது எனும் - கணக்கிட்டுக் கூற முடியாது என்று சொல்லக்கூடிய, வெயில் விரி - வெயில் விரிந்த, அயில் வாள் - கூரிய வாள்கள் போன்ற, அவிர் கர நிரையால் - விளங்கும் கிரணங்களாகிய தன் கரங்களின் கூட்டங்களால், உலகு இடு - உலகின்மீது போர்க்கப்பட்ட, நிறை இருள் உறையினை - நிறைந்த இருளாகிய உறையை, உரிவான் - உரித் தெடுப்பானாயினன் ; (அதாவது கழற்றுவானாயினன்).

நிழல் இனன் - ஒளியையுடைய சூரியன் என்னலும் ஒன்றும் ; இனன் - சூரியன் (பிங்). சூரியன் உலகின் இருளாகிய போர்வையைத் தன் கிரணங்களென்னும் ஒளி பொருந்திய வாள்களைக் கொண்டு உரித்தெடுப்பவனானான் என்க. ஒப்பு : "மூன்று லோக மூடு மக்கராம், என்ற காரிரு ணீங்க விராகவன், தோன்றி னானென

வெய்யவன் ரேன்றினன் " (307). இங்கு இருளை உலகின் உறையாகக் கூறப்பெற்றது. இது, தற்குறிப்பேற்ற அணி.

பி - ம். 1. விலகிடு நிலவினன்; வெயில்விடு மயில்வாள்; வெயிவிடு மயில்வாள்.

2. விசையினதிசை; மிசையினதிசை; விசையென; விசையினன் வெயிலோன்; சுடர்விடு விசையன; சுடரவன் விசையன; சுடரெழு பரிவினனிசைதோய்; விசையென; விசையின.

3. அலகிட லரிதென; வரிதெனு கரவரையான்; கரனுனையான்,

4. உலகிடு யிருளுறை யுரிபவனெழவே; யுரியா; யுரிவார்.

### முனிவர் எரியிடைப் புகுந்து பிறப்பு நீக்கியது 110—15

110. ஆயிடை யறிஞனு மவனெதி ரழுவத்
தீயிடை நுழைவதொர் தெளிவினை யுடையான்.
நீவிடை தருகென நிறுவின னெறியால்
காயெரி வரன்முறை கடிதினி லிடுவான்.

அ இடை - அப்போது, அறிஞனும் - மகா ஞானியாகிய சரபங்க முனிவரும், அவன் எதிர் - அந்த இராமபிரான் எதிரில், அழுவம் தீ இடை - மிகுதியான தீயினிடத்து, நுழைவது ஓர் தெளிவினை உடையான் - நுழைந்து உயிர் விடுவதான ஒரு நிச்சய புத்தியை மேற்கொண்டவராய், காய் எரி - எரியும் தீயை, நெறியால் - முறைப்படி, வரன்முறை - சாஸ்திர விதிப்படி, கடிதினில் இடுவான் - வேகமாய் மூட்டுபவராகி, 'நீ விடை தருகென நிறுவினன் - நீ எனக்கு விடை தருவாயாக' என்று கேட்டுக் கொண்டனர்.

அழுவத் தீ - அங்கிருந்த காட்டுத் தீ என்பாரும் உளர்; 'பரந்த ஓம குண்டத்திலே' என்பது பழையவுரை. நீ விடை: இது இன வெதுகையாக வந்தது. இனி, நீ இடை தருகெனப் பாடங்கொண்டு, நீ அதற்கு இடமளிப்பாயாக என்று பொருள் கொள்வர்.

பி - ம். 1. அவனெழுமளவில்; அவனிடையணுகி; னெதிர் தழுவத்.

2. விழுவதோர் தெளிவின; தீயினுணுழைவதொர்; யுடையேன்.

3. தருகெனு மியர்தமை நிறுவிக்; நிறுவினநெறியால்.

4. கடிதினிவிடலும்,

111. வரிசிலை யுழவனு மறையுழ வனைநீ
புரிதொழி லெனையது புகலுதி யெனலும்
திருமக டலைவசெய் திருவினை யுறயான்
எரிபுக நினைகுவெ னருளென விறைவன்,

வரி சிலை உழவனும் - கட்டுக்கள் அமைந்த வில்போரில் வல்ல இராமபிரானும், மறை உழவனை - வேதப் பயிற்சியிற்றேர்ந்த சரபங்க முனிவரை (நோக்கி), ' நீ புரிதொழில் எனை - நீ இப்பொழுது செய்யும் காரியம் என்னை ? அது புகலுதி எனலும் - அதனைச் சொல்வீராக ' என்று கேட்கவும், (அம் முனிவர்), ' திருமகள் தலைவ - லக்ஷ்மீபதியாகிய ஏ ராகவ ! செய் இருவினை அற - யான் செய்த நல்வினை தீவினை இரண்டும் விட்டு நீங்க, யான் எரி புக நினைகுவென் - நான் அக்னிப் பிரவேசம் செய்ய எண்ணுகிறேன் ; அருள் என - நீ எனக்கு விடை அருள வேண்டு ' மென்று கேட்டுக் கொள்ள, இறைவன் - இராமபிரான், (பின்வருமாறு கூறுவானாயினன்.)

சிலையுழவன், மறையுழவன் : சிலைத் தொழிலிலும் மறை முதலிய சாஸ்திரக் கலையிலும் வல்லவர் என்பது; வாளுழவன் என்றாற் போல ; (பால. கார்முகப் : 15 ; அயோத். மந்தரப் : 61)., ஆழியுழவன் (170); வில்லேருழவர், சொல்லேருழவர் என்றமையும் நோக்குக ; (குறள். 872). இருவினை - புண்ணிய பாவங்கள் ; இவை மாயை சம்பந்தமான பிறப்புக்கு ஏதுவாகலின், இவை இரண்டும் அற்றால்தான் மோட்சம் சித்திக்கும் ; இதனாலே, ' இருள்சேர் இருவினை ' என்றதும் ஆம் ; (குறள். 5). இராமபிரானைத் திருமகள் தலைவன் என்பது ; 984 ; பால : அகலிகைப் : 52 ; அயோத். மந்திரப் : 50 ; தைலமாட்டுப் : 54 ;

பி-ம். 2. வினையது ; லனையது.

3. தெரிவினையறயான் ; திருமகடலைவன் ; துலகுறு தெளிவால் ; குறுசெயலால்.

4. லருள்கென ; நானென விறைவன் ; இருள்கெட ; வணுகுவெனருளென விறைவன்.

(38)

112. யான்வரு மமைதியி லிதுசெய லெவனோ
மான்வரு தனியுரி மார்பினை யெனலும்
மீன்வரு கொடியவன் விறலடு மறவோன்
ஊன்விடு முவகைய னுரைநனி பகர்வான் ;

'மான் வரு - மானிடமிருந்து அடையப் பெற்றதான, தனி உரி மார்பினை - ஒப்பற்ற தோலினைத் தரித்த மார்பையுடைய முனிவ! யான் வரும் அமைதியின் - யான் இங்கு வந்த இப்பொழுதில், இது செயல் எவன் - இப்படி உயிர் விடும் இக்காரியத்தை நீவிர் செய்வது எனோ?' எனலும் - என்று இராமபிரான் கேட்டபொழுது, மீன் வருகொடி அவன் - மீன் வடிவம் எழுதப் பெற்றுவரும் கொடியை யுடைய மன்மதனுடைய, விறல் அடு - வலிமையை அழித்த, மற வோன் - தவ வலிமையுடைய அம்முனிவர், ஊன் விடும் உவகை யின் - தன் உடலைவிட்டு நீங்கும் மகிழ்ச்சி மேலிட்டவராய், உரை நனி பகர்வான் - பின் வருமாறு வார்த்தைகளை நன்கு உரைப்பா ராயினர்.

அமைதி - சமயம்; அயோத். கிளைகண்டு: 99; சுந்தர. 796. தவநியமத்தோர்க்கு, மான் தோல் மேல் போர்த்தல் மரபு; 'மானி னுரிவை தைஇய வூன்கெடு மார்பின்' (முருகு. 128 - 9). மீன் வரு கொடியவன் விறலடுமறவோன் என்றமையால், சரபங்கர் எனப் பெயர் பெற்றமைக்குக் காரணமுரைத்ததும் ஆம். விறலடும் அற வோன் எனப் பிரித்தும் பொருள் கொள்ளலாம். ஊன்விடும் உவ கையன்; ஊன், உடலுக்கு ஆகுபெயராய் நின்றது. எவனோ: ஓ: அசை.

பி - ம். 1. மமைதியினிது; மளவையினிது.
2. மான்வரு மதனுரிமார்பினை; தனியதள்.
4. ஊன் வருமுவகையி; நனிபுகல்வான். (39)

113. ஆயிர யுகமுள தவமயர் குவென்யான்
நீயிவண் வருகுதி யெனுநிலை யுடையேன்
போயின தருவினை புகலுறு விதியான்
மேயினை யினியொரு வினையிலை விறலோய்;

'விறலோய் - வெற்றியுடைய வீரனே! யான் - யான், ஆயிரம் உகம் உள - ஆயிர யுககாலமாக உள்ள, தவம் அயர்குவென் - தவ நியமத்தில் இருந்து வந்துள்ளேன்; நீ இவண் வருகுதி எனும் நிலை உடையேன் - நீ இங்கு வரப்போகிறாய் என்னும் உறுதியை மேற் கொண்டுள்ளேன்; புகல் உறு விதியான் - சாஸ்திரங்களில் விதித்த முறைப்படி, போயினது அருவினை - எனது போக்கவரிய நல்வினை தீவினை யிரண்டும் அழிந்தன; மேயினை - அதன் பயனாய் நீ இங்கு எனக்கு அருள்புரிய வந்தனை; இனி ஒரு வினை இலை - இனியான் செய்யத்தக்க செயல் வேறு இல்லை,

அருந்தவம் செய்து இருவினை அற்றோர் பரமன் திரு வருள் எய்துவர் என்ற உண்மை விதிப்படி, 'நீ என் முன் வந்தருளி ஞய்; இனி வேறு யான் செய்யத்தக்க வினை இல்லை;' என்று உண் மையை எடுத்து உலகுக்கு விளங்க வைத்ததும் ஆகும். ஆயிரம் என்பது இங்குப் பல யுகங்களின் மிகுதியைக் குறிப்பது. நிலை - உறுதி; (திருவாசகம். 3 : 9).

பி-ம். 1. தவமுயல்கு வென்யான்; அயர்பவன் யான்; முகமிது தவமுயல்.
2. நினைவுடையேன்; வருதிற மறிகிலே.
3. திருவினை. 4. வினையிலே விமலா. (40)

114. இந்திரன் நாளின திறுதிகள் பகர
வந்தனன் மருவுதி மலரய னுலகம்
தந்தன னெனவது சாரலெ னுரவோய்
அந்தமி லுயர்பத மடைதலே முயல்வேன்.

'உரவோய் - வலியோனே! இந்திரன் - தேவேந்திரன், நாளினது இறுதிகள் பகர - எனது ஆயுளின் காலங்கள் கடந்துள்ளன என்பதைத் தெரிவிக்க, வந்தனன் - வந்து, 'மலர் அயன் உலகம் தந்தனன் - பிரமதேவர் தம் சத்திய லோக வாழ்க்கையை உமக்கு அளித்தனர்; மருவுதி என - வந்து அடைவாயாக,' என்று கூற, அது சாரலென் - அதை நான் சேர விரும்பாதவனாகி, அந்தம் இல் உயர் பதம் அடைதலே - அழிவு இல்லாத உயர்ந்த பரமபதத்தை அடை வதை, முயல்வேன் - முயற்சி மேற்கொண்டுள்ளேன்.

உரவோய் என்ற விளி, சரபங்கர் இராமபிரானை நோக்கிக் கூறி யது. நாள் - காலத்தின் பேரெல்லையான யுகங்களைக் குறித்தது எனக் கொள்ளப்பட்டது. இந்திரன் அழைத்தது; 88-90. சரபங் கர் அந்தமில் பரம்பதத்தை விரும்பினது; 91. 92.

பி-ம். 1. னிறுதி செய்பகர; திறுதி செய்பகலாய்; பகலான்; இந்திர னெனதுளமறிகில னிவணே.
2. வந்தெனைமருவுதி.
3. சார்கிலனுரவோய். 4. மடைவதை முயல்வேன். (41)

115. ஆதலி னதுபெற வருளென வுரையாக்
காதலி யவளொடுங் கதழெரி முழுகிப்
போதலே மருவின னெருநெறி புகலா
வேதமு மறிவரு மிகுபொரு ளுணர்வான்.

ஒரு நெறி புகலா - ஓர் உறுதியான வழி இஃது என்று குறிப்பிட்டுச் சொல்லாத, வேதமும் - வேதங்களும் (அதாவது, வேதங்கள் பரம்பொருளை அறியும் நெறிகளைப் பல படித்தாய்க் கூறுகின்றன என்பதாம்;), அறிவரு - அறிய முடியாத, மிகு பொருள் உணர்வோன் - மேம்பட்ட பரம் பொருளின் நிலையை உணர்ந்த அம் முனிவர், 'ஆதலின் - ஆகையால், அது பெறல் அருள் என - அந்தப் பரமபதம் அடைவதை எனக்கு அருள்வாயாக' என்று, உரையா - இராமபிரானிடம் சொல்லி, காதலி அவளொடும் - தம் மனைவியோடும், கதழ் எரி மூழ்கி - பற்றி எரியும் பெரிய நெருப்பிற் புகுந்து, போதலை மருவினன் - பரமபதம் போகும் செயலை மேற்கொண்டார்.

மிகுபொருள் - பரம்பொருளாகிய ஸ்ரீராமபிரான் என்னலும் ஆம். கதழ் - மிகுதி; வலிமையும் ஆம்; நங்க. *694*. வேதமும்: உம்மை, உயர்வு சிறப்பினது. நெறி; *17, 43*. சரபங்கர் பிரமலோகத்திற்குப் போனதாகவே வான்மீகம் கூறும்.

பி - ம். 1. னிதுபெற.
2. யிவளொடு; காதலி யொடுவளர் கதழெரி.
3. யரு நெறிபுகலா; போதலை முடுகினனொரு.
4. மருளுறு மிகுபொருள்; வேதமு மறிகுறு மிகுபொருள்; (42)

116. தேவரு முனிவரு முறுவது தெரிவோர்
மாவரு நறுவிரை மலரயன் முதலோர்
ஏவரு முடிவினி லிருவினை யொருவிப்
போவது கருதுமவ் வருநெறி புக்கான்.

உறுவது தெரிவோர் - இனி நடக்கப் போகும் விஷயத்தைத் தம் அறிவினால் தெரிந்துகொள்ளக் கூடியவரான, மாவரு நறுவிரை - மாட்சிமைக் கிடமான நல்ல தெய்வ மணமுடைய, மலர் அயன் முதலோர் - தாமரை மலரின் உள்ள பிரம தேவர் முதலாக உள்ள, தேவரும் - தேவர்களும், முனிவரும் - மகரிஷிகளுமாகிய, ஏவரும் - எல்லாரும், இருவினை ஒருவி - நல்வினை தீவினையாகிய இரண்டையும் நீக்கி, முடிவினில் - கடைசியாக, போவது கருதும் - போதலை எண்ணும், அ அரு நெறி புக்கான் - (சரபங்கர்) அந்தப் பெறுதற்கு அரிய மோட்சமாகிய பரமபதத்தைப் போயடைந்தார்.

உறுவது தெரிவோர், என்று எதிர்காலத்தைக் குறித்தது, இறப்பு நிகழ்வாகிய இரு காலங்களை அறியலாம்; ஆனால் எதிர்

காலம் அறிவது அரிது என்பதைக் குறித்தது. உபலக்ஷணத்தால் மற்ற இரு காலங்களையும் குறிப்பால் உணர்த்தியது எனக்கொண்டு, முக்காலமும் உணரும் ஞானியர் எனலும் ஒன்றும். ஏவர்: எவர் என்பது எதுகை நோக்கி நீண்டது. அருநெறி: மறுகாநெறி (93); அந்தமில்லுயர்பதம் (*114*), என்றமையும் நோக்குக. இதனால் மலரயன் முதற்றேவர்கள் இருவினைப் பயனாய் உள்ள நிலைகளையுடையவர் என்பதும் அந்நிலைகளும் அழியும் நீர்மைய என்பதும் பெறப்படும்.

பி-ம். 1. முறுபொரு டெரியும். 2. முதலார்.
3. விருவினையுதவிப்.
4. போமவர் கருதுமவ்வருநெறி; வொருநெறி; புகுந்தான். (43)

**117.** அண்டமு மகிலமு மறிவரு நெறியால்
உண்டவ னொருபெய ருணர்குந ருறுபே
றெண்டவ நெடிதுயி ரிறுதியி லவனைக்
கண்டவ ருறுபொருள் கருதுவ தெளிதே.

அண்டமும் - எல்லா அண்டங்களையும், அகிலமும் - அவற்றினுள் அடங்கிய உலகங்களையும், அறிவு அரு நெறியால் - யாரும் அறிய முடியாதபடி, உண்டவன் - தான் எடுத்துத் தன் வயிற்றினுள் அடக்கிக் கொண்ட திருமாலாகிய இராமபிரானுடைய, ஒரு பெயர் - ஆயிர நாமங்களுள் ஒப்பற்றதான இராம நாமத்தை, உணர்குநர் - சிந்திப்பவர், உறு பேறு - அடையும் பாக்கியம், எண் தவ நெடிது - கணக்குக்கு எட்டாத பெரிது ஆகும்; (என்றால்), நெடிது உயிர் இறுதியில் அவனை கண்டவர் - நீண்ட உயிரின் முடிவுக் காலத்தில் அப்பெருமானை நேரில் தெரிசித்தவர், உறு பொருள் - அடையும் பதவிச் சிறப்பை, கருதுவது எளிதே - நினைப்பது எளிதாகுமோ? ஆகாது என்றபடி.

அண்டமும் அகிலமும் உண்டவன்; யுகமுடிவுக் காலத்தில் எல்லா அண்டங்களையும் அவற்றிலுள்ள சராசரப் பகுதிகள் அனைத்தையும் திருமால் தன் திருவயிற்றில் அடக்குவதை இங்குக் குறிப்பிட்டபடி. ஒரு பெயர் - ஒப்பற்ற பெயர். அது, இராம நாமம்; அவன் ஆயிர நாமங்களுள், அது துல்லியமானதால். உறு

பேறு - பெரும் பதவியும் ஆம் ; உறு : மிகுதியைக் குறிக்கும் உரிச் சொல் ; (நன்னூல் : உரியியல், 15); 'உறுமீன் வருமளவும் வாடி யிருக்கு மாங்கொக்கு (மூநுரை) ; ஈற்று ஏகாரம் வினைப் பொருளில் வந்தது. இனி, தவநெடிது என்பதை உறுபேறு என்பதுபோல உரிச் சொற்றொடர் ஆகவும் கொள்ளலாம். ஒப்பு :, 'இறுவரம்பினி லிராம னென் றோரும்பர் நிறுவ ரென்பது நிச்சயமாகலின்' (பால : பாயிரம்).

பி - ம். 2. ருணருக ருறுபே ; ருணர்கில ருறுபே.
3. றெண்டர நெடிதுயி.
4. கண்ட னருறு பொருள் ; தெளிதோ. (44)

சரபங்கர் பிறப்புநீங்கு படலம் முற்றும்.

---

# 3. அகத்தியப் படலம்

---

இராம லக்ஷ்மணர் பிராட்டியோடு, அகத்திய முனிவரின் ஆச்சிரமம் அடைந்த செய்தியைக் கூறும் படலம் என விரியும். அகத்தியன் : அகஸ்திய என்ற வடசொல்லின் திரிபு. அகஸ்தியர் என்னும் பெயர், மலையை அடக்கினவர் என்னும் காரணத்தால் அவர்க்கு ஏற்பட்டது என்பர். சில சுவடிகளில் இப்படலத்தின் 26 ஆம் செய்யுள் வரை, தண்டகாரணியப் படலம் என்றும், பிறகு அகத்தியப் படலம் என்றும் குறிப்பிடப் பெற்றுள்ளன.

மூவரும் சரபங்கர் ஆச்சிரமத்தை விட்டு நீங்குதல் 118 – 9.

118. அனையவ னிறுதியி னமைவு நோக்கலின்
இனியவ ரின்னலி னிரங்கு நெஞ்சினர்
குனிவரு திண்சிலைக் குமரர் கொம்பொடும்
புனிதன துறையுணின் றரிதிற் போயினர்.

இனியவர் - யாவர்க்கும் இனிமையை அளிப்பவர்களும், குனி வரு திண் சிலை குமரர் - வளைக்கக் கூடிய வலிய விற்களையுடைய அரச குமாரர்களுமான இராமலக்ஷ்மணர், கொம்பு ஒடும்-பூங் கொம்பு போன்று அழகுடன் விளங்கும் சீதாப்பிராட்டியோடும், அனையவன் இறுதியின் அமைவு நோக்கலின் - அந்தச் சரபங்க முனிவரது முடிவின் நிலையைப் பார்த்தமையால், இன்னலின் இரங்கு நெஞ்சி னர் - துன்பத்தால் வருந்திய மனமுடையவர்களாய், புனிதனது உறையுள் நின்று - பரிசுத்தரான அம்முனிவருடைய ஆச்சிரமத்தி னின்று, அரிதில் போயினர் - சிரமத்தோடு நடந்து அப்பாற் சென்றனர்.

உறையுள் - இருப்பிடம் : 107. அரிதிற் போயினர் - அம்முனி வரது பிரிவினால் வருந்திச் சென்றனர் என்னலும் ஒன்றும். பிராட்டி யைக் கொம்பு என்றது, 74. குமரர் : நவ யௌவனமுடையவர். 'குனிவரு திண்சிலைக்குமரர்' : 'சித்திரக் குனிசிலைக்குமரர்' என்றதும் நோக்குக. ஸுதீக்ஷ்ணர் என்னும் முனிவரிடஞ் சென்றால், அவர் இராமபிரான் முதலியவர்க்கு இருப்பிடம் ஏற்படுத்தித் தருவர் என்று கூறிச் சரபங்கர் அக்னியிற் புகுந்து பரகதி யடைந்தா ரென்றும், அதன்பின் பல முனிவர்கள் அவ்வாச்சிரமத்திற்கு வந்து இராமபிரானைத் தெரிசித்து இராவணன் முதலிய அரக்கர்களின்

கொடுமைகளைக் கூறி முறையிட்டனரென்றும், அம்முனிவர்களுக்கு இராமபிரான் அபயமளித்தனர்' என்றும் வான்மீகம் கூறும்.

பி-ம். 1. அமைந்து நோக்கலின் : அமைதி : நோக்கிய ;
2. ரின்னலா னிரங்கு.
3. குனிதரு வரிசிலை ; கொம்பொடு.
4. துறையுள் விட்டரிதிற். (1)

119. மலைகளு மரங்களு மணிக்கற் பாறையும்
அலைபுன னதிகளு மருவிச் சாரலும்
இலைசெறி பழுவமு மினிய சூழலும்
நிலைமிகு தடங்களு மினிது நீங்கினர்.

மலைகளும் - பல மலைகளையும், மரங்களும் - பல மரங்கள் அடர்ந்த இடங்களையும், மணி கல் பாறையும் - அழகிய பல கற்பாறைகள் உள்ள இடங்களையும், அலை புனல் நதிகளும் - அலைகளோடு கூடிய நீர் மிக்க நதிகள் உள்ள இடங்களையும், அருவிச் சாரலும் - மலையருவிகள் பாய்ந்தோடும் மலைச்சாரல்களான இடங்களையும், இலை செறி பழுவமும் - இலைகள் அடர்ந்த காடுகளான இடங்களையும், இனிய சூழலும் - மற்றும் இனியவையாய் விளங்கிய இடங்களையும், இனிதின் நீங்கினர் - பார்த்து மகிழ்ந்தவர்களாய் (அந்த இராம லக்ஷ்மணர் சீதை ஆகிய மூவரும்) கடந்து சென்றனர்.

மலைகள் முதல் இனிய சூழல் பலவும் அவர்களுக்குத் தோற்றத்தால் மகிழ்ச்சி அளித்தமையால் நடந்து சென்ற வருத்தந் தோன்றாமல் அக்காட்சிகளில் ஈடுபட்டு மனம் மகிழ்ந்து இன்புற்றோர்களாய்ச் சென்றனர் என்பதாம். பழுவம் - காடு ; கல்லதரத்தமும் ஆம் ; சீவக. *1185, 1414*.

பி-ம். 1. அலைபுகு நதிகளும். (2)
4. நிலை வருதடங்களும் ; நிலைதரு ; நீங்கியேகினர்; நெடிது நீங்கினர்

தண்டகவன முனிவர்கள் அவர்களை வரவேற்று உபசரித்தல் 120—7.

120. பண்டைய வயன்றரும் பால கில்லரும்
முண்டரு மோனரு முதலி னோர்களத்
தண்டக வனத்துறை தவத்து ளோரெலாம்
கண்டன ரிராமனைக் களிக்குஞ் சிந்தையார்.

பண்டைய அயன் தரும் - முதன் முதற்றோன்றிய பழமையான பிரமதேவன் பெற்றவர்களான பாலகில்லரும் (வாலகில்யர் என்னும்

மகரிஷிகளும்), முண்டரும் - தலைமயிரை மழித்தவர்களும், மோனரும்- மௌன விரதம் பூண்டவர்களும், முதலினோர்கள் - முதலாய் உள்ள, அ தண்டக வனத்து உறை - அந்தத் தண்டகாரணியத்தில் வாழ்ந்து வந்த, தவத்து உளோர்கள் எலாம் - தவநெறியில் உள்ள முனிவர்கள் யாவரும், இராமனை கண்டனர் - இராமபிரானைக் கண்டவர்களாய், களிக்கும் சிந்தையர் - மகிழ்ச்சி கொண்ட மனமுள்ளவர்கள் ஆயினர்.

பண்டைய என்பதை வாலகில்லர்க்குங் கூட்டி உரை கொள்ளலாம்; வாலகில்லர்: இவர்கள் அறுபதினாயிரவர் என்பர்; இவர்கள் பிரமதேவரின் உரோமங்களினின்றும் பிறந்த அவனுடைய மானச புத்திரர்கள்; பெருந் தபோதனர்கள்; இவர்கள் அனைவரும் கட்டை விரல் பிரமாணமுள்ள குறுகிய உடல்களையுடையவர்கள்; நாள்தோறும் சூரியனுடைய இரதத்தை வலம் வந்து கொண்டிருப்பவர்; இவர்களின் வரலாறுகளை ஸ்ரீமகாபாரதம் ஆதிபருவத்தில் காண்க. மோனர் - மௌன விரதமுடையவர்; மோனம்: மௌனம் என்பதின் போலி. களிக்குஞ் சிந்தையார் கண்டனர் எனவும் பொருண் முடிவு கொள்ளலாம்.

பி-ம். 1. பண்டமை யகத்தரும்; பண்டைபயரந்தரு; பண்டயன்; பயந்தருன்;
2. முதலினோர்கடாங். 3. தவத்துளோர்கடாஞ். (3)

121. கனைவரு கடுஞ்சினத் தரக்கர் காயவோர்
வினைபிறி தின்மையின் வெதும்பு கின்றனர்
அனைவரு கானகத் தமுத ளாவிய
புனைவர வுயிர்வரு முலவை போல்கின்றார்.

கனைவரு - கடுகிவரும், கடும் சினத்து - கொடிய கோபத்தையுடைய, அரக்கர் காய - இராக்கதர்கள் வருத்துவதால், ஓர் வினை பிறிது இன்மையின் - அவர்களைப் போக்க வல்ல செயல் தமக்கு வேறு இல்லாமையால், வெதும்புகின்றனர் - உள்ளமும் உடலும் வாடி வருந்துகின்ற அம்முனிவர்கள், (இராமபிரான் வரவால்), அனை வரு கானகத்து - நெருப்புப் பற்றிவரும் கொடிய வனத்தில், அமுது அளாவிய - அமுதத்தோடு கலந்த, புனை வர - நீர்ப்பெருக்கு எதிர் வருதலால், உயிர் வரும் - உயிர் மீண்டு வளர்ந்து ஓங்கும், உலவை போல்கின்றார் - உலர்ந்த மரங்களைப் போல்பவராயினர்.

கனை வரு கடுஞ் சினத்து, என இயைக்க. அனை - அனல் ; 78 ; புனை - புனல், 78 ; பெருங். 4. 7 : 75 : புனை ; ஆகுபெயராய் மழையையுங் குறிக்கும். இனி, கனைவரு கடுஞ்சினம் - நெருப்புப் பற்றி எரிவது போன்ற கொடிய கோபம் என்னலும் ஆம் ; கனை - கனல். அரக்கர்களுக்கு நெருப்பும், முனிவர்களுக்கு உலவை மரங் களும், இராமபிரானது வரவுக்கு, நீர்ப் பெருக்கின் (அல்லது மழை யின்) வரவும், அம்முனிவர்களின் மகிழ்ச்சிக்கு உயிர் வருதலும் உவமைகள் ஆயின. உலவை - வளாரிளம் கொம்பும் ஆம்.

பி-ம். 1. கனல்வரு கடுஞ்சினத்.
3. அனல் வருகானகத்.
4. புனல் வர : போனின்ருர். (4)

122. ஆய்வரும் பெருவலி யரக்கர் நாமமே
வாய்வெரீஇ யலமரு மறுக்க நீங்கினர்
தீவரு வனத்திடை விட்டுத் தீர்ந்ததோர்
தாய்வர ணேக்கிய கன்றின் றன்மையார்.

ஆய்வரும் - மேன்மேலாய் மிகுந்து வரும், பெரு வலி - பெரிய வலிமையையுடைய, அரக்கர் நாமமே - இராக்கதர்களுடைய பெயர் களையே, வாய் வெரீஇ - வாயாற் சொல்லவும் வெருண்டு, அலமரும் - வருந்தும், மறுக்கம் - மனக் குழப்பத்தை, நீங்கினர் - நீங்கினவர் களான அம்முனிவர்கள், தீ வரு வனத்து இடை விட்டு - நெருப்புப் பற்றிவரும் ஒரு காட்டினிடத்துத் தன்னைத் தனியே விட்டு, தீர்ந்தது - நீங்கியதாகிய, தாய் வரல் - தாய்ப் பசு திரும்பித் தன்னிடம் வருவதை, நோக்கிய - எதிர் நோக்கியிருந்த, கன்றின் தன்மையார் - இளங்கன்றின் நிலைமையையுடையவராயிருந்தனர்.

எரிவனம் - அரக்கர்களுக்கும், கன்று முனிவர்களுக்கும், தாய்ப் பசு இராமபிரானுக்கும் உவமைகள். அலமருதல் - திகைத்து வருந்துதல் ; அலமா, பகுதி. மறுக்கம் - தத்தளிப்பு. தாய் வர நோக்கிய கன்று ; அயோத். : மந்திரப் : 58 ; சுந்தர. 617 ; பெருங். 2-10 : 7 ; குறுந். 64 ; 1-3. தாய் கன்றை வனத்திடை விட்டுத் தீர்ந்தது என்றது முனிவரின் கதியற்ற நிலையைக் கருதி என்க.

பி-ம். 2. வாய் வெரியலமரு ; அலம் வருமறுக்கம்.
3. தீ வரு ; யிட்டுத் தீர்ந்ததோர். (5)

**123.** கரக்கருங் கடுந்தொழி லரக்கர் ¹காய்தலில்
²பொரற்கிட மின்மையிற் புழுங்கிச் சோருநர்
³அரக்கரென் கடலிடை யாழ்கின் றரொரு
மரக்கலம் பெற்றென மறுக்க நீக்கினர்.

கரக்க அரும் - மறைப்பது என்பதின்றிச் செய்யும், கடும் தொழில் - கொடுஞ் செயல்களையுடைய, அரக்கர் - இராக்கதர்கள், காய்தலில்-பகைத்து வருத்துவதால், பொரற்கு இடம் இன்மையின்- அவர்களோடு போராடுவதற்குத் தமக்கு இடம் இல்லாமையால், புழுங்கி சோருநர் - மனம் நொந்து சோர்வடைந்தவர்களும், அரக்கர் என் கடல் இடை ஆழ்கின்றார் - இராக்கதர்கள் என்னும் கடலிடை வீழ்ந்து அமிழ்கின்றவர்களுமான அம்முனிவர்கள், ஒரு மரக்கலம் பெற்றென - அங்ஙனம் ஆழாது கரை சேர்ந்துய்ய ஒரு மரக்கலத் தைப் பெற்றாற் போல, மறுக்கம் நீங்கினர் - (இராமபிரானைக் கண்டதும்) மனக்கலக்கம் நீங்கப் பெற்றனர்.

கரவுடன் கொடுந்தொழில் செய்வோர் அச்சமுடையவர்; அரக்கர் யாரிடமும் அஞ்சாராதலின், கரக்கருந் தொழிலினர் என்னப் பட்டனர்: அடக்கிக் கொள்ள முடியாத கொடுந்தொழில் எனவும் கொள்ளலாம். இனி, அரம் கருங் கடலிடை என்ற பாடத்தைக் கொண்டு, அரம் கரும் கடல் - பள்ளமாயும் கரு நிறத்தையுடையது மான கடல் எனவும் பொருள் கொள்வர். அரம் - பள்ளம். கடலிடை ஆழும் நிலையிலிருந்தோர்க்கு, ஒரு மரக்கலம் அங்கு வந்துதவியது போல, அரக்கரால் அலைப்புண்ட அம்முனிவர்க்கு இராமபிரான் ஓர் உதவி ஆயினன் என்பதாம். அரக்கர் கடல்; இராமபிரான் மரக் கலம். அரக்கர் கடல் கடக்கக் கப்பல்; 'அரக்கர் வேலைக்கோர் தோணி பெற்றனமென '(உயுத்த - முதற்போர்: 102). பொரற்கு இடம் இன் மையால்; போர் புரிவதற்குத் தம் தவ நிலை இடந்தராதாதலின், எனவும் கொள்ளலாம். பொரற்கு என்பதற்குப் பொருந்துதற்கு என்றும் பொருள் கூறுவர்.

பி - ம். 1. காய்தலால். 2. புரக்கிடமின்மையிற்; சோர்கின்றார்.
3. அரக்கருங் கடலிடை; ஆழ்கின்றார்க் கொரு.

இச்செய்யுள் அடியிற் காணுமாறு ஒரு பிரதியில் எதுகை திரிந்து காணப் பெறுகின்றது.

காக்கருங் கடுந்தொழி லரக்கர் காய்தலில்
போக்கிட மின்மையிற் புழுங்கிச் சோர்குநர்
ஆக்கருங் கடலிடை யாழ்கின் றரொரு
மாக்கலம் பெற்றென மறுக்கம் நீங்கினர். (6)

124. தெரிஞ்சுற நோக்கினர் செய்த செய்தவம்
அருஞ்சிறப் புதவநல் லறிவு கைதர
விரிஞ்சுறப் பற்றிய பிறவி வெந்துயர்ப்
பெருஞ்சிறை வீடுபெற் றனைய பெற்றியார்.

செய்த செய் தவம் - தாங்கள் அதுகாறும் செய்து வந்த மேலான தவம், அரும் சிறப்பு உதவ - பெரும் சிறப்பைத் தமக்கு அளிக்க, நல் அறிவு கைதர - தாம் அடைந்துள்ள நல்ல ஞானம் உதவி செய்ய, தெரிஞ்சு - இராமபிரான் பரம் பொருள் என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டு, உற நோக்கினர் - அவனை நன்றாய்ப் பார்த்தவர்களாய், விரிஞ்சு உற பற்றிய - விரிந்து தம்மை வலிதாய்ப் பற்றியிருந்த, வெம் பிறவி துயர் - கொடிய பிறவியாகிய துன்பத்தைத் தரும், பெரும் சிறை - பெரிய சிறையாகிய காவலில் நின்று, வீடு பெற்றனைய - விடுதலை அடைந்ததே போன்ற, பெற்றியார் - தன்மையுள்ளவர்களாயினர்.

தெரிஞ்சு, விரிஞ்சு, என்பன தெரிந்து, விரிந்து என்பனவற்றின் போலிகள். செய்தவம் சிறந்த தவமும் ஆம். கைதரல் - உற்றுழியுதவுதல்; ஒப்பு; அயோத். மந்திரப்: *15*. கைதரல், மிகுதலும் ஆம்; உயுத்த. மீட்சி: *268*. வீடு: முதனிலை திரிந்த தொழிற்பெயர்; வீடு - விடுதலை; *130*; சுந்தர. *612*, *637*, *1164*.

பி-ம். தெரிந்துற. 2. சிறப்புதவுநல். 3. விரிந்துற. (7)

125. வேண்டின வேண்டினர்க் களிக்கு மெய்த்தவம்
பூண்டுள ராயினும் பொறையி னாற்றலால்
மூண்டெழு வெகுளியை முதலி னீக்கினர்
ஆண்டுறை யரக்கரா லலைப்புண் டாரரோ.

வேண்டினவர்க்கு - விரும்பிச் செய்தவர்க்கு, வேண்டின அளிக்கும் - அவர்கள் விரும்பிய பலன்களை விரும்பிய வாறே தரும், மெய் தவம் பூண்டுளர் ஆயினும் - உண்மையான நற்றவம் மேற்கொண்டுள்ளார் ஆனாலும், பொறையின் ஆற்றலால் - பொறுமை என்னும் (தம்) வலிமையால், மூண்டு எழு வெகுளியை - மேற்கிளம்பி எழும் கோபத்தை, முதலின் நீக்கினர் - வேரோடு அழித்த அம்முனிவர்கள், ஆண்டு உறைந்து - அவ்வனத்தில் தங்கியிருந்து, அரக்கரால் - இராக்கதர்களால், அலைப்பு உண்டார் - வருத்த முற்றனர். அரோ: அசை.

தம் தவ வலிமையால் அரக்கர்களினின்று தாம் விடுதலை அடையக் கூடுமாயினும், தம் தவநிலைக்கு வெகுளல் கூடாதென்று பொறுத்திருந்தனர் என்பது கூறப்பட்டது. முதலின் நீங்கினர் - தவத்தின் ஆரம்பத்திலேயே விட்டு நீங்கப் பெற்றவர் என்னலும் அமையும்; இதனால், தவம் எய்துவதற்கு முதலில் சினம் நீங்க வேண்டும்; பெர்றுமை எய்த வேண்டும் என்பன பெறப்பட்டன. 'தன்னைத் தான் காக்கிற் சினங்காக்க' (குறள் : 305). தவத்தின் சிறப்பு : குறள், 265 ; சூளா. சுயம் : 113 ; பெருங். 2. 8 ; 126. 7 ; சீவக. 2986.

பி - ம். 1. வேண்டிய ; வேண்டு நர்க்கருளும்.
3. முதலு நீங்கினர் ; முதலினீங்கினர்.
4. ஆண்டுறைந்தரக்கரால் ; அலைப்புண்டார்களே. (8)

126. எழுந்தன ரெய்தின ரிருண்ட மேகத்தின்
கொழுந்தென நின்றவக் குரிசில் வீரனைப்
பொழிந்தெழு காதலிற் பொருந்தி னாரவன்
தொழுந்தொறுந் தொழுந்தொறு மாசி சொல்லுவார்.

எழுந்தனர் எய்தினர் - (அம் முனிவர்கள இராமபிரானது வரவு கண்டு) எழுந்து அவன் அருகு அணுகி, இருண்ட மேகத்தின் கொழுந்து என நின்ற - கரிய மேகத்தின் கொழுந்து போலத் தம் முன் நின்ற, அ குரிசில் வீரனை - அந்த ராஜ குமாரனான ரகுவீரனை, பொழிந்து எழு காதலில் - சொரிந்து மேலும் ஆகி மிகுதியாய் எழுகின்ற அன்போடு, பொருந்தினர் - அடைந்தனர்; அவன் தொழும் தொறும் தொழும் தொறும் - அந்த இராமபிரான் தம் மைத் தனித்தனியே தொழுது வணங்கும் போதெல்லாம், ஆசி சொல்லுவார் - ஆசிர்வாத வசனங்களைச் சொல்லுவராயினர்.

எழுந்தன ரெய்தினர் - எழுந்தது தெரிந்ததன்றி நடந்து சென்றது தெரியாத விரைவில் அடைந்தனர் என்பதாம். 'எடுத்தது கண்டன ரிற்றது கேட்டார்' (பால. கார்முகப் : 34) என்றது போல, விரைவுக் குறிப்பையுணர்த்தியது. இராமபிரானுக்கு மேகத்தின் கொழுந்து; 'கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியை' (பால. திருவவதாரா : 104). பொழிந்து எழுகாதலில் பொருந்தினர்-தங்கள் மீது, பொழிந்து மேலும் வளர்கின்றதான இராமபிரானுடைய அன்பின் வசமானர் என்றும் பொருள் கொள்ளலாம். 'தொழுந் தொறும், தொழுந்தொறும்'; அடுக்கு, மிகுதிப் பொருளை யுணர்த்துவது. குரிசில் - பெருமைக்குரியோன் எனலும் ஆம்.

பி - ம். 2. கொழுந்தன. 4. சொல்லுவான் : சொல்லினர். (9)

127. இனியதோர் சாலைகொண் டேகி யிவ்வயின்
நனியுறை யென்றவற் கமைய நல்கித்தாம்
தனியிடஞ் சார்ந்தனர் தங்கி மற்றைநாள்
அனைவரு மெய்தின ரல்லல் சொல்லுவான்.

(பின்பு), அனைவரும் - அம்முனிவர்கள் எல்லாரும், இனிய ஓர் சாலை கொண்டு ஏகி - இராமபிரான் முதலியோர் வசிப்பதற்கு இனிய தான ஒரு பன்னசாலைக்கு அவர்களை அழைத்துக் கொண்டு சென்று, 'இவயின் - இவ்விடத்தில், நனி உறை என்று - நன்றாகத் தங்கி யிருப்பீராக' என்று, சொல்லி அவற்கு அமைய நல்கி - அந்த இராமபிரானுக்கு ஏற்றவற்றைப் போதுமானபடி அளித்து, தாம் தனி இடம் சார்ந்தனர் தங்கி - தாம் தத்தம் தனியிடங்களை அடைந்து தங்கியிருந்து, அல்லல் சொல்லுவான் எய்தினர் - (பின்) அரக்கர்களால் தமக்குண்டாகும் துன்பங்களை எடுத்துச் சொல்லும் பொருட்டு (அவ்விராமபிரானிடம் மறுநாள்) வந்தடைந்தனர்.

அமைய நல்கி, என்பது அமைவ நல்கி என்றிருப்பின் அப் பாடம் சிறக்கும்; அவர்க்கு அமையம் நல்கி, என்றபாடம் கொண்டு அவர்களுக்கு (வந்த சிரமம் தீர) ஆறுதல் அளித்து என்றும் பொருள்கொள்ளலாம்; அமையம் - ஆறுதல்; குறள். 1178.

பி - ம். 1. சாரல்கொண்டு; கொண்டெய்தி.
2. யென்றவர்க் கமைவு நல்கி; கிடமு நல்கி.
3. தனியிட மெய்தினர் தங்குமாதவர்; தனித்தனிச் சாலையிற்றங்கி.
4. எய்தினு; ரல்லல் கூறவே; ரல்லல் சொல்லுவார். (10)

முனிவர் இராமபிரானை அபயம் வேண்டல் 128—33

128. எய்திய முனிவரை யிறைஞ்சி யேத்துவந்
தையனு மிருந்தன னருளென் னென்றலும்
வையகங் காவலன் மைந்த வந்ததோர்
வெய்யவெங் கொடுந்தொழில் விளைவு கேளெனு,

ஐயனும் - இராமபிரானும், எய்திய முனிவரை - அவ்வாறு தன்னிடம் வந்த அம்முனிவர்களை, இறைஞ்சி - வணங்கி, ஏத்து உவந்து - அவர்களை அன்போடு துதித்து, இருந்தனன் - அங்கு இருந்தவனாகி, 'அருள் என் என்றலும் - இப்பொழுது நீவிர் எனக்கு என்ன கட்டளையிடுகின்றீர்கள்' என்று கேட்டுக்கொண் டதும், (அம் முனிவர்கள்), 'வையகம் காவலன் மைந்த - உலகங்க

ளனைத்தையும் காப்பதில் வல்லவனான தசரத சக்கரவர்த்தியின் குமாரனே! வந்தது - எங்களுக்கு நேரிட்டுள்ளதான, ஓர் வெய்ய வெம் கொடும் தொழில் - ஒப்பற்ற மிகக் கொடியதான செயல்களின், விளைவு - மிகுதியை, கேள் - கேட்டருள்வாயாக,' என - என்று,

ஏத்துவந்து: என்பதற்கு அம் முனிவர்கள் செய்த துதிகளுக்கு மகிழ்ந்து எனப் பொருள் கொள்வாருமுளர். வையகங் காவலன் மைந்த, என்றதால் தந்தைக்கு உரிய காவற்கடமை உனக்கும் உண்டு என்றதைக் குறிப்பிட்டபடியுமாம். 133 ஆம் செய்யுளையும் நோக்குக. தசரதனை வையகங்காவலன் என்றது; 'தரையளித்த தனி நேமித் தயரதன்,' (354); 'வையக முழுவதும் வறிஞ னோம்பு மோர் செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றான்' (பால. அரசியற்; 12.) என்றவற்றாலும், பிறவற்றாலும் அறியலாம். வெய்ய வெம் கொடும்; ஒரு பொருட் பன்மொழி; இது கொடுமையின் மிகுதியைப் புலப்படுத்த வந்தது. இதுமுதல் ஆறுகவிகள் ஒரு தொடர்.

பி - ம். 1. ஏத்தவங்; ஏத்திய; முனிவர்களெவரு மேத்திட.

2, யங்களவளாயபின்; யருளினென்றலும்; யருளுமென்றலும்.

3. காவலன் மதலை; வையகம் பரித்திடும் வரத கேளென.

4. கடுந்தொழில் விளைவு; கருந்துயர்விளைவு; கடுந்துயர் விளம்பக் கேளென; கொடுந்துயர் விளம்பன் மேயினார். (11)

129. இரக்கமென் றொருபொரு ளிலாத நெஞ்சினர்
அரக்கரென் றுளர்சில ரறத்தி னீங்கினார்
நெருக்கவும் யாம்படர் நெறிய லாநெறி
துரக்கவு மருந்தவத் துறையும் நீங்கினோம்;

'இரக்கம் என்று ஒரு பொருள் - இரக்கம் என்று சொல்லப் பெறும் ஒப்பற்ற ஒரு குணம், இலாத - சிறிதும் இல்லாத, நெஞ்சினர் - மனமுடையவர்களும், அறத்தின் நீங்கினார் - தரும மார்க்கத்தினின்றும் நீங்கினவர்களும் ஆன, அரக்கர் என்று உளர் சிலர் - இராக்கதர்கள் என்று உள்ள சிலர், நெருக்கவும் - எங்களை வருத்தவும், யாம் - (அதனால்) யாங்கள், படர் நெறி - ஒழுகும் மார்க்கத்திற்கு, அலா நெறி - அல்லாதவையான தீய வழியில், துரக்கவும் (அவர்கள் எங்களை) நடக்கும் வண்ணம் செலுத்தவும், அரும் தவ துறையும் நீங்கினோம் - அரிய தவமார்க்கங்களினின்றும் விலகினவர்கள் ஆனோம்.

ஒரு பெர்ருள் - ஒப்பற்ற செல்வம் என்னலும் ஆம். இரக்கம் என்ற குணத்தை ஒரு பொருளாகக் கூறியது, வைசேடிக மதம் பற்றி ; 'அருட் செல்வம் செல்வத்துட் செல்வம்' (குறள் : 241) என்றது போல. மேலும், 'சினத்தைப்பொருளென்று கொண்டவன் கேடு,' என்ற குறளுக்குப் பரிமேலழகர் எழுதியுள்ள உரையையும் நோக்குக. உளர் சிலர் - அத்தண்டக வனத்தில் இருந்த கரன் முதலியவர்களைக் குறித்தது.

பி - ம். 1. நெஞ்சினர்.
2. அறத்துணிங்கினர் ; அறத்து நீங்கினர் ; அறத்தை நீங்கினர்.
3. நெருக்கியெம்மறை நெறி முதலயாவையும் ; நெறியிலாநெறி ;
4. துரக்க நல்லருந்தவத் ; துறையுணிங்கினேம் ; நீங்கினேம். (12)

130. வல்லியம் பலதிரி வனத்து மானென
எல்லியும் பகலுநொந் திரங்கி யாற்றலெம்
சொல்லிய வறநெறித் துறையி னீங்கினேம்
வில்லியன் மொய்ம்பினய் வீடு காண்டுமோ ;

'வில் இயல் மொய்ம்பினய் - தனுர் வித்தையில் வலிமையுள்ளோனே ! வல்லியம் பல திரி வனத்து - கொடிய புலிகள் பல சஞ்சாரஞ் செய்யும் வனத்திலேயுள்ள, மான் என - மான்களைப் போல, எல்லியும் பகலும் - இரவும் பகலும், நொந்து - மனம் நொந்து, இரங்கி - வருந்தி, ஆற்றலெம் - (அவ்வரக்கர் புரியும் கொடுமைகளைப்) பொறுக்க முடியாதவர்கள் ஆகி, சொல்லிய அறநெறி துறையின் நீங்கினேம் - நூல்களில் சொல்லப்பட்ட தரும மார்க்கத்தினின்றும் விலகினவர்கள் ஆனேம் ; வீடு காண்டுமோ - இனி யாங்கள் இத்துன்பத்தினின்று விடுதலை காண்போமோ ?

வில்லியன் மொய்ம்பினய், என்ற விளி, 'நீ விற்றொழிலில் வல்லவனாதலால், அரக்கர்களை அழித்து எங்களைத் துயரினின்று விடுவிக்கும் ஆற்றலுடையாய்' என்றதைக் குறிப்பிட்டபடியும் ஆம். எல்லி - இரவு ; 'எல்லியும் பகலும் போலத் தழுவினரெழுவிற்றோளார்' (உயுத்த. வீடணனடைக் : 123). அறநெறித்துறையின நீங்கினேம் ; (ஆதலின்), வீடு காண்டுமோ ; வீடு - மோட்சமும் ஆம். முன் பாடலில், 'தவத்துறை நீங்கினேம்' என்று கூறி, இப் பாடலில், 'அறநெறித்துறையின் நீங்கினேம்' என்றது நோக்கத்

தக்கது. இங்கு முனிவர்கள் கூறியவை பின் பிராட்டியின் மொழியாக வந்துள்ளமை காண்க; சுந்தர. 462.

பி - ம். 1. வனத்துண்மானென.
2. திரங்க வல்லது; திரங்கியல்லதியாம்.
3. நீங்கினம்; துறையு நீங்கினோம்; துறையு னீங்கினோம்.
4. காண்குமோ; காண்பமோ. (13)

131. மாதவத் தொழுகலே மறைகள் யாவையும்
ஓதலெ மோதுவார்க் குதவ லாற்றலெம்
மூதெரி வளர்க்கலெ முறையி னீங்கினேம்
ஆதலி லந்தண ரேயு மாகிலேம்;

'மா தவத்து ஒழுகலெம் - மாட்சிமை பொருந்திய தவநெறியில் நடக்கின்றோம் அல்லோம்; மறைகள் யாவையும் ஓதலெம் - வேதங்கள் எல்லாவற்றையும் அத்தியயனம் செய்கின்றோம் அல்லோம்; ஓதுவார்க்கு உதவல் ஆற்றலெம் - ஓதுகின்ற மாணவர்களுக்கு ஓதுவித்தல் என்னும் உதவியாகிய கடமையைச் செய்கின்றோம் அல்லோம்; மூது எரி வளர்க்கிலெம் - பழமையான வைதிக அக்கினியை வளர்க்கின்றோம் அல்லோம்; முறையின் நீங்கினேம் - இத்தகைய எங்களுக்கு உரிய ஒழுக்கங்களினின்றும் விலகினோம்; ஆதலின் - ஆகையால், அந்தணர் ஏயும் - பிராமணர் என்பது கூட, ஆகிலேம்- ஆனவர் ஆகோம்.

மறைகள் யாவையும்; வேதங்களையும், மற்ற வேதாங்கங்கள், சாத்திரங்கள் ஆகியவற்றையும் எனக் கோடலும் ஒன்றும். ஓதலெம், ஓதுவார்க் குதவலெம்; அந்தணர்க்குரிய ஆறு ஒழுக்கங்களுள் ஓதல், ஓதுவித்தல் இரண்டைக் கூறியது; இவை யிரண்டும் மற்றவற்றுள் சிறப்புற்றமையால்; மற்ற வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பவை அருத்தாபத்தியால் கிடைக்க வைத்ததும் ஆம். மூதெரி: பிரமசரியந் தொடங்கி வளர்த்து வரப்பாலதான வைதீக அக்கினி; யாகத்தீயும் இதனுள் அடங்கும். முறை - சதாசாரமும் ஆம். ஓதலும், ஓதுவார்க்குதவலும், மூதெரி வளர்த்தலும் அந்தணர்க்குரிய பிறப்பொழுக்கங்கள் என்பதும் விளங்கவைத்தமை உணரப்பாலதாம். அந்தணர் ஒழுக்கம்; குறள், 30; 134.

பி - ம். 1. மாதருக் கொழிக்கிலம்; தொழுகலேம்.
2. ஓதினர்க்குதவ; குதவுகிற்றலெம்.
3. மூதேசு வளர்க்கிலம்; முறைகள்நீங்கினோம்; முறையி னீங்கினம்.
4. நல்லராயினோம். (14)

இதன்பின் ஒரு சுவடியிலும், ஓர் அச்சுப்பதிப்பிலும் அடியிற் கண்ட பாடல்கள் அதிகமாக உள்ளன.

1. அருந்திற லுலகொரு மூன்று மாணையிற்
புரந்திடு தசமுகத் தொருவன் பொன்றிலாப்
பெருந்தவஞ் செய்தவன் பெற்ற மாட்சியால்
வருந்தினேம் நெடும்பகல் வரத யாமெலாம்.

பி - ம். 2. தரக்கன் பொன்றிலாப்.

2. தேவர்க டமைத்தினந் துரந்து மற்றவர்
தேவியர் தமைச்சிறைப் படுத்தித் திக்கெலாங்
கூவிடத் தடிந்தவர் செல்வங் கொண்டபோர்
மாவலித் தசமுகன் வலத்துக் கியார்வலார்.

3. அவன்வலி படைத்துமற் றரக்கர் யாவரும்
சிவன்முதன் மூவரைத் தேவர் சித்தரைப்
புவனியின் முனிவரை மற்றும் புங்கவர்
எவரையுந் துரந்தன ரிறைவ வின்னுமே.

4. ஆயிர கோடியென் றுரைக்கு மண்டமேன்
மேயபோ ரரக்கரே மேவ லல்லதைத்
தூயசீ ரமரரென் றுரைக்குந் தொல்கணத்
தாயவ ரெங்ஙனென் றறிந்தி லோமைய.

5. வெள்ளியங் கிரியிடை விமலன் மேலைநாட்
கள்ளிய வரக்கரைக் கடிந்தி லேனென
ஒள்ளிய வரமவர்க் குதவி னுன்கடற்
பள்ளிகொள் பவன்பொரு தினைத்த பான்மையான்.

பி - ம். 2. கடிகிலேனென,

6. நான்முக னவர்க்குநன் மொழிகள் பேசியே
தானுறு செய்வினைத் தலையி னிற்கின்றான்
வானில்வெஞ் சுடர்முதல் வயங்கு கோளெலாம்
மேன்மையி லருஞ்சிறைப் பட்டு மீண்டுளார்.

132. இந்திர னெனிலவ னரக்க ரேவின
சிந்தையிற் சென்னியிற் கொள்ளுஞ் செய்கையான்
எந்தைமற் றியாருள ரிடுக்க ணீக்குவார்
வந்தனை யாஞ்செய்த தவத்தின் மாட்சியால்.

'எந்தை - எங்கள் தலைவனான இராமபிரானே! இந்திரன் எனில் - தேவேந்திரனிடம் போய் முறையிட்டுக் குறைதீர்க்கலாம்

என்றால், அவன் - அந்த இந்திரன், அரக்கர் ஏவின - அரக்கர்கள் கட்டளையிட்ட பணிகளை, சிந்தையில் - மனத்திலும், சென்னியில் - சிரத்திலும், கொள்ளும் செய்கையான் - ஏற்றுக் கொண்டு நடக்கும் செயலையுடையவனாய் இருக்கின்றான்; இடுக்கண் நீக்குவார் - எங்கள் துன்பங்களை அகற்ற வல்லவர், மற்று யார் உளர் - வேறு யார் இருக்கின்றனர்? (வேறு ஒருவரும் இல்லை என்றபடி); யாம் செய்த தவத்தின் மாட்சியால் - யாங்கள் செய்த தவத்தின் சிறப்பால், வந்தனை - நீ இங்கு எங்களைக் காக்க வந்தருளினாய்.

எந்தை என்றது, மரபு வழுவமைதியும் ஆம். இதனால் முனிவர்கள் தங்களுக்கு வேறு புகலிடமில்லை யென்ற உறுதியான நம்பிக்கை கொண்டமை அறிவித்ததாகும். இந்திரனைக் குறித்தது, அவன் தேவர் தலைவன் என்ற சிறப்புப்பற்றி; அவ்விந்திரனும் அரக்கர்க் காட் செய்யும் நிலையில் இருப்பதால், 'இனி உன்னையின்றி யெங்கட்குக் கதியில்லை' என்று இராமபிரானிடம் துணிந்து கூறினர். சென்னியிற் கொள்ளுதல் - பயபக்தியோடு தலைமேற் றாங்கிச் செல்வதுபோல் ஏற்றுச் செய்தல். சிந்தையிற் சென்னியில்; ஒப்பு. 'சிந்தையிலுஞ் சென்னியிலும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்' (அயோத். குகப் ; 32.)

பி - ம். 1. இந்திரன் முதலினோ; ரேயினை.
2. செய்கையார்; செய்கையன்.
3. னீக்குவான். 4. யாஞ்செயத்; யாஞ்செயுந்; மாட்சியான். (15)

133. உருளுடை நேமியா லுலகை யோம்பிய
பொருளுடை மன்னவன் புதல்வ போக்கிலா
இருளுடை வைகலே மிரவி தோன்றினாய்
அருளுடை வீரநின் னபயம் யாமென்றார்.

'உருள் உடை நேமியால் - எங்கும் சுற்றிச் செல்லுதலையுடைய ஆக்ஞாசக்கரத்தால், உலகை ஓம்பிய - உலகம் முழுவதும் பரிபாலித்த, பொருள் உடை மன்னவன் - சிறந்த செயலையுடைய அரசனான தசரதனுடைய, புதல்வ - புத்திரனான இராமபிரானே! அருள் உடை வீர - கருணையுடைய ரகுவீரனே! போக்கு இலா இருள் உடை - நீக்குதல் இல்லாத துன்பமாகிய இருளைக்கொண்ட, வைகலேம் - நாட்களை உடையவர்களாயிருக்கிறோம்; இரவி தோன்றினாய் - சூரியன் போல நீ வந்து காட்சி தந்தருளினாய்; நின் அபயம் யாம் - நாங்கள் உனது அடைக்கலம் ஆனோம்', என்றார் - என்று அம் முனிவர்கள் கூறினர்.

அரசன் ஆணையைச் சக்கரம் என்றல் கவிமரபு. உலகை ஓம்பிய மன்னவன் புதல்வ, என்றமையால், தந்தைக்கு உரிய பொறுப்பு தனயனுக்கும் உண்டு என்பதை உணர்த்தி நின்றது. பொருள்: செயல், மெய்மை, உறுதிப் பொருள், புகழ் முதலிய பல பொருள்களும் கூறுவர். போக்கிலா இருள் - விடியாத பேரிருள்; அரக்கரை இருளாகவும் இராமபிரானை அவ்விருள் போக்கும் இரவியாகவும் கூறப்பெற்றது; ஒப்பு. *307.* 'அருளுடை வீர' என்றமையால், சிஷ்ட பரிபாலனம், துஷ்ட நிக்ரகம் ஆகிய அருட் செயல்களை மேற்கொண்ட எம்பெருமான் இராமபிரானாக அவதரித்துள்ளான் என்பதை உணர்ந்து கூறியது என்னலாம். அபயம் - பயமற்றது. தண்டகாரணியத்து முனிவர்கள், இராமபிரானிடம் அரக்கரால் தாம் படுந்துயர் கூறி, அருள் புரிய வேண்டி அபயம் புகுந்த இச் செய்தி, சுந்தர; *462.* இல் பிராட்டி முகத்தாலும், இந்நூல் 354 ஆம் செய்யுளாலும், உயுத்த. வீடணனடைக்கலப். *118* இல் இராமபிரான் வாக்காலும், உறுதிப் படுத்தியுள்ளமை நோக்கத் தக்கதாம். முனிவர்கள் முறையிட்டதும் இராமபிரரன் அவர்களுக்கு அபயமளித்ததும் சரபங்கராச்சிரமத்திலேயே நடந்ததாக வான்மீகம் கூறும்.

பி - ம். 1. நேமிகொண்டுயிர்கள்: னுயிர்களோம்பிய.
3. இருளிடை வைகினே; தோன்றினே.
4. அருளுடை யமலநின். *(16)*

அவன் முனிவர்களுக்கு அபயம் அளித்தல் 134—39

**134.** புகல்பு குந்திலரேற் புறத்தண் டத்தின்
அகல்வ ரேனுமென் னம்பொடும் வீழ்வரால்
தகவி றுன்பந் தவிருதிர் நீரெனப்
பகல வன்குல மைந்தன் பணிக்கின்றான்.

பகலவன் குல மைந்தன் - சூரியன் குலத்துதித்த மைந்தனான இராமபிரான், (அம் முனிவர்களை நோக்கி), 'புகல் புகுந்திலரேல் - அவ்வரக்கர்கள் (இனித் தீமை விளைப்பதில்லையென்று உறுதி கூறி மன்னிப்புக்கேட்டு என்னிடம்) அடைக்கலம் அடையாவிட்டால், புறத்து அண்டத்து அகல்வரேனும் - அவர்கள் இவ்வண்டத்திற்கு அப்பால் உள்ள புற அண்டத்தில் உள்ள உலகங்களில் அகன்று சென்றாரென்றாலும், என் அம்பொடும் வீழ்வர் ஆல் - யான் ஏவும் என் அம்பு தைக்கப்பெற்று அதனோடும் கீழே வந்து வீழ்ந்திறப்பார்; (ஆதலின்), நீர்-நீவிர், தகவு இல் துன்பம் - உங்களுக்குத் தகுதியற்ற

இக் கொடிய துன்பத்தை, தவிருதிர் - போக்குவீராக,' என - என்று கூறி, பணிக்கின்றான் - பின்வருமாறு மேலும் உறுதி கூறுவானாயினன்.

பகலவன் - சூரியன்; பகலைச் செய்கிறவன்; தினகரன் என்ற வடசொற் பொருளை மேற்கொண்டது. என் அம்பொடும் வீழ்வர்: என் அம்பு அவ்வண்டகோளகைக்கப்புறத்ததான புற அண்டங்களிலும் தேடிச் சென்று பாய்ந்து அவர்களைக் கொன்று வீழ்த்தும் என்றபடி; என் அம்பு அவர்களை உயிர் கவர்ந்து வீழ்த்தினாலன்றித் தனியே வீழாது என்னலும் ஒன்றும். தகவில் துன்பம் - நல்லோர்களாகிய உங்கட்குத் தக்கதன்றாகிய துன்பம். பணித்தல் - உறுதி கூறுதல்; மணி: 20 : 10. இது முதல் 6 செய்யுட்கள் இராமபிரானது அபயமளிக்கும் அருந்திறலுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

பி - ம். 1. புகல் புரிந்திலரேற்; பிழைத்தண்டத்தின்; புகலும் வஞ்சகர்கள் போற்றும் பல்லண்டத்தின்.
2. அம்போடுழல்வரால். 3. தவிர்திர் நீரெனப்.
4. மைந்தன் பகர்கின்றான்; பகருவான். (17)

135. வேந்தன் வீயவும் யாய்துயர் மேவவும்
ஏந்த லெம்பி வருந்தவு மென்னகர்
மாந்தர் வன்றுயர் கூரவும் யான்வனம்
போந்த தென்னுடைப் புண்ணியத் தாலென்றான்.

'வேந்தன் வீயவும் - சக்கரவர்த்தியாகிய என் தந்தை இறக்கவும், யாய் துயர் மேவவும் - என்னைப் பெற்ற தாயாகிய கோசலாதேவி துன்பம் அடையவும், ஏந்தல் எம்பி வருந்தவும் - பெருமைக் குணங்கள் பொருந்திய என் தம்பி பரதன் வருத்தமுறவும், என் நகர் மாந்தர் வன் துயர் கூரவும் - என் அயோத்தி நகர மாந்தர்கள் கொடிய துயரைப் பெரிதும் அடையவும், யான் வனம் போந்தது - நான் காட்டில் வசிக்க வந்த இச் செயல், என்னுடை புண்ணியத்தால் - யான் செய்த புண்ணியத்தின் பயனால்;' என்றான் - என்று இராமபிரான் அம்முனிவர்களுக்குப் பொருந்துமாறு விரித்துக் கூறினான்.

'என் தந்தை முதலியோர் வருந்த இப்படி வனவாசம் செய்ய வருவதாயிற்றே என்று இதுகாறும் என் மனம் வருந்தியது; இன்று, இவ்வன வாசம் உங்கள் போன்ற பரமசாதுக்களுக்கு உதவி

யளிக்கும் பணியில் ஈடுபட இடமாயிற்று ; ஆதலால், இஃது, என் நல்வினை என்னை இங்கு வரச்செய்து எனக்கு நற்பேறு அளித்தது' என்று இராமபிரான் உணர்ந்து கூறிய சிறப்பு வியக்கத்தக்கது.

யாய் - தாய் ; இது ஆய் என்பதின் போலி. ஏந்தல் - உயர் குணங்களை ஏந்தியவன் ; உயர்ச்சியும் ஆம் ; பரதன் பெருமை : பால. குலமுறை. 21 ; அயோத். குகப் ; 35 ; உயுத்த. மீட்சி 232. ஒப்பு. அயோத். குகப். 67.

பி - ம். 1. தாய் துயர் மேவவும் ; யாய் வரமேவவும் ; யாம் துயர் மேவவும் ; யாய் துயரெய்தவும் ; ஆய்வரம் வேண்டவும்.

3. வான்றுயர் கூரவும். 4. புண்ணியர் தானென்றான். (18)

136. அறந்த வாநெறி யந்தணர் தன்மையை
மறந்த புல்லர் வலிதொலை யேனெனில்
இறந்து போகினு நன்றிது வல்லது
பிறந்தி யான்பெறும் பேறென்பதி யாவதோ.

'அறம் தவா நெறி - தருமத்தினின்றும் நீங்காத நன்னெறியை மேற்கொண்டுள்ள, அந்தணர் தன்மையை - முனிவர்களாகிய உங்கள் பெருமையை, மறந்த - மறந்து உங்களுக்குக் கேடு செய்கின்ற, புல்லர் - அற்பர்களாகிய அரக்கர், வலி தொலையேன் எனில் - வலியை அழிக்காமற் போவேனெனில், இறந்து போகினும் - அவ்வரக்கர்களாற் போரில் இறக்கப் பெற்றாலும், நன்றிது - அது எனக்கு நலனளிப்பதாகும் ; அல்லது - இந்த நற்காரியத்திற்குப் பயன்படுதல் அல்லாமல், பிறந்து யான் பெறும் பேறு - பிறந்ததனால் யான் அடையும் பாக்கியம், யாவதோ - வேறு யாதையுள்ளதாகும்? (இல்லை என்றபடி).

தவா - கெடாத என்னலும் ஒன்றும். நன்றிது - நல்லது ; இது, அசைநிலை ; (அயோத். நகர் நீங்கு ; 117 ; சுந்தர. 365). யாவதோ? எதிர்மறை வினா. இச்செய்யுள், இராமபிரான் துஷ்ட நிக்கிரகம் சிஷ்ட பரிபாலனம் புரியவே அவதரித்த உண்மையைக் குறிப்பால் உணர்த்தியதும் ஆம்.

பி - ம். 1. அறந்த ருஞ்சுர ரந்தணர் தன்மையை.

3. இறந்தபோதிலும் ; நன்றதுவல்லது ; வல்லதேல் ; நன்றிதல்லது. (19)

137. நிவந்த வேதியர் நீயிருந் தீயவர்
கவந்த பந்தக் களிநடங் கண்டிட
அமைந்த வில்லு மருங்கணைத் தூணியும்
சுமந்த தோளும் பொறைத்துயர் தீருமால்.

'நிவந்த - (குணங்களால்) உயர்ந்த, வேதியர் நீயிரும் - வேத முணர்ந்த அந்தணர்களாகிய நீங்கள் எல்லோரும், தீயவர் - கொடியோர்களான அவ்வரக்கர்களுடைய, கபந்த பந்தம் - தலையற்ற குறையுடல்களின் தொகுதி, களி நடம் கண்டிட - களித்தாடும் நடனத்தைப் பார்த்து மகிழ, அமைந்த வில்லும் என்னிடம் செயலின்றி இருந்ததான என் வில்லையும், அரும் கணை தூணியும் - அரிய அம்புகள் அமைந்த அம்புப் புட்டிலும், சுமந்த - இதுகாறும் தாங்கியிருந்த, தோளும் - என் தோள்களும், பொறை துயர் தீரும் - சுமப்பதாகிய துன்பத்தைப் போக்குவதாகும்.

களி நடம் - கண்டோர்க்குக் களிப்பைத் தரும் நடனமும் ஆம். கவந்தபந்தம்; 448. கவந்தமாடுதல்; 448; 487-522; சுந்தர. 976. 977; சீவக. 2310; கலிங்கத்துப்: 419. ஆயிரம் போர்வீரர் மடிந்த களத்தில் ஒரு கவந்தம் ஆடும் என்பர்; இங்குக் கவந்தபந்தம் என்றமையால், 'பல கபந்தக் கூட்டங்கள் ஆடுமாறு, அரக்கர்களைக் கொல்வேன்' என்று இராமபிரான் உறுதி கூறினன் என்க. இதன் விளைவு, கரதூடணப் போரிலும், பின் இராம ராவண யுத்தத்திலும் நிகழ்ந்தமை காண்க. பொறைத் துயர் - போரின்றி வீணே தாங்குவதால் உண்டாகும் துயரும் ஆம். ஒப்பு: 990; அயோத். நகர் நீங்கு: 139; சூளா. 1192. இச்செய்யுளில் எதுகையில் வகரமகரங்கள் இனம்பற்றி வந்துள்ளன; 'சேவலங் கொடியோன் காப்ப, ஏம வைக லெய்தின்று லுலகே' என்பது போல; (குறுந். கடவுள் வாழ்த்து). இங்கு இராமபிரான் கூறியதைப் பிராட்டிக்கு நினைவூட்டுவது போல அநுமன் பின் கூறியதைச் சுந்தர. 650 இல் காண்க.

பி-ம். 1. நிவந்த தேவர்க ளீண்டிருந் தீயவர்; நீரிருந்தீயவர்; நீவிருந் தீயவர்; நீவிருந்தெவ்வர்தம்.

2. காண்டிரேல்; கண்டிரேல்.

4. சுமந்ததோளெனுஞ் சொல்லுஞ் சுமக்குமால். (20)

138. ஆவுக் காயினு மந்தணர்க் காயினும்
யாவர்க் கேனு மெளியவர்க் காயினும்
சாவப் பெற்றவ ரேதகை வானுறை
தேவர்க் குந்தொழுந் தேவர்க ளாகுவார்.

'ஆவுக்கு ஆயினும் - பசுக்களைக் காப்பாற்றும் பொருட்டாயினும், அந்தணர்க்கு ஆயினும் - அந்தணர்களைக் காப்பாற்றும் பொருட்டாயினும், எளியவர் யாவர்க்கேனும் ஆயினும் - வலிமையிற் குறைந்தவர்களில் எவர் பொருட்டாயினும், சாவப் பெற்றவரே - உதவிசெய்து அதன் காரணமாக இறக்கப் பெற்றவர்களே, தகை வான் உறை - பெருமை பொருந்திய சுவர்க்கத்தில் வாழும், தேவர்க்கும் - தேவர்களுக்கும், தொழும் - தொழுது வணங்கக்கூடிய, தேவர்கள் ஆகுவார் - தேவர்களாக ஆவர்.

ஆ - பசு: இஃது எல்லாப் பிராணிகளிலும் புனிதமும், பயன் தருவதும் ஆதலால், முன்வைத்துக் கூறப் பெற்றது. "விடுமில மருங்கின் மக்கட் கெல்லாம், பிறந்தநாட் டொட்டுஞ் சிறந்ததன் றீம்பால், அறந்தரு நெஞ்சோ டருள்சுரந் தூட்டும்," (மணி - ஆபுத்திரன்திற: 51 - 54) என்று சிறப்பிக்கப் பெறுவதும் நோக்குக. மேலும், 'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்' என்ற (புறநா. 9) புறப்பாவை இச் செய்யுள் அடியொற்றி அமைந்துள்ளது என்க. ஆவுக்கு, 'ஆமா கோனவ் வணையவும் பெறுமே' என்ற நன். 248-ஆம், சூத்திரத்தின் சங்கரநமச்சிவாயர் உரையைக் காண்க. எளியர் - மெல்லியலார் என்னும் பொருளில் பெண்பாலைக் குறிப்பதும் ஆம். ஏழை - பெண்; உயுத்த. அங்கதன்றூது. 5. ஆயினும் என்பது ஓர் எண்ணிடைச் சொல்; ஒப்பு. 'பொதியி லாயினு மிமய மாயினும்' (சிலப். 1:14). இன்னோர் திறத்து இறந்தோரும் இறக்கத் துணிந்தோரும் நல்லுல காகிய வீடு எய்துவர் என்பது, திலீபன், சடாயு முதலினோர் சரிதங்களால் அறியக்கிடக்கும். தேவர்க்கும் தேவர்: உம்மை, உயர்வு சிறப்பினது. சாவ - சாக. இராமபிரான், 'மன்னுயிர்க்கெலாம் நல்லன்' (அயோத். மந்திரப். 38) என்றது இங்கு நினைக்கத் தக்கது.

பி - ம். 2. எவர்க்கேயும்; எவர்க்கேனு மேழையர்க்காயினும்;
3. சாவிற் பெற்றவை; தகுவானுறை.
4. தேவுக்குந் தொழுதேவர்களாவதே.

139. சூர றுத்த வனுஞ்சுடர் நேமியும்
ஊர றுத்த வொருவனு மோம்பினும்
ஆர றத்தினொ டன்றிநின் றாரவர்
வேர றுப்பென் வெருவன்மி னீரென்றான்.

'சூர் அறுத்தவனும் - சூரபன்மனை வேல்கொண்டறுத்த முருகக் கடவுளும், சுடர் நேமியும் - ஒளியோடு கூடிய சக்கரத்தையுடைய திருமாலும், ஊர் அறுத்த ஒருவனும் - திரிபுரர் ஊர்களை எரித்தழித்த ஒப்பற்ற சிவபெருமானும், ஓம்பினும் - துணையாக வந்து பாதுகாத்தாலும், ஆர் அறத்தினோடு அன்றி நின்றார் - யார் தருமத்தோடன்றி வேறு பாவவழிகளில் நின்றார்களோ, அவர் - அக்கொடியோர்களை, வேர் அறுப்பென் - வேரொடு மடிய அறுத்து ஒழிப்பேன் ; நீர் வெருவன்மின் - நீங்கள் அஞ்சாதீர்' என்றான் - என்று இராமபிரான் உறுதி கூறினான்.

திரி மூர்த்திகளில் பிரமதேவரை நீக்கிக் கூறியது, அவர் வேத நெறியில் தவநியமத்தில் எப்போதும் இருப்பவராதலின் போரிட வாரார் என்பது பற்றி. சூர் அறுத்த முருகக் கடவுளை முற்கூறியது, அவர் தேவசேனாபதியாதலின் ; சூரறுத்தவன் ; 'சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி' முருகு : 275 ; 'சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற், சினமிகு முருகன் ; (அகநா. 59 : 10-11). சுடர் நேமி - ஒளி வீசும் திருமால் ; இது வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை ; நேமி என்பதே ஆகுபெயரும் ஆகும். திருமாலை, நேமி என்பது ; 153 ; சுந்தர. 1059, 1112. ஊர் : இது பொதுப் பெயர் ; இங்கு முப்புரங்களைக் குறித்து நின்றது. அறத்தினோடன்றி நின்றார் என்பதற்கு, அரக்கர் என்றே பொருள் கொண்டாருமுளர். இவ்வாறு இராமபிரான், தண்டகாரணிய முனிவர்களுக்கும், பின் விபீஷண ஆழ்வானுக்கும் அபயமளித்து ஆதரித்து அறந்தலை நிறுத்திய அருஞ்செயலை நடுநாயகமாய்க் கொண்ட இக்காப்பியம் சரணாகதகிரந்தம் என்ற அரும் பெயரால் சிறப்பிக்கப் பெறுகின்றது என்க.

பி-ம். 3. ஆரறத்தை யழித்து நின்றாரவர்
4. வெருவலிர் நீரென்றான்.

### முனிவர்களின் மகிழ்ச்சி 140—1

140. உரைத்த வாசகங் கேட்டுவந் தோங்கிட
இரைத்த காதல ரேகிய வின்னலர்
திரித்த கோலினர் தேமறை பாடினர்
நிருத்த மாடினர் நின்று விளம்புவார்.

உரைத்த வாசகம் கேட்டு - இவ்வாறு இராமபிரான் அபய மளித்துக் கூறிய உறுதி மொழிகளைக் கேட்டு, உவந்து - மகிழ்ந்து, ஓங்கிட இரைத்த காதலர் - மேலோங்கி, ஒலித்த அன்பினையுடைய அம்முனிவர்கள், ஏகிய இன்னலர் - நீங்கிய துன்பத்தையுடையவர் களாயும், திரித்த கோலினர் - கையாற் சுழற்றிய தண்டங்களை யுடையவர்களாயும், தே மறை பாடினர் - தெய்வத் தன்மை வாய்ந்த வேத கானம் செய்து, நிருத்தம் ஆடினர் - (மகிழ்ச்சி மேலீட்டால்) நடனமும் செய்து கொண்டு, நின்று விளம்புவார் - இராமபிரான் முன் நின்று பின்வருமாறு கூறுவாராயினர்.

இரைத்த - மிகுதியான என்றலும் ஆம்; நக்க. 242. இரைத்த காதலர், ஏகிய இன்னலர்: இவை வடமொழி நடை. கோல் திரித்தல், பாடுதல், ஆடுதல் இவை மகிழ்ச்சியால் எழுந்த செயல்கள். மகிழ்ச்சி யால் ஆடுதல், பாடுதல்; பால. திருவவதாரப். 15 ; அயோத். மந்தரைசூழ்ச்சி : 27. கோல் - முனிவர்க்குரிய திரிதண்டம் அல்லது ஏக தண்டம். தேமறை - இனிய வேதமும் ஆம்.

பி - ம், 1. தோங்கிமேல் ; தோங்கின.
3. திரைத்த தோலினர்.
4. விளம்பினார். (23)

141. தோன்ற னீமுனி யிற்புவ னத்தொகை
மூன்று போல்வன முப்பது கோடிவந்
தேன்ற போது மெதிரல வென்றலின்
சான்று வேதம் தவப்பெரு ஞானமே.

'தோன்றல் - தலைவனே! நீ முனியில் - நீ கோபங்கொண்டால், மூன்று புவன தொகை போல்வன - மூவுலகங்களையும் போன்றவை, முப்பது கோடி வந்து ஏன்ற போதும் - முப்பது கோடி அளவாக வந்து உன்னை எதிர்த்தபோதும், எதிர் இல என்றலின் - அவை எதிராக உனக்கு ஆகமாட்டா என்று கூறுமிடத்து, சான்று - சாட்சியாக நிற்பவை, வேதம் தவ பெரு ஞானமே - வேதமும், அதனால் அடையத்தக்க சிறந்த ஞானமுமே ஆகும் : அரோ - அல்லவா?

முப்பது கோடி என்றது, ஒன்றுக்குக் கோடியாகப் பெருகி வந்தாலும் என்று, மிகுதியைக் கோடி யென்றும் எண்ணின் பெருக்கிற் கூறியது. அதாவது, முப்பது கோடி உலகங்கள் என்றபடி: உலகம் - என்பது ஆகுபெயரால் அங்கு வாழ்வாரைக் குறித்து நின்றது. அரோ - என்ற இடைச்சொல் வினைப் பொருளை ஏற்று வருவது இதுபோல் இந்நூலிற் பல விடத்துங் காணலாம். அரோ, அசையும் ஆம். கடவுளின் பேராற்றல், வேதத்தாலும் ஞானத்தாலுமே அறியப்படும் என்பது இங்குக் குறிக்கப்பெற்றது.

பி-ம். 2, கோடிதர். 3. மெதிரல்ல வென்றலிற்; மெதிரில.
4. சான்ற லோவெவ் தகைப்பெரு ஞானமே; தகைப்பறு ஞானமே; தவம்பெரு ஞானமே. (24)

## இராமபிரான் முதலியோர் முனிவர்களிடையே பத்தாண்டுகள் தங்கியிருந்தமை 142—3.

**142.** அன்ன தாதலி னேயின வாண்டெலாம்
இன்னல் காத்திங் கினிதுறை வாயெனச்
சொன்ன மாதவர் பாதந் தொழுதுயர்
மன்னர் மன்னவன் மைந்தனும் வைகினன்.

'அன்னது ஆதலின் - நீ எங்களுக்கு உறுதியளித்தபடி எங்களைக் காக்க வேண்டியது உன் கடமையாய் இருத்தலின், ஏயின ஆண்டு எலாம் - நீ வனவாசம் செய்வதாய் அமைந்த ஆண்டுகள் எல்லாம், இன்னல் காத்து - எங்களுக்குத் துன்பம் வராமல் பாது காத்து, இங்கு இனிது உறைவாய் என - இந்தத் தவவனத்தில் இனி மகிழ்ந்து வாழ்ந்து வருவாயாக' என்று, சொன்ன - விரும்பிக் கேட்டுக்கொண்ட, மாதவர் பாதம் தொழுது - மகா தவத்தினர்களான அம்முனிவர்களுடைய பாதங்களை வணங்கி, உயர் மன்னர் மன்னன் மைந்தனும் - சிறந்த அரசர்க்கரசனான தசரத சக்கரவர்த்தி குமாரனான இராமபிரானும், வைகினன் - அங்குத் தங்கியிருந்தான்.

ஏயின - கைகேயி ஏவிய என்றலும் ஒன்றும். இன்னல் காத்தல் - துன்பம் வராமல் தடுத்துக் காத்தல், உயர் மன்னர் மன்னன் - உயர்ந்த அரசர்க்கெல்லாம் அரசனான தசரத சக்கரவர்த்தி; இனி உயர் என்பதை மைந்தனோடு இயைத்து கூறினும் அமையும்.

பி - ம். 1. னேயின வாண்டெமக் (இன்னல்)
2. இனி இருப்பாயென ; வாயெனு.
3. தொழுதவன்; சொற்கிசைத் தாங்கனே.
4. மைந்தரும் வைகினர். (25)

இதன்பின் ஒரு சுவடியில் அடியிற்காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

மாத வத்தினர் பன்னியர் மாகுலச்
சீதை யைத்தம தெய்வதம் போலவே
ஆத ரித்தன ராண்டகை யோரவர்
ஏத நீத்தங் கிருந்தனர் சில்பகல்.

**143.** ஐந்து மைந்து மமைதியி னுண்டவண்
மைந்தர் தீதிலர் வைகினர் மாதவர்
சிந்தை யெண்ணி யகத்தியற் சேர்கென
இந்து நன்னுத றன்னொடு மேகினர்.

மைந்தர் - இராம லக்ஷ்மணர்கள், அவண் - அந்தத் தவ வனத்தில், ஐந்தும் ஐந்தும் ஆண்டு - பத்து வருஷகாலம், தீது இலர் - துன்பம் அற்றவர்களாய், அமைதியின் - மன நிறைவுடன், வைகினர் - தங்கியிருந்தனர் ; (பிறகு), மாதவர் - பெருந்தவத்தினரான அம்முனிவர்கள், சிந்தை எண்ணி - மனத்தில் ஆலோசித்து, 'அகத்தியன் சேர்க என - (நீங்கள்) அகத்திய முனிவரிடம் போய்ச் சேர்வீர்களாக' என்று சொல்ல, இந்து நல்நுதல் தன்னொடும் - (பிறைச்) சந்திரன் போன்ற அழகிய நெற்றியையுடைய சீதாப்பிராட்டியோடும், ஏகினர் - இராம லக்ஷ்மணர் அவ்விடம் நோக்கிப் புறப்பட்டனர்.

இராமபிரான் அகத்தியரைக் காணுமுன் தண்டகாரணிய முனிவர்களுடன் பத்தாண்டுகள் தங்கியிருந்தனன் என்பது : 'முனிவர்களின் ஆச்சிரமங்களில் முதலில் ஒருதரம் வசித்திருந்த இடங்களுக்கே அரக்கரால் உண்டாகும் இன்னலைத் தொலைக்கும் பொருட்டு மீண்டும் சென்று வாஸம் செய்தனன். ஆச்சிரமங்களில் (*13, 12, 4, 5, 6, 7,* $1\frac{1}{4}$, $\frac{3}{4}$, *3, 8*) மாதங்கள் என்று, *10* ஆச்சிரமங்களில் *5* ஆண்டுகளை ஒரு வட்டத்தில் கழித்து, அதே கணக்கின்படி இரண்டாவது வட்டத்தையும் அவன் கழித்தனன்' என்று வான்மீகம், ஆரண்ய, *11* ஆம் ஸர்க்கம் கூறும். பாகவதமும் (*2260*), இராமபிரான் முனிவர்களுக் கபயம் நல்கி அவர்களுடனே பத்தாண்டுகள் கழித்தனன் என்றே கூறும். அமைதி - ஆறுதல் அல்லது சாந்தி. மைந்தர் -

வலியோர் என்பதைக் குறிப்பது. மாதவர் சிந்தை எண்ணி : இராம பிரான் அவதாரக் கருத்தையும், அதற்கு அகத்தியர் மூலம், வில், அம்பு, அம்புப் புட்டில் முதலிய உதவிகள் பெறவேண்டும் என்ப தையும் தம் முக்கால முணருந்தன்மையால் கருதி எனக. சேர்க என என்பது சேர்கென என வந்தது, தொகுத்தல் விகாரம். இதனோடு சில சுவடிகளில் தண்டகாரணியப் படலம் முற்றும் என் றுள்ளது; அச்சுவடிகளில் இதற்குப் பின் அகத்தியப் படலம் தொடங்கும்.

பி - ம். 1. ஐந்தொடைந்தெனு மாண்டவ்வனத்திடை.
2. மைந்தர் மாண்புற்றிருந்தபின் மாதவர்.
3. நன்னுதன் மானொடு; மாதொடு, லாளொடு. (26)

அவர்கள், வழியில் ஸுதீக்ஷ்ணமுனிவரை அடைந்தமை 144—8

144. விடர கங்களும் வேய்செறி கானமும்
படருஞ் சின்னெறி பயப்பய நீங்கினார்
சுடரு மேனிச் சுதீக்கண னென்னுமவ்
இடரி லானுறை சோலைசென் றெய்தினார்.

விடர் அகங்களும் - மலை வெடிப்புக்களான பள்ளங்களிலும், வேய் செறி கானமும் - மூங்கில்கள் அடர்ந்த காடுகளிலும், படரும் - தொடர்ந்து செல்லும், சில் நெறி - சிறிய வழிகளை, பய பய நீங்கி னார் - (மூவரும்), மெல்ல மெல்லக் கடந்து சென்று, சுடரும் மேனி - ஒளி வீசும் திருமேனியையுடைய, சுதீக்கணன் என்னும்-ஸுதீக்ஷ்ணர் என்று சொல்லப் பெறும், அ இடர் இலான் உறை - துன்பங்கள் அற்ற அந்த முனிவர் வசித்து வந்த, சோலை சென்று எய்தினார் - தவச் சோலையைப் போய் அடைந்தனர்.

பயப்பய : மெல்ல மெல்ல; 'பாடகக் காலினாரைப் பயப்பயக் கொண்டு போனார்' : (பால. எழுச்சி: 53). சுதீக்கணர் - (ஸுதீக்ஷ்ணர்) உக்ரதபஸுடையவர் என்பது பொருள்; இவர் அகத்தியரின் சிடர் என்று அத்யாத்ம ராமாயணம் கூறும். இடரிலான் - பிறவி யால் அடையும் துன்பங்கள் அற்றவர். சோலை - தவவனம். இடரிலாதுறைசோலை என்ற பாடத்தைக் கொண்டு, ஒருவித துயருக் கும் இடமில்லாது வசிக்கும் சோலை எனவும் பொருள் கொள்வர்; ஸுதீக்ஷ்ணர் இருந்த தவவனம் செழுமையாயும் பலவகை அரிய கனி வர்க்கங்கள், நீர்நிலைகள் நிரம்பப் பெற்றும், மனோகாமாய் இருந்தது

என்று முதநூல் கூறும். 'சுடருமேனிச் சுதீக்கணன்' என்பதற் கேற்ப, 'அருக்க னன்னமுனி' (145) என்பது காண்க.

பி-ம். 1. வேய்நெறி கானமும்; மெய்ந் நெறிக்கானமும்.
2. சின்னெறியும் பைய; பய; பைப்பய; பைய்ப்பய; பையய.
3. சுதீக்கண னென்பான் ஞெடர்; னென்னுமவ்; நேமிச்சுதீக் கணனுகிய; சுதீட்டணனென்னுமவ்.
4. இடரிலா துறைசோலை. (27)

145. அருக்க னன்ன முனிவனை யவ்வழி
செருக்கில் சிந்தையர் சேவடி தாழ்தலும்
இருக்க வீண்டென் றினியன கூறினுன்
மருக்கொள் சோலையின் மைந்தரும் வைகினுர்.

செருக்கு இல் சிந்தையர் - கருவ மற்ற மனத்தினையுடைய அவ்விராம லக்ஷ்மணர், அ வழி - அவ்விடத்தில், அருக்கன் அன்ன முனிவனை - சூரியன் போன்ற ஒளியையுடைய அந்தச் ஸுதீக்ஷ்ண முனிவரின், சே அடி தாழ்தலும் - செம்மையான திருவடிகளைப் பணிந்து வணங்கவும், 'ஈண்டு இருக்க என்று - அவர் அவர்களை, 'இங்கு இருப்பீர்களாக' என்று இடங்காட்டி இருக்கச் செய்து, இனியன கூறினுன் - இனிய உபசார மொழிகளை கூறினர்; மைந்தரும் - அவ்வாறு உபசரிக்கப் பெற்ற இராம லக்ஷ்மணர்களும், மரு கொள் சோலையில் - மணம் நிறைந்த அந்தத் தவவனத்தில், வைகினுர் - தங்கியிருந்தனர்.

அருக்கனன்ன முனிவன் - தன் பிர்ஹ்ம தேஜஸினுல் சூரியன் போல் ஒளியுடன் விளங்கும் ஸுதீக்ஷ்ணர்; முன், 'சுடருமேனிச் சுதீக் கணன்' (144) என்றதையும் நோக்குக. செருக்கு - யான் எனது என்னும் மதம்; 'யானென தென்னுஞ் செருக்கறுப்பான்' (குறள். 346). இராம லக்ஷ்மணர் யாரிடமும் தாம் சக்கரவர்த்தி குமாரர் என்ற செருக்கன்றி முன் வந்து அன்புடன் பேசுபவராதலின், செருக்கில் சிந்தையர் எனப்பட்டார். இருக்க ஈண்டு என்றது: வந்தோர்க்கு இருக்க இடமளித்தல், செய்யக் கூடிய முதல் உபசாரமாதலின். மருக்கொள் சோலை: 'பிழியுந் தேனிற் பிறங்கரு வித்திரள், பொழியுஞ் சாரல் விரைவினிற் போயினுர்', (152) என்றமையாலும் விளங்கும். 'சரபங்கர் உரைப்படி இராமன் முதலினேர் ஸுதீக்ஷ்ணர் ஆச்சிரமத்தை முதலில் ஒருதடவை அடைந்து ஒரிரவுதங்கிப் பின், 10 ஆண்டுகள் வேறு வேறு ஆச்சிரமங்களில் தங்கிப் பிறகு அகத்

தியரைக் காணப் போகுமுன் மற்றொரு முறை ஸுதீக்ஷ்ணரைக் கண்டார்' என்று வான்மீகம் கூறும். ஒரு பிரதியில் இதன் பிறகு அகத்தியப்படலம் என்றுள்ளது.

பி-ம். 1. யவ்வுழி. 2. தாழலும்; கண்டவற் சேர்தலும். 3. நினிய கூறினன். (28)

146. வைகும் வைகலின் மாதவன் மைந்தர்பால்
செய்கை யாவையுஞ் செய்திவண் செல்வநீ
எய்த யான்செய்த தெத்தவ மென்றனன்
ஐய னும்மவற் கன்பன கூறினன்.

மாதவன் - பெருந் தவத்தினரான அந்த ஸுதீக்ஷ்ண முனிவர், வைகும்வைகலின் - தங்கியிருந்த ஆச்சிரமத்தில், மைந்தர் பால் - அந்த இராம லக்ஷ்மணரிடத்து, செய்கை யாவையும் செய்து - செய்யத் தக்க அதிதிகளுக்குரிய உபசாரங்களனைத்தும் முறைப்படி செய்து, (இராமபிரானை நோக்கி), 'செல்வ - சீமானே! நீ இவண் எய்த - நீ இவ்விடத்திற்கு வர, யான் செய்தது எ தவம் - யான் செய்தது எத்தகைய தவச் சிறப்பாகும்?' என்றனன் - என்று உபசார மொழிகள் கூறினர்; ஐயனும் - இராமபிரானும், அவற்கு - அந்த முனிவற்கு, அன்பன - அன்புள்ள மொழிகளை, கூறினன் - சொன்னான். (கூறியவை அடுத்து வருவன காண்க).

வைகல் - போது, அல்லது வேளை எனலும் ஆம்; செல்வன்: இம்மைமறுமை மேர்ட்சச் செல்வங்களை யருள்பவன், என்னலும் ஒன்றும். தம்மிடம் வந்தவரிடம் இன்மொழி பேசி மகிழ்வித்தல், செய்யும் உபசாரங்களுள் தலைசிறந்தது; ஆதலின், 'யான் செய்த தெத்தவம்' என்றனன் என்க; ஒப்பு: பால. திருவவதார. 61; கையடைப்: 6; மிதிலைக் காட்சி. 93.

பி-ம். 1. வைகுமவ்வுழி: மைந்தன் பால்.
2. செய்வன யாவையும்; யாவதுஞ்; இவண் செல்வநீர்.
4. கன்பினன் கூறுவான்; கன்பினிற் கூறுவான். (29)

147. சொன்ன நான்முகன் றன்வழித் தோன்றினர்
முன்னை யோருண் முயறவ முற்றினர்
உன்னில் யாருள ருன்னரு ளெய்திய
என்னின் யாருள ரிற்பிறந் தாரென்றான்.

'சொன்ன - ஆன்றோர் யாவரும் புகழ்ந்து சொன்ன, நான்முகன் தன் வழி தோன்றினர் - பிரமதேவர் வம்சத்தில் உதித்தவர்களாகிய, முன்னையோருள் - முதன்மை பெற்ற பண்டை முனிவர்களுள், முயல் தவம் முற்றினர் - முயன்ற கடுமையான தவத்தினை முற்றச் செய்தவர், உன்னின் யார் உளர் - உம்மைப் போல் செய்தவர் வேறு யாவரே உள்ளார்? (ஒருவரும் இல்லை என்றபடி); உன் அருள் எய்திய - உம் அருளை அடைந்த, இல் பிறந்தார் - இல் வாழ்க்கையில் தோன்றினோர், என்னில் யார் உளர் - என்னைப் போல் பேறு பெற்றவர் வேறு யாரே உள்ளார்? (ஒருவரும் இல்லை என்றபடி)' என்றான் - என்று (இராமபிரான்) பாராட்டிக் கூறினான்.

சொன்ன - சிறப்புற்ற என்னலும் ஒன்றும். நான்முகன் வழி தோன்றினோர் - பிரமதேவர் பரம்பரையில் உதித்த அந்தணர் என்பதாம். முயல் தவம் முற்றினர், இஃது அவருக்கு ஸுதீக்ஷ்ணர் என்ற பெயரைக்குறிப்பிட்ட படியும் ஆம். (ஸுதீக்ஷ்ணன் - உக்கிரமான தவத்தையுடையவன், 144.) இற்பிறந்தார் - நற்குலத்தில் பிறந்து இல்வாழ்வார். இனி, உன்னில் - கருதிப் பார்க்குமிடத்து, என்று கூறினும் அமையும். என்னில் - என்னை விடச் சிறந்து, என்று, எல்லைப் பொருளிலும் பொருள் கொள்ளலாம். என்னில் யாருளர் என்றது தற்புகழ்ச்சியாற் கூறியதன்று; மகரிஷியின் பெருமை தோன்றக் கூறியதாகும்; ஒப்பு, பால. வேள்விப் : 23.

பி - ம். 1. தன்வழி தோன்றினோர்; தன் வயிற்றோன்றிய.
2. முன்னையோரு முதற்றவ, முயர்தவ; முன்னையோரின் முயறவ; முயறவமுன்னினர்; முன்னையோருயர் தவமுற்றினர்.
3. யாருளார்; ருன்னருள்பற்றிய.
4. ரிப்புவி மீதென்றான்: ரிற்பிறந்தானென்றான். *(30)*

148. உவமை நீங்கிய தோன்ற லுரைக்கெதிர்
நவமை தோன்றிய நற்றவன் சொல்லுவான்
அவமி லாவிருந் தாகியென் னுலமை
தவமெ லாங்கொளத் தக்கனை யாலென்றான்.

உவமை நீங்கிய தோன்றல் உரைக்கு - உவமை கூறுவதற்கு ஒன்றில்லாத தலைவனான இராமபிரான் கூறிய மொழிக்கு, எதிர் - மறுமொழியாக, நவமை தோன்றிய நல் தவன் - அதுகாறும் ஒருவரும் செய்யாததான புதுமையாகத் தோன்றிய கடுந் தவத்தையுடைய ஸுதீக்ஷ்ண முனிவர், சொல்லுவான் - பின்வருமாறுகூறினர்; (அதா

வது):- 'அவம் இலா விருந்து ஆகி - வீண் போகாத நல்ல அதிதியாக நீ எனக்கு ஆகி, என்னால் அமை - என்னால் இதுகாறும் செய்து அமைந்துள்ள, தவம் எலாம் - என் தவப்பயன்கள் அனைத்தையும், கொள தக்கனை என்றான் - நீ ஏற்றுக்கொள்ளத் தக்கவனாவாய்' என்று கூறினார். ஆல் : அசை.

இங்கு, பரம்பொருளாகிய இராமபிரானிடத்தில் ஸுதீக்ஷ்ண முனிவர் தம்மிடமுள்ள அனைத்தையும் ஒப்புவித்துப் பிரபத்தி மார்க்கத்தை மேற்கொண்டதாக ஆசிரியர் கூறியுள்ளார். 'கொள்க தக்கிணையாய் - தக்ஷிணையாக நீ ஏற்றுக்கொள்க என்றார்' எனப் பொருள் கொண்டாரும் உளர்.

ஸுதீக்ஷ்ணர் இராமபிரானிடம், 'சரபங்க முனிவர்க்காக வந்த தேவர்கள் தலைவனான மஹேந்திரன் என்னைப் பார்க்க இவ்விடம் வந்து, நான் எனது புண்யகர்மத்தினால் எல்லா உலகங்களையும் வென்றுவிட்டதாகக் கூறிப் போனான்; தேவரிஷிகள் மகிழ்ந்துலாவப் பெற்றவைகளும், என்னால் தவஞ்செய்து சம்பாதிக்கப்பட்டவைகளுமாகிய அந்த உலகங்களில் நீ எனது அநுக்ரகத்தினால் சீதையோடும் இலக்குமணனோடும் கூடிச் சுகமாக விளையாடிக் கொண்டிருப்பாயாக' என்றனர்; அதற்கு இராமன், 'நான் சுயமாகவே உலகங்களைச் சம்பாதித்துக் கொள்கிறேன்; ஆனால் இவ்வாரணியத்தில் நாங்கள் வசிக்கும்படி என் இருப்பிடத்தை மாத்திரம் தேவரீர் ஏற்படுத்திக்கொடுக்க விரும்புகின்றேன்' என்றான்; என்று இவ்விடத்தில் முதனூல் கூறும்; இந்நூலில், ஆசிரியர் இராமபிரான் அகத்தியாச்சிரமத்திற்குச் செல்லும் வழியில் ஸுதீக்ஷ்ண முனிவரைச் சந்தித்தாகக் கொண்டு, அதன்படி வரலாற்றை அமைத்துச் செல்கின்றாரென்பது நோக்கத்தக்கது.

பி - ம். 2. நவமை தீர்ந்துயர்; நவமை நீங்கிய; நற்றவன் சொற்றுவான்.
3. ஆகவென்னலரும், யென்னலரும்.
4. கொள்தக்கிணை; தக்கணை யாவென்றான். (31)

இராமபிரான் அகத்திய முனிவரைக் காண விரும்பியதும்,
ஸுதீக்ஷ்ணர் அதற்கு விடையளித்ததும். 149—52

**149.** மறைவ லானெதிர் வள்ளலுங் கூறுவான்
இறைவ நின்னரு ளெத்தவத் திற்கெளி
தறைவ தீண்டுண் டகத்தியற் காண்பதோர்
குறைகி டந்த தினியெனக் கூறினான்.

வள்ளலும் - இராமபிரானும், மறைவலர்ன் எதிர் - வேதங்களில் வல்ல அம்முனிவர் முன்னே, கூறுவான் - பின்வருமாறு சொல்ல லானான் :-' இறைவ - தலைவரே! நின் அருள் - உமது அனுக்கிரகம், எ தவத்திற்கு எளிது - எத்தகைய தவத்தினால் அடையக் கூடிய எளிமையுடையது? ஈண்டு - இப்பொழுது, அறைவது உண்டு - நான் தெரிவித்துக் கொள்வது ஒன்று உள்ளது; (அஃது என்னையெனில்), இனி - இப்பொழுது, அகத்தியர் காண்பது - அகத்திய முனிவரைப் போய்த் தெரிசிக்க வேண்டுவதான, ஓர் குறை கிடந்தது - ஒரு குறை என் மனத்தில் உள்ளது,' என கூறினான்-என்று சொன்னான்.

நின்னருள் எத்தவத்திற்கு எளிது - உம் அருளே, எத் தவத் தாலும் அடைதற்கு எளிதன்று; அதை யான் எளிதில் அடைந் தேன் என்றனன் என்க. மேலும், உம் தவப்பயனையும் பெற்றால் அது என் தகுதிக்கு ஏற்றதன்று என்றதும் ஆம். [அன்றியும், ஸுதீக்ஷ்ணர் தம்மால் அடையப்பெற்ற தவப்பயனால் சுவர்க்க போகங் களை அங்கிருந்து அடைவாயாக என்று கூறியதற்கு, இராமபிரான், 'என் முயற்சியாலேயே தவப்பயன் பெற விரும்புகிறேன்' என்று கூறியதாக வான்மீகத்தால் அறியப்படுவதால், ஸுதீக்ஷ்ணருடைய தவப் பயன்களை இராமபிரான் ஏற்கவில்லை எனத்தெரிகிறது. அக் கருத்தைக் கொண்டே இந்நூலில், ஆசிரியர் கல்வியிற் பெரியார், 'நின் அருள் எத்தவத்திற்கு எளிது.' என்ற குறிப்பால் உணரவைத் தனர் என்க.] குறை கிடந்தது: குறை - இன்றி நிறையாதது, அல்லது பூர்த்தியாகாதது.

பி - ம். 1. மறைவலோனெதிர்; மறைவல்லோனெதிர்.
2. எத்தவத்திற்கெதிர்; எத்தவத்தோர்க்கெளிது.
3. அறைவ தீண்டொன். 4. தனியெனக் கூறுவான். (32)

150. நல்ல தேநினைந் தாயது நானுமுன்
சொல்லு வான்றுணி கின்றது தோன்றனீ
செல்தி யாண்டவற் சேருதி சேர்ந்தபின்
இல்லை நின்வயி னெய்தகி லாதவே.

'தோன்றல் - தலைவனே! நீ நல்லதே நினைந்தாய் - நீ நல்ல காரியத்தையே எண்ணினாய்; அது - அதனையே, நானும் - நான் கூட, முன் சொல்லுவான் துணிகின்றது-உனக்கு முன்பே சொல்ல வேண்டு மென்று நிச்சயித்தது; ஆண்டு செல்தி - அவ்வகத்தியர் ஆச்சிரமத் திற்கு நீ போவாயாக; அவன் சேருதி - அவரைச் சேர்வாயாக:

சேர்ந்தபின்-அவரை அடைந்த பிறகு, நின் வயின் எய்த கில்லாதவே இல்லை - உன்னிடம் அடையக் கூடாத நலன்கள் யாவுமே இரா; (அதாவது நீ எல்லாப் பேறுகளையும் அடைந்தவனுவாய் என்றபடி).

நல்லதே நினைந்தாய் என்றது, இராவண சங்காரத்தைக் கருதியும், அதற்கு அகஸ்தியர் அருளக் கூடிய படைக்கலங்கள் முதலிய உதவியையும் முனிவர் தம் ஞான திருஷ்டியால் உணர்ந்தும் கூறியதாகும். இது, 'சேருதல் செவ்வியோய்! நன்று; தேவர்க்கும் யாவர்க்கு நன்றெனு' என்று பின் 151ல் தெளிவுபடுத்தியதாலும் காண்க. துணிகின்றது: துணிந்தது என்னும் பொருளில் கால வழுவமைதியாக வந்துள்ளது. செல்தி என்னும் வினைமுற்றை வினையெச்சப் பொருளில் கொண்டு, சென்று சேருதி எனவும் இயைத்துப் பொருள் கோடலும் ஒன்றும்.

பி - ம். 2. துணிகிற்பது; துணிகின்றனன்.
3. செல்க யாண்டவற்; செல்லு காண்டவற்; சேருதி சேர்ந்த பின்; செல்தி யாண்டவற்; செல்லுசென் றவர்ச்சேருதி.
4. னெய்த திலாதவே; னெய்தலில் லாதவே; னெய்து கிலாதவே.

(33)

151. அன்றி யுந்நின் வரவினை யாதரித்
தின்று காறுநின் றேமுறு மாலவற்
சென்று சேருதி சேருதல் செவ்வியோய்
நன்று தேவர்க்கும் யாவர்க்கு நன்றெனு.

'அன்றியும் - அஃது அல்லாமலும், செவ்வியோய் - சிறந்தோனே! (அவ்வகத்திய முனிவர்), நின் வரவினை ஆதரித்து - உனது வருகையை விரும்பி, இன்று காறும் - இன்று வரையிலும், நின்று - எதிர் பார்த்து இருந்து, ஏம் உறுமால் - ஏங்கியிருப்பார்; (ஆதலால்), சென்று அவற் சேருதி - நீ போய் அவரை அடைவாயாக; சேர்ந்த பின் - அவ்வாறு சேர்ந்த பிறகு, தேவர்க்கும் நன்று யாவர்க்கும் நன்று - தேவர்க்கும் மற்றெல்லோர்க்கும் நல்லதே ஆகும்;' எனு - என்று கூறி, (இது அடுத்த செய்யுளோடு இயைந்து வினை முடிவு கொள்ளும்).

செவ்வி - அழகுமாம். ஏமுறல் - ஏக்கமடைதல்; மயக்கமடைதலும் ஆம்; 'ஏமுற வொழியா வேயர் மன்னனை' (பெருங். 2. 11 : 38.); 'வேனி லத்த மென்னு தேமுற்று' (அகநா. 69 : 9). 'நன்று தேவர்க்கும் யாவர்க்கும் நன்று' 'இது முனிவர் தம் முக்கால உணர்ச்சியாகிய ஞான திருஷ்டியால் கூறியது ஆகும். முன் 150 இல் 'நல்லதே நினைந்

தார்' என்றும் 'இல்லை நின் வயினெய்த லிலர்தவே' என்றும் கூறியதை இஃது அடியொற்றியது என்க.

பி-ம். 1. அன்றியு நினைக்காணுதற் காதரித்.
3. றேமுறு மாலவன்.
3. சேருதல் சேர்ந்த பின்.
4. நன்று யாவர்க்குந் தேவர்க்கும் நாதனே. (34)

152. வழியுங் கூறி வரம்பில வாசிகள்
மொழியு மாதவன் மொய்மலர்த் தாடொழாப்
பிழியுந் தேனிற் பிறங்கரு வித்திரள்
பொழியுஞ் சோலை விரைவினிற் போயினர்.

வழியும் கூறி - அகத்தியர் ஆச்சிரமத்திற்குப் போகும் வழியையும் விளக்கிக் கூறி, வரம்பு இல - எல்லையற்றனவான, ஆசிகள் மொழியும் - ஆசீர்வசனங்களைக் கூறிய, மா தவன் - பெருந் தவசியான அந்த ஸுதீக்ஷ்ணருடைய, மொய் மலர் தாள் தொழா - அடர்த்தியான தாமரை மலர் போன்ற பாதங்களை வணங்கி, பிழியும் தேனில் - அடையிலிருந்து பிழியப்படும் தேனின் ஒழுக்குப்போன்று, பிறங்கு - அங்கு விளங்கிய, அருவி திரள் பொழியும் - அருவித் தொகுதிகள் நீரைச் சொரியும், சோலை - அந்த ஸுதீக்ஷ்ணருடைய தவச்சாலையிருந்த சோலையை விட்டு, விரைவினில் போயினர் - (இராம லக்ஷ்மணர்) விரைவாக அப்பால் சென்றனர்.

'இவ்வாச்ரமத்தினின்றும், தென்திசையாக நான்கு யோசனை தூரம் போன பின்பு, அங்கு அகஸ்தியருடைய சகோதரராகிய ஸுதர்சன முனிவரின் ஆச்ரமத்தைக் காண்பாய்; அங்கிருந்து தென்திசையாகவே ஒரு யோசனை தூரம் போகையில் அங்கு அகஸ்தியாச்ரமம் இருக்கிறது' என்று ஸுதீக்ஷ்ணர் இராமபிரானிடம் கூறியதாக வான்மீகம் கூறும். அம்முனிவர் ஆச்ரமத்தை அவர்கள் நீங்கும் நிலையில் பிராட்டி இராமபிரானுக்கு, அஹிம்ஸாதர்மத்தைப் பற்றி விரித்துரைத்து, தம்மைப் பீடித்தாலன்றி அரக்கர்களை வதைக்கலாகாது என்று கூறியதாகவும் அம் முதனூல் கூறும்.

தேனிற் பிறங்கு அருவித் திரள் - தேனால் விளங்கும் அருவிக் கூட்டங்கள் என்னலும் ஒன்றும்; அதாவது, அங்கு அருவிகளில் தேன் பெருக்கு இடையறாது ஓடிக்கொண்டிருந்தது என்பதாம். ஸுதீக்ஷ்ணர் இருந்த தவச்சோலை மதுரமான பல கனிவர்க்கங்களும், மலர்களும், செடி கொடிகளும் நிறைந்து விளங்கிச் செழுமையாய்

இருந்தது என்று முதனூல் கூறுவதால், இங்குச் சோலை என்று ஸுதீக்ஷ்ணர் தவச்சோலை என்றே பொருள் கொள்ளப்பட்டது. முன் 'இடரிலானுறை சோலை' (*144*) என்றும், 'மருக்கொள் சோலை (*145*) என்றும் சிறப்பிக்கப் பெற்றமையும் நோக்கப்பாலதாம். செ லும் வழியில் இராமபிரான் முதலியோர் அகத்திய முனிவரின் இளை சகோதரரான ஸுதர்சனர் என்பவரையும் பணிந்து சென்றன என்று முதனூல் கூறும்.

பி-ம். 1. வரம்பில தாசிகள்; வரம்பகலாசிகள்; வரம்பிகலாசிகள்.
4. பொழியுஞ்சாரல். (35

இதன் பின் சில பிரதிகளில் அடியிற்காணுமாறு ஓர் அதிக பாடல் உள்ளது.

கான யாறுங் கனவரைச் சாரலும்
ஏனை வீர ரினிதினி லெய்தினார்
ஆன கத்திய னுயபி றாதமை
வான வர்க்கிறை வன்வணங் கிச்செலா.

அகத்திய முனிவர் அவர்களை எதிர்கொண்டமையும் அம்முனிவரின் பெருமைகளும் 153—8

**153.** ஆண்டகைய ரவ்வயி னடைந்தமை யறிந்தான்
ஈண்டுவகை வேலைதுணை யேழுலக மெய்த
மாண்டவர தன்சரண் வணங்கவெதிர் வந்தான்
நீண்டதமி ழாலுலகை நேமியி னளந்தான்;

நேமியின் - திருமால் (திரிவிக்கிரமனாகி உலகைத் தன் ஓ அடிக்குள் அடக்கி அளந்தது) போல, உலகை - உலக அறிவுகள் யாவற்றையும், நீண்ட தமிழால் - நீண்ட காலமாகவுள்ள தமிழால், அளந்தான் - அதனுள் அடக்கி அளந்தவனான அகத்தியர், ஆண் தகை - வீரர்களுள் சிறந்தவனான இராமபிரான், அவ் வயின் அடைந்தமை - அந்த இடத்தைச் (தன் வனத்தை) சேர்ந்ததை, அறிந்தான் - உணர்ந்து, துணை ஏழு உலகம் - பதினான்கு உலகங் களும், ஈண்டு உவகை வேலை எய்த - நெருங்கிய மகிழ்ச்சிக் கடலில் மூழ்க, மாண்ட வரதன் - மாட்சிமையுற்ற வரங்களை அளிக்கவல்ல இராமபிரான், சரண் வணங்க - தமது திருவடிகளை வணங்குமாறு, எதிர் வந்தான் - (தம் ஆச்சிரமத்தினின்று புறப்பட்டு, இராமபிரான்) எதிரே வந்தார்.

அளந்தான், அறிந்தான், வந்தான் என வினை முடிவு செய்க.

நேமி தன் திருவடியால் நீண்ட உலகை அளந்ததுபோல, முனிவர் தமிழால் உலகை அளந்தார். அளந்தமை, உலக அறிவை அம்மொழியினுள் செறித்தமை ; அறிய வேண்டிய அறிவு யாவற்றையும் தமிழைக் கொண்டே அறியும் வண்ணம் அம்மொழியை இலக்கண முதலியவற்றால் வளமுறச் செய்தார் என்க. துணை ஏழுலகும் உவகை எய்தியது, இராமபிரான் அகஸ்தியரால் பெறப் போகும் உதவிகளால் இராவண சங்காரம் அண்மையில் நிகழும் என்ற கருத்தால் ; அன்றி, முனிவர் கொண்ட மகிழ்ச்சி எல்லா உலகங்களிலும் பரவிற்று எனலும் ஆம். வரதன் - வரத்தைத் தருபவன். மாண்ட வரதன் என்பதற்கு அகத்தியர் என்று பொருள்கொண்டு, அவர் சரணத்திலே (இராமன்) வணங்க, என்று, இராமன் என்னும் சொல்லை வருவித்துப் பொருள் கொள்ளலும் ஆம். இது முதல், செய்யுள்கள் இடத்திற்கேற்ற சந்தம் பெற்றிருப்பன காண்க.

பி - ம். 1. அவ்வயின் வரும்பரி சறிந்தான்.

2. வேலைகரையற்றிட வெழுந்தே ; யேழுலகுமெய்த.

3. மாண்டவர்கள் தன்சரண் ; வணங்கவெளிவந்த ; வரதன் வரவு காண வெதிர் வந்தான் ; வழங்கவெதிர்.

4. நீண்ட தமிழ் வாரி நிலமேனி மிரவிட்டான். (36)

154. பண்டவுணர் மூழ்கினர் படார்களென வானோர்
எண்டவ வெமக்கருள் கெனக்குறை யிரப்பக்
கண்டொருகை வாரினன்மு கந்துகட லெல்லாம்
உண்டவர்கள் பின்னுமிழ்க வென்றலு முமிழ்ந்தான் ;

வானோர் - தேவர்கள், பண்டு - முன், அவுணர் - அசுரர்கள், மூழ்கினர் - கடலின் மூழ்கி ஒளிந்து கொண்டார்கள் ; படார்கள் - (ஆதலின்) அழிய மாட்டார்கள், என - என்று கருதி, (அகத்திய முனிவரை அடைந்து), 'எண் தவ - மதிக்கத்தக்க தவமுடைய முனிவரே, எமக்கு அருள்க - எங்களுக்கு அருள் புரிவீராக' என குறை இரப்ப - என்று கூறித் தம் குறையைச் சொல்லி இரந்து கேட்டுக்கொள்ள, கண்டு - உள்ள நிலையை அவர் தெரிந்து கொண்டு, கடல் எல்லாம் - ஏழு கடல் நீர் அனைத்தையும், ஒரு கை வாரினன் முகந்து - தம் ஒரு குறுகிய கையால் அள்ளி எடுத்து, உண்டு - பருகி, பின் அவர்கள் உமிழ்க என்றலும் - பிறகு அத்

தேவர்கள், 'அக் கடல்நீரை உமிழ்ந்தருள்வீராக' என்று வேண்டிக் கொள்ளலும், உமிழ்ந்தான் - மீண்டும் உமிழ்ந்து அக்கடல்களை நிர் நிரம்பச் செய்தார்.

தேவர்களின் பகைவரான விருத்திராசுரன் முதலிய அசுரர்கள், கடலிற் புகுந்து ஒளிந்து கொள்ள, இந்திரன் முதலிய தேவர்கள், அகத்திய முனிவரை அடைந்து குறை கூறி வேண்ட, அவர் ஏழு கடல் நீரையும் ஒருசேர ஒருமுறை ஆசமனம் செய்து உண்டனர். அதனால் அசுரர்கள் வெளிப்பட, இந்திரன் விருத்திரன் முதலிய அவ் வசுரர்களை அழித்தனன். பிறகு அவ்வானவர் விருப்பப்படி உண்ட அக்கடல் நீரை மீண்டு உமிழ்ந்து கடல்களை நிரப்பினர் என்ற புராண வரலாறு இச்செய்யுளால் விளக்கப்பட்டது. இச்செய்தி, " முனிக்கரசு கையான் முகந்து முழுங்கும் பனிக் கடலு முண்ணப்படும் : (நன்னெறி : 7); திருவால. திருவிளையாடல் ; நூல் வரலாறு, 3 ; சுந்தர : 15 ; தக்க 40 ; முதலியவற்றுலும் விளங்கப் பெறுவது காணலாம்.

பி - ம். 2. வெமக் கருளெனக் ; குறையிரந்தார்.
3. மொண்டொருகை ; முகந்த கட.
4. வென்றன ருமிழ்ந்தான் ; ருமிழ்ந்தோன். (37)

155. தூயகட னீரைமுழு துண்டவை துரந்தான்
ஆயவவ னுலமரு மெய்யுடைய னன்னுன்
மாயவினை வாளவுணன் வாதவிதன் வன்மைக்
காயமினி துண்டுலகி னுரிடர் களைந்தான் ;

தூய கடல் நீரை முழுது உண்டு - பரிசுத்தமான கடல்களின் நீர் முழுவதையும் பருகி, அவை துரந்தான் - அவற்றை மீண்டும் உமிழ்ந்த, ஆயவனும் - அப்படிப்பட்ட அம்முனிவரும், ஆல் அமரும் மெய்யுடையன் -பெரிய ஆலமரம் உள்ளடங்குவதான உருவில் சூட்சம மான (விதைபோன்ற) யாக்கையுடையவன் ; அன்னுன் - அம் முனி வர், மாய வினை - வஞ்சகத் தொழிலையுடைய, வாள் அவுணன் - வாளேந்திய கொடிய அசுரனை, வாதவி - வாதாபி என்பவனது, வன்மை - வலிமை வாய்ந்த, காயம் இனிது உண்டு - உடலை மகிழ்ந்து உண்டு, உலகின் ஆர் இடர் - உலகுக்கிருந்த கொடிய துன்பத்தை, களைந்தான் - போக்கி யருளினவர் ஆவர்.

இச் செய்யுளில் முதலடி, அகத்தியர் முன் கடலுண்ட செய் தியை மீண்டு முரைத்ததாகும். அது செயற்கருஞ் செயலாதலின்

மறுமுறைக் கூறி அறிவுறுத்தப் பெற்றது என்க. இவ்வாறு கூறுவது, அனுவாதம் எனப்படும். ஆலமருமெய்யுடையன் : மரங்களுள் பெரிய ஆலமரம் மிகச் சிறிய விதையில் அடங்கியுள்ளது போல, பெரிய கடல்களின் நீர்ப்பரப்பு இம்முனிவர் குறுகிய உடலுள் அடங்கியிருந்தது என்று உபமான முகத்தால் விளக்கியது ஆம். இது, ‘தெள்ளிய வாலின் சிறுபழத் தொருவிதை தெண்ணீர்க் கயத்துட் சிறுமீன் சினையினும், நுண்ணிதே யாயினுமண்ணல் யானை, அணிதேர்ப் புரவி யாட்பெரும் படையொடு, மன்னர்க் கிருக்க நிழலாகும்மே’ (நறுந்தொகை) என்றமையால், இனிது விளங்கும். மேலும், திருமால் வாமனனாய், மாவலிபாற் சென்று மூவடி மண் வேண்டிப் பின் திரிவிக்கிரமனாய் வளர்ந்து மூவுலகையும் அளந்து கொண்ட செய்தியை, உட்புகுத்தி, ‘ஆலமர்வித்தி னருங் குறளானான்’ (பால. வேள்விப் : 21) என்று கூறியதை, இங்கு வலியுறுத்தியதும் ஆம். ஆலமரு மெய்யுடைய னன்னான், தூயகடனீ... ருண்டது மிழ்ந்தான். என இயைத்துப் பொருள் கொள்ளலும் அமையும். இனி, ஆல் அமரு மெய்யுடையன் அன்னான், (உலக மெல்லாம் உண்டு பின்) ஓர் ஆலிலையிற் சிறு குழந்தையாய்ப் பள்ளி கொண்ட திருமால் அன்ன சிறிய உருவையுடைய அகத்தியர் எனப் பொருள்கொள்ளலும் ஒன்றும். வாள் அவுணன் - வாள் போன்ற கொடுந் தொழிலைக் கொண்ட அசுரன். வாதவி - வாதாபி என்ற சொல்லின் விகாரம். காச்யபரின் வழி வந்த வாதாவி, இல்வலன் என்ற இரு அசுரர்கள் தண்டகாரணியத்தில் தங்கி அங்கிருந்த முனிவர்களை வஞ்சனையால் கொன்று வந்தனர் ; அகத்தியரையும் அவ்வாறே அவர்கள் வஞ்சிக்க முயல, அவர், வாதாபியைத் தம் மந்திர பலத்தினால் அழித்துக்கொன்றனர் என்பர். ஆர் இடர் - நிறைந்த இடர் ; அதாவது, பேரிடர் ; பொருந்திய இடரும் ஆம்.

பி - ம். 1. துண்டவை துறந்தோன் ; னீரை முழுதுண்டவை.

2. ஆயவத லாலமரு ; ஆயவ னாலமரும் ; ஆயவத னாலமரு ; ஆய வது மாலமரும் மெய்யுடைய தன்னான்.

3. மாயவிதன் வண்மைக் ; வாதவிதன் வண்மைக், மாயவிவன் வண்மை ; மாயவ்வன் வன்மைக்; வாளவுணர்மாய ;

4. ஞேரிடர் களைந்தான் ; களைந்தோன் ; கடிந்தான். (38)

156. யோகமுறு பேருயிர்க டாமுலைவு றுமல்
ஏகுநெறி யாதென மிதித்தடியி னேறி
மேகநெடு மாலைதவழ் விந்தமெனும் விண்டோய்
நாகமது நாகமுற நாகமென நின்றான் ;

(மேலும், அவர்), யோகம் உறு பேர் உயிர்கள் தாம் - முயற்சியை மேற்கொண்டு வாழும் பெருங் கணக்கில் உள்ள சீவன்கள், உலைவு உறாமல் - துன்பம் அடையாதபடி, ஏகும் நெறி யாது என - (இந்த விந்தமலையைக்) கடந்து செல்லும் வழி யாது என்று (தேவர்கள்) அவ் வகத்திய முனிவரைக் கேட்டுக் கொள்ள, அடியின் மிதித்து ஏறி - தம் காலடிகளால் மிதித்து அம் மலைமீது ஏறி, மேகம் நெடு மாலை தவழ் - மேகங்களின் பெரிய வரிசைகள் படிந்து ஊரப் பெற்ற, விந்தம் என்னும் - விந்திய பருவதம் என்னும், விண் தோய் - ஆகாய மளாவி உயர்ந்த, நாகம் அது - மலையானது, நாகம் உற - கீழே உள்ள பாதாள உலகைப் போய் அடையும்படி ஆழ்ந்து போக, நாகம் என நின்றான் - ஒரு யானை போலப் பெருமிதத்துடன் நிமிர்ந்து நின்று, அதன் செருக்கை அடக்கி உலகுக்கருள் புரிந்தவர்.

யோகம் - சம்பாத்தியம்; சிவனுபாயமும் ஆம் ; விந்த மலை சூரிய சந்திரர் முதலான கிரகங்களைப் பகைத்து, அவற்றின் கதியைத் தடை செய்யுமாறு வானளாவி எழுந்து நின்றமையால், காலங்கள் முறைமாறிப் போக, தேவர்கள் அகத்தியரை அணுகி, அக்குறை தீர்க்கக் கேட்டுக் கொள்ள, அவர் அந்த விந்தமலையைத் தம் பாதத்தால் மிதித்து அதன் மேலே ஏறினர். அதனால் அம்மலை பூமியின் கீழ் உள்ள பாதலத்திற் சென்று ஆழ்ந்து போயிற்று என்பது புராண வரலாறு. அகத்தியர் விந்தமலையை ஆழ்த்தியது ; நன்னெறி. 37. மாலை - ஒழுக்கம் அல்லது வரிசை ; (பிங்). 'மாலை வண்டன மாலைக்கண் கொண்டவே' (சீவக. 2397.) ; நாகம், இங்குப் பல பொருள் குறித்த ஒரு பெயர்த் திரிசொல் ; ஒப்பு. 'நாகமு நாகமு நாண நடந்தான்' (பால : கார்முகப் : 32); வி - பா- தீர்த்த யாத்திரை : 10. குலோத். 34 ; இராசராச சோழனுலா. 237.

இதன் பின், ஒரு பிரதியில் உழக்கும்மறை என்று தொடங்கும் (158) செய்யுள் உள்ளது.

பி - ம். 1. ஓசையுறு ; முலைவுறுவன் (ஏக).
2. ஏக நெறி.
3. மேக நெறிமாலை ; விந்தை யெனும் விண்டோய்.
4. நாச முற.

157. மூசரவு சூடுமுத லோனுரையின் மூவா
மாசிறவ வேகென வடாதுதிசை மேனாள்
நீசமுற வானினெடு மாமலய நேரா
ஈசனிக ராயுலகு சீர்பெற விருந்தான் ;

மேல் நாள் - முன்னொரு காலத்தில், வடாது திசை - வடக்குத் திசை, நீசம் உற - பள்ளமுற, (அதாவது, கீழ் ஆழ்ந்துபோக, அது கண்டு), மூசு அரவு சூடு முதலோன் - நெருக்கமாகப் பல அரவுகளை ஆபரணமாகத் தரித்த தலைமைத் தெய்வமான சிவபிரான், 'மூவா - முதிர்ந்து தளர்ச்சியடையாத, மாசு இல் தவ - குற்றமில்லா நற்றவத்தினையுடைய அகத்தியனே! ஏகு என - நீ (தெற்குத் திசைநோக்கிச்) செல்வாயாக' என்று சொல்ல, வானின் நெடு மா மலயம் நேரா - ஆகாய மட்டும் உயர்ந்து நீண்ட பெரிய மலய மலையை அடைந்து, ஈசன் நிகராய் - பரமசிவனுக்குச் சமனாக, உலகு சீர்பெற - உலகம் தாழாமல் சமநிலையை அடைய, இருந்தான் - அங்கு (அம் முனிவர்) தங்கியிருந்தார்.

மூசரவு - வலிய, அல்லது கொடிய அரவும் ஆம். உரை - கீர்த்தி. வடாது திசை - வடக்குத் திசை ; வடாது (புறநா. 6 : 1). இது வடா திசை எனவும் வரும் ; வடக்கே உள்ளது வடாது ; இது, மருஉமொழி. பால. மிதிலைக் காட்சி : 130. நீசம் - தாழ்வு ; எதிர் மொழி, உச்சம் ; நீசம், எனும் நிலைகள், சோதிட நூலில் கிரகங் களின் கதிகளில் கூறப்பெறுவது காண்க. மா மலயம் நேரா, ஈசனிகராய் என்றமையால், ஈசனுக்கு அகத்தியரும், ஈச னிருக்கும் கயிலைமலைக்கு மலய மலையும் நிகராக விளங்க எனக் கொள்க. அகத்தியர் ஈசனுக்கு நிகரானவர் ; 168. இனி, 'நேமி நெடு மா மலையை மேவா' என்னும் பாடங்கொண்டு, சக்கரவாள கிரியைப் பொருந்தி என்பது (பழய உரை).

பி - ம். 1. மூசரவு சூடி முதலாய தனிமூவர் ; முதலோனி னுரைமூவா ; னுரையுமூவா ; னுலகின்மூவா ; யுரையின் மேவா ;

2. மாசில னேகவில விடாது லகமேனாள் ; ஈசனவ னேவலின் வடாது திசைமேனாள் ; வடாது லகமேனாள் ; மாசில னேவிட வடாது திசை நின்ற ; யேசவது கொண்டு லைவுறுது லகுபேண ; மாசிற நேர்வில் வடாது லகமென்னா.

3. மேவுநெடு ; வானினெடு ; நீசமறமேவு ; நெடு மாமலையை மேவா ; நீசமற நேமிநெடு மாமலையைமேவா ; மாமலய மேவி ; நீசமறமான நெடு மாமலய வேவா.

4. நேர்பெற விருந்தான். (40)

158. உழக்குமறை நாலினு முயர்ந்துலக மோதும்
வழக்கினு மதிக்கவையி னும்மரபி னாடி
நிழற்பொழி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கண்
தழற்புரை சுடர்க்கடவு டந்ததமிழ் தந்தான்.

(அம் முனிவர்), நிழல் பொழி - ஒளியைப் பொழிகின்ற, கணிச்சி - மழுவையும், மணி நெற்றி - அழகிய நெற்றியானது, உமிழ் செம் கண் - தோற்றுவிக்கின்ற சிவந்த கண்ணையும், தழல் புரை சுடர் - நெருப்புப் போன்ற ஒளிவீசும் திருமேனியையும் உடைய, கடவுள் - தெய்வமாகிய சிவபிரான், தந்த - தமக்கு உபதேசித்து அருளிய, தமிழ் - தமிழ் மொழியை, உழக்கு மறை நாலினும் - வருந்தி ஓதி யறியக்கூடிய, இருக்கு, யஜுர், ஸாமம், அதர்வணம், என்னும் நான்கு வேதங்களாகிற நூல் வழக்கினாலும், உலகம் உயர்ந்து ஓதும் வழக்கினும் - உலகத்தில் உள்ள ஆன்றோர் கூறும் உலக வழக்கினாலும், மதி கவையினும் - தம் புத்தியினால் செய்யும் ஆராய்ச்சியைக் கொண்டும், மரபின் - மரபு முறைப்பட, நாடி - நன்கு ஆராய்ந்து, தந்தான் - இலக்கணம் நன்கு அமைத்து அருளினவர் ஆவர்.

உழக்கு மறை - கனம், ஜடை முதலிய முறையே அப்பியசித்து ஸ்வரம் தவறாமல் ஓதி உணரத்தக்க மறை; இதனால் வேதம் ஓது வதில் உள்ள பரிசிரமம் விளங்கும். நிழல் - ஒளி. தழற்புரை சுடர்க் கடவுள் - 'எரிபோல் மேனிப்பிரான்' (தேவாரம்). சிவபெரு மான் அகத்தியர்க்குத் தமிழ் மொழியை அறிவித்தது, 'ஆதியில் தமிழ் நூல் அகத்தியற் குணர்த்திய மாதொரு பாகனை வழுத்துதும்' என்ற சேனாவரையர் வாக்காலும், 'தமிழ் மொழியைக் குடமுனிக்கு வகுத்துரைத்தார் கொல்லேற்றுப் பாகர்' என்ற திருவிளையாடற் புராணமுடையார் கூற்றாலும் அறியலாம். அகத்தியர் அருளிய இலக்கணம், அகத்தியம் எனப்படும். மரபினாடி; 'மயங்கா மரபி னெழுத்து முறைகாட்டி' என்றாற் போல; (தொல். பாயிரம்). 'தழற் புரை சுடர்க் கடவுள்'; - சிவபிரான்; ஒப்பு. 'தழலையே அனையவன்' (பால: எதிர்கோள்: 19); 'செங்கண் தழற்புரை சுடர்க்கடவுள்' என்பதற்கு, சிவபெருமானது சிவந்த நெற்றிக் கண்ணின் தழலை யொத்த சூரியன் எனப் பொருள் கொள்வாரும் உளர்; 'சூரிய பக வான் கொடுத்த தமிழையுண்டாக்கினவர்; மதிக்கவையினும் - புத்தி கப்பு விட்டதனாலும்' என்பன (பழைய உரை). மரபினாடித் தந்தான்; ஒப்பு. தொல். சிறப்புப்பாயிரம். கடவுள் தந்த தமிழை, அகத்தியன், நூலினும், வழக்கினும், மரபின் நாடித் தந்தான் என்க. 'என்று

முளை தென்றமிழ்' (164) என்றமையால், அகத்தியன் தந்தது இலக்கணமே என்க. 'தென்றமிழுரைத்தோன்' என்ற சுந்தர. 462-க்கு எழுதியுள்ள உரைக்குறிப்பையும் காண்க.

பி - ம். 1. முய்ந்துலக மோதும்.
2. மதிக்கவயின்; மதிக்கவியினும்; மதித்தவயினு; மதிக்கவினினும் மரபினுடி; மரபினேடி; விதிக்கும் வகை தம்மரபினுடி; வழக்கென விதிக்க வினிலு மரபுநாடி.
3. நிழற்பொலி; நெற்றியுறு; கணிச்சிதிகழ்; கணிச்சியணி.
4: அழற்புரை; அழற்புகை யுடைக்கடவுன்; தந்தோன். (41)

முனிவர் இராமபிரானைக் கண்டு மகிழ்ந்து, அவர்களைத் தம் ஆச்சிரமம் அழைத்துச் செல்லுதல் 159—65

159. விண்ணினி னிலத்தினில் விகற்பவுல கிற்பேர்
எண்ணினி லிருக்கினி லிருக்குமென யாரும்
உண்ணினை கருத்தினை யுறப்பெறுவெ னுலென்
கண்ணினி லெனக்கொடு களிப்புறு மனத்தான்;

(மேலும் அம்முனிவர்), 'விண்ணினில்-தேவருலகத்திலும், நிலத்தினில் - இப்பூவுலகத்திலும், விகற்ப உலகில் - மாறுபட்டுள்ள பிற பல்வேறு உலகங்களிலும், பேர் எண்ணினில், பெரிய கணித நூல்களிலும், இருக்கினில் - வேதங்களிலும், இருக்கும் என - எப்பொழுதும் நிறைந்துள்ளதென, யாரும் உள் நினை கருத்தினை - யாவரும் மனத்தில் நினைக்கின்ற பரம்பொருளை, என் கண்ணினில் - என் கண்களால், உற பெறுவென் - இன்று நேரிற் காணப் பெறுவேன்,' என கொடு-என்று எண்ணிக் கொண்டு, களிப்பு உறு மனத்தான் - மகிழ்ச்சியடைகின்ற மனத்தையுடையவரானார். ஆல் - வியப்புப் பொருளை யுணர்த்தும் இடைச்சொல்.

'எல்லா உலகங்களிலும், கலந்து விளங்கும் பரம்பொருளாகிய இராமபிரானை நேரில் காணும் பேறு பெறுபவனுவேன்' என்று களிப்புற்ற மனத்தினராய் இருந்தார் அகத்தியமுனிவர் என்க. 'யாரும் உண்ணினை கருத்து - யாவராலும் உள்ளத்தின் கண்ணே நினைக்கப்படும் பேரறிவாகிய இராமன்; கருத்து - பேரறிவாகிய இராமன்;' என்பது பழையவுரை. எண்ணில்; எண் - தியானம்; கருத்து என்றும் கொள்ளலாம்.

பி - ம். 1. விகற்ப வுலகிற்பேர். 2. விருப்பனென.
3. கருத்தனை; யொருத்தனை; யுறப்படுவனுல்.
4, கண்ணிணை களிப் பெனெனவே; கருதுளத்தான். (42)

160. இரைத்தமறை நாலினொ டியைந்தபிற யாவும்
நிரைத்தநெறி ஞானநிமிர் கல்லினெடு நாளிட்
டுரைத்துமய னுருமறி யாதபொரு ளோவின்
றுரைத்ததுவு மாலெனு முணர்ச்சியி னுவப்பான்.

'இரைத்த - (உச்ச நிலையில்) கோஷிக்கின்ற, மறை நாலின் ஒடு - வேதங்கள் நான்கோடு, இயைந்த - பொருந்திய, பிற யாவும் - மற்ற சாஸ்திர புராணங்கள், முதலிய நூல்கள் அனைத்தும், நிரைத்த- முறையே பயின்ற, நெறி ஞானம் - நன்னெறியின் வழியே உண்டான ஞானம் என்னும், நிமிர் கல்லில் - உயர்ந்த உரைகல்லின், நெடு நாள் இட்டு உரைத்தும் - பல நாட்கள் இட்டு உரைத்துப் பார்த்தும், அயனும் அறியாத - பிரமதேவரும் அதன் சிறப்புத் தன்மையைக் கண்டறிய முடியாத, பொருளோ - அப்பரம்பொருள் தானோ, இன்று உரைத்து உதவும் ஆல் - என் எதிர், காட்சி தந்து என்னொடும் பேசி அருள்செய்யும் போலும்' எனும் - என்கின்ற, உணர்ச்சியின் - மன எழுச்சியால், உவப்பான் - களிப்புள்ளவரானார்.

அரிய பொன்னை உரைத்து மாற்று அறிவது போல, வேதங் கள் சாஸ்திரங்கள், பிற நூல்கள் முதலியவற்றைப் பயின்ற ஞானத் தாலும் ஆராய்ந்தறிய முடியாத சிறப்புத் தன்மையையுடைய பரம் பொருள் என்க. இக்கருத்துக் கொண்டே, 'மாற்றறியாத செழும் பசும் பொன்னே' என்று இறைவனை விளித்துச் சிறப்பித்தார் இராமலிங்க சுவாமிகளும்.

பி-ம். 1. நான்கினொடு : டியைந்த பொருள்; டிசைந்த பொருள்.
2. நிரைத்த நெடு ; நிரைத்து நெறி ; ஞானநிமிர் கோவினொடு ; கல்விநெடு.
3. டரைத்தும் அரனுனுமறியாத : அயனுருமுணராத பொருளே நின் ; பொருணேர்நின்.
4. உரைக்குதவு மாலெனவே ; உரைத்துதவ வந்ததெனவே ; மனமுவந்தான்.

(43)

161. உய்ந்தன ரிமைப்பில ருயிர்த்தனர் தவத்தோர்
அந்தண ரறத்தினெறி நின்றனர்க ளானார்
வெந்திற லரக்கர்விட வேர்முத லறுப்பான்
வந்தனன் மருத்துவ னெனத்தனி வலிப்பான்.

'வெம் திறல் அரக்கர் - கொடிய வலிமை வாய்ந்த இராக்கதர் களாகிய, விட வேர் முதல் அறுப்பான் - விடவேரை அடியோடு

அறுக்கும் பொருட்டு, மருத்துவன் வந்தனன் - வைத்தியன் போன்ற இராமபிரான் இங்கு வந்து விட்டான்; (இனி), இமைப்பு இலர் - இமைத்தல் இல்லாக் கண்களையுடைய தேவர்கள், உய்ந்தனர் - துன்பத்தினின்றும் நீங்கி ஈடேறினார்கள்; தவத்தோர் உயிர்த்தனர் - தவம் செய்யும் முனிவர்கள், உயிர் பெற்றவர்கள் ஆனார்கள்; அந்தணர் அறத்தின் நெறி நின்றனர்கள் ஆனார் - பிராமணர்களும் தரும மார்க்கத்தில் நின்று ஒழுகலாயினர்;' என - என்று எண்ணி, தனி வலிப்பான் - ஒப்பற்ற துணிவு கொள்வாராயினர், (அவ்வகத்திய முனிவர்)

ஆனார் என்பதை இமைப்பவர்க்கும், தவத்தோர்க்கும் கூட்டியுரைக்கப்பட்டது. தவத்தினர் என்பது வானப்பிரத்த நெறியில் உள்ள முனிவர் என்றும், அந்தணர் என்பது இல்வாழ்க்கையில் உள்ள வேதியர் என்றும் கொள்ளற்பாலது. மருத்துவன்-வைத்யன்; திருமாலே தன்வந்திரி பகவானாகத் தோன்றிய ஆதி வைத்தியர் ஆதலானும், ஸம்ஸார ஜன்ம வியாதிகளையே போக்குபவராதலானும், விஷ்ணு சஹஸ்ர நாமஸ்தோத்திரத்தில், 'பேஷஜம், பிஷக்' என்ற நாமங்களால் அவர் அழைக்கப்பெறுவதாலும், மருத்துவன் என்ற பெயர் ஸ்ரீராமபிரானுக்குப் பொருந்தும் என்க. மேலும், ஸ்ரீராமபிரான் தன் கூரிய பாணங்கொண்டு அரக்கராகிய விஷவேர் அறுத்து உலகுக்குற்ற கொடிய துயராகிய நோயைப் போக்க வந்தமை நோக்கி, வைத்திய சாஸ்திர நிபுணரான அகத்திய முனிவர் ஸ்ரீராமபிரானை விஷ வைத்தியனாகவும் அஸ்திர சஸ்திர வைத்யனாகவும் சிறப்பித்தார் எனவும் கொள்ளலாம். விடம் - உலக சமூகத்தில் ஊடுருவிச் சென்று வருத்தி வந்த விஷம்; இச்செய்யுள் உருவகம்.

பி - ம். 1. தந்தன ரிமைப்பிலர்; உயர்ந்தன ரிமைப்பிலர்.
2. நின்றனர்க ளானாக்; அகன்றகற நோனு; அகன்றதினி மாறு.
3. வெந்துயரரக்கர். 4. னெனக் கருதுகின்றா. (44)

162. ஏனையுயி ராமுலவை யாவுமிடை வேவித்
தூனுக ரரக்கருரு மிற்சுடு சினத்தின்
ஆனவ னலைக்கடி தவித்துல களிப்பான்
வானமழை வந்ததென மைந்துறு மனத்தான்.

(அம் முனிவர் மேலும்), ஏனை உயிராம் உலவை யாவும் - தட்மொழிந்த உயிர்களாகிய வாடிய எல்லாவற்றையும், இடை

வேவித்து - தமக்கு உணவு வேண்டும்போதெல்லாம் வேகவைத்து, ஊன் நுகர் - அவர்களின் மாமிசங்களை உண்ணும், அரக்கர் - இராக்கதர்கள் என்னும், உருமில் சுடு சினத்தின் - இடியைப் போன்று சுட்டெரிக்கின்ற கோபத்தினலான, கான அழலை - காட்டுத் தீயை, கடிது அவித்து - விரைவில் அழித்து, உலகு அளிப்பான் - உலகத்தைக் காக்கும் பொருட்டு, வான மழை வந்தது என - மேகத்தினின்றும் மழை வந்தது என்று, மைந்து உறு மனத்தான் - விருப்பத்தையுடைய மனமுள்ளவர் ஆனர்.

ஏனையுயிர் - அரக்கர் ஒழிந்த மற்றை உயிர்கள். உலவை ; 121 ; ஊன் என்பதை ஆகுபெயராக உடலுக்கே ஆக்கிப் பொருள் கொள்ளலும் அமையும். அரக்கருக்கு, தாக்கி எரிக்கும் இடியோடு கூடிய அனல், உவமை ; இராமபிரானுக்கு, அனல் அவிக்க வரும் மேகம். 'வீருக்கிய பொற்கலன் வில்லிட வார மின்ன, மாருத் தனிச் சொற்றுளி மாரி வழங்கி வந்தான், காருக்க நிமிர்ந்து புகைந்து கனன்று பொங்கும், ஆருக்கன லாற்றுமோ ரஞ்சன மேகமென்ன' (அயோத். நகர்நீங்கு: 125) 'மைந்துறு மனத்தான் - இந்திரியங்களை ஒடுக்கி வலிமை பெற்ற மனத்தான்; மைந்து - வலிமை' என்பது பழைய உரை. இச் செய்யுள் உருவகம்.

பி - ம். 1. ஏனையுயிர் யாவுமுலர்கா னெனவெரிக்கும்; யுயிராமுதல; ரரமுலகில்; வேவத்; வேவா.
2. தானுகரரக்கர்; ருருவைச் சுடு; ருருவச்சுடு; ருருவிற்சுடு; ரரக்கரானுர்ச் சுடு சினத்தின்;
3. கானவனலைக்.
4. முந்துறு மனத்தான்; அமைந்துறு மனத்தான். (45)

163. கண்டன னிராமனை வரக்கருணை கூரப்
புண்டரிக வாணயன நீர்பொழிய நின்ருன்
எண்டிசையு மேழுலகு மெவ்வுயிரு முய்யக்
குண்டிகையி னிற்பொருவில் காவிரி கொணர்ந்தான்.

எண் திசையும் - எட்டுத் திக்குக்களும், ஏழ் உலகும் - ஏழு உலகங்களும், எ உயிரும் - எல்லாப் பிராணிகளும், உய்ய - நற்கதி அடையும் பொருட்டு, குண்டிகையினில் - தமது கடத்தில், பொருவு இல் - ஒப்பற்ற, காவிரி கொணர்ந்தான் - (பிரமலோகத்திலிருந்து) காவேரி என்னும் புண்ணிய தீர்த்தத்தை உலகிற் கொண்டு வந்தருளிய அகத்திய முனிவர், இராமனை வர கண்டனன் - இராம

பிரான் தம்மிடம் நாடிவரக் கண்டு, கருணை கூர - அன்பு பெருக, புண்டரிக - தாமரை மலர் போன்று, வாள் - ஒளிவீசும், நயனம் - தம் கண்களினின்றும், நீர் பொழிய நின்றான் - ஆனந்த பாஷ்பம் சொரிய நின்றார்.

கருணை கூர - அன்பு அதிகரிக்க ; 'கழிவுங் கூரும் மிகுதிப் பொருள' (தொல். உரியியல்). கருணை கூர, என்பதனைக் கண்டனன் என்பதனோடும் கூட்டலாம். ஏழுலகு - உலகில் உள்ள ஏழு தீவு களும் ஆம். குண்டிகை - கரகம் ; கடம் : இது தவசியர்க்கு உரிய, வாய் குறுகிய சிறு நீர்க்குடம். பொருவில் காவிரி ; கங்கை முதலிய பிற புண்ணிய நதிகளும் இந் நதியிற் படிந்து தம் கழிமலம் போக்கிக் கொள்ளும் தூய்மை வாய்ந்தது ஆதலின்; 'கங்கையிற் புனிதமாகிய காவிரி', என்று ஆன்றோரும் அருளியது காண்க; (தொண்டரடிப் பொடியாழ்வார். திருமாலை. 23). இக்கருத்துக் கொண்டே பின், 'தெய்வப் பொன்னி' (175) எனச் சிறப்பித்ததும் ஆம். காவிரி : காவேரி என்னும் வட மொழியின் திரிபு ; இது, கவேரன் என்னும் சோழ மன்னனின் கன்னியென்னும் மரபுபற்றி வந்த தத்திதாந்தப் பெயர் ; கவேர கன்னி - காவிரி ; 'தவா நீர்க் காவிரிப் பாவைதன் றாதை, கவேரனாங் கிருந்த கவேர வனமும்' (மணி. 3 : 55—56.) அகத்தியர் காவிரி கொணர்ந்த வரலாறு, ஆக்நேய புராணம், துலாகாவேரி மஹாத்மியத்தில் விரித்துக் கூறப் பெறுவது காணலாம்.

பி - ம். 1. மனக்கருணை ; னிராமனுருவைக்.
4. பெரிய காவிரி ; பொருனை காவிரி ; நீர் பெரிய காவிரி : குண்டிகை தனிற் பொருவில் காவிரி. (46)

**164.** நின்றவனை வந்தநெடி யோனடி பணிந்தான்
அன்றவனு மன்பொடு தழீஇயமுத கண்ணன்
நன்றுவர வென்றுபல நல்லுரை பகர்ந்தான்
என்றுமுள தென்றமி ழியம்பியிசை கொண்டான்.

நின்றவனை - (நயன நீர் பொழிய) நின்ற அந்த அகத்திய முனிவரை, வந்த நெடியோன் - அங்கு வந்த நெடுமாலாகிய இராமபிரான், அடி பணிந்தான் - அடிபணிந்து வணங்கினான் ; அன்று - அப் பொழுது, என்றும் உள - உலகந்தோன்றிய காலமுதற்றோன்றி

யுள்ள, தென் தமிழ் - தேன் போன்று இனிய தமிழ் மொழியை, இயம்பி - (இலக்கண மூலமாய் உலகுக்கு) எடுத்துக் கூறி, இசை கொண்டான் - கீர்த்தியடைந்தவரான, அவனும் - அந்த அகத்திய முனிவரும், அன்பொடு தழீஇ - அன்போடு அவ்விராமபிரானைத் தழுவிக் கொண்டு, அழுத கண்ணன் - (ஆனந்தக் கண்ணீர் பெருக) அழுத கண்களையுடையவராய், 'நன்று வரவு என்று - உன் வருகை நலம் தருவதாக' என்று, பல நல் உரை பகர்ந்தான் - பல நல்ல உபசார மொழிகளைக் கூறி வரவேற்றார்.

நெடியோன் - திரிவிக்கிரமனாய் முன் விசுவரூபமெடுத்த திருமாலே இராமபிரானாக வந்துள்ளான் என்றதைக் குறிப்பிட்டபடி. என்றுமுள தென் தமிழ்; அகத்தியரால் தமிழ் உண்டாக்கப்பட்டது என்பார் கொள்கையை மறுத்து, தமிழ் மொழி அநாதியானது என்பதை வற்புறுத்தி யுரைத்ததாம்; சுந்தர. 462 ஐயும் அதன் உரையையும் நோக்குக. தென் தமிழ் - தேன் போன்ற இனிமையுடைய தமிழ்; தென் - தேன் என்பதின் குறுக்கல் விகாரம். தென் - அழகும், இனிமையும் ஆம்; இனி தென் தமிழ் என்பதற்குத் தெற்கு நாட்டில் பயிலப் பெற்று வரும் தமிழ் எனக் கொள்ளலும் ஒன்றும்.

பி - ம். 1. வந்து நெடியோனடி வணங்க; நெடியோ னடிபணிந்தான்.
2. அன்றவனை. 4. ழியம்புமிசை கொண்டான். (47)

165. வேதியர்கள் வேதமொழி வேறுபல கூறக்
காதன்மிக நின்றொளிர் கமண்டலுவி னன்னீர்
மாதவர்கள் வீசிநெடு மாமலர்க டூவப்
போதுமண நாறுகுளிர் சோலைகொடு புக்கான்.

வேதியர்கள் - வேதமோதியுணர்ந்த அந்தணர்கள், வேறு பல - இருக்கு, யஜுர், ஸாமம், அதர்வண மென்று பல வேறு வகைப்பட்ட, வேத மொழி கூற - வேத மொழிகளான மங்கல வாழ்த்துக்களைக் கூறி வாழ்த்தவும், மாதவர்கள் - பெரிய தவசிகளான முனிவர்கள், காதல் மிக - அன்பு அதிகரிக்க, நின்று - எதிரே நின்று, ஒளிர் கமண்டலுவின் நல் நீர் வீசி - ஒளி வீசும் கமண்டலு என்னும் தம் பாத்திரங்களில் உள்ள பரிசுத்தமான புண்ணிய தீர்த்தத்தை மந்திரத்தோடு வீசித்தெளித்து, நெடு மா மலர்கள் தூவ - அழகிய மலர்களைத் தொடர்ந்து தூவி ஆசிர்வதிக்க, (அகத்திய முனிவர்),

பேர்து கணம் நாறும் - அப்பொழுது மலர்ந்த பூக்களின் நறுமணம் கமழும், குளிர் சேர்லே கொடு - குளிர்ச்சியான தம் தவச்சாலையுள்ள சோலேக்குள் அழைத்து கொண்டு, புக்கர்ன் - போயடைந்தார்.

கமண்டலு : இது கமண்டலம் எனவும் வழங்கும் ; தவசிகளும் துறவிகளும் கொள்ளும் நீர்க் கரகம். இது குண்டிகையெனவும் கூறப்பெறும் ; 163. ஆசீர்வாத முகமாய் வேத மொழிகளைக் கூறி வாழ்த்தெடுப்பதும், மந்திர பூர்வகமாய்ப் புண்ணிய தீர்த்தத்தைக் கொண்டு புரோக்ஷணம் செய்வதும், நறுமலர் தூவுவதும் வைதிக முறையிற் செய்யப்பெறும் சிறந்த வாழ்த்துக்களும் உபசாரங்களும் ஆம் என்க. போது : அப்பொழுது மலரும் நிலேயில் உள்ள மலர் : 'காலே யரும்பிப் பகலெல்லாம் போதாகி' (குறள். 1227.)

பி - ம். 1. வேறு பல கூறிக்; வேறு பலர் வேதமொழி.
2. காதன் மறையோரெழில்.
3. வீசிநறு. 4. புக்கார். (48)

அகத்தியர் இராமபிரானை உபசரித்தல் 166—170

166 பொருந்தவம லன்பொழி லகத்தினிது புக்கான்
விருந்தவ ணமைத்தபின் விரும்பினன் விரும்பி
இருந்தவ மிழைத்தவென தில்லிடையில் வந்தென்
அருந்தவ முடித்தனே யருட்கரச வென்ருன்.

அமலன் - பரிசுத்தனுன இராமபிரான், பொழில் அகத்து - அந்தத் தவச்சோலேயில், பொருந்த - தன் மனம் விரும்பித் தங்கி யிருக்க, இனிது புக்கான் - மகிழ்ச்சியுடன் போய்ச் சேர்ந்தான்; அவன் - அம்முனிவர், விரும்பினன் - விருப்பமுற்றவராகி, விருந்து அமைத்தபின் - (இராமபிரான் முதலினேர்க்கு) விருந்து செய்து உபசரித்த பிறகு, (அவனைநோக்கி), 'அருட்கு அரச-அருள்புரிவதிற் சிறந்தோனே ! இரும் தவம் இழைத்த எனது இல் இடையில் - பெரும் தவம் செய்துள்ளதான இந்த என் ஆச்சிரமத்தினிடத்து, விரும்பி வந்து - நீ விருப்பத்துடன் எழுந்தருளி, என் அரும் தவம் முடித்தனே - என் அரிய தவத்தை நிறைவேற்றி வைத்தாய்' என்ருன் - என்று அன்புடன் உபசார மொழி கூறினுர்.

விரும்பி யிருந் தவமிழைத்த எனது, எனத் தொடர்ந்த முறையே பொருள் கொள்வாரும் உளர். ஆனல், தம் தவத்தைத் தாமே சிறப்பித்துக் கொள்ளாமல், வந்த விருந்தினரைச் சிறப்பிப்பதே ஆன்ருேர் மரபு ஆதலின், விரும்பி வந்து என இயைத்துப் பொருள்

கொள்ளப்பெற்றது. 'அருட்கரச' என்றது, இராம்பிரான் பேரருள் கொண்டு தம்மை நாடி வந்து அருள்புரிந்த பெருமை தோன்ற முனிவர் கூறியது ஆகும். மேலும், அம் முனிவர் இராம்பிரான் தெரிசனமே பெரும் தவப்பயனுய்க் கருதியதும், தவம்செய்து மேலும் அடையக் கூடிய பேறு வேறு இல்லையென்று கொண்டதுமான துணிவு புலப்பட அருந்தவம் முடித்தனே என்று தெரிவித்ததும் ஆம். இருந்தவம் இழைத்த எனது இல்லில், என்று உணர்த்தும் இவ்வுபசார மொழி, இவ்வில் நீ வரப் பெருந்தவம் செய்தது எனக் கூறியது ; இது, தம் மில்லம் நாடி வந்த கண்ணபிரானைக் கண்டு மகிழ்ந்த விதுரன் கூற்றினை (வி. பா. கிருட்டினன் றூது : 80) நினைப் பூட்டுகின்றது.

பி - ம். 1, பொருந்தவண் மலர்ப்பொழி ; பொருந்து மமலன் ; வமலன் மலர்ப்பொழி.
2. விருந்தவ னமைத்தவை ; விருந்தவ னளித்தவை ; யுகந்தபின் : விரும்பின விரும்பி ; அமைந்தபின்.
3. இருந்தவ மியற்றுமென. 4. அருந்தவ நிரப்பினை. (49)

167. என்றமுனி யைத்தொழு திராம னிமையோரும்
நின்றதவ முற்றுநெடி யோரினெடி யோரும்
உன்றனருள் பெற்றிலர்க ளுன்னருள் சுமந்தேன்
வென்றன னனைத்துலகு மேலினியெ னென்ருன்.

என்ற முனியை - என்று கூறிய அகத்திய முனிவரை, இராமன் - இராமபிரான், தொழுது - வணங்கி, 'இமையோரும் - தேவர்களும், நின்ற தவம் - தாம் செய்ய வேண்டியதான தவத்தை, முற்று - பூர்த்தியாகச் செய்து முடித்த, நெடியோரின் நெடியோரும் - மேலோர் யாவருக்கும் மேலோரான மா முனிவர்களும், உன்றன் அருள் பெற்றிலர்கள் - உமது அநுக்கிரகத்தை பெற்ருர் அல்லர் ; உன் அருள் சுமந்தேன் - (அப்படியிருக்க யானே) உமது அருளைப் பெரிதும் சுமந்தவனுனேன் ; (ஆதலின்), அனைத்துலகும் - எல்லா உலகங்களையும், வென்றனன் - நான் வென்றவனுனேன் ; மேல் - இதற்கு மேலாக, இனி என் - இனி எனக்கு ஆகக் கூடியது என்ன இருக்கிறது ?', என்ருன் - என்று மறுமொழி கூறினுன்.

உன்னருள் சுமந்தேன், என்றது - என் தகுதிக்கு மேலாக நீ எனக்கு அருள் புரிந்தாய் என்பதாம் ; இராமபிரான், அகத்தியரால்

தெய்வப்படைகள் முதலியன பின் அருளப்பெற்ருனெனினும் அதனை முற்கூட்டியே உணர்ந்து கூறியதும் ஆம் என்க. இமையோரும், நெடியோரும் என்பவற்றின் உம்மைகள் உயர்வு சிறப்பின.

பி - ம். 1. னெனையோரும்.
2. முற்ற நெடிதோரும்; முற்றிநெடியோரும்.
3. பெற்றவர்கள்.
4. மேலினி யனென்ருன்; மேலினிய வென்ருன்; மேலிதெனென்ருன். (50)

இதன் பின், ஒரு சுவடியில் அடியிற்காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

எண்டகு குணத்தமல னிவ்வகை யியம்பத்
தெண்டிரை முகந்துமிழ் செழுந்தவ னுரைப்பான்
கண்டெனது நற்றவ நலச்செயல் கருத்திற்
கொண்டுதவி வந்தனையெ னக்கொர்குறை யுண்டோ.

168. தண்டகவனத்துறைதி யென்றுரை தரக்கொண்
டுண்டுவர வித்திசை யெனப்பெரி துவந்தேன்
எண்டகு குணத்தினை யெனக்கொடுயர் சென்னித்
துண்டமதி வைத்தவனை யொத்தமுனி சொல்லும்.

உயர் சென்னி - தன் உயர்ந்த தலையில், துண்ட மதி - பிறைச் சந்திரனை, கொடு - கொண்டு, வைத்தவன் - வைத்துக்கொண்டவனை சிவபிரானை, ஒத்த - நிகர்த்த, முனி - அகத்திய முனிவர் (இராமபிரானை நோக்கி), ‘ எண் தகு குணத்தினை - யாவரும் மதிக்கத் தக்க நற்குணமுடைய இராமா! தண்டகவனத்து உறைதி என்று - தண்டகாரணியத்தில் நீ வசிக்கிருய் என்று, உரை தர கொண்டு - (இங்கு வரும் முனிவர்கள் முதலினேர்) கூறிய சொல்லைக் கேட்டு, உண்டு வரவு இ திசை என - இந்தப் பக்கம் நீ வருவதுண்டு என்று, பெரிது உவந்தேன் - பேரானந்தம் கொண்டவனுனேன் ;’ (என்று), சொல்லும் - மேலும் சொல்வாரானர். (சொன்னவை அடுத்துவரும் இரு செய்யுட்களிற் காண்க.)

எண் தகு குணம் - எட்டு மேலான குணங்களைக் குறிப்பதும் ஆகும்; ‘ எண் குணத்தான் ’ என்று கடவுளைக் குறிப்பிடுவதும் (குறள் 9). காண்க. துண்டமதி - பிறைத்துண்டு: அதாவது,

சந்திரனது ஒரு பகுதியான இளம் பிறை. அகத்தியர் சிவபெருமானுக்கு நிகரானவர் என்பது, 157, 158.

பி - ம். 1. தண்டக வனத்தமைதி ; துறைதிர்.
3. எண்தபு குணத்தினை ; எண்தகு குணத்தினை.
4. வைத்தவனு மொத்த முனி.

(51)

169. ஈண்டுறைதி யையவினி யிவ்வயி னிருந்தால்
வேண்டியன மாதவம் விரும்பினை முடிப்பாய்
தூண்டுசின வாணிருதர் தோன்றியுள ரென்றால்
மாண்டுக மலைந்தெமர் மனத்துயர் துடைப்பாய்.

'ஐய - ஐயனே ! ஈண்டு உறைதி - இங்கு நீ தங்கியிருப்பாக ; இ வயின் இருந்தால் - இவ்விடத்தில் நீ இருந்தால், இனி - இனி மேல், வேண்டியன மாதவம் - நீ விரும்பிய பெரிய தவங்களை, முடிப்பாய் - நீ விரும்பியவாறே செய்து முடிப்பாய் ; (மேலும்), தூண்டு சின வாள் நிருதர் தோன்றி உளர் என்றால் - தூண்டப்பட்ட கோபத்தோடு கூடிய கொடிய வாள் ஏந்திய அரக்கர்கள் வந்தனர்கள் ஆனால், மாண்டு உக - அவர்கள் அழிந்து சிந்த, மலைந்து - அவர்களோடு போர் செய்து, எமர் - என் போன்ற முனிவர்களுடைய, மன துயர் - மனத் துன்பத்தை, துடைப்பாய் - போக்கியருள்வாய்.

இச் செய்யுளும் அடுத்த செய்யுளும் அகத்தியர் கூற்று. வேண்டியன மாதவம், தன் சிறிய தாய் கைகேயி கூறிய வண்ணம் ஆகும் தவங்கள் என்னலும் ஆம் ; (அயோத். கைகேசி சூழ்வினைப், 107). வாள் நிருதர் - வாள் போன்ற கொடிய நிருதர் என்னலும் ஒன்றும். இனி, வாள் என்பதற்கே கொடுமை என ஒரு பொருளும் உண்டு.

பி - ம். 2. வேண்டிய நன் மாதவம் ; விரும்பின.
4. மலைத்தெமர் ; மனத்திடர் தொலைப்பாய்.

(52)

170. வாழுமறை வாழுமனு நீதியறம் வாழும்
தாழுமிமை யோருயர்வர் தானவர்க டாழ்வார்
ஆழியுழ வன்புதல்வ வையமிலை மெய்யே
ஏழுலகம் வாழுமினி யிங்குறைதி யென்றான்.

'ஆழி உழவன் புதல்வ - ஆக்ஞா சக்கரத்தை உலகெங்கும் செலுத்திய தசரத சக்கரவர்த்தியின் குமாரனே ! இனி மறை வாழும் -

(நீ இங்கு வதிதலின்) இனி, வேதங்கள் வாழ்வன ஆகும்; மனு நீதி வாழும் - மனுதர்ம சாஸ்திரமும் வாழ்வடையும்; அறம் வாழும் - முப்பத்திரண்டு தருமங்களும் வாழ்வுற்றோங்கும்; ஏழ் உலகம் வாழும் - ஏழு உலகங்களும் வாழ்வடையும்; தாழும் இமையோர் உயர்வர் - அரக்கர்களால் துன்புறுத்தப்பட்டுத் தாழ்ந்த நிலையிலிருந்து வருந்தும் தேவர்கள் உயர் நிலையை அடைவர்; தானவர்கள் தாழ்வார் - அரக்கர்கள் தாழ்வடைவர்; ஐயம் இலை - இதில் சந்தேகம் இல்லை; மெய்யே - இஃது உண்மையே ஆகும்; இங்கு உறைதி - ஆதலின் நீ இங்குத் தங்கி யிருப்பாயாக,' என்றான் - என்று அகத்திய முனிவர் கூறினர்.

ஆழி உழவன் : *111.*, குறிப். ஏழுலகு: பூமியின் பகுதிகளாகிய ஏழு த்வீபங்கள் : இனி, கீழேழு, மேலேழு உலகங்களைக் குறிப்பதும் ஆம். தானவர் என்பது தனு என்பாளிடம் தோன்றினவர் என்னும் பொருளால் அசுரர்களையே குறிக்கும்; ஆயினும், அசுரர்கள் போலக் கொடியவர்களாகிய அரக்கர்களாலே எல்லாவுலகமும் துயருற்று வருந்துகின்றமை நோக்கித் தானவர்கள் என்பதற்கு அரக்கர்கள் என்றே இங்குப் பொருள் கொள்ளப்பட்டது.

பி - ம். 3. மெய்யீர். 4. யீங்குறைதிரென்றான். (53)

இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணும் இரண்டு பாடல்கள் அதிகமாக உள்ளன.

1. என்றுபினு மாதவ னெடுத்தினி துரைப்பான்
அன்றமரர் நாதனை யருஞ்சிறையில் வைத்தே
வென்றிதரு வேற்றச முகப்பதக னாதி
வன்றிற லரக்கர்வலி மைக்குநிக ரியாரே.

2. ஆயவர்க டங்கள்குலம் வேரற மலைந்தே
தூயதவ வாணரொடு தொல்லமரர் தம்மை
நீதனி புரந்திடுதல் நின்கடன தென்றான்
நாயகனு நன்றெனவ வவற்குநவில் கின்றான்.

இராமபிரான் தான் அரக்கரை அழிக்கக் கருதியிருப்பதைக் கூற, முனிவர் அவனுக்குப் படைக்கலங்கள் சில அளித்து, தங்கியிருக்கத்தக்க இடத்தையும் கூறியது 171—6

171. செருக்குடை யரக்கர்புரி தீமைசிதை வெய்தத்
தருக்கழி தரக்கடிது கொல்வது சமைந்தேன்
வருக்கமறை யோயவர் வருந்திசையின் முந்துற்
றிருக்கைநல னெற்கருள்க வென்றன னிராமன்.

இராமன் - இராமபிரான், (அகத்திய முனிவரை நோக்கி), 'வருக்க மறையோய் - தொகுதியாகிய பலவகைப்பட்ட வேதங்களை யுணர்ந்தவரே! செருக்கு உடை அரக்கர் - கருவங் கொண்ட இராக்கதர்கள், புரி - செய்கின்ற, தீமை சிதைவு எய்த - கொடுமை அழிய, தருக்கு அழிதர - (அவர்களுடைய) கருவம் அழிய, கடிது கொல்வது சமைந்தேன் - அவ்வரக்கர்களை விரைவில் கொல்வதாக உறுதிசெய்து கொண்டேன்; (ஆதலின்), அவர் வரும் திசையில் முந்து உற்று இருக்கை நலன் - அவ்வரக்கர்கள் வரும் திசையில் (அதாவது தெற்குத் திசையில்) முன்னிருந்து எதிர் நோக்கியிருத்தல் நலமாகும்; எற்கு அருள்க - எனக்கு அதற்கு அனுக்கிரகித்து அனுமதி அளிப்பீராக!' என்றனன் - என்று கேட்டுக் கொண்டான்.

கொல்வது சமைந்தேன் என்றது, முன் தண்டகவனத்து இருடியர்க்கு அபயமளித்து உறுதி கூறியுள்ளதை எடுத்துரைத்தது; 134—139. வருக்க மறையோய் என்றது, வேதங்கள் நான்கையும் அதனைச் சார்ந்த அங்கங்களையும் பிறவற்றையும் உணர்ந்தவர் என்பதைக் குறிப்பிட்டபடி. அவர் வரும் திசை - இராவணன் முதலிய அரக்கர்கள் தெற்கே இலங்கையிலும் அதனைச் சார்ந்த இடங்களிலும் இருந்தனர் ஆதலின், அவர்கள் வரவு நோக்கி எதிர் பார்த்திருக்க விரும்பினன் இராமபிரான் என்பதாம். எற்கருள்க என்றது, 'அவ்வரக்கர்களை அழித்து முனிவர்களுக்கு யான் அளித்த உறுதி மொழி நிறைவேற உமது அருள் எனக்கு வேண்டும்', என்று அதன் உட்பொருள் தோன்றக் கூறியதும் ஆம்; அவ்வாறு இராமபிரான் கேட்டுக் கொண்டதற்கிணங்க, அகத்திய முனிவர் பின் இராமபிரானுக்கு, சிறந்த வில், அம்புகளோடு கூடிய அம்புப் புட்டில், வாள், அஸ்திரங்கள் முதலியன அளித்து அருள் புரிந்ததும் நோக்கத்தக்கது; 172—173.

பி-ம். 1. செருக்கடை யரக்கர்; செருக்கிடை யரக்கர்; சிதைவெய்தி.
4. நலனிற் கருளெனென்றனன்; னெற்கருள வென்றனன்; இருக்சு நிலனெற் கருளென்றனன். (54)

172. விழுமியது சொற்றனையிவ் வில்லிதிவண் மேனாள்
முழுமுதல்வன் வைத்துளது மூவுலகும் யானும்
வழிபட விருப்பதிது தன்னைவடி வாளிக்
குழுவழுவில் புட்டிலொடு கோடியென நல்கி,

(அம் முனிவர் இராமபிரானை நோக்கி), 'விழுமியது சொற்றனை - சிறந்த செய்தியே நீ கூறினும்; இவண் - இவ்விடத்தில், இ வில்

இது - இந்த வில், மேல் நாள் - முன்னொரு காலத்தில், முழு முதல்வன் வைத்து உளது - பரம் பொருளாகிய திருமால் வைத்துள்ளது; மூ உலகும் யானும் வழிபட இருப்பது - மூன்று உலகத்தவரும் யானும் ஆராதிக்க இருப்பது; இது தன்னை - இந்த வில்லை, வடி வாளி குழு - கூரிய அம்புக் கூட்டங்களை, வழுவு இல் - என்றுங் குறைபடாத, புட்டில் ஒடு - அம்புப் புட்டிலோடு, கோடி - ஏற்றுக்கொள்வாயாக;' என நல்கி - என்று சொல்லி அவற்றை அவ்விராமனிடம் கொடுத்து,

இந்தச் செய்யுண் முதல் 176 வரையுள்ள செய்யுட்கள் குளகமாய் அமைந்து, 'என்றான்' என்ற வினைகொண்டு முடிவு பெறும். முழு முதல்வன் என்பதைச் சிவபெருமான் எனப்பொருள் கொண்டாரும் உளர். திருமாலுடைய ஒரு வில்லையே அகத்தியர் இராமபிரானுக்குக் கொடுத்துதவியது என்பது, பின் (உயுத்த. மந்திரப்: 87வது) செய்யுளால் நன்கு விளக்கம் பெற்றிருப்பதாலும், வான்மீகம் ஆரண்ய: 11வது ஸர்க்கத்தில், அகத்தியர் கூறியதாக உள்ளதாலும் நன்கு விளங்கும். பரசுராமனால் முன் கொடுக்கப் பெற்றதும், பின் இராமபிரான் வருணனிடம் ஒப்பித்ததுமான வில்லை (பால. பரசு: 45) கரன் போரில் வருணன் கொண்டு வந்து கொடுத்து உதவினான் என்பது 539ஆல் விளங்குவது காணலாம். இப்பொழுது அகத்தியர் கொடுத்த வில் அதனின்றும் வேறானது.

பி - ம். 1. சொற்றினை; வில்லிறைவ மேனாள்.
2. விருப்பது மேருமலை வில்லோன்.
3. குழுவுவிழை. (55)

173. இப்புவன முற்றுமொரு தட்டினிடை யிட்டால்
ஒப்புவர விற்றென வுரைப்பரிய வாளும்
வெப்புருவு பெற்றவரன் மேருவரை வில்லா
முப்புர மெரித்ததனி மொய்கணையு நல்கா,

(மேலும் அம்முனிவர்), 'இ புவனம் முற்றும் - இவ்வுலக முழுவதையும், ஒரு தட்டின் இடை இட்டால் - ஒரு தராசுத்தட்டின் இடத்து (இதனை மற்றொரு தட்டில் வைத்து) நிறுத்தால், ஒப்பு வரவிற்று என - ஒப்பு ஆகக்கூடியது' என்று, உரைப்பு அரிய - சொல்வதற்கு அரிதான, வாளும் - ஒரு வாளையும், வெப்பு உருவு பெற்ற அரன் - அனல் வடிவு பெற்ற சிவபிரான், மேரு வரை வில்லா - மகாமேரு என்னும் மலையை ஒரு வில்லாகக் கொண்டு,

முப்புரம் எரித்த - திரிபுரங்களைச் சுட்டு எரித்த, தனி - ஒப்பற்ற, மொய் கணையும் - வலிய அம்பையும், நல்கா - (இராமபிரானிடம்) கொடுத்து,

ஒப்பு வரவு இற்று என - ஒப்பாக வருவது இல்லாதாகுமென, எனப் பொருள் கொள்ளலும் அமையும். வெப்பு உருவு பெற்ற அரன்; 'எரிபோன் மேனிப்பிரான்' (தேவாரம்) என்றமையும் நோக்குக. முப்புரம் எரித்த கணை; திருமாலைக் கணையாகக் கொண்டு, அதனைத் தூண்டாமலே எரித்த அதன் சிறப்புத் தோன்றுமாறு, தனி மொய் கணை எனப்பட்டது. நல்கா - நல்கி. சிவபிரான் திரிபுரமெரித்த காலை, மேருமலையை வில்லாகவும், திருமாலையே அம்பாகவுங்கொண்டமை, 'நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபங் கற்சாபம், பாணந்தான் மண்டின்ற பாணமே - தாணுவே, சீராரூர் வாழுஞ் சிவனேயஃ தெப்படிநீர், நேராரூர் செற்ற நினைவு' என்ற இரட்டையரும் காளமேகப் புலவரும் அருளிய வெண்பாவினால் அறியலாம். அகத்திய முனிவர், இராமபிரானுக்கு, 'வாளும், வில்லும், தூணியும் கொடுத்தா'ரென்று, கூர்மபுராணம் (இராமன் வனம்புகு: 35) கூறும். 'அந்த வில், திருமாலுடையது, விச்வகன்மனால் உண்டாக்கப் பட்டது என்றும், அந்த அம்பு, பிரமதேவரால் அளிக்கப்பெற்றது என்றும், அவ்வம்பும் இரு புட்டில்களும் வாளும் தேவேந்திரனால் கொடுக்கப்பெற்றவை என்றும், அகத்தியர் இராமபிரானிடம் கூறிக் கொடுத்தார்' என்று வான்மீகம் கூறும். 'அவருக்காகப் பலகாலமாய்த் தாம் வைத்திருந்த, மகேந்திரம் என்னும் மகத்தான வில்லையும், அக்ஷயமான அம்பறுத் தூணீரத்தையும், இரத்தினங்களிழைத்த ஒரு வாளையும் தந்தனர்' என்று, அத்யாத்ம ராமாயணம் கூறும். 'எரித்த கணை மொய்க்கவச நல்கா' என்ற பாடபேதத்தால் அகத்தியர் கவசமும் அளித்தார் என்ப தேற்படுகிறது; ஆனால் அதற்குப் பிற நூல் களில் ஆதாரமின்மையால் இங்குக் கொள்ளப்பெறவில்லை. முப்புர மெரித்த மொய்கணை: இதனை. 'எரிமுகப் பேரம்பு' என்பர்; சிலப். 6 ; 40-41.

பி - ம். 1. தட்டிடையி.

2. ஒப்பு வரவுற்றென; ஒப்புயர்வுற்றென; ஒன்வாள்: தொவ்வ.†

3. பெற்றுவரன்; பெற்றவுயர்; கொண்டவரன்.

4. மெரித்தகணை மெய்க்கவசம் நல்கா.

(56)

174. ஓங்குமர னோங்கிமலை யோங்கிமண லோங்கிப்
பூங்குலை குலாவுகுளிர் சோலைபுடை விம்மித்
தூங்குதிரை யாறுதவழ் சூழலதொர் குன்றின்
பாங்கருள தாலுறையுள் பஞ்சவடி மஞ்ச.

'மஞ்ச - மைந்தனே! ஓங்கு மரன் ஓங்கி - உயர்ந்த மரங்கள் நிமிர்ந்து வளரப்பெற்றும், மலை ஓங்கி - மலைகள் உயர்ந்து விளங்கப் பெற்றும், மணல் ஓங்கி - மணற் குன்றுகள் உயர்ந்து விளங்கப் பெற்றும், பூம் குலை குலாவு - பூங்கொத்துக்கள் விளங்கியும் உள்ள, குளிர் சோலை-குளிர்ந்த சோலைகள், புடை விம்மி - பக்கங்களில் தழைந்தோங்கப் பெற்றும், தூங்கு திரை ஆறு தவழ்-அசைந்தாடும் திரைகளோடு கூடிய நதிகள் பல தழுவிச் செல்லப் பெற்றும் உள்ள, சூழலது - சுற்றுப் புறங்களையுடையதான, ஓர் குன்றின் பாங்கர் - ஒரு குன்றின் அருகே, பஞ்சவடி - பஞ்சவடி என்னும், உறை உள் - ஓர் இருப்பிடம், உளது - இருக்கின்றது.

தூங்கு - அசைந்தாடும்; 'தூங்குங் களிறோ துயருறு' (நீதிநெறி: 38). பஞ்சவடி - ஐந்து ஆலமரங்கள் பொலிந்து விளங்கும் காரணம் பற்றி வந்த பெயர். இப்பொழுது அது நாஸிக் என்ற பெயரால் வழங்கும் இடம் என்பர். அகஸ்தியாச்சிரமத்திலிருந்து பஞ்சவடி இரண்டு யோசனை தூரமென்று வான்மீகமும், ஒரு காத தூரமென்று அத்யாத்மமும் கூறும். வடி - வட விருக்ஷம் உள்ள இடம்; வட விருக்ஷம் - ஆலமரம். மஞ்ச: மைந்த என்பதன் போலி; சுந்தர. 505. சூழல் - சுற்றிடம்.

பி-ம். 1. ஒங்கிமர.
4. பஞ்சவடி யென்றோர் தலமஞ்சா; மைந்த; மைந்தா. (57)

175. கன்னியிள வாழைகனி யீவகதிர் வாலின்
சென்னெலுள தேனொழுகு போதுமுள தெய்வப்
பொன்னியென லாயபுன லாறுமுள போதா
அன்னமுள பொன்னிவளொ டன்பின்விளை யாட.

'(அங்கு), கன்னி இள வாழை - மிக்க இளம் வாழைகள், கனி ஈவ - பழங்களைத் தருவன ஆம்; கதிர் வாலின் செந்நெல் உள - ஒளி பொருந்திய வாலோடு கூடிய சிவந்த சம்பா நெல் பயிர்களும் உள்ளன; தேன் ஒழுகு போதும் உள - தேன் வழிந்து விழும் புதுமலர்களும் உள்ளன; தெய்வ பொன்னி எனல் ஆய - தெய்வத் தன்மை பொருந்திய காவேரி என்று சொல்லத்தக்க, புனல் ஆறும்

உள - நன்னீரையுடைய நதிகளும் உள்ளன; பொன் இவளோடு அன்பின் விளையாட - திருமகளாகிய இப்பிராட்டியோடு அன்பு கொண்டு விளையாடுவதற்குரிய, போதா - பெருநாரைகளும், அன்னம் - அன்னப்பறவைகளும், உள - ஆங்கு உள்ளன.

கன்னி இள: ஒரு பொருட் பன்மொழி. கன்னியிள வாழை: அழியாது ஒன்றன் பின் ஒன்றாய்த் தொடர்ந்து வளரும் வாழை எனலும் ஒன்றும்; கன்னி - அழிவில் பொருள். (பிங்). சென்னெல்: செந்நெல் என்பது எதுகை நோக்கித் திரிந்து நின்றது: பஞ்சவடிப் பிரதேசம், நீர்வளம் மிகுந்தமையால் செந்நெற்பயிர் தாமே விளைவனவாகும். கதிர் வாலின் செந்நெல்: நெல்லுக்கு வால் போன்று நீண்டு கூரியதும், நுண்ணியதுமான ஓர் உறுப்பு உண்டு; 'நெல்வாலு மருத......வயிரப்படையான்' (86) என்றமையும் நோக்குக. போதா - புள்ளின் பேதம்; 'பெரு நாரையுமாம்' என்பது பழைய உரை. இனி, கதிர்வாலின் சென்னல் எனப்பாடங் கொண்டால், ஒளி பொருந்திய வாலோடு விளங்கும் சென்னல் என்னும் ஒருவகை மீனைக் குறித்ததும் ஆம். சென்னல் - ஒருவகைக் கெண்டை மீன். இவ்விதம் பாடங்கொள்ளுமிடத்து, அக் கெண்டை மீன் ஆற்று நீரில் புரண்டு புரண்டு செல்லுதல் அழகுடைத்தாகும்; ஆதலால், அக்காட்சி பிராட்டிக்கு மகிழ்ச்சியை உண்டாக்கும் எனக் குறிப்பிட்டதும் ஆம். போதா, அன்னம் என்பன நீர்வாழ் பறவைகள்; இவை மகளிர் விளையாடற் குரிய பறவைகள். பொன்னியெனலாய புனலாறு, என்றது கோதாவரியைக் குறித்தது. பொன்னி யெனலாயது; காவிரியோடு சேர்த்து எண்ணும் பெருமை பொருந்திய நதி யென்றும் கொள்ளலாம். பொன்னியை உவமித்தது உபமானப் பொருட்குள்ள சிறப்பு நோக்கி என்க. ஆசிரியர் தமது சோழ நாட்டுத் தெய்வ நதி என்ற அபிமானம் பற்றி கூறியதும் ஆகும்.

பி - ம். 1. மீனுகதிர்; வாழை கமுகோடுகதி ரீனும்.
2. சென்னல்.
3. பொன்னியெனுமாறு முளதான வயல் போகா; போதார். (58)

இதன் பின் ஒரு சுவடியில் அடியிற்காணும் ஓர் அதிகப் பாடல் உள்ளது.

வானுலகில் வானவர்கள் மங்கையர்கள் விஞ்சைக்
கானவர்கள் கன்னியர்கள் கந்திருவர் நாகர்
ஆனவர்க ளாயவவர் மங்கையர்க ளாயா
ஈனமற வந்துவிளை யாடுமிட மங்கண்.

176. ஏகியினி யவ்வயி னிருந்துறைமி னென்றான்
மேகநிற வண்ணனும் வணங்கிவிடை கொண்டான்
பாகனைய சொல்லியொடு தம்பிபரி விற்பின்
போகமுனி சிந்தைதொட ரக்கடிது போனான்.

'இனி - இனிமேல், அ வயின் ஏகி - அவ்விடத்திற்கு நீங்கள் சென்று, இருந்து உறைமின் - அங்குத் தங்கியிருந்து வாசம் செய்யுங்கள்,' என்றான் - என்று அகத்திய முனிவர் கூறியருளினர்; மேக நிற வண்ணனும் - மேகம் போன்ற கருநிறத்தையுடைய திருமேனியனான இராமபிரானும், வணங்கி - அம்முனிவரை வணங்கி, விடை கொண்டான் - அவரிடம் உத்தரவு பெற்றுக் கொண்டான்; பாகு அனைய சொல்லி ஒடு - தேன்பாகு போன்ற இனிய சொற்களையுடைய பிராட்டியோடு, தம்பி - தம்பியாகிய இலக்குவனும், பரிவின் - அன்போடு, பின் போக - தன் பின்னே தொடர்ந்து செல்ல, முனி சிந்தை தொடர - அவ்வகத்திய முனிவருடைய மனம் அன்பு மேலீட்டால் அவர்கள் பின் தொடர்ந்து வர, கடிது போனான் - விரைவில் அவ்விடம் விட்டுச் சென்றான்.

மேக நிற வண்ணன் - மேகத்தின் தன்மைபோன்று கைம்மாறு கருதாது அருள்புரியும் தன்மையுடையவன் எனவும் கொள்ளலாம். நிறம் - குணம் (பிங்). சீதை சொல்லுக்குப் பாகு; *831*; பால. மிதிலைக்: *21*. சிந்தை தொடர்தல்; *1033*: சிந்தை தொடர - அன்புடையார் பிரிந்து சென்றால் அவரை மனம் பின்பற்றி நினைக்குமாதலால்.

பி-ம். 1. யினிதவ்வுழி. 2. மேக நிறவண்ணனும். (59)
3. தம்பிபிரிவிற்பின்.

அகத்தியப் படலம் முற்றும்

---

# 4. சடாயுகாண் படலம்.

---

இது, இராமபிரான் (அகத்தியர் ஆச்சிரமமிருந்து பஞ்சவடிக்குச் செல்லும் வழியில்), சடாயுவைக் கண்டு அவர் நட்பைப் பெற்ற செய்தியைக் கூறும் படலம் என்று விரியும். சடாயு இராம லக்ஷ்மணர் சீதை மூவரையும் கண்ட செய்தியைக் கூறும் படலம் என்றும் இதனைக் கொள்ளலாம். இது, சடாயுப்படலம் எனவும் சில சுவடிகளில் காணப்படுகிறது. சடாயு - ஜடாயு என்ற வட சொல்லின் சிதைவு. சடாயு என்பதற்குப் பலமயிர்களைச் சேர்த்துத் தொகுத்த ஜடை போன்று மிகுதியான ஆயுளை யுடையவன் என்று பொருள் கூறுவர்.

இராமன் முதலினேர் சடாயுவைக் கண்டமை.

177. நடந்தனர் காவதம் பலவு நன்னதி
கிடந்தன நின்றன கிரிகள் கேண்மையில்
தொடர்ந்தன துவன்றின சூழல் யாவையும்
கடந்தனர் கண்டனர் கழுகின் வேந்தையே.

(இராமபிரான் முதலிய மூவரும்), காவதம் பலவும் - பலகாத வழி தூரமும், நடந்தனர் - நடந்து சென்றனராய், கிடந்தன நல் நதி - இடையே நீண்டு ஓடிக்கொண்டிருந்தவையான சிறந்த ஆறுகளையும், நின்றன - ஆங்காங்கு நிலைபெற்று நின்றனவாய் உள்ளனவும், கேண்மையின் - நட்பு அல்லது உறவு உள்ளனபோல, தொடர்ந்தன - ஒன்றோடொன்று தொடர்ந்துள்ளனவுமான, கிரிகள் - பல மலைகளை யும் (அதாவது, மலைத்தொடர்களையும்), துவன்றின சூழல் யாவை யும் - இடையிடையே அடர்ந்து இருந்த வனப் பிரதேசங்களையும், கடந்தனர் - தாண்டிச் சென்று, கழுகின் வேந்தை - (சடாயு என்னும்) கழுகுகளுக்கு அரசனை, கண்டனர் - (ஓரிடத்தில்) பார்த் தார்கள். ஏ : ஈற்றசை.

காவதம் - காத தூரம்; சிலப். 10 : 36. கிடந்தன - படுத் திருந்தன போல நீண்டு விளங்கின என்றலும் ஆம். நின்றன - நிமிர்ந்து நின்றவை போல் ஓங்கி வளர்ந்திருந்தவை. தொடர்ந்தன - தொடர்ச்சியாய் இருந்தவை. நின்றன என்றது, தனித்தனியாய் இருந்த மலைகளையும், தொடர்ந்தன என்றது, மலைத் தொடர்ச்சி களையும் குறிப்பிட்டபடி. துவன்றுதல் - நெருங்கி நிறைதல். சூழல் -

சூழ்ந்த இடம். நன்னதி - புண்ணிய நதிகளும் ஆம். கிரிகள்: என்பது இங்கு மத்திம தீபம் என்னும் இடைநிலைத் தீவக அணி யாக அமைந்து நின்றது.

இதன்பின் சில சுவடிகளில், 'உருக்கிய சுவணமொத்' என்னும் செய்யுள் காணப்படுகிறது.

பி - ம். 1. நடந்தன காவதம்.
2. கிடந்தன நின்றவும், கிடந்தவும் நின்றவும்; கீழ்மையிற்,
3. துவன்றிய சூழல்; தொடர்ந்தன விரிந்தன.
4. கழுகின் வேந்தனை. (1)

சடாயுவின் தோற்றப் பொலிவு :—178—184

178. முந்தொரு கருமலை முகட்டு முன்றிலில்
சந்திர னொளியொடு தழுவச் சாத்திய
அந்தமில் கனைகட லமரர் நாட்டிய
மந்தர கிரியென வயங்கு வான்றனை,

முந்து - முன்னொரு காலத்தில், அமரர் - தேவர்கள், அந்தம் இல் - அளவின் முடிவு சொல்ல முடியாத, கனைகடல் - ஒலிக்கின்ற கடலில், சந்திரன் ஒளி ஒடு தழுவ - சந்திரனுடைய நிலவொளியோடு பொருந்தும்படி, சாத்திய நாட்டிய - அடைதாணுய்ச் சேர்த்துக்கட்டி (மத்தாக) நிறுத்திய, மந்தர கிரி என - மந்தர மலைபோல, ஒரு கரு மலை முகட்டு முன்றிலில் - ஒரு பெரிய மலையின் உச்சியில் உள்ள முன்புறத்தில், வயங்கு வான் தனை - விளங்குபவனுன சடாயுவை,

இச்செய்யுள் பின் 185ம் செய்யுள் வரை ஒரு தொடராய் இயைந்து, அதில் உள்ள 'அணுகினர்' என்னும் வினைகொண்டு முடியும். கடலில் தேவாசுரர் அமுதம் பெற, மந்தர மலையைச் சந்திரன் என்னும் அடை தாணிற் கட்டி, மத்தாக நிறுத்தி வாசுகி யைக் கயிருகக் கொண்டு கடைந்தனர் என்பதாம்; 102; பால. அகலிகை: 21, 23; கிட்கிந்தா. வாலிவதைப். 17; 144; தக்க. 284. கருமலை - கரிய மலையும் ஆம். சடாயு தங்கியிருந்த மலை பிரஸ்ரவணம் என்னும் மகாபாரத வனபர்வம். அந்தமில் என்பதை அமரருக்கும் கூட்டி உரைத்தலும் ஒன்றும். சடாயுவுக்கு மந்தர கிரி, அவன் தோற்றத்திற்கும், சந்திரன் நிலவொளி, அவன் உடலின் நிறத் துக்கும் உவமை ஆயின. சடாயுவுக்குக் கடலினுள் நாட்டிய

மந்தரகிரி ; 985. சடாயு ஓர் ஆலமரத்தின் மீது தங்கியிருந்தான் என்று வான்மீகம் கூறும் ; இங்கு, ஒரு கருமலை முகட்டு முன்றிலில் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. முன்றில் ; இஃது இலக்கணப் போலி. மலை முகட்டு முன்றில் ; 'பிறங்குஞ் சிகரப்படர் முன்றில்' சுந்தர : 47. முந்து, அவர்களின் முன்னே என்றும் பொருள் கூறலாம்.

இரு சுவடிகளில் இச்செய்யுள் இல்லை. சில சுவடிகளில் இதுவும் அடுத்த செய்யுளும் இடம் மாறிக் கிடக்கின்றன.

பிம். 1. முகட்டில் முன்றிலில் ; முகட்டு நிற்றலின்.

2, தழுவிச்சாற்றிய ; தழுவிச் சாத்திய ; தருவுஞ் சார்த்தின.

4. மந்தர வரையென. (2)

179. உருக்கிய சுவணமொத் துதயத் துச்சிசேர்
அருக்கனி னிழல்படைத் தலங்கு திக்கெலாம்
தெரிப்புறு செறிசுடர்ச் சிறையி னாற்றிசை
விரித்திருந் தனனென விளங்கு வான்றனை,

உருக்கிய சுவணம் ஒத்து - தீயில் காய்ச்சி உருக்கப் பெற்ற பொன்னைப் போன்றுள்ள, உதயத்து உச்சி சேர் அருக்கனில் - உதய கிரியின் உச்சியை அடைந்து தோன்றும் சூரியனைப் போல, நிழல் படைத்து - ஒளியைப் பெற்று, அலங்கு திக்கு எலாம் - இருளால் வருந்தும் திக்குகள் எங்கும், தெரிப்பு உறு - விளங்கச் செய்யும், செறி சுடர் சிறையினால் - அடர்ந்த ஒளியோடு கூடிய தன் சிறகுகளால், திசை விரித்து இருந்தனன் என - திசையெங்கும் பரவ விரித்துக் கொண்டு இருந்தான் என்று சொல்லும்படி, விளங்கு வான் தனை - விளங்கிய சடாயுவை,

உதயகிரிக்கு, உருக்கிய சுவணம் ; சுவணம் - பொன் ; 38 ; சுந்தர. 174. உருக்கிய சுவணம் ஒத்து விளங்குவான் றன்னை என இயைத்தும் பொருள் கொள்ளலும் ஆம். நிழல் - ஒளி ; 158. அலங்குதல் - வருந்துதல் (பிங்.) ; வருந்துதல் - தம் நிலைதெரியாது இருளால் வருந்துதல். சடாயு தன் சிறை ஒளியால் திசைகளை விளக்கிக் கொண்டிருந்தான் என்பதாம். முன் செய்யுளில் சடாயுவின் சிறை ஒளிக்குச் சந்திரன் நிலவும், இச் செய்யுளில் காலைக் கதிர

வனின் பொன்னொளியும் உவமைகளாக்கப் பெற்றன. இதனால், சடாயுவின் நிறம் பொன்னிறம் என்பதாயிற்று ; 180ஐயும் நோக்குக.

பி - ம். 2. அருக்கனில கவிடத் ; அருக்கனி லொளிபடைத் ; அருக்கனிவ் வகலிடத்.

3. சிகையினுற் சிறை ; சிறையினுற் சிறை ; சிறையி னுற்றிசை ; தெரிக்குறுஞ் செறி சுடர்ச் ; தெரிப்புறு தெரிசுடர்ச்.

4. விரிந் திருந்தானென ; விரிந்திருந்தாலென. (3)

180. வானிற விசும்பெழின் மறையத் தன்மணிக்
கானிறச் சேயொளி கதுவக் கண்ணகல்
நீனிற வரையினிற் பவழ நீள்கொடி
போனிறம் பொலிந்திடப் பொலிகின் றுன்றனே,

வால் நிற விசும்பு எழில் மறைய -(தன் தேக காந்தியால்) பெரிய நிறத்தோடு கூடிய ஆகாயத்தின் அழகு மறைந்து போகவும், கண் அகல் - இடமகன்ற, நீல் நிற வரையினில் - (தான் இருந்த) நீல நிற மான மலேயில், தன் கால் நிற - தன் காலின் நிறமாகிய, மணி சேய் ஒளி - செம்மணியாகிய மாணிக்கம் போன்ற சிவந்த ஒளி, கதுவ - சுற்றிப்பற்றிக் கொள்ள, பவழ நீள் கொடிபோல் நிறம் பொலிந்திட - அங்குப் பவழத்தின் நீண்ட கொடிகளே போல, அவ்விடங்கள் விளங்க, பொலிகின்றுன் தனே - விளங்குவானே.

நீல் - நீலம் என்பதின் கடைக் குறை. 'நீனிற நிருதர் ;: சுந்தர. 1180 ; என்றாற் போல. போன் நிறம் - பொன் போன்ற மேனி அல்லது உடல் எனலும் ஆம். பொன் - போன் ; நீட்டல் விகாரம். 'போனிறப் புத்தி சேனன்' (சீவக. 789. நச். உரை.) நிறம் - உடல் ; திருக்கோவையார் : 58. சடாயு தன் உடலின் மேலுள்ள பொன் ஒளியால் வான் ஒளி மறையவும், அதன் கால்களின் செவ்வொளியால் அம்மலே சிவப்பால் மூடுண்ணவும், அம்மலே மீது விளங்கினுன் என்பதாம். இச் செய்யுள், 'நீணிறத்தாற் சோலே நிறம்பெயர நீடியதன், தாணிறத்தாற் பொய்கைத் தலஞ்சிவப்ப - மாணிறத் தான், முன்னப்புட் டோன்று முளரித் தலேவைகும், அன்னப்புட் டோன்றிற்றே யாங்கு' என்ற (நளவெண்பா. 23.) செய்யுளே நினேப் பூட்டுகின்றது. பவழக்கொடி சடாயு கால்களுக்கும், பொன்னிறம் அதன் உடல் நிறத்திற்கும் உவமை. சடாயுவின் பொன்னிற ஒளி

யால், இயல்பிற் பொன்னிறமான காலை வான நிறத்தின் ஒளி மறைந் திருந்தது என்னும் சிறப்பு இங்கு அமைந்துள்ளமை நோக்குக.

பி-ம். 1. மாணிற விசும்.
2. காணிறச் செவ்வழி கதுவ.
3. வரையினை; வருவினிற்; நீள்கிரி.
4. பொலிந்தென; பொலிந்தன.

(4)

181. தூய்மைய னிருங்கலை துணிந்த கேள்வியன்
வாய்மையன் மறுவிலன் மதியின் கூர்மையன
ஆய்மையின் மந்திரத் தறிஞ னெனச்
சேய்மையி னேக்குறு சிறுக ணன்றனை,

தூய்மையன் - (உள்ளும் புறமும்) தூய்மையுடையவன்; இருங் கலை துணிந்த கேள்வியன் - பெருங் கல்வியுடைமையோடு தெளிந்த துணிவு பெற்றதான கேள்விச் செல்வமுமுடையவன்; வாய்மையன் - உண்மையுடையவன்; மறு இலன் - குற்றம் அற்றவன்; மதியின் கூர்மையன் - புத்தி நுட்பமுடையவன்; (இவ்வாறிருத்தலோடு), ஆய்மையின் - ஆராய்ந்து நோக்குதலையுடைய, மந்திரத்து அறிஞன் ஆம் என - மந்திராலோசனையில் வல்ல அறிவுடைய அமைச்சனே போன்று, சேய்மையின் நோக்கு உறும் - மிக்க தூரத்தில் உள்ள வற்றையும் பார்த்தறியும், சிறு கண்ணன் தனை - சிறிய கண்களை யுடைய, அச் சடாயுவை,

இருங் கலை துணிந்த கேள்வியன்: சகல சாஸ்திரங்களையும் கற்றும் ஆன்றோர்பாற் கேட்டும் தெளிவு கொண்டவன்; கற்றவை பின் கேள்வியால் துணிவு பெறும் ஆதலின். வாய்மை, தீமை சொல்லாமையும் ஆம்; சொல்லாமை என்ற உப லக்ஷணத்தால், நினையாமையும், செய்யாமையும் உடையன் என்பதாம். சடாயு வின் இச்சிறப்பு நோக்கியே, ஞான சம்பந்தப் பெருமானரும், "பொய் சொல்லா துயிர் போனன் புள்ளிருக்கு வேளூரே" என இவனைப் பாராட்டினர் என்க. மறுவிலன் - பெரும் வலிமை பெற்றவன் எனினும், அதனல் செருக்கடைந்து பிறர்க்கு வலுவில் ஒரு குற்றமும் புரிந்தவன் அல்லன் என்பதுமாம். மதியின் கூர்மை: நுட்பமானதினுள்ளும் நுழைந்து ஆராயும் நுண்ணறிவு. மந்திரத்து அறிஞன் - மந்திராலோசனைக்குரிய அறிவு வாய்ந்த மந்திரி; இது, 'உற்றது கொண்டு மேல் வந் துறுபொரு ளுணருங்

கோளார்; 'தெரியுங் கால, மும்மையு முணர வல்லார்' எனத் தசரத சக்கரவர்த்தியின் மந்திரிகளை நம் கவிச் சக்கரவர்த்தி சிறப் பித்தமையாலும் உணரலாம்; (அயோத்: மந்திரப்: 7, 9). இதனு லன்ரே,' மந்திரிக்கழகு வரும் பொருளுரைத்தல்' என்ற நீதிமொழி யும் எழுந்தது? சடாயு அறிவின் நுட்பம் போலக் கட்புல நுட்பமும், வாய்ந்தவன் என்பது, 'சேய்மையின் நோக்குறுஞ் சிறு கண்ணன்' என்றமையால் விளங்கப் பெற்றது; இச்சடாயுவின் கட்புல நுட்பம் இவன் இனமாகிய கழுகுகளுக்கெல்லாம் அமைந்துள்ள மையால் உலகில், 'கழுகுக் கண்ணுடையவன்' என்ற வசனமும் நிலவுகின்றது போலும். சேய்மையின் நோக்குதல்; ஒப்பு. 'சேயதை நோக்கி' என்ற பெருங்: 3: 4. 97 அடியையும், அதற்கு, 'சேயதை நோக்குதல் - தீர்க்க தரிசனம்; என்றது, பகைவெல்லுதலை' என்ற ஐயரவர்களின் குறிப்புரையையும் காண்க.

பி-ம். 2. னருங்கலே. 2. வாய்மையின் மறுவிலன்; கூர்மையின்.
3. ஆய்வுறும்; தறிஞனன்புசால்.
4. சேயினி ளுேக்குறு; சேயென; சேயினை நோக்குறுஞ். (5)

182. வீட்டிவா ளவுணரை விருந்து கூற்றினை
ஊட்டிவீழ் மிச்சிரு னுண்டு நாடொறும்
தீட்டிமே விந்திரன் சிறுகண் யானையின்
தோட்டிபோற் றேய்ந்தொளிர் துண்டத் தான்றனை.

வாள் அவுணரை - வாளேந்திய அசுரர்களை, வீட்டி - போரில் வீழ்த்தி மடித்து, கூற்றினை விருந்து ஊட்டி - யமனை விருந்தாகக் கொண்டு அவன் அவர்களை உண்ணச் செய்து, வீழ் - அவ் இயமன் உண்டது போகக் கீழ் விழுந்ததான, மிச்சில் - மீதியாய் விடப் பட்டதை, நாள்தொறும் உண்டு - தினமும் தான் அருந்தி, சிறு கண் யானையின் மேவு இந்திரன் - சிறிய கண்களையுடைய தன் ஐரா வதம் என்னும் யானையின்மீது விளங்கும் இந்திரனுடைய, தோட்டி போல் - அங்குசம் போல், தீட்டி - கூராகத் தீட்டப்பெற்று, தேய்ந்து ஒளிர் - அதனுல் தேய்ந்து விளங்கும், துண்டத்தான் தனை - மூக்கை யுடைய சடாயுவை,

சடாயு அவுணரைக் கொன்று அவர்களை யமனுக்கு விருந் தூட்டி, மிச்சிலை நாடொறும் உண்பவன் என்பதாம். 'மிச்சில், சேஷ மான மாங்கிஷம்' என்பது பழைய உரை. துஷ்ட நிக்ரஹம் என்ற வீரச் சிறப்பும், விருந்தூட்டிய பின் மிச்சில் மிசைதல் என்ற உயரிய

நெறியும் விளங்குவன காண்க. கூற்றினையூட்டி; கூற்றுக்கு ஊட்டி என்ற பொருளில் உருபு மயக்கமுமாம். இந்திரன் தன் தோட்டியைத் தீட்டிக் கூராக்கிக் கொள்வது போல, சடாயு தன் மூக்கைத் தீட்டி கொள்வான் என்பதாம். பறவைகள் தாம் உண்ட உணவின் மிச்சம் தங்காதபடித் தம் அலகைக் கல், மரம் முதலியவற்றில் தீட்டுவது போலத் துடைத்துச் சுத்தஞ் செய்து கொள்ளும் இயற்கை நயம் இதில் விளங்க வைத்தது ஆகும். கழுகின் அலகு கூர்மையாயும், வலிவுடையதாயும், தூய்மையாயும் விளங்கும் என்பது இவ்வாறு சிறப்பிக்கப் பெற்றது என்க. சடாயுவின் துண்டத்திற்கு இந்திரனுடைய தோட்டி உவமை. தோட்டி - அங்குசம் (பிங்). துண்டம் - பறவையின் அலகு; 915. சிறுகண் யானை - உருவிற் பெரிய யானைக்குக் கண் அளவிற் சிறுமையுடையது போல, கழுகுக்கும் கண் அளவிற் சிறுத்து நெடிது நோக்கும் வன்மையுண்டு என்க. இந்திரன் யானையின் தோட்டி : புகழ்ப்பொருளுவமை.

பி-ம். 1. கூற்றினுக். 2. மிச்சினுளுண்டு.
3. சிறுகணானையின்; தெறு கண்யானையின்.
4. தோட்டியிற் பொலிவுறுஞ்; தோட்டிபோற் றேய்ந்து. (6)

183. கோளிரு நாலினோ டொன்று கூடிய
ஆளுறு திகிரிபோ லாரத் தான்றனை
நீளுயர் மேனியி னெற்றி முற்றிய
வாளிர வியிற்பொலி மவுலி யான்றனை,

இரு நாலின் ஓடு ஒன்று கூடிய - எட்டோடு ஒன்று கூடிய, (அதாவது ஒன்பது ஆகச் சேர்ந்த), கோள் - கிரகங்களை, ஆள் உறு திகிரி போல்-ஆளுதலைக் கொண்ட சிம்சுமாரம் என்னும் துருவ சக்கரம் போன்று விளங்கும், ஆரத்தான் தனை-(நவரத்தின) மாலையையுடையவனை, நீள் உயர் மேனியின் - நீண்டு உயர்ந்த (தன்) உடலின், நெற்றி - உச்சியில், முற்றிய - கவிந்து விளங்கிய, வாள் இரவியின் - ஒளியுடைய சூரியனைப் போல, பொலி - விளங்குகின்ற, மவுலியான் தனை - கிரீடமுடைய சடாயுவை,

சடாயு கழுத்தின் ஆரத்திற்குச் சிம்சுமாரம் என்னும் துருவ சக்கரம் உவமை. துருவ சக்கரம் நவக்கிரகங்களை இயங்கச் செய்வது. நவக்கிரகங்கள் இங்கு நவமணிகளுக்கு உவமை ஆயின. நவக்கிரகங்கள் ஒன்பது நிறவேற்றுமைகளை யுடைமையால், அவ்வாறு நிறவேற்றுமைகளையுடைய நவமணிகளுக்கு அவை உவமை ஆயின. மேலும்,

அந்நவமணிகளை நிற ஒற்றுமையாலும் மற்றைச் சிறப்புத் தன்மையாலும் நவக்கிரகங்களுக்குப் பிரதிநிதிகளாக நம் சோதிட நூல்கள் கூறுவதும், அவ்வாறே கருதி அவற்றை அணிவதும் நம்மனோர் மரபு ஆகும் என்பது இங்கு உணரத்தக்கது. நவக்கிரகங்கள் :— சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், பிருகஸ்பதி, சுக்கிரன், சனி, ராகு, கேது என்பன. நவமணிகள்: கோமேதகம், நீலம், பவழம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்பன. ஆரம் - ஹாரம் என்ற வடசொற்றிரிபு. ஆரம் கோள்களாவன ; 'கோளெலாங்கிடந்த நெடுஞ்சிறை யன்ன நிறையாரங் குலவமன்னோ'; 558. கிரீடத்திற்குச் சூரியன் : 82. இதனால், சடாயுவின் கழுத்தில் ஆரம்போல் விளங்கும் சுற்றிய உரோமப் பகுதியும், தலையில் கிரீடம் போன்று விளங்கிய கொண்டையும் சிறப்பிக்கப் பெற்றன என்க.

பி-ம். 1. நான்கினோ......கூடின; கூட்டின.

3. நீளுறு மேருவி ; நீளிரு மேருவி ; நீளுயர் மேருவி. (7)

184. சொற்பங்க முறநிமி ரிசையின் சும்மையை
அற்பங்க முறவரு மருணன் செம்மலைச்
சிற்பங்கொள் பகலெனக் கடிது சென்றுதீர்
கற்பங்க ளெனைப்பல கண்டு ளான்றனை,

சொல் பங்கம் உற - சொற்கள் எடுத்துக் கூற முடியாமல் தோல்வியடைய, நிமிர் இசையின் சும்மையை - அவற்றுள் அடங்காது எழுந்தோங்குகின்ற புகழின் பெருந் தொகுதி போன்றவனை, அல் பங்கம் உற - இருள் குறைவுபட்டு ஒதுங்கியோட, வரும் - தோன்றுபவனான, அருணன் செம்மலை - அருணனுடைய குமாரனை, கடிது சென்று தீர் - விரைவிற் கழிந்து ஒழிகின்ற, சிற்பம் கொள் பகல் என - அற்பமான பகல்களைப் போல, கற்பங்கள் எனை பல - கற்பகாலங்கள் என்பன பலவற்றை, கண்டு உளான் தனை - கண்டுள்ளவனான சடாயுவை,

இதனால் சடாயு சொல்லுக்கடங்காத புகழும், கற்பங்கள் பல கடந்த ஆயுளும் உடையவன் என்பதாம். சடாயு நீண்ட வாழ்நாள் உடையவன் என்னும் இச்செய்தி, மேல், 'காமனென்ப வனையுங் கண்ணின் நோக்கினேன் ;' 189 ; 'ஊழி காண்கிற்கும் வாணாளுந்தையை உயிர்பண் டுண்டான்' (உயுத்த. அங்கதன் றூது : 5). என்பவற்றாலும் வலியுறுத்தப் பெறுவன

காணலாம். அருணோதயமானால் இருள் இரிந்தோடுமாதலால், அற்பங்க முறவரு அருணன் என்னப்பட்டது. சடாயுவும் அவன் தமயன் சம்பாதியும் அருணன் புதல்வர்கள்; 201; கிட்கிந்தா. சம்பாதிப்: 22; 31; 53. சிற்பம் - சிறுமை; அற்பம்: 91; 'சொற் பங்க முறநிமி ரிசையின் சும்மையை'; ஒப்பு: இளைப்பலிவன் றேசுரைப்பின்' (சீவக. 1790).

பி - ம். 1. சொற்பங்கமற நிமிர்; சும்மையன்; சும்மையின்.
3. சிற்பங்கொள் கடலென; சிற்பங்கள் பலவென.
4. ளெனப்பல ளினைப்பல; கற்பங்கள் பலபல.

(8)

இராமலக்ஷ்மணர் சடாயுவை ஐயுற்று நோக்குதல் 185—6.

185. ஓங்குயர் நெடுவரை யொன்றி னின்றது
தாங்கல திருநிலந் தாழ்ந்து தாழ்வுற
வீங்கிய வலியின னிருந்த வீரனை
ஆங்கவ ரணுகின ரயிர்க்குஞ் சிந்தையார்.

ஓங்கு உயர் நெடுவரை ஒன்றின் - ஓங்கி உயர்ந்த பெரிய மலை ஒன்றின்மீது, நின்று - தங்கியிருந்து, அது தாங்கலது - அம்மலை தன்னைத் தாங்கமாட்டாது, இரு நிலம் தாழ்ந்து தாழ்வு உற - அம்மலை பெரிய பூமியினுள் புதைந்து கீழே ஆழ்ந்து போக, வீங்கிய வலியினின் இருந்த - பருத்த வலிமையோடு அங்கு இருந்த, வீரனை - வீரம் மிக்க அந்தச் சடாயுவை, ஆங்கு - அவ்விடத்தே, அவர் - அந்த இராமலக்ஷ்மணர், சீதாதேவி ஆகிய மூவரும், அயிர்க்கும் சிந்தையர் - ஐயங் கொண்ட மனமுடையவர்களாய், அணுகினர் - அவனருகே சென்றனர்.

ஓங்குயர் - ஒரு பொருட் பன்மொழியும் ஆம். சடாயு தன்மீது இருந்ததால் அவன் பாரம் தாங்காமல், அவ்வரை தரையில் ஆழ்ந்து புதைந்து போயிற்று என்பதாம். சடாயு தங்கியிருந்த வரையின் பெயர் பிரஸ்ரவணம் என்பர். அயிர்த்தது அவன் பேருருக் கண்டு அரக்கனோவென்று அயிர்த்தமை அத்யாத்மிக ராமாயணத்திற் காண்க. அயிர்த்த தன்மை அடுத்த செய்யுளாலும் விளங்கும்.

பி - ம். 1. யொன்றின்மேலது; யொன்றி னின்றது.
2. தாங்கலா திருநிலத் தாழ்ந்து தாழ்வுறும்.
3. வலியினிலிருந்த; வலியினிருந்த; யிருந்த வேலையின்.
4. ஆங்க வரணுகித் தங்கருத்தி னய்குவார்.

(9)

186. இறுதியைத் தன்வயி னியற்ற வெய்தினுன்
அறிவிலி யரக்கனு மல்லனு மெனில்
எறுழ்வலிக் கலுழனே யென்ன வுன்னியச்
செறிகழல் வீரருஞ் செயிர்த்து நோக்கினுர்.

செறி கழல் வீரரும் - நெருங்கிய வீரக்கழல் அணிந்த வீரர் களாகிய இராமலக்ஷ்மணர்களும், 'தன் வயின் - தனக்கு, இறுதியை - முடிவு அல்லது அழிவை, இயற்ற-செய்துகொள்ள, எய்தினுன்-இங்கு வந்தவனுன இவன், அறிவு இலி அரக்கன் ஆம் - அறிவற்றவனுன யாரோ ஓர் அரக்கனே ஆவான்; அல்லன் ஆம் எனில் - அவ்வாறு அல்லன் என்ருல், எறுழ் வலி கலுழன் ஆம் - மிக்க வலிமையுடைய கருடனே ஆவான்'; என்ன உன்னி - என்று ஊகித்துக் கொண்டு, செயிர்த்து - கோபங்கொண்டு, நோக்கினுர் - அவனைப் பார்த்தனர்.

அறிவிலியரக்கன்: நல்லறிவு இல்லாது தீயவழி புகும் அரக்கன்; தனக்குக் கேட்டைத் தானே தேடிக் கொண்டவனுதலின்; அறிவிலி என்றது, அரக்கன் இராவணனும் ஆம். தன் வயின் - தனக்கு என்ற பொருளில் உருபு மயங்கி வந்தது எனக் கொள்க. எறுழ்வலி: ஒரு பொருட் பன்மொழி; கலுழன் என்றது, அவனது பறவை உருவாலும் அவன், பொன்னிறமாய் விளங்கியதாலும் என்க; சடாயு பொன்னிறம் வாய்ந்தவன்; 179; 180; குறிப்.

பி - ம். 1. இறுதியைத் தம்வயின்: வியற்ற வெண்ணினுன்.
2. மல்லனேயெனில். 3. (வுன்னிய செறிகழல்.)
4. தேர்ந்து நோக்கினுர்; மயிர்க்குஞ் சிந்தையார்; செயிர்த்து நோக்கவே. (10)

சடாயுவும் அவர்களைக் கண்டு அயிர்த்தல் 187—191

187. வனைகழல் வரிசிலை மதுகை மைந்தரை
அனையவன் ருனுங்கண் டயிர்த்து நோக்கினுன்
வினையறு நோன்பின ரல்லர் வில்லினர்
புனைசடை முடியினர் புலவ ரோவெனு.

அனையவன் தானும் - அத்தகைய அந்தச் சடாயுவும், வனை கழல் வரி சிலை - புனைந்த வீரக்கழல்களையும், கட்டுக்கள் அமைந்த வில்லையுமுடைய, மதுகை மைந்தரை - பராக்கிரம முள்ள அந்த அரச குமாரர்களை, கண்டு - பார்த்து, 'வினை அறு நோன்பினர் அல்லர் - (இவர்கள்) இருவினையும் அறுதற்கான தவவிரதத்தை

யுடையவர் அல்லர் ; வில்லினர் - வில்லை ஏந்தியுள்ளார்கள் ; புனை சடை முடியினர் - தரித்த சடை முடியையுடையவராயிருக்கின்றனர் ; புலவரோ எனு- இவர்கள் தேவர்களோ (என்று), அயிர்த்து - ஐயமேற் கொண்டு, நோக்கினன் - பார்த்தான்.

அயிர்த்து நோக்கியது, தவ நிலைக்குரிய சடை, முடி கொண்டாரேனும், அதற்கு மாறுகப் போர்க்குரிய வில்லையுடைமையால் என்க. திருமேனியின் ஒளி நோக்கித் தேவரோ என்று அயிர்த்ததும் ஆம். புலவர் - தேவர் (திவா.) ; புலமையின் மிக்கோர் - என்ற பொருளில் வந்தது ; *188* ; *1145* ; விபுதர் என்ற வட சொல்லையும் நோக்குக. முதலில் இராம லக்ஷ்மணர் சடாயுவைக் கண்டு அயிர்த்து அணுகியதுபோல (*185*), இங்குச் சடாயுவும் அன்னோரைக்கண்டு அயிர்த்தமை கூறப்பெற்றது காண்க. 'புலவரோவெனு' என்ற பாடம் அடுத்த செய்யுளுடன் தொடர்பு பெற்றுள்ளமை காண்க.

பி - ம். 1. யங்கை மைந்தரை. 2. டயிர்த்து நோக்கியே.
3. வினையுறு நோன்பின.
4. புலவரோவென; புலவர் தாங்கொலோ ; புரவல ரோவெனு. (11)

188. புரந்தரன் முதலிய புலவர் யாரையும்
நிரந்தர நோக்குவெ னேமி யானுமவ்
வரந்தரு மிறைவனு மழுவ லாளனும்
கரந்தில ரென்னையா னென்றுங் காண்பெனால்.

'புரந்தரன் முதலிய புலவர் யாரையும் - இந்திரன் முதலான தேவர்கள் அனைவரையும், நிரந்தரம் நோக்குவேன் - நான் எப்பொழுதும் பார்ப்பவன் ஆவேன் ; நேமியானும் - சக்ராயுதமுடைய திருமாலும், அ வரம் தரும் இறைவனும் - தம் அடியார் விரும்பிய வரன்களை அன்போடு அளிக்கும் தலைவராகிய அப் பிரமதேவரும், மழுவலாளனும் - மழு என்னும் கோடாலியைக் கையிற் சிறக்கக் கொண்டு துஷ்ட நிக்ரஹம் செய்யும் சிவபெருமானும், யான் என்றும் காண்பென் ஆல் - நான் அவர்களை என்றும் தெரிசிப்பவனுதலின், என்னை கரந்திலர் - என்னைக் கண்டு மறைந்து கொள்ளமாட்டார்கள், (தம் உண்மை வடிவில் தோன்றுவர் என்றபடி.)

இச் செய்யுளால் சடாயு, தினம் திருமால், பிரமன், சிவபிரான் ஆகிய மும்மூர்த்திகளையும் நேரிற் கண்டு வழிபடுபவன் என்பது பெறப்பெற்றமை நோக்கப்பாலதாம். இனி, பிரமதேவர் வழிபாடு நம் நாட்டுக் கோயில்களில் இன்மையால், சிவத்தலமான புள்ளிருக்கு

வேளூரும், திருமால் நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான திருப்புட்குழியும் சடாயு வழிபட்டவை என முறையே, ஞானசம்பந்த மூர்த்தியாலும், திருமங்கை மன்னராலும் பாராட்டப் பெற்றமை தேவாரத்தாலும், பெரிய திருமொழியாலும் அறியலாம். வரந் தருவார் முத்தேவரும் ஆயினும், சிறப்பாகப் பிரம தேவரையே யாவரும் நாடித் தவம்செய்து வரம்பெறுவது நோக்கி, அவர் வரந்தரு மிறைவர் எனப்பட்டார்; நிரந்தரம் - வடசொல்.

பி - ம். 2. நிரந்தரங் காண்குவென்; நேமியாளனும்.
3. வரந்தருங் கடவுளும் மழுவல்லாளனும்; வரந்தருமிறைவரும்.
4. ரவர்தமை யென்றுங் காண்பனால். (12)

189. காமனென் பவனையுங் கண்ணி னோக்கினேன்
தாமரைச் செங்கணித் தடக்கை வீரர்கள்
பூமரு பொலங்கழற் பொடியி னோடுமொப்
பாமலன் வருபவ ரார்கொ லாமிவர்.

'காமன் என்பவனையும் - வடிவிற் சிறந்தவனான மன்மதனையும், கண்ணின் நோக்கினேன் - என் கண்களாற் பார்த்திருக்கின்றேன்; (அவன்), தாமரை செம் கண் - தாமரை (மலர் இதழ்) போன்று சிவந்த கண்களையும், தட கை - நீண்ட கைகளையுமுடைய, இ வீரர்கள் - இந்த வீரர்களின், பூ மரு பொலன் கழல் - தாமரை மலரின் வாசனையுடைய பொற் பாதங்களில் ஒட்டிய, பொடியினோடும் - தூசியோடும், ஒப்பு ஆம் அலன் - ஒப்பாவான் அல்லன்; வருபவர் இவர் - வரும் இவர்கள், ஆர் கொல் - யாராக இருக்கலாம்?

மேற்கூறிய இரண்டு செய்யுட்களால், சடாயு இராம லக்ஷ்மணர் களைத் தேவர் அல்லர் என நிச்சயித்தது அறியலாம். கண்ணின் நோக்கினேன்: காமன் சிவபெருமானால் எரிக்கப்பட்டு அனங்கனான தற்கு முன்னே, அதாவது அவன் முன் உருவோடு இருந்ததைச் சடாயு பார்த்தவன் என்பதாம். 'அலைகடல் கடையக் கண்டே னயனைந்து முகமுங் கண்டேன், மலையிரு சிறகு கண்டேன் வாரிதி நன்னீர் கண்டேன், சிலைமதன் வடிவு கண்டேன் சிவன் சுத்தக் கழுத்துங் கண்டேன், குலவரி யிருகண் கண்டேன் கொடுத்ததை வாங்கக் காணேன்', என்னும் சாம்பவன் கூற்றாக வழங்கும், பழம் இராமா யணத் தனிச்செய்யுளில், 'சிலைமதன் வடிவு கண்டேன்' என்றுள்ள தும், இங்கு நோக்கற்பாலது. தாமரைச் செங்கண்.................. வீரர்கள்: கிட்கிந்தா. மராமரப்: 35; சுந்தர. 394, 577, வான்மீக முனிவரும் சூர்ப்பணகை முகமாய், 'புண்டரீக விசாலாக்ஷௌ' எனச்

சிறப்பித்தமை காண்க. வடிவிற் சிறந்தோனான மன்மதன் இவ்விரு வர் கால் தூசிக்கும் ஒப்பாக மாட்டான் எனபதாம். கொல்: இடைச் சொல்; இங்கு ஐயப் பொருளில் வந்தது. கழற்பொடி; பால; அகலிகைப்: 71; குலமுறை 29; கிட்கிந்தா. மராமரப்: 44.

பி-ம். 2. செங்கணின் றடக்கை வீரர்கள்.
3. பொருளி னேடுமொப்.
4. பாமென வுணரலென்; அறிந்தி லேனுர்; (13)

190. உலகொரு மூன்றுந்தம் முடைமை யாக்குறும்
அலகறு மிலக்கண மமைந்த மெய்யினர்
மலர்மகட் குவமையா ளோடும் வந்தவிச்
சிலைவலி வீரரைத் தெரிகி லேனெனு,

'உலகு ஒரு மூன்றும் - சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும் மூவுலகங்களையும், தம் உடைமை ஆக்குறும் - தமக்கு உரிய பொரு ளாகச் செய்து கொள்ளவல்ல, அலகு அறும் - அளவு சொல்ல முடியாத, இலக்கணம் - சிறந்த சாமுத்திரிகா லக்ஷணங்கள், அமைந்த - பொருந்திய, மெய்யினர் - திருமேனிகளையுடையவர் களாய், மலர் மகட்கு உவமையாளோடும் - தாமரை மலர் மீது விளங் கும் திருமகளுக்கு உவமையாகக் கூறத்தக்க ஒரு பெண்ணோடும், வந்த - இங்கு வந்த, இ சிலை வலி வீரரை - இந்த வில் வலிமை வாய்ந்த வீரர்களை, தெரிகிலேன் - இன்னார் என்று நான் அறிய முடியாதவனாய் இருக்கிறேன்;' எனு - என்று சடாயு கூறி,

இது 192-வது செய்யுள்வரைக் குளகமாய்த் தொடர்ந்து, அதில் உள்ள, 'எனப் பல மனத்துளெண்ணுவான்' என்பதோடு இயைந்து பொருள் முடிவுறும். 'இவர்களுடைய அங்க லக்ஷணங் களை நோக்குமிடத்து இவர்கள் திரிலோகாதிபதிகளாய் இருக்கத் தக்கவராக வேண்டும்; மேலும், திருமகள் போல ஒரு மடந்தையுடன் வருகின்றனர்' என்று சடாயு அவர்கள் தெய்வத்தன்மையை ஊகித்து உணர்வானாயினன் என்க. மலர்மகட் குவமையாள்: மலர் மகள் அழகிற் சிறந்தவள்; அவளுக்கு ஓர் உபமானமாக எடுத்துக் காட்டும் மேலான அழகின் சிறப்புடையவள் சீதை என்பதாம்; உபமானப் பொருள் உபமேயத்தினும் சிறப்புள்ளதாதலின் என்க.

பி-ம். 2. அலகினி லிலக்கண மறைந்த மெய்யினுர்;
இலகிய விலக்கண மேய்ந்த மெய்யினுர்; அமையு மெய்யினுர்.
3. மலர்மக ளுவமையா.
4. சிலைமலி; தெரிக்கிலே னென்றுன்; தெரியகிற்றிலேன். (14)

191. கருமலை செம்மலை யனைய காட்சியர்
திருமகிழ் மார்பினர் செங்கண் வீரர்தாம்
அருமைசெய் குணத்தினென் றுணைவ னாழியான்
ஒருவனை யிருவரு மொத்து ளாரரோ.

'கருமலை செம்மலை அனைய - நீல மலையையும், சிவந்த பொன் மலையையும் ஒத்த, காட்சியர் - தோற்றத்தவர்களும், திரு மகிழ் மார்பினர் - வெற்றித் திருவாகிய ஜயலக்ஷ்மி மகிழ்ந்து தங்கியிருக்கும் மார்பையுடையவர்களுமான, செங்கண் வீரர் - சிவந்த கண்களையுடைய இவ்வீரர்கள், அருமை செய் - அருமையாய் அமைந்த, குணத்தின் - நற்குணங்களையுடைய, என் துணைவன் - என் நண்பனான, ஆழியான் - தசரத சக்கரவர்த்தியாகிய, ஒருவனை - அவ்வொருவனையே, இருவரும் - இவ்விருவர்களும், ஒத்துளார் - ஒத்து இருக்கிறார்கள்; தாம், அரோ; அசைகள்,

கருமலை: இந்திர நீலபருவதம்; செம்மலை - செம் பொன் மலை, அதாவது மேருகிரி; இராமனுக்குக் கருமலை, இலக்குவனுக்குப் பொன்மலை உவமைகள். செங்கண் வீரர் - செந்தாமரை மலர் போன்ற கண்களையுடைய வீரர்கள். திருமாலைச் 'செங்கண்மால்' என்பதையும், இராமலக்ஷ்மணர் அத் திருமாலின் அம்சமாய் அவதரித்தவர் என்பதையும் நோக்குக. தாம்: துணிவுப் பொருளை உணர்த்தும் இடைச் சொல்லும் ஆம். தசரத சக்கரவர்த்தியை இராம லக்ஷ்மணர்கள் ஒத்திருந்தது என்றது, தந்தையின் சாயை தனயர்களிடத்தில் விளங்குவது இயல்பாதலின். அரோ, வினைப் பொருளையும் வியப்புப் பொருளையும் தழுவி வந்தது என்னலும் ஒன்றும்.

பி - ம். 1. காட்சிய.
2. திருமறு மார்பினர்; திருமகள் மார்பினர்; மார்பினார்.
3. குணத்து நற்று ணைவ னாழியான்; குணத்தனென் றுணைவனாகிய.
4. யொத்த போலுமால்; யொத்த வாறரோ. (15)

### சடாயு அவர்களை வினவி அறிதல் 192—193

192. எனப்பல நினைப்பினன் மனத்து ளெண்ணுவான்
சினப்படை வீரர்மேற் செல்லு மன்பினன்
கனப்படை வரிசிலைக் காளை யீர்கள்யார்
மனப்பட வெனக்குரை வழங்கு வீரென்றான்.

என - என்பனவான, மனத்துள் எண்ணுவான் பல நினைப்பினன் - மனத்தில் நினைக்கும் பல எண்ணங்களைக் கொண்டவனும், சினம் படை வீரர் மேல் - கொடிய ஆயுதங்களையுடைய அவ்வீரர்களிடத்து, செல்லும் அன்பினன் - செல்வதான அன்பையுடையவனுமான சடாயு, கன படை - வலிய ஆயுதமாகிய, வரி சிலை - கட்டுக்கள் அமைந்த வில்லையுடைய, காளையீர்கள் - விருஷபம் போன்ற நீங்கள், யார் - யாவர்?, மனம்பட - என் மனத்தில்படுமாறு, எனக்கு உரை வழங்குவீர் - எனக்கு மறுமொழி கூறுவீர்களாக' என்றான் - என்று கேட்டுக் கொண்டான்.

பி - ம். 1. எனைப்பல ; எனைப்பல மனத்தினி னினைத்தங்கெய்திய ; நினைப்பின ;

2. சினைப்படையவர் கண்மேற் ; வீரரைத் தெளியு.

3. காளை நீர்களியார் ; கனப்புறு வரிசிலைக்கரத்தர் நீங்கள் யார் ; காளை வீரர்கள் ; காளை நீவிர்யார்.

4. மனத்தினி லுள்ளன வழங்கு வீரென்றான். (16)

193. வினவிய காலையின் மெய்ம்மை யல்லது
புனைமலர்த் தாரவர் புகல்கி லாமையால்
கனைகடல் நெடுநிலங் காவ லாழியான்
வனைகழற் றயரதன் மைந்தர் யாமென்றார்.

வினவிய காலையின் - (என்று சடாயு) கேட்டபொழுது, புனை மலர் தார் அவர் - அழகிய பூமாலையை அணிந்த அந்த இராம லக்ஷமணர், மெய்ம்மை அல்லது - உண்மை அல்லாது வேறொன்றை, புகல் கிலாமையால் - பேசுவதில்லை ஆதலின், ' யாம் - யாங்கள், கனை கடல் நெடு நிலம் - ஒலிக்கின்ற கடலால் சூழப்பெற்ற பெரும்புவி முழுவதும், காவல் - காத்தலையுடைய, ஆழியான் - சக்கரவர்த்தியான, வனை கழல் தயரதன் - வீரக் கழல் அணிந்த தசரதருடைய, மைந்தர் என்றார் - குமாரர்கள் '' என்று மறுமொழி கூறினர்.

புனை - அழகு (பிங்); ' அசோகின் புனை நிழல் ' (நன். கடவுள் வாழ்த்து) என்றதுபோல. புகல் கிலாமையால்: கில்: உறுதிப் பொருளை உணர்த்தும் இடைநிலை. அறிமுகமின்றி, ஐயுறவு கொண்டோரிடம், தம் நிலையின் உண்மையைக் கூறக் கூடாது என்பது அரசியல் நீதி ஆயினும், அன்னோர் நேரொருவரில்லா வீரர் ஆதலின், யாரிடமும் அச்சமின்றி உண்மையே கூறும் தனிச் சிறப்பு அவர்களிடத்துக் குடிகொண்டிருந்தது என்பதாம். தயரதன் -

தசரதன் என்பதன் திரிபு : தசரதன் என்பதற்குப் பத்துத் திக்குக் களிலும் தன் தேரைச் செலுத்தி வென்றி கண்டவன் என்றும், அவுணர்தேர் பத்து வென்றவன் என்றும், தச - பக்ஷி (ராஜஹம்ஸத்தை கருடனைத்) தன் தேரிற் கொடியாகக் கொண்டவன் என்றும் காரணம் பல கூறுவர்.

பி - ம். 3. கனைகழனெடு நிலங். 4. யாமென்ருன். (17)

### தசரதன் மரணத்தையறிந்து சடாயு வருந்துதல் 194—9.

194. உரைத்தலும் பொங்கிய வுவகை வேலையன்
தரைத்தலை யிழிந்தவர்த் தழுவு காதலன்
விரைத்தடந் தாரினன் வேந்தர் வேந்தன்றன்
விரைத்தடந் தோளிணை வலிய வோவென்ருன்.

உரைத்தலும் - என்று அவ்விராம லக்ஷ்மணர்கள் சொன்னதும், பொங்கிய உவகை வேலையன் - பொங்கி மேற்கிளம்பிய களிப்பென்னும் கடல் போன்றவனான அந்தச் சடாயு, தரை தலை இழிந்து - அம்மலை உச்சியிலிருந்து தரையிடத்து இறங்கி வந்து, அவர் தழுவும் காதலன் - அவர்களைத் தழுவிக் கொள்ளும் அன்புடையவனாய், 'விரை தடம் தாரினன் - மணம் பொருந்திய பெரிய மாலை அணிந்தவனான, வேந்தர் வேந்தன் தன் - அரசர்க் கரசனான அந்தத் தசரத சக்கரவர்த்தியின், வரை தடம் தோள் இணை - மலை போன்று அகன்றதாய் விளங்கும் தோள்கள் இரண்டும், வலியவோ என்ருன் - வலியனவாய் இருக்கின்றனவா' என்று வினவினன்.

உவகை வேலை : ஆனந்த ஸாகரம். தோள் வலியவோ என்பது, அரசர்களைப்பற்றி க்ஷேமம் விசாரிக்கும் முறை ; அயோத். கிளைகண்டு நீங்கு. 56 ; பெருங். 2. 9 : 30. ஒன்னுரை யொறுத்து உலகைப் புரக்கும் பொறை யேந்தியவை அரசர் தோள்களாதலின் தோள்களை முன்னிட்டு க்ஷேமம் விசாரித்தான் என்க. 'விரைத் தடந்தாரினீர்' எனும் பாடங்கொண்டு, இராம லக்ஷ்மணர்களை விளித்ததாகவும் உரை கொள்ளலும் அமையும்.

பி - ம். 1. வேலையான் ; வுவகையுள்ளத்தான்.
2. தவற்ருழுங்காதலன் ; தழுவி யன்புரு ; தழுவுங்காதலன்.
3. தாரினீர் ; தாரினிர் ; தோளினீர். (18)

195. மறக்கமுற் ருததன் வாய்மை காத்தவன்
துறக்கமுற் ருனென விராமன் சொல்லலும்
இறக்கமுற் ருனென வேக்க மெய்தினுன்
உறக்கமுற் ருனென வுணர்வு நீங்கினுன்.

அவன் - அந்தச் சக்கரவர்த்தி, மறக்க முற்ருத - மறக்க முடியாததான, தன் வாய்மை காத்து - தனக்குரிய சத்தியத்தைப் பாது காத்து, துறக்கம் உற்ருன் என - சுவர்க்கத்தைப் போய் அடைந் தான் என்று, இராமன் சொல்லலும் - இராமபிரான் சொன்னதும், இறக்கம் உற்ருன் என — தயரதன் மரணத்தை அடைந்தான் என்று, ஏக்கம் எய்தினுன் - பெரிய ஏமாற்றத்தையடைந்து, உறக்கம் உற் ருன் என - நித்திரையில் ஆழ்ந்தவன் போல, உணர்வு நீங்கினுன் - தன் அறிவின் உணர்ச்சியற்றவனுனன்.

முற்ருத - ஏலாத; தயரதன் தன் வாய்மை காத்து அதன் பொருட்டு உயிர் நீத்தவன்; 'மெய்விடக் கருதாதுவிண் ஏறினுன்'; 205; 'நெறி திறம்பாத்தன் மெய்யை நிற்பதாக்கி யிறந்தான்.' (அயோத். குகப்: 68); 'வாய்மையும் மரபுங் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்' (கிட்கிந்தா. வாலிவதைப்: 76). இறக்கமுற்ருன் என, இறந்து போய்விட்டானு, என்ற வியப்பின்மேற் கூறியதும் ஆம். ஏக்கம் - ஏமாற்றம்; 'நீயுயிர் நானுடல்' என்று உறுதி கூறிய அன்பன் அவ்வுறுதி மொழி மாறி இறந்தானே என்றதால் உண்டான ஏமாற்றம்; (199). உறக்கம் - சாவு, என்னலும் ஆம்; பின், 196 இல், 'தன் உயிர் வந்த மன்னனும்' என வந்துள்ளதை யும் நோக்குக.

பி-ம். 1. மறக்க முற்ருற்றன; மறக்க முற்ருததன்; மறக்க முற்ருதுதன்; மறக்கவுங் கற்றிலா வாய்மை காத்தவன்.

2. முன்னஞ் சொல்லுமுன்.

3. இறக்கமற் றுளதென; இறக்க முற்றியரென; இறக்கவுற்ரு னென; இறக்கமுற்றியாதென.

4. உறக்க முற்ருரென; துறக்கமுற்ருர்கள் போற்ருனுஞ் சோம்பினுன்.

(19)

196. தழுவின ரெடுத்தனர் தடக்கை யான்முகம்
கழுவின ரிருவருங் கண்ணி னீரினுல்
வழுவிய தன்னுயிர் வந்த மன்னனும்
அழிவுறு நெஞ்சின னரற்றி னுனரோ.

இருவரும் - இராம லக்ஷ்மணர் இருவரும், தடம் கையால் - தம் பெரிய கைகளால், (உணர்வு நீங்கிய நிலையில் இருந்த அந்தச் சடாயுவை), தழுவினர் எடுத்தனர் - தழுவி எடுத்தவர்களாய், கண்ணின் நீரினுல் - (சோகத்தால் தமக்குண்டான தம்) கண்ணீரால், கழுவினர்- அந்தச் சடாயுவின் முகத்தைக் கழுவினுர்கள் ; (அந் நிலையில்), வழுவிய - நீங்கியதாகக் கருதப்பட்ட, தன் உயிர் வந்த மன்னனும் - தன் உயிர் மீண்டும் வரப்பெற்ற அந்தக் கழுகுக்கரசனும், அழிவு உறு நெஞ்சினன் - (சக்கரவர்த்தி இறந்ததைக் கருதி) மனம் அழிந்தவனுய், அரற்றினுன் - பின் வருமாறு வாய்விட்டழுது புலம்பினுன். அரோ : அசை.

கண்ணீராற் கழுவுதல் ; ஒப்பு: 'வார் மணிப்புனலான் மண்ணை மண்ணு நீராட்டுங் கண்ணுன்' (அயோத் : குகப் : 39); பள்ளிபடைப் : 124 ; 'அஞ்சனந்தோய் கண்ணிலருவிநீ ராங்கவர்க்கு, மஞ்சன நீராக வழிந்தோட' (நள. 2 : 76). மன்னனும் என்றது : கழுகுகளுக் கிறைவனுதலாலும், சக்கரவர்த்தியின் ஆருயிர் நண்பன் ஆதலாலும், சக்கரவர்த்தியே என்று கருதிய பெருமை தோன்றவும் கூறியது என்க. 'வழுவிய வின்னுயிர் வந்து பின்னரும், அழிவுறு நெஞ் சினன் அரற்றினுனரோ' என்ற பாடமும் ஏற்கும்.

பி - ம். 1. எடுத்தவர்.
3. வழுவிய வின்னுயிர் ; வழுவிய வுயிர்வரத் தெளிந்து மற்றவன் ; வழுவிய வென்னுயிர் ; வழுவிய வின்னுயிர் வந்து பின்னரும்,
4. அழிவரு நெஞ்சினன் ; னரற்ற லாயினுன். (20)

### வேறு

197. பரவலருங் கொடைக்குநின்றன் றனிக்குடைக்கும்
பொறைக்குநெடும் பண்பு தோற்றக்
கரவலருங் கற்பகமு முடுபதியுங்
கடலிடமுங் களித்து வாழப்
புரவலர்தம் புரவலனே பொய்ப்பகையே
மெய்க்கணியே புகழின் வாழ்வே
இரவலரு நல்லறமும் யானுமினி
யென்படநீத் தேகி ஞயே.

'புரவலர் தம் புரவலனே - அரசர்க்கெல்லாம் அரசனே ! பொய் பகையே - பொய்க்குப் பகைவனே ! மெய்க்கு அணியே - சத்தியத் திற்கு ஓர் அணிகலம் போன்றவனே ! புகழின் வாழ்வே - புகழுக்கு

ஒரு வாழ்விடமாய் உள்ளவனே ! நின் தன் - உன்னுடைய, பரவல் அரும் - புகழ முடியாத ; (அதாவது புகழுக்கு அடங்காத), கொடைக்கும் - கொடைச் சிறப்புக்கும், தனி குடைக்கும் - குளிர்ந்த வெண் கொற்றக் குடைக்கும், பொறைக்கும் - பொறுமைக் குணத்திற்கும், நெடும் பண்பு தோற்ற - பெரிதும் குணம் மாறுபட்டுத் தோற்றுப் போன, கரவல் அரு கற்பகமும் - இரப்போர்க்கு ஈவதில் ஒளிப்பது இல்லாத கற்பக விருக்ஷமும், உடுபதியும் - நட்சத்திரங்களுக்கு நாயகனான சந்திரனும், கடல் இடமும் - கடலால் சூழ்ந்த இந்த உலகமும், களித்து வாழ - இனித் தமக்கு எதிராக உள்ளார் ஒருவரும் இல்லை என்று மனம் மகிழ்ந்து வாழும்படியாக, இரவலரும் - உன்னிடம் வந்திரக்கும் யாசகர்களும், நல் அறமும் - சிறந்த தருமமும், யானும் - உன் நண்பனான நானும், இனி எண்பட - இனி என்ன துன்பத்தை அடைந்து வருந்த, நீத்து - எங்களை விட்டு, ஏகினாய் - சென்றாய் ? ஏ : ஈற்றசை.

இது முதல் 4 செய்யுட்கள் தயரதனைக் குறித்துச் சடாயு வருந்தியதைக் கூறும். தயரதன் இறந்தமையால், இனித் தன்னிலும் பிறர்க்கு அளிப்பவர் வேறு இல்லை எனக் கற்பகமும், தசரதன் குடை, மண்ணிடை நிலைபெற்று நாளும் வளர்ந்து கொண்டும், வந்தடைந்தோர்க்கு இன்னிழல் அளித்துப் பகையிருளைப் போக்கியதால், தன்னினும் சிறந்த அதன் தன்மை இனி அழிந்தது என்றும், தானே இனி உயர்வுற இடமாயிற்று என்றும் கருதி உடுபதியும், இனி உலகைத் தாங்கியதால், அவன் பொறையிற் சிறந்தவன் என்ற சிறப்பு போய், அச்சிறப்பு இனித் தன்பால் நிலவுறும் என்று கடலிடமாகிய இப்புவியும் களித்து வாழ இடமாயிற்று என்பதாம்; மேலும், அபயம் இந்திரனுக்கு அளித்துச் சம்பரன் என்னுந் தானவனைப் போரில் அழித்து அவ்விந்திரனுக்கு மீண்டும் சுவர்க்க வாழ்வை அளித்தான் தசரதன் ஆதலால், கற்பகமும் ; (பால. கையடைப் : 8;) உலகிலே என்றும் நிலை பெற்றும், தேய்வது, பின் வளர்வது என்னும் மாறுபாடின்றி, நாளும் வளர்ந்தோங்கியதாலும், வந்தடைந்தோர்க்கு இனிய குளிர் நிழலை அளித்து இருளைப் போக்கியதாலும், தன்னிலும் சிறப்புற்ற தசரதன் குடை (பால. அரசியற் : 9) அவன் இறந்தமையால் இனி சிறப்பெய்தாது என்று உடுபதியும், இவ் வையக முழுவதும் 'வறிஞனோம் புமோர் செய்யென' (பால. அரசியற்: 12) குறைவுபட்டுத் திகழ்ந்த சிறுமை தனக்கு நீங்கும் எனக் கடலிடமான புவியும் களித்தன என்க.

இனி, 'ஈந்தேகடந்தா னிரப்போர் கடலே' (பால. அரசியற்: 5) என்பதற்கேற்ப, தசரதனுடைய கொடையினால் இரவலர்களும், கொற்றவெண் குடையின் கீழ்க் கவலையின்றி வளர்ந்ததால் நல்லறமும், இழிந்த கழுகு என்று இகழ்ந்து எள்ளாமல், தன்னைத் தன் உயிராகப் பாவித்து நட்புக் கொண்ட பொறையினால் தானும், தங்க இடமில்லை யென்று வருந்தினான் கழுகின் வேந்தனான சடாயு என்க. இச் செய்யுளில் மேற்கூறிய செய்திகள் நிரனிறையணியில் அமைந்துள்ள சிறப்பு நோக்கத்தக்கதாம்.

பி - ம். 1. நின்றன் தனிக்குடைக்கும் பண்புதோற்று.
2. மதியிடமும். 4. தெய்தினையே; எகினையோ. (21)

198. அலங்கார மெனவுலகுக் கமுதளிக்குந்
தனிக்குடையா யாழி சூழ்ந்த
நிலங்காவ லதுகிடக்க நிலையாத
நிலையுடையே னேய நெஞ்சின்
நலங்காண நடந்தனையோ நாயகனே
தீவினையே னண்பி னின்றும்
விலங்கானே னாதலினால் விலங்கினே
னின்னுமுயிர் விட்டி லேனால்.

'நாயகனே - தலைவனே! அலங்காரம் என - அலங்காரப் பொருளாய் அமைந்துள்ளது என்று (அறியாதார் கண்ணுக்குத் தோற்றம் அளித்து), உலகுக்கு அமுது அளிக்கும் - (உண்மையில்) உலகில் வாழும் உயிர்களுக்குத் தேவாமிருதம் போன்று நல்லருள் சுரந்தளிக்கும், தனி குடையாய் - ஒப்பற்ற குடையையுடையவனே! ஆழி சூழ்ந்த நிலம் காவல் அது கிடக்க - கடலாற் சூழ்ந்துள்ள இவ்வுலகம் இப்பொழுது உன் பிரிவால் அக்காவலைப் பிரிந்து நிற்பது ஒரு புறம் இருக்க, நிலையாத நிலையுடையேன் - சஞ்சலமான நிலையுடையவனான எனது, நேய நெஞ்சின் நலம் - மனத்தின் அன்பின் சிறப்பை, காண ஓ - நீ அறியவோ, நடந்தனை - நீ இவ்வுலக வாழ்க்கையை விட்டுச் சென்றாய்? தீவினையேன் - பாவியாகிய யான், விலங்கு ஆனேன் ஆதலினால் - ஓர் இழிந்த விலங்குச் சாதியில் பிறந்தவன் ஆதலினால், நண்பின் நின்றும் - உத்தம நட்புத் தன்மையினின்றும், விலங்கினேன் - தவறினவனாய் (உன்னைப் பிரிந்தும்), உயிர் விட்டிலேன் - உயிர் விடாது இன்னும் வாழ்கின்றேன். ஆல்: அசை.

தயரதன் தான் உலகில் அலங்காரம் என வெண்குடை வெளிப்படையில் தோன்றினாலும், உண்மையில் 'உலகுயிர் அளிப்பவன் என்பதற்கு ஓர் அடையாளமாக வெண்குடை தரித்திருந்தான் என்பதாம். தனிக் குடையாய் - ஏகசத்திராதிபதியே' என்றதும் ஆம். குடை உலகளிப்பது :—ஒப்பு : 'கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை, வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப் பதுவே' (புறம். 35. 19-21.); சிலப் : 1 : 1-3. பெருங் : 1 : 36 : 104 : 42 : 44-6. நிலங்காவலது கிடக்க - உலகைக் காப்பது என்ற பொறுப்பை விட்டு, அதனிலும் யமன் உனக்கு நண்பன் என்ற சிறப்பின் உண்மையை நீ காணவும், உலகுக்குக் காட்டவும் நடந்தனையோ என்று சடாயு கூறினனும் ஆம். 'சாவிற்சாதல்' என்றபடி, இறந்தவுடன் யான் இறந்துபட வேண்டியிருக்க, அவ்வாறு செய்யாமல் நிற்பது, விலங்கா நட்பின் உயர் பண்பைத் தான் பெருமையால் விலங்கானேன் என்று கூறி வருந்தினன் என்க. விலங்கு என்பது இங்குப்பறவையைக் குறித்தது.

பி-ம். 1. குயிரளிக்குந் தனிக்குடையாய்.

2. நிலங்காக்குஞ் செயல் கிடக்க.

3. நடந்தனை யென்னையகனே; நலங்காண வேகினையோ; நண்பினானும்; அன்பில் நானும்; னண்பென்றாலும்; னம்பிநானும்; னம்பியின்று.

4. ஆகவினால; ஆதலால்; இன்றுமுயிர்; வின்னுயிரும்; என்னுயிரும்; விட்டிலேன் நான்; விட்டிலேனே; வீட்டிலேன். (22)

**199.** தயிருடைக்கு மத்தென்ன வுலகைநலி
சம்பரனைத் தடிந்த வந்நாள்
அயிர்கிடக்குங் கடல்வலயத் தவரறிய
நீயுடல் யானுவி யென்னச்
செயிர்கிடத்தல் செய்யாத திருமனத்தாய்
செப்பினாய் திறம்பாய் நின்சொல்
உயிர்கிடக்க வுடலைவிசும் பேற்றினா
ருணர்விறந்த கூற்றி னாரே.

செயிர் கிடத்தல் செய்யாத திரு மனத்தாய் - குற்றம் தங்கி இருப்பதைச் செய்யாத அழகிய (தூய) மனமுடையோனே! தயிர் உடைக்கும் மத்து என்ன - தயிர்க் கட்டியை உடைத்துக் குழப்பும் மத்துப் போல, உலகை நலி - எல்லா உலகில் உள்ளோர்களையும்

வருத்திய, சம்பரனை - சம்பராசுரனை, தடிந்த அ நாள் - வெட்டி வீழ்த்திய அன்று; அயிர் கிடக்கும் கடல் வலயத்தவர் அறிய - கரிய நுண் மணல் படிந்து கிடக்கும் கடல் சூழ்ந்த இவ்வுலகில் உள்ளோர் அறியும்படி, 'நீ உடல் யான் ஆவி என்ன - நீ உடல் என்றும், நான் உயிர்' என்றும், செப்பினாய் - நீ முன் உறுதி கூறியுள்ளாய்; நின் சொல் திறம்பாய் - உன் வார்த்தைக்கு நீ மாறுபட மாட்டாய்; (அவ்வாறாக), உணர்வு இறந்த - அந்த நட்பு உணர்ச்சியின் சிறப்பை அறிந்து கொள்ளும் திறமையற்ற, கூற்றினார் - இயமனும், உயிர் கிடக்க விட்டு - உயிராகிய என்னை இங்குக் கிடக்குமாறு விட்டு, உடலை - உடலாக வுள்ள உன்னை, விசும்பு ஏற்றினாரே-சுவர்க்கத்திற்கு ஏற எடுத்துச் சென்றானே, (இது என்ன மதியீனம்? என்பதாம்).

தயிருடைக்கும் மத்து; சுந்தர: 675; 960. சீவக: 421. சம்பரனைத் தசரதன் மாய்த்தது; பால. கையடைப்: 8; அயோத். மந்தரை சூழ்ச்சி. 81; பள்ளிபடை: 53; கிளைகண்டு நீங்கு: 63. உடலை விட்டு உயிரைக் கொண்டு போக வேண்டிய கூற்றுவன், உயிரை விட்டு, உடலைக்கொண்டு சென்றமையால், 'உணவிறந்த கூற்றினார்' என்றான் சடாயு; கூற்றினார் எனப்பன்மை விகுதி கொடுத்துக் கூறியது, இகழ்ச்சிக் குறிப்பில் அமைந்த வஞ்சப் புகழ்ச்சியாகும். கூற்று - உடலிலிருந்து உயிரைக் கூறுபடுத்திக் கொண்டு செல்பவன் என்னும் பொருளது. 'செயிரிலா வுலகினிற் சென்று நின்று வாழ், உயிரெலா முறைவதோ ருடம்பு மாயினான்' (பால. அரசியற்: 10). என்று தயரதன் சிறப்பிக்கப் பெற்றமையால், சடாயு தன் அரிய நண்பன் என்னும் முறையிலும் ஒரு தனிச் சிறப்பு தோன்ற, அவன் தன்னை உயிர் என்று கூறி ஏற்றுக் கொண்ட பெருமை இங்கு விளங்க வைத்ததாகும்.

சம்பராசுர யுத்தத்தில் தேவருதவிக்காகச் சென்ற தயரதன் சடாயுவுடன் அங்கு நட்புக் கொண்டான் என்றும், அப்பொழுது 'நீயுடல்யானாவி' எனக் கூறித் தயரதன் சடாயுவுக்கு உறுதி கூறினான் என்றும், அந்நட்பே, 'ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை, யிருநிலம் பிளக்கவேர் வீழ்க்கும்மே' என்றவாறு உறுதி பெற்றது என்றும் கொள்ளக்கிடக்கும். அவ்வாறு சடாயு தேவர்க்கு உதவியளித்து, அவர்களுக்குப் பகைவரான கொடிய அவுணர்களை அழித்து, அவர் உடல்களைக் கூற்றுக்கு விருந்தாக அளித்து, மிச்சி

லைத் தான் உண்டுவந்தவன் என்பதும், முன் (182) இல் குறிப்பிட்டுள்ளமை இங்கு உய்த்து உணரப்பாலதாம்.

பி-ம். 1. மத்தது போலுலகை; தடிந்த வாளாய்.

2. வலயத் தயலறிய; வலயத் தாரறிய; நீயுயிர் யானுடல மென்று; ஞானுவி யென்று; ஞவி யென்றே; நீயுடல்யா னுயிராமென்று.

3. செயிர் கிடத்த வில்லாத; செப்பினை முன்; திறம்பா கின் சொல்.

4. உடல் விசும்பு; ருணர் விருந்த கூற்றினுரே; ருணர்வுவந்த; ருணர்விழந்த; ருணர்வுலர்ந்த. (23)

சடாயு மனந்தேறித் தன் வரலாறு கூறுதல் 200—1.

200. எழுவதோ ரிசைபெருக விப்பொழுதே
யொப்பரிய வெரியுந் தீயில்
விழுவதே நிற்கமட மெல்லியலார்
தம்மைப்போ னிலத்தின் மேல்வீழ்ந்
தழுவதோ யானென்ஞ வறிவுற்ரு
னெனவெழுந் தவரை நோக்கி
முழுவதே ழுலகுடையான் மைந்தன்மீர்
கேண்மினென முறையிற் சொன்ஞன்.

'எழுவது ஓர் இசை பெருக - மேற்கிளம்பி எழுவதான ஒப்பற்ற கீர்த்தி வளர்ந்தோங்கும்படி, இப்பொழுதே - என் நண்பன் இறந்ததைக் கேட்ட இப்பொழுதே, ஒப்பு அரிய - ஒப்புரைக்க முடியாத, எரியும் தீயில் - சுடர்விட்டு எரியும் நெருப்பில் விழுவதே நிற்க - விழுந்து மடிவதாக அரிய நட்புக்குரியச் செயலைச் செய்யாமல்விட்டு, மட மெல்லியலார் தம்மைப் போல் - பேதமையையுடைய பெண்களைப் போல, நிலத்தின் மேல் விழுந்து - தரைமீது விழுந்து, யான் அழுவதோ - நான் அழுவதுவோ செய்வது?' என்று கூறி, அறிவு உற்ருன் என - (தெளிவான) அறிவு பெற்றவனைப் போல, எழுந்து - மீட்டும் எழுந்து, அவரை நோக்கி - அந்த இராம லக்ஷ்மணர்களைப் பார்த்து, 'ஏழ் உலகு முழுவது உடையான் - ஏழு உலகம் முழுவதும் உரிமையாக வுடைய தயரதனது, மைந்தன்மீர் - குமாரர்களாகிய நீங்கள், கேண்மின் என - யான் கூறுமிதைக் கேளுங்கள்' என்று, முறையில் சொன்ஞன் - உரிய முறையில் அடியிற் காணுமாறு சடாயு கூறுவானானன்.

நண்பனைப் பிரிவதைவிடத் தீயில் வீழ்ந்து இறப்பது மேல் என்றது, 'பசைந்தாரிற் றீர்தலிற் றீப்புகுதல் நன்று' (நான்மணிக் : 13) என்று கூறும் பிரமாணத்தை மேற்கொண்டென்க. துயருற்ற காலை நிலத்தில் வீழ்ந்தழுதல், மகளிர் செயல்; அயோத்யா. நகர்நீங்கு, 108. முழுவதேழுலகுடையவன் - தயரதன்; 'செம்மாண்டனிக்கோ லுலகேழினுஞ் செல்ல நின்றான்' (பால. அரசியற் : 1); ஆதலால் அவன் மைந்தராகிய இவர்க்கும் அவ்வுரிமையுண்டு என்ற முறைப்படி கூறியது என்க. சடாயு தான் எரியில் வீழ்ந்திறக்க உறுதி கொண்டு, அழுவதை நிறுத்தி, தன் வரலாற்றை அவரறியக் கூறத் தொடங்கினான் என்க.

ஒரு பிரதியில், இச்செய்யுள், அடியிற்காணுமாறு சில மாறு பாடுகளுடன் காணப் பெறுகின்றது.

எழுவனிசை பெறுகிட வென்று ணவனிடம்
பிடிப்பதற்கின் றெரியுந்தீயில்
விழுவனது நிற்கமட மெல்லியலார் தமைப்போல
நிலத்தின் மேல்வீழ்ந்
தழுவதிலென் னெனவுணர்ந்தாங் கெழுந்தவரை
நோக்கியுமக் கொன்றுசொல்வேன்
முழுவதுமே ழுலகுடைய மொய்ம்பினீர்
கேண்மினென முறையிற் சொல்வான்.

பி - ம். 1. யிப்பொழுதே குவனைய; யிப்பொழுதே பரிவனைய.
2. மேல் வீழ்ந்திங்.
3. வெழுந் தங்கவரை நோக்கி.
4. மைந்தர்காள்; மைந்தர்நீர்; முன்பர்நீர்: மொய்ம்பினீர்; முறையிற் சொல்வான். (24)

இதன்பின் அடியிற்காணும் (5) பாடல்கள் அச்சுப்பிரதிகளிலும், சில ஏட்டுப் பிரதிகளிலும் உள்ளன. அவை, சிறந்தனவாகக் கருதப் பெறும் பழைய ஏட்டுப் பிரதிகளில் இல்லாமையாலும், அவற்றின் செய்தி துக்க நிலையில் உள்ளோன் மன உணர்ச்சிக்கு மாறாய்ப் புராண ரீதியில் ஒன்றை விரிவாய்க் கூறும் முறையில் அமைந் திருத்தலானும், நூலாசிரியரான நம் கல்வியிற் பெரியார் காப்பி யத்தை யாத்துச்செல்லும் நெறிக்குப் புறம்பாய் உள்ளனவெனக் கருத இடந்தருவதாலும், அவை பாடவரிசையிற் சேர்க்கப் பெறாமல், தனியே அதிகப் பாடல்களாகக் கீழேகுறிக்கப் பெறுவன ஆயின.

தக்கன்மனை வயிற்றுதித்தா ரைம்பதின் மர்தடங் கொங்கைத் தையலாருள்
தொக்கபதின் மூவரையக் காசிபனும் புணர்ந்தனனத தோகை மாருள்
மிக்கவதி திப்பெயராண் முப்பத்து முக்கோடி விண்ணோ ரீன்றாள்
மைக்கருங்கட் டிதியென்பா ளதினிரட்டி யசுரர்தமை வயிறு வாய்த்தாள். (1)

தானவரே முதலோரைத் தனுப்பயர் தாண்மதி யென்பாண் மனிதர் தம்மோ
டானவரு ணங்களவை யடைவடைவே பயந்தனளாற் சுரபி யென்பாள்
தேனுவுடன் சராசரமற் றுளவாய பிறபயந்தா டெரிக்குங் காலை
மானமுடைக் குரோதவசை கழுதைமரை யொட்டகமும் வயிறு வாய்த்தாள். (2)

மழைபுரையுங் குழல்விநதை வானிடிமி னருண னுடன் வயிநதேயன்
தழைபுரையுஞ் சிறைக்கூகை பாறுமுதல் பெரும்பறவை தம்மை யீன்றாள்
இழைபுரையுந் தாம்பிரையூர்க் குருவிசிவல் காடைமுதல் பிறவு மீன்றாள்
கழையெனுமக் கொடிபயந்தாள் கொடியுடனே செடிமுதலாக் கண்டவெல்லாம். (3)

வெருட்டியெழு கணபணத்தின் வியாளமெலாங் கத்துருவா மின்னு மீன்றாள்
மருட்டியெழு மொருதலைய புயங்கமெலாஞ் சுதையென்னு மாது தந்தாள்
அருட்டை யெனு மவளளித்தா ளோந்தியுடும் பணில்கண்முத லாய வெல்லாம்
தெருட்டிடுமா தினையீந்தாள் செலசரமாகிய பலவுந் தெரிக்குங் காலை. (4)

அதிதிதிதி தனவருட்டை சுதைகழையே சுரபியணி விநதை யான்ற
மதியினைகத் துருவுடனே குரோதவசை தாம்பிரையா மடநல் லார்கள்
விதிமுறையே யிவையனைத்தும் பயந்தனர்கள் வினதைசுத னருணன் மென்றோள்
புதுமதிசேர் நுதலரம்பை தனைப்புணர வுதித்தனம்யாம் புவனி மீதே. (5)

201. அருணன்றன் புதல்வன்யா னவன்படரு
முலகெலாம் படர்வெ னுழி
இருண்மொய்ம்பு கெடத்துரந்த தயரதற்கின்
னுயிர்த்துணைவ னிமையோ ரோடும்
வருணங்கள் விரிகின்ற காலத்தே
வந்துதித்தேன் கழுகின் வேந்தன்
தருணங்கொள் பேரொளியீர் சம்பாதி
பின்பிறந்த சடாயு வென்றான்.

' தருணம் கொள் பேர் ஒளியீர் - இளமை பொருந்திய பெரும் தேசு உடையவர்களே ! யான் - நான், அருணன் தன் புதல்வன் - அருணன் என்பானுடைய புத்திரன் ; அவன் படரும் - அவன் செல்லும், உலகு எல்லாம் - உலகங்கள் எவ்விடத்தும், படர்வேன் - செல்லும் திறமையுடையேன் ; இமையோர் ஓடும் - தேவர்களோடும்,

வருணயகள் - பல வருணபேதங்கள், விரிகின்ற காலத்தே - வகைப் பட்ட ஆதிகாலத்திலேயே, வந்து உதித்தேன் - வந்து பிறந்தேனாகிய யான், கழுகின் வேந்தன் சம்பாதி - கழுகுகளுக்கு அரசனான சம்பாதி என்பவனுக்கு, பின் பிறந்த - பின் அவன் தம்பியாகப் பிறந்த, சடாயு - சடாயு என்பவன் ஆவேன்; இருள் மொய்ம்பு கெட ஆழி துரந்த - பகைவர்களாகிய இருளின் வலிமை அழிந்தோடும் படித் தன் ஆக்ஞா சக்கரத்தைச் செலுத்திய, தயரதற்கு - தசரத சக்கரவர்த்திக்கு, இன் உயிர் துணைவன் - இனிய உயிர்போன்ற நண்பன்' என்றான் - என்று (தன் வரலாறு) கூறினான்.

தருணம் - இளமை; அயோத். தைலமாட்டுப்: 15. ஒளி - தேசு; புறநா. *51; 309;* மணி: *19; 128.* சீவக. *248; 272;* பெருங். *1: 34; 66.* சூளா: இரத: *24;* குறள். பரிமேல்: *698.* அருணன் - சூரியன் சாரதி. படர்தல் - செல்லுதல்; அயோத். நகர்நீங்கு: 47, 79. விரிகின்ற காலம்; இது காலவழுவமைதி. கழுகின் வேந்தன் சடாயு என இயைத்துக் கொள்வாரும் உளர். சம்பாதி - நன்றாய்ப் பறந்து செல்பவன் என்னும் பொருள்பெற்று வந்த காரணப்பெயர்.

பி - ம். 1. அருணனருள் புதல்வரி லுலகெலா மளந்து தன்னார்; படர்வானாழி.

2. இருணவியுஞ் சுடர்நேமித் தசரதற்கின் னுயிர்த்துணைவ னிமை யோராதி: தயரதன்றன்; இருணன்குகெட.

3. வகுத்திட்ட; விதித்திட்ட.

4. பின்வரு சடாயு; பின்னர்வரு; பின்பிறந்தேன்: சடாயு வென்பேன்; சடாயு வென்பேர். (25)

அதனைக்கேட்டு இராம லக்ஷ்மணர்கள் அடைந்த மகிழ்ச்சி

202. ஆண்டவனீ துரைசெய்ய வஞ்சலித்த
மலர்க்கையா ரன்பி னேடும்
மூண்டபெருந் துன்பத்தான் முறைமுறையி
னிறைமலர்க்கண் மொய்த்த நீரார்
பூண்டபெரும் புகழ்நிறுவித் தம்பொருட்டாற்
பொன்னுலகம் புக்க தாதை
மீண்டனன்வந் தானவனைக் கண்டனரே
யொத்தனரவ் விலங்கற் றோளார்.

ஆண்டு அவன் ஈது உரை செய்ய - அப்பொழுது அச்சடாயு இவ்வரலாற்றைச் சொல்ல, விலங்கல் தோளார் - மலைபோலும் பெருமையும் வலிமையும் வாய்ந்த தோள்களையுடைய அவ்விராம லக்ஷ்மணர்கள், அஞ்சலித்த மலர் கையார் - தாமரை மலர்கள் போன்ற (அழகிய) கூப்பிய கைகளையுடையவர்களாய், அன்பின் ஓடும், அன்போடு, மூண்ட - மிகுந்த, பெரும் துன்பத்தால் - பெரிய வருத்தத்தினால், முறை முறையின் - அடிக்கடி மேன்மேலும், மலர் கண் நிறை மொய்த்த நீரார் - தாமரை மலர்கள் போன்ற தம் கண்கள் நிறைய அடர்ந்த நீரையுடையவர்களாய், பூண்ட பெரும் புகழ் நிறுவி - தான் தாங்கியிருந்த பெரிய புகழை இவ்வுலகில் என்றும் நிலைத்திருக்குமாறு நிறுத்தி, தம் பொருட்டால் - மைந்தராகிய தாம் பிரிந்து வனம் சென்ற துயரின் பொருட்டு, பொன் உலகம் புக்க - துறக்க நாடு சென்ற, தாதை - தம் தந்தையாகிய தயரதனை, மீண்டனன் வந்தான் அவனை - மீண்டு தம்மைக் காண வந்த அவனை, கண்டனரே ஒத்தனர் - நேரில் பார்த்தவர்களையே போலானார்கள்.

ஆண்டவன் - பெருமைக் குணங்களை ஆண்ட சடாயு என்றலும் ஒன்றும். அது, இராமபிரான் சடாயுவைத் தன் பெரிய தாதையைப் போல் பாராட்டிய சிறப்புத் தோன்றக் கூறியது என்க. பொன்னுலகம் புக்க தாதை தம் பொருட்டால் மீண்டனன் வந்தான் என இயைத்துப் பொருள் கோடலும் அமையும். பூண்ட பெரும் புகழ் நிறுவி, 195-ஆம் செய்யுளின் உரையைக் காண்க. கண்டனரே : ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது. அன்பினோடு மூண்ட பெரும் துன்பத்தால் முறைமுறையின் நிறைந்த கண்ணீர் - தாதையையே மீண்டுங் கண்டது போன்ற மகிழ்ச்சியால் பெருகி நிறைந்த ஆனந்தக் கண்ணீரும், தம் தந்தை இறந்து விட்டாரே என்ற நினைப்புண்டாக அதனால் பெருகி நிறைந்த துயரக் கண்ணீரும் ஒன்றன்பின் ஒன்றாய் மாறிமாறி நிறைந்தன என்க.

பி - ம். 1. ஆண்டவனவ்வுரை கூறவஞ்சலித்தகையினரா யன்பினோடு; ஆண்டவனஃ துரை செய்ய : மலர்க்கையான்.

2. துயரத்தான் ; மொய்த்தநீரால் ; முழுநீர் பாயப்.

3. பொருட்டான் மேலுலகம்; பொருட்டிப் பொன்னுலகம் : புக்க தந்தை ; புகுந்த தாதை.

4. மீண்டனன் வந்தடைந்தானைக் கண்டனனே யொத்தனனவ் ; வந்தன னவனைக் ; விலங்கற் றோளான் ; வீங்குதோளான். (26)

### சடாயு உயிர் விடத்துணிந்து பிறகு தவிர்ந்தது 203—27

203. மருவினிய குணத்தவரை யிருசிறகா
லுறத்தழுவி மக்காணீரே
உரியகடன் வினையேற்கு முதவுவீ
ருடலிரண்டுக் குயிரொன் ருனன்
பிரியவுந்தான் பிரியாதே யினிதிருக்கு
முடற்பொறையாம் பீழை பாரா
தெரியதனி லின்றேபுக் கிறவேனே
லித்துயர மறவே னென்ருன்.

(பின்னர் அச் சடாயு), மருவு இனிய - தழுவி ஏற்றுக் கொள் வதற்கு இனிய, குணத்து அவரை - நற்குணம் வாய்ந்த அந்த இராம லக்ஷ்மணர்களை, இரு சிறகால் - தன் இரு சிறகுகளால், உற தழுவி - நன்ருய் (தன் உடலோடு) அணைத்துக் கொண்டு, 'மக்காள் - என் மக்களே! நீரே - நீங்கள் தாமே, வினையேற்கும் - தீவினை யுடைய எனக்கும், உரிய கடன் - இறக்கும் தந்தைக்குச் செய்வதற்கு உரியதான பிதுர்க் கடனை, (பிரேத ஸம்ஸ்காரம், தர்ப்பணம், பிண்டம் இடுதல் முதலியவற்றை), உதவுவீர் - செய்தருள்வீர் களாக! உடல் இரண்டுக்கு உயிர் ஒன்று ஆனன் - என்னுடையதும் தன்னுடையதுமான இரண்டு உடல்களுக்கு ஒரே உயிர்போன்று இருந்தவனான என் நண்பன் தயரதன், பிரியவும் - என்னை விட்டு உயிர் நீங்கிச் செல்லவும், தான் பிரியாதே - நான் மட்டும் பிரிந்து இறவாமல், இனிது இருக்கும் - இனிதாக வாழ்ந்து இருக்கும், உடல் பொறை ஆம் - உடலைச் சுமந்திருப்பதான, பீழை பாராது, துன்பத்தை இனி பார்த்துக் கொண்டிராமல், எரி அதனில் - நெருப் பிலே, இன்றே - இன்றைக்கே, புக்கு - புகுந்து, இறவேன் ஏல் - இறவாமல் இருப்பேனானல், இ துயரம் மறவேன் என்ருன் - இத் துக்கத்தை நான் மறக்க முடியாது' என்று கூறினன்.

சிறகால் தழுவுதல்: தாய்ப் பறவை தன் குஞ்சுகளைத் தன் சிறகுகளால் தழுவும் இயல்புடையது. பறவைகளுக்கு இரு சிறகு கள் கைகள் போல இருத்தல்; 'அஞ்சிறை யான காமர் துணைக்கரம், கொண்டு' (அயோத். கைகேசி சூழ்வினைப் : 47;) 'தையறுயர்க்குத் தரியாது தஞ்சிறகாங், கையால் வயிறலைத்து' (நள. 2 : 115). மக்காள் என்றது தன் நண்பன் மைந்தர் தன் மைந்தரே என்ற துணிவும் அன்பும் பற்றி: வினையேற்கும், என்றது, நண்பன் இறந்தது கேட்டும் உயிர் நீங்காதிருந்த தன் கொடிய பாவ வினை யைக் குறிப்பிட்டபடி. பீழை: பீடா என்ற வடசொல் திரிந்து

வந்தது ; இது பீடை என்று பொது விதியை ஏற்றும் வழங்குவது உண்டு. சடாயு எரி புகுந்து இறக்கத் துணிந்தது ; முன், 'எரியுந் தீயில் விழுவதே நிற்க' (200) என்று கூறியபடி, 'பசைந்தாரிற் றீர்தலிற்றீப் புகுத னன்று' (நான்மணிக். 13.), 'பிரிவின்கட் பீழை தருவதொன் றில்' (குறள். 839.) எனத் தீர்மானித்தான் என்க.

பி-ம். 1. மருவுறுநற் குணத்தவரை வரிச் சிறகா லுறத்தழுவி ; வரி சிற கால் ; வன்சிறையால் ; மக்கணீரே.

2. உரிய கடன் முறையெனக்கு முதவுவீர்.

3. பிரிய வுவந்தியான் பிரியா திருக்குமுடற் பொறைப் பயன் மற்றியாது மில்லேன் ; பிரியவு நான் பிரியாதே யினிதிருக்கு முடற் பொறையாற் பிழைபாராதே ; பொறையார் பீழை ; பொறையான் பீழை ; பிழைப்பா ராரே.

4. தெரியி தனினின்றே ; எரியிடைபுக் கிறவேனேல் துயரமறவே னெனவவரு மியம்பலுற்றார். (27)

வேறு

204. என்று ரைத்த வெருவை யரசனைத்
துன்று தாரவர் நோக்கித் தொழுதுகண்
ஒன்று முத்த முறைமுறை யாயுக
நின்று மற்றின்ன நீர்மை நிகழ்த்தினர்.

என்று உரைத்த - என இவ்வாறு கூறிய, எருவை அரசனை - கழுகுக்கரசனான சடாயுவை, துன்று தார் அவர் - பொருந்திய மாலை அணிந்த அந்த இராம லக்ஷ்மணர், தொழுது - வணங்கி, கண் ஒன்றும் - கண்களிற் பொருந்திய, முத்தம் - முத்துக்கள் போன்ற நீர்த்துளிகள், முறை முறையாய் - வரிசையாகத் தொடர்ந்து, உக - சிந்த, நின்று - அச்சடாயு எதிரே வருந்தி நின்று, இன்ன நீர்மை - பின்வரும் விதமாய், நிகழ்த்தினர் - எடுத்துரைத்தனர்.

கண் ஒன்று முத்தம் - முத்துப் போன்ற கண்ணீர்த் துளிகள் ; முத்தம் - முத்து ; கண்ணீர்த் துளிகள் முத்துக்கள் போன்று ஒளியும் திரண்ட வடிவும் கொண்டிருந்தமையால், உவமை ஆகுபெயராயிற்று ; 'சேயரிக் குவளைமுத்தஞ் சிந்துபு சிதறிப் போனாள்'; (791) என்பதையும் நோக்குக. இனி முத்தம் உறை முறையாய் விழ எனப் பாடங்கொண்டு, கண்ணீர்த் துளிகளாகிய முத்துக்கள் மழை போல வரிசையாய்ச் சொரிய எனப் பொருள் கோடலும் அமையும் ;

உறை - மழை ; குறள் : 559. நீர்மை : சிறந்த தன்மை ; ஒப்புரவு எனலும் ஆம். நிகழ்த்துதல் - விளங்கக் கூறுதல்.

பி - ம். 2. தாரவன்.

3. யேயுக ; முறை முறையேயுக.

4. நின்று பற்றினன்; நின்று மற்றினி : நீர்மை நிகழ்த்தினன். (28

இச் செய்யுள் சில ஏட்டுப் பிரதிகளில் இல்லை ; எனினும், சிறந்த ஏடுகளில் இஃது உள்ளமையாலும், பொருட்டொடர்புக்கு இஃது இன்றியமையாததாக இருத்தலாலும் இங்குக் கொள்ளப் பெற்றது.

205. உய்விடத் துதவற் குரியா னுந்தன்
மெய்வி டக்கரு தாதுவிண் ணேறினன்
இவ்வி டத்தினி லெம்பெரு மாஅனெமைக்
கைவி டிற்பினே யார்களை கண்ணுளார்.

'உய்வு இடத்து - ஆபத்தினின்று நீங்கிப் பிழைக்க வேண்டிய இடத்து, உதவற்கு உரியானும் - காப்பாற்றி உதவி அளித்தற்கு உரிய பெருமை பொருந்திய சக்கரவர்த்தியும், தன் மெய் விட கருதாது - தன் சத்தியத்தைக் கைவிட எண்ணமல், விண் ஏறினன் - சுவர்க்கமடைந்தான் ; இ இடத்தினில் - இந்தக் காட்டில், எம் பெருமாஅன் - எங்கள் தலைவனே !, எமை கை விடில் - நீவிர் எங்களை விட்டு இறந்து போனல், பினே - பின்பு, களைகண் உளார் யார் - (எங்களுக்குப்) பற்றுக்கோடாக உள்ளவர் வேறு யாரே உள்ளார் ? (ஒருவரும் இல்லையே என்றபடி).

உய்விடத்துதவற்குரியான் - தயரதன் ; தன் மெய்விடக் கருதாது - தான் கைகேயிக்கு முன் அளித்த வரன்களைக் கொடுக்காவிடில் ஏற்படும் சத்தியத்தை யிழந்துவிட எண்ணுது. களைகண் - கொடி வளர்ந்தோங்க நடப்பெறும் கொம்பு ; பற்றுக் கோடும் ஆம் ; அயோத். ஆறுசெல் : 10; சுந்தர. 287 ; 'ஆருளர் களைக ணமமா அரங்கமா நகரு ளானே' (திருமாலை : 29). 'நாங்கள் இளையோர், இதுவோ கொடியவனம் ; எங்களுக்கு உங்கள் ஆதரவு இன்றியமையாதது' என்றதைக் குறிப்பிட்டபடி. எம் பெருமாஅன் - விளி அளபெடுத்து வந்தது. கைவிடுதல் - ஆபத்து வேளையில் விட்டுச்

செல்லுதல். இது, வனவாசத்தில் ஏற்படும் துன்பங்களைக் குறிப்பிட்டுக் கூறியதும் ஆம்.

பி - ம். 1. உய்பொருட் குற்றவர்க்.
2. மெய்விடற் கரிதாகி; மெய்பொருட்டெளிவு பெறவிண்ணேறினன்.
3. இவ்விடர்க் கடலெம் பெருமானெமை.
4. கைவிடப் பின்னையார்; யாருளர் கண்ணுளார் கண்ணுளோர்.

(29)

206. தாயி னீங்கருந் தந்தையிற் றண்ணகர்
வாயி னீங்கி வனம்புகுந் தெய்திய
நோயு நீங்கினெ நுன்னினென் னெங்களை
நீயு நீங்குதி யோநெறி நீங்கலாய்.

'நெறி நீங்கலாய் - அறநெறியினின்றும் நீங்காதவரே! நீங்கு அரு - ஒருபோதும் நீங்காத, தாயின் - தாயை விட்டும், தந்தையில் - தந்தையை விட்டும், தன் நகர் வாயின் - குளிர்ந்த நீர்வளம் பொருந்திய அயோத்தி நகரின் கோட்டை வாயிலையும், நீங்கி - நாங்கள் நீங்கி, வனம் புகுந்து - காட்டில் புகுந்து, எய்திய - இதுகாறும் அடைந்த, நோயின் - வருத்தத்தினின்றும், நுன்னின் - உம்மை அடைந்தமையால், நீங்கினெம் - நீங்கினவர்கள் ஆனோம்; எங்களை நீயும் என் நீங்குதியோ - இந்நிலையிலுள்ள எங்களை விட்டு நீங்களும் இறந்து போவது ஏனோ? (நீவிர் இறத்தல் கூடாது என்று குறிப்பிட்டபடி.)

நுன் - உன்; நுன், கன்னட நாட்டுத் திசைச்சொல்; சீவக: 324. உரை. தே. சுந்தர: பெருங்: 1: 32: 13. நீயும்: உம்மை, உயர்வு சிறப்பாகவும், இறந்தது தழுவிய எச்ச உம்மையாகவும் கொள்ளப்பாலது. இதில், தாயின், தந்தையின், வாயின், நுன்னின் என்பவற்றில் உள்ள இன் உருபை, நீக்கப்படு பொருளாயும் எல்லைப் பொருளாயும் கொள்க.

பி - ம். 1. தாயு நீங்கரு தந்தையும்; தந்தையைத் தண்ணகர்; தந்தையின் தன்னகர்.
2. வயனீங்கி.
3. நோயினீங்கி: நோயுநீங்கி: நண்ணல னெங்களை; நண்ணிய வெங்களை; முன்னிலி னெங்களை; துன்னில் வந்தெங்களை, நுன்னைக் கண்டெங்களை.

(30)

207. என்று சொல்ல விருந்தழி நெஞ்சினன்
நின்ற வீரரை நோக்கி நினைந்தவன்
அன்ற தென்னி லயோத்தியி லையநீர்
சென்ற பின்னவற் சேர்குவென் யானென்றான்.

என்று சொல்ல - என்று இராம லக்ஷ்மணர் வருந்திச் சொல்ல, இருந்து அழி நெஞ்சினன் - இருந்து அழிகின்ற மனத்தினனான சடாயு, நின்ற வீரரை - தன் எதிர் நின்ற வீரர்களாகிய இராம லக்ஷ்மணர்களை, நோக்கி - பார்த்து, நினைந்தவன் - ஒரு யோசனை செய்தவனாகி, 'அது அன்று எனின் - அச்செயல் உங்களுக்கு உடன்பாடு அன்று என்றால், ஐய நீர் - அன்பர்களே! நீவிர் - நீவிர், அயோத்தியில் சென்ற பின் - திரும்பி அயோத்தி நகரில் போய்ச் சேர்ந்த பிறகு, யான் அவன் சேர்குவென் - யான் (இறந்த) அந்தச் சக்கரவர்த்திபால் போய்ச் சேருவேன், (உயிரை விடுவேன்),' என்றான்- என்று (அவர்க்குச் சமாதானம் வரக்) கூறினான்.

ஐய, என்றது அன்பினால்; இது மரபு வழுவமைதி.

பி - ம். 1. என்ற சொல்ல ரிருந்தழி நெஞ்சினர்; என்று சொல்லி யிருந்தழு நெஞ்சினர்; ரிறந்தழி; ரிரந்தழு; ரிழிந்தழி; ரிறங்குறு நெஞ்சராய்.
2. நின்ற வேந்தரை; நினைந்தவை. 3. னையன்மீர்.
4. சேர்கு வனியா னென்றான்; சேர்குவென் யானென; சேர்வ னென் றேசொல்வான். (31)

வனம் வந்த வரலாறு கேட்டு, சடாயு அவர்களைப் பாராட்டுதல் 208—214

208. வேந்தன் விண்ணடைந் தானெனில் வீரர்நீர்
ஏந்து ஞால மினிதளி யாதிவண்
போந்த தென்னை புகுந்தவென் புந்திபோய்க்
காந்து கின்றது கட்டுரை யீரென்றான்.

(பின் அச் சடாயு), 'வேந்தன் - சக்கரவர்த்தியாகிய தயரதன், விண் அடைந்தான் எனில் - சுவர்க்கத்தை அடைந்தான் என்றால், வீரர் நீர் - வீரர்களாகிய நீங்கள், ஏந்து ஞாலம் - தாங்கி ஆள்வதற்கு உரிய உங்கள் இராச்சியத்தை, இனிது அளியாது - மனமுவந்து நன்கு காப்பாற்றாமல், இவண் - இவ்வனத்திற்கு, போந்தது என்னை - வந்தது என்ன காரணத்தால்? என் புந்தி - என் மனம், போய் - ஒரு நிலையில் இல்லாமற் போய், காந்துகின்றது -

வெதும்புகின்றது ; புகுந்த என் - வந்து நேர்ந்த தீமைகள் யாவை ? கட்டுரையீர் - எடுத்துக் கூறுங்கள் ' என்றான் - என்று வருந்திக் கேட்டான்.

வீரர் நீர் : ' நீங்கள் மகா வீரர்களாய்க் காணப்படுகின்றீர்கள் ; ஆதலால் உங்களைச் சத்துருக்கள் வென்று நாட்டினின்றும் வெருட்டியடித்திருக்க ஞாயம் இல்லை ;' என்று ஊகித்துக் கூறியது. ஏந்து ஞாலம் - பரம்பரையாக உரிமையுடன் ஆண்டு வந்த உலகம். புந்தி - புத்தி ; இங்கு மனம் என்னும் பொருளில் வந்தது. கட்டுரைத்தல் - தெளிவாக விரித்துச் சொல்லுதல்.

சில சுவடிகளில் இச்செய்யுள் பின்னும், அடுத்த செய்யுள் முன்னுமாக உள்ளன.

பா-ம். 2. யினியயளி யாதிவட் ; யாதிங்ஙன்.

3. போந்த தென்ன பொருட்டிதென் புந்தியிற் ; புகுந்ததென்.

4. கட்டுரைப்பீ ரென்றான். (32)

209. தேவர் தானவர் திண்டிற நாகர்வே
றேவ ராக விடரிழைத் தாரெனில்
பூவ ராவு பொலங்கதிர் வேலினீர்
சாவ ராக்கித் தருவெ னரசென்றான்.

' பூ அராவு பொலன் கதிர் வேலினீர் - கூர்மையாக அராவப் பெற்று, பொன் ஒளி வீசும் வேல்களை யுடையவர்களே !, திண் திறல் - மிக்க வலிமை வாய்ந்த, தேவர் - தேவர்களாயினும், தானவர் - அசுரர்கள் ஆயினும், நாகர் - நாகலோகத்தவர்களாயினும், வேறு எவர் ஆக - வேறு எவரே ஆக ஆயினும், இடர் இழைத்தார் எனில் - உங்களுக்குத் துன்பம் செய்தார் என்று கூறுவீரானால், சாவர் ஆக்கி - அவர்களை இறந்தவராகச் செய்து, (அதாவது அவர்களைக் கொன்று). அரசு தருவென் என்றான் - உங்கள் இராச்சியத்தை மீட்டுக் கொடுப்பேன் ' என்று உறுதி கூறினான் சடாயு.

பூ - கூர்மை : புறநா : 224 ; 15 ; இறை. சூ : 17 ; அயோத். மந்திரப் : 77 ; சூளா. 501 ; நச். உரை ; சீவக. 2599. பூ அராவுதல் - பூவைப்போல் அராவுதல் என்ற பொருளும் கொள்வர். வேலிற் பூ அராவுதல் : 504 ; முல்லைப். 41. வேறு எவர் ; என்றது, மானிடர், அரக்கர் முதலினோரைக் குறிப்பிட்டது என்க. ஆக என்பது

தேவர் முதல் யாவர்க்கும் கூட்டியுரைக்கப் பெற்றது. திண்டிறல் : இது ஒரு பொருட் பன்மொழி.

பி - ம். 3. கறை வேலினீர்; கழல் வேலினீர்.
4. தருகுவென் சாற்றுவீர். (33)

210. தாதை கூறலுந் தம்பியை நோக்கினன்
சீதை கேள்வ னவனுந்தன் சிற்றவை
மாத ரால்வந்த செய்கை வரம்பிலா
ஓத வேலை யொழிவின் றுணர்த்தினன்.

தாதை கூறலும் - தந்தையாகிய சடாயு அவ்வாறு சொன்னவுடன், சீதை கேள்வனும் - சீதா தேவியின் கணவனான இராமபிரானும், தம்பியை நோக்கினன் - தன் தம்பியாகிய இலக்குவனைக் கண் ஜாடை கொண்டு பார்த்தான் ; அவனும் - (அந்தக் குறிப்பறிந்த) இலக்குவனும், தன் சிற்றவ்வை மாதரால் - தன் சிறிய தாயாகிய, கைகேயி என்னும் மாதினால், வந்த செய்கை - உண்டான செயலாகிய, வரம்பு இலா ஓத வேலை - எல்லை இல்லாத ஒலியுடைய பெருங்கடல் போன்ற துயரச் செய்தியை, ஒழிவு இன்று - சிறிதும் விட்டுப்போகாமல், உணர்த்தினன் - அச்சடாயுவுக்கு விளங்கக் கூறினான்.

சடாயுவைத் தாதை என்றது : தன் தந்தையாகிய தயரதருக்கு இன்னுயிர்த் துணைவன் என்ற முறைபற்றி என்க. சடாயு, இராம லக்ஷ்மணர்களை, மக்கள் என்பதும் அவர்கள் சடாயுவைத் தாதை என்பதும் பின் இந்நூலிற் பல இடங்களிற் காணலாம் ; ஆரணிய : 202, 203, 219 ; 946, 956, 981 ; 988 ; உயுத்த. அங்கதன் றூது : 5. இராமபிரான், தன் வரலாற்றினைத் தானே கூறாது தம்பியைக் கூறச்செய்தது, தாயாகிய கைகேயின் மேல் குற்றங் கூறுவதைத் தான் விரும்பாமல் என்க. இவ்வாறே குகனிடமும், அநுமன் முதலியோரிடமும் நிகழ்ந்தமை காண்க. நோக்கினன் என்றது, இலக்குவன் இங்கித ஞானத்தில் வல்லவனாதலின். சிற்றவ்வை : சிறு அவ்வை ; அவ்வை - தாய். 'ஓதவேலை சிற்றவ்வை மாதரால் வந்த செய்கை யொழிவின் றுணர்த்தினன் - ஒலியையுடைய கடல் போலக் கைகேசி நிமித்தமாக உண்டான மாற்ற மெல்லாம் சொன்னான்' என்பது பழையவுரை. வரம்பிலா வேலை : வேலை கரையுடையது ; ஆனால் இந்தத் துயர வேலை கரையிலாதது என்பது.

பி - ம். 1. தாதை கேட்டலும்.
3. மாதினால் வந்த ; செய்கைமற்றியாவையும்.
4. ஓதி வேலை; ஓதவேலை மொழியென்றுணர்த்தினன்; ஓதினனவன் கேட்டு வந்தோதுவான். (34

வெதும்புகின்றது; புகுந்த என் - வந்து நேர்ந்த தீமைகள் யாவை? கட்டுரையீர் - எடுத்துக் கூறுங்கள்' என்றான் - என்று வருந்திக் கேட்டான்.

வீரர் நீர்: 'நீங்கள் மகா வீரர்களாய்க் காணப்படுகின்றீர்கள்; ஆதலால் உங்களைச் சத்துருக்கள் வென்று நாட்டினின்றும் வெருட்டியடித்திருக்க ஞாயம் இல்லை;' என்று ஊகித்துக் கூறியது. ஏந்து ஞாலம் - பரம்பரையாக உரிமையுடன் ஆண்டு வந்த உலகம். புந்தி - புத்தி; இங்கு மனம் என்னும் பொருளில் வந்தது. கட்டுரைத்தல் - தெளிவாக விரித்துச் சொல்லுதல்.

சில சுவடிகளில் இச்செய்யுள் பின்னும், அடுத்த செய்யுள் முன்னுமாக உள்ளன.

பி-ம். 2. யினியளி யாதிவட்; யாதிங்ஙன்.

3. போந்த தென்ன பொருட்டிதென் புந்தியிற்; புகுந்ததென்.

4. கட்டுரைப்பீ ரென்றான். (32)

209. தேவர் தானவர் திண்டிற நாகர்வே
றேவ ராக விடரிழைத் தாரெனில்
பூவ ராவு பொலங்கதிர் வேலினீர்
சாவ ராக்கித் தருவெ னரசென்றான்.

'பூ அராவு பொலன் கதிர் வேலினீர் - கூர்மையாக அராவப் பெற்று, பொன் ஒளி வீசும் வேல்களை யுடையவர்களே!, திண் திறல் - மிக்க வலிமை வாய்ந்த, தேவர் - தேவர்களாயினும், தானவர் - அசுரர்கள் ஆயினும், நாகர் - நாகலோகத்தவர்களாயினும், வேறு ஏவர் ஆக - வேறு எவரே ஆக ஆயினும், இடர் இழைத்தார் எனில் - உங்களுக்குத் துன்பம் செய்தார் என்று கூறுவீரானால், சாவர் ஆக்கி - அவர்களை இறந்தவராகச் செய்து, (அதாவது அவர்களைக் கொன்று). அரசு தருவென் என்றான் - உங்கள் இராச்சியத்தை மீட்டுக் கொடுப்பேன்' என்று உறுதி கூறினான் சடாயு.

பூ - கூர்மை: புறநா: 224; 15; இறை. சூ: 17; அயோத். மந்திரப்: 77; சூளா. 504; நச். உரை; சீவக. 2599. பூ அராவுதல் - பூவைப்போல் அராவுதல் என்ற பொருளும் கொள்வர். வேலிற் பூ அராவுதல்: 504; முல்லைப். 41. வேறு ஏவர்; என்றது, மானிடர், அரக்கர் முதலியோரைக் குறிப்பிட்டது என்க. ஆக என்பது

தேவர் முதல் யாவர்க்கும் கூட்டியுரைக்கப் பெற்றது. திண்டிறல் : இது ஒரு பொருட் பன்மொழி.

பி - ம். 3. கறை வேலினீர் ; கழல் வேலினீர்.
4. தருகுவென் சாற்றுவீர். (33)

210. தாதை கூறலுந் தம்பியை நோக்கினன்
சீதை கேள்வ னவனுந்தன் சிற்றவை
மாத ரால்வந்த செய்கை வரம்பிலா
ஓத வேலை யொழிவின் றுணர்த்தினன்.

தாதை கூறலும் - தந்தையாகிய சடாயு அவ்வாறு சொன்னவுடன், சீதை கேள்வனும் - சீதா தேவியின் கணவனான இராமபிரானும், தம்பியை நோக்கினன் - தன் தம்பியாகிய இலக்குவனைக் கண் ஜாடை கொண்டு பார்த்தான் ; அவனும் - (அந்தக் குறிப்பறிந்த) இலக்குவனும், தன் சிற்றவ்வை மாதரால் - தன் சிறிய தாயாகிய, கைகேயி என்னும் மாதினால், வந்த செய்கை - உண்டான செயலாகிய, வரம்பு இலா ஓத வேலை - எல்லை இல்லாத ஒலியுடைய பெருங்கடல் போன்ற துயரச் செய்தியை, ஒழிவு இன்று - சிறிதும் விட்டுப்போகாமல், உணர்த்தினன் - அச்சடாயுவுக்கு விளங்கக் கூறினன்.

சடாயுவைத் தாதை என்றது : தன் தந்தையாகிய தயரதருக்கு இன்னுயிர்த் துணைவன் என்ற முறைபற்றி என்க. சடாயு, இராம லக்ஷ்மணர்களை, மக்கள் என்பதும் அவர்கள் சடாயுவைத் தாதை என்பதும் பின் இந்நூலிற் பல இடங்களிற் காணலாம் ; ஆரணிய : 202, 203, 219 ; 946, 956, 981 ; 988 ; உயுத்த. அங்கதன் றூது : 5. இராமபிரான், தன் வரலாற்றினைத் தானே கூறாது தம்பியைக் கூறச்செய்தது, தாயாகிய கைகேயின் மேல் குற்றங் கூறுவதைத் தான் விரும்பாமல் என்க. இவ்வாறே குகனிடமும், அநுமன் முதலியோரிடமும் நிகழ்ந்தமை காண்க. நோக்கினன் என்றது, இலக்குவன் இங்கித ஞானத்தில் வல்லவனாதலின். சிற்றவ்வை : சிறு அவ்வை ; அவ்வை - தாய். 'ஓதவேலை சிற்றவ்வை மாதரால் வந்த செய்கை யொழிவின்றுணர்த்தினன் - ஒலியையுடைய கடல் போலக் கைகேசி நிமித்தமாக உண்டான மாற்ற மெல்லாம் சொன்னான்' என்பது பழையவுரை. வரம்பிலா வேலை : வேலை கரையுடையது ; ஆனால் இந்தத் துயர வேலை கரையிலாதது என்பது.

பி - ம். 1. தாதை கேட்டலும்.
3. மாதினால் வந்த ; செய்கைமற்றியாவையும்.
4. ஓதி வேலை; ஓதவேலை மொழியென்றுணர்த்தினன்; ஓதினனவன் கேட்டு வந்தோதுவான். (34

211. உந்தை யுண்மைய ளுக்கியுன் சிற்றவை
தந்த சொல்லைத் தலைக்கொண்டு தாரணி
வந்த தம்பிக் குதவிய வள்ளலே
எந்தை வல்ல தியாவர்வல் லாரெனா.

(அதனைக் கேட்ட சடாயு இராமபிரானை நோக்கி), 'உந்தை உண்மையன் ஆக்கி - உன் தந்தை சத்தியசந்தன் என்பதை நிலை நிறுத்தி, உன் சிற்றவை தந்த சொல்லை தலை கொண்டு - உன் சிறிய தாய் கட்டளையிட்ட சொல்லைச் சிரமேற் கொண்டு ஏற்று, தாரணி - உனக்கு உன் தந்தை அளித்த அரசியற் செல்வத்தை, வந்த தம்பிக்கு - உன் பின் பிறந்த தம்பியாகிய பரதனுக்கு, உதவிய - (விருப்பொடு) கொடுத்த, வள்ளலே - கொடையாளிகளுட் சிறந்தோனே! எந்தை வல்லது - என் அப்பனாகிய நீ செய்த செய்கை போல, யாவர் வல்லார் - யாரே உலகில் செய்யும் திறமையுள்ளவர் ஆவர்? (ஒருவரும் இல்லை என்றபடி).

எந்தை என்று இராமபிரானைச் சொன்னது, அன்பின் மிகுதியால் வந்த மரபு வழுவமைதியின் பாற்படும். எந்தை வல்லது: ஒப்பு: 'ஐயன் வல்லனென் னுருயிர் வல்லன்'; 802. எந்தை - என் தந்தை என்பதின் மரூஉ. இனி, எந்தை என்பதை, சடாயு தன் தம்பி முறையான தயரதன் பாற்கொண்டு, 'மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்' (குறள். 70) என்ற புகழை அத்தயரதன் பெற்றான் எனக்கூறினன் என்க. சடாயுவைப் பெரியவுடையார் என்று வைஷ்ண ஸம்பிரதாயத்தில் ஏற்றிக் கூறுவதும் இங்கு நோக்கத்தக்கது. இராமபிரானை வள்ளல் என்றது, தனக்கு உரியதும், தன் தந்தையால் அரச சபை முன் உறுதி கூறி அளிக்கப்பெற்றதுமான அரசியற் பெருஞ் செல்வத்தை விருப்பொடு தம்பிக்கு அளித்த வரையாத பெருங் கொடைச் சிறப்பைப் பாராட்டி என்க. தாரணி: தரணி என்ற வடசொல்லின் விகாரம். இச் செய்யுளும் அடுத்த செய்யுளும் குளகமாய்ப் பொருள் தொடர்பு கொண்டு, அதிலுள்ள 'என்றான்' என்ற வினைகொண்டு முடியும்.

பி - ம். 1. யுண்மை யினுக்கி. 2. தந்தை, சொல்லை.
3. வள்ளலென்.
4. வல்லது யாவர்; எந்தை நின் வலித்தியார் வல்ல ராமென்றான்.

212. அல்லித் தாமரைக் கண்ணனை யன்புறப்
புல்லி மோந்து பொழிந்தகண் ணீரினன்
வல்லை மைந்தவம் மன்னையு மென்னையும்
எல்லை யில்புக ழெய்துவித் தாயென்றான்.

(மேலும் அச்சடாயு), அல்லி தாமரை கண்ணனை - அகவிதழ் களையுடைய தாமரை மலர் போன்ற (அழகிய) கண்களையுடைய இராமபிரானை, அன்பு உற புல்லி மோந்து - அன்பு மிகத் தழுவி உச்சிமோந்து, பொழிந்த கண் நீரினன் - சொரிந்த கண்ணீரை யுடையவனாய், 'மைந்த - புதல்வனே! அ மன்னையும் - அந்தத் தயரத சக்கரவர்த்தியையும், என்னையும் - என்னையும், எல்லை இல் புகழ் எய்துவித்தாய் - அளவு அற்ற பெரிய புகழ் அடையச் செய் தாய், வல்லை - நீயே சமர்த்தன் ஆவாய்' என்றான் - என்று பாராட் டினான்.

அல்லி - அகவிதழ் (பிங்). புல்லி மோந்து: குழந்தையைத் தழுவுதலும் உச்சி மோத்தலும், அன்புடைய பெற்றோர் செயல்கள்; மோத்தல் - மூக்கால் நுகர்தல், 'முறைமுறையே மோக்கின்றான்; 995. மோப்பக் குழையும் அனிச்சம்' (குறள், 90) என்பதையும் நோக்குக. கண்ணீர்: இங்கு ஆனந்தக் கண்ணீர். மன்னையும் என்னை யும் என்று உம்மையால் சேர்த்துச் சிறப்பித்தது, அவ்விருவருள் வேறுபாடின்மையால், அத்தயரதன் புகழ் தன் புகழேயாகக் கருதிக் கூறியது. பொழிந்த கண்ணீரின் இது வடமொழி நடை. வல்லை: முன் (211) இல், 'எந்தை, வல்லதியாவர் வல்லார்' எனக் கூறியதை மீட்டும் இங்குக் கூறி வலியுறுத்தியது ஆகும்; வல்லன் - சாமர்த்திய சாலி; 802. வல்லை; 'வல்லையுன் கட்டுரைகள்' (திருப்பாவை. 15).

பி - ம். 2. புல்லிப் போந்து; புல்லிப் புல்லிப் பொழிந்த.
4. எய்து வித்தாயென; தாயெனா. (36)

213. பின்ன ரும்மப் பெரியவன் பெய்வளை
அன்ன மன்ன வணங்கினை நோக்கினன்
மன்னர் மன்னவன் மைந்தவிவ் வாணுதல்
இன்ன ளென்ன வியம்புதி யாலென்றான்.

பின்னரும் - பிறகும், அ பெரியவன் - அந்தப் பெரியோனான சடாயு, பெய்வளை அன்னம் அன்ன - அணிந்த வளையல்களையுடைய அன்னப் பேடு ஒத்த, அணங்கினை - தெய்வப் பெண் போன்ற சீதையை, நோக்கினன் - பார்த்து, 'மன்னர் மன்னவன் மைந்த -

சக்கரவர்த்தியின் திருக்குமாரனுன ஏ, இராம! இவள் நுதல்- இந்த ஒளி தங்கிய நெற்றியையுடைய பெண், இன்னள் என்ன - இன்னுள் என்று, இயம்புதி என்ருன் - சொல்வாயாக' என்று கூறினுன். ஆல்: ஆசை.

பெரியவன்: குணம், கல்வி, கேள்வி, ஆயுள் முதலியவற்ருல் பெரியவன். பெய்வளை யன்னம்: இல் பொருளுவமை. அணங்கு, வாணுதல் என்பன இங்குப் பெண் என்ற அளவில் வந்தது எனக் கொள்ளப்பாலது. நோக்கினுன்: முற்றெச்சம். பிராட்டியை அன்னத்திற்கு உவமிப்பது இந்நூலில் பல இடத்துங்காணலாம்.

பி-ம். 1. அன்ன மென்னடை யாடனை நோக்கியே.
3. மன்னர் மன்னவ; மைந்த.
4. வியம்புதி யெற்கென்ருன். (37)

214. அல்லி றுத்தன தாடகை யாதியா
வில்லி றுத்தங் கரிவையை மேலை நாள்
புல்லு றுத்ததி யாவும் புகன்றுதன்
சொல்லி றுத்தனன் றோன்றல்பின் றோன்றினுன்:

தோன்றல் பின் தோன்றினுன் - இராமபிரான் பின் பிறந்த இலக்குவன், மேலைநாள் - முன்னுளில், அல் இறுத்து அன - இருள் வந்து தங்கி இருந்தது போன்ற (உருவுடைய), தாடகை ஆதியா - தாடகை என்னும் அரக்கியைக் கொன்றது முதலாக, வில் இறுத்து - மிதிலையில் சிவதனுசை முறித்து, அங்கு - அவ்விடத்தில், அரிவையை - சீதாப்பிராட்டியை, புல் உறுத்தது - (இராமபிரான்) மணந்து கொண்டது, யாவும் புகன்று - எல்லாவற்றையும் சொல்லி, தன் சொல் இறுத்தனன் - தன் சொற்களைக் கூறி முடித்தான்.

தோன்றல்: ஆடவரிற் சிறந்தோன், தலைவன் என்னும் பொருளதும் ஆம்; 141. அல்லிறுத்தன தாடகை; பால. தாடகைவதைப் 71, 73. தாடகை - மலைகண் மீது சஞ்சரிப்பவள் என்னும் காரணத்தால் வந்த பெயர். புல்லுறுத்தல் - தழுவுதல்; மணந்து கொள்ளல். 'புல்லிறுத்தன யாவும் - பொருந்த உண்டான வெல்லாம்' என்பது பழையவுரை.

பி-ம். 1. அல்லிறுத்தயன் தாடகை, அல்லிறுத்தனன் ருடகை;
2. வில்லிறுத்த திடையென்று; திடையென.
3. புல்லிறுத்தனன் யாவும்; புல்லிறுத்தியாவும்; புல்லிருத்தன பாவும். (38)

இராமன் பஞ்சவடிக்குச் செல்ல விரும்பச் சடாயு அவர்களை
அங்குச் சேர்ப்பித்தது 215—9.

215. கேட்டு வந்த கிளரொளி மோலியான்
தோட்ட லங்கலி னீர்துறந் தீர்வளம்
நாட்டு நீரினி நண்ணுதல் காறுமிக்
காட்டில் வைகுதிர் காக்குவென் யானென்றான்.

கேட்டு உவந்த - அது கேட்டு மகிழ்ந்த, கிளர் ஒளி மோலியான் - மேலோங்கும் ஒளியுள்ள முடியுடைய சடாயு, 'தோடு அலங்கலினீர் - பூவிதழ்களாலாகிய மாலைகளை யுடையவர்களே! வளம் துறந்தீர் - உங்கள் செல்வச் சிறப்புக்களைவிட்டு விட்டு வந்தீர்; நாடு நீர் இனி நண்ணுதல் காறும் - உங்கள் நாட்டுக்கு நீவிர் இனித் திரும்பிச் சேரும் வரையில், இ காட்டில் வைகுதிர் - இந்த வனத்தில் தங்கி யிருங்கள்; யான் காக்குவென் - நான் உங்களைப் பாதுகாத்து வருவேன்;' என்றான் - என்று கூறினன்.

மோலி: மௌலி என்பதின் திரிபு. சடாயு மௌலியுடைமை - 183. இங்கு மௌலி என்றது. கழுகுக்கு உள்ள உச்சிக் கொண்டை போன்ற சிகைத் தொகுதியை. தோடு - பூ விதழ்; 'தோடு துற்ற மலர்த்தாரான்' பால. திருவவதாரப்: 62.

பி-ம். 1. கேட்டு வந்தனன்; கேட்டனனவன்; கேழ்கிளர் மவுலியான்; கிளரு மௌலியான்.
3. நாட்டி னீவிரு நன்னுதரூனுமிக்; னீவிரிந் நன்னுதலோடுமிக்; நாட்டு நீர்மையிந் நன்னுதலோடுமிக்.
4. காட்டுள் வைகுதிர். (39)

216. இறைவ வெண்ணி யகத்திய னீந்துள
தறையு நன்மணி யாற்றி னகன்கரைத்
துறையி னுண்டொரு சூழலச் சூழல்புக்
குறைது மென்றன னுள்ளத் துறைகுவான்.

உள்ளத்து உறைகுவான் - எல்லா உயிர்களின் உள்ளத்திலும் மறைந்து வசிக்கும் பரம்பொருளாகிய இராமபிரான், (அச் சடாயுவை நோக்கி), 'இறைவ - தலைவனே! அகத்தியன் - அகத்திய முனிவர், எண்ணி - யான் தங்கியிருப்பதற்குத் தக்க இடம் என்று ஆலோசித்து, ஈந்து உளது - அருளியது ஆன, அறையும் நல் மணி ஆற்றின் அகன் கரை - ஒலிக்கின்ற சிறந்த அழகிய கோதாவரி நதியின் அகன்ற கரையின் நீர்த்துறை இடத்தில், ஒரு சூழல்

உண்டு - ஓர் இடம் உள்ளது; அ சூழல் புக்கு - அந்த இடத்தை அடைந்து, உறைதும் என்றனன் - வசிப்போம்' என்று கூறினான்.

உள்ளத்துறைகுவான் : அயோத். காப்புச் செய்யுள்; இளைகண்டு நீங்கு : 81. அறையும் நன்மணி - ஒலிக்கும் சிறந்த இரத்தினங்கள் பொருந்திய என்றும் பொருள் கொள்ளலாம். கோதாவரி நதியில் உயரிய அரதனங்கள் கிடைப்பது உண்டு என்பது அறியப்படு கின்றது. இறைவ! என்றது பக்ஷிகளுக்கு அரசன் என்ற முறை பற்றியும், தன் தந்தை என்னும் நிலையுடைமை பற்றியும் என்க.

பி-ம். 1. இறைவ னெண்ணி; இறைவகேட்டி; யகத்திய னீங்கெமக்.
2. கறைதல் செய்தன ஞற்றினகன் கரைத்.
3. துறையி னீண்டொரு; துறையுளுண்டொரு; சூழலென் றன்னதில்.
4. உறைது மென்ன வன்ஞனவர்க் கோதுவான். (40)

217. பெரிது நன்றப் பெருந்துறை வைகினீர்
புரிதிர் மாதவம் போதுமின் யானது
தெரிவு றுத்துவெ னென்றவர் திண்சிறை
விரியு நீழலின் மேவவிண் சென்றனன்.

(அது கேட்ட சடாயு), 'பெரிதும் நன்று - (அகத்தியர் தெரிவித்தபடி அங்குச் சென்று நீங்கள் தங்குவது) மிக்வும் நன்மை தரத் தக்கது; நீர் அ பெரும் துறை வைகி - நீங்கள் அந்தப் பெரிய ஆற்றின் துறையிடத்துத் தங்கியிருந்து, மா தவம் புரிதிர் - சிறந்த தவத்தைச் செய்யுங்கள்; போதுமின் - வாருங்கள்; யான் அது தெரிவுறுத்துவென் - நான் அவ்விடத்தை உங்களுக்குக் காண்பிப்பேன்;' என்று - என்று கூறி, திண் சிறை நிழலில் அவர் மேவ - தன் வலிய சிறகுகளின் விரிந்த நிழற்கீழ் அவர்கள் பொருந்தி வரும்படி, விண் சென்றனன் - ஆகாயத்திற் பறந்து சென்றான்.

பெரிதும் நன்று; என்றது, உலகக்ஷேமமாகிய இராவணவதத் திற்குத் தோற்றுவாய் அங்கு ஏற்படும் என்ற உண்மையை அகத்தியர் உணர்ந்து கூறியது என்பதை நூலாசிரியர் சடாயு முகத்தால் அறிவித்தது எனக் கொள்ளப்பாலதாம். இனி, பெரிது நன்று அப் பெருந்துறை எனக் கூட்டிப் பொருள் கூறுவாரும் உளர்.

பி-ம். 1. பெரிதவன் சொல் பெருந்துறை; பெரிது நின்ற பெருந்துறை.
2. புரிதிமாதவம்.
3. னென்றவர் தன்சிறை; னென்றுதன்பின் சிறை.
4. விண்மேற் சென்றான். (41)

218. ஆய சூழ லறிய வுணர்த்திய
தூய சிந்தையத் தோமில் குணத்தவன்
போய பின்னைப் பொருசிலை வீரரும்
ஏய சோலை யினிதுசென் றெய்தினர்.

ஆய சூழல் - அத்தகைய பஞ்சவடி என்னும் இடத்தை, அறிய உணர்த்திய - அறிந்து கொள்ளும்படி தெரிவித்த, அ தூய சிந்தை தோம் இல் குணத்து அவன் - அந்தப் பரிசுத்தமான மனமும், குற்றமற்ற நற்குணங்களுமுடைய அந்தச் சடாயு, போய பின்னை - அவ்விடம் விட்டுச் சென்ற பிறகு, பொரு சிலை வீரரும் - போர்க்குரிய வில்லையுடைய வீரர்களான அந்த இராம லக்ஷ்மணர்களும், ஏய சோலை - அங்கு அமைந்திருந்த ஒரு சோலையில், இனிது சென்று எய்தினர் - மகிழ்ந்து போயடைந்தனர்.

ஏயசோலை - அகத்தியர் அவர்கள் தங்கியிருக்குமாறு அருளிய சோலை என்றலும் ஒன்றும். 'தூயசிந்தையத்தோமில் குணத்தினன்', என்பது முன் 181, 184, 211, 212 இல் காண்க.

பி-ம். 1. வுணர்த்தியத். 2. சிந்தைய தோமில்; சிந்தனை.
3. பின்னரப் பொருசிலை. (42)

219. வார்ப்பொற் கொங்கை மருகியை மக்களை
ஏர்ப்பச் சிந்தனை யிட்டவ் வரக்கர்தம்
சீர்ப்பைச் சிக்கறத் தேறினன் சேக்கையில்
பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்றான்.

அ அரக்கர் தம் சீர்ப்பை - அங்குள்ள இராக்கதர்களின் வலிமை மேம்பாட்டை, சிக்கு அற - ஐயத்திற்கு இடமின்றி, ஏர்ப்ப - செம்மையாக, சிந்தனை இட்டு - மனத்தில் கருதி, தேறினன் - நன்கு உணர்ந்த அச்சடாயு, வார் பொன் கொங்கை மருகியை - கச்சணிந்த பொன்னிறத்த கொங்கைகளையுடைய தன் மருமகளான பிராட்டியையும், மக்களை - மைந்தர்களான இராம லக்ஷ்மணர்களையும், சேக்கையில் - கூட்டிலுள்ள, பார்ப்பை பார்க்கும் - தன் குஞ்சுகளைப் பாதுகாத்துக் கொள்ளும், பறவையில் - தாய்ப் பறவையைப் போல, பார்க்கின்றான் - பாதுகாத்து வரலானான்.

பொற் கொங்கை: பொன், அழகுமாம். சீர்ப்பு - வலிமை, மிகுதி முதலியவற்றின் சிறப்புக்கள், சிக்கு - தடையும் ஆம். சேக்கை - தங்கியிருக்கும் இடம், அல்லது கூடு. பார்ப்பு - தாய்ப் பறவையால்

பாதுகாக்கப் பெறும், அதாவது சிறகு முளைக்காது தன்னைக் காப் பாற்றிக்கொள்ள முடியாத இளமை நிலையில் உள்ள குஞ்சு ; பார்ப்பு, இது தவழும் இனமான, தவளை, ஆமை, பல்லி முதலியனவற்றின் இளமைப் பருவத்தில் உள்ளவற்றையும் குறிக்கும் (பிங்). பார்ப்பைப் பார்க்கும் பறவையில் என்றமையால், சடாயு அவர்கள்பால் கொண்ட அன்பையும், பாதுகாப்பையும் சிறப்பித்ததாகும். சடாயு ஒரு பறவை யாதலின், பறவை தன் பார்ப்பிடம் காட்டும் அன்பைக் கொண்டு விளங்க வைத்த இயற்கை நயம் நோக்கத்தக்கது. பறவைப் பார்ப்பு : சுந்தர. *1247*. 'அரக்கர் தம் சீர்ப்பைத் தேறினன், பார்க்கின்ருன்' என்றமையால் அரக்கரால் அவர்களுக்கு இடையூறு வரலாகா தென்ற கருத்தோடு பார்க்கின்ருன் என்க.

பி - ம். 2. யிட்டவரக்கர்தம் ; வரக்கர்தாம் ; யிட்டு வரக்கர்தம்.
3. சிக்குறத் தேறினன் ; சிக்கெனத் ; சேக்கையுட் ; தேற்றினன் சேக்கையுட் ; தேறினன்றிக்குறல். (43)

சடாயுகாண் படலம் முற்றும்.

---

## 5. சூர்ப்பணகைப் படலம்

---

பஞ்சவடியில், சூர்ப்பணகை இராமபிரானைக் கண்டு மோகித்து, அதனால் அவள் அடைந்த துன்பத்தைக் கூறும் படலம் என்று விரியும். இவ்வரலாறு இராமபிரான் முதலியோர் பஞ்சவடியில் தங்கிய மூன்றும் ஆண்டு நிகழ்ந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. சூர்ப்பணகை :—அரக்கர் வேந்தனான இராவணன் தங்கை. சூர்ப்ப ணகை என்பதற்கு, முறம்போன்ற நகத்தை உடையவள் என்று பொருள் கூறுவர்.

இது, சில பிரதிகளில், செய்யுள் 220 முதல் 226 வரை பஞ்சவடிப் படலம் என்றும், 227 முதல் 361 முடிய சூர்ப்பநகி மூக்கரி படலம் என்றும் இரு படலங்களாகவும், ஒரு சுவடியில் இது பஞ்சவடிப் படலம், சூர்ப்பணகைப் படலம், மூக்கரி படலம் என மூன்று படலங்களாகவும் காணப்படுகின்றது. இப்படலத்தின் கதைப் போக்கு வான்மீகத் திற்குப் பெரிதும் மாறி அமைந்துள்ளது.

இர்ாமபிரான் முதலியோர் கோதாவரியைக்கண்டது 220—22.

220. புவியினுக் கணியா யான்ற
பொருடந்து புலத்திற் றாகி
அவியகத் துறைக டாங்கி
யைந்திணை நெறிய ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென்
றொழுக்கமுந் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா
வரியினை வீரர் கண்டார்.

இச்செய்யுள், கோதாவரி நதிக்கும், ஆன்றோர் கவிக்கும் சிலேடையாக அமைந்துள்ளது.

நதியைக் குறிக்குமிடத்து :—புவியினுக்கு அணியாய் - பூமிக்கு ஓர் ஆபரணம் போன்று (அழகு) தருவதாய் அமைந்து, ஆன்ற பொருள் தந்து - சிறந்த பொருள்கள் பலவற்றை அளித்து, புலத் திற்று ஆகி - வயல்களுக்குப் பயன்படுவதாக ஆகி, அவி அக துறைகள் தாங்கி - தன்னிடத்தில் உள்ளடங்கிய பல நீர்த்துறை களைப் பெற்று, ஐ திணை நெறி அளாவி - முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகைப்பட்ட நிலப்பகுதிகளாலான வழி

களில் பரந்துசென்று, சவி உற தெளிந்து - ஒளிபொருந்தும்படி தெளிவுடைத்தாகி, தண் என்று ஒழுக்கமும் தழுவி - குளிர்ந்த நீரோட்டத்தையும் தழுவிக் கொண்டு,

சான்றோர் கவி என - கல்வியிற் சிறந்த மேலோர் சொன்ன கவி போல விளங்கிய, கோதாவரியினை - கோதாவரி என்னும் நதியை, வீரர் கண்டார் - ரகு வீரர்களான இராம லக்ஷ்மணர்கள் பார்த்தார்கள்.

இனி, சான்றோர் கவியைக் குறிக்குமிடத்து:—

புவியினுக்கு அணியாய் - புவியில் உள்ள மாந்தர்க்கு அலங்காரமாகி, ஆன்ற பொருள் தந்து - சிறந்த அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப் புருஷார்த்தங்களை அளித்து, புலத்திற்று ஆகி - அறிவிற்றங்கி, அவி அக துறைகள் தாங்கி - செம்பாகமாய் அமைந்த அகப்பொருள் துறைகளை ஏற்று, ஐம் திணை நெறி அளாவி - முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்து திணைகளிலும் விரவி வரப்பெற்று, சவி உற தெளிந்து - அறிவுச் சுடர்கொளுத்தும் படி தெளிவுடைத்தாகி, தண் என் ஒழுக்கமும் - குளிர்ந்த இனிய தன்மை என்ற நடையும், தழுவி - தழுவிக்கொண்டு, (விளங்கிய கோதாவரி என்க.)

நதி புவியினுக்கு அணி: 'ஆறில்லாவூருக்கு அழகு பாழ்' என்றதும் நோக்குக. நதி பொருள் தருத; தான் பிறக்கும் மலைபடு பொருள்களாகிய, பலவகை மணிகள், சந்தனம், தேக்கு முதலிய விலையுயர்ந்த மரங்களையும், பாயும் பிற நிலங்களுக்குரிய பொருள்களையும் ஈர்த்துக் கொணர்ந்து தருதல். அவியகத் துறைகள் தாங்கி, அவியுணவைத் தன்னிடங் கொண்ட பல வேள்விச் சாலைகளாகிய இடங்களைத் தன் கரையில் பெற்று கொண்டு, எனப்பொருள் கூறினும் அமையும். அவி - அடங்கிய, சமைந்த என்ற பொருள்கள் கொள்ளலாம். சவியுறத் தெளிந்து, தெளிந்த நீரில் ஒளி உட்புகுந்து அடியில் உள்ளவற்றையும் தெளிவுற விளக்கும் என்பது; 'ஈர்ந்த நுண்பளிங்கெனத் தெளிந்த வீர்ம்புனல், பேர்ந்தொளிர் நவமணி படர்ந்த பித்திகை, சேர்ந்துழிச் சேர்ந்துழி நிறத்தைச் சேர்தலால்' (கிட்கிந்தா. பம்பைப்: 3) என்றமையும் நோக்குக. சவி - ஒளி, நேர்மை, சுவை, என்ற பல பொருள்களையுடையது. தண்ணென் றொழுக்கமும் தழுவுதல் - எப்பொழுதும் வற்றாத குளிர்ந்த நீரோட்டத்தையுடைமை. வீரர் என்றது உபலக்ஷணத்தால் பிராட்டியையும் குறித்தது என்க.

அணியாய்; "சொல்லாற் பொருட்கிடனாக, உணர்வினில் வல்லோர், அணி பெறச் செய்வன செய்யுள்"; (நன். சூ: 268.) என்றமை

நோக்குக. ஆன்ற பொருள், சிறந்த நான்கு புருஷார்த்தங்கள்; 'அறம் பொருளின்பம் வீடடைதல் நூற்பயனே' என்றமையால்; (நன். சூ. 12, பொதுப்பாயிரம்). புலத்திற்ருகி, அறிவினுல் உணரப்பெறுவது ஆதலின். சவியுறத்தெளிதல்; மயக்கத்துக் கிடமின்றி, விளங்க வைக்கும் அழகுடைத்தாதல்; புலம் - நூல்; 'புலந்தொகுத்தோன்'; தொல். பாயிரம். புலனெறி வழக்கம் என்றமையும் காண்க. தண்ணென்ஞெழுக்கம் - படிக்குங்கால் வெறுப்புண்டாகாமல் மனத்திற்கு ஓர் இன்பம் பயக்கும் குளிர்ந்த நடையுடைமை; தலைவன் தலைவர்க்கு இன்பம் அளிப்பதான களவு, கற்பு என்னும் ஒழுக்கங்களைத் தன்னிடம் கொண்டு, என்னலும் ஒன்றும். இங்ஙனம், கோதாவரி நதியும் ஆன்ருேர் கவியும், அணி, பொருள், துறை, திணை முதலியன தழுவி நடப்பதால், இரட்டுற மொழிதலாகக்கொண்டு, சிலேடையணியில் ஒப்புமை காட்டிச் சிறப்பித்த அழகு நோக்கி இன்புறப்பாலதாம். மற்றவை விரிக்கிற் பெருகும்.

பி-ம். 1. பொருடருந்திறத்ததாகி; புலத்திற்ருக்கி.
2. நெறிவளாவி. 3. தண்ணென் ஞெழுக்கமும்.
4. கோதாவிரியினைத்தெரியக். (1)

221. வண்டுறை கமலச் செவ்வி
வாண்முகம் பொலிய வாசம்
உண்டுறை குவளை யொண்க
ணுருங்குற நோக்கி யூழின்
தெண்டிரைக் கரத்தின் வாரித்
திருமலர் தூவிச் செல்வர்க்
கண்டடி பணிவ தென்னப்
பொலிந்ததக் கடவுள் யாறு.

அ கடவுள் யாறு - அந்தத் தெய்வத் தன்மை வாய்ந்த கோதாவரி நதி, செல்வர் கண்டு - அந்தச் செல்வக் குமாரர்களான இராமலக்ஷ்மணர்களையும் பிராட்டியையும் பார்த்து, வண்டு உறை கமலம் - வண்டுகள் தங்கப்பெற்ற தாமரை மலர் ஆகிய, செவ்வி வாள் முகம் - அழகிய ஒளி தங்கிய தன் முகம், பொலிய - மகிழ்ச்சியால் மலர்ந்து விளங்க, வாசம் உண்டு - நறுமணத்தைத் தன்னுட்கொண்டு, உறை - அங்கே உள்ள, குவளை ஒண் கண் - நீலோற்பல மலர்களாகிய ஒளிதங்கிய தன் விழிகளால், ஒருங்கு உற நோக்கி - (அவர்

களை) ஒரு முகமாக நன்குப் பார்த்து, ஊழின் தெள்திரை கரத்தின் - இயல்பாய், வரிசையால் வரும் தெளிவான திரைகளாகிய தன் கைகளால், திரு மலர் வாரி - அழகிய மலர்களை ஒரு சேர எடுத்து, தூவி-சொரிந்து, அடி பணிவது என்ன - அவர்களின் பாதங்களில் வணங்குவதே போல, பொலிந்தது - விளங்கியது.

கடவுள் யாறு என்றது: கோதாவரி; ஏழு புண்ணிய நதிகளில் ஒன்றுதலின். கோதாவரி நதியில் உள்ள தாமரை மலர் அதன் முகமாகவும், நீலோற்பல மலர்கள் அதன் கண்களாகவும், திரைகள் அதன் கரங்களாகவும் உவமிக்கப் பெற்றுள்ளன. பெரியோர்களைத் தெரிசிக்குங்கால் முகம் மலர்ந்து, மலர் தூவி அருச்சித்து, அடி வணங்கும் முறையில் அந்த நதி விளங்கியது என்க. நதிகளில் தாமரை, குவளை முதலிய மலர்கள் இருப்பனவாகக் கூறுவது கவி மரபு; இது, நதியின் அருகேயுள்ள ஓடை முதலிய நீர் நிலைகளில் மலர்வனவற்றைக் குறிப்பிட்டது எனக் கொள்ளலாம். தாமரை மலர் மகளிர் முகத்திற்கும், குவளை மலர்கள் அவர்கள் கண்களுக்கும் உவமை; 'புள்ளார் புறவிற் பூங்காவி, புலன்கொள் மாதர் கண் காட்ட, நள்ளார் கமலம் முகங்காட்டும் நறையூர் நின்ற நம்பியே' (பெரிய திருமொழி 6. 7 : 3). நதியின் அலைகளை அதன் கரங்களாக உவமிப்பது; 'திரையெனு நிமிர்கையால், ஏந்தினளொரு தானே' (அயோத். கங்கைப்: 62.): 'தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையா லடிவருடப் பள்ளி கொள்ளும் கருமணியை'; (பெருமாள் திருமொழி 1.) ஒருங்குற நோக்கி - கண்கள் நிறையப் பார்த்து, என்றும் பொருள் கூறுவர்.

பி - ம். 1. கமலவாசத் (துண்டுறை).

2. உண்டுறு குவளையுண்கண்; ஒண்டுறை குவளை; கொண்டுறை குவளை: யுண்கண் குளிர்ப்பொடு நோக்கி வீசும்; நோக்கிக் கோதில்.

3, கரத்தான் வாரித்; திருமலர்த் தூவி; செம்மலர்தூவி.

4. பணிவெனென்ன; பணிவெனென்ன; கண்டடி தொழுவ தென்னப்; பொலிந்தது கடவுள் யாறு.

(2)

222. எழுவுறு காத லாரி
னிரைத்திரைத் தேங்கி யேங்கிப்
பழுவநாட் குவளைச் செவ்விக்
கண்பனி பரந்து சோர

வழுவிலா வாய்மை மைந்தர்
வனத்துறை வருத்த நோக்கி
அழுவது மொத்த தாலவ்
வலங்குநீ ராறு மன்னே.

அ அலங்கு நீர் ஆறு - அந்த அசைந்தோடுகின்ற நீர்ப் பெருக்கையுடைய கோதாவரி என்னும நதி, வழு இலா வாய்மை மைந்தர் - குற்றம் இல்லாத சத்தியவான்களான இராமலக்ஷ்மணர்கள், வனத்து உறை வருத்தம் நோக்கி - காட்டில் வந்து வசிக்கும் துன்ப நிலையைப் பார்த்து, எழு உறு காதலால் - அவர்கள் மீது எழுந்த அன்பினால், இரைத்து இரைத்து ஏங்கி ஏங்கி - அடிக்கடி பெரு மூச்சு விட்டு ஏக்கமும் உற்று, பழுவ - காடுபோல் அடர்ந்த, நாள் குவளை - அன்று மலர்ந்த நீலோற்பல மலர்களாகிய, செவ்வி கண் - அழகையுடைய கண்களினின்றும், பனி - நீர்த்துளிகள், பரந்து சோர - எங்கும் பரவிப் பொழிய, அழுவது ஒத்தது - அழுவதை ஒத்திருந்தது. ஆல், மன், ஓ என்பன அசைகள்.

அலங்குதல் - அசைந்தாடுதல்; 'அலங்குளைப் புரவி'; (புறநா. 2. 13.) வழு இலா வாய்மை - தவறுத சத்தியத்தையுடைய என்றலும் ஒன்றும். கண்ணுக்குக் குவளை: முன் (221) இல், 'குவளையோண்கண்' என்றமை நோக்குக. வாய்மை மைந்தர் - தீமை இல்லாது இன்சொல் வழங்கும் மைந்தர்களாகிய இராம லக்ஷ்மணர் என்னலும் அமையும்; 'வாய்மை யெனப்படுவ தியாதெனில் யாதொன்றுந் தீமை யிலாத சொலல்,' (குறள். 291). என்றமையால்; தீமையிலாத சொல்லுதலாவது, கேட்டலால் வருத்தம் ஏற்பட இடமின்றி இனிய மொழியால் உண்மையைப் பேசல். கண்பனி - கண்ணீர். கண்பனி; குறுந். *86 : 1; 348 : 4; 365 : 2-6*; நற். *197 : 3*; கலி· *3 : 3; 10; 13*. பழுவநாட்குவளை - குவளைக்காடு; ஒப்பு. குவளைக்கானம்; (225). இரைத்திரைத்து, ஏங்கியேங்கி என்னும் அடுக்குகள், மிகுதியைக் குறிப்பன.

பி-ம். 1. காதலா லீங்; காதலாதலாலே; காதலாவித்; எழுவுகா தலவீதென்ன; எழுவுகாதலின் வாய்ந்தென்ன; எழுவுகாதல் வந்தென்னென; யேங்கிக்.

2. கழுவுநாட்; தழுவுகட்; குழுவுநாட்; பழுதுநாட்.

3. வழுவில் வாய்மை. 4. அழுவதே யொத்த தம்மா. (3)

இராமபிரானும் பிராட்டியும் அந்நதியின் வளத்தில் ஈடுபடுதல் **223—25**

**223.** நாளங்கொ ணளினப் பள்ளி
நயனங்க ளமைய நேமி
வாளங்க ளுறைவ கண்டு
மங்கைதன் கொங்கை நோக்க
நீளங்கொள் சிலையோன் மற்றந்
நேரிழை நெடிய நம்பி
தோளின்க ணயனம் வைத்தாள்
சுடர்மணித் தடங்கள் கண்டாள்.

நீளம் கொள் சிலையோன் - நீண்ட வில்லைக் கொண்ட இராமபிரான், நாளம் கொள் - (அடியில்) தண்டினைக் கொண்ட, நளின பள்ளி - தாமரை மலராகிய படுக்கையில், நயனங்கள் அமைய - கண்கள் அமைதி நிலையில் மூடியிருக்க, நேமி வாளங்கள் உறைவ கண்டு - சக்கரவாகப் பறவைகள் ஆணும் பெண்ணும் ஆக ஒன்று சேர்ந்து தங்கி யிருப்பதைப் பார்த்து, மங்கைதன் கொங்கை நோக்க - பிராட்டியின் கொங்கைகளை (அவற்றிற்கு ஒப்பாகக் கருதிப்) பார்க்க, அ நேரிழை - அந்தப்பிராட்டியும், சுடர்மணி தடங்கள் கண்டாள் - ஒளி வீசும் நீலமணியால் ஆகிய குன்றுகளை நோக்கி, நெடிய நம்பி - பெரியோனும் ஆடவர்களிற் சிறந்தோனுமான இராமபிரானுடைய, தோளின் கண் - தோள்களில், நயனம் வைத்தாள் - தன் கண்களைச் செலுத்தினுள். (பார்த்தாள் என்றபடி).

நீளங் கொள் சிலை - நெடுஞ் சிலை. நாளம் - உட்டுளையுள்ள, தாமரை முதலிய கொடிகளின் தண்டு. நேமி வாளம் - சக்கரவாகம் என்னும் நீர் வாழ் பறவை; இது வட்டமாய்க் குவிந்துயர்ந்த வடிவையுடையது. சக்கரவாகம் என்ற வடசொல் தமிழில் சக்கர வாளம் எனத் திரிந்தது என்க. இது முதற்குறையாக வாளம் எனவும் வழங்கும். இதனை மகளிர் கொங்கைக்கு உவமையாகக் கூறுவது கவிமரபு. 'மங்கைமார் துணைமுலையெனப் பொலிவன வாளம்' (கிட்கிந்தா. பம்பைப் : 21). சக்கரவாகம் இரவில் பிரிந்து வருந்தும்; பகலில் ஒன்று சேர்ந்து வாழும்; சுந்தர. 687. நயனங்கள் அமைய, கண்கள் உறங்க எனலும் ஆம். நேமிவாளம் பிராட்டி கொங்கையையும், மணித்தடங்கள் பெருமான் தோள்களையும் முறையே அன்னோர்க்கு நினைப்பூட்டினமையாய் அவ்விருவரும் அவற்றை நோக்கி மகிழ்ந்தனர் என்க. ஆதலின் இது, நினைப் பணியின் பாற்படும்.

மணித்தடங்கள் இராமபிரான் தோள்களுக்கு உவமை; 233, 234; பால. மிதிலைக்காட்சி : 56. மணித்தடம், அழகிய கரை என்றுமாம். நேரிழை : அன்மொழித்தொகை. நெடிய நம்பி : சக்கரவர்த்தியின் மூத்த குமாரன் என்பதையும், நீண்டு உயர்ந்த திருமேனியுடையவன் என்பதையும் குறிப்பிட்டவாறும்; அன்றி, நெடியோனாய் எழுந்து உலகளந்த திருமாலே இராமபிரானுவான் என்றதை நம்மனோர்க்கு ஆசிரியர் நினைப்பூட்டக் கூறியது என்றுங் கொள்ளப் பாலதாம். நம்பி - ஆடவரிற் சிறந்தவன்; அதாவது புருஷோத்தமன்; இராமபிரானை நம்பி என்பது; பால. கையடை. 17; கார்முகப். 43; கிட்கிந்தா. மராமர : 37; உயுத்த. கும்பகருண : 358. இதுமுதல் 3 பாடல்கள் இராமன், சீதாப்பிராட்டி இவர்களின் ஒத்த செயல்களைக் கூறுவன. இப்பாடல்கள், அயோத். கங்கைப்படலத்தில், அவ் வாற்றங்கரைக் காட்சிகளை இராமபிரானும் பிராட்டியும் நுகர்ந்தமையைக் கூறும் செய்யுட்களை நினைப்பூட்டுகின்றன.

பி-ம். 1. நளினப் பூவின்; நயனங்க ளங்கணேமி; ளனைய மேனி.
2. கொங்கை நோக்கும்; கொங்கை நோக்கி.
3. நீளங்கொள் நிலையோன்; மற்றை நேரிழை.
4. மனம்வைத் தன்ன; வளம்வைத் தன்ன. (4)

224. ஓதிம மொதுங்கக் கண்ட
வுத்தம னுழைய ளாகும்
சீதைதன் னடையை நோக்கிச்
சிறியதோர் முறுவல் செய்தான்
மாதவ டானு மாண்டு
வந்துநீ ருண்டு மீளும்
போதக நடப்ப நோக்கிப்
புதியதோர் முறுவல் பூத்தாள்.

(அங்கு), ஓதிமம் ஒதுங்க கண்ட - அன்னப்பறவை ஒதுங்கி அப்புறம் செல்வதைப் பார்த்த, உத்தமன் - புருஷோத்தமனான இராமபிரான், உழையள் ஆகும் - அருகில் நடந்து வந்தவளான, சீதை தன் நடையை நோக்கி - பிராட்டியின் நடையழகைப் பார்த்து, சிறியது ஓர் முறுவல் செய்தான் - ஒரு புன்சிரிப்புக் கொண்டவனான்; மாது அவள் தானும் - பிராட்டியும், ஆண்டு - அவ்வாற்றினிடத்தில், வந்து நீர் உண்டு மீளும்.வந்து, நீரைப் பருகித் திரும்பிப்

போகும், போதகம் நடப்ப நோக்கி - யானை நடந்து செல்வதைப் பார்த்து, புதியது ஓர் முறுவல் பூத்தாள் - அதுகாறும் இல்லாத ஒரு தனிப்புன்னகை கொண்டாள்.

ஓதிமம் ஒதுங்கியது, மானிடராகிய அன்னோர் அருகில் வருவதைக் கண்டு இயல்பாய் உண்டான அச்சத்தால்; ஒதுங்குதல், நடத்தலும் ஆம்; 'கோல்கா லாகக் குறும்பல வொதுங்கி'; (புறநா. 159 - 3 ; உரை). அதைக் கண்டு இராமபிரான் முறுவல் பூத்தது, தன்னருகே நடந்து வரும் பிராட்டியின் நடைக்குத் தோற்று அவ்வோதிமம் நாணிப் புறம் போந்ததாகக் கருதி, என்க. சிறியதோர் முறுவல் பூத்தது : தோற்ற அன்னத்தின் குறையை உணர்ந்து அதனை வெளிப்படையாய்க் காட்டாது கருணைகொண்டதால் எழுந்த மெய்ப்பாடென்க. உழை - கிட்டின இடம். போதகம் - இங்கு ஆண்யானைக் கன்றைக் குறிப்பது; போதகம்; பத்து ஆண்டு நிறைந்த யானையின் ஆண் கன்று (பிங்). இராமபிரானுக்கு, ஆண் யானை ; 1046. பிராட்டி முறுவல் பூத்தது : அப்போதகம் தன் கணவன் நடைக்குத் தோற்று மீண்டது என்ற கருத்தால்; இதுவரை, பிராட்டி இராமபிரான் நடைக்கு யானையின் நடையை ஒப்பாகக் கருதியிருந்தவள் ; பால. மிதிலைக்காட்சி : 57 ; இப்பொழுது அஃது உவமையாகாது என்பது, அதன் நடையினால் விளங்க, இதுவரையில்லாத உணர்ச்சி மேலீட்டால் புதிய முறுவல் பூத்தாள் என்க. இராமபிரான் சீதாப்பிராட்டி இருவர் நடைகளை 'மத்த மாதங்க கமனம், மத்த ஸாரஸ காமனீம்' என்று ஆன்றோர் சிறப்பித்தவாறு, இங்கு ஏற்றங் கற்பித்தோடு, 'நாகமு நாகமும் நாண நடந்தான்' என்றும், பால. கார்முகப் : 32 ; 'அன்னமு மரம்பையரும் மாரமுதும் நாண, மன்னவை யிருந்தமணி மண்டப மடைந்தாள்' என்றும் (பால. கோலங்காண் : 28) முன் கூறியதை இங்கு உறுதிப்படுத்தினார் ஆசிரியர் என்க. மகளிர் நடைக்கு அன்னம் நாணுதல், 250.

பி - ம். 1. நடையின் நோக்கி. 3. நீரருந்தி மீளும்.
4. நடப்பக்கண்டு ; முறுவல் செய்தாள். (5)

225. வில்லியற் றடக்கை வீரன்
வீங்குநீ ராற்றின் பாங்கர்
வல்லிக ளுடங்கக் கண்டான்
மங்கைதன் மருங்கு நோக்க

எல்லியங் குவளைக் கானத்
திடையிடை மலர்ந்து நின்ற
அல்லியங் கமலங் கண்டா
ளண்ணறன் வடிவங் கண்டாள்.

வில் இயல் தட கை வீரன் - தனுர்வித்தையில் தேர்ச்சி பெற்ற நீண்ட கைகளையுடைய வீரனான இராமபிரான், வீங்கு நீர் ஆற்றின் பாங்கர் - மிகுகின்ற நீரையுடைய அந்தக் கோதாவரி என்னும் ஆற்றின் அருகே, வல்லிகள் நுடங்க கண்டான் - கொடிகள் அசைந்து கொண்டிருக்கப் பார்த்து, மங்கை தன் மருங்குல் நோக்க - (அவைபோன்ற) பிராட்டியின் இடையையும் உற்றுப்பார்க்க, எல்லி அம் குவளை கானத்து - இருள் போலக் கறுத்துத் தோன்றிய அழகிய நீலோற்பல மலர்களாகிய காட்டினிடத்து, இடை இடை மலர்ந்து நின்ற - நடு நடுவிலே பூத்து விளங்கிய, அல்லி அம் கமலம் கண்டாள் - அகவிதழ்களையுடைய தாமரை மலர்களைக் கண்ட பிராட்டி, அண்ணல் தன் வடிவு கண்டாள் - இராமபிரானுடைய திருமேனி உருவையும் நோக்கினாள்.

தடக்கை - வலியகை; ஆஜானுபாகு என்னும் பொருளை மேற் கொண்டது ஆம். பாங்கர் - பாங்கு என்பதன் ஈற்றுப்போலி. இராமபிரான் வல்லிகளைக் கண்டவுடன் பிராட்டியின் மருங்குலை நோக்கியதும், பிராட்டி குவளைக்கானத்துக் கமலங்களைக் கண்டு அண்ணல் வடிவு நோக்கியதும், ஒன்றுக்கொன்றுள்ள ஒற்றுமை நோக்கி என்க. இச்செய்யுளும் முன் 224-இல் கூறியபடி நினைப் பணியின் பாற்படும். எல்லி அம் குவளைக் கானத்து - இரவில் மலர்ந்து விளங்கும் அழகிய குவளைக் காட்டினிடத்து எனக் கொள் ளலும் அமையும். குவளை இரவில் மலரும் ஆதலின்; எல் - இரவு (பிங்). குவளைக் கானம் என்றது, அம்மலர்களின் மிகுதிபற்றி. குவளைக்கானம் இராமபிரான் திருமேனிக்கு உவமை: ஒப்பு; திரு வரங்கக் கலம்பகம்: 1. இராமபிரான் கை, பாதம், கண் முதலிய அங்கங் களுக்குத் தாமரைகள்: திருவேங்கடமாலை: 8.

பி - ம். 1. வில்விய நடக்கை, வில்லியர் தடக்கை; விலங்குநீர்,
3. நடங்கக் கண்டே; நடக்கங் கண்டான்; நோக்கா; மருங்கு கண்டான்.
3. எல்லியல் குவளைக்; ஒல்லுயர் குவளைக்.
4. வடிவு கண்டாள்; அண்ணல்கண் வடிவுங் கண்டாள்; அண்ணலை யவளும் பார்த்தாள்.

## அவர்கள் பஞ்சவடியில் தங்கியது

226. அனையதோர் தன்மை யான
வருவிநீ ராற்றின் பாங்கர்ப்
பனிதரு தெய்வப் பஞ்ச
வடியெனும் பருவச் சோலைத்
தனியிட மதனை நண்ணித்
தம்பியாற் சமைக்கப் பட்ட
இனியபூஞ் சாலை யெய்தி
யிருந்தன னிராம னிப்பால்,

இராமன் - இராமபிரான், அனையது ஓர் தன்மையான - அத் தகைய ஓர் (அழகிய) தன்மையையுடைய, அருவி நீர் ஆற்றின் பாங்கர் - அருவிகளாய் இருந்து பின் ஒன்றுகூடிய அந்தக் கோதாவரி நதியின் அருகே, பனி தரு தெய்வ - குளிர்ச்சி பொருந்திய தெய்வத் தன்மையுடைய, பஞ்சவடி என்னும் பருவச் சோலை - பஞ்சவடி என்னும் எல்லாப் பருவ நலன்களும் சிறந்து விளங்கும் சோலையில், தனி இடம் அதனை நண்ணி - ஏகாந்தமான ஓர் இடத்தை அடைந்து, தம்பியால் சமைக்கப்பட்ட - தன் தம்பியாகிய இலக்ஷ்மண னால் (அங்கு) அமைக்கப்பெற்ற, இனிய பூம் சாலை எய்தி - கண் ணுக்கும் மனத்திற்கும் இனிமையான அழகிய பர்ணசாலையை அடைந்து, இருந்தனன் - அங்குப் (பிராட்டியோடும்) தங்கி இருந் தான் ; இப்பால் - இதன்பின்,

பஞ்சவடி : *174* ; குறிப். பூம் சாலை - அழகிய (தாழைகளால் வேயப்பெற்ற) தவச்சாலை ; சாலை தம்பியாற் சமைக்கப் பெற்றது. சுந்தர. *630* ; இராமபிரானும் பிராட்டியும் ஆற்று வளனை நுகர்ந்து கொண்டிருக்க, இலக்குவன் சாலை சமைத்தனன் என்றது குறிப்பு. பனி: என்பது 'வருத்தம்' என்ற பொருள் தொனித்து, பஞ்சவடி யில் மேல் நிகழும் துன்பச் செயலை இங்குக் குறித்த நயமும் ஓர்க. இப்பால் : இதன் மேல் நடந்த செய்தி யாது எனில், அது, பின்னர் கூறப்பெறும் என்பதாம். இப்பால், என்ற சொல் 229-ம் செய்யுளில் (சூர்ப்பணகை) எய்தினள் என்ற வினைகொண்டு

முடிவுறும். சில சுவடிகளில் இச் செய்யுளுடன் பஞ்சவடிப்படலம் முடியும்.

பி - ம். 1. தன்மையாளவ் ; தன்மையாலங் ; தன்மைத் தாயவ்.

2. பனிவருங்குன்றில் ; பனிதரு படிவ ; பனிதருவடிவப் ; பருவஞ்சோலை ; பருவத்தூடோர்.

3. தம்பியா லமைக்கப்பட்ட.

4. சோலையெய்தி ; சோலை நண்ணி. (7)

வேறு

சூர்ப்பணகை பஞ்சவடி வருதல் 227—9

227. நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
மூலநா சம்பெற முடிக்கு முன்பினால்
மேலைநா ளுயிரொடும் பிறந்து தான்வினை
காலமோர்ந் துடனுறை கடிய நோயனாள்,

மா நீல மணி நிற நிருதர் வேந்தனை - மாட்சிமை பெற்ற நீல ரத்தினம் போன்ற கருநிறமுடைய அரக்கர்க்கரசனான இராவணனை, மூல நாசம் பெற - வேரோடு அழிவு அடையுமாறு, முடிக்கும் - சூழ்ச்சியைச் செய்து முடிக்கும், முன்பினால் - வலிமையின் மிடுக்கினால், மேலை நாள் - முன்னாளில், உயிரொடும் பிறந்து - (கருவாய் இருந்த) உடலில் உயிர் உண்டான காலத்திலேயே அவ்வுயிருடன் கூடத்தோன்றி, தான் வினை காலம் ஓர்ந்து - தன் செயலியற்றற்கு உரிய காலத்தை உணர்ந்து, (அதனை எதிர் பார்த்து), உடன் உறை - உயிரோடு அவ்வுடலில் சேர்ந்து இருந்து வருகின்ற, கடிய நோய் அனாள் - கொடிய வியாதியை ஒத்தவளும்,

இது மேற்செய்யுள்களோடு குளகமாகி, 229 ஆம் செய்யுளிலுள்ள 'எய்தினள்' என்ற வினை முடிவு கொள்ளும். இராவணன் கரு நிறமானவன் ஆதலின், நீலமாமணி அவன் நிறத்திற்கு உவமை. நிருதர் : நிருதி என்னும் தென்மேற்குத் திசைக்குக் காவல் பூண்ட ஒரு தெய்வத்தின் வழித் தோன்றினவர். மூலம் - வேர்; சிறு பஞ்சமூலம் என்பதையும் நோக்குக. வேரோடு அழிதல் - குலம் முழுவதும் மீதியின்றி அடியோடு அற்றுப்போதல். முன்பு - உடல் வலிமை ; மிடுக்கு ; 230. மேலைநாள் : மேல் என்ற சொல், ஐ என்னும்

சாரியை ஏற்றது. உடனுறை கடிய நோயனுள்: 'உடன் பிறந்தே கொல்லும் வியாதி' என்பதும் காண்க. சூர்ப்பணகைக்கு, உயிருடன் தோன்றி வளரும் நோய்; இது, 417 இல், பின்னரும் வலியுறுத்தப் பெறுவது நோக்குக. உயிரொடும் பிறந்தநோய்: ஒருவன் முன் பிறப்பில் செய்த தீவினை, கொடிய நோய் உருவாகி அவன் உடன் பிறந்து வளர்ந்து அவனை அழிப்பதே போலக் கேட்டிற்குக் காரண மாய் உள்ளவள் என்பதைத் தொடக்கத்திலேயே நமக்கு ஆசிரியர் முன்கூட்டி அறிவுறுத்துகின்றமை உணரப்பாலதாம். இவ்வாறே இராமபிரான் அம்பினால் தாடகை அழிந்தபோது, 'முடியுடை யரக்கற் கந்நாண் முந்தியுற் பாதமாகப், படியிடை யற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை யொத்தாள்' (பால. தாடகைவதைப்: 75) என்றும், பின் இராமபிரான் வனத்துக்கேகச் சூழ்ச்சி செய்த மந்தரையை, 'இன்னல்செ யிராவண னிழைத்த தீமைபோல், துன்னருங் கொடு மனக் கூனி தோன்றினாள்' (அயோத். மந்தரை சூழ்ச்சிப்: 39) என்றும் இவ்வாறு கொடியவர்களை இராவணனோடு தொடர்பு படுத்திக் கதையை நடத்திச் செல்லும் கவிஞரின் திறம் நோக்கத்தக்கது. சில சுவடிகளில் இச் செய்யுள் முதல் 'சூர்ப்பநகி மூக்கரி படலம்' என்றும், வேறு சிலவற்றில் இதுமுதல் 'சூர்ப்பணகைப் படலம்' என்றும் காணப்பெறுகின்றன.

பி-ம். 1. மணிநிகர்.
2. மொய்ம்பினான்; மொய்ம்பினார்; மன்பினால்; மன்பினாள்; முன்பினாள்.
3. மேலைநா ளுயிரொடும் பிறந்து; ளுடன்பிறந் தவரின் வேலினைக்; பிறந்து தன்வினை.
4. கடிய நோயன்னாள்; கடிய கோளன்னாள். (8)

228. செம்பரா கம்படச் செறிந்த கூந்தலாள்
வெம்பரா கந்தனி விளைந்த மெய்யினாள்
உம்பரா னவர்க்குமொண் டவர்க்கு மோதநீர்
இம்பரா னவர்க்குமோ ருறுதி யீட்டுவாள்.

செம்பு அராகம் பட - செம்பின் நிறம் பிற்பட்டு அழியும்படி, செறிந்த - (செந்நிறமாய்) அடர்ந்த, கூந்தலாள் - தலை மயிரை யுடையவளும், வெம்பு - வெப்பங்கொள்ளும், அராகம் தனி விளைந்த- (காமத்தால்) ஆசை ஒப்பில்லாது வளர்ந்து தழைந்த, மெய்யினாள் - உடம்பை யுடையவளுமான சூர்ப்பணகை, உம்பர் ஆனவர்க்கும் -

தேவர்களுககும், ஒண் தவர்க்கும் - சிறந்த தவத்தையுடைய முனிவர் களுக்கும், ஓதம் நீர் இம்பர் ஆனவர்க்கும் - கடல் நீரால் சூழப்பெற்ற இவ்வுலகத்து மானிடர்களுக்கும், ஓர் உறுதி ஈட்டுவாள் - ஒப்பற்ற ஒரு நன்மையைத் தேடித்தருபவளானாள்.

செம்பு + அராகம் - செம்பராகம் ; அராகம் - சிவப்பு ; இது, ரர்கம் என்னும் வட சொல்லின் திரிபு ; சூர்ப்பணகை தான் மேற்கொண்ட தான செயலே, அரக்கர் அழிவுக்கும், அதனால் உம்பர் இம்பர் நலத் திற்கும் காரணமாகி நின்றதால் அவள் அன்னோர்க்கு ஓர் உறுதி ஈட்டுவாள் என இங்குச் சிறப்பிக்கப்பெற்றாள் ; இது பிறிதினவிற்சி எனும் அணியாகும். இராமாவதாரத்தின் பயனான, 'துஷ்நிக்ரகம்', 'சிஷ்டபரிபாலனம்' என்ற இரண்டும் சூர்ப்பணகை வாயிலாக நடை பெற்றது என்ற செய்தி முன் செய்யுளாலும் இச் செய்யுளாலும் விளங்க வைத்தமை காண்க. இவ்வாறே, ஆசிரியர், "அரக்கர் பாவமு மல்லவரியற்றிய வறமுந், துரக்க நல்லருள் துறந்தனள் தூய்மொழி மடமான்' என்று, கைகேசி திறத்தும்; (அயோத். மந்தரை சூழ்ச்சி : 78) ; "தேவர் செய்தவத்தினாற் செம்ம லேகினான்" (825) என்று இளையபெருமான் திறத்தும் சிறப்பித்தமை காண்க. இச் சூர்ப்பணகையும் கைகேயியும் உண்மையில் கொடிய நோக்கங் கொண் டவர்கள் ஆனாலும் அன்னோர் செயல்களின் விளைவு உலக நன்மைக் குக் காரணமாயிற்று என்ற உண்மையை ஆசிரியர் நம்மனோர்க்கு அறிவுறுத்தினர் எனக் கொள்க. இவ்வாறு இந்நூலிற் பின்னும் வந்துள்ளனவற்றையும் கூட்டிக்கொள்க. இனி, 'ஓர் இறுதி யீட்டு வாள்' எனப் பாடங்கொண்டு, தேவர்க்கும், இவ்வுலக மானிடர் களுக்கும் ஓர் முடிவை அதாவது அழிவைத் தேடுபவள் எனப் பொருள் கொண்டார் ஒரு சாரார்.

பி - ம். 1. செம்பராகம் பெறச்.

2. வெம்பராகுத்தனி விளைந்த ; ராகுதனி ; ராகந்தனி விளைந்து வீங்கினாள்.

3. றிறுதியீட்டுவாள் ; மின்றிறுதி. (9)

229. வெய்யதோர் காரண முண்மை மேவினாள்
வைகலுந் தமியளவ் வனத்து வைகுவாள்
நொய்தினிவ் வுலகெலா நுழையு நோன்மையாள்
எய்தின ளிராகவ னிருந்த சூழல்வாய்.

வெய்யது ஓர் காரணம் உண்மை - கொடிதான ஒரு காரணம் தன்னிடம் உள்ளதை, மேவினுள் - மேற்கொண்டவளும், (அதன் பொருட்டு), தமியள் அ வனத்தில் வைகுவாள் - தனியளாய் அந்தக் காட்டில் வசித்து வருபவளும், நொய்தின் - எளிதில், இ - இந்த, உலகு எலாம் நுழையும் நோன்மையாள் - உலகெல்லாவற்றிலும் புகுந்து செல்லத்தக்க வலிமையுடையவளுமான சூர்ப்பணகை, இராகவன் இருந்த சூழல்வாய் - இராமபிரான் தங்கியிருந்த அந்தப் பஞ்சவடி என்னும் இடத்து, எய்தினள்-(ஒரு சமயம்) வந்தடைந்தாள்.

வெய்யதோர் காரண முண்மை - தான் கொண்ட கொடிய காம இச்சை உள்ளதை என்று இடக்கரடக்கலிற் கவி கூறியதாகவும் கொள்ளலாம். இனி, வெய்யதோர் காரணமாவது, இராவணன் தன் கணவனை முன் கொன்ற கொடுஞ் செயலுக்குப் பழி வாங்க அமைந்த எனக் கொள்ளலும் ஒன்றும்; உத்தர. திக்குவிசயப்: **95-115.** இச் செய்தியின் உண்மை அடுத்த 230 கவியிலும், தன் 'கிளைக்கிறுதி காட்டுவாள்' என்ற குறிப்பினுலும் உறுதிப்படுவது காண்க. அன்றி, இராவணன் சீதாப்பிராட்டியை எடுத்துச் செல்வதான வெய்யதோர் உண்மைக்குக் காரணம் மேயினள் என்பதும் ஆகலாம். தமியள் என்றதால், சூர்ப்பணகை பெண்களுக்குரிய அடக்கம், கட்டுப்பாடு என்பன இன்றித் தன் இஷ்டப்படி திரிபவள் என்பதாம். இராகவன்: இரகு என்னும் அரசன் மரபிற் றேன்றினவன் என்னும் பொருளில் வந்த தத்திதாந்தப் பெயர். சூழல்வாய்: வாய், இடம் என்னும் பொருளை யுணர்த்தும் ஏழன் உருபு. உலகெலாம் நுழையு நோன்மையாள், எய்தினள் என்று கூறினமையினுல், இச்செயல் அவளாகச் செய்ததன்று; மேல் விளைவனவற்றை விதி கூட்டுவிக்கத் தற்செயலால் நிகழ்ந்தது என்பதைக் குறித்ததாம்.

பி-ம். 1. காரண விழைவு மேயினுள்: மேயினள்; மேயினுல்.

2. தமியளாய் வனத்து வைகுவாள்; வனத்துள் வைகுவாள்; வைகுவள்.

3. நொய்தினின்: நொய்தினில். (10)

**சூர்ப்பணகை இராமபிரானைக் கண்டு அவன் அழகில் ஈடுபடுதல் 230—44**

**230.** எண்டரு மிமையவ ரரக்க ரெங்கண்மேல்
விண்டனர் விலக்குதி யென்ன மேலைநாள்
அண்டசத் தருந்துயி றுறந்த வையனைக்
கண்டன டன்கிளைக் கிறுதி காட்டுவாள்.

தன் கிளைக்கு - தன் சுற்றத்தவரான அரக்கர்களுக்கு, இறுதி காட்டுவாள் - முடிவை உண்டாக்குபவளான அந்தச் சூர்ப்பணகை, மேலை நாள் - முன்னொரு காலத்தில், எண் தரும் இமையவர் - யாவரும் கருதிப் புகழத்தக்க தேவர்கள், 'அரக்கர் எங்கள் மேல் விண்டனர் - அரக்கர் எங்கள் மீது பகை கொண்டனர்; விலக்குதி என்ன - அவர்களால் நிகழும் துன்பத்தைப் போக்கியருள்வாயாக' என்று வேண்டிக் கொள்ள, அண்டசத்து அருந்துயில் துறந்த - (அதன் பொருட்டு) ஆதிசேடனாகிய பாம்பின் மீது கொண்டிருந்த தன் அரிய யோக நித்திரையைவிட்டு, உலகில் அவதரித்து வந்த, ஐயனை - இராமபிரானை, கண்டனள் - பார்த்தாள்.

எண் - மதிப்பு அல்லது பெருமையும் ஆம்; இனி எண் தரும், என்பதற்கு முப்பத்து முக்கோடி யென்னும் எண்ணிக்கையைக் கொண்ட எனப் பொருள் கோடலும் ஏற்கும். விண்டனர் - வேறு பட்டனர் என்ற பொருளில், பகைகொண்டனர் எனக் கொள்ளப் படுவது; சுந்தர. 322, 613: இமையவர் வேண்டிக் கொண்டது; பால. திருவவதாரப்; 18, 19. அண்டசம் - முட்டையிலிருந்து பிறப்பது. இது பறவைகள் மற்றும் ஊர்வனவான பல பிராணி களுக்கும் உள்ள பொது நிலையெனினும், சிறப்பாக இங்குப் பாம்பையே குறிப்பிட்டு நின்றதால் காரண இடுகுறிப்பெயராயிற்று. தன் கிளைக்கிறுதி காட்டுவாள் ஐயனைக் கண்டனள் என இயைக்க. உம்பரானவர்க்குறுதி காட்டுவாள் 228, என்று கூறி, இங்குத் தன் கிளைக்கிறுதி காட்டுவாள் என்றதன் பொருத்தத்தையுங் காண்க. இச்செய்யுளிலும் அவதார நோக்கமும் அஃது எய்துதற்கு அமைந்த வாயிலும் கூறப்பெற்றன.

சூர்ப்பணகை இராமபிரானைக் கண்ட காலத்தைக் குறித்து, 'பதின்மூன்றாவது ஆண்டு சிறிது எஞ்சியிருக்கையில் சூர்ப்பணகை இராமனைக் கண்டாள்' என்று திலகமும், இராமபிரான் ஆரணியத்தில் பன்னிரண்டு வருஷங்கள் வசித்தபிறகு சூர்ப்பணகை அவரிடம் வந்தாள்' என்று பாத்ம புராணமும் கூறும்.

பி-ம். 1. எண்டகு மிமையவ.

3. அண்டரு மருந்துயில்; அண்டருக்கருந்துயில்; அண்டமற் றருந்துயிறுறந்த.

4. கிறுதிகாட்டவே. (11)

இதன்பின் ஒரு சுவடியில் அடியிற்காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

கண்டு தன்னிருவிழி களிப்பக் காய .....கத்
தெண்டரும் புளகித மெழுப்ப வேதிலாள்
கொண்டதீ வினைத்திறக் குறிப்பை யோர்கிலாள்
அண்டர்நா தனையிவ னுரென் றுன்னுவாள்.

231. சிந்தையி லுறைபவற் குருவந் தீய்ந்ததால்
இந்திரற் காயிர நயன மீசற்கு
முந்திய மலர்க்கணோர் மூன்று நான்குதோள்
உந்தியி லுலகளித் தாற்கென் றுன்னுவாள்.

'சிந்தையில் உறைபவற்கு - மனத்திலே (தோன்றித்) தங்குபவனான மன்மதனுக்கு, உருவம் தீய்ந்தது - உருவம் முன் எரிந்து போயிற்று; இந்திரற்கு - தேவேந்திரனுக்கோ, ஆயிரம் நயனம் - ஆயிரம் கண்கள் உண்டு; ஈசற்கு - சிவபெருமானுக்கோ, முந்திய - சிறந்த, மலர் கண் ஓர் மூன்று - தாமரை மலர் போன்ற கண்கள் ஒரு மூன்று உள்ளன; உந்தியின் உலகு அளித்தார்க்கு - தன் உந்தித் தாமரையினின்றும் உலகங்களைத் தந்தருளிய திருமாலுக்கு, நான்கு தோள் - தோள்கள் நான்கு;' என்று உன்னுவாள் - என்று அவள் சிந்திப்பாள். ஆல்: அசை.

இராமபிரானைக் கண்ட சூர்ப்பணகை அவன் வடிவழகில் ஈடுபட்டு முதலில், 'இவன் மன்மதனோ' என்று ஐயுற்றாள்; பிறகு அவன் வடிவை உற்று நோக்கி, 'இவன் இந்திரனோ, சிவபெருமானோ, திருமாலோ' என ஐயுற்றுப்பின் அவர்களின் இவன் ஒருவன் அல்லன் எனத் தெளிவடைந்தமை இங்குக் கூறப்பெற்றது. அகப் பொருட்டுறைகளில், முதலில் தலைவியைக் கண்ட விடத்துத் தலைவன் கொள்ளக்கூடிய ஐயப்பர்ட்டை இங்கு ஒரு மாது ஓர் ஆடவனைக்கண்டு கூறுவதாக உள்ளமை, நூலியற்கைக்குமாருகும் எனினும், இது, பெண்ணலத்திற்கு மாறுபட்ட ஓர் அரக்கியின், பெருந்திணையின் பாற்படும் பொருந்தாக்காமம் எனக் கொள்ளத் தக்கதாம். உருவில் வேறுபாடுகள் தோன்றினும், காமன் முதலியோர் இடத்து அமைந்த அருஞ் சிறப்புக்கள் யாவும் அந்த இராமபிரா னிடத்துப் பொருந்தியிருந்தமையால், 'அவர்களில் இவன் வேறு னவன்; ஆதலின், இவன் யாவனென்று தெரியவில்லையே' என்று என்று எண்ணினாள் என்க.

சிந்தையிலுறைபவன்-சித்தஜன், மனோபவன் என்ற வடமொழிப் பெயர்களின் பொருளைத் தழுவி வந்தது. மன்மதன் உருவந் தீய்ந்த செய்தி அடுத்த செய்யுளில் ஒருவாறு விளக்கப்படுவதோடு, பால. தடாகைவதைப் படலம் முதற் செய்யுளாலும் அறியலாம். இந்திரன் ஆயிரம் நயனம் பெற்றது; பால. அகலிகைப்: 72, 81. ஈசற்கு மலர்க்கண் மூன்று என்றது, சந்திரன், சூரியன், அக்கினி ஆகிய மூன்றும் மலர்கள் போல விளங்குவன ஆதலின். இனி, 'நாலிரண்டுந் தியிலுதித்தவற்குண்டு', என்ற பாடத்திற்கு, திருமால் உந்தியிற் றோன்றிய பிரமனுக்கு மலர்க்கண்கள் எட்டு உண்டு என்பது பொருள். ஒப்பு: "இந்திரனென்னி னிரண்டேகண் ணேறூர்ந்த, அந்த ரத்தா னென்னிற் பிறையில்லை - அந்தரத்துக், கோழியா னென்னின் முகனொன்றே கோதையை, ஆழியா னென்றுணரப் பாற்று" (தொல். பொருள் 60. நச். மேற்.) இதில், ஐயமும், ஐயமறுப்பும் கூறப் பெற்றமை நோக்குக.

பி-ம். 1. தீர்ந்ததால்.

3. மூன்று நாலிரண்(டு); மூன்று நான்கிரண்டு.

4. டுந்தி யிலுதித்தவற் குண்டென். (12)

232. கற்றையஞ் சடையவன் கண்ணிற் காய்தலால்
இற்றவ னன்றுதொட் டின்று காறுந்தான்
நற்றவ மியற்றியவ் வனங்க னல்லுருப்
பெற்றன னாமெனப் பெயர்த்து மெண்ணுவாள்.

'கற்றை அம் சடையவன் - தொகுதியான அழகிய சடையை யுடைய சிவபெருமான், கண்ணில் - தன் நெற்றிக் கண்ணால், காய்தலால் - கோபித்து எரித்ததால், இற்றவன் - உடல் அழியப் பெற்றவனான, அ அனங்கன் தான் - அந்த மன்மதனே, அன்று தொட்டு இன்று காறும் - தன் உடலழிந்த அன்று முதல் இன்று வரையில், நல் தவம் இயற்றி - நல்ல தவங்களைச் செய்து, நல் உரு பெற்றனன் ஆம் என - இந்த நல்ல உருவத்தைப் பெற்றனன் ஆகும்' என்று, பெயர்த்தும் - மீண்டும், எண்ணுவாள் - அச் சூர்ப்பணகை கருதுவாளாயினள்.

தான், என்பது துணிவுப் பொருளை உணர்த்த வந்த இடைச் சொல். முன் செய்யுள் ஐயத்தையும், இச் செய்யுள் ஓர் துணிவையும் உணர்த்துவது நோக்கத்தக்கது. அனங்கன் - அங்க

பற்ற மன்மதன். மன்மதன் சிவபெருமானால் எரிக்கப்பட்டு உரு இழந்தவன் : 231. குறிப்.

பி - ம். 1. காய்தலின். 3. பெற்றவ னுமெனப். (13)

233. தரங்களி னமைந்துதாழ்ந் துயர்ந்த தாலமா
மரங்களு நிகர்க்கில மலையும் புல்லிய
உரங்களி னுயர்திசை யோம்பு மானையின்
கரங்களே யிவன்மணிக் கரமென் றுன்னுவாள்.

'இவன் மணி கரம் - இவனுடைய அழகிய கைகள், தரங்களின் அமைந்து - சிறப்பில் ஒத்து அமைந்து, தாழ்ந்து - முழங்கால் வரையில் தாழப்பெற்று, உயர்ந்த தால மா மரங்களும் - ஓங்கி வளர்ந்த பெரிய பனை மரங்களும், நிகர்க்கில - ஒப்பாகா ; மலையும் புல்லிய - (உவமையில்) மலைகளும் - இழிந்தவை ஆம் ; (ஆதலின்), உரன்களின் உயர் - வலிமையில் உயர்ந்த, திசை ஓம்பு யானையின் - திக்குக்களில் இருந்து உலகைச் சுமந்து காக்கும் யானைகளின், கரங்களே - துதிக்கைகளே ஆம் ;' என்று உன்னுவாள் - என்று அச்சூர்ப்பணகை எண்ணுவாளாயினள்.

ஆடவர் கரங்களுக்கு உவமை கூறப்பெறும் பனை மரங்கள் இராமபிரான் கரங்களுக்கு உவமை ஆகா என்றும், உலகைத் தாங்கும் திக்கஜங்களின் துதிக்கைகளே உவமை ஆம் என்றும், சூர்ப்பணகை கருதினாள் ; இவ்வாறு கூறியது அக்கரங்களின் செறிவையும் திண்மையையும் குறித்தன என்க ; அநுமன் இராமபிரான் திருத் தோள்களின் சிறப்பை விளக்கிக் கூறுமிடத்து, 'நீடுறு கீட்டிசை நின்ற யானையின், கோடுறுகரமெனச் சிறிது கூறலாம்' (சுந்தர. 536.) என்று குறிப்பிட்டதின் ஒற்றுமை இங்கு நோக்கத்தக்கது. இனி உயர்ந்த தால மா மரங்கள் என்பதற்கு, உயர்ந்த தலமான சுவர்க்கத்தில் உள்ள சிறந்த கற்பகம் முதலிய தருக்களும் எனவும் கொள்ளலாம் ; தாலம் - தலம் என்பதின் விகாரம். கரங்களே : ஏகாரம், தேற்றம் அல்லது துணிவுப் பொருளது.

பி - ம். 1. தாழ்ந்தழகின் சார்பின ; சார்ந்தபின் ; தாழ்ந்தழகிற் சார்பில ; சார்பின துயர்ந்து தாலமா ; துயர்ந்த தானமார்.

3. யோம்பு மோங்கலின். 4. கரங்க ளென்கின்றாள் ; கையென் றுன்னுவாள். (14)

234. வின்மலை வல்லவன் வீரத் தோளொடும்
கன்மலை நிகர்க்கில கனிந்த நீலத்தின்
நன்மலை யல்லது நாம மேருவும்
பொன்மலை யாதலாற் பொருவி லாதென்பாள்.

'வில் மலை வல்லவன் - வில்லைக் கொண்டு போரிட வல்லவனை இவனுடைய, வீர தோள் ஒடும் - வீரம் பொருந்திய தோள்களோடும், கல் மலை நிகர்க்கில - வெறுங் கல்லாகிய சாதாரண மலைகள் ஒப்பாகா; கனிந்த நீலத்தின்-முதிர்ந்த நீலரத்தினத்தினு லமைந்த, நல் மலை அல்லது - அழகிய மலை அல்லாமல், நாம மேருவும் - புகழ் வாய்ந்த மேரு மலையும், பொன் மலை ஆதலால் - (அது) பொன் மயமான மலை ஆதலின், பொருவலாது - ஒப்பாகாது;' என்பாள் - என்று சொல்லுவாள்.

மலை வல்லவன் : மலை - முதனிலைத் தொழிற் பெயர்; மலைதலில் வல்லவன் என்னும் பொருளது. இவன் தோளுக்கு இந்திர நீலபருவதமே நிகர்; மற்ற கன்மலையும், பொன் மலையும் ஒப்பாகா என்பதாம். இராமபிரான் மேனிக்கு இந்திர நீலமலை உவமை; சுந்தர : 543. நாமம் - புகழ். மேரு பெருமையால் ஒக்குமேனும், பொன்னிறமான நிற வேறுபாடுள்ளமையான் ஒவ்வாது என்பதாம்.

பி - ம். 1. வின் மலை யல்லவன்; தோள் கண்டும்.
2. நிகர்க்கல. 3. நன்மலையன்னது.
4. பொருவலா தென்பாள். (15)

235. தாளுயர் தாமரைத் தளங்க டம்மொடும்
கேளுயர் நாட்டத்தன் கிரியின் றோற்றத்தான்
தோளொடு தோளினைத் தொடர்ந்து நோக்குறின்
நீளிய வல்லகண் ணெடிது மார்பென்பாள்.

'தாள் உயர் - நாளத்தினுல் உயர்ந்து விளங்கும், தாமரை தளங்கள் தம் ஒடும் - தாமரை மலரின் இதழ்களுடன், கேள் உயர் - ஒளி சிறந்து விளங்கும், நாட்டத்தன் - கண்களையுடையவன்; கிரியின் தோற்றத்தான் - மலை போன்ற கம்பீரமான காட்சியுடையவன்; தோள் ஒடு தோளினை தொடர்ந்து நோக்குறின் - இவன் ஒரு தோளொடு மற்றொரு தோளை ஒரே பார்வையில் சேர்த்துப் பார்க்குமிடத்து, கண் நீளிய அல்ல - எனது கண்கள் போதுமான நீளம் உடையன அல்ல; நெடிது மார்பு என்பாள் -

இவன் மார்பு (என் கண்கள் நோக்கும் அளவினும்) நீண்டு பரந் துள்ளது ' என்று சொல்லுவாள்.

நீரில் உள்ள பூக்களில் தாமரை மலரே நீர்மட்டத்திற்கு மேலே உயர்ந்து தோன்றும் நாளத்தையுடைமையால், தாளுயர் தாமரை யெனச் சிறப்பிக்கப்பட்டது. தளம் - பூவிதழ் : (சூடா). கேள் - கேழ் என்பதின் திரிபாக அமைந்தது. தாமரைத் தளம், செவ்வரி படர்ந்து காண்போர்க்குக் குளிர்ச்சியையும், மகிழ்ச்சியையும் அளிக்கும் வனப் புடைமையால், இராமபிரான் கண்களுக்கு ஒப்புமை கூறப்பெற்றது. 'அளக்கலாகா வளவும் துளக்கலாகா நிலையும் தோற்றமும்' உடைமையால் இராமபிரானை இங்குக் கிரியின் தோற்றத்தான் என்றாள். இராமபிரான் தோள்களின் பருமையையும் மார்பின் பரப்பையும் ஒருங்கே பார்த்து இன்புறுவதற்குத் தன் கண்கள் போதிய அளவு பெரியனவாய் இல்லையே என்று மனம் ஏங்கி நின்றாள் சூர்ப்பணகை என்பதாம்.

பி - ம். 1. தாளுறு ;

2. கேளுயர் ; கோளுறு ; கோளுறு நீலமால் மலையின் கொள்கை யான்.

3. தோளொடு தோள் செலத் தொடர்ந்து நோக்குறின் ; தொடர நோக்குறின் ; நோக்குற ; நோக்குகின்.

4. நெடிது மார்பென்றாள் ; நெடியமார்பென்றாள். (16)

236. அதிகநின் றொளிருமிவ் வழகன் வாண்முகம்
பொதியவிழ் தாமரைப் பூவை யொப்பதோ
கதிர்மதி யாமெனிற் கலைக டேயுமம்
மதியெனின் மதிக்குமோர் மறுவுண் டென்னுமால்.

'நின்று அதிகம் ஒளிரும் - நிலைபெற்று எப்பொழுதும் மிகுதி யாக ஒளிவீசும், இ அழகன் வாள் முகம் - இந்த ஸௌந்தர்ய மூர்த்தி யின் தேசோமயமான முகம், பொதி அவிழ் தாமரைப்பூவை ஒப்பதோ- முகை அவிழ்ந்து மலரும் தாமரைப் பூவை ஒப்பாகுமோ? (அப் பொழுது மலர்ந்த தாமரையை ஒப்பாகுமோ ?) ஆகாது என்பதாம். கதிர் மதி ஆம் எனில் - கிரண ஒளிகளால் நிறைந்த முழு மதி உவமை ஆகும் என்று கூறினால், கலைகள் தேயும் - அதற்குள்ள கலைகள் மறுநாள் முதல் தேயத் தொடங்கி, அழிந்து போகும்; அ மதி எனில் - அப்படியே அந்தச் சந்திரனை உவமை கூறினாலும்,

மதிக்கும் - அந்தச் சந்திரனுக்கும், ஓர் மறு உண்டு - கறையாகிய ஒரு குற்றம் அதனிடம் எப்போதும் உள்ளது ;' என்னும் - என்று சொல்லுவாள். ஆல் : அசை.

பொதி - அரும்பு ; 'கமலப் பொதியினை நகுவன புணர்முலை' (பால. நாட்டுப் : 44.); 'பொதிய விழ்மாலை வீழ்ந்து' (சீவக, 1447). ஒப்பதோ : ஓகாரம் எதிர்மறைப் பொருளது. அடிக்கடிக் கூம்பி மலரும் தாமரை மலரும், ஒரு படித்தாக இன்றி அடிக்கடி வளர்ந்தும் தேய்ந்தும் நிலைமாறிக் கொண்டும், தன்னிடம் ஒரு கறையாகிய குற்றத்தை நிலையாய்க் கொண்டுமுள்ள சந்திரனும், எப்பொழுதும் ஒரு நிலைத்தாய் ஒளி வீசும் இவன் திருமுகத்துக்கு ஒப்பாகா என்று சூர்ப்பணகை காரணத்தோடு முடிவு செய்தாள் என்க. இராமபிரான் முகம் மதிக்கு ஒப்பு ஆகாது ; சுந்தர : 540. சில பிரதிகளில் இதன்பின் 'வாணிலா' என்று தொடங்கும் (239) செய்யுள் காணப்படுகிறது.

இச் செய்யுள் முதல் 5 செய்யுட்கள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. ஆயினும், இவை இடம் மாறிக் காணினும் எமக்குக் கிடைத்த சுவடிகளிலெல்லாம் உள்ளன.

பி - ம். 1. வழகன் நான்முகம்.
2. தாமரை போக்கிப் பொங்கிரும் ; பூவை யொப்பதோங்
3. கலைகடேயுமிவ்.
4. மதியெனி லதற்கு மோர்; மதிக்கொரு; மறுவுண்டாமென்றாள்.

237. எவன்செய வினியவிவ் வழகை யெய்தினான்
அவஞ்செய்து திருவுடம் பலச நோற்கின்றான்
நவஞ்செயத் தகையவிந் நளின நாட்டத்தான்
தவஞ்செயத் தவஞ்செய்த தவமெ னென்கிறாள்.

'இனிய இ அழகை எய்தினான் - (காண்பதற்கு) இன்பத்தை அளிக்கும் இந்தத் திவ்விய சௌந்தர்யத்தை அடைந்துள்ள இவன், அவம் செய - தன்னை வீணாக்கிக் கொள்ள, திரு உடம்பு - தன் அழகிய திருமேனி, அலச - வருந்த, எவன் செய - எதைச்சாதிக்கும் பொருட்டு, நோற்கின்றான் - தவம் செய்கின்றான்? நவம் செயத் தகைய-பார்க்கப் பார்க்க மேன்மேலும் புதுமையை உண்டாக்கத்தக்க, இ நளின நாட்டத்தான் - இந்தத் தாமரை போன்ற கண்களையுடைய இவன், தவம்செய - தவம் செய்யும்படியாக, தவம் செய்த தவம் என்-அத் தவந்தான் முன் செய்த தவம் யாதோ' என்கின்றாள் - என்று வியந்து சொல்வாளாயினள்.

எவன் செய: எவன் - யாது; 'வானுயிர் தோற்றமெவன் செய்யும்' (குறள். 272) என்ருற் போல. செய்தல் - தேடியடைதல்; அதாவது சம்பாதித்தல்: 'ஈதற்குச் செய்க பொருளை' (திரிகடுகம். 90.) என்ருற் போல. 'எவன் செய......அவன், செயத் திருவுடம்பு' எனப் பாடங்கொண்டு, செயத்திரு உடம்பு - ஜயலக்ஷ்மி வாழும் தன் உடம்பு எனப் பொருள் கொண்டாரும் உளர். நவம் - புதுமை; இது வடசொல்; நவஞ்செய்தல் - பார்க்குந் தோறும் ஒரு புதுமையான அழகை உண்டாக்குதல்; இனி நவஞ் செயத் தகைய என்பதற்கு, நட்புக் கொள்ளத்தக்க, எனப் பொருள் கொள்ளலும் அமையும்; நவம் - நட்பு (திவாகரம்). நளினம் - தாமரை; 223; நளினம் - நயப்புடைமையும் ஆம்; அது கண்டோர்க்கு ஒரு விருப்பை உண்டாக்குவதால் என்க. நளின நாட்டத்தான்; புண்டரீகாக்ஷன் என்னும் வடமொழிப் பொருளைக் குறிப்பது. தவஞ்செய்த தவம்; 'தவஞ்செய்த தவமாந்தையல்' (சுந்தர. 1275) என்று பிராட்டியை அநுமன் முகமாய் ஏற்றிக் கூறிய சிறப்பு, இப்பெருமானுக்கும் அமைந்தமை இங்குச் சூர்ப்பணகை வாக்கால் விளக்கப்பெற்றது என்க.

பி - ம். 1. வினியன வழகை; யினியிவ னழகை யெய்துவான்; எவன் செய்ய வினையனிய்.

2. அவன் செய; தவஞ் செயத் திருவுடம்பலச; வுடம்பசைய: அமைய நோற்கின்ருன்.

3. நவஞ் செய்ததனைய; நவன் செயத்.

4. தவஞ் செய்த தவஞ் செய்யும்; தவன் செய்த தவனெ னென் கின்ருள்; தவமி தென்கின்ருள். (18)

238. உடுத்தநீ ராடைய ளுருவச் செவ்வியள்
பிடித்தரு நடையினள் பெண்மை நன்றிவன்
அடித்தலந் தீண்டலி னவனிக் கம்மயிர்
பொடித்தன போலுமிப் புல்லென் றுன்னுவாள்.

'உடுத்த நீர் ஆடையள் - கடலாகிய நீரைத் தன் ஆடையாக உடையவளும், உருவ செவ்வியள் - வடிவத்தின் அழகை யுடையவளும், பிடிதரு நடையினள் - பெண் யானையை ஒத்த நடையை யுடையவளுமான நிலமாதின், பெண்மை நன்று - பெண் தன்மை நன்ருய் இருக்கிறது! (ஏனெனில்), இ புல் - இந்தப் புற்கள், இவன்

அடித்தலம் தீண்டலின் - இவனுடைய திருவடிகள் பட்டமையால், (அப்புவி மடந்தையின்), அ மயிர் - உடலிலுள்ள அந்த உரோமங்கள், பொடித்தன போலும் - இன்பவுணர்ச்சியால் மயிர்க்கூச் செறிந்தனபோலும்,' என்று உன்னுவாள் - என்று நினைப்பாளாயினள்.

உடுத்த நீர் ஆடையள் : இது வடமொழி நடை ; இனி, நீர் உடுத்த ஆடையள் என இயைத்து, கடலை உடுத்துக் கொண்ட ஆடையாகவுடையவள் எனலும் ஒன்றும் ; நீர் - கடல் ; புவிக்குக் கடலை ஆடையாக உரைப்பது கவி மரபு ; சுந்தர. 423 ; புறநா. 361 : 1. பிடித்தரு நடை : எதுகை நோக்கி ஒற்று மிகுந்தது ; தரு, உவம வாசகம். மகளிர் நடைக்குப் பெண்யானை நடை ; பால. மிதிலைக் : 77 ; நீர் விளையாட்டு: 1 ; அயோத். கங்கைப் : 4. பெண்மை நன்று ; நன்றில்லை என்று இகழ்ச்சிக் குறிப்பிற் கூறியது. பிற ஆடவன் உடல் தன் மேற்படவும், பெண்களுக்குரிய அச்சம், நாணம், பயிர்ப்பு இன்றி, வெளிப்படையாய் மயிர் பொடித்து நின்றமையால் பெண்மை நல்லதன்று என இகழ்ந்ததாம். இனி, அவன் திருவடி தீண்டப் பெற்றபேறு அவ்வவனி மாதுக்குக் கிடைத்த நலத்தைப் பாராட்டினுள் எனவும் கொள்ளலாம். அன்றியும், புவிமாது நாயகனுன் திருமாலின் திருவடி தன் மீதுபட அவள் புளகாங்கிதம் பெற்றனள் என்பதைக் கவி குறிப்பாகக் கூறும் நயம் போற்றப்பாலது. இராமபிரான் அடித்தலம் தம் மேற்பட்ட புல்கள் இங்குப் பூமி மடந்தையின் உடலில் உள்ள உரோமங்களாக உருவகஞ் செய்யப்பெற்றன. பொடித்தல் - அரும்புதல் ; தோன்றுதல். பூமிக்குப் புல்லாகிய ரோமம் பொடித்தல் ; 'நெடுநில மடந்தை, புறமயிர்த்தலம் பொடித்தன போன்றன பசும்புல் ;' (கிட்கிந்தா. கார்காலப் : 43.)

பி-ம். 2. பிடித்தரு நடையவள் ; பிடித்தன்ன ;
3. தீண்டிலன். 4. பொடித்த நிகர்க்குமால். (19)

**239.** வாணிலா முறுவலான் வயங்கு சோதியைக்
காணல னேகொலாங் கதிரி னுயகன்
சேணெலாம் புல்லொளி செலுத்திச் சிந்தையில்
நாணிலன் மீமிசை நடக்கு மென்கின்ருள்.

'வாள் நிலா முறுவலான் - ஒளி பொருந்திய நிலவு போன்ற பற்களையுடைய இவனது, வயங்கு சோதியை - திருமேனியில் விளங்கும் திவ்விய ஒளியை, கதிரின் நாயகன் - ஒளியின் தலைவனுன சூரியன், காணலனே கொலாம் - பார்த்திலனே போலும்! (ஏனெனில்),

சேண் எலாம் புல் ஒளி செலுத்தி - நெடுந்தூரமெல்லாம் அவன் தன் அற்ப ஒளியைச் செல்லச் செய்து, சிந்தையில் - உள்ளத்தில், நாண் இலன் - வெட்கம் இல்லாதவனாய், மீமிசை - வானத்தில் மேன்மேல், நடக்கும் - நடக்கின்றான்,' என்கின்றாள் - என்று கதிரவனை இழித்துக் கூறினாள்.

இவனுடைய திருமேனியின் ஒளி மிகுதியைக் கதிரின் நாயகனை சூரியன் கண்டிருந்தால், இவனொளிக்குத் தன் ஒளி எம்மாத்திரம் என்று வெட்கி வெளிக்கிளம்பாது ஒளிந்து கொள்வான் ஆதலின், 'காண்கிலன்' என்றாள். சூரியன் மற்றைக் கோள்களுக்கெல்லாம் ஒளி அளித்துதவுவன் ஆதலின், கதிரின் நாயகன் எனப்பட்டான். இராமபிரான திருமேனியின் ஒளி, சூரியன் ஒளியை மழுங்கச் செய்வது; ''வெய்யோனொளி தன்மேனியின் விரிசோதியின் மறையப்......போனான்'' அயோத். கங்கைப்: 1. ஒப்பு. புறநா. 8.

பி-ம். 1. வாணிலை மருங்குலான்; வாணிலை மருங்கினான்; வாணிலா மருங்குலாள்.

2. காணிலனென் கொலோ; காணலனே கொலோ.

3. சேணெலாம்; சேணுயர்: செனொளி; சேணிலாச் செலுத்துஞ் சிந்தையின்; செலுத்தச் சிந்தையும்.

4. நாணலன்......நடக்கின்றா னென்றாள்; நடிக்கின்றா னென்றாள்: நடக்குமென் னென்றாள். (20)

240. குப்புறற் கரியமாக் குன்றை வென்றுயர்
இப்பெருந் தோளவ னிதழுக் கேற்பதோர்
ஒப்பென வுலகமே யுரைக்கி னொண்ணுமோ
துப்பினிற் றுப்புடை யாதைச் சொல்லுகேன்.

'குப்புறற்கு அரிய - தாண்டிச் செல்வதற்கு அருமையான, மா குன்றை வென்று - பெரிய மலையை வென்று பின்னிடச் செய்து, உயர் - உயர்ந்து விளங்குகின்ற, இ பெரும் தோளவன் - இந்தப் பெரிய தோள்களையுடைய இவனுடைய, இதழுக்கு - உதடுகளுக்கு, (துப்பு) ஒப்பு என உலகமே உரைக்கின் - பவழமே நிகர் என்று சான்றோர் சொல்லுவாரெனில், ஒண்ணுமே - அது பொருந்துமோ? (பொருந்தாது என்றபடி); (ஆனால்), துப்பினில் - பவழத்தைக் காட்டிலும், துப்பு உடை யாதைச் சொல்லுகேன் - (உவமை கூற) வலிமையுடைய வேறு எதனை யான் எடுத்துக் கூறும் திறமையுடையேன்? (திறமை தனக்கில்லை என்றபடி.)

குப்புறல் - தாண்டிச் செல்லல்; சுந்தர. 15. மாக்குன்று - பெரிய மேருமலையும் ஆம். உலகம் - இடவாகு பெயரால் உலகில் வாழும் பெரியோரைக் குறிப்பது; 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' என்றாராதலின்; துப்பு - பவழம், வலிமை, அழகு, சிறப்பு, தூய்மை என்னும் பல பொருளது. மாகுன்றை வென்றுயர் இப்பெருந் தோளவன்; 'வின் மலை வல்லவன் வீரத் தோளொடும் நன் மலை நிகர்க்கில' (235) என்றமையும் ஒப்பிடுக. இராமபிரான் இதழுக்குப் பவழம் ஒப்பாகாது என்பது; சுந்தர. 541.

பி-ம். 1, குப்புறற் குரிய; குன்றம் வென்றுயர்.
3. வுலகமே லுரைக்கி னுள்ளமே; லுலகமெய் யுரைக்கி: லொண்ணு மேல்; லொண்ணுமே; லாகுமே.
4. துப்பெனிற்றுப்புடை யாரைச் சொல்லுகேன்; யாரைச் சொல்லென்பாள். (21)

241. நற்கலை மதியுற வயங்கு நம்பிதன்
எற்கலை திருவரை யெய்தி யேமுற
வற்கலை நோற்றன மாசி லாமணிப்
பொற்கலை நோற்றில போலு மாலென்றாள்.

'நல் கலை மதி உற - அழகிய கலைகள் நிரம்பிய பூர்ண சந்திரனை ஒப்ப, வயங்கும் - விளங்குகின்ற, நம்பிதன் - இந்த ஆடவரிற் சிறந்தோனது, எல் கலை திரு அரை - சூரியனைத் தன் ஒளியால் அழித்துவிடும் அழகிய இடையை, எய்தி - அடைந்து, ஏம் உற - இன்பமுற, வற் கலை நோற்றன - மரவுரியே தவஞ் செய்தன; மாசு இலா மணி - குற்றம் இல்லாத உயர்ந்த, பொன் கலை நோற்றில போலும் - பொன்னுடை தவம் செய்யவில்லை போலும்,' என்றாள் - என்று கூறினாள். ஆல்: அசை.

நற் கலை மதியுற வயங்குநம்பி: இதனாலே இராம சந்திரன் என்ற பெயருக்குக் காரணமானமை நோக்குக. உற - ஒப்பு. எல் கலை - இருளை ஓட்டும் எனலும் ஒன்றும். அரை: உடலின் அரை அல்லது நடுப்பாகமாகிய உறுப்பு ஆதலின்; இஃது, இடை, நடு எனப் பெயர்களும் பெறும்; உடலின் கால் பாகமுள்ளதற்குக் கால் எனப் பெயர் வழங்குவதுபோல. ஏம்: ஏமம் என்பதில் இடைக்குறை. ஏம் உற - க்ஷேமம், அல்லது, ஓர் பாதுகாவலை அடைய என்னலும் ஆம். ஏமுறல்: உயுத்த. வீடணனடைக்: 114. வற்கலை - மரவுரி; வர்க்கலா

என்ற வடமொழியின் திரிபு ; அயோத். நகர்நீங்கு : 146. பொற்கலை - தீதாம்பரம்.

பி - ம். 1. மதிமுகம் வயங்கு ; மதிமுக மிலங்கு.

2. எற்கலைத் திருவரை. 4. போவுமா லென்பாள். (22)

242. தொடையமை நெடுமழைத் தொங்க லாமெனக்
கடைகுழன் றிடைநெறி கரிய குஞ்சியைச்
சடையெனப் புனைந்தில னென்னிற் றையலார்
உடையுயிர் யாவையு முடையு மாலென்றாள்.

'தொடை அமை - தொடர்ச்சி பொருந்திய, (அதாவது விடாது தொடர்ந்த), நெடு மழை தொங்கல் ஆம் என - நீண்ட மழைக்கால் என்று சொல்லத்தக்கவாறு, கடை குழன்று - நுனி சுருண்டு, இடை நெறி - நடுவே அடர்ந்துள்ள, கரிய குஞ்சியை - கருநிறமான தலைச் சிகையை, சடை என புனைந்திலன் என்னில் - இவன் சடையாகத் தரித்திலன் என்றால், தையலார் உடை - மகளிருடைய, உயிர் யாவையும் - உயிர்கள் எல்லாம், உடையுமால் என்றாள் - அழிந்து போய் விடுமே' என்று கூறினாள்.

அநுமன் பிராட்டியிடம் இராமபிரான் திருமேனிச் சிறப்பைக் கூறுமிடத்து அப் பெருமான் குஞ்சியைப்பற்றிக் கூறிய,

நீண்டு குழன்று நெய்த்திருண்டு நெறிந்து செறிந்து நெடுநீலம்
பூண்டு புரிந்து சரிந்துகடை சுருண்டு புகையு நறும்பூவும்
வேண்டு மல்ல வெனத்தீதெய்வ வெறியே கமழு நறுங்குஞ்சி
ஈண்டு சடையா யினதென்றால் மழையென் றுரைத்த லிழிவன்றோ;

(சுந்தர. 546) என்ற செய்யுளால் இக்கருத்தின் ஒப்புமை விரிவாய் விளக்கப்பெற்றமை காண்க. உடைதல் - தகர்தல் அல்லது அழிதல். உயிர் யாவையும் ; உம்மை, எஞ்சியது தழுவியதாகக் கொண்டு உயிரும் அதனினுஞ் சிறந்த நாண், கற்பு ஆகிய பெண்மைக்குரிய சிறப்புக்களையும் எனக் கொள்ளலும் ஒன்றும். சடையாகக் கொள்ளாத இராமபிரான் குஞ்சி, மகளிர் உயிரைத் தகர்க்கும் தன்மையது என்பது பிராட்டி திறத்து, 'இந்திர நீல மொத் திருண்ட குஞ்சியும்........முறுவ லுண்டதே,' (பால. மிதிலைக் : 56)

எடுத்துக் காட்டியதை இங்குக் கருதப்பாலதாம். உடை, உயிர்; உடையும் உயிரும் எனவும் கொள்வர்.

பி - ம். 1. நறுமழை; மழைத் தொகுதி; மலர்த் தொகுதி.
2. கடைகுழன்றிடு நெறிக் கரிய; நெறித்தாய குஞ்சியை.
3. சடையெனக் கரந்திலன்.
4. உடையயி ருடையுமென் றுன்னி நிற்கின்றுள். (23)

இதன்பின் சில சுவடிகளில் 'கரந்தில னிலக்கணம்' என்னும் 244-ம் செய்யுளும், ஒரு சுவடியில் 'வான்றனில்,' என்னும் 246-ம் செய்யுளும் உள்ளன.

243. நாறிய நகையணி நல்ல புல்லினுல்
ஏறிய செவ்வியை யியற்று மோவெனு
மாறகன் முழுமணிக் கரசின் மாட்சிதான்
வேறொரு மணியினுல் விளங்கு மோவென்றுள்.

'நாறிய - விளங்குகின்ற, அணி நகை - அழகிய ஆபரணங்களில், நல்ல புல்லினுல் - சிறந்தவை இவனது மேனியைத் தழுவினுல், ஏறிய செவ்வியை - இவனுக்கு இப்பொழுதிலும் சிறந்த அழகை, இயற்றுமோ - அவை உண்டாக்குமோ?' எனு - என்று யோசித்து, (பின்), 'மாறு அகல் - ஒப்பு இல்லாத, முழு மணிக்கு அரசின் மாட்சி - சிறந்த இரத்தினங்களுக்கெல்லாம் அரசான கௌத்துவ மணியின் சிறப்பு, வேறு ஒரு மணியினுல் விளங்குமோ - மற்றோர் இரத்தினத்தால் உண்டாகுமோ?' என்றுள் - என்று சொல்லி ஒரு முடிவுக்கு வந்தாள் அச்சூர்ப்பணகை. தான்: அசை.

நாறுதல் - தோன்றுதல், விளங்குதல். இயற்றுமோ - உண்டாக்குமோ; ஓகார வினு எதிர்மறைப் பொருளாய், இயற்ருது என்பதாம். முழு மணிக்கரசு - கௌத்துபம் என்னும் மணி; சுந்தர. 103, 291 : 1290. இது, எடுத்துக் காட்டு உவமையணி. ஒப்பு: முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டார் யாரே, யழகுக் கழகு செய்வார் (நீதிநெறி. 12). 'மாறிரு மார்பினின் மணியின் மாட்சிதான்' என்ற பாடம் இக் கருத்தை வலியுறுத்துவது காண்க. 'அமிழிமைத்துணேகள்' என்று தொடங்கும் (பால. கோலங்காண்: 3). செய்யுளை இது நினைப் பூட்டுகின்றது.

பி - ம். 2. செவ்வியி; செவ்வியன், செவ்வியென், செவ்விய.
3. மாறிகன்; மாறிரு மார்பினின்; மணியின் மாட்சிதான்.
4. மணியினில். (24)

244. கரந்தில னிலக்கண மெடுத்துக் காட்டிய
பரந்தரு நான்முகன் பழிப்புற் றனரோ
இரந்திவ னிணையடிப் பொடியு மேற்கிலாப்
புரந்தர னுலகெலாம் புரக்கின் றனென்றாள்.

'இவன் இணை அடி பொடியும் இரந்து ஏற்கிலா - இவனுடைய இரு திருவடிகளில் ஒட்டிய தூசிக்குரிய பெருமையையும் இரந்தும் பெறமாட்டாத, புரந்தான் - தேவேந்திரன், உலகு எலாம் - மூவுலகங் களையும், புரக்கின்றான் - ஆட்சி புரிகின்றான்; (ஆதலின்), கரந் திலன் - ஒளிக்காதவனாய், இலக்கணம் எடுத்து காட்டிய - உத்தம சாமுத்திரிகா லக்ஷணம் அனைத்தையும் இவனுடைய மேனியில் அமைத்து விளங்கச் செய்த, பரம் தரு நான் முகன் - மேன்மை பொருந்திய பிரமதேவன், பழிப்பு உற்றான் அரோ - இகழப்பட்டவ னானன் அன்றோ?' என்றாள் - என்று கருதுவாளாயினாள்.

பழிப்புற்றமை: இவனுடைய காலில் ஒட்டிய தூசிக்கும் ஒப்பு ஆகாத இந்திரன் மூவுலகும் ஆள, உத்தம லக்ஷணங்கள் அமைந்த இவன் வனத்தில் திரிந்து வருந்துமாறு வைத்த நிலைமையால், பிரம தேவனின் படைப்புத் தொழில் பயனற்றதாயிற்று; ஆதலின், அவன் இகழ்ச்சிக்கு இடமானான் என்பதாம். அரோ என்ற சொல் இது போல் வினாப் பொருளில் அமைந்துள்ளமை இந்நூலிற் பல இடங் களிற் காணலாம். இதனைப் பொதுநோக்காக அசையென்று நீக்கு வாரும் உளர். பரந்தரு நான் முகன் - பரம் பொருளாகிய திருமா லால் படைக்கப் பெற்ற நான்முகன் எனக் கொள்ளலும் அமையும். காட்டிய - உண்டாக்கிய அல்லது படைத்த என்றலும் ஏற்கும். 'களையாத துன்பமிக் காரிகைக்குக் காட்டி' (சிலப். 19 : 17) என்பது போல. மூன்றும் அடியில், 'இருந்தவன்' என்ற பாடமும் ஏற்கும். அடிப்பொடிக்கு ஒப்பாகாது எனக்கூறுதல்; 323.

இதுவும் அடுத்த செய்யுளும், 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐய ரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. மெடுத்துக் காட்டின்.

2. பரந்திருநான் முகன்; பழிபெற் றனரோ.

3. பொடிக ளொக்கிலாப்; பொடிகளு மொப்பிலாப்.

4. இருந்தவனிணையடி; புரக்குமா லென்றாள்; புரந்தர னரசியல் பொறுத்த தென்னென்றாள்; பொறுத்த தென்னென்பாள்.(25)

சூர்ப்பணகை, அழகிய உருவில், இராமபிரான் முன் தோன்றியது 245 — 52.

245. நீத்தமும் வானமுங் குறுக நெஞ்சிடைக்
கோத்தவன் புணர்விடைக் குளித்து மீக்கொள
ஏத்தவும் பரிவினென் றீக லான்பொருள்
காத்தவன் புகழெனத் தேயுங் கற்பினாள்,

நீத்தமும் - கடல் நீரும், வானமும் - ஆகாயமும், குறுக - அளவிற் குறைந்தவையாய்த் தோன்றுமாறு, நெஞ்சு இடை கோத்த-தன் மனத்திலே பதிந்த, அன்பு உணர்வு இடை குளித்து-காம வெள்ளத்தில் முழுகி, மீ கொள - (பின்) அவ்வுணர்ச்சி மேலோங்க, ஏத்தவும் - இரப்போர் தன்னைத் துதிக்கவும், பரிவின் - அவர்கள்பால் இரக்கத்தோடு, ஒன்று ஈகலான் - தன்னிடமுள்ளவற்றில் ஒரு சிறிதையும் கொடுக்காதவனாய், பொருள் காத்தவன் புகழ் என - தன் பொருளைக் காத்து நின்றவன் புகழே போல, தேயும் கற்பினாள் - குறைந்தழியும் கற்பையுடையவளும்,

மீக்கொள, தேயும் கற்பினாள் என்று முடிக்க. இது, அடுத்த செய்யுளோடு இயைந்து குளகமாகி, ஓவியம் போன்றனள் என வினை முடிவு கொள்ளும். பெருமைக்குக் கடலும், வானும்; குறள். 103, 272. காமம் பெரிது; 'காதல் தானும் கடலினும் பெரிதே' (நற். 166. 10); குறுந். 3 : 1; 18 : 5; 99 : 4-6; 102 : 3. சூர்ப்பணகையின் கற்பின் தேய்வுக்கு, பொருளை யீயாது, காத்துவந்த உலோபியின் புகழின் தேய்வு உவமை;

பி - ம். 1. நீத்தமும் பரவையும்; குறுகி நெஞ்சிடை.
2. கோத்தவிப் புணர்விடைக் குளிக்க மீக்கொள; குளிப்ப மீக்கொள; குளிக்கு மேற்கொள; கொண்டு மீக்கொள; கோத்தவன் பரிவினிற் குளிக்க வீங்கினன்.
3. ஏத்தவும் புரியவொன்; ஏத்தவம் யுரியவொன்; ஏத்தறம் பெருகவொன்; ஏத்தறம் புரியடுவான்; றீகிலான் பொருள். (26)

246. வான்றனில் வரைந்ததோர் மாத ரோவியம்
போன்றன ணின்றனள் புழுங்கு நெஞ்சினாள்
தோன்றறன் சுடர்மணித் தோளி னுட்டங்கள்
ஊன்றின பறிக்கவோ ரூற்றம் பெற்றிலாள்.

புழுங்கும் நெஞ்சினாள் - காம விகாரத்தால் வேகும் மனமுடைய அந்தச் சூர்ப்பணகை, தோன்றல் தன் - இராமபிரானுடைய, சுடர் மணி தோளின் - ஒளி வீசும் நீலமணி போல் விளங்கும் புயங்களில்,

ஊன்றின நாட்டங்கள் - ஆழ்ந்து பதிந்த தன் கண்களை, பறிக்க - பறித்துத் தன்னிடம் மீட்டுக் கொள்ள, ஓர் ஊற்றம் பெற்றிலாள் - ஒரு வலிமையைப் பெருதவளாகி, வான் தனில் வரைந்த - வானிடத்தே வரையப் பெற்ற, ஓர் மாதர் ஓவியம் போன்றனள் - (ஒரு பெண்ணின்) காதலே சித்திர வடிவம் கொண்டது போன்று, நின்றனள் - அங்குச் செயலற்று நிற்பாளாயினள்.

நாட்டம் - கண்; நாடிப்பார்க்கும் செயலைக் கொண்டது; பார்வை, நோக்கம் என்பன போல; 'நாட்டந்தா னெரியுமிழ்' (339) என வந்தமையும் நோக்குக. ஊற்றம் பெற்றிலள்: இராமபிரான் மணித் தோள்களில் அவள் கண்கள் பதிந்து நிற்க, அக் கண்களை மீட்கும் வகையின்றி உணர்ச்சியற்ற நிலையில் இருந்தாள் என்பதாம்; ஆசையில் ஆழ்ந்த மகளிர், சித்திரம் போல் செயலற்று நிற்றல்; பால. மிதிலைக்காட்சிப்: 39; கோலங்காண்: 20. இது, 'தோள்கண்டார் தோளே கண்டார்' என்ற (பால. உலாவியற்: 19) செய்யுளை ஒருவாறு நினைப்பூட்டுகின்றது. மாதர்; உரிச்சொல்; மாதர் - காதல் (தொல். உரி. சூ. 30); ஒப்பு 'கண்ணிஞல் காதலென்னும் பொருளையே காண் கின்றோம்.' (பால. உலாவியற். 3) மாதர் ஓவியம் - அழகிய சித்திரம் என்னலும் ஒன்றும். இங்கு ஓவியம் என்றது, சித்திரத்தின் அசைவற்ற நிலையை மட்டும் குறிக்க வந்தது எனக் கொள்ளற்பாலது. சூர்ப்பணகை அழகிய உருக்கொண்டது பின்னரே ஆதலின், இங்கு அவள் தன் சுய உருவுடனேதான் இருந்தாள் என்பது அறியப்பாலதாம். சூர்ப்பணகை வானத்தில் நின்றபடியே இராமபிரானைக் கண்டு மோகித்து, அவன் தன்பால் அன்புகொள்வதற்காக அழகிய உருவம் தரித்து, கீழே இறங்கி, அவனருகில் வந்துநின்றனள்; **249, 251.** இவ்வாறு முதனூல் கூறவில்லை.

பி-ம். 1. வளர்ந்த தோர்மாதர்.
2. போன்றனள் புலர்ந்தனள்; நெஞ்சினள்.
3. தோன்றல் சுடர்மணி.
4. ஊன்றினள் பறிக்க...............பெற்றிலள். (27)

**247.** நின்றன ளிருந்தவ னெடிய மார்பகம்
ஒன்றுவெ னன்றெனி லமுத முண்ணினும்
பொன்றுவென் போக்கினி யரிது போலெனுச்
சென்றெதிர் நிற்பதோர் செய்கை தேடுவாள்.

நின்றனள் - அவ்வாறு சித்திரம்போல் உணர்ச்சியற்ற நிலையில் வானத்தில் நின்ற அந்தச் சூர்ப்பணகை, 'இருந்தவன் - அங்கிருந்த

இராமபிரானுடைய, நெடிய மார்பு அகம் - பரந்த மார்பினிடத்தே, ஒன்றுவென் - சேர்ந்து தழுவுவேன்; அன்று எனில் - அங்ஙனம் தழுவப்பெறேன் என்றால், அமுதம் உண்ணினும் - யான் தேவாமிர் தத்தையே உண்டாலும், பொன்றுவேன் - (இக்காம நோயினால்) இறந்தே போவேன்; போக்கு இனி அரிது போல் எனா - எனக்கு வேறு வழி இல்லை போலும்' என்று எண்ணி, எதிர் சென்று நிற்பது - அவ்விராமபிரானின் எதிரே போய் நிற்பதாகிய, ஓர் செய்கை தேடுவாள் - ஓர் உபாயத்தை நாடுபவள் ஆனாள்.

இருந்தவன் பன்னசாலைக்குப் புறத்திலே ஓரிடத்தில் தனியே இருந்தவன். சூர்ப்பணகை, தான் அமுதம் உண்டாலும், இராம பிரானை அடையாத நிலையில் அது தன்னுயிரைக் காப்பாற்றாது; தான் இறந்து படுதல் திண்ணம் என்று எண்ணி, அவனை அடையும் உபாயத்தைத் தேடுவாளாயினள் என்க.

பி - ம். 1. நின்றன னின்றயன்; நின்றவ ளிருந்தவன்.
2. னமுதமுண்கினு. 3. போன்மெனாச். (28)

248. எயிறுடை யரக்கியெவ் வுயிரு மிட்டதோர்
வயிறுடை யாளென மறுக்கு மாதலால்
குயிறொடர் குதலையோர் கொவ்வை வாயிள
மயிறொட ரியலெழில் மருவ னன்றெனா,

'எயிறு உடை அரக்கி - கோணற் பற்களையுடைய இந்த அரக்கி, எ உயிரும் இட்டது - எல்லாப் பிராணிகளையும் உணவாக இடப்பெற்றதான, ஓர் வயிறு உடையாள் என - ஓர் (பெரிய) வயிற்றை யுடையவள் என்று, மறுக்கும் ஆதலால் - என்னை ஏற்றுக்கொள்ள இவன் மறுப்பான் ஆதலின், குயில் தொடர் - குயிலை ஒத்த, குதலை - கொஞ்சும் இள மொழிகளையுடைய, ஓர் கொவ்வை வாய் - ஒரு கொவ்வைக் கனிபோன்ற சிவந்த வாயை யுடைய, இள மயில் தொடர் - இளம் மயிலுக்குப் பொருந்திய, இயல் எழில் - இயற்கை யழகை, மருவல் - தழுவி ஏற்றுக் கொள்ளுதல், நன்று எனா - நல்ல செயல் ஆகும்' என்று,

இது குளகமாகி அடுத்த செய்யுளோடு தொடர்ந்து வினை முடிவு கொள்ளும். எயிறுடையரக்கி: அரக்கி என்ற குறிப்பில், எயிறு என்பதைக் கோணற்பற்கள் எனக் கொள்ளப்பட்டது; கோணற் பல்: கோரைப் பல் எனவும் படும். இது வக்ர தந்தம் என்ற வடசொற்றொடரின் பொருளைக் கொண்டது. எவ்வுயிரும்:

உம்மை - எந்தப் பிராணியையும்; ஒழிவின்றி, என்னும் பொருளில் முற்றும்மை ஆகும். குதலை - பொருள் விளங்காது இளங்குழந்தைகள் கூறும் சொல். குயில் தொடர்: தொடர் உவம வாசகம், 'குயில்தொடர் குதலையோர் கொவ்வை வாயிளமயில்'; இல் பொருளுவமை.

பி - ம். 1. எயிற்றுடை யரக்கி.

2. வயிற்றுடை யாளெனின்; யாளெனு; மறுக்கு மாதவின்.

3. குதலையள்; கொவ்வைச் செவ்விவாய்; கொவ்வைச் செய்ய வாய்.

4. ரியல்பினுன் மருவல்; ரியலியன் மருவல்; ரியலியாய் மருவல்; சாயலின் மருவல். (29)

249. பங்கயச் செல்வியை மனத்துப் பாவியா
அங்கையி னுயமந் திரத்தை யாய்ந்தனள்
திங்களிற் சிறந்தொளிர் முகத்தள் செவ்வியள்
பொங்கொளி விசும்பினிற் பொலியத் தோன்றினுள்.

பங்கயச் செல்வியை - செந்தாமரை மலர்மீது வீற்றிருக்கும் செல்வத்திற்கு உரிய தேவியாகிய திருமகளை, மனத்து பாவியா - மனத்தில் தியானம் செய்து, அம் கையின் ஆய மந்திரத்தை - தனக்குச் சித்தியாய் இருந்த அத்தேவியின் மூல மந்திரத்தை, ஆய்ந்தனள் - ஜபம் செய்தனள்; (அதனுல்), திங்களில் சிறந்து ஒளிர் முகத்தள் - பூர்ண சந்திரனைவிடச் சிறந்து ஒளிவீசும் முகமுடையவளாயும், செவ்வியள் - பருவம் நிறைந்த அழகமைந்தவளாயும் ஆகி, பொங்கு ஒளி விசும்பினில் பொலிய - தனது ஓங்கிய ஒளி ஆகாயத்தில் பரவி விளங்க, தோன்றினுள் - அங்குக் காணப்பட்டாள்.

திங்களிற் சிறந்து - சந்திரனைப் போலச் சிறந்து என ஒப்புப் பொருளிலும் கொள்ளலாம். செவ்வி - பருவ நிறைவின் அழகு, (பிங்). 'அங்கையினுய மந்திரம் - பூர்வத்தில் தனக்குக் கைவல்யமாயிருக்கிற மந்திரம்' என்பது பழையவுரை. கைவல்யம் - ஸித்தி அல்லது அனுகூலம். வான்மீகத்தில், சூர்ப்பணகை இராமபிரானிடம் வந்தபோது அவள் இயற்கை உருவமே வருணிக்கப்பட்டுள்ளது; ஆனுல் இராமபிரான் அவளை நோக்கி, 'இவ்வளவு மனோகரமான உருவத்தையுடைய நீ எனக்கு அரக்கியாகத் தோற்றவில்லை

என்று கூறியதாக அந்நூலே பின்னர்க் கூறுமாதலால், அவள் உருமாறிவந்தது அந்நூலுக்கும் உடன்பாடென்பதாகும். அத்யாத்ம ராமாயணம் அவள் அழகிய வடிவம் தரித்து வந்தனள் என்று விளக்கிக் கூறும்.

பி-ம். 1. மனத்திற் பாவித்தே. 2. அங்கவட் காய மந்திரத்தை.
3. செறிந்தொளி ரமுதச் செவ்வியாற்; சிறந்தொளிர் முகத்துச் செவ்விவன்.
4. விசும்பினைப் பொலியத். (30)

வேறு

250. பஞ்சியொளி விஞ்சுகுளிர் பல்லவ மனுங்கச்
செஞ்செவிய கஞ்சநிகர் சீறடி பெயர்ப்பாள்
அஞ்சொலிள மஞ்ஞையென வன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்.

ஒளி விஞ்சு - ஒளி மிக்கு விளங்கும், பஞ்சி - செம்பஞ்சும், குளிர் பல்லவம் - குளிர்ச்சியைத் தரும் இளம் தளிர்களும், அனுங்க - வருந்த, செஞ் செவிய - செந்நிறமான அழகினைக் கொண்ட, கஞ்சம் நிகர் - தாமரை மலர் போன்ற, சீறடி - தன் சிறிய அடிகளை, பெயர்ப்பாள் - எடுத்து வைத்து நடப்பவளாகி, அம் சொல் இள மஞ்ஞை என - அழகிய சொற்களைப் பேசும் இள மயில் போலவும், அன்னம் என - அன்னப் பேடை போலவும், மின்னும் வஞ்சியென - மின்னல் போல் ஒளி வீசும் கொடி போலவும், நஞ்சம் என - விஷம் போலவும், வஞ்ச மகள் - வஞ்சனையுடைய அச்சூர்ப்பணகையான அரக்கி, வந்தாள் - அங்கு இராமபிரான் முன்னே வந்தாள்.

அனுங்க : அனுங்கியவை பஞ்சி, பல்லவம் என்பன. இவை ஒளி, நிறம், மென்மை, குளிர்ச்சி முதலிய குணமேம்பாடுகளுடையன ; அவை அவளடிகளுக்கு ஒப்பாகாமல் அனுங்கின. அனுங்குதல் - வருந்துதல் ; வாடுதல் : (பிங்). செவிய : செவ்விய என்பதன் இடைக்குறை. சீறடி : சிறுமை + அடி. அடி பெயர்த்தல் - அடியெடுத்து நடத்தல். மஞ்ஞை - சாயலுக்கும், அன்னம் - நடைக்கும், வஞ்சி - மெலிந்து துவளும் உருவுக்கும், நஞ்சம் - கொடுமைக்கும், உவமைகள் ஆயின. மஞ்ஞையை மகளிர் நடைக்கு உவமை கூறலும் உண்டு. 'மயில் கண்டன்ன மடநடை மஞ்ஞை' திருமுருகு. 205, 310. நஞ்சை உவமித்தது, அஃது உண்ணும்போது இனிதாய் இருந்து, பின் கொல்லும் கொடுமையை யுடைமையால் ; 'சிங்கி குளிர்ந்துங்

கொலும்' (நீதிநெறி : 59); என்றமை நோக்குக; வஞ்சமகள்; ஒப்பு : தக்க. 556. பல உவமைகளைத் தொடர்ச்சியாய்க் கொண்டமையால் இது, மாலையுவமையணி ஆகும். ஓர் அழகிய மகளின் நடையை வர்ணிக்கும்போது இவ்விதச் சந்த இன்பந் தழைந்த கவிகளில் ஆசிரியர் அமைப்பது, பால. கோலங்காண் படலத்திலும் காண்க. இச் செய்யுள் மெல்லின ஓசை மிகுந்து வந்த வண்ணப்பா ஆகும்.

பி - ம். 1. பஞ்சியொளிர்; பஞ்சிஞெளி; மிஞ்சுகுளிர்; பல்லவமனுக்கும்.
2. சிறடிய ளாகி; சேவடி பெயர்ப்பாள். (31)

251. பொன்னொழுகு பூவினொடு பூவிலுறை பூவை
பின்னெழில்கொள் வாளிணை பிறழ்ந்தொளிர் முகத்தாள்
கன்னியெழில் கொண்டது கலைத்தட மணித்தேர்
மின்னிழிவ தன்மையது விண்ணிழிவ தென்ன,

பொன் ஒழுகு - பொன்னிறமாய் விளங்குகின்ற, பூவின் ஒடு - பொலிவோடு, பூவில் உறை பூவை - செந்தாமரைப் பூவில் வாழும் திருமகள், பின் எழில் கொள் - தனக்குப் பின்னிட்டுப் போகும்படியான அழகைக் கொண்டு, வாள் இணை - இரண்டு வாள்கள்போன்ற கண்கள், பிறழ்ந்து ஒளிர் - நிலைமாறிச் சலித்து விளங்கப் பெற்ற, முகத்தாள் - முகத்தையுடைய அந்தச் சூர்ப்பணகை, கன்னி எழில் கொண்டது - ஒரு புதிய அழகைக் கொண்டதான, கலை தட மணி தேர் - சித்திரச் சிலைகளால் அலங்கரிக்கப்பட்ட பெரிய அழகான தேர், மின் இழிவ தன்மையது - மின்னல் கீழிறங்கும் இயல்பையுடையதாய், விண் இழிவது என்ன - வானிலிருந்து கீழே இறங்கி வருகிறது என்று சொல்லும்படி,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய்த் தொடர்ந்து, வந்தாள் என வினை முடிவு கொள்ளும். கன்னியெழில் கொண்டதான கலைத் தட மணித்தேரினையுடைய மின் என விண் இழிந்தது எனக்கொள்க. மின் - ஒளியும் ஆம். சூடா). கன்னி - இளமை, புதுமை; முகத்தாள், கன்னியெழில் கொண்டு எனக் கூட்டிப் பொருள் கொள்ளலுமாம்; கன்னி - மணமாகாத இளம்பெண்.

பி - ம். 1. பொன்னொழுகு பூவினுறை; பூவொடொளிர்; பூவொடலர்; பூவினது; பூவினப்; பொன்னொழுது பூவினது; பூவொழிவில்.
2. பின்னிழல்கொள்; பின்னுருவ; முகத்தோர்; முகத்தோள்.
3. கொண்டதோர் கலைத்தட.
4. தன்மையிது; தன்மைய தொத்துயரும் விண்ணின் வழி வந்தாள்; விண்ணின்மிசை நின்றும். (32)

252. கானிலுயர் கற்பக முயிர்த்த கதிர்வல்லி
மேனிநனி பெற்றுவிளை காமநெறி வாசத்
தேனின்மொழி யுற்றினிய செவ்விநனி கொண்டோர்
மானின்விழி பெற்றுமயில் வந்ததென வந்தாள்.

ஓர் மயில் - ஒரு மயிலானது, கானில் உயர் - நறுமணத்தாற் சிறந்த, கற்பகம் உயிர்த்த - கற்பகத் தரு பெற்ற, கதிர் வல்லி - ஒளிவீசும் காமவல்லி என்னும் கொடியின், மேனி நனி பெற்று - வடிவத்தைத் தான் நன்கு அமையப் பெற்று, காமநெறி - காம மார்க்கத்தில் இழுக்கும், வாச தேனின் மொழி உற்று - நன் மணங் கொண்ட தேன் போன்ற இனிய மொழிகளையும் அடைந்து, இனிய செவ்வி நனி கொண்டு - காண்பதற்கினிய அழகின் மிகுதியையும் தன்னிடம் கொண்டு, மான் விழி பெற்று - மானின் விழிகளையும் அடைந்து, வந்தது என - நடந்து வந்தது என்று சொல்லும்படி, வந்தாள் - (சூர்ப்பணகை அங்கு) வந்தாள்.

ஒரு மயில் காமவல்லியின் வடிவங்கொண்டு, தேனின் மொழியும், உடலழகும், மானின் விழியும் பெற்று நடந்து வந்தது போல வந்தாள் என்க. மகளிர் வடிவுக்கு வல்லியும், மொழிக்குத் தேனும், விழிக்கு மானும், நடைக்கு மயிலும் உவமைகள். மயில் நடை, முருகு : 205. முன் செய்யுளில் உள்ள முகத்தாள், மயில்போல வந்தாள் என வினை முடிவு செய்க. இனி, காமவல்லியை எழுவாயாகக் கொண்டும் பொருள் கூறலாம். இவள் தன் பெயர் காமவல்லி என்று பின் (258) இராமபிரானிடம் கூறிக்கொள்வதற்கு இயைபும் இங்கு நோக்கத்தக்கது. கற்பகத்தின் மேற்படரும் கொடிக்குக் காமவல்லி என்று பெயர். அது பொன் வடிவமானது; சீவக. 2855. செவ்வி : பருவ நலனுமாம்; 249, 251, 252 செய்யுள்கள் ஒவ்வொன்றிலும், ஆசிரியர் ஒன்றுக்குமேற்பட்ட உவமைகளை ஒன்ருகப் பின்னி அமைத்தது, அவர் அரக்கி இழைத்த மாயத்தின் வலிமையை நன்கு காட்டவே, என்னலாம்.

பி - ம். 1. கானினுயர்.
2. மேனிதனி; காம நிறைவாச; காம நறைவாசம்.
3. மொழியொத்தினிய; மொழி பெற்றினிய; செவ்வியது கொண்டே.
4. பெற்றரிதில் வந்ததென. (33)

இதன்பின், ஒரு சுவடியில் அடியிற்காணும் ஒரு செய்யுள் அதிகமாக உள்ளது.

பொன்னொடு மணிக்கலை சிலம்பொடு புலம்ப
மின்னொடு மணிக்கலைகள் மின்னிடை நோவத்
துன்னுகுழல் வண்கவரி தோகைபணிமாற
அன்னமென வல்லவென வாமென நடந்தாள்.

குறிப்பு :— இவ்வதிகப் பாடல் ஒரு பிரதியில் 3-ம் அடியிற் சிறிது வேறுபட்டுப் பாலகாண்டம், கோலங்காண் படலத்தில், 'வல்லியை யுயிர்த்த' (24) என்னும் பாடலுக்குப்பின் காணப்படுகின்றது. ஆதலின், இஃது இங்கு இடைச்செருகல் என்பது விளங்கும். மேலும் இச்செய்யுள் சூளாமணி, தூதுவிடு சருக்கம், 19-வது செய்யுளை ஒத்து இயங்குவதும் நோக்கத் தக்கது.

இராமபிரான் அவளைக் கண்டு வியத்தல் 253—55.

253. நூபுரமு மேகலையு நூலுமற லோதிப்
பூமுரலும் வண்டுமிவை பூசலிடு மோதை
தாமுரைசெய் கின்றதொரு தையல்வரு மென்னக்
கோமகனு மத்திசை குறித்தனன் விழித்தான்.

நூபுரமும் - (அவளுடைய) காற்சிலம்பும் (அல்லது பாதச் சதங்கையும்), மேகலையும் - மேகலாபரணமும், நூலும் - அரை நூன் மாலை என்னும் அணியும், அறல் ஓதி பூ முரலும் வண்டும் - கரு மணல் படிந்தது போன்று விளங்கும் கூந்தலில் அணிந்த மலர்களில் (ரீங்கார) ஒலி செய்யும் வண்டுகளும், இவை - ஆகிய இவை, பூசல் இடும் ஓதை - ஆரவாரஞ் செய்யும் ஓசைகள், ஒரு தையல் வரும் என்னு - ஒரு பெண் இங்கே வருகிருள் என்று தெரிவிக்கின்றது என்று நினைத்து, கோமகனும் - சக்கரவர்த்தி குமாரனை இராமபிரானும், அ திசை - அந்த ஒலிவரும் திசையை, குறித்தனன் விழித்தான் - குறித்து நோக்கினன்.

மேகலை, இடையில் அணியும் மணிகள் கோத்த வடங்களை யுடைய ஓர் ஆபரணம். நூல் - பூணூல் போன்று அணியும் பொன் மாலையும் ஆம். பூசல் - பேரொலி. பூசலிடு மோதை; 'பூசல் வண்டரற்றும் கூந்தற்பொய் மகள்' என்று இவளைப் பின்னும் (266) குறிப்பிடுவது காண்க. ஆபரணங்களின் ஒலிகளும் வண்டுகள் செய்த ஒலியும் ஒரு தையல் வருகிருள் என்பதை அறிவித்தது என்க. குறித்தனன் : முற்றெச்சம்.

பி - ம். 1. நண்ணிய மெல்லோதிப். 2. விடுமோசை.
3. தாமரையில் வாழுமொரு தையல் வரவென்னக்; வென்னக்.
4. குறித்தெதிர் விழித்தான்; குறிக்கொள விழித்தான்.

254. விண்ணருள வந்ததொரு மெல்லமுத மென்ன
வண்ணமுலை கொண்டிடை வணங்கவரு போழ்தத்
தெண்ணருளி யேழைமை துடைத்தெழுமெய்ஞ் ஞானக்
கண்ணருள்செய் கண்ணனிரு கண்ணினெதிர் கண்டான்.

விண் - சுவர்க்கம், ஒரு மெல் அமுதம் அருள வந்தது என - ஒப்பற்ற மென்மையான அமுதத்தை அருள அவ்வமுதம் புவிக்கு வந்ததே போல, வண்ண முலை கொண்டு - அழகிய தனங்களைத் தன்னிடங் கொண்டு, இடை வணங்க - அவற்றைத் தாங்கமாட்டாமல் தன் இடை துவண்டு வணங்குவது போல வளைய, வரு போழ்தத்து - அவள் வருகின்ற போது, எண் அருளி - (சீவன்களுக்கு) அறிவை அளித்து, ஏழைமை துடைத்து - அறியாமையை ஒழித்து, எழும் - மேல் உதயமாகும், மெய்ஞ்ஞான கண் அருளும் - (பின்) தத்துவ ஞானமாகிய உண்மைக் கண் பார்வை அளித்தருள் செய்யும், கண்ணன் - இராமபிரான், இரு கண்ணின் எதிர் கண்டான் - தன் இரு கண்களுக்கு எதிரே (அவள் வருவதைக்) கண்டான்.

விண்ணருள வந்த மெல்லமுதம் : அமுதம் விண்ணவரிடத்தே உள்ளமையால் அவர் கொடுக்க வந்தது என்க ; விண்ணருள வந்த மெல்லமுதம், என்பதை வண்ண முலைக்கு அடையாகக் கொள்வதன்றி, அவளுக்கே உவமையாகவும் கொள்ளலாம். ஏழைமை - அறியாமை : 271 ; அயோத்யா. குகப் : 15. கண்ணன் : கண்டோர் கண்களைவிட்டகலாதவன் ; எல்லார் கண்களையும் கவரும் வனப்புடையவன் ; யாவர்க்கும் அறிவுக்கண்ணை அளிப்பவன் ; என்றும் பலவிதமாகப் பொருள்கொள்வர். இது, 'யாதினு முயர்ந்தோர் தன்னை யாவர்க்குங் கண்ணனென்றே ஓதிய பெயர்க்குத் தானேயுறு பொருளுணர்த்திவிட்டான்' (பால. உலாவியற் : 6) என்றமையால் அறியக் கிடக்கும். இனி, கண்ணருள் செய்' என்ற அடைமொழிகளால், யாவர்மாட்டுங் கருணை பொழியும் கண்களையுடையவன் என்பதும் பெறப்பெற்றது; (கண் - கண்ணோட்டம்). மேலும், இராமபிரானுக்குக் கருணாகரன் என்ற பெயருண்மையும், இந்நூலில், அவன் கருணைக்கடல், கருணையார்கலி, கருணையின் நிலயம் எனவும் பிறவாறும் ஆங்காங்குப் பாராட்டப் பெறுவதும் இங்கு நோக்கப்பாலதாம். இச் செய்யுளின் பின் இரண்டடிகளும் பரம் பொருளாய் நின்று உலகத்திற்கு மெய்ஞ்ஞானக் கண் அருள் பவன் தான் மேற்கொண்ட மானிடநிலைக்கேற்பச் செய்த திரு

விளையாடல்களைக் குறிப்பன என்க. சூர்ப்பணகை மாறுவேடம் கொண்டு இராமபிரானை மயக்கவந்து தோல்வியுற்றதும், மாரீசன் மாறுவேடங்கொண்டு பிராட்டியை மயக்கியதால் உயிரிழந்ததும் ஆன இரு செயல்கள் அமைந்த நயம் நோக்கத்தக்கது. இவ்வாறு சூர்ப்பணகை, மாரீசன் என்ற இரு அரக்கர்களும் தங்கள் தீ முயற்சிகளால் தாங்கள் இழவையே பெற்றும், இராமாயண வரலாற்றின் போக்குக்கு அவர்கள் காரணமாயிருந்தமையும் நோக்கற்பாலது.

பி - ம். 1. விண்ணவ ரருந்தவரும்.

2. வருந்தவரு போதத்; வருந்த வருமானே.

3. யேழமை துடைத்து; துடைத்தெழுவு ஞானக்; துடைத்த பெருஞானக்; துடைத் தெழுவிஞ்ஞானக்.

4. கண்ணரெதிர் கண்ண.

(35)

255. பேருழைய நாகருல கிற்பிறிது வானில்
பாருழையி னில்லதொரு மெல்லுருவு பாரா
ஆருழைய டங்குமழ கிற்கவதி யுண்டோ
நேரிழையர் யாவரிவ ணேரென நினைந்தான்.

பேர் உழைய - பெரிய இடத்தையுடைய, நாகர் உலகில் - நாகங்கள் வாழும் பாதலத்திலும், பிறிது வானில் - அதனிலும் வேறான சுவர்க்க லோகத்திலும், பார் உழையில் - பூமியினிடத்தும், இல்லது - இல்லாததான, ஒரு - ஒப்பற்ற, மெல் உருவு பாரா - மென்மை பொருந்திய அபபெண் வடிவத்தை இராமபிரான் பார்த்து, 'ஆர் - இவள் யார்? உழை அடங்கும் அழகிற்கு அவதி உண்டோ - இவளிடத்தில் அடங்கியுள்ள அழ்குக்கு எல்லை உண்டோ? (இல்லை என்பதாம்); நேரிழையர் யாவர் இவள் நேர் - மகளிர் இவளுக்கு ஒப்பானவர் யாவரே உள்ளார்?' என நினைந்தான் - என்று எண்ணினான்.

பேர் - பெருமை என்ற பண்பின் விகாரம். உழை - இடம் (பிங்). மெல்லுருவு : மெல், மெல்லியல் என்பதின் கடைக்குறையாகக் கொண்டு பெண் உரு என்றே பொருள் கொள்ளலாம், அவதி - எல்லை; பால. திருவவதாரப் : 28; சுந்தர. 521. அழகிற்

கவதியுண்டோ - ஒப்பு ; 'அழகிற் கெல்லை யில்லையாம் என்ன நின்றாள்'; (278).

பி - ம். 1. பேருடைய நாகருல ; பிறிதின்வானில் ; பிறிது வானில்.

2. பாரிடையி லில்லதொரு ; பாருழையி லாததொரு ; மெல் லமுது பாரா.

3. யாரிடையடங்கும் ; யாருழையடங்கும் ; மழகிற் கமைதி யுண்டோ ; மகிழ்விற்கவதி.

3. யாவரிவர் நேரென. (36)

சூர்ப்பணகை, தன்னை மணந்துகொள்ளுமாறு இராமபிரானை வேண்டியதும் இராமபிரான் மறுத்தலும் 256—75.

256. அவ்வயினவ் வாசைதன கத்துடைய வன்னாள்
செவ்விமுக முன்னியடி செங்கையி னிறைஞ்சா
வெவ்விய நெடுங்கணயில் வீசியயல் பாரா
நவ்வியி னொதுங்கியிறை நாணியய னின்றாள்.

அ் வயின் - அப்போது, அ ஆசை தனது அகத்து உடைய அன்னாள் - அந்த இராமபிரான் மீது கொண்ட ஆசையைத் தன் மனத்திற் கொண்ட அச்சூர்ப்பணகை, செவ்வி முகம் முன்னி - இராமபிரானுடைய அழகிய முகத்தை எதிர் நோக்கி, அடி செம் கையின் இறைஞ்சா - அவனது திருவடிகளைத் தன் சிவந்த கைக ளால் வணங்கும் குறிப்பில் கும்பிட்டு, வெவ்விய - கொடிய, நெடும் கண் அயில் வீசி - தன் நீண்ட கண்களாகிய வேல்களை இராம பிரான் மீது வீசி, அயல் பார்ரா - பின் அவனைப் பாராதது போல வேறு ஒன்றைப் பார்ப்பதுபோல் பார்த்து, நவ்வியின் ஒதுங்கி - (மருண்ட) மான்போல ஒருபுறம் விலகி, இறை நாணி - சிறிது நாணத்தையும் மேற்கொண்டு, அயல் நின்றாள் - அருகே நின்றாள்.

இச்செய்யுள் காம உணர்ச்சி மேற்கொண்ட ஒரு மடந்தையின் செயல்களையும் மெய்ப்பாடுகளையும் நன்கு விளக்கும் நிலையில் சித்திரிக்கப்பட்டுள்ளது. செவ்வி முக முன்னி : இந்தச் சூர்ப் பணகைக்கே ஏற்றி, அவள் தன் அழகிய முகத்தை இராமபிரான் காணுமாறு முன் நீட்டிக் காட்டி, என்னலும் ஒன்றும். வெவ்விய நெடுங்கண் அயில் வீசி : தம் காம உணர்ச்சியைத் தம் கண்களால் தெரிவித்துத் எதிர்ப்பட்ட ஆடவரை வாட்டுவது மகளிர் இயல்பு ஆதலின். கண்ணை வேலென்று கூறியது, அதன் கொடிய

செயல்பற்றி. நவ்வியின் ஒதுங்கி : மான் புதிதாக ஒன்றைக் கண்ட விடத்து அச்சங்கொண்டு ஒதுங்குவது போல இவள் பாசாங்கு செய்தாள் என்பதாம். இறை நாணி - சிறிது வெட்கங் கொண்டது போல நடித்தது, தன் காமக் குறிப்பை அறிவிக்க என்க. அயல் பார்த்தல் ; 'யானோக்குங் காலை நிலனோக்கும்' (குறள். 1094) என்றாற் போல. அயல் நின்றாள் : உண்மையில் அவள் அவ்விடம் விட்டுப் போக விரும்பாததை உணர்த்திற்று.

பி - ம். 1. அவ்வயினினுசை; அவ்விடையினுசைதனமனந்தொடரவன்னுள்.
2. முகனோக்கியடி ; இறைஞ்சி.
3. வெவ்வயி னெடுங்கண் வலைவீசி.
4. நிறைநாணி யயல்நின்றாள் ; அயர்நின்றாள். (37)

257. தீதில்வர வாகதிரு நின்வரவு சேயோய்
போதவுள தெம்முழையொர் புண்ணியம தன்றோ
ஏதுபதி யேதுபெயர் யாவருற வென்றான்
வேதமுதல் பேதையவ டன்னிலை விரிப்பாள்.

'சேயோய் - அழகியனே ! நின் திரு வரவு - உன்னுடைய சிறந்த இந்த வருகை, தீது இல் வரவு ஆக - தீங்கில்லாத நல்வரவு ஆகுக ; போத - (இங்கு நீ) வர, எம் உழை ஓர் புண்ணியம் அது அன்றோ - எம்மிடத்து (முன் செய்த) ஒரு புண்ணியம் இருக்கின்றது அல்லவா? ஏது பதி - எது உனது இருப்பிடம்? ஏது பெயர் - எது உன் பெயர் ஆகும்? யாவர் உறவு - உனக்கு உறவினர் யாவர்?'' என்று வேத முதல் வேதத்துக்கு மூலமான இராமபிரான், என்றான் - அவளை வினவினான் ; பேதை அவள் - (சூர்ப்பணகையாகிய) அப் பெண்ணும், தன் நிலை விரிப்பாள் - தன் குலம் முதலிய விருத்தாந்தங்களை விளக்கிச் சொல்பவளானாள். (அவ் விருத்தாந்தம் அடுத்து வரும் செய்யுளில், பூவிலோன் புதல்வன் என்றதிலிருந்து விளங்குவதாகும்).

சேயோய் - தூரியாய் ; ஒப்பு. 'சேயோயென்பது தூரியாவென்றவாறு' (தக்க. 194 ; உரை). புறத்தார்க்குச் சேயோன் (திருவாச. சிவபு.). 'நின் வரவு தீதில் வரவாக ; போத எம் முழையொரு புண்ணியமதன்றோ ?.' இவை தம்முழை வந்தோர்க்கு இன்மொழி கூறி அழைக்கும் முறையாகும்.' இது நல்வரவு கூறுதல் எனப்படும். இதனைச் சுவாகதம் என்பர் வடமொழியில். வந்தோர்க்கு நல்வரவு

கூறல்; பால. திருவவதார : 61; கையடைப் : 6. வேத முதல் - இராமன்; அன்னமாய் வேதம் அறைந்தவன் ஆதலின்; (60). வேதன் முதல் எனப் பாடங்கொண்டு, பிரமன் முதலாக உள்ள தன் குல வரலாற்றைச் சூர்பபணகை கூறினாள் என்பாரும் உளர்.

பி - ம். 1. தீதிலது வாகதிரு; வரவாகு மயில்; வரவு செய்யோய்.
2. புண்ணியம தண்டோ. 4. வேதன்முதல். (38)

வேறு

258. பூவிலோன் புதல்வன் மைந்தன்
புதல்விமுப் புரங்கள் செற்ற
சேவலோன் துணைவ னான
செங்கையோன் றங்கை திக்கின்
மாவெலாந் தொலைத்து வெள்ளி
மலையெடுத் துலக மூன்றும்
காவலோன் பின்னை காம
வல்லியாங் கன்னி யென்றாள்.

'பூவிலோன் - (நான்), தாமரைப் பூவைத் தன் இருப்பிடமாக வுடைய பிரமதேவனின், புதல்வன் மைந்தன் புதல்வி - புத்திரரான புலஸ்தியர் குமாரர் விச்ரவஸ் என்னும் முனிவரின் பெண் ஆவேன்; மு புரங்கள் செற்ற - திரிபுரங்களை (எரித்து) அழித்த, சே வலோன்- இடபத்தை ஏறிச் செலுத்திச் செல்ல வல்ல சிவபெருமானுடைய, துணைவன் ஆன - நண்பன் ஆன, செம் கையோன் - சிவந்த கரங் களையுடைய குபேரனின், தங்கை - தங்கை ஆவேன்; திக்கின் மா எலாம் தொலைத்து - எட்டுத் திசை யானைகள் அனைத்தையும் போரில் வலியிழந்து ஓடச் செய்து, வெள்ளி மலை எடுத்து - வெள்ளி மயமான கயிலாயமலையைத் தன் கைகளால் பெயர்த்து எடுத்து, உலகம் மூன்றும் காவலோன் - சுவர்க்கம், பூமி, பாதலம் ஆகிய மூவுலகங்களையும் காத்து ஆளும் திறமையுடைய இராவண னுடைய, பின்னை - பின் பிறந்த தங்கை; காம வல்லி ஆம் கன்னி என்றாள் - காமவல்லி என்ற பெயருடைய கன்னி' என்று தன்னை உணர்த்தினாள்.

பிரமதேவருடைய புதல்வர், புலஸ்தியர்; புலஸ்தியர் மைந்தர், விச்ரவசு; விச்ரவசுவின் புதல்வி சூர்ப்பணகை எனத் தன்னை அறி வித்தாள். இது, மணம் செய்துகொள்ள விருக்கும் வதுவின்

மூன்று தலைமுறை கூறுவது போன்று, தன்னைத் தானே தெரிவித்துக் கொண்டமையால் அவளது மணக்குறிப்பு தொனிக்க நிற்பதாம். இராவணனால் இலங்கையிலிருந்து துரத்தப்பட்ட குபேரன் சிவபெருமானை நாடித் தவம் புரிந்து அவர் அருள்பெற்று வடதிசைக் காவலனானதோடு அச்சிவபெருமானுக்கு உற்ற நண்பனும் ஆயினன் ; ஆதலின், சேவலோன் துணைவன் என்னப்பட்டான்; உத்தர. வரையெடுத்த : 10. செல்வத்திற்கு இறைவனான குபேரன் தன்னை யடைந்தோர்க்கு இரு நிதியம் நாளும் அளிப்பதால் சிவந்த கையனானான் ; ஆதலின், செங்கையோன் எனச் சிறப்பிக்கப் பெற்றானென்க. இராவணன் திக்கஜங்களை வென்றது, வெள்ளி மலையெடுத்தது, ஆகிய அவன் வீரச் செயல்கள், உத்தரகாண்டம், வரையெடுத்த, திக்குவிசயப் படலங்களால் அறியலாம். காமவல்லியாங் கன்னி : தான் கன்னி என்று பொய் கூறியது, இராமபிரானை மணந்து வாழ விரும்பிய குறிப்பை வெளியிட்டது என்க. காமவல்லி என்று சூர்ப்பணகை தன் பெயரைக் கூறியதோடு, தன் காமக் குறிப்பையும் தெரிவித்தது ஆகும்.

இச்செய்யுளில் இராவணனைப் பின் கூறியது, அவன் பிராயத்திலே குபேரனின் இளையோன் ஆனதாலும், கொடிய அவன் பெயரை முன் கூறாமல் மறைக்கக் கருதினமையாலும் என்க. சூர்ப்பணகையின் பிறப்பைப் பற்றி நூல்கள் பலவாருகக் கூறுகின்றன. அவற்றுட் சில பின்வருமாறு :—

1. வடமொழி அத்யாத்ம ராமாயணமும், தமிழ் உத்தர காண்டமும் ; புலஸ்தியனின் மகனான விச்ரவஸ், சுமாலியின் மகள் கைகசியை மணந்து, இராவணன், கும்பகருணன், சூர்ப்பணகை, வீடணன் என்ற நால்வரையும் முறையே பெற்றனள் எனக்கூறும். இக் கைகசி சாலகடங்கட மரபினள் என்பது பின் செய்யுளால் (259) விளங்கும்.

2. வியாஸ பாரதமும், பெருந்தேவனார் பாரதமும் ; விச்ரவஸ் மூன்று மனைவியரை மணந்தனன் ; அவர்களுள் புஷ்போத்கடை என்பாள் இராவணனையும் கும்பகருணனையும், மாலினி என்பாள் வீடணனையும், இராகை என்பாள் கரன், சூர்ப்பணகை என்பவர்களையும் முறையே பெற்றனர் எனக் கூறும்.

பி - ம். 2. செங்கையோன் பின்னை.

3. வெள்ளிவரை யெடுத்த.

259. அவ்வுரை கேட்ட வீர
னையுறு மனத்தான் செய்கை
செவ்விதன் றறியலாகுஞ் சிறிதி
னென்று ணராச் செங்கண்
வெவ்வுரு வமைந்தோன் றங்கை
யென்றது மெய்ம்மை யாகில்
இவ்வுரு வமைந்த தன்மை
யியம்புதி விரைவி னென்றான்.

அ உரை கேட்ட - அச் சொற்களைக் கேட்ட வீரனான இராம பிரான், ஐ உறு மனத்தான் - (அவள்பால்) சந்தேகங் கொண்ட மனமுடையவனாய், 'செய்கை செவ்விது அன்று - இவள் செயல் நேரானது அன்று; சிறிதின் அறிதல் ஆகும் - இது இனிச் சற்று விசாரித்தலால் அறிந்து கொள்ளக்கூடியது ஆகும்;' என்று உணரா - என்று உணர்ந்து, (அவளை நோக்கி), 'செம் கண் வெம் உரு அமைந்தோன் - எப்பொழுதும் சிவந்த கண்களையும் பயங்கர மான உருவத்தையும் உடைய இராவணனின், தங்கை என்றது மெய்மை ஆகில் - தங்கை நீ என்பது உண்மையாகுமேல், இ உரு அமைந்த தன்மை - நீ இந்த அழகிய உருவம் அடைந்த விதத்தை, விரைவின் இயம்புதி என்றான் - எனக்கு விரைவில் சொல்லுவா யாக' என்று வினவினான்.

அவள்பால் ஐயுறு மனத்தன் ஆனதாலும், அவள் செய்கை செவ்விது அன்று என உணர்ந்ததாலும், 'விரைவின் இயம்புதி' என்று அவள் உண்மையை அறிந்து கொள்ள விரும்பினான் என்க. குபேரனை விட்டு, இராவணனை அவன் குறித்ததால், அவள் இயல்பை அவன் ஒருவாறு ஊகித்தான் என்னலாம். செங்கண் - எப்பொழுதும் கோபத்தால் சிவந்திருக்கும் கண்; செந்நிறம் வெகுளியைக் காட்டும் நிறம். வெவ்வுரு என்றதில் உள்ள வெம் மையைச் செங்கண் என்பதற்கும் கூட்டலாம். இராவணன் இருபது செங்கண்களும், பத்துத் தலைகளும், இருபது கைகளும் பெற்றுப் பார்க்கப் பயங்கரமான தோற்றத்தவன் ஆதலின், செங்கண் வெவ்வுரு அமைந்தோன் என்னப்பட்டான். இராமபிரான் வினாக் களும், அவற்றிற்கு அரக்கி கூறும் விடைகளும், பிற நிகழ்ச்சிகளும்

கம்பர் இக்காவியத்தை ஓர் அரிய நாடகமாகப் படைத்த அருமை அறிந்து போற்ற உதவுவனவாம்.

பி-ம். 1. அயிர்த்தன னவன்தன் செய்கை ; மனத்தன் ; செல்கை.
2. செய்விதின் றறிதற்கேற்ற சிரிதென்றுணர்ந்து செம்மல் ; செவ்விதென் றறிதலாகும் ; செறிதினென் றுணரச் ; உணர்ந்து.
3. வெவ்வுரு பயந்தோன் ; யென்பது மெய்ம்மை ;
4. வியந்ததன்மை ; யியல்பினென்றான். (40)

260 தூயவன் பணியா முன்னஞ்
சொல்லுவாள் சோர்வி லாளம்
மாயவல் லரக்க ரோடும்
வாழ்வினை மதிக்கி லாதே
ஆய்வுறு மனத்தே னாகி
யறந்தலை நிற்ப தானேன்
தீவினை தீய நோற்றுத்
தேவரிற் பெற்ற தென்றாள்.

தூயவன் பணியா முன்னம் - பரிசுத்தனான இராமபிரான் அவ்வாறு சொன்ன உடனே, சோர்வு இலாள் - சிறிதும் மனத்தளர்ச்சியில்லாத அவள், 'அ மாய வல் அரக்கரோடும்-அந்த மாயை மிக்க இராக்கதர்களோடும், வாழ்வினை - சேர்ந்து வாழும் வாழ்க்கையை, மதிக்கிலாதே - தகுதி என்று கருதாதே, ஆய்வு உறு மனத்தேன் ஆகி - ஆராய்ந்து நோக்கும் மனமுடையவளாகி, அறம் தலை நிற்பது ஆனேன் - அறத்தைக் கடைப்பிடித்து நடப்பதாக ஆனேன் ; ஆதலின், தீவினை தீய நோற்று - என் பாவங்கள் அழியும்படி தவஞ் செய்து, தேவரில் - தேவர்களிடத்திலிருந்து, பெற்றது - இந்நல் லுருப் பெற்றதாகும்' என்றாள் - என்று மறுமொழி கூறினாள்.

பணித்தல் - கட்டளையிடுதலும் ஆம். தேவரில் பெற்றது - தேவர்களைப் போல இந்தத் திவ்ய சரீரத்தைப் பெற்றது என்னலும் அமையும். 'இவ்வுரு அமைந்த தன்மையியம்புதி' (259) என்று இராமபிரான் வினவ, அதற்குச் சிறிதும் தயக்கம் இன்றி உடனே தான் தேவரில் (இவ்வுரு) பெற்றது என்று விடை பகர்ந்தாள்.

பி-ம். 1. சோர்விலாள் சொல்லுவாளம் ; சோர்வினோடும் ; சோர்விலாத.
2. மாயைவல் லரக்கரோடு; வாழ்வுற; மதிக்கலாதேன் ; லரக்க ரோடே ; வாழ்வினை மதித்திராதே ; வாழ்வுற மதிக்கலாதேன்.
3. மனத்தளாகி; மனத்தாகி. (41)

261. இமையவர் தலைவ னேயு
மெளிமையி னேவல் செய்யும்
அமைதியி னுலக மூன்று
மாள்பவன் றங்கை யாகில்
சுமையுறு செல்வத் தோடுந்
தோன்றலை துணையு மின்றித்
தமியணீ வருதற் கொத்த
தன்மையென் றைய லென்றான்.

'தையல் - பெண்ணே! இமையவர் தலைவன் ஏ உம் - தேவர்க் கரசனான இந்திரனுங்கூட, எளிமையின் - இழிந்த நிலையில், ஏவல் செய்யும் - தான் ஏவிய சிறுதொழிலைச் செய்யும்படியான, அமைதியின் - தன்மையின், உலகம் மூன்றும் ஆள்பவன் - மூவுலகங்களையும் தன் ஆட்சியில் அடக்கி ஆண்டு வருபவனான இராவணனுடைய, தங்கை ஆகில் - தங்கைநீஆவாய் ஆனால், சுமை உறு செல்வத் தோடும் தோன்றலை - (உன் நிலைமைக்கேற்ற) மிகுதி பொருந்திய செல்வச் சிறப்பின் ஆடம்பரத்தோடும் நீ காணப்படவில்லை; துணை யும் இன்றி - (மேலும்) துணைவரும் இல்லாமல், தமியள் - தனியளாக, வருதற்கு - நீ இப்படி வருவதற்கு, ஒத்த தன்மை - பொருந்திய காரணம், என் என்றான் - யாது' என்று இராமபிரான் அச்சூர்ப்ப ணகையை வினவினான்.

தையல்: தை - அலங்கரித்தல்; அழகு. கலி. 27 : 19. எளிமை யின் ஏவல் செய்தல் - சிறிதும் தடையின்றி ஏவிய பணிகளை அச்சத் துடன் அடங்கிச் செய்தல்.

பி - ம். 1. வானோ ரெளிமையின்; எழுமையின்னேவல்; எண்மையினேவல்; மெலிமையினேவல்; எளிதின் வந்தேவல்; எளிமையுமேவல்.
2. னுலகமெல்லாம். 3. தோன்றிலை.
4. தமியைநீ; தமியை நீர்; தன்மையென் னறைதி. (42)

262. வீரனஃ துரைத்த லோடு
மெய்யிலாள் விமல யானச்
சீரிய ரல்லார் மாட்டுச்
சேர்கிலென் றேவர் பாலும்
ஆரிய முனிவர் பாலு
மடைந்தனெ னிறைவ வீண்டோர்
காரிய முண்மை நின்னைக்
காணிய வந்தே னென்றாள்.

வீரன் அஃது உரைத்தலோடும் - வீரனான இராமபிரான் அவ் வார்த்தை சொன்னவுடன், மெய் இலாள் - உண்மை யற்றவளான அந்தச் சூர்ப்பணகை, (இராமபிரானை நோக்கி) 'விமல - குற்றமற்ற வனே! யான் - நான், அ சீரியர் அல்லார் மாட்டு - அந்த உயர் குண, ஒழுக்கம் இல்லாத அரக்கர்களிடத்து, சேர்கிலென் - சேர்வேனல்லேன்; தேவர் பாலும் - தேவர்களிடத்தும், ஆரிய முனிவர்பாலும் - சிறப் பிக்கத்தக்க முனிவர்களிடத்தும், அடைந்தனென் - அடைந்து நன் னெறியில் வாழ்பவளாவேன்; இறைவ - தலைவனே! ஈண்டு ஓர் காரியம் உண்மை - இங்கு ஒரு காரியம் எனக்கு ஆகவேண்டுவது உள்ளமையால், நின்னைக் காணிய வந்தேன் - அதன் பொருட்டு உன்னைக் காணவந்தேன்' என்றாள் - என்று சொன்னாள்.

ஈற்று அடியால் அவள் தான் தமியளாய் வந்ததற்குக் காரணம் கூறினாளென்க. இனி, சூர்ப்பணகை, தேவகாரியமாகவும், முனிவர் காரியமாகவும் இராவணன் முதலிய அரக்கர் வதமாகிய இரகசிய காரியத்திற்கு ஓர் உபாயங்கருதி, பிறர் அறியாமல் அதனை முடிக்க வந்தாள் என்ற ஓர் உட்கருத்துத் தோன்றக் கூறினாள் என்றுகொள்வாரும் உளர்; 'நீலமா மணி நிற நிருதர் வேந்தனை மூல நாசம் பெற முடிக்கும் முன்பினாள்' (227) என்று அச்சூர்ப்ப ணகையை இக்காப்பியத்தில், முதன் முதல் அறிவுறுத்தும் முகமாய் இக்கருத்தை முன் கூட்டி ஆசிரியர் புலப்படுத்தியுள்ளமை நோக் கத்தக்கதாம்.

பா - ம். 1. விமலமானச்; மெய்யிலாள் விளம்புவாளச்.

2. சீரற மல்லார் மாட்டுச்; சேரலென்.

3. மனுகுலதியான் மற்றீண்டோர்.

4. காரிய வுண்மை; காரிய முன்னைக் காண வந்தனென் றனியே யென்றாள்; நிமித்த முன்னைக் காணிய; நம்மைக் காணிய. (43)

263. அன்னவ ளுரைத்த லோடு
மையனு மறிதற் கொவ்வா
நன்னுதன் மகளிர் சிந்தை
நன்னெறிப் பால வல்ல
பின்னிது தெரியு மென்னாப்
பெய்வளைத் தோளி யென்பால்
என்னகா ரியத்தை சொல்லஃ
தியையுமே லிழைப்ப லென்றான்.

அன்னவள் உரைத்தலோடும் - அவள் அப்படிச் சொன்னதும், ஐயனும் - இராமபிரானும், நல் நுதல் மகளிர் சிந்தை - அழகிய நெற்றியையுடைய பெண்களது மனநோக்கங்கள், அறிதற்கு ஒவ்வா - ஆடவர்களால் அறிய முடியா; நல் நெறிப் பால அல்ல - இவள் சிந்தை, நல்வழியிற் செல்வது அன்று; இது - இவ்வாறு அறிவது, பின் தெரியும் - பிறகு தெரியலாகும்; என்னா - என்று எண்ணி, (சூர்ப்பணகையை நோக்கி), 'பெய்வளை தோளி - வளையல்கள் அணிந்த தோள்களையுடைய பெண்ணே! என் பால் என்ன காரியத்தை - நீ என்னிடம் என்ன காரியங் கருதி வந்துள்ளாய்? சொல் - அதனைச் சொல்வாயாக; அஃது இயையுமேல் - அது பொருத்தமாக இருக்குமானால், இழைப்பல் - செய்வேன்,' என்றான் - என்று கூறினான்.

'மகளிர் சிந்தையறிதற் கொவ்வா,' என்பது பொதுவான கொள்கை: இது, 'பெண்ணெனப் படுவ கேண்மோ, பீடில பிறப்பு நோக்கா, உண்ணிறை யுடைய வல்ல வோராயிர மனத்த வாகும்' (சீவக. 197) என்றதை அடியொற்றி வந்தது என்னலாம்.

இது பின் தெரியும்: இவளும் 'நன்னெறிப்பாலள் அல்லள்' என்பது பின் அறியலாம் என்று இராமபிரான் தீர்மானித்துக் கொண்டான்; 259 ஐயும் காண்க. வளைத்தோளி - தோள்வளை என்னும் அணிகலம் பூண்டவள் என்னும் குறிப்பில் வந்த அன்மொழித் தொகை; இங்கு அண்மைவிளியில் வந்துள்ளது. காரியத்தை - காரியத்தையுடையாய் என்னும் முன்னிலைப் பொருளில் ஐ விகுதி பெற்று வந்தது. 'அது செய்கிறேன்,' என்று உறுதி கூறாமல், 'இயையுமேல்' என்ற சொல்லால் முன்கூட்டித் தற்காத்துக் கொண்டு கூறிய திறம் நோக்கற்பாலது. இயையுமேல், என்னல் செய்யக்கூடுமானால், என்றும் பொருள் கூறலாம்; 'இயையுமே லிழைப்பல்' என்று கூறுவது உலக வழக்கமாகும்.

பி-ம். 1. மறிதற் கொல்லா.

2. பாலதென்னிற்; பாலதல்ல; பாலதென்பர்.

3. தெரியு மென்னே; பின்னதை யறிதுமென்னா; தெரியுமென்ன; பெய்வளைத் தோளிரென்பால்.

4. என்னகா ரியம்நீ சொல்; சொல்லெற் கியையுமேல்; சொல்ல லிசையுமே; விசைப்ப லென்றான்; விழைப்பெனென்றான்; விழைப்ப தென்றான். (44)

264. தாமுறு காமத் தன்மை
தாங்களே யுரைப்ப தென்ப
தாமென லாவ தன்று
லருங்குல மகளிர்க் கம்மா
ஏமுறு முயிர்க்கு நோவே
னென்செய்கேன் யாரு மில்லேன்
காமனென் றொருவன் செய்யும்
வன்மையைக் காத்தி யென்றாள்.

(அதற்குச் சூர்ப்பணகை), தாம் உறு காம தன்மை - தாம் கொண்ட காமவேட்கையின் தன்மையை, தாங்களே உரைப்பது என்பது - தாமே வெளிப்படையாய்ச் சொல்லிக் கொள்வது என்பது, அரும் குல மகளிர்க்கு - அரிய குலத்திற் பிறந்த பெண்களுக்கு, ஆம் எனல் - தகுதியுடைத்தாகும் என்று சொல்வது, ஆவது அன்று - நடக்கக் கூடியது அன்று ; (ஆனால்), ஏம் உறும் - மயக்கங்கொண்ட, உயிர்க்கு - என் உயிர் வாழ்வதற்கு, நோவேன் - வருந்துகிறவள் ஆவேன் ; என் செய்கேன் - என்ன செய்ய வல்லேன்? யாரும் இல்லேன் - எனக்கு உதவி செய்யக் கூடியவர் வேறு ஒருவரையும் இல்லாதவளானேன்; (ஆதலின்), காமன் என்று ஒருவன் - மன்மதன் என்று ஒருவன், செய்யும் - என்பாற் செய்கின்ற, வன்மையை - கொடுமையை, காத்தி - தடுத்து நீ காப்பாற்றுவாயாக' என்றாள் - என்று கூறினாள். ஆல்: அசை. அம்மா: இரக்கத்தை உணர்த்தும் இடைச்சொல்.

'உயர்குடியிற் பிறந்த மகளிர் தம் காம விழைவைத் தாமே சொல்லார்; எனக்கு வேறு ஒருவர் தூதாக வந்து துணை செய்வாரில்லை ; என்னுயிர் போகும் நிலையில் வருந்துகின்றதால் வேறு வழியின்றி யானே நேரில் என் நிலையை உன்பால் தெரிவிக்க வேண்டியதாயிற்று. ஆதலின், காமன் என்பவன் என்பாற் செய்யும் கொடுமையைத் தவிர்த்து நீ என்னை ஆண்டருள்வாயாக' என்று வேண்டினாள். கன்னியர் தம் காமவேட்கையைத் தாமே வெளியிடார்; 'கன்னியர் தம் வேட்கையே போலுங் கழிமழலை, தன்மணிவாயுள்ளே தடுமாற' (நள. 2 : 21). ஆமெனலாவதன்று - சம்பவிக்கக் கூடியதன்று; அதாவது நடவாதது என்பதாம்; சீவக, 1028 ; 1861 ; வி. பா. வேத்திர. 5 ; குறுந். 9, 10. ஏம் - மயக்கம் ; ஏக்கமும் ஆம். முருகு. 163 ; குறுந். 214 : 7. குறள். 873. 'காமனென்றொருவன்...... காத்தி! ஒப்பு: 'உருவிலா னொருவன் செய்யு முறுபகை காத்தல் வேண்டும்'. (நைடதம் நளன் றூது. 77.)

பி - ம். 1. தாமுறுங் காமத்.

2. யாமென லாவதின்றால்; லாமென லாவதின்றால்; தாமென லாவதென்றால் : அம்ம.

3. ஏமுற வுயிர்க்கு நோயென் னறைகேன்; நோயென் னறையேன்; நோகேன்.

4. வெம்மையைக் காத்தி; காத்தி ரென்றாள். (45)

265. சேணுற நீண்டு மீண்டு செவ்வரி சிதறி வெவ்வே
றேணுற மிளிர்ந்து நானா விதம்புரண் டிருண்ட வாட்கண்
பூணியல் கொங்கை யன்னா ளம்மொழி புகல லோடும்
நாணில ளைய ளொய்ய ணல்லளு மல்ல ளென்றான்.

சேண் உற நீண்டு - பார்வை நெடுந்தூரம் செல்லுமாறு நீண்டு, மீண்டு - அப்புறம் செல்ல இடமின்றித் திரும்பி, செம் அரி சிதறி - சிவந்த இரேகைகள் பரவி, வெவ்வேறு ஏண் உற - பலவகைச் சிறப்புக்கள் பொருந்த, மிளிர்ந்து - பிறழ்ந்து, நானா விதம் புரண்டு - பல வகையாய் மாறிப் புடை திரும்பி, இருண்ட - இருள் போல் கருநிறமான, வாள் கண் - வாள் போன்ற கண்களோடு, பூண் இயல் கொங்கை அன்னாள் - ஆபரணங்கள் அணிந்த அழகிய கொங்கைகளையுமுடைய அந்தச் சூர்ப்பணகை, அ மொழி புகலோடும் - அவ் வார்த்தைகளைச் சொன்னவுடன், 'நாண் இலள் - இவள் வெட்கம் இல்லாதவள்; ஐய நொய்யள் - மிகவும் அற்பமானவள்; நல்லளும் அல்லள் - நல்லவளும் அல்லாதவள்;' என்றான் - என்று இராம பிரான் நினைத்தான்,

செவ்வரி - செம்மை + அரி. ஏண் - உயர்ச்சி அல்லது சிறப்பு; 'ஏணில தொரு குரங் கிது' (சுந்தர. 591). 'வாட்கண் : மகளிர் கண்ணுக்கு வாள் உவமை, அதன் ஒளி, உரு, கொடுமை, கூர்மை முதலியவற்றால்; ஒளிதங்கிய கண் என்றலும் ஒன்றும். ஐய : மிகவும், என்ற இழிவை உணர்த்தும் இடைச்சொல்; ஐ, நுட்பமான என்றவிடத்து, ஐயநொய்யள் என்பது ஒருபொருட் பன்மொழி. நொய்யள் - இழிந்தவள் : நொய்மை - இழிவு; நாலடி. 41. 'ஏணுற்மிளிர்ந்து...... கொங்கையன்னாள்': சூர்ப்பணகை பின் காமக்குறிப்புக்களை, அவளது கண்களும் கொங்கைகளும் வெளிப்படுத்தினவாறு, அவை சிறப்பிக்கப்பெற்றன என்பதாம். 'உயிரினும் நாணுச் சிறந்தன்று' என்றபடி, நாண் மகளிர்க்குரிய உத்தம குணங்களில் ஒன்றாதலால், அஃது இவளிடம் இன்மையால் இவள், 'ஐயநொய்யள்; நல்லளு

மல்லள்' என்றான் என்க. முன் 256 ஆம் செய்யுளுடன் இச் செய்யுளையும் ஒப்பிட்டுச் சூர்ப்பணகையின் நடிப்புச் செயல்களை, (நாட்டிய இலக்கணம்) ஆசிரியர் இடம் நோக்கி அமைத்துக் காட்டும் அருமை, கண்டு இன்புறற்பாலது.

பி-ம். 1. தெறிச் செவ்வே; பரந்து வெவ்வே.

2. றேனுற மிமிர்ந்து; மானுற மிமிர்ந்து.

3. கொங்கை யாளிப் புன்மொழி; புகறலோடும்.

4. நாணில ளெனமற்றையன் நல்லளு மல்ல ளென்றான்று; ளையனெய்ய.........ளென்றான். நைய நொய்யள். (46)

266. பேசல னிருந்த வள்ள
ளுள்ளத்தின் பெற்றி யோராள்
பூசல்வண் டரற்றுங் கூந்தற்
பொய்ம்மகள் புகன்ற வென்கண்
ஆசைகண் டருளிற் றுண்டோ
வன்றென லுண்டோ வென்னும்
ஊசலி னுலாவு கின்றாண்
மீட்டுமோ ருரையைச் சொன்னாள்.

பேசலன் இருந்த வள்ளல் - (அவ்வாறு எண்ணி மேலும்) பேசாது இருந்த அந்த இராமபிரானுடைய, உள்ளத்தின் பெற்றி ஓராள் - மனத்தின் தன்மையை உணராதவளான, வண்டு பூசல் அரற்றும் கூந்தல் பொய் மகள் - வண்டுகள் பேரொலியை முழக்கும் கூந்தலையுடைய பொய்யுருக் கொண்ட அந்தச் சூர்ப்பணகை, 'புகன்ற - இவன் சொன்ன சொற்கள், என் கண் - என்னிடத்து, ஆசை கண்டு - ஆசை உண்டாகி, அருளிற்று உண்டோ - அருள் செய்ததாகுமோ? அன்று எனல் உண்டோ - (அல்லது), 'நீ விரும்புவது தக்கது அன்று' என்று மறுப்பதாகுமோ?' என்னும் - என்ற இருவித யோசனைகளினிடையே, ஊசலின் உலாவுகின்றாள் - ஊஞ்சலைப் போல முன்னும் பின்னும் (மனம்) உலவுகின்றவள், மீட்டும் ஓர் உரையை சொன்னாள் - மறுபடியும் ஒரு வார்த்தை சொல்வாளானாள்.

பெற்றி - பெருமையும் ஆம். பூசல் - ஒலி; 'அப்பெரிய பூசல் செவிசார்தலும்'; சுந்தர, 696; போரும் ஆம். பொய் மகள்: பொய் பேசுபவள் என்னலும் ஒன்றும். ஆசை கண்டு - ஆசை உண்டாகி;

காணுதல் - உண்டாதல் அல்லது தோன்றுதல்; 'முனைவன் கண்டது முதனூ லாகும்' (தொல். மரபியல் : 94); களிக்கும் நல்வினை காணுயோ' (சுந்தர. 659.) மனத்திண்டாட்டத்திற்கு ஊசலாடுவது உவமை; சுந்தர. 428. உரை : முதனிலைத் தொழிற்பெயர்.

பி-ம். 1. பேசல விருக்க.

3. வன்றெனி லுண்டோ; வன்றிமற் றுண்டோ.

4. ஊசலா லுலாவுகின்றாள்; ஊசலு ளுலாவுகின்றாள்; ஊசல ளுலாவுகின்றாள்; ஊசலினுளத்தாள் பின்னு மீட்டுமோ ருரையைச்; சொல்வாள். (47)

267. எழுதரு மேனி யாயீண்
டெய்திய தறிந்தி லாதேன்
முழுதுணர் முனிவ ரேவற்
செய்தொழின் முறையின் முற்றிப்
பழுதறு பெண்மை யோடு
மிளமையும் பயனின் றேகப்
பொழுதொடு நாளும் வாளா
கழிந்தன போலு மென்றாள்.

'எழுது அரு மேனியாய் - சித்திரத்தில் எழுதுவதற்கும் அரிய தான வடிவழகுடையோனே! ஈண்டு எய்தியது அறிந்திலாதேன் - நீ இவ்விடத்தில் வந்திருப்பது அறியாத நான், முழுது உணர் முனிவர் ஏவல் - எல்லாவற்றையும் நன்கு அறியும் ஞான முள்ள முனிவர்கள் ஏவினவையான, செய்தொழில் - பணிவிடை களை, முறையின் முற்றி - முறைப்படி செய்து முடித்து, பழுது அறு பெண்மையோடும் - குற்றமில்லாத என் பெண் தன்மையோடும், இளமையும் பயன் இன்று ஏக - இளமைப் பருவமும் பயன் படாமற் போக, பொழுதொடு நாளும் - காலை முதலிய சிறு பொழுதுகளோடு, பல நாட்கள் முழுவதும், வாளா கழிந்தன - வீணே கடந்துவிட்டன' என்றாள் - என்று கூறினாள். போலும் என்பது இசைநிறைக்கவந்த அசைச் சொல்.

முன் 260 இல் 'அறந்தலை நிற்பதானேன்' என்று கூறிய அவளே தன் வாயால், 'பெண்மையும் இளமையும் பயனின்றேக நாளும் வாளா கழிந்தன' என்று கூறியது காண்க. பெண்மையும் இளமையும் பயனுறுதல்; பால. உலாவியற். 3. இராமபிரான்

எழுதரு மேனியன் என்பது; "'எழுதரிய திருமேனிக் கருங்கடலைச் செங்கனிவாய்க் கோசலையென் பாள் பயந்தாள்' (பால. குலமுறை : 20): 'எழுதலாங் கொலம் மன்மத னலென்றாள்' (பால. உலாவியற் : 25.); 'ஓவியத் தெழுத வொண்ணு வுருவத்தாய்' (கிட்கிந்தா. வாலிவதைப் : 78); சுந்தர. 1128. இங்குப் போலும் என்ற சொல், அசையாகாமல் வினைப் பொருளில் உண்மையை உணர்த்தும் நிலையில் வந்த இடைச்சொல் என்னலும் ஆம். முற்றி என்பதை, முற்ற என்பதின் எச்சத்திரிபாகக் கொண்டு, 'முற்றுமாறு இருந்தால்' எனவும் பொருள் கொள்ளலாம்.

பி-ம். 1. எழுதரு மேனியீரீண்; தறிந்திலேன்யான்.
2. ரேயல் செய்தொழின்; ரேவுஞ் செய்தொழின்.
3. பழுதுறு பெண்மை; பயனின்றேகிப்; பயனின்றெய்தப்.
4. கழிந்து வீண்போன தென்றாள். (48)

268. நிந்தனை யரக்கி நீதி
நிலையிலாள் வினைமற் றெண்ணி
வந்தன ளாகு மென்றே
வள்ளலு மனத்துட் கொண்டான்
சுந்தரி மணத்திற் கொத்த
தொன்மையின் றுணிவிற் றன்றால்
அந்தணர் பாவை நீயா
னரசரில் வந்தே னென்றான்.

வள்ளலும் - அது கேட்ட இராமபிரானும், நிந்தனை அரக்கி - இவள் யாவரும் நிந்தித்து வெறுக்கக் கூடிய, (அல்லது நிந்தனைக்கு இடமான) அரக்கி ஆவள்; நீதி நிலை இலாள் - நியாய நெறியில் நில்லாதவள்; மற்று வினை எண்ணி வந்தனள் ஆகும் - வேறு ஓர் (கொடிய) தீவினையைப் புரியக் கருதி இங்கு வந்தவள் ஆக வேண்டும்,' என்றே - என்று, மனத்துள் கொண்டான் - மனத்தில் தீர்மானமாக எண்ணினவனாய், 'சுந்தரி - அழகிய பெண்ணே! நீ அந்தணர் பாவை - நீயோ பிராமண குலப்பெண், யான் அரசரில் வந்தேன் - நானோ அரசர்களான க்ஷத்திரிய குலத்திற் பிறந்தவன்; (ஆதலின் நீ கூறுவது), மணத்திற்கு ஒத்த - மண முறைமைக்கு ஏற்ற, தொன்மையின் துணிபிற்று அன்று - தொன்று தொட்டு வரும் வழக்கத்திற்கு இஃது உறுதி அளிப்பது அன்று,' என்றான் - என்று சொன்னான். ஆல் : அசை.

தன்னிடம் காம விழைவை விரும்பி வந்தனள் என்பதை, வினைமற்றெண்ணி என இடக்கரடக்கரில் கூறியது எனக் கொள்ளலும் ஏற்கும். இப்பொழுதுதான் சூர்ப்பணகையின் கருத்து இராமபிரானுக்கு நன்கு புலனாயிற்று என்க. இருந்தும், சிறிது நகைச்சுவை விரும்பி அவன் மேலே கூறினான் ஆகும். 'மணத்திற்கொத்த.........வந்தேன்' என்றது, தன்னிலும் மேற்குலத்துப் பெண்ணை மணத்தல் கூடாது என்பது மனுநீதியாதலின். தொன்மை: பண்பாகு பெயராய்ப் பழைய ஒழுக்கம் அல்லது ஆசாரத்திற்கு ஆகி வந்தது. அந்தணர் பாவை என்றது, அவள் பிரம குமாரரான, புலஸ்தியர் வழி வந்த விச்ரவஸ் முனிவர் புதல்வி ஆதலின்; 258. குறிப். இதுமுதல் இராமபிரான் அவளிடம் பேசின யாவும் அவனது உண்டாட்டம் ஆகிய போலி மன நிலையைக் காட்டுவது ஆகும். சுந்தரி, என்றதால்; 'நீ அழகுடையை ஆயினும், மரபினால் ஏற்கத் தக்கவள் அல்லள்' என்று கூறி விளையாடியது.

பி-ம். 1. நீதி நினைவிலாள் வினையையெண்ணி.

2. வந்தளனென்பா லென்றே வள்ளலுமறிந் தன்னை; மனத்திற் கொண்டான்; வள்ளலுண்டாட்டங் கொள்வான்.

3. சுந்தரீ; தன்மையின்றுணிவிற்; சுந்தரி மாருக்கொத்த தன்மைநீ சொல்விற் றன்றால்; சுந்தரீ மரபிற்கொத்த.

4. பாவை நீயான்; பாவையென்று லரக்கரில் வந்த தென்னோ.(49)

269. ஆரண மறையோ னெந்தை
யருந்ததிக் கற்பி னெம்மோய்
தாரணி புரந்த சால
கடங்கடர் மரபிற் றையல்
போரணி பொலங்கொள் வேலோய்
பொருந்தலை யிகழ்தற் கொத்த
காரண மிதுவே யாகி
லென்னுயிர் காண்பெ னென்றாள்.

போர் அணி பொலன் கொள் வேலோய் - போர் செய்தலே தன் அணிகலமாய்க் கொண்ட அழகிய வேலையுடையோனே! எந்தை - என் தந்தை, ஆரண மறையோன் - வேதங்களை ஓதியுணர்ந்த அந்தணராகிய விச்ரவஸ் என்னும் முனிவர்; அருந்ததி கற்பின் எம் ஓய் - அருந்ததி போன்ற கற்பிற் சிறந்த என் தாய், தாரணி புரந்த - பூமியைப் பரிபாலித்து ஆண்டு வந்த, சாலகடங்கடர் - சால

கடங்கடர் என்னும், மரபில் தையல் - அரசகுலத்துப் பெண்; பொருந்தலே - நீ இசையாமல், (அல்லது சம்மதிக்காமல்), இகழ்தற்கு ஒத்த - என்னை இகழ்ந்து ஏற்றுக் கொள்ளாததற்கு ஏற்ற, காரணம் இதுவே ஆகில் - இதுவே உனக்குக் காரணம் ஆகுமானல், என் உயிர் காண்பென் என்ருள் - என் உயிர் அழியாமல் அதனை நான் பெற்றவளாவேன்' என்று சூர்ப்பணகை கூறினுள்.

எந்தை - விச்ரவஸ். ஆரணம்; ஆரண்யகம் என்பதன் திரிபு: ஆரண்யகம், வேதத்தின் ஒரு பகுதி. அருந்ததி: இது அருந்துதி என்றும், தமிழில் திரிந்து வரும். ஓய் - தாய்: சுந்தர. 1272; பெருங். 2. 10. 50. வேலோய் என்பதில், வேல் என்றது இங்கு ஆயுதப்பொது. பொருந்தலே, முற்றெச்சம்; பொருந்துதல் - இசைதல். 'அந்தணர்க்கும் அரசர்க்கும் இடையே மணவினை தொன்மையின் துணிவிற்றன்று' என்று இராமபிரான் கூறச் சூர்ப்பணகை தான் அந்தணனுக்கும் அரசர் குலப்பெண்ணுக்கும் மகளாய்த் தோன்றினவளாதலின், அந்தணர் மகளாகாமை கூறி மணம் விரும்பினதாகும். சாலகடங்கடர் மரபு - சால கடங்கடை என்பவளிடம் தோன்றிய மரபினர்; அரக்கர்; சாலகடங்கடை என்பவள் திருணபிந்து என்ற இராஜரிஷியின் மகளாவாள் என்பதும், அவள் வயிற்றிலே புலஸ்தியரின் அருளால் விச்ரவஸ் தோன்றினன் என்பதும், அவ்விச்ரவஸின் மகளே சூர்ப்பணகை என்பதும் அத்யாத்ம ராமாயணத்தில் கண்ட வரலாறு. அரக்கர் குலத்தினனான ஹேதியின் மகன் வித்யுத்கேசன் என்பான், சாலகடங்கடை என்பாளை மணந்து சுகேசனைப் பெற, அவர்களுக்கு மக்களாய்த் தோன்றின மாலியவான், சுமாலி, மாலி என்றவருள் சுமாலியின் மகளான கைகசியே இராவணன் சூர்ப்பணகை முதலியோர்களைப் பெற்றவள் என்பது மற்ருெரு வரலாறு. இரு வரலாறுகளாலும் சூர்ப்பணகை சாலகடங்கடை மரபில் வந்தவள் என்பது அறியப்படுகின்றது. தாரணி புரந்த சாலகடங்கடர் மரபின் தையல் என்றமையால், சாலகடங்கடர் க்ஷத்திரியர் என்பதும், அந்தணனன தகப்பனுக்கும் க்ஷத்திரிய குலத்தளான தாய்க்கும் தோன்றின தான், மநுதர்ம நூலின் (அத். 10. சுலோ. 6) கட்டளைப்படி, தகப்பன் ஜாதியை அடையாதவளாகி, தாயின் ஜாதியைவிட உயர்ந்தவளாகி அதாவது சிறந்த க்ஷத்திரிய மகளாகி இராமபிரானுகிய க்ஷத்திரியனை மணக்கத்தக்கவளாயினள் என்றதைக் கூறினுளாவள்.

என்னுயிர் காண்பென் - நான் உயிர்பிழைப்பேன் என்றபடி; இராமபிரானுக்குத் தன் மரபின் உண்மையைக் காட்டி அவன் கூறிய

குறையை விலக்கி, தான் இராமபிரானை மணம் செய்துகொண்டு உயிர்வாழக் கூடும் என்ற துணிவு உண்டாகி, 'என் உயிர் காண்பென்' என்று கூறினாள் என்க. 'உயிர் காண்பென்' என்றதற்குச் சாவேன் என்றும் பொருள் கொள்வர்.

பி-ம். 1. கற்பி னெம்மோய்; கற்பி தெம்மோய்.

2. கடங்கடர்தம் மரபிற்; கடங்க மன்னன்றையல்; கடங்கட மன்னன் றையல்; மரபின்றையல்.

3. பொலன் கொள்வேலாய்.

4. காரண மிதுவே யாயின்; யிதுமெய் யென்னில்; கடப்பெ னென்றாள். (50)

270. அருத்திய ளன்ன கூற
வகத்துறு நகையின் வெள்ளைக்
குருத்தெழு கின்ற நீலக்
கொண்டலுண் டாட்டங் கொண்டான்
வருத்தநீங் கரக்கர் தம்மின்
மானுடர் மணத்த னங்கை
பொருத்தமன் றென்று சாலப்
புலமையோர் புகல்வ ரென்றான்.

அருத்தியள் அன்ன கூற - ஆசை கொண்ட அச்சூர்ப்பணகை அவ்வித வார்த்தைகளைச் சொல்ல, அகத்து உறு நகையின் - தன் மனத்தில் உண்டான சிரிப்பின், வெள்ளைக் குருத்து எழுகின்ற - வெண்ணிறமான இளங்குருத்து மேற்றோன்றுகின்றது என்று தோன்றச் சிரித்த, நீல கொண்டல் - கரிய மேகம் போன்ற இராமபிரான், உண்டாட்டம் கொண்டான் - ஓர் விளையாட்டை மேற்கொண்டவனாய், 'நங்கை - பெண்ணே! வருத்தம் நீங்கு - துன்பம் இல்லாத, அரக்கர் தம்மின் - இராக்கதர்களோடு, மானுடர் மணத்தல் - (பல துன்பங்களுக்கு இடமான) மனிதர் மணம் செய்து கொள்ளுதல், பொருத்தம் அன்று என்று - பொருத்தம் ஆகாது என்று, சால புலமையோர் - சாத்திரங்களில் சிறந்த அறிவுடையோர், புகல்வர் - சொல்லுவார்கள்', என்றான் - என்று கூறினான்.

இது, இராமபிரான் இப்பொழுது கணப்பொருத்தமும் இல்லை என்பதை இங்கு ஆதாரங்காட்டி மறுத்தமை என்க. இனி, 'நங்கை வருத்தம் நீங்கு' எனக்கொண்டு, 'நங்கையே! நான் உன்னை

ஏற்காததால் உனக்கு உண்டான வருத்தத்தினின்று நீங்கு' எனக் கொள்ளலும் ஒன்றும். இராமபிரானுக்கு, கொண்டல்; அயோத். மந்திரப். 5 ; சுந்தர. 392.

பி - ம். 1. ஊணைய கூற,; ஊின்னகூற; வகத்தெழு நகையின்; நகையன்.
2. நீலக் கொண்டல்; நீரக் கொண்டலும் நாட்டங் கொண்டான்.
3. மானுயர்; மனைத்தனங்காய்; மனைத்தை நங்காய். (51)

271. பராவருஞ் சிரத்தை யாரும் பத்தியின் பயத்தை யோரா
திராவணன் றங்கை யென்ற தேழைமைப் பால தென்னு
அராவணை யமல னன்னு யறிவித்தேன் முன்னந் தேவர்ப்
பராவினெ னீங்கி னேனப் பழிபடு பிறவி யென்ருள்.

'அராவணை அமலன் அன்னாய் - பாம்பணை மீது பள்ளி கொள்ளும் நிர்மலனான திருமாலைப் போன்றவனே! பராவு அரும் - விரித்துக் கூறுவதற்கு அரிய, சிரத்தை ஆரும் - சிரத்தை என்னும் ஊக்கம் நிரம்பிய, பத்தியின் பயத்தை - பத்தியினால் யான் பெற்ற நற்பயனை, ஓராது - (நீ) உணராமல், 'இராவணன் தங்கை என்றது - நான் இராவணன் தங்கை'யென்ற ஒரு காரணத்தைச் சுட்டி மறுத்தது, ஏழைமை பாலது - உன் அறியாமையால் நிகழ்ந்தது ஆகும்;' என்னு - என்று கூறி, 'தேவர் பராவினென் - தேவர்களைத் நான் துதித்து, அ பழி படு பிறவி - அந்த நிந்தனைக்குரிய என் அரக்கப் பிறவியை நீங்கினேன் - நீங்கிவிட்டேன் -(என்ற செய்தியை) முன்னம் அறிவித்தேன் - உனக்கு முன்னம் யான் அறிவித்துள்ளேன்;' என்ருள்-என்று சூர்ப்பணகை இராமபிரானிடங் கூறினாள்.

ஏழைமைப் பாலது, ஆராய்ச்சியின்மையால் ஆனது என்றலும் ஒன்றும்; அன்றி, சூர்ப்பணகை, தான் தவத்தால் பெற்ற மரபு மாறுபாட்டைத்தானே மறந்து, 'இராவணன் தங்கை' என்று தன்னை முதலில் அறிவித்துக் கொண்டது தனது ஏழைமைப் பாலது என்று கூறிக்கொண்டதும் ஆம். அவள் முன்னர் அறிவித்தது; 260. சிரத்தை ஆரும் பத்தி: சிரத்தையோடு கூடின பக்தி. பழிபடு பிறவி - பாவ ஜன்மம் என்னும் பொருளைக் கொண்டது ஆம். இதுவும் முன் செய்யுளும் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. பராபரி சித்தியாரும் மத்தியென் பதத்தை யோரார்; பராமரி சித்தியாரும் பதகியென்பயத்தை; வித்தியாதர் பன்னியான்: பன்னியான் பலத்தையோரேன்; பராவரும் புத்தியுள்ளார்.

2. யேழைமைப் பாலவெண்ணில்; யேழைமைப் பாலதன்றே; அன்றோ, பாலதென்பாள்.

3. யறிந்திலேன் முன்னம்.

4. பராவினி னீங்கினேனப்; பராவினை நீங்கினேனப்; பராவி நோய் நீங்கினேனிப்; பராவியா னீங்கினேனப். (52)

272. ஒருவனோ வுலக மூன்றிற்
 கோங்கொரு தலைவ னூங்கில்
ஒருவனே குபேர னின்னி
 னுடன்பிறந் தார்க ளன்னார்
தருவரேற் கோடு மன்றேற்
 றமியையவே றிடத்துச் சாரல்
வெருவுவெ னங்கை யென்றான்
 மீட்டவ ளினைய சொன்னாள்.

'நங்கை - மகளிரிற் சிறந்தவளே! நின்னின் உடன் பிறந்தவர்கள் - (நீ கூறியபடி) உன்னோடு கூடப் பிறந்தவர்களில், ஒருவனோ - ஒருத்தனோ, உலகம் மூன்றிற்கு - மூவுலகங்களுக்கும், ஓங்கு ஒரு தலைவன் - சிறந்த ஒப்பில்லாத தலைவனான இராவணன்; ஊங்கில் - சிறப்பினில், ஒருவனோ - மற்றொருவனோ, குபேரன் - செல்வத்திற்கு அதிபதியாகிய குபேரன் ஆவன்; அன்னார் தருவரேல் - அவர்கள் உன்னை அளிப்பாரானால், கோடும் - நான் கொள்ளக் கூடியதாகும்; அன்றேல் - அப்படியில்லை எனில், தமியை - தனியளான நீ, வேறு இடத்து சாரல் - வேறு ஒருவரை நீயாகத் தேர்ந்து அடைதலை, வெருவுவென் - யான் அஞ்சுகின்றேன்' என்றான் - என்று இராமபிரான் கூறினான்; அவள் - அச்சூர்ப்பணகை, மீட்டு - அதற்கு சமாதானமாக, இனைய சொன்னாள் - இப்படிப்பட்ட சொற்களைக் கூறினாள். அது அடுத்த செய்யுள்களால் விளங்கும்.

ஊங்கில் - ஊங்கு, மேம்பட்டது; ஒப்பு: 'கல்வியினூங்கில்லை' (நீதிநெறி: 1). இச்செய்யுளில் இராமபிரான் இராவணனை முன்னர்க் கூறினமைக்குக் காரணம் அவன் பராக்கிரமம் கருதியும், சூர்ப்பணகையுடன் ஒருதாய் வயிற்றுப்பிறந்த உரிமை கருதியும் என்க. வேறிடத்து, தமியை சாரல் என்றியைக்க. சாரல் - சேர்ந்து

ஏற்காததால் உனக்கு உண்டான வருத்தத்திநின்று நீங்கு' எனக் கொள்ளலும் ஒன்றும். இராமபிரானுக்கு, கொண்டல்; அயோத். மந்திரப். 5 ; சுந்தர. 392.

பி - ம். 1. எனைய கூற,; வின்னகூற ; வகத்தெழு நகையின் ; நகையன்.
2. நீலக் கொண்டல் ; நீரக் கொண்டலும் நாட்டங் கொண்டான்.
3. மானுயர் ; மணத்தனங்காய் ; மணத்தை நங்காய். (51)

271. பராவருஞ் சிரத்தை யாரும் பத்தியின் பயத்தை யோரா
திராவணன் றங்கை யென்ற தேழைமைப் பால தென்னு
அராவணை யமல னன்னு யறிவித்தேன் முன்ன நந் தேவர்ப்
பராவினெ னீங்கி னேனப் பழிபடு பிறவி யென்றாள்.

'அராவணை அமலன் அன்னாய் - பாம்பணை மீது பள்ளி கொள்ளும் நிர்மலனான திருமாலைப் போன்றவனே! பராவு அரும் - விரித்துக் கூறுவதற்கு அரிய, சிரத்தை ஆரும் - சிரத்தை என்னும் ஊக்கம் நிரம்பிய, பத்தியின் பயத்தை - பத்தியினால் யான் பெற்ற நற்பயனை, ஓராது - (நீ) உணராமல், 'இராவணன் தங்கை என்றது - நான் இராவணன் தங்கை'யென்ற ஒரு காரணத்தைச் சுட்டி மறுத்தது, ஏழைமை பாலது - உன் அறியாமையால் நிகழ்ந்தது ஆகும் ;' என்னா - என்று கூறி, 'தேவர் பராவினென் - தேவர்களைத் நான் துதித்து, அ பழி படு பிறவி - அந்த நிந்தனைக்குரிய என் அரக்கப் பிறவியை நீங்கினேன் - நீங்கிவிட்டேன் -(என்ற செய்தியை) முன்னம் அறிவித்தேன் - உனக்கு முன்னம் யான் அறிவித்துள்ளேன் ;' என்றாள்-என்று சூர்ப்பணகை இராமபிரானிடங் கூறினாள்.

ஏழைமைப் பாலது, ஆராய்ச்சியின்மையால் ஆனது என்றலும் ஒன்றும் ; அன்றி, சூர்ப்பணகை, தான் தவத்தால் பெற்ற மரபு மாறுபாட்டைத்தானே மறந்து, 'இராவணன் தங்கை' என்று தன்னை முதலில் அறிவித்துக் கொண்டது தனது ஏழைமைப் பாலது என்று கூறிக்கொண்டதும் ஆம். அவள் முன்னர் அறிவித்தது; 260. சிரத்தை ஆரும் பத்தி : சிரத்தையோடு கூடின பக்தி. பழிபடு பிறவி - பாவ ஜன்மம் என்னும் பொருளைக் கொண்டது ஆம். இதுவும் முன் செய்யுளும் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. பராபரி செத்தியாரும் மத்தியென் பதத்தை யோரார் ; பராமரி சித்தியாரும் பதகியென்பயத்தை ; வித்தியாதர் பன்னியான் : பன்னியான் பலத்தையோரேன் ; பராவரும் புத்தியுள்ளார்.

2. யேழைமைப் பாலவெண்ணில்; யேழைமைப் பாலதன்றே; அன்றோ, பாலதென்பாள்.

3. யறிந்திலேன் முன்னம்.

4. பராவினி னீங்கினேனப்; பராவினை நீங்கினேனப்; பராவி நோய் நீங்கினேனிப்; பராவியா னீங்கினேனப். (52)

272. ஒருவனோ வுலக மூன்றிற்
 கோங்கொரு தலைவ னூங்கில்
ஒருவனோ குபேர னின்னி
 னுடன்பிறந் தார்க ளன்னார்
தருவரேற் கோடு மன்றேற்
 றமியையவே றிடத்துச் சாரல்
வெருவுவெ னங்கை யென்றான்
 மீட்டவ ளினைய சொன்னாள்.

'நங்கை - மகளிரிற் சிறந்தவளே! நின்னின் உடன் பிறந்தவர்கள் - (நீ கூறியபடி) உன்னோடு கூடப் பிறந்தவர்களில், ஒருவனோ - ஒருத்தனோ, உலகம் மூன்றிற்கு - மூவுலகங்களுக்கும், ஓங்கு ஒரு தலைவன் - சிறந்த ஒப்பில்லாத தலைவனான இராவணன்; ஊங்கில் - சிறப்பினில், ஒருவனோ - மற்றொருவனோ, குபேரன் - செல்வத்திற்கு அதிபதியாகிய குபேரன் ஆவன்; அன்னார் தருவரேல் - அவர்கள் உன்னை அளிப்பாரானால், கோடும் - நான் கொள்ளக் கூடியதாகும்; அன்றேல் - அப்படியில்லை எனில், தமியை - தனியளான நீ, வேறு இடத்து சாரல் - வேறு ஒருவரை நீயாகத் தேர்ந்து அடைதலை, வெருவுவென் - யான் அஞ்சுகின்றேன்' என்றான் - என்று இராம பிரான் கூறினான்; அவள் - அச்சூர்ப்பணகை, மீட்டு - அதற்கு சமாதானமாக, இனைய சொன்னாள் - இப்படிப்பட்ட சொற்களைக் கூறினாள். அது அடுத்த செய்யுள்களால் விளங்கும்.

ஊங்கில் - ஊங்கு, மேம்பட்டது; ஒப்பு: 'கல்வியினூங்கில்லை' (நீதிநெறி: 1). இச்செய்யுளில் இராமபிரான் இராவணனை முன்னர்க் கூறினமைக்குக் காரணம் அவன் பராக்கிரமம் கருதியும், சூர்ப்பணகையுடன் ஒருதாய் வயிற்றுப்பிறந்த உரிமை கருதியும் என்க. வேறிடத்து, தமியை சாரல் என்றியைக்க. சாரல் - சேர்ந்து

மணம் செய்து கொள்ளல் என்னும் பொருளில் வந்தது; இனி, 'நீ தனியாக இவ்விதம் வருவது' என்றலும் அமையும்.

பி - ம். 1. மூன்றிற் கூங்கொரு; மூன்றிற் கொருங்கொரு; மூன்றிற் கொருதனித் தலைமையுள்ளான்; தலைவ னேங்கு.

2. குபேர னின்னே டுடன்பிறந் தவர்களன்னார்; குபேரனுன் னெடுடன்;

3. தருவரேத் கொள்வென்.

4. தமிய ளென்னிடனீசார; சார்தி; சேர்தி; சார்தல்; வெருவுது நங்கை யென்றான்; நங்கா யென்றான்: வேதத்தி னறிவை யென்றான்.

273. காந்தர்ப்ப மென்ப துண்டாற்
காதலிற் கலந்த சிந்தை
மாந்தர்க்கு மடந்தை மார்க்கு
மறைகளே வகுத்த கூட்டம்
ஏந்தற்பொற் றோளி னாயிஃ
தியைந்தபி னெனக்கு மூத்த
வேந்தர்க்கும் விருப்பிற் றாகும்
வேறுமோ ருரையுண் டென்றாள்.

(மேலும், சூர்ப்பணகை இராமபிரானைப் பார்த்து), 'ஏந்தல் பொன் தோளினாய் - மலைபோன்ற அழகிய தோள்களையுடையவனே! காதலில் கலந்த சிந்தை - வேட்கையில் ஒருவர்க்கொருவர் ஒற்றுமைப் பட்ட மனமுடைய, மாந்தர்க்கும் மடந்தை மார்க்கும் - ஆடவர்க்கும் மகளிர்க்கும், காந்தர்ப்பம் என்பது - காந்தருவம் என்றது, மறைகளே வகுத்த - வேதங்களே வகுத்துவைத்த, கூட்டம் - மணமுறை, உண்டு - உள்ளது; இஃது இயைந்த பின் - இந்தக் காந்தருவ விவாகம் நம்முள் நிகழ்ந்தபின், எனக்கு மூத்த வேந்தர்க்கும் - என் தமையன்மார்களுக்கும், விருப்பிற்று ஆகும்-(இது) விருப்புடையதே யாகும்; அன்றியும், இஃதன்றியும், வேறும் ஓர் உரை உண்டு - நான் கூறவேண்டிய வேறொரு தனிச் செய்தியும் இருக்கிறது.'' (அதனை அடுத்த செய்யுளிற் காண்க). என்றாள் - என்று கூறினாள். ஆல், அசை.

காந்தர்ப்பம் - கந்தர்வ விவாகம்; இது தலைவனும் தலைவியும் மனமொத்துக் கூடும் கூட்டம். இது வேதங்களில் விதித்

துள்ள எட்டுவகை மணங்களில் ஒன்று. எட்டு வகை மணங்களாவன: பிரமம், தைவதம், பிரஜாபத்தியம், ஆர்ஷம், ஆசுரம், காந்தர்வம், ராக்ஷஸம், பைசாசம் என்பன. இவற்றின் விரிவை இறையனாரகப் பொருள், தொல்காப்பியம் முதலிய நூல்களிற் காண்க. இதனை 'யாழோர் கூட்டம்' எனவும் தமிழ் நூல்கள் கூறும். 'காமக் கூட்டங் காணுங்காலை மறையோர் தேஎத்து மன்றலெட்டினுள், முறையமை நல்லியாழ்த் துணைமையோ ரியல்பே' (தொல். பொருள். சூ. 92); 'மறைகளே வகுத்த கூட்டம்', என்றதால், இது வேதங்கள் விதித்த முறை என ஆதாரங்காட்டினள் என்க. மறைகளே: ஏகாரம் தேற்றப் பொருளிலும் சிறப்புப் பொருளிலும் வந்தது என்க. ஏந்தல் - மலை; பல பொருள்களையும் ஏந்தி உயர்ந்து நிற்பதால்; இது, பூதரம் என்ற வடசொற் பொருளைக் கொண்டது. வேந்தர்க்கும்: தான் அரச குலத்தவள் என்பதை மீட்டும் வலியுறுத்தியதுமாம். அன்றியும், முன் செய்யுளில் இராமபிரான் இராவணனை, குபேரனை கொடுக்கின் கொள்ளலாகும் என்று கூறியதை, அவன் அவர்கள்பால் அஞ்சிக் கூறியதாகச் சூர்ப்பணகை கொண்டு, காந்தர்வ மணத்தால் அவர்களின் விருப்பத்தையும் பின் கொள்ளலாகும் என்று உறுதி கூறினள் என்க. அன்றியும், 'உடன் பிறந்தார்கள் தருவரேல் கோடும்' (272) என்று இராமபிரான் கூறியதை, அவன் வேத விதிக்கு உள்ளடங்கி நடக்க விரும்பியதாகச் சூர்ப்பணகை கொண்டு, தான் விரும்பும் 'காந்தர்ப்பமும் மறைகள் வகுத்த கூட்டமே' என்று சாதித்தனள் என்க.

பி-ம். 1. காந்தர்ப்பமென்று முண்டால் காதலிற் கலந்த காதன்; கலந்த மார்க்கம்.

2. மறைகளின் வகுத்த, வடித்துக் கூறும்.

3. யீதியைந்த பின்; யஃதியைந்த பின்; யிஃதியைந்த பின்; யதினியைந்தபின்; ஏய்ந்த பொற்றோளினா யஃதிசைந்த பின்; றோளினா யாமிசைந்தபின்; றோளினாய் கேளிசைந்தபின்.

4. விருப்பமுண்டாம்; விருப்புற்றார்க்கும்; விருப்பிதானும்; விருப்பமாகும்; விரும்பிற்றாகும். (54)

274. முனிவரோ டுடைய முன்னே
முதிர்பகை முறைமை நோக்கார்
தனியைநீ யாத லான்மற்
றவரொடுந் தழுவற் கொத்த

வினையமீ தல்ல தில்லை
விண்ணுநின் னாட்சி யாக்கி
இனியவர் மகிழ்ந்து வந்துன்
னேவலி னிற்ப ரென்றாள்.

'அவர் - என் தமயனான அந்த இராவணன் முதலிய அரக்கர்கள், முன்னே - முன்னமே, முனிவரோடு உடைய முதிர்பகை முறைமை - முனிவர்களுடன் தாம் கொண்டுள்ள முற்றிய பகைமை என்னும் முறைமையை, நோக்கார் - இனிக் கருதமாட்டார்கள்; நீ தனியை ஆதலால் - நீ இக்காட்டில் தக்க துணையின்றித் தனியே வாழ்கிறாய் ஆதலால், அவரொடும் - அந்த அரக்கர்களோடும், தழுவற்கு - சேர்ந்து நட்புடன் வாழ்வதற்கு, ஒத்த - அனுகூலமான, வினையம் ஈது அல்லது இல்லை - உபாயம் அல்லது தந்திரம் இந்த நம் கந்தர்வ விவாகம் அல்லது வேறு இல்லை; (இவ்வாறு நாம் மணந்து கொள்வமேல்), இனி - இனிமேல், விண்ணும் நின் ஆட்சி ஆக்கி - தேவலோகத்தையும் உன் ஆட்சிக்குள் இருக்கச்செய்து, அவர் மகிழ்ந்து வந்து - அவ்விராவணன் முதலிய அரக்கர்கள் விருப்போடு வந்து, உன் ஏவலின் நிற்பர் - உன் கட்டளையின்படி அவர்கள் அடங்கி நிற்பார்கள்,'' என்றாள் - என்று சூர்ப்பணகை இராமபிரானுக்கு எடுத்துக் கூறினாள்.

இங்குச் சூர்ப்பணகை இராமபிரானை நோக்கி, 'நீயோ முனிவேடங் கொண்டுள்ளாய்; தனியையாய் இருக்கின்றாய்; இராவணனோ முனிவர் மாட்டுப் பகைகொண்டவன்; என்னை மணப்பதால் அவனுக்கு முனிவரைச் சார்ந்த உன்பாலுள்ள பகைமை நீங்கும்; அதனோடு உன்னைச் சார்ந்தவரான முனிவர்பாலும் அவனுக்குள்ள பகைமை நீங்கும்; இவற்றோடு உனக்கு விண்ணுலக ஆட்சியும் உண்டாம்; அவ்வரக்கர்கள் மகிழ்ந்து வந்து ஏவல் செய்வர். இவ்வளவு பெரிய நன்மைகள் உனக்கும் பிறர்க்கும் உண்டாக இந்த நம்மண நிகழ்ச்சி அல்லாமல் வினையம் வேறில்லை' என்று கூறினாள் எனக் கொள்க. வினையம் - உபாயம் அல்லது சூழ்ச்சி; இது விநயம் என்ற வடசொல்லின் திரிபு; வினையம்: தமிழ்ச் சொல்லாகக் கொண்டு காரியம் என்னலும் ஆம். விண்ணும்: உம்மை எஞ்சியது தழுவிப் பூமியையும் குறித்து நின்றது; விண்ணும்: உம்மை, உயர்வு சிறப்பும் ஆம். (55)

பி - ம். 1. முனிவரோடுடன் யான் முன்னே; முனிவரோ டுறைவாய் முன்னே; டுடையர் முன்னே; யன்னோர்க் கவர்பகை முறைமை நோக்கி; முதிர் பகை முறையை நோக்கி; நோக்காய்; நோக்காத்

2. தனியை நீ யாகலான்; தனிமை நீ; தனியனீ.

3. வினையம தல்ல வில்லை; வினையமீ தல்லாலில்லை; விண்ணுமின் னூட்சியாகும்.

4. இனிய வெம்மன்னர் வந்துன்; இனியவர் யாரும் வந்துன்; இனி யரா யன்னர் வந்துன்; இனியவர் மனத்தர் வந்துன்; மனத் தால் வந்துன்; மகிழ்ந்து வந்துன். (55)

275. நிருதர்த மருளும் பெற்றே
னின்னலம் பெற்றே னின்னோ
டொருவருஞ் செல்வத் தியாண்டு
முறையவும் பெற்றே னென்றே
திருநகர் தீர்ந்த பின்னர்ச்
செய்தவம் பயந்த தென்னா
வரிசிலை வடித்த தோளான்
வாளெயி றிலங்க நக்கான்.

வரிசிலை வடித்த தோளான் - கட்டுக்கள் அமைந்த விற்றொழி லிற் பயின்ற தோளையுடைய இராமபிரான், (சூர்ப்பணகையின் இச் சொற்களைக் கேட்டு), 'நிருதர் தம் அருளும் பெற்றேன் - அரக்கர் களுடைய அனுக்கிரகமும் அடைந்தேன் ஆனேன்; நின்நலம் பெற் றேன் - உன்னை அடைதலாகிய ஒரு நன்மையையும் பெற்றவனானேன்; யாண்டும் ஒருவு அரும் செல்வத்து - எக்காலத்தும் நீங்காது என்றும் நிலைத்திருக்கும் (பெரும்) செல்வத்தோடு, நின்னொடும் உறையவும் பெற்றேன் - உன்னோடு சேர்ந்து வாழவும் பெற்றவனானேன்; திருநகர் தீர்ந்த பின்னர் - அழகிய அயோத்தி நகரை நான் நீங்கி வந்த பிறகு, செய் தவம் பயந்தது - யான் செய்த தவத்தின் பயன் பலவாய் விளைந் தன போலும்,' என்னா - என்று (வியந்தது போலச்) சொல்லி, வாள் எயிறு இலங்க நக்கான் - ஒளியுள்ள தன் பற்கள் தோன்றச் சிரித்தான்.

நலம் - அழகும் ஆம். சிலை வடித்தல் - விற்றொழிலில் பயிலுதல்; சீவக. 1450. இனி வரிகளாகச் சிலைத் தழும்பு உண்டாகியுள்ள என் றும், வில் தன் இடமாகக் கொண்ட என்றும், சிலை உராயப் பெற்ற வென்றும் பிறவாறும் பொருள் கூறினாரும் உளர். நக்கது, இளிவர லால் ஆகியது என்க.

பி-ம். 1. நிருதர தருளும் பெற்றோ நின்னலம் பெற்றோம் நின்னோ; நிருதன் றன்னரும்; நிருதர்கள் துணைகள் பெற்றோம் நின்னலம் பெற்றோம் யானிற்.

2. ஒரு பெருஞ் செல்வத் தியாண்டும், செல்வத் தியாண்டு முறையவும்; துறந்த வென்றன்; தீர்ந்து வந்து செய்தவம்.

4. பிடித்த தோளான்; வடிவுத் தோளான்; வரிசிலைக்குரிசில் நக்கான்மறுத்தவ ளுரைக்கும் வேலை. (56)

அங்குப் பிராட்டி தோன்ற, அவளைக் கண்ட சூர்ப்பணகையின்
ஐயமும் துணிவும் 276—81.

276. விண்ணிடை யிம்பர் நாகர்
விரிஞ்சனே முதலோர்க் கெல்லாம்
கண்ணிடை யொளியின் பாங்கர்க்
கடிகமழ் சாலை நின்றும்
பெண்ணிடை யரசி தேவர்
பெற்றநல் வரத்தாற் பின்னர்
மண்ணிடை மணியின் வந்த
வஞ்சியே போல்வாள் வந்தாள்.

**விண்** இடை - வான் உலகத்தும், இம்பர் - இப்பூவுலகத்தும், நாகர் - பாதல உலகத்தும், (வாழும்) விரிஞ்சனே முதலோர்க்கு எல்லாம் - பிரம தேவர் முதலான அனைவர்க்கும், கண் இடை ஒளியின் பாங்கர் - கண்களிடத்து ஒளியாய் வியாபித்து விளங்கும் பரம்பொருளாகிய இராமபிரான் அருகே, பெண் இடை அரசி - பெண்களின் அரசி போன்றவளும், தேவர் பெற்ற நல் வரத்தால் - முன் தேவர்கள் கேட்டுப் பெற்றுக்கொண்ட நல்ல வரத்தின் காரணத்தால், பின்னர் - பிறகு, மண் இடை - இப்புவியினிடத்து, மணியின் வந்த - ஓர் இரத்தினத்தினின்றும் தோன்றிய, வஞ்சியே போல்வாள் - ஒரு கொடியே போன்று அவதரித்தவளுமான (திருமகளான) பிராட்டி, கடிகமழ் சாலை நின்றும் - மணம் வீசும் பன்னசாலையினின்றும், வந்தாள் - வருவளாயினள்.

**விண்ணிடை** என்பதில் உள்ள இடை என்ற சொல்லை, இம்பர், நாகர் என்ற சொற்களுடன் கூட்டிப் பொருள் செய்யப்பட்டது. **விரிஞ்சனே**; ஏகாரம் தேற்றப் பொருளது; விரிஞ்சன், விண்ணோர் முதல் அனைவர்க்கும் முன் வைத்துக் கருதப்படும் சிறப்புடைமை குறித்தபடி. கண்ணிடையொளி; இஃது உருவக அணியும் ஆம்; 'கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை' ஆதலின்; உடலின் மற்ற

அவயவங்களுள் கண் சிறந்தது ; அக்கண்ணினும், அதனிடை விளங்கும் விழி சிறந்தது ; அவ்விழியினும் அதனுள் இலங்கும் ஒளி சிறந்தது ; ஆதலின், இராமபிரான் எல்லா ஜீவன்களின் கண்களின் ஒளியாய் வியாபித்து விளங்கும் பரம்பொருள் என்பது குறிக்கப்பெற்றது. இராமபிரானுக்கு, ஒளி ; 239.

பெண்ணிடை யரசி : 'தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினாள்' (பால. கார்முகப் ; 17.) என்றதும் நோக்குக. மண்ணிடை......வஞ்சியே போல்வாள் ; இது, பிராட்டி பூமியினின்றும் தோன்றிய அயோநிஜை என்ற ஏற்றங்கூறியதும் ஆம் ; பின் 'நிலந்தந்து நிரம்பிற்றன்றே' என்ற சூர்ப்பணகை வாக்காலும் (631) இஃது அறியக்கிடக்கும். மணியின் வந்த வஞ்சி : இல்பொருளுவமை; 'மண்ணிடை மணியின்' என்பதற்குப் பூமிதேவியிடமிருந்து, எனவும் பொருள் கொள்ளலாம். இனி, கண்ணிடை ஒளியின்' கண்களிடத்துத் தோன்றும் ஒளிபோல, பாங்கர் கடிகமழ்சாலைநின்றும் - அருகேயிருந்த மணங்கமழும் தவச்சாலையிலிருந்தும், பெண்ணிடையரசி.........வந்தாள் எனப் பிராட்டிக்கே முழுவதும் இயைத்துப் பொருள் கூறுவதும் பொருந்தும். அவ்வாறு கொள்ளுமிடத்து, 'கண்ணிடை ஒளியின்' என்பதற்கு, கண்கள் பார்க்க முடியாமற் கூசிப் பின் வாங்கும் ஓர் ஒளியுடன் எனப்பொருள் கொள்ளப்பாலதாம். இடைதல் - பின்னிடுதல் ; 'வேயிடை தோளினளும்.' 284. 'இழைக்கும் நுண்ணிடையிடை தர' (பால. அகலிகைப் : 68.); பின் 277-இல், 'வான் சுடர் சோதி வெள்ளம்' என்று பிராட்டியின் திருமேனி ஒளியைக் குறிப்பிட்டதும் நோக்குக. மேலும் தேவர் பெற்ற நல்வரத்தால் வந்தாள் ;என இயைத்து, தேவர்க்கு எம்பிரான் அருளிய வரத்தை நிறைவேற்றி வைக்குங் காரணத்தால், இராவணாதிய அரக்கர்கள் அழிவுறுவதற்கு ஒரு தோற்றுவாய் போலப் பிராட்டி அங்கு வந்தாள் என்னலும் ஒன்றும் ; "அரக்கரென்னுங் கான்சுட முளைத்த கற்பின் கனலியைக் கண்ணிற் கண்டாள் ; (277). இவ்வாறு இவ்வவதார இரகசியத்தை ஆசிரியர் இந்நூலில் மற்றும் பல இடங்களில் நம்மனோர்க்கு அறிவுறுத்திச் செல்வது காணலாம். மற்றும் இராவண வதத்திற்குப் பிராட்டியை அவன் எடுத்துச் சென்றதே காரணமாதலால், அவளது பிரவேசத்தை ஆசிரியர் இவ்வாறு சிறப்பித்துக் கூறினார்

என்க. கடிகமழ்சோலை, 'தம்பியாற் சமைக்கப்பெற்ற இனிய பூஞ்சாலை,' (226); பூம்பொழிற்சாலை (289) என்றமை நோக்குக.

பி-ம். 1. விஞ்சையர் முதலோர்க்.

2. கண்ணிடற் கரியான் பாலக்...சாலை நின்றே.

3. தேவர் பெற்றுடை வரத்தாற் ; வரத்தாற் பினனை.

4. மண்ணிடை மணியிற்றந்த ; வஞ்சியே போல வந்தாள் ; வஞ்சி யாங் கனக வந்தாள். (57)

277. ஊன்சுட வுணங்கு பேழ்வா
யுணர்விலி யுருவி னுறும்
வான்சுடர்ச் சோதி வெள்ளம்
வந்திடை வயங்க நோக்கி
மீன்சுடர் விண்ணு மண்ணும்
விரிந்தபோ ரரக்க ரென்னும்
கான்சுட முளைத்த கற்பின்
கனலியைக் கண்ணிற் கண்டாள்.

ஊன் - தன் உடலை, சுட - (தான் கொண்ட காமத் தீ) சுட்டெரிக்க, உணங்கு - அதனால் வாடிக் காய்ந்து போன, பேழ்வாய் - பெரிய வாயையுடைய, உணர்வு இலி - நல்லுணர்வற்ற அச்சூர்ப்பணகை, உருவின் - பிராட்டியின் திருவுருவிலே, நாறும் - தோன்றிய, வான் சுடர் சோதி வெள்ளம் - பெரிய சுடர்மயமான சோதிப் பெருக்கு, வந்து இடை வயங்க - வந்து அவ்விடத்து விளங்க, நோக்கி - அதனைப் பார்த்து, மீன் சுடர் விண்ணும் - நட்சத்திரங்கள் ஒளிரும் ஆகாயத்தும், மண்ணும் - புவியிலும், விரிந்த - பரவிய, போர் அரக்கர் என்னும் - போர்செய்யும் (கொடிய) தன்மையையுடைய இராக்கதர்களென்னும், கான் சுட-காட்டைச் சுட்டழிக்க, முளைத்த - தோன்றிய, கற்பின் கனலியை - கற்பு என்னும் தீயாகிய பிராட்டியை, கண்ணில் கண்டாள் - தன் கண்ணெதிரே (வரக்) கண்டாள்.

உணங்கு உணர்விலி, சோதி வள்ளம் வயங்க, கனலியைக் கண்டாள் என்றியைக்க. இராவண சங்காரத்துக்குக் காரணரான இருவரை ஒருங்கே நமக்கு அறிவிக்கும் கவிஞரின் திறத்தை ஓர்க. ஊன் : ஊனாலாகிய உடல் ; ஆகுபெயர். உணர்விலி என்றது அவளது கெட்ட புத்தியையும், அவளுக்கு இயல்பாய் உள்ள தாழ் வினையும், இராமபிரான்பாலும், பிராட்டிபாலும் உள்ள தெய்விக உயர்வினை ஆராய்ந்து கொள்ளவல்ல சுய அறிவு இன்மையையும்

குறிப்பிட்டபடியும் ஆம். அரக்கர் குலத்தை அழிக்கத் தோன்றிய பிராட்டியாகிய சோதி வெள்ளம் : 'மின்னாச யென்னும்படி நின்றாள்' (பால. மிதிலைக்காட்சிப். 31); 'மின்னிழல வன்னவடன் மேனியொளி மான' (பால. கோலங்காண். 28) என்றமையும் நோக்குக. சீதை கற்பின் கனலி : சுந்தர : 665 ; 1078 ; உயுத்த. மீட்சிப் : 85 ; இச் செய்யுளில் பிராட்டி சோதி வெள்ளமாகவும், கனலியாகவுமே சூர்ப்ப ணகைக்குக் காட்சியளித்தது நோக்கத்தக்கது.

பி - ம். 1. ஊன்சுடு முணர்வு கொண்டா ளொண்டொடி ; ஊன்சுட ருணங்கு ; வனத்திடைவயங்க ; வயங்கமாளா. (58)

278. பண்புற நெடிது நோக்கிப்
படைக்குநர் சிறுமை யல்லால்
எண்பிறங் கழகுக் கெல்லை
யில்லையா மென்று நின்றாள்
கண்பிற பொருளிற் செல்லா
கருத்தெனி னஃதே கண்ட
பெண்பிறந் தேனுக் கென்றா
லென்படும் பிறருக் கென்றாள்.

பண்பு உற - நன்றாக, நெடிது நோக்கி - (பிராட்டியை) நன்றாக நெடுநேரம் உற்றுப் பார்த்து, 'படைக்குநர் சிறுமை அல்லால் - சிருஷ்டிப்பவரது குறைவே அல்லாமல், எண் பிறங்கு - கருத்தில் விளங்கும், அழகுக்கு எல்லை இல்லை ஆம் என்று - அழகுக்கு ஒரு வரையறை கிடையாது என்று சொல்லத்தக்கவாறு, நின்றாள் - இவள் விளங்கி நின்றாள்; கண் பிற பொருளில் செல்லா - (இவளை நோக்கிய) கண்களும், மற்றப் பொருள்களில் செல்லமாட்டா ; கருத்து எனின் அஃதே - மனமோவெனில் அவ்வாறே வேறொன்றிலும் செல்லாது ; கண்ட - இவளைக்கண்ட, பெண் பிறந்தேனுக்கு என்றால் - பெண்ணாய்ப் பிறந்த எனக்கே இவ்வித மயக்க நிலை உண்டாகுமானால், பிறர்க்கு என்படும் - இவளைக் கண்ட ஆடவர்க்கு என்ன ஆமோ?' என்றாள் - என்று வியப்புமேலிட்டுக் கூறினாள்.

சிருஷ்டிக்கும் பிரமதேவருக்குத் திறமை இல்லை என்று சொல்வ தல்லால் அழகு என்பது ஓர் எல்லைக்குள் அடங்கியதன்று என்ப தற்கு ஓர் உதாரணமாக நின்றாள் பிராட்டி என்பதாம்; ஒப்பு : 'அழகிற் கவதியுண்டோ' (255); அழகு இன்பதே இவளையடைந்து மேலும்

அழகையடைந்தது என்னுங் கருத்தில், 'அழகெனு மதுவுமோ ரழகு பெற்றதே' (பால. மிதிலைக் : 34): என்றும், 'அழகிவளைத்தவஞ் செய்து பெற்றது காண்' (பால. கார்முகப் : 19) என்றும் பிராட்டி சிறப்பிக்கப்பெற்றமை இங்கு நோக்கப்பாலது. இங்கு, பிராட்டி பிரமசிருஷ்டிக்கு அப்பாலானவள் என்பது சூர்ப்பணகையின் கொள்கை என்னலாம். கண்பிற பொருளிற் செல்லா : அழகு என்பது காண்போர் கண்ணைத் தன்பால் கவர்ந்து கொள்ளும் சிறப்புடையது; 'திருவளர் தாமரை' (திருக்கோவையார் 1) என்ற செய்யுளின் உரையில் பேராசிரியர், 'திருவென்பது, கண்டா ரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்' என்று விளக்கியுள்ளமையும், 'கண்வாங் கிருஞ்சிலம்பு' (கலி. 39 : 15) என்பதற்கு நச்சி னார்க்கினியர், 'பார்த்தவர்கள் கண்ணைத் தன்னிடத்தே வாங்கிக் கொள்ளும் கரியமலை' என்று உரை வகுத்துள்ளமையும் இங்கு நோக்கத்தக்கனவாம். பெண்பிறந் தேனுக் கென்றால் : இதனால் பெண்களே விரும்பும் பேரழகுடையாள் பிராட்டி என்பது விளங் கும். இக்கருத்து, பால. கோலங்காண் : 19, 20, 29; இன்னும், மதுரைக் : 555; பரி. 21 : 22; உரை; சீவக; 165, 587, 2447 விளங்க வைத்துள்ளமை நோக்குக. என்படும் பிறர்க்கு : என்போல் பெண் அல்லாத ஆடவர்க்கு என்ன நிலைமை ஏற்படும்? அது தன்னால் விளக்க முடியாது என்பதாம். பெண் பிறந்தேனுக்கு இங்ஙன மானால், பிறர்க்கு என்படும் என்றது, தொடர்நிலைச் செய்யுட் பொருட்பேறணியாம். இங்கு, இராமபிரானையும், ஆடவர் பெண்மை யவாவுந் தோளினாய் என்று சிறப்பித்தமை ஒப்பு நோக்கத் தக்கது. பால. தாடகை வதைப், 41. இனி, 'பெண் பிறந்தேனுக்குக் கண்பிற பொருளிற் செல்லா, கருத்தெனி லஃதே என்றால் என்படும் பிறர்க்கு' என இயைத்துப் பொருள் கோடலும் அமையும்.

இதன்பின் சில பிரதிகளில், 'மருவொன்று கூந்தலானை' என்று தொடங்கும் 279-ஆம் செய்யுள் காணப்படுகிறது.

பி-ம். 2. அழகிற்செல்லை; யாமென்று நின்றுடன்னை; செல்லை யில்லையா மெனவேயுன்னி.

2. கருத்தினி லஃதே; லஃதே கொண்டேன். (59)

279. பொருதிறத் தானை நோக்கிப் பூவையை நோக்கி நின்றாள்
கருதமற் றினிவே றில்லை கமலத்துக் கடவு டானும்
ஒருதிறத் துணர நோக்கி யுருவினுக் குலக மூன்றில்
இருதிறத் தார்க்குஞ் செய்த வரம்பிவ ரிருவ ரென்றாள்.

பொரு திறத்தானை நோக்கி - போரில் வல்லமையுடைய இராம பிரானைப் பார்த்து, பூவையை நோக்கி நின்றாள் - (பின்) பிராட்டியை யும் பார்த்து வியந்து நின்ற சூர்ப்பணகை, 'கமலத்து கடவுள் தானும் - தாமரை மலர்மீது விளங்கும் (சிருஷ்டிகர்த்தாவான) பிரம தேவனும், ஒரு திறத்து - ஒப்பற்ற விதமாய், உணர நோக்கி - ஆழ்ந்து உணர்ந்து பார்த்து, உலகம் மூன்றின் - மூவுலகங்களில் உள்ள, இரு திறத்தார்க்கும் - ஆடவர் பெண்டிர் என்னும் இரு பாலார்க்கும், இவர் இருவர் - இவர் இருவர்களும், உருவினுக்குச் செய்த வரம்பு - (ஆண் பெண் என்னும் அழகிய) உருவங்களுக்கு உண்டாக்கிய உச்ச எல்லைகளே ஆம்; மற்று கருத இனி வேறு இல்லை - வேறு விதமாய் எண்ண இனி இடம் இல்லை. (இதுவே முடிவு)' என்றாள் - என்று தீர்மானித்தாள்.

பூவை - நாகணவாய்ப் புள்; அதுபோன்ற சொல்லையுடைய பிராட்டியைக் குறித்து உவமையாகுபெயராய் வந்தது. இரு திறத் தார்க்குஞ் செய்த வரம்பிவரிருவர்; இது, 'ஓவியத்துறை கைபோய வொருவனை யுருவின் மிக்க, காவல னொருவன் மற்றோர் கன்னிநீ தீட்டு கென்னத், தாவரு மெழிலிற் கோட்டத் தானுமங் நளனு மாக, மேவர வினிது நோக்கி மெய்மயிர் பொடிக்கு மன்றே' (நைடதம்: அன் னத்தைக் : 6) என்னும் செய்யுளை நினைப்பூட்டுகின்றது. முன் 278-இல், பிராட்டி பிரம சிருஷ்டிக்கு அப்பாற்பட்டவள் என்று எண்ணி, இங்கு இராமபிரானும், பிராட்டியும் சிருஷ்டியின் வரம்புகளே ஆவர் என்று தீர்மானித்து வியந்து நின்றனள் என்க.

பி - ம். 1. நோக்கி நெஞ்சிற். 2. கருமமற் றில்லை.
3. குலக மூன்றின். 4. இருதிறத் தார்க்குச் செய்த. (60)

280. மருவொன்று கூந்த லாளை
வனத்திவன் கொண்டு வாரான்
உருவிங்கி துடைய ராக
மற்றையோர் யாரு மில்லை
அரவிந்த மலரு ணீங்கி
யடியிணை படியிற் றோயத்
திருவிங்கு வருவ தென்னோ
வென்றகந் திகைத்து நின்றாள்.

'மரு ஒன்று கூந்தலாளை - மணம் பொருந்திய கூந்தலையுடைய இவளை, இவன் வனத்து கொண்டு வாரான் - இவன் காட்டிற்கு

அழைத்துக் கொண்டு வரமாட்டான் ; இது உருவம் உடையர் ஆக. இப்படிப்பட்ட சுந்தர உருவமுடையரான, மற்றையோர் - மகளிர் மற்றையோர், யாரும் இங்கு இல்லை - வேறு ஒருவரும் இங்கு இல்லை ; திரு - லக்ஷ்மிதேவி, அரவிந்த மலர் உள் நீங்கி - தாமரை மலராகிய தன் இருப்பிடத்தை விட்டு நீங்கி, அடி இணை படியில் தோய - தன்னிரு பாதங்களும் நிலத்திற்படிய, இங்கு வருவது என்னோ - இங்கு வருவதும் என்ன காரணம் கொண்டோ ?' என்று அகம் திகைத்து நின்றாள் - என்று சூர்ப்பணகை தன் மனம் மருண்டு நின்றாள்.

சீதை, மருவொன்று கூந்தலாள் ; உத்தம சாதிப் பெண்களின் கூந்தலில் இயற்கையான தெய்வ மணங் கமழுமாதலின் ; குறுந். 2 ; திவ்: திருவிருத்தம். 55. 'வாசநா ரூேதியாள்' (624) என்றதும் காண்க. அகந்திகைத்து நின்றது : தான் வழிபட்டு வரும் திரு தனக்கு அருள் புரிய வந்தாளோ, அல்லது தான் செய்யக் கருதிய தீவினையை எண்ணித் தனக்குக் கேடு இழைக்க வந்தாளோ என்றும் அவள் திகைத்தாள் எனலும் ஆம். தேவர்களுக்கு அடிகள் நிலத்திற் படியா ; இங்குப் படியில் வந்ததும் அவளுக்குத் திகைப்பை உண்டாக்கிற்று. இச்செய்யுளின் கருத்து : பிராட்டியைப் பார்த்து அரக்கி, 'இவ்வளவு அழகிய ஒருத்தியை எவரும் கொடிய காட்டிற்கு அழைத்து வரத்துணியார் ; ஆகவே, இவள் நகர மகளல்லள் ; காட்டிலோ இவ்வளவு அழகிய எவரும் இல்லை ; ஆகவே அரவிந்த மலரில் தங்கும் திருவே இவள் ஆகலாம் ; ஆனால், அவள் இங்கு வரக் காரணம் என்னோ ?' என்று திகைத்தாள் என்பதே.

பி - ம். 1. மருவொன்றுங் கூந்தலாளை.

2. உருவொன்றிங் குடையாள் போல் மற்றுருவுடையாரு மில்லை ;

3. வருவாளென்னோ ; மலரினீங்கி ; யடிமலர்படியிற்றோய. (61)

281 பொன்னைப்போலொளிரு மேனி
பூவைபோல் வண்ணத் தானிம்
மின்னைப்போ லிடையா ளோடு
மேவும் வேடத்த னல்லன்
தன்னைப்போற் றகையோ ரில்லாத்
தளிரைப்போ லடியி னாளும்
என்னைப்போ லிடையே வந்தா
ளிகழ்விப்பே னிவளை யென்னா.

பூவை போல் வண்ணத்தான் - காயாம் பூப் போன்ற நிறமுடைய இவன், பொன்னைப் போல் ஒளிரும் மேனி - பொன்னைப் போல விளங்கும் தேக காந்தியையும், மின்னை போல் இடையாளோடும் - மின்னலைப்போல் துவளும் இடையையுமுடைய இவளோடும், மேவும் வேடத்தன் அல்லன் - சேர்ந்து வாழும் இல்லறத்தானது வேடங் கொண்டவன் அல்லன் ; (அதாவது, தவவேடத்தில் இருக்கிறான்); (ஆதலின்), தன்னைப் போல் தகையோர் இல்லா - தனக்கு ஒத்த சிறப்பு உள்ளவர் பிறர் இல்லாதவளும் (ஒப்பற்றவளும்), தளிரைப் போல் அடியினாளும் - தளிர் போன்ற மெல்லிய பாதங்களையுடையவளு மான இவள், இடையே என்னைப் போல் வந்தாள் - நடுவில் இவ்விடத் திற்கு என்னைப் போல வந்தவளே ஆக வேண்டும் ; இவளை இகழ் விப்பேன் - (ஆதலின்) இவளை (இவன்) இகழ்ந்து அகற்றும்படி செய்வேன்' ; என்னா - என்று தீர்மானித்து,

இச்செய்யுள் அடுத்த செய்யுளோடு இயைந்து குளகமாகி, அதில் உள்ள 'விலக்குதி வீரவென்றாள்', என்பதன் வினைகொண்டு முடியும். 'மேனி, பயனிலை' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. இனி, 'பொன்னைப் போல் பொருவில் மேனி' என்ற பாடத்திற்கு, பொன்னைப் போல ஒப்புக் கூறுதற்கில்லாத திருமேனி என்னலுமாம்; 'பொன்னல தில்லைப் பொன்னை யொப்பென' (சுந்தர. 1271) என் றமை நோக்குக. பிராட்டியின் மேனி பொன்னிறம் ; சுந்தர. 688. தகையோர் - அழகியோர் என்பது பழைய உரை. தகையோர் ; தகுதியுடையோர் என்று இங்குப் பொருள் கொள்ளப்பெற்றது ; தன்னைப்போல் தகைப்படாதவர் (அடக்கப்படாதவர்) என்று, பிராட் டியை அரக்கி கருதினாள் என்றும் கூறுவர். 'என்னைப்போல இவ ளும் நடுவில் இவன்பால் ஆசைகொண்டு வந்தவளே ஆவள்' என்னும் கருத்தில் கூறினாள் என்க.

பி - ம். 1. பொன்னைப் போல் பொருவில் மேனிப் ; பூவைப் பூ வண்ணத் தானிம்.

2. மேவு மெய்யுடைய னல்லன் ; உறைந்த மெய்யுடையனல்லன்.

3. தகையோரில்லாத் ; ஒளியினாளும்; தாமரையடியின்னாளும் ; ஒளியின்னாளும்.

4. இகழ்விப் பனவளை ; இகழ்விப் பென்னிவளை ; மின்னே ; யென்ன.

(62)

## சூர்ப்பணகை, பிராட்டியைப் பற்றித் தீங்கானகூற, இராமபிரான் பிராட்டியுடன் ஏகியது 282—88

282. வருமிவள் மாயம் வல்லள் வஞ்சனை யரக்கி நெஞ்சம்
தெரிவில தேறுந் தன்மை சீரியோய் செவ்வி தன்றால்
உருவிது மெய்ய தன்று லூனுகர் வாழ்க்கை யாளை
வெருவினெ னெய்தி டாமல் விலக்குதி வீர வென்றாள்.

'சீரியோய் - நற்குணமுடையோனே! வரும் இவள் - (பிராட்டியைச் சுட்டி) இதோ வருகின்ற இவள், மாயம் வல்லள் - மாயையில் தேர்ந்தவள்; வஞ்சனை அரக்கி - வஞ்சனைத் தன்மை கொண்ட இராக்கதி; நெஞ்சம் தெரிவு இல - இவள் எண்ணங்கள் அறிந்து கொள்ள முடியாதன; தேறும் தன்மை - இவளை நல்லவள் என்று துணிவு கொள்ளும் முறை, செவ்விது அன்று - சிறப்புடைத்தாகாது; உரு இது மெய்யது அன்று - இவள் இப்பொழுது கொண்டுள்ள இந்த உருவமும் உண்மையானதன்று; (ஆதலின்), ஊன் நுகர் வாழ்க்கையாளை - மாமிசத்தை உண்டு வாழும் தொழிலையுடைய இவளை, வெருவினென் - கண்டு நான் அஞ்சுகின்றேன்; எய்திடாமல் - அருகே வராமல், வீர - வீரனே! விலக்குதி - நீ இவளைத் தடுத்து அப்புறப்படுத்துவாயாக' என்றாள்-என்று சூர்ப்பணகை இராமபிரானை நோக்கிக் கூறினாள்; ஆல், அசை.

வெருவினென் - இறந்த காலவினையை நிகழ்காலப் பொருளிற் கொண்டது; இது கால வழு வமைதி. 'திருடனுக்குத் தோன்றும் திருட்டுப் புத்தி' என்பதுபோல, தனக்குரித்தான, மாயம், வஞ்சனை முதலிய குணங்களோடு, தான் கொண்ட மாறுவேடம், ஊனுகர் வாழ்க்கை ஆகிய தீச்செயல்களைப் பிராட்டி மேலேற்றிக் கூறினாள் சூர்ப்பணகை என்க. இச்செய்யுளில் சூர்ப்பணகை தான் நடிக்கும் கபட நாடகத்தில் உச்ச நிலையை அடைந்து விட்டாள் என்னலாம்.

பி-ம். 1. மாயம் வல்ல வஞ்சனை; நெஞ்சில.

2. தெருளுறத் தேறுந்; தெருவில்தேறுந்; தெரிவிலடேறுந்; செயலி தன்றால்; செயலிற்றன்றால்.

3. மெய்யிற்றென்னப்; மெய்யிற்றன்றே; மெய்யிற்றன்றால்; மெய்யென் றுள்ளேன்: வாழ்க்கையாணின்.

4. வெருவுவன்; வெருவின செய்திடாமல்; அருகுற வெய்திடாமலகற்றுதி.

283. ஒள்ளிதுன் னுணர்வு மின்னே
யுன்னையா ரொளிக்கு மீட்டார்
தெள்ளிய நலத்தி னுலுன்
சிந்தனை தெரிந்த தம்மா
கள்ளவல் லரக்கி போலா
மிவளுநீ காண்டி யென்னு
வெள்ளிய முறுவன் முத்தம்
வெளிப்பட வீர னக்கான்.

வீரன் - வீரனாகிய இராமபிரான், (சூர்ப்பணகையை நோக்கி), மின்னே - மின்னல் போன்ற பெண்ணே! உன் உணர்வு ஒள்ளிது - உன் அறிவு சிறந்தது; உன்னை யார் ஒளிக்கும் ஈட்டார் - உன்னை யாரே வஞ்சித்து மறைந்து கொள்ளும் ஆற்றல் உள்ளவர்? (ஒருவரும் இரார் என்றபடி); தெள்ளிய நலத்தினால் - உன் தெளிவான புத்திச் சிறப்பினால், உன் சிந்தனை - உன் ஆலோசனை, தெரிந்தது - இந்த உண்மையைத் தெரிந்து கொண்டது; அம்மா - இது ஆச்சரியம்! இவளும் - இதோ வரும் இவளும், கள்ள வல் அரக்கி போல் ஆம் - திருட்டுத் தன்மை மிக்க கொடிய அரக்கியே ஆவாள் போலும்; நீ காண்டி - நீ இவளை நன்றாய்ப் பார்த்துக் கொள்'; என்னு - என்று கூறி, வெள்ளிய முறுவல் முத்தம் வெளிப்பட - வெண்ணிறமான தன் பற்களாகிய முத்துக்கள் வெளியே தோன்ற, நக்கான் - சிரித்தான்.

ஒள்ளிது - சிறப்புடையது; 'உரிய மாதவ னொள்ளிதென் றமைந்தனன்' (அயோத். மந்திரப் : 74); 'ஒள்ளிய துணர்ந்தே னென்ன வீடணற் குரைப்பதானான்' (உயுத்த. அங்கதன் றூது : 1). ஒள்ளிது : இது கன்னடச் சொல் என்பர். ஈட்டார் - வலியுடையோர். அம்மா : வியப்பை உணர்த்தவந்த இடைச்சொல். காண்டி - நீ குறிக்கொண்டு நோக்கிக் கவனித்துக் கொள் என்னுங் குறிப்பில் வந்தது. வெள்ளிய முறுவல் முத்தம்; ஒப்பு. 'நகையின் வெள்ளைக் குருத்தெழுகின்றது;' (270); இராமபிரான் பற்களுக்கு முத்து; சுந்தர : 542. இச் செய்யுளில் சூர்ப்பணகையைக் குறித்துக் கூறியவை வஞ்சப் புகழ்ச்சி என்னும் எதிர்மறை இலக்கணையின்பாற் படும். அரக்கி போலாம் : போல் அசை நிலை என்க; ஒப்பில் போலியாகக் கொள்வாரும் உளர். இச் செய்யுள், இராமபிரான் மேற்கொண்ட உண்டாட்டத்தின் உச்சநிலையை அறிவிப்பதாகும். உன் சிந்தனை : சூர்ப்பணகையின் தீய சிந்தனை என்ற உட்பொருளைக்

குறிப்பதும் ஆம். இதுகாறும் நடைபெற்றவற்றைப் பிராட்டி அறியாள் என்க.

பி - ம். 1. ஒள்ளிய வுணர்வுக்கின்னே; ஒள்ளிது வுணர்வு.

2. தெள்ளிய மனத்தினுனுன்; நலத்தினுளும்.

3. போறு மியலோரீ; போறு மியலுரீ; லரக்கி காண்மற்றியலோரீ கருதேலென்முன்.

4. முறுவல் தோன்ற வெளிப்பட. (64)

284. ஆயிடை யமுதின் வந்த
வருந்ததிக் கற்பி னஞ்சொல்
வேயிடை தோளி ஞளும்
வீரனைச் சேரும் வேலை
நீயிடை வந்த தென்னை
நிருதர்தம் பாவை யென்னுக்
காயெரி யனைய கள்ள
வுள்ளத்தாள் கதித்த லோடும்,

அ இடை - அச்சமயத்தில், அமுதின் வந்த - தேவாமிருதம் போன்று அங்கு வந்த, அருந்ததி கற்பின் - அருந்ததி போன்ற கற்புச் சிறப்பினையும், அம் சொல் - அழகிய சொற்களையும், வேய் இடை தோளினுளும் - மூங்கில் (வெட்கிப்) பின்னிடும்படியான அழகிய தோளையுடையவளுமான பிராட்டியும், வீரனை - வீரனுன இராமபிரானை, சேரும் வேலை - வந்து அணுகும் போது, காய் எரி அனைய - பற்றி எரியும் நெருப்பை ஒத்த, கள்ள உள்ளத்தாள் - வஞ்சக எண்ணங் கொண்ட அச்சூர்ப்பணகை (பிராட்டியை நோக்கி), 'நிருதர் தம் பாவை - அரக்கர் பெண்ணே! (அதாவது அரக்கியே!), இடை நீ வந்தது என்னை - நாங்கள் பேசிக் கொண்டிருக்கும இடத்தில் நீ குறுக்கிட்டு வந்தது என்?' என்னு - என்று சொல்லி, கதித்தலோடும் - சினந்து விரைந்து வந்த அளவில்.

இது அடுத்த செய்யுளில் உள்ள 'அஞ்சினள்' என்பதோடு தொடர்ந்து வினைமுடிவு கொள்ளும்.

ஆயிடை: அகரச்சுட்டு செய்யுள் விகாரத்தால் நீண்டது. அமுதின் வந்த - திருப்பாற் கடலில் அமுதத்தோடு தோன்றி (திருமாலின் அவதாரமாகி) வந்த எனலும் ஆம். அமுதின் வந்த

என்பதை அஞ்சொல் என்பதோடு இயைத்துப் பொருள் கொள்ளலும் ஒன்றும். முதலிரண்டடிகளை, 'ஆயிடைத்தாரையென் றமிழ்திற் றோன்றிய வேயிடைத் தோளிணை ளிடை விலக்கினள்' (கிட்கிந்தா. வாலிவதைப் : 13) என்பதனோடு ஒப்பிடுக. பிராட்டி அமிழ்தின் வந்தவள்; கிட்கிந்தா. வாலிவதைப்: 78. அருந் ததிக்கற்பு : கற்புக்கு அருந்ததி ஓர் எடுத்துக் காட்டு ஆதலின்; (269); அவள்போன்ற கற்புடையாள் பிராட்டி என்னப்பட்டது; பிராட்டிக்கு அருந்ததி : அயோத். வனம்புகு : 8; சுந்தர : 468, 602, 612. வேலை - சமயம் அல்லது காலம்; (பிங்); சுந்தர. 40. பாவை : அண்மை விளி, இயல்பாய் நின்றது. கதித்தல் - விரைந் தேகுதல்; சுந்தர : 919. முன் சூர்ப்பணகையைக் கடிய நோய்க்கு ஒப்பிட்டுக் கூறியதற்கு (227) மாறாக, இங்குப் பிராட்டியைப் பிறப்பு இறப்பு என்னும் நோய்களைத் தீர்க்கும், மருந்து என்னும் அமுதுக்கு ஒப்பிட்ட சிறப்பும், அமுதையும் நஞ்சையும் ஓரிடத்திற் காட்டிய நயமும் நோக்கத்தக்கன.

பி - ம். 1. கற்பினின் சொல். 2, வேயிடைத் தோளினாளும்.
3. வந்ததென்னே; நீ யெட வந்ததென்னே.
4. காயெரியன்ன கள்ள; யென்னக் கள்ள......கலித்தலோடும், கனற்றலோடும்; கனன்ற வோடும். (65)

285. அஞ்சினள் வஞ்சி யன்ன
மின்னிடை யலச வோடிப்
பஞ்சின்மெல் லடிக ணோவப்
பதைத்தனள் பருவக் கால
மஞ்சிடை வயங்கித் தோன்றும்
பவழத்தின் வல்லி யேபோற்
குஞ்சர மனைய வீரன்
குவவுத்தோ டமூவிக் கொண்டாள்.

அஞ்சினள் - (சூர்ப்பணகை தன் அருகே விரைந்து வரக்கண்டு) பயங் கொண்டவளான பிராட்டி, மின் இடை - மின்னல் போன்ற தன் இடை, வஞ்சி அன்ன - வஞ்சிக்கொடி போல, அலச - தள்ளாட, ஓடி - ஓடிச்சென்று, பஞ்சின் மெல் அடிகள் நோவ - பஞ்சு போன்ற தன் மென்மையான பாதங்கள் வருந்த, பதைத்தனள் - துடித்தவளாய், பருவ கால மஞ்சு இடை - மழை பெய்யும் கார்

காலத்தில் மேகத்தினிடம், வயங்கித் தோன்றும் - விளக்கமாய்த் தோன்றுகின்ற, பவழத்தின் வல்லியே போல் - ஒரு பவழக் கொடியைப் போல, குஞ்சரம் அனைய வீரன் - யானை போன்ற வீரனை இராமபிரானுடைய, குவவு தோள் - பருத்துயர்ந்த தோட்களை, தழுவிக் கொண்டாள் - (ஓடி) அணைத்துக் கொண்டாள்.

அச்சத்தினால் விளையும் செய்கை இங்குச் சித்தரிக்கப்படுவது காண்க. இடைக்கு மின்னல்; நுட்பமும், நுடங்கி ஒளி வீசும் தன்மையுமுடைமையால். வஞ்சி - சிந்திற் கொடியும் ஆம். அலசல் - தள்ளாடி வருந்துதல்; 'திருவுடம் பலச நோற்கின்றான்' (227); 'ஐய சாலவு மலசினன்' (அயோத். மந்திரப் : 62). பஞ்சின் மெல்லடி : *623* ; அயோத். மந்திரப் : *19*. பருவக்கால மஞ்சிடை........... பவழத்தின் வல்லி : இராமபிரானுக்குக் கார்கால மேகமும், அவனைத் தழுவிக் கொண்ட பிராட்டிக்கு அம் மேகத்திடைத் தோன்றும் பவழக் கொடியும்; பவழக்கொடிபோன்ற மின்னலும் என்னலும் ஆம். இச்செய்யுள் சமாகித அலங்காரம் என்பர்.

பி - ம். 1. அஞ்சின எஞ்சி ; யசையவோடி.
2. பஞ்சிமெல்லடிகள் ; பதைத்துடன்.
3. வல்லியன்ன ; வல்லியென்னக் ; வல்லியேயோர். (*66*)

286. வளையெயிற் றவர்க ளோடு
வரும்விளை யாட்டென் றாலும்
விளைவன தீமை யேயா
மென்பதை யுணர்ந்து வீரன்
உளைவன வியற்ற லொல்லை
யுன்னிலை யுணரு மாயின்
இளையவன் முனியு நங்கை
யேகுதி விரைவி னென்றான்.

'வளை எயிற்று அவர்களோடும் - வளைந்த தெற்றுப் பற்களை யுடைய அரக்கர்களோடும், வரும் விளையாட்டு என்றாலும் - வருவது விளையாட்டே என்றாலும், விளைவன தீமையே யாம் - அதனால் உண்டாவன கேடுகளே ஆவனவாம்;' என்பதை உணர்ந்து - என்ற உண்மையை ஊகித்து அறிந்துகொண்டு, வீரன் - பெரும் வீரனை

இராமபிரான், (சூர்ப்பணகையை நோக்கி), நங்கை - பெண்ணே! உளைவன இயற்றல் - மனவருத்தந்தரும் காரியங்களைச் செய்யாதே; இளையவன் - என் தம்பி, உன் நிலை உணரும் ஆயின் - உன் (மன) நிலைமையை அறிவானானால், ஒல்லை முனியும் - உடனே உன்மேற் கோபங்கொள்வான்; விரைவின் ஏகுதி - ஆதலின் விரைவாக நீ இவ்விடம் விட்டுப் போய்விடு!' என்றான் - என்று கூறினான்.

வளையெயிறு - வக்ர தந்தம் என்னும் கோணற்பல்: விளையாட் டென்றாலும் விளைவன தீமை; இது, விளையாட்டே தீவினையாகும், என்ற பழமொழியின் கருத்தைத் தழுவியது; சீவக. *909* ஐயும், அதன் உரையையும் நோக்குக. விளையாட்டு தீவினையானது; முன் மந்தரையின் கூன் முதுகில் விளையாட்டுக்காக உண்டை செலுத்தி அதன் காரணமாகத் தான் அரசியலைத் துறந்து கானகம் வந்ததைக் கருத்துட் கொண்டதும் ஆம்; அயோத். மந்தரை சூழ்ச்சி : *41*; உயுத்த. கும்பகருணன் வதைப் : *17*. உளைவன - மன வருத்தந் தருவன; பால. கையடை; *10*; உயுத்த. அங்கதன்றூது : *38*; சுந்தர : *236*. *282* ஆம் செய்யுள் முதல் இச் செய்யுள் ஈறாக, இராம பிரானை வீரன் என்றே ஒவ்வொரு செய்யுளிலும் பேசப்படும் நயம் ஓர்க. இச்செய்யுள், பின்னே, 'இளையவன் முனிதலை' முன் னறிவித்ததாம்.

பி - ம். 1. வருவிளையாட்.

2. மென்பது முணர்ந்து; தீமைமெய்யே யென்பதை; தீமை யாகுமென்பதை; யுணர்ந்த வீரன்; விளைவது தீமையாகு மென்பதை.

3. உளைவன வியற்றேல்; வியற்றியென்னே; யுணர்வனாகின்.

4. நங்கா யேகுதி.

(67)

287. பொற்புடை யரக்கி பூவிற்
புனலினிற் பொருப்பில் வாழும்
அற்புடை யுள்ளத் தாரு
மனங்கனு மமரர் மற்றும்
எற்பெறத் தவஞ்செய் கின்றா
ரென்னை நீ யிகழ்வ தென்னே
நற்பொறை நெஞ்சி லில்லாக்
கள்வியை நச்சி யென்றாள்.

பொற்புடை அரக்கி - அழகிய உருவை மேற்கொண்ட அந்த அரக்கியாகிய சூர்ப்பணகை, (இவ்வாறு கூறிய இராமபிரானை நோக்கி), 'பூவில் - தாமரை மலரிலும், புனலில் - பாற்கடலிலும், பொருப்பில் - கைலாய மலையிலும், வாழும் - வாழ்கின்ற, அற்பு உடை உள்ளத்தாரும் - என்பால் அன்பு கொண்ட மனமுடைய (நான்முகன், திருமால், சிவபெருமான், ஆகிய) திரு மூர்த்திகளும், அனங்கனும் - மன்மதனும், மற்றும் அமரர் - பிற தேவர்களும், என் பெற தவம் செய்கின்றார் - என்னை யடையத் தவம் செய்து கொண்டிருக்கிறார்கள்; (அப்படியிருக்க), நல் பொறை நெஞ்சில் இல்லா - (மகளிர்க்கு) நன்மை தருவதான பொறுமை என்பது மனத்தில் இல்லாத, கள்வியை - கள்ளத்தனமுடைய இவளை, நச்சி - விரும்பி, என்னை நீ இகழ்வது - என்னை நீ அலட்சியம் செய்வது, என்னே என்றாள் - யாது காரணம்?' என்று வினவினாள்.

'பூவிற்..........அற்புடை யுள்ளத்தார்' என்பதற்கு பூமியில் (தரையில்) வாழும் மானிடர், நீரில் வாழும் நீரர மனிதர், மலையில் வாழும் வித்யாதரர் ஆகிய ஆடவர்கள் எனப் பொருள் கொள்வதும் ஒன்றும். அற்பு : அன்பு என்பதன் விகாரம். சூர்ப்பணகை, பிராட்டியை, 'நற்பொறை நெஞ்சிலில்லாக் கள்ளி' என்றது, தன்னைக் கண்ட பொழுமை காரணமாகவும், 'நீ யிடை வந்த தென்னை' (284) என்றுதான் கேட்ட அளவிலேயே, சிறிதும் பொறுமையின்றி, அஞ்சினள் போல ஓடிப்போய் இராமபிரானைத் தழுவிக்கொண்டாளெனக் கருதியும் என்க.

பி-ம். 1. பொருப்பில் வைகும்.
2. அற்புரையுள்ளத்தாரும்; அற்புண்டவுள்ளத்தாரும்; அற்பொறையுள்ளத்தாரும்.
3. யிகழ்வதேயிர்.
4. நெஞ்சினில்லாக்.

(68)

288. தன்னெடுந் தொடர்வி லாதே
மென்னவுந் தவிரா டானிக்
கன்னெடு மனத்தி சொல்லுங்
கள்ளவா சகங்க ளென்னா
மின்னெடு தொடர்ந்து செல்லு
மேகம்போல் மிதிலை வேந்தன்
பொன்னெடும் புனிதன் போயப்
பூம்பொழிற் சாலை புக்கான்.

'இ கல் நெடும் மனத்தி தன்னெடு - இந்தக் கல்போன்று உறுதியான மனத்தையுடைய இவளோடும், தொடர்வு இலாதேம் என்னவும் - எவ்விதத் தொடர்பும் இல்லாதவர்கள் யாம் என்று கூறவும், தவிராள் - இவ்விடம் விட்டு நீங்கினுள் அல்லள்; சொல்லும் - இவள் பேச்சுக்களும், கள்ள வாசகங்கள் - வஞ்சக வார்த்தைகளாயிருக்கின்றன;' என்ன - என்று எண்ணி, புனிதன் - தூயவனுன இராமபிரான், மின் ஒடும் தொடர்ந்து செல்லும் ஒரு மேகம் போல - மின்னல் பின் தொடரவரும் மேகம் முன்னே செல்வதுபோல, மிதிலே வேந்தன் பொன் ஒடும் - மிதிலே நகர்க்கரசனுன ஜனகராஜனின் அழகிய பெண்ணுன அப்பிராட்டியோடும், போய் - அவ்விடம் விட்டுச் சென்று, அ பூம் பொழில்-அந்த அழகிய சோலே யிலிருந்த, சாலே - தன் பன்னசாலேயின் உள்ளே, புக்கான் - புகுந்து சென்ருன்.

கல் எவ்வளவு காலம் நீரில் ஊறவைத்தாலும் அதனுள் ஈரப் பசை உண்டாகாது; அதுபோலச் சூர்ப்பணகைக்குத் தான் கூறிய நீதி நிறைந்த நன்மொழிகள் அவள் மனவுறுதியை மாற்றவில்லே; ஆதலின், இராமபிரான் அவளேக் 'கன்னெடும் மனத்தி' என்ருன்; இது, 'வைகலும் நீருட் கிடப்பினும் கல்லிற்கு, மெல்லென்றல் சால வரிதாகும்-அஃதேபோல், வைகலும் நல்லறங் கேட்பினுங் கீழ்கட்குக், கல்லினும் வல்லென்னும் நெஞ்சு' (அறநெறிச். 51). என்ற செய்யுளின் கருத்தை மேற்கொண்டது. தன்னெடும், என்பதற்கு உன்னேடும் எனவும் பொருள்கொள்ளலாம்; 281. தொடர்வு இலாமை: எவ்வித இயைபுமில்லாமை. க்ள்ள வாசகங்கள், வஞ்சகச் சொற்கள்; 283. மின்னெடுந் தொடர்ந்து செல்லும் மேகம்: ஒப்பு: 285 ஆம் செய்யுளும் அதன் குறிப்பும். மிதிலே வேந்தன் பொன்; ஜனகன் முற்றுந் துறந்த ஞானியரும் அவனிடம் வந்து தத்துவப் பொருளேக் கேட்டுத் தெளிவடையும் பெருமையுடையவனுதலின் அவனுடைய புதல்வி என்று சிறப்பிக்கப் பெற்ருள். பொன் என்றது, தன்மையாலும், அருமையாலும் சுடினும் தன்னெளிகெடாது மேலும் சிறந்தோங்கும் சிறப்புடைமையாலும், பொன் ஒப்பாயிற்று எனக்கொள்ளலும் ஆம்; 281 செய்யுளேயும் அதன் குறிப்புரையும் நோக்குக. புனிதன்: இராமபிரான்; பிறமாதை மனத்தாலும் விரும்பாத தூய்மைபற்றிக் கூறியதும் ஆம்.

பி-ம். 1. லென்னவுந் தொடர்வடானிக்.
2. மனத்திற் சொல்லும்; வாசகங்கள் கேளான்.
3. மிதிலேயந்த.

(69)

### சூர்ப்பணகையின் மனச்சஞ்சலம்

289. புக்கபின் போன தென்னு
முணர்வினள் பொறையி னீங்கி
உக்கதா முயிர ளொன்று
முயிர்த்தில ளொடுங்கி நின்ருள்
தக்கிலன் மனத்துள் யாதுந்
தழுவிலன் சலமுங் கொண்டான்
மைக்கருங் குழலி ஞண்மாட்
டன்பினில் வலிய னென்ருள்.

புக்க பின் - இவ்வாறு, இராமபிரான் பிராட்டியுடன் தன் பன்னசாலையை அடைந்த பிறகு, (அச்சூர்ப்பணகை), போனது என்னும் உணர்வினள் - போயிற்று என்று சொல்லத்தக்க உணர்ச்சி நிலை அடைந்தவளாயும், பொறையின் நீங்கி - உடலின் உள்ளிருந்து அகன்று, உக்கது ஆம் உயிரள் - சிதைந்தழிந்தது என்று சொல்லும் நிலைமையான உயிரையுடையவளாயும் ஆகி, ஒன்றும் உயிர்த்திலள் - ஒரு மூச்சுக் கூட விடாமல், ஒடுங்கி நின்ருள் - அடங்கியிருந்தாள்; (பின்பு) அவள், ‘ தக்கிலன் - இவன் எனக்கு ஒத்த தகுதியுடையவன் அல்லன்; மனத்துள் யாதும் தழுவிலன் - தன் மனத்தில் என்னைப்பற்றி யாதொரு பற்றும் அடைந்தவனல்லன்; சலமும் கொண்டான் - என்பால் தணியாத கோபமும் கொண்டுள்ளான்; மை கரும் குழலினுள் மாட்டு - மை போன்ற கரிய கூந்தலையுடைய அப் பெண்ணிடத்து, அன்பினில் வலியன் - ஆசையில் உறுதியுடையவன் ’ என்ருள் - என்று (தன்னுள்ளே) கூறிக்கொண்டாள்.

போன தென்னு முணர்வினள்; உக்கதாமுயிரள்; என்பன வடமொழி நடை. பொறை - உடல்; உயிரைத் தாங்கியிருப்பது என்னும் பொருளது; இதனுலே உடல், உயிர்ப் பொறை யென்றும் பெயர் பெறும்; சுந்தர. 554. தக்கிலன் - தகவிலன்; திருக்கோவையார் 376; கொளு. சலம் - தணியாக் கோபம் 361 : 994. அன்பினில் வலியன் - தளராத அன்புடையவன் எனலும் ஆம். சூர்ப்பணகை இராமபிரானைக் கண்டது முதல் இதுகாறும் நிகழ்ந்தவை எற்பாட்டுப் பொழுதிலென்க.

பி - ம். 1. போயதென்னு முணர்வினுள்; பொறை யினீங்கி.
2. முயிருமொன்று முயிர்க்கிலள்; முயிருளொன்றும்; முயிர்க்கிலாள்.

3, தக்கிலன் மனத்துள் யாதுந் தழுவிலன்; தக்கிலன் தகுதியாதுந்; தழுவலன்; தழுவிலான்; தக்கிலன் மனத்துள் யாதுந்தக விலன்; தக்கன மனத்தியாதுந் தகவிலன்.

4. அன்பினில் வலியனென்பாள்; அன்பின னிவனென் றுன்னு.(70)

### சூரியாத்தமனம்

290. நின்றில ளவனைச் சேரு
நெறியினை நினைந்து போனாள்
இன்றிவ னாகம் புல்லே
னெனிலுயி ரிழப்பெ னென்னாப்
பொன்றிணி சாரற் சீதப்
பளிக்கறைப் பொதும்பர்ப் புக்காள்
சென்றது பரிதி மேல்பாற்
செக்கர்வந் திறுத்த தன்றே.

நின்றிலள் - பின்பு அச்சூர்ப்பணகை அங்கு நிற்காமல், அவனை சேரும் நெறியினை நினைந்து - அவ்விராமபிரானைத் தான் சேர்ந்து வாழும் வழியை எண்ணியவாறே, போனாள்-அவ்விடம்விட்டுச் சென்றவள், ' இன்று இவன் ஆகம் புல்லேன் எனில்-இன்று நான் இவன் மார்பைத் தழுவகிலேன் என்றால், உயிர் இழப்பென் - என் உயிரை இழந்து விடுவேன்,' என்னா - என்று நினைந்து, பொன் திணி-பொன் அடர்ந்து நெருங்கியுள்ள, சாரல் - ஒரு மலைச்சாரலில் உள்ள, சீத பளிக்கு அறை - குளிர்ச்சியான ஒரு பளிங்குப் பாறையையுடைய, பொதும்பர் - மரஞ் செடிகள் அடர்ந்த ஒரு சோலையுள், புக்காள் - புகுந்தாள்; (அப்பொழுது), பரிதி மேல்பால் சென்றது - சூரியன் மேற்றிசையில் சென்று அத்தமித்தது; செக்கர் வந்து இறுத்தது - அங்குச் செவ்வானம் வந்து சேர்ந்தது. அன்று, ஏ: அசைகள்.

ஆகம் - உடலும் ஆம். உயிர் இழப்பென், என்றது அவ்விரக தாபந் தாங்காது என்பதாம்; ஆகம் புல்லேனெனில் உயிரிழப்பென் என்னா அவனைச் சேரும்... ..நினைந்து போனாள், என இயைத்தும் பொருள்கொள்ளலாம். பளிக்கறை - பளிங்குப் பாறை; பளிங்கு மண்டபம் என்று பொருள் கொண்டாரும் உளர்; அறை - பாறை; ' அகலறைக், காலமன்றியும் மரம் பயன் கொடுத்தலின், காலினுதிர்ந் தன கருங்கனி நாவன் ' (மலைபடு. 133-135. நச். உரை.) பளிக்கறை,

*1068.*; அயோத். சித்திரகூடப்: *11* ; திருமால் நூற்றெட்டுத் திருப் பதிகளுள் ஒன்றான திருவெள்ளறை என்ற தலம் ஒரு வெண்பாறை யில் அமைந்த கோயிலுடைமையால் அப் பெயர் பெற்றமையும் நோக்கற்பாலது. இனி, சூர்ப்பணகையின் ஒருதலைக் காமமாகிய விரகதாபத்தைக் கூறத்தொடங்கு முன், அக்காமத்தைத் தூண்டி வளர்க்கும் பொழுதான சூரியன் அத்தமனத்தையும், செக்க ரையும் இங்குத் தோற்றுவாய் ஆக முன்கூட்டிக் கூறப்பெற்றது என்க. பொதும்பர் - சோலை, அல்லது குறுங்காடு; இது பொதும்பு என்பதின் போலி ; பெரும்பாண் ; *374* ; மணி. *4 : 5.*

பி - ம். 1. நின்றில னிவன் சேரும் நெறியென ; நின்றனனியனைச் சேரும் நெறியினை நினைந்து நெஞ்சின்.

2. ஞகஞ்சேரனெனி.........னென்றோர்.

3. சரளச் சோலைப்பளிக்கறை; சாரற்சோலைப்.

4. கதிரும் மேல்பாற் ; சென்றனன் பருதிமேல்பாற். (71)

## வேறு

## சூர்ப்பணகையின் விரகதாபம் 291—306

291\. அழிந்த சிந்தைய ளாயயர் வாள்வயின்
மொழிந்த காமக் கடுங்கனன் மூண்டதால்
வழிந்த நாகத்தின் வன்றொளை வாளெயிற்
றிழிந்த கார்விட மேறிய தென்னவே.

வழிந்த - மேலே வெளிப்பட்டு வழிந்து பெருகிய, நாகத்தின் - நாகப்பாம்பு என்னும் சர்ப்பத்தின், வன் - வலிய, தொளை - உள் துவாரமுள்ள, வாள் - ஒளிபொருந்திய, எயிற்று - நச்சுப் பல்லி லிருந்து, இழிந்த கார் விடம் - இறங்கிய கரிய விஷம், ஏறியது என்ன - தலைக்கு ஏறியது போல, அழிந்த சிந்தையளாய் - அழிந்து போன மனத்தையுடையவளாய், அயர்வாள் வயின் - சோர்வுற்று வருந்துபவளான சூர்ப்பணகையிடத்து, மொழிந்த - முன் கூறிய, காம கடும் கனல் - காமமாகிய கொடிய நெருப்பு, மூண்டது - மிகுந்து எரியலாயிற்று; ஆல் : ஏ : அசைகள்.

இச் செய்யுள் முதல், சூர்ப்பணகை அடைந்த விரகத்துன்பம் விளக்கப்படுகின்றது. மூண்டதால், என்னவே, சிந்தையளாய், அயர்வாள் என்றும் இயைத்துப் பொருள்கொள்ளலாம். அழிந்த

சிந்தையள் ; ‘ போனதென்னு முணர்வினள் ’ (289) என்றது போல ; இது வடமொழி நடை. நாகத்தின் தொளையுடைய நச்சுப்பல் ; அயோத். தைலமாட்டுப் ; 82 ; முருகு. 148-150. கனலினுங் காமம் கடிய வெம்மையுடைத்தாதலின், காமக்கடுங்கனல் என்னப் பட்டது ; ‘ ஊருளெழுந்த வுருகெழு செந்தீக்கு, நீருட் குளித்து முயலாகும் - நீருட், குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி, ஒளிப் பினுங் காமஞ் சுடும் ’ (நாலடி. 90); ‘ தொடிற் சுடினல்லது காமநோய் போல, விடிற்சுட லாற்றுமோ தீ,’ (குறள். 1159); கண்டரவந்த காம வொள்ளெரி : (குறுந். 305 ;). காமநோய்க்கு விடம் ; 305 ; 750 என்பனவற்றிற் காண்க.

பி - ம். 1. யழிவாள்வயின். 3. வாளெயி (றிழிந்த).
4. எழுந்த கார்விட மேறுவ. (72)

292. தாட கைக்கொடி யாடட மார்பிடை
ஆட வர்க்கர சன்னயி லம்புபோல்
பாட வத்தொழின் மன்மதன் பாய்கணை
ஓட வுட்கி யுயிருளைந் தாளரோ.

தாடகைக் கொடியாள் - தாடகை என்னும் கொடிய அரக்கியின், தட மார்பு இடை - பெரிய மார்பின் இடத்து, ஆடவர்க்கு அரசன் - புருஷோத்தமனை இராமபிரானுடைய, அயில் அம்புபோல் - கூரிய அம்பு சென்று பாய்ந்ததே போல, பாடவம் தொழில் மன்மதன் - திறமை வாய்ந்த காமப் போர்த் தொழிலைச் செய்யும் மன்மதன் (எய்த), பாய் கணை - வேகமாய்ப் பாய்ந்து வந்த மலரம்பு, ஓட - சூர்ப்பணகை மார்பில் தைத்துத் துளைத்து அப்பாற் செல்ல, உட்கி - அதனால் அவள் அஞ்சி, உயிர் உளைந்தாள் - உயிர் வருந்தினாள்- அரோ : அசை.

தாடகை மார்பில் இராமபிரான் அம்பு ஏவிய சிறப்பு ; பால- தாடகைவதைப் : 73 ; குலமுறைகிளத்து ; 26 ; இது, சரித நிகழ்ச்சி யையே உவமையாகக் கூறியது. அயில் அம்பு - அரத்தால் அராவிக் கூராக்கப்பட்ட அம்பும் ஆம். பாடவம் - திறமை அல்லது வல்லமை : 412 ; கிட்கிந்தா. சம்பாதிப் : 7 ; பாடவம் - வல்லமை, களிப்பு, சுகம், பெருமை என்னும் பல பொருளது ஆம். ‘ பாடவம் - மதிப்பு ; என்பது பழையவுரை. உயிருளைதல் - பிராணவஸ்தை. மன்மதன் : மனத்தைக் கலக்கி வருத்துபவன் என்னும் பொரு ளுடைமை இங்குப் பொருந்த அமைந்தது என்பதாம். இராம

பிரான் தாடகைமீது செலுத்திய இராமபாணம் மன்மதன் சூர்ப்ப ணகைமீது செலுத்திய காமபாணத்துக்கு உவமை. ஒன்றுக் கொன்று எதிரிடையான இரு மெய்ப்பாடுகள் ஒரே பயனை விளைத் தற்கு இச்செய்யுள் மேற்கோள். இராமபிரானை எதிர்ந்த ஈரரக்கியருள் ஒருத்தி அவன் அம்பால் இறந்தனள்; மற்றொருத்தி அவனிடம் கொண்ட தகாக் காதலால் (மன்மதன் பாணத்தால்) சிதைந்தனள் என்னும் நயம் நோக்கற்பாலது.

பி-ம். 1. கொடியாடணி மார்பிடை.
2. னழுந்தம்பு போல்.
3. யுணர் வொழிந்தாளரோ. (73)

293. கலையு வாமதி யேகறி யாகவன்
சிலைய மாரனைத் தின்னு நினைப்பினள்
மலைய மாருத மாநெடுங் காலவேல்
உலைய மார்பிடை யூன்றிட வோயுமால்.

கலை உவா மதியே-(சூர்ப்பணகை), பதினாறுகலைகளும் நிறைந்து (அங்குத் தோன்றிய) பூர்ண சந்திரனையே, கறி ஆக - உணவுக்கு வெஞ்சனமான கறியாகக் கொண்டு, வன் சிலைய மாரனை - வலிய கரும்பு வில்லையுடைய மன்மதனை, தின்னும் நினைப்பினள் - உணவாகத் தின்ன எண்ணங் கொண்டவளானாள்; (ஆனால்), மலய மாருதம் ஆம் - மலய மலையிலிருந்து உண்டாகி வீசும் தென்றல் காற்றாகிய, நெடும் காலவேல் - நீண்ட யமனுடைய சூலம், உலைய - வருந்தும்படி, மார்பு இடை ஊன்றிட - தன் மார்பினிடத்து அழுந்தித் தைத்து நிற்க, ஓயும் - அதனால் செயலற்றவளாய் ஓய்ந்து ஒடுங்கினாள். ஆல்: அசை.

உவா: அமாவாசை, பௌர்ணமை இரண்டுக்கும் பெயர்; இங்கு மதி என்றமையால் பௌர்ணமியாயிற்று. கறி: காய் கிழங்கு முதலியவற்றைத் துண்டாக நறுக்கிச் சமைக்கப்படுவது; கடித்துத் தின்னுவதும் ஆம்; கறித்தல்; கறிக்கப்படுவது; 'அரிமா கொடிப் புல் கறிக்குமோ' (நாலடி. 141). கரி என்று கொள்ளின், சான்றுமாம். மாரன் சிலை மென்மையான கரும்பேயெனினும் அதை வில்லாகக் கொண்டு மாரன் காமுகரை வாட்டுகின்றான் ஆதலின், 'வன் சிலைய மாரன்' என்னப்பட்டான். மாரன் - மன்மதன். (பிங்). தென்றல் - யமனுடைய சூலத்திற்கு ஒப்பு. தென்றலும் மதியும் காமுகர்களைத் துன்புறுத்தும் என்பது நூன்மரபு. இதுமுதல் 307 வரை அரக்கி

யின் காமத் துயர்கள் விளக்கப்பெறுகின்றன. அவள் எண்ணங் களும், அவை மாறக் காரணங்களும் அமைக்கப் பெற்றுள்ள சமத்காரத்தை ஓர்க. இந்நூலில் ஆசிரியர், விரகதாபத்தின் விளைவுகளைக் கூறும் இத்துறையைப் பாத்திரங்களின் இயல்பு களுக்கேற்ப அவ்வவ்விடங்களில் வருணித்துச் சொல்லுஞ்சிறப்பு ஆங்காங்கே கண்டு மகிழற்பாலது. ஒன்றைச் செய்யத் துணியும் போது மற்றொரு நிகழ்ச்சி அதனைச் செய்யவொட்டாமல் தடுக்கின்றது என்று கூறுவது ஒரு நயம். இவ்வாறே பின்னும் தொடர்ந்து கூறப் படுவன காண்க. இப்பாடலினால் சூர்ப்பணகை பஞ்சவடிக்கு வந்து இராமபிரானைக் கண்டது ஒரு பௌர்ணமி தினம் என்க.

பி-ம். 1. கலையவாமதி; கலையமாமதி; கலையின் மாமதி; மதியே கறி யாகவும்.

2. சிலையின் மாரனை; சிலைகொண் மாரனைத் தின்னவென் றுன்னுவாள்.

3. மார்பினி லூன்றிட; உலைவின் மார்பகத் தூன்றவுங் கோய் குவாள். (74)

294. அலைக்கு மாழி யடங்கிட வங்கையால்
மலைக்கு லங்களிற் றூர்க்கு மனத்தினள்
நிலைக்கும் வானி னெடுமதி நீணிலா
வலைக்கு நீங்கு மிடுக்கிலண் மாந்துவாள்.

அலைக்கும் - தன்னை வருத்தும், ஆழி - கடல், அடங்கிட - ஓசையின்றி அடங்கிப்போக, அம் கையால் - தனது உள்ளங்கைக ளால், மலை குலங்களின் - மலைக்கூட்டங்களைக் கொண்டு, தூர்க்கும் மனத்தினள் - (அக்கடலைத்) தூர்த்துவிடும் எண்ணங்கொண்டவ ளானாள்; (ஆனால்), வானில் நிலைக்கும் நெடு மதி - ஆகாயத்தில் இரவு முழுவதும் நிலைத்து இருக்கும் பூர்ண சந்திரனுடைய, நீள் நிலா வலைக்கு - நீண்டு பரவியுள்ள நிலாவாகிய வலையினின்று, நீங்கும் - தப்பிச் செல்லும், மிடுக்கு இலள் - வலிமை இல்லாத வளாய், மாந்துவாள் - வருந்தினாள்.

அலைக்கும் ஆழி - அலை வீசும் ஆழியும் ஆம்; அலையோசை காமுகரை வருத்துவனவற்றுள் ஒன்று. நிலவு, வலை வீசியது போலப் பரந்து சூழ்ந்திருந்ததால், நீணிலா வலை என்னப்பட்டது. நிலவுக்கு வருந்துவது; அது காமுகரை நெருப்புப் போல அழற்றி

வருத்துமாதலின் : 'போதச் சொரிந்ததே நீணிலா வென்னும் நெருப்பு' ; (நள. 1. 102). மாந்துதல் - வருந்துதலும் ஆம் ; 'மணிபிரியரவின் மாந்தி'; (அயோந். தைலமாட்டு : 63).

பி-ம். 2. மலைக்குலங்களின் மாற்றவென் றுன்னுவாள்.
3. நிறைமதி நீணிலா.
4. மலைக்கு நீங்குமிடுக்கினள் ; வலைக்கணீங்க ; மலைக்க நீங்கும் ; அலைக்க நீக்குமிடுக்கிலளாழ்குவாள் ; மலைக்கு நீக்குமிடுக் கிலள்.

(75)

295. பூவெ லாம்பொடி யாகவிப் பூமியில்
காவெ லாமொடிப் பேனெனக் காந்துவாள்
சேவ லோடுறை செந்தலை யன்றிலின்
நாவி னுல்வலி யெஞ்ச நடுங்குவாள்.

'பூ எலாம் பொடி ஆக - மலர்கள் யாவும் காய்ந்து பொடியாக உதிரும்படி, இ பூமியில் - இந்தப் பூமியில் உள்ள, கா எலாம் - சோலைகள் அனைத்தையும், ஒடிப்பேன் என - ஒடித்து அழிப்பேன்' என்று, காந்துவாள் - கோபிப்பாள் ; (ஆனால்), சேவலோடு உறை - தன் ஆணுடு சேர்ந்து இருக்கும், செம் தலை அன்றிலின் - சிவந்த தலையையுடைய அன்றில் பறவையின், நாவினுல் - (அதன் மகிழ்ச்சிக்குரிய) நாவின் குரலினுல், வலி எஞ்ச - தன் வலிமை குறைய, நடுங்குவாள் - அஞ்சி உடல் நடுக்கங் கொண்டவளானுள்.

பூக்களைப் பொடியாக்கக் கருதியது, மன்மதன் பூக்களாகிய அம்புகளைக் கொண்டு வருத்துவதால் அவையில்லாமற் செய்ய. அன்றில் : ஒருவகைப் பறவை ; இப்பறவைகள், ஆணும் பெண்ணும் இணை பிரியாதவை ; அப்படிப் பிரியாத அவற்றைக் கண்ட போது பிரிந்து வாடும் மகளிர்க்கு அது பெருந்துயரை விளைக்கும் என்பது நூன் மரபு. அன்றிலைக் கிரௌஞ்ச பக்ஷி என்பர் வடமொழியில். அன்றிலின் தலை சிவப்பு என்பது ; 'நெருப்பினன்ன செந்தலை அன்றில்'; (குறுந். 160) ; தொல். களவு : 21; நச். மேற் ; அன்றில், பால. மிதிலைக் : 68 ; உண்டாட்டு : 28.

பி-ம். 1. பூமியுள் ; பூவினுட்.
2. மொடிப்பெனெனக் ; பொடிப் பெனெனக் ; காந்துமால்.
4. யெஞ்ச நடுங்குமால் ; யெஞ்ச நடுங்குவாள் ; யெஞ்சி நடுங்குவாள் ; யெஞ்சி நடுங்குமால் ; யெஞ்சி நடுங்கினுள் ; வல்லியஞ்சி நடுங்குவாள்.

(76)

296. அணைவி றிங்களை நுங்க வராவினைக்
கொணர்வெ னோடி யெனக்கொதித் துன்னுவாள்
பணையின் மென்முலை மேற்பனி மாருதம்
புணர வாருயிர் வெந்து புழுங்குமால்.

'அணைவு இல் திங்களை - தனக்கு அனுகூலம் இல்லாத சந்திரனை, நுங்க - விழுங்க, அராவினை - இராகு அல்லது கேதுவாகிய பாம்பை, ஓடி கொணர்வென் என - ஓடிப்போய்ப் பிடித்துக்கொண்டு வருவேன்' என்று, கொதித்து - கோபத்தால் கொதிப்படைந்து, உன்னுவாள் - எண்ணுவாள்; (ஆனால்), பணையின் மென் முலை மேல் - தனது பருமையும் மென்மையுமுடைய தனங்களின்மீது, பனி மாருதம் புணர - (அப்பொழுது), குளிர்ந்த காற்று வந்து வீசிப் படிய, ஆருயிர் வெந்து புழுங்கும் - தன் அரிய உயிர் சூடுபட்டு வெந்து வருந்துவாள். ஆல் : அசை.

சந்திரன் காமுகரை வருத்துமாதலின், அணைவில் சந்திரன் என்னப்பட்டது. குளிர்காற்று காமநோயுற்றாரைத் தீப்போல் எரித்து வருத்தும் இயல்பினது; 'தென்றற் புலியே யிரைதேடுதியோ'; பால. கடிமணப் : 7; அக்காற்றையும் இனி, பாம்புக்குக் காற்று உணவு ஆதலால், பாம்பைக் கொணர்ந்தால் அது உண்டுவிடும் என்று கருதி எனலும் ஆம்.

பி - ம். 1. அணவி றிங்களை; அணையி றிங்களை.
4. வெந்து புழுங்குவாள். (77)

297. கைக ளாற்றன கதிரிளங் கொங்கைமேல்
ஐய தண்பனி யள்ளின ளப்பினாள்
மொய்கொ டீயிடை வெந்து முருங்கிய
வெய்ய பாறையில் வெண்ணெய் நிகர்க்குமால்.

(சூர்ப்பணகை தனக்குண்டான காமத்தீயைத் தணித்துக் கொள்ளும் பொருட்டு), தன கதிர் இளம் கொங்கைமேல் - தன்னுடைய ஒளிபொருந்திய இளமையான தனங்களின் மீது, கைகளால் - தன்னிரு கைகளாலும், ஐய தண்பனி - மிகவும் நுட்பமான குளிர்ந்த பனிக்கட்டிகளை, அள்ளினள் அப்பினாள் - அள்ளி எடுத்து அப்பிக்கொண்டாள்; (ஆனால் அது), தீ இடை வெந்து முருங்கிய - தீயிடத்து வெந்து காய்ந்துள்ள, வெய்ய பாறையில் - சூடான ஒரு பாறையின் மேல் வைத்த, வெண்ணெய் நிகர்க்கும் - வெண்ணெயை ஒத்து உருகி அழிந்தது. ஆல் : அசை.

மொய் கொள் தீ, அவள் கொண்ட காமத்தீக்கும், வெய்ய பாறை, அக்காமத்தியால் தாக்குண்ட அவள் தனத்திற்கும், பனி, வெண்ணெய்க்கும் உவமைகள் ஆயின. பனியை வெண்ணெயாக உவமித்தமையால், அதனைப் பனிக்கட்டி எனக் கொள்ளப்பட்டது. ஐய - மென்மையான என்னலும் ஆம். அள்ளினள் : முற்றெச்சம். வெய்ய பாறையில் வெண்ணெய் ; 'ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்...........வெண்ணெ யுணங்கல் போல'; (குறுந். 58 : 3-5). முன் செய்யுளில் பனி மாருதத்தால் வெந்து புழுங்கியவள், உடனே பனி அள்ளி அப்பினள் என்று கூறினது, அவள் மன மயக்க நிலையைக் காட்ட என்க.

பி - ம். 1. கைகளாற்றன்.
2. ஐயமென் குழம்பள்ளின; ளப்பினள்.
3. வெந்து முருகிய.
4. பாறையின் வெண்ணெய் ; நிகர்க்கவே. (78)

298. அளிக்கு மெய்யுயிர் காந்தழ லஞ்சினள்
குளிக்கு நீருங் கொதித்தெழக் கூசுமால்
விளிக்கும் வேலையை வெங்கண னங்கனை
ஒளிக்க லாமிட மாமென வுன்னுமால்.

அளிக்கும் - காக்கப்படவேண்டிய, மெய் - உடலையும், உயிர் - உயிரையும், காந்து - சுட்டெரிக்கின்ற, அழல் - (காம) நெருப்பை, அஞ்சினள் - அஞ்சினவளாகி, குளிக்க - அவ்வெப்பத்தைத் தணிப் பதற்காகத் தான் சென்று குளிப்பாளாக, நீரும் - அந்தத் தண்ணீ ரும், கொதித்து எழ - தன் காமத்தியால் சூடேறிக் கொதித்து மேலே பொங்கி வர, கூசும் - குளிப்பதற்கே அஞ்சிக் கூச்சமடைவாள்; விளிக்கும் வேலையை - ஒலி செய்து தன்னைத் துன்புறுத்தும் கடலை, வெம் கண் அனங்கனை - கொடிய மன்மதனை, ஒளிக்கல் ஆம் இடம் - ஒளித்துவைக்கக் கூடிய இடம், ஆம் என உன்னுவாள் - ஆகும் என்று கருதுவாள்.

உயிர்காந்தழல் ; 299. விளித்தல் - பேரொலி செய்தல் ; 'வளை வாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும் ; (பெரும்பாண். 300). விளிக்கும் என்பதனை முற்றாகவும் கொள்ளலாம். அனங்கன் - மன்மதன் : 232 ; உரை. இச்செய்யுள் காமம் தீயினும் அஞ்சப்படும் என்று கூறுவதாம்: ஒப்பு : 'ஓஓ கடலே, ஊர்தலைக்கொண்டு கனலுங் கடுந் தீயுள், நீர்பெய்தக் காலே சினந்தணியு மற்றிஃதோ, வீரமில் கேள்வ

னுற்இய காமத்தீ, நீருட் புகினுஞ் சுடும்'; (கலி. 144 : 59 - 62); 'நீருட் குளிப்பினும் காமஞ் சுடுமேகுன் றேறி, யொளிப்பினுங் காமஞ் சுடும்'; (நாலடி. 90); இன்னும், கந்த. மாயை நீங்கு. 10; விநாயக இந்திர சாபம். 34 முதலியவற்றைக் காண்க.

பி - ம். 1. அழிக்கு மெய்யுயி ரென்று; அளிக்கு மென்னுயி ரென்று; மெய்யுயிர் கான்றழலஞ்சினள்; மெனதுயிரென்; றழலஞ்சியே.

2. குழிக்கும்நீருங்; கூசுவாள்.

3. வெங்கண ணெங்கணே; விழிக்கும் வேலையிவ்; வேளையில்; வேலையில்வேள்; வேள்விடு மைங்கணே; அநங்கனே.

4. வுன்னுமால். (79)

299. வந்து கார்மழை தோன்றினு மாமணிக்
கந்து காணினுங் கைத்தலங் கூப்புமால்
இந்து காந்தத்தி னீர நெடுங்கலும்
வெந்து காந்த வெதும்புறு மேனியாள்.

இந்து காந்தத்தின் ஈர நெடும் கலும் - சந்திர காந்தம் என்பதான குளிர்ந்த பெருங் கல்லும், வெந்து காந்த - தன்மேல் பட்டதால் சூடுண்டு கருகுமாறு, வெதும்பு உறு மேனியாள் - காமத்தீயால் வெதுப்புற்ற உடலையுடைய சூர்ப்பணகை, கார் மழை வந்து தோன்றினும் - கரிய மேகம் வந்து தன்முன் தென்பட்டாலும், மா மணி கந்து காணினும் - சிறந்த நீல மணியினாலான தறியைக் கண்டாலும், கைதலம் கூப்பும் - தன் கைகளைக் குவித்து வணங்குவாள். ஆல், அசை.

இந்து காந்தம் - சந்திர காந்தம் என்னும் ஒருவகை இரத்தினக்கல்; அதன் மீது நிலவு பட்டால் அது நீர் சுரக்கும் இயல்பினது. மா மணி கந்து - பெரிய நீலமணித் தூண் அல்லது தறி. கைத்தலம் கூப்பியது; அது இராமபிரான் திருமேனியின் நிறம் கொண்டமையால்; அவற்றைக் கண்டதும் இராமபிரானையே நேரில் கண்டதுபோல எண்ணி, அவன் தனக்கு அருள் புரியுமாறு கைகூப்பி வணங்கினாள் என்க. தான் காதலித்த தலைவனது நிறம்போன்றவற்றைக் கண்டு அவனை நேரிற் கண்டது போலக் கருதுதல் மகளிர் இயல்பு; ஒப்பு : 'கரிய மஞ்சினோ டஞ்சன மிவைமுத லதிகங், கரிய காண்டலும் கண்ணினீர் கடல்புகக் கலுழ்வாள்'; சுந்தர : 336; 'நின்ற குன்றத்தினை நோக்கி, நெடுமாலே வா வென்று கூவும்;

'நன்று பெய்யும் மழைகாணில் நாரணன் வந்தானென்றுலும்'; 'கரும் பெரும் மேகங்கள் காணில் கண்ணனென் றேறப் பறக்கும்'; (திருவாய்மொழி : 4 ; 4 ; 9.) "குவலயஞ் சூழ்கடல் காயா மரகதங் கொண்ட னெய்தல், குவளையங் கண்டன்பர் கைவர்" (திருவரங்கத் : 90). இது முதல், 5 செய்யுள்களிற் குறிக்கப்பெறும் மெய்ப்பாடு களுக்கு இலக்கணம் தொல். மெய்ப்பாட். 22-ஆம் சூத்திரத்தில் காண்க.

பி - ம். 1. மழை தோன்றலு ; தோன்றிஞ.

2. கந்து காணினும் ; கூப்புவாள்.

4. வெதுப்புறு மேனியாள், வெதும்பிடு மேனியாள். (80)

300. வாம மாமதி யும்பனி வாடையும்
காம னுந்தனைக் கண்டுண ராவகை
நாம வாளெயிற் றோர்கத நாகமாய்ச்
சேம மால்வரை யின்முழைச் சேருமால்.

வாம மா மதியும் - அழகிய பூர்ண சந்திரனும், பனி வாடையும் - குளிர்ந்த காற்றும், காமனும் - மன்மதனும், தனை கண்டு உணரா வகை - தன்னைக் கண்டறிந்து கொள்ளாதபடி, நாம வாள் எயிற்று - அச்சத்தைத் தரும் கூரிய விஷப் பற்களையுடைய, நாகம் ஆய் - ஒரு நாகப் பாம்பின் வடிவோடு, சேம மால் வரையின் முழை - பாதுகாவலாக உள்ள ஒரு பெரிய மலைக் குகையினுள், சேரும் - சேர்ந்தடைவாள்.

நாகமாய் முழை சேரும் ; அரக்கி, தான் ஒளிய இடம் காணமல், நாகமாய், வரையின் முழைச் சேர்ந்தனள் என்க. நாகமானது ; நாகம் பிடிக்கும் என்று மதிக்கும், உண்டுவிடும் என்று வாடைக்கும், தன்னை எரித்த சிவபிரானுக்குரியது என்று மன்மதனுக்கும் அச்சம் உண்டாக்கவேண்டி. 'நாகம் வாழ் முழை' என்று பாடம் கொள் ளின், 'முன்னமேனியளாய்' (301) என்று பின் கூறுவது பொருந் தாமை காண்க.

பி - ம். 1. வடவாடையும். 2. காமனுமெனைக்.

3. நாம வெள்ளெயிற்றுர்விட ; நாகம்வாழ்.

4. முழை சேர்ந்தனள். (81)

301. அன்ன காலை யழன்மிகுத் தேறவும்
முன்ன மேனிய ளாய்முலை வெந்துக
இன்ன வாசெய்வெ னென்றறி யாதிளம்
பொன்னின் வார்தளி ரிற்புரண் டாளரோ.

அன்ன காலை - அவ்வாறு (சூர்ப்பணகை ஒரு நாகமாய் மலை முழையில் மறைந்து) இருந்த போது, அழல் மிகுத்து ஏறவும் - அங்கும் அக் காமத்தீ மிகுந்து மேலேறவும், (அதனைத் தாங்காது), முன்ன மேனியளாய் - (நாக உருவினின்றும் மாறித்) தன் பழைய வடிவைக் கொண்டவளாகி, முலை வெந்து உக - தனங்கள் வெப்ப முற்று அனல் சொரிய, 'இன்னவா செய்வென் என்று அறியாது - இன்ன வாறு செய்வேன்' என்று தான் அறியாது, பொன்னின் வார் இளம் தளிரில் - பொன் போன்ற நிறமுடைய இளம் தளிர் களின் மீது, புரண்டாள் - விழுந்து புரண்டாள். அரோ : அசை.

பொன்னின் வார் தளிரில் புரண்டாள் : காமத்துயரால் வருந்து வோரைத் தளிர்ப்படுக்கையிற் கிடத்தி வைத்தல் சைத்யோபசாரங் களில் ஒன்று ஆதலின் ; பால. மிதிலைக் : 50 ; 81. தானே தளிர் களைப் பரப்பி அதிற் புரண்டாள் என்க. தளிரிற் புரண்டாள் : தளிர் போலப் புரண்டு வாடினுள் என்னலும் அமையும்; தீயிற் பட்ட தளிர் போலத் தன் காமத்தீயிடைப்பட்டுப் புரண்டு துடித் தாள் என்க.

பி - ம். 1. யழன் மிகுதென்றலும்; யழன் மிகுத்தேறலும்; அழன் மிகுந்தேறலும்; அழன் மிகுதென்றலால்.
2. முன்னின் மும்மடியாய் முலைவெந்துக ; முன்னை... ..வெந்துக ; முன்னை மும்மடியின்முலை ; முன்னை மேனியளாய்.
3. இன்னவாறிதற் கென்ற றியாளிளம் ; றறியாதிளம். (82)

302. வீரன் மேனி வெளிப்பட வெய்தவன்
கார்கொண் மேனியைக் கண்டன ளாமெனச்
சோரும் வெள்குந் துணுக்கெனு மவ்வுருப்
பேருங் காலப் பிணியிறை பேர்கலாள்.

வீரன் மேனி வெளிப்பட - (அப்பொழுது) இரகு வீரனை இராமபிரானுடைய உருவெளித் தோற்றம் எழ, வெய்து - விருப்ப முற்று, அவன் கார்கொள் மேனியை கண்டனள் ஆம் என - அவன் மேகம் போன்ற திருமேனியை நேரிற் கண்டவளே போல, சோரும் -

சோர்வு அடைவாள்; வெள்கும் - வெட்கமடைவாள்; துணுக்கு எனும் - திடுக்கிட்டு நடுங்குவாள்; அ உரு பேரும் கால் - அந்த உருவெளித்தோற்றம் மறைந்தபோது, அ பிணி - தான் கொண்ட அக்காம நோயினின்றும், இறை பேர்கலாள் - சிறிதும் நீங்கமுடியாத வளாய் வருந்தினள்.

வெய்து - விருப்பம்; குறுந் : *165 : 2; 363 : 6*. வெம்மை விருப்பமாதல் போல, அதன் வேறுபாடாகிய வெய்தும் விருப்பமாயிற்று. சினங்கொண்டு, வெப்பமுற்று என்றும் பொருள் கொள்ளலாம். கார் கொள் : கொள், உவம வாசகம். வெள்கியது : உருக் கண்டு நாணமடைந்ததால்.

பி-ம். 1. வெளிப்பட வெய்யவள்; வெய்யதன் வெய்யவன்; வெளிப் படில் வெய்தென.

2. கண்டனனுமென; கார்கொள் மெய்க்குயிர் காண்குவெனுமெனக்.

3. வேர்க்குந் துணுக்குறு மவ்வுரு; துணுக்கெனு : சோரும் வெஃகுர்.

4. பேருங்கால் வெம்பிணியிடைப் பேருமால்; பேருங்காலப் பிணியிடைப்; பேருமால்; பேருவாள். *(83)*

303. ஆகக் கொங்கையி னையனென் றஞ்சன
மேகத் தைத்தழு வும்மவை வெந்தன
போகக் கண்டு புலம்புமப் புன்மையாள்
மோகத் துக்கொர் முடிவுமுண் டாங்கொலோ.

அஞ்சன மேகத்தை - மைபோன்று கருநிறமான மேகத்தை, ஐயன் என்று - இராமபிரான் என்று எண்ணி, ஆக கொங்கையின் தழுவும் - தனது மார்பிலுள்ள கொங்கைகளில் பிடித்து அணைத்துக் கொள்வாள்; அவை வெந்தன போக கண்டு - அம் மேகங்கள், (தன் உடலின் காமத் தீப்பட்டதால்), வெந்து உருகி அழிந்தமை கண்டு, புலம்பும் - வாய்விட்டுப் புலம்பி அழுவாள்; அ புன்மையாள் மோகத்திற்கு - அந்த இழிகுணமுடைய சூர்ப்பணகை கொண்ட மோகத்திற்கு, ஓர் முடிவு உண்டாம் கொலோ - ஒரு முடிவு உண்டாகுமோ? (ஆகாது என்றபடி).

மோகத்திற்கோர் முடிவில்லை என்பது: ஒப்பு : 'ஆசை நோய்க்கும் மருந்து முண்டாங்கொலோ' பால. மிதிலைக்காட்சி : *80*; 'மருந்து பிறிதில்லை யானுற்ற நோய்க்கே' (நற். *80 : 9*). புலம்பல்.

அழுங்கல் அல்லது பிதற்றலும் ஆம். ஓர் : ஓர் என்பதன் விகாரம். 'புன்மையாள் மோகம்' என்று கூறிய நயம் ஓர்க.

பி - ம். 1. கொங்கையின் மகிழ்ந்தஞ்சன.
2. மவை வெர்துகும்.
3. புலம்புறும் புன்மையாள் ; புலம்புறு மப்புல்லியாள்.
4. மோகத்திற்கொர். (84)

304. ஊழி வெங்கன லுற்றன ளொத்துமவ்
வேழை யாவி யிழந்திலள் செங்கையின்
ஆழி யானை யடைந்தவள் பின்னரும்
வாழலா மெனு மாசை மருந்தினே.

ஊழி வெம் கனல் உற்றனள் ஒத்தும் - மோகத்தால் யுகாந்த காலத் தீயிடை விழுந்தவள் போல வருந்தினுளெனினும், செம் கையின் - சிவந்த கைகளையுடைய, ஆழியான் அடைந்து - இராம பிரானைத் தான் பெற்று, அவள் பின்னரும் வாழலாம் எனும் ஆசை மருந்தின் - தான் பின்னும் வாழலாம் என்ற ஆசையாகிய மருந்தைக் கொண்டதினுல் (தான்), ஏழை - அந்த அறிவற்ற சூர்ப்பணகை, ஆவி இழந்திலள் - தன் உயிர் இழக்காதவளாய் இருந்தாள். ஏ, அசை.

செங்கையின் ஆடைந்து, என்று இயைத்தும் பொருள் கொள்ளலாம். காமத் தீயாகிய நோயினின்றும், அவள் உயிர் நீங்காது இருந்ததற்குக் காரணம் தான் இராமபிரானை அடைந்து வாழலாம் என்ற எண்ணம் கொண்டமையே ஆகும். ஆசையே காம நோய்க்கு மருந்தாகி, அவள் உயிரைக் காத்துவந்தது என்பதாம். வாழலா மெனு மாசையால் இறந்திலள் ; ஒப்பு ; பால. கார்முகப். 47. சுந்தர : 499. ஆசை நோயாகவும், அதுவே மருந்தாகவும் அமையும் இடங்களைக் காண்க.

பி - ம். 1. லுற்றவளோதுமவ்.
2. யிறந்திடலெய்திடா ; விறந்தில ளென்பரால்.
3. யடைந்தனள் பின்னையும் ; யடைந்திலள் பின்னையும் ; யணைந் தவள் பின்னரும்.
4. மாசை மனத்தினுள் ; மாசை மனத்தினே. (85)

305. வஞ்ச னைக்கொடு மாயை வளர்க்குமென்
நெஞ்சு புக்கென தாவத்தை நீக்கெனும்
அஞ்ச னக்கிரி யேயரு ளாயெனும்
நஞ்சு நக்கினர் போல நடுங்குவாள்.

நஞ்சு நக்கினர் போல நடுங்குவாள் - (தன் பொய்மையை ஒருவாறு உணர்ந்தவளாகிச் சூர்ப்பணகை), விஷத்தை நாவால் நக்கினவர் போல உடல் நடுக்கமுற்று, (இராமபிரானை உள்ளத்தால் விளித்து), 'அஞ்சனக் கிரியே - மைம்மலை போன்றவனே! அருளாய் எனும் - எனக்கு அருள்புரிவாயாக' என்பாள்; (மற்றும்), வஞ்சனை, கொடு மாயை வளர்க்கும் என் நெஞ்சு புக்கு - வஞ்சனையையும் கொடிய மாயைச் செயல்களையும் வளர்க்கின்ற என் நெஞ்சினுள் நீ புகுந்து, எனது ஆவத்தை நீக்கு எனும் - எனக்கு உண்டான ஆபத்தைப் போக்கியருள்வாயாக' என்பாள்.

இச்செய்யுள், சூர்ப்பணகை தான் மாயவேடம் பூண்டு வந்தமை முதலிய தன் குற்றங்களை உணர்ந்து, அவ்வாறிருந்தும் இராமபிரானின் அருளை வேண்டியது. இராமபிரானுக்கு அஞ்சனக்கிரி; 25; அயோ. தைலமாட்டுப் : 52; அஞ்சனக்கிரி - மை போன்ற கரு நிற மலை; அஞ்சனம் - கருமை (பிங்).

பி - ம். 1. வஞ்சனைக் கொடுமை வளர்க்குமென்; வஞ்சகக்கொடுமை.
2. யெனதாபத்தை; புக்கினை தாபத்தை.
4. நஞ்ச நக்கினள்போல; நஞ்சை நக்கினள் போல. (86)

306. காவி யோகய லோவெனுங் கண்ணிணைத்
தேவி யோதிரு மங்கையிற் செவ்வியாள்
பாவி யேனையும் பார்க்குங்கொ லோவெனும்
ஆவி யோயினு மாசையி னோய்விலாள்.

ஆவி ஓயினும் ஆசையின் ஓய்வு இலாள் - தன் உயிர் ஓய்ந்து அழிந்து போவதானாலும், தான் அவ் விராமபிரான்பாற் கொண்ட ஆசையின் ஒழிவை அடையாத அந்தச் சூர்ப்பணகை, 'காவியோ - நீலமலரோ, கயலோ - அல்லது கயல் மீனோ, எனும் - என்று சொல்லத்தக்க, கண் இணை - இரு கண்களையுடைய, தேவியோ - அவன் மனைவியோ, திருமங்கையில் செவ்வியாள் - இலக்குமி தேவியைவிட அழகுடையவளாய் இருக்கிறாள்; (இப்படியிருக்க), பாவியேனையும் - பாவியாகிய என்னையும், பார்க்குங்கொலோ - அவன் கண்ணெடுத்துப் பார்ப்பானோ?' எனும் - என்று சொல்லி வருந்துவாள்.

கண்ணுக்குக் காவியுங் கயலும் உவமை : உவமான சங்கிரகம். ஆவி யோயினு மாசை யருமை. ஒப்பு : 'பூவின்வாய் வாளி புகுந்த வழியேயென், ஆவியார் போனாலும் மவ்வழியே - பாவியேன், ஆசை போகாதென் றழிந்தா ளணியாழின், ஓசைபோற் சொல்லா ளுயிர்த்து' (நள. 1 : 96.) ; 'மூர்க்கன் முடித்தலை, அற்ற போதன்றி யாசையரு னென்றான்'; (உயுத்த. அங்கதன் றூது : 43) திருமங்கையில் - திரு மங்கை போல என ஒப்புப் பொருளாகவும் கொள்ளலாம். பாவியேனை யும் - (விகார ரூபங்கொண்ட) பாவியாகிய என்னையும் ; உம்மை, இழிவு சிறப்பு. பார்க்குங் கொலோ ; கொல் ஐயப் பொருளது. ஓ : எதிர்மறை.

பி - ம். 2. மங்கையிற் சீரியள்.

3. பாவியென்றனைப் பார்க்குங்கொலென்றெணும் ; பாவியே னெனைப் ; பாவி யெங்களைப்.

4. ஆசையை யோய்விலாள் ; ஆசைக ளோய்விலாள். (87)

இதன்பின் சில பிரதிகளிலும், சில அச்சுப் புத்தகங்களிலும் அடியிற்காணும் ஒரு பாடல் அதிகமாக உள்ளது. இது சிறந்த சுவடிகளிலும் சிறந்த பழைய அச்சுப் பிரதிகளிலும் இல்லை.

மாண்ட கற்புடை யாண்மலர் மார்பகம்
ஆண்டி ருக்குநல் லாண்மக னென்னுமால்
வேண்ட கிற்பின் னல்வர மெய்யிடைத்
தீண்ட கிற்பதன் றேதெறுங் கர்மமே.

சூரியோதயம்

307. ஆன்ற காத லஃதுற வெய்துழி
மூன்று லோகமு மூடு மரக்கராம்
ஏன்ற காரிரு ணீக்க விராகவன்
தோன்றி னானென வெய்யவன் றோன்றினன்.

ஆன்ற காதல் அஃது - மிகுந்த காதலான அத் துன்பத்தை, உற எய்துழி - அச் சூர்ப்பணகை மிகுதியும் அடைந்து வருந்தும் நிலையில், மூன்று லோகமும் மூடும் - சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும் மூவுலகங்களிலும் மூடிக் கவிந்து கொண்ட, அரக்கர் ஆம் - இராக் கதர்களாகிய, ஏன்ற கார் இருள் - எதிர் கொண்ட கரிய இருட்டை, நீக்க - போக்க, இராகவன் தோன்றினான் என - இராமபிரான்

அவதரித்ததே போல, வெய்யவன் தோன்றினான் - சூரியன் உதய மானான்.

எய்துழி, தோன்றினான் என இயைக்க. இருளுக்கு அரக்கரும், அதனைப் போக்கும் சூரியனுக்கு இராகவனும் உவமைகள் ; 389. 291-ஆம் செய்யுளிலிருந்து இதுவரை, அரக்கி இரவில் பட்ட காமத்துன்பம் விரித்துரைக்கப்பெற்றது. இவ்வனுபவம் அரக்கி யாகிய அவள் இயல்புக் கேற்றவாறு அமைத்துக் காட்டிய திறம் நோக்கி யின்புறத்தக்கது. சில சுவடிகளில இச் செய்யுளுடன் சூர்ப்பணகைப் படலம் முற்றும் ; மேல் உள்ளது, மூக்கரி படலம்.

பி - ம். 1. காதலஃதுற ; காதலஃதுறும் வெய்துழி ; ஆன்ற காலத்தவள்.

(88)

சூர்ப்பணகை பிராட்டியைப்பற்றத் தொடர, இலக்குவன் அவளை அங்க பங்கஞ் செய்தது 308—313

308. விடியல் காண்டலு மாண்டுத்தன் னுயிர்கண்ட வெய்யாள்
படியி லாண்மருங் குளளெனி லெனையவன் பாரான்
கடிதி னோடினெ னெடுத்தொல்லைக் கரந்தவள் காதல்
வடிவி னானுடன் வாழ்வதே மதியென மதியா,

விடியல் காண்டலும் - பொழுது விடிந்ததும், ஆண்டு தன் உயிர் கண்ட வெய்யாள் - அப்பொழுது தன் உயிர் வரக் கண்ட கொடியவளான சூர்ப்பணகை, 'படி இலாள் - ஒப்பில்லாதவளான (அவன்) தேவி, மருங்கு உளள் எனில் - அவன் அருகே இருப்பாள் ஆனால், அவன் எனை பாரான் - அவன் என்னைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டான் ; (ஆதலின்), கடிதின் ஓடினென் - விரைவில் யான் ஓடி, எடுத்து - அவளை எடுத்துக்கொண்டு போய், ஒல்லை கரந்து - விரைவில் எங்கேனும் ஒளித்து வைத்துவிட்டு, (பின்), காதல் அவள் வடிவில் - அவன் காதலுக்கு இடமான அவளுடைய உருவில், நான் உடன் வாழ்வதே - நான் அவனுடன் சேர்ந்து வாழ்வதே, மதி என - அறிவுடைமையாகும்' என்று, மதியா - தீர்மானித்து,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய்த் தொடர்ந்து அதி லுள்ள நோக்கினள் எனும் வினைமுடிவு கொள்ளும். ஆண்டுத் தன் உயிர்கண்ட வெய்யாள் என்றமையால், இரவில் அச் சூர்ப்பணகை காமமேலீட்டால் தன் உயிர் நீங்கியதென்னும் நிலையில் உணர் வற்றுக் கிடந்தாள் என்பது பெறப்படும். படி - ஒப்பு ; 'படி

யுரைத் தெடுத்துக் காட்டும் படித்தன்று'; (சுந்தர : 527). 'கரந்து - வயிற்றிடை ஒளித்துத் தின்று என்பது பொருள்,' என்பது பழைய உரை. சூர்ப்பணகை காமரூபிணி ஆதலால், பிராட்டியின் வடிவில் இராமபிரானுடன் இருந்து வாழத் தீர்மானித்தாள்; (காமரூபிணி - இச்சைப்பட்ட உருவை எடுத்துக் கொள்ளும் சித்தி பெற்றவள்). பிராட்டியை எடுத்து அப்புறப்படுத்திவிட்டுத் தான் அவளுருவங்கொண்டு இராமபிரானுடன் வாழத் துணிந்தனள் என்க.

பி - ம். 1. காணத்தன் னுயிர்கண்ட வெவ்வினைக் கொடியாள்; காண்டலி னுண்டு; காண்டவினீண்டு.

2. மருங்குளளென; மருங்குளளெனில்; வடிவிலா மருங்காளுள ளெனில்; வடிமருங்குலாளுள ளெனிலவன் வரானவனைக்.

3. ஞேடி முன்னெடுத்; கரந்தபின் காதல்.

4. காதல் வடிவினுலுடன்; வாழ்வதே வாழ்வென; மதியென வந்தாள். (39)

309. வந்து நோக்கினள் வள்ளல்போ யொருமணித் தடத்தில்
சந்தி நோக்கின னிருந்தது கண்டன டம்பி
இந்து நோக்கிய நுதலியைக் காத்தய லிருண்ட
கந்த நோக்கிய சோலையி லிருந்தது காணுள்.

வந்து நோக்கினள் - இராமபிரான் முதலினோர் இருந்த இடத்தில் வந்து பார்த்தாள்; (அப்போது), வள்ளல் - இராமபிரான், போய் - அவ்விடத்தினின்று அகன்று, ஒரு மணி தடத்தில் - ஒரு அழகிய நீர்த்துறையில், சந்தி நோக்கினன் இருந்தது கண்டனள் - சந்தியாவந்தனச் செயலில் ஈடுபட்டிருந்தமையைப் பார்த்தாள்; தம்பி - (இராமபிரானுடைய) தம்பியாகிய இலக்குவன், இந்து நோக்கிய நுதலியை - பிறைச் சந்திரனை ஒத்த நெற்றியையுடைய பிராட்டியை, காத்து - பாதுகாத்துக் கொண்டு, அயல் - அருகே, கந்தம் நோக்கிய இருண்ட சோலையில் - நறுமணம் மேல் நோக்கி வீசப்பெற்ற, இருள் போல் அடர்ந்த சோலையில், இருந்தது காணுள் - இருந்ததை அவள் காணவில்லை.

பின், 332-இல், 'நின்றந்த நதியகத்து நிறை தவத்தின் குறை முடித்து,' எனக் கூறப்பெறுவதாலும், இராமபிரான் தவச்சாலை, கோதாவரி நதிக்கரையில் பஞ்சவடிக்கு அருகில் இருந்தது என்று

அறியப்பெறுவதாலும் (226), இராமபிரான் சந்தி நோக்கியிருந்த மணித்தடம், கோதாவரி நதிக்கரையில் உள்ள ஒரு நீர்த்துறை எனக் கொள்ளற்பாலதாம். இந்து நோக்கிய நுதலி: நோக்கிய, உவம வாசகம். இனி, சந்திரனும் பார்த்து வியக்கும்படியான அழகிய நெற்றியையுடைய பிராட்டி எனலும் ஒன்றும். இந்து, இங்கு எட்டாம் பிறை. இராமபிரானை வள்ளல் என்றது - அப்பெருமான் யாவர்மாட்டும் வரையறையின்றி இன்னருள் புரியுங் கடப்பாடுடையவன் ஆதலின்; இராமபிரானை வள்ளல் என்ற பெயராலேயே பெரும்பாலும் இந்நூல் வழங்கும். சந்தி என்பது ஸந்தியா என்னும் வடசொல்லின் திரிபு. இது, இரவும் பகலும் கூடும் காலை மாலைப் போதுகளைக் குறிக்கும்; இங்கு, கால ஆகுபெயராய் அக்காலங்களில் செய்யும் கடன்களைக் குறித்து நின்றது. காணாள்: சோலை அடர்ந்து இருண்டிருந்தமையாலும், இலக்குவன் தனியிடத்தே ஒதுங்கி யிருந்தமையாலும் அவள் காணாள் ஆயினள்.

பி - ம். 1. மணித்தடத்தான்.

2. சந்தி நோக்கியே யிருந்தது. (90)

310 தனியி ருந்தனள் சமைந்ததென் கருத்தெனத் தாழ்வுற்
றினியி ருந்தெனக் கெண்ணுவ தில்லென வெண்ணத்
துனியி ருந்தவன் மனத்தின டோகையைத் தொடர்ந்தாள்
கனியி ரும்பொழில் காத்தய லிருந்தவன் கண்டான்.

'தனி இருந்தனள் - இப்போது இவள் தனியே இருந்தவள் ஆயினாள்; என் கருத்து சமைந்தது - என் எண்ணம் நிறைவேறியது;' என - என்றும், 'இனி தாழ்வு உற்று இருந்து - இனிமேல் நான் தாமதமடைந்து இருந்து, எனக்கு எண்ணுவது இல் - எனக்கு யோசிக்க வேண்டிய காரியமும் வேறு இல்லை,' என - என்றும், எண்ண - எண்ணித் தீர்மானித்து, துனி இருந்த வன் மனத்தினள் - (அப்பிராட்டி பால்) வெறுப்புக் கொண்டிருந்த கொடிய மனத்தையுடைய அச்சூர்ப்பணகை, தோகையைத் தொடர்ந்தாள் - மயில் போன்ற சாயலையுடைய அப்பிராட்டியைப் (பற்றிக்கொண்டு போக) அவளை நாடிச் சென்றாள்; கனி, இரும் பொழில் காத்து - கனிகள் தரும் அப்பெரிய சோலையில் இருந்து காவல் செய்து கொண்டு, அயல் இருந்தவன் - பக்கத்தில் இருந்த இலக்குவன், கண்டான் - அதனைக் கண்டான்.

சமைந்தது என்றது, தன் காரியம் கை கூடுவது திண்ணம் என்ற உறுதியால் கூறிய காலவழுவமைதி. பிராட்டிபால் சூர்ப்பணகை வெறுப்புற்றது; பிராட்டியிருப்பதால் இராமபிரான் தன்னை நாடவில்லை என்று கருதியதால்; 'படியிலாள் மருங்குளளெனில் எனையவன் பாரான்' என்று முன் (308) கூறியதை நோக்குக.

பி-ம். 1. சிந்தனை தாழ்வுற. 2. தில்லென வெண்ணித்.
3. வன்மனத்தவ டோகையைத். (91)

311. நில்ல டியெனக் கடுகினன் பெண்ணென நினைந்தான்
வில்லெ டாதவள் வீங்கெரி யாமென விரிந்த
சில்ல லோதியைச் சிக்குறச் செங்கையாற் பற்றி
ஒல்லை யீர்த்துதைத் தொளிகிளர் சுற்றுவா ளுருவி,

(அதனைக் கண்ட இலக்குவன்), 'அடி நில் என - அடீ! நில்' என்று அதட்டி, கடுகினன் - விரைந்து வந்தான்; பெண் என நினைந்தான் - (கேடு செய்ய வந்த அவள்) ஒரு பெண் ஆயிற்றே என்று எண்ணி, வில் எடாது - தன் வில்லை எடுக்காமல், அவள் - அந்தச் சூர்ப்பணகையின், வீங்கு எரி ஆம் என விரிந்த - மிகுந்து எழுகின்ற நெருப்பு என்று சொல்லும்படி பரந்து விளங்கிய, சில்லல் ஓதியை - சிறு கூந்தலை, செங்கையால் சிக்கு உற பற்றி - தன் சிவந்த கைகளில் சிக்கிக்கொள்ளுமாறு பற்றிக் கொண்டு, ஒல்லை - விரைவில், ஈர்த்து - பிடித்து இழுத்து, உதைத்து - அவளைத் தன் காலால் உதைத்துத் தள்ளி, ஒளி கிளர் சுற்றுவாள் உருவி - ஒளி விளங்கும் தன் உடைவாளை உருவி எடுத்து,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாகிப் 'புரிகுழல் விட்டான்' என்னும் வினைகொண்டு முடிவு பெறும். பெண்ணென நினைந்தது; இராமபிரான் தாடகையைப் பெண்ணென நினைந்தது போல; பால. தாடகைவதைப்: 54. சில்லல், அல் விகுதி. சில்லோதி - வண்டுகளின் அநுகரண ஓசையைப் பெற்ற கூந்தல், என்றும் கூறுவர். சுற்றுவாள் - ஆடையில் செருகி வைத்திருக்கும் சிறுவாள்; சுற்று - ஆடை; சுற்றப்பட்டது என்னும் பொருளில் ஆடையைக் குறித்தது; 'சுரிகை நுழைந்த சுற்று வீங்கு செறிவுடை' (பெரும்பாண். 73; முல்லைப். 46-47). இதனைக் குற்றுவாள் என்றும் கூறுவர்; உடைவாள் என்ற வழக்கையும் ஓர்க. வில் எடாது - என்றமையால், அவள் பெண்பாலாதலின் அவளைக் கொல்ல விருப்பமின்றி என்பது பெறப்படும். இலக்குவன்,

அயோமுகி இறத்தும் அவனைக் கொல்லாது அவள் நாசி செவிகளை மட்டும் துண்டித்த செய்கை இங்கு நோக்கத்தக்கது ; 1109 ; இலக்குவன் சூர்ப்பணகையை உதைத்த செய்தி, 327-லும் காண்க இலக்குவன் கண்ட சூர்ப்பணகை தன் சுய உருவில் இருந்தனள் என்க.

பி-ம். 1. நில்லடஇயென. 2. வில்லெடாதவன்.

3 லோதியைச் செங்கையிற் றிருகுறப்பற்றி; செங்கையாற் றிருகுறப் ; சிக்கெனப்பற்றி ; சிக்கவேபற்றி.

4. ஒல்லையீர்த்துவைத் தொளிகிளர் ; ஒல்லையிலுதைத் தொளிகெழு சுற்றுவாள் ; ஒல்லையீர்த்துதைத் தடித்தபின் னுருத்து வாளுருவி; வல்லை யீர்த்துதைத் தொளிகெழு. (92)

312. ஊக்கித் தாங்கிவிண் படர்வெனென் றுருத்தெழு வாளை
நூக்கி நொய்தினில் வெய்திழை யேலென நுவலா
மூக்குங் காதும்வெம் முரண்முலைக் கண்களு முறையால்
போக்கிப் போக்கிய சினத்தொடும் புரிகுழல் விட்டான்.

ஊக்கி - முயன்று, தாங்கி - இவனையும் ஏந்தி எடுத்துக்கொண்டு, விண் படர்வென் என்று - ஆகாய மார்க்கம் சென்றிடுவேன் என்று எண்ணி, உருத்து எழுவாளை - கோபித்து மேற்கிளம்பத் தொடங்கிய அச்சூர்ப்பணகையை, நொய்தினில் நூக்கி - (இலக்குவன்) எளிதிற் கீழே உந்தித் தள்ளி, 'வெய்து இழையேல் என நுவலா - இப்படிக் கொடுந் தொழிலைச் செய்யாதே' என்று கூறி, மூக்கும் - அவளுடைய மூக்கையும், காதும் - செவிகளையும், வெம் முரண் முலைக் கண்களும் - பயங்கரமாக நிலைமை மாறுபட்டு விளங்கிய முலைகளின் காம்புகளையும், முறையால் போக்கி - ஒன்றன்பின் ஒன்றாய் வரிசையாய் அறுத்து எறிந்து, போக்கிய சினத்தொடும் - அதனோடு தணிந்த கோபத்தோடு (அதாவது கோபம் தணிந்து), புரி குழல் விட்டான் - முறுக்கிப் பிடித்திருந்த அவள் கூந்தலை விட்டான்.

மூக்கும் காதும் அறுத்தது - அவளுக்கு அவலக்ஷணம் உண்டாக்க : முலைக் கண்கள் அறுத்தது அவள் பெண்மைக்குக் குறைவாக்க ; 'முலையிரண்டு, மில்லாதாள் பெண்மை காமுற் றற்று.' (குறள் : 402) ; 'காதிரண்டு மில்லாதா ளேக்கழுத்தஞ் செய்தலும்' (சிறு பஞ்சமூலம். 5). இனி, இங்கு இளைய பெருமான் சூர்ப்பணகையின் மேல்வாயும் மேலுதட்டையும் கூட அறுத்து விட்டான் என்பது,

356-ம் செய்யுளால் விளங்குவது காண்க. இலக்குவன் சூர்ப்ப ணகை மூக்கு, காது, முலைக்கண் இவற்றைக் கொய்தான் என்றே பாகவதபுராணம், (9 - 9 : 45) கூறும். வான்மீகம், அத்யாத்மிக ராமா யணங்களும், கூர்மபுராணமும் அவளுடைய மூக்கும் காதுகளை மட்டுமே கொய்தான் எனக் கூறுகின்றன. உதடுகளையும் அரிந்தா னென்று மகாபாரதம் கூறும். இங்குச் சூர்ப்பணகையின் உறுப்புக் களை அரிந்தது போலவே, இலக்குவன் அயோமுகிக்கும் செய்ததைச் (1109) காண்க. "பர்ணசாலைக்கு வந்த சூர்ப்பணகை இராமனை நோக்கி," நீ தவக்கோலத்தில் மனைவியோடு இருப்பது யாது பற்றி? க்ஷத்திரியரைப் போல் வில்லும் அம்புங் கொண்டது எதற்கு' என்று கேட்க, அதற்கு இராமபிரான் அவளது வஞ்சனை அறியாது, தான் காட்டிற்கு வந்த வரலாற்றை உள்ளவாறு கூறினான்; பிறகு இராமபிரான் அவள் கருத்தை ஒருவாறு உட்கொண்டு, பரிகாசந் தோன்ற, 'நான் மனைவியொடு கூடினவனாய் இருக்கிறேன்; இதோ இங்கே யுள்ளவன் தனியனாய், இளைஞனாய், அழகுடையவனாய் இருக்கிறான். அவனைக் கேட்பாயாக' என்றனன். அவ்வாறே சூர்ப்பணகை இலக்குவனை அணுகித் தன்னை அங்கீகரிக்குமாறு கேட்க, அவனும் பரிகாசமாகவே, 'நான் இராமனுக்குத் தாஸன், தாஸனை மணப்பதில் உனக்குப் பெருமையில்லை; இராமனையே, உன்னைத் தன் இளையாளாக மணந்து கொள்ளக் கேட்டுக்கொள்' என்றான். அப்பால் சூர்ப்பணகை இராமபிரானை வற்புறுத்திப் பார்த்தும் முடியாமல் ஆத்திரம் மேலிட்டுச் சீதை மேற்பாய்ந்து அவளைத் தின்ன யத்தனித்தாள். இதனைக் கண்ட இலக்குவன் இராமபிரான் உத்தரவின்படி அவளது மூக்கையும் காதுகளையும் போக்கினான்" என்று இவ்வரலாற்றை வான்மீகம் கூறும்.

பி-ம். 1. ஊக்கித்தாக்கி; ஊக்கித்தோக்கி; ஊக்கித் தோங்கி; படர்வெம்.

2. நோக்கியாங்கண் ஞெய்திழையேல்;

3. காதொடு முகிழ்முலை; காதுடன் முரண்முலை முழுவதும் முறையால்; மூக்குங்காதும் புணர்முலைக் கண்களும்: முகிண் முலைக் கண்களும்.

4. பொங்கிய சினத்தொடும்; போக்கப் பொங்கிய சினத் தொடும்.

(93)

**313.** அக்க ணத்தவள் வாய்திறந் தரற்றிய வமலை
திக்க னைத்தினுஞ் சென்றது தேவர்தஞ் செவியும்
புக்க துற்றது புகல்வதென் மூக்கெனும் புழையூ
டுக்க சோரியி னீரமுற் றுருகிய துலகம்.

அ கணத்து - அந் நேரத்திலே, அவள் - அந்தச் சூர்ப்பணகை, வாய் திறந்து அரற்றிய அமலை - வாயைத் திறந்துகொண்டு பெரு முழக்கத்துடன் கதறிய ஓசை, திக்கு அனைத்தினும் சென்றது - எட்டுத் திக்குகளிலும் சென்று பரவியது; தேவர்தம் செவியும் புக்கது - தேவர்களுடைய செவிகளிலும் (அவ்வோசை) புகுந்தது; உற்றது புகல்வது என் - அங்கு நிகழ்ந்ததைச் சொல்ல வேண்டியது யாது? மூக்கு எனும் புழை ஊடு - அவளுடைய மூக்கென்று சொல்லும் துவாரங்களின் வழியே, உக்க - வழிந்து சொரிந்த, சோரியின் - இரத்தத்தினால், ஈரம் உற்று - ஈரம் படிந்து, உலகம் முழுவதும் உருகியது - உலகம் முழுவதும் கரைந்து நிலை தளர்ந்தது.

தேவர்கள் செவியும் என்றதில் உம்மை, மற்ற இவ்வுலகில் உள்ளோர் செவிகளைத் தழுவி நின்றதோடு, வெகு தொலைவில் இவ்வுலகுக்கும் அப்பாலுள்ள வானோர் செவிகளிலும் புகுந்தது என்ற ஒலியின் மிகுதியைக் குறிப்பிட்டபடியும் ஆம். மூக்கெனும் புழை : மூக்கு அறுபட்டுப் போனதால், அங்கு மூக்கு என்னும் உறுப்பு இன்றி இரு புழைகளே இருந்தன என்பதைச் சுட்டிக் காட்டியது என்க. உருகியது, அவ்விரத்தத்தின் வெம்மையால்.

பி-ம். 1. தரற்றிய வோதை.
2. திக்கனைத்தினுந் தனிநின்ற தேவர்தஞ் செவியும்.
3. புக்கதப்புறம்; புக்கடைந்தது.
4. சோரியின் நீரம்.

(94)

**314.** கொலைது மித்துயர் கொடுங்கதிர் வாளினக் கொடியாள்
முலைது மித்துயர் மூக்கினை நீக்கிய முறைமை
மலைது மித்தென விராவணன் மணியுடை மகுடத்
தலைது மித்தற்கு நாட்கொண்ட தொத்ததோர் தன்மை.

கொலை துமித்து - கொல்லுவதை நீக்கி, உயர் கதிர் கொடும் வாளின் - சிறந்த ஒளியுள்ள கொடிய உடைவாளால், அ கொடியாள் - அக்கொடிய சூர்ப்பணகையின், முலை துமித்து - கொங்கைகளை அறுத்து, உயர் மூக்கினை நீக்கிய - அவளது உயர்ந்து விளங்கிய

மூக்கையும் போக்கிய, முறைமை - செயல், மலை துமித்து என - மலையின் சிகரங்களைத் துண்டித்ததுபோல, இராவணன் மணி உடை மகுடம் - இராவணனுடைய இரத்தினங்கள் பதித்துள்ள கிரீடங்களையுடைய, தலை துமித்தற்கு - பத்துக் தலைகளையும் துண்டிப்பதற்கு, நாள் கொண்டதோர் தன்மை ஒத்தது - ஆரம்பச் சடங்கு செய்யும் முகூர்த்தத்தைச் செய்தது ஒத்து இருந்தது.

துமித்தல் - விலக்குதல்; கலி. 116 : 5; கொலை துமித்துயர் கொடுங்கதிர்வாள் என இயைத்து வாளுக்குச் சிறப்பாக்கலும் ஒன்றும். சூர்ப்பணகையின் மூக்கையும், முலைகளையும் துமித்தது, இராவணனுடைய தலைகளைத் துமிக்க முதலில் ஆரம்பவிழாக் கொண்டாடியது போலாகும். நாட்கொள்ளுதல் - குறிப்பிட்ட நன்னாளில் தொழில் தொடங்குதல்; சீவக. 448- ந. உரை; பு - வெ. 38, 39. தாடகையை இராமபிரான் கொன்றவிடத்தும், இவ்வாறே கூறப்பெற்றமை காண்க; பால. தாடகைவதைப். 75.

பி - ம். 1. கொலை துமித்தெழுங்; வாளிலக் கொடியாள்.
2. நீக்கிய மூத்தம்; நீக்கலுமுந்தி; நீக்கலின் முந்தி; நீக்கி முகுத்தம்
3. மணி முடிமகுடத். 4. நாட்செய லொத்ததோர். (95)

315. அதிர மாநிலத் தடிபதைத் தரற்றிய வரக்கி
கதிர்கொள் காலவேற் கரன்முத னிருதர்வெங் கதப்போர்
எதிரி லாதவ ரிறுதியி னிமித்தமா யெழுந்தாண்
டுதிர மாரிபெய் கார்நிற மேகமொத் துயர்ந்தாள்.

அதிர - அதிர்ச்சி உண்டாக, மா நிலத்து - பெரிய தரையில், அடி பதைத்து - தனக்குண்டான நோவினால் தன் அடிகளைப் பதைப்புடன் எடுத்து வைத்து, அரற்றிய - வாய்விட்டுக் கதறிய, அரக்கி - இராக்கதியாகிய சூர்ப்பணகை, கால - யமன் போன்ற, கதிர் கொள் வேல் - ஒளி கொண்ட வேலேந்திய, கரன் முதல் - கரனை முதல்வனாகக் கொண்டவர்களும், வெம் கத போர் எதிர் இலாதவர் - கொடிய போரில் தமக்கு எதிர் ஒருவர் இல்லாதவர்களுமான, நிருதர் - அரக்கர்களுடைய, இறுதியின் நிமித்தமாய் - அழிவின் பொருட்டு, எழுந்து ஆண்டு - எழுந்து அங்கு உதிர மாரி பெய் - இரத்தமழை பொழிகின்ற, கார் நிறமேகம் ஒத்து - கரிய நிற மேகத்தை ஒத்தவளாகி, உயர்ந்தாள் - (ஊக்கத்துடன்) நிமிர்ந்து நின்றாள்.

கரன் முதலிய அரக்கர்களுடைய முடிவை முன் கூட்டி அறிவிக்கும் உற்பாதம் போல, உதிர மாரி பெய்யும் மேகத்தை ஒத்து, சூர்ப்பணகை அவ்வரக்கர் இருக்குமிடம் நோக்கி எழுந்தாள் என்க. சூர்ப்பணகை உருவம் - கருமேகத்திற்கும், அவள் யாக்கையிலிருந்து ஒழுகும் இரத்தப் பெருக்கு உதிரமாரிக்கும் உவமைகள். மேகம் உதிரமாரி பெய்தல் வரும் தீமைக்கு அறிகுறி ; 431 ; வி. பா. சூது போர்ச் ; 259. நிமித்தம் - தீய சகுனமும் ஆம். இங்குச் சூர்ப்பணகையை, 'உதிர மாரிபெய் கார்நிற மேகமொத் துயர்ந்தாள்' என்றமை போலவே வான்மீகமும் கூறும். ஒரு சுவடியில் இதனோடு சூர்ப்பணகைப் படலம் முடியும்.

பி - ம். 1. நிலத்திடை புரண்டரற்றிய வரக்கி.

2. நிருதர் தங்கதப் போர் ; காலவெங்கரன் முதனிருதர் தங்கதப் போர் ; கனப்போர்.

3. நிமித்தமா வெழுந்தாண்.

4. டுதிரமாரி, டுதிரவாரிபோய்க்.

(96)

316. உயரும் விண்ணிடை மண்ணிடை விழுங்கிடந் துளைக்கும்
அயருங் கைகுலைத் தலமரு மாருயிர் சோரும்
பெயரும் பெண்பிறந் தியான்பட்ட பழியெனப் பிதற்றும்
துயரு மஞ்சிமுன் றொடர்ந்திலாத் தொல்குடிப் பிறந்தாள்.

துயரும் - துன்பமென்ற ஒன்றும், அஞ்சி - பயந்து, முன் தொடர்ந்திலா - இதற்கு முன் ஒரு போதும் அணுகாத, தொல் குடி பிறந்தாள் - பழமையான அரக்கர் குலத்தில் பிறந்தவளான அச் சூர்ப்பணகை, விண் இடை உயரும் - (தனக்குண்டான துன்பம் தாங்காமல்), வானிடத்தே உயர்ந்து எழுவாள் ; மண் இடை விழும் - தரைமீது விழுவாள் ; கிடந்து உளைக்கும் - தரையில் விழுந்தபடியே கிடந்து ஊளையிடுவாள் ; அயரும் - தளர்ச்சியடைவாள் ; கை குலைத்து அலமரும் - கைகளைப் பிசைந்து கொண்டு மனச்சோர்வுறுவாள் ; ஆர் உயிர் சோரும் - தன் அரிய உயிர் சோர்ந்து மூர்ச்சையடைவாள் ; பெயரும் - அம் மூர்ச்சை தெளிந்து பின் எழுந்து செல்வாள் ; 'பெண் பிறந்து யான் பட்ட பழி என பிதற்றும் - பெண்ணாய்ப் பிறந்து யான் பட்ட நிந்தனை இது' எனப் பிதற்றுவாள்.

பிரமனை முதலாகக் கொண்ட பழைமை வாய்ந்த தொல்குடி புலஸ்தியகுலம். துயரும் அஞ்சி, என்றமையால், இராவணன்

குடியின் சிறப்பு கூறப்பெற்றது. உளைத்தல் - இது முதனிலை திரிந்து ஊளை என ஆகும்; வருந்துதலும் ஆம்; 'உளையும் வெஞ்சம மிவனுட னுளதென வுணர்ந்தான்; (சுந்தர. 236).

பி - ம். 1. கிடந்துழக்கும்; கிடந்துழைக்கும்.
2. குலைந்தலம் வரும்.
3. பிறந்தேன் பட்ட; பிறந்தே பட்ட; பழியெனுப் பிதற்றும்; பிழையெனப் பிதற்றும். (97)

317. ஒற்றும் மூக்கினை யுலையுறு தீயென வுயிர்க்கும்
எற்றுங் கையினை நிலத்தினி லிணைத்தடங் கொங்கை
பற்றிப் பார்க்குமெய் வேர்க்குந்தன் பருவரன் மயக்கால்
சுற்று மோடும்போய்ச் சோரிநீர் சொரிதரச் சோரும்.

(அச்சூர்ப்பணகை) மூக்கினை - (இரத்தம் பெருக்கிட்டுச் சொரியும்) தன் மூக்கை, ஒற்றும் - தன் ஆடையினால் ஒற்றிக் கொள்வாள்; உலை உறு தீ என உயிர்க்கும் - கொல்லன் உலைக்களத்தில் எழும் தீச்சுடர் போல, பெரு மூச்செறிவாள்; கையினை நிலத்தினில் எற்றும் - கைகளை யோங்கித் தரையில் தாக்கி அடிப்பாள்; இணை தடகொங்கை பற்றிப் பார்க்கும் - தன் இரு பெருங் கொங்கைகளைக் கைகளிற் பற்றிப் பார்ப்பாள்; மெய் வேர்க்கும் - உடல் வேர்ப்பாள்; தன் பருவரல் மயக்கால் - தனது துன்பத்தினால் உண்டான புத்தி மயக்கத்தால், சுற்றும் ஓடும் - சுற்றுப் புறமெங்கும் ஓடுவாள்; போய் - அவ்வாறு ஓடிச் சென்று, சோரி நீர் சொரிதர - இரத்த வெள்ளஞ் சொரிய, சோரும் - தளர்வாள்.

ஒற்றியது, இரத்தப் பெருக்கு தன்மேல் விழாமல் தடுக்க. உலையுறு தீ - கொல்லன் உலையில் துருத்தியினால் ஊதப் புறப்பட்டு ஓங்கும் தீ; ஒப்பு: பால. மிதிலைக் : 49 ; அயோத். கைகேசி சூழ்வினைப் : 12. நகர்நீங்கு ; 134. மணி. 2 : 43, 19 : 28. பற்றும் பார்க்கும் - பற்றிப் பார்க்கும்; பார்த்தது, முலைக்கண்கள் அறுக்கப்பட்டு இரத்தம் பெருகியதை. சுற்றும் ஓடும் - சுழலுவாள், ஓடுவாள் எனப் பிரித்தும் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 2. நிலத்திடை.
3. பற்றும் பார்க்கும்; மெய்வெயர்க்கும், மெய்நோக்கும்; தன் பருவலிக் காலால்; பருவரைக் காலால்.
4. மோடும் புண்; சோரி நீரிழிதரச். (98)

318. ஊற்று மிக்கநீ ரருவியி னொழுகிய குருதிச்
சேற்று வெள்ளத்துட் டிரிபவ டேவரு மிரியக்
கூற்று முட்குந்தன் குலத்தினோர் பெயரெலாங் கூறி
ஆற்று கிற்கிலள் பற்பல பன்னிநின் றழைத்தாள்.

ஊற்று மிக்க - ஊற்றினின்று மிகப் பெருகிய, நீர் அருவியின் - நீரையுடைய மலையருவி போல, ஒழுகிய - வழிந்தோடிய, குருதி சேறு வெள்ளத்து உள் - இரத்தச் சேருன பிரவாகத்தினுள், திரிபவள் - அலைபவளான அச்சூர்ப்பணகை, ஆற்றுகிற்றிலள் - தன்னல் பொறுக்க முடியாதவளாய், தேவரும் இரிய - தேவர்களும் அவள் கூவும் முழக்கங்கேட்டு அஞ்சி நிலைகெட்டு ஓட, கூற்றும் உட்கும் - யமனும் பெயர் கேட்டுக் கூசி அஞ்சும், தன் குலத்தினோர் பெயர் எலாம் கூறி - தன் குலத்தைச் சேர்ந்த அரக்கர்களின் பெயர்களை யெல்லாம் சொல்லி, பல் பல பன்னி நின்று - பல பலவாறு பிரலாபித்து நின்று, அழைத்தாள் - கூப்பிடுவாளானாள்.

ஊற்று : ஊறும் தொழிலையுடையது. தேவரும், கூற்றும் இவற்றின் உம்மைகள் உயர்வு சிறப்பின. பன்னுதல் ; பிரலாபித்தல் ; விளக்கிக் கூறுதல் : அயோத் : கைகேசி சூழ்வினைப் : *41* ; கிட்கிந்தா. வாலிவதைப் : *146*. உட்கும் என்பது பெயரெலாம் என்பதனோடு இயையும்.

பி - ம். 1. ஊற்றெடுத்த நீரருவியின்.
2. வெள்ளத்தினலைபவள்.
3. கூற்று மஞ்சத்தன். கூற்று முட்கத்தன்.
4. ஆற்றுகிற்கிலாள் ; ஆற்றகிற்கிலள் ; ஆற்றகிற்றிலன் ; ஆற்றுகின்றிலள் ; பலபலபன்னி ; நின்றழூதாள் ; நின்றழைத்தாள்.

*(99)*

சூர்ப்பணகை தன் சுற்றத்தாரை கூவிப் பிரலாபித்தல் **319—331**

319. நிலையெடுத்து நெடுநிலத்து நீயிருக்கத் தாபதர்கள்
சிலையெடுத்துத் திரியுமிது சிறிதன்றோ தேவரெதிர்
தலையெடுத்து விழியாமை சமைப்பதே தழலெடுத்தான்
மலையெடுத்த தனிமலையே யிவைகாண வாராயோ.

தழல் எடுத்தான் - அனலைக் கையில் ஏந்தியுள்ள சிவபெருமானுடைய, மலை - கயிலை மலையை, எடுத்த - அசைத்து எடுத்த,

தனி மலையே - ஒப்பற்ற மலை போன்ற அண்ணாவே! நீ நெடு நிலத்து நிலை எடுத்து இருக்க - நீ இந்த நெடிய உலகில் நிலை பெற்ற புகழால் ஓங்கியிருக்கும் போது, தாபதர்கள் - (எளிய) வாழ்க்கையில் உள்ள தவத்தோர்கள், சிலை எடுத்து திரியும் இது - வில்லேந்தி அஞ்சாமல் சஞ்சரிக்கின்ற இந்த விபரீதம், சிறிது அன்றோ - உன் பெருமைக்குக் குறைவு அல்லவா? அன்றியும், தேவர் எதிர் - தேவர்களின் முன்னே நாம், தலை எடுத்து விழியாமை - தலை நிமிர்ந்து பார்க்கக் கூடாமல் வெட்கி ஒளிவது, சமைப்பதே - ஆகக்கூடியதோ? இவை காணவாராயோ - (இவ்வாறு நிகழ யான் பட்ட இச்சிறுமைகளை) நீ பார்க்க இங்கு வரமாட்டாயோ?

சிவபிரான் தழல் கையில் ஏந்திக் கொண்டது: தாருகவனத்து முனிவர்கள் ஏவிய அனலை அவர் தம் கையில் ஏந்திக் கொண்ட அருஞ்செயலைக் குறிப்பிட்டது. தாபதர் - தாபஸ: என்ற வடசொல்லின் திரிபு. தாபதர் என்றது இராம லக்ஷ்மணர் தவக்கோலம் பூண்ட நிலையை உட்கொண்டு கூறியது. சமைப்பதே: ஏகாரம் பிறிது நிலையுணர்த்தும் வினாப்பொருளது. இவை காண; தன் அங்கங்கள் அறுப்புண்டு அவதியுறும் இந்நிலைகளைக் காண.

பி - ம். 1. நிலையெடுத்தார், நிலைவெடுத்த. நிலையெடுத்தார் நீணிலத்து.
2. திரியுமிது; சிறிதன்றோ.
3. சமைப்பதோ; தலையெடுத்துப் பாராமல்; தழலெடுத்தோன், தலையெடுத்தான்.
4. மணிப்புயனே. (100)

320. புலிதானே புறத்தாகக் குட்டிகோட் படாதென்னும்
ஒலியாழி யுலகுரைக்கு முரைபொய்யோ வூழியினும்
சலியாத மூவருக்குந் தானவர்க்கும் வானவர்க்கும்
வலியானே யான்பட்ட வலிகாண வாராயோ.

ஊழியினும் சலியாத - கற்ப முடிவுக் காலத்தும் நிலை தளராத, மூவர்க்கும் - மும்மூர்த்திகளுக்கும், தானவர்க்கும் — அசுரர்களுக்கும், வானவர்க்கும் - தேவர்களுக்கும், வலியானே — வலியுடைய இராவணனே! புலி புறத்து ஆக - தாய்ப் புலி பக்கத்தில் இருக்க, குட்டி - அதன் குட்டி, கோள்படாது என்னும் - எவராலும் பிடிக்கப்பட்டு அவதியுறாது என்று கூறப்பெறும், ஒலி ஆழி உலகு உரைக்கும் உரை - முழக்கத்தோடு கூடிய கடலால் சூழப்பெற்ற உலகத்தோர் கூறும் முதுரை பொய்யோ - பொய்தானோ? யான் பட்ட - யான்

அடைந்த, வலி காண வாராயோ - கொடிய துன்பத்தைக் காண நீ வரமாட்டாயோ?

புலி தானே........குட்டிகோட்படாது; இது ஒரு பழமொழி; 'புலி புறங்காக்குங் குருளைபோல' (புறநா. 42 : 10); 'குட்டியைத் தின்னலாமோ கோட்புலி புறத்ததாக' (சீவக. 1034); வலி - பகைவரின் வலியினால் யான் பட்ட என்றும் கூறலாம். சலியாத வலியானே, என்று இராவணனுக்கே இயைத்துப் பொருள் கூறுவாரும் உளர். தானவர் - தனு என்பாளிடம் காசிபர்க்குப் பிறந்த அசுரர்; தத்திதாந்தப்பெயர். உலகு - இடவாகு பெயர்.

பி - ம். 1. புறத்தாகிற்; படாதென்ன; படாதெனவே.
2. ஒலியார் நீருலகுரைக்கும்.
3. வானவர்க்குந் தானவர்க்கும்.
4. கலிகாண.

(*101*)

321. ஆர்த்தானைக் கரசுந்தி யமரர்கணத் தொடுமடர்த்த
போர்த்தானை யிந்திரனைப் பொருதவனைப் போர்தொலைத்து
வேர்த்தானை யுயிர்கொண்டு மீண்டானை வெரிந்பண்டு
பார்த்தானே யான்பட்ட பழிவந்து பாராயோ.

பண்டு - முன் (திக்விஜயத்தில்), ஆர்த்து - பெருமுழக்கமிட்டுக் கொண்டு, ஆனைக்கு அரசு உந்தி - யானைகளுக்கு அரசாகிய ஐராவதத்தைச் செலுத்திக்கொண்டு, அமரர் கணத்தோடும் அடர்த்த - தேவர்கணங்களோடும் எதிர்த்துப் போர்புரிந்த, போர் தானை இந்திரனை - போர்ச் சேனைகளோடு கூடிய இந்திரனை, பொருது - எதிர்த்துப் போர் செய்து, அவனை போர் தொலைத்து - அவனை அப்போரில் அழியச் செய்து, வேர்த்தானை உயிர்கொண்டு மீண்டானை - (அக்காலை) அச்சத்தால் உடல் வியர்த்துத் தப்பி உயிர் கொண்டு மீண்டு ஓடிப்போன அவனை, பண்டு - முன், வெரிந் பார்த்தானே - முதுகிட்டோடப் பார்த்த இராவணனே! யான் பட்ட பழி - யான் இங்கு அடைந்துள்ள இழிவை, வந்து பாராயோ - நீ வந்து பார்க்க மாட்டாயோ?

இச்செய்யுளை இந்திரசித்தைக் கருதிக் கூறியதாகப் பொருள் கொண்டாரும் உளர். பின் 329 இல் இந்திரசித்து இந்திரனைத் தளையிட்டு இலங்கையில் சிறைவைத்த சிறப்பை இவள் தனியே கூறி அவனை யழைப்பதால், இச்செய்யுள் இராவணனுடைய திக்விஜயத்தில் நிகழ்ந்த ஒரு செயலே என்பதாம்.

பி - ம். 1. தொடு மடர்ந்த ; தொடுமடர்த்தப் ; தொடுமடர்ந்து.
2. யிந்திரனைப் பொருதானை. (102)

322. காற்றினையும் புனலினையும்
கனலினையுங் கடுங்காலக்
கூற்றினையும் விண்ணியங்கு
கோளினையும் பணிகோடற்
காற்றினை நீ யீண்டிருவர்
மானிடவர்க் காற்றுது
மாற்றினையோ வுன்வலத்தைச்
சிவன்றடக்கை வாள்கொண்டாய்.

சிவன் தட கை வாள் கொண்டாய் - சிவபிரான் தன் பெருங் கை நீட்டிக் கொடுத்தருளிய சந்திரஹாஸம் என்னும் வாளைக் கொண்டுள்ளவனே ! காற்றினையும் - வாயுதேவனையும், புனலினையும் - நீர்க் கடவுளாகிய வருணனையும், கனலினையும் - அக்கினிதேவனையும், கடும் கால கூற்றினையும் - கொடிய கால தேவனான யமனையும், விண் இயங்கு - வானில் சஞ்சரிக்கும், கோளினையும் - நவக்கிரகங்களையும், பணி கோடற்கு - உனக்கு ஏவலாளராக உனக்குக் குற்றேவல் புரிவதற்கு, ஆற்றினை - செய்வித்தாய் ; நீ - அத்தகைய வலிமை கொண்ட நீ, ஈண்டு இருவர் மானிடவர்க்கு ஆற்றுது - இங்குள்ள இரு மனிதர்க்கு எதிரிடும் வலியில்லாது, உன் வலத்தை மாற்றினையோ - உன் வலிமையைப் போக்கடித்துக் கொண்டாயோ ?

இராவணன், சிவன் தடக்கை வாள் கொண்டது ; உத்தர. திக்கு விசயப் : 76. இராவணன், வாயு, வருணன், யமன் முதலிய திக்குப் பாலர்களையும் கோள்களையும் வென்றது ; மேற்கூறிய திக்குவிசயப் படலத்தில் விரிவாய்க் காணலாம்.

பி - ம். 1. பணிகொண்டற்(கு) ; பணிகொண்டங்(கு).
2. விண்ணியங்குங் கோளினையும் ; கோளினையும் பணிகொளவுன் கொற்றத்தால்.
3. மானுடவர்க் ; மானிடனர்க் ; யீண்டிரு மானிடவர் தமக் காற்றுமல்.
4. சிவன் வலக்கை ; நின் தயத்தால் சிவனிடக்கை வாள் கொண்டாய் !. (103)

323\. உருப்பொடியா மன்மதனை யொத்துளரே யானாலும்
செருப்படியிற் பொடியொவ்வா மானிடரைச் சீறுதியோ
நெருப்பொடியப் பொடிசிதற நிறைமதத்த திசையானை
மருப்பொடியப் பொருப்பிடியத் தோணிமிர்த்த வலியோனே.

(நீ எதிர்த்த), நிறை மதத்த திசையானை - நிறைந்த மதத்தைக் கொண்ட திக்கயங்களின், மருப்பு ஒடிய - தந்தங்கள் ஒடிந்துபோகவும், பொருப்பு இடிய - கயிலாய மலை இடிபடவும், நெருப்பு ஒடிய - அக்கினிதேவன் தோல்வியுற்று, பொடி சிதற - பொடியாய் சிதறி விழவும், (உன் திக்விஜய காலத்தில்) தோள் நிமிர்த்த - உன் இருபது தோள்களையும் நிமிர்த்துத் தாக்கிப் போர் செய்த, வலியோனே - வலிமையுடைய இராவணனே! உரு பொடியா மன்மதனை - வடிவம் அழியாத மன்மதனை, ஒத்து உளரே ஆனாலும் - ஒப்பாக இருக்கின்றனரே ஆனாலும், செரு படியில் - போர்க்களத்தில், பொடி ஒவ்வா - தூளுக்கும் ஒப்பாகாத (அற்ப வலியுடைய), மானிடரை - எளிய மனிதராகிய அவ்விருவர்களை, சீறுதியோ - நீ கோபித்துப் போரிடுவாயோ? (நீ போரிட வருவது உன் ஆற்றலுக்குக் குறைவாகுமே! என்றபடி).

உரு பொடியா மன்மதன் - சிவபிரானால் உரு சாம்பராய் எரிக்கப் படாத மன்மதன்; இனி, உருப்பு ஒடியா மன்மதன் என்றும் பிரிக்கலாம், என்பது பழையவுரை. இஃது இல்பொருளுவமை; சூர்ப்பணகை, தன்னை உறுப்பறை செய்த இவர்களை இவ்வாறு பாராட்டியது அன்னோர் தனக்குச் செய்த கேட்டினும் அவர்கள் வடிவழகால்தான் ஈர்ப்புண்டமையைப் புலப்படுத்தியவாறும். 'செருப்படி - சமரபூமி' என்பது. 'செருப்படியிற் பொடி யொவ்வா மானிடரை' இத் தொடரைப்பற்றி முன் எழுந்தனவாகக் கூறப்பெறும் ஆக்ஷேபண ஸமாதானப் பொருள்களை, விநோதரச மஞ்சரி முதலிய நூல்களில் விரிவாய்க் காணலாம். இராவணன் தோள் நிமிர்த்துப் போரிட்ட காலத்து அவனால் வெல்லப்பெற்றவற்றுள் அக்கினி, திக்கயங்கள், கயிலாயம் என்பன இச் செய்யுளில் குறிக்கப்பெற்றன.

பி-ம். 1. உருப்படிவ மன்மதனை; உருப்பொடியா மன்மதனே; உருப்படிவம் மன்மதனை.
2. செருப்படியிற்றுக ளொவ்வா; செருப்படியிற் பொடியொவ்வா; மானுடரைச்.
3. நெருப்படியிற் பொடி சிதற நிறைந்த மதத் திசையானை; நெருப்படியிற் பொடி சிதறி.
4. வானிமிர்த்த தோளோனே; தோணிமிர்த்த வாளோனே; மருப்பொடிய பொருப்புடைய; ... தோனிமிர்த்த வாளானே; மருப்பொடியத் தோணிமிர்த்த வலியோனே வாராயோ. (104)

324. தேனுடைய நறுந்தெரியற் றேவரையுந் தெறுமாற்றல்
தானுடைய விராவணற்குந் தம்பியர்க்குந் தவிர்ந்ததோ
ஊனுடைய வுடம்பினரா யெங்குலத்தோர்க் குணவாய
மானுடவர் மருங்கேபுக் கொடுங்கினதோ வலியம்மா.

'தேன் உடைய - தேனைத் தன்னிடங்கொண்ட, நறும் தெரியல் - இனிய மணமுடைய (கற்பகம் முதலிய பஞ்ச தருக்களின் பூக்களாலாகிய) மாலைகளை அணிந்த, தேவரையும் - தேவர்களையும், தெறும் - பகைத்து வருத்தும், ஆற்றல்தான் உடைய - வல்லமை பெற்ற, இராவணற்கும் - இராவணனுக்கும், தம்பியர்க்கும் - அவன் தம்பி மார்களுக்கும், வலி - வலிமை, தவிர்ந்ததோ - இப்பொழுது நீங்கி விட்டதோ? ஊன் உடைய உடம்பினர் ஆய் - தசையோடு கூடிய உடல்களை யுடையவர்களாய், எம் குலத்தோர்க்கு - எங்கள் அரக்கர் குலத்தவர்க்கு, உணவு ஆய - உணவாகப் படைக்கப்பட்ட, மானுடவர் மருங்கே புக்கு - மனிதர்களிடத்தே (அவ்வலி) போய்ப் புகுந்து, ஒடுங்கினதோ - அடங்கிக்கொண்டதோ? அம்மா - இது, ஆச்சரியம்!

தேவரையும்: உம்மை உயர்வு சிறப்பினது. தம்பியர் - கும்பகருணன், கரன் முதலினோர்; வீடணனும் இராவணன் தம்பியருள் ஒருவனாயினும் அவனுடைய குணச்சிறப்புக்கருதி அவனை விலக்கிப் பொருள் கொள்ளவேண்டும். ஊனுடைய உடம்பினராய் - மாமிசம் என்னும் அளவிலே உள்ள உடம்பினர்களாய், அதாவது எதிர்த்துப் போரிடும் தகுதியற்றவர் என்றும், தம் உணவுக்காகவே படைக்கப் பெற்றவர் என்றும் குறித்தபடி.

பி-ம். 1. தேவர்களைத்தெறு. 2. தம்பியர்க்கு மிராவணற்கும்.
3. வுன்குலத்தோர்க். 4. மானிடவர் மருங்கே; ஒடுங்கிற்றே.

325. மரனேயு நெடுங்கானின் மறைந்துறையுந் தாபதர்கள்
உரனேயோ வடலரக்க ரோய்வேயோ வுற்றெதிர்ந்தார்
அரனேயோ வரியேயோ வயனேயோ வெனுமாற்றல்
கரனேயோ யான்பட்ட கையறவு காணுயோ.

'மரன் ஏயும் - மரங்கள் அடர்ந்த, நெடும் கானில் - இந்தப் பெரிய வனத்தில், மறைந்து உறையும் - நமக்கு அஞ்சி ஒளிந்து தங்கும், தாபதர்கள் - தவசியர்கள், வலியே ஓ - இவ் வலிமையைக் குறிப்பதோ? (அல்லது), அடல் அரக்கர் - வலிமை பொருந்திய இராக்கதர்களது - ஒய்வேயோ வலிமை ஒய்ந்து போனதைக் குறிப்பதோ (அறியேன்); உற்று எதிர்ந்தார் - எதிர்த்துப் போரிட

வந்த பகைவர்கள், 'அரனே ஓ - (இவன்) சிவபிரான் தானோ? அரியே ஓ - அல்லது திருமால் தானோ? அயனே ஓ - அன்றிப் பிரம தேவன் தானோ?' எனும் - என்று கருதும், ஆற்றல் - வலிமை பொருந்திய, கரனே ஓ - கரனே! யான் பட்ட -யான் உள்ளான, கை அறவு - துன்பத்தை, காணாய் ஓ - நீ (வந்து) காணமாட்டாயோ?

இச்செய்யுள், அரக்கி கரனைக் குறித்துக் கூவியது. பகைவர் கரனைத் திரிமூர்த்திகளுள் ஒருவனோ என்று கருதக்கூடிய வலிமை யுள்ளவன் என்பதாம். சூர்ப்பணகை தனக்குண்டான அத்துன்பத்தால் தமக்கு அஞ்சி ஒளிந்து வாழும் தவசியர் தமக்கு வலிமை யுண்டாயிற்று; அரக்கர்களுக்கு வலி ஓய்ந்து போயிற்று' என்று கருதியதைக் குறிப்பிடுகிறது. தாபதர்கள்: 319. முனிவர்; தாபதர் என்றது, அரக்கர்கள் நோக்கப்படி வலிமையற்றவர் என்ற இழிவுக் குறிப்பை உணர்த்தி நிற்பது. கையறவு - துன்பம்; "வாராள் காயசண் டிகையெனக் கையற வெய்தி" (மணி. 20 : 25-6). [தாபதர்கள் வலியேயோ - தவசியர் மிடுக்கரோ': என்பது பழையவுரை.]

பி-ம். 1. 'நெடுங் கான மறைந்துறையும்'; மறைந்துறையும் மானிடருக்; மானிடவர்.
2. லரக்கர்க் கொழிவேயோ.
3. 'வயனேயோ வரியேயோ' வரனேயோ. (106)

326. இந்திரனு மலரயனு மிமையவரும் பணிகேட்பச்
சுந்தரிபல் லாண்டிசைப்ப வுலகேழுந் தொழுதேத்தச்
சந்திரன்பொற் குடைநிழற்ற விசைந்திருந்த சவைநடுவே
வந்தடியே னாணாது முகங்காட்ட வல்லேனோ.

'இந்திரனும் - தேவேந்திரனும், மலர் அயனும் - தாமரை மலர் மீது உள்ள பிரமதேவனும், இமையவரும் - மற்றைத் தேவர்களும், பணி கேட்ப - நீ இடும் கட்டளைகளைக் கேட்டு அவற்றின்படி குற்றேவல் புரிய, சுந்தரி பல்லாண்டு இசைப்ப - இந்திராணி பல்லாண்டு என்னும் வாழ்த்துப் பாடல்களைப் பாட, உலகு ஏழும் தொழுது ஏத்த - ஏழுலகங்களில் உள்ளார்களும் வணங்கித் துதிக்க, சந்திரன் பொன் குடை நிழற்ற - பூர்ண சந்திரன் அழகிய கொற்றக் குடைபோல் தான் நின்று நிழல் தர, இசைந்து இருந்த சவை நடுவே - ஆடம்பரமாய் நீ அமர்ந்திருந்த உன் சபையின் நடுவில், அடியேன் வந்து - அடியாளாகிய யான் வந்து, நாணாது - வெட்க

மின்றி, முகம் காட்ட வல்லேனே - (மூக்கொடு காதுகளும் அறுபட்ட) என் முகத்தைக் காட்டி நிற்கத் தகுதி யுடையேனோ? (உடையேன் ஆகேன் என்றபடி.)

சுந்தரி - இந்திராணி; சூந்தர. 148; (பிங்). பல்லாண்டு - பல ஆண்டுகள் வாழவேண்டு மென்று மங்கல வாழ்த்துப் பாடுதல். உலகேழு - கீழேழு மேலேழு உலகங்களைக் குறிப்பது. அடியேன் என்றது, வணங்குதற்கு உரிய தங்கை என்பதைக் குறிப்பிட்டவாறு. இச்செய்யுள், இராவணனின் அவைப் பெருமையையும், அங்கு உறுப்பறையர் புகலாகாது என்றதையும், தன் அவமானத்தையும் குறித்தது.

ஒரு சுவடியில் இதன்பின், 'நகையாலே' என்னும் 328-ஆம் செய்யுளும், வேறு சில சுவடிகளில், 'ஒருகாலத் துலகேழு' என்னும் 330-ம் செய்யுளும் உள்ளன.

பி - ம். 1. மரனயனும்; மாலயனும். 2. வுலகமெலாந் தொழு.
3. போற்றனிக் குடைக்கீழ் நீயிருக்குஞ்; முரசிருந்த சபை; சந்திரன் போற்குடை நிழற்ற; சந்திரன்போற றனிக்குடைக்கீழ்; சந்திரவெண் டனிக்குடைக்கீழ்; சந்திர வெண்குடை தழைப்ப நீயிருக்குஞ் சபையகத்தே. (107)

327. உரனெரிந்து விழவென்னை யுதைத்துருட்டி மூக்கரிந்த
நரனிருந்து தோள்பார்க்க நானிருந்து புலம்புவதோ
கரனிருந்த வனமன்றோ விவைபடவுங் கடவேனோ
அரனிருந்த மலையெடுத்த வையாவோ வையாவோ.

'அரன் இருந்த மலை எடுத்த - சிவபிரான் எழுந்தருளியிருந்த கயிலாயம் என்னும் மலையைப் பெயர்த்து எடுத்த, ஐயாவோ, ஐயாவோ - ஐயனே! ஐயனே!! உரன் நெரிந்து விழ - என் மார்பு நெரிபட்டு யான் கீழே விழும்படி, என்னை உதைத்து உருட்டி - என்னைத் தன் காலால் உதைத்து யான் உருண்டு விழச்செய்து, மூக்கு அரிந்த - என் மூக்கை அரிந்த, நரன் இருந்து தோள்பார்க்க - ஒரு மனிதன் தன் தோளைப் பார்த்துப் பெருமிதம் கொண்டிருக்க, நான் இருந்து புலம்புவதோ - யான் எனக்கோர் ஆதரவு இன்றித் தனியே இங்கு இருந்து புலம்பிக்கொண்டிருப்பதோ? கரன் இருந்த வனம் அன்றோ-இது கரன் தன் ஆட்சி செலுத்திக் கொண்டிருக்கும் வனம் அல்லவா? இவை படவும் கடவேனோ - (இந்த நமக்குரிய இவ்விடத்திலேயே) யான் இக்கேடு அடையத் தகுமோ?

சூர்ப்பணகையை இளையபெருமான் உதைத்து உருட்டி மூக் கரிந்தது: 311—2. தோள் பார்த்தல்: வீரச்செயல் புரிந்தோர், தம் தோளைப்பார்த்துப் பெருமிதத்தோடு மகிழ்தல்; சீவக. 847, 1843; பெருங். 5-7 134. கரன் இருந்த வனம்: கரன் அவளுக்குக் காவற் றுணையாக இருக்குமாறு இராவணனால் வைக்கப்பெற்ற வனம் ஆதலின்; உத்தர. திக்கு விசயப்: 114, 115; இது ஜன ஸ்தானம் எனப்படும். ஐயன் - தமயனும் ஆம்; புலம்பலாதலின், ஐயாவோ என்பது இருமுறை வந்தது; இராவணவோ இராவணவோ என்றும் மருகாவோ மருகாவோ என்றும் வந்துள்ளமை காண்க. 328, 329. ஒப்பு. "மல்லார் திண்டோண் மாமாவோ மந்தா கினியாண் மதலாயோ"; (வி. பா. சூதுபோர்ச். 233.)

பி - ம். 1. மூக்கரிந்து. 2. தோள்பார்ப்ப.
3. வனமன்றே: வனத்திருந்தும்.
4. அண்ணவோ, அண்ணவோ. (108)

328. நசையாலே மூக்கிழந்து நாணமிலா நான்பட்ட
வசையாலே நின்புகழு மாசுண்ட தாகாதோ
திசையானை விசைகலங்கச் செருச்செய்து மருப்பொசித்த
இசையாலே வெழுதுபெய ரிராவணவோ யிராவணவோ.

திசையானை விசை கலங்க - திக்கஜங்கள் தம் கோபவேகம் கலக்கமுற்று ஓய, செரு செய்து - அவற்றுடன் போரிட்டு, மருப்பு ஒசித்த - அவற்றின் கொம்புகளை ஒடித்த, இசையாலே பெயர் எழுது - கீர்த்தியால், உன் புகழ்ப்பெயரை (உலகில்) எழுதி நிலை நாட்டியுள்ள, இராவண ஓ, இராவண ஓ - இராவணனே! இராவணனே! நசையாலே - ஆசைகாரணமாக, மூக்கிழந்து - என் மூக்கை நான் பறிகொடுத்து, நாணம் இலா - நாணம் கெட்டழியும்படி, நான் பட்ட வசையாலே - நான் அடைந்துள்ள இந்த நிபந்தனைக்குரிய பழியினால், நின் புகழும் - உன்னுடைய கீர்த்தியும் மாசு உண்டது ஆகாது ஓ - களங்கமடைந்தது ஆகாதோ? (ஆகும் என்றபடி).

இசையால் பெயர் எழுதல்: ஒருவனுடைய கீர்த்தியினால் அவன் பெயர் உலகில் நிலைத்திருக்குமாறு செய்தல்; 'இசையாலெழுதுபெயர்- உலகமெல்லாம் எழுதியிருக்கிற கீர்த்தியுடைய பழைய வசனம்' என்பது பழையவுரை. முன் செய்யுளில், 'ஐயாவோ! ஐயாவோ!' என்றது போலப் புலம்பலில் இங்கும் இராவணவோ இராவணவோ என்று இருமுறை அடுத்து வந்தது. இவ்வாறே பின்வரும் செய்யுட்

களிலும் வருவனவற்றையுங் கொள்க. நசையாலே என்றது, சீதையை நீ அடைய வேண்டும் என்று உன் மீது நான் வைத்த ஆசையால் தான் அவளைப் பற்றச் சென்றதாகச் சூர்ப்பணகை கூறிக்கொள்ளும் பொய்யான கற்பித்ததைக் குறிப்பிட்டதும் ஆகும்; *368* ; *634*.

பி-ம். 1. 'நாணமலா நான்பட்ட', நாணமில்லா நான்பட்ட.

2. நினதுபுகழ்; மாசுபடக் கடவதுண்டோ.

3. செருச்செய்து பெருத்தெழுந்த; செவிடு படப்பொடித்த; செவிடு படச்செருச்செய்து பெருத்தெழுந்த.

4. நிறைந்த புயத்திராவணவோ; யெழுந்தபேரிராவணவோ. *(109)*

329. கானதனி னிடையொருவர் காதொடுமூக் குடனரிய
மானமதாற் பாவியே னிவண்மடியக் கடவேனே
தானவரைக் கருவறுத்துப் புரந்தரனைத் தளையிட்டு
வானவரைப் பணிகொண்ட மருகாவோ மருகாவோ.

'தானவரை கரு அறுத்து - அசுரர்களை அவர்களது பற்று அற்றுப்போகச்செய்து, புரந்தரனை - தேவேந்திரனை, தளையிட்டு - விலங்கி லிட்டுச் சிறைப்படுத்தி, வானவரை - தேவர்களை, பணி கொண்ட - குற்றேவல் செய்யுமாறு அடிமைகொண்ட, மருகா ஓ, மருகா ஓ, - மருமகனே! மருமகனே!! கான் அதனின் இடை - இக் காட்டினிடத்து, ஒருவர் - ஒரு மனிதன், காது ஒடு மூக்கு உடன் அரிய - என் காதுகளையும் மூக்கையும் ஒன்று சேர அறுத்துவிட, பாவியேன் - பாவியாகிய யான், மானம் அதால் - (அதனால் ஏற்பட்ட) அவமானத்தால், இவண் மடிய கடவேனே - இங்கே கிடந்து இறந்துபோகத் தக்கவள் ஆவேனே?

இதுவும் அடுத்த செய்யுளும் சூர்ப்பணகை இந்திரசித்தை நோக்கி அரற்றியவை. கருவறுத்தல் - நிர்மூலமாக்குதலும் ஆம். மருகன் - சகோதரன் மைந்தன்; இங்கு இந்திரசித்து, மானம் - அவமானம் என்பதின் முதற் குறை; *767*; 'மானந் தலைவருவ செய்பவோ' (நாலடி. *198*). மானமதால்-தன்மதிப்பினால்; மானம், லஜ்ஜையும் ஆம்.

பி-ம். 1. இடை யிருவர்; கானதனி லிருவ ரென்றன் காதுமுலை மூக்கரிய; கானகத்தின் நான் வாளாற் காதொடு மூக்கரிய.

2. ஈனமதாற் பாவியேனிவை படவுங் கடவேனே; மானமற்றிப் பழிசுமந்து வாழ்ந்திடவுங் கடவேனே.

3. தானவரைக் கரிசறுத்துப் புரந்தரனைச் சிறையிட்டுத்; தானவரைத் தடிந்த; புரந்தரனைத்தான் சிறையிட்டுப். *(110)*

330. ஒருகாலத் துலகேழு முருத்திரிய தனுவொன்றால்
திருகாத சினந்திருகித் திசைதிசையே செலநூறி
இருகாலப் புரந்தரனை யிருஞ்சிறையி லிட்டலைத்த
மருகாவோ மானிடவர் வலிகாண வாராயோ.

'ஒரு காலத்து - (இராவணன் திக் விஜயம் செய்த) காலத்தில், தனு ஒன்றால் - தன் ஒரு வில்லால், திருகாத சினம் திருகி - தணியாத கோபம் முறுகி, அல்லது முதிர்ந்து, உலகு ஏழும் உருத்து - ஏழுலகங்களையும் சினந்து, இரிய - அவை நிலை தளர்ந்து ஓடவும், திசை திசையே செல - கண்ட திசை யெங்கும் பயந்து ஓடிச் செல்லவும், நூறி - அங்குள்ளார்களைக்கொன்று, அ புரந்தரனை - அத்தேவேந்திரனை, இருகால் - இருமுறை, இரும் சிறை இட்டு அலைத்த - பெருஞ் சிறையிலிட்டு வருத்திய, மருகா ஓ - என் மருமகனே! மானிடவர் - இந்த இருமனிதர், வலிகாண - வலிமையை நீ நேரில் காண, வாராயோ - வரமாட்டாயோ?

இராவணன் திக் விஜயம் செய்த காலை, மேகநாதனும் அவனுடன் சென்று ஏழுலகங்களையும் அலைத்து வருத்தி, இந்திரனை இருமுறைச் சிறைப்படுத்தி வந்தான் என்பதாம். இனி, உலகு ஏழும் உரு திரிய, எனப் பிரித்து ஏழுலகங்களும் தம் உரு மாறும்படி எனவும் பொருள் கொள்ளலாம். இந்திரனை அவன் வென்று சிறைப்படுத்தினமையால் அவனுக்கு இந்திரசித்து என்று பெயர் வழங்கலாயது. 'இருகாலில்' என்று பாடங்கொண்டு 'இரண்டு கால்களிலும் 'விலங்கிட்டு' என்று பழைய உரை கூறும். 'இகலிந்திரனீரிருகாலெனக்கே தோற்றான்' என்ற உயுத்த. நாகபாசப்படலம் 10 ஆம் செய்யுளால் இந்திரசித்து இந்திரனை 4 தடவைகள் வென்றான் என்றும் காணப்படுகிறது.

பி-ம். 1. முருத்தெரியத்; முருத்தெதிரத்; துலகொரு மூன்றையு முலைத்துத் தனுவொன்றால்;

2. 'திசையனைத்துஞ்செல'; சில நூறி;

3. இருகாலிற் புரந்தரனை யிருந்தளையிலிடுவித்த; இருஞ்சிலையிலிட்டலைத்த; இருந்தளையில்.

4. மானிடவன் வலி; யான்பட்ட வசை காண. (111)

331. கல்லீரும் படைத்தடக்கை யடற்கரதூ டணர்முதலா
அல்லீருஞ் சுடர்மணிப்பூ ணரக்கர்குலத் தவதரித்தீர்
கொல்லீரும் படைக்கும்ப கருணனைப்போற் கொடியீர்காள்
எல்லீரு முறங்குதிரோ யானழைப்ப கேளீரோ.

'கல் ஈரும் - வலிய கல்லையும் பிளக்கத்தக்க, படை தட கை - ஆயுதங்களைக் கொண்ட பெரிய கைகளையுடைய, அடல் - வலிமையுள்ள, கர தூடணர் முதலா - கரன் தூஷணன் முதலான, அல் ஈரும் - இருளைப் பிளந்து அகற்றும், சுடர் மணி பூண் - ஒளியுடைய இரத்தின ஆபரணங்களைப் பூண்ட, அரக்கர் குலத்து அவதரித்தீர் - இராக்கதக் குலத்து உதித்தவர்களே! கொடியீர்காள் - கொடியவர்களாகிய நீங்கள், எல்லீரும் - நீவிர் எல்லாரும், கொல் ஈரும் படை கும்பகருணனை போல் - கொல்லனால் அராவிக் கூராக்கிய ஆயுதங்களையுடைய கும்பகருணனைப் போலவே, உறங்குதிரோ - தூங்குகின்றீர்களோ? யான் அழைப்ப கேளீரோ - யான் கூப்பிடுகின்றவை நீவிர் செவியாற் கேட்க வில்லையோ?

கொடியீர் என்றது: தான் கூப்பிட்டழைத்தும் வாராதிருந்த கோபத்தால் கூறியது. அவதரித்தல், என்பது மேலோருக்கே கூறுவது; தன் குலப்பெருமை தோன்றச் சூர்ப்பணகை அவ்வரக்கர் பிறப்பைச் சிறப்பித்துக் கூறியது; அல்லது இழிவு படுத்தவும் கூறியதாம். கும்பகருணன் - குடம் போன்ற காதுகளையுடையவன் என்னும் பொருளில் வந்த பெயர்; இராவணன் தம்பி; அவன் எப்பொழுதும் உறங்கும் இயலுடையன். சூர்ப்பணகை அழைத்தும் அரக்கர்கள் அவளுக்கு உதவ வாராமையால், அவள் அவ்வரக்கர்பால் வெறுப்புற்று, 'எல்லீரும் கும்பகருணனைப்போல் உறங்குதிரோ?' என்றாள். இது, ஜனஸ்தானத்தில் நின்ற கரதூடணரைக் கருதிக் கூறியது. 317 முதல் இதுவரையில் உள்ள செய்யுட்கள் சுவடிகளில் முறைமாறிக் கிடக்கின்றன,

பி-ம். 1. தூடணர் முதலா; கரதிரி தூடணன் முதலாய.
2: அல்லாருஞ்சுடர். 4. யானழைத்தல் கேளீரோ. (112)

இராமபிரான் அங்கு வந்து நடந்த செய்தி அறிந்து அவளைக்கடிதல் 332—41

332. என்றின்ன பலபன்னி யிகலரக்கி யழைத்திரங்கி
பொன்றுன்னும் படியகத்துப் புரள்கின்ற பொழுதத்து
நின்றந்த நதியகத்து நிறைதவத்தின் துறைமுடித்து
வன்றிண்கைச் சிலைநெடுந்தோண் மரகதத்தின் மலைவந்தான்.

என்று இன்ன - என்று இவ்விதமாக, பல பன்னி - பலவற்றைச் சொல்லி, இகல் அரக்கி - பகைமை கொண்ட அந்த அரக்கியாகிய சூர்ப்பணகை, அழைத்து இரங்கி - (தன் சுற்றத்தாராகிய அரக்கர்களைக் கூவி) அழைத்து வருந்தி, பொன் துன்னும் - அழகு மிக்க, படி அகத்து - (அத் தவச்சாலையின்) தரையிடத்து, புரள்கின்ற பொழுதத்து - புரண்டழும் சமயத்து, வன் திண் கை - தன் வலிமையும் உறுதியும் அமைந்த கைகளும், சிலை நெடும் தோள் - வில்லேந்திய நீண்ட புயங்களு முடைய, மரகதத்தின் மலை - மரகத மலைபோன்ற இராமபிரான், அந்த நதி அகத்து - அருகில் உள்ள அந்தக் கோதாவரி நதியிடத்து, நிறை தவத்தின் துறை முடித்து - விதிமுறைப்படி நிதம் செய்யவேண்டிய தன் ஜபம் ஆகிய நித்திய கடன்களை முற்றச் செய்து முடித்து, நின்று - அங்கு நின்றும், வந்தான் - தன் தவச்சாலை நோக்கித் திரும்பி வந்தான்.

பன்னுதல் - பலமுறை பிரலாபித்துக் கூறுதல் ; 318. பொன் துன்னும்படி : பொன்னைத் தன்னிடம் கொண்ட பூமி என்னும் பொருளில் வந்தது. பூமிக்கு, வடமொழியில் வசுந்தரை என்னும் பெயர் உள்ளமையும் காண்க. பொழுதத்து ; அத்து, சாரியை. மரகதத்தின் மலை: உவமை ஆகுபெயராய் இராமபிரானைக் குறித்தது; இராமபிரானுக்கு மரகதமலை; பால. மிதிலைக்காட்சி: 53, 56; கிட்கிந்தா. மராமரப் : 55 ; சுந்தர : 535. முன், 309, இல், 'ஒரு மணித்தடத்தில் சந்தி நோக்கின னிருந்தது' என்று குறிப்பிட்டதில் மணித்தடம் என்பது இச் செய்யுளால் கோதாவரி நதிக்கரையில் உள்ள ஒரு துறை என்பதாம். இராமபிரான் நீர்த்துறைக்குச் செல்லுங் காலையிலும் சிலை சுமந்திருந்தனன் என்றும் கொள்ள இச்செய்யுள் இடம் தருகிறது. செய்யுள் 308 முதல் இதுகாறும் நிகழ்ந்தவை காலையில் என்க.

பி - ம். 1. யழுதிரங்கி ; யிடருழக்கும் வல்லரக்கிப்.
2. பொன்றின்ன படிநிலத்துப் புரண்டெழுமப் போதின்முன்னே.
3. நின்றன்ன பொழுதியற்று நிறைநியமத் துறைமுடித்தே.
4. வன்றுன்னு. (113)

333. வந்தானை முகநோக்கி வயிறலைத்து மழைக்கண்ணீர்
செந்தாரைக் குருதியொடு செழுநிலத்தைச் சேருக்கி
அந்தோவுன் றிருமேனிக் கன்பிழைத்த வன்பிழையால்
எந்தாயான் பட்டபடி யிதுகாணென் றெதிர்வீழ்ந்தாள்.

வந்தானை - அவ்வாறு வந்த அவ் விராமபிரானை, முகம் நோக்கி - (சூர்ப்பணகை) அவன் முகத்தை எதிர் நோக்கி, வயிறு அலைத்து - தன் வயிற்றில் (கைகளால்) அடித்துக்கொண்டு, மழை கண் நீர் - மழைபோல் சொரிந்த தன் கண்ணீராலும், செம் தாரை குருதி ஒடு - தொடர்ந்து ஒழுகிய தன் சிவந்த இரத்தத்தாலும், செழு நிலத்தை சேறு ஆக்கி - வளம் பொருந்திய அந்தத் தவ வனத்தின் நிலத்தை சேருகக் குழைத்துக் கொண்டு, "எந்தாய் - என் தலைவனே! அந்தோ - ஐயோ! உன் திருமேனிக்கு அன்பு இழைத்த - உன் அழகிய வடிவிடத்தில் ஆசை கொண்ட, வன் பிழையால் - வலிய குற்றத்தால், இது யான் பட்டபடி காண் என்று - இத்துன்பம் யான் அடைந்த தன்மை; இதைக் காண்பாயாக' என்று கூறி, எதிர் வீழ்ந்தாள் - அவ் விராமபிரான் முன்னே விழுந்தழுதாள்.

வயிறு அலைத்தல்: மகளிர் தங்கட்கு ஓர் ஊறு உற்ற விடத்துத் தம் கைகளால் வயிற்றில் அடித்துக் கொள்ளுதல் இயல்பு; பால. ஆற்றுப்: 14; சுந்தர. 739, 979, 988. நிலத்தைச் சேருக்கியது: சூர்ப்பணகை தன் கண்ணீரும் தன் உடலிலிருந்து சொரிந்த இரத்தமும் விழுந்து நனைந்த நிலத்தில் அவள் விழுந்து அழுது புரண்டமையால் உண்டான சேறு என்க. அந்தோ: இரக்கச்சொல்: இது சிங்களச் சொல் என்பார் ஒருசாரார். ஆனால், இது ஹந்த என்ற வடசொல்லின் திரிபேயாகும். அன்பிழைத்த வன்பிழை: அன்பு கொள்ளுதல் கொடிய குற்றம் ஆகாது என்பதும், அன்பிழைத்த எனக்கு இத் தீங்கிழைத்தல் முறையோ என்பதும் சூர்ப்பணகையின் கருத்தாகும் என்க.

பி-ம். 1. 'வந்தானை யிடைநோக்கி'; தனிநோக்கி வயிறலைத்து மைக் கண்ணீர்.

2. நெடுநிலத்தைச்; திருநிலத்தைச்; செந்தாரைக் குருதிகொடு.

3. திருவடிவுக் காசை வைத்த யென்பிழையால்.

4. பட்டபடி யிதுகேளென் றடிவீழ்ந்தாள்; பட்டபழி. (114)

334. விரிந்தாய கூந்தலாள் வெய்யவினை யாதானும்
புரிந்தாளென் பதுந்தனது பொருவரிய திருமனத்தால்
தெரிந்தானின் றிளையோனே யிவளைநெடுஞ் செவியொடுமூக்
கரிந்தானென் பதுமுணர்ந்தா னவளைநீ யாரென்றான்.

விரிந்தாய கூந்தலாள் - விரிந்துள்ள கூந்தலையுடைய அவள், வெய்ய வினை யாதேனும் புரிந்தாள் என்பதும் - கொடிய செயல்

ஏதோ செய்தாள் என்பதையும், தனது (இராமபிரான்) தன்னுடைய, பொருவு அரிய திருமனத்தால் - ஒப்பில்லாத சிறந்த தன் மனத்தினால், தெரிந்தான் - தெரிந்துகொண்டு, இளையோனே - தம்பியாகிய லக்ஷ்மணனே, இவளை - இவளை, இன்று - இப்பொழுது, நெடும் செவி ஒடு மூக்கு - நீண்ட (இவள்) காதுகளோடு மூக்கையும், அரிந்தான் என்பதும் உணர்ந்தான் - அறுத்தவனுவன் என்றதையும் அறிந்துகொண்டு, அவளை 'நீ யார் என்றான் - அவளை நோக்கி, நீ யார்?' என்று கேட்டான்.

விரிந்தாய கூந்தலாள் என்பது, அரக்கியர்க்கு உள்ள கூந்தலின் இயல்பைக் கூறியது; அதாவது அவள் பரட்டைத் தலையள் என்பது; இனி, லக்ஷ்மணன் அவள் கூந்தலைப் பற்றித் திருகி அலைத்தமையால் விரிந்த கூந்தலாள் என்பதும் ஒக்கும். இலக்குவன் அவள் கூந்தலைப் பற்றித் திருகி யீர்த்தது; 311. இராமபிரான் வினவினால், அரக்கி தன் போலியுருவம் மாறிச் சுயவுருவத்துடன் இருந்தமை விளங்கும். ஆதலின், அவளை யார் என்று ஐயப்பட்டு வினவியது.

பி - ம். 1. விரிந்தலசுங் கூந்தலிவள் வெவ்வினைமற் றீங்கெவையே; யாதேனும்.
2. புரிந்தன னென்பது.
3. திளையானே; யிளையவனே; தெரிந்தனனிங் கிளையவன் மற் றிவளை நெடுஞ்செவி மூலமூக்.
4. னவளை யையயோநீ; ஐயநீ; அமனோநீ; யம்மனோநீர்; யம்மனோயோ; கரிந்தன னென்பது மறிந்தாங் கவடனை நீ யாரென்றான். (115)

335. அவ்வுரைகேட் டடலரக்கி யறியாயோ நீயென்னைத்
தெவ்வுரையென் றெவ்வுலகு மில்லாத சீற்றத்தான்
வெவ்விலைவே லிராவணனும் விண்ணுலக முதலாய
எவ்வுலகு முடையானுக் குடன்பிறந்தேன் யானென்றாள்.

அ உரை கேட்டு - (இராமபிரான் வினவிய) அந்த வார்த்தையைக் கேட்டு, அடல் அரக்கி - கொடிய அந்த இராக்கதியான சூர்ப்பணகை, 'என்னை நீ அறியாயோ - என்னை நீ அறியமாட்டாயோ? எ உலகும் தெவ் உரை என்று இல்லாத - எந்த உலகத்திலும் தனக்குப் பகைவர் பேச்சு என்று ஒன்று இல்லாத, சீற்றத்தான் -

கோபமுடையவனுன, வெம் இலை வேல் - கொடிய இலை வடிவு கொண்ட வேலையுடைய, இராவணன் ஆம் - இராவணன் என்று சொல்லும், விண் உலகம் முதல் ஆய - சுவர்க்கம் முதலாக உள்ள, எ உலகும் உடையானுக்கு - எந்த உலகத்தையும் தனக்கு உரிமை யாகக் கொண்டவனுக்கு, உடன் பிறந்தேன் யான் என்ருள் - சகோ தரியாகப் பிறந்தவள் யான் ஆவேன்' என்று கூறினுள்.

தெவ் வுரையென் றெவ்வுலகும் இல்லாத என்றது, இராவணன் எல்லா உலகங்களையும் வென்று தன் கீழாக்கியதைக் குறிப்பிட்டது. அறியாயோ என்றது, முன் அவள் தான் உருமாறி அழகிய வடி வுடன் வந்ததை மறந்த நிலையில் கூறியது என்க.

பி ம். 1. அவ்வரக்கி; இகலரக்கி; யறிந்திலையோ; யறிந்திலையோ நீ யெனைத்தான்.

2. தெவ்வுலகு யென்றேருலகு; தெவ்வ ருரங்கிழித் துயிருண் டுலவுகொடுஞ் சீற்றத்தான்.

3. னிவ்வுலகே ழுமுதலாய; விராவணனவ்; வெவ்விலையேல் கரத்தொளிரும் விறலிரா வணனெனும்பேர்; முவ்விலையே விராவணனிவ் வுலகேழு முதலாய.

4. முடையானே டுடன்பிறந்தேன் யானென்ருள். (116)

336. தாமிருந்த தகையரக்கர் புகலொழியத் தவமியற்ற
யாமிருந்த நெடுஞ்சூழற் கென்செயவந் தாயெனலும்
வேமிருந்தை யெனக்கனலு மெரிகாம வெம்பிணிக்கு
மாமருந்தே நெருநலினும் வந்திலெனே யானென்ருள்.

தகை அரக்கர் தாம் இருந்த - தகைத்தற்கு உரிய இராக்கதர்கள் தங்கியிருந்த, புகல் ஒழிய - இருப்பிடங்களை விட்டுவிட்டு, யாம் தவம் இயற்ற - யாங்கள் தவம் செய்ய, இருந்த நெடும் சூழல் - இந்தப் பெரிய தவ வனத்திற்கு, என் செய வந்தாய் - யாது செய்யும் பொருட்டு நீ வந்தாய்?' எனலும் - என்று இராமபிரான் கேட்டதும், (சூர்ப்பணகை), வேம் இருந்தை என கனலும் - நெருப்பில் வேகும் கரிபோலக் கொதிக்கும், எரி காம வெம் பிணிக்கு - எரிகின்ற காமம் என்னும் வெப்பம் மிகுந்த நோய்க்கு, மா மருந்தே - சிறந்த மருந்து போன்றவனே! நெருநலினும் - நேற்றும், யான் வந்திலெனே என்ருள் - யான் இங்கு வந்தேன் அல்லவோ?' என்று கூறினுள்.

இருந்தை - கரி, இது இருந்தில் எனவும் வழங்கும். வேம் இருந்தை எனக் கனலும் வெம் காமப் பிணி, நெருப்பில் கரி எளிதிற் பற்றுவதோடு, மிக உக்கிரமாகவும் இருக்கும்; அதுபோலக் காமத் தீயும் ஆகும்; ஆதலின், வேமிருந்தை யெனக் கனலும் வெங்காம பிணி என்னப்பட்டது. காமப்பிணிக்கு மருந்து என்பதற்கு ஒப்பு. குறள், *1102*, நெருநல் - நேற்று; குறள் : *336*; இச்செய்யுள் முதல், சூர்ப்பணகை தான் கொண்ட காதற் கருத்து நிறைவேறக் கையாளும் சாம, தான, பேத உபாயங்கள் அமைந்துள்ளமை நோக்கத்தக்கது. 'அரக்கர் புகலொழிய, யாம் தவம் இருந்த சூழல்' என்று இயைத்து, இராமபிரான் பஞ்சவடியில் தங்கியதற்குக் காரணம் கூறியதும் தொனிப்பது காண்க. *171, 174* என்ற செய்யுட்களைக் காண்க.

பி - ம். 1. யரக்கர்; புக்கொழிய; தவமிருந்த தவம்புரியும்; தவத்தர் களாம்.

2. விடத்திவ்வி; வனச்சூழல்; வந்தீரெனலும்.

3. வேமிருந்தில்; கனலுமெரி காம; வேமிருந்திமெனக்; வேமிருந்தியென; வேயமருந் தீயெனக் கனலும்; வேமிருந்தை யிடைக் கனலினெரி; வேமிருந்திலெனக் கனலும் வெங்காம வெம்பிணிக்கு.

4. நெருனலையும்; நெருநலுன்முன். (*117*)

**337.** செங்கயல்போற் கருநெடுங்கட் டேமருதா மரையுறையும்
நங்கையிவ ரெனநெருநல் நடந்தவரோ நாமென்னக்
கொங்கைகளுங் குழைகாதுங் கொடிமூக்குங் குறைத்தழித்தால்
அங்கணர சேயொருவர்க் கழியாதோ வழகென்றாள்.

'செம் கயல் போல் - சிவந்த கயல் மீன்களைப்போல, கருநெடும் கண் - கரிய நீண்ட கண்களையுடைய, தே மரு தாமரை உறையும் - தேன் பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கும், நங்கை என - திருமகளே என்னும்படி, நெருநல் - நேற்று, நடந்தவரோ - நடந்து வந்தவரோ? நாம் என்ன - நீவிர்' என்று இராமபிரான் கேட்க (அதற்குச் சூர்ப்பணகை), அரசே - அரசனே! கொங்கைகளும் - தனங்களும், குழைகாதும் - வளர்ந்து துவண்டு தொங்குகிறது காதுகளும், கொடிமூக்கும் - கொடிபோன்று மேலுயர்ந்து நீண்ட, மூக்கும், குறைத்து அழித்தால் - வெட்டி அழித்து விட்டால்,

அங்கண் - அந்நிலையில், அழகு அழியாதோ என்றாள் - ஒருவருக்கு அழகு அழிந்து போகாதோ ?' என்று கூறினாள்.

கயல் மீன் மகளிர் கண்ணுக்கு உவமை; அது மகளிர் கண் போல் மருண்டு சலிக்குந் தன்மையும் உருவ ஒற்றுமையும் உடைமையால். தேம் - தேன் ; தேம் மருவு - தேமருவு என்றாயிற்று ; நன். சூ. 219. நாம் - நீர், 'நாமரை யாமத் தென்னோ வந்து வைகி நயந்ததுவே' (திருக்கோவையார். 164) அடியையும் அதற்குப் பேராசிரியர், 'நாம் என்னும் முன்னிலை யுளப்பாட்டுத் தன்மை உயர்வு தோன்ற முன்னிலைக்கண் வந்தது என்று எழுதிய உரையையும் நோக்குக; இன்னும், கலித். 81: 37; திருவால. திருவிளை: 38: 2. இவற்றையும் காண்க. ஒரு மகளுக்குக் கொங்கைகளும் காதுகளும் மூக்கும் அழிந்து விட்டால், அவள் அழகோடு பெண்மையும் கெடும் என்பது ; 'கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டு, மில்லாதாள் பெண்காமுற் றற்று' (குறள். 402) என்பதாலும் அறியலாம். மேலும், ஒருவருக்கு மூக்கு இல்லாது அழிந்து போகுமேல் அது பிறர் பார்த்து நகைக்கும்படி அவமானத்திற்கு இடமாகும் ; உயுத்த. கும்பகருண : 360.

பி - ம். 1. செங்கயல்சேர் ; தாமரைப்பூவில்.
2. நங்கையிவளென ; நங்கையினுயவள் நெருநல் நடந்தவள் நீயோ வென்று.
3. குழைக்காதும் ; குறைந்தழிந்தால் ; குறைத்தெறிந்தால் ; குறைத்திழிந்தால். (118)

338. மூரன்முறு வலனிளைய மொய்ம்பினன் முகநோக்கி
வீரவெகுண் டனையிவடன் விடுகாதுங் கொடிமூக்கும்
ஈரநினைந் திவளிழைத்த பிழையென்னென் றிறைவினவச்
சூரநெடுந் தகையவனை யடிவணங்கிச் சொல்லுவான்.

இறை - தலைவனான இராமபிரான், மூரன் முறுவலன் - புன் சிரிப்புக்கொண்டு, இளைய மொய்ம்பினன் - இளைய வீரனான இலக்குவனுடைய, முகம் நோக்கி - முகத்தைப்பார்த்து, 'வீர ! - வீரனே ! இவள் தன் - இவளுடைய, விடுகாதும் கொடி மூக்கும் - தொங்கி வளரவிடப்பட்ட தொள்ளைச் செவிகளையும், நீண்ட மூக்கையும் வெகுண்டனை - கோபங்கொண்டு, ஈர - நீ அறுத்தெரிய, இவள் நினைந்து இழைத்த - இவள் கருதிச்செய்த, பிழை - குற்றம், என் என்று - என்ன' வென்று, வினவ - கேட்க, சூர நெடும்தகை - சூரத் தனமும் பெருமைக் குணமும் வாய்ந்த இலக்குவன், அவனை அடி

வணங்கி - அவ்விராமபிரானின் - திருவடிகளை வணங்கித் தொழுது, சொல்லுவான் - பின்வருமாறு மறுமொழி கூறுவானாயினன்.

மூரன் முறுவலன் : இயற்கையில் கோர ரூபமான சூர்ப்பணகை, தன் காது மூக்கு முதலியன அறுபட்டதால் தன் அழகெல்லாம் அழிந்து விட்டதாகக் கூறியதும், இராமபிரானுக்குப் புன்னகை உண்டாயிற்று. 'மூரன் முறுவலன்' என்பதை, ஒரு பொருட் பன்மொழியாகவும் கொள்ளலாம். மேலும், நேற்று வந்தவள் தான் யான் என அவள் கூறக்கேட்டதினாலும் ஆம். இனி 'சூரநெடுந் தகை யவனை' என்று கொண்டு, இராமபிரானுக்குக் கூட்டிப் பொருள் கொள்ளலும் பொருந்தும். கொடி மூக்கு : 337, 361.

பி - ம். 1. னிளையமுன்பினேன் ; மொய்ம்பினனை ; முரறரு முறுவலினை யோனினிய முகனோக்கி ; மூரனகை விழைந்தமல னிளவறனை.
2. வீரவிரைந்தனை ; விரைந்தியனிழைத்த ; வெகுண்டியவள் காதும் முலை மூக்கும் வேறுற ; வெகுண்டிவடன்.
3. ஈர விரைந்திய னிழைத்தபிழை; ஈர நினைந்தியவள் செய்த பிழை.
4. சொல்விடுவான். (119)

339. தேட்டந்தான் வாளெயிற்றிற் றின்னவோ தீவினையோர்
கூட்டந்தான் புறத்துளதோ குறித்தபொரு ளறிந்திலெனால்
நாட்டந்தா னெரியுமிழ நல்லாண்மேற் பொல்லாதாள்
ஓட்டந்தா ளரிதினிவ ளுயிர்கவர்ந்தா ளெனவந்தாள்.

'தேட்டம் தான் - இவள் (பிராட்டியைத்) தேடி வந்தது தான், வாள் எயிற்றில் தின்னவோ - தன் வாள் போல ஒளி உள்ள தன் பற்களால் அவளைக் கடித்துத் தின்பதற்கோ ? தீவினையோர் - கொடிய செயலை மேற்கொண்ட அரக்கர்களுடைய, கூட்டம் தான் - கூட்டமே தான், புறத்து உளதோ - பக்கத்தில் இருக்கின்றதோ - குறித்த பொருள் - இவள் கருதி வந்த காரியத்தை, அறிந்திலென் - அடியேன் அறிந்தே னல்லேன் ; நாட்டம் தான் எரி உமிழ - கண்கள் தீயைக் கக்க, பொல்லாதாள் - இக் கொடியவள், நல்லாள் மேல் - பிராட்டி மீது, அரிதின் - அரிய நிலையில், இவள் உயிர் கவர்ந்தாள் என - இப் பிராட்டியின் உயிரை அபகரித்துவிட்டாள் என்று சொல்லும் நிலையில், ஓட்டந்தாள் வந்தாள் - ஓடி வந்தாள்.

தேட்டம் - தேடுதல். தேட்டம் தான், கூட்டந்தான், நாட்டம் தான் என்பனவற்றின் ஈற்றில் உள்ள தான் என்றவை, தேற்றப்

பொருளில் வந்த இடைச்சொற்கள். ஒப்பு: 'கல்லேத் தான் மண்ணைத் தான் காய்ச்சித்தான் குடிக்கத்தான் கற்பித்தாஞ ?' (தனிப்பாடல்) நாட்டம் - கண் ; நாடுதல் என்னும் தொழிலடியாகப் பிறந்த தொழிற் பெயர். பொருள் - காரியம். நல்லாள் மேல் பொல்லாதாள் ; இது முரணணி. ஒட்டந்தாள் வந்தாள் - ஓடி வந்தாள். 'ஒட்டந்தெதிரா ' (அயோத். நகர் நீங்கு : 84) ; தொல். பொருள் 58. உரை ; "ஒக்க வோட்டந்த வந்தியும்" (திருவிசைப்பா. கோயில் : 2 : 2. 'அரிதின் அவள் உயிர் வந்தாள்" என்று பாடங் கொண்டு சூர்ப்பணகை தன்மேல் ஓடிவரக் கண்ட பிராட்டி அஞ்சி ஆவியிழந்தவள் போலத் தன் நிலை தளர்ந்து கிடந்தாள் என்பதும் பின் ஏதோ அதிர்ஷ்ட வயமாய் தன்னுயிரை மீண்டும் பெற்றவளாஞள் என்றும் பொருள் கூறுவர்.

பி - ம். 1. தீவினையின் ;

2. புகுந்துளதோ ; புகுந்துளவோ ; பொருளறிந்தலமால் ; ளுணர்ந்திலனல்.

3. தீயுமிழ.

4. ஒட்டந்தா னரிதினிவ ; ளுயிர் தந்தா ; ளுயிர்வந்தெளென ; ஒட்டந்வானுளதி வடனுயிருய்ந்தாளென வுரைத்தாள். (120)

340. ஏற்றவளை வரிசிலையோ னியம்பாமுன் னிகலரக்கி
சேற்றவளை தன்கணவ னருகிருப்பச் சினந்திருகிச்
சூற்றவளை துனியுழக்குந் துறைகெழுநீர் வளநாட
மாற்றவளைக் கண்டக்கா லழலாதோ மனமென்ருள்.

ஏற்ற - கையிற் ருங்கிய, வளை வரி சிலையோன் - வளைந்த கட்டுக்கள் அமைந்த வில்லையுடைய இலக்குமணன், இயம்பா முன் - இப்படிச் சொல்லி முடியும் முன்னமே, இகல் அரக்கி - பகைமை கொண்ட அவ்வரக்கியாகிய சூர்ப்பணகை, 'சூல் தவளை - கருவுற்றிருந்த பெண் தவளை, தன் கணவன் அருகு - தன் கணவஞகிய ஆண் தவளையின் அருகே, சேற்ற வளை இருப்ப - சேற்றில் ஒரு சங்கு தங்கியிருக்க, சினம் திருகி - (மயங்கிக்) கோப முதிர்ச்சியுற்று, துனி உழக்கும் - வெறுப்புடன் ஊடல்கொண்டு வருந்தும் துறை கெழு நீர் நாடா - துறைகள் நிறைந்த நீர் நிலைகளையுடைய வளம்பெற்ற கோசல நாட்டை யுடையவனே! மாற்றவளை கண்டக்கால் - சக்களத்தியைக் கண்டால், மனம் அழலாதோ என்ருள் - ஒருத்தி மனம் எரியாதோ ?, என்று கூறிஞள்.

ஏற்ற வரிசிலையோன் என்றது, சூர்ப்பணகையை அம்பு பூட்டி எய்வதற்குச் சன்னத்தனாய நாண் ஏற்றிய வரிசிலையுடைய இலக்குவன் எனலும் அமையும். ஏற்ற வளை வரிசிலையோன் என்பதை இராமபிரானுக்கு ஆக்கி இலக்குவனுக்கு இராமபிரான் மறுமொழி கூறுமுன் என்று பொருள் கூறுவாரும் உளர்; சூல் தவளை தன் கணவன் அருகில் சங்கிருப்பதைக் கண்டு மயங்கிச் சினம் திருகியது என்க, இங்கு கோசல நாட்டுக்குக் கூறிய வருணனையை 'புழற்கா லாம்ப லகலடை நீழற் கதிர்க் கோட்டு நந்தின் சுரிமுக யேற்றை நாகின வளையொடு பகன்மணம் புகூஉம் நீர்த்திகழ் கழனி நாடு' புறம். 266 : 3-6. அடிகளோடு ஒப்பிடுக. இராமபிரான் தனக்கே உரியவன் என்றும் பிராட்டி தனக்குப் போட்டியாக வந்த சக்களத்தி என்றும் சூர்ப்பணகை கருதினாள் என்பதாம். அவ்வாறுள்ள நிலையில் அவள் மனம் அழன்று பிராட்டிக்குக் கேடு சூழக் கருதியது நியாயமே என்பதும் அவள் கருத்து என்பது விளங்குவது காண்க. சக்களத்தில் சககளத்திரம் என்ற வடசொல்லின் திரிபு என்பர். இச் செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. செய்யுளின் போக்கைக் காணுங்காலும் இஃது இடைச் செருகல் என்பது தோன்றுகிறது. எனினும், கிடைத்த எல்லா ஏடுகளிலும் இது காணப்படுவதால், இஃது இங்குப் பாடமாகக் கொள்ளப்பட்டது.

பி - ம். 1. ஏற்ற வரிசிலை யிளவ லியம்பாமுன்.
3. நீருழக்குந்துறை. 4. லெரியாதோ. (121)

341. பேடிப்போர் வல்லரக்கர் பெருங்குலத்தை யொருங்கவிப்பான்
தேடிப்போந் தனமின்று தீமாற்றஞ் சிலவிளம்பி
வீடிப்போ காதேயிவ் வெவ்வனத்தை விட்டகல
ஓடிப்போ வென்றுரைத்த வுரைகடந்தாற் கவளுரைப்பாள்.

(அச்சொற்களைக் கேட்டு இராமபிரான்), பேடி போர் - அச்சமுள்ள போர் புரிவதில், வல் - திறமையுள்ள, அரக்கர் பெருங்குலத்தை - வலிமை வாய்ந்த இராக்கதர்களுடைய பெரிய கூட்டத்தை, ஒருங்கு அவிப்பான் - ஒருசேர அழிக்கும் பொருட்டு, தேடிப் போந்தனெம் - அவர்களைத் தேடிக்கொண்டு இங்கு வந்துள்ளோம்; (ஆதலால்) இன்று தீ மாற்றம் சில விளம்பி - இப்பொழுது நீ (சொல்லத் தகாத) கொடுஞ் சொற்கள் சில பேசி, வீடி போகாதே - அழிந்து போகாதே; இ வெவ் வனத்தை விட்டு - இந்த

விரும்பத்தக்க தவ வனத்தை விட்டு, அகல - அகன்று அப்பாலாக, ஓடிபோ - ஓடிப் போய்விடு,' என்று உரைத்த - என்று அவளுக்கு அறிவுறுத்திக் கூறிய, உரை கடந்தாற்கு - சொற்களால் புகழ்ந்து கூற முடியாத பெருமையுடைய அவ் விராமபிரானுக்கு, அவள் உரைப்பாள் - அந்தச் சூர்ப்பணகை பின் வருமாறு மறுமொழி கூறலானுள்.

பேடித்தல் - அச்சுறுத்தல்; குடநாட்டுச் சொல். வெவ்வனம்; விரும்பத்தக்க வனம். வெம்மை - விருப்பம்; தொல். சொல் : 334. உரை கடந்தான் - புகழ்ச் சொல்லுக்கு அடங்காதவன் - அதாவது அவன் பெருமை யாவராலும் புகழ முடியாத சிறப்புடையது என்பதாம். உரை கடந்தான்; உரைகடந்தாற்கு என்பதனை, உரைகள் தந்தாற்கு எனப் பிரித்து, வேத தத்துவ உரைகளை அன்னமாய் இருந்து உபதேசித்த பரம்பொருளாகிய இராமபிரானுக்கு என்று பொருள் கொள்ளலும் ஏற்கும்.

பி - ம். 2. மிவண் தீமாற்றம்; யாங்கள் தீமாற்றம்.
3. மொய்வனத்தை; வெவ்வனத்தை.
4. வென்றுரைத்த வுரை கடந்தாங்; வென்றுரைப்ப; வென்றுரைத்தா னுத்தமன்; மன்மற்றவ ளுரைப்பாள். (122)

சூர்ப்பணகை தன்னை ஏற்றுக்கொள்ள வேண்டுதல் 342—52.

342. நரைதிரையொன் றில்லாத நான்முகனே முதலமரர்
கரையிறந்தோ ரிராவணற்குக் கரனிறுக்குங் குடியன்றே
விரையுமது நன்றன்று வேருக யானுரைக்கும்
உரையுளது நுமக்குறுதி யுணருதிரே லென்றுரைப்பாள்.

நரை திரை ஒன்று இல்லாத - உரோமம் நரைத்தலும் உடல் சருமம் சுருங்குதலும் ஆகிய ஒரு கிழத்தன்மை யென்பதே இல்லாத, நான்முகனே முதல் அமரர் - பிரமதேவனே முதலாகிய தேவர்கள், கரை இறந்தோர் - எல்லையற்ற அளவு உள்ளவர்கள், இராவணற்கு - இராவணனுக்கு, கரன் இறுக்கும் குடி அன்றே - இறைசெலுத்தும் அவன் ஆட்சிக்குள் அடங்கிய குடிமக்கள் அல்லரோ? விரையும் அது - நீங்கள் அவசரப்பட்டு இப்பொழுது செய்யத் துணியும் காரியம், நன்று அன்று - உங்கட்கு நன்மை தரும் செயல் ஆகாது - உறுதி உணருதிரேல் - உங்கள் நலனை நீங்கள் உணர்வீரானுல்,

நுமக்கு - உங்களுக்கு, வேறு ஆக - தனிப்பட, யான் உரைக்கும் உரை உளது - யான் சொல்லவேண்டிய சொல் உள்ளது, என்று உரைப்பாள் - என அதனை எடுத்துக் கூறுவா ளாயினள்; (அது பின்வரும் செய்யுள்களால் விளங்கும்).

நரை திரை ஒன்றில்லாத: என்பது அதன் இனமான மூப்பையும் உள்ளடக்கிக் கூறியது, 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்ற உத்திபற்றி என்க. நான்முகனே; ஏகாரம் தேற்றப் பொருளது; நான்முகன் முதலாய அமரர்கள் என்றும் நவ யௌவன நிலையில் உள்ளவர்கள்; அவர்களுக்கு இளமை, மூப்பு, பிணி, சாக்காடு என்னும் அவத்தைகள் இல்லை என்பதாம். பிரிநிலைப் பொருளும் ஆம். கரம் - கப்பம் அல்லது குடியிறை, (பிங்). கரன் - கரம் என்பதின் போலி. ஒப்பு: 'கலக் கலவறை' பெருங். *1. 32: 61-2.* 'சேனைக் காவலர் கரங்கள் நீக்கி' (வி-பா. பாயிரம்: *13.*) விரையும் அது: "வீடிப் போகாதே;" ஓடிப் பேர் (*341*) என்று என்னை விரட்டுவது. இது முதல், பின்வரும் செய்யுட்கள் இராம பிரானிடம் அரக்கி கூறியவை.

பி-ம். 1. யென்றில்லாத; நான்முகனுர் முதலமரர்.
2. கரமிறுக்குங்; கடமிறுக்குங்; கடனிறுக்குங் குடிகண்டாய்.
3. விரையுமிது; நன்றதன்றல் வேந்தற்கு; நானுரைக்கும்.
4. யுரையுளதே; யுரையுமுள தனக்கு யொப்புளதே லெனவுரைப்பாள்; யுரையுள துமக்குறுதி யோர்திரே லெனிலுரைப்பாம்:

**343.** ஆக்கரிய மூக்குங்கை யரியுண்டா ளென்றுரை
நாக்கரியுந் தயமுகனர் நாகரிக ரல்லாமை
மூக்கரிந்து நுங்குலத்தை முதலரிந்தீ ரினியுமக்குப்
போக்கரிதிவ் வழகையெல்லாம் புல்லிடையே யுகுத்தீரே.

'உங்கை - உன் தங்கை, ஆக்கு அரிய - படைத்தற்கு அருமையான, மூக்கு அரி உண்டாள் - மூக்கும் அறுபட்டாள்; என்றுரை - என்று போய்ச் சொன்னவரையும், நாக்கு அரியும் தயமுகனர் - நாக்கை அறுக்கும் பத்துத் தலைகளையுடைய கொடிய இராவணனர், நாகரிகர் அல்லாமை - கண்ணோட்ட முடையவர் அல்லாமையால், மூக்கு அரிந்து - என் மூக்கை அறுத்து, நும் குலத்தை - உம் குலத்தையே, முதல் அரிந்தீர் - வேரோடு அறுத்தவர் ஆனீர்;

இனி உமக்கு போக்கு அரிது - இனிமேல் உமக்குத் தப்பிப் பிழைத்துப் போகும் வழி இல்லை; இ அழகு எல்லாம் - இந்த உம் (அரிய) சௌந்தரியம் அனைத்தையும், புல் இடையே - புற்கள் அடர்ந்த இடத்திலே, உகுத்தீரே - சிந்தினவராக ஆயினீரே!'

மூக்கு என்றது, காதுகளையும், கொங்கைகளையும் தழுவிக் கூறியது ஆம். தயமுகனார்: ஆர் விகுதி சிறப்பு நோக்கி வந்தது. தயமுகன் - தசமுகன் என்ற வடசொற் றிரிபு; தயரதன் என்றாற் போல. நாகரிகம் - கண்ணோட்டம்; இது, 'பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க, நாகரிகம் வேண்டு பவர்' என்ற (குறள். 58)க்கு உரை வகுத்த ஆசிரியர் பரிமேலழகர், நாகரிகம் என்பது கண்ணோட்டம் ஆதல் என்று கூறியது காண்க. 'நஞ்ச முண்பர் நனி நாகரிகர்' என்ற (நற்றிணை 355 : 7.) மேற்கோள் காட்டியுள்ளமையாலும் அறியலாம். நாகரிகர்; பெருங். 1 : 35 ; 17. அரிந்தீர்; இனி இராவணன் சீற்றத்தால் இராமபிரான் குலம் அழிந்துபோகும் என்ற துணிவு பற்றிக் கூறிய கால வழுவமைதி ஆகும். மூக்கரிந்து நும் குலத்தை முதலரிந்தீர்; ஒப்பு. 'வாலியைப் படுத்தாயலை மன்னற, வேலியைப் படுத்தாய் விறல் வீரனே' (கிட்கிந்தா. வாலி வதைப் : 89); இது உடனிகழ்ச்சியணி; ஒப்பு; சுந்தர. 544. சூர்ப்பணகை தன் மூக்கு முதலிய உறுப்புக்களை இழந்ததையும், இனி, இராவணன் கோபத்திற்கு ஆளாகில், இராமபிரான் இறந்து போய்விடுவன் என்பதையும் பெரிதாகக் கருதாமல், அவன் அரிய அழகு போய்விடுமே என்றே கவலை யுறுவது அவள் காம உணர்ச்சியைக் காட்டுவதாம். புல்லிடை யுகுத்தல்; புல்லிடை யுகுத்த பொருளை மீண்டும் திரட்டி யெடுக்க முடியாது போல, அவன் அழகை மீண்டும் தான் அடைய முடியாது போய்விடுமே என்று வருந்தினாள் என்க. புல்லிடை யுகுத்தல்; அயோத். மந்தரை சூழ்ச்சி : 62. பள்ளியடைப் : 112.

பி - ம். 1. ஆக்கரிய மூலை நங்கை யரியுடையா ளென்றுரை.

2. தசக்கிரிவன்; தசமுகன் காணு னுமக்கிங் குரைப்பதென்னே.

3. மூக்கரிந்தீர் நங்குலத்தை; மூக்கரியா நங்குலத்தை யினி நமக்கும்; யினியுமக்கும்.

4. நம்மழகைப் புல்லிடையே யுகுத்தீரால்; புல்லிடையிற் போக்கினீரால். (124)

344. வான்காப்போர் மண்காப்போர் மாநாகர் வாழுலகம்
தான்காப்போ ரினித்தங்க டலைகாத்து நின்றுங்கள்
ஊன்காக்க வுரியார்யா ரென்னையுயிர் நீர்காக்கின்
யான்காப்பெ னல்லாலவ் விராவணனு ருளரென்றுல்.

'(நீவிர் எனக்கிழைத்த பெருந் தீங்குக்காக உம்மைத் தண்டிக்க) இராவணனுர் உளர் என்ருல் - (பேராற்றல் படைத்த என் அண்ணனை) இராவணனுர் உளரே என்ருல், நீர் என்னை உயிர் காக்கின் - (என் விருப்பத்தை நிறைவேற்றி), என் உயிரை நீவிர் காத்தளிப்பீரானுல், யான் காப்பென் - (அவ்விராவணனுரிடமிருந்து) நும்மை நான் காப்பேன்; அல்லால் -(அப்படி நான் காப்பது) அல்லாமல், வான் காப்போர் - வானத்தை ஆளும் தேவர்களுள்ளும், மண் காப்போர் - பூமியை ஆளும் மன்னர்களுள்ளும், மா நாகர் வாழ் உலகம் தான் காப்போர் - பெரிய நாகர்கள் வாழும் பாதலத்தையே காக்கும் நாகராசாக்களுள்ளும், இனி - அவ்விராவணனுர் போர்க்கெழும் காலத்தில், தங்கள் தலை காத்து - தங்கள் தலைகளையும் தப்புவித்துக்கொண்டு, உங்கள் ஊன் காக்க - நுங்கள் உடல்களைக் காப்பாற்ற, உரியர் யார் - தக்கவர் யாவர்? (எவருமிலர் என்றபடி).

இராவணனுர் உளர், என்றது இராம லக்ஷ்மணர்களை அச்சுறுத்தக் கூறியது. இராவணனுக்குமுன் மூவுலகமும் நில்லாது என்பது கருத்து. ஊன் - உடல்; குறள் : 1013. இராவணனுர் என்றது, அவன் வலிமையைக் குறித்தது.

இச் செய்யுளில் சூர்ப்பணகை இராமபிரானை நோக்கி, 'நீர் என்பொருட்டுக் குற்றமிழைத்தீர்கள்; ஆதலால் இராவணனின் சினத்துக்கு ஆளானீர்; உம்மைக் காக்க ஒருவருமிலர்; இப்பொழுது என்னிடம் அன்பு காட்டுவீர்களானுல் நானே உமக்கு உதவியாய் நிற்பேன்; என் தமையனும் பகைமை நீங்கி உம்மிடம் நட்புக் கொள்வான்' என்று கூறினுள் என்க. 'அல்லால் இராவணனுர் உளர்' என்பதற்கு, 'இல்லாவிட்டால் உங்களை அழிக்க இராவணனுர் இருக்கின்ருர்' என்றும் பொருள் கூறுவர். இச்செய்யுள், 342 முதல் 349 வரை உள்ள பாடல்கள் இலக்குவனை யுள்ளடக்கி இராமபிரான் ஒருவனையே நோக்கிக் கூறியதாகக் கொள்வதே தக்கதாகும். இவ்வாறே பின்வரும் செய்யுட்களும் கொள்ளத் தக்கனவாம். 126. குறிப்பு : ஒரு பிரதியில் இப்பாடல் இல்லை.

பி - ம். 1. வானுகர் வாழுலகம். 2. டலைகாத்த நிற்கின்ருர்.
3. ஊன் காக்க வுரியவர்யார்; ரென்னுயிரை; நீகாத்தால்; நீர்காக்கில்; நீர்காப்பில். 4. தல்லாம விராவணனுர். (125)

345. காவற்றின் கற்பமைந்தார் தம்பெருமை தாங்கழறார்
ஆவற்பே ரன்பினு லறைகின்றே னுமன்றே
தேவர்க்கும் வலியான்றன் றிருத்தங்கை யாளிவளீண்
டேவர்க்கு வலியாளென் றிளையானுக் கியம்பீரோ.

திண் காவல் கற்பு அமைந்தார் - (தம்மைத் தாமே பாதுகாத்துக் கொள்ளும்) வலிய காவலாகிய கற்பு நெறியில் அமைந்த (உயர் குல) மகளிர், தம் பெருமை தாம் கழறார் - தம் பெருமையைத் தாமே கூறிக்கொள்ள மாட்டார்கள்; ஆவல் பேர் அன்பினுல் அறைகின்றேன் ஆம் அன்றே - (அப்படியிருந்தும்), உம்மிடத்து யான் கொண்ட ஆசை காரணமான பெரிய அன்பினுல் இச்சொற்களை யான் (வெளிப்படையாய்ச்) சொல்லுகின்றேன்; 'இவள் தேவர்க்கும் வலியான் தன் திரு தங்கையாள் - இவள் தேவர்களுக்கும் வலியவனை இராவணனுடைய அருமைத் தங்கை, ஈண்டு - இங்கு, ஏவர்க்கும் வலியாள் என்று - எவரையும் விட வலிமை பெற்றவள்' என்று, இளையானுக்கு - நும் தம்பிக்கு, இயம்பீரோ - நீர் எடுத்துக் கூறமாட்டீர்களோ?

முன், செய்யுளில் இராவணனையும் எதிர்த்து நிற்கும் தன் ஆற்றலை வெளிப்படுத்தி, அதனையே இங்கும் வற்புறுத்திக் கூறுகின்றாள் சூர்ப்பணகை. இஃது அவள் இராமபிரானிடம் இலக்குவனுக்குக் கூறுமாறு வேண்டிக்கொண்டது. திண் கற்பு; 'கற்பென்னும் திண்மை' (குறள். 54). தம் பெருமை தாம் கழறாமை; குறள்: *978–9*. ஆவல், அன்பு என்பன ஒருபொருள் பன்மொழி; ஆவல் பேரன்பு - அளவுகடந்த பெரிய அன்பு. 'இளையான் தன் வலியைப் பெரிதும் கருதி, என் வலியை எளிமை யாக்குகின்றான் போலும்; அவனுக்குக் கூறுவீராக' என்றனள் என்க. 'தேவர்க்கும் வலியான்றன் திருத்தங்கை யான்; இவள் இங்கு ஏவர்க்கு வலியானுக்கு இளையாள்' என்ற பாடத்திற்கு, அரக்கி தான் பிராட்டியினும் சிறந்தவளாகத் தற்புகழ்ச்சி செய்துகொண்ட பொருள் அமையும்.

பி - ம். 1. *தங்கருத்தினிமை தாங்கழறார்; தாங்கழலார்; கழறார்கள்.*
2. *ஆவவிற்பே ரன்பதனு லறைந்தனன் மற்றதை யறியீர்;*
3. *தேவர்க்கும் வலியான்றன் திருத்தங்கை யானிவளிங் கேவர்க்கு வலியானுக் கிளையாளெற் கியம்பீரே. இளையானீ ரியீம்பீரே; எவர்க்கும் வலியீர் யாருளத்துமீ ரியம்பீரோ.* (126)

**346.** மாப்போரிற் புறங்காப்பென் வான்சுமந்து செலவல்லேன்
தூப்போலக் கனிபலவுஞ் சுவையுடைய தரவல்லேன்
காபபோரைக் கைத்தேநீர் கருதியதே தருவேனிப்
பூப்போலு மெய்யிவளாற் பொருளென்னே புகல்வீரால்.

"மா போரில் புறம் காப்பென் - பெரிய போர் ஏற்பட்டால் அதில் யான் உம் அருகில் இருந்து உம்மைக் காப்பேன். வான் சுமந்து செல வல்லேன் - ஆகாய மார்க்கமாய் உம்மை யான் எடுத்துக்கொண்டு (குறித்த இடத்திற்குச்) செல்லவும் திறமையுடையவள் ஆவேன். தூ போல - மாமிசம் போன்ற, சுவை உடைய கனி பலவும் - நல்ல சுவையுடைய பழங்கள் பலவற்றையும், தர வல்லேன் - தேடிக் கொணர்ந்து உமக்குத் தர வல்லவள் ஆவேன்; காப்போரை கைத்து - யார் காத்து இருந்தாலும் அவர்களை எதிர்த்து அழித்து, என் நீர் கருதியதே - நீவிர் எதைப் பெற விரும்புகின்றீரோ அதனையே, தருவேன் - பற்றிக் கொணர்ந்து உமக்குத் தருவேன்; (இத்தகைய திறமையுடைய என்னைவிட்டு) இ பூ போலும் மெய் இவள் ஆல் - இந்த மலர்போன்ற மென்மை பொருந்திய உடலுடைய இப் பெண்ணால், பொருள் என்னே - அடையும் பயன் என்ன தான் உண்டு? புகல்வீர் - எனக்குச் சொல்வீராக! ஆல்: ஈற்றசை.

புறம் காப்பேன் - உம் உடலுக்கு ஊறு வராமல் தடுத்துக் காப்பேன்; புறம் - உடம்பும் ஆம்: 'பைம்புறப் படுகிளி' ஐங்குறு: 260. இனி புறங்காத்தல் என்பதற்குப் பாதுகாத்தல் என்னும் பொருளும் உண்டு. 'வான் சுமந்து செல்லல் வல்லேன்' என்றது; அரக்கர் ஆகாய கமனத்தில் வல்லவர் ஆதலின்; தூ - மாமிசம்; (பிங்.); 'தூவகலில் குந்தமற மைந்தர்'; (அயோத். தைலமாட்டுப்: 12.) தூப் போல் - மாங்கிசம் போலும், காப்போரைக் கைத்தென்னில், கருதியது தருவேன் - எவர் எந்தப் பொருளைக் காத்திருந்தாலும் அவரைக் கொன்று நீர் வேட்டது யாதோ? அதனைத் தருவேன் என்பது பழையவுரை. கைத்தல்; கோபித்தல்; அலைத்தல்; 'மருவலரைக் கைக்கும்' (தஞ்சைவா. 423); பூப்போலும் மெல்லியல் என்றது பிராட்டி திருமேனியின் சௌந்தரிய மென்மையின் சிறப்பைக் கருதாது, சூர்ப்பணகை தன்போல் ஒரு காரியமும் செய்ய முடியாத வலிமை அற்ற உடல் நிலையைக் குறித்துப் பிராட்டியை இகழ்ந்தபடி, பொருள் - பயன். "மெய்ப்பொருள் காண்ப தறிவு" (குறள். 423.) சுவை, பயன் இவற்றின் வேறுபாடுகளுடன் குகன்

இராமபிரானிடம் தன் உதவிப் பெருமையைக் கூறியனவற்றை (அயோத். கங்கைப். 64-67) இச் செய்யுளுடன் ஒப்பிடுக.

பி-ம். 1. ‘ புறங்காப்பேன் ’
2. கனிபலவுஞ் சுவையுடைய; கனிபோல்வ; சுவையொழுகத்; தூப்பாரும் கனிபலவும் சுவை கொணர வல்லேனல்.
3. கைத்தேனீர் ; கருதியது தருவேனிப் ; காப்பாரைக் காற்படநீ ; காப்போரைக் காக்குநீர்.
4. பொருனென்னே, பொருளென்னும், புகலென்னே ; பூப் போலும் மெல்லியலால். (127)

347. குலத்தாலு நலத்தாலுங் குறித்தனவே கொணர்தக்க
வலத்தாலு மதியாலும் வடிவாலு மடத்தாலும்
நிலத்தாரும் விசும்பாரு நேரிழையா ரென்னைப்போல்
சொலத்தானிங் குரியாரைச் சொல்லீரே வல்லீரேல்.

‘ குலத்தாலும் - பிறந்த உயர்குலச் சிறப்பினலும், நலத்தாலும் - நன்மை தரத்தக்க குணச் சிறப்புக்களாலும், குறித்தனவே - நீவிர் குறித்தவற்றை யெல்லாம், கொணர் தக்க - கொண்டுவந்து தரக் கூடிய, வலத்தாலும் - ஆற்றல் உடைமையாலும், மதியாலும் - அறிவுடைமையாலும், வடிவாலும் - வடிவழகினலும், மடத்தாலும் - மடமையாலும், நிலத்தாரும் - இந்த மண்ணுலகத்தாரும், விசும் பாரும் - வானுலகத்தாரும், என்னைப் போல் - என்னைப் போல, நேரிழையார் - பெண்கள், சொலதான் - ஒப்பாகச் சொல்வதற்கு, உரியாரை - உரிமை யுடையோரை, வல்லீரேல் - நீங்கள் சொல்லத் திறமை யுடையீரானல், சொல்லீர் - சொல்வீராக ! ஏ : ஈற்றசை.

பின்னர் வடிவாலும் என்று அழகைத் தனியே குறிப்பிட்டிருப்பதால், நலத்தாலும் என்பதற்குக் குணச் சிறப்பாலும் என்று பொருள் கொள்ளப்பட்டது. மடத்தாலும் :—மடம் - மென்மை ; ‘ தெளிநடை மடப்பிணை ’ (புறநா. 23.) மகளிர்க்குரிய நான்கு உயர் குணங்களில் ஒன்று ; மடம் - மேன்மையும் ஆம்.

பி-ம். 1. குறித்த பொருள் கொடுத்துதவும் ; குறித்தபொருள் கொணர் தக்க.
2. மடப்பானும் ; வலத்தாலுஞ் செருக்காலும் ; வடிவாலுந் தடத்தாலும்.
3. நிலத்தாரும் நேரிழையா ரென்னைப்போல் நிகரென்று ; நேரி ரிழையார் யாரெனக்கு நேராக.
4. சொலித்தாகுங் குறியாரைச் சொல்லீர் நீர் நல்லீரே ; சொல் லீரோ ; சொல்லீரோ நல்லீரே. (128)

348. போக்கினீ ரென்னாசி போய்த்தென்னீர் பொறுக்கிலிரேல்
ஆங்குவெனோர் நொடிவரையி லழகமைவெ னருள்கூரும்
பாக்கியமுண் டெனிலதனால் பெண்மைக்கோர் பழுதுண்டோ
மேக்குயரு நெடுமூக்கு மடந்தையர்க்கு மிகையன்றோ.

'என் நாசி போக்கினீர் - என் மூக்கை அறுத்துவிட்டீர்கள், போய்த்து என் - அதனால் போனதான நஷ்டம் என்ன? (ஒன்று மில்லை என்றபடி); நீர் பொறுக்கிலிரேல் - நீவிர் இதனைப் பொறுக்க மாட்டீர்களென்றால், அருள் கூரும் பாக்கியம் உண்டு எனில் - அவ் விதம் உங்கள் அருள்மிகும் பேறு எனக்கு உண்டாகுமானால், ஓர் நொடிவரையில் - ஒரு நொடிப் பொழுதளவுக்குள், ஆக்குவென் - அதனை மீண்டும் உண்டாக்கிக் கொள்வேன்; அழகு அமைவேன் - (நீங்கள் விரும்பும் வண்ணம்) நல்ல அழகு பொருந்தினவளாக ஆவேன். அதனால் - அப்படியே எனக்கு மூக்கு இல்லாமற் போனால், பெண்மைக்கு ஓர் பழிப்பு உண்டோ - என் பெண் தன்மைக்கு ஒரு குறை உண்டாகுமோ? மேக்கு உயரும் நெடுமூக்கும்- மேலே உயர்ந்துள்ள நீண்ட மூக்கும், மடந்தையர்க்கு - மகளிர்க்கு, மிகை அன்றோ - அதிகப்படி அல்லவோ?

போய்த்து என்பது போயிற்று என்ற சொல்லின் போலி; ஆயிற்று என்பது ஆய்த்து என்று வந்தாற்போல; தக்க. 205. உரை. சூர்ப்பணகை தன் விருப்பப்படி உருவெடுத்துக் கொள்ளும் மந்திரசித்தி யமைந்தவளாதலின் (முன் நல்ல வடிவழகமைந்த மங்கை வடிவில் வந்ததையும் நோக்குக.) மூக்கை மீண்டும் ஒரு நொடிப்போதில் உண்டாக்கிக் கொள்வேன், மேலும் நல்ல அழகுடையவளாகவும் அமைவேன் என்றனள். இச் செய்யுளில் சூர்ப்பணகையின் வாதம் இருவகைகளாக உள்ளது. ஒன்று வேண்டுமானால் போன மூக்கைத் திரும்பவும் பெறுவேன் என்பது; (2) மற்றது, மூக்கு இல்லாவிட்டாலும் சிறப்பானது என்பது; இவ் விரண்டனுள் தான் எதற்கும் சித்தமா யிருப்பதை அவள் தெரிவித்தனள் என்க. இது நம் ஆசிரியர் சூர்ப்பணகையைச் சித்தரித்துச் செல்லும் முறைக்கு ஒவ்வாததுபோல் தோன்றுகிறது. ஸ்ரீ ஐயரவர்களும் 'இச்செய்யுள் சந்தேகம்' என்று குறித்திருக்கிறார்கள். இஃது ஆராய்ச்சிக் குரியது. முகத்தில் மற்ற உறுப்புக்களெல்லாம் படிந்தாற்போ லமைந்திருக்க அந்த மூக்குமட்டும் மேலுயர்ந்து இருப்பது அம் முகத்திற்குக் குற்றம் என்பது அவள் கூறிய

வாதத்தின் கருத்து. மிகை - அனுவசியம் என்னும் பொருள் கொண்டது. மிகை - குற்றம் என்பது பழையவுரை.

பி - ம். 1. பொய்த்தென்றோ; பொறுக்குவிரேல்; போக்குவிரேல்; போதுவிரேல்; போக்கினி றென்னுசி போனதெனப் பொருமனுண்டேல்.

2. னருள்கூட்டும்: னருள்சூடும்; ஆக்குவே னெடியவரையிலழகைப்பெண்.

3. பாக்கியமுண் டெனிலதனால்; முண்டெனி லன்றால்; பழியுண்டோ; பழிப்புண்டோ.

4. மேக்குயர நெடுமூக்கு, மேக்குயர்ந்த கொடி மூக்கு; மடந்தையர்க்கு மிக நன்றே? (129)

349. விண்டாரே யல்லாரோ வேண்டாதார் மனம்வேண்ட
உண்டாய காதலிலென் னுயிரென்ப துமதன்றோ
கண்டாரே காதலிக்குங் கட்டழகும் விடமன்றோ
கொண்டாரே கொண்டாடு முருப்பெற்றாற் கொள்ளீரோ.

வேண்டாதார் விண்டாரே அல்லாரோ - நமக்கு விருப்பமல்லாதவர், பகைவரே அல்லரோ? பகைவரே. (அவ்வாறின்றி) மனம் வேண்ட உண்டாய - மனம் விரும்பி வேண்டியதால் உண்டான, காதலின் - ஆசையால், என் உயிர் என்பது உமது அன்றோ - என் உயிர் ஆனது, உமக்குரியதாக உம்மிடம் ஒப்புவிக்கப் பெற்றதாகும் அன்றோ? (மேலும்), கண்டாரே காதலிக்கும் - கண்டோர் யாவரும் ஆசைப்படும், கட்டழகும் - உடலழகும், விடம் அன்றோ - (ஒரு மடந்தைக்கு) விஷமே அல்லவோ? கொண்டாரே கொண்டாடும் - கணவர் பாராட்டுகின்ற, உரு பெற்றால் - உருவத்தை மட்டும் நான் அடையப்பெற்றால், கொள்ளீரோ - நீவிர் என்னை ஏற்றுக்கொள்ள மாட்டீரோ? (ஏற்றுக்கொள்வீர் என்றபடி).

இதில் உள்ள ஏகார இடைச்சொற்கள் தேற்றப் பொருளிலும், ஓகார வினாக்கள் உடன்பாட்டுப் பொருளிலும் வந்துள்ளன. காதலுக்கு அழகு காரணமன்று; மனவொற்றுமையே காரணமாகும். மனவொற்றுமை இல்லாதது பகைமையாகும்; அன்றியும் அதிக அழகு பெண்களுக்கு விடம்போன்றது; உமக்கு என்னிடம் விருப்பம் உண்டாதற்கு வேண்டிய அழகு என்னிடம் இருக்கிறது. அது போதுமே' என்பது சூர்ப்பணகையின் வாதம். வேண்டாதார் என்பது பிராட்டியைக் குறித்தபடி. இதுவும் 'சந்தேகம்' என்பது

ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. கட்டு + அழகு : கட்டு = உடல், யாக்கை என்னும் பொருளில் வந்தது ; கட்டழகு என்பதற்கு மிக்க அழகு எனப் பொருள் கொள்வாரும் உளர். கண்டாரே காதலிக்கும் கட்டழகு விடமன்றோ? இது 'பார்யா ரூபவதீச் சத்ரு:' என்ற வடமொழி மூதுரையை யொட்டி வந்தது. கொண்டாரே கொண் டாடும் உரு இது 'கொண்டவன் மெச்சினவள் ரம்பை' என்னும் உலக வழக்கை யடியொற்றியது. "விண்டாரே யல்லரோ வேண் டாதார் மனம் வேண்டில் - உலகத்திலே தம்மை விரும்பாத பேரை ஒருவர் விரும்பினால், அவர் சத்துருக்கள் அல்லவோ? ஆகையால் உம்மை விரும்பாத பிராட்டியை ஆசைப்படாதேயும் என்பது பொருள். கொண்டாரே கொண்டாடும் உருப்பெற்றாற் கொள் ளீரோ - குலமகளிர்க்கு மிகவும் அழகு ஆகாதென்று, கொண்ட புருஷர்களாலே புகழும் அழகு, தெய்வாதீனமாக வாய்த்திருந்தால் என்னைக் கொள்ள வொண்ணாதோ - என்பன பழையவுரை.

பி - ம். 1. யல்லரோ.........வேண்டாதார் தாம்வேண்டில் ; வேண்டா தார் மனம்வேண்ட.

2. காதலினென்.

3. கட்டழகும் விடமன்றோ. (130)

350. சிவனுமலர்த் திசைமுகனுந் திருமாலுந் தெறுகுலிசத்
தவனுமெழுந் தொன்றாகி நின்றன்ன வுருவோனே
புவனமனைத் தையுமொருவன் பூங்கணையா லுயிர்வாங்கும்
அவனுமுனக் கிளையானே யிவனேபோ லருளிலனால்.

'சிவனும் - சிவபெருமானும், மலர் திசைமுகனும் - தாமரை மலர்மீது இருக்கும் நான்கு முகங்களையுடைய பிரமதேவனும், திரு மாலும் - மாவிஷ்ணுவும், தெறு குலிசத்து அவனும் - பகைவரை அழிக்கும் வச்சிரப் படையையுடைய இந்திரனும், எழுந்து - தத்தம் உரு விட்டு எழுந்து, ஒன்று ஆகி - ஒரு மூர்த்தியாகி, நின்று அன்ன - நின்றார் என்று சொல்லலாம்படி, உருவோனே - காட்சி அளிக்கும் திருஉருவை யுடையவனே!, புவனம் அனைத்தையும்-எல்லா வுலகங்களில் உள்ள பிராணிகளையும், ஒருவன் பூம் கணையால் - ஒப்பற்ற கொடிய தன் பூக்களாகிய அம்புகளால், உயிர் வாங்கும் - உயிரை அபகரிப்பது போன்று வருத்தும், அவனும் - அந்த மன்மதனும், இவனே போல் அருள் இலனால் - இந்த உன் தம்பி

யைப்போல இரக்க மற்றவனாய் இருக்கிறானாதலின், உனக்கு இளை யானோ - உனக்குத் தம்பியோ?

இந்திரன் மும்மூர்த்திகளுக்கு அடுத்தபடியான சிறப்புடையவ னாதலின், அம் முத்தேவருடன் சேர்த்து அந்நால்வரும் ஒரு மூர்த்தி யாய் அவதரித்தவனோ இராமபிரான் என்று பாராட்டினாள். ஸகல தேவாம்சமும் இராமபிரானிடம் சிறந்து விளங்குகின்ற உண்மையைச் சூர்ப்பணகை உணரா ளெனினும் அப் பெருமான் வடிவழகில் பெரிதும் ஈடுபட்டு நின்றாளாதலின், இவ்வாறு சிறப்பித்துக் கூறி னாள் என்க. (சிவனைப்போலக் கொல்லுந் தொழிலும், பிரமனைப் போல் அனுட்டானத் தொழிலும், திருமாலைப்போலக் காக்குந் தொழிலும், இந்திரனைப்போல அரசுரிமையும் பெற்றமையால், நால்வரும் ஓருருப் பெற்றாற் பொன்றவன், என்பது பழையவுரை. ஒருவன் பூம் கணையால் தன்னிடம் உள்ள ஐங்கணைகளில் ஒன்றாகிய நீலோற்பலமாகிய மலர்க்கணையால் உயிரை அபகரிக்கும், அவனும் அந்த மன்மதனும் எனப் பொருள் கொள்ளவும் இடந்தருவது என்க; மன்மதன் ஐங்கணைகளுள் நீல மலர்க்கணை ஏவினோர் உயிரை அபகரிக்கும் கொடுமை யானதால், அவன் கணையென விசேடிக்கப் பெற்றது; "நினைக்கு மரவிந்தம் நீள்பசலை மாம்பூ, அனைத்துணவு நீக்கு மசோகு - வனத்திலுறு, முல்லை கிடை காட்டும் மாதே முழுநீலம், கொல்லுமத னம்பின் குணம்'( உபமான சங்கிரகம்.) சூர்ப்பணகை இளைய பெருமானுக்கு மன்மதனை உவமித்துக் கூறியது, அவன் மன்மதன்போல், அழகும் தன்னை அங்க மூளி செய்த கொடுமையும் உடைமையால் என்க. அவன் என்றது, அம் மன்மதன் தன்னைப் பெரிதும் வருத்துங் கொடுமை கருதி அவன் பெயர் கூற விழையாமல் குறிப்பால் உணர்த்தினாள் என்னலாம். 343-ஆம் செய்யுளிலிருந்து முன் செய்யுள் முடிய பன்மையில் விளித்து, இங்கு ஒருமையை உபயோகித்திருப்பது காண்க. மேல்வரும் செய்யுள்களிலும் பன்மையே வழங்கப் பெற் றுள்ளன. இவ்வாறு ஒருமை பன்மை மயக்கங்கள் அமைந்திருப் பினும், சில செய்யுட்கள் இருவரையும் குறிப்பனவாகவும், வேறு சில இராமபிரானையே குறிப்பனவாகவும் அமைந்துள்ளமை இப் பகுதியில் இடைச் செருகல்கள் பல நிகழ்ந்துள்ளனவோ என்று ஐயமுற இடந்தருகின்றது. கிடைத்த சுவடிகளிலெல்லாம் இவை காணப்படுதலில், அறிஞர்களின் ஆராய்ச்சிக்கு விட்டுவிட்டு, இவை

பாட எண்கள் கொடுத்துப் பதிப்பிக்கலாயின. இது, இவ்வாறு இனிவரும் செய்யுட்களுக்கும் அமையும்.

பி-ம். 1. 'நெடுங் குலிசத்'

2. தவனுமடுத் தொன்றுகி; வுருவோனி; வுருவுடையாய் வுருவேய்ப்பாய்.

3. மொருதன் பூங்கணையா; பொருவன் பூங்கணையால்.

4. இளையானு மிவனேபோ; இலையவனே வெனக்கின்று மறைந்திடுவாய். (131)

351. பொன்னுருவப் பொருகழலீர் பிழைகாணீர்
மூக்கரிவான் பொருள் வேறுண்டோ
என்னுருவைக் கைக்கொண்டீ ரிருந்தொழியு
நம்மருங்கே யேகா ளப்பால்
பின்னிவளை யயலொருவர் பாரார்ஆ
மெனவரிந்தீர் பிழைசெய் தீரோ
அன்னதனை யறிந்தன்றோ வன்பிரட்டி
கொண்டதுநா னறிவி லேனே.

பொன் உருவ - பொன்னால் ஆக்கப்பெற்று அழகமைந்த, பொரு கழலீர் - வீரக்கழல் அணிந்தவளே! பிழை காணீர் - நீவிர் பிழை செய்யமாட்டீர்; என் உருவைக் கைகொண்டீர் - என் உருவை உனக்கு உரிமையாக்கி எடுத்துக்கொண்டீரே ஆவீர்; நம் மருங்கே - (இனி) நம்மிடத்திலேயே இருந்து ஒழியும் - (இவள் இங்கேயே) தங்கி இருந்து விடுவாள்; பின்னை - பிறகு, அப்பால் ஏகாள் - அப்புறம் போகமாட்டாள்; இவளை அயல் ஒருவர் பர்ரார் ஆம் - இவளை அயலார் ஒருவர் விரும்பிப் பார்க்கவும் மாட்டார்; என அரிந்தீர் - என்று (தீர்மானித்தே) என் நாசியை அறுத்துவிட்டீர்; மூக்கு அரிவான் பொருள் - (இல்லாவிட்டால்) என் மூக்கை அரியும் படியான உண்மை நோக்கம், வேறு உண்டோ - வேறு உள்ளதோ? (இல்லை என்றபடி), பிழை செய்தீரோ - ஆதலின் நீவிர் தவறு செய்தீர் ஆவிரோ? ஆகமாட்டீர் என்பதாம்); அன்ன தனை - அந்த உமது உண்மை நோக்கத்தை, அறிந்து அன்றோ - அறிந்து கொண்டு அல்லவா? நான் அன்பு இரட்டி கொர்ண்டது - நான் உம் மீது ஆசை இருமடங்காகக் கொண்டது? நான் அறிவு

இலேனோ - நான் இதைத் தெரிந்துகொள்ளப் புத்தியில்லாதவளோ? (இல்லை என்றபடி).

பி - ம். 1. பொன்னுருவும் பொருகழலீர்; பொலன் கழலீர்; புழை காண; மூக்கரிந்தீர் பொருள்வேருண்டால்.

2. இன்னிருவ மிவைகைக்கொண்; இருந்தொழியும நம்மருகே; என்னுருவில் மிகைகண்டீ ரும்மருங்கே யிருத்துமுவளம் பிடித்தெம்பாலிற்.

3. பாராரென்றே; பாராரென்றீரத் தீர்ந்தீர்; பாராரென் றுயிர்த் தீர்ந்தீர்.

4. பிரட்டி யென்பது நானறிகிலேனோ; அறிந்திலேனோ. (132)

352. வெப்பழியா நெடுவெகுளி வேலரக்க
ரீதறிந்து வெகுண்டு நோக்கின்
அப்பழியா லுலகனைத்து மும்பொருட்டா
லழிந்தனவா மறத்தை நோக்கின்
ஒப்பழியச் செய்கிலா ருயர்குலத்தை
தோன்றினு ருணர்ந்து நோக்கின்
இப்பழியைத் துடைத்துதவி யினிதிருத்தி
ரென்னொடுமென் றிறைஞ்சி நின்ருள்.

வெப்பு அழியா - கொதிப்பு நீங்காத, வெகுளி - கோபமுடைய, நெடு வேல் அரக்கர் - நீண்ட வேலேந்திய இராக்கதர்கள், ஈது அறிந்து - நீங்கள் எனக்குச் செய்த இந்தக் கொடுமை அறிந்து, வெகுண்டு நோக்கின் - கோபித்து நோக்குவாராஞல், அ பழியால் - அவர்கள் செய்யும் அப் பழிவாங்குங் கொடிய செயலால், உலகு அனைத்தும் - எல்லா உலகங்களும், உம்பொருட்டால் - உங்கள் நிமித்தமாக, அழிந்தன ஆம் - அழிந்து போனவையாய் விடும்; அறத்தை நோக்கின் - தருமத்தைக் கருதுமிடத்து, உயர் குலத்து தோன்றினீர் - உயர்ந்த குலத்திற் பிறந்தவர்களாகிய நீவிர், ஒப்பு அழிய செய்கிலீர் - உலகம் ஒப்புக்கொள்ளும் முறை கெடும்படியான காரியத்தைச் செய்யமாட்டீர்; (ஆதலின்) உணர்ந்து நோக்கி - நன்ருய் உணர்ந்து பார்த்து, இ பழியை துடைத்து - என்னை உறுப் பறையாக்கிய இந்தப் பழியை நீக்கி, உதவிட - அருள் புரிந்து, என்னொடும் இனிது இருத்திர் என்று - என்னோடு சேர்ந்து இனிது

வாழ்ந்து இருப்பீராக, என்று கூறி, இறைஞ்சி நின்றாள் - இராம பிரானை வணங்கி நின்றாள் அச்சூர்ப்பணகை.

வெப்பு - கொடுமையும் ஆம். வெப்பு அழியாவேல் என்றும் இயைக்கலாம். என் பொருட்டு அன்பு உங்களுக்கு ஏற்படாவிட்டாலும் அரக்கர்களால் உலகு உயிரனைத்தும் அழியாமல் காக்க வேண்டியபோது தர்மத்தைக் கருதியேனும் என்னை ஏற்றுக் கொண்டு இனிது வாழ்வீராக என்று வணங்கிக் கேட்டுக்கொண்டாள் (சூர்ப்பணகை) என்னலும் ஒன்றும். 'வெப்பு - அக்கினி. அறத்தை நோக்கி ஒப்பழியச் செய்கிலீர் - தருமத்தைப் பார்த்து உலகத்துக்கு ஒத்த ஆசாரம் நீங்கள் அழிக்கிறதில்லை; இப்பழியை - உங்களால் இவ்வுலகம் அழிந்தது என்று சொல்லக்கூடிய பழியை' என்பள் பழையவுரை.

பி - ம். 1. வெபபமுறு நெடு வெகுளி......காண்டும்; னெப்பழியா; நோக்கி.

2. நம்பொருட்டா; மறத்தை நோக்கின்.

3. செய்கிலா ருயர்குலத்துத் தோன்றினோர்; ஒப்பரிய சிறுயர்களாயுயர் குலத்திற ரேன்றினீர் செய்கில்லா ருணர்ந்து பார்த்திங்.

4. இப்பழியைத் தீர்த்திருமி னென்னொடுமென் றிறைஞ்சயய லிறைவன் கூறும்; யினிதிருநீ ரென்னொடுமென். (133)

இராமபிரான் அவளைக் கடிந்து கூறல் 353—5.

353. நாடயரத் துயரிழைத்த நவையரக்கி
நின்னன்னை தன்னை நல்கும்
தாடகையை யுயிர்கவர்ந்த சரமிருந்த
தன்றியுநான் றவமேற் கொண்டு
தோடசையத் துறுமலர்த்தா ரிகலரக்கர்
குலந்தொலைப்பான் ரேன்றி நின்றேன்
பாடகல புல்லொழுக்கின் வல்லரக்கி
யென்றிறைவன் பகரும் பின்னும்.

(அப்பொது இராமபிரான் அரக்கியை நோக்கி), "நாடு அயர - உலகம் வருந்த, துயர் இழைத்த - துன்பம் புரிந்த, நவை அரக்கி - குற்றம் மிகுந்த அரக்கியாகிய, நின் அன்னை தன்னை நல்கும் - உன் தாயைப் பெற்றவளான, தாடகையை - தாடகை என்பாளை, உயிர்

கவர்ந்த - உயிரை அழித்த, சரம் இருந்தது - அம்பும் (இப்பொழுதும்) என்னிடம் உள்ளது. அன்றியும் - அது அல்லாமலும், நான் - நான், தவம் மேல் கொண்டு - தவ நியமத்தை மேற்கொண்டு, தோடு அசை - இதழ்கள் அசையும், அ - அந்த, மலர் துறு தார் - மலர்கள் நெருங்கிய மாலை அணிந்த, இகல் அரக்கர் - பகைவரான நீ கூறிய அந்த இராக்கதர்களுடைய, குலம் தொலைப்பான் - குலங்களையே அழிக்கும்பொருட்டு, தோன்றி நின்றேன் - இங்கு வந்திருக்கின்றேன். புல் ஒழுக்கின் வல் அரக்கி - அக்குலத்தில் தோன்றி,) அற்ப நடத்தையுடைய கொடிய அரக்கியே!; பாடு அகல - நீ இவ்விடம் விட்டு அப்பாற் போவாயாக; என்று - என்று கூறி, இறைவன் - யாவர்க்கும் தலைவனான இராமபிரான், பின்னும் பகரும் - மீண்டும் பின்வருமாறு கூறினான்.

நவை யரக்கி என்பதைச் சூர்ப்பணகையை நோக்கிய விளியாகக் கொள்வாரும் உளர். நின் அன்னை தன்னை நல்கும் தாடகை: என்றது, சூர்ப்பணகையின் தாயாகிய கேகசியைத் தாடகை பெற்றவள் அல்லள் எனினும், அவளை, இராவணன் முதலினோர் பாட்டிமுறை கொண்டும் அத்தாடகையின் மைந்தர்கள் சுபாகு மாரீசர்களை மாமன்மார் முறைகொண்டும் பாராட்டி வந்தது கருதிக் கூறப்பட்டது என்க. புல்லொழுக்கின் வல்லரக்கி என்றது அலளது தகாத காம நோக்கத்தையும், அதற்காகப் பிராட்டியைக் கொல்ல முயன்றதையும் உட்கொண்டு கூறியது ஆகும். பாடு அகல - அப்பாலே போ; தோள் தகை அத்துறு மலர்த்தார் - தோள் பரிக்கும் அந்த நெருங்கின மாலை என்பன பழையவுரை. பாடகல: அகலப்பாடு என்பது மாறிவந்தது என்க.

பி - ம். 1. நாடறியத்; நாடறியாத; நெடுகெடத்; நின்னய்யைய வ்வை நல்கா; நின்றவ்வை தன்னை நல்கும்; நின்னன்னை தய்யையே யாம்; தவ்வை கொண்ட.

3. தோடசைய; தயசமுற்று ரிகலரக்கர்; தொலைப்பா னீண்டு நின்றேன்.

4. போடகல புல்லொழுக்கின்; புகலும் பின்னும். (134)

354. தரையளித்த தனிநேமித் தயரதன்றன்
புதல்வர்யமந் தாய்சொற் ரூங்கி
விரையளித்த கான்புகுந்தேம் வேதியரு
மாதவரும் வெண்ட நின்ற

கரையளித்தற் கரியபடைக் கடலரக்கர்
குலந்தொலைத்துக் கண்டாய் பண்டை
வரையளித்த குலமாட நகர்புகுவே
மிவைதெரிய மனக்கொ ளென்ருன்.

"யாம் - நாங்கள், தரை அளித்த தனி நேமி - நில முழுவதையும் அருள் ஆட்சிபுரிந்து வந்த ஏக சக்கராதிபதியான, தயரதன் தன் புதல்வர் - தசரத சக்கரவர்த்தியின் குமாரர்கள்; தாய்சொல் தாங்கி - எங்கள் அன்னை சொல்லிய கட்டளையை ஏற்று, விரை அளித்த கான் புகுந்தேம் - நறுமணத்தை வீசி அளிக்கும் இந்தக் கானகத்தில் வந்து சேர்ந்தோம்; (இங்குள்ள) வேதியரும் - வேதம் ஓதும் அந்தணர்களும், மா தவரும் பெருந் தவசிகளும், வேண்ட - (அரக்கர்களால் தங்களுக்குள்ள துன்பங்களை எடுத்துக் கூறி எம்மிடம் விரும்பித்) தெரிவித்தபடி, நின்ற - இங்குத் தங்கியுள்ள, கரை அளித்தற்கு அரிய - எல்லை சொல்வதற்கு அரிதான, கடல் படை அரக்கர் - கடல்போன்ற (பெரிய) படையினராகிய அரக்கர்களையுடைய, குலம் தொலைத்து - கூட்டத்தை அழித்து, பண்டை - பழமையான அல்லது தொன்றுதொட்டு எங்களுக்கு உரிமையான, வரை அளித்த குல மாட மலைகளை ஒத்த கூட்டமான அல்லது சிறந்த மரங்களையுடைய, நகர் புகுவேம் - அயோத்திமா நகரில் போய்ச் சேருவோம். (அதுவரையில் திரும்பமாட்டோம் என்றபடி) இவை - இச் செய்திகளை, தெரிய மனம் கொள் - மனத்தில் நன்ருக எண்ணிக்கொள்'' என்ருன் - என்று இராமபிரான் அச் சூர்ப்பணகைக்கு எடுத்து அறிவுறுத்தினன்.

தாய்சொல் என்றது - தாயரில் ஒருத்தியாகிய கைகேயியைக் குறித்தது. தயரதன் உலகம் முழுவதும் ஆண்டவன்; "அம் மாணகருக் கரசன் னரசர்க்கரசன். செம்மாண் டனிச்கோ லுலகேழினுஞ் செல்ல நின்ருன்'' (பால. அரசியற்: 1.) படையைக் கடல் என்றது நோக்கிக் கரையளித்தற் கரியது எனப்பட்டது; கரைகாப்புளதுநீர் கட்டுக்குள மன்றிக் கரைகாப் புளதோ கடல்' (நன்னெறி. 33...) கண்டாய்: முன்னிலையசை; இதை நீ தெரிந்துகொள் என்னலும் ஒன்றும். மாடத்திற்கு வரை - 'தடவரை தங்கு மாடம்'; (பெரிய திருமொழி. 4, 6, 5.) அயோத்தியைப் பண்டை நகர் என்றது

'ஊழியி னிறுதி யுறையுள்' (பால. நகரப் : 2); என்ற சிறப்பு நோக்கி ;

பி - ம். 1. நெடுநேமி ; சிறுவன்யான் ; தனயர்யாம்.

2. புகுந்தோம் ; வேண்ட நீண்டு ; வேண்ட நீண்ட.

3. குலந்தொலைக்க ; தொலைத்துங் கண்டாய் பண்டவ்.

4. குலமாட வயோத்திநகர் புகுவதிது மனக்; புகுவதுநின் ; புகுவெனது. (*136*)

355. நெறித்தாரை செல்லாத நிருதரெதிர்
நில்லாத நெடிய தேவர்
மறித்தாரீண் டிருவரிவர் மானிடவ
ரென்னுது வல்லை யாகில்
வெறித்தாரை வேலரக்கர் விறலியக்கர்
முதலினர்நீ மிடலோ ரென்று
குறித்தாரை யாவரையும் கொணருதியே
நின்னெதிரே கோறு மென்ருன்.

'நெறி தாரை செல்லாத - நல்லொழுக்க வழியே செல்லாத, நிருதர் - இராக்கதர்களுடைய, எதிர் - எதிரில், நில்லாதே - நிற்காமல், நெடிய தேவர் - நெடுங்காலமாகச் சிறப்புடன் வாழ்ந்த தேவர்களும், மறித்தார் - தோற்றுத் திரும்பி ஓடிப்போனர்கள் ; ஈண்டு இவர் இருவர் மானிடவர் - இங்குள்ள இவர் இரு மனிதர்தாமே, என்னுது - என்று அலக்ஷியமாய்க் கருதாமல், வல்லை ஆகில் - உனக்குத் திறமை யிருந்தால், வெறி தார் ஐ வேல் அரக்கர் - மணம் மிக்க மாலை அணிந்த அழகிய வேலேந்திய இராக்கதர்கள், விறல் இயக்கர்- வலிமை வாய்ந்த யக்ஷர்கள், முதலினர் - முதலானவர்களுள், நீ மிடலோர் என்று குறித்தாரை - நீ வலிமை யுடையோரென்று குறிப்பிட்டு மதித்தவர்களை, யாவரையும் - எல்லாரையும், கொணருதியேல் - இங்குப் போரிட அழைத்துக்கொண்டு வருவாயாஞல், நின் எதிரே கோறும் - உன் முன்னிலையிலேயே அவர்களை யாம் கொன்று அழிப்போம்,' என்ருன் - என்று கூறினுன் இராமபிரான்.

இயக்கரை உடன் சேர்த்துக் கூறியது: இயக்கர் தலைவனை குபேரன் அவள் தமயன் என்று அவள் முன் கூறிய முறைபற்றி, அவன் உதவ வரலாம் என்னும் கருத்தில் ; வெறித்தார் ஐ வேல்

அரக்கர் எனப் பிரித்து, செருக்குற்றரான அழகிய வேல் ஏந்திய அரக்கர் எனவும் பொருள் கொள்வார். 'வெறித்தாரை வேல், புலால் நாற்றமும் விரைவுமுள்ள வேல்' : பழையவுரை. இச் செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. நெறித்தானல் லறங்கருதா நிருதர்; நிருதரெதிர் நில்லாதே; நிருதரெதிர் நில்லாது; நிருதரெதிர் சொல்லாத.

2. மறிந்தாலிங் கிருவர்; மானிடரென் றெண்ணுது; ரீண்டிய ரிருவர்; மானுடவர்.

3. முதலோரின் மிடலோரென்று.

4. கொணருதிநீ யென்னெதிரே கோறு; நின்னெதிரே கொன்று மென்றான். (137)

சூர்ப்பணகை பின்னும் தன்னை ஏற்றுக்கொள்ள வேண்டுதல் 356—9

356. கொல்லலா மாயங்கள் குறித்தனவே
கொள்ளலாங் கொற்ற முற்ற
வெல்லலா மவரியற்றும் வினையமெல்லாங்
கடக்கலா மேல்வாய் நீங்கிப்
பல்லெலா முறத்தோன்றும் பகுவாய
ளென்னுது பார்த்தி யாகில்
நெல்லெலாஞ் சுரந்துதவு நீர்நாட
கேளென்று நிருதி கூறும்.

'நெல் எலாம் சுரந்து உதவும் - நெல் முதலிய உணவுப் பொருள்களையெல்லாம் மிகுதியாக விளைந்து அளிக்கின்ற, நீர் நாட - நீர்வளமுடைய கோசல நாடுடையவனே! கேள்-கேட்பாயாக; மேல்வாய் நீங்கி - வாயின் மேல் புறம் விட்டு நீங்கி, பல் எலாம் உற தோன்றும் - எல்லாப் பற்களும் நன்றாக வெளியே விளங்கும்படிக் காணப்படும், பகுவாயள் என்னுது - அளவுக் கதிகமாகப் பிளந்த பெரிய வாயை யுடையவள் என்று என்னை இகழாமல், பார்த்தி ஆயின் - நீ என்பால் கருணைகொண்டு நோக்கி யருள்புரிவையேல், கொல்லல் ஆம் - அவ்வரக்கர்களை உன் கருத்துப்படி கொன்றுவிடலாம்; குறித்தனவே மாயங்கள் கொள்ளல் ஆம் - அவர்கள் மேற்கொண்டு நடத்த எண்ணிய மாயச் செயல்களை முன்னதாக நாம் அறிந்து கொள்ளலாம்; கொற்றம் முற்ற வெல்லலாம் - வெற்றி நம்பால் முற்றிலும் உண்டாக அவர்களை நாம் வென்றுவிடலாம்; அவர் இயற்றும் வினையம் எலாம் கடக்கலாம் - அவர்கள் செய்யும் தந்திரம்

அனைத்தையும் நாம் உட்படாது தாண்டி நீங்கலாம்' என்று நிருதி கூறும் - என்று அந்த அரக்கி (சூர்ப்பணகை) இராமபிரானிடம் கூறினள்.

'அரக்கர்களைக் கொல்வதே குறியானல், அதனைச் செய்து தரவும் தான் வல்லள்' என்பது இங்கு அமைந்த அவள் கூற்றாகும். 'நெல்லெலாஞ் சுரந்துதவும் நீர் நாட' என்றமையால் கோசலநாடு, நெல் முதலிய நன்செய்ப் பயிர்கள் செழித்து வளரும் நீர்வளம் மிக்கது என்பதும், எலாம் என்றதனால், நெல்லோடு, மற்றைக் கரும்பு முதலிய மருதநில வளங்களைக் கூட்டி யுரைத்ததும் ஆம்; 'நிலஞ் சுரக்கும் நிறைவளம்' (பால. நாட்டுப் : 38) என்றமையும் நோக்குக. 'மேல்வாய் நீங்கிப் பல்லெலாம் உறத்தோன்றும் பகுவாயள்;' என்றமையால், இளையபெருமான் அவள் நாசியை ஈர்ந்தகாலை அந் நாசியோடு அதனை அடுத்த மேல்வாயின் புற உதடு முதலியனவும் அறுபட்டுப் போயின வென்பதும், அதனால் அவள் பற்களெல்லாம் முழுமையும் வெளியே தோன்றுமாறு பெரிதும் விகாரத் தோற்றம் அடைந்தாள் என்பதும் பெறப்படும். இத்தகைய தன் உருவ வேறுபாடு தான் அடைந்ததை இங்கு அவளே உணர்ந்து இரங்கிக் கூறுவதாகக் கொள்ளவும் இடம் தருவதாகும். வினையம் - வஞ்சனை; 'மருங்குடை வினையமும்'; (உயுத்த. இலங்கைக் கேள்விப் : 19); 'என்மனமுங் கன்ற வினையங்கள் செய்தாள்' (விறலிவிடு: 420;) விநயம் என்ற வடசொல் தமிழில் வினையம் என்று திரிந்து வழங்குவதாகும். இச் செய்யுளால் நாணமும், மானமும் சிறிதும் இல்லாத அரக்கி மேலும் இராமபிரான் காதலை நாடி நிற்கும் இழிவுநிலை காட்டப் படுகிறது; மேலே வரும் 3 செய்யுட்களும் இதனையே புலப்படுத்துவன. பகுவாய்: அளவுக்கு அதிகமான பெரிய வாய் எனலும் ஆம்; 'செங்கண் பகு வொளி' (சீவக. 2801). பார்த்தியாயின் கொல்லலாம், கொள்ளலாம், வெல்லலாம், கடக்கலாம் என்றாள் நிருதி. நிருதி - அரக்கி; நிருதர் குலமாது; தத்திதாந்தப்பெயர்; 'நிருதியிற் பிறநத வீரர்' (சுந்தர. 824;) என்று அரக்கர் கூறப் பெறுவதும் காண்க.

பி - ம். 1. குறித்தனவே கொண்டிடலாம்.
2. வெல்லலாம் மற்றியற்றும்; வினையெலாம்; வினைகளெல்லாம் வென்றிடலாம்; மவரியற்றும்; மாயத்து வினையெல்லாம்; வெல்வாய் நீங்கி; செருமலையா னமைந்தீராகில்.
3. பகுவாயா ளென்னுது; வாயாளாகினும் யான்பயின்றபோது.
4. சுரந்தவிக்கும்; கேளெனப்பின்; நிருதிசொல்லும். (138)

357. காம்புறழுந் தோளாளைக் கைவிடீ
　　　ரென்னினும்யான் மிகையோ கள்வர்
　ஆம்பொறியி லடலரக்க ரவரோடே
　　　செருச்செய்வா னமைந்தீ ராகில்
　தாம்பொறியிற் பலமாயந் தரும்பொறிக
　　　ளறிந்தவற்றைத் தடுப்பே னன்றே
　பாம்பறியும் பாம்பினகா லெனமொழியும்
　　　பழமொழியும் பார்க்கி லீரோ.

'காம்பு உறழும் - (இள) மூங்கிலை நிகர்க்கும், தோளாளை - (அழகிய) தோள்களையுடைய உம் மனைவியை, கைவிடீர் என்னினும் - நீவிர் துறந்துவிடமாட்டீர் ஆயினும், யான் மிகையோ - நான் உம்மோடு வாழ்வது உமக்குக் குற்றமாகுமோ? (அதிகமாகுமோ எனலும் ஆம்); கள்வர் ஆம் - வஞ்சகர்களான, பொறி இல் அடல் அரக்கர் ஆம் அவரோடே - திருவில்லாத வலிமிக்க இராக்கதர்களுடனே, செரு செய்வான் அமைந்தீர் ஆகில் - போர் புரியும் நிலையில் உள்ளீரானால், பொறியில் பல மாயம் தரும் - ஐம்பொறிகளைப் போலப் பலவகை மயக்கமான வஞ்சனைகளை உண்டாக்கக் கூடிய, பொறிகள் அறிந்து - அவர்களுடைய தந்திரங்களை முன்னதாக யான் அறிந்து, அவற்றை தடுப்பேன் - அன்றே அவற்றைத் தடுத்துவிடுவேன் அன்றோ? பாம்பு - பாம்பானது, பாம்பின கால் - அப்பாம்பு உறையும் புழையை, அறியும் - நன்கு அறியும் இயல்பினது, என மொழியும் என்று உலகம் சொல்லும், பழமொழியும் - முதுமொழியையும், பார்க்கிலீரோ - நோக்கி அறியமாட்டீரோ?

மகளிர் தோளுக்கு மூங்கில் உவமை. பொறி - திரு; அறிவும் ஆம். பொறி - மெய் வாய் கண் மூக்கு செவி எனும் ஐந்து இந்திரியங்கள். பொறி அறிந்து - தந்திரங்களை அறிந்து; இச்செய்யுளில் பொறி என்ற சொல், புலன், வஞ்சனை, தந்திரம், என்று பல பொருள்களில் வந்துள்ளது. பாம்பினகால் - பாம்பின் பாழி அல்லது புற்று; 'பாம்பறியும் பாம்பின கால்;' (பழமொழி நானூறு. 7.); 'அரவுக் குறியி னயலவ ரறியா' (பெருங். 4 : 13 : 149.) என்றதையும் நோக்குக. இதற்குப் பாம்பு சென்றவழி என்றும், பாம்பின் கால்களைப் பாம்பே அறியும் என்றும் பொருள்கூறினரும் உளர்.

'ஆம் பொறியில் - ஆக்கம் செய்யும் திருமகள் கடாக்ஷமில்லாத. தாம் பொறியிற் பல மாயந்தரும் பொறிகளறிந்து -

இராக்கதர் தாம் தங்களுக்கு வஞ்சனை செய்வது விதி யாகையினாலே செய்யும் பல மாயந்தரும் அந்த உடக்கு அறிந்து; உடக்கு - சூது; 'முதற்பொறி, திரு; இரண்டாம்பொறி, விதி; மூன்றும் பொறி உடக்கென்றறிக.': பழையவுரை.

பி - ம். 1. காம்புறமூர்; காம்பொறியுர். காம்பறியுர்; கைவிடரென்றிடில் மற்றெனையும்.

2. செருமலைவான்; ஆம்பொறிசே ரடலரக்கர் தம்மொடுதா னமர்புரியா னமைந்தீராகில்.

3. தரும்பொறிக ளறிந்தவற்றை; அருந்தவத்தைத் தடுப்பரன்றே; தடுப்பேனன்றே; தடுப்பன் கண்டீர்; பெருமாயந் தரும் பொறிகள்.

4. பழமொழி நீர் பார்த்திலீரோ; பழமொழியும் பார்த்திலீரோ. (*139*)

358. உளங்கோடற் கன்பிழைத்தா ளுண்டொருத்தி
யென்னுதியே னிருத ரோடுங்
களங்கோடற் கரியசெருக் கண்ணியக்கா
லொருமூவேங் கலந்த போது
குளங்கோடு மன்றேயக் கொடியவிறல்
வீரர்தமைக் கொன்ற பின்னர்
இளங்கோவோ டெனையிருத்தி யிருகோளுஞ்
சிறைவைத்தாற் கிளையா ளென்றே.

'உளம் கோடற்கு - மனத்தில் ஏற்றுக்கொள்ளுதற்கு, அன்பு இழைத்தாள் ஒருத்தி உண்டு - அன்பு புரிபவளான ஒருத்தி இருக்கிறாள்', என்னுதியேல் - என்று நீர் சொல்வீரானால், (அதாவது, 'எனக்கு ஒரு மனைவி உண்டு' என்று நீ கூறுவாயானால்), நிருதரோடும் - அரக்கர்களோடும், களம் கோடற்கு அரிய - போர்க்களத்தை யடைவதற்கு அரியதான, செரு கண்ணியக்கால் - போரைச் செய்யக் கருதினால், ஒரு மூவேம் கலந்தபோது - நீவிரும், உம் தம்பியும் யானுமாகிய நாம் மூவரும் சேர்ந்து எதிர்த்து நின்ற போது, குளம் கோடும் அன்றே - அப் போர்க்களத்தை இரத்தக் குளமாக்கி (அவர்களைக் கொன்று) வெற்றி கொள்வோம் அல்லவோ? அ கொடிய விறல் வீரர் தமை கொன்ற பின்னர் - அந்தக்

கொடியவரும் வலிமையுள்ள வீரர்களுமாகிய அவ்வரக்கர்களை (அவ்வாறு) நாம் கொன்றபிறகு, இரு கோளும் சிறை வைத்தாற்கு - சந்திர சூரியர்களாகிய இரு கிரகங்களையும் சிறையிட்டு வைத்த இராவணனுக்கு, இளையாள் என்றே - தங்கை என்ற சிறப்புத் தோன்ற, இளம் கோ ஒடு - உம் தம்பியாகிய அரசிளங் குமரனோடு, எனை இருத்தி - என்னை இருக்குமாறு செய்து வாழச் செய்வீராக !

கண்ணுதல் - கருதுதல் ; சுந்நர. 308. ‘குளங்கோடல் - குளம் பறித்துப் பாழாக்குதல் : பழையவுரை. களங் கோடல் - போரில் வென்று அப் போர்க்களத்தைப் பற்றிக் கொளலும் ஆம் ; கலி. 86 : 13 ; புறநா. 62 : 12 ; சிலப். 28 : 104 - 5 ; பு-வெ. 180 உரை ; 225 ; வி - பா. காண்டவ : 53 ; 13-ம் போர், 29 ; 15-ம் போர் : 12. இளையாள் என்றே - இவள் சிறிதும் குறைவுபட்டவள் அல்லள் என்றே எனவும் பொருள் தொனிக்குமாறு அமைந்துள்ளது காண்க. இளையாளை இளையாளோடு இருத்தி என்றது, ஒரு சொன்னயம். இலக்குவனை இளங்கோ என்பது, 1168; அயோத். நகர்நீங்கு: 108. நீ மணம் செய்துகொள்ளா யாயினும் உன் தம்பியுடன் என்னை நிறுத்து’ என்று அரக்கி இராமபிரானை வேண்டிக்கொண்டாள் என்க. இப்பகுதியிலுள்ள சில செய்யுட்களில், இராமபிரானை ஒருமையிலும், வேறு சிலவற்றில் பன்மையிலும் விளிப்பது காண்க. அன்றியும், இதுகாறும் சூர்ப்பணகை இராமபிரான் மீது மட்டும் காதல் கொண்டவளாகக் கூறப்பட்டிருப்பதும் நோக்குக : இதுவும் அடுத்த செய்யுளும் சந்தேகமென்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. இஃது ஆராயத்தக்கது.

பி - ம். 1. உளங்கோட லுனையிழைத்தா ளுளளொருத்தி ; உளங்கோடற் குனக் குரியா ளுள ளொருத்தி ; உளங் கோடலன் பிழைத்தா ளுண்டொருத்தி.

2. களங்கோடற் குரிய......கலந்த காலை.

3. குளங்கோடு மென்றிதவு முறுகோளே யென்றுணருங் குறிக்கோளில்லா ; மன்றிதவு......குறிகோளில்லா; கொடியதிறல் ; கொன்ற பின்னை.

4. கிளையேனென்றாள் ; கிளையேனென்பாள் ; கிளையோமென்றாள் ; கிளையாளென்ன ; கிளையோளென்ன. (140)

359. பெருங்குலா வுறுநகர்க்கே பெயருநாள்
வேண்டுமுருப் பிடிப்பெ னன்றேல்
அருங்கலா முற்றிருந்தா னென்றாலு
மிளையவன்றா னரிந்த நாசி
ஒருங்கிலா விவளோடு முறைவதோ
வென்பானே லிறைவ வொன்று
மருங்கிலா தவளோடு மன்றேயான்
நெடுங்காலம் வாழ்ந்தே னென்பாய்.

'இறைவ - தலைவனே! பெரும் குலா உறு நகர்க்கே பெயரு நாள் - பெரிய கொண்டாட்டம் பொருந்தி விளங்கும் அயோத்திமா நகருக்கே நீவிர் திரும்பிச் செல்லுங்காலை, இளையவன் - உம் தம்பி, அரும் கலாம் உற்று இருந்தான் என்றாலும் - அடைதற்கு அரிய கோபமான மாறுபாட்டம் என்மீது கொண்டிருந்தான் ஆயினும், தான் அரிந்த நாசி ஒருங்கு இலா - தன்னால் அரியப்பட்ட மூக்கு அடியோடு இல்லாத, இவளோடும் உறைவதோ - இவளோடு நான் சேர்ந்து வாழ்வதோ', என்பானேல் - என்று மறுப்பனேயானால், ஒன்று மருங்கு இலாதவளோடும் - பொருந்தி யிருக்கவேண்டிய இடை (என்னும் உறுப்பே) இல்லாதவளோடும், அன்றே - அல்லவா, யான் நெடும் காலம் வாழ்ந்தேன் என்பாய் - நான் நீண்டகாலமாய்ச் சேர்ந்து வாழ்ந்து வருகின்றேன் ?' என்று அவனுக்கு நீவிர் சமாதானம் சொல்வீராக ; அன்றேல் - அல்லாவிடில், வேண்டும் உரு பிடிப்பேன் ; அவன் விரும்பும் வேறு உருவம் எடுத்துக்கொள்வேன்'

குலா - மகிழ்ச்சியும் ஆம் ; 'குலாத்தில்லை' ; (திருவிசைப்பா. 3-ம் பதிகம்.) நாசியிலாள் இவளோடு உறைவதோ என்று கலாம் உற்றிருந்தான் - மூக்கில்லாதவளோடு நான் சேர்ந்து வாழ்வதோ என்று கலகஞ் செய்து மறுத்தானென்றால், என்றலும் அமையும். மருங்கு ஒன்று மிலாதவள் - இடை என்ற உறுப்பே சிறிதும் இல்லாதவளாகிய பிராட்டி; 'மருங்கிலா நங்கை'; பொய்யோ வெனுமிடையாள்'; 'வெளியன்ன தோரிடையாள் ;' (பால. மிதிலைக் காட்சி : 38 ; அயோத். கங்கைப் : 1, 2.) என்றமை நோக்குக. 'அருங்கலாம் - அரிய அங்கலாப்பு ; அரிய கலாய்ப்பு'; பழையவுரை. இனி, அருங்கலா முற்றிருந்தாள் என்பதற்கு, 'இவளாலே அனேக காரியங்கள் சாதித்தோம் என்று சொல்லிக்கொள்ளலாம்' என்று பழைய வசனநூல் கூறும். 'வேண்டு முருப்பிடிப்ப னன்றே' என்றும்

பாடங்கொண்டு, அன்று ஏ என்பவை அசைகள் எனக் கொள் வாரும் உளர்.

பி - ம். 1. போயநாள் வேண்டுமுருப் பிடிப்பே னன்றே; பிடிப்பே னேன்றே.

2. னென்னினுமீங் கிளையயன்றான்; னென்னிலுமீங்; முற்றெறிந் தானென் னனுமாய்; லென்னிலுமாம்; மிளையவனு விழந்த நாசி; மிளையவன்று னிழந்த நாசி.

3. முறைவேனோ; முறைதற்கா வென் னுதியே விறைவதோன்றும்.

4. மன்றோ நீ; மன்றோ நான்; மருங்கிலா தவளோடு மெய்விதம் நீ நெடுங்காலம் வாழ்ந்த தென்றாள்; வாழ்ந்த தம்மா. (141)

இராமபிரான் வெகுண்டு கூற, அரக்கி வஞ்சினங் கூறி அகறல் 360—1

360. என்றலுமே யிளையவன்று னிலங்கிலைவேல்
கடைக்கணியா விவளை யீண்டு
கொன்றுகளை யோமென்னி னெடிதலைக்கு
மருளென்கொல் கோவே யென்ன
நன்றதுவே யாமன்றோ போகாளே
லாகவென நாதன் கூற
ஒன்றுமிவ ரெனக்கிரங்கா ருயிரிழப்பெ
னிற்கிலென வரக்கி யுன்னு,

என்றலுமே-என இவ்வாறு சூர்ப்பணகை கூறலும், இளையவன்-இளைய பெருமானுன இலக்குவன், இலங்கு இலை வேல் கடைக் கணியா - விளங்கும் இலைபோன்ற அலகையுடைய தன் வேலைத் தன் கடைக்கண்ணுல் குறித்துக் காட்டி, 'கோவே - தலைவரே! இவளை கொன்று களையோம் என்னில் - இவளை நாம் கொன்று தொலைக்காவிடில், நெடிது அலைக்கும் - பெரிதும் தொல்லை உண் டாக்குவாள்; அருள் என்கொல் என்ன-தமது அருள் என்னையோ?' என்று கேட்க, நாதன் - தலைவனுன இராமபிரானும், 'போகாளேல் - இவள் இவ்விடம் விட்டுப் போகாது மேலும் இருப்பாளெனில், அதுவே நன்று ஆம் அன்றோ - நீ கூறிய அதுவே நல்லதாகும் அல்லவோ? ஆக என - அவ்வாறே செய்க' என்று, நாதன் கூற - என்று தலைவனுன இராமபிரான் சொல்ல, 'இவர் எனக்கு ஒன்றும் இரங்கார் - இவர்கள் ஒரு சிறிதும் எனக்கு இரங்கமாட்டார்கள்; நிற்கின் உயிர் இழப்பென் - இங்கு நான் இனித் தாமதித்து நின்றால்

என் உயிரை யான் இழந்துவிடுவேன்;' என - என்று, அரக்கி உன்னு - அந்த இராக்கதியாகிய சூர்ப்பணகை கருதி; தான், அசை.

இச் செய்யுளும் அடுத்த செய்யுளும் குளகமாகி அடுத்த செய்யுளில் உள்ள, 'போனுள்' என்ற வினைமுடிவு கொள்ளும். வேல் கடைக்கணியா; வீரர் தம் போர்ப்படைக் கருவியைப் பார்த்துக் கூறுதல்; தாம் அப்படையைக்கொண்டு செய்யக்கூடிய போர்த்தொழிலைக் குறிப்பிடுவது ஆகும். இனி, 'வேல் கடைக் கணியா'; வேல் என்பதைக் கண்ணுக்கு உவமையாகுபெயராகக் கொண்டு, கடைக்கண்ணுல் நோக்கி, எனப் பொருள்கோடலும் அமையும். அருள் என் கொல் - உத்தரவு என்னவோ என்று எதிர்பார்த்துக் கூறியது; இனி இவள்பால் அருள் காட்டியிருப்பது என்னே என்று ஊக்கியதும் ஆகும். நன்றதுவே என்றது, நீ கூறியபடியே அவளைக் கொன்று களைதலாகிய செயலே நல்லது என்பதாம்.

பி-ம். 1. என்றவண்மே; கடைக்கண்ணி யிவளை.
2. களையே மென்ரு; களையே மாயின்.
3. போகாளே லாகுமென; லாகவென்று.
4. னிற்கி னெனவரக்கி; னிற்கிலேனென; நின்றிடிலென. (142)

361. ஏற்றநெடுங் கொடிமூக்கு மிருகாது
முலையிரண்டு மிழந்து வாழல்
ஆற்றுவனே வஞ்சனையா லுமையுள்ள
பரிசறிவா னமைந்த தன்ரே
காற்றினிலுங் கனலினிலுங் கடியானைக்
கொடியானைக் கரனை யுங்கள்
கூற்றுவனை யிப்பொழுதே கொணர்கின்றே
னென்றுசலங் கொண்டு போனுள்.

'ஏற்ற - என் அழகுக்குப் பொருத்தமாய் அமைந்திருந்த, நெடும் கொடி மூக்கும் - நீண்ட கொடிபோலும் விளங்கி யுயர்ந்திருந்த மூக்கும், இரு காதும் - இரண்டு செவிகளும், முலை இரண்டும் - இரு கொங்கைகளும், இழந்தும் - அழிந்துபோகியும், வாழல் ஆற்றுவனே - என் உயிரோடு வாழ்வதைப் பொறுத்துக்

கொண்டிருப்பேனே? (மாட்டேன் என்றபடி); உமை உள்ள பரிசு - உம்மிடம் உள்ள நோக்கங்களை, வஞ்சனையால் அறிவான் அமைந்தது அன்றோ - (இவ்வாறு பேசிய எல்லாம்) கபடமாய் நான் அறிந்து கொள்வதற்காகச் செய்த செயல் அல்லவோ? (ஆதலின்), காற்றினிலும் கடியானை - காற்றைவிட வேகமும் ஆற்றலும் உடையவனும், கனலினும் கொடியானை - நெருப்பைப்போற் கொடியவனுமான, கரனை உங்கள் கூற்றுவனை - கரனாகிய உங்களுக்கு யமன் போன்றவனை, இ பொழுதே கொணர்கின்றேன் - இப்பொழுதே இங்கு அழைத்துக்கொண்டு வருகின்றேன்,' என்று - எனக்கூறி, சலம் கொண்டு போனாள் - (சூர்ப்பணகை அவர்கள்பால்) தணியாப் பகைமை கொண்டு அவ்விடம் விட்டுச் சென்றாள்.

கொடிமூக்கு : 337-338. காற்றினிலுங் கனலினுங் கடியானைக் கொடியானை - இது, நிரனிறையணி. சலம் - தணியாச் சினமும் ஆம். தான் கொண்ட காதல் எந்த விதத்தாலும் அவ்விராம லக்ஷ்மணர்களிடத்து இனி நிறைவேறாது என்று நம்பிக்கை யிழந்த நிலையில் அச் சூர்ப்பணகை, 'என் மூக்கும் காதும் கொங்கைகளும் இழந்த பின், யான் உங்களைக் கொல்லாது உயிர் வாழ்வேனோ? உங்கள் கோட்பாடுகளை அறிந்துகொள்ளவே, யான் மீண்டும் உங்கள்பால் காதல் கொண்டவள்போல இதுகாறும் வஞ்சனையாய் நடித்தேன்; உங்கள் நோக்கம் அறிந்தேனாதலின், இனி உங்களைக் கொல்லுவதற்கு, வலிமைவாய்ந்த கரன் முதலிய இராக்கத வீரர்களை அழைத்துக்கொண்டு வருகிறேன்' என்று கூறிச் சென்றாள் என்க. உள்ளபரிசு - உள்ளபடி, எனலும் ஆம்.

பி-ம். 1. மிழந்து வாழ; மிழந்தும் வாழ; மிழந்து வாழ்தல்; மிழந்தும் வாளா.

2. ஆற்றுவளோ; லுமையுள்ள; லுமக்குள்ள; பரிசறிவனமைந்த; பரிசறிந்து யானமைத்த தன்றோ.

3. காற்றினினுங் கல்வினினுங் கடியானை; காற்றெனினுங் கனலெனினுங். (143)

இச் செய்யுளின்பின் ஒரு சுவடியில் அடியிற்கண்ட பாடல் அதிகமாக உள்ளது.

மண்கிடந்து சிதலரிப்ப வளர்புற்றை
மறைப்புறு வள்ளுகி ரினாலே
எண்கிடந்தாற் போலுமையான் றலைதெரிக்க
வேய்கின்றே னிமையோர் காணக்

கண்குடைந்த பனிநொங்கின் மூக்கிழந்து
பகுவாயாற் கதற லுற்ற
புண்கிடந்த புலான்முகத்துப் புலைச்சியுன்றன்
றமருடன்போய்ப் புலம்பு வாயே.

இப்படலத்தின் கதைப்போக்கில் முதனூலுக்கு ஒருவாறு இடையிடையே மாறுபாடுகள் பல உள்ளன எனினும், அவை 'பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி' என்னும் வழிநூல் அமைப்பை மேற்கொண்டுள்ளது எனக் கொள்ளற்பாலதாம். இவ்வாறே, இவ்விராம சரிதத்தைப் பின் கூறியுள்ள அத்யாத்மிகம், மகாபாரதம் முதலிய இதிகாசங்களிலும், பாத்மம் முதலிய புராணங்களிலும் வரலாறுகள் ஆங்காங்குச் சிற்சில மாறுபாடுகளுடன் விளங்குவன காணலாம்.

இப்படலத்தைப் பொருந்தாக் காமமாகிய பெருந்திணைக்கு ஏற்பவும், அரக்கி என்ற நிலைக்கு ஏற்றவாறும் விருவிருப்புடன் ஆசிரியர் யாத்துச் செல்லும் முறையை நோக்குமிடத்து, இதன் பிற்பகுதியில் சில பாடல்கள் இடைச்செருகல்களாகப் புகுந்துள்ளன என்றே கருத வேண்டி யிருக்கிறது. ஸ்ரீ ஐயரவர்களும், இங்குச் சில பாடல்களைச் சந்தேகம் என்றே குறித்துள்ளார். யாம் ஆராய்ந்த சுவடிகளிலும், அச்சுப் பிரதிகளிலும் இப்பாடல்கள் உள்ளமையால், அவற்றைப் பாட பேதங்களைக் கொண்டு ஒருவாறு திருத்திப் பாட வரிசையில் தொடர் எண் கொடுத்தே பதிப்பித்துள்ளோம். ஆயினும் இப்படலத்தின் இறுதிப்பகுதி, மேலும் ஆராய்ந்து திருந்தப் பெறுவது ஏற்புடைத்தாகும்.

சூர்ப்பணகைப் படலம் முற்றும்.

---

# 6. கரன் வதைப்படலம்

இஃது, இராமபிரான் கரன் என்னும் அரக்கர் தலைவனையும் அவன் துணைவர்களையும் வதைத்த செய்தியைக் கூறும் படலம் என்று விரியும். இது, சில பிரதிகளில் கரன் படைத்தலைவர் வதைப் படலம், திரிசிரா வதைப்படலம், தூடணன் வதைப்படலம், கரன் வதைப்படலம் என நான்கு படலங்களாகப் பிரிந்து காணப்படுகிறது; மற்றும் இது, வேறுசில பிரதிகளில்--கரன் படைத்தலைவர் வதைப்படலமும், திரிசிரா வதைப்படலமும் என்ற இரண்டையும் ஒரே படலமாகக் கொண்டு, பிற இரண்டுடன் மூன்று படலங்களாகவும் உள்ளது; இனி, இவை முழுவதும் ஒரு பிரதியில் கரதூடணாதியர் வதைப்படலம் என்றுங் காணப்படுகின்றது; பெரும்பாலான பிரதிகளில் இவை அனைத்தும் கரன் வதைப்படலம் என்ற ஒரே படலமாகவே உள்ளன. தூடணன், திரிசிரா, கரன் இம்மூவருள், கரனே தலைவன் ஆனமை யாலும், அவன் ஆணையின்படியே, போர் புரிந்தவர் தூடணன் திரிசிரா என்ற இருவரும் ஆதலானும், தலைவனான கரன் பெயராலே இப்படலப்பெயர் வழங்கலாயிற்று எனக்கொண்டு கரன் வதைப்படலம் எனவே இங்குக் கொள்ளப்பெற்றது.

கரன்: இராவணன் தாயாகிய கேகசி என்பாளின் தங்கையும், இராவணன் தந்தையாகிய விச்ரவஸ் முனிவரின் இரண்டாம் மனைவி யாக அமைந்தவளுமான, கும்பீனஸி என்னும் அரக்கியின் குமாரன். ஆதலின், இவன் இராவணனுக்குத் தாய்வழி, தந்தைவழியாகிய இரு முறையாலும் தம்பி ஆனவன். தூடணன் இவனுக்குத் தம்பி என்பர். திரிசிரா என்பவன் கரனுடைய படைத்தலைவன் என வான்மீகத்தால் தெரிகிறது.

மகாபாரதம் வனபர்வம் 276-ஆவது அத்தியாயம், இராவணன், கரன், சூர்ப்பணகை முதலியோருடைய உறவுமுறையைச் (சில பெயர் மாறுபாடுகளுடன்) பின் வருமாறு காட்டும்.



கரன், தூஷணன், திரிசிரஸ் என்ற மூவரும் முன், யாஜ்ஞு வல்கியரின் குமாரர்களான சந்திரகாந்தன், மகாதேவன், விஜயன் என்ற அந்தணர்களா யிருந்தவரென்றும், சிவபிரான் சாபத்தால் அரக்கர்களாயினர் என்றும், அவர்களுக்கு இராமபிரானல் சாபத் தீர்வு கூறப்பட்டது என்றும் சேஷ தர்மத்தில் பீஷ்ம யுதிஷ்டிர ஸம்வாதத்தில் கூறப்பெற் றிருக்கிறதென்று மகேசுவர தீர்த்தர் கூறுவர்.

**சூர்ப்பணகை கரனிடம் வந்து முறையிடலும், அவன் போர்க்கெழலும் : 362—70.**

362. இருந்த மாக்கரன் ருளிணை யின்மிசைச்
சொரிந்த சோரியள் கூந்தல டூம்பெனத்
தெரிந்த மூக்கினள் வாயினள் செக்கர்மேல்
விரிந்த மேக மெனவிழுந் தாளரோ.

சொரிந்த சோரியள் - பொழிந்த இரத்தத்தை யுடையவளும், கூந்தலள் - (சொரிவதுபோல அவிழ்ந்து அலேந்த) கூந்தலே யுடைய வளும், தூம்பு என தெரிந்த மூக்கினள் - மதகுகளின் துவாரங்கள் போல விளங்கிய ஓட்டையான மூக்கிணே யுடையவளும், வாயினள் - (அவ்வாறே பெரிய மதகுவாய் போன்ற) வாயை யுடையவளுமான சூர்ப்பணகை, செக்கர் மேல் விரிந்த - செவ்வானம் மேல் படர்ந்த, மேகம் என - கருமேகம் போன்றவளாய், இருந்த மா கரன் - ஜனஸ்தா னத்தில் இருந்த பெருமை பொருந்திய கரன் என்னும் அரக்கர் தலேவனுடைய, தாள் இணேயின் மிசை - இரு பாதங்களின்மீது, விழுந்தாள் - போய் விழுந்தாள். அரோ : அசை.

முன் பட்லத்தின் இறுதிச் செய்யுளில், 'போனுள்' என்று முடிந்து, இச் செய்யுளில் விழுந்தாள் என்று அமைந்திருப்பது அவள் சென்ற விரைவைக் குறிப்பதாகும். சொரிந்த என்பதைக் கூந்தலுக்குங் கூட்டி, அவிழ்ந்தலேந்த எனப் பொருள் கொள்ளப் பட்டது. தூம்பு, நீரோடிவந்து விழும் மதகின் துவாரம்; மூக்கு அறுபட்டுப்போய் அம் மூக்குத் துவாரங்கள் மட்டும் விளங்கினவை தாம்புகளுக்கு உவமிக்கப் பெற்றன. மூக்கினள், வாயினள் என் றமையால் மூக்குத் துவாரங்கள் வழியாகவும் வாயின் வழியாகவும் இரத்தப் பெருக்குகள் ஓடி வந்தன என்பதாம். இதனல், முன், அவள் மேல்வாய் உதடும் இலக்குமணனுல் அறுப்புண்டதாக 356 இன் குறிப்பில் விளக்கப்பெற்றமை இங்கு உறுதிப்படுவதும் நோக்கத்தக்கது. செக்கர் மேல் விரிந்த மேகம்; செக்கர் - அவள்

கூந்தலுக்கும், மேகம் அவள் உடல் நிறத்திற்கும் உவமைகள். இனி, ஒருசாரார், 'செக்கர் மேல்விரிந்த மேகமென இருந்த மாக்கரன்ருளிணை யின்மிசை..............................விழுந்தாள்' என இயைத்துப் பொருள் கூறுவாரும் உளர்; அவ்வாருனல், செக்கர் - கரன் தலை உரோமங்களுக்கும், மேகம் அவள் உடலுக்கும் உவமைகள் ஆம். தூம்பு - மதகு; சீவக. 1976, 2760; புறநா. 19 : 10; இனி இருந்த மாக்கரன் என்பதற்கு இராவணன் ஆணையால் சூர்ப்பணகைக்குச் காவலாக ஜனஸ்தானத்தில் இருந்த பெருமை பொருந்திய கரன் எனலும் ஆம். கரன் இருந்த இடம் திரிகண்டகம் எனப்படும் என்பது ஆனந்த ராமாயணம். இப்பொழுது அதனைத் திரியம்பகம் என்பர்.

பி - ம். 1. ருண்மிசை யின்மிகச்.

2. சோரி வரத்தனைத் தூம்பெனச். (1)

363. அழுங்கு நாளிதென் றந்தக ஞணையால்
தழங்கு பேரி யெனத்தனித் தேங்குவாள்
முழங்கு மேக மிடித்தவெந் தீயினுல்
புழுங்கு நாக மெனப்புரண் டாளரோ.

அந்தகன் ஆணையால் - யமனுடைய கட்டளைப்படி, அழுங்கு நாள் இது என்று - அரக்கர்களுக்கு அழிவுக்காலம் இது என்று, தழங்கு பேரி என - ஒலிக்கும் முரசம் போல, தனித்து ஏங்குவாள் - ஒரு விபரீத முறையில் கதறியவளான சூர்ப்பணகை, முழங்கும் மேகம் - குமுறும் மேகம், இடித்த வெம் தீயினுல் - இடித்து வெளிப் படுத்திய கொடிய இடியினுல், புழுங்கும் நாகம் என - வருந்தச் சோரும் நாகப்பாம்பு போல, புரண்டாள் - (கரன் தாள்மிசை விழுந்து) புரண்டழுதாள். அரோ : அசை.

சூர்ப்பணகை அழுத ஒலி அரக்கர்களுக்கு அழிவுக் காலத்தை அறிவுறுத்த யமன் ஆணையால் முழக்கப்பட்ட முரசொலி போன்றது என்பதாம்; இது தற்குறிப்பேற்றவணி. சூர்ப்பணகையைத் 'தன் இனைக் கிறுதி காட்டுவாள்' (230) என்றதை நோக்குக. இடி ஓசை கேட்டு நாகம் சோர்வுறுதல்; பெருங். 2 - 10 : 112; சீவக. 242; நாலடி. 164. இடிக்கு முரசு; பால. எழுச்சி : 1; பெருங். 3 - 5 : 35; சீவக. 1275. சூர்ப்பணகைக்கு, நாகம் உவமை. 'அழுங்கு நாள் -

அரக்கர் மடியும் நாள்' என்பது பழையவுரை. தீ - இடி, பண்டு புரமெரித்த தீ' நண்டி. 55; மேற்கோள், உரை.

பி - ம். 1. அழிந்த நாளிதென்; அழுங்கு நாளையென்; அந்தண ருணையால்.

2. யெனத்தனத் தெற்றிவான்; எங்கயான்.

3. வேக முடிந்த வெந்தீயினால்; முடித்தவெந்தீயினால்; முழங்கு மோசையின் மும்மடி கூவிமெய். (2)

364. வாக்கிற் கொப்பப் புகைமுந்து வாயினான்
நோக்கிக் கூசலர் நுன்னையித் தன்மையை
ஆக்கிப் போனவ ரார்கொலென் றானவள்
மூக்கிற் சோரி முழீஇக்கொண்ட கண்ணினான்.

அவள் மூக்கில் சோரி - அந்தச் சூர்ப்பணகையின் மூக்கிலிருந்து சொரிந்த இரத்தத்தில், முழீஇ கொண்ட - ஆழ்ந்து பதிந்த, கண்ணினான் - கண்களை யுடையவனும், வாக்கிற்கு ஒப்ப - தன் வாயினின்றும் பிறக்கும் சொற்களுக்கு ஒத்தபடி, புகை முந்து வாயினான் - புகை வெளிவந்த வாயை யுடையவனுமான கரன், நோக்கி - அந்தச் சூர்ப்பணகையைப் பார்த்து, 'கூசலர் - கூச்சமற்றவர்களாய், நுன்னை - உன்னை, இ தன்மை ஆக்கி போந்தவர் - இவ்விதம் அலங்கோலமாகப் பின்னப்படுத்திச் சென்றவர், ஆர் கொல் என்றான் - யார்?' என்று கேட்டான்.

மூக்கிற் சோரி முழீஇக் கொண்ட கண்ணினான்: அவள் மூக்கிலிருந்து வந்த இரத்தம் பாய்ந்து, அதனால் முழுகிய கண்களையுடைய கரன் என்பாரும் உளர். முழீஇக் கொண்ட; 'தழுவிம் முழுவி' (திருச்சிற். 339) என்றதற்கும், 'முழுவித் தழுவி' (திருச்சிற். 227) என்றதற்கும் 'முத்தமிட்டுக் கொண்டு' என்று உரை கூறியிருப்பது காண்க. முழீஇ, சொல்லிசையளபெடை. வாக்கிற்கு ஒப்ப புகை - அவன் வாயிலிருந்து பின் வந்த பேச்சாகிய தீக்கு ஒவ்வ, முன் எழுந்து வந்தது புகை என்பதாம்; அதாவது, அவன் பேச்சுக்கு முன், வாயினின்று வந்த மூச்சாகிய காற்று என்க. புகை, நெருப்பு உண்டாவதற்கு முன் தோன்றும் இயல்பு நோக்கி, இவ்வாறு கூறப் பெற்றது. இனி, 'நுன்னை நோக்கிக் கூசலர்' என இயைத்து, 'உன்னைக் கண்டாலே யாரும் அஞ்சிக் கூச்சங்கொண்டு ஓடவேண்டியிருக்க, அப்படிக்கின்றி இத்தன்மை உனக்கு ஊறு செய்தவர்'

என்று வினவியதாகவும் கொள்ளலாம். ஆக்கிப்போதல், ஒரு சொல்லாகவேனும், இரு சொற்களாகவேனும் கொண்டு பொருளுரைக்க.

பி - ம். 1. வாக்கி னெக்கப்; வாக்கிற் கொக்கப்; வாக்கிற் கோபப் புகை; வாயினன்; வாயினள்.

2. கூசல ருன்னை; கூசலா னுன்னையிதாக்கி; கூசலீர் நம்மையித் தன்மைய; கூசிடாதுன்னை; கூசலாதுன்னை; கூசலானுன்னை.

3. ரார்கொ லென்றனுக்கம்; ஆர்கொ லென்றனயன்.

4. முழீஇக் கொண்ட வாயினன்; மொழிகொண்ட கண்ணினன். (3)

365. இருவர் மானிடர் தாபத ரேந்திய
வரிவில் வாட்கையர் மன்மதன் மேனியர்
தரும நீரர் தயரதன் காதலர்
செருவி னேரு நிருதரைத் தேடுவார்.

(அது கேட்ட சூர்ப்பணகை), 'இருவர் மானிடர் - இரண்டு மனிதர்கள்; தாபதர் - தவ நியமத்தில் இருப்பவர்; ஏந்திய - தாங்கிய, வரி வில் வாள் கையர் - கட்டுக்கள் அமைந்த வில்லும் வாளுமுடைய கையினர்; மன்மதன் மேனியர் - மன்மதன் வடிவெடுத்து வந்தது போன்ற அழகிய மேனியுடையவர்கள்; தரும நீரர் - தரும நெறியே நடப்பவர்; தயரதன் காதலர் - தசரத சக்கரவர்த்தியின் குமாரர்கள்; செருவில் நேரும் - போரில் எதிரிடும், நிருதரை - அரக்கர்களை, தேடுவார் - தேடித் திரிந்துகொண்டிருப்பவர்.

இதுமுதல் நான்கு செய்யுட்கள் சூர்ப்பணகை கூறியவை: இராம லக்ஷ்மணர் மன்மத மேனியர்,......தேடுவார், என்றவை இராம பிரான் தன்னிடம் கூறியதாலும், தான் நேரிற்கண்டமையாலும் சூர்ப்பணகை அறிந்து கூறியவை என்க; இவை, 232, 323, 341, 353-355 செய்யுட்களால் விளங்குவன காண்க. இவ்வாறே இருவரையும் ஒருமிக்கச் சூர்ப்பணகை பின் இராவணனிடத்துக் கூறியுள்ளதும் (603) நோக்குக. மன்மதன் மேனியர்; இக்கருத்து விளங்க வான்மீகத்தில் இவ்விடத்தில் சுலோகம் அமைந்திருப்பது நோக்கத்தக்கது.

பி - ம். 1. மானுடர்.

2. மன்மத மேனியர்; மேனியார்; வரிவில்லார் கையர் மன்மத மேனியர்.

3. தரும நீதித் தயரதன் காதலர். (4)

366. ஒன்று நோக்கல ருன்வலி யோங்கறம்
நின்று நோக்கி நிறுத்து நினைப்பினர்
வென்றி வேற்கை நிருதரை வேரறக்
கொன்று நீக்குது மென்றுணர் கொள்கையார்.

'ஓங்கு அறம் நின்று - மேலான தருமவழிகளில் தாமும் நின்று, நோக்கி - அத்தருமங்களை நன்கு நோக்கி, நிறுத்தும் நினைப்பினர் - அவற்றை எங்கும் நிலைநிறுத்தும் கருத்துடையவர்களாய், உன் வலி ஒன்றும் நோக்கலர் - உனது வலிமையைச் சிறிதும் கருதாமல், வென்றி வேல் கை நிருதரை - வெற்றிமிக்க வேலேந்திய கைகளை யுடைய அரக்கர்களை, வேர் அற - அடியோடு அழிய, கொன்று நீக்குதும் என்று - கொன்று தொலைப்போம் என்று, உணர் - தீர் மானித்துள்ள, கொள்கையார் - கோட்பாடு அல்லது சங்கற்பத்தை யுடையவர்.

சூர்ப்பணகை, கரன் வினவியதற்கு, இராமலக்ஷ்மணர் தனக்குச் செய்த கொடுமையை நேராக எடுத்துக் கூறாமல், 'தாபதர் அறம் நிறுத்தும் நினைப்பினர் ; உன் வலி நோக்கலர்; நிருதரை வேரற நீக்கு தும் என்றனர்' என்று வேண்டாத செய்தியை முற்கூறியது, அவள் அவர்கள்பால் கரனின் வெறுப்பையும் கோபத்தையும் தூண்டுதற்கு என்க.

'அறம் நிறுத்தும் நினைப்பினர்' என்று பகைவர் கூற்றாக இங்கு அமைந்துள்ளது நோக்கத்தக்கது, இச்செய்யுள், சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. ஒன்றும் நோக்கிலர்.
2. நினைப்பினால்.
4. நீக்குறு மென்றுணர். (5)

367. மண்ணி னோக்கரு வானினின் மற்றினில்
எண்ணி நோக்குறில் யாவரு நேர்கிலாப்
பெண்ணி னேக்குடை யாளொரு பேதையென்
கண்ணி னேக்கி யுரைப்பருங் காட்சியாள்.

'மண்ணில் - இவ்வுலகத்தும், நோக்கு அரு வானினில்—நாம் எளிதில் காணமுடியாத சுவர்க்கலோகத்தும், மற்றினில் - இம் மண், விண் அல்லாத பிற பாதலம் முதலிய வுலகங்களிலும், எண்ணி நோக்குறில் - கருதிப் பார்க்குமிடத்து, யாவரும் நேர்கிலா - ஒருவரும்

ஒப்பு ஆகமாட்டாத, பெண்ணின் நோக்கு உடையாள் - பெண்ணழகு மிக்குடையவள், என் கண்ணின் நோக்கி-என் கண்களாற் பார்த்து, உரைப்பு அரும் - என் வாய்ச் சொற்களால் எடுத்துக் கூற முடியாத, காட்சியாள் - தோற்றச் சிறப்புடையவள்.

முதலில், இராமலக்ஷ்மணர் அரக்கரின் பகைவர் என்று கூறி, அவர்களால் தான் துன்பமடையக் காரணமொன்றைப் படைத்துக் கொண்டு, அதற்கு முகவுரையாக அவள் கூறியது இச்செய்யுள் என்க.

மற்றினில்: இடைச்சொல் உருபேற்று வந்தது. நோக்கு; அழகு; 'நோயிகந்துநோக்கு விளங்க' (மதுரைக்: 13). பெண்ணின் நோக்குடையாள்; 'பெண்களேநோக்கிக் கொண்டாடும் அழகுடையாள்' எனலும் ஒன்றும்; 'பெண்டிரும் வெஃகுதல்' பால. கோலங்காண்: 19; சீவக. 587, 447; "எண்பிறங் கழகுக் கெல்லை யில்லையா மென்று நின்றாள், கண்பிற பொருளிற் செல்லா கருத் தெனி லஃதே கண்ட, பெண்பிறந் தேனுக்கென்றா லென்படும் பிறருக் கென்றாள்" என முன் இச் சூர்ப்பணகை பிராட்டியைக் கண்ட காலை கூறியுள்ளதையும் (278) இங்கு ஒப்பு நோக்குக; மேலும், பிராட்டியின் அழகின் சிறப்பை, 'உமையா ளொக்கும் மங்கைய ருச்சிக் கரம்வைக்குங், கமையாண் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணார், இமையா நாட்டம் பெற்றில மென்றா ரிருகண்ணால், அமையா தென்றா ரந்தர வானத் தவரெல்லாம்;' (பால. மிதிலைக்: 25); "வெங்களி விழிக்கொரு விழவு மாயவர், கண்களிற் காணவே களிப்பு நல்கலான், மங்கையர்க் கினியதோர் மருந்து மாயவள்' எனச் சிறப்பித்துள்ளமையும் (பால. மிதிலைக்: 33) காண்க.

பி-ம். 2. எண்ணினோக்குறில் யாவரு நோக்கிலா; யாவர்க்கு நோக்கலாம்; நேரலாப்; நேரிலாப்.

3. னோக்குடையாளொடும் பேதையேன்; னோக்குடையாடனைப்; நோக்குயராள்.

4. யுரைப்பதோர் காதலாள்; காதலால்; யுரைப்பெருங்காதலான்.

368. கண்டு நோக்குறுங் காரிகை யாடனைக்
கொண்டு போவெ னிலங்கையர் கோக்கெனா
விண்டு மேலெழுந் தேனை வெகுண்டவர்
துண்ட மாக்கினர் மூக்கெனச் சொல்லினாள்.

'நோக்கு உறும் காரிகையாள் தனை - அழகு அமைந்த அப் பெண்ணை, கண்டு - யான் பார்த்து, இலங்கையர் கோக்கு கொண்டு போவென் என - இலங்கையில் வாழும் அரக்கர் மன்னனை இராவணனுக்காக, (இவளை) எடுத்துக்கொண்டு போவேன் என்று எண்ணி, விண்டு - பகைத்து, மேல் எழுந்தேனை - அவள்மேல் பாய்ந்து கிளம்பிய என்னை, அவர் - அந்த இராமலக்ஷ்மணர்கள், வெகுண்டு - கோபமேற்கொண்டு, மூக்கு துண்டம் ஆக்கினர் - என் மூக்கைத் துண்டமாக அறுத்துவிட்டனர்' என - என்று, சொல்லினாள் - சூர்ப்பணகை கரனிடம் கூறினாள்.

நோக்குறுங்காரிகை 377 குறிப். காரிகை - அழகு; 'கழல் யாப்பு காரிகை நீர்த்து' (குறள். 777). மூக்கு என்றது, இங்கு அறுபட்ட மற்ற உறுப்புக்களுக்கும் உபலக்ஷணமாகக் கொள்ளற்பாலது, துண்டம் என்ற சொல்லுக்கே மூக்கு என்ற பொருளும் உண்டு. துண்டமாக்கினர் மூக்கு' என்றதன் சொற்சுவையை நோக்குக. சூர்ப்பணகை, பிராட்டியை இராவணனுக்காக எடுக்கச்சென்றதாகக் கூறியது வான்மீகத்தில் இல்லை.

பி - ம். 1. நோக்குறுகாரிகை; நோக்கருங்; நோக்குடை; நோக்கிய.

2. கொண்டுபோயவிலங்கையர்; கோற்கென.

4. சொல்லுவாள்; துண்டமாக்கினர் துண்டத்தை யென்றனர். (7)

இதன்பின், ஒருபிரதியில் அடியிற்காணுமாறு சிதைந்த பாடல் ஒன்று காணப்படுகிறது.

ஆற்றேனாற்றேனது கேட்டேனன்றுத்தா
னறுத்தானென் மூக்கைக்
கூற்றே......................குலையுங்
குலையுமது கண்டீர்
காற்றேதீயெனத் திரியுங் கரனே
கரனுக் கிளையோரே
தோற்றேன் தோற்றேன் வல்லபங்க
ளெல்லாவசையுந் தோற்றேனே.

**369.** கேட்ட னனுரை கண்டனன் கண்ணினால்
தோட்ட நுங்கிற் றொளையுறு மூக்கினைக்
காட்டெ னவெழுந் தானெதிர் கண்டவர்
நாட்டந் தீய வுலகை நடுக்குவான்.

எதிர் கண்டவர் நாட்டம் - எதிர்ப்பட்டுப் பார்த்தவருடைய கண்கள், தீய - கருகி அழிந்துபோகும்படி, உலகை நடுக்குவான் - உலகத்தை நடுங்கச் செய்பவனான கரன், உரை கேட்டனன் - சூர்ப்பணகை சொன்ன வார்த்தைகளைக்கேட்டு, தோட்ட நுங்கில் - தோண்டி யெடுக்கப்பட்ட பனை நுங்கைப்போல, தொளை உறு - தொளைகள் உண்டான, மூக்கினை - மூக்கை, கண்ணினால் - தன் கண்களால், கண்டனன் - பார்த்து, 'காட்டு என எழுந்தான் - (உனக்கு இக்கேடு செய்தவரை எனக்குக்) காட்டு' என்று சொல்லிக் கொண்டு எழுந்து கிளம்பினான்.

தோட்ட : தொள், பகுதி ; பால. குலமுறை. 8. சூர்ப்பணகையின் மூக்கு அறுபட்டுத் துவாரங்கள் மட்டும் விளங்கிய முகத்தின் தோற்றம், நுங்கு தோண்டி எடுக்கப்பட்டபின் விளங்கும் பனங்காய் போன்றிருந்தது என்பதாம். நுங்கு, மானிட உறுப்பிற்கு ; ஒப்பு ; நாலடி. 44. பனங்காய் அவ்வரக்கியின் முகத்தின் வடிவத்திற்கும், நிறத்திற்கும் மிக்க பொருத்தமான உவமை. கேட்டனன், கண்டனன், எழுந்தான் என்று கூட்டுக. காண்டலும், கேட்டலும் உண்மை அறிதற்கு வாயில்களேயாயினும், ஆராய்ச்சி யில்வழி அவை போதா என்பது அறியப் பாலது.

பி - ம். 1. கண்டனன் கேண்டுறத் ; கண்டிலன் கேடினர் ; கண்டிலன் கேடினைத் ; கண்டிலன் தேண்டினர் ; கண்டிலன் கேண்டுடன் ; கேட்டனன் கரன் கேட்டபின் கேழ்கிளர் ; கண்டனன் கண்ணோடு ; கண்டனன் நீண்டியத் ; கண்டனன் நீண்டிய.

2. தோட்ட தூரிற்.

3. காட்டினு ளெழுந்தானெதிர் கண்டபின். (8)

**370.** எழுந்து நின்றுல கேழு மெரிந்துகப்
பொழிந்த கோபக் கனலினிற் பொங்குவான்
கழிந்து போயினர் மானிட ரென்னுங்கால்
அழிந்த தோவிவ் வரும்பழி யென்னுமால்.

எழுந்து நின்று - இவ்வாறு சொல்லிக் கொண்டே எழுந்து நின்று, உலகு ஏழும் எரிந்து உக - ஏழுலகங்களும் எரிந்து பொடியாய்ச் சிந்த, பொழிந்த - சொரிந்த, கோப கனலினில் பொங்குவான் - கோபத் தீயினால் ஓங்கி விளங்கிய அக்கரன், 'மானிடர் கழிந்து போயினர் என்னும் கால் - இத்தீங்கு புரிந்த அம் மனிதர்கள் என்னால் அழிந்து நீங்கிப்போயினர் என்னுமிடத்தும், இ அரும் பழி - நமக்குண்டான இந்தப் பெரும் நிந்தனை, அழிந்ததோ - தீர்ந்ததாக ஆகுமோ?' (ஆகாது என்றபடி.) என்னும் - என்று சொன்னான்; ஆல்; ஈற்றசை.

இதனால், தான் அந்த இராமலக்ஷ்மணர்களை அழிப்பது திண்ணம் என்பதும், அப்படி அவர்களை அழித்தாலும் அரக்கர் சமூகத்திற்கு அம்மானிடரால் உண்டான அபகீர்த்தி அழியாதே என்பதும் கரன் கொண்ட கருத்துக்களாம். உலகேழும் என்பது, கீழேழு மேலேழு ஆகிய பதினான்கு உலகங்களைக் குறித்தபடி.

பி-ம். 2. பொழிந்து கோபக்; கோபத்தனலினிற்; கோபக்கனலுகப் பொங்குவான்.
3. மானுயர்; மானுடர்; ரென்றுகால்.
4. இழிந்ததோவிவ் விரும்பழி; யென்றுதான். (9)

கரன், தன் படைத்தலைவரின் வேண்டுகோளின்படி அவரைப் போர்க்கனுப்புதல் 371—7

371. வருக தேரெனு மாத்திரை மாடுளோர்
இருகை மால்வரை யேழினொ டேழனார்
ஒருகை யாலுல கேந்து முரத்தினார்
தருக விப்பணி யெம்வயிற் றானென்றார்.

(அவ்வாறு மொழிந்த கரன்), 'தேர் வருக எனும் மாத்திரை - எனது தேர், போருக்கு ஆயத்தமாக வரக்கடவது' என்று சொல்லிய அளவில், மாடு உளோர்-அவன் அருகிருந்தவர்களும், இரு கை மால் வரை ஏழினோடு ஏழு அனார்-இரண்டு கைகளையுடைய பெரிய மலைகள் பதினான்குக்கு ஒத்தவர்களும், ஒரு கையால் - (அப்பதினால்வரில் ஒவ்வொருவரும்) தத்தம் ஒரு கையினாலே, உலகு ஏந்தும் - உலகம் முழுவதும் தாங்கி ஏந்தும், உரத்தினார்-வலியுடையோர்களுமான அவனது படைத்தலைவர்கள் பதினால்வர்கள், 'இ பணி - இந்தப் பணியாகிய போர்த்தொழிலை, எம் வயின் தான் தருக - எங்களிடமே தந்தருள்வீராக' என்றார் - என்று வேண்டிக்கொள்வாராயினர்.

மாடு - பக்கம். மாத்திரை - கண்ணிமைக்கும் அல்லது கைந் நொடிக்கும் கால அளவு ; (தொல். எழுத்து : 6). இரு கைமால் வரை : இல்பொருளுவமை. ஒப்பு : 'இருகை வேழத்திராகவன்' (பால. பாயிரம். காப்பு. 1.) ; 'இரு கை யானையை யொத்து' (திருவா. 45). கரனுடைய படைத்தலைவர் பதினால்வர் என்பதாம்.

பி - ம். 1. மாடுளார்.

2. டேழெனு ; டேழென்பார் ; மால்வரை போல்பயரேழிரண்.

3. டொருகையா.

4. தருதி யிப்பணி யெம்வயிற்றுனெனு ; தருவவிப்பணி யெம் வயிற்று மென்பார் ; றுனென்றார். (*10*)

**372.** சூலம் வாண்மழுத் தோமரஞ் சக்கரம்
கால பாசங் கதைபொருங் கையினர்
வேலை ஞாலம் வெருவுறு மார்ப்பினர்
ஆல காலந் திரண்டன்ன வாக்கையார்.

சூலம், வாள், மழு, தோமரம், சக்கரம், காலபாசம், கதை - (அப்படைத்தலைவர்) சூலம் முதல் கதை வரை உள்ள போர்ப் படைகளைக் கொண்டு, பொரும் கையினர் - போரிடும் கைகளையுடையவர் ; வேலை ஞாலம் வெருவு உறும் ஆர்ப்பினர் - கடல் சூழ்ந்த இவ்வுலகத்தவர் யாவரும் கேட்டு அஞ்சும் ஆரவாரம் உடையவர்கள் ; ஆலகாலம் திரண்டு அன்ன - ஆலகாலம் என்ற விடம் ஒன்று சேர்ந்து உருவெடுத்து வந்தாற்போன்ற, ஆக்கையார் - உடலையுடையவர்கள்.

மழு - கோடாலி. தோமரம்-இருப்புலக்கை; கை வேலும் ஆம்; (பிங்). காலபர்சம் - சுருக்கிவலித்து இழுக்கும் கயிற்றாலாகிய ஒரு போர்க்கருவி ; யமன் கையிற்கொண்டுள்ள பாசம் போன்ற கயிறு என்னலும் ஆம். கதை - தண்டாயுதம். பொருங் கையினர் - போரிடும் தொழிலை யுடையவர் என்றும், தனக்குள்ளடங்கிய சேனைப் படைகளை யுடையவர் என்றுங் கொள்ளலாம்; கை : பக்கப்படையும் ஆம் ; (பிங்கலம்). ஆலகாலம், நிறத்துக்கும் செயலுக்கும் உவமை : பாற்கடல் கடைந்த காலத்தில் முதலில் தோன்றிய விடம் ஆலகாலம் எனப்படும். முன் செய்யுளில் (371) உள்ள ஏழிரேடேழனர், இதில் உள்ள, கையினர், ஆர்ப்பினர், ஆக்கையார் என

இயைத்துப் பொருள் முடிவு செய்க. அரக்கர்தம் ஆயுதங்களைக் கூறுவன ; 380, 396.

பி-ம். 2. தொடர்கையினர், யிருகையினர். 3. னெருவுறு மார்பினர்.
4. ஆலம்யாவுர் திரண்டன்ன யாக்கையர். (11)

373. வெம்பு வேலைக் கனலன்ன வெம்மையார்
நம்பி நம்மடி மைத்தொழி னன்றெனு
உம்பர் மேலு முருத்தனை போதியோ
இம்பர் மேலினி யாமுளெ மேயென்றார்.

வெம்பு வேலை கனல் அன்ன - வெப்பம் கொண்டுள்ளதும், கடலிடத்திலிருந்து கிளம்புவதுமான வடவைத்தீயைப் போன்ற அப் படைத்தலைவர்கள், (கரனைநோக்கி), 'நம்பி-தலைவனே! நம் அடிமை தொழில் நன்று எனு - எங்களுடைய சேவகம் நன்றாய் இருக்கிறது!' என்று தம்மை இகழ்ந்துகொண்டவர்களாய், 'உம்பர் மேலும் - தேவர்கள்மீது, உருத்தனை போதியோ - கோபித்துப் போர்செய்யப் போகிறாயோ? (அல்லவே என்றபடி); இம்பர்மேல் - இவ்வுலக மானிடர்மீது போர் செய்ய, இனி யாம் உளேமே என்றார் - இனி யாங்கள் இருக்கிறோமே ; நீ போவது ஏன்?' என்று தடுத்துக் கூறினர்.

'நீ தேவர் மீது போர்செய்யப் போவதானால், அஃது உன் பெருமைக்கும் வீரத்திற்கும் ஏற்றதாகும். இப்பொழுது நாம் போர்புரிய உள்ளவரோ இரு மானிடரே; ஆதலால், இவர்மீது நீ போர்செய்யப் போவது தகாது; இதற்கு யாங்களே செல்கின்றோம்'' என்று படைத்தலைவர் கரனிடம் கூறி அவனைத் தடுத்தனர் என்பதாம். இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

நம்பி: அண்மைவிளி. 'எம்மடிமைத் தொழில் நன்று' என்றது, இகழ்ச்சிக் குறிப்பில் வந்த எதிர்மறைப் பொருளது. 'உம்பர் மேனின்றுருத்தனை போதியோ' என்பதற்கு, 'நின்று கோபித்துக் கொண்ட நீ தேவர்மேலேயானால் போ' என்று பொருள்;' என்பது பழையவுரை. பின், சுந்தரகாண்டத்தில், பஞ்ச சேனாபதிகள் இராவணனைத் தடுத்து, அநுமன்மீது தாம் ஏகக் கருதியதைக் கூறும் பாடல்களை (864-6) இச் செய்யுளுடன் ஒப்பிடலாம்.

பி-ம். 1. 'வெம்பு கோபக்கனலர் விலங்கினேர் ; விலக்கினர்; விலக்கியே.
2. நம்பி யெம்மடிமைத்.
3. உம்பர் மேனின்றுருத்தனை ; போதியே ; உம்பர்மேவின்றுருத்தனை போதியேல் ; உம்பர் மேற் சென்றுறுத்தனை போதியேல் ;
4. யாமுளமோ வென்றார் ; யினியேனுளம் யாமென்றார்.

இச் செய்யுள் ஒரு சுவடியில் பின் வருமாறு மாறி அமைந்துள்ளது :—

வெம்பு கோபக் கரனை விலக்கியே
நம்பி யெம்மடி மைத்தொழி லன்றெனு
உம்பர் மேற்சென் றுருத்தனை போதியோ
இம்பர் மேலினி யேனுளம் யாமென்றார். (12)

374. நன்று செல்லுதிர் நானிச் சிறூர்கண்மேல்
சென்று போர்செயிற் றேவர் சிரிப்பரால்
கொன்று சோரி குடித்தவர் கொள்கையை
வென்று மீளுதிர் மெல்லிய லோடென்றான்.

'நன்று செல்லுதிர் - நல்லது ; நீங்களே செல்லுங்கள் ; நான் இ சிறூர்கள் மேல் - நான் இந்தச் சிறு மனிதர்கள்மீது, சென்று போர் செயின் - போய்ப் போர் புரிந்தால், தேவர் சிரிப்பர் - தேவர்கள் நம்மை இகழ்ந்து நகைப்பார்கள் ; (ஆதலின்), கொன்று - நீங்கள் போய் அவர்களைக் கொன்று, சோரி குடித்து - அவர்களுடைய இரத்தத்தைக் குடித்து, அவர் கொள்கையை - அவர்கள்கொண்ட கோட்பாட்டை, வென்று - பயன்படாமற் செய்து அவர்களை வென்று மெல்லியலோடு - அவ்விராமன் மனைவியோடு, மீளுதிர் என்றான் - மீண்டுவருவீராக' என்று கரன் கூறினான். சிரிப்பரால் ; ஆல், அசை.

தேவர் - நமக்குத் தோற்றோடிய (அல்லது நமக்குப் பகைவரான) தேவர். அவர் கொள்கை ; அரக்கர்களைக் கொன்று அறத்தைக் காப்பது என்ற அவர் கோட்பாடு ; 366. மெல்லியல் என்பதைச் சூர்ப்பணகைக்காக்கி, செல்லுதிர் என்பதோடு கூட்டியும் பொருள் உரைப்பாரும் உளர்.

பி - ம். 1. நன்று சொல்லினிர் நாணிச் ; நாணில் சிறூர் ; நானுஞ்.
2. போர் செய்யிர். (13)

375. என்ன லோடும் விரும்பி யிறைஞ்சினர்
சொன்ன நாணிலி யந்தகன் றூதென
அன்னள் பிற்படர் வாரென வாயினர்
மன்னன் காதலர் வைகிட நண்ணினர்.

என்னலோடும் - என்று கரன் உத்தரவு கொடுத்த அளவில், விரும்பி இறைஞ்சினர் - மகிழ்ச்சிகொண்டு அவனை வணங்கினவர்

களாகி, சொன்ன - இராம லக்ஷ்மணர்களைப் பற்றி அங்கு வந்து கூறிய, நாண் இலி - வெட்க மற்றவளாகிய சூர்ப்பணகையை, அந்தகன் தூது என - யமன் அனுப்ப வந்த தூதாக முன்னிட்டுக் கொண்டு, அன்னள் பின் படர்வார் என - அந்தச் சூர்ப்பணகை யாகிய யமதூதியின் பின்னே செல்வார் போன்று, ஆயினர் - ஆகிச் சென்ற அப்படைத் தலைவர்கள், மன்னன் காதலர் - தசரத மன்னன் குமாரர்களான இராம லக்ஷ்மணர்கள், வைகு இடம் - தங்கியிருந்த தவச்சாலையை, நண்ணினர் - போயடைந்தனர்.

விரும்பி இறைஞ்சியது, அன்னோர் விருப்பின்படி அவர்களைப் போர் செய்யச் செல்லுமாறு அனுமதித்த மகிழ்ச்சியால் என்க. நாணிலி என்றது, அவள் வெட்கங் கெட்டுத் தகாத முறையில் காதல் கொண்டது பற்றியும், அவர்கள் தனக்கு இழைத்த கேட்டை யும் அவமானத்தையுங் கருதாமல், பெண்களுக்குரிய நாணமின்றி, அவர்களையே புகழ்ந்து பாராட்டியதையும் கருதிக் கூறியது. 'சொன்ன நாணிலி - கோட்சொன்ன, நாண்கெட்ட, சூர்ப்பணகை' என்பது பழைய உரை. படர்தல் - செல்லுதல்; பால. வேள்விப் : 14; அயோத். நகர்நீங்கு : 47. சூர்ப்பணகையை யமதூதியாகக் கூறி, அவள்பின் அரக்கர் படைவீரர் சென்றனர் என்றமையால், அப் படைவீரர் அனைவரும் இறப்பர் என்பதை முன்கூட்டி அறிவித் ததும் ஆகும்.

பி - ம். 1. மெழுந்தங் கிறைஞ்சினர்.
2. நாணிலவ் வந்தகன்; நாளினி லந்தகன்.
3. அன்னர் பிற்படர்; அன்னகர்ப்படர்; வாளென; அன்னர் பின்படர்; படர்வாயென; படர்வாரென லாயினர்; படர் வாளென லாயினள்.
4. மன்னர் காதலர்; மன்னன் காதலன்; வைகிடத் தெய் தினர். (14)

376. துமிலப் போர்வல் லரக்கர்க்குச் சுட்டியே
அமலத் தொல்பெய ராயிரத் தாழியான்
நிமலப் பாத நினைவி லிருந்தவக்
கமலக் கண்ணனைக் கையினிற் காட்டினள்.

அமலம் தொல் - குற்றமற்றவையும், பழமையாக வழங்கி வருவனவுமான, பெயர் ஆயிரத்து - ஆயிரம் திருநாமங்களையுடைய, ஆழியான் - சக்கரப் படையையுடைய திருமாலின், நிமல பாத

நினைவில் இருந்த - பரிசுத்தமான திருவடிகளைத் தியானித்த நிலையில் இருந்த, அ கமல கண்ணனை - அந்தச் செந்தாமரை மலர் போன்ற கண்களையுடைய இராமபிரானை, துமிலம் போர் வல் அரக்கர்க்கு - ஆரவாரத்தோடு போரிடுவதில் வல்லவரான அவ்வரக்கர் படைத் தலைவர்க்கு, கையினில் - (சூர்ப்பணகை) தன் கையால், சுட்டியே காட்டினாள் - குறித்துக் காட்டினாள்.

அமலம் - இயற்கையிலேயே மலமற்றது. நிமலம் - மலத்தினின்று விடுபட்டது. நினைவு - தியானம்; தொல். பொருள் : 75. நச். உரை. ஆழியான் என்றது, திருவயோத்தியில், இக்ஷ்வாகு முதல் இரவிகுலத்தவர் தங்கள் குல தெய்வமாக ஆராதிக்கப் பெற்று வந்த ஆயிர நாமத் தண்ணலாகிய திருமாலை; இம்மூர்த்தியே பின் விடணற்கு அளிக்கப் பெற்றவரும், இப்பொழுது திருவரங்க நகரில் பள்ளிகொண்ட கோலமாய் விளங்குபவருமான அரங்கநாதர் என்பர். நிமல பாதம் என்ற வடசொற்றொடர் எதுகை நோக்கி நிமலப்பாதம் என இரட்டித்தது. 'துமிலப் போர் - அதிரப் பொரும் போர்;' என்பது பழையவுரை. இராமபிரான் திருமாலின் அவதாரமாயிருந்தும் அத் திருமாலையே வணங்கினான் என்பது, தன் அவதார முறையில் தன் குல வழிபாட்டைப் பின்பற்றிச் செய்தது என்பதாம்; "தன் திருவுள்ளத்துள்ளே தன்னையே நினையுமற்றக் குன்றிவர் தோளினானை" (அயோத். கைகேசி சூழ்வினைப் : 80.) என்றதும் நோக்கற்பாலது. இச்செய்யுள் இராமபிரானின் தவ நிலையினையும், அரக்கரின் அவ நிலையினையும் ஒருமிக்கக் கூறியவாறு என்க.

பி - ம். 1. துமிலைப் போர்வல்; துமிலப் போர்வில்; சுட்டினாள்.
3. நினைவி னிருந்த. 4. காட்டியே. (15)

**377.** எற்று வாம்பிடித் தேந்துது மென்குநர்
பற்று வாநெடும் பாசத்தி னென்குநர்
முற்று வாமிறை சொன்முறை யாலெனாச்
சுற்றி னார்வரை சூழ்ந்தன்ன தோற்றத்தார்.

'எற்றுவாம் - அவனை மோதி எறிவோம்; பிடித்து ஏந்துதும் - அப்படி எற்றி எறிந்த அவனைக் கைகளிற் பிடித்து ஏந்திக்கொள்வோம்;' என்குநர் - என்று சொல்பவர்களும், 'நெடும் பாசத்தின் பற்றுவாம் என்குநர் - நெடிய காலபாசம் என்னும் கயிற்றுச் சுருக்கால் பிடித்துக் கட்டுவோம்' என்று சொல்பவர்களும், 'இறை

சொல் முறையால் - நம் தலைவர் சொல்லிய முறைப்படி, முற்று வாம் - நாம் மேற்கொண்ட காரியத்தை முற்றுப்பெறச் செய்வோம்' எனு - என்று கூறுபவர்களுமாகி, வரை சூழ்ந்தன்ன தோற்றத்தார் - (அப்படைத் தலைவர்கள்), மலைகள் பல சூழ்ந்துகொண்டாற் போன்ற காட்சி யுடையவர்களாய், சுற்றினுர் - அந்த இராமபிரான் இருந்த இடத்தைச் சூழ்ந்து கொண்டனர்.

எற்றுவாம் பிடித்து ஏந்துதும் என்றது - பந்துக்களைக்கொண்டு விளையாடுதல் போல, இராம லக்ஷ்மணர்களை எற்றிப் பிடித்து ஏந்திப் போர் செய்வோம் என எளிதாகக் கருதிக் கூறியது என்க. இறை சொன் முறையால் முற்றுவாம் என்றது; 'கொன்று சோரி குடித்தவர் கொள்கையை, வென்று மீளுதிர் மெல்லிய லோடு' (374) என்று கரன் நியமித்ததை உட்கொண்டு அதனை நிறை வேற்றக் கருதிக் கூறியது. வரை சூழ்ந்தன்ன தோற்றத்தார்: முன், இப் படைத்தலைவருக்கு, 'இரு கை மால் வரை யேழினோ டேழனுர்' என்று உவமை கூறியதை இங்கு மீண்டும் வலியுறுத் தியது என்னலாம்.

பி-ம். 1. எற்று வார்பிடித் தேந்துபு மென்குநர்; எற்று வாம்பிடித் தேந்தின மென்குநர்; எற்று வோம்பிடித் தென்குன ரின்னரைப்; தென்குன ரேந்துதும்.

2. பற்றுவோம்; என்குனர்; என்றனர்.

3. முற்று நான்மறை சூழற மூர்த்தியைச்: முற்று நான்மறைச் சொன்முறை யாலெனச்; முற்றினுர் முறை சொன்முறை யாலெனுச்.

4. சூழ்ந்தன தோற்றத்தார்; சுற்றினுன்வகை. *(16)*

## இராமபிரான் போருக்குப் புறப்படுதல் 378—9

378. ஏத்து வாய்மை யிராம னிளவலைக்
காத்தி தையலை யென்றுதன் கற்பகம்
பூத்த தன்ன பொருவி றடக்கையால்
ஆத்த நாணி னருவரை வாங்கினுன்.

ஏத்து வாய்மை இராமன் - யாவரும் புகழ்ந்து கொண்டாடும் சத்திய விருதத்தை மேற்கொண்ட இராமபிரான், இளவலை - தன் தம்பியாகிய இலக்குவனை (நோக்கி), 'தையலை காத்தி என்று -

(தேவியாகிய) பிராட்டியை நீ பாதுகாத்துக்கொண்டிரு' என்று சொல்லி, கற்பகம் பூத்தது அன்ன - கற்பக விருக்ஷம் பூத்து விளங்குவது போன்ற, தன் பொருவு இல் தட கையால் - தன் ஒப்பு அற்ற பெருங் கரத்தால், ஆத்த நாணின் அருவரை - கட்டப்பட்ட நாண் கயிற்றையுடைய அரிய மலைபோன்ற வில்லை, வாங்கினன் - எடுத்துக் கொண்டான்.

ஏத்து வாய்மை - எல்லாத் தருமத்தினும் மேன்மையுற்றதாக வாய்மை ஏத்தப்படுவது; ''பொய்யாமை பொய்யாமையாற்றி னறம் பிற செய்யாமை செய்யாமை நன்று'' (குறள். 297); 'யாமெய்யாக் கண்டவற்றுளில்லை யெனைத் தொன்றும், வாய்மையி னல்ல பிற'' (குறள். 300) என்பனவற்றாலும் பிறவற்றாலும் அறியக் கிடக்கும். இராமபிரான் வாய்மையுடையவன்; ''மெய்ம்மை யல்லது புனைமலர்த் தாரவர் புகல்கிலாமையால்'' (193) இராமபிரான் கரத்திற்கு, பூத்த கற்பகவிருக்ஷம்; இது கொடைச் சிறப்பை உணர்த்தியதோடு, பொருவில் என்றதால், அக்கற்பகமும் ஒப்பாகாது எனவும் கொள்ள இடமாகும்; கற்பகம் தன்னையடைந்தவர்க்கே உதவும்; அதுபோலன்றி இராமபிரான் யாவர்க்கும் வலுவிற் சென்று அவர் குறிப்பறிந்து அன்னோர் வேண்டுவனவற்றை அருள்வானாதலின். நாணின் அருவரை: இல்பொருளுவமை. வில்லுக்கு வரை; பால. கையடைப்; 19; கார்முகப்: 70. வரை - மூங்கிலும் ஆம். வில் மூங்கிலால் அமைக்கப்படுவதாதலின் முதலாகு பெயராய் வில்லைக் குறிப்பதாம். ஆத்த - கட்டிய; சீவக. 1883; பெருங். 2. 16 : 91. வாங்குதல், வளைத்தலும் ஆம் (சூடா.); 'பிறைமதி யன்ன கொடுமரம் வாங்கி' (கல்லாடம். 4; 19).

பி - ம். 1. யிளவலை யாரியன்.

2. யென்றகன் கற்பகம்; யென்றதன் கற்பகம்.

3. பூத்த தன்மைப் பொருவிறடக்கையால், பூத்த நன்பொருவிற் றடக்கையினர்; றடக்கையான்.

4. ஆத்த நாணி யருவரை. (17)

379. வாங்கி வாளொடு வாளிபெய் புட்டிலும்
தாங்கித் தாமரைக் கண்ணனச் சாலையை
நீங்கி யிவ்வயி னேர்மி னடாவென
வீங்கு தோளன் மலைதலை மேயினன்.

தாமரை கண்ணன் - செந்தாமரை இதழ்போன்ற அழகிய கண்களையுடைய இராமபிரான், வாள் ஒடு வாளி பெய் புட்டிலும் வாங்கி - தன் வாளுடன் அம்புகள் வைத்திருக்கும் தூணியையும் எடுத்துத் தரித்துக்கொண்டு, அ சாலையை நீங்கி - அந்தப் பர்ணசாலையை விட்டு நீங்கி, ' இ வயின் நேர்மின் அடா என - இவ்விடம் (போருக்கு) வாருங்களடா ' எனக் கூறி, வீங்கு தோளன் - போர் உண்டானமை கருதிப் பூரித்தெழுந்த தோள்களையுடையவனாய், மலைதலை மேயினான் - போர் செய்தலைத் தொடங்குவானாயினன்.

உள்ளத்தை வசீகரிக்கும் அழகும், குளுமையும், நிறமும், உருவும் ஒத்தமையால் தாமரை இதழ் இராமபிரான் கண்களுக்கு உவமை யாற்று. இராமபிரான் தாமரைக் கண்ணன் ; 50 ; 376 ; கிட்கிந்தா. வாலிவதைப் : 152 ; கிட்கிந்தைப் 138 ; சுந்தர. 557. அடா ; இழிந்தோரைக் குறிக்கும் விளி ; (21). போர் என்ன, வீரர்க்குத் தோள் வீங்குதல் ; பால. பூக்கொய் : 18.; ' வாங்கி ' என்றது முன் செய்யுளின் ஈற்றில் வந்த, வாங்கினன் என்ற சொல்லின் தொடர்பை உணர்த்தும் அனுவாதம்.

பி - ம். 1. வாளிகைப் ; வாளிகொள் ; வாளிமெய்ப் ; வாளிவை ; வாளியின் ; வாளியெய்ப்.
2. கண்ணவன் சாலையைச் ; கண்ணன சாலையைச்.
3. எடாவென.
4. வீங்கு தோளின் மலைதலை. (18)

படைத்தலைவர் அழிய, அரக்கி ஓடினது 380—1

380. மழுவும் வாளும் வயங்கெரி முச்சிகைக்
கழுவுங் காலவெந் தீயன்ன காட்சியார்
எழுவி னீடடக் கையெழு நான்கையுந்
தழுவும் வாளிக ளாற்றலஞ் சார்த்தினான்.

கால வெம் தீ அன்ன காட்சியார் - கொடிய ஊழிக்காலத்துத் தீப்போன்ற தோற்றத்தையுடைய அவ்வரக்கர் படைத்தலைவர்களுடைய, மழுவும் - கோடாலிகளும், வாளும்-வாள்களும், வயங்கு எரி - விளங்கும் நெருப்புச் சுடர்போன்ற, மு சிகை கழுவும் - முத்தலைகள் கொண்ட சூலங்களும் ஆகிய இவற்றை யுடைய, எழுவின் நீள் தட கை எழு நான்கையும் - தூண்கள் போன்று நீண்டு பெருத்த அவர்களின் இருபத்தெட்டுக் கைகளையும், தழுவும் - குறி தவறாது போய்த் தாக்கும், வாளிகளால் - தன் பாணங்களால், தலம் சார்த்தினான்-(இராமபிரான்)நிலத்தில் துணித்து வீழ்த்தினான்.

போரின் தொடக்கத்திலேயே பதினன்கு படைத்தலைவர்களும் தங்கள் படைகளுடன் கைகளை இழந்தனர் என்பது கூறப்பட்டது.

பி - ம். 1. மழுவும் வாளி : வயங்கொளி முச்சிகை.
2. தீ நிகர் காட்சியின் ; காட்சியர்.
3. எழுவி வீட்டக்கை ; எழுவி நீள் தடக்கையெழு நான்கையும்.
4. வாளி யொன்ருற்றலஞ்; றடஞ் சேர்த்தினன் ; சாத்தினன். (19)

381. மரங்கள் போனெடு வாளொடு தோள்விழ
உரங்க ளாலடர்த் தாருர வோன்விடும்
சரங்க ளோடின தைத்த வரக்கர்தம்
சிரங்க ளோடின தீயவ ளோடினள்.

நெடுவாளொடு - நீண்ட வாள்களோடு, தோள் - தோள்கள், மரங்கள்போல் விழ - மரங்கள் வெட்டப்பட்டு வீழ்வனபோல விழவும், (அவற்றைப் பொருட்படுத்தாமல் மேலும்), உரங்களால் அடர்த்தார் - அப்படைத்தலைவர்கள் தம் மார்பின் வலி கொண்டு தாக்கிப் போர்புரிந்தனர் ; உரவோன் விடும் சரங்கள்-வலிமை வாய்ந்த இராமபிரான் அவர்கள்மீது தூண்டின அம்புகள், ஓடின தைத்த- ஓடி அன்னேர் உடலில் ஊடுருவிப் பாய்ந்தன ; (அவ்விதம் பாய்ந்தமையால்), அரக்கர் தம் சிரங்கள் - அவ்வரக்கர்களுடைய தலைகள், ஓடின - அறுபட்டு ஓடி அப்பால் விழுந்தன ; தீயவள் ஓடினள் - அது கண்ட கொடிய சூர்ப்பணகையும் அஞ்சி அவ்விடம்விட்டு ஓடினள்.

வாள் இங்கு ஆயுதப் பொதுவைக் குறித்து நின்றது. சிரங்கள் ஓடின - தலையறுபட்டு இறந்தனர் என்பதாம். சரங்கள் ஓடின, சிரங்கள் ஓடின, தீயவள் ஓடினள் என்ற அடுக்கு, விரைவில் உண்டான ஏககால நிகழ்ச்சிகளின் குறிப்பை உணர்த்தியது. ஒப்பு ; பால ; தாடகைவதைப் : 70 : வேள்விப் : 51 ; கார்முகப் : 34. சுந்தர. 544. இஃது, உடனிகழ்ச்சியணி, எனப்படும். 'உரங்களோடு எதிர்த்தார் - அரக்கர் மிடுக்கொடு எதிர்த்தார்' என்பது பழையஉரை.

பி - ம். 2. லடர்த்தார்க்குரவோன்விடு ; லடர்ந்தார்க்..............விடும் ; லடர்த்தாருரவோன்விடு ; உரங்களோடடர்ந்தார் ; உரங்களாலடர்ந்தார்.
3. சரங்களோடு தைக்க வரக்கர்தம் ; சரங்களொன்றினிற்ருக்குமரக் ; சரங்களோடு மத்தக்கவரக்கர்தஞ் ; தைக்கவவர்கள் கரம்.
4. சிரங்களோடயத் தீயவளோடினள். (20)

382. ஒளிறு வேற்கரற் குற்ற துணர்த்தினள்
குளிறு கோபவெங் கோளரி மாவடக்
களிறெ லாம்படக் கைதலே மேலுறப்
பிளிறி யோடும் பிடியன்ன பெற்றியாள்.

குளிறு - கர்ச்சிக்கும், கோப வெம் கோள் அரிமா - சினமுடைய கொடிய வலிய சிங்கம், அட - போரிட்டதால், களிறு எலாம் பட - தன்னை எதிர்த்த ஆண் யானைகள் எல்லாம் இறந்தழிய, (அது கண்டு), கை தலைமேல் உற - துதிக்கை தன் தலைமேல் படியத் தூக்கி வைத்துக்கொண்டு, பிளிறி ஓடும் - வீரிட்டுக்கொண்டு ஓடும், பிடி அன்ன - பெண்யானைபோன்ற, பெற்றியாள் - தன்மையுடைய அச்சூர்ப்பணகை, ஒளிறு வேல் கரற்கு ஒளிவீசும் வேலேந்திய கரனுக்கு, உற்றது உணர்த்தினள்-நடந்த செய்தியை அறிவித்தாள்.

குளிறுதல் - பேரொலி செய்தல் ; (சூடா). 516 ; அயோத்யா. வனம்புகு : 47. ஒளிறுதல் - விளங்குதல்; இச்சொல் ஒளிர்தல் என்பதின் திரிபு என்னலுமாம் ; 516. இவற்றில் எதுகை ஒற்றுமையுடைமை காண்க. யானை அஞ்சி வெருண்டோடுங்காலை, தன் துதிக்கை தலைமேலுறத் தூக்கிக்கொண்டு ஓடும் இயல்பினது ; சுந்தர. 6. அரிமா இராமபிரானுக்கும், களிறுகள் அரக்கர்களுக்கும், பிடி சூர்ப்பணகைக்கும் உவமைகள். பல களிறுகள்பட ஒரு பெண் யானை அலறிச் செல்வதுபோல் என்றது உவமை.

பி - ம். 1. குற்ற துணர்த்துவான் ; துணர்த்தியக்.

2. கோளரி மாவொன்றால் ;

3. கைத்தல மேலுறப்.

ஒரு சுவடியில்,

குளிறு கோபவெங் கோளரி மாவொன்றால்
களிறெலாம் படக் கைதலை மேல்வைத்துப்
பிளிறி யோடும் பிடியன்ன பெற்றியாள்
ஒளிறு வேற்கரற் குற்ற துணர்த்தினள்.

என இச்செய்யுள் மாறிக் காணப்படுகிறது. (21)

583\. அங்க ரக்க ரவிந்தொழிந் தாரெனப்
பொங்க ரத்தம் விழிவழிப் போந்துக
வெங்க ரப்பெய ரோன்வெகுண் டான்விடைச்
சங்க ரற்குந் தடுப்பருந் தன்மையான்.

விடை சங்கரற்கும் - இடப வாகனத்தையுடைய சிவபெருமானுக்கும், தடுப்பு அரும் தன்மையான் - தடுக்கமுடியாத வீரத் தன்மையுடையவனுன, வெம் கர பெயரோன் - கொடிய கரன் என்னும் பெயரையுடைய அவ்வரக்கன், அங்கு அரக்கர் அவிந்து ஒழிந்தார் என-போர்புரிய இராமபிரானிடத்திற்குத் தான் அனுப்பிய படைத் தலைவர்கள் பதினுல்வரும் இறந்து ஒழிந்தனர் என்று சூர்ப்பணகை கூற(க்கேட்டு), பொங்கு அரத்தம் - உள்ளிருந்து பொங்கி மேற்கிளம்பிய இரத்தம், விழிவழி - தன் விழிகளின் வழியாக, போந்து உக - போய்ச் சிந்த, வெகுண்டான் - கோபங்கொண்டான்.

சங்கரற்கும்; உம்மை உயர்வு சிறப்பினது. அரத்தம்: ரத்தம் என்பது, 'ரவ்விற்கம் முதலாமுக்குறிலும்' என்றபடி அகர உயிர் முன்வந்தது.

பி-ம். 1. ரவிந்தழிந்தாரெனப்; ரழிந்தவிந்தாரெனப்.
2. பொங்கிரத்தம் (22)

384\. அழையென் றேரெனக் காக்குகென் போர்ப்படை
உழைய ரோடி யொருநொடி யும்பல்மேல்
மழையின் மாமுர செற்றுதிர் வல்லென்ருன்
முழையின் வாளரி யஞ்ச முழங்குவான்.

முழையின் வாள் அரி அஞ்ச முழங்குவான் - குகைக்குள் பதுங்கி இருக்கும் கொடிய சிங்கங்கள் அஞ்சும்படி பேரொலி செய்பவனை கரன், 'என் தேர் அழை - என் தேரை இங்கு அழையுங்கள்; என் போர்படை எனக்கு ஆக்குக - என் போருக்குரிய சேனைகளை எனக்கு உதவியாக வரச் செய்யுங்கள்; வல் - விரைவில், உழையர் - ஏவலாளர்கள், ஓடி - ஓடிச் சென்று, ஒரு கொடி உம்பல் மேல் - ஒப்பற்ற கொடியால் அலங்கரிக்கப்பெற்ற ஒரு யானைமீது, மழையின் - மேகம் அதிர்வதுபோல, மா முரசு எற்றுதிர் - பெரிய போர் முரசத்தைத் தாக்கி முழக்குங்கள்' என்ருன் - என்று கூறினன்.

உழையர்-குற்றேவற்பணி புரிவோர்; 717, 718; சுந்தர. 104, 122, 293. உம்பல் - யானை; யானைக் கமரரும்பல்" (திருவள்ளுவமாலை. 3

முரச முழக்குக்கு மேகமுழக்கு. வாளரி - கொடிய சிங்கம் ; வாள ரக்கர் என்பதும் நோக்குக.

பி - ம். 1. அழைமி னென்ன வரக்கர்வன் போர்ப்படை ; அழையென்றே திரரக்கர் வெம்போர்ப்படை ; அழையுந்தேரமர்க் கேகுவன் ; போர்ப்பறை ; அழையென் றெய்யரரக்கரான போர்ப்படை; அழையென்றேயெதிரரக்கர் வெம்போர்ப்பறை ; அழையென் றேரிய் வரக்கர் வெம்போர்ப்படை.

2. செற்றுதிர் வம்மென்றான்.

3. மாமுர சேற்றினர் வல்லையின் முழங்குவார்.

இச்செய்யுள் ஒரு சுவடியில் பின்வருமாறு மாறி அமைந்திருக்கிறது.

அழையுந் தேரமர்க் கேகுவன் போர்ப்பறை
எழுக சேனையென் றெற்றுதி ரென்றலும்
உழைய ரேரடி யுரைத்தன ரொல்லைவான்
மழையின் மாமுர செற்றினர் வல்லையே. (23)

## படைகளின் எழுச்சி 385—7

385. பேரி யோசை பிறத்தலும் பெட்புறு
மாரி மேகம் வரம்பில வந்தெனத்
தேரின் சேனை திரண்டது தேவர்தம்
ஊரு நாக ருலகு முலையவே.

பேரி ஓசை பிறத்தலும் - அவ்வாறு போர்ப்பறை முழங்கியதும், பெட்பு உறு - பெருமை பொருந்திய, மாரிமேகம் - கார்கால மேகங்கள், வரம்பு இல - அளவற்றன, வந்த என - திரண்டு வந்தாற் போல, தேவர் தம் ஊரும் - தேவலோகமும், நாகர் உலகும் - நாகர்கள் வாழும் பாதலவுலகும், உலைய - நிலைகுலைந்து வருந்துமாறு, தேரின் சேனை திரண்டது - கரனுடைய தேர்ப்படை ஒன்று சேர்ந்து வந்தது. ஏ : ஈற்றசை.

பெட்பு - பெருமை ; சூடா. மாரி மேகம்-மழை சொரியும் மேகமும் ஆம். தேருக்கு - மேகம் ; நிறத்தாலும் உயர்ந்து விளங்கும் உருவாலும் ஒலியாலும் என்க. பேரிக்கு முரசு ; குறுந், 380 : 2 ; பெருங். 1. 49 ; 86 ; தக்க. 530. பெட்புறும் தேரின் சேனை என இயைத்து, போர் நிகழ்ந்தமையால் மகிழ்ச்சி அல்லது விருப்பமேலிட்ட தேர்ப்படை, என்னலும் ஒன்றும். தேவர் தம் ஊர் ; ஊர் - இடம், ஒரு சுவடியில்

இதன்பின், ‘ காடு துன்றி ’ எனத் தொடங்கும் (387) ஆம் பாடல் உள்ளது.

பி - ம். 1. பிறங்கலும் ; பெட்புற.
2. வரம்பின் வர்தெனத் ; வரம்பினில் வர்தெனத் ; வாரியேழும் வரம்பறவர்தெனச்.
3. சேருஞ்சேனை ; திரண்டன; திரண்டதத் தேவர் தம்.
4. முலைர்தயே. (24)

386. போர்ப்பெ ரும்பணை பொம்மென் முழக்கமா
நீர்த்த ரங்க நெடுந்தடந் தோள்களா
ஆர்த்தெ ழுந்த திறுதியி னார்கலிக்
கார்க்க ருங்கடல் கால்கிளர்ந் தென்னவே,

இறுதியின் - யுக முடிவாகிய ஊழிக் காலத்தில், ஆர்கலி கார் கரும் கடல் - மிக்க ஓசையுடன் கரிய பெருங்கடல், கால் கிளர்ந்து என்ன - காற்றினால் கொந்தளித்து மேற் பொங்கி வந்தாற் போல, போர் பெரும்பணை - போரை அறிவிக்கும் பெரும் முரசும், பொம் என் முழக்கமா - பொம் என்று பேரொலி ஆக, அவர்களின் நெடும் தடம் தோள்கள் நீர் தரங்கமா - நெடிய பெரிய தோள்கள் நீண்ட அலைகளாக, ஏ : ஈற்றசை.

இச் செய்யுள் அடுத்துவரும் 389 வரையுள்ள செய்யுள் களுடன் தொடர்ந்து முன், 385 வது செய்யுளில் உள்ள, ‘ தேரின் சேனை திரண்டது ’ என்பதோடு இயைந்து வினைமுடிவு கொள்ளும்.

பணை - முரசம் ; 570 ; அயோத். மந்திரப் : 53. வனம் புகு : 4. பொம் : ஒலிக்குறிப்பு. தேர்ப் படையைக்கடல் என்றது மிகுதி பற்றி. ஆர்கலி கார்க்கருங் கடல் - ஆர்கலியாகிய கரிய பெரிய கடல் எனலும் ஒன்றும் ; ஆர்கலி - கடல். கால் கிளர்த்தல் - இடம் விட்டுப் பலகிளைகளாகப் பெயர்ந்து உலகில் புகுதல் என்னலும் அமையும். கால் - கிளை ; ‘ பல காலி னோடியுங் கண்ட தில்லலையே ’ (பால. நாட்டுப் : 60.) ; சுந்தர. 250. சேனையைக் கடல் என்றதற் கேற்ப, அலைகள் தோள்களாகக் கூறப்பெற்றன என்க.

பி - ம். 1. முழக்கமாய்.
2. நெடுங் தடர்தோர்களா ; தோள்களால் தோளவர் ; தேரவர்.
4. கார்த்தடுகடல்.

ஒரு சுவடியில் இச் செய்யுள் பின் வருமாறு மாறி யமைந்துள்ளது :—.

போர்ப்பெ ரும்பறை பொம்மெனக் கேட்டலும்
சூர்த்த நோக்கினர் தூண்டகு தோளினர்
ஆர்த்தெ ழுந்தா ரிறுதியி னூழ்பெரும்
கார்க்க ருங்கடல் கால்கிளர்ந் தென்னவே. (25)

387. காடு துன்றி விசும்பு கரந்தென
நீடி யெங்கு நிமிர்ந்த நெடுங்கொடி
ஓடு மெங்கள் பசியென் றுவந்தெழுந்
தாடு கின்ற வலகையி னாடவே,

காடு துன்றி - காடுகள் எல்லாம் ஒன்று சேர்ந்து நெருங்கி, விசும்பு கரந்தென - வானை மறைத்தாற்போலே, எங்கும் - எவ்விடத்தும், நீடி - வியாபித்து, நிமிர்ந்த - மேலோங்கிய, நெடும் கொடி - தேர்களின் நீண்ட கொடிகள், 'எங்கள் பசி ஓடும் என்று - இனி எங்களுடைய பசி நீங்கி விடும்' என்று, உவந்து எழுந்து ஆடுகின்ற - மகிழ்ச்சியோடு எழுந்து நின்று கூத்தாடுகின்ற, அலகையின் - பேய்களைப்போல, ஆட - அசைந்து ஆடவும், ஏ : ஈற்றசை.

தேர்க் கொடிகள் அடர்ந்தமைக்குக் காடுகள் உவமை; காடு என்றது மிகுதி பற்றி ; ஒப்பு : 527. அலகைகள் பசி ஓடும் என்றது, போரில் இறந்தவர், உடலையும் குருதியையும் உண்ண இடமாகும் என்று கருதியதால் என்க. போரில் அலகைகள் புலாலைத் தின்று ஆடுவது; பால. வேள்வி ; 54; தக்க. 53; கலிங்கத்துப். களம் பாடியது : 113. கொடிக்கு அலகை ஒப்பு.

பி - ம். 1. விசும்பு கடந்தென ; கடந்திட.
2. நிறைந்த நெடுங்கொடி.
4. அலகை யினையதே. (26)

388. தறியி னீங்கிய தாழ்தடக் கைத்துணைக்
குறிகொ ளாமத வேழக் குழுவனார்
செறிவின் வாளொடு வாளிடைத் தேய்ந்துகும்
பொறியிற் கானெங்கும் வெங்கனல் பொங்கவே,

தறியின் நீங்கிய - கட்டுத்தறிகளினின்றும் விடப்பட்டவையும், குறி கொளா - எதையும் பொருட்படுத்தாதவையும் ஆன, தாழ்

தட கை துணை - தாழ்ந்து தொங்கும் பருத்த துதிக்கைகள் இரண்டுடைய, மத வேழ குழு அனார் - மதங்கொண்ட யானைக் கூட்டம் போன்ற அரக்கர்களின், செறிவின் - நெருக்கத்தினால், இடை - இடையே, வாளொடு வாள் தேய்ந்து - அன்னோர் வாள்களோடு வாள்கள் உராயத் தேய்ந்து, உகும் - அவற்றினின்று சிந்தும், பொறியில் - தீப் பொறிகளால், கான் எங்கும் வெம் கனல் பொங்க - அவ்வனமெங்கும் கொடிய நெருப்பு ஓங்கி எழ, ஏ : ஈற்றசை.

அரக்கர் படை வீரர்க்கு, தறியின் நீங்கிய தாழ் தடக்கைத் துணை மத வேழங்கள் ; இஃது, இல் பொருளுவமை'; ஒப்பு : ‘இரு கை வேழத்தி ராகவன்’ (பால. கடவுள் வாழ்த்து) ‘இருகையிற் கரி நிகரெண்ணிறந்தவர் (அயோத். நகர் நீங்கு : 174) ‘இரு கை யானை,’ (திருவாசகம். சத. 41.) இனி, தடக்கைத் துளை’ என்ற பாடங்கொண்டு துளைத்தடக்கை வேழம் என இயைத்து, துளைகளோடு கூடிய பெரிய துதிக்கையை யுடைய யானை’ எனப் பொருள் கோடலும் அமையும். இதனால், இதுகாறும் போரில்லாமல் அடைப்பட்டிருந்த அரக்கர்கள் இப்போர்ப்பறை கேட்டு, ஊக்கத்தோடு போர்க்குப் புறப்பட்டமை, கட்டப்பட்டிருந்த மத யானைகள் அவிழ்த்துவிடப் பட்டமைக்கு உவமையாயிற்று. இனி, செறி வில் வாளொடு - அடர்ந்த ஒளி பொருந்திய வாள்களோடு எனப் பொருள் கோடலும் அமையும். இச் செய்யுள், தேர்ப்படையைத் தொடர்ந்து சென்ற அரக்கர் படை வீரர்களின் செறிவையும், அவர்கள் ஏந்திய வாட்படைகளின் மிகுயையும் விளக்கியது என்க. ‘தறி - தூண். குறிக்கொளா - இலக்கணங் கொள்ளாத; பாகன் கைக்கு அடங்காத என்றலுமாம்’. என்பன பழையவுரை.

பி - ம். 1. தறியி னேங்கிய தடக்கைத் திணிக் ; தடக்கைத் தணிக் ; தடக்கை துளைக்.

2. குழுவென ; குழுவினர் ; குழுவினோர் ; குழுவன்னார்.

3. செறுவில் ; செறியும் ; செறிதலாலவர் வாளொடு வாளிடைப் ; தேயத்துகும்.

4. கானிடை வெங்கனல் ; பொங்குமால். (27)

389. முருடி ரண்டு முழங்கு முழக்கொலி
உருடி ரண்டெழுந் தேரொலி யுட்புக
அருடி ரண்ட வருக்கன்றன் மேலழன்
றிருடி ரண்டுவந் தீண்டிய தென்னவே.

இரண்டு - இரண்டு பக்கங்களிலும், முருடு முழங்கு முழக்கு ஒலி - முருடு என்னும் போர்ப்பறை முழக்குகின்ற பேரொலி, உருள் திரண்டு எழும் - சக்கரங்கள் பல ஒன்ருய் உருண்டோடினதால் உண்டாகும், தேர் ஒலியினுள் புக - தேரோசைகளினுட் புகுந்து அடங்க, (இரண்டொலிகளும் ஒன்ருய்க் கலக்க), அருள் திரண்ட - எல்லா உயிர்களிடத்தும் இரக்கமே திரண்டு வந்துள்ளது போன்று விளங்கும், அருக்கன் தன்மேல் - சூரியன் மீது, அழன்று-கோபித்து, இருள் திரண்டு வந்து ஈண்டியது என்ன - இருள் எல்லாம் ஒனறு சேர்ந்து எதிர்த்து வந்தது போல,

முருடு ; ஒருவகைப் பறை மத்தளமும் ஆம் ; சிலப். 1 : 46. பால. திருவவதாரப் ; 94. முருடின் ஒலி தேரொலியுள் அடங்கியது என்ற தால் தேரொலியின் மிகுதி கூறியது என்க. எல்லா உயிர்களிடத்தும் அருள் மிக்கவன் - அருக்கன். அவனதுஅருளாகிய ஒளியின்றேல், மழையிராது; புல் பூடு முதல் ஓருயிரும் வாழாது ; அது போல, இராமபிரான் மன்னுயிரத்தனையும் தன்னுயிரெனக் காத்தருளும் கருணை கொண்டவனுதலின், அவ்வருக்கனுக்கு ஒப்பாகக் கூறப் பெற்ருன். அரக்கர் படைக்குத் திரண்டெழுந்த இருள் தொகுதி உவமை; நிறமும் பெருமையுடைமையால், இராமபிரானுக்குச் சூரியன் உவமை ; ஒப்பு. 'மூன்று லோகமு மூடு மரக்கராம், என்ற காரிருள் நீக்கவி ராகவன், தோன்றி ஞனென வெய்யவன் ருேன்றினன்' (307) என்றமையும் நோக்குக. 'முருடு திரண்டு - முருடென்னும் வாத்தியம் திரண்டு ; விகாரம். முருடு இரண்டு என்றலுமாம்; உருள் - தேர் வண்டில். இராமன் - மேல் அரக்கர் வந்தது, ஆதித் தன்மேலே இருள்போருக்கு வந்தது போலும்' என்பது பழையவுரை.

பி - ம். 1. முருரு ருண்டு முழங்கு ; முழங்குறத் தாக்கொலி.
2. உருடுருண்டெழுந் ; தேரொலிச் சேனைகள் ; டெழுந்தோ ரொலியுட் புக.
3. யருக்கனை மேலு மன் (று) ; யருக்கனை மூடுதற்.
4. வந்தீண்டுவ தென்னவே. (28)

390. தலையின் மாசுணந் தாங்கிய தாரணி
நிலைநி லாது முதுகை நெளிப்புற
உலைவி லேழுல கத்தினு மோங்கிய
மலையெ லாமொரு மாடுதொக் கென்னவே,

மாசுணம் தலையில் தாங்கிய - ஆதிசேடனாகிய பாம்பு தன் தலை மீது கொண்டு சுமந்த, தாரணி - பூமி, நிலை நிலாது - ஒரு நிலையில் நிற்கமுடியாமல், முதுகை நெளிப்பு உற - தன் முதுகை நெளிந்து கொடுக்க, ஏழ் உலகத்தினும் - ஏழு உலகங்களினும், ஓங்கிய மலை எலாம் - ஓங்கி வளர்ந்துள்ள மலைகள் யாவும், ஒரு மாடு தொக்கது அன்ன - ஓரிடத்தே தொகுத்து வந்தனபோல,

'கார்க்கருங்கடல் கால்கிளர்ந்தென்ன', (386), 'அலகையின் ஆட' (387), 'பொறியினிற் கானெங்கும் வெங்கனல் பொங்க' (388), 'இருள்திரண்டுவந் தீண்டியதென்ன' (389), 'மலையெலாமொரு மாடு தொக்கென்ன' (390), 'தேரின் சேனை திரண்டது' 385 எனத் தொகுத்துப் பொருண் முடிவு கொள்க.

பூமி, சராசரப் பொருள் அனைத்தையும் தரித்து நிற்பதால் தாரணி எனப்பட்டது. அது நிலை நிலாது முதுகை நெளிப்புற்றது: வந்த அரக்கர்களின் தேர்ப்படைகளின் சுமையைப் பொறுக்க லாற்றாது என்க. பூமி முதுகு நெளிப்புறல்; ஒப்பு: 447; பால. கார்முகப்: 10 சுந்தர. 423; சிலப். 26 : 82. தேர்ப்படை மலைகளின் தொகுதிக்கு உவமை; அவை வலிமையும் பெருமையும் உயர்வும் உடைமையால்.

பி - ம். 2. முதுகு நெளிப்புற.

3. உலைவின் மூவுலகத்தினும்; உலக மூன்றிடத்தினுமோங்கிய; உலைவிறேர்களுலகத்துளோங்கிய; உலகில் மூவுலகத்தினும். (29)

வேறு

391. ஆளிகள் பூண்டன வரிகள் பூண்டன
மீளிகள் பூண்டன வேங்கை பூண்டன
ஞாளிகள் பூண்டன நரிகள் பூண்டன
கூளிகள் பூண்டன குதிரை பூண்டன.

(அத்தேர்கள்), ஆளிகள் பூண்டன - யாளி என்னும் கொடிய விலங்குகள் பூட்டப்பட்டனவும், அரிகள் பூண்டன - சிங்கங்கள் பூட்டப்பட்டனவும், மீளிகள் பூண்டன - பேய்கள் பூட்டப்பட்டனவும்,

வேங்கை பூண்டன - புலிகள் பூட்டப்பட்டனவும், ஞாளிகள் பூண்டன - நாய்கள் பூட்டப்பட்டனவும், நரிகள் பூண்டன - நரிகள் பூட்டப்பட்டனவும், கூளிகள் பூண்டன - பூதங்கள் பூட்டப்பட்டனவும், குதிரை பூண்டன - குதிரைகள் பூட்டப்பட்டனவும்; (ஆகிவந்தன என வினை முடிவுசெய்க.)

ஆளி - யானைபோல் துதிக்கையும், சிங்கம் போன்ற மற்ற உறுப்புக்களும், சிறகுகளும் அமைந்த ஒரு கொடிய விலங்கு. இவ்வகை விலங்கு முன் இருந்து இப்பொழுது அழிந்தொழிந்தது என்பர். மீளி - பேய்; சுந்தர. 768; உயுத்த. மூலபல: 80. மீளி - இடபமும் ஆம். ஞாளி - நாய்; 432. கூளி - பூதம்; இது குறுகிப் பருத்த உருவமுடையது: இது பதினெண் கணங்களுள் ஒரு வகையினது. ‘ ஆளி - அத்தியாளி; மீளி - மிடுக்கு; ஒரு விதப் பசாசுமாம. கூளிகள் - பசாசுகள். இவை பூண்ட தேர்கள் ’ என்பன பழைய உரை.

பி - ம். 1. வெருமைபூண்டன.
3. ஞமலிபூண்டன.
4. கோளரிபூண்டன; குனிப்பிறேர்களே. (30)

392. வல்லியக் குழாங்களோ மழையி னீட்டமோ
ஒல்லிபத் தொகுதியோ வோங்கு மோங்கலோ
அல்லமற் றரிகளி னனிக மோவெனப்
பல்பதி னுயிரம் படைக்கை வீரரே.

வல்லிய குழாங்களோ - புலிகளின் கூட்டங்களோ, மழையின் ஈட்டமோ - மேகங்களின் கூட்டமோ, ஒல் இப தொகுதியோ - விரைவுடன் வரும் யானைக் கூட்டமோ, ஓங்கும் ஓங்கலோ - உயர்ந்து விளங்கும் மலைகளோ, அல்ல - அவையல்லாதனவான, அரிகளின் அனிகமோ - சிங்கங்களின் படைகளோ, என - என்று சொல்லும் படியாக, பல் பதினுயிரம் - பல பதினுயிரக்கணக்கான, படை கை வீரர் - போர்ப்படைகளை ஏந்திய அரக்க வீரர்கள்; (வந்தனர் என வினை முடிவு செய்க). ஏ; ஈற்றசை.

வீரர்களான அரக்கர்கள், புலிக்கூட்டங்கள் போலும், யானைத் தொகுதிகள் போலும், மலைக்கூட்டங்கள் போலும், சிங்கப்படைகள் போலும், பல பதினுயிரக் கணக்கில் போர்க்கு வந்தனர் என்பதாம். கொடுமைக்குப் புலியும், பெரிய வடிவுக்கும், கர்ச்சனைக்கும் மேகமும், பெரிய வலிய உருவுக்கு யானையும், வீர பராக்ரமத்திற்குச் சிங்கமும்,

அவ்வரக்கர்வீரர்க்கு உவமைகள் ஆயின. ஒல் ; ஒலிக்குறிப்பும் ஆம். இச்செய்யுள் ஐயவணி அல்லது மயக்க வணியின் பாற்படும். பழைய உரை 'உல்லியத் தொகுதி' என்று பாடங்கொண்டு, 'கரடிக் கூட்டம்' என்னும்.

பி - ம். 1. குழாங்கொலோ ; மலையினீட்டமோ.
2. புல்லிய தொகுதியோ பொருவிலோங்கலோ ; பொங்கு லோகமோ ; வில்லியத் தொகுதியோ ; உல்லியத் தொகுதியோ வோங்கு லோகமோ.
3. வல்லெயிற் றரிகளி னனிக மோவென ; வனிகமேயெனப் ; வனிக மேயெனுப்.
4. பல்பதினுயிரர். (31)

393. ஏற்றின மார்த்தன வேன மார்த்தன
காற்றின மார்த்தன கழுதை யார்த்தன
தோற்றின மாத்திரத் துலகு சூழ்வரும்
பாற்றின மார்த்தன பணில மார்த்தன.

ஏற்று இனம் ஆர்த்தன - சிங்கங்களின் கூட்டங்கள் ஒலித்தன ; ஏனம் ஆர்த்தன - பன்றிகள் உறுமின ; காற்று இனம் ஆர்த்தன - பேய்களின் கூட்டம் கர்ச்சித்தன ; கழுதை ஆர்த்தன - கழுதைகள் பேரொலி எடுத்து முழக்கின ; தோற்றின மாத்திரத்து - மனத்தில் தோன்றின உடனே, உலகு சூழ்வரும் - உலக முழுவதும் சுற்றி வரக்கூடிய, பாறு இனம் - பருந்து அல்லது கழுகின் கூட்டம், ஆர்த்தன - கூச்சலிட்டன ; பணிலம் ஆர்த்தன - சங்குகள் முழங்கின.

ஏறு என்பது மிருகங்களின் ஆண்களுக்கு வழங்கும் பொதுப் பெயராயினும், இங்கு ஆர்த்தல் என்னுங் குறிப்பினாலும், போர்க் களத்திற்கு வந்த இரதங்களில் சிங்கங்கள் பூட்டப்பட்டிருந்தமை யாலும் (392) சிங்கம் எனவே பொருள் கொள்ளப்பெற்றது. காற்று - பிசாசு; இஃது உலக வழக்கு. பாறு - கழுகு ; அல்லது பருந்து ; கலிங்கத்துப் ; அவதாரம் ; 73 ; களம் பாடியது : 18. தோன்றின என்பது தோற்றின என எதுகை நோக்கி வலித்தது ; தோன்றின - மனத்தில் உதித்த ; 'தோற்றின மாத்திரத்து - படைதோன்றிய வுடனே' என்பது பழைய உரை.

பி - ம். 1. ஏற்றெதிரிடிப் பினிஸிபங்களார்த்தன ; வெருமையார்த்தன.
2. காற்றினிற் பாய்கதிப் பரிகளார்த்தன.
3. துலகஞ் சூழ்வரும்.
4. பாற்றின மார்த்தது பணிலமார்த்ததே ; பறவை யார்த்தன. (32)

394. தேரினந் துவன்றின சிறுகட் செம்முகக்
காரின நெருங்கின காலிற் காற்பரித்
தாரினங் குழுவின தடையில் கூற்றெனப்
பேரினங் கடலெனப் பெயருங் காலையே.

பேர் இனம் - அவ்வரக்கர்களின் காலாட் படைகள், தடையில் கூற்று என - எவராலும் தடுக்க முடியாத யமனைப்போன்றும், கடல் என - கடல் போன்றும், பெயரும் காலை - போர்புரியப் புறப் பட்டபோது, (அவற்றின் பின்னே), தேர் இனம் துவன்றின - தேர் களின் கூட்டம் நெருங்கின ; சிறு கண் செம் முக கார் இனம் - சிறிய கண்களையும் சிவந்த முகத்தையு முடைய மேகம் போன்ற யானைக் கூட்டங்கள், நெருங்கின - வந்து நிறைந்தன ; காலில் - காற்றைப் போன்று, கால் பரி - கால்களால் விரைந்து ஓடும் குதிரைகளின், தார் இனம் - குதிரைப்படைகளின் கூட்டம், குழுவின - நிறைந்தன.

ஏ : ஈற்றசை ; பேர் - ஆள் ; பேர்வழி என்பதையும் நோக்குக. இங்குக் காலாட்படையைக் குறித்து நின்றது. 'கூற்றெனப் பேரினம் - காலனைப் போன்ற அரக்கர் கூட்டம்' என்பது பழைய வுரை. முன்னே காலாட்படை பெயர, தேர், யானை, குதிரை என்னும் முப்படைகளும் பின்னே பெயர்ந்தன என்பது கூறப்பட்டது. கார் : மேகம்போன்ற யானை ; இஃது உவமையாகுபெயர். சிறுகட் செம்முகம் என்ற குறிப்பால், அது மேகம் என்னாது யானையைக் குறித்து நின்றது. செம்முகக்கார் - சிவந்த புள்ளிகளையுடைய முகத்துயானை. தார் - கிண்கிணிமாலை ; பிடர் மயிரும் ஆம் ; அதனையுடைய குதிரைக்கு ஆயிற்று.

இச்செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

பி - ம். 2. கலினமாப்பரி ; காலிற்கால்வரு ; காலிற்கால் வகுத்.
3. தாரினங் குழுவின ; குழுமின; தருகட் கூற்றெனப் ; கூற்றன்ன.
4. பேருங் காலையே ; பேரினந் துவன்றின பேச லாவதோ. (53)

395. மழுக்களு மயில்களும் வயிர வாட்களும்
எழுக்களுந் தோமரத் தொகையு மீட்டியும்
முழுக்கலு முசுண்டியுந் தண்டு முத்தலைக்
கழுக்களு முலக்கையுங் கால பாசமும்,

மழுக்களும் - கோடாலிகளும், அயில்களும் - வேல்களும், வயிர வாட்களும் - உறுதியான வாள்களும், எழுக்களும் - இருப்புலக்

கைகளும், தோமர தொகையும் - எறியீட்டிகளின் தொகுதியும், ஈட்டியும் - நெடிய ஈட்டிகளும், முழுக்கலும் - முழுக் கற்களாகிய உருண்டையான கவண் கற்களும், முசுண்டியும் - முசுண்டி என்னும் ஒரு வகை ஆயுதங்களும், தண்டும் - தண்டாயுதம் என்னுங் கதை களும், மு தலை எழுக்களும் - மூன்று தலைகளையுடைய சூலங்களும், உலக்கையும் - உலக்கைகளும், கால பாசமும் - கால பாசம் போன்ற சுருக்குக் கயிறுகளும்,

இது முதல் 3 செய்யுட்கள் படையினர் சுமந்து சென்ற படை களைக் கூறும். முழுக்கள் என்பதும் பாடம்; அது முழுக்கல் என் பதன் திரிபே. முத்தலைக்கழு; 'முச்சிகைக் கழு' 380.

பி - ம். 2. தொகையி னீட்டமும்; மீட்டிய.

3. முழுக்களும்; முழக்கலும். (34)

396. குந்தமுங் குலிசமுங் கோலும் பாலமும்
அந்தமில் சாபமுஞ் சரமு மாழியும்
வெந்தொழில் வலயமும் விளங்குஞ் சங்கமாம்
பந்தமும் கப்பணப் படையும் பல்லமும்,

குந்தமும் - வேல்களும், குலிசமும் - வச்சிரப்படைகளும், கோலும் - தடிகளும், பாலமும் - பிண்டிபாலம் என்னும் படைகளும், அந்தம் இல் சாபமும் - அளவில்லாத விற்களும், சரமும் - அம்பு களும், ஆழியும் - சக்கரப் படைகளும், வெம் தொழில் வலயமும் - கொடிய தொழிலையுடைய வளையங்களும், (அல்லது வளை என்னும் ஆயுதங்களும்), விளங்கு சங்கமாம் - வெண்ணிறமாய் விளங்கும் சங்குகளாகிற, பந்தமும் - கூட்டங்களும், கப்பண படையும் - கப் பணம் என்னும் ஆயுதமும், பல்லமும் - பல்லம் என்ற ஆயுத வகை களும்,

கப்பணம் - யானை நெருஞ்சி; முட் போன்ற, பல முட்கள் அடர்ந்து விளங்கும் ஓர் இரும்புப்படை; கைவேலும் ஆம். பாலம்: பிண்டி பாலம் என்பதன் முதற்குறை; 'கண்டகோடாலியும் ஆம்' என்பது பழையவுரை. வலயம் - பாரா வலயம் என்னும் படையும் ஆம். கோல் - குதிரைச் சம்மட்டியும் ஆம். 'கோல் கொண்டான் மால்கொண்ட மா' (நள. 3 : 45). சங்கமாம் பந்தம் - சங்கனுபந்தம்

என்ற படையும் ஆம். இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. கோலு மாழியும்; கோலு மாலமும்.
2. விளங்கு சங்கமாம்; வேலுஞ் சங்கினிற்.
4. பந்தமு மிப்படை பரித்த தானையே; படையும் பல்லமும்,
(35)

இதன்பின், ஒரு சுவடியில், பின்வரும் பாடல் ஒன்று அதிகமாக உள்ளது. இதன்பின், அச்சுவடியில் ' ஆறிரேடாயிரம்' (399) என்ற செய்யுள் அங்குக் காணப்படுகின்றது.

பத்துட ஞலெனப் பகுத்த வாயிரம்
வித்தக வரக்கர்கள் வீர வேள்வியில்
முத்தலைக் குரிசிலுக் கன்று முக்கணுன்
அத்துணைப் படைத்தவ னருள வுற்றுளார்.

897. ஆதியி லருக்கனு மனலு மஞ்சுறும்
சோதிய சோரியுந் தூவுந் துன்னின
ஏதிகண் மிடைந்தன விமைய வர்க்கெலாம்
வேதனை கொடுத்தன வாகை வேய்ந்தன.

ஏதிகள் (மேற்கூறிய) ஆயுதங்கள், ஆதி இல் அருக்கனும் - அநாதியாய் உள்ள சூரியனும், அனலும் - தீயும், அஞ்சு உறும் - அச்சமடையத்தக்க, சோதிய - ஒளியுடையனவும், சோரியும் தூவும் துன்னின - இரத்தமும் மாமிசமும் நிறைந்து விளங்கியவையும், இமையவர்க்கு எலாம் - தேவர்களுக் கெல்லாம், வேதனை கொடுத்தன - துன்பந் தந்தவையும், வாகை வேய்ந்தன - போரில் வெற்றி மாலை யடைந்தவையுமாய், மிடைந்தன - நெருங்கி விளங்கின.

சோரியும் தூவும் துன்னியது - முன் தேவர்களுடன் செய்த போர்களிற்ருக்கிப் பகைவர் இரத்தத்தையும், அவர்கள் உடலின் மாமிசப் பகுதிகளையும் கொண்டமையால்; இனி, போர்க்கு எழுமுன் அப்படைகளுக்குப் பலியிட்ட சோரியும் தூவும் ஆம். தூ - மாமிசம்; (346). ஏதி - ஆயுதம்; 21; சுந்தர. 209, 234. ஆயுதங்கள் வாகை வேய்ந்த செய்தி இங்குக் கூறப்பெற்றது.

பி - ம். 1. மழலுமஞ்சுற. 2. தூவுந் துன்னிய.
3. ஏதிகளெடுத்துளாரிமையவர்க்கெலாம்.
4. கொடுத்துநல் வாகை வேய்ந்தன; வேய்ந்துளார்.
(36)

## சேனையின் எழுச்சி 398—412.

398. ஆயிர மாயிரங் களிற்றி னாற்றலர்
மாயிரு ஞாலத்தை விழுங்கும் வாயினர்
தீயெரி விழியினர் நிருதர் சேனையின்
நாயகர் பதின்மரோ டடுத்த நால்வரே.

நிருதர் சேனையின் நாயகர் - (இவ்வாறு எழுந்த) அரக்கர்படைகளின் தலைவர்கள், பதின்மரோடு அடுத்த நால்வர் - பதினால்வர் (ஆவர்); ஆயிரம் ஆயிரம் களிற்றின் ஆற்றலர் - ஒவ்வொருவரும் தனித்தனியே பல ஆயிர யானைகளின் வலியுடையவர்களும், மா இரு ஞாலத்தை விழுங்கும் வாயினர் - மிகப் பெரிய உலகத்தையே விழுங்கக் கூடிய பெரிய வாயை யுடையவர்களும், தீ எரி விழியினர்- நெருப்பு எரிவதுபோல் விளங்கும் விழிகளை யுடையவர்களுமாவர். ஏ: ஈற்றசை.

இச் செய்யுள் முதல் சேனைத் தலைவரையும், வீரரையும் பற்றிக் கூறும். இங்குக் கூறிய படைத் தலைவர் பதினால்வர் முன் இராம பாணத்தால் இறந்த (381) படைத் தலைவர் பதினால்வரின் வேறுவர் என்க. மா + இரு - மாயிரு என்றானது, பொது விதிக்கு விலக்கு. மா இரு : ஒரு பொருட் பன்மொழி.

பி - ம். 3. பதிமரோடடுத்த; தீ யெழும் விழியினர்.
4. நாயக ரோர்பதி னானு வீரரே; பதின்மரோ டொத்த நால்வரே.

(37)

399. ஆறினோ டாயிர மமைந்த வாயிரம்
கூறின தொருபடை குறித்த வப்படை
ஏறின தேழின திரட்டி யென்பரால்
ஊறின சேனையின் றொகுதி யுன்னுவார்.

ஊறின சேனையின் தொகுதி உன்னுவார் - போர்த்திறத்தில் ஊறிய படையின் தொகையை எண்ணிக் கணக்கிடுவோர், கூறினது ஒரு படை - சொல்லப்பட்ட (படைகளுள்) ஒரு படை, ஆறினோடு ஆயிரம் அமைந்த ஆயிரம் - ஆறாயிரத்தின் ஆயிரமடங்கான, அறுபது லக்ஷம்; குறித்த அ படை - இவ்வாறு கணக்கிடப்பட்ட அப் படைகளின் (பதினான்கு படைத்தலைவர்க்கு உரிய மொத்தம்) ஏழினது இரட்டி - பதினான்கு கொண்டது, என்பர் - என்று கூறுவர்; ஆல்: அசை.

அங்குப் போர்க்கு வந்த படை ஒன்றுக்கு அறுபது லக்ஷங் கொண்ட பதினன்கு படைகள் இருந்தன என்பதாம். இது சேனைத் தொகை. கரன் படை வீரர் மொத்தம் பதினலாயிரம் என்பர், சுந்தர. 351. இத்தொகை, கம்ப. சுந்தர காண்டத்திலும், வான்மீகம், அத்யாத்ம ராமாயணம் போன்ற நூல்களிலும் வேருகக் காண்கிறது. இப் பாடல் ஐயத்திற்குரியது.

பி-ம். 1. ஆறிரண் டாறுடனமைந்த வாயிரம்; ஆறிரண் டாறென வமைந்த வாயிரம்,
2. கூறின வொருபடை; கூறிய வொரு தொகை குறித்த முத் தொகைக்.
3. கேளிய திரட்டியி னிரட்டி; யன்பரால்; எறின தேழத னிரட்டி.
4. ஊறிய சேனைதூ டணனுக் குன்னிலே. (38)

ஒரு சுவடியில் இதன் பின் அடியிற் காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

ஆறுநா ளுயிர கோடி யாளித்தேர்
கூறிய தவற்றினுக் கிரட்டி குஞ்சரம்
ஏறிய பரியவற் றிரட்டி வெள்ளநூ
றீறிலாள் கரன் படைத் தொகுதி யென்பரால்.

400. உரத்தின ருருமென வுரற்றும் வாயினர்
கரத்தெறி படையினர் கமலத் தோன்றரும்
வரத்தினர் மலையென மழைது யின்றெழும்
சிரத்தினர் தருக்கினர் செருக்குஞ் சிந்தையார்.

(அப்படை வீரர்கள்), உரத்தினர் - மிக்க வலிமை வாய்ந்தவர்கள்; உரும் என உரற்றும் வாயினர் - இடிபோல முழக்கஞ் செய்யும் பேச்சை யுடையவர்கள்; கரத்து, எறி படையினர் - கைகளால் வீசி எறிந்து தாக்கும் ஆயுதங்களை யுடையவர்கள்; கமலத் தோன் தரும் வரத்தினர் - பிரமதேவன் தந்த வரன்களை யுடைய வர்கள்; மலை என - மலைகள் என்று எண்ணி, மழை துயின்று எழும் - மேகங்கள் வந்து படிந்து தூங்கிப் பின் எழுந்து செல்லும், சிரத்தினர் - (உயரமும் அகலமு முடைய) தலைகளை யுடையவர்கள்; தருக்கினா - கருவம் மிக்கவர்கள்; செருக்கும் சிந்தையார் - போரில் பகைவரை அழிக்கும் எண்ண மேலிட்டவர்கள்.

உராற்றுதல் - முழக்குதல்; 1110. செருத்தல் - அழித்தல்; 'செருத்தது.........தக்கணை' வெள்ளியில் (தேவாரம்) செருக்கும் சிந்தையார் - உற்சாக மேலிட்டவரும் ஆம். கரத்து - உருபு மயக்கம்.

பி - ம். 1. வுரனும் வாயினர்.
3. மலையிடை யெரி யனர்ந்தன ; மலையிடை வயங்கு தீ யெனும்.
4. செருக்குஞ் சிந்தையார் ; திருக்கினர் செருக்குஞ். (39)

401. விண்ணள விடநிமிர்ந் துயர்ந்த மேனியர்
கண்ணள விடலரு மார்பர் காலினல்
மண்ணள விடுநெடு வலத்தர் வானிடை
எண்ணள விடலருஞ் செருவென் றேறினர்.

விண் அளவு இட - வானை அளந்து பார்க்க, நிமிர்ந்து உயர்ந்த- நிமிர்ந்து ஓங்கிய, மேனியர் - உருவை யுடையவர்; கண் அளவு இடல் அரும் மார்பர்-கண்களால் பார்த்து அளவிட்டுக் கூற முடியா வண்ணம் பரந்த மார்பை யுடையவர் ; காலினல்-தம் கால்களால், மண் அளவு இட - பூமியை அளந்து பார்க்கக் கூடிய, நெடு வலத்தர் - மிக்க வலிபடைத்தவர்கள்; வான் இடை - (முன்) வானகத்தில், எண் அளவு இட அரும் - எண்களால் அளவிட்டுச் சொல்ல முடியாத, செரு வென்று - போர்களில் வெற்றி கண்டு, ஏறினர் - மேம்பட்டவர்கள்.

விண் அளவிட - ஆகாயத்தை அளாவிச் செல்ல எனப் பொருள் கோடலும் அமையும். 'வானிடை யெண்ணளவிட வரும் செரு வென்றேறினர் - வானாட்டினுள்ளோரில் எத்தனை தேவ கணங்களை வென்றாரென்று எண்ணுதற்கரிய பல செருக்களில் அந்த அமரர் கூட்டத்தை வென்றேறியவர்' என்பது பழையவுரை.

பி - ம். 2. காலினர்,
3. வலத்தவர் வானவர் ; விடு நெடுவலத்தர் ; வலத்தர் வாளினல்.
4. எண்ணள விடற்கருஞ் சமர்வென்; றெய்தினர் ; றேகினர் ; செருவென். (40)

402. இந்திரன் முதலினே ரெறிந்த மாப்படை
சிந்தின தெறித்துகச் செறிந்த தோளினர்
அந்தக னடிதொழு தடங்கு மாணையார்
வெந்திற லுருவுகொண் டனைய மேனியார்.

இந்திரன் முதலினோர் - இந்திரன் முதலான தேவர்கள், எறிந்த- தம்மீது வீசித் தாக்கிய, மா படை - சிறந்த ஆயுதங்கள், தெறித்து

சிந்தின உக - எதிரிட்டுச் சிதறிப் பொடியாகச் சிந்திப்போகும்படி அமைந்த, செறிந்த தோளினர் உறுதி பெற்ற தோள்களை யுடையவர் கள்; அந்தகன், அடிதொழுது அடங்கும் ஆணையார் - இயமனும் தம் பாதங்களில் விழுந்து வணங்கி அடங்கி நிற்கும்படிச் செய்யும் அதிகார முடையவர்கள்; வெம் தொழில் உருவு கொண்டனைய மேனியார் - கொடுஞ் செயலே ஒரு வடிவெடுத்து வந்தாற் போன்ற வர்கள்.

பி ம். 2. தெறித்துரு செறிந்த தோளினர்; சிந்தினர்; செறுத்த தோளினர்.
3. அந்தணர் தொழத்தகு மாற்ற லாணையார்; னடிதொழு மடங்கு; மாணையர்.
4. வெந்தழ லுருவு கொண்டனைய; டன்ன மேனியார்; வெந்திற லுருவு கொண்டனைய மேனியார்; மேன்மையார். (41)

403. சூலமும் பாசமுந் தொடர்ந்த செம்மயிர்ச்
சாலமுந் தறுகணு மெயிறுந் தாங்கினர்
ஆலமும் வெளிதெனு நிறத்த ராற்றலால்
காலனுங் காலனென் றயிர்க்குங் காட்சியார்.

(அவர்கள்), சூலமும் - சூலாயுதமும், பாசமும் - பாசம் என்னும் ஆயுதமும், தொடர்ந்த - பிணைந்து நின்ற, செம் மயிர் சாலமும் - சிவந்த மயிர்த் திரளும், தறுகணும் - கொடிய கண்களும், எயிறும் - கோணற் பற்களும், தாங்கினர் - கொண்டவர்கள்; ஆலமும் வெளிது எனும் நிறத்தர் - விஷமும் வெண்மையானது என்று சொல்லக் கூடியவாறு கரிய நிறத்தை யுடையவர்கள்; ஆற்ற லால் - தம் வலிமையினால், காலனும் - யமன்கூட, காலன் என்று,- தனக்கு இவர்கள் காலன் என்று, அயிர்க்கும் காட்சியார் - சந்தேகித் துப் பயப்படும் தோற்றத்தினர்.

சூலமும், பாசமும், சாலமும், தறுகணும், எயிறும்; இவற்றின் உம்மைகள், எண்ணும்மைகள். ஆலமும், காலனும்: இவ்வும்மைகள் உயர்வு சிறப்பின. சூலம் முதல் எயிறு வரை யுள்ளவை, படைகள், உறுப்புக்கள் ஆகியவற்றைக் கூறுவனவர்ல் தறுகண் என்பதற்குக் கொடிய கண் எனப் பொருள் கொள்ளப்பட்டது. ஆலமும் வெளிது எனும் நிறத்தார்; ஒப்பு. 4 கிட்கிந்தா. நாடவிட்ட: 49; சுந்தர. 528.

இச் செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

பி - ம். 1. பாசமுஞ் சுமந்த செம்மயிர்ச்.
3. வெறிதெனு; வெளிறிடு; நிறத்த ராதலால். (42)

404. கழலினர் தாரினர் கவச மார்பினர்
நிழலுறு பூணினர் நெறித்த நெற்றியர்
அழலுறு குஞ்சிய ரமரை வேட்டுவந்
தெழலுறு மனத்தின ரொருமை யெய்தினர்.

கழலினர் - வீரக்கழல்கள் அணிந்தவர்கள், தாரினர் - போர் மாலையை அணிந்தவர்கள், கவச மார்பினர் - கவச மணிந்த மார்பை யுடையவர்கள், நிழல் உறு பூணினர் - ஒளி மிகுந்த ஆபரணங்களை யுடையவர்கள், நெறித்த நெற்றியர் - கோபத்தால் சுருக்கி நிமிர்ந்த நெற்றியை யுடையவர்கள், அழல் உறு குஞ்சியர் - நெருப்புப்போல் சிவந்து அடர்ந்த தலைமயிரை யுடையவர்கள், அமரை வேட்டு - போரை விரும்பி, உவந்து எழல் உறு மனத்தினர் - மகிழ்ந்து உற்சாகம் கொண்டு எழுகின்ற மனத்தையுடையவர்கள், ஒருமை எய்தினர் - தம்முள் ஒற்றுமை யடைந்தவர்கள்.

அமரை வேட்டுவந் தெழலுறு மனத்தினர்; ஒப்பு: பால. பூக்கொய்: 18; சுந்தர. 754; புறநா. 31: 9; அகநா. 157. ஒருமை எய்தினர் - ஒன்று கூடினர் என்றலும், போரில் ஒரே கருத்துக் கொண்டனர் என்றலும் ஆம்.

பி-ம். 2. நெறித்துப் பொங்கிய; நெரிந்து பொங்கியே.
4. தழலுறு மனத்தின ரொருவ ரேயனர். (48)

405. மருப்பிரு மதக்களிற் றமரர் மன்னனும்
விருப்புரு முகத்தெதிர் விழிக்கின் வெந்நிடும்
உருப்பெரு துலைவுறு முலக மூன்றினும்
செருப்பெருத் தினவுறு சிகரத் தோளினர்.

இரு மருப்பு - ஒடியாத வலிய தந்தங்களையுடைய, மத களிற்று - மதங்கொண்ட ஐராவதம் என்னும் யானையை யுடைய, அமரர் மன்னனும் - தேவர்க்கரசனான இந்திரனும், முகத்து எதிர் விழிக்கின் - இவ்வீரர்கள் முகத்துக்கு எதிரே நோக்குங்கால், விருப்பு உரு - எதிர் நிற்க விருப்ப முறாமல், வெந் இடும் - அஞ்சி முதுகு காட்டி ஓடுவான்; (அத்துணை வீரமுடையார் என்றபடி); உரு பெருது உலைவுறும் - தம் உருக்கொண்டு நிற்றலைப் பெறாமல் அழியும்படியான, உலகம் மூன்றினும் - சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும் மூவுலகங்களினும், செரு பெரு - போரை யடையாமல், தினவு உறு - தினவைக் கொண்ட, சிகர தோளினர் - மலைச்சிகரம் போன்று பெருத்துயர்ந்த தோள்களை யுடையவர்கள்.

இரு மருப்பு என்றமையால், அதன் வலிமை கூறியபடியாம். போர் பெருது தோள் தினவுறுதல்; 424; பால. அரசியற்: 12; பரசுராமப்: 18; சுந்தர. 766, 894. விருப்புறு முகம் என்று இணைத்து, விருப்படையாத, அதாவது வெறுப்புக் கொண்ட இயற்கையையுடைய முகம் என்றும் பொருள் கூறலாம். 'விருப்புறு முகத்தெதிர் விழிக்கில் அமரர் மன்னனும் வெந்நிடும் - அரக்கர்கள் சந்தோஷத்துடனே இராதபோது, அவர்கள் முகத்துக்கு முன்னே வந்தால் இந்திரனும் பின்னிட்டோடுவான்' என்பது பழையவுரை.

பி-ம். 1. மருப்பிறுமதக்; மறுப்பறுமதக்; மதக்களிறனைய மன்னன்முன்.

2. விருப்புறு; விருப்புறர்முகத்தெதிர் விளிக்குமேதகும்; விருப்பறு முகத்தெதிர் விழிக்கவே தன(து). விழிக்கின் வெந்நிடும்; விழிக்குன் வேகம (தருப்)

3. உருப்பெறு வுலைவுறு; தருப்பெறு.

4. செருப்பெறு தெனவுறு. (44)

406. குஞ்சரங் குதிரைபேய் குரங்கு கோளரி
வெஞ்சினக் கரடிநாய் வேங்கை யாளியென்
றஞ்சுறக் கனல்புரை முகத்த ரார்கலி
நஞ்சுதொக் கெனப்புரை நயனத் தார்களும்,

குஞ்சரம் குதிரை - யானை, குதிரைகள், பேய் - பிசாசு, குரங்கு - குரங்கு, கோள் அரி - வலிய சிங்கம், வெம் சினம் கரடி - கொடிய கோபமுடைய கரடி, நாய் - நாய், வேங்கை - வேங்கைப்புலி, யாளி - யாளி என்னும் விலங்கு, என்று - என்று எண்ணி, அஞ்சு உற - பயப்படத்தக்க, கனல் புரை முகத்தர் - நெருப்புப் போன்ற முகத்தையுடையவர்களாய், ஆர்கலி நஞ்சு தொக்கென புரை - (கடைந்தபோது) கடலில் தோன்றிய விஷந் திரண்டதுபோல் விளங்கும், நயனத்தார்களும் - கண்களையுடையவர்களும்,

இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடராய் இயைந்து முற்றுப்பெறும். அவ்வரக்கர் யானை முதலாகப் பல கொடிய மிருகங்களின் முகங்களையுடையவர்; அன்னோர் முகங்கள் கனல் போலும், கண்கள் விடம் திரண்டு வந்ததுபோலும் கொடுமை அமையப்

பெற்றவர். ஆர்கலி நஞ்சு தொக்கென நயனம் : ஆர்கலி, அன்னவர் உருவின் கருமை பெருமைகளுக்கும், விடம் அவர் கண்களின் கொடுமைக்கும் உவமைகள் ஆயின.

பி-ம். 1. குதிரையே.

3. அஞ்சுதற் கனல்புரை ; முகத்தராதலின்.

4. நஞ்சுகக் கனல்புரை ; நஞ்சு தொக்கனபுரை ; நஞ்சு தொக்கெனக் கனல் நயனத்தார் பலர். (45)

407. எண்கைய ரெழுகைய ரேழு மெட்டுமாய்க்
கண்கனல் சொரிதரு முகத்தர் காலினர்
வண்கையில் வளைத்துயிர் வாரி வாயிலிட்
டுண்கையி னுவகைய ருலப்பி லார்களும்,

எண் கையர் - எட்டுக் கைகளை யுடையவர்கள் ; எழு கையர் - எழு கைகளை யுடையவர்கள் ; ஏழும் எட்டும் ஆய் - ஏழும் எட்டும் என்னும் எண்ணிக்கையுடையனவாய் உள்ள, கண் - கண்கள், கனல் சொரி தரு - நெருப்பைச் சொரின்ற, முகத்தர் - முகங்களை யுடையவர் ; காலினர் - அவ்வாறே ஏழு எட்டு ஆகிய கால்களை யுடையவர் ; உயிர் - (எதிர்ப்பட்ட) பிராணிகளை, வண் கையில் வளைத்து வாரி - வலிய தம் கைகளால் வளைத்து அள்ளி எடுத்து, வாயில் இட்டு - தம் வாய்களில் போட்டு, உண்கையில் - உண்பதில், உவகையர் - மகிழ்ச்சியடைகிறவர்கள் ; உலப்பு இலார்களும் - (இவ்வாறு உள்ள அரக்கர்கள்) அளவற்றவர் ஆவர்.

இச் செய்யுள் போருக்கு வந்த அரக்கர் படைவீரர்களின், விருப்பங்களையும், கொடுஞ் செயல்களையும், அன்னோர் தொகையின் அளவின் மிகுதியையும் கூறியது ஆகும். உலப்பிலார் - குறையாத வலிமை யுடையவர் என்னலும் ஆம். ஒரு சுவடியில் இச்செய்யுள் இல்லை.

பி-ம். 3. வண்கையின் ; வண்கையிலனைத்துயிர் வாரிவாயிட.

4. உண்கையருரப்பின ருலப்பிலார்களும் ; உண்கைய ருலப்பில்பல கோடியுற்றுளார் ; உலப்பிலார்களே. (46)

408. இயக்கரிற் பறித்தன வவுண ரிட்டன
மயக்குறுத் தமரரை வலியின் வாங்கின
துயக்கில்கந் திருவரைத் துரந்து வாரின
நயப்புறு சித்தரை நலிந்து வவ்வின,

இயக்கரில் பறித்தன - (முன் போரில்) யக்ஷர்களிடமிருந்து வலிதிற் பிடுங்கிக்கொண்டவையும், அவுணர் இட்டன - அசுரர்கள் (முன் போர்க்களத்தில் தோற்றோடியபோது) போட்டவையும், அமரரை - தேவர்களை, மயக்குறுத்து - (போரில்) திகைக்கும்படி மாயை பல செய்து, வலியின் வாங்கின - தம் வலிமையால் பெற்றவையும், துயக்கு இல் - சோர்வு அற்ற, கந்திருவரை - கந்தர்வர்களை, துரந்து வாரின - வெருட்டி ஓடச்செய்து அவர்களிடமிருந்து வாரிக்கொண்டவைகளும், நயப்பு உறு சித்தரை - நயந்து படிந்த சித்தர்களை நலிந்து வவ்வின - வருத்திக் கவர்ந்தவையுமான,

இச்செய்யுள் அடுத்த செய்யுளுடன் இயைந்து வினை முடிவு பெறும். இங்குக் கூறியவை கொடி முதலியனவேயன்றி, ஆயுதங்கள் அல்ல. இவ்வரக்கர்கள், மாயையிலும் ஆற்றலிலும் வல்லவர் என்பதும், நயந்தோரையும் நலியும் கொடுஞ்செயல் உள்ளவர் என்பதும் விளங்கும். கந்திருவர் ; கந்தர்வர் என்ற வட சொல்லின் திரிபு. 'துயக்கில் - அறிவின்மையில்லாத' என்பது பழையவுரை.

பி - ம். 1. வவுணரீந்தன ; வவுணரீட்டின.
2. தேவரை வலிந்து கொண்டன ; வலிதிற்கொண்டன.
3. கந்தர்ப்பரை ; துரந்துபற்றின.
4. வியப்புறு படைக்கல விழுமம் பெற்றுளோர். (47)

409. கொடிதழை கவிகைவான் றொங்கல் குஞ்சரம்
படியுறு பதாகைமீ விதானம் பன்மணி
இடைமிளிர் சாமரைக் குழாங்கொண் டெங்கணும்
மிடைதலி னுலகெலாம் வெயிலி ழந்தவே.

கொடி - துகிற்கொடிகளும், தழை - மயிற் பீலிகளும், கவிகை - குடைகளும், வான் தொங்கல் - உயர்ந்த மாலைகளும், குஞ்சம் மேல்படி உறு - குஞ்சங்கள் மேற்பொருந்திய, பதாகை - பெருங்கொடிகளும், மீ விதானம் - மேல் கட்டிகளும், பல் மணி இடை மிளிர் - பலவகை இரத்தினங்கள் இடையிடையே ஒளிவீசும், சாமரை குழாம் - வெண் சாமரைத் தொகுதிகளும், கொண்டு - இவைகொண்டு, எங்கணும்

மிடைதலில் - எங்கும் நெருங்கியிருந்ததால், உலகு எலாம் - புவி முழுவதும், வெயில் இழந்த - சூரிய வெளிச்சமாகிய வெயிலை இழப் பன ஆயின. ஏ : ஈற்றசை.

இங்குக் கூறியவெல்லாம் முன் செய்யுளிற் கூறியபடி பகை வரிடமிருந்து பெற்றவை. தழை - பீலிக்குடையும் ஆம். தொங்கல்- விருதாவளி; 'புடவைத் தூக்கம்' என்பது பழையவுரை; பால. எழுச்சி; 56, 78; எதிர்கோட் : 7; அயோத். பள்ளியடைப் : 10. உயுத்த. இராவணன்றானைகாண் : 8. பதாகை - பெருங்கொடி; (பிங்). விதானம் - மேற்கட்டி; பால. கோலங்காண்; 26; சுந்தர, 1181. கொடி முதலியவற்றால் வெயில் மறைதல்; பால. எழுச்சி : 7.

பி - ம். 1. வன்றொங்கல்; கொடி தழை தொங்கல் வெண்கவரி குஞ்ச மேற்; கவிகையின்.

2. விதானம் பல்வகை; விதானம் பான்மதுக்; விதானம் பான் மதிக்; விதானம் பன்மதிக்;

3. அடியில் வெங்கனுமடைய மீமிசை; இடையில தெங்கனு மீமிசை; குழாங்களெங்கனும்; இடைமிளிர் சாமரை.

4. இடையில துலகெலாம் வெயிலிழக்கவே; வெயிலீழைக்கவே; இழப்பவே. (48)

410. எழுவரொ டெழுவர்நீ ளுலக மேழொடேழ்
தழுவிய வென்றியர் தலைவர் தானையர்
மழுவினர் வாளினர் வயங்கு சூலத்தார்
உழுவையொ டரியென வுடற்றுஞ் சீற்றத்தார்.

தானையின் தலைவர் - அச்சேனைகளின் தலைவர்கள், எழுவரொடு எழுவர் - பதினால்வர்; நீள் உலகம் ஏழொடு ஏழ் - (அவர்கள்), நீண்ட உலகங்கள் பதினான்கிலும், தழுவிய - பொருந்திய, வென்றியர் - வெற்றியையுடையவர்கள்; மழுவினர் வாளினர் வயங்கு சூலத்தர் - கோடாலிகளையும், வாட்களையும் விளங்கும் சூலங்களையுமுடையவர் கள்; உழுவையொடு அரி என - புலி சிங்கங்களைப்போல, உடற்றும் - பிறரை வருத்தும், சிற்றத்தர் - சினத்தையுடையவர்கள்.

வாளினர்; 411. உழுவையொடரி யெனவுடற்றுஞ் சிற்றத்தார்: 'புலிக்கணமுஞ் சீயமும் போர்க்களிறும் போல்வார், வலிச்சினமும் மானமுந் தேசும்...சிற்றஞ்சிறந்து' (புறப். வெண்; 25.) உடற்றுதல்,

போர் செய்தலும் ஆம். இங்குக் கூறப் பெற்ற பதினான்கு தானைத் தலைவர் முன் மடிந்தவரினும் வேறானவர் என்க.

பி - ம். 1. எழுவரோடெழுவ ரேழுலகமேழொடேழ்; எழுவரோடெழுவரா முலகமேழொடேழ்; நீருலகமேழொ.
2. வென்றிய தலைவர் தானையின்.
3. சூலத்தர். 4. சீற்றத்தர். (49)

411. வில்லினர் வாளின ரிதழை மேலிடும்
பல்லினர் மேருவைப் பறிக்கு மாற்றலர்
புல்லினர் திசைதொறும் புரவித் தேரினர்
சொல்லின முடிக்குறுந் துணிவி னெஞ்சினர்.

வில்லினர் - வில்லையுடையவர்கள்; வாளினர் - வாள்களையுடையவர்கள்; இதழை மேலிடும் பல்லினர் - உதடுகளின்மேல் வைத்து ஊன்றும் பற்களையுடையவர்கள்; மேருவை பறிக்கும் ஆற்றலர் - மேருமலையையும் பறித்து எடுக்கக்கூடிய வலிமை வாய்ந்தவர்கள்; புரவி தேரினர் - குதிரைகள் பூட்டப்பட்ட தேர்களையுடையவர்கள்; சொல்லின் முடிக்குறும் - தாம் சொல்லிய காரியங்களைச் சொல்லிய வண்ணமே செய்துமுடிக்கும், துணிவின் நெஞ்சினர் - வலியுடைய மனத்திரான அப்படைத்தலைவர்கள், திசை தொறும் புல்லினர் - நான்கு திசைகளிலும் வந்து சூழ்ந்து நின்றனர்.

இதழை மேலிடும் பல்லினர் - இயற்கையில் இதழுக்கு மேலாக விளங்கும் கோரப் பற்களையுடையவர்கள் என்றேனும், கோபத்தால் இதழை அதுக்குவதால் வெளித்தோன்றிய பற்களையுடையவர்கள் என்றேனும் கொள்க; இதழிற்பல்லிடுதல்; பால. தாடகைவதைப்; 49; வேள்விப்: 47. சொல்லின முடிக்குறும்: தம் தலைவர் கட்டளையிட்டவற்றைத் தவறாமல் முடிக்கக்கூடிய, என்னலும் ஒன்றும்.

பி - ம். 1. ரிதழின் மீதிடும்; ரிதழின் மேலிடும்.
4. துணிவு நெஞ்சினர்; துணிவினெஞ்சினர். (50)

412. தூடணன் றிரிசிராத் தோன்ற லாதியர்
கோடணை முரசினங் குளிறுஞ் சேனையர்
ஆடவ ருயிர்கவ ரலங்கல் வேலினர்
பாடவ நிலையினர் பலருஞ் சுற்றினர்.

ஆடவர் உயிர் கவர் அலங்கல் வேலினர் - தம் மெதிர் வந்த வீரர்களுடைய உயிர்களை அபகரிக்கும் மாலை யணிந்த வேற் படையை

யுடையவர்களும், பாடவ நிலையினர் - திறமை வாய்ந்த நிலை யுடைய வர்களும், கோடணை முரசு இனம் குளிறும் சேனையர் - கர்ச்சனை யோடு முழங்கும் பேரிகைக் கூட்டங்கள் ஒலிக்கின்ற சேனைகளை யுடையவர்களுமான, தூடணன், திரிசிரா, தோன்றல் ஆதியர் - தூஷணன், திரிசிரஸ், முதலிய தலைவர்களை முன்னிட்டவர்களான, பலரும் - படைத்தலைவர்கள் பலரும், சுற்றினர் - வந்து சூழ்ந்தனர்.

பாடவம் - வல்லமை அல்லது களிப்பு: 292; கிட்கிந்தா. சம்பாதிப்: 7, 21. தோன்றல் என்பதற்குக் கரன் என்று பழைய உரை பொருள் கூறும். கோடணை - ஒலி, முழக்கம், அலங்காரம் என்னும பொருள்களை உடையது; கோஷணம் என்னும் வடசொல் லின் திரிபு. 'கோடணை முரசு - கொம்பினால் அடிபடு முரசு. குளிறு தல் - பேரொலி செய்தல் (திவா). பாடவம் - உள்ளக் களிப்பு' - இவை பழையவுரை. தூடணன், கரனின் தம்பி; 523. திரிசிரா மூன்று தலைகளை யுடையவன்.

இச் செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. தோன்றலாதியாக்; திரிதலைத் தோன்ற லாதியோர்.
2. கோடோடு; குளிறுஞ் சேனையார்.
4. பாடல நிலையினர்; சுற்றினர். (51)

### கரன் படையுடன் போர்க்களம் தோன்றுதல் 413—6

413. ஆன்றமை யெறிபடை யழுவத் தார்கலி
வான்றொடர் மேருவை வளைத்த தாமென
ஊன்றின தேரின னுயர்ந்த தோளினன்
தோன்றினன் கரன்நமன் றுணுக்க மெய்தவே.

ஆன்று அமை - நிறைந்து விளங்கிய, எறி படை - பகைவர் களைத் தாக்க வல்ல சேனைகளாகிய, அழுவத்து ஆர்கலி - ஆழ்ந்த கடல், வான் தொடர் மேருவை வளைத்தது ஆம் என - ஆகாயமளா விய மேருமலையைச் சூழ்ந்து கொண்டது போல் விளங்க, ஊன்றிய தேரினன் - நடுவில் நிலை நிறுத்திய தன் தேரை யுடையவனும், உயர்ந்த தோளினன் - உயர்ந்த புயங்களை யுடையவனும் ஆன, கரன் - கரன் என்னும் இராக்கத வீரன், நமன் துணுக்கம் எய்த - யமனுங் நடுக்கமடைய, தோன்றினன் - (போர்க்களத்தில்) காணப்பட்டான். ஏ; ஈற்றசை.

அழுவம் - நடு, அல்லது பரப்பும் ஆம்; சுந்தர. 9, 904. கரனைச் சூழ்ந்த சேனைக்கு, மேருவை வளைத்த கடல்; கரனுடைய தேர் மேருவுக்கு ஒப்பாகவே முதனூலிலும் கூறப் பெற்றுள்ளது காண்க. 'ஆன்று அமை எறி படை - அன்று பொருந்திய கொல்லும் சேனைகள் எனலும் ஒன்றும்; ஆன்று, விகாரம். அழுவத்து ஆர்கலி - வழுக்கு நிலமுடைய கடல்; அழுவம் - பரப்புமாம். தோன்றினன் - போருக்குப் புறப்பட்டான்' இவை, பழையவுரை.

பி - ம். 2. வளைந்த தாமென.
3. ஊன்றிய தேரினர் உயர்ந்த தோளினர்.
4. தோன்றினர் யாவரும்; கரனமன்; இயமனும். (52)

414. அசும்புறு மதகரி புரவி யாடகத்
தசும்புறு சயந்தன மரக்கர் தாடர
விசும்புறு தூளியால் வெண்மை மேயின
பசும்பரி பகலவன் பைம்பொற் றேரரோ.

அசும்பு உறு - (படைகளிலிருந்த) கசிதலையுடைய, மத கரி - மதங்கொண்ட யானைகளும், புரவி - குதிரைகளும், ஆடக தசும்பு உறு - பொன்னாலான கலசத்தையுடைய, சயந்தனம் - தேர்களும், அரக்கர் தாள் - காலாள் வீரர்களான அரக்கர்களும், தாள் - தத்தம் கால்களால், தர - உண்டாக்கிய, விசும்பு உறு தூளியால் - வானிற் போய்ப் படிந்த தூசியால், பகலவன் - சூரியனுடைய, பசும் பரி - பச்சை நிறக் குதிரைகளும், பைம் பொன் தேர் - பசிய பொன்னாலாகிய அவனுடைய தேரும், வெண்மை மேயின - வெண்ணிறத்தை யடைந்தன. அரோ; அசை.

படைகள் எழுப்பிய தூசிகள் சூரியமண்டலத்திற் படிந்தன என்பது பொருள். அசும்பு - கசிவு; ஊற்று; அயோத். சித்திர கூடப்: 36; சுந்தர. 90, 303. தசும்பு - குடம்; பால. நகரப்: 26: அயோத். சித்திரகூடப்; 36; சுந்தர. 90. சூரியனுடைய தேர்க் குதிரைகள் ஏழு; அவை பசுமை நிறமானவை; "பச்சைமா வேழு மேறப்போ யாறு மெய்தினர்" (பால. கையடைப்: 23;) சுந்தர. 107. ஆடகம், சயந்தனம்; இவை ஹாடகம், ஸ்யந்தநம் என்னும் வட சொற்களின் திரிபுகள். இதுவும் மேல் வரும் ஐந்து செய்யுட்களும், கரன் சேனையுடன் வந்ததைக் கூறும்.

பி - ம். 2. தசும்புறு திணிபுயத் தரக்கர்; தசும்புறு தேர்களவ் வரக்கர்.
3. தூளியின் வெண்மை; தூளியான் வெண்மை. (53)

415. வனந்துகள் பட்டன மலையின் வானுயர்
கனந்துகள் பட்டன கடல்க டூர்ந்தன
இனந்தொகு தூளியா லிசைப்ப தென்னினிச்
சினந்தொகு நெடுங்கடற் சேனை செல்லவே.

சினம் தொகு - கோபம் மிக்க, நெடும் கடல் சேனை செல்ல - பெரிய கடல் போன்ற அவ்வரக்கர் சேனைகள் ஜனஸ்தானத்திலிருந்து பஞ்சவடியை நோக்கிச் சென்றபோது, இனம் தொகு தூளியால் - கூட்டமாய்த் திரண்டு எழுந்த தூசியால், வனம் - அவ்வனம் எங்கும், துகள் பட்டன - தூசி படிந்தன ஆயின; வான் உயர் மலையின் கனம் துகள் பட்டன - வானோங்கி யுயர்ந்த மலைகளின் மீது படிந் திருந்த மேகங்களும் அத் தூசியால் மூடப்பட்டன; கடல்கள் தூர்ந்தன - (அத்தூசிகளால்) கடல்களும் தூர்ந்து மேடாயின; இனி என் இசைப்பது - இனி வேறு எதைக் கூறுவது?.

சேனையைக் கடல் என்றது, அதன் மிகுதி நோக்கி; 413. இனி என் இசைப்பது; இனி மற்றவற்றின் மீது அத் தூசிகள் படிந்தன என்று எடுத்துக் கூறுவது வேண்டுவதன்று என்பதும், வந்த சேனையின் மிகுதிக்கு வேறு என்ன கூறுவது என்பதும் ஆம்.

பி-ம். 1. துகள் பட்டது.
3. தூளியிலிசைப்ப; தூளியா மிசைப்ப. (54)

416. நிலமிசை விசும்பிடை நெருக்க லானெடு
மலைமிசை மலையினம் வருவ போன்மலைத்
தலைமிசைத் தலைமிசைத் தாவிச் சென்றனர்
கொலைமிசை நஞ்செனக் கொதிக்கு நெஞ்சினர்.

கொலைமிசை - போரில் கொல்லுதலை மேற்கொண்டு, நஞ்சு என - விடத்தைப் போன்று, கொதிக்கும் நெஞ்சினர் - கொதிக்கின்ற கொடிய மனமுடைய அவ்வரக்கர் வீரர்கள், நிலமிசை - தரையின் மீதும், விசும்பு இடை - ஆகாயத்தினிடத்தும், நெருக்கலால் - இட மின்றி நெருக்கம் ஏற்பட்டதால், நெடு மலை மிசை மலை இனம் வருவ போல் - நீண்டுயர்ந்த மலைகளின்மீது மலைக் கூட்டங்கள் ஏறி நடந்து வருவனபோல, மலை தலைமிசை தலைமிசை - மலைகளின் சிகரங்கள் தோறும், தாவி சென்றனர் - அடிகளை எடுத்துவைத்துத் தாண்டிச் செல்வாராயினர்.

தரைமீதும் வான்மீதும் செல்வதற்கு இடமின்றிச் சேனைகள் அடர்ந்து நெருக்கமுண்டானதால் பின் வந்த அரக்கர் வீரர்கள்

மலைகள் மீதே தாண்டித் தாண்டி வந்தனர் என்க. மலைமிசை மலை என்றது, அன்னோர் உரு மலைபோன்ற பெருமையுடையன ஆதலின்; இஃது இல்பொருளுவமை. ஒப்பு, "தெருவிட மில்லென் றெண்ணி வானிடைச் செல்கின்றாரும்"; (சுந்தர. 763.)

பி-ம். 1. நெருங்கலா நெடு.
2. மலைமிசை மாகரி; மலைமிசை மலையினம்; மலையினம் மலைந்து மால்கரி.
3. தலைமிசை தலைமிசை தாவிச்.
4. கொதிக்குஞ் செய்கையார். (55)

வேறு

கரன்சேனை இராமபிரானை நெருங்கியது 417—26

417. வந்தது சேனை வெள்ளம்
வள்ளியோன் மருங்கின் மாயா
பந்தமா வினையம் மாளப்
பற்றறு பெற்றி யோர்க்கும்
உந்தரு நிலைய தாகி
யுடனுறைந் துயிர்க டம்மை
அந்தகற் களிக்கு நோய்போ
லரக்கிமுன் னாக வம்மா.

மாயா - அழியாத, பந்த மா வினையம் மாள - பிணிப்பாகிய பெரும் செயல்கள் அழிய, பற்று அறு - (விஷய) ஆசைகள் அற்ற, பெற்றியோர்க்கும் - உயர் நிலையடைந்த ஞானியர்க்கும், உந்து அரு நிலையது ஆகி - எதிர்த்துத் தள்ளமுடியாத தன்மையுடையதாகி, உடன் உறைந்து - உடம்புடன் கூடத் தங்கியிருந்து, உயிர்கள் தம்மை - எல்லா உயிர்களையும், அந்தகற்கு அளிக்கும் - யமனிடம் சேர்ப்பிக்கும், நோய்போல் - வியாதியேபோன்ற, அரக்கி முன்னாக - அரக்கியாகிய சூர்ப்பணகை முன் இருந்து அழைத்துச் செல்ல, வள்ளியோன் மருங்கின் - வள்ளலாகிய இராமபிரான் அருகே, சேனை வெள்ளம் வந்தது - கரனுடைய சேனைக் கடல் வந்தது; அம்மா: இரக்கத்தை யுணர்த்தும் அசைச்சொல்.

சூர்ப்பணகை, தன்னுடன் பிறந்த கரன் முதலிய அரக்கர்களுக்கும், பின் இது காரணமாகவே இராவணன் முதலினோர்க்கும் கேட்டுக்குக் காரணமாய் நின்றாள் ஆதலின், அவளுக்கு உயிர்களை

அந்தகற்கு அளிக்கும் நோய் உவமையாயிற்று; இது; "மேலைநா ளுயிரொடும் பிறந்து தான்விளை, கால மோர்ந்துடனுறை கடிய நோயனுள்" (227) என்று முன் கூறிய கொள்கையை மீட்டும் விளக்கி நிலைநாட்டியது என்க. அரக்கர்கள் உயிர்களுக்கும், சூர்ப்பணகை நோய்க்கும், இராமபிரான் யமனுக்கும் உவமைகள். இங்கு, "உடன் பிறந்தே கொல்லும் வியாதி" (மூதுரை, 20) என்ற வாக்கும் நோக்கத்தக்கது. இதனால், முன்னை வினைப்பயனால் நோய் பிடிப்பதும், அதனால் மரண மெய்துவதும், பற்றற்றுத் தவநெறி நின்றாரையும் அது விடுவதின்று என்பதும் அறிவித்த வாறாம்; 'பந்தமாம் வினையின் மாளப் பற்றிய பயத்தின் - கூட்ட மாகிய வினையினாலே, உயிரை உண்ணப்பிடித்த பிரயோசனத்தினால்' என்பது பழையவுரை. இப்படையோடும் சூர்ப்பணகை வந்தது கூறப் பெற்றது.

பி - ம். 1. மருங்கின் மாயப்; மருங்கு மாய; மருங்கின் மாயைப்; மருங்கின் மாய; வள்ளியோர் மருங்கின்.

2. வினையை மானப்; வினையின் மானப்; வினையை மானப்; வினை யின் மானம்; பற்றுறும் பெற்றியோர்க்கும். (56)

418. தூரியக் குரலின் வானின்
முகிற்கணந் துணுக்கங் கொள்ள
வார்சிலை யொலியி னஞ்சி
யுருமொரு மறுக்கங் கொள்ள
ஆர்கலி தானு முட்கி
யசைவுற வரக்கர் சேனை
போருவந் திருந்த வீர
னுறைவிடம் புக்க தன்றே.

தூரிய குரலின் - வாத்தியங்களின் முழக்கத்தால், வானின் முகில் கணம் துணுக்கம் கொள்ள - ஆகாயத்தில் உள்ள மேகக் கூட்டங்கள் திடுக்கிட்டு நடுங்கவும், வார் சிலை ஒலியின் - நீண்ட விற் களின் நாணொலிகளால், அஞ்சி - பயந்து, உரும் ஒரு மறுக்கம் கொள்ள - இடிகளும் ஒரு கலக்கமடையவும், ஆர்கலிதானும் உட்கி - கடல்களும் உள் நடுக்கமுற்று, அசைவு உற - அசைந்து குழம்பவும், அரக்கர் சேனை - அந்த இராக்கதப் படைகள், போர் உவந்து இருந்த- போரை விருப்புடன் எதிர்பார்த்திருந்த, வீரன் - இரகு வீரனான இராமபிரான், உறைவு இடம் - தங்கியிருந்த பன்னசாலை யிருந்த இடத்தில், புக்கது - போய் அடைந்தன. அன்று, ஏ; அசைகள்.

தூரியம் - வாத்தியப் பொது (பிங்). சேனை முழக்கத்திற்கு மேகம், கடல், இவற்றின் முழக்கங்கள் உவமைகள்.

பி - ம். 1. வான்முத னுணுக்கும் முகிற்குலர்.

2. வார்சிலை யுருமெலா மறுக்கங்; யாவரு மறுக்கங்; யொலிப் பினஞ்சி மறுக்கமெய்த.

3. ஆர்கலி யார்ப்புக்குட்கி; ஆர்கலி யார்ப்பி னுட்கி; ஆர்கலி யார்த்துத் தூங்க வதிர்ந்து மற்றரக்கர் சேனை.

4. போர் வனத்திருந்த; வீரர் தம்மிடம். (57)

419. வாய்புலர்ந் தழிந்த மெய்யின்
வருத்தத்த வழியில் யாண்டும்
ஓய்வில நிமிர்ந்து வீங்கு
முயிர்ப்பின வுலைந்த கண்ண
தீயவர் சேனை வந்து
சேர்ந்தமை தெரியச் சென்று
வேய்தெரிந் துரைப்ப போன்ற
புள்ளொடு விலங்கு மம்மா.

புள் ஒடு விலங்கும் - அவ்வனத்திலுள்ள பறவைகளும் மிருகங் களும், (அவ்வரக்கர் சேனைகளின் வரவால்), வாய் புலர்ந்து - அஞ்சி வாய் உலர்ந்து, அழிந்த - அழிந்தனவும், மெய்யின் வருத்தத்த - உடலிற் பிணி கொண்டனவும், வழியில் யாண்டும் ஓய்வு இல-இடை வழியில் எங்கும் தங்கி இளைப்பாறுதல் இல்லாதனவும், நிமிர்ந்து வீங்கும் உயிர்ப்பின - அண்ணாந்து பெருமூச்சு விடுவனவும், உலைந்த கண்ண - ஒளி மழுங்கிய கண்களையுடையனவும் ஆகி, தீயவர் சேனை வந்து சேர்ந்தமை - கொடிய அவ்வரக்கர் படை வந்து சேர்ந்த செய் தியை, தெரிய சென்று - தாம் முன் அறிந்து சென்று, வேய் தெரிந்து உரைப்ப போன்ற - ஒற்றர்கள் போல் இராமலக்ஷ்மணர் களுக்குத் தெரிவிப்பன போன்றன. அம்மா: இரக்கத்தையுணர்த்தும் இடைச் சொல்.

புட்களும் விலங்குகளும் அரக்கர் படை யெழுச்சியால் வெருண்டு, அஞ்சி ஓடியவை அப்போர்ப்படை யெழுச்சியை முன்ன தாக அறிந்து வந்து (இராமலக்ஷ்மணர்களுக்கு) அறிவிக்கும் ஒற்றர்கள் போல விளங்கின. ஒற்றர்களின் நடுக்கநிலை: ஒப்பு. சுந்தர. 745, 805.

வேய் - ஒற்று. (பிங்) ; பால. *அகலிகைப் 39* ; உயுத்த. ஒற்றுக் கேள்வி ; *33* ; *தானைகாண். 15* ; பு. வெ. *1* : 6 : இனி, வேய் என்பதற்கு, பகைப் புலத்து ஒற்றர் உணராமற் சென்று ஒற்றி அவ்வொற்றுவகையான் அவர் உணர்த்திய குறிப்புச் சொல், என்பர் நச்சினார்க்கினியர் ; (தொல். புறத்திணை, 3. நச்.). விலங்குகள் வேய் உரைத்தல் : சீவக. *384*. வேயின் இலக்கணம் ; பு. வெ. சூத். 6. 'வேய்தெரிந்துரைப்ப போன்ற - தூதாக வருங்காரியம் அறிந்துரைப்பது போன்றன' என்பது பழையவுரை.

பி - ம். 2. தழிந்த மெய்ய ; வருத்தத்தவ் வழியில் ; வருத்ததர் வழியில் ; வாய்புலர்ந் துலந்த மெய்ய வருத்தத்த வழியி னெங்கும் ; வழியின் யாண்டும்.

2. முயிர்ப்பிலவுலைந்த கண்ணர் ; வுலந்த கண்ணத் ; முயிர்ப்பின வலர்ந்த கண்ணர் ; வுலைந்த காலத்.

3. சேர்ந்ததென் றமலன் பாங்கர்.

4. விலங்குபுள் ளெழுவ வம்மா ; புள்ளொடும் விலங்கு மம்மா ; விலங்கொடு புள்ளு மெல்லாம். (58)

420. தூளியின் படலை வந்து
தொடர்வுற மரமுந் தூறும்
தாளிடை யொடியு மோசை
சடசட வொலிப்பக் கானத்
தாளியு மரியு மஞ்சி
யிரிதரு மமலை நோக்கி
மீளிமொய்ம் பினருஞ் சேனை
மேல்வந்த துளதென் றுன்ன,

தூளியின் படலை - தூசியின் தொகுதி, வந்து தொடர்வு உற - வந்து படிய, மரமும் தூறும் - அவ்வனத்தில் இருந்த மரங்களும் புதர்களும், தாள் இடை - வரும் சேனையரக்கர்களுடைய கால்களின் இடைப்பட்டு, ஒடியும் ஓசை - ஒடிபடும் ஓசைகள், சடசட ஒலிப்ப - சடசடவென்று ஒலியை உண்டாக்க, கானத்து - அவ்வனத்தில் வாழும், ஆளியும் அரியும் - யாளிகளும் சிங்கங்களும், அஞ்சி - பயந்து, இரிதரும் அமலை நோக்கி - நிலைகெட்டு ஓடும் பேராரவாரத்தைப் பார்த்து, மீளி மொய்ம்பினரும் - வலிய தோள்களையுடைய இராம லக்ஷ்மணர்களும், 'சேனை மேல் வந்ததுளது என்று உன்ன - 'அரக்கர் சேனை தம் மேற் போர்க்கு எழுந்து வந்துள்ளது' என்று கருதிய அளவில்,

இச் செய்யுளும் அடுத்த செய்யுளும் குளகமாய் இணைந்து அடுத்த செய்யுளில் உள்ள மொழியலுற்றான், என்ற வினைகொண்டு முடியும். படலை - கூட்டம் அல்லது தொகுதி; இது படலம் எனவும் வழங்கும், அமலை - ஒலி; பால. நாட்டுப்; 3; சுந்தர. 801, 873, 944. சடசட இஃது ஒலிக் குறிப்பு; இரட்டைக் கிளவி. மீளி மொய்ம்பினர் என்பதற்கு யமன்போன்ற வலியுடையவர் என்பாரும் உளர்; மீளி - யமன்; பொருந. 93; பெரும். 5; 3; 44. மொய்ம்பு - தோள்; கலி. 88. தாளியின் படலையும், சடசட ஒலியும், ஆளியும் அரியும் அஞ்சியிரிதரும் அமலையும் நோக்கி, மீளி மொய்ம்பினரும் சேனைமேல் வந்ததுளது என்று உன்னினர் என்க. ஆளியையும் அரியையும் கூறியது; இவை விலங்குகளில் வலியுள்ளன ஆதலாலும், மற்றவை அஞ்சின என்பது சொல்லாமலே அமையும் எனவும் கருதி என்க.

இதன் பின், 'மின்னின்ற,' என்ற செய்யுள் சில சுவடிகளிலும், அச்சுப்பிரதிகளிலும் காணப்படுகின்றன.

பி-ம். 1. படலம் வந்து; தொடர்வுறுமரமுந்; தொடர்ந்தன மரமுந்.
3. தாளில்பல் விலங்குமஞ்சி; யிரிதரு மலக்கணோக்கி.
4. மீளியோனரக்கர் சேனை; றென்றெண்ணு; றென்றுன்னி. (59)

இராமபிரான் போருக்கு ஆயத்தமாதல்

421. மரம்படர் கான மெங்கு
மதர்பட வந்த சேனை
கரன்படை யென்ப தெண்ணிக்
கருநிறக் கமலக் கண்ணன்
சரம்படர் புட்டில் கட்டிச்
சாபமுந் தரித்தான் றள்ளா
உரம்படர் தோளின் மீளாக்
கவசமிட் டுடைவா ளார்த்தான்.

மரம் படர் கானம் எங்கும் - மரங்கள் அடர்ந்து விளங்கும் அவ் வனம் எங்கும், அதர்பட - வழி உண்டாக, வந்த சேனை - அங்கு வந்த சேனை, கரன் படை என்பது - கரன் சேனை என்பதை, கருநிற - கரிய நிறத்தையுடைய, கமல கண்ணன் - தாமரை மலரிதழ்போன்ற கண்களையுடைய இராமபிரான், எண்ணி - தீர்மானித்து, சரம் படர் புட்டில் கட்டி - அம்புகள் மிகுந்த அம்புப் புட்டிலைத் தன் முதுகின் புறம் கட்டி, சாபமும் தரித்தான் - வில்லையும் எடுத்துக் கொண்டவனாகி, தள்ளா - நீங்காத, உரம் படர் தோளின் - வலிமைமிக்க

தோள்களில், மீளா - தகர்க்கமுடியாத, கவசம் இட்டு - கவசத்தைப் பூட்டி, உடைவாள் ஆர்த்தான் - தன் உடைவாளையும் கட்டிக் கொண்டான்.

வந்தது கரன் படை என இராமபிரான் தீர்மானித்தது, முன், "கரனை யுங்கள் கூற்றுவனை யிப்பொழுதே கொணர்கின்றேன்" (361) என்று சூர்ப்பணகை கூறிச் சென்றுளாதலின் என்க. அதர் - வழி: புழுதி, அல்லது நுண்மலர் (சூடா. பிங்.) என்றும் கூறுவர். இனி, மதர்பட எனப் பாடங்கொண்டு, செருக்கு மேலிட்டு, எனப் பொருள் கொள்வாரும் உளர்.

பி - ம். 1. மரன்படர்; மதர்பட வரக்கர்சேனை.
2. யென்பதுன்னி; கடனிறக் கமலக் கண்ணன்.
3. சரன்படர்; தரித்துத்தான்றன்; தெரிந்தேதள்ளா.
4. உரன்படர்; மார்பமீது; டொளிர்வா ளார்த்தான். (60)

**இலக்குவன் கூற்றும், அதனை இராமபிரான் தடுத்துப் போர்க்கெழுதலும் 422–6.**

422. மின்னின்ற சிலையன் வீரக்
கவசத்தன் விசித்த வாளன்
பொன்னின்ற வடிம்பின் வாளிப்
புட்டிலன் புகையு நெஞ்சன்
இன்னின்று காண்டி யான்செய்
நிலையென விரும்பி நேரா
முன்னின்ற பின்வந் தானை
நோக்கினன் மொழிய லுற்றான்.

மின் நின்ற சிலையன் - மின்னலானது ஓர் உருக்கொண்டு தங்கி நின்றது போன்ற வில்லை யுடையவனும், (அல்லது ஒளி வீசும் வில்லை உடையவன் எனினும் ஆம்), வீர கவசத்தன் - வீரத் தன்மை பொருந்திய (அதாவது வலிமையுள்ள) கவசமணிந்தவனும், விசித்த வாளன் - கட்டிய உடைவாளையுடையவனும், பொன் நின்ற வடிம்பின் - பொன்னால் அமைந்த விளிம்புகளையுடைய, வாளி புட்டிலன் - அம்புகள் அமைந்த புட்டிலையுடையவனுமாய், புகையும் நெஞ்சின் - கோபத் தீயால் புகை நின்ற மனத்தையுமுடைய (இலக்குவன்), விரும்பி - தான் போருக்குச் செல்ல விரும்பி, (இராமபிரானை நோக்கி) 'யான்செய் நிலை - யான் செய்யும் போரின்

திறமையை, இன் இன்று காண்டி என - இன்றைக்கு இப்பொழுதே நீவிர் பார்ப்பீராக' என்று கூறி, முன் நேரா நின்ற - தன் முன் வந்து போர் புரிய எதிரிலே நின்ற, பின் வந்தானை - தன் தம்பியாகிய இலக்குவனை, நோக்கினன் - இராமபிரான் பார்த்து, மொழியல் உற்றான் - பின் வருமாறு கூறலானான்; கூறியதை அடுத்த இரண்டு செய்யுள்களிற் காண்க.

முன் செய்யுளில் இராமபிரான் போருக்கு ஆயத்தமானதைக் கூறி, இங்கு இலக்குவன் அவ்வாறே போர்புரிய நின்றமை கூறப் பெற்றது.

மின் நின்ற சிலை; இல் பொருளுவமை; மின்னல் ஓர் உருவில் லாததும் ஓரிடத்தே தங்கி நில்லாததும் ஆதலின். வீர கவசம் - பகைவர்க் கஞ்சாது எதிர்த்து நிற்கக்கூடிய வீரத்தை உண்டாக்கும் கவசம். பொன் நின்ற வடிம்பின் வாளி: அம்புகளின் ஓரங்களில் பொன் பூசப் பெற்றிருத்தல்; 491; பொன் - இரும்பும் ஆம். இனி பொன்னின்ற வடிம்பின் என்பதைப் புட்டிலுக்கும் இயைத்துப் பொருள் கொள்ளலாம். இச் செய்யுளின், முன்னின்ற.............. புட்டிலன்" வரையில் இராமபிரானுக்கே ஆக்கிப் பொருள் கூறு வாரும் உளர். 'இக்கவி இளையபெருமாள் மேலது; நின்னின்று காண்டியான் செய்நிலையென - நீ நில், நான் செய்வதை நின்று பார்' என்பது பழையவுரை. இவ்வாறு கொள்வது இராமபிரானை இலக்கு வன் கட்டளை யிடுவதாக அமையுமாதலின் அது பொருந்தாது என்க. இலக்குவன் போரில் மற்றையவர்க்கு முன் நிற்றல்; உயுத்த வேலேற்ற. 32. இன்னின்றே: 'இன்னினியே செய்க வறவினை' (நாலடி. 29) என்றாற்போல. இ நின்று காண்டி, என்ற பாடங் கொண்டு 'இவ்விடத்திலேயே நீ நின்று காண்பாயாக' என்று கூறியதாகவும் பொருள் கொள்ளலாம்; இங்கு, இந்நின்று, எதுகை நோக்கி, இன்னின்று என்றாயிற்று. விரும்பி நேரா - என்பதற்குப் போர்செய்ய விரும்பி அதற்கு உடன்பட்டு என்றும் பொருள் கூறுவர்.

பி - ம். 1. மின்னின்ற நிலையின் வீரக்.
2. பொன்னின்ற சுடரின் வாளிப்.
3. நின்னின்று காண்டி.
4. பின்வந்தோனுக் கிளையவன்; பின் வந்தோனை. (61)

423. நெறிக்கொண்மா தவர்க்கு முன்னே
நேர்ந்தனெ னிருத ராவி
பறிக்குவென் யானே யென்னு
மம்மொழி பழுது றுமே
வெறிக்கொள்பூங் குழலி னாளை
வீரனே வேண்டி னேன்யான்
குறிக்கொண்டு காத்தி யின்னே
கொல்வெனிக் குழுவை யென்றான்.

'நெறி கொள் மாதவர்க்கு - தவநெறியையே தமக்கு உரிய வாழ்க்கையாகக் கொண்டுள்ள பெருந்தவத்தினரான தண்டகவன முனிவர்க்கு, முன்னே நேர்ந்தனென் - முன்னமே நான் ஒப்புக் கொண்ட, யானே நிருதர் ஆவி பறிக்குவென் என்னும் - அரக்கர்களின் உயிரை யானே நின்று நீக்குவேன் என்று கூறிய, அ மொழி பழுது உறுமே - அந்த உறுதிச்சொல் வீண்போகாமல், யான் வேண்டினேன் - யான் உன்னை விரும்பிக் கேட்டுக்கொள்கிறேன், வீரனே - வீரனாகிய நீயே, வெறிகொள் - மணங்கமழும், பூ குழலினாளை - பூச்சூடிய கூந்தலையுடைய ஜானகியை, குறி கொண்டு காத்தி - குறிப்பாய் நோக்கிக் காப்பாயாக! இ குழுவை எல்லாம் - (போருக்கு வந்த) இந்த அரக்கர படைக்கூட்டத்தை யெல்லாம், இன்னே கொல்வேன் - இப்பொழுதே கொன்று விடுகிறேன்' என்றான் - என்று (இராமபிரான் இலக்குவனுக்குக்) கூறினான்.

இராமபிரான் நெறி கொண் மாதவர்க் குரைத்தது; 134—139. குறிக்கொள்ளுதல் - உன்னிப்பாய்ப் பார்த்துக் கொள்ளுதல்; "தீக்கா னகத்துறையுந் தெய்வங்காள் வீமன்றன், கோக்காதலியைக் குறிக்கொண்மின்" (நள. 2 : 107.)

பி - ம். 1. நேர்ந்தனனிருதராவி.
2. யானே யென்ற பழமொழி; யென்னுமாம் மொழி யானே யென்று பகர்ந்து.
3. வேண்டினேன் வீர னின்னை.
4. குறிக்கொடுகாத்தி.

(62)

424. மீளருஞ் செருவில் விண்ணு
மண்ணுமென் மேல்வந் தாலும்
நாளுலந் தழியு மன்றே
நானுனக் குரைப்ப தென்னே
ஆளியின் மொய்ம்பி னுயிவ்
வமரெனக் கருளி யின்றென்
தோளினைத் தின்னுகின்ற சோம்பினைத்
துடைத்தி யென்றான்.

(மேலும் இராமபிரான் இலக்குமணனை நோக்கி), 'ஆளியின் மொய்ம்பினுய் - யாளி போன்ற வலிமை யுடையவனே! விண்ணும் மண்ணும் மேல் வந்தாலும் - வானுலகத்தவரும், இப்பூவுலகத்த வரும் என்னை எதிர்த்துத் திரண்டு வந்தாலும், மீள் அரும் செரு வில் - திரும்பிச்செல்ல முடியாத போரில், நாள் உலந்து அழியும் அன்றே - அவ்விண்ணுளோரும் மண்ணுளோரும் தம் ஆயுள் நாள் ஒழிந்து அழிவர் அல்லரோ? நான் உனக்கு உரைப்பது என்னே - நான் உனக்குச் சொல்லக்கூடியது வேறு யாதுள்ளது? (ஆதலால்), இ அமர் எனக்கு அருளி - இந்தப் போரை எனக்கு நீ அளித்து, என் தோளினை தின்னுகின்ற - என் தோள்களைத் தின்னுவது போலத் தினவை யுண்டாக்கி வருத்துகின்ற, சோம்பினை - சோம்பலை, துடைத்தி என்றான் - நீ போக்குவாய்" என்று அன்புடன் கேட்டுக் கொண்டான்.

இராமபிரான், போரில் தனக்கு ஓர் ஊறும் உண்டாகாதென் பதை எடுத்துக் கூறி, இலக்குவனைப் போரினின்று விலக்கினுன் என்க. தோளின் சோம்பு; 405. உரை.

பி-ம். 2. நாளுலந்தழியு மென்றே; நாளுலந்தழியு மென்றால்; தழியு மென்றல்; குரைப்பதெங்கே.

3. ஆளியின் றுப்பினுயிவ்; கருளிகின்றென்; கருள்தியாயிற்; கருளுவாயென்; கருள்தியென்னு; கருளியின்று.

4. தோளிணைத்தினவு தின்னுமென்றன்; தினவுமாறச் சோம்பினைத் துடைக்க வென்றான்; தீர்த்துச் சோம்பினைத். (63)

425. என்றலு மிளைய வீர
னிசைந்தன னிராம னேந்து
குன்றன தோளி னாற்ற
லுள்ளத்தி னுணரக் கொண்டான்
அன்றியு மண்ண லாணை
மறுக்கில னங்கை கூப்பி
நின்றன னிருந்து கண்ணீர்
நிலம்புகப் புலர்கின் றாள்பால்.

என்றலும் - என்று இராமபிரான் கூறியதும், இளைய வீரன் - வீரனாகிய தம்பி இலக்குவன், இசைந்தனன் - இராமபிரான் கருத்துக்கு உடன்பட்டவனானான்; (மேலும்), இராமன் ஏந்தும் குன்று அன தோளின் ஆற்றல் - இராமபிரானுடைய உயர்ந்த குன்றுகள் போன்ற தோள்களின் வலிமையை, உள்ளத்தின் உணர கொண்டான் - மனத்தில் நன்றாக உணர்ந்தவனானான்; அன்றியும் - அஃது அல்லாமலும், அண்ணல் ஆணை மறுக்கிலன் - பெரியோனான அப்பெருமானுடைய கட்டளையை மறுக்காதவனாகி, இருந்து - அத்தவச்சாலையில் இருந்துகொண்டு, கண் நீர் நிலம் புக - தன் கண்ணீர் நிலத்தில் விழுந்து உட்புகும்படியாக, புலர்கின்றாள்பால் - வருந்துகின்ற பிராட்டியின் அருகே, அம் கை கூப்பி - தன் இரு உள்ளங் கைகளைச் சேர்த்துக் குவித்துக்கொண்டு (வணங்கிய நிலையில்), நின்றனன் - (இராமபிரான் ஆணைப்படி அங்குக் காவலாக) நின்றான்.

பிராட்டி புலர்ந்தது - போரிற் பெருமானுக்கு என்ன துன்பமுண்டாகுமோவென்று. இராமபிரான் கரனை எதிர்த்துப் பொரச் சென்ற பிராட்டி வருந்தியது; சுந்தர. 347; பிராட்டிகொண்ட துன்பவுணர்ச்சியை இங்குக் கல்வியிற் பெரியார் காட்டியமைக்கும் நுட்பம் கருதத்தக்கது. அங்கை - அழகிய கையும் ஆம்.

பி - ம். 1. னிசைந்திலனி ராமனேந்து; யியைந்தன னிராம; என்ற பின்னிளையோன் மற்றென்றிசைத்தில; னிராமனேங்கும்.
2. குன்றன்ன தோளினாற்றல்; தோளினான்றன் னுள்ளத்தி னுணர்வுகொண்டான்; தோளினானும்.
3. மண்ணலாணை; மறுக்கிலான்.
4. நின்றனனிருந்தான் கண்ணீர்; நின்றன னிழிந்த கண்ணீர்; நிலனுறப் பொழிகின்றாள் பால்; நிலனுறப் புரள்கின்றாள் பால்; புலர்க்கின்றாள் பால். (64)

426. குழையுறு மதியம் பூத்த
        கொம்பனாள் குழைந்து சோரத்
தழையுறு சாலை நின்றும்
        தனிச்சிலை தரித்த மேரு
மழையென முழுங்கு கின்ற
        வாளெயிற் றரக்கர் காண
முழையினின் றெழுந்து செல்லு
        மடங்கலின் முனிந்து சென்றான்.

குழை உறு - குழை என்னும் காதணி பொருந்திய, மதியம் பூத்த - பூர்ண சந்திரனை வதனத்தை மலர்ந்த பூவாகக் கொண்ட, கொம்பு அனாள் - ஒரு பூங்கொம்பு போன்ற பிராட்டி, குழைந்து சோர - தளர்ந்து சோர்வடைய, தழை உறு சாலை நின்றும் - தழைகளால் அமைந்த அத்தவச் சாலையினின்றும், தனி சிலை தரித்த - ஒப்பற்ற வில்லை யேந்திய, மேரு - மேருமலைபோன்ற இராமபிரான், மழை என முழங்குகின்ற - மேகம் போலக் கர்ச்சனை செய்கின்ற, வாள் எயிற்று அரக்கர் காண - ஒளி பொருந்திய பற்களையுடைய அவ்விராக்கதர்கள் காணும்படி, முழையின் நின்று எழுந்து செல்லும் - மலைக்குகையி னின்று எழுந்து வெளியே செல்லும், மடங்கலின் - ஒரு சிங்கத்தைப் போல, முனிந்து சென்றான் - கோபத்துடன் அவர்களை எதிர்நோக்கிச் சென்றான்.

மேரு, கொம்பனாள் குழைந்து சோர, சாலை நின்றும் அரக்கர் காண, மடங்கலின் முனிந்து சென்றான் என்க. குழையுறு மதியம் பூத்த கொம்பு : இல்பொருளுவமை; மதியம் ; அம் சாரியை. மேரு ; உவமை ஆகுபெயர் ; மேரு சென்றான் ; ஒப்பு, 'மரகதத்தின் மலை வந்தான்'; (332). இராமபிரானுக்கு மடங்கல் ; பால. கார்முகப் ; 32 ; சுந்தர. 160, 348. மேகம், அரக்கர் உருவுக்கும் ஆம். வாள் எயிற்று அரக்கர் என்றதால், அவ்வரக்கர் எயிறுகள் மின்னலுக்கு உவமை என்பது குறிப்பால் உணரப்பாலது ; இனி, வாள் எயிறு, வாள் போன்று நீண்டும் வளைந்துமுள்ள கூர்மையான கோரப்பற்கள் என்னலும் ஆம். இந்நிலையில் இராமபிரானும் பிராட்டியும் பேசிக் கொள்ளவில்லை என்பது புலனாகின்றது. கணவன் வெளியே செல்லும்போது தன் மனைவியிடம் சொல்லிக்கொண்டு போவதும், போகுங் கணவனை மனைவி தடைசெய்வதும் ஆகா என்பது நம்மனோர் துணிபு. தாரையும் மந்தோதரியும் தடைசெய்தமையால், வாலிக்கும், இராவணனுக்கும் அழிவு நேர்ந்தமை இங்கு அறியத்தக்கது.

பி-ம். 1. கொம்பனாள் குழையைத் தேற்றி. 2. நின்றுந் தனிச்சிலை.

சூர்ப்பணகை காட்டக் கரன் இராமபிரானைக் கண்டு முனிதல் 427—9

427. தோன்றிய தோன்ற றன்னைச்
சுட்டினள் காட்டிச் சொன்னாள்
வான்றொடர் மூங்கி றந்த
வயங்குவெந் தீய தென்னத்
தான்றொடர் குலத்தை யெல்லாந்
தொலைக்குமா சமைந்து நின்றாள்
ஏன்றுவந் ததிர்ந்த வீர
னிவனிக லிராம னென்றே.

வான் தொடர் மூங்கில் தந்த - ஆகாயத்தைத் தொடர்ந்து உயர்ந்த மூங்கில்களிலிருந்து (அவை உறைதலால்) உண்டான, வயங்கு வெம் தீ அது என்ன - விளங்கும் கொடிய தீ என்று சொல்லு மாறு, தான் தொடர் குலத்தை எல்லாம் - தனக்குச் சுற்றமான அரக்கர் குலத்தவர் அனைவரையும், தொலைக்கும் ஆ சமைந்து நின்றாள் - அழிக்கும் படியாகத் தீர்மானித்து அக்காரியத்தில் ஈடுபட்டு நின்ற சூர்ப்பணகை, தோன்றிய தோன்றல் தன்னை - அங்குத் தென்பட்ட இராமபிரானை, சுட்டினள் காட்டி - தன் கையாற் குறித்துக் கரனுக்குக் காட்டி, 'ஏன்று வந்து எதிர்ந்த வீரன் இவன் - போர்க்கோலந் தாங்கி நம்மை எதிர்ந்து வந்துள்ள வீரனாகிய இவன், இகல் இராமன் என்று - நம்பால் பகைமை கொண்ட இராமன் என்பவனாவன்' என்று, சொன்னாள் - கூறினாள். ஏ : அசை.

மூங்கில் ஒன்றோடொன்று உராய்ந்து உண்டான நெருப்பு தன் இனமான அப்புதரிலுள்ள எல்லா மூங்கில்களையும் அழிக்கும்; அதுபோலச் சூர்ப்பணகை தன் குலத்தையே தான் கொண்ட பொறாமைத் தீயால் அழிக்கக் காரணமானாள் என்க. 'உடன்பிறந்தே கொல்லும் வியாதி' என்றதுபோல. மூங்கில் தந்த எரி அப்புதரையும் அதைச் சார்ந்த மரங்களையும் அழிக்கும் என்பது; உத்தர. இலவணன் வதைப் ; *29* ; தக்க - *304* ; மதுரைக். *302* ; புறநா. *349*. சூர்ப்பணகை தன் குலத்தை அழிக்கக் காரணமானவள் ; *227*.

பி - ம். 1. *சுட்டியே காட்டிச்.*
2. *மூங்கிற்றந்த; மூக்கை. கான்றொடர் மூக்கையீர்ந்தோன் முனைவன் கனலேயென்ன.*
: *சமைந்து நின்றே.*
*விராமனென்ன; விராமனென்றாள்.*

ஒரு பிரதியில் இச்செய்யுள் அடியிற் காணுமாறு மாறிக் காணப்படுகிறது.

“ தோன்றிய தோன்ற றன்னைச் சுட்டியே காட்டிச் சொன்னாள்
கான்றுடர் மூக்கையீர்ந்தோன் முன்னவன் கனலே யென்னச்
சான்ற நுங் குலத்தை யெல்லாஞ் சமைக்குமா றமைந்து நின்றான்
என்றவந்..................................னென்றாள். (66)

428. கண்டனன் கனகத் தேர்மேற்
கதிரவன் கலங்கி நீங்க
விண்டன னின்ற வென்றிக்
கரனெனும் விலங்கற் றோளான்
மண்டமர் யானே செய்திம்
மானிடன் வலியை நீக்கிக்
கொண்டனென் வாகை யென்று
படைஞரைக் குறித்துச் சொன்னான்.

கனக தேர்மேல் கதிரவன் - பொன்மயமான தேர்மீதுள்ள சூரியன், கலங்கி நீங்க - கலக்க முற்று (அஞ்சி) அப்பாலேக, விண்டனன் நின்ற - பகைத்து நின்ற, வென்றி - வென்றிமிக்க, கரன் என்னும் விலங்கல் தோளான் - கரன் என்னும் மலைகள் போலும் தோள்களையுடைய அரக்கர் தலைவன், கண்டனன் - இராமபிரானைக் கண்டு, படைஞரை குறித்து - போர்க்கு ஆயத்தமாய் நின்ற தன் படைவீரர்களான அரக்கர்களைப் பார்த்து, ‘ யானே மண்டு அமர் செய்து - யானே இந்தப் பெரும் போரைச் செய்து, இ மானிடன் வலியை நீக்கி - இந்த மனிதன் ஆற்றலை அழித்து, வாகை கொண்டனென் என்று - வெற்றி மாலைகொள்வேன் ’ என்று, சொன்னான்-கூறினான்.

கதிரவன் கலங்கி நீங்கக் கனகத்தேர் மேல் விண்டனன் நின்ற வென்றிக்கரன் என இயைத்துப் பொருள்கொள்வாரும் உளர். விலங்கல் - மலை ; குறுக்கீடாக நின்று வழி தடைப்படுத்துதல் பற்றிவந்த தொழிற்பெயர். விண்டனன் - தானேசென்று போரிடுவதாகக் கூறிய அச்சேனைத் தலைவர் கருத்துக்கு மாறுபட்டவனாகி, என்னலும் ஆம். ‘ கொண்டனென் வாகை ’ என இறந்த காலத்தாற் கூறியது, தான் வெற்றிகொள்வது திண்ணம் என்ற துணிவுபற்றிவந்த கால வழுவமைதி என்க. விலங்கற்றோள் ; மலைகள் போல வலிமையும், பெருமையும் உடைமையால்.

பி - ம். 2. விண்டன னேன்ற; விண்டொட நின்றவென்றி; விண்டனினின்ற.
3 யானே யெய்தி ; மானிடர் வலியை, மானுடன் வலியை. (67

429. மானிட ஞெருவன் வந்த வலிகெழு சேனைக் கம்மா
கானிட மில்லை யென்னுங் கட்டுரை கலந்த காலை
யானுடை வென்றி யென்னும் யாவருங் கண்டு நிற்றிர்
ஊனுடை யிவனை யானே யுண்குவெ னுயிரை யென்றான்.

(மேலும் கரன் தன் படைஞர்களை நோக்கி), 'மானிடன் ஒருவன் - நம்மோடு போர்புரிய வந்துள்ளவன் ஒரு மனிதனே ஆவன்; வந்த - அவனை எதிர்த்துப் போர் செய்ய வந்த, வலிகெழு சேனைக்கு - வலிமை மிக்க நம் அரக்கர் சேனைக்கோ, கான் இடம் இல்லை - இவ்வனம் நிற்பதற்கு இடம் போதுமானதாய் இல்லை, என்னும் - என்று உலகம் சொல்லும், கட்டுரை கலந்த காலை - உறுதிமொழி உண்டானபோது, யான் உடை வென்றி என்னும் - என்னுடைய வெற்றியின் திறம் என்ன பயனுடைத்தாகும்? (பயன் ஆகாது என்றபடி); (ஆதலின்), யாவரும் கண்டு நிற்றிர் - நீவிர் அனைவரும் பார்த்துக்கொண்டு நிற்பீராக! யானே - யான் ஒருவனே, ஊன் உடை இவனை - நாம் உண்பதற்கு உரிய மாமிசம் அமைந்த உடலையுடைய இந்த மனிதனது, உயிரை உண்குவென் - உயிரைப் பருகுவேன்' என்றான் - என்று கூறினான்.

அம்மா - வியப்பை உணர்த்தும் இடைச்சொல். யானுடை வென்றி "நானுடைத்தாய்மை காட்டவும்" என்றது போல; (சுந்தர. 629,) யானே யுண்குவென்; யானே என்பதிலுள்ள ஏகாரம் மற்றோரை விலக்கும் பிரிநிலைப்பொருளது. நிற்றிர்; படர்க்கையிடம் முன்னிலை வினைகொண்டு நின்றது, இடவழுமமைதியாகும். இவனையுயிரை யுண்குவென்; வினை இருசெயப்படுபொருள்களை ஏற்றுவந்தது என்னலும் ஆம்; இவனையுயிரை - இவனுடைய உயிரை எனவேற்றுமை மயக்கம் எனவுங் கொள்ளலாம். இது முன் செய்யுளிற் கூறியதற்கு விளக்கமே ஆகும். இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் கருத்து.

பி - ம்: 1. மானுடனொருவன்; ஒருவன்வந்த சேனைக்கெல்லாம்.
2. யென்ற கட்டுரை; கலந்தகாலத்.
3. நியானுடை; காணநிற்றீர், காணநிற்றிர்; யாவருங் காண்டி நிற்றீர்.

**அகம்பன் கரனைத் தடுத்ததும், கரன் அதனைக் கேளாமையும் 430—5.**

430. அவ்வுரை கேட்டு வந்தா னகம்பனென் றமைந்த கல்விச்
செவ்வியா னொருவ னைய செப்புவென் செருவிற் சால
வெவ்விய ராத லன்றே வீரரி லாண்மை வீர
இவ்வயி னுளதாந் தீய நிமித்தமென் றியம்ப லுற்றான்.

அகம்பன் என்று-அகம்பன் என்று பெயர் கொண்ட, அமைந்த கல்வி செவ்வியான் - பொருந்திய கல்விச் சிறப்புடைய, ஒருவன் - ஓர் அரக்கன், அ உரை கேட்டு - கரனுடைய அந்த வார்த்தைகளைக் கேட்டு, வந்தான் - அவன் அருகே வந்து, ‘ஐய - ஐயனே! வீரருள் ஆண்மை வீர - வீரர்களுள் சிறந்த வலிமையுடைய வீரனே! செப்புவென் - யானொரு விஞ்ஞாபனம் செய்து கொள்கின்றேன்; (அஃதியாதெனில்), செருவில் சால வெவ்வியர் ஆதல் - போரில் மிக்க தீவிர முடையராக ஆவது, நன்றே- நல்லதே ஆகும்; (ஆயினும்), இவயின்- இப்பொழுது, தீய நிமித்தம் உள ஆம்-கேட்டைஅறிவிக்கும் குறிகள் பல உள்ளன ஆகும்’ என்று இயம்பல் உற்றான் - என்று பின்வருமாறு அவற்றைக் கூறத் தொடங்கினான். அவை அடுத்து வரும் செய்யுள்களால் அறியக்கிடக்கும்.

நிமித்தம் அறிந்து அவற்றின் பலனை உணர்த்துகின்ற அகம்பனது அறிவுத் திறத்தைக் கருதி, ‘அமைந்த கல்விச் செவ்வியான்’ என அவன் சிறப்பிக்கப் பெற்றான். அகம்பன்; கம்பமில்லாதவன்; - அதாவது எதற்கும் சலித்துத் தளராத உறுதியுடையவன் என்ற காரணப் பெயர். அத்தகைய உறுதிக் குணம் அமைந்தவனே இங்குச் சலித்துக் கூறுகின்றானாதலின், வருந் தீமை பெரிது என்பது விளங்கும். ‘வெவ்வியர் ஆதல் - விருப்பமுடையவராதல் என்றலும ஒன்றும். வீரரிலாண்மை வீர’ என்றது; ஒப்பு. ‘வீரரென் பார்கட் கெல்லா முன்னிற்கும் வீரர் வீரன்.’ (உயுத்த. இந்திரசித்துவதைப்:30). கரன் போருக்குக் கிளம்பும்போது அவன் பல உற்பாதங்களைக் கண்டனனென்றும், ஆனால் அவற்றைப் பொருட்படுத்தாமல் இராமபிரானிருந்த இடத்துக்கு அவன் வந்தானென்றும், அவ்வுற்பாதங்களை இராமபிரானுங் கண்டு, கடும்போர் வருமென்பதையும் முடிவில் பகைவர் முடிவர் என்பதையும் உணர்ந்தானென்றும் முதனூலுங் கூறும். அகம்பன் என்பவனைப் பற்றிய குறிப்பு அங்கு யாதும் இல்லை. கரன் வதம் முடிந்தபின் அகம்பனன் என்ற ஒற்றன் ஒருவன் இரா

வணனுக்குப் போரின் விளைவைச் சென்று தெரிவித்தனன் என்று அந்நூல் கூறும்.

பி - ம். 1. கேட்டு நின்ருன கம்பனென் ஞெருவன்கல்வி ; கேட்டுநின்றய.
2. செவ்வியோ ; செவ்வியின் வழியேயின்னே ; செவ்வியோ ஞெருவனின்னே.
3. வீரரல்லாமை வீரர். 4. வெவ்விய வீரா. (69)

வேறு

431. குருதி மாமழை சொரிந்தன மேகங்கள் குமுறிப்
பருதி வானவ னூர்வளைப் புண்டது பாராய்
கருது வீரநின் கொடிமிசைக் காக்கையின் கணங்கள்
பொருது வீழ்வன புலம்புவ நிலம்படப் புரள்வ.

'கருது வீர - யாவரும் மதிக்கத்தக்க வீரனே! மேகங்கள் குமுறி - மேகங்கள் முழங்கி, குருதி மா மழை சொரிந்தன - பெரிய இரத்த மழையைப் பொழிந்தன ; பரிதி வானவன் ஊர்வளைப் புண்டது - சூரியன் பரிவேடத்தால் வளைக்கப் பெற்றுள்ளமையும், காக்கையின் கணங்கள் - காகக் கூட்டங்கள், நின் கொடிமிசை - உன் கொடியின்மீது, பொருது வீழ்வன - சண்டை செய்து கொண்டு வீழ்கின்றவற்றையும், புலம்புவ - அவை வாய்விட்டுக் கதறுவதையும், நிலம்பட புரள்வ - தரையில் வீழ்ந்து புரள்வதையும், பாராய் - நீ பார்ப்பாயாக !.

இது முதல், நான்கு கவிகள் அகம்பன் கூறிய தீய நிமித்தங்கள்· 'வீர ! காக்கையின் கணங்கள், வீழ்வன, புலம்புவ, புரள்வ, கருது' என இயைத்துப் பொருள் கோடலும் அமையும். ஊர் - ஊர்கோள் ; இதனைப் பரிவேடம் என்று கூறுவர் ; ஊர் - மண்டிலம் ; (பிங்.) எனலும் ஆம். இது, "தேரிற்றிரி செங்கதிர் தங்குவதோர், ஊருற்ற தெனப் பொலி யொண்முடியான்" (82.) என்றமையால் விளக்க முறுவது காணலாம். இவ்வாறு தோன்றும் ஊர்கோளை, ஓர் உற்பாத மாகக் கூறுவது கவி மரபு; 460; உயுத்த. இராவணன் வதைப் : 19-21; சீவக. 1136 ; பாரதவெண்பா. வாசுதேவ : 124 ; வி - பா. கிருட்டிணன் றூது ; 226. தீயநிமித்தங்கள் ; கலிங்கத்துப். 222-224 ; தக்க. 941, உரை.

பி - ம். 1. குமுறும் ; குமிறிப். 2. வளைப்புண்டன.
3. காகத்தின் கணங்கள்.
4. புலம்பின நிலம்படப் ; புலம்புறு நிலம்படப். (70)

432. வாளி வாய்களை யீவளைக் கின்றன வயவர்
தோளு நாட்டமு மிடந்துடிக் கின்றன தூங்கி
மீளி மொய்ம்புடை யிவுளிகள் விழுவன விறலோய்
ஞாளி யோடுநின் றுளைப்பன நரிக்குலம் பலவால்.

'விறலோய் - வலிய வெற்றியுடைய கரனே! வாளி வாய்களை - அம்புகளின் கூறிய வாய்களாகிய ஓரங்களை, ஈ வளைக்கின்றன - ஈக்கள் சுற்றுகின்றன; வயவர் - வீரர்களுடைய, தோளும் நாட்டமும் - தோள்களும் கண்களும், இடம் துடிக்கின்றன - இடப்புறம் துடிக்கின்றன; மீளி மொய்ம்பு உடை இவுளிகள் - பராக்கிரம முடைய போர்க் குதிரைகள், தூங்கி விழுவன - தாமே தூங்கிக்கொண்டு சோர்ந்து வீழ்கின்றன; நரி குலம் - நரிக்கூட்டங்கள், பல - பல போந்தனவாய், ஞாளியோடு நின்று - நாய்களுடன் சேர்ந்து நின்று, உளைப்பன - ஊளையிடுகின்றன; பாராய் - இவற்றை நீ நோக்குவாயாக!

ஆயுதங்களின் வரம்புகளை ஈ சுற்றுவதும், வீரர்களின் தோள்களும் கண்களும் இடந்துடிப்பதும், குதிரைகள் தாமே தூங்கிவிழுவதும், நாய் நரிகள் ஊளையிடுவதும், தீமையை அறிவிக்கும் அடையாளங்கள் ஆம். உளைத்தல் - ஊளையிடுதல்; "நரிவாய்கொண்டு உலப்பிலின்பமோ டுளைக்கு மோதையும்' (மணி. *6: 111.*) மீளிமொய்ம்பு: பொருந. *140*; பெருங்: *5 : 3 : 44.*

பி-ம். 1. வாளின் வாய்களை; வாளி வாயினை.

3. விழுவன காணய்; வீழ்வன காணய்; மீளி மொய்ம் பினரினி வுளிகள்; மீளி மொய்ம்ப நின்னிவுளிகள் வீழ்வன காணய்; மீளி மொய்ம்பரோ டிவுளிகள் வீழ்வன காணய்.

4. றுளைக்கின்ற; றழைப்பன; கூளியோடு நின்றழைக்கின்ற நரிக்குலம் பாராய். (71)

433. பிடியெ லாமதம் பெய்திடப் பெருங்கவுள் வேழம்
ஒடியும் மான்மருப் புலகமுங் கம்பிக்கு முயர்வாள்
இடியும் வீழ்ந்திடு மெரிந்திடும் பெருந்திசை யெவர்க்கும்
முடியின் மாலைகள் புலாலொடு முழுமுடை நாறும்.

'பிடி எலாம் - பெண் யானைகளெல்லாம், மதம் பெய்திட - மத நீரைச் சொரிய, பெரும் கவுள் வேழம் - பெரிய கதுப்புக்களையுடைய ஆண் யானைகளின், மால் மருப்பு ஒடியும் - பெரிய தந்தங்கள் தாமே ஒடிந்து விழுகின்றன; உலகமும் கம்பிக்கும் - பூமியும் அதிர்ச்சி

யடைந்து நடுங்குகின்றது; உயர் வான் இடியும் வீழ்ந்திடும் - உயர்ந்து விளங்கும் வானில் உள்ள இடிக்குலங்களும் கீழே வீழ்கின்றன; பெரும் திசை எரிந்திடும் - பெரிய திசைகளெல்லாம் தீப்பற்றி எரிகின்றன; எவர்க்கும் - எல்லோருக்கும், முடியின் மாலைகள் - தம் முடியில் சூட்டிய மாலைகள், புலால் ஒடு முடை நாறும் - மாமிச நாற்றமொடு கெட்ட நாற்றமும் வீசுகின்றன.

இங்கு, ஒடியும் முதல் நாறும் என்பது ஈருக உள்ள வினைகள் முன் செய்யுளை யொட்டி நிகழ்காலத்திற் கொள்ளப்பட்டன. பிடிக்கு மதம் இயற்கையில் வெளிப்படுவதின்று; அப்படி உண்டாவதும், ஆண் யானைகளின் தந்தங்கள் தாமே ஒடிதலும், உலகம் கம்பித்தலும், இடி வீழ்தலும், திசை தீப்பற்றி எரிவதும், மாலைகள் துர்நாற்றம் வீசுவதும், துர்நிமித்தங்கள்; ஒப்பு. சுந்தர. 372 - 377, 946; உயுத்த. இராவணன்வதைப்: 18, 21. ஒடியுமால்; ஆல் அசையாகவும் கொள்ளலாம்.

பி - ம். 1. பெருங் கவின் வேழம்.
2. ஒடியமான்மருப்பு; ஒடியமாமருப்பு; துலகமுங் கம்பித்தவுயர்.
3. இடியும் வீழ்ந்த வெரிந்தன.
4. புலால் வெறிமுழு முடைகமழ்ந்த. (72)

434. இனைய வாகலின் மானிட
னொருவனென் றிவனை
நினைய லாவதிங் கேழைமை
நீயமர்க் கியன்ற
வினையெ லாஞ்செய்து வெல்லலாந்
தன்மைய னல்லன்
புனையும் வாகையாய் பொறுத்தியென்
னுரையெனப் புகன்ருன்.

'புனையும் வாகையாய் - வெற்றிமாலை தரிப்பவனே; இனைய ஆகலின் - இத்தகைய தீய நிமித்தங்கள் நிகழ்வனவாதலின், இவனை - இந்த இராமனை, மானிடன் ஒருவன் என்று - ஓர் எளிய மனிதன்தானே என்று, இங்கு நினையல் ஆவது ஏழைமை - இப்பொழுது நினைப்பது அறிவீனம் ஆகும்; நீ அமர்க்கு இயன்ற - நீ போர்க்கு உரிய, வினை எலாம் செய்து - போர்த் தொழில் யாவும் செய்து, வெல்லல் ஆம் தன்மையன் அல்லன் - (நீ) வெல்லக் கூடிய (அவ்வளவு எளிமை) நிலைமையுடையவன் இவன் அல்லன்; என் உரை

பொறுத்தி - யான் கூறிய என் வார்த்தைகளைப் பொறுத்துக்கொள்வாயாக!' என புகன்றான் - என்று (பணிவுடன்) கூறினன்.

புனையும் வாகையாய் என்றது கரனை நோக்கிக் கூறிய விளி; இஃது, அக்கரன் முன் பெற்ற வெற்றிகளைக் குறிப்பிட்டது. தலைவனை நோக்கி விளிக்கும் மரியாதைக்குரியதும் ஆம்; 'வாழி நின் கொற்றம்' என்பதுபோல. 'மானிடன் ஒருவன்' என்று கரன் கூறியது, 429; பொறுத்தி - நீ இதனை ஏற்றுக் கொள்வாய் எனலும் ஆம். 'கொண்ட னர்நிறை போற்றெனக் கூறினன்' (சீவக. 430) அவ்விடத்து, 'போற்றென' என்றதற்குத் திருவுளம்பற்று என்ற வுரையைப் போன்றது எனக்கொள்க. ஒப்பு 'பொறுத்தாங்கு; புறநா. 58 : 2-3.

பி - ம். 1. 'இனைய தாதலின்'.
2. நீதியாம் நின்ற; நீதியோய் நின்ற; நீதியா நின்ற; நினையிலாவ திங் கேழமை.
3. தரத்தனுமல்லன்; தன்மையினல்லன்; தகைமையனல்லன் (73)

435. உரைத்த வாசகங் கேட்டலு முலகெலா முலையச்
சிரித்து நன்றிதென் சேவகந் தேவரைத் தேய
அரைத்த வம்மியா மலங்கெழிற் றோளமர் வேண்டி
இரைத்து வீங்குவ மானிடற் கெளியவோ வென்றான்.

உரைத்த வாசகம் கேட்டலும் - அவ்வாறு கூறிய அகம்பனின் வார்த்தைகளைக் கேட்டவுடன், (கரன்), உலகு எலாம் உலைய சிரித்து - உலகம் யாவும் நிலை தளர்ந்து நடுங்குமாறு சிரித்து, 'தேவரை தேய அரைத்த - தேவர்களைத் தேய்ந்து உரு அழியுமாறு அரைத்த, அம்மி ஆம் - அம்மிக்கல் என்னும், அலங்கு எழில் தோள் - அசைந்து விளங்கும் அழகிய என் தோள்கள், அமர் வேண்டி - போரை விரும்பி, இரைத்து வீங்குவ - பூரித்துப் பெருத்துள்ளவை, மானிடற்கு எளியவோ - ஒரு மனிதனுக்கு எளிமை ஆயினவோ? நம் சேவகம் நன்றிது - நம் வீரம் நன்றாய் இருக்கிறது!' என்றான் - என்று கூறினன்.

அம்மியிட்டரைத்தல்; சுந்தர. 308, 968; அலங்குதல் - அசைதல்; சுந்தர, 687; புறநா. 2 : 13. வீரர் தோள் போர் வேண்டி வீங்குதல்; பால, பூக்கொய்; 18. நன்றிது - நன்றாய் இருக்கிறது; இது, அசை நிலை; அயோத். நகர் நீங்கு; 117; சுந்தர. 365. சேவகம்-வீரம்; 'சேவகஞ் செகுத்த சேவகன்' அயோத். மந்திரப்; 77; 'என்னெடுஞ்

சேவகந்தோற்க வென்றான்' (உயுத்த. நாகபாசப்; 10.) இரைத்து வீங்கும்; ஒருபொருட் பன்மொழி; இரைத்தல் - வீங்குதல்; நச். 242 - உரை.

பி - ம். 2. கின்ற தன் சேவகம்; நன்று நஞ்சேவகம்; சேவகர் தெவ்வரைத்.

3. மலங்கவிற் றோனமர்; விலங்கெழிற் றோனமர்.

4. இரைத்து வீங்கிய; மானுடற் கெளியவோ; கெளியவே யென்றான். (74)

அரக்கர் சேனை இராமபிரானுடன் போரிட்டழிதல் 436—56

436. என்னு மாத்திரத் தெறிபடை யிடியென விடியா
மன்னர் மன்னவன் மதலையை வளைந்தன வளைந்து
மின்னும் வாலுளை மடங்கலை முனிந்தன வேழம்
துன்னி னாலெனச் சுடுசினத் தரக்கர்தந் தொகுதி.

என்னும் மாத்திரத்து - என்று கரன் கூறிய அளவில், மின்னும் வால் உளை மடங்கலை - ஒளி வீசும் நீண்ட பிடரி மயிர்களையுடைய சிங்கத்தை, முனிந்தன - பகைத்தவையாகி, வேழம் வளைந்து துன்னினால் என - யானைகள் வந்து அச்சிங்கத்தை வளைந்து நெருங்கின போல வளைந்துகொண்டு, சுடு சினத்து அரக்கர் தம் தொகுதி - நெருப்புச் சுடுவது போன்ற கோபத்தையுடைய அரக்கர்களுடைய கூட்டம், எறிபடை இடி என இடியா - ஒன்றோடொன்று தாக்கும் படைக்கலன்கள் இடி இடிப்பன போல ஒலி செய்ய, மன்னர் மன்னவன் மதலையை - அரசர்க்கரசனான தசரதன் குமாரனான இராமபிரானை, வளைந்தன - வந்து சூழ்ந்து கொண்டன.

வளைந்து மின்னும் வாலுளை எனவும் இயைத்துப் பொருள் கொள்ளலாம். மன்னர் மன்னவன் மதலை-சக்கரவர்த்தித் திருமகன்; தசரதன், மன்னர் மன்னவன் எனப்பல இடங்களிலும் பாராட்டப் பெறுவது காண்க; 212, 538; பால. அரசியற், 1, திருவவதாரப்; 31. மடங்கல் - சிங்கம், 426, உரை. அரக்கர் படைவீரர்க்கு வேழங்களும், இராமபிரானுக்கு மடங்கலும் உவமைகள்.

பி - ம். 1. என்னும் மாத்திரை; மாத்திரத் தெய்யெறி படையெனவுரையா.

2. வளைத்தனர் வளைத்தனு; வளைத்தன வளைந்து; வளைத்த தவ்வனத்து; வளைந்தன வனத்து; வளைந்தன வளைத்த.

3. முனிந்தென வேழம்; முனிந்திட வேழம்; (75)

437. வளைந்த காலையில் வளைந்ததவ் விராமன்கை வரிவில்
விளைந்த போரையு மாவதும் விளம்புதும் விசையால்
புளைந்த பாய்பரி புரண்டன புகர்முகப் பூட்கை
உளைந்த மால்வரை யுருமிடி படவொடிந் தென்ன.

வளைந்த காலையில் - அவ்வாறு அரக்கர் படைகள் இராமபிரானைச் சூழ்ந்து கொண்டபோது, இராமன் கை வரி வில் - அந்த இராமபிரானுடைய கட்டுக்கள் அமைந்த வில்லும், வளைந்தது - (அம்பு தொடுக்க) வளைந்தது ; விளைந்த போரையும் - அப்போது நிகழ்ந்த போரினைப்பற்றியும், ஆவதும் - அதனால் ஏற்பட்ட நிலைமைபற்றியும், விளம்புதும் - கூறுவோம் ; விசையால் புளைந்த - தம் வேகத்தால் துளையுண்ட, பாய் பரி - பாய்ந்துசெல்லும் குதிரைகள், புரண்டன - கீழே வீழ்ந்து புரண்டன ; மால்வரை உரும் இடிபட ஒடிந்தென்ன - பெரியமலைகள் பேரிடி பட்டதால் ஒடிந்தனபோல, புகர் முக பூட்கை - புள்ளிகள் அமைந்த முகங்களையுடைய யானைகள், உளைந்த - வருந்தி வீழ்ந்தன.

அரக்கர்தம் தொகுதி வளைந்த காலையில் இராமன் கை வில் வளைந்தது என்றது சொல்லணி. புளைதல் - அலங்கரித்தலும் ஆம் ; இது புனைதல் என்பதன் திரிபு. பூட்கை - யானை ; சுந்தர. 851, 864, 871 ; உயுத்த. முதற்போர் : 58. ஆவதும் : காலவழுவமைதி, ‘ விசையாற் புளைந்த பாய் பரி-வேகத்தினாற் பறவை போன்று ஐந்து கதியுடையதாவு பரி ; புள் ஐந்த.’ என்பது பழையவுரை.

பி - ம். 1. வளைந்த காலையின்; வளைந்ததவ் விராகவன் வரிவில்.
2. மாவது விளம்புதும் ; போரதையியன்ற வாறியம்புதும்.
3. புளைந்து பாய்பரி.
4. படவுடைந்தென்ன, படவுடைர்தது போல ; உளைந்த பேரரா வுருமிடி. (76)

438. சூல மற்றன வற்றன சுடர்மழுத் தொகைவாள்
மூல மற்றன வற்றன முரட்டண்டு பிண்டி
பால மற்றன வற்றன பகழிவெம் பகுவாய்
வேலு மற்றன வற்றன வில்லொடு பல்லம்.

(இராம பாணங்களால்), சூலம் அற்றன - அவ்வரக்கர்கள் ஏவிய சூலங்கள் அழிந்தன ; சுடர் மழு தொகை அற்றன - ஒளியுடைய

கோடாலித் தொகுதிகள் அழிந்தன ; வாள் மூலம் அற்றன - வாள் களின் அடிப்புறங்கள் அழிந்த ; (மூலம் அற்றன - உருத்தெரியாமல் அழிந்தன என்னலும் ஒன்றும் ;) முரண் தண்டு அற்றன - வலிய தண்டாயுதங்கள் அற்றொழிந்தன ; பிண்டிபாலம் அற்றன - பிண்டி பாலம் என்னும் படைகள் அழிந்தன ; வெம் பகுவாய் வேலும் அற்றன - கொடிய, பிளந்து செல்லும் வாயையுடைய வேல்களும அழிந்தன; வில் ஒடு பல்லம் அற்றன - வில்லுகளோடு பல்லம் என்ற ஆயுதங்களும் அழிந்தன.

முதலில் சூலம் தனியே குறிப்பிட்டமையால், பகுவாய் வேல் என்பது, பிளந்து செல்லக்கூடிய வேல் என்றும், பகழி என்பது முன் குறிப்பிட்டுள்ளமையால், ஈற்றில் உள்ள பல்லம் என்பதற்கு அம்பு எனப் பொருள்கொள்ளாமல், அது ஒரு தனி ஆயுதம் என்றும் பொருள் கொள்ளப்பட்டன ; பல்லம் - அம்புக் குதை யும் ஆம்.

பி - ம். 1. சுடர் மழுத்தெறித்தன சுரிவாள்; வற்றன சுடர்மழுச் சுடர்வாள்.
2. மூலமற்றன முசுண்டிக டெறித்தமாப் பிண்டி.
3. பால மற்றன தெறித்தன கண்டு பல் பலவாம்.
4. வேலு மற்றன தெறித்தன வில்லொடு பல்லம். (77)

439. தொடிது ணிந்தன தோளொடுந் தோமரந் துணிந்த
அடிது ணிந்தன கடகளி றச்சொடு நெடுந்தேர்க்
கொடிது ணிந்தன குரகதந் துணிந்தன குலமா
முடிது ணிந்தன துணிந்தன முளையொடு முசலம்.

தொடி துணிந்தன - அவ்வரக்கர்களுடைய வீரவளைகள் துண் டித்து விழுந்தன ; தோளொடு தோமரம் துணிந்த - அவர்களின் தோள்களுடன் (அவர்களுடன் அவர்கள் ஏந்திய) தோமரம் என்னும் ஆயுதங்கள் துண்டாயின ; கட களிறு அடி துணிந்தன - மத யானை கள் தம் கால்கள் துண்டிக்கப்பட்டன ; நெடும் தேர் அச்சொடு கொடி துணிந்தன-பெரியதேர்கள் அச்சுக்களுடன் கொடிகளும் துண்டிக்கப் பெற்றன ; குரகதம் துணிந்தன - குதிரைகள் துண்டங்களாய் வெட்டப்பட்டன ; குல மா முடி துணிந்தன - கூட்டமான பெரிய கிரீடங்கள் துண்டிக்கப் பெற்றன ; முளையொடு முசலம் துணிந்தன - தண்டுகளுடன் உலக்கைகள் துண்டாக்கப்பட்டன.

வளை - தோள்வளையும் ஆம். தோமரம் - ஒருவகைத் தண்டா யுதம் எனவும், கைவேல் எனவும் கூறுவர். முளை முசலம் என்னும் ஓர் ஆயுதம் என்பர் ; இது முளைத்தண்டு எனப்படும் ; சீவக. 1136.

பி - ம். 1. தோளொடு தோமரர்.
2. கடக்களிறச்சொடு, கடக்களிற்றொடு நெடுங்கடுந்தேர்.
3. துணிந்தன கொடியோர்.
4. முளையொடு துணிந்தன முசலம் ; முனையொடு முசலம்; முரணொடு துணிந்தன முசலம். (78)

440. கருவி மாவொடு கார்மதக் கைம்மலைக் கணத்தோ
டுருவி மாதிரத் தோடின சுடுசர முதிரம்
அருவி மாலையிற் பிறங்கிய தவனியி லரக்கர்
திருவின் மார்பகந் திறந்தன துறந்தன சிரங்கள்.

சுடு சரம் - இராமபிரான் ஏவிய கொடிய பாணங்கள், கருவிமா ஒடு - கல்லணை பூண்ட குதிரைகளோடு, கார் மத கை மலை கணத்தொடு-கரிய நிறத்தையும் மதத்தையுமுடைய யானைகளின் கூட்டத்தையும், உருவி - துளைத்து அப்பாற்சென்று, மாதிரத்து ஓடின - திசைப் புறங்களில் விரைந்தோடின ; உதிரம் அருவி மாலையில் பிறங்கின - இரத்தம் அருவிகளின் ஒழுக்குப்போல விளங்கின ; அவனியில் - பூமியில், அரக்கர் திரு இல் மார்பு அகம் திறந்தன - அவ்விராக்கதர்களுடைய அழகற்ற (அல்லது பொலிவு இல்லாத) மார்பிடங்களைப் பிளந்து வெளிப்பட்டன ; சிரங்கள் துறந்தன - அன்னோர் தலைகள் உடல்களினின்றும் விட்டு நீங்கின.

சுடுசரம் 441, 511, 521; பால. தாடகை வதைப்: 73; அகலிகைப்: 78. அரக்கர் திருவில் மார்பகம் - அரக்கர்களுடைய வெற்றித் திருவில்லாத மார்பகம் எனலும் ஆம். கருவி - கல்லணை ; குதிரைச் சேணம். மா - குதிரை.

பி - ம். 1. கருவிமார் பெனுங்கார் மலைக்கைம்மலைக் கணத்தோ ; கருவி மார்பினுங் ; கருவிமார்பெனுங் ; கருமலை கைம்மலைக் ; கருவி மாவொடுகார்மதக் ; கணத்தோர்.
2. சுடுசரமுதிர ; மாரியோடோடின சுடுசரந் துரக்க.
3. அருவிமாரியிற் றேங்கின ; அருவியாறு போற்றேங்கின ; அருவிமாரியிற் பிறங்கிய தவனியிலரக்கர் ; அருவிமாலையிற்.
4. துணிந்தன சிரங்கள் ; துறந்துள சிரங்கள் ; பிறங்கின சிரங்கள்.

441. ஒன்று பத்துநா றுயிரங் கோடியென் றுணராத்
துன்று பத்திய விராகவன் சுடுசரந் தூரக்கச்
சென்று பத்திரத் தலேயின மலேதிரண் டென்னக்
கொன்று பத்தியிற் குவிந்தன பிணப்பெருங் குன்றம்.

ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், கோடி என்று உணரா - ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், கோடி என்று கணக்கிட்டு அறிய முடியாத, துன்று பத்திய - நெருங்கிய வரிசையாகவுள்ள, சுடுசரம்-சுட்டெரிக்க வல்ல நெருப்புப் போன்ற கொடிய அம்புகளை, இராகவன் தூரக்க - இராமபிரான் தூண்டி எய்ய, சென்று - அவ்வம்புகள் சென்று, கொன்று - அவ்வரக்கர்களைக் கொன்று, பத்திர தலேயின் - அம்புகளைத் தம் தலேகளிற் கொண்டனவாய், மலே திரண்ட என்ன - மலேகள் ஒன்று திரண்டு கிடந்தனபோல, பிண பெரும் குன்றம் - அவர்களுடைய பிணங்களாகிய பெரும் குன்றுகளை, பத்தியில் குவித்தன - வரிசையாய்க் குவிந்து கிடக்கச்செய்தன.

சுடுசரம், 440 உரை. பத்திரம் - அம்பு ; (பிங்.). இனி பத்திரத்தலேயின் - மலேகளின் சிகரங்களை ஒத்தனவாக என்னலும் ஒன்றும் ; பத்திரம் - மலே (பிங்.) ; இலேயும் ஆம். இராகவன் சுடுசரம் தூரப்ப, (அவை) சென்று கொன்று பத்திரத் தலேயின் பிணப்பெருங் குன்றம் மலேதிரண்டென்ன குவிந்தன என்க. 'துன்று பத்திய - நெருங்கிய ஒழுக்கமுடைய : பத்திரத் தலேயின் - காடு போன்ற தலேயின்' என்பன பழைய உரை. இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. ராயிரகோடி ; ருணரத்.
2. பத்தியவ்விராகவன் ; பத்தியிற் சுடுசர மிராகவன் ; தூரப்பச்.
3. தலேயென மலே; தலேயென பத்தியில் மலேதிரண்; தலேயினமலே.
4. குவித்தனன் பிணப் ; குவிந்தனபிணப். (80)

442. காடு கொண்டகா ருலவைகள் காயெரி கதுவச்
சூடு கொண்டன வெனத்தொடர் குருதிமீத் தோன்ற
ஆடு கின்றன வறுகுறை யயிலம்பு விண்மேல்
ஓடு கின்றன வுயிரையுந் தொடர்வன வொத்த.

காடு கொண்ட - வனத்தில் அடைந்திருந்த, கார் உலவைகள் - கரிய மரக்கொம்புகள், காய் எரி கதுவ - எரியும் நெருப்புப் பற்றிக் கொள்ள, சூடுகொண்டன என - சூடு கொண்டவை போல, அறுகுறை - அரக்கர்களுடைய தலேயறுப்புண்ட உடற்குறைகளாகிய

கவந்தங்களின், தொடர் குருதி மீ தோன்ற - அவற்றினின்று தொடர்ந்து எழுகின்ற இரத்தம் மேலே தோன்ற, ஆடுகின்றன - அவை ஆடுகின்ற தோற்றம், அயில் அம்பு (இராமபிரானுடை) கூரிய அம்புகள், விண்மேல் ஓடுகின்றன உயிரையும் - சுவர்க்கத்தை நாடி வானிற் செல்கின்ற அவ்வரக்கர்களுடைய உயிர்களையும், தொடர்வன ஒத்த-பிடிக்கத் தொடர்ந்து செல்வன போன்று விளங்கின.

உலவை - உலவை என்னும் ஒரு வகை மரமும் ஆம்; இஃது ஓடை மரம் எனவும் வழக்கும்; பிங். இராம பாணங்களால் அறுபட்ட அரக்கர்களுடைய குறை உடல்களாகிய கபந்தங்கள் ஆடும்போது, அவற்றினின்றும் மேல் கொப்புளித்து எழுந்த இரத்தத் தொகுதி மேலே கிளம்பிய தோற்றம், விண் செல்கின்ற அவ்வரக்கர் உயிர்களையும் விடாதுபற்றி அழிக்க அவ்விராம பாணங்களே மேலெழுந்து செல்கின்றன ஒத்து விளங்கின என்பதாம். குருதி எழுந்தமை இராம பாணம் எழுந்தமைக்கு உவமை; அக்கணைகள் தீயுமிழுந்தன்மைய ஆதலின் என்க. இது, போரில் எதிர்த்து உயிரிழந்தோர் வீரசுவர்க்கம் புகுவர் என்ற மரபுபற்றிக் கூறியதும் ஆம். போரிற்கவந்தம் ஆடுவது; 480; பால. வேள்வி: 54; சுந்தர. 976, 977-ம் அவற்றின் உரையும் காண்க. இச்செய்யுள் **தற்குறிப் பேற்ற உவமையணி.**

பி-ம். 1. காடுகண்ட; கதழெரிகதுவ; காடுகொண்டதோ ருலவைக டலையெரி கதுவ; காடு கொண்டிடுமுலவையிற்.
2. குருதி நீர் பலவாய்,
3. வறுதலை யயிலம்பு; ஆடுகின்றன கவந்தங்க ளயிலமபு பிண மேல்.
4. வுயிரினைத் தொடர்வன; ஓடுகின்ற தம்முயிரையுந் தொடர்வன வொத்தனவே; தொடர்வனவொக்க. (81)

**443.** கைகள் வாளொடு களப்பட கழுத்தறக் கவச
மெய்கள் போழ்படத் தாள்விழ மிகநெடு நிருதர்
செய்ய மாத்தலை சிந்திடத் திசையுறச் சென்ற
தைய லார்நெடு விழியெனக் கொடியன சரங்கள்.

தையலார் நெடு விழி என - மகளிர் தம் நீண்ட விழிகள் போல, கொடியன - கொடுமையுள்ளனவான, சரங்கள் - இராமபாணங்கள்,

மிக நெடு நிருதர் - மிகவும் உயர்ந்து வளர்ந்த அரக்கர்களின், கைகள் வாளொடு களம்பட - கைகள் அவர்கள் பிடித்திருந்த வாள்களோடு அப்போர்க்களத்தில் அறுபட்டுவிழ, கழுத்து அற - கழுத்துக்கள் அற்றுப்போக, கவச மெய்கள் போழ்பட - கவசமணிந்த உடல்கள் பிளவுபட, தாள் விழ - பாதங்கள் சிதைந்து கீழே விழ, செய்ய மா தலை சிந்திட-சிவந்த பெரிய தலைகள் சிதறிவிழ, திசை உற சென்ற - நான்கு திசைகளிலும் பொருந்துமாறு பரந்து சென்றன.

சரங்கள் சென்ற என இயைக்க. இராம பாணங்களுக்குத் தையலார் விழி: இது, உபமானத்தை உபமேயமாக்கிக் கூறியது; இவ்வாறு கூறுவது எதிர் நிலை அணி; 'காசலம்பு முலையவர் கண்ணெனும் பூசலம்பு' (பால. ஆற்றுப். 1.) 'நல்லார் கொழுங்கயற் றடங்கண் போலு மம்புகொண் டரசர்மீண்டார்'; (சீவக. 439); பு. வெ. 8. இச்செய்யுளில் பல நிகழ்ச்சிகள் ஒரு சேர நிகழ்ந்தனவாய்க் கூறப்பெறுவதால் இஃது, உடனிகழ்ச்சியணி எனப்படும்; ஒப்பு: "தாடகை தன்னுர முருவி, மலையுருவி, மரமுருவி மண்ணுருவிற் றுருவாளி" (பால. குலமுறை, 26.) செய்ய மாத்தலை; இராமபாணத்தால் இரத்தம் பரவி விளங்கிய தலை என்றும், தம் குஞ்சியால் செந்நிறமான தலை என்றும் கொள்க.

பி - ம். 1. களம்பட, துணிபடக்.
2. மெய்கள் போழ்ந்திட; விழவெருவிட; பாழ்பட; மெய்கொள் நிருதர்.
3. சிந்தின திசையுறச்; சிலையுறச் சென்ற.
4. விழியெனத் தொடர்வன. (32)

444. மாரி யாக்கிய வடிக்கணை வரைபுரை நிருதர்
பேரி யாக்கையின் பெருங்கரை வயின்றொறும் பிறங்க
ஏரி யாக்கின வாறுக ளாக்கின விரைக்கும்
சோரி யாக்கின போக்கின வனமெனுந் தொன்மை.

மாரி ஆக்கிய - மழை பெய்வது போன்று பெய்யும் ஒரு நிகழ்ச்சியை உண்டாக்கிய, வடி கணை - கூரிய இராம பாணங்கள், வரை புரை நிருதர் - மலைகளைப் போன்ற அரக்கர்களுடைய, பேர் யாக்கையின் - பெரிய உடல்களின், பெரும் கரை - பெரிய கரைகள், வயின் தொறும் பிறங்க - இடந்தோறும் விளங்க, ஏரி ஆக்கின - பல ஏரிகளை உண்டாக்கின; ஆறுகள் ஆக்கின - பல நதிகளை உண்டாக்கின; இரைக்கும் சோரி ஆக்கின - அவற்றில் ஒலிக்கும் இரத்த

வெள்ளம் நிரம்பச் செய்தன ; வனம் எனும் தொன்மை போக்கின - (இவ்வாறு செய்தமையால்), வனம் என்ற பழைய தன்மையை அழித்தன.

வடிக்கணை, ஆக்கின ; ஆக்கின ; போக்கின என்க. மழை பெய்து, ஆறு ஏரி நிரம்புமாதலின், அது கணை மாரியாகக் கூறப் பெற்றது.

பி - ம். 1. வரை பொருநிருதர்.

2. வகுத்தாங் (கேரி)

3. யாறுகளியற்றின ; ஏரியாக்கிய ; யாறுகளியற்றின நிறையச்; யாக்கின வெங்கும் ; கேரியாக்கிய தெழுந்துயர் யாற்றி னிறையச், (83)

445. அலைமி தந்தன குருதியின் பெருங்கட லரக்கர்
தலைமி தந்தன நெடுந்தடி மிதந்தன தடக்கை
மலைமி தந்தன வாம்பரி மிதந்தன வயப்போர்ச்
சிலைமி தந்தன மிதந்தன கொடியொடு தேர்கள்.

அலை மிதந்தன குருதியின் பெரும் கடல் - அலைகள் மேலெழுந் தனவான இரத்தப் பெருங்கடலில், அரக்கர் தலை மிதந்தன - (இராம பாணங்களால் துண்டிக்கப் பெற்ற) அரக்கர்களுடைய தலைக்ள் மிதந்தன ; நெடும் தடி மிதந்தன - அன்னோர் நீண்ட தசைத்துண் டங்கள் மிதந்தன ; தட கை மலை மிதந்தன - பெரிய துதிக்கைகளை யுடைய யானைகள் மிதந்தன ; வாம் பரி மிதந்தன - தாவிச்செல்லும் குதிரைகள் மிதந்தன ; வய போர் சிலை மிதந்தன - வலிய போர் விற் க்ள் மிதந்தன ; கொடி ஒடு தேர்கள் மிதந்தன - கொடிகளோடு விளங்கிய தேர்க்ள் மிதந்தன.

'தடி - குறையுடல் பழையவுரை.' ; தடி - தண்டாயுதம் எனலும் ஆம்.

பி - ம். 1. அலைமிகுந்தன ; குருதியம் பெருங்கட.

3. வடிபொற் (சிலை).

4. கொடி நெடுந்தேர்கள் ; நெடுந்திண்டேர். (84)

446. ஆய காலையி லனல்விழித் தார்த்திரைத் தரக்கர்
தீய வார்கணை முதலிய தெறுசினப் படைகள்
மேய மால்வரை யொன்றினை வளைத்தின மேகம்
தூய தாரைகள் சொரிவன வாமெனச் சொரிந்தார்.

ஆய காலையில் - அவ்வாறானபோது, அரக்கர் - (இறவாது ஒழிந்த மற்ற) அரக்கர்கள், மேய மால் வரை ஒன்றினை - நிலைபெயராது இருந்த ஒரு பெரிய மலையை, இன மேகம் வளைத்து - கூட்டமான மேகங்கள் சூழ்ந்து கொண்டு, தூய தாரைகள் சொரிவன ஆம் என - துல்லியமான மழைத்தாரைகளைப் பொழிவனபோல, தீய வார் கணை முதலிய-கொடிய நீண்ட அம்புகள் முதலான, சின தெறு படைகள் சொரிந்தார் - கோபித்து அழிக்கவல்ல போர்ப்படைகளைச் (இராமபிரான் மீது) சொரிந்தனர்.

மலை இராமபிரானுக்கும், இனமேகம் அரக்கர்களுக்கும் உவமைகள்; இங்கு இராமபிரானுக்கு மால் வரையை ஒப்பிட்டது, அவனது அளக்கலாகா அளவும் பொருளும் துளக்கலாகா நிலையும் தோற்றமுங் கருதி என்க. அரக்கர்க்கு மேகம்; 450.

பி - ம். 1. தார்த்திக லரக்கர், தார்த்தெழுந் தரக்கர்.
2. தீயவார்சிலை முதலிய வடுசினப்படைகள்; வார்கணை முதலிய யடுசினப் படைகள் ; தீயவார்சிலை முதலிய ; சினவிற்ற படைகள் ; சினத்தடுபடைகள்.
4. யொன்றினை வளைத்தன மேகம் ; வளைத்தெழுமேகம் ; சினத்தடு மேகம் ; யடுசினமேகம். (85)

447. சொரிந்த பல்படை துணிபடத் துணிபடச் சரத்தால்
அரிந்து வெந்தன சிந்திடத் திசைதிசை யகற்றி
நெரிந்து பார்மக ணெளிவுற வனமுற்று நிறைய
விரிந்த செம்மயிர்க் கருந்தலை மலையென வீழ்த்தான்.

சரத்தால் - இராமபிரான் தன் அம்புகளால், சொரிந்த பல்படை- அரக்கர்கள் இராமபிரான் மீது மிகுதியாகப் பொழிந்த பலவகை ஆயுதங்களும், துணிபட துணிபட - பலவகைத் துண்டங்களாகும் படி, அரிந்து - வெட்டி, வெந்தன சிந்திட-வெந்து சிந்தும்படி, திசை திசை அகற்றி - நாலா திசைகளிலும் செல்ல அவற்றை அப்புறப் படுத்தி, பார்மகள் - புவிமடந்தை, நெரிந்து நெளிவு உற - நொறுங்கி வளைவு அடையவும், வனம் முற்றும் நிறைய - அவ்வனமெங்கும்

நிறைந்து விளங்கும்படியும், விரிந்த செம்மயிர் கரும் தலை - படர்ந்த செம்பட்டை மயிர்களையுடைய அவ்வரக்கர்களின் பெரிய தலைகளை, விழ்த்தான் - வெட்டிக் கீழே வீழ்த்தினான்.

விழ்த்தான்; என்ற வினைக்கு இராமபிரான் என்ற எழுவாய் வருவித்துக் கொள்ளபெற்றது. துணிபட, துணிபட; அடுக்கு, மிகுதிப்பொருளது, திசை திசை: அடுக்கு எண்ணுப் பொருளது. பார்மகள் நெரிந்து நெளிவுற்றது; அரக்கர்களின் தலைக்ள் வீழ்ந்த அதிர்ச்சியாலும் அவற்றின் பாரமிகுதியாலும்; பால. கார்முகப்: 10; சுந்தர. 423. கருந்தலை - கரிய தலையும் ஆம்.

பி - ம். 1. வெம்படை; துணிதுணி படச்சுடு சரத்தால்.
2. போந்தன சிந்திட; வீழ்ந்த சிந்திட; வெந்தனல் சிந்திட; அரிந்து சேவகனவை யெலாம்.
3. பார்மகள் முதுகிற; முதுகுளுக்குற நிமிரரக்கர்.
4. விழுந்தார்; வீழ்ந்த; விழுந்த. (86)

448. கவந்த பந்தங்கள் களித்தன குளித்தகைம் மலைகள்
சிவந்து பாய்ந்தவெங் குருதியிற் றிருகின சினத்தால்
நிவந்த வெந்தொழி னிருதர்தம் நெடுநிணந் தெவிட்டி
உவந்த வன்கழு துயிர்சுமந் துளுக்கிய தும்பர்.

(அக்காலை), கவந்த பந்தங்க்ள் - குறை உடல் தொகுதிகள், களித்தன - களிப்புற்றன; கை மலைகள் - யானைக்ள், சிவந்து பாய்ந்த வெம் குருதியில் - (அங்குச்) சிவந்து பாய்ந்தோடிய வெப்பமான இரத்த வெள்ளத்தில், குளித்த - நீராடின; திருகின சினத்தால் - க்டுமையான கோபத்தால், நிவந்த வெம் தொழில் நிருதர் தம் - மேலோங்கிய கொடுஞ் செயலையுடைய அரக்க்ர்களுடைய, நெடு நிணம் திவட்டி - பெரும் கொழுப்புகளை (உண்டதால்) தெவிட்டலை அடைந்து, வன்கழுது-வலிய பேய்கள், உவந்த - (அதனால்) மகிழ்ச்சி யடைந்தன; உம்பர் - தேவர் உலகம், உயிர் சுமந்து - இறந்த அரக் கர்களுடைய) உயிர்களைத் தாங்கி, உளுக்கியது - (அப்பாரந் தாங்கா மல்) நெளிந்தது.

களித்தன; இதனைக் குட நாட்டுச் சொல்லாகக்கொண்டு, கூத் தாடின எனப் பொருள்கொள்ளலுமாம். திருகின - கடுமையாய் முரண்பட்ட; 'திருகு சினத்தார்' 728. 'பருதி சினந்திருகிய கடுந் திறல் வேனில்' (பெரும்பாண். 3.) தெவிட்டுதல் - விரும்பப்படாது மிகுதல். உளுக்குதல் நெளிதல் - பால. கார்முகப் 10; சுளுக்கேறுதலு

ஆம்; இது, தொடர்பு நவிற்சியணி. இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. குளித்தன குளித்தகை மலைகள்; மலையில்.
2. பெயர்துயர்ந்த; செயங்தெழுந்த. 3. துளுக்கிய தும்பர்.
4. உவந்தவன்; உவந்த பேய்க் கணமுயிர். (87)

449. மருட ருங்களி வஞ்சனை வளையெயிற் றரக்கர்
கருட னஞ்சுறு கண்மணி காகமுங் கவர்ந்த
இருட ரும்புறத் திழுதையர் பழுதுறற் கெளிதே
அருட ருந்திறத் தறனன்றி வலியதுண் டாமோ.

மருள் தரும் - மாயையைச் செய்யும், களி - மதச் செருக்கும், வஞ்சனை - வஞ்சகமுமுடைய, வளை எயிற்று அரக்கர் - வக்கரமான கோரைப் பற்களையுடைய அவ்வரக்கர்களின், கருடன் அஞ்சுறு கண்மணி - (பறவைக் கரசனான) கருடனே (கண்டு) அஞ்சுதற்குரிய கண்விழிகளை, காகமும் கவர்ந்த - (இழிந்த) காக்கைகளும் பறித்து எடுத்தன; ஆதலின், இருள் தரும் புறத்து - இருள்போன்ற கரிய உடலையுடைய, இழுதையர் - கீழ்மக்கள், பழுது உறற்கு எளிதே - கேடடைவதற்கு எளியதே ஆகும்; அருள் தரும் திறத்து - அருள் அளிக்கும் சிறப்புடைய, அறன் அன்றி - தருமமே அல்லாமல், வலியது - வலிமை யுடையது, உண்டாமோ - உலகில் உள்ள தாகுமோ? ஆகாது என்றபடி.

மருள் தரும் - மயக்கத்தை உண்டாக்கும் எனலும் ஏற்கும். வளை யெயிற்றரக்கர்; 286. காகமும்: உம்மை, இழிவுசிறப்பினது. புறம் - உடல். திருமாலை. 6; மணி. 4: 121. கண்மணியைக் காகம் உண்ணல் - சுந்தர. 621; 666; தக்க. 562; சூளாமணி. 15. இழுதையர் பழுதுறுவர்; அறன் வலியுறும் என்ற நீதிகள் இச் செய்யுளால் விளங்குகின்றன. அறனன்றிவலி துண்டாமோ; ஒப்பு 'அறம் வெல்லும் பாவந் தோற்கும்' (சுந்தர. 190.) 'இருள் - அஞ்ஞானம்; பெரியோராலே தள்ளப்பட்டிருக்கும் மறமே நித்திய மென்னும் பேதையர் பழுது உரைக்கும் வார்த்தைக்குக் கிருபைதரும் மிடுக்குடைய தருமம் எளிதாமோ? ஆகையால், தருமமே பலம்' என்பன பழையவுரை.

பி-ம். 1. வாளெயிற்றரக்தர். 2. காகங்கள் கவர்ந்த.
3. இருடரும் மனத்; இருடரும்புறத்; பழுதுரைக் கெளிதே.
4. அருடருந் திறத்தார்க்கன்றி. (88)

### வேறு

**450.** பல்லாயிர மிருள்கீறிய பகலோனென வொளிரும்
வில்லாளனை முனியாவெயி லயிலாமென விழியாக்
கல்லார்மழை கணமாமுகில் கடைநாள்விழு வனபோல்
எல்லாமொரு தொடையாவுட னெய்தார்வினை செய்தார்.

பல் ஆயிரம் இருள் - மிகப் பலவான இருள் தொகுதியை, கீறிய - பிளந்து அழித்த, பகலோன் என ஒளிரும் - சூரியனைப்போல ஒளிவீசும் தேக காந்தியையுடைய, வில்லாளனை - வில்லாளியாகிய இராமபிரானை, எல்லாரும் ஒரு தொடையா - (இறவாது மிகுந்த மற்ற) அரக்கர்கள் எல்லாரும் ஒரு தொடர்பாக, முனியா - கோபித்து, வெயில் அயில் ஆம் என - ஒளியையுடைய வேல் போல, விழியா - விழித்து நோக்கி, கண மா முகில் - கூட்டமான பெரிய மேகங்கள், கடை நாள் - யுக முடிவுக் காலத்தில், கல் ஆர் மழை - கற்கள் போன்ற மழையை, விடுவனபோல் - எறிந்து சொரிதலைப்போல, எல்லாம் உடன் எய்தார் - எல்லா அம்புகளையும் சேர்த்து எய்து, வினை செய்தார் - போர்த்தொழிலைச் செய்தனர்.

அரக்கர்களுக்கு மேகம்; 446. இராமபிரானுக்குச் சூரியன்; 307. முனியா, விழியா என்பன செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சங்கள். விழிக்கு அயில். உயுத்த. அங்கதன்றூது: 14.

பி - ம். 2. முனியாமிக. 3. விழுவதுபோல்.
4. தொகையாய் வர; படையெறிந்தார். (89)

**451.** எறிந்தாரென வெய்தாரென வெறியாநினைந் தனவும்
அறிந்தாரென வறியாவகை யயில்வாளியி னறுத்தான்
செறிந்தாரையும் பிறிந்தாரையுஞ் செறுத்தாரையுந் திறத்தால்
மறிந்தாரையும் வலித்தாரையு மடித்தான்சிலை பிடித்தான்.

சிலை பிடித்தான் - வில்லைக் கையிற் பிடித்தவனான இராமபிரான், செறிந்தாரையும் - அவ்வரக்கருள் கூட்டமாகத் திரண்டு வந்தவர்களையும், பிறிந்தாரையும் - பிரிந்து தனியே வந்தவர்களையும், செறுத்தாரையும் - கோபித்துப் பகைத்து வந்தவர்களையும், சினத்தால் மறிந்தாரையும் - முன் தோற்றோடிப் போய்ப் பின் கோபங்கொண்டு திரும்பி வந்தவர்களையும், வலித்தாரையும் - வலிந்து போரிட வந்தவர்களையும், (ஆகிய எல்லாரையும்) மடித்தான் - அழித்தான்; எறிந்தார் என - இன்னார் வேல் முதலிய எறிபடை

களை வீசினவர்களென்றும், எய்தார் என - இன்னார் அம்பு முதலிய அஸ்திரங்களைத் தூண்டினவர்களென்றும், எறியா நினைந்தனவும் - எறிவதற்கு எண்ணியவைகளையும், அறிந்தார் என - ஆராய்ந்து அறிந்துகொண்டாரென்றும் உள்ளவர்களை, அறியாவகை - அவர்கள் அறிந்துகொள்ள முடியாதபடி (எவரெவர் எது எதனைச் செய்துகொண்டிருந்தனர் என்று கூறமுடியாத வளவில்), அயில் வாளியின் அறுத்தான் - கூரிய தன் அம்புகளால் அறுத்து அழித்தான்.

சிலைபிடித்தவன், மடித்தான், அறுத்தான் என்று முடிவுசெய்க. செறிந்தார் - தன்னைச் சூழ்ந்து நெருங்கியிருந்தவர் என்றும், பிறிந்தார் - விலகி நின்றவர் என்றும் கொள்ளலாம். 'அறிந்தாரென அறியாவகை - தேவர்களும் மற்றுள்ளோரும் அறிந்தார் என்ற சொல் மேலிடாதபடி அவர்கள் அறியாமல் அழித்தான் என்று பொருள். 'செறிந்தார் - கோபத்தால் மேல் வீழ்ந்தார். பறிந்தார் - உறையினின்றும் வாளைப் பிடுங்கினர். மறித்தாரை - எதிரே வந்து வந்து தகைந்தபேரை; மறிந்தாரென்றது மெலித்தல், வலித்தல் - நினைத்தல்' என்பன பழையவுரை.

பி - ம். 1. நினைந்தாரென வெறிய; வெய்தாரென வெறிய; வெரியால்; வெறியா நினைந்தனவும்.
2. டயில் யாளிகொ டறுத்தே; டயில் வாளியி.
3. பறித்தாரையுஞ் சினத்தால் பறிந்தாரையும். (90)

452. வானத்தன கடலின்புற வலயத்தன மதிசூழ்
மீனத்தன மிளிர்கொண்டலின் மிசையத்தன மிடல்வெம்
கானத்தன மலையத்தன திசைமுற்றிய கரியின்
தானத்தன காகுத்தன சரமுந்திய சிரமே.

காகுத்தன - இராமபிரானுடைய, சரம் உந்திய - பாணங்களால் உந்தித் தள்ளப்பெற்ற, சிரமே - அரக்கர்களுடைய தலைகள், வானத்தன - ஆகாயத்தினிடமாயின; கடலின் புற வலயத்தன - கடல்களுக்கு அப்பால் உள்ள சக்கரவாளகிரிகளின் இடமாயின; மதி சூழ் மீனத்தன - சந்திரனைச் சூழ்ந்த நட்சத்திர மண்டலங்களின் இடமாயின; மிளிர் கொண்டலின் மிசையத்தன - ஒளிரும் மேக மண்டலங்களின் மேலாயின; மிடல் வெம் கானத்தன - வலிமையும் கொடுமையும் பொருந்திய காடுகளின் இடமாயின; மலையத்தன - மலைகளின் இடமாயின; திசை முற்றிய - திக்குக்களின் கோடியில்

உள்ள, கரியின் - யானைகளின், தானத்தன - இடத்தை அடைந் தவை யாயின.

கடலின் புற வலயம் - எல்லைப்புறக் கடல்களும் ஆம். கரியின் தானத்தன - யானைகளின் மதப் பெருக்குகளின் இடமாயின என்றலும் ஏற்கும்.

பி - ம். 1. கடலிற் புற வலியத்தன ; கடலிற்பிற வலயத்தன ; கடலின் வரு மலயத்தன ; மதிதோய்.

2. குண்டல மிதுனத்தன மிளிர்வெங்.

3. திசை சுற்றிய ; திசை வைத்திடு. *(91)*

453. மண்மேலன மலைமேலன மழைமேலன மதிதோய்
விண்மேலன நெடுவேலையி னிடமேலன மிடலோர்
புண்மேலன குருதிப்பொரு திரையாறுகள் பொங்கத்
திண்மேருவை நகுமார்பினை யுருவுந்தெரி சரமே.

திண் மேருவை நகு - வலிய மேருமலையை இகழும், மார்பினை - அரக்கர்களுடைய மார்புகளை, உருவும் தெரி சரம் - ஊடுருவிச் செல்லும் இராமபிரான் தேர்ந்துவிட்ட அம்புகள், பொரு திரை குருதி ஆறுகள் - மோதுகின்ற அலைகளோடு கூடிய இரத்த ஆறுகள், பொங்க - மேற்கிளம்பிப் பெருக, மண் மேலன - தரைமீது உள்ளன ஆயின ; மலை மேலன - மலைகளின் மீது உள்ளன ஆயின ; மழை மேலன - மேக மண்டலங்களின் மீது உள்ளன ஆயின ; மதி தோய் விண் மேலன - சந்திரன் பொருந்தி விளங்கும் ஆகாயத் தின்மேல் உள்ளன ஆயின ; நெடு வேலையின் இடம் மேலன - நெடிய கடல் இடங்களின்மேல் உள்ளன ஆயின ; மிடலோர் புண் மேலன - போரில் இறந்த வலிய அரக்கர் தம் தசைமீது உள்ளனவும் ஆயின.

மண்முதல், மிடலோர் புண் வரை மேலனவாய் நின்றன என இயைக்க. மார்பினை உருவும் தெரிசரம் : ஒப்பு. பால. தாடகை : 73, அரக்கர்கள் மார்புகளுக்கு மேருமலை ஒப்பு, அதன் திண்மையாலும் பெருமையாலும் என்க. மார்புகளை மேரு மலையாக உவமித்ததற் கேற்ப, அம் மார்புகளினின்றும் இராம பாணங்களால் பிளக்கப்பட்ட புண்களினின்று பெருகி யோடிய இரத்தப் பெருக்குக்கள், மலை யருவிகளாக விசேடிக்கப் பெற்றன. பொரு திரை குருதி ஆறுகள் என மாற்றிப் பொருள் கொள்ளப்பெற்றது. நகு : என்பதை

உவமை வாசகமாகக்கொண்டு ஒத்த என்று பொருள் கொள்ளலும் ஒன்றும்.

பி - ம். 1. மண் மேலன மழை மேலன வரை மேலன மதிதோய்.
2. விடமேயின; மேல் கிழன மிடலோர்; வேலையின் விட மேலன; விண் மேலன விழி மேலன மேல் கிழெனமிடலோர்.
3. புண் மேலுகு குருதிப் பொரு; திரை மேலன பொங்கத்; குருதிப் பொழி திரை யாறுகள் பொழியத்.
4. நகு மார்புக ளுருவித் திரி சரமே; யுருவத் தெரி சரமே; (92)

454. பொலந்தாரின ரனலின்சிகை பொழிகண்ணின ரெவரும்
வலந்தாங்கிய வடிவெம்படை விடுவார்சர மழையால்
உலந்தாருடல் கடலோடுற வுலவாருட லுற்றார்
அலந்தார்நிசி சரராமென விமையோரொடு மார்த்தார்.

பொலம் தாரினர் - அழகிய மாலை யணிந்தவர்களும், அனலின் சிகை பொழி கண்ணினர் - நெருப்பின் சுடர்களைச் சிந்துகின்ற கண்களையுடையவர்களுமாய், வடி வெம் படை விடுவார் - கூரிய கொடிய போர்க்கருவிகளை (இராமபிரான்மீது) விடுபவர்களான, எவரும் - அரக்கர்கள் யாவரும், சர மழையால் - (இராமபிரான்) தூண்டிய அம்பு மழையால், உடல் கடல் ஒடு உற - தம் உடல்கள் கடலோடு போய் அடைய, உலந்தார் - இறந்தனராகி, உலவா உடல் உற்றார் - (பின்) அழியாத தேவ உடலை அடைந்தவர்களாய், இமையோர் ஒடும் - அத் தேவர்களோடும் சேர்ந்து, 'நிசிசரர் அலந்தார் ஆம் என ஆர்த்தார் - 'இராக்கதர்கள் அழிந்தார்' என்று மகிழ்ச்சியால் ஆரவாரஞ் செய்தனர்.

பொலம் தாரினர் - பொன்னாலான மாலை யணிந்தவர் என்னலும் ஒன்றும். அனலின் சிகை - நெருப்புப்போன்ற குஞ்சி எனலும் ஆம். 'அனலின் சிகை - தீயின் நாக்கு' என்பது பழையவுரை. வலந் தாங்கிய வடிவெம் படை விடுவார் சர மழையால் என்றே கொண்டு, இராமபிரான் விடுத்த சரமழையால் என்றும் பொருள் கொள்ளலாம். அவ்வாறு கொள்ளும்போது, படை என்பது சரத்தையே குறிக்கும். அரக்கர்கள் இராம பாணங்களால் அடிபட்டுத் தம் உடல்கள் கடலிற் போயடைய, தாம் அழியாத் தேவர் உருவுடன் வானடைந்து தாம் அரக்கர்களாய் இருந்த காலத்திருந்த பகைமைக்குணம் மாறி, மற்ற தேவர்களுடன் சேர்ந்து, 'அரக்கர்கள் அழிந்தனர்' என்று மகிழ்ச்சியால் பேராரவாரம் செய்தனர் என்பதாம். உடல்கள் கடலைச் சார்தல்,

நூளா. சுயம்வர : 130. தேவருலகு - வீரசுவர்க்கம். 'நிசி சரர் - இரவிற் சஞ்சரிப்பவர் என்னும் பொருளால் அரக்கரைக் குறிப்பது. அரக்கர்கள் தேவராகி, அரக்கரையே இழித்தல்; 482, 483, 484, ஒப்பு : தக்க. 561.

பி - ம். 1. பொலங் தாங்கினர்; பொதி கண்ணினர்.
2. வய வெம்படை.
3. கடலோடின குருதிப்புன லுயிரற்; கடலோருற; வுலவாவுயிர் விட்டார்.
4. அலைந்தார்; இமையோரெடுத் தார்த்தார்; இறையோரெடுத் தார்த்தார். (93)

455. ஈரற்செறி கமலத்தன விரதக்குறை புளினம்
வீரக்கரி முதலைக்குல விடுபாய்பரி குரம்பாப்
பாரக்குடர் மிடைபாசடை படர்கின்றன பலவா
மூரித்திரை யுதிரக்குள முழுகிக்கழு தெழுமே.

ஈரல் - (இறந்த அரக்கர்களுடைய) ஈரல்கள், செறி கமலத்தன - நிறைந்த தாமரை மலர்களாகவும், இரத குறை - அழிந்த தேர்களின் குறைகள், புளினம் - மணல் திட்டுக்களாகவும், வீர கரி - வீரத்தோடு பொருதழிந்த யானைகள், முதலை குலம் - முதலைகளாகவும், பாய் பரி - பாயும் குதிரைகள், விடு - அங்குப் பாசனத்திற்காகக் கட்டிவிடப்பட்ட, குரம்பா - அணைகளாகவும், பார குடர் - வலிய குடர்கள், மிடை - நெருங்கிய, பல பாசடை ஆ - பல் பசிய இலைகள் ஆகவும் கொண்ட, மூரி திரை - வலிய அலைகளோடு கூடிய, உதிர குளம் - இரத்தக் குளத்தில், கழுது முழுகி எழுவ - பேய்கள் முழுகி எழுந்து நீராடி மகிழ்ந்தன.

இராம பாணங்களால் இறந்த அரக்கர்களுடைய இரத்தம் நிறைந்த குளத்தில், அன்னோர், ஈரல்களே தாமரை மலர்களாகவும், குடல்களே கொடிகளாகவும், தாமரை யிலைகளாகவும், தேர்க் குறைகள் மணற்றிட்டுகளாகவும், வீழ்ந்த யானைகளே முதலைகளாகவும், குதிரைகள், பாசன அணைகளாகவும், இரத்தமே நீராகவும் அமைய, அங்குப் பேய்கள் முழுகி எழுந்து விளையாடின என முற்று உவமை அணியில் விளக்கப்பெற்றது. இரத்த வெள்ளத்தில் கழுதுகள் குளித்தல்; சுந்தர. 659; 662; சீவக. 804. யானைக்கு முதலை; 481. குரம்பு - நீர் தடுக்கும் அணை; பால. நாட்டுப் : 2. 'ஈரல் - மாங்கி

சம். புளினம் - புள்ளின் கூட்டமும், மணல் மேடுமாம்'; இவை பழையவுரை.

பி - ம். 1. விரதத்திரள் புளினம்; இரைக்கின்ற புளினம்; கமலத்தினின் மிளிர்கின்றன விடையாப்; முதலைக்குல மிதக்கின்றன வுதிக்கும்.
2. விடுபாய் புறம்பாய்; விடுபொற்றிரள்.
3. படர் பாசிகள் பயில்கின்றன பரக்கும்; படைக்கின்றனர் பலவா.
4. யுதிரக்கடன்..............தெழவே; தெழுமே. (94)

456. அழைத்தார்சில ரார்த்தார்சில ரழிந்தார்சிலர் கழிந்தார்
உழைத்தார்சில ருயிர்த்தார்சில ருருண்டார்சிலர் புரண்டார்
குழைத்தாழ்திரைக் குருதிக்கடற் குளித்தார்சிலர் கொலைவாய்
மழைத்தாரைகள் படப்பாரிடை மடிந்தார்சில ருடைந்தார்.

கொலை வாய் மழை தாரைகள்பட - பகைவர்களைக் கொல்லும் தன்மை பெற்ற மழைவருஷம் போல் இராமபிரானால் தூண்டப்பட்ட அம்புகள் மேல் வந்து தாக்கினமையால், சிலர் அழைத்தார் - சில அரக்க வீரர்கள் தம் உறவினர் பேர்களைக் கூவி அழைப்பாராயினர்; சிலர் ஆர்த்தார் - சிலர் பெருங் கூச்சலிட்டனர்; சிலர் அழிந்தார் - சிலர் இறந்தழிந்தனர்; சிலர் கழிந்தார்-சில்ர் அவ்விடம் விட்டோடினர்; சிலர் உழைத்தார் - சிலர் வருந்தினர்; சிலர் உயிர்த்தார் - சிலர் பெரு மூச்சுவிட்டனர்; சிலர் உருண்டார் - சிலர் உருண்டோடினர்; சிலர் புரண்டார் - சிலர் புரண்டு தத்தளித்தனர்; குழை தாழ் திரை குருதி கடல் - சேறு ஆழ்ந்து திரைகளோடு கூடிய இரத்தக் கடலில், சிலர் குளித்தார்-சிலர் மூழ்கி வருந்தினர்; சிலர் பார் இடை மடிந்தார், உடைந்தார் - சிலர் பூமியில் விழுந்து, உயிர் இழந்தவரும், தோற்று ஓடினவரும் ஆயினர்.

கொலைவாய் மழை என்ற குறிப்பால், தாரைகள், அம்பு மாரி யைக் குறித்தன. அழைத்தல்: 'ஐயோ! அப்பா!' வென்று வாய் விட்டுக் கூவுதல். கழிந்தார் என்பதற்கு, நிலைதவறி மலசலாதிகளைக் கழித்தனர் எனப் பொருள் கொண்டாரும் உளர். உழைத்தல் - வருந்துதல்; 'உழைத்தவல் லிருவினைக் கூறு காண்கிலாது' (கிட்கிந்தா. வாலிவதைப்; 22); 'உழைக்கன்றேபோலே நோக்க முடையவர் வலை யுட்பட் டுழைக்கின்றேற்கு,'' (திருமாலை. 36.); குழைத்து ஆழ்திரைக் குருதிக்கடல் எனப் பிரித்தும் பொருள் கொள்ளலாம். உடைந்தார் - உடல் சின்னபின்னமாக்கப் பெற்றனர் எனவும், உறுதிநிலை தளர்ந்

தனர் எனவும் பொருள் கொள்ளலாம். முன் செய்யுளில் குருதிக் குளம்' ஆகியிருந்தது, இச் செய்யுளில் 'கடலாகிப் பொங்கியது' என்க. சில சுவடிகளில் இச் செய்யுள் இடம் மாறியுள்ளது.

பி - ம். 1. அழைத்தார் சிலரயர்ந்தார்.
2. உழைத்தார் சில ருரைத்தார்.
3. குழைத்தாடிரைக்; குழைத்தாடின; குழைத்தோடின கோலா; குளிர்மா; பாரிடை மருண்டார; படர்பாரிடை. (95)

**படைத்தலைவர் பதினல்வர் நின்று போரிட்டுமடிதல் 457—75**

457. உடைத்தார்களை நகைசெய்தன ருருடேரின ருடனாய்
அடைந்தார்படைத் தலைவீரர்கள் பதினல்வரு மயில்வாள்
மிடைந்தார்நெடுங் கடற்றானையர் மிடல்வில்லினர் விரிநீர்
கடைந்தார்வெரு வுறமீதெழு கடுவாமெனக் கொடியார்.

விரி நீர் - பரந்த பாற்கடலை, கடைந்தார் - கடைந்த தேவாசுரர்கள், வெருவு உற - அச்சங்கொள்ள, மீது எழு - மேற்கிளம்பிவந்த, கடு ஆம் என கொடியார் - விஷமேபோலக் கொடுமையுள்ளவர்களான, படைத்தலைவீரர்கள் பதினல்வரும் - அவ்வரக்கர் படைத்தலைவர்களான வீரர்கள் பதினல்வர்களும், உடனாய் - ஒருமிக்க, உடைந்தார்களை நகை செய்தனர் - தம்முள் தோற்றோடியவர்களைப் பார்த்து இகழ்ச்சி தோன்ற நகைத்தவர்களாய், உருள் தேரினர் - சக்கரங்களையுடைய தேர்மீது ஏறினவர்களாய், அயில்வாள் மிடைந்து ஆர் - வேலும் வாளும் கொண்டு நெருங்கின, நெடும் கடல் தானையார் - பெருங்கடல் போன்ற சேனையை யுடையவர்களாய், மிடல் வில்லினர் வலிமையுற்ற வில்லினர்களாய், உடனாய் அடைந்தார் - ஒன்றுகூடி அப்பொருகளத்தை அடைந்தார்கள்.

கடைந்தார் என்றமையால், விரி நீர் என்பது பாற்கடல் எனக் கொள்ளப்பட்டது, படைத்தலைவர்க்குப் பாற்கடலில் எழுந்த கடு உவமை. கடற்றானையர் என்றமையால், அவர்களுடன் வந்த அரக்கர் படைக்குக் கடல் உவமை. இனி, பாற்கடலை நீர்க்கடலாகக் கூறுவதும் உண்டு; படைத்தலைவர் பதினல்வர் கரனுடன் வந்தவர், *398, 410*: இவர் முன் வந்துபட்ட *(371, 381)* இருபதினல்வரினும் வேறானவர்.

பி - ம். 1. ருடனாங். 2. கடைந்தா.
4. விரிவுறமீதெழு; வெழுங்கடுவா மெனக் கனன்றார். (96)

458. நாகத்தனி யொருவில்லியை நளிமுப்புர முன்னாள்
மாகத்திடை வளையுற்றன வெனவள்ளலை மதியார்
ஆகத்தெழு கனல்கண்வழி யுகவுற்றெதி ரழன்றார்
மேகத்தனி நெடுவில்லியை வளைத்தார்செரு விளைத்தார்.

முன்னாள் - முன்னொருகாலத்தில், நாகம் தனி ஒரு வில்லியை - மேருமலையை ஒப்பற்ற ஒரு வில்லாகக் கொண்ட சிவபெருமானை, நளி முப்புரம் - பெரிய அசுரர்களுடைய மூன்று புரங்கள், மாகத்து இடை - ஆகாயத்திடையே, வளைவுற்றன என-வளைந்து கொண்டன போன்று, மேக தனி நெடு வில்லியை - காளமேகம்போன்ற நெடு வில்லேந்திய, வள்ளலை - வரையாது வழங்குபவனுமான இராம பிரானை, மதியார்-ஒரு பொருளாகக் கருதாதவர்களாய், ஆகத்து எழு கனல் - அவர்களுடைய உடலினின்று எழுந்த கோபக்கனல், கண் வழி உக உற்று - கண்களின் வழியே சிந்தப்பெற்று, எதிர் அழன்றார் - எதிரே கோபங்கொண்டு, வளைத்தார் - வளைத்துக்கொண்டவர்களாய், செரு விளைத்தார் - போரிட்டனர்.

முப்புரம் :- இரும்பினாலும் பொன்னாலும், செம்பினாலும் அமைந்தனவும் நினைத்த இடத்திற்கு எழுந்து ஏகக் கூடிய சக்தியமைந்தனவுமான கோட்டைகளால் அமைந்த ஊர்கள். இம் முப்புரங்களையும், அவற்றிற்குரிய வித்யுந்மாலி, தாருகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூன்று அசுரர்களையும் சிவபிரான் தம் சிரிப்பினால் தீ எழச் செய்து அழித்தனர் என்பது புராணவரலாறு. சிவபெருமானின் பெருமையை அறியாது, அவரை வளைத்துப் பின்பு அழிந்த திரிபுரர்கள்போல், அரக்கர்படைகள் இராமபிரானை வளைத்துநின்று அழிவுறனர் என்பது குறிப்பு. மேகத்தினை நிகர் வில்லி என்பதற்கு, காளமேகம் மழைபொழிவதுபோல அம்புகளைப் பொழியும் வில்லையுடையவன் எனப் பொருள் கொள்ளலும் அமையும்.

நாகம் பல பொருள் குறித்த ஒரு பெயர்த் திரிசொல்; இங்கு மலை என்னும் பொருளில் வந்தது; "பொன்னாகமு நாகமு நாண நடந்தான்' (பால. கார்முகப் : 32.) நளி - பெருமை : (பிங்.),

பி - ம். 1. நளிர்முப்புரர் முன்னாள் ; நளிமுப்புரர்.
2. யொருவில்லினில் ; வளைவுற்றனரென ; வளையுற்றனரென ; யொருவன்னளலை மதியா ; மடிவித்தவ னிகர்வள்ளலை.
3. கனல் கண் விழியுக ; கனலே விழியுக ; ஆகத்தெறு கனல் கண்ணுக வழன்றே பின்னு மரக்கர்.
4. யோகத்தெழு நெடுவில்லியை யுகவுற்றெதிர் நின்றார். (97)

459. எய்தார்பல ரெறிந்தார்பல ரெழுவோச்சினர் மழுவால்
பொய்தார்பலர் புடைத்தார்பலர் கிடைத்தார்பலர் பொருப்பால்
பெய்தார்மழை பிதிர்த்தா ரெரி பிறைவாளெயிற் றரக்கர்
வைதார்பலர் தெழித்தார்பலர் மலையாமென வளைத்தார்.

பிறை வாள் எயிற்று அரக்கர் - (அத்தலைவருடன் வந்த) பிறைச் சந்திரன் போன்று ஒளி தங்கிய வளைந்த பற்களையுடைய அரக்கர்களில், பலர் - பலபேர்கள், எய்தார் - இராமபிரான்மீது அம்புகளை எய்தனர்; பலர் எழு ஓச்சினர் - பல அரக்கர் எழு என்னும் உலக்கைபோன்ற போர்ப்படைகளைக் கொண்டு வீசினர்; பலர் மழுவால் பொய்தார் - பலர் மழு என்னும் கோடலிகளால் துளைத்தனர்; பலர் புடைத்தார்-பலர் ஆயுதங்கொண்டு அடித்தனர்; பலர் கிடைத்தார் - பலர் நெருங்கி வந்தனர்; பலர் பொருப்பால் மழை பெய்தார் - பலர் மலைகளைக் கொண்டு மழைபோல் வருஷித்தனர்; எரி பிதிர்த்தார்-(பலர்) நெருப்பைச் சொரிந்தார்கள்; பலர் வைதார் - பலர் வசை மொழிகளைக் கூறினர்; பலர் தெழித்தார் - பலர் அதட்டினார்கள்; மலை ஆம் என வளைத்தார் - (பலர்) மலைபோலவந்து சூழ்ந்து கொண்டனர்.

எழு - வளைதடியும் ஆம்: பொய்தல் - துளைத்தல்; சுந்தர. 912, 963. கிடைத்தல்-நெருங்குதல்; "கிடந்தானைக் கிடைத்திரு, தடங்கை கூப்பினன்" (கிட்கிந்தா. கிட்கிந்தைப்: 23); கிடைத்தல் எதிர்த்தலும் ஆம்; தெழித்தல் - அதட்டுதல்; சுந்தர. 466, 482, 'பொய்தார் - பொய்யொழுக்க முள்ளபேர். மழை பிதிர்த்தார் - கையினால் மழையைப் பிசைந்தார். வைதார் - இந்திரனுரை வைதார். தெழித்தார் முழங்கினார்': இவை பழைய உரை.

பி-ம். 1. ரெழுவோச்சினர் மழுவோச்சினர் பலவும்; மழுவோச்சினரெழுவால்; மழுவாள்.

2, கொய்தார்பலர் புடைத்தார்பல ரடர்த்தார் பலர் குன்றால்; பெய்தார்பலர்; வெய்தேபலா விடுதார் வெகுண்டெழுந்தே பலர் பொருப்பாற்; விடைத்தார் பலர் பொருப்பாற்; அடைத்தார் பலர் பொருப்பால்; பொருப்பாற்; பெய்தார் பலர் விதிர்த்தார் பலர்.

4. மழையாமென மலைந்தார்; மறித்தார் பலர் கடல் போல்பவர் வளைத்தார். (98)

460. தேர்பூண்டன விலங்கியாவையுஞ் சிலைபூண்டெழு கணையால்
பார்பூண்டன மதமாகரி பலிபூண்டன பரிமாத்
தார்பூண்டன வுடல்பூண்டில தலைவெங்கதிர் தழிவந்
தூர்பூண்டன பிரிந்தாலென விரிந்தாருயி ருலந்தார்.

சிலை பூண்டு எழு இராமபிரானது வில்லினின்றும் வெளியே எழும், கணையால் - அம்புகளால், தேர்பூண்டன - தேர்களில் பூட்டப் பட்ட, விலங்கு யாவையும் - விலங்குகள் எல்லாம், பார்பூண்டன - தரையில் விழுந்து இறந்தன; மத மா கரி பலி பூண்டன - மதங் கொண்ட பெரிய யானைகள் பலியிடப்பட்டன; தார்பூண்டன பரிமா - கிண்கிணி மாலையணிந்த குதிரைகள், உடல் தலை பூண்டில - உடல்களில் தம் தலைகள் பெறுதன ஆயின; (அங்ஙனமாகவே), செரு விளைத்தார் - போரிட்ட அவ்வரக்கர்கள், வெம்கதிர் தழிவந்து ஊர் பூண்டன - வெவ்விய சூரியனைத் தழுவிச் சூழ்ந்து ஊர்கோள் எனும் பரி வேடம் கொண்டது, பிரிந்தாலென - பிரிந்து சென்றது போல, உயிர் உலந்தார் - உயிர் இழந்து, விரிந்தார் - எங்கும் பரந்து கிடப்பாராயினர்.

மதமாகரி: இருபெயரொட்டுப்பண்புத்தொகையும் ஆம். தழி: தழுவி என்னும் வினையெச்சத்தின் மருஉச்சொல்: சீவக. 2026; இது தழீஇ என அளபெடுத்தும் வரும். இரிந்தார் உயிர் உலந் தார் எனப் பாடங்கொண்டு, இரிந்து ஓடுவாரும் உயிரழிந்தாரும் ஆயினர் எனவும் பொருள் கொள்வர். ஊர் - ஊர்கோள் என்னும் பரிவேடம்; 82; 431; கதிரவனைச் சூழ்ந்த ஊர்கோள் சடுதியில் பிரிவது போலக் இராமபிரானைச் சூழ்ந்துநின்ற அரக்கர் தொலைந் தனர் என்க.

பி - ம். 1. சிலை பூண்டன; கொலையால்.

3. வுடல் பூண்டிட தனிவெங்கதிர் தனைவந்; வுடல் பூண்டன தலை வெங்கதிர் திசையந்.

4. ஊர் பூண்டது; உலந்தார். (99)

**461.** மால்பொத்திய மறவோருடன் மலையொத்துட னழிசெம்
பால்பொத்தின நதியிற்கிளர் படியொத்தது பனிவான்
மேல்பொத்திய குழுவிண்ணவர் விழிபொத்தினர் விரைவெம்
கால்பொத்தினர் நமன்தூதுவர் கடிதுற்றுயிர் கவர்வார்.

மால் பொத்திய - மயக்கத்தால் மூடுண்ட, மறவோர் உடல் - வீரர்களாகிய அரக்கர்களுடைய உடம்புகள், மலை ஒத்து - மலைகள் போல் விளங்க, உடல் அழி - அவ்வுடல்களுடன் அழிந்து விழும், செம்பால் பொத்தின - இரத்தத்தால் மூடுண்ட, நதியில் - ஆறுகளினால், கிளர் படி ஒத்தது - பூமி விளங்கியது ஒத்தது; பனி வான் மேல் - குளிர்ந்த வானத்தின் மீது, பொத்திய குழு விண்ணவர் - நிறைந்த கூட்டமாய் உள்ள தேவர்கள், விழி பொத்தினர் - அப் போரின் உக்கிரத்தைக் கண்டு ஆற்றாது தம் விழிகளை மறைத்துக் கொள்வாராயினர்; நமன் தூதுவர் - யம தூதர்கள், கடிது உற்று உயிர் கவர்வார் - விரைந்து வந்து அரக்கர் உயிர்களைக் கவர்ந்து செல்வாராய், மிடல் வெம் - வலிய கொடுமை கொண்ட, கால் பொத்தினர் - தம் கால்களால் அப் பொருகளத்தை மூடினவர்களாயினர்.

மறவோரை மலைகளுக்கு உவமித்ததற்கு ஏற்ப, அவர்கள் உடல்களிலிருந்து பெருகியோடி விழுந்த இரத்த வெள்ளத்தை நதிகளாகக் கூறப்பெற்றது. விண்ணவர் விழி பொத்தியது - அப் போரின் கொடுமையைக் காணமுடியாமல், கண்களை மூடிக்கொள்ள இமைகள் இல்லாதவராதலின், கைகளால் பொத்திக்கொண்டனர் என்க. நமன் தூதுவர் கால் பொத்தியது - அவர்கள் மிகுதியையும், அவர்கள் கால்களால் அந்த ரணகளம் மூடுண்டதையும் அரக்கர்களின் அழிவு மிகுதியையும் அறிவிப்பது ஆகும்; பொத்துதல் மூடுதல் அல்லது மறைத்தல்: 44.

பி - ம். 1. மால் பொத்தின.........மழை பொத்தின வழி செம்; மழை பொத்தியவழி செம்; மழை யொத்துடன் றழீஇச் செம்.

2. பால் பொத்திய; படிபொத்தின படர்வான்; படிபொத்திய படர்வான்; படியொத்தினர் படர்வான்.

3. மேல் பொத்தின...............விரைவெம்; விழி பொத்தின மிடல் வெம்.

4. கால் பொத்தின நமன். (100)

**462.** பேயேறினர் செருவேட்டெழு பித்தேறினர் பிலவாய்த்
தீயேறிக லரியேறினர் கரியேறினர் செறிவாய்
நாயேறின தலைமேனெடு நரியேறின வெரிகால்
வாயேறிய வடிவாளியின் வானேறினர் வந்தார்.

பில வாய் - மலைக் குகைபோன்ற வாயையுடைய, தீ ஏறு இகல் அரி ஏறினர் - பெரு நெருப்புப் போன்று போரிடும் ஆண் சிங்கத்தின் மீது ஏறினவர்களும், கரி ஏறினர் - யானைமிது ஏறினவர்களுமாய், செரு வேட்டு எழு - போரை விரும்பி எழுகின்ற, பேய் ஏறினர் - பேய் பிடித்தவர்கள் போன்றும், பித்து ஏறினர் - பைத்தியம் பிடித்தவர்கள் போன்றும் வந்த அரக்கர்களுடைய, தலைமேல் - தலைகளின் மீதே, செறிவாய் - கூட்டமாக, நாய் ஏறின - பல நாய்கள் ஏறின; நெடு நரி ஏறின - பெரிய நரிகள் ஏறினவாய்ப் பற்றிக் கொண்டன; எரி கால் - நெருப்பைக் கக்கும், வாய் ஏறிய - வாயினால் தாக்கப்பட்ட, வடி வாளின் - கூரிய இராமபாணங்களால், (அடிபட்டு அவர்கள்) வான் ஏறினர் வந்தார் - வீர சுவர்க்கம் ஏறி வந்தனர் ஆயினர்.

இச்செய்யுளுக்கு வேறு விதமாகப் பொருள் கூறுவாரும் உளர். சில சுவடிகளில் இச் செய்யுள் அடிமாறிக் கிடக்கின்றது. போர் வெறியுடன் வந்து தாக்கியவர்கள், தம் உயிரிழந்து வீரசுவர்க்கம் புக்கனர் என்பது கூறப்பட்டது.

பி - ம். 1. பே யேறின........பனிவாய்; செருவேட்டொரு.
2. தீ யேறிக லரியேறினர்; தீயேறிக லரியேறென முகிலேறெனச் செறிந்தார்; தீயேறென வரியேறென விடியேறெனத் திறலோர்.
3. நாயேறிய தலைமேனெடு நரியேறின; நரியேறிட.
4. வாயேறிய வடி வாளியின் வானேறினர் வடவை; (101)

**463.** தலைசிந்தின விழிசிந்தின தழல்சிந்தின தரைமேல்
மலைசிந்தின படிசிந்தின வருசிந்துர மழைபோல்
சிலைசிந்தின கணைசிந்தின தேர்சிந்தின திசையூ
டுலைசிந்தின பொறிசிந்தின வுயிர்சிந்தின வுடலம்.

மழைபோல் சிலை சிந்தின கணை சிந்தின - மழை பெய்வது போல இராமபிரானுடைய வில் உமிழ்ந்த அம்புகள் சிதறின; (அதனால்), தலை சிந்தின - அரக்கர்களுடைய தலைகள் சிதறி வீழ்ந்தன; விழி

சிந்தின - அன்னோர் விழிகள் தெறித்து வீழ்ந்தன ; தழல் சிந்தின - அவ் விழிகளினின்றும் நெருப்பு சிந்துவன ஆயின ; வரு சிந்துரம் தரைமேல் மலை சிந்தினபடி போல் சிந்தின - போரில் எதிர்த்து வந்த யானைகள் தரைமீது மலைகள் சிதறி வீழ்ந்தனபோலச் சிதறி வீழ்ந்தன ; தேர் சிந்தின - அவ் வரக்கர்களுடைய தேர்களும் சிதைந்து வீழ்ந்தன ; திசை ஊடு - திசைகளின் நெடுக, உலை சிந்தின பொறி சிந்தின - கொல்லுலையிலிருந்து சிந்தினபோலத் தீப்பொறிகள் சிந்தின ; உடலம் - அவ்வரக்கர்களுடைய உடல்கள், உயிர் சிந்தின - உயிர்களைச் சிந்துவன ஆயின.

தலை சிந்தின விழி சிந்தின தழல் சிந்தின என்பனவற்றையும் சிந்துரத்திற்கே கூட்டியும் யுரைக்கலாம். சிந்துரம் - யானை. (பிங்).

பி - ம். 1. வுடல்சிந்தின வாயின.
2. சிந்துர மலைபோற் ; சிந்துர மமலன்.
3. கணை சிந்தையி னறமொன்றில ரிறயே ; வலிசிந்தின திசையோ ; வணி சிந்தின திசையூ ; திசை சிந்தின திசையோ.
4. உலை சிந்தின ; பொறி சிந்தில ; உயிர் சிந்திட. (*102*)

வேறு

464. படைத்தலை வருமவர் படைத்த தேர்களும்
உடைத்தடம் படைகளு மொழிய வுற்றெதிர்
விடைத்தடர்ந் தெதிர்ந்தவர் வீரன் வாளியால்
முடைத்தவெங் குருதியின் கடலின் மூழ்கினர்.

படைத் தலைவரும் - அவ் வரக்கர் படைத் தலைவர்களான பதினால்வரும், அவர் படைத்த தேர்களும் - அவர்கள் பெற்றிருந்த இரதங்களும், உடை தடம் படைகளும் - அவர்கள் கொண்ட பெரும் போர்க் கருவிகளும், ஒழிய - நீங்கலாக, உற்று - போர்களத்தில் வந்தடைந்து, எதிர் - இராமபிரான் எதிரே, விடைத்து - செருக்கு மேலிட்டு, அடர்த்து - நெருங்கித் தாக்கி, எதிர்ந்தவர் - எதிரிட்டுப் போர் புரிந்தவரான மற்ற அரக்கர் யாவரும், வீரன் வாளியால் - இராமபிரானுடைய அம்புகளால், முடைத்த - துர்க்கந்த மிக்க, குருதியின் கடலின் - இரத்தக் கடலிடையே, மூழ்கினர் - முழுகி இறந்தனர்.

படைத்தலைவர் பதினால்வர் ஒழிய, மற்ற அரக்கர்கள் இராமபிரான் கணைகளால் அடிபட்டு இரத்த வெள்ளத்தில் மூழ்கி

யிறந்தமை இங்குக் கூறப்பெற்றது. விடைத்து - விடைபோல் துள்ளி எனலும் ஆம். 'விடைத்து - கோபித்துக்கொண்டு' என்பது பழையவுரை.

பி - ம். 1. படைப் பெருந் தலைவரும் படைத்த; படைத்த சேனையும்; படைத்த தோள்களும்.

2. முடைய வுற்றெதிர்; மொருங்கு கொண்டுவர்.

3. தெதிர்ந்தவர்; மிடைத்தெதிர்ந் தடர்த்தவர்; தடுத்தமர் வினைத் தன ரமலன் வாளியால்.

4. முடைத்தடங் குருதி வெங்கடலின். (*103*)

465. சுற்றுற நோக்கினர் தொடர்ந்த சேனையில்
அற்றில தலையெனு மாக்கை கண்டிலர்
தெற்றின ரெயிறுக டிருகி னர்சின
முற்றின ரிராமனை முடுகு தேரினர்.

(தனித்து நின்ற அப் படைத்தலைவர் பதினால்வரும்), சுற்று உற நோக்கினர் - எல்லாப் பக்கங்களிலும் சுற்றிப் பார்த்தனர்; தொடர்ந்த சேனையில் - தம்மைத் தொடர்ந்து வந்த சேனைகளில், தலை அற்றில எனும் - தலை அறாதவை என்று சொல்லக்கூடிய, ஆக்கை கண்டிலர் - அரக்கருடைய உடல்களைக் காணாதவராயினர்; சினம் திருகினர் - கோபம் முறுகியவர்களாகி, எயிறுகள் தெற்றினர் - பற்களைக் கடித்தனர்; முடுகு தேரினர் - விரைந்து தூண்டிய தேர்களை யுடையவர்களாகி, இராமனை முற்றினர் - இராமபிரானைச் சூழ்ந்துகொண்டனர்.

சினம் திருகுதல், கோபத்தில் முறுக்கேறுதல்; 'திருகு சினத் தார்'; 728. எயிறு தெற்றுதல்; பற்களைக் கடித்தல்; இது கோபத்தால் உண்டாகும் மெய்ப்பாடுகளில் ஒன்று; எயிறு அலைத் தல், எயிறு தின்றல் என்றும் வழங்கப்பெறும். முதல் இரண்டு அடிகளால் சேனைத் தலைவர் பதினால்வர் ஒழிந்த மற்ற அரக்கர் படைவீரர் அனைவரும் இறந்தழிந்தமை விளங்கும்.

பி - ம். 2. அற்றிலாத் தலைபெறு மாக்கை; இற்றில தலை.

3. தெற்றின வெயிறினர்; தெற்றிடு மெயிறுதின் றிரைத்த வெஞ்சமர்.

4. உற்றன ரிராமனோ டுருத்தவ் வீரரே. (*104*)

466. ஏழிரு தேரும்வந் திமைப்பின் முன்பிடைச்
சூழ்வன கணைகளிற் றுணிய நூறினன்
ஆழியு மாணியும் மாளு மற்றவை
ஊழிவெங் காலெறி யோங்க லொத்தவே.

வந்து இடை சூழ்வன - பக்கத்தில் வந்து சூழ்ந்தனவான, ஏழ் இரு தேரும் - (அப் படைத்தலைவர்களுடைய) பதினான்கு தேர்களும், இமைப்பின் முன் - கண்ணிமைக்கும் நேர அளவுக்குள், கணைகளில் - தன் அம்புகளால், துணிய - துண்டுபடும்படி, நூறினன் - இராமபிரான் அழித்தான்; ஆழியும் ஆணியும் ஆளும் அற்று - சக்கரங்களும் அச்சாணிகளும் சாரதிகளும் அழிந்துபோக, அவை - அப் படைத் தலைவர்களுடைய பதினான்கு தேர்களும், ஊழி வெம் கால் எறி - கொடிய ஊழிக்காற்று தாக்கிய, ஓங்கல் ஒத்த - மலைகள் போல வீழ்ந் தழிந்தன.

ஊழிக்காற்று, இராம பாணத்திற்கும், தேர்கள், அழிந்து வீழும் மலைகளுக்கும் உவமை ஆயின. ஊழிக் காற்றில் மலைகள் சிதைந்து வீழ்தல்; 894; கிட்கிந்தா. மராமர : 125; வாலி வதைப் : 10. ஆள் - தேராள்; சாரதி : 495; தக்க. 563.

பி - ம். 1. திமைப்பின் முன்படை; திசைப்பின் முன்பிடைச்; முன்புறச்.
2. சூழ்வெங் கணைகளிற்.
3. ஆழியும் புரவியும்; ஆழியும் பூணியு மச்சு மற்றவை; ஆழியும் பூணியு மாளு மற்றவை.
4. கால்வழி யோங்க லொத்ததே. (105)

467. அழிந்தன தேரவ ரவனி கீண்டுக
இழிந்தனர் வரிசிலை யெடுத்த கையினர்
ஒழிந்திலர் சரங்களை யுருமி னேறெனப்
பொழிந்தனர் பொழிகனல் பொடிக்குங் கண்ணினர்.

தேர் அழிந்தன அவர் - தேர் அழிந்துபோன அப் படைத் தலைவர்கள், அவனி கீண்டு உக - பூமி பிளந்துவிடும்படி (அவ்வளவு வேகமும் வலிமையும் கொண்டு), இழிந்தனர் - கீழ் இறங்கினராகி, வரி சிலை எடுத்த கையினர் - கட்டுக்கள் அமைந்த வில்லை ஏந்திய கையை யுடையவர்களும், மிகு கனல் பொடிக்கும் கண்ணினர் - நெருப்பை மிகவும் சிந்துகின்ற கண்களை யுடையவர்களுமாகி, சரங்களை - அம்புகளை, ஒழிந்திலர் பொழிந்தனர் - இராமபிரான் மீது ஒழியாது தொடர்ந்து சொரிந்தார்கள்.

தேர் அழிந்துபோகவும், அப் படைத்தலைவர் பதினால்வரும் கீழிறங்கி, விற்களை வளைத்து இராமபிரான் மீது அம்புகளைப் பொழிந்தனர் என்பதாம். அழிந்தன தேர் அவர் இழிந்தனர் எனப் பிரித்துப் பொருள் கோடலும் ஒன்றும்.

பி-ம். 1. ரஜனி யீண்டுக; ரஜனி நீண்டுக.

2, இழிந்தன வரிசிலை; விழுந்தனர் வரிசிலை யெடுத்து வீசினர்.

3. ஒழிந்திலர் கணைகளை; ஒழிந்திலர் கதங்களை.

4. பொழிகனல் பொடிக்குங் கண்ணினர்; பொழிந்தனர் கணை களைப்; பொழிந்தனர் பொழிகனல் பொடிக்குங் கண்களால்; பொழிந்தனர் கணைகனல். (106)

468. நூறிய சரமெலா நுறுங்க வாளியால்
ஈறுசெய் தவர்சிலை யேழொ டேழையும்
ஆறினொ டாறுமோ ரிரண்டு மம்பினால்
கூறுசெய் தமர்த்தொழிற் கொதிப்பை நீக்கினான்.

சரம் எலாம் - அப்படைத் தலைவர்கள் தூண்டிய அம்புகள் எல்லாம், நூறிய நுறுங்க - அழிந்து பொடிகளாக, வாளியால் ஈறு செய்து - (இராமபிரான்) தன் அம்புகளால் அழித்து, அவர் சிலை ஏழொடு ஏழையும் - அவர்களுடைய வில்லுகள் பதினான்கையும், ஆறின்ஒடு ஆறும் ஓர் இரண்டும் - பதினான்கு அம்புகளால், கூறுசெய்து - துண்டுகளாக்கி, அமர் தொழில் கொதிப்பை - போர்த் தொழிலில் அவர்கள் மேற்கொண்ட கொடுமையை, நீக்கினான் - போக்கினான்.

நூறிய சரம் எலாம் என்றும் கூட்டிப் பொருள்கொள்ளலாம்.

பி-ம். 1. நறுங்க மேற்கொள; நுங்க வாளியால்; நறுங்கு வாளியால்.

3. ஆறுமோ ரிரண்டி னம்பினால்; ரிரண்டங் கம்பினால்; ரிரண்டு வாளியாற்.

4. கொதிப்பு நீக்கினான்; தமர்த்தொனிக் கொதிப்பு; தமர்த்தலைக் கொதிப்பை. (107)

469. வில்லிழந் தனைவரும் வெகுளி மீக்கொளக்
கல்லுயர் நெடுவரை கடிதி னேந்தினர்
ஒல்லையி னுருத்துயர் விசும்பி னோங்கிநின்
றெல்லையில் பொறியுக வெறிதன் மேயினர்.

அனைவரும் - அப்படைத் தலைவர் எல்லாரும், வில் இழந்து - தம் விற்களை இழந்து, வெகுளி மீ கொள - கோபம் மேலிட, கல் உயர் நெடுவரை - கல்லால் உயர்ந்த பெரிய மலைகளை, கடிதின் ஏந்தினர் - விரைவில் கையில் ஏந்தி எடுத்தவர்களாய், ஒல்லையின் - விரைவில், உருத்து - கோபித்து, உயர் விசும்பின் ஓங்கி நின்று - ஆகாயத்தில் உயர எழுந்து நின்று, எல்லையில் பொறி உக - அளவற்ற தீப் பொறிகள் சிந்த, எறிதல் மேயினர் - எறியத் தொடங்கினர்.

பி - ம். 1. மீக்கொள. 2. கல்லுறு நெடுவரை.
3. உருத்தவர் விசும்பின்; நோக்கி நின்.
4. எல்லுயர் பொறியுக; எல்லியல் பொறியுக; வெறியன் மேயினர். (108)

470. க்லைகளின் பெருங்கடல் கடந்த வில்லினன்
இலைகொள்வெம் பகழியே ழிரண்டு வாங்கினன்
கொலைகொள்வெஞ் சிலையொடு புருவங் கோட்டினன்
மலைகளுந் தலைகளும் விழுந்த மண்ணிலே.

கலைகளின் பெரும் கடல் - அறுபத்து நான்கு கலைகளாகிய பெருங்கடல்களை, கடந்த - கற்றுத் தேர்ந்த, வில்லினன் - வில்லையுடைய இராமபிரான், இலைகொள் - இலைகள் போன்ற அலகுகளைக் கொண்ட, வெம் பகழி - கொடிய பாணங்கள், ஏழ் இரண்டு - பதினான்கு, வாங்கினன் - எடுத்துக்கொண்டு, கொலை கொள் வெம் சிலை ஒடு - கொல்லும் தொழிலைக் கொண்ட கொடிய தன் வில்லோடு, புருவம் கோட்டினன் - தன் புருவங்களையும் வளைத்தான்; (அதனால்), மலைகளும் தலைகளும் மண்ணிலே விழுந்த - அவ்வரக்கர்கள் வீசியெறிந்த மலைகளும் அவர்கள் தலைகளும் தரையில் விழுந்தன.

சிலையொடு புருவங் கோட்ட, மலைகளொடு தலைகள் வீழ்ந்தன, என உடனவிற்சியணியில் கூறப் பெற்றதால், சிலையும் புருவமுங் கோட்டிய அளவிலே, அவர்கள் தலைகளும் ஏந்திய மலைகளும் அற்று விழுவன ஆயின என, விரைவின் நிகழ்ச்சியின் சிறப்பு அமைய வைத்தமை நோக்கற்பாலது. ஒப்பு: சுந்தர. 544. இராமபிரான் கலை

களின் பெருங்கடல் கடந்தவன்; அயோத். நகர்நீங்கு; 140; ஒப்பு. 'நுண்ணூ லாய்ந்தே கடந்தா னறிவென்னு மளக்கர்,' (பால. அரசியற்: 5.)

பி-ம். 1. கடந்த கல்வியான்.
2. பிரண்டு வாங்கினுன்; பிரண்டு வாங்கியே.
3. சிலைகொடு புருவங்; சிலையிடைக் கொழுவித் தாக்கினுன்.
4. மலைகள்போல் தலைகளும். (109)

471. படைத்தலை வீரர்கள் படலும் பல்படை
புடைத்தடர்த் தார்த்தெரி புகையுங் கண்ணினுர்
கிடைத்தன ரரக்கர்கள் கீழு மேலுமொய்த்
தடைத்தனர் திசைகளை யமர ரஞ்சினுர்.

படைத்தலை வீரர்கள் படலும் - படைத்தலைவர்களான வீரர் பதினுல்வரும் அவ்வாறு அழியவும், அரக்கர்கள் - மற்றுமுள்ள இராக்கதர்கள், பல் படை புடைத்து - தம் பலவகை ஆயுதங்களையும் தாக்கி வீசி, ஆர்த்து-ஆரவாரம் செய்து, எரி புகையும் கண்ணினுர் - நெருப்பு புகைந்து எழுகின்ற கண்களையுடையவர்களாய், கிடைத்தனர் - இராமபிரான் அருகில் வந்தவர்களாய், திசைகளை - நான்கு திசைகளையும், கீழும் மேலும் மொய்த்து, கீழும் மேலுமாக மொய்த்துக்கொண்டு, அடைத்தனர் - இடமில்லாமல் அடைத்துக்கொண்டனர்; அமரர் அஞ்சினுர் - அது கண்டு தேவர்கள் அச்சங்கொண்டனர்.

கிடைத்தல் - அருகே அணுகுதல்; 459 உரை. 'கிடைத்தனர்-எதிர்த்தனர்' என்பது பழையவுரை. படைத்தலைவர்களோடு வந்த வீரர்கள் யாவரும் அழிந்தனர் (465) என்று முன் கூறினமையால், இங்கு வந்தவர் வேறு என்பதாயிற்று.

பி-ம். 1. படைத்தலைத் தலைவர்கள்.
2. புடைத் தடர்த் தெதிரழல் புரையும்; புடைத்தடர்ந் தெதிரழல்; புடைத்தெடுத் தார்த்தெரி; புடைத்திடுத்தார்த்தெதிர்.
3. கீழுமேலுமாய். (110)

472. முழங்கின பெரும்பணை மூரி மால்கரி
முழங்கின வரிசிலை முடுகு நாணெலி
முழங்கின சங்கொலி புரவி மொய்த்துற
முழங்கின வரக்கர்தம் முகிலி னுர்ப்பரோ.

பெரும் பணை - பெரிய போர்முரசுகளும், மூரி மால் கரி - வலிய பெரிய யானைகளும், முழங்கின - பேரொலி செய்தன; வரி சிலை முடுகு

நாண் ஒலி - கட்டமைந்த வில்லுகளின் கடுமையான நாணின் ஒலிகளும், முழங்கின - முழக்கமிட்டன ; சங்கு ஒலி முழங்கின-சங்கநாதங்கள் ஒலித்தன ; புரவி மொய்த்து உற - குதிரைகள் அடர்ந்துவர, அரக்கர் தம் முகிலின் ஆர்ப்பு - அரக்கர்களுடைய மேகம்போன்ற கர்ச்சனை, முழங்கின - பேரொலி செய்தன ; அரோ : அசை.

சில சுவடிகளில் இதனுடன் கரன் படைத்தலைவர் வதம் முற்றும், அவற்றில், இனி வருவன, திரிசிரா வதைப்படலம்.

பி - ம். 1. மூரியமால்கரி ; மூரிமாகரி.
2. முடுகி நாணொலி ; முடுக்கு நாணொலி.
3. சங்கொடுபுரவி ; புரவிமுற்றுற.
4. முழங்கின ரரக்கர்கண் முகிலு மஞ்சவே. (111)

வேறு

அப்பொழுது எங்கும் நிகழ்ந்தவை

473. வெம்படை நிருதர் வீச விண்ணிடை மிடைந்த வீரன்
அம்பிடை யறுக்கச் சிந்தி யற்றன விழுமென் றஞ்சி
உம்பரு மிரியல் போன ருலகெலா முலைந்து சாய்ந்த
கம்பமி றிசையி னின்ற களிறுகண் ணிமைத்த வன்றே.

நிருதர் - அரக்கர்கள், வீச - வீசி எறிதலால், வெம் படை - கொடிய அப்படைக்கலன்கள், விண் இடை மிடைந்த - வானத்திடத்து நெருங்கினவற்றை, வீரன் - இரகுவீரனான இராமபிரானுடைய, அம்பு இடை அறுக்க - அம்புகள் அவற்றின் இடையே புகுந்து அறுத்ததால், சிந்தி அற்றன - சிந்தி அழிந்தவை, விழும் என்று அஞ்சி - தம்மேல் விழுந்து ஊறு செய்யும் என்று அஞ்சினவர்களாய், உம்பரும் -(அப்போரைப் பார்க்க வானிற் றிரண்டு நின்ற) தேவர்களும், இரியல் போனர் - நிலைகெட்டு விழுந்து ஓடினர் ; உலகு எலாம் உலைந்து சாய்ந்த - மற்ற உலகத்துள்ளோரும் நிலைதளர்ந்து நடுங்கித் தளர்வுற்றனர் ; கம்பம் இல் திசையில் நின்ற களிறும் - நடுக்கம் என்பது இல்லாத திசைகளைச் சுமந்து நின்ற திக்கஜங்களும், கண் இமைத்த - அச்சத்தால் கண்களை மூடிக் கொண்டன. அன்று, ஏ : அசைகள்.

நிருதர் வீச விண்ணிடை மிடைந்த வெம்படை என மாற்றி இயைக்க. உம்பரும், களிறும் ; இவற்றின் உம்மைகள் உயர்வு சிறப்பின. கம்பம் இல் திசையில் நின்ற களிறு - கம்பத்திற் கட்டப்படுவ

இன்றித் திசைகளில் நின்ற யானைகள் எனப் பொருள் கொள்ளலும் ஒன்றும். இச் செய்யுள் தொடர்பு நவிற்சி யணியின் பாற்படும்.

இச் செய்யுளுடன் கரன்படைத்தலைவர் பதினால்வரின் வதை கூறப்பட்டதென்க. ஒரு சுவடியில் இதனுடன் கரன் படைத்தலைவர் வதைப்படலம் முற்றும் எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது.

பி-ம். 1. நிருதர் வீசி.

2. அம்பிடை யிறுக்கச்; அம்பின லறுக்கச்; யற்றன படுமென்றஞ்சி.

3. ரிமையவ ருலகமெஞ்சக் ; முலைந்து சிந்திக்.

4. கம்பித்த திசையினின்ற.........னிமைத்த தன்றே ; ணடைத்த வன்றே. (112)

வேறு

திரிசிராவின் படைஞர் போரிட்டு அழிந்தது 474—97

474. அத்தலைத் தானையன் னளவி லாற்றலன்
முத்தலைக் குரிசில்பொன் முடியன் முக்கணன்
கைத்தலைச் சூலமே யனைய காட்சியான்
வைத்தலைப் பகழியான் மழைசெய் வில்லினன்.

அத்தலை-அப்பொழுது, அளவில் தானையன்-அளவில்லாத சேனைகளை உடையவனும், ஆற்றலன் - (அவ்வாறே கணக்கிட்டுச் சொல்ல முடியாத) வலிமையுடையவனும், பொன்முடியன் - பொன்னாலான கிரீடத்தையுடையவனுமான, முத்தலை குரிசில்-மூன்று தலைகளுடைமையால் திரிசிரா எனும் பெயர் பெற்றவனும், முக்கணன் - மூன்று கண்களையுடைய சிவபெருமானுடைய, கை தலை - கையிடத்துள்ள, சூலமே அனைய காட்சியான் - சூலமே போன்ற தோற்றத்தையுடையவனும், வை தலை பகழியான் - கூரிய தலைகளை யுடைய அம்புகளை யுடையவனும், மழை செய் வில்லினன் - மழைபோல் அம்புகளைப் பொழியும் வில்லையுடையவனும்,

இதுவும் அடுத்த செய்யுளும் தொடர்ந்து குளகமாகி முடிவுறும். படைத் தலைவர் இறந்தபின் இராமபிரானோடு இதுகாறும் போரிட்டவர் திரிசிராவின் படைகள் என்று கொள்ளற் பாலது. மூன்று சிரங்களோடு விளங்கினவனாதலின் அவனுக்குச் சிவபிரானுடைய முத்தலைச் சூலம் உவமை ஆயிற்று. அவன்

சிவபிரான் திரி சூலம்போன்று வலிமையும் கொடுமையும் உடையவன் என்னலும் ஒன்றும். மழைசெய் வில், 492. இது முதல் 497 வரை திரிசிராவுக்கும் இராமபிரானுக்கும் நடந்த போரை விளக்குவது ஆகும்.

இராமபிரான் முதலில் தூடணனுடன் போர்புரிந்து அவனைக் கொன்று, பிறகு திரிசிராவுடன் போர்செய்து அவனை அழித்தானென வான்மீகம் கூறும். திரிசிரா கரனுடைய படைத்தலைவன் என்றும், தூடணன் அவன் தம்பி என்றும் அம் முதனூலால் அறியப்படுகின்றது ; 523ஆம் செய்யுளையும் நோக்குக.

பி - ம். 1. னளவிலாற்றலன் ; னளவிலாற்றன.
2. போர் முடிவின்; முக்கணன் குரிசிலான் முடிவின் முக்கணன்.
3. காட்சியான்.
4. மைத்தலைப்பகழியான் ; மலைசெய் வில்லினன். (113)

475. அன்னவ னடுவுற வூழி யாழியீ
தென்னவந் தெங்கணு மிரைத்த சேனையுள்
தன்னிகர் வீரனுந் தமியன் வில்லினன்
துன்னிரு ளிடையதோர் விளக்கிற் றோன்றினான்.

அன்னவன் - அத்தகைய திரிசிரா என்பவன், நடுவு உற-நடுவே பொருந்தியிருக்க, ஊழி ஆழி - ஊழிக்காலத்தில் பொங்கி எழும் கடல், ஈது என்ன வந்து - இது என்று சொல்லும்படி எழுந்துவந்து, எங்கணும் இரைத்த - எப்புறமும் முழங்கிக் கிளம்பிய, சேனை உள் - அவ்வரக்கர் சேனைக்குள்ளாக, தன் நிகர் வீரனும் - தனக்குத் தானே நிகரான இராமபிரானும், தமியன் வில்லினன் - தனியே ஒருவனாய் வில்லையுடையவனாய், துன் இருள் இடை - நெருங்கிய இருளின் இடையே, ஓர் விளக்கில் - ஒரு விளக்கைப்போல, தோன்றினான் - விளங்கினான்.

ஊழியிற் கடல் பொங்கி எழுதல் : கிட்கிந்தா. கலன்காண் ; 32 ; வாலிவதைப் : 43. இராமபிரான் தனக்குத்தானே நிகரானவன் ; எதிர்கோட் : 19. இராமபிரான் இருளிடை விளக்குப் போன்றவன் ; 'இருளுடை வைகலேம் இரவி தோன்றினாய்' 133. என்று தண்டகாரணிய முனிவர்கள் இராமபிரானைக் கூறிப் பாராட்டியது இங்கு ஒப்பு நோக்கற்பாலது.

பி - ம். 2. சேனைவாய்.
3. தன்னிகராயினான் ; தனித்தவில்லினன்.
4. துன்னிருள் துடைப்பதோர் ; துன்னிரு ளுடையதோர். (114)

476. ஓங்கிய வாளின னுருமி னார்ப்பினன்
வீங்கிய வேகத்தன் வெய்ய கண்ணினன்
ஆங்கவ னணிக்கெதி ரணிக ளாகநேர்
தாங்கின னிராமனுஞ் சரத்தின் றானையால்.

ஓங்கிய வாளினன் - வீசுவதற்கு ஓங்கிய வாளையுடையவனும், உருமின் ஆர்ப்பினன் - இடிபோன்ற பேரொலியுடையவனும், வீங்கிய வேகத்தன் - மிகுந்த வேகத்தையுடையவனும், வெய்ய கண்ணினன் - கொடிய கண்களை யுடையவனுமான, ஆங்கு அவன் - அங்கு வந்த திரிசிரா என்பவனுடைய, அணிக்கு-சேனையணிகளுக்கு, நேர்-எதிரே, அணிகள் ஆக - சேனையணிகளாக, சரத்தின் தானையால் - தன் பாணங்களாகிய சேனைகளைக்கொண்டு, நேர் தாங்கினன்-இராமபிரான் எதிரிட்டு நின்றான்.

திரிசிராவுடைய படைகளுக்கு எதிராக இராமபிரான் தன் அம்புகளையே படையணிகளாக வகுத்து எதிர்த்து நின்றான் என்பதாம், சரத்தின் தானையால் என்றமையால், பகைவன் படைகள் தன்னிடம் அணுகமுடியாதபடி தனது அம்புத் தொகுதிகளையே அணிவகுத்தாற்போலே நிறுத்தி யெதிர்த்து நின்றான் இராமபிரான் என்றும், அரக்கனது பல்வகை சேனையைத் தடுக்கத் தன்னிடம் போதிய படை இல்லாக் குறையை இராமபிரான் தன் அம்புத்தொகுதிகளால் நிரப்பித் தடுத்து எதிர்த்தான் என்றும் திறம்பெற இங்கு விளக்கப்பெற்றது நயம். படைகளே சேனை ஆனமை; இதனுடன் அநுமன் அங்கங்களே படைகளானமையை சுந்தர. 833 ஒப்பிடுக.

பி-ம். 1. ஓங்கொளி வாளினன்; ஓங்கொளி யாளினர்; னார்ப்பினர்.
2. வீங்கிய வேகத்தர் வெய்ய கண்ணினர்.
3. ரணிகளாக்கிநேர்.
4. சரத்தி னானையால். (115)

477. தாளிடை யற்றன தலையு மற்றன
தோளிடை யற்றன தொடைக ளற்றன
வாளிடை யற்றன மழுவு மற்றன
கோளிடை யற்றன குடைக ளற்றன.

(அங்ஙனம் இராமபிரான் எதிர் தூண்டிய அம்புகள் தாக்க), தாள் இடை அற்றன - (அரக்கர்களுடைய) கால்கள் நடுவே அற்று வீழ்ந்தன ஆயின; தலையும் அற்றன - அவ்வரக்கருடைய தலைகளும்

அழிந்து போயின ; தோள் இடை அற்றன - இடையே பல அரக்கர்கள்தம் தோள்களும் அறுந்தன ; தொடைகள் அற்றன - பலர் தொடைகளும் துண்டிக்கப்பட்டுப் போயின ; வாள் இடை அற்றன - வாள்களும் பல சிதைந்தன ; மழுவும் அற்றன - கோடாலி களும் அழிந்தன ; கோள் இடை அற்றன - அன்னோர் வலியும் இடையே அற்றழிந்தது; குடையும் அற்றன - அவ்வரக்கர்கள் குடை களும் அழிந்தன.

தோளிடையற்றன ; அதனால், அவர்கள் ஏந்திப் பொருத அம்பு களும், வாள்களும் மழுவும் அற்றன என்னலும் ஆம் ; தொடை, அம்பும் ஆம் கோள் - காம்பும் ஆம். சில பிரதிகளில், இச்செய்யுளின் இரண்டு மூன்றும் அடிகள், மூன்று இரண்டாம் அடிகளாக மாறி யுள்ளன. இச்செய்யுள் பொருளிசைமாறு அடிமறிமாற்றுப் பொருள் கோளின் பாற்படும்.

பி-ம். 2. தொடையு மற்றன.
3. மழுவோடற்றன ; மழுக்களற்றன ; வரிகளற்றன.
4. குடையுமற்றன. (116)

478. கொடியொடு கொடிஞ்சிறப் புரவிக் கூட்டறப்
படியொடு படிந்தன பருதித் தேர்ப்பணை
நெடியவெங் கடகரி புரண்ட நெற்றிவீழ்
இடியொடு மிடிந்துவீழ் சிகர மென்னவே.

பருதி தேர் பணை - வட்டவடிவமாய் அமைக்கப்பட்ட தேர்க்கூட் டங்கள், கொடி ஒடு கொடிஞ்சு இற-கொடிகளும், கொடிஞ்சு என்னும் உறுப்புக்களும் அற்று ஒடிய, புரவி கூட்டு அற - பூட்டப்பட்ட குதிரைகளின் கட்டு அற்றழிய, படி ஒடு படிந்தன - தரையிற் படிந்தனவாய் வீழ்ந்து அழிந்தன ; நெற்றி வீழ் - தன் உச்சியில் விழுந்த, இடி ஒடு இடிந்து வீழ் - இடியோடு இடிபட்டு நொறுங்கி வீழும், சிகரம் என்னவே-மலைச் சிகரங்களைப் போலவே, நெடிய வெம் கடகரி புரண்ட - உயர்ந்த கொடிய மதங்கொண்ட யானைகள் கீழே வீழ்ந்து புரண்டன.

பருதி : இது பரிதி எனவும் வழங்கும் ; பருதி-வட்டம் அல்லது உருளை. பருதித்தேர் - வட்டவடிவமான அல்லது உருளைகளுடைய தேர்கள் (பிங்.). கொடிஞ்சி - தேர்த்தட்டின் முன்னே கைக்குதவியாகத் தாமரைமொட்டு வடிவில் அமைத்துத் தொங்கவிட்டிருக்கும் ஓர் அழகிய உறுப்பு. "மணித்தேர்க் கொடிஞ்சி கையாற்பற்றி..........

வருவோன் '' (மணி. 4. 48-50). பணை - பணை என்பதன் இடைக் குறை. நெற்றி - தலையின் முன்புறம் அல்லது உச்சி. இடியினாற் ருக்குண்டு மலைச் சிகரங்கள் ஒடிந்து வீழ்ந்தனபோல யானைகள் இராமபாணங்களாற் ருக்குண்டு விழ்ந்தன ; இராம பாணத்திற்கு இடியும், யானைகளுக்கு மலைச்சிகரங்களும் உவமைகள்.

பி-ம். 1. கொடுஞ்சினைப்புரவி ; கொடிஞ்சிறைப்.
2. படியிடைப்படிந்தன பருத்ததேர் பணை ; தேர்பணை; படியொடு மடிந்தன பருத்ததொருபணை; படியிடைபடிந்தன பருதித்தேர்த் தொகை.
3. நெடியன கடகரி புரண்டநெற்றியின்.
4. இடிவிழ விடிந்துவீழ் ; இடிபட. (117)

479. அற்றன சிரமென வறித றேற்றலர்
கொற்றவெஞ் சிலைச்சரங் கோத்து வாங்குவார்
இற்றில தாளென வெழுந்து விண்ணினைப்
பற்றினர் மழையெனப் படைவ ழங்குவார்.

(சில அரக்கர்கள்), சிரம் அற்றன என - தம்தலைகள் அறுபட்டன என்று, அறிதல் தேற்றலர் - அறியாதவர்களாய், கொற்ற வெம் சிலை - தமது வலிமிக்க கொடிய விற்களில், சரம் கோத்து வாங்குவார்- அம்புகளைப் பூட்டித் தூண்டினார்கள்; தாள் இற்றில என - தம் கால் கள் அற்றுப்போனவை அறியாமல் அவை இருப்பனபோலக் கருதி, எழுந்து விண்ணினை பற்றினர் - எழுந்து ஆகாயத்தை அடைந்தவர் களாய், மழை என படை வழங்குவார் - மழைபெய்வதுபோல மிகுதி யாகத் தம் போர்க்கருவியைத் தூண்டிப் பெய்தனர்.

போரில் உண்டான ஊக்கத்தால் அரக்கர்கள், தம் தலைகளற்றன என்பதையும், கால்கள் அற்றன என்பதையும் உணராதவர்களாய்ச் சரங்களைப் பொழிந்தும், வானில் எழுந்தும் படைகளைத் தூண்டியும் பொருதனர் என்பதாம். தம் தலை அறுபட்ட பின்னும் உயிர் சிறிது நேரம் இருக்குமாதலின், அவ்வுயிர் உள்ளளவும் தம் போர்த் தொழிலேயன்றித் தம் உடனிலை யுணராத நிலையில் இருந்து பொருத வீராவேசம் இங்குக் குறிக்கப்பெற்றது. ஒப்பு. 'அடுசிலைப் பகழி தொடுத்துவிடப் புகுமளவினி லயலெதிர் விட்டவர் வெட்டின, உடல் சில விருதுணிபட்டன பட்டபின் ஒரு துணி கருது மிலக்கை யழிக்குமே' (கலிங்கத்துப்பரணி, 421.) ; 'பற்றிநின்றொரு வன்படை

வாளெதிர், உற்றவன்றலை சிந்திட வோச்சினன், அற்றதன்றலை கொண்டவனுந் தனைச், செற்றவன்றலை சிந்திட வீசினன்'' (வி-பா: முதற்போர்ச்: 31).

பி-ம். 1. 'வறியகிற்றிலார்'.

2. கோத்து வாங்குவர்.

3. இற்றவ ரிருதய ரெழுந்து; இற்றிலர் தாளென; இற்றில தானென வெழுவர் விண்ணினைப்; இற்றவர் தானென.

4. பற்றின மழையெனப். (118)

480. கேடகத் தடக்கைய கிரியின் றோற்றத்த
ஆடகக் கவசத்த கவந்த மாடுவ
பாடகத் தரம்பையர் மருளப் பல்வித
நாடகத் தொழிலன நாந்த கத்தன.

கவந்தம் ஆடுவ - அப்பொருகளத்தின் அரக்கர்களுடைய குறையுடல்கள் ஆடுபவை, கேடக தட கைய - கேடகம் என்னும் படையை ஏந்திய பெரிய கைகளையுடையன; கிரியின் தோற்றத்த - மலை போன்ற வடிவையுடையன; ஆடக கவசத்த - பொற்கவசங்களையுடையன; நாந்தகத்தன - வாள்களை ஏந்தினவாயின; பாடகத்து அரம்பையர் மருள - பாடகம் என்னும் காலணியுடைய அரம்பை முதலிய தேவமாதர்களும் கண்டு வியக்கும்படியான, பல்வித நாடக தொழிலன - பலவித நடனத் தொழில்களையுடையன.

அரம்பையர் என்பது பொதுவாக தேவமகளிரைக் குறிப்பதும் ஆம். கவந்த மாடுதல், 482; பால. வேள்விப்: 54; அயோத். கிளைகண்டு: 35; சுந்தர: 976, 977.

பி-ம். 1. தடக்கையர்; தடக்கையக்; றோற்றத்தர்.

2. கவசத்தர்; கவந்த மாய்வனைப்.

3. தரம்பையர் மகிழப் பல்வித.

4. தொழிலின; தொழிலினை நடிப்ப வொத்தவே; நந்தகத்தன; நடித்த தொத்தன; நாடகத்தொழில்களை நடிப்ப போன்றவே. (119)

481. கவரிவெண் குடையெனு நுரைய கைம்மலைச்
சுவரின கவந்தமாழ் சுழிய தண்டுறைப்
பவரினப் படுமணி குவிக்கும் பண்ணைய
உவரியைப் புதுக்கின வுதிர வாறரோ.

உதிர ஆறு- (இராமபாணங்களால் அறுப்புண்டு இறந்துபட்ட அரக்கர்படைகளின்) இரத்த ஆறுகள், கவரி வெண்குடை எனும் நுரைய - வெண்சாமரங்கள், வெண்குடைகள் என்ற நுரைகளை யுடையன; கைம்மலை சுவரின - இறந்த யானைகளாகிய பக்கச் சுவர்களை யுடையன; கவந்தம் ஆழ் சுழிய - குறையுடல்கள் ஆழத்தக்க சுழிகளை யுடையன; தண் துறை - குளிர்ந்த நீர்த்துறைகளினின்றும், பவர் இன - நெருங்கிய பலவகையான, படு மணி - தோன்றும் பல இரத்தினங்கள், குவிக்கும்-குவித்துக்கொண்டு வந்து ஒதுக்கும், பண்ணைய பல வயல்களை அருகில் உடையன; உவரியை புதுக்கின - கடலைப் புதுமையுறச்செய்தன. அரோ : அசை.

கைம்மலைச் சுவரின - அந்த இரத்த ஆற்றில் சில இடங்களில் ஒதுக்கப்பெற்றுக் கிடக்கும் யானையுடல்கள், சுவர்கள்போன்று விளங்கி, ஆற்றின் வெள்ளத்தைத் தடைப்படுத்தப் பக்கங்களில் ஆங்காங்குச் சில மதில்கள் எழுப்ப பெற்றிருப்பதை ஒத்தன என்பது இங்குக் குறிப்பிடப்பெற்றது. நதிக்கு அமைவதான, நுரை, சுவர், சுழி, பண்ணை, முதலியன இந்த இரத்த ஆற்றுக்கும் உள்ளன ஆயின என்பதாம். பண்ணை - கூட்டமும் ஆம். உவரியைப் புதுக்குதல், இரத்த வெள்ளம் நிரம்பியதால் அக்கடலின் நீனிறம் செந்நிறமாக, அதன் உவர்த் தன்மையும் நீங்கியது என்பதாம். பண்ணை- தோட்டமும் ஆம். இச்செய்யுளுக்கு ஒப்பு : சூளா. 1396.

பி - ம். 1. நுரைய கைமலை; நுரையக் கைமலை.
2. சுவறரு சுறவமாழ்சுழிய; கவந்தமாழ்சுழிய; சுவறரு சுறவமாச் சுழீஇய தண்டுறைப்; சுரித்தண்டுறைப்; சுழியத்தண்டுறை.
3. பருமணி குவிக்கும்; படுமணி குவிக்கப் பண்ணையப்.
4. வுதிர யாறரோ. (120)

482. சண்டவெங் கடுங்கணை தடியத் தாஞ்சில
திண்டிறல் வளையெயிற் றரக்கர் தேவராய்
வண்டுழல் புரிகுழல் மடந்தை மாரொடும்
கண்டனர் தம்முடைக் கவந்த நாடகம்.

சண்ட வெம் கடும் கணை - வலிய மிகக் கொடிய இராமபாணங்கள், தாம் தடிய - தாக்கிக் கொன்றமையால், சில திண் திறல் - சில மிக்க வலிமை வாய்ந்த, வளை எயிற்று அரக்கர் - வக்ர தந்தங்களையுடைய இராக்கதர்கள், தேவராய் - வீரசுவர்க்க முற்றுத் தேவர்களாகி, வண்டு உழல் புரி குழல் மடந்தைமார் ஒடும் - வண்டுகள் சுழன்று வரும் புரிகளாய்ப் பின்னப்பட்ட கூந்தலையுடைய தெய்வமகளிர்களோடும், தம் உடை கவந்த நாடகம் - தம்முடையனவான உடற்குறைகள் யுத்த களத்தில் ஆடும் கூத்தை, கண்டனர் - கண்டு மகிழ்வாராயினர். தாம் ; அசை.

அரக்கர்கள் இராமபாணம் பட்டு இறந்தவுடனே சுவர்க்கம் சென்றமையும், அவர்கள் தேவராக இருந்து தம்முடல் குறை உயுத்த களத்தில் ஆடுவதான, (அவை தம்முடல் தாமே என்று அறியாது), அக் கவந்த நாடகத்தைத் தமக்கு உரிய தேவமாதர்களுடன் கூடிநின்று பார்த்து மகிழ்ந்தமையும் கூறப்பெற்றன. இராமபாணம் பட்டிறந்தோர் விரைவில் துறக்க வாழ்வெய்தித் தெய்வமகளிரோடு மகிழ்ந்து வாழ்வர் என்பது இதனால் விளங்கும் ; இவ்வாறே அடுத்த இரண்டு செய்யுள்களிலும் உள்ளன காண்க.

பி - ம். 1. சண்ட வெங்கொடுங்கணை துணிப்ப ; தான்சில.
3. வண்டுழல் மலர்க்குழல்.
4. தம்முடைக் கவர்தமாடவே. *(121)*

483. ஆய்வளை மகளிரோ டமர ரீட்டத்தர்
தூயவெங் கடுங்கணை துணித்த தங்கடோள்
பேயொரு தலைகொளப் பிணங்கி வாய்விடா
நாயொரு தலைகொள நகையுற் ளூர்சிலர்.

ஆய் வளை மகளிரோடு - தேர்ந்தணிந்த வளையல்களையுடைய தெய்வமகளிரோடு, அமரர் ஈட்டத்தார் - தேவர்கள் கூட்டத்தினர்களாகிய சிலர் அரக்கர்கள், தூய வெம் கடும் கணை - பரிசுத்தமான இராமபிரானுடைய கொடிய பாணங்கள், துணித்த - துண்டுபடச் செய்த, தங்கள் தோள் - தம்முடைய தோள்களை, ஒரு தலை பேய் கொள - ஒருபுறம் பேய் பற்றியிழுக்க, பிணங்கி-அதனோடு எதிரிட்டு,

வாய்விடா ஒரு தலை நாய் கொள - அதனைத் தன் வாயிலிருந்து நழுவ விடாது ஒரு நாய் வேறொரு புறம்பற்றி யீர்க்க, (அதைக்கண்டு), நகையுற்றார் - வேடிக்கையாக நகைப்பாராயினர்.

பி-ம். 1. ஆயவர் மகளிரோ; அமரசுட்டத்தார்; சுட்டத்து; சுட்டத்த.
2. துணிப்பத்தங்கடோள்.
3. பிணங்கி வாய்களின்.
4. நகைகொள்வார் சிலர். (122)

484. தெரிகணை மூழ்கலிற் றிறந்த மார்பினர்
இருவினை கடந்துபோ யும்ப ரெய்தினார்
நிருதர்தம் பெரும்படை நெடிது நின்றவன்
ஒருவனென் றுள்ளத்தி னுலைவுற் றார்சிலர்.

தெரி கணை மூழ்கலில்-இராமபிரானால் தெரிந்து தூண்டப்பட்ட அம்புகள் உட்புகுந்தமையால், திறந்த மார்பினர் சிலர்-பிளக்கப்பட்ட மார்புகளையுடைய அரக்கர்களாகிய சிலர், இரு வினை கடந்து - தம் பெரும்பாவங்கள் நீங்கினவர்களாய், போய் உம்பர் எய்தினார் - போய்ச் சுவர்க்கம் அடைந்தவர்கள், 'நிருதர் தம் பெரும்படை நெடிது - இராக்கதர்களுடைய பெரும் சேனைகளோ மிக நீண்டுள்ளன; நின்ற வன் - இவர்களை எதிர்த்து நின்ற இராமபிரானோ, ஒருவன் என்று - துணையின்றி ஏகாங்கியாய் இருக்கின்றானே!' என்று, உள்ளத்தின் உலைவு உற்றார் - மனத்தில் இரக்கமும் அச்சமுமுற்று வருந்தினர்.

எய்தினார் உலைவுற்றார் என்க. அரக்கர் தேவரானவுடன், அத் தேவர்க்குரிய உயர்குணம் எய்தி இராமபிரான்பால் அன்புற்று வருந் தினர் என்க. இருவினைகடந்து என்பதற்கு, புண்ணிய பாவங்களா கிய இருவினைகள் நீங்கி எனப் பொருள் கொண்டாரும் உளர். புண் ணியம் பாவம் அற்றநிலை வீடு பேறாகிய மோட்சநிலையாதலின், அது துறக்கவாழ் வுற்றோர்க்கு உரியதன்று; ஆதலின் இருவினை என்ப தற்குத் தம் பெருந் தீவினை என்றே பொருள் கொள்ளப்பெற்றது. 'ஒருவன் - ஒப்பற்றவன்; பரமன். 'பலரென் றிருந்தோமே! ஒரு வன்றானென்றார்' என்பது பழையவுரை.

பி-ம். 1. யுருவிடத்திறந்த; வீழ்தலிற்றிறந்த.
3. கடிந்தபோய்; உருவினைக்கடந்து; போயும்பரெய்திய; யும்ப ரெய்தினார். 3. யிடையி னின்றவன்.
4. றுள்ளத்தி னுலைவுற்றாரரோ; றுள்ளத்தி னுணர்வுற்றார் சிலர். (123)

485. கைக்களி றனையவன் பகழி கண்டகர்
மெய்க்குலம் வேரொடுந் துடைத்து வீழ்த்தின
மைக்கரு மனத்தொரு வஞ்சன் மாண்பிலன்
பொய்க்கரி கூறிய கொடுஞ்சொற் போலவே.

மை கரு மனத்து - மைபோன்று இருண்ட மனத்தையுடைய, ஒரு வஞ்சன் மாண்பு இலன் - வஞ்சகத்தன்மையுடையவனும் உயர் குணம் இல்லாதவனுமான ஒருவனை, பொய் கரி கூறிய கொடும்சொல் போலவே - நீதி மன்றத்தில் பொய்ச் சாட்சி சொன்ன கொடும்சொல் அழிப்பதுபோல, கை களிறு அனையவன் - துதிக்கையையுடைய ஆண் யானைபோன்ற இராமபிரானுடைய, பகழி - அம்புகள், கண்டகர் - கொடியோர்களான அரக்கர்களுடைய, மெய் குலம் - உடற் கூட்டங் களை, வேர் ஒடும் துடைத்து வீழ்த்தின - வேரோடு அழித்துக் கீழே வீழ்த்தின.

பொய்க்கரி கூறினோரின் கொடுஞ்சொல் அவர் குலத்தை நாசம் செய்வதுபோல, இராமபிரானுடைய அம்புகள் அரக்கர்களுடைய குலத்தை வேரொடும் துடைத்தழித்தன என்பதாம். பொய்க்கரி கூறினவன் நரகிடை வீழந்து நெடுங்காலந் துயருறுவன் என்பது; அயோத். பள்ளிபடைப்: 102; சுந்தர. 808; உயுத்த. வருணனை வழிவேண்டு: 25; மூலபலவதைப். 145. ஒப்பு. 'வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே, பாதாள மூலி படருமே - மூதேவி, சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே, மன்றோரஞ் சொன்னா மனை' நல்வழி. 23. இன்னும், கலித். பாலை: 34 : 10; குறுந். 184 : 1; பழமொழி: 241; சிறுபஞ. 10; காண்க. கண்டகர் - முட்போல் கொடியவர். மெய்க்குலம்: இங்கு உடற்கூட்டத்தைக் குறித்தது.

பி-ம். 1. கைக்களிற்றன்னவன்; கைக்கரியன்னவன்; கைக்களிற்றனை யவன்; பகழிகண்டவர்.
2. துணித்து வீழ்த்தின.
3. மைக்கொடுமனத்தொரு; மாண்பிலா.
4. கடுஞ்சொற்போலவே; கொடுஞ்சொற்போனபோல். (124)

486. அஞ்சுதற் குறுபகை யறுத்த நீதியர்
தஞ்செனத் தன்மய மாக்குந் தன்மைபோல்
வஞ்சகத் தரக்கரை வளைத்து வள்ளருன்
செஞ்சரத் தூய்மையாற் றேவ ராக்கினுன்.

வள்ளல் - பரமோபகாரியாகிய இராமபிரான், அஞ்சுதற்கு உறு பகை அறுத்த - யாவரும் அஞ்சுவதற்கு இடமாக உள்ள காமமாதி யான பகைகளைக் களைந்த, நீதியர் - நீதிநெறியில் நின்ற ஞானியர், 'தஞ்சு என - நீவிரே புகலிடம்' என்று சரணம் அடைய, தன்மயம் ஆக்கும் தன்மைபோல் - அவர்களைத் தம்மொத்த நிலையில் வைக்கும் தன்மைபோல, வஞ்சகத்து அரக்கரை - கபடத்தன்மையுடைய அவ் வரக்கர்களை, வளைத்து - எங்கும் ஓடாமல் தடுத்து வளைத்துக் கொண்டு, செம் சர தூய்மையால் - தனது சிறந்த அம்புகளின் பரி சுத்தத் தன்மையால், தேவர் ஆக்கினுன் - தேவராகச் செய்தான்.

இச்செய்யுளில் இராமபிரான் தன்னைச் சரணடைந்த சாதுக் களைக் காப்பதுபோலவே, தனக்குத் துன்பமிழைத்த தீய அரக்கர் களுக்கும் நற்கதி அளித்தான் என்ற அரிய செய்தி காணக்கிடக்கின் றது. கரன், மாரீசன், இராவணன் முதலியோரும் இராமபிரான் தூய சரத்தால் நற்கதி அடைந்துள்ளமை உலகப் பிரசித்தம். 'தஞ் சென - தஞ்சமென்று; தஞ்சமென் றடைந்தவரைத் தங்களைப் போல ஆக்கும் பெரியோர்கள்போல' என்பது பழையவுரை. 'அசுரரைத்தேவ ராக்குகை, இரும்பைப் பொன்னுக்குகை' (தக்க. 561). தஞ்சு - தஞ்சம்; "தஞ்சென வுணர்ந்திலை யுணருந்தன்மையோய்" (உயுத்த. மந்திரப்: 16.)

பி - ம். 1. அஞ்சுதற் கெழும்பகை யதனை நீதியால்; அஞ்சிதத்தெழுபகை; அஞ்சுற்ற துறுபகை; அஞ்சுமற்றுறுபகை; அஞ்சிறை யறுபத.
2. தன்மய; தன்வய; தன்வச; தன்மையி.
3. வளைத்து வள்ளறன்.
4. செஞ்சரத் தூநினிற். (125)

487. வலங்கொள்போர் மானிடன் வலிந்து கொன்றமை
அலங்கல்வே லிராவணற் கறிவிப் பாமெனச்
சலங்கொள்போ ரரக்கர்த முருக்க டாங்கின
இலங்கையி லுய்த்ததக் குருதி யாறரோ.

வலம்கொள் - வலிமைகொண்ட, போர் மானிடன் - போரில் சிறந்த ஒரு தனி மனிதன் (இராமபிரான்), வலிந்து கொன்றமை-அரக்

கர் பலரை வலிமைகொண்டு கொன்றதை, அலங்கல் வேல் இராவணற்கு-மாலையணிந்த வேல் ஏந்திய இராவணனுக்கு, அறிவிப்பாம் என-போய்த் தெரிவிப்போம் என்று, குருதிஆறு-அங்குள்ள இரத்த நதி, சலம் கொள் போர் - கோபங்கொண்ட போர்புரிந்த, அரக்கர் தம் உருக்கள் தாங்கின - இராக்கதர்களுடைய உடல்களைச் சுமந்து கொண்டுபோய், இலங்கையின் உய்த்தது - (அவற்றை) இலங்கை நகரில் கொண்டுபோய்ச் சேர்த்தது. அரோ : அசை.

இறந்த அரக்கர்களுடைய உடல்களைச் சுமந்த இரத்தப் பெருக்கு, கடலிற்கலந்து அவ்வுடல்களை இலங்கை நகரிற்கொண்டு சேர்த்தது என்பதாம். போரில் அரக்கர்களுக்கு உண்டான அழிவை இராவணனுக்கு அறிவித்ததோடு இதனால், இராமபிரானுடைய போராற்றலையும் அவனோடு எதிர்த்தால் அவனுக்கும் இலங்கைக்கும் இதே கதி ஆகும் என்பதையும், அந்த இரத்தப் பெருக்கு அவனுக்குத் தெரிவித்தபடி என்பதாம். 'வலங்கொள் போர்மானிடன்' என்றமையால் இராபிரானுக்குக்கே வெற்றி என்பதை முன் கூட்டி இராவணனுக்கு அறிவிப்பதுபோலக் குருதியாறு சென்றது என்னலுமாம்; (வலம் - வெற்றி).

பி - ம். 1. மானுடன் வலிந்து; வளைந்து கொன்றமை.
2. கறிவித்தாமெனச்.
3. ச்லங்கொள் போரரக்கர்தம்; சலங்கொள் வேலரக்கர்தம்; முருக்கடாங்கின; முருக்கடாங்கியே.
4. விட்டதக்குருதி; லூற்றவக்; லுய்த்தவக்; லுய்த்தன; புகுந்தக்; ஹுகுத்தவவ் விரத்தவாறரோ. (126)

திரிசிரா வானில் எழுந்து பொருது தன் உயிர் இழத்தல் 488—96.

488. சூழ்ந்துயர் நெடும்படை பகழி சுற்றுறப்
போழ்ந்துயிர் குடித்தலிற் புரளப் பொங்கினன்
தாழ்ந்திலன் முத்தலைத் தலைவன் சோரியின்
ஆழ்ந்ததே ரம்பரத் தோட்டி யார்க்கின்றான்.

சூழ்ந்து உயர் நெடும் படை - தன்னைச் சூழ்ந்து உயர்ந்த பெரிய அரக்கர் சேனை வீரர்களை, பகழி - இராமபாணங்கள், சுற்று உற போழ்ந்து - சுற்றிலும் வளைத்துக்கொண்டு பிளந்து, உயிர் குடித்தலில் - அவர்களின் ஆவிகளைப் பருகியதால், புரள - அன்னோர் கீழ் வீழ்ந்து புரள, (அதுகண்டு), முத்தலை தலைவன் - திரிசிரா என்

னும் படைத்தலைவன், பொங்கினான் - கோபம் மேற்கொண்டவனாய், தாழ்ந்திலன் - தாமதிக்காதவனாய், சோரியின் ஆழ்ந்த தேர் - இரத்த வெள்ளத்தில் அழுந்தியிருந்த தன் தேரை, அம்பரத்து ஓட்டி - ஆகாயத்தில் செலுத்தி, ஆர்க்கின்றான் - கர்ச்சித்தான்.

இரத்தச் சேற்றில் ஆழ்ந்திருந்தமையால், தரைமீது செல்ல இடமின்றி, திரிசிரா என்பவன் தன் தேரை வானிற் செலுத்திக் கர்ச்சனை செய்தான் என்பதாம். அம்பரம் - ஆகாயம்; 'தாழ்ந் திலன் - துக்கத்தில் அழுந்தினானல்லை; ஆர்த்தல் வாய்புடைத்தல்; ஆவலங் கொட்டல்' என்பன பழையவுரை.

பி - ம். 1. சூழ்ந்ததார் நெடும்படை; சூழ்ந்தனன் நெடும்படை; சூழ்ந்திடு மரக்கரை; நெடுபடை.

2. குடித்தலிற்புழுங்கி னான்மனம்.

3. தலைவன் தானிரைத்; தாழ்ந்த,

4. ஆழ்ந்ததன் றேர்மிசை யமருக் கெய்தினான். (127)

489. ஊன்றிய தேரின னுருமின் வெங்கணை
வான்றொடர் மழையென வாய்மை யாவர்க்கும்
சான்றென நின்றவத் தரும மன்னவன்
தோன்றறன் றிருவுரு மறையத் தூவினான்.

ஊன்றிய தேரினன் - (வானில்) பின்வாங்காமல் நின்ற தேரை யுடைய அந்தத் திரிசிரா என்பவன், உருமின் - இடிபோல் (தாக்கு கின்ற), வெம் கணை - தன் கொடிய அம்புகளை, வான் தொடர் மழை என - மேகத்தினின்று இடைவிடாது தொடர்ந்து பெய்யும் மழையே போல, வாய்மை யாவர்க்கும் - ஸத்தியத்தில் அனைவருக்கும், சான்று என நின்ற - ஓர் எடுத்துக்காட்டாக விளங்கிய, தருமம் அன்னவன் - தருமமே ஒரு வடிவெடுத்தாற்போன்ற தயரத சக்கரவர்த்தியின், தோன்றல் தன் - குமாரனான இராமபிரானுடைய, திரு உரு - திரு மேனி, மறைய - மறையும்படி, தூவினான் - சொரிந்தான்.

தசரத சக்கரவர்த்தி வாய்மை யாவர்க்கும் சான்று; 'மறக்க முற்றாதன வாய்மை காத்தவன்' (195); "வாய்மையும் மரபுங்காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்' (கிட்கிந்தா. வாலி வதைப்; 76.); 'இம் மாண் கதைக்கோ ரிறையாய விராமனென்னும், மொய்ம்மாண் கழ லோற்றரு நல்லற மூர்த்தி யன்னான்,' (பால. அரசியற்; 1.). தேரில்

நின்ற திரிசிரா மேகத்திற்கும், அவன் செலுத்திய அம்புகள் மழைக்கும் உவமைகள்.

பி - ம். 1. தருமமேயன ; தரும மன்னவத்.
4. தோன்றிய திருவுரு ; திருவுரு நிறையத். (128)

490. தூவிய சரமெலாந் துணிய வெங்கணை
ஏவின னிராமனு மேவி யேழிரு
பூவியல் வாளியாற் பொலங்கொ டேரழித்
தாவிவெம் பாகனை யழித்து மாற்றினன்.

தூவிய சரம் எலாம் - அத்திரிசிரா சொரிந்த அம்புகள் எல்லாம், துணிய - துண்டுபட்டு அழியும்படி, இராமனும் - இராமபிரானும், வெம் கணை ஏவினன் - கொடிய அம்புகளைத் தூண்டினன் ; ஏவி - அவ்வாறு தூண்டி, ஏழ் இரு - (மேலும்) பதினான்கு, பூ இயல் வாளியால் - கூர்மை பொருந்திய அம்புகளால், பொலன் கொள் தேர் அழித்து-அத்திரிசிராவின் பொன்னால் அமைந்த தேரை அழித்து, வெம் பாகனை - அவனுடைய பராக்கிரமமுள்ள தேர்ப்பாகனை, ஆவி அழித்து - உயிரழித்து, மாற்றினன் - அப்போர் நிலையைத் தடுத்து மாறுபடச் செய்தான்.

பூவியல் வாளி :- கூர்மை பொருந்திய அம்பு ; பூ - கூர்மை ; 'பூவெழு மழுவினாற் பொருது போக்கிய' (அயோந். மந்திரப் : 77); 'பூ நின்ற வேன் மன்னன்' (இறை. சூ. 17. மேற்.); 'பூ வாட் கோவலர்' (புறநா. 214: 15); 'வள் நிசிதம் பூவள்ளயில் வசியாறுங் கூர்மை' (சூடா. நிகண்டு. 7 : 10). பொலன் கொள் தேர் - அழகு அமைந்த தேரும் ஆம் ; பொலன் - அழகு ; (திவாகரம்). ஆவி வெம் பாகன் - உயிர் போன்று விரும்பத்தக்க பாகன் என்றலும் ஒன்றும்.

பி - ம். 1. தொலைய வெங்கணை. 3. பூவசி வாளியால்.
4. ஆவியம் பாகனை ; யறுத்து மாற்றினன். (129)

491. அன்றியு மக்கணத் தமர ரார்த்தெழப்
பொன்றெரி வடிம்புடைப் பொருவில் வாளியால்
வன்றொழிற் றீயவன் மகுட மாத்தலை
ஒன்றொழித் திரண்டையு முருட்டி னனரோ.

அன்றியும் - அதுவல்லாமல் மேலும், அ கணத்து - அந்த க்ஷணத்தில் (அதாவது அதே நேரத்தில்), அமரர் ஆர்த்து எழ-

தேவர்கள் (மகிழ்ச்சியால்) ஆரவாரஞ் செய்து எழுந்து கொண்டாட, பொன் தெரி வடிம்பு உடை - பொன்னினால் விளங்கும் ஓரங்களை யுடைய, பொருவு இல் வாளியால் - ஒப்பற்ற தன் அம்புகளால், வன் தொழில் தீயவன் - கொடுந்தொழிலுடைய அப்பாவியாகிய திரிசிரா வின், மகுடம் மா தலை - கிரீடமணிந்த (மூன்று) பெரிய தலைகளில், ஒன்று ஒழித்து - ஒன்றைமட்டும் விட்டு, இரண்டையும் - மற்றை இரு தலைகளையும், உருட்டினான் - இராமபிரான் தரையில் உருண் டோட அறுத்துத் தள்ளினான். அரோ : அசை.

வடிம்பு : 422. பொன் : இரும்பும் ஆம் ; 'தூண்டிற் பொன்மீன் விழுங்கிற்று.' (குறள். 931) ; அம்புகளின் ஓரங்கள் இரும்பினால் அமைதலும் உண்டு ஆதலின். இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 2. 'பொன்றெரி வனப்புடை' (130)

492. தேரழிந் தவ்வழித் திரிசி ராவெனும்
பேரழிந் தென்னினு மறம்பி ழைத்திலன்
நாரிழிந் துமிழ்சிலை வான நாட்டுழிக்
காரிழிந் தாலெனக் கணைகள் சிந்தினான்.

அ வழி - அப்போர்க்களத்தில், தேர் அழிந்து - தன் தேர் அழியப்பெற்று, திரிசிரா எனும் - திரிசிரன் என்னும், பேர் அழிந் தென்னினும் - தன் காரணப்பெயர் அழிந்ததானாலும், மறம் பிழைத் திலன் - வீரத்தில் விடாதவனாய், சிலை - தன் வில், நார் இழிந்து உமிழ் - நாணிலிருந்து வெளிவிடப்பெற்ற, கணைகள் - அம்புகளை, வான நாடு உழி கார் இழிந்தால் என - வான நாட்டிடத்திலிருந்து மேகம் (மழை) இறங்கினதுபோல, சிந்தினான் - செலுத்தினான்.

திரிசிரா என்னும் பேர் அழிந்தது ; மூன்று தலைகளில் இரண்டு அற்றன ஆதலின். நார் - நாண். நாட்டுழி - வேற்றுமை மயக்கம். கணைகள் சிந்துதல், கார் இழிதலுக்கு ; மதுரைக் 183 ; பரிபா. 22 : 5, சீவக. 421, 451 ; பெருங். 3-27 : 98-9.

பி-ம். 1. தில்வழி
2. பேரழிந்ததனினும் ; பேரழிந்தனன் பின்னும் ; பினுமறம் ;
3. வாரழிந்திமிழ்சிலை ; வாரிழிந்திமிழ்சிலை ; நாரழிந் ; நாரழுந்து ; வளைத்து நன்மழைக் ; வளையநாட்டுழி.
4. காரழிந்தாலெனக் ; கார்பொழிந்தாலெனக் ; காரிழந்தாலெனக் கணை வழங்கினான். (131)

493. ஏற்றிய நுதலின னிருண்ட கார்மழை
தோற்றிய வில்லொடுந் தொடர மீமிசைக்
காற்றிடை யழித்தெனக் கார்மு கத்தையும்
மாற்றரும் பகழியா லறுத்து மாற்றினன்.

ஏற்றிய நுதலினன் - கோபத்தால் புருவம் மேலேற்றி நெரித்த நெற்றியையுடைய இராமபிரான், இருண்ட கார் - இருண்ட கார்கால மேகம், மழை தோற்றிய - மழையை உண்டாக்கியது போல விளங்கிய, வில் ஒடும் - தன் வில்லோடும், தொடர - தொடர்ந்து போர் செய்ய, மீ மிசை - (வானத்தின்) மேலே, காற்று இடை அழித்து என - காற்று இடையே புகுந்து அழித்ததுபோல, கார்முகத்தையும் - அத்திரிசிராவின் வில்லையும், மாற்று அரும் பகழியால் - (பிறரால்) விலக்க முடியாத தன் அம்புகளால், அறுத்து மாற்றினன் - வெட்டி அழித்தான்.

ஏற்றின நுதல்; நெற்றிமேல் நுதலேறுதல், வீரத்திற்குரேன்றும் மெய்ப்பாடுகளில் ஒன்று; நுதல், என்பது புருவத்தையும் குறிக்கும் (பிங்களம்). கார் மழை தோற்றிய வில் என்றமையால், மழை, அம்பு மழையைக் குறித்தது. மீமிசை: ஒரு பொருட் பன்மொழியும் ஆம். காற்று கார்மழை இடையழித்ததெனக் கார் முகத்தையும் மாற்றரும் பகழியா லறுத்து மாற்றினன் எனவும் இயைத்துப் பொருள் கொள்ளலாம். முன் செய்யுளில், திரிசிரா 'காரிழிந்தாலெனக் கணைகள் சிந்தினன்' என்று கூறி, இங்கு இராமபிரான் 'கார்மழை தோற்றிய வில்லொடும் தொடர்ந்தான்' என்று ஈரிடத்தும் ஓர் உவமையையே அமைத்தது நயம். சரங்களுக்கு மழை; பகழிக்குக் காற்று. இனி, இருண்ட..............தொடர' என்பதைத் திரிசிரா வுக்கே ஆக்கிப் பொருண் முடிவு கொள்வாரும் உளர்.

பி-ம். 1. ஏற்றிய நுதலினன்; ஏற்றிய வில்லின னிருண்ட மாமழை.
2. வில்விடை தொடர.
3. காற்றிடை யழிந்தெனக்; காற்றிடை யறுத்தென. (132)

494. வில்லி ழந்தன னென்னினும் விளங்குவாண் முகத்தின்
எல்லி ழந்தில னிழந்திலன் வெங்கத மிடிக்கும்
சொல்லி ழந்திலன் ருேள்வலி யிழந்திலன் சொரியும்
கல்லி ழந்தில னிழந்திலன் கறங்கெனத் திரிதல்.

வில் இழந்தனன் என்னினும் - திரிசிரா தன் வில்லை இழந்தானென்றாலும், விளங்கு வாள் முகத்தின் - விளங்கும் ஒளியையுடைய

தன் முகத்தின், எல் இழந்திலன் - இயற்கையாய் அமைந்த ஒளி இழந்தானல்லன் ; வெம் கதம் இழந்திலன் - கொடுங்கோபமும் இழந்தானல்லன் ; இடிக்கும் சொல் இழந்திலன் - இடி முழக்கம் போன்று பேசும் வார்த்தைகளையும் இழந்தானல்லன் ; தோள் வலி இழந்திலன் - தன் புய வலியையும் இழந்தானல்லன் ; சொரியும் கல் இழந்திலன் - (இராமபிரான் மீது தான் பொழியும்) கற்களையும் தவிர்ந்தானல்லன் ; கறங்கு என திரிதல் இழந்திலன் - காற்றாடி போலச் சுழன்று திரிவதையும் அவன் விட்டு நீங்கினான் அல்லன்.

திரிசிரா தன் வில்லிழந்தபோதும் சிறிதும் ஊக்கங் குறையாமல் பொருத வீரம் இங்கு விளக்கப்பெற்றது. முகத்தின் எல் இழவாமை; ஒப்பு : 'மும்மடங்கு பொலிந்தனவம் முறைதுறந்தா னுயிர்துறந்த முகங்களம்மா' (உயுத்த. இராவணன் வதைப். 201). கல் : மலையும் ஆம். கறங்கு - காற்றாடி ; சுந்தர. 786, 803.

பி - ம். 1. விழுத்தவாண் முகத்தின் ; விழித்தவாண் முகத்தின்; வீழ்ந்த வாண் முகத்தின் ; விழிக்கும் வாண்முகத்தின்.

3. னிழந்தில னிழந்திலன் றோள்வலி ;

4. கழங்கெனத் திரிதல். (133)

495. ஆளி ரண்டுநா றுளவென வந்தரத் தொருவன்
மூளி ரும்பெரு மாயையின் செருமுயல் வானைத்
தாளி ரண்டையு மிரண்டுவெங் கணைகளாற் றடிந்து
தோளி ரண்டையு மிரண்டுவெஞ் சரங்களாற் றுணித்தான்.

அந்தரத்து - ஆகாயத்திலே, ஒருவன் - தனியாய் நின்ற திரிசிரா என்பவன், மூள் இரும் பெரு மாயையின் - முடுகிய மிகப் பெரிய தன் மாயையால், ஆள் இரண்டு நூறு உள என - வீரர்கள் இருநூறு பேர் உள்ளனர் போலத் தோன்றும்படி செய்து, செரு முயல்வானை - ஊக்கத்துடன் போர் புரிந்த அவனை, தாள் இரண்டையும் - (இராமபிரான்) அவன் கால்கள இரண்டையும், இரண்டு வெம் கணைகளால் தடிந்து - இரு கொடிய அம்புகளால் துண்டித்து, தோள் இரண்டையும் - அவனுடைய தோள்கள் இரண்டையும், இரண்டு வெம் சரங்களால் - இரு கொடிய அம்புகளால், துணித்தான் - துண்டாக வெட்டினான்.

ஆள் - வீரன்; பால. மிதிலைக் 27: நங்க. 563. அந்தரம் ஆகாயம்; 'அந்தர வானத்தவர்' (பால. மிதிலைக்காட்சி: 25.) இரும் - பெரும்; ஒரு பொருட் பன்மொழி.

பி - ம். 1. நூறளவென் றாயிர முருவெடுத்தொருவன்; ராயிர முளதென.
2. மாளரும் பெருமாயை கொண்டமர் விளைப்பானை; மாய வெஞ்செரு முயல்.
3. வெம்பகழியாற்றடிந்து.
4. சரத்தினாற் றுணித்தான். (134)

496. அற்ற தாளொடு தோளின னயிலெயி றிலங்கப்
பொற்றை மாமுழைப் புலாலுடை வாயினிற் புகுந்து
பற்ற வாதரிப் பான்றனை நோக்கினன் பரியான்
கொற்ற வார்சரத் தொழிந்ததோர் சிரத்தையுங் குறைத்தான்.

அற்ற தாள் ஒடு தோளினன் - கால்களும் தோள்களும் இல்லாத வனாகி, (அதன்மேலும்), அயில் எயிறு இலங்க - தன் கூரிய பற்கள் தோன்றுமாறு, பொற்றை மா முழை - மலையின் குகை போன்ற, புலால் உடை வாயினில் - புலால் நாற்றம் வீசும் தன் வாயினால், புகுந்து பற்றல் ஆதரிப்பான் தனை - புகுந்து இராமபிரானைப் பற்றி விழுங்க மேற்கொண்ட அவ்வரக்கனை, நோக்கினன் - (இராமபிரான்) பார்த்து, பரியான் - அவன் மீது இரக்கங்கொள் ளாதவனாய், கொற்ற வார் சரத்து - வலிய தன் ஒரு நீண்ட அம்பி னால், ஒழிந்தது ஓர் சிரத்தையும் - அவனது எஞ்சி யிருந்த மற்ற ஒரு தலையையும், குறைத்தான் - துண்டித்து வீழ்த்தினான்.

பொற்றை: மலை (பிங்களம்). 'வாயினிற் புகுந்து வாயினாற் கடிக்கச்சென்று' என்பது பழையவுரை. கொற்றம் - வெற்றியும் ஆம். வாயினில் - வேற்றுமை மயக்கம்.

பி - ம். 1. தாளொடு தோளிலன்; அற்றதோளொடு தாளிலனாயினு மரக்கன்.
2. பொற்றைமா முழைப்புனலுடை. புகையுடை.
3. நோக்கிய பரமன்; பரிவான்.
4. சரங்கொடு தலையையுங் குறைத்தான்; சரத்தொரு தலையையுங் குறைத்தான்; கணைகொடு; (135)

**திரிசிரா மடிதலும், நிருதர் சேனை சிதறி ஓடலும் 497—501**

**497.** திரிசி ராவெனுஞ் சிகரமண் சேர்தலுஞ் சிதறி
நிருத ரோடினர் தூடணன் விலக்கவு நில்லார்
பருதி வாளினர் கேடகத் தடக்கையர் பரந்த
குருதி நீரிடை வார்கழல் கொழுங்குடர் தொடக்க,

திரிசிரா எனும் சிகரம் - திரிசிரன் என்னும் மலைச்சிகரம், மண் சேர்தலும் - தரையில் விழுந்ததும், பருதி வாளினர் - சூரியன போல் ஒளி வீசும் வாட்களையுடையவரும், கேடக தட கையர் - கேட கத்தையுடைய பெருங் கரங்களை யுடையவர்களுமாய், நின்ற நிருதர் - அங்கு நின்ற அரக்கர்கள், சிதறி - அச்சத்தால் சிதறுண்டு, தூடணன் விலக்கவும் நில்லார் - தூடணன் தம்மைத் தடுக்கவும் நிற்காதவர்க ளாய், பரந்த - அப் பொருகள மெங்கும் பரவிக் கிடந்த, குருதி நீர் இடை - இரத்த வெள்ளத்தினிடையே, கொழும் குடர் - இறந்து கிடந்த அரக்கர்களுடைய கொழுவிய குடர்கள், வார் கழல் - தம் நீண்ட கழல்களில், தொடக்க - மாட்டிக்கொண்டு விலங்குகள் போலத் தடைசெய்ய, ஓடினர் - அப்பால் ஓடி அகன்றனர்.

இச் செய்யுளை அடுத்த செய்யுளோடு தொடர்ந்து அழுந்தினர், பிழைப்பார் என்னும் வினைகளைக்கொண்டு முடித்தலும் ஆம். பருதிவாள் ; ஒப்பு. 'பருதிவேல்'; சீவக. 568. தொடக்க - கட்ட ; தொடக்கு - விலங்கு ; 'தொடக்கறுத்தோர் சுற்றமே' (100);

பி - ம். 1. சேர்தலுஞ் சிந்தி; சேர்தலுஞ் சிதறி.
3. பருதி வானினர்; தடக்கையர் பாயும்.
4. கொழுங்கடறுடக்க; குடருடக்க. *(136)*

**498.** கணத்தின் மேனின்ற வானவர் கைபுடைத் தார்ப்பப்
பணத்தின் மேனிலங் குலைவுறக் கால்கொடு பறப்பார்
நிணத்தின் மேல்விழுந் தழுந்தினர் சிலர்சிலர் நிவந்த
பிணத்தின் மேல்விழுந் துருண்டன ருயிர்கொடு பிழைப்பார்.

மேல் - ஆகாயத்தில், கணத்தின் நின்ற - கூட்டமாக நின்ற, வானவர் - தேவர், கை புடைத்து ஆர்ப்ப - தம் கைகளைக் கொட்டி ஆரவாரம் செய்யவும், பணத்தின் மேல் நிலம் - ஆதிசேடன் படத்

தின் மேல் உள்ள பூமி, குலைவு உற - நடுக்கங்கொள்ளவும், கால் கொடு பறப்பார் - தங்கள் கால்களைப் பதிய வைத்து விரைந்தோடின அவ்வரக்கர்களில், சிலர் நிணத்தின் மேல் விழுந்து அழுந்தினர் - சிலர் நிணச்சேற்றில் விழுந்து அழுந்தினவர்களாயும், சிலர் - மற்றும் சிலர், நிவந்த பிணத்தின் மேல் விழுந்து உருண்டனர்- உயர்ந்து கிடந்த பிணங்களின் மீது விழுந்து உருண்டு கீழே விழுந்த வர்களாயும், உயிர் கொடு பிழைப்பார் - ஒருவாறு தம் உயிர் கொண்டு பிழைத்தனர் ஆயினர்.

பணத்தின் மேனிலம் குலைவுறல் ; 525. நிலம் குலைவுறல், ஓடும் அரக்கர்தம் விசையாலும், பளுவாலும்; நிவந்த பிணம்: ஒன் றன்மே லொன்ருகக் கிடந்தமையால் உயர்ந்து கிடந்த பிணக் குவியல்கள்.

பி-ம். 1. புடைத்தார்த்தார்.

2. குழியுறக் கால்கொடு பதைத்தார்; நிலங்குறைவுறக் கால் கொண்டு பதைத்தார்; கால்கொண்டு பதைப்பார்.

3. விழுந்துருண்டனர் சிலர் நிலந்தெரியா; சிலர் சிலர் நிறைந்து.

4. பிணங்கு ழிந்திடப் பெரும்பயம் பிடித்தார்; ருயிர்கொண்டு பிழைப்பார். (137)

499. வேய்ந்த வாளொடு வேலிடை மிடைந்தன வெட்ட
ஓய்ந்து ளார்சில ருலந்தன ருதிரநீர் யாற்றில்
பாய்ந்து கால்பதிந் தழுந்தினர் சிலர்சிலர் பயத்தால்
நீந்தி ஞர்நெடுங் குருதியங் கடல்புக்கு நிலையார்.

சிலர் - (அஞ்சியோடின) அரக்கர்களில் சிலர், இடை - அவ்வாறு ஓடும்போது இடைப்பட்ட, வேய்ந்த - ஏந்திய, வாள் ஒடு வேல் - வாள்களோடு வேல்கள், மிடைந்தன - வழியிலே நெருங்கிக்கிடந்தவை, வெட்ட - தம் கால்களை வெட்ட, ஓய்ந்துளார் - அதனுல் ஓடமுடியாமல் சோர்வுற்று, உலந்தனர் - இறந்தார்; சிலர் - மற்றும் சில அரக்கர்கள், உதிர நீர் ஆற்றில் பாய்ந்து - இரத்த வெள்ளமான ஆற்றில் தாவி வீழ்ந்து, கால் பதிந்து அழுந்தினர் - தம் கால்கள் புதைபட்டு எடுக்க முடியாமல் அதில் ஆழ்ந்து இறந்தனர்; சிலர் பயத்தால் நீந்திஞர் - வேறு சிலர் அச்சங்கொண்டு அந்த உதிர ஆற்றில் நீந்தினராகி, குருதி அம் கடல் புக்கு - பெரும் இரத்தக்கடலிற்

புகுந்து, நிலையார் - அங்கு நிலை கொள்ளாதவர்களாய்த் தத்தளித்தனர்.

பி - ம். 1. மிடைந்தன வோட்டம்; வேலிவை பதங்களிருந்த.
2. ஒய்ந்து தாம் சிலர்; ஒய்ந்து கால்சில; குலைந்தனர் குருதி நீராற்றின்; குலந்தன குதிரநீர்; ஒய்ந்ததாஞ் சிலகுலந்தனர்; ஒய்ந்து பார் சிலருண்டனர் யாற்றில்.
3. பாய்ந்தகால்; பாய்ந்தகால் பறிந்தொழுகினர்; பாய்ந்ததால் பறித்தழுந்தினர்; சிலர் சிலர் பலத்தர்; பலத்தால் பறித்தழுந்திலர்; பாய்ந்துகால் பறித்தழுந்தினர்.
4. குருதியின் கடனெடிதுறயே; கடல்புக்கு நிலையார். (138)

500. மண்டி யோடினர் சிலர்நெடுங் கடகரி வயிற்றில்
புண்டி றந்தமா முழையிடை வாளொடும் புகுவார்
தொண்டை நீங்கிய கவந்தத்தைத் துணைவநீ யெம்மைக்
கண்டி லேனெனப் புகலெனக் கைதலைக் கொள்வார்.

மண்டி ஓடினர் சிலர் - விரைந்து ஓடின சில அரக்கர்கள், நெடும் கட கரி வயிற்றில் - மிகுந்த மதப்பெருக்கையுடைய யானையின் வயிற்றில், புண் திறந்த - மாமிசங்கள் பிளந்து உடல் திறக்கப்பட்ட, மா முழை இடை - பெரிய குகை போன்ற இடங்களில், வாள் ஒடும் புகுவார் - தம் கைவாளோடு உட்புகுந்து ஒளிந்து கொள்பவர்களாவர்; தொண்டை நீங்கிய - தொண்டை அறுபட்டு நீங்கிப்போன, கவந்தத்தை - குறையுடலைப் பார்த்து, (சிலர்), 'துணைவ - நண்பனே! நீ எம்மை கண்டிலேன் என - நீ எங்களைப் பார்க்கவில்லையென்று, புகல் என - அந்த இராம பாணங்களுக்குச் சொல்வாய்' என்று, கை தலை கொள்வார் - தம் கைகளைத் தலைமேல் தூக்கி வணங்கிக் கேட்டுக்கொண்டனர்.

வாளொடும் புகுந்தது: அவர்களின் வீர இயல்பினால் என்க: வாள், போகுமிடங்களில் வழி உண்டாக்கிக் கொள்ளவும் ஆம்.

பி - ம். 1. கைக்கரி வயிற்றுப்.
2. முழையிடைக் கொண்டாமென வழியார்; முழையென வாளொடும்; வளையிடை வாளொடும்.
3. மண்டை நீங்கிய கவந்தத்தைத் துணைவ மற்றெமை நீ.
4. கண்டிலமென்றியாலென; கண்டிலோமென வியம்பென; லோமொன்றும் யாமென்ன; கண்டிலங்கொலென வியம்பென; கண்டிலோ மெனச்சொல்லென. (139)

501. கச்சும் வாளுந்தங் காருடர்ந் தீர்ப்பன காணர்
அச்ச மென்பதொன் றுருவுகொண் டாலென வழிவார்
உச்ச வீரன்கைச் சுடுசர நிருதர்நெஞ் சுருவித்
தச்சு நின்றன கண்டன ரவ்வழித் தவிர்ந்தார்.

(வேறுசிலர்), உச்ச வீரன் கை சுடு சரம் - தலைசிறந்த வீரனான இராமபிரான் கையாற் றூண்டப்பட்ட கொடிய பாணங்கள், நிருதர் நெஞ்சு உருவி - இராக்கதரின் மார்பைத் துளைத்து உட்சென்று, தச்சு நின்றன - தைத்துக்கொண்டு இருந்தவற்றை, கண்டனர் - பார்த்து, அ வழி தவிர்ந்தார் - அவ் வழியே செல்லாது நீங்கினவர்களாய், கச்சும் வாளும் - தம் அரைக்கச்சும் அதி லுள்ள வாளும், தம் கால் தொடர்ந்து ஈர்ப்பன - தம் கால்களை விடாது தொடர்ந்து அறுத்து வருத்துவதை, காணர் - தெரிந்து கொள்ளாதவர்களாய், அச்சம் என்பது ஓர் உருவு கொண்டால் என - பயம் என்பது ஓர் உருக்கொண்டு வந்ததேபோல, அழிவார் - மேற் செல்லமுடியாமல் அங்கேயே இருந்து வருந்தியழிவாராயினர்.

உச்சம் - உயர்வு; நீசம் - தாழ்வு; உச்சம் நீசம் என்பன, கிரகங் களின் உயர்வு தாழ்வு நிலைகளைச் சோதிட நூல்கள் குறிப்பன காண்க. தச்சு - தைத்து என்பதன்போலி. சில பிரதிகளில இது முன்னும், 500-ஆம் செய்யுள் பின்னுமாக உள்ளது. சில சுவடி களில், இதனுடன் திரிசிராவதைப்படலம் முற்றும்; அச்சுவடிகளில் மேல்வருவன தூடணன் வதைப்படலம்.

பி - ம். 1. தீர்வனகாணர்; காலறுத் தீர்ப்பன கருதார்.
2. கண்டாமென வழிவார்; கொண்டாமென.
3. உச்சிவீரன்கை; நெஞ்சுருவத்.
4. தைச்சு நின்றன .................. தவிர்வார்; தைச்சு நின்றனர் - கண்டனர். (140)

தோற்றேடிய வீரர்களைத் தூடணன் நிறுத்துதல் 502—22.

502. அனைய ராகிய வரக்கரை யாண்டொழிற் கமைந்த
வினைய நீங்கிய மனித்தரை வெருவன்மி னென்ன
நினையு யானென்று நிரப்புவ துண்டென நின்றான்
துனையும் வாம்பரித் தேரினன் றூடணன் சொன்னான்.

தூடணன் - அவ்வாறு அரக்கர் படைவீரர்கள் அஞ்சியோடியதை கண்ட தூடணன் என்னும் படைத்தலைவன், துனையும் வாம் பரி தேரி னன்-விரைவாய்ச் செல்லும் குதிரைகள் பூட்டப் பெற்ற தேரையுடை

யவனாய், அனையர் ஆகிய அரக்கரை - அவ்வாறு ஓடும் அரக்கரை நோக்கி, 'ஆண் தொழிற்கு அமைந்த - ஆண்மைச் செயலுக்குப் பொருந்திய, வினையம் நீங்கிய - செயல் இல்லாத, மனித்தரை வெருவல்மின் - மனிதரைக்கண்டு அஞ்சாதீர்கள்;' என்றா - என்றுகூறி, 'யான் நினையும் ஒன்று நிரப்புவது உண்டு என - நான் கருதும் ஒன்றை உங்கட்குச் சொல்வது உண்டு' என்று, நின்றான் சொன்னான் - தான் (ஓரிடத்தில்) நின்று அவர்களுக்குப் பின் வருமாறு சொன்னான்.

தூடணன் : 474 உரை ; 523. நிரப்புதல் - விளக்குதலும் ஆம். 'உயிர்நீங்கினரியாரது நிரப்புவீ ரென்றான்' கிட்கிந்தா. சம்பாதிப்: 29. நிரப்புவது - அச்சத்தால் அழிந்த அவர்களின் மனத்தைத் தைரிய மூட்டி நிரப்புவது எனலும் ஆம். வினையம் : சாமர்த்தியம் அல்லது உபாயமும் ஆம்; உயுத்த. இரணியன் வதைப் : 147. மனித்தர் - மனிதர் என்பதின் வலித்தல் விகாரம். 'துனையும் வார்பரி' என்ற பாடங்கொண்டு, 'வேகத்தை ஒழுங்காகப் பெற்ற பரி' என்று பழையவுரை கூறும்.

பி - ம். 2. மனத்தரை; மணிசரை; மாந்தரை; மனிதரை; வெருவலீரென்றான்.

3. நினையும் யானுமக்குரைப்பது முண்டென்று நின்றான்; முண்டென வெதிர்நின்றே; நிரம்புவதுண்டென; நினையுநானொன்று.

4. துனையுமாபரித் தேரினன்; வார்பரித்தேரினன். (141)

503. வச்சை யாமெனும் பயமனத் துண்டென வாழும்
கொச்சை மாந்தரைக் கோல்வளை மகளிருங் கூசார்
நிச்ச யமெனுங் கவசத்தா னிலைநிற்கு மன்றேல்
அச்ச மென்னுமீ தாருயிர்க் கருந்துணை யாமோ.

வச்சை ஆம் எனும் பயம் - பழிப்புக்கு இடமாம் என்று சொல்லப்படும் அச்சத்தை, மனத்து உண்டு என வாழும் - தம் மனத்தில் உள்ளதாகக் கொண்டு உயிர் வாழும், கொச்சை மாந்தரை - அற்ப மனிதருக்கு, கோல்வளை மகளிரும் கூசார் - அழகிய வளையல்கள் அணிந்த பெண்களும் கூச்சமடையார்; (அன்றியும்), நிச்சயம் எனும் கவசத்தால் - துணிவு என்னும் ஒரு கவசத்தினால், நிலைநிற்கும் - (உயிர்) நிலை நிற்பதாகும்; அன்றேல் - அல்லாவிடில், அச்சம்

என்னும் அது - நீங்கள் மேற்கொண்ட பயம் என்னும் இக் குணம், ஆர் உயிருக்கு - உம் அரிய உயிர்க்கு, அரும் துணை ஆமோ - அரிய உதவி ஆகுமோ? (ஆகாது என்றபடி).

வச்சை: பேதை; வசையும் ஆம்; பால. உண்டாட்டுப்: 19; பூக்கொய்: 19. 'நிச்சயம் என்னும் கவசத்தால் - (சரீரம்) நித்திய மென்று திடம்பண்ணும் சொல்லாகிய கவசத்தால் ஆன்மா நிலைநிற் கும்' என்பது பழையவுரை. தூடணன் மனவலி இன்றியமையாதது என்று கூறுவதை, 'உடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும், ஆற்ற லதுவே படை.' (குறள். 765) என்றதனோடு ஒப்பிடுக. பயம், வசையாகும், அல்லது, பேதைமைக் குணமாகும் என்பது கருத்து. இதனையே குணமாகக்கொண்ட மாந்தரை, அச்சமே அற்ற அரக்கர் கண்டு அஞ்சலாமோ என்று கூறினான் என்க. உடல் நிச்சயம் என் னும் எண்ணம் கவசமாக உருவகிக்கப்பட்டது. அச்சம், உடல் அழிந்துவிடுமோ என்ற அச்சம். கொச்சை மாக்கள்-இழிந்த மனிதர்; சுந்தர. 1141; உயுத்த. மந்திரப்: 101; 112. மகளிரும்; உம்மை, இழிவு சிறப்பு. உடல் நிச்சயம் என்ற அரக்கர் குணமும், அதுவச்சை என்ற மாந்தர் குணமும் இங்குக் குறிக்கப்பெற்றமை காண்க.

பி-ம். 1. பச்சையாமெனப்; வச்சையாமெனும்; பச்சையில்லதோர்; துண்டெனில்வாழும்.
2. கொல்வது மகளிருங் கூசார்.
3. நிச்சயமுயிர்நீங்குதல் நிலைநிற்பதன்றோ; கவசத்தினிலை நிற்ப தல்லால்; நிலைநிற்ப தன்றே.
4. அச்சமென்னு மதாருயிர்க். (142)

504. பூவ ராவுவேற் புரந்தரன் றன்னொடு பொன்று
மூவ ரோடுதான் முன்னின்று முட்டிய முனையில்
ஏவ ரோடின ரிராக்கதர் நுமக்கிடைந் தோடும்
தேவ ரோடுகற் றறிந்துளி ரோமனந் திகைத்தீர்.

'பூ அராவு வேல் - கூர்மையாக அராவப் பெற்ற வேலையுடைய, புரந்தரன் தன்னொடு - தேவேந்திரனோடும், பொன்று - அழியாது என்றும் நிலைபெற்ற, மூவரோடு - மும்மூர்த்திகளோடும், முன் நின்று முட்டிய முனையில்-எதிர்நின்று தாக்கிய போர்க்களத்தில், இராக்கதர் ஏவர் ஓடினர் - அரக்கர்கள் யாரே பயந்து போரிடாமல் ஓடினர்? (ஒருவரும் ஓடவில்லை என்றபடி); மனம் திகைத்தீர் - இப்பொழுது நீங்கள் மனந்தடுமாறினீர்; நுமக்கு இடைந்து ஓடும் - உங்களைத்

கண்டால் வருந்தி ஓடும் சுபாவமுடைய, தேவரோடு - தேவர்களிட மிருந்து, கற்று அறிந்து உளிர் ஒ - இவ்வாறு ஓடுதலைக் கற்று அறிந்து கொண்டுள்ளீர்களோ?

பூவ்ராவு வேல்; 209; ஒப்பு: 'பூவியல் வாளி' (490). எவர்: எவர் என்பதின் நீட்டல் விகாரம்.

பி-ம். 1. புரந்தரனோடுதான்; புரந்தரனோடுடுந்தான்; றன்னொடுமேனுள்.
2. மூவரோடுதா முன்னின்று.
3. யாவரோடினர்; யாவரோடினர்; நுமக்குடைந்தோடும்.
4. அறிந்துளிராமெனத்; அறிந்தனராமெனத்; தேவரோடு கற்றறிந் திலிரோ. (143)

505. இங்கொர் மானிடற் கித்தனை வீரர்க ளிடைந்தீர்
உங்கை வாளொடு புகழ்விழ வூர்புக வுவந்தீர்
கொங்கை மார்பிடைக் குளிப்புறக் களிப்புறு கொழுங்கண்
நங்கை மார்களைப் புல்லுதி ரோநல நுகர்வீர்.

இங்கு ஓர் மானிடற்கு - இங்குப் போருக்கு வந்த ஒரு மனித னுக்கு, இத்தனை வீரர்கள் இடைந்தீர்-நீங்கள் இவ்வளவு வீரர்களும் பின்னிட்டு ஓடலானீர்; உம் கை வாள் ஒடு புகழ் விழ - உங்கள் கையிற் பிடித்த வாளும் புகழும் விழுந்து அழிய, ஊர் புக உவந்தீர்- ஊரிற்குள் ஓடிப் புகுந்துகொள்ள விரும்பினீர்; நலம் நுகர்வீர் - நலத் தைத் துய்க்க விரும்பிய நீங்கள், களிப்பு உறு - மகிழ்ச்சிகொண்ட, கொழும் கண் நங்கைமார்களை - மதர்த்த கண்களையுடைய உங்களுக் குரிய மகளிரை, கொங்கை மார்பு இடை குளிப்பு உற - (அன்னார்) கொங்கைகள் உங்கள் மார்பின் இடையே அழுந்த, புல்லுதிரோ - தழுவி மகிழ்வீரோ?

கையில் வாளிருக்கவும், எதிர்த்துப் போர்புரியாது மறைந்து, திரும்ப ஊர் புகுதலும், ஒரு மானுடன் எதிர்நின்று பொர முடியாத மார்புகொண்டு, நீவிர் உங்கள் காதன் மகளிரைத் தழுவ எண்ணுதலும், உங்கள் வீர வாழ்க்கைக்கு இழிவாம் என்று தூடணன் போரில் தோற்றோடிய அரக்கர்களை நோக்கி இழித்துக் கூறினன் என்க.

பி-ம். 1. வீரருமிடைந்தீர்; வீரருமுடைந்தே.
2. வாளொடு போய்விழுந் தூர்புக லுற்றீர்; ஊர்புகநினைந்தீர்; ஊர்புகவுகந்தீர். 3. களிப்புற்றுக் கொழுங்கை.
4. புல்குதிரோ; நகைக்குரியீர். (144)

506. செம்பு காட்டிய கண்ணிணை பாலெனத் தெளிந்தீர்
வெம்பு காட்டிடை நுழைதொறும் வெரிநுறப் பாய்ந்த
கொம்பு காட்டுதி ரோதட மார்பிடைக் குளித்த
அம்பு காட்டுதி ரோகுல மங்கையர்க் கம்மா.

செம்பு காட்டிய கண் இணை-போரில் செம்புபோல் கோபத்தால் சிவந்து தோன்றிய உங்கள் இரு கண்களும், பால் என தெளிந்தீர் - (அச்சத்தினால்) பால் போல வெளுப்பாய்த் தெளிவடையப் பெற்றுள்ளீர் ; குல மங்கையர்க்கு - உமது அரக்கர் குல மகளிர்க்கு, வெம்பு காட்டு இடை நுழைதொறும் - கொடிய காட்டிடையே நுழைந்து நீங்கள் ஓடும்போதெல்லாம், வெரிந் உற பாய்ந்த - உங்கள் முதுகில் நன்றாய்ப் பாய்ந்து தைத்த, கொம்பு காட்டுதிரோ - கொம்புகளைக் காட்டுவீர்களோ ? (அல்லது), தட மார்பு இடை குளித்த - உங்கள் பெரிய மார்பிடையே புகுந்து தைத்த, அம்பு காட்டுதிரோ - அம்புகளைக் காட்டுவீர்களோ ? எதனைச் செய்யப் போகிறீர்கள் ? அம்மா : இரக்கச் சொல்.

செம்பு காட்டிய கண் ; "கண் கடையிற் காய்ப்புண்ட செம்பிற் றோன்ற' (சுந்தர : 999) ; உயுத்த. மகுடபங்கப் 42. இது, பகைவரோடு எதிர்த்து மார்பிற் புண்படுதல் வீரர்க்கு விழுப்புண் அடைதல் என்னும் புகழ் அன்றி, முதுகிற் புண்படுதல் இழிவுக்கு இடமாகும் என்று இடித்துக் கூறியது என்க : 'விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள், வைக்குந்தன் னாளை யெடுத்து' என்ற (குறள். 776) பரி. உரையை நோக்குக. 'செம்பு...தெளிந்தீர் - எக்காலமும் சிவந்த கண் போரிலே வந்தபோது, விளர்க்கும்படி சேவகப்பாடு பெற்றவரே என்றது.' என்பது பழையவுரை.

பி - ம். 1. கண்ணிணைப் ; தெரிந்தீர்.
2. வாளொடு புகவிழுந்.
4. காட்டுதிரோ சென்று மங்கையர்க். (145)

507. ஏக்க மிங்கிதன் மேலுமுண் டோவிகன் மனிதற்
காக்கும் வெஞ்சமத் தாண்மையவ் வமரர்க்கு மரிதால்
தாக்க ரும்புயத் துங்குலத் தலைமகன் றங்கை
மூக்கொ டன்றிநும் முதுகொடும் போம்பழி முயன்றீர்.

'இகல் மனிதற்கு ஆக்கும் - பகைமையுள்ள ஒரு மனிதனோடு செய்யும், வெம் சமத்து - கொடிய போரில், ஆண்மை - உங்கள்

ஆண் தன்மையல்லாத பேடித் தன்மை, அ அமரர்க்கும் அரிது - அந்தத் தேவர்களுக்கும் கிடைத்தற்கு அரிது; இங்கு எக்கம் இதன்மேல் உண்டோ - இவ்விடத்தில் நமக்குக் கிடைக்கக்கூடிய வருத்தம் இதற்குமேல் உண்டோ? (இல்லை, என்றபடி); தாக்கு அரும் புயத்து - எதிர்த்துத் தாக்குவதற்கு அரிய புயங்களையுடைய, உம் குல தலைமகன் - உங்கள் குலத்துத் தலைவனான இராவணனின், தங்கை - தங்கையாகிய சூர்ப்பணகையின், மூக்கு ஒடு அன்றி - மூக்கோடு மட்டுமல்லாமல், நும் முதுகு ஒடும் போம் பழி - உங்கள் முதுகுக்கும், உண்டாகும்படி அமையும் பழிச்சொல்லை, முயன்றீர் - நீங்கள் இப்பொழுது அஞ்சி ஓடுவதால் ஆக்கினீர்.

ஆண்மை என்பது, நகைச் சொல்லாய், அதன் எதிர்ப் பொருளைச் சுட்டியது. 'இகல் மனிதர்க்காக்கும் வெஞ்சினத் தாண்மை அவ்வமரர்க்கு மரிது; அரக்கரே, நீங்கள் வெற்றியை மனிதருக் குண்டாக்கி ஓடுகிற ஆண்மைப்பாடு; நமக்குப் பயந்த தேவரும் மனிதரை வெல்வார்; உங்களைப்போல ஓடமாட்டார். நீங்கள் செய்த ஆண்மை அமரருக்கும் அரிது (இது மோசக்கொண்டாட்டம்); தாக்கும் புயம் - எதிர்ப்பதற்கு அருமையான புயம். தலைமகன் - இராவணன்.' என்பன பழையவுரை. வீரத்துக்குண்டாம் பழியை இகழ்ந்து கூறியது; ஒப்பு: சுந்தர. 1074. மூக்கொடன்றியும் பழிநும் முதுகொடும்போம்; ஒப்பு. 552.

பி - ம். 1. எக்கையிங்கி தன்...மனிதன்.
2. ஆக்கு...மரிதாத்; வமரர்க்குமரிதிற்கு; தாண்மையை; தாண்மையய்; ஆக்கும் வெஞ்சினத் தமரிடை யமரர்க்கு மரிதால்.
3. புயநுங்குலத்.
4. டன்றியும் முதலொடும் போம்பழி முயன்றீர்; டன்றியும் முதுகொடும்; போம்படிநும் முகத்தொடும் போம்பழி முயன்றீர். (146)

508. ஆர வாழ்க்கையின் வணிகரா யமைதிரோ வயில்வேல்
வீர வாட்கொழு வெனமடுத் துழுதிரோ வெறிப்போர்த்
தீர வாழ்க்கையிற் றேவரைச் செருவிடைப் பறித்த
வீர வாட்கையீ ரெங்ஙனம் வாழ்திரோ விளம்பீர்.

'வெறி போர் - மூர்க்கச் செயலை மேற்கொண்ட போரில், தீர வாழ்க்கையில் - தைரியத்தோடு கூடிய வாழ்வினால், தேவரை செரு இடை பறித்த - தேவர்களிடமிருந்து போரில் பிடுங்கிக்கொண்ட,

வீர வாள் கையீர் - வீரச் செயலுக்குரிய வாளைக் கையிற் கொண்டவர்களே! வாழ்க்கையின் வணிகராய் ஆர அமைதிரோ - (இனி உங்கள் போர்த்தொழிலைவிட்டு), உங்கள் வாழ்க்கையில் வணிகராய் அமைந்து வாழப்போகிறீர்களா? (அல்லது), அயில் வேல் வீர வாள் - கூரிய வேலையும் வீரத்தை விளக்கும் வாளையும், கொழு என மடுத்து - ஏரின் கொழுவாக மண்ணில் ஆழ்த்தி, உழுதிரோ - உழுது பயிரிடப் போகிறீர்களோ? எங்ஙனம் வாழ்திரோ - எவ்வாறு வாழப்போகிறீர்கள்? விளம்பீர் - எனக்குக் கூறுங்கள்.

தேவரைச் செருவிடைப் பறித்த; இதில் தேவரை என்பது தேவரிடமிருந்து என்ற பொருளில் வேற்றுமை உருபு மயங்கி வந்தது. வெறிபோர்-வீராவேசங்கொண்ட போர். அஞ்சி ஓடும் உமக்கு இனி, வேலும் வாளும் பயன்படாவாதலின், அவற்றைக்கொண்டு உழுதுண்டு வாழப்போகிறீர்களா? அல்லது வணிகராக வாழப் போகிறீர்களா? என்று ஏளனமாக இழித்துக் கூறினான் என்க. உழுதிரோ, என்பதற்குப் போரில் பகைவர் உடலில் அழுத்திப் போர்புரிவீரோ? என்று பொருள்கொள்ளலும் ஆம்; வில்லேருழவன், வாளுழவன் என வழங்கப்பெறுவனவுங் காண்க. இச்செய்யுள் 'சந்தேகம்.' என்பது, ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. 502 முதல் இதுவரை தூடணன் வாக்கு.

பி - ம். 1. வயின் மேல்.
2. கொழுவெழுமடுத்து; கொடுவேன் மடுத்தழுதிரோ; வெறியோர்; ஊரவாட் கொழுவேன் மடுத்தழுதிரோ வெறிபோற்; தழுதிரோவெகுளி; கொழுவெழுமடுத்.
3. வாட்கையிற் றெவ்வரைச்; செருவிடைப் பழித்த; செருவிடைப்பற்றும்.
4. வீர வாட்கையர்; பார......பகர்வீர்; றெவ்விதம் வாழ்வீர்;

**(147)**

தூடணன் எழுந்து போரிடுதலும் மடிதலும் 509—22.

509. என்று தானுந்த னெறிகடற் சேனையு மிறைநீர்
நின்று காண்டிரென் னெடுஞ்சிலை வலியென நேராச்
சென்று தாக்கினன் றேவரு மருள்கொண்டு திகைத்தார்
நன்று காத்தியென் றிராமனு மெதிர்செல நடந்தான்.

என்று - இவ்வாறு தூடணன் கூறி, 'நீர் - நீங்கள், இறை - சிறிது போது, நின்று - ஓடாது நின்று, என் நெடும் சிலை வலி - எனது நெடிய வில் வலியை, காண்டிர் என - காண்பீராக! என்று கூறி, தானும் தன் எறிகடல் சேனையும் - தானும் தன் அலை வீசித்

தாக்கும் கடல்போன்ற பெரிய சேனையும், நேரா சென்று தாக்கினன் - இராமபிரானை எதிர்த்துச்சென்று தாக்கினான்; தேவரும் மருள் கொண்டு திகைத்தார் - தேவர்களும் மயக்கமுற்றுக் கலங்கினர்; இராமனும் - இராமபிரானும், 'நன்று காத்தி என்று - உன்னை நன்றாகக் காப்பாற்றிக்கொள்' எனக் கூறி, எதிர் செல நடந்தான் - அத்தூடணனுக்கு எதிராக நடந்து சென்றான்.

திகைத்தல், இன்ன செய்வது என்று தீர்மானிக்க முடியாமல் பிரமித்து நிற்றல். நின்று காத்தி, என்றது 'திறமையுண்டேல் என்னை எதிர்த்து நின்று உன்னை நீ காப்பாற்றிக் கொள்' என்று பெருமிதத்தோடு கூறிய வீர வார்த்தை. 'காத்தி' என்றதைப் பின் 522-இல் இராமபிரான் அவனை நோக்கிக் கூறியதோடு ஒப்பிடுக. எதிர் செல - எதிர்த்துப் போரிட என்றும் கொள்ளலாம்.

பி - ம். 1. என்று தன்கடற் சேனையோ டெழுந்திவ ணிறை நீர்.
2. னெடுஞ் சிலைநிலை; னெடுஞ்சிலை நேரென நேரா.
3. சென்று தாங்கினன்; மருள்கொடு திகைத்தார்.
4. நன்று காத்திரென்; றெதிர் செலவிரா மனுநடந்தான். (148)

இதன் பின் ஒரு சுவடியில் அடியிற்காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

'நடந்து தன்னிரு கரத்தினி னலம்பெருஞ் சிலைவாய்த்
தொடர்ந்த நாணொலி யெழுப்பினன் றுகைப்படு மண்டம்
இடிந்த தென்னநின் றதிர்ந்ததங் கிறைவனு மிமைப்பின்
மிடைந்த வெஞ்சர மழைவிடு தாரையின் விதைத்தான்.

510. ஊட றுப்புண்ட மொய்படைக் கையொடு முயர்ந்த
கோட றுப்புண்ட குஞ்சரங் கொடிஞ்சொடு கொடியின்
காட றுப்புண்ட காலிய றேர்கதிர்ச் சாலி
சூட றுப்புண்ட வெனக்கழுத் தறுப்புண்ட துரகம்.

(அப்போரில் இராமபாணங்களால்), மொய் படை - வலிய படைகள், ஊடு அறுப்புண்ட-இடையே அறுக்கப்பெற்றன; குஞ்சரம் - யானைகள், கை ஒடும் - துதிக்கைகளோடும், உயர்ந்த - உயர்ந்து விளங்கிய, கோடு - தந்தங்கள், அறுப்புண்ட - அறுக்கப்பெற்றன; கால் இயல் தேர் - காற்றுப்போல் விரைந்து செல்லும் தேர்கள், கொடிஞ்சு ஒடு-அவற்றின் தேர்த்தட்டின் முன்னேயுள்ள உறுப்போடு, கொடியின் காடு - கொடிகளின் கூட்டமும், அறுப்புண்ட - அறுக்கப்

பட்டன ; துரகம் - குதிரைகள் ; கதிர் சாலி சூடு - சம்பா நெற்பயிரின் கதிர்களாகிய கொண்டைகள், அறுப்புண்ட என - அறுக்கப்பட்டன போல, கழுத்து அறுப்புண்ட - தம் கழுத்துக்கள் அறுப்புண்டன.

மொய்படை என்றது, தேர், யானை, குதிரைப்படைகளை ஒத்த காலாட்படை என்க. கொடியின் காடு ; காடு என்றது மிகுதிபற்றி 51 ; கொடிஞ்சு - வளைந்த தாமரை முகை போன்ற உறுப்பு ; தேர்த் தட்டுக்கும் பெயர் ; அயோத். குகப் : 43 ; சூளா. 9 : 273 ; கலி. 85 : 19. கால் இயல் தேர் - சக்கரங்களையுடைய அழகிய தேர், என்னலும், இயல் கால் தேர் எனமாற்றி, அழகிய சக்கரங்களையுடைய தேர் என்னலும் ஆம். கதிர் சாலிச் சூடு ; இது குதிரையின் வளைந்த கழுத்தொடு விளங்கும் முகத்திற்கு உவமை ; மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ். சிறுதேர் : 5 ; பெரியபுராணம். திருநாவுக்கரசு : 6 ; 'கால் வயத்தேர் - வண்டிலினால் இயலும் தேர்' என்பது பழையவுரை.

பி - ம். 1. கையொடு மொய்ம்படை ; வரம்பெறு துதிக்கைமற்றுயர்ந்த.
3. சாலியத்தேர்க் கெதிர்ச்சாலி.
4. சூடறுப்புண்ட வாமென வறுப்புண்ட துரகம் ; தொத்தறுப் புண்டன துரகம். (149)

511. துருவி யோடின வுயிர்நிலை சுடுசரந் துரந்த
கருவி யோடுவன் கச்சையுங் கவசமுங் கழல
அருவி யோடின வெனவிழி குருதியா றலைப்ப
உருவி யோடின கேடகத் தட்டொடு முடலம்.

சுடு சரம் துரந்த - இராமபிரானால் தீயைப்போல் சுடும் அம்புகள் விடப்பட்டவை, உயிர் நிலை துருவி ஓடின - அரக்கர்களுடைய உயிர் தங்கிய மர்ம ஸ்தானங்களைத் தேடிப் பார்த்தவையாய்ச் சென்றவை, கருவி ஓடு வன் கச்சையும், கவசமும் கழல - அவர்கள் ஏந்திய ஆயுதங்களோடு வலிய அரைக்கச்சை முதலிய கட்டுக்களும், கவசங்களும் கழன்றுபோக, அருவி ஓடின என - மலையருவிகளில் வெள்ளம் ஓடுவதுபோல, இழி குருதி ஆறு அலைப்ப - அவ்வரக்கர் உடல்களிலிருந்து இறங்கி விழுகின்ற இரத்த நதி அங்குமிங்கும் அவற்றை அசைத்தாட்ட, கேடக தட்டு ஒடும் - கேடகம் என்னும் தட்டோடு, உடலம் - அன்னோர் உடல்களையும், உருவி ஓடின - (அவ்வம்புகள்) உட்புகுந்து துளைத்தோடின.

கேடகத்தட்டு : ஒப்பு. தக்க. 101, 671. கருவி: ஆயுதப்பொது. உடலம் : உடல் என் சுடுசரம், கழல, அலைப்ப உருவி ஓடின என்க.

பதனோடு அம் என்னும் சாரியை பெற்றது. இந்தக்கவி விற்பூட்டு என்பது பழையவுரை.

பி - ம். 1. சுடுசரந் தொகும்பல் சுடுசரந் துவன்றி.
2. கருவியோடுவகச்சையுங்; கருவியோடின கச்சை; கருவியோடு கைப் பகுதியைக் களைந்தொரு கணத்தின்.
3. யெனவழி குருதியாறெழுக; குருதியாற்றெழுக; யோடின வேல்விழி; யெனப் பெருங் குருதியாறெழுக; வெருவியோடின வென; வெண்ணிசூழ் கண்ணன் மேவாரின்.
4. தட்டினோடுடலம். (150)

512. ஆய்ந்த கங்கபத் திரங்கள்புக் கரக்கர்தம் மாவி
தோய்ந்த தோய்வில பிறைமுகச் சரஞ்சிரந் துமித்த
காய்ந்த வெஞ்சரம் நிருதர்தங் கவசமார் புருவப்
பாய்ந்த வஞ்சக ரிதயங்கள் பிளந்தன பல்லம்.

ஆய்ந்த - இராமபிரானால் தேர்ந்து தூண்டப்பட்ட, கங்கபத் திரங்கள் - கங்கபத்திரம் என்னும் ஒரு வகை அம்புகள், புக்கு - உடல்களில் புகுந்து, அரக்கர்தம் ஆவி தோய்ந்த - சில அரக்கர் களுடைய உயிரோடு கலந்து பற்றிக்கொண்டன; தோய்வு இல பிறை முக சரம் - அவ்வாறு தோயாதனவான அர்த்த சந்திர பாணங்கள், சிரம் துமித்த - சில அரக்கருடைய தலைகளைத் துண்டித்தன; காய்ந்த வெம் சரம் - பகைத்துச் சென்ற சில கொடிய அம்புகள், நிருதர் தம் - சிலஅரக்கர்களுடைய, கவச மார்பு - கவசமணிந்த மார்புகளை, உருவ பாய்ந்த - ஊடுருவிப் பாய்ந்தன; பல்லம் - மற்றும் சில அம்புகள், வஞ்சகர் - கொடிய அவ்வரக்கர்களின், இதயமும் பிளந்தன - இதயத்தையும் பிளந்து அழித்தன.

கங்கபத்திரம் - கழுகிறகுகள் கட்டப்பட்ட அம்பு; ஒரு வகை அம்பு: நற்றிணை. 329; 4. பிறை முகச் சரம் - பிறைச்சந்திரன் போன்ற தலையையுடைய அம்பு; இதனைக் கோடாலிவாயம்பு என்னும் பழைய வுரை. பல்லம் - அம்பின் வகையில் ஒன்றும் ஆம். இச்செய்யுளில் அம்புகளின் பலவகைப் பெயர்கள் கூறப்பெற்றமை காண்க.

பி - ம். 1. கரக்கரதாவி; கரக்தர்தம் மெய்யில்; கரக்கர்தம் மகலம்.
2. தோய்ந்த தொய்வில; தோய்விலாப்; தோய்ந்து தோய்விலாப் ............துமித்துக்.
3. காய்ந்தநெஞ்சின நிருதர்; செஞ்சர நிருதர்தங்; வெஞ்சினத் தரக்கரவன்; செஞ்சர நிருதர்வெங்.
4. ரிதயமும் பிளந்தன; பாய்ந்து வஞ்சரின்னிதயமும்; வஞ்சக ரிதயத்தைப்; ரிதயமும் பிளந்தன. (151)

513. தூட ணன்விடு சரமவை யாவையுந் துணியா
மாடு நின்றவர் வழங்கிய படைகளு மாற்ரு
ஆடல்கொண்டன னளப்பரும் பெருவலி யரக்கர்
கூடி நின்றவக் குரைகடல் வறள்படக் குறைத்தான்.

தூடணன் விடு - தூடணன் தாண்டிய, சரம் அவை யாவையும் - அம்புகள் அனைத்தையும், துணியா - (இராமபிரான்) துண்டமாக்கி, மாடு நின்றவர் வழங்கிய படைகளும் மாற்ரு - அவன் பக்கத்தில் நின்ற அரக்கர்கள் ஏவிய படைக்கலங்களையும் மாற்றி, அளப்பு அரும் - அளவிடமுடியா, பெரு வலி அரக்கர் - மிக்க வலிமை வாய்ந்த இராக்கதர்கள், கூடி நின்ற - ஒன்றுகூடி நின்ற, குரை கடல் - ஒலிக்கும் கடல் போன்ற அச்சேனையை, வறள் பட - வற்றி அழியுமாறு, குறைத்தான் - அழித்து, ஆடல் கொண்டனன் - வெற்றி கொண்டான்.

துணியா, மாற்ரு; இவை உடன்பாட்டு வினைகள். ஆடல் - வெற்றி; ஆடல் கொண்டனன் குறைத்தான் என்றும் கூட்டலாம்; இங்கு, கொண்டனன், முற்றெச்சம். அரக்கர்படைகளைக் குரை கடல் என்றதற்கேற்ப, வறள்படக் குறைத்தான் என்னப்பட்ட நயம் உணரத்தக்கது.

பி - ம். 1. சரம்யாவையுந் துணிய; சரமெலாம் யாவையுந்; துணிந்து; துணித்து.
2. படைகளும்மாற; படைகளும்வறிதா.
3. ஆடல்கொண்டு மேலளப்பரும்; கொண்டனரளப்படும்.
4. குறைகட லளவறக்; வறள; வறள்படக்கு டித்தான். (152)

514. ஆர்த்தெ ழுந்தனர் வானவ ரருவரை மரத்தோ
டீர்த்தெ ழுந்தன குருதியின் பெருநதி யிராமன்
தூர்த்த செஞ்சரந் திசைதொறுந் திசைதொறுந் தொடர்ந்து
போர்த்த வெஞ்சினத் தரக்கரைப் புரட்டின புவியில்.

வானவர் ஆர்த்து எழுந்தனர் - இராமபாணங்களின் அருஞ் செயல்களைக் கண்ட தேவர்கள் எழுந்து ஆரவாரஞ்செய்தனர்; குருதியின் பெரு நதி - இரத்தப் பேராறு, அருவரை - பெரிய மலைகளை, மரத்தொடு - அவற்றிலுள்ள பல மரங்களோடு, ஈர்த்து எழுந்தன - இழுத்துக்கொண்டு பெருகின; இராமன் - இராமபிரான், தூர்த்த - நிரப்பிய, செம் சரம் - சிறந்த அம்புகள், திசை தொறும் திசை தொறும்

தொடர்ந்து - ஒவ்வொரு திசைதோறும் பின்பற்றிச் சென்று, போர்த்த வெம் சினத்து அரக்கரை - அத்திசைகளைப் போர்த்தாற் போற் கவிந்துகொண்ட கொடிய கோபங்கொண்ட இராக்கதர்களை, புவியில் - தரைமீது, புரட்டின - புரண்டு உருளுமாறு செய்தன.

செஞ்சரம், திசைதொறுந் தொடர்ந்து போர்த்த வெஞ்சினத் தரக்கரைப் புவியிற் புரட்டின என, இராமபிரான் அம்புகளுக்கே வினைப்படுத்தி யுரைத்தலும் ஒன்றும்.

பி - ம். 1. ஆர்த்தெழுந்த குருதியின்.

3. குருதியின் பெருந்திரை; குருதியம் பெருநதி திசைதொறுந் தொடர்ந்து பேருலகைப்:

4. வெஞ்சுரத் தரக்கரைப். (153)

515. தோன்று மால்வரைத் தொகையெனத் துவன்றிய நிணச்சே
றான்ற பாழ்வயிற் றலகையைப் புகழ்வதெ னமர்வேட்
டூன்றி னாரெலா முலந்தன ரொல்லையின் மடிந்தார்
கான்ற வவ்வுயிர்க் காலனும் வலித்துமெய் கவன்றான்.

தோன்று மால் வரை தொகை என - விளங்கும் பெரிய மலைகளின் கூட்டமென, துவன்றிய - நெருங்கிக் கிடந்த, நிண சேறு - (இறந்த அரக்கர்களுடைய) கொழுப்பாகிய சேற்றை, ஆன்ற - தின்று நிறைந்த, பாழ் வயிற்று அலகையை - (அதுகாறும் உணவு கிடைக்காமல்) பாழ்பட்டு இருந்த வயிற்றையுடைய பேய்களை, புகழ்வது என் - புகழ்ந்து கூறுவதற்கு என்ன இருக்கிறது? (ஏனெனில்), அமர் வேட்டு ஊன்றினார் எலாம் - போரை விரும்பி வந்து நின்ற அரக்கரெல்லாம், ஒல்லையின் - விரைவில், உலந்தனர் - மடிந்தார்; கான்ற - கக்கி வெளியிட்ட, அ உயிர் - அந்த உயிர்களை, காலனும் - யமனும், வலித்து - பற்றி இழுத்து, மெய் கவன்றான் - உடல் தளர்ந்து வருந்தினான்.

காலனும்; உம்மை, உயர் சிறப்பினது; எல்லா உயிர்களையும் கவர்ந்து செல்லும் காலனும் அங்கு இறந்த அரக்கர்களுடைய உயிர்களை வலிந்து பற்றிக்கொள்ளும் வலியற்று உடல் தளர்ந்து வருந்தினான் என்றால், அங்கு மலைக் கூட்டம் போலக் கிடந்த நிணத் தொகுதிகளையுண்ட பேய்களைப் புகழ்வதில் என்ன சிறப்புள்ளதாகும் என்பதாம். 'துன்றிய நிணச்சேறு ஆன்ற பாழ்வயிற றலகையைத் தோன்று மால்வரைத் தொகையெனப் புகழ்வதென் என்று அங்வயம்' என்பது பழையவுரை. ஒரு சுவடியில் இதன்பின்

517-ஆம் செய்யுளான, 'அறங்கொள்ளாதவர்' என்ற பாடல் உள்ளது.

பி - ம். 1. தோன்றிய நிலேச்சே; துன்றிய நிணச்சே; துயன்றிய தெனச் சென்.

3. முலேந்தன ரொல்லேயின்; முலர்ந்தன ரொல்லேயின்.

4. கான்ற கண்ணினீர்க் காலனுங் கலுழ்ந்துமெய்; காலனுங் கவர்ந்துமெய்ம் மறந்தான்; வலிக்குமேல் கவர்ந்தான்; கழிந்துமெய் மறந்தான். (154)

516. களிறு தேர்பரி கடுத்தவர் முடித்தலே கவந்தம்
ஒளிறு பல்படைத் தங்குலத் தரக்கர்த முடலம்
வெளிறு சேர்நிணம் பிறங்கிய வடுக்கலின் மீதில்
குளிறு தேர்கடி தோட்டினன் றூடணன் கொதித்தான்.

தூடணன் - தூடணன் என்பவன், களிறு - யானேகளும், தேர் - இரதங்களும், பரி - குதிரைகளும், (கொண்டு), கடுத்தவர் - கோபித்துப் போர்புரிந்தவரான, தன் குலத்து அரக்கர் தம் - தன் குலத்தைச் சார்ந்த அரக்கர்களுடைய, முடி தலே - கிரீடங்கள் அணிந்த தலேகளும், கவந்தம் - அவர்களுடைய குறையுடல்களும், ஒளிறு பல் படை - விளங்குகின்ற பல ஆயுதங்களும், வெளிறு சேர் நிணம் - வெண்ணிறம் பொருந்திய கொழுப்பும், பிறங்கிய - விளங்கிய, அடுக்கலின் மீதே - மலேகளின் மேலே, குளிறு தேர் கடிது ஓட்டினன் - முழக்கம் இடுகின்ற தன் தேரை விரைவாய் ஓட்டினவனுய், கொதித்தான் - கோபித்துச் சென்றுன்.

உடலம் என்றது, உறுப்புக்கள் அறுபடாது கிடந்த அரக்கர் உடல்கள். அடுக்கல்: ஒன்றன்மீது ஒன்று அடுக்கி வைத்தாற்போல் விளங்கும் பல பகுதிகளேயுடைய மலே; மலே, இங்குப் பெருமையைக் குறித்தது. அப்போர்க் களத்தில், களிறு முதல், நிணம் வரை யுள்ளவை மலேகள் போலக் குவிந்து கிடந்தன; அவற்றின் மீது தன் தேரைச் செலுத்திச் சென்றுன் தூடணன் என்பதாம்; ஒப்பு. சுந்தர. *999*. ஒரு சுவடியில் இப்பாடல் இல்லே.

பி - ம். 1. முடித்தலே கவிழ்ந்த,

2. முடலும்; பரிக்குர்தலே; முடித்தலேக் கவந்தம்.

3. சேர்பிணம்; மீதாக்; மீதாய்க்; சேர்நிணம் பிணங்கிய வடுக் கலின் மீதாய்க்.

4. தோட்டியத் தூடணன் ;... (155)

517. அறங்கொள் ளாதவ ராக்கைக ளடுக்கிய வடுக்கல்
பிறங்க நீண்டன கணிப்பில பெருங்கடு விசையால்
கறங்கு போன்றுள தாயினும் பிணப்பெருங் கடத்தில்
இறங்கு மேறுமத் தேர்பட்ட தியாதென விசைப்பாம்.

அறம் கொள்ளாதவர்-தருமத்தைக் கைக் கொள்ளாதவர்களான அவ்வரக்கருடைய, ஆக்கைகள் - உடல்கள், அடுக்கிய அடுக்கல்- ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கப்பெற்றுக் கிடந்தனவான மலைகள், பிறங்க நீண்டன - எங்கும் தென்படும்படியாக நீண்டு கிடந்தவை, கணிப்பில-கணக்கிட முடியா ; பிணம் பெரும் கடத்தில் - அப்பிணக் காடாய் மிகுந்த அப்போர்க்களத்தில், (தூடணன் தேர்) பெரும் கடும் விசையால் - மிகக் கடுமையான வேகத்தால், கறங்கு போன்று உளது ஆயினும் - பம்பரம் போன்று செல்வதானாலும், இறங்கும் ஏறும் - இறங்குவதும் ஏறுவதுமாய்த் தோன்றிற்று ; அ தேர் பட்டது - அந்தத் தூடணனுடைய தேரடைந்த நிலை, யாது என இசைப்பாம் - யாதென்று யாம் கூறுவாம் ; (கூற முடியாது என்றபடி)

ஆக்கைகள் அடுக்கிய அடுக்கல் - பிணங்கள் ஒன்றன்மேலொன்றாய் மலைகள் போலக் குவியப்பெற்றுக் கிடந்தன என்பதாம். தேர் கறங்குபோலச் சுழன்று வேகமாகச் சென்றாலும் அப்பிணக் காட்டில் ஏறியும்இறங்கியும் செல்ல வேண்டியிருந்தமையால், அது எடுத்துரைக்க முடியாத பெரும் இடர்க்குள்ளாயிற்று என்பதாம். ஏறியும் இறங்கியும் சுழன்றோடிய தேருக்குக் கறங்கு உவமை. கறங்கு - காற்றாடியும் ஆம். இச் செய்யுள் ‘ சந்தேகம் ’ என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 1. அறங்கொள்ளாதவ ராக்கிய வாக்கையினடுக்கல்.
2. பிறங்கி ; பிறங்கி மீதிடப் பேணில் பெருங்.
3. பிணப்பெருங்கட்டத்து ; கடற்பிணங்கூட்டத் ; கட்டத்து ; காட்டில் ; ஆயினு மொருகணப் பொழுதின்.
4. திறங்கு. (156)

518. அரிதி னெய்தின னையைந்து கொய்யுளைப் பரியால்
உருளு மாழிய தொருதனித் தேரினன் மேகத்
திருளி னீங்கிய விந்துவிற் பொலிகின்ற விராமன்
தெருளும் வார்கணைக் கூற்றெதி ராவிசென் றென்ன.

ஐ ஐந்து - இருபத்தைந்து, கொய் உளை பரியால் உருளும் - அழகாகக் கொய்து கத்தரிக்கப்பட்ட பிடரி மயிர்களையுடைய குதிரைகள்

இழுத்துச் சென்றமையால் உருள்கிற, ஆழியது ஒரு தனி தேரினன் - சக்கரங்களைக்கொண்ட ஓர் ஒப்பற்ற தேரையுடைய தூடணன், மேகத்து இருளின் நீங்கிய - மேகம் மறைத்ததால் உண்டான இருட்டினின்றும் நீங்கி வெளிவந்த, இந்துவில் பொலி கின்ற இராமன் - சந்திரனைப்போல் விளங்கிய இராமபிரானுடைய, தெருளும் - தெளிவான, வார் - நீண்ட, கணை கூற்று எதிர் - அம் பாகிய யமன் எதிரே, ஆவி சென்று என்ன - உயிர் சென்றாற்போல, அரிதின் எய்தினன் - மிக்க பிரயாசையிற் சென்றடைந்தான்.

கொய் உளை - நறுக்கின பிடரிமயிர். இச்செய்யுள் விற்பூட்டு. ஐயைந்து பரிகளின் முயற்சியால் ஆழி உருண்டது என்றதனால், பிணக்காட்டின் பெருமை கூறப்பட்டது. இருளின் நீங்கிய இந்து - சூழ்ந்திருந்த அரக்கர் பட்டொழியத் தான் மட்டும் நின்ற இராம பிரானுக்கு உவமை. இஃது ஏற்ற உவமை. 524 ஆம் செய்யுளையும் காண்க. கூற்றெதிர் ஆவி சென்றென்ன: இராமபாணம் கூற் றுக்கும்; தூடணன் ஆவிக்கும் உவமைகள்.

பி - ம். 1. அரிதி னெய்தியவையைந்து ; அரிதி னெய்தின னுயிரங் கொய் யுளைப்பரி பூண்.
2. ஆழிய வொருதனித் ; ஆழியுய்த்தொரு; டுருளுமாழி பெற்றெரு தனித் தேர்ப்படை யரக்கன்.
3. திருளு நீங்கிய ; இருளை நீங்கிய ; நீங்கிய யிரவியிற்.
4. எரியும் வெங்கணை யெனுங்கதிர்க் கெதிர்வரு மிருள்போல்.

(157)

519. சென்ற தேரையுஞ் சிலையுடை மலையெனத் தேர்மேல்
நின்ற தூடணன் றன்னையு நெடியவ னேக்கி
நன்று நன்றுநின் னிலையென வருளுரை நயந்தான்
என்ற காலத்தவ் வெய்யவன் பகழிமூன் றெய்தான்.

நெடியவன் - இராமபிரான், சென்ற தேரையும் - தன் எதிரே வந்த தேரையும், சிலை உடை மலை என - வில்லேந்திய மலைபோல, தேர் மேல் நின்ற - தேர்மீது போர்க் கோலங்கொண்டு நின்ற, தூடணன் தன்னையும் - தூடணனையும், நோக்கி - பார்த்து, 'நின் நிலை நன்று நன்று என - நீ போரில் கொண்ட உறுதி நிலை நல்லது, நல்லது' என்று, அருள் உரை நயந்தான் - அருளோடு கூடிய சொற்களாற் பாராட்டிக் கூறினான்; என்ற காலத்து - அவ்வாறு கூறிய அச்சமயத்திலே, அ வெய்யவன் - அக்கொடியோ னை தூடணன், பகழி மூன்று எய்தான் - இராமபிரான்மீது மூன்று அம்புகளைத் தொடுத்தேவினான்.

சிலையுடைமலை ; இல் பொருளுவமை. நெடியவன், எங்கும் வியாபித்த திருமாலாகிய இராமபிரான் ; முன் திரிவிக்கிரமனாய் நீண்டுயர்ந்தவன் என்றலும் ஒன்றும். நன்று நன்று : அடுக்கு உவகையின் வந்தது ; இது, தன் பகைவனாயினும் அவன் வீரத்தைபாராட்டிய இராமபிரானுடைய சிறப்பைக் குறிப்பிட்டது என்க.

பி-ம். 1. சிலையுடன் மலையெனத்.
2. தூடணன் றன்னையு நோக்கிய நிமலன்.
3. வருணுரை நவின்றான் ; வருளிறை நயந்தான் ; நகைத்தான்.

(158)

520. தூர வட்டவெண் டிசைகளைத் தனித்தனி சுமக்கும்
பார வெட்டினோ டிரண்டினி லொன்றுபார் புரக்கல்
பேர விட்டவன் கரிநுத லோடையிற் பிறங்கும்
வீர பட்டத்திற் பட்டன விண்ணவர் வெருவ.

தூர வட்ட எண் திசைகளை - தூரத்தில் வட்டமாய் எட்டுத் திசைகளை, தனி தனி சுமக்கும் - தனித்தனியே சுமந்துகொண்டு நிற்கும், பார எட்டின் ஓடு - வலிய எட்டுத் திக்கயங்களோடு, இரண்டினில் ஒன்று - உலகங்களைத் தாங்கும் மற்ற இரண்டான ஆதிசேடன் ஆதி கூர்மம் என்பவற்றில் ஒன்றான ஆதி சேடனாக உள்ள தன் பாதுகைகள், பார் புரக்கல் - உலகை ஆட்சிபுரிய, பேர விட்டவன் - தன்னை விட்டுப் பிரியுமாறு விட்ட இராமபிரானுடைய, கரி நுதல் ஓடையில் பிறங்கும் - யானையின் நெற்றியில் உள்ள முகபடாம்போல விளங்கும், வீரபட்டத்தில் - வீரபட்டிகையென்னும் நெற்றிப்பட்டத்தில், விண்ணவர் வெருவ - தேவர்கள் அஞ்சி நடுங்க, பட்டன - (அத் தூடணன் எய்த பகழிகள் மூன்றும்) பட்டன.

கரிநுதல் ஓடை ; இராமபிரானுக்கு யானையும், அவன் நெற்றியில் அணிந்திருந்த வீரபட்டிகைக்கு, யானை நெற்றியில் அணிந்திருக்கும் ஓடையும் உவமைகள். வீரபட்டிகை, வீரர்கள் அணியும் நெற்றிப்பட்டம் ; பால. கடிமணப் : 54 ; சுந்தர. 882 ; (குறிப்பு. வீர சூடிகை வேறு, வீரபட்டம் வேறு.) 'தூரம் - அநேகந் தூரம் ; பாரவெட்டினோ டிரண்டினி லொன்று - பருத்த அட்டகசங்களும் கூர்மமும் அனந்தனும் ; ஒன்று - அனந்தன் - திருவடி ; பார் - பூமி ; விட்டவன் - பெருமான்' என்பன பழையவுரை. இதற்கு எட்டு கஜங்களும், சேடனுடனும், கூர்மமுமாகிய பத்தில் ஒன்றான சேடனாகிய பாதுகையை, பரதாழ்வான் கேட்க, அவன் விருப்பப்படிப் பார்

புரக்க விட்டவன் என்று பொருள் கொள்ளப்பட்டது. சேடன் பாது கையாவது; 'சென்றாற் குடையாம்........நின்றால் மரவடியாம்' என்ற (முதல் திருவந். 53.) பாசுரத்திற் காண்க. இரண்டினில் ஒன்று - திருமாலின் இரு கரங்களினின்று பார் புரக்கும் சங்கு சக்கரங்களாகிய இரண்டினில் ஒன்றான சக்கரத்தின் அவதாரமான பரதாழ்வான் என்றும், பிறவாறும் பொருள் உரைப்பர். எட்டினோடிரண்டு; இரும்பிய லனந்தனு மிசைந்த யானையும், பெரும்பெயர்க் கிரிகளும் பெயரத் தாங்கிய' (அயோத். மந்திரப். 16). இச்செய்யுளுக்கு வேறு வகையாகப் பொருள் கூறிப் போந்தாரும் உளர். இச்செய்யுள் இடைச்செருகல் என்று தோன்றுகிறது. மேலும் 519, 521-ம் பொருட்டொடர்பு குன்றாமல் ஒத்து இயங்குவதும் இக்கருத்தை வலியுறுத்தும்.

பி - ம். 1. தூரவிட்ட.
2. புரக்கப் ; புரக்கும்.
3. பேரவிட்டதன் நுதலணி ; பேரவிட்டதின் ; பேரவிட்டவன் மணி நுதலோடை ; பேர விட்டவன்றன் நுதன் மீதினிற் பிறங்கும்.
4. வீரபட்டிகைபட்டென ; வீரபட்டிகைபட்டது ; விரபட்டிமை பட்டன ; வீரபட்டத்துப் பட்டது. (159)

521. எய்த காலமும் வலியுநன் றெனநினைந் திராமன்
செய்த சேயொளி முறுவலன் கடுங்கணை தெரிந்தான்
நொய்தி னங்கவ னெறில்பரித் தேர்பட நூறிக்
கையில் வெஞ்சிலை யறுத்தொளிர் கவசமுங் கடிந்தான்,

இராமன் - இராமபிரான், எய்த காலமும் - (அத்தூடணன்) அம்பு எய்த காலமும், வலியும் - அவனுடைய வலிமையும், நன்று என நினைந்து - சிறப்புடையன என்று எண்ணி, செய்த சேய் ஒளி முறுவலன் - சிவந்த ஒளியுடைய புன்னகை செய்தவனாய், கடும் கணை தெரிந்தான்-கொடிய பாணம் ஒன்றைத் தேர்ந்து விடுத்து, நொய்தின்- விரைவில் (அல்லது) எளிதில், அங்கு அவன் எறில் பரி தேர் பட நூறி - அங்கு அந்தத் தூடணனுடைய விரைவிற் செல்லும் குதிரைகள் பூட்டிய தேர் அழியச் சிதைத்து, கையின் வெம் சிலை அறுத்து - அவன் கையிலிருந்த கொடிய வில்லையும் வெட்டி, ஒளிர் கவசமும் கடிந்தான் - விளங்கிய அவன் கவசத்தையும் பிளந்து அழித்தான்.

காலமும் வலியும் நன்று என்றது : படைவீரர்கள் அஞ்சியோடிய போது அஞ்சாது எதிர்சென்று அவர்களை மறித்துப் போர்க்கு ஏகச் செய்து தானும் அஞ்சாது எதிர்த்துப் போர்செய்யும் அவனது

போரிட்ட நேரத்தையும் வலியையும் பாராட்டியது; 519ஐயும் காண்க. தொறில் : விரைவு. சுந்தர. 937. தூடணன் மூன்று பகழிகளால் தன் வீரபட்டத்தை எய்ய, இராமபிரான் ஒரே அம்பினால் அவ்வரக்கனுக்கு மூன்று அழிவுகளைச் செய்தான் என்க.

பி - ம். 1. நல்லென நினைந்து.

3. நொய்தி னீங்கவன் ; தேரறநூறி ; தேர்படப்படநூறி.

4. கையின் வெஞ்சிலை ; றறுத்தவன் கவசமுங். (160)

**522.** தேவ ரார்த்தெழ முனிவர்க டிசைதொறுஞ் சிலம்பும்
ஓவில் வாழ்த்தொலி கார்க்கடன் முழக்கென வோங்கக்
காவ டாவிது வல்லையே னீயெனக் கணையொன்
றேவி னானவ னெயிறுடை நெடுந்தலை யிழந்தான்.

தேவர் ஆர்த்து எழ-தேவர்கள் எழுந்து ஆரவாரம் செய்ய, முனிவர்கள் - இருடியர், திசைதொறும் - எல்லாத்திசைகளிலும் சூழ்ந்து, சிலம்பும் - ஒலிக்கின்ற, ஓவு இல் வாழ்த்து ஒலி - ஒழிதலில்லாத ஆசீர்வாத ஓசை, கார் கடல் முழக்கு என ஓங்க - கரியகடல் முழக்கம்போல மேலெழும்ப, 'வல்லையேல் இது கா அடா நீ என - திறமையுள்ளவனால் நீ இதைத் தடுத்து உன்னைக் காப்பாற்றிக்கொள்ளடா' என்று சொல்லி, கணை ஒன்று ஏவினான்-இராமபிரான் ஓர் அம்பைத் தூண்டினான் ; அவஅ - அந்தத் தூடணனும், எயிறுடை நெடுந்தலை இழந்தான்-கோரதந்தங்களையுடைய தன் பெரிய தலையை இழந்தான்.

அடா : இழிந்தோனை நோக்கிக் கூறும் மொழி. 20 ; குறிப். அரக்கனுதலின் எயிறுடை நெடுந்தலை என்பதற்கு, வக்கரதந்தங்களையுடைய பெருந்தலை எனப் பொருள் கொள்ளப்பட்டது. தேவர் ஆர்ப்பும், முனிவர் வாழ்த்தொலியும் இரண்டும் கார்க்கடல் முழக்குக்கு உவமையாக்கலும் ஒன்றும். சில பிரதிகளின்படி, இதனுடன் தூடணன் வதைப்படலம் முற்றும் ; அப்பிரதிகளின் இனி வருவன கரன் வதைப்படலம்.

பி - ம். 2. நாற்கடன் முழக்கென ; கருங்கடன் முழக்கென ; கார் கடல் முரசென ; ஓய்வில் வாழ்த்தொலி.

3. காவெடா ; நொய்திலங் கவன் வல்லையே. (161)

இதன்பின் ஒரு பிரதியில் அடியிற் காணும் ஓர் அதிகப்பாடல் உள்ளது.

விழுந்த வெம்படைத் தூடணன் சிரமெனவெருவுற்
றழிந்த சிந்தையர் திசைதிசை யோடின ரரக்கர்
எழுந்த காதலி னிடைவிடா திமையவர் முனிவர்
பொழிந்து பூமழை போற்றின ரிறைவனைப் புகழ்ந்தார்.

வேறு

கரன் போருக்குப் புறப்படுதலும் அவன் படை அழிதலும் **523—30**

523. தம்பிதலை யற்றபடி யுந்தய ரதன்சேய்
அம்புபடை யைத்துணி படுத்தது மறிந்தான்
வெம்புபடை விற்கைவிச யக்கரன் வெகுண்டான்
கொம்புதலை கட்டிய கொலைக்கரி கடுப்பான்.

கொம்பு தலை கட்டிய - தந்தங்கள் தலை வரை உயர்ந்து வளரப் பெற்ற, கொலை கரி கடுப்பான் - கொலைச் செயலைப் புரியும் யானை போன்றவனான, வெம்பு படை - கொடிய பல ஆயுதங்களையும், வில் - வில்லையும், கை - கைகளையுமுடைய, விசய கரன் - வெற்றி யையுடைய கரன் என்பவன், தம்பி தலை அற்றபடியும் - தன் தம்பியாகிய தூடணன் தலையற்று அழிந்த விதமும், தயரதன் சேய் - தசரதன் குமாரனான இராமபிரானுடைய, அம்பு படையை துணிபடுத்ததும் - அம்புகள் தன் அரக்கர் படைகளை வெட்டித் துண் டாடியதையும், அறிந்தான் - அறிந்து, வெகுண்டான் - சினமேற் கொண்டான்.

தம்பி - தூடணன் ; 'மூக்கினைக் காட்டென்ன எழுந்த (8) கரனை, ஏழொடேழனார் தடுத்து (10)த் தாம் போர்க்கெழவும், அவர்களும் அவர்களின் படைவீரர்களும் இராமபிரானால் அழிந்தனர் (20) ; பிறகு வேறு பதினான்கு தலைவர்களுடனும் திரிசிரா, தூடணன் கரனின் படை முதலியோருடனும் அவன் போர்க்கெழ, அப்படைகளும் அழிந்ததைக் கண்ட முத்தலைக்குரிசில் (113-136) போரிட்டு இறந் தான்; அதனைக் கண்ட தூடணன் சிதறியோடும் அரக்கர் படையினை நிறுத்தித் தான் போர்செய்து (141-8) அவனும் தலையிழந்தவனாகவே, (161), கரன் முடிவாகத் தானே போர்செய்யத் தொடங்கினன் என்க. 'கொம்பு தலை கட்டிய குலக்கிரி - கோட்டை முகத்திற் பெற்ற யானை' என்பது பழையவுரை. கடுத்தல் - ஒத்தல் ; கடுப்ப ; உவமை உருபு ; நன். சூ. 367. இராமபிரானைச் சேய் என்று கூறியது, சிறுவன் என்ற இகழ்ச்சிப் பொருளில். படி - விதம்: பாசத்தா லனகன்றம்பி பிணிப் புண்ட படியை' (உயுத்த. நாகபாசப்; 209).

பி - ம். 1. தம்பி மடியுற்றபடி; தம்பி படியுற்றபடி.
3. வெம்பு வரி விற்கை ; வெருண்டான்.
4. கொலைக்கரி யொடொப்பான் ; கரியையொப்பான் ; கரிதடுப் பான்; குலக்கரி யொடொப்பான் ; குலக்கரி கடுப்பான். (162

**524.** அந்தகனு முட்கிட வரக்கர்கட லோடும்
சிந்துரம் வயப்புரவி தேர்திசை பரப்பி
இந்துவை வளைக்குமெழி லிக்குல மெனத்தான்
வந்துவரி விற்கைமத யானையை வளைத்தான்.

அந்தகனும் உட்கிட - யமனும் கண்டு அஞ்ச, அரக்கர் கடல் ஓடும் - அரக்கர் படை வீரர்களாகிய கடலோடும், சிந்துரம் - யானைகள், வய புரவி - வலிமை மிக்க குதிரைகள், தேர் - தேர்கள் ஆகிய நாற்படைகளை, திசை பரப்பி - எல்லாத் திசைகளிலும் பரவிச் சூழ்ந்திருக்கச் செய்து, இந்துவை வளைக்கும் எழிலி குலம் என - சந்திரனைச் சுற்றி வளைத்துக்கொண்ட மேகக்கூட்டம் போல, (சேனைகள் இராமபிரானை வளைந்து நிற்க), வரி வில் கை மத யானையை - கட்டமைந்த வில்லேந்திய கையையுடைய மதயானை போன்ற இராமபிரானை, தான் வந்து வளைத்தான் - தான் வந்து வளைத்துக்கொண்டான்.

அந்தகனும்; உம்மை உயர்வு சிறப்பினது. அரக்கர் கடல் என்றது, அரக்கர்களின் மிகுதியைக் குறித்தது. இராமபிரானுக்குச் சந்திரனும் அரக்கர் கூட்டத்திற்கு மேகக்கூட்டமும் உவமை. இந்து இராமபிரானுக்கு: 518. வரி விற்கை மதயானையை: இல்பொருள் உவமை. 'எழிலி மேகம்; 'தடிந்தெழிலி தானல் காதாகி விடின்' (குறள். 17.)

பா - ம். 1. வயக்கரிகள்; வயப்புரவி தேர்மிசை பரப்பி; வயப்புரவி தேரிவைபரப்பி; சிந்துர வரக்கரி; பரப்ப. (163)

**525.** அடங்கலில் கொடுந்தொழி லரக்கரவ் வனந்தன்
படங்கிழி வுறப்படி படப்பல விதப்போர்
கடங்கலுழ் தடங்களிறு தேர்பரி கடாவித்
தொடங்கினர் நெடுந்தகையும் வெங்கணை துரந்தான்.

அடங்கல் இல் கொடும் தொழில் அரக்கர் - கட்டுக்கடங்காத கொடிய செயல்களையுடைய இராக்கதர்கள், அ அனந்தன் - அந்த ஆதிசேடனது, படம் கிழிவு உற - படம் கிழிந்துபோக, படி பட - பூமியும் அழிய, பலவித - பலவகையான, கடம் கலுழ் தடம் களிறு - மதப்பெருக்கோடு கூடிய பெரிய யானைகளையும், தேர் - இரதங்களையும், பரி - குதிரைகளையும், கடாவி - செலுத்தி, போர் தொடங்கினர் - போரிடத் தொடங்கினார்கள்; நெடும் தகையும் - குணத்தாற் சிறந்த இராமனும், வெம் கணை துரந்தான் - கொடிய அம்புகளைத் தூண்டினான்.

'கடங்கலுழ் தடங்களிறு; பால. தாடகை வதைப்: 50. படங் கிழிதர படிபட' ஒப்பு. 498.

பி-ம். 1. லரக்கர்க ளனந்தன்.

2. படங் கிழிதரப் படிதனிற்; படியிடை பலவிதப்போர்; படி மிசைப் பல; கிழிதரப் படிபடப்; படிப்பட.

3. தடக்களிறு; கருங்களிறு.

4. தொடங்கின நெடுந்தகை. (164)

526. துடித்தன கடக்கரி துடித்தன பரித்தேர்
துடித்தன முடித்தலை துடித்தன தொடித்தோள்
துடித்தன மணிக்குடர் துடித்தன தசைத்தோல்
துடித்தன கழற்றுணை துடித்தன விடத்தோள்.

கடம் கரி துடித்தன - (இராமபாணங்கள் பட்டு) மதத்தையுடைய யானைகள் துடித்தன; பரி தேர் - குதிரைகள் பூட்டப்பெற்ற தேர்கள், துடித்தன - துள்ளித் துடித்தன; முடி தலை துடித்தன - முடிகள் அணிந்த அரக்கர் தலைகள் துடித்தன; தொடி தோள் துடித்தன - வளையல்கள் அணிந்த அரக்கர்களுடைய தோள்கள் துடித்தன; மணி குடர் துடித்தன - அன்னோர் சிறு குடல்களும் துடித்தன; தசை தோல் துடித்தன - தசையோடு கூடின தோல்களும் துடித்தன; துடித்தன கழல் துணை - இரண்டு கால்களும் துடித்தன; துடித்தன இடம் தோள் - இடப்புறத் தோள்களும் துடித்தன.

கடகரி என்ற வடசொற்றொடர் தமிழ் விதிபற்றிக் கடக்கரி என ஒற்று இரட்டித்தது. தேர் துடித்தலாவது, தேர் துள்ளி விழுந்ததைக் குறிப்பிட்டபடி; இனி, தேர்ப்பரி என மாற்றித் தேரில் பூட்டப்பெற்ற குதிரைகள் துடித்தன எனக் கொள்ளலும் ஏற்கும். மணி குடர் - சிறுகுடல்; மணி என்பது சிறுமையைக் குறித்து வந்தது; 'மணிப்புரு: மணிக்காடை' என்பனபோல. கழல் துணை; இடவாகு பெயராய்க் கழலணிந்த பாதங்களைக் குறித்தது. இடதோள் துடித்தன - சாகாத அரக்கர்களுடைய இடத்தோள் துடித்தன; இது, நியமித்தத்தைக் குறிப்பிட்டது.

பி-ம். 3. துடித்தன விரைக்குடர்; படக்கை.

4. துடித்த மணித் தொடை துடித்தன துணைத்தாள். (165)

**527.** வாளின்வனம் வேலின்வனம் வார்சிலை வனந்திண்
தோளின்வன மென்றிவை துவன்றுநிரு தப்பேர்
ஆளின்வன நின்றதனை யம்பின்வன மென்னும்
கோளின் மழைவன்குழு வினிற்குறை படுத்தான்.

வாளின் வனம் - வாட்படையின் தொகுதியும், வேலின் வனம் - வேற்படையின் தொகுதியும், வார் சிலை வனம் - நீண்ட விற்களின் தொகுதியும், திண் தோளின் வனம் - வலிய தோள்களின் தொகுதியும், அன்னவை துவன்று - ஆகிய அவை நெருங்கியமையப்பெற்ற, நிருத பேர் ஆளின் வனம் நின்றதனை - அரக்க வீரர்களின் பெரிய தொகுதிகள் எதிர் நின்றவற்றை, அம்பின் வனம் என்னும் - இராமபிரான் தன் அம்புகளின் தொகுதி என்று சொல்லக்கூடிய, கோளின் - வலிமை பொருந்திய, மழையின் - மழைக்கூட்டத்தின், குழுவினில் குறைபடுத்தான் - தொகுதிகளாய்த் துண்டாடிக் கீழ் வீழ்த்தினன்.

வனம் என்ற சொல் இங்கு மிகுதியைக் குறிப்பிட வந்தது. ஆயுதவனம்; தக்க. 401 உரை. வேல், வில், வாள் - மூவகை காலாட் படைகளைக் குறித்தன. இம்மூன்றும் ஒருங்கே கூறப்படுபவன; பதிற்றுப். 33 : 7-8; ஆள் - வீரன்; (495) குறிப்பு. பெரு மழையால் வனங்கள் அழிதல் போல அழிந்தன என்றது குறிப்பு; சுந்தர. 314. இதன்பின் ஒரு செய்யுள் இருக்கவேண்டுமென்பது, ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. சிலை வனத்திண்; சிலை வனர்தன்.
2. தோளின் வனமென்றிவை; நிருதப்போா; தொடங்கி நிருதப் போர்; அன்னவை துவன்று; துவன்ற நிருதப்பேர்;
3. அம்பின் வனமென்னச்.
4. குழுமழையின் குழுவிடைத் துணிபடுத்தான்; கோளின் வன மழைக் குழுவினிற். (166)

**528.** தானுருவு கொண்டதரு மந்தெரி சரந்தான்
மீனுருவு மேருவை விரைந்துருவு மேலாம்
வானுருவு மண்ணுருவும் வாளுருவி வந்தார்
ஊனுருவு மென்னுமி துணர்த்தவு முரித்தோ.

தான் உருவுகொண்ட தருமம் - தருமம் தான் ஓர் உருவைக் கொண்டது போன்ற இராமபிரான், தெரி சரம் தான் - தேர்ந்து எய்த

அம்புதான், மீன் உருவும் - நட்சத்திர மண்டலங்களை ஊடுருவிச் செல்லும்; மேருவை விரைந்து உருவும் - மேருமலையையும் துருவிப் புகுந்து அப்பாற் செல்லும்; மேல் ஆம் வான் உருவும் - இவற்றிற் கெல்லாம் மேலேயுள்ள வானமண்டலத்தையும் உருவிச் செல்லும்; மண் உருவும் - பூமியையும் ஊடுருவித்துளைத்துச் செல்லும்; (அவ்வாருக), வாள் உருவி வந்தார் - வாளை உருவிக்கொண்டு போரிட வந்த அரக்கர்களுடைய, ஊன் உருவும் என்னும் இது - உடலை ஊடுருவிச் செல்லும் என்று சொல்லும் இதை, உணர்த்தவும் உரித்தோ - எடுத்துக் கூறுவதும் பெருமைக்கிடமாமோ? (ஆகாது என்றபடி.)

மீனுருவு மேருவை விரைந்துருவும் - நட்சத்திரமண்டலங்களை உருவிச்செல்லும் மெருமலையை விரைவில் ஊடுருவிச் செல்லும், என இயைத்துப் பொருள் கோடலும் அமையும். இச்செய்யுள்; பால. குல முறை; 26; 'அலையுருவக் கடலுருவத்' என்ற தொடக்கத்துச் செய்யுளை நினைப்பூட்டுகின்றது. இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. கொண்டு தருமந்; தருமன் விடு; தருமன்றெரி.
2. விரைந்துருவு மெல்லாம். 3. வாளுருவு வஞ்சர்.
4. மென்றதை யுணர்த்தவு. (167)

529. அன்றிடர் விளைத்தவர் குலங்களொ டடங்கச்
சென்றுலை வுறும்படி தெரிந்துகணை சிந்தா
மன்றிடை நலிந்துவலி யோர்களெளி யோரைக்
கொன்றனர் கவர்ந்தபொரு ளிற்கடிது கொன்றான்.

அன்று - அப்போது, இடர் விளைத்தவர் - துன்புறுத்தியவர்களான அவ்வரக்கர்கள், குலங்கள் ஒடு அடங்க - கூட்டத்தோடு ஒருசேர, சென்று உலைவு உறும்படி - போய் அழியும்படி, தெரிந்து கணை சிந்தா - (இராமபிரான்) அம்புகளை ஆராய்ந்து விட, மன்று இடை - நீதிமன்றத்திடத்து, வலியோர் - வலிமை மிக்கவர், எளியோரை - ஏழ்மை நிலையில் உள்ளவரை, நலிந்து - வருத்தி, கொன்றவர் - அழித்தவராய், கவர்ந்த பொருளில் - அவ்வேழையரிடமிருந்து அபகரித்துக் கொண்ட பொருள் அழியும் வேகத்திலும், கடிது கொன்றான் - விரைவில் அவர்களை அழித்துக் கொன்றான்.

எளியோர் பொருளை வலிந்து கொண்ட வலியோர் விரைவில் அழிவர் என்பது கருத்து.

பி-ம். 2. சென்றுணர்வுறும்படி; வுறும்பரிசு செம்மல் கணைசிந்தி.
3. மன்றிடைவந்த வெளி யோரை வலியோர்கள்.
4. கொன்றனர்நுகர்ந்த; கொன்றுற வலிந்த; கொன்றவர் கவர்ந்த; கொன்றுற வலிந்த பொருளிற் கடிது கொன்றான். (168)

530. கடுங்கர னெனப்பெயர் படைத்த கழல்வீரன்
அடங்கலு மரக்கரழி வுற்றிட வழன்ருன்
ஒடுங்கலி னிணக்குருதி யோதமதி னுள்ளான்
நெடுங்கடலின் மந்தர மெனத்தமிய னின்ருன்.

ஒடுங்கல் இல் - குறை படுதல் இல்லாத, நிண குருதி ஓதம் அதில் உள்ளான் - கொழுப்பும் இரத்தமுமான கடலில் இருந்தவனும், நெடும் கடலின் - பெரிய பாற்கடலினிடை, மந்தரம் என தமியன் நின்ருன் - (நாட்டப் பெற்ற) மந்தரகிரிபோலத் தனியே நின்றவனுமான, கடும் கரன் எனப்பெயர் படைத்த - கொடியகரன் என்று பிரசித்திபெற்ற, கழல் வீரன் - வீரக்கழல் அணிந்த அவ்வரக்க வீரன், அரக்கர் அடங்கலும் அழிவு உற்றிட - (தன் படை வீரர்களான) இராக்கதர் எல்லாரும் (போரில்) அழிவு அடைய, அழன்ருன் - கோபங்கொண்டவனானன்.

பி-ம். 3. யோதமதனுள்ளால்; யோதமதினுள்ளே.
4. தனிய னின்ருன். (169)

கரன் தனித்து நின்று போரிட்டு மடிதல் 531—46

531. செங்கணெரி சிந்தவரி விற்பகழி சிந்தப்
பொங்குகுரு திப்புணரி யுட்புகையு நெஞ்சன்
கங்கமொடு காகமிடை யக்கடலி னேடும்
வங்கமென லாயதொரு தேரின்மிசை வந்தான்.

செம் கண் எரி சிந்த - தன் சிவந்த கண்களினின்றும் நெருப்புச் சொரியவும், வில் பகழி சிந்த - வில் அம்புகளைப் பொழியவும், பொங்கு குருதி புணரி உள் புகையும் நெஞ்சன் - மேல் பொங்கி எழுகின்ற இரத்தக்கடலின் உள்ளே புகைந்து கொண்டிருக்கும் மனத்தையுடைய அக்கரன் என்பவன், கங்கம் ஒடு காகம் மிடைய - கழுகுகளோடு காகங்கள் நெருங்கிவந்தடைய, கடலின் ஓடும் வங்கம் எனல்

ஆயது - கடலிற் செல்லும் கப்பல் என்று சொல்லத்தக்கதான, ஒரு தேரின் மிசை வந்தான் - ஒரு தேரின் மீது போர் செய்ய வந்தான்.

பொங்கு குருதியுள் புகையும் நெஞ்சன், என இயைத்துப் பொருள் கோடலும் அமையும். கங்கமும் காகமும் அடைதல், அங்குக் கிடைக்கும் குருதியையும் ஙிணத்தையும் பருகி உண்ண. குருதி, வெள்ளம் ஆனதற்கேற்ப, அதனிடைச் செல்லும் தேர் வங்கமாக உவமிக்கப்பெற்றது.

பி - ம். 1. சிந்திப், சிந்தாப்.
2. புணரியிற் புகையு.
4. வங்கமென லாயதொரு. (170)

532. செறுத்திறுதி யிற்புவனி தீயவெழு தீயின்
மறத்தின்வயி ரத்தொருவன் வந்தணுகு முந்தைக்
கறுத்தமணி கண்டர்கட வுட்சிலை கரத்தால்
இறுத்தவனும் வெங்கணை தெரிந்தன னெதிர்ந்தான்.

இறுதியில் புவனி தீய - யுகம் முடியும் ஊழிக்காலத்தில் உலகம் எரிந்து அழிய, செறுத்து எழு - பகைத்துக் கடுமையுடன் எழுகின்ற, தீயின் - தீயைப் போல, மறத்தின் வயிரத்து ஒருவன் - கொடுமையிலும் பகைமையிலும் ஒப்பற்றவனான அந்தக் கரன் என்பவன், வந்து அணுகும் முந்தை - தன் அருகே வந்தடைவதற்கு முன்னமே, கறுத்த மணி கண்டர் - விடம் அடங்கியதால் கறுப்பு நிறமான அழகிய கழுத்தையுடைய சிவபிரானது, கடவுள் சிலை - தெய்வத்தன்மை வாய்ந்த திரியம்பகம் என்னும் வில்லை, இறுத்தவனும் - (பிராட்டியின் திருமணத்துக்கு முன்) வளைத்து ஒடித்த இராமபிரானும், வெம் கணை தெரிந்தனன் - கொடிய அம்புகளை ஆராய்ந்து எடுத்துக்கொண்டவனாய், எதிர்ந்தான் - போரிட அவனை எதிர்த்துச் சென்றான்.

கரனுக்கு ஊழித்தீ உவமை. வயிரம் தீராப் பகைமையும் ஆம். முந்தை - முன் ; இதை ஐயீற்றுடைக் குற்றுகரம் என்பர் ; 609.

பி - ம். 1. திறுதியிற் புணரி.
2. வந்தணுக முந்தை, வந்தணுகு முன்னே. (171)

**533.** தீயுருவ கால்விசைய செவ்வியன வெவ்வாய்
ஆயிரம் வடிக்கணை யரக்கர்பதி யெய்தான்
தீயுருவ கால்விசைய செவ்வியன வெவ்வாய்
ஆயிரம் வடிக்கணை யிராமனு மறுத்தான்.

தீ உருவ - நெருப்புப் போன்ற வடிவையுடையனவும், கால் விசைய - காற்றுப் போல வேகமுள்ளவையும், செவ்வி அன - சிறப்புற்றனவும், வெம் வாய் - கொடிய வாயையுமுடைய, ஆயிரம் வடி கணை - ஆயிரம் கூரிய அம்புகளை, அரக்கர் பதி எய்தான் - இராக்கதர் தலைவனான கரன் தூண்டினான்; இராமனும் - இராமபிரானும், தீ உருவ - அவ்வாறே நெருப்புப் போன்ற வடிவுடையனவும், கால் விசைய - காற்றுப்போல வேகமுள்ளவையும், செவ்வியன - சிறப்பமைந்தவையும், வெம் வாய் - கொடிய வாயையுமுடைய, ஆயிரம் வடி கணை - ஆயிரம் கூரிய அம்புகளைத் தூண்டி, அறுத்தான் - அவற்றை அறுத்து ஒழித்தான்.

ஒரு பிரதியில் இதன் பின் 'கள்ள வினை' யெனத்தொடங்கும் 535ஆம் பாடல் உள்ளது. 4ஆம் அடியிலுள்ள 'ஆயிரம் வடிக்கணை' என்பது கரன் கணையையே குறிப்பதாகவும் கொள்ளலாம்.

பி-ம். 1. தீயுருவு கால் விசைய ; செவ்வியென.
3. செவ்வியன செவ்வாய் ; செவ்வியென.
4. ஆயிர மோடன்னவை யிராமனு மறுத்தான். (172)

**534.** ஊழியெரி யிற்கொடிய பாய்பகழி யொன்பான்
ஏழுலகி னுக்குமொரு நாயகனு மெய்தான்
சூழ்சுடர் வடிக்கணை யவற்றெதிர் தொடுத்தே
ஆழிவரி விற்கரனு மன்னவை யறுத்தான்.

ஊழி எரியில் கொடிய - ஊழித் தீப்போற் கொடியனவான, பாய் பகழி ஒன்பான் - பாய்ந்து செல்லும் அம்புகள் ஒன்பதை, ஏழ் உலகினுக்கும் ஒரு நாயகனும் - ஏழு வகையாக உள்ள உலகங்கட்கு ஒப்பற்ற நாயகனான இராமபிரானும், எய்தான் - கரன் மீது தொடுத்து விட்டான்; ஆழி வரி வில் கரனும் - வட்டமாய் வளைந்த வில்லை யுடைய கரனும், அவற்று எதிர்-அவற்றிற்கு எதிராக சுடர் சூழ் வடி கணை தொடுத்தே-ஒளி சூழ்ந்த கூரிய அம்புகளை ஏவி, அன்னவை - இராமபிரானால் ஏவப்பெற்ற அவ்வம்புகளை, அறுத்தான் - அறுத்து ஒழித்தான்.

ஏழுலகினும் ஒரு நாயகன்; கீழேழு மேலேழு ஆகிய பதினான்கு உலகங்களுக்கும் தலைவனாகிய இராமபிரான்; இது ஸர்வேச்வரன் என்று கருதி கூறியது; இதுவன்றி ஏழு பிரிவாய் (கண்டங்களாய்) உள்ள இந்த உலகுக்கு நாயகன் என்னலும் ஒன்றும்; சூரியகுலத் தரசருக்கு இவ்வுலகு முழுவதும் உரிமை என்பது பற்றிக் கூறிய தாகவும் கொள்ளலாம்; 'செம்மாண் டனிக்கோ லுலகேழினுஞ் செல்ல நின்றான்' (பால. அரசியற்: 1.) எனத் தயரதசக்கரவர்த்தி சிறப்பிக்கப் பெற்றமையால் அவனுக்குப் பின் அவன் மைந்தனான இராமபிரானுக்கும் அவ் வுரிமை யுடைமை காரணமாகவும் கூறப் பெற்றது என்னலும் ஆம். ஆழி வரி வில்: வில்லை வளைத்து நாணேற்றுங்கால் அது வட்டமாக வளையும் நிலை நோக்கிக் கூறியது. ஆழி வில்லைக் கையிலே கொள்பவன் என்க. ஆழி வரி வில்; இதனை வட்டவார் சிலை என்பர். ஒரு பிரதியில் இப்பாடல் இல்லை.

பி-ம். 1. ஊழியனலிற்; பகழியொன்றுற்; ஒன்றால்; ஒன்று.
2. ஏழுலகினுக்கு.
3. யவற்றெதிர் துரந்தான்; தொடர்ந்திட்.
4. டாழிவரிவிற். (173)

535. கள்ளவினை மாயவமர் கல்வியின் விளைத்தான்
வள்ளலுரு வைப்பகழி மாரியின் மறைத்தான்
உள்ளமுலை வுற்றமர ரோடின ரொளித்தார்
வெள்ளெயி றிதழ்ப்பிறழ வீரனும் வெகுண்டான்.

(அவ்வாறு அம்புகொண்டு இராமபாணங்களை அறுத்த கரன்), கல்வியின் - தான் கற்றுத் தேர்ந்த வகையால், கள்ள வினை - வஞ்சகத் தொழிலையுடைய, மாய அமர் - மாயப்போரை, விளைத்தான் - உண்டாக்கினவனாய், வள்ளல் உருவை - இராமபிரானது திருமேனியை, பகழி மாரியின் மறைத்தான் - அம்பு மழையால் மறையும்படி மூடி விட்டான்; அமரர் - தேவர்கள், உள்ளம் உலைவு உற்று - மனம் வருந்தி, ஓடினர் ஒளித்தார் - ஓடித் தம்மை மறைத்து ஒளித்துக் கொண்டனர்; வீரனும் - மகாவீரனான இராமபிரானும், வெள் எயிறு இதழ் பிறழ - தன் வெண்ணிறப் பற்கள் உதட்டின்மேல் மாறி விளங்க, வெகுண்டான் - கோபங் கொண்டான்.

இராமபிரான்; யாவர் மாட்டுங் கருணையை வரையாது அளிப்பவனாதலின் இந் நூலிற் பல விடங்களிலும் அவனை வள்ளல் எனக்

கூறுவது காணலாம்; அமரர்; போரைக்காண வானில் வந்து நிறைந்து நின்றவர். எயிறு இதழ் பிறழ்தல்: கோபத்திற் பற்கள் இதழ் மேல் தோன்றும் நிலை; சிலப். அரங்கேற்று காதை உரை, வெகுண்டோ னவிநயங் காண்க.

பி - ம். 1. கள்ளவமர் மாயவினை; மாயை பல கற்ற கரனென்போன்; வளைத்தான்.

3. உள்ளமயர் வுற்றமர.

4. ரிதழ்ப்பவள வீரனும். (174)

## வேறு

536. முடிப்பெ னின்றொரு மொய்கணை யாலெனத்
தொடுத்து நின்றுயர் தோளுற வாங்கினன்
பிடித்த திண்சிலை பேரகல் வானிடை
இடிப்பி னோசை படக்கடி திற்றதே.

(அவ்வாறு வெகுண்ட இராமபிரான்), 'இன்று ஒரு மொய் கணையால் - இன்று ஒரு வலிய அம்பினால், முடிப்பென் என - இவனை அழிப்பேன்' என்று, தொடுத்து நின்று - அம்பைத் தொடுத்து நின்றவனாய், உயர் தோள் உற வாங்கினன் - அந்த வில் நுனி தன் தோளில் படும்படியாக வளைத்தான்; (அவ்வாறு வளைக்க), பிடித்த திண் சிலை - தான் கையிற் பிடித்த அந்த வலிய வில், பேர் அகல் வான் இடை - பெரிய அகன்ற ஆகாயத்தினிடையே இடிப்பின் ஓசைபட - இடியின் ஓசை யுண்டாக, கடிது இற்றது - விரைவில் தானாக ஒடிந்தது. ஏ: ஈற்றசை.

இடிப்பின் ஓசைபட - இடியின் ஓசையும் உள் அடங்குமாறு போரோசையுடன் என்று வலிந்து பொருள் கொள்வாரும் உளர். இப்போரில் கரன் ஒரு பாணத்தால், இராமபிரான் வில்லைக் கையாற் பிடிக்கும் இடத்திற்கு அருகே துண்டித்தான் என்றும், அதனோடு கரன் ஏழு பாணங்களை ஏவி இராமபிரான் பூண்டிருந்த கவசத்தை யும் அறுத்தான் என்றும் வான்மீகம் கூறும்.

பி - ம். 1. யாலெனாத்.

2. நின்றொரு.

4. திற்றவே. (175)

537. வெற்றி கூறிய வானவர் வீரன்வில்
இற்ற போது துணுக்கமுற் றேங்கினர்
மற்று வெஞ்சிலை யின்மை மனக்கொளா
அற்ற தாலெம் வலியென வஞ்சினர்.

வெற்றி கூறிய வானவர் - இராமபிரானுடைய வெற்றியைப் பாராட்டிக் கூறிய தேவர்கள், வீரன் வில் இற்றபோது - இரகுவீரனது வில் ஒடிந்தபோது, துணுக்கம் உற்று ஏங்கினர் - நடுக்கமடைந்து வருந்தினர்களாய், மற்றும் வெம் சிலை இன்மை மனம் கொளா - வேறு வில் (இராமபிரானிடம்) இல்லாததை மனத்தில் கொண்டு, எம் வலி அற்றது என - எங்கள் வலிமை மாய்ந்ததாகும் என்று, அஞ்சினர் - அச்சங் கொண்டனர். ஆல் : அசை.

இராமபிரான் வில் ஒடிந்ததால் இனி அரக்கர்க்கே வெற்றி யென்றும், அதனால் தமக்கு வேறு உதவி செய்வாரின்மையும் அறிந்து, தம் வலி அற்றது என்றும், தாம் இனி அரக்கரால் பெரிதும் இடருறுவதே யாகும் என்றும் அஞ்சினர் வானவர் என்பதாம். இதனால் இராமபிரான் வலிமையே அன்னோர் தம் வலியாகக் கருதி யிருந்தனர் என்பது விளங்கும்.

பி - ம். 2. றேங்கியே.
3. மற்றொர்.
4. அற்றதானம் வலியென. (176)

538. என்னு மாத்திரத் தேந்திய கார்முகம்
சின்ன மென்றுந் தனிமையுஞ் சிந்தியான்
மன்னர் மன்னவன் செம்மன் மரபினால்
பின்னு றத்தன் பெருங்கர நீட்டினன்.

என்னும் மாத்திரத்து - அவ்வாறு வானவர் வருந்திக் கூறிய அளவில், மன்னர் மன்னவன் செம்மல் - அரசர்க்கரசனும் தயரதன் குமாரனை இராமபிரான், ஏந்திய கார்முகம் - தான் பிடித்திருந்த வில், சின்னம் என்றும் - துண்டுபட்டதென்றும், தனிமையும்,- தான் வேறு வில் முதலிய துணையின்றித் தனித்திருப்பதையும், சிந்தியான் கருதாது, மரபினால் - முன்கூறியிருந்த சங்கேதப்படி, தன் பெரும் கரம் பின் உற நீட்டினன் - தனது நீண்ட கையைப் பின்புறம் செல்ல நீட்டினன்.

மாத்திரம் - அளவு, கலித் 47 ; 22. சின்னம் - துண்டு ; சிந்நம் என வடசொல்லின் திரிபு. மரபு : பரசுராமனிடமிருந்து கொண்ட வில்லை வருணனிடங்கொடுத்துக் கூறியிருந்த சங்கேதம் ; பால. பரசுராமப்படலம் : 45 ; சுந்தர. 356 ; மரபு ; இராசத மரபும்ஆம். சீவக. 265 ; ஸ்ரீ ஐயரவர்களின் அடிக்குறிப்பைக் காண்க. மரபு : போர்க்களத்தில் ஒரு வீரர்க்கு ஒரு வில் முறியுமானால், உடனே பின்னிற்கும் அவர் ஏவலர் சேமவிற்களினின்று மற்றொரு வில்லை எடுத்துதவுதல் என்னும் பழைய வழக்கம் ஆம். இவ்விடத்தில் வான்மீகம் கூறுவதாவது :—' சத்ருக்களை அழிக்கும் திறமுடைய இராமபிரான், அந்தப் பகைவனை முடிப்பதற்காக, மிகவும் கம்பீரமான கோஷத்தையுடைய மற்றொரு பெரிய வில்லை எடுத்து நாணேற்றினர் ; மிகவும் பெரிதான அந்தத் தனுஸ் விஷ்ணுவினுடையது ; அகஸ்தியமாமுனியால் கொடுக்கப்பட்டது' ; (ஆரண்ய. ஸர்க்-28).

பி - ம். 2. தனியென்றுஞ் சிந்தியான். (177)

539. கண்டு நின்று கருத்துணர்ந் தானென
அண்டர் நாதன் றடக்கையி னத்துணை
பண்டு போர்மழு வாளியைப் பண்பினால்
கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன்.

கண்டு நின்று - அந்நிலையைப் பார்த்து நின்று, கருத்து உணர்ந்தான் என - அப்பெருமானுடைய திருவுள்ளத்தை அறிந்து கொண்டான்போல, பண்டு - முன், போர் மழு ஆளியை - போர்க்கு உரிய கருவியாக கோடாலியைக் கொண்டவனான பரசுராமனை, பண்பினால் கொண்ட - சாமர்த்தியத்தினால் வென்று கைக்கொண்டதும், தன்னிடம் கொடுத்து வைத்திருந்ததுமான, வில்லை - விஷ்ணு சாபம் என்னும் வில்லை, அதனை - அப்போது ; வருணன் - வருண தேவன் தடக்கையில் கொடுத்தனன் தேவர் தலைவனான இராமபிரானுடைய நீட்டிய அந்த பெரிய கரத்தில் கொடுத்தான்.

இராமபிரான் பரசுராமனிடமிருந்து கைக் கொண்ட வில்லை வருணனிடம் ஒப்பித்து இருந்தது ; பால. பரசுராமப் ; 45. மழுவாளி ; மழு என்னும் கோடாலியைக் கைகொண்டு ஆள்பவனான பரசுராமன் ; பரசு - கோடாலி.

பி - ம். 2. அண்டர் நாயகன் றடக்கையி.
3. மழுவாளியைப் பற்றியே ; மழுவாளி கைப்பண்பினால்.
4. கொடுத்திட்டான். (178)

540. கொடுத்த வில்லையக் கொண்ட னிறத்தினன்
எடுத்து வாங்கி வலங்கொண் டிடக்கையிற்
பிடித்த போது நெறிபிழைத் தார்க்கெலாம்
துடித்த வாலிடக் கண்ணொடுந் தோள்களே.

கொடுத்த வில்லை - வருணன் கொடுத்த அந்த வில்லை, அ கொண்டல் நிறத்தினன் - நீருண்ட மேக நிறத்தினனான அந்த இராமபிரான், எடுத்து - பெற்று, வலம் கொண்டு வாங்கி - தன்வலிமையோடு வளைத்து, இடக்கையில் பிடித்தபோது - தன் இடக்கையில் பிடித்தபோது, நெறி பிழைத்தார்க்கு எலாம் - நன்னெறியினின்று தவறிய அவ்வரக்கர்களுக்கு எல்லாம், இடம் கண் ஒடு தோள்கள் — இடக் கண்களோடு இடத் தோள்கள், துடித்த - துடித்தன. ஆல்; ஏ : அசை.

வாங்குதல் - வளைத்தல்; (சூடா.) 'பிறைமதியன்ன கொடுமரம் வாங்கி' (கல்லாடம்; 4: 19); 'வாங்கு வளைக்கையார்' (நள. 1. 20.). ஆடவர்க்கு இடக்கண்ணும், தோளும் துடித்தல் தீய நிமித்தம். நெறிபிழைத்தோர்க்கெலாம், என்றமையால், இராமபாணத்தின் செயலின், விரிவைக் குறிக்கப் பெற்றது. 'எடுத்து வாங்கி வலங் கொண்டு - கை குவித்து வாங்கி அதன் பலத்தை யுட்கொண்டு' என்பது பழையவுரை.

பி - ம். 1. வலங் கொடிடக் கையில்; வயங் கொளிடக் கையால்.
3. பிழைத் தோர்கெலாம்.
4. துடித்த வாலிடக்; துடித்த தாலிடக்; துடித்த தாமிடக் கண்ணொடு தோளுமே. (179)

541. ஏற்றி நாணிமை யாமுன் னெடுத்தது
கூற்றி னாருங் குனிக்கக் குனித்தெதிர்
ஆற்றி னானவ னாழியந் தேர்சரம்
நூற்றி னானும் பொடிபட நூறினான்.

(இராமபிரான்) அது எடுத்து-அந்த வில்லை எடுத்து, இமையா முன் - இமைக்கும் நேரத்திற்கு முன்னாக, நாண் ஏற்றி - நாணை இழுத்துப் பூட்டி, கூற்றினாரும் குனிக்க-யமனும் கண்டு களிப்புடன் கூத்தாட, குனித்து - அதனை வளைத்து, எதிர் ஆற்றினான் அவன் - தன் எதிர் வந்து போராற்றிய கரனுடைய, ஆழி அம் தேர்-சக்கரங்களோடு கூடிய அழகிய தேரை, சரம் நூற்றினால் - நூறு அம்பு

களால், நுண் பொடிபட - நுண்ணிய பொடியாக உதிர்ந்து அழிய, நூறினன் - அழித்தான்.

கூற்றினரும் குனித்தது; அது காறும் இராவணன் ஆணைக்கு அஞ்சி அரக்கர்பால் அணுகாதிருந்து, இப்பொழுது இராமபிரான் துணை வலியால் இனி அவர்களைப்பற்றலாம் என்றமையால்; இனி, குனித்தல் என்பதற்கு நடுங்குதல் எனப்பொருள்கொண்டு, யமன் இராமபிரான் செய்த போரின் கடுமையைக் கண்டு அஞ்சி நடுங்கினன் எனக் கொள்வாரும் உளர். ஆழியம் தேர்: வட்ட வடிவமான அழகிய தேர் என்னலும் அமையும். நூறுதல் - அழித்தல்; 468. 'எதிராற்றுதல் - எதிர்நிற்றல்' என்பது பழையவுரை.

பி-ம். 1. ஏற்றின னிமையாமு னெடுத்து நாண்; னெடுத்தும்.
2. குனிப்பக்குனித்; குணிக்கக்.
3. தேரினைச் செஞ்சரம். (180)

542. எந்தி ரத்தடந் தேரிழந் தானிழிந்
தந்த ரத்திடை யார்த்தெழுந் தம்பெலாம்
சுந்த ரத்தனி வில்லிதன் றோளெனும்
மந்த ரத்தின் மழையின் வழங்கினன்.

எந்திர தடம் தேர் இழந்தான் - எந்திரங்களைக் கொண்டு அமைக்கப் பெற்ற தனது பெரிய தேரை இழந்த கரன், இழிந்து - இறங்கி, ஆர்த்து அந்தரத்து இடை எழுந்து-கர்ச்சித்துக்கொண்டு வானத்தினிடத்து எழுந்து சென்று, அம்பு எலாம்-தன்னிடமிருந்த அம்புகள் யாவற்றையும், சுந்தர தனி வில்லி தன் - அழகிய ஒப்பற்ற வில்லையுடைய இராமபிரானது, தோள் எனும் - புயங்கள் என்று சொல்லப் பெறும், மந்தரத்தில் - மந்தர கிரியின் மீது, மழையின் - மழை சொரிவதுபோல, வழங்கினன் - பொழிந்தான்.

கரனுடைய தேர் அரிய பொறிகளால் அமைந்தது. இத்தகைய தேரை, அக்க குமரான் முதலிய அரக்கர் படைவீரரும் அடைந்திருந்தமை, சுந்நர. 940. ஆல் அறியலாம். சுந்தரவில்லி; பால. அகலிகைப். 55. இங்கு இராமபிரான் தோளுக்கு மந்தரகிரி உவமையாகக் கூறப் பெற்றது.

பி-ம். 1. எந்திரத் தேரிழிந்தேகமுன்; தானெழுந்.
2. அந்தரத்திடை. (181)

543. தாங்கி நின்ற தயரத ராமனும்
தூங்கு தூணி யிடைச்சுடு செஞ்சரம்
வாங்கு கின்ற வலக்கையை வாளியால்
வீங்கு தோளொடும் பாரிடை வீழ்த்தினன்.

தாங்கி நின்ற தயரத ராமனும் - அச்சரங்களை எதிர்த்து நின்ற தசரத குமாரனான இராமபிரானும், தூங்கு தூணியிடை - முதுகின் புறம் தொங்கும் அம்புப்புட்டிலினிடத்திருந்து, சுடு செம்சரம் வாங்கு இன்ற - தீ போல் சுடும் சிவந்த அம்புகளைவிட வெளியே எடுக்கின்ற, வல கையை - கரனுடைய வலக் கரத்தை, தோள் ஒடு - அவன் தோளோடு கூட, பார் மிசை வீழ்த்தினன் - வெட்டித் தரைமீது விழச் செய்தான்.

தசரதராமன் : கிட்கிந்தா. சம்பாதிப் ; 61 ; உத்தர : அசுவமேத ; 73. தூங்குதல் - தொங்குதல் ; சுந்தர. 271, 922. வாங்குதல் - வெளியே எடுத்தல் ; முள்வாங்கி என்ற சொற்பொருளையும் நோக்குக.

பி - ம். 3. வலக்கையோர்; வலக்கையொர்.
4. தோளொடும் பார்மிசை ; பாரிடை. (182)

544. வலக்கை வீழ்தலு மற்றைக்கை யால்வெற்றி
உலக்கை வானத் துருமென வோச்சினன்
இலக்கு வற்குமுன் வந்த விராமனும்
விலக்கி னனொரு வெங்கதிர் வாளியால்.

வலம் கை வீழ்தலும் - கரன் தனது வலக் கை அற்றுக் கீழ் வீழ்ந்ததும் (அதனைப் பொருட்படுத்தாது), மற்றை கையால் - இடக் கையாகிய மற்றொரு கரத்தால், வெற்றி உலக்கை - வெற்றியைத் தரவல்லதான உலக்கை என்னும் ஆயுதத்தை, வானத்து உரும் என - மேகத்திடைத் தோன்றும் இடியே போல, ஓச்சினன் - இராமபிரான் மீது ஓங்கி வீசினன் ; இலக்குவற்கு முன்வந்த இராமனும் - இலக்குவனுக்கு முன் பிறந்த (தமயனான) இராமபிரானும், ஒரு வெம் கதிர் வாளியால் - ஒரு கொடிய ஒளியையுடைய அம்பினால், விலக்கினன் - அதனைத் தன்மீது படாமல் தடுத்து அப்புறப்படுத்தினன்.

ஒரு கையற்றுப் போகவும் கரன் மற்றைக் கரத்தில் உலக்கை கொண்டு பொருத இம்மறப் போரின் சிறப்பு, பாரதப் போரில் அபிமன் கைகளில் ஒன்று அறுபட, அவன் தன் மற்றைக்கையால் போர்

செய்த திறத்தையொக்கும்; வி. பா; பதிமூன்றும் போர்ப்: 114. இலக்குவற்கு முன் வந்தவிராமன்; போருக்கெழுந்த இலக்குவனை நிறுத்தித் தான் முன் எழுந்து வந்த இராமன் என்பதும் தொனிப்பது காண்க.

பி - ம். 1. மற்றக்கை; மற்றிடக் கையினால்.
2. யானி இருமென.
4. வெங்கனல் வாளியால். (183)

545. விராவ ருங்கடு வெள்ளெயி றிற்றபின்
அராவ ழன்ற தனையவ னாற்றலான்
மராம ரங்கையின் வாங்கிவந் தெய்தினான்
இராம னங்கொர் தனிக்கணை யேவினான்.

அரா - ஒரு நாகம், கடு விரா வரு வெள் எயிறு - தன் விஷம் கலந்துவரும் வெள்ளிய பற்கள், இற்றபின் - பிடுங்கப்பட்ட பின், அழன்றது அனையவன் - கோபித்ததே போன்றவனும், ஆற்றலான் - தன் வலிமையுடையவனுமான அக் கரன், மராமரம் கையில் வாங்கி வந்து எய்தினான் - ஓர் ஆச்சா மரத்தைப் பெயர்த்து எடுத்துக் கொண்டு போரிட வந்தடைந்தான்; இராமன் - இராமபிரானும், அங்கு ஓர் தனி கணை ஏவினான் - அப்பொழுது ஓர் ஒப்பற்ற அம்பைத் தூண்டினான்.

விராவரு; விராவு அரு எனப் பிரித்தும் பொருள் கொள்ளலாம். தன் விஷப்பல் பிடுங்கப்பட்ட நிலையில் நாகம் சீறி எழுவது இயற்கை; ஆயினும் அதன் வலி பின் குன்றிப்போகும் என்பது போல, கரனும் தன் வலிகுன்றி இனி இறப்பது திண்ணம் என் பதை முன் கூட்டியறிவிக்க, எயிறு இற்ற நிலையில் அராவழன்றது இங்கு உவமையாகக் கூறப்பெற்றது என்க; அழலும் அராவின் கொடுமை; புறநா. *89 : 5 : 6*; சுந்தர: *1044*; உயுத்த. மந்திரப். *56*; முதற் போர்ப். *151, 239*; ஒப்பு: 'கூருகிரும் வாளெயிறும் தானி ழந்த கோளரி' பெருந்தேவனார் பாரதம். உத்யோக பருவம். இம்மூன்று பாடல்களிலும், காப்பியத் தலைவனின் பெயர் தொடர்ந்து ஒவ்வொரு விதமாக வந்துள்ளமை காண்க.

பி - ம். 1. வெள்ளெயிற் றான்விட.
2. தனையதன் னாற்றலான்.
3. தெனக் கொதித் தாற்றலால்; வாங்கி வந்தேவினான். (184)

546. வரம ரக்கன் படைத்தலின் மாயையின்
உரமுடைத் தன்மை யாலுல கேழையும்
பரமு றுத்திய பாவத்தி ஞல்வலக்
கரமெ னக்கரன் கண்டமுற் ருனரோ.

அரக்கன் - இராவணன், வரம் படைத்தலின் - வரன்கள் பல பெற்றமையாலும், மாயையின் - தான் கற்றுத் தேர்ந்த வஞ்சகச் செயலாலும், உரம் உடை தன்மையால்- தான் பெற்ற வலிமையாலும், உலகு ஏழையும் - ஏழுலகங்களேயும், பரம் உறுத்திய பாவத்திஞல் - பெரிதும் வருத்திய பாவச் செயல்களால், வல கரம் என - அவன் வலக்கை (அற்றதே) போல, கரன் - கரன் என்னும் அவ்வரக்கன், கண்டம் உற்ருன் - துண்டித்து, வீழ்த்தப் பெற்ருன். அரோ; அசை,

கரன் கண்ட முற்றமைக்கு இராவணன் இழைத்த பாவமே காரணமென்பது கூறப்பெற்றது. அவன் பாவம் செய்ய, அவன் படைத்த வரமும், மாயையும் காரணங்கள். கரன் இராவணனுக்கு வலக்கரம் போன்றவன். இனி, 'வலக்கரமெனக்கரன்' என்பதை, இரட்டுற மொழிதலாகக்கொண்டு, முன் வலக்கரம் அழிந்ததுபோலக் கரன் கண்ட முற்ருன் எனப் பொருள் கொள்ளலும் அமையும். கரனது வலக்கரம் அற்றது ; 543, 544. பரம்-மிகுதியும் ஆம். இராம பிரான் கரனேச் சங்கரித்த வீரச்செயலுக்கு, திருவெண்காடு என்னும் சுவேதாரண்ய க்ஷேத்திரத்தில் சிவபிரான் அந்தகாஸுரனே ஸம்ஹரித்த செயலே ஒப்பாக வான்மீகம் கூறும். ஒரு பிரதியில் இச்செய்யுள் இல்லே. இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. இப்படலத்தில் கூறப்பெற்ற நிகழ்ச்சிகள் நடந்த காலம் ஒரு மூர்த்தமாகும் 550 ; மாரீசன் வதை. 64. சுந்தர. 351.

பி-ம். 1. வரமரக்கர் ; மாய்கையின். 2. லுலகி யாவையும்.
3. பரமுருக்கி ; பாவத்தி ஞலகல். 4. கண்ட மற் ருனரோ.

(185)

கரன் மடிய, தேவர் கொண்ட மகிழ்ச்சி

547. ஆர்த்தெ ழுந்தன ராடினர் பாடினர்
தூர்த்த மைந்தனர் வானவர் தூய்மலர்
தீர்த்த னும்பொலிந் தான்கதி ரோன்றிசை
போர்த்த மென்பனி போக்கிய போலவே.

வானவர் - (அது கண்ட) தேவர், ஆர்த்து எழுந்தனர் - (சந்தோஷத்திஞல்) ஆரவாரம் செய்து எழுந்தனர்களாய், ஆடினர்

பாடினர் - ஆடிப் பாடிக் கொண்டு, தூய் மலர்-தூய்மையான கற்பகம் முதலிய மலர்களை, தூர்த்து அமைந்தனர் - இராமபிரான் மீது நிரம்பப் பொழிந்து நின்றனர்; தீர்த்தனும் - பரிசுத்தனான இராம பிரானும், கதிரோன் - சூரியன், திசை போர்த்த - திசையெங்கும் மூடிய, மென் பனி போக்கியது என்ன - மென்மையான பனியைப் போக்கி விளங்கியதுபோல, பொலிந்தான் - ஒளியுடன் விளங்கினான்.

இராமபிரானைத் தீர்த்தன் என்பது; பால. திருவவதாரப்: 117; உலாவியற்; 32; கிட்கிந்தா. கார்காலப்; 19; சுந்தர. 677, உயுத். வீட ணன்: 143. இதில் இராமபிரானைக் கதிரோனாகவும், போரில் வந்து சூழ்ந்திருந்த அரக்கர்களை மென்பனியாகவும் உவமித்தமையால், இராமபிரான் ஆற்றலுக்கு அரக்கர் படைவீரர்களின் எளிமை புலப் படுத்தியதாகும். முன், இராமபிரானை இரவிக்கு ஒப்புக்கூறியது; 475. சூர்ப்பணகை இவ்வாறே இராமபிரானை, இருளில் விளக் காகவும், மதியமாகவும் கூறினமை இங்கு ஒப்பு நோக்கத்தக்கது;

பி-ம். 2. தூமலர்.
4. போக்கிய தென்னவே; போக்கினன் போலவே; போக்கின்ற போலவே. (186)

இராமபிரான் தன் ஆச்சிரமம் அடைதல் 548—50.

548. முனிவர் வந்து முறைமுறை மொய்ப்புற
இனிய சிந்தை யிராமனு மேகினான்
அனிக வெஞ்சமத் தாருயிர் போகத்தான்
தனியி ருந்த வுடலன்ன தையல்பால்.

முனிவர் முறை முறை வந்து - இருடியர் பலர் மேன் மேலும் வரிசை வரிசையாக (அல்லது, தொடர்ந்து) வந்து, மொய்ப்பு உற நெருங்கிச் சூழ்ந்து கொள்ள, இனிய சிந்தை இராமனும் - யாவரும் விரும்பத்தக்க மனமுடைய இராமபிரானும், அனிக வெம் சமத்து - அரக்கர் படைகளைக் கொண்ட கொடிய உயுத்தத்திற்கு, தன் ஆர் உயிர் போக - தன் அரிய உயிர் செல்ல, தனி இருந்த உடல் தான் அன்ன - தனித்து உயிர் அற்றுக் கிடந்த உடல்தான் என்று சொல்லும் நிலையில் இருந்த, தையல் பால் - பிராட்டியின் இடத் திற்கு, ஏகினான் - சென்றான்.

போரை முடித்துக்கொண்டு இராமபிரான் முனிவர் சூழ, பிராட்டியை அடைந்தான் என்று கூறப்பெற்றது. அம் முனிவர்

களுக்கு விடை கொடுத்துப் பின் தனியே சென்முன் எனலும் ஆம். இராமபிரானை உயிராகவும் பிராட்டியை உடலாகவும் கூறுவது; பால. கடிமணப்: 19; சுந்தர. 525. கற்புடைய மகளிர் தம் கணவனைத் தம் உயிராகக் கருதுதல்; பால. எழுச்சி; 22; கிட்கிந்தா. கார்காலப்: 22, 25. சமம்: சமரம் என்ற வடசொல்லின் குறை. (187)

549. விண்ணி னீங்கிய வெய்யவர் மேனியில்
புண்ணி னீரும் பொடிகளும் போயுக
அண்ணல் வீரனைத் தம்பியு மன்னமும்
கண்ணி னீரினிற் பாதங் கழுவினுர்.

விண்ணின் நீங்கிய - போரில் இறந்து வீர சுவர்க்கம் அடைந்த, வெய்யவர் - அவ்வரக்கர்களுடைய, மேனியில் - உடலில் ஏற்பட்ட, புண்ணின் நீரும் - புண்களிலிருந்து வந்த இரத்தமாகிய நீரும், பொடிகளும்-அப்போர்க்களத்தில் எழுந்து இராமபிரான்மீது படிந்திருந்த தூசிகளும், போய் உக - அழிந்துபோகுமாறு, அண்ணல் வீரனை - பெருமைதங்கிய வீரனுகிய இராமபிரானை, தம்பியும் அன்னமும் - தம்பியாகிய இலக்குவனும், அன்னம்போன்ற பிராட்டியும், கண்ணின் நீரினுல் - தங்கள் கண்ணீர்களால், பாதம் கழுவினுர் - திருவடிகளைக் கழுவினுர்.

அன்னம்: உவமையாகு பெயர்; சீதையை அன்ன மெனக் கூறுவது இந்நூலிற் பரக்கக் காணலாம். பாதங் கழுவினுர் - இராமபிரான் பாதங்களில் படிந்திருந்த இரத்தக் கறைக்ளையும், புழுதிகளையும் கண்டு தம்பியும் அன்னமும் கொண்ட வருத்த மிகுதியால் பெருக்கிய கண்ணீர் இராமபிரானுக்குக் கால்கழுவ நீராயிற்று என்க. வெளியே யிருந்து வந்தோருக்குக் கால் கழுவ நீர் கொடுப்பது வீட்டிலுள்ளார் செய்யும் உபசாரங்களுள் முதன்மை பெறுவது ஆதலின், அம்முறை பற்றி இவ்வாறு சிறப்பிக்கப் பெற்றது. ஒப்பு. 'கோதிலாப் பொன்னடியைக் கண்ணிற் புனலாற் கழுவினுன், பின்னிடையா ளோடும் விழுந்து' (நள. 3: 72.). புண்ணீர் - இரத்தம்; 550; சுந்தர. 356, 659, 662, 1236. போரினின்று திரும்பி வந்த இராமபிரானைப் பிராட்டி வரவேற்று உபசரித்ததை வான்மீகத்தில் பரக்கக் கூறப் பெற்றுள்ளமை காண்க. இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. வெய்யவன். 3. தம்பியு மங்கையும்.
4. கண்ணி னீர்கொடு. (188)

550. மூத்த மொன்றின் முடிந்தவர் மொய்புணீர்
நீத்த மோடி நெடுந்திசை நேருறக்
கோத்த வேலைக் குரலென வானவர்
ஏத்த வீர னினிதிருந் தானரோ.

மூத்தம் ஒன்றின் - ஒரு முஹூர்த்த நேரத்திற்குள், முடிந்தவர் - அப்போரில் இறந்த அரக்கர்களுடைய, மொய் - மிகுதியாகத் திரண்ட, புண்ணீர் நீத்தம் - இரத்த வெள்ளம், கோத்த வேலை குரல் என - ஒன்றோடொன்று கலந்த கடல்களின் ஓசையென, ஓடி நெடும் திசை நேர் உற - ஓடிச்சென்று நெடிய திசைகளை எதிரிட்டு மோத, வானவர் ஏத்த - தேவர்கள் (இராமபிரான் வெற்றியின் மகிழ்ந்து) துதி செய்ய, வீரன் - இரகுவீரனான இராமபிரான், இனிது இருந்தான் - இன்புற்று இருந்தான். அரோ : ஈற்றசை.

மூத்தம் : முஹூர்த்தம் என்னும் வட சொல்லின் திரிபு. இது மூன்று நாழிகை அளவு கொண்ட நேரம் என இந்நூலால் தெரிகிறது; 'வில்லொன்றிற் கடிகை, மூன்றில் ஏறினர் விண்ணில் என்றாள்' 617 ; 'கன்னல் மூன்றிற் களப்படக் கால்வளை,' சுந்தர. 351. இந்தக் கரதூஷண யுத்தம் நடந்த நேரம் ஒன்றரை முகூர்த்தம் என்று வான்மீகமும், மூன்றே முக்கால் நாழிகை என்று அத்யாத்ம ராமாயணமும் கூறும்.

பி-ம். 1. முடித்தனன் மொய்புணீர்; முத்தம் மூன்றின் முடித்தனன் மொய்ம்புணீர், (189)

கரன் அழிய, சூர்ப்பணகை இலங்கைக்கு ஏகல் 551—3.

551. இங்கு நின்ற துரைத்து மிராவணன்
தங்கை தன்கை வயிறு தகர்த்தனள்
கங்கு லன்ன கரனைத்த ழீஇநெடும்
பொங்கு வெங்குரு திப்புரண் டாளரோ.

இங்கு நின்றது உரைத்தும் - இங்கு இனி நிகழ்ந்தவற்றைச் சொல்லுவோம்; (அது யாது எனில்), இராவணன் தங்கை - இராவணனுடைய தங்கையாகிய அச் சூர்ப்பணகை, தன் கை வயிறு தகர்த்தனள் - தன் கைகளால் தன் வயிற்றில் அடித்துக்கொண்டவளாய், கங்குல் அன்ன கரனை தழீஇ - இருள் ஒத்த மேனியையுடைய (இறந்த) கரனைத் தழுவிக்கொண்டு, பொங்கு நெடும் வெம் குருதி புரண்டாள் - மேலே பொங்கியெழுந்த நெடிய வெப்பமான இரத்தத்தில் வீழ்ந்து புரண்டு அழுதாள். அரோ : ஈற்றசை.

தழீ இ; சொல்லிசை யளபெடை. வயிறு தகர்த்தல்; சோக முற்ற மகளிர் இயல்பு ; பால ; ஆற்றுப் ; 14; சுந்தர. 739, 979, 988.

பி-ம். 1. துரைத்தோ மிராவணன்.
2. தங்கை தன் வயிற்றிற் கரந்தாக்கியே.
4. பொங்கு செங்குருதிப். (190)

552. ஆக்கி னேன்மனத் தாசையிவ் வாசையென்
மூக்கி னேடு முடிய முடிந்திலேன்
வாக்கி னலுங்கள் வாழ்வையு நாளையும்
போக்கி னேன்கொடி யேனென்று போயினள்.

'மனத்து - என்மனத்தில், ஆசை ஆக்கினேன் - (இராமன்பால்) ஆசை கொண்டேன் ஆனேன் ; அ ஆசை - அந்த ஆசை, என் மூக்கினேடு - என் மூக்கு முதலியன அறுபட்டதோடு, முடிய - முடிந்தொழிய, முடிந்து இலேன் - இறந்து போனேனல்லேன் ; வாக்கினல்- என் வாய்ச் சொற்களால், உங்கள் வாழ்வையும் - உங்களுடைய வாழ்க்கைச் சிறப்பையும், நாளையும் - வாழ்நாளையும், போக்கினேன் - போக்கடித்தேன்; கொடியேன்-(ஆதலின் யான்) கொடியவளானேன்;' என்று - எனப் புலம்பிக்கொண்டு, போயினள் - அவள் அவ்விடம் விட்டுச் சென்றாள்.

ஆசை முடிய முடிந்திலேன் - ஆசையை முழுவதும் விட்டுத் தீர்ந்தவளாக ஆனேன் அல்லேன், எனவும் பொருள் கொள்ளலாம். இரு சுவடிகளில் இதனுடன் கரன் வதைப்படலம் முற்றும்; அச் சுவடிகளில் 'அலங்கல்' என்று தொடங்கும் அடுத்த செய்யுள் மேற் படலத்தின் முதற்செய்யுளாகக் காணப்படுகிறது.

பி-ம். 1. மனத்தாசை யவ்வாசை. (191)

553. அலங்கல் வேற்கை யரக்கரை யாசறக்
குலங்கள் வேரறுப் பான்குறித் தாழ்கடல்
கலங்கு றைத்தெழு காலெனக் காலினல்
இலங்கை மாநகர் நொய்திற்சென் றெய்தினள்.

அலங்கல் வேல் கை அரக்கரை - மாலையணிந்த வேலைக் கையிற் கொண்ட இராக்கதர்களை, ஆசு அற - அடியற்றுப் போம்படி, குலங்கள் வேர் அறுப்பான் குறித்து - அவ்வரக்கர்களின் கூட்டங்களையே

வேர் அறுத்து அழிக்கக் கருதி, ஆழ் கடல் கலம் குறைத்து எழு கால் என - ஆழ்ந்த கடலிடை அகப்பட்ட மரக்கலத்தைச் சிதைத்து மேற்கிளம்பும் புயற்காற்றுப் போல, காலினுல் - தன் கால் கொண்டு நடந்து, நொய்தின் - பிரயாசை அல்லது சிரமத்தோடு, இலங்கைமா நகர் சென்று எய்தினுள் - இலங்கைமா நகரிற் சென்றடைந்தாள்.

அலங்கல் என்ற சொல்லை அரக்கரை என்ற சொல்லுக்கு அடையாகவும் கூட்டியுமுரைக்கலாம். ஆசு அற : குற்றம் அல்லது பற்றுக்கோடு அற்றுப்போக என்னலும், பெருமை அற என்னலும் ஆம். குலங்கள் - இனங்கள் ; சாதிகள் என்றலும் ஒன்றும். கலம் : மரக்கலம் என்பதன் முதற்குறை. 'காலெனக் காலினுல்' என்றது சொல்லணி. நொய்தின் - விரைவில் என்றலும் ஆம். சூர்ப்பணகை, கரதூடணுதி அரக்கர்களைமட்டுமின்றி இராவணன் முதலிய மற்றை அரக்கர் குலங்களையும்அழிப்பதைக் கருதி இலங்கை சென்ருள் என்க. 'நீலமா மணிநிகர் நிருதர் வேந்தனை மூலநா சம்பெற முடிக்கும் மொய்ம்பினுள்,' எனச் சூர்ப்பணகைப்படலத்தில் (227) அவளுக்குத் தோற்றுவாயாகக் கூறியதற்கேற்ப, இப்படல முடிவிலும் அவளது இந்நோக்கத்தை வலியுறுத்திக் கூறிய பெற்றி நுணுகி நோக்கத்தக்கது. சூர்ப்பணகை கடலைக் காலால் நடந்து கடந்தமை இங்குக் கூறப்பட்டது.

'இராமபிரான் கரன் முதலிய அரக்கர்களைக் கொன்ற வரலாருகிய இந்தப் படலத்தைப் படிப்பவர், கேட்பவர் அனைவரும் அப்பெருமான் அருளால் தீவினைகளினின்று நீங்குவார் ; குலவிருத்தியடையக் கூடிய நற்புதல்வர்களைப் பெறுவர் ; அன்னோர் சிறைத்துன்பமும், கடன் தொல்லையும் ஒழிந்து இன்புறுவர்' என ஸ்காந்த புராணம் பல சுருதி கூறும்.

பி - ம். 1. அரக்க ரென்றுளார்.

2. வேரறுப்பான் குறித்தாளுயிர்; குறித்தாருயிர்; குறித்தாழ் கடல்.

3. கலங்குறைத்தன போனெடுங் காலென ; கலங்கு சூறையன் போர்நெடுங் காலென ; கலங்கல் சூறையன் காலென ; கலங்கல் சூறையன் காலெனக் காலினுல் ; காலெனப் பொன்னெடு.

3. இலங்கை மாநகர்க் கேகின ளென்பவே. (192)

## கரன் வதைப்படலம் முற்றும்.

---

# 7. சூர்ப்பணகை சூழ்ச்சிப்படலம்

---

இது, சூர்ப்பணகை இராவணனிடம் சென்று, சீதாப்பிராட்டியை அவன் அபகரித்து வருமாறு செய்யும் துராலோசனையாகிய தந்திரத்தை விரித்துக் கூறும் படலம் என்று விரியும். சில பிரதிகளில், இப்படலம் அடுத்த படலத்துடன் சேர்ந்து, **மாரீசன் வதைப் படலம்** என்று ஒருபடலமாகவே வழங்கப் பெறுகின்றது. மற்றும் சில பிரதிகளில் இவை, **இராவணன் அரசிருக்கைப்படலம், அவை புகுபடலம், மோகப் படலம், மாரீசன் வதைப்படலம்** என நான்கு படலங்களாகவும் உள்ளன.

இந்தப் பகுதி சம்பந்தமாய், வான்மீகத்தில் அடியிற்கண்ட சில விசேடச் செய்திகள் காணப்படுகின்றன.

1. ஜனஸ்தானத்தில் நடந்த சூர்ப்பணகையின் அங்கபங்கம், கரதூடணாதியர் போரில் அழிந்தமை முதலியவற்றை, முதலில் இராவணனுக்கு **அகம்பன்** என்ற ஒரு சாரன் அறிவித்து, அவனே சீதையை அபகரித்து வருமாறு இராவணனுக்குக் கூறினான் எனபது;

2. அகம்பன் சொற்கேட்ட இராவணன் முதலில் ஒரு முறை மாரீசனிடம் போய்ப் பயனின்றித் திருமபியது.

**இராவணன் கொலு விருக்கை 554—76.**

**554.** இரைத்தநெடும் படையரக்க ரிறந்ததனை
மறந்தனள்போ ரிராமன் றுங்க
வரைப்புயத்தி னிடைக்கிடந்த பேராசை
மனங்கவற்ற வாற்ற ளாகித்
திரைப்பரவைப் பேரகழித் திருநகரிற்
கடிதோடிச் சீதை தன்மை
உரைப்பெனெனச் சூர்ப்பணகை வரவிருந்தா
னிருந்தபரி சுரைத்து மன்னோ.

இரைத்த நெடும் படை - பெரு முழக்கமிட்டுச் சென்ற பெரிய படைவிரர்களான, அரக்கர் - கரனை உள்ளிட்ட இராக்கத வீரர்கள்,

இறந்ததனை - போரில் இறந்தொழிந்த செய்தியை, மறந்தனள் - மறந்துவிட்டவளாய், போர் இராமன் - போரில் வல்ல இராமபிரானது, துங்க - உயர்ந்து விளங்கிய, வரை புயத்தின் இடை கிடந்த - மலைகள் போன்ற தோள்களிடத்துப் பதிந்து கிடந்த, பேர் ஆசை மனம் கவற்ற - மிகுந்த ஆசையானது தன் மனத்தை வருத்த, ஆற்ருள் ஆகி - அத்துயரத்தைப் பொறுக்க முடியாதவளாகி, திரை பரவை - அலைகள் நிறைந்த கடலை, பேர் அகழி - பெரும் அகழியாகக் கொண்ட, திருநகரில் கடிது ஓடி - செல்வம் மிக்க இலங்கை நகரிடத்து விரைந்து ஓடிச் சென்று, 'சீதை தன்மை உரைப்பென் என - சீதையின் லக்ஷணங்களை இராவணனுக்கு எடுத்துக் கூறுவேன்' என்று, சூர்ப்பணகை வர - சூர்ப்பணகை வந்த நிலையில், இருந்தான் - அங்கு இருந்த இராவணன், இருந்த பரிசு - வீற்றிருந்த விதத்தை, உரைத்தும் - யாம் எடுத்துக் கூறுவோம். (அவை பின் வரும்.) மன், ஒ : ஈற்றசைகள்.

இறந்ததனை மறந்தது; காமம் துக்கத்தை வென்று மேலோங்கியதைத் தெரிவிக்கின்றது. 'திரைப் பரவைப் பேரகழி'; சுந்தர. 157 ; சிலப். உரைபெறு : 3 ; உரை. சீதை தன்மை இராவணனுக்குச் சூர்ப்பணகை எடுத்துரைக்கச் சென்றது, இராவணன் சீதையை அடைய வேண்டுமென்று அவன்பால் கொண்ட அன்புகாரணத்தால் அன்று; ஆனால், சீதை இருப்பதால், இராமன் தன்னை ஏற்றுக்கொள்ளவில்லை ; ஆதலால், அவளை இராவணன் எடுத்துக் கொண்டால், இராமன் வேறு மனைவியின்றித் தன்னை விரும்பக் கூடும் என்ற நோக்கங்கொண்டு என்பதைத் தெரிவிக்கவே 'ஆசை ஆற்ருளாகி' என்றது. இச்செய்யுளும் பின் வருவனவும் கவிக்கூற்று.

பி-ம். 1. இரைக்கு நெடும்பணை யரக்கர் ; இரைக்கு நெடுங் கடலரக்கர்; மறந்தனள் போலிராமன்.

3. திரைப்பரவை சூழிலங்கைத் ; திருநகரில் ; சீதை செய்தி.

4. உரைத்துமன்றே.

555. நிலையிலா வுலகினிடை நின்றனவுந்
திரிந்தனவு நெறியி னீந்த
மலரின்மே னான்முகற்கும் வகுப்பரிய
நுனிப்பதொரு வரம்பி லாத
உலைவிலா வகையிழைத்த தருமமென
நினைந்தவெலா முதவுந் தச்சன்
புலனெலாந் தெரிப்பதொரு புனைமணிமண்
டபமதனிற் பொலிய மன்னோ.

உலகின் இடை - இவ்வுலகில், நிலை இலா - ஒரு நிலையில் இல்லாதவையாய், நின்றனவும் - இடம் விட்டுப் பெயராது ஒரே இடத்தில் நிலைத்திருப்பனவும், திரிந்தனவும் - இடம் விட்டுச் சஞ் சரிப்பனவும் ஆன ஸ்தாவர ஜங்கமப் பொருள்கள் அனைத்தையும், நெறியின் ஈந்த - முறைப்படி படைத்த, மலரின்மேல் நான்முகற்கும் - தாமரை மலரின்மீது விளங்கும் பிரம தேவர்க்கும், வகுப்பரிய - படைக்க முடியாததும், நுனிப்பது ஒரு வரம்பு இலாத - நுட்பமாகக் கணக்கிட்டறியும் ஓர் எல்லைக்குட்படாததுமான, தருமம் என-தருமத் தைப்போல, நினைந்த எலாம் உதவும் - நினைத்தவை யனைத்தையும் தரவல்ல, தச்சன் - தெய்வத் தச்சனான விசுவகர்மனது, புலன் எலாம் தெரிப்பது - சிற்பநூல் நுட்ப அறிவு எல்லாம் விளக்கிக் காட்டு வதும், புனை - அழகியதும், உலைவு இலா வகை - அழிவில்லாதபடி, இழைத்த - உண்டாக்கியதுமான, ஒரு மணி மண்டபம் அதனில் - ஒப்பற்ற இரத்தின மயமான ஒரு சபாமண்டபத்தில், பொலிய - (இராவணன்) சிறப்புடன் அமர்ந்து விளங்க, மன் ஓ : அசைகள்.

இது முதல் 576-ஆம் செய்யுள் முடிய ஒரு தொடராகி, அச் செய்யுளிலுள்ள இருந்தனன் என்பதனோடு முடியும்.

நிலையிலா வுலகினிடை - நிலையற்றதான இவ்வுலகினிடத்து; ஒரு நிலையில் இல்லாது சுழலும் தன்மையுடைய இவ்வுலகினிடத்து; என்றும் பொருள் கொள்ளலாம். வகுப்பரிய, வரம்பிலாத, தருமமென உதவும் தச்சன் என்க. தெய்வத் தச்சனாகிய விசுவகருமன் மனத்தில் நினைத்தவாறே படைக்கும் ஆற்றல் அமைந்தவன்; மண்டபம் அவன் புலனெலாம் தெரிப்பது என்க. புனை மணி மண்டபம் - மணிகளைக் கொண்டு அழகுடன் அமைந்த மண்டபம்; 'புனை நிழல்' என்றதும் காண்க. (நன்னூல் எழுத்தியல். சூ. 1.) இலங்கை நகரை வானவர் தச்சன் படைத்தது.

சுந்தர. *103 ; 123.* தருமம் நினைந்த வெலாம் உதவும் : 'சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங் காக்க மெவனோ வுயிர்க்கு' (குறள், 31).

பி - ம். 1. நிற்பனவு நடப்பனவு; நின்றனவுங் கிடந்தனவும்; நின்றனவுங் கடந்தனவும்; நிற்பனவுஞ் செல்வனவும்; நின்ற கிடந்த, முதலாய; நெறியி னீய்ந்த.

2. வகுப்பரிது........வரம்பிலாற்றல்; நுனிப்பதரு; குணிப்ப தொரு; வரம்பிலாதான்; வகுப்பரிதாய் நுனித்த தொழில் வரம்பிலாற்றல்; வகுப்பரிய நுனிப்பரிய வரம்பிலாற்றல்;

3. வகையுழந்த தருமமென; தருமமென வுரைத்தவெலாம்; வகை யுஞற்று முளத்தினிடை நினைத்த தெல்லாம்.

4. புலனெலாந் தெரித்ததொரு,..............மண்டபமென்னும் பொதுவின் மன்னோ; பொருப்பின் மன்னோ. (2)

இதன் பின், ஒரு சுவடியில் அடியிற்காணும் பாடல் ஒன்று அதிகமாக உள்ளது.

பரிக்குமண்டப் பரப்பெவைக்குந் தனியரசென்
றரன்கொடுத்த வரத்தின் பான்மை
உரைக்குவமை பெறக்குலிசத் தவன்முதலா
யுலகிறைமைக் குரிய மேலோ
ரிருக்குமரித் தவிசெவைக்கு நாயகமீ
தெனக்குறித் தங்கிமையோர் தச்சன்
அருக்கர்வெயில் பறித்தமைத்த வரிமுகத்தின்
மணிப்பீடத் தமர்ந்தான் மன்னோ.

556. புலியினத ளுடையானும் பொன்னுடை
புனைந்தானும் பூவி னானும்
நலியுமனத் தாரல்லர் தேவரிலிங்
கியாவரினி நாட்ட வல்லார்
மெலியுமிடை தடிக்குமுலை வேயிளந்தோட்
சேயரிக்கண் வென்றி மாதர்
வலியநெடும் புலவியினும் வணங்காத
மகுடநிரை வயங்க மன்னோ.

புலியின் அதள் உடையானும் - புலித்தோலை ஆடையாக வுடைய சிவபெருமானும், பொன் ஆடை புனைந்தானும் - பொன்னால்

அமைந்த பீதாம்பரத்தைத் தரித்த திருமாலும், பூவினனும் - தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமதேவனும், நலியும் மனத்தார் - (இந்த இராவணனுடைய சிறப்பைக் கண்டு) மனம் அழியும் தன்மை யுடையவராவர்; (அங்ஙனமானால்), அல்லர் தேவரில்-அம் மூவரல்லாத தேவர்களில், இங்கு யாவர் இனி நாட்ட வல்லார் - இங்கு இந்த இராவணனுக்கு ஒப்பாக நிலை நிற்கக் கூடிய திறமை யுள்ளவர் வேறு யாரே உள்ளார்? (ஒருவரும் இல்லை என்றபடி); மெலியும் இடை - நாளும் மெலிந்து வரும் இடையையும், தடிக்கும் முலை - மேன்மேல் பூரித்து வளரும் தனங்களையும், வேய் இளம் தோள் - மூங்கில் போன்றும் இளமை பொருந்தியும் உள்ள தோள்களையும், சேய் அரி கண் - செவ்வரி படர்ந்த கண்களையு முடைய, வென்றி மாதர் - யாரையும் வென்று தம் வயப்படுத்தும் மகளிர்கள் கொண்ட, வலிய நெடும் புலவியினும் - தணிக்க முடியாத வலிமை வாய்ந்த நீண்ட ஊடலிடத்தும், வணங்காத - அம்மகளிரை வணங்காத, மகுடம் நிரை - முடி வரிசை, வயங்க - விளங்க, மன், ஓ : அசைகள்.

புலியினதளுடையான் : சிவபிரான் ; தாருகா வனத்து இருடியர், சினந்து தம் மந்திரபலத்தால் ஏவிய புலியைக் கொன்று அதன் தோலை ஆடையாக அணிந்து கொண்டான் என்பது புராணவரலாறு. 'புலித்தோலை யரைக்கசைத்து' (சுந்தரர் தேவாரம்). நலியுமனத்தா ரல்லர் - இந்த இராவணனை வருத்தும் மன முடையவர் அல்லர் எனப் பொருள் கோடலும் ஒன்றும். இராவணன் மும்மூர்த்திகளின் வலி துடைத்தவன் ; சுந்தர. 311. மெலியுமிடை தடிக்கு முலை வேயிளந் தோட் சேயரிக்கண் வென்றிமாதர் ; ஒப்பு. 'ஏங்கு மிடை தடித்தமுலை யிருண்டகுழன் மருண்டவிழி யிலவச்செவ் வாய்ப் பூங்கொடியீர்' (பால. திருவவதாரப் ; 39.) என்றமையும் நோக்குக. புலவியினும் வணங்காமை : ஒப்பு. 'வணங்குதல் மகளி ரூட லுளினு முளதோ' (உயுத்த. இரணியன்வதைப் : 146) ; மகளிர் புலவியில் ஆடவர் வணங்குதல் இயல்பு; அதிலும் வணங்காத பெரு மிதம் உடையவனாதலின், மாதர் புலவியினும் வணங்காத மகுட வரிசையான் என இராவணன் சிறப்புக் கூறப் பெற்றது. புலவி

யினும் உம்மை உயர்வு சிறப்பினது. இராவணன் வணங்கா முடியன் : 'முன்னம் யாரையுங் கும்பிடா வென், தலை' 872.

பி-ம். 1. புலியதளினுடையானும்............பூவிலானும் பொன்னுடையுடையானும்.

2. தேவரினிங் ; வலத்தாரல்லரவ ரென்னில் ; வரத்தாரல்லர் ; நலியுவலத்தரல்லரெனத் திசைக்கண் புகழெழுந்து நகைத்தலே போல்.

3. வேய்பொருதோட்.

4. வலியினெடும்............வயங்குமாதோ. (3)

557. வண்டலங்கு நுதற்றிசைய வயக்களிற்றின்
மருப்பொடிய வடர்த்த பொற்றோள்
விண்டலங்க ளுறவீங்கி யோங்குதய
மால்வரையின் விளங்க மீதில்
குண்டலங்கள் குலவரையை வலம்வருவா
னிரவிகொழுங் கதிர்சூழ் கற்றை
மண்டலங்கள் பன்னிரண்டு நாலைந்தாய்ப்
பொலிந்ததென வயங்க மன்னோ.

வண்டு அலங்கு நுதல் - வண்டுகள் சுற்றிவருகின்ற நெற்றியையுடையனவும், திசைய - திக்குக்களில் உள்ளனவுமான, வய - வெற்றி மிக்க, களிற்றின் - திசை யானைகளின், மருப்பு ஒடிய - தந்தங்க ஒடிந்து போகும்படி, அடர்த்த - அவற்றோடு போர் புரிந்து தாக்கிய, பொன் தோள் - அழகிய தோள்கள், விண் தலங்கள் உற - வானுலகங்களிற் போய்ப் படியும்படி, வீங்கி - பூரித்து, ஓங்கு உதயா மால் வரையின் - உயர்ந்து வளர்ந்த உதயகிரி போல, விளங்க - தோன்றவும், மீதில் - அத்தோள்களின்மீது தோன்றும், குண்டலங்கள் - காதுகளில் அணிந்துள்ள குண்டலங்கள், குல வரையை - உயர்ந்த மேரு மலையை, வலம் வருவான் - வலமாகச் சுற்றி வருபவனான, இரவி - சூரியனது, கொழும் - கொழுமையான, கதிர் சூழ் - கிரணங்கள் சூழப்பெற்ற, கற்றை - தொகுதியான, மண்டலங்கள் பன்னிரண்டும் - பன்னிரண்டு மண்டலங்களும், நாலு ஐந்தாய் - இருபதாக விரிந்து, பொலிந்தது என - விளங்கிய என்று சொல்லும்படியும், வயங்க - பிரகாசிக்க. மன் ; ஓ : அசைகள்.

இச் செய்யுள், இராவணன் தோள்களையும் அவற்றின்மீது புரளும் குண்டலங்களையும் கூறியது என்க. பொற்றோள் - பொன்னால் அலங்கரிக்கப்பட்ட தோள்கள் எனலும் ஒக்கும். துவாதச ஆதித்தர் என்னும் பன்னிரு சூரியர்களும் இருபதாய் விரிந்து விளங்குவதல்போல, இராவணன் தோள்மீது காதுகளின் குண்டலங்கள் விளங்கின என்க. திசையானைகள் எட்டு ; அவை, ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சகம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீபம் என்பன. பன்னிருசூரியர் : வைகத்தன், விவச்சுதன், வாசன், மார்த்தாண்டன், பாற்கரன், இரவி, லோகப்பிரகாசன், உலோகசாட்சி, திரிவிக்ரமன், ஆதித்தன், திவாகரன், அங்கிசமாலி, எனப்படுவர் : (பிங்.) சில சுவடிகளில் இதுவும் முன் செய்யுளும் இடம் மாறி அமைந்துள்ளன.

பி - ம். 1. பண்டலங்கு திசைக்களிற்றின் பணை மருப்பி னிணையொடியப் படர்ந்த பொற்றோள் ; வண்டலங்கனுகர் திசையின்............ படர்ந்த திண்டோள் ; வண்டலங்க னுதற்றிசையின் ; மண்டலங்கத் திசைக்களிற்றின் ; பண்டலங்கத் திசைக்களிற்றின் ; வண்டலங்கலங்கா திசையின் ; பண்டு நெடுந்திசை சுமக்கும்.

2. விளங்கக் காதிற்.

3. கொடுங்கதிர் ; வலமல்குவா ணிரவி கொடுங்.

4. பொலிந்தவென ; வயங்குமாதோ ; வயங்கமாதோ. (4)

558. வாளுலா முழுமணியின் வயங்கொளியின்
றொகைவழங்க வயிரக் குன்றத்
தோளெலாம் படிசுமந்த விடவரவின்
படநிரையிற் றோன்ற வான்ற
நாளெலாம் புடைதயங்க நாமநீ
ரிலங்கையிற்று னலங்க விட்ட
கோளெலாங் கிடந்தநெடுஞ் சிறையன்ன
நிறையாரங் குலவ மன்னோ.

வாள் உலாம் - ஒளி வீசப்பெற்ற, முழு மணியின் - அவன் அணிந்துள்ள ஆபரணங்களில் பதிக்கப் பெற்ற பெரிய இரத்தினங்களின், வயங்கு ஒளியின் - விளங்கும் காந்தியின், தொகை - தொகுதி, வழங்க - வீசி வரவும், வயிர குன்ற தோள் எலாம் - வயிரக் குன்று போன்ற உறுதி வாய்ந்த தோள்களெல்லாம், படி சுமந்த - பூமியைத்

தாங்கிய, விட அரவின் - விஷத்தையுடைய ஆதிசேடனுன பாம்பின், பட நிரையின் - படங்களின் வரிசையைப்போல, தோன்ற - விளங்கவும், நாம நீர் இலங்கையில் - அச்சத்தைத் தரும கடல்நீரால் சூழப்பெற்ற இலங்கை மாநகரில், தான் நலங்க விட்ட - தான் வருந்துமாறு செய்த, கோள் எலாம் - நவக்கிரகங்கள் யாவும், ஆன்ற - சிறந்த, நாள் எலாம் - நக்ஷத்திரங்கள் யாவும், புடை தயங்க - பக்கங்களில்விளங்கும்படி, கிடந்த - அடைபட்டுக் கிடந்த, நெடும் சிறை அன்ன - பெரும் சிறைபோன்று, நிறை ஆரம் - நிறைந்த இரத்தினமாலை, குலவ - விளங்கவும், மன், ஓ : அசைகள்.

இதில், இராவணனுக்கு, அரவுகளின் அரசனுன ஆதிசேடனும், அவனுடைய பரந்த தோள்களுக்கு, அவ்வாதிசேடனுடைய அகன்ற படங்களும், அவன் தோள்களில் அணிந்திருந்த இரத்தினங்களுக்கு, அவ்வரவரசன் உச்சிக் கொண்டைகளின்மீது விளங்கிய இரத்தினங்களும் ஒப்பு. இராவணனனுக்குச் சேடன் ; 'உரகர் கோனினிதரசு வீற்றிருந்தனனெப்ப' சுந்தர. 1083. மேலும் இதில், இராவணன் தான் அணிந்துள்ள ஆரத்தின் இரத்தினங்கள், முன் அவன் வென்று சிறையிட்ட நக்ஷத்திரங்களுக்கும் நவக்கிரகங்களுக்கும் உவமையாயின. இராவணன் கோள்களைச் சிறைவைத்தது ; 851.

பி - ம். 1. முழுமணிகள் ; வயங்கு சுடர்த் தொகை புடைதயங்கும் ; நாரநீரிலங்கை ; வழங்கி வயிரத்தூணில்.

3. நலங்காட்ட ; சமரட்ட ; முன்வாரியிட்ட ; றன்வசமாயிட்ட.

4. கோளெலாங் கொடுஞ்சிறையிற் கிடந்தனைய நிலவாரங். (5)

ஒரு சுவடியில் பின்வரும் நான்கு அதிகப்பாடல்கள் இதன்பின் காண்கின்றன.

1. பொருப்பினையுங் கடந்தபுயப் பரப்பினிடை
பொழிகதிரி னெளிகு லாவிப்
பரப்புமிருட் குறும்பெறிந்த பகலொளியுங்
கெடத்துரந்து பருவ மேகத்
துருப்பயிலின் திரநீலச் சோதிதினைத்
துலகமெலா முவந்து நோக்கத்
திருப்பயிலுத் தரிகமொடு செறிவாகு
வலயநிரை திகழ மன்னே.

2. இலங்குமர கதப்பொருப்பின் மருங்குதவ
விளங்கதிரின் வெயில்சூழ்ந் தென்ன
அலங்குசெம்பொ னிழைப்பயிலு மருந்துகிலிற்
பொலிந்தவரைத் தலத்தின் மீது
நலங்கொள்சுடர்த் தொங்கைபரப்பு நவமணிப்பத்
தியினிழைத்த நலமார் கச்சுத்
துலங்கவசைத் ததிற்சுரிகை யுடைவடிவாள்
மருங்கினிடைத் தொடர மன்னோ.

வேறு

3. வானுல களிக்கும் புரந்தர னாதி
மருவுமெண் டிசைப்படுகிருப
ரானவர் தமது புகழெலா மொருங்கே
யன்னமென் புள்ளுருத் தாங்கித்
தானிடை விடாது தசமுகத் தரக்கன்
பதத்திடைத் தாழ்ந்துதாழ்ந் தெழல்போல்,
பானிறக் கவரி மயிர்க்குலங் கோடி
பாங்கினிற் பயின்றிட மன்னோ.

4. தேவகன் னியர்க ளியக்கர்தங் குலத்துத்
தெரிவையர் சித்தர்மங் கையர்கள்
மேவருந் திறல்சேர் நாகர்மெல் லியர்கள்
விளங்குகந் திருவர்மேல் விஞ்சைக்
காவலர் குலத்திற் றோன்றுகன் னியர்க
ளாதியாய்க் கணிப்பில்பல் கோடி,
பாவைய ரெவரும் பாங்குற நெருங்கிப்
பலாண்டிசை பரவிட மன்னோ.

வேறு

559. ஆய்வரும் பெருவலி யரக்க ராதியோர்
நாயகர் நளிமணி மகுட நண்ணலால்
தேய்வுறத் தேய்வுறப் பெயர்ந்து செஞ்சுடர்
ஆய்மணிப் பொலன்கழ லடிநின் றூர்ப்பவே.

ஆய்வு அரு - ஆராய்ந்து அறிய முடியாத, பெரு வலி - மிக்க வலிமையுடைய, அரக்கர் ஆதியோர் - இராக்கதர் முதலான தலைவர் களுடைய, நளி மணி மகுடம் - பெருமை வாய்ந்த இரத்தினங்கள் பதித்த கிரீடங்கள், நண்ணலால் - அன்னோர் வந்து வணங்க

நெருங்குகின்றமையால், தேய்வு உற தேய்வு உற - நாளும் தேய் வடையும்படி, பெயர்ந்து - மீண்டும், செம் சுடர் ஆய் மணி பொலன் கழல் - சிவந்த ஒளியுடைய தேர்ந்த மணிகளையுடைய (இராவண னது) அழகிய வீரக்கழல், அடி நின்று ஆர்ப்ப - அவன் அடியிற் கிடந்து ஒலிக்க, ஏ : ஈற்றசை.

கழல் ஆர்ப்ப, என இயைக்க. அரக்கராதியோர் ; - அரக்கர் முதலாக மற்றைத் தேவர், அசுரர் முதலினோர் ; அரக்கரை முற் கூறியது, இராவணனுடைய இனத்தவராதலின். ஆய் வரும் பெரு வலி யரக்கர் ; 122. தேய்வுறத் தேய்வுற : அடுக்கு, மிகுதிப் பொருளி னது. ஆய்மணி - ஒப்பு : 'ஆய்மயில்' (குறள் 1081) என்பதற்குப் பரிமேலழகர் உரையைக் காண்க. கழல் தேய்தல் - தலைவர்கள் வந்து அடிக்கடி வணங்குவதால் அன்னோர் மணி முடிபட்டு உராய்ந்து என்க ; இராவணன் அடியில் பலர் மகுடம் வைத்தல் ; சுந்தர. 312. ஒப்பு : 'கோவுடை நெடுமணி மகுட கோடியால் சேவடி யடைந்த பொற்கழலுந் தேயுமால்' (பால. அரசியற் : 8) ; "எந்தை கழலிணையி னெம்மருங்குங் காணலாங் - கந்து சுளியுங் கடாக் களிற்றின் - வந்து, பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தங்கண், மணிமுடியிற் றேய்ந்த வடு" (நள. 3 : 62) ; தேயத்தேய அதிக ஒளி வீசும் மணிகள் என்பது கூறப்பெற்றது. ஒரு சுவடியில் இதன்பின் 'குண்டல முதலிய' என்று தொடங்கும் (573-ஆம்.) செய்யுள் காணப்படுகின்றது.

பி - ம். 1. யரக்கராதியர்.
2. நாயக நளிர்மணி ; நாயகன் நளிர்மணி ; மகுட நக்கலால்.
3. பெயர்த்துஞ் செஞ்சுடர்.
4. லயனின் றார்ப்பவே ; நின்றார்க்கவே, (6)

560. மூவகை யுலகினு முதல்வர் முந்தையோர்
ஓவில ருதவிய பரிசி னேங்கல்போல்
தேவரு மவுணரு முதலி னோர்திசை
தூவிய நறுமலர்க் குப்பை துன்னவே.

மூவகை உலகினும் - மூன்றுவகைப்பட்ட சுவர்க்கம், பூமி, பாத லம் என்னும் உலகங்களினும், முதல்வர் - தலைவர்கள், முந்தையோர்- ஒருவருக்கு ஒருவர் முன்னிட்டவர்களாய், ஓவிலர் - ஒழியாதவர்களாய் எப்பொழுதும், உதவிய - கொண்டுவந்து செலுத்திய, பரிசின் -

காணிக்கைப் பொருள்களின், ஓங்கல் போல் - மலையைப் போல, தேவரும் அவுணரும் முதலினோர் - தேவர்களும் அசுரர்களும் முதலாவுள்ள மற்றையோர், திசை - நாற்றிசைகளினின்றும், தூவிய - பொழிந்த, நறுமலர் - நல்ல மணமுடைய பூக்களின், குப்பை - குவியல், துன்ன - நெருங்கி நிறைந்து கிடக்க, ஏ. ஈற்றசை.

முதல்வர் முந்தையோர்; ஒரு பொருட்பன்மொழியாகவும் கொள்ளலாம். பரிசு - திறை; பரிசில்களும் மலர்க்குப்பைகளும் ஓங்கல்போல் விளங்கின என்க. பரிசில் வழங்கினோர் மூவுலகிலுள்ள தலைவர்கள்; பூக்களைத் தூவினோர், மற்றைத் தேவர்களும் அசுரர்கள் முதலாயினோரும் என்க; முதலினோர் என்றமையால், அவரொழிந்த மற்ற, யக்ஷ, கின்னராதியர் எனக்கொள்ளற் பாலதாம்;

பி - ம்: 1. உலகினின் முதல்வர்; முதல் முந்தையோர்.
2. ஒவல ருதவிய; ஒவியனுதவிய; ஒய்விலருதவிய.
4. துன்னறுன். (7)

இதன் பின் ஒரு சுவடியில் அடியிற் காணும் இரு பாடல்கள் அதிகமாக உள்ளன.

1. தண்கதிர் பொழியுமோர் தவள மாமதி
விண்பிரிந் திருநிலத் திருந்து வேறுவே
றெண்கடந் துருவெடுத் திருளை யோட்டல்போல்
வெண்குடைத் தொகைபல கோடி மேவவே.

2. ஏவலின் புரிதொழி லேவை யுஞ்செய்
தோவிலர் துயர்க்கடற் கொழிவு காண்கிலா
மேவரும் பெரும்பயம் பிடித்து விண்ணவர்
தாவினர் தலைத்தலை தாழ்ந்து நிற்கவே.

561. இன்னபோ திவ்வழி நோக்கு மென்பதை
உன்னலர் கரதலஞ் சுமந்த வுச்சியர்
மின்னவிர் மணிமுடி விஞ்சை வேந்தர்கள்
துன்னினர் முறைமுறை துறையிற் சுற்றவே.

மின் அவிர் - மின்னல் போல் ஒளி வீசுகின்ற, மணி முடி - இரத்தின கிரீடங்கள் அணிந்த, விஞ்சை வேந்தர்கள் - வித்யாதர அரசர்கள், இன்ன போது இ வழி நோக்கும் என்பதை - இன்ன சமயத்தில் தாமிருக்குமிடம் இராவணன் நோக்குவான் என்பதை, உன்னலர் - அறிந்து கொள்ளமுடியாதவர்களாய், கர தலம் சுமந்த உச்சியர் - தம்

கைகளைத் (எப்போதுமே) தாங்கிய சிரங்களின் உச்சியையுடைய வர்களாய், துன்னினர் - நெருங்கிய, முறை முறை - அவரவர்களுக்கு உரிய முறைப்படி, துறையில் - தத்தமக்கு ஏற்பட்ட தொழில் துறையில் (அமர்ந்து), சுற்ற - சூழ்ந்திருக்க, ஏ ; ஈற்றசை.

இராவணனுடைய திருநோக்கு எப்போது நேருமோ என்று முன்னெச்சரிக்கையாய் நின்றனர் என்க. ஒப்பு : 'இன்னபோ திவ் வுழி யேவுமென் றறியாது, கடைக்கண் ணேக்கிற் கலங்கே கைவிரற் புடைப் பெயர்வு நோக்கிப் போற்றுபு நின்று, சிறுகுற் றேவல் நனிதவப் புரிந்தும்' (வலிவல மும்மணிக். 10 : 7–10).

பி - ம். 1. இன்னன பொழுதிய ஞேக்கமென்பதை; ஞேக்குமென்பதை.
2. உன்னலார்.
3. மின்னவி ராமணி முடி.
4. தன்னிருர் திசைதொறு முறையிற் சுற்றயே; தொடர்ந்த சுற்றயே. (8)

562. மங்கையர் திறத்தொரு மாற்றங் கூறினும்
தங்களை யாமெனத் தாழுஞ் சென்னியர்
அங்கையு முள்ளமுங் குவிந்த வாக்கையர்
சிங்கவே றெனத்திறற் சித்தர் சேரவே,

சிங்க ஏறு என திறல் - ஆண் சிங்கம் என்று சொல்லத்தக்க வலிமை வாய்ந்த, சித்தர் - சித்தர்கள், மங்கையர் திறத்து ஒரு மாற்றம் கூறினும் - இராவணன் தன்னருகேயுள்ள தன் குற்றேவல் மகளிரைக் குறித்து ஒரு வார்த்தை கூறினாலும், தங்களை ஆம் என - அவ்வார்த்தை தம்மை நோக்கிக் கூறியதாகக் கருதி, தாழும் சென்னியர் - (அதனை ஏற்கும் நிலையில் தம்) தலை வணங்கி நிற்பவர்களுள், அம் கையும் உள்ளமும் குவிந்த ஆக்கையர் - தம் உள்ளங் கைகளும், மனமும் குவிந்து (கீழ்ப்படிதலை அறிவிக்கும் படிக் குனிந்த உடல்களை யுடையவர்களாய், சேரவே - அவ்விரா வணன் அருகே அடைந்து நின்று சூழவும்,

சித்தர் - ஒரு தேவச் சாதியார். அங்கை - அகம்+கை. உள்ளம் குவிதல் - மனம் அடங்கல்.

(பி - ம்.) 1. தாழுஞ் சென்னியார்.
4. சிங்கவே றினத்திறற் சித்தர் சேரயே. (9)

563. அன்னவ னமைச்சரை நோக்கி யாண்டொரு
நன்மொழி பகரினு நடுங்குஞ் சிந்தையர்
என்னைகொல் பணியென விறைஞ்சு கின்றனர்
கின்னரர் பெரும்பயங் கிடந்த நெஞ்சினர்.

கின்னரர் - கின்னரர் என்னும் பிறிதொரு தேவச் சாதியர், அன்னவன் - அந்த இராவணன், அமைச்சரை நோக்கி - (தன்) மந்திரிகளைப் பார்த்து, ஆண்டு ஒரு நல் மொழி பகரினும் - அங்கு (தனியே இரகசியமாய்) ஒரு நல்வார்த்தை கூறினாலும், நடுங்கும் சிந்தையர் - (தம்மை நோக்கியே கொடியமொழி கூறினனோ என்று) நடுங்கும் மனமுடையவர்களாகி, பெரும் பயம் கிடந்த நெஞ்சினர் - மிக்க அச்சம் தங்கிய மனமுடையவர்களாய், 'என்னை கொல் பணி என - 'என்ன கட்டளை?' என்று, இறைஞ்சுகின்றனர் - (இராவணனை நோக்கி) வணங்குவாராயினர்.

கின்னரர்; கின்னரமென்னும் ஒரு வகை யாழைக்கொண்டு இசைபாடும் ஒரு வகை தேவச்சாதியர்; இவர்கள் மனித முகமும், ஒரு வகைப் பறவை உடலும் அமைந்த ஆண் பெண் இணைபிரியா தமைந்தவர். இங்கு இவர்களது அச்சம், 'அருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்பது நிகர்க்கும்.

பி - ம். 1. 2. நடுக்குஞ் சிந்தையர்; நடுங்கு நெஞ்சினர்.
3. என்னகொல்.........கின்றனர்; விறைஞ்சி நின்றனர்.
4. கின்னரம் பெரும்புயங் கிடந்த நெஞ்சினர். (10)

564. பிரகர நெடுந்திசைப் பெருந்தண் டேந்திய
கரதலத் தண்ணலைக் கண்ணி னோக்கிய
நரகின ராமென நடுங்கு நாவினர்
உரகருந் தம்மன முலைந்து சூழவே,

உரகரும் - நாக லோகத்தவர்களும், பிரகர நெடும் திசை - பாவஞ் (செய்தவர்களைத்) தண்டிப்பதற்கு இடமான, (தெற்குத் திசைக்குத் தலைவனான), பெரும்தண்டு ஏந்திய - பெரிய காலதண்டம் என்னும் தண்டாயுதத்தைத் தாங்கிய, கரதலத்து - கையையுடைய, அண்ணலை - பெரியோனான தரும ராஜனை (யமனை), கண்ணின் நோக்கிய - கண்ணெதிரில் கண்ட, நரகர் ஆம் என - மகா பாவிகளைப் போல, நடுங்கும் நாவினர் - நடுங்கும் நாவினையுடையவர்களாய், தம் மனம் உளைந்து - தங்கள் மனம் வருந்தி, சூழ - அந்த இராவணன் சபா மண்டபத்தில் சூழ்ந்து நிற்க, ஏ : ஈற்றசை.

பிரகரம் - அடித்தல். யமனை அண்ணல் எனச் சிறப்பித்தது, அவன் நெறிமுறை பிறழாது அவரவர் செய்த குற்றத்திற்கேற்பத் தண்டனை விதிக்கும் தன்மையனாதலின். நரகர் - பாவியர்; நரக தண்டனைக்குரிய பாவியர் எனலும் ஒன்றும். நரகர் என்பதற்கு, இங்கு நரகில் இருந்து வருந்துவோர் எனப்பொருள் கொள்வாரும் உளர்; பாவியர் நரகெய்திய பின் தருமராஜனைக் காண இடமில்லை ஆதலின், அவன் தண்டிப்பதற்கான பாவியர் என்றே பொருள் கொள்ளப்பட்டது. 'நல்லவன் தோற்பதே, நரகன் வெல்வதே' (937) என்றமையும் நோக்குக. 'தண்டு.........நடுங்கு நாவினர்'; 'பாம்புக்கு ராஜா மூங்கிற்றடி' என்றதுபோல. இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

(பி - ம்.) 1. பிரிதர நெடுந்திசைப். 2. கண்ணிற் காண்குறு.
3. நரகரி லஞ்சினர்; நடுங்கு நாவினர்; நடுங்கு நெஞ்சினர்.
4. உரகர் கடம்மன; தம்மனத் தச்சமோங்கவே. (11)

இதன்பின், ஒரு சுவடியில் பின்வரும் அதிகப் பாடல்கள் காணப்படுகின்றன.

1. வியக்கமுப் புவனமும் வெகுண்டு மேலைநாட்
கயக்கிய கடுந்திறற் கருத்து ளேகிடந்
துயக்கிய பயத்தின ரவுண ரோடுமற்
றியக்கருந் திசைத்திசை யிறைஞ்சி நிற்கவே.

2. பெருந்திசை யிரிந்திடப் பெயர்த்தும் வென்றநாட்
பருந்திறற் புயம்பிணிப் புண்டு பாசத்தால்
அருந்தளைப் படுந்துய ரதனுக் கஞ்சியே
புரந்தரன் களாஞ்சிகை யெடுத்துப் போற்றவே.

565. திசையுறு கரிகளைச் செற்றுத் தேவனும்
வசையுறக் கயிலையை மறித்து வானெலாம்
அசையுறப் புரந்தரற் கடந்த தோள்களின்
இசையினைத் தும்புரு விசையி னேத்தவே.

திசை உறு கரிகளை செற்று - திக்குக்களிற் பொருந்திய யானைகளை, (திக்கயங்களை) வலியடக்கி வென்று, தேவனும் வசை உற - மகாதேவனாகிய சிவபெருமானும் பழிப்பை அடைய, கயிலையை மறித்து - அவன் வீற்றிருந்த கயிலாய மலையை நிலைமாறப் பெயர்த்

தெடுத்து, வான் எலாம் அசை(வு) உற - வானுலகம் முழுவதும் நடுங்கும்படி, புரந்தரன் கடந்த - இந்திரனை நெருக்கத் தாக்கி வென்ற, தோள்களின் இசையினை - இராவணனுடைய இருபது தோள்களின் கீர்த்தியை, தும்புரு - தும்புரு என்னும் கந்தருவன், இசையின் ஏத்த - தன் யாழிசையால் ஏத்தித் துதிக்க, ஏ: ஈற்றசை.

இராவணன், திக்கயங்களை வென்றது, கயிலைமலை எடுத்தது, இந்திரனை வென்று வானுலகை வருத்தினது; ஆகிய செயல்கள் உத்தரகாண்டம் வரையெடுத்த படலம், திக்கு விசயப்படலம், முதலியவற்றிற் காண்க. தும்புரு - ஒரு கந்தருவன் - இசையில் வல்லவன்; கந்தருவர் - குதிரை முகமும், மானிட உடலங்களும் அமைந்தவர்; தும்புருவும் நாரதரும் இன்னிசை பாடுவதிலும், யாழ் வாசிப்பதிலும் வல்லவராதலின், இவ்விருவரையும் இணைத்தே கூறுவது மரபு. கந்திருவம் - குதிரை, (பிங்).

(பி - ம்.)
1. செறுத்துத் தேவர்கள்; செற்றுத் தேவர்கள்; செனுத்தித் தேவர்கள்.
2. மறித்த வாழ்வெலாம்; மறித்த வாறுடன்; மறந்து வானெலாம்;
3. புரந்தர னலைத்த தோள்களின்; தோள்களின் புரந்தரனடந்த தேர்களின்.
4. இசைகளைத்தும்புரு; இசையுறு தும்புரு; விசையினேற்றவே,

(12)

566. சேணுயர் நெறிமுறை திறம்ப லின்றியே
பாணிகள் பணிசெயப் பழுதில் பண்ணிறை
வீணையி னரம்பிடை விளைந்த தேமறை
வாணியி னாரதன் செவியின் வாக்கவே.

சேண் உயர் - மிக உயர்ந்த, நெறி முறை திறம்பல் இன்றியே - இசைநெறிகளில் மாறுபடுதல் இல்லாமல், பாணிகள் பணி செய - தாளங்கள் அவற்றின் நிலைகளை அளந்து காட்டுதலாகிய தொழிலை வகுத்துக்காட்ட, பழுது இல் - குற்றமில்லாத, பண் நிறை - பண் நிரம்பிய, வீணையின் நரம்பு இடை - மகதியாழ் என்னும் தன் வீணையிடத்துள்ள நரம்புகளிலிருந்து, விளைந்த - உண்டாகிய, தே மறை - தெய்வத் தன்மை பொருந்திய கந்திருவ வேதமாகிய ஸங்கீதத்தை, வாணியின் - தன் வாக்கோடு கூட, நாரதன் - நாரதர் என்னும்

தேவரிஷி, செவியின் வாக்க - தன் இருபது செவிகளிற் பொழிய, ஏ : ஈற்றசை.

சேணுயர் : ஒரு பொருட் பன்மொழியும் ஆம். பாணி - தாளம் ; 575. சுந்தர. 75, 133, 282. பாணியின் என்பதற்குத் கைகளால் எனப்பொருள் கொள்வாரும் உளர். தேமறை - தெய்வத் தன்மை யுடைய வேதம் எனவும், வாணியின் - சரஸ்வதியைப்போல எனவும் பொருள் கொள்வார் ஒரு சிலர். வாக்குதல் - வார்த்தல், ஊற்றுதல். நாரதர் - யாவர்க்கும் அன்பருள்பவர் என்னும் பொருள் ; இவர் பிரம குமாரர் ; இசையில் வல்லவர். 'சேணுயர் நெறிமுறை திறம்ப லின்றியே ; நீண்டுயர்ந்த பாடும் முறையான மந்தரம், மத்திமம், தாரம் தவருமல். பாணி - தாளம்' ; இவை பழையவுரை.

(பி - ம்.) 1. திறம்ப லின்றிரு.

2. பாணிசெய் பழுதில் பண்ணிடை ; பணணிறை ; பண்ணிசை.

3. வீணையி னரம்பிசை; விளைத்த தேமறை ; விளைந்த தெம்மறை ; தேன்மறை.

4. செவியின் வார்க்கவே ; செவிலார்க்கவே. (13)

வேறு

567. மேகமென் றுருத்தி வீக்கி
விண்ணவர் தருவும் விஞ்சை
நாகமுஞ் சுரந்த தீந்தே
னறுபுன லோட ளாவித்
தோகையர் துகிலிற் றேய்க்கு
மென்பதோர் துணுக்கத் தோடுஞ்
சீகர மகர வேலைக்
காவலன் சிந்த மன்னோ.

மகர வேலை காவலன் - சுருமீன்களையுடைய கடல்களுக்கு அரச னான வருணதேவன், விண்ணவர் தருவும் - தேவர்களது கற்பக விருக்ஷமும், விஞ்சை நாகமும் - வித்தியாதரர் உலகில் உள்ள சுர புன்னை மரமும், சுரந்த - தம் மலர்களிலிருந்து பொழிந்த, தீம் தேன் - இனிய தேனை, நறு புனலோடு - மணமிக்க நன்னீரோடு, அளாவி - கலந்து, மேகம் என் துருத்தி வீக்கி - மேகம் என்கிற நீர்த்துருத்தி யில் கட்டி, தோகையர் துகிலில் தோய்க்கும் என்பதோர் துணுக் கத் தோடும் - இராவணன் அருகேயுள்ள மகளிர்களுடைய ஆடை

யில் படிந்து நனைந்துவிடுமே என்ற நடுக்கத்தோடும், சீகரம் - சிறு திவலைகளை, சிந்த - பொழியவும், மன், ஓ : அசைகள்.

வருணன், அச்சத்துடன்செய்யும் பணி கூறப்பெற்றது. விண்ணவர் தருவும் நாகமும் சுரந்த என்பதற்கு, அவற்றின் மலர்களாற் பொழிந்த எனப்பொருள் வருவித்துக் கொள்ளப்பட்டது. நுண் துளிகளாய் வீசுதல் ; நனைந்து போகாமல், இனிய மணமும் சுவையும் மட்டும் பெற்று மகிழ்வுற. துருத்தி - நீர் வீசும் கருவி. சீகரம் - திவலை. இது முதல் நான்கு பாடல்கள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. துருத்திகொண்டு ; நூரத்து வீக்கி மேகமாந்துருத்தி ; விரையுலாந் தருவின்போது.

2. தீந்தேம் புனலொடு மளாவி நவ்வித் ; மளாவி நாவி ; புனலொடு மலையினுவி ; நாகமீத ரற்றுத் தீம்பாற் புனலொடு மளாவி நவ்வித்; நறுபுன லோடளாவி; தீந்தேன் புனலொடு.

3. துகிலிற் றேயு ; றேய்த்து ; றேய்த்தும் ; றேய்க்கும்.

4. காவலன் சிறந்த மன்னோ ; காவலன் மன்னோ ; சிந்துமன்னோ.

568. நறைமலர்த் தாதுந் தேனு
நளிநெடு மகுட கோடி
முறைமுறை யறையச் சிந்தி
முரிந்துகு மணியு முத்தும்
தறையிடை யுகாத முன்னந்
தாங்கினன் றழுவி வாங்கித்
துறைதொறுந் தொடர்ந்து நின்று
சமீரணன் றுடைப்ப மன்னோ.

சமீரணன் - வாயுதேவன், நறை மலர் தாதும் - மணம் வீசும் மலர்களில் இருந்து சிந்தும் மகரந்தங்களும், தேனும் - அம்மலர்களிலிருந்து பொழியும் தேனும், நளி - பெரிய, நெடு - நீண்ட, மகுட கோடி - அங்கு இராவணனைக் காணவந்துள்ள மூவுலகத்து அரசர்களுடைய கிரீடங்களின் கூட்டங்கள், முறை முறை அறைய - பல முறைகளும் நெருக்கத்தால் தாக்க, சிந்தி முரிந்து உகு - அவை சிதறியதால் ஒடிந்து உதிர்ந்த, மணியும் முத்தும் - இரத்தினங்களும் முத்துக்களும், தரையிடை-தரையினிடம், உகாத முன்னம் - உதிரா முன்னமே, (அதாவது அவை கீழே விழும்போதே), தாங்கினன் -

அவற்றை ஏந்திக்கொண்டவனாய், தழுவி வாங்கி - தழுவி எடுத்து துறை தொறும் தொடர்ந்து நின்று - பல இடங்களிலும் விடாமல் நின்றவனாய், துடைப்ப - (அந்தத் தேன், மகரந்தம், கிரீடங்களி னின்று உகும் இரத்தினங்களாகிய அக்குப்பைகளைத்) துடைத்து அவ்விடங்களைச் சுத்தம் செய்ய, மன், ஓ : அசைகள்.

இங்கு, வாயு தேவன் பணி கூறப்பெற்றது. நறுமலர்த் தாது, தேன், முத்து, மணி முதலியனவே, அச்சபையில் குப்பையாகக் கருதப்பட்டு ஒதுக்கப்படுபவை என்பதால், அவ்விராவணன் செல்வச் செருக்கின் மேம்பாடு உய்த்துணரப்பாலதாம் ; முத்தைத் தனியே கூறியுள்ளமையால், மணிகள் அம்முத்துக்கள் ஒழிந்த மற்றை அரதனங்கள் என்க. தரை என்பது எதுகை நோக்கித் தறை யெனத் திரிந்தது ; 'தறைவாயவன் வந் தடி, தாழுதலும் (877.)' 'வாங்கி - நீக்கி' என்பது பழையவுரை.

பி - ம். 1. களிர் நெடும்.

2. முறை முறையனுக; முறை முறை யிறையச் ; யிறைஞ்சச்சிந்தி.

3. யுகுத்த முன்னம்.

4. தொடர்ந்து நின்ற சமீரணன். (15)

ஒரு சுவடியில் இதன் பின் 3 அதிகப் பாடல்கள் பின் வருமாறு உள்ளன.

1. கடிநக ரழித்துத்தன் காவன் மாற்றிய
கொடியவன் றனக்குளங் குலைந்து கூசியே
வடதிசைப் பரப்பினுக் கிறைவன் மாநெதி
இடுதிறை யளந்தன னிரந்து நிற்கவே.

2. நிகரறு புவனமு மூன்றென நிகழ்த்திய
தொகையினிற் றொகுத்திடு மண்டச் சூழலின்
வகையினைக் குருமுறை மரபின் வஞ்சியாப்
புகரவன் விரித்தெடுத் தியம்பிப் போகவே.

3. மதியினிற் கருதுமுன் வந்து வேண்டினன்
எதுவிதப் பொருள்களு மிமைப்பி னல்கியே
திதிமுத லங்கமஞ் சவையுந் தெற்றென
விதிமுறை பெறத்தனி விளம்பிப் போகவே.

வேறு

569 மின்னுடை வேத்திரக் கையர் மெய்புகத்
துன்னிடு கஞ்சுகத் துகிலர் சோர்விலாப்
பொன்னொடு வெள்ளியப் புரந்த ராதியர்க்
கின்னியன் முறைமுறை யிருக்கை யீயவே.

பொன் ஒடு - (தேவ குருவாகிய) பிரகஸ்பதியோடு, வெள்ளி - அசுர குருவாகிய சுக்கிரனும், மின் உடை - ஒளியுடைய, வேத்திர கையர் - பிரம்பு பிடித்த கையினராய், மெய் புக துன்னிடு கஞ்சுக துகிலர்-தம் உடல் புகுமாறு தைக்கப்பட்ட சட்டையாகிய உடையை யுடையவர்களாய், சோர்வு இலர்-சோம்பலில்லாதவர்களாய், புரந்தரா தியர்க்கு-இந்திரன் முதலியவர்களுக்கு, இன் இயல்-இனிய தன்மை யோடு, முறை முறை - தக்க முறைப்படி, இருக்கை ஈய - ஆசனங் களைக் கொடுத்து உபசரிக்க, ஏ : ஈற்றசை.

பொன், வெள்ளி - இவை நிறம் பற்றிவந்த பெயர்கள் ; தேவ குருவாகிய பிரகஸ்பதி பொன்னிறமும், அசுர குருவாகிய சுக்கிரன் வெண்ணிறமும் உடைமையால், அவர்களுக்குக் காரணப் பெயர்களா யின. இந்திரனுக்குக் குருவான பிரகஸ்பதியும், அவ்விந்திரன் முதலிய தேவர்களுக்குப் பகைவர்களான அசுரர்களுக்குக் குருவான சுக்கிரனும் இராவணனிடம், கஞ்சுகிகளாய் அமர்ந்து, அவ்விந் திரன் முதலினோரை உபசரிக்கும் ஏவலில் நிற்கப் பணித்த இராவணனது வலிய ஆணை இங்குக் கூறப்பெற்றது. இனி, வேத்திரக் கையரும் கஞ்சுகத் துகிலருமான பணியாளர்கள், புரந்த ராதியர்க்குப் பொன்னொடு வெள்ளியிருக்கைகளை ஈய என இயைத் துப் பொருள் கூறுவாரும் உளர். அது முன்னுள்ள மற்ற செய்யுள் களில் உள்ளன போல இராவணனது சிறப்பைக் கூற வந்த விடத்து, அவனுக்குப் பெருமை தராது என்பது இங்கு நோக்கத்தக்கது. ‘பொன்னொடு வெள்ளி - கட்டியம்’ என்பது பழையவுரை. துன்னு தல் - தைத்தல். கஞ்சுகம் - சட்டை ‘கஞ்சுக முதல்வர்’ (சிலப். கால் கோள்: *138*. இதனை ‘மெய்ப்பை’ என்றும் கூறுவர் ; முல்லைப். *60* ; சிலப். *16: 107*.

பி - ம். 1. மின்னிடை வேத்திரக் ; மின்னிடு ; மெய்ப்புகு.
2. துன்னெடுங் ; துகிலர்சோர்விலர் ; சோர்விலார்.
3. பொன்னொடு வெள்ளிகள் ; பொன்னொடும் வெள்ளியப்.
4. முறைமையி னிருக்கை. (*16*)

570. சூலமே முதலிய துறந்து சுற்றிய
சேலையாற் செய்யவாய் புதைத்த செங்கையன்
தோலுடை நெடும்பணை துவைக்குந் தோறெலாம்
காலனின் றிசைக்குநாட் கடிகை கூறவே.

காலன் - யமன், சூலமே முதலிய துறந்து-சூலம் முதலாக உள்ள தன் ஆயுதங்களை நீத்து, சுற்றிய சேலையால் - தன் அரையிற் சுற்றிய ஆடையால், செய்ய வாய் - தன் சிவந்த வாயை, புதைத்த - பொத்தி மறைத்துக் கொண்ட, செம் கையன்- சிவந்த கையையுடைய வனாய், தோல் உடை நெடும் பணை - தோலையுடைய பெரிய முரசங் கள், துவைக்கும் தோறு எலாம் - அடிக்கப்படும் சமயங்களிலெல் லாம், இசைக்கும் நாள் கடிகை - அறிவிக்கும் நாளின் நாழிகைக் கணக்கை, வந்து கூற - அச்சபையில் வந்து எடுத்துச் சொல்ல, ஏ : ஈற்றசை.

கண்டோர் நடுங்கும் காலன், இராவணன் சபையில் தன் ஆயு தங்களை நீத்து, தன் ஆடையாலும் கையாலும் வாயைப் பொத்திக் கொண்டு அடக்கமாக வந்து நின்று, நாளின் நாழிகை இன்னதென்று அவ்வப்போது அறியக் கூறும் பணியில் இருந்தான் என்பதாம். அடக்கம் என்பது, உயர்ந்தோர் முன் அடங்கி யொழுகும் ஒழுக்கம்; அவை, 'பணிந்த மொழியும், தணிந்த நடையும், தானை மடக்கலும், வாய் புதைத்தலும் முதலாயின' என்று (தொல். மெய்ப்: பேரா. உரை) கூறியது இங்கு நோக்கத்தக்கது. சூலமே முதலிய, என்றது, அவனது காலதண்டம், காலபாசம் என்னும் படைகளையும் குறிப்பதும் ஆம். யமனுடைய ஆயுதங்களுள் சூலமும் ஒன்று. யமன் குறித்த காலந் தவறாமல் உயிர்களைப் பற்றிச் செல்பவன்; (ஆதலால்), அந்தக் காலனையே இராவணன் தன்சபையில் நாழிகை களைக் காலந் தவறாமல் எடுத்துக்கூறும் பணியில் வைத்திருந்தான் என்க. நாழிகைக் கணக்கர் என்பார், அரச சபையில் நாழிகை யளவை அவ்வப்போது எடுத்துக் கூறும் பணியில் இருக்கும் ஊழியர்; சிலப். 5 : 449; அடியார்க். உரை. கடிகை - கடிகா என்ற வட சொல்லின் திரிபு, 'தோலுடை நெடும் பணை - யாமந் தோறும் ஒலிக்கும் துந்துபி;' என்பது பழையவுரை.

பி - ம். 1. துறந்த சுற்றிய.
2. செறியவாய் புதைத்துச் செங்கையின்; செற்றியவாய்; செறிய வாய்; புதைத்த செங்கையின்; வெங்கையின்.
4. காலனின்றிசைக் குறுங்கடிகை.

இதன்பின், ஒரு சுவடியில் பின்வரும் ஓர் அதிகப் பாடல் காணப் பெறுகிறது.

> உரியநுங் குலத்துளே ஞெருவன் யானெனப்
> பரிவுறும் பழமைக ளெடுத்துப் பன்னியே
> விரைமலர் சிதறிமெய் யன்பு மீக்கொளா
> நிருதியங் கடிமுறை காத்து நிற்கவே.

**571.** **நயங்கிளர் நறுவிரை நான நெய்யளாய்**
**வியன்கருப் பூரமென் பஞ்சின் மீக்கொளீஇ**
**கயங்களின் மரைமலர்க் காடு பூத்தென**
**வயங்கெரிக் கடவுளும் விளக்க மாட்டவே.**

வயங்கு எரி கடவுளும் - விளங்குகின்ற அக்கினி தேவனும், நயம் கிளர் - சிறப்பு மிக்க, நறு விரை - நறிய மணத்தோடு கூடிய, நானம் - கத்தூரியை, நெய் அளாய் - (பசுவின்) நெய்யிற்கலந்து, வியன் கருப்பூர மென் பஞ்சில் மீ - சிறந்த பச்சைக் கற்பூரத்தை மிருதுவான பஞ்சின்மீது வைத்து, கொளீஇ - (திரியாகக்) கொண்டு கொளுத்தி, கயங்களில் - குளங்களில், மரை மலர் காடு பூத்தென - தாமரை மலர்கள் காடுபோல மலர்ந்தனபோல, விளக்கம் மாட்ட - விளக்குகளை ஏற்ற, ஏ : ஈற்றசை.

நானநெய் - கத்தூரிக் குழம்பு எனினும் ஆம். மரை : தாமரை என்பதன் முதற் குறை. விளக்கம் - தொழிற்பெயர்; அம் விகுதி. இராவணன் சபைக்குக் கயமும், அங்கு ஏற்றப் பெற்று விளங்கிய விளக்குகளுக்கு அக் கயத்தில் அலர்ந்து விளங்கும் தாமரை மலர்த் தொகுதியும் உவமைகள். ‘ தாமரை விளக்கந் தாங்க ’ (பால, நாட்டுப். 4) என்பதையும் நோக்குக. வயங் கெரிக் கடவுளும் : அவனே ஒளியுடையவனாய் இருந்தும், அவனை விளக்கேற்றப் பணித்தமையால் அவ்விளக்குகள் அவ்வங்கிக் கடவுளினும் ஒளி சிறந்தன என்பது விளங்குவதாம். யார் யார் எதனாற் சிறந்தவர்களோ அவர்களையெல்லாம் இராவணன் தனக்குப் பணியாளர்களாகக் கொண்டு அத்தொழில்களின் குறை முடிக்கச்செய்த சிறப்பு நோக்கற்பாலதாம். கொளீஇ : சொல்லிசை யளபெடை

பி - ம். 1. நானச் செய்யளாய்; நானநெய் யளாவி நந்தலில்.
2. பஞ்சிமீக் கொளீஇ; பஞ்சுமீக் கொளீஇ.
3. கயங்களின் ஞமரைக்; விரைமலர்க் காடு.
4. கடவுட்டீ விளக்க மாட்டவே.

(18)

572. அதிசய மளிப்பதற் கருள றிந்துநல்
புதிதலர் கற்பகத் தருவும் பொய்யிலாக்
கதிர்நெடு மணிகளுங் கறவை யான்களும்
நிதிகளு முறைமுறை நின்று நீட்டவே.

நல் புதிது அலர் - அழகுடன் புதிதாய் மலர்ந்த, கற்பக தருவும்- வானுலகத்துக் கற்பக மரமும், பொய் இலா நெடு கதிர் மணிகளும் - எப்பொழுதும் தவருத நீண்ட காந்தியோடு கூடிய சிந்தாமணி முதலான தெய்வ ரத்தினங்களும், கறவை ஆன்களும் - பால் கறக்கும் காமதேனு முதலிய தெய்வப் பசுக்களும், நிதிகளும், - சங்கம் பதுமம் என்னும் தெய்வத் தன்மை வாய்ந்த நிதியங்களும், அதிசயம் அளிப்ப தற்கு-இராவணனுக்கு வியப்பு உண்டாக்குவதற்கு, அருள் அறிந்து- அவன் அருள் நோக்கம் பார்த்து, முறை முறை - ஒன்றன்பின் ஒன்ருன வரிசைப்படி, நின்று நீட்ட - அவன் எதிரே நின்று தத்தம் பயன்களை நீட்டி வழங்க, ஏ : ஈற்றசை.

தெய்வத்தன்மை வாய்ந்த கற்பகம், சிந்தாமணி, காமதேனு முதலிய கொடையிற் சிறந்தவை எல்லாம் இராவணன் சபையில் அவன் அருளை எதிர்பார்த்துச் சமயமறிந்து அவன் பிறருக்குக் கொடுக்க விரும்பும் பொருள்களை, அவன் வியப்புறும்படி வலுவிற் பொழிந்து கொண்டிருந்தன என்பதாம். ஒப்பு. சுந்தர. 122. தேவ தருக்கள் கற்பகம், சந்தானம், மந்தாரம், பாரிசாதம், அரிசந்தனம் என ஐவகைப்படும். 'ஒரு மொழியொழிதன் னினங்கொளற் குரித்தே' (நன். சூ. 358) என்றபடி, கற்பகத்தை மட்டும் கூறி, மற்றவற்றை வருவித்துக் கொள்ள வைத்தது என்க. நிதிகள் ஒன்பது: அவை, சங்கம், பதுமம், மகாபதுமம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என்பன; மணிகள் ஆன்கள் எனப் பன்மையிற் கூறினமை, சிந்தாமணி, சூடாமணி, முதலியனவற்றையும், காமதேனு அதன் வழி வந்த நந்தினி முதலிய தெய்வப் பசுக்களையும் என்க. காமதேனுக்கள், சிந்தாமணிகள் பல என்றும் கூறுவர்.

பி - ம். 1. அதிசயமிகப்பல வளிக்குஞ் சீர்மையில்; அதிசய மளிப்பவற் கருளிற்; அதிசய மளிப்பவர்; அருளிறந்தார்; அருளிறந்த; அருளறிந்து நற்கருளி தென்னவே.

2. கறபக மலரும் பொய்யிலார்க்; தருவும் பொன்றிடாக்.

3. கதிரிடு நெடுமணிக் கறவை யான்கெழு; கதிர்விடு நெடுமணிக் கதிரிடு; கதிர் நெடுமணியுடன்; கறவை யாவுடன்; கறவை மான்களும்.

4. நிதியமு; நின்று நீடவே. (19)

573. குண்டல முதலிய குலங்கொள் பேரணி
மண்டிய பேரொளி வயங்கி வீசலால்
உண்டுகொ லிரவினி யுலக மேழினும்
எண்டிசை மருங்கினு மிருளின் றென்னவே.

குண்டலம் முதலிய - இராவணன் (அணிந்திருந்த) காதுக் குண்டலங்கள் முதலான, குலம் கொள் பேர் அணி - சிறப்பைக் கொண்ட உயர்ந்த ஆபரணங்கள், மண்டிய பேர் ஒளி - அடர்ந்த பெரும் காந்தியை, வயங்கி வீசலால் - எங்கும் நிறைந்து வீசுவதால், 'உலகம் ஏழினும் - கீழேழு மேலேழு உலகங்களிலும், இனி - இனி மேல், இரவு உண்டு கொல் - இரவு என்பதொன்று உண்டோ? எண் திசை மருங்கினும் - எட்டுத்திக்குக்களான இடங்களிலும், இருள் இன்று - (இனி) இருள் என்பது இல்லாததாகும்:' என்ன - என்று (எவரும்) சொல்லும்படி, ஏ : ஈற்றசை.

பி - ம். 1. குலங்கள் பேரணி.
2. மண்டிய வொளிபல ; மண்டிய பேரணி ; வயங்க வீசலால்.
3. இரவினிலுலக ; யுலகமெங்கணும்.
4. மிருளென் றுன்னவே ; இலதென் றெண்ணவே ; இருளினன் றென்னவே. (20)

574. கங்கையே முதலிய கடவுட் கன்னியர்
கொங்கைகள் சுமந்திடை கொடியி னொல்கிடச்
செங்கையி னரிசியும் மலருஞ் சிந்தினர்
மங்கல முறைமொழி கூறி வாழ்த்தவே.

கங்கையே முதலிய - கங்கையையே முதலாகக் கொண்ட, கடவுள் கன்னியர் - தீர்த்த கன்னியர்களான தெய்வ மகளிர், கொங்கைகள் சுமந்து - (தம்) தனபாரங்களைத் தாங்குவதால், இடை கொடியின் ஒல்கிட - தங்கள் மெல்லிய இடைகள் கொடிபோலத் துவள, செம் கையின் அரிசியும் மலரும் சிந்தினர் - தம் சிவந்த கைகளால் அரிசியையும், மலரையும் எடுத்து இராவணன்மீது சிந்தி, மங்கலமுறை மொழி கூறி - மங்கல வாழ்த்து முறையில் பல வார்த்தைகளைச் சொல்லி, வாழ்த்த - வாழ்த்துக்கூற, ஏ : ஈற்றசை.

கங்கையே முதலிய கடவுட் கன்னியர் : அவர், கங்கை, யமுனை, ஸரஸ்வதி, ஸிந்து, நர்மதை, கோதாவரி, காவேரி என்பவர். மகளிர் அட்சதையும் மலரும் தூவி வாழ்த்துதல் ; பல்லாண்டு கூறுதலும்

ஆம். மலர் தூவி வாழ்த்துதல்: பெருங். 1, 42: 94; சிலப். மங்கல: 62. இச் செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

பி - ம். 1. கங்கையை முதலிய தீர்த்த கன்னியர்.

4. மங்கல மொழிமுறை; கூவி; மங்கல மொழிமறை; மங்கல மறைமொழி. (21)

**575.** ஊருவிற் றோன்றிய வுருப்ப சிப்பெயர்க்
காரிகை யார்முதற் கலாப மஞ்ஞைபோல்
வார்விசிக் கருவியோர் வகுத்த பாணியின்
நாரிய ரருநட நடிப்ப நோக்கியே,

ஊருவில் தோன்றிய - நாராயண முனிவரது தொடையி னின்று பிறந்த, உருப்பசி பெயர் - ஊர்வசி என்னும் பெயரை யுடைய, காரிகையார் முதல் - பெண்கள் முதலாக உள்ள, நாரியர் - மகளிர், கலாப மஞ்ஞை போல் - தோகையுடைய மயில்களே போல, வார் விசி கருவியோர் - வாரினால் இழுத்துக் கட்டப்பட்ட தோற்கருவியாகிய தண்ணுமை முதலிய வாத்தியக்காரர், வகுத்த பாணியின் - வகைப்படுத்தியமைத்த தாளமுறைக்கேற்ப, அரு நடம் நடிப்ப - அரிய நடனங்கள் நடிக்க, நோக்கி - அதனைப் பார்த்து மகிழ்ந்து, ஏ; ஈற்றசை.

திருமாலின் அம்சமான நரன் நாராயணன் என்னும் இரு முனிவர்கள் பதரிகாச்சிரமத்தில் தவஞ்செய்துகொண்டிருக்கையில், இந்திரனால் ஏவப்பட்டு அங்கு வந்த தேவமாதர் பலர், தம்மேனி அழகாலும், ஆடல் பாடல் முதலியவற்றாலும், அம்முனிவர்களை மயக்கித் தம்பால் ஈடுபடச் செய்யத் தொடங்கினர்; அதுகண்ட அம் முனிவர்களில் ஒருவரான நாராயண முனிவர், அம்மகளிரை அவமானப்படுத்தக் கருதித் தம் தொடையிலிருந்து கட்டழகிற் சிறந்த ஒரு மடந்தையைத் தம் தவச் சிறப்பால் உண்டாக்க, அம்மங்கையின் சௌந்தரிய மேம்பாட்டைக் கண்ட அத்தெய்வ மகளிர் நாணித் தம் மழகிற் றேல்வியுற்று அம்முனிவரை வணங்கி, அம்மங்கை நல்லாளையே தம் தலைவியாக ஏற்றுக்கொண்டு அவளுடன் வானுலகெய்தினர்; அவ்வாறு அந்நாராயண முனிவரால் படைக்கப் பெற்றவளே ஊர்வசி எனப்படுவள். ஊருவிற்றோன்றினள் ஆதலின், தத்திதாந்தமாக அவளுக்கு ஊர்வசி எனப்பெயர் வழங்குவதாயிற்று. கலாப மஞ்ஞை - தோகை விரித்தாடும் மயில். காரிகை - அழகு; அழகுடைமையால் பெண்ணைக் குறித்து நின்றது. பாணி-

தாளம்; 566. உரை. இதுவும் அடுத்த செய்யுளும் சந்தேக மென்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. ஊருயிற்றோன்றிய; உயிர் பெய்யோவியம்; உயிர் போலோவியம்; றோன்றுருப் பசிபோ லோவியம்; றென்றுருப் பசிபோலோங்கிய;

2. ஆவியங் கார்வரச் செருக்கிய; காரினிற் செருக்கிய; கார்வரச் செருக்கிய

3. வார் விசைக்; வகுத்த பாடலின்.

4. அருநடாவில; கருநடம். (22)

576. இருந்தன னுலகங்க ளிரண்டு மொன்றுந்தன்
அருந்தவ முடைமையி னளவி லாற்றலில்
பொருந்திய விராவணன் புருவக் கார்முகக்
கருந்தடங் கண்ணியர் கண்ணின் வெள்ளத்தே.

உலகங்கள் இரண்டும் ஒன்றும் - உலகங்கள் மூன்றினும், தன் அரும்தவம் உடைமையின் - பிறரால் செய்தற்கரிய தவத்தைத் தான் செய்துள்ளமையின், அளவு இல் ஆற்றல் - அளவு இல்லாத வலிமை பொருந்திய, இராவணன் - இராவணனனவன், புருவ கார் முக கரும் தடம் கண்ணியர் - புருவமாகிய விற்களையுடைய கரிய பெரிய கண்களையுடைய மகளிர், கண்ணின் வெள்ளத்தே - கண்களின் பார்வையாகிய வெள்ளத்தினிடத்து, இருந்தனன் - இருந்தான்.

555-ஆம் செய்யுள் முதல் இதுவரையில் ஒரு தொடராகி, 'இருந்தனன்' என்ற வினைமுடிவு கொண்டது என்க. (இப்பகுதியிலுள்ள செய்யுட்கள் சுவடிகள் பலவற்றும் இடமாறிக் கிடக்கின்றன.) அரக்கனின் பலவகை ஆற்றல்களை அமைக்க வந்த இப்பகுதியில், அவன் 'கருந்தடங் கண்ணியர் கண்ணின் வெள்ளத்தே' இருந்தனன் என்று கூறி முடித்தது, பின்வரும் கதைக்குத் தோற்றுவாயாக அமைந்த நயம் ஓர்க. இது, "வாங்குவளைக் கையார் வதன மதிபூத்த, பூங்குவளைக் காட்டிடையே போயினான்" (நள. சுயம்வர: 20) என்ற பாடலை நினைப்பூட்டுகின்றது. வெள்ளம்-ஒரு பேரெண்; இங்குக் கண்களின் மிகுதியைக் குறித்து நின்றது. வெள்ளத்தே இருந்தனன் எனப்பொருள் முடிவு ஏற்படுதலால் இது பூட்டுவிற் பொருள்கோள். ஒருசுவடியில் இதனுடன் இராவணன் அரசிருக்கைப் படலம் முற்றும்; அச்சுவடியின்படி அடுத்த படலம் 'அவைபுகுபடலம்' எனப்படும்.

செய்யுள் 555 முதல் இதுவரையில், சூர்ப்பணகை இராவணன் முன் தோன்றியகாலை, அவன் கொலுவிலிருந்த தன்மை கூறப்

பெற்றது. (வான்மீகம் ஆரணிய காண்டம் 32-ஆவது ஸர்க்கமும் இராவணனுடைய பெருமைகளைப் பொதுவாகக் கூறுவதாகவே அமையும்.) இந்நூலில், தண்டகாரணியத்தில் நிகழ்ந்த செய்திகளை முதன்முதலாகச் சூர்ப்பணகை வாயிலாலேயே இராவணன் கேட்டனன் என்று கொள்வதனால், இங்குக் கூறிச்செல்லும் கதையின் போக்கு, வான்மீகத்தினின்று பெரிதும் மாறியிருக்கிறது. வான்மீகத்தில், சூர்ப்பணகை இராவணனிடம் சென்று, அவன், பகைவர் வந்துள்ளமையை அறியாமல் இருப்பதாக அவனை இகழ்ந்து பேசி, இராம லக்ஷ்மணர்களின் பெருமைகளையும், பிராட்டியின் ஸௌந்தரியத்தையும் விளக்கிக்கூறி, அவனை இராமலக்ஷ்மணர்களை வதம் செய்து, பிராட்டியை அபகரித்து வருமாறு வற்புறுத்தி வேண்டிக் கொண்டனள் என்று கூறப்பெற்றுள்ளது.

இப்பகுதியிலுள்ள பாடல்கள் சுவடிகளில் பலவாறு பிறழ்ந்தும் இடம் மாறியும் காண்கின்றன. அன்றியும், இப்பாடல்களை நோக்குமிடத்து, ஆசிரியர் நூலை யாத்துச் செல்லும் உயர் நோக்குக்குப் புறம்பாகப் பல இடைச்செருகல்கள் இப்பகுதியில் நாளடைவில் நேர்ந்துள்ளன என்றே கருத இடந்தருகின்றது.

பி-ம். 1. ஞாலகமோர் மூன்று மெய்திய.
2. அருந்தவ; மெனுமதை யளவி; அருந்தவம் மெய்ம்மையின்; அருந்தவப் பெருமையின்.
3. பருவக்கார்முகக். (23)

### சூர்ப்பணகை இலங்கையுட் புகுதல் 577—8

577. தங்கையு மவ்வழி தலையிற் றங்கிய
செங்கையள் சோரியின் றாரை சேர்ந்திழி
கொங்கையள் மூக்கிலள் குழையின் காதிலள்
மங்குலி னொலிபடத் திறந்த வாயினள்,

அ வழி - அவ்வாறு இராவணன் சபையில் வீற்றிருந்த பொழுது, தங்கையும் - அந்த இராவணனுடைய தங்கையாகிய சூர்ப்பணகையும், தலையில் தாங்கிய செம் கையள் - தன் தலை மீது சுமந்த சிவந்த கைகளையுடையவளும், சோரியின் தாரை - இரத்தத்தின ஒழுக்குகள், சேர்ந்து இழி கொங்கையள் - ஒன்று சேர்ந்து பெருகி விழப்பெற்ற கொங்கைகளையுடையவளும், குழையின் காது இலள் - குழையணிந்த காதுகள் இல்லாதவளும, மங்குலின் ஒலி பட - மேகத்தின் முழக்கம் உண்டாக, திறந்த வாயினள் - திறந்த வாயையுடையவளுமாகி,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய் இயைந்து, 'வந்து தோன்றினள்' என வினை முடிவுபெறும். தலையில் கைகளை வைத்துக் கொண்டு குருதி வெள்ளம் சொரியப் பேரொலியுடன் ஒரு மடந்தை வருவதே ஒரு பெரும் உற்பாதமாகும்; இதனால், இவள் தோற்றமே இராவணனுக்குக் கேட்டை முற்கூட்டி அறிவிப்பதாயிற்று என்னலாம். சூர்ப்பணகை தலையில் கைவைத்து அழுதுகொண்டு இலங்கை யெய்தியது; பெரியாழ்வார் திருமொழி. *8. 9: 4.* சுமந்த கையள் : *616.* குழையில் காதினள்; *312; 700.* மங்குலின் ஒலி பட - மேகத்தின் கர்ச்சனை அழிய; (அது) உள்ளடங்குமாறு, என்றும் பொருள் கொள்ளலாம். சோரியின் தாரை, அறுபட்ட மூக்கிலிருந்து பெருகி வழிந்த இரத்தப் பெருக்கும், முலைக்கண்களை அறுத்துவிட்டமையால் அவற்றினின்றும் பெருக்கெடுத்து வழிந்த இரத்தப் பெருக்கும் ஒன்று சேர்ந்து வழிந்தன என்க.

பி - ம். 1. தங்கையு மிவ்வழித்.

2. சேர்ந்திழி; தொத்திழி; ருரைகொத்தழி; செங்கையன் பெருகு செந்நீரிற் றோய்ந்தழி.

3. குழையில் காதினள்; காதில் முகத்தினள் ஒலிகெட.

4. மங்குலி னொளிபடத்; துறந்தயாயினள். (24)

578. முடைமிடை வாயினின் முறையிட் டார்கலி
கடையுகத் தெழுமொலி காட்டக் காந்துவாள்
குடதிசைச் செக்கரிற் சேந்த கூந்தலாள்
வடதிசை வாயிலின் வந்து தோன்றினள்.

முடை மிடை வாயினின் - முடை நாற்றம் மிகுந்த தன் வாயினால், முறையிட்டு - தனக்குற்ற குறையைக் கூறிப் புலம்பிக் கொண்டு, ஆர்கலி - கடலிலிருந்து, கடை யுகத்து - கடைசி யுக முடிவில், (அதாவது, மகாப் பிரளய காலத்தில்), எழும் ஒலி - எழுகின்ற பேரொலியை, காட்ட - தோற்றுவித்தனள் என்று சொல்லும்படிப் பேரிரைச்சலுடன், காந்துவாள் - தீப்பட்டுக் கருகுதல் போன்ற நிலையிலுள்ளவளும், குட திசை செக்கரில் சேந்த கூந்தலாள் - மேல் திசையில் தோன்றும் அந்தி வானத்துச் சிவப்பு நிறத்தைக் கொண்ட கூந்தலையுடையவளுமான சூர்ப்பணகை, வட திசை வாயிலின் வந்து தோன்றினள் - இலங்கை நகரின் வடக்குப் புற வாயிலினிடத்தே வந்து காணப்பட்டாள்,

முடை மிடை வாய் - மாமிசங்களை யுண்ணும் வாயினையுடைமையால் முடை நாற்றம் மிக்க வாய். சூர்ப்பணகை கூந்தலுக்குச் செக்கர்; சிவப்பாதலின்; 'செம்பராகம் படச்செறிந்த கூந்தலாள்' (228); 'வீங்கெரி யாமென விரிந்தன சில்லலோதி' (311) என்றமையுங் காண்க. இப்பாடல் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. முடைகமழ் வாயினின்; முடை முடைவாயினின்; முடையுடை வாயினள்; முடையுடை வாயினால்; முடிமிடை வாயிலின்; முறையிட் டார்த்தெழு; முறையிட் டார்கலி.

2. கடையுகக் கடலொலி; கடையுகக் காரொலி; காட்டிக் காந்துவாள்.

3. சோர்ந்த கூந்தலாள்; சேர்ந்த கூந்தலாள்.

4. வடதிசைக் கயிலையின். (25)

### சூர்ப்பணகையைக் கண்டு அரக்கர் வருந்துதல் 579—97.

579. தோன்றலுந் தொன்னக ரரக்கர் தோகையர்
ஏன்றெதிர் வயிறலைத் திரங்கி யேங்கினர்
மூன்றுல குடையவன் றங்கை மூக்கிலள்
தான்றனி யவள்வரத் தரிக்க வல்லரோ.

தோன்றலும் - அவ்வாறு சூர்ப்பணகை அவ்வடக்கு வாயிலில் வந்து தோன்றியதும், தொல் நகர் அரக்கர் தோகையர் - பழமையான அந்த இலங்கை நகரில் இருந்த அரக்கர் மகளிர், எதிர் ஏன்று - எதிரே வந்து, வயிறு அலைத்து - தம் வயிறுகளில் அடித்துக்கொண்டு, இரங்கி ஏங்கினர் - இரக்கமுற்று அழுதனர்; மூன்று உலகு உடையவன் தங்கை - மூவுலகங்களையும் தனக்கு உரிமையாக அடைந்துள்ள இராவணன் தங்கை, மூக்கு இலள் - மூக்கு அற்றவளாய், தனி அவள் தான் வர - தனியளாய் அவள் மட்டும் வர, தரிக்க வல்லரோ - கண்டு சகிக்கவல்லவர் ஆவரோ? (மாட்டார் என்றபடி).

இது முதல், 597 முடிய உள்ள செய்யுட்கள் சூர்ப்பணகையின் துயர நிலையைக்கண்ட இலங்கை அரக்கரின் மறுக்கத்தைக் கூறுகின்றன. இங்கும், சுவடிகளிற் செய்யுட்கள் இடம் மாறிக் காணப்படுகின்றன. தொன்னகர்; 'தொன்மா விலங்கை' சிறுபாணுற்: 119. துன்புற்ற காலை, மகளிர் தம் வயிறு அலைத்தல் வழக்கம்; பால. ஆற்றுப்: 14. சுந்தர. 979, 988. மூன்றுலகுடையவன் தங்கையாகலின், தனியே வருந் தகுதியுடையவளல்லள்; மூன்றுலகுடை

யவன்; 576. "உலக மூன்று மாள்பவன் றங்கையாயில், ........ தமியணீ வருதற் கொத்த தன்மையென் றையல்" (261) என்று இராமபிரான் முன் கூறியுள்ளதையும் இங்கு நோக்கற்பாலதாம்; மேலும், இவ்வாறு மூக்கு முதலிய அங்கங்கள் அறுப்புண்ட நிலையில் அநாதைபோல வந்தமையால் தரிக்க வல்லார் ஆயினர் என்க.

பி-ம். 2. யிரங்கி யேங்கினர்; யிரங்கித் தாங்கினர்; தாங்கினூர்.
3. மூக்கிலாள்.
4. யெதிர்வரத்; தரிக்க கில்லரே; (26)

580. பொருக்கென நோக்கினர் புகல்வ தோர்கிலர்
அரக்கரு மிரைத்தன ரசனி யேறெனக்
கரத்தொடு கரங்களைப் புடைத்துக் கண்களின்
நெருப்பெழ விழித்துவாய் மடித்து நிற்கின்றார்.

அரக்கரும்-அதனைக்கண்ட அங்கிருந்த இராக்கத ஆடவர்களும், பொருக்கு என நோக்கினர் - திடுக்கிட்டுப் பார்த்தனர்; புகல்வது ஓர்கிலர் - இன்ன சொல்வதென்று அறியாதவர்களாய், அசனி ஏறு என - பேரிடி முழக்கம் போல, கரத்து ஒடு கரங்களை புடைத்து - கையோடு கையைத் தாக்கி, கண்களின் நெருப்பு எழ - தம் கண்களினின்று நெருப்புக் கிளம்ப, விழித்து - விழித்து நோக்கி, வாய் மடித்து - தம் வாய் இதழ்களை மடித்துக் கடித்துக்கொண்டு, நிற்கின்றார் - நிற்பவராயினர்.

பொருக்கு என: இது விரைவுக்குறிப்பு; பால. திருவதார: 42; உயுத்த. கும்பகருணப்; 113. அரக்கரும்; உம்மை, இறந்தது தழுவிய எச்சவும்மை. முன் செய்யுளில் அரக்கியர் நிலை கூறிய செய்தியை உடன் தழுவி வந்தது. கரத்தொடு கரம்புடைத்தலும், கண்கள் நெருப்பெழ விழித்தலும், வாய் மடித்தலும், வெகுளி மேற்படும் மெய்ப்பாடுகள்; சிலப். அரங்கேற்றுகாதை: உரை. வெகுண்டோன விநயம்.

பி-ம். 1. தோர்கிலார்.
2. அரக்கரு மார்த்தன ரசனி யாமெனக்; ரசனியாமெனக்; அரக் கருமடுத் தனரசனி யேறெனக்.
3. கரத்தொடுங் கரங்களை; புடைத்துக் கண்களிற்.
4. மடித்து நின்றனர். (27)

581 இந்திரன் பாலதோ வுலக மீன்றபேர்
அந்தணன் பாலதோ வாழி யானதோ
சந்திர மவுலிபாற் றங்கு மேகொலோ
அந்தர மிதுவென வழல்கின் றார்சிலர்.

சிலர் - அவ்வரக்கருள் சிலர், 'இந்திரன் பாலது ஓ - இக்குற்றம் இந்திரனைச் சார்ந்ததோ? (அல்லது), உலகம் ஈன்ற - உலங்களைப் படைத்த, பேர் அந்தணன் பாலதோ - பெருமைக் குரிய அந்தணனை பிரமதேவன் பாற்பட்டதோ? (அல்லது), ஆழியான் அதோ - (அதுவுமன்றேல், இக்குற்றம்) திருப்பாற்கடலிற் பள்ளிகொள்ளும் திருமாலைச் சார்ந்ததோ? (அல்லது), சந்திர மவுலிபால் தங்குமே கொலோ - சந்திரனைத் தன் முடியிற் சூடிய சிவபெருமான் இடமே போய்த் தங்கியதாகுமோ? அந்தரம் இது என - இஃது ஓர் ஆபத்து என்று, அழல்கின்றார் - கொதிப்புள்ளவராயினர்.

பேரந்தணன் என்றது, பிரமதேவர்கள் அனைவரையும் படைத்தமையாலும், அவன்தான் அந்தணத் தன்மையிற் சிறந்தமையாலும் என்க. இந்திரனை முற்கூறியது, பொதுவாக இந்திரன் அரக்கர்களுக்குப் பகைவன் ஆதலின்; பின் திரிமூர்த்திகளைக் கூறியது, மற்றையோர் இத்தீங்கு புரியத் துணியும் ஆற்றலிலர் என்ற துணிவால். அந்தரம்; ஆபத்து; முடிவும் ஆம்; சில சுவடிகளில் இதன் பின் 'என்னையே' என்று தொடங்கும் 584-ஆம் செய்யுள் காணப்படுகிறது.

பி - ம். 1. இந்திரன் மேலதோ.
2. அந்தணர்; அந்தணன் மேலதோ.
3. றங்குமேகொலா; றயங்குமே கொலிங்.
4. அந்தர மொன்றுகின்; அந்தர மீதென வறைகின்றார் சிலர்; அழுகின்றார் சிலர். (28)

582. போரிலான் புரந்தர னேவல் பூண்டனன்
ஆருலா நேமியா னுற்ற ரேற்றுப்போய்
நீரினு னெருப்பனுன் பொருப்பி னனினி
யார்கொலா மீதென வறைகின் றார்சிலர்.

சிலர் - மற்றும் சில அரக்கர்கள், 'புரந்தரன் - தேவேந்திரனோ என்றால், போர் இலான் - போர் செய்வது என்பதே இல்லாதவனும், ஏவல் பூண்டனன் - நம் அரசனான இராவணனுக்கு அடங்கி

அவன் ஏவிய குற்றேவல்களைச் செய்பவனாய் இருக்கின்றான்; ஆர் உலாம் நேமியான் - கூர்மை பொருந்திய சக்கரத்தையுடைய திருமால், ஆற்றல் தோற்று போய் - நம் அரசனான இராவணனுக்கு வலி இழந்து ஓடிப்போய், நீரினான் - கடல் நீரில் போய்ப் புகுந்துகொண்டான்; நெருப்பு அனான் - அழலைப்போன்ற சிவபெருமானோ என்றால், பொருப்பினான்- (நம் இராவணற்கு எதிர் நிற்கமாட்டாது போய்) ஒரு மலைமீது ஏறிக்கொண்டான்; (இவ்வாறாக), இனி யார் கொல் ஆம் ஈது என-இனி வேறு யாரே இக்கொடுஞ் செயல் புரிந்தோர் ஆவர்?' என்று, அறைகின்றார் - கூறுவாராயினர்.

முன்செய்யுளில் இந்திரன் அல்லது முத்தேவர்களில் யாரோ இத்தீங்கு புரிந்தார் என்று சிலர் அயிர்த்தனராக, மற்றும் சில அரக்கர்கள், அவ்விந்திரனும், முத்தேவரும் அல்லர் என இச்செய்யுளால் துணிந்தமை கூறப்பெற்றது என்க. புரந்தரன், நேமியான், பொருப்பனான், என்ற மூவரைக் கூறியது; ஒப்பு; திருமுருகு : 148-159. பிரமனை விலக்கியது, பிரமதேவர் போரிடுவது இன்மையாலும், அவர் இராவணனது குல முதல்வ ராதலாலும் என்க. ஆர் - ஆரக்கால்களும் ஆம். திருமால், பாற்கடலிற் பள்ளிகொண்டமையும், சிவபிரான் கயிலை மலைமீது இருப்பதையும் இராவணனுக்கு அஞ்சியென அரக்கர்கள் இராவணனுக்கு ஏற்றங்கருதி மிகைபடக்கூறினர் என்பதாம். சிவபிரானை நெருப்பனான் என்றது, திருவண்ணாமலையில் கனலாய் ஓங்கிய சோதிவடிவத்தைக் கருதியும், 'எரிபோன் மேனிப்பிரான்' (தேவாரம்) என்றமை கருதியும், அவன் கையில் கனல் கொண்டுள்ளமையைக் கொண்டும் என்க. இச்செய்யுள் சில சுவடிகளில் இடம் மாறிக் காணப்படுகிறது.

பி - ம். 1. பூண்டனன் 2. நேமியனாற்ற.
3. நீரிலா னெருப்பினான்; நீருளான் நெருப்புளான் பொருப்புளானினி.
4. ஆர்கொலா மிதற்கென. (29)

583. செப்புதற் குரியவர் தெவ்வ ராருளர்
முப்புறத் துலகமு மடங்க மூடிய
இப்புறத் தண்டத்தோர்க் கியைவ தன்றிது
அப்புறத் தண்டத்தா ராரென் றார்சிலர்.

சிலர் - மற்றும் சில அரக்கர், 'தெவ்வர் - நம் தலைவனாகிய இராவணனுக்குப் பகைவராய் உள்ளோர் என்று, செப்புதற்கு உரியவர் -

சொல்லக் கூடிய நிலையில் உள்ளோர், யார் உளர் - யாவரே இருக்கின்றனர்? மு புறத்து உலகமும் அடங்க மூடிய - மூன்று வகைப் பட்ட சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும் உலகங்கள் முழுவதும் உள்ளடங்கும்படி கவிந்துகொண்ட, இ புறத்து அண்டத்தோர்க்கு - இந்த அண்ட கோளகையினுள்ளோர்க்கு, இது இயைவது அன்று - இது பொருந்தும் செயல் ஆகாது; (ஆதலின், இச்செயல் புரிந்தோர்), அ புறத்து அண்டத்தோர் ஆம் - இவ் வண்டத்திற்கு அப்பால் உள்ள பகிரண்டத்தில் உள்ளார் ஆவர். ஆர் என்றார் - அவர் யார் என்று ஐயுற்றுக் கூறினர்.

முப்புறத்து உலகமும் மடங்க மூடிய - மூவுலகங்களும், சுருண்டு மடங்கிக்கொள்ள எனவும், பொருள் கொள்ளலாம். இப் புறத்து அண்டம் - இந்த அண்டகோளகை; அப்புறத் தண்டம் - அந்தப் பகிரண்டம் எனும் வெளி அண்டம்.

பி - ம். 1. செப்புறற் குரியவர்; செப்புதற்குரியவோர்; தேவராதியர்; தேவரியாருளர்.
2. மடங்க மூடிய; மடங்க மூட்டிய.
3. இப்புறத் தண்டத்தார்; இயைவதன்றிது; தன்றது.
4. ராமென்றார் சிலர். (30)

584. என்னையே யிராவணன் றங்கை யென்றபின்
அன்னையே யென்றடி வணங்க லன்றியே
உன்னவே யொண்ணுமோ வொருவ ராலிவள்
தன்னையே யரிந்தன டானென் றார்சிலர்.

சிலர் - மற்றும் சில அரக்கர்கள், ‘ என்னையே - இஃது என்ன ஆச்சரியம்! இராவணன் தங்கை என்ற பின் - இராவணனுடைய தங்கை என்றறிந்தபின், ‘அன்னையே என்று - என் தாயே!’ என்று, அடி வணங்கல் இன்றி - அவளுடைய அடிகளில் விழ்ந்து வணங்கிக் கீழ்ப்படிதல் அல்லாமல், ஒருவரால் உன்னவே ஒண்ணுமோ - ஒருவராலும் இவ்வாறு இவளுக்குத் தீங்கு செய்வதென்பதை நினைக்கவும் முடியுமோ? (முடியாது என்றபடி); ஆதலால், தன்னையே தான் அரிந்தனள் என்றார் - சூர்ப்பணகை தன்னைத்தானே மூக்கரிந்து கொண்டாள்’ என்றனர்.

பி - ம். 2. வணக்க லின்றியே.
3. உன்னவே வொன்றுமோ; வொருவ ராலினி.
4. யரிந்தனர் தானென்றார் சிலர்; யரிந்தனன் றானென்றார் சிலர்; யரிந்ததா ரென்றார் சிலர். (31)

585. சொற்பிறந் தார்க்கிது துணிய வொண்ணுமே
இற்பிறந் தார்தமக் கியைவ செய்திலள்
கற்பிறந் தாளெனக் கரன்கொ லாமிவள்
பொற்பறை யாக்கினன் போலென் றூர்சிலர்.

சிலர் - மற்றும் சில அரக்கர்கள், 'சொல் பிறந்தார்க்கு - கீர்த்தியுடன் பிறந்த நற்குலத்தோர்க்கு, இது துணிய ஒண்ணுமோ - இவ்வாறு ஒரு மகளுக்கு ஊறு செய்தல் கூடியதாகுமோ? (ஆகாது என்றபடி; (ஆதலின்), இல் பிறந்தார்க்கு இயைவ செய்திலள் - நற்குடியிற் பிறந்த குலமகளுக்கு ஏற்ற காரியம் இவள் செய்யாதவளாய், கற்பு இறந்தாள் என - தன் கற்பு நிலை கடந்தவளானுள் என்று கருதி, இவள் பொற்பு அறை ஆக்கினன், - இவளை அழகிழந்தவளாக அங்கசேதனம் செய்தவன், கரன் கொல் ஆம் - கரனே ஆவான் போலும்' என்றூர் - என்று கூறினர்.

'சொற்பிறந்தார் - தோன்றப்பட்டார்' என்பது பழையவுரை. முற்கூறப்பட்டவர் என்றும் பொருள்கூறுவர். பிறர் இவர்களுக்கு இத் தீங்கு செய்ய முடியாதாதலின், கரனே செய்திருப்பான் என்பது சிலர் கருத்து. ஜனஸ்தானத்தில், கரனுடைய பாது காவலில் இராவணனுல் இவள் இருத்தப் பெற்றவளாதலின், அக்கரனே இவளுடைய நடத்தைக் குறைவைக் கண்டு இத் தண்டனை விதித்தான் என்று அவர்கள் கருதுவாராயினர். பொற்பறை; காதறை, மூக்கறை போல்வது. பொற்பறை - அழகைப் போக்குதல். இற்பிறத்தல் - நற்குடிப் பிறத்தல்; சுந்தர. 623; 1273.

பி-ம். 1. வொண்ணுமோ; சொற் பிறந்தார்க்கிது துணியத் தோன்றுமோ.
2. யிசைவ செய்திலள்.
4. பொற்பிறந்தாக்கினள் புகன்றென்றூர் சிலர்; பொற்பிறந்தாளென; போன்றென்றூர் சிலர். (32)

586. தத்துறு சிந்தையர் தளருந் தேவரிப்
பித்துற வல்லரே பிழைப்பில் சூழ்ச்சியார்
முத்திறத் துலகையு முடிக்க வெண்ணுவார்
இத்திறம் புணர்த்தன ரென்கின் றூர்சிலர்.

(இராவணனுக்கு அஞ்சி), 'தத்து உறு சிந்தையர் - நிலைதவறித் தடுமாற்றங் கொள்ளும் மனமுடையவராய், தளரும் - தளர்ச்சியடைந்துள்ள, தேவர் - தேவர்கள், இ பித்து உற வல்லரே - இந்தப்

பயித்தியச் செயலைச் செய்ய வல்லவராவரோ? (ஆகார் என்றபடி); (ஆதலின்) பிழைப்பு இல் சூழ்ச்சியார் - தவருத தந்திரத்தில் வல்லவராய், மு திறத்து உலகையும் முடிக்க எண்ணுவார் - மூவகைப்பட்ட உலகங்களையும் நாசமாக்கக் கருதிய எவரோ, இ திறம் புணர்த்தனர் - இவ்விதம் செய்தவராக வேண்டும்;' என்ருர் சிலர் - என்று இராக்கதரிற் சிலர் கூறினர்.

'தேவர்களில் யாவரும் இச்செயல் புரிய வல்லரல்லர்; ஆதலின் இச்செயல் புரிந்தவர், மூவுலகையும் முடிக்கக் கருதி, தாம் கொண்ட காரியம் தவருது முடிப்பவருமான வேறு யாரோ செய்ததாகும்' என்றனர் ஒரு சிலர் என்பதாம்.

பி - ம். 1. தத்துவரு சிந்தையர்; சிந்தையாற் றளருஞ்; தத்துறுஞ்.
2. வல்லரோ. 3. முடிக்க முன்னுவார்.
4. புணர்ந்தனர்; புரிந்தனர்; புணர்த்தவர். (33)

587. இனியொரு கற்பமுண் டென்னி னன்றியே
வனைகழல் வயங்குவாள் வீரர் வல்லரோ
பனிவரு கானிடைப் பழிப்பி னேன்புடை
முனிவரர் வெகுளியின் முடிவென் ருர்சிலர்.

சிலர் - மேலும் சில அரக்கர்கள், 'இனி ஒரு கற்பம் உண்டு என்னில் அன்றியே - இனி வேறு ஒரு கற்பத்தில் இது நிகழலாமென்பது அல்லாமல், வனை கழல் வயங்கு வாள் வீரர் - வீரக் கழல் புனைந்து விளங்கும் வாளேந்திய வீரர்களாய் (இந்தக் கற்பத்தில்) உள்ளவர், வல்லரோ - இச் செயல் புரிய வல்லவராவரோ? (ஆகார் என்றபடி; ஆதலின்), பனி வரு கான் இடை - குளிர்ச்சி பொருந்திய காட்டினிடத்து, பழிப்பு இல் நோன்பு உடை - நிந்தனைக் கிடமில்லாத தவ விரத நியமங்களையுடைய, முனிவரர் - சிறந்தோரான முனிவர்களுடைய, வெகுளியின் முடிவு - கோபத்தின் பயனுல் இது விளைந்ததே ஆகும்;' என்ருர் - என்று கூறினர்.

இராவணனின் ஆட்சி நடக்கும் இக்கற்பத்தில், இச்செயலைச் செய்யும் ஆண்மை கொண்ட வீரர் இல்லை; ஆகவே, இது நடந்ததற்கு முனிவரர் வெகுளியே காரணமாகலாம் என்று கூறினர் என்க. முனிவரர் வெகுளி காலத்தையும் வெல்லத் தக்கதாகலின். கற்பம் - ஒரு பிரமன் ஆயுட் காலம். பனி வரு கான் - நடுக்கம் வரத்தக்க கொடிய கானமும் ஆம். முனிவரர் - சிறப்புடைய முனிவர்கள்; வரர் - மேன்மை அல்லது சிறப்புடையவர். வெகுளியின் முடிவு; 'குண

மென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்தலரிது' ; 'எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார், பெரியார்ப் பிழைத் தொழுகுவார்' (குறள். 29, 896) ஆதலின். 581-ஆம் செய்யுள் முதல், இது முடியச் சூர்ப்பணகையைக் கண்ட அரக்க ஆடவர், 'இது செய்தவர் யாரா யிருக்கலாம்?' என்று ஆராய்ந்தமையைத் தெரிவித்த தாகும். இனி அரக்கியர் செயல்கள் கூறப்பெறும்.

பி-ம். 1. டென்னுமன்றியே ; டென்னிலின்றியே.
2. வழங்குவார் வீரர் ; வயங்குதாள் வீரர் ; வணங்குவாள் வீரர் ; வணங்குவார் வீரர்.
3. பழிப்பில நோன்புடை ; நோன்பினர் ; நோன்புசெய் ; பழிப்பி னோன்புகள் ; னோன்படை.
4. முனிவர்தம் வெகுளியின் ; முடிபென்றார் சிலர். (34)

588. கரையறு திருநகர்க் கருங்க ணங்கைமார்
நிரைவளைத் தளிர்க்கர நெரித்து நோக்கினர்
பிரையுறு பாலென நிலையிற் பின்றிய
உரையின ரொருவர்மு னொருவர் முந்தினர்.

கரை அறு திரு நகர் - எல்லையற்ற செல்வத்தையுடைய அழகிய அந்த இலங்கை நகரில் உள்ள, கரும் கண் நங்கைமார் - கரியகண் களையுடைய அரக்கியராகிய மகளிர், நிரை வளை தளிர் கரம் - வரிசை யாக விளங்கும் வளையல்களை அணிந்த தம் தளிர்போன்ற கைகளை, நெரித்து - அழுத்தி நெருக்கிக்கொண்டு, நோக்கினர் - (அச்சத் தோடு) பார்த்தவர்களாய், பிரை உறு பால் என - பிரை ஊற்றப் பெற்ற பால்போல, நிலையில் பின்றிய - தம் நிலையில் மாறிய, உரையினர் - சொற்களை அல்லது பேச்சுக்களை யுடையவர்களாய், ஒருவர் முன் ஒருவர் முந்தினர் - ஒருவருக்கு முன் ஒருவராக ஓடி வருவராயினர்.

பிரையுறுபால் - பிரையூற்றப் பெற்ற பால் திரிந்து நிலை கெடும் ; ஆதலின் ; பிரையுறுபால் ; பால. மிதிலைக்காட்சிப். 41. சுந்தர. 191; புறநா. 276; 5-6; இங்கு, நங்கைமார் நிலை தளர்ந்தமைக்கு உவமையாயிற்று. பின்றிய உரையினர், அச்சத்தால் பேச முடி யாது பின்வாங்கி வெளிவராத வர்த்தைகளையுடையவர் எனலும் பொருந்தும். 'பின்றிய உரையினர்-வேறுபட்ட சொல்லினர்' என்பது பழையவுரை. இனி, கருங்கணங்கைமார், தளிர்க்கரம் என்ற குறிப்புக்க ளால், அந்நகரில் இராவணன் ஆணையில் வாழ்ந்து வந்த, வடிவழகிற்

சிறந்த தேவமகளிர் முதலான பிறமகளிர் எனக் கொள்ளலும் ஒன்றும். முந்தினர், என்பதற்கு பேசமுற்பட்டனர் என்றும் கூறலாம்.

பி - ம். 1. கருங்கண்மங்கையர்.

2. தளிர்க்கைக ணெரித்து; நிரைவளைத் தளிர்களை நெரித்து நொந்தனர்.

3. நிரையிற்பின்றிய; நிலையிற்பின்னிய.

4. உரையிலரொருயர்; உரையினரொருவரி னொருவர்; னொருவர் முந்தினர்; ஒருவர்மு னொருவரே. (35)

589. முழவினில் வீணையின் முரனல் யாழினில்
தழுவிய குழலினிற் சங்கிற் றாரையில்
எழுகுர லன்றியே யென்று மில்லதோர்
அழுகுரல் பிறந்ததவ் விலங்கைக் கன்றரோ.

முழவினில் - மத்தளத்தினின்றும், வீணையில் - வீணையினின்றும், முரல் நல் யாழினில் - ஒலிக்கின்ற நல்ல யாழினின்றும், தழுவிய குழலில் - இசையைத் தழுவிய புல்லங்குழலினின்றும், சங்கில் - சங்க வாத்தியத்தினின்றும், தாரையில் - ஒழுங்காகத் தொடர்ந்து வரும் வீழ்ச்சிபோல், (இயற்கையாய்), எழு குரல் அன்றியே - எழுந்து ஒலிக்கும் மங்கல ஒலி அல்லாமல், அன்று - அன்றைக்கு, அ இலங்கைக்கு - அந்த இலங்கை நகரினிடம், என்றும் இல்லது ஓர் - என்றுமே இல்லாத ஒரு, அழுகுரல் பிறந்தது - அழுகை ஒலி உண்டாயிற்று. அரோ : அசை.

வீணையில், யாழினில், என வீணையையும், யாழையும் வேறு படுத்திக் கூறியிருப்பது இங்கு நோக்கத்தக்கது; இதனால் வீணை வேறு; யாழ் வேறு என்பது தெள்ளிதின் உணரத்தக்கதாம். குழல்- புல்லங்குழல் மட்டுமன்றி, இசைக்கருவிகளில் தொளைக் கருவி களான, எல்லாவற்றையும் குறிக்கும் என்னலாம். தாரையில், என்பதற்கு தாரை என்னும் ஒருவகை ஒலி எழுப்பும் இசைக் கருவி என்றுரும் உளர். எழுகுரல்; எழுவகைக்குரல் அதாவது, குரல் துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன என்ன லும் ஆம். இவ்வாறு ஓர் அழுகுரல் இலங்கையில் அதுவரை கேட் டறியார்; ஆதலின், அது அந்நகர்க்கு ஒருபுதுமையான நிகழ்ச்சியாகி, அன்னோர் மனத்தைப் பேதித்தது என்னலாம். பின் சுந்தரகாண்

டத்தில் அநுமன் வாயிலாக 'அளிக்கும் தேறலுண் டாடினர் பாடினராகிக் களிக்கின் ருரலாற் கவல்கின்ரு ரொருவரைக் காணேம்' (125) என்று கூறத்தக்க பெருமை வாய்ந்த நகர், இன்று இந்நிலையை அடைந்தது என்க.

பி - ம். 1. முரளி யாழினில்; மூரியாழினில். 3. குரலின்றியே. 4. அழுகுரல் பரந்ததால். (36)

590. கள்ளுடை வள்ளமுங் களித்து வெம்பிய
உள்ளமு மொருவழிக் கிடக்க வோடினர்
வெள்ளமு நாணுற விரிந்த கண்ணினர்
தள்ளுறு மருங்கினர் தழீஇக்கொண் டேகினர்.

வெள்ளமும் நாண் உற - பெரிய பிரவாகமும் வெட்கமடையும் படியாக, விரிந்த கண்ணினர் - கண்ணீர் விரிந்து பெருகிய கண்களை யுடைய மகளிர்கள், கள் உடை வள்ளமும் - கள்ளைத் தன்னிடம் கொண்ட கிண்ணமும், களித்து வெம்பிய உள்ளமும் - கட்குடித்து அதனுல் வெப்பமுற்ற மனமும், ஒரு வழி கிடக்க - ஒரு புறத்தே இருக்கவிட்டு, (அவற்றை நாடாமல்), ஓடினர் - ஓடினவர்கள், தள்ளுறு மருங்கினர் - தள்ளாடி விழும் இடையையுடையவர் களாய், தழீஇ கொண்டு-ஒருவரை ஒருவர் தழுவிப் பற்றிக்கொண்டு, ஏகினர் - (சூர்ப்பணகையின் அருகு) தொடர்ந்து சென்றனர்.

பருக நினைத்தவர்கள் தம் கள் கிண்ணங்களை ஒரு புறம் கிடக்க விடுத்தும், கள்ளைப் பருகினோர் மதர்த்து இருக்கும் நிலையை மாற்றிக் கொண்டும், சூர்ப்பணகையின் அருகில் சென்றனர் என்பதாம். தழீஇ: சொல்லிசை யளபெடை.

பி - ம். 1. களிக்குந் தும்பியும்; களித்ததும்பியும் ; கள்ளுடை வெள்ளமும்.
2. ஒரு வழிகிடக்க ; கிடக்க வாடினர்.
3. மிளிர்த்த கண்ணினர் ; விரிந்த கண்ணினர்.
4, தள்ளுறு தாளினர் தழீஇக் கொண்டேங்கினர். (37)

591. நாந்தக வுழவர்மே ஞடுந் தண்டத்தார்
காந்தின மனத்தினர் புலவி கைம்மிகச்
சேந்தக ணதிகமுஞ் சிவந்து நீருக
வேந்தனுக் கிளையவ டாளின் வீழ்ந்தனர்.

நாந்தக உழவர்மேல் - வாட்போரில் வல்ல தம் கணவர்மீது, நாடும் தண்டத்தார் - தண்டனை விதிப்பதை நாடி நின்ற அரக்கர்

மகளிர், காந்தின மனத்தினர் - தாம் கொண்ட கோபத்தால் வெதும்பிய மனத்தினராய், புலவி கை மிக - ஊடலாகிய பிணக்கம் அதிகப்பட, சேந்த கண் அதிகமும் சிவந்து - முன் ஊடலில் உண்டான கோபத்தால் சிவந்த தம் கண்கள் இப்பொழுது சூர்ப்பணகை நிலைகண்டு அஞ்சி மேலும் அதிகமாகச் சிவந்து, நீர் உக - நீரைச் சிந்த, வேந்தனுக்கு இளையவள் - தம் அரசனை இராவணனுக்குத் தங்கையான சூர்ப்பணகையின், தாளில் வீழ்ந்தனர் – பாதங்களில் வீழ்ந்து வருந்தினர்.

நாந்தக உழவர் என்றது, அரக்கர்களின் இயற்கையை விளக்க. தம் கணவர்பால் கொண்ட புலவி காரணமாக எழுந்த சினத்தால் சிவந்த கண்களையுடைய அரக்கர் மகளிர், இப்பொழுது சூர்ப்பணகைக்கு உண்டான கேட்டைக் கண்டு அஞ்சி, அதனல் தாம் கொண்ட ஊடலை விடுத்து, மேலும் தம் கண்கள் சிவந்து, நீரைச் சிந்தினவர்களாய் அச்சூர்ப்பணகையின் பாதங்களில் வந்து விழ்ந்து வருந்தினர் என்க. இதனல், அன்னோர் தம் கணவர்பாற் கொண்ட வூடலை சூர்ப்பணகைக் குண்டான துன்பத்தைக் கண்ட அச்சம் தடை செய்து மாற்றிவிட்ட தென்பதாம். தம் கணவர்பால் கொண்ட புலவியால் அன்னோரைத் தண்டிக்க விரும்பிய மகளிர், தாமே இங்கு வேறு தண்டனைக்குள்ளாகி வருந்தியது நோக்கத்தக்கது. நாந்தக வுழவர்; வில்லேருழவர்; சொல்லேருழவர் என்பன போன்றது. இச் செய்யுள் ‘சந்தேகம்’ என்பது, ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. நாந்தக வுழவரை நாட்டுந் தண்டத்தர்; வுழவர் மேனாட்டுந் தண்டத்தர்; நாடு தண்டத்தர்; நாடுந் தண்டத்தர்; வுழவனை நாட்டுந் தண்டத்தர்.
2. காந்திய சினத்தினர்; புலவிக்கை மிகச்.
3. சேந்த கண்டிருமுகந்; சேந்த கண்டீமுகஞ்; கண்டீமுதிர் சிவந்த நீருக; சேந்த கண்முகம் வழிசிந்தி நீருக.
4. கிளைய டாளில். (38)

592. பொற்றலை மரகதப் பூக நோவுறச்
சுற்றிய மணிவடந் தூங்கு மூசலின்
முற்றிய பாடலை முனிவுற் றேங்கினார்
சிற்றிடை யலமரத் தெருவு சேர்கின்றார்.

பொன் தலை - பொன்போன்ற நிறத்துடன் தலையில் விளங்கும் கனிகளையுடைய, மரகத பூகம் நோவு உற - மரகதம்போல் பசுமை

யாய் விளங்கும் கமுகமரம் வருந்துமாறு, சுற்றிய - சுற்றிக் கட்டப் பட்ட, மணி வடம் தூங்கும் ஊசலின் - இரத்தின வடங்களிலே தொங்குகின்ற ஊஞ்சலில் இருந்து, முற்றிய ஆடலை - உச்சநிலையில் ஆடிக்கொண்டிருந்ததை, முனிவு உற்று - (இச்சூர்ப்பணகைக்கு உண்டான துயரைக் கண்ணுற்றதால் (அஞ்சி) வெறுத்து, ஏங்கினர்- ஏக்கங்கொண்ட மகளிர், சிறு இடை அலமர - தம் நுட்பமான இடைகள் தள்ளாடி வருந்த, தெருவு சேர்கின்றார் - சூர்ப்பணகை செல்லும் தெருவில் வந்தடைவாராயினர்.

பொன் தலை மரகத பூகம்-செம்பொன்னிறமாகப் பழுத்து விளங்கும் மரகத நிறமான பாக்குமரம்; பாக்குப் பழங்களின் நிறம், செம்பொன்னுக்கும், அம்மரத்தின் நிறம், மரகதங்களுக்கும். பூக வூசல்; பால. உலாவியற் ; 37 ; மரகதப்பூகம் ; பால. மிதிலைக் காட்சிப் : 10. பூகம் நேர்வுற என்னும் பாடங்கொண்டு, ஆடுவதால் வளைவுறு நிலையினின்று விடுபட்டு நேரே நிற்க எனப்பொருள் கூறலும் ஒன்றும்.

பி - ம். 1. நேர்வுற ; பூகமீதினில்.
2. தூங்க வூசலின்; தூங்க லூசலின்; தூங்கவூசலின்.
3. முற்றிய பாடலின் ; முற்றிய பாடலை ; முனிவுற்றேகினார்.
4. அலம்வர; தெருவிற் ; சேர்கின்றாள். (39)

593. எழுவென மலையென வெழுந்த தோள்களைத்
தழுவிய வளைத்தளிர் நெகிழத் தாமரை
முழுமுகத் திருகயன் முத்தி னாலிகள்
பொழிதரச் சிலருளம் பொருமி விம்முவார்.

சிலர் - மற்றும் சில அரக்கர் மகளிர், எழு என - தூண் போலவும், மலை என - மலைகள் போலவும், எழுந்த - மேனோக்கி உயர்ந்து விளங்கிய, தோள்களை - தம் கணவர்களுடைய தோள்களை, தழுவிய தழுவிக்கொண்டிருந்த, வளை தளிர் நெகிழ - வளையல்கள் அணிந்த தளிர்போன்ற கைகள் தளர்வுற, தாமரை முழு முகத்து - பூர்ணமாக மலர்ந்து நிறைந்த தாமரை மலர்போன்ற தம் முகங்களில் உள்ள, இரு கயல்-இரு கயல் மீன்கள்போல் மிளிர்ந்து விளங்கும் கண்களில், முத்தின் ஆலிகள் - முத்துக்கள்போன்ற கண்ணீர்த் துளிகள், பொழிதர - சிந்த, உளம் பொருமி விம்முவார் - மனம் வருந்தி விம்முவாராயினர்.

கணவர் தோள்களைத் தழுவி நின்ற நிலையில் மகிழ்ந்திருந்த சில மகளிர், சூர்ப்பணகையின் துயர் நிலை கண்டு, தம் கணவர்களைத் தழுவிய கைகளை விடுத்து வந்து, கண்ணீர் உகுத்து வருந்தினர்.

இதில் காதலின்பத்தைச் சோகமும் அச்சமும் வென்ற செய்தி கூறப்பெற்றது என்க. வளைத்தளிர், முகத்திருகயல் என்பன, தளிர்போன்ற கைகளையும், முகத்தில் உள்ள கயல் மீன்கள் போன்ற கண்களையும் குறித்து உவமை ஆகுபெயர்களாய் வந்தன. இவற்றைப் பிற குறிப்பு எனலும் ஒன்றும். செய்யுள் 590 முதல், வீதியிலும் தம் இல்லங்களிலும் நிகழ்ந்த செயல்கள் கூறப்பெற்றமையால், சூர்ப்பணகை நகரினுள்ளே நெடுந்தூரம் வந்த செய்தி அறிவித்ததாகும்.

பி ம். 2. தழுவிய கைத்தளிர்; தழுவியவளைச் கரநெகிழ்த்துத் தாமரை.
3, திருக்கயன்.
4. பொலிதர; சிலருளர்; சிலருளம்; சிலர் சிலர் பொருமி. (40)

வேறு

594. நெய்ந்நிலைய வேலரச னேருநரை யில்லான்
இந்நிலையு ணர்ந்தபொழு தெந்நிலைய னென்னு
மைந்நிலைநெ டுங்கண்மழை வானிலைய வாகப்
பொய்ந்நிலைம ருங்கினர் புலம்பினர் புரண்டார்.

நேருநரை இல்லான் - தன்னை எதிர்ப்பவர் என்றவரை இல்லாதவனை, நெய் நிலைய வேல் அரசன் - நெய் தடவப்பட்ட வேலையுடைய தம் அரசனான இராவணன், இ நிலை உணர்ந்த பொழுது - சூர்ப்பணகைக்கு ஏற்பட்ட இவ்விதத் துயர் நிலையை அறியும்பொழுது, எ நிலையன் என்னு - எந்த நிலைமையுடையனுவனோ' என்று, மை நிலை நெடும் கண் - மை தங்கப்பெற்ற நீண்ட கண்கள், மழை வான் நிலையது ஆக - மழை பொழியும் மேகத்தின் நிலையையுடையனவாக, பொய் நிலை மருங்கினர் - பொய்யான நிலைய இடைகளையுடைய அவ்வரக்கர் மகளிர், புரண்டார் புலம்பினர் - புரண்டு புலம்பி அழுதனர்.

நேருநர் - பகைவர்; அதாவது எதிர் வந்து போரிடுவோர்; நேர்தல் - எதிர்த்தல். நெய் நிலைய வேல்; வேலுக்கு நெய் தடவுதல்; பால. கடிமணப்: *102*; அயோத். வனம்புகு: *6*. பொய் நிலை மருங்கு, ஒப்பு: பொய்யோ வெனுமிடையாள்; (அயோத். கங்கைப். *1*.)

பி - ம். 1. நெய்கிலை; நேருணகை; அரசர்...........இல்லார்.
2. அந்நிலை.
3. நெடுங்கமட வானிலையவாகப்; நெடுங்கண்மட வாளிணையாகப்; வானிலையதாக; வானிலையவாக.
4. பொய்நிலை; பொன்னிலை; மயங்கிய; மருங்குலர்; பொய்ம்மலை மருங்குலர். (41)

595. மனந்தலை வருங்கனலி னின்சுவை மறந்தார்
கனந்தலை வருங்குழல் சரிந்துகலை சோர
நனந்தலைய கொங்கைக டதும்பிட நடந்தார்
அனந்தலிள மங்கைய ரழுங்கியயர் கின்றார்.

அனந்தல் இள மங்கையர் - தூங்கிக் கொண்டிருந்த சில இள மங்கையரான அரக்கியர், (சூர்ப்பணகைக்குண்டான துன்பத்தை யுணர்ந்து) மனம் தலை - தம்மனம் ஈடுபட்டு ஒன்றியதால், வரு - உண்டான, கனவு இன் சுவை மறந்தார்-கனவின் இனிய சுவையை மறந்தவர்களாய், கனம் தலைவரும் குழல் சரிந்து - மேகத்தின் சிறப்பினைக் கொண்ட தம் கூந்தல் அவிழ்ந்து, கலை சோர - தம் ஆடையும் சோர்ந்து நெகிழ, நனம் தலைய - இடம் அகன்றமையுடைய, கொங்கைகள் - தம் தனங்கள், ததும்பிட - குலுங்க, நடந்தார் - எழுந்து சூர்ப்பணகையைக் காண நடந்து வந்தவர்கள், அழுங்கி அயர்கின்றார் - மனம் வருந்தினரானார்.

கனவு இன் சுவை - கனவிற்கண்ட இன்பச்சுவை; அதாவது கனவில் தம் கணவரோடு மகிழ்ந்திருந்த சுவை. கூந்தல் சரிதல், கலை சோர்தல்; அனந்தலில் நிகழ்வன; புணர்ச்சியில் நிகழ்வனவும் ஆம். இங்குச் சூர்ப்பணகைக் குண்டான கேட்டை அறிந்து, அதனால் எழுந்த அச்சத்தால் விரைந்து ஓடி வந்தமையாலும் ஆம். அழுங்கி அயர்ந்தது, தாம் கண்ட இன்பக்கனவு இச்சூர்ப்பணகை வந்த நிலையால் தடைபட்டதே என்றும் ஆம்; இக்கருத்து, 'புலம்பு சேடியர்; கைம்மிசைப் போயினாள்' (பால. உலாவியற்: 21.) இல் விளங்க வைத்தமை நோக்கற்பாலது. அனந்தல் - மயக்கமும் ஆம்; "பழஞ் செருக்குற்ற நும் அனந்தர்நடை" (மலைபடு கடாம். 173.) 'அனந்தலாடேல்' (ஆத்திசூடி). 'நனந்தலைய - மார்பின் நடுத்தலத்திலுள்ள' என்பது பழையவுரை.

பி-ம். 1. வருங்கனவரின் சுவை; மனந்தலையருங் கனவினுந் துயர்மறந்தார்.
2. வருங்குழ லொசிந்து கலை; கடைசோர; நடைசோர; சரிந்து தரைசோர.
3. நனந் தலைகட் கொங்கை.
4. அனந்தரிள மங்கையர்; யழுங்கி யழுகின்றார்; யழுங்கி யெழுகின்றார்.

596\. அங்கையி னரன்கயிலை கொண்டதிற லையன்
தங்கைநிலை யிங்கிதுகொ லென்றுதளர் கின்றார்
கொங்கையிணை செங்கையின் மலைந்துகுலை கோதை
மங்கையர்க ணங்கையடி வந்துவிழு கின்றார்.

குலை கோதை மங்கையர்கள் - அவிழ்ந்தலைந்த கூந்தலையுடைய அவ்வரக்கர் மங்கையர்கள், 'அம் கையில் - தன் உள்ளங்கையிலே, அரன் கயிலை கொண்ட - சிவபெருமான் இருந்த கயிலை மலையைப் பிடுங்கி எடுத்துக்கொண்ட, திறல் ஐயன் - வலிமையுள்ள நம் அரசனை இராவணனுடைய, தங்கை நிலை இங்கு இது கொல் - தங்கையின் நிலை இப்பொழுது இவ்வாறாயிற்றுபோலும்!' என்று தளர்கின்றார் - என்று சோர்வுற்றவர்களாய், கொங்கை இணை - தம் இரு தனங்களையும், செம் கையில் மலைந்து - தமது சிவந்த கைகளால் அடித்துக்கொண்டு, நங்கை அடி வந்து விழுகின்றார் - சூர்ப்பணகையின் அடிகளில் வந்து வீழ்வாராயினர்.

கோதை - கூந்தல், (பிங்.); சுந்தர. *128.* கோதை - மாலையும் ஆம். இராவணன் கயிலையைத் தன் கையில் ஏந்தி எடுத்ததாகக் கூறுவது; தற்புகழ்ச்சிதோன்ற என்க. மகளிர் துயர் நிலையில் கொங்கைகளில் அடித்துக்கொள்வது; இது மார்படித்துக் கொள்ளுதல் எனப்படும். சூர்ப்பணகையை நங்கை என்றது, அவள் இராவணன் தங்கை யென்னும் உயரிய நிலை நோக்கி என்க. ஒரு சுவடியில் இச்செய்யுள் இல்லை.

பி - ம். 3. கொங்கையிணை.
4. ணங்கையெதிர்; மங்கையர் நங்கையடி. (43)

597\. இலங்கையில் விலங்குமிவை யெய்தலில வென்றும்
வலங்கையி லிலங்குமயின் மன்னனுள னென்னு
நலங்கையி லகன்றதுகொ னம்மினென நைந்தார்
கலங்கலில் கருங்கணிணை வாரிகலுழ் கின்றார்.

வலம் கையில் இலங்கும் அயில் - தன் வலக்கரத்தில் விளங்கும் வேலையுடைய, மன்னன் உளன் என்னு - நம் அரசனை இராவணன் இருக்கின்றான் என்று அச்சத்தால், என்றும் - எப்பொழுதும், இலங்கையில் - இந்த இலங்கை நகரில் உள்ள, விலங்கும் - மிருகங்கள்கூட இவை எய்தல் இல - இத்தகைய துன்பங்களை அடைவனவல்ல; (அவ்வாறாக இப்பொழுது), நம்மின் - நம்மினின்று, நலம் கையில் அகன்றது கொல் என - நன்மை என்பது நீங்கியது

போலும் என்று, நைந்தார் - மனம் தளர்ந்தவர்களாய், கலங்கலில் - அதனால் உண்டான கலக்கத்தினால், கரும் கண் இணை - (அரக்கியர்) கரிய தம் இரு கண்களினின்றும், வாரி - நீரை, கலுழ்கின்றார் - சிந்தி வருந்துவாராயினர்.

என்றைக்கும் கையில் வலம் இலங்கு அயில் என இயைத்தும் பொருள் கொள்ளலாம்; இனி இவ் வேல் இராவணனுக்கு மயன் என்பான், தன் மகள் மண்டோதரியை மணம் செய்வித்தபோது அளித்தது என்றும், இது பிரமதேவரால் சிருஷ்டிக்கப்பட்டது என்றும், இவ்வேலையே இராவணன் போரில் வீடணன் மேல் தூண்ட, அதனை இலக்குவன் முன்வந்து தன் மார்பிற் றாங்கி யுணர்வற்று வீழ்ந்தான் என்றும் (உயுத்த. வேலேற்ற. 26.) அறியப்பெறும் செய்தியையும் இங்கு இயைத்து நோக்குமிடத்து, இராவணன் கையில் இருந்த வேலின் சிறப்பு விளங்குவது காணலாம். வாரி - நீர்; வடசொல். 'விலங்குமிவை யெய்தலில : ' உலகத்தில் ஆடுமாடுகள் வளரும்படி, செவிக்குறைப்படுத்தல் உண்டு; நம்முடைய இலங்கையில் ஆடுமாடுகளுக்கு மிவையில்லை; அப்படியிருக்க இவளுக்கு இந்தக் குறை வந்ததென்று பொருள். நலங்கையி லகன்றது - இந்தச் செல்வம் நம் கையை விட்டுப் போயிற்று. கலங்கயில் - சத்துருவைக் கலக்கும் வேல்; அலங்கணிணை - அலங்குங் கண்ணிணை; அலங்கல் - பிரகாசித்தல்; குலையலங் காந்தள்' என்பன பழையவுரை. இச் செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. இலங்கையில் விலங்கிரவி.

2. மன்ன னுளனென்னும்; னுளனென்ன; னுளனென்னின்.

3. அகன்றது கொன்னரிதென; நலங்கையின் கண்டது கொல்.

4. னிலங்கணிணை; கலங்கயினலங்; நலங்கணிணை. (44)

சூர்ப்பணகை இராவணனை அடைதலும், அவளைக் கண்டு அவன் வெகுளலும் 598—601.

598. என்றினைய வன்றுய ரிலங்கைநக ரெய்த
நின்றவ ரிருந்தவரொ டோடுநெறி தேடக்
குன்றினடி வந்துபடி கொண்டலென மன்னன்
பொன்றிணி பொலன்கழல் விழுந்தனள் புரண்டாள்.

என்று இனைய - என இத்தன்மையாக, இலங்கை நகர் வன் துயர் எய்த - இலங்கை நகரில் உள்ளார் கொடும் துயரை யடையவும், நின்றவர் இருந்தவர் ஒடு - இராவணன் சபையில் நின்றவர்கள் அங்கு

உட்கார்ந்து இருந்த மற்றவர்களோடு, ஓடு நெறி தேட - (அச்சத்தால் அவ்விடம் விட்டு) ஓடும் வழியைத் தேடும்படியாகவும், குன்றின் அடி வந்து படி - மலையின் அடிவாரத்தில் வந்து படியும், கொண்டல் என - நீருண்ட மேகம்போல, மன்னன் - இராக்கர்தம் அரசனான இராவணனுடைய, பொன் திணி - பொன் மிகுந்த, பொலன் கழல் - அழகிய வீரக்கழல் அணிந்த பாதங்களில், விழுந்தனள் புரண்டாள் - (சூர்ப்பணகை) விழுந்து புரண்டழுதாள்.

இலங்கை நகர்; இடவாகு பெயரால் அங்கிருந்த அரக்கர்களைக் குறிப்பது. குன்று - உருவின் பெருமையாலும், நிறத்தாலும், பல சிகரங்கள் உடைமையாலும் இராவணனுக்கும், கொண்டல் நீருண்டு கருமையாய் இருப்பதாலும், குமுறுவதுபோன்ற அழுகுரலாலும் சூர்ப்பணகைக்கும் ஒப்பு.

பி - ம். 1. ரிலங்கை நகரெய்தி.
2. ரிருந்தவர்களோடு.
3. குன்றினிடை; வந்துபடர்.
4. பொன்றணி தருங்கழல்; கருங்கழல். (45)

599. மூடிய திருட்படல மூவுலகு முற்றச்
சேடனும் வெருக்கொடு சிரத்தொகை நெளித்தான்
ஆடின குலக்கிரி யருக்கனு மயிர்த்தான்
ஓடின திசைக்கரிக ளும்பரு மொளித்தார்.

(அப்பொழுது), மூ உலகும் முற்ற - மூன்று உலகங்கள் முழுவதும், இருள் படலம் மூடியது - இருளின் பரப்பு மூடிக்கொண்டது; சேடனும் - உலகங்களைத் தாங்கும் ஆதிசேடனும், வெருகொடு - அஞ்சி, சிரம் குவை நெளித்தான் - தன் ஆயிரம் தலைத் தொகுதிகளையும் (சுமை தாங்கமாட்டாது) நெளித்து அசைத்தான்; குல கிரி ஆடின - ஏழு குல பருவதங்களும் அசைந்து ஆடின; அருக்கனும் அயிர்த்தான் - சூரியனும் (தனக்கு என்ன ஆபத்துண்டாகுமோ என்று) சந்தேகித்து வருந்தினான்; திசை கரிகள் ஓடின - திக்குக்களில் உள்ள யானைகள் தம் இடம் விட்டு ஓடின; உம்பரும் ஒளித்தார் தேவர்களும் போய் மறைந்து கொண்டனர்.

குலக்கிரிகள்; கயிலை, இமயம், மந்தரம், விந்தியம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம் என்பன. குலக்கிரி - மேருவும் ஆம்.

சேடன் உலகங்கள் அழியும் ஊழி முடிவிலும் அழியாது மிகுந்து இருப்பவன் என்னும் பொருளது. குலக்கிரிகள் ஆடினமை, இராவணன் தம்மையும் பெயர்த்தெறிவானோ என்றும், திசைக்கரிகள் ஓடினது, இராவணன் மீண்டும் தம்மோடு பொர வருகின்றானோ என்றும் ஆம்.

பி - ம். 1. மூடிய திருட்படலே ; மூடின விருட்படலம் ; முவுலகு முட்கச்.

2. சிரத்தொகை வளைத்தான் : யலைத்தான்.

3. ஆடிய குலக்கிரி ; யருக்கனும் வெயர்த்தான். (46)

600. விரிந்தவல யங்கண்மிடை தோள்படர மீதிட்
டெரிந்தநய னங்களெயிற் றின்புற மிமைப்ப
நெரிந்தபுரு வங்கணெடு நெற்றியினை முற்றத்
திரிந்தபுவ னங்கள்வினை தேவரு மயிர்த்தார்.

விரிந்த வலயங்கள் மிடை - விரிவான வளையங்கள் நெருங்கிய, தோள் படர - தன் இருபது புயங்களும் பூரிக்கவும், மீது இட்டு எரிந்த நயனங்கள் - மேலோங்கி நெருப்புச் சுடர் போல் விளங்கிய கண்கள், எயிற்றின் புறம் இமைப்ப-பற்களின் புறத்தே ஒளி வீசவும், நெரிந்த புருவங்கள் - கோபத்தால் சுருங்கி நெருங்கிய புருவங்கள் நெடு நெற்றியினை முற்ற - நீண்ட நெற்றியைப் போய்ப்பற்றித் தங்கவும், புவனங்கள் திரிந்த - உலகங்கள் நிலைமாறிச் சுழன்றன; வினை - அவ்விபரீதச் செயல்களைக் கண்டு, தேவரும் அயிர்த்தார் - இனியாதாகுமோ என்று தேவர்களும் திகைத்தனர்.

வினை அயிர்த்தார் - தாம் செய்யும் வினை இன்னதென்று அறியாது அயிர்த்தார் என்னலும் ஆம். இதில், கோபத்தால் இராவணனுக்குண்டான மெய்ப்பாடுகளும், அதனால் உலகங்களில் உண்டான சுழற்சிகளும், தேவர்கள் அடைந்த திகைப்பும் கூறப்பெற்றன. ஒப்பு : பால. கையடைப். 13.

பி - ம். 1. வலயங் கண் மிகு,

2. னெயிறின்புற; மெரிப்ப ; யெறிப்ப ; மிமைப்ப, மிறைப்ப.

3. புருவங்களிடை ; புருவங்கணெறி ; புருவங்கநெரி ; நெற்றியினை முற்றித்.

4. திரிந்த திசையெங்கு ; தேவருமயர்த்தார். (47)

601. தென்றிசை நமன்றனொடு தேவர்குல மெல்லாம்
இன்றிறுதி வந்தது நமக்கென விருந்த
நின்றுயிர் நடுங்கவுடல் விம்மநிலை யில்லா
தொன்றுமுரை யாடலில ரும்பரினொ டிம்பர்.

தென் திசை நமன் தன் ஒடு - தெற்குத் திசையின் காவலனான யமனோடு, தேவர் குலம் எல்லாம் - தேவர்களுடைய இனங்கள் யாவும், நமக்கு இன்று இறுதி வந்தது என - நமக்கு இன்று முடிவு அல்லது நாசம் வந்துள்ளது என்று, இருந்த - வருந்தி யிருந்தன ; உம்பர் ஒடு இம்பர் - (மேற்கண்ட) தேவர்களோடு இவ் வுலகத்து மானிடர்களும், உயிர் நடுங்க நின்று - தம் உயிர்கள் அச்சத்தால் நடுங்குமாறு நின்று, உடல் விம்ம - தம் உடல்கள் விம்மலுற, நிலை நில்லாது - ஒரு நிலையில் இராமல், ஒன்றும் உரை ஆடல் இலர் - ஒன்றும் பேசா திருந்தனர்.

தேவர்குலம் ; யக்ஷ, வித்தியாதர, ஸித்த, கந்தருவாதிய பதினெண் கணத்தவர். இறுதி வந்தது ; உறுதியின்பால் கூறிய கால வழு வமைதி.

பி - ம். 1. நமன்றனொடு தேவகுல கெல்லாம் ; தேவர்கணமெல்லாம்.
2. இன்றுறுதி ; நமக்கென விழுந்தார் ; நமக்கென முன்னேங்கி.
3. நின்றுயிர் நடுங்கவுடர் ; நின்றுடனடுங்கியுயிர் விம்மி நிலைநில்லா ; நிலையில்லார் ; நிலையிற்றூர் ; விம்மிநிலை.
4. நன்று முரையாடவிலர் ; யாடவிலது ; உம்பரொடு மிம்பர். (48)

இராவணன் வினவும் சூர்ப்பணகையின் விடையும் 602—10.

602. மடித்தபில வாய்கடொறும் வந்துபுகை முந்தத்
துடித்ததொடர் மீசைகள் சுறுக்கொள வுயிர்ப்பக்
கடித்தகதிர் வாளெயிறு மின்களுல மேகத்
திடித்தவுரு மொத்துரறி யாவர்செய லென்றான்.

மடித்த பில வாய்கள் தொறும் - (இராவணன்), கோபத்தால் மடித்த குகைகள் போன்ற தன் வாய்களில் எல்லாம், புகை வந்து முந்த - கோபத் தியின் புகைகள் வந்து முற்பட்டு விளங்க, துடித்த- கோபத்தால் துடித்த, தொடர் மீசைகள்-வரிசையாய்த் தொடர்ந்து விளங்கிய மீசைகள், சுறுக்கொள - தீக்கொண்டது போலக் கருகிப் போகும்படி, உயிர்ப்ப - பெருமூச்சுவிட, கடித்த கதிர் வாள் எயிறு- கோபத்தால் கடித்த ஒளி வீசும் வாள்போன்ற வக்ர தந்தங்கள்,

மின் கனல - மின்னல் போல விளங்க, மேகத்து இடித்த உரும் ஒத்து - மேகத்தினிடம் இடித்த இடிபோன்று, உரறி - பேரொலி எழுப்பி, 'யாவர் செயல் என்றான் - இது யாருடைய செய்கை?' என்று கேட்டான்.

வாய் மடித்தல், மீசைகள் துடித்தல், எயிறு கடித்தல், பெரு மூச்சுவிடுதல் முதலியன கோபத்தில் உண்டாகும் மெய்ப்பாடுகள். பில வாய் - மலைக்குகைகள் போன்று ஆழ்ந்து அகன்றுள்ள வாய்கள். மீசை; மிசை என்பது மீசையென நீண்டது; அதாவது மேல் உதட்டின் மீது உள்ள உரோமத்திற்கு ஆயிற்று எனக் கூறுவர்; சீவக 911. உரை. வாயிற் புகை வருதல்; கிட்கிந்தா. வாலி வதைப்: 13. சுறுக்கொள; சுந்தர. 1110. சுறுநாறல் - தீப்படுகின்ற தசை, மயிர் முதலியவற்றிலிருந்து உண்டாகும் கெட்ட நாற்றம்; தக்க 184. குறிப்புரை; ஒப்பு: ஆளுடைய பிள்ளை திருவந். 25; அரிச்சந்திர. மயான: 35.

பி-ம். 1. வந்து நகை மூந்த.
2. சுறுக்கொள வயிர்ப்பக்; சுறுக்கொள முறுக்கி.
3. கடித்த கடை வாயெயிறு; மின்கனல மேகத்; கடித்தெயிறு தின்றுகனல் சிந்துகருமேகத்.
4. மொத்துதறி. (49)

இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும் அதிகப்பாடல் காண் கின்றது.

என்றபொழு திற்கடி தெழுந்தலறி வாய்விட்
டன்றருகு நின்றபல தேவர்கண மஞ்சப்
புன்றொழி லரக்கர்மனத் திற்புகை யெழும்பக்
கன்றியம னத்தள்கழ றிற்றிடுவ தானாள்.

603. கானிடை யடைந்துபுவி காவல்புரி கின்றார்
மீனுடை நெடுங்கொடியி னானனையர் மேல்கீழ்
ஊனுடை யுடம்புடைமை யோருவமை யில்லா
மானிடர் தடிந்தனர்கள் வாளுருவி யென்றாள்.

(அது கேட்ட சூர்ப்பணகை), 'புவி காவல் புரிகின்றார் - பூமியைப் பாதுகாக்கின்றவர்களும், மீன் உடை நெடும் கொடியினான் அனையர் - மீனையுடைய நீண்ட கொடியைக் கொண்டவனாகிய மன்மதனை ஒப்ப வர்களும், மேல்கீழ் - மேலேயுள்ள உலகங்களிலும். கீழே யுள்ள

உலகங்களிலும், ஊன் உடை உடம்பு உடைமையோர் - நாம் தின்னும் தசையையுடைய உடலையுடையவர்களும், உவமை இல்லா மானிடர் - ஒப்புக் கூறுவதற்கில்லாதவர்களுமான, மனிதர்கள், கான் இடை அடைந்து - காட்டிலேவந்திருந்து, வாள் உருவி - தம் வாளை உருவி, தடிந்தனர்கள் - துண்டித்தனர்,' என்றாள் - என்று கூறினாள்.

புவி காவல் புரிகின்றார், என்றமையால் அவர்கள் அரச குலத்தவர் என்பது அறிவித்தது. கானிடை யடைந்து புவி காவல் புரிதல்; என்றும் புணர்த்திக் கூறலாம். தடிந்தனர்கள்; கள்; விகுதி மேல் விகுதி; 'என் மகளைச் செய்தனகள்' என்று திருமங்கை மன்னன் அருளியதையும் நோக்குக; (பெரிய திருமொழி. 5, 5 : 2.). சூர்ப்பணகை, மீனுடை நெடுங்கொடியினேனையர்' என்று தன் அண்ணனிடம் பகைவரைத் தெரிவிக்கும்போது கூறினது. அவள் மனத்திலே என்றும் விட்டு நீங்காமல் தங்கிய அவ்விராம லக்ஷ்மணர்களின் வடிவழகால் உண்டான மயக்கத்தால் என்க. இவ்வாறே, கரனிடம் அவள் கூறியபோதும் 'மன்மதன் மேனியர்' (365) என்றமை காண்க.

பி - ம். 1. கானிடை யடைத்தபுவி; காவல்புரி கின்றார்.
2. முதல் மேல்கீழ்; கீழ்மேல்.
3. குவமையில்லார்; யுடம்பினுடை யோருவமை யொவ்வா.
4. மானுடர். (50)

604. செய்தனர்கண் மானிட ரெனத்திசை யனைத்தும்
எய்தநகை வந்தெரி சிந்தினக ணெல்லாம்
நொய்தவர் வலித்தொழி னுவன்றமொழி யொன்ரு
பொய்தவிர் பயத்தையொழி புக்கபுக லென்றான்.

மானிடர் செய்தனர்கள் என - (இவ்வாறு) மனிதர்கள் செய்தனர் என்று சொல்ல, திசை அனைத்தும் எய்த நகை வந்தது - (இராவணனுக்கு) எல்லாத் திசைகளிலும் ஒலி சென்றடையும்படி சிரிப்பு உண்டாயிற்று; கண் எல்லாம் எரி சிந்தின - அவன் (இருபது) கண்களெல்லாம் நெருப்பைச் சிந்தின; (அங்ஙனமாக, அவன் சூர்ப்பணகையை நோக்கி), 'நொய்தவர் - அற்பமான மானிடர், வலி தொழில் - பராக்கிரமத் தொழிலை, நுவன்றமொழி - சொன்ன உன் வார்த்தைகள், ஒன்ரு - பொருந்தமாட்டா: பொய் தவிர் - பொய்யை விடு! பயத்தை ஒழி - உனக்குண்டான அச்சத்தைப் போக்கு! புக்க புகல் - நடந்த விஷயங்களைச் சொல்'! என்றான் - என்று கூறினான்.

செய்தவர்கள்; கள் விகுதிமேல் விகுதி; 603-இல் தடிந்தனர் கள் என்று வந்தது போல. அச்சந்தவிர்; புக்கபுகல்; ஒப்பு. 'நொம் மெனக் கொல்லா நெஞ்ச மஞ்சலை நுவறி' சுந்தர. 1131.

பி-ம். 1. மானுடரெனத்; மானிட ரெத்திசை.

3. மொழி யொன்றே; மொழியொன்று; மொழி யொன்றால்; பொருளன்றே.

4. பொய்தவர்; பெய்தவர்; உற்ற புகலென்றான்; உற்ற பரி சென்றான். (51)

இதன் பின், ஒரு சுவடியில், பின் வரும் அதிகப் பாடல் காண் கிறது.

என்பதை மனக்கொடிட ரேறிய கருத்தாள்
முனபவுன் முகத்தினெதிர் பொய்மொழிய கில்லேன்
நின்பதநின் ஞணையிது நீகருது வாயென்
றன்பினுரி யோர்கிலை யெடுத்துரைசெய் கிற்பாள்.

605. மன்மதனை யொப்பர்மணி மேனிவட மேருத்
தன்மத னழிப்பர்திர டோளின்வலி தன்னால்
என்னதனை யிப்பொழு திசைப்பதுல கேழின்
நன்மதம ழிப்பரொரி மைப்பினனி வில்லால்.

(அதற்குச் சூர்ப்பணகை, 'நான் சொன்ன அந்த மானிடர்), மணி மேனி - தம் சிறந்த மேனியினால், மன்மதனை ஒப்பர் - மன் மதனை ஒப்புக் கூறக் கூடியவர்; திரள் தோளின் வலி தன்னால் - திரண்ட தம் தோள் வலியினால், வட மேரு தன் மதன் அழிப்பர் - வடக்கேயுள்ள மேருமலையின் செருக்கை அழிக்கக் கூடியவர்கள்; வில்லால் - தம் வில் வலியினால், ஓர் இமைப்பில் - ஒரு கணநேரத்தில், உலகு எழின் நல் மதன் நனி ஒழிப்பர் - ஏழுலகின் வலியை முற்றும் அழிப்பார்கள்; என் அதனை இப்பொழுது இசைப்பது - அதை இப் பொழுது யான் எவ்வாறு எடுத்துக் கூறுவது? (என்னால் கூற முடியாது என்றபடி.)

மணி மேனி மன்மதன் என்றலும் ஒன்றும்; இமைப்பு - இமைக் கும் கால அளவு; தொழிலாகு பெயர். என்னதனை இப்பொழுது இசைப்பது என்றதால், நீ பின் நேரிற்கண்டால் தெரிந்து கொள்ள லாம் என்ற குறிப்பும் ஆம். வடிவில் சிறந்தார் மட்டும் அல்லர்;

வீரத்திலும் மேம்பட்டவர் என்று அன்னோர் சிறப்பை மேன் மேலும் சிறப்பித்துக் கூறியதாம் : மதன் : மதம் என்பதன் ஈற்றுப் போலி, இங்குச் சூர்ப்பணகை இராம லக்ஷ்மணர்களாகிய இருவரையும் ஒத்த நிலையில் வைத்துக் கூறுவது நோக்கத்தக்கது. இது, பின்வரும் பாடல்களுக்கும் ஒக்கும், மன்மதனை ஒப்பர் : 603. வடமேரு......வலி தன்னால். ஒப்பு : தக்க. 156. மானிடர் என்று அவன் இகழ்ந்தது தகாதெனெ, இவ்வாறு அவள் கூறினாள் என்க.

பி-ம். 2. தன்னெழிலழிப்பர் ; தன்னெழிலொப்பர் ; தம்மத மளிப்பர்,
3. தசைப்ப நிலகேழின் ; யிசைப்ப னுலகேழின்.
4. வின்மத மளிப்பதோ ரிமைப்பினனி வில்லார். (52)

606. வந்தனைமு னித்தலைவர் பாலுடையர் வானத்
திந்துவின்மு கத்தரெறி நீரிலெழு நாளக்
கந்தமல ரைப்பொருவு கண்ணர்கழல் கையர்
அந்தமிற வத்தொழில ராரவரை யொப்பார்.

(மற்றும் அன்னோர்), 'முனி தலைவர் பால் வந்தனை உடையர் - சிறந்த முனிவர்களிடத்து வணக்க வழிபாடுகள் உடையவர்கள் ; வானத்து இந்துவின் முகத்தர் - ஆகாயத்தில் விளங்கும் பூர்ண சந்திரன் போன்று அழகிய முகங்களையுடையவர்கள்; எறி-அலைகள் வீசி யெறியப் பெற்ற, நீரில் - நீரையுடைய (தடாகத்தில்), எழு - தோன்ற எழுகின்ற, நாள - தண்டினையுடைய, கந்த மலரை - மண முள்ள தாமரை மலரை, பொருவு - ஒத்து விளங்கும், கண்ணர் - கண் களையும், கழல் - பாதங்களையும், கையர் - கைகளையும் உடையவர்கள் ; அந்தம் இல் தவ தொழிலர் - முடிவற்ற பெருந்தவத்தைத் தம் தொழிலாகக் கொண்டவர்கள் ; ஆர் அவரை ஒப்பார் - அவர்களை ஒப்பவர்கள் யாரே உள்ளார்கள்? (ஒருவரும் இருக்க மாட்டார்கள் என்றபடி.)

நாளம் - உட்டொளையுடைய தண்டு. நாளக் கந்த மலர் என்றமை யால் தாமரை மலரைக் குறித்ததாகும். கண், கழல், கை இவை தாமரை மலருக்கு ஒப்பானவை ; 'வாய் கண் கை, யுந்தி பதம் கோகனம் பத்தினர் குன்று' (திருவேங்கடமாலை ; 8.) ; என்றமையும் நோக்குக.

பி-ம். 4. 'அந்த மில் வலத்தொழிலர் ;' தொழிலில். (53)

607. வற்கலையர் வார்கழலர் மார்பிலணி நூலர்
விற்கலையர் வேதமுறை நாவர்தனி மெய்யர்
உற்கலைய ருன்னையொர்து கட்டுணையு முன்னூர்
சொற்கலையெ னத்தொலைவி றூணிகள் சுமந்தார்.

(மேலும் அன்னோர்), 'வற்கலையர் - மரவுரியை ஆடையாக வுடையவர்கள்; வார் கழலர் - நீண்ட வீரக் கழலை யணிந்தவர்கள்; மார்பில் அணி நூலர் - மார்பிலே பூண்ட அழகிய முந் நூலை யுடையவர்கள்; வில் கலையர் - வில் வித்தையில் தேர்ந்தவர்கள்; வேதம் உறை நாவர் - வேத மந்திரங்கள் தங்கும் நாவினை யுடையவர்கள்; தனி மெய்யர் - ஒப்பற்ற ஸத்தியத்தை யுடையவர்கள்; உத் கலையர் - கலை யறிவுகளில் மேம்பட்டவர்கள்; சொல் கலை என - சொல்லின் கலை என்னும் இலக்கண சாஸ்திரம்போல, தொலைவு இல் - அழிவு இல்லாது வளர்ந்தோங்கும், தூணிகள் சுமந்தார் - அம்புப் புட்டில்களைத் தாங்கியிருப்பவர்கள்; உன்னை ஒர் துகள் துணையும் உன்னார் - உன்னை ஒரு தூசியளவாகக்கூட மதிக்கமாட்டாதவர்கள்.

வேதம் உறை நாவர் - சதா வேதங்களைப் பயிலுவதால் அவை தோயப் பெற்ற நாவினர்; வேத முறை நாவர் என்ற பாடமும் ஒன்றும். தனி மெய்யர் - பிறர் எவரும் அடையாத தனிப்பட்ட சிறப்பமைந்த எழிலுடைத் திருமேனியை யுடையவர் எனலும் அமையும். உத் கலையர் என்பது தமிழ் விதிப்படி, உற்கலையர் எனத் திரிந்தது; உற்பவம், உற்சாகம், என்பனபோல. முன், விற்கலையர் என்று தனித்துக் கூறியது, அக் கலையில் அடைந்துள்ள தேர்ச்சியின் தனிச் சிறப்பை விளக்க என்க. உற்கு - உனக்கு, அலையர் - அஞ்சி அலைய மாட்டார் என்றும் பொருள் கூறுவர்; அவ்வாறு கூறின் அடுத்த விளக்கம் பயனற்றுப்போவது காண்க. சொற்களும் அவற்றின் இலக்கணங்களும் அளவுகடந்து விரிந்துள்ளனபோல, அன்னோரின் அம்புப் புட்டில்களும் அழியாது நிறைந்து பெருகி விளங்குவன என்னற்பாலதாம். 'சொல்லொக்கும்........... சரம்' (பால. தாடகைவதைப்: 73.) சுடு என்றதுபோல; தொலைவில் தூணி - 'என்றுந் தேய்வுருத் தூணி' (பால. தாடகைவதைப்: 19.) இஃது அட்சய தூணி எனவும், அம்பருத் தூணி எனவும் வழங்கும்.

பி - ம். 1. மார்பினணி; மார்பினனி; மார்பின்மணி.
2. நாவர்நனி; நாவரெழின்.
3. துகட்டணையு; துகட்டினைய; உற்கலையு முன்னையோர். (54)

608. மாரருள ரேயிருவ ரோருயிரின் வாழ்வார்
வீரருள ரேயவரின் வில்லின்வலி வல்லார்
ஆரொருவ ரன்னவரை யொப்பவர்க ளையா
ஓரொருவ ரேமுதல்வர் மூவரையு மொப்பார்.

'ஐயா - ஐயனே! இருவர் மாரர் உளரே - இரு மன்மதர்கள் இருக்கிறார்களா? (இல்லை என்றபடி); ஓர் உயிரின் வாழ்வார் - அவர்கள் ஒரே உயிர்போல வாழ்பவர்களும், வில் அமரில் வல்லார் - விற்போரில் வல்லவர்களும் ஆன, அவரின் வீரர் உளரே - அவர்களைவிட மேலான வீரர் பிறர் உள்ளார்களோ? (இல்லை என்றபடி); அன்னவரை ஒப்பவர்கள் ஒருவர் ஆர் - அவர்களை ஒப்பான ஒருவர் வேறு யாரே உள்ளார்? (ஒருவரும் இல்லை என்றபடி); ஓர் ஒருவரே, - அவ்விருவரில் ஒவ்வொருவருமே, முதல்வர் மூவரையும் ஒப்பார் - முதற்றேவர்களான மும்மூர்த்திகளையும் தனித்தனியே ஒப்புடையவராவர்.

மாரன்: ஆடவரையும், மகளிரையும் காமநோயால் துன்புறுத்துபவன் என்னும் பொருளது.

பி - ம். 1. ரோருலகின்; ரோருருவின்.
2. ரேயவரின்; வில்லமரில் வல்லார்; வில்லதனின் வல்லார்; வில்லவரின்.
4. ரேயிறைவர்; ரேயிருவர். (55)

இச் செய்யுள் ஒரு சுவடியில் பின்வருமாறு மாறிக் காண்கிறது.

ஆரிருவ ராருயிரி னன்னமொடு வாழ்வார்
வீரருள ரேயவர்தம் வீரம்வர வல்லார்
ஓரொருவ ரன்னவரை யொப்பரவ ரின்னும்
ஓரொருவர் மூவகையின் மூர்த்திகளு மொப்பார்.

609. ஆறுமன மஞ்சின மரக்கரை யெனச்சென்
றேறுநெறி யந்தண ரியம்பவுல கெல்லாம்
வேறுமெனு நுங்கள்குலம் வேரொடு மடங்கக்
கோறுமென முந்தையொரு சூளுறவு கொண்டார்.

'ஏறு நெறி அந்தணர் - நாளும் மேலோங்குகின்ற நன்னெறியைக் கடைபிடித்த முனிவர்கள், சென்று - அம்மானிடரிடஞ் சென்று, 'அரக்கரை - அரக்கரைக் கண்டு, ஆறும் மனம் அஞ்சினம் - வெகுளி அடங்கிய எங்கள் மனத்தில் அச்சங் கொண்டோம்;' என இயம்ப - என்று கூடி முறையிட்டுக் கொள்ள, 'உலகு எல்லாம் வேறும்

எனும் - உலகமனைத்தையும் வென்று அழிப்போம்' என்று கூறும்; உங்கள் குலம் - உங்களது அரக்கர் குலத்தை, அடங்க - முழுவதும், வேர் ஒடும் கோறும் என - வேரோடு அழிப்போம் என்று, முந்தை முன், ஒரு சூளுறவு கொண்டார் - ஒரு சபதத்தை மேற்கொண்டுள்ளார்.

இராமபிரான் செய்த சூளுறவை அவனே சூர்ப்பணகையிடம் தெரிவித்தது; 353-5. அரக்கரை அஞ்சினோம்; மூன்றும் வேற்றுமைப் பொருளும் கொள்ளலாம். வேறும் என்றது அரக்கர் கூற்று; கோறும், என்றது இராமபிரான் கூறியது. சூளுறவு - சபதம்; இது, சூள் எனவும் வரும்; அயோத். பள்ளிபடை : 96. ஆறு மனம் : ஒப்பு. பரி. 3. 79. உரை. சில சுவடிகளில், முன் செய்யுளும் இதுவும் இடம் மாறியுள்ளன.

பி - ம். 1. ஆறுபுல னஞ்சின; மஞ்சிய வரக்கரை.
3. வேரொடு நடுங்க. (56)

610. தராவலய நேமியுழ வன்றயர தப்பேர்ப்
பராவரு நலத்தொருவன் மைந்தர்பழி யில்லார்
விராவரும் வனத்தவன் விளம்பவுறை கின்றூர்
இராமனு மிலக்குவனு மென்பர்பெய ரென்றூள்.

(மேலும் அன்னோர்), ' தரா வலயம் நேமி உழவன் - இப்பூமண்டலம் முழுவதும் தன் ஆக்ஞா சக்கரத்தைச் செலுத்தியவனுன, தயரத பேர் - தசரதன் என்னும் பெயரையுடைய, பராவரு நலத்து ஒருவன் - யாவரும் புகழ்ந்து பாராட்டுதலையுடையதான சிறப்பை யுடைய ஒப்பற்றவனது, மைந்தர் - குமாரர்கள்; பழி இல்லார் - நிந்தனைக்கு இடமில்லாதவர்; அவன் விளம்ப - அந்தத் தயரத சக்கரவர்த்தி சொல்ல, (அதனை மேற்கொண்டு), விராவு அரு வனத்து - பரந்து வாழ்வதற்கு அரிய கானகத்தில், உறைகின்றூர் - தங்கி வசித்து வருகின்றனர்; பெயர் - அவர்களுடைய பெயர்கள், இராமனும் இலக்குவனும் என்பர் - இராமன், இலக்குவன் என்று சொல்வார்கள்,' என்றூள் - என்று சூர்ப்பணகை கூறினுள்.

தயரதன் இராமனைக் கானேகுமாறு கூருவிடினும், கைகேயிக்கு அளித்த வாக்குறுதி நிறைவேறுவதை அவன் விருப்பமாகக் இராமபிரான் கொண்டதைக் குறிப்பிட்டபடி. 605-610 செய்யுள்கள் இராவணன், சூர்ப்பணகையை நோக்கி, 'யாவர் செயல்? (602) என்றும், 'புக்க புகல்' (604) என்றும் கூறினமைக்கு விடையாக அவள் கூறியவை. 'நுன்னை இத்தன்மை ஆக்கிப் போனவரார் கொல்' (364.)

என்ற கரன் வினவுக்கு அவள் கூறிய விடையையும் (365-8) இவற்றோடு ஒப்பு நோக்குக. வான்மீகி ராமாயணத்தில், கரனுடைய இவ்வினவுக்கு அவள் விடையாக அமைந்த 'தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ புண்டரீக விசாலாக்ஷௌ சீரக்ருஷ்ணஜி நாம்பரௌ' என்ற அவள் விடையையும், அதற்கு ஸ்ரீ பெரிய வாச்சான் பிள்ளை அவர்கள் அருளிய வியாக்யானத்தையும் இங்கு அறிவது பயனுடைத்தாகும். இம்மூன்றிடங்களிலும், இராம லக்ஷ்மணர்களை அவள் ஒருமித்தே வருணித்திருப்பதன் நயம் ஓர்க. அன்றியும், இராமாயணத்தில் இராமபிரானையும் இலக்குவனையும் பிறர் பிறிதொருவருக்குப் படர்க்கையில் அறிமுகப்படுத்தும் விசுவாமித்திரர் (பால. குலமுறைகிளத்து), அநுமன் (கிட்கிந்தா. மராமாப்) போன்ற இடங்களில் அவரவர்கள் தத்தம் நிலைகளினின்று கூறும் அப் பகுதிகளோடு, சூர்ப்பணகை தன்னலங்கருதிக் கூறும் இப்பகுதியை ஒப்பிட்டுப் பார்த்தலும் பயனுடைத்தாகும்.

இனி, பராவு அருநலத்து எனப் பிரித்தும் பொருள் கோடல் அமையும்.

பி - ம். 3. விராவருவனத் ; விராவனத்தனே.
4. மென்ப பெயரென்றாள். (57)

ஒரு சுவடியில் இதன்பின், பின்வரும் அதிகப் பாடல் காண்கிறது.

ஈதவர்க டங்கள்செய லென்றவ ளுரைப்பக்
கோதுறு மனத்தெரி பிறந்துகுறை நாளின்
மோதுவட வைக்கனன் முகந்துலக மெல்லாம்
காதுறு சினத்தனித னைக்கழறு கின்றான்.

இராவணன் தன்னை வெறுத்துக் கூறல் 611—4.

611. மருந்தனைய தங்கைமணி நாசிவடி வாளால்
அரிந்தவரு மானிட ரறிந்துமுயிர் வாழ்வார்
விருந்தனைய வாளொடும் விழித்திறையும் வெள்கா
திருந்தன னிராவணனு மின்னுயிர்கொ டின்னும்.

மருந்து அனைய தங்கை - தேவாமிர்தம்போல் கிடைத்தற்கரியதான தன் தங்கையாகிய சூர்ப்பணகையின், மணி நாசி - அழகிய மூக்கை, வடி வாளால் - கூரிய தம் வாளினால், அரிந்தவரும் மானிடர் - அறுத்தவர்களும் அற்ப மனிதர்களே யாம்! அறிந்தும் - இக் கொடும் செயலை அறிந்த பிறகும், உயிர் வாழ்வார் - அவர்கள் உயிருடன் வாழ்ந்து வருகின்றனர்களாம்! இராவணனும் -

இராவணன் என்ற பெயருடையோனும், விருந்து அனைய வாள் ஓடும் - புதிதான வாளோடும், விழித்து - தன் இருபது கண்களையும் கொட்டாது விழித்துப் பார்த்துக்கொண்டு, இறையும் வெள்காது - சிறிதும் வெட்கமுறாமல், இன் உயிர் கொடு - தன் இனிய உயிரை வைத்துக்கொண்டு, இருந்தனன் - இருக்கின்றான்போலும்!

இது முதல் 615 முடிய ஒரு தொடராகி, அதனிலுள்ள 'என்றான்' என்பதனோடு வினை முடிபு கொள்ளும். இதில் இராவணன் தன்னை ஓர் அன்னியன்போலப் படர்க்கையிடத்திற் கூறியது தனக்குண்டான பழிக்கு அஞ்சி என்க. இவ்வாறே அவன் தன்னைப் படர்க்கையில் பழித்துக்கொண்டது; உயுத்த. மந்திரப். 12. தங்கையை இங்கு மருந்து எனக் கூறியது கிடைத்தற்கு அரிதாய் ஒருத்தியாய் இருக்கும் தனிச்சிறப்பு நோக்கி. விருந்தனைய வாள் - அதுவரை அதனை உடயோகப்படுத்தாது அருமையாய் வைத்துப் போற்றி வந்த வாள்; இது சந்திரஹாஸம் எனப்படும். சிவபிரான் இதனை இராவணனுக்கு அளித்தது; உயுத்த. கும்பகருணன் வதைப் : 1; உத்தர. வரையெடுத்த : 75.

பி - ம். 1. நங்கைமணி ; தங்கமணி ; நாசிநெடு.
2. ரரிந்தமுயர் ; முயிர் வாழ்வான்.
3. விழித்துறையும் ; விளித்திறையும் ; விளித்தநிறை.
4. மின்னுயிரொடின்னும் ; னிராவணனின்னுயிர். (58)

612. கொற்றமது முற்றிவலி யாலரசு கொண்டேன்
உற்றபயன் மற்றிதுகொ லாமுரை யிறந்தேன்
முற்றவுல கத்துமுதல் வீரர்முடி யெல்லாம்
அற்றபொழு திற்றிதுபொ ருந்துமென லாமோ.

கொற்றம் அது முற்றி - எங்கும் எனது வெற்றியை முற்றுப் பெறுமாறு செய்து முடித்து, வலியால் - என் வலிமையினால், அரசு கொண்டேன் - (மூவுலகத்தும்) என் ஆட்சியைக் கொண்டேன்; உற்ற பயன் - அவ்வாறு ஆட்சி பெற்ற பயன், இதுகொல் ஆம் - இது தான் போலும்! உரை இறந்தேன் - (இதனால்) என் புகழை இழந்தவனானேன்; முற்ற உலகத்து - உலகம் முழுவதும் உள்ள, முதல் வீரர் முடி எல்லாம் - முதன்மைப்பட்ட சிறந்த வீரர்களுடைய தலைகளை எல்லாம், அற்ற பொழுது - அறுபட்டுத் அழிந்தபொழுதும், இற்று இது - இத்தன்மையான இழந்தபுகழ், பொருந்தும் எனல்

ஆமோ - என்னிடம் மீண்டும் பொருந்துதல் ஆகுமோ? (ஆகாது என்றபடி.) முன்னுள்ள ஆம், இடைச்சொல்.

கொற்றம் - அரச உரிமையும் ஆம். இற்று இது பொருந்து மெனல் ஆமோ: இழந்த இந்த மானம் மீண்டும் வந்து சேருமோ எனலும் ஆம். இனி; இவள் இழந்த மூக்கு முதலியன மீண்டும் பொருந்தும் என்பது உண்டாகுமோ, அறுபட்ட அவள் மூக்கும் நிகரெனக் கூறலாகுமோ எனப் பொருள் கொள்ளவும் இடமாகும். இதனால், இராவணன் தனக்கு நேர்ந்த இப்பழிக்கு இவ்வுலகத் தையே அழிக்கக் கருதினன் என்பதும் விளங்கும்.

பி - ம். 2. மற்றிது வொல்காவுரை யிறந்தேன்; மற்றிது வொல்கா முறை யிறந்தேன்; கொலாமொரு பிறந்தேன்.

3. (கொண்டேன்) உற்றபயன் மற்றிது கொலோ வுளது மூன்றாய்; முற்றுமுல கத்தொகையென் மூரி வடி வாளாய்.

4. பொழுதத்திது; பொழுதற்றிது. (59)

613. மூளுமுள தாயபழி யென்வயின் முடித்தோர்
ஆளுமுள வாமவர்த மாருயிரு முண்டாம்
வாளுமுள தோதவிட முண்டவன் வழங்கு
நாளுமுள தோளுமுள நானுமுளெ னன்றே.

என் வயின் - என்பால், உளது ஆய - என்றும் நிலைப்பதாகிய, மூளும் பழி முடித்தோர் - ஊக்கத்துடன் முற்படுகிற பழியைச் செய்து முடித்தவரான, ஆளும் உள - ஆட்களும் இன்னும் இருக்கின்றார்கள்! அவர் தம் ஆர் உயிரும் உண்டாம் - அவர்களு டைய அரிய உயிர்களும் இன்னும் உள்ளனவாம்! வாளும் உளது - என் கையில் சந்திரஹாஸம் என்னும் வாளும் இருக்கின் றது! ஓதம் விடம் உண்டவன் - கடலில் உண்டான விடத்தை யுண்ட சிவபெருமான், வழங்கு - எனக்கு அளித்த, நாளும் உள - முக்கோடி வாணாளும் இருக்கின்றன! தோளும் உள - (அரன் கயிலையை அசைத்து எடுத்த) இருபது தோள்களும் இருக்கின்றன! நானும் உளென் அன்றே - நானும் உயிரோடு இருக்கின்றேன் அல்லவோ!

மூள் - முற்படுதல்; 'முதலற முடிக்க மூண்டான்' (உயுத்த. மாயாசீதைப். 96.) ஆளும், என்றது இழிவுபற்றிக் கூறியது.

'என் கை வாளும் என் வாழ் நாளும் பயனின்றிப் பழிக்கிடமாய் உள்ளன, நானும் வீண் பூபாரமாய் இருக்கின்றேன்' என்று தன்னை நிந்தித்துக் கூறியது ஆகும். இதில், திணை பால் எண் முதலியன வழுவமைதியில் வந்துள்ளன.

பி-ம். 1. ஆளுமுள வாமயர தாருயிரு முண்டாம்; ஆளுமுளது மயன தாருயிரு முண்டாம்; ஆளுமுளதா மயர்கள்.

4. நாலும் னெனன்றே; நாளுமுளனன்றே. (60)

614. பொத்துற வுடற்பழி புகுந்ததென நாணித்
தத்துறுவ தென்னைமன னேதளர லம்மா
எத்துய ருனக்குள தினிப்பழி சுமக்கப்
பத்துள தலைப்பகுதி தோள்கள்பல வன்றே,

'மனனே - ஏ மனமே! உடல் பொத்துஉற - என் உடல் பொத்துப் புழையடையும்படி, பழி புகுந்தது - நிந்தனை வந்து புகுந்து கொண்டது, என - என்று, நாணி - வெட்கமுற்று, தத்துறுவது - நீ தவித்துத் தடுமாற்றங் கொள்வது, என்னை - ஏனோ? இனி தளரல் - இனி நீ தளர்ச்சியடைய வேண்டாம்! எ துயர் உனக்கு உளது - உனக்கு என்ன துன்பம் உள்ளது? இனி - இனிமேல், பழிசுமக்க - இப்பழியை ஏற்றுத்தாங்கிக்கொள்ள, தலை பகுதி - என் தலைகளாகிய பாகங்கள், பத்து உள - பத்து என்னும் எண்ணிக்கையில் உள் ளன; தோள்கள் பல அன்றே - அவற்றோடு எனக்குத் தோள்களும் இருபது என்னும் பல உள்ளன அல்லவோ?

இராவணனின் மானங் காத்தலாகிய சிறந்த வீரத்தன்மை இங்குப் புலப்படுகின்றது. தன் தங்கை அவ் விருவர்களையும் புகழ்ந்து கூறிய சொற்கள் இந்நிலைக்கு அவனைக் கொணர்ந்தன எனலாம். அம்ம: இரக்கத்தை உணர்த்தும் இடைச்சொல்; விளியும் ஆம்; (நன். உயிர்: 17. உரை;) அம்ம, கேட்பிக்கும் என்ற தொல்காப்பிய விதிப்படி, இதனை நீ கேட்பாயாக! எனலும் ஒன்றும். அன்று, ஏ: ஈற்றசைகள்.

பி-ம். 1. புத்துற வுறப்பழி; புதலுற வுடைப்பழி; புதலுற.

2. தத்துறுவ தென்ன; தளர்தலம்மா.

4. தலைப்பகழி; யன்றே. (61)

இராவணன், கரன் முதலிறேர் அவர்களைக் கொன்றிலரோ?
எனச் சூர்ப்பணகை நிகழ்ந்தவை கூறல் 615—8.

615. என்றுரை செயாநகை செயாவெரி விழிப்பான்
வன்றுணையி லாவிருவர் மானிடரை வாளால்
கொன்றிலர்க ளாநெடிய குன்றுடைய கானில்
நின்றகர னேமுதலி னோர்நிருத ரென்றான்.

என்று உரை செயா - என்று சொல்லி, நகை செயா - சிரித்து, எரி விழிப்பான் - நெருப்புப்போல விழிப்பவனாய், (அந்த இராவணன் சூர்ப்பணகையை நோக்கி), 'நெடிய குன்று உடைய கானில் நின்ற - நீண்டுயர்ந்த மலைகளையுடைய கானில் உனக்குக் காவலாக இருந்த, கரனே முதலினோர் நிருதர் - கரன் முதலாக உள்ள இராக்கதர்கள், வன் துணை இலா இருவர் மானிடரை, வலிய துணியில்லாத இருவராகிய அம்மானிடர்களை, வாளால் - தம் வாட்களால், கொன்றிலர்களா என்றான் - கொன்றனர் இல்லையா?' என்று வினவினான்.

உரைசெயா, நகைசெயா, இவை உடன்பாட்டு வினைகள். நகை செய்தது, வெகுளியால். வாளால், என்றது - ஆயுதப் பொதுவைக் குறிப்பது, வன் துணையிலா இருவர் மானிடரை; மானிடர் எளியர் என்பதும், அதிலும் அன்னோர் வலிய துணையற்றவராய் இருவர் மட்டுமே இருக்கக் கரன் முதலினோர் அவர்களைக் கொல்லாது விட்டது என்? என்ற குறிப்புத் தோன்றக் கூறினான் என்க.

இச்செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

பி-ம். 2. மானுடரை வாளால்; வாளிற்.
3. கொன்றிலர் கொலா நெடிய; குன்றனைய தோளின்; நின்ற கரன் முதலினோர். (62)

வேறு

616. அற்றவ னுரைத்த லோடு மழுதிழி யருவிக் கண்ணாள்
எற்றிய வயிற்றள் பாரி னிடைவிழுந் தேங்கு கின்றாள்
சுற்றமுந் தொலைந்த தைய வொய்தெனச் சுமந்த கையாள்
உற்றது தெரியும் வண்ண மொருவகை யுரைக்க லுற்றாள்.

அற்று அவன் உரைத்தல் ஒடும் - அவ்வாறு இராவணன் சொன்ன அளவில், அழுது இழி அருவி கண்ணாள் - அழுது வீழ்கின்ற அருவி போன்ற நீரையுடைய கண்களையுடையவளும்,

எற்றிய வயிற்றள் (கைகளால்) அடித்துக்கொண்ட வயிற்றை யுடையவளும், பாரின் இடை வீழ்ந்து ஏங்குகின்றாள் - தரையிடம் விழுந்து வருந்துகிறவளுமான சூர்ப்பணகை (அவனை நோக்கி), ' ஐய - ஐயனே ! சுற்றமும் - அக்கரன் முதலான நம் சுற்ற வர்க்கமும், நொய்து தொலைந்தது - எளிதில் அழிந்து போயிற்று ; என - என்று கூறி, சுமந்த கையாள் - தலைமேல் தாங்கிய கையை யுடையவளாய், உற்றது தெரியும் வண்ணம் - அங்கு நேர்ந்த செய்தி தெரியும்படி, ஒரு வகை உரைக்கல் உற்றாள் - ஒருவாறு சொல்லத் தொடங்கினாள் ; (அவள் உரைத்தவை அடுத்த சில செய்யுட்களால் விளங்கும்.)

சுமந்த கையள் - தலைமேற் கொண்ட கையள் ; பெருந்துயரில் தலைமேற் கைவைத் தழுதல் மரபு; 577. இராவணனின் அவ்வினாவை எதிர் பார்த்தே அவள் முன் இராம லக்ஷமணர்களின் வீரத்தைப் பாராட்டிப்பேசினாள் என்க.

பி - ம். 1. அழுதழியருவிக்கண்ணாள் ; யருவிக்கண்ணள்.

2. எற்றினள் வயிற்றிற் பாரினிடை விழுந்தேங்கி நைந்தாள்.

3. சுற்றமுஞ்சிதைந்ததையா ; தைய ; சிதைய நோற்றே னென்ற னள் ; நொந்தேன் ; கையள்.

4. மொருவகை தெரிக்க லுற்றாள். (63)

617. சொல்லென்றன் வாயிற் கேட்டார்
தொடர்ந்தெழு சேனை யோடும்
கல்லென்ற வொலியிற் சென்ற
கரன்முதற் காளை வீரர்
எல்லொன்று கமலச் செங்க
ணிராமனென் றியைந்த வேந்தல்
வில்லொன்றிற் கடிகை மூன்றி
லேற்றினன் விண்ணி லென்றாள்.

'சொல்-நான் கூறிய அச்சொற்களை, என் தன் வாயில் கேட்டார்- என் வாயினால் நான் சொல்லக் கேட்டனராய், தொடர்ந்து எழு சேனை ஓடும் - (உடனே தம்மைப் பின்) தொடர்ந்து எழுந்த சேனைகளோடும், கல் என்ற ஒலியில் சென்ற - கல் என்ற ஓசையுடன் சென்ற, கரன் முதல் காளை வீரர் - கரன் முதலான காளைகள் போன்ற வீரர்கள், எல் ஒன்று - சூரியனுடைய கிரணங்கள் பொருந்திய (பட்ட), கமலச்-

தாமரை மலர்போன்ற, செம் கண்-சிவந்து ஒளிரும் கண்களையுடைய, இராமன் என்று இயைந்த - இராமனென்று பெயர் பொருந்திய, ஏந்தல்-பெருமையிற் சிறந்த ஒருவனது, வில் ஒன்றில்-ஒரு வில்லால், கடிகை மூன்றில் - மூன்றே நாழிகை அளவில், விண்ணில் ஏறினர் என்றாள் - இறந்து வானேறிச் சென்றனர்' என்று கூறினாள் சூர்ப்பணகை.

காளை ; ஆண் இடபம் ; இஃது ஆண்மையும் வீரமும் மிக்கோனுக்கு உவமை கூறப் பெறுவது. கல் ; ஒலிக்குறிப்பு ; அனுகரண ஓசை என்பர். எல்-சூரியன், வெயில், ஒளியுமாம்; பிங். எல்லொன்று கமலம் - அன்றலர்ந்த செந்தாமரை என்பது. கடிகை - நாழிகை; (திவா.) கமலச் செங்கணிராமன் என்று வேண்டாத இடத்தில் சிறப்பித்தது, அந்த இராமபிரானுடைய கண்ணழகில் ஈடுபட்டு, அதனையே நினைத்திருந்த காதலால் என்க. எல்லொன்று செங்கண் என்று இயைக்க, அவனுடைய வீரத்தைக் குறித்ததுமாம். கரன் முதலான அரக்கர்களைக் கொன்ற கால அளவு, 550 : சுந்தர. 351.

பி - ம். 1. சொல்லொன்றென்; தொடர்ந்தெழுஞ்.
2. சென்ற கரன்முதற்.
3. நிசைத்த வேந்தல் ; எல்லென்ற வரிவிற் செங்கையிராம னென் நிசைந்த ; நிசைத்த.
4. லேற்றினன் ; விசும்பிலென்றாள். (64)

618. தாருடைத் தானை யோடுந்
தம்பியர் தமியன் செய்த
போரிடை மடிந்தா ரென்ற
வுரைசெவி புகாத முன்னம்
காரிடை யுருமின் மாரி
கனலொடு பிறக்கு மாபோல்
நீரொடு நெருப்புக் கான்ற
நிறைநெடுங் கண்க ளெல்லாம்.

தமியன் செய்த போர் இடை - பிறிதொரு துணையின்றித் தனியாய் ஒருவன் செய்த போரிடத்து, தம்பியர் - தன் தம்பியரான கரதூடணர்கள், தார் உடை தானை ஓடும் - போர் மாலை அணிந்து சென்ற அரக்கர் படைகளோடும், மடிந்தார் என்ற உரை - இறந்துவிட்டார் என்ற சொல், செவி புகாத முன்னம் - தன் காதுகளில்

புகுந்தவுடனே, கார் இடை உருமின் - கரிய மேகத்தினிடத்து உண்டாகும் இடியின, கனல் ஒடு - நெருப்போடு, மாரி - மழை, பிறக்குமாபோல் - தோன்றுவதே போல, நிரை நெடும் கண்கள் எல்லாம் - இராவணனுடைய வரிசையான இருபது கண்கள் எல்லாம், நீரோடு நெருப்பு கான்ற - நீரையும் நெருப்பையும் கக்கின.

தாருடைத்தானை-முன்னணிச்சேனையோடு மற்றைச் சேனைகளும் என்னலும் ஒன்றும்; பு. வெ. *144*. புகாத முன்னம் - புகுந்த அப்பொழுதே எனக் கொள்க. இடியில் மழையும் நெருப்பும் தோன்றுவது; நீரிடி, நெருப்பிடி என வழங்குமாறும் நோக்குக. உவமையின் நயச் சிறப்பு ஓர்க. முதலில் இளிவரவில் அழுங்கியிருந்த இராவணன் மனம், இப்பொழுது கோபத்திலும் சோகத்திலும் ஆழ்ந்தது என்க.

பி - ம். 1. தாருடைச்சேனை.
2. மடிந்தாரென்ன; செவிப்புகாத முன்னம்.
3. உருமின்வாரி; கனலொடுங் கலக்குமாபோல்.
4. நெருப்புங்கான்ற; நிறைநெடுங். (*65*)

**இராவணன் சூர்ப்பணகை செய்த குற்றத்தைக் கேட்டு அறிதல் 619—21.**

619. ஆயிடை யெழுந்த சீற்றத்
தழுந்திய துன்ப மாறித்
தீயிடை யுகுத்த நெய்யிற்
சீற்றத்திற் கூற்றஞ் செய்ய
நீயிடை யிழைத்த குற்ற
மென்னவர் நின்னை யின்னே
வாயிடை யிதழு மூக்கும்
வலிந்தனர் கொய்ய வென்றான்.

அ இடை - அப்பொழுது இராவணன், எழுந்த - மேற்கிளம்பிய, சீற்றத்து அழுந்திய துன்பம் மாறி - கோபத்தில் அழுந்திய தன் துன்பம் மாறுபட்டு வேறாகி, தீ இடை உகுத்த நெய்யில் - நெருப்பிடத்தே பொழிந்த நெய்யைப் போல, சீற்றத்துக்கு ஊற்றம் செய்ய - தான் கொண்ட கோபத்திற்கு வலியை உண்டாக்க, 'அவர் - அந்த மானிடர், நின்னை - உன்னை, இன்னே - இவ்விதமாக, வாய் இடை இதழும் மூக்கும் - வாயிடமான உதடுகளையும் மூக்கையும், வலிந்தனர் கொய்ய - வலிந்து அரியும்படியாக, நீ இடை இழைத்த குற்றம் என் - நீ அவரிடம் செய்த குற்றம் யாது?' என்றான் - என்று கேட்டான்,

தீயிடை யுகுத்தநெய்; பால. மிதிலைக்: 101; கார்முகப்: 26. 'ஆயிடை யெழுந்த......ஊற்றம் செய்ய - அப்போது உண்டான கோபத்திலே முன் உண்டான துக்கம் ஒளித்தது: ஒளித்து அந்தக் கோபத்தை வர்த்திக்கப் பண்ணினது, வடவை நெருப்பிலே நெய் விட்டது போன்றது' என்பது பழையவுரை. ஊற்றம் - வன்மை. சூர்ப்பணகை வாயிதழ் அறுக்கப்பட்ட செய்தி இங்குக் காண்கிறது. இச் செய்யுளில், ஒரு சுவை மற்றொரு சுவையை மாற்றியது என்பது ஒரு நயம். இராவணன் சூர்ப்பணகையின் அவலத்தைக் கண்டு, அவளைக் கேட்ட வினாக்களின் முறை, அவனது இராஜஸ குணத்தைத் துலக்கிக் காட்டுவது காண்க.

பி - ம். 1. தன்பமாழித்; துன்பயாழித்.

2. யுகுக்கு நெய்யிற்.

3. மென்னை கொனின்னை. (66)

620. என்வயி னுற்ற குற்றம்
யாவர்க்கு மெழுத வொண்ணுத்
தன்மைய னிராம னேடுந்
தாமரை தவிரப் போந்தாள்
மின்வயின் மருங்குல் கொண்டாள்
வேய்வயின் மென்றோள் கொண்டாள்
பொன்வயின் மேனி கொண்டாள்
பொருட்டினுற் புகுந்த தென்றாள்.

(அது கேட்ட சூர்ப்பணகை), 'என் வயின் உற்ற குற்றம்-என்னிடம் உண்டான பிழையாதெனில், யாவருக்கும் எழுத ஒண்ணுத - சித்திரக் கலையிற்றேர்ந்த யாவர்க்கும் எழுத முடியாத, தன்மையன் - லக்ஷணச் சிறப்புக்கள் அமைந்த, இராமனேடும் - அந்த இராமனேடும், தாமரை தவிர போந்தாள் - தனக்கிருப்பிடமாகிய தாமரை மலரை விட்டு வந்தவளும், மின் வயின் மருங்குல் கொண்டாள் - மின்னலிடமிருந்து இடையைப் பெற்றவளும், வேய் வயின் மென் தோள் கொண்டாள் - மூங்கிலினிடமிருந்து தன் மென்மையான தோள்களைக் கொண்டவளும், பொன் வயின் மேனி கொண்டாள் - பொன்னிடமிருந்து தன் மேனியைக்கொண்டவளுமான ஒருத்தியின், பொருட்டினுல்-நிமித்தமாக, புகுந்தது என்றாள்-நிகழ்ந்தது' என்று கூறினுள்.

இராமபிரான் யாவர்க்கும் எழுதவொண்ணு வடிவழகுடையான்; அவ்வடிவழகு சூர்ப்பணகை மனத்தைவிட்டு அகலாதிருந்தமையால், இராவணன் எதிரில் தான் இருப்பது மறியாது, அவனைப்புகழ ஆரம்பித்துவிட்டாள். பின், அதனை ஒருவாறு மறைத்துக்கொண்டு, இராவணனிடம் சீதையின் அழகைப் புகழத் தொடங்கிய திறம், இங்கு நோக்கத்தக்கதாம். யாவர்க்கு மெழுதவொண்ணுத் தன்மையின், என்ற பாடங்கொண்டு, பிராட்டிக்கே இயைத்துக் கூறலும் ஆம். மின்வயின் மருங்குல், வேயின் மென்றோள், பொன்வயின் மேனி கொண்டாளென்றது, உபமானப் பொருள்களையே இங்கு உபமேயமாக்கியது காண்க. மின், மகளிர் இடைக்கும், வேய் அன்னோர் தோளுக்கும், பொன், மேனிக்கும் உவமைகள்: பிராட்டி பொன் நிறமானவள்; *281; 640*; சுந்தர. *684*.

பி-ம். 1. மெழுதொணுத; மெழுதவெய்தா.
2. தன்மையினி ராமனோடும்; தன்மையனி ராமனோடும்.
3. மருங்கு கொண்டாள்; மென்வயின் மென்றோள் கொண்டாள்; வேயிடைமென் றோள்கொண்டாள். (67)

621. ஆரவ ளென்ற லோடு
மரக்கியு மைய வாழி
தேரவ ளல்குல் கொங்கை
செம்பொன்செய் குலிகச் செப்பு
பாரவள் பாதந் தீண்டப்
பாக்கியம் படைத்த தம்மா
பேரவள் சீதை யென்று
வடிவெலாம் பேச லுற்றாள்.

'அவள் ஆர் என்னல் ஓடும் - நீ கூறிய அவள் யார்?' என்று இராவணன் கேட்டலும், அரக்கியும் - இராக்கதியாகிய சூர்ப்பணகையும், 'ஐயா-ஐயனே! வாழி - நீ வாழ்வாயாக! அவள் அல்குல் தேர் - அவளுடைய அல்குல் தேர் என்பதே ஆகும்; கொங்கை - அவளுடைய கொங்கைகள், செம் பொன் செய் - சிவந்த பொன்னால் செய்யப்பட்ட, குலிக செப்பு - சிவப்பான செப்புக்களாம்; பார் - பூமி, அவள் பாதம் தீண்ட - அவளுடைய பாதங்களைத் தொடும்படியாக, பாக்கியம் படைத்தது - பெரும்பேறு பெற்றது, அம்மா - ஆச்சரியம்! அவள் பேர் சீதை - அவளுடைய பெயரோ சீதை யென்பதாகும்;' என்று - என்று சொல்லி, வடிவு எலாம் - அப்பிராட்டியின் திரு

மேனியின் லக்ஷணங்களை யெல்லாம், பேசல் உற்ருள் - (சூர்ப்பணகை) சொல்லத் தொடங்கினுள்.

அல்குலுக்குத் தேர் ; 631. வாழி : இஃது அரசன் முதலினே ரிடம் பேசத் தொடங்கும்போது கூறும் மங்கலச் சொல் ; சிலப். 20 : 30-33. 'ஆழித் தேரவள்' என்ற பாடங்கொண்டு, சக்கரங்களோடு கூடிய தேர் என்று பொருள் கோடலும் ஒன்றும். அம்மா : இடைச் சொல் ; இங்கு வியப்பை யுணர்த்தி நின்றது. கொங்கை...செப்பு : 'குலிகச் செப்பன கொம்மை வரிமுலை' (சீவக. 641). குலிகம் - சாதி லிங்கம் ; இங்குலிகம் என்றும் பெயர்பெறும் ; அதன் நிறமான சிவப் பைக் குறித்து நின்றது ; குலிகம் ; சிவப்பு ; (திவா.) பாரவன்......... பாக்கியம் பெற்றது ; ஒப்பு. 280.

பி-ம். 1. ஹென்றலோடு மரக்கியுமமையதாகத் ; ஆரவ ரென்ருன் பின்ன ரரக்கியும் மொழியாளையா ; மையவாழித்.
2. தேரவடிரண்ட கொங்கை ; குலிசச் செப்பால்.
4. பேர்வளர் சீதை ; சீதையென்றே ; வடிவெல்லாம். (68)

சூர்ப்பணகை பிராட்டியை வருணித்தல் 622—7.

622. காமரம் பழுத்த பாடற்
கள்ளெனக் கனிந்த செஞ்சொற்
தேமலர் செறிந்த கூந்தற்
றேவர்க்கு மணங்கா மென்னத்
தாமரை யிருந்த நங்கை
சேடியாந் தரமு மல்லள்
யாமுரை வழங்க லென்ப
தேழைமைப் பால தன்றே.

பழுத்த காமரம் பாடல்-(அச்சீதை) காமரம் என்னும் பண்ணின், கள் என கனிந்த செம் சொல்-தேன் போன்று கனிந்த இனிய சுவை யைத் தரும் அழகிய சொற்களையுடையவள் ; தே மலர் செறிந்த கூந்தல் - தேனையுடைய மலர்கள் நிறைந்த கூந்தலையும் உடையவள் ; தேவர்க்கும் அணங்காம் என்ன-தேவர்களுக்கும் ஒரு தெய்வப் பெண் என்று சொல்லத்தக்கவளான அந்நங்கைக்கு, தாமரை இருந்த நங்கை- தாமரை மலர்மீது வீற்றிருந்த பெண்ணுகிய திருமகள், சேடி ஆம் தரமும் அல்லள் - ஒரு பணிப் பெண்ணென ஆகக் கூடிய தகுதியும் உடையவள் அல்லள் ; (அவ்வாருக), யாம் உரை வழங்கல் என்பது -

இவளது சிறப்பை யாம் எடுத்துரைப்பது என்பது, ஏழைமை பாலது - அறிவின்மையைச் சார்வதாகும்; அன்று, ஏ : ஈற்றசைகள்.

சொல், கூந்தல், தேவர்க்கு மணங்கு இவற்றைத் தாமரை யிருந்த தையலுக்கே கூட்டிப் பொருள் கூறுவாருமுளர். ' இந்தக் கவிமுற்றும் இலக்குமிக்கு விசேஷணம் ' என்பது பழையவுரை. தேவர்க்கும் என்பதற்குத் தெய்வப் பெண்கட்கும் என்றும் பொருள் கொள்வர்.

பி - ம். 1. காமரமுரலும்; காமரம்பன்னுபாடல்; காமரமினிது பாடல்; தீஞ்சொல்.

2. தேமலர் நிரந்த; தேமலர் நிறைந்த; தேமலர் நறுமென்; தேவர்க்கு மணங்களுர்க்கும்; மணங்காமென்னும்; மணங்கா மென்றத்,

3. தாமரையிருந்த தையல்; 'தாமரையாளுமன்னுள்; தாமரை பயந்ததையல்; தாமரை பயந்த நங்கை; சேடியர் தாமு; சேயடித் தரமுமல்லார்.

4. வழங்கு மென்ப; தென்றே; தன்றே; வன்றே. (69)

623. மஞ்சொக்கு மளக வோதி
மழையொக்கும் வடிந்த கூந்தல்
பஞ்சொக்கு மடிகள் செய்ய
பவழத்தின் விரல்க ளைய
அஞ்சொற்க ளமுதி னள்ளிக்
கொண்டவள் வதன மைதீர்
கஞ்சத்திற் கொண்ட தேனுங்
கடலினும் பெரிய கண்கள்.

' ஐய - ஐயனே ! அம் சொற்கள் - அழகிய சொற்களோ, அமுதில் அள்ளி கொண்டவள் - அமுதத்திலிருந்து வாரி முகந்து கொண்ட அந்த மடந்தையின், அளக ஓதி - முன்னே குழன்று விளங்கும் கூந்தல், மஞ்சு ஒக்கும் - மேகத்தை நிகர்க்கும்; வடிந்த கூந்தல் - அவளது வாரி முடித்துத் தொங்கவிடப்பட்ட கூந்தலோ, மழை ஒக்கும்- நீருண்ட மேகத்தை ஒப்புடைத்தாகும்; அடிகள் - அவளு டைய பாதங்கள், பஞ்சு ஒக்கும் - செம்பஞ்சு போன்றிருக்கும்; விரல் கள் - அவளது பாதத்தில் உள்ள விரல்களோ, செய்ய பவழத்தின்-

சிறந்த பவழத்தினால் ஆனவை போன்றவை ; வதனம் - அவளுடைய முகம், மை தீர் - குற்ற மற்ற, கஞ்சத்தில் கொண்டதேனும் - தாமரை மலரிலிருந்து தேர்ந்தெடுக்கப்பெற்றது என்றாலும், கண்கள் - அவளுடைய விழிகள், கடலினும் பெரிய - கடலைவிடப் பெரியனவாகக் கொள்ளப்பாலன.

அம் சொற்கள் அமுதில் அள்ளிக் கொண்டவை ; 'அமிழ்தத் தன்ன வந்திங் கிளவி' என்ற குறுந்தொகை (206 : 1) அடிக்கு 'கேட்டார் பிற செயல்களை மறந்து நிற்றலின் அமிழ்தத்தை உவமை கூறினர்' என்ற ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு இங்கு நோக்கத் தக்கது. ஓதி ; 'வாழைப் பூவெனப் பொலிந்த ஓதி' (சிறுபாண். 21-2) என்ற அடிக்கு நச். உரையையும், ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பையும் காண்க. ஓதி - மகளிர் கூந்தலின் ஐம்பால்களுள் ஒன்றான பனிச்சை (முன்னுச்சி மயிர்) ; நக்க 25. உரையையும் காண்க. 'ஓதி மஞ் சொக்கும் - குழல் முடித்தற்கு மஞ்சு ஒப்பு ; வடித்த கூந்தல் மழை ஒக்கும் - மழை பெய்ததுபோலும் அவிழ்ந்த கூந்தல்' என்பன பழையவுரை. மஞ்சு - சிறிது நீருண்ட மேகம் என்றும் கூறுவர். (சிறுபாண். 264. நச். உரை.) இங்கு, மழையைப் பொழியக்கூடிய நிலையில் முதிர்ந்து விளங்கும் நீருண்ட மேகத்தைக் குறித்தது. பஞ்சு ஒக்கும்-பஞ்சை ஒப்புக் கூறக் கூடியவாறு மென்மையானவை என்றும் பொருள் கொள்ளலாம். பஞ்சு - இங்குச் செம்பஞ்சு ; அது மென்மையும் செந்நிறமு முடைமையால். முகத்துக்குத் தாமரை மலர்: கண்டோர் மனத்தைக் கவரும் ஒளி, நிறம், வடிவு, மென்மை, நறு மணம் முதலியன உடைமையின், முகத்துக்கு உவமை. கண்ணுக்குக் கடல் ; உபமான சங்கிரகம் ; கடலினும் பெரிய கண்கள். சுந்தர. 393 ; வி. பா. பாயிரம். 6. வடிதல் - நீண்டு தொங்குதல் ; அழகு பெறுதலும் ஆம். இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. மளகவோளி ; மளகபாரம் ; வடித்த கூந்தல்.

2. மடியள் செய்ய ; பவழத்தை விரல்களொக்கும் ; விரல்களாலே ; விரல்களையா.

3. கொண்டனள் ; வதனமையா.

4. ளைவிற்றேறுங் ; நெடியகண்கள். (70)

624. ஈசனார் கண்ணின் வெந்தா
னென்னுமி திழுதைச் சொல்லிவ்
வாசநா றோதி யாளைக்
கண்டனன் வவ்வ லாற்றான்
பேசலாந் தகைமைத் தல்லாப்
பெரும்பிணி பிணிப்ப நீண்ட
ஆசையா லழிந்து வெந்தா
னநங்கனவ் வுருவ மம்மா.

'அநங்கன் - மன்மதன், ஈசனார் கண்ணின் வெந்தான் - என்னும் இது சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணால் வெந்து எரிந்து போனான்', என்று சொல்லும் இக் கூற்று, இழுதை சொல் - பேதைமை மொழியே ஆகும்; இ வாசம் நாறு ஓதியாளை - இந்த நன் மணங் கமழும் கூந்தலுடைய பெண்ணை, கண்டனன் - கண்டு, வவ்வல் ஆற்றான் - அபகரித்துக்கொண்டு செல்லும் வலிமையற்ற வனான அவன், பேசல் ஆம் தகைமைத்து அல்லா - சொல்ல முடியாத, பெரும் பிணி பிணிப்ப - பெரிய காமமாகிய நோய் தன்னைப் பிடித்துக் கொண்டு வருத்த, நீண்ட ஆசையால் - நீண்டு வளர்ந்த அவ்வாசை யினால், அ உருவம் அழிந்து தேய்ந்தான் - அந்தத் தன் உருவம் நாளடைவில் தேய்ந்து அழிந்து போய்விட்டான், (என்பதே அறி வுடைமை ஆகும்); அம்மா : வியப்பை உணர்த்தும் இடைச்சொல்.

அநங்கன் : அங்கம் அற்ற மன்மதன். இழுதை - அறிவின்மை; 'இழுதை நெஞ்சமி தென்படு கின்றதே' (தே. 1203. 8); பொய்யும் ஆம். இழுதைச்சொல் - முட்டா ளுடைய வார்த்தை எனலும் ஆம். வாச நாறோதியாள் என்றது; உத்தம லக்ஷணம் வாய்ந்த பத்மினிச் சாதிப் பெண்களுக்குக் கூந்தல் இயற்கை மணமுடையது ஆதலின்; குறுந். 1. மன்மதன் ஈசன் கண்ணிற்பட்டழிந்தது; பால. தாடகை வதைப்: 1. இச்செய்யுள், அவநுதியணியின் பாற்படும் (ஒழிப்பணி); 'சிறப்பினும் பொருளினும் குணத்தினு முண்மை, மறுத்துப் பிறி துரைப்ப தவநுதியாகும்' (தண்டி: 75); அவநுதி - மறுத்துரைத் தல். 'அநங்கன் வவ்வலாற்றான்' என்று சூர்ப்பணகை கூறியது, இராவணனை அவன் பிராட்டியை வவ்வுமாறு பின் கூறுதற்கு (632) முகவுரையாகும் என்க.

பி-ம். 1. னென்னுமிதிழுக்கச் சொல்லால்; னென்னுமதிழுதை.
2. வல்லவாற்றால்; வல்லவற்றால்.
3. தகைமைத்தல்லாற்; தன்மைத்தல்லாற்; பிணிக்க நீண்ட.

625\. தெவ்வுல கத்துங் காண்டி
        சிரத்தினிற் பணத்தி னோர்கள்
    அவ்வுல கத்துங் காண்டி
        யலைகட லுலகிற் காண்டி
    வெவ்வுலை யுற்ற வேலை
        வாளினை வென்ற கண்ணாள்
    எவ்வுல கத்தா ளங்கம்
        யாவர்க்கு மெழுதொ ணாதாள்.

'வெம் உலை உற்ற - வெப்பமான உலையில் வைத்துக் காய்ச்சிக் கூராக்கப்பெற்ற, வேலை வாளினை - வேலையும் வாளையும், வென்ற - கூர்மையாலும் ஒளியாலும் வடிவாலும் வென்ற, கண்ணாள் - கண்களை யுடையளான அம்மங்கை, தெவ் உலகத்தும் - தேவர் உலகத்திலும், காண்டி - நீ காண்பாயாக; சிரத்தினில் பணத்தினோர்கள் - தலையில் படமுடையவரான நாகர்களது, அ உலகத்தும் - அந்தப் பாதாள உலகத்தும், காண்டி - காண்பாயாக; அலைகடல் உலகில் காண்டி - அலைகள் பரந்த கடலால் சூழப்பட்ட இந்தப் பூவுலகிலும் காண்பாயாக; (இம் மூவுலகத்தும் இத்தகைய வனப்பமைந்த பெண்ணொருத்தி காணமுடியாது என்றபடி); அங்கம் யாவர்க்கும் எழுத ஒணாதாள் - சித்திரத்தில் யாவராலும் எழுத முடியாத அழகிய அங்க லக்ஷணங்கள் அமைந்தவள்; (ஆதலின்) எவ்வுலகத்தாள் - பின் எந்த உலகத்தவளாய் இருப்பாள்? (இஃது அறியக் கூடாத அரிய விஷயம் என்றபடி).

தெவ்வுலகம்; தே உலகம் என்பது எதுகை நோக்கி தெ உலகம் எனக் குறுகிப் பின் தனிக் குறின் முன்னொற்றுயிர்வரினிரட்டும், என்ற விதிப்படி, தெவ்வுலகம் என்றாயிற்று என்று கொள்ளப்பாலதாம். இனி, தெவ் + உலகம் - பகைவரான தேவர் உலகம் எனலும் ஒன்றும். பிராட்டி மேற்கூறிய மூவுலகத்துள் ஓரிடத்தினளும் அல்லள் என்பது சூர்ப்பணகையின் துணிவு; முன் 278 ஆம் செய்யுளில் இவள் பிராட்டிபால் கொண்ட கருத்தை இது வலியுறுத்துகின்றமை காண்க. வாளும் வேலும், மகளிர் கண்களுக்குஉவமை; 'கொல்லும் வேலுங் கூற்றமும் வாளுமிவை யெல்லாம் வெல்லும் வெல்லும் என்ன மதர்க்கும் விழிகொண்டாள்'' (பால. மிதிலைக் : 32).

பி - ம். 1. சிரத்தினைப்; சித்தரிற்பணத்.

3\. வெவ்வுலையுற்ற வேலை; வாளினை வேற்கண்ணாள்.

626. தோளையே சொல்லு கேனோ
சுடர்முகத் துலவு கின்ற
வாளையே சொல்லு கேனோ
வல்லவை வழுத்து கேனோ
மீளவுந் திகைப்ப தல்லாற்
றனித்தனி விளம்ப லாற்றேன்
நாளையே காண்டி யன்றே
நானுனக் குரைப்ப தென்னோ.

'தோளையே சொல்லுகேனோ - அவளுடைய தோளழகையே எடுத்துச் சொல்லுந் திறமுடையேனோ ? சுடர் முகத்து உலவுகின்ற - அவளுடைய ஒளிபொருந்திய முகத்தில், (சஞ்சரிப்பன போல்) பிறழ் கின்ற, வாளையே சொல்லுகேனோ - வாள்போன்ற கண்களையே கூறுவேனோ ? வல் அவை வழுத்துகேனோ - சூதாடுங்கருவி போன்ற கொங்கைகளின் சிறப்பை எடுத்துக் கூறுந்திற முடையவளாவேனோ? மீளவும் திகைப்பது அல்லால் - சொல்ல முடியாமல் மறுபடியும் மறுபடியும் முயற்சி செய்து யான் திகைப்பு அடைவதே அல்லாமல், தனிதனி - ஒவ்வொரு அங்கத்தின் சிறப்பையும் தனித்தனியே, விளம்பல் ஆற்றேன் - எடுத்துக் கூறும் திறமையுடையேனல்லேன் : நாளையே காண்டி அன்றே - நாளை நீயே நேரில் அவளைக் கண்டு தெரிந்து கொள்வாயல்லவா ? நான் உனக்கு உரைப்பது என்னோ - நான் உனக்கு இனி, எடுத்துக் கூறுவதும் ஏனோ ?

'அல்லவை வழுத்துகேனோ' என்று பாடம் கொண்டு, மேற் கூறிய தோளையும் கண்களையுமின்றி மற்ற அங்கங்களை எடுத்துக் கூறும் திறத்தினளாவேனோ, என்றும் பொருள் கூறுவர். தோள் களின் அழகைச் சொல்வதென்றால், அதற்கேயான் திறமுடையவள் அல்லேன் என்ற குறிப்பு ; இவ்வாறே மற்ற அவயவங்களின் திறமும் என்றபடி. இராமபிரான் அங்க லக்ஷணங்களில் ஈடுபட்ட மிதிலை நகர மகளிர் திறத்தைக் கூறுமிடத்து, 'தோள்கண்டார் தோளே கண்டார்' என்ற தொடக்கத்துப் பாசுரத்திற் கூறிய சிறப்புக்கள் பிராட்டிக்கும் அமைந்துள்ளன என்பது சூர்ப்பணகையின் வாக்கால் இங்கு விளக்கப்பட்டது எனக் கொள்ளலாம்.

பி-ம். 1. துலாவுகின்ற ; துலவி நீங்கும்.
2. அல்லவை வழுத்துகேனோ ; வழுத்துவேனோ.
3. மீளவுந் தகைப்பதல்லால் ; திகைக்கினல்லாற்.
4. நானிது நவில்வதென்னோ.

627. வில்லொக்கு நுதலென் ருலும்
வேலொக்கும் விழியென் ருலும்
பல்லொக்கு முத்தென் ருலும்
பவழத்தை யிதழென் ருலும்
சொல்லொக்கும் பொருளொவ் வாதாற்
சொல்லலா முவமை யுண்டோ
நெல்லொக்கும் புல்லென் ருலும்
நேருரைத் தாக வற்ரு.

'நுதல் வில் ஒக்கும் என்ருலும் - அவளுடைய நெற்றி வில்லுக்கு ஒப்பு ஆகும் என்ருலும், விழி வேல் ஒக்கும் என்ருலும் - அவளுடைய விழிக்கு வேல் ஒப்பு ஆகும் என்ருலும், பல் முத்து ஒக்கும் என்ருலும் - அவளுடைய பல் முத்துப்போன்றது என்ருலும், பவழத்தை இதழ் என்ருலும் - பவழத்தை அவளுடைய இதழுக்கு ஒப்பு என்ருலும், சொல் ஒக்கும் - சொல் நிலை அளவில் ஒப்புடைத்தாகும்; பொருள் ஒவ்வாது ஆல் - பொருளை நோக்குமிடத்து ஒப்பாகா; ஆதலால், சொல்லல் ஆம் உவமை உண்டோ - அவள் அவயவங்களுக்குச் சொல்லக்கூடிய உவமைப் பொருள்களும் உள்ளனவோ? (இல்லை என்றபடி); நெல் ஒக்கும் புல் என்ருலும் - நெற்பயிர் புல் போன்றது என்று கூறினுலும், நேர் உரைத்து ஆக வற்ரு - நேராக உவமை சொல்லியது கூடிற்று ஆகுமோ? (ஆகாது என்றபடி).

நெல், புல் என்பனவற்றை, நெல்லரிசி என்றும், புல்லரிசி என்றும் கொள்ளலாம். இரண்டும் அரிசிப் பெயரால் அழைக்கப் பெறினும், தன்மையில் ஒவ்வாமைபோல என்க. சொல் ஒக்கும் - ஆன்ருேர்கள் உவமையாக எடுத்தாண்ட சொல் என்ற அளவில் ஒப்பாகும் என்றபடி. வில்லொக்கும் நுதல்; ஒப்பு: 'சிலைப்புருவம்' (திருக்குற். உலா. *310*). வற்று - கூடியது; வல்லதும் ஆம். *668*. சொல்லலா முவமையுண்டோ; ஒப்பு. 'நினைய லாமன்றி யுவமையு மன்னதா நிற்கும்' (சுந்தர. *102*). இதன்பின், 'பண்புற நெடிது நோக்கி' என்ற பாடல் ஒரு சுவடியில் காணப்பெறுகிறது.

பி - ம். 2. பொருளொவ்வாவாற்.
3. சொல்லலாந் தகைமைத்துண்டோ; முவமையுண்டே.
4. வற்றே. (74)

சூர்ப்பணகை, இராவணனைப் பிராட்டிபால் மோகங்கொள்ளத் தூண்டுதல் 628-34.

628. இந்திரன் சசியைப் பெற்று
னிருமூன்று வதனத் தோன்றன்
தந்தையு முமையைப் பெற்றுன்
ருமரைச் செங்கண் மாலும்
செந்திரு மகளைப் பெற்றுன்
சீதையை நீயும் பெற்ருய்
அந்தரம் பார்க்கி னன்மை
யவர்க்கில்லை யுனக்கே யையா.

'ஐயா - ஐயனே! இந்திரன் சசியை பெற்ருன் - தேவேந்திரன் இந்திராணியை அடைந்துள்ளான்; இரு மூன்று வதனத்தோன் தன் தந்தையும் - ஆறு முகனுன முருகனுடைய தந்தையாகிய சிவ பிரானும், உமையை பெற்ருன் - உமாதேவியைத் தனக்கு உரிய வளாக அடைந்துள்ளான்; தாமரை செம் கணனும் - தாமரை மலர் போன்று (அழகுடன்) சிவந்து விளங்கும் கண்களையுடைய திரு மாலும், செம் திரு மகளை பெற்ருன் - செந்நிற மமைந்த இலக்குமியை அடைந்துள்ளான்; (அவ்விதமே), நீயும் - நீயும், சீதையை பெற்ருய் - சீதையை உனக்கு உரியவளாக இப்பொழுது அடையப்பெற்றுள் ளாய்; அந்தரம் பார்க்கின் - இவற்றின் பேதத்தை ஆராய்ந்து பார்க்கு மிடத்து, அவர்க்கு நன்மை இல்லை - இதில், அன்னோர்க்குச் சிறப்பு இல்லை; உனக்கே - அஃது உனக்கே யுடையதாகும்.

'சீதையைப் பெற்ருய் நீயும்' என்றது, 'செருநிலத் திவனை வென்றீர் திருவினுக் குரியீரென்ருன்' என்று கட்டியங்காரன் சீவக னுக்கு விரோதமாய் அரசர்க்குக் கூறியதுபோல; (சீவக. 744); இச் சிந்தாமணிச் செய்யுளின் 1, 2 அடிகளையும் ஒப்பு நோக்குக. சீதையைப் பெறுவதால், இராவணன் பெறக்கூடிய நன்மை இன்னதாம் என்று சூர்ப்பணகை கருதினள் என்பதனையும் ஓர்க. சீதையைப் பெற்ருய் நீயும் என்றது, துணிவு பற்றி அவளை அவன் அடைதல் நிச்சயம் என்று எழுந்த காலவழுவமைதி; சீதையைப் பெற்ருய் நீயும், அதனுலே நன்மை அவர்க்கிலை; உனக்கே எனக் காரணங் காட்டிக் கூறியதும் ஆம். இனி, அந்தரம் பார்க்கின், நன்மை அவர்க்கு; இலை உனக்கே ஐயா, எனப்பிரித்து விபரீதமாக இனி அவனுக்கு நடக்கப்போகும் தீமை புலப்படுமாறு, இச்சொற் ருெடர் சூர்ப்பணகை வாயினின்றும் எழுந்தது என்னலும் அமையும்;

இதனை அவவாக்கு என்பர் வடமொழியில். அடுத்த 829, 630 ஆம் செய்யுள்களிலும் இவ்வாறே மாறு பொருள் பயக்கும்படி சொற்கள் அமைந்துள்ளமை நோக்குக. அந்தரம்-பேதம் அதாவது தாரதம்யம்; முடிவு என்பதும் ஆம். இரு மூன்று வதனத் தோன்றல் என்ற பாடமும் சிறக்கும்.

பி-ம். 1. வதனத்தான்றன்; வதனத்தோன்றல்.
2. செங்கண்மாலும்.
3. சீதையை நீயே பெற்ருய்; பெற்ருனியும்.
4. நினக்கே யையா. (75)

629. பாகத்தி லொருவன் வைத்தான்
பங்கயத் திருந்த பொன்னை
ஆகத்தி லொருவன் வைத்தா
னந்தண ஞவின் வைத்தான்
மேகத்தின் மின்னை முன்னே
வென்றநுண் ணிடையி ஞளை
மாகத்தோள் வீர பெற்ரு
லெங்ஙனம் வைத்து வாழ்தி.

'மாக தோள் வீர - வானோங்கி உயர்ந்து விளங்கும் தோள்களை யுடைய வீரனே! ஒருவன் பாகத்தில் வைத்தான் - மும்மூர்த்திகளில் ஒருவனுன சிவபெருமான் தன் தேவியாகிய உமையைத் தன் மேனி யின் இடப்பாகத்தில் இணைத்து வைத்துக்கொண்டான்; பங்கயத்து இருந்த பொன்னை - தாமரை மலர்மீது இருந்த திருமகளை, ஒருவன் - அம்மும்மூர்த்திகளுள் மற்ருெருவனுன திருமால், ஆகத்தில் வைத் தான் - தன் மார்பிலே வைத்துக் கொண்டான்; அந்தணன் நாவில் வைத்தான் - பிரமதேவன் தன் மனைவியாகிய கலைமகளைத் தன் நாவினிடத்தே வைத்துக்கொண்டான்; மேகத்தின் மின்னை - மேகத்திற் பிறக்கும் மின்னலை, முன்னே வென்ற - முன்னமே வென்றதான, நுண் இடையினுளை - நுட்பமான இடையை யுடைய அந்தச் சீதையை, பெற்ருல் - நீ அடைந்தால், எங்ஙனம் - எவ் விடத்து, வைத்து வாழ்தி - வைத்து வாழ்வாய்?

மாகம் - மகா கம் பெரிய ஆகாயம்; இராவணன் தோள்களை மாகத்தோள் என்றது, அவற்றின் உயர்ச்சியையும், பரப்பையும் சிறப் பித்துக் கூறியபடி; 'பொற்ருேள் விண்டலங்களுற வீங்கி' என்று முன், 557 இல் கூறியதற்கு இணங்க என்க. ஆகம் - மார்பு; 'யாக்கை

யும் மார்புமாக மென்றுரைப்பர்' (பிங்). எங்ஙனம் வைத்து வாழ்தி - எவ்வாறு நீ வைத்து வாழப் போகிறாய்? அதாவது நீ வாழ மாட்டாய்; உன் வாழ்வு அழியும் என்ற பொருள் தொனிக்கவும் நின்றது; முன் 628 ஆம் செய்யுளில், 'நன்மையவர்க்கு உனக்கு இலை' என்றமை போல. எங்ஙனம் - எவ்விடத்து என்று; 'ஙனம்' என்பது இடப் பொருளைக் குறித்து வந்தது என்றுங் கூறுவர். 1, 2 அடிகளுக்கு ஒப்பு. 'கணவரைச் சேர்ந்த பின்பு, பிரிவினை யோர்ந்துமை செந்திரு வாணி பிரிவதின்றி, மருவினர் பாகமு மாகமு நாவு மகிழ்ந் தென்றுமே' (சிராப்பள்ளிக் கோவை. 163).

பி - ம். 1. பங்கயத் திருந்த பெண்ணை.

3. மின்னை முன்னை; மேகத்துப் பிறந்த மின்னை; மின்னை யென்ற நுண்ணிடை யியலை நீயு.

4. எவ்வழி வைத்து. (76)

630. பிள்ளைபோற் பேசு வாளைப்
பெற்றபின் பிழைக்க லாற்றாய்
கொள்ளைமா நிதியமெல்லா மவளுக்கே
கொடுத்தி யைய
வள்ளலே யுனக்கு நல்லேன்
மற்றுநின் மனையின் வாழும்
கிள்ளைபோன் மொழியார்க் கெல்லாங்
கேடுசூழ் கின்றே னன்றே.

'ஐயா - ஐயனே! வள்ளலே - கொடையிற் சிறந்தோனே! பிழைக்கல் ஆற்றாய் - மேற்கொண்ட காரியத்தில் தவறு செய்யாதவனே! பிள்ளை போல் பேச்சினளை - நாகணவாய்ப் பிள்ளை போன்ற பேச்சுக் களையுடைய அந்தச் சிதையை, பெற்றபின் - நீ அடைந்த பிறகு, கொள்ளை போகின்ற செல்வம் - மற்ற உன் காதன் மகளிர்களால் பெரிதும் கொள்ளப்படும் உனது பெரும் செல்வம், அவளுக்கே கொடுத்தி - அந்தச் சிதைக்கே நீ கொடுப்பவனாவாய்; உனக்கு நல்லேன் - உனக்கு நான் நன்மை புரிந்தவளாக ஆகிறேன், (ஆனால்); உன் மனையில் வாழும் - உன் அரண்மனையில் உன் அருள் நாடி இப்பொழுது வாழ்ந்துவரும், கிள்ளைபோல் மொழியார்க்கு எல்லாம் - கிளிப்பிள்ளை போன்ற அழகிய சொல்லையுடைய உன் காதன் மகளிர்க்கெல்லாம், கேடு சூழ்கின்றேன் அன்றே - கேட்டை விளைவிக்கின்றேன்; அல்லவா? மற்று: அசை.

பிள்ளை : பறப்பனவற்றின் இளமை; (தொல். பொருள் : 560, 561). பிள்ளைபோற் பேசுவாள் - மொழிதிருந்தா இளங் குழந்தை போன்ற மழலைப் பேச்சினை யுடையாள் என்றலும் ஏற்கும். பிள்ளை - கிளிப்பிள்ளையும் ஆம். பெற்றபின் பிழைக்க லாற்றுய்-அடைந்தபின் அவள் திறத்து ஒரு தவறும் நீ செய்யமாட்டாய்: அதாவது அவ ளிஷ்டப்படி நீ நடந்து கொள்வாய் எனப் பொருள் கோடலும் ஒன்றும்; இனி முன்னிரு செய்யுட்களிற் கூறியவை போல, நீ அவளைப் பெற்றபின் அழிவது திண்ணம் என்றும் உட்பொருள் தோன்ற நின்றமையும் நோக்குக. கொள்ளை - மிகுதி; பெருவாரியாக அபகரிக்கப்படல் என்னலும் அமையும். மற்று - மற்றவர்களான, என்றலும் ஒன்றும்.

பி - ம். 1. பேசுவாளை ; பிழைத்தலாற்றுய்.
2. பைய ; யம்ம ; கொற்ற.
3. வள்ளலே நினக்கு ; நல்லள் மற்றுநின்.
4. சூழ்கின்ற தன்றே ; சூழ்கின்றே னின்றே. (77)

631. தேர்ந்தந்த வல்குற் சீதை
தேவர்த முலகி லிம்பர்
வார்தந்த முலையி னார்தம்
வயிறுதந் தாளு மல்லள்
தார்தந்த கமலத் தாளைத்
தருக்கினர் கடையச் சங்க
நீர்தந்த ததனைவெல்வா னிலந்தந்து
நிமிர்ந்த தன்றே.

'தேர் தந்த அல்குல் சீதை - தேர் போன்ற அல்குலை யுடைய சீதை, தேவர் தம் உலகில் - தேவர் உலகமாகிய சுவர்க்கத்திலும், இம்பர் - இவ்வுலகத்திலுமுள்ள, வார் தந்த கொங்கையார் தம் - கச்சினுற் கட்டப்பட்டு விளங்கும் கொங்கைகளை யுடைய மகளி ருடைய, வயிறு தந்தாளும் அல்லள் - வயிற்றிலிருந்து பெறப் பெற்ற வளும் அல்லள்; சங்க நீர் - சங்குகள் பொருந்திய பாற்கடல், தருக் கினர் கடைய-அதனைச் செருக்குக் கொண்டவர்களாய்த் தேவாசுரர்கள் முன்கடைய, தார் தந்த கமலத்தாளை - தாமரை மலர்களை மாலையாகக் கொண்ட திருமகளை, தந்தது - முன் அளித்தது; அதனை வெல் வான் - அந்தப் பாற்கடலை வெல்லும் பொருட்டு, நிலம் தந்து - இந்தப் பூமியானது (அத்திருவினும் சிறப்பமைந்த இவளை) பெற் றளித்து, நிமிர்ந்தது - மற்றை யாவற்றினும் ஒரு தனிப் பெருமை யால் உயர்ந்தது; அன்று, ஏ : அசைகள்.

தேர்தந்த ; தந்த, உவம வாசகம். தேர்தந்த அல்குல் ; 621. வார் தந்த கொங்கையர் தம் வயிறு தந்தாளுமல்லள் : அயோநிஜை என்றபடி ; பால. கோலங்காண் 24 ; பிராட்டியை நிலமகள் தந்தனள் ; பால. கார்முகப் ; 16, 17. தார்தந்த கமலத்தாள் - பத்ம மாலையை யுடைய திருமகள் ; 'பத்மமாலாங் தராம் தேவீம் பத்மினீம் பத்ம மாலினீம்' என்று ஸ்ரீஸூக்தமும் சிறப்பிக்கின்றமை காண்க. சங்க நீர் - பாஞ்சஜந்யம் என்னும் சங்கினைத் தந்த பாற்கடல் எனினும் அமையும். சீதை தாய் வயிற்றிற் பிறந்தவளல்லள்; தரையில் தோன்றினவள் என்று கூறினள் என்க. 'இலக்குமியைக் கடல் தந்தது ; அதனை வெல்லும் பொருட்டுச் சீதையைப் பூமி தந்து அக்கடலினும் உயர்ந்தது' ; ஒப்பு. 'குன்றம் மாடக் கோவி னளிக்குங் கடலன்றி அன்றம் மாடத் திம்பரளிக்கு மமுதன்னாள் ; (பால. மிதிலைக் : 26).

பி - ம். 1. முலகினிம்பர். 2. கொங்கை மாதர் ; மல்லாள்.
3. தருக்கின்கடையச்.
4. நீர் வளை ; தியனைவேலை ; வேலைநிலை தந்து ; நிரம்பிற்றேன். (78)

632. மீன்கொண்ட கொடி யினுற்கு
விழாவயர்ந் துலக மேத்தத்
தேன்கொண்ட நெறிமென் கூந்தற்
சிற்றிடைச் சீதை யென்னும்
மான்கொண்டுண் டாடு நீயுன்
வாள்வலி யுலகங் காண
யான்கொண்டூ டாடும் வண்ண
மிராமனைத் தருதி யென்பால்.

'மீன் கொண்ட கொடியினுற்கு - மீனைத் தன் கொடியிற் கொண்ட மன்மதனுக்கு, உலகம் விழா அயர்ந்து ஏத்த - உலகத்தில் உள்ளோர் திருவிழாக் கொண்டாடித் துதிக்கவும், உன் வாள் வலி உலகம் காண - உன் வாளின் வலிமையை உலகம் கண்டு கொள்ளும் படியும், தேன் கொண்ட நெறி மென் கூந்தல் - வண்டுகள் மொய்த்துப் படிப்படியாய்ச் சுருண்டு விளங்கும் மென்மையான கூந்தலையும், சிறு இடை - நுட்பமான இடையையு முடைய, சீதை என்னும் - யான் கூறிய அந்தச் சீதை என்னும், மான் - மான்போன்ற பெண்ணை, நீ கொண்டு உண்டாடு-நீ அடைந்து விளையாடி இன்பம் நுகர்வாயாக; (அதனோடு, உனக்கு இந்த உபகாரஞ் செய்த எனக்கு), யான் கொண்டு ஊடாடும் வண்ணம் - யான் அவனைத் துன்புறுத்துமாறு, என்பால் இராமனை தருதி - என்னிடத்தில் இராமனைத் தந்து விடுவாயாக,

மன்மதனுக்கு விழாவயர்தல் - காமன்பண்டிகை கொண்டாடுதல்; இது, வஸந்த காலத்திற் கொண்டாடப் பெறும் ; வஸந்த காலம் இன்பத்திற்குச் சிறந்த காலமாதலின், அது கருதி மன்மதனுக்கு விழாக் கொண்டாடுதல் மரபு ; சிலப். கடலாடுகாதை. 1·4 ; நாச்சியார் திருமொழி; 1 ; 'தையொரு திங்களும்' என்ற தொடக்கத்துப் பாசுரங்களாலும், "மகர வெல்கொடி மகிழ்கணைக் காமற்கு நகரங் கொண்ட நாளணி விழவின்' (பெருங். 3. 5 : 30-31.) அடிகளாலும் பிறவாற்றாலும் அறியக் கிடக்கும். இராவணன் சீதையைப் பெற்றதை, உலகம் மன்மத விழாக் கொண்டாடி அயரும் என்று அவள் கூறினாள் என்க. இந்த அடிக்கு, 'மதனனே பரத்துவம் என்று உலகம் போற்றும்படி' என்று பழையவுரை பொருளமைக்கும். நெறி மென் கூந்தல்; 'நெறிந்த கருங்குழல் மடவாய்' (பெரியாழ்வார் திருமொழி. 10 ; 1.) உண்டாடுதல் - விளையாடுதல் ; 270 ; கூடி மகிழ்ந்து இன்புறுதலுமாம். 'உன் வாள்வலி யுலகங்காண' என்பது மத்திமதீபம். மான் : உவமையாகு பெயராய்ச் சீதையைக் குறித்து நின்றது. சூர்ப்பணகை, இராவணனுக்குத் தான் ஒரு பேருதவி செய்ததைக் கருதித் தான் விரும்பும் உதவியை அவன் தடையின்றி யளிப்பான் என்ற துணிவு மேற்கொண்டு, தான் இராமபிரான்பாற் கொண்டுள்ள காதலை உள்ளடக்கி, துன்புறுத்தல் என்னும் வெளிப்பொருள் தோன்றக் கூறிய நயம் ஓர்ந்துணரத் தக்கது ; ஊடாடுதல் - இடையே புகுந்து துன்புறுத்தல்.

பி - ம். 1. விழாப்பரித்த ; விழாப்புரிந்த ; விழாவெடுத்த ; மீன் கொண்டோடும் வேலை மேகலை யுலகமேத்த ; விழாப்பலவுலக.
2. தேன் கொண்டோடுங் கூந்தற் ; சீதை செல்வ.
3. மான் கொண்டோட நீயுன் ; நீநின் ; வாள்வலி யுலகம் வாழ்த்த.
4. தருதியென்றுள். (79)

633. தருவது விதியே யென்றாற்
றவம்பெரி துடைய ரேனும்
வருவது வருநா ளன்றி
வந்துகை கூட வற்றோ
ஒருபது முகமு மார்பு
முருவமுங் கண்ணுந் தோள்கள்
இருபதும் படைத்த செல்வ
மெய்துவ தினிநீ யென்றாள்.

'தருவது விதியே என்றால் - ஒருவனுக்கு நன்மை கொடுக்க வல்லது ஊழ் வினையே என்று கூறினால், தவம் பெரிது உடைய

ரேனும் - பெரிதும் தவம் செய்துடையர் ஆனாலும், வருவது - வரக் கூடிய ஒன்று, வரும் நாள் அன்றி - வந்து சேரும் நாளில் அல்லாமல், வந்து கைகூட வற்றோ - வந்து கைகூட வல்லதாகுமோ? (ஆகாது என்றபடி); ஒருபது முகமும் - பத்து முகங்களும், மார்பும் - (வீரம் நிறைந்த) மார்பும், கண்ணும் தோள்கள் இருபதும் - கண்களும் தோள்களும் இருபதாக உள்ளவைகளும் கொண்ட, உருவமும் - உருவத்தையும், படைத்த செல்வம் - பெற்ற உன் செல்வச் சிறப்பையும், நீ எய்வது இனி என்றாள் - சீதையை அடைந்த பின்னரே நீ உண்மையில் அடைந்தவனாவாய்' என்று கூறி, இராவணனுக்குச் சீதைபால் ஆசையைத் தூண்டினாள் சூர்ப்பணகை.

நன்மையையோ தீமையையோ தருவது விதி என்றாலும், இங்கு இராவணனிடம் கூறியது நன்மையையே என்க. அவை வருவதற்கு உரிய காலம் பார்த்தே வரும் என்றது; 'ஆகுநாளன்றி,............ யாகா;' மூதுரை; 'சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா, உறுகாலத் தூற்றாகா ஆமிடத்தே யாகும்'; (நாலடி. 110); 'ஆம்போ தவளோடு ஆம்' என்றமையும் நோக்குக. இதனால் நீ தவத்தினால் பெற்றுள்ள பெருஞ் செல்வ மெல்லாம் சீதையைக் கருதுமிடத்து உண்மைச் செல்வமாகா. சீதையைப் பெற்றால்தான், நீ உண்மையில் பெருஞ் செல்வம் எய்தினவனாவாய் என்றனள் என்க.

பி - ம். 1. தருவதும் விதியே; தவமதுடைய ரேனும்; தவம்புரிந்துடைய ரேனும்.
2. வந்தொன்றுங்; வந்து கை கூடவற்றோ.
3. ஒருபது முகத்துக் கண்ணு; ஒருபது முகமேற் கண்ணுமுரம் பெறு; பொருவது மூக்குங் கண்ணும்; ஒருபது முகத்துக் கண்ணும் புருவமும் முகமும். (80)

634. அன்னவ டன்னே யுன்பா
லுய்ப்பதென் றணுக லுற்ற
என்னையவ் விராமன் றம்பி
யிடைபுகுந் திலங்கு வாளால்
முன்னைமூக் கரிந்து விட்டான்
முடிந்ததென் வாழ்வு முன்னின்
சொன்னபி னுயிரை நீப்பான்
றுணிந்தனெ னென்னச் சொன்னாள்.

அன்னவள் தன்னை - அத்தகைய சீதை என்பாளை, உன்பால் உய்ப்பது என்று - உன்னிடம் சேர்ப்பது என்று கருதி, அணுகல்

உற்று என்னை – அவளைப் பற்றுவதற்கு அவள் அருகில் சென்ற என்னை, அ இராமன் தம்பி - அந்த இராமனுடைய தம்பியாகிய இலக்குவன், இடை புகுந்து - நடுவே ஓடிவந்து புகுந்து, இலங்கு வாளால் - தன்னிடம் விளங்கிய ஒரு வாளினால், முன்னை - அவளை நான் பற்றும் முன்பே, மூக்கு அரிந்து விட்டான் - என் மூக்கை அரிந்துவிட்டான் ; என் வாழ்வும் முடிந்தது - அதனால் என் வாழ்வும் முடிந்தே போய் விட்டது ; உன்னில் சொன்ன பின் - (இவற்றை யெல்லாம்) உன்னிடம் கூறிய பின், உயிரை நீப்பான் துணிந்தனென் - என் உயிரை மாய்த்துக்கொள்வதாகத் தீர்மானம் செய்துகொண்டேன்,' என்ன சொன்னாள் - என்று இராவணனிடம் சூர்ப்பணகை கூறினாள்.

'நீ இழைத்த குற்றம் என்னைகொல்' என்று இராவணன் வினவியதற்கு (619), சூர்ப்பணகை 15 செய்யுட்களில், அவனுடைய காமத்தை எழுப்பி, இச்செய்யுளில், விடை கூறுகின்ற அவள் சூழ்ச்சித் திறம் நோக்கத்தக்கது. முடிந்ததென் வாழ்வு : 'மூக்குப் போய்ப் பிறர் பார்த்து நகைக்கும்படி இராமல் யான் என் வாழ்வையே முடித்துக் கொள்ளத் தீர்மானித்து விட்டேன்' என்றாள் சூர்ப்பணகை ; இவ்வாறே, அவள் தமயன்மார்களுள் ஒருவனான கும்பகருணனும், சுக்கிரீவனால் தன் மூக்கு இழந்த அவமானத்தைத் தாங்காது, இராமபிரானிடம் குறிப்பிட்ட, 'மூக்கிலா முகமென்று முனிவர்களு மமரர்களும், நோக்குவார் நோக்காமை நுன்கணையா லென்கழுத்தை, நீக்குவாய் நீக்கியபின் நெடுந்தலையைக் கருங் கடலுள், போக்குவா யிதுவின்னை வேண்டுகின்ற பொருளென்றான்" (உயுத்த. கும்பகருணன் வதைப் ; 360) என்ற செய்யுளையும் ஒப்பு நோக்கத் தக்கதாகும். கும்பகருணனுக்கும் சூர்ப்பணகைக்கும் உள்ள வேற்றுமை ; முன்னவன் மானமும் நேர்மையு முடையவன் ; பின்னவள் அவையிரண்டு மற்றவள். இனி அயோத்யா காண்டத்திற்கு மந்தரையும், ஆரண்யகாண்டத்திற்குச் சூர்ப்பணகையும் கதைப் போக்கில் நேர்ந்த திருப்பங்களுக்குக் காரணமாவர் என்பதும் நோக்கத்தக்கது.

பி - ம். 1. இன்ன வடன்னை புன்பா லுய்ப்பலென் றெடுக்கலுற்ற ; லுய்ப்ப லென் ; றெடுக்கவேகும்.

3. முன்னமூக் ; முன்னின்மூக் ; வாழ்வுன்றன்பால்.

இராவணன் மோகத்தால் கட்டுண்டல் 635—42.

635. கோபமு மறனு மானக் கொதிப்புமென் றினைய வெல்லாம்
பாபநின் றிடத்தி னில்லாப் பெற்றிபோற் பற்று விட்ட
தீபமொன் றொன்றை யுற்ற லென்னலாஞ் செயலிற் புக்க
தாபமு நானு மொன்று யுயிரொடுந் தழீஇய வன்றே.

கோபமும் - ஆண்மைக்கு உரிய கோபமும், மறனும் - வீரமும், மான கொதிப்பும் - அவமானம் உண்டானதால் எழும் மனக் கொதிப்பும், என்ற - என்று சொல்லத்தகும், இனைய வெல்லாம்-இத்தகைய உணர்ச்சிகளெல்லாம், பாபம் நின்றிடத்து - தீவினை தங்கிய இடத்திலே, நில்லா பெற்றி போல் - நில்லாத (புண்ணியத்) தன்மைபோல, பற்று விட்ட-இராவணனிடத்தில் கொண்டிருந்த தொடர்பு அற்றன ஆயின ; தீபம் ஒன்றை ஒன்று உற்றல் என்னல் ஆம் செயலில்-ஒரு தீபம் மற்றொரு தீபத்தோடு சேர்ந்தால் அன்ன செய்கையில், தாபமும்-(ஆசையாலாகிய) வெம்மையும், காம நோயும் காமம் என்னும் நோயும், உயிரொடும் தழீஇய-இந்த இராவணன் உயிரோடு தழுவி ஒன்றாய்ப் பிணைந்து ஓங்கி நின்றன. அன்று, ஏ : அசைகள்.

கோபம், மறம், மானக் கொதிப்பு முதலிய வீர லக்ஷணங்கள் எல்லாம், பாபம் நின்ற இடத்து (நற்குணங்கள்) நில்லாதனபோல, மோகம் வந்துற்றபோது அவனைவிட்டு நீங்கின என்னப்பட்டது. இதனால் சினம், வீரம், மானம் முதலிய ஆடவர்க்குரிய குணங்களைக் காமம் வென்றமை குறிக்கப்பெற்றது. இஃது, ஓர் சுவை மற்றொரு சுவையால் வெல்லப்படுதற்கு உதாரணம்; ஒரு தீபம் மற்றொரு தீபத்தோடு சேர்ந்தாற்போல, அவனுக்குச் சீதை பால் உண்டான காதலும், அவளையடைய வேண்டும் என்ற ஆசையால் உண்டாகிய வெப்பமும் வேற்றுமையறியாது ஒன்றோடொன்று இணைந்து மேலோங்கி நின்றன என்பதாம். பெற்றி,சிறப்புக்குணமும் ஆம் ; "மாருதி வடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி" (உயுத்த. வீடணனடைக்கலப்: *108*); "யோகத்தின் பெற்றியாலே" *1196*. தழீஇ : சொல்லிசை யளபெடை.

பி-ம். 1. கோபமு மற்றுமானக்; கோபமு மரக்கன்மானக்; நினைய வெண்ணம்.
2. பாவமொன்றிடத்து; தன்மம் போற்; வென்றிபோற்; பாக்கியம் போலத் தேய்ந்த.
3. யென்னலாய்ச் செவியிற்; யென்னலாஞ் செவியிற்.
4. தாபமுங் காமநோயு மாருயிர் கலந்தவன்றே; தாபமு முயிரு மொன்றாய்.

ஒரு சுவடியில் இதன்பின், பின்வரும் அதிகப்பாடல் காண்கிறது; அதனோடு அச்சுவடியில் அவை புகுப்படலம் முற்றி, அடுத்த செய்யுளுடன் மோகப்படலம் தொடங்கும்.

இற்றெலா மரக்கி யாங்கே யெடுத்தவ ளியம்பக் கேட்ட
கொற்றவா ளரக்கன் முன்னே கொண்டவெங் கோபத் தீயின்
சொற்றவர் தரத்தின் வாய்மை யெனும்புனல் சொரித லொடும்
அற்றதாற் பின்பாங் கன்னோன் கருத்தும்வே றுய தன்றே.

636. கரனையு மறந்தான் றங்கை மூக்கினைக் கடிந்து நின்றார்
உரனையு மறந்தா னுற்ற பழியையு மறந்தான் வெற்றி
அரனையுங் கொண்ட காம னம்பினன் முன்பு பெற்ற
வரனையு மறந்தான் கேட்ட மங்கையை மறந்தி லாதான்.

அரனையும் வெற்றி கொண்ட - சிவபிரானையும் ஜயங்கொண்ட, காமன் அம்பினல் - மன்மதன் பாணத்தால் (கட்டுண்டவனாய்), கேட்ட மங்கையை மறந்திலாதான் - சூர்ப்பணகை சொல்லத் தான் கேட்ட மங்கையாகிய சீதையை மறக்க முடியாது, (அவள் பால் காதல் மேற்கொண்ட) இராவணன், கரனையும் மறந்தான் - தன் தம்பி முறையில் உள்ள கரன் இறந்தான் என்பதையும் மறந்துவிட்டான்; தங்கை - தன் தங்கையாகிய சூர்ப்பணகையின், மூக்கினை - மூக்கை, கடிந்து நின்றார் - துண்டித்தும் உயிர் கொண்டிருந்த இராம லக்ஷ்மணர்களின், உரனையும் மறந்தான் - வலிமையையும் மறந்தவனானன்; உற்ற பழியையும் மறந்தான் - தனக்கு உண்டான நிந்தனையையும் மறந்தவனானன்; முன்னை பெற்ற - முன் தான், பிரமதேவன், சிவபிரான் முதலியவர்களிடம் பெற்ற, வரனையும் - வரன்களையும், மறந்தான் - மறந்தவனானன்.

உம்மைகள் யாவும் எண்ணும்மைகள்; இவற்றை உயர்வு சிறப்பு உம்மைகளாகக் கொள்வாரும் உளர். இனி, கரன்முதல், பெற்ற வரன் முதலியவற்றை மறந்த இராவணன், கேட்ட மங்கையைமட்டும் மறக்கமாட்டாதவனானன் எனவும் பொருள் கொள்ளலாம். இதனல் இராவணன், சீதைபாற் கொண்ட எண்ணம் தவிர மற்ற ஒன்றிலும் மனம் நாடினனல்லன் என்பதாம். உரன், வரன்: என்பன உரம், வரம் என்பனவற்றின் போலிகள்; 'வரனையுமறந்தான் - முக்கோடி அரைக்கோடி வாணாளும் இந்தக் குற்றத்தினல் அழியுமென்பதையும் மறந்தான்' என்பது பழையவுரை.

பி-ம். 1. கடிந்து நின்றான்; கடிந்தே நின்ற. 2. மறந்தான் மேலாம்.
3. அரனையும் வென்றகாமன்; முன்னைப்; முன்னம்; காமனம்பினல் வெம்பி முன்னை.
4. மங்கையை மறந்திடாதான்; மறக்கிலாதான். (83)

637. சிற்றிடைச் சீதை யென்னு
நாமமுஞ் சிந்தை தானும்
உற்றிரண் டொன்ருய் நின்ரு
லொன்ரெழித் தொன்றை யுன்ன
மற்ரெரு மனமு முண்டோ
மறக்கலாம் வழிமற் றியாதோ
கற்றறி ஞான மின்றேற்
காமத்தைக் கடக்க லாமோ.

சிறு இடை சீதை என்னும் நாமமும் - நுட்பமான இடையை யுடைய சீதை என்னும் பெயரும், சிந்தைதானும் - அந்த இராவண னுடைய மனமும், இரண்டு - ஆகிய இரண்டும், ஒன்ருய் உற்று நின்ருல் - ஒன்ருகப் பொருந்திச் சேர்ந்திருந்தால், ஒன்று ஒழிந்து ஒன்றை உன்ன - அவ்விரண்டில் ஒன்றைவிட்டு மற்ருென்றை மட்டும் நினைக்க, மற்று ஒரு மனமும் உண்டோ - வேறு ஒரு மனம் தனித்து அவனுக்கு உள்ளதோ? (இல்லை என்றபடி); மறக்கல் ஆம் வழி மற்றும் யாதோ - அந்தச் சீதையை அவன் தன் மனத்தினின் றும் மறக்கக் கூடிய வழியும் வேறு உள்ளதோ? (அதுவும் இல்லை என்பதாம்); கற்று அறி ஞானம் இன்றேல் - நூல்களைக் கற்று அதன் மூலம் அறிந்து கொள்வதான ஞானம் என்பது ஒருவனுக்கு இல்லையானல், காமத்தைக் கடக்கல் ஆமோ - காமத்தை வென்று அதனைவிட்டு விலக முடியுமோ? (முடியாது என்பதாம்).

கடைசி அடியில் ஒரு சிறந்த நீதி அடங்கியுள்ளது. மனம் ஓர் உணர்ச்சி வயப்பட்டால் அதனை மாற்ற ஞானமே வேண் டும் என்பதும், ஞானத்தைத் தவிர வேறு வழியில்லை யென் பதும் இங்குக் கூறப்பெற்றன. ஞானம் - உண்மை யறிவு. இரா வணன், வேத மாயிரம் வந்தோன்; அறிவாளன்; இவ்வாறு அவன் கல்வி கற்றும், ஞானம் பெறவில்லை யென்பது குறிப்பு. இதனுலே போலும், 'கற்றுமறி வில்லாத வென்கன்மத்தை யென்சொல்லு வேன்' என்று தாயுமானவர், இவ்விராவணன் போன்ற பிறர் குற்றத் தைத் தம் மேலேற்றிக் கூறி வருந்தினுர் போலும்! "பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்ருல்' (பால. நாட்டுப்: 10) என்பதால் இக்கருத்து வலியுறுத்தப் பெறுவதும் காண்க. இச்செய்யுள் வேற்றுப் பொருள்வைப்பணியின் பாற்படும். இக் கருத்தை ஒட்டி, ஞானத்தால் குற்றத்தைக் களையவேண்டும் என் பது, 'காமத்தாற் கனலும் வெந்தீச், சீலத்தா லவிவ தன்றிச்

செய்யத்தானுவ துண்டோ' (657) என்று கூறியதிலும் காண்க. இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 1. சிந்தை தேர்வான்.

2. தொன்றையுன்னு; லொன்றெழிர்.

4. கற்றனர் ஞான; கற்றிடு ஞான; கற்றிலான் ஞானமின்றேற்; கற்றிலா ஞான மின்றேற்; கற்றுணர் ஞான மின்றேற். (84)

638. மயிலுடைச் சாய லாளை
வஞ்சியா முன்ன நீண்ட
எயிலுடை யிலங்கை வேந்த
னிதயமாஞ் சிறையி லிட்டான்
அயிலுடை யரக்க னுள்ள
மவ்வழி மெல்ல மெல்ல
வெயிலுடை நாளி லுற்ற
வெண்ணெய்போல் வெதும்பிற் றன்றே.

நீண்ட எயில் உடை - நீண்ட மதில்களையுடைய, இலங்கை வேந்தன் - இலங்கைக் கரசனான இராவணன், மயில் உடை சாய லாளை - மயில் பெற்றுள்ள சாயலையுடைய சிதையை, வஞ்சியா முன்னம் - வஞ்சனையால் அபகரிக்காத முன்பே, இதயம் ஆம் சிறை யில் இட்டான் - தன் இருதயமாகிய சிறையில் இட்டு அடைத்து விட்டான்; (அதனால்), அயில் உடை அரக்கன் உள்ளம் - வேலை யுடைய அரக்கனாகிய இராவணன் மனம், அ வழி - அப்பொழுது, வெயில் உடை நாளில் - வெயில் மிகுதியாகவுடைய பகற்பொழுதில், உற்ற - அவ்வெயிலில் வைக்கப்பெற்ற, வெண்ணெய் போல் - வெண் ணெயைப்போல, மெல்ல மெல்ல - கொஞ்சங் கொஞ்சமாய் மெதுவாக, வெதும்பிற்று - வெந்து உருகியது. அன்று, ஏ : ஈற்றசைகள்.

மயில் உடை சாயலாளை - மயில் உடைந்து தோற்றுப்போகும் மேனியையுடைய சிதையை எனவும் பொருள்கொள்ளலாம்; "ஆடு இன்ற மாமயிலினு மழகிய குயிலே" (அயோத். சித்திரகூடப்; 12.) என்றதும் நோக்குக. எயிலுடை இலங்கைவேந்தன் இதயமாம் சிறை: 'சானகியை மனச்சிறையிற் கரந்த காதல்'; (உயுத்த. இராவணன் வதைப்: 239.) இலங்கை பிறர் உட்புக முடியாத எயில்களையுடையது; அப்படிப் புகுந்தாலும் இராவணன் இருப்பிடம் யாரும் அணுக முடி யாது; அந்த இராவணனை அடைந்தாலும் பிறர் அறியாத அவன்

மனத்தில் ஒளித்து வைத்தான் எனச் சிறையின் வலி இங்குக் கூறப் பெற்றது எனக் கொள்க. 'வஞ்சியா முன்னம்......சிறையிட்டான்'; ஒன்றைச் செய்வதன்முன் அதனையொத்த பிறிதொன்றைச் செய்த தாகக் கூறியது : ஒப்பு. அயோத். 84. கைகசி சூழ் : நள. சுயம்வர: 20. வெயிலுற்ற வெண்ணெய் ; ஒப்பு. 'வெய்ய பாறையில் வெண்ணெய் நிகர்க்குமால்' (297) ; 'ஞாயிறு காயு வெவ்வறை மருங்கில்............ வெண்ணெ யுணங்கல்போல' (குறுந். 58: 3—5.); 'வெண்ணெய்க்குன் றெரியுற்றுற்போல்' (சீவக. 1597) ; சூளா. 1020.

பி-ம். 1. வஞ்சியை முன்ன ; வஞ்சியா முன்னே நின்ற.
2. யிலங்கைநாத
4. நாளிலுள்ள ; விளம்பிற்றன்றே ; உருகிற்றன்றே. (85)

639. விதியது வலியி னாலு மேலுள விளைவி னாலும்
பதியுறு கேடு வந்து குறுகிய பயத்தி னாலும்
கதியுறு பொறியின் வெய்ய காமநோய் கல்வி நோக்கா
மதியிலி மறையச் செய்த தீமைபோல் வளர்ந்த தன்றே.

விதியது வலியினாலும் - ஊழ்வினையின் வலிமையாலும், மேல் உள விளைவினாலும் - இனிமேல் நடக்கவேண்டிய செயல்களைக் கருதியும், பதி உறு கேடு வந்து குறுகிய பயத்தினாலும் - அந்த இலங்கை நகருக்கு நேரவிருக்கும் நாசமானது நெருங்கியுள்ள பயனா லும், கதி உறு பொறியில் - வேகமாகச் சுழல்கின்ற இயந்திரம் போல, வெய்ய காம நோய் - கொடிய காமப் பிணியானது, கல்வி நோக்கா - கல்வியின் நலனை நாடாத, மதி இலி - மதியற்ற மூடன் ஒருவன், மறையச் செய்த - பிறர் காணாது செய்த, தீமைபோல் - பாவச்செயல் போல, வளர்ந்தது - வளர்ந்து ஓங்கியது. அன்று ; ஏ : ஈற்றசைகள்.

காமநோய் வளர்ந்தது என்க. அதற்குக் காரணங்களும், உவ மையும் கூறப்பெற்றன. கதி உறு பொறியில் - வேகம் பொருந்திய அவன் புலன்களில் என்றலும் ஒன்றும்; பொறி, மனத்தையும் குறித்தது என்னலாம். மறையச் செய்த தீவினை வளரு மென்பது ; "மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம், பறை யறைந்தாங் கோடிப் பறக்கும் - கழிமுடைப் புன்புலா னாற்றம் புறம் பொதிந்து மூடினும், சென்றுதைக்குஞ் சேயார் முகத்து' (நீதிநெறிவிளக்கம் : 95); இஃது எடுத்துக்காட்டு உவமையணி. இச் செய்யுளில், இராவணன்

பிராட்டி காரணமாகக் கொண்ட நோய்க்குக் காரணங்கள் கூறியுள்ளமை காண்க.

பி - ம். 1. விரியுது வகையினுலும்; மேலுள வினவினுலும்.
3. கரியது பொறியில். (86)

640. பொன்மய மான நங்கை
மனம்புகப் புன்மை பூண்ட
தன்மையோ வரக்கன் றன்னை
யயர்த்ததோர் தகைமை யாலோ
மன்மதன் வாளி தூவி
நலிவதோர் வலத்த னானன்
வன்மையை மாற்று மாற்றல்
காமத்தே வதிந்த தன்றே.

பொன் மயம் ஆன நங்கை - முழுவதும் பொன்னால் அமைந்தது போன்ற வடிவிற் சிறந்த அப்பிராட்டி, மனம் புக - தன் மனத்திற் புகுந்ததால், புன்மை பூண்ட தன்மையோ -அவ்விராவணனின் மனம் புன்மையைக்கொண்ட தன்மையோ? (அல்லது), தன்னை அயர்த்தது ஓர் தகைமையாலோ - தன்னையே மறந்து மயங்கிய ஒரு நிலைமை யாலோ? அரக்கன் தன்னை - அரக்கனான இராவணனை, மன்மதன் மன்மதனும் (அவனிடம் அஞ்சாமல்), வாளி தூவி - தன் மலர்க் கணைகளை அவன்மீது ஏவி, நலிவது ஓர் வலத்தன் ஆனான் - துன்புறுத்துவதான வலிமை யுடையவனானான்; (இதனால்) வன்மையை மாற்றும் ஆற்றல் - எந்த வலிமையையும் மாற்றிப் போக்கக் கூடிய சக்தி, காமத்தே வதிந்தது அன்றே - காமத்தினிடத்திற் பொருந்தி யுள்ளது அல்லவா?

மிகுந்த வலிமை பொருந்திய இராவணனையும் மெலிவிக்கத் தக்க வலிமை மன்மதன் பெற்றான் என்றது, காமத்தின் வலிமையைக் கூறியவாறு. புன்மையும், அயர்வும் தோன்ற மனவலி கெடும் என்பதும் கூறப்பெற்றது. சீதையைப் பொன் என்பது 288; சுந்தர. 654. 'வன்மையை......வதிந்த தன்றே' இஃது ஓர் அரிய நீதியாகும். அன்று, ஏ : அசைகளும் ஆம்.

பி - ம். 1. மனம்புக்க; மடமைபூண்ட.
2. தன்மையாலோ; தன்மைய; வாளிதூவ வலியதோர் பயத்தி னன்றன். 3. வலத்தினலோ.
4. வன்மையை யாற்றுமாற்றல்; காமத்தை வருத்தன்றே; காமத்தின் வசத்ததன்றே; மாற்றுந் தன்மை. (87)

641. இழிந்தன னிருக்கை நின்ருண்
டேழுல கத்து ளோரும்
மொழிந்தன ராசி யோசை
முழங்கின சங்க மெங்கும்
பொழிந்தனர் பூவின் மாரி
போயினர் புறத்தோ ரெல்லாம்
அழிந்தயர் சிந்தை யோடு
மாடகக் கோயில் புக்கான்.

இருக்கை நின்று இழிந்தனன் - (இவ்வாறு காம வயப்பட்டுச் சிந்தை அயர்ந்த இராவணன்), தன் சிங்காதனத்தை விட்டு இழிந்தான்; ஆண்டு - அப்பொழுது அங்கிருந்த, ஏழ் உலகத்தோரும் - ஏழுலகத்தவர்களும், ஆசி மொழிந்தனர் - ஆசீர்வாத மொழிகளைக் கூறி அவனை வாழ்த்தினர்; சங்கம் எங்கும் ஓசை முழங்கின - சங்குகளின் ஒலி எங்கும் முழங்கின; புறத்தோர் எல்லாம் - அங்கு அவன் அருகே யிருந்தவர் அனைவரும், பூவின் மாரி பொழிந்தனர் போயினர் - இராவணன் மீது மலர் மழை தூவித் துதித்துப் புறம் சென்றனர்; (இராவணனும்), அழிந்து அயர் சிந்தையோடும் - அழிந்து வாடும் மனத்தினேடும், ஆடக கோயில் புக்கான் - பொன்னால் அமைந்த தன் அரண்மனையிற் புகுந்தான்.

அரசன் தன் சிங்காதனம் விட்டு எழுந்து செல்லும் போதும், வந்து அமரும்போதும் சங்கம் முதலிய வாத்தியங்கள் முழங்கச் சபையோர், பூக்களைத் தூவி ஆசீர்வதித்தல் மரபு; இஃது ஆசிரியர் காலத்துச் சோழர் மாட்டும் உள்ளதாம் என்றும் கருதலாம்: ஆடகம்; ஹாடகம் என்ற வடசொல்லின் திரிபு; ஆடகம், பொன்னின் ஒரு வகை: மற்றவை, கிளிச்சிறை; ஜாதரூபம், ஜாம்பூநதம் என்பன. இங்கு ஆடகம் என்பது, பொன் என்ற பொதுப்பெயரை யுணர்த்தி நின்றது.

பி-ம். 1. எழுந்தன; னிருக்கை விட்டாங் கெவ்வுலகத்து ளோரும்; னிருக்கை நின்று; நின்றுமே லுலகத்துளோரும்.

2. ராசியோசை முழங்கின சங்கமூதிப்;

3. போயினர்.

4. அழிந்தொழி; அழிந்திழி; அழிந்தயர்; அழிந்தெறி. (88)

642. பூவினுல் வேய்ந்து செய்த
பொங்குபே ரமளிப் பொற்பின்
தேவிமார் வெள்ள நீங்கிச்
சேர்ந்தனன் சேர்த லோடும்
நாவிநா ருேதி நவ்வி
நயனமுங் நலனு நண்ணிப்
பாவியாக் கொடுத்த வெம்மை
பயப்பயப் பயந்த தன்றே.

தேவிமார் வெள்ளம் நீங்கி - (அவ்விராவணன்) தன் தேவியர் கூட்டத்தை விட்டு நீங்கி, பூவினுல் வேய்ந்து செய்த - மலர்களால் அலங்கரித்து அமைத்த, பொற்பின் பொங்கு பேர் அமளி-அழகினுல் மிகுந்து சிறந்து விளங்கிய பெரிய தன் படுக்கை யிடத்து, சேர்ந்தனன் -போய் அடைந்தான் ; சேர்தலோடும் - (அவ்வாறு அமளியைச்) சார்ந்தபோது, நாவி நாறு ஓதி - கத்தூரி மணங்கமழும் கூந்தலை யுடைய பிராட்டியின், நவ்வி நயனமும் - மான் போன்ற கண்களும், நலனும் - மற்ற அங்க லக்ஷணங்களும், நண்ணி - இராவணன் மனத்துட் புகுந்து, பாவியா கொடுத்த - பாவித்ததனுல் விளைந்த, வெம்மை - தாபமானது, பய பய - மெல்ல மெல்ல, பரந்தது - அவன் உடலெங்கும் விரிந்து வருத்தியது ; அன்று ; ஏ : ஈற்றசைகள்.

நாவிநாருேதி ; அன்மொழித் தொகையாய்ப் பிராட்டியைக் குறிப்பது ; உத்தம மகளிர் கூந்தல் நன்மணம் கமழுமாதலால் ; குறுந். 2. பயப்பய ; "பாடகக் காலினுரைப் பயப்பயக் கொண்டு போனுர்" (பால. எழுச்சிப் : 53.)

பி-ம். 1. ரமளிப் பொற்பிரு ; 'பூவினுல் வருந்திச் செய்த பொங்கு பேரமளிப் பொற்பின் ; பொங்கு பொங்க மளிக்கோதை.

2. குழுவு நீங்கச்.

3. நயனமும் குயமும் புக்கு ; நயனமு மனமு நண்ணிப்.

4. பாவியாற்கொடுத்த ; பாவியான்; பாவினும். (89)

### வேறு

### இராவணனின் விரகதாபம் 643—7

643. நூக்க லாக லாத காத லூறு நூறு கோடியாய்ப்
பூக்க வாச வாடை வீசு சீத நீர்பொ திந்தமென்
சேக்கை வீக ரிந்து திக்க யங்க ளெட்டும் வென்றதோள்
ஆக்கை தீய வுள்ள நைய வாவி வேவ தாயினன்.

(காமத்தில் வீழ்ந்த இராவணன்), நூக்கல் ஆகலாத - தள்ளி விலக்குவது என்பது முடியாத, காதல் - பிராட்டிபாற் கொண்ட காம இச்சை, நூறு நூறு கோடியாய் - பல நூற்றுக் கணக்கான கோடிகளின் மடங்காக, பூக்க - விரிந்து வளர, வாடை வீசு சீத நீர் பொதிந்த - வடக்குத் திசையிலிருந்து வீசும் குளிர்ந்த நீர் நிரம்பி யுள்ளனவும், மென் சேக்கை - மெல்லிய படுக்கையின் மீது பரப்பப் பட்டனவுமான, வாச வீ - மணம் நிறைந்த மலர்கள், கரிந்து - கருகிப் போகவும், திக்குக் கயங்கள் எட்டும் - எட்டுத் திக்கு யானைகளையும், வென்ற - முன் வென்று தோற்கடித்த, தோள் ஆக்கை - தோள் களும் அவனுடைய உடலும், தீய - எரியவும், ஆவி வேவது - அவன் உயிர் வெந்து நைவது, ஆயினன் - ஆனான்.

இராவணனின் விரகத்தால், அவன் உடல் முழுவதும் வெதும்பி, அவனுடைய படுக்கை மீதுள்ள மலர்கள் கரிந்தன; இனி, வாச வாடை வீசுவனவும், சீதநீர் பொதிந்தனவுமான மென் சேக்கை வீ எனவும் பொருள் கொள்ளலும் ஆம். அவன் தோள்களும் உடலும் எரிந்தன என்பதாம். நூக்குதல் - விலக் குதல்; சுந்தர. 91; "நூக்கிப் புறத்திரு போகென்னு மின்னாச் சொல்" (நாலடி. 326); நூறு கோடி என்பது அளவு மிகுந்தது என்பதைக் குறிக்க வந்தது. காற்றில் மழைக் குளிர்ச்சியும் கலந்து வருவது; சிலப். மனையறம்: 14-15. பூத்தல் - மலர்தல், விரிதல். சேக்கை - படுக்கை; 673; அயோத். நகர்நீங்கு - 222. இது முதல், ஆறு பாடல்கள் பாலகாண்டம் கார்முகப் படலத்தில் பிராட்டியின் ஒருதலைக் காமமான கைக்கிளைப் பகுதியில் வந்துள்ள போன்ற சந்தத்தில் அமைந்துள்ளன; இவ்வாறே நைடதத்திலும் கைக்கிளைப் படலத்தில் இவ்விதச் சந்தப் பாக்கள் காணப் பெறு வதால், இத்தகைய சந்த விருத்தங்களைக் கைக்கிளையை விளக்க ஆன்றோர் இயற்றிச் செல்லுதல் மரபு எனக் கொள்ளலாம்.

காமத் தியால் மலர் முதலியன கரிதல்; பால. மிதிலைக். 50, 81; சுந்தர. 425.

பி - ம். 1. தூக்கலாத காதனின்று.........கோடியாப்.
2. பூக்கயாசை ; பூக்கொள்வாசத் ; பூக்கலாதயாடை.
3. சேக்கை வீய கரிந்து ; சேக்கவீய் கரிந்து ; சேக்கை மீதரிந்து ; சிந்தைவேறு முன்பு தேயலா ; சேக்கைமீ திருந்து சிந்தை வேவ; வெந்து தேயவும்.
4. ஆக்கை தேய : ஆக்கை வீய. (90)

644. தாது கொண்டு சீத முஞ்சு மந்து தண்ணெ னந்தமென்
போது கொண்ட டுத்த போது பொங்கு தீம ருந்தினுல்
வேது கொண்ட தென்ன மேனி வெந்து சிந்த விம்முதீ
ஊது வன்று ருத்தி போலு யிர்த்து யிர்த்து யங்கினுன்.

தாது கொண்டு - மகரந்தங்களைத் தம்மிடத்துக் கொண்டு, சீதமும் சுமந்து - குளிர்ச்சியையும் தாங்கி, தண் என் - குளிர்ச்சியான, அந்த - அழகிய, போது கொண்டு - மலர்களை எடுத்துக்கொண்டு, அடுத்த போது - அவ்வாடைக் காற்று தன்னிடம் வந்தபோது, பொங்கு தீ மருந்தினுல் - மேற்கிளம்பி எரிகின்ற சூடான ஒரு மருந்தினுல், வேது கொண்டது என்ன - வேது பிடிக்கப்பட்டது போல, மேனி வெந்து - தன் உடல் வெந்து, சிந்த - சிதற, விம்மு தீ - மிகுந்து எழும் தீயை, ஊது - ஊதுகின்ற, வன் துருத்தி போல் - கொல்லனின் வலிய உலைத் துருத்தியைப்போல, உயிர்த்து உயிர்த்து - அடிக்கடி பெருமூச்சுவிட்டுக்கொண்டு, உயங்கினுன் - இராவணன் வருந்திச் சோர்ந்தான்.

இராவணனுக்குப் பணிப்பெண்டிர் குளிர்ச்சி பொருந்திய பொருள்களைக் கொண்டு சைத்யோபசாரங்களைச் செய்ய, அவை கொடிய மருந்துகொண்டு வேது பிடிப்பது போல் அவனுக்கு, எரிச்சலை மிக்கு உண்டாக்கின என்க. வேது - சூடான ஒற்றடம்; 'வேதினெற்றி'; (கலித். 1060 ; 35), 'தடமுலை வேதுகொண் டொற்றியும்' (கலிங்கத். 55.). நெருப்பு மயமான பெருமூச்சு விட்டு வருந்தி நொந்தான் என்க. கொல்லுலைத் துருத்திபோல மூச்சுவிடுதல்: 'உலைமுகப் புகை நிகருயிர்ப்பின் மாய்ந்ததே'; (பால. மிதிலைக் ; 48); "ஊதுலையிற் கனலென்ன வெய்துயிர்த்தான்" (அயோத். கைகேசி

சூழ்வினைப் : 12) ; 'ஊதுலைக்குருகி னுயிர்த்து' (மணி. 2 : 43). ஊதுவன் துருத்தி - ஊதுகின்ற கொல்லன் துருத்தி, என்னலும் அமையும். உயிர்த்துயிர்த்து ; அடுக்கு, மிகுதிப்பொருளது.

பி - ம். 1. சீதமேவு; சீதமூசு சாந்துகந்த ; சந்துதந்த.
2. போது கொண்ட வித்தபோது ; போது கொண்ட பாயல்மீது பொங்கு தீயருந்தினால்.
3. வெந்து வெந்து விம்முதீ.
4. ஊதுவன் துருத்தி. (91)

645. தாவி யாது தீயெ னூது தைய லாளை மெய்யுறப்
பாவி யாத போதி லாத பாவி மாழை பானல்வேல்
காவி யான கண்ணி மேனி காண மூளு மாசையால்
ஆவி சால நொந்து நொந்த ழுங்கு வானு மாயினான்.

தாவியாது - மனத்தை ஒரு நிலையில் நிறுத்தாமலும், தீ எனூது - (பிறர் மனைவியை விரும்புதல்) நெருப்பை அணுகுவது போன்றது என்று கருதாமலும், தையலாளை - சீதையை, மெய் உற - உண்மையாக, பாவியாத - மனத்தில் நினையாத, போது இலாத - நேரம் இல்லாத, (அதாவது எப்பொழுதும் எண்ணிக்கொண்டிருந்த), பாவி - பெரும் பாவியான இராவணன், மாழை பானல் வேல் காவி - மாவடு, கருநெய்தல், வேல், நீலோற்பலம், ஆன - இவை போன்ற, கண்ணி - கண்களையுடைய அப்பிராட்டியின், மேனி காண - திருமேனியைக் காண்பதற்கு, மூளும் - மேன் மேலும் அதிகரிக்கும், ஆசையால் - விருப்பத்தால், ஆவி சால நொந்து நொந்து - தன் உயிர் மிகவும் வருந்தி, அழுங்குவானும் ஆயினான் - துன்புறுவானுமானான்.

தாவியாது - ஸ்தாபியாது ; அதாவது நிலை நிறுத்தாது; பாவித்தல் - மனத்தால் உருவைச் சங்கற்பித்துக் கொள்ளுதல்; 642 ; "உன்னை யல்லாற் பாவியேன் பாவியேன்" (தொண்டரடிப் பொடி. திருமாலை. 35.) மாழை - அழகிய எனும் பொருள்கொண்டு, பானல் வேல், காவி என்பவற்றிற்கு அடைமொழியாகவுங் கொள்ளலாம். 'தாவியாது - பிறர் பெண்ணைத் தொடவொண்ணாதென்ற சாபத்தை நிறுத்தாது எனவும், தவியாதெனவுமாம். பாவியாத போதிலாத பாவி - எப்போதும் நினைக்கிறதே தொழில். மாழை - மான்' இவை பழையவுரை. இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 1. தீயெனூது; தையன்மானை. 3. காவியாகு. (92)

**646.** பரங்கி டந்த மாதி
ரஞ்சு மந்த பாழி யானையின்
கரங்கி டந்த கொம்பொ
டிந்த டங்க வென்ற காவலான்
மரங்கு டைந்த தும்பி
போல னங்க பாணம் வந்துவந்
துரங்கு டைந்து நொந்து
நொந்து ளைந்து ளைந்தொ டுங்கினான்.

பரம் கிடந்த மாதிரம் - பாரம் தங்கியுள்ள திக்குக்களை, சுமந்த - தாங்கிய, பாழி யானையின் - பருத்த திக்கயங்களின், கரம் கிடந்த - துதிக்கையின் புறத்தில் பொருந்தியிருந்த, கொம்பு ஒடிந்து (உரம்) அடங்க - தந்தங்கள் ஒடிந்து தன் மார்பிற் புதைந்து உள்ளடங்குபடி, வென்ற காவலான் - வெற்றிகொண்ட ஆட்சியனான இராவணன், அனங்கபாணம் - மன்மதன் பாணங்கள், வந்து வந்து - மேன் மேலும் வந்து, மரம் குடைந்த தும்பி போல் - பட்டுப்போன மரத்தைக் குடைந்து துவாரம் செய்த வண்டுகளேபோல, உரம் குடைந்து - அந்தத் தன் மார்பைக் குடைந்து, நொந்து நொந்து - அதனால் மேன்மேலும் துன்புற்று, உளைந்து உளைந்து - மனம் மிகவும் நோவுற்று, ஒடுங்கினான் - செயலற்று ஒடுங்கிப் போனான்.

இராவணன் மார்பில் யானைத் தந்தம் அடங்கினமை; உயுத்த. இராவணன் வதைப் : 213. அடங்கிய, என்பதை யானைக்கே கூட்டியும் பொருள் கொள்ளலாம். மரங்குடைந்த தும்பி : பட்ட மரத்தினுள் உள்ள புழு முதலியவற்றை உண்ண, துளைத்து உட்செல்லும் வண்டுகள்; இங்குப் பிராட்டியை நினைந்து ஆவி சோர்ந்த நிலையில் இருக்கும் இராவணனுக்குப் பட்ட மரமும், அநங்க பாணங்களுக்கு, வண்டுகளும் உவமைகள் ஆயின. நொந்து நொந்து, உளைந்து உளைந்து; இவ்வடுக்குகள் மிகுதியைக் குறித்து வந்தன. கொம்பொடிந்து கிடந்த உரம், வாளியால், தும்பி குடையும் நிலைமை பெற்றது என்க.

பி - ம். 1. *பரித்தபாழி ; சுமந்த பார யானையின் ;*
2. *கொம்பொடிந் திரங்க ; கொம்படர்ந் தடங்க ; கொம்பொடித் தடங்க ; காவலன்.*
3. *னங்கன் வாளி யைந்தும் வந்து ; வாளி வந்து.*
4. *துரங் குடைந் துள்ளுருவ நொந்து நொந் துளைந் தொ துங்கினான் ; குடைந்துருக நெஞ்சு ; குடைந்தொருங்க.* (93)

647. கொன்றை துன்று கோதை யோடொர்
கொம்பு வந்தெ னெஞ்சிடை
நின்ற துண்டு கண்ட தென்று
ழந்த ழுங்கு நீர்மையான்
மன்ற றங்க லங்கன் மாரன்
வாளி போல மல்லிகைத்
தென்றல் வந்தெ திர்ந்த போது
சீறு வானு மாயினன்.

'கொன்றை துன்று கோதை ஓடு - கொன்றைக்காய்கள் நெருங்கின போல விளங்கும் கூந்தலோடு, ஓர் கொம்பு வந்து - ஒரு பூங்கொம்பு போன்ற மங்கை வந்து, என் நெஞ்சு இடை நின்றது கண்டது உண்டு என்று-என் மனத்தினிடத்தே தங்கிநின்றது யான் கண்டது உண்டு' என, உழந்து அழுங்கு நீர்மையான் - வருந்தி மனம்நோகின்ற தன்மையுடையவனான இராவணன், மன்றல் தங்கு அலங்கல் மாரன் - மணம் தங்கிய மாலை அணிந்த மன்மதனுடைய, வாளி போல-மலர்க்கணைகளைப் போல, மல்லிகை தென்றல் வந்து, - மல்லிகை மணத்தோடு இளந்தென்றற் காற்றானது வந்து, எதிர்ந்த போது - தன்னைத் தாக்கி வீசிய போது, சீறுவானும் ஆயினன் - அந்தத்தென்றல் காற்றின்மீது கோபித்தவனும் ஆனான்.

கொன்றைக் காய்களை மகளிர் கூந்தலுக்கு உவமை கூறுவது; உபமான சங்கிரகம். கோதை - கூந்தல்; (பிங்); 'கொன்றை துன்று கோதை - கொன்றைக் காய்போல் நீண்டகுழல்' என்பது பழையவுரை. ஒப்பு : 'கொன்றையம் பூங்குழலாள்' 'சிலப். ஆய்ச்சியர் : அடியார்க்' உரை.) கொம்பு; உவமையாகுபெயர். 'மன்றல் தங்கு' என்பதை, வாளிக்கும் இயைத்துப் பொருள் கொள்ளலாம். தென்றலும் மன்மத பாணம்போற் காமுகரை வருத்தும்; 'தென்றற் புலியே யிரைதேடுதியோ'; (பால. கடிமணப் : 7). இச் செய்யுள் இராவணன் கண்ட உருவெளித்தோற்றம் கூறியது.

பி - ம். 2. நின்றதென்று கண்டதென்று; நின்றதுண்டெனக் கசிந்த.
3. தெழுந்த போது.

இராவணன் ஒரு சோலையை அடைந்து,
அங்குப் பருவங்களை அழைத்துப் பின் நீக்கல் **648—57**

**648.** அன்ன காலை யங்கு நின்றெ
ழுந்த ழுங்கு சிந்தையான்
இன்ன வாறு செய்வெ னென்றொ
ரெண்ணி லானி ரங்குவான்
பன்னு கோடி தீப மாலை
பாலை யாழ்ப்ப ழித்தசொற்
பொன்ன னாரெ டுக்க வங்கொர்
சோலை யூடு போயினான்.

அன்ன காலை - அப்பொழுது, அழுங்கு சிந்தையான் - வருந்தும் மனமுடைய அவ்விராவணன், அங்கு நின்று எழுந்து - அந்தப் படுக்கையினின்றும் எழுந்து, 'இன்ன ஆறு செய்வென் என்று - இவ்விதம் செய்வேன்' என்று, ஓர் எண் இலான் இரங்குவான் - ஓர் ஆலோசனையில்லாது வருந்துவானாகி, பாலை யாழ் பழித்த சொல் - பாலை யாழ் என்னும் ஒருவகை யாழின் இசையைப் பழித்த சொற்களையுடைய, பொன் அனார் - பொன் போன்ற அழகுடைய மகளிர், பன்னு - சிறப்பித்துச் சொல்லக்கூடிய, கோடி தீப மாலை எடுக்க - எண்ணின் மிக்க தீப வரிசைகளை எடுத்துச் செல்ல, அங்கு ஓர் சோலை ஊடு போயினான் - அங்கு அயலில் இருந்த ஒரு சோலையினுட் சென்றான்.

பாலையாழ்; இதன் இயல்பை இசை நூல்களிற் கண்டு கொள்க. இனி, பன்னு பாலையாழ் என்றலும் ஒன்றும். ஓர் என்பது இங்கு இரண்டிடங்களிலும் குறுகி ஒர் என நின்றது செய்யுள் விகாரம்; ஒர் கொம்பு என முன் 647 இல் வந்ததுபோல. எண்ணிலான்; எண், முதனிலைத் தொழிற் பெயர்.

பி-ம். 1. நின்றழிந் தழுங்கு.
2. எண்ணிலா திரங்குவான்; எண்ணிலா னிரங்குவான்; எண்ணிறு னிறங்குவான். (95)

வேறு

**649.** மாணிக்கம் பனசம் வாழை மரகதம் வயிரந் தேமா
ஆணிப்பொன் வேங்கை கோங்க மரவிந்த ராகம் பூகம்
சேணுற்ற நீலஞ் சாலங் குருவிந்தந் தெங்கு வெள்ளி
பாணித்தென் பளிங்கு நாகம் பாடலம் பவழ மன்னோ.

(அச்சோலையில் உள்ள), பனசம் - பலாமரங்கள், மாணிக்கம் - மாணிக்கம் என்னும் இரத்தின மயமானவை; வாழை - வாழை

மரங்கள், மரகதம் - மரகதமென்னும் பச்சை மயமானவை; தேமா வயிரம் - தேமா என்னும் இனிய மாமரங்கள், வயிரம் என்னும் மணி மயமானவை; வேங்கை - வேங்கை என்னும் ஒருவகை மரங்கள், ஆணிப்பொன் - மாற்று உயர்ந்த பொன்னாலமைந்தவை; கோங்கு - கோங்கு மரங்கள், அரவிந்த ராகம் - பதும ராகம் என்னும் அரதன மயமானவை; சேண் உற்ற பூகம் - வானோங்கி வளர்ந்த கமுக மரங்கள், நீலம் - இந்திர நீலம் என்னும் இரத்தின மயமானவை; சாலம் குருவிந்தம் - சால விருக்ஷங்கள் என்னும் ஆச்சா மரங்கள், குருவிந்தமென்னும் ஒருவகை இரத்தின மயமானவை; தெங்கு வெள்ளி - தென்ன மரங்கள், வெள்ளி என்னும் உலோகத் தாலானவை; நாகம் - புன்னாகம் என்னும் சுரபுன்னை மரங்கள், பாணி தெள் பளிங்கு - நீர் போலத்தெளிந்த பளிங்காலானவை; பாடலம் - பாதிரி மரங்கள், பவழம் - பவழ மயமானவை; மன், ஓ; ஈற்றசைகள்.

இதிற் கூறப்பெற்ற மணிகளின் வகைகளையும் அவ்வவற்றின் தன்மைகளையும், சிலப்பதிகாரம், ஊர்காண் காதையிலும். கல்லாடம் 100-ம் பாடலிலும், திருவிளையாடற் புராணம், மாணிக்கம் விற்ற படலத்தும் விரிவாய்க் காணலாம். 'சாலம் - மராமரம்' பழையவுரை. இராவணன் சோலையிலுள்ள மரங்கள் மணிகளாலானவை; சுந்தர: 114

பி - ம். 1. மரவிந்த மாரம்; ராகபூகம்.
3. சேணுய்க்குர்; தென்னம் வெள்ளி; தெங்கும் வெள்ளி; வெள்ளில்.
4. பாணித் தென்பளிங்கு; பாணித் தண்பளிங்கு. (96)

650. வானுற நிவந்த செங்கேழ்
மணிமரந் துவன்றி வான
மீனெடு மலர்க டம்மில்
வேற்றுமை தெரித றேற்றுத்
தேனுகு சோலை நாப்பண்
செம்பொன்மண் டபத்து ளாண்டோர்
பானிற வமளி சேர்ந்தான்
பையுளுற் றுயங்கி நைவான்.

பையுள் உற்று-காம நோயாகிய துன்பமுற்று, உயங்கி நைவான்- வாடி வருந்துபவனான இராவணன், வான் உற நிவந்த-வானத்தைத் தொடும்படி உயர்ந்த, செம் கேழ் - சிறந்த நிறங்களையுடைய, மணி மரம் துவன்றி - பலவகை இரத்தினமயமான மரங்கள் அடர்ந்து,

மலர்கள் - அவற்றின் பூக்கள், வான மீன் ஒடு - வானில் உள்ள நட்சத்திரங்களோடு, தம்மில் - தமக்கு, வேற்றுமை தெரிதல் தேற்ரு - வேறுபாடு காண முடியாத, தேன் உகு - தேனைச் சொரிகின்ற, சோலை நாப்பண் - அந்தச் சோலையின் நடுவே இருந்த, செம்பொன் மண்டபத்துள் ஆண்டு - சிவந்த பொன்னாலமைந்த மண்டபத்தின் இடத்தில், பால் நிற ஓர் அமளி சேர்ந்தான் - பால் போன்று வெண்ணிறமான ஒரு படுக்கையை அடைந்தான்.

பையுள் - துன்பம் ; (திவா); அயோத். தைலமாட்டுப் : 86 ; கங்கைப்படலம் ; 46.

பி - ம். 1. துவன்றிமாக. 3. யாங்கோர்.
4. பானிறப் பள்ளி. (97)

651. கனிகளின் மலரின் வந்த
கள்ளுண்ட களிக ளன்ன
வனிதையர் மழலை யின்சொற்
கிள்ளையுங் குயிலும் வண்டும்
இனியன மிழற்று கின்ற
யாவையு மிலங்கை வேந்தன்
முனியுமென் றவிந்த வாய
மூங்கையர் போன்ற வன்றே.

கனிகளின் மலரின் - அச்சோலையில் உள்ள பலவகை இனிய கனிகளிலும், மலர்களிலுமிருந்து, வந்த - நெகிழ்ந்து வெளியே வந்த, கள் உண்டு - தேன்களை அருந்தி, களிகள் அன்ன - கட்குடியர்களைப் போன்றனவும், வனிதையர் மழலை இன் சொல் - மகளிரின் மழலை மொழி போன்ற இனிய சொற்களைப் பேசுவனவுமான, கிள்ளையும் - கிளிகளும், குயிலும் - குயில்களும், வண்டும்-வண்டுகளும், இனியன மிழற்றுகின்ற யாவையும் - இனிய சொற்களைப் பயிலும் மற்ற பறவைகள், அனைத்தும் இலங்கை வேந்தன் - இலங்கை நகருக்கரசனான இராவணன், முனியும் என்று - நம்மீது கோபிப்பான் என்று, அவிந்த வாய - அடங்கின வாயையுடையனவாகி, மூங்கையர் போன்ற - ஊமைகள் போன்றிருந்தன. அன்று, ஏ : ஈற்றசைகள்.

களிகள் அன்ன, மழலை இன் சொல், என்பனவற்றைக் கிள்ளை என்பதனோடு கூட்டுக. 'வனிதையர் மழலை இன் சொற்கிள்ளை' என்றது, உபமேயத்தினும் உபமானச் சிறப்புடைமையால் என்க; இஃது, எதிர் நிலையணி எனப்படும். யாவையும் என்றது, மேற்

கூறிய இள்ளை முதலியனவன்றி, நாகணவாய்ப்புள்ளையும், இனிய ஒலி பயிலும் மற்ற பறவைகளையும் குறிப்பதாகும்.

பி - ம். 1. கள்ளுண்ட களிப்பாலங்கண்; கனிகளன்ன.
2. வனிதையாம் மழலை; இள்ளையும் மயிலும்;
3. மிலங்கு வேர்தன்.
4. போலுமன்றே; போன்றதன்றே. (98)

652. பருவத்தால் வாடை தந்த
பசும்பனி யனங்க பாணம்
உருவிப்புக் கொளித்த புண்ணிற்
குளித்தலு முளைந்து விம்மி
இருதுத்தான் யாத டாவென்
றியம்பினு னியம்ப லோடும்
வெருவிப்போய்ச் சிசர நீங்கி
வேனில்வந் திறுத்த தன்றே.

பருவத்தால் - அந்தப் பின் பனிக்காலமாகிய பருவத்தின் இயல்புப்படி, வாடை தந்த - வடதிசைக் காற்று உண்டாக்கிய, பசும் பனி - குளிர்ச்சியான பனியானது, அனங்கபாணம் உருவி புக்கு ஒளித்த புண்ணில் - மன்மத பாணங்கள் உள்ளே ஊடுருவிப் புகுந்து தன் உடலினுள் (முன்) ஒளிந்து கொண்டிருந்த புண்களில், குளித்தலும், தோய்ந்து கலக்கவும், உளைந்து விம்மி - (அவ்விராவணன்) வருந்தித் துடித்து, ‘இருது தான் யாதடா என்று - இப்பொழுது நடக்கும் இருதுத்தான் யாதடா ? என்று, இயம்பினன் - வினவினன்; இயம்பலோடும் - அவ்வாறு அவன் சொன்னவுடனே, சிசிரம் - அந்தப் பின் பனிக்காலம், வெருவி போய் நீங்கி - அச்சமுற்று அவ்விடம் விட்டுச் செல்லவும், வேனில் வந்து இறுத்தது - இள வேனிற் காலம் வந்து அங்குத் தங்கியது. அன்று, ஏ : ஈற்றசைகள்.

இருது : பருவக்காலம்; ருது என்ற வடசொல், தமிழ் விதிப்படி இருது என ஆயிற்று. சிசிரம்; பின் பனிக்காலமான, மாசி, பங்குனி மாதங்கள். இதுவே, சூர்ப்பணகை இராவணனை வந்து கண்ட காலமாகும் என்க. பசும்பனி - குளிர்ந்த பனி; பசுமை - குளிர்ச்சி; அகநா. 57. அடா - தனக்கு அடங்கிய பணியாளனை நோக்கிக் கூறும் மொழி; தக்க. 508.

பி - ம். 1. வாடை வந்த; யனங்கன் வாளி.
2. புண்ணீர்க் குளித்தலு; முலைந்து விம்மி.
3. றியம்பின னியம்ப லோடும். 4. சிசிர நீங்கி. (96)

653. வன்பனை மரமுந் தீயும்
மலைகளுங் குளிர வாழும்
மென்பனி யெரிந்த தென்றால்
வேனிலை விளம்ப லாமோ
அன்பெனும் விடமுண் டாரை
யாற்றலா மருந்து முண்டோ
இன்பமுந் துன்பந் தானு
முள்ளத்தோ டியைந்த வன்றே.

வன் பனை மரமும் - வலிய கிளைகளையுடைய (பெரிய) மரங்களும், தீயும் - நெருப்பும், மலைகளும் - வலிய மலைகளும், குளிர - குளிர்ச்சி யடைய, வாழும் - சிறந்தோங்கும், மெல் பனி எரிந்தது என்றால் - மென்மையான பனியும் இராவணனுக்கு நெருப்புப்போல எரிச்சலை உண்டாக்கிற்று என்றால், வேனிலை விளம்பல் ஆமோ - (இயல்பாய் வெம்மையுடைய) வேனிற் பருவத்தைப் பற்றிக் கூற முடியுமோ? (முடியாது என்றபடி); அன்பு எனும் விடம் உண்டாரை - காமம் என்னும் விஷத்தைப் பருகியவரை, ஆற்றல் ஆம் மருந்தும் உண்டோ - அவ் விடத்தைத் தணிக்கத் தக்க மருந்தும் உலகில் உண்டோ? (இல்லை என்றபடி); இன்பமும் துன்பம் தானும் - இன்பம் துன்பம் என்பவை, உள்ளத்தோடு இயைந்த அன்றே - அவரவர் மனத்தோடு பொருந்தியவை அல்லவா?

தீயும் மரமும் மலையும் என்றும் கூட்டிப் பொருள் கூறலாம். சுக துக்கங்கள் என்பன, அவரவர் மன நிலையைப் பொறுத்தவை ஆகும் என்பதாம்; அதாவது, இன்ப துன்பங்கள் புறத்தால் அமையா என்பதும், அவை அகத்தின் உணர்ச்சிகளே என்பதும் இங்கு எடுத்துக்காட்டப் பெற்ற உண்மைகளாம். 'மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி' (குறள். 453) இதனால், மனத்தைப் பண்படுத்த வேண்டும் என்பது பெறப்பெற்றது. அன்று, ஏ: அசைகளாகவுங் கொள்ள லாம்.

பி - ம். 1. வன்பெனும்மரமும்; மண்ணும் மரமுந்திய.
2. யெரிந்த வென்றால்; வேனலை.
3. விடமுண்டோரை. 4. யியைந்த தன்றே. (100)

654. மாதிரத் திறுதி காறுந் தன்மனத் தெழுந்த மையல்
வேதனை வெப்பஞ் செய்ய வேனிலும் வெதுப்புங் காலை
யாதிதிங் கிதனின் முன்னைச் சிசிரநன் றிதனை நீக்கிக்
கூதிராம் பருவந் தன்னைக் கொணருதிர் விரைவி னென்றான்.

தன் மனத்து எழுந்த - தன் மனத்திடம் தோன்றிய, மையல் வேதனை - காமத் துன்பம், மாதிரத்து இறுதிகாறும் - திசைகளின்

முடிவு வரைக்கும், வெப்பம் செய்ய - வெம்மையை உண்டாக்க, (அதனோடு) வேனிலும் வெதுப்பும் காலை - அப்பொழுது வந்த இள வேனிற்காலமும் தன்னை வெதுப்பியபோது, 'யாது இங்கு - இப் பொழுது இங்கு வந்துள்ள இந்த இருது யாது? முன்னை சிசிரம் இதனின் நன்று - முன்னிருந்த பின்பனிக் காலமே இதனைவிட நல்லது; இதனை நீக்கி - ஆதலின் இந்த இளவேனிற் பருவத்தை அப்புறப்படுத்தி, கூதிர் ஆம் பருவம் தன்னை - கூதிர்க்காலமாகிய குளிர்ந்த பருவத்தை, விரைவில் கொணருதிர் என்றான் - விரை விற் கொண்டு வருவீராக' என்று இராவணன் கட்டளை இட்டான்.

கூதிர் - (ஐப்பசி கார்த்திகை மாதங்களான) குளிர்காற்று வீசும் பருவம்.

பி - ம். 1. மாதிரங் கடந்த தோளான் மனத்தெழு மாயமையல்.
2 வேனலும் வெதும்புங் காலை; வெதும்பும் வேலை; வேதனை வெதும்பச் செய்த; வேதனை வெதுப்பஞ் செய்த.
3. யாது தீங்கிதனின்; யாது தீயிதனில்; சீத நன்றிதனை; சிசிர மென்றரி தினீக்கி; சீதனென்றெழுதி நீக்கி.
4. கூதிரம்; கடிதினென்றான். *(101)*

655. கூதிர்வந் தடைந்த காலை கொதித்தன குவவுத் திண்டோள்
சீதமுஞ் சுடுமோ முன்னைச் சிசிரமே காணி தென்றான்
ஆதியா யஞ்சு மன்றே யருளல தியற்ற லென்ன
யாதுமிங் கிருது மாகா யாவையு மகற்று மென்றான்.

கூதிர் வந்து அடைந்த காலை - கூதிர்ப்பருவம் வந்தடைந்த போது, குவவு திண் தோள் - இராவணனின் பருத்த இருபது வலிய தோள்களும், கொதித்தன - கொதிப்புண்டன; (அதனால் அவன்), சீதமும் சுடுமோ - கூதிர்ப்பருவத்துச் சீதமும் சுடுமோ? (சுடாது என்பதாம்); (ஆதலின்), முன்னை சிசிரமே இது காண் என்றான்-முன் வந்த முன் பனிக்காலமே இஃது ஆகும்; பாருங்கள்;' என்று அவன் கூறினான்; (அதுகேட்ட பணியாளர்), 'ஆதியாய்-தலைவனே! அருள் அலது இயற்றல்-தேவரீர் அருளியது அல்லாததைச் செய்தல் என்ப தையே, அஞ்சும் - நாங்கள் அஞ்சுவோம்', என்ன-என்று மறுமொழி கூற, 'இங்கு யாதும் இருது ஆகாது - இங்கு எந்த இருதுவும் எனக்கு நன்மை தராது; (ஆதலின்), யாவையும் அகற்றும் என்றான் - எல்லா இருதுக்களையும் இவ்விடம்விட்டு அகற்றிவிடுங்கள்' என்று

அவன் அப்பணியாளர்க்குக் கட்டளையிட்டான். அன்று, ஏ: அசைகள்.

பி-ம். 1. கூதிர்வந் தணையும் போது; தடுத்தகாலே; தணையுங்காலே; கொதித்தனன்; கொதித்த தன்குயவுத்.
3. நியற்றயென்ன; நியற்றுமென்ன: வியற்றலென்ன.
4. நியாவையு. (102)

656. என்னலு மிருது வெல்லா
மேகலும் யாவுந் தந்தம்
பன்னரும் பருவஞ் செய்யா
யோகிபோல் பற்று நீத்த
பின்னரு முலக மெல்லாம்
பிணிமுதற் பாசம் வீசித்
துன்னருந் தவத்தோ ரெய்துந்
துறக்கம்போற் றோன்றிற் றன்றே.

என்னலும் - என்று இராவணன் கட்டளையிட்டதும், இருது எல்லாம் - எல்லா இருதுக்களும், ஏகலும் - அவ்விடத்தை விட்டு அகல, யாவும்-அச்சோலையிலுள்ள அசையும் பொருள்கள் அசையாப் பொருள்கள் என்ற எல்லாம், பன் அரும் பருவம் செய்யா - சொல்வதற்கு அருமையான அந்த அந்தப் பருவத்திற்கு உரிய இயற்கைச் செயல்களைச் செய்யாதவைகளாய், யோகி போல் - யோகத்திலமர்ந்துள்ளவர்களைப்போல, பற்று நீத்த - தமக்கு உரிய தொடர்புகளை விட்டு நீங்கின; பின்னரும்-அதனோடன்றிப் பிறகும், உலகம் எல்லாம்- இவ்வுலகம் அனைத்தும், பிணி முதல் பாசம் வீசி - நோய்முதலான கரும விதிவழியே வந்த பிணிப்புக்களை விலக்கி எறிந்து, தவத்தோர் எய்தும் - தவத்தைச் செய்தோர் அடையும், துன் அரும் துறக்கம் போல் - யாவரும் அடைதற்கு அரியதான சுவர்க்கம்போல, தோன்றிற்று - காணப்பெற்றது. அன்று, ஏ: ஈற்றசைகள்.

துறக்கம், தவஞ்செய்தோர்களால் அடையப் பெறுவது; அஃது இவ்வுலகைப் போல இருதுக்களின் வேறுபாடுகள் இன்றி, எப்பொழுதும் ஒரேதன்மைத்தான இன்பநிலை நிலவப் பெற்றது என்பது இதனால் அறியப்படுவதாம்; பருவஞ்செய்யாத் துறக்கம்: 93. ஒப்பு: 'இருது வேற்றுமை யின்மையாற், கருதி மேற்றுறக் கத்தினோ, டரிது வேற்றுமையாகவே, கருது வேற்றடங் கையினாய்; (சூளா. 742). தவத்தின் எய்துந் துறக்கம்; 'தானமுந் தவமுந் தாஞ்செய்வ ராயின், வானவர் நாடு வழிதிறந் திடுமே' (தனிப்பாடல்); தக்க. 40.

ரையும் காண்க. 'பற்றற்ற யோகியர்போலப் பருவங்கள் போனபின், பூலோகம், அந்தப் பருவங்கள் செல்லாத சொர்க்கம் போன்றது' என்பது பழையவுரை.

பி-ம். 1. வெல்லா மேகின; யேகினயாவும்; யதுந்தந்தம் பன்னெடுங் காலஞ்செய்யும் யோகினிற்.

2. பருவஞ் செய்த பாதியிற் பருவ; பருவஞ் செய்யா ரெய்தி யிப் பருவ நீத்த.

4. தவத்தினெய்தும்; தவத்தின்மேவுர்; தவத்தினேய்ந்த; தவத் தோருன்னூர். (*103*)

657, கூலத்தா ருலக மெல்லாங்
கொதிப்பொடு குளிர்ப்பு நீங்க
நீலத்தா ரரக்கன் மேனி
நெய்யின்றி யெரிந்த தன்றே
காலத்தால் வருவ தொன்றோ
காமத்தாற் கனலும் வெந்தீச்
சீலத்தா லவிப்ப தன்றிச்
செய்யத்தா னுவ துண்டோ.

கூலத்து ஆர் உலகம் எல்லாம் - ஒருவரையறை அல்லது முறையில் பொருந்தியுள்ள இவ்வுலகம் முழுவதும், (இராவணன் கட்டளைப் படி இருதுக்கள் யாவும் அகன்ற நிலையில்), கொதிப்பு ஒரு குளிர்ப்பு நீங்க - வெப்பமும் குளிர்ச்சியும் நீங்கிப்போக, (அப்பொழுதும் தன் நிலை மாறுது), நீலத்து ஆர் அரக்கன் மேனி - கரு நிறம் பொருந்திய அரக்கனுன இராவணன் உடம்பு, நெய் இன்றி எரிந்தது - நெய் இல்லாமலே எரிந்தது; காலத்தால் வருவது ஒன்றோ - கால வேறு பாட்டால் மட்டும் இவ்வாறு எரிச்சல் உண்டாவது ஒன்று உள்ளதோ? (இல்லை என்றபடி); காமத்தால் கனலும் வெம் தீ - காம உணர்ச்சியால் உடலில் பற்றி எரியும் கொடிய தீயை, சீலத்தால் அவிப்பது அன்றி - நற்குணத்தால் அக் காமத்தீயை அவித்து ஒழிக்க வேண்டுமே அல்லாமல், செய்யதான் ஆவது உண்டோ - அதற்குப் பரிகாரமாகச் செய்யக் கூடியதும் வேறு உள்ளதோ? (இல்லை என்றபடி). அன்று: ஏ: அசைகள்.

கூலம் - வரம்பு; (பிங்); 'கூல நீங்கிய விராக்கதப் பூசுரர்' (உயுத்த. பிரமாத்திரப்: *164*); இனி, கூலத்து ஆர் உலகம் என்பதற்கு, (கடலாகிய) கரையினுல் விளங்கும் இவ்வுலகம் என்பாரும்

உளர். ஒவ்வொரு இருதுவுக்கும் ஒரு காலவரையறை உண்டு என்ற் முறை யிருக்க, அம்முறை இங்கு இராவணனல் மாற்றப்பட்டது என்க. 'கூலம் - நிறைவு; தார் - ஒழுங்கு' என்பன பழையவுரை. நெய்யற்றபோது தீ அவியும்; ஆனல் காமத்தீயோ நெய் இல்லாமலே எரியும் தன்மையது என்பதாம். நெய்யின்றி (விளக்கு) எரிதலை, காலமின்றி அவன்மேனி எரிந்ததற்கு உவமையாகவும் கொள்ளலாம். முன் 637 இல், 'கற்றனர் ஞான மின்றேற் காமத்தைக் கடக்கலாமோ' என்றதனேடு இதனை ஒப்பிடுக. ஞானத்தின் வழியே சீலம் பிறத் தலும் ஓர்க. 'காலத்தால் வருவ தொன்றே' என்பதற்கு, இன்ப துன்பங்கள் (மனத்தாலன்றிக்) காலத்தால் வருவன அல்ல (653) என்று ஒருவகையாகவும், தீவினையின் பயனுகக் கஷ்டகாலம் நேருங் காலத்தில் ஒன்றன்றிப் பலதுன்பங்கள் விளையும், என்று மற்றொரு வகையாகவும் பொருள் காணலாம். காமத்தைச் சீலத்தாலன்றி வேறென்றால் அழிக்கமுடியாது; ஒப்பு. "தீராத காமத் தழலைத்தன் செம்மையெனும், நீரா லவித்துக் கொடுநின்று" (நள. சுயம்வர: 86.) இச்செய்யுளில் சிறந்த நீதியொன்று பொதிந்திருப்பது நோக்கத்தக்கது.

பி - ம். 1. கூலத்தாலுலக..................குளிருநீங்க; வெதுப்புநீங்க; வெதுப்புநீக்கி; வெதும்புநீங்கி.
2. நீலக்காரரக்கன் நெய்யன்றி; யெரிந்தவன்றே.
3. காலத்தாலவெரியதொன்றே; காமத்தாலக்கனலும்.
4. சீலத்தனவிப்பனன்றேற்; சீலத்தால் வீவதன்றிச்; விடுவதன்றி.

(*104*)

இராவணன் சந்திரனைக் கொணரச் செய்தல்.

658. நாரமுண் டெழுந்த மேகந்
தாமரை வளைய நானச்
சாரமுண் டிருந்த சீதச்
சந்தனந் தளிர்மென் றூதோ
டாரமுண் டெரிந்து சிந்தை
யயர்கின்று னயனின் றுரை
ஈரமுண் டென்ப ரோடி
யிந்துவைக் கொணரு மென்றான்.

நாரம் உண்டு எழுந்த - நீரையுண்டு மேல் எழுந்த, மேகம் - மேகங்களும், தாமரை வளையம் - தாமரைத் தண்டுகளின் சுருள் களும், நான சாரம் உண்டு இருந்த - கத்தூரி வாசனை ரஸங்களைத் தன்னிடம் கலக்கப் பெற்றிருந்த, சீத சந்தனம் - குளிர்ச்சியான சந்தனக் குழம்பும், தளிர் - இளந் தளிர்களும், மெல் தாதோடு -

மென்மையான பூக்களின் மகரந்தங்களோடு, ஆரம் - முத்துக்களும், உண்டு - தன் உடல்மீது பரப்பப்பட்டு எரிந்து, அவற்றால் சூடுண்டவன்போல எரிச்சல்கொண்டு, சிந்தை அயர்கின்றான் - மனம் வருந்துகின்ற இராவணன், அயல் நின்றாரை - தன் அருகே நின்றவரைப் (பார்த்து), 'ஈரம் உண்டு என்பர் - (சந்திரனுக்குக்)குளிர்ச்சி உண்டு' என்று கூறுவர்; (ஆதலின்), ஓடி-நீங்கள் ஓடிச் சென்று, இந்துவை - சந்திரனை, கொணரும் என்றான் - கொண்டு வருவீராக!' என்று கட்டளையிட்டான்.

நீருண்டமேகம், தாமரைவளையம், சீதசந்தனம், தளிர்கள், பூக்களின் மகரந்தங்கள், முத்துக்கள் இவை சீதத்தன்மையுடையன என்பதும், அவை காமத்துயரால் வருந்துவோர்க்கு அணிய உபயோகிக்கப் பெறும் சைத்யோபசாரப் பொருள்கள் என்பதும் நூன் மரபு. அம்மேகம் முதலியன தன் காம வெம்மையைத் தணிக்காமையால் இராவணன் கோள்களையும் அடக்கி ஆளும் ஆற்றலுடையனாதலின், தன் காம வெம்மையைத் தணித்துக் கொள்ளக் குளிர்ச்சியைத் தரும் இந்துவையே கொண்டு வருமாறு கட்டளையிட்டான் என்க. இந்து - ஈரத்தை உண்டாக்குவது என்னும் பொருளிற் காரணப்பெயர்; இந்துவை: குற்றியலுகரம் கெடாது நின்றதற்கு உதாரணம். ஆரம் - மாலையும் ஆம்.

பி - ம். 1. தாரமுண்...............நானுச்; தாரமுண்...........நானு; தாமரைவளைய நாக்குஞ்; வளைய நாகஞ்; வயங்குமான.

2. சார மூண்; சீத சந்தனத்தளிர்; சந்தனத்தளிர்.

3. டிருந்தஞ்சிந்தை; டிருந்தசிந்தை; டெறிந்துசிந்தை; டெறிந்து சிந்த.

4. டென்பாரோடி; கொணர்மினென்றான்; கொணர்திரென்றான்; கொணர்தீரென்றான். (105)

### சந்திரோதயம் 659—61.

659. வெஞ்சினத் தரக்க னாண்ட வியனகர் மீது மேவ
நெஞ்சயிர்த் தொதுங்கு கின்ற நிறைமதி யோனை நேடி
அஞ்சலை வருதி நின்னை யழைத்தன னரச னென்னச்
சஞ்சலந் துறந்து தானச் சந்திர னுதிக்க லுற்றான்.

வெம் சினத்து - கொடிய கோபத்தையுடைய, அரக்கன் ஆண்ட - இராக்கதனாகிய இராவணன் ஆண்டு வந்த, வியன் நகர்மீது - பெரிய அவ் விலங்கை நகரின்மீதாக, மேவ - அடைய, நெஞ்சு அயிர்த்து - மனத்தில் அச்சத்தால் ஐயமேற்கொண்டு, ஒதுங்குகின்ற - கண்களிற்

படாமல்) விலகிச் செல்லுதலைக் கொண்டுள்ள, நிறை மதியோனை - பூர்ண சந்திரனை, நேடி - (அவ்விராவணன் ஏவலாளர்) தேடிக் கண்டு பிடித்து, 'அஞ்சலை - பயப்படாதே! நின்னை அரசன் அழைத்தனன்- உன்னை எங்கள் அரசனுன இராவணன் அழைத்துள்ளான்,' என்ன - என்று கூற, அ சந்திரன் - அந்தச் சந்திரனும், சஞ்சலம் துறந்து - தனக்குள்ள தடுமாற்றம் நீங்கி, உதிக்கல் உற்ருன் - அவ் விலங்கை நகரின்மீது தோன்றுவானுயினன்.

சந்திரன் இலங்கைமேற் செல்லாமை; 'இருசுட ரியங்காப் பெருமூ திலங்கை' (ஆசிரியமாலை - புறத்திரட்டு-எயில் கோடல்).

பி-ம். 1. வெஞ்சின சிலதரண்டர்; ஆண்டைவியனகர்; மீதுபோக; மீது மேவி; மீதுபோது.

2. நெஞ்சுயிர்த் தொதுங்குகின்ற; நெஞ்சில னொதுங்குகின்ற;...... நோக்கி; நெஞ்சினி லஞ்சிநின்ற மதியினை நீதொனிப்போ.

3. அரசனென்ருர்.

4. துறந்துமற்றச்; துறந்துவானச்; துறந்தானந்த. (106)

660. அயிருறக் கலந்த தீம்பா
லாழிநின் ருழி யிந்து
செயிருறற் கரச னுண்டோர்
தேய்வுவந் துற்ற போழ்தின்
வயிரமுற் றுடைந்த மாற்ருன்
வலியறச் சென்ற வன்றன்
உயிர்தெற வுவந்து வந்தா
னொத்தன னுதயஞ் செய்தான்.

செயிர் உறற்கு அரசன் - தன்னேடு போரிடுவதற்கு உரிய பகையரசன், ஓர் தேய்வு உற்ற போழ்தில் - ஒரு மெலிவடைந்தபோதில், ஆண்டு - அந்தச் சமயத்தில், வயிரம் உற்று (தோற்றவன்) அப்பகை அரசன்மீது காழ்த்த பகைமையை மேற் கொண்டு, உடைந்த மாற்ருன் - வலி அழிந்த நிலையில் இருந்த பகையரசன், வலி அற - வலிமை முற்றும் அற்றுப்போக, சென்று - அவன்மீது போர்க்குச் சென்று, அவன் தன் உயிர் தெற - அவனுடைய உயிரை அழிக்க, உவந்து வந்தான் ஒத்தனன் - விரும்பி வந்தவனைப்போன்று, அயிர் உற கலந்த - சருக்கரை மிகுதியாகக் கலந்தது போன்ற, தீம் பால் ஆழி நின்று - இனிய பாற்கடலிலிருந்து, ஆழி இந்து - வட்டமான முழுமதி, உதயம் செய்தான் - உதித்தான்.

அயிர்-சருக்கரை, (திவாகரம்). இயல்பான பாலினும், பாற்கடலின் பால் மிக்க சுவையுள்ளது என்பது, அயிருறக்கலந்த தீம்பால் என்பதால் விளக்கப் பெற்றது. இனி, அயிருறக்கலந்த ஆழி என்பதற்கு, கரு நுண் மணல் பொருந்தப்பெற்ற பாற்கடல் எனப் பொருள் கொண்டாரும் உளர். ஆழி; பல பொருட்டிரிசொல். இங்குக் கடல், வட்டம் எனும் பொருள்களில் வந்தது. தன் பகைவன் சருகிய சமயம் பார்த்து அவன் மேற்சென்று அவன் உயிரை அழிக்கச் செல்லும் ஒருவனைப்போல, இந்து, இராவணன் இதுகாறும் தன்னை அடக்கி ஆண்ட பகைமை கருதி, அவன் காம வயத்தனாய் வருந்தும் நிலையறிந்து, தன் பண்டைப் பகைமையைத் தீர்த்துக்கொள்ள வந்தான் போன்று தோன்றினான் என்க. இந்து பகைமை தீர்த்துக்கொள்ளுதல் மேல்வரும் செய்யுள்களால் அறியப் பெறும், இது, ‘கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன், குத் தொக்க சீர்த்த விடத்து’ (குறள். *490*) என்னும் குறட்பாவை நினைப் பூட்டுகின்றது. செயிர் - போர், பகைமையும் ஆம்.

இச்செய்யுள் ‘சந்தேகம்’ என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 1. கலந்து தீம்பால் ; லாழிநீத்து,
2. செயிருறக் கொதித்த தாண்டோர் ; செயிருறக் கலந்த, செயிரு றக் கலந்த......தெவ்வு வந்துற்றபோது.
3. ருடைந்து சென்றோர் ; ருடைந்த மாற்றார் ; செற்றார் வலியவர்.
4. னுதயஞ் செய்வான். (*107*)

ஒரு சுவடியில் இச்செய்யுள் பின்வருமாறு காண்கின்றது.

அயிருறக் கலந்த நன்னீ ராழியின் மீதே யிந்து
செயிரறத் துலங்கி யாண்டோர் தேய்விலா தெழுந்த போதில்
வயிரமற் றுடைந்த செற்றார் வலியர் சோர்விடைச்செல் வர்போ
லுயிர்தெறக் கால னென்பா னொத்தன னுதயஞ் செய்தான்.

661. பராவருங் கதிர்க ளெங்கும்
பரப்பிமீப் படர்ந்து வானில்
தராதலத் தெவரும் பேணத்
தண்மதி யுதித்த தோற்றம்
அராவணைத் துயிலு மண்ணல்
காலமோர்ந் தற்ற நோக்கி
இராவண னுயிர்மே லுய்த்த
திகிரியு மென்ன லான.

(அச்சந்திரன்), பராவு அரும் - புகழ்தற்கு அரிய, (அதாவது மிக்க சிறப்பையுடைய), தண்மதி - குளிர்ந்த அச்சந்திரன், கதிர்கள்

எங்கும் பரப்பி - தன் கிரணங்களை எங்கும் பரவச்செய்து கொண்டு, வானில் மீ படர்ந்து - ஆகாயத்தில் மேலே சென்று, தராதலத்து எவரும் பேண - உலகில் உள்ளோர் எல்லாரும் விரும்பி ஏற்க, உதித்த தோற்றம் - தோன்றிய காட்சி, அரா அணை துயிலும் அண்ணல் - ஆதிசேடனாகிய பாம்புப் படுக்கையில் கண்வளரும் பெரியோனான திருமால், காலம் ஓர்ந்து - இராவணனை அழிப்பதற்கு ஏற்ற காலம் இது என்று உணர்ந்து, அற்றம் நோக்கி - சமயம் பார்த்து, இராவணன் உயிர்மேல் உய்த்த - இராவணனுடைய உயிரின்மீது அதனைக் கவருமாறு செலுத்திய, திகிரியும் என்னல் ஆன, சக்கரமும் ஆயிற்று (என்று சொல்லுமாறு விளங்கிற்று.)

இச்செய்யுள் முழுமதியைத் திகிரிக்கு ஒப்பாகக் கூறியது. பராவரும் : பரா + வரும் என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலுமாம்; பரவு என்பது ஈறு கெட்டு, அகரம் ஆகாரமாக நீண்டது; நிலவு, கனவு என்பன, நிலா, கனா என வருதல் போல; நன். சூ. 172. வானில் தராதலத்தில்; என்பதற்கு வானிலும் புவியிலும் எனப் பொருள் கொண்டாரும் உளர். மதிக்குத் திருமாலின் சக்கரம்; சக்கரம் நெருப்பைக் கக்கிக்கொண்டு வருவது போல மதியும், இராவணனுக்குத் துயர் செய்யும் என்று அடுத்த செய்யுளில் விளக்கப் பெறுவதை முன்கூட்டி உணர வைத்தது என்க. அற்றம் - இல்லாத சமயம்; 'அருந்தவன் றந்தையை யற்றம் நோக்கியே' (பால. திருவவதாரப் : 41). 'முனிவனை யற்ற நோக்கி; (பால. அகலிகைப் : 74) ஆன, ஒருமைப் பன்மை மயக்கம்.

பி - ம். 1. பாயுமீப் படர்ந்த வானத்; தராதலமெவரும்.
2. பேணு; பேணத்தகையனைச் சலிக்கு நீரால்.
3. அராவணை துயிலு; அண்ணல் சாலுமோ ரற்றநோக்கி.
4. காலமோர்ந் துயிர்மேலுற்ற; மென்னலான. (108)

## நிலவு இராவணனை வருத்துதல் 662—5.

662. அருகுறு பாலின் வேலை யமுதெலா மளைந்து வாரிப்
பருகின பரந்து பாய்ந்த நிலாச்சுடர் பனிமென் கற்றை
நெரிவுறு புருவச் செங்க ணரக்கற்கு நெருப்பி னுப்பண்
உருகிய வெள்ளி யள்ளி வீசின லொத்த தன்றே.

அருகு உறு - தன் அருகே பொருந்தியதான, பாலின் வேலை அமுது எலாம் - பாற்கடலிலிருந்து உண்டான அமுத மனைத்தையும், அளைந்து வாரி பருகின, (சந்திரன்) துழாவி வாரி எடுத்து உண்டவை,

பரந்து பாய்ந்த - எங்கும் விரிந்து பாய்ந்த, நிலா சுடர் பனி மெல் கற்றை - நிலவின் சுடராகிய குளிர்ந்ததும் மென்மையுள்ளதுமான தொகுதி, நெரிவு உறு புருவ - நெரித்தலையுடைய புருவங்களோடு கூடிய, செம் கண் அரக்கற்கு - சிவந்த கண்களையுடைய இராக்கதனாகிய இராவணனுக்கு, நெருப்பின் நாப்பண் - நெருப்பின் நடுவே, உருகிய - உருகியதான, வெள்ளி - வெள்ளியை, அள்ளி வீசினால் ஒத்தது - (அவன்மீது) வாரி வீசியதே போன்று வெம்மையை உண்டாக்கி அவனை வருத்திற்று. அன்று, ஏ: ஈற்றசைகள்.

சந்திரன் பாற்கடலிலிருந்து அமுதத்தோடு பிறந்தவன்; அவ்வமுதத்தை மிகுதியும் உண்டு, அதனை நிலாவாகும் தன் கிரணங்களால் உலகில் வீசி உயிர்கள் பலவற்றையும் வளர்த்து வருபவன் என்ற நூன் மரபையும், இயற்கைக் கொள்கையையும் இங்கு விளக்கியது என்னலாம். புருவங்கள் நெரிவதும், கண்கள் சிவப்பதும் வெகுளி மேற்கொண்டோன் மெய்ப்பாடுகள். நிலவு, காமநோய் கொண்ட இராவணன் உடலை வெதுப்பியது ஆதலின், அந்நிலவு நெருப்பினிடை நின்ற வெள்ளி உருக்குக்கு உவமையாக்கப் பெற்றது. சில சுவடிகளில் இதுவும் அடுத்த செய்யுளும் இடம் மாறியுள்ளன.

பி - ம். 1. அமிர்தெலாம்; யடையவாரி.
2. பருகினன் பரந்து பாய்ந்த; பரந்து மாய்ந்த; பொழியப் பாய்ந்த; பசுமென் கற்றை.
3. நெரியுறு; நெருப்பு நாப்பண். (109)

663. மின்னலந் திகழுஞ் சோதி விழுநிலா மிதிலை சூழ்ந்த
சென்னெலங் கழனி நாடன் றிருமகள் செவ்வி கேளா
நன்னலந் தொலைந்து சோரு மரக்கனை நாளுந் தோலாத்
துன்னல னொருவன் பெற்ற புகழெனச் சுட்ட தன்றே.

மின் நலம் திகழும் சோதி - மின்னலின் சிறப்பு விளங்கும் ஒளியைத் தன்னிடங்கொண்ட, விழு நிலா - சிறப்பமைந்த நிலவானது, சூழ்ந்த செம் நெல் அம் கழனி மிதிலை நாடன் - சுற்றிலும் சூழ்ந்தமைந்த செந்நெற்பயிர் நிறைந்த வயல்களையுடைய விதேக நாட்டின் அரசனான சனகராஜனுடைய, திருமகள் செவ்வி கேளா - அழகிய பெண்ணாகிய சீதாதேவியின் வடிவழகைக் கேட்டு, நல் நலம் தொலைந்து - தன் பெருமை யெல்லாம் அழிந்து, சோரும் - தளர்கின்ற, அரக்கனை - இராக்கதனாகிய இராவணனை, நாளும் தோலா -

என்றும் தோல்வியடையாத, துன்னலன் ஒருவன் பெற்ற புகழ் என - பகைவனொருவன் அடைந்த புகழ் (ஒரு வீரனை) எவ்வாறு வருத்துமோ அவ்விதம், சுட்டது - சுட்டது போல வருத்தியது. அன்று, ஏ : ஈற்றசைகள்.

நிலா சுட்டது என வினை முடிவு கொண்டது. செந்நெல் எனப்பாலது எதுகை நோக்கி, சென்னெல் எனத்திரிந்து வந்தது. செவ்வி - அழகு; 'வண்டுறை கமலச் செவ்வி', (221). பகைவன் புகழைக் கேட்டால் அது ஒருவன் மனத்தை எவ்வாறு சுட்டு வருத்துமோ அவ்வாறு நிலவு தன் ஒளியால் இராவணனைக் சுட்டு வருத்தியது என்க. நிலவுக்குப் புகழ்; பால. மிதிலைக் காட்சிப். **743**; சுந்தர. **155**. இனி, சென்னல் எனப் பாடங்கொண்டால், ஒருவகை மீன் என்னலாம்; **175**. உரை.

பி - ம். 1. மின்னிலங் திரிந்ததன்ன : மின்னலங் தீர்ந்ததென்ன விழுநிறை மிதிலை ; மின்னெலாங் கெழுஞ் ; மின்னலங் திரிந்த சோதி.
2. செங்நெலங்கழனி ; செவ்விகேட்டு.
3. நாணுங் தோலா. (*110*)

**664.** கருங்கழற் கால னஞ்சுங் காவலன் கறுத்து நோக்கித்
தருங்கதிர்ச் சீத யாக்கைச் சந்திரற் றருதி ரென்ன
முருங்கிய கனலின் மூரி விடத்தினை யொழுக்குஞ் சீற்றத்
தருங்கதி ரருக்கன் றன்னை யாரழைத் தீர்க ளென்றான்.

கரும் கழல் காலன் அஞ்சும் - பெரிய வீரக்கழல் அணிந்த யமனும் அஞ்சும்படியான, காவலன்-(அரக்கர்க்கரசனான) இராவணன், கறுத்து நோக்கி - தன் ஏவலாளர்களைக் கோபித்துப் பார்த்து, 'சீதம் தரும் கதிர் யாக்கை - குளிர்ச்சியை அளிக்கும் கிரணங்களையுடைய உடலைக்கொண்ட, சந்திரன் தருதிர் என்ன - சந்திரனை அழைத்துக் கொண்டு வாருங்கள் என்று யான் கூற, முருங்கிய கனலின் - யாவையும் அழிக்கும் தீயோடு கூடிய, மூரி விடத்தினை - வலிய (அல்லது) கொடிய விஷத்தை, ஒழுக்கும்-பெய்யும், சீற்றத்து-கோபத் தோடு கூடிய, அரும் கதிர் அருக்கன் தன்னை - கொடிய கிரணங்களை யுடைய சூரியனை, யார் அழைத்தீர்கள் - உங்களில் யார் அழைத்து வந்திராவீர்?' என்றான் - என்று கேட்டான்.

சந்திரன் வர, அதன் சீதம் தன் காம வெப்பத்தை மேலும் வளர்த்தது ஆதலின், இராவணன் அச்சந்திரனைச் சூரியன் என்றே கருதி, 'ஏன் சூரியனை அழைத்தீர்?' என்று தன் ஏவலாளரை நோக்கிச் சினந்தான். 'கருங்கழல் - கூடாதாரைக் கொன்று

கட்டும் வீரர் கழல்; முருங்கிய தணலின் - கொல்லுங் கனல் போல' என்பது பழையவுரை. இராவணன் காலன் அஞ்சுங் காவலன்; உத்திர. திக்குவிசயப் படலம்.

பி - ம். 1. காவலான்; கருங்கழ லரக்க னஞ்சுங் காவலன்.
2. தருங் கதிர்ச் சிதை.
3. முருங்கிய கனலின்; தழலின்; முகக்குஞ் சீற்றத்; மொருங்குஞ் சீற்றத்; முருக்குஞ் சீற்றத்.
4. யாரழைத் தார்களென்றான். (111)

665. அவ்வழிச் சிலத ரஞ்சி
யாதியா யருளில் லாரை
இவ்வழித் தருது மென்ப
தியம்பலா மியல்பிற் றன்றால்
செவ்வழிக் கதிரோ னென்றுந்
தேரின்மே லன்றி வாரான்
எவ்வழித் தெனினுந் திங்கள்
விமானத்தின் மேல தென்றார்.

அவ் வழி - அப்போது, சிலதர் - அங்கிருந்த ஏவலாளர், அஞ்சி - பயந்து, 'ஆதியாய் - தலைவனே! அருள் இல்லாரை - நீவிர் கட்டளையிடாதவரை, இ வழி - இவ்விடத்து, தருதும் என்பது - அழைத்து வந்து சேர்ப்போம் என்பது, இயம்பல் ஆம் இயல்பிற்று அன்று - யாரும் சொல்லக் கூடிய தன்மையது அன்று; செம் வழி கதிரோன் - செம்மையாகச் செல்லும் முறையையுடைய சூரியன், என்றும் - எப்பொழுதும், தேரின்மேல் அன்றி வாரான் - தேரின் மேலே யல்லாமல் (மற்றொன்றில்) வரமாட்டான்; திங்கள் எ வழித்து எனினும் - சந்திரன் எவ்விடம் சென்றாலும், விமானத்தின் மேலது - விமானத்தின் மீதேறியே செல்வான்' என்றார் - என்று மறுமொழி கூறினர்.

இவ்வாறு கூறியது, அவன் தடுமாற்றத்தை நீக்க என்க. அருளில்லாரை...... இயல்பிற்றன்று; ஒப்பு. 755. சந்திரன் விமானத்தின் மீதேறியே செல்வான் என்பது நூன்மரபு; தக்க. 555; உரை. சிலதர் - ஏவலாளர்: சீவக. 2725. வழி - முறைமை. 'வெவ்வழித்தெனினும்' என்று பாடங்கொண்டு, 'வெப்பம் தரும் வழியாக வந்தானென்றாலும்' என்று பழையவுரை கூறும்.

பி - ம். 1. யாரிய வருளிலாரை; யாதிய வருளிலாரை.
2. இவ்வழித் தருதலென்ப; தருதிரென்ப.
4. எவ்வழித் தென்னுந் திங்கள் வெவ்வழித் தெரிக்கத் திங்கள்; மேலனென்றார். (112)

சந்திரோபாலம்பனம் 666—8.

**666.** பணந்தாழல்குற் பனிமொழியார்க்
கன்பு பட்டார் படுங்காமக்
குணந்தான் முன்ன மறியாதான்
கொதியா நின்ருன் மதியாலே
தணந்தா மரையின் றனிப்பகைஞ
னென்னுந் தன்மை யொருதானே
உணர்ந்தா னுணர்வுற் றவன்மேலிட்
டுய்த்த துன்பம் முரைசெய்வான்.

பணம் தாழ் அல்குல் - பாம்புப் படம் ஒப்புமையிற் குறைவுறும் அல்குலேயும், பனி மொழியார்க்கு - குளிர்ந்த சொற்களையுமுடைய மகளிர் திறத்து, அன்பு பட்டார் - இச்சை வாய்ப்பட்டோர்கள், படும் - அடையும், காம குணந்தான் - காம நோயின் தன்மையை, முன்னம் அறியாதான் - இதற்கு முன்பு ஒரு போதும் அறியாதவஞன இராவணன், மதியால் - அந்தச் சந்திரனல், கொதியா நின்ருன் - இப்போது தவித்து வருந்துபவ ஞஞன்; தண் அம் தாமரையின் - குளிர்ந்து அழகியதான தாமரைமலரின், தனி பகைஞன் என்னும் தன்மை - ஒப்பற்ற பகைவஞன அச்சந்திரனே இவன் என்னும் உண்மை நிலையை, ஒரு தானே உணர்ந்தான் - தானே ஒருவாறு அறிந்தவஞகி, உணர்வு உற்று - (மீண்டும்) உணர்ச்சியடைந்து, உயிர் தந்து உய்க்க - தன் உயிரைக் கொடுத்துத் தான் உய்வுற, அவன் மேலிட்டு - அச்சந்திரனை முன்னிட்டு, உரை செய்வான் - பின் வருமாறு உரைப்பானுஞன்.

தாழ்; உவமை வாசகமும் ஆம். இராவணன், தான் அன்பு கொண்ட மகளிரை அடையாது இதுவரை இவ்வாறு வருந்தினவன் அல்லன்; ஆதலின், பனி மொழியார்க் கன்பு பட்டார் படுங் காமக் குணம் முன்னம் அறியாதான் எனப்பட்டான். சந்திரன் தாமரைக் குப் பகைஞன் என்பது, சந்திரனைக்கண்ட தாமரை கூம்பிச்சோர்ந்து நிற்கும் இயல்பினதாதலின்; இது கவிமரபு. தணம்: தண் + அம் என் பதின் தொகுத்தல் விகாரம். தாமரையின்...உணர்ந்தான் என்றது, சந்திரன்தான் என்ற உண்மையை அறிந்தமையைக் குறித்தது.

பி - ம். 1. பல்வளையற்; பல்வளையார்; அன்பு பூண்டார்.
3. குணந்தான் முன்ன மறியாதான்; நின்ருன் குறியாலே; திருப் பகைஞ; தன்மை தனதுளத்தே.
4. டுய்த்த துக்க; உயிர் காத்துய்க்க; உணர்ந்தா னுணர்ந்தபின் பவஞ லுற்றதுய ராகுரை செய்வான்; உரை செய்தான். (113)

667. தேயா நின்றாய் மெய்வெளுத்தா
யுள்ளங் கறுத்தாய் நிலைதிரிந்து
காயா நின்றா யொருநீயுங்
கண்டார் சொல்லக் கேட்டாயோ
பாயா நின்ற மலர்வாளி
பறியா நின்றா ரில்லையால்
ஓயா நின்றே னுயிர்காத்தற்
குரியா ராரே யுடுபதியே.

'உடுபதியே - நட்சத்திரங்களுக்குத் தலைவனான சந்திரனே! தேயா நின்றாய் - (நீ உன்) உடல் நாளும் தேய்ந்து போகிறாய்; மெய் வெளுத்தாய் - உடல் வெளுத்துப் போயுள்ளாய்; உள்ளம் கறுத்தாய் - மனம் கருகிப் போய்விட்டாய்; நிலை திரிந்து காயா நின்றாய் - நீ உன் நிலைமை வேறுபட்டுக் காய்ந்துவிட்டாய்; ஒரு நீயும் - தனிப்பட்ட (ஒரு விபரீத நிலையில் உள்ள) நீயும், கண்டார் சொல்ல கேட்டாயோ - என்னைப் போல ஒரு பெண்ணைப் பிறர் ஒருவர் கண்டுவந்து சொன்னதைக் கேட்டு, அவள் பாற் காதல் கொண்டுள்ளாயோ? பாயாநின்ற - பாய்ந்து வருத்துகின்ற, மலர் வாளி - மன்மதனுடைய மலர்க்கணைகள், பறியா நின்றார் இல்லையால் - பறித்து எறிந்து என்னைக் காப்பவர் இல்லை யாதலின், ஓயா நின்றேன் - வலி ஒடுங்கி ஓய்ந்து போயுள்ளேன்; உயிர் காத்தற்கு உரியார் ஆரே - என் உயிரைக் காத்தளிப்பதற்கு உரியவர் யாரே யுள்ளார்?

'நீ குளிர்ந்த உன் நிலவைப் பொழிந்து என் வெம்மையைப் போக்குவாய் என்று கருதி உன்னை இங்கு வருவித்தேன்; நீயும் என் போல் ஒரு மங்கை திறத்துக் காதல் கொண்டு வருந்துகின்றாய் போலும்! ஏனெனில் நீயும் தேயா நின்றாய்......கேட்டாயோ?' என்று தன் நிலையை மதி மேலேற்றிக் கூறினான் இராவணன் என்க. தேயா நின்றாய், காயா நின்றாய், பாயா நின்ற, பறியாநின்றார்; இவை செய்யா வென்னும் வாய்பாட்டுத் தெரிநிலை உடன்பாட்டு வினைகள். இச்செய்யுள், "நைவாய வெம்மேபோல் நாண்மதியே நீயிந்நாள், மைவா னிருளகற்றாய் மாழாந்து தேம்புதியால், ஐவா யரவணைமே லாழிப் பெருமானார், மெய்வா சகங்கேட்டுன் மெய்ந்நீர்மை தோற்றாயோ" (திருவாய்மொழி. 2. 1 : 6.) என்ற ஆழ்வார் அருளிச் செயலை

அடியொற்றி யெழுந்துள்ளது என்னலாம். ' இந்தக்கவி, தன் குறையை மதிமேலேற்றிச் சாற்றியது ' என்பது பழையவுரை.

பி - ம்: 1. வண்ணங்க றுத்தாய்.

3. பறிக்க நின்றார் ; பரியா நின்றார் ; புரியா நின்றாய் மாற்றாரில்; ரின்மையலால்; ரின்மையால்.

4. நின்றென் றுயிர்காத்தற்; குரியா ரியாவர் ; குரியார் யாவர் ; ஒயாநின்ற மனத்தென்னைச் சுடுய தென்றோ வுடுபதியே. (114)

668. ஆற்று ராகிற் றம்மைக்கொண்
டடங்கா ரோவென் னுருயிர்க்குக்
கூற்றாய் நின்ற குலச்சனகி
குவளை மலர்ந்த தாமரைக்குத்
தோற்று யதனு லகங்கரிந்தாய்
மெலிந்தாய் வெதும்பத் தொடங்கினாய்
மாற்றார் செல்வங் கண்டழிந்தால்
வெற்றி யாக வற்றாமோ.

' என் ஆர் உயிர்க்கு கூற்றாய் நின்ற - என் அரிய உயிர்க்கு ஒரு யமன் போல் நிற்கின்ற, குல சனகி - சிறப்புற்ற சானகியின், குவளை மலர்ந்த - இரு நீலோற்பலங்கள் மலரப் பெற்றவைபோன்ற கண்களையுடைய, தாமரைக்கு - தாமரை போன்ற முகத்திற்கு, தோற்றாய் - நீ தோல்வியுற்றாய் ; அதனால் - அக்காரணங்கொண்டு, அகம் கரித்தாய் - உள்ளம் சினத்தால் கருகியுள்ளாய் ; மெலிந்தாய் - உடல் மெலிந்து வாடிப் போனாய் ; வெதும்ப தொடங்கினாய் - வெந்து போகத் தொடங்கிவிட்டாய் ; மாற்றார் செல்வம் கண்டு அழிந்தால் - தன் பகைவர் செல்வச் சிறப்பைக்கண்டு மனம் அழுக்காறு கொண்டு வருந்தினால், வெற்றி ஆக வற்று ஆமோ - வெற்றியடையும் வல்லமை உண்டாகுமோ ? (ஆகாது என்றபடி).

ஆருயிர் - பொருந்திய உயிர் எனலும் ஒக்கும். குவளை மலர்ந்த தாமரை - நீலோற்பல மலர்கள் தன் இடையே புஷ்பிக்கப் பெற்ற தாமரைப்பூ, இஃது இல்பொருளுவமை ; குவளை மலர்ந்த தாமரை : ஒப்பு : ' தூமலர்த் தாமரைப் பூவி னங்கண், மாயிதழ்க் குவளை மலர் பிணைத் தன்ன, திருமுகத்து' (அகநா. 361:1-3); ' கொங்குமலி கருங்கு வளை கண்ணாகத் தெண்கயங்கள், செங்கமல முகமலர்த்துந் திருக் கண்ணபுரம்," (பெரிய திருமொழி: 8. 3 : 8); சீவக. 2130, 2133. வற்று; கூடியது ; வல்லதும் ஆம் ; 627. சந்திரன் பிராட்டியின் முகச் செவ்வி

கண்டு அழுக்காறு கொண்டதாக, அதனால் அம்மதியடைந்த கேடுகளை இராவணன் உணர்ந்து கூறி, அம்மதியை இழித்துக் கூறியதாக இச்செய்யுள் அமைந்துள்ளது. பிறர் செல்வங்கண்டு அவர்பால் அழுக்காறுறுதல் வெற்றி ஆகாது; தோல்வியே தரும் என்பது இச்செய்யுளால் அறியப் பெறும் நீதியாகும். இராவணன் நீதிபேசுவது இங்கு நோக்கத்தக்கது. 'இந்தக் கவிமுழுதும் பிராட்டி விஷயம்' என்பது பழையவுரை.

பி-ம். 1. குவளை யலர்ந்த. 3. லகங்க ரித்தாய்.
4. வசைத்தாமோ; வசித்தாமோ; கண்டுமன மழிந்தால் வாகை பெற வற்றோ. *(115)*

இராவணன் சூரியனையும் பகலையும் வருவிக்க,
அவற்றால் விளைந்தவை 669—84

669. என்னப் பன்னி யிடருழவா
விரவோ டிவனைக் கொண்டகற்றி
முன்னைப் பகலும் பகலோனும்
வருக வென்றான் மொழியாமுன்
உன்னற் கரிய வுடுபதியு
மிரவு மொளித்த வொருநொடியில்
பன்னற் கரிய பகலவனும்
பகலும் வந்து பரந்தவால்.

என்ன பன்னி - என்று பிலாபித்து, இடர் உழவா - துன்பத்துட் பட்டு வருந்தி, 'இரவோடு இவனை - இராவோடு இந்தச் சந்திரனையும், கொண்டு அகற்றி - கொண்டு அப்பாற் செல்லுமாறு நீக்கிவிட்டு, முன்னை பகலையும் பகலோனையும் - முன்னிருந்த பகலும் சூரியனும், வருக என்றான் - வருமாறு செய்வீர்' என்று இராவணன் கூறினான்; மொழியாமுன் - அவ்வாறு அவன் கட்டளை யிடும் முன்னே, உன்னற்கு அரிய - யாவரும் நினைப்பதற்கு அருமை யான, உடுபதியும் - சந்திரனும், இரவும் - இராப்பொழுதும், ஒரு நொடியில் - ஒரு கணப்பொழுதிலே, ஒளித்த-மறைந்தன; பன்னற்கு அரிய பகலவனும் - யாவரும் புகழ்ந்து பாராட்டற்கு அரிய சூரியனும், பகலும் - பகற்பொழுதும், வந்து பரந்த-வந்து பரவலாயின. ஆல்: ஈற்றசை.

அகற்றி ; வியங்கோள் ; வினையெச்சமாகவும் பொருள் கொள்ளலாம்.

பி-ம். 1. மிடருழல்வான் ; மிடருழப்பான் ; மிடருளவா.

2. வருகவென முன் மொழியாமுன்.

3. மொழிந்த தொருநொடியிற் ; உன்னற் கெளிதே யுடுபதியு மிரவு மொளித்த தொரு ; மொளித்தே யோடியதாற் ; உன்னற் கெளிதே யுடுபதியு மிரவு மொளித்தா ஞெடியொன்றில்.

4. பகலோனும் பகலும் ; பரந்தனவால் ; பரந்ததால். (*116*)

அகால சூரியோதய வருணனை. **670—84**

**வேறு**

**670.** இருக்கின் மொழியா லெரிமுகத்தி
னீந்த நெய்யி னெரிசெம்பொன்
உருக்கி யனைய கதிர்பாய
வனல்போல் விரிந்த வுயர்கமலம்
அருக்க னெய்த வமைந்தடங்கி
வாழா தடாத பொருளெய்திச்
செருக்கி யிடையே திருவிழந்த
சிறியோர் போன்ற சேதாம்பல்.

அருக்கன் - சூரியன், எரி முகத்தின் - யாகாக்னியில், இருக்கின் மொழியால் ஈந்த - (அந்தணர்கள்) வேத மொழிகளைச் சொல்லிக் கொண்டு ஆகுதி செய்த, நெய்யின் - நெய்யைப் போல், எய்த - (மிகுந்த ஒளியுடன், வானத்தில்) வந்து அடைய, கதிர் - அவனுடைய கிரணங்கள், எரி - உலையில், செம்பொன் உருக்கி அனைய - செம்பொன்னை உருக்கிய பிழம்பு போல, பாய - பூமியில் மீது வந்து படர, உயர் கமலம் - சிறப்பமைந்த தாமரைகள், அனல்போல் விரிந்த - நெருப்பு சுவாலைபோல மலர்ந்தன; சேதாம்பல் - (சந்திரன் விளங்கிய காலத்தில் விரிந்திருந்த) செம்மையான ஆம்பல்கள், சிறியோர் - அற்பர்கள், அடாத பொருள் எய்தி - அறவழியல்லாத வழிகளில் (புதுப்) பொருளைப்பெற்று, அமைந்து அடங்கி வாழாது - (சான்றோர்க்குரிய) புலனடக்கமும் மனவடக்கமும் கொண்டு வாழாமல், செருக்கி - கர்வமுற்று (வாழும்போது), இடையே - இடையிலே, திரு - (தாம் பெற்ற) செல்வத்தை, இழந்த போன்ற - இழந்து செருக்கு (அவிந்தடங்கின) போன்று, கூம்பின.

முன் பகற்பொழுதில் இராவணன் சந்திரனை வரவழைத்ததால், அடாதபொருள் பெற்ற சிறியோர் போல ஆம்பல்கள் செருக்கி மலர்ந்தன ; அச்சந்திரன் மறைந்து சூரியன் மறுபடியும் தோன்றியதால் செருக்கடங்கிக் கூம்பின என்க. அக்கினி மேலும் நெய் ஊற்றப் பெருமையால் தணிந்திருந்ததுபோலச் சூரியன் முதலில் மறைந்திருந்தான் ; பின்பு நெய்யை வேதமந்திரங்களுடன் ஊற்றினபோது முன்னெரிந்ததைவிட அதிக ஒளியுடன் எரிந்தான் என்க. இங்குத் தாமரைப் பூவுக்கு நெருப்பு உவமையாகவும் கொள்ளலாம். 'ஆதித்தன் கிரணம் நெய்யாக, அக்கினி தாமரையாக' என்பது பழையவுரை. தாமரைக்குத் தீ ; பெருங் ; *1. 40 : 245 ; 48 : 148-9*. ஆம்பல் சிறியோர்க்கு ; ஒப்பு : பால. மிதிலைக்காட்சிப். *73*. அமைந்தடங்குதல் ; ஒப்பு : புறநா. *191 : 6*.

பி - ம். 1. மொழியாரெரி ; மொழியா லொழுக்கத் ; நெய்யினிருஞ் செம்பொன் ; நெய்யினேர் செம்பொன்.

2. உருக்கியன்ன ; கனல்பாய ; விரிந்ததுயர் ; பாய வலந்ததெங்கும் ; கதிர்பரப்பு மனலி லலர்ந்த வொண்கமலம்.

3. அருக்கனேக வவிந்தடங்க ; வலியடங்கி ; விந்தடங்க ; வாழா வடாத.

4. திருவீழ்ந்த. *(117)*

671. நாணி நின்ற வொளிமழுங்கி
நடுங்கா நின்ற வுடம்பினனாய்ச்
சேணி னின்றும் புறஞ்சாய்ந்து
கங்குற் றூரம் பின்செல்லப்
பூணின் வெய்யோ னொருதிசையே
புகுதப் போவான் புகழ்வேந்தர்
ஆணை செல்ல நிலையிழந்த
வரசன் போன்று னல்லாண்டான்.

பூணின் வெய்யோன் - உலகிற்கு ஓர் அலங்காரம் போன்று விளங்கும் சூரியன், ஒரு திசையே புகுத - ஒப்பற்ற கிழக்குத் திசையில் வந்துதிக்க, அல் ஆண்டான் - இரவை ஆளும் சந்திரன், நாணி - அச்சூரியனைக் கண்டு வெட்கமுற்று, நின்ற ஒளி மழுங்கி - தன்னிடமுள்ள ஒளி குறைந்தழிந்து, நடுங்கா நின்ற உடம்பினன் ஆய் - தடுமாற்றமடைந்த உடம்பையுடையவனாக, சேணின் நின்று புறம் சாய்ந்து - நடுவானினின்றும் ஒருபக்கம் சரிவுற்று,

கங்குல் தாரம் பின் செல்ல - இரவாகிய தன் மனைவி பின் தொடர்ந்து வர, போவான் - அப்பால் ஒதுங்கிச் செல்பவன், புகழ் வேந்தர் ஆணைசெல்ல - புகழ் வாய்ந்த பேரரசரது ஆக்ஞை நடைபெற, நிலை இழந்த - தன் நிலைமை அழிந்துபோன, அரசன் போன்றான் - ஒரு சிற்றரசனைப் போல ஒடுங்கிப் போனான்.

அல்லாண்டான் - சந்திரன்; நிசாபதி என்ற வடமொழிப் பெயருடைமை பற்றி வந்த பெயர். புகழ் வேந்தனுக்குச் சூரியனும், நிலையிழந்த சிற்றரசனுக்குச் சந்திரனும் உவமைகள். சந்திரன் மனைவி இருள் என்பது கவிமரபு.

பி - ம். 1. யொளிமழுங்கி; நடுங்குகின்று.
2. புறஞ்சாய்த்து; கங்குற்றூர்தம் பின் செல்லப்.
3. புகுதக்கண்டான்; பார்வேந்தன்.
4. ஆணைசெல்லா; ஆணையிழந்து நிலையிழந்த; நிலையழிந்த; வமைச்சா போலான்; வரசன்போன்றான்; குறும்பர் போன்றானல்லுடையோன். (118)

வேறு

672. மணந்தபே ரன்பரை மலரின் சேக்கையுள்
புணர்ந்தில ரிடையொரு வெகுளி பொங்கலால்
கணங்குழை மகளிர்கள் கங்குல் வீய்ந்ததென்
றுணர்ந்திலர் கனவினு மூட றீர்ந்திலார்.

கனம் குழை மகளிர்கள் - கனமான குழை எனும் அணியைச் செவிகளில் அணிந்துள்ள அரக்கர் மகளிர்கள், மலரின் சேக்கை உள் - மலர்ப்பள்ளியிடத்து, மணந்த பேர் அன்பரை - தம்மோடு கூடிய மிக்க அன்புடைய தம் கணவரை, இடை ஒரு வெகுளி பொங்கல் ஆல் புணர்ந்திலர் - இடையே ஒரு கோபமேலீட்டால் கூடி மகிழாது ஊடல் மிக்கிருந்த அன்னோர், கங்குல் வீய்ந்தது என்று உணர்ந்திலர் - இரவு கழிந்தது என்று உணராது, கனவிலும் - தாம் அப்போது கண்டு கொண்டிருந்த கனவிலுங்கூட, ஊடல் தீர்ந்திலார் - தாம் கொண்ட ஊடலை விட்டு நீங்காதவராய் இருந்தனர்.

கனங்குழை என்பது எதுகை நோக்கி கணங்குழையெனத் திரிந்து நின்றது. மணத்தல் - கலத்தல்; 'அறையும் பொறையும் மணந்ததலைய' (புறநா. 118); 'தேறுநீர்ப் புணரியொடு யாறுதலை

மணக்கும்' பட்டினப்பாலை: 97. தீர்ந்திலார் உணர்ந்திலர் எனவும் வினைமுடிவு செய்யலாம்.

பி - ம். 1. மணந்தபொன் மண்டபத்தலரின்; பொன்மரை மலரின்; பொற்றாமரை மலரின்.
2. புணர்ந்தவரிடை.
3. கங்குல் நீங்கிட; வீந்ததென்று.
4. உணர்ந்தனர்; தீர்ந்திலர்; மூட வீங்கிலர். (*119*)

**673.** அணைமலர்ச் சேக்கையு ளாட நீர்ந்தனர்
பணைகளைத் தழுவிய பவழ வல்லிபோல்
இணைமலர்க் கைகளி னிறுக வின்னுயிர்த்
துணைவரைத் தழுவினர் துயில்கின் றார்சிலர்.

சிலர் - சிலமகளிர்கள், அணை மலர் சேக்கை உள் - மெத்தையாக அமைந்த பூப்பள்ளியில், ஆடல் தீர்ந்தனர் - தம் காமலீலைகளைச் செய்து முடித்தவர்களாய், பணைகளை தழுவிய பவழ வல்லிபோல் - பருத்த மரக்கிளைகளைத் தழுவிப் படர்ந்த பவழக் கொடிகளைப் போல, இணை மலர் கைகளின் - தம் இரு தாமரைமலர்கள் போன்ற கைகளால், இன் உயிர் துணைவரை - தம் இனிய பிராண நாயகரை, தழுவினர் - தழுவிக்கொண்டவர்களாய், துயில்கின்றார் - தூங்குகிறவர்களாயினர்.

அரக்கராகிய கணவர்க்கு மரக்கிளையும், அவரைத் தழுவிய அரக்கர் மகளிர்க்குப் பவழக்கொடிகளும் உவமைகள். உயிர்த் துணைவர்; உவமைத்தொகை; உயிராகிய துணைவர் என இரு பெயரொட்டாகவுங் கொள்ளலாம். இதுவும் அடுத்த செய்யுளும், சில சுவடிகளில் முன் பின்னாக் அமைந்துள்ளன.

பி - ம். 1. ஊட நீர்ந்தனர்.
3. கைகளா விறுக. (*120*)

**674.** தள்ளுறு முயிரினர் தலைவர் நீங்கலால்
நள்ளிர விடையுறு நடுக்க நீங்கலர்
கொள்ளையி னலர்தருங் குவளை நாண்மலர்க்
கள்ளுகு வனவெனக் கலுழுங் கண்ணினார்.

தலைவர் நீங்கலால் - மற்றும் சில அரக்கர் மகளிர் தம் கணவர் தம்மைத் தனியே விட்டு நீங்கினதால், தள் உறும் உயிரினர் - தடு

மாற்ற முற்ற உயிரையுடையவராய், நள் இரவு இடை - நடு இராத்திரியில், உறு - அடைந்த, நடுக்கம் நீங்கலர் - நடுக்கம் நீங்காதவர்களாய், அலர்தரு குவளை நாண் மலர் - புதிதாய் மலர்ந்த கரிய குவளை மலர்களினின்றும், கள் கொள்ளையின் உகுவன என - தேன் மிகுதியாகச் சிந்துவன என்று சொல்லுமாறு, கலுழும் கண்ணினார் - நீர் சிந்தி அழுகின்ற கண்களையுடையவ ராயினர்.

இனி, தலைவர் நீங்கலால், தள்ளுறு முயிரினர், கொள்ளையின லர்தரு குவளை நாண்மலர் கள்ளுகுவனவெனக் கலுழுங் கண்ணினர், நள்ளிரவிடை யுறுநடுக்க நீங்கலர், என இயைத்துப் பொருள் கோடலும் அமையும். தம் கணவர்களைப் பிரிந்ததால் உயிர் நீங்குவது போன்ற துயரில் இருந்த மகளிர், நடு நிசியிற் பெரிதுங் கண்ணீர் கலுழ நடுக்குற்று வருந்தினர் என்க. தலைவர் நீங்கியது, அவர் கதிரவன் வரவை அறிந்தமையால்.

பி-ம். 1. தள்ளுறு நிலையுயிர்த்; தள்ளுறு முணர்வினர்; தலைவன்.
2. நீங்கினார்; நீங்கலார்.
3. வலர்கரும்; கொள்ளையின் மலர்க்கரும்; குவளை நாண்மலர்.
4. கள்ளுகு வனமெனக் களிக்கும் கண்ணினர். (121)

675. அளியினந் தடந்தொறு மார்ப்ப வாய்கதிர்
ஒளிபட வுணர்கில வுறங்கு கின்றன
தெளிவில வின்றுயில் விளைக்குஞ் சேக்கையுள்
களிகளை நிகர்த்தன களிகொள் ளன்னமே.

ஆய் கதிர் ஒளி பட - சிறந்த சூரியனது கிரணங்களின் ஒளி தோன்றவும், அளி இனம் தடம் தொறும் ஆர்ப்ப - வண்டின் கூட்டங் கள் இடங்களெங்கும் ஒலி செய்யவும், களி கொள் அன்னம் - மகிழ்ச்சியுற்ற அன்னப் புட்கள், களிகளை நிகர்த்தன - கட்குடித் தோரைப்போல, இன் துயில் விளைக்கும் சேக்கை உள் - இனிய தூக்கத்தை உண்டாக்கும் (தாமரைப் பூவாகிய) தம் படுக்கைகளில், தெளிவு இல - அம் மயக்கத்தினின்றும் தெளிவிலாதவையாயும், உணர்கில - உணர்ச்சியற்றவையாயும், உறங்குகின்றன - தூங்கிக் கொண்டிருந்தன.

இராவணன் ஆணையால் முழுமதி மறைந்து, கதிரவனும் தோன்றினமையால், களிமயக்கத்தில் தூங்கிக் கொண்டிருந்த அன்னங்கள், வெயிலின் கிரணங்களை உணராமலும், மயக்கம் நீங்காமலும், தம் பூப்பள்ளியில் கட்குடித்தோரைப்போல் அயர்ந்து துயின்றுகொண்டிருந்தன என்பதாம். இன்துயில் விளைக்குஞ்

சேக்கை ; அன்னங்கள் தாமரை மலரில் உறங்கும் என்பது பெரு வழக்காதலின், தாமரைப் பூவாகிய தம் படுக்கைகளில், எனப் பொருள் செய்யப் பெற்றது ; அன்னம் தாமரை மதுவை யுண்டு மயங்கியிருப்பது ; நாச்சியார் திருமொழி ; 7 : 7 ; பால. நாட்டுப் : 13. அளியினம் உணர்ச்சியுற்று ஆர்ப்ப, அன்னம் உறங்கின என்பதாம். முன்செய்யுட்களில் மக்களின் செய்திகளைக் கூறி இங்கு மக்களின் வேறுபட்ட அஃறிணை உயிர்களில் இரண்டின் செய்திகள் கூறப் பெற்றன.

பி - ம். 1. கடந்தொறும். 2. உணர்ந்தில ; உணங்கில.
3. தெளிவில ரின்னுயிர் தெளிவின வின்னுயிர் ; வினையுஞ் சேக்கையுட் ; தெளியற வின்றுயில் விழையச் சேக்கையின் இனைநுரை நிகர்த்தன. 4. களிநல் யானையே. (122)

676. விரிந்துறை துறைதொறும் விளக்கம் யாவையும்
எரிந்திழு தஃகல வொளியி ழந்தவால்
அருந்துறை நிரம்பிய வுயிரி னன்பரைப்
பிரிந்துறை தருங்குலப் பேதை மாரினே.

அரும் துறை நிரம்பிய - அரிய அகப்பொருள் துறைகளின் அறிவு நிரம்பப் பெற்ற, உயிரின் அன்பரை - தம் உயிர்போன்ற கணவரை, பிரிந்து உறைதரும் - பிரிந்து தம் மில்லிடமிருந்து வருந்தும், குல பேதைமாரினே - நற்குலத்துதித்த மகளிரைப்போல, விரிந்து உறை துறை தொறும் - விசாலமான அந்நகர் மாளிகை இடங்களிலெல்லாம், விளக்கம் யாவையும் - உள்ள விளக்குகள் அனைத்தும், இழுது எரிந்து அஃகல - நெய் எரிந்து குறையாமல் இருக்கவும், ஒளி இழந்த - தம் ஒளியை இழந்தன ஆயின. ஆல் : அசை.

நெய்யிருந்தும் பகலின் வெளிச்சத்தால் மயங்கிய விளக்கொளிக்குக் கணவரைப் பிரிந்த மங்கையர் உவமை. அருந்துறை - அரிய கல்வித்துறைகளும் ஆம். இச்செய்யுள், விபாவனையணியென்றும் காரணவாராய்ச்சி யணி யென்றுங் கூறப்பெறும்.

பி - ம். 1. விரிந்துறை யுறைதொறும் ; விரிந்தறு மனைதொறும்.
2. எரிந்தற நிழற்றலி னொளியிழந்தவால் ; எரிந்துறை யிழைத்தலின் ; எரிந்து துயரும் போன்றெல்லும் வீழ்ந்ததால் ; எரிந்த வினைத்தலி னொளியிழந்தவால் ; வொளியிழந்தன ; தஃகலாயொளி. 3. அருந்துணை.
4. துறைகருங் குழற்பேதை ; தருகுலப் பேதை. (123)

677. புனைந்தித ழுரிஞ்சுறும் பொழுது புல்லியும்
வனைந்தில வைகறை மலரு மாமலர்
நனந்தலை யமளியிற் றுயிலு நங்கைமார்
அனந்தலி னெடுங்கணோ டொத்த வாமரோ.

இதழ் புனைந்து உரிஞ்சுறும் பொழுது புல்லியும் - இதழ்களை அழகாகத் தவழும் பகற்பொழுது வந்த போதும், வைகறை மலரும் மா மலர்-(இயல்பாய்) விடியற்காலம் மலர வேண்டிய மாட்சிமை பெற்ற மலர்கள், வனைந்தில - அழகைக் கொண்டு மலர்ந்து விளங்காதனவாய், நனம் தலை - இடமகன்ற, அமளியில் துயிலும் நங்கைமார் - பள்ளியில் நித்திரை செய்யும் மகளிரின், அனந்தலின் - தூக்கத்தில் விளங்கும், நெடும் கணோடு ஒத்த ஆம் - நீண்ட கண்களை ஒத்து விளங்கின போலும் ஆயின. அரோ : ஈற்றசை.

மலர் நங்கைமார் கண்ணோடு ஒத்தவாம் என்றியைக்க. நடுநிசி நடந்துகொண்டிருந்தபொழுது சூரியன் திடீரென்று தோன்றினனாதலின், இயற்கையில் பொழுது விடிந்து மலரக்கூடிய மலர்கள், அவ்வாறு மலராது முகிழ்த்தே நின்றன என்க. ‘புனைந் திதழுரிஞ்சுறு’ என்பதைச் சிலேடையாக்கி நங்கைமார்க்கும் கூட்டியுரைக்கலாம். காரணம் தோன்றியும் காரியம் நிகழாமையால், இதுவும் விபாவனை யணியின் பாற்படும். உரிஞ்சுதல் - தவழ்தல் அல்லது உராய்தல். பொழுது, சூரியனும் ஆம். வைகறை மலர், மகளிர் அனந்தர் விழியை ஒத்தது; ஒப்பு. 66; பெருங் : 2. 15 : 20-24. ‘புனைந் திதழ்.........மாமலர் - சூழ்ந்த மலரைத் தடவி விரிக்கும் ஆதித்தன் கிரணங்கள் பூவினுள்ளே பிரவேசித்தல் ; காலத்தில் மலரும் பூவெல்லாம் அனந்தலில் உறங்குகின்ற கண் போன்றன ; முன் குவிந்தபடியே இருந்தன. நனந்தலை - நடு’ என்பன ப..ழயவுரை. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

(பி - ம்.) 1. புனைந்தக முரிஞ்சுறு ; புனைந்தில கதிரொளி புக்க போதிலும்; தகமுழஞ்சுறு ; தகமுரஞ்சுறு ; தம்முரஞ்சுறு.

2. வனைந்துறு ; வனைந்தன.

4. அனந்தரி னெடுங். (124)

678. இச்சையிற் றுயில்பவர் யாவர் கண்களும்
நிச்சயம் பகலுந்த மிமைக ணீங்கில
பிச்சையு மிடுதுமென் றுணர்தல் பேணலா
வச்சையர் நெடுமனை வாயின் மானவே.

பிச்சையும் இடுதும் என்று - இரப்போருக்குப் பிச்சையேனும் போடுவோம் என்று, உணர்தல் பேணலா - உணர்தலை மேற் கொள்ளாத, வச்சையர் - உலோபிகளுடைய, நெடுமனை வாயில் மான - பெரிய வீட்டு வாயிலை ஒப்பாகும்படி, இச்சையில் - தம் விருப்பபடி, துயில்பவர் யாவர் கண்களும் - தூங்குபவர் எல்லாருடைய கண் களும், பகலும் தம் இமைகள் நிச்சயம் நீங்கிலா - பகற்பொழு தாகிய பின்பும் நிச்சயமாய்த் தம் இமைகள் நீங்கி விழித்தில.

பிச்சையும்: உம்மை இழிவு சிறப்பு: வச்சையர் 680; 929. பால. பூக்கொய். 19. 'வச்சையர் - லோபியரான மலட்டுப் பசு போன்றவர்' - பழையவுரை. வச்சையர் நெடுமனை வாயில் விச்சை யர்க்கு அடைத்திருப்பது போல என்க.

பி-ம். 1. துயிலுறும்யாவர்; துயில்பவர்க்கியாவர்; துயில்வதற்கியாவர்.
2. பகல்வந்து மிமைகள் நீக்கிலா; ணீக்கில; னீக்கலர்; னீங்கலர்; மிமைக்கண்ணீங்கில.
3. பிச்சையுமீய்து; மென் றுணர்வுபேணலர்; றுணர்வுபேணலா.
4. வாயிலானவே. (125)

679. நஞ்சுறு பிரிவின நள்ளி னீளமோர்ந்
தஞ்சுற நடுவணோ ரயர்வு தாங்கிய
வெஞ்சிறை நீங்கிய வினையி னோரென
நெஞ்சுறக் களித்தன நேமிப் புள்ளெலாம்.

நேமி புள் எலாம் - சக்கரவாகப் பறவைகள் யாவும், நள்ளின் நஞ்சு உறு பிரிவின - நள்ளிரவின் விஷம் போன்ற கொடிய பிரிவையுடையன, நீளம் ஓர்ந்து - இரவு நீட்டித்தலை உணர்ந்து, அஞ்சுற - அச்சங்கொண்டு வருந்த, ஓர் அயர்வு தாங்கிய - ஓர் அயர்ச் சியை மேற்கொண்டிருந்தவை, நடுவண் - அத்துயரின் நடுவே, வெம் சிறை நீங்கிய வினையினோர் என - கொடிய சிறையினின்றும் விடு பட்ட நல்வினையை யுடையார் போல, நெஞ்சு உற களித்தன - (பகற் பொழுது வந்தது கண்டு), மனம் மிக மகிழ்வுற்றன ஆயின.

இரவெல்லாம் தத்தம் துணையைப் பிரிந்து வருந்தும் இயல்பின வான சக்கரவாகப் புட்கள், இரவில் அயர்வுற்றவை, இடையே அரக்

கன் ஆணையால் இரவு நீங்கிச் சூரியன் உதிக்கவும், சிறையினின்றும் விடுபட்டவர்போல மனம் மகிழ்வுறுவன ஆயின என்பதாம். சக்கரவாகப்புட்கள், இரவிற் பிரிந்து வருந்திப் பகலிற் கூடி மகிழும் இயல்பின என்பது ; சுந்தர. 687 ; குறிப்பு. நீளம் - கூடு என்று பொருள் கொண்டு, கூட்டில் இரவுக் காலத்தில் தன் இனம் பிரிந்திருத்தலை உணர்ந்து என்றும் பொருள்கொள்ளலாம். 'நடுங்கும்படி யிடையிலே ஒரு பிரிவு பெற்ற சக்கரவாளப் புள் பகற்காலம் வரச் சிறை நீங்கினவர் போலக் களித்தன' என்பது பழையவுரை. இதுவும் அடுத்த செய்யுளும் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. நஞ்சுறு பிரிவுற ; பிரியன ; பிரிவினை ; நாளில் நாளுமோர்க் ; நாளு நீளவோர்க் ; நாளு நீளுமோர் ; நாளி னீளமோர்.

2. விடுவதோர் தயாவு தாங்லால் ; தஞ்சுறத் தங்கணோருளுந் தாங்கல் ; தாங்கலால் ; வடுத்ததோர் தயாவு தாங்கலால் ; தூங்கலால் ; தஞ்சுறத் தங்கணோ ரருளுந் தாங்கலால் ; தஞ்சுறு நங்கையினர்வு தாங்கிய.

3. வினையிலோரென.

4. நெஞ்சுறக் கழிந்தன. (126)

680. நாண்மதிக் கல்லது நடுவ ணெய்திய
ஆணையிற் றிறக்கலா வலரிற் பாய்வன
மாண்வினைப் பயனறு வச்சை வாயில்சேர்
பாணரிற் றளர்ந்தன பாடற் றும்பியே.

பாடல் தும்பி - இசையுடன் ஒலிக்கும் வண்டுகள், நாள் மதிக்கு அல்லது - புதிதாய் உதிக்கும் சந்திரனைக் கண்டு மலர்வது அல்லாமல், ஆணையில் - இராவணனுடைய கட்டளைப்படி, நடுவண் எய்திய- இடையிருளிலே வந்தடைந்த பகற் போதில், திறக்கலா அலரில் - மலரமுடியாத குமுதம், குவளை, ஆம்பல் முதலிய பூக்களிடத்தே, பாய்வன - பாய்ந்து வருகின்றவை, மாண் வினை பயன் அறு - மாட்சிமையுற்ற நல்வினையின் பயனைப் பெறாத, வச்சை - உலோபியின், வாயில் சேர் - வீட்டு வாயிலை அடைந்த, பாணரில் - இரக்க வந்த பாணர்களைப்போல, தளர்ந்தன - மனச்சோர்வு கொண்டன. ஏ: ஈற்றசை,

பாடற்றும்பி திறக்கா அலரிற் பாய்ந்ததால், தேனைப் பெற முடியாது என்பது கூறப்பெற்றது ; ஆம்பல் போன்ற இயற்கைப்

பொருள்கள், இயற்கைக்கு அடங்கியிருத்தலையும், வண்டு, அகால மாறுபாட்டால் தடுமாறுவதையும் இச் செய்யுள் சித்திரிக்கின்றது என்க. வண்டுகளின் ஏமாற்றம், வச்சைமாந்தர் இல் முன் வந்த பாணரின் ஏமாற்றத்துக்கு ஒப்பாயிற்று. வண்டுகளைப் பாணர் என்றது அவை இசை பயில்வதோடு, பிறரை நாடி ஐயம் ஏற்றுண்டு வாழும் இயல்புமுடைமையால் என்க. வச்சை; 678.

பி-ம். 1. நடு வணல்கிய ; நடுவினெய்திய.

2. ஆணியி னீக்கலா ; னீக்கிலா ; ஆணயை நீக்கலாயலரி பாய்வன; வலரியாய்வன.

3. மாண்மையிற் பயனறு ; பயனன்றியச்சை ; மாந்தர் வாயில் மாதர் வாயில்.

4. பாடி றும்பியே. (127)

681. அருமணிச் சாளர மதனி னூடுபுக்
கெரிகதி ரின்றுயி லெழுப்ப வெய்தவும்
மருளொடு தெருளுறு நிலையர் மங்கையர்
தெருளுற மெய்ப்பொரு டெரிந்தி லாரினே.

அரு மணி சாளரம் அதனின் ஊடு - பெறுதற்கரிதான இரத்தினங்கள் வைத்து இழைக்கப் பெற்ற பலகணிகளின் வழியே, புக்கு - உள்ளே புகுந்து, எரி கதிர் - வெம்மை தரும் சூரிய கிரணங்கள், இன் துயில் எழுப்ப - இனிய தூக்கத்தினின்றும் தங்களை எழுப்பும்படி, எய்தவும் - வந்தடையவும், மங்கையர் - அம்மாடங்களில் துயின்ற அரக்கர் மகளிர், தெருள் உற - தெளிவாக, மெய் பொருள் தெளிந்திலாரின் - மிகத்தெளிவாக (அதாவது, அரைகுறையில்லாமல்) உண்மைத் தத்துவத்தை அறியாதவர்களைப் போல, மருள் ஒடு தெருள் உறு நிலையர்-ஒரு பால் மயக்கமும் மற்றொருபால் தெளிவும் அடையும் தன்மையுடையவரானர். ஏ : ஈற்றசை.

உண்மையான ஞானம் அடையப் பெறாதார் மயக்கமும், தெளிவும் மாறிமாறி யடைந்து உலகில் சஞ்சல முறுவதுபோல, மகளிர், தம் துயிலினின்று விடுபட்டும் விடுபடாமலும் தளர்வுறுவாராயினர். மருளொடு தெருளுற்றது ;, குறைத் தூக்கத்தால் மருளும்,

பொழுது புலர்ந்ததால் தெருளும் ஏற்பட்டமையால் என்க. மங்கை யர், மெய்ப்பொருள் தெளிந்தார்க்கு உவமை.

பி-ம். 1. சாளரமத னூடும்புகு ; சாளரத்தங்க ணூடுபுக்.
2. கெரிகதிர் பாய்ந்தவர் துயிலெழுப்பவும்; யெழுப்பி யேற்றவும்; யேத்தவும்.
3. மருள்கொடு ; நேருறு நிலையர் ; நிலைமை மங்கையர் ; நிலைய மங்கையர் ; அருளுறுந் துயிலெழா நிலைகொண் மங்கையர்.
4. தெளிவுற மெய்ப்பொருள் ; தெளித்திலாரினே ; தெரிந்தி லாரினே ; தெரிந்திலார்கள் போல். (128)

682. ஏவலின் வன்மையை யெண்ண றேற்றலர்
நாவலர் நவிற்றிய நாழி நாமநூல்
காவலி னுனித்துணர் கணித மாக்களும்
கூவுறு கோழியுந் துயில்வு கொண்டவே.

ஏவலின் வன்மையை - இராவணனது கட்டளையின் வலிமை யால் இரவிடையே சூரியன் உதித்துப் பகலானதை, எண்ணல் தேற்றலர் - நினைக்கும் தெளிவு அற்றோர்களாய், நாவலர் - கற்று வல்ல அறிவாளிகள், நவிற்றிய - நூல்களில் சொல்லிய, நாழி நாம நூல்-நாழிகை முதலியவற்றை அறிவுறுத்தும் சிறப்பமைந்த கணித நூல்களில் சொல்லியபடி, காவலின் நுனித்து உணர் - இரவில் காவலிருந்து காலத்தை நுணுகி அறிந்துணர்த்தும், கணித மாக் களும் - காலக் கணக்கர்களும், கூவு உறு கோழியும் - பகற்பொழு தாவதைக் கூவி உணர்த்தும் கோழியும், துயில்வு கொண்ட - தூக் கத்தை மேற்கொண்டனர். ஏ : ஈற்றசை.

காலக்கணக்கர் இரவு விழித்திருந்து அவ்வப்போது காலத்தை அறிவுறுத்துபவர் ; அவர்கள் இப்பொழுது இராவணன் ஆணைப் படி எதிர்பாராது பொழுது விடிந்தமை அறிந்து, இயற்கைப்படி பொழுது விடிந்ததாகவும், தாம் காலக்கணக்கில் தவறியதாவும் எண்ணித் தம் தொழிலை விட்டுத் துயிலத் தொடங்கினர். கோழிகள், இயற்கைக்கு ஒத்துக் கூவும் இயல்புடையன. செயற்கையால் உண் டான இந்தப்பொழுது விடிந்த நேரத்தை அவை உணராவாதலின் உறக்க மேற்கொண்டன என்க. கணிதமாக்களும், கோழியும் துயில்வு கொண்ட என அஃறிணை வினை முடிவு கொண்டது,

திணை மயக்கம். நுனித் துணர்தல் - நுட்பமாக ஆராய்ந்து உணர்தல்; 'நுனித்தறங் குனித்த மேலோர்' (அயோத். மந்திரப் : 8.) நாழிகை நூலும் நாழிக்கணக்கரும்; (முல்லைப் : 55-8;) குறுந்: 261: 6-6; சிலப். 5 : 49, அடியார்க். இச்செய்யுள் 'சந்தேகம்' என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 1. ரேற்றலா; யெண்ண ரேயலாம்; எயலிற் பகலயனெழுந்த தெண்ணிலார்.
2. நாவினினியற்றிய; நாவலரியற்றிய; நாளினுமநூல்.
3. காவலி னினிதுணர். (129)

683. இனையன வுலகினி னிகழு மெல்லையில்
கனைகழ லரக்கனுங் கண்ணி னோக்கினன்
நினைவுறு மனத்தையு நெருப்பிற் றீய்க்குமால்
அனையவத் திங்களே யாகுமா லென்றான்.

இனையன - இவ்வித நிகழ்ச்சிகள், உலகின் நிகழும் எல்லையின்- உலகில் நடைபெற்றுக் கொண்டிருந்தபொழுதில், கனை கழல் அரக்கனும் - ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த இராக்கதனாகிய இராவணனும், கண்ணின் நோக்கினன் - தன் கண்களால் அவ்வாறு உதித்த சூரியனைப் பார்த்து, 'நினைவு உறு மனத்தையும் - இவனை நினைக்கும் என் மனத்தையும், நெருப்பில் தீய்க்கும் ஆல் - தன்னுடைய வெப்பத்தால் எரிக்கின்றனன் ஆதலின், அனைய அ திங்களே ஆகும் என்றான் - (முன் வந்த, அந்தச் சந்திரன்தான் இவன் ஆகும்' என்று துணிந்து கூறினான். பின்னுள்ள ஆல்: அசை.

நினைவுறு மனத்தையும் சுடுதல்; 'கருதில்வே முள்ளமும் காணில்வேம் நயனமும்' (பால. தாடகைவதைப்; 5). மனத்தையும்: உம்மை, எஞ்சியது தழுவிய எச்ச வும்மை; அதாவது உடலையும் தீய்க்கும் என்பதைத் தழுவி வந்தது என்பதாம்.

பி - ம். 4. மெல்லையில்.
3. நெருப்புத் தீய்க்குமால்; தீக்குமால். (130)

684. திங்களோ வன்றிது செல்வச் செங்கதிர்
பொங்குளைப் பச்சைமாப் புரவித் தேரதால்
வெங்கதிர் சுடுவதே யன்றி மெய்யுறத்
தங்குதண் கதிர்சுடத் தகாதென் றார்சிலர்.

சிலர் - அங்கிருந்த பணியாளரிற் சிலர், (அவ்விராவணனை நோக்கி), 'இது திங்களோ அன்று - இது சந்திரனே அன்று;

செல்வ செம் கதிர் - சிறப்புடைய சூரியனே ஆகும்; பொங்கு உளை - வளர்ந்து ஓங்கி விளங்குகின்ற பிடரிமயிர்களையுடைய, பச்சை மா புரவி தேரது ஆல் - பசுமை நிறமுடைய பெருமையுற்ற குதிரைகள் பூட்டப்பெற்ற தேரினையுடையது ஆகுமாதலால், (மேலும்), வெம் கதிர் மெய் உற சுடுவதே அன்றி - வெப்பமான கிரணங்களையுடைய சூரியன் உடலில் மிகவும் சுடுமே அல்லாமல், தண் தங்கு கதிர் - தன்னிடம் குளிர்ச்சி பொருந்திய கிரணங்களையுடைய சந்திரன், சுட தகாது என்றார் - சுடத்தக்கது அன்று' என்று கூறினர்.

சூரியன்தான் இவன் என்பதற்கு ஆதாரமாக, பச்சைக் குதிரைகள் பூட்டப்பட்ட தேருடைமையைக் குறிப்பிட்டுக் காட்டித் தெளிவித்தனர். செய்யுள் 605-ஐயும் காண்க. இதனால், இயற்கையில் வெங்கதிர்களையுடைய சூரியனை இராவணன் சந்திரன் என்றே மயங்கியதும், தான் கொண்ட காமாக்கினியால் வருந்தும் நிலையில் அவன் இருந்ததால் அச்சூடு சூரியனால் ஏற்பட்டது என்று மயங்கிக் கூறியதும் ஆம். சூரியன் தேரில் பூட்டப்பெறும் குதிரைகள் ஏழு என்றும், அவை பச்சைநிறமுள்ளவை யென்றும் கூறுவர்; 'பச்சைமா வேழு மேறப்போ யாறு மேறினர்' (பால. கையடைப் : 23) 'அருக்கன்ற னலங்குதேர்ப் புரவி யேழும்' (சுந்தர. 107.) இனி, சூரியன் தேரிலுள்ளது ஒரே குதிரைதான் என்றும், ஸப்தாச்வம் (ஏழு பெயர்ப் புரவி) என்பது அதன் பெயரென்றும் கூறப்பெறுவதும் உண்டு; வி-பா. இந்திரப்பிரத்தச் : 30.

பி - ம். 1. திங்களென் றுரைத்தனை யிறைய தேர்கிலாய்; செல்வ செங்கதிர்.
2. செங்கதி ரிங்கிது சுடுதல் செய்யுமால்; பச்சையம் புரவி; தேர் கொலாம்; தேரலால்.
3. தங்குதண் மதிசுடத் தக்க தோவெனப்; பொங்கிய வுழையர்கள் புகன்ற போதிலே.
4. தண்சுடர் சுடர்த். (131)

இரவியைப் போக்கி இளம் பிறையைக் கொணரச் செய்தல் 685—90

வேறு

685. நீலச் சிகரக் கிரியன்னவ னின்ற வெய்யோன்
ஆலத் தினும்வெய்ய னகற்றி யரற்று கின்ற
வேலைக் குரலைத் தவிர்கென்று விலக்கி மேலை
மாலைப் பிறைப்பிள்ளையைக் கூவுதிர் வல்லை யென்றான்.

சிகர நீலகிரி அன்னவன் - பல சிகரங்களையுடைய நீலமலை போன்ற இராவணன், 'நின்ற வெய்யோன் - எதிர் நின்ற இக்

(கொடிய கிரணங்களையுடைய) சூரியன், ஆலத்தினும் வெய்யன் - விஷத்தைவிடக் கொடியவன்; (ஆதலின்), அகற்றி - இவனை அப்பாற்படுத்தி, அரற்றுகின்ற - ஆரவாரம் செய்கின்ற, வேலை குரலை - கடலின் ஒலியை, 'தவிர்க' என்று விலக்கி - 'ஒழிக' வென்று தடுத்து, மேலை - மேற்றிசையில் உதிக்கும், மாலை பிறை பிள்ளையை-மாலைப் பொழுதில் தோன்றும் இளம்பிறையை, வல்லை - விரைவில், கூவுதிர் - கூவி அழைப்பீராக' என்றான் - என்று பணித்தான்.

இராவணன் பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் கரு நிறத்தையும் வலிமையையும், பெருமையையும் உடையனாதலின், 'நீலச் சிகரக்கிரி யன்னவன்' என்னப் பெற்றான். கடலின் ஓசை காமுகரை வருத்துவது இயல்பாதலின், அவ்வோசைக்கு வருந்தி அதனை அடக்குமாறு பணித்தான் என்க. மேலை மாலைப் பிறைப் பிள்ளை என்றமையால், அது மேற்கே மாலையில் உதிக்கும் மூன்றாம் பிறையாகிய இளம்பிறை என்னப் பெற்றது. தவிர்கென்று : தவிர்க வென்று என்பதின் தொகுத்தல் விகாரம். பிறைப்பிள்ளை - இளம் பிறை ; கிளிப்பிள்ளை, அணிற்பிள்ளை என்பனபோல.

பி - ம். 1. யன்னயணின்ற.
2. வெய்யவ னெய்யனரற்றுகின்ற ; வெய்யவனழற்றி ; வெய்யன் சுற்றி.
3. விலக்கியேலை, விலக்கியய்யேலை, விலக்கிமேலும். (132)

686. சொன்னா னிருதர்க்கிறை யம்மொழி சொல்ல லோடும்
அந்நாளி னிரம்பிய வம்மதி யாண்டொர் வேலை
முந்நாளி னிளம்பிறை யாகி முளைத்த தென்றால்
எந்நாளு மருந்தவ மன்றி யியற்ற லாமோ.

நிருதர்க்கு இறை - இராக்கதர்களுக்கு அரசனான இராவணன், சொன்னான் - அங்ஙனம் கூறினான் ; அ மொழி சொல்லல் ஓடும் - அவ்வார்த்தை கூறிய அளவிலே, அ நாளின் நிரம்பிய - அந்த நாட்கள் பதினைந்தால் நிரம்பியதான, அ மதி - அந்தப் பூர்ண சந்திரன், ஆண்டு - அவ்விடத்து, ஓர் வேலை - (குறிப்பிட்ட) அந் நேரத்திலேயே, மு நாள் இளம்பிறை ஆகி - மூன்றாம் நாளில் தோன்றும் இளம் பிறையாக மாறி, முளைத்தது என்றால் - உதய மாயிற்று என்று சொல்வாரானால், அரும் தவம் அன்றி - அரிய தவத்தை அல்லாது வேறொன்றை , எ நாளும் - என்றும், இயற்றல் ஆமோ - செய்யத் தக்கது ஆகுமோ ? (ஆகாது என்றபடி).

இராவணன் முன்செய்த அரிய தவப்பயனால், கோள்கள் முதல் யாவும் அவனுக்கு அடங்கி ஏவல் புரிகின்றன ஆதலின், தவத்தினும் உயர்வு இல்லை; அத் தவமே செய்யத்தக்கது என்ற உண்மை இச் செய்யுளால் உறுதிப்படுத்தப் பெறுவதாகும். இராவணன் செய்த தவப்பெருமையையும், அத்தவப்பயனையும் ஆசிரியர் இந்நூலில் பல இடங்களில் அறுதியிட்டுக் கூறுவது காணலாம்; சுந்தர. *104* குறிப்பு. மேலும் இக்கருத்து, "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ, மீண்டு முயலப் படும்" என்ற (குறள். *265*) பாவால் அறிவுறுத்தப் பெறுவதும் காண்க.

பி - ம். 1. சொன்னா ருழையோர் மதிக்கம் மொழி சொல்லலோடும்.
2. அன்னாரு நிரம்பிய ; அன்னாநிரம்பிய ; யாங்குமீண்டு.
3. முன்னாளி ; முன்னானை ; யாக முளைத்த ; முனைத்த வென்றால்.
4. எந்நாளு மருந்தவ மெய்தி யியற்றல் நன்றே ; யருந்தவமின்றி ; யியம்பலாமோ. (*133*)

687. குடபாலின் முளைத்தது கண்ட குணங்க டீயோன்
வடவாவன லன்றெனின் மண்பிடர் வைத்த பாம்பின்
விடவா ளெயிறன்றெனி லென்னை வெகுண்டு மாலை
அடவா ளுருவிக்கொடு தோன்றிய தாகு மன்றே.

'குடபாலின் முளைத்தது கண்ட -(பிறைமதி) மேற்குத்திசையில் உதித்தது பார்த்த, குணங்கள் தீயோன் - தீய குணங்களையுடைய அந்த இராவணன், '(இது), வடவா அனல் - இது வடவைத் தீ; அன்று எனில் - அன்றாயின், மண் பிடர் வைத்த - இந்தப் பூமியைத் தன் பிடரிமீது வைத்துத் தாங்கியுள்ள, பாம்பின் - பாம்பாகிய ஆதிசேடனின், விட வாள் எயிறு - விஷத்தைக் கக்கும் ஒளி பொருந்திய பல்லே ஆகும்; அன்று எனில் - அதுவும் அல்லாக்கால், என்னை வெகுண்டு - என்மீது கோபமுற்று, மாலை - மாலைப்பொழுது, அட - கொல்ல, வாள் உருவி கொடு - தன்வாளை உருவிக்கொண்டு, தோன்றியது ஆகும் - என் எதிர் தென்பட்டதே ஆகும். அன்று, ஏ : அசைகள்.

வாடவாநலம், என்ற வடமொழித்தொடர் வடவாவனல் என்றாயிற்று. பிறைக்கு, வடவாவனல், சேடன் பல், வாள் உவமைகள். பிறைக்குப் பாம்புப் பல்; ஒப்பு : தக்க. *128* ; *420*. பிறையை வாள் என்றது, வாள்போல் கூர்மையும் வளைவும், பெற்றமையாலும், வாள் ஈர்வதுபோன்ற நிலவைப் பொழிந்து வருத்தியதாலும் என்க,

மாலை காமுகரை வருத்தும் இயல்பினது ஆதலின், அது தன்னை வெகுண்டு வாளேந்தி வந்தது எனக் கூறினான். 'மாலை மலருமிந் நோய்', (குறள். 1227) என்றமையும் நோக்குக. இச்செய்யுளுக்கு ஒப்பு : 'வேலைநின்றெழா வுகக்கனலென வேகநஞ்சரு மதிப்பிள வென, மாலையும்படா விழித்திரளது வாய்தொறுங்குவா லெயிற் றணியதே' (நக்க. 155).

பி - ம். 1. குடபாலினில் வந்ததுகண்டு ; வந்ததுகண்ட.
2. வன்பிடர்.
3. விடவாயெயிறு ; வெகுண்டமாலை ; வெருண்டமாலை.
4. அடல்வா ளுருவித் தயல் ; அடர்வாள் ; வெண்மதியன்றி தென்றான் ; யாகுமன்றோ. (134)

688. தாதுண் சடிலத்தலை வைத்தது தண்ட ரங்கம்
மோதுங் கடலிற் கிடைமுந்து பிறந்த போதே
ஓதுங் கடுவைத்தன் மிடற்றி லொளித்த தக்கோன்
ஈதுங் கடுவாமென வெண்ணிய வெண்ண மன்றோ.

'ஓதும் கடுவை தன் மிடற்றில் ஒளித்த தக்கோன் - யாவரும் கொடிதென்று சொல்லும் நஞ்சினைத் தன் கழுத்தில் வைத்து அடக்கிக்கொண்ட மேலோனான சிவபெருமான், தண் தரங்கம் மோதும் - குளிர்ந்த அலைகள் தாக்கியடிக்கும், கடலிற்கு இடை - பாற்கடலின் இடத்து, முந்து பிறந்த போதே - அவ்விஷத்துக்கு முந்தியே (இப்பிறை) பிறந்த அப்பொழுதே, தாது உண் சடிலத் தலை வைத்தது - மகரந்தங்களைக்கொண்ட தன் சடையி னிடத்து இப்பிறையை எடுத்துப் பிணித்து வைத்துக்கொண்டது (ஏனென்றால்), ஈதும் - இந்தப்பிறையும், கடு ஆம் என எண்ணிய எண்ணம் அன்றோ - கொடிய நஞ்சே என்று கருதிய எண்ணம் கொண்டு அல்லவோ ?.

ஓதும் கடு - வேதத்தால் புகழப்படும் கடு என்னலும் ஆம்; 'கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை, மறைநவி லந்தணர் நுவலவும் படுமே' என்ற (புறநா. 1. 5-6) அடிகளையும், அவற்றின் உரையையும் காண்க; ஓதுதல் - வேதம் ஓதுதல். பாற்கடலில் கடு பிறந்து அழிக்க வருவது கண்ட தேவாசுரர் அபயம் என்று சிவபெருமானிடம் முறையிட, அப்பெருமான் அவர்களையும் மற்ற உலகினரையும் பாதுகாக்க, அக்கடுவை எடுத்துத் தம்

கண்டத்தில் மறைத்துக்கொண்டார். ஆனால் அக்கடு, பிறந்த தற்கு முன்னே அப்பாற்கடலிற் பிறந்த இந்தப் பிறையைப் பிறர் வேண்டாமலிருக்கவும், இது எவற்றினும் கொடிய விஷம் என்று கருதியே எடுத்துத் தம் சடை யிடத்து அவர் வைத்துக் கொண்டார் என்று காமுகனான இராவணன், அப்பிறையைக் கண்டு அதனால் தனக்குண்டான கொடுமையால் ஊகித்துக் கொண் டான் என்பதாம்; இது, தற்குறிப்பேற்றவணி. தாதுண் சடிலம் - சடிலத்தில் அணிந்துள்ள கொன்றைமலர் முதலியவற்றில் உள்ள மகரந்தங்கள் நிரம்பிய சடிலம். நிலவை விடம் என்றது; 'உலந் தவர்க் குயிர்சுடு விடமுமாய்' (பால. உண்டாட்டுப் 2.); 'மதிக்கலை யாம் வெள்ளைவிடம்' (நைடத. சந்திரோ. 14). இச்செய்யுள், சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. சடிலத்திடை.
2. கடலிற்பட; கடலிற் கிடைமுந்து பிறந்தெழுந்தே.
3. மிடற்றி லடக்கு நாதன்: காதுங் கடுவை களத்தி லடக்கிய கடவுள் மற்றும்;
4. வெண்ணமன்றே; வெண்ணமன்னே. (135)

689. உருமொத்த வலத்துயிர் நுங்கிய திங்க ளோடித்
திருமிச் சிறுமென் பிறைதீமை குறைந்த தில்லை
கருமைக் கறையெஞ்சலி னஞ்சு கலந்த பாம்பின்
பெருமை சிறுமைக்கொரு பெற்றி குறைந்த துண்டோ.

'எஞ்சல் இல் நஞ்சு கலந்த பாம்பின் - குறைவில்லாத விஷம் தன்னிடம் கலந்துள்ள பாம்புகளுள், பெருமை சிறுமைக்கு - பெரிது சிறிது என்பதற்கு, ஒரு பெற்றி குறைந்தது உண்டோ - விஷத் தன் மையில் ஒரு குறைவு அடைவது உள்ளதாகுமோ? (ஆகாது என்ற படி); அதுபோல, உரும் ஒத்த வலத்து - இடிபோன்ற வலிமையோடு, உயிர் நுங்கிய - என் உயிரை விழுங்கியது போன்ற துயரைத் தந்த, திங்கள் - முழுச் சந்திரன், ஓடி - இவ்விடம்விட்டு அகன்று, திருமி - மாறி வந்த, இ சிறு மெல் பிறை - இந்தச் சிறிய இளம்பிறை, தீமை குறைந்தது இல்லை - அம் முழுமதியில், கொடுமையிற் குறைந்ததாக இல்லையே!

பாம்பில் சிறுமை பெருமை இல்லை; அது போல, முழுமதிக் கும், பிறை மதிக்கும் வேற்றுமை இல்லை என்பதாம். இச் செய்யுள்

உவமையணி. 'திருமி - திரும்பி. எஞ்சலில் - சுருங்குதலில்லாத; பாம்புக்குள்ளே சிறிது பெரிதுண்டோ' - என்பது பழையவுரை.

பி-ம். 1. உருமொக்க நிறைந்தென்னுயிர் நுங்கிய திங்கள் மீள; உருமொக்க வுலேந்துயிர்; உரிமைத் தய வந்துயிர் நுங்கிய; உருவொக்க மலர்ந்துயிர்; உருமொத்து.

2. அருகிச் சிறுதண் பிறையாகியுந் தீமை குறைந்திலேயாற்; சிறுமின் பிறை; தீமை நிறைந்த தில்லை; தீமை குறைத்ததில்லை; திருமிச் சிறைபுன் பிறை.

3. கருமைக் கடுவைத்தன் வாயிற் கரந்த பாம்பின்; கறை நெஞ்சினி னஞ்சு; நெஞ்சுகரந்த; நெஞ்சிலினஞ்சு.

4. வெற்றி குறைந்ததுண்டோ. (136)

690. கன்னக் கனியுமிரு டன்னையுங் காண்டு மன்றே
முன்னைக் கதிர்நன்றி தகற்றுதிர் மொய்ம்பு சான்ற
என்னைச் சுடுமேலினி யேழுல கத்தில் வாழ்வோர்
பின்னைச் சிலருய்வரென் றங்கொரு பேச்சு முண்டோ.

'முன்னை கதிர் நன்று - முன் வந்த சூரியனே நல்லதாகும்; கன்ன கனியும் - (இனி), மிகவும் கனிந்தது போல முதிரும், இருள் தன்னையும் - இருட்டையும், காண்டும் - அதன் தன்மை எப்படியுள்ளது என்பதையும் பார்த்துவிடுவேன்; இது அகற்றுதிர் - இந்தப் பிறையை இவ்விடம் விட்டு அப்புறப்படுத்துவீர்; மொய்ம்பு சான்ற - வலிமை மிக்க, என்னை சுடுமேல் - என்னையே இந்தப் பிறை சுடுமானல், இனி - இனிமேல், ஏழு உலகத்தில் வாழ்வோர் - ஏழு உலகங்களிலும் வாழ்பவர் தம்முள், பின்னை சிலர் - பிறகு சிலர், உய்வர் என்று - இப்பிறையின் கொடுமைக்குத் தப்பிப் பிழைப்பாரென்று, அங்கு ஒரு பேச்சும் உண்டோ - அவ்வுலகங்களில் ஒரு வார்த்தையும் பேசப்படுமோ? (பேச இடமிராது; யாவரும் அழிவர் என்பதாம்). அன்று, ஏ: அசைகள்.

கன்னக் கனிதல் - மிகவும் நன்ருய் முற்றிக் கனிதல்; இது கன்னங்கறுத்த, செக்கச்சிவந்த, சின்னஞ் சிறுத்த, பென்னம் பெருத்த, பண்ணப் பணைத்த என்பன போன்று மிகுதியுணர்த்துவதாம். அகற்றுதிர், என்பதோடு என்ருன் என்னும் வினை முடிவு தொக்கி நிற்பது என்க.

பி-ம். 1. கன்னற் கனையுமரு டன்னையுங் காட்டுமன்றே; மிருடன்னவுங்.

2. கதிர் நன்றீத கற்றுதிர்; கதிரதன்றித கற்றுதிர்; முன்புசான்ற.

3. சுடுமென்னினிங்; யேழுலகத்து.

4. பின்னர்ச் சிலருய்பவர் யாரவை பேசவுண்டோ; சிலர் வாழ்வ, சிலருய்ப்பவ. (137)

இருளின் வருணனை. **691—4.**

**691.** ஆண்டப் பிறைநீங்கலு மெய்திய வந்த காரம்
தீண்டற் கரிதாய்ப்பல தேய்ப்பினுந் தேய்க்க லாகா
வேண்டிற் கரபத்திரப் பத்தியி னீர்ந்து வீழ்த்துக்
காண்டற் கரிதாய்ப்பல கந்து திரட்ட லாகும்.

ஆண்டு - அப்பொழுது, அ பிறை நீங்கலும் (இராவணன் ஆணைப்படி) அந்த இளம்பிறை அவ்விடம் விட்டு நீங்கியவுடன், எய்திய அந்தகாரம் - அங்குவந்த இருள், தீண்டற்கு அரிதாய் - யாவராலும் தீண்டுவதற்கு முடியாதபடியும், பல தேய்ப்பினும்-பல கருவிகளைக் கொண்டு தேய்த்தாலும், தேய்க்கல் ஆகா - தேய்த்து அழிக்க முடியாததுமாயிற்று ; வேண்டில் - ஒருகால் விரும்பினால், கரபத்திர பத்தியில் ஈர்த்து - கை வாள்களின் தொகுதியால் அவ்விருளை அறுத்து, விழ்த்து - கீழே வீழ்த்தி, காண்டற்கு அரிதாய்- இதனைக் காண்பதற்கு அரியதாகும்படி, பல கந்து-பல தூண்களாய், திரட்டல் ஆகும் - திரட்டுதலைச் செய்யலாம்.

இது முதல் மூன்று செய்யுட்கள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. சிலர் இவற்றை இராவணன் கூற்றாகவும் கொண்டு பொருள் அமைப்பர். இருள் கருவியால் அழிக்கமுடியாது; ‘கருவிக்கு நீங்காக் காரிருள்’ (நள. சுயம் வரக். 119); ‘கொள்ளிக்கும் விள்ளாக் காரிருள்’ (நள. சுயம்வரக். 113.) என்றதையும் ஒப்பு நோக்குக. கரபத்திரம் - கைவாள் ; பத்திரம் - வாள். 895. ‘பல தேய்ப்பினும் தேய்க்கலாகா - எந்த ஒளியினாலாவது போக்கலாமென்றாலும் ஆகாத இருள். வேண்டற் கரபத்திரம் - வேண்டுதற்குரிய ஈர்வாள். உயர் கந்து - நீண்ட தூண்’ என்பன பழையவுரை.

பி - ம். 1. நீங்கினு ; மெய்திய தந்தகாரம்.

2. தீண்டற் கெளிதாய்ப் பல தேய்ப்பன ; தேய்த்தலாகி; தேய்ப்பலாகி ; தேய்தலாகி ; தேய்வுறுவ.

3. வேண்டற்கர......வீர்த்து வீழ்த்திக் ; வீர்ந்து வீழ்த்தலாகி, விழுத்தலாகி.

4. காண்டற் கருது சேணுயர் கந்து ; திரட்டலாகி. (138)

692. முருடீர்ந் துருட்டற் கெளிதென்பதென் முற்ற முற்றிப்
பொருடீர்ந்த ஞானச் சுடர்புக்கு வழங்க லின்றிக்
குருடீங்கி தென்னக் குறிக்கொண்டகண் ணோட்டங் குன்றி
அருடீர்ந்த நெஞ்சிற் கரிதென்பதவ் வந்த காரம்.

(இவ்விருட் பிழம்பை), முருடு ஈர்ந்து - முண்டு முடுச்சுகளை வெட்டி எறிந்து, உருட்டற்கு - உருட்டிக் கந்துகளாகத் திரட்டு வதற்கு, எளிது என்பது என் - செய்வது எளிது என்று சொல்வது என்ன சிறப்புடைத்தாகும்? (பின்பு, அவ்விருள் எத் தன்மையது, எனின்), முற்ற முற்றி - முழுவதும் முதிர்ந்து, பொருள் தீர்ந்த - உண்மைப் பொருள் இது என்று சந்தேகத் திற்கு இடமின்றித் தீர்மானம் செய்த, ஞானம் சுடர் புக்கு வழங்கல் இன்றி - ஞானமாகிற நல்லொளி புகுந்து வழங்குவது இல்லாமல், 'ஈங்கு இது குருடு என்ன - இங்கு இஃது ஒரு குருடு' என்று பிறரால் சொல்லப்படும், குறிகொண்ட - ஒரு பெயரைத் தாங்கிக்கொண்டதும், கண்ணோட்டம் குன்றி - பரந்த தாட்சண்யம் என்பதும் குறைந்து, அருள் தீர்ந்த - அருளும் அற்ற, நெஞ்சில் - மனத்தைப் போல, அ அந்தகாரம் - அந்த இருள், கரிது என்பது - கரிதானது என்று சொல்லத்தக்கது.

முன் செய்யுளிற் கூறிய, 'பல கந்துதிரட்டலாகும்' என்றதைத் தொடர்ந்து இங்கு, 'முருடீர்ந் துருட்டற்கெளிது என்பதென்' என்று வினவியது. முருடு - முண்டும் முடிச்சுமாய் உள்ள முரட்டுக் கட்டை. முற்ற முற்றி; இது முன் 690-இல் வந்துள்ள கன்னக்கனியும் என்பது போன்றது. கண்ணோட்டம் இல்லாத கண் குருடு என்பதாம்; குறள், 575, 577. ஞானம் இல்லாது, குருடு என்னும் பெயரும் தாங்கி, கண்ணோட்டமுமற்று, அருளும் இல்லாத நெஞ்சுபோன்ற இருள் என்க. இவ்வுவமையின் அருமை ஆய்ந்து உணர்ந்து போற்றத்தக்கது.

பி-ம். 1. முருட்டற் குருத்தீதென; கரிதென்ப தென முய்யமுற்றி; முற்றி முற்றி.
2. பொருடீங்கில் கேள்விச்.
3. குறிக்கொண்டு கண்ணோட்டம்.
4. கரிதென்ப தந்தகாரம்; கரிதென்ப வந்தகாரம்; கரிதென்பன வந்தகாரம்.

693. விள்ளாது செறிந்திடை மேலுற வீங்கி யெங்கும்
நள்ளா விருள்வந்தகன் ஞாலம் விழுங்க லோடும்
எள்ளா வுலகியாவையும் யாவரும் வீவ தென்ப
துள்ளா துமிழ்ந்தான் விடமுண்ட வொருத்த னென்றான்.

விள்ளாது - பிளவுபடாமல் முழுமையாக, இடைசெறிந்து - இடமெல்லாம் அடர்ந்து, மேல் உற வீங்கி - வானிடத்தும் பொருந்தும்படி பெருத்தோங்கி, எங்கும் நள்ளா இருள் வந்து - எங்கிலும் பொருந்தாத இருளானது சூழ்ந்துவந்து, அகல் ஞாலம் விழுங்கல் ஓடும் - இடமகன்ற உலகை விழுங்கிய அளவில், (அது கண்ட இராவணன்), 'விடம் உண்ட ஒருத்தன் - விஷத்தை உண்ட ஒப்பற்ற சிவபெருமான், எள்ளா உலகு யாவையும் - இகழ்தற்கல்லாத உலகம் அனைத்தும், யாவரும் - அதில் வாழும் உயிர்கள் எல்லாம், வீயும் என்பது உள்ளாது - அழியும் என்பதை நினையாமல், உமிழ்ந்தான் என்றான் - தான் முன் உண்ட விடத்தை உமிழ்ந்துவிட்டான்'- என்று கூறினன். (அவ்விடமே இவ்விருளாய் வந்தது என்பது கருத்து).

இரவு, தன்னை மிகவும் வருத்தியதால் அதனை இராவணன் சிவபிரான் உமிழ்ந்த விடம் என்று கூறினன் என்க. 'செல்லா விரவே, சிறுகா விருளே' சுந்தர. (492), என்று பிராட்டி யிரங்கிக் கூறியதும் காண்க. இச்செய்யுள் தற்குறிப்பேற்ற வணியும், உருவகவணியும் ஆம்.

பி - ம். 1. செறுத்திடை மேலுற வோங்கி யோங்கும்; வீங்கி யோங்கும்; வீங்கி யேங்கி : வோங்கி யெங்கும்.
2. இருள்வந்தன ; இருளந்தகன் ; விலங்கலோடும்.
3. வீயுமென்ப ; வீவதென்ப.
4. உள்ளா வுமிழ்ந்தான். (140)

694. வேலைத் தலைவந் தொருவன்வலி யால்வி ழுங்கும்
ஆலத்தி னடங்குவ தன்றி தறிந்து ணர்ந்தேன்
ஞாலத்தொடு விண்முதல் யாவையு நாவி னக்கும்
காலக் கனல்கார் விடமுண்டு கறுத்த தன்றே.

(இவ்விருள்), ஒருவன் - ஒப்பற்ற சிவபெருமான், வேலை தலை வந்து - பாற்கடலினிடத்து வந்து, வலியால் - தன் பராக்கிரமத்தால், விழுங்கும் - விழுங்கிய, ஆலத்தின் இது அடங்குவது அன்று-அந்த விஷத்தைப்போல ஒருவன் எடுத்துண்ண இஃது அடங்கக் கூடிய

தன்று; அறிந்து உணர்ந்தேன் - இதனை யான் நன்றாய் அறிந்து உணர்ந்து கொண்டேன்; (ஆதலால், இது பின்னை யாதெனில்), ஞாலத்து ஒடு - இந்த உலகத்தோடு, விண் முதல் யாவையும் - ஆகாயம் முதலிய எல்லாப் பூதங்களையும், நாவின் நக்கும் - தன் நாவினால் நக்கியுண்ணும், கால கனல் - ஊழிக்காலத் தீ, கார் விடம் உண்டு - கரிய விடத்தை உண்டு, கறுத்தது - கருநிறத்தை அடைந்தது ஆகும்; அன்று, ஏ : அசைகள்.

'இந்த இருளைச் சிவபெருமான் உண்ட ஆலத்தினோடு ஒப்பிட்டால் அவ்வொப்புமை அடங்கக்கூடியது அன்று; பின்னை இஃது என்னையெனில், காலக்கனல் விடம் உண்டு கருநிறத்தை மேற்கொண்டதே ஆகும்' என்று இராவணன் ஊகித்துக் கூறினான் என்க. முன் செய்யுளில், 'சிவபிரான் உண்ட விடம் உமிழ்ந்தது' என்ற கூற்றை இது மாற்றி உரைத்ததாகும்; முன் 691-இல் கூறியதை அடுத்த செய்யுளில் மாற்றியது போல; இது கவியின் ஒரு வகைத்திறன். ஞாலத்தொடு விண் முதல் யாவையும் - உலகத்தோடு விண் முதலாக உள்ள பூதங்கள் அனைத்தையும் என்றும் பொருள் கூறலாம்; நாவில் நக்கும் என்றமையால், எல்லா உலகங்கள், அல்லது ஐம்பெரும் பூதங்கள் யாவும், காலக் கனலுக்கு நாவால் நக்கி யுண்ணக்கூடிய எளிய உணவு என்பதாம். கனலுக்கு நாவுடைமை; அக்கினிக்கு ஸப்த ஜிஹ்வா என்ற பெயர் உண்மையும் அறிக; (ஸப்தஜிஹ்வா - ஏழு நாவன்). காலக் கனலே கொடிது கறுத்தது என்றதால், காலக் கனல் கோபித்தும் வந்தது என்றும் கூறலாம்; கறுத்தல் - கோபித்தல்; 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள' (தொல்.)

பி-ம். 2. ஆலத்தி னடுங்குவ தன்றி; யுணர்ந்தறிந்தேன்.
4. காலக்கடல்; காலத்தனல்; காலக்கனலே. *(141)*

### பிராட்டியின் உருவெளித் தோற்றம் 695—8

695. அம்பு மனலு நுழையாக்கன வந்த காரத்
துப்பு மழைகொண்டய லொப்பரி தாய துப்பின்
கொம்பர் குரும்பைக் குலங்கொண்டது திங்க டாங்கி
வெம்புந் தமியேன்முன் விளக்கெனத் தோன்று மன்றே.

'அயல் ஒப்பு அரிது ஆய-பிறிதொன்றை எளிதில் ஒப்புமை கூற முடியாத, துப்பின் கொம்பர் அது-ஒரு பவழக்கொம்பு ஆனது, அம்பும் அனலும் நுழையா - பாணமும் நெருப்பும் உள் நுழைந்து பிளந்தழிக்க

முடியாத, கன - வலிய, அந்தகார தும்பு மழை கொண்டு - இருளாகிய விரிந்த மேகத்தைத் தாங்கிக்கொண்டு, குரும்பை குலம் கொண்டது - இரு தெங்கிளங் காய்களையும் தன்னிடங் கொண்டதாய், திங்கள் தாங்கி - சந்திரனையும் தரித்து, வெம்பும் தமியேன் முன் - வருந்தித் தனியேயிருந்து வாடும் என் எதிரே, விளக்கு என - ஒரு தீபம்போல், தோன்றும் - ஒளியுடன் காணப்படுகின்றது! அன்று, ஏ : ஈற்றசைகள்.

இது, இராவணன் கண்ட பிராட்டியின் உருவெளித் தோற்றம். துப்பின் கொம்பு பிராட்டியின் திரு உருவுக்கும், மழை அவள் கூந்தலுக்கும், குரும்பைக்குலம் அவள் தனங்களுக்கும், திங்கள் அவளது திருமுகத்திற்கும், விளக்கு அவள் திருமேனியின் ஒளிக்கும் உவமைகள். இஃது இல்பொருளுவமையோடு உருவகவுயர்வு நவிற்சி அணியும் ஆம். இதில், வடிவுவமை, வினையுவமைகள் அடுக்கி வந்துள்ளமை காண்க. இங்கு உவமைகள் உபமேயங்களாக மாறிவந்து அவ்வுமைகளினும் அவை சிறப்புற்றமை விளக்கப் பெற்றது. அம்பும் அனலும் நுழையா இருள் ; ஒப்பு : 691 ; குறிப்புரை. தும்பு - சிக்கு அல்லது துன்பமும் ஆம் ; சீவக. 666. 'தும்புமழை - விரிந்தமழை' பழையவுரை.

பி - ம். 1. நுழையாக்கையரக்க. 2. தும்பர்.
3. கொம்பன்ன குரும்பைக். 4. தனியேன் ; தனியென். (142)

696. மருளூடு வந்த மயக்கோமதி மற்று முண்டோ
தெருளேமி தென்னோ திணிமையிழைத் தாலு மொவ்வா
இருளூடிரு குண்டலங் கொண்டு மிருண்ட நீலச்
சுருளோடும் வந்தோர் சுடர்மாமதி தோன்று மன்றே.

'மருள் ஊடு வந்த மயக்கோ - இது, (என்) புத்தி மாறுபட்டத்தால் வந்த மயக்கமோ? மதி மற்றும் உண்டோ - இதுவரை இல்லாத புதியதான ஒரு மதி உள்ளது போலும்! இது என்னோ தெருளேம் - இது யாதோ? யான் அறியக்கூடியதாய் இல்லை! திணி மை இழைத்தாலும் - திணிக்கப்பெற்ற மையைக்கொண்டு அமைத்தாலும், ஒவ்வா - ஒப்பாகாத, இருள் ஊடு - இருளின் இடையே, இரு குண்டலம் கொண்ட - குண்டலங்கள் என்னும் இரண்டு காதணிகளைப் பூண்டும், இருண்ட நீல சுருள் ஓடும் - இருட்டுப்போன்ற கருநிறமான சுருண்ட கற்றையான கூந்தலோடும், சுடர் மா மதி தோன்றும் - ஒளி வீசும் ஒரு பூர்ணசந்திரன் என் எதிரே வந்து தோன்றுகிறது!; அன்று, ஏ : ஈற்றசைகள்.

திணிமை யிழைத்தாலும் ஒவ்வா இருள்; அங்குப் பரவியிருந்த அந்தகாரத்தைக் குறித்தது. ஒப்பு; 'கூட்டுமைபோற் சிறந்த கூரிருள்' (நள. சுயம்வர. *102*). மா மதி, இருகுண்டலங் கொண்டும், நீலச் சுருளோடும் தோன்றும் என்றது பிராட்டியின் உருவெளித் தோற்றம். இஃது, உருவகவணி; இல் பொருளுவமையை யேற்றுவந்தது; இராவணன் பிராட்டியின் உருவெளியிற் கண்ட முகம், குண்டலங்கள் அணிந்தும், இருண்ட நீலச் சுருளாகிய கூந்தலைக் கொண்டும் இருந்தமையால், 'இதுவரையில் காணாத புதுமதி' என்று அவன் ஐயுறலானான் என்க. நீலச்சுருள், ஓலையுமாம்.

பா-ம். 1. மருளோடு; மதிமாறுமூண்டோ; மதிமறந்ததுண்டோ.

2. தெருளோமிதென்னோ; தெருளாவிதென்னு; திணிமுத்திமைத் தாலு மொவ்வா; திணிமுற்றிழையைததாலு; திணிமுற்றிமைத் தாலு; திணித்தமையழைத்தாலு; தெரிந்துணர்ந்தாலும்; வறியேன் செறிந்தமூலம்.

3. இருளோடிரு; இருளோடிருள்; கொண்டிருண்ட; கொண்டு மிருண்ட.

4. தோன்றுதென்றான். (*143*)

697. புடைகொண்டெழு கொங்கையு மல்குலும் புல்கி நிற்கும்
இடைகண்டில மல்லதெல் லாவுரு வுந்தெ ரிந்தாம்
விடநுங்கிய கண்ணுடை யாரிவர் மெல்ல மெல்ல
மடமங்கைய ராயென் மனத்தவ ராயி னாரே.

'புடை கொண்டு எழு - (மார்பின்) பக்கங்களைத் தன்னிடமாக அடக்கிக்கொண்டு, பரவி மேற்கிளம்பி எழுந்துள்ள, கொங்கையும் - தனங்களையும், அல்குலும் - அல்குலையும், புல்லி நிற்கும் - தழுவித் தாங்கி நிற்கவேண்டிய, இடை கண்டிலம்-(இவளது) இடை என்னும் உறுப்பைப் பார்க்க முடியவில்லை; அல்லது - அவ்விடையல்லாது; எல்லா உருவும் தெரிந்தாம் - மற்ற எல்லா அங்கங்களின் உருவங்களையும் அறிந்து கொண்டோம்; விடம் நுங்கிய கண் உடையார் இவர் - விஷத்தை விழுங்கியதான கண்களையுடைய இவர், மெல்ல மெல்ல - மெதுவாக, மட மங்கையர் ஆய் - ஓர் இளமங்கையர் தோற்றமாகி, என் மனத்தவர் ஆயினர் - என்மனத்தினுள் வந்து தங்குபவரானார். ஏ: ஈற்றசை.

*695* முதல் உருவெளித்தோற்றம் சிறுகச்சிறுக அமைந்து, இங்கு முழுமையும் ஆயினமை கூறும் நயம் நோக்கற்பாலது. இடை

கண்டிலாமை: அது பிறர் கட்புலனுக்குத் தோன்ருது நுட்பமாய் இருப்பதால்; 'பொய்யோவெனும் இடையாள்'; (அயோத். கங்கை: 1.); 'மருங்கிலா நங்கை'; (பால. மிதிலைக்: 38.) என முன் கூறியுள்ளமை காண்க. விடநுங்கிய கண்: விடத்தைப் போலக் கருநிறம் கொண்டுள்ளமையாலும், விடம் போலத் தன்னை வருத்துவதாலும்; விடங்கொண்ட கண்; பால. பூக்கொய்: 7; உண்டாட்டு: 10. கண்ணுடையார், மெல்ல மெல்ல, மடமங்கையாய் என் மனத்தவராயினர் என்க.

பி-ம். 1. புல்லநிற்கும்; புல்லிநிற்கும்.
2. மல்லா தெலாவுருவுங்; வுருவுந்தெரிந்தாம்; வுருவுந்தெளிந்தென.
3. மெள்ளமெள்ள; மெள்ளவந்தே.
4. மடமங்கையார் மென்மனத்தவ ராயினரே; மனத்தைய லாயினரே; மங்கையராமென; மனமங்கையர் போலென் மனத்திடைப் புகுந்ததென்றான். (144)

698. பண்டே யுலகேழினு முள்ள படைக்க ணாரைக்
கண்டே னிதுபோலொரு பெண்ணுருக் கண்டி லேனல்
உண்டே யெனில்வேறினி யெங்கை யுணர்த்தி நின்ற
வண்டேறு கோதை மடவாரிவ ராகு மன்றே.

'பண்டு ஏ - முன்னமே, உலகு ஏழினும் உள்ள - ஏழுலகங்களிலும் உள்ள, படை கண்ணாரை - வேல், வாள், அம்பு என்னும் படைகள்போன்ற கண்களையுடைய மகளிர் எல்லாரையும், கண்டேன் - பார்த்துள்ளேன்; இவர் போல்வது ஓர் பெண் உரு கண்டிலேன் - இவரைப்போல உள்ள ஒரு பெண்ணின் உருவச் சிறப்பை நான் எங்கும் கண்டேனில்லை; வேறு இனி உண்டே எனில் - வேறு இனி ஒரு பெண் இதோ இருக்கின்றாளே என்றால், எங்கை உணர்த்தி நின்ற - என் தங்கையாகிய சூர்ப்பணகை எனக்குத் தெரிவித்துள்ள, வண்டு ஏறு கோதை மடவார் - வண்டுகள் ஏறி மொய்க்கப்பெற்ற கூந்தலையுடைய அவ்விளமங்கையே, இவர் ஆகும் - இப்பெண்மணி ஆகவேண்டும். அன்று, ஏ, ஆல்: அசைகள்.

அன்றே: இது, வியப்போடு கூடிய தேற்றப்பொருளில் வந்தது. ஏழுலகில் உள்ள வடிவிற் சிறந்துள்ள பெண்கள் அனைவரையும் இராவணன் இதற்குமுன் கண்டுள்ளான்; இப்பொழுது பிராட்டியின் உருவெளியாகிய ஓர் அதிசௌந்தரியப் புதுத் திருவுருவை அவன் கண்டமையால், அவ்வுரு தன் தங்கை கூறிய பெண்ணே ஆகவேண்டும் என்று துணிவு கொண்டான் என்க. இதனால், சூர்ப்பணகையின்

உரை வன்மையும், இராவணனின் ஏற்றுணரும் சக்தியின் பெருமை யும தெரியவருகின்றன. கோதை, மாலையும் ஆம். இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 2. னியர்போல்வதோர்; னிதுபோல்வதோர்; கண்டிலேன்யான்.
3. உண்டேயயல்; உண்டேலயல்; யேறிலையெங்கை; யேறிலையே லெங்கை; யுணர்த்திநின்ற.
4. வண்டேறு பூங்குழன் மானிவளாகு; ரியராகுமன்றே; ளாகு மென்றான். (145)

இராவணன் சூர்ப்பணகையை அழைத்துவர ஏவுதல்.

699. பூண்டிப் பிணியா னுறுகின்றது தான்பொ றாதாள்
தேண்டிக் கொடுவந்தனள் செய்வதொர் மாறு முண்டோ
காண்டற் கினியாளுருக் கண்டவட் கேட்கு மாற்றால்
ஈண்டிப் பொழுதேவிரைந் தெங்கையைக் கூவு கென்றான்.

'இ பிணி பூண்டு யான் உறுகின்றது - இக் காமநோயை யான் மேற்கொண்டு வருந்துகின்றதை, தான் பொறாதாள் - தான் கண்டு தாங்கமாட்டாதவளாகி, (என் தங்கை சூர்ப்பணகை), தேண்டி கொடு வந்தனள் - இப்பெண்ணை, எனக்காக அவளே தேடி இங்குக் கொண்டுவந்து சேர்த்துள்ளாள்; செய்வது ஓர் மாறும் உண்டோ - (ஆதலின்), அத்தங்கை திறத்து யான் செய்யக்கூடிய பிரதியுபகாரமும் உண்டாகுமோ? (ஆகாது என்றபடி); காண்டற்கு இனியாள் - காண்பதற்கு இனியவளான அச்சீதையின், உரு - உருவத்தை, அவள் கண்டு-அவளும் தன் கண்களால் பார்த்து, (அவள்) கேட்கும் ஆறு ஆல்-அவளை நான் கேட்டு அறிந்து கொள்ளும்படியாக, ஈண்டு- இவ்விடத்தில், இ பொழுதே - இப்பொழுதே, விரைந்து - விரைவில் போய், எங்கையை - என் தங்கையாகிய சூர்ப்பணகையை, கூவுக என்றான் - கூப்பிட்டு அழைத்து வாருங்கள்' என்று ஏவலர்களிடம் இராவணன் கூறினான்.

இது, உருவெளித் தோற்றத்தை உண்மையான சீதை உருவாக இராவணன் கருதிக் கூறியது. உறுகின்றது; உறுதல்-வருந்துதல்; 'உற்றலால் கயவர் தேரா' (தேவாரம்). தேண்டி - தேடி.

பி-ம். 1. பிணியிற்றுற வாதியான் பொருந்தத்; பிணியாறுறு; பிணியா லுறுதான்.
3. காண்டற்கரியாளுருக் கண்டயட் காட்டிக்கேட்க; கேட்கு மாற்றல். 4, கூவுமென்றான். (146)

சூர்ப்பணகையின் வரவு.

700. என்று னெனலுங் கடிதேகினர் கூவு மெல்லை
வன்று ணிருதக்குலம் வேரற மாய்த்தல் செய்வாள்
ஒன்றாத காமக் கனலுட்டெற லோடு நாசி
பொன்றாழ் குழை கொங்கைகள் போக்கினள் போய்ப்பு குந்தாள்.

என்றான் - என்று இராவணன் கட்டளையிட்டான்; எனலும் - அவ்வாறு கட்டளையிடலும், கடிது ஏகினர் கூவும் எல்லை - (பணியாளர்) விரைந்து சென்று அச் சூர்ப்பணகையைக் கூப்பிடும் அளவிலே, வன் தாள் நிருத குலம் வேர் அற மாய்த்தல் செய்வாள் - வலிய முயற்சியையுடைய இராக்கதக் கூட்டத்தை வேர் அற்றுப் போக அழிப்பதை மேற்கொண்டவளும், ஒன்றாத - தனக்குப் பொருந்தாததான, காம கனல் உள் தெறல் ஓடும் - காமத் தீ தன் மனத்தைச் சுட்டெரித்தலாலே, நாசி பொன் தாழ் குழை கொங்கைகள்-தன் மூக்கையும், பொன்னலாகித் தாழ்ந்து தொங்கிய தன் குழை என்னும் காதணியோடு விளங்கிய செவிகளையும், தனங்களையும், போக்கினள் - போக்கிக் கொண்டவளான அச் சூர்ப்பணகை, போய் புகுந்தாள் - இராவணன் இருந்த இடம் போய்ச் சேர்ந்தாள்.

தாள் - ஊக்கம் அல்லது முயற்சி; 'தாளாளன் என்பான் கடன் படா வாழ்பவன்' (திரிகடுகம் : 12). 'நிருதக்குலம் வேரற மாய்த்தல் செய்வாள்'; இச் சூர்ப்பணகையே அரக்கர்குல அழிவுக்குக் காரணமாவாள் என்பது இந் நூலாசிரியர் கொள்கை. இதனை இவ்வாசிரியர் உறுதிப்படுத்திவது காண்க; 227, 230, 418. மேலும், இவள் தன் பொய்க் கூற்றாலே நாசத்தை வற்புறுத்து மிடங்களிலெல்லாம் இவ்வாறு இவள் கூறப்படுவதும் நோக்குக. குழை - காதும் ஆம்; தானியாகுபெயராய், அது இருந்த செவிகளைக் குறித்து நின்றது என்க; குழையும் போனமை; 577. தெறலோடு, போய்ப்புகுந்தாள் என்று கூட்டியும் பொருள் கூறலாம். சில சுவடிகளில் இசசெய்யுள் இல்லை.

பி - ம். 2. வன்றேணிருதர்; மாய்த்தல் செய்வான்; வாய்த்தல் செய்வாள்,
4. குழைதன்னேடும் போக்கினள். (147)

இராவணன் அவளை வினுதலும், அவள் விடை இறுத்தலும் : 701—5.

701. பொய்ந்நின்ற நெஞ்சிற்கொடி யாள்புகுந் தாளை நோக்கி
நெய்ந்நின்ற கூர்வாளவ னேருற நோக்கி நங்கை
மைந்நின்ற வாட்கண் மயினின்றென வந்தென் முன்னர்
இந்நின்றவ ளாங்கொ லியம்பிய சீதை யென்றான்.

நெய் நின்ற கூர் வாள் அவன் - நெய் தடவப் பெற்றிருந்த கூரிய வாளையுடைய அந்த இராவணன், பொய் நின்ற நெஞ்சில்

கொடியாள் - பொய் நிலை பெற்றுத் தங்கியிருந்த மனத்தை யுடைய அக் கொடிய சூர்ப்பணகையான, புகுந்தாளை - அங்கு வந்து சேர்ந்தவளை, நேர் உற நோக்கி - தன் எதிர் வரக்கண்டு, 'நங்கை - நங்கையே! இயம்பிய சீதை - நீ என்னிடம் கூறிய அச் சீதை என்பவள், மை நின்ற வாள் கண் - மை எழுதப் பெற்றிருக்கும் வாள்போன்ற கூரிய கண்களோடு, மயில் நின்ற(து) என - ஒரு மயில் வந்து நின்றது என்னும்படி, என் முன்னர் வந்து இ நின்றவள் ஆம் கொல் - என் எதிரில் வந்து இதோ நிற்கின் றவளே ஆவள் போலும்!' என்றான் - என்று கேட்டான்.

நெய் நின்ற வேல்; வேல் முதலிய படைகள் துருப் பிடிக்காமல் இருக்க நெய் பூசுதல் மரபு; சீவக. 282. சூர்ப்பணகையை நங்காய் என்றது, தன் அன்புடைமையைத் தெரிவிக்க. மயிலை உவமை கூறியது; அதன் சாயல், நடை முதலிய ஒப்புடைமையால். 'வந்தென் முன்னரின் நின்றவள்', ஒப்பு: சுந்தர. 309.

பி-ம். 1. கொடியாட் குரைத்தார்; கொடியாள் புகுந்தாளை.
2. கூர்வேலவன்; நோக்கு நங்காய்.
3. மயில் போல்பவள். (148)

702. செந்தாமரைக் கண்ணொடுஞ் செங்கனி வாயி னோடும்
சந்தார்தடந் தோளொடுந் தாழ்தடக் கைக ளோடும்
அந்தாரக லத்தொடு மஞ்சனக் குன்ற மென்ன
வந்தானிவ னாகுமவ் வல்வி லிராம னென்றாள்.

'செம் தாமரை கண் ஒடும் - சிவந்த தாமரை மலரின் இதழ் போன்ற கண்களோடும், செம் கனி வாயின் ஒடும் - சிவந்த ஆதொண்டைக் கனிபோன்ற உதடுகளோடும், சந்து ஆர் தடம் தோள் ஒடும் - அழகு நிறைந்த அகன்று பெரியதாய் விளங்கும் தோள்களோடும், தாழ் தட கைகள் ஒடும் - முழந்தாள் வரையில் நீண்டு தொங்கிய பெரிய கைகளோடும், அம் தார் அகலத்து ஒடும் - அழகிய மாலை யணிந்த மார்பினோடும், அஞ்சன குன்றம் அன்ன - மை போன்ற ஒரு கரிய குன்று என்று சொல்லும்படி, வந்தான் இவன - இங்கு வந்துள்ளவனான இவனே, அ வல் வில் - அந்த வலிய வில் லேந்திய, இராமன் ஆகும் என்றாள் - இராமன் ஆவன்' என்று கூறி னாள் அச் சூர்ப்பணகை.

இராவணன் சீதாப்பிராட்டியின் திருவுருவையே சிந்தித்திருக்க, அவள் உரு அவனுக்கு உருவெளித் தோற்றமாய்ப் புலப்பட்டது

போல, சூர்ப்பணகையும், இராமபிரானது திவ்ய மங்கள உருவையே கருதி யேங்கி யிருந்தவளாதலின், தான் இராவணன் முன்னிலையில் இருப்பதையும் மறந்து, தன்னெதிர் தோன்றிய இராமபிரான் உரு வெளித் தோற்றத்தில், அவள் கண்ட அப்பெருமானது திருவுருவச் சிறப்புக்களைப் புகழ்ந்து பேசினுள் என்க. இச்செய்யுள், நூலாசிரியரது, நகைச் சுவை ததும்பக் கூறும் நாடகப் போக்கை விளக்கும் கற்பனை என்க. இவ்வித அரிய கற்பனைகள் இந்நூலில் காணப் பெறுவனவற்றையே கொண்டு நம்மனோர், இந்நூலைக் கம்ப சூத்திரம் என்றும், கம்ப நாடகம் என்றும் கம்ப சித்திரம் என்றும் சிறப்பித்துப் பாராட்டுவாராயினர் என்க.

செம் கனி - சிவந்த கொவ்வைக் கனியும் ஆம். சந்தார் தடந் தோள் - சந்தனம் பூசப் பெற்ற பருத்துயர்ந்த தோள் என்றும் கூறலாம். தடக்கை; இதனை, ஆஜானுபாகு என வடமொழியிற் சிறப்பிப்பர். தாழ் தடக்கை: இஃது இராமபிரான் அங்க லக்ஷணங்களுள் ஒன்று; சுந்தர ; 356. ஆடவரின் தடந்தோள், தடக்கை, அகன் மார்பு ஆகிய அங்கங்கள் மகளிர் மனத்தில் விருப்பை ஊட்டுவனவாம். 'தோள் கண்டார் தோளே கண்டார்' எனவும், 'தடக்கை கண்டாரு மஃதே;' (பால. உலாவியற் ; 19) எனவும் கூறினமை இங்கு நோக்கற் பாலதாம். இராமபிரான் திருவுருவுக்கு அஞ்சனக்குன்றம்; அயோத். தைலமாட்டு ; 52. வல் வில் ; ஒரே அம்பினுல் பலவற்றை ஊடுருவி அழிக்குமாறு ஏவக்கூடிய வில் ; ஒப்பு: பெரிய திருமொழி. 5. 1; 4., புறநா. 152.

பி - ம். 1. லகையினேடும்.
2. தடத்தோளொடுங் ; தடக்கையி னேடும்.
3. மஞ்சன மேகமென்ன.
4. னியனுங்கொல் விராமன் ; னவனுகு மீயல்வில் ; வல்விராம ; லவ்விராமன். (149)

703. பெண்பாலுரு நானிது கண்டது பேதை நீயீண்
டெண்பாலு மிலாததோ ராணுரு வென்ற தென்னே
கண்பாலுறு மாயை கவற்றுதல் கற்ற நம்மை
மண்பாலவ ரேகொல் விளைப்பவர் மாயை யென்ருன்.

பேதை - அறியாதவளே! நான் கண்டது இது பெண் பால் உரு - நான் கண்டதான இதுவோ பெண்பாலின் உருவமாய் இருக்கிறது; நீ ஈண்டு - நீயோ இவ்விடத்து, எண் பாலும் இலாதது ஓர் ஆண்டு உரு என்றது - நினைக்கவும் இடமில்லாத ஓர் ஆண் உருவம் இது என்று கூறியது, என்னே - என்ன

ஆச்சரியம்! கண் பால் - கண்ணுக்கு எதிரேயே, உறு மாயை கவற்றுதல் கற்ற - பெரும் மாயைச் செயலால் (பிறரை) மயக்குவதைக் கற்றுவல்ல, நம்மை - இராக்கதர்களாகிய நமக்கே, மண்பாலவரே கொல் - மண்ணுலகத்தவரான மனிதர்களே போலும், மாயை விளைப்பவர் - மாயையை உண்டாக்குவராவர்!' என்றான் - என்று இராவணன் வியந்து கூறினான்.

என்னே, என்ன காரணம் என்று வினவியதுமாம். 'நான் கண்டதோ பெண்ணுரு; நீ ஆணுரு என்கிறாய்! இஃது என்ன மதியீனம்;?' என்ற குறிப்பில் பேதை என்ற சொல் குறிப்பதும் ஆகும். பேதை : பண்பாகுபெயர்; அண்மை விளியில் இயல்பாய் நின்றது. மண்பாலவரே; ஏகாரம் இழிவு சிறப்பை உணர்த்துவது.

பி-ம். 1. பெண்பாலிது; பேதை நீயும்; பெண்பாலுருக் கண்டிது கேட்கான் பேதையாயாய்.

2. எண்பாலுமோ ராணுரு வெய்தியதென்ற தென்னே.

3. கண்பாலுறுமாயை ...கற்ற நம்முன்.

4. கொல்வியற்றுவர்; சொல்விளைப்பவர்; விளைப்பவன்னர். (150)

704. ஊன்றுமுணர் வப்புற மொன்றினு மோட லின்றி
ஆன்றுமுள தாய்நெடி தாசை கனற்ற நின்றாய்க்
கேன்றுன்னெதி ரேவிழி நோக்கு மிடங்க டோறும்
தோன்றுமனை யாளிது தொன்னெறி யாகு மென்றாள்.

'ஊன்றும் உணர்வு - (சீதையின் வடிவழகில்) ஊன்றிப் பதிந்துள்ள உன் அறிவு, அ புறம் ஒன்றினும் ஓடல் இன்றி - வேறு ஒரு புறத்தும் போகாமல், ஆன்றும் - மிகுதியாக, உளது ஆம் - உண்டாகியிருக்கிறது; நெடிது ஆசை கனற்ற - அப் பெரிய காம இச்சையாகிய தீ பற்றி எரிய, நின்றாய்க்கு - நின்று வருந்தும் உனக்கு, உன் எதிரே - உன் முன்னே, ஏன்று விழி நோக்கும் - பொருந்தி உன் விழிகள் காணும், இடங்கள் தோறும் - எல்லா இடங்களிலும், அனையாள் தோன்றும் - அந்தச் சீதையே தென்படுவாள்; இது - இவ்வாறு தோன்றுவது, தொல் நெறித்து ஆகும் - பழமையான வழக்கமே ஆகும்', என்றாள் - என்று சூர்ப்பணகை இராவணனுக்குச் சமாதானம் கூறினாள்.

ஆசை கனற்ற, என்றமையால், ஆசையாகிய தீ என்னப்பட்டது. இது தொன்னெறித்து: இவ்வாறு உருவெளி தோன்றுவது பழமையான நூல்களில் சொல்லப்பட்டது என்னலும் ஆம்,

சூர்ப்பணகை தனக்கு நேர்ந்த நிகழ்ச்சிக்கே காரணம் கூறுப வளாக அமைந்த பாடங்கொண்டு, பழையவுரை 'ஊன்று முணர்வு - சூர்ப்பணகைக்கு இராமனிடத்திலே பொருந்தும் அறிவு : ஏன்று- பொருந்தி ' என்று பொருள் கூறும். தோன்றுதல் ; ' நோக்குவ வெல்லா மவையே போறல் ' (நம்பி அகப்.)

பி - ம். 1. புறமொன்றிலு மோடலன்றி.

2. யான்றுமுள நூநெடி தாசை கனற்ற நின்றாய், சான்றுன்னுளத் தாசை தழைக்கத் தளர்ந்தமையால், யான்றுமுள நாமநெடி தாசை கனற்ற, சான்றுமுள தாமெநெடி தாசை தகைந்து ; தகைத்து ; தழைப்ப நின்றேற்.

3. கேன்றென் னெதிரே வழிநோக்கு; விழிநேடு மிடங்க ளெல்லாம்; வெளிநோக்கு.

4. தோன்று மனையானது ; மனையானிது ; தொன்னெறித் தாகும்.

(*151*)

**705.** அன்னா ளது கூற வரக்கனு மன்ன தாக
நின்னாலவ் விராமனைக் காண்குறு நீரெ னென்றான்
என்னா ளவ னென்னையித் தீர்வரு மின்னல் செய்தான்
அந்நாண்முதல் யானு மயர்த்தில னாகு மென்றாள்.

அன்னாள் - அந்தச் சூர்ப்பணகை, அது கூற - அவ்வாறு சொல்ல, அரக்கனும் - இராக்கதனான அந்த இராவணனும், ' அன்னது ஆக - அவ்வாறே ஆகுக ; (ஆனால்), நின்னால் அ இராமனை காண்குறும் - உன்னால் அந்த இராமனைக் காணப்பெறும், நீர்- தன்மை, என் என்றான்-என்ன காரணம்பற்றி ' ? என்று கேட்டான் ; (அதற்கு அவள்), ' எ நாள் என்னை இ தீர்வு அரு இன்னல் செய்தான் - என்று அந்த இராமன் எனக்குப் போக்க முடியாத இந்தத் துன்பத்தைச் செய்தானோ, அ நாள் முதல் - அந்த நாள் முதலாக, யானும் - நானும், அயர்த்திலன் ஆகும் - அவனை மறக்கா திருக்கிறேன்,' என்றாள் - என்று சாமர்த்தியமாய் மறுமொழி கூறினாள்.

தீர்வரு மின்னல் : மூக்கு, காது முதலிய அறுபட்டவை மறுபடியும் உண்டாக இடமின்மையின் ; உண்மையில் இராமபிரான்பால் தான் கொண்ட காதல் நீங்காமையால், அவனையே நினைந்திருந்த சூர்ப்பணகை, தான் காணுமிடமெல்லாம் இராமபிரான் வடிவமே தோன்ற, அதனை இராவணனிடம் முன் மறைத்துக் கூற மறந்தவள், ' நீ ஆண் உருக் காண்பதாக் கூறுவது என்னை ' என்று இராவணன்

உசாவவும், அவள் தன் பிழையை உணர்ந்து, தன் உள்ளத்தை மறைத்து, மேற்கூறியவாறு சாமர்த்தியமாய் விடை கூறினுள் என்க.

பி-ம். 1. மன்னதாகில்; மன்னதாகி.
2. நீர்மையென்றான்; நின்னுசையி னீயு மிராமனைக் காண லென்றான்; நீரென்னென்றான்.
3. அன்னுளைய னென்னை; என்னுளையனென்னை; என்னுதரவுக் கிசையாதவன் றீர்வருமின்னல் செய்த.
4. அங்நாண் முதல் யாறு மயிர்த்தில னயனையென்றாள்; னயர்த்திலே; ளுகயென்றாள்; மறந்திலனுக. (152)

சூர்ப்பணகை, சீதையைக் கவர்ந்துவருமாறு இராவணனுக்குக் கூறுதல்.

706. ஆமாம தடுக்குமெ னுக்கையொ டாவி நைய
வேமால்வினை யேற்கினி யென்விடி வாகு மென்னக்
கோமானுல குக்கொரு நீகுறை கின்ற தென்னே
பூமாண்குழ லாடனை வவ்வுதி போதி யென்றாள்.

'ஆம் ஆம் - அஃது உண்மைதான்; அது அடுக்கும் - அது நிகழக் கூடிய விஷயமே; என் ஆக்கை ஒடு ஆவி நைய வேம் ஆல் - என் உடலோடு உயிரும் மெலிந்து வேகின்றது; ஆதலால், வினையேற்கு - இக் கொடிய துயராகிய காம வினையால் தவிக்கும் எனக்கு, இனி விடிவு என் ஆகும் - இனி இத்துயரினின்று நீங்கும் வழி யாது ஆகும்?' என்ன - என்று இராவணன் கேட்க, (சூர்ப்பணகை), 'நீ உலகுக்கு ஒரு கோமான் - நீயோ உலகமுழுவதற்கும் ஓர் ஒப்பற்ற தலைவன்; குறைகின்றது என்னே - இவ்வாறு சிறுமையுடன் நீ வருந்துவது ஏன்? பூ மாண் குழலாளை - அந்த மலரணிந்த சிறந்த கூந்தலையுடைய சீதையை, வவ்வுதி - அபகரிப்பாயாக! போதி - இப்பொழுதே போவாயாக!' என்றாள் - என்று இராவணனுக்கு உபாயம் கூறி அவனைத் தூண்டி விரைவுப்படுத்தினுள் அச்சூர்ப் பணகை.

வேம் மால் வினையேற்கு எனப்பிரித்துப் பொருள் கூறுவாரும் உளர். விடிவு; ஒப்பு: 'முடிவிலாப் பிறப்போ வெல்லாம். விடிந் தது விடிந்ததென்ன விடிந்தது கங்குற்கானம்' (திருக்குற்றுலப்: மந்த மாருதச்: 72.)

பி-ம். 1. யெனுவியோ டாக்கை; யெனதாக்கையோ.
2. விடியாகு மென்றான்.
3. குறைகின்ற தின்னே; குறைகின்ற தென்னை; குறைகின்ற தென்றே; நீ குறை நின்ற தென்னே; குலைகின்ற தென்றே. (153)

அதுகேட்ட இராவணன் நிலை

707. என்று ளகன்றுள வரக்கனு மீட ழிந்தான்
ஒன்றுனு முணர்ந்தில ளுவி யுலைந்து சோர்ந்தான்
நின்றுரு நடுங்கினர் நின்றுள நாளி ளுலே
பொன்றுதுள ளுயின னத்தனை போலு மன்றே.

என்றுள் அகன்றுள் - என்று கூறி அச் சூர்ப்பணகை அவ்விடம் விட்டுச் சென்றுள் ; அ அரக்கனும் ஈடு அழிந்தான் - அந்த இராக்கதனுகிய இராவணனும் வலி குறைந்தவனுகி, ஒன்றுனும் உணர்ந்திலன் - ஒன்றிலும் உணர்ச்சி இல்லாதவனுய், ஆவி உலைந்து சோர்ந்தான் - உயிர் நிலைகெட்டுச் சோர்வடைந்தான் ; நின்றுரும் நடுங்கினர் - அருகே நின்றவர்களும் நடுங்கினுர்கள் ; நின்று உள நாளினுல் ஏ-இன்னும் ஆயுள் நாட்கள் நின்றுள்ளமையாலே, பொன்றுது உளன் ஆயினன் - அவன் இறவாமல் உயிருள்ளவன் ஆனுன் ; அ துணை போலும் - அதுவே அவன் உயிரோடு இருந்ததற்கு ஏற்ற காரணமாகும். அன்று, ஏ : ஈற்று அசைகள்.

என்றுளகன்றுள் ; என்பதை விரைவுப் பொருளிற்கொண்டு, இனித்தான் அங்கு நின்றுல், இராமபிரான்பால் தான் கொண்டுள்ள காமவேட்கை வெளியாகி விடுமென்று அஞ்சி, உடனே அவ்விடம் விட்டகன்றுள் எனக்கொள்ள இடந்தருவது நோக்கற்பாலது. அன்றியும், தான் கொடுத்த போதனை அவனைத் தனியே செயல்படுத்தட்டும், என்றும் ஆம். அவ்வரக்கன் எனப்பாலது, அவரக்கன் என இயல்பாய் நின்றது, செய்யுள் விகாரம். ஒன்றுலு முணர்ந்திலன் - பரிசனங்கள் செய்த சைத்யோபசாரங்கள் ஒன்றினுலும் அவன் நல்லுணர்வு பெற்றுனல்லன் எனக் கூறினும் பொருந்தும். நின்றுளநாள் பிரமதேவன் அருளிய ஆயுட்காலம் ; 'ஆயுளுள்ள போது எப்படி இறப்பான் ?' என்பது ஒரு பழமொழி. ஈடு - வலிமை அல்லது பெருமை ; சுந்தர. 588 ; 675. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 1. என்றேயகன்று ளவரக்கனு; மிரங்கினைந்தாங்,

2. ளுவியுலைர் தொழிந்தான்.

4. னத்தனை போலு ; னத்தனைபோனு.

**இராவணன் கட்டளையின்படி, தெய்வத்தச்சன் மண்டபம் அமைத்தல் 708—13**

708. இறந்தார் பிறந்தாரென வின்னுயிர் பெற்ற மன்னன்
மறந்தா னுணர்ந்தானவண் மாடுநின் ருரை நோக்கிக்
கறந்தா லெனநீர்தரு சந்திர காந்தத் தாலோர்
சிறந்தார் மணிமண்டபஞ் செய்கெனச் செப்பு கென்றான்.

இறந்தார் பிறந்தார் என - இறந்தவர் மீண்டும் உயிர்பெற்று வந்ததேபோல, இன் உயிர் பெற்ற மன்னன் - தன் இனிய உயிரைத் திரும்பப்பெற்ற அந்த அரக்கர்க்கரசனான இராவணன், மறந்தான் உணர்ந்தான் - அதுகாறும் நினைவு மறந்த நிலையில் இருந்த அவன் மீண்டும் உணர்வு அடைந்தவனாகி, அவண் மாடு நின்றாரை நோக்கி- அங்குத் தன் அருகே நின்ற ஏவலாளரைப் பார்த்து, ' கறந்தால் என நீர் தரு - கறந்தது போல நீரைச் சுரக்கும், சந்திர காந்தத்தால் - சந்திரகாந்தம் எனும் கற்களினால், ஓர்-ஒரு, சிறந்து ஆர்-சிறப்புற்று விளங்கும், மணி மண்டபம் - அழகிய மண்டபத்தை, செய்க என - செய்வாயாக ' என்று, செப்புக என்றான் - (தெய்வச் சிற்பிக்குச் சொல்வீர்' என்று கட்டளையிட்டான்.

இறந்தார் பிறந்தாரென - இறந்தவர் மறு சன்மம் எடுத்து வந்தார் என்பது போல எனவும் பொருள் கொள்ளலாம் ; ஏனெனில், "இறந்தவர் பிறப்பர்; பிறந்தவர் இறப்பரென்பதும் பெருமறைத் துணிபு" என்றாராதலின் ; ஒப்பு. சீவக. 269. இதனால் இராவணன் இறந்தவன் போல உணர்ச்சியற்ற நிலையில் இருந்து மீண்டும் ஒருகால் உணர்வு பெற்றான் என்பது பெறப்பட்டது. மறந்தா னுணர்ந்தான் : மறம் தான் உணர்ந்தான் எனப் பதப் பிரிவு செய்து, தன் வலிமையை உணர்ந்தவனாகி, எனப் பொருள் கொள்ளலும் ஏற்கும். மாடு - அயல் அல்லது பக்கம் ; (சூடா.); ' மாடு சென்றனர் மங்கையர் நால்வரே '; (அயோத். மந்திரப் : 88). கறந்தாலென : பசுவினிடமிருந்து பால் கறந்ததே போல : சந்திரகாந்தம் : ஒருவகைக் கல்; அது தன்மீது நிலாவொளி பட்டால், பசு பால் கறப்பது போல நீரைச் சொரியும் என்பர் ; பால. நகரப் : 30 ; ' தெய்வச் சிற்பிக்குச் செப்புக ' என்றமை அடுத்த செய்யுளால் விளங்கும்.

பி - ம். 1. பிறந்தாலென ; பெற்ற நீசன்.

2. பலர்மாடு நின்றாரை ; பலமாடு நின்றாரை.

3. காந்தத்தாலே. 4. செப்பு மென்றான்.

709. வந்தா னெடுவானுறை தச்சன் மனத்து ணர்ந்தான்
சிந்தா வினையன்றியுங் கைவினை யாலுஞ் செய்தான்
அந்தாம நெடுந்தறி யாயிரத் தால மைந்த
சந்தார் மணிமண்டபந் தாமரை யோனு நாண.

நெடு வான் உறை தச்சன் - நீண்டு வெகுதூரம் பரவியுள்ள வானுலகில் வாழும் தெய்வக் கம்மியனான விசுவகன்மன், வந்தான் - அங்கு வந்து, மனத்து உணர்ந்தான் - இராவணன் நிலையையும் அவன் கட்டளையையும் தன் மனத்தில் உணர்ந்தவனாகி, அம் தாமம் நெடும் தறி ஆயிரத்தால் அமைந்த - அழகிய ஒளியுடைய நீண்ட தூண்கள் ஆயிரத்தால் அமைந்ததான, சந்து ஆர் மணி மண்டபம். அழகு நிறைந்த சந்திரகாந்தத்தினா லான இரத்தின மண்டபத்தை, தாமரையோனும் நாண - தாமரை மலரில் வாழும் (சிருஷ்டி கர்த்தாவாகிய) பிரமதேவனும் கண்டு வெட்கப்படுமாறு (சிறப்புடையதாய்), சிந்தா வினை அன்றியும் - மனத்தின் ஊகத்தால் மட்டு மன்றியும், கை வினையாலும் - தனது கை வேலையின் சிறப்பினாலும், செய்தான் - செய்து முடித்தான்.

சிந்தாவினை - மனச் சங்கற்பத்தாலேயே சிருஷ்டித்தல்; விசுவகர்மன் கைவினை யின்றித் தன் மனத்தால் நினைத்த வண்ணம், ஒன்றை அமைக்கும் தெய்வ சக்தி வாய்ந்தவன். அவன், இராவணன் கட்டளைக்கு ஏற்பத் தான் அமைக்கும் மண்டபம் அரிய சிறப்புடன் இருக்க வேண்டுமே என்று அஞ்சினவனாய்த் தன் மனத்திறமையோடு அமையாமல், தன் கைத்திறமையும் காட்டி அமைத்தான் என்பதாம். தாமரையோனும் : உம்மை உயர்வு சிறப்பினது. யாவற்றையும் சிருஷ்டிப்பவன் அவனாயிருந்தும், அவனும் அம்மண்டபத்தைக் கண்டு அதுபோன்ற சிறப்புடன் தன்னாலும் அமைக்க முடியாது என்று நாணுமாறு அமைத்தான் விசுவகன்மன் என்க; இஃது உயர்வு நவிற்சியணி. அன்றியும், 'நான்முகத் தொருவனின் றாழ்முறை யுரைப்ப......படைத்தான்......, வானவர் தச்சனும்' என்று (சுந்தர. 123) கூறியபடி, நான்முறை அறிந்துரைப்பவன் நான்முகனாதலின், அவனும் நாண, என்றார். தறி - ஸ்தம்பம் அல்லது தூண்; "நெடுந்தறி நேடினாயோ" (உயுத்த. இரணியன் வதைப் : 129). அந்தாம நெடுந்தறி - அழகிய மாலைகளால் அலங்கரிக்கப்பெற்ற நெடிய தூண்கள் என்னலும் ஒன்றும்; தாமம் : ஒளி, இடம், அழகு, மாலை எனப் பல பொருளைக் குறிக்கும் திரிசொல். சிந்தை வினை என்றிருக்கற்பாலது, சிந்தாவினை என

வடசொல் ஈறு திரியாமல் வந்தது, 'விகாரத் தியல்பும்' என்ற விலக்கு விதியை மேற்கொண்டது என்க.

பி-ம். 1. னெடு வானவர் தச்சன்.
2. யன்றியங்கை; கைவினையாளுஞ்; கைவினைதாளுஞ்.
3. யாயிரக்கா லமைந்த,; காலமைத்த. (156)

710. காந்தம் மமுதின்றுளி கால்வன கால மீனின்
வேந்தன் ஞெளியன்றியு மேலொடு கீழ்வி ரித்தான்
பூந்தென்றல் புகுந்துறை சாளர மும்பு னைந்தான
ஏந்தும் மணிக்கற்பகச் சீதளக் காவி மைத்தான்.

கால மீனின் வேந்தன் ஒளி அன்றியும் - காலத்தை உணர்த்தும் நக்ஷத்திரங்களுக்குத் தலைவனான சந்திரனது ஒளி இல்லாமலே, அமுதின் துளி கால்வன - அமிர்தத்தின் துளிகளை உமிழ்வனவான, காந்தம் - சந்திரகாந்தக் கற்களை, மேல் ஒடு கீழ் விரித்தான் - (அவ் விசுவகன்மன்) அம்மண்டபத்தின் மேலும் கீழும் பரப்பி அமைத்தான்; பூம் தென்றல் புகுந்து உறை - இனிய (அல்லது) பூ மணத் தோடு கூடிய) தென்றற் காற்று உட்புகுந்து தங்கும்படி, சாளரமும் புனைந்தான் - பல பலகணிகளையும் அழகுற அதனில் அமைத்தான்; மணி ஏந்தும் கற்பக சீதள கா அமைத்தான் - இரத்தினங்களையே பூக்களாகவும் கனிகளாகவும் தாங்கி நிற்கும் தேவலோகத் துள்ள கற்பக விருக்ஷங்கள் நிறைந்த குளிர்ச்சி பொருந்திய பூஞ்சோலையை யும் அவன் அங்கு உண்டாக்கினான்.

காலமீன் - உரிய காலப்படி உதித்து விளங்கும் நக்ஷத் திரங்கள். சந்திரன் குளிர்ந்த அமிர்த கிரணங்களைத் தன் நிலவால் பொழிபவன்; அவனின்றியே சந்திரகாந்தக் கற்களைக்கொண்டு அவற்றால் அவ்வமிர்த கிரணங்களும் தட்பமும் சொரியும் படி அமைத்தான் என்க. இஃது இல்பொருள் உவமை. இனி, இராவணன் வெறுத்துத் திங்களை முன் அப்பால் ஏகச் செய்தமை யால், அச்சந்திரனின்றியே அமைத்தான் எனலும் ஆம். கால மீனின் வேந்தன் - சந்திரன்: சந்திரன் உடுபதி என்பதாலும், அவன் தக்ஷனுடைய மகளிராகிய நக்ஷத்திரங்களைத் தன் மனைவிய ராகக்கொண்ட புராண வரலாற்றாலும் என்க. மணிக் கற்பகக்கா; ஒப்பு. 'கானும் பொழிலு மிவை செங்கன கத்தினாலும், ஏனம் மணி

யாலு மியற்றிய வேனும் யாவும், மலருங் கனியுந்தரச் செய்த் செய்கை.' (சுந்தர. 114.)

பி-ம். 1. மயிர்நின்றுளி ; காலமின்னின்.
4. காவிசைத்தான். (157)

711. ஆணிக்கமை பொற்றட்டின் மணிச்சுட ரார்வி ளக்கம்
சேணுற் றிருள்சீப்பன தெய்வ மடந்தை மார்கள்
பூணிற் பொலிவார்புடை யேந்திடப் பொங்கு தோளான்
மாணிக்க மானத்திடை மண்டபங் காண வந்தான்.

ஆணிக்கு அமை பொன் தட்டின் - உறை ஆணியால் மாற்று அறிந்து அமைக்கப்பெற்ற பொன் தட்டில், மணி சுடர் ஆர் விளக்கம்- இரத்தினங்களையே ஒளிர் சுடராகக்கொண்ட விளக்குக்கள், சேண் உற்று இருள் சீப்பன - வெகுதூரம் சென்று இருளைப் போக்குவன வற்றை, பூணில் பொலிவார் - ஆபரணங்களால் சிறப்புற்று காட்சி யளிப்பவரான, தெய்வ மடந்தைமார்கள் - (அவ்விராவணனிடம் பணிப்பெண்களாய் வந்து அமர்ந்துள்ள) தேவமகளிர்கள், புடை ஏந்திட - அருகேயிருந்து தாங்கிவர, பொங்கு தோளான் - பூரித் தெழுந்த தோள்களையுடைய இராவணன், மாணிக்க விமானத்து இடை - ஒரு மாணிக்கத்தால் அமைந்த விமானத்தின் இடையிலே ஆரோகணித்துக்கொண்டு, மண்டபம் காண வந்தான் - அந்தச் சந்திரகாந்த மண்டபத்தைக் காண்பதற்கு வந்து சேர்ந்தான்.

ஆணிக்கமைந்த பொன் - ஆணி என்னும் மாற்றறியும் பொன்னால் பரிசோதித்து எடுத்த சிறந்த பொன் ; இதனை ஆணிப் பொன் என்பர். ஆணி - உரையாணி. மணிச்சுடர் விளக்கம் - இரத் தினங்கள் போல ஒளிவிட்டு விளங்கும் விளக்குகள் என்னலும் அமையும். மானம் - விமானம் என்பதன் முதற்குறை.

பி-ம். 1. பொற்கைம்மணிச் ; பொற்றகட்டின்மணிச் ; ஆணிக்கனகத்தை மணிச்சுடராய் விளக்கம் ; ஆணிக் கனகத்தின் ; ஆணிக்கமை பொற்றின்.
2. சிப்பவத் தெய்வ ; சிய்த்திடத் தேவர்தம் மங்கைமார்கள் சேணுற்றிருள் தீய்ப்பன.
3. யேந்திய பொங்குதோளான் ; புடை யெய்திடப்.
4. மாணிக்கவி மானத்திடை. (158)

712. அல்லாயிர கோடி யடுக்கிய தொத்த தேனும்
நல்லார் முகமாம் நளிர்வானில வின்றி நாமப்
பல்லாயிர கோடி பனிச்சுட ரீன்ற திங்கள்
எல்லா முடனு விருளோடி யிரிந்த தன்றே.

நளிர் வான் நிலவு இன்றி - குளிர்ந்த வானில் உள்ள சந்திரனுடைய நிலவு இல்லாமலே, அல் ஆயிர கோடி அடுக்கியது ஒத்த தேனும் - இரவு ஆயிர கோடிக் கணக்கில் அடுக்கி வைத்தது போன்று இருந்த போதிலும், நல்லார் முகம் ஆம் - அந்த இராவணனுடன் வந்த மங்கையர் முகங்களாகிற, நாம - பெருமைக்குரிய, பல் ஆயிர கோடி - பல ஆயிர கோடியளவான, பனி சுடர் ஈன்ற - குளிர்ந்த ஒளியை அளித்த, திங்கள் எல்லாம் - சந்திரர்கள் யாவரும், உடனு - அவனுடனே வருதலால், இருள் - (இரவு) இருட்டு, ஓடி இரிந்தது - நிலைகெட்டு ஓடிவிட்டது. அன்று, ஏ : அசைகள்.

நல்லார் முகங்களாகிய, திங்கள் எல்லாம் உடன் வர, அவ்விரவு இரிந்தது என்க. ஆயிர கோடி என்பன இங்கு அளவின் மிகுதியைக் குறிக்க வந்தவை.

பி - ம். 1. தொத்ததானும்; தோற்றத்தானும்; தொத்ததலானும்; தொக்கின்றுனும்.
2. வானிலவீன்ற; வானிலவீன்ற; வொன்றிநாமப்; வீன்றநாம, நன்மதி யின்றி.
3. சுடர் பாய்ந்த திங்கள்; சுடர் தீர்ந்த திங்கள்.
4. இருளோட விரித்ததன்றே; விரிந்ததன்றே; விளங்கிற்றன்றே; முடனுயிரு ளோட. (159)

713. பொற்புற்றன மாமணி யொன்பதும் பூவி னின்ற
கற்பத்தரு வின்கதிர் நாணிழற் கற்றை நாற
அற்பற்றழி யப்பக லாக்கிய தால ருக்கன்
நிற்பத்தெரிக் கின்றது நீள்சுடர் நீர்மை யன்றே.

பொற்பு உற்றன - அழகுள்ளனவான, மா மணி ஒன்பதும் - சிறந்த நவரத்தினங்களும், பூவின் - பூக்களேயாக, நின்ற - தம்மிடம் நிற்கப்பெற்ற, (அம்மண்டபத்தைச் சார்ந்த சோலையில் உள்ள), கற்ப தருவின் - கற்பக விருக்ஷங்களின், கதிர் - ஒளியின் சுடர்கள், நாள் நிழல் கற்றை நாற - பகல் வெளிச்சத் தொகுதிபோலத் தோன்றி ஒளி வீச, அல் பற்று அழிப - (அதனுல்) இரவின் தொடர்பு அழிந்து போக, பகல் ஆக்கியதால் - பகல் போன்ற வெளிச்சத்தை

உண்டாக்கியதால், அருக்கன் நிற்ப - சூரியன் இல்லாதிருக்கவும், நீள் சுடர் தெரிகின்றது - நீண்ட ஒளியை வெளிப்படுத்துகின்ற செயல், நீர்மை அன்றோ - அக் கற்பகத் தருக்களுக்குள்ள மேன்மைத் தன்மையல்லவா?

அங்குச் சோலையில் உள்ள கற்பக விருக்ஷங்களின் பூக்களாய் அமைந்த நவரத்தினங்களின் ஒளி, இரவைக் கெடுத்து ஒளியை உண்டாக்கியதால், சூரியன் இல்லாமலே ஒளி வீசிற்று என்க. மணிகள் இரவைப் பகலாக்குதல்; சுந்தர: 109, 111. மணிகளாலியற்றிய கற்பகம் மலர்தல்; சுந்தர. 114. மணிகள் யாவும் சூரிய வெளிச்சம் படவே ஒளி வீசுவன; ஆனால் இந்தக் கற்பகவிருக்ஷத்தின் பூக்களாகிய நவமணிகள் சூரியனின்றிச் சுயவொளியுடைய பெருமையுடையன என்பதாம். ஜைன நூல்களில், 'சோதிரங்கமென்னுங் கற்பகவிருக்ஷம் சந்திராதித்தர் ஒளியினை யடக்கும் ஒளியினைக் கொடுக்கும்' என்று கூறப்பட்டுள்ளது என்பர். 708 முதல் இது வரையுள்ள செய்யுட்கள் வானவர் தச்சன் இயற்றிய மண்டபம், சோலை இவற்றின் சிறப்புக்களைக் கூறியவை ஆம்.

பி-ம். 1. பொற்புற்ற நவமணி; பொற்பற்றன வாய்மணி; பொற்பெற்றன வாய்மணி; பொற்புற்ற நவமணி யொன்பதும்; பூவினின்ற.
2. கற்றை கால; கற்றை நான்ற.
3. பகலாக்கிய வருக்கன்.
4. நிற்பத் தெரிகின்றது; நீர்சுடர் நீர்மை. (160)

### இராவணன் மண்டபத்தின் உட்புகுதலும் அங்கு நிகழ்ந்தனவும் 714—20

714. ஊறோசை முதற்பொறி யாவையு மொன்றி னொன்று
தேருநிலை யுற்றதோர் சிந்தையன் செய்கை யோரான்
வேறுய பிறப்பிடை வேட்கை விசித்த தீர்ப்ப
மாறோருடல் புக்கென மண்டபம் வந்து புக்கான்.

ஊறு - பரிசவுணர்ச்சியும், ஓசை - சப்தவுணர்ச்சியும், முதல் - முதலாகவுள்ள, பொறி யாவையும் - புலன்கள் அனைத்தும், ஒன்றின் ஒன்று - ஒன்றைப் போல மற்றவையும், தேரு - தெளிவு அடையாத, நிலை - நிலைமையை, உற்றது - அடைந்த, ஓர் சிந்தையன்-ஒரு தனிப்பட்ட மனத்தையுடையவனான அந்த இராவணன், செய்கை ஓரான் - தான் செய்யவேண்டியது இன்னது என்று அறியப் பெறாதவனாய், வேட்கை விசித்து அது ஈர்ப்ப - ஆசை அந்த மனத்தைப் பிணித்து

இழுக்க, மாறு ஓர் உடல் புக்கது என - வேறு ஓர் உடலில் தான் புகுந்து கொண்டது போன்று, மண்டபம் வந்து புக்கான் - அந்தச் சந்திரகாந்த மண்டபத்திற்கு வந்து அதில் புகுந்தான்.

புலனுணர்ச்சி கெட்டுத் தன் செயலற்ற உயிர், ஊழ்வினையாலாகிய ஆசை வழிப்பட்டு தான் இன்னது செய்கிறது என்று உணராமல், நீங்குங் காலத்துக் கொண்ட ஆசையையொட்டி வேறோர் உடலில், தன் முயற்சியில்லாமலே புகுவது போல, இராவணன் தன் செயலின்றி, பிராட்டிபால் கொண்ட காம ஆசை வயத்தனாய், வானவர் தச்சன் கட்டிய அம்மண்டபத்தை அடைந்தான் என்பதாம். ஆசையே பிறவிக்குக் காரணமாய் நின்று, அதற்கேற்ற பிறவியில் உயிரை உய்க்கும் என்க. 'அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந், தவாஅப் பிறப்பீனும் வித்து' குறள். (361) காண்க. இது, பிறிது நவிற்சியணியின் பாற்படும். பொறி இங்குப் புலனைக் குறித்தது. ஊறோசை முதற் புலன்கள்; ஊறு, ஓசை, நாற்றம், சுவை, ஒளி என்பன; இவை முறையே, மெய், செவி, மூக்கு, வாய், கண் என்னும் ஐம் பொறிகளின் வழியே இயங்கும். இச் செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 1. முதற்பொறை; மொன்றிலொன்று; மொன்றிளொன்றும்.
2. சிந்தையின் செய்கை தேரான்.
3. விசித்தீர்ப்ப; புரிந்த தீர்ப்ப; பிரிந்ததீர்ப்பான்; வீகை விதிர்ந்து தீர்ப்ப.
4. ருடலுற்றென. (161)

வேறு

715. தண்டலில் தவஞ்செய் வோர்கள் வேண்டின தாயின் நல்கும்
மண்டல மகர வேலை ய'முதொடும் வந்த தென்னப்
பண்டருஞ் சுரும்பு சேரும் பசுமர முயிர்த்த பைம்பொன்
தண்டளிர் மலரிற் செய்த சீதளச் சேக்கை சார்ந்தான்.

தண்டல் இல் - தடையில்லாமல், தவம் செய்வோர்கள் - தவம் செய்பவர், வேண்டின - விரும்பினவற்றை, தாயின் நல்கும் - அது, தாயைப்போல அன்போடு உதவும்; (அதுபோன்ற) மகர மண்டல வேலை-மகர மீன்கள் வாழும் வட்டமான பாற்கடல், அமுது ஒடும் வந்தது என்ன - தன்னிடமுள்ள தேவாமிர்தத்தோடு அங்கு வந்து சேர்ந்தது என்று சொல்லும்படி, பண் தரு சுரும்பு சேரும் - இசையை உண்டாக்கும் வண்டுகள் வந்துகூடி மொய்த் திருக்கும், பசு மரம் - பசுமையான மரங்கள், உயிர்த்த - துளிர்த்த பைம் பொன் தண் தளிர் - பசிய பொன்போன்ற நிறத்தையுடைய

குளிர்ந்த தளிர்களினாலும், மலரில் - பூக்களாலும், செய்த - அலங்கரிக்கப்பெற்ற, சீதள சேக்கை சார்ந்தான் - குளிர்ந்த படுக்கையை (இராவணன்) போய் அடைந்தான்.

அமுதத்தோடு கூடிய பாற்கடல், இங்குத் தளிர், மலர் இவற்றோடும் கூடிய படுக்கைக்கு உவமையாகப் பெற்றது. படுக்கைக்குப் பாற்கடல்; 'பாற்கடலன்ன தோர்பாய லணைந்தான்' (பால. கடிமணப். *99*); 'பாற்கடற் படுதிரை பவளவல்லியே, போல்.........பொங்கணை மேல் கிடந்தாள்' (அயோத்: மந்தரை சூழ்ச்சிப். *42*.) அமுதத்திற்குத் தளிரும் மலரும். தவம், தன்னைச் செய்பவருக்கு உதவுவதுபோலப் பாற்கடல், தேவர்களுக்கு அளித்தது என்க. தவம் வேண்டின வேண்டியாங்களிக்கும் சிறப்பினது; சுந்தர. *104*; குறள்; *265*. தண்டல் - தடைப்படுதல்; சுந்தர. *592*. தண்டலில்...நல்கும்' என்றது வேற்றுப் பொருள்வைப்பணி.

பி - ம். 1. செய்வோர் தாம்; தவத்தோர் யாரும்; வேண்டிய தரவே நல்கும்; வேண்டின வெல்லா நல்கும்; வேண்டினதாயு நல்கும்.
2. யமுதென வந்த.
3. பண்டரு சுரும்பு; சுரும்பு சேரப்பசு மரமுரைத்த.
4. தெண்டளிர் சேர்ந்தான். *(162)*

**716.** நேரிழை மகளிர் கூந்த னிறைநறை வாச நீந்தி
வேரியஞ் சரளச் சோலை வேனிலான் விருந்து செய்ய
ஆர்கலி யழுவந் தந்த வமிழ்தென வொருவ ராவி
தீரினு முதவற் கொத்த தென்றல்வந் திறுத்த தன்றே.

ஒருவர் ஆவி தீரினும்-ஒருவர் உயிர் அவர் உடலைவிட்டு நீங்கும் நிலையில் இருந்தாலும், உதவற்கு ஒத்த - அவ்வாறு நீங்காதபடி காத்து அவ்வுயிரை உதவுதற்கு ஏற்றதான, ஆர்கலி அழுவம் தந்த அமிழ்து என - பாற்கடலாகிய பள்ளம் தந்த அமுதம்போன்று, தென்றல் - தென்றற் காற்று, இழை மகளிர் கூந்தல் - சிறந்த ஆபரணங்கள் அணிந்த இராவணனின் பரிசன மகளிரது கூந்தலில் விளங்கும், நிறை நறை வாசம் நீந்தி - நிறைந்து விளங்கும் தேனோடு கூடிய நறுமணத்தில் புகுந்து அதனைக் கடந்து, வேரி அம் சரளம் சோலை - தேனோடு கூடிய அழகிய சீதளமான தேவதாரு மரங்கள் அடர்ந்த அங்குள்ள சோலையிடத்து, வேனிலான் - வசந்த காலத்திற்கு உரிய மன்மதன், விருந்து செய்ய - வரவேற்று விருந்து செய்து உபசரிக்க, வந்து இறுத்தது - அங்கு வந்து சேர்ந்தது. அன்று, ஏ: ஈற்றசைகள்.

'தென்றல், (இராவணனைச் சூழ்ந்திருந்த) மகளிர் கூந்தலின் நிறை நறை வாசம் நீந்தி, சோலை வேனிலான் விருந்து செய்ய, ஒருவர் ஆவி தீரினும் உதவற்கொத்த ஆர்கலி அழுவம் தந்த அமுதென வந்து இறுத்தது, என இயைத்துப் பொருள்கொள்க. கூந்தல் வாச முடைமை ; குறுந். 2. இனி அமிழ்தென, ஆவி தீரினும் உதவற்கு ஒத்த தென்றல் என இயைத்தும் பொருள் கூறலும் ஆம். வேரி ; நறுமணமும் ஆம் ; (நூடா.) பழையவுரை, 'நிறை நறைவாச நீக்கி' என்று பாடங்கொண்டு, 'இராவணனுக்கு ஆகாததினாலே, தென்றல் வாசத்தைக் கொண்டு வரவில்லையென்று பொருள்' என்று கூறு கின்றது. தென்றல் வாசம் நீந்தி வருதல் : சிலப். மனையறம்படுத்த. 14-25. வேனிலான் - காமன். அழுவம், பரப்பும் ஆம். சரளச்சோலை ; சுந்தர. 199. சரளம் - தேவதாரு என்ற மரம். இராவணன் ஆணைக்குத் தென்றல் உட்படுதல் இச்செய்யுள் முதல் 5 செய்யுட்களில் கூறப் பெறும் ; இதற்கு ஒப்பு : சுந்தர. 293. இச்செய்யுளின் 3, 4 அடி கள் நயமானவை என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. கூந்த னிறைந்த நல்வாச ; மகளிர்தந்த நிறைந்த நல்வாச நீக்கி ; பாச நீக்கி ; வாச நீக்கி.
2. தாமச் சோலை ; தாழைச் சோலை ; வேனலான்.
3. யழுவத்தந்த ; தந்தமருந்தென ; யமுதம்போலொருங்.
4. முதவற் சேர்ந்த. (163)

717. சாளரத் தூடு வந்து தவழ்தலுந் தரித்த றேற்றான்
நீளரத் தங்கள் சிந்த நெருப்புக நோக்கு நீரான்
வாழ்மனைப் புகுந்த தாண்டோர் மாசுணம் வரக்கண் டன்ன
கோளுறக் கொதித்து விம்மி யுழையரைக் கூவிச் சொன்னான்.

சாளரத்து ஊடு வந்து - (அத்தென்றல்) பலகணிகளின் வழியே உட்புகுந்து வந்து, தவழ்தலும் - உலாவலும், தரித்தல் தேற்றான் - தாங்க இயலாதவனாய், நீள் அரத்தங்கள் சிந்த - (தன் கண்களி னின்று) நீண்ட இரத்தத் துளிகளைச் சிந்தும்படியாகவும், நெருப்பு உக நோக்கும் நீரான் - நெருப்புத் தெறித்து விழுமாறும் சினந்து பார்க்கும் தன்மையுடைய அந்த இராவணன், வாழ் மனை புகுந்தது - (ஒருவன்) தான் வாழும் வீட்டில் புகுந்ததான, ஓர் மாசுணம்-ஒரு பெரும் பாம்பு, ஆண்டு வர கண்டு அன்ன - அங்குத் தன்னெதிரே வரக் கண்டதே போல, கோள் உற கொதித்து - தீங்குற்று அதனால் மனக் கொதிப்பை யடைந்து, விம்மி - தேம்பி, உழையரை - அரு கிருந்த ஏவலாளர்களை, கூவி - அழைத்து, சொன்னான் - பின் வரு மாறு கூறினான். சொன்னது அடுத்த செய்யுளிற் காண்க.

மாசுணம் - மலைம்பாம்பும் ஆம்; தென்றலுக்கு இங்கு மாசுணம் உவமை; அது பாம்புபோலச் சீறிவருவதாலும், விஷம்போலக் காமுகரை வருத்துமாதலாலும் என்க; வாழ் மனையிற் புகுந்த மாசுணம்; 'வாழ்மனையிற் பாம்பு புகுந்தாற் போலும்' என்பது ஒரு பழமொழி. தென்றலைப் பாம்பென்றதுபோல, பாடலைப் பாம்பென்று கூறியது காண்க: அயோத் : கைகேசி சூழ். 54; சுந்தர. 271; 287. அரத்தம்; ரக்தம் என்ற வடசொல்லின் திரிபு; 'அரத்த முண்டனைய மேனி' (பால. உலாவியற் : 5.); இது இரத்தம் எனவும் வரப்பெறும்; நன். சூ. 148. கோள் - தீமை; (திவா).

பி - ம். 2. சிந்தி; நோக்குங் கண்ணன்; நோக்கு நெஞ்சன்,

3. வாளெனப் புகுந்த.

4. கோளெனக் கொதித்து விம்மி. (164)

718. கூவலி னுயிர்த்த சின்னீ ருலகினைக் குப்புற் றென்னத்
தேவரி னொருவ னென்னை யின்னலுஞ் செயத்தக் கானே
ஏவலி னன்றி வந்திங் கிவ்வழ லெய்திற் றென்னாச்
காவலி னுழையர் தம்மைக் கொணருதிர் கடிதி னென்றான்.

'கூவலின் உயிர்த்த - ஒரு சிறு கிணற்றில் ஊறிச் சுரந்த, சில் நீர் - சிறுமையான நீர், உலகினை குப்புற்று என்ன - உலகத்தையே (தன்னுள்ளடக்கிக்) கடந்து வந்தது என்பது போல, தேவரின் ஒருவன் - (எனக்கு அடங்கிய) தேவர்களுள் ஒருவனான இவன், என்னை இன்னலும் செய தக்கானே - என்னைத் துன்பஞ் செய்ய வலிமையுடைய னானானே? இ அழல் - இந்தத் தீ, ஏவல் இன்றி - என் கட்டளை இல்லாமல், இங்கு வந்து எய்திற்று - இங்கு வந்தடைந்தது' என்று - என்று கூறி, 'காவலின் உழையர் தம்மை - இங்குக் காவலில் உள்ளவரை, கடிதின் கொணருதிர் என்றான் - விரைவில் இங்கு அழைத்துக்கொண்டு வருவீராக' என்று தன் அருகில் உள்ளாரிடம் கூறினான்.

கூபம் என்ற வடசொல் கூவல் எனத்திரிந்து வந்தது; இது கூவம் எனவும் வழங்கும். குப்புற்றென்னத் தென்றல், காமுகனான இராவணனை அழல்போல் சுட்டது ஆதலின், அதனை அவன், அழலென்றே மயங்கிக் கூறினான் என்க; வேனிற் காலத்துத் தென்றல் காமுகரை வருத்தும் என்பது, 647 : 654. கூவல்நீர் தேவரின் ஒருவற்கும், தான் உலகுக்கும் உவமையாகக் கூறப்பட்டன,

இதுவும் அடுத்த செய்யுளும் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. கூயவி னுறையுஞ் சின்னி ருலகினைக் குறைத்தல் போலக்; கூயவி னுயர்ந்த ; ருலகினைக் கொண்டதென்ன.
2. செய்தற் கொப்பான்; செயத்தக்கானே ; செய்யத்தக்கான்.
3. ஏவினன்றி ; ஏவலன்றித் ; ஏயலினின்றித்; தென்றலெவ்வழி யெய்திற் ; றிவ்வழி யெய்திற் ; யெய்திற் றென்னை ; யெய்திற் றென்னக்.
4. தம்மைக் கூவுதிர். (165)

719, அவ்வழி யுழைய ரோடி யாண்டவர்க் கொணர்தலோடும்
வெவ்வழி யமைந்த செங்கண் வெருவுற நோக்கி வெய்யோன்
செவ்வழி தென்ற லாற்குத் திருத்தினீர் நீர்கொ லென்ன
இவ்வழி யிருந்த காலைத் தடையவற் கில்லை யென்றார்.

அ வழி - அப்பொழுது, உழையர் - அருகிருந்தோர், ஓடி - ஓடிச் சென்று, ஆண்டு - அவ்விடத்தில், அவர் கொணர்தல் ஒடும் - அக் காவலாளரை அழைத்து வந்ததும், வெய்யோன் - கொடியோனான அந்த இராவணன், வெம் வழி அமைந்த - கொடுமைத் தன்மை பொருந்திய, செம் கண் - தன் சிவந்த கண்களால், வெருவு உற நோக்கி - அச்சம் உண்டாகும்படிக் கோபித்துப் பார்த்து, 'நீர் கொல் தென்றலாற்கு செவ்வழி திருத்தினீர் என்ன - நீங்கள் தாம் அத்தென்றல் என்பவனுக்கு இவ்விடம் வர நேரான வழிகாட்டி விட்டீர்போலும்?' என்று கேட்க, 'இ வழி இருந்த காலை - இங்கு இந்தச் சாளரங்களாகிய வழி அமைந்திருந்த நிலையில், அவற்கு தடை இல்லை - அந்தத் தென்றல் என்பானுக்கு இங்கு வருவதற்குத் தடை கிடையாதது ஆகும்' என்றார் - என்று அக்காவன் மாக்கள் சமாதானம் கூறினர்.

உழையர் - அமைச்சரும் ஆம். 'தடையவற்கில்லை - உம்முடைய வேதனைகண்டு தடுத்தேமில்லை' என்பது பழையவுரை. இவ்வழி யிருந்த காலை என்பதற்கு, இம்மண்டபத்தில் இருந்தபோது, என்றும் பொருள் கூறலாம்.

பி-ம். 1. அவ்வழிச் சிலதரோடி ; யாண்டவர்க் குரைத்தலோடும் யாண்டவற்குரைக்கவந்தார்.
2. வெவ்வழி யரக்கர் கோமான் வெகுண்டவர் தம்மை நோக்கிச்.
3. திருத்தினை நீகொ லென்ன ; செவ்வழி தென்றற் காறு திருத்தினீ ரென்கொ லென்ன, (166)

720. வேண்டிய துணர்ந்து செய்வான்
விண்ணவர் வருவ ரென்றால்
மாண்டது போலுங் கொள்கை
யானுடை வன்மை வல்லை
தேண்டிநீர் திசைக டோறுஞ்
சேணுற விசையிற் செல்குற்
றீண்டிவன் றன்னைப் பற்றி
யிருஞ்சிறை யிடுதி ரென்றான்.

'வேண்டியது உணர்ந்து செய்வான் - யான் வேண்டியதை என் குறிப்பினால் உணர்ந்து செய்யும் பொருட்டு, விண்ணவர் வருவர் என்றால் - தேவர்கள் என்னிடம் வருவார் என்பது இருக்க, யானுடை கொள்கை வன்மை - என்னுடைய கோட்பாட்டின் வலிமை, மாண்டதுபோலும் - (இத்தென்றலின் செய்கையால்), அழிந்தது போலும்; (ஆதலின்), வல்லை - விரைவாக, நீர் திசைகள் தோறும் தேண்டி - நீவிர் எல்லாத் திசைகளிலும் தேடிக்கொண்டு சேண் உற விசையில் செல்குற்று - வெகுதூரம் வேகமாய்ச் சென்று, இவன் தன்னை - இந்தத் தென்றலாகிய காற்றை, பற்றி - பிடித்து, ஈண்டு-இந்த இலங்கையில், இரும் சிறை இடுதிர் - கொடுஞ் சிறையில் போடுங்கள்', என்றான் - என்று கட்டளையிட்டான்.

'விண்ணவர் யான் வேண்டியது உணர்ந்து வரவேண்டியிருக்க, இப்பொழுதுள்ள என் கோட்பாட்டு வன்மையை அறியாமல், தன் நிலையையும் மறந்து, இங்கு இவன் வந்தது குற்றம்' என்றான் என்க. தேடிக் கொணரக் கட்டளையிட்டதால், தென்றல் இதற்குள் ஓடி ஒளிந்துகொண்டான் என்று கொள்ளுதல் வேண்டும். இருஞ்சிறை - பெரிய சிறையும் ஆம். இச்செய்யுள் பழைய அச்சுப்புத்தகங்களில் இல்லை; ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பின்படி பழைய ஏட்டுச் சுவடிகளிலிருந்து எடுத்து இங்குப் பதிப்பிக்கப் பெற்றது.

பி - ம். 1. நினைத்தும்; வருவரென்றால்.
2. மென்னை யென்னுடை வலி நீ யிப்போ.
3. தேண்டியே திசைக; சேணுறச்சென்று வல்லே. (167)

இராவணன் அமைச்சருடன் ஆலோசித்தல் 721—2.

721. காற்றினேன் றன்னை வாளா
முனிதலிற் கண்ட தில்லை
கூற்றும்வந் தென்னை யின்னே
குறுகுமாற் குறித்த வாற்றால்
வேற்றருங் கருங்கட் சீதை
மெய்யருள் புனையே னென்றால்
ஆற்றலா லடுத்த தெண்ணு
மமைச்சரைக் கொணர்தி ரென்றான்.

(மேலும் இராவணன்), 'காற்றினேன் தன்னை - காற்றிற்கு உரிய தெய்வமாகிய வாயு தேவனை, வாளா முனிதலில் - வீணே கோபிப்பதால், கண்டது இல்லை - நாம் அடையக்கூடிய பயன் ஒன்றும் இல்லையே யாகும்; குறித்த ஆற்றால் - நான் மனத்திற்கொண்டபடி, வேல் தரும் கரும் கண் சீதை - வேல் போன்றதும் கருமை வாய்ந்தது மான கண்களையுடைய சீதையின், மெய் அருள் புனையேன் என்றால் - உண்மையான அருளை யான் அடையேன் என்று ஆகுமேல், கூற்றும் வந்து என்னை இன்னே குறுகும் ஆல் - யமனும் வந்து என் உயிரைப்பற்றிப் போக இப்பொழுதே வந்தடைவான்; (ஆதலால்), அடுத்தது - மேல் நடக்க வேண்டியதை, ஆற்றலால் எண்ணும் - தம் அறிவு வலிமையால் சாதிக்கும் வழியைக் கருதிச்சொல்லக் கூடிய, அமைச்சரை - என் மந்திரிமார்களை, கொணர்திர் - இங்கு அழைத்துக்கொண்டு வருவீராக,' என்றான் - என்று இராவணன் கட்டளை யிட்டான்.

வேல்தரும்: தரும், என்பது உவமவாசகம். கருங்கண் - பெரிய கண்ணும் ஆம். மெய்யருள் - பொய்யாகிய உருவெளி அல்லாது உண்மை வடிவுடன் வந்தருள்வது.

பி - ம். 1. வாளால் முனிதலில்.
2. கூற்றுவர்; குறித்த வாற்றல்; கூற்றுவன் றன்னை யின்னே குறுகு மென் னுவிகுன்று.
3. மெய்யருள் புனையத் தக்க; புனையே னென்னில்.
4. ஆற்றலாலி தத்த தெண்ணு; ஆற்றலாங் ககத்த தெண்ணும்; ஆற்றதற் கமைந்த செய் தகை மைச்சரைக். (168)

722. ஏவின சிலத ரோடி யேயெனு மளவி லெங்கும்
கூவினர் கூவ லோடுங் குறுகினர் கொடித்திண் டேர்மேல்
மாவினிற் சிவிகை தம்மேன் மழைமதக் களிற்றின் மீதில்
தேவரும் வானந் தன்னிற் றிசைதொறுஞ் சிந்தை சிந்த.

ஏவின சிலதர் ஓடி - அவ்வாறு இராவணனால் ஏவப் பெற்ற பணியாளர் ஓடி, ஏய் எனும் அளவில் - ஏய் என்று சொல்லும் நேர அளவில், எங்கும் கூவினர்-எங்கும் போய்க் கூவியழைத்தனர்; கூவலோடும் - அவ்வாறு கூவி அழைத்தவுடன், தேவரும் வானம் தன்னில் - தேவர்களும் ஆகாயத்தில், திசைதொறும் - நாலாதிசைகளிலும் வந்து, சிந்தை சிந்த - தங்கள் மனம் சோர்ந்து சிந்தும் நிலையில் இருந்து ஏங்க, கொடி திண் தேர் மேல் - கொடிகளால் அலங்கரிக்கப் பெற்ற வலிய தேர்களின் மீதும், மாவினில் - குதிரைகளின் மீதும், சிவிகை தம்மேல் - பல்லக்குக்களின் மீதும், மழை மத களிற்றின் மீதும்-மேகம்போன்ற (கரிய நிறமுடைய) மதங்கொண்ட ஆண் யானைகளின் மீதும், குறுகினர் - (அம்மந்திரிகள் இராவணன் இருக்குமிடத்தை) அடைந்தனர்.

தேவரும்; உம்மை, எஞ்சியது தழுவிய எச்சவும்மை; மற்றை, முனிவர், மானிடர் முதலினோரை உடன் கூட்டி உரைக்கப்பாலது. சிலதர்-பணியாளர்; 665; பெண்பால் சிலதியர். ஏ எனும் அளவு - ஏ என்னும் சொல்லை உச்சரிக்கும் கால அளவு; 749. இஃது இந் நூலிற் பல இடங்களிற் பயிலப்பெறுவது காணலாம்.

பி-ம். 1. ஏவலுமுழையர் வல்லே யோடின ரெங்குந்தேடிக்; தணியினெங்கும்; தணியிலெங்கும்; தலையிலெங்கும்.
2. திண்டேரர்; திண்டேரார்; திண்டேரின்.
3. மாவினர் சிவிகை மேலர் மும்மதக் களிற்றர்வையத்; சிவிகை மேலாம் களிற்றின் மேலாம்; மும்மதக்களிற்றின் மானத்; மேலத்; மேலார்; வையத்.
4. தேவரும் வானத் தேவரும்; றெய்வரும்; தேவர்தம் விமானந்தன் மேற்றிசை தொறுஞ்சென்று சிந்த; தேவருமிரியல் செய்யத்திசை; தேவர்க ளதுகண் டென்னோ வெனமனந் திகைத்துச் சோர்ந்தார். (169)

அமைச்சரின் ஆலோசனைப்படி இராவணன் மாரீசனிடம் செல்லுதல்.

723. வந்தமந் திரிக ளோடு
மாசற மனத்தி னெண்ணிச்
சிந்தையி னினைந்த செய்யுஞ்
செய்கையன் றெளிவி னெஞ்சன்
அந்தரஞ் செல்வ தாண்டோர்
விமானத்தி னுரு மின்றி
இந்திய மடக்கி நின்ற
மாரீச னிருக்கை சேர்ந்தான்.

வந்த மந்திரிகளோடு - அவ்வாறு வந்த மந்திரிகளோடு, மாசு அற மனத்தின் எண்ணி-குற்றமில்லாதபடி மனத்தில் ஆலோசித்து, சிந்தையில் நினைந்த - தன் மனத்தில் எண்ணியவற்றை, செய்யும் செய்கையன் - செய்து முடிக்கும் வினைத்திறமுடையவனும், தெளிவின் நெஞ்சன் - தெளிவாக எண்ண முடையவனுமான அந்த இராவணன், ஆண்டு - அப்பொழுது, அந்தரம் செல்வது - வானின் வழியே செல்லக்கூடியதான, ஓர் விமானத்தின் - ஒப்பற்ற தனது புஷ்பக விமானத்தின் மீது ஏறி, ஆரும் இன்றி - வேறொரு துணைவரின்றித் தனியனாய், இந்தியம் அடக்கி நின்ற - ஐம்புலன் களையும் அடக்கித் தவநிலையில் நிலைத்து நின்ற, மாரீசன் என்பவன் இருப்பிடத்திற்குப் போய்ச்சேர்ந்தான்.

ஆருமின்றி, என்பதை மாரீசனுக்கு இயைத்தும் பொருள் கொள்ளலாம். இந்தியம் - இந்திரியம் என்ற வட சொல்லின் திரிபு; 'இந்தியக் குஞ்சரத்தை ஞானப் பெருங்கயிற்றால்......பந்திப்பர்,' (அறநெறிச்சாரம். *192*). தெளிவு இல் நெஞ்சன், எனப்பிரித்து, இன்ன செய்வதென்று தெளிவு பெறாது கலக்கமுற்ற மனமுடையன், எனப் பொருள் கொண்டாரும் உளர். இனி, சிந்தையில் நினைந்த செய்யும் செய்கையன் என்பதற்கு, மனவடக்கமல்லாது மனம் போன வழியில் செய்பவன் எனப்பொருள் கூறலும் பொருந்தும்.

பி - ம். 1. மந்திரியரோடு; மந்திரிகளோது வசனமு மனத்தி னெண்ணு; மரபினன் மனத்தி; சிந்தை யினடைந்த.
2. நினைத்த செய்யுஞ்; செய்கையிற் றெளியு நெஞ்சன்.
3. செல்வ தாங்கோர் மானத்தி லாருமின்றி; செய்த வாண்டோர்.
4. மடங்கு நெஞ்சின், மடங்கி நின்ற, மடங்க நின்ற, மடங்கு நோன்பின். *(170)*

சூர்ப்பணகை சூழ்ச்சிப்படலம் முற்றும்.

---

## 8. மாரீசன் வதைப்படலம்

---

இஃது, இராவணனது தூண்டுதலுக் கிணங்கி, மாரீசன் மாய மானுகப் பஞ்சவடிக்குச் சென்று, பிராட்டியை மயக்க, அதனைப்பிடிக்கச் சென்ற இராமபிரான் அதனை வதைத்த செய்தியைக் கூறும் படலம் என விரியும். மாரீசன்; சுகேது என்ற யக்ஷனின் பெண்ணுன தாடகைக்கும், சுந்தன் என்ற யக்ஷர் தலைவனுக்கும் பிறந்தவன்; சுவாகு என்றவனின் தமையன்; அகத்தியர் சாபத்தால் தாடகையும், அவள் மக்களும் அரக்கர்களாகி, இராவணனின் தாய் வழிப் பாட்டனுகிய சுமாலியால் போற்றப்பட்டனர். சுவாகுவையும் மாரீசனையும் சுமாலி, தன் மக்கள் போலவே பாராட்டி வந்தமையால், அவர்கள் இராவணனுக்கு மாமன்மார்கள் என்ற முறையை எய்தினர். இவ் வரலாற்று விளக்கத்தைப் பாலகாண்டம் தாடகை வதைப் படலத்தில் காண்க.

சூர்ப்பணகையினுல் தூண்டப் பெற்று இராவணன் சீதார்ப்பிராட்டியை வஞ்சனையால் அபகரிக்கக் கருதி மாரீசனிடம் சென்றுன் என்று முன் படலத்தில் கூறப்பெற்றது. அதன்மேல் நடந்தவை இங்குக் கூறப்பெறும். அச்சுப் புத்தகங்கள் பலவற்றிலும், சுவடிகள் சிலவற்றிலும், இதுவும் முன் படலமும் ஒன்ருகவே, 'மாரீசன் வதைப்படலம்' என்று வழங்கப்பெறுமாயினும், சிறந்த சுவடிகளில் உள்ளவாறு இவை தனித்தனிப் படலங்களாகக் கொள்ளப்பெற்றன.

**மாரீசனிடம் இராவணன் தான் வந்த காரணங்கூறல் 724—29.**

**724.** இருந்தமா ரீச னந்த
விராவண னெய்த லோடும்
பொருந்திய பயத்தின் சிந்தை
பொருமுற்று வெருவு கின்ருன்
கருந்தட மலையை னானை
யெதிர்கொண்டு கடன்கள் யாவும்
திருந்திய செய்து செவ்வித்
திருமுகம் நோக்கிச் செப்பும்.

இருந்த மாரீசன் - அங்குத் தவநிலையில் இருந்த மாரீசன், அந்த இராவணன் எய்தல் ஓடும் - அந்த இராவணன் அங்கு வந்தடைந்ததோடும், பொருந்திய-உண்டான, பயத்தின் - அச்சத்தால், சிந்தை பொருமுற்று- மனம் விம்முதல் அடைந்து, வெருவுகின்ருன்-

அஞ்சி நடுங்குகின்றவனாகி, கரும் தடம் மலை அன்னானை - கரிய பெரிய மலைபோன்ற அந்த இராவணனை, எதிர் கொண்டு - எதிர் சென்று அழைத்து வந்து, கடன்கள் யாவும் திருந்திய செய்து - அரசனுக்குச் செய்ய வேண்டிய உபசாரக் கடமைகள் அனைத்தையும் செவ்வையாய்ச் செய்து, செவ்வி திருமுகம் நோக்கி - காட்சிக்குரிய அவனது அழகிய முகத்தைப் பார்த்து, செப்பும் - பின் வருமாறு கூறுவானாயினன்.

இராவணன், கருமை நிறமும் பல சிகரங்கள் போன்ற தலைகளும், பெருமையும், வலிமையும் வாய்ந்தவன் ஆதலின், கருந்தடமலை யன்னான் என்னப்பட்டான். திருமுகம் - சந்நிதியும் ஆம். செப்பும் : செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று. இராவணன் அங்கு எய்திய காலை மாரீசன் சிந்தை பொருமுற்று வெருவியது, 'அவன் தனியே வரக்கூடியவனல்லன்; ஏதோ கொடிய செயல் கருதி வந்துள்ளான்; இதனால், தனக்கும் மற்ற அரக்கர்க்கும் என்ன தீங் குண்டாகுமோ?' என்று கருதி என்க. சில சுவடிகளின்படி இச் செய்யுளுடன் மோகப்படலம் முற்றும்; அடுத்த செய்யுள் முதல் மாரீசன்வதைப் படலம் தொடங்கும்.

பி - ம். 1. வந்தாங்கிராவணன்; மாரீசன்வந்த; வெய்த வண்ணம்; பொருந்திய மனத்தன்.

2. பொருந்திய பயத்தன்; பயத்தனெஞ்சிற் பொருக்கெனவெழுந்த வல்லே.

3. மலையன்னானை, மலையினானை; கடன்க ளியாவுந்.

4. திருந்துறச்செய்து. (1)

வேறு

725. கந்த மலர்த்தண் கற்பக நீழற் றலைவற்கும்
அந்தக னுக்கு மஞ்ச வடுக்கு மரசாள்வாய்
இந்த வனத்தென் னின்ன லிருக்கை யெளியோரின்
வந்த கருத்தென் சொல்லுதி யென்றான் மருள்கின்றான்.

மருள்கின்றான் - (இராவணன் தன்னிடம் வந்த காரணம் என்ன தீமைக்கு இடமாகுமோ என்று) அஞ்சி மயங்கினவனான மாரீசன், (அவ்விராவணனை நோக்கி), 'சந்தம் மலர் தண் கற்பக நீழல் - அழகிய மலர்களையுடைய குளிர்ந்த கற்பக விருக்ஷங்களின் நிழலில் அமர்ந்து வானுலகை ஆட்சி செய்யும், தலைவற்கும் - தேவர் தலைவனான இந்திரனுக்கும், அந்தகனுக்கும் - யமனுக்கும், அஞ்ச அடுக்கும் -

அஞ்சும்படி ஆணை செலுத்தும், அரசு ஆள்வாய் - அரசாட்சி செய்து வருபவனே! (அத்தகைய நீ), இந்த வனத்து - இந்த (ஒதுக்குப்புறமான) காட்டில், என் இன்னல் இருக்கை - எனது துன்பத்திற்கு இடமான இருப்பிடத்திற்கு, எளியோரின் - எளிய நிலையில் உள்ளவரைப்போல, வந்த கருத்து என் - நீ தனித்துவந்த எண்ணம் யாதோ? சொல்லுதி என்றான் - எனக்குச் சொல்வாயாக!' என்று கேட்டுக்கொண்டான்.

செல்வம், போகம் முதலிய சிறப்பால் இந்திரனும், வலிமையால் அந்தகனும் மேம்பட்டவராதலின், அன்னோரும் அஞ்சும்படியான வலிமையுடையவன் அவ்விராவணன் என்பது தோன்றக் கூறப்பெற்றது. இன்னல் இருக்கை: இராவணன் பெருமைக்கேற்ற சிறப்புக்கள் அமையப் பெறாத தவக் குடில். இந்திரன் - கற்பக நிழலின் கீழிருந்து அரசாள்பவன்; 'இன்றளிர்க் கற்பக நறுந்தேனிடை துளிக்கும் நிழலிருக்கை'; (பால. கையடைப் : 8). மாரீசன் இருந்த இடம் இலங்கையிலிருந்து வெகு தூரத்திற்கப்பால், கடலைத்தாண்டியுள்ள ஓரிடம் என்று முதனூல் கூறும்.

பி - ம். 1. கந்தமலர்த், சந்த மலர்த்தின்;

3. லிருக்கைக் கெளியோரின், வின்ன லுழக்கு மெளியோரின்; யெளியாரின்.

4. யென்முன் மகிழ்கின்முன்; சொல்லென மற்றங் கவனோதும். (2)

726. ஆன தனைத்து மாவி தரித்தே னயர்கின்றேன்
போனது பொற்பு மேன்மையு மற்றென் புகழோடும்
யான துனக்கின் றெங்ங னுரைக்கே னினியென்னா
வான வருக்கு நாண வடுக்கும் வசைமன்னே.

'ஆனது அனைத்தும் - எனக்கு வரவேண்டிய தீமைகள் யாவும் வந்துவிட்டன; ஆவி தரித்தேன் - என் உயிர் நீங்காது தாங்கிக் கொண்டுள்ளேன்; அயர்கின்றேன் - (அத்தகைய வலிமை வாய்ந்த யான் இப்பொழுது) வருந்துகின்றேன்; என் பொற்பும் மேன்மையும் புகழ் ஓடும் போனது எனது பொலிவும், சிறப்பும் என் புகழும் போய் விட்டன; இனி யான் உனக்கு இன்று எங்ஙன் உரைக்கேன் - இனி நான் உனக்கு எனக்குண்டான துன்பநிலையை எவ்வாறு எடுத்துக் கூறும் ஆற்றல் உடையவனாவேன்?,' என்னா - என்று கூறி, (இந் நிகழ்ச்சி), 'வானவருக்கும் - தேவர்களுக்கும், நாண - நாம் கண்டு

நாணும்படியான, அடுக்கும் வசை - வந்து சம்பவித்துள்ள நிந்தனை (அல்லது சிறுமையே) யாகும்: மற்று, மன், ஓ: இவை அசைகள்.

இச்செய்யுள் முதல், 730 ஆம் செய்யுள் முடிய நான்கு செய்யுள்களும் குளகமாய்த் தொடர்ந்து அதிலுள்ள என்றான் என்னும் வினை கொண்டு பொருள் முடியும். மற்றென் - வேறு எனக்கு இனி என்ன பெருமையிருக்கிறது! என்று தன்னை இகழ்ந்து கூறியதாகக் கொள்ளினும் அமையும். பொற்பும் மேன்மையும் புகழோடும் போயின என வரப்பாலது, போனது என வந்தது, பன்மை ஒருமையாக மயங்கிவந்ததாகும்.

பி - ம். 1. ஆனைதனக்கும்; ஆனதனக்கும்.

3. மினிதென்னு. 4. வசையம்மா. (3)

727. வன்மை தரித்தோர் மானிடர் மற்றங் கவர்வாளால்
நின்மரு கிக்கு நாசி யிழக்கு நிலைநேர்ந்தால்
என்மர புக்கு நின்மர புக்கு மிதன்மேலோர்
புன்மை தெரிப்பின் வேறினி யுண்டோ புகழ்வேலோய்.

'புகழ் வேலோய் - யாவரும் புகழும் வேலையுடையவனே! மானுடர் - மனிதர், வன்மை தரித்தோர் - வலிமை பூண்டவரானார்கள்; மற்று - மேலும், அங்கு - தண்டகாரணியத்தில், அவர் - அந்த மானிடர், வாளால் - தம் கைவாளினால், நின் மருகிக்கு - உன் மருமகளாகிய சூர்ப்பணகைக்கு, நாசி இழக்கும் நிலை நேர்ந்தால் - மூக்கை இழக்கும்படியான ஒரு சூழ்நிலை உண்டானால், என் மரபுக்கும் - என் குலத்திற்கும், நின் மரபுக்கும் - உன் குலத்திற்கும், இதன் மேல் - இதற்கு மேலான, ஓர் புன்மை தெரிப்பின் - ஓர் இழிவைக் கூறுமிடத்து, இனி வேறு உண்டோ - இனி வேறு சொல்லக் கூடியது உண்டோ? (இல்லை என்றபடி).

இனி, 'புகல் வேலோய்' என்ற பாடங்கொண்டு, வேலோய் என்று விளித்து, 'நீ சொல்வாயாக' என்று பொருள் கொள்வாரும் உளர். தன் தங்கை என்னாது, மருகி எனக் குறிப்பிட்டது, அவனுக்கும் அந்தப் புன்மையில் இடமுண்டு என்று அவன் உணரும் பொருட்டு. மாரீசன் இராவணனுக்குத் தாய் வழி மாமன் என்ற முறையுள்ளமையால், தன் மரபோடு அவன் மரபுக்கும் இதனால்

இழிவு ஏற்பட்டது எனக் கூறினான். மாரீசன், இராவணனுக்கு மாமன் ; 354 உரை ; பால. தாடகை வதை ; 41.

பி - ம். 1. வன்மை திரிந்தோர் ; வன்மை தெரிப்போர்.

2. நிலை நேர்ந்தார் ; நாசியிதட்கு நிலைதந்தால் ; நிலையந்தால்.

3. முன்மரபிற்கு மினிமேலோர் ; மினியேறாய் ; மிதில் யேறேர்.

4. வேறினிமற்றென் ; புன்மைதரிப்பின் ; வேறினியென்றே ; புகல் வேலோய். (4)

728. திருகு சினத்தான் முதிர மலைந்தோர் சிறியோர்நாள்
பருகின னென்றால் வென்றி நலத்திற் பழியன்றோ
இருகை சுமந்தா யினிதி னிருந்தா யிகல்வேலுன்
மருக ருலந்தா ரொருவன் மலைந்தான் வரிவில்லால்.

'திருகு சினத்தால் - முறுக்கப்பெற்ற (அதாவது, கடுமையான) கோபத்தோடு, முதிர மலைந்தோர் - உக்கிரமாகப் போரிட்டவர்களான, சிறியோர் நாள் பருகினன் என்றால் - என் தம்பியர்களான கர தூடணருடைய ஆயுள் நாட்களை (அம்மானுடன்) குடித்து அழித்துவிட்டான் என்று கூறினால், வெற்றி நலத்தின் பழி அன்றோ - இதுகாறும் நாம் அடைந்துள்ள வென்றிச் சிறப்புக்கு ஒரு நிந்தனை அன்றோ? இகல் வேல் உன் மருகர் - போர்புரியும் வேலேந்திய உன் மருகர்களாகிய அக் கரதூஷணதியர், உலந்தார் - அழிந்தனர் ; ஒருவன் - ஒரு மானுடன், வரி வில்லால் - தன் கட்டுக்கள் அமைந்த வில்லைக்கொண்டு, மலைந்தான் - போரிட்டு அவர்களை அழித்தான் ; (இவ்வாறிருக்க நீயோ), இரு கை சுமந்தாய் - உன் இரு கைகளையும் (தவஞ் செய்வதாகத்) தலைமேல் தூக்கிக் கும்பிட்டுத் தாங்கிக்கொண்டு, இனிதின் இருந்தாய் கவலையற்று மகிழ்ச்சியோடு இருந்தாய்.

முதிர மலைதல் ; சுந்தர. 778 ; திருகு சினம் ; சுந்தர. 1033.

பி - ம். 1. திருகு சினத்தர், திருகு சினத்தின் ; முதிர மலைந்தார், முதிர மலைந்தான் ; பருகினரென்றால்.

2. லதுமிக வன்றோ பழியம்மா, யிதுமிக வன்றே பழியன்றோ ; வென்றி நலத்தின் பரிசன்றோ, வென்றி நிலத்தின் பழி ; என் றலது மிகவந்தோ.

3. இருகை சுமந்தா னினிதி னிழந்தான்.

4. மருக ருலைந்தா ரொருவன் மலைந்தான் ; வரி வில்லான். (5)

729. வெப்பழி யாதென் னெஞ்சு முலந்தேன் விளிகின்றேன்
ஒப்பில ரென்றே போர்செய வொல்லே னுடன்வாழும்
துப்பழி செவ்வாய் வஞ்சியை வவ்வத் துணைகொண்டிட்
டிப்பழி நின்னிற் றீரிய வந்தே னிவணென்றான்.

'வெப்பு அழியாது - (மேற்கூறிய நிகழ்ச்சிகளால்) எனக்கு உண்டான மனக்கொதிப்பு அழியாமல், நெஞ்சும் உலந்தேன் - மனமும் அழிந்தேன்; விளிகின்றேன் - அதனால் யான் இறந்து அழியும் நிலையில் இருக்கின்றேன்; ஒப்பு இலர் என்றே - எனக்கு அம்மானுடர் நிகரானவர் அல்லர் எனக் கருதியே, போர் செய ஒல்லேன் - அவரோடு போர் புரிய உடன்படாதவன் ஆனேன்; (ஆதலால்), உடன் வாழும் - அம் மானுடருடன் வாழ்கின்ற, துப்பு அழி செம் வாய் வஞ்சியை - பவழத்தைத் தனக்கு ஒப்பில்லாமையால் தோற்றுப் பின்னிடச் செய்யும் சிவந்த வாயையுடைய கொடிபோன்ற பெண் ஒருத்தியை, வவ்வ - யான் அபகரித்துக்கொண்டு வருவதற்கு, துணை கொண்டு இட்டு - உன்னை என் துணையாகக் கொண்டு, இ பழி நின்னில் தீரிய - எனக்கு ஏற்பட்ட இந்தப் பழியை உன்னைக்கொண்டு நீக்கிக் கொள்ளும்பொருட்டு, இவண் வந்தேன் - இவ்விடம் உன்னை நோக்கி யான் வந்துள்ளேன்' என்றான் - என்று இராவணன் மாரீசனிடங் கூறினான்.

நெஞ்சும் : உம்மை, உடல், ஆவி முதலியவற்றை உடன் தழுவிய எச்சவும்மை. விளிகின்றேன், என்று இராவணன் வாயினின்றும் அமங்கலமான சொல் எழுந்தது ; இதனால் அவனுக்கு ஏற்படப் போகும் அழிவு அவனறியாமலே அவன் வாயிற் பிறந்தது என்க. விளிதல் - அழிதல், இறத்தல் ; 'விளிந்தாரின் வேறல்லர்' (குறள். 143.) வஞ்சி : உவமையாகுபெயர். ஒல்லுதல் - பொருந்துதல், இயலுதல் ; குறள். 33. தீரிய - நீக்க ; செய்யிய என்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம் ; 'நின்னைக் காணிய வந்தே னென்றாள்' (262) என்றதுபோல. செய்யுள் 725இல், மாரீசன், 'வந்த கருத்தென் சொல்லுதி' என்று வினவ, இராவணன் மாரீசன் மனத்தை வசீகரிக்கும் முறையில் பேசி, முடிவாக இச் செய்யுளில் தன் கருத்தை வெளியிட்ட திறம் நோக்கத் தக்கது.

பி - ம். 1. வெப்பொழியாதே ; வெப்பொழியாவென் ; னெஞ்சு புலந்தே.
2. ஒப்பழி யென்றே ; செய லொல்லேன் ; ஒப்பிலரொன்னார் ; ஒப்பிலரொன்றே ; ஒப்பிலரன்றே.
3. துணை கொண்டீன்(டு) ; துணைகொண்டீட் , வவ்வத் துணை கொண்டீண்டு.
4. நின்னூற் றீரிய ; டப்பழி நின்னிற்; னிவையென்றான். (6)

## மாரீசன் நல்லுரை கூறல் 730—41.

**730.** இச்சொ லனைத்துஞ் சொல்லி யரக்க னெரிகின்ற
கிச்சி னுருக்கிட் டுய்த்தன னென்னக் கிளர்வான்முன்
சிச்சி யெனத்தன் மெய்ச்செவி பொத்தித் தெருமந்தான்
அச்ச மகற்றிச் செற்ற மனத்தோ டறைகின்ருன்.

அரக்கன் - இராவணன், எரிகின்ற கிச்சின் - எரிகின்ற நெருப்பில், உருக்கு இட்டு உய்ந்தனன் என்ன - உருக்காகிய எஃகு இரும்பைத் தீயிலிட்டுக் காய்ச்சி அதனைத் தன் காதுகளில் செலுத்தினன் என்னும்படி, இ சொல் அனைத்தும் - இவ்வித வார்த்தைகள் யாவையும், சொல்லி - தன்னிடம் கூறி, கிளர்வான் முன் - தன்னைத் தூண்டும் அவ்விராவணன் முன்னாக, சி சீ என தன் மெய் செவி பொத்தி - (மாரீசன்) 'சிச்சீ' என்று வெறுப்புடன் கூறித் தன்னுடைய கேட்கும் உணர்ச்சியை அறிவிக்கும் காதுகளைக் கைகளால் பொத்திக்கொண்டு, தெருமந்தான் - குழப்பமுற்று வருந்தினவனாகி, அச்சம் அகற்றி - (ஒருவாறு) பயம் நீங்கினவனாய், செற்ற மனத்தோடு - கோபங்கொண்ட மனத்துடனே, அறைகின்ருன் - பின் வருமாறு சொல்லுவானானன்.

இச்சு - நெருப்பு; சுந்தர. 1045. சிச்சீ: இது வெறுப்பை யுணர்த்தும் ஒலிக்குறிப்பு; மெய்ச் செவி - கேட்கும் உணர்ச்சியை அறிவிக்கும் செவி; மெய் - உணர்வு அல்லது அறிவு; புறநா. 25: 11. 'இச்சு - அக்கினி. உருக்கிட்டு - உருக்கிரும்பை நெருப்பிலிட்டு. தெருமந்தான் - அலமந்தான்; செற்ற மனம் - கோபத்தையுடைய மனம்.' என்பன பழையவுரை.

பி - ம். 1. லனைத்துந் தக்க வரக்கன்.
2. கிச்சி னரக்கிட்; கிச்சை யுருக்கிட்; கிச்சி னுரைக்கிட்.
4. செற்றமனத்தற். (7)

**731:** மன்னு நீயுன் வாழ்வை முடித்தாய் மதியற்ருய்
உன்னு லன்றி தூழ்வினை யென்றே யுணர்கின்றேன்
இன்னு வேனும் யானிது ரைப்பெ னிதமென்னுச்
சொன்னு னன்றே யன்னவ னுக்குத் துணிவெல்லாம்.

'மன்னு - மன்னனே! நீ உன் வாழ்வை முடித்தாய் - நீ உனது வாழ்நாளை முடித்துக்கொண்டாய்; மதி அற்ருய் - அதற்கு இயைய உன் அறிவையும் இழந்தாய்; ஈது உன்னுல் அன்று - இச்செயல்

உன்னால் ஆக்கப்பட்டது அன்று; ஊழ் வினை என்றே உணர்கின்றேன் - உனது பழைய வினையின் பயனே (இவ்வாறு உன்னைத் தூண்டியது) எனவே கருதுகின்றேன்; இன்னா எனும் - (உனக்கு) ஆகாதவையெனத் தோன்றினாலும், யான் இதம் இது உரைப்பென் என்னா - நான் உனக்கு நன்மை தரத்தக்க இதனைக் கூறுவேன்' என்று சொல்லி, அன்னவனுக்கு - அந்த இராவணனுக்கு, துணிவு எல்லாம் - உறுதியளிக்கும் நற்புத்தியாகிய நீதி அனைத்தையும், சொன்னான் - மாரீசன் எடுத்துக் கூறுவானாயினான். அன்று, ஏ: அசைகள்.

வாழ்வை முடித்தாய் என்றது; 'நீ இச்செயல் புரிவாயெனில் இறப்பது திண்ணம்' என்ற உறுதியை யுணர்த்தவந்த கால வழுவமைதியாகும். மதி அற்றாய்; தன் விதியின்வழியே புத்தி மாறும் என்றதை அறிவுறுத்தி, இஃது உன் ஊழ்வினை என எடுத்துக் காட்டினான் என்க. மதியற்றது; 'எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையும், தேரான் பிறனில் புகல்.' என்ற (குறள். 144)படி நல்வழியில் ஒழுகாமையால் என்க. அவன் தான் கூறுவதைக் கேட்டு, அதன்படி நடக்கமாட்டான் என்றதை மாரீசன் உணர்ந்தே, 'ஈதுன் ஊழ்வினை என்றே உணர்கின்றேன்' என்று நடுநிலை அணியில் அமைத்துக் கூறினான் என்க. துணிவு கூறியது, இராவணன்பால் மாரீசன் கொண்ட அன்புபற்றி; துணிவு - ஆன்றோர் அறிவால் நிச்சயித்துக் கூறியுள்ள நீதி. இதம் - ஹிதம் என்ற வடசொல்லின் திரிபு. 'இன்னா - பொல்லாப்பு'; பழையவுரை.

பி - ம். 1. நீநின்; உன்னாலன்று.

2. லன்றி யாழ்வினை; தூழ்வினை யென்றேன்.

3. இன்னாதேனு; இன்னா நெஞ்சினென்னா; இன்னா நெஞ்ச மின்ன முரைப்பான்.

4. யென்றவனுக்குத்; யன்றவனுக்குத். (8)

**732.** அற்ற கரத்தோ டுன்றலை நீயே யனன்முன்னில்
பற்றினை யுய்த்தாய் பற்பல காலம் பசிகூர
உற்றுயி ருள்ளே தேய வுலந்தாய் பினையன்றோ
பெற்றனை செல்வம் பின்னி திழந்தாற் பெறலாமோ.

'அற்ற - (உன் வாளால்) அறும்படி வெட்டிய, கரத்தோடு உன் தலை - கையோடு, ஏந்திய உன் தலைகளை, அனல் முன்னில்-வேள்வித்

தீமுன், நீயே பற்றினை உய்த்தாய் - நீயே எடுத்து ஆகுதிகளாகச் செலுத்தி ஓமம் செய்தாய்; பல் பல காலம் பசி கூர உற்று - நெடும் காலம் பசி மிக அடைந்து, உள்ளே உயிர் தேய - உடலுள் உன் உயிர் தேய்ந்து வாட, உலந்தாய் - வருந்தித் தவம் செய்தாய்; பினை அன்றோ செல்வம் பெற்றனை - அவ்வாறு அருந் தவம் செய்தபின் அல்லவோ, இந்த மூவுலகங்களையும் ஆளும் பெருஞ் செல்வத்தை அடைந்துள்ளாய்? இழந்தால் - இதனை நீ இழந்தால், பின் இது பெறல் ஆமோ - பிறகு இச் செல்வ வாழ்க்கையை அடைய முடியுமோ? (முடியாது என்றபடி).

இங்கு மாரீசன் கூறிய இராவணனது கொடுந்தவச் செய்தி உத்தரகாண்டத்தில் உள்ளது. கரத்தோடு அற்ற தலை, எனப் பிரித்துக் கூட்டி, கைகளினால் அறுக்கப்பெற்ற தலை என்றும் பொருள் கூறுவர். இச் செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. தியே யனல்; யனல் மூன்றில்; யனன் மூன்றில்; யனல் முற்றி; யயன் முன்னில்.
2. பற்றினை யற்றாய்; பசி திர; பசி பற்றி.
3. யுனையன்றோ; யுனையன்றோ, யுழையன்றோ, வுலையன்றோ.
4. பெற்றன செல்வம்; பின்ன திழந்தால். (9)

733. திறத்திற னாலே செய்தவ முற்றித் திருவுற்றாய்
மறத்திற னாலே சொல்லுதி சொல்லாய் மறைவல்லோய்
அறத்திற னாலே யெய்தினை யன்றோ வதுநீயும்
புறத்திற னாலே பின்னு மிழக்கப் புகுவாயோ.

சொல் ஆய் மறை வல்லோய் - சொற்களை ஆராய்ந்து உணர்தற்குரிய வேதங்களில் வல்லவனே! திறம் திறன் ஆலே - மிகத் திறமையினாலே, செய் தவம் முற்றி - நீ செய்யக்கூடிய தவங்களையெல்லாம் செய்து முடித்து, திரு உற்றாய் - இப்பொழுது நீ பெற்றுள்ள பெருஞ் செல்வத்தை அடைந்துள்ளாய்; மற திறன் ஆலே - அதருமத்தினால் அல்லது உன் கொடிய வலிமையை மேற்கொண்டு, சொல்லுதி - நீ இப்பொழுது இவ்வாறு பேசுகின்றாய்; அற திறனாலே எய்தினை அன்றோ - நீ செய்த அறத்தின் வலி பெற்ற தவத்தாலேயே நீ இச் செல்வத்தை அடைந்தாய் அல்லவா? அது - அச் செல்வ வாழ்க்கையை, புற திறனாலே - அறத்திற்குப் புறமான அதரும வலியாலே, பின்னும் இழக்க - பின்பு அதனை

இழந்துபோக, புகுவாயோ - அத்தீய காரியத்தில் நீ புகுந்து கெடப் போகின்றாயோ?

சொல் ஆய் மறை வல்லாய்: இராவணன் பலகாலம் ஆராய்ந்து உணர்ந்து வேதங்களை ஓதியுள்ளவன்; சுந்தர. 483, 1086.; புறத் திறன் - பாவ வகை. திறன்; திறம் என்றதன் போலி; வகை என்றும் பொருள் பெறும்; நக்க. 836 உரை. நீயும்: உம்மை உயர்வு சிறப்பினது.

பி - ம். 1. திறத்திறனுலோ; முற்றுத்.
2. மறத்திறனுலோ; சொல்லுதி கொல்லோ, சொல்லுதி! கொ லோத், சொல்லுதி கொல்லாய்.
3. உலர்ந்தாய்; வதுநீயிப்.
4. மிழக்கப் பெறுவாயோ. (10)

734. நாரங் கொண்டார் நாடு கவர்ந்தார் நடையில்லா
வாரங் கொண்டார் மற்றொரு வற்காய் மனைவாழும்
தாரங் கொண்டா ரென்றிவர் தம்மைத் தருமந்தான்
ஈருங் கண்டாய் கண்டக ருய்ந்தா ரெவரையா.

'ஐயா-ஐயனே! நாரம் கொண்டார் - பிறர் நாட்டிலே உள்ள நீரைத் தம் வலியால் அல்லது திருட்டுத் தனத்தால் அபகரித் துக் கொண்டவரும், நாடு கவர்ந்தார் - பிறருடைய நாட்டை அதரும வழியில் பற்றிக்கொண்டவரும், நடை இல்லா வாரம் கொண்டார் - மனு முறைப்படி நடைபெற்று வரும் முறை இல்லாமல் அதிக மான குடிவாரத்தை (வரியைக்) குடிகளிடமிருந்து வலிய வாங்கிக் கொண்டவரும், மற்று ஒருவற்கு ஆய் மனை வாழும் - வேறு ஒருவ னுக்கு உரியவளாகி அவனது இல்லில் இருந்து வாழ்ந்துவரும், தாரம் கொண்டார் - மனைவியைத் தம் வலியால் அபகரித்துக் கொண்டவரும், என்று இவர் தம்மை - என்று சொல்லப்பெறும் இக் கொடியோர்களை, தருமம் தான் - தரும தேவதைதானே வந்து, ஈரும் - அறுத்து அழிக்கும்; கண்டகர் உய்ந்தார் எவர் - பாவிகள் யாரே அழிவடையாமல் தப்பிப் பிழைத்தவர்? (ஒருவரும் இல்லை என்றபடி). கண்டாய்: முன்னிலையசை.

நாரங் கொண்டார் நாடு கவர்ந்தார், என்றதை ஒரு தொடராக இயைத்து தம்பால் அன்புகொண்ட ஒருவரது நாட்டை நம்பிக் கைக்கு விரோதமாய் அபகரித்துக் கொண்டவர் எனப் பொருள் கொண்டாரும் உளர். வாரம்: பயிரிடுவோர் அடையும் விளை

பொருளின் பகுதி என்னலும் ஆம்; மற்றொருவற்காய் மனை வாழும் தாரம் - பிறர் மனைவி; பிறர் மனைவியை அபகரித்தவன், பெரும் பாவியர்களில் கொடியோன் ஆவன்; 'என்னொருவ னேதின் மனையாளை நோக்கு' (நாலடி. 86) என்று, பிறர் மனைவியை விருப் பொடு பார்த்தலே குற்றம் என்று கூறியிருக்க, அவரிடம் தகாத மொழிதலும், தகாத செயலைப் புரிதலும் எத்துணைக் கேட்டிற் கிடமாம் என்பது இதனால் நன்கறியலாம்; மேலும், "உம்மை வலியாற் பிறர்மனைமேற் சென்றாரே இம்மை, அலியாகி யாடி யுண்பார்" (நாலடி. 85) என்றமையும்; 'வம்புலாங் கூந்தன் மனைவியைத் துறந்து பிறர் பொருள் தார மென்றிவற்றை, நம்பினா ரிறந்தால் நமன்றமர் பற்றி யெற்றிவைத் தெரியெழு கின்ற, செம்பினா லியன்ற பாவையைப் பாவீ தழுவென மொழிவதற்கஞ்சி, நம்பனே வந்துன் திருவடி யடைந்தேன் நைமிசா ரணியத்து ளெந்தாய்' (பெரியதிருமொழி. 1-6 : 4.) என்ற திருமங்கை மன்னன் அருளிச் செயலும், இங்கு ஆய்ந் தறிவுறத் தக்கனவாம். கண்டாய் - இதனை நீ ஆராய்ந்து அறிந்துகொள் என்னலும் ஆம். கண்டகர் - கொடியோர்; பாவி; கண்டகம் - முள்; அதுபோன்று கொடுமை பொருந்தினவர்; கண்டகன்; சுந்தர. 318, 659, 1075. ஐயா, என்றது அன்புபற்றிக் கூறிய விளி; இரக்கம் பற்றியதும் ஆம். நாரங் கொண்டார் முதல் இச் செய்யுளிற் கூறப்பெற்ற நால்வரும் மகா பாவியர் ஆதலின், அவர்களைத் தருமதேவதை ஒறுக்கும் என்னு முகத்தால் மாரீசன், 'நீ இத்தகைய தீங்கைப் புரிந்து கேடுறாதே' என்று இராவணனுக்கு இடித்துரைத்தான் என்க. 'நாரம் கொண்டார் - தானமேற்ற பிராமண ருடைய; நாடு கவர்ந்தார் - கிராமங்களைப் பறித்தார்; நடை - முறை; வாரம் - பகுதி; தருமம் - இயமன்' என்பன பழையவுரை.

பி - ம். 1. நாடு துறந்தார்; நடையல்லார்; நடுவில்லா; நாடு புரந்தார் நடுவில்லார்.

2. மற்றொருவர்க்காய்; மற்றொருவன்றன் மனைவாழும். (11)

735. அந்தர முற்றா னகலிகை பொற்பா லழிவுற்றான்
இந்திர னொப்பா ரெத்தனை யோர்தா மியலற்றார்
செந்திரு வொப்பா ரெத்தனை யோர்நின் றிருவுண்பார்
மந்திர மற்றா ருற்ற துரைத்தாய் மதியற்றாய்.

'அந்தரம் உற்றான் - சுவர்க்க லோகத்தைத் தனக்குரிமையாகக் கொண்டு ஆளும் இந்திரன், அகலிகை பொற்பால் - அகலிகை

என்பாள் அழகில் மயங்கி ஈடுபட்டு, அழிவு உற்றான் - (யாவரும் வெறுக்கத்தக்க சாபக்) கேட்டை யடைந்தான்; இந்திரன் ஒப்பார் - அந்த இந்திரனைப் போன்றவர், எத்தனையோர்தாம் இயல் அற்றார் - எத்தனை பேர்கள்தாம் தம் சிறப்பழிந்து போயினர்! செம் திரு ஒப்பார் - செவ்விய திருமகளைப் போன்ற அழகுடைய மகளிர், எத்தனையோர் நின் திரு உண்பார்-எவ்வளவு பேர்கள் உன் நலத்தை அனுபவிக்கின்றாராய் உள்ளனர்! (அப்படியிருக்க), மந்திரம் அற்றார் உற்றது உரைத்தாய்-ஆலோசனை யற்றவர் கொள்வதை நீ என்னிடம் கூறினாய்; மதியற்றாய் - ஆதலின், நீ உன் அறிவுகெட்டுப் போய்விட்டாய்.

முன் செய்யுளிற் கூறியபடி, பிறர் மனைவியை நயந்து கெட்டோருக்கு உதாரணமாக, அகலிகை திறத்து இந்திரன் அடைந்த கேட்டை இங்கு எடுத்துரைத்தான் மாரீசன் என்க. ஒப்பு: 'இந்திரனே சாலுங்கரி' (குறள். 25); இந்திரன் சாபம் பெற்ற வரலாறு, **பால.** அகலிகைப் படலத்துள் காண்க. திருவுண்ணல்: உண்ணப் படாததை உண்ணுவதாகக் கூறுவது மரபு வழுவமைதியாகும். மந்திரம் - ஆலோசனை; (பிங்.); 'மந்திரம் யாதோ' (சுந்தர. *416*); 'மன்னவன் றனக்கு நாயேன் மந்திரத் துள்ளேன்' (சுந்தர. *519*). தருமம் - தருமதேவனான யமனும் ஆம்.

ஒரு சுவடியில் இச் செய்யுள் அடியிற் காணுமாறு, அடிகளும் சொற்களும் மாறி வந்துள்ளது.

செந்திரு வொப்பா ரெத்தனை யோருன் றிருவுண்பார்
மந்திர மற்றா ரெண்ணிலர் கெட்டேன் மதியற்றாய்
அந்தர முற்றா னகலிகை பொற்பா லிழிவுற்றான்
இந்திர முற்றா னுற்ற துரைத்த லெளிதன்றோ.

பி - ம். 2. தாமிழிபுற்றார்; ரிழிபுற்றார்.
3. அந்தர முதலான்.........விழிவுற்றான்; நின்றிரு வுய்ப்பார், நின்றிரு மேவ.
4. மந்திரமுற்றா ரெண்ணிலர் கெட்டேன் வடிவற்றார். (*12*)

**736.** செய்தா யேனுந் தீவினை யோடும் பழியல்லா
தெய்தா தெய்தா தெய்தி னிராம னுலகீன்றான்
வைதா லன்ன வாளிகள் கொண்டுன் வழியோடும்
கொய்தா னன்றே கொற்ற முடித்துன் குழுவெல்லாம்.

'செய்தாய் எனும் - நீ உன் எண்ணப்படி இக் காரியத்தைச் செய்தாய் ஆனாலும், தீவினை ஓடும் பழி அல்லாது எய்தாது எய்

தாது - பாவத்தோடு நிந்தனையல்லாமல் மற்றது அடையாது அடையாது; எய்தின் - அப்படியே உன் காரியம் கைகூடுமானாலும், உலகு ஈன்றான் இராமன் - உலகங்களைத் தன் திருவுந்தியினின்றும் படைத்த திருமாலாகிய இராமபிரான், வைதால் அன்ன வாளிகள் கொண்டு - முனிவர்களுடைய கொடிய சாபச்சொல் போன்ற தன் அம்புகளைக்கொண்டு, உன் வழி ஓடும் - உன் சந்ததியோடும், கொற்றம் முடித்து - உங்கள் வலிமையை அழித்து, உன் குழு எல்லாம் - உன் அரக்கர் கூட்டத்தை எல்லாம், கொய்தான் அன்றே - நிச்சயமாய் அறுத்து ஒழித்துவிட்டான் என்றே கூறத் தகுவதாகும்.

தீவினையோடும் பழி எய்தும் என்றது, அவன் இருமையும் இழத்தலைக் கூறியவாறு. பிறர்மனை நச்சுவார் தீவினையோடும் பழி எய்துவர் என்பது, 'அறம் புகழ் கேண்மை பெருமை யிந்நான்கும், பிறன்றார நச்சுவார்ச் சேரா - பிறன்தார, நச்சுவார்ச் சேரும் பகை பழி பாவமென், றச்சத்தோ டிந்நாற் பொருள்' (நாலடி. 82). வைதால் அன்ன வாளிகள்: முனிவர்கள் வைத சாபச் சொற்கள் போன்ற அம்புகள்; முனிவர் சாபமொழி தப்பாது தொடர்ந்து ஒருவனை அழிக்குமாறுபோல் இராமபாணம் தவறாது அழிக்கும் என்றபடி; 'வைத வைவின் மராமர மேழ்தொளை யெய்த வெய்தவற்கு' (பால. பாயிரம்: 5); 'சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரம்' (பால. தாடகை வதைப்: 73) என்பனவற்றால் அறிக. கொய்தானன்றே: துணிவுபற்றி வந்த கால வழுவமைதி. எய்தா தெய்தாது; அடுக்கு அச்சப்பொருளில் இருமுறை வந்தது.

பி - ம். 1. செய்தா யென்னில்; பழியல்லால், பழியெல்லாம்.

2. தெய்தி விராமன், லெய்தாலென்; கொலெய்தா நிற்குமன்றி யிராமனென மேலோன்.

3. வைதோய் வாயின வாளிகளாலுன், வைதானல்ல வாளிகளாலுன்; கொண்டும், வாளிகளாலுன் வழிமுற்றும்.

4. கொய்வான் மற்றுன் பத்தமுடித் தின்குழுவெல்லாம். (13)

737. என்று னென்னே யெண்ணலே யோநீ கரனென்பான்
நின்று னைக்கு மேலுள னென்னு நிலையம்மா
தன்று னைத்தன் றேரொடு மாளத் தனுவொன்றால்
கொன்றான் முற்றுங்கொல்ல மனத்திற் குறிகொண்டான்.

'கரன் என்பான்-கரன் என்று சொல்லப்படுபவன், நின் தானைக்கும் மேல் என்னும் நிலை உளன் - உன் சேனைகளுக்குத் தலைவன் என்ற நிலையை யுடையவனாயிற்றே! தன் தானை தன் தேர் ஒடும் மாள - (அந்தக் கரன்) தன்னுடைய சேனைகள் தன்னுடைய தேர்ப் படையுடன் அழிய, தனு ஒன்றால் - தன் அம்பு ஒன்றைக்கொண்டு, கொன்றான் - இராமன் கொன்று அழித்தான்; (மேலும்), முற்றும் - நம் அரக்கர் குலம் முழுவதையும், கொல்ல - கொன்றொழிக்க, மனத்தில் குறி கொண்டான் - அவன் தன் மனத்தில் சங்கற்பித்துக் கொண்டுள்ளான்; என்னே என் தான் நீ எண்ணலையோ - என்ன ஆச்சரியம்! நீ ஏன் தான் இதனை ஆலோசனை செய்யவில்லையோ? அம்மா - (இவ்வாறு நீ அறியாமலிருப்பது) பெரு வியப்பைத் தருகின்றது!

அம்மா! இரக்கத்தை உணர்த்தும் இடைச்சொல்லும் ஆம். இராமபிரான் அரக்கர்குல முழுவதும் அழிக்கக் குறிக்கொண்டது; *134 - 139 ; 353 - 355.*

பி - ம். 1. என்றே யின்னு......னென்போன், யெண்ணிலை, யெண்ணலையேநீ, யெண்ணலையேநீ.

2. நிலையோனை.

3. தன்றானைத் திண்டேரொடுமாள, தன்றானைக் குற்றாரொடுமாள, தன் றூரத்தின் டோளொடு.

4. குறிகொண்டாய். (*14*)

738. வெய்யோர் யாரே வீர விராதன் றுணைவெய்யோர்
ஐயோ போனா னம்பொடு மும்பர்க் கவனென்றால்
உய்வார் யாரே நம்மி லெனக்கொண் டுணர்தோறும்
நையா நின்றே னீயி துரைத்து நலிவாயோ.

'வெய்யோர் - பராக்கிரம முள்ளோருள், வீர விராதன் துணை வெய்யோர் யாரே - வீரத்தன்மை வாய்ந்த விராதன் அளவு வீர முடையோர் யாரே உள்ளார்? (ஒருவரும் இல்லை என்றபடி); அவன் - அந்த விராதனும், ஐயோ - ஐயோ!, அம்பொடும் - இராமன் விட்ட

அம்பு பட (அதனேடும்), உம்பர்க்கு போனன் என்றால் - இறந்து வான் சென்றான் என்று சொல்லுமிடத்து, நம்மில் உய்வார் யாரே என கொண்டு - அரக்கர்களாகிய நம்மில் இனி யாரே பிழைத்து வாழப் போகிறார்கள் என எண்ணி, உணர் தோறும் - கருதும்போதெல்லாம், நையா நின்றேன் - தளர்வுற்றிருக்கின்றேன்; (அவ்வாருக), நீ இது உரைத்து - நீயும் இந்த வார்த்தைகளைக் கூறி, நலிவாயோ - என்னை மேலும் துன்புறுத்துவாயோ?

விராதன் மிக்க வலிமையும் கொடுமையும் வாய்ந்தவன்; *1 - 19*; சுந்தர. 358. ஐயோ : இரக்கத்தை உணர்த்தும் சொல். நலிவாயோ - நீ அழிவாயோ என்னலும் ஆம்.

பி - ம். 1. வெய்யர் யாரே, வெய்யார் யாரே; துணையாயோர்.
2. ஐயா போனன். 3. நம்மின்; டியிர் தோறும்.
4. நலிவாயே. (15)

739. மாண்டார் மாண்டார் நீயினி மாள்வார் தொழில்செய்ய
வேண்டா வேண்டா செய்திடி னுய்வான் விதியுண்டோ
ஆண்டா ராண்டா ரெத்தனை யென்கே னறனுளார்
ஈண்டா ரீண்டார் நின்றவ ரெல்லா மிலரன்றே.

'மாண்டார் மாண்டார் - இறந்தவர் இறந்து போனவரே ஆவர்; நீ இனி மாள்வார் தொழில் செய்ய வேண்டா வேண்டா - நீ இனி இறப்பவர்கள் செய்யும் இக்கொடும் தொழிலைச் செய்யவேண்டாம்; செய்திடின் - அவ்வாறு செய்வாயே ஆனல், உய்வான் விதி உண்டோ - நீ பிழைத்து வாழ்வதற்கு விதிவழி உண்டாகுமோ? (ஆகாது என்றபடி); ஆண்டார் ஆண்டார் எத்தனை என்கேன் - உலகை ஒருவர்பின் ஒருவராய் ஆண்டு வந்தவர் எவ்வளவு பேர் இறந்தார் என்று யான் சொல்ல வல்லேன்? (அது முடியாது என்றபடி); அறன் ஆளார் - அறத்தின் வழி தம் வாழ்க்கையைச் செலுத்தாதவர், ஈண்டார் ஈண்டார் - நீடித்து இருக்கவேமாட்டார்; நின்றவர் எல்லாம் - இவ்வுலகில் நெடுங்காலம் பொருந்தி வாழ்வு கொண்டு இருந்தவர் எல்லாம் - இலர் அன்றே - இப்பொழுது இல்லாது இறந்துபோயினர் அல்லவோ?

வேண்டா வேண்டா - அடுக்குக்கள் சொல்வனவற்றை வற்புறுத்திக் கூறவந்தன. மாண்டார் மாண்டார் - மாட்சியுற்று வாழ்ந்தோரும் மாண்டே போயினர் என்னலும் ஒன்றும்; ஒப்பு "வாழ்ந்தவர்கள் வாழ்ந்தது மாமழை மொக்குளின் மாய்ந்து மாய்ந்து,

ஆழ்ந்தாரென்றல்லாலன்று முதலின்றறுதியா, வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பரென்பதில்லை நிற்குறின், ஆழ்ந்தார் கடற்பள்ளி 'பண்ண லடியவராமினே' (திருவாய்மொழி, 4-1 : 6); இக்கருத்தை, 'முடிசார்ந்த மன்னரு மற்றுமுள்ளோரு முடிவிலொரு, பிடி சாம்பராய் வெந்து, மண்ணாவது கண்டு பின்னுமிந்தப், படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்லாற் பொன்னினம் பலவர், அடிசார்ந்து நாமுய்யவேண்டு மென்றேயறி வாரில்லையே'' என்று பட்டினத்தாரும் அறிவுறுத்தி யுள்ளமை காண்க.

பி-ம். 1. மாளா தொழில் செய்ய; மாளும்வகை தேட.
2. செய்தலி னுய்வான்; னுய்யும் விதி.
3. ஆண்டா ராண்டோர்; யெத்தனை யென்கோ; யென்கே னழிகின்றார்; னறநோனர்.
4. மிலரன்றே. (16)

740. எம்பிக் கும்மெ னன்னை தனக்கு மிறுதிக்கோர்
அம்புய்க் கும்போர் வில்லி தனக்கு மயனிற்கும்
தம்பிக் கும்மென் னாண்மை தவிர்ந்தே தளர்வுற்றேன்
கம்பிக் கும்மென் னெஞ்சவ னென்றே கவல்கின்றேன்.

எம்பிக்கும் - என் தம்பியாகிய சுபாகுவுக்கும், என் அன்னை தனக்கும் - என் தாயாகிய தாடகை என்பாளுக்கும், இறுதிக்கு ஓர் அம்பு உய்க்கும் - அழிவு உண்டாவதற்கு ஒவ்வொரு பாணத்தைச் செலுத்திய, போர் வில்லி தனக்கும்-போரிற்சிறந்து விளங்கும் வில்வீரனான இராமனுக்கும், அயல் நிற்கும் - அவன் அருகுநின்று அவன் ஏவலைப் புரிந்துகொண்டிருக்கும், தம்பிக்கும் - அவ்விராமனது தம்பியாகிய இலக்குவனுக்கும், என் ஆண்மை தவிர்ந்தே - என் வல்லமையை அழிந்து போகவிட்டே, தளர்வு உற்றேன் - தளர்ச்சியடைந்தேன், என் நெஞ்சு கம்பிக்கும் - என் மனம் அவர்களை இப்பொழுது நினைத்தாலும் நடுங்குகின்றது; அவன் என்றே கவல்கின்றேன் - அந்த இராமனே உனக்கு விரோதியாக ஏற்பட்டு விட்டானே என்று கவலையுள்ளவனாகிறேன்.

எம்பிக்கும்மென், தம்பிக்கும்மென், கம்பிக்கும்மென், என்பனவற்றில் மகரவொற்று மிகுந்து விரிந்தமை, எதுகை நோக்கி வந்த செய்யுள் விகாரத்தால் என்க. தளர்வுற்றது, முன் இராமபாணம் தன்னைக்கொண்டுபோய்க் கடலில் ஆழ்த்தியது கருதியும். இரண்டாம் முறையாகத் தண்டகாரணியத்தில், இதற்கு முன், மான் வேடம் பூண்டு சென்று, தன்னுடன் வந்த அரக்கர் இருவர் மாளத் தான்

தப்பிவந்ததையும் நினைத்து என்க ; 764, 766, 793 ; கூர்மபுராணம், இராமன் வனம்புகு, 50; வான்மீகம். ஆரணிய காண்டம், சருக்கம், 39.

பி - ம். 2. தனக்கு மன்பான.
3. தம்பிக்கு நம், தம்பிக்குந் தம், தம்பிக்கு மனமாண்மை; மாண்மை தவிர்ந்தே செய்கிற்கும் ; தவிர்ந்தே தளர்கிற்கும்.
4. நெஞ்சின னன்றே, னெஞ்சக மின்றுங். (17)

741. நின்றுஞ் சென்றும் வாழ்வன யாவு நிலையாவால்
பொன்று மென்னு மெய்ம்மை யுணர்ந்தோய் புலையாடற்
கொன்று முன்னா யென்னுரை கொள்ளா யுயர்செல்வத்
தென்று மென்று வைகுதி யையா வினியென்றான்.

'ஐயா - ஐயனே! நின்றும் சென்றும் - நகராமல் ஓரிடத்தில் நிலைபெற்றிருந்தும், நடமாடிப் பல இடங்களுக்குச் சென்றும், வாழ்வன யாவும் - வாழும் ஸ்தாவர ஜங்கமப் பொருள்கள் அனைத்தும், நிலையா-நிலைத்து இருப்பன அல்ல ; (ஆதலின்), பொன்றும் என்னும் மெய்மை உணர்ந்தோய் - உலகில் உள்ளன வனைத்தும் ஒரு காலத்தில் அழிந்தேபோம் என்று கூறப்பெறும் உண்மையை நீ அறிந்துள்ளாய் ; புலை ஆடற்கு ஒன்றும் உன்னாய் - (அத்தகைய நீ,) இந்த இழிவுச் செயல் புரியச் சிறிதும் நினையாதிருப்பாயாக! என் உரை கொள்ளாய்-யான் கூறும் நீதியுரையை ஏற்றுக்கொள்வாயாக! இனி உயர் செல்வத்து என்றும் வைகுதி - இனி இப்பொழுது நீ துய்த்து வரும் உயர்ந்த செல்வ நிலையில் எப்பொழுதும் நீடித்து இருப்பாயாக!' என்றான்-என்று இராவணனுக்கு (நீதி) எடுத்துரைத்தான் மாரீசன். ஆல்: ஆசை.

ஐயா : முன் 734 உள்ளவாறு, அன்பினால் வந்த மரபு வழுவமைதி. வாழ்வன யாவும் நிலையா ; உலகத்தில் உள்ளன வனைத்தும் அழியும் நீர்மையன என்பதாம்; புலையாடல்; சீதையைக் கவர்தலாகிய புன் தொழிலைச் செய்தல் ; புலை - இழிதொழில் ; 'புல்லலோம்பன்மின் புலைமக னிவனென' (மணி. 13 : 91). ; 'புலைமேலுஞ் செலற்கொத்து' (உயுத்த. இராவணன் வதைப் ; 204). 'நின்றன நின்றன நில்லா வெனவுணர்ந் தொன்றின வொன்றின வல்லே செயிற்செய்க, சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன், வந்தது வந்தது கூற்று ;'' (நாலடி. 4.) என்ற உறுதிமொழியும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

பி - ம். 1. வாழ்வன வெல்லாம் . வாழ்பவை யென்றும் ; நிலையாவாம்.
2. தன்மையுணர்ந்தாய் ; புலைபொய்ம்மை.
3. கொன்றும் முன்னாய். (18)

வேறு

இராவணன் சினம் 742–3.

742. கங்கைசடை வைத்தவ ளெடுங்கயிலை வெற்போர்
அங்கையி னெடுத்தவென தாடெழின் மணித்தோள்
இங்கொர்மனி தற்கெளிய வென்றனை யெனத்தன்
வெங்கணெரி யப்புருவ மீதுற விடைத்தான்.

(அம்மொழிகளைக் கேட்ட இராவணன், மாரீசனை நோக்கி), கங்கை சடை வைத்தவன் ஒடும் - கங்கை நதிப் பெருக்கைத் தன் சடையிடத்து அடக்கி வைத்துள்ள சிவபெருமானோடும், கயிலை வெற்பு-அவன் இருக்கும் கயிலாயமலையை, ஓர் அம் கையில் எடுத்த- என் ஓர் உள்ளங்கையிலே பெயர்த்து எடுத்து வைத்துக்கொண்ட, எனது ஆடு எழில் மணி தோள் - என்னுடைய போர் செய்ய வல்லனவும் அழகுடையனவுமான சிறந்த புயங்கள், இங்கு ஓர் மனிதனுக்கு எளிய என்றனை என - இப்பொழுது நீ ஓர் அற்ப மனிதனுக்குக் கீழ்ப்பட்டன என்று இழித்துச் சொன்னாயே' என்று, வெம் கண் எரிய - தன் கொடிய கண்கள் நெருப்பை வீச, புருவம் மீது உற - தன் புருவங்கள் மேனோக்கி நெறித்து நிற்க, விடைத்தான் - கோபித்துரைத்தான்.

கயிலை மலையை இராவணன் தன்னிருபது கரங்களைக்கொண்டு பெயர்த்தெடுக்க முயன்றபோது, சிவபிரான் தன் காற் பெருவிரலால் சிறிது அழுத்த, இராவணன் தன் கரங்கள் உள் அகப்பட்டு அவற்றை விடுவித்துக் கொள்ளமுடியாமல் வருந்திப் பின் தன் பிழையுணர்ந்து தான் கற்று வல்ல சாமகானம் செய்து, சிவபிரானை மகிழ்வித்துத் தன் கைகளை விடுவித்துக்கொண்டு வந்தான் என்பது பிரசித்தமான வரலாறாய் இருக்க, இதைத் தற்புகழ்ச்சியின்பாலாய் அம்மலையைத் தான் எடுத்ததாகக் கூறினான் என்க. இவ்வாறே இராவணன் தன் பெருமை தோன்றக் கூறிக்கொள்வதை இந்நூலிற் பல இடங்களிலும் காணலாம். ஆடெழின் மணித்தோள்-ஆண் தொழிற் சிறப்பமைந்த அழகிய தோள் என்னலும் ஒன்றும். கண் எரிதலும் புருவம் மீதுறலும் வெகுளியிற்றோன்றும் மெய்ப்பாடுகள்; ஒப்பு; பால. பரசுராமப் 16. விடைத்தல்; பெருஞ்சினங்கொண்டு பேசுதல்; பால. பரசுராமப். 16. செருக்குக் கொண்டுரைத்தலு விம்முதலும் ஆம்; இச்சொல் சோழ நாட்டில் இன்றும் வழக்கிலுள்ளது. இச் செய்யுள் சினத்துக்குரிய சந்தத்தில் அமைந்திருப்பது காண்க.

பி-ம். 2. தாண்டொழின் மறந்தே; தாடக மணித்தோள்; கெளிய வென்றனன்; 3. யெனத்தான்.
4. வெகுண்டான்; வெங்கணெரியச் சினமெழுந்தனன் விளம்பும்

743. நிகழ்ந்ததை நினைக்கிலையென் னெஞ்சினிலை யஞ்சா
திகழ்ந்தனை யெனக்கிளைய நங்கைமுக மெங்கும்
அகழ்ந்தவரை யொப்புற வமைத்தவரை யையா
புகழ்ந்தனை தனிப்பிழை பொறுத்தனெனி தென்றான்

'ஐயா - ஐயனே! நிகழ்ந்ததை நினைக்கிலை - நடந்த காரியத்தை நீ நினைத்தாயில்லை; அஞ்சாது - அச்சமின்றி, என் நெஞ்சின் நிலை - என் மனநிலையை, இகழ்ந்தனை - இகழ்ந்து கூறினாய்; எனக்கு இளைய நங்கை - எனக்கு இளையவளான என் தங்கை சூர்ப்பணகையின், முகம் எங்கும் - முகம் எல்லாம், அகழ்ந்த வரை ஒப்பு உற - தோண்டப்பட்ட மலையில் உள்ள பள்ளங்கள்போல் விளங்க, அமைத்தவரை - செய்தவர்களான அந்த மானிடரை, புகழ்ந்தனை - (என்னிடமே) புகழ்ந்துபேசினாய்; இது தனி பிழை பொறுத்தனென் என்றான் - இந்த உன் ஒப்பற்ற பெரும் பிழையைப் பொறுத்துக் கொண்டேன்' என்று இராவணன் மாரீசனிடங் கூறினான்.

ஐயா, என்றது இங்கு இகழ்ச்சி மேற்கூறிய வஞ்சப் புகழ்ச்சி. நங்கை என்றது அன்பின் மிகுதி தோன்றக் கூறியது. 701 இல் உள்ளது போல, செவிகள், மூக்கு இவை அறுக்கப்பெற்றுப் பெரும் புழைகள்போலக் காணப்பட்ட சூர்ப்பணகையின் முகத்திற்குப் பல பள்ளங்கள் தோண்டப்பெற்ற மலை உவமை; முன் 'தோட்ட நுங்கிற் றுளையுறு மூக்கினை', (369) என்றமையும் இங்கு நோக்கத் தக்கது. அகழ்ந்தவரை, ஒப்புற அமைத்தவரை, என்று பிரித்து, நாசியை அகழ்ந்து, முகத்தை மேடு பள்ளமில்லாமல் ஒரே தட்டையாக அமைத்தவரை என்றும் பொருள் காணலாம். 'அகழ்ந்தவரை யொப்புற வமைத்தவரை - மண்ணிலிருந்த மலையையெடுத்து அந்த மண்ணைக் குழி செய்தவர்கள்போல் சூர்ப்பணகை முகத்தைக் குழியாக்கின பேரை' என்பது பழையவுரை.

பி-ம். 1. நினைந்திலை; னெஞ்சினிலை யையா.

2. யெனக்கினை நங்கை; நங்கைமுலைநாசி.

3. அகழ்ந்தனைய தொப்புற; யொப்பறவழித்த வரையம்மா; இகழ்ந்தனைய தொப்புற; அகழ்ந்தவரை மறந்தவர் தமைக்கருதி யென்றான். (20)

மாரீசன் மீண்டும் உறுதிமொழி கூறுதல் 744–50.

744. தன்னைமுனி வுற்றதறு கட்டகவி லோனைப்
பின்னைமுனி வுற்றிடுமெ னத்தவிர்தல் பேணான்
உன்னைமுனி வுற்றுன்கு லத்தைமுனி வுற்றாய்
என்னைமுனி வுற்றிலையி தென்னென விசைத்தான்.

தன்னை முனிவு உற்ற - தன்பாற் கோபங்கொண்ட, தறுகண் தகவு இலோனை - அஞ்சாத, நேர்மையற்ற அவ்விராவணனை, பின்னை முனிவு உற்றிடும் என்ன - மேலும் தன்னைக் கோபிப்பான் என்று, தவிர்தல் பேணான் - அவனுக்கு நலத்தைக் கூறுவதை விட்டுவிட விரும்பாதவனான அந்த மாரீசன், (இராவணனை நோக்கி), 'என்னை முனிவுற்றிலை - என் மீது நீ கோபிக்கவில்லை; உன்னை முனிவு உற்று உன் குலத்தை முனிவுற்றாய் - உன்னைக் கோபித்து வெறுத்துக்கொண்டு, (அதனோடு), உன் அரக்கர் குலத்தின் மீதும் கோபித்தவனாகிறாய்; (அஃது அல்லாமல்), இது என் என - இக்காரியம் நீ செய்வது ஏனோ?' என்று, இசைத்தான் - பொருந்துமாறு கூறினான்.

"தம்முயிர்க் குறுதி யெண்ணார் தலைமகன் வெகுண்ட போதும் வெம்மையே தாங்கிநீதி விடாது நின்றுரைக்கும் வீரர்", (அயோத். மந்திரப்: 9) என்றபடி, அரசனுக்கு இதமான மந்திரிகளை யொப்ப மாரீசன், இங்கு மீட்டும் உள்ளத் துணிவுடன் புத்தி கூறினன் என்க. மாரீசன் கூறியதற்கு ஒப்பு. "வாலி யைப்படுத் தாயலை மன்னற வேலி யைப்படுத் தாய் விறல் வீரனே.' (கிட்கிந்தா. வாலி வதைப்: 89;) இது என் என - இது என்ன விபரீதம் என்னலும் ஆம். இது, வேற்றுப் பொருள் வைப்பணியின் பாற்படும். இச் செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ. ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. கட்டகயிலானைப், கட்டகை விலேனை, கட்டழலினோனை.
2. தவிரல்பேணு (தன்னை).
3. உன்னை முனிவுற்றுன் னுறவோடு முனி; வுன்குலத்தை.
4. யிதெனென விசைப்பான்; யிதன்றென விசைத்தான்; யெனப்பின்று மிசைப்பான்.

745. எடுத்தமலை யேநினையி னீசனிகல் வில்லா
வடித்தமலை நீயிதுவ லித்தியென வாரிப்
பிடித்தமலை நாணிடைப் பிணித்தொருவன் மேனாள்
ஒடித்தமலை யண்டமுக டுற்றமலை யன்றோ.

'எடுத்த மலையே நினையின் - நீ எடுத்த கயிலை மலையையே பெரிதாக நினைந்து நீ பெருமைப்படுவாய் எனின், 'இது ஈசன் இகல் வில்லா(ய்) வடித்த மலை - இதுவே சிவபிரான் போர் செய்வதற்கு வில்லாய்த் திருத்திக் கொண்ட மலை, நீ இது வலித்தி என - நீ இதை வளைத்து நாணேற்று' என்று விசுவாமித்திரர் கூற, ஒருவன்- (நீ இழித்துக் கூறும் அந்த) ஒரு மனிதனான இராமன், மேல் நாள் - முன் ஒருநாள், வாரி - அதனை எளிதில் எடுத்து, பிடித்த மலை - கையிற் பிடித்த மலை போன்ற அச்சிவ தநுசும், நாண் இடை பிணித்து ஒடித்த மலை - அதனை நாணிடையே வைத்துக் கட்டி இழுத்து வளைக்கத் தொடங்கிய நிலையில் ஒடித்ததான அவ்வில்லாகிய மலை, அண்டம் முகடு உற்ற மலை அன்றோ?- இவ்வண்டத்தின் உச்சியைத் தொட்டு உயர்ந்ததான மேருமலைக்கு நிகரானது அன்றோ ?.

'கயிலைமலை இமயமலையில் ஒரு சிகரம்; அதனை எடுத்ததையே நீ பெரிதாகக் கருதிப் பாராட்டிக் கொள்கிறாயே! மனிதன் என்று நீ இழித்துக் கூறும் இராமன், முன் நாள் (அதாவது பதினாறு பிராயம் நிரம்பாத இளம்பிராயத்தில்), சீதாப்பிராட்டியின் சுயம்வரத்தில் எடுத்து வளைத்த நிலையில், அந்த வேகம் தாங்காது ஒடிந்துபோன மலை போன்ற வில், ஆகாய முகடு அளாவியதும் மலைகளுள் சிறந்ததும் பெரியதுமான மேருமலை அன்றோ?' என்று இராமனுடைய ஆற்றலின் சிறப்பை எடுத்துக் கூறினான் மாரீசன்; ஒப்பு: (பால: பரசுராம. 30, 31); இவ் வில்லின்வரலாற்றை ஆசிரியர் கல்வியிற் பெரியார், பரசுராமன் முகத்தாற் கூறுமிடத்து ; " வடமேருவின் வலிசால்வன.........யனலனமைவனதா, மிருகார்முகமுள " என விளங்க வைத்தமையும் காண்க; (பால. பரசுராமப்: 26.) [இவ்வில்லின் வரலாறு பலவாறுகூறப் பெறுகின்றது ; அவற்றுள், இது மயனால் படைக்கப் பெற்றது என்பது ஒன்று ; சிவபெருமானால் தக்கன் வேள்வியில் கையாளப்பெற்றது என்பது மற்றொன்று ; திரிபுரசங்காரத்தில் சிவபெருமான் மேருவை வில்லாகக் கொண்டதே பின்பு ஜனகனிடம் வந்தது என்பாரும் உளர்.] இதனால், இராமபிரான் ஒடித்த வில்லும் அவன் பரசுராமனிடமிருந்து பெற்ற வில்லும், மேருமலைக்கு நிகரான சிறப்புடையன என்பதே ஆம். 'நீயிது வலித்தியென' என்றதை

ஜனக்ராஜன் கூற்ருகக் கொள்வாரும் உளர் ; பால. கார்முக : 25 இல் கூறியுள்ளமையாலும், 'வலித்தி' யென என்று கட்டளை இடுவதற்கு, விசுவாமித்திரருக்கேயன்றிச் சனகருக்கு அத்தகைய உரிமையின் மையாலும் அவ்வாறு கூறுதல் பொருந்தாது என்க. இதற்கேற்ப, 'நீ யிது பிடித்தி யென' என்னும் பாடங்கொண்டு, 'இராம! இந்த வில்லை எடு' என விசுவாமித்திரர் சொல்ல' என்றுள்ள பழைய உரையும் இங்கு நோக்கத்தக்கது. முதனூலாகிய வான்மீகமும் இக்கருத் தைக் கொண்டே அமைந்துள்ளமையும் காண்க.

பி-ம். 1. நினையினீசனிகல் வில்லாய் ; மலையேயிது ; னிகனில்லாய் ; வில்லாய்.

2. வடித்தமரர்சீயிது, வடித்தமலையேயிது ; வலித்திடுயென் ; வயிற்றியெனவாரிப்.

3. பிடித்தொருவன்.

4. மலையண்டர்; யண்டமுற வைத்தமலே; ஒடித்தமலை யும்பர்முக.

**746.** யாதுமறி யாயுரைகொ ளாயிகலி ராமன்
கோதைபுனை யாமுனுயிர் கொள்ளைபடு மன்றே
பேதைமதி யாலிதுவோர் பெண்ணுருவ மென்ருய்
சீதையுரு வோநிருதர் தீவினைய தன்ருே.

'யாதும் அறியாய் - (இராமன் ஆற்றல் முதலியவற்றை) நீ ஒன்றும் அறிந்தாயல்லை ; உரை கொளாய் - யான் கூறும் நல்லுரை களையும் நீ ஏற்றுக்கொள்ள மாட்டாய் ; இகல் இராமன் - போரிற் சிறந்த இராமன், கோதை புனையாமுன் - போர்க்கு எழக் கையுறை அணியும் நேரத்திற்கு முன்னே, (அதாவது போரணி பூணத் தொடங்கும் அந்நேரத்திலேயே), உயிர் கொள்ளைபடும் அன்றே-அரக் கர்களாகிய நம் உயிர் அனைத்தும் மிகுதியாக அழிக்கப்படும் என்பது நிச்சயம் ; பேதை மதியால் - உன் மூட அறிவால், இது ஓர் பெண் உருவம் என்ருய் - நீ அபகரித்து வரக் கருதும் இந்தச் சீதை ஒரு பெண்ணின் வடிவமே என்று கருதியுள்ளாய் ; அது சீதை உருவோ - அது சீதை என்னும் ஒரு பெண் உருவமோ? (அன்று என்றபடி) ; நிருதர் தீவினையது அன்ருே - அரக்கர்களாகிய நம்மவர் செய்த பாவமே ஓர் உருவெடுத்து வந்தது அல்லவோ?

யாதும்றியா யுரை கொளாய் ; 'ஏவவுஞ் செய்கலான் றுன்றேரு னவ்வுயிர், போஒ மளவுமோர் நோய்'. என்ற (குறள். 847) அடி

யொற்றி வந்தது என்க. கோதை - வில் வீரர் கையில் அணியும் ஒரு தோல் உறை.

பி - ம். 1. எதுமறியா; யுரையிகவி. 2. படுமென்றே.
3. மதியாலிஃதோர்; விதுவோர்; மென்றல்.
4. தீவினையிதன்றே, தீவினையதென்றே. (23)

747. உஞ்சுபிழை யாயுறவி னேடுமென வுன்னு
நெஞ்சுபறை போதுமது நீநினைய கில்லாய்
அஞ்சுமென தாருயி ரறிந்தருகு நின்றார்
நஞ்சுநுகர் வாரையிது நன்றெனலு நன்றே.

'உறவினோடும் உஞ்சு பிழையாய் என - (இக்காரியஞ் செய்தால்) நீ உன் உறவினர்களோடு தப்பிப் பிழைக்க மாட்டாய் என்று, உன்னு - நினைந்து, நெஞ்சு பறை போதும் - என் மனம் பறை அடிப்பது போலும் துடிக்கின்றது ; நீ அது நினையகில்லாய் - நீ அத் தீமையை எண்ணும் திறமை யற்றவனானாய் ; அஞ்சும் எனது ஆர் உயிர் - (உன் நிலையைக் கண்டு) எனது அரிய உயிரும் அஞ்சு கின்றது ; (உனக்கு இணங்கி நான் பேசுவது என்பது), நஞ்சு நுகர் வாரை அறிந்து - விஷத்தை எடுத்து உண்பவரைத் தெரிந்து, அருகு நின்றார் - அவர் அருகே நின்றவர், இது நன்று என்னலும் - 'இச்செயல் செய்வது நல்லது' என்று கூறுவதும், நன்றே - இத னிலும் நல்லதே ஆகும்.

நீ இத் தீச்செயல் புரிவதை நான் ஏற்றுக்கொண்டால், அஃது ஒருவன் விஷம் உண்ணுகிறான் என்பதை அறிந்தும் அது நல்ல செயல் என்று அவனுக்குக் கூறுவதை ஒக்கும், என்று உபமான முகத்தால் மீண்டும் இராவணனுக்கு மாரீசன் புத்தி கூறுவானானான். விஷம் உண்ணுவதிலும் இராவணன் துணிந்த செயல் தீமைதரத் தக்கது என்பது மாரீசன் கருத்து. ஏனெனில், விஷத்திற்கு மாற்று உண்டு ; இதற்கு மாற்றில்லை ; அழிவு நிச்சயம் என்றபடி ; உஞ்சு - உய்ந்து என்பதன் போலி ; பறை போதல் - பறை யடிப்பது போலத் துடித்தல் ; 'நெஞ்சு பறைபோலும் - மாரீசன் நெஞ்சு பறைபோ லடிக்கின்றது. அறிந்தருகு நின்றார் - நச்சுப் பொய்கையென வறிந்து அருகே நிற்கின்றனர்' என்பன பழையவுரை.

பி - ம். 1. வுன்னாய்.
2. போதுமதுநீ நினையகில்லா ; யேதுமது ; நில்லாய்.
3. நன்றெனது நன்றே. (24)

748. ஈசன்முத லாகவிறை யோருலகு மற்றைத்
தேசமுதன் முற்றுமோ ரிமைப்பினுயிர் தின்னக்
கோசிக னளித்தகட வுட்படை கொதிப்போ
டாசில கணிப்பில விராமனரு ணிற்ப.

'ஈசன் முதலாக இறையோர் உலகும் - ஈசானன் முதலாக உள்ள கடவுளர் உலகங்களையும், மற்றை - மற்றுமுள்ள, தேசம் முதல் முற்றும் - பிற இடங்கள் யாவும் ஓர் இமைப்பில் உயிர் தின்ன - இமைக்கும் ஒரு மாத்திரை நேர அளவில், உள்ள உயிர்கள் அனைத்தையும் அருந்த, (அதாவது அழித்தொழிக்க), கோசிகன் அளித்த கடவுள் படை - கௌசிக முனிவர் முன் அளித்த தெய்வத் தன்மை பொருந்திய அஸ்திரங்களாகிய ஆயுதங்கள், ஆசு இல - குற்ற மற்றனவும், கணிப்பு இல - கணக்கிட முடியாதனவும், கொதிப்போடு - உக்கிரமாக, இராமன் அருள் நிற்ப - இராமன் கட்டளையை எதிர்பார்த்து நிற்கின்றன.

ஈசன் - ஈசான திக்கு என்னும் வடகிழக்குத் திக்குத் தலைவனும், உருத்திரகணத் தலைவர் பதினொருவரில் ஒருவனும் ஆம். ஈசானனை முதலிற் குறித்தது, முதலாகக் கொண்டு எண்ணப்படும் திக்குக்கு உரிய தலைவன் அவனாதலின் என்க. உயிர் தின்னல்: மரபு வழுவமைதி. கோசிகன் இராமபிரானுக்குக் கடவுட் படைகள் அளித்ததும், அவை இராமன் ஏவலில் நிற்பதும்; பால. வேள்விப்: 1; குலமுறை கிளத்து : 28 ; கிட்கிந்தா. பம்பைப் : 5 ; மராமரப் : 43 ; உயுத்த. மந்திரப்: 86. 'இராம னருள் நிற்ப - இராமனுடைய ஆக்ஞை யாலே அவை உலகத்தை அழிக்காமல் நிற்கின்றன' என்பது பழையவுரை.

பி-ம். 1. ஈசன்முதன் மற்றுமிமை, ஈசன்முதன் முற்று, யோருடை வேண்டீர்; மிமையோர் குலமு ;

2. ரெயிற்றினிடை தின்ப ; ரிமைப்பினிடை தின்ப, ரிமைப்பி னுயிர் தின்ப ; தின்பக்.

3. கோசிக னமைத்த ; படைகுளிர்ப் போ(டு) ; குதிப்போ(டு).

4. கணக்கில, கணிப்பிலி ராமன். (25)

749. ஆயிரம டற்கையுடை யானைமழு வாளால்
ஏயெனுமு ரைக்குளுயிர் செற்றவெதி ரில்லோன்
மேயதிறன் முற்றும்வரி வெஞ்சிலையி னோடும்
தாயவன்வ லித்தகைமை யாமுறுத கைத்தோ.

'ஆயிரம் அடல் கை உடையானை - ஆயிரம் வலிய கைகளையுடைய கார்த்தவீரியன் என்பானை, மழு வாளால் - தன் கோடாலி என்னும் படையினால், ஏய் எனும் உரைக்குள்-ஏய் என்று சொல்லும் நேர அளவுக்குள், உயிர் செற்ற எதிர் இல்லோன் - உயிரை அழித்த, தனக்கு எதிரற்ற வீரனான பரசுராமன், மேய - பொருந்த அடைந்திருந்த, திறல் முற்றும் - வலிமை முழுவதையும், வரி வெம் சிலையின் ஓடும் - அவன் பிடித்திருந்த கட்டுக்கள் அமைந்த கொடிய வில்லோடும், தாயவன் - அவன் வலியைக் கடந்த இராம பிரானது, வலி தகைமை - வலிமையின் திறத்தை, யாம் உறு தகைத்து ஓ - நாம் தாங்கக்கூடிய சிறப்படைதல் கூடுமோ? (கூடாது என்றபடி.)

மழுவாள் : இருபெயரொட்டுப் பண்புத்தொகை. தாய்தல்: தாவி அபகரித்துக் கொள்ளுதல்; 'வையந் தாயமா பரவை' (திருக்குறுந்தாண்டகம். 16); "உலகந் தாயவனை யல்லது தாந்தொழா" (இயற்பா. முதற்றிருவந்தாதி : 11). ஏயெனு முரைக்குள் : 732; இச் செய்யுளுக்கு ஒப்பு : சுந்தர. 464. சில சுவடிகளில் இச் செய்யுள் இல்லை; இது சந்தேகம் என்பது ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 2. மிமைப்பினுயர்.
3. முற்றுவரி; வலித்தகையைவெஞ். 4. தாயகன். (26)

750. வேதனைசெய் காமவிட மேவிடமெ லிந்தாய்
தீதுரைசெய் தாயினைய செய்கைசிதை வன்றோ
மாதுலனு மாய்மரபின் முந்தையுற வந்தேன்
ஈதுரைசெய் தேனிதனை யெந்தைதவிர் கென்றான்.

'வேதனைசெய் - துன்பத்தை உண்டாக்கும், காம விடம் மேவிட - காமமாகிய விஷம் உன்னையடைந்து பற்றிக்கொள்ள, மெலிந்தாய் - அதனால் வாட்டமடைந்து அறிவுக் குறைவுற்றாய்; (ஆதலின்), தீது உரை செய்தாய் - தகாத கொடிய வார்த்தைகளைச் சொன்னாய்; இனைய செய்கை - நீ இவ்வாறு செய்யத் துணிந்த செயல், சிதைவு அன்று ஓ - நம் அழிவுக்குக் காரணமன்றோ? மாதுலனும் ஆய் - உனக்கு மாமன் என்னும் உறவுள்ளவனுமாகி, உற முந்தை வந்தேன்-

உனக்கு மிகவும் முன்னே பிறந்தவனுனேன்; ஈது உரை செய்தேன்-உனக்கு நலந்தரத் தக்க இவ்வுரைகளை அன்பினுல் உரைத்தேன்: (ஆதலின்), எந்தை - என் அப்பனே! இதனை-சீதாப்பிராட்டியைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்ற இத் தீய எண்ணத்தை, தவிர்க்க என்ருன் - நீ விட்டுவிடுவாயாக'! என்று பரிந்து இராவணனிடம் மாரீசன் கூறினுன்.

காம விடம் வேதனை தருவது; 'மங்கையரால் வருங்' காமமில்லையெனிற்கருங் கேடெனும், நாமமில்லை நரகமுமில்லையே' (அயோத். மந்தரை சூழ்ச்சி : 21). மாதுலனுமாய்; 'மாதுலனும், மருகனும் நேயத்தின் மிக்கோர்' என்பராதலின்; 'மாமனு மருகனும் போலுமன்பின; (சீவக. 43). மரபு; இங்குத் தாய்வழியான மரபு. மாதுலன் - மாதாவுடன் பிறந்தவன்; உறவினனும் பிராயத்தில் முதிர்ந்தவனுமான ஒருவன் கூறுவது கேட்கத்தக்கது என்றது கருத்து. எந்தை; என்றது அன்பினுற் கூறிய மரபு வழுவமைதி. இதனை, என்றது; இராவண்ணன் பிராட்டியை அபகரித்துவரக் கருதிய கொடியசெயலைத் தன் வாயாற் கூற அஞ்சிக் குறிப்பால் உணர்த்தியதும் ஆம். 'இப்பாடல் இல்லை' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. 'எதனில்' என்பது குறிக்கப்பெறவில்லை.

பி-ம். 1. தீதுரை செயாயினைய; சிந்தை சிதையன்றே; சிதையென்றே; செய்கை சிதையன்றே. 4. யதனை; தவிரென்ருன். (27)

இராவணன் மீண்டும் மாரீசனைச் சினந்து கூறல் 751

751. என்னவுரை யித்தனையு மெத்தனையு மெண்ணிச்
சொன்னவனை யேசின னரக்கர்பதி சொன்னுன்
அன்னையுயிர் செற்றவனை யஞ்சியுறை கின்ருய்
உன்னையொரு வற்கொருவ னென்றுணர்கை நன்ருே.

என்ன - என்று மாரீசன் சொன்ன, உரை இத்தனையும் - அறிவுரைகள் இவ்வளவையும், எத்தனையும் எண்ணி - எல்லா விதங்களாலும் ஆலோசித்து, சொன்னவனை-புத்திமதி கூறின மாரீசனை, ஏசினன் - நிந்தித்தவனுய், அரக்கர்பதி - இராக்கதர்க்கரசனுன இராவணன், சொன்னுன்-பின்வருமாறு கூறினுன்; 'அன்னை உயிர் செற்றவனை - உன் தாயாகிய தாடகையின் உயிரைப்போக்கிய அந்த இராமனுக்கு, அஞ்சி உறைகின்ருய் - பயந்து இங்கு வந்து தவம் செய்பவன் போல மறைந்து வாழ்கின்ருய்; உன்னை - அப்படிப்பட்ட பேதையாகிய உன்னை, ஒருவற்கு ஒருவன் என்று - ஒரு போர்

வீரனுக்கு எதிராகக் கூறக்கூடிய ஆண் மகன் என்று, உணர்கை - மதித்தல், நன்றோ - சிறப்புடையதாகுமோ? (ஆகாது என்றபடி).

'என்னவுரை சொன்னவனை - இந்தப்படி போதித்த வசனங்களை யெல்லாம் மேல் வருங்காரியம் எண்ணிச் சொன்ன மாரீசனை' என்பது பழையவுரை. இங்குக் கூறியவாறே பின், இராமபிரான் தூதனுப்ப வந்த அங்கதனையும் நோக்கி, இராவணன் கூறியது காண்க. (உயுத்த. அங்கதன் தூதுப்: 26.) ஒருவற் கொருவன் - ஆளுக்கு ஆள், என்பது போல.

பி - ம். 1. யித்தனையு மெண்ணச்; எண்ணச்.
2. சொன்னவனை வைதடலரக்கர்பதி. 3. யஞ்சியவுரைகின்றாய்.
4. உன்னை யுரவுக்கொருவ னென்றுணரலாமோ. (28)

752. திக்கய மொளிப்பநிலை தேவர்கெட வானம்
புக்கவ ரிருக்கைபுகை வித்துலகம் யாவும்
சக்கர நடத்துமெனை யோதயர தன்றன்
மக்கணலி கிற்பரிது நன்றுமதி யன்றோ.

'திக்கயம் ஒளிப்ப - திக்கில் உள்ள யானைகள் அஞ்சி ஒளிந்து கொள்ளவும், தேவர் நிலை கெட - தேவர்கள் தம் நிலைகெட்டு வருந்தவும், வானம் புக்கு - சுவர்க்க லோகத்தில் புகுந்து, அவர் இருக்கை புகைவித்து - அத்தேவர்களுடைய இருப்பிடங்களை எரி மூட்டிப் புகைந்து எரியும்படி செய்து, உலகம் யாவும் - எல்லா உலகத்தும், சக்கரம் நடத்தும் - என் ஆட்சிச் சக்கரத்தைச் செலுத்திவரும், எனையோ - என்னையோ? தயரதன் தன் மக்கள் நலிகிற்பர் - தசரதனுடைய மக்களாகிய இராமலக்ஷ்மணர் என்னும் மானிடர் தோல்வியடையுமாறு வருத்துவர்? இது நன்று மதி அன்றோ - இந்த உன் வார்த்தை நல்ல அறிவுடையதாகுமன்றோ? (ஆகாது என்னும் எதிர்மறைப் பொருளது).

திக்கயங்கள் இராவணனுக்கு அஞ்சி ஒளித்ததும், இராவணன் தேவர் உலகில் புகுந்து அன்னோர் இருப்பிடங்களை எரி யூட்டியழித்ததும், உத்தர காண்டம் திக்கு விசயப்படலத்தால் அறியப் பெறுவன. உலகம் யாவும் சக்கரம் நடத்தல்; ஒப்பு; தக்க. 2. திக்கயம் :— திக்கஜம் என்ற வடசொற்றிரிபு.

பி - ம். 1. மொளிக்க நிலை; தேவர்கடம் வானம்.
2. நடத்தமெனையே.
4. நலிகிற்குமிது, நலிகிற்பதிது, வலிகிற்பரிது; வலியன்றே; வலியன்றே. (29)

753. மூவுலகி னுக்குமொரு நாயக முடித்தேன்
மேவலர் கிடைக்கினிதன் மேலினிய துண்டோ
ஏவல்செய கிற்றியென தாணைவழி யெண்ணிக்
காவல்செ யமைச்சர்கட னீகடவ தன்றே.

'மூ உலகினுக்கும் - சுவர்க்கம், பூமி, பாதாளம் என்னும் மூன்று உலகங்களுக்கும், ஒரு நாயகம் முடித்தேன் - நான் தனி ஆட்சியைச் சூட்டிக் கொண்டேன் ; மேவலர் கிடைக்கின் - (அவ்வாறு சத்துருக் கள் என்பார் இல்லாத எனக்கு இப்பொழுது) அப்படிப் பகைவர் கிடைக்கக் கூடியதானல், இதன் மேல் இனியது உண்டோ - இதனை விட எனக்கு இன்பந் தரத்தக்கது வேறொன்று உள்ளதாகுமோ ? (ஆகாது என்றபடி); காவல் செய் - அரசியலைப் பாதுகாத்து வரும், அமைச்சர் கடன் - மந்திரிகளுக்குரிய கடமையை, நீ கடவது அன்று- நீ செய்யக்கடவது அன்று; (ஆதலின்), எனது ஆணை வழி எண்ணி- என் கட்டளையின் போக்கை அனுசரித்து அதற்கு ஏற்றவாறு கருதி, ஏவல் செய்கிற்றி - (நீ மறுமொழி கூருது), யான் கட்டளையிட்ட தைச் செய். ஏ : ஈற்றசை.

ஒரு நாயக முடித்தேன் - ஒப்பற்ற தலைவன் என்ற செயலைச் சாதித்துக் கொண்டேன் என்னலும் ஆம். ஒரு நாயகம் - ஏகாதிபத் தியம். அரசியலிற் சிறந்த பதவியில் உள்ள மந்திரிகளும் என் ஆணையைப் பாதுகாத்து நடத்தவேண்டியவர்கள் ; அவ்வாறுக (அவ் வித நிலையில் இல்லாத நீ) என் ஆணையைக் கடந்து நடப்பது கூடாது என்ருன் என்பதாம். கடவது - கடத்தல் என்று பொருள் கொண்டு நீ மீறுவது தகாது என்று கூறியதும் ஆம்.

பி - ம். 1. நாயகமுடைத்தேன்.

2. மேல் வலியதுண்டோ ; கிடைத்திலிதன்.

3. ஏவல் செய்கிற்குமென.

4. கடவதன்றே ; நன்றுன் மதியன்றே, (30)

இராவணன், 'நீ மறுத்தால் உன்னைக் கொல்வேன்' என்றல்.

754. மறுத்தனை யெனப்பெறினு நின்னைவடி வாளால்
ஒறுத்துமன முற்றது முடிப்பெனொழி கில்லேன்
வெறுத்தன விளத்தலுறு மித்தொழிலை விட்டென்
குறிப்பின்வழி நிற்றியுயிர் கொண்டுழலி னென்றான்.

'மறுத்தனை என பெறினும் - நீ என் ஆணை மறுப்பைக் கூறினாற்கூட, நின்னை வடி வாளால் - உன்னை என் கூரிய வாளால், ஒறுத்து - அழித்து, மனம் உற்றது - என் மனம் கருதியதை, முடிப்பென் - செய்து முடித்தே தீருவேன்; ஒழிகில்லேன் - இதனைச் செய்யாமல் நீங்கமாட்டேன்; (ஆதலின்), உயிர்கொண்டு உழலின் - நீ உன் உயிரை வைத்துக்கொண்டு வாழ விரும்பினால், வெறுத்தன விளத்தல் உறும் - யான் வெறுப்பனவற்றைச் சொல்லும், இத்தொழிலை விட்டு - நீ (எனக்கு உபதேசம் செய்யும்) இந்தத் தகாத செயலை விட்டு, என் குறிப்பின் வழி நிற்றி - என் நோக்கப்படி நின்று நடப்பாயாக!' என்றான் - என்று (இராவணன் மாரீசனை நோக்கி) அறுதியிட்டுக் கூறினான்,

மனமுற்றது : பிராட்டியை அபகரித்துவர எண்ணியது. 'ஒறுத்தல்-அழித்தல்; 'ஒறுத்தானை மொன்னார் புரங்கள்' தேவாரம். உழலின் என்பது, (மானத்தை விட்ட) திண்டாட்ட வாழ்வைக் குறிப்பிட்டதாகும்.

பி-ம். 2. ஒறுத்துமென் மனக்குறை; முடிப்ப தொழிகில்லேன்.
3. வெறுப்பன விளத்த; விளர்த்த.
4. கொண்டுழலி யென்றான். (31)

மாரீசன் ஆராய்ந்து அடங்கிக் கூறுதல் 755-6.

வேறு

755. அரக்கனஃ துரைத்த லோடு மறிந்தன னடங்குநெஞ்சன்
தருக்குநர் கெடுவ ரென்ற றத்துவ நிலையிற் றன்றோ
செருக்கினிற் றீரு மென்பார் தம்மிலார் செருக்க ரென்னா
உருக்கிய செம்பொ னுற்ற நீர்மையா னுரைக்க லுற்றான்.

அரக்கன் அஃது உரைத்தலோடும் - இராக்கதனான இராவணன் அவ்வாறு கூறிய அளவில், அறிந்தனன் - இராவணன் மனப்போக்கை நன்கு அறிந்துகொண்டவனும், அடங்கு நெஞ்சன் - அடங்கிய மனமுடையவனுமான அம் மாரீசன், 'தருக்கினர் கெடுவர்

என்றல் - செருக்குற்றார் அழிவர் என்று கூறும் வார்த்தை, தத்துவ நிலையிற்று அன்றோ - உண்மை நிலையை யுடையது அல்லவோ? செருக்கினில் தீரும் என்பார் தம்மின் - தம் செருக்கிலேயே அழிவோம் என்ற உறுதியுடையோரை விட, செருக்கர் ஆர் - செருக்குற்ற பகைவர் யாரே யுள்ளார்?' என்னா - என்று கருதி, உருக்கிய செம் பொன் உற்ற நீர்மையான் - உருக்கப்பெற்ற சிவந்த பொன் அடைந்த நிலையை யடைந்த மாரீசன், உரைக்கல் உற்றான் - பின் வருமாறு இராவணனிடம் கூறலானான்.

அறிந்தனன்: இராவணன் ஏவற்படி செய்யாவிடில் அவன் தன்னைக் கொன்று விடுவான் என்பதை அறிந்த மாரீசன் என்றலும் ஒன்றும். தருக்கினர் கெடுவர்; இது ஒரு நீதிமொழி; 'துள்ளின மாடு பொதி சுமக்கும்' என்னும் பழமொழி போன்றது. பழையவுரை, 'செருக்கினர்த் தீர்த்து மென்பார் தம்மிலார் செருக்க ரென்னா' என்று பாடங்கொண்டு, 'செருக்கை யுடையவரது கர்வத்தைத் தீர்க்கிறேமென்று எண்ணுகிறவரினும் செருக்குண்டோவென வெண்ணி' என்று பழையவுரை பொருள் கூறும். உருக்கிய செம் பொன் னுற்ற நீர்மையான் என்றது, மாரீசன் வருந்தி மனமுருகிய நிலையைக் குறித்தது; அன்றியும், உருக்கப்பட்ட பொன், மாசு நீங்கியதாலும், நயத்தாலும் மேம்பட்டு விளங்குவதே போல், மாரீசன், இராவணனுடைய கொடிய கட்டளைக்கு உள்ளாகி, இராமபிரான் அம்பால் அடிபட்டு, இறந்து தூயகதி யடையலாம் என்ற உறுதியான தெளிவு நிலையை மேற்கொண்டான் என்ற உட்பொருளைக்கொண்டு நிற்பது உய்த்துணரப்பாலதாம். இரண்டாமடியில், சிறந்த நீதி பொதிந்துள்ளது காண்க.

பி-ம். 1. அரக்கன துரைத்தலோடு; மடங்கு நெஞ்சர், னடங்கார் நெஞ்சம்.

2. கெடுவ நன்றே, கெடுவான் றேற்றத்துவ; நிலையதன்றே; கெடுவரென்று நெறியிற்றாமோ.

3. செருக்கினர்க் கினிமை செய்யார் தம்மில், செருக்கினிதீர்த்து, செருக்கினிற்றீரு; தம்மில்யார், தம்மினர், தம்மியார்.

4. செம்பினன்னான் பின்னரு முரைக்கலுற்றான், செம்பினுற்ற நீரென, செப்பினுற்ற நீரென.

756. உன்வயி னுறுதி நோக்கி
யுண்மையி னுணர்த்தி னேன்மற்
றென்வயி னிறுதி நோக்கி
யச்சத்தா லிசைத்தே னல்லேன்
நன்மையுந் தீமை யன்றே
நாசம்வந் துற்ற நாளில்
புன்மையி னின்ற நீராய்
செய்வது புகறி யென்றான்.

'உன் வயின் உறுதி நோக்கி - உன் திறத்து நன்மையை எண்ணி, உண்மையின் உணர்த்தினேன் - உண்மையாக எடுத்துரைத்தேன்; மற்று - அதுவன்றி, என் வயின் இறுதி நோக்கி - என் திறத்து அழிவுண்டாவதைக் கருதி, அச்சத்தால் இசைத்தேன் அல்லேன்-எனக்கு உண்டாகும் தீமைக்கு அஞ்சிக் கூறினேன் அல்லேன்; நாசம் வந்து உற்ற நாளில் - அழிவு ஏற்படும் காலத்தில், நன்மையும் தீமை அன்றே - (தனக்கு உற்றவர் கூறும்) நலந்தரத் தக்கவையும் தீமையாகத் தோன்றுமல்லவா? புன்மையின் நின்ற நீராய் - இழிந்த செய்கையில் ஈடுபட்டுள்ளவனே! செய்வது புகல்தி - யான் செய்ய வேண்டியதான உன் கட்டளையைச் சொல்வாயாக!' என்று மாரீசன் இராவணனிடம் முடிவிற் கேட்டுக்கொண்டான்.

இனி, புன்மையி னின்ற நீரர்ய்ச் செய்வது புகலி, என்ற பாடத்தைக் கொண்டு, 'நான் களர் நிலத்தில் பாய்ந்த நீர்ரகப் பயனின்றிப் போகும்படிச் செய்யக்கூடிய உன் கட்டளைதான் யாது?' என்றான், எனப் பொருள் கொள்வாரும் உளர். 'நன்மையுந் தீமையன்றே நாசம்வந் துற்றபோது' என்றது ஒரு நீதி; 'விநாச காலே விபரீத புத்தி' என்றதைப் போன்றது.

பி-ம். 1. வுணர்வயி னுணர்த்தினேன். 2. னுறுதி யெண்ணி.
3. நன்மையுந் தீமையாகும், தீமையன்றே, தின்மையன்றே; துற்றபோது.
4. னுற்ற நீராய்; நீராய்ப்.

**இராவணன் மகிழ்ந்து, பிராட்டியை வவ்விவர வழி கூறுதல் 757-61.**

757. என்றலு மெழுந்து புல்லி
யேறிய வெகுளி நீங்கிக்
குன்றெனக் குவிந்த தோளாய்
மாரவேள் கொதிக்கு மம்பால்
பொன்றலி லிராம னம்பாற்
பொன்றலே புகழுண் டன்றே
தென்றலைப் பகையாச் செய்த
சீதையைத் தருதி யென்றான்.

என்றலும் - என்று மாரீசன் சொன்ன அளவில், ஏறிய வெகுளி நீங்கி - மேலோங்கி யிருந்த தன் கோபந் தணிந்து, எழுந்து புல்லி - இராவணன் (உவகையால்) எழுந்து நின்று மாரீசனைத் தழுவிக் கொண்டு, (அவனை நோக்கி), 'குன்று என குவிந்த தோளாய் - குன்று கள் போல உருண்டு திரண்ட தோள்களை யுடையவனே! மார வேள் கொதிக்கும் அம்பால் - மன்மதனுடைய கொதிப்பதுபோன்ற கொடிய அம்புகளால், பொன்றலின் - யான் இறந்துபோதலைவிட, இராமன் அம்பால் பொன்றலே - இராமன் அம்பினால் நான் இறந்து படுதலே, புகழ் உண்டு அன்றே - யான் புகழாகிய வீரசொர்க்கம் அடைய இடமாகு மல்லவா? ஆதலின், தென்றலை பகையாய் செய்த - யாவர்க்கும் இனிமையைத் தரும் தென்றல் காற்றை, என்னைத் தீபோல எரித்து வாட்டும் பகையாகக் காமத்துயரை உண்டாக்கிய, சீதையை தருதி என்றான் - சீதையை என்னிடம் கொண்டு வந்து தரும் பணியைச் செய்' என்று கூறினான்.

'மாரனாற் பொன்றலினும் இராமனாற் பொன்றல் புகழுடைத்து' என்றான் என்க. இஃது, இராவணன் உள்ளக் கிடக்கையைப் புலப் படுத்தியது என்க. இராவணன் இவ்விதத் தீவிரக் கொள்கையுடையன் என்பது, பின், இந்திரசித்துக்கு அவன் அறிவுறுத்திய செய்தியாலும் விளங்குவது காணலாம்; (உயுத்த. இந்திரசித்து வதைப் : 8 - 11.) மாரவேள் : இருபெயரொட்டுப் பண்புத்தொகை ; மன்மத பாணம் காமுகருக்குத் தீ எரிப்பது போலக் கொதிப்பை உண்டாக்கும் என்பது, இவ்விராவணன் திறத்து, 365 முதல் உள்ள செய்யுள் களால் விளங்குவது காண்க. இதுகாறும் இராமபிரான்பால் தான் கொண்ட பகைமை காரணமாக மாரீசனிடம் உதவிக்கு வந்த

தாகக் கூறியவன், அவன் இசைந்ததால் உண்டான மகிழ்ச்சியால் உறுதி நெகிழ்ந்து, தன் காம உள்ளத்தைத் தெரிவித்தமை காண்க.

பி - ம். 1. என்றவ னிசைத்தலோடும் இராவண னெழுந்து புல்லி; வெகுளி நீக்கி.

2. கொதிக்கு மம்பிற்; கொற்ற மன்மதன் கையம்பால்.

3. பொன்றலே புகழா மன்றோ.

4. தென்றலைப் பகையைச் செய்த; பகைமை செய்த, பகையாச் செய்த, பகையிற் செய்த, பகைப்பச் செய்த. (34)

758. ஆண்டவ னனைய கூற
வரக்கரோ ரிருவ ரோடும்
பூண்டவென் மானந் தீரத்
தண்டகம் புக்க காலைத்
தூண்டிய சரங்கள் பாயத்
துணைவர்பட் டுருள வஞ்சி
மீண்டயான் சென்று செய்யும்
வினையென்கொல் விளம்பு கென்றான்.

ஆண்டு அவன் அனைய கூற - அப்பொழுது அந்த இராவணன் அவ்வாறு சொல்ல (மாரீசன்), 'பூண்ட என் மானம் தீர - (முதன் முதல் விசுவாமித்திரர் செய்த வேள்வியினிடத்தில்) நான் அந்த இராமனால் அடைந்த என் அவமானம் நீங்கும் பொருட்டு, அரக்கர் ஓர் இருவர் ஓடும் - (என் நண்பர்களான) இரண்டு இராக்கதர் களுடனே, தண்டகம் புகுந்த காலை - நான் மான் வேடம் பூண்டு இராமன் இருந்த தண்டக வனத்தில் அவனுக்குக் கேடு உண்டாக்கக் கருதிப் புகுந்த காலத்தில், தூண்டிய சரங்கள் பாய - அந்த இராமன் ஏவிய அம்புகள் பாய்ந்தமையால், துணைவர் பட்டு உருள - என் னுடன் துணையாய் வந்த அந்த நண்பர் இருவரும் ஆவி அழிந்து உருண்டு கீழே விழுந்து ஒழிய, அஞ்சி மீண்ட யான்-அதனால் பயந்து மீண்டு ஓடிவந்த நான், சென்று செய்யும் வினை என் கொல் - மறுபடி யும் அவ்விடம் சென்று செய்யக்கூடிய காரியம் யாதோ? விளம்புக என்றான் - சொல்வாயாக' என்று இராவணனிடங் கூறினான்.

மாரீசன் பூண்ட மானம்; பால; வேள்விப். 52-ல் கூறியபடி இராம பிரானால் கடலில் விடப்பட்டமை. இவ்வவமானம் தீர, அவன் தண்ட காரணியத்திற் செய்த முயற்சி தோல்வியுற்றமை இங்குக் குறிக் கப்பெற்றது. இவ்வரலாறு வான்மீகராமாயணம் ஆரணியகாண்டம்

39-ஆம் சர்க்கத்தில் விரிவாகக் கூறப்பெற்றுள்ளது. தமிழ்க் கூர்ம புராணம், இராமன் வனம் புகுந்த, 50 இல், ''மரையுருவாக முன்னர் வாளெயிற்றரக்கர் மற்றுங், கிருவரோ டிராமன் முன்ன ரெய்தலும வன்கை யம்பாற், பொருவரு மென்னோ டெய்து மிருவரும் பொன்றல் செய்தார், வெருவியான் மாயை தன்னு லிலங்கையின் மேவி னேனால்'' என்று கூறுவதையுங் காண்க. இச்செய்தி இந்நூலில் பின்னும் 766-இலும் சுட்டப்பெறும். 'அஞ்சி மீண்ட யான் சென்று செய்யும் வினை யென்கொல்' என்ற மையால், இராமன் முன் இனித் தான் சென்றால் இறப்பது திண்ணம் என்பதைக் குறிப்பிட்டபடியும் ஆம். விளம்புகென்றான் ; தொகுத்தல் விகாரம், இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ. ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. ஆண்டை யானவைய ; வரக்கனன்றிருவரோடும், வரக்கர்களோடு முன்னாட்.

2. பூண்ட வெம்மானம் போகத், பூண்டவெம்வலிமை தீர்ப்பான் ...புகுந்து போதல்.; தயவனம் புக்க போதில்; போழ்தில் ; மானந்தீர்த்த தண்டகம்.

3. பட்டுருளச் சோர்ந்து, பட்டொழிய ஈண்டுயர்ந்தடைந்தே யான் போயென் செய்வதி யம்பு கென்றான் ;

4. மீண்டியான் ; விளம்புகின்றான், சொல்லுகென்றான். (35)

759. ஆயவ னனைய கூற
வரக்கர்கோ னைய நொய்துன்
தாயையா ருயிருண் டானைக்
கொல்லயான் சமைந்து நின்றேன்
போயையா புணர்ப்ப தென்னை
யென்பது பொருந்திற் றென்றே
மாயையால் வஞ்சித் தன்றே
வவ்வுத லவளை யென்றான்.

ஆயவன் அனைய கூற - அந்நிலையில் உள்ள மாரீசன் அவ்வாறு சொல்ல, அரக்கர் கோன் - இராக்கதர்க் கரசனான இராவணன், 'ஐய - ஐயனே ! நொய்து உன் தாயை ஆர் உயிர் உண்டானை - (பெண் என்று கருதாது) இழிந்த முறையில், உன் தாயாகிய தாடகையின் அரிய உயிரை அழித்த அந்த இராமனை, கொல்ல - கொல்லுவதாக, யான் சமைந்து நின்றேன் - நான் சங்கற்பித்து உறுதி

கொண்டிருக்கிறேன் ; போயையா புணர்ப்பது என்னை என்பது - நீ போய்ச் செய்யக்கூடிய சூழ்ச்சியாதோ என்று வினவுவது, பொருந் திற்று ஒன்றோ - உனக்குப் பொருத்தமான ஒரு காரியம் ஆமோ? (ஆகாது என்றபடி); அவனை - அந்தச் சீதையை, மாயையால் வஞ் சித்து - உன் மாயைத் திறத்தால் வஞ்சனை செய்து ஏமாற்றி, வவ்வுதல் அன்றோ என்றான் - நான் அவனை அபகரித்து வருதல் அல்லவோ செய்யத்தக்க காரியம் ' என்று கூறினான்.

நொய்து-இழிவான முறையில் ; " நொய்தி னொய்ய சொன்னூற் கலுற்றேன் " (கம்ப. பாயிரம் : 5); "கொல்லயான் சமைந்து நின்றேன்" ' இராமனைக் கொல்லுவது என் வேலை ; நீ சீதையை எடுத்து வருவ தற்குரிய வஞ்சனைச் செயலைப்புரி ' என்று இராவணன் மாரீசனுக்குக் கட்டளையிட்டான் என்க. அதாவது, ' நீஅஞ்சும் அந்த இராமனை நான் பார்த்துக் கொள்கிறேன் ; நீ சீதையைவஞ்சி ' என்றான் என்க.

பி - ம். 1. ஆயதாங்கனைய.
2. தாயுயிருண்டோன்.
3. பொருந்திற்றன்றே, பொருந்திற்றன்றால், பொருந்திற் றன்றே, பொருந்திற்றென்னே.
4. வவ்வுவதவனை ; வஞ்சித்தியாம் போய்வவ்வுது மவனை. (36)

760, புறத்தினி யுரைப்ப தென்னே
புரவலன் றேவி தன்னைத்
திறத்துழி யன்றி வஞ்சித்
தெய்துதல் சிறுமைத் தாமால்
அறத்துள தொக்கு மன்றே
யமர்த்தலை வென்று கொண்டுன்
மறத்துறை வளர்த்தி மன்ன
வென்னமா ரீசன் சொன்னான்.

' மன்ன - அரசனே ! இனி புறத்து உரைப்பது என்னே - இனி வேறு கூறவேண்டியது என்ன உள்ளது ? (ஒன்றும் இல்லை என்ற படி) ; புரவலன் தேவி தன்னை - அரசனை இராமன் தேவியை, திறத்து உழி அன்றி - உன் வலிமை இடமாய் அல்லாமல், வஞ்சித்து எய்துதல் - வஞ்சனை செய்து அபகரித்து அடைதல், சிறுமைத்து ஆம் ஆல் - உன் பெருமைக்குக் குறைவை உண்டாக்குவது ஆகு மாதலின், அறத்துளது ஒக்கும் அன்றே - அறச்செயல்களோடு, அவ் வாறு செய்தது ஒவ்வாது அல்லவா ? அமர்தலைவென்று கொண்டு-

போரிடத்து அந்த இராமனை நீ வென்று அச்சீதையைப் பற்றிக் கொண்டு, உன் மற துறை வளர்த்தி - உன் வீரத்தொழிலை வளர்த்துக் கொள்வாயாக !' என்ன - என்று, மாரீசன் சொன்னான் - மாரீசன் இராவணனுக்கு நீதி எடுத்துக் கூறினான். ஏ : அசை.

புரவலன் தேவி என்றமையால், அன்னவளை வஞ்சனையால் அபகரித்தல் தகாது என்றபடி. இனி மறத்துறை வளர்த்தி என்பதற்கு உன் கொடுந்தொழிலாகிய பாவத்தை வளர்த்துக் கொள் என்ற உட்பொருளுடன் கூறியதும் ஆம். அறத்துளது ஒக்கும், என்று கொண்டும், அன்று, ஏ ஆகியவற்றை அசைகளாகக் கொண்டும், மறத்துறையில் பிறர் மனைவியைக் கொள்வது போர்க்குரிய அறமாகும் என்றும் சிலர் பொருள்கொள்வர்.

பி-ம். 1. புறத்தினிப் புகல்வதென்னே புங்கவன்.
2. திறத்துழியறிஞ, திறத்துநீ, திறத்த நீ யன்றி வஞ்சித்தியற்றுதல் ; சிறுமையாகும்.
3. யமர்த்தலை யமரைவென்றுன் ; வென்றுகொண்டு.
4. வளர்த்திமன்னே ; மன்னு. (37)

761. ஆனவ னுரைக்க நக்க
வரக்கர்கோ னவரை வெல்லத்
தானைதான் வேண்டு மோவென்
றடக்கைவா டக்க தன்றோ
ஏனைய ரிறக்கிற் றானுந்
தமியளா யிறக்கு மன்றே
மானவ ளாத லாலே
மாயையின் வலித்து மென்றான்.

ஆனவன் - தன் வழிக்கு அடங்கி வந்தவனான மாரீசன், உரைக்க - அவ்வாறு கூற, நக்க அரக்கர்கோன் - (அவன் அறியாமை கருதி) நகைத்த இராக்கத வேந்தனான இராவணன், அவரை வெல்ல - அந்த இராமலக்ஷ்மணர்களை வெல்வதற்கு, தானைதான் வேண்டுமோ - போர்ச் சேனையின் உதவிதான் எனக்கு வேண்டுமோ ? என் தட கை வாள் தக்கது அன்றோ - என் பெருங்கரத்தில் உள்ள சந்திரஹாஸம் என்னும் வாள் ஏற்றது ஆகாதோ ? (போதும் என்றபடி); மானவள் - அந்தமானிட மகளிரிற் சிறந்த சீதை, ஏனையர் இறக்கில் - அவளுடன் இருக்கும் மற்றையரான அவர்கள் இருவரும் போரில் இறந்தால், தானும் தமியளாய் இறக்கும் அன்றே - அவளும் தனியான நிலையில் அப்போதே இறந்து போவாள் அல்லவா? ஆதலாலே -

அது காரணமாகவே, மாயையின் வலித்தும் என்றான் - நாம் மாயை யால் அவனை வஞ்சித்துப் பற்றி வருவோம்' என்று கூறினான்.

மானவள்; மானிடப் பெண்ணிற் சிறந்தவள்; 774. இராம பிரானை மானவன் என்று கூறுவதும் காண்க; இனி மான் போன்றவள் என்றும், மானத்தை மேற்கொண்டவள் என்றும் பொருள்கொள்ளலும் ஆம். மானவள் ஆனதால் மானைக் காட்டி வஞ்சகமாய் வலையிற் சிக்கவைத்துப பிடித்து வருதல் போலப் பிடித்து வருவோம் என்று கூறினான் என்னும் நயந்தோன்ற நின்ற மையும் காண்க. இவ்வாறு உபயோகப்படுவது பார்வை மான் எனப் படும்; பெரும்பாண். 95; நச். உரை. ஏனையர் இறக்கில் தானும் அன்றே தமியளாய் இறக்கும் மானவள் என்றது: கணவன் இறந் தது கண்டால் உடன் இறக்கக்கூடிய பிராட்டியின் கற்புறுதியை இராவணன் அறிந்து கூறியது. 'ஏனையர்......அன்றே; இவ்வாறே இராவணன் பிராட்டியிடம், 'உயிரென வுரியோன் றன்னைக், கொன்றுகோ ளிழைத்தா னீநின் னுயிர்விடிற் குற்றங் கூடும்' சுந்தர 472.) என்று கூறினமை காண்க. வலித்தல் - வலிமையாற்றிக் கொணர்தல்; 'போர்வில்லை, வலித்தானை மங்கை திருமணத்தா னென் றியாம் வலித்தோம்' பால. கார்முகப்: 20.

பி-ம். 1. ஆனவனுரைக்க வந்த, ஆனவனறைய வவ்வா; னவனை வெல்ல; நக்காங் கரக்கர்கோ னவனைவெல்ல.
2. தானையும் வேண்டுங்; வேண்டுமோ; தடக்கைவாள் கரத்த தன்றோ; வாட்கரத்தன்றோ; தவத்தின்வாள்.
3. தமியளா யிருக்குமன்றே; யிறக்குமன்னாள்.
4. மாயத்தால் வலித்து, மாயையால் வலித்து. (38)

762. தேவியைத் தீண்டா முன்ன
மிவன்றலை சரத்திற் சிந்திப்
போவகை புணர்ப்ப னென்று
புந்தியாற் புகல்கின் றேற்கும்
ஆவகை யாயிற் றில்லை
யார்விதி விளைவை யோர்வார்
ஏவிய செய்த லல்லா
லில்லைவே றென்றென் றெண்ணு.

(இச் சொற்களைக் கேட்ட மாரீசன், தனக்குள்), 'தேவியை தீண்டா முன்னம் - இராமன் தேவியாகிய சீதாப்பிராட்டியை இவன் நெருங்கிப் பற்று முன்னே, இவன் தலை சரத்தில் சிந்தி போவகை -

இவன் தலைகள் தன் பாணங்களால் அறுபட்டுச் சிந்திப் போகுமாறு, புணர்ப்பன் - (இராமபிரான்) செய்விப்பான் என்று, புந்தியால் புகல்கின்றேற்கும் - புத்தியால் நிச்சயித்துக் கூறும் எனக்கும், ஆவுகை ஆயிற்று இல்லை - ஆகக்கூடிய நல்ல வழியும் ஏற்பட இடமில்லை ; விதி விளைவை ஆர் ஓர்வார் - ஊழ் வினையின் பயனை முன்னறிய வல்லவர் யார் ? (ஒருவரும் இல்லை யென்றபடி) ; ஏவிய செய்தல் அல்லால் - (இப்பொழுது) இவன் ஏவியவற்றைச் செய்ய வேண்டியதே யல்லாமல், வேறு ஒன்று இல்லை - வேறு யான் செய்யக்கூடிய காரியம் இல்லை' என்று எண்ணு - என்று மாரீசன் எண்ணி,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய் இயைந்து அடுத்த செய்யுளில் உள்ள, போனான் என்னும் வினைகொண்டு முடிவுபெறும். புகல்கின்றேற்கும் : உம்மை, உயர்வு சிறப்பினது. 'இராவணன் விதியை மாற்றக் கருதிய யான், என் விதியை மாற்றிக்கொள்ளும் வழியை அறியப் பெற்றேன் அல்லேன்' என்று மாரீசன் கூறிக்கொண்டான் என்க. 'யார் விதி விளைவை யோர்வார் ;' விதியை மாற்ற யாராலும் முடியாது என்பது ஒரு நீதி ; ஒப்பு : குறள், 380 ; நல்வழி. 30. இந்நீதி இராவணன் திறத்தும் கொள்ளலாம்.

பி - ம். 1. திண்டா முன்னை யிவன் ; முன்னேயிவன்.
2. போம் வகை ; புணர்ப்பி னென்றேன், புணர்ப்ப னென்னும் ; புணர்ப்ப னென்று, புணர்ப்பாரென்று.
3. ஆம்வகை, ஆமவை ; யார்விதி யதனை, யார்விதி யவிவை.
4. ஏவது செய்வ, ஓவது செய்ய ; றென்றென்னு, றென்றுமென்னு, றெமக்கென்றெண்ணி, றெண்ணமென்னு, றென்றெண்ணு. (39)

மாரீசன், இராவணன் வேண்டுகோட்கு உடன்பட்டேகுதல் 762–3.

763. என்னமா மாயம் யானிங்
கியற்றுவ தியம்பு கென்றான்
பொன்னின்மா னாகிப் புக்கப்
பொன்னைமால் புணர்த்து கென்ன
அன்னது செய்வெ னென்னு
மாரீச னமைந்து போனான்
மின்னுவே லரக்கர் கோனும்
வேறொரு நெறியிற் போனான்.

'இங்கு யான் என்ன மா மாயம் இயற்றுவது - இப்பொழுது யான் என்ன பெரும் மாயச் செயல் செய்யத்தக்கது ? இயம்புக

என்றான் - சொல்வாயாக' என்று இராவணனை நோக்கி மாரீசன் கேட்டான்; (அதற்கு இராவணன்), 'பொன்னின் மான் ஆகி புக்கு - பொன் போன்ற (நிறமுள்ள) ஒரு மானாக ஆகி, அவர்கள் இருக்குமிடஞ்சென்று, அ பொன்னை மால் புணர்த்துக என்ன - அந்தப் பொன் போன்ற சீதைக்கு ஆசையை உண்டாக்குவாயாக' என்று கூற, 'அன்னது செய்வென் என்னா - அதனை யான் செய்வேன்' என்று கூறி, மாரீசன் அமைந்து போனான் - மாரீசன் அதற்கு இசைந்து சென்றான்; மின்னும் வேல் அரக்கர் கோனும் - ஒளி வீசும் வேலேந்திய அரக்கர்க் கரசனான இராவணனும், வேறு ஒரு நெறியில் போனான் - வேறொரு வழியாகச் சென்றான்.

இயம்புகென்றான், புணர்த்துகென்ன; தொகுத்தல் விகாரங்கள். பொன்னின் மான் - பொன் போன்ற மான்; இன் ஐந்தாம் வேற்றுமை ஒப்புப்பொருளின் வந்தது. பொன்னை - உவமையாகு பெயர். புணர்த்துதல் - உண்டாக்குதல்; 'தூமமென் குழலியர் புணர்த்த சூழ்ச்சியால்' (பால. திருவவதாரப் : 48). வேலரக்கர் கோன் : வேல், இங்கு ஆயுதப் பொதுப்பெயராகக் கொள்க; அன்றி இராவணனுக்கு, பிரமதேவன் படைத்ததும் மயன் கொடுத்ததுமான அரிய வேற்படையும் ஆம்; உயுத்த. வேலேற்ற : 26. 'பொன்னின் மானாகி, பொன்னை மால் புணர்த்து' என்றது ஒரு சொன்னயம். மாரீசன் உடன்பட்ட பிறகு, இராவணன் அவனைத் தன் விமானத்தின் மீதே எற்றிக்கொண்டு, இருவரும் தண்டகவனம் சென்றனர் என்று முதனூலும், அத்யாத்மிக ராமாயணமும் கூறும். மார்சன் கொண்ட துணிவை உணர்த்தும் முறையில் பின்வரும் ஒரு தனிச் செய்யுள் வழங்கப்பெறுவதும் உண்டு.

மானினல் வடிவுகொண்டால் மன்னவ னிராமன் கொல்வான்
நானினி யேகே னென்றால் நீயெனைக் கொல்வாய் நாடில்
மானவன் வாளி பாய மறலியூர் புகுந்து மற்றுன்
சேனையோ டுனக்குந் தானந் தேடுவ னென்று சென்றான்.

பி - ம். 1. யானின்றியற்றுவ; யான்மற் றியற்றுவ; யான்மற் றியம்புகே னென்னப்.
2. மானாகி நீபோய், மானாகிப் போகி; புக்குப் பொன்னை, புக்கிப் பொன்னை.
3. அன்னதே செய்வன்; னறைந்து போனான்.
4. செய்வே னென்னா, செய்வெ னென்ன; நெறியிற் சென்றான். (40)

வேறு

மாரீசனின் நினைப்பும் நிலையும் 764-5.

764. மேனாளவர் வில்வலி கண்டமையால்
தானாக நினைந்து சமைந்திலனால்
மானாகுதி யென்றவன் வாள்வலியால்
போனான்மன முஞ்செய லும்புகல்வாம்.

மேல் நாள் அவர் வில் வலி கண்டமையால் - முன்னாள் அந்த இராம லக்ஷ்மணருடைய விற்றொழிலின் வலிமையை அவன் கண்டுள்ளமையால், தான் ஆக நினைந்து சமைந்திலன் - தானே அம் மாயமான் வடிவெடுக்க அவன் இயைந்தவனல்லன்; 'மான் ஆகுதி என்றவன் - மானாக வடிவெடுத்துச் செல்' என்று கட்டளையிட்ட இராவணனுடைய, வாள் வலியால் - வாளின் வலிமைக்கு (அஞ்சி), போனான் - அவன் விருப்பப்படி செய்யத் தீர்மானித்துச் சென்ற அம் மாரீசன், மனமும் - மனத்தன்மையையும், செயலும் - அவன் செய்த மாயைச் செயல்களையும், புகல்வாம் - இனி எடுத்துக் கூறுவோமாக, (அவை பின்வரும் செய்யுள்களால் அறிக.)

இது கவிக்கூற்று. மேனாள் அவர் வில்வலி கண்டமை, இரு முறைகள்; 758-உரை. ஆதலின், மாரீசன் அவர்கள்பால் இப் பொழுது செல்வது மூன்றும் முறையாகும்; 766; மூன்றும்முறை படுவது திண்ணமென்ற கொள்கையும் காண்க. வாள் வலியால் - இராவணன் வாள் வலிக்கு அஞ்சி; இராவணன், "என் குறிப்பின் வழி நிற்றி யுயிர்கொண்டுழலின்" என்றதால்; 754.

பி-ம். 1. மேனாளவன்.
4. யென்னவன்; வாய்மொழியால். (41)

765. வெஞ்சுற்ற நினைத்துகும் வீரரைவே
றஞ்சுற்று மறுக்குறு மாழ்குழிநீர்
நஞ்சுற்றுழி மீனினடுக் குறுவான்
நெஞ்சுற்றதொர் பெற்றி நினைப்பரிதால்.

வெம் சுற்றம் நினைத்து உகும் - (அவ்வாறு சென்ற மாரீசன் தனது) விரும்பத்தக்க தன் உறவினரான அரக்கர்க்கு இனி ஏற்படக் கூடிய அழிவை எண்ணி மனம் கரைந்து வருந்துவான்; வேறு - அதனோடு, வீரரை அஞ்சு உற்று - வீரர்களான இராம லக்ஷ்மணர்களுக்குப் பயந்து, மறுக்கு உறும் - குழப்பம் மேற்கொள்வான்; ஆழ் குழி நீர் நஞ்சு உற்றுழி - ஆழமான குழியில் உள்ள நீர் விஷம்

கலந்த நிலையில், மீனின் - அதில் உள்ள மீன்படும் துன்பம்போல, நடுக்கு உறுவான் - நடுக்கம் கொண்டவனானான்; நெஞ்சு உற்றது ஓர் பெற்றி - அவன் மனம் (அப்போது) அடைந்த ஒரு தன்மையை, நினைப்பு அரிது - நாம் நினைந்து அறிவது முடியாதது ஆகும்.

வீரரை யஞ்சுற்று - வீரர்க்கு அஞ்சி; இது வேற்றுமை மயக்கம். ஆழ்குழி நீர்......மீனின்; ஆழ்குழி நீரில் நஞ்சு உற்ற - மீன் மாரீசன் நிலைக்கும், அவன்பட்ட அவதிக்கும் ஒப்பு; இனி, ஆழ்குழி நீர் நஞ்சுற்றுழி மீனின் - ஆழ்ந்த வாவி நீரில் வலைகாரர் கலந்த நஞ்சை யுண்டு அழிந்து துடிக்கும் மீன்போல என்று பழையவுரை கூறுவதால், மீன் பிடிப்போர், மீனுள்ள குழி நீரில் நஞ்சு கலத்தல் உண்டு போலும் எனக்கருத இடந்தருகிறது. ஆழ்குழி; ஆழ் என்ற அடை, அம்மீன்கள் அக்குழியை விட்டுவர முடியாத பள்ளமுடைமையையும், ஒரு கால் துள்ளி வெளியே வந்தாலும் தரையில் இருந்து உயிர் வாழ முடியாமையையும் குறிப்பிட்டது என்க. நஞ்சுற்றோர் நடுங்குதல்; 305. நினைப்பரிது என்றமையால், சொல்லமுடியாதது என்பதும் பெறப்பெறும். இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. வெஞ்சுற்ற நலிந்திடும் வீரர் முன்னே, வெஞ்சுற்ற மறுத்தறு வீரரையென்; சுற்றமறுத்துகும்.
2. அஞ்சுற்றயனே கினனூழ்கடலின்.
3. நஞ்சுற்றுழி, நஞ்சுற்றழி; வாரிநடுக்குறுவான்.
4. நிகழ்த்தரிதால். (42)

### மாரீசன் பஞ்சவடிக்கு வந்து பொன்மான் உருவெடுத்ததும், அதனைப் பிராட்டி கண்டதும் 766–70.

766. அக்காலமும் வேள்வியினன் றுதொடர்ந்
தெக்காலு நலிந்துமொ ரீறுபெருன்
முக்காலின் முடிந்திடு வான்முயல்வான்
புக்கான விராகவன் வைகுபுனம்.

அவனோடு - அந்த இராமபிரானோடு, அ வேள்வியில் காலம் - விசுவாமித்திரர் புரிந்த அந்த யாகத்தின் காலமாகிய, அன்று தொடர்ந்து - அந்த நாள் முதல், எ காலும் நலிந்தும் - எந்த வகையிலும் துன்பப்பட்டும், ஓர் ஈறு பெறுன் - சாவாகிய ஒரு முடிவை அடையாத மாரீசன், மு காலின் - மூன்றும் முறையாக இப்பொழுது, முடிந்திடுவான் முயல்வான் - இறந்திடும் பொருட்டு

முயற்சி செய்பவனாய், அ இராகவன் வைகு புனம் - அந்த இராம பிரான் வசித்து வந்த வனத்தினிடம், புக்கான் - போய்ப் புகுந்தான்.

விசுவாமித்திரர் செய்த யாககாலம் முதல் மாரீசன் நலிவுற்று வந்தான் என்பதும், முடிவாக இப்பொழுது அவன் சாகவே வந்தான் என்பதும் கூறப்பட்டன. இது மூன்றாங் காலம் என்றமையால் முன் விசுவாமித்திரர் யாககாலத்தில் நலிவுற்றதை முதற்காலமாகவும், (பால. வேள்விப் 52) பின் தண்டகவனத்தில் தன் இரு நண்பர்களுடன் மான் வேடந்தரித்து இராமபிரானால் நலிவுற்றதை இரண்டாங் காலமாகவும் (758) கொள்க. மூன்றாவதான இம்முறை தான் முடிவு திண்ணமென்று அவன் எண்ணினான். 'முக்காலின் முடிந்திடுவல்' (கூர்ம). இராகவன் - ரகு என்னும் அரசன் வழித் தோன்றினவன்; இது தத்திதாந்தம். புனம் - மலைச்சார்பான வனம்; 'புனத்திடை மயிலனாள்' (சீவக. *1723*); அகநா. *368*.

பி - ம். 1. வேள்வியிலன்றியனோ(டு); னன்றுமகன்(றெக்).

2. இக்காலுரு, இக்காலமுடிந்திடு மேதுவினால். (*43*)

767. தன்மானமி லாத தயங்கொளிசால்
மின்மானமு மண்ணும் விளங்குவதோர்
பொன்மானுரு வங்கொடு போயினனால்
நன்மானனை யாடனை நாடுறுவான்.

நல் மான் அனையாள் தனை - அழகிய மான்போன்ற பிராட்டியை, நாடு உறுவான் - நாடுதலை மேற்கொண்ட அம் மாரீசன், தன் மானம் இலாத - தன் நிகர் இல்லாத, தயங்கு ஒளி சால் - விளங்கும் ஒளி மிகுந்த, மின் மானமும் - மின்னலோடு கூடிய ஆகாயத்தும், மண்ணும் - புவியின் மீதும், விளங்குவது ஓர் - விளங்குவதான ஒப்பற்ற, பொன்மான் உருவம் கொடு - (ஒரு) பொன்மானின் உருவம் எடுத்துக் கொண்டு, போயினன் - அவ்விராமபிரானிருந்த வனத்திற்குப் போனான். ஆல், அசை.

மானம் - சமானம் என்ற வடசொல்லின் முதற்குறை. 2-வது மானம் - ஆகாயம்; இஃது உலக வழக்கு; செய்யுளிலும் ஏகதேசம் வரும்; "செம்மானத் தொளியன்ன மேனியான் காண்" (தேவாரம்).

பி - ம். 1. மிலாத் தயங்கொளி; கொளிகால், கொளிதான், கொளிசேர்.

2. மின் வானமும், மன்மானமு; விளக்குவதோர், வயங்குவதோர்,

(*44*)

768. கலைமான்முத லாயின கண்டவெலாம்
அலைமானுறு மாசையில் வந்தனவால்
நிலையாமன வஞ்சனை நேயமிலா
விலைமாதர்கண் யாரும் விழுந்தெனவே.

நிலையா மனம் - ஒருவரிடத்தும் நிலைத்து நிற்காத மனமும், வஞ்சனை - சூதும் கொண்ட, நேயம் இலா - (உண்மை) அன்பு இல்லாத, விலை மாதர் கண் - வேசையரிடம், யாரும் - காமுகரான ஆடவர்கள் அனைவரும், விழுந்தது எனவே - மயங்கி விழுந்த வாறே போல, கண்ட (மாரீசன் தன்மாயையால் வேடம் எடுத்துக் கொண்ட அந்தப் பொன்மானைக்) கண்ட, கலைமான் முதல் ஆயின எலாம் - அக்காட்டில் இருந்த கலைமான்கள் முதலானவை யாவும், அலை மான் உறும் ஆசையின் - அலைகள் வந்து மோதுவனபோன்ற ஆசைமேலிட்டனவாய், வந்தன - அதனை நோக்கி ஓடிவந்தன. ஆல் : ஈற்றசை.

விலைமாதர் கண் ; விலைமாதருடைய கண் மயக்கில் எனவும் கொள்ளலாம். வீழ்தல் - விரும்புதல் ; " தாம் வீழ்வார்......கனி" குறள். *1191*. விலைமாதர்கள் யாரிடமும் உண்மையில் பற்றுவைக்க மாட்டார்கள் ; *797*; பால. ஆற்றுப். *6*; தாடகை வதைப்: *15* ; அயோத். வனம்புகு : *1*. ஆதலின், அந்த மாரீசனை பொன்மான் விலைமாதர்க் கும், அலைகள் விலைமாதரை நாடிச் செல்லுங் காமுகர்க்கும் உவமை யாயின ; மேலும் மாரீசனுக்கு அம்மிருகங்களிடத்து ஒரு பற்றில் லாமையும் நோக்கத்தக்கதாம். இனி மலைமானுறும் ஆசையின் எனக்கொண்டு, மலைபோன்ற பேராசை கொண்டு எனவும், அலை மானுறுமாசையின், கடல்போன்ற பேராசையின் எனவும் பொருள் கொள்ள இடந்தருவது காண்க. அலை - கடல் : சினையாகு பெயர். மானுறுதல் - ஒப்பாதல் :

பி - ம். 1. அலைவானுறு, மலைவானுறு, மலைமானுறு ;
2. ஊறுமாயையின்.
3. நிலையாமென, நிலைமாமன வஞ்சனை நேயமிலா.
4. விலைமாதர்களின்பாரும் ; விழுந்தனவே. (45)

769. பொய்யாமெனவோது புறஞ்சொலினால்
நையாவிடை நோவ நடந்தனளால்
வைதேவிதன் வால்வளை மென்கையெனும்
கொய்யாமல ரான்மலர் கொய்குறுவான்.

வைதேவி - சீதாப்பிராட்டி, தன் வால் வளை மெல் கை எனும் - தன்னுடைய தூய வளையல்கள் அணிந்த மென்மை பொருந்திய கைகளென்னும், கொய்யா மலரால் - பறிக்கப்படாத தாமரை மலர்களால், மலர் கொய் குறுவான் - மலர்கள் பறிக்கும் பொருட்டு, புறம் - பார்க்கும் அயலார், பொய் ஆம் என ஓதும் - உண்டென்பது பொய்யே தான் என்று கூறும், சொலினால் - சொல்லுக்கு இணங்க, நையா இடை நோவ - தளரும் தன் இடை வருந்த, நடந்தனள் - அங்கு நடந்து வருவாளாயினள். ஆல் : ஈற்றசை.

வைதேவி ; வைதேகி என்னும் சொல்லின் திரிபு ; விதேஹ ராஜன் குலத்துதித்த பெண் என்ற பொருளில் வந்த தத்திதாந்தம்; பெரியாழ்வார் திருமொழி 3. 10 : 4 ; 8 ; பெரியதிருமொழி. 11. 5 : 1. வால் வளை - ஒளி தங்கிய வளையலும் ஆம். கொய்யாமலர் : பாயாவேங்கை, பறவாக்கொக்கு என்பனபோல வந்த பிறகுறிப்பு. மலர், உவமை ஆகுபெயர் ; இனி, கொய்யப்படாது, தடாகத்தில் சிறந்த காந்தியுடன் விளங்கும் தாமரை மலர்போன்ற கை எனலும் ஒன்றும். கொய் குறுதல்: குறு, துணைவினை; குறுதல் என்பதற்கும், பறித்தல் என்னும் பொருள் உண்டு; குறுந். 142, 144; ஐங். 23: 2. பெருங். 2. 12, 129. மலரால் மலர் கொய் குறுதல் என்பது சொல்லணி; ஒப்பு. 'மலர் மிசை மலர் பூத்தன்ன வளைக்கை'; சுந்தர. 208;-ம் அதன் குறிப்பும் நோக்குக. பிராட்டிக்கு இடை பொய் என்பது, பார்ப்போர் கண்ணுக்குப் புலப்படாத நுட்பத் தன்மையால் ; பால. கார்முகப் ; 63 ; கோலங் காண் : 12 ; அயோத். கங்கைப் : 1. சொலினால் ; வேற்றுமை மயக்கம்.

பி - ம். 1. பொய்யாமெனவோதல் பொருந்திடமின்.
2. நையாமிடை நோவ நடந்திடுவாள்.
3. வைதேகி.
4. மலராமலர் ; கொய்தூறுவாள் ; மலர் கொய்துறவே. (46)

770. உண்டாகிய கேடுடை யார்துயில்வாய்
எண்டானு மியைந்தியை யாவுருவம்
கண்டாரென லாம்வகை கண்டனளால்
பண்டாரு முருவிடர்ப் பாடுறுவாள்.

பண்டு ஆரும் உரு - முன் அதுவரை யாரும் அடையாத, இடர்ப்பாடு - துன்பம். உறுவாள் - அடையப் போகும் பிராட்டி, உண்டாகிய கேடு உடையார் - தமக்கு ஏற்படக் கூடிய தீங்கை அடைந்துள்ளவர், துயில்வாய் - தம் நித்திரையில், எண்தானும் இயைந்து இயையா-தம்மனத்தில் அதுவரை எண்ணி அமைதலும் இல்லாத, உருவம் கண்டார் எனல் ஆம் வகை - ஒரு விபரீத உருவத்தைக் (கனவிற்) கண்டாற்போல, கண்டனள் - அந்த மாய மானைப் பார்த்தாள். ஆல் : அசை.

ஒருவர் தாம் அடையப் போகும் கேட்டுக்கு அறிகுறியாகக் கனவில் முன்னதாக விபரீதத் தோற்றங்களைக் காண்பது உண்டு; அத்தகைய காணாப் பொருளைக் கனவிற் காண்பதுபோல, மாரீசனாகிய விபரீத மானைப் பிராட்டி நேரில் கண்டனள் என்பதாம். இதனால் வரப்போகும் தீங்கினைக் கவி துயரத்துடன் உரைத்தனர் என்க. இடர்ப்பாடுறுவாள் - தான் அதனைப் பெறவேண்டு மென்ற எண்ணத்தாலுண்டான துன்பமடைந்தாள் எனலும் ஆம். இதுவும் அடுத்த செய்யுளும் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ர். 1. துயிலால்; துயிலார்; துயில்வால்; துயில்வார்; எண்டானு மிலாவியையா.
2. யியைந்திசையா.
3. கொண்டாரென லாம்வகை கொண்டனளால்; கண்டாலென லாயது.
4. பாடுறுவான். (47)

771. காணுவிது கைதவ மென்றுணராள்
பேணாத நலங்கொடு பேணினளால்
வாணாளி ராவணன் மாளுதலால்
வீணாளி லறம்புவி மேவுதலால்,

அ இராவணன் - அந்த இராவணனுடைய, வாழ்நாள் - வாழும் ஆயுட் காலம், மாளுதல் ஆல் - அழியவிருப்பதினாலும், வீழ்

நாள் இல் அறம் - அழியுங்காலம் என்பது இல்லாத தருமம், புவி மேவுதலால் - பூமியை அடைவதினாலும், காணா - (பிராட்டி) அந்த மானைக்கண்டு, இது கைதவம் என்று உணராள் - இது வஞ்சனைச் செயல் என்று அறியாது, பேணாத நலம் கொடு - இது, தான் அதுவரை மேற்கொள்ளாத ஒரு நன்மையென்று உள்ளத்திற் கொண்டு, பேணினள் - அந்த மானை விரும்பினாள். ஆல் : ஈற்றசை.

காணா இது - இதுவரையிற் கண்டிராத இந்த மான் என்லும் ஒன்றும். வீழ்நாள் இல் அறம் - அறம் அழியாது என்பதாம்; அறம் ஒருகால் சரிவுறுமே அன்றி அழிந்தேபோவதன்று; 'யதாய தாஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத' என்று கீதையில் கண்ண பிரான் பார்த்தனுக்கு அருளியது காண்க. பிராட்டி, அம்மானைக் கண்ட நிகழ்ச்சியே, அதனை அவள் அடைய விரும்பவும், அது இராமபிரானால் கொல்லப்பட்டு அழியவும், பிராட்டியை இராவணன் அபகரித்துச் செல்லவும், இராவணன் அழியவும், அரக்கர்களா லொடுக்கப்பட்டிருந்த தருமம் நிலைபெறவும் காரணமாயிற்றாதலின் இவ்வாறு கூறப்பெற்றது என்க. ஒப்பு. 'அரக்கர் பாவமு......தூம் மொழி மடமான்' அயோத். மந்தரை சூழ்ச்சி: 78. வாணாள், வீணாள் என்பன, வாழ்நாள் வீழ்நாள் என்பவற்றின் மரூஉ மொழிகள். இக்கருத்து, பின் 781, 824 செய்யுட்களாலும் வலியுறுத்தப் பெறு வது காண்க. கைதவம் - வஞ்சகம், 886. இச்செய்யுளின் கருத்து, 'பொன்மானன் றாசை கொண்ட பொன்னனையார் பட்டதுயர், சென் மாந்த பாவம் சிவசிவா' என்ற சிவசிவவெண்பா (82)வில் குறிக்கப் பெற்றுள்ளது காண்க.

பி - ம். 1. றுணராப். 2. பேணாத வுளங்; பேணாத நலங்.
3. வாணாளவ்விராவணன்.
4. வீணாளினறம்; வீணாளினலம். (48)

பிராட்டி அதனைப் பிடித்துத் தரவேண்டி இராமபிரானை விரும்பியது 772–4.

772. நெற்றிப்பிறை யாண்முன நின்றிடலும்
முற்றிப்பொழி காதலின் முந்துறுவாள்
பற்றித்தரு கென்பெ னெனப்பதையா
வெற்றிச்சிலை வீரனை மேவினளால்.

நெற்றி பிறையாள் முனம் - பிறை மதி போன்ற நெற்றியை யுடைய பிராட்டி முன்னே, நின்றிடலும் - அந்த மான் போய் நிற்க

வும், முற்றி பொழி காதலின் முந்துறுவாள் - நிறைந்து மேல்ததும்புகின்ற ஆசையின் முன் செல்பவளான அவள், 'பற்றி தருக என்பென் என பதையா - இதனைப் பிடித்துத் தருவாய் என்று இராமபிரானிடம் சொல்வேன்' என மிக விரைவுடன், வெற்றி சிலை வீரனை - விஜய கோதண்டத்தையுடைய வீரனான இராமபிரானை, மேவினள் - அடைந்தாள். ஆல்: ஈற்றசை.

பிறை - எட்டாம் நாட்பிறை. தருகென்பென்; தருகவென்பென் என்றதின் தொகுத்தல். தன்னிலும் அதிக வேகமாக முன் செல்லும் ஆசையுடன் என்றலும் ஆம். வெற்றிச் சிலை வீரன் - தோல்வி என்பதின்றி எப்பொழுதும் வெற்றியேயுடைய வில்வீரன் என்க.

பி - ம். 1. பிறையாடன்மு னின்றிடலும், பிறையாளிறை.
3. கென்பனெனப் பிழையா, கென்ப தெனப்பதையா; பற்றித் தருவா யிதெனப் பகர்வாள். (49)

**773.** ஆணிப்பொனி னாகிய தாய்கதிரால்
சேணிற்சுடர் கின்றது திண்செவிகால்
மாணிக்க மயத்தொரு மானுளதால்
காணத்தகு மென்றனள் கைதொழுவாள்.

கை தொழுவாள் - (பிராட்டி இராமபிரானைக்) கைகூப்பி வணங்கினவளாய், 'ஆணி பொனில் ஆகியது - மாற்றுயர்ந்த பொன்னால் அமைந்ததாகியும், ஆய் கதிரால் - தன் மேனியின் சிறந்த ஒளியினால், சேணில் சுடர்கின்றது - நெடுந்தூரம் பிரகாசிக்கின்றதும், திண் செவி கால் - வலிய காதுகளும் கால்களும், மாணிக்க மயத்து - முழுவதும் மாணிக்கமாய் அமையப் பெற்றதுமான, ஒரு மான் உளது ஆல் - ஒரு மான் இங்கு வந்துள்ளது; ஆதலின், காணத்தகும் - அதனை நீவிர் வந்து காணவேண்டிய தாகும்,' என்றனள் - என்று கூறினாள்.

அ மானின் தன்மையைத் தம் கருத்தாக செய்யுள்கள் 770, 771-இல் கூறி, அதன் வருணனையைப் பிராட்டி வாயிலாக இங்குக் கவிஞர் அமைத்த நயத்தை ஓர்க.

திண் செவி - நெறித்த காதுகள்; மான் தன் செவிகளை நெறித்து நோக்கும் இயல்பினது. திண் கால்: மானின் கால்கள் மென்மையானவையேனும் வலிமையும் சறுக்காது ஊன்றிச் செல்லும் உறுதிப்பாடும் உடையன என்க. காணத்தகும் என்றது, அஃது

அபூர்வ அழகுடையதாதலின். இதில், பிரானிடம் பிராட்டி கூறும் மரியாதையும் காண்க.

பி-ம். 1. ஆணிப் பொனின் மேனியதாய்; பொனினுகிய காயத்தில்; காய் கதிரால்; ராகியதால் கதிரால்.

2. கண் செவிகானல்.

4. கைதொழுதாள். (50)

774. இம்மானி நிலத்தினி லில்லையெனு
எம்மானி தெனச்சிறி தெண்ணல்செயான்
செம்மானவள் சொற்கொடு தேமலரோன்
அம்மானு மருத்திய னுயினனுல்.

இ மான் இ நிலத்தில் இல்லை எனு - இத்தகைய மான் இந்தப் புவியில் இல்லை என்றும், எ மான் இது என - இஃது எத்தகைய மான் என்றும், சிறிது எண்ணல் செயான் - சிறிதும் ஆலோசிக்காதவனுன, தே மலரோன் அம்மானும் - தேனையுடைய தாமரை மலரில் வாழும் பிரமதேவனுக்குத் தந்தையாகிய திருமாலின் அவதாரமான இராமபிரானும், செம் மானவள் - செந்நிறமான பிராட்டியின், சொல் கொடு - சொல்லை ஏற்றுக்கொண்டு, அருத்தியன் ஆயினன் - அம் மானை அவளுக்குப் பிடித்துத் தருவதில் ஆசையுள்ளவன் ஆனுன். ஆல்: ஈற்றசை.

இராமபிரான் பிரமதேவரின் தந்தையாகிய திருமாலே என்பது; 'சதுமுகன் ருதை சொன்னுன்' (789). மனைவியின் சொல்லால் திருமாலும் இங்கு மயங்கினன் என்று கூறுவது ஒரு நயம்; இச் செயல் அவன் எடுத்த அவதாரத்துக் கேற்றதொன்று என்பது உணரற்பாலது. பிராட்டியை மானவள் என்பது; 761; இனி செம் மான் அவள்; சிவந்த மான் போன்றவள் எனவும் பிரித்துப் பொருள்கொள்வர். இ நிலத்து: இந்நிலத்து என இரட்டித்து வரற்பாலது, எதுகை நோக்கி இயல்பாய் நின்றது. அம்மான் - தலைவன்; உம்மை உயர்வு சிறப்பினது. ஒரு சுவடியில் இச்செய்யுள் இல்லை.

பி-ம். 1. யில்லையென.

2. எம்மானிதனை; தெண்ணல் செய்யான். (51)

அப்பொழுது இலக்குவன் கூறியவையும், அவற்றை இராமபிரான் மறுத்தமையும் 775–78.

775. ஆண்டங்கிளை யோனுரை யாடினனால்
வேண்டும்மென லாம்விழை வன்றிதெனப்
பூண்டுஞ்சுபொ லங்கொடி போயதுநாம்
காண்டும்மெனும் வள்ளல் கருத்துணர்வான்.

'பூண் துஞ்சு பொலன் கொடி - ஆபரணங்கள் தங்கியிருக்கும் பொற்கொடி போன்றவளே ! போய் அது நாம் காண்டும் - நாம் போய் அந்த மானைப் பார்ப்போம்,' எனும் - என்று கூறிய, வள்ளல் கருத்து உணர்வான் - இராமபிரானுடைய கருத்தை அறிந்தவனான, இளையோன் - இளையபெருமானான இலக்குவன், ஆண்டு - அப்பொழுது, 'வேண்டும் எனல் ஆம் விழைவு அன்று இது என - வேண்டும் என்று ஆசைப்படுவதான விருப்பத்தக்கப் பொருள் இஃது அன்று' என்று, அங்கு - அவ்விடத்தில், உரை ஆடினன் - எடுத்துச் சொல்லலானான். ஆல் : அசை.

துஞ்சுதல் - தங்கியிருத்தல் ; நிலைபெறுதல் ; 'புலி துஞ்சு வியன் புலம்' (புறநா. 54); 'துஞ்சு நீணிதியது' (சூளா. நாட்டுச் 1). வள்ளல் - இராமபிரான் ; இராமபிரானை, வள்ளல் என்ற பெயரால் கூறுவது ஆசிரியரின் பெருவழக்கு. இனி, கேட்டார்க்குக் கேட்டதை வழங்கும், 'கொடைமடம்' உடைமையும் சுட்டியதாகும். விளைவன்றிதென, எனும் பாடங்கொண்டு, இது சிருஷ்டியில் ஏற்படுவதன்று; அதாவது மாயம் என்று சொன்னான் எனப் பொருள் கொள்வதும் ஒன்றும். காண்டும்மெனும் என்று ஒற்று இட்டித்தது, மிகுத்தல் விகாரம். 'இக்கவி விற்பூட்டு ; பழையவுரை'.

பி - ம். 1. னுரையாடலனால், னுரையாடவினால், யுரையாடவிலான்.
2. விளைவுண்டதனால், விளைவன்றிதெனன்.
3. போயிது நாங் ; கொடியோயது நாம்.
4. மெனலென்பது கண்டிளையோன். (52)

776. காயங்கன கம்மணி கால்செவிவால்
பாயும்முரு வோடிது பண்பலவால்
மாயம்மென லன்றி மனக்கொளவே
ஏயும்மிறை யையுற வென்றனனால்.

(இலக்குவன் இராமபிரானை நோக்கி), 'காயம் கனகம் - உடலோ பொன்னிறமானது ; கால் செவி வால் மணி - கால்களும் செவிகளும்

வர்லும் மாணிக்க மயமாய் உள்ளன; ஆதலின், பாயும் உருவோடு இது - பாய்ந்து செல்லும் மானாகிய இது, பண்பு அல ஆல் - இயற்கைத் தன்மைக்கு ஒத்ததன்று; ஆதலின், மாயம் எனல் - இது மாயமான் என்று சொல்லத்தகுவது ஆகும்; அன்றி - அஃதல்லாமல் வேறு விதமாய் (அதாவது உண்மையான மான் என்று), இறை - இறைவனே! மனம் கொளவே - மனத்தில் கொள்வதற்கே, ஐயுறவு ஏயும் - ஐயப்பாடு உள்ளதாகும்', என்றனன் - என்று எடுத்துரைத்தான். ஆல்: ஈற்றசை.

உரு - மான்; 'கானிடையுருவைச் சுடுசரந்துரந்து' (பெரிய திருமொழி *1-4: 2*) இனி, பாயும் உருவோடு - பாய்ந்து செல்லும் அழகோடு கூடிய எனிலும் அமையும்; உரு - அழகு. 'காயங்கனகம் மணிகால் செவிவால்'; *773*, நோக்குக; அங்கு வாலைக் குறிப்பிடாதது உபலக்ஷணத்தால் கூட்டிக்கொள்ளவும் ஆம். மாயம் எனல் - மாயம் என்று சொல்லப்பட்டதாகும்; 'மக்கட்பதடியெனல்' என்றதுபோல: (குறள் *196*). இனி, இறை ஐயுறவு - சிறிது ஐயுறவிற்கு இடம் என்று பொருள் கொண்டாரும் உளர்; ஆனால் இளைய பெருமான் ஐயுறவுகொள்வது குறை பாடற்றமை காணத் தகும். பாயும் முரு, மாயம்மெனா, ஏயும் மிறை; இவை, எதுகைநோக்கி ஒற்று மிகப் பெற்றன.

பி - ம். 2. காயம் பொலன்ன மணிகால்; பாயும்முயிரோ.
3. மாயமென.
4, ஏயுமிறை மெய்யல வென்றனளே; ஆயுந்தரமையுற; யையுறு மென்றுளயே. (53)

777. நில்லாவுல கின்னிலை நேர்மையினால்
வல்லாரு முணர்ந்திலர் மன்னுயிர்தாம்
பல்லாயிர கோடி பரந்துளவால்
இல்லாதன வில்லை யிளங்குமரா.

'இளம் குமரா - இளமைப் பருவத்துக் குமாரனே! நேர்மையினால் வல்லாரும் - நுண்மையால் அறிந்துணரவல்ல ஆன்றோரும், நில்லா உலகின் நிலை - ஒரு நிலையில் நிற்காத இந்த உலகத்தின் நிலைமையை, உணர்ந்திலர் - முற்றும் அறிந்தாரல்லர்; மன் உயிர் தாம் - இந்த உலகில் வாழும் பிராணிகள் தாம், பல் ஆயிரம் கோடி பரந்து உள ஆல் - பல ஆயிரங் கோடியளவாக விரிந்துள்ளன; ஆதலின், இல்லாதன இல்லை - இதுபோன்ற பிராணிகள் இல்லை

எனச் சொல்வதற்கு இல்லை. (உள்ளன என்றே கொள்ளவேண்டும் என்றபடி).

இளங்குமரா ; நீ சிறுவன்; ஆதலின் நீ அறியும் அறிவு போதாதவன் என்ற குறிப்பு. பல்லாயிரங்கோடி : அளவின் மிகுதியைக் குறிப்பிட்டபடி. நில்லாவுலகம் ; 555. நேர்மையினுல் - உண்மையினுல். நேர்மையினுல் உணர்ந்திலர் என்றும் கூட்டிப் பொருள் உரைக்கலாம். வல்லார் - பெரியோர், என்பது, பழையவுரை. இங்கு வான்மீகத்தில் இராமபிரான், 'மணிகளையும், தங்கம் வெள்ளி முதலியவற்றையும் அளிக்கத்தக்க பலவகைத் தாதுக்களும், காட்டில் மிக்க முயற்சியால் கிடைக்கப்படுகின்றன ; நாட்டிலுள்ளவைகளைவிடக் காட்டிலுள்ளவை அரியன' என்று இலக்குவனிடம் கூறியதாகக் காணப்படுகிறது.

பி - ம். 2. எல்லாருமுணர்ந்தில ரின்னுயிர்தாம் ; மன்னுயிர்தான்.

3. கோடி பரிந்துளவால் ; பரிந்தருவால். (54)

778. என்னென்று நினைந்த திழைத்துளதாம்
கன்னங்களில் வேறுள காணுதுமால்
பொன்னின்குளிர் மேனி பொருந்தினவேழ்
அன்னங்கள் பிறந்த தறிந்திலையோ.

என் என்று நினைந்து அது இழைத்து உளது ஆம் - நீ என்ன ஆலோசனையின் மீது அவ்வாறு கருதிக் கூறியது ஆகும்? கன்னங்களின் - நமது செவிகளினுல், வேறு உள காணுதும் - நாம் காணுத வேறு பல வகைப் பொருள்கள் உள்ளன என்பதைக் கேட்டறிந்துள்ளோம்; பொன்னின் - பொன்போன்ற நிறமுடைய, குளிர் மேனி பொருந்தின - குளிர்ந்த உருவங்கள் அமைந்தனவான, எழ் அன்னங்கள் பிறந்தது - எழு அன்னப்புட்கள் முன் பிறந்துள்ளமை, அறிந்திலையோ - நீ கேட்டறிந்துள்ளாய் அல்லவோ? (அதாவது நீ கேட்டிருக்கிறுயே என்பதாம்). ஆல் : அசை.

இழைத்தல்-நுண்ணியதாய் ஆராய்ந்துரைத்தல் : குறள். 417. பரி. உரை ; சீவக. 1089 ; பெருங். 3. 6 : 122, 'இழைத்தல் - உண்டாக்கல்'; பழையவுரை. கன்னம் : கர்ணம் என்ற வடசொற் சிதைவு ; கன்னப்பூ, கும்பகன்னன், என்றமை போல. பொன்னின்னெளி...... ......அன்னங்கள் பிறந்தது ; பரத்துவாச முனிவரின் புதல்வரான எழுவர், ஒரு பிறப்பில் எழு பொன்னிறமான அன்னப்

பற்வைகளாகி, யோகம் விரதம் முதலிய நியமங்களை விடாமற் செய்து முத்தியடைந்தனர்என்ற ஒரு வரலாறு, ஸ்ரீ வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியர் அவர்கள் உரையிற் காணப்பெறும். இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. நினைத்த திழைத்துள நம் ; நினைத்துள தம் ; தினைத்துளதம்.
3. பொன்னின் ஞெளிமேனி ; பொன்னின்ஞெளிர்மேனி ; பொருந் திய கேழ் ; பொருந்தினவால்.
4. அன்னங்கள் கொணர்ந்த ; அன்னங்கள் புகுந்த. (55)

சீதை மான் மறைந்து போய் விடுமேயென வருந்தியது.

779. முறையுமுடி வும்மிலை மொய்யுயிரென்
றிறைவனிளை யோனொடி யம்பினனால்
பறையுந்துணை யன்னது பன்னெறிபோய்
மறையும்மென வேழை வருந்தினளால்.

இறைவன் - யாவர்க்குந் தலைவனான இராமபிரான், 'மொய் உயர் - (உலகில்) நிறைந்துள்ள பிராணிகள், முறையும் முடிவும் இலை - அவை உண்டாகும் முறையும் அவை அழியும் நிலையும் நாம் அறிந்து கூறும் நிலையில் உள்ளவை அல்ல ;' (அதாவது நம் அறிவு கடந்த செயல்களாம் என்றபடி); என்று - என, இளையான் ஒடு - தன் தம்பி இலக்குவனோடு, இயம்பினன் - கூறினன் ; (அந்நிலையில்), ஏழை - பிராட்டி, பறையும் துணை - இவ்வாறு நீவிர் பேசிக்கொண் டிருக்கும் அளவில், அன்னது பல் நெறி போய் மறையும் என - அந்த மான் பல வழியாய்ச் சென்று மறைந்து போய்விடுமே' என்று, வருந்தினள் - வருந்திக் கூறினள். ஆல் : ஈற்றசை.

பறைதல் - பேசுதல் ; இது மலைநாட்டு வழக்கு. 'சிறிதென் கொடுமை பறைந்தேன்' (திருவா. 89). ஏழை - பெண் என்ற அளவிற் பிராட்டியைக் குறிப்பது ; அறியாமை யுடையவள் என்பதாம் ; அதாவது பெண்கள் பேதையர் எனப்படுவதையும் நோக்குக. ஏழை, குணவாகுபெயர் ; மாரீசனின் மாயை அறியாதவள் என்றது குறிப்பு. முறையும் முடிவும், மறையும்மென இவை, 776 இல் உள்ளனபோலச் சந்த வின்பம் பயக்க எதுகையில் மகர வொற்றுக் கள் மிகுந்து நின்றன. 'முறை - பிரமாணம்' என்பது பழையவுரை.

பி - ம். 1. முடிவுமில மொய்யுயிர் ; மெய்யுயிரென்.
2. னிளையானொ டியம்பிடும் வாய்.
3. துணையின்னது ; துணைமானது.
4. வஞ்சி வருந்தினளால். (56)

வேறு

இராமபிரான் சென்று மானைக்காண்டலும், இலக்குவன் மறுபடியும் தடுத்தலும் 780–84.

780. அனையவள் கருத்தை யுன்னா
வஞ்சனக் குன்ற மன்னான்
புனையிழை காட்ட தென்று
போயினான் பொருத சிந்தைக்
கனைகழற் றம்பி பின்பு
சென்றனன் கடக்க வொண்ணா
வினையென வந்து நின்ற
மானெதிர் விழித்த தன்றே.

அனையவள் கருத்தை உன்னா - அவ்வாறு வருந்திக் கூறிய பிராட்டியின் நோக்கத்தை எண்ணி, அஞ்சன குன்றம் அன்னான் - மைம்மலை போன்ற இராமபிரான், புனை இழை, அது காட்டு என்று - பூண்ட அணிகலையுடைய பெண்ணே! அந்த மானை (எனக்குக்) காட்டு என்று கூறி, போயினான் - அப்பிராட்டியுடன் அம்மானைக் காணச் சென்றான்; பொருத சிந்தை - அது கண்டு பொருத மனத்தையுடைய, கனை கழல் தம்பி - ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த தம்பியாகிய இலக்குவன், பின் சென்றனன் - அவர்கள் பின்னே தொடர்ந்து செல்வானாயினன்; (அப்பொழுது), கடக்க ஒண்ணா வினை என வந்து நின்ற - விலக்க முடியாத ஊழ்வினை சீவன்களைத் தொடர்ந்து வருவதுபோல அங்கு வந்து நின்ற, மான் - (மாரீசனான) அம்மாய மான், எதிர் விழித்தது - அவர்களை நோக்கி எதிரே நின்று விழித்துப் பார்த்தது: அன்று, ஏ: ஈற்றசைகள்.

இராமபிரானுக்கு அஞ்சனக் குன்றம்; 25, 305, 702; அயோத். தைலமாட்டு: 52. கடக்க வொண்ணா வினைக்கு அந்த மாயமான் உவமை. புனை யிழை - அழகிய ஆபரணமணிந்த பெண்: அன் மொழித்தொகை; இஃது, அண்மை விளியில் இயல்பாய் வந்தது; புனை - அழகு (பிங்.); 'பூமலி யசோகின் புனை நிழல்' (நன். எழுத்தியல், கடவுள் வாழ்த்து) என்றாற்போல. ஊழ் வினை தொடர்ந்து வருதல்; "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந் துறும்" (குறள். 380). தம்பி பின்பு சென்றது; அவர்களுக்கு அம் மானால் ஏதேனும் ஆபத்து நேரக்கூடும் என்றும், தான் அவர்களை அச்சமயம் விட்டுப் பிரிந்திருக்கக் கூடாது என்று கருதியும் என்க. விழித்தது - அவர்கள் விழிக்கு இலக்காகியது என்பாரும்

உள்ர். அது 'நோக்கிய மானை நோக்கி' என்று தொடங்கும் அடுத்த (781) செய்யுளோடு இயைபு பெருமை அறியலாம்.

பி-ம். 2. காட்டதென்றும்; தெரிந்த சிந்தை. (57)

இராமபிரான் அம்மானைக் கொண்டாடியது 781–3.

781. நோக்கிய மானை நோக்கி
நுதியிழை மதியி னொன்றும்
தூக்கில னன்றி தென்று
னதன்பொருள் சொல்ல லாகும்
சேக்கையி னரவி னீங்கிப்
பிறந்தது தேவர் செய்த
பாக்கிய முடைமை யன்றோ
வன்னது பழுது போமோ.

நோக்கிய மானை நோக்கி - அவ்வாறு பார்த்த அம்மானை (இராமபிரான்) பார்த்து, நுதி இழை மதியின் - தன் கூர்மையுள்ள புத்தியால், ஒன்றும் தூக்கிலன் - சிறிதும் ஆராய்ந்து பாராதவனாய், 'இது நன்று என்றான் - இது அழகானதே' என்று வியந்து கூறினான்; அதன் பொருள் சொல்லல் ஆகும் - அவ்வாறு அப்பெருமான் கூறியதற்குக் காரணமான உட்பொருள் இன்னது என்று யாம் கூறக்கடவோம்; (அஃது யாதெனில்), அரவு சேக்கையின் நீங்கி - (பாற்கடலில் திருமால் தன்) ஆதிசேஷனை பாம்பணையை விட்டு நீங்கி, பிறந்தது - புவியில் இராமனாக அவதரித்தது, தேவர் செய்த பாக்கியம் உடைமை அன்றோ - தேவர்கள் செய்த பெரும்பேறு உடைமை காரணம் அல்லவோ? அன்னது பழுது போமோ - அந்தப் பேறு பயன்படாது வீணாய்ப் போய்விடுமோ? (வீணாகாது என்றபடி.)

'நுதி யிழை மதியிலொன்றுந் தூக்கிலன் - கூரிய புத்தியினால் ஒன்றும் அளவிடவில்லை' என்பது பழையவுரை. இராமபிரான் நுதியுடை மதியனேனும், தூக்கிலன், நன்றிது என்றது, வந்த அந்த மாரீசனை மான் மூலம் இராவண சங்காரம் நிகழவும், அதனால் தேவர்களுக்கு நல் வாழ்வான பாக்கியம் ஓங்கவும் காரணமாவது கருதி என்னும் அவதார ரகசியத்தையும், அந்தப் பரம்பொருளாகிய திருமாலே இராமபிரானாக அவதரித்துள்ளார் என்பதையும் நம்மனோர்க்கு இவ்வாறு இந்நூல் மூலம் அடிக்கடிப் புலப்படுத்தும் ஆசிரியர் கருணைத்திறம் நாம் பாராட்டிப் போற்றற்பாலதாம்.

நுதி - நுட்பம், கூர்மை; இழைமதி - பொருள்களை நுண்ணிதாக ஆராய்கின்ற அறிவு. 'இழைத்துணர்ந் தீண்டிய கேள்வியர்' (குறள். 417). சேக்கை - படுக்கை; பால. உண்டாட்டுப் : 6, 58, 61; அயோத். நகர்நீங்கு : 223.

பி-ம். 1. நறியுடை மதியா னென்றும்; நோக்கின னோக்கி மானை நறியுறு; நறியிடை; நுனியிழை.
2. என்றான் தன்பொருள்; னறிவதென்னு வதன்பொருள்.
3. னராவி னீங்கிப்; நீக்கிப்.
4. பாக்கிய மில்லைமை யென்று லதன்றிறம் பழுது. (58)

782. என்னொக்கு மென்ன லாகு
மிளையவ விதனை நோக்காய்
தன்னொக்கு மென்ப தல்லாற்
றனையொக்கு முவமை யுண்டோ
பன்னக்க தரள மொக்கும்
பசும்புன்மேற் படரு மென்னா
மின்னொக்குஞ் செம்பொன் மேனி
வெள்ளியின் விளங்கும் புள்ளி.

(இராமபிரான் இலக்குவனை நோக்கி), 'இளையவ - தம்பி! இதனை நோக்காய் - இந்த மானை நீ உற்று நோக்குவாயாக! என் ஒக்கும் என்னல் ஆகும் - என் (இதற்கு) ஒப்பாகும் என்று சொல்லக் கூடியது ஆகும்? தன் ஒக்கும் என்பது அல்லால் - இது தனக்குத் தானே ஒப்பாகும் என்று சொல்வதல்லாமல், தனை ஒக்கும் உவமை உண்டோ - இதற்கு ஒப்பாகும் உவமைப்பொருள் வேறு உள்ளதோ? (இல்லை என்றபடி); பல் - இதன் பற்கள், நக்க தரளம் ஒக்கும் - ஒளி வீசும் முத்துக்களுக்கு ஒப்பாகும்; பசும் புல் மேல் படரும் மெல் நா - பசுமையான புற்களைத் தின்ன அவற்றின் மேல் செல்லும் அதன் மென்மையான நாக்கு, மின் ஒக்கும் - மின்னலுக்கு ஒப்பு ஆகும்; மேனி செம் பொன் - இதன் உடல் சிவந்த பொன்போன் றுள்ளது; புள்ளி - இதன் உடலில் அமைந்துள்ள புள்ளிகள், வெள்ளியின் விளங்கும் - வெள்ளிபோல ஒளி வீசுகின்றன.

நோக்காய் : உடன்பாட்டு வினை; இனி, இதற்கு நீ நன்றாய்ப் பார்க்கவில்லை என எதிர்மறையிலும் பொருள் கொள்ள இடமாகும். தன்னொக்கு முவமை: புறநா : 377 : 10 - 11; பதிற்று : 73 : 23; இதனை அந்வயாலங்காரம் என்பர். பசும்புல் மேல் படரும் மென்னா மின்னொக்கும் - பசிய புல்லைத்தின்ன நீட்டும் இதன் நா, மின்னலைப்

பேரல் ஒளியும் அடிக்கடி தோன்றி மறையும் தன்மையும் உடையது எனலும் ஏற்கும். மான் தன் நாவை அடிக்கடி வெளியே நீட்டி, உள் இழுத்துக்கொள்ளும் இயல்பைக் கூறியது. இனி, 'என் னைக்கும் என்னலாகு மிளையவ' என்பதை ஒரு தொடராக இயைத்து, என்னை யொத்த (அன்புடைய) தம்பீ எனப் பொருள் கொள்வாரும் உளர். இச் செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. மிளையவ னிதனை.
2. தன்னைக்கு முவமை யல்லாற்; வுவமைத்தல்லாற்; னுருவு முண்டோ.
3. பன்னகத்; பன்னெக்க; பருமணி செவிகா லொக்கு. (59)

783. வரிசிலை மறைவ லோனே மானிதன் வடிவை யுற்ற
அரிவையர் மைந்தர் யாரே யாதரங் கூர்க லாதார்
உருகிய மனத்த வாகி யூர்வன பறப்ப யாவும்
விரிசுடர் விளக்கங் கண்ட விட்டிலின் வீழ்வ காணாய்.

(மேலும் இராமபிரான் இலக்குவனை நோக்கி), 'வரி சிலை மறை வலோனே - கட்டுக்கள் அமைந்த வில்வித்தையில் வல்லவனே! மான் இதன் வடிவை உற்ற-இந்த மானின் உருவை உற்று நோக்கிய, அரிவையர் - மகளிர், மைந்தர் - ஆடவர், யாரே ஆதரம் கூர்கலாதார்-யாவரே இதன் பால் ஆசை மிகாதவர் ஆவர்? (ஆசைப்படார் இலர் என்றபடி); ஊர்வ பறப்ப யாவும் - ஊர்ந்து செல்வனவும், பறந்து செல்வனவுமான உயிர்ப் பிராணிகள் அனைத்தும், உருகிய மனத்த ஆகி - இதனைக் கண்டு இதன் பால் உண்டான ஆசையால் இளகிய மனம் உடையவாகி, விரி சுடர் விளக்கம் கண்ட விட்டிலின்-பரந்த ஒளியையுடைய விளக்கைக்கண்ட விட்டிற் பறவைகளைப் போல, வீழ்வன - இதனிடம் ஆசைப்பட்டு வந்து விழுகின்றன; காணாய் - இதனை நீ பார்ப்பாக!'

'மானிதன் வடிவையுற்ற......கூர்கிலாதார்,' என்றமையால், பிராட்டியும் அவளை யனுசரித்து யானும் இதன் பால் ஆசையுற்று வந்தது இயற்கையே; இது குற்றமன்று' என்று இளையவனுக்கு இராமபிரான் எடுத்துக் காட்டுவது போலும் அமைந்துள்ளது என்ன லாம். அரிவையர் : மகளிர் என்ற பொதுத்தன்மையைக் குறிப்பது. மைந்தர் - இளமை பொருந்திய ஆடவர்; மைந்து - இளமை. சிலை மறை வலோய் - தனுர் வேத பாரங்கதன் என்னும் பொருளது; இனி, சிலை மறைவ்லோயே எனப்பிரித்து, தனுர் வித்தையிலும்

மறைகளிலும் வல்லவனே என்பதுமாம்; இராம லக்ஷ்மணர் பரத சத்ருக்னர் ஆகிய நால்வரும் வசிஷ்ட முனிவரிடம் வேதங்களையும் வில் வித்தையையும் கற்றுத் தேர்ந்தமை அறிக; பால. திருவவதாரப் : 128 ; குல முறை கிளர்த்துப் ; 24, 28. விட்டிற் பறவை விளக்கொளியில் வீழ்ந்து மாய்வது ; உயுத்த. மாயாசனகப் : 68 ; மூல பலவதைப் : 180 ; சில கோவை நூல்களுள், பதங்கம் பழிச்சல் என்னும் ஒரு துறை உண்டு ; (பதங்கம் - விட்டிற் பறவை); அதனாலும் இச்செய்தி அறியப் பெறுவது காணலாம்; வீழ்தல் ; ஆசை வயப்படுதலும் ஆம் ; 768. குறிப். இலக்குவனை இராமபிரான் வில் வல்லோன் என்று பாராட்டியது ; உயுத்த. நிகும்பலைப் : 4.

பி - ம். 1. வல்லோனே ; மானிதின் வடிவு கண்டால்.
2. கூர்கிலாதார்.
3. யாதரங் கூர்கிலாதார்; யூர்வன பறவையாவும், யூர்கின்ற பறப்ப; பறவையாவும், பிறப்ப யாவும்.
4. விளங்கக்கண்ட ; விட்டில்போல் ; விழுவ. (60)

இலக்குவன் மேலும் தடுத்தலும், இராமபிரான் அவனை மறுத்தலும் 784–90.

784. ஆரிய னனைய கூற வன்னது தன்னை நோக்கிச்
சீரிய தன்றி தென்று சிந்தையிற் றெளிந்த தம்பி
காரிய மென்னை யீண்டுக் கண்டது கனக மானேல்
வேரியந் தெரியல் வீர மீள்வதே மேன்மை யென்றான்.

ஆரியன் அனைய கூற - மேலோனான இராமபிரான் அவ்வார்த்தைகள் சொல்ல, அன்னது தன்னை நோக்கி - அம்மானைப் பார்த்து, சிந்தையில் தெளிந்த தம்பி - தன் மனத்தில் நன்றாய்த் தீர்மானங் கொண்ட தம்பியாகிய இலக்குவன், ‘ வேரி அம் தெரியல் வீர - நன் மணமும் அழகும் அமைந்த மாலையையுடைய வீரனே ! ஈண்டு கண்டது கனகமான் ஏல் - இங்குக் காணப்படுவதான இது பொன்மான் ஆகுமேல், காரியம் என்னை - நமக்கு இதனால் ஆக வேண்டிய காரியம் யாதே உள்ளது ? (ஒன்றும் இல்லை என்றபடி) ; (ஆதலின்), மீள்வதே மேன்மை என்றான் - நாம் இதனைவிட்டுத் திரும்பிச் செல்வதே சிறப்பினதாகும் ’ என்று கூறினான்.

ஆரியன் : போற்றத்தக்க பெருமையுடையோன் ; பெரியோரை ஆரிய, என்று அழைப்பது வடமொழி வழக்கு; இராமபிரானை ஆரியன் என்று கூறுவது இந்நூலிற் பெருவழக்காக உள்ளமை

ஆங்காங்குக் காணப்பெறும். வேரி - தேன் என்னலும் ஆம். மீள் வதே : ஏகாரம் தேற்றப் பொருளது.

பி - ம். 1. னனைய சொல்ல ; வயன்யந்தங்கதனை நோக்கிச்.
2. சீரிய லாகா தென்னல் சிந்தையிற் தெளிந்த தம்பி, தென்னுஞ் சிந்தையிற் றெரிந்த சிந்தையாற் றெரிந்த ; தெரிந்த தம்பி.
3. மீண்டு கண்டது கனகமானல்.
4. வீரா ; மீள்வதே கருமம். (61)

785. அற்றவன் பகரா முன்ன
மழகனை யழகி யாளும்
கொற்றவன் மைந்த மற்றைக்
குழைவுடை யுழையை வல்லே
பற்றினை தருதி யாயிற்
பதியிடை யவதி யெய்தப்
பெற்றுழி யினிதுண் டாடப்
பெறற்கருந் தகைத்த தென்றாள்.

அற்று அவன் பகரா முன்னம் - அவ்வாறு அந்த இலக்குவன் சொல்லும் அளவிலே, அழகனை - அழகாற் சிறந்த இராமபிரானை, அழகியாளும்-அழகே வடிவெடுத்தன்ன பிராட்டியும், 'கொற்றவன் மைந்த - சக்கரவர்த்தி குமார! குழைவு உடை - இப்பொழுது தளர்ந்த நிலையில் உள்ள, இ உழையை - இந்த மானை, வல்லே பற்றினை தருதி ஆயில்-விரைவில் பிடித்துத் தருவீரானால், அவதி எய்த பெற்று - நாம் வனத்தில் வசிக்க வேண்டிய காலத்தின் முடிவு வந்தபோது, பதி இடை - நம் அயோத்தி நகரினிடத்து, இனிது உண்டாட - மகிழ்ந்து விளையாடுவதற்கு, பெறற்கு அரும் தகைத்து - பெறுதற்கரிய சிறப்புடையதாகும்' என்றாள்-என்று கூறினாள். மற்று : அசை.

அற்றவன் - அத்தன்மையவன் எனலும் ஆம். இராமபிரானை அழகன் என்பது ; அயோத். குகப் : 42 ; சுந்தர. 197, 390, 612. கொற்றவன் மைந்த ; மனைவி தன் கணவன் பெயர் சொல்வது நம் மகளிர் வழக்க மின்மையின், 'மாமன்மைந்த !' என்ற பொருளில் அமைந்த, ஆரிய புத்திர என்று கூறும் வடமொழி வழக்கை இது பின்பற்றியது என்க. உழை - மான் ; சுந்தர ; 418, 563, 944. உண் டாடல் - விளையாடல் ; 'கொண்டலுண்டாட்டங் கொண்டான்,' 270. 'பதியிடை யவதியெய்தப் பெற்றுழி இனிதுண்டாட - தண்ட

காரணியத்திலே பத்து வருடமும் பஞ்சவடியிலே மூன்று வருடமும் போக, நின்ற ஒரு வருடமும் கிட்டிற்றே ; இந்த ஒரு வருடமும் முடிந்தவிட்த்து அயோத்திக்குக் கொண்டுபோய் விளையாட' என்பது பழையவுரை.

பி - ம். 1. அற்றன பகருமுன்னம் ; யனகனையாழியாளும்.
2. கோதின்மான் றன்னை வல்லே ; குழுவுடை.
3. தருதி னானப் ; பதியுடையவதி யெய்தல்.
4. பெற்றுழை ; தகைத்தி தென்றாள் ; பெறவிருந்தகைத்தி லென்றாள். (62)

786. ஐயநுண் மருங்கு னங்கை
யஃதுரை செய்ய வையன்
செய்வெனென் றமைய நோக்கத்
தெளிவுடைத் தம்பி செப்பும்
வெய்யவல் லரக்கர் வஞ்சம்
விரும்பினர் வினையிற் செய்த
கைதவ மானென் றண்ணல்
காணுதி கடையி னென்றான்.

ஐய நுண் மருங்குல் நங்கை-மிகவும் நுட்பமான இடையையுடைய பெண்ணிற் சிறந்தாளான பிராட்டி, அஃது உரை செய்ய - அந்த வார்த்தை சொல்ல, 'செய்வன் என்று-அவ்வாறேபற்றித் தருவேன்' என்று, ஐயன்- இராமபிரான், அமைய நோக்க- அந்த மானைக் கூர்ந்து பார்க்க, தெளிவு உடை தம்பி செப்பும் - அதைக் கண்ட, நிச்சய புத்தியுடைய தம்பியாகிய இலக்குவன் (பின்வருமாறு) சொல்வானானான் ; 'அண்ணல் - பெரியோய் ! வஞ்சம் விரும்பினர் - வஞ்சகச் செயல் புரிய விரும்பினவர்களான, வெய்ய வல் அரக்கர் - கொடிய வலிய இராக்கதர்கள், வினையில் செய்த - சூதாகச்செய்த, கைதவம் மான் என்று - மாய மான் இஃது என்று, கடையின் காணுதி - நீவிர் முடிவிற் காண்பீர்,' என்றான் - என்று கூறினான்.

ஐயநுண் : ஐயத்துக்கிடமான நுண்ணிய என்றும் பொருள் கொள்ளலாம். அமையம் நோக்க, அதனைப் பிடித்தற்குரிய ஏற்ற பொழுதை ஆராய எனலும் ஆம். அண்ணல் ; ஆண்பாற் சிறப்புப்பெயர் ; இங்கு அண்மை விளியில் வந்துள்ளது. நோக்கத் தெளிவு உடைத் தம்பி என்று கூட்டிப் பொருள் காணலும் ஆம். இவ்வாறு கூறியதால், இராமபிரான் அன்பு வயப்பட்டு

நோக்கத் தெளிவிழந்திருந்தமை குறிப்பிடப் பெற்றது என்க. கைதவம் - மாயம் ; வஞ்சகம். 771.

பி - ம். 2. செய்திறமையை......யிளயல் ; அமையநோக்கித் தெளிவுடை, தெளிவுடைச் செம்மல் சொல்லும், தெரிவுடைத் தம்பி செப்பும் ; செம்மல் செப்பும்.

3. வரக்கர் நெஞ்சம் விரும்பிட வினையிற்செய்த ; வெய்யவே யரக்கர், வெய்யவே யரக்கர் நெஞ்சம் ; விரும்பினர் ;

4. மானென்றெண்ணல். (63)

787. மாயமேன் மடியு மென்றன்
வாளியின் மடிந்த போது
காய்சினத் தவரைக் கொன்று
கடன்கழித் தோமு மாதும்
தூயதேற் பற்றிக் கோடுஞ்
சொல்லிய விரண்டி னொன்று
ஏயதே புரிது மென்று
னிமையவ ரிடுக்கண் டீர்ப்பான்.

இமையவர் இடுக்கண் தீர்ப்பான் - தேவர்க்கு அரக்கர்களால் ஏற்பட்டுள்ள துன்பத்தை நீக்க அவதரித்தவனான இராமபிரான், (தம்பியை நோக்கி), ‘ மாயமேல் - நீ கூறுவதுபோல இது மாய மான் ஆகுமேல், என் தன் வாளியின் - என் அம்பினால், மடியும் - இஃது இறந்துபடும் ; மடிந்தபோது-அவ்வாறு இறந்த காலை, காய் சினத்து அவரை கொன்று - வருத்தும் கோபத்தோடு கூடிய அவ்வரக்கரைக்கொன்று, கடன் கழித்தோமும் ஆதும் - நம் கடமையைத் தீர்த்தவர்களாகவும் ஆவோம் ; தூயதேல் - அவ்வாறின்றி அது இயல்பான நல்ல மானே ஆகுமானால், பற்றி கோடும் - பிடித்துக் கொண்டுவருவோம் ; சொல்லிய இரண்டின் ஒன்று - மேற்கூறிய இரண்டு வகையில் ஒன்றை, ஏயது ஏ புரிதும் என்றான் - எது பொருத்தமானதோ அதனையே நாம் செய்வோம் ’ என்று கூறினான்.

இமையவர் இடுக்கண் தீர்ப்பான் : அவதார இரகசியம் இங்கும் அறிவுறுத்தப் பெற்றது ; சர்வஞ்ஞனான இராம்பிரான் மானின் உண்மை காணத் தவறினமைக்குக் காரணமும் காட்டியவாறும். கடன், முன் தேவர்களுக்கும், பின் தண்டகாரணியத்தில்

முனிவர்களுக்கும் உறுதியளித்த கடமை. கழித்தோமும்; உம்மை எதிரது தழுவிய எச்சவும்மை என்க.

பி-ம். 1. மடியுமென்கை, மடியானன்றே, மடியுமென்றே, மடிவரன்றி மடிந்தபோதிற்.
2. காய்சினத்தயரேற் பற்றிக்கொள்வேன்.
3. பற்றிக்கொண்டும்.
4. தியதேயுரைத்தி, தியதேயுரைத்தா; யுரைத்ததென்றான்; தேவரையிடுக்கண் தீர்ப்பான். (64)

788. பின்னின்ரு ரெனைய ரென்று
முணர்கிலெம் பிடித்த மாயம்
என்னென்றுந் தெரித றேற்ரும்
யாவதீ தென்று மோராம்
முன்னின்ற முறையி னின்ருர்
முனிந்துள வேட்ட முற்றல்
பொன்னின்ற வயிரத் தோளாய்
புகழுடைத் தாமன் றென்ருன்.

(மேலும் இலக்குவன் இராமபிரானை நோக்கி), 'பொன் நின்ற வயிரம் தோளாய்-அழகு தங்கி நின்ற உறுதியான தோள்களையுடைய பெருமானே! பின் நின்ருர் எனையர் என்றும் உணர்கிலெம் - இந்த மானை முன்னே விட்டுப் பின்னே நின்ற பகைவர்கள் எத்தன்மையர் என்றும் அறிந்தோமல்லோம்; பிடித்த மாயம் என் என்றும்-அவர்கள் உறுதியாகக் கொண்ட வஞ்சகச் செயல் எத்தன்மைத்தென்றும், தெளிதல் தேற்ரும்-தெளிவுடையோமும் அல்லோம்; ஈது யாவது என்றும் ஓராம்-இந்த மான் யாது என்றும் உணர்ந்தோமல்லோம்; (அன்றியும்), முன் நின்ற - வெகுகாலமாய் நிலைபெற்று நின்ற, முறையின் நின்ருர் - நீதி முறை வழியே நின்ற பெரியோர்கள், முனிந்து உள - வெறுத்து விலக்கியுள்ள, வேட்டம் முற்றல் - வேட்டையில் உறுதி கொள்ளுதல், புகழ் உடைத்து ஆம் அன்று - புகழையுடைய செயல் ஆகாது' என்ருன் - என்று கூறினன்.

பொன் நின்ற - திருமகள் தங்கி நின்ற என்னலும் ஒன்றும்; இனி, பொன்னிற் பதிப்பிக்கப்பெற்ற வயிரமணிகள் விளங்குந் தோள்களையுடையவனே, என்ருரும் உளர்; அது வனவாஸத்தில் உள்ள நிலைக்கு ஏற்காது. எனையர் - எத்தனைபேர் என்றும் பொருள் கொள்ளலாம். மாயம்-இந்த மான் கொண்ட மாயம் என்றும் கொள்வர்.

வேட்டம் - வேட்டை ; வேட்டமாடுதல் விலக்கற் பாலதான விய சனங்களில் ஒன்று என்று ஆன்றோரால் கூறப்பெற்றுள்ளது ; விய சனங்களாவன ; "வேட்டங் கடுஞ்சொன் மிகுதண்டஞ் சூதுபொரு, ளிட்டங்கட் காமமோ டேழு" என்றாராதலின்; (குறள். 566. பரி. உரை); பு. வெ. 225. உரை. வேட்டையாடுதலைப்பற்றி ஆசிரியர் கொண்ட கருத்து இங்கே விளங்குகிறது. தண்டகாரணிய வாசத்தில் இராம பிரான் எங்கேனும் வேட்டையாடினனென்றாவது, புலால் உண்டான் என்றாவது கம்பநாட்டாழ்வார் இந்நூலில் எங்கும் கூறாமையும் அவர் கருத்தை வலியுறுத்துவது காண்க.

பி - ம். 1. ரினையரென்றும், ரெனையரென்றும், ரெயரோயென்றும்.
2. என்னின்று, என்றென்றுந் ; தெளிதலில்லோம், தெளித ரேற்றும் ; யாவதொன்றுந்.
3. முன்னின்றார், முன்னென்று, முன்னின்று முடியச் செய்தார்; மறையினின்றார் முனிந்துள.
4. பொருவிற்றோளாய் ; புகழுடைத்தன்றாமென்றான். (65)

789. பகையுடை யரக்க ரென்றும்
பலரென்றும் பயிலு மாயம்
மிகையுடைத் தென்றும் பூண்ட
விரதத்தை விடுது மென்றல்
நகையுடைத் தாகு மன்றே
யாதலி னலனே யென்னத்
தகையுடைத் தம்பிக் கந்நாட்
சதுமுகன் றாதை சொன்னான்.

'(நீ சொல்லுகிறபடி), பகை உடை அரக்கர் என்றும் - பகை மையை இயல்பாய்க்கொண்ட இராக்கதர்கள் என்று நாம் திண்ண மாக அறியும்போதும், பலர் என்றும் - அவர்கள் பலராவார் என்று உணரும்போதும், பயிலும் மாயம் மிகையுடைத்து என்றும் - அவர் கள் புரியும் மாயவினை அளவு மீறியது என்று கண்டபோதும் (நாம் அவர்களைக் கொல்லாமல் தயங்குவது), பூண்ட விரதத்தை விடுதும் என்றல் - அரக்கர்களைக் கொன்று அறத்தைக் காப்பதாக நாம் மேற்கொண்ட சங்கற்பத்தைக் கைவிடுவோம் என்று கூறுத லாகும் ; (அவ்வாறு நிகழ்வது), நகை உடைத்து ஆகும் அன்றே - (அது) பரிகாசத்திற்கு இடமுடையதாகும் அன்றோ? ஆதலின் - ஆகையால், நலனே என்ன - நான் மேற்கொண்ட இச்செயல்

(அதாவது, தூய மானுல் பிடித்துவரவும், மாயமானுல் கொல்ல எண்ணுவதும்) நல்லதே' என்று, அ நாள் - அப்பொழுது, சதுமுகன் தாதை சொன்னுன் - நான்முகனுகிய பிரமதேவனுக்குத் தந்தையாகிய இராமபிரான் (தன் தம்பிக்குக்) கூறினுன்.

பூண்டவிரதம்; தண்டகாரணிய முனிவர்களுக்கு அபயம் அளித்தபோது கூறிய உறுதிமொழி. இலக்குவன் கூறிய தடைகளையே ஒப்புக்கொண்டு, அக்காரணத்துக்காகவே தான் செல்லுதல் இன்றியமையாதது என்று இராமபிரான் கூறினுன் என்க. பகையரக்கர் என்றறிந்து வாளாவிருத்தல் விருத பங்கமாகும் என்பது கருத்து. நாள் - காலமும் ஆம். சது : சதுர் என்ற வடசொல்லின் சிதைவு. சதுமுகன்ருதை; நான்முகனுகிய பிரமதேவனைத் தன் நாபியினின்றும் ஈன்ற திருமாலே இராமபிரானுதலின்; 53. 774; அயோத். குகப் : 65; உயுத்த. வீடணனடைக்கலப் : 138 : நாகபாசப் : 149.

பி-ம். 1. பயிலுமாயை.
2. தென்று நம்பால் வீரத்தை விடுதுமென்னில்; மிகவுடைத்தொன்றும்; தொன்றும் பூண்ட.
3. வீராயாதலினலமென்றென்னத்; யாதலனன்றீதென்னு; நன்றீதென்னத்; நலமேயென்னுத்; நலமேதெண்ணுத்; நவையேதென்னத்.
4. தம்பிக்கன்று; ருதை சொல்வான். (66)

790. அடுத்தவு மெண்ணிச் செய்த
லண்ணலே யமைதி யன்ருே
விடுத்திதன் பின்னின் ருர்கள்
பலருள ரெனினும் வில்லால்
தொடுத்துவெம் பகழி தூவித்
தொடர்ந்தனென் விரைந்து சென்று
படுக்குவெ னதுவன் ருகிற்
பற்றினன் கொணர்வெ னென்ருன்.

(அச்சொற்களைக் கேட்ட இலக்குவன் இராமபிரானை நோக்கி), 'அண்ணலே - பெரியோனே! அடுத்தவும் எண்ணி செய்தல் - நம்மிடம் வந்து நெருங்கிய காரியத்தையும், எண்ணி செய்தல் - முன்னதாக ஆராய்ந்து செய்தல், அமைதி அன்ருே - பொருத்தமுடைய தல்லவோ? (ஆதலில்), விடுத்து - (இம்மானை முன்னுக நம் முன்) வரவிட்டு, இதன்பின் நின்ருர்கள்-இதன் பின்னே நின்றபகை

வர்கள், பலர் உளர் எனினும்-பலபேர் உள்ளார்ஆனாலும், வெம் பகழி வில்லால் தொடுத்து தூவி - கொடிய அம்புகளை என் வில்லிற்பூட்டி அவர்கள்மீது சொரிந்து, தொடர்ந்தனென் விரைந்து சென்று - அவர்களைப் பின்பற்றி வேகமாய்ச்சென்று, படுக்குவென் - அழிப் பேன் ; அது அன்று ஆகில் - அது மாயமான் இல்லை ஆனால், பற்றினன் கொணர்வென் - அதனைப் பிடித்து நானே கொண்டு வருவேன் ', என்றான் - என்று கூறினான்.

படுக்குவென் பற்றினன் : இவை, முற்றெச்சங்கள். எண்ணிச் செய்தல்; 'எண்ணித் துணிக கருமம் துணிந்தபி, னெண்ணுவ மென்ப திழுக்கு ' (குறள், 467). என்றதைப் பின்பற்றிக் கூறியதாம். இச் செய்யுளில், இலக்குவன் தானேமானின் பின் போவதாகக் கூறினன். இக்கருத்து முதனூலி லில்லை.

பி - ம். 1. அடுத்தவு, அடுக்குமதெ.
2. விடுத்தயல், விருத்திதனயனின்றார்கள்.
3. துரந்தியான் விரைந்து ; விரைநது சுற்றிப்.
4. பற்றினன் வருவெ, பற்றியே, பற்றிநான். (67)

பிராட்டி பின்னும் வற்புறுத்த, இராமபிரான் மானைப் பிடிக்க ஏகுதல். 791–4.

791. ஆயிடை யன்ன மன்னா ளமுதுகுத் தனைய செய்ய
வாயிடை மழலை யின்சொற் கிளியினுங் குழறி மாழ்கி
நாயக நீயே பற்றி நல்கலை போலு மென்னாச்
சேயரிக் குவளை முத்தஞ் சிந்துபு சீறிப் போனாள்.

அ இடை - அந்தச் சமயத்தில், அன்னம் அன்னாள் - அன்னப் புள் போன்ற பிராட்டி, மாழ்கி - வருத்தமேலிட்டு, அமுது உகுத்து அனைய - அமிர்தத்தைச் சிந்தினது போன்றவாக, செய்ய வாய் இடை - (தன்) சிவந்த வாயினிமிடமிருந்து, மழலை இன் சொல் - இனிமையான மழலைச் சொற்களை, கிளியினில் குழறி - கிளியைவிட அழகாகக் கொஞ்சிப்பேசி, மாழ்கி - மயங்கிச் சோர்ந்து, 'நாயக-தலைவ! நீயே பற்றி நல்கலை போலும் - நீவிரே (சென்று) அதனைப் பிடித்து வந்து எனக்குத் தரமாட்டீர் போலும்!' என்னா - என்று சொல்லி, சேய் அரி குவளை முத்தம் சிந்துபு - சிவந்த கோடுகளையுடைய நீலோற்பல மலர் போன்ற தன் கண்களினின்றும் முத்துக்கள் போன்ற கண்ணீர்த் துளிகளைச் சிந்திக்கொண்டு, சீறி போனாள் - கோபித்துப் பன்னசாலையை நோக்கிச் சென்றாள்.

ஆயிடை : தூக்கிற் சுட்டு நீண்டு, யகர வுடன்படுமெய் தோன்றிற்று; (நன். சூ.192.) "அமு துகுத்தனைய.........கிளியினுங்குழறி" ஒப்பு. 'அஞ்சொற்க ளமுதி லள்ளிக் கொண்டவள்', (623); "அஞ்சொற்கள் கிள்ளைக்கெல்லா மருளினு ளழகை மாந்தி' (பால. கோலங்காண் : 10). குவளை - பிராட்டியின் கண்களுக்கும், முத்தம் அவள் கண்ணீர்த் துளிகளுக்கும் உவமையாகுபெயர்களாய் வந்தன. மாழ்குதல் - வருத்தத்தால் மயங்கிச் சோர்தல்; சுந்தர. 988.

பி-ம். 1. கிளியினிற் குழறி, கனியினிற் குழறி, கனியினுங் கழறி.
4. சிந்துவ சிதறிப். (68)

792, போனவள் புலவி நோக்கிப்
புரவலன் பொலன்கொ டாராய்
மானிது நானே பற்றி
வல்லையின் வருவெ னீயிக்
கானியன் மயிலன் னாளைக்
காத்தனை யிருத்தி யென்னா
வேனகு சரமும் வில்லும்
வாங்கினன் விரைய லுற்றான்.

போனவள் புலவி நோக்கி - அவ்வாறு சென்ற பிராட்டியின் பிணக்கைப் பார்த்து, புரவலன் - காத்தற் றொழிலில் வல்ல இராம பிரான் (இலக்குவனை நோக்கி), 'பொலன் கொள் தாராய் - அழகிய மாலை அணிந்தவனே! மான் இது - இந்த மானை, நானே பற்றி - நானே போய்ப் பிடித்துக்கொண்டு, வல்லையில் - விரைவில், வருவென் - வருவேன்; நீ இ கான் இயல் மயில் அன்னாளை - நீ இந்த வனத்தில் உலாவும் மயில்போன்ற சீதையை, காத்தனை இருத்தி - பாதுகாத்துக்கொண் டிருப்பாயாக!' என்னா - என்று கூறி, வேல் நகு சரமும் - (தன்) வேல் போன்ற அம்புகளையும், வில்லும், வில்லையும், வாங்கினன் - பெற்றுக்கொண்டு, விரையல் உற்றான் - விரைந்து செல்லத் தொடங்கினான்.

பொலன் கொள் தாராய் : உபசார வழக்கு. கான்பயில் மயில்; சீதைக்கு, மயில்; பால. கோலங்காண் : 18; அயோத். சித்திரகூடப் : 1, 2; 4. இயலுதல் - சஞ்சரித்தல். 'பீலி மஞ்ஞையி னியலி' (பெரும்பாண். 331.) வேல் நகு : நகு, உவம வாசகம்; இனி வேலைப் பழித்துச் சிறந்து விளங்கும் அம்பு எனலும் ஏற்கும். வாங்கினன் -

இளைய பெருமாள் கொடுக்க' வாங்கிக்கொண்டவனாய், என்னலும் ஒன்றும். வாங்கினன் : முற்றெச்சம். 'நானே பற்றி வருவன்' என்றது, இலக்குவன் தான் செல்வதாகக் கூறியதை (790) மறுத்தபடி ; இவ்வாறு கூறியது பிராட்டியை மகிழ்விக்க என்க.

பி-ம். 1. போனவள் புல்லி னோக்கிப்; புங்கவன்; பொலன்மானென்ன.

2. வல்லையிற் கொணர்வ னீயிக்; வருவனன்றே; வருவனென்றே.

3. மயிலினாளைக்; காத்தியவணிருத்தி, காத்தினிதிருத்தி, காத்தினீ யிருத்தி.

இராமபிரான் சொற்படி இலக்குவன் சீதையைக் காத்து நிற்றல்.

793. முன்னமு மானாய் வந்த மூவரி லொருவன் போனான்
அன்னமா ரீச னென்றே யயிர்த்தனெ னிதனை யையா
இன்னமுங் காண்டி வாழி யேகென விருகை கூப்பிப்
பொன்னனாள் புக்க சாலை காத்தனன் புறத்து நின்றான்.

(அது கண்ட இலக்குவன் இராமபிரானை நோக்கி), 'ஐயா, ஐயனே ! வாழி - வாழ்வாயாக ! முன்னமும் மானாய் வந்த - இதற்கு முன்னேயும் (இவ் வனத்தில்) மான் வேடத்துடன் வந்த, மூவரில் - மூன்று அரக்கர்களுள், ஒருவன் போனான் - ஒருவன் நம் அம்பால் அடிபட்டிறவாமல் தப்பிப் பிழைத்து போனான் ; அன்ன மாரீசன் என்றே - அவ்வாறு தப்பிப் போன மாரீசன் இவன் என்றே, இதனை அயிர்த்தனென் - இந்த மானை நான் சந்தேகிக்கின்றேன் ; இன்னமும் காண்டி - இனி நீவிரும் (இவ்வுண்மை) கண்டுகொள்வீர்; ஏகு என - செல்வீராக !' என்று கூறி, இரு கைகூப்பி - தன்னிரு கைகளையும் குவித்து வணங்கி, பொன் அனாள் புக்க சாலை - திருமகள் போன்ற பிராட்டி போய் அடைந்த பன்னசாலையை, புறத்து காத்தனன் நின்றான் - வெளியே நின்று (பிராட்டியைக்) காத்துக்கொண்டிருந்தான். (வாழி : அசை)

முன்னமும் மாரீசன் ; 758, 766, உரைகளைக் காண்க. வாழி ; அசையும் ஆம். இலக்குவன் பன்னசாலையின் புறத்தே யிருந்துகாத்து வந்தமை ; 310 ; இராம்பிரான் இறுதிக் கட்டளை கொடுத்தபின்னும்

இலக்குவன் கூறியதாக இச் செய்யுள் அமைந்துள்ளது. இச் செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. மகம்வாய் வந்த, மகவாய் வந்த, மாய வந்த, மாவாய் வந்த.
2. ளியவீன லயைய.
3. இன்னமு முடிவிற் காண்டி; யீதென விருகை.
4. புகுந்த சாலே கரத்தொரு புறத்தி னின்முன்; ளிருக்குஞ்சாலே.

794. மந்திரத் திளேயோன் சொன்ன
வாய்மொழி மனத்துட் கொள்ளான்
சந்திரற் குவமை சான்ற
வதனத்தாள் சலத்தை நோக்கிச்
சிந்துரப் பவழச் செவ்வாய்
முறுவலன் சிகரச் செவ்விச்
சுந்தரத் தோளி ஞனம்
மானினைத் தொடர லுற்ருன்.

சிகர செவ்வி - மலேச் சிகரங்கள் போன்று சிறப்பமைந்த, சுந்தர தோளிஞன் - அழகிய தோள்களேயுடைய இராமபிரான், மந்திரத்து இளேயோன் - சொன்ன ஆலோசனையிஞல் தம்பியாகிய இலக்குவன் எடுத்துக் கூறிய, வாய் மொழி - உண்மையான உறுதி மொழிகளே, மனத்து உள் கொள்ளான் - தன் மனத்தினுள் ஏற்றுக் கொள்ளாதவஞய், சந்திரற்கு உவமை சான்ற - சந்திரனுக்கு உவமையாகக் கூறுவதிற் சிறந்து விளங்கிய, வதனத்தாள் - திருமுகத்தையுடைய பிராட்டியின், சலத்தை நோக்கி - கோபத்தைக் கருதி, சிந்துரம் பவழ செம் வாய் முறுவலன் - செந்நிறமான பவழம் போன்று சிவந்த வாயினிடத்துக் கொண்ட புன்னகையுடையவஞய், அ மானின தொடரல் உற்ருன் - அந்த மானேப் பின்பற்றிச் செல்லத் தொடங்கினன்.

வாய்மொழி : உறுதிச் சொல்; சத்திய வசனம் என்பது; அயோத். சித்திரகூடப் : *55* ; புறநா. *388 : 9* ; மணி. *11* : *68*. சந்திரற்கு உவமை சான்ற ; உபமேயத்தினும் உபமானம் சிறந்தது; சந்திரனுக்கு உபமானமாகக் கூறத் தக்கவையுள் பிராட்டி திருமுகமே சிறந்ததாகக் கொள்ளத்தக்கது என்பதாம். சலம் - மாறுபாடு அல்லது பிடிவாதமும் ஆம் ; பால. மிதிலேக். *57* ; கடிமணப். *58* ; அயோத். மந்திரப். *72*; சுந்தர. *634*.

பி - ம். 1. மனத்துக் கொள்ளான், மனத்திற் கொள்ளான்.
2. சலத்தை யுன்னி. *(71)*

795. மிதித்தது மெல்ல மெல்ல வெறித்தது வெருவி மீதில்
குதித்தது செவியை நீட்டிக் குரபத முரத்தைக் கூட்டி
உதித்தெழு மூதை யுள்ள மென்றிவை யுருவச் செல்லும்
கதிக்கொரு கல்வி வேறே காட்டுவ தொத்த தன்றே.

மெல்ல மெல்ல மிதித்தது - (அந்த மாயமான் முதலில்) மெதுவாக அடியெடுத்து நடந்து சென்றது; வெறித்தது - வெறித்துப் பார்த்தது; வெருவி மீதில் குதித்தது - அச்சங்கொண்டதுபோல, மேலே தாவிக் குதித்தது; செவியை நீட்டி - தன் காதுகளை நெறித்து வெளியே நீட்டிக்கொண்டு, குரபதம் உரத்தை கூட்டி - குளம்போடு கூடிய கால்களை மார்பில் ஒட்டினாற்போல மடக்கி வைத்துக்கொண்டு, உதித்து எழும் ஊதை உள்ளம் என்று இவை - தோன்றி மேற் கிளம்பி எழும் காற்று, மனம் என்ற இவற்றை, உருவ செல்லும் - ஊடுருவிச் செல்லும், கதிக்கு - செலவிற்கு, ஒரு கல்வி வேறே காட்டியது ஒத்தது - கற்றறிய வேண்டிய ஒரு புதிய பாடத்தைத் தனிப்பட்ட முறையில் காட்டியதை ஒத்து, ஓட்டம் எடுத்தது. அன்று, ஏ : ஈற்றசைகள்.

வெறித்தல் - விறைப்பாக அசைவற்று நிற்றலும் ஆம். கிட்கிந்தா. வாலிவதைப்: 30; சுந்தர. 1015. குரபதம் - குளப்படி. உதித்தெழும் ஊதை, உள்ளம் என்றவை, வாயுவேகம் மனோவேகம் என்று நூல்கள் சொல்வனவாம். காற்று, மனம் இவை மானின் வேகத்திற்கு உவமை; அவற்றையும் கடந்த வேகத்தில் சென்றது என்க. கதிக்கு ஒரு கல்வி வேறே காட்டுவது ஒத்தது; அதன் ஒவ்வொரு வேக நடைக்கும் ஒவ்வொரு புதிய சாஸ்திரம் தோற்றுவித்ததை ஒத்தது எனலாம். 'மொழிக்கொரு பசப்பும்..............விழிக்கொரு சிமிட்டும்'; (குற்றாலக்குற.) என்றது போல.

பி - ம். 1. வெருவிமீதாய்க்; மீதாக்.

2. குரப்பத வுரத்தைக்கூட்டி, குரகத வுரத்தைக் கூட்டி, குரவிரு பதத்தைக் கூட்டி.

3. யுள்ளமென்றிவை விலங்குக் குள்ள.

4. காட்டிய தொத்த தன்றே. (72)

796. நீட்டினு னுலக மூன்று
நின்றெடுத் தளந்த பாதம்
மீட்டுந்தா னீட்டற் கம்மா
வேறுமோ ரண்ட முண்டோ
ஓட்டினான் றொடர்ந்த தென்னை
யொழிவற நிறைந்த தன்மை
காட்டினு னன்று சென்ற
கடுமையார் கணிக்கற் பாலார்.

இராமபிரான், நின்று எடுத்து - முன் திரிவிக்கிரமனாகி விசுவரூபம் எடுத்து நின்று, மூன்று உலகம் - சுவர்க்க மத்திய பாதலம் என்றும் மூவுலகங்களையும், அளந்த பாதம் - அளந்த தன் திருவடிகளை, நீட்டினான் (இப்பொழுது மானின் பின்னே) நீட்டி நடப்பதானான்; மீட்டும் நீட்டற்கு - மறுபடியும் நீட்டி நடப்பதற்கு, வேறும் ஓர் அண்டம் உண்டோ - இந்த அண்டத்தைத் தவிர, வேறாக ஓர் அண்டம் உளதோ? (இல்லையே என்றபடி); (அவ்வாறாகவும்), தொடர்ந்து ஓடினான் என்னை? - அப்பெருமான் அந்த மானைப் பின் தொடர்ந்து ஓடினது தான் என்ன காரணம்? (அஃதென்னையெனில்), ஒழிவு அற நிறைந்த தன்மை - ஓரிடமும் ஒழிவு என்பது இன்றி, எங்கும் தான் நிறைந்து விளங்கும் (அதாவது ஸர்வவியாபியான பரம் பொருள் தானே என்னும்) தன்மையை, காட்டினான் - யாவரும் தெரியும் வண்ணம் காட்டினான் என்றே கொள்ளத்தக்கது; அன்று சென்ற கடுமையை - அன்று அப்பெருமான் அந்த மானைத் தொடர்ந்து சென்ற வேகத்தை, ஆர் கணிக்கற்பாலார் - அளவிட்டுக் கூற வல்லவர் யாரேயுள்ளார்? (ஒருவரும் இலர் என்றபடி). அம்மா: வியப்பையுணர்த்தும் இடைச்சொல்.

ஓட்டினான்: ஓடினான் என்பது எதுகை நோக்கி ஒட்டினான் என விரிந்து நின்றது; இனி அந்த மானை ஓடச் செய்து தான் தொடர்ந்தான் என்று பொருள் கொள்ளலும் ஆம். நின்றெடுத்தளந்த பாதம்- மாவலிபால் வாமனனாய்ச் சென்று மூவடி மண் இரந்து நின்ற அந் நிலையிலேயே, திரிவிக்கிரமனாய் விசுபரூபமெடுத்து அங்கு நின்றே மூவுலகுமளந்த, என்றும் பொருள் கொள்ளலாம்; இவ்வரிய செயல், பால. வேள்விப்படலத்தில் 35-37-ம் செய்யுள்களால் நன்கு விளக்கப் பெற்றமை காண்க. இச்செய்யுளால் இராமபிரான் எங்கும் நிறைந்த பரம்பொருளாகிய திருமாலே என்பதை விளங்க வைத்ததாகும்.

'ஒட்டினுன் என்பதற்கு, ஓடினுன் என்று பொருள். பெருமான் ஓடினுன் என்ருல், முன் தன் இரண்டடிக்குப் போதாத இந்த அண்டம் அன்றி வேறோர் அண்டத்திலே சென்ருன் என்ருல் அல்லவோ ஓடினுன் என்னலாம்? ஆனல் இப்பொழுது மானைத் தொடர்ந்ததோ என்ருல், தான் அந்தர்யாமியாய் எங்கும் நிறைந்து நின்றதை அறியச் செய்ததேயன்றி, மான் பின் போனுன் அல்லன். இப்படி, சிறுத்த இவ் வண்டத்திலே அவன் ஓட இட முண்டோ என்பது பொருள்' என்பன பழையவுரை. இச்செய்யுள், சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் கருத்து.

பி-ம். 1. நீட்டினுல்.

2. மீட்டுநா முரைத்தற் கம்மா, மீட்டுதா னிட்டற்கு, மீட்டுந்தா னுரைத்தற்கு, மீட்டுந்தா னளத்திற்கு, மீட்டுந்தா னுகைத்தற்கு.

3. ஒட்டினுற்ருெடர்ந்த; தொடர்ந்ததன்னை, தொடர்ந்துதன்னை, தொடர்ந்த வென்று மொழிவற நினைந்த.

4. காட்டினு னதனையன்றிக் கடுப்பையார் கணிக்கற்; சென்ற கடிமை, சென்றகடுப்பையார் தணிக்கப்பாலார், தணிக்கற் பாலார். (73)

797. குன்றிடை யிவரு மேகக் குழுவிடைக் குதிக்குங் கூடச்
சென்றிடி லகலுந் தாழிற் றீண்டலாந் தன்மைத் தாகும்
நின்றதே போல நீங்கு நிதிவழி நேய நீட்டு
மன்றலங் கோதை மாதர் மனமெனத் தகையத் தம்மான்.

அ மான் - அந்த மாயமான், குன்று இடை இவரும் - மலையின் இடத்து ஏறும்; மேக குழு இடை குதிக்கும் - மேகக் கூட்டத்தின் இடையே போய்த் தாவிக் குதிக்கும்; கூட சென்றிடில் - அதனோடு கூடப் போனுல், அகலும் - வெகுதூரம் அகன்று அப்பாற் போய் விடும்; தாழில் - சற்றுத் தாமதித்து நின்ருல், தீண்டல் ஆம் தன்மைத்து ஆகும் - கையால் பற்றக்கூடிய நிலையில் அருகே வந்து நிற்கும்; நின்றதே போல நீங்கும் - அருகே நின்றதுபோல இருந்து உடனே நீங்கி அப்பாற் செல்லும்; (ஆதலின் அது), நிதிவழி நேயம் நீட்டும் - செல்வம் உள்ள வழியில் தம் ஆசையைச் செலுத்தும், மன்றல் அம் கோதை மாதர் மனம் என - மணமுடைய அழகிய மாலை யணிந்த விலைமகளிர் மனமே என்று சொல்லக்கூடிய, தகையத்து - தன்மையுடையதாயிற்று.

விலைமகளிருடைய மனம் ஓரிடம் நில்லாது, பணமுடையவர்களை நாடி அலைந்துகொண்டே யிருக்கும்; இந்த மானும் அவ்விலை மகளிரைப்போலப் பாசாங்குகள் பலசெய்து ஓரிடத்தும் நில்லாமல் அவ்வனத்தில் எங்கும் திரிந்தது; என்க. விலைமாதர் மனம் ஒரு வழி நிலைத்திராது என்பது 768; பால. ஆற்றுப்: 31; சீவக. 1212, மானின் வேகத்திற்குப் பரத்தையர் மனம் உவமையாம்; 768.

பி-ம். 1. குதிக்குங் கூடிச்.

2. தகைமைத் தாகும்.

3. நேச நீட்டும்.

4. போயிற் றம்மா; போயிற் றம்மான்; போய தம்மான் (74)

798. காயம்வே றாகிச் செய்யுங் கருமம்வே றாயிற் றன்றே
ஏயுமே யென்னின் முன்ன மெண்ணமே யிளவற் குண்டே
ஆயுமெய் யறனிலாத வரக்கரா னவர்கள் செய்த
மாயமே யாய தேயான் வருந்திய தென்றான் வள்ளல்.

'காயம் வேறு - ஆகி இந்த மானின் உடலே இயற்கைக்கு மாறுபட்டதாகி, கருமம் வேறு ஆயிற்று - இது செய்யும் செயலும் முற்றும் மாறியுள்ளது அன்றோ - அல்லவோ? என்னின் - இஃது உண்மையானால், ஏயும் ஏ - பொருந்துமோ? முன்னம் - முன்னமேயே, எண்ணமே - இந்த எண்ணமே, இளவற்கு உண்டே - தம்பிக்கு உள்ளதே! (ஆதலின்), யான் வருந்தியது - நான் இதுகாறும் இது பற்றி, வருத்தத்திற்குள்ளானது, ஆயும் மெய் அறன் இலாத - ஆராய்ந்து நோக்கும் உண்மை, அறம் என்பவை இல்லாத, அரக்கர் ஆனவர் செய்த - இராக்கதர் என்பார் செய்த, மாயமே ஆயதே - மாயமாக முடிந்ததேயாகும்' என்றான் வள்ளல் - என்று கூறி வருந்திக் கூறிக்கொண்டான் இராமபிரானாகிய வள்ளல்.

ஏயுமே, ஆகுமே, உண்டே, ஆயதே; என்பனவற்றில் உள்ள ஈற்று ஏகாரங்கள் இரக்கத்தையும் வருத்தத்தையும் உணர்த்தி நின்ற இடைச்சொற்கள். இராமபிரானை வள்ளல் என்று கூறுவது இந்நூலில் பெருவழக்காகும். இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

இச்செய்யுள் ஒரு சுவடியில் பின்வருமாறு மாறிக்காண்கிறது :-

காயம் வேருகிற் செய்யுங் கருமமும் வேரு யெண்ணற்
கேயுமென் றிளையோன் முன்ன மிசைத்தசொல் லுறுதி
ஓயுமே லுறுத்தல் செல்லா தொழித்தலா லரக்கர் செய்த
மால்மற் றிதனல் வீணே வருந்தின னென்ன வள்ளல்.

பி - ம். 1. ருகிற்றன்றே ; வேருகிச் செல்லும் வேருகிச் செய்யும்.
2. மெண்ணலே யிளயற், மெண்ணமே லின்னமுண்டே.
3. யுறுதல் செல்லா வரக்க ; ஆயுமே யறமில்லாத, ஆயுமெய்யறி வில்லாத.
4. யாயதேனாம், மாயமே ஞாயமோதான், ஞாயமோ யான், மாய மே யாய மேனான், மாயமே யாறல் மேனுள், மாயமா ருகு மென்ன. (75)

### வேறு

மாரீசன் தப்பி ஓட முயல, இராமபிரான் அவனை வீழ்த்தியது 799–801.

799. பற்று வானினி யல்லன் பகழியால்
செற்று வானிற் செலுத்தலுற் றுனென
மற்ற மாய வரக்கன் மனக்கொளா
உற்ற வேகத்தி னும்பரி னோங்கினுன்.

அ மாய அரக்கன் - மாயையில் வல்ல அந்த அரக்கனான மாரீசன், 'இனி பற்றுவான் அல்லன் - இனி இராமன் என்னைப் பிடிக்க முயல மாட்டான் ; பகழியால் செற்று - தன் அம்பால் என்னைக் கொன்று, வானில் செலுத்தல் உற்றுன் - என்னை மேலுலகு செலுத்தக் கருதியுள்ளான் ;' என - என்று, மனம் கொளா - மனத்தில் எண்ணிக் கொண்டு, உற்ற வேகத்தின் - தனக்குற்ற மிக வேகத்தோடு, உம்பரின் ஓங்கினுன் - வானில் எழும்பிச் செல்வானானுன்,

பி - ம். 2. செலுத்த லுற்றுனென, செலுத்தவனென்பதை.
3. மனங்கொளா, மனக்கொள.
4. னும்பரி னேகினுன் ; மேகத்தினும்பரின். (76)

800. அக்க ணத்தினி லையனும் வெய்யதன்
சக்க ரத்திற் றகைவரி தாயதோர்
செக்கர் மேனிப் பகழி செலுத்தினன்
புக்க தேயம்புக் கின்னுயிர் போக்கென.

அ கணத்தினில் - அதே நேரத்தில், ஐயனும் - இராமபிரானும், தன் சக்கரத்தினில் - தனது (திருமாலாய நிலையிற் கொண்டுள்ள) சுதர்சனம் என்னும் சக்கராயுதத்தைப்போல, தகைவு அரிது ஆயது - யாராலும் தடுக்க முடியாததான, ஓர் வெய்ய செக்கர் மேனி பகழி - ஒரு கொடிய சிவந்த நிறம் அமைந்த அம்பை, 'புக்க தேயம் புக்கு இன் உயிர் போக்கு என - இவன் சென்ற இடத்தைத் தொடர்ந்து சென்று இவன் இனிய உயிரை அழித்துவிடு' என்று, செலுத்தினன் - தூண்டினன்.

சக்கரத்தினில் ; சக்கராயுதத்தைவிட எனப் பொருள் கொண்டாரு முளர் ; அது அபசாரத்திற்கிடமாமென அஞ்சற்பாலது. செக்கர் மேனி அம்பு : செந்நிறமான அக்கினிக் கணையும் ஆம்.

இச்செய்யுள் ஒரு பிரதியில் இல்லை.

பி - ம். 1. ஐயனும் வெய்தெனச்.
2. தகைப்பரி தாயதோர்.
4. புக்கதென் புலத்தின் னுயிர் போக்கென. (77)

801. நெட்டி லைச்சரம் வஞ்சனை நெஞ்சுறப்
பட்ட தப்பொழு தேபகு வாயினல்
அட்ட திக்கினு மப்புற மும்புக
விட்ட ழைத்தொரு குன்றென வீழ்ந்தனன்.

நெடு இலை சரம் - நீண்டு (கூரியதான) அலகையுடைய அந்த இராமபாணம், வஞ்சனை - வஞ்சகனை அந்த மாரீசனுடைய, நெஞ்சு உற - இதயத்தில் நன்கு பொருந்த, பட்டது - போய்த் தைத்தது ; அ பொழுதே - அந்நேரத்திலேயே, பகு வாயினல் - பிளந்த தன் வாயினல், அட்ட திக்கும் அ புறமும் புக - எட்டுத் திக்குகளிலும் அவற்றிற்கு அப்பாலும் சென்று புகும்படி, அழைத்து - ('ஹா! ஸீதே! ஹா லக்ஷ்மண' என்று இராமபிரான் குரலில் உரத்த ஓசையை) வெளி யிட்டுக்கூவி அழைத்து, ஒரு குன்று என வீழ்ந்தனன் - ஒரு மலைபோலத் தன் சுய வடிவில் அவன் கீழே விழுந்தான்.

நெட்டிலைச்சரம்-நீண்ட இலைபோன்ற வடிவும் கூர்மையும் பொருந்திய அலகையுடைய அம்பு ; ஆயுதங்களின் நீண்டு அகன்று கூர்மை

யான முனைப் பாகத்தை இலை எனக் கூறுதல் மரபு. விட்டழைத்தமை 'ஹா ஸீதே! ஹா லக்ஷ்மண!' என்று இராமபிரான் தன் பெருங்குரலில் கூப்பிட்டது போல. இராமபிரான் குரலில் 'ஹாஸீதே! ஹாலக்ஷ்மண!' என்று மாரீசன் கூவியது; 804; வான்மீகம். ஆரண்ய: சர்க்கம், 47; கூர்ம, இராமன் வனம் புகு; 57; செவ். பாகவதம், 2271. அதன் விளைவு மேலே விளங்கும். பகுவாயினால், என்றதால் அவன் பெருங்குரலில் அழைத்தமை பெறப்பெற்றது. குன்றென வீழ்ந்தனன், என்றமையால், அவன் தன் சுய உருக்கொண்டமையும், அவ்வுருவின் பெருமையும் வலிமையையும் உணர்த்தியவாறும்.

பி-ம். 1. வஞ்சக னெஞ்சுறப். 2. பட்டவப் பொழுதே.
3. திக்கினுக் கப்புற, திக்கெனு மப்புற.
4. குன்றின் வீழ்ந்தனன். (78)

**இராமபிரான் மாரீசன் வஞ்சனையை அறிந்து, பிராட்டியை நினைத்துத் தன் பன்னசாலைக்கு மீளுதல் 802-806.**

802. வெய்ய வன்ற னுருவினில் வீழ்தலும்
செய்ய தன்றெனச் செப்பிய தம்பியை
ஐயன் வல்லனென் னாருயிர் வல்லனான்
உய்ய வந்தவன் வல்லனென் றுன்னினான்.

வெய்யவன் - கொடியவனான அந்த மாரீசன், தன் உரு ஒடு வீழ்தலும் - தன் சுய வடிவத்தோடு கீழே விழுந்தவுடன், (இராமபிரான்), 'செய்யது அன்று என செப்பிய - இந்த மான் நல்லதன்று அதாவது, (வஞ்சகமென்று) சொன்ன, தம்பியை - தன் தம்பியாகிய இலக்குவனை, 'ஐயன் வல்லன் - என்னப்பன் சமர்த்தன்; என் ஆர் உயிர் வல்லன் - என் அரிய உயிர் போன்றவன் சமர்த்தன்; நான் உய்ய வந்தவன் வல்லன் - நான் வாழ்வுறுவதற்கு என்பின் பிறந்தவன் சமர்த்தன்;' என்று உன்னினான் - என்று பெருமிதத்தோடு எண்ணினான்.

தன் உருவினில் வீழ்தல்; அரக்கர்களும் அசுரர்களும் தம் மாயையால் வேறு உரு எடுத்து வந்தாலும், அவர்கள் இறக்கும் பொழுது தம் சுய உருவொடு இறப்பர் என்பது; கூர்ம. இராமன் வனம்புகு: 57. இனி, ஸ்ரீ பாகவத புராணத்தில், பூதனை முதலிய அசுரர்கள் சரித நிகழ்ச்சிகளிலும் இது காணலாம். இராமபிரான் அன்பினால் இலக்குவனை ஐயன் என்பது; ஒப்பு: அயோத். கிளை கண்டு: 50; உயுத்த. பிரமாத்திரப். 206,

அவனைத் தன் ஆருயிரென்றது; ஒப்பு: 1097, 1099; சுந்தர. 39. நான் உய்யவந்தவன்; நான் துயருறாது வாழ, எனக்குத் துணையாய் நின்று பணி புரிய, என்பின் வனம் வந்தவன் எனலும் ஒன்றும்

பி-ம். 1. ஞருவினில் வீழ்தலும்; தனுவினின் வீழ்தலும்.
3. வல்லன்யான்.
4. வந்தவ னல்லனென். (79)

803. ஆசை நீளத் தரற்றினன் வீழ்ந்தவந்
நீசன் மேனியை நின்றுற நோக்கினன்
மாசின் மாதவன் வேள்வியின் வந்தமா
ரீச னேயிவ னென்பது தேறினன்.

ஆசை நீளத்து - திசையுள்ள அளவு நீளமாக, அரற்றின-வாய் விட்டுக் கதறினவனாய், வீழ்ந்த அ நீசன் மேனியை - தரையிலே விழுந்த அந்தக் கயவனான மாரீசன் உருவை, நின்று உற நோக்கினன் - (அருகிற் சென்று) நின்று இராமபிரான் நன்றாய்ப் பார்த்து, மாசு இல் மாதவன் வேள்வியின் - குற்றமற்ற பெருந்தவசியான கௌசிக முனிவர் யாக சாலையினிடத்து, வந்த மாரீசனே இவன் என்பதையும், தேறினன் - தெரிந்துகொண்டான்.

ஆசை - திசை; 948. கௌசிகர் செய்த யாகசாலையிடத்து வந்தது: (740); பால: வேள்விப்: 52.

பி-ம். 1. அரற்றிமுன் வீழ்த்திடு.
2. நேருற நோக்கினன், நின்றுறநோக்கியே.
4. னென்பதுங். (80)

804. புழைத்த வாளி யுரம்புகப் புல்லியோன்
இழைத்த மாயையி னென்குர லாலெடுத்
தழைத்த துண்டது கேட்டயர் வெய்துமால்
மழைக்கண் ணேழையென் றுள்ளம் வருந்தினன்.

'புழைத்த - துளைத்த, வாளி - என் பாணம், உரம் புக - தன் மார்பினுட் புகவும், புல்லியோன் - அற்பனான அந்த மாரீசன், இழைத்த மாயையின் - செய்த மாயையினால், என் குரலால் எடுத்து அழைத்தது உண்டு - என் குரல் போன்ற ஒலியால் சீதையையும் இலக்குவனையும், அவன் கூவி அழைத்தது உள்ளது; அது கேட்டு- அக்குரலைக்கேட்டு, மழை கண் ஏழை - மழை போல நீரைச் சொரியும் கண்களையுடைய அவள், அயர்வு எய்தும் ஆல் - (மனம்) சோர்ந்து

வருத்தமடைவளே !' என்று உள்ளம் வருந்தினன் - என்று இராம பிரான் தன் மனம் வருந்தினன்.

புழைத்தல் - துளைத்தல்; அல்லது துவாரம் செய்தல். புழை - துவாரம். மழைக்கண் - மேகம் போன்ற கருநிறமும் குளிர்ச்சி யும் பொருந்திய கண் என்னலும் ஒன்றும்; சுந்தர. 335. குறிப் புரை காண்க; குறள். 1239; மழைக் கண் ஏழை, என்றதனால் மழை போல் கண்ணீர் சொரிய விட்டிருந்த அவள் வருத்த நிலையை உணர்ந்து இராமபிரான் கூறியதும் ஆம். 801-இல் 'விட்டழைத் தது', இத்தகையதென்பது இங்கு விளக்கப்பெற்றது.

ஒரு பிரதியில், இதுவும் அடுத்த செய்யுளும் பின்னு முன்னு மாக மாறியுள்ளன.

பி - ம். 1. உழைத்தவாளி.

2. குரலாலிசைத், குரலாலிழைத்; லாலிழைத்து மாயையிலென்

குரல். 4. மழைக்கை மங்கை, மழைக்க ணங்கை. (81)

805. மாற்ற மின்னது மாயமா ரீசனென்
றேற்ற முன்னுணர்ந் தானிருந் தானென
தாற்ற றேறு மறிவின் ஞதலால்
தேற்று மாலிளை யோனெனத் தேறினன்.

இன்னது - இவ்வாறு, 'ஸீதா, லக்ஷ்மண' என்று எழுந்த, மாற்றம் - சொற்களை, முன் மாய மாரீசன் என்று - முன்பே இவன் மாயத் தன்மையுடைய மாரீசனுகும் என்று, ஏற்றம் உணர்ந் தான் இளையோன் இருந்தான் - நன்ருக உணர்ந்திருந்த இலக்குவன் இருந்துளான்; எனது ஆற்றல் தேறும் அறிவினன் - (அன்றியும், அவன்) என் வலிமையை அறியும் அறிவையுடையவன்; ஆதலால், தேற்றும் என - ஆதலால் அவன் அவளைத் தேற்றுவான் என்று எண்ணி, தேறினன்-(இராமபிரான்) மனம் தேறினவனுனன். ஆல்; அசை.

மாற்றமென்னது, என்ற பாடங் கொண்டு, 'இனிச் சொல்ல வேண்டியது யாது உள்ளது' என்று இராமபிரான் தானே கூறிக் கொண்டதாகவும் பொருள் கூறுவர்.

பி - ம். 1. மென்னிது, மென்னது, மென்னினி.
2. எற்ற கலையின் முன்னுணர்ந் தானெ(தாற்றல்); இருந்தானுக் கென் ; தானெனி லென்னுடை(யாற்ற); தேற்ற முணர்ந்தா னெனினென்னுடை, னேற்ற முணர்ந்தா.
3. யாற்றறேறு.
4. தேற்றுவானினியோ னென்றுந் தேறினன். (82)

806. மாள்வ தேதொழி லாகவந் தானலன்
சூழ்வ தோர்பொரு ளுண்டிவன் சொல்லினல்
மூள்வ தேத மதுமுடி யாமுனம்
மீள்வ தேநல னென்றவன் மீண்டனன்.

'மாள்வதே தொழிலாக வந்தான் அலன் - இவன் இவ்விடத்து என்னால் இறந்து போதலைமட்டும் தன் செயலாக நிச்சயித்து வந்தவன் அல்லன் ; (ஆதலால்), இவன் சொல்லினல் - இவன் கூவிய சொற்களால், சூழ்வது ஓர் பொருள் உண்டு - நிகழக் கூடிய ஒரு பெருந் திங்கு உள்ளது; மூள்வது ஏதம் அது முடியா முனம் - அத் தீங்கு, வந்து பற்றிக் கேடுறுத்தும் முன்னமே, மீள்வதே நலன் என்று - நான் பன்னசாலைக்குத் திரும்பிப் போவதே நல்லது' என்று, அவன் மீண்டனன் - அந்த இராமபிரான் திரும்பிச் செல்வானாயினன்.

சூழ்வதோர் பொருள் உண்டு; 'பொய்க்குர லின்று பொல்லாப் பொருள்பின்னர் பயக்கு மென்பான்' (சுந்தர. 564); "இக்குரல் இளவல் கேளா தொழிகென" இராமபிரான், தன் வில்லின் நாணொலி எழுப்பினன்" என்று பின்னர் சுந்தர. 564. கூறியது இங்குக் குறிக்கப் பெருதது காண்க.

பி - ம். 1. வாழ்வதே பொருவாக ; பொருளாக வந்தானலன்.
2. ளுண்டெனத் தோன்று நான்.
3. மூள்வதே யத்தது ; தாழ்வதே யெற்றையல் வருந்துமால்.
4. மென்றனன் மீண்டனன், னென்றயன் மீண்டனன். (83)

மாரீசன் வதைப்படலம் முற்றும்.

---

# 9. சடாயு உயிர்நீத்த படலம்

இஃது, இராவணன், பிராட்டியை அபகரித்து எடுத்துச் செல் வதையும், அப்போது, சடாயு என்னும் கழுகுக் கிறைவன் அவனை மறித்து அவனோடு போர் செய்து, அப் போரில் தன் இறகுகள் அறுப்புண்டு விழ்ந்து கிடந்து, பின் இராம லக்ஷ்மணர்கள் வர, அவர் களிடம் நிகழ்ந்த செய்தியை அறிவித்துத் தன் உயிரை விட்டுப் பரகதி யெய்திய செய்தியையும் கூறும் படலம் என்பதாம். இஃது, இராவணன் வஞ்சனை சூழ்படலம், சடாயு வதைப்படலம், என்ற இரு பிரிவுகள் பெற்றும், சடாயு மோட்சப் படலம் என்ற வேறு பெயர் பெற்றும் சில பிரதிகளில் காணப்பெறுகின்றது.

## கவிக் கூற்று

807. சங்க டுத்த தனிக்கடன் மேனியாற்
கங்க டுத்த நிலைமை யறைந்தனெம்
கொங்க டுத்த மலர்க்குழற் கொம்பனாட்
கிங்க டுத்த தகைமை யியம்புவாம்.

சங்கு அடுத்த தனி கடல் மேனியாற்கு - சங்குகள் பொருந்திய ஒப்பற்ற கடல் போன்ற நீல நிறமான திருமேனியுடைய இராமபிரானுக்கு, அங்கு அடுத்த நிலைமை அறைந்தனெம் - மானைத் தொடர்ந்து சென்ற இடத்து நிகழ்ந்த தன்மையைக் கூறினோம்; கொங்கு அடுத்த மலர் குழல் கொம்பு அனாட்கு - மணம் பொருந்திய மலர்களை யணிந்த கூந்தலையுடைய பூங்கொம்பு போன்ற பிராட்டிக்கு, இங்கு அடுத்த தகைமை - இப் பன்னக சாலையில் நேர்ந்த நிகழ்ச்சியின் தன்மையை, இயம்புவாம் - இனிச் சொல்லுவோம்.

ஒரு பிரதியில் இச் செய்யுளே இல்லாமலும், சில பிரதிகளில் இது முந்தின படலத்தின் இறுதிச் செய்யுளாக அமைந்தும் காணப் படுகின்றது. இச் செய்யுள் கவிக்கூற்று.

சங்கடுத்த தனிக்கடல் மேனியான் - பாஞ்சசன்யம் என்னும் சங்கு தன் கரத்தில் பொருந்த ஏந்தியுள்ள ஒப்பற்ற கடல் போன்ற மேனியையுடைய திருமாலாகிய இராமபிரானுக்கு என விரித்துப் பொருள் கொள்வாரும் உளர். இராமபிரான் மேனிக்குக் கருங்கடல்; பரல. குலமுறை : *20* ; கடிமணப் : *63*; அயோத். கங்கைப் : *1*, மலர்க்

குழற் கொம்பு - இல்பொருளுவமை. கொங்கு - தேனும் ஆம். தகைமை தகையப்பட்டமை; அதாவது, பிடித்துப் பற்றப்பட்டமை என்னலும் ஒன்றும்.

பி - ம். 1. மேனியார்க். 2. தகைமை யறைந்தனம்.
4. சரிதை யியம்புவாம். (1)

மாரீசன் குரல் கேட்டுப் பிராட்டி வருந்தியது. 808—9.

808. எயிற லேத்தது முழைதிறந் தேங்கிய
செயிர்த லைக்கொண்ட சொற்செவி சேர்தலும்
குயிற லத்திடை யுற்றதொர் கொள்கையாள்
வயிற லைத்து விழுந்து மயங்கினள்.

எயிறு அலைத்தது - பற்கள் (மூடி அசைத்தலைப் பெற்ற, முழை திறந்து - மலைக் குகைபோன்ற தன் வாயைத் திறந்து கொண்டு, ஏங்கிய - முழங்கிய, செயிர் தலை கொண்ட சொல் - குற்றம் மேற்கொண்ட அந்த மாரீசனுடைய வார்த்தை, செவி சேர்தலும் - பிராட்டியின் செவிகளிற் சேர்ந்ததும், குயில் தலத்து இடை உற்றது ஓர் கொள்கையாள் - ஒரு குயில் (தான் இருந்த மரத்திலிருந்து) தரையில் தவறி விழுந்தது போன்ற ஒரு துயர் நிலையை யடைந்தவளாய், வயிறு அலைத்து - தன் வயிற்றில் கைகளால் அடித்துக்கொண்டு, விழுந்து - தரையில் விழுந்து, மயங்கினள் - மயக்கமுற்றாள்.

ஏங்கல் - ஆரவாரிக்கை. செயிர் - கோபம், குற்றம், போர், வருத்துகை ஆகிய பலபொருள் கொண்டது. செயிர் தலைக் கொண்ட சொல்: 'ஹா ஸீதே! ஹா லக்ஷமணா' என்று இராம பிரான் குரலில் மாரீசன் கூறிய வஞ்சகம் நிறைந்த கொடுஞ்சொல். இராமபிரானைப் பிரிந்து வருந்தும் நிலையில், கொடுஞ் சொல்லும் கேட்ட பிராட்டிக்குத் தலத்திடை விழுந்து தவிக்கும் குயில் உவமை யாக்கப் பெற்றது; இவ் வுவமை பின் பிராட்டி இராவணனால் அப கரிக்கப்பெற்று அடையப்போகும் பெருந்துயரை முன்கூட்டி யறிவித்ததாகவும் கொள்ளலாம். மகளிர் பெருந் துயருற்றகாலைத் தம் வயிறு அலைத்து ஏங்குதல் இயல்பு; 333; உரை. காண்க.

பி - ம். 1. திறந் தோங்கிய.
2. செயிர்த்தலைக் கொண்ட, செயிறலைக் கொண்ட.
3, குயிறலைத்திடை, குயிறலைத்திடர், (2)

809. பிடித்து நல்கிவ் வுழையெனப் பேதையேன்
முடித்த னென்முதல் வாழ்வென மொய்யழல்
கொடிப்ப டிந்த தெனநெடுங் கோளரா
இடிக்கி டைந்த தெனப்புரண் டேங்கினுள்.

(அப்பொழுது பிராட்டி), ' இ உழை பிடித்து நல்கு என - இந்த மானை நீயே பிடித்து எனக்குக் கொடு என்று சொல்லி, பேதையேன் - அறிவில்லாத யான், முதல் வாழ்வு - என் வாழ்வுக்கு ஆதாரமாகிய என் கணவனை, முடித்தனென் - அவன் அழியும்படியான செயலைச் செய்துமுடித்து விட்டேன் ;' என - என்று கூறி, மொய் அழல் கொடி படிந்தது என - நெருங்கிய நெருப்பு ஒரு பூங்கொடியைப் பற்றிக்கொண்டதுபோலவும், நெடும் கோள் அரா இடிக்கு இடைந்தது என - நீண்ட வலிய பாம்பு இடியோசை கேட்டு அதற்கு வலிகெட்டு வருந்திக் கிடந்தது போலவும், புரண்டு ஏங்கினுள் - தரையிற் புரண்டு வருந்தி யழுதாள்.

முதல் வாழ்வு, என்பதை வாழ்வுமுதல் என மாற்றியும் கொள்ளலாம். மொய் குழற் கொடி : அடர்ந்த கூந்தலையுடைய ஒரு கொடி என அன்மொழித்தொகையாகக் கொண்டும் பொருள் கூறலாம். இடைதல் - வருந்திச் சோருதல். பேதையேன் : ' பெண்ணறி வென்பது பெரும்பேதைமைத்து' என்பதைத் தான் உணர்ந்து கூறியதும் ஆம். 'அழல் கொடிப் படிந்தது'; 'அரா இடிக்கு உடைந்தது'; இவை மாரீசன் சொற்கேட்ட பிராட்டியின் நிலைக்கு உவமைகள். அழலில் கொடி படிந்தது என, என்றும் மாற்றிப் பொருள் கொள்ளலாம். அரவு இடிக்குடைதல் ; பால. உலாவியற் : *30* ; அயோத். தைலமாட்டுப் : *26* ; பெருங். *2. 10; 112* ; சீவக. *243* ; குறுந். *158 : 1—2* ; *391* : நாலடி. *164*.

பி - ம். 1. நல்கிவ் வுழை யென்று, நல்கி யுறையென.
2. வாழ்வெனும், வாழ்வென்று ; மொய்குழல்.
3. கொடிபடர்ந்த, கொடிப் படிந்தனவென, கொடிவீழ்ந்தன.
4. இடிக்குடைந்தது. (3)

பிராட்டி இலக்குவனை வெறுத்துக் கூறல்

810. குற்றம் வீய்ந்த குணத்தினெங் கோமகன்
மற்றை வாளரக் கன்புரி மாயையால்
இற்று வீழ்ந்தன னென்னவு மென்னயல்
நிற்றியோ விளையோ யொருநீ யென்ருள்.

' குற்றம் வீய்ந்த குணத்தின் என் கோமகன் - குற்றம் என்பது இல்லாத நற்குணங்களையுடைய என் தலைவன், மற்றை - வேறு

பட்ட, (அதாவது) பகைவனுன, வாள் அரக்கன் புரி மாயையால் - கொடிய இராக்கதன் செய்த வஞ்சகச் செயலால், இற்று வீழ்ந்தனன் என்னவும - உயிரற்றுக் கீழே விழுந்தான் என்பதை (அவன் குரலால்) கேட்டபினபும், இளேயோய் ஒரு நீ - அவனுக்கு ஒரு தம்பியாக உள்ள நீயும், என் அயல் நிற்றியோ - என் அருகிலே நிற்கின்ருயோ ?' என்ருள் - என்று பிராட்டி இலக்குவனே நோக்கிக் கடிந்து கூறினுள்.

வீய்தல் - அழிதல், இல்லாது போதல் ; இது வீதல் எனவும் வரும். மற்றை : ஐயிற்றுக் குற்றுகரம். ஒரு நீ என்றது - ஒரு மனிதனுகிய நீ எனவும், ஓர் ஆடவனுகிய நீ எனவும் இழித்துக் கூறியதோடு, 'இற்று வீழ்ந்தனன் என்னவும் நிற்றியோ' என்றதால், 'அவனுக்குத் தீங்கு நேருவதை நீ விரும்பியுள்ளாய் போலும்' என்ற கருத்தும் தொனிப்பக் கூறியதும் ஆம். 'உன் தமயன் ஆபத்தினிடைப்பட்டுக் கூவவும், நீ அதனேப் பொருட்படுத்தாது என்னருகில் நிற்பதால், நீ இதுகாறும் உள்ளத்திற் பகைமை கொண்டு வெளிக்கு நல்லவனும வேண்டியவனும் போல நடித்து வந்து, தக்க சமயத்தில் உன் அண்ணனுக்குக் கேடு சூழக் கருதி வந்தவன் ஆக வேண்டும் ; மேலும் உன் மனேவியை நாட்டில் விட்டு வந்த நீ, உன் தமயனுக்குக் கேடிழைத்துப் பின் என்னே அடையவே கருதினுய் போலும்' என்பது போன்றதும், மற்றும் பல சொற்களால் கொடுமையாகவும் இலக்குவனேப் பிராட்டி நிந்தித்தாள் என்பது வான்மிக ராமாயணத்தால் அறியப்பெறுவதை, இங்கு ஆசிரியர், 'இற்று வீழ்ந்தன னென்னவு மென்னயல் நிற்றியோ' என்று ஒரு சிறு சொற்ருெடரால் குறிப்பில் அடக்கியும், மற்ற கொடுஞ் சொற்களேத் தாம் வெளிப்படையாய்ப் பரம பாகவதனுகிய இளேயபெருமான் திறத்து எடுத்துரைக்க அஞ்சியும், கூறிய திறம் இங்குக் கூர்ந்து நோக்கற்பாலதாம். இவ்வாறு சுருங்கச் சொல்லி, விரஸமின்றி விளங்கவைக்கும் ஆசிரியரது நுண்ணறிவின் கவித் திறம் கண்டு பாராட்டற்குரியது. மேலும், 'குற்றம்வீய்ந்த குணத்தினென் கோமகன்' என்று இராமபிரானேச் சிறப்பித்ததால், இலக்குவனே, 'நீ குற்றம் நிறைந்த குணக்கேடன்' என்று நிந்தித்ததும் ஆகும். பின்வரும் 818, 819-ஆம் செய்யுட்களும், சுந்தர காண்டத்து, 343, 505-ஆம் செய்யுட்களும் இங்குப் பிராட்டியின் கூற்றுக்கு விளக்கங்களாக அமைவது காண்க.

பி - ம். 1. வீந்த. 2. மற்றவ் வாளரக்கன்.
3. இற்று வீந்தனன் ; மென்னெதிர்.
4. விளேயா ; யெதிர் நீ யென்ருள், மியவனீயென்ருள். (4)

### வேறு

### இலக்குவன் பிராட்டிக்குத் தேறுதல் கூறியது 811—7.

811. எண்மையா ருலகினி லிராமற் கேற்றமோர்
திண்மையா ருளரெனற் செப்பற் பாலதோ
பெண்மையா லுரைசெயப் பெறுதி ராலென
உண்மையா னனையவட் குணரக் கூறினான்.

'எண்மை ஆர் உலகில் - எளிமை நிறைந்த இவ்வுலகத்தில், இராமற்கு ஏற்றம் - இராமபிரானுக்கு அதிகமான சிறப்புடைய, ஓர் திண்மையார் உளர் எனல் - ஒரு வலிமையுடையோர் இருக்கிறார் என்பது, செப்பல் பாலதோ - பேசக் கூடிய தாகுமோ? (ஆகாது என்றபடி); பெண்மையால் உரை செய பெறுதிர் என - நீவிர் உமது பெண்ணறிவினால் இவ்வாறு கூறல் ஆயினீர்' என்று, உண்மையான் - உண்மை நிலையைத் தன் அறிவினால் உணர்ந்த இலக்குவன், அனையவட்கு - அந்தப் பிராட்டிக்கு, உணர கூறினான் - அறிந்துகொள்ளுமாறு எடுத்துரைத்தான்.

எண்மை - எளிமை, தாழ்வு; குறள். 424, 750, 991; எண்மை எண்ணிக்கையும் ஆம். பெண்மை - பெண்களுக்குள்ள அறியாமை; 'பெண்ணறி வென்பது பெரும் பேதைமைத்தே' எனறதும் காண்க. இந்த இடத்தில், வான்மீகம், 'இவ்வண்ணம் வன்மொழி பேசுவது பெண்களின் இயல்பே அன்றோ? இவ்வாறே உலகங்களிலும் காணப்படுகிறது; பெண்கள் தருமத்தைத் துறந்தவர்களும், சபல முடையவர்களும், கொடுமை யுற்றவர்களும், மித்திர பேதஞ் செய்பவர்களுமே ஆகின்றனர் அல்லரோ?' என்று இளைய பெருமான் கூறியதாகச் சொல்லுகின்றது. உண்மையான் - நடந்த உண்மைகளைத் தன்னறிவால் உணர்ந்த இலக்குவன் என்க. அனையவட்கு: அனை அவட்கு எனப் பிரித்து, தனக்குத் தாய்போன்ற அப் பிராட்டிக்கு, எனவுங் கொள்ளலாம்; தமயன் மனைவி, தாய் போன்ற சிறப்புடையவள் என்பது நம்மனோர் கொள்கையாதலின். இனி, அனையவட்கு என்பதற்கு, உலக மாதா ஆகிய பிராட்டிக்கு எனக் கொள்ளவும் இடமாகும்.

பி-ம். 1. ருலகினி னிராமற்; கேற்றமோர்.
2. ருளரெனச்; செப்பற் பாலரோ, செப்பப் பாலிரோ.
3. பெறுதிராலெனு; ராமென, ரோவென.
4. யவற்குணரச்; குறுதி செப்பினான், குறுதி கூறினான். (5)

812. ஏழுமே கடலுல கேழு மேழுமே
சூழுமேழ் மலையவை தொடர்ந்த சூழல்வாய்
வாழுமே ழையர்சிறு வலிக்கு வாளமர்த்
தாழுமே யிராகவன் தனிமை தையலீர்.

'தையலீர் - அம்மா! கடல் ஏழும் - ஏழ் கடல்களும், உலகு ஏழும் - (ஈர்) ஏழ் உலகங்களும், சூழும் ஏழ்மலை இவ்வுலகத்தைச் சூழ்ந்துள்ள ஏழு குல பருவதங்களும், தொடர்ந்த சூழல்வாய் - இவற்றைத் தொடர்ந்தனவான இடங்களில், வாழும் ஏழையர் சிறுவலிக்கு - வாழ்கின்ற எளியோரின் அற்பமான பலத்திற்கு, இராகவன் தனிமை - இராமபிரானுடைய தான் தனியாய் நிற்கும் வீரத் தன்மை, வாள் அமர் தாழுமே - கொடிய போரில் தாழ்ந்து போய்விடுமோ? (தாழாது என்றபடி).

இராகவன்; 229. தனிமை - ஒப்பற்ற வீரத்தன்மையும் ஆம். வாளமர் கொடும்போர். வாளரக்கன் என்றாற்போல். 'ஏழுமேழ்கடல் - எழப்பட்ட ஏழ்கடல்; ஏழும் என்றது நீட்டல் விகாரம்'; பழையவுரை.

பி - ம். 1. ஏழுமே கடலுல, ஏழுதீ வேழ்கட, ஏழுமாழ்கட.
2. மலையிவை; 3. மாளமர்.
4. தையனீர். (6)

813. பாரெனக் கனலெனப் புனலெனப் பவனவான்
பேரெனைத் தவையவன் முனியிற் பேருமால்
காரெனக் கரியவக் கமலக் கண்ணனை
ஆரெனக் கருதியிவ் விடரி னாழ்கின்றீர்.

'பார் என - புவி என்றும், கனல் என - தீ என்றும், புனல் என - நீர் என்றும், பவனம் வான் பேர் எனைத்து அவை - காற்று, ஆகாயம் என்னும் பேர்களைக்கொண்ட எவையும், அவன் முனியில் - இராமபிரான் கோபித்தால், பேரும் ஆல் - அவை நிலை தளர்ந்து கெடும்; ஆதலின், கார் என கரிய அ கமலம் கண்ணனை - நீருண்ட மேகம் போன்று கருநிறமான திருமேனியையுடைய அந்தச் செந்தாமரைக் கண்ணனன இராமபிரானை, ஆர் என கருதி - யாரென்று நினைத்து, இ இடரில் ஆழ்கின்றீர் - நீவிர் இவ்விதத் துன்பத்தில் ஆழ்ந்து தத்தளிக்கின்றீர்?

பாரென, கனலென, புனலென; இவற்றில் என என்பது எண்ணுப் பொருளில் வந்த இடைச்சொற்கள். பாரென..........

வான்பேர் : ஐம்பூதங்களைக் குறிப்பிட்டபடி. கார் என ; என, உவமைச் சொல். இராமபிரான் கமலக்கண்ணன் ; 376 ; அயோத். மந்திரப் : 51; சுந்தர. 394 ; உயுத்த. வீடணனடைக்கலப் : 124. இங்கு, இலக்கு வன் பிராட்டிக்கு இராமபிரானின் அவதார இரகசியத்தைக் குறிப் பிட்டான் எனலும் ஆம். இவ்வாறே, பிரமன் முதலியோர் இராம பிரானுக்கே நினைப்பூட்டிய இடங்களையும் காண்க.

பி - ம். 1. பாரெனப் புனலெனக் கனலெனப் ; புனலெனப் பவனம் வான் கனல் ; பவனமாம்பெரும்.

2. பேரெனத்திசையென, பேரெனத் தனையன், பேரெனத் தகையவன் முனிவினிலா ; தகையென ; முனிவிற் ;

4. விடரினூழ்கின்றீர், விடருழக்கின்றீர். (7)

814. இடைந்துபோய் நிசிசரற் கிராம னெவ்வம்வந்
தடைந்தபோ தழைக்குமே வழைக்கு மாமெனின்
மிடைந்தபே ரண்டங்கண் மேல கீழன
உடைந்துபோ யயன்முத லுயிரும் வீயுமால்.

‘இராமன் - இராமபிரான், நிசிசரற்கு - ஓர் அரக்கனுக்கு, இடைந்து போய் - போரில் சோர்ந்து பின் வாங்கிப்போய், எவ்வம் வந்து அடைந்தபோது - துன்பம் வந்துற்றபோது, அழைக்குமே - பிறரைத் தனக்குத் துணையாக வர அழைப்பான் போலும்! (மாட்டான் என்றபடி) ; அழைக்கும் ஆம் எனில் - அவ்வாறு கூப்பிட நேரிடு மானல், மேல கீழன - மேலும் கீழுமாய் உள்ளனவாய், மிடைந்த - செறிந்து கிடந்துள்ள, பேர் அண்டங்கள் - பெரிய அண்ட கோள கைகள், உடைந்து போய் - தகர்ந்து அழிந்துபோய், அயன்முதல் உயிரும் - அவற்றில் உள்ள பிரமன் முதலான சீவராசிகளும், தீயும் - எரிந்தழிந்துபோம். ஆல் : ஈற்றசை.

இதனல், இராமபிரான் அண்டங்கள் யாவற்றினும் பரந்து விளங்கும் எல்லாப் பொருள்களிலும் உள்ளும் புறமும் கலந்துள்ள பரமாத்மா என்பதைச் சுட்டி, அவனுக்கு ஓர் ஆபத்து நேரிடில் அண் டங்கள் அவற்றிலுள்ள சராசரப் பொருள்கள் யாவும் அழிந்து போயிருக்குமே ; அவ்வாறு அழியவில்லை யாதலின், அவனுக்குத் துன்பம் உண்டாகவில்லை என்பதைப் பிரமாண மூலம் பிராட்டிக்கு எடுத்து உறுதி கூறினன் இளைய பெருமான் என்க. நிசிசரன் - இரவில் சஞ்சரிப்பவன் என்ற பொருளில் காரணப் பெயராய் அரக்க னுக்கு ஆயிற்று. அயன் முதல் : பிரமனும், அப்பரமன் திருவுந்தி

னின்றுந் தோன்றினவனே ஆதலின். எவ்வம் - துன்பம்; கிட்கிந்தா. பம்பைப்: 17.

பி - ம். 1. இடைந்தபோர் நிசாசரத்; இராம னேவும்வர், இராமனேயம்வர்.
2. இடைந்தபோது, இடைந்து போர்; தழைக்குமாலெனில், தடைந்து தானழைக்குமே.
3. மேலகிழன, மேல்கிழன.
4. உடைந்துபோம்; னுலகுந் தீயுமால்; வீயுமால். (8)

815. மாற்றமென் பகர்வது மண்ணும் வானமும்
போற்றவன் றிரிபுர மெரித்த புங்கவன்
ஏற்றிநின் றெய்தவில் லிற்ற தெம்பிரான்
ஆற்றலி னமைவதோ ராற்ற லின்மையால்.

'மண்ணும் வானமும் போற்ற - இப்புவியில் உள்ள மானிடரும், வானில் உள்ள தேவரும் புகழ்ந்து கொண்டாட, வன் திரிபுரம் எரித்த புங்கவன் - வலிய முப்புரங்களை எரித்தழித்த கடவுளாகிய சிவபெருமான், ஏற்றி நின்று எய்த வில் - முன் நாண் ஏற்றி அம்பு தொடுத்த வில், எம்பிரான் ஆற்றலின் - எங்கள் பெருமானுன இராமபிரான் வலிமைபோல, அமைவது ஓர் ஆற்றல் இன்மையால் - பொருத்தமான ஒரு வலிமை அதனிடம் இல்லாமையால், இற்றது - ஒடிந்து போயிற்று; (ஆதலின்), மாற்றம் என் பகர்வது - வார்த்தைகளைக் கொண்டு யான் இராமபிரான் திறத்தை எவ்வாறு எடுத்துரைப்பது? (எனக்கு எடுத்துரைக்கும் திறனில்லை என்றபடி).

இராமபிரான் ஒடித்த வில்லின் வரலாறு; 745 ஆம் செய்யுளின் உரையிற் காண்க. புங்கவன்: இடபத்தை ஊர்வோனுன சிவபிரான் எனலும் ஒன்றும்; புங்கம் - எருது; 'புங்கமூர்வோனும்'; (பரி. 8 : 2).

பி - ம். 1. பிரிநினி மண்ணும். 2. போற்றமுன் றிரிபுர மெரிக்கப்.
3. எற்றிநின் றெடுத்தலின்; றெய்தலி னிற்ற; வில்லிறுத்த தெம்பிரான், வில்லிறுத்த வெம்பிரான்.
4. ஆற்றிலின் மேலுமோ, ராற்ற லுண்மையோ, லாற்றலாகுமோ.

816. காவல னீண்டுநீர் கருதிற் றெய்துமேல்
மூவகை யுலகமு முடியு முந்துள
தேவரு முனிவரு முதல செவ்வியோர்
ஏவரும் வீவர்மற் றறமு மெஞ்சுமால்.

'காவலன் - காப்பதில் வல்லவனான இராமபிரான், ஈண்டு - இப்பொழுது, நீர் கருதிற்று - நீவிர் எண்ணியதான அழிவை, எய்தும் எல் - அடைவனானால், மூ வகை உலகமும் முடியும் - சுவர்க்கம் பூமி பாதலம் என மூவகைப்பட்ட உலகங்களும் அழிந்துபோம்; முந்து உள - முதன்மையாகக் கருதப்பட்டுள்ள, தேவரும் -(பிரமாதி) தேவர்களும், முனிவரும் - முனிவர்களும், முதல - முதன்மையாகக் கொண்ட, செவ்வியோர் எவரும் - சிறந்தோர் யாவரும், வீவர் - அழிவர்; மற்று - அதுவன்றி, அறமும் எஞ்சும் - (அழியாத) தருமமும் அழியும். ஆல் : ஈற்றசை.

காவலன் : இங்கு, தன்னைக் காப்பாற்றிக் கொள்வான் என்ற உறுதிப்பொருளை யுணர்த்திக் கூறியது. நீர் கருதிற்று : இடக்கரடக்கல்; இறந்தான் என்று பிராட்டி கருதியது; 810; அதனைத் தன் வாயாற் கூறவும் விரும்பாமையைத் தெரிவித்தபடி. முந்துள - தொன்றுதொட்டுள்ள, எனலும் ஒன்றும். எஞ்சும் - அழியும்; 'வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்' (குறள். 44). தேவரும், முனிவரும், எவரும், அறமும் இவற்றில் உள்ள உம்மைகள் எண்ணும்மைகளோடு உயர்வு சிறப்பினவும் ஆம். அறமும் : எவரும் வீவர் என்று வினைகொண்டு முடித்துப் பின் தனியே, அறமும் எனக் கூறியதால், இந்த உம்மை அறத்திற்குள்ள அழியாத் தனிச்சிறப்பை உணர்த்தியது ஆகும். அறமும் : உம்மை உயர்வு சிறப்பினது.

பி-ம். 1. காவலி னீண்டு.........றெய்துமால்.
2. முந்துளர், முந்துற, முடிவு வந்துற.
3. முதலச் செவ்வியோர்.
4. எவரும் வீந்துளர், யாவரு மிறந்துமற், யாவரும் வீயுமற், யாவரு மிறந்துளார், வீழ்ந்துள தறமு, வீயுநல் லறமு. (10)

817. பரக்கவென் பகர்வது பகழி பண்ணவன்
துரக்கவங் கதுபடத் தொலைந்து சோர்கின்ற
அரக்கனவ் வுரையெடுத் தாற்றி னானதற்
கிரக்கமுற் றிரங்கலி ருத்தி ரீண்டென்றான்.

'பரக்க என் பகர்வது - விரிவாக (யான் இனி) என்ன சொல்வது? பண்ணவன் - நம் தலைவனான இராமபிரான், அங்கு பகழி துரக்க - அந்த மானைத் தொடர்ந்து சென்ற இடத்து அம்பு தூண்ட, அது பட - அந்த அம்பு தன்மீது பட, தொலைந்து சோர்கின்ற அரக்கன் - தன் வலி தொலைந்து சோர்ந்து அழிகின்ற அவ்

விராக்கதன் (மாரீசன்), அ உரை எடுத்து அரற்றினன் - இராம் பிரான் குரலால் அந்த வார்த்தைகளைக் கதறிக்கூவினன்; (ஆதலின்), அதற்கு இரக்கம் உற்று இரங்கலிர் - அதன்பொருட்டு ஏக்க மடைந்து வருந்தி அழாதீர் : ஈண்டு இருத்திர் என்றான் - இங்குக் கவலையற்று இருப்பீராக !' என்று பிராட்டிக்கு இலக்குவன் தேறுதல் கூறினன்.

பண்ணவன் - கடவுள் ; மேலோன் என்னும் பொருளது. இரங் குதல் - அழுதல் ; (திருவாசகம்). 'தொலைந்து சோர்கின்ற' என்பதை, சோர்ந்து தொலைகின்ற என மாற்றிப் பொருள் கொள்ளலும் ஏற்கும்.

பி - ம். 1. பகழிப் பண்ணவன்.

2. துரக்கயர் ததுபட, துரக்கவெங் கணைபடச், துரக்க வந்து கணைபடத் தொலைந்து சோருமவ்.

4. நயர்வதென் னிருத்தி. (11)

பிராட்டி இலக்குவனை மீண்டும் வெறுத்துக் கூறியது 818—9.

818. என்றவ னியம்பலு மெழுந்த சீற்றத்தள்
கொன்றன வின்னலள் கொதிக்கு முள்ளத்தள்
நின்றநின் னிலையிது நெறியிற் றன்றெனா
வன்றறு கண்ணினாள் வலிந்து கூறினாள்.

என்று அவன் இயம்பலும் - என்று இலக்குவன் கூறலும், எழுந்த சீற்றத்தள் - மேற்கிளம்பிய கோபத்தவளும், கொன்று அன - தன்னைக் கொல்ல நேர்ந்தது போன்ற, இன்னலள் - துயரமுடையவளும், கொதிக்கும் உள்ளத்தள் - கொதிக்கின்ற மன முடையவளும், வல் தறுகண்ணினாள் - கொடிய அஞ்சாமையை யுடையவளுமான பிராட்டி, (இலக்குவனை நோக்கி), 'நின்ற நின் நிலை இது - (பெருமானுக்கு உற்றதைக் கேட்டும் அதற்கு அஞ்சாது, கவலையின்றி இங்கு நிற்கின்ற) இந்த உன் தன்மை, நெறியிற்று அன்று என - நீதி முறையில் உள்ளது அன்று' என்று, வலிந்து - கூறுவாள் - கடினமாய்க் கூறுவாளாயினாள். (சொல்லியது அடுத்த செய்யுளால் விளங்கும்).

கொன்றன - கொன்றது போன்ற ; 'கொன்றன்ன வின்னா செயி னும்' (குறள். 109). கொன்றன வின்னலள் ; 'இளையபெருமாள் உரை தன்னைக் கொன்றதுபோலவந்த துன்பத்தினள்' என்பது பழையவுரை.

பிராட்டி இங்கு இலக்குவனிடம் கூறிய கடுஞ்சொற்களை, 'நின்ற நின்னிலையிது நெறியிற்றன்று' என்று சுருக்கமாகக் கம்பநாட்டாழ்வார் அமைத்துள்ளனர். வான்மீகமோ, இவ்விடத்தை விரித்துக் கூறும்; (45 ஆவது ஸர்க்கம்). அத்யாத்மராமாயணமும், 'அண்ணலுக்குத் தீங்கை விரும்புகின்றீர்; பெருமானைக் கொல்லும்பொருட்டுப் பரதரால் அனுப்பப்பட்டீர் போலும்; அண்ணனுக்கு அழிவு நேர்ந்தால் என்னைக் கைக்கொள்ள எண்ணி வந்தீர்; என்னை நீர் பெற மாட்டீர்' என்பனபோன்ற கொடுஞ் சொற்களைக் கூறியதாக அமைக்கின்றது; (7 வது ஸர்க்கம்). இவ்வாறு கூறியதைப் பிராட்டி எண்ணித்தான் பின் சுந்தரகாண்டத்தில், 'இளவலை யெண்ணிலா வினையேன் சொன்ன வார்த்தை' என்றும், 'மஞ்சனை வைது' என்றும், தன்னைத்தானே நொந்துகொள்கிறாள் (343; 435).

பி - ம். 1. மெடுத்த சீற்றத்தள்.
2. கொன்றெென வின்னுயிர் குலையு முள்ளத்தாள்.
3. நின்றவ னின்னிலை நெறியி லுண்டென, நின்றன நிலையிது, நின்றனை நின்னிலை, நின்றன னின்னிலை.
4. வன்றெறு கண்ணினள், வன்றெறுஞ் சினத்தினளாய்; வயிர்த்துக் கூறுயாள். (12)

819. ஒருபகல் பழகினு ருயிரை யீவரால்
பெருமக னுலைவுற்ற பெற்றி கேட்டுநீ
வெருவலை நின்றனை வேறென் யானினி
எரியிடைக் கடிதுவீழ்ந் திறப்பெ னீண்டெனு,

'ஒரு பகல் பழகினர் - ஒரு நாளே பழகினவராயினும், (உண்மை அன்புடையோர்), உயிரை ஈவர் - (அந்த நண்பருக்குத் தாம் முன்வந்து நின்று) தம் உயிரையும் கொடுத்து உதவி புரிவர்; (அவ்வாறாக), பெருமகன் உலைவு உற்ற பெற்றி - தலைவனான இராமபிரான் அழிவடைந்தான் என்ற தன்மையை, நீ கேட்டும் - நீ காதாற் கேட்டும், வெருவலை - அஞ்சாமல், நின்றனை - என் எதிரில் நின்று கொண்டிருக்கிறாய்; வேறு என் - எனக்கு இனி வேறு வழி யாதுள்ளது? யான் இனி எரி இடை கடிது வீழ்ந்து - யான் இனி மேல் நெருப்பிடையே விரைவில் விழுந்து, ஈண்டு உயிர் இறப்பென் எனு - இப்பொழுது என் உயிரை மாய்த்துக் கொள்வேன்' என்று (பிராட்டி) கூறி; ஆல்: அசை.

இச் செய்யுள் அடுத்த செய்யுளோடு குளகமாய் இயைந்து வினைமுடிவு கொள்ளும். 'ஒருநாட் பழகினோரும் தம் நண்பருக்குத் துயர் உற்றபோது தாம் முன்னின்று தம் உயிரையும் கொடுத்துதவுவர்; அப்படி யிருந்தும், நீ இராமபிரானுக்குத் தம்பியாய் உடன் பிறந்து இதுகாறும் கூடப் பழகிவந்தும் இவ் வாபத்து நிலையிலும் உதவாதும் சிறிதும் அச்சமின்றியும் நிற்கின்றாய்; ஆதலின் நீ மிகக் கொடியவன்' என்பது பிராட்டியின் கருத்து. சக்கரவர்த்தியிடம் ஒருநாட் பழகிய கழுகுக் கரசனான சடாயு அவன் இறந்தானெனக் கேட்டுத் தான் உயிர் துறக்கத் துணிந்ததையும், இராமபிரானிடம் ஒருநாட் பழகிய குகப்பெருமான் இராமபிரானுடன் வனஞ்செல்லத் துணிந்ததையும், இங்குக் கருத்திற்கொண்டு கூறியதும் ஆம்; 203; அயோத். கங்கைப் : *67*. பெருமகன் - ஆடவரிற் சிறந்தோன் ; புருஷோத்தமன் என்னும் பொருளது; 'குற்றம் வீய்ந்த கோமகன் 'கோமகன்' என்றதும் நோக்குக ; *810*. பகல் - நாள் ; (திவாகரம்). 'ஒல்லை, கொடாஅ தொழிந்த பகலும்' (நாலடி. *169*). 'எரியிடை கடிது புக்கிறப்பென்' என்றபடி செய்ய முற்பட்டமை, 820, 959. செய்யுள்களாலும் அறியலாம்.

'வேறென்,' என்றதற்கு, 'உன் எண்ணம் என்னை அபகரிக்க நினைத்தது; வேறில்லை' என்று கூறியதும் ஆம். இங்கு, 'நீ செல்லா திருப்பாயாகில், யான் கோதாவரியில் வீழ்வேன்; உட் சுருக்கையாயினும் போட்டுக் கொள்வேன்; மலையினுச்சியினின்றாயினும் வீழ்வேன்; கடு விஷத்தையாயினும் உண்பேன்; தீயிலாயினும் குதிப்பேன்; பெருமானை விட்டு மற்றொரு ஆடவனை மாத்திரம் காலினாலும் தொடேன்' என்று இவ்வண்ணம் கூறி, கைகளினால் மார்பி லடித்துக்கொண் டழுதனள்' என்று வான்மீகம் அமைக்கும். எரியிடை வீழ்வேன் : 'ஏகாது நிற்றியெனின் யான் நெருப்பிடை வீழ்வே னென்று முடுகா, மா கானகத்திடை யோடலோடும்' என்று இலக்குவன் பின் இராமபிரானிடம் (958) கூறுவதையும் காண்க.

பி - ம். 1. பழகினா முயிரை.

2. னலைவுறு, னலைவுறும்; னனைவுறு; கேட்டநீ.

3. வேறெனி யானினி, வேறுநீயினி.

4. எரியிடை வீழ்ந்துயி ரிறப்ப லீண்டெனா; கடிதுபுக்கு, கடிதின் வீழ்ந்து; துயிரிழப்ப; தீண்டெனா. (*13*)

### இலக்குவன் மனக்கலக்கத்துடன் பிராட்டியிடம் விடைபெற்றேகல். 820—25.

**820.** தாமரை வனத்திடைத் தாவு மன்னம்போல்
தூமவெங் காட்டெரித் தொடர்கின் ருடனைச்
சேமவிற் குமரனும் விலக்கிச் சீறடிப்
பூமுக நெடுநிலம் புல்லிச் சொல்லுவான்.

தாமரை வனத்திடை - (தடாகத்தில் உள்ள ஓர்) செந்தாமரைக் காட்டினிடத்து, தாவும் அன்னம்போல் - தாவிச் செல்லும் அன்னப் பறவைபோல, தூம வெம் காட்டு எரி - புகையோடு கூடிய காட்டுத் தீயினிடத்து, தொடர்கின்றுள் தனை - விழத் தொடங்கிய பிராட்டியை, சேம வில் குமரனும் - பாதுகாப்பதில் வல்ல வில்லை யுடைய இளங் குமரனுன இலக்குவனும், விலக்கி - (அவளை அத்தீயில் விழாமல்) தடுத்து, சிறு அடி பூ முகம் - அப் பிராட்டி யின் சிறிய அடிகளாகிய தாமரைகளுக்கு எதிரே, நெடு நிலம் புல்லி - நெடிய தரையைத் தழுவி விழுந்து, (அதாவது நமஸ்கரித்து), சொல்லுவான் - பின் வருமாறு கூறுவானுயினன்.

காட்டுத் தீக்குத் தாமரை மலர்கள் உவமை; தாமரை மலர்கள் செந்தீச் சிகைபோல இதழ்களால் ஒளிரும் இயல்பினவரல்; ஒப்பு: 'அள்ளற் பழனத் தரக்காம்பல் வாயவிழ, வெள்ளந்தீப் பட்டதென வெரீஇப், புள்ளினந்தங் - கைச்சிறகாற் பார்ப்பொடுக்குங் கௌவை யுடைத்தரோ, நச்சிலைவேற் கோக்கிள்ளி நாடு.' முத்தொள்ளாயிரம். தாமரை வனம்: வனம் என்றது மிகுதிபற்றி; 'வாளின் வனம் வேலின் வனம்' என்றதுபோல், 527: இனி, வனம் என்பதற்கு நீர் எனும் பொருள் உண்மையால், வனத்திடைத் தாமரை தாவும் என இயைத்துப் பொருள் கோடலும் ஒன்றும். அன்னம் தாமரையைச் சார்வது; ஒப்பு. "செங்கமல நாண்மலர்மேல் தேனுகரு மன்னம் போல்" (நாச்சியார் திருமொழி. 7 : 7); மூதுரை. 24. தாமரையிடைத் தாவுவதுபோல் பிராட்டி எரியிடைத் தொடர்ந்தது; ஒப்பு: 'நீந்தரும் புனலிடை நிவந்த தாமரை, ஏய்ந்ததன் கோயிலிலே யெய்துவா ளெனப்பாய்ந்தனள்' (உயுத்த. மீட்சிப்: 85). சேம வில் குமரன்: இராமபிரானுக்கும் பிராட்டிக்கும் க்ஷேமத்தைத் தரும் பாதுகாவற் பணியை மேற்கொண்ட வில்லையுடைய குமரன் என்க. சீறடி: சிறுமை + அடி; சிறுமை என்பதின் ஈறு கெட்டு ஆதி நீண்டது. மகளிர் அடிகள் சிறியவையாய் இருத்தல் உத்தம லக்ஷணமாகும்; 250; பால. கோலங்காண்: 27. சீறடிப் பூ முகம்: பிராட்டியின்

திருவடிகளைத்தொட்டு நமஸ்கரிக்காமல் அவற்றின் எதிரில் தரையில் வீழ்ந்து நமஸ்கரித்தது அவன் மனத் தூய்மையையும் பக்திச் சிறப்பையும் உணர்த்தியவாறு. பூ : தாமரைப்பூ ; 'பூவெனப் படுவதும் பொறிவாழ் பூவே' என்றாராகலின். குமரன் என்பது, இளையபிரான் பிராட்டியிடம் கொண்ட மகனுந் தன்மையைக் குறித்தது.

பி-ம். 1. நிடைதாவு. 2. காட்டெரி தொடர்.
3. சேறடி (பூமுக).
4. பூமலர் பூமுதல் ; பூவைதன் ; பூவைதன் ; பூமிசை விழுந்திவை புகலன் மேயினன், புல்லிச் சொல்லுமால். (14)

821. துஞ்சுவ தென்னைநீர் சொன்ன சொல்லையான்
அஞ்சுவென் மறுக்கிலெ னவலந் தீர்ந்தினி
திஞ்சிரு மடியனே னேகு கின்றனென்
வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ.

'துஞ்சுவது என்னை - நீவிர் இறந்து போவது ஏன்? நீர் சொன்ன சொல்லை யான் அஞ்சுவென் - நீவிர் கூறிய சொல்லுக்கு நான் மிகவும் அஞ்சுகின்றேன் ; மறுக்கிலேன் - உமது கட்டளையை நான் மறுக்கமாட்டேன்; இனி அவலம் தீர்ந்து இஞ்சு இரும்- இனியாவது உம்முடைய துயரம் நீங்கி இங்கு இருப்பீராக! அடியேன் ஏகுகின்றனென்-அடியேன் செல்லுகின்றேன்; வெம் சின விதியினை வெல்ல வல்லமோ - கொடியதும் கோபத்தோடு கூடியதுமாய் நம்மை எதிர்த்து வந்துள்ளது நம் விதியை நாம் வெல்ல வலிமையுடையோமோ? (வல்லோம் அல்லேம் என்றபடி).

துஞ்சுதல் : இறத்தல் : இது மங்கல வழக்கு. அவலம் - துன்பம் ; 835, 927 இஞ்சு இங்கு என்பதின் போலி ; பருந்து என்பது பரிஞ்சு என வந்ததுபோல ; 948. வெஞ்சின விதி ; கடுங் கோபத்தோடு தம்மைத்தாக்க வந்துள்ள விதி. 'வல்லமோ' என்று தன்னையும் இணைத்துக் கூறியது. விதி வெல்லற்கரிது ; 956, குறள். 380, நல்வழி. 30. இச் செய்யுள் சந்தேகம் என்பது ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. சொற்ற சொல்லை, சொன்ன சொல்லில்யான்.
2. தீர்த்தினி, தீர்ந்த நீர், தீர்ந்திடும்.
3. எஞ்சினெனடியனேன், உஞ்சிரு, மிஞ்சிரு, னேகுகின்றேனினி னேகுகின்றேனென்றான், னேகுகின்றனன்.
4. மிஞ்சின விதியினை வெல்லலல்லமே. (15)

822. போகின்றே னடியனேன் புகுந்து வந்துகே
டாகின்ற தையன்ற னாணை நீர்மறுத்
தேகென்றி ரிருக்கின்றிர் தமிய ரென்றுபின்
வேகின்ற சிந்தையேன் விடைகொண் டேனெனா,

'அடியனேன் போகின்றேன் - அடியேன் நான் இப்பொழுதே செல்லுகின்றேன்; கேடு-ஒரு பெருங்கேடு, புகுந்து வந்து ஆகின்றது-நம்மிடம் வலிந்து புகுந்து வந்ததாக உள்ளது; ஐயன் தன் ஆணை நீர் மறுத்து ஏகு என்றீர் - நம் தலைவரான இராமபிரான் எனக்கு இட்ட கட்டளையைக் கடந்து நீர் என்னைப்போகச் சொல்லுகிறீர்; தமியர் இருக்கின்றிர்-(துணையின்றித்) தனித்து நீர் இருக்கின்றீர்', என்று - எனக்கூறி, பின் - பிறகு, 'வேகின்ற சிந்தையேன் - துயரால் வெந்து கொண்டிருக்கின்ற மனத்தையுடைய யான், விடை கொண்டேன் - நும்மிடம் அனுமதி பெற்றுக்கொண்டேன்', எனா - என்று சொல்லி,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாகி, அதிலுள்ள 'விம்மினான்' என்னும் வினைகொண்டு பொருள் முடியும். இராமபிரான் இலக்குவனைப் பிராட்டியைக் காத்துக் கொள்ளும்படிக் கட்டளையிட்டது ; 792 ; 'அதனை மீறி என்னைச் செல்லுமாறு நீவிர் இப்பொழுது பணிக்கின்றீர் ; ஆதலின், இக்குற்றம் உம்மையே சாரும்' என்று பிராட்டிக்கு இலக்குவன் குறிப்பிட்டதும் ஆகும். இராமபிரான் கட்டளையைக் கடந்து செல்லும் நிலை தனக்கு நேர்ந்ததே என்றும், அவ்வாறு கடந்து செல்லாவிடில் பிராட்டி எரியிடை வீழ்ந்திறப்பளே (819) என்றும், பிராட்டி, தன்னை ஐயுற்றதும், ஆகிய இருதலைக் கொள்ளியிடைப்பட்டது போன்று மனம் 'வேகும் நிலையில்' விடை கொண்டேன் எனக் கூறினான் என்க.

ஆகின்றது என்றது, துணிவு பற்றிவந்த கால வழுவமைதி. விடை கொண்டேன் என்றது, பிராட்டியின் வேறு சொற்களைக் கேட்க விருப்பமில்லாமையைக் குறிப்பிட்டபடியும் ஆம். ஒப்பு. 'மின்னொளிர் கானமின்றே போகின்றேன் விடையுங்கொண்டேன்' அயோத். கைகேசி சூழ்வினைப் : 110. ஏகென்றீர்; தொகுத்தல் விகாரம்.

பி-ம். 1. னடியேன் பொருந்தி யந்தகே(டா); பொருந்திற்றின்றுகே.
2. தரசன்றனாணை ; நீ மறுத், தான்மறுத்.
3. தேகின்றே னிருக்கின்றீர் ; தனியிரென்று ; தமியிரென்று ; தமியினென்னினி.
4. சிந்தையான் விடைகொண்டேகினன். (16)

**823.** இருப்பனே லெரியிடை யிறப்ப ராலிவர்
பொருப்பனே யானிடைப் போவெ னேயெனில்
அருப்பமில் கேடுவந் தடையு மாருயிர்
இருப்பனேற் கென்செய லென்று விம்மினன்.

'இருப்பனேல் - நான் போகாமல் இங்கே இருப்பேனானால், இவர் எரி இடை இறப்பர் - இந்தப் பிராட்டி நெருப்பிடை விழுந்து இறந்துபோவர்; பொருப்பு அனையான் இடை போவன் ஏ எனில் - மலைபோன்ற தோற்றம் வாய்ந்த இராமபிரானிருக்கும் இடத்திற்கு யான் போவேன் ஆனால், அருப்பம் இல் - எளிமையற்ற (அதாவது பெரிய), கேடு வந்து அடையும்-தீங்கு வந்து சேரும்; ஆர் உயிர் இருப்பனேற்கு-நிறைந்த உயிரைவிடாது இருந்து கொண்டிருக்கும் எனக்கு, என் செயல்-செய்யக்கூடிய காரியம் யாது? (தெரியவில்லையே!)' என்று விம்மினன் - என்று எண்ணி இலக்குவன் தேம்பி வருந்தினன். ஆல் : அசை.

இராமபிரானுக்கு மலை உவமை; 'மரகதத்தின் மலைவந்தான்' (332). அருப்பம் - அல்பம் என்றதின் திரிபு: 'அருப்ப மன்றிதென் றையுற வெய்தினன்' (அயோத். பள்ளியடைப்; 40); 'அருப்ப மென்று பகையையு மாரழல் நெருப்பையு மிகழ்ந்தாவது நீதியோ' (உயுத்த. முதற் போர்; 92). இஃது அற்பம் எனவும் வரும்; 'அப்பம்' என்பது பிராகிருதம். ஆருயிர் இருப்பன்-உயிர் வைத்துக்கொண்டு வாழவேண்டும் என்ற விருப்பம் இல்லாதவன் என்பதும், உயிரைப் போக்கிக்கொள்வது தற்கொலை என்னும் ஆத்ம ஹத்தியாகுமே என்று அஞ்சினன் என்பதும் அறியப்பாலதாம். ஆருயிர் - போகாது நிறைந்த உயிர்.

பி - ம். 1. யெரியினி லிறக்கு மாலிவள்.
2. பொருப்பனை யானிடம்; யான்வயிற் போவ னுமெனில்; போவ னேனெனில்; புகுவ னுண்டெனில்.
4. விருப்பனேற், விருப்பனேன்; கென்செய்வே னென்று விம்மினன். (17)

**824.** அறந்தன்னு லழிவில தாக லாக்கலாம்
இறந்துபா டிவர்க்குறு மிருக்கி னிவ்வழி
துறந்துபோ மிதனையே துணிவென் றெல்வினைப்
பிறந்துபோந் திதுபடும் பேதை யேனென,

'இ வழி இருக்கின் - (நான் போகாமல்) இங்கேயே இருந்தால், இறந்து பாடு இவர்க்கு உறும்-இப்பிராட்டியாருக்கு இறந்து போதல்

உண்டாகும்; (ஆதலின்), தொல் வினை பிறந்து போந்து - பழைய வினையின் பயனாய்ப் பிறந்து வந்து, இது படும் - இத் துன்பத்தைப் படும், பேதையேன் - அற்பனாகிய நான், துறந்து போம் இதனையே - (இவ்விடத்தை) விட்டுச் செல்லும் இச்செயலையே, துணிவென் - துணிந்து செய்வேன்; அறம் தன்னால் அழிவு இலது ஆகல் ஆக்கலாம் - தருமத்தால் மட்டுமே அழிவில்லாமையைச் செய்யலாம்;' என - என்று நிச்சயித்து,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய் இயைந்து அதிலுள்ள 'ஏகினான்', என்னும் வினைகொண்டு முடியும். அறந்தனா லழிவிலதாக லாக்கலாம்; 'அறம் ஒன்றே இந்நிலையில் காக்கக்கடவது' என்றனன் என்க; இது, 'தருமந் தலைகாக்கும்' என்ற உண்மையைக் கடைப்பிடித்தது. இது, இலக்குவனது உறுதியான கொள்கை. 'தன் யத்னத்திலேயே பிராட்டி திருமேனிக்குத் தீங்கில்லாமலிருந்தால் நம்முடைய வசமாக்கலாம்' என்று இதற்குப் பழையவுரை உரை கூறும். பேதையேன், என்பது, வினையை வெல்லமுடியாமை கருதிக் கூறியது ஆம். 'தன் வினைப்பயன்' என்றிலக்குவன் கூறியது, அவன் எடுத்த மானிடப் பிறவிக்கு ஏற்ப, என்க.

பி - ம். 1. லழிவிலதாகி லார்விலக்கலாம், லழிவிலதாக வாகுமே.
2. இறந்துபா டியவனுறலதன்; மிதனி னிவ்வழி, விருக்கி லிவ்வழி.
3. மதனையே துணிவென்; துணிவென்றால் வினை.
4. ததுபடும்; பேதையே னென்றான். (18)

825. போவது புரிவலான் புகுந்த துண்டெனில்
காவல்செய் யெருவையின் றலைவன் கண்ணுறும்
ஆவது காக்குமென் றறிவுற் றவ்வழித்
தேவர்செய் தவத்தினாற் செம்ம லேகினான்.

'நான் போவது புரிவல் - நான் போகின்றேன்; புகுந்தது உண்டு எனில் - ஏதேனும் தீங்கு நேர்ந்தது உண்டானால், காவல் செய் எருவையின் தலைவன் கண் உறும் - நமக்குக் காவலைச் செய்து வரும் கழுகுகளுக்குத் தலைவனான சடாயு காண்பான்; ஆவது காக்கும் - அவனால் கூடிய அளவு காத்துக்கொள்வான்;' என்று அறிவு உற்று - என்று தன் புத்தியால் சிந்தித்து, தேவர் செய் தவத்தினால் - தேவர்கள் செய்த தவச் சிறப்பினால், அ வழி - அவ்விடத்தினின்றும், செம்மல் - சிறந்தோனான இலக்குவன், ஏகினான் - நீங்கி இராமபிரானை நாடிச் சென்றான்.

'எருவையின் தலைவன் கண்ணுறும்; ஆவது காக்கும்' என்றது; நாட்டி னிவிரு ணண்ணுதல் காறுமிக், காட்டில் வைகுதிர் காக்குவென் யான்' (215) என்ற சடாயு கூற்றாலும், 'வார்ப்பொற் கொங்கை மருகியை மக்களை, ஏர்ப்பச் சிந்தனையிட்ட வரக்கர்தம், சீர்ப்பைச் சிக்கறத் தேறினன் சேக்கையில், பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்றான்' (219) என்ற கவிக் கூற்றாலும் அறியப்பெறும். இலக்குவன் இங்ஙனம் பிராட்டியைத் தனித்திருக்கவிட்டுச் சென்றது, இராவணன் வந்து பிராட்டியை அபகரித்துச் செல்வதற்கும், அதனால் அவன் தன் அரக்கர் குலத்தொடும் மாள்வதற்கும், தேவர்கள் துயரம் நீங்குதற்கும் இடமாயிற்றாதலின், 'தேவர்செய் தவத்தினால் செம்மலேகினான்' என்னப்பட்டது; 228 உரையிற் காண்க. கிருத்திவாஸர் என்றவரால் எழுதப்பெற்ற வங்காளிமொழி இராமாயணத்தில், இலக்குவன் ஏகுமுன் பிராட்டி நின்ற இடத்தைச் சூழ ஒரு வரையிட்டு, அதனைப் பிராட்டி தாண்டலாகாது என்று கூறிச் சென்றனன் என்றும், பின், மாறு வேடத்தில் வந்த இராவணனை உபசரிக்க அவள் வரையைத் தாண்டியதால் அவனால் பிடித்துக் கொள்ளப் பட்டாளென்றும் கூறப்பெற்றிருக்கிறது. இது வரையில், மாரீசன் சூழ்ச்சியால் இராமபிரானும் இலக்குவனும் பன்னகசாலையினின்று பிரிக்கப்பட்ட செய்தி கூறியதாகும்; இனி, இராவணன் செயல் கூறப்பெறும்.

பி-ம். 1. போவது புரிவல்யான்; புரியவெனியான்; புரிகுவென்.
2. தலைவன் காண்குறும்.
3. றறிவித் தவ்வழித்; றவ்வுழிச். (19)

**இராவணன் துறவி வேடம் புனைந்து பிராட்டியிருந்த இடம் வந்தது. 826—30.**

**826.** இளையவ னேகலு மிறவு பார்க்கின்ற
வளையெயிற் றிராவணன் வஞ்ச முற்றுவான்
முளைவரித் தண்டொரு மூன்று முப்பகைத்
தளையரி தவத்தவர் வடிவுந் தாங்கினான்.

இளையவன் ஏகலும் - இலக்குவன் அவ்வாறு சென்ற அளவில், இறவு பார்க்கின்ற - அவன் நீங்கிச் செல்லுதலை எதிர்பார்த்துக் கொண்டிருந்த, வளை எயிற்று இராவணன் - வளைந்த பற்களையுடைய அவ்விராவணன், வஞ்சம் முற்றுவான் - தான் கருதிவந்த வஞ்சகச் செயலைச் செய்து முடிக்கும் பொருட்டு, வரி -

ஒன்ருகக் கட்டப்பட்ட, முளை தண்டு ஒரு மூன்றும் - மூங்கிற்றண்டுகள் ஒரு மூன்றையும், மு பகை தளை அரி - காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்று உட்பகைகளாகிய பந்தங்களை அறுத்த, தவத்து அவர் வடிவும் - தவத்துறையில் உள்ள துறவியரின் வடிவத்தையும், தாங்கினன் - ஏற்றுக்கொண்டவனுனன்.

இதுமுதல் 835-வரை உள்ள செய்யுட்கள் குளகமாய் இயைந்துள்ளன. இறவு - நீக்கம்; அயோத். கிளைகண்டு: 102. வளை எயிறு-வக்ரதந்தம்; இஃது அரக்கர்களுக்கு உரியது; 'வளையெயிற்றவர்க ளோடு வரும்வினை யாட்டென் ருலும்'; (286). வரி முளைத் தண்டொரு மூன்று: இது மூன்று மூங்கிற் கம்புகளை ஒன்ருக இணைத்துக் கட்டப்பெற்ற தண்டு; இது திரிதண்டம் எனப்படும்; 840. காமம், வெகுளி, மயக்கம் என்னும் முப்பகைகளை அடக்கியதற்கு அடையாளமாக இத்திரிதண்டைத் துறவிகள் கொள்வர் என்பர்; துறவிகளை முக்கோற்பகவர் எனத் தமிழ் நூல்கள் கூறுவதும் காண்க; தொல். பொருள்: மரபியல்: சூ. 70; கலி. 9: 2; முல்லைப். 378; வி. பா. அருச்சுனன் தீர்த்தயாத்திரை: 11; அரிச்சந்திர: விவாக. 314. முக்கோற்பகவரை வினவுதல், என்ருெரு துறை, கோவை நூல்களிற் பயிலப் பெறுவதும் காண்க. வைணவத் துறவியர் இத்தகைய திரிதண்டிகளே ஆவர்; மற்ருெரு வகைத் துறவியர் ஏகதண்டிகள்; இவர்கள் ஒரே தண்டத்தையுடையவர். முளை - மூங்கில்; (பிங்களம்); வேரின்று குருத்தாக முளைத்து வருதலால் முளையெனப் பெயர்பெற்றது; குறிஞ்சிப்: 130-1. உரை; பெருங். 1-56;-9. இராவணன், காவியுடை, குடுமி, குடை, திரிதண்டம், கமண்டலம் முதலியன ஏற்று வந்தான் என வான்மீகமும் கூறும்; ஆரணிய: சருக்கம் 46. மஹாபாரதம், வனபருவம் இராவணன் மொட்டைத்தலையுடன் வந்தான் என்று கூறும்.

பி - ம். 1. இளையயனேகவு; மிதவுபார்க்கின்ற.
3. தண்டொளிர்கையன் முப்பகைத்; மூன்றுமூவகைத், மூன்றின் மூவகைத்.
4. தளையெரிதயத்தயர், தனெரிதயத்தயர்; படிவந்தாங்கினன், வேடந்தாங்கினன்.

827. ஊணில ஞமென வுலர்ந்த மேனியன்
சேணெறி வந்ததோர் வருத்தச் செய்கையன்
பாணியி னளந்திசை படிக்கின் றானென
வீணையி னிசைபட வேதம் பாடுவான்.

(அவன்), ஊண் இலன் ஆம் என - உணவு இல்லாதவன் என்று சொல்லும்படி, உலர்ந்த மேனியன் - வற்றிக் காய்ந்துபோன உடலையுடையவன்; சேண் நெறி வந்தது - நெடுந்தூரம் வழிநடந்து வந்தது போன்ற, ஓர் வருத்த செய்கையன் - வருத்தத்தைப் புலப் படுத்தும் செயலையுடையவன்; பாணியின் அளந்து - தாளத்தினால் அளந்து, இசை படிக்கின்றான் என - இசையைப் பாடுபவன்போல, வீணையின் இசைபட - வீணையின் இசை எனத் தோன்றுமாறு, வேதம் பாடுவான் - சாமவேதத்தைக் கானம் செய்பவனும் ஆனான்.

பாணி - கை; கையில் உள்ள தாளத்திற்கு ஆகுபெயராய் வந்தது; பால. நகரப்; 52; சுந்தர. 210, 232. வேதம் பாடுவான் என்றதால், ஸாமவேதமே இசையிற் பாடப்பெறுவதும் அவ் வேதத்தில் இராவணன் வல்லவன் என்பதும்; சுந்தர. 483; உத்தர, வரையெடுத்த: 73; 74. இராவணன் வேதம்பாடுதல் 733, 847, 483, யுத்த. மந்திரப். 48. இசை படுதல் - இசை அழிந்துபோதலும் ஆம். 'பாணியிடை யிடைப் படிக்கின்றானென - தாளத்தின் விதியால் நடனஞ்செய்யுமிடத்திற்பாடும் பாடுவானைப்போல' என்பது பழைய வுரை. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. வுலந்தமேனியன்; மேனியான், யாக்கையன்.
2. சேணிடை நியந்ததோர் வருத்தஞ்.
3. பாணியி னடத்திடைப், பாணியின் நிறத்தினிற் படுரம்புளர், பாணியி னுழந்திடப்.
4. வீணையி னிசைபடு; பாடினான். (21)

828. பூப்பொதி யவிழ்ந்தன நடையன் பூதலம்
தீப்பொதிந் தாமென மிதிக்குஞ் செய்கையான்
காப்பரு நடுக்குறுங் காலன் கையினன்
மூப்பெனும் பருவமு முனிய முற்றினான்.

பூ பொதி அவிழ்ந்து அன - பூவின் இதழ் மெல்ல விரிந்தாற் போன்ற, நடையன் - மெதுவான நடையை யுடையவன்; பூதலம் தீ பொதிந்தது ஆம் என - பூமி நெருப்பால் நிறைந்துள்ளது போன்று, மிதிக்கும் செய்கையான் - பட்டதும் படாததுமாய் அடிகளைவைக்கும்

செயலையுடையவன்; காப்பு அரு நடுக்கு உறும் - காக்க முடியாது நடுக்கமடையும், காலன் கையினன் - கால்களையும், கைகளையுமுடையவன்; மூப்பு எனும் பருவமும் - முதுமைப் பருவமும், முனிய முற்றினன் - பிறர் கண்டு வெறுக்குமாறு முதிர்ந்தவனானன்.

பொதி - இதழ்; அரும்பும் ஆம். 'கமலப்பொதியிணை நகுவன புணர்முலை'; பால. நாட்டு: 44; 'பொதியவிழ் பூமரம்'; (பெருங். 1.51 :5); 'பொதியவிழ் வான்பூ' (குறுந். 330. 4.) பூப்பொதி - பூவிதழ் (பழையவுரை.) பூப்பொதி யவிழ்ந்தன நடையன் - அரும்பு மலரும்போது இதழ்கள் மெதுவாக மலருதல்போல மெதுவாக நடப்பவன்; குறுநடையும் குந்தி மிதித்துச் செல்லுதலும் அந்தணர்க்கியல்பு ஆதலின், அவ்வாறு நடந்து சென்றான் என்னலும் அமையும்; பால. எழுச்சிப்: 43. முதுமையைக்கண்டு பிறர் வெறுப்பது; பெரியதிருமொழி. 1-3 ஆம் திருமொழியாலும், பிறவாற்றாலும் நன்கு அறியலாம். இராவணன் கொண்ட தவ்வேடத்திற்கு ஒப்பு: 'ஊன்கெடு மார்பி, னென்பெழுந் தியங்கு மியாக்கையர் நன்பகல், பலவுடன் கழிந்தவுண்டியர்' (திருமுருகாற். 128-31). இவ்வேடத்தை, 'இறுகுத நிரங்கி நூறு வயதுபுகு மந்த ணாளன் என வுறையுள் வந்து' என்று இராமசெயத் திருப்புகழ் அமைக்கும்.

பி - ம். 1. பூவவிழ்ந்தன்ன; வீழ்த்தென, பூத்தலத்.
2. தீப்பொதிந்தாலன்ன; சிந்தையன், சிந்தையான்.
4. முடிய முற்றினன். (22)

829. ஏமுறு நிலையின னிடுகு கண்ணினன்
ஆமையி னிருக்கையி னமைந்த வாக்கையன்
நாமநூன் மார்பின னணுகி னனரோ
தூமனத் தருந்ததி யிருந்த சூழல்வாய்.

ஏம் உறு நிலையினன் - மனக் கலக்க முற்ற நிலைமையை யுடையவனும், இடுகு கண்ணினன் - இடுங்கிய கண்களையுடையவனும் ஆமையின் இருக்கையின் - ஆமையின் (மேல் உள்ள) கூடு போன்று, அமைந்த - கூனலாய் அமைந்த, ஆக்கையன் - உடலையுடையவனும், நாம நூல் மார்பினன் - பெருமையுடைய பூணூல் அணிந்த மார்பையுடையவனுமாய், தூ மனத்து அருந்ததி - பரிசுத்தமான மனத்தையுடைய அருந்ததிபோன்ற கற்பிற் சிறந்த பிராட்டி, இருந்த சூழல் வாய் - இருந்த பன்னசாலையின் இடத்து, நணுகினன் - (அந்த இராவணன்) வந்தடைந்தான். அரோ: ஈற்றசை,

ஏம் - ஏக்கம் அல்லது கலக்கம்; 'ஏமுறு முயிர்க்கு வேவேன்' (263). இடுகு கண் - ஒடுங்கிய கண்; அயோத். சித்திரகூடப்: 30. ஆமையின் இருக்கை - ஆமை என்னும் உயிர்ப்பிராணி உள்ளே சுருங்கித் தங்கக் கூடியதும், அதன்மேலே உள்ளதுமான ஓட்டைக் குறித்து நின்றது. இதற்கு ஆமைபோல ஐந்து உறுப்புக்களை அடக்கிய முனிவர் வேடத்தன் என்றும், ஆமைவடிவமாய் அமைக்கப்பெற்ற கூர்மாசனத்தையுடையவன் என்றும் பிறவாறுங் கூறிப் போந்தாரும் உளர். 827 முதல் இராவணன் எடுத்து வந்த முதிய தவத் துறவி உருவின் பொலிவையே சிறப்பித்துக் குறித்துள்ளமை நோக்கற்பாலதாம். நாம நூன்மார்பினன்: நாமம் - பெருமை; புகழ்; 'நாமநீரயோத்திநகர நண்ணினன்' (பால. பரசுராமப்: 45.); தூமனத்தருந்ததி: பரிசுத்தமான மனத்தை யுடைய அருந்ததி போன்ற கற்பிற் சிறந்த பிராட்டி; பிராட்டியின் மனத்தூய்மை, வரும் இராவணனுடைய ஆசை வார்த்தை களாலும் அச்சுறுத்தலினாலும் மாறாது, உறுதி மேற்கொண்டது என்பதை முன்கூட்டி விளங்கவைத்ததும் ஆகும்; அருந்ததி வசிஷ்டமுனிவரின் மனைவி; கற்பிற் சிறந்தவள்; இங்கு உவமை ஆகுபெயராய்ப் பிராட்டியைச் சிறப்பித்ததென்க. இவ்வாறே இந் நூலில் ஆசிரியர் மற்றும் சில இடங்களில் பிராட்டியை அருந்ததி என்றே கூறியுள்ளமை காண்க; 996; சுந்தர. 410,602, 512.

பி - ம். 1. தாமரைக் கண்ணொடேர் தவத்தின் மாலையன், தாமரை மணித் தொடர் தவத்தின், தாமரைக் கண்ணு சேர்தவத்தின்; மாலையன்; சபத்தின் மாலையன், தரித்த மாலையன், தரித்த மார்பினன், துளசி மார்பினன்.

2. ஆமையி னடக்கிய வளைந்த யாக்கையன், ஆமையி னிருக்கையி னடங்கு மாக்கையன், காமன் வெஞ்சரம்படக் கருகு மேனியன்.

4. தூய்மனத். (23)

830. தோமறு சாலையின் வாயி றுன்னினன்
நாமுதல் குழறிட நடுங்குஞ் சொல்லினன்
யாவரிவ் விருக்கையு ளிருந்து ளீரென்றான்
தேவரு மருடரத் திரிந்த மேனியான்.

தேவரும் மருள் தர - தேவர்களும் மயக்கம் கொள்ள, திரிந்த மேனியான் - மாறுபட்ட தவ வடிவத்தை யுடைய அந்த இராவணன்,

தோம் அறு சாலையின் வாயில் - குற்றமற்ற அப் பன்னசாலையின் வாயிலை, துன்னினன் - சேர்ந்து, நா முதல் குழறிட - நாவின் அடிப்புறம் தடுமாற, நடுங்கும் சொல்லினன் - நடுங்கிக் குழறும் சொற்களை யுடையவனாய், 'யாவர் இ இருக்கை உள் இருந்து உளீர் என்றான் - இப் பன்னசாலையுள் இருக்கிறவர் யாவர்' என்று வினவினான்.

தேவரும் மருள்தர - இவன் வஞ்சனைகளை நன்குணர்ந்த தேவர் இவன் இராவணன் என்று அறியாது மயங்க என்க. நா முதல் குழறிட - நா, மனம் உடல் முதலியவை தடுமாற என்னலும் ஒன்றும்; முன் 828 இல், "காப்பரு நடுக்குறுங் காலன் கையினன்" என்றமையும் நோக்குக. இச் செய்யுளின் பின்னிரண்டு அடிகளில் மகரத்திற்கு வகரம் இன வெதுகையாக அமைந்துள்ளது.

பி - ம். 1. தோமகல்; நாமகள் சாலையின் வாயி லண்ணினான்.
2. நடுங்குஞ் சொல்லினன்.
3. யாவிரிங்; லிருந்தனீ.
4. மருள் கொளத், மருளுறத். (24)

பிராட்டி அவனை எதிர்கொண்டு உபசரித்தல்.

831. தோகையு மிவ்வழித் தோமில் சிந்தனைச்
சேகறு நோன்பின ரென்னுஞ் சிந்தையால்
பாகியல் கிளவியோர் பவழக் கொம்பர்போல்
ஏகுமி னீண்டென வெதிர்வந் தெய்தினாள்.

தோகையும் - பிராட்டியும், இ வழி - இந்த வனத்தில் இருக்கும், தோம் இல் சிந்தனை - குற்றமற்ற மனத்தையுடைய, சேகு அறு நோன்பினர் என்னும் சிந்தையால் - குற்றமற்ற தவ விரதத்தை யுடையவர் இவர் என்ற எண்ணத்தினால், பாகு இயல் கிளவி - தேன் பாகு போன்று சுவைதரும் சொற்களையுடைய, ஓர் பவழ கொம்பர் போல் - ஒரு பவழக் கொம்பு போல, 'ஈண்டு ஏகுமின் என - இங்கு எழுந்தருள்க' என்று சொல்லிக்கொண்டே, எதிர் வந்து எய்தினாள் - அந்தக் கபட சந்நியாசியாகிய இராவணன் எதிர் வந்தனள்.

தோகையும், பாகியற் கிளவியோர் பவழ கொம்பர் போல், எதிர்வந் தெய்தினாள் என இயைக்க. தோகை - மயில்; இங்கு சாயலாலும் நடையாலும் பிராட்டிக்கு மயில் உவமை; இனி, இது சினையாகுபெயராய் மயிலையும், பின் உவமையாகுபெயராய்ப் பிராட்டியையும் குறிப்பதால் இருமடியாகுபெயரும் ஆகும். பாகிற் கிளவி

யோடு ஒரு பவழக் கொம்பு உள்ளதாகுமேல், அது பிராட்டிக்கு உவமையாகும் என்பது குறிப்பு; ஆதலின், இஃது இல்பொருள் உவமை. தம்மில்லம் நாடி வந்தோரிடம் இனியசொற் கூறி எதிர் வந்து வரவேற்று உபசரிப்பது இல்லற மகளிர் ஒழுக்கமாதலின், இவ்வாறு உபசரித்தாள் பிராட்டி. சேகு - குற்றம்; உயுத்த. மூலபல வதைப் : 233. சொல்லுக்குப் பாகு; பால. நாட்டுப் : 49; மிதிலைக் காட்சிப் : 21; பூக்கொய் : 30. பாகு - வெல்லப்பாகும் ஆகும்.

பி-ம். 1. தோகையு மய்யழித்; தோமில் சிந்தனை.
2. சேகுறு நோம்பின, சேகறுந் தயத்தின.
3. பாகியல் கிளவியாள்; கொம்பு போன்(று) கொம்பென.
4. எகுமீண் டென்னவே எதிர்கொண் டேத்தினுள். (25)

இராவணன் பிராட்டியை நோக்கி வியந்தல். 832—8.

832. வெற்பிடை மதமென வேர்க்கு மேனியன்
அற்பினிற் றிரைபுர ளாசை வேலையன்
பொற்பினுக் கணியினைப் புகழின் சேக்கையைக்
கற்பினுக் கரசியைக் கண்ணி னோக்கினான்.

வெற்பு இடை மதம் என - மலையிடத்து உண்டாகும் சிலாசத்து என்னும் தாதுவாகிய கல்மதம்போல, வேர்க்கும் மேனியன் - வெயர்வை பெருகுகின்ற உடலை யுடையவனும், அற்பினில் - அன்பினால், திரை புரள் - அலைகள் புரண்டு எழப்பெற்ற, ஆசை வேலையன் - ஆசைக் கடலிடைப் பட்டுள்ளவனுமான இராவணன், பொற்பினுக்கு அணியினை - அழகுக்கு ஓர் அணிகலம் போன்றவளை, புகழின் சேக்கையை - புகழுக்கு இருப்பிடமானவளை, கற்பினுக்கு அரசியை - கற்பு என்பதற்கு ஓர் அரசி போன்றவளை, கண்ணின் நோக்கினான் - தன் கண்களால் நேரிற் கண்டான்.

வெற்பிடை மதம் என : மதம் என்ற குறிப்பால் வெற்பு என்பதை யானை எனக்கொண்டு, அவ்வியானையின் மதப் பெருக்குப் போல வெயர்க்கும் மேனியன் என உரை கண்டாரும் உளர். யானைக்கு மதம் உடலெங்கும் பெருகி வராது ஆதலின், மலையி லிருந்து பெருகிவரும் சிலாசத்து எனும் ஒரு தாதுப்பொருள் என்று பொருள் கொள்ளப்பட்டது. மதம் - சத்து அல்லது சாரம்; வெற்பின் மதம் - சிலாசத்து. அற்பு : அன்பு என்ற சொல்லின் விகாரம்; ஆசை வேலை - ஆசை இங்குக் காம இச்சை; காம இச்சை யின் மிகுதியைக் கருதியும், அஃது அலைபுரண் டெழுவது போன்ற

கிளர்ச்சியை உண்டுபண்ணுவதாலும், 'அற்பினிற் றிரைபுர ளாசை வேலையன்' என்னப்பட்டான்; 'காதலுனுங் கடலினும் பெரிதே' (நற்றிணை. 166 : 10); ('காமக் கடும்புனல்') குறள். 1134, 1137 :) கடும்புனல் - கடல்; பரி. உரை. பிராட்டி அழகுக்கு அணிகலம்; 'அழகெனு மணியுமோ ரழகு பெற்றதே' (பால. மிதிலைக் காட்சிப் : 34) என்றதும் நோக்குக. கற்பினுக்கரசி; அநுமன் 'கண்டனென் கற்பினுக் கணியை' என்றும், 'கற்பெனும் பெயரதொன்றுங் களிநடம் புரியக் கண்டேன்' என்றும் இராம பிரான் முன் சிறப்பித்துக் கூறினமை காண்க; (சுந்தர. 1269, 1273.) கண்ணி னோக்குதல் - கண்ணெதிரே நன்ருய்ப் பார்த்தல் சுந்தர. 1269.

பி-ம். 1. வியர்க்கு மேனியன்.
2. அற்பினற் றிரைபுர ளாசை வேலையின், அற்பினிற் றிரள்புய ளுசை.
3. பொற்பினத் தணியிளைப் புகழின் செய்கையை. (26)

833. தூங்கலின் குயில்கெழு சொல்லி னும்பரின்
ஓங்கிய வழகினு ளுருவங் காண்டலும்
ஏங்கினன் மனநிலை யாதென் றுன்னுவாம்
வீங்கின மெலிந்தன வீரத் தோள்களே.

தூங்கலின் - சோர்வுற்ற நிலையிலேயும், குயில் கெழு - குயிலின் முதிர்ந்த, சொல்லின் உம்பரின் - சொற்களின் இனிமைச் சிறப்பில், ஓங்கிய அழகினள் - சிறந்த அழகுடையளான பிராட்டி யின், உருவம் காண்டலும் - திருவுருவைக் கண்டவுடன், வீர தோள்கள் - அந்த இராவணனுடைய வீரத்திற் சிறந்த புயங்கள், வீங்கின - மகிழ்ச்சியால் பூரித்தன; மெலிந்தன - அவளை எவ்வாறு அடைவது என்ற ஏக்கத்தால், (அத்தோள்கள்) சோர்ந்து மெலி வுற்றன; ஏங்கினன் - அவ்வாறு ஏக்கங்கொண்ட அவனது, மன நிலை - மனத்தின் நிலைமையை, யாது என்று இயம்புவாம் - யாதென்று யாம் சொல்லுவோம்! (நம்மால் சொல்லுந் தரத்ததன்று என்றபடி). ஏ : ஈற்றசை.

தூங்கல் - தாழ்தல் (திவாகரம்); சோர்வுறுதலும் ஆம். பிராட் டியின் சோர்வு நிலை; மாரீசன் கூறிய வார்த்தைகளால், இராமபிரா னுக்கு உற்ற துயர்கேட் டடைந்த சோர்வு நிலை. கெழு - மிகுதி; முதிர்வு. இனி கெழு என்பதை உவமை வாசகமாகவும் கொள்ள

லாம். பிராட்டியின் அத் துயர நிலையிலும் அவளது குரலின் இனிமையும், உருவின் அழகும் இராவணனுக்குச் சிறந்து விளங்கின என்பதாம். பிராட்டியின் மகிழ்ச்சி நிலையில் அவை எவ்வாறு சிறந்து விளங்கும் என்பதை இங்கு ஊகிக்கப்பாலதாம். இக் கருத்து, பின் 838 ஆம் செய்யுளில், "உளைவுறு துயர்முகத் தொளியி தாமெனின், முளையெயிற் றிலங்கிடு முறுவ லென்படும்" (838) என்று அவன் பின் கூறுவது காண்க. இனி, 'தூங்கலி னுருகெழு சொல்லி னும்பரி னேங்கிய வழகினுள்' எனப் பாடத்தைக் கொண்டு, தூங்கலின் - தன் கணவனான இராமபிரானுக்கு ஏற்பட்ட துயரத்தால் வாடியுள்ள அந்நிலையிலும், உரு கெழு - உருவின் மிக்கு, சொல்லின் உம்பரின் - புகழின் உச்ச நிலையில் உள்ள, அழகினுள் - அழகையுடைய பிராட்டி எனப் பொருள் கொள்ளலும் ஏற்கும்; சொல் - புகழ்; (பிங்களம்) 'கெழு - உண்டாயது; உம்பரில் - தெய்வப் பெண்களில்' என்பன பழையவுரை. 'கோகிலஞ் செற்ற தன்ன குதலையள் சிறுவாள்' (அயோத். நகர்நீங்கு : 232) என்றதால், பிராட்டி எந்நிலையிலும் தன் இயற்கை அழகு கெடாதவள் என்பதாகிறது.

பி - ம். 1. தூங்கலில் குயில்கெழு; துயில்கெழு, னுருகெழு; சொல் லும்; னும்பரும்.
3. எங்கின னன்னிலை; மனநிலை யாதென்.
4. வீங்கிய மெலிந்தன. (27)

834. புனமயிற் சாயற னெழிலிற் பூநறைச்
சுனைமடுத் துண்டிசை முரலுந் தும்பியின்
இனமெனக் களித்துள தென்ப தென்னவன்
மனமெனக் களித்தது கண்ணின் மாலையே.

கண்ணின் மாலையே - பிராட்டியைக் கண்ட அவ் விராவணனுடைய கண்களின் வரிசைதான், புன மயில் சாயல் தன் எழிலில் - காட்டில் (சுயேச்சையாய்ச் சஞ்சரிக்கும்) மயில்போன்ற மேனியுடைய பிராட்டியின் அழகினால், பூ நறை சுனை மடுத்து உண்டு - பூக்களில் உள்ள தேன் நிறைந்த மடுவில் அதனைத் தேக்கிப் பருகி, இசை முரலும் - ரீங்கார இசை ஒலி செய்யும், தும்பியின் இனம் என - வண்டுகளின் கூட்டம் போல, களித்துளது என்பது என் - மகிழ்ந்து மயங்கியுள்ளது என்று சொல்வதில் என்ன சிறப்புள்ளது! (பின் என்னை யெனில்), அவன் மனம் என களித்தது - அவனுடைய மனம்போலக் களித்தது என்று சொல்வதே தகும்.

மயில் சாயல் : உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன் மொழித்தொகை. பூ - ,தாமரைப் பூக்களும் ஆம் ; 'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே' என்றாராகலின். இராவணன் துறவி வேடம் பூண்டு வந்த நிலையில், அவனது இருபது கண்களும் வெளிக்குப் புலப்படாவாதலின், பிராட்டிக்கு அவை தெரியவில்லை என்னலாம். தும்பி - வண்டு ; (பிங்களம்). இராவணனுடைய களிப்படைந்த கண்களுக்கு, நறவுண்டதால் களிப்படைந்த வண்டு கள் புறத்திலே காணும் உவமையும், புறத்திலே காணப்படாத அவன் மனமும் உவமைகள். அகத்தினழகு முகத்தே தோன்று மாதலால், கண்கள் களித்தன. விழிக்கு வண்டு : பால. நாட்டுப் : 23 ; எழுச்சிப் : 49 ; உண்டாட்டுப் : 13. வண்டெனக் கண்ணும் மனமுங் களித்தல் ; அயோத். மந்திரப் : 50).

பி - ம். 1 புனமயிற் சாயலின் ; சாயலாள் ; னெழிலென் பூநறைச்.
4. களித்தனன். (28)

835. சேயிதழ்த் தாமரைச் சேக்கை தீர்ந்திவண்
மேயினள் மணிநிற மேனி காணுதற்
கேயுமே யிருபதிங் கிமைப்பி னாட்டங்கள்
ஆயிர மில்லையென் றவல மெய்தினான்.

'சேய் இதழ் தாமரை சேக்கை தீர்ந்து - சிவந்த இதழ்களை யுடைய தாமரை மலராகிய தன் இருப்பிடத்தைவிட்டு, இவண் மேயினள் - இவ்விடம் வந்துள்ள திருமகளாகிய இவளது, மணி நிற மேனி காணுதற்கு - சிறந்த ஒளியுடைய திருமேனியைக் காண்ப தற்கு, இங்கு இருபது நாட்டங்கள் ஏயுமே - இங்கு எனக்குள்ள இரு பது கண்கள் போதுமானவை ஆமோ ? (ஆகா என்றபடி) ; இமைப்பு இல் நாட்டங்கள் ஆயிரம் இல்லை என்று - இமையாக் கண்கள் எனக்கு ஆயிரம் இல்லையே என்று எண்ணி, அவலம் எய்தினான் - (இரா வணன்) துன்பமடைந்தான்,

பிராட்டியைக் கண்டவுடன் இராவணனுக்கு அவள் திருமகளே எனும் எண்ணம் உண்டாயிற்று. இவ்வாறே "அரவிந்த மலரு ணீங்கியடியிணை படியிற்றோயத் திருவிங்கு வருவதென்னோ வென்ற கந்திகைத்து நின்றாள் ; (280) என்றபடி, சூர்ப்பணகைக்கும் இவ் வெண்ணம் ஏற்பட்டமை இங்கு நோக்கத்தக்கது. தெய்வக்காட்சியின் வலிமை முனிவர்கள் முதலான நல்லோர்களுக்கு நன்கு தெரிவது போலவே, பாபமும் கொடுமையும் நிறைந்த அரக்கர்களுக்கும் தெரிய வரும் ; அவர்களின் வினை அவ்வுண்மையை உடனே மறைத்துவிடு

கின்றது என்ற தத்துவம் இங்குத் தெரிவது காண்க. தாமரை நீத்து வந்த திருவே பிராட்டி என்பது, 620 ; "போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்" (பால. கோலங்காண்: 34); அயோத். நகர்நீங்கு: 238; சுந்தர, 395. இங்கு இராவணன் கூறியதற்கு ஒப்பு : 'உமையா ளொக்கும் மங்கையருச்சிக் கரம்வைக்கும், கமையாண்மேனி கண்டவர் காட்சிக் கரைகாணார், இமையாநாட்டம் பெற்றிலமென்றா ரிருகண்ணால் அமையாதென்றா ரந்தரவானத் தவரெல்லாம் ; (பால. மிதிலைக்காட்சிப் 25.); 'நம்பியைக்காண நங்கைக் காயிரம் நயனம் வேண்டும், கொம் பினைக் காணுந்தோறும் குரிசிற்கு மன்னதேயாம்'; (பால. கார்முகப் ; 43.) இராவணன் தான் இந்திரனல்லனே என்றேங்கினான் என்க.

இராவணன் மாய வேடங்கொண்ட காலத்தும், இச்செய்யுளிலும் முன் செய்யுளிலும், அவனது இருபது கண்கள் பேசப்படுவதால், அரக்கர்கள் எடுக்கும் மாய உருவங்களெல்லாம் பிறர் கண்ணுக்குப் படுமேயன்றி, உண்மையில் மாறா என்பது பெறப்படுவது காண்க.

பி-ம். 1. தீர்ந்தயன், நீத்திவன்.
2. மேயவளெழில் பெறு மேனி காண்பதற்.
3. கேயுமோ விருபதன் றிமைப்பி.
4. றல்ல லெய்தினான், றையமெய்தினான். (29)

836. அரைகடை யிட்டமுக் கோடி யாயுவும்
புரைதபு தவத்தினான் படைத்த போதுமே
நிரைவளை முன்கையிந் நின்ற நங்கைதன்
கரையறு நன்னலக் கடற்கென் றுன்னினான்.

நிரை வளை முன் கை - வரிசையாக வளையல்கள் அணிந்த முன்கையுடன் இ நின்ற நங்கை தன் - இங்கு நின்ற இப் பெண் ணிற் சிறந்தாளது, கரை அறு நல் நலம் கடற்கு - கரையற்ற சிறந்த அழகான கடலிற் படிந்து மகிழ்வதற்கு, புரைதபு தவத்தின் நான் படைத்த - குற்றமற்ற தவத்தினால் நான் பெற்றுக்கொண்ட, அரை கடையிட்ட - அரைக்கோடியைப் பின் சேர்த்த, என் மு கோடி - என் மூன்று கோடி (அதாவது, மூன்றரைக்கோடியான) ஆயுவும் - என் ஆயுட்காலமும், போதுமே - போதுமானதாகுமோ? (ஆகாது என்றபடி).

நிரை வளை முன் கை ; 'வளையொலி முன்கையாள்' என்றமை நோக்குக ; (உயுத்த. மீட்சிப் : 78 . நன்னலம் - மிக்க அழகு ; 'நன் னலத்துப் பெண்ணரசி' (பால, கார்முகப் ; 17.) என்றமை காண்க.

பிராட்டியின் அழகின் கரை காணமுடியாது என்பது, 278 ; "கமை யாள் மேனி கண்டவர் காட்சி கரை காணார்" (பால. மிதிலைக் காட்சிப். 25). இங்கின்ற - இங்குநின்ற ; 'இங்கின்றுளென்னை யீன்றுள்' (அயோத். குகப் ; 70). அரை கடையிட்ட முக்கோடி ஆயுள் ; இராவணன் சிவபிரானிடமிருந்து பெற்றது மூன்றரைக்கோடி ஆண்டுகள் ; இவ்வாறு அமைந்த ஆயுளைத் திருமால் அரைக் கோடி ஆகும்படிச் சூழ்ச்சி செய்தார் ; அதனை இராவணனும் மற்றை அரக்கர்களும் அறியாது அவனுக்கு மூன்றரைக்கோடி ஆயுள் என்றே எண்ணியிருந்தனர் என்பதாம் ; உயுத்த. இராவணன் வதைப் 243. உத்தர. திக்கு விசயப் ; 75 ; 80-82. இனி, அரைகடை யிட்ட என்பதற்கு, அரைக் கோடியாகக் கணக்கிட்ட என்றும் பொருள் கொள்ளலாம் ; கடை யிடுதல் - கணக்கிட்டுக் கூறுதல் ; 'கடையிட்ட கணிதப் பாதலக்கம்' (18). போதுமே ; ஏகாரம் வினைப் பொருளை உணர்த்தி நின்றது. இராவணன் ஆயுள் முக்கோடி என்றும் கூறப் பெறுவதுண்டு ; உயுத்த இராவணன் வதைப் 198. அரை கடையிட்ட என்பது இங்கு இரட்டுற மொழிதலாகக் கூறப் பெற்ற சிறப்பு நோக்கப்பாலது ;

பி - ம். 1. கோடியாகமும்.
2. புரைதவிர் ; தவத்தின் யான் ; போலுமோ, போதுமோ.
3. முன்கை நிறைந்த நங்கைதன் ; நங்கையின்.
4. கடிதென்றுன்னினன். (30)

837. தேவரு மவுணருந் தேவி மாருடன்
கூவல்செய் தொழிலினர் குடிமை செய்திட
மூவுல கமுமிவர் முறையி னளயான்
ஏவல்செய் துய்குவெ னினியென் றெண்ணினன்.

'தேவரும் - தேவர்களும், அவுணரும் - அசுரர்களும், தேவிமார் உடன் - தத்தம் மனைவியர்களுடனே, கூவல் செய் தொழிலினர்-நான் கூவி அழைத்து ஏவிய பணிகளைச் செய்யும் தொழில்களையுடையவர் களாய், குடிமை செய்திட - வழிவழியே (அதாவது பரம்பரையாக) அடிமை வேலை செய்துவர, மூ உலகமும் இவர் முறையின் ஆள - (எனக்குரிய) மூவுலகங்களையும் இப்பிராட்டி உரிமை முறை குறை படாது ஆண்டுவர, இனி - இனிமேல், யான் ஏவல் செய்து - நான் இவர் ஏவிய பணிகளைச் செய்து, உய்குவென் என்று - ஈடேறி வாழ் வெய்துவேன்' என்று, உன்னினன் - இராவணன் கருதுவானானன்.

குடிமை - பரம்பரை யடிமை; அதாவது, குடிப்பிறப்பினுல் கொண்ட தொழில்; குறள். 793. இச்செய்யுளிற் கூறிய கருத்தையே பின் இராவணன் கூறிப் பிராட்டியிடம் இரந்துகேட்டுக்கொண்டது; சுந்தர. 443. கூவல் - 'ஏவற் கூவல் பணிசெய்வேன்' (சுந்தர. 602.)

பி - ம். 1. அவுணர் தம் தேவிமாருடன்.

2. கூவல்செய் தொழிலெனக் கூறல் செய்தியான்.

3. மூவுலகெளியர முறையி, மியள் முறையினுளமற்
மூவுல கேழியர்;

4. ஏவல் செய்குவனினி யென்ன வெண்ணினுன்; ஏவலின்;
றெய்தவ. (31)

838. உளைவுறு துயர்முகத் தொளியி தாமெனின்
முளையெயி றிலங்கிடு முறுவ லென்படும்
தளையவிழ் குழலிவட் கண்டு தந்தவென்
இளையவட் களிப்பனென் னரசென் றெண்ணினுன்.

'உளைவு உறு துயர் முகத்து - வேதனை மிக்க துக்கத்தினிடத்து, ஒளி இது ஆம் எனில் - இவருடைய தோற்றப் பொலிவு இத்துணைச் சிறப்புடையதாகுமேல், முளை எயிறு இலங்கிடும் - நாணற் குருத்துப்போன்று விளங்கும், முறுவல் என்படும் - (மகிழ்ச்சிக் காலத்து எழும்) புன்னகை செய்யும்போது உண்டாகும் அழகு எத்தகையதாகும்? தளை அவிழ் குழல் இவள் கண்டு - கட்டவிழ்ந்த கூந்தலையுடைய இவளைக் கண்டுபிடித்து, தந்த - எனக்கு அளித்த, என் இளையவட்கு - என் தங்கை சூர்ப்பணகைக்கு, என் அரசு - என் அரசுரிமையை, அளிப்பென் என்று - நான் வெகுமதியாகக் கொடுப்பேன்' என்று, எண்ணினன் - இராவணன் கருதினுன்.

உளைவு உறுதுயர்; தன் கணவனுக்குற்ற துயரங்கேட்டு வருந்தும் துயர். இராவணன் இங்குக் கூறும் இக்கருத்து, முன் 833 செய்யுளிலேயே ஒருவாறு விளக்க முறுவது காண்க. முளை எயிறு - நாணற் குருத்துப்போன்ற பற்கள்; 'கிளையரி நாணற் கிழங்கு மணற் கீன்ற, முளையோரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்' (அகநா. 212; 4-5); கலித். 4: 13; குறுந். 119; பெருங். 1. 56: 41; மணி. 4: 100; சிலப். 15: 202; சீவக. 2042. இனி, தளையவிழ் குழலிவண் கண்டு, என்ற

பாடங்கொண்டு, தளையவிழ்குழல், என்பதை அன்மொழித் தொகை யாய்ப் பிராட்டிக்கு ஆக்கிப் பொருள்கொள்ளலும் ஒன்றும். தந்த என்று இறந்த காலத்தாற் கூறியது, சூர்ப்பணகை சொல்லிய போதே, தான பிராட்டியை அடைந்ததாகக் கொண்ட துணிவினுல் இது, காலவழுவமைதி.

பி - ம். 1. தொளியி தாமென.
2. நிலங்கிய முறுவ.
3. தளையவிழ் குழலியண் ; தந்தயவ். (32)

இராவண சந்நியாசியைப் பிராட்டி வரவேற்றபோது
நிகழ்ந்தவை 839—41.

839. ஆண்டையா னனையன வுன்னி யாசைமேல்
மூண்டெழு சிந்தனை முறையி லோன்றனைக்
காண்டலுங் கண்ணினீர் துடைத்த கற்பினுள்
ஈண்டெழுந் தருளுமென் றினிய கூறினுள்.

ஆண்டையான் - அவ்விடத்துள்ளோனுகி, அனையன உன்னி - மேற்கூறியவற்றை நினைந்து, ஆசை மேல் மூண்டு எழு-ஆசை மேன் மேல் அதிகரித்து எழுகின்ற, சிந்தனை-எண்ணத்தையுடைய, முறை இலோன் தனை - நன் முறை வழி நில்லாத அந்த இராவண சந்நி யாசியை, கண்ணின் நீர் துடைத்த கற்பினுள் - தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்ட சிறந்த கற்பினளான பிராட்டி, 'ஈண்டு எழுந் தருளும் என்று-(அவனை நோக்கி), இங்கே நீவிர் எழுந்தருள்வீராக !' என்று, இனிய கூறினுள் - இனிய வசனங்கூறி வரவேற்றுள்.

பிறனில் விழைந்து புகுதல் நீதி முறைக்கு மாறுன பெரும் பாவச் செயலாதலின், முறையிலோன் என்னப்பட்டான் ; 'அறன் கடை நின்ருரு ளெல்லாம் பிறன்கடை, நின்ருரிற் பேதைய ரில்,' (குறள். 142); 'அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும், பிறன் ருர நச்சுவார்ச் சேரா'' (நாலடி. 82) என்ருராகலின். கண்ணீர் துடைத்த கற்பினுள் ; தன் கணவனுக்கு நேர்ந்த துயரங் கேட்டதால் தனக்குண்டான சோகத்தில் பெருக்கெடுத்து வந்த கண்ணீரைத் துடைத்த கற்புடைய பிராட்டி ; கற்பினுள் என்றமையால் அவ ளுடைய, கற்பு எந்த நிலையிலும் மாருது என்பதை முன்னர் நம்ம னோர்க் கறிவித்தபடியும் ஆம் ; சடாயு இராவணனோடு பொருது, சிறை இழந்து கீழ் வீழ்ந்த தன் செயலற்ற துயர்நிலையில், ''பொருஞ் சிறை யற்றதே பூவை கற்பெனும், இருஞ் சிறை யருதென விடரி

னீங்கினுன்'' (948) என்ற உறுதி மேம்பாடு கொண்டமையாலும் அறியலாம். தன் துயர நிலேயிலும் தன் வீட்டுக்கு வந்த தவசி, துறவி முதலிய அதிதியை, இனிய மொழி கூறி வரவேற்று உபசரிக்க வேண்டியது இல்லற வாழ்க்கையில் உள்ள குலமகளுக்குரிய கடமை யாதலின், கண்ணீரைத் துடைத்துக்கொண்டு இனிய கூறினுள் என்க.

பி-ம். 1. ஆண்டவன், ஆண்டைய என்னன, ஆண்டையா னின்னன யுன்னி யாசைமேன்.
2. முறையி லொன்றினைக்.
3. லுடைத்த கையினுள்.
4. னினைய கூறினுள். (33)

840. ஏத்தின ளெய்தலு மிருத்தி ரீண்டென
வேத்திரத் தாசனம் விதியி னல்கினுள்
மாத்திரி தண்டயல் வைத்த வஞ்சனும்
பூத்தொடர் சாலேயி னிருந்த போழ்தினே,

ஏத்தினள்-அவ்வாறு உபசாரமொழிகள் கூறி வரவேற்றபிராட்டி, எய்தலும் - அவ்விராவண சந்நியாசி அப்பன்னசாலேயில் வந்தடையவும், 'இருத்திர் ஈண்டு என - இதில் வீற்றிருப்பீராக' என்று, வேத்திரத்து ஆசனம் விதியின் நல்கினுள் - பிரம்பினுல் செய்யப் பெற்ற ஓர் ஆசனத்தை விதி முறைப்படி (அவனுக்கு) அளித்தாள்; மா திரி தண்டு அயல் வைத்த வஞ்சனும் - பெருமைக்குரிய தன் திரிதண்டமென்னும் முக்கோலே, அருகே ஓர் இடத்தில் வைத்த வஞ்சகனுன அவ்விராவணனும், பூ தொடர் சாலேயின் இருந்த போழ்தினே - பூக்கள் படர்ந்து அழகாய் விளங்கிய அப்பன்ன சாலேயுள் புகுந்து இருந்த போதிலே, (நிகழ்ந்தவை அடுத்த செய்யுளிற் கூறப்பெறும்.)

இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் குளகமாய் இயைந்து அங்கு நிகழ்ந்த செயல்களின் வினேகொண்டு முடியும். விதியின் நல்கினுள் ; என்றமையால், வந்த அதிதிக்குச் செய்யவேண்டிய விதிப்படி, ஆசனத்தோடு அர்க்கியம், பாத்தியம், ஆசமனியம் முதலியனஅளித்து உபசரித்தாள் என்பது உபலக்ஷணத்தால் பெறப் படும்; "காஷாய தண்டமாத்ரேண யதிப் பூஜ்யா நஸம்சய:'' என்ற உறுதி மேலிட்டும் உபசரித்தாள் பிராட்டி என்க. 'விதியின்' என்றமை, அவளுக்கு உரிய விதியினுல் என்றும் பொருள்

கொள்ளக் கிடப்பது காண்க. திரிதண்டம்: 826. குறிப். பூ தொடர்சாலை: பூ - அழகும் ஆம்.

பி - ம். 1. எத்தினளேத்தலு ; யிருத்தியீண்டென.
2. விருப்பி னல்கினுள், விரைவி னல்கினுள்.
3. வைத்து வஞ்சனும், வைத்த வஞ்சகன், தண்டவன்.
4. பூத்தடஞ்சாலை ; சாலையா யிருந்த. (34)

841. நடுங்கின மலைகளு மரனு நாவவிந்
தடங்கின பறவையும் விலங்கு மஞ்சின
படங்குறைந் தொடுங்கின பாம்பும் பாதகக்
கடுந்தொழி லரக்கனைக் காணுங் கண்ணினே.

பாதக கடும் தொழில் அரக்கனை காணும் கண்ணின் - பெரும் பாவத்திற்கு இடமான கொடிய செயலை மேற்கொண்ட இராக்கதனாகிய இராவணனை அங்குக் கண்டபோது, மலைகளும் மரனும் நடுங்கின - அங்குள்ள மலைகளும் மரங்களும் நடுக்கமுற்றன ; பறவையும் - ஆங்கிருந்த பறவைகளும், நா அவிந்து - நா ஒடுங்கி, அடங்கின - கூவாது அடங்கிப்போயின ; விலங்கும் அஞ்சின - கொடிய வனமிருகங்களும் அவனைக் காண அச்சங்கொண்டன ; பாம்பும் - அங்குள்ள கொடிய பாம்புகளும், படம் குறைந்து ஒடுங்கின - படமெடுத்து நோக்குவதை விட்டு அஞ்சி அடங்கிக் கிடந்தன.

பாதகக் கடுந்தொழில் - பாதகங்களுக்கெல்லாம் கொடியதான கற்புடைய பிறன் மனைவியை நாடி வந்த செயல். கண்ணின் - கண் என்றது இங்குச் சமயத்தில் எனக் காலப்பொருளில் வந்தது ; கண்ட இடத்து எனப் பொருள் கொண்டாரும் உளர். நடுங்கின மலைகளும் மரனும் ; இது பிராட்டிக்கும், அதனால் பின் இராவணனுக்கும் நிகழப் போகும் தீங்குக்கு அறிகுறியான உற்பாதங்கள் எனலும் ஒன்றும். பாம்பு அச்சமுற்றபோது, படமெடுக்காது அடங்கித் தலையைக் கீழ் வீழ்த்திக்கொள்ளும்; சீற்றமுற்றபோது தான் அஃது எழுந்து சீறிப் படமெடுக்கும். மலைகள் முதல் பாம்பு வரை காட்டில் உள்ளவை தமக்கு இவ்விராவணனால் என்ன தீங்கு நேரிடுமோ என்று அஞ்சி நடுங்கி ஒடுங்கின என்னலும் ஆம். கொடியவையான, வன விலங்கு, பறவை, பாம்பு இவற்றினும் கொடியது இராவணன் கருதிய வினையாதலின், அவை அவனைக் கண்டு அஞ்சின என்னப்பாலதாம். அஃறிணைப் பொருள்கள் இங்

நிலையில் அஞ்சியதாக இங்குக் கூறியவாறே வான்மீகமும் கூறுவது காண்க.

பி - ம். 3. தொழுங்கின ; பாம்புபாதகக்.

4. கண்டகாலையே ; கண்ணிலே. (35)

இராவணன் பிராட்டியை வினுதலும் அவள் விடையிறுத்தலும் 842—5.

842. இருந்தவன் யாவதிவ் விருக்கை யீங்குறை
அருந்தவன் யாவனீர் யாரை யென்றலும்
விருந்தின ரிவ்வழி விரகி லாரெனப்
பெருந்தடங் கண்ணவள் பேசன் மேயினுள்.

இருந்தவன் - பிராட்டியால் உபசரிக்கப்பெற்று அங்கு இருந்த இராவண சந்நியாசி, 'இ இருக்கை யாவது - இந்த இருப்பிடம் யாது? ஈங்கு உறை அரும் தவன் யரவன் - இங்கு வசிக்கும் அரிய தவசி யார்? நீர் யாரை - நீவிர் யாராவீர்?' என்றலும் - என்று உசாவியபோது, இ வழி விருந்தினர் - இவர் இவ்விடம் வந்த ஓர் அதிதி யாவர்; விரகு இலார் - வஞ்சகம் அற்றவர்; என - என்று எண்ணி, பெரும் தடம் கண் அவள் - பெரிய விசாலமான கண்களையுடைய பிராட்டி, பேசல் மேயினுள் - அவனுடன் பேசத் தொடங்கினுள்.

வான்மீகத்தில் இவ்விடத்தில், பிராட்டி தனக்குத் தவிசளிக்கும் முன்னமேயே இராவணன் அவளை மிகவும் புகழ்ந்து விசாரித்தான் என்று கூறப்பெற்றிருக்கிறது.

விருந்தினர் - புதிதாக வந்தவர் எனலும் ஆம். விரகு - கபடமும் ஆம். பெருந்தடங்கண் : பால. நாட்டு, 36. 'இவ்வழி விரகிலாரெனு - நாம் வந்த மார்க்கம் அறியாதவரென்று எண்ணி' என்பது பழையவுரை.

பி - ம். 1. இருந்தவ னியார்பதி ; யாதிவ் விருக்கை.

2. இருந்தவர் யாவர்நீர், இருந்தவன்.

3. விரகிலாமெனப், விரகிலாரெனு ; ரிவ்வுழி விரகி லாரெனப்; ரிவ்வழி மேவி னூர்யரப் ; மேவி லாரெனப்.

4. கண்ணியள். (36)

843. தயரதன் றொல்குலத் தனயன் றம்பியோ
டுயர்குலத் தன்னைசொ லுச்சி யேந்தினன்
அயர்வில னிவ்வழி யுறையு மன்னவன்
பெயரினைத் தெரிகுதிர் பெருமை யீரென்றாள்.

'பெருமையீர் - பெருமைக்குரியோரே! தொல் குலம் தயரதன் தனயன் - பழமையான இட்சுவாகு குலத்துத் தசரதசக்கரவர்த்தியின் குமாரர், தம்பியோடு - தம் தம்பியுடன், உயர் குலத்து அன்னை - உயர்ந்த குலத்துப் பிறந்த தாயின், சொல் உச்சி ஏந்தினன் - கட்டளையாகிய சொல்லைத் தன் தலை மேற்றாங்கினவராய், அயர்வு இலன் - வருத்தமின்றி, இ வழி உறையும் - இவ்விடம் வந்து வசிக்கின்றார்; அன்னவன் - அவரது, பெயரினை - பெயரை, தெரிகுதிர் - நீவிர் அறிந்திருக்கலாமே' என்றாள் - என்று பிராட்டி மறுமொழி கூறினாள்.

கைகேயியை உயர் குலத் தன்னை என்றதால், இராமபிரான் போலப் பிராட்டியும் அக் கைகேயிபால் கொண்ட நல்லெண்ணமும் மதிப்பும் விளங்குவது காணலாம். உச்சி ஏந்தியது; 211; 354; 'இப் பணி தலைமேற் கொண்டேன்' (அயோத். கைகேசி சூழ்வினைப்; 110): என்றதுபோல. 'தெரிகுதிர்' என்றது, தண்டகாரணியத்துத் தவ சியர் முனிவர் அனைவரும் இராமபிரான் அங்கு வந்திருப்பதை நன்கு அறிவாராதலின், தவக்கோலத்துட னிருந்தமையால் நீவிரும் அறிந் திருக்கக்கூடுமே' என்ற துணிவாற் கூறியது; இனி, இவ்வனத்தில் பெருமான் பெயரை அறியாது தவநெறியில் உள்ள ஒரு துறவி இருப்பது, பிராட்டிக்கு வியப்பைத் தந்தமையால், 'தெரிகுதிர்!' என்று வினவியதாகவும் பொருள் கொள்ளலாம். கணவன் பெயரை நேரிடக் கூறுவது நம் மகளிர் வழக்கமன்று ஆதலின், அன்னவன் என்ற குறிப்பால் உணரவைத்தாள் என்க.

பி - ம். 1. தலையன் றம்பியோ.
3. அயர்வில நிவ்வழி; நிவ்வுழி யுறையு.
4. பெயரினித்.

844\. கேட்டனென் கண்டிலென் கெழுவு கங்கைநீர்
நாட்டிடை யொருமுறை நண்ணி னேன்மலர்
வாட்டடங் கண்ணினீர் யாவர் மாமகள்
காட்டிடை யரும்பகற் கழிக்கின் றீரென்றான்.

'கேட்டனென் - நீர் சொன்ன செய்திகளைக் கேட்டுள்ளேன்; கண்டிலென் - ஆனால் நான் அவரை நேரில் பார்த்தேனில்லை; கெழுவு கங்கை நீர் - மிகுதியான கங்கை நீர்ப்பெருக்குள்ள, நாட்டிடை - அந்தக் கோசலவள நாட்டிடத்து, ஒரு முறை நண்ணினேன் - ஒரு தடவை போயிருந்தேன்; மலர் - தாமரை மலரையும், வாள் - வாளையும் போன்று, தடம் - பெரிய, கண்ணின் நீர் - கண்களையுடைய நீவிர், யாவர் மா மகள் - யாருடைய மாண்புடை மகள் ஆவிர்? காடு இடை அரும் பகல் கழிக்கின்றீர் - இக்காட்டினிடத்து அரிய நாட்களைக் கழித்துக் கொண்டிருக்கிறீரே!' என்றான் - என்று இரங்கிக் கூறுவது போலக் கேட்டான்.

கேட்டனென் - கேள்வியுற்றிருக்கிறேன், என்றானும் ஆம். 'ஒரு முறை நண்ணினேன்' என்றது, இராவணன் முன் திக்கு விஜயம் செய்த காலை, அயோத்தி நகரடைந்து, அப்பொழுது அங்கிருந்து அரசாண்டுவந்த, இராமபிரானுடைய மூதாதையருள் ஒருவனான அனரணியன் என்பானைப் போரில் வீழ்த்தி நிந்திக்க, அவ்வேந்தன் மனம் புழுங்கி, தன் குலக்குமாரன் தசரதராமன் என்னும் ஒருவனால் அவன் கொல்லப்படுவான் என்று சபித்தனன் என்பது, உத்திர. திக்குவிசயப்: 41; இச்செய்தியை ஒருவாறு நினைத்து இராவணன் கூறியதும் ஆகும். 'அரண்மனையில் எல்லாவிதச் சௌபாக்யங்களோடு இவ்விளமைப் பருவத்தைக் கழிக்கவேண்டிய நீவிர் இக்கொடிய காட்டில் இருந்து வருந்துகிறீரே!' என்று இரங்கிக் கூறுவதுபோல இராவணன் பிராட்டிக்குத் தன்பால் பரிவு உண்டாக்க வினவினான் என்க.

பி-ம். 1. கேட்பயன் மண்டினன், கேட்டவ னீண்டிவன்; கெழுவு நங்கைநீர், கெழுவுங்,
2. நணணினன்மலர், நண்ணிநன்மலர், நண்ணினேன்வடி, நண்ணினே னெனு.
3. கண்ணினியாவர்.
4. காட்டிடை நெடும்பகற் கழிக்கின்று யென்றான். (38)

845. அனகமா நெறிபட ரடிக ளும்மலால்
நினைவதோர் தெய்வம்வே றிலாத நெஞ்சினன்
சனகன்மா மடமகள் சனகி காகுத்தன்
மனைவியா னென்றனள் மறுவில் கற்பினள்.

மறு இல் கற்பினள் - (அது கேட்ட) குற்றமற்ற கற்பினை யுடைய பிராட்டி, அனகம் மா நெறி படர் - குற்றமில்லாத சிறந்த நன் மார்க்கத்தில் ஒழுகும், அடிகள் - அடிகளே! நும் அலால் - உம்மைப் (போன்றவர்களை) அல்லாது, நினைவது ஓர் தெய்வம் வேறு இலாத நெஞ்சினன் - வேறு ஒரு தெய்வத்தை நினைப்பது இல்லாத மனத்தையுடைய, மா சனகன் - மாட்சிமையுற்ற ஜனகராஜனது, மட மகள் - இளமைத் தன்மையுடைய குமாரியான, சனகி - சானகி என்பவள், யான் - யான்; காகுத்தன் மனைவி - காகுஸ்தரது மனைவி யாவேன்,' என்றனள் - என்று மறுமொழி கூறினள்.

மறுவில் கற்பினள்; சுந்தர. 369. அனகம் (அ + நகம்); குற்றம் அல்லது பாவமற்றது; இது வடசொல்; கடவுளை அனகன் எனக் கூறுவதுங் காண்க. இனி, அனகம் ஆம் நெறி எனவும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். அடிகள், என்பது துறந்த முனிவர் முதலிய பெரியோரைக் குறிக்குஞ் சொல்; (சிலப். பதிகம். 1. அடியார்க். உரை.) சனகர், முனிவர் முதலிய துறவியரைத் தெய்வமாகக் கருதி வழிபட்டு வந்த மகாஞானி ஆவர். சனகி - சானகி என்பதின் விகாரம். ககுத்தன் என்ற, மன்னனது குலத்திற் பிறந்த காரணமாக இராமனுக்குக் காகுத்தன் என்ற பெயர் வழங்குவதாகும். ககுஸ்தன்: இராமபிரானின் மூதாதையருள் ஒருவன்; இவ்வேந்தன், இந்திரன் தன்னை விடையேறாகச் சுமக்க அதின்மீது ஊர்ந்து தேவாசுரர் யுத்தத்தில் அசுரர்களை வென்று, வானுலகைத் தேவர்களுக்கு மீட்டுக் கொடுத்தவன்; (பால. குலமுறை கிளத்து; 3.); இவன் புரஞ்சயன் என்றுங் கூறப்பெறுவன். சனகி, காகுத்தன் என்பன தத்திதாந்தப் பெயர்கள். ஆயிழை - அன்மொழித்தொகை. இங்குப் பிராட்டி தன் கணவன் பெயரை நேரிடையாய்க் கூறாமல், காகுத்தன் என்ற குலப்பெயரால் குறிப்பிட்டமை நோக்குக.

பி - ம். 1. அனகன் மாநெறி தொடர்ந்தடிக; அனக மாநெறி.
3. சனகன்மாமகள்; மகள்பெயர்.
4. மனைவியா மென்றனள்.

பிராட்டி மேலும் வினவ, அவன் கூறியவை 846—54.

846. அவ்வழி யனையன வுரைத்த வாயிழை
வெவ்வழி வருந்தினீர் விளைந்த மூப்பினீர்
இவ்வழி யிருவினை கடக்க வெண்ணினீர்
எவ்வழி நின்றுமின் றெய்தி னீரென்றாள்.

அனையன உரைத்த - அவ்விதம் தன் வரலாற்றினைக் கூறிய, ஆய் இழை - பிராட்டி, அ வழி - அப்போது. (அந்த இராவண சந்நியாசியை நோக்கி), 'விளைந்த மூப்பினீர் - பழுத்த முதுமைப் பருவத்தினரும், இ வழி - இத்தவநியம வழியிலே, இரு வினை கடக்க எண்ணினீர் - புண்ணிய பாவங்களாகிய இருவினைகளையும் கடக்கக் கருதியுள்ளீருமாகிய நீவிர், வெம் வழி வருந்தினீர் - கொடிய இக் காட்டுவழியே நடந்து வந்து வருத்தமடைந்தவராகக் காணப்படு கின்றீர்; எ வழி நின்றும் - எவ்விடமிருந்து, இன்று எய்தினீர் என்றாள் - இன்று இங்கு வந்தடைந்தீர்?' என்று பரிவுடன் வினவினாள்.

இரு வினையும் கடந்த பற்றற்ற நிலையினரான துறவியரே வீடுபேறடைவர்; 'இருள்சேரிருவினையுஞ் சேரா விறைவன் பொருள் சேர் புகழ்புரிந்தார் மாட்டு' (குறள். 5.) என்றமை காண்க. அரு நெறிக்குரிய துறவி வேடத்தனாய் இராவணன் வந்தமையால், 'இரு வினைகடக்க வெண்ணினீர்' என்று கூறினாள் பிராட்டி என்க. வெவ்வழி வருந்தினீர், என்றது 827 இல் 'சேணறி வந்ததோர் வருத்தச் செய்கையன்' என்றதால் விளங்க வைத்தமை காண்க.

பி - ம். 1. யனையவை யுரைத்த, யனையவா றுரைத்த, யினையன வுரைத்த.
2. மெய்வழி வருந்தினிர்; வருந்தநீர், வருத்தநீர், வினைத்தவிருந் தினீர்.
4. எவ்வழி நின்றுமிங்; நின்றுவந் தெய்தினீர், நின்றுமென் றெய்தினீர். (40)

847. இந்திரற் கிந்திர னெழுத லாகலாச்
சுந்தர னுன்முகன் மரபிற் றோன்றினான்
அந்தரத் தோடுமெவ் வுலகு மாள்கின்றான்
மந்திரத் தருமறை வைகு நாவினான்.

(அதற்கு, இராவணன்), 'இந்திரற்கு இந்திரன் - (தேவர்களுக்கு ஈசனான) இந்திரனுக்குத் தலைவன்; எழுதல் ஆகலா - சித்திரத்தில்

யாவராலும் எழுதமுடியாத, சுந்தரன் - அழகையுடையவன்; நான்முகன் மரபில் தோன்றினன் - நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவன் குலவழியில் பிறந்தவன்; அந்தரத்தோடும் - வானுலகத்தோடும், எ உலகும் ஆள்கின்றான் - எல்லா உலகங்களையும் ஆள்கின்றவன்; மந்திரத்து அரு மறை வைகும் நாவினன்-மந்திரங்களைத் தம் மிடங்கொண்ட அரிய வேதங்கள் தங்கியுள்ள நாவையுடையவன்;

இச் செய்யுள் முதல் 856 முடிய ஒரு தொடர். இந்திரன் - தலைவன் அல்லது அரசன் என்னும் பொருளது; நரேந்திரன், மிருகேந்திரன் என்பன போல. நான்முகன் மரபிற்றோன்றினன்; 258; சுந்தர. 483, 1154. அருமறை வைகும் நாவு: அரிய வேதங்களை நன்கு அத்யயனம் செய்து அவற்றை நன்கு மொழியும் நாப்பழக்கம் உள்ளவன்; 827. உரை. 'எவ்வழி நின்றுமின் றெய்தினிா' என்ற பிராட்டியின் வினவுக்கு, இராவணனுடைய பெருமைகளையெல்லாம் பலபடக்கூறி, அவன் நகரிலிருந்து வந்ததாக 851-இல் முடிக்கின்றமை காண்க.

பி-ம். 2. சுந்தர நான்முகன்; றோன்றினேன். (41)

848. ஈசனாண் டிருந்தபே ரிலங்கு மால்வரை
ஊசிவே ரொடும்பறித் துருட்டு மூற்றத்தான்
ஆசைகள் சுமந்தபே ரமரி யானைகள்
பூசல்செய் மருப்பினைப் பொடிசெய் மார்பினன்;

'ஈசன் - சிவபிரான், ஆண்டு இருந்த - தன் இருப்பிடமாகக் கொண்டு எழுந்தருளியிருந்த, இலங்கு மால் வரை - (தோற்றத்தால் சிறந்து) விளங்கும் பெரிய கயிலையங்கிரியை, ஊசி வேர் ஓடும் - ஊசி போன்ற சிறு வேர் ஒன்றும் விடாமல் சேர்த்து, பறித்து உருட்டும் ஊற்றத்தான் - பறித்துப் (பம்பரம் போல்) உருட்டிய வலிமையுடையவன்; ஆசைகள் சுமந்த - திக்குகளைத் தாங்கிய, பேர் அமர் யானைகள் - பெரிய போர்களிற் சிறந்த யானைகள், பூசல் செய் - போரிடும், மருப்பினை - தந்தங்களை, பொடி செய் மார்பினன் - தூளாக ஒடித்த மார்பையுடையவன்;

ஊசிவேர் ;- திருவாய்மொழி ; 1. 2 : 3 ; ஈடு. இராவணன் மலையெடுத்தது ; 285, 319, 323, 327, 745; சுந்தர. 117, 272, 303 451-52, 743 முதலியவற்றாலும், உத்தர. வரையெடுத்த படலத்தாலும் அறியலாம். இங்கு உருட்டியது என்றது, மிகைபடக் கூறியது. இராவணன் திக்கயங்களின் மருப்பொடித்தது ; 258, 323;

328, 565, சுந்தர. 452 ; உயுத்த. மந்திரப் : 102 முதலிய வற்றாலும், உத்திர. திக்குவிசயப்படலத்தாலும் அறியலாம்.

பி - ம். 1. ஈசனுண் டிருந்தபே. 2. பறித்தெடுக்கு ; மூக்கத்தான்.
3, பேரமரில் யானைகள், பேரளவில் யானையின் ; அமரி லானைகள்.
4. பூசல்வன் மருப்பினைப், பூசலன் மருப்பினைப் ; பொடிசெய் தோளினன், (42)

849. நிற்பவர் கடைத்தலை நிறைந்த தேவரே
சொற்பகு மற்றவன் பெருமை சொல்லுங்கால்
கற்பக முதலிய நிதியங் கையன
பொற்பதி மானந்தே ரிலங்கை பொன்னகர் ;

'கடை தலை நிறைந்து நிற்பவர் - அவன் வாயிலினிடத்துத் திரளாக வந்து நிறைந்து அவனுடைய அருள் நாடி நிற்பவர், தேவரே - தேவர்களே ஆவர் ; கற்பகம் முதலிய நிதியம் - கற்பகதரு முதலிய தேவலோகத்துச் செல்வமெல்லாம், கையன - அவன் கைவசத்தில் உள்ளன ; பொன் பதி-செல்வத்தின் நாயகனான குபேரனின், மானம்-(புஷ்பகம் என்னும் பெயரையுடைய) விமானம், தேர்-அவனுடைய தேராகும் ; பொன் நகர் - (அவனுக்குரிய) அழகிய நகரம், இலங்கை - இலங்கையாகும் ; அவன் பெருமை சொல்லுங்கால் - மேலும் அவன் பெருமைகளை எடுத்துக் கூறுமிடத்து, சொல் பகும் - சொற்கள் போதாமற் குறைவுபடும்.

தேவர்கள் அவன் அருள் நாடி அவன் வாயிலிற் காத்திருப்பவரென்றும், கற்பகம் முதலிய தேவ நிதியங்கள் அவன் கைவசமாக உள்ளன என்றும், அவன் நகரம் கடல் சூழ்ந்ததும் பொன்மயமானதுமான இலங்கை நகர் என்றும், மற்றும் அவன் பெருமை கூறிற் சொல் சுருங்கும் என்றும், ஒருவாறு தன் பெருமைகளை மறைமுகமாய்த் தெரிவித்தான் இராவணன் என்பதாம். கற்பகம் முதலிய என்றதினால், பஞ்சதருக்களில் அஃது ஒழிந்த, சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம் முதலிய தெய்வத்தருக்களையும், சிந்தாமணி முதலிய இரத்தினங்களையும் பிறவற்றையும் குறிப்பிட்டபடியாம். சொற்பகுதல் - சொற்கள் போதாமையாதல்; 'சொற்பக விநாயகன்' திருவால, திருவிளை; காப்பு. 1 : புட்பகம்,

குபேரனது என்பது ; உத்தர. புலத்தியப் : 22. இலங்கை, பொன்னகர் ; சுந்தர ; 177.

பி-ம். 1. நிறைந்து ; தேவரைச், தேவரை.
2. சொற்பத மென்றவன், சொற்பகு மாற்றவன், சொற்பதங் கவனரும் பெருமை.
3. நிதியங்கையனு, நிதியி னங்கையன், நிதியங் காமர்சூழ்.
4, பொற்பகமான நீ, புஷ்பக விமானத் தேறி, பொற்பதி மானந் தேர். (43)

இதன் அடியில், இரண்டு அதிகச் செய்யுள்கள் சில பிரதிகளில் உள்ளன. பெரும்பாலன பழைய ஏடுகளில் அவை அல்லாமையால் அவை இங்குப்பாடல் வரிசையில் எண் கொடுத்துச் சேர்க்கப் பெறவில்லை ; அவை,

*1.* மேனகை திலோத்தமை முதல வேழையர்
வானகந் துறந்துவந் தவன்றன் மாட்சியால்
ஊனமில் லடைப்பைகால் வருட லொண்செருப்
பானவை முதற்றொழி லவர தாகுமே.

2. சந்திர னிரவியென் பவர்க டாமவன்
சிந்தனை வழிநிலை திரிவர் தேசுடை
இந்திரன் முதலிய வமர ரீண்டவன்
கந்தடு கோயிலின் காவ லாளரே.

850. பொன்னக ரத்தினும் பொலன்கொ ணகர்தம்
தொன்னக ரத்தினும் தொடர்ந்த மாநிலத்
தென்னக ரத்தினு மினிய வீண்டவன்
நன்னக ரத்தன நவையி லாதன.

'பொன் நகரத்தினும் - பொன்னகரமாகிய அமராவதி என்னும் தேவர் நகரிலும், பொலன் கொள் நாகர் தம் தொல் நகரத்தினும் - அழகு பொருந்திய நாகலோகத்துத் தலைநகராகிய போகவதி என்னும் பழமை வாய்ந்த நகரத்திலும், மா நிலத்து தொடர்ந்த எ நகரத்தினும் - பெரிய இப் பூவுலகில் (பலவாய்த்) தொடர்ந்து உள்ளனவான பிற எந்த நகரத்திலும், இனிய - இன்பந்தருவனவாய்ச் சிறந்துள்ளவையும், நவை இலாதன - குற்றமற்றவையும் ஆனபொருள்கள், ஈண்டு - ஒன்று சேர்ந்து திரண்டு, அவன் நல் நகரத்தன - அவனுடைய அழகிய இலங்கை மாநகரில் உள்ளன ஆம்.

விண், பாதலம், புவி ஆகிய மூவுலகங்களில் உள்ள அரிய பொருள்கள் யாவும் அவ்விராவணன் இலங்கை நகரில் ஒன்று சேர்ந்துள்ளன; அதாவது, இராவணன் மூவுலகங்களிலுமுள்ள இனிய பொருள்களனைத்தையும் அபகரித்துத் தன் இலங்கை நகரில் சேர்த்துவைத்திருந்தான் என்பதாம்; 'உலக மூன்றிற் றெட்புறு பொருள்களெல்லா மிதனுழைச் செறிந்த' (சுந்தர. 95).; இவ்வாறு கூறியதால் மூவுலகத்தினும் இனியவளான பிராட்டியும் அவன் நகரத்திலிருக்கவே உரியள் என்பதை அவன் குறிக்காமற் குறித்ததாம். தெந் நகரத்தினுமென்றிருக்கப் பாலது எதுகை நோக்கித் திரிந்தது.

பி-ம். 1. கொணுகரத். 3. மினிய வீடவன், மினிய வீடெனும் 4. தன்னகரத்தினு. (44)

851. தாளுடை மலருளோன் தந்த வந்தமில்
நாளுடை வாழ்க்கைய னாரி பாகத்தன்
வாளுடை தடக்கையன் வாரி வைத்தவெங்
கோளுடை சிறையினன் குணங்கண் மேயினுன்.

'தாள் உடை மலர் உளோன் - தண்டினையுடைய தாமரை மலரில் வாழும் பிரமதேவன், தந்த - அருளிய, அந்தம் இல் நாள் உடை வாழ்க்கையன் - அழிவு இல்லாத வாழ் நாட்களையுடையவன்; நாரி பாகத்தன் - தன் தேவியாகிய உமையை இடது பாகத்தில் உடைய சிவபெருமான் அருளிய, வாள் உடை தட கையன் - சந்திரஹாஸம் என்னும் வாளையுடைய பெரிய கையையுடையவன்; வாரி வைத்த - ஒருங்கே திரட்டி எடுத்து வைத்த, வெம் கோள் உடை - வலிமை மிக்க நவகிரகங்களைக் கொண்டு போய் அடைத்து வைத்த, சிறையினன் - சிறைச்சாலையையுடையவன்; குணங்கள் மேவினுன் - மேலான குணங்கள் அமைந்தவன்.

மற்ற மலர்களிலும் தாமரையின் தண்டு சிறந்துயர்ந்துள்ளமையால் தாளுடைமலர் என்னப்பட்டது; 'தாளதாமரை' (பால. மிதிலைக்; 47). இராவணனுக்கு நீண்ட ஆயுள் அருளியவர் சிவபெருமானென்று உத்தரகாண்டம் கூறும்; மற்றும், அந்த மில்லா நாள் அவன் பெற்றுனில்லை; இராவண சந்நியாசி இவற்றைத் திரித்துக் கூறினுகும். நாரி - பெண்; இங்கு உமாதேவியைக் குறிப்பது; நாரிபாகத்தன்; உமாதேவி சிவபிரானைப் பூஜித்து அவள் விருப்பப்படி அவ்விசன் உடலில் ஒரு பாகமாய் அமர்ந்தாள் என்பது புராணவரலாறு; வி. பா. அருச்சுனன் தீர்த்த: 13. வாரிவைத்த, என்றது, அவனுக்கு

அச்செயலின் எளிமை குறிப்பிட்டபடி. ஈசனிடமிருந்து பெற்றவாள், சந்திரஹாஸமாகும்; இராவணன் கோள்களைச் சிறைவைத்தது; 557.

பி-ம். 1. மலருளான், மலரிஞேன். 2. பாகத்தான்,
4. குணங்கண் மேன்மையான். (45)

ஒரு சுவடியில் இச்செய்யுள் பின்வருமாறு மாறியுள்ளது.

தாள்வரு மூன்றரைக் கோடி சாற்றுறு
நாள்பெறும் வாட்கைய ஞரி பாகத்தான்
வாள்பெறுந் தடக்கையன் வான மீதுறை
கோள்களைச் சிறைசெய்தோன் குணத்தின் மேலையோன்.

852. வெம்மைதீ ரொழுக்கினன் விரிந்த கேள்வியன்
செம்மையோன் மன்மதன் திகைக்குஞ் செவ்வியான்
எம்மையோ ரனைவரு மிறைவ ரேயெனும்
மும்மையோர் பெருமையு முற்றும் பெற்றியான்.

'வெம்மை தீர் ஒழுகிக்கினன் - கொடுமையினின்றும் நீங்கிய நல்லொழுக்கங்களையுடையவன்; விரிந்த கேள்வியன் - விரிவான வேதங்களைக் கேட்டு ஓதியுணர்ந்தவன்; செம்மையோன் - கோணுத நடுநிலையில் உள்ளவன்; மன்மதன் திகைக்குஞ் செவ்வியான் - மன்மதனும் கண்டு ஏக்கமுறும் உடலழகு அமைந்தவன்; எம்மையோர் அனைவரும் - எவ்வுலகத்தில் உள்ளவர் எல்லாரும், இறைவரே எனும் - தெய்வங்கள் என்று சொல்லும், மும்மையோர் பெருமையும் - மும்மூர்த்திகளின் பெருமைகளும், முற்றும் பெற்றியான் - முழுவதும் அமைந்த பெருமையுடையவன்.

கேள்வி - வேதம்; கேட்டு ஓதப்படுவதால்; சுருதி என்ற வடமொழிப் பெயரின் பொருளில் அமைந்தது; ஆன்றோரிடம் நூல்களைக் கேட்டறிந்தவன் என்னலும் ஒன்றும்; 'கற்றலிற் கேட்டலே நன்று'; 'கற்றிலனுயினுங் கேட்க' என்பன காண்க. திகைக்கும்; அயோத். *2 : 18. 19.* இறைவர் மும்மையோர் - திரி மூர்த்திகள்.

பி-ம். 1. வெம்மை தீரொழுக்கினன்; கேள்வியான்.
2. செம்மை தீர் மன்மதன், செம்மையன் மன்மதன்; செவ்வியன், செவ்வியோன்;
3. ரென்றெனும், ரேயினும்; ரென்னுமென்னும்; எம்மஞே ரனையருமிறைவர். (46)

853. அனைத்துல கினுமழ கமைந்த நங்கையர்
எனைப்பல ரவன்றன தருளி னிச்சையோர்
நினைத்தன ருருகவு முதவ நேர்கலன்
மனக்கினி யாளொரு மாதை நாடுவான்.

'அனைத்து உலகினும் - எல்லா உலகங்களிலும் உள்ள, அழகு அமைந்த நங்கையர் - அழகு பொருந்திய மகளிர், அவன் தனது அருளின் இச்சையோர் - அவனுடைய அருளை யடைவதில் ஆசை கொண்டுள்ளோர், எனைபலர் - எவ்வளவு பேர்கள், நினைத்தனர் உருகவும் - அவனை நினைத்தவர்களாய் இருந்து (அடையப் பெருமையால்) மனம் உருகி வருந்தவும், உதவ நேர்கலன் - அவர்களுக்கு அருள்புரிய உடன்படாதவனாய், மனக்கு இனியாள் ஒரு மாதை நாடுவான் - தன் மனத்திற்கு இனியளான ஒரு மங்கையை நாடிக்கொண்டிருக்கிறான்.

நங்கையர் என்றாலே பெண்களிற் சிறந்தார் ஆவர்; அந்நங்கையருள் வடிவழகிற் சிறந்தவர் என்பது தோன்ற, அழகமைந்த நங்கையர் என்னப்பட்டது; மனத்திற்கு என்பது மனக்கு என வந்தது விகாரம்; அயோத். மந்தரை சூழ்ச்சி : 75.

பி-ம். 1. அனைத்துல கமுமைந்த; அமைந்த மங்கையர்.
2. எனைத்துள ரவன்றன்; னிச்சையால்.
3. நினைத்தனர் மயங்குவார் நிருப நேர்கிலான், நினைத்தவ ருருகவு முதவ நேர்கிலன், முதவ நேர்ந்திலன், முதல் நேர்கிலன், முதல்வ னேகிலன்.
4. மனத்தினி யாளொடும் மாய்கை; மாதர் நாடுவான். (47)

854. ஆண்டையா னரசுவீற் றிருந்த வந்நகர்
வேண்டியான் சில்பக லுறைதன் மேயினேன்
ஈண்டியா னிருந்தவற் பிரியு நெஞ்சிலேன்
மீண்டனெ னவனுடை வினைய முற்றுவான்.

'ஆண்டையான் - தலைவனான அவன், அரசு வீற்றிருந்த - அரசாட்சிபுரிந்து எழுந்தருளியிருந்த, அ நகர் - அந்த இலங்கை மாநகரில், யான் வேண்டி - நான் விரும்பி, சில பகல் உறைதல் மேயினேன் - சில நாட்கள் தங்கியிருக்கலானேன்; யான் ஈண்டு இருந்து - நான் அவனுடன் நெருங்கிப் பழகியிருந்து, (பின்) அவன் பிரியும் நெஞ்சு இலேன் - அவனைப் பிரிந்து வரும் மனம் இல்லாதவனாய், அவனுடை வினையம் முற்றுவான் - அவனது காரியம்

ஒன்றை முற்றுவிக்கும் பொருட்டு, மீண்டனென் - திரும்பி வந்தேன். (என்று கூறினன் எனப் பொருண் முடிவு செய்க.).

ஆண்டை: ஆண்டகை என்பதின் குறுக்கல் விகாரம்: 'இன்றும் சோழநாட்டில் தலைவனை 'ஆண்டை' யென்ற பெயரால் அழைப்பது காணலாம். ஆண்டையான் என்பதற்கு அப்பொழுது அவன், எனவும் பொருள் கொண்டாரும் உளர். இதுவும் அடுத்த செய்யுளும், சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 2. லுறைய மேயினேன், லுறைதன் மேவினேன்; வேண்டினேன்.
3. நீண்டனெ னிருந்தவற் பிரிந்த நெஞ்சிலேன்; பிரிய நெஞ்சிலேன், நீண்டனா ளிறையவர்ப் பிரிய நெஞ்சிலேன், நீண்டுநா னிருந்தவற், ஈண்டுநா னிருந்த.........நெஞ்சினேன்.
4. னென்றனன் வினைய; முன்னுவான், மீண்டன னென்றலும்; விமலை கூறுவாள். (48)

பின்னும் பிராட்டி வினவ, அவன் கூறியது 855—9.

855. வேதமும் வேதிய ரருளும் வெஃகலாச்
சேதன மன்னுயிர் தின்னுந் தீவினைப்
பாதக வரக்கர்தம் பதியின் வைகுதற்
கேதுவென் னுடலமு மிகையென் றெண்ணுவீர்.

'உடலமும் மிகை என்று எண்ணுவீர் - உடம்பையும் அதிகமானது என்று நினைக்கும் துறவியாகிய நீவிர், வேதமும் - வேதங்களையும், வேதியர் அருளும் - அவ்வேதங்களையுணர்ந்த அந்தணர்களுடைய அனுக்ரகங்களையும், வெஃகலா - விரும்பாது, சேதன - பகுத்தறிவோடு கூடிய, மன் உயிர் - நிலை பெற்ற மானிடர்களை, தின்னும் - பற்றி உண்ணும், தீ வினை பாதக அரக்கர்தம் பதியின் - கொடுஞ் செயல்களையுடைய பாவிகளான அரக்கர்களின் நகரில், வைகுதற்கு - (நீவிர்) தங்கியிருப்பதற்கு, ஏது என் - காரணம்என்ன?

இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடராகி, அதனிலுள்ள 'என்றாள்' என்பதனுடன் முடியும். 'உடலமும் மிகை யென் றெண்ணுவீர்' என்பது, 'மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல், உற்றார்க் குடம்பு மிகை'; (குறள். 345) என்னுங் கருத்தைத் தழுவி வந்தது; இதற்குப் பரிமேலழகர் கூறும் உரையைக் காண்க. வேதமும், உடலமும், உம்மைகள் உயர்வு சிறப்பின. எந்தப் பிராணிக்கும் தன் உடல்மீதுள்ள அபிமானம்

விடுதல் அரிது; அவ்வுடலபிமானமும் உண்மைத் துறவிக்கு இராது என்பதைப் பிராட்டி புலப்படுத்தினாள் என்க. உடலுக்கு உயிர்ப் பொறை என்ற பெயர் உள்ளமை இங்கு நோக்கத்தக்கது. சேதன மன்னுயிர் - பகுத்தறிவுடைய மானிடர். பாதகத் தீ வினை யரக்கர் என மாற்றி, பிறர்க்குக் கேட்டை யுண்டாக்கும் கொடுஞ்செயலுடைய அரக்கர் என்றும் பொருள் கொள்க. சேதனம்- அறிவு. பாதக, வரக்கர்தம்...........ஏதுவென்' - "தீயாரைக் காண் பதுவுந் தீதே திருவற்ற, தியார்சொற் கேட்பதுவுந் தீதே - தியார் குணங்களுரைப்பதுவுந் தீதே யவரோ டிணங்கி யிருப்பதுவுந் தீது" (மூதுரை. 9.) என்ற உண்மை கருதிக் கூறியது.

பி-ம். 1. வேள்விய ருளும், வேதியர் செயலும்.
2. சேதனை மன்னுயிர், சேதமென்னுயிர், சேதியர் மன்னுயிர், சேதின ரின்னுயிர்.
3. பதியில் வைகுதற். 4. கேதுவெ னிதயமு. (49)

856. வனத்திடை மாதவர் மருங்கு வைகலீர்
புனற்றிரு நாட்டிடைப் புனித ரூர்புக
நினைக்கிலீ ரறநெறி நினைக்கி லாதவர்
இனத்திடை வைகினீ ரென்செய் தீரென்றாள்.

'வனத்து இடை - காட்டினிடத்து வாழும், மா தவர் மருங்கு - பெரிய தவத்தினர்களான பெரியோர் அருகு, வைகலீர் - தங்கி யிருந்தீர் அல்லீர்; புனல் திரு நாட்டு இடை - நீர் வளமுள்ள சிறந்த நாடுகளினிடத்துள்ள, புனிதர் - பரிசுத்தரான இல் வாழ்வார்கள் தம், ஊர் புக - ஊர்களில் போய்ச் சேர, நினைக்கிலீர் - எண்ணினீர் இல்லை; (ஆனால்) அறம் நெறி நினைக்கிலாதவர் - தரும மார்க்கத்தை நினையாதவர்களான அரக்கர்களுடைய, இனத்து இடை - கூட்டத் தினிடத்து, வைகினீர் - தங்கியிருந்தீர்; என் செய்தீர் என்றாள் - என்ன தகாத காரியத்தைச் செய்தீர்!' என்று பிராட்டி அந்த இராவண சந்நியாசியை நோக்கி வினவினாள்.

'துறவிகள், வனத்தில் தவசிகளோடு பெருங்காலமும், தீர்த்தாடனத்தைக் கருதி நதி தீரங்களில் உள்ள இல்லறத்தா ரிடங்களில் அவர்கள் ஆதரவில் சில காலமும் இருப்பது நியம மாகும்; அவ்வாறின்றி, அறநெறி நினையாப் பாவியர்களான அரக்கர் இனத்தோடு அவர்கள் பதியில் போயிருந்தது உமது தவநியமத் திற்குத் தகாதே என்ற கருத்தில், 'என்ன அநீதி செய்து விட்டீர்'

என்று அவன் பிழைக்கு வருந்திக் கூறினள் பிராட்டி என்க. ஓர் ஏட்டுப் பிரதியில் இந்தப் பாடல் இல்லை.

பி-ம். 1. *மாதவ ரருகு வைகலிர் ; வைகும் நீர்.*
2. *புனத் திரு.*
3. *நினைத்திவி ரறநெறி, நினைக்க லாதயர், நினைத்தவி லறநெறி.*
4. *வைகினி ரென், வைக நீரென்.* (*50*)

வேறு

857. மங்கையஃ துணர்த்தல் கேட்ட
வரம்பிலான் மறுவிற் றீர்ந்தாள்
வெங்கண்வா ளரக்க ரென்ன
வெருவுவாள் மெய்மை நோக்கித்
திங்கள்வாண் முகத்தி னாளே
தேவரிற் றீய ரன்றே
எங்கள்போ லியர்க்கு நல்லார்
நிருதரே போலு மென்றான்.

மங்கை - பிராட்டி, அஃது உணர்த்தல் கேட்ட - அவ்வார்த்தை சொல்லித் தனக்கு அறிவுறுத்தியது கேட்ட, வரம்பு இலான் - எல்லை கடந்து ஒழுகுபவனான அந்தக் கபவனாகிய இராவணன், மறுவில் தீர்ந்தாள் - குற்றங்களற்றவளும், வெம் கண் வாள் அரக்கர் என்ன வெருவுவாள் - மிகக் கொடிய இராக்கதர்கள் என்று சொல்லிய அளவிலே அஞ்சுபவளுமான பிராட்டியின், மெய்மை நோக்கி - உண்மை நிலையைப் பார்த்து, 'திங்கள் வாள் முகத்தினாளே - சந்திரன் போன்ற ஒளியுடைய முகத்தை யுடையவளே ! தேவரில் தீயர் அன்றே - (அவ்வரக்கர்கள்) தேவர்களைப்போலக் கொடியவர் அல்லரே !, எங்கள் போலியர்க்கு - எம்போன்ற தவசியர்க்கு, நிருதரே - அந்த இராக்கதர்களே, நல்லார் போலும் என்றான் - நல்லவர் ஆவர்' என்று கூறினான்.

வெங்கண் வாள் அரக்கர் : கொடிய கண்களையும் வாளேந்திய கைகளையுடையவர்களுமான அரக்கர்கள் எனக் கொள்வதும் ஒன்றும். வெருவுதல் - அஞ்சி நடுங்குதல் ; *272, 282* ; 'யானை, வெரூஉம் புலி தாக் குறின்' (குறள். *599*;) மெய்மை - உடலின் நிலையும் ஆம் ; 'பட் டாங்கான உணர்வு', என்றமையுங் காண்க. (தொல், எழுத்து. *156*.

உரை). தேவரிற்றீயரன்றே : எங்கள்போன்ற துறவியர்க்கு நிருதரும் தேவரைப் போல நல்லவரே ஆவர் என்பதும், துறவியராகிய யாம், நிருதருக்கும் தேவருக்கும் வேறுபாடு கருதோம், என்பதும் புலப்படக் கூறிய முறையில் சொற்கள் அமைந்துள்ளமை காண்க. தேவரில் - தேவரை விட, என்றுங் கொள்ளலாம். இதன் பின், ஒரு பாடல் இருக்கவேண்டும் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. யஃதுரைத்தல கேட்ட; மறு விலாதாள், மறுவ நீர்ந்தார், மறுவ நீர்ந்தான்.

2. வெருவலம் மெய்ம்மை நோக்கின, மெய்யை நோக்கி.

3. முகத்தி னுயத்; தேவரிற் றீய ரல்லர். (51)

858. சேயிழை யன்ன சொல்லத் தீயவர்ச் சேர்தல் செய்தால்
தூயவ ரல்லர் சொல்லிற் றொன்னெறி தொடர்ந்தோ ரென்றாள்
மாயைவல் லரக்கர் வல்லர் வேண்டுரு வரிக்க வென்ப
தாயவ ளறித றேற்றா ளாதலி லயலொன் றெண்ணாள்.

அன்ன சொல்ல - அவ்வாறு அந்த இராவண சந்நியாசி கூற, சேய் இழை ஆயவள் - சிறந்த அணிகலன்கள் பூண்ட பிராட்டி, மாயை வல் அரக்கர் - மாயைத் தன்மையுடைய வலிய அரக்கர்கள், வேண்டு உரு வரிக்க வல்லர் என்பது - தாம் விரும்பும் உருவத்தை ஏற்றுக் கொள்ளும் திறமையுடையவர் என்னும் செய்தி, அறிதல் தேற்றாள் ஆதலின் - அறியும் திறமையற்றவ ளாதலாலே, அயல் ஒன்று எண்ணாள் - வேறு ஒன்றையும் அவனைப்பற்றிச் சிந்தனை செய்யாதவளாய், 'சொல்லில் - சொல்லுமிடத்து, தொல் நெறி தொடர்ந்தோர் - பழைய நன் மார்க்கத்தில் தொடர்ந்து நடந்துவரும் மேலோர், தீயவர் சேர்தல் செய்தால் - கெட்ட குணமுடையவரோடு சேர்ந்து பழகினால், தூயவர் அல்லர் - (அவர்) பரிசுத்தமான நல்லோர் ஆகமாட்டார்,' என்றாள் - என்று கூறினாள்.

பிராட்டி, அவன், தன் மாயையால் துறவிபோல வந்துள்ள இராவணன் என்பது அறியாளாதலின், அவனிடம் வேறு கெட்ட எண்ணமும் ஐயமுங் கொள்ளாமல், அவனை உண்மையான துறவி என்றே கருதி, 'கெட்டோரைச் சேர்ந்த நல்லோரும் கெட்டோரே ஆவர்' என்று கூறினாள் என்பதாம்; ஒப்பு : குறள். 455. சேயிழை; அன்

மொழித் தொகை. இதுவும் அடுத்த செய்யுளும் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு :

பி-ம். 1. சேயிழைக் கன்ன சொல்லத் தீய்வர்ச் சேர்வை செய்தார்; அனைய சொல்ல; சேர்தல் செய்யார், சேர்த்தல் செய்தி.

2. தூயவ ரெனயே சொல்லத் தொன்னெறி தொடர்வ துண்டோ; தொடர்ந்தோ ரல்லர், தொடர்ந்தோ ரென்றால்.

3. மாயம் வல் லரக்கர், மாயவல் லரக்கர்; அரக்கராகு மென் பதை, அரக்கர் வல்லர் வேண்டுரு வெடுப்ப வென்ப.

4. ஆய்கி லன்றித் தேரா எருந்தய ரலயென் றுன்ற. (52)

இராவணன் சமாதானங் கூறியதும், பிராட்டி இராமபிரான் பெருமைகளை விளக்கியதும் 859—63.

859. அயிர்த்தன ளாகு மென்றோ
ரையுற வகத்துக் கொண்டான்
பெயர்த்தது துடைக்க வெண்ணிப்
பிறிதுறப் பேச லுற்றான்
மயக்கறு முலக மூன்றில்
வாழ்பவர்க் கனைய வல்லோர்
இயற்கையி னிற்ப தல்லா
லியற்றலா நெறியே தென்றான்.

அயிர்த்தனள் ஆகும் என்று - (பிராட்டி கூறிய மொழிகளால்) தன் மீது அவள் ஐயம் கொண்டவள் ஆகும் என, ஓர் ஐயுறவு அகத்து கொண்டான் - ஒரு சந்தேகத்தைத் தன் மனத்திற் கொண்ட இராவணன், அது - அந்தச் சந்தேகத்தை, பெயர்த்து துடைக்க எண்ணி - தீர்த்து ஒழிக்கக் கருதி, பிறிது உற பேசல் உற்றான் - வேறொரு வகையில் பேசத் தொடங்கினவனாகி, ' மயக்கு அறும் - அறிவின் மாறுபாடு அற்ற (அதாவது நல்லறிவோடு கூடிய), உலகம் மூன்றில் வாழ்பவர்க்கு - மூவுலகங்களிலும் வாழும் தேவர், நாகர், மானிடர் என்பார்க்கு, அனைய - மேற் கூறியவாறு, வல்லோர் - வலியோரான அவ்வரக்களுடைய, இயற்கை யின் நிற்பது அல்லால் - இயல்பான குணத்தைப் பின்பற்றி நடப்பது அல்லாமல், இயற்றல் ஆம் நெறி ஏது என்றான் - செய்யக் கூடிய உபாயம் வேறு யாதே உள்ளது?' என்று கூறினன்.

ஐயுறவு - சந்தேகம், ஐயப்பாடு ; ' தெளிந்தான்கண் ணையுறவும் ' (குறள். 510.); ஐய உறவு - ஐயுறவு; தொகுத்தல் விகாரம். உலகம்

மூன்றும் அரக்கர்க்குட்பட்டவை; ஆதலின், அவற்றில் வாழ்வார் தம் விருப்பப்படி வாழ இயலாமல், அவ்வரக்கர்கள் விருப்பிற்கு இணங்கியே வாழ வேண்டியவராவர் என்று கூறினன் என்க.

பி-ம். 1. அயர்த்தன ளாகு; அகத்திற் கொண்டான்.
2. பிறிதுற வுரைக்க.
4. இயற்கையிற் பிரியினல்லா வியற்றலா நெறியெ னென்றான், இயற்கையிற் பிரியி னல்லா; னெறிய தென்றான், நெறியே யென்றான், நெறியென் னென்றான். (53)

860. திறந்தெரி வஞ்ச னச்சொற் செப்பலுஞ் செப்ப மிக்காள்
அறந்தரு வள்ள லீண்டிங் கருந்தவ முயலு நாளுள்
மறந்தலை திரிந்த வாழ்க்கை யரக்கர்தம் வருக்கத் தோடும்
இறந்தனர் முடிவர் பின்னை யிடரிலை யுலகி லென்றாள்.

திறம் தெரி வஞ்சன் - பிறர் மன நிலையின் தன்மையை அறிந்து கொள்ளும் வஞ்சகனான அந்த இராவணன், அ சொல் செப்பலும் - அவ்வார்த்தை கூறலும், செப்பம் மிக்காள் - மேன்மைக் குணம் நிறைந்த பிராட்டி, 'அறம் தரு வள்ளல் - தருமத்தை உலகுக்குத் தந்து நிலை நாட்டவல்ல எங்கள் பெருமான், ஈண்டு - இப்பொழுது, இங்கு - இவ்வனத்தில், அரும் தவம் முயலும் நாள் உள் - அரிய தவத்தைச் செய்து வரும் இந் நாட்களுள், மறம் தலை திரிந்த - பாபம் அல்லது கொடுமை முரண்ட, வாழ்க்கை அரக்கர் - வாழ்வை யுடைய இராக்கதர்கள், தம் வருக்கத்தோடும் இறந்தனர் முடிவர் - தம் இனத்தோடும் இறந்து ஒழிவர்; பின்னை - பிறகு, உலகில் இடர் இலை என்றாள் - (மூவுலகத்திலும்) துன்பமே இல்லாததாகும்' என்று கூறினள்.

திறந்தெரி வஞ்சன் - திறமையாகத் தெரிந்த வஞ்சகன் எனலும் அமையும். செப்பம் - செம்மைக்குணம்; குறள். *951*; மலைபடு. *160*. இராம்பிரான் அறந்தரு வள்ளல்; *31, 50, 136, 139*; பால. நகரப் : *5*; கிட்கிந்தா. வாலிவதைப்; *22, 125, 131*; சுந்தர. *363, 639, 1123*. மூன்றும் அடியில், அறந்தலை திரிந்த வாழ்க்கை எனப்பாடங் கொண்டு, தருமம் மாறுபடும் பாவ வாழ்க்கையுடைய என்று பொருள் கொள்வாரும் உளர். மறம் தலை திரிந்த என்றதற்கு, மறத்தினால் மூளைபுரண்ட எனலும் ஆம்.

பி-ம். 1. திறந்தரு; வஞ்சன் கூறக் கேட்டலுஞ் செவ்வி மிக்காள்.
3. அறந்தலை திரிந்த; அறைந்த னளக னம்பா லருந்தவத்தோடு மேலா. 4. பிறந்தவா; யுலகுக்கென்றான். (54)

861. மானவ ளுரைத்த லோடு
மானிட ரரக்கர் தம்மை
மீனென மிளிருங் கண்ணுய்
வேரற வெல்வ ரென்னில்
யானையி னினத்தை யெல்லா
மிளமுயல் கொல்லு மின்னும்
கூனுகிர் மடங்க லேற்றின்
குழுவைமான் கொல்லு மென்ருன்.

மானவள் - பெருமையுள்ள பிராட்டி, உரைத்தலோடும் - அவ்வாறு கூறியவுடன், (இராவணன் பிராட்டியை நோக்கி), 'மீன் என மிளிரும் கண்ணுய் - கயல் மீன்போலச் சலித்து ஒளிரும் கண்களையுடையவளே! மானிடர் அரக்கர் தம்மை - மனிதர் அரக்கர்களை, வேர் அற வெல்வர் என்னில் - மூலத்தோடு (அதாவது அடியோடு) முடிய வென்று விடுவார் என்ருல், யானையின் இனத்தை எல்லாம் இள முயல் கொல்லும் - யானையின் கூட்டம் அனைத்தையும் ஓர் இளம் முயல் கொன்றுவிடும்; (அன்றியும்), மின்னும் - ஒளி வீசும், கூர் உகிர் மடங்கல் ஏற்றின் குழுவை - கூரிய நகங்களையுடைய ஆண் சிங்கங்களின் கூட்டத்தை, மான் கொல்லும் - ஒரு மான் கொன்றுவிடும்;' என்ருன் - என்று கூறினன்.

மானவள்; மானவன் என்பதின் பெண்பாலாய்ப் பிராட்டியைக் குறிப்பது; மானம் - பெருமை. இராமபிரானை மானவன் என்பது இந்நூலில் பலவிடங்களில் வருவது காணலாம். பிராட்டியை மானவள் என்பது; 761, 774, 1125. மடங்கல் - சிங்கம்; மிளிர்தல் - ஒளி வீசுதல்; 'கெண்டை யொண்கண் மிளிர;' (பெரிய திருமொழி. 3. 7 : 2.)

பி-ம். 1. ஆனவ ளுரைத்த. 2. மீனினு மிளிருங்.
3. ஆனையி னினத்தை.
4. ஏற்றைக் குழுவை; கூனுகிர்; குருளைமான், குருளைகள்கொல்லு.

(55)

862. மின்றிரண் டனைய பங்கி விராதனும் வெகுளி பொங்கிக்
கன்றிய மனத்து வென்றிக் கரன்முதற் கணக்கி லோரும்
பொன்றிய பூச லொன்றுங் கேட்டிலீர் போலு மென்ருள்
அன்றவற் கடுத்த துன்னி மழைக்கணீ ரருவி சோர்வாள்.

(அது கேட்ட பிராட்டி), மின் திரண்டு அனைய பங்கி - மின்னல்கள் திரண்டு உள்ளன போலச் (சிவந்த) தலைமயிரையுடைய, விராத

னும் - விராதன் என்னும் அரக்கனும், வெகுளி பொங்கி கன்றிய - கோபம் மேலிட்டுக் காய்ந்து முதிர்ந்த, மனத்து - (கொடிய) மனத்தை யுடைய, வென்றி - வெற்றி மிக்க, கரன் முதல் கணக்கு இலோரும் - கரன் முதலாகக் கணக்கில்லாத அரக்கர்களும், பொன்றிய பூசல் ஒன்றும் - போரில் இராமபிரானால் இறந்தபோது உண்டான பேராரவாரம் ஒன்றினையும், கேட்டிலிர் போலும் - நீவிர் கேள்விப்பட வில்லை போலும்!' என்றாள் - என்று பிராட்டி கூறி, அன்று - இராமபிரான் அரக்கரோடு போர் செய்த அன்று, அடுத்தது உன்னி - அந்த இராமபிரானுக்கு நேர்ந்த உடற் புண் முதலிய இடையூறுகளை நினைத்து, மழை கணீர் அருவி சோர்வாள் - குளிர்ந்த கண்களினின்று உண்டாகும் நீராகிய அருவியைச் சிந்தவிட்டு நின்றாள்.

மின் - ஒளியும் ஆம். பங்கி - ஆண்பால் தலைமயிர் (பிங்). விரா தன் செந்நிறப் பங்கியன்; 13. பூசல் - ஆரவாரம் (266); சண்டை அல்லது போரும் ஆம். கேட்டிலிர் போலும் 'இந்த வனத்தில் முன் பெரும் ஆரவாரம் எழப் போர் நடந்ததே; அவ்வொலி உம் செவியில் விழவில்லையா? அல்லது மற்ற முனிவர் முதலிய தவசி யர் கூற நீவிர் கேட்கவில்லையா?' என்றனள் பிராட்டி என்க. மழைக் கண்: 804; உரை. கரன் போரில் இராமபிரானுக்கு ஏற்பட்ட புண் களாலாகிய துன்பம்; 549. இராமபிரான் வீரத்திறம் பேசுமிடையில், அவனுக்குண்டான புண்களை நினைத்து மனம் நெகிழ்ந்த பெண்மைக் குணம் இங்குக் கூறப்பெற்றமை காண்க.

பி - ம். 1. வெகுளி பொங்கக்.
3. கேட்டிலிர் போலு, கண்டிலிர் போலு.
4. அன்றவர்க்; ராவி சோர்வாள், ராவி சோர்வாள். (56)

863. வாளரி வள்ள றன்னால் மான்கண நிருத ரன்னார்
கேளொடு மடியு மாறும் வானவர் கிளரு மாறும்
நாளையே காண்டி ரன்றே நவையிலீ ருணர்கி லீரோ
மீளருந் தருமந் தன்னை வெல்லுமோ பாவ மென்றாள்.

'நவை இலிர் - குற்றமற்ற பெரியீரே! வாள் அரி வள்ளல் தன்னால் - கொடிய சிங்கம் போன்ற இராமபிரானால், மான் கணம் நிருதர் அன்னார் - மான் கூட்டம் போன்ற அரக்கரானவர், கேள் ஒடு மடியும் ஆறும் - தம் உறவினரோடு அழியும் விதத்தை யும், வானவர் கிளரும் ஆறும் - தேவர்கள் சிறந்து ஓங்கும் விதத்

தையும், நாளையே காண்டிர் அன்றே - நாளைக்கே நீவிர் காண்பீர் அன்றோ? மீள் அரும் தருமம் தன்னை - விலக்க முடியாத தரு மத்தை, பாவம் வெல்லுமோ - பாவம் வென்றுவிடுமோ? உணர் கிலிரோ - இதனை நீவிர் அறியீரோ?' என்றாள் - என்று கூறினாள்.

இராமபிரானைச் சிங்கம் என்றும், அரக்கர்களை மான் கூட்டம் என்றும் உவமித்துக் கூறியது இராமபிரானின் ஆற்றலின் சிறப்பை யும், அரக்கர்களின் அச்சங் குடிகொண்ட வலியிலாத் தன்மையையும் உணர்த்தியவாறும். இராவணன், ' கூருகிர் மடங்கலேற்றின் குழுவை மான் கொல்லும்' (861) என்று கூறியதற்கு விடையாகப் பிராட்டி கூறியதும் ஆம். இச்செய்யுள் வேற்றுப் பொருள் வைப்பணியாகும். நாளையே: ஏகாரம் விரைவுப் பொருளது. முன் 859-இல் இராவ ணன், ' மயக்கறு முலக மூன்றில் வாழ்பவர்க் கனைய வல்லோர் இயற் கையி னிற்ப தல்லால் இயற்றலா நெறியே தென்றான்' என்றதை மறுத்து,' 'தருமந்தன்னை வெல்லுமோ பாவம்' என்று கூறி, ' நவை யிலீர்! இதனை நீவிர் அறியீரோ' என்று அறிவுறுத்தினாள் என்க. தருமத்தைப் பாவம் வெல்லாது; 449; சுந்தர. 190, 405, 1137; உயுத்த. முதற் போர்ப் : 25.

பி - ம். 1. வாளரி வள்ளல் சொன்ன; வள்ளல் சொல்ல; யானுய ரரக்க ராளோர்; சொன்ன மான்கண நிருத ரன்னார்; நிருத ராளோர், நிருத ரானர்; றன்ன விலங்கைமா நிருத ரெல்லாம்; மாறு கொளரக்க ராளோர்.
2. மறியுமாறும், மெறியுமாறும், முடியுமாறும்.
3. நவையி லிருணர். (57)

அது கேட்டு இராவணன் சினங் கொண்டு கூறல் 864—6

864. தேனுட னமுத ளாய வன்னமென் சிலசொன் மாலை
தானுடைச் செவிக ளூடு தவழ்வுறத் தளிர்த்து வீங்கும்
ஊனுடை யுடம்பி னானும் முருகெழு மான மூன்ற
மானிடர் வலிய ரென்ற மாற்றத்தாற் சீற்றம் வைத்தான்.

தேன் உடன் அமுது அளாய அன்ன தேனோடு அமுதத்தைக் கலந்ததுபோன்ற (பிராட்டியின்), மென் சில சொல் மாலை - மென்மை யான சில சொற்களின் வரிசை, தான் உடை செவிகள் ஊடு தவழ்வு உற - தன்னுடைய காதுகளின் வழியே நுழைய, தளிர்த்து வீங்கும் - (அதனால்) புளகித்துப் பூரித்த, ஊன் உடை உடம்பினானும் - தசைப்பற்றுடைய உடலினனான அந்த இரவண

னும், மானிடர் வலியர் என்ற மாற்றத்தால் - மனிதர்களான இராம லக்ஷ்மணர்கள் வலிமை யுடையோர் என்று பிராட்டி கூறிய சொற் களால், உரு கெழு மானம் ஊன்ற - தன் சுய அபிமானம் உரு வெடுத்து ஓங்கி உள்ளே அழுந்திப் பதிய, சீற்றம் வைத்தான் - கோபத்தைக் கொண்டான்.

பிராட்டியின் சொல் தேனொடு அமிர்தங் கலந்தது போன்றது; ஒப்பு. கிட்கிந்தா. நாடவிட்ட: 50. உரு கெழு மானம் - உருவெடுத்தாற் போன்று மிகுந்த குலாபிமானமும் ஆம். இங்குச் சிருங்காரத்தை வெகுளி மாற்றியது; ஒப்பு. சுந்தர. 466. கோபம், எத்தகைய காவலை யும் கடந்து மேலெழும் என்பதும் இதனால் அறியலாகும்.

பி-ம். 1. தேனிடை யமு, தேனுடை யமு, தேனுட னமு; வென றவள், வென விவள்; யண்ணமென் செஞ்சொன் மாலை.
3. முடம்பினுனுக் குரைகெழு; முருக்கெழு மான, முருக்கெழு மான.
4. மானுடர்; வலிய ரென்றே; மானத்தார் சீற்றம்; சீற்றங் கொண்டான். (58)

865. சீறின னுரைசெய் வானச் சிறுவலிப் புல்லி யோர்கட்
கீறொரு மனிதன் செய்தா னென்றெடுத் தியம்பி னையேல்
தேறுதி நாளை யேயவ் விருபது திண்டோள் வாடை
வீறிய பொழுது பூளை வீயென வீவ னன்றே.

சீறினன் - கோபங்கொண்ட அந்த இராவணன், உரை செய்வான் - (பின்வருமாறு) பதில் கூறினன்; 'அ சிறு வலி புல்லி யோர்க்கு - நீ கூறிய சிறு வலிமையுடைய அந்த (விராதன் முதலிய) அற்பர்களுக்கு, ஒரு மனிதன் ஈறு செய்தான் என்று எடுத்து இயம்பினை ஏல் - ஒரு மனிதனை இராமன் முடிவைச் செய்தான் என்று நீ கூறினையானல், நாளையே தேறுதி - அதன் முடிவை நீ நாளையே தெளிவாக அறிந்து கொள்வாய்; அ இருபது திண் தோள் வாடை - (போரில்) அந்த இராவணனுடைய இருபது வலிய தோள்களின் காற்று, வீசிய பொழுது - வீசியடிக்கும்போது, பூளை வீ என - பூளைப் பூவைப்போல, வீவன் - அந்த மனிதன் அழிவன்; அன்று, ஏ: அசைகள்.

நாளையே: ஏகாரம், தேற்றப் பொருளது. பூளை வீ: இஃது ஒரு காட்டுச் செடியின் பூ; இது பஞ்சுபோல் நுட்பமும் வெண்மையும் அமைந்தது; பொங்கற் புது நாளில், பூக்களோடு கூடிய இச்செடி

களைக் கொணர்ந்து வீட்டின் முன்புறக் கூரை முகப்பில் சொருகி வைப்பது கொங்கு நாட்டு வழக்கம்; பூளை வீ: பால. தாடகை வதைப்: *1*: அகலிகைப்: *39*; சுந்தர. *1211*; உயுத்த. முதற்போர் *256*; பெரும்பாண். *192*. அன்றே என்பது தேற்றப் பொருளில் வந்த வினாவாகவும் கொள்ளலாம்.

பி-ம். 1. சீறின னுரை செய்யானைச்; சிலையலிப், சினையலைப் புலியோர் தங்கட்; புலி யன்னார்கட்; யரக்கர் தங்கட்.
2. நியம்பி னீரேல், நியம்பு நீயே.
3. தேறுதிர்; யவ்விராவணன் நிண்டோளால் வாள்; யவ் விராவணன் திரடோளால் வாள்; யன்றோ னிருபது.
4. வீறிய போது பூளை; கான வீயென; வீறிய போது பூளை வீய போல் வீய. (59)

866. மேருவைப் பறிக்க வேண்டில் விண்ணினை யிடிக்க வேண்டில்
நீரினைக் கலக்க வேண்டி னெருப்பினை யவிக்கவேண்டில்
பாரினை யெடுக்க வேண்டிற் பானிகர் செஞ்சொ லேழாய்
யாரெனக் கருதிச் சொன்னா யிராவணற் கரிதே தென்றான்.

'பால் நிகர் செம் சொல் ஏழாய் - பால்போன்று சிறந்து சுவை தருவனவான சொற்களையுடைய பெண்ணே! மேருவை பறிக்க வேண்டில் - மகா மேருமலையைப் பெயர்த்தெடுக்க விரும்பினாலும், விண்ணினை இடிக்க வேண்டில் - வான மண்டலத்தை இடித்துத் தள்ள விரும்பினாலும், நீரினை கலக்க வேண்டில் - கடல்களில் உள்ள நீரைக் கலக்க விரும்பினாலும், நெருப்பினை அவிக்க வேண்டில் - (அக்கடலில் உள்ள வடவாமுகாக்கினி என்னும்) நெருப்பை அவிக்க விரும்பினாலும், பாரினை எடுக்க வேண்டில் - பூமியைப் பெயர்த்து எடுக்க விரும்பினாலும், இராவணற்கு - அந்த இராவணனுக்கு, அரிது ஏது - அரிய காரியம் எது உள்ளது? (ஒன்றும் இல்லை என்றபடி); யார் என கருதி சொன்னாய் - அந்த இராவணனை யார் என்று எண்ணி நீ அவ்வாறு கூறினாய்?' என்றான் - என்று அந்த இராவண சந்நியாசி கோபத்துடன் பேசினான்.

பிராட்டியின் மொழிக்குப்பால்; அயோத். கங்கைப். *61*, நீர் - கடல்; தானியாகு பெயர்; மதுரைக். *36*. நெருப்பு - பஞ்ச பூதங்களில் ஒன்றான தீயையே குறித்ததும் ஆம். இனி உபலக்ஷணத்தால், காற்றினையும் அவிக்கும் ஆற்றல் உள்ளவன் இராவணன் என்பதும் கொள்ள இடமாகும். இதனால், இராவணன் பஞ்ச பூதங்களையும்

அடக்கி ஒடுக்க வல்லவன் என்பது பெறப்படும்; அக்னி, வாயு, வருணன் முதலினோர் அவனுக்கு ஏவலாளர்களாய் இருந்தனர் என்பது; 560, 567, 568, 569, 571. இச்செய்யுள் 'மேருவை யுருவ வேண்டின்' என்று தொடங்கும், சுந்தர. 446 ஐ ஒத்திருப்பது காண்க. இன்னும், 'மலையகழ்க் குவனே கடறூர்க் குவனே, வான் வீழ்க் குவனே. வளிமாற் றுவனெனத், தான் முன்னிய துறை போகலின்' என்ற பட்டினப். 271-3 அடிகளையும், 'ஆலுங்கட றூர்த்தன்மலை யகழ்தலிவை வல்லார்' என்ற (சீவக. 2165) அடியையும் இச்செய்யுள் பின்பற்றி யமைந்துள்ளமை காண்க. ஏழாய் என்றது பிராட்டியின் அறியாமையைக் குறித்ததும் ஆம்.

பி-ம். 1. விண்ணினை யடக்க, விண்ணினை யிடக்க; பிளக்க; யெடுக்க.
2. நீரினைக் கவர; நெருப்பினை யழிக்க.
3. பாரினைப் பறிக்க; பிளக்க, பிடுங்க; பலவினைச் சிலசொல் லேழாய்; செஞ்சொ லேழாய், பலவினைத் திறலோ னேழை.
4. கரிதெ னென்றான், கரிதே னென்றான், கரிதோ வென்றான்' கரிதே யென்றான், கரிதே தென்றான். (60)

பிராட்டி இடித்துக் கூற, இராவணன் வெகுண்டு தன் வேடம் நீங்கல் 867-9.

867. அரண்டரு திரடோள் சால
வுளவெனி லாற்ற லுண்டோ
கரண்டநீ ரிலங்கை வேந்தைச்
சிறைவைத்த கழற்கால் வீரன்
திரண்டதோள் வனத்தை யெல்லாஞ்
சிறியதோர் பருவந் தன்னில்
இரண்டுதோ ளொருவ னன்றோ
மழுவினு லெறிந்தா னென்றாள்.

'அரண் தரு - பாதுகாவலைச் செய்கின்ற, திரள் தோள் - திரண்ட புயங்கள், சால உள எனில் - மிகுதியாக உள்ளன என்று கூறினால், ஆற்றல் உண்டோ - (அதனால் அவை) வலிமை யுள்ளன வென்று கூற இட முண்டோ? (ஏனென்னில்), கரண்ட நீர் இலங்கை வேந்தை - நீர்க்காகங்கள் வாழும் கடல் நீரால் சூழப்பெற்ற இலங் கைக் கரசனான இராவணனை, சிறை வைத்த - முன்னொருகால் சிறையில் அடைத்து வைத்த, கழல் கால் வீரன் - வீரக்கழல் அணிந்த காலையுடைய வீரனான கார்த்த வீரியார்ச்சுனனது, திரண்ட தோள் வனத்தை எல்லாம் - பருத்த (ஆயிரம்) தோள்களாகிய காட்டை எல்லாம், சிறியது ஓர் பருவம் தன்னில் - தனது சிறிய

த்தான ஓர் இளம் பருவத்தில், இரண்டு தோள் ஒருவன் தானே - இரண்டு தோள்களையுடைய பரசுராமன் என்னும் ஒரு மனிதன் தானே, மழுவினால் எறிந்தான் என்றாள் - தன்கையிலுள்ள கோடாலியால் வெட்டி எறிந்தான்' என்று பிராட்டி உதாரண முகத்தால் எடுத்துக் கூறினாள்.

இதுகாறும் பிராட்டி வந்தவனை இராவணனே என்றறியாமல், அவன் ஒரு சந்நியாசியே என்று எண்ணிக் கூறியவை. அரண் தரு தோள் - உடலைக் காப்பன தோள்கள் ஆதலின்; ஒப்பு. 'மெய் சென்று தாக்கும் வியன் கோலடிதன்மேற், கை சென்று தாங்கும் கடிது'; நன்னெறி: 31). கரண்டம் - நீர்க்காக்கை; கிட்கிந்தா. (பிங்); பம்பைப்: 17. தோள்வனம் பல; 527; கார்த்த வீரியன் தோள் களுக்கு மூங்கிற்காட்டை உவமை கூறியதையும் ஒப்பிடுக; சுந்தர. 456, கார்த்தவீரியார்ச்சுனன்: இவன் ஹேஹய நாட்டுக் கிருதவர்மன் என்பவன் மைந்தன்; ஆயிரம் கைகள் உள்ளவன்; இவன் ஒரு சமயம் இராவணனைச் சிறைப்படுத்தி வைத்திருந்தான். அதனால் இவன் ராவணஜித் என்னும் பட்டம் பெற்றான். பரசுராமன் இவன் கரங்களை அறுத்து ஒழித்தான். இவன் வரலாறுகள்; பால. பரசுராமப்: 12; சுந்தர. 456, 464, உயுத்த. கும்பகருணன் வதைப்; 25; இராவணன் வதைப்: 208. இராவணனைக் கார்த்த வீரியன் சிறைப் படுத்தியது; உயுத்த. இராவணன் வதைப்: 208; தக்க. 417; திருவரங்கமாலை: 38. மற்றும் இவன் வரலாறுகள் உத்தர. கார்த்த வீரியார்ச்சுனப் படலத்தாலும், மகாபாரதம் வனபருவம், பாகவத புராணம் முதலியவற்றாலும் விரிவாகக் காணலாம்.

பி - ம். 1. உரண்டரு திரடோள் சாய வுளதெனி; வுளவென வாற்ற லுண்டோ; லாற்றலுண்டோ; வுளதெனி லாற்றலுண்டோ.
2. கரண்டம்யா ழிலங்கை, கரண்டையா ழிலங்கை.
3. பருவந் தன்னால்.
4. இரண்டுதோள் மனிதன்; னொரு வன்றே, னொருவன்றானே.

(61)

868. என்றவ ளுரைத்த லோடு மெரிந்தன நயனந் திக்கிற்
சென்றன திரடோள் வானந் தீண்டின மகுடந் திண்கை
ஒன்றொடொன் றடித்த மேகத் துருமென வெயிறு தம்மின்
மென்றன வெகுளி பொங்க விட்டது மாய வேடம்.

என்று அவள் உரைத்தலோடும் - என்று பிராட்டி கூறிய அளவில், நயனம் எரிந்தன - அந்த இராவணனுடைய கண்கள் கோபத்தால் நெருப்புப்போல் எரிவன ஆயின; திரள் தோள் - பருத்த

அவனுடைய இருபது தோள்களும், திக்கில் சென்றன - திக்குகள் எங்கும் பரந்து பூரித்துச் சென்றன ; மகுடம் வானம் தீண்டின - அவனுடைய கிரீடங்கள் வான முகட்டைப்போய்த் தொட்டன ; திண் கை ஒன்றேடு ஒன்று - அவன் வலிய கைகள் ஒன்றேடொன்று (மோத), மேகத்து உரும் என அடித்த - மேகத்தின் இடி போலத் தாக்கி அடித்து ஒலி உண்டாக்கின ; எயிறு தம்மின் மென்றன - பற்கள் ஒன்றேடொன்று கடித்தன ; வெகுளி பொங்க - இவ்வாறு கோபம் அதிகரிக்க, மாய வேடம் - அவ்விராவணன் எடுத்து வந்த மாயத் துறவி வேடம், விட்டது - அவனை விட்டு நீங்கிற்று,

திடீரென்று தோன்றிய வெகுளியால், போலி வேடம் மறைய, இராவணன் சுய உருவம் வெளிப்பட்டது என்பதாம். இதனால் அரக்கர்கள் முதலினோர் மாயையால் வேறு உரு எடுக்க வல்லவராயினும், அன்னோர்க்குப் பெருஞ் சினம் மூண்டு, தம் மாயத்தை மறந்த போதும், உயிர் இறக்கும்போதும், அவர்க்குச் சுய உருவம் வந்துவிடும் என்பது, இராவணனது இந் நிகழ்ச்சியாலும், மான் வேடம் புனைந்து வந்த மாரீசன் உயிர் இறக்குந் தருணத்தில் சுய உருவுடனே விழுந்து இறந்தமையாலும் அறியலாம். இவ்வாறே ஸ்ரீ பாகவத புராணத்திலும் பூதனை, சகடாசுரன், தேனுகாசுரன், பகாசுரன், முதலியவர்கள் சரிதங்களிலும் காணலாம். இச்செய்யுளில், வெகுளி மேலீட்டால் உண்டாகும் மெய்ப்பாடுகள் நன்கு விளக்கப் பெற்றுள்ளன ; இதுபோல வெகுளியின் மெய்ப்பாடுகள், விளங்குமிடங்கள் : *742, 1005* ; பால, கையடைப் : *13*, அயோத். நகர்நீங்கு : *113,–116, 117, 121* ; குகப் : *7* ; கிட்கிந்தா. வாலிவதைப் : *11*, இங்கு, காமத்தை மானம் வென்றதும், அதனால் வெகுளி பிறந்ததுங் காட்டப் பெற்றன.

பி - ம். 1. என்றிய லுரைத்த. 2. சென்றது.
3. ஒன்றேடொன் றடித்த ; மேகத் திடியென ; தருமென வெயிற்றி னேளி ; வெயிற்றி னென்றி, வெயிற்றி னேடு, வெயிற்றி றென்றி.
4. வென்றன வெகுளி ; விட்டனன் மாய வேடம். (62)

869. இருவினை துறந்த மேலோ ரல்லர்கொ லிவரென் றெண்ணி
அரிவையு மைய மெய்தா யாரிவர் தாமென் றென்றும்
தெரிவரு நிலைய ளாகத் தீவிடத் தரவந் தானே
உருகெழு சீற்றம் பொங்கிப் பணம்விரித் துயர்ந்த தொத்தான்.

அரிவையும் - பிராட்டியும், இவர் - இந்தத் தவ வேடம் மாறிய இவர், இரு வினை துறந்த - புண்ணிய பாபங்களான இருவகை வினைகளை விட்டு ஒழித்த, மேலோர் அல்லர் கொல் - மேன்மையுடை துறவி

அல்லர் போலும், என்று எண்ணி - என நினைத்து, ஐயம் எய்தா - சந்தேகம் அடைந்து, 'யார் இவர் தாம் என்று - இவர் யாரோ' என்று, ஒன்றும் தெரிவு அரு நிலையள் ஆக - ஒரு விவரமும் அறிய மாட்டாத நிலைமையுடையவளாய் இருக்க, தீவிடத்து அரவம் - கொடிய விஷத்தையுடைய பாம்பு, தானே உரு கெழு சீற்றம் பொங்கி - தானாகக் கோபம் உருவெடுத்து மேற் கிளம்பி, பணம் விரித்து உயர்ந்தது ஒத்தான் - தன் படத்தை விரித்து எழுந்து உயர்ந்தது போல (அவ்விராவணன்) ஆனான்.

இராவணன் கோபத்துடன் தன் பத்துத்தலைகளும் இருபது தோள்களும் விளங்க நிமிர்ந்து எழுந்த தோற்றம், பல தலைகளை யுடைய ஒரு சர்ப்பம் சீற்றங்கொண்டு தன் படத்தை எடுத்து நிமிர்ந்து எழுந்தது போலானது என்பதாம். கொல், என்னும் இடைச் சொல் இங்கு ஐயப் பொருளை உணர்த்தி நின்றது. துறவியாயிருந்த நிலை திடீரென்று மறைந்து மற்றொன்றாக மாற, இராவணன் உருவைச் சிறிதும் எதிர் பாராதவளும், அதனை முன் அறியாதவளும், நாயகன் பிரிவால் சோகமுற்றிருந்தவளுமான பிராட்டிக்கு மயக்கமும் அச்சமும் கூடி, அவ்வுரு பல படங்களையுடைய கொடிய பாம்பாகத் தோன்றியதென்று கூறிய நயம் உணர்ந்து போற்றத்தக்கது.

பி - ம். 1. னல்லன்கொ வியனென் றெண்ணி; வியரென் றேங்கி, ரியன்றுனென்.
2. மைய மெய்த, மைய மெய்த; அரியையு மயங்கிச் சோர்ந் தாங் கறிவிலா தொடுங்க வன்னேன்.
3. நிலையதாகத், நிலையதாய, நிலையளாய; தரவத்தாடு. தரவந் தான் வெவ்.
4. பொங்கப் பணம்; வுயர்ந்தா லொத்தான்; விரித்தெழுந்த தொத்தான். (63)

பிராட்டியின் அச்ச நிலை.

870. ஆற்றவெந் துயரத் தன்னை
ளாண்டுற்ற வலக்க ணோக்கின்
ஏற்றமென் னினைக்க லாகும்
பிறிதெடுத் தியம்ப லாகும்
மாற்றமொன் றில்லை செய்யும்
வினையில்லை மறிக்க லாகாக்
கூற்றம்வந் துற்ற காலத்
துயிரெனக் குலைவு கொண்டாள்.

ஆற்ற வெம் துயரத்து அன்னாள் - (தன் கணவனான இராம பிரானுக்கு உற்ற துன்பம் கருதி) மிகவும் கொடிய துயரத்தை

யடைந்திருந்த பிராட்டி, ஆண்டு உற்ற அலக்கண் நோக்கின் - அப்பொழுது (அந்த இராவணனால்) அடைந்த துன்பத்தைக் கருது மிடத்து), ஏற்றம் என் நினைக்கல் ஆகும் - அதனிலும் அதிகமான துயர்நிலை வேறு எதனை நினைக்க முடியும்! (வேறொரு துன்பத்தை யும் நினைத்துச் சொல்ல முடியாத அவ்வளவு கொடிய துன்பம் அது என்றபடி); பிறிது எடுத்து (என்) இயம்பல் ஆகும் - வேறு எதனை எடுத்துக் கூறக் கூடும்? மாற்றம் ஒன்று இல்லை - அவள் சொல்லக் கூடிய வார்த்தையும் இல்லாமற் போற்று; செய்யும் வினை இல்லை - அவளுக்கு அவனை விட்டுத் தப்பி போகச் செய்யக் கூடிய செயலும் தோன்றவில்லை; (ஆதலின்), மறிக்கல் ஆகா - தடைசெய்யக் கூடாத, கூற்றம் வந்து உற்ற காலத்து - கூற்றுவன் எதிர் வந்து அடைந்த போது, உயிர் என - தவிக்கும் சீவனைப்போல, குலைவு கொண்டாள் - நடுக்க முற்றாள்.

ஆற்ற - மிக அல்லது முழுவதுமான: குறள். 367; அலக் கண் - துன்பம்; 959, 999. இராவணன் சுயவுருவுடன் வெகுண் டெழுந்த நிலை கண்ட பெருந்துயரமும் ஆம். கோபத்தோடு எழுந்த இராவணனுடைய பயங்கரமான சுய வடிவைக் கண்டவுடன் பிராட்டி அடைந்த துயரத்திற்கு நிகராக ஒன்றை எண்ணவும் கூறவும் முடி யாது என்று ஆசிரியர் திகைத்துப் பின், கூற்றுவன் எதிர் வந்த காலத்து உயிர்படும் துயரத்தின் நடுக்கத்தை ஒருவாறு உவமை கூறினர் என்க. கதையின் போக்கில் ஆசிரியர் உள்ளம் எத்துணை ஆழ்ந்துள்ளதென்பது இதனால் தெரியவரும். கூற்றம் - உயிரை உடலினின்று கூறுபடுத்திப் பற்றிச் செல்லும் யம தூதன்; இயமன் வேறு, கூற்றுவன் வேறு; 'தருமராசனேவ வந்த கூற்றிக் குமைத்தார் போலுங் குறுக்கைவீ ரட்டனாரே' (திருநாவுக். தே.) என்பது காண்க. பிராட்டிக்கு மாற்றமும் இல்லை; வினையும் இல்லை என்று இயைக்க.

பி - ம். 1. ஆற்றருந் துயரத்; வலக்கணோக்கி.
2. பிறிதடுத்து, மெறிரெடுத் தியம்பலாகும்; மென் சொல்ல லாகும், வினைக்கலாகும்.
3. வினையில விரிக்கலாகா, வகையில மதிக்கலாகா. (64)

இராவணன் சீற்றம்

871. விண்ணவ ரேவல் செய்ய
வென்றவென் வீரம் பாராய்
மண்ணிடைப் புழுவின் வாழு
மானிடர் வலிய ரென்றாய்
பெண்ணெனப் பிழைத்தா யல்லை
யுன்னையான் பிசைந்து தின்ன
எண்ணுவெ னெண்ணிப் பின்னை
யென்னுயி ரிழப்பெ னென்னா,

'விண்ணவர் ஏவல் செய்ய - தேவர்கள் யான் ஏவிய குற்றேவல் தொழில்களைச் செய்ய, வென்ற - அவர்களை வென்று அடிமை கொண்ட, என் வீரம் பாராய் - என் பராக்கிரமத்தை நீ கருதாமல், மண் இடை - புவியினிடத்து, புழுவின் வாழும் - அற்பப் புழுக்களைப் போல இழிந்த நிலையில் சீவிக்கும், மானிடர் வலியர் என்றாய் - மனிதர் வலியுடையோர், என்று கூறினாய்; (இவ்வாறு என் எதிரில் கூறிய நீ) பெண் என பிழைத்தாய் - ஒரு பெண் என்ற காரணத்தினால் உயிர் பிழைத்துள்ளாய்; அல்லை - அல்லாவிடில், உன்னை யான் பிசைந்து தின்ன எண்ணுவென் - உன்னை என் கைகளாற் பிசைந்து தின்ன நினைப்பேன்; எண்ணி - அவ்வாறு எண்ணிச் செய்து, பின்னை - நீ இறந்த பிறகு, என் உயிர் இழப்பென் (உன் மேற் கொண்ட ஆசையால் உன்னை யடைய முடியாத நிலையில்) என் உயிரையே நான் போக்கிக்கொள்வேன், என்னா - என்று கூறி,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாக இயைந்து, அடுத்த செய்யுளில் உள்ள 'உறைதி யென்றான்' எனும் வினைகொண்டு பொருண் முடிவுபெறும். முன் துறவியாயிருந்தபோது அவன் மன நிலை அறிந்து தன் பேச்சை மாற்றிப் பேசிவந்தவன், இப்பொழுது வெகுளி நிலையில் பிராட்டியின் அச்சநிலையையும் கவனியாது தன் பெருமையைக் கூறிச் செல்வது காண்க. காமத்தைக் கோபம் வென்றது. அடுத்த செய்யுளில் அவன் நிதான மடைகின்றான். பெண்ணெனப் பிழைத்தாய்: பெண்ணைக் கொல்வது கூடாது என்ற காரணத்தால் பிழைத்தாய்; இவ்வாறு கூறியது ஓர் ஆடவனாய் இருந்தால் கொன்றே யிருப்பேன் என்பதாம்; பெண் கொலை கூடாது; என்பது; "பெண்ணென மனத்திடைப் பெருந்தகை நினைத்தான்" (பால. தாடகை வதைப்: 54); 'பிழைத்தனை பாவியுன் பெண்மை யாலென்றான்' (கிட்கிந்தா. வாலிவதைப்;

22.) ; இந்திரசித்து இறந்தது கண்டு, அத்துயருக்குக் காரண மான பிராட்டியைக் கொன்றுவிடக் கருதி வாள் உருவிய இரா வணனைத் தடுத்து மகோதரன் கூறிய நீதிகளாலும் நன்கு அறி யலாம் (உயுத்த. இராவணன் சோகப் : 54 60.) பிராட்டியை அவன் கொல்ல எழுந்தது, உயுத்த. மாயசனகப். 70ஆம் செய்யுளிலும் காண்க. பிராட்டியை இராவணன் முதலிற் 'பிசைந்து தின்ன' நினைத்தது அவன் சீற்றத்தின் விளைவு ; 'பின்னை என்னுயிரிழப்பன்' என்றது தான் கொண்ட காமத்தால் என்க. அன்றியும் அவளுயிரை அவன் தன்னுயிராகக் கொண்டமையைப் புலப்படுத்தியதும் ஆம்.

பி - ம். 1. யென்றதன். 2. புழுவில்.

3. யன்றே லுன்னை, யல்லாதுன்.

4. என்னுய தெண்ணிப், எண்ணினே னெண்ணிப், என்னுய னெண்ணிற் ; னென்றான். (65)

பின் இராவணன் இதமொழி கூறித் தன்கருத்தை வெளியிடலும் பிராட்டி அவனை இகழ்ந்து கூறலும் 872—77.

872. குலைவுற லன்ன முன்னம் யாரையுங் கும்பி டாவென்
தலைமிசை மகுட மென்னத் தனித்தனி யினிது தாங்கி
அலகில்பூ ணரம்பை மாத ரடிமுறை யேவல் செய்ய
உலகமே ழேழு மாளுஞ் செல்வத்து ளுறைதி யென்றான்.

அன்னம் - அன்னப்பறவை போன்றவளே ! குலைவு உறல் - நடுக்கம் அடைய வேண்டாம் ; முன்னம் யாரையுங் கும்பிடா-இதற்கு முன் எவரையும் கும்பிட்டு வணங்கா, என் தலை மிசை - என் பத்துத் தலைகளின்மீது, மகுடம் என்ன - கிரீடத்தைத் தாங்குவதுபோல, தனி தனி - ஒவ்வொரு தலையிலுமாக முறையே, இனிது தாங்கி, இன்பத்தோடு உன்னை நான் உயர்த்தி வைத்துக்கொண்டு, அலகு இல் பூண் அரம்பை மாதர் - கணக்கற்ற ஆபரணங்களை அணிந்த தெய்வமக்ளிர், அடி முறை ஏவல் செய்ய - உன் திருவடிகளிற் பணிந்து முறைப்படி அவரவர்களுக்கு நீ இடும் குற்றேவல்களைச் செய்ய, உலகம் ஏழ் ஏழும் ஆளும் - பதினான்கு உலகங்களையும் ஆட்சி புரியும், செல்வத்துள் - எனது பெரும் செல்வ வாழ்வில், உறைதி என்றான் - நீ மகிழ்ந்து இருப்பாயாக', என்று கூறினான்.

முன்கொண்ட நிலையிலிருந்து அரக்கன் சரேலென்று மாறினமை இங்குக் காட்டப் பெறுகிறது. கோபத்தைக் காமம்வென்றது ; ஆண்

மையும் அகன்றது. இவ்வாறு மெய்ப்பாடுகளுள் ஒன்றையொன்று வெல்லும் காட்சி இந்நூலிற் பலவிடங்களில் அமைந்துள்ளமை காண்க. இடையிலே, இராவணன் தான்கொண்ட வெகுளியை ஒருவாறு அடக்கத் தான், கொண்ட கருத்துக்கியையத் தன்னை மாற்றிக்கொண்ட நிலையைக் கூறும் ஒரு செய்யுள் இடையே இருந்திருக்கும் என்று தோன்ற இடமுண்டாகிறது. அன்னம்: உவமை ஆகுபெயராகப் பிராட்டியைக் குறித்த அண்மை விளி. பிராட்டியை அன்னம் எனக் குறிப்பிடுவது இந்நூலில் பரக்கக் காணலாம். இராவணன் யாரையுங் கும்பிடாதவன்; 556. அலகில் என்பதை அரம்பை மாதர்க்குங் கூட்டலாம்.

பி-ம். 1. குலவுறே லன்ன மன்னாய்; லன்ன மற்றோர் யாவினுங்; கும்பிடாமுன்.
3. ரடியிணை.
4. உலக மீரேழு மாளும்; செல்வத்தி னுறைதி, செல்வத்தி னிருத்தி. (66)

873. செவிகளைத் தளிர்க்கை யாலே
சிக்குறச் சேமஞ் செய்தாள்
கவியையுங் கடக்கும் வென்றிக்
காகுத்தன் கற்பி னேனைப்
புவியுடை யொழுக்க நோக்காய்
பொங்கெரிப் புனித ரீயும்
அவியைநாய் வேட்ட தென்ன
வென்சொனா யரக்க வென்னா.

(அதுகேட்ட பிராட்டி பதைபதைத்து), செவிகளை - தன் இரு செவிகளையும், தளிர் கையாலே - தளிர்போன்ற மெல்லிய தன் இரு கைகளாலும், சிக்கு உற - அழுத்தமாக, சேமம் செய்தாள் - மூடி அவன் சொற்கள் கேளாதபடி பாதுகாத்துக் கொண்டவளாய், (அவனை இகழ்ந்து நோக்கி), 'அரக்க - இராக்கத! புவி இடை ஒழுக்கம் நோக்காய் - பூமியில் உள்ள நல்லொழுக்கத்தை நாடாதவனே! கவியையும் கடக்கும் வென்றி - கவிகளாலும் கற்பனை செய்ய முடியாத வெற்றிப் பெருமையுடைய, காகுத்தன் கற்பினேனை - இராமபிரானுடைய கற்பின் வழிநிற்கும் மனைவியாகிய என்னை, புனிதர் - பரிசுத்தரான முனிவர் முதலிய அந்தணர், பொங்கு எரி - மேலெழுந்து ஓங்கும் தம் வைதிக அக்கினியில், ஈயும் - தேவர்க்கு அளிக்கும், அவியை - அவி உணவை, நாய் வேட்டது அன்ன - ஓர்

இழிந்த நாய் விரும்பியதே போல, (நீ விரும்பி), என் சொன்னாய் - என்ன வார்த்தை கூறினாய்?' என்று, என்று சொல்லி,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய் இயைந்து அதிலுள்ள 'என்றாள்' என்னும் வினைகொண்டு பொருண்முடிவு பெறும். செவிகளை சேமஞ் செய்தது; இராவணன் கூறியவை தான் கேட்கத் தகாவாதலின்; அல்லது, அதன் கொடுமையைப் பொறுக்க முடியாததாலும் ஆம்; ஒப்பு. சுந்தர. 444. சிக்கு - கெட்டி, அல்லது உறுதி; 219; பால. உலாவியற்: 14; சுந்தர. 485. காகுத்தன்: 845, குறிப். அவி - அவிர்ப்பாகம்; முனிவர் முதலிய அந்தணர் தாம் வளர்க்கும் வைதிக அக்னியில் தேவர்க்கு அளிக்கும் உணவு; 220, பால. அகலிகை. 42; அயோத். மந்தரை சூழ்ச்சிப்; 26; அவியினை நாய் வேட்டன்ன: ஒப்பு. சுந்தர. 620. இவ்வுவமையே இங்குப் பிராட்டி கூறியதாக அத்யாத்ம ராமாயணத்தும் வந்துள்ளது நோக்கத்தக்கது. என்சொனாய், என்றதை வியப்புப் பொருளிலும் கொள்ளலாம். இனி, "புவியிடை யொழுக்கம் நோக்காய்ப், பொங்கெரிப் புனித ரீயு மவியை" எனப் பாடங்கொண்டு, 'பூமியில் நல்லொழுக்கத்தையே தம் நோக்கமாகக் கொண்டு வாழும் பரிசுத்தரான முனிவர் முதலிய அந்தணர் தம் வைதீக அக்னியில் தேவர்க்கு ஆவுதியாக அளிக்கும் அவிர்ப்பாக அமுதை என இயைத்துப் பொருள் கொள்ளலும் ஆம். வேட்டல் - விரும்பல் (பிங்). இராவணனைப் பிராட்டி துறவி என்று கருதிய வரையில், மரியாதைக்குரிய பன்மையிலும், அவன் அரக்கனென்று தெரிந்தபின் அவனை இகழ்ச்சியாக ஒருமையிலும் விளிப்பது நோக்கத்தக்கது. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. செம்மல் செய்தாள்.
2. கவினும் வெஞ் சிலைக்கை, கவினுறுஞ் சிலைக்கை; காகுத்தனைய றன்னை.
3. புவியிடை யொழுக்க நோக்காப் பொங்கெரிப் புனித வீயும்.
4. யரக்க வென்ன, யரக்க வென்றாள். (67)

874. புன்னுனை நீரி னொய்தாய்ப் போதலே புரிந்து நின்ற
இன்னுயி ரிழத்த லஞ்சி யிற்பிறப் பழித்த லுண்டோ
மின்னுயிர்த் துருமிற் சீறும் வெஞ்சரம் விரவா முன்னம்
உன்னுயிர்க் குறுதி நோக்கி யொளித்தியா லோடி யென்றாள்.

'புல் நுனை நீரின் - புல்லின் நுனியில் தங்கியிருக்கும் நீர்த் துளியைப் போன்று, நொய்தாய் - அற்பமாக ஆகி, போதலே -

அழிந்து மறைந்து போவதையே, புரிந்து நின்ற - தன் தொழிலாக இயற்றி நின்ற, இன் உயிர் இழத்தல் அஞ்சி - என் இனிய உயிரை விட்டுவிடுவதற்குப் பயந்து, இல் பிறப்பு அழித்தல் உண்டோ - நற் குலத்தில் பிறந்த பெருமை அழியும்படிச் செய்வது உண்டாகுமோ? (ஆகாது என்றபடி); மின் உயிர்த்து - ஒளியை வெளியிட்டுக் கொண்டு, உருமில் சீறும் - இடிபோலச் சீறித் தாக்கும், வெம் சரம் விரவா முன்னம் - இராமபிரான் கொடிய அம்புகள் வந்து கலந்து உன்னை அழிக்கா முன்னம், உன் உயிர்க்கு உறுதி நோக்கி - உன் உயிருக்கு நலத்தை நீ நாடி, ஓடி ஒளித்தி என்றாள் - இவ்விடம் விட்டு ஓடி நீ மறைந்து கொள்வாயாக! என்று அவ்விராவணனுக்கு எச்சரிக்கையாக உறுதி கூறினாள் பிராட்டி. ஆல் : அசை.

'உன் கருத்துக்கு நான் இசையேனெனில் நீ என்னைக் கொன்று விடுவாய் என்பதற்கு அஞ்சி என் குலச் சிறப்பான கற்பிற்குக் கேடு உண்டாக்கிக் கொள்ள மாட்டேன்;' எனத் தன் உறுதியைப் பிராட்டி கூறியதோடு, 'இராமபாணங்கள் வந்து உன்னை அழித்துவிடும்; அதற்கு முன் எங்கேனும் ஓடி ஒளிந்து கொள்' என்று அவள் பரம கருணையோடு இராவணனை எச்சரித்து அவனுக்கு உறுதியும் கூறினாள் என்க. இனி, 'வினவா முன்னம்' என்னும் பாடங் கொண்டு, உன்னை (வினவித்) தேடிவரா முன்னம் எனவுங்கொள்வர்; 'ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும்'; (குறள். 594) என்றது போல. உயிர் புன்னுனி நீர் போன்றது; நாலடி. 34. இற்பிறப்பு; சுந்தர. 623, 1273. இற்பிறப் பழித்தலுண்டோ, ஒப்பு. கல்லொடுந் தொடர்ந்த நெஞ்சக் கற்பின்மேற் கண்ட துண்டோ'' (சுந்தர. 445.)

பி - ம். 1. புன்னுனி நீர்; நீரி னெய்தாப்; போகவே புரிந்து.

2. என்னுயி ரிழப்ப, என்னுயிர் விடுதலஞ்சி; பழியதுண்டோ, பழிதலுண்டோ.

3. மின்னுவில் லுருவிற்; வெங்கணை விரவா; சீறுஞ் செஞ்சரம்; தருமென் சீறும்.........வினவா; வெருவா முன்னம்.

4. குறுதி யெண்ணி. (68)

875. என்றவ ளுரைக்க நின்ற
விரக்கமி லரக்க னெய்த
உன்றுணைக் கணவ னம்பவ்
வுயர்திசை சுமந்த வோங்கல்
வன்றிறன் மருப்பி னாற்றன்
மடித்தவென் மார்பின் வந்தால்
குன்றிடைத் தொடுத்து விட்ட
பூங்கணை கொல்ல தென்றான்.

என்று அவள் உரைப்ப - என்று பிராட்டி சொல்ல, நின்ற இரக்கம் இல் அரக்கன் - நிலைத்த இரக்கமற்ற அந்த இராவணன், 'உன் துணை கணவன் எய்த அம்பு - உன் வாழ்க்கைத் துணைவனான கணவன் ஏவிய அம்பு, உயர் திசை சுமந்த - சிறந்த திசைகளைச் சுமந்து நிற்கும் யானைகளின், வன் திறல் மருப்பின் - வலிய திறமை வாய்ந்த தந்தங்களின், ஆற்றல் மடித்த - வலிமையை அழித்த, என் மார்பின் வந்தால் - என் மார்பிடத்துத் தாக்க வந்தால், அது - அவ்வம்பு, குன்று இடை - மலையிடத்து, தொடுத்து விட்ட - தொடுத்து ஏவிய, பூம் கணை என்றான் - மலரம்புபோல் ஆகும்' என்று கூறினான்.

நின்ற அரக்கன், என்றும் கூட்டுக. ஓங்கல்-மலை ; பெருமையும் உயர்வும் நோக்கி யானையைக் குறித்து நின்றது : இஃது உவமையாகு பெயர். வன்திறல் : ஒரு பொருட் பன்மொழியும் ஆம். கொல் : அசை நிலை; 'கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே' என்றாராகலின் ; (நன். இடையியல். சூ. 16). தன் மார்புக்குக் குன்றும், இராமபிரான் அம்புக்குப் பூங்கணையும் உவமைகளாகக் கூறினான். குன்றின்மீது மலரை எறிந்தது போலாகும் என்பது இராவணன் கருத்து.

பி - ம். 1. லரக்க னேய்ந்த, லரக்க ரேந்தல்.
2. கணவ னம்போ, கணவ னம்பிவ்.
3. மட்டித்த மார்பின்.
4. குன்றிடைப் புடைத்த முள்ளின் கூர்ங்கணை போலு மென்றான்;

(69)

876. அணங்கினுக் கணங்க னாளே
யாசைநோ யகத்துட் பொங்க
உணங்கிய வுடம்பி னேனுக்
குயிரினை யுதவி யும்பர்க்
கணங்குழை மகளிர்க் கில்லாப்
பெரும்பதங் கைக்கொ ளென்னா
வணங்கின னுலகந் தாங்கு
மலையினும் வலிய தோளான்.

உலகம் தாங்கும் மலையினும் - உலகத்தைத் தாங்கி நிற்கும் மலையைக் காட்டிலும், வலிய தோளான் - வலிமை பெற்ற தோள்களை யுடைய இராவணன், 'அணங்கினுக்கு அணங்கு அனாள் ஏ - அழகுக்கு ஓர் அழகுபோன்றவளே! ஆசை நோய் அகத்து உள் பொங்க - உன்பாற் கொண்ட ஆசை (காமம்) ஆகிற வியாதி என் மனத்தினுள்ளே பொங்கிக் கொதிப்பேற, உணங்கிய உடம்பினேற்கு - (அதனால்) வாடிய உடலையுடைய எனக்கு, உயிரினை உதவி - உயிரை அளித்து, உம்பர் - சுவர்க்கலோகத்திலுள்ள, கணங்குழை - திரண்ட குழை என்னும் காதணிகளைப் பூண்ட, மகளிர்க்கு இல்லா - தெய்வ மகளிர்களுக்கும் கிடைப்பதற்கு இல்லாததான, பெரும்பதம் - பெரிய சிறப்பமைந்த பதவியை, கை கொள் என்னா - நீ ஏற்றுக் கொள்வாய்' என்று கூறி, வணங்கினன் - பிராட்டியை நோக்கி நமஸ்கரித்தான்.

உலகந் தாங்கும் மலை - மேருமலையும் ஆம். இருசு போன்று நடுவில் நின்று மேருமலை உலகைத் தாங்குவது என்பது புராண மரபு. இக்காரணம் பற்றியே மலை, வடமொழியில், பூதரம் என்னும் பெயரையுடையது என்ப. அணங்கு - அழகு (பிங்); பிராட்டி அழகுக்கு அழகைச் செய்பவள்; 'அழகெனு மதுவுமோ ரழகு பெற்றதே'; (பால. மிதிலைக்காட்சி: 33); 'அணிபறித் தழகு செய்யும் அணங்கு,' (யுத்த. அங்கதன் தூது: 18) என அவள் கூறப்பெற்றமை காண்க. இனி அணங்கினுக் கணங்கே, 'தெய்வப் பெண்ணுக்கு ஒரு தெய்வப் பெண் போன்றவளே' என்றும், 'தெய்வமகளுக்கு உன் அழகால் வருத்தத்தை யுண்டு பண்ணுபவளே' என்றும் பொருள் கொள்ளலாம்; ஒப்பு. 'திருவுக்குந் திருவாகிய செல்வா' (பெரியதிருமொழி. 7. 7: 1). இராவணன் இவ்வாறே கூறிப் பிராட்டியை வணங்கி வேண்டிக் கொண்டது; சுந்தர 443. இப்பகுதியில் இராவணன் தன் மானம், காமம்ஆகிய இரு மெய்ப்பாடுகளும் தடுமாறி, தன் வலிகூறிப் பிராட்டியை

அச்சுறுத்துவதும், அடுத்தபடி அவனை இரங்கி யாசிப்பது மான செயல்களில் இறங்குவதுமான நிலைகள் காட்டப் பெற்றி ருக்கும் நயம் ஓர்க. கணங்குழை ; கணம் - திரட்சி ; 'கணங்குழை நல்லவர்' (கலித். 71 : 19.

பி - ம். 1. அணங்கினுக் கணங்க ளுய்ந்தின் ; யகத்துப் பொங்க.
3. மகளிர்க் கெல்லாம் ; கைக்கொ ளன்று.
4. பெரிய தோளான். (70)

பிராட்டி வருந்திக் கதறியது.

வேறு

877. தறைவாயவன் வந்தடி தாழுதலும்
கறைவாள்பட வாவி கலங்கினள்போல்
இறைவாவிளை யோயென வேங்கினளால்
பொறைதானுரு வாயதொர் பொற்புடையாள்.

அவன் - அந்த இராவணன், வந்து - பிராட்டியின் அருகே வந்து, அடி தறைவாய் தாழுதலும் - அவள் திருவடி நோக்கித் தரையில் விழுந்து வணங்கி வேண்டிக் கொள்ளவும், பொறைதான் உரு ஆயது ஓர் பொற்பு உடையாள் - பொறுமையே ஓர் உருவாகியது போன்ற ஒப்பற்ற தன்மையுடையவளான பிராட்டி, கறை வாள் பட - இரத்தக் கறை படிந்த (கொடிய) வாள் தன்மீது பட, ஆவி கலங்கினள் போல் - உயிர் குலைந்து வருந்தினவள்போல, 'இறைவா - என் தலைவ னான பெருமானே! இளையோய் - அவர் தம்பியாகிய இளையபெரு மானே!' என-என்று வாய் விட்டுக் கூவி, ஏங்கினள் - ஏக்கமுறுவா ளாயினள். ஆல் : அசை.

தறை : தரை என்னும் சொல் எதுகைநோக்கித் திரிந்தது ; 'தறையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ' (பால. பாயிரம். 10 ;) கறை - இரத்தமும் ஆம் ; (பிங்). தரைவாய் அடி தாழுதல் ; ஒப்பு. 'சிறடிப் பூமக நெடு நிலம் புல்லி'; (818.) பிராட்டி பொறையே உருவானவள் ; சுந்தர. 1273. இராவணன் பிராட்டி முன் வணங்கிக் கேட்டுக்கொண்டது ; 876. குறிப். இதுமுதல் 885 வரை யுள்ள பாக்கள் அவலச்சுவைக் கேற்ற சந்தம் அமைந்துள்ளன. இவ்வாறே, 1092-1107 ; சுந்தர. உருக்காட்டு 3-10 ; திருஞான. தேவாரம் திரு மருகற்பதிகம் முதலிய பாசுரங்கள் அமைத்துள்ளமை காண்க. இனி, இந்நிலையில் அவனைத் தன் சொல்லினால் சுட்டு அழிக்க வல்ல கற்பி

ஞற்றலைப் பிராட்டி பெற்றிருந்தும் அவ்வாறு செய்யாமல் நின்ற நிலையை ஆசிரியர் சுட்டியவாறுமாம்; (சுந்தர. 624).

பி-ம். 1. தறைமேலயன், தறையா யிடையர்; யந்தடி தொழுதலுவ்.
2. கலங்கினர் போல்.
4. பொறை தானுயிர் போயது போற்புகல்யாள். (71)

பிராட்டியை இராவணன் தரையுடன் பெயர்த்து எடுத்து வான்வழி ஏகல் 878-9

878. ஆண்டாயிடை தீயவ னாயிழையைத்
தீண்டானயன் முன்னுரை சிந்தைசெயாத்
தூண்டானென லாமுயர் தோள்வலியால்
கீண்டானில மோசனை கீழ்புடையே,

ஆண்டு - அப்பொழுது, தீயவன் - கொடியோனான அந்த இராவணன், ஆய் இழையை - பிராட்டியை, அயன் முன் உரை - பிரமதேவன் முன் இட்ட சாபச் சொல்லை, சிந்தை செயா - மனத்தில் எண்ணி, தீண்டான் - அவள் திருமேனியைத் தீண்டாதவனாகி, தூண் தான் எனல் ஆம் - தூண்கள் தாம் என்று சொல்லத்தக்க, உயர் தோள் வலியால் - உயர்ந்த தன் புயங்களின் வலியைக் கொண்டு, ஆயிடை - அந்த இடத்து, நிலம் கீழ் புடை ஓர் ஓசனை - பிராட்டி இருந்த பூமியினிடத்தைக் கீழும் பக்கங்களும் ஆக ஒரு யோசனை அளவு, கீண்டான் - பெயர்த்தெடுத்தான்: ஏ: ஈற்றசை.

ஆயிழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்ப் பிராட்டியைக் குறிப்பது. இராவணனுக்குப் பிரமதேவன் சாபமிட்டது; 947; சுந்தர; 627 உரை; 1276. இதனோடு, அவனுக்கு வேதவதி, அரம்பை, நளகூபரன், புஞ்சிகஸ்தலை ஆகியோராலும் சாபங்கள் உண்டு. இராவணன் பிராட்டியைத் தீண்டாது, இருந்த நிலத்தொடு பெயர்த்தெடுத்தான் என்பது; 941, 967, 1004; சுந்தர. 626, 630, 1275, 1276; மேலும் இச்செய்தி அத்யாத்மராமாயணம் ஆரணியகாண்டம். சருக்கம் ஏழிலும் கூறப்பெற்றுள்ளமை காணலாம். ஆனால், இராவணன் பிராட்டியைத் தன் கரங்களாற்பற்றி எடுத்துச் சென்றதாகவே வான்மீகம் கூறும்; இஃது, ஆசிரியர் கொண்ட தனி மாறுபாடாகும்; இதனால் அவர்தம் பக்திச் சிறப்பின் உறுதி புலப்படும். இராவணனால் எடுக்கப் பெற்றவள் மாயா சிதை யென அத்யாத்மராமாயணம், கூர்மபுராணம், முதலியன கூறும். ஓசனை: யோஜனை என்ற வடசொல்லின் திரிபு; இது யோசனை யெனவும் வழங்கும். இதனை, ஒரு காததூரம் எனவும்,

நாற்காத தூரமெனவும், பிறவாறும் கூறுவர். இராவணன் பிராட்டியை அபகரித்த முகூர்த்தம் விந்தம் என்ற பெயரையுடையதென்று வான்மீகமும் (ஆரண்ய. 68 ஆம் ஸர்க்கம்), அந்நேரம் சித்திரைமாதம் சுக்கிலபக்ஷம் அஷ்டமி நடுப்பகல் என்று மகாநாடகம் என்னும் நூலும் கூறும். அக்னிவேச்ய ராமாயணம் இந்நாள் மாகமாஸம் சுக்லபக்ஷம் அஷ்டமியில் விருந்தமென்ற முகூர்த்தத்தில் நிகழ்ந்தது என்று கூறும்.

பி - ம். 1. ஆண்டாசுறு; தீயவ.
2. தீண்டானவன் மேலுரை, தீண்டாலெனு மேலுரை, தீண்டானயன் முன்னுரை, தீண்டாதெனு மேலுரை.
4. னிலம் யோசனை கீழொடு மேல், னிலமி யோசனை; கீழொடுமே. (72)

879. கொண்டானுயர் தேர்மிசை கோல்வளையாள்
கண்டாடன தாருயிர் கண்டிலளால்
மண்டானுறு மீனின் மயங்கினளால்
விண்டான்வழி யாயெழு வான்விரைவான்.

உயர் தேர் மிசை கொண்டான் - (அங்ஙனம் பிராட்டியை இருந்த நிலத்தோடு பெயர்த்தெடுத்த இராவணன்), தனது உயர்ந்த தேரின் மீது வைத்துக்கொண்டான்; கோல் வளையாள் - அழகிய வளையல் களை அணிந்த பிராட்டி, கண்டாள் - அச் செயலை உணர்ந்தாள்; (ஆனால்), தனது ஆருயிர் கண்டிலள் - அவள் தன் அரிய உயிர் இழந்தவள் போலாகி, மண் தான் உறு மீனின் மயங்கினள் - தரை மீது போகட்ட மீனைப் போல மயக்கமுற்றாள்; (அப்பொழுது இராவணனும்), விண் தான் வழி ஆ - ஆகாய மார்க்கமாய், எழுவான் - எழுந்து செல்லக்கருதி, விரைவான் - விரைபவனானான்.

கோல் வளை - சித்திர வேலைப்பாடுகள் அமைந்த வளை; கோல் - சித்திரவேலை; திரட்சியும் ஆம்; 'வார்கோற் செறியச் சிலம்பிற்' (புறநா. 36 : 2); 'கோலமை குறுந்தொடி'; (குறுந். 267:5); 'கோனிற வளையினார்க்குக் குருந்தவ னொசித்தது' (சீவக- 209)'; 'கோல்வளைக் குக் காட்டினான்' (நள. கலிதொடர். 18). ஆருயிர் கண்டிலள் - தன் அரிய உயிரான இராமபிரானைக் காணாமல் ஏங்கினாள் என்றும் பொருள் கொள்ளலாம். மீனின் என்பது, மின்னின் என்பதன் விகாரமாக வந்தது எனக் கொள்ளலும் அமையும்; மின் என்ற சொல்லின் வழிப் பிறந்த சொல்லே மீன் என்பதும் ஆம். ஆல்:

இரண்டிடத்தும் அசைகள். இராவணன் தேர் சிறிதுதூரம் தரையிற் சென்று, பின் வானில் எழுந்தது என்பது, *968*.

பி - ம். 1. ஞயர் தோளது ; தேர்மிசை யிலையார்.
3. மண்டா ஞறு மின்னின், ஞருமின்னின் ; மண் டோய்வுறு மானின். (73)

பிராட்டியின் புலம்பல் 880—5

880. விடுதேரென வெங்கனல் வெந்தழியும்
கொடிபோல்புரள் வாள்குலே வாளயர்வாள்
துடியாவெழு வாடுய ராலழுவாள்
கடியாயற னேயிது காவெனுமால்.

'விடு தேர் என - தேரைச் செலுத்து, என்று (இராவணன் தன் சாரதிக்குச்) சொல்ல, கனல் வெந்து அழியும் - நெருப்பில் விழுந்து வேக்காடுற்று அழிகின்ற, கொடி போல் - ஒரு பூங்கொடியைப் போல, புரள்வாள் - (பிராட்டி) புரள்வாள் ; குலேவாள் - நிலே கெட்டு வருந்துவாள் ; அயர்வாள் - சோருவாள் ; துடியா எழுவாள் - துடித்து மீண்டும் எழுந்திருப்பாள் ; துயரால் அழுவாள் - தனக் குற்ற துன்பத்தால் அழுவாள்; 'கடியா அறனே - எங்களால் கைவிடப்படாத ஏ தருமமே ! இது கா எனும் - இத் துயரத்தினின் றும் என்னேக் காப்பாயாக ! என்று கூறுவாள். ஆல் : ஈற்றசை.

கடிதல் - விலக்குதல், அல்லது ஓட்டுதல் ; 'காலாற் கிளி கடியுங் கானக நாடன்' (நாலடி. *283*); 'கொடி கடிந்து கோறிருத்தி' (புறநா. *17 : 5*); 'கடியா வறமே - 'ஒருவருங் கைவிடாத தருமமே' பழையவுரை.

பி - ம். 1. வந்திழியும்.
2. குலேயாள் துடியா, குழையா ளயர்வாள்.
3. டயரா லெழுவாள், டயரால் விழுவாள்.
4. கடிதா வறனே, கடிதா லறமே, கடியா மறனே, கடியா வறனே. (74)

881. மலேயேமர னேமயி லேகுயிலே
கலேயேபிணே யேகளி றேபிடியே
நிலேயாவுயி ரேனிலே தேறினிர்போய்
உலேயாவலி யாருழை நீருரையீர்.

'மலேயே - மலேகளே !, மரனே - மரங்களே !, மயிலே - மயில் களோ !, குயிலே - குயில்களே !, கலேயே - கலேமான்களே !, பிணேயே-

பெண் மான்களே !, களிறே - ஆண் யானைகளே !, பிடியே - பெண் யானைகளே !, நிலையா உயிரேன் - ஒரு நிலையில் நில்லாது தத்தளிக்கும் உயிரையுடைய எனது, நிலை தேறினிர் நீர் - நிலைமை தெளிவாய் அறிந்துகொண்ட நீங்கள், உலையா வலியார் உழை போய் - அழியாத வலிமையுள்ள அந்த இராமபிரானிடம் போய், உரையீர் - சொல்வீராக !, இதுமுதல் 885 வரை ஒரு தொடர்.

கலை - ஆண் மான். உலையா வலியார் - யாவராலும் அழிக்கப்படாத வலிமை வாய்ந்தவர் ; இது, இராமபிரானோடு இலக்குவனையும் குறிப்பிட்டதாகவும் கொள்ளலாம். தலைவன் தலைவியர் பிரிந்த நிலையில் துயர மேலீட்டால், கேளாதனவும், உரையாதனவும், உணராதனவுமான அஃறிணைப் பொருள்களை நோக்கி அவை கேட்பன போலவும், உரைப்பன போலவும், உணர்வன போலவும் கூறுவது மரபு : இது திணை வழுவமைதியின் பாற்படும் ; (நன். சூ. 409). இராமபிரான் பிராட்டியைப் பிரிந்த துயரமாற்றாது, அஃறிணைப் பொருள்களை நோக்கி விளித்து வருந்திக் கூறுவன, கிட்கிந்தா. பம்பைப் படலத்தும் சுந்தர. காட்சிப் படலத்தும், கூறப்பெற்றுள்ளமை காண்க. இப்பாடலோடு, சீவக. 1376 ; நைடத. பிரிவுறு: 18 ; நள. கலிநீங்கு 119. முதலியன ஒப்பு நோக்கற்பாலன; இவ்வாறே பின்வரும் செய்யுள்களிலும் வந்துள்ளமையுங் காண்க. இதன் முதலிரண்டடிகளிலுள்ள பெயர்கள் அடையின்றி வந்துள்ளன. உயிரேன் நிலை, என்றது தன் உயிரின் நிலையாயுள்ள இராமபிரானைக் குறித்தது ஆம் ; 879, குறிப். மூன்றாமடியில் 'நிலை நேடினர் போய்' என்ற பாடங்கொண்டு, 'பெருமாள் நின்ற இடந்தேடிப்போய்' என்று பழையவுரை பொருள் கூறும்.

பி - ம். 3. நிலையா வுயிரே நிலை நேடினிர் போய், நேடினர் போய் ; நிலை தேறுநர் போய், நிலை தேறினர் போல், நிலை நேடின போய், நிலையா வுயிர் போய். (75)

882. செஞ்சேவக னார்நிலை நீர்தெரிவீர்
மஞ்சேபொழி லேவன தேவதைகாள்
அஞ்சேலென நல்குதி ரேலடியேன்
உஞ்சேனது தானிழ வோவுரையீர்.

'மஞ்சே - மேகங்களே !, பொழிலே - சோலைகளே !, வனதேவதைகாள் - காடுறையும் தெய்வங்களே !, செம் சேவகனார் நிலை - சிறந்த வீரத்தன்மையுடைய (என் கணவரான) இராமபிரான் என்னை இழந்ததால் அடையக்கூடிய துயர்நிலை, நீர் - நீங்கள், தெரிவீர் -

அறிவீர்கள்; அஞ்சேல் என நல்குதிரேல் - பயப்படாதே என்று எனக்கு ஆறுதல் அளித்து, (அவர்க்கும் எனது இந்த அவக் கேடான நிலையை தெரிவித்தால்), அடியேன் உஞ்சேன் - அடியாளாகிய யான் ஈடேறினேன் ஆவேன்; அதுதான்-அப்படி நீங்கள் செய்வதுவும், இழவோ - உங்களுக்கு நஷ்டமாகுமோ; (ஆகாது என்றபடி); உரையீர் - ஆதலின் நீவிர்போய் எம்பெருமானிடங் கூறுங்கள்.

இராமபிரானைச் சேவகன் என்றல்; சுந்தர. 20, 625; உயுத்த. அங்கதன் றூது; 7. நிலை: இருக்கும் இடம் என்றும் பொருள் கொள்ளலாம். உய்ந்தேன் என்பது, உஞ்சேன் என வந்தது போலி. 'உஞ்சாலிழிவோ' என்று பாடங்கொண்டு, 'நான் பிழைத்தால் உங்களுக் கேதாகினும் பறிபடுமோ' என்று பழையவுரை கூறும்.

பி - ம். 1. வன தெய்வதைகாள்.
4. யிகழ்வோ வுரையிர், யிழிவோ வுரையீர், யினிபோ யுரையீர்; உஞ்சேனெனி னிழிவோ; உஞ்சாலிழிவோ. (76)

883. நிருதாதியர் வேரற நீண்முகில்போல்
சரதாரைகள் வீசினர் சாரகிலா
வரதாவிளை யோய்மறு வேதுமிலாப்
பரதாவிளை யோய்பழி பூணுதிரோ.

நிருதாதியர் - அரக்கர் முதலான கொடியோர்கள், வேர் அற - அடியோடு அற்று அழிய, நீள் முகில் போல் - பெரிய காளமேகம் போல, சர தாரைகள் வீசினர் - அம்பு மழையை வீசிக்கொண்டவர் களாய், சாரகிலா - இங்கு வந்து சேராத, வரதா - அடைந்தோர்க்கு வர மருளும் பிரானே! இளையோய் - (அப் பெருமானை அகலாத) தம்பியாகிய இலக்குவ!, மறு ஏதும் இலா - குற்றம் யாதும் இல்லாத, பரதா - பரதனே! இளையோய் - அவனை நீங்காத தம்பி யாகிய சத்துருக்னனே! பழி பூணுதிரோ - இங்கு இப்பொழுது வந்து என்னைக் கொடிய நிலையினின்று விடுவிக்காத இப்பழியை நீங்கள் அடைவீர்களோ?

நிருதாதியர் - அரக்கர் தலைவனை இராவணன் முதலினோர் என்னலும் ஆம். இராமபிரானை நீள் முகிலுக்கு ஒப்பிட்டது, திரு மேனியின் நிறத்தாலும் அம்பு மாரி சொரியும் தன்மையாலும் என்க; ஒப்பு. "வீருக்கிய பொற்கலன் வில்லிட வார மின்ன, மாருத் தனிச் சொற்றுளிமாரி வழங்கி வந்தான், காருக்க நிமிர்ந்து புகைந்து கனன்று பொங்கும், ஆருக்கன லாற்றுமொ ரஞ்சன மேக மென்ன"

(அயோத். நகர் நீங்கு: 125). இராமபிரானை, 'வரதா' என்றது; பால. திருவவதார; 121, 131; அயோத் மந்தரை சூழ்ச்சி : 57. இது தண்டகாரணிய வனத்து இருடியர் அரக்கர்களாற் படுந் துயர் கேட்டு, அவர்க்கு அருள் புரிந்த செயலைக் கருதியும், அத்தகைய அருள் மூர்த்தி இப்பொழுது தனக்கு உதவ வாராததேனோ என்று நினைத்தும் கூறியது என்னலாம். இளையோய் : 'உன்னைக் கொடுஞ்சொற் கூறி அகற்றினேனே! அது கருதி வாராதிருக்கிறாயோ?' என்று இளையபெருமானை நினைத்துக் கூறியதாகும். பரதனை, 'மறுவேதுமிலான்' என்றது; 'தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணிதன்னைத் தீவினையென்ன நீத்துச் சிந்தனை முகத்திற் றேக்கி' இராமபிரானை நாடி வனம் போந்தமையாலும், பின் பெருமான் கருத்துக் கிணங்கி, பாதுகையைப் பெற்று, அதனை அரசு கட்டிலி லிருத்தித் தன் தம்பியாகிய சத்ருக்னன்பால் அரசாளும் பொறுப்பை ஒப்புவித்துத் தான் தவவேடம் பூண்டு பெருமான் வரவை எதிர்நோக்கி யிருந்த மாசற்ற நிலையைக் கருதியுங் கூறியது ; இஃது, ' ஆயிர மிராமர் நின் கேழாவரோ தெரியி னம்மா !' (அயோத். குகப் : 35) என்று குகப் பெருமானாலும், "முன்னை நுங்குல முதலு ளோர்கடாம், நின்னை யரவரே நிகர்க்கு நீர்மையார், மன்னர் மன்னவா" (அயோத். பள்ளியடை : 119.) என்றும் 'தரும நீதியின் றற்பய னவதுன், கருமமே யன்றிக் கண்டிலங் கண்களால்'; (உயுத்த. மீட்சிப் : 231), என்றும், கோசலா தேவியாராலும் பாராட்டப் பெற்றமையாலும், 'தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும் பள்ளமென்னுந் தகையானை' என்று (பால. குலமுறை: 21) விசுவாமித்திர முனிவர் ஏற்றிக் கூறிய சிறப்பு நோக்கியும் தெள்ளிதின் அறியப்பாலதாம். பழி பூணுதிரோ ; என்றது, 'ஒரு குற்றமும் அற்றநீவிர் என்பொருட்டு வீணே பழிக்கு இடமானீரே !' என்று பிராட்டி வருந்திக் கூறியதுமாகும்.

பி - ம். 1. நீள் முகில்போல் ; நீர் முகில்போல்.
2. சரதாரை சொரிந்திடைச் சாரகிலீர் ; வீசினராச் சார்கிலிரோ.
3. வினையாய். (77)

884. கோதாவரி யேகுளிர் வாய்குழைவாய்
மாதாவனை யாய்மன னேதெளிவாய்
ஓதாதுணர் வாருழை யோடினைபோய்
நீதான்வினை யேனிலை சொல்லலையோ.

'கோதாவரியே - கோதாவரி என்னும் நதியே ! குளிர் வாய் - (நீ) குளிர்ந்த தன்மை யுடையாய் ! குழை வாய் - (நீ) இளகிய இயல்

புடையாய் ! மாதா அனையாய் - உயிர்கட்குத் தாய் போன்றவளாவாய் ! (எனக்கும் தாய் போன்றவளே !) ; மனனே தெளிவாய் - குற்றமற்றுத் தெளிந்த மனமுடையாய் ! நீ தான் - அத்தகைய நீயும், ஓதாது உணர்வார் உழை - ஓதாமலே எல்லா நூல் அறிவையும் உணர்ந்துள்ள என் கணவரான இராமபிரானிடத்து, ஓடினை போய் - ஓடிச் சென்று, வினையேன் நிலை - துன்பத்திற்கு இடமான தீவினையுடைய என் இந் நிலைமையை, சொல்லலையோ - சொல்லமாட்டாயோ ?

மனன் - மனம் என்பதன் போலி. குளிர் வாய் குழை வாய் : அந் நதிப் புனலின் தன்மைகளை அதற்குரிய குணங்களாகக் குறிப்பிட்டபடி. மாதா அனையாய் : நதியை நாட்டிற்குத் தாய் என்று கூறுவது கவி மரபு ; 'சரயு என்பது தாய்முலை யன்னதிவ், வுரவு நீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம்' (பால. ஆற்றுப் : 12.); மேலும், ஒப்பு. சிலப். கானல்வரி : 27. ஓதா துணர்வார் : 'அன்னமா யருமறைக ளறைந்தாய்நீ யவையுன்னை முன்னமா ரோது வித்தார்' (60) என்ற விராதன் துதியாலும் அறியப்பெறுவது காண்க. இனி, ஓதா துணர்வார் என்பதற்குப் 'பிறர் சொல்லாமலே என் துயர் நிலையை அவர் அறியக் கூடியவர் ; ஆயினும் என்னை வேண்டி நீ ஓடினை போய்ச் சொல்' எனப் பிராட்டி கோதாவரியை நோக்கி வேண்டிக்கொண்டாள் எனக் கொள்ளலும் அமையும். 'மனனே தெளிவாய்', என்பதற்கு, என் மனத் துன்பத்தை நீ தெளிவாய் அறிந்துகொள்வாய் எனவும் பொருள் கொள்ளலாம். நதி ஓடும் இயல்புபற்றி, ஓடினை போய்ச் சொல்லலையோ என்றாள் என்க. கோதாவரி, குளிர்ந்தும் தெளிந்தும் உள்ளமை ; "சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவி" (220) என்றமையால் அறிக. இவ்வாறே இராமபிரான் பிராட்டியைப் பன்னசாலையிற் காணாது வருந்திக் கோதாவரிநதி, அருகேயுள்ள குன்றுகள், மான்கள் முதலியவற்றையும் நோக்கிப் பிராட்டியைத் தேடித் தருமாறு கூறியதாக அநுமன் பிராட்டியிடம் சொல்லியது இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும் ; சுந்தர. 573 - 75. இங்குக் கூறியவண்ணமே, கோதாவரி நதியையும், ஆங்கிருந்த பலவகைப் பறவைகளையும் மரங்களையும் மலைகளையும் நோக்கி, பிராட்டியும், இராமபிரானும் கூறி வருந்தியதாக வான்மீகமும் விளக்கிக் கூறுவதும் காண்க.

பி - ம். 2. மாதா வனையான் மனனே.

3. ருணர்வாரிடை, ருழையோடினை போய்.

4. நீதா னெளியே னிலை செப்பிலையே, நிலை கூறிலையோ, நிலை சொல்லுதியோ ; சொல்லிலையோ.

(78)

885. முந்துஞ்சுனை காண்முழை வாழரிகாள்
இந்தந்நில னோடு மெடுத்தகைநால்
ஐந்துந்தலை பத்து மலைந்துலையச்
சிந்தும்படி கண்டு சிரிக்கிலிரோ.

'முந்தும் - என் முன்னே தோன்றும், சுனைகாள் - மலை யூற்றுக் களே! முழை வாழ் அரிகாள் - மலைக் குகைகளில் வாழும் சிங்கங் களே! இந்த நிலனோடும் - இந்த நானிருந்த தரையோடும், எடுத்த கை நால் ஐந்தும் - என்னைப் பெயர்த்து எடுத்த இவன் கைகள் இருபதும், தலை பத்தும் - பத்துத் தலைகளும், அலைந்து உலைய - (இராமபிரான் அம்புகளால்) அலைவுற்றுச் சிதறி அழிய, சிந்தும்படி கண்டு - சிந்தி விழும் விதத்தை நீங்கள் பார்த்து, சிரிக்கிலிரோ - சிரிக்கமாட்டீர்களோ?

பிராட்டியை இருந்த தரையோடு இராவணன் பெயர்த்தெடுத் துச் சென்றது; 877; குறிப். இந்த நிலம் என்பது, எதுகை நோக்கி ஒற்று மிகுந்தது; விரித்தல் விகாரம். 'அலந்தலையாய் - துக்கத்திற் கிடமாய்' என்பது பழையவுரை. அபசாரமுற்ற கைகளும் தலைகளும் தாமே சிதறி அழிய என்று கொண்டதாகவும் கூறலாம். சுனை - மலையிலுள்ள நீர்நிலையும் ஆம்.

பி-ம். 1. முழை வாளரிகள், முழை காளரிகாள்.
2. நிலமோடு; கைந்நால்.
3. பத்து மலந்தலையா; மலைந்துலையாச், மலைந்தலையாச், மலைந் தலைவாய், மலந்தலையாய்.
4. சிரித்திடுவீர்; சிந்தும்படி நீரித செப்பிலிரோ. (79)

வேறு

இராவணன் பிராட்டியை இகழ, அவள் அவனை நிந்தித்தல் 886–890.

886. என்றின்ன பலவும் பன்னி
யிரியலுற் றரற்று வாளைப்
பொன்றுன்னும் புணர்மென் கொங்கைப்
பொலங்குழை போரி லென்னைக்
கொன்றுன்னை மீட்குங் கொல்லம்
மானிடர் கொள்க வென்னா
வன்றிண்கை யெறிந்து நக்கான்
வாழ்க்கைநாள் வறிது வீழ்ப்பான்.

என்று இன்ன பலவும் பன்னி - இவ்விதம் பல வார்த்தைகளைச் சொல்லிப் பிரலாபித்து, இரியல் உற்று அரற்றுவாளை - நிலை

கெட்டு வாய்விட்டுப் புலம்பியழும் பிராட்டியை (நோக்கி), வாழ்க்கை நாள் வறிது வீழ்ப்பான் - தனது வாழ்நாளை வீணே அழித்துக் கொள்பவனான இராவணன், பொன் துன்னும் - பொன்னால் அமைந்த ஆபரணங்கள் அணிந்த, புணர் மெல் கொங்கை - ஒன்றோடொன்று நெருங்கி அமைந்த தனங்களையுடைய, பொலன் குழை - அழகிய குண்டலங்களை யணிந்துள்ள பெண்ணே ! அ மானிடர் - (நீ கூறிய) அந்த மனிதர், போரில் என்னைக் கொன்று - யுத்தத்தில் என்னைக் கொன்று, உன்னை மீட்பர் கொல் - உன்னை மீட்பார் போலும் ! 'கொள்க என்னா - (வலிமை யிருந்தால்) மீட்டுக் கொள்ளட்டும்' என்று கூறி, வன் திண் கை எறிந்து - தன் மிக வலிய கைகளை ஒன்றோடொன்று தாக்கி ஒலியுண்டாக்கி, நக்கான் - (பரிகாசக் குறிப்பில்) சிரித்தான்.

பன்னுதல் - விளக்கமுறப் பலமுறை மடக்கிச் சொல்லுதல் ; 'என்றென் றுன்னும் பன்னி யிரக்கும்' (அயோத். கைகேசி சூழ் வினைப்:42. ; 'பற்பலவும் பன்னி யிடருழக்கும்'; கிளைகண்டு நீங்கு : 67 ; கிட்கிந்தா. வாலிவதைப் : 146 ; சுந்தர. 343, 571. இரிதல் - நிலை தளர்தல் ; பால. ஆற்றுப் : 14 ; சுந்தர. 22, 145. வாழ்க்கைநாள் வறிது வீழ்ப்பான் ; செயற்கரிய தவஞ்செய்து வரமாகப் பெற்ற மூன்றரைக் கோடி வாழ்நாட்களை, பிறர்மனை நாடுதல் என்னும் ஒரிழிந்த செயலால் வீணே போக்கிக்கொள்ளத் துணிந்தனனாதலின்; இவ் விழிந்த செயலை, "பாம்பின் தலைநக்கி யன்ன துடைத்து" (நாலடி. 87.) என்று உதாரண முகத்தாலும், 'விளிந்தாரிற் றீமை புரிந் தொழுகுவார்' (குறள். 143) என்றலாலும் கூறி, அத் தீயோர் அழிவது திண்ணம் என்பது அறிவுறுத்தப்பட்டமை காண்க. புணர் - ஒன்றோடொன்று சேர்ந்து சமானமான, என்னலும் ஆம் ; இனி, புணர் என்பது புதுமை என்னும் பொருளும் கொள்ளும் (பிங்). பொன் துன்னும் என்பதற்குப் பொன்நிறம் பொருந்திய என்றலும் ஆம். கொல் : இங்கு எதிர்மறை வினாப்பொருளில் வந்த இடைச் சொல். கை யெறிந்து நகுதல்; கையெறிதல் : இகழ்ச்சியிலும் வெகுளியிடத்தும் தோன்றும் மெய்ப்பாடு,'; 'அங்கத னதனைக்

கேளா வங்கையோ டங்கை தாக்கித் துங்கவன் தோளும் மார்பு மிலங்கையுந் துளங்க நக்கான்'' (உயுத்த. அங்கதன் றூது: 28).

பி-ம். 1. யிரங்கியுற் றாற்றுவானை, யிரக்கமுற், யிரியலுற் ருற்றுவானை யிரியலிட் டாற்றுவானை.

2. பொலன் குழாய்.

3. னுன்னை மீட்பர்கொல், றுன்னை மீட்குங்கொல்லோ; கொல்லா மானிடர்; மானிடர் கொள்கை யென்னு, மானிடர் போல மென்னு, கொல்லம்மானிடர்.

4. யறிதே வீழ்ப்பான், யறிது வீழ்வான். (80)

887. வாக்கினு லன்னுன் சொல்ல
மாயையால் வஞ்ச மானென்
ருக்கினு யாக்கி யுன்னை
யாருயி ருண்ணுங் கூற்றைப்
போக்கினுய் புகுந்து கொண்டு
போகின்ருய் பொருது நின்னைக்
காக்குமா காண்டி யாயிற்
கடவலுன் தேரை யென்ருள்.

அன்னுன் - அவ்விராவணன், வாக்கினுல் சொல்ல-தன் வாயால் அவ்வாறு ஏளனமாகக் கூற, (பிராட்டி), 'மாயையால் - உன் மாயையினுல், வஞ்ச மான் ஒன்று ஆக்கினுய் - ஒரு வஞ்சகமான பொய் மானை உண்டாக்கினுய்; ஆக்கி - அவ்வாறு அதனை உண்டாக்கி, (அதன் மூலம்) உன்னை ஆர் உயிர் உண்ணும் கூற்றை - உன்னுடைய அரிய உயிரைக் கவரும் யமன் போன்ற இராமபிரானை, போக்கினுய் - அந்த வஞ்ச மான்பின் போகச் செய்தாய்; புகுந்து - (பின் அவரில்லாத சமயத்தைப் பயன்படுத்தி, யான் தனித்திருந்த இடத்தில் வந்து) புகுந்து, கொண்டு போகிருய் - (என்னைக் கள்வன் போலக் கவர்ந்து) எடுத்துச் செல்கின்ருய்; பொருது - அந்த இராமபிரானேடு (நேர் நின்று) போர்செய்து, நின்னை காக்கும் ஆ காண்டி ஆயில் - உன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் திறமையைக் காட்டும் செயல் உனக்கு இருக்குமானுல், உன் தேரை கடவல் என்ருள் - உன் தேரை (இவ்விடம் விட்டுச்) செலுத்தாதே' என்று கூறினுள்.

வாக்கினுல் சொல்ல; வாக்கு - வாய் (பிங்); இது வடமொழிப் பெயருளது. 'வாக்கினுற் றெருட்டு வாரில்லை' (உயுத்த. பிரமாத் திரப்: 201). உன்னை யாருயி ருண்ணுங் கூற்றை; உன்னை;

உன்னுடைய என்னும் பொருளது ; 'அவ்வித் தழுக்காறுடையானைச் செய்யவள், தவ்வையைக் காட்டிவிடும்' (குறள். 16) என்றதுபோல ; உருபுமயக்கம். கடவல் ; எதிர்மறை ஏவல் வினைமுற்று ; அல் விகுதி.

பி - ம். 1. மாயையின் வஞ்ச.

2. பின்னையா ருயிருண் ணுங் ; யரக்காவுன்னை.

3. பொருந்து நின்னைக். (81)

888. மீட்டுமொன் றுரைசெய் வாணீ
வீரனே விரைவின் மற்றுன்
கூட்டமா மரக்கர் தம்மைக்
கொன்றுங்கை முலையு மூக்கும்
வாட்டினார் வனத்தி லுள்ளார்
மானிட ரென்ற வார்த்தை
கேட்டுமிம் மாயஞ் செய்த
தச்சத்தின் கிளர்ச்சி யன்றோ.

'நீ வீரனே - நீ சுத்த வீரனோ? உன் கூட்டம் ஆம் அரக்கர் தம்மை - உன் இனத்தவரான கர தூடணாதி இராக்கதர்களை, விரைவில் கொன்று - மிக விரைவிற் போரிற் கொன்று, உங்கை முலையும் மூக்கும் - உன் தங்கையாகிய சூர்ப்பணகையின் முலைகளையும் மூக்கையும், வாட்டினார் - அறுத்துத் துன்புறுத்தியவர்களான, மானிடர் - மனிதர்கள், வனத்தில் உள்ளார் என்ற வார்த்தை - காட்டிலே இருக்கிறார்கள் என்ற சொல், கேட்டும் - நீ கேட்ட பின்னும், இ மாயம் செய்தது - இந்த வஞ்சகச் செயலைப் புரிந்தது, அச்சத்தின் கிளர்ச்சி அன்றோ - அவர்களிடத்து உனக்குள்ள பயத்தின் மிகுதி அல்லவோ? (என்று இடித்துரைத்து) மீட்டும் ஒன்று உரை செய்வாள் - (அந்த இராவணனை நோக்கி), மறுபடியும் ஒரு வார்த்தை சொல்வாளானாள் ; மற்று : அசை.

விரைவிற் கொன்று : பதினாலாயிரம் போர்ப்படை வீரர்களோடு கர தூடணாதியர்களை ஒரு முஹூர்த்த நேரத்திற் கொன்றதைக் குறிப்பிட்டது. சூர்ப்பணகையின் முலையும் மூக்கும் அறுத்த பின்னரே, கர தூடணாதியரைக் கொன்றதேனும், விரைவிற் றன்னந் தனியனாய் நின்று அப்பதினாலாயிரம் பேரைக் கொன்ற வீரத்தின் தனிச் சிறப்புத் தோன்ற அவ்வரிய வீரச் செயலை முன்னம் குறிப் பிட்டபடி. இவ்வாறு, 'உன் உறவினர் சாகவும், உன் தங்கை மானமிழக்கவும், நேரில் வந்து போர்புரிய அஞ்சியன்றோ, இம்மாயம்

புரிந்தனை' என்று இகழ்ந்தாள் என்க. இவ்வாறே, சுந்தர. 452 இலும் பிராட்டி இராவணனை இகழ்ந்தது காண்க. கிளர்ச்சி - அதிகரிப்பு; கொந்தளிப்பும் ஆம்.

பி - ம். 1. எய்வீரனே விரைந்து மற்றுன்.
2. கூட்டரா மரக்கர்; றுங்கை கொங்கை.
3. வனத்தி னின்றார், வனத்தி னுள்ளார்; றென்று வார்த்தை.
4. கேட்டுமே மாயம். (82)

889. மொழிதரு மளவி னங்கை
கேளிது முரணில் யாக்கை
இழிதரு மனித ரோடே
யான்செரு வெதிர்ப்பெ னென்றால்
விழிதரு நெற்றி யான்றன்
வெள்ளிவெற் பெடுத்த தோட்குப்
பழிதரு மதனிற் சாலப்
பயன்றரும் வஞ்ச மென்றான்.

மொழி தரும் அளவில் - (இவ்வாறு பிராட்டி) சொன்ன அள் விலே, (இராவணன் அவளை நோக்கி), 'நங்கை - பெண்களிற் சிறந்த வளே! இது கேள் - யான் கூறும் இதனைக் கேட்பாயாக! முரண் இல் யாக்கை - வலியற்ற உடலையுடைய, இழிதரு மனிதரோடே - இழிவான மனிதர்களோடே, யான் செரு எதிர்ப்பென் என்றால் - யான் எதிர்த்துப் போர் செய்வேனானால், விழி தரு நெற்றியான் தன் - விழியைக் கொண்ட நெற்றியையுடைய சிவபெருமானது, வெள்ளி வெற்பு எடுத்த தோட்கு - வெள்ளி மலையாகிய கயிலையங்கிரியை எடுத்த (வலிமைமிக்க என்) தோள்களுக்கு, பழி தரும் - பழிப்பை உண்டாக்கும்; அதனில் - அப்படிச் செய்வதைவிட, வஞ்சம் - நான் இப்பொழுது மேற்கொண்டுள்ள வஞ்சகச் செயலே, சால - மிகவும், பயன் தரும் - நல்ல பயனைத் தருவதாகும்' என்றான் - என்று கூறினான்.

இராவணன் வெள்ளி மலையைப் பெயர்த்தெடுத்தது: உத்தர. வரை யெடுத்த: 75.

பி - ம். 1. செருவேற்ப லென்பால், செருவினைப்பெ னென்றால்.
3. வெடுத்த வெற்குப்.
4. பழிதரு மச்சமென்றான், பயன்படும் வஞ்ச; பருவரு மதனின் மானிற் சாயல் பயன்படு வஞ்ச. (83)

890. பாவையு மதனைக் கேளாத்
தங்குலப் பகைஞர் தம்பால்
போவது குற்றம் வாளிற்
பொருவது நாணம் போலாம்
ஆவது கற்பி னாரை
வஞ்சிக்கு மாற்ற லேயாம்
ஏவமென் பழிதா னென்னே
யிரக்கமி லரக்கர்க் கென்றாள்.

பாவையும் - சித்திரப் பதுமைபோன்ற அழகுடைய பிராட்டியும், அதனை கேளா - இராவணனது அம் மொழியைக் கேட்டு, (அவனை நோக்கி), ' தம் குல பகைஞர் தம்பால் - தமது குலத்திற்கே பகைவர்களாய் உள்ளோரிடத்து, போவது - போரிடச் செல்வது, குற்றம் - குற்றமும், வாளில் பொருவது - வாளை ஏந்தி அவர்களுடன் போரிடுவது, நாணம் போலாம் - வெட்கமான செய்கையும் ஆகும் போலும்! கற்பினாரை - கற்புடைய மகளிரை, வஞ்சிக்கும் ஆற்றலே - வஞ்சகமாய் அபகரிக்கும் வலிமையே, ஆவது ஆம் - செய்யத்தக்கது ஆகும் போலும்! இரக்கம் இல் அரக்கர்க்கு - இரக்கமற்ற பாவிகளான இராக்கதர்களுக்கு, ஏவம் என் - குற்றம் என்பது தான் யாதோ? பழிதான் என்னே - நிந்தனை என்பது தான யாதேயோ?' என்றாள் - என்று கூறினாள்.

பாவை ; உவமையாகு பெயர் ; இனி, கண்ணிற் பாவை போலத் தோன்றும் கருமணியும் ஆம் ; ' கருமணியிற் பாவாய் நீ போதாய்'; (குறள். 1123.). வாளாற் பொருவது : இங்கு வாள் என்பது ஆயுதப் பொதுவைக் குறித்து நின்றது. ஏவம் : குற்றம் ; அயோத். கைகேசி சூழ்வினைப் : 38 ; குகப். 17 ; இஃது எவ்வம் என்பதின் விகாரம் ; ஏவம் வேறு ; பழி வேறு.

பி - ம். 1. பாவையு மிதனைக்.
2. போவதுங் குற்றம்.
3. கற்பினோரை.
4. பழிதா னென்னை, பழியா மென்னே.

## சடாயுவின் வருகை 891—6.

891. என்னுமவ் வேலை யின்க
　　ணெங்கடா போவ தென்றே
நின்னிலென் றிடித்த சொல்லன்
　　நெருப்பிடைப் பரப்புங் கண்ணன்
மின்னென விளங்கும் வீரத்
　　துண்டத்தன் மேரு வென்னும்
பொன்னெடுங் குன்றம் வானில்
　　வருவதே போலு மெய்யான்,

என்னும் அ வேலையின் கண் - என்று பிராட்டி கூறிய அவ் வேளையில், 'எங்கு அடா போவது - அடா! எங்கே நீ போகிறாய்? நில் நில் என்று - அங்கேயே நில்லு நில்லு' என்று, இடித்த சொல்லன் - இடி முழங்குவது போன்ற உரக்கக் கூறிய சொற்களை யுடையவனும், நெருப்பு இடை பரப்பும் கண்ணன் - (கோபத்தால்) இடமெல்லாம் நெருப்பைப் பரவச் செய்யும் கண்களையுடையவனும், மின் என விளங்கும் வீர துண்டத்தன் - மின்னல் போல் ஒளி வீசிய வீரத் தொழில் புரியத்தக்க மூக்கையுடையவனும், பொன் நெடும் குன்றம் - பொன்மலையான மேரு வென்னும் நெடியமலை, வானில் வருவதே போலும் - ஆகாயத்தில் பறந்து வருவதே போன்ற, மெய்யான் - பெரிய உடலையுடையவனும்,

இச்செய்யுள் முதல், ஐந்து செய்யுள்கள் (996-வது செய்யுள் வரை) இயைந்து ஒரு தொடராகி, அதிலுள்ள, 'வந்தனன் எருவையின் மன்னன்' என்பதோடு வினை முடிவு பெறும். சடாயுவின் பிரவேசம் கூறப்பெறும் அழகு, கூர்ந்து நோக்கத்தக்கது; வந்தவன் யாவன் என்பது 896-ஆம் செய்யுளில்தான் கூறப்பெறுவதும் அவன் சொல், கண், துண்டம், மெய் என்று அவன் தோற்றத்தை முறைப்படுத்திய இயற்கை யழகும் போற்றத்தக்கன. அடா: முன்னுள்ளோரை யிழித்துக் கூறும் சொல்.; 379; உயுத்த. இரணியன் வதைப்: 129. நில் நில் - அடுக்கு, வெகுளிப் பொருள்து. துண்டம் - பறவையின் அலகு; 182, 913, 928. பொன்னிறத்தாலும் உருவின்

பெருமையாலும் சடாயுவுக்கு மேரு உவமை. முன் (178) மந்திரகிரி யோடு அவனை உவமித்தமை காண்க.

பி-ம். 1. எல்லையின்கண்.; போயதென்றோ, போயதென்னே, போவ தெங்கன், போயதென்ன.
2. எடுத்த சொல்லன்; நெருப்புடைப் பரப்புக்.
3. விளங்குவீரத்.
4. வானின் வருவதே; போல வந்தான்; பொருவு மெய்யன்; வருவபோற் பொலியு மெய்யான். (85)

892. பாழிவன் கிரிக ளெல்லாம்
பறிந்தெழுந் தொன்றோ டொன்று
பூழியி னுதிர விண்ணிற்
புடைத்துறக் கிளர்ந்து பொங்கி
ஆழியு முலகு மொன்றா
யழிதர முழுதும் வீசும்
ஊழிவெங் காற்றி தென்ன
விருஞ்சிறை யூதை பொங்க,

பாழி வல் கிரிகள் எல்லாம் - பருத்த வலிய மலைகள் யாவும், பறிந்து எழுந்து - பறிக்கப்பட்டு மேலெழுந்து, ஒன்று ஓடு ஒன்று- ஒன்றுக்கொன்று, பூழியின் உதிர - புழுதிபோலாகி உதிர்ந்து வீழ, விண்ணில் புடைத்து - வானில் தாக்கி, உற கிளர்ந்து பொங்கி- பெரும் ஓசையிட்டு மேற்கிளம்பி, ஆழியும் - கடலும், உலகும் - இவ்வுலகமும், ஒன்றாய் அழிதர - ஒருசேர அழிய, முழுதும் வீசும் - உலகமெங்கும் வீசியடிக்கும், ஊழி வெம் காற்று இது என்ன - யுகாந்தப் பெருங்காற்று இஃது என்று சொல்லும்படி, இரு சிறை ஊதை பொங்க - தன் இரண்டு சிறகுகள் அடிப் பனவால் உண்டான காற்று மேற்கிளம்பி வீசி அடிக்கவும்,

சடாயு வந்த வேகத்தால், மலைகள் பெயர்ந்து ஒன்றோடொன்று தாக்கித் தூளாகிப் புழுதிபோல விழ, கடலும் உலகமும் அழிவுற்றன என்பதாம். 'பாழி - மிடுக்கு; இருஞ்சிறை யூதைமோத - பெரிய சிறைக்காற்று வர.' என்பன பழையவுரை. சடாயு சிறைக் காற்றுக்கு ஊழிக்காற்று.

பி-ம். 1. பாழி வண்கிரி.
2. உதிரம் விண்ணிற்; புடையுறக் கிளர்ந்து, பிழைப்புற கிளர்ந்து.
4. விருஞ்சிறை; யூதை மோத, யூதை யோத. (86)

வேறு.

893. சாகைவன் றலையொடு மரமுந் தாழமேல்
மேகமுங் கிரிகளும் விண்ணின் மீச்செல
மாகவெங் கலுழனே வருகின் ருனென
நாகமும் படமொளித் தொதுங்கி நையவே,

மரமும் - அவ்வனத்திலுள்ள மரங்களும், சாகை வன் தலை யொடு - கிளைகளாகிய வலிய தலைப் பாகங்களோடு, தாழ - தாழ்ந்து கீழே விழவும், மேல் மேகமும் கிரிகளும் - மேலே உள்ள மேகங் களும் மலைகளும், (இடம் பெயர்ந்து), விண்ணின் மீ செல - ஆகா யத்தின் மேலே செல்லவும், மாக வெம் கலுழனே வருகின்ருன் என - வைகுந்தத்தில் உள்ள கருடபகவானே வருகின்ருன் என்று சொல்லத் தக்கதாய், நாகமும் - சருப்பங்களும், படம் ஒளித்து - தம் படங்களைச் சுருக்கி மறைத்துக்கொண்டு, ஒதுங்கி நையவே - ஒதுங்கி வருந்தவே,

மாகம் (மகாகம்) - பெரிய ஆகாயம்; பூதங்கள் அனைத்தினும் ஆகாயம் பெரியது, ஆதலின்; இனி, ஆகாயத்தினிடமிருந்தே மற்ற பூதங்கள் தோன்றின, ஆதலாலும்; 'வானின்றிழிந்து வரம்பிகந்த மா பூதத்தின் வைப்பு' (அயோத். 1). என்றமையும் நோக்குக. கருடனைக் கண்ட நாகம் அடங்கியுட்கும்; 'மாசுணங்கெடக் கருடனைப் பொரு வின காலமாரியே' (கிட்கிந்தா. கார்காலப்: 22); பெருங். 1. 46: 23-24; 3. 24: 175-6. இங்குச் சடாயுக்குக் கருடாழ்வான் உவமையாகக் கூறப்பெற்றது; 186.

பி - ம். 1. சாகமுந் தழையொடு மரமுஞ் சார்வது; தாழ்ந்தமேல், தாழ்வன;
2. மேகமும் விசும்பிடைப் பறக்கு மீமிசை; கிரிகளும் விண் ணின் மீச்செல; விண்ணின் மேற்செல; மீச்செல்ல.
4. தொடுங்கி நையவே. (87)

894. யானையு மாளியு முதல யாவையும்
கானெடு மரத்தொடு தூறு கல்லிவை
மேனிமிர்ந் திருசிறை விசையி னேறலால்
வானமுங் கானமு மாறு கொண்டவே.

யானையும் ஆளியும் முதல யாவையும - யானைகளும் யாளிகளும் முதலாக உள்ள எல்லா விலங்குகளும், கான் நெடு மரத்தொடு தூறு கல் இவை - காட்டில் உள்ள நீண்ட மரங்களோடு, புதர்கள், கற்கள்

ஆகிய இவைகளும், இரு சிறைகள் விசையில் - சடாயுவின் இரு சிறகுகள் வீசிய காற்றின வேகத்தால், மேல நிமிர்ந்து ஏறலால் - (தம் நிலைபெயர்ந்து) மேலே எழுந்து வானத்தில் ஏறிச் செல்வதால், வானமும் கானமும் மாறுகொண்ட - ஆகாயமும் காடும் இடம்விட்டு மாறி மயங்கின ஆயின. ஏ : ஈற்றசை.

மாறு கொள்ளுதல் - பகை மேற்கொள்ளலும் ஆம. இச் செய் யுளுக்கு ஒப்பு : சுந்தர ; *18* ; *710*.

பி - ம். 1. ஆனையு மாளியு, யானைமீ யாளியு.

2. கானொடு கானுறு, கானொடு மரங்கொடு.

3, மேனிறைத் ; வீச்சி னேறலால்,

4. மாறுகொள்ளவே, மாறுகொள்ளுமே ; கானக மென்ன லாயவே ; மென்ன வாய்த்தவே. *(88)*

895. உத்தமன் றேவியை யுலகொ டோங்குதேர்
வைத்தனை யேகுவ தெங்கு வானினோ
டித்தனை திசையையும் மறைப்பென் யானெனப்
பத்திரச் சிறைகளை விரிக்கும் பண்பினன்.

(சடாயு இராவணனை நோக்கி), 'உலகோடு உத்தமன் தேவியை - கீண்டியெடுத்த பூமியோடு புருஷோத்தமனான இராமபிரானுடைய தேவியாகிய பிராட்டியை, ஓங்கு தேர் வைத்தனை - உயர்ந்த உன் தேர்மீது வைத்துள்ளாய் ; எங்கு ஏகுவது-நீ எங்கே போகக் கூடும் ? வானின் ஓடு இத்தனை திசையையும் - ஆகாயத்தோடு இந்த எல்லாத் திசைகளையும், யான் மறைப்பென் என - நான் உனக்கு வழிவிடாமல் மறைத்துக் கொள்வேன்' என்று, பத்திர சிறைகளை - தனது (இலை போல் அடர்ந்த) சிறகுகளை, விரிக்கும் பண்பினன் - பரப்பிய செயலை யுடையவனாகி,

உலகு ; நிலப்பகுதியைக் குறிப்பது ; 'மாயோன் மேய காடுறை யுலகமும்' (தொல். பொருள்). இனி, உலகொடோங்கு தேர் எனக் கொண்டு, உலகத்தோடு ஒப்ப ஓங்கி விளங்கிய பெருமையுடைய தேர் எனவும் கொள்ளலாம். பத்திரச்சிறை - தனக்குப் பாதுகாப்பை அளிக்கும் சிறகுகள்; இனி, பத்திரம் என்பதற்கு பொன், அழகு, இறகு, வாள், மங்கலம் எனப்பல பொருள்களும் உண்டு. பறவைக்கே

பத்ரத என்ற ஒரு பெயருமுண்டு. பண்பினன் - ('பண்பெனப் படுவது பாடறிந்தொழுகல்'; கலித். 133: 8.)

பி-ம். 2. வைத்தய னேகிடா யகையின் வானிநே; யேகுதி யெங்கு; வைத்தலே யேகுதி.

3. மறைப்பெ னீண்டெனுப், னீண்டெனப்; யானெனப்; னென்னின்றுனெனப். (89)

896. வந்தன னெருவையின் மன்னன் மாண்பிலான்
எந்திரத் தேர்ச்செல வொழிக்கு மெண்ணினன்
சிந்துரக் கால்சிரஞ் செக்கர் சூடிய
கந்தரக் கயிலையை நிகர்க்குங் காட்சியான்.

மாண்பு இலான் - நற்குண நற்செயலற்ற இராவணனின், எந்திர தேர் செலவு - இயந்திர சக்தியமைந்த தேரின் போக்கை, ஒழிக்கும் எண்ணினன் - தடுத்து அழிக்கும் கருத்தையுடையவனும், சிந்துரம் கால் சிரம் - சிவப்பான கால்களையும் தலையையும், செக்கர் சூடிய கந்தரம்-செவ்வானத்தைப் பூண்ட மேகத்தைத் தன் பிடரியிற் கொண்ட, கயிலை - கயிலையங்கிரியை, நிகர்க்கும் - ஒப்பாகவிளங்கும், காட்சியான்- தோற்றத்தையுடையவனுமான, எருவையின் மன்னன் - கழுகுகளுக்கு அரசனான சடாயு, வந்தனன் - அங்கு இராவணன் எதிரே வந்தான்.

சடாயுவின் கால் (சிரம்) இவை செந்நிறமானவை ; 180. கந்தரம்- மேகம் ; கழுத்து; (திவா. பிங்). சடாயுவுக்குக் கயிலையங்கிரி ; 984. இதனால் சடாயு வெண்ணிற மேனியும், கால், சிரம் இவை சிவப்பு நிறமும் அமையப்பெற்றவன் என்பது விளங்கும்; அவனது உடலின் வலிமையையும் பெருமையையுங் கருதி, மந்தரகிரி, கயிலையங்கிரி, மேருகிரி இவை முன் உவமையாக்கப்பெற்றன என்று கொள்க. முன் சடாயுகாண் படலத்தில் சடாயு இருந்த தோற்றத்தை ஒருவிதமாகக்கூறி, அவன் பகைவன்மீது பாய்ந்து வந்த வேகத்தையும் தோற்றத்தையும் இங்கு விளக்கி, இரண்டும் ஒன்றுக்கொன்று தொடர்புடையதாக அமைத்த நயம் காண்க ; இப்பகுதியுடன் சுந்தர காண்டத்தில் அநுமன் கடல்மீது பாய்ந்தபோது, அவன் தோற்றத்தையும் வேகத்தையும் வருணித்துள்ள பகுதியை ஒப்பிடுதலும்

பயனுடைத்தாம். அன்றியும், தூரத்திலிருந்து அருகில் வரும் காட்சியைப் படிப்படியாகக் கற்பித்துக் கால் முதலியனவற்றை இறுதியில் அமைத்த நயம் கண்டு இன்புறத்தக்கது.

பி - ம். 1. மாண்பிலன்.

2. தேர்செலா தொழிக்கு மீட்டினுன்; மீட்டினுல்.

3. சிந்தொடு மணிச்சடைச் செக்கர் சூழ்களக்.

4. கந்தரன் கயிலேயை. (90)

வேறு.

சடாயு பிராட்டிக்குத் தேறுதல் கூறி, இராவணனேச் சினந்தது 897—906.

897. ஆண்டுற்ற வணங்கினே யஞ்சலெனுத்
தீண்டுற்றில னென்றுணர் சிந்தையினுன்
மூண்டுற்றெழு வெங்கத முற்றிலனுய்
மீண்டுற்றுரை யாடலே மேவினனுல்.

ஆண்டு உற்று - (சடாயு) அவ்விடம் வந்து, அ அணங்கினே - அந்தப் பிராட்டியை (நோக்கி), 'அஞ்சல் எனு-நீ பயப்படாதே' என்று துணிவு கூறி, தீண்டு உற்றிலன் என்று உணர் சிந்தையினுன் - இராவணன் அவளேத் தொடவில்லே என்று அறிந்த எண்ணம் உடையவனுய், மூண்டு உற்று எழு வெம் கதம் முற்றிலன் ஆய் - மேற்கிளம்பி எழும் கொடிய கோபம் முதிரப் பெருதவனுகி, மீண்டு உற்று - எழுந்த அக்கோபத்தை மீண்டு அடக்கிக்கொண்டு, உரை ஆடலே மேவினன் - அந்த இராவணனுடன் சில சொற்களேப் பேசத் தொடங்கினுன். ஆல்: ஈற்றசை. (அவ்வுரையாடலே அடுத்து வரும் 9 செய்யுட்களிற் காண்க.)

இதுகாறும், சடாயு நடந்த உண்மையை முற்றிலும் அறியாதவனுய், பிராட்டியின் புலம்பலேக் கேட்ட மாத்திரத்து, அது தோன்றிய இடத்தை நோக்கிப் பரபரப்புடன் வந்து, செல்லும் தேரை நிறுத்தக் கூறி, அது நில்லாமையால், அதனருகில் வந்து பார்த்து, நிகழ்ந்தவை யாவையுங் கண்டு, பிராட்டியின் தூய்மையையும் அவள் நிலேயையும் கண்ணுரக் கண்டு, அவளேத் தேற்றி, இராவணனிடம் வீரத்தோடு, சமாதான வாதம் புரியலானுன் என்க. இப்பேச்சு 906 ஆம் செய்யுள்வரை தொடரும்; இதில் சாம, தான, பேத, தண்ட மெனும் நால்வகை உபாயங்களேயும் சடாயு செலுத்து

தலையும், இராமாவதாரத்தின் உண்மையை அவன் இராவணனுக்கு அறிவுறுத்துதலையும் காண்க. அவ்வணங்கு, எனப்பாலது ஒற்று இரட்டிக்காமல் செய்யுளின் சந்த ஓசை நோக்கி இயல்பாக நின்றது. கோபத்தைச் சடாயு அடக்கிக்கொண்டது, இராவணன் பிராட்டியின் திருமேனியைத் தீண்டாமை கருதி ; கதம் - செல்கையும் ஆம்.

பி - ம். 1. ஆண் டுற்றய் வணங்கினை.
2. தீண்டிற்றிலன் ; னென்றுயர் சிந்தையினுன்.
3. மூன்றுத் றெழுவோர் கதமுற் றிலனுய்; முற்றிலனுல், முற்றினபின்.
4. மேயினனுல், மேவினனே; உரையா டலனே யினனுல். (91)

898. கெட்டாய்கிளை யோடுநின் வாழ்வையெலாம்
சுட்டாயிது வென்னை தொடங்கினை நீ
பட்டாயென வேகொடு பத்தினியை
விட்டேகுதி யேல்விளி கின்றிலையால்.

'கெட்டாய் - (நீ) கேடுற்றவனுனாய்! கிளையோடு உன் வாழ்வை யெலாம் - உன் உறவினரோடு உன்வாழ்க்கை முழுவதையும், சுட்டாய் - எரித்து ஒழித்துவிட்டாய்! இது என்ன தொடங்கினை - இக் காரியத்தை யாது நோக்கங் கொண்டு செய்யத் தொடங்கினுய்? நீ பட்டாய் எனவே கொடு - நீ (நான் சொல்லுகிறபடி செய்யா விட்டால்), இறந்தாய் என்பதை எண்ணிக்கொண்டு, பத்தினியை விட்டு ஏகுதியேல் - உத்தம பத்தினியாகிய இப்பிராட்டியை இங்கு விட்டுச் செல்வாயானுல், விளிகின்றிலை - நீ இறக்கமாட்டாய்! ஆல்: ஈற்றசை.

கெட்டாய், சுட்டாய், பட்டாய் என்பன விரைவுந் துணிவும் பற்றிவந்த காலவழுவமைதிகள். விளிகின்றிலை ; என்னல் நீ அழிவா யல்லை ; இராமபிரானுலும் நீ யழிவாயல்லை என்னலும் ஒன்றும். பத்தினி ; கற்புநிலையில் உள்ள மகள் ; பதிவிரதையும் ஆம் ; இது பன்னி எனத் திரிந்தும் வரும்.

பி - ம். 1. வாழ்வை யெல்லாம். 2. வென்ன தொடங்கினை.
4. விட்டேகுதியால் ; விளிவுற் றிலையால், விளிகிற் றிலையால் ; விட்டாலுலையான் விளிகின் றிலனுல். (92)

899. பேதாய்பிழை செய்தனை பேருலகின்
மாதாவனை யாளை மனக்கொடுநீ
யாதாகநி னைந்தனை யெண்ணமிலாய்
ஆதார நினக்கினி யாருளரோ.

'பேதாய் - அறிவில்லாதவனே! பிழை செய்தனை - நீ (பெரும்) தவறு செய்துவிட்டாய்; பேர் உலகின் மாதா அனையாளை - பெரிய உலகத்து வாழும் உயிர்களுக்கு எல்லாம் தாய் போன்ற இப் பிராட்டியை, யாது ஆக மனம் கொடு நினைந்தனை - நீ யாரென்று மனத்தில் கொண்டு எண்ணினாய்? எண்ணம் இலாய் - நினைத்துப் பார்க்கும் ஆற்றல் இல்லாதவனே! நினக்கு இனி ஆதாரம் யார் உளர் - (எண்ணமல், உலகமாதாவைப்பற்றிய) உனக்கு, இனிமேல் ஆதரவு அளிக்கக் கூடியவர் யாரே உள்ளார்? (ஒருவரும் இல்லையே, என்றபடி) ஓ : ஈற்றசை.

இஃது, இராவணன்பால் இரங்கி, அவனுக்கு உண்மையைக் கூறியது. எண்ணம் - யோசனையும் ஆம். பேருலகின் மாதா; உலகத்திலுள்ள சராசரங்களனைத்தையும் ஈன்ற தாய்; லோகமாதா; ஜகன்மாதா என்றபடி. ஆதாரம் - பற்றுக்கோடும் ஆம். மனக் கொடு : அத்துச்சாரியை கெட்டது.

பி - ம். 1. மனத்தொடுநீ, மனத்தினெடா, மனத்திடர்நீ, மனத்திடைநீ.
3. ஏதாக; நினைத்தனை; யெஞ்சினையால்.
4. முனக்கினி யாருளரே. (93)

900. உய்யாமன் மலைந்தும ராருயிரை
மெய்யாக விராமன் விருந்திடவே
கையார முகந்துகொ டந்தகனர்
ஐயாபுதி துண்ட தறிந்திலையோ.

'இராமன் - அந்த இராமபிரான், உமர் - உன்னினத்தவரான கரதூடணாதி இராக்கதர்கள், உய்யாமல் - தப்பிப் பிழைக்காமல், ஆர் உயிரை - அவர்தம் அரிய உயிர்களை, மெய் ஆக விருந்து இடவே - உண்மையாகவே விருந்து உணவாக அளிக்க, அந்தகனர் - யமனனவர், கை ஆர முகந்து - கை நிறைய வாரி யெடுத்துக் கொண்டு, புதிது உண்டது - அதுவரை யடையாத ஒரு புதிய விருந்துண்டதை, அறிந்திலையோ - நீ அறியவில்லையோ?

ஐயா : ஐய, என்ற இரக்கத்தை உணர்த்தும்சொல் நீண் டொலித்தது. ஏ : ஈற்றசை. புதிதுண்டது : அந்தகன் இதுவரை

இராவணனுக்கு அஞ்சி உண்ணுதிருந்து, இராமபிரான் அவ்வரக்கர்களைக் கரதூடணப் போரில் அழித்தமையால் அப்பெருமான் உதவி கொண்டு அவர்கள் உயிரைப் புதிதாக உண்டான் என்க. இதனுல், 'அந்தகன் முன்போல் உனக்கு இனி அஞ்சமாட்டான்; அந்த இராமபிரான் வலி கருதி உன் உயிரையும் இனி உண்பான்' என்பதை அறிவித்தபடியும் ஆம். புதிதுண்டல்: புதிதாக அறுவடையாகி வந்த தானியத்தை நல்ல நாள் பார்த்து உண்ணும் ஒரு விருந்துச் சடங்கும் ஆம்; புறநா. *168: 5-8*; பெரியாழ்வார் திருமொழி. 5, 3.

பி-ம். 1. ராருயிரான், ராருயிர்தான்; மற்ருருயிரை.
2. விருந்திடவென். 4. தறிந்திலையே. (*94*)

901. கொடுவெங்கரி கொல்லிய வந்ததன்மேல்
விடுமுண்டை கடாவ விரும்பினையே
அடுமென்ப துணர்ந்திலை யாயினும்வன்
கடுவுண்டுயி ரின்நிலை காணுதியால்.

'கொடு வெம் கரி - தன்மேல் கொடுமையான அச்சத்தை உண்டாக்கும் யானை, கொல்லிய வந்ததன்மேல் - கொல்லும் பொருட்டு எதிர்த்து வந்த அதன்மீது, விடும் உண்டை கடாவ விரும்பினையே - வீசும் மண்ணுண்டையை அதன்மேல் எறிய விரும்பினையே! அடும் என்பது உணர்ந்திலை ஆயினும் - இச் செயல் உன்னை அழித்துவிடும் என்பதை நீ உணராவிடினும், வல் கடு உண்டு - வலிய விஷத்தை அருந்தி, உயிரின் நிலை காணுதி - உன் உயிர் நிலைத்திருக்கும் என்றும் காண நினைக்கின்ருய்! (இது என்ன மதியீனம்! என்பது) ஆல்: அசை.

கொல்லிய - கொல்லும் பொருட்டு; 'நின்னைக் காணிய வந்தேன்' (262) என்றது போல. 'கொல்லவந்த சின யானைமீது உண்டை கடாவினுல், அது முன்னிலும் அதிகக் கோபங்கொண்டு தாக்கும்; அது போல, அரக்கர்களைக் கொன்று அறங் காக்க வந்த இராமபிரானை, அவன் தேவியை அபகரித்துச் செல்வதான இச்செயல் மேலும் உங்கள்மீது பெருஞ் சீற்றங் கொள்ளத் தூண்டுவதாகும்' என்று கூறினன் என்க. பிராட்டியை இராவணன் விரும்பியெடுத்தது, கொடிய கடுவை அவன் தானுக எடுத்து உண்டது போன்றது என்றும் எடுத்துக் கூறினன் சடாயு என்பதாம். விடும் உண்டை; வில்லினுல் தெறித்து வீசும் மண்ணுண்டை; பால.

எழுச்சி : 60 ; அயோத். மந்தரைசூழ்ச்சி : 41 ; உயுத்த. கும்பகருணன் வதைப் : 17. கடாவுதல் - வீசியெறிதல் ; இது கடாசுதல் எனவும் வழங்கும். விடம், உண்டாரைக் கொல்லும்; சீதையென்னும் விடம் தீய யெண்ணங் கொண்டு கண்டாரையுங் கொல்லும்; ஆதலால் : வன் கடு என்னப்பட்டது ; "உண்ணுதே யுயிருண்ணு தொரு நஞ்சு சனகியெனும் பெருநஞ்சுன்னைக், கண்ணுலே நோக்கவே போக்கி யதே யுயிர்" உயுத்த. இராவணன்வதைப் : 220. என்று வீடணன் வருந்திக் கூறியது இங்கு நோக்கத்தக்கது ; இவ்வாது செய்வதை விஷப்பரீட்சை என்பர்.

பி - ம். 1. வந்தநின்மேல் , வந்தனமேல்.
2. விரும்பினையேல் , விரும்பினையோ.
3. பதறிந் நிலையா ; யாயினு யெங். 4. காணுதியோ. (95)

802. எல்லாவுல கங்களு மிந்திரனும்
அல்லாதவர் மூவரு மந்தகனும்
புல்வாய்புலி கண்டது போல்வரலால்
வில்லாளரை வெல்லு மிடுக்கினரோ.

' எல்லா உலகங்களும் - சகல உலகத்தில் உள்ளவர்களும், இந்திரனும் - தேவேந்திரனும், அல்லாதவர் - அன்னோர் அல்லாதவரான, மூவரும் - நான்முகன், திருமால், சிவபிரான் என்னும் மும்மூர்த்திகளும், அந்தகனும் - யமனும், புல்வாய் புலி கண்டது போல்வர் - மான் புலியைக் கண்டதுபோல அஞ்சுவர் ; அலால் - அல்லாமல், வில்லாளரை - வில்வீரர்களான இராமலக்ஷ்மணர்களை, வெல்லும் - வெல்லக்கூடிய, மிடுக்கினரோ - வலிமையுடையவர்களோ ? அல்லர் என்றபடி.

உலகம் : உலகில் உள்ளவர் ; இடவாகுபெயர். அந்தகன் ; முடிவு அல்லது அழிவையுண்டாக்குபவன் என்ற பொருளில் யமனைக் குறிப்பது; ' இராவணாந்தகனை ' (பெரிய திருமொழி 2. 3 : 7). புல்வாய் - மான்; பால. குலமுறை ; 5 ; புல்வாய் புலிகண்டது ; ஒப்பு. சுந்தர. 333 ; வி. பா ; சூது போர். 251 ; நள. கலிதொடர் : 130. இங்கும், இராமபிரான் மூவரினும் வேறான மேலானவன் என்பது குறிக்கப்பெற்றது; 904, குறிப்புங் காண்க.

பி - ம். 3. புலிகண்டன ; போல்வதலால், போல்வதல்லா, போல்வதலான்.
4. வில்லாளனை ; வெல்ல மிடுக்குளரோ. (96)

903. இம்மைக்குற வோடு மிறந்தழியும்
வெம்மைத்தொழி லிங்கிது மேவுதியால்
அம்மைக்கரு மாநர கந்தருமால்
எம்மைக்கித மாகவி தெண்ணினை நீ.

'இம்மைக்கு - இப்பிறவியில், உறவு ஓடும் இறந்து அழியும் - சுற்றத்தாருடன் இறந்து ஒழியக் காரணமான, வெம்மை தொழில் இது - கொடுந்தொழிலாகிய இதனை, இங்கு - இவ்விடத்தில், மேவுதியால் - நீ மேற்கொண்டு செய்கின்றாய்; ஆதலின், அம்மைக்கு அரு மா நரகம் தருமால் - இறந்த அப்புறமும் கொடிய நரகத்தை (இது) தருமாதலின், இது எம்மைக்கு இதம் ஆக - இச்செயல் எதற்கு நலன் தருமென்று, நீ எண்ணினை - நீ கருதினாய்?

இம்மை - இப்பிறவி; அம்மை - வரும்பிறவி; எம்மை - எப்பிறவியும் ஆம். பிறர் மனைவியை விரும்பினார் இப்பிறவியில் தன் குலத்தோடு நிர்மூலமாக அழிந்து இடர்ப்படுவர் என்பது; இவ்வுண்மையை, பெரிய திருமொழி. *1. 4 : 6*; சீவக. *2769*; சூளா. துறவு : *93*; முதலியவற்றாலும், நாலடி. *81, 82.* செய்யுட்களாலும் பிறவாற்றாலும் அறியலாம். எம்மைக்கு - எல்லாக் காலத்திற்கும் என்னலும் ஒன்றும்; இனி எ+மைக்கு எனப் பிரித்து, எப் பிறப்பிற்கு அல்லது எந்தப் பாவத்திற்கு எனப்பொருள் கொள்ளலும் ஆம்; மை - பிறப்பு, பாவமும் ஆம்; பட்டினப் : *159.* ந. உரை.

பி - ம். 1. மிறந்திழியும். 2. மேவிலையால்; வேண்டிலையால்.
3. அம்மைக்கு மருநரகந் தருமால்; கழியா நரகம்.
4. வில்லாளனே; எம்மைக் குறவாக. (97)

904. முத்தேவரின் மூல முதற்பொருளாம்
அத்தேவரிம் மானிட ராதலினால்
எத்தேவரொ டெண்ணுவ தெண்ணமிலாய்
பித்தேறினை யாகப் பிழைத்தனையால்.

'இ மானிடர் - இந்த மனிதர் வடிவில் வந்துள்ள இராமலக்ஷ்மணர், மு தேவரின் - (பிரமன், விஷ்ணு, சிவன் என்னும்) மூன்று தேவர்களின், மூல முதல் பொருள் அம் - ஆதி காரணமாய் உள்ள பரம்பொருளாகிய, அ தேவர் - அந்தப் பரம்பொருளே ஆவர்; ஆதலினால் ஆதலால், எ தேவரோடு எண்ணுவது - இவர்களை எந்தத் தேவர்களோடு ஒப்பிட்டு நினைப்பது? (ஒப்பிட முடியாதவர் என்றபடி); எண்ணம் இலாய் - ஆலோசனை யற்றவனே! பித்து

ஏறினை ஆக - நீ பைத்யம் முற்றினவனாக, பிழைத்தனை - இந்த அப சாரத்தைச் செய்தாய் : ஆல் : ஈற்றசை.

இராமபிரான் மும்மூர்த்திகளுக்கும் மேலான பரம்பொருள் 52; 102; என்பது இக்காண்டத்தில், விராதன், இந்திரன், கவந்தன் துதிகளாலும், பால. கடிமணப் : 69 ; அயோத். கைகேசி சூழ் வினைப் : 91; குகப் ; 65 ; கிட்கிந்தா. வாலிவதை, 121, 132 ; சுந்தர. 1117 ; 1122 ; உயுத்த. இராவணன் வதைப் : 135, மற்றும் பல இடங் களாலும் தெரியவரும். பிழைத்தல் - அபசாரம் அல்லது தவறிழைத் தல் ; 'என் பிழைத்தனை யென்று நின்றேங்குமால்'; (அயோத். நகர் நீங்கு ; 13); 'பிழைத்தனை பாவியுன் பெண்மையாலென்றான்' (கிட் கிந்தா. வாலிவதைப் ; 22.)

பி - ம். 2. அத் தேவனிம் மானிட.
4. யாக்கை பிழைத்தனைநீ, யாதல் பிழைத்தனை. (98)

905. புரம்பற்றிய போர்விடை யோனருளால்
வரம்பெற்றவு மற்றுள விஞ்சைகளும்
உரம்பெற்றன வாவன வுண்மையினேன்
சரம்பற்றிய சாபம் விடுந்தனையே.

'புரம் பற்றிய-திரிபுரங்களைத் தீ பற்றி அழியுமாறு செய்த, போர் விடையோன் அருளால் - போர் செய்யும் இயல்புடைய, இடபத்தை யுடைய சிவபிரானது திருவருளினால், வரம் பெற்றவும் - வரங்களாக நீ பெற்றவைகளும், மற்று உள விஞ்சைகளும் - மேலும் நீ தேர்ச்சி பெற்றுள்ள மாயப்போர் முதலான வித்தைகளும், உண்மையினேன்- சத்திய விரதத்தையுடைய இராமபிரான், சாபம் பற்றிய சரம் விடும் தனையே - வில்லில் தொடுக்கப்பெற்ற அம்புகளை (அவன்) விடும் வரையிலேதான், உரம்பெற்றன ஆவன - வலிமை பெற்றனவாகக் கருதப்படுவன ஆம்.

போர் விடையோன் - போரிடுவதற் சிறந்த சிவபெருமான் என்ன லும் ஆம். இராமபிரான் உண்மையினேன் என்பது ; 193 ; கிட்கிந்தா. அரசியற் : 48 ; ஸத்ய பராக்ரமம் என்றும், ஸத்ய விருத : என்றும், இராமபிரானை வான்மீகர் முதலினோர் ஏத்திக் கூறினமையுங் காண்க. இதனால், இராமபிரான் அம்பு மற்ற தேவர்கள் அளித்த வரங்களி லும் வலியுள்ளது என்பதாம். இராவணன் சிவபிரானிடம் வரம் பெற்றது, உத்திர. திக்குவிசயப் ; 76. இங்குச் சடாயு கூறியவாறே, பிராட்டி இராவணனிடம் கூறினமை காண்க ; (சுந்தர. 450). சாபம் -

வில்; 396, 421. பால. அகலிகைப். 77. இச்செய்யுள் சந்தேகமென்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. புரஞ் செற்றிடு; விடையா னருளால்.
3. வாயினு முண்மையினேன்; வுண்மையினோர்.
4. உரம்பெற் றுளதாவ தெல்லா மொருவன்; சரம்பற்றுறு தன்மை கெடுத்தனையே; விடுத்தனையே. (99)

906. வானுள்பவன் மைந்தன் வளைத்தவிலான்
தானேவரி னின்று தடுப்பரிதால்
நானேயவ னுய்ப்பெனிந் நன்னுதலைப்
போநீகடி தென்று புகன்றிடலும்,

'வான் ஆள்பவன் மைந்தன் - இப்பொழுது சுவர்க்கத்திலிருந்து அங்கு அவ்வின்பத்தை ஆள்பவனான தசரத சக்கரவர்த்தியின் குமாரனான இராமபிரான், வளைத்த வில்லான் - போரிட வளைத்த வில்லையுடையவனாக, தானே வரின் - தான் நேரே போரிட வந்தால், நின்று தடுப்பு அரிது - அவன் எதிரே நின்று அவனைத் தடுப்பது உன்னால் முடியாது; இ நல் நுதலை-இந்த அழகிய நெற்றியுடைய சீதாதேவியை, நானே அவண் உய்ப்பென் - நானே இவள் முன்னிருந்த பன்னசாலையில் கொண்டு போய்ச் சேர்ப்பேன்; கடிது போதி - நீ இவளைவிட்டு விரைவில் ஓடிப் போய் விடு!' என்று புகன்றிடலும் - என்று சடாயு இராவணனை நோக்கிச் சொன்ன அளவில்,

இது முதல் 910 வரை செய்யுள்கள் குளகமாகத் தொடர்ந்து 910-இல் 'பார்த்தி யென்றான்' என்னும் வினைமுடிவு கொள்ளும். தயரதன் இறந்து வானுலகம் சென்றதை, 'வானாளச்சென்ற' தாகக் கூறியது சிறப்பு நோக்கி. நன்னுதல்: பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. அவண் உய்ப்பென் - இராமபிரானிருக்குமிடத்தில் கொண்டு சேர்த்துவிடுவேன் என்றலும் ஒன்றும். போதி: போ பகுதி; இ விகுதி த் எழுத்துப்பேறு; ஆதி என்று வருதலை ஒக்கும்; (அயோத். மந்தரை சூழ்ச்சி: 17). இதுவரை சடாயு இராவணனுக்குக் கூறியவை, சாம தான பேத மெனனும் முதன் மூன்று உபாயங்களை மேற்கொண்டன என்க.

பி-ம். 1. மானுனவன் மான வளைத்த விலான்; மானுனவனஞ்ச; வானோர்தொழு நாதன்.
2. ஆனு லெவரேனு மடுப்பரிதால், தானே வரி லொன்று; கடப்பரிதால்.
3. ஊனேறிய வுன்றலை பத்தொடிய; யிவனுய்ப்பெனிக்; யானே யவனுய்ப்பனிங். (100)

### இராவணன் சினந்து கூறுதல் 907—8.

907. கேட்டானிரு தர்க்கிறை கேழ்கிளர்தன்
வாட்டாரை நெருப்புக வாய்மடியா
ஓட்டாயினி நீயுரை செய்குநரைக்
காட்டாய்கடி தென்று கனன்றுரையா,

கேட்டான் நிருதர்க்கு இறை - இதுவரை சடாயு கூறிய சமாதானத்திற்குரிய வசனங்களைக் கேட்ட இராக்கத அரசனான இராவணன், கேழ் கிளர் - ஒளி ஓங்கி விளங்கிய, தன் வாள் தாரை நெருப்பு உக - தனது சந்திரஹாசம் என்னும் வாளினின்றும் (நெருப்பு) வரிசை சொரிந்து சிந்த, வாய் மடியா - கோபத்தால் தன் வாய் இதழ்களை மடித்துக்கொண்டு, 'இனி நீ ஓட்டாய் - இனிமேல் நீ வார்த்தைகளை ஓடவிடாதே! (அதாவது பேச்சை அடக்கிக்கொள் என்றபடி); உரை செய்குநரை - நீ சொல்லுகிற அந்த மனிதர்களை, கடிது காட்டாய் என்று - விரைவில் என் முன் காட்டுவாயாக' என்று, கனன்று உரையா - கோபித்துப் பேசி,

இதுவும் அடுத்த செய்யுளும் தொடர்ந்து, 909 இலுள்ள என்னும் என்ற வினைகொண்டு முடியும். தன் வாள் தாரை - 'தனது கொடிய கண்களினின்று' எனவும் பொருள் கொள்ளலாம்; தாரை - கண்; (திவா); தாரை-கண்மணியும் ஆம் (பிங்). வாய் மடித்தல், வெகுளியின் மெய்ப்பாடு; 600; பால. தாடகை வதைப் : 49; அயோத். குகப் : 9; சிலப். 3. உரை: வெகுண்டோனவிநயம். ஓட்டாய், என்பது ஒரு கிராமியச்சொல்; சோழநாட்டில் இன்னும் வழக்கிலுள்ளது. ஓட்டாய் இனி, என்பதற்கு இராவணன், தன் தேர்ப்பாகனை நோக்கி, 'இனி தேரை நீ ஓட்டுவாயாக' என்றான் எனப் பொருள் கூறுவாரும் உளர்; 'விடுதேர்' (850) என்றதுபோல. ஆனால் அது முன்பின் தொடர்பற்றுப் பொருட்பொருத்தமின்றி, வேறுபடுவது காண்க.

பி-ம். 4. கதழ்ந்துரையா, கனன்றிடலும், கனன்று சொல்வான். (101)

908. வரும்புண்டர வாளியுன் மார்புருவிப்
பெரும்புண்டிற வாவகை பேருதிநீ
இரும்புண்டநீர் மீளினு மென்னுழையின்
கரும்புண்டசொல் மீள்கிலள் காணுதியால்.

'வரும் புண்டர - எனக்குத் தடையாக எதிர்த்து வரும் கழுகே! (என்) வாளி உன் மார்பு உருவி - என் அம்பினால் உன்

மார்பினைத் துளையிட்டு, பெரும் புண்திறவா வகை - பெரிய புண்ணாக அம் மார்பு திறந்து போகாதபடி, நீ பேருதி - நீ இவ்விடம் விட்டு அப்பாற் சென்று தப்புவாயாக ! இரும்பு உண்ட நீர் மீளினும்- தீயிற் காய்ந்த இரும்பு உட்கொண்ட நீர் ஒரு கால் மீண்டு வெளிவருமாயினும், என் உழையின் - என்னிட மிருந்து, கரும்பு உண்ட சொல் - கரும்புபோன்று இனிய சொற்களையுடைய இந்தப் பெண், மீள்கிலள் - மீண்டும் வரக்கூடியவள் அல்லள், காணுதி - இதனை நீ தெரிந்து கொள். ஆல் : ஈற்றசை.

புண்டரம் - கழுகு ; வடசொல்; அண்மைவிளி; இரும்புண்ட நீர் ; ' இரும்புண்ணீரினு மீட்டற் கரிதென ' (புறநா. 21 ; 8); (பெருங். 3 : 25 : 71) ; ' இரும்புண்ட நீரைப்போல வென்னு ருயிரை யாரப் பருக ' திருவாய்மொழி. 10, 10 : 5) ; திருவேங்கடத் தந்தாதி : 6 ; திருவரங்கக்கலம்பக ; 95. கரும்புண்ட ; உண்ட, உவம வாசகம் ; கரும்புண்ட சொல், அடையடுத்த ஆகுபெயர் ; பிராட்டியைக் குறிப்பது.

பி - ம். 1. வரும்புண்டரம் ; புண்டருவாளி ; வாளியின் மார்பு.
2. டருமாவகை பேசுதிநீ.
3. இரும்புண்டது, இரும்புண்புனல் ; மீள்கினுமென் ; மென்னுழையிற், யென்னுழையிக். (102)

வேறு.

பிராட்டி அயர்வுற, சடாயு அவளைத் தேற்றுதல் 909—10.

909. என்னும் மளவிற் பயமுன்னி னிரட்டி யெய்தி
அன்னம் மயர்கின் றதுநோக்கி யரக்க னுக்கை
சின்னம் முறுமிப் பொழுதேசிலை யேந்தி நங்கள்
மன்னன் மகன்வந் திலனென்று வருந்த லன்னே.

என்னும் அளவில் - என்று இராவணன் சொன்ன மாத்திரத்தில், அன்னம் - அன்னப்பறவை போன்ற பிராட்டி, பயம் முன்னின் இரட்டி எய்தி - அச்சம் முன்னைவிட இரு மடங்கு அடைந்து, அயர்கின்றது நோக்கி - வருந்துகின்றதைச் சடாயு பார்த்து, (பிராட்டியை நோக்கி), ' அன்னே - தாயே ! அரக்கன் யாக்கை - இந்த இராக்கதனான இராவணன் உடல், இ பொழுதே - இந்த நேரத்திலேயே, சின்னம் உறும்-(என்னால்) பல துண்டுகளாகச் செய்யப்படும் ; நங்கள் மன்னன் மகன் - நம் சக்கரவர்த்தித் திருமகனான இராமபிரான்,

சிலை ஏந்தி வந்திலன் என்று - வில்லை ஏந்தி (உன்னை மீட்க) வந்தானில்லையே என்று, வருந்தல் - வருந்தாதே!

இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடராய் இயைந்து பொருள் முடிவு கொள்ளும். பிராட்டியை அன்னம் எனக் கூறுவது இந்நூலின் பெரு வழக்காகும். நங்கள்: முன்னிலையுளப்பாட்டுத் தன்மைப் பன்மை. அன்னை; அண்மை விளி: அன்னை என்றது அன்பினாலும், உலகமாதா என்ற மரியாதையாலும் என்க. மருகியை அன்னை என்றது, அன்பினால் வந்த மரபு வழுவமைதியும் ஆம். வருந்தல் :-எதிர்மறைவினை. என்னும்மளவில், அன்னம்மயர்கின்றது, சின்னம்முறும் என்பன, செய்யுளின் ஓசை நயங் கருதி ஒற்று மிக்கன. சின்னம் - துண்டு; இது வடசொல்.

பி - ம். 1. முன்னினு மிரட்டி; மிரட்டி யெய்த.
2. மயர்கின்றதை, மயர்கின்ற துயர்க்க ளுக்கை; யரக்கன் யாக்கை. 3. யேந்தி யெங்கள்.
4. வருந்த லென்னை, வருந்தல் தன்னை. (*103*)

910. முத்துக் கனபோன் முகத்தாலி முலைக்கண் வீழ்ந்து
தத்தத் தளரே றலைதால பலத்தி னேலும்
கொத்தொப்பன கொண்டிவன் கொண்டன வென்ற வாசை
பத்திற்கு மின்றே பலியீவது பார்த்தி யென்றான்.

'முத்து உக்கன போல் - முத்துக்கள் சிந்தினபோல, முகத்து - முகத்திலுள்ள கண்களினின்றும், ஆலி முலை கண் வீழ்ந்து - நீர்த்துளிகள் கொங்கைகளின் மீது விழுந்து, தத்த - தத்தித் தெறித்து விழ, தளரேல் - சோர்ந்து வருந்தாதே! தால பலத்தின் ஏலும் - பனம் பழங்களைத் தாங்கிய, கொத்து ஒப்பன - கொத்தை ஒத்து விளங்குவனவான, தலை கொண்டு - இவன் தலைகள் பத்தையும் கொண்டு, இவன் கொண்டன என்ற - இவன் முன் வென்று தனக்கு உரிமை யாக்கிக்கொண்டவை என்று சொல்லப்பட்ட, ஆசை பத்திற்கும் - பத்துத் திக்குக்களுக்கும், இன்றே-இன்றைக்கே, பலி ஈவது - நான் (அத்தலைகளைப்) பலியாக இடுவதை, பார்த்தி - நீ காண்பாயாக!' என்றான் - என்று ஆறுதலாகப் பிராட்டிக்கு உறுதி மொழி கூறினான் சடாயு.

ஆலி - மழைத்துளி, அல்லது நீர்த்துளி; முலை மேல் ஆலி வீழ்தல்; 'கொண்ட நெடுங்கணாலி கொங்கை கோப்ப' (அயோத். கைகேசி சூழ்வினை: 6;) நகர்நீங்கு; *101.*; சுந்தர-559. தாலபலம் - பனம்

பழம்; இது வடமொழித்தொடர். இராவணன் தலைகளுக்குப் பனங் கனிகளின் கொத்து; "இலங்கையர் கோனைப் பானுநேர் சரத்தாற் பனங்கனி போலப் பருமுடி யுதிரவில் வளைத்தோன்" (பெரிய திருமொழி. 9. 1 : 7.); 'நீளிரும் பனைமிசைப் பலபதி னுயிரங் குலைதரை யுதிர்வபோல்' (பரி. 2 : 43-44). ஆசைபத்து - பத்துதிசைகள்; எட்டுத் திக்குக்களோடு, மேல், கீழ் இரண்டும் சேர்ந்து திசைகள் பத்து ஆயின. இராவணன் திக்விசயத்தில் பத்துத்திக்குகளையும் வென்றவன்; உயுத்த. அங்கதன் றூது : 4.

பி - ம். 1. முத்துக்கள் போன்.
2. தத்துற் றயரேல், தத்தத் தளரேறலை; றளரேற்றலை யிங்கிவை பொங்குதாலக், தத்தத் தளரீர், தத்தத் தலையீங்கிவை தாங்கிய போகுதல் தாலக்; தால பலத்தின் மேலும்.
3. கொண்டுகைக் கொண்டவன், கொண்டன னென்ற வாசை, கண்டு கைக்கொண்டன; கைக்கொண்டவன் கொண்ட.
4. பத்துக்கு மின்றே; பார்த்தி யென்னு. (*104*)

**இராவணனும் சடாயுவும் பொருதல் 911—30.**

**911.** இடிப்பொத்த முழக்கி னிருஞ்சிறை வீசி யெற்றி
முடிப்பத் திதனைப் படியிட்டு முழங்கு துண்டம்
கடிப்பக் கடிதுற்றவன் காண்டகு நீண்ட வீணைக்
கொடிப்பற்றி யொடித்துயர் வானவ ராசி கொண்டான்.

(இவ்வாறு சொல்லிச் சடாயு), இடிப்பு ஒத்த முழக்கின் - இடி இடித்தலைப் போன்ற பேரொலியோடு, இரும் சிறை விசி எற்றி - தன் பெரும் சிறகுகளை வீசி அடித்துத் தாக்கி, முடி பத்தி தனை படி இட்டு - இராவணனுடைய கிரீடங்களின் வரிசையைத் தரையின்மீது தள்ளி, முழங்கு துண்டம் கடிப்ப - பேரொலியுண்டாகும்படி தன் மூக்கினால் கடிக்கும்படி, கடிது உற்று - விரைவில் பறந்து வந்து, அவன் காண் தகு வீணை கொடி பற்றி ஒடித்து - அவ்விராவணனது பார்ப்பதற்கு ஏற்றதாக (அவன் தேரில் விளங்கிய) வீணைக்கொடியைப் பிடித்து ஒடித்து, வானவர் உயர் ஆசி கொண்டான் - (வானில் உள்ள) தேவர்களுடைய சிறந்த வாழ்த்தாகிய ஆசிர்வாதங்களைப் பெற்றான்.

துண்டம் - பறவையின் மூக்கு அல்லது அலகு; *182, 913, 972.* இராவணன், வீணையிசையில் வல்லவனாதலின் வீணையையே தன் கொடியில் அடையாளமாகக் கொண்டிருந்தான் என்க. உயர்

வானவர் - சிறந்த வானவர், அல்லது வானிலிருந்து இதனைப் பார்த்திருந்த தேவர் என்றேனுங் கொள்ளலாம். காண்டகு - காண்டற்கு ஏற்ற அழகுடைய என்னலும் ஆம்.

பி - ம். 1. முழங்கினிருஞ் ; னிருஞ்சிற கடித்து வீசி.
2. படியிட்டபின் மூரித் தண்டக்.
3. கடிப்புற்ற கைத்தலத்தாற் கடிது நீண்ட வீணைக், கடித்துற்றவன் கைத்தலங். (105)

912. அக்காலை யரக்க னுருக்கரக் கன்ன கண்ணன்
எக்காலமு மின்னதோ ரீடழி வுற்றி லாதான்
நக்கா னுலகேழு நடுங்கிட நாக மன்ன
கைக்கார் முகத்தோடு கடைப்புரு வங்கு னித்தான்.

அ காலை - அப்பொழுது, எ காலமும் - இதற்கு முன் எந்தக் காலத்தும், இன்னது ஓர் ஈடு அழிவு - இத்தன்மையதான தன் வலிமைக்கு ஒரு கேட்டை, உற்று இலாதான் - அடைந்திலாதவனான இராவணன், உருக்கு அரக்கு அன்ன கண்ணன் - உருக்கிய அரக்குப் போன்று கொதிப்பும் சிவப்புமுடைய கண்களையுடையவனாய், உலகு ஏழும் நடுங்கிட - ஏழுலகங்களும் அஞ்சி நடுங்கும்படியாக, நக்கான் - சிரித்து, நாகம் அன்ன - மலை போன்று விளங்கிய, கை கார்முகத்தோடு - தன்கையிற் கொண்ட வில்லோடு, கடை புருவம் - தன் புருவங்களின் நுனிகளையும், குனித்தான் - கோபத்தால் வளைத்தான்.

ஈடு - வலிமை (பிங்). உருக்கரக்கு அன்ன கண்ணன் ; கோபத்தால் பொங்கியும் சிவந்தும் தோன்றிய கண்களையுடையவன்; அரக்கு - சாதிலிங்கமும் ஆம். நக்கான் : நக்கது, வீர அட்டகாசம் என்பர் வடமொழியில். வில்லை வளைத்ததும், புருவங் கடை குனித்ததும் ஒரே சமயத்தில்நிகழ்ந்தன என்பதாம்; இஃது உடனவிற்சியணி. புருவங் குனித்தல் கோபத்தின் அறிகுறி ; அயோத். குகப் : 7. நாகம் ; இது பல பொருள்குறித்த ஒரு பெயர்த்திரிசொல் ; இங்கு, மலை என்னும் பொருளைக் குறித்தது ; 'நாகமு நாகமு நாண நடந்தான்' (பால. கார்முகப் ; 32.); நாகம், கைக்கும் வில்லுக்கும், என்னலும் ஆம். இனி, நாகம் - பாம்பும் ஆம் ; வில்லுக்குப் பாம்பு ; பால. கார்முகப் ; 7.

பி - ம். 1. அரக்குருக் கன்ன, னுருக்கரக்கன்ன.
2. மன்ன தோரீடழி. 3. நாகமன்னான். (106)

913. சண்டப் பிறைவா ளெயிற்றான்சர தாரை மாரி
மண்டச் சிறகா லடித்தான் சிலவள் ளுகிரால்
கண்டப் படுத்தான்சில காலனுங் காண வுட்கும்
துண்டப் படையாற்சில துண்ட துண் டங்கள் கண்டான்.

பிறை வாள் - பிறைச் சந்திரன் போன்று வளைவானதும் ஒளியுடையதுமான, சண்ட எயிற்றான் - கொடிய பற்களையுடைய இராவணன் தூண்டின, சரதாரை மாரி - அம்புகளின் வரிசையாகத் தொடர்ந்த மழை, மண்ட - அதிகரித்துத் தாக்க, (சடாயு) சில - அவற்றிற் சிலவற்றை, சிறகால் அடித்தான் - தன் சிறகுகளால் அடித்து அழித்தான்; சில - மற்றும் சிலவற்றை, வள் உகிரால் - தன் கூரிய நகங்களால், கண்டம் படுத்தான் - துண்டாடினான்; சில - மேலும் சில அம்புகளை, காலனும் காண உட்கும் - யமனும் காண அஞ்சும்படியான, துண்டம் படையால் - தன் மூக்காகிய ஆயுதத்தால், துண்ட துண்டங்கள் கண்டான் - சிறுசிறு துண்டுகளாக்ச் செய்தழித்தான்.

சண்டம் - கொடுமை; பெருவலியுமாம்; இனி சண்ட எயிற்றான் - யமன் போன்ற பற்களையுடையவன் என்னலும் ஒன்றும்; சண்டன் - யமன். துண்டப்படையால் துண்டதுண்டங்கள் கண்டான் என்றது சொல்லணியும் ஆம். துண்டப்படை; சூளாமணி: 1452. காலனும்: உம்மை, உயர்வு சிறப்பினது. கண்டான் - ஆக்கினான்; காணுதல் - ஆக்குதல்; 'முனைவன் கண்டது முதனூலாகும்,' (தொல். பொருள். 649.)

பி-ம். 1. சரத் தாரை மாரி; சரத தான மாரி.
2. சில கால வள்ளுகிராற்; சிறையா லடித்தான்.
3. குலைக்காலனுங் காண வுடங்கும்.
4. சிலை துண்டங்கள்; துண்டங்கள் செய்தான். (107)

914. மீட்டும் மணுகா நெடுவெங்க ணனந்த நாகம்
வாட்டுங் கலுழனென வன்றலை பத்தின் மீதும்
நீட்டுந் நெடுமூக்கெனு நேமியின் சேம விற்கால்
கோட்டும் மளவில்மணிக் குண்டலங் கொண்டெ ழுந்தான்.

மீட்டும் அணுகா - அச்சடாயு மறுபடியும் அந்த இராவணனை அணுகி, நெடு வெம் கண் அனந்த நாகம் - நீண்டனவும் கொடிய கண்களை யுடையனவுமான பல பாம்புகளை, வாட்டும் - அழிக்கும், கலுழன் என - கருடன்போல, வன் தலை பத்தின் மீதும் - அவனது

வலிய பத்துத் தலைகளின் மேலும், நீட்டும் நெடு மூக்கு எனும் நேமியின் - நீட்டிய நீண்ட மூக்கு என்னும் சக்கரப்படையினால், சேம வில் கால் கோட்டும் அளவில் - (அவன்) பாதுகாவலாக உள்ள தன் வில்லை வளைத்து நாண் பூட்டும் நேரத்திற்குள், மணி குண்டலங்கள் கொண்டு எழுந்தான் - அவன் அணிந்திருந்த இரத்தின குண்டலங் களைப் பறித்துக் கொண்டு மேற்கிளம்பினான்.

இச்செய்யுளில் இருவர் செயல்களும் காட்டப்பெற்றன காண்க. சேம வில் - ஆபத்தில் உதவப் பாதுகாவலாக வைத்துள்ள வில்; சிலப். 2. 42. உரை. இராவணன் பத்துத் தலைகளை யுடைமை யாலும், கொடிய கண்களை யுடைமையாலும் அவை பல நாகங் களுக்கு உவமைகளாக கூறப்பெற்றன. அவன் குண்டலங்களை அப்பாம்புகளின் மணிகளாகக் கொள்க. மீட்டும் மனுகா, நீட்டுந் நெடுமூக்கு, கோட்டும் மளவில் என்பவற்றில் மகர ஒற்றுக்கள் எதுகை நோக்கியும், சந்த இன்பங்கருதியும் மிக்கன; இவை விரித் தல் விகாரங்கள்.

பி - ம். 1. நெடுவன்கண்; வரந்த நாகம்.
2. வாட்டுங் கயிலவ; மாட்டுங் கலுழ, ஆட்டுங் கலுழ; பத்து மீதாய், மீது.
3. நீட்டுநெடு; சேற விற்கால், சேமணிக்கால்.
4. மளவிற் குண்டலங்கள். (108)

915, எழுந்தான் றடமார்பினி லேழினோ டேழு வாளி
அழுந்தாது கழன்றிட வெய்தெடுத் தார்த்த ரக்கன்
பொழிந்தான் புகர்வாளிகள் மீளவும் போர்ச்ச டாயு
விழுந்தா னெனவிண்ணவ ரஞ்சினர் வெய்து யிர்த்தார்.

(அப்போது) அரக்கன் - இராக்கதனான இராவணன், ஆர்த்து - கர்ச்சனைசெய்து, எழுந்தான் தட மார்பினில் - மேலெழுந்த சடாயு வின் பெரிய மார்பிடத்து, ஏழின் ஓடு ஏழு வாளி - தான் எய்த பதினான்கு அம்புகள், அழுந்தாது கழன்றிட - உள்ளே அழுந்திப் புகாமல் வெளியே கழன்று வரவும், மீளவும் - மறுபடியும், புகர் வாளிகள் பொழிந்தான் - பொன்னிற அம்புகளைச் சொரிந்தான்; போர் சடாயு - போரில் வல்ல சடாயுவும், விழுந்தான் என - அடி பட்டுக் கீழே விழுந்தான் என்று, விண்ணவர் - (வானில் அப் போரைப்பார்த்து நின்ற) தேவர்கள், அஞ்சினர் வெய்துயிர்த்தார் - அச்சமுற்றுப் பெருமூச்சுவிட்டு வருந்தினர்.

'பொன்னிற வாளி' என்பது பழையவுரை. புகர்வாளி: ஒளியுடைய அம்பு; புகர் - கபில நிறமும் ஆம். எழினேடேழு; இப்பிரயோகம் இக்காண்டத்திற் பல விடங்களில் வருவது காண்க. 399, 468, 470, 490. விழுந்தானென; உறுதிமேற்கூறிய காலவழுவமைதி.

பி - ம். 2. அழிந்தா யெனவே தொடுத்தார்த் தங்கரக்க னென்போன்; கழன்றிடப் பெய்தெடுத், கழன்றிடவே தொடுத்தார்த்.

3. புகர் வாளிக ளுருவிடப், புக வாளிகள், சரமாரிகள்.

4. வஞ்சினர் விண்ணவர், வஞ்சினர் வானவர்.

916. புண்ணிற் புதுநீர் பொழியப்பொலி புள்ளின் வேந்தன்
மண்ணிற் கரனே முதலோருதி ரத்தின் வாரி
கண்ணிக் கடலென்று கவர்ந்தது கான்று மீள
விண்ணிற் பொலிகின்றதொர் வெண்ணிற மேக மொத்தான்.

புண்ணின் - தன் உடம்பில் இராவணன் ஏவிய அம்புகள் பட்டுண்டான புண்களிலிருந்து, புதுநீர் பொழிய - புதிய இரத்தம் பெருகி விழ, பொலி - தோன்றிய, புள்ளின் வேந்தன் - பறவைகளுக் கரசனான சடாயு, மண்ணில் - பூமியில், கரனே முதலோர் - கரன் முதலான அரக்கர்களுடைய, உதிரத்தின் வாரி - இரத்தப் பெருக்கை, கடல் என்று கண்ணி - கடல் எனக் கருதி, கவர்ந்தது- முன் பருகிக் கவர்ந்து கொண்டதை, மீள கான்று - மறுபடியும் பூமியில் உமிழ்ந்து, விண்ணில் பொலிகின்றது - ஆகாயத்தில் விளங்குகின்றதான, ஓர் வெண் நிற மேகம் - ஒரு வெண்ணிறமான மேகத்தை, ஒத்தான் - ஒத்து விளங்கினான்.

சடாயு இராவணன் அம்புகளால் உண்டான புண்களினின்று இரத்த வெள்ளத்தைச் சொரிந்து கொண்டு வானில் விளங்கிய தோற்றம், முன், கரன் முதலான அரக்கர் போரிற்பட்டு வீழ, அவர்கள் உடலிலிருந்து பெருக்கெடுத்து விளங்கிய இரத்த வெள்ளத்தைக் கடலென்று எண்ணிப் பருகி, மீண்டும் அந்த ரத்தத்தை மழையாகக் கீழே பொழிந்து விளங்கும் ஒரு வெண்ணிற மேகம் போன்றிருந்தது என்க. அதுவரை சடாயு ஒரு போதும் தன் இரத்தம் வெளிப்பட யாராலும் அடிபட்டது இல்லையாதலின், இப்போது வெளிப்பட்ட இரத்தம் புதுநீர் என்னப்பட்டது; சடாயு புள்ளின் வேந்தன்: 177, 204, 918, 922, 925, 835-6, 948, 1028;

சடாயுவின் நிறம் வெண்மையானது; 178, 895. இவ்வுவமைக்கு, ஒப்பு. பால. ஆற்றுப்படலம். 2; நைடதம். நாட்டுப்: 1.

பி-ம். 1. பொலியப் பொழி.

3. நுகர்ந்தது கான்று; கண்ணிக் கடலொன்று, கண்ணுற்றிது கடலென்று முகந்தது கான்று, கண்ணிற் கடலென்றுங் கரந்தது கடலென்ற; கரந்தது கான்று.

4. நீணிற மேக மொத்தான், நீர்நிற; மேக மென்ன. (110)

917. ஒத்தா னுடனே யுயிர்த்தா னுருத்தா னவன்றோள்
பத்தோடு பத்தின் னெடும்பத்தியிற் றத்தி மூக்கால்
கொத்தா நகத்தாற் குடையாச் சிறையாற் புடையா
முத்தார மார்பிற் கவசத்தையு மூட்ட றுத்தான்.

ஒத்தான் - முன் கூறியபடி வெண்ணிற மேகம் போன்றவனான சடாயு, உடனே - அப்பொழுதே, உயிர்த்தான் - பெருமூச்சு விட்டு, உருத்தான் - கோபித்தவனாகி, அவன் தோள் பத்து ஒடு பத்தின் - அவ்விராவணனுடைய தோள்கள் இருபதின், நெடும் பத்தியில் - நீண்ட வரிசையில், தத்தி - தாவிக் குதித்து, மூக்கால் கொத்தா - தன் மூக்கினால் கொத்தியும், நகத்தால் குடையா - தன் நகங்களாற் குடைந்து புண்ணாக்கியும், சிறையால் புடையா - தன் சிறகுகளால் அடித்தும், முத்து ஆர மார்பில் கவசத்தையும் - முத்துமாலைகள் பூண்டு விளங்கிய அவன் மார்பில் அணிந்திருந்த கவசத்தையும், மூட்டு அறுத்தான் - அதன் பிணிப்புக்களை அறுத்து நாசமாக்கினான்.

கொத்தா, குடையா, புடையா என்பவை செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சங்கள். மூட்டு - பொருத்துவாய் என்னலும் ஒன்றும்.

பி-ம். 1. னுடனே யெதிர்த்தான்.

2. பத்தென்றுறும் பத்தியில், பத்தொடு பத்தினுனெடும்; தத்தி மூக்கிற், றத்த மூக்கால்.

3. சிறகாற் புடையா; கொத்தார் குடையார் சிறையாற் புடையாற் குலாவு. (111)

918. அறுத்தானை யரக்கனு மைம்பதொ டைம்ப தம்பு
செறித்தான் றடமார்பிற் செறித்தலுந் தேவ ரஞ்சி
வெறித்தார் வெறியாமு னிராவணன் வில்லை மூக்கால்
பறித்தான் பறவைக்கிறை விண்ணவர் பண்ணை யார்ப்ப.

அறுத்தானை - தன் கவசத்தின் மூட்டறுத்தழித்த சடாயுவை, அரக்கனும் - இராக்கதனான இராவணனும், ஐம்பது ஒடு ஐம்பது அம்பு - நூறு பாணங்களை, தட மார்பில் செறித்தான் - அவன் பெரிய மார்பில் அடர்ந்து அழுந்தச் செய்தான்; செறித்தலும் - அவ்வாறு இராவணன் அம்புகளை அழுந்தச் செய்தலும், தேவர் அஞ்சி வெறித்தார் - அதைக் கண்ட தேவர்கள் யாதாகுமோ என்று பயந்து திகைத்தார்கள்; வெறியாமுன் - அத்தேவர்கள் அவ்வாறு திகைக்கும் முன்னே, பறவைக்கு இறை - பறவைகளுக்கு அரசனான சடாயு, விண்ணவர் பண்ணை ஆர்ப்ப - அத் தேவர்களின் கூட்டம் ஆரவாரம் செய்து மகிழ, இராவணன் வில்லை - இராவணனது வில்லை, மூக்கால் பறித்தான் - தனது மூக்கினாற் பறித்துப் பிடுங்கினான்.

வெறித்தல், பிரமித்தலும் ஆம்; கலித். 143; 7. வெறியா முன் ஆர்ப்ப, என்றது, விரைவைக் குறித்தபடி. பண்ணை: பணை என்பதன் விரித்தல் விகாரமாகக் கொண்டு, தேவர் தம் துந்துபி முதலிய வாத்தியங்களை முழக்கி மகிழ்ந்தனர் எனப் பொருள் கொள்வாரும் உளர்; பண்ணை: 927; பால. கடிமணப்: 42; சுந்தர. 602.

பி-ம். 1. அறுத்தானுக் கரக்கனு. 2. றடமார்பினிற்.
3. வெறிய முன்னிராவணன், வெறியா முன்னிராவணன்; வில்லைப்பல்லாற்,
4. பண்ணையார்க்க. (112)

919. எல்லிட்ட வெள்ளிக் கயிலைப்பொருப் பீச னோடும்
மல்லிட்ட தோளா லெடுத்தான்சிலை வாயின் வாங்கி
வில்லிட் டுயர்ந்த நெடுமேக மெனப்பொ லிந்தான்
சொல்லிட் டவன்றேள்வலி யாருளர் சொல்ல வல்லார்.

ஈசன் ஓடும் - சிவபெருமானோடும், எல் இட்ட - ஒளி வீசிய, கயிலை பொருப்பு - கயிலாயகிரியை, மல் இட்ட தோளால் - தன் வலி காட்டிய தோள்களால், எடுத்தான் - எடுத்த இராவணனது, சிலை - வில்லை, வாயில் வாங்கி - (சடாயு) தன் வாயினால் பற்றி எடுத்துக்

கொண்டு, வில் இட்டு உயர்ந்த - இந்திர வில் என்னும் வான வில்லைத் தோன்றச்செய்து மேலே விளங்கிய, நெடு மேகம் என - பெரிய மேகத்தைப்போல, பொலிந்தான் - தோன்றினான்; அவன் தோள் வலி - அவன் புய பராக்கிரமத்தை, சொல் இட்டு சொல்ல வல்லார் யார் உளர் - தம் சொற்களைக் கொண்டு அளவிட்டு யாரே சொல்லத்தக்கவராயுள்ளார் : (ஒருவரும் இலர் என்றபடி).

இராவணன் கயிலையங்கிரியை எடுத்தது ; 327, 565, 596, 745, 889 ; சடாயுவின்றோள் : 'வன்றிண் டோள்வலி மாறிலாதவன்' கிட்கிந்தா. சம்பாதிப். 46. சொல் இட்டவன் - புகழை நிலை நாட்டிய வன் என்றும் பொருள் கொள்ளலாம். சடாயுவின் புகழ்; சுந்தர. 566 ; உயுத்த. மகுடபங்கப் : 34. வானில் இராவணன் வில்லோடு விளங்கிய சடாயுவுக்கு வான வில்லோடு விளங்கும் மேகம் உவமை ; ஒப்பு : 916-

பி - ம். 1. புல்லிட்டவெள்ளி.

2. சிலைவாயிடை நின்றுவாங்கி.

3. வில்விட்டுயர்ந்தான், வில்விட்டுயர் மேகமென விசும்பிற் பொலிந்தான் ; குயர்ந்தானெடுமேக. (113)

920. மீளா நிறத்தா யிரங்கண்ணவன் விண்ணி னோட
வாளா லொறுத்தான் சிலைவாயிடை நின்று வாங்கித்
தாளா லிறுத்தான் றழல்வண்ணன் றடக்கை வில்லைத்
தோளா லிறுத்தான் துணைத்தாதைத னன்பிற் றோழன்.

தழல் வண்ணன் தட கை வில்லை - நெருப்புப் போன்ற செந் நிறத்தையுடைய சிவபெருமான் தன் பெரிய கையிற் கொண்ட திரியம் பகம் என்ற வில்லை, தோளால் இறுத்தான் - தன் தோளாற்றலால் ஒடித்த இராமபிரானுடைய, தாதை துணை அன்பில் தோழன் - தந்தை யாகிய தயரதசக்கரவர்த்திக்குத் துணைவனும் அன்புடைய தோழனு மான சடாயு, மீளா நிறத்து - பின்னிடாத (வலிய) தோள்களை யுடைய, ஆயிரம் கண்ணவன் - ஆயிரங்கண்களையுடைய இந்திரன், விண்ணின் ஓட - போரில் தோற்று வானில் திரும்பி ஓட, வாளால ஒறுத்தான் - தன் வாளால் வருத்திய இராவணனுடைய, சிலை - வில்லை, வாய் இடை நின்று வாங்கி - தன் வாயிற் கௌவிக் கொண்டிருந்ததிலிருந்து எடுத்து, தாளால் இறுத்தான் - தன் கால் களால் ஒடித்தழித்தான்.

சிவபெருமான் வில்லை யொடித்தவனின் தாதை தோழன், இந்திரனை வாளாலொறுத்தவன் வில்லை இறுத்தான் என்க. சிவ பெருமான் தழல்வண்ணன், 984; துணைத்தாதை அன்பிற்றோழன் - தனக்கு மற்றொரு தந்தையும் அன்பிற் சிறந்த தோழனுமான சடாயு என்றும், பொருள் கொள்ளலாம்; துணைத் தாதை - இரண்டாவது தந்தையும் ஆம். இனி, துணையாக காட்டில் இருந்து காத்து வந்தவனும், தன் தந்தைக்கு அன்பிற் சிறந்த தோழனுமான சடாயு என்றுபொருள் கொள்ளலும் ஒன்றும். சடாயு தயரதன் துணைவன் என்பது; 191, 938, 939; கிட்கிந்தா. சம்பாதி: 22. ஆயிரங்கண் ணவன் - இந்திரன்; இந்திரன் ஆயிரங்கண் பெற்றமை, பால. அகலி கைப் படலத்தால் அறியலாம். இராவணன் இந்திரனை வாளால் ஒறுத்தது; உத்தர. திக்கு விசயப்படலம் காண்க.

பி - ம். 1. விண்ணின்றோட.

2. வாளாலறுத்தான்; நிலைவாயிடை நின்றும்,

4, னன்புத்தோழன். (114)

921. ஞாலம் படுப்பான்தன தாற்றலுக்கேற்ற நல்வில்
மூலம் மொடிப்புண்டது கண்டு முனிந்த நெஞ்சன்
ஆலம் மிடற்றான்புர மட்டதொ ரம்பு போலும்
சூலம் மெடுத்தார்த் தெறிந்தான்மறந் தோற்றிலாதான்.

ஞாலம் படுப்பான் - உலகை அழிக்கவல்லவனும், மறம் தோற்றிலாதான் - வலிமை குறையாதவனுமான இராவணன், தனது ஆற்றலுக்கு ஏற்ற - தன் வலிமைக்குத் தக்கதான, நல் வில் - தன் சிறந்த வில்லானது, மூலம் ஒடிப்புண்டது கண்டு - அடி ஒடிந்து அழிவுற்றதைப் பார்த்து, முனிந்த நெஞ்சன் - கோபங் கொண்ட மனத்தினனாய், ஆலம் மிடற்றான் - விஷத்தைத் தன் கழுத்தில் அடக்கிக்கொண்ட சிவபிரான், புரம் அட்ட - முன் திரிபுரங் களை அழித்த, ஓர் அம்பு போலும் - ஒப்பற்ற அம்பைப்போன்ற, சூலம் எடுத்து ஆர்த்து எறிந்தான் - தன் சூலாயுதத்தை எடுத்துக் கர்ச்சித்து (அச்சடாயுவின் மீது) வீசி எறிந்தான்.

படுத்தல் - அழித்தல்; உயுத்த. மூலபலவதைப்; 56. வில் மூலம் - வில்லுக்கு ஆதாரமான பாகம் என்னலும் ஒன்றும். மூலம் மொடிப்புண்டது, ஆலம் மிடற்றான், சூலம் மெடுத்தான்; இவை

எதுகை நோக்கியும் சந்தவின்பங்கருதியும் மகர வொற்று மிகுந்து நின்றன ; இவை விரித்தல் விகாரங்கள் ; 914 ஒப்பு நோக்குக.

பி - ம். 1. ஞாலமெடுப்பான், ஞாலமெடுத்தான் ; தாற்றலுக்கொத்த வல்வில்.

2, மூலமொடிப்புண்டது ; மொடிப்புண்டன, முடிப்புண்டது ; முடிந்த நெஞ்சன்,

3. ஆலமிடற்றான், ஆலமிடற்றார் ; புரம்பட்ட தோரம்பு, புரம்படுத்ததோர்.

4. சூலமெடுத்தான். (115)

922. ஆற்றா னிவனென் றுணராவென தாற்றல் காணென்
றேற்றா னெருவைக்கிறை முத்தலை யெஃகை மார்பின்
மேற்றா னிதுசெய்தவ ராரென விண்ணு ளோர்கள்
தோற்றாது நின்றார்தம தோள்புடை கொட்டி யார்த்தார்.

எருவைக்கு இறை - கழுகுகளுக்கு அரசனான சடாயு, ' இவன் ஆற்றான் என்று உணரா - இவன் இந்தச் சூலத்தைத் தாங்கும் வலியற்றவன் என்று எண்ணி, எனது ஆற்றல் காண் என்று - ' என் வலிமையை நீ பார் ' என்று சொல்லி, மு தலை எஃகை - இரா வணன் எறிந்த மூன்று தலைகளையுடைய அந்தச் சூலாயுதத்தை, மார்பின் மேற்றான் - தன் மார்பின் மேல் தாங்கிக்கொண்டான் ; (அது கண்டு), விண் உளோர்கள் - வானில் உள்ள தேவர்கள், இது தான் செய்பவர் யார் என - இவ்வாறு அருஞ் செயலைப் புரிபவர் வேறு யாரே உள்ளார்? என்று, தோற்றாது நின்றார் - ஊகித்தறிய முடியாது வியப்புற்று நின்றவர், தம் தோள் புடை கொட்டி ஆர்த் தார் - தம்முடைய தோள்களைத் தட்டி ஆரவாரம் செய்தனர்.

மேற்றான் - மேல் ஏற்றுக் கொண்டான் ; மேற்று - மேலது, என்பது போல ; இறை. சூ. 5. தோள்புடை கொட்டுதல் - தோள்களி னிடத்துத் தட்டுதல் ; இது வீரச் செயலிடத்து ஆடவர் புரியும் செயல் ; கிட்கிந்தா. வாலிவதைப் 3 ; சுந்தர. 3. 830. தோற்றாது - இராவணன் கண்களுக்குப் புலப்படாதபடி, எனலும் ஆம். பகைவன் படையை மார்பில் ஏற்றல் ; குறள். 774. பரி. உரை.

பி - ம். 1. றுணராதி யென்னாற்றல், றுணரா தெனதாற்றல், றுணர்ந்தான வனாற்றல் காணான்.

2. யெஃக மார்பின், யெஃகு மார்பின்.

3. செய்பவராரென.

4. தந்தோள் படை ; தோளிடை. (116)

923. பொன்னேக் கியர்தம் புலனேக்கிய புன்க ணேரும்
இன்னேக்கிய ரில்வழி யெய்திய நல்வி ருந்தும்
தன்னேக்கிய நெஞ்சுடை யோகியர் தம்மைச் சார்ந்த
மென்னேக்கியர் நோக்கமு மாமென மீண்ட தவ்வேல்.

பொன் நோக்கியர் தம்-பொன்னை அடைவதிலேயே நோக்கமுடைய விலைமகளிர்களுடைய, புலன நோக்கிய - இடம் அல்லது வீட்டை விரும்பிச்சென்ற, புன்கணோரும் - வறுமை மேலிட்டவர்களும், இன் நோக்கியர் இல் வழி - இனிய பார்வையோடு ஏற்று உபசரிக்கும் பான்மையற்றவர் (வீட்டின்) இடத்து, எய்திய நல் விருந்தும்-போய் அடைந்த நல்லவிருந்தினரும், தன் நோக்கிய - தன் ஆத்ம ஸ்வரூபத்தையே கருதி யோக நிலையில் உள்ள, நெஞ்சு உடை-மனத்தையுடைய, யோகியர் தம்மை சார்ந்த - யோகியர்களை (விரும்பி) அடைந்த, மெல் நோக்கியர் நோக்கமும் ஆம் என - மென்மையான பார்வையுடைய மகளிருடைய குறிக்கோளும் ஒப்பாகும் என்று சொல்லும்படி, அ வேல் - அந்த இராவணன் வீசிய மூவிலை வேலாகிய சூலம், மீண்டது - பயனற்றதாய்ச் செயலின்றித் திரும்பியது.

வறியவரை விலை மகளிர் மதிக்கமாட்டார்; ஆதலின், அவர்கள் அவ்விலை மகளிரால் நிந்தனையே பெறுவர் என்பதாம்; இது, ' விளக்கொளியும் வேசையர் நட்பு மிரண்டும், துளக்கற நாடில் வேறல்ல-விளக்கொளியும், நெய்யற்ற கண்ணே யறுமே யவரன்பும், கையற்ற கண்ணே யறும் ' (நாலடி. 371.) என்பதால் விளங்குவது காண்க. புன்கணோர் : காம நோயால் வருந்தும் அற்பரும் ஆம்; புன்கண் - துன்பம்; புறநா. 12 : 17 ; சிலப். 20 ; 32; மணி. 11 ; 112 ; பெரும். 1. 44 ; 5. இன்னேக்குய......நல்விருந்தும் ; ' முகந்திரிந்து நோக்கக் குழையும் விருந்து ' (குறள். 90), என்றமை காண்க. தன்னேக்கிய ; தன்னேக்குதலாவது, ' அஹம் பிர்ஹ்மா அஸ்மி ' என்னும், ' தானே பிரும்மம், பிர்மம் தன்னிலும் வேறுபட்டது அன்று ' என்ற வேறுபாடு என்பதில்லா அத்வைத நிலை ; அத்தகைய அபேத உணர்ச்சியுடைய யோகியர் மாட்டு, மகளிர் காமநோக்கம் பயன்படாது கெடும் என்பதாம். ஆதலின், மேலே உதாரணங்களாய்க் காட்டப்பெற்ற மூன்றும், பயனற்று மீண்ட இராவணன வேலுக்கு உவமைகள் ஆயின. பொன்னேக்கியர் : தம்மை நாடிவரும் ஆடவர், இளைஞர், முதியர், அழகமைந்தவர், அழகற்றவர், விரூபி, குரூபி என்று கருதாமல், அன்னோர் பொருளையே பெறும் நோக்கமுடைய விலைமகளிர். இல் நோக்கியர் இல்வழி......விருந்தும் : மனைவியின் கருத்துப்படி நோக்கி நடக்கும் பேதையர் வீட்டை அடைந்த நல்விரு

தினர் எனவும் பொருள்கொள்ளலாம்; இது, 'இல்லாளையஞ்சி விருந் தின் முகங்கொன்ற நெஞ்சிற் புல்லாளன்'' (சீவக. 2319) என்றதால் உறுதி பெறுமாறு அறிக. இங்கு, முதலில் உள்ள இல் என்பது இல்லாளையும், இரண்டாவது வீட்டையும் குறிப்பதாகும். இனி, யோகியர் தன்மை சார்ந்த என்ற பாடங்கொண்டு, யோகியர் பரம் பொருளிடத்திலன்றிப் பிறிதோரிடத்திற் கருத்தைச் செலுத்தாத வாறு போல, கற்புடைய மகளிர் தம் கணவர் பாலன்றிப் பிறரிடம் தம் கருத்தைச் செலுத்தார்; அது போல என்றும் பொருள்கொள் வாரும் உளர். மென்னோக்கியர் - அழகிய கண்களையுடைய மகளிர்; அதாவது, வாழ்க்கைத் துணைவியர் என்னலும் ஒன்றும். மீண்டது; சடாயுவின் உடலில் தாக்கி ஊடுருவிச் செல்லாது, தெறித்து மீண் டது அவ்வேல் என்க. இதனால் சடாயுவின் உடல் வலிமையின் சிறப்பு விளங்க வைத்த நயம் உணரப்பாலது. 'புலம் - இடம்; இன்னோக்கியரில் வழி - இனிய பார்வையுடையோர் இல்லாத இடத்து. தன்னோக்கிய - தன் ஆன்மாவின் நிலையறிந்த' என்பன பழையவுரை. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 3. சிந்தனை யோகியர் சார்பு சார்ந்த; தன்மை சார்ந்த, தண்மை சார்ந்த, நெஞ்சு சார்ந்த, (117)

924. வேகம்முடன் வேலிழந் தான்படை வேறெ டாமுன்
மாகம்மறை யும்படி நீண்ட வயங்கு மான்றேர்
பாகன்றலை யைப்பறித் துப்படர் கற்பி னாள்பால்
மோகம்படைத் தானுளை வெய்த முகத்தெ றிந்தான்.

வேல் இழந்தான் - அவ்வாறு தான் ஏவிய சூலப்படையின் பயனை இழந்த இராவணன், வேகம் உடன் படை வேறு எடா முன் - விரைவோடு ஆயுதம் வேறு எடுக்கும் முன்னதாக, (சடாயு) மாகம் மறையும்படி - பெரும் வானம் மறைந்துபோகும்படி, நீண்ட - நீண்டுயர்ந்த, வயங்கு மான் தேர் - தோற்றமுடையதும் குதிரைகள் பூட்டினதுமான இராவணனது தேரில் இருந்த, பாகன் தலையை பறித்து - சாரதியின் தலையைப் பறித்து எடுத்து, படர் கற்பினாள் பால் - படர்ந்த (அதாவது செழித்த) கற்பினையுடைய பிராட்டி யிடம், மோகம் படைத்தான் - காம மயக்கம் கொண்ட இராவணன், உளைவு எய்த - பெரிதும் துன்பம் அடையும்படி, முகத்து எறிந் தான் - (அப்பாகன் தலையை) அவன் முகத்தின் மீது விசி யெறிந் தான்.

மான் தேர் - குதிரைகள் பூட்டப்பெற்ற தேர் (மான் - குதிரை) 'மாதரார் கண்க ளூடே வாவுமான் றேரிற் செல்வான்,' (பால. உலா வியற் : 6.); "மான்றேர்த் தொழிற்கு மடைத்தொழிற்கு மிக்கோன்" (நள. கலிநீங்கு : 25). உளைவு - கன்றுதல்; குடைவுறுதல் போல வருத்துதல். இச் செய்யுளிலும் எதுகையில் ஓசையின்பங் கருதி மகர வொற்றுக்கள் விரிந்துள்ளன.

பி-ம். 1. வேகமுறு வேல், வேக முதல்; வில்லே விழந்தான், வேகம் முடன் வில்விழந்தான்.
2. மறையும்படி நின்று; நீண்டு வயங்கு, நின்று வயங்கு.
3. தலையைப் பற்றி; படர்ந்த கற்பினாள் பால்.
4. படைத்தானவன் வேகமுகத், படைத்தான் றலைவெய்தி.

925. எறிந்தான் றனைநோக்கி யிராவண னெஞ்சி னாற்றல்
அறிந்தான் முனிந்தாண்டதொ ராடகத் தண்டு வாங்கிப்
பொறிந்தாங் கெரியின் சிகைபொங்கி யெழப்பு டைத்தான்
மறிந்தா னெருவைக்கிறை மால்வரை போல மண்மேல்.

எறிந்தான் தனை நோக்கி-சாரதி தலையைத் தன்மீது எறிந்த சடாயுவைப் பார்த்து, இராவணன் - இராவணனும், நெஞ்சின் ஆற்றல் அறிந்தான் - சடாயுவின் மன வலிமையை அறிந்தவனாய், முனிந்து-சினங்கொண்டு, ஆண்டு ஓர் ஆடக தண்டு வாங்கி - ஆங்குத் தன்னிடம் இருந்ததான ஒப்பற்ற பொன்னாலான தண்டாயுதத்தை எடுத்து, பொறிந்து - பொறிகளைப் பொழிந்து கொண்டு, எரியின் சிகை பொங்கி எழ - நெருப்பின் சுடர் மேற்கிளம்பி எழுந்தது போல எழ, புடைத்தான் (அதனால் சடாயுவை) அடித்தான்; (அவ்வளவில்), எருவைக்கு இறை - கழுகுகளுக்கு அரசனான சடாயு, மண்மேல்-தரையின்மீது, மால் வரை போல - பெரிய மலை வீழ்ந்ததேபோல, மறிந்தான் - கீழ் மேலாக மாறி விழுந்தான்.

ஆண்டதோர் ஆடகத்தண்டு - தான் முன் பல போர்களில் கைக் கொண்டு பழகி வெற்றிகொண்ட பொன்னாலான கதாயுதம் என்னலும் ஒன்றும். சடாயுவுக்கு மலை; 178, 891. மறிதல் - திரும்பிமாறுதல், மடங்குதல். புடைத்தான், என்றமையால் சண்டை நெருக்கத்தில் நடந்தது என்பது தெரிகிறது; அத்தண்டைச் சடாயு பறித்தெறிந்தது 928-இல் சொல்லப்பெறும்.

பி-ம். 1. எறிந்தானது நோக்கி, எறிந்தான் றன்னை நோக்கி, எறிந்தானை.
2. முனிந்தானோ ராடகத், முனிந்தாண்ட தொராடகத்.
3. கெரியின் சிறை.

926. மண்மேல் விழுந்தான் விழலோடும் வயங்கு மான்றேர்
கண்மே லொளியுந் தொடராவகை தான்க டாவி
விண்மே லெழுந்தா னெழமெல்லிய லாளும் வெந்தீப்
புண்மே னுழையத் துடிக்கின்றனள் போற்பு ரண்டாள்.

மண் மேல் விழுந்தான் - தரையில் விழுந்த சடாயு, விழல் ஓடும் - அவ்வாறு விழுந்த உடனே, வயங்கு மான் தேர் - பொலிவுற்று விளங்கும் குதிரைகள் பூட்டப்பெற்ற தன் தேரை, கண்மேல் ஒளியும் தொடரா வகை - சடாயுவின் நெடுந்தூரம் பார்க்கும் சக்தியமைந்த கண்களின் ஒளி கூடத் தொடர்ந்து நோக்க முடியாதபடி, தான் கடாவி - (இராவணன்) தானே தேரை விரைந்து செலுத்தி, விண்மேல் எழுந்தான் - ஆகாய மார்க்கமாய்ச் செல்ல மேற்கிளம்பினான்; எழ - அவ்வாறு அவன் தேரோடு மேற்செல்ல, மெல்லியலாளும் - மென்மைத் தன்மையுடைய பிராட்டியும், புண்மேல் - (முன்னே உள்ள) ஒரு புண்ணினுள், வெம் தீ நுழைய - கொடிய நெருப்பு நுழைந்துகொள்ள, துடிக்கின்றவள்போல் - (அப்பொழுது) துடிக்கின்றவளைப்போல, புரண்டாள் - (அதேரில்) விழுந்து புரண்டு துடித்து வருந்தினாள்.

கண்மேல் தொடராவகை: சேய்மையில் நோக்குறுஞ் சிறு கண்ணன் ஆயினும் (181) அவன் கண்ணொளியும் தொடர்ந்து செல்லாதபடி, என்க; அதாவது, அதிவேகத்திலும் அதிக உயரத்திலும் என்றபடி. புண்ணிற் றீபுகுதல்: பால. கையடைப்: 11; அயோத். நகர் நீங்கு: 95; சுந்தர. 341, 342. சடாயுவுக்கும் இராவணனுக்கும் நடந்த இக் கொடிய போரின் பகுதிகளைப் படிப்படியாய் முன்னேற்றிச் செல்லும் கவிஞரின் திறமையையும், அவற்றின் இடையே பிராட்டியின் சோக நிலைகளை அமைத்துக் காட்டும் சிறப்பையும் ஓர்க.

பி - ம். 2. தொடரா விசைதான் கடாவி; தொடர் விஞ்சையின் கடாவி. விசையிற்றான் கடாவி;

3. லெழுந்தானென; லாளும் வெந்த.

4. புண்வேனுழையத் துடிக்கின்ற வர்போற்; துடிக்கின்றனபோற்.

(120)

927. கொழுந்தே யனையாள் குழைந்தேங்கிய கொள்கை கண்டான்
அழுந்தே லவலத்திடை யஞ்சலை யன்ன மென்னு
எழுந்தா னுயிர்த்தானட வெங்கினிப் போவ தென்னு
விழுந்தா னவன்றேர்மிசை விண்ணவர் பண்ணை யார்ப்ப.

கொழுந்தே அனையாள் - இளந்தளிரை போன்ற (மென்மையுடைய) பிராட்டி, குழைந்து - நெகிழ்ந்து, ஏங்கிய - ஏக்கமுற்ற, கொள்கை கண்டான் - நிலைமையைக் கண்ட சடாயு, (தான் மண்ணிற் கிடந்தபடியே, அவளை நோக்கி), 'அன்னம் - அன்னப் பறவை போன்றவளே!, அவலத்து இடை அழுந்தேல் - துன்பத்தில் ஆழ்ந்து வருந்தாதே! அஞ்சலை - பயப்படாதே!' என்னு - என்று ஆறுதல் கூறி, உயிர்த்தான் எழுந்தான் - பெருமூச்சுவிட்டு எழுந்து, 'அட எங்கு இனி போவது என்னு-அடா! எங்கு இனி நீ தப்பிப் போவது?' என்று, விண்ணவர் பண்ணை ஆர்ப்ப-தேவர்களின் கூட்டம் (சந்தோஷத்தால்) ஆரவாரம் செய்ய, அவன் தேர்மிசை விழுந்தான் - அவனுடைய தேர்மீது பாய்ந்து குதித்தான்.

கொள்கை - நிலைமை அல்லது நிகழ்ச்சி; 'புகுந்த கொள்கை யுடனுறைந்தான்' (உயுத்த. முதற்போர்ப் : 132). சீதைக்கு அன்னம் 909; குறிப். விண்ணவர் பண்ணையார்ப்ப ; 918-

பி - ம். 1. குழைந் தோங்கிய.
2. அழுந்தேலவ சத்திடை...யன்னை ; யன்னை யென்னு.
3, போவதென்ன, போவதென்றே.
4. பண்ணை யார்க்க ; விண்ணவர் கண் விடுத்தார், விண்ணவர் கண்டிரைத்தார். (121)

928. பாய்ந்தா னவன்பன் மணித்தண்டு பறித்தெ றிந்தான்
ஏய்ந்தார் கதித்தேர்ப் பரியெட்டினே டெட்டு மெஞ்சித்
தீய்ந்தா சறவீசியத் திண்டிறற் றுண்ட வாளால்
காய்ந்தான் கவர்ந்தானுயிர் காலனுங் கைவி திர்த்தான்.

பாய்ந்தான் - (அவ்வாறு இராவணன் தேர் மீது) பாய்ந்த சடாயு, அவன் - அந்த இராவணனுடைய, பல் மணி தண்டு - பல வகை இரத்தினங்கள் வைத்து இழைக்கப்பெற்ற அத்தண்டாயுதத்தை, பறித்து எறிந்தான் - பிடுங்கி அப்பால் எறிந்து, ஏய்ந்து ஆர் - பொருந்தி விளங்கிய, கதி தேர் - வேகத்தையுடைய (அவன்) தேரில் பூட்டப்பெற்ற, பரி எட்டினேடு எட்டு - குதிரைகள் பதினாறும், எஞ்சி தீய்ந்து ஆசு அற - ஒடுங்கி அழிந்து அடியோடு மாள, வீசி -

வீசி எறிந்து; அ திண் திறல் - அந்த மிக்க வலிமை வாய்ந்த, துண்ட வாளால் - தன் மூக்காகிய வாளினால், காய்ந்தான் - அழித்தான்; உயிர் கவர்ந்தான் - அவற்றின் உயிர்களைப் பற்றிக்கொண்டவனாக, காலனும் - யமனும், கை விதிர்த்தான் - (இராவணனிடங் கொண்டுள்ள அச்சத்தால், அச்செயலில்) கைந்நடுக்க மடைந்தான்.

தண்டு: முன் 925 குறிப்பிட்ட ஆடகத்தண்டு ஆம். ஆசு - கவசமும் ஆம். (திவா). துண்டவாள்: 913-இல், 'துண்டப்படை' என்றமையும், 915 இல் நேமிப்படை யென்றதும், 182-இல் யானையின் தோட்டி போற்றேய்ந் தொளிர் துண்டத்தான் என்றமையும் நோக்கி, சடாயுவின் மூக்கு, வாள்போலும், யானைத் தோட்டிபோலும் கூர்மையும் உறுதியும் வளைவும் அடைந்தது எனக் கொள்ளற்பாலது. 'எஞ்சித் தீய்ந்தாசற வீசிய - சுருங்கிக் கருகிக் கவசமற அக் குதிரைகளை வீசிய; துண்ட வாள் - மூக்காகிய வாள்' என்பன பழையவுரை. இராவணன் தேரிற் கட்டிய குதிரை பதினாறு என்பது இங்குக் கூறப் பெற்றது. இதுவும் அடுத்த செய்யுளும் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. பணித்தண்டு; கைப்படுதண்டு; பறித்திறுத்தான்.
2. டெட்டு மஞ்சித்.
3. தேய்ந் தோடிட வீசியத்திண்டிறல்.
4. காய்ந்தே கவர்ந்தா; விண்ணவர் கண்விடுத்தார். (122)

929. திண்டே ரழித்தாங்கவன் றிண்புறஞ் சேர்ந்த தூணி
விண்டான் மறைப்பச் செறிகின்றன வில்லி லாமை
மண்டா ரமர்தான் வழங்காமையில் வச்சை மாக்கள்
பண்டார மொக்கின்றன வள்ளுகி ராற்ப றித்தான்.

திண் தேர் அழித்து - சடாயு இராவணனுடைய தேரைச் சிதைத்தழித்து, விண் தான் மறைப்ப செறிகின்றன-வான் மறையும்படி அடர்ந்தனவான, வில் ஆங்கு இலாமை - இராவணனிடத்தில் போரிட வேறு வில் அப்பொழுது இல்லாமையாலும், மண்டு ஆர் அமர் வழங்காமையின் - கடுமையாகப் பொருந்திய போருக்கு அவை (அம்புகள்) உதவா நிலைமையில், வச்சை மாக்கள் பண்டாரம் ஒக்கின்றன - உலோபிகளுடைய கருவூலத்தை ஒப்பனவையுமான, அவன் திண் புறம் சேர்ந்த - அவ்விராவணனது வலிய முதுகினிடம் சேர்த்துக் கட்டப்பெற்றிருந்த, தூணி - அம்புப் புட்டில்களை, வள் உகிரால் - தனது கூரிய நகங்களால், பறித்தான் - பிடுங்கி யெறிந்தான்,

அழித்தாங்கு - அழித்து ; ஆங்கு, அசை எனவும் கொள்ள லாம் ; 'ஊடலி னுண்டாங்கோர் துன்பம்' (குறள். 1307) என்றது போல. இனி அழித்தாங்கு - அழித்தவிடத்து என்றும் பொருள் கொள்ளலும் ஒன்றும். பொருளைப் பெற்றிருந்தும் உலோபிகளு டைய அப்பொருள், தனக்கும் பயன்படாது, பிறர்க்கும் கொடுப்பதும் இன்றி வீணே பாழ்படுவதுபோல, இராவணனுடைய அம்புப்புட்டில் கள் அவனிடம் வில் இல்லாமையால் பயனற்றன ஆயின. பண்டாரம் ஒக்கின்றன எனப் பன்மையிற் கூறியதால், பல அம்புப் புட்டில்களை அவன் அணிந்திருந்தான் என்பது பெறப்படும். இராவணன் வில் முன்பே அழிந்தமை ; 918-20. வச்சைமாக்கள் : 678; பால. உண்டாட் டுப் : 17, பூக்கொய் : 19 ; கிட்கிந்தா. கார்காலப் : 121.

பி-ம். 1. திண்டேரிழிந்தாங்கவன் ; திண்புயஞ் சேர்த்த தூணி.

2. செறிகின்றது, செறிக்கின்றன, யெறிகின்றன, வில்விலாமல்.

3. அண்டா தமராங்கவன் செய்கிலனச்ச மாக்கள் ; மண்டான மர்தான் ; பண்டா, மற்றுன், வண்டார் மனத்தான் ; மழத் தான் ; வஞ்சமாக்கள்.

4. வண்டார வள்ளுகிர் ; பல்லுகிராற்பறித் தெறிந்தான். (123)

930. மாச்சிச் சிரல்பாய்ந்தென மார்பினுந் தோள்கண் மேலும்
ஓச்சிச் சிறகாற் புடைத்தானுலை யாவி ழுந்து
மூச்சித் தவிரா வணனும்முடி சாய்த்தி ருந்தான்
போச்சித் தனைபோலு நின்னாற்ற லெனப்பு கன்றான்.

மா சிச்சிரல் பாய்ந்தென - (சடாயு), பெரிய மீன் கொத்திப்பறவை குறி பார்த்து மீனைப் பற்றப் பாய்ந்து வீழ்ந்தாற்போலப் பாய்ந்து, மார்பினும் தோள்கள் மேலும் - இராவணனுடைய மார்பின்மீதும் தோள்களின்மீதும், (பாய்ந்து) ஓச்சி - ஓங்கி, சிறகால் புடைத்தான் - தன் சிறகுகளால் அடித்தான்; (அதனால்), உலையா விழுந்து - வலி தளர்ந்து, மூச்சித்த இராவணனும் - மூச்சடங்கிய இராவணனும், முடி சாய்த்து இருந்தான் - தலை சாய்த்துச் செயலற்றிருந்தான் ; (அது கண்ட சடாயுவும்), 'போச்சு - போய்விட்டது, இத்தனை போலும் நின் ஆற்றல் - உன் வலிமை இவ்வளவுதானா ?' என புகன் றான் - என்று இழித்துக் கூறினான்.

சிச்சிரல் - மீன் கொத்திப்பறவை; சுந்தர. 448. இது சிச்சிரம், சிச்சிலி, சிரல் எனவும் பெயர்பெறும்; களவழி. 5. சிறுபாண். 181. சீவக. 2499; உரை. மூச்சித்தல் : திரிபு. போச்சு ; போயிற்று என்பதன் போலி.

பி - ம். 1. மாச்சிச்சிரம் பாய்ந்தயன், மாச்சிச்சிரல், மாச்சித்திரம் போலப், மாச்சித்திரம் பெறப் ; தோளின் மேனும், தோள்கள் மீதும்,

2. ஒச்சிச் சிறையாற் ; கடித்தானுலேந்து ; புடைத்தானடித்தானுலேயா, புடைத்தான் படிதந்தானுலேயா ; கடித்துலேந்து.

3. முடிசாய்ந்திருந்தான்.

4. தலைபோனும் ; நினதாற்றலெனப். (*124*)

இராவணன் சடாயுமீது தன் வாளை எறிய, சடாயு விழுந்தது 931—2.

931. அவ்வே லையினே முனிந்தான்முனிந் தாற்ற லன்னவ்
வெவ்வே லரக்கன் விடலாம்படை வேறு காணுன்
இவ்வே லையினே யிவனின்னுயி ருண்பெ னென்னுச்
செவ்வே பிழையா நெடுவாளுறை தீர்த்தெ றிந்தான்

அ வேலையின் ஏ - அப்பொழுதே, முனிந்தான் - இராவணன் கோபமுற்றவனுனன் ; முனிந்து - அவ்வாறு கோபமுற்று, ஆற்றலன் - வலிமை கொண்டவனுன, அ வெம் வேல் அரக்கன் - அந்த கொடிய வேலேந்திய இராக்கதனுன இராவணன், விடல் ஆம் படை வேறு காணுன் - (சடாயுவின் மீது) ஏவி விடக்கூடிய ஆயுதம் வேறு காணுதவனுய், (பிறகு), 'இ வேலையின் ஏ இப்பொழுதே, இவன் இன் உயிர் உண்பென் என்று - இந்தச் சடாயுவின் இனிய உயிரை அழிப்பேன்' என்று, பிழையா - கொண்ட குறி தவருத, நெடு வாள் உறை தீர்த்து - தன் நீண்ட வாளை உறையிலிருந்து வெளியே எடுத்து, செவ்வே எறிந்தான் - செம்மையாகச் சடாயுவின்மேல் வீசி யெறிந்தான்.

ஆற்றலன் + அவ் என்பது, செய்யுள் சந்த வின்பம் நோக்கி னகரவொற்று விரிந்து நின்றது ; இது செய்யுள் விகாரம். நெடு வாள் - அவன் சிவபெருமானிடமிருந்து பெற்ற சந்திரஹாஸம் என்னும் வாள்; அது, 'எவ்வகைப்படையும் வெல்லும் சந்திரவாள்' (உத்தர. திக்குவிசயப் : 75) என்ற பெருமை வாய்ந்ததென்க.

அடுத்த 932 இல், இது 'தெய்வவாள்' என்று குறிப்பிட்டுள்ளமையும்நோக்குக. செவ்வே - திறமையுடன் என்றலும் ஏற்கும்.

பி-ம். 1. வேலையின்வாய் முனிந்த ரற்றலி னாற்றல் பெற்ற; முனிந் தாற்றலன்ன; லாற்றலென்ன.

2. யினிவேறு காணன்.

3. இவ்வேலையின் வாயிவன் றன்னாயி ருண்ப னென்னா, இவ் வேயினே யிவனின்னுயிர்; ருண்பலென்னாச், லென்னச்.

4. தெய்வோருடல்கீறிய வாளுறை தீர்த்தெறிந்தான்; பிழையாத தொர் வாள்; தீர்ந்தெறிந்தான். (125)

932. வலியின் றலைதோற்றிலன் மாற்றருந் தெய்வ வாளால்
நலியுந் தலையென்றது வன்றியும் வாழ்க்கை நாளும்
மெலியுங் கடைசென்றுள தாகலின் விண்ணின் வேந்தன்
குலிசம் மெறியச்சிறை யற்றதொர் குன்றின் வீழ்ந்தான்.

வலியின் தலை - இராவணனுடைய வலிமையின் இடத்து, தோற்றிலன் - சடாயு தோற்று அழிந்தான் அல்லன்; (ஆனால்), மாற்று அரும் - (யாவராலும்) தடுக்கமுடியாத, தெய்வ வாளால் - (சிவபெருமானிடம் பெற்ற) தெய்வத் தன்மை பொருந்திய வாளினால், நலியும் தலை என்றது - அழியும் இடமாம் என்றதாலும், அன்றியும் - அல்லாமலும், வாழ்க்கை நாளும் - அவனுடைய வாழ் நாளும், மெலியும் கடை சென்று உளது ஆகலின் - குறைவுறும் கடைசி நிலையை அடைந்துள்ளது ஆதலானும், விண்ணின் வேந்தன் - வானுக்கு அரசனான இந்திரன், குலிசம் எறிய - அவனது வச்சிரப் படையை வீசித் தாக்க, சிறை அற்றது ஓர் குன்றின் - சிறகுகள் அற்று வீழ்ந்த ஒரு குன்றைப் போல, வீழ்ந்தான் - சடாயு தன் சிறகு அறுபட்டுக் கீழே விழுந்தான்.

முன் மலைகளுக்குச் சிறகுகள் இருந்தன என்பதும், அதனால் அவை பல இடங்களுக்கும் பறந்து சென்று ஆங்காங்கு உள்ளவர்க்குப் பல சேதங்களை விளைத்து வந்தன என்பதும், இந்திரன் தன் வச்சிரப்படையால் அம்மலைகளின் சிறகுகளையெல்லாம் அறுத்துக் கீழே வீழ்த்தினான் என்பதும், அதனால் அம்மலைகள் இடம் விட்டுப் பெயராமற்றங்கலாயின என்பதும் புராண வரலாறு; சுந்தர. 1025. இராவணன் வாளால் சிறை அறுப்புண்டு வீழ்ந்த சடாயுவுக்கு, இந்திரனால் சிறையறுப்புண்டு வீழ்ந்த மலை உவமை; இதனால், சடாயுவின வலிமையும் பெருமையும் விளங்குவன காணலாம்.

இராவணன் சடாயுவைச் சிறகறுத்தான் என்று வான்மீகமும், அத்யாத்மமும் கூறும். சடாயுவுக்கு உயிர் அவர் சிறகுகளில் அமைந்திருந்தது என்பர். குலிசம் - இந்திரனுடைய வச்சிராயுதம்; 350, 396, 1002. ‘தெய்வவாளால் நலியுந்தலை யென்றதும்’ என்பதால், சடாயுவுக்கு, முன்னமே, இவ்வாறு இராவணன் வாளால் இறப்பன் என்ற விதியோ, சாபமோ உண்டு என்பது ஊகிக்க இடந்தருகின்றது. ‘ஊழ்வினையால் விழுஞ்சடாயு’ என்று இராமசெயத் திருப்புகழ் கூறுவதுங் காண்க; இஃது ஆராயத்தக்கது. குலிசம் மெறிய, மகரவொற்று சந்தவோசைநோக்கி மிகுந்தது; விரித்தல் விகாரம்.

பி-ம். 1. பலியின்றலை; தோற்றலன்; தெய்வவையேல்; மீசன்யாளால்.
2. யென்றஃதன்றியு, நலியின்றலை யென்றது யென்றது வாழ்க்கை நாளும்; வாழ்க்கைகளும்; தலையென் செயவல்லன், தலை வென்றது வென்றியும்.
3. சென்றுளதாதலின்.
4. குலியம்மெறிய; குன்றில் வீழ்ந்தான். (126)

அதுகண்ட தேவர் முனிவர் முதலியவர் துயரமும், பிராட்டியின் நடுக்கமும் 933-4

933. விரிந்தார் சிறைகீழுற வீழ்ந்தனன் மண்ணின் விண்ணோர்
இரிந்தா ரிழந்தா டுணையென்ன முனிக்க ணங்கள்
பரிந்தார் படர்விண்டுவி னாட்டவர் பைம்பொன் மாரி
சொரிந்தா ரதுநோக்கிய சீதை துளக்க முற்றாள்.

விரிந்து ஆர் சிறை - விரிந்து நிரம்பிய சிறகுகள், கீழ் உற - கீழே விழ, மண்ணின் வீழ்ந்தனன் - (சடாயு) தரைமீது வீழ்ந்தான்; விண்ணோர் இரிந்தார் - (அது கண்ட) தேவர்கள் நிலை கெட்டு அஞ்சி ஓடினர்; முனி கணங்கள் - முனிவர் கூட்டங்கள், துணை இழந்தாள் என்ன - பிராட்டி தனக்கு உதவியாக வந்த சடாயுவையும் இழந்தாள் என்று, படர் பரிந்தார் - துன்பத்தால் இரங்கி வருந்தினர்; விண்டு வின் நாட்டவர் - விஷ்ணுவின் நாடாகிய ஸ்ரீவைகுந்தத்தில் உள்ள நித்திய சூரிகள், பைம பொன் மாரி சொரிந்தார் - பசிய பொன்னின் மழையைச் சடாயுவின்மீது பொழிந்து அவனை வாழ்த்தினர்; அது நோக்கிய சீதை - அதைக் கண்ட பிராட்டி, துளக்கம் உற்றாள் - நடுக்கம் அடைந்தாள்.

விண்ணோர் இரிந்தார்; இரிந்தது, இனித் தமக்கு என்ன கேடு இராவணனால் விளையுமோ என்று அஞ்சியும், சடாயுவின் அழிவும், பிராட்டியின் துணையற்ற நிலையும் கண்டு ஆற்றாராய்

நிலை கலங்கியும் என்க. விஷ்ணுபக்தர்களை, நித்யசூரிகளான விஷ்ணுலோக வாஸிகள் போற்றிப் புகழ்ந்து பொன் பூமாரி சொரிந்து வாழ்த்தி, அப்பரமபதத்திற்கு அழைத்துச் செல்வர் என்பது வைஷ்ணவ சித்தாந்தம். ஆதலின், அதற்கு அனுகுணமாக, அன்னோர் சடாயுவின்மீது பொன் மாரி பொழிந்து வாழ்த்தினர் என்பதாம். இதுவும் அடுத்த செய்யுளும் சந்தேகம் என்பது ஸ்ரீஐயரவர்கள் குறிப்பு.

897 முதல் இச்செய்யுள்வரை சடாயு இராவணனை எதிர்த்துப் போர்புரிந்து இறந்த வரலாறு கூறப்பெற்றது; அதற்கு முகவுரையாக, 891 முதல் பாடல்கள் அமைந்துள்ளமையும் காண்க. இதுவே, இராமயணத்தில் இராவணன் முதன்முறையாகச் செய்யும் போர் என்பதையும், இதுவே, அவன் படையின்றித் தனியனாய் நின்று (சடாயு என்ற) ஒரு மாபெரும் வீரனோடு புரிந்த போர் என்பதையும் மனங்கொள்க ; அன்றியும், 'சரணெனக்கியார் கொலென்று சானகி யழுதுசாம்ப, அரணுனக்காவென் வஞ்சி யஞ்சலென்றருளினெய்தி, முரணுடைக்கொடியோன கொல்ல மொய்யமர் முடித்துத் தெய்வ, மரண மென்றுதை பெற்ற தென்வயின் வழக்கன் றுமோ' என்று (உயுத்த. வீடணனடைக் : 110) இராமபிரான் வருந்திப் புகழுமாறு, 'புகழுக்குத் தன் உயிரை விற்ற' சடாயுவின் பெருமையும், நட்பு நம்பினோர்க்காக உயிரைவிடத் துணியும் வீரம் ஆகிய அவன் பண்புகளும் அளவிடற்கரியன என்பதை நாம் ஒருவாறு உணரவும், கம்பநாட்டாழ்வார் இப்படலத்தை மிகத்திறம்பட யாத்துள்ளமை அறிந்து போற்றற்குரியது.

பி-ம். 1. வீழுற வீழ்ந்தனன். 2. ரிழந்தான்றுணை.
3. பிரிந்தார்கடன். 4. துணுக்க முற்றாள். (127)

934. வெள்கும் மரக்கன் னெடுவிண்புக வார்த்து மிக்கான்
தொள்கின் றலையெய்திய மானெனச்சோர்ந்து நைவாள்
உள்கும் முயிர்க்கு முயங்கும்மொரு சார்வு காணாள்
கொள்கொம் பொடியக் கொடிவீழ்ந்தது போற்கு லைந்தாள்.

வெள்கும் அரக்கன் - (சடாயுவின் ஆற்றலுக்கு அஞ்சி) வெட்க முற்ற அரக்கனான இராவணன், (சடாயு கீழே வீழ்ந்தது கண்டு), நெடு விண் புக ஆர்த்து - வானில் ஒலி புகும்படி ஆரவாரம் செய்து, மிக்கான் - (தன் வெட்க நிலையின் நீங்கி) மேம்பட்டவனானான் ; தொள்

இன் தலை எய்திய - வலையிடத்து அகப்பட்டுக் கொண்ட, மான் என - ஒரு மானைப் போல, சோர்ந்து நைவாள் - தளர்ந்து வருந்துபவளான பிராட்டி, உள்கும் - 'இனி என் செய்வேன்!' என்று நினைத்தாள்; உயிர்க்கும் - (சோகத்தால்) பெருமூச்சு விட்டாள்; உயங்கும் மயங்கிச் சோர்வாளானாள்; ஒரு சார்பு காணாள் - (அவள் தனக்கு), ஓர் ஆதரவுங் காணாதவளாய், கொள் கொம்பு ஒடிய - ஆதரவாய்க் கொண்ட கொம்பு ஒடிந்துபோக, கொடி வீழ்ந்தது போல் - அதனைப் பற்றிப் படர்ந்திருந்த கொடி கீழே விழுந்தது போல, குலைந்தாள் - நிலைகெட்டு வருந்தினாள்.

வெள்குதல் - வெட்கமுறுதல்; 'வெள்கிட மகுடஞ் சாய்க்கும்' (கிட்கிந்தா. வாலிவதைப். 73). தொள்கு - விலங்கு படுகுழி; வலையும் ஆம். 'யானை தொள்கிடங் கிடந்தென்ன' (கிட்கிந்தா. வாலிவதைப்: 73); 'தொள்கின் தலை - யானை யிருஞ்சிப் புள்ளினிடத்தில்' என்பது பழையவுரை. இவ்வுரையின்படி, தொள்கின் தலை எய்திய மான் என்பது, யானையிருஞ்சிப் புள் என்ற ஒரு பறவையினிடம் அகப்பட்டுக் கொண்ட மான் என்று பொருளாகிறது; இப்பறவை, யானையங்குருகு, ஆனைச் சாத்தன் என்றும் பெயர் பெறும்; (மதுரைக்: 674; அகநா: 145; குறுந்: 34: 4; திருப்பாவை. 7.); இது யானையை வருத்தும் இயல்புடையதென்றும் கருதலாம். இஃது ஆராயத்தக்கது. கொள் கொம்பு; கொழுகொம்பு எனவும் வழங்கும்; "கொள்கொம்பாய்ப் படர்தரு மின்னோய்" (பெருங். 4-13: 81.). வெள்கும் மரககன், உள்கும் முயர்க்கும், முயங்கும் மொரு; இவை சந்த வின்பங்கருதி, மகர ஒற்று மிகுந்து நின்றன; இவை விரித்தல் விகாரங்கள். இவ்வாறு முன் சில பாடல்களில் மகரவொற்றுக்கள் விரிந்து நின்றமை நோக்குக. இராவணனால் அபகரிக்கப்பட்ட பிராட்டிக்கு, வலையிற்பட்ட மானும், சடாயு வீழக்கண்ட அவளுக்கு, கொள் கொம்பு ஒடியப்பெற்ற கொடியும் உவமைகள்.

பி - ம். 1. வெள்கிலரக்கன்......வார்த்து நின்றான்.

2. றலையெய்தி மானெனச், தலையேந்திய.

3. முயிர்க்கும் மயங்கும்.

4. கொம்புடைய; வீழ்ந்தன போற்; குறைந்தாள். (128)

### வேறு.

### பிராட்டியின் புலம்பல் 935-40.

935, வன்றுணை யுளனென வந்த மன்னனும்
பொன்றின னெனக்கினி புகலென் னென்கின்ருள்
இன்றுணைப் பிரிந்திருந் தின்ன லெய்திய
அன்றிலம் பெடையென வரற்றி ளுளரோ.

இன் துணை பிரிந்து இருந்து-தன் இனிய துணையாகிய சேவலை விட்டுப் பிரிந்து தனியே இருந்து, இன்னல் எய்திய - துன்பமுற்ற, அன்றில் அம்பெடை என - அழகிய பெட்டை அன்றிற் பறவை போல, அரற்றினுள் - வாய்விட்டுப் புலம்பியழுதவளான பிராட்டி (சடாயு விழுந்ததைக் கண்டு), 'வல் துணை உளன் என - வலிய துணையாக வந்துள்ளான் என்று நான் தைரியம் கொள்ளும்படி, வந்த மன்னனும் - எனக்கு உதவ வந்த கழுகு அரசனுன சடாயுவும், பொன்றினன் - அழிந்தனன்; எனக்கு இனி புகல் என் - எனக்கு இனி, துணை அடையக்கூடிய இடம் வேறு எது?' என்கிருள் - என்று சொல்லி வருந்துவாளாயினுள். அரோ: அசை.

புகல்: புகுமிடம்; பற்றுக்கோடு; தஞ்சமாக அடையுமிடம். அன்றில்: ஒரு வகைப் பறவை; 295; பால. மிதிலைக்: 78; இவை சேவலும் பெட்டையும் ஒன்றையொன்று விட்டுப் பிரியா; அவ்வாறு பிரிய நேரின் மிகவும் வருந்தும் இயல்பின; இவை பனைமேல் உறையும்; இவற்றின் தலை செந்நிறமானவை; இதனைவட நூலார் கிரௌஞ்ச பக்ஷி என்பர். பால. கடிமணப்: 5; குறள். 160, 177. ஆதலின், பிரிந்து வருந்தும் தலைவன தலைவியர்க்கு, இப்பறவைகளை உவமைப் படுத்திக் கூறுவது தமிழ் இலக்கியங்களின் பெருவழக்கு ஆகும். இங்கு இராமபிரானைவிட்டுப் பிரிந்த பிராட்டிக்கு அன்றிற்பெடை உவமையாயிற்று; அயோத். நகர் நீங்கு: 205. சடாயுவை, மன்னன் என்றது (936); தசரத சக்கரவர்த்தி போன்று இராமபிரானல் பாராட்டப் பெற்ற பெருமை நோக்கியதும் ஆம். இதன் பின் ஒரு சுவடியில், 'நாணிலேனுரை' என்று தொடங்கும், 938-ஆம் செய்யுள் உள்ளது.

பி-ம். 1. வந்த மன்னனும். 2. புகல்மற் றேதென; 3. தன்றுணைப் பிரிந்திருந்தமை யெய்தி; பிரிந்தின்னலெய்திய, பிரிந்திரிந்த. 4. வரற்றலானுள்.

936. பின்னவ னுரையினை மறுத்துப் பேதையேன்
அன்னவன் றனைக்கடி தகற்றி னேன்பொரு
மன்னவன் சிறையற மயங்கி னேன்விதி
இன்னமு மெவ்வினை யியற்று மோவெனு,

'பேதையேன் - அறிவற்றவளான நான், பின்னவன் உரையினை மறுத்து - இராமபிரானது தம்பியாகிய இலக்குவன் சொன்ன உறுதி மொழிகளைத் தடுத்து, அன்னவன் தனை கடிது அகற்றினேன் - அவ்விலக்குவனை விரைவில் என்னை விட்டு நீங்கிப் போமாறு செய்தேன்; (இப்பொழுது), பொரு மன்னவன் சிறை அற - என்னைக் காப்பாற்ற வந்து போரிட்ட மன்னவனான சடாயு தன் சிறகுகள் அற்று வீழ, மயங்கினேன் - இனி என் செய்வேன் என்று அறியாது திகைப்புற்றேன் ஆனேன்; விதி - என் ஊழ்வினை விதித்த செயலாது, இன்னமும் - இனிமேலும், எ வினை இயற்றுமோ - என்ன கொடுஞ் செயலைச் செய்யுமோ?' எனு - என்றுவருந்தி,

இச்செய்யுள் அடுத்த செய்யுளோடு குளகமாய் இயைந்து அதிலுள்ள 'ஏங்கினாள்' என்னும் வினைகொண்டு முடியும். இது, கடந்தவை நினைந்து வருந்துதல் என்னுங் கழிவிரக்கம் என்னும் பச்சாத்தாபத்திற்கு ஓர் உதாரணமாகும்; விதியின் வலியைப் பிராட்டி குறித்து ஏங்கினாள் என்க. சில பிரதிகளில் இப்பாடல் இல்லை.

(130)

பி - ம். 1. மறுத்த பேதையேன்.

937. அல்லலுற் றேனைவந் தஞ்ச லென்றவிந்
நல்லவன் றோற்பதே நரகன் வெல்வதே
வெல்வதும் பாவமோ வேதம் பொய்க்குமோ
இல்லையோ வறமென விரங்கி யேங்கினாள்.

'அல்லல் உற்றேனை - துன்பத்திற்கு உள்ளாகிய என்னை, வந்து அஞ்சல் என்ற - அணுகி, நீ அஞ்சாதே என்று ஆறுதல் கூறிய, இ நல்லவன் தோற்பதே - இந்த நற்குண நற்செய்கையனான சடாயு, தோற்றுப் போவதோ? நரகன் வெல்வதே - நரகத்திற்கு உரிய பாவியாகிய இந்த இராவணன் வெற்றி பெறுவதோ? வேதம் வெல்வதும் பாவமோ - வெற்றிபெறுவதும் பாவந்தானோ? வேதம் பொய்க்குமோ - 'அறம் வெல்லும் பாவந்தோற்கும்' என்ற வேதமும் பொய்யாகப் போய்விடுமோ? அறம் இல்லையோ - தருமம் என்பதும் இல்லையோ?' என - என்று பலவாறு கூறி, இரங்கி ஏங்கினாள் - வருந்தி ஏக்கமுற்றாள்.

தோற்பதே, வெல்வதே என்பனவற்றின் ஈற்றில் உள்ள ஏகாரங்கள் வினாப்பொருளை ஏற்று வந்தன. வேதம் பொய்க்குமோ: வேதம் பொய்க்காது; என்பது: 'வேதம் தப்பினபோது மன்னுன்றனுவுமிழ் சரங்கடப்பா' என்ற (உயுத்த. கும்பகருணன் வதைப்: 26.) இராவணன் வாக்கால் உறுதிப்படுவது காண்க. அறம் இல்லையோ - தருமம் என்பது எங்கள் பால் இல்லையோ என்றும் பொருள் கொள்ளலாம். நரகன் - நரகிற் கேதுவான தீவினையுடையவன்; 'நரகனுயிர்க்கு நல்லுயிர்கொண்டு, பரகதியிழக்கும் பண்பீங்கில்லை' '(சிலப். அடைக்கலக் : 84-5); 'நரகரைப்புடைத்துணும் பூதமும்' (மணி. விழா வயர்காதை: 24-5.) ஒரு பிரதியில் இப்பாடல் இல்லை.

பி-ம். 2. தோற்பதோ; வெல்வதோ, ருேற்பதென் நவையன் வெல்வதென்.
3. வெல்வது பாவமோ. 4. இல்லையே யறமென. *(131)*

938. நாணிலே னுரைகொடு நடந்த நம்பிமீர்
நீணிலை யறநெறி நின்று ளோர்க்கெலாம்
ஆணியை யுந்தையர்க் கமைந்த வன்பனைக்
காணிய வம்மெனக் கலங்கி விம்மினாள்.

'நாண் இலேன் உரை கொடு - வெட்கம் இல்லாதவளான என் சொல்லைக் கேட்டுக்கொண்டு, நடந்த நம்பிமீர் - சென்ற ஆடவரிற் சிறந்தவர்களே! நீள்நிலை - நெடுங்காலமாக நிலைத்துள்ளதான, அறம் நெறி - தரும மார்க்கத்தில், நின்று உளோர்க்கு எலாம் - நிற்கின்ற மேலோர்க்கெல்லாம், ஆணியை - உரையாணி போன்றவனும், உந்தையர்க்கு - உங்கள் தந்தையான சக்கரவர்த்திக்கு, அமைந்த நண்பனை - பொருந்திய நண்பனுமான சடாயுவை, காணிய - காணும் பொருட்டு, வம் என - வருவீராக' என்று சொல்லி, கலங்கி விம்மினாள் - (பிராட்டி) கலக்கமுற்று அழுதாள்.

நாணிலேன் என்றது, மகளிர்க்குரிய நாற்குணச் சிறப்புக்களுள் ஒன்றான நாணம் என்பதின்றி, தன் கணவனான இராமபிரானைத் தன் விளையாட்டு இன்பமே பெரிதாகக் கருதி, வந்த மானைப் பிடித்துத்தர வேண்டுமென்று வற்புறுத்தி அனுப்பியதோடு, உத்தம குணவானான இளையபெருமானைத் தகாத கொடுமொழி கூறித் தன்னைவிட்டேகுமாறு செய்தமை கருதி தன்னைத்தானே நொந்து கூறியது என்க. ஆணி: அச்சாணி என்னலும் ஒன்றும். சடாயு, இங்கு அறநெறி நின்றுளோர்க்கெலாம் ஆணி, என்னப் பட்டவன். சடாயு தயரதனுக்கு நண்பன் என்பது; 191, 198,

*199*, *201*, *939*, காணிய - காணும்பொருட்டு, *262*. வம் - வருவீராக; 'புண்ணியரே வம்மினென்று, (*993*); 'வம்மெனக்கூஉய்' (மணி *19*; *98*); 'வம்மெனக் கொம்மெனக் கூவிடப் பெற்ருய்' (மீனுட்சி பிள்ளைத்; அம்புலிப்).

இதன்பின் சில பிரதிகளில், 'கற்பழியாழியாமை' என்று தொடங்கும், *940*-ஆம் செய்யுள் உள்ளது.

பி - ம். 1. நம்பிபோய், நம்பியீர்.

2. கின்றுளார்கெலாம், நின்றுளார்க்குரை.

3. ஆணியின் முதல்வனு யமைந்தயன்பனே. கமையவன்பனே.

4. காணிலேயோவெனக் கலங்கி விம்மினுள். (*132*)

939. எல்லியல் விசும்பிடை யிருந்த நேமியாய்
சொல்லிய வறநெறி தொடர்ந்த தோழமை
நல்லிய லருங்கடன் கழித்த நம்பியைப்
புல்லுதி யோவெனப் பொருமி யேங்கினுள்.

எல் இயல் - ஒளி தன்னிடம் கூடியதாகக்கொண்ட, விசும்பு இடை - வானுலகினிடத்து, இருந்த நேமியாய் - தங்கியிருப்பவரான சக்கரவர்த்தியே! சொல் இயல் - கீர்த்தி அல்லது புகழ் பொருந்திய, அறநெறி தொடர்ந்த - தர்மத்தின் வழிச்சென்ற, தோழமை - நட்புக்கு உரியதான, நல் இயல் அரும் கடன் - நல்ல சாஸ்திரங்கள் கூறும் அரிய கடமையை, கழித்த - செய்துமுடித்த, நம்பியை - உத்தமனுன சடாயுவாகிய உம் நண்பனே, புல்லுதியோ என - இப்பொழுது அங்குக்கண்டு தழுவி மகிழ்வீரோ' என்று, பொருமி ஏங்கினுள் - (பிராட்டி) விம்மலுற்று அழுதாள்.

'எல் இயல் - ஒளி கூடியதான; 'இயல்வது கரவேல்' (ஆத்திசூடி) என்பதும் நோக்குக. சொல் இயல் - சொல்லப்பட்ட சாஸ்திரம் அல்லது நூல்; இயல், இசை, நாடகம் என்றமையும் காண்க. நல்இயல் - சிறந்த தன்மை என்னலும் ஏற்கும்; ஆகவே, இயல் என்ற சொல் இங்குப் பலபொருள் குறித்த திரிசொல்லாக வந்தமை காண்க.

தசரதசக்கரவர்த்தி, பரமபதமாகிய வைகுண்ட வாழ்வை எய்த வேண்டியவர், தேவர்களின் விருப்பப்படி இராவணவதம் முடியும் வரையில் சுவர்க்கலோகத்திலேயே இருந்தார் என்பதும், இராவண வதத்திற்குப்பின் பிராட்டி அக்கினிப்பிரவேசம் செய்து எழுந்த நிலே

யில், தேவர்கள் அச்சக்கரவாத்தியை இராமபிரான் முன்னிலையில் அழைத்துவர, அவர் இராமபிரானைக் கண்டு மகிழ்ந்து, பிராட்டிக்கும் ஆறுதல் கூறிப் பின்னர் பரமபதமெய்தினர் என்பதும், உயுத்த மீட்சிப்படலத்தால் அறியப்பெறும். அருங்கடன் கழித்த நம்பி; அருங்கடன் கழித்தது: நண்பன் புதல்வன் தன் புதல்வனென்ற கோட்பாட்டுக் கடமையும், 'காட்டில் வைகுதிர் காக்குவென் யான்' என்று கூறிய மொழி பழுதுருமல் தன் உயிரையும் கொடுத்துக் காத்தமையும் ஆம். 'அருங்கடன் கழித்த நம்பியை - பெருமாளுக்கு உதவிய சடாயுவை' என்பது பழையவுரை, இதனாலன்றோ, வானர ராஜனை சுக்கிரீவனும், காட்டிலே, கழுகின் வேந்தன் செய்தனகாட்டமாட்டேன்' (உயுத்த. மகுடபங்கப்: 34) என்று இராமபிரானிடம் தன் குறை நயந்து கூறுமிடத்துச் சடாயுவின் அருஞ்செயலைப் பாராட்டினன் என்க. புல்லுதியோ: சடாயு வீரசுவர்க்கமடைபவராதலின், சுவர்க்கத்தில் உள்ள சக்கரவர்த்தியைக் கண்டு தழுவலாம் என்று பிராட்டி துணிவுகொண்டு கூறினள். இதனல், சடாயு, பரமபதம் எய்துவது அறியாத நிலையிற் பிராட்டி கூறியது என்னலாம்.

பி - ம். 1. ஒல்லையில் விசும்பிடை, எல்லையில் விசும்பிடை, எல்லையின் விசும்பிடை, எல்லியின் விசும்பிடையிருந்த நேமியான்.
2. சொல்லியலாநெறி, சொல்லியலாய் நெறி; தொடுக்குந் தோழமை.
3. நல்லியல்பமைந்துறக்கண்டு நாயகற்; கழிந்த நம்பியை.
4. பொருமிப் பொங்கினள். (133)

940. கற்பழி யாமையென் கடமை யாயினும்
பொற்பழி யாவலம் பொருந்தும் போர்வலான்
விற்பழி யுண்டது வினையினேன் வந்த
இற்பழி யுண்டதென் றிரங்கி யேங்கினள்.

கற்பு அழியாமை - என் பதிவிருதாதரும நிலை அழியாது இருத்தல், என் கடமை ஆயினும் - (காத்துக்கொள்ளவேண்டுவது) எனக்குள்ள கடமை; (அதனை நான் என்றும் காத்துக்கொள்வேன்; ஆனாலும், பொற்பு அழியா வலம் பொருந்தும் - மேன்மை நிலை கெடாத வல்லமை பொருந்திய, போர்வலான் - போரில் வல்ல வீரனன இராமபிரான், வில் பழி உண்டது - ஏந்திய கோதண்டம் என்னும் வில் நிந்தனையை அடைந்துவிட்டது; வினையினேன் வந்த- பாவியாகிய நான் பிறந்த, இல் பழி உண்டது - சனககுலமும் (என்னால்) பழிப்புக்கு இடமாயிற்று' என்று - என்று சொல்லி, இரங்கி ஏங்கினள் - (பிராட்டி) அழுது வருந்தினள்.

கற்பழியாமை தன் கடமை என்றமையால், தனக்கு எத்தகைய துயரமும் நிந்தனையும் ஏற்பட்டாலும் தன் கற்புத்திறத்தில்தான் கொண்டுள்ள உறுதிப்பாட்டை அறுதியிட்டுக் கூறியதாகும். அது ஒருபுறம் தன் கடமையே ஆனாலும், தன்னால் ஸ்ரீராமபிரானுடைய வில்லுக்கும், தான் பிறந்த குலத்திற்கும் பழி ஏற்பட்டு விட்டதே என்று பிராட்டி பெரிதும் வருந்தினாள், 'வந்த இல்' என்பதற்கு இல்லாள் என்ற பொறுப்பில் வந்த எனக்கொண்டு, இக்ஷ்வாகு குலத்தைக் குறித்துக் கூறியது என்று கொள்வாரும் உளர். அதுவிற் பழி உண்டது என்றதனுள் அடங்குமாதலின், மேற்கொண்ட உரையே சிறக்கும் என்பதாம். இது, 'உன்குல முன்னதாக்கி' என்று தொடங்கும் சுந்தர. 1272-ஆம் செய்யுளையும், 'என்றனது, கைபுகுந்த தென்னுடைய கால் புகுந்த தென்றழுதாள், மைபுகுந்த கண்ணீர் வர." (நள. கலிதொடர்: 98.) என்றதையும் நினைப்பூட்டுகின்றது.

பி - ம். 1. கற்பழியாதவென் கடனதாயினும்.
2. பொற்பொழியாவலம்; பொருந்தும் போர்வலான்; போர்வல்லான்.
3. வினையின் வந்தவென்.
4. இற்பழியுண்டென. (134)

இராவணன் பிராட்டியுடன் ஏகியது.

941. ஏங்குவா டனிமையு மிறகி ழந்தவன்
ஆங்குறு நிலைமையு மரக்க னோக்கினான்
வாங்கினன் றேரிடை வைத்த மண்ணொடும்
வீங்குதோண் மீக்கொடு விண்ணி னேகினான்.

ஏங்குவாள் தனிமையும் - இவ்வாறு புலம்பி வருந்துகின்ற பிராட்டியின் துணையற்ற தனி நிலைமையும், இறகு இழந்தவன் - தன் சிறகுகளையிழந்த சடாயு, ஆங்கு உறு நிலைமையும் - அங்கு அப்போது அடைந்துள்ள மரணாவஸ்தை நிலைமையும், அரக்கன் நோக்கினான் - இராக்கதனான இராவணன் பார்த்து, தேர் இடை வைத்த மண் ஒடும் - தன் தேர்இடத்தும் பிராட்டியை வைத்திருந்த நிலத்தோடுகூட, வாங்கினன் - தான் தூக்கி யெடுத்து, வீங்கு தோள் மீ கொடு - தனது பருத்துயர்ந்த தோள்களின்மீது வைத்துக் கொண்டு, விண்ணின் ஏகினான் - ஆகாய மார்க்கத்திற் சென்றான்.

இராவணன் தேரையும், அதன் குதிரைகளையும், பாகனையும் சடாயு அழித்து ஒழித்துப் பயனறச் செய்தமையால், வேறு தேர்

இன்றித் தானே தன் தோள்களில் அந்த நிலனோடு பிராட்டியைத் தூக்கிச் சென்றான் என்பதாம். இராவணன், பிராட்டியை அவள் இருந்த மண்ணோடு எடுத்துச்சென்றது, 880, சுந்தர. 626; இனி, பிராட்டியைப் பன்னசாலையோடே பெயர்த்துச் சென்றான் இராவணன் என்று, சுந்தர. 630, 1275, ஆம் பாடல்களால் அறியப் பெறுவதும் நோக்கத்தக்கது. ஆசிரியர், இராவணன் பிராட்டியைத் தரையோடு பெயர்த்து எடுத்துச் சென்றான் என்று முன் 880இல் கூறிய கொள்கையை இது போன்று பின்னும் பல இடங்களில் வலியுறுத்திச் செல்வது' இது 'தன்குறி வழக்க மிகவெடுத் துரைத்தல்' என்னும் உத்திபற்றி ஆம் என்க. இவ்விடத்தில் அத்யாத்ம ராமாயணம் இராவணன் பிராட்டியை வேறோர் இரதத்தில் ஏற்றிச் சென்றான் என்று கூறும்.

பி - ம். 1. ஏங்குவாடன்மையு, ஏங்குவடன்மையு; மிறகழிந்தவன்.
2. ஆங்குறுதன்மையு; துயரமு; துன்பமு.
4. மீக்கொண்டு விண்ணிலேகினான், மேற்கொண்டு. (135)

பிராட்டி உணர்வு அழிந்து கிடந்தமை.

942. விண்ணிடை வெய்யவ னேகும் வேகத்தால்
கண்ணொடு மனமவை சுழன்ற கற்பினாள்
உண்ணிறை வுணர்வழிந் தொன்று மோர்ந்திலள்
மண்ணிடைத் தன்னையு மறந்து சாம்பினாள்.

விண் இடை - ஆகாயத்தினிடமாக, வெய்யவன் - கொடியோனான அந்த இராவணன், ஏகும் வேகத்தால்,-செல்லும் விரைவினால், கண் ஒடு மனம் அவை - கண்கள் மனம் ஆகியவை எல்லாம், சுழன்ற - சுழலும் நிலையையடைந்த, கற்பினாள் - கற்பிற்சிறந்த பிராட்டி, உள் நிறை உணர்வு அழிந்து - தன் மனத்தில் நிறைந்து நின்ற அறிவு அழியப்பெற்று, ஒன்றும் ஓர்ந்திலள் - அங்கு நடந்த விஷயங்களொன்றையும் உணரமாட்டாதவளாய், தன்னையும் மறந்து- தன்நினைவும் இழந்து (அதாவது பிரக்ஞைகெட்டு), மண் இடை சாம்பினாள் - இராவணன் தூக்கிச் சென்றதும், தான் இருந்ததுமான நிலத்தினிடத்தே சோர்ந்து கிடந்தாள்.

பி - ம். 2. மனவிவை, மனவிவை; உணாவொழிந்.
3. மோர்கிலாள். (136)

**இராவணன் பிராட்டியோடு ஏகுவதைக்கண்டு சடாயு வருந்துதல். 943–8**

**943.** ஏகின னரக்கனு மெருவை வேந்தனும்
மோகவெந் துயர்சிறி தாறி முன்னியே
மாகமே னோக்கினன் வஞ்சன் வல்லையில்
போகுதல் கண்டகம் புலர்ந்து சொல்லுவான்.

அரக்கனும் - இராக்கதனான இராவணனும், ஏகினன் - சென்றான்; எருவை வேந்தனும் - கழுகரசனான சடாயுவும், மோக வெம் துயர் சிறிது ஆறி - தான் அடைந்திருந்த மயக்கக் கொடுந்துயரம் சிறிது தணிந்து, முன்னியே - நடந்த செயலை நினைவிற்கொண்டு, மாகம் மேல் நோக்கினன் - வானத்தை மேல் நோக்கிப் பார்த்து, வஞ்சன் வல்லையில் போகுதல் கண்டு - வஞ்சகனான அவ்விராவணன் விரைந்து (அவ்வான்வழியே) செல்வது கண்டு, அகம் புலர்ந்து - மனம் வாடி, சொல்லுவான் - சில சொல்லுற்றான். (சொன்னவை அடுத்து வரும் செய்யுள்களில் காண்க).

மோகம் - மூர்ச்சை : (நூடா); மயக்கவுணர்ச்சி அல்லது திகைப்பும் ஆம்; உயுத்த. நாகபாசப் : 84. மாகம் : (மகா + கம்); இது வடசொற்றொடர்.

பி - ம். 2. தாறிமூர்ச்சியா, தாறிமூர்ச்சையா, தாறிமூழ்கியா.
3. மாகமேநோக்கினன், மாகமின்னோக்கியவ், மாகமீ நோக்கினன்.
4. போகுதல் கண்டவன் ; புலந்து செல்வான். (137)

**944.** வந்திலர் மைந்தர்தாம் மருகிக் கெய்திய
வெந்துயர் துடைத்தன ரென்னு மெய்ப்புகழ்
தந்திலர் விதியினார் தரும வேலியைச்
சிந்தினர் மேலினிச் செயலெ னாங்கொலோ.

'மைந்தர் தாம் - (என்) மக்களான இராமலக்ஷ்மணர்களும், வந்திலர் - இன்னும் வந்தாரல்லர்; மருகிக்கு எய்திய - என் மருமகளான பிராட்டிக்கு நேர்ந்த, வெம் துயர் - கொடிய துன்பத்தை, துடைத்தனர் என்னும் - போக்கிவிட்டார் என்று சொல்லக்கூடிய, மெய் புகழ் - உண்மையான கீர்த்தியை, தந்திலர் - தமக்கு உண்டாக்கிக் கொண்டார் அல்லர்; விதியின் ஆர் - விதிகளாற் சிறந்து விளங்கும், தரும வேலியை - தருமமாகிய ஒரு வேலியை, சிந்தினர் - சிதறிப் போகச்செய்து விட்டனர்; மேல் - இனிமேல், செயல் - நடக்கும் காரியம், என் ஆம் கொல் ஓ - என்னவாகுமோ?,

சடாயு இராமலக்ஷ்மணர்களை, மைந்தர் என்றும், பிராட்டியை மருகியென்றுங் கொண்டது; 203, 212, 219, 949. விதியினர்; விதியினால் கட்டுப்பட்டவராகிய அவர்கள், என்ற பொருளும் கொள்ளலாம். விதியினர்: ஆர் சிறப்புப்பன்மை விகுதியும் ஆம்; 956. தந்திலர் - தனக்குக் தந்திலர் என்னலும் ஆம். விதியின் ஆர் தருமம்: தருமம் பல விதிகளை யுலகுக்கு அளித்துள்ள பெருமையால் நிறைந்துள்ளது என்பதாம். தரும வேலியைச் சிந்தினர்: ஒப்பு. 'வாலியைப் படுத்தாயலை மன்னற, வேலியைப் படுத்தாய் விறல் வீரனே' (கிட்கிந்தா. வாலிவதைப்; 89.) கொல், ஓ என்பன ஐயப்பொருளன.

பி - ம். 1. மைந்தர் நம், மைந்தர் நன்; மருகியெய்திய; நான்மருகிக்.
2. துடைத்தனெனென்று; தருமவல்லியை.
4. சிந்தியதெனிற்பெருஞ் செயலென்னுங்கொலோ. (138)

945. வெற்றிய ருளரெனின் மின்னி னுண்ணிடைப்
பொற்றொடிக் கிந்நிலை புகுதற் பாலதோ
உற்றதை யின்னதென் றுணர கிற்றிலேன்
சிற்றவை வஞ்சனை முடியச் செய்ததோ.

'வெற்றியர் - தான் மேற்கொண்ட செயலில் வெற்றியை அடையக்கூடிய இராமலக்ஷ்மணர்கள், உளர் எனில் - அங்கு உள்ளார்களானால், மின்னின் நுண் இடை பொன் தொடிக்கு - மின்னலை விட நுட்பமான இடையையுடைய பொன்னாலாகிய வளையல்களை அணிந்துள்ள பிராட்டிக்கு, இ நிலை - இப்படிப்பட்ட கொடிய நிலைமை, புகுதல் பாலதோ - சம்பவிக்கக்கூடியதாகுமோ? (ஆகாது என்றபடி); உற்றதை - அந்த இராமலக்ஷ்ணர்களுக்கு அங்கு இன்னது நேர்ந்தது என்பதை, உணரகிற்றிலேன் - அறிய முடியாதவனாய் இருக்கின்றேன்; சிற்றவை வஞ்சனை முடிய செய்ததோ - அன்னோர் சிறிய தாயான கைகேசி தான் மேற்கொண்ட வஞ்சனைச்செயல் தன் முடிந்த பயனை அளிக்க விளைந்ததோ?.

வஞ்சனை செய்ததோ என்றியைக்க. மின்னின் நுண்ணிடை - மின்னலைப் போன்ற நுண்ணிடையும் ஆம். பொற்றொடி; மூன்றும் வேற்றுமை உருபும் பயனுமுடன் றொக்க தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. சிறு + அவ்வை: சிற்றவ்வை; அவ்வை - அன்னை; இங்கு அவை என்றது, இடைக்குறை. உணர கிற்றிலேன்; கில்: ஆற்றலை யுணர்த்தும் இடைநிலை. வெற்றி உண்டாயிருப்பின் உடனே திரும்பியிருப்பரே என்ற ஐயத்தால்

என்க. 'உற்றதை - இருவரும் பிரிய வந்த காரணத்தை' என்பது பழையவுரை.

பி - ம். 2. பொற்ருெடி யின்னிலைப்.

3. யுணர்கிற்கிலேன், யுணர்தற்கிலேன்.

4. இன்னலை முடியச். (139)

ஒரு சுவடி இப்பாடலைப் பின்வருமாறு அமைத்துள்ளது.

வெற்றிய ரவரெனின் மிதுலை வேந்தன்பாற்
பொற்ருெடிக் கின்னன புகுதற் பாலதோ
உற்றதை யின்னதென் றுணரு கிற்றிலேன்
சிற்றவை வஞ்சனை நிமிரச் சேர்ந்ததோ.

946. பஞ்சணை பாம்பணை யாகப் பள்ளிசேர்
அஞ்சன வண்ணனே யிராம ஞதலால்
வெஞ்சின வரக்கஞல் வெல்லற் பாலனே
வஞ்சனை யிழைத்தனன் கள்ள மாயையால்.

'பாம்பு - ஆதிசேடன் என்னும் பாம்பு, பஞ்சு அணை ஆக - தான் பள்ளிகொள்ளும் பஞ்சு மெத்தை போலாக, பள்ளி சேர் - அதில் படுக்கைகொள்ளும், அஞ்சன வண்ணனே - மை போலும் கரிய நிறமுடைய திருமாலே, இராமன் ஆதலால் - இராமபிராஞகத் திருவவதாரஞ்செய்துள்ளான் ஆதலால், (இவ்விராமபிரான்) வெம் சினம் அரக்கஞல் - கொடுங்கோபத்தைக் கொண்ட இராக்கதஞகிய இராவணஞல், வெல்லல் பாலன் ஓ - வெல்லக் கூடியவன் ஆவானே? (ஆகான் என்றபடி); (ஆதலின், அவ்வரக்கன்) கள்ளமாயையால் - திருட்டுச் செயலாகிய தன் மாயையால், வஞ்சனை இழைத்தனன் - இந்த வஞ்சனையைச் செய்தனன் ஆவான்.

ஆதிசேடன் என்னும் பாம்பு திருமாலுக்குத் தவிசாகவும், படுக்கும் பஞ்சணையாகவும் மற்றும் பல வகைகளாகவும் பயன்படுவதாகும்; முதல் திருவந். 53. கள்ளமாயை : அரக்கர்கள் மாயையாகிய திருட்டுச் செயலில் வல்லவர்கள் என்பது ; 66.

பி - ம். 1. பஞ்சணைப்பாம்பணை ; பள்ளிகொள். 3. வெல்லப்பாலனே.

4. கள்ள மாயத்தால் ; வஞ்சனை யிழைத்தியன் வவ்விஞன் கொலாம். (140)

947. வேரற வரக்கரை வென்று வெம்பழி
தீருமென் சிறுவனுந் தீண்ட வஞ்சுமால்
ஆரியன் றேவியை யரக்க னம்மலர்ப்
பேருல களித்தவன் பிழைப்பில் சாபத்தால்.

'என் சிறுவனும் - என் மைந்தனுன இராமனும், அரக்கரை வேர் அற வென்று - இராக்கதர்களை மூல நாசம் அடையப் (போரில்) வென்று அழித்து, வெம் பழி தீரும் - தனக்கு நேர்ந்த இப்பழியைத் தீர்த்துக் கொள்வான்; அம் மலர் - அழகிய தாமரை மலர் மீது விளங்கும், பேர் உலகு அளித்தவன் - பெருமை தங்கிய உலங்களைப் படைத்தருளிய பிரமதேவனுடைய, பிழைப்பு இல் சாபத்தால் - தவறுதல் இல்லாது பலிக்கக் கூடிய சாபத்தினல், ஆரியன் தேவியை - போற்றுதற்குரிய இராமபிரான் தேவியாகிய சீதையை, தீண்ட அஞ்சும் - இராவணன் தன் கைகளால் தீண்டிக் கேடிழைக் கப் பயப்படுவான். ஆல் : ஈற்றசை.

சிறுவன், இங்கு மகன் என்னும் பொருளில் வந்தது (பிங்); 'உல கர்ளுஞ் சிறுவர்ப் பயந்து' (சீவக. 2606.) அ மலர் பேர் உலகு அளித்த வன் எனக்கொண்டு, அ, என்பது, உலகறி சுட்டு என்னலும் ஒன்றும். இராவணனுக்குப் பிரம தேவன் இட்டசாபம்; சுந்தர. 627, உரையிலும், 1276 இலும் காண்க; பிரம தேவரிட்ட இச்சாப வரலாறு இந்நூலிலும், தமிழ் உத்தர காண்டத்தும் காணப் பெறவில்லை. முன் செய்யுளில் சடாயு, இராமபிரானைத் திருமாலே என்று கொண்டதற்கேற்ப, அவதார காரியம் இந்த வியாஜத்தால் முடிய உள்ளது என்ற நிச்சய புத்தியை அடைந்தா னென்க. அன்றியும், இராவணனுக்குள்ள பிரம சாபத்தை அவன் அறிவானுதலின், பிராட்டியின் கற்புக்கு யாதொரு கேடும் வராது என்று அவன் உறுதிகொண்டான் என்க. அடுத்த செய்யுளையும் காண்க.

பி - ம். 1. சிறுவனே. 2. அரக்கனன் மலர்ப். 4. பேரு களிப்பவன். (141)

948. பருஞ்சிறை யின்னன பன்னி யுன்னுவான்
அருஞ்சிறை யுற்றன ளாமெ னுமனம்
பொருஞ்சிறை யற்றதே பூவை கற்பெனும்
இருஞ்சிறை யருதென விடரி னீங்கினுன்.

பருஞ்சு இறை - பருந்து இனமாகிய கழுகுகளுக்கு அரசனுன சடாயு, அரும் சிறை உற்றனள் ஆம் என - (பிராட்டி) கொடிய (அல்

லது நீங்குதற்கரிய) சிறையிடத்தை அடைந்தனள் போலும் என்று, மனம் உன்னுவான் - மனத்திற் சிந்திப்பவனாகி, இன்னன பன்னி - இவ்வாறெல்லாம் சொல்லி, பொரும் சிறை இற்றதே - போரிட வல்ல (என்) சிறகுகள் அழிந்தனவே ஆனாலும், பூவை கற்பு எனும் - நாகணவாய்ப் புட் போன்ற அழகிய சொற்களையுடைய பிராட்டியின் கற்பு என்னும், இரும் சிறை - பெருந் தற்காப்பு, அருது என - அழிவடையாது என்று, இடரின் நீங்கினான் - தன் துன்பத்தினின்றும் (ஒருவாறு) நீங்கினவனானான்.

பருஞ்சு - பருந்து என்பதன் போலி; 'இங்கிரும்' என்பது 'இஞ்சிரும்' என (821) இல் வந்ததுபோல; ஆனால், பருஞ்சிறை என்பதற்குப் பருத்த சிறகுகளையுடைய சடாயு எனப் பொருள் கொண்டாரும் உளர்; சிறையிழந்த நிலையில் இருந்த சடாயுவை, அவ்வாறு இங்குக் கூறுதல் ஏற்காது என்பதாம். இனி, 'பரிஞ் சிறை - பரிந்த இறைவனென்னுமாம், 'மனம் பொருஞ் சிறை - மனோவேகம் போன்று பறக்கும் இந்தச் சிறகற்று நாம் உயிரோடே இருக்கையினாலே, இராமன் வந்தவுடனே இராவணன் கொண்டு போனானென உரைக்கலாம்; உடனே மீட்பர்; ஆகையினாலே நாலு நாள் மறிப்பொழியப் பிராட்டியின் கற்பு அழியாது என்றான்' என்பன பழையவுரை. பிராட்டிக்குப் பூவை; பால. மிதிலைக்காட்சி: 79; சுந்தர: 319. கற்பெனு மிருஞ்சிறை: கற்புக் காவலே பெண்டிற்கு மற்றைக் காவலினும் சிறப்புற்றதாகலின்; 'சிறைகாக்கும் காப்பெவன் செய்யு' மகளிர், நிறைகாக்குங் காப்பே தலை; (குறள். 57.) என்றமையுங் காண்க. இடரினீங்கினான்; தான் சிறையறுப்புண்டு அழிவதை ஒரு பொருட்டாக மதியாது, பிராட்டியின் கற்புச் சிறை யழியாது என்ன உறுதி அடைந்த சடாயு, தான் கொண்ட மனத்துன்பம் தணிந்து அமைதியடைந்தான் என்க. இனி, இடராவது, பிராட்டிக்கு ஏற்பட்ட இடரால் தனக்கு ஏற்பட்ட இடர் என்னலும் ஒன்றும்; 'பொருஞ் சிறையற்றதே; (அதன் விளைவால்) அருஞ்சிறையுற்றன ளாம்' என மனம் உன்னுவான் இன்னன பன்னி, (பின்) பூவை கற்பெனும் இருஞ்சிறை, யருதென, பருஞ்சிறை இடரின் நீங்கினான், என்றும் இயைத்துப் பொருள் கொள்ளலும் ஆம்.

பி-ம். 1. பரிஞ்சிறை. 2. யுற்றனமென.
3, பொருஞ்சிற இற்றதேல்; சிறகிற்றதே, சிறகிற்றதேல், சிறை யற்றதேல்.
4. சிறையிருதென, சிறகருதென, சிறையிருதென. (142)

### சடாயு சோர்வுற்றுத் துயின்றமை

949. அஞ்சிறைக் குருதியா றழிந்து சோரவும்
வஞ்சியை மீட்டிலெ னென்னு மானமும்
செஞ்செவே மக்கண்மேற் சென்ற காதலும்
நெஞ்சுறத் துயின்றன னுணர்வு நீங்கலான்.

அம் சிறை குருதி ஆறு அழிந்து - தன் அழகிய சிறகுகளி லிருந்து வெளிவந்த இரத்தப் பெருக்காகிய ஆறு அழிந்துபோய், சோரவும் - அதனால் தான் தளர்ச்சியடைந்த நிலையிலும், வஞ்சியை - கொடிபோன்ற பிராட்டியை, மீட்டிலென் என்னும் மானமும் - தான் மீட்கவில்லையே என்னும் அவமானமும், மக்கள்மேல் - தன் மைந்தர் களான இராமலக்ஷ்மணர்பால், செஞ்செவே சென்ற காதலும் - முற்றி லும் (அல்லது நேராகச்) சென்றதான அன்பும், நெஞ்சு உற - மனத்தில் பொருந்தி நிற்க, உணர்வு நீங்கலான் - தன் உணர்ச்சி (அல்லது பிரக்ஞை) கெடாதவனும், துயின்றனன் - (சடாயு) அங்குத் (ஒருவாறு) தூங்கிய நிலையில் இருந்தனன்.

மானம்: அவமானம் என்பதன் முதற் குறை; *1042*; ‘மானந் தலைவருவ செய்பவோ’ (நாலடி. *198*.) செஞ்செவே, *950*; பால. தாடகைவதைப்: 7, பூக்கொய்: *7*; உலாவரு: 10, கோலங்காண்: *15*; அயோத். கங்கைப்: *51*; கிட்கிந்நா. தானைகாண்: *29*. அவலம், அன்பு என்னும் இரு சுவைகள் கூடித் துயிலிற் செலுத் தின என்பது கூறப்பெற்றது.

பி - ம். 1. ரழிந்து சோர்வுற; சோர்வுறும்.
2. மீட்கிலேனென்னு, மீட்டிலேனென்னு.
3. செஞ்சவெம் மக்கண்மேற்.
4. னுணர்வு நீங்கினன். *(143)*

இதன்பின் இரு சுவடிகளில் அடியிற்காணும் 6 பாடல்கள் அதிகமாக உள்ளன. அவற்றின் சில தொடர்களுக்குப் பொருள் விளங்காது பொருத்த மற்று மிருப்பன காண்க.

வேறு.

1. சடாயுவைத் தடிந்த வாளைச் சடுதியில் விதிர்க்கக் கண்டாள்
தடாலெனக் கபாடஞ் சாத்திச் சாலையுட் சலித்தா ளந்தோ
விடாதட மன்னை விண்மேல் விரைந்தெடுத் துச்சி வேட்டான்
குடாமதி கோனைச் சேருங் கோமுகற் குறளி யொத்தான்.

வேறு

2. பெண்ணைவிட் டமைந்திடிற் பிழையி தாமென
உண்ணிறை கூடமு மூவந்த சாலையு
மண்ணலபி ராமன்மார் பமர்ந்த வாதியும்
விண்ணில் மேதினி வேண்டி யெய்தினுள்.

3. முன்னமே பூமியை முகந்து பாதலந்
தன்னிலே தரித்தன சயமுந் தந்தில
தென்னவே மாகமீ தேகி னுற்செய
வுன்னியே யிராவண னுவந்த தொத்தரோ.

4. சடாயுவுஞ் சாய்ந்தனன் சனகி சாய்ந்தனள்
விடாசெய மேதியு பிறகதி வேறுளோர்
தொடாமறைக் கிரியையுஞ் சுவைத்த கோமக
னடாதமேற் செயலெலா மமைத்த லென்சயம்.

5. மூன்றுருத் தொருபது முத்தி யோசனை
யேன்றது பாவையு மேதென் றெண்ணுமுன்
ரேன்றினன் சுபாரிசன் ருெழுது தொல்லுல
கீன்றன ளிவளென விசைத்தி றைஞ்சியும்.

6. இசைக்கட னுறைப னிலங்கை வேந்தனீ
திசைப்படாப் புவனமுன் செல்வ மென்னதோ
வசைக்கடல் வாழ்வது வழக்கென் றெண்ணியோ
துசக்கடல் மொழிசெலத் தொழுது போயினுன்.

இராவணன் பிராட்டியை அசோக வனத்தில் சிறைவைத்தது.

950. வஞ்சியை யரக்கனும் வல்லை கொண்டுபோய்ச்
செஞ்செவே திருவுருத் தீண்ட வஞ்சுவான்
நஞ்சிய லரக்கியர் நடுவ ணுயிடைச்
சிஞ்சுவ மரத்திடைச் சிறைவைத் தானரோ.

அரக்கனும் - இராக்கதனுன இராவணனும், வஞ்சியை - வஞ்சி
கொடிபோன்ற பிராட்டியை, திரு உரு தீண்ட அஞ்சுவான் - அவ
திருமேனியைத் தொடப் பயந்தவனுகி, ஆய் இடை - அந்த இலங்
நகரினிடத்துள்ள, சிஞ்சுவ மரத்து இடை - (அசோக வனத்
டத்து), சிஞ்சுப மரத்தடியில் நஞ்சு இயல் அரக்கியர் நடுவ
விஷம்போன்ற (கொடிய) தன்மையரான இராக்கத மகளிர்
செஞ்செவே - செம்மையாக, சிறை வைத்தான் - காவலில் த்து
விட்டான். அரோ : ஈற்றசை.

செஞ்செவே, என்பதை அஞ்சுவான் என்பதோடும் இயைத்துப் பொருள் கொள்ளலாம். பிராட்டியை அசோகம் என்னும் வனத்தில் ஒரு சிஞ்சுவ மரத்தடியில் சிறைவைத்ததாக வான்மீகம் சுந்தர காண்டம் கூறும். ‘சிஞ்சுபாமரம் - இரவெரிமரம், பழையவுரை; இதனை தோதகத்தி யென்றும், நூக்கமரமென்றுங் கூறுவதும் உண்டு. இராவணன் பிராட்டியைத் தூக்கிச் செல்லும் வழியில் ஒரு மலைச் சிகரத்தில் ஐந்து வானரர்கள் நின்றிருப்பதைக் கண்டு பிராட்டி, தன் அணிகலன்களைத் தன் உத்தரியத்தில் முடித்து, இராவணன் அறியாமல் அவ்விடத்தை நோக்கி வீசி யெறிந்தனள் என்று வான்மீகமும், அத்யாத்மராமாயணமும் கூறும்; இதனை இங்குக் கூறுமல், நம் கவிஞர், கிட்கிந்தா காண்டம். கலன்காண்படலத்தில் கூறுவது காண்க.

முதலில் இராவணன் பிராட்டியுடன் தன் அந்தப்புரத்திடம் கொண்டு சென்று, அவளை இங்கே இருத்தி, எட்டு அரக்கர்களை ஜனஸ்தானத்திற்கு அனுப்பி அங்கிருந்து இராமபிரானைப்பற்றிய செய்திகளை அறிந்து வரச்செய்து, பிறகு அவன் பிராட்டிக்குத் தன் செல்வங்களை யெல்லாம் காட்டி அவளை மகிழச்செய்ய முயல, அவள் ஒரு புல்லைத் தன் முன்னே போட்டு, அதனிடம் பேசுவதுபோல இராவணனைப் பெரிதும் இகழ, அவன் அவளுக்குப் பன்னிரண்டுமாதம் தவணை கொடுத்து அசோகவனத்திற் சேர்த்தனன் என்று வான்மீகம் கூறும்.

பி-ம். 3. அஞ்சன அரக்கியர்.

4. அஞ்சுற நவ்வியிற; அஞ்சுற நவ்வியிற், அஞ்சியநவ்வியிற், சிஞ்சுறுவனத்திடை, செஞ்செயில்வனத்திடை, சிஞ்சுவ வனத்திடை, சிஞ்சுமாவனத்திடை. *(144)*

### கவிக் கூற்று

951. இந்நிலை யினையவர் செயலி யம்பினும்
பொன்னிலை மானின்பின் றொடர்ந்து போகிய
மன்னிலை யறிகென மங்கை யேவிய
பின்னவன் றன்னிலை பேசு வாமரோ.

இ நிலை - இத்தன்மையதாக, இனையவர் செயல் - இவ் விராவணன், சடாயு, பிராட்டி இவர்களின் செயல்களை, இயம்பினும் - கூறினேம்; பொன் நிலை மானின் பின் - பொன்னிறம் பொருந்திய

மாயமானின் பின்னே, தொடர்ந்து - அதனைப் பின்பற்றி, போகிய - சென்ற, மன் நிலை அறிக என - தலைவனான இராமபிரான் நிலைமையை அறிவாயாக என்று, மங்கை ஏவிய - பிராட்டி கட்டளை யிட்டனுப்பிய, பின்னவன் தன் நிலை - இராமபிரான் தம்பியாகிய இலக்குவன் நிலையை, பேசுவாம் - இனி சொல்லத்தொடங்குவோமாக. அரோ: ஈற்றசை. அறிகென: அறிகவென, என்பதன் விகாரம்.

பி - ம். 1. இந்நிலையின்னவன், இந்நிலையனையவள்; யினையவள் செயலி, யனையவள் சிறை; நிலையியம்பினும்.
2. மன்னிலை யறிகிலாண் மங்கை; யறியென, யறியென, யறிகிலான்.
3. பின்னினையவனிலை, பின்னவன் மேனிலை; பின்னிலை மேனிலை.

(*145*)

பிராட்டியை நீங்கிய இலக்குவன் செயல் 952–4.

952. ஒருமக டனிமையை யுன்னி யுள்ளுறும்
பருவரல் மீதிடப் பதைக்கு நெஞ்சினன்
பெருமகன் றனைத்தனிப் பிரிந்து பேதுறும்
திருநகர்த் தீருமப் பரதன் செய்கையான்.

ஒரு மகள் - ஒப்பற்ற பிராட்டியின், தனிமையை உன்னி - தனியேயிருக்க நேர்ந்த நிலைமையை நினைத்து, உள் உறும் பருவரல் மீது இட - தன் மனத்தில் பொருந்திய துன்பம் மேலோங்க, பதைக்கும் நெஞ்சினன் - அதனால் துடிக்கும் மனமுடைய இலக்குவன், பெருமகன் தனை - பெரியோனான இராமபிரானை, தனி பிரிந்து பேதுறும் - தனியே விட்டுப் பிரிந்துவருந்தும், திருநகர் தீரும்-தெய்வத்தன்மை பொருந்திய அயோத்திநகரை விட்டுச் சென்ற, அ பரதன் செய்கையான் - அந்தப் பரதாழ்வானது செயலைப் போன்ற செயலையுடையவனான்.

பருவரல் - துன்பம்; அயோத். நகர் நீங்கு: *215*; தைலமாட்டு: *55*, கிட்கிந்தா. மராமரப்: *25*. பேதுறல்: வருத்தமுறுதல் (பேது - துன்பம்); பால. உலாவியற்: *7*; குறுந். *197*: *3*. இச்செய்யுள், இலக்குவனுக்கும், பரதனுக்கும் சிலேடையாக அமைந்துள்ளமை காண்க. பரதன் திருநகர்த் தீர்ந்தது, இலக்குவன் ஒருமகளாகிய பிராட்டியை விட்டு நீங்கியது; பருவரல் மீதிடப் பதைக்கும் நெஞ்சு, அவ்விருவர்க்கும் ஒக்கும். இனி, பரதன் சித்திரகூடத்தில் தங்கியிருந்த இராமபிரானைக் கண்டு, தன்னால் ஆனமட்டும் அவனை நகருக்குத் திரும்ப வேண்டியும், அவன் இசையாமையால், அவனை

விட்டுப் பிரிந்தபோது கொண்ட மனநிலை, கூறுவதும் ஆகும். அங்கு, 'விம்மினன் பரதனும் வேறுசெய்வ தொன்றின்மையி னரிதென வெண்ணி யேங்குவான்' (அயோத். கிளைகண்டு. 134) என்பதையும் நோக்குக.

ஒரு பிரதியில் இதன்கீழ் இராவணன் வஞ்சனை சூழ்படலம் முற்றும் என்ற தொடர் காணப்படுகின்றது. அங்கு, அடுத்து வருவது சடாயு மோக்ஷப்படலம்.

பி - ம். 1. முன்னியுள்ளுறும்.
3. பிரிந்துற்ற துன்பொடும், பிரிந்த பேதுற்றுத்.
4. தீர்வுறும் பரதன், திருநகர்ச் செல்லும் பரதன். (146)

953. தெண்டிரைக் கலமென விரைவிற் செல்கின்றான்
புண்டரீ கத்தடங் காடு பூத்தொரு
கொண்டல்வந் திழிந்தன்ன கோலத் தான்றனைக்
கண்டனன் மனமெனக் களிக்குங் கண்ணினான்.

தெள் திரை கலம் என - தெளிந்த அலைகளையுடைய கடலிற் செல்லும் மரக்கலம் போல, விரைவில் செல்கின்றான் - வேகமாய்ச் செல்கின்ற இலக்குவன், ஒரு கொண்டல் - நீருண்ட ஒரு மேகம், புண்டரீகம் தடம் காடு பூத்து - தாமரை மலர்கள், பெரிய காடு போல அடர்ந்து மலரப்பெற்று, வந்து இழிந்த என்ன - தரையில் வந்து இறங்கியது என்று சொல்லத்தக்க, கோலத்தான் தனை - அழகிய திருமேனியையுடைய இராமபிரானை, மனம் என களிக்கும் கண்ணினான் - மனம்போல மகிழ்ச்சியடையும் கண்களையுடையவனாய், கண்டனன் - பார்த்தான்.

திரை : இங்குச் சினையாகுபெயராய்க் கடலைக்குறித்து நின்றது; 'திரைவளரிப்பி' (சீவக. 2645) என்றதுபோல. கலம் - மரக்கலம் என்பதன் முதற் குறை. இராமபிரானுக்குத் தாமரைக்காடு பூத்த மேகம்; இஃது, இல்பொருளுவமையேற்ற உருவகம்; 'கருமுகிறு மரைக்காடு பூத்துநீ...........வந்து தோன்றினான்' (பால. திருவவ தாரப் : 13); 'நீலக் கார்முகில் கமலம் பூத்து...வருவதே போலும் மாலை' (கிட்கிந்தா. வாலிவதைப் : 75); காடு என்பது இங்கு மிகுதியைக் குறித்தது. மனமுங் கண்ணுங் களித்தல்; 834; அயோத். மந்திரப் : 50. கண்களித்தது, தேடிவந்த பிரானைக கண்டமையால். இராமபிரானைச் சிறிதும் விட்டுப்பிரியாத இயல்பினன் ஆதலாலும், சடுதியில் அப்பிரானை அடையவேண்டுமென்று அவன் விரைந்து வந்ததாலும், அவனுடைய காட்சி இலக்குவனுக்கு அப்பொழுது தனிச்சிறப்புடன் அமைவதாயிற்று என்க. (147)

பி - ம். 3. திழிந்தென, திழிந்தன, திழிந்தனன்.

954. துண்ணெனும் மவ்வுரை தொடரத் தோகையும்
பெண்ணெனும் பேதைமை மயக்கப் பேதிஞல்
உண்ணிறை சோருமென் றூச லாடுமக்
கண்ண னு மிளவலேக் கண்ணி ஞேக்கிஞன்.

துண் எனும் - (கேட்போர்) அஞ்சித் திடுக்கிட்டு நடுங்குவதற்குரிய, அ உரை - அந்த மாரீசன் இறக்கும்போது கூறிய சொல், தொடர - தன்னிடம் வந்துசேர, தோகையும் - அதைக் கேட்கும் பிராட்டியும், பெண் எனும் பேதைமை - தன் பெண்மைத் தன்மையாகிய பேதைமைக்குணம் மயக்க - தன்னை மயக்கத்திற்குள்ளாக்க, பேதிஞல் - அதனல் உண்டான மாறுபாட்டிஞல், (அல்லது வருத்தத்திஞல்), உள் நிறை சோரும் என்று - தன் மனத்திஞள் கொண்ட உறுதி நிலே சோர வருந்துவாள் என்று, ஊசல் ஆடும் - நிலே கொள்ளாது தத்தளிக்கும், அ கண்ணனும் - அந்த அழகிய கண்களையுடைய இராமபிரானும், இளவலே - தன் தம்பியாகிய இலக்குவனை, கண்ணின் நோக்கிஞன் - தன் கண்களிற் கண்டனன். அரோ : ஈற்றசை.

துண்ணெனல்: திடுக்கிடுதலாகிய அச்சக்குறிப்பு; அயோத். கைகேசி சூழ்விணைப் : 84; குகப். 28, அவ்வுரை, மாரீசன் இறக்கும் போது கூறிய, 'ஹா ஸீதே! ஹா லக்ஷ்மணு!' எனறு இராமபிரான் குரலிற் கூறியவை; 801, 804. பெண்ணெனும் பேதைமை; பேதைமை-அறியாத்தன்மை; 'பெரிய பேதைமைச்சின்மதிப் பெண்மையால்' என்று பிராட்டியே தன்னைக் கூறிக்கொண்டது, (சுந்தர. 618.) காண்க. பெண்ணேயே பேதை என்பர்; 'பிழைத்தனை பாவியுன் பெண்மையா லென்ருன்' (கிட்கிந்தா. வாலிவதைப் : 22.); "பெண்ணீர் மைக்கியல் பிழையே போன்ம்" (பெருங். 4. 14 : 142). நிறை: ஒருவழி நிறுத்துகை. இவ்வாறு மகளிர் தம் மனத்தைத் தம் கணவர் திறத்து நிறுத்தும் உறுதி நிலேயே கற்பு எனவும் கூறப்பெறும். கண்ணன் : (கிருஷ்ணன் - கருநிறமானவன்) என்ற வடசொல்லின் திரிபு எனவும் கூறுவர்; இது, பின்னே நிகழும் அவதாரப்பெயரைக் கொள்ளும் குறைபாடுடையது; அழகிய கண்களை உடையவன் என்ற பொருளே இங்குக் கொள்ளப்பெற்றது. இராமபிரானைக் கண்ணன் என்னும் பெயராற் கூறுவது இந்நூலிற் பல இடங்களிற் காணலாம். ஊசலாடுதல் - ஒருநிலேயில் நில்லாது ஊஞ்சல்போல முன்னும் பின்னும் போதல். ஒப்பு : பால. கையடைப் : 11. கண்ணின் நோக்குதல்; சுந்தர. 216. 630, 1269.

'கண்ணினன் கண்டனன்; கண்ணன் நோக்கினன்' என்ற கூறியவற்றுள் அடங்கிய பாவ வேற்றுமைகளை ஓர்க.

பி - ம். 1. தொடர்ந்த தோகையும், தொடர்ந்து தோகையும்.
2. மயக்க மெய்யினால், மயக்கப்பேச்சினால், மயக்கம் பேதினால்; மயக்கும் பெற்றியால்.
3. உண்ணிலை சோரா.
4. கண்ணுற்றனரோ. (148)

இலக்குவன் வந்த காரணத்தை இராமபிரான் வினவியறிதல் 955-60.

955. புன்சொற் கடந்த பகுவா யரக்க
னுரைபொய் யெனுது புலர்வாள்
வன்சொற் கடந்து மடமங்கை யேவ
நிலைதேர வந்த மருளோ
தன்சொற் கடந்து தளர்கின்ற நெஞ்ச
முடையேன் மருங்கு தனியே
என்சொற் கடந்து மனமுந் தளர்ந்த
விளவீரன் வந்த வியல்பே.

'புல் சொற்கள் தந்த-(பொய்யான) இழிந்த சொற்களைக் கூறிய, பகு வாய் அரக்கன் - பிளந்தது போன்ற பெரிய வாயையுடைய இராக்கதனான மாரீசன், உரை பொய் எனுது - கூறிய வார்த்தைகள் பொய் என்று கருதாது, புலர்வாள் - வாடிவருந்துபவளாகி, வன் சொற்கள் தந்து - கொடுஞ் சொற்களைக் கூறி, மட மங்கை ஏவ - கொண்டதுவிடாத் தன்மையுடைய மங்கையாகிய சீதை வேறு கட்டளையிட, தன் சொல் கடந்து - அவன் தன் அறிவின் சிறப்பால் ஆராய்ந்து முன் கூறிய உறுதிச் சொற்களை மீறி, தளர்கின்ற நெஞ்சம் உடையேன் மருங்கு - (அக்கொடிய அரக்கன் என்போல் மொழிந்த சொல்லால் என்ன விளையுமோ என்று) இப்பொழுது சோர்வுறும் மனமுடைய என் அருகே, என் சொல் கடந்து - என் கட்டளையையும் மீறி, இளவீரன் தனியே வந்த இயல்பு-இளைய வீரனான இலக்குவன் தனியாக வந்துள்ள தன்மை, நிலை தேர வந்த - என் நிலைமையை அறிய வந்த, மருளோ - மாறுபாடான மயக்கச் செயலேயோ?

பிராட்டி கூறிய வன் சொற்கள்; 810, 818, 819. மடமங்கை: மடமைத் தன்மையுடைய மங்கை; மடமையாவது, கொண்டது விடாமை; இது மகளிர்க்கியல்பான குணங்கள் நான்கனுள் ஒன்று;

மடமை - பேதைமையும் ஆம். இளையபெருமான்தன் சொற்கடந்தது; 776, 784 பாடல்களில் காணும் தன் உறுதிமொழிகளைத் தானே கடந்து இப்பொழுது தனக்கு என் நீங்கு நேரிட்டதோ என்று மயங்கி வந்ததாகக் கருதிக்கூறியதும் என்க. தன் சொற்கடந்து, 'நீ பிராட்டியைப் பாதுகாத்துக்கொண்டிரு' என்று இராமபிரான் தான் (792) சொல்லியது எனலும் ஆம். இராமபிரான், 'தளர் இன்ற நெஞ்சம் உடையேன்'; தளர்ந்தது; (804). இளவீரன் வந்த இயல்பு, மருளே எனமுடிவு செய்க. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. புன்சொற்கிடந்த......பொய்யதென்று புகலா; யெனுமு புகல்வாள்.

2. தின்சொற்...நிலைதேறுமாறு வருமால்; மருளோன், மருளே; வந்த மகனேன்.

3. நெஞ்சமுரையேன், மருங்கு தனியேன்.

4. மனமுந்தவிர்ந்த; மனமுந்திகைத்திவ்; தளர்ந்திய்விளவீரன் (149)

956. என்றுன்னி யென்னை விதியார் முடித்த
தெனவெண்ணி நின்ற விறையைப்
பொன்றுன்னு விற்கை யிளவீரன் வந்து
புனைதா ளிறைஞ்சு பொழுதின்
மின்றுன்னு நூலின் மணிமார் பழுந்த
விரைவோடு புல்லி யுருகா
நின்றுன்னி வந்த நிலையென்கொ லென்று
நெடியோன் விளம்ப நொடிவான்.

என்று உன்னி - என்று இவ்வாறு ஆலோசனை செய்து, விதியார் முடித்தது என்னை என எண்ணி - ஊழ்வினை முடித்த காரியம் யாதாகுமோ என்று கருதி, நின்ற இறையை - செயலற்று நின்ற தலைவனை இராமபிரானை, பொன் துன்னு வில் கை - அழகால் நிறைந்த வில்லேந்திய கையையுடைய, இளவீரன் வந்து புனைதாள் இறைஞ்சு பொழுதில் - இளைய வீரனை இலக்குவன் அருகே வந்து (இராமபிரான்) அழகிய பாதங்களை வணங்கிய பொழுதில், மின் துன்னு நூலின் மணி மார்பு அழுந்த - மின்னல் படிந்ததுபோன்ற பூணூல் விளங்கப் பெற்ற நீலமணிபோன்ற ஒளியுடைய தன் மார்பு அழுந்திப் படிய, விரைவு ஓடு புல்லி - வேகமாய்த் தழுவிக்கொண்டு, உருகாநின்று - தளர்வுற்று நின்று, 'உன்னி வந்த நிலை என்கொல்

என்று - நீ இங்குக் கருதி வந்த தன்மை யாதோ?' என்று, நெடியோன் விளம்ப - தமையனான இராமபிரான் கேட்க, நொடிவான் - (இலக்குவன் பின்வருமாறு) கூறினான். (அவை, அடுத்தவரும் பாடல்களால் விளங்கும்.)

விதியார்: ஆர் - மரியாதைப்பன்மை விகுதி; 'விதியார் முடித்தது - தெய்வத்தின் சூழ்ச்சி; என்னையென்று - யாதென்று' என்பன பழையவுரை. விதிமுடித்தல்; 997; 1022. இலக்குவன் பொன்னிறத்த னாதலின், விற்கைப் பொன் துன்னுமிள வீரன் என இயைத்தும் பொருள் கொள்ளலாம். இராமபிரான் பூணூல் அணிந்துள்ளமை; 607; பால. கடிமண: 61; மின் துன்னு நூலின்மணி மார்பு; மார்பில் அணிந்த நூலுக்கு மின்; ஒப்பு: 'விண்ணிழந்த மின்போலு நூன்மார்ப' (நள. சுயம்வர: 10); விண்மின்னென மிளிரும்புரி வெண்ணூலணி மார்பன்" (அரிச்சந்திர. காசி: 29). புனைதாள் - அழகிய பாதம்; 'புனைநிழலமர்ந்த' (நன். எழுத்: 1). நொடித்தல் - சொல்லுதல் (திவா.); இது கன்னடநாட்டுச் சொல்.

பி-ம். 1. என்றுன்னி முன்னை என்றுன்னியுன்னை, என்றுன்னியெண்ணி; விதியார் முடிந்த.
2. இறையே.
3. விற்கைவயவீரன், விரைமார் பழுந்த; மின்னென்று நூலின்; புல்லியிறுகா.
4. நிலையென்னையென்று; விளம்ப மொழிவான். (150)

957. இல்லா நிலத்தி னியையாத வெஞ்சொ
லெழவஞ்சி யெவ்வ முறயான்
வல்லா யரக்க னுரையாகு மென்ன
மதியாண் மறுக்க முறுவாள்
நில்லாது மற்றி தறிபோதி யென்ன
நெடியோய் புயத்தின் வலியென்
சொல்லான் மனத்தி னடையாள் சினத்தின்
முனிவோடு நின்று துவள்வாள்.

'நிலத்தில் இல்லா - உலகத்தில் இல்லாததும், இயையாத - பொருந்தாதுமான (அதாவது விபரீதமான), வெம் சொல் எழ - (ஹா! ஸீதே! ஹா; லக்ஷ்மண! என்ற) கொடுஞ்சொல் எழுந்து ஒலிக்க, (அதனைக் கேட்டு), வஞ்சி எவ்வம் உற - கொடிபோன்ற

பிராட்டி துயரமடைய, யான் - அதனைக்கண்ட நான், 'வல் வாய் அரக்கன் உரை ஆகும் என்ன - (இது) வலிய வாயையுடைய அரக்கனுடைய சொல்லே ஆகும்' என்று கூற, மதியாள் - அந்த என் சொல்லை மதிக்காமல், மறுக்கம் உறுவாள் - குழப்பமுற்றவளாய், நெடியோய் புயத்தின் வலி - உயர்ந்தோரான உமது தோள் வலிமையை, என் சொல்லால் மனத்தின் அடையாள் - யான் சொன்ன விதத்தால் தன் மனத்தில் சமாதானம் அடையாதவளுமாகி, சினத்தின் முனிவு ஓடு - கோபத்தால் உண்டான வெறுப்போடு, இது அறி; நில்லாது போதி என்ன - 'இதன் உண்மையை நீ அறிந்துவா, இங்கு நிற்காமல் போவாயாக'! என்று கூறி, நின்று துவள்வாள், நின்று தளர்வுற்றாள்.

'இல்லா நிலம் - தேவரீர் இல்லாத பன்னசாலை' என்பது பழையவுரை. இல்லா............வெஞ்செல், என்றது இராமபிரான் இவ்வாறு துயருற்றுக் கூவான் என்ற துணிவுபற்றி; மற்று: அசை. வஞ்சி - சிந்திற் கொடிபோன்ற மென்மையுடைய பிராட்டி என்னலும் ஆம். எவ்வம் - துன்பம்; 'எவ்வம் நீங்கிய பிறப்பு' (கிட்கிந்தா. பம்பைப்: *17*); குறுந். *103 : 3* ; புறநா. *393 : 11*. சினத்தின் முனிவு - கோபத்தின் மிகுதி என்னலும் ஆம். இச்செய்யுளையும் அடுத்த செய்யுளையும் குளகமாகக் கொண்டு, இயைத்துப் பொருள் கூறுவாரும் உளர். இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. இசையாத வெஞ்சொல்; இல்லாணிலத்தில்; யேவமுறையால்; துன்பமுறயான்.

2. வல்லானரக்கனுரை யென்றெடுத்தென் மதியாலுரைத்த பொழுது; மதியா லுரைத்த பொழுது; மயச்க முறுவாள்.

3. மற்றதறி; யென்ன; நெடியோய் மறுத்தலுடையேன்; புயத்தின் வலியோய்; வலியான்.

4. சொல்லா லனத்தி னடையாள் சினத்தி னுறுவாள் துணுக்கமுறுவாள், சொல்லா மனத்தி; னிடையா சலத்தின் முடிவோடு.

(151)

958. ஏகாது நிற்றி யெனின்யா னெருப்பி
னிடைவீழ்வெ னென்று முடுகா
மாகான கத்தி னிடையோட லோடு
மனனஞ்சி வஞ்சி வினையேன்
போகாது நிற்கி லிறவா திருக்கை
புணரா ளெனக்கொ டுணரா
ஆகாதி ருக்கை யறனன் றெனக்கொ
டிவண்வந்த தென்ன வமலன்.

(பின்னர், பிராட்டி என்னை நோக்கி), 'ஏகாது நிற்றி எனில் - நீ இராமபிரான் நிலை அறிந்து வரச் செல்லாது இங்கு நிற்பாயானால், யான் நெருப்பின் இடை வீழ்வென் என்று - நான் இக்காட்டிலுள்ள நெருப்பின் இடையே வீழ்ந்து இறந்து போவேன்' என்று சொல்லி, முடுகா - விரைந்து, மா கானகத்தின் இடை ஓடல் ஓடும் - பெரிய காட்டிலே உள்ள (தீயை நாடி) ஓடிய அளவில், மனன் அஞ்சி - மனத்தில் அச்சமேற்கொண்டு, வினையேன் போகாது நிற்கில் - பாவியாகிய யான் அவ்விடம் விட்டு உம்மை நாடிப் போகாது நின்றால், வஞ்சி - கொடிபோன்ற அப்பிராட்டி, இறவாது இருக்கை புணராள் - இறவாது இருப்பதை மேற்கொள்ள மாட்டாள் (அதாவது இறந்தே விடுவாள்), என கொடு உணரா - என்று அறிந்து கொண்டு, இருக்கை ஆகாது - அங்கு நான் இருப்பது தக்கதன்று; அறன் அன்று - அது தருமத்திற்கு ஏற்ற காரியமும் அன்று; என கொடு - என்று உறுதியான எண்ணத்தை மேற்கொண்டு, இவண் வந்தது என்ன - நான் இங்கு வந்த காரியமாகும் என்று இளையபெருமான் கூறவும், அமலன் - குற்றமற்றவனான இராமபிரான்,

இச்செய்யுள் 692 வரை அடுத்துவரும் நான்கு செய்யுள்களுடன் தொடர்ந்து குளகமாகி 'நின்றான்' என்னும் வினை முடிபு ஏற்கும். முடுகா, புணரா என்பன செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினைகள். மனன்: மனம் என்பதன் ஈற்றுப் போலி. இளையபிரான் தன்னை வினையேன் என்று இழித்துக் கூறிக் கொண்டது; 'இருதலைக் கொள்ளி எறும்பு போல, அங்கு இருந்தாலும் பிராட்டி இறக்கக் காரணமாவேன்: சென்றாலும், பெருமான் இட்ட கட்டளையைக் கடந்த குற்றமும் பின் விளையக் கூடிய ஏதமும் உண்டாகும்; என்று இரண்டுக்கும் இடனாய் நின்ற தன் சூழ்வினையைக்கருதிக் கூறியதாகும். ஆகாது இருக்கை என்றது; இருந்தால் பிராட்டி தீயிடை வீழ்ந்து இறந்து படுவாள் ஆதலின்; அறனன்று என்றது, அத்தகைய ஒரு ஸ்திரீஹத்தி தோஷத்திற்குத் தானே

காரணமாதல் ஆதலால்; மேலும் தன்னிடம் சந்தேக உணர்ச்சி கொண்ட ஒரு பெண் தனித்திருக்கும் இடத்தில் தான் இருப்பதும் அறனன்று ஆதலானும் என்க; இனி ஆகாதிறக்கை எனும் பாடங்கொண்டு, பிராட்டி இறத்தல் தகாது எனப் பொருள் கூறிஞரும் உளர். பிராட்டி இலக்குவன் சொல்லை வெறுத்து, நெருப்பிடை வீழ்ந்து இறப்பதாகக் கூறியது; 818, 819. இங்கு, இலக்குவன் பிராட்டி தன்னை நோக்கிக் கூறிய கொடுஞ் சொற்களைக் குறிக்கவில்லை என்பது கருதற்பாலது. வான்மீகத்திலும் அத்யாத்ம ராமாயணத்திலும், இராமபிரான் பிராட்டியைத் தனியே விட்டு வந்ததற்காக இலக்குவனைக் கடிந்து கூற, இலக்குவன் பிராட்டி கூறிய கொடிய மொழிகளைத் தெரிவித்தனன் என்றும், அம்மொழிகளால் இராமபிரான் சாந்தமடையவில்லையென்றும் கூறப்பட்டுள்ளதும் நோக்கத்தக்கது.

பி-ம். 1. நிற்றியெனிலியான்; யிடைவீழ்வதென்று.
2. மனமஞ்சியெஞ்சி; மனனஞ்சியஞ்சி வினையேன்; வந்தவினையேன், வஞ்ச வினையேன், மன்ற வினையேன்.
3. போகாதிருத்தினிறவா, போகாதிருக்கின், போகாதிருக்கில்; விறவாது நிற்கை.
4. ஆகாதியற்கை, ஆகாதிறத்தை. (152)

959. சாவா திருத்த லிலளான துற்ற
தகையோ தடுக்க முடியா
தாவா வலக்க ணுறுவா ளுரைத்த
பொருளோ வகத்தி னடையாள்
காவா னிலத்தின் வருமேத மற்ற
தொழியாது கைக்கொ டகலப்
போவார் பிரிக்க முயல்வார் புணர்த்த
பொருளா மிதென்று தெருளா,

'சாவாது இருத்தல் இலள் ஆனது உற்றது - சீதை இறவாதிருப்பதென்பது இல்லாதது ஆக நிகழ்ந்துள்ளது; (அதாவது இறப்பது நிச்சயம் என்பது ஏற்பட்டு விட்டது); அதையோ தடுக்க முடியாது- அவ்வாறு அவளை இறவாமல் தடுப்பதென்பதும் முடியாத காரியம் ஆகி விட்டது; ஆ ஆ - அந்தோ! அந்தோ!! அலக்கண் உறுவாள் - (பெரிதும்) துன்பமடைவாளாயினள்; உரைத்த பொருளோ - இவ்வினையோன் அவளுக்குத் தேறுதலாகக் கூறிய உண்மைப் பொருளையோ, அகத்தின் அடையாள்-அவள் தன் மனத்

இல் இருத்தி வைத்துக்கொண்டு சாமாதானம் அடையாதவளானாள்; (ஆதலால்), காவான் நிலத்தின் ஏதம் வரும் அது ஒழியாது - இலக்குவன் காவல் நீங்கப் பெற்ற அவ்விடத்தில் ஆபத்து திண்ணமாய் வராமல் தீராது; பிரிக்க முயல்வார் - எம்மை அவளிடமிருந்து பிரிக்க முயன்றவர்கள், கை கொடு அகல போவார் - அவளைக் கைப்பற்றிக் கொண்டு வெகுதூரம் போகக் கருதியவராவா; புணர்ந்த பொருள் ஆம் இது - வஞ்சகர்கள் செய்த சூழ்ச்சி இஃது ஆம்' என்று தெருளா - என்று இராமபிரான் தன் அறிவினால் ஆராய்ந்து உணர்ந்து; மற்று : அசை.

'சாவாதிருத்தல்...........முடியாது-சீதை சாவேன் என்றதைத் தடுக்க முடியாது. ஆவா அலக்கணுறுவாய் - ஐயோ! நீயும் மிகத் துக்கிப்பாய்; என்பது, இலக்குவனை நோக்கிக் கூறியது; முன்னிலை. காவா நிலத்தின்...........தெருளா - தம்பி, நீ காத்திராது இங்கு வந்த போதே அவ்விடத்தில் ஒரு குற்றம் வரும்; வந்தால் அது நீங்கவும் செய்யாது; ஆகையாலே, சீதையை வஞ்சித்துக் கொண்டு போக வேண்டுமென்று ஒருவரிட்ட உபாயமென்று நன்றாயறிந்து': இவை, பழையவுரை.

பி - ம். 1. விளைவான துற்றதகையோ; துற்றநிதையோ.
2. பொருளோ மனத்தினிடையாக்; வுளத்தினிடையாக்.
3. வருமேதமழியாது.
4. பிரிக்கும் வகையே புணர்ந்த; முயல்வார் புணர்ந்த; புணர்ந்த பொருளாகி தென்று; பொருளே யிதென்று. (153)

960. வந்தாய் திறத்தி னுளதன்று குற்ற
மடவாண் மறுக்க முறுவாள்
சிந்தா குலத்தொ டுரைசெய்த செய்கை
யதுதீது மன்று தெளிவாய்
முந்தே தடுக்க வொழியா தெடுத்த
வினையேன் முடித்த முடிவால்
அந்தோ கெடுத்த தெனவுன்னி வுன்னி
யழியாத வுள்ள மழியா,

'வந்தாய் திறத்தின் குற்றம் உளது அன்று - சீதையைத் தனியே விட்டுவந்த உன்னிடத்தில் குற்றம் உள்ளது ஆகாது; (அதாவது குற்றம் இல்லை என்றபடி); மறுக்கம் உறுவாள் மடவாள்- மானையடைய வேண்டும் என்ற வருத்தம் மேற்கொண்ட சீதை,

சிந்தாகுலத்து ஒடு - மன வருத்தத்தோடு, உரை செய்த செய்கை அது - அதைப் பிடித்துத் தரவேண்டிச் சொன்ன செயலும், தீதும் அன்று - கெட்ட செயலும் அன்று ; (அது மனிர்க்குரிய இயற்கைச் செயலே ஆகும், என்றபடி) ; தெளிவாய் - அது மாயமான் என்று நிச்சய புத்தியோடு, முந்தே தடுக்க - நீ முன்னமே இக்காரியஞ் வேண்டாம் என்று என்னைப் பல காரணங்காட்டித் தடுக்க, ஒழி யாது - அச்செயலை விட்டு நீங்காமல், எடுத்த வினையேன் - அந்த மானைப் பிடிக்கும் செயலை மேற்கொண்ட தீவினையேனான நான், முடித்த முடிவால் - செய்து முடித்த காரியத்தின் முடிவினால், அந்தோ கெடுத்தது - அச்செயல் ஐயோ என்னைக் கெடுத்துவிட் டது !' என உன்னி உன்னி - என்று பல முறை எண்ணி, அழியாத உள்ளம் - எதற்கும் தளர்ச்சியுறாத தன் மனம், அழியா - அழிந்து வருந்துவானாகி.

இனி, இப்பாடலால் இராமபிரான் இளைய பெருமானிடத்தும், பிராட்டியிடத்தும் குற்றங்கண்டு குறை கூறாது அத்தீமைக்கெல் லாம் தானே காரணன் என்று கூறி வருந்திய பெருமைக்குணம் புலப்படக் கூறிய சிறப்பு பெரிதும் பாராட்டற்குரியதாம். இது, 'தன் குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின், என்குற்ற மாகு மிறைக்கு' (குறள். 436) என்ற பொய்யா மொழியை நினைப்பூட்டு கின்றது. அழியாத வுள்ளம்: தந்தை இறந்து போகவும், தாய் பெருந்துயர் எய்தவும், அயோத்தி நகரமாந்தர் அருந்துயரில் ஆழவும், தம்பியாகிய பரதாழ்வான் தனக்குரிய அரசியற் போகங்களைத் துறந்து தவநியமத்தல் இருந்து வருந்தவும், தான் துயரமென் பதையே அறியாது வளர்ந்த தன் மனைவி, தம்பி இலக்குவன் இவர்களோடு வனத்தில் ஏற்பட்ட பல இடுக்கண்களையெல்லாம் பொறுத்துக்கொண்டு இருந்தவன் ஆதலின் என்க. மறுக்க முறு வாள் உரை செய்த செய்கை, என்பதற்கு, மாரீசன் உரை கேட்டு மனக்கலக்க மடைந்த சீதை உன்னை இகழ்ந்து பேசிய செய்கை என்றும் பொருள் கொள்வர். அது, முன் செய்யுளின் போக்குக்குப் பொருந்தாமை காண்க. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. லுனதன்று ; குற்றமடையாண் ; வந்தாய் மறுத்த மொழிவா ளுரைக்கு மறுக்க முடனீ.

2. மது தீதுமென்று ; சிந்தா குலத்தி னுறுதீயர் செய்கை யிது வென்றறிந்து தெளிவால்.

3. வொழியாது வந்த ; முந்தே தடுத்த மொழியாதெடுத்த ; வினை யேன் முடித்த முடியாலடுத்த செயலால்.

4. மழிவான்.

## இராமலக்ஷ்மணர் பன்னசாலைக்குத் திரும்புதல்

961. பாணித்து நின்று பயனாவ தென்னை
பயில்பூவை யன்ன குயிலைக்
காணிற் கலந்த துயர்தீரு மன்றி
யயலில்லை யென்று கடுகிச்
சேணுற் றகன்ற நெறியூடு சென்ற
சிலைவாளி யன்ன விசைபோய்
ஆணிப் பசும்பொ னனையா ளிருந்த
வவிர்சோலை வல்லை யணுகா,

'பாணித்து நின்று - இங்கு நாம் தாமதித்து நிற்றலால், பயன் ஆவது என்னை - ஆகும் பயன் யாது? (ஒன்றும் இல்லை என்றபடி); பூவை அன்ன பயில் குயிலை - நாகணவாய்ப்புள் போன்று (அழகாய்ப்) பேசும் குயில் போன்ற சீதையை, காணில் - கண்டோமேயானால், கலந்த துயர் தீரும் - நமக்குண்டான (அல்லது நம்மை அணுகிய) இத் துன்பம் நீங்கும்; அன்றி அயல் இல்லை - அவ்வாறு போய்ச் சீதையைக் காண்பது அன்றி நாம் செய்யக்கூடிய வேறு செயலும் நமக்கு இல்லை;' என்று - என இராமபிரான் கூறி, கடுகி - விரைந்து, சேண் உற்று அகன்ற-நெடுந்தூரமாகப் பொருந்திப் பரந்து இருந்த, நெறி ஊடு - வழியே, சென்ற சிலை வாளி அன்ன விசைபோய் - தன் வில்லிற் பூட்டிவிடப்பட்ட அம்பு சென்றது போன்ற வேகத்தோடு சென்று, ஆணி பசும்பொன் அனையாள் இருந்த - மாற்றுயர்ந்த பசிய பொன் போன்ற திருமேனியுடைய பிராட்டியிருந்த, அவிர் சோலை வல்லை அணுகா - (எதிரே) விளங்கிய பஞ்சவடிச் சோலையை விரைவில் அணுகி,

இஃது அடுத்த செய்யுளுடன் இயைந்து, நின்றான் என்ற வினை கொண்டு முடியும். பாணித்தல் - தாமதித்தல்; உயுத்த. முதற் போர்ப்: 172; கலித். 102: 13, உரை. பூவை அன்ன பயில் குயில் - பூவை போன்று அழகிய பேச்சும், குயில் போன்று இனிய குரலும் பொருந்திய பிராட்டி என்க; இஃது இல்பொருளுவமைப் பொருளில் வந்த உருவகம்; இதனை, உருவகத்துள் உருவகம் என்பர். விரைவுக்கு இராமபிரான் ஏவிய அம்பு; கிட்கிந்தா. கிட்கிந்தைப்: 12; உயுத்த. அங்கதன்றூது: 13. பிராட்டிக்குப்

பொன், நிறத்தாலும், குணத்தாலும் என்க; பிராட்டியைப் பொன்னுக்கு உவமையாகக் கூறுவது இந்நூலிற் பரக்கக் காணலாம்.

பி-ம். 1. பாணிக்க நின்று, பாணித்தல் கண்ட; மயில் பூவை யன்ன.
2. காணிற் கரந்த, காணிற் கிடந்த; யென்று கடுக.
3. நெறியூடு சென்று, நெறிமீது போன.
4. வலர்சோலை, வகைசோலை; அனுக. (155)

பிராட்டியைக் காணாது இராமபிரான் அயர்ந்தது 962—6

962. ஓடி வந்தனன் சாலையின் சோலையி னுதவும்
தோடி வர்ந்தபூஞ் சுரிகுழ லாடனைக் காணான்
கூடு தன்னுடை யதுபிரிந் தாருயிர் குறியா
நேடி வந்தது கண்டில தாமென நின்றான்.

ஓடி வந்தனன் - இவ்வாறு விரைந்து ஓடிவந்த இராமபிரான், சாலையின் - அப்பன்ன சாலையினிடத்து, சோலையின் உதவும் - அங்கிருந்த சோலையினின்று அளிக்கப் பெற்ற, தோடு இவர்ந்த - இதழ்கள் ஓங்கி விளங்கிய, பூம் - பூக்களையணியும், சுரி குழலாள் தனை - சுருள்கொண்ட கூந்தலையுடைய பிராட்டியை, காணான் - காணாதவனாய், ஆர் உயிர் - அரிய ஓர் உயிர், தன்னுடையது கூடு பிரிந்து - தன்னுடையதான உடலை விட்டுப் பிரிந்து, குறியா-தேடிவந்து, அது கண்டிலது ஆம் என-அந்த உடம்பை (அவ்வுயிர்) காணாது தியங்கியது போல, நின்றான் - திகைப்புற்று நின்றான்.

பிராட்டி சுரி குழலாள்; பெரிய திருமொழி. 5. 7; 7. பிராட்டியைப் பிரிந்த இராமபிரானுக்கு உடலைப் பிரிந்த உயிர் உவமை; இதனால் இராம்பிரான் உயிரும், பிராட்டி உடலும் ஆவர் என்பதாயிற்று. 'உடம்புயிரைத் தொடர்கின்றது ஒத்தாள்' (பால. கடிமணப்; *91.*); சுந்தர. *491, 125.* பிராட்டியை உயிராகவும் இராமபிரானை உடலாகவும் கூறிய இடங்களும் உண்டு; சுந்தர. *491, 525.* இனி, 'காணார், கண்டிலராமென நின்றார்' எனப் பாடங்கொண்டு இலக்குவனையும் உடனாக்கிப் பன்மையிற் பொருள் கூறினாரும் உளர்; அது, உயிர் உடல் என்ற உவமைகளுக்குப் பொருந்தாமை காண்க. பிரிந்த ஜீவன் தன் பிரேதத்தை நாடி அலையும் என்ற சாத்திரக் கொள்கை இங்குக் கையாளப்பட்டது காண்க.

பி-ம். 1. ஓடி வந்தெதிர், ஓடிவந்தனர், சோலையுமுதவும்.
2. சாலையும், சோலையும், சாலையிற், சுரி குழலாளொடுந் தோன்றாக்; காணார்.
4. கண்டிலராமென நின்றார். (156)

963. கைத்த சிந்தையன் கனங்குழை யணங்கினைக் காணான்
உய்த்து வாழ்தற்கு வேறொரு பொருளில னுதவ
வைத்த மாநிதி மண்ணொடு மறைத்தன வாங்கிப்
பொய்த்துளோர்கொளத் திகைத்து நின்றானையும் போன்றான்

கனங்குழை அணங்கினை காணான் - கனமான குழை என்னும் காதணியை அணிந்து விளங்கும் தெய்வப் பெண்ணாகிய பிராட்டியை அங்குக் காணாத இராமபிரான், கைத்த சிந்தையன் - வெறுப்புற்ற மனத்தினனாய், உதவ - தான் வேண்டும்போது தனக்கு உதவுதற்காக, மண்ணொடு மறைத்தன வைத்த - மண்ணில் ஓரிடத்தில் புதைத்து மறைத்து மூடிவைத்த, மா நிதி - (தன்) பெருஞ்செல்வத்தை, பொய்த்து உளோர் வாங்கி கொள - வஞ்சகச்செயலுடைய கள்வர் அதனைத் தாம் பெயர்த்தெடுத்துக்கொண்டு போய்விட, திகைத்து நின்றானையும் போன்றான் - ஏக்கமுற்று இருந்த ஒருவனையும் போன்று, (அங்கு இராமபிரான் ஏக்கத்துடன்) இருந்தான்.

பிராட்டி, தேடிப் பாதுகாத்து வைத்த அரும்பொருளுக்கும், இராமபிரான் அப்பொருளையிழந்த ஒருவனுக்கும் உவமைகள் ஆக்கப் பெற்றனர்; இராமபிரான் வனமேகும் போது அது கேட்ட கோசலா தேவி நிலைமைக்கு, 'பொன்பிழைக்கப் பொதிந்தனர் போலவே' (அயோத். நகர் நீங்கு: 13.) என இவ்வுவமை எடுத்தாளப்பெற்றிருப்பது காண்க. செல்வத்திற்குரிய திருமகளான பிராட்டியை அருஞ் செல்வமாகவே உவமிக்கப் பெற்ற நயம் இங்கு உணரத்தக்கது; அநுமன் மூலம் இராமபிரான் அடையாளமாகக் கொடுத்தனுப்பிய திருவாழி கண்ட பிராட்டியை, நம் ஆசிரியர் கவிச்சக்கரவர்த்தியார், "பழந்தன மிழந்தன படைத்தவரை யொத்தாள்" (சுந்தர. 554) என உவமித்துக்கூறியது இக்கருத்தை அடிப்படையாகக்கொண்டெழுந்தது என்க. வைத்தமாநிதி: சேமித்துவைக்கப்பெற்ற பெருஞ் செல்வம்; இங்கு, பிராட்டி இராமபிரானின் வைத்த மாநிதி. திருமாலை, வைத்தமாநிதி யென்று, ஆழ்வார் அருமையாகப் பாராட்டிப் பரவியுள்ளதுங் காண்க; திருவாய்மொழி; 6. 7: 11. வைஷ்ணவர்களுள், 'வைத்தமாநிதி' யென்ற குடிப்பெயரைக் கொண்டுள்ள ஒருவகையினர் உள்ளமையும் இங்கு நோக்கத் தக்கதாம். மண்ணொடு மறைத்தனர்; மண்ணொடு பெயர்த்து இரா

வண்ன் எடுத்துச் சென்றதைத் தொனியால் குறிப்பிட்ட நயம் ஓர்க.

பி - ம். 1. காணு(து); சனகியைத் தேடினன் காணுன்.
2. உய்த்து வாழ்தர, உய்த்த வாழவல்ல வேறெரு பொரு ளல்லதுதயா, உய்த்து வாழ்வதோர்; வேறெரு பொருளி லானுதவ.
3. மறைந்தன வாங்கி, மறைக்க மற்றயலிற்; மறைத்தனர் வாங்கி, மறைத்தன வாங்கி, மறைந்தன வாங்கி.
4. நின்றுரையுமொத்தான். (157)

964. மண்சு ழன்றது மால்வரை சுழன்றது மதியோர்
எண்சு ழன்றது சுழன்றது வெறிகட லேழும்
விண்சு ழன்றது வேதமுஞ் சுழன்றது விரிஞ்சன்
கண்சு ழன்றது சுழன்றது கதிரொடு மதியும்.

(இவ்வாறு இராமபிரான் திருவுள்ளம் பெருந் திகைப்புக்குள் ளாகவே), மண் சுழன்றது - (அவன் எங்கும் நிறைந்த பரம்பொரு ளாதலின்) பூமி சுழன்று தத்தளித்தது; மால் வரை சுழன்றது - பெரிய மலைகளும் சுழன்றன; மதியோர் எண் சுழன்றது - திவ்விய ஞானிகளான மகான்களுடைய அசையாத உறுதியுடைய எண்ணங் களும் சுழன்று தத்தளித்தன; அ எறிகடல் ஏழும் - அலைகள் வீசி யெறியப்பெறும் அந்த ஸப்த ஸாகரங்களும், சுழன்றது - கொந்தளிப் புற்றன; விண் சுழன்றது - வானமும் சுழலலுற்றது; வேதமும் சுழன்றது - என்றும் நிலைமாறுத வேதங்களும் மாறுபாடுற்றுக் குலைவுற்றன; விரிஞ்சன் - பிரமதேவனின், கண் - எட்டுக் கண்களும், சுழன்றன - பார்வையின்றிச் சுழற்சியடைந்தன; கதிர் ஒடு மதியும் - சூரியனேடு சந்திரனும், சுழன்றது - சுழல்வன ஆயின.

இது முதல் வரும் நான்கு செய்யுள்களும் குளகமாய் இயைந்து, 967-இல் உள்ள, 'சொன்னுன்', என்ற வினையைக்கொண்டு பொருண் முடிவுபெறும். மதியோர் எண் சுழன்றது; எண்ணும் என்றிருக்கப்பாலதான உயர்வு சிறப்பு உம்மை தொக்கி நின்றது எனக்கொள்க. அவ்வெறி கடல்: அ, உலகறி சுட்டு. எறிகட லேழும்: உம்மை முற்றும்மையாகும். ஏழ்கடல்: தயிர், பால், கள், தேன், கருப்பஞ்சாறு, உப்பு, சுத்த ஜலம் என்பன. சுழன்றது; என்றவை, பன்மை ஒருமை மயக்கம்.

பி - ம். 1. இச்செய்யுளில், சுழன்றது என்றுள்ள இடங்களிற் சுழன்றன என வந்துள்ளன. (158)

965. அறத்தைச் சீறுங்கொ லருளையே சீறுங்கொ லமரர்
திறத்தைச் சீறுங்கொன் முனிவரைச் சீறுங்கொ றீயோர்
மறத்தைச் சீறுங்கொ லென்கொலோ முடிவென்று மறையின்
நிறத்தைச் சீறுங்கொ னெடுந்தகை யோனென நடுங்க,

நெடும் தகையோன்-நெடியோனான அவ் விராமபிரான், 'அறத்தை சீறும் சொல் - தருமத்தைக் கோபிப்பானோ? அருளையே சீறும் கொல் - கருணை என்னும் அரிய தனக்குள்ள குணத்தையே சீறிக் கோபிப்பானோ? அமரர் திறத்தை சீறும் கொல் - தேவர்களுக்குள்ள பராக்கிரமத்தைச் சீறிக்கோபிப்பானோ? முனிவரை சீறும் கொல் - தவசிகளாகிய முனிவர்களையே சீறுவானோ?, தீயோர் மறத்தையே சீறும் கொல் - அரக்கர் முதலிய கொடியோரது வலிமையைச் சீறுவானோ? மறையின் நிறத்தையே சீறும் கொல் - வேதத்தின் (மாறுபட்ட) தன்மையையே கோபிப்பானோ?' என - என்று பல வாறு கருதி, என் கொல் ஓ முடிவு என்று - அவனது இக் கோபத் தின் முடிவு யாதாகுமோ? என்று நடுங்கி,

இதுவும் அடுத்து வரும் இருபாடல்களும் குளகமாய் இயங்கி, 967-இல் உள்ள, 'இளையவன் சொன்னான்' என வினைகொண்டு பொருண் முடிவுபெறும்.

அறத்தைச் சீறுதல், அறங்காக்க வந்த அவனுக்கே கேடுவர, அதைக்கண்டும், அருளையே சீறுதல், கருணையின் நிலையனான அவ னிடத்தே கருணை அருள் செய்யவில்லையே என்றும், அமரர் திறத் தைச் சீறுதல், தேவர் பொருட்டே தான் திருவவதரித்துப்பல இன் னல்களையும் பொருட்படுத்தாது உதவிவர, அதனைப் பாராட்டாது அத்தேவர்கள் அவ்வுதவி மறந்து மறைந்துவிட்டனரே என்றும், மறையின் நிறத்தைச் சீறுதல், அறம் வெல்லும், என்று உறுதி கூறும் வேதம் நிலைமாறிப் பொய்த்ததே என்றும் கொள்ளற் பாலன. நிறம் - இயல்பு, குணம் ; (பிங்);

பி-ம். 3. முடிவென்று மறுகும்,

4. தகையோனென்று நடுங்க, தகையோனெனத் தியங்கா ; நடுங்கா; நிறத்திற்சேரயன் முதலுயிர் திகைத்துளம் நடுங்கா. (159)

**966.** நீல மேனியந் நெடியவன் மனநிலை திரிய
மூல காரணத் தவனொடு முலகெலா முற்றும்
கால மாமெனக் கடையிடு கணிக்கரும் பொருள்கள்
மேல கீழுற கீழன மேலுறும் வேலை,

நீல மேனி அ நெடியவன் - நீல நிறமான திருமேனியையுடைய அந்த நெடியோனான இராமபிரானுடைய, மனநிலை திரிய - மன நிலைமை (இவ்வாறு) மாறுபட, மூல காரணத்து அவன் ஒடு - படைப்புக்கு முதற்காரணனான பிரமனோடு, உலகெலாம் முற்றும் காலம் ஆம் என - (அவன் படைத்த) உலகங்கள் யாவும் தம் நிலை கெட்டு இலயம் ஆகும் கற்ப முடிவுக் காலம் இது என்று சொல்லும்படி, கடை இடு கணிக்க அரும் பொருள்கள் - இவ்வளவு என்று கணக்கிட்டுப் பார்த்து முடிவுகாண இயலாத பொருள்கள் யாவும், மேல கீழ்உற - மேலுள்ளவை கீழாகவும், கீழன மேல் உறும் - கீழுள்ளவை மேலாகவும் மாறி நிலை தடுமாறும், வேலை-நேரத்தில்,

பிரம கற்ப முடிவில் யாவும் அவனுடன் அழியும் என்பது; *1055.* கடையிடுதல் - கணக்கிட்டு முடிவுசெய்தல்; *18, 836;* 'மூலகாரணத்தவன் - பிரமன்; பால. அகலிகைப்: *47.* முற்றுங் காலம் - யுகாந்தகாலம்; கடையிடும் கணிக்கரும் பொருள்கள் - கணக்கினால் முடிவு காண்பதற்கரிய சராசரங்கள்; மேல கீழுற - வானம் பூமியிலே விழ. கீழன மேலுறும் - பூமியிலுள்ளவையெல்லாம் ஆகாயத்திலே செல்லும்' என்பன பழையவுரை.

பி - ம். 1. நன்னெடியவன், நீல மேனியன் முடிவுற முற்றும், தெரியா.
2. காரணத்தயனொ; முடிவுற முற்றும்.
3. கடையில் கணக்கரும்; கடையிடுங் கணக்கரும் கணித்தரும்.
4. கீழுறத்திரிந்தன விளம்புவதெவனோ; மேலுங் கீழுறக் கீழன மேலுறக் கிளர்ந்த; மவ்வேலை; மேல் கால்களைக்கீழென. *(160)*

பிராட்டி எடுத்துச் செல்லப் பெற்றமை அறிந்து, அவர்கள் அவ்வழியே தொடரல் 967–70.

**967.** தேரி னாழியுந் தெரிந்தனந் தீண்டுத லஞ்சிப்
பாரி னோடுங்கொண் டகன்றதும் பார்த்தனம் பயனின்
றோருந் தன்மையீ தென்னென்ப துரனிலா தவர்போல்
தூரம் போவதன் முன் றொடர்துமென் றிளையவன் சொன்னான்

இளையவன் - தம்பியாகிய இலக்குவன், 'தேரின் ஆழியும் தெரிந்தனம் - தேரினது சக்கரச் சுவடும் கண்டோம்; தீண்டுதல் அஞ்சி -

பிராட்டியின் திருமேனியைத் தீண்டி யெடுத்துச் செல்வதற்குப் பயந்து, பாரின் ஓடு கொண்டு அகன்றதும் பார்த்தோம் - அவள் இருந்த நிலத்தோடு தோண்டிப் பெயர்த்து எடுத்துச் சென்றதும் நாம் அறிந்தோம்; உரன் இலாதவர் போல் - வலிமையற்றவர்போல, பயன் இன்று - ஒருவித பலனும் இல்லாமல், ஒரும் தன்மை ஈது - நாம் ஆலோசிக்கும் இத் தன்மை, என் என்பது - என்னென்று சொல்வது! தூரம் போவதன் முன் - பிராட்டியை எடுத்துச் சென்றவன் வெகு தூரம் போவதற்கு முன்னே, தொடர்தும் - அவனை நாடிப் பின் தொடர்ந்து செல்வோம்' என்று சொன்னான் - இவ்வாறு இராமபிரானிடங் கூறினான்.

இராவணன் இலங்கையிலிருந்து மாரீசனிடம், 'விமானத்திலாரு மின்றிச்' சென்று (723), அம்மாரீசன் அவன் வேண்டுகோளுக்குச் 'சமைந்து போக'த் தான் 'வேறொரு நெறியிற்' சென்றவன் (763), பின்பு பிராட்டியைத தவத்தவர் வடிவு தாங்கி வஞ்சித்து, அவளை அபகரித்துத் தேரின்மீதேற்றிச் செல்லும் வழியில், சடாயுவின் வீரச் செயலால் அத்தேர் அழிய, அவன் அவளை மண்ணொடும் 'வீங்கு தோண்மீக்கொடு விண்ணினேகின (941) செய்தி, இங்கு நினைவு கூரத்தக்கது. வான்மீகத்தில் இச் செய்தி வேறுவிதமாக அமைந் துள்ளமை காண்க. தேரின் ஆழியும் தெரிந்தனம்: முன் (879) செய்யுளில், 'கொண்டானுயர் தேர்மிசை...விண்டான் வழியா யெழு வான்' என்று கூறி, இங்கு, 'தேரின் ஆழியும் தெரிந்தனம்...... தொடர்தும்' என்று சொல்லியிருப்பதையும், அடுத்த செய்யுளில், 'தேர் சென்ற நெடுநெறிபோனார்' என்றும், அதற்கடுத்ததில், 'சுவ டெலாமாய்ந்து விண்ணினேகிய தொருநிலை' கண்டனர் என்றும் கூறியுள்ளதையும் நோக்கும்போது, இராவணனுடைய தேர் வானத் தில் ஏறுவதன் முன் நெடுந்தூரம் நிலத்தில் ஓடியுள்ளமை புலனாகும். இவை மாறுபாடாகா; முன் செய்யுளில் தேர் சென்றமையை விரைவிற் கூறி, அது சென்றமுறையை இங்கு விளக்கியதாகும். இவ்வாறே, இந்நூலில் ஆசிரியர் பல இடங்களிற் கூறிச் செல்லுவது நோக்கி இன்புறற்பாலது.

பி - ம். 1. தேரினாழிபட்டிருந்ததும்; ஆழியும் தெரிந்தன; தெரிந்தது.
2. கொண்ட கழ்ந்தது; பார்த்தன ரயனின், பார்த்தனன் பயனின்.
3. தன்மையேதென்பது, தன்மை யீதென்பது; யீதென்பதவ் வுரனிலா; தன்மை யேதென்ன மற்றுணர் விலாதவர்.
4. போது முன்; தினையவன்றெழலும், (161)

968. ஆம தேயினி யாவதென் றமலனு மமையத்
தாம வார்கணைப் புட்டிலு முதலிய தாங்கி
வாம மால்வரை மரனிவை மடிதர வயவர்
பூமி மேலவன் றேர்சென்ற நெடுநெறிப் போனர்.

அமலனும் - பரிசுத்தனை இராம்பிரானும், (இளைய பெருமாளை நோக்கி), 'ஆம் - அவன் சொல்லுவது ஏற்றதே! அதே இனி ஆவது என்று - அதுவே இனிச் செய்யக்கூடியது' என்று எண்ணி, அமைய-அவன் கூற்றுக்கு இசைய, வயவர் தாம் வார் கணை புட்டிலும் முதலிய தாங்கி - வெற்றி வீரர்களான அவ்விருவரும் கயிற்றினால் பிணைக்கப்பட்ட நீண்ட அம்புப் புட்டில் முதலியவற்றை உரிய முறைப் படி பூண்டுகொண்டு, வாம மால் வரை - அழகிய பெரிய மலைகளும், மரன் இவை - மரங்கள் முதலியவைகளும், மடிதர - ஒடிந்து அழியும்படி, பூமிமேல் அவன் தேர் சென்ற - தரைமீது அவ் விராவணன் தேர் சென்றதான, நெடு நெறி போனர் - நீண்ட வழியைப் பின்பற்றிச் சென்றனர்.

வாமம் . அழகு ; ஒளியும் ஆம் ; (பிங்). மரன் - மரம் என்பதன் ஈற்றுப்போலி. வாம மால்வரை மரனிவை மடிதர, பூமிமேல் தேர் சென்ற நெடுநெறி போனர் என இயைத்துப் பொருள் கொள்ளப் பட்டது. இதனல் அக்காட்டில், வரையும், மரங்களும் சிதைந்து போகுமாறு வேகமாய் அவ்விராவணன் தேர் சென்றது என்பதும், அவ்வாறு சென்றதனல் அவன் தேர் சென்ற நெறி இராமலக்ஷ்மணர்களுக்கு நன்கு புலப்படுவதாயிற்று என்பதும் அறியப்படுவதாம்.

பி - ம். 1. றமலனு மெய்யில்.
2. புட்டிலை முதலிய, புட்டிலே முதலிய; தாங்க.
3. மரனிவை மடிந்தக, மரனிவை மாநிலம்படிய, மரனிவை மடிந்த வயவர்.
4. சென்றன நெறி போனர்; தேரி தென்றந் நெறி, தேர் சென்றவர் நெறிப்போனர். (162)

தேர்ச்சுவடு மறைந்தது கண்டு இராமன் ஏக்கமுற்றது.

969. மண்ணின் மேலவன் தேர்சென்ற சுவடெலா மாய்ந்து
விண்ணி னோங்கிய தொருநிலை மெய்யுறு வெந்த
புண்ணி னூடுறு வேலென மனமிகப் புழுங்கி
எண்ணி நாமினிச் செய்வதென் னிளவலே யென்றான்.

அவன் தேர் மண்ணின்மேல் சென்ற சுவடு எலாம் மாய்ந்து - இந்த இராவணனுடைய தேர் தரைமீது சென்ற அடையாளம் யாவும் இல்லாமற்போய், விண்ணின் ஓங்கியது - வானத்தில் ஓங்கிச் சென்றதான, ஒரு நிலை மெய் உற - ஒரு நிலைமை உண்மையாகத் தோன்ற, வெந்த புண்ணின் ஊடு - முன்னமே தீயால் வெந்து போயிருந்த ஒரு புண் வழியே, உறு வேல் என - ஒரு வேல் ஊடுருவிச் சென்றதுபோல, மனம் மிக புழுங்கி - இராமபிரான் மனம் மிகத் தவித்து, 'இளவலே - தம்பீ ! நாம் இனி எண்ணி செய்வது என் - நாம் இனிமேல் ஆராய்ந்து செய்யக்கூடிய காரியம் யாது?' என்றான் - என்று (இலக்குவனை) வினவினான்.

சுவடு - தடமும் ஆம். மெய்யுறு வெந்த புண்ணின் என்றும், ஒரு நிலை மனமிகப் புழுங்கி, என்றும், இயைத்துப் பொருள் கொண்டாரும் உளர். இனி, ஒரு நிலை விண்ணின் ஓங்கியது என இயைத்து - ஓர் இடத்தில் அத்தேர் வானில் எழுந்தது என்று தென்பட்டதென் ஒரு வினை வருவித்துப் பொருள் கூறினார் ஒரு சாரார். புண்ணில் வேல் நுழைந்தாற்போல ; அயோத். கிளைகண்டு, 58 ; சுந்தர. 420 ; 484 ; கலித். 83 : 30 ; 84 : 30 ; 120 : 17 ; பெருங். 1. 54 : 46 ; சீவக 284. 'சுவடெல்லாம் மாய்ந்து விண்ணினோங் கியது - வண்டில் தடமொழிந்து தேர் ஆகாயத்தில் போனது' என்பது பழையவுரை. இராவணனின் தேர் நெடுந்தூரம் தரைமீது ஓடிப் பின் விண்ணில் ஏறிற்று என்பது இதனால் புலப்படுகிறது.

பி - ம். 1. தேர்சென்ற நெறியெலா மாய்ந்து, சுவடுபின் மாய்ந்து.

2. விண்ணினேகிய, விண்ணினேக்கிய, விண்ணிலோங்கிய; னேங்கியதெனக் கண்டு மெய்யுற.

4. எண்ணினுமினிச்.

இலக்குவன், தேர்சென்ற தெற்குத் திசைநோக்கிச் செல்வோம் என்றல்.

970. தெற்கு நோக்கிய தெனும்பொரு டெரிந்ததத் திண்டேர்
மற்கு நோக்கிய திரள்புயத் தண்ணலே வானும்
விற்கு நோக்கிய பகழியி னெடிதன்று விம்மி
நிற்கு நோக்கிலென் பயனென விளையவ னேர்ந்தான்.

(அது கேட்டு), இளையவன் - தம்பியாகிய இலக்குவன், (இராமபிரானை நோக்கி), மற்கு நோக்கிய திரள் புயத்து அண்ணலே - மற்போரை எதிர் நோக்கிய பருத்த தோள்களையுடைய பெரியோனே! அ திண் தேர்-அந்த வலிய தேர், தெற்கு நோக்கியது எனும் பொருள் தெரிந்தது – தென் திசையை நோக்கிச் சென்றது என்னும் உண்மை தெரிவது ஆயிற்று; வானும் - அத்தேர் சென்றதாக நாம் கருதும் வானமும், விற்கு நோக்கிய பகழியின் நெடிது அன்று - (உமது) வில்லினின்று புறப்படும் அம்பு செல்லக்கூடிய தூரத்தினும் தொலையில் உள்ளது அன்று; (அதாவது, அம்பு செல்லும் எல்லைக்குள் உள்ளது); விம்மி நிற்கு நோக்கில் என் பயன் - மனம் (ஏக்கத்தால்) விம்மலுற்றுத் தவித்துச் செயலற்று நின்றால் என்ன பயனுடைத்தாகும்? (இனி, வீண் ஆலோசனை செய்து தாமதிப்பது பயன்தராது என்றபடி), என - என்று, நேர்ந்தான் - கூறினான்.

பொருள் - உண்மை; 'வேதங் கண்ணிய பொருள்' (உயுத்த. இராவணன்வதை 1.) 'பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு' (குறள். 5). விற்கு, மற்கு: உருபு மயக்கங்கள்; இவை செய்யுள் விகாரங்களும் ஆம். 'மற்கு நோக்கிய திரள்புயத் தண்ணலே,' என்றும், விற்கு நோக்கிய பகழியின் நெடிதன்று என்றுங் கூறியது, என் செய்வதென்று அறியாமல் விம்மிய நிலையில் இருந்த இராமபிரானுக்கு, ஆறுதலும் ஊக்கமும் உண்டாகக் கூறியவை என்க. இனி, விம்மி நோக்கிது நிற்கு என் பயத்தது எனப் பாடங்கொண்டு இயைத்து, 'விம்முற்று வீணே நோக்கி நின்றால் உமக்கு உண்டாகும் பயன்யாது' எனப் பொருள் கூறினாரும் உளர். இவ்வாறு கூறுதல், இடித்துரைக்கும் முறையில் இருப்பதால், அது இளையபெருமான் தன்மைக்கும் இராமபிரான்பால் அவன் கொண்ட மதிப்புக்கும் குறைவாகும்; ஆதலால், பொருந்தாமை காண்க. 'வானம்.................நெடிதன்று - அம்பின் வேகத்தினும் ஆகாயம் பெரிதோ; அப்படியிருக்க

விசாரமிட்டு நிற்பதிற் பயன் யாது என்று பொருள்' என்பது, பழையவுரை. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 1. தெறிந்தறித்திண்டேர்; நோக்கிய தேனுமதி யாருட்டெரிந்தது.

2. தண்ணலே வானம், தண்ணல்யாம் வலிசோர்.

3. னெடிதென்று விம்மி; பகழியிற் சென்றிடர் விம்மி, பகழியி ஞெடிதென்று விம்மி.

4. நிற்கு நோக்கிதென் நிற்கு நோக்கியென், நிற்க நோக்கி லென, நிற்க நோக்கலென், நிற்க நோக்கிய, நிற்கு நோக் கென் கொள்பயனிதெ, நிற்கி னூக்கமென்பயந்த தென்றினை யனிகழ்த்தான், பயனிதென், நிற்கு நோக்கினன் பயந்ததென், நிற்கும் நோக்கென்கொல் பயந்தது. (164)

## செல்லும் வழியில் அவர்கள் கண்டவையும் சடாயுவே இவை செய்திருப்பான் என்று கொண்டமையும் 971–80.

971. ஆகு மன்னதே கருமமென் றத்திசை நோக்கி
ஏகி யோசனை யிரண்டுசென் றூரிடை யெதிர்ந்தார்
மாக மால்வரை கால்பொர மறிந்தது மானப்
பாக வீணையின் கொடியொன்று கிடந்தது பார்மேல்.

'அன்னதே கருமம் ஆகும் என்று - அதுவே நாம் செய்யத் தக்க செயலாகும்' என்று (இராமபிரானும் உடன்பட்டு), அ திசை நோக்கி ஏகி - அந்தத் தெற்குத் திசையை நோக்கிச் சென்று, யோசனை இரண்டு சென்றூர் - இரண்டு யோசனை தூரம் கடந்து சென்ற அவ்விருவரும், இடை - அவ்வழியிடத்து, மாக மால் வரை கால் பொர மறிந்தது மான - வானளாவிய பெரிய மலை யொன்று பெருங் காற்றுத் தாக்க ஒடிந்து விழுந்ததேபோல, பாக வீணையின் கொடி ஒன்று - துண்டிக்கப்பட்ட வீணை உருவம் வரையப் பெற்ற கொடி ஒன்று, பார்மேல் கிடந்தது எதிர்ந்தார் - தரைமீது கிடந் ததை எதிரே கண்டனர்.

யோசனை: பத்துமைல் தூர நீட்டல் அளவு; பிறவாறு சொல்வாரும் உளர். வீணைக்கொடி, இராவணன்கொடி; 911; உயுத்த. இராவணன்வதைப்: 34.

பி - ம். 2. சென்றேங்கிடை, சென்றேரிடை, சென்றுயிடை; நேர்ந்தார். (165)

3. முறிந்தது மானப்,

972. கண்டு கண்டக ரோடுமக் காரிகை பொருட்டால்
அண்ட ராதியற் காரமர் விளைத்ததென் றயிர்த்தான்
துண்ட வாளினிற் சுடர்க்கொடி துணிந்த தென்றுணராப்
புண்ட ரிகக்கண் ணமலனுக் கிளையவன் புகன்றான்.

கண்டு - அவ் வீணைக் கொடியைப் பார்த்து, அ காரிகை பொருட்டால் - அந்தப் பிராட்டியை விடுவிக்கும் பொருட்டாக, கண்டகரோடு - அக்கொடியோருடனே, அண்டர் ஆதியர்க்கு - தேவர் முதலானவர்களுக்கு, ஆர் அமர் விளைந்தது என்று - அரிய போர் ஒன்று ஏற்பட்டது என்று, அயிர்த்தான் - அந்த இராம பிரான் ஐயங்கொண்டான் ; (ஆனால்), இளையவன் - தம்பியாகிய இலக்குவன், துண்ட வாளினில் - சடாயுவின் மூக்காகிய வாளால், சுடர் கொடி துணிந்தது என்று உணரா - ஒளியையுடைய (பகைவனது) அந்த வீணைக்கொடி துண்டு பட்டுள்ளது என்று உணர்ந்து, புண்ட ரிகக் கண் அமலனுக்கு - தாமரை மலர்போன்ற கண்களையுடைய இராமபிரானுக்கு, புகன்றான் - எடுத்துரைத்தான். (புகன்றது, அடுத்த செய்யுளால் விளங்கும்).

கண்டகர் - முட்போல் கொடிய பாவிகள் ; 734, உரை. துண்டம்- மூக்கு : 182; துண்டவாள் ; 182 ; 913, புண்டரிகக் கண் அமலன் ; இராமபிரான் கண்களுக்குத் தாமரை மலர்களை ஒப்பிடுவது இந் நூலிற் பரக்கக் காணலாம்.

இராமபிரான் தன் மயக்க நிலையில், போர் புரிந்தவர் தேவர் முதலியோரென்றும், அவர் பலரென்றும் பகைவரும் பல ரென்றும் அயிர்க்க, இலக்குவன் தன் சாந்த நிலையில் நின்று, போரிட்டவன் சடாயு என்று நிச்சயமாகவும், பகைவன் இராவணன் என்று சந்தேகித்தும் கூறிய நுட்பம் காண்க. பழையவுரை, ' புண்ட ரீகக் கட்புரவலற் புரவலன் புகல்வான்,' என்று பாடங்கொண்டு, ' தாமரைக் கண்ணனை இராமனைக் காக்கும் இலக்குவன் சொல் வான் ' என்று பொருள் கூறும்.

பி - ம். 2. அ்ண்டாதிபற், அண்டராதியராரமர், அண்டசாதிபர்க், அண்ட ரானவமரார் விளைத்தார்களென்றயிர்த்தான்.

3. துண்ட வாளியிற், துண்டவாளியின் றுடர்கொடி ; துணரான்.

4. புனல்வரைப்புரவலன், புரவலர்புரவலன் ; புகல்வான். (166)

973\. நோக்கி ஞலைய நொய்திவ ணெய்திய நுந்தை
மூக்கி ஞலிது முறிந்தமை முடிந்தான் மொய்ம்பின்
தாக்கி ஞனடு வடுத்தது தெரிகிலந் தமியன்
யாக்கை தேம்பிடு மெண்ணரும் பருவங்க ளிறந்தான்.

'ஐய - ஐயனே! நோக்கினல் - கூர்ந்து பார்த்தால், இவண் நொய்து எய்திய - இங்கு விரைவில் (பிராட்டிக்குற்ற நிலைமை யறிந்து) வந்த, நுந்தை - நும் தந்தையாகிய சடாயுவின், மூக்கினல் இது முறிந்தமை முடிந்தது - மூக்கால் இந்தக் கொடி முறிந்து வீழ்ந் துள்ளது என்பது முடிவாக அறியத்தக்கதாகும்; மொய்ம்பின் தாக்கினன் - வலிமையோடு (அப்பகைவனை) அச்சடாயு தாக்கியிருப் பார்; நடு அடுத்தது - அதற்கு இடையே நேர்ந்தது, தெரிகிலம் - நாம் அறிய முடியாதவரா யுள்ளோம்; எண் அரும் பருவங்கள் இறந் தான் - கணக்கிட முடியாத காலம் கடந்தவரான அந்தச் சடாயு, தமியன் யாக்கை - துணையின்றித் தனியே வந்து போரிட்டதால், அவன் உடல், தேம்பிடும் - (இப்பொழுது) களைப்புற்றுச் சோர்வுறு நிலையதாகும்; ஆல்: அசை.

தேம்புதல் - வாடுதல், தளர்வுறுதல்; 'கொழும்பதிய குடி தேம்பி' (மதுரைக். 167.); 'ஊடியார் நலந்தேம்ப' (கலிந். 68: 12.) கொடி அறுந்துள்ள முறையைப் பார்த்து, 'இது மூக்கினல் முறிந்தது' என்று கூறிய இளையோனின் அறிவு நுட்பம் காண்க. சடாயு பல காலம் வாழ்ந்தவன்; 184, 189, 201; உயுத்த. அங்கதன்றூது; 5. இதுவும், அடுத்த செய்யுளும் இலக்குவன் கூற்று. இறந்தான், என்றதால் தொனிக்கும் பொருளையும் காண்க.

பி-ம். 4. ணெய்தினனுந்தை.
3. லறிந்திலன்றமியேன், தெறிந்திலம்.
4. தேம்பிட வெண்ணரும்; பருவங்களறிந்தான். (167)

974\. நன்று சாலவு நடுக்கரு மிடுக்கின முன்னம்
சென்று கூடலாம் பொழுதெலாந் தடுப்பது திடனல்
வென்று மீட்கினு மீட்குமால் வேறுற வெண்ணி
நின்று தாழ்த்தொரு பயனிலை யென்றனு நெடியோன்.

'சாலவும் நன்று - சடாயு வந்து எதிர்த்திருப்பின் அது மிகவும் நல்லதே ஆகும்; நாம் நடுக்கரும் மிடுக்கின்-நாம் பிறரால் தடுக்கமுடி யாத வேகத்தோடு, முன்னம் சென்று-மேலே சென்று, கூடலாம்-அச் சடாயுவுடன் போரில் கலந்துகொள்வோம்; பொழுது எலாம் தடுப்பது

திடன் - அச்சடாயு இற்றைப்பொழுது முழுவதும் அப்பகைவனைத் தடுத்துத் தடைசெய்வது நிச்சயம்; வென்று மீட்கினும் மீட்கும் - அச்சடாயு தானே அப்பகைவனை வென்று பிராட்டியை மீட்டாலும் மீட்பான்; வேறு உற எண்ணி - வேறு ஒரு விதம் தோன்ற நாம் எண்ணி, நின்று தாழ்த்து ஒரு பயன் இலை - இங்கு வீணே நின்று தாமதித்து ஒரு பயனும் ஏற்படுவதில்லை;' என்றலும் - என்று இளையவன் எடுத்துக்கூறியதும், நெடியோன் - பெரியோனான இராம பிரான், ஆல் : இரண்டிடத்தும் அசைகள்.

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய் இயைந்து, கண்டார் என்னும் வினைகொண்டு முடியும். திடன் : திடம் என்பதின் ஈற்றுப்போலி. ஆல் என்பன இரண்டையும் எதிர்கால வினை யெச்ச விகுதிகளாகக்கொண்டு பொருள் கூறலும் அமையும்; மீட்கும் - மீட்போம் என்று பன்மைத்தன்மையிலும் பொருள் உரைக் கலாம். உற எண்ணி - ஆழ்ந்து யோசித்தும், என்னலும் ஆம்.

பி - ம். 1. நடுக்கிலமிடுக்குள நாமும்; மிடுக்கினனுமும், மிடுக்கின்னு முன்னம்; நடுக்கு மிடுக்கினனு முன்னம்; மிடுக்கினம் நாமும்.
2. சென்று கூடுறும் பொழுதவன் றடுப்பதுந் திடமால்.
3. வெற்றியேறெண்ணி.
4. நின்று தாழ்ந்தொரு; பயனில. (168)

975. தொடர்வதேநல மாமெனப் படிமிசைச் சுற்றிப்
படருங் காலெனக் கறங்கெனச் செல்பவர் பாரின்
மிடல்கொள் வெஞ்சிலை விண்ணிடு வின்முறிந் தென்னக்
கடலின் மாடுயர் திரையெனக் கிடந்தது கண்டார்.

'தொடர்வது ஏ நலம் ஆம் என - அவ்வாறு பின்பற்றிச் செல்வதே நல்லது ஆகும்' என்று, (நெடியோன் கூற, இருவரும்), படிமிசை சுற்றி படரும் கால் என - புவியின்மீது சுற்றிச்செல்லும் சுழல் காற்றுப் போலவும், கறங்கு என - காற்றாடி போலவும், செல்ப வர் - சென்றவர், (ஓரிடத்தில்), விண் இடு வில் முறிந்து அன்ன - வானில் தோன்றும் இந்திர வில் முறிந்து வீழ்ந்தது போலவும், கடல் மாடு உயர் திரை என – கடலினிடத்து உயர்ந்து விளங்கும் அலை போலவும், தரையில் - தரைமீது, மிடல் கொள் வெம் சிலை கிடந்தது கண்டார் - வலிமை கொண்ட ஒரு கொடிய வில் கிடந்த தைப் பார்த்தனர்.

விண்ணிடு வில்; 'வானிடு வில்லின்' (நாலடி. கடவுள் வாழ்த்து); 'வானிடு சிலையிற் றோன்றி' (சீவக. 951). கறங்கு: கறங்கு தல், சுழலுதல் என்னும் தொழிலடியாகப் பிறந்த சொல்; ஆதலின், கறங்கு என்பது பம்பரத்திற்கும் ஆம்; 'சத்தவொலியுஞ் சுழலுங் கறங்கே' (பிங்) என்றமையும் நோக்குக. கறங்கு; 50, 494, 517; சுந்தர. 786, 803; உயுத்த. கும்பகருணன் வதைப்: 161. இராவணன் சிலைக்கு, வானவில்லும், கடல் அலையும் உவமைகள். 'வில்முறிந் தென்ன' என்றதால், அவர்கள் கண்டவை வில்லின் துண்டங் களாமென்க; சடாயு இராவணன் வில்லை மூலத்தில் ஒடித்தது; 921. அலை என்றமையும், அத்துண்டங்களை என்க.

பி - ம். 1. மிசை சுற்றி.

2. செல்லுவார் பார்த்தார், செல்பவர் பார்த்தார்; செல்பவன் பார்த்தான்.

3. மண்ணிடை விழுந்திரு துணியாய். (169)

976. சிலைகி டந்ததா லிலக்குவ தேவர்நீர் கடைந்த
மலைகி டந்தன்ன வலியது வடிவினுன் மதியெண்
கலைகி டந்தன காட்சிய திதுகடித் தொடித்தான்
நிலைகிடந்தவா நோக்கென நோக்கின னின்றான்.

(அதனைக் கண்டு, இராமபிரான்), 'இலக்குவ - லக்ஷ்மணா! கிடந் தது சிலை - இங்குக் கிடப்பதான இவ்வில், தேவர் நீர் கடைந்த மலை என வலியது - தேவர்கள் பாற்கடலைக் கடைந்த மந்தர மலை போன்று வலிமையுள்ளதே ஆகும்; வடிவினால் - இஃது உருவத்தால், மதி எண் கலைகிடந்து அன்ன - சந்திரனின் எட்டாம் நாள் பிறை கிடந் தது போல, காட்சியது - தோற்றத்தையுடையது; இது கடிது ஒடித்தான் - இந்த வில்லை விரைவில் ஒடித்தவனது, நிலை கிடந் தவா - வலிமை நிலை இருந்த தன்மையை, நோக்கு என - நீ ஊகித் துப் பார்! என்று கூறி, நோக்கினன் நின்றான் - இராமபிரானும் அந்த வில்லை அதிசயத்துடன் பார்த்து நின்றான்,

தேவர்கள் கடைந்தது பாற்கடலை; ஆதலால், இங்கு நீரைப் பாலுக்கு இலக்கணையாகக் கூறப்பெற்றது என்க; இனி, தேவர்கள் கடைந்தது உவர் நீர்க்கடலே என்று கூறுவாரு முளர்; மந்தர மலை, மதி எண்கலை; இவை வில்லுக்கு உவமைகள். ஒடித்தான் நிலைகிடந் தவா என்று இயைக்க. ஒருசுவடியில் இச்செய்யுள் பின்வருமாறு காணப் பெறுகிறது.

சிலைகிடந்த தாலிலக்குவ தேவர்நீர் கடைந்த
மலைகிடந்த போற்கண்டது மற்றிதன் வலத்திற்
கலைகடந்த ருங்கடுப்பி னனிதுகடி தொடித்தோ
னிலைகிடந்த மற்றிதனிடை நோக்கென நின்றான்.

இச் செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. சிலை கிடந்ததோ ளிலக்குவா ; நீர்கடந்த,
2. மலைகிடந்தென, கிடந்தன, கிடந்தென்ன ; வலியவேல்.
3. காட்சியனிது ; கடித்தொடித்தான், பிடித்திறுத்தான் ; காட்சி யதிது கடிதொடித்தான்.
4. நிலை கடிந்தவா. (170)

977. நின்று பின்னரு நெடுநெறி கடந்துற நிமிரச்
சென்று நோக்கினர் திரிசிகைக் கொடுநெடுஞ் சூலம்
ஒன்றும் பல்கணை மழையுறை புட்டிலோ ரிரண்டும்
குன்று போலவண் கிடந்தகண் டதிசயங் கொண்டார்.

நின்று - அச்சிலையை நோக்கி நின்று, பின்னரும் - பிறகும், நெடு நெறி கடந்து - நீண்ட வழியை அவர்கள் கடந்து, உற நிமிர சென்று - பெரிதும் நேராகச் சென்று, திரி சிகை கொடு நெடும் சூலம் ஒன்றும் - மூன்று தலைகளோடு கொடிய நீண்ட சூலம் ஒன்றும், பல் கணை மழை, உறை - பல அம்புகளின் தொகுதிகள் தங்கியுள்ள, புட்டில் ஓர் இரண்டும் - தூணிகள் இரண்டும், குன்றுபோல் - மலைகளைப்போல (பெரியனவாய்), அவண் கிடந்த - அங்கே கிடந்தவற்றை, நோக்கினர் கண்டு - தெரியப் பார்த்து, அதிசயம் கொண்டார் - வியப்புற்றவர் ஆனார்.

திரிசிகைச்சூலம் ; 922. மழை : மிகுதியைக் குறிக்க வந்தது ; மழைத் தாரைபோன்று பல அடர்ந்துள்ள அம்புகளுக்கு, மழை என்பது, உவமையோடு கூடிய முதலாகு பெயராம் ; அதாவது, இருமடியாகு பெயர் ஆயிற்று என்னலும் ஒன்றும். குன்றில்-மழையுறைதல் போல, அம்புகள் தூணிகளில் அடங்கியிருந்தன என்க. இராவணன் இரண்டு புட்டில்கள் பூண்டமை சொல்லப்பெற்றது.

பி-ம். 1. கடந்துடனிமிரச்.
2. நோக்கினன் ; திரிசிரத்தொளிர் நெடுஞ்சூலம், திருநெடுஞ்சூலம், திணிநெடுஞ் சூலம்.
3. ஒன்று பல்கணை மழையுறு ; மழைநிறப், மழையுறைப், மழை யுறப், மழையுறழ் ; ஒரொன்றும்.
4. கிடந்ததென் ; குன்று போல்பயர் கிடந்தன குறுகினருற்றார்,

**978.** மறித்துஞ் சென்றனர் வானிடை வயங்குற வழங்கி
எறிக்குஞ் சோதிகள் யாவையுந் தொக்கன வெனலாய்
நெறிக்கொள் கானக மறைதர நிருதர்கோ னெஞ்சில்
பறித்து வீசிய கவசமுங் கிடந்தது பார்த்தார்.

மறித்தும் சென்றனர் - அவ்விடம் விட்டு மீண்டும் அப்பாற் சென்ற இராமலக்ஷ்மணர்கள், வான் இடை - ஆகாயத்தினிடத்து, வயங்கு உற - விளக்கம் உண்டாக, வழங்கி - தம்மிடமிருந்து அளித்து, எறிக்கும் - அதனால் ஒளி வீசும், சோதிகள் யாவையும் - சந்திரன் சூரியன் மற்ற கிரகங்கள் நட்சத்திரங்களின் ஒளிகள் யாவும், தொக்கன எனல் ஆய் - ஒன்று சேர்ந்துள்ளன என்று சொல்லும்படி ஆகி, நிருதர் கோன் நெஞ்சில் பறித்து வீசிய - அரக்கர்க்கரசனான இராவணன் மார்பினின்று பறித்து (சடாயு) வீசியெறிந்ததான, கவசமும் - கவசமும், நெறிகொள் கானகம் மறைதர கிடந்தது - அவர்கள் வழி மேற்கொண்டு சென்ற காடு மறையும்படி அங்குக் கிடந்ததை, பார்த்தார் - கண்டனர்.

சென்றனர் கவசமும் பார்த்தார் என வினை முடிவு கொள்க. அக்கவசம், சோதிகள் யாவையும் தொக்கன எனலாய், கானகம் மறை தரக் கிடந்தது என்க; கவசத்தை சடாயுபறித்து வீழ்த்தியது; 917.

பி-ம். 1. மறித்துச் சென்றனர். 2. தொக்கன வெனலரம்.
3. நெறிக் கொளாகமும்; கானகமுறைதர.
4. கறித்து வீசிய கவசமுங் கிடந்தது கண்டார் (172)

**979.** கான்கி டந்தது மறைதரக் கால்வயக் கலிமாத்
தான்கி டந்துழிச் சாரதி கிடந்துழிச் சார்ந்தார்
ஊன்கி டந்தொளி ருதிரமுங் கிடந்துள துலகின்
வான்கி டந்தது போல்வது கிடந்துழி வந்தார்.

கால் வய கலி மா - காலில் வலிய வேகம் பொருந்திய குதிரைகள், கான் மறைதர கிடந்தது - அங்குக் காடு இருந்த இடம் மறைந்து கிடக்கும்படியாக, கிடந்துழி - இறந்து கிடந்த இடத்தையையும், சாரதி கிடந்துழி - தேர்ப்பாகன் இறந்து விழுந்து கிடந்த இடத்தையும், சார்ந்தார் - அந்த இராம லக்ஷ்மணர்கள் அடைந்தனர்; (அவ்விடத்தில்), உலகின் - இப்புவியினிடத்து, வான் கிடந்தது போல்வது - வானமே வந்து கிடந்தது விளங்கியதுபோல, ஊன் கிடந்து - தசைகள் கிடந்து, ஒளிர் உதிரமும் கிடந்துள - விளங்கும் இரத்த

மும் சிதறிச் சிந்தினவையாய், கிடந்துழி - கிடந்த இடத்தில், வந்தார் - அவர்கள் வந்தனர்.

கான் கிடந்தது மறைதர - காட்டின இடம் மறைந்துபோக; மறைந்தமை அவ்விடத்தில், குதிரைகள், சாரதி இவை இறந்த உடல்கள் கிடந்ததால் என்க; 978-ஐயும் காண்க. கால் வலிய வேகம் - காற்றுப்போல வலிவுடன் கூடிய வேகத்தையுடைய என்றும் கூறலாம். 'கான் கிடந்து மறைதர - முன்கிடந்த கவசம் மறையும்படி அப்பாற் சென்ற பின்' என்பது பழையவுரை. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. தான் கிடந்தது, தான் கிடந்தன.
3. ஊன் கிடந்த தோளுதிரமும், ஊன் கிடந்த தோருதிரமும், ஊன் கிடந்தோ னுதிரமும்.
4. போல்பவன், போல்வதே, போல்வன. (173)

அவர்கள் பலகுண்டலங்களையும் பூண்களையுங் கண்டமை.

980. கண்ட லங்குதங் கைத்தலம் விதிர்த்தனர் கவினார்
விண்ட லந்துறந் திறுதியின் விரிகதிர்ப் பருதி
மண்ட லம்பல மண்மிசைக் கிடந்தென மணியின்
குண்ட லம்பல குலமணிப் பூண்களின் குப்பை.

இறுதியின் - கற்ப முடிவுக் காலத்தில், விரி கதிர் பல பருதி மண்டலம் - பரந்த கிரணங்களுடைய பல சூரிய மண்டலங்கள், கவின் ஆர் - அழகு பொருந்திய, விண் தலம் துறந்து - தமக்குரிய வான இடங்களை விட்டு நீங்கி, மண் இடை கிடந்து என - பூமி மீது வீழ்ந்து கிடந்தாற் போல விளங்கிய, குண்டலம் பல - குண்டலங்கள் பலவற்றையும், குல மணி பூண்களின் குப்பை-உயர்ந்த இரத்தினங் களின் தொகுதியையும், கண்டு - அந்த இராமலக்ஷ்மணர்கள் அங்குப் பார்த்து, அலங்கு தம் கை தலம் விதிர்த்தனர் - (வியப்பும் அச்சமுமுற்றவர்களாய், ஒளி வீசும் தம் கைகள் நடுக்கமுற்றனர்.

கற்ப முடிவுக் காலத்தில், சூரியன் முதலிய கோள்கள், தாரகை கள் எல்லாம் கீழே வீழ்ந்து அழிவுறும் என்பது நூன்மரபு; இது, 1009-ஆம் பாடலால் விளங்குவது காண்க. பருதி மண்டலம் பல: துவாதச ஆதித்யர்களைக் குறித்தது. இராவணனுடைய குண்டலங் களும், அவனணிந்திருந்த குலமணிப் பூண்களும், பல சூரியர்போல ஒளிவிட்டுக்கொண்டு அங்குக் கீழே கிடந்தனவற்றை இராம

லக்ஷ்மணர்கள் கண்டு, அதிசயமும் அச்சமுமுற்று நடுங்கி நின்றனர் என்பதாம். இராவணன் குண்டலங்களுக்கும் மணிப் பூண்களுக்கும் சூரியர்கள் உவமை; 557; சுந்தர. 407. குப்பை - குவியலும் ஆம். அலங்கு என்பதற்கு அசைந்தாடும் என்ற பொருளுண்டேனும், பின் விதிர்த்தார் என வந்துள்ளமை கருதி, அலங்கு என்பதற்கு இங்கு, ஒளி வீசும் எனப்பொருள் கொள்ளப்பட்டது; அலங்குதல் - ஒளி வீசுதல் (பிங்). கவின் ஆர் என்பதைப் பருதியோடியைத்துச் சிறப்பித்துப் பொருள் கூறலும் அமையும். இப்பாடல் விற்பூட்டுப் பொருள்கோள் என்பதாம்.

பி - ம். 1. கண்டு நாயக னிளவலுக் குரைத்தனன் கவினூர்.
2. துறந்திவ்வயின், துறந்துறுதியால் விரிகின்ற பருதி; விரிகதிர் வெய்யோன்.
3. மண்ணிடைக் கிடந்தன; கிடந்தென.
4. குண்டலங்கள் பல............குவியல், குண்டலங்களுங் குலமணிப்பூண்களுங் குறிக்கின். (174)

இராமபிரான் இலக்குவனை நோக்கிச் சடாயுவுடன் பலர் போர் புரிந்தனர் என்றது.

981. தோள ணிக்குலம் பலவுள குண்டலத் தொகுதி
வாளி மைப்பன பலவுள மணிமுடி பலவால்
நாள னைத்தையுங் கடந்தனன் றமியனந் தாதை
ஆளி யொப்பவர் பலருளர் பொருதன ரிளையோய்.

(அப்போது இராமபிரான்), 'இளையோய் - தம்பீ! தோள் அணி குலம் பல உள - தோள்களில் அணியும் ஆபரணங்களின் தொகுதி பல (இங்குக் கிடப்பன) உள்ளன; வாள் இமைப்பன குண்டல தொகுதி பல உள - ஒளி வீசுவனவான குண்டலங்களின் கூட்டம் பல உள்ளன; மணிமுடி பல ஆல் - இரத்தின கிரீடங் களும் பல உள்ளன; ஆதலின், நாள் அனைத்தையும் கடந்தனன் நம் தாதை தமியன் - பல ஆயுட்காலங்களைக் கடந்தவனான நம் தாதையாகிய சடாயுவோ துணையின்றித் தனியே உள்ளவனாகவும், பொருதனர் - அவனோடு எதிர்த்துப் போர் புரிந்தவரோ, ஆளி மொய்ம்பினர் பலர் உளர் - சிங்கம் போன்ற வலியுடையோர் பலராக உள்ளாராகவும் (காண்கின்றது).

தோளணி - தோள்களில் வீரர்கள் அணியும் வளை முதலிய ஆபரணங்கள். சடாயு பல காலங்கள் கடந்தவனாதலின், நாளனைத்

ணையும் கடந்தவன் என்னப்பட்டான்; சடாயுவின் முதுமை இங்குக் கூறப்பெற்றது; 'கற்பங்கள் பல கண்டுளானன்றனே' (184); 'ஊழி காண்கிற்கும் வாணு ளுந்தையை யுயிர்பண் டுண்டான்' (உயுத்த. அங்கதன்றூதுப்: 5.) என்பனவற்றால் இது விளங்கும். நாள் கடந்தவன், என்ற கூற்றால் இராமபிரான் தான் அறியாமலே சடாயுவின் முடிவைக் குறித்ததும் காண்க. ஆளி - யாளி; சிங்கம் யானை இவற்றின் உருவொடு, பறவைபோன்று வலிய சிறகுகளையும் உடைய ஒரு கொடிய பிராணியும், ஆம்; இஃது இப் பொழுது காணப்பெறுவ தன்று.

பி - ம். 1. தோளணிக்கலம், 2. யாளிமைப்பின,
3. கடந்தனன் முதையோ தமியன்; றமியனந் தந்தை; றம்பி நந்தாதை.
4. பொருதனரையா; பலருள்ராகுமற் றினையோய். (175)

இலக்குவன் பொருதவன் இராவணன் என்றது.

982. திருவி னாயக னுரைசெயச் சுமித்திரைச் சிங்கம்
தருவி னீளிய தோள்பல தலைபல வென்றால்
பொருது தாதையை யித்தனை நெறிக்கொடு போனான்
ஒருவ னேயவ னிராவண னாமென வுரைத்தான்.

திருவின் நாயகன் - இலக்குமி தேவியின் நாயகனான (திருமாலாகிய) இராமபிரான், உரைசெய - அவ்வாறு கூற, சுமித்திரை சிங்கம் - சுமித்திராதேவி குமாரனான சிங்கம் போன்ற பராக்கிரம முள்ள இலக்குவன், 'தருவின் நீளிய - மரம்போல நீண்டனவான தோள் பல - தோள்கள் பலவும், தலை பல என்றால் - தலைகளும் பல உள்ளன என்று சொல்லுமிடத்து, தாதையை இத்தனை பொருது - நம் தந்தையாகிய சடாயுவோடு இவ்வளவு போர் புரிந்து, நெறி கொடு போனான் - தன் வழிமேற் சென்றவன், ஒருவனே - ஒருவனே ஆவன்; அவன் இராவணன் ஆம் - அப்படிப்பொருதவனும் இராவணனே ஆவன்' என உரைத்தான் - என்று (ஆராய்ந்து) கூறினான்.

இராமபிரானைத் திருவினாயகன் என்பது, பால. வேள்விப் 52; அயோத். மந்திரப்: 48; கிட்கிந்தா கார்காலப்: 42. இலக்குவனைச் சுமித்திரைச்சிங்கம் என்பது; உயுத்த. கும்பகருணன் வதைப்: 207, 247. பலதோள் வளையங்களும் கிரீடங்களும் உடையவனான இராவணன் ஒருவனேதான் வந்து பிராட்டியை அபகரித்துச்

சென்றதோடு சடாயுவுடன் போரிட்டவனும் ஆவன் என்று இளைய பெருமான் தன் நுண்ணிய அறிவால் உணர்ந்து கூறினான் என்க. சடாயுவை இராமலக்ஷ்மணர் தம் தாதை என்பது; 210, 983, 984, 986, 1023, 1025; உயுத்த. வீடணனடைக்கலப்: 116, அங்கதன்றூது: 5.

பி-ம். 1. சுமித்திரைச் செம்மல். 2. தலைபல வென்றே. 3. நெறிக்கொண்டு, நெறியொடு. (176)

இராமபிரான் சடாயுவைக் கண்டு, அவர்மீது விழுந்து புலம்பியது 983–90

983. மடலு ளூட்டிய தாரிளை யோன்சொலை மதியா
மிடலு ளூட்டங்க டீயுக நோக்கினன் விரைவான்
உடலு ளூட்டிய குருதியம் பரவையி னும்பர்க்
கடலு ளூட்டிய மலையன்ன தாதையைக் கண்டான்.

மடல் உள் நாட்டிய - பூவிதழ்களை உள்ளே பிணைத்து அமைக்கப்பெற்ற, தார் இளையோன் - மாலையணிந்த தம்பியாகிய இலக்குவன், சொலை - சொல்லை, மதியா - (இராமபிரான்) நன்கு மதித்து ஏற்றுக்கொண்டு, மிடல் உள் - வலிய தன் மனமும், நாட்டங்கள் - கண்களும், தீ உக - கோபத்தால் நெருப்பைச் சிந்த, நோக்கினன் விரைவான் - அங்கு நாடிப்பார்த்துக்கொண்டு சென்று, உடல் உள் நாட்டிய - உடலை தன்னுள் நிலை நிறுத்தப் பெற்றிருந்த, குருதி பரவையின் - இரத்தக் கடலின்மீது, கடல் உள் நாட்டிய வரை என- முன் பாற்கடலில் அமுதம் கடைய நிறுத்திய மந்தரமலையே போலக் காணப்பட்ட, தாதையை கண்டான் - தன் தந்தையாகிய சடாயுவைப் பார்த்தான்.

தார் இளையோன், என்றது, அரசகுமாரனும் வீரனுமாதலின் உபசாரமாகக் கூறிய இலக்கணையாகும். சொலை: சொல்லை என்பதன் இடைக்குறை. மந்தரமலை, முன் பாற்கடலில் நாட்டப்பெற்றது போல, இங்குக் குருதிக் கடலில் நாட்டப்பெற்றிருந்த சடாயு உடல் என்க. சடாயுவுக்கு மந்தரமலை; 178. இரத்த வெள்ளத்தினிடையே ஒரு மலைபோற் கிடந்த சடாயுவை இராமபிரான் தூரத்திலிருந்து பார்த்து, இவன் அரக்கன் என்றும் அவனே பிராட்டியை அபகரித்து வந்து பக்ஷித்துவிட்டவன் என்றும் தீர்மானித்து, அவன்மீது சினந்து ஓர் அம்பை ஏவ எண்ணினான், என்று வான்மீகம், அத்யாத்மம் இரண்டும் கூறும். ஆனால் கம்பர் தம் கொள்கைக்கு ஏற்றவாறு நிகழ்ச்சிகளை மாற்றிச் செலுத்தும் திறம் நோக்கற்பாலது. இப்பொழுது இராமபிரான் வெகுண்டது

சடாயுவுடன் போரிட்ட கொடியோனைக் குறித்து என்க. குருதியம் பரவை : அம் சாரியை.

பி - ம். 1. மடலிளுட்டிய ; ரிளையோன் றனைமதியா ; சொன்மதியா ; சொல்மதியா, சொல்லைமதியா, னுரைமதியா ; மிடலினுட்டங்க.
2. விரைவாய், 3. உடலினுட்டிய.
4. கடலுநாட், கடலினுட்டிய ; வரையெனத், மலையென்ன, மலையெனத் ; கண்டார். (177)

984. துள்ளி யோங்குசெந் தாமரை நயனங்கள் சொரியத்
தள்ளி யோங்கிய வமலன்றன் றனியுயிர்த் தாதை
வள்ளி யோன்றிரு மேனியின் றழனிற வண்ணன்
வெள்ளி யோங்கலி லஞ்சன மலையென வீழ்ந்தான்.

(சடாயு விழுந்து கிடந்ததைக் கண்ட) ஓங்கு செம் தாமரை நயனங்கள் - சிறந்து விளங்கும் செந்தாமரை மலர்கள் போன்ற தன் கண்கள், துள்ளி சொரிய தள்ளி - நீர்த் துளிகளைச் சொரிந்து வெளியிட்டுக் கொண்டு, ஓங்கிய அமலன் - துன்பம் மேற்பட்ட பரிசுத்தனான இராமபிரான், தன் தனி உயிர் தாதை - தனது ஒப்பற்ற உயிர்போன்ற தந்தையும், வள்ளியோன் - வள்ளன்மையிற் சிறந்தோனுமான சடாயுவின், திருமேனியின் - திவ்ய சரீரத்தின் மீது, தழல் நிற வண்ணன் - நெருப்புப் போன்ற செந்நிற மேனியை யுடைய சிவபெருமானுடைய, வெள்ளி ஓங்கலில் - வெள்ளிமலை என்னும் வெண்ணிறக் கயிலை மலையின்மீது, அஞ்சனமலை என - ஒரு கருமை நிறமான மலை வீழ்ந்ததுபோல, வீழ்ந்தான் - (தான்) போய் விழுந்தனன்.

துள்ளி - துளி ; 'துள்ளிசோர் வெள்ளக் கண்ணன்' (1027); சுந்தர. 150. சடாயுவை வள்ளியோன் என்றது: ஆபத்திடைப் பட்ட பிராட்டியை விடுவிக்கும் பொருட்டுத் தன் உயிரையே கொடுத்த வள்ளலாதலின். தழல் நிற வண்ணன் - சிவபெருமான் ; 'எரிபோன் மேனிப் பிரான் ; (திருநாவுக்கரசர் தேவாரம்). சடாயுவுக்கு வெள்ளியோங்கல் உவமை; அவன் வெண்ணிறத்தோடு, மலைபோல் பெரிய உருவம் உடைமை பற்றி. இராமபிரானுக்கு அஞ்சனமலை ; 305 ; அயோத். தைல மாட்டுப். 52,

பி - ம். 1. நயன நீர் சொரிய.
2. யோங்கிய துயர்வரத் தனியுயிர்த்தந்தை.
3. மேனியிற் றழனிற, மேனிமேன் மழைநிற.
4. மஞ்சென மலையென விழுந்தான். (178)

985. உயிர்த்தி லன்னொரு நாழிகை யுணர்விலன் கொல்லென்
றயிர்த்த தம்பிபுக் கங்கையி னெடுத்தன னருவிப்
புயற்க லந்தநீர் தெளித்தலும் புண்டரீ கக்கண்
பெயர்த்துப் பயப்பய வயர்வுதீர்ந் தினையன பேசும்.

ஒரு நாழிகை உயிர்த்திலன் - (அவ்வாறு விழுந்த இராமபிரான்) ஒருநாழிகைக் காலம் வரையில் மூச்சு விடாது அடங்கி யிருந்தான்; உணர்வு இலன் கொல் என்று அயிர்த்த தம்பி - தன நினைவு இல்லாது போய்விட்டான் என்று ஐயமுற்ற இளைய சகோதரனை இலக்குவனும், புக்கு அம் கையின் எடுத்தனன் - அருகில் சென்று, அழகிய தன் கைகளினால் இராமபிரானைத் தழுவி எடுத்துக்கொண்டு, புயல் அருவி கலந்த நீர் தெளித்தலும் - மேகம் பொழிந்து மலை அருவியிற் கலந்துவந்ததான நீரை இராமபிரான்மீது எடுத்துத் தெளித்த அளவில், புண்டரீக கண் பெயர்த்து-(அவன்) தன் தாமரை மலர் போன்ற கண்களைத் திறந்து, பயபய - மெல்ல மெல்ல, அயர்வு தீர்ந்து - தனக்கு உண்டான சோர்வு நீங்கி, இனையன பேசும் - பின் வருமாறு பேசுவானானன். (பேசியவை அடுத்து வரும் பாடல்களிற் காண்க);

புயல் கலந்த நீர் - மேகத்தினின்று புதிதாய்ப்பொழிந்த குளிர்ந்த நீர். உணர்வு அற்ற நிலையில் மயக்க முற்றார்மீது குளிர்ந்த நீரைத் தெளித்தல் உணர்ச்சியை உண்டாக்கும் சைத்யோபசாரமாகும். புண்டரீகம் - தாமரை; இராமபிரான் கண்ணுக்குப் புண்டரீகம் உவமை; சுந்தர. 394, 578: பேசும்; திணைவழுவமைதி.

பி - ம். 3. தெளித்ததும்; புண்டரிகக்கண்.
4. பெயர்த்தும் பையவயர்த், பைப்பைய, பையபவியர்வுயிர்த்.

(176)

வேறு.

986. தந்தா தையரைத் தனயர் கொலை நேர்ந்தார்
முந்தாரே யுள்ளார் முடிந்தான் முனையொருவன்
எந்தாயே வெற்காக நீயு மிறந்தனையோ
அந்தோ வினையே னருங்கூற்ற மானேனே.

'தம் தாதையரை - தமது தகப்பன்மார்களின், கொலை நேர்ந்தார் - கொலைக்குக் காரணமாக ஆன, தனயர் - மைந்தர், முந்து ஆரே உள்ளார் - இதற்கு முன் யாரே உள்ளவராவர்? (ஒருவரும் இல்லை என்றபடி); முனை முடிந்தான் ஒருவன் - முன்னரே என் ஒரு தந்தையாகிய தசரதசக்கரவர்த்தி (யான் காரணமாக) முடிவடைந்தார்

எந்தாய் ஏ - என் தந்தையாகிய சடாயுவே! எற்கு ஆக - என் பொருட்டாக, நீயும் இறந்தனையோ - நீயும் இறந்து போனாயோ? அந்தோ - ஐயோ! வினையேன் - பாவியாகிய யான், அரும் கூற்றம் ஆனேனே - (உங்களிருவருக்கும்) சொல்லற்கரிய கொடிய யமனாக ஆகிவிட்டேனே!

முனை : முன்னை என்பதன் இடைக்குறை. எந்தாயே : ஏகாரம், புலம்பலில் விளிப் பொருளில் மிக்கு வந்தது. நீயும்: உம்மை, இறந்தது தழுவியதாக, தந்தை தயரதனைக் குறிப்பிட்டது. இனி, எங்களைக் காத்து வருவதாகக் கூறிய நீயும் என்றும், கற்பங்கள் பல கண்ட நீயும் என்றும், உயர்வு சிறப்பை உணர்த்திய உம்மை யாகவும், நீ ஒரு தந்தைதான் உள்ளாய் அந்த நீயும், என்று எஞ்சியது தழுவிய எச்ச உம்மையாகவும் கொள்ளலாம்; ஒப்பு. "நீயு நீங்கு தியோ நெறி நீங்கலாய்" 206. அந்தோ ; இரக்கத்தை யுணர்த்தும் சொல். இது முதல் 5 செய்யுட்கள் அவலச்சுவையில் அமைந்துள் ளமை காண்க. இச்செய்யுளும் அடுத்ததும் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. தந்தார்தமைக் கொலையு நேர்ந்தாரார் தாரணியின்; கொலை சூழ்ந்தார் தாரணியின், குலவ நேர்ந்தாரார் தாரணி.
2. முந்தானே யாவரினு, முந்தானே யுள்ளானே; முடிந்தான் முனை யொருவன்.
3. எந்தாயோ..........யிறந்தனையால்.
4. மானேனோ. (180)

987. பின்னுறுவ தோராதே பேதுறுவேன் பெண்பாலாள்
தன்னுறுவ றீர்ப்பான் றனியுறுவ தோராதே
உன்னுறவு நீதீர்த்தா யோருறவு மில்லாதேன்
என்னுறுவான் வேண்டி யிடருறுவே னெந்தாயே.

'எந்தாயே - என் தந்தையே! தனி உறுவது ஓராதே - நீ துணை யின்றித் தனியே இருப்பதைக் கருதாமலே, பெண்பாலாள் தன் - ஒரு பெண் (சீதை) ஆபத்தில் உள்ளாள் என்று அவளுடைய, உறுவல் தீர்ப்பான் - துன்பத்தை நீக்கி அவளைக் காக்கும் பொருட்டு, உன் உறவு நீ தீர்த்தாய் - உன்னையே பலிகொடுத்து உன் உறவின் கடமையை நீ செய்து முடித்தாய்; பின் உறுவது ஓராதே பேது உறு வேன் - (நானோ), இனி என்ன நடக்கப்போவது என்பதை உணராது துன்பத்திற்கு உள்ளாகி வருந்துபவனும், ஓர் உறவும் இல்லாதேன் - (சீதையையும் உன்னையும் விட்டுப் பிரிந்ததால்) இனி வேறோர் உறவு உலகில் உண்டு என்பதைப் பெருதவனுமான நான், என் உறுவான்

வேண்டி - இனி எதை அடைய விரும்பி, இடர் உறுவேன் - துன்பம் அடைவேன் ?

எந்தாயே : ஏகாரம் இரக்கத்தையுணர்த்தி நின்றது. உன் உறவு : மகன், மருகி என்ற உறவுகள். என் உறுவான் வேண்டி : இனி அடையக்கூடியது ஒன்றுமில்லை என்று வெறுத்துக் கூறிய தாம். இப்பொழுது இரங்குவதும் பயனற்றது என்று கூறியது.

பி-ம். 1. தோராதேன் ; பேதுறுவென், பெய்துறுவென்.
2. தன்னுறுத நீர்ப்பான்.
3. உன்னுறவுந் தீர்த்தாயே தீர்த்தாய் நீ.
4. யென்றுயே, யெந்தாயோ. (181)

988. மாண்டேனே யன்றே மறையோர் குறைமுடிப்பான்
பூண்டேன் விரத மதனு னுயிர்பொ றுப்பேன்
நீண்டேன் மரம்போல நின்றொழிந்த புன்றொழிலேன்
வேண்டேனிம் மாமாயப் புன்பிறவி வேண்டேனே.

'மறையோர் குறை முடிப்பான் - இருடிகளின் குறைகளைத் தீர்த்து வைப்பதாகக் கூறிய, விரதம் பூண்டேன் - சங்கற்பம் மேற் கொண்டுள்ளேன் ; அதனால் உயிர் பொறுப்பேன் - அதன் காரண மாகவே இந்த என் உயிரைத் தாங்குகின்றேன். (ஆனால்), மரம் போல நீண்டேன் - மரம் போல ஓங்கி வளர்ந்து, நின்று ஒழிந்த புன் தொழிலேன் - வீணே செயலற்று நின்று அழிந்து போவதான இழிந்த செயலையுடைய யான், மாண்டேனே அன்றே - நான் இறந் தவனே அல்லனோ? இ மாய புன் பிறவி வேண்டேன் வேண் டேனே - ஆதலின், இந்தப் பயனற்ற அற்ப மானிடப் பிறவியைச் சிறிதும் விரும்பினேன் அல்லேன் !

இராமபிரான் மறையோர் குறை முடிப்பதாக விரதம் பூண்டது; 134-39 ; 354. சடாயுவின் நிலையைக் கண்ட இராமபிரான், தன் செயலற்ற நிலையைக் கண்டு, தான் இருந்தும் இறந்தவனாகத் தன்னை வெறுத்துக் கூறியது இது. மரம், தனக்கும் பிறர்க்கும் வந்த இடர் நீக்காது நின்ற இடத்திலே இருப்பது கருதி, மரம்போல் நின்று, தான் பயனற்று வளர்ந்து நிற்பதை இகழ்ந்தபடி.

பி-ம். 1. மாண்டேனே யன்றே, மாண்டோய்தவத்து.
2. னுயிர் பொறுத்தேன், னுயிர் பொறுத்தே.
3. நின்றுலர்ந்த, நின்றுலர்ந்தேன்.
4. மாயமாம் புன்பிறவி வேண்டேனல். (182)

989. என்றாரம் பற்றுண்ண வேன்றாயைச் சான்றோயைக்
கொன்றானு நின்றான் கொலையுண்டு நீகிடந்தாய்
வன்றாட் சிலையேந்தி வாளிக் கடல்சுமந்து
நின்றேனு நின்றே னெடுமரம்போ னின்றேனே.

'என் தாரம் பற்று உண்ண - என் மனைவி பிறனால் அபகரிக்கப் பெற்றிருக்க, என்றாயை - அது கண்டு அவளை மீட்கும் பொறுப்பை யேற்று அப்பகைவனை எதிரிட்டு நின்ற உன்னை, சான்றோயை - மேலான குணச்சிறப்புடைய உன்னை, கொன்றானும் - கொன்ற அக் கொடியோனும், நின்றான் - இறவாது இன்னும் உயிர்கொண்டு வாழ் கின்றான்; நீ கொலை உண்டு கிடந்தாய் - நீயோ அவனால் கொல்லப் பட்டுக் கிடக்கின்றாய்; வல் தாள் சிலை ஏந்தி - வலிய அடிப் பாகங் களையுடைய வில்லைக் கையில் தாங்கிக்கொண்டு, வாளி கடல் சுமந்து- அம்புகளைக் கடல்போல மிகுதியாக (வீணே) சுமந்துகொண்டு, நின்றேனும் - நிற்கும் யானும், நின்றேன் - வாளா நின்றேன்! நெடு மரம் போல நின்றேன் - நீண்டுயர்ந்த மரம்போலப் பயனற்ற வனாய் நின்றேனே!

தாரம் - தாங்கிப் பாதுகாக்கத் தக்கவள் என்னும் பொருளைக் கொண்ட வடசொல். பற்றுண்ண, உண் என்பது, செயப்பாட்டு வினைப்பொருளை யுணர்த்தும் ஒரு விகுதி யாகும்; கட்டுண்டான், பிடியுண்டான் என்பன போல. வன் தாட்சிலை - வலிய அடிப்புறங் களையுடைய வில்; உயுத்த. நாகபாசப். 15; இதனைக் கால் என்றும் கூறுவதுண்டு; 914; 'காணு நெடுஞ்சிலை கால்வலி தென்பார்' (பால. கார்முகப்: 28). வாளிக்கடல்: கடல் என்றது மிகுதிபற்றி. நெடுமரம் போனின்றேனே: தன்னை மீண்டும் பெரிய மரத்திற்கு உவமையாக்கிக்கொண்டது, 988-ல் கூறியதை உறுதிப்படுத்திக் கூறியதாகும். இச் செய்யுளின் 3.4. அடிகளுக்கு ஒப்பு; அயோத். நகர் நீங்கு: 139.

பி - ம். 1. வென்றாதை சான்றோயை; பற்றியட லெந்தைதனை யிப்பொழு தில்.
2. கொலையூண்டு; நீ கிடத்தி.
3. வன்றோளின் வில்லேந்தி வாளிக்கடன் முகந்து.
4. நின்றேனெடு மரம்போல், நின்றேனே நின்றே, நின்றேனு நின்ற; போனின்றேனால்,

(183)

990. சொல்லுடையா ரென்போ லினியுளரோ தொல்வினையேன்
இல்லுடையாள் காண விரகுடையா யெண்ணிலாப்
பல்லுடையா யுன்னைப் படையுடையான் கொன்றேக
வில்லுடையே னின்றேன் விறலுடையே னல்லேனே.

'இல் உடையாள் காண- என் மனைக் கிழத்தியாகிய சீதை பார்த்திருக்க, விரகு உடையாய் - திறமையுள்ளோனே! எண் இலா பல் உடையாய் படை உடையான் - பல வலிய ஆயுதங்களை யுடையவனுமான பகைவன், கணக்கிட முடியாத பல பற்களையுடையோனே! உன்னை கொன்று ஏக - உன்னை கொன்று செல்ல, தொல் வினையேன் -பண்டைத் தீவினையுடைய நான், வில் உடையேன் நின்றேன் - வில்லைக் கையிலுடையவனாய் இதோ நிற்கின்றேன்; விறல் உடையேன் அல்லேனே - நான் வீரமுடையவன் அல்லனே! (இல்லாதவன் என்றபடி); இனி என் போல் சொல் உடையார் உளரோ - இனி, உலகில் என்னைப்போலப் புகழுடையவர் உளராவரோ? (ஆகார், என்றபடி).

விரகு - சாமர்த்தியம்; போர்த்திறம் 'தொல் வினையேன் இல்லுடையாள்' என இயைத்துப் பொருள்கொள்வாரும் உளர். எண்ணிலாப் பல்லுடையாய் என்று சடாயுவைக் குறிப்பிட்டதால், சடாயுவின் அலகில் இருபுறங்களிலும் மேலும் கீழுமாகப் பல கூரிய முட்கள் போன்ற பற்கள் இருந்தன என்று கொள்ளத்தக்கதாம். இனி, 'இறகுடையா யெண்ணிலா' எனப் பாடங்கொண்டாரும் உளர். இதனால், இராமபிரான் தான் இனிச் 'சொல்லுடையேனும், விறலுடையேனும் அல்லேன்' என்று தன்னை நொந்துகொண்டது ஆகும்.

பி-ம். 1. சொல்லுடையாதென்போ.
2. இல்லுடையாள் சோர்விற் குடையா யெண்ணில் நான், இல்லுடையாள் நாண; விரகுடையா னெண்ணிலாப்.
3. பல்லுடையானுன்னைப்; கொன்றேற்க, கொன்றகல.
4. விறலுடையா னல்லேனே; னில்லேனே. (184)

சடாயு சிறிது உணர்வு பெற்று, அவர்களைக் கண்டு மகிழ்தல் **991-3.**

**991.** அன்ன பலபலவும் பன்னி யழுமயங்கும்
தன்னிக ரிலாதானுந் தம்பியுமத் தன்மையனுய்
உன்னு முணர்வுசிறி துண்முளைப்பப் புள்ளரசன்
இன்னுயிர்ப்பா னன்பா லிருவரையு நோக்கினுன்.

தன் நிகர் இலாதானும் - தனக்கு ஒப்புமை வேறு ஒருவரில்லாத இராமபிரானும், அன்ன பல பலவும் பன்னி - அத்தன்மையவாகப் பற்பலவற்றையும் சொல்லிப் பிரலாபித்து, அழும் மயங்கும் - அழுது புத்தி மயங்கியிருந்தான் ; தம்பியும் - தம்பியாகிய இலக்குவனும், அ தன்மையனுய் - அந்த இராமபிரானைப்போல, உன்னும் - நினைந்து வருந்தினுன் ; (அந்நிலையில்), புள் அரசன் - பறவைகளுக்கு இறைவனுன சடாயுவும், உணர்வு சிறிது உள் முளைப்ப - உள்ளத்தில் சிறிது தன் உணர்ச்சி உண்டாக, இன் உயிர்ப்பான் - இனிய மூச்சு விடுபவனுகி, இருவரையும் அன்பால் நோக்கினுன் - அந்த இராமலக்ஷ்மணர் இருவரையும் அன்போடு கண்திறந்து பார்த்தான்.

இராமபிரான் தன்னிகரிலாதான் என்றமை, *1115* ; கிட்கிந்தா. மராமரப் : *11* ;

பி - ம். 1. அன்னுபல, அன்னுன்பல, அன்றே பல, அன்னய் பலபலவும், அன்னபல பன்னி யமலனழுதிரங்கத் ; யழுங்குமழும்.
2. தன்னே ரிலாவினையோன்ருனு மயர்பொழுதின், தன்னிகரிலாதானுந், தன்மையனும், தன்மையனு, தன்மையனுல்.
3. உன்னுமறிவு சிறிதுணர்ந்து புள்ளரசன், உன்னுதுணர்வு சிறிதுளைப்பப் ; முன்னேயுணர் சிறிதுரைப்பப் ; உன்னுவுணர்வு.
4. இன்னுயிர்ப்பாலுற்றே, இன்னுவுயிர்ப்பா, இன்னுவுயிரா. *(185)*

**992.** உற்ற துணரா துயிருலைய வெய்துயிர்ப்பான்
கொற்றவரைக் கண்டான்றன் னுள்ளங் குளிர்ப்புற்ருன்
இற்ற விருசிறகு மின்னுயிரு மேழுலகும்
பெற்றனனே யொத்தேன் பெயர்த்தேன் பழியென்ருன்.

உற்றது உணராது - பிராட்டியை இராவணன் அபகரிக்குமாறு இராமலக்ஷ்மணர்களுக்கு நேர்ந்ததையும், பிராட்டிக்கு மேல் நிகழ்ந்த செய்தியையும் அறிந்துகொள்ளமுடியாமல், வெய்துயிர்ப்பான் -

ஏக்கத்தால் பெருமூச்சு விட்டு வருந்துபவனான சடாயு, கொற்ற வரை கண்டான் - அரசகுமாரர்களான அவ்விருவரையும் கண்டு, தன் உள்ளம் குளிர்ப்பு உற்றான் - பார்த்ததால் தன் மனத்தில் தாபம் நீங்கிக் குளிர்ந்த அமைதி நிலை அடைந்தானாகி, 'இற்ற இரு சிறகும் - வெட்டுண்டு அற்றுப்போன என் இரு சிறகுகளும், இன் உயிரும் - என் இனிய பிராணனையும், ஏழ் உலகும் - கீழேழ் மேலேழான எல்லா உலகங்களையும், பெற்றனனே ஒத்தேன் - எனக்கு உரிமையாக அடைந்தவன்போல மகிழ்ச்சியுள்ளவனானேன்; பழி பெயர்த்தேன் - எனக்குண்டான நிந்தனையையும் நீக்கிக்கொண் டேன்' என்றான் - என்று கூறினான்.

கொற்றவரை : வெற்றிச் சிறப்புடைய இராமலக்ஷ்மணரை என்னலும் ஆம்; (கொற்றம் - வெற்றி.) கொற்றவர் என்ற குறிப் பால், இராமலக்ஷ்மணர் இராவணனை வென்று பிராட்டியை மீட்டு வருவர் என்ற உறுதியைக் குறிப்பிட்டபடியும் ஆம். இன்னுயிரும் பெற்றேன் : இதனால் இராமலக்ஷ்மணர்களையே தன் உயிராகக் கருதியிருந்தமை புலப்படுவது காணலாம்; ஏழுலகும் பெற்றேன் : இனி, இராமபிரான் இராவணாதியரக்கர்களை யழித்துப் பிராட்டியைச் சிறைமீட்டு எல்லாவுலகங்களும் வணங்க அயோத்யாதிபதியாய் விளங்குவானென்றும், அவன் அடையும் அத்தகைய சிறப்பே, தானடையும் பெருஞ்சிறப்பாக ஆகும் என்றுங் கருதினான் சடாயு எனக் கொள்ளத்தக்கதாம்; ஏழுலகும், ஏழு கண்டங்களாயமைந்த இப்புவி முழுவதும் எனக்கொள்ளலும் ஒன்றும். பெயர்த்தேன் பழி : இனி இராமபிரான் வெற்றி பெற்றுப் பிராட்டியை மீட்பான் என்ற துணிவால், 'காட்டில் வைகுதிர் காக்குவென் யான்' (215) என்று முன் தான் கூறிய உறுதிமொழி மாறப் பிராட்டியை இராவணன் அபகரிக்குமாறு விட்டும், அரக்கனாகிய இராவணனுக்குத் தான் தோற்றுத் தன் சிறகழிந்ததால்,உண்டான பழி இனிநீங்கிற்று என்ற துணிவால் கூறியது என்க. பழி : தன் மைந்தர்களுக்கு ஏற்பட்ட நிந்தனை தனக்கு ஏற்பட்டதாகக் கருதியதாகவும் கொள்ளலாம்.

பி - ம். 1. உற்றவுணரா துயிருய்ய; துணரா துயிருலைவால்.

2. கொற்றவனைக்; குளிர்வுற்றான்.

3. இற்ற விருஞ்சிறகு, விருஞ்சிறையு.

4. பெற்றவனே, பெற்றவனேயொத்தான்; பெயர்ந்தேன். (186)

993. பாக்கியத்தா லின்றென் பயனில் பழியாக்கை
போக்குகின்றேன் கண்ணுற்றேன் புண்ணியரே வம்மினென்று
தாக்கி யரக்கன் மகுடத் தலைதகர்த்த
மூக்கினு லுச்சி முறைமுறையே மோக்கின்ருன்.

'புண்ணியரே - புண்ணியவான்களே! இன்று - இற்றைக்கு, என் - என்னுடைய, பயன் இல் - பயனற்றதும், பழி - நிந்தனைக் கிடமானதுமான, யாக்கை - உடலை, போக்குகின்றேன் - ஒழித்து விடும் நிலையில் இருக்கின்றேன்; பாக்கியத்தால் கண்ணுற்றேன் - முன்செய்த நல்வினையினுல் உங்களை இந்நிலையில் இப்பொழுது காணப்பெற்றேன்; வம்மின் என்று - வருவீர்களாக!' என்று நல் வரவு கூறியழைத்து, அரக்கன் மகுட தலை தாக்கி தகர்த்த - அரக்க ஞகிய இராவணனுடைய கிரீடங்கள் அணிந்த தலைகளைத் தாக்கிச் சிதற அடித்த, மூக்கினுல் - தன் மூக்கால், உச்சி - அவர்களுடைய உச்சந்தலைகளை, முறைமுறையே - மாறிமாறிப் பலமுறை, மோக்கின் ருன் - (சடாயு) அன்பால் மோந்து மகிழ்கின்றவனுனன்.

பயனில் பழியாக்கை: சடாயு தன்னுடல் பயனற்றதாயும் பழிக்கு இடமாயும் போனதாகக் கருதியதாம்; பிராட்டியை மீட்க வியலாமற் போனதைக் குறித்துக் கூறியது. பாக்கியத்தால் போக்கியது; தன்னுயிர் நீங்கும் தருணத்தில் இராமலக்ஷ்மணர்களைக் கண்டது, தான் முன்செய்த புண்ணியத்தால் அடைந்த பேருகும் என்றது. உயிர் போகுந் தருணத்தில் ஸ்ரீராமநாமத்தைச் சிந்திப் பாருக்கே நற்கதி கிடைக்கும் என்ற நிலையில், அப்போது நேரே அவ னைக் கண்டவர் பெரும்பாக்கியம் அடைவர் என்பது கூறவேண்டிய தில்லை; ஆதலின், அதனைத் தானடைந்த பெரும் பேருகக் கருதிக் கூறினுன் சடாயு என்பதாம். இவ்வுண்மையைச் சரபங்கர் பிறப்பு நீங்கு படலத்திறுதியில், நம் கவிச்சக்கரவர்த்தியார் நன்கு விளங்க வைத்த சிறப்பு, செய்யுள் 117-இல் நோக்கத்தக்கதாம். அன்றியும், பழியாக்கை, பாக்கியத்தால் போக்குகின்றேன், என இயைத்து 'பிறருக்குப் பயன்படுவதில்லாததும், பிணங்களைத் தின்னும் கழுகு என்று பிறர் பழிப்பதற்கு இடமாயுள்ளதுமான தன் உடலை ஒரு பெண்ணை ஆபத்தில் காப்பாற்றும் செயலில் ஈடுபடுத்திப் போக்கியது தன் பெரும்பாக்கியம் எனக் கருதினுன் சடாயு என்றும் கூறலாம்.

உச்சிமோத்தல்: ஒருவர் தம் குழந்தைகளிடத்தில் கொள்ளும் வாத்ஸல்ய உணர்ச்சியால் உண்டாகும் மெய்ப்பாட்டு நிகழ்ச்சி. இது, தாய் இயல்பாய்ச் செய்வது; இங்குத் தந்தை உச்சிமோந்த

செய்தி கூறப்பெற்றது. இராமபிரானைப் புண்ணியன் என்பது 1034 ; பால. உலாவியற் : 22, பரசுராமப் : 40.

பி - ம். 2. போக்கினேன் ; புண்ணியர் காணுமென்று ; கண்ணுற்ற புண்ணியரே வாருமென.

3. தலைதுமித்த ; மகுடந்தனைப் பறித்து.

4. மூக்காலிருவருச்சி மோந்தான் முறைமுறையே, முறைமுறையின் ; மோக்கின்றான். (187)

994. வஞ்சனையால் வந்த வரவென்ப தென்னுடைய
நெஞ்சகமே முன்னே நினைவித்த தானாலும்
அஞ்சொன் மயிலை யருந்ததியை நீங்கினிரோ
எஞ்சலிலா வாற்ற லிருவீரு மென்றுரைத்தான்.

(சடாயு அவர்களை நோக்கி), 'வந்த வரவு - நடந்த காரியம், வஞ்சனையால் என்பது - (இராவணனின்) வஞ்சகச் செயலால் ஆனது என்பது, என்னுடைய நெஞ்சகமே - என் மனமே, முன்னே நினைவித்தது - முன்னமே யான் எண்ணும்படிச் செய்தது ; ஆனாலும் - அவ்வாறானாலும், அம் சொல் மயிலை - அழகிய சொற்களைப் பயிலும் மயில் போன்ற சாயலுடையவளும், அருந்ததியை - அருந்ததி போன்ற கற்பு நிலையில் உள்ளவளுமான பிராட்டியை, எஞ்சல்இலா ஆற்றல் இருவீரும் - குறைபடாத வலிமையுடைய நீவிர் இருவரும், நீங்கினிரோ - தனியே விட்டுச்சென்றீர்களோ ?' என்று உரைத்தான் - என்று சடாயு இராமலக்ஷ்மணர்களை நோக்கிக் கூறினான்.

வந்த வரவு : வரவு என்பதற்குத் துன்பம் என்ற ஒரு பொருளும் உண்டு என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. அஞ்சொன் மயில் : இல்பொருளுவமையாய்ப் பிராட்டியைக் குறித்தது ; பிராட்டியை அருந்ததியென்பது ; 829; சுந்தர. 612. பிராட்டி வஞ்சகத்தால் அபகரிக்கப்பட்டனள் என்றது தெரிந்தாலும், அவளை அந்நிலையில் இருக்கச்செய்து, எஞ்சலிலாவாற்றல் இருவரும் எங்குச் சென்றிருந்தனர் என்பதைச் சடாயு அறிய விரும்பினான் என்க.

பி - ம். 2. நெஞ்சமே முன்னம் நிரப்புற்றதானாலும், நினைப்பித்ததாதலால்.

3. அஞ்சொற் கிளியாடனைத்தனிவிட் டகன்றீரோ.

4. எஞ்சலினாற்ற, எஞ்சலிலாற்ற, (188)

வேறு

இலக்குவன் கூற்று

995. என்றவ னியம்பலு மிளைய கோமகன்
ஒன்றுமாண் டுறுபொரு ளொழிவு ருவகை
வன்றிறன் மாயமான் வந்த தாதியா
நின்றது நிகழ்ந்தது நிரப்பி னனரோ.

என்று அவன் இயம்பலும் - என்று சடாயு சொன்னதும், இளைய கோமகன் - இளைய அரச குமாரனான இலக்குவன், ஆண்டு அவ்விடத்தில், உறு பொருள் ஒன்றும் ஒழிவு உரு வகை - நிகழ்ந்த செயல் ஒன்றும் விட்டுப் போகாதபடி, வல் திறல் மாயம் மான் வந்தது ஆதி ஆ - திறமை மிக்க வஞ்சக மான் வந்தது முதலாக, நின்றது நிகழ்ந்தது - அங்கு நின்று நடைபெற்றதான செய்திகளை, நிரப்பினன் - முழுவதும் சொல்லி முடித்தான். அரோ : ஈற்றசை.

வன் திறல் ; ஒருபொருட் பன்மொழி. 'நின்றது நிகழ்ந்தது - இராமபிரான் ஆணைப்படி தான் காத்திருந்தது ; பிராட்டி தன்னைப் போகச்சொன்னபின் நடந்தது.' (பழையவுரை).

பி - ம். 2. ஒன்றுமாங்குறு.
3. வன்றிறல் மானது ; வன்றிற மானது.
4. நிகழ்த்தி னனரோ. (189)

சடாயு அவர்களுக்குத் தேறுதல் கூறியது 996-1004.

996. ஆற்றலா னவ்வுரை யறைய வாணையால்
ஏற்றுணர்ந் தெண்ணியவ் வெருவை வேந்தனும்
மாற்றருந் துயரிவர் மனக்கொ ளாவகை
தேற்றுத னன்றென வினைய செப்புவான்.

ஆணையால் - இராமபிரான் (குறிப்பினால் செய்த) கட்டளையின் படி, ஆற்றலான் - (சொல்வதில்) திறமையுள்ளவனான இலக்குவன், அ உரை அறைய - அந்த வார்த்தைகளைக் கூற, அ எருவை வேந்தனும் - அந்தக் கழுகுகளுக்கரசனான சடாயுவும், ஏற்று உணர்ந்து - தன் செவியில் ஏற்று அதனை நன்கு உணர்ந்து, எண்ணி - தானும் ஆலோசித்து, மாற்று அரும் துயர் - தவிர்க்க முடியாத அத்துன்பத்தை, இவர் மனம் கொளாவகை - இவர்கள் மனத்திற் கொள்ளாதபடி, தேற்றுதல் நன்று என - இவர்களை இப் பொழுது தேற்றிச் சமாதானப்படுத்துதலே நல்லது என்று எண்ணி, இனைய செப்புவான் - பின்வரும் விஷயங்களைக் கூறுவானானான்.

ஆணையால்: இராமபிரான் ஆணைப்படி, இலக்குவனே பெரும்பாலும், வினவுவோர்க்குத் தம் செய்திகளைக் கூறுவது இந் நூலிற் காணக்கிடப்பது காண்க; இதனை, குகன், சடாயு, அநுமன் முதலினோர் வினவிய திறத்து நோக்குக. மனைவியை அயலான் அபகரித்துச் செல்வது என்பதினும் மேலான துயரம் ஒருவனுக்கு இல்லையாதலின், மாற்றருந்துயர் எனப்பட்டது. 'ஆணையால் ஏற்றுணர்ந்தெண்ணி - முறைமையில் கேட்டு அளவிட்டு' என்பது பழையவுரை.

பி-ம். 1. ஆற்றலோ னவ்வுரை, ஆற்றல னவ்வுரை.
2. தெண்ணிய வெருவை.
3. துயரவர். 4. செப்பினான். *(190)*

997. அதிசய மொருவரா லமைக்க லாகுமோ
துதியறு பிறவியி னின்ப துன்பந்தான்
விதிவய மென்பதை மேற்கொ ளாவிடின்
மதிவலி யால்விதி வெல்ல வல்லமோ.

'ஒருவரால் அதிசயம் அமைக்கல் ஆகுமோ - ஒருவரால் இயல்புக்கு மாறாக ஒரு புதுச் செயலைச் செய்ய முடியுமோ? (முடியாது என்றபடி); துதி அறு - புகழ்ச்சி என்பது இல்லாததான (அதாவது இகழ்ச்சிக்கே இடமான), பிறவியின் - பிறப்பில், இன்ப துன்பம் தான் - ஒவ்வொருவரும் அடையும் சுகதுக்கங்கள்தாம், விதிவயம் என்பதை - முன் செய்த ஊழ் வினையின்படி நடப்பன என்ற உண்மையை, மேல் கொள்ளாவிடில் - நாம் ஏற்றுக்கொண்டு நடக்காவிட்டால், மதி வலியால் - நம் புத்தியின் திறத்தினால், விதி - அவ் ஊழ்வினையை, வெல்ல வல்லமோ - வெல்லும் திறமையுடையோமோ? (அல்லோம் என்றபடி).

இதுவும் பின்வரும் செய்யுட்களும் சடாயு, இராமலக்ஷ்மணர்கள் துயர்கண்டு கூறியவை. அதிசயம் - ஆச்சரியத்தை உண்டாக்குவது; அதாவது எதிர்பாராத நிகழ்ச்சி; நம் கருத்துக்கு அப்பாலானது. இராமபிரானும், தான் வனத்துக் கேக நேர்ந்ததைக் குறித்து இலக்குவன் வருந்திச் சினந்தபோது, இவ்வாறே கூறி, அவனைச் சமாதானப்படுத்தியது காண்க; (அயோத். நகர்நீங்கு: *133*). பிறவியில் ஒருவர் அடையும் சுகதுக்கம் யாவும் அவரது பண்டை ஊழ்வினை வழி நடப்பன என்பதும், நம் மதியினால் அவ்விதியை வெல்ல முடியாது என்பதும் இதனால் அறியப்பெறும்; இஃது நாம் அறிந்துணர வேண்டிய ஒரு சிறந்த நீதி ஆகும். துதி யறு பிறவி -

புகழ்ச்சிக்கிடமில்லாத அ.்தாவது, இகழ்ச்சிக்கிடமான பிறவி என்க; 'வேண்டேன் மாமாயப் புன்பிறவி வேண்டேனே' (988) என்று இராமபிரான் வெறுத்துக் கூறியதுங் காண்க. இன்ப துன்பம் விதி வயம் என்பது; 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந் துறும்' (குறள். 380); 'தாந்தா முன்...........வெறுத் தாலும்போமோ விதி' (நல்வழி. 30); 'நிதியுங் கணவனும் நேர்படினுந் தத்தம் விதியின் பயனே பயன்' (மூதுரை. 19) என்பன காண்க.

பி - ம். 2. துதியுறு. 3. விதிவச, விதிவருமென்பதே, விதிவசமென் பதே, விதிவலி யென்பதே.

4. மதிவலியான்விதி, மதிவலியாள்வலி யெல்லலாகுமோ, மதிவலி யாள்வலி யென்ன வல்லமோ. (191)

998. தெரிவுறு துன்பம்வந் தூன்றச் சிந்தையை
இரிவுசெய் தொழியுமீ திழுதை நீரதால்
பிரிவுசெய் துலகெலாம் பெறுவிப் பான்றலை
அரிவுசெய் விதியினுர்க் கரிதுண் டாகுமோ.

'உலகு எலாம் - உலகத்தில் உள்ள சீவன்களனைத்தையும், பிரிவு செய்து - பலவகைகளாக வகுத்து, பெறுவிப்பான் - படைப்ப வனான பிரமதேவனுடைய, தலை - ஐந்து தலைகளில் ஒன்றை, அரிவு செய் - அரிந்த, விதியினுர்க்கு - ஊழ்வினைக்கு, அரிது உண்டாகுமோ - செய்தற்கு அரிய காரியம் ஒன்று ஏற்படுமோ? (ஏற்படாது என்றபடி); ஆதலின், தெரிவு உறு - தெளிவாகத் தெரியத் தோன்றும், துன்பம் வந்து ஊன்ற - துன்பம் வந்து அழுந்தி நிலைபெற, சிந்தையை இரிவு செய்து - அதனால் அஞ்சித் தன் மனத்தை நிலை கெட்டு ஓடச் செய்து, ஒழியும் ஈது - தன் காரியத்தை விட்டு நீங்கும் இச்செயல், இழுதை நீரது - பேதைத் தன்மை யுடையதாகும். ஆல்: அசை.

பல்வேறு உயிர்களையும் படைக்கும் திறமுடைய பிரமதேவனை யும் விதி அவன் தலை அறுபடுமாறு செய்ததாதலின், நமக்கு உண் டாகும் துன்பங்கள் அனைத்தும் நம் ஊழ்வலியின் வழியே நடப்பன என்று கொண்டு நாம் அடங்கி யிருக்க வேண்டுமே அன்றி அதனால் மனம் வருந்துவது பேதைமைச் செயலாகும் என்பதாம். சிவபிரான் பிரமன் சிரங்களில் ஒன்றைத் துணித்த வீரச்செயலை விதியின் மேலேற்றி இங்குக் கூறப்பெற்றது. இழுதை - அறிவின்மை; இது

பேதைமை, பேய், பொய் எனப் பல பொருளிலும்வரும்; 'எரிவுசெய்............நீரது - நெஞ்சத்தைத் தவிக்கப் பண்ணி, நாளோடே சரீரம் உலரப் பண்ணுகிறது அறியாமையாம். உலகெலாம்..............பெறுவிப்பான் - நால்வகைத் தோற்றமும் எழுவகைப் பிறப்புமாக உலகத்தைப் படைக்கும் பிரமன்' என்பன பழையவுரை. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. தெரிவறுதுன்பம், தெரிவருந்துன்பம்; தூன்றிற் சிந்தையை.
2. எரிவுசெய் தொழியு. (192)

999. அலக்கணு மின்பமு மணுகு நாளவை
விலக்குவ மென்பது மெய்யிற் றுகுமோ
இலக்குமுப் புரங்களை யெய்த வில்லியார்
தலைக்கலத் திரந்தது தவத்தின் பாலதோ.

'மு புரங்களை இலக்கு எய்த வில்லியார் - திரிபுரங்களைக் குறியாகக் கொண்டு அம்பு தொடுத்த மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானுர், தலை கலத்து இரந்தது - பிரம கபாலத்தைப் பிச்சைப் பாத்திரமாகக் கொண்டு இரந்தது, தவத்தின் பாலதோ - அவரது தவச் செயலோடு சேர்த்துச் சொல்லக்கூடியதோ? (அன்று என்றபடி); ஆதலால், அலக்கணும் இன்பமும் - துன்பமும் இன்பமும், அணுகும் நாள் - வரும்போது, அவை விலக்குவம் என்பது - அந்த இன்ப துன்பங்களை வராமல் தடுப்போம் என்று சொல்வது, மெய்யிற்று ஆகுமோ? உண்மையாக நடக்கக் கூடியது ஆகுமோ? (ஆகாது என்றபடி).

தவத்தின்பாலதோ?: பலகாலம் அருந்தவம் புரிந்த சிவபெருமானையும் ஊழ்விதி விடவில்லை என்பதாம்.

பி-ம் 1. அவைக்குநாளவை, அமைக்குநாளவை, வைகுநாளிவை, நாளிவை.
2. விலக்குமதென்பது, விலக்குதமென்பது; விலக்குவமென்பது; மெய்யிற்றுகுமோ, மேவிலாகுமோ, விலக்குவமென்பது மெய்யுற்றுகுமோ.
3. இலக்கமுப்புர, இலக்கின்முப்புர, விலக்குமுப்புர, விலக்கமுப்புர; யெய்த வில்லையத், யெய்த வில்வியத்.
4. தலைக்கரத்; திரந்ததும்; திர்ந்தது; தலைக்கலந்துயல்வரு தலைவர்க்கன்றியே. (193)

1000. பொங்குவெங் கோளரா விசும்பு பூத்தன
வெங்கதிர்ச் செல்வனை விழுங்கி நீங்குமால்
அங்கண்மா ஞாலத்தை விளக்கு மாய்கதிர்த்
திங்களு மொருமுறை வளருந் தேயுமால்.

'பொங்கு வெம் கோள் அரா - மேற்கிளம்பிச் சீறும் கொடிய வலிய கிரகங்களாகிய பாம்புகள், விசும்பு பூத்து அன - ஆகாயத்தில் மலர்ந்தாற்போல ஒளிர்கின்ற, வெம் கதிர் செல்வனை - வெப்பத்தைத் தரும் கிரணங்களையுடைய சூரியனை, விழுங்கி நீங்கும்-உண்டு நீங்கும்; அம் கண் மா ஞாலத்தை - அழகிய இடமகன்ற பெரிய இப்புவியை, விளக்கும் - இருட்டில் தன் நிலவினால் விளங்கும்படிச் செய்யும், ஆய் கதிர்திங்களும் - சிறந்த (குளிர்ந்த) கிரணங்களையுடைய சந்திரனும், ஒருமுறை வளரும் தேயும் -ஒரு தரம் வளர்வதும்,(பின்) தேய்வதுமாக மாறுபடும். ஆல் : இரண்டிடங்களிலும் அசைகள்.

கோள் அரா ; இராகு கேதுக்கள் என்பனவாம். வெம் கதிர் செல்வன் - விரும்பத்தக்க கிரணங்களாகிய செல்வத்தை அளிக்கும் சூரியன் என்னலும் ஏற்கும்; சூரியகிரணங்கள் பிராணிகள் வாழ்விற்கு உரிய செல்வமாக உள்ளமையால் என்க. ஒரு முறை - ஒரு பக்ஷம் என்னும் காலம். கிரகணங்கள் சூரிய சந்திரர் இருவர்க்கும் உள எனினும், சூரியனுக்கு மீட்டும் கூறி, சந்திரனின் தேய்வு வளர்ச்சிகளைக் குறித்தது, ஓரொருகாலத்தில் நிகழ்வதையும், நித்யமாய் நிகழ்வதையும் காட்ட என்க. இச் செய்யுள்களின் 3-4 அடிகளுக்கு ஒப்பு : புறநா. 27 : 11-14.

பி-ம். 1. விசும்பு தூர்த்தன ; விசும்பு பூத்தால்.
2. வெங்கதிரோன்றனை ; நீங்குமங்(கு). (194)

1001. அந்தரம் வருதலு மனைய தீர்தலும்
சுந்தரத் தோளினிர் தொன்மை நீரவால்
மந்திர விமையவர் குருவின் வாய்மொழி
இந்திர னுற்றன வெண்ண வொண்ணுமோ.

மந்திர - மந்திராலோசனையிற் சிறந்த, இமையவர் குருவின் - தேவர் குருவாகிய பிரகஸ்பதி பகவானின், வாய் மொழி - உண்மை அறிவுரைகளைக் கேட்டு நடக்கும், இந்திரன் உற்றன - இந்திரன் அடைந்த துன்பங்கள், எண்ண ஒண்ணுமோ - கணக்கிடமுடியுமோ? (முடியாதனவாம் என்றபடி) ; ஆதலால், சுந்தர தோளினீர் - அழகிய தோள்களையுடையவர்களே ! அந்தரம் வருதலும் - ஒருவருக்குத்

தீங்கு வருவதும், அனைய தீர்தலும் - அவை நீங்குவதும், தொன்மை நீர - தொன்றுதொட்டு நடைபெறுவனவே ஆம்; ஆல் : ஈற்றசை.

மந்திர இமையவர் குரு : தேவர் மந்திராலோசனை சபையில் உள்ளவரான குரு என்றும், மந்திர சித்தி பெற்ற தேவகுரு என்றும் கூறலாம். மந்திரம் - மந்திரத் தொழில்; 'மந்திரமற்றுமுற்ற துரைத்தாய்' (735); 'மன்னவன் றனக்கு நாயேன் மந்திரத் துள்ளேன்' (சுந்தர. 519). பிரகஸ்பதி பகவானின் போதனைக்குள் ளமர்ந்த இந்திரனும், நாரதர், துருவாசர், அகத்தியர் முதலோரின் சாபங்களுக்குள்ளானமை இங்குக் குறிக்கப்பெற்றது என்க. அன்றியும், இந்திரன் இமையவர் குருவிற் சாபம் பெற்றதும், ஆம்; ஒரு சமயம் இந்திரன் தன் சபையில் நிகழ்ந்த ஆடல் பாடல் களில் ஈடுபட்டு அதனால் அங்கு வந்த தன் குருவான பிரகஸ்பதி யைக் கண்டு வணங்கி உபசரியாமல் இருந்தனன்; அதுகண்ட அவ் வமரர் குரு அவன் மீது வெகுண்டு அங்கு நின்று வெளிப்போந்த னர்; அதனால் இந்திரன் தன் தேவலோக ஆட்சியையும் செல் வத்தையும் இழந்து பலகாலம் வருந்திப் பின் அவ்வமர முனிவரிடம் சென்று குறை நயந்து வேண்டிக்கொள்ள, அம்முனிவர் அவன் பால் அருள்புரிந்து அவனது இழந்த பதவியை மீண்டும் அடையுமாறு அருள்புரிந்தனர் என்று மகாபாரதத்தும், கந்தபுராணத்தும் உள்ள வரலாற்றினை இதற்கு ஆதாரமாகக்கொண்டு பொருள் கூறினரும் உளர். 'தேவர்கள் குருவான வியாழ பகவான் மொழிப்படி நடக்கை யிலேயும் இந்திரன் பட்டபாடு எண்ணப்படுமோ?' என்ற பழையவுரை இங்கு நோக்கற் பாலதாம். அந்தரம் - துன்பம், துக்கம், முடிவு, கேடு என்னும் பல பொருளுடையது. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் கருத்து.

பி - ம். 1. வருவது மனைய தீர்வதுஞ்.
2. தொன்மை நீரதால், தொன்மை யாதலால், தொன்மை நீரதான்;
3. மந்திர மிமையவர் குரவன் வாய்மொழி.
4. ஊற்றதை யெண்ண. (195)

1002. தடைக்கரும் பெருவலிச் சம்ப ரப்பெயர்க்
கடைத்தொழி லவுணனுற் குலிசக் கையினான்
படைத்தனன் பழியது பகழி வில்வலாய்த்
துடைத்தன னுந்தைதன் குவவுத் தோளினால்.

'பகழி வில் வலாய் - அம்புகளை எய்யும் விற்போரில் வல்ல இராம! தடைக்கு அரும் - தடுப்பதற்கு அரிய, பெரு வலி - மிக்க

வலிமையுடைய, சம்பர பெயர் - சம்பரன் என்ற பெயரைக்கொண்ட, கடை தொழில் அவுணனால் - இழிவான தொழிலையுடைய ஓர் அசுரனால், குலிச கையினன் - வச்சிராயுதமேந்திய கையையுடைய இந்திரன், பழி படைத்தனன் - தன் பதவியை இழந்து பழிப்பை அடைந்தவனானான்; அது - அப்பழியை, உந்தை - உன் தந்தையாகிய தசரத சக்கரவர்த்தி, தன் குவவு தோளினால் - தனது பருத்த புயவலிமையினால், துடைத்தனன் - நீக்கி அவ்விந்திரனுக்கு மீட்டும் வானாட்சியை அளித்தான்.

சம்பரனைத் தயரதன் வென்று இந்திரனுக்கு ஆட்சியை மீண்டும் அளித்தது; 199; பால. கையடைப்; 8; அயோத். மந்திரப்; கைகேசி சூழ்வினை : 40; கிட்கிந்தா. மராமரப் : 29, 30. இப்போரினைச் சடாயு நேரிற்கண்டவன் என்பது; செய்யுள் 199 குறிப்புக் காண்க. இவ்வாறு சிவபெருமான், சூரிய சந்திரர், இந்திரன் ஆகியோர்க்கு நேர்ந்த இன்னல்களைக் கூறிச் சடாயு இராமபிரானைத் தேற்றினான் என்க. இந்திரன் செய்தியை முன் செய்யுளிலும் இங்கும் கூறியது, வந்த வினை தீரும் என்பதற்கு உதாரணம் என்பதாம்.

பி - ம். 1. தடுக்கரும்.
2. கொடுத்த வல்லவுணனாற்; கடைக் கரு மவுணனாற்.
3. படைத்தன பழி. 4. துப்புத் தோளினால். (196)

வேறு

1003. பிள்ளைச்சொற் கிளிய னாளைப் பிரிவுற் யுற்ற பெற்றி
தள்ளுற்ற வறமுந் தேவர் துயரமுந் தந்த தேயால்
கள்ளப்போ ரரக்க ரென்னுங் களைகளைக் களைந்து வாழ்தி
புள்ளுக்கும் புலம்பு பேய்க்குந் தாயன்ன புலவுவேலோய்.

'புள்ளுக்கும் - பறவைகளுக்கும், புலம்பு பேய்க்கும் - உணவின்றிப் பசியால் புலம்பும் பேய்களுக்கும், தாய் அன்ன - தாயேபோல, புலவு வேலோய் - (பகைவர்) புலாலை அளித்துப் பசி தீர்க்கும் வேலேந்திய இராம! சொல் - திருந்தாத மழலைச் சொற்களைப் பேசும், கிளி அனாளை - கிளி போன்ற சீதையை, பிரிவு உற்ற பெற்றி - நீ பிரிந்து வருந்தும் தன்மை, தள்ளுற்ற அறமும் - (அரக்கர்களால்) தள்ளி ஒடுக்கப்பெற்ற தருமமும், தேவர் துயரமும் - (அவ்வரக்கர்களால்) தேவர்கள் அடைந்துள்ள துன்பங்களும், தந்ததே ஆல் - தந்தனவே ஆகுமாதலால், கள்ள போர் அரக்கர் என்னும் களைவினை - திருட்டுத் தொழிலையுடைய அரக்கர்களாகிய களைப் பூண்டு

களை, களைந்து - பிடுங்கி எறிந்து அழித்து, வாழ்தி - நீ நல்வாழ்வை அடைவாயாக.

தாய் அன்ன ; தாய் அன்போடு உணவளிப்பவளாதலின். புள் : இங்குக் கழுகு, பருந்து, காகம் போன்ற புலாலுண்ணும் பறவை களைக் குறித்தது. இராமபிரானின் வேல் பகைவராகிய அரக்கரைக் கொல்லும் தொழிலை மேற்கொண்டமையால், அவ்வேல் இறந்த பகைவர் புலாலை பறவைகளுக்கும் பேய்களுக்கும் தாய்போல் உணவு ஊட்டுவது எனச் சிறப்பிக்கப் பெற்றது. வேல் என்றது இங்கு ஆயுதப் பொதுவைக் குறிப்பதாகும். புலம்புபேய் ; பேய்கள் எவ்வளவு அருந்தியும் ஆறுத பசியுடையன வாதலின் ; பேய்கள் பசியாற் புலம்புவதைக் கலிங்கத்துப்பரணி முதலிய பரணி நூல்களில் பேய்களைப் பாடியது, பேய்முறைப்பாடு, என்ற பகுதி களில் விரிவாய்க் காணலாம். பிராட்டியை இராமபிரான் பிரிந்த பெற்றி, பிராட்டி அல்லது இராமபிரானது வினை காரணமாய் ஏற் பட்டது அன்று என்பதும், தருமத்தைக் காக்கவும், தேவர் முனிவர் களைக் காக்கவும் இராமபிரான் மேற்கொண்ட செயலே என்பதுமான இரகசியத்தைச் சடாயு ஒருவாறு உணர்ந்து கூறியது என்க. இராம பிரான் அடைந்த பிரிவுத் துயர், தள்ளுற்ற அறமும், தேவர் துயரமும் தந்தது என்றதில் அமைந்த நுட்பத்தை ஓர்க. களை : பயிரை வளர விடாமல் அடர்ந்துள்ள வேற்றுப் பூண்டுகள் ; களையப்படுவது களை ஆதலின், களை என்பது முதனிலைத் தொழிற் பெயராகும். அறமாகிய பயிருக்கு அரக்கராகிய களை என்க.

பி-ம். 1. பிள்ளையின் மொழியவா டன்னைப் ; கிளியனுளைப், கிளியன்னுளைப் ; பிரிவுறப் பெற்ற பெற்றி.

2. தள்ளுறு மறமுந்தேவர், தள்ளற்ற வறமுந்.

3. களையினைக் களைந்து, களையினைக் களைதி வாழி, களைந்து காத்தி.

4. புள்ளிற்கும் ; புலனில் பேய்க்கும். (197)

1004. வடுக்கண்வார் கூந்த லாளை யிராவணன் மண்ணி னோடும்
எடுத்தன னேகு வானை யெதிர்ந்தென தாற்றல் கொண்டு
தடுத்தனெ னுவ தெல்லாந் தவத்தரன் தந்த வாளால்
படுத்தன னிங்கு வீழ்ந்தே னிதுவின்று பட்ட தென்ருன்.

‘ வடு கண் - மாவடு போன்ற கண்களையும், வார் கூந்தலாளை - நீண்ட கூந்தலையுமுடைய சீதையை, இராவணன் மண்ணின் ஓடும் எடுத்து ஏகுவானை - அவளிருந்த தரையோடும் பெயர்த்து எடுத்துச்

சென்றவனை இராவணனை, எனது ஆற்றல் கொண்டு எதிர்த்து - என் வலிமை கொண்டு எதிரிட்டு, ஆவது எல்லாம் - என்னால் ஆகக்கூடிய எல்லாவிதத்தாலும், தடுத்தனென் - நான் தடுத்தேன் ; (ஆனால்), தவத்து அரன் தந்த வாளால் - அவன் செய்த தவம் காரணமாகச் சிவபெருமான் அவனுக்கு அளித்த சந்திரஹாஸம் என்னும் வாளினால், படுத்தனன் - என்னை அழித்தனன் ; இங்கு வீழ்ந்தேன் - அதனால் யான் இவ்விடத்தில் (என் சிறகு அறுப்புண்டு) விழுந்தேன் ; இது இன்று பட்டது - இந்நிலைமை (எனக்கு) இன்று நிகழ்ந்தது ' என்றான் - என்று சடாயு (தன் வரலாறு) கூறினான்.

மாவடு, மகளிர்கண்ணுக்கு உவமை ; அயோத். சித்திரகூடப் : 33 ; மாவடுவின் பிளவைக் கண்ணுக்கு உவமையாகக் கூறுவதும் உண்டு. வடு - ஸீமந்தரேகை என்பாரும் உளர். இராவணன் பிராட்டியை அவளிருந்த மண்ணோடு பெயர்த்தெடுத்துச் சென்றது ; 478 ; குறிப்.

பி - ம். 2. எடுத்தவனேகு போதினெதிர்ந்து.
3. கமைந்த வாளால், சமைத்தவாளால், தவத்தான் தரித்த வாளால், பெற்ற வாளால்.
4. படுத்தனன் பட்டு வீழ்ந்தே ; னீங்கு வீழ்ந்தேன், னிது விங்கு பட்டதென்றான். (198)

### இராமபிரானது சீற்றமும் அவன் கூற்றும் 1005–11

1005. கூறின மாற்றஞ் சென்று செவித்தலங் குறுகா முன்னம்
ஊறின வுதிரஞ் செங்க ணுயிர்த்தன வுயிர்ப்புச் செந்தீ
ஏறின புருவ மென்மே லிரிந்தன சுடர்க ளெங்கும்
கீறின தண்ட கோளங் கிழிந்தன கிரிக ளெல்லாம்.

கூறின மாற்றம் - சடாயு, தான் பட்டது கூறிய அந்தச் சொற்கள், செவி தலம் சென்று குறுகா முன்னம் - இராமபிரான் செவிகளிடம் போய்ச் சேர்ந்தவுடனே, செம் கண் உதிரம் ஊறின - அவன் சிவந்த கண்களில் இரத்தப் பெருக்கு ஊற்றுப்போல் சுரந்தன ; உயிர்ப்பு செம் தீ உயிர்த்தன - மூச்சுக்கள் சிவந்த நெருப்பை வெளிப்படுத்தின ; புருவம் மென்மேல் ஏறின - புருவங்கள் வரவர நெற்றிமேல் ஏறின ; எங்கும் சுடர்கள் இரிந்தன - அக்கோபத்தால் உண்டான நெருப்புச் சுடர்கள் எங்கும் நிலைகெட்டு ஓடின ; அண்ட கோளம் கீறின - உருண்டையாயுள்ள

உலகங்கள் பிளவுபட்டன; கிரிகள் எல்லாம் கிழிந்தன - மலைகள் அனைத்தும் சிதைவுபட்டன.

இது முதல் நான்கு பாடல்கள் வெகுளிச்சுவையை விளக்குவன. கண்ணில் உதிரம் ஊறுதல், நெருப்புப்போல மூச்சு விடுதல், புருவங்கள் மேலேறுதல் இவை வெகுளியில் உண்டாகும் மெய்ப்பாடுகள். குறுகா முன்னம் - குறுகின அப்பொழுதே; குறுகா: செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினை. சுடர்கள் இரிந்தன என்பதற்குச் சந்திர சூரியரான சுடர்கள் இடம் விட்டு ஓடின எனலும் ஆம். சுடர்கள் இரிந்தன, அண்டகோளம் கீறின, கிரிகள் கிழிந்தன என்றவை இராமபிரான் பரம்பொருள் என்றமையைக் காட்டின என்க; இக்கருத்து அடுத்த கவியாலும் விளங்கவைத்தமை காண்க. கிரிகளெல்லாம் கிழிந்தன; கிழிதல் என்பது, வலிவற்ற நுட்பமான பொருள்களினிடம் உண்டாகும் எளிய செயல் ஆகும். இராமபிரான் கொண்ட வெகுளியின் முன், வலிய மலைகளின் எளிமையை விளக்கியவாறும். இராமபிரான் சீற்றத்தின் விளைவு: சுந்தர. 454; 567.

பி - ம். 1. கூறினன் மாற்றஞ்; செவித்தொளே.
2. வுதிரச் செங்கண் ணுமிழ்ந்தன; வுயிர்ப்பச் செந்தீ.
3. விழிந்தனசுடர்க, லெழுந்தன சுடர்கள்.
4. கீறின வண்டகோளங். (199)

1006. மண்ணகந் திரிய நின்ற மால்வரை திரிய மற்றைக்
கண்ணகன் புனலுங் காலுங் கதிரொடு திரியக் காவல்
விண்ணகந் திரிய மேலை விரிஞ்சனுந் திரிய வீரன்
எண்ணரும் பொருள்க ளெல்லா மென்பது தெரிந்த தன்றே.

மண் அகம் திரிய - பூமி நிலைகெட்டுச் சுழல, மால் வரை திரிய - பெரிய மலைகள் தமது நிலை தளர்ந்து சுழல, மற்றை - மற்றுமுள்ள, கண் அகன் புனலும் - இடத்தால் அகன்ற பரப்பையுடைய நீரும், காலும் - எங்கும் வியாபித்துள்ள காற்றும், கதிர் ஒடும் - சூரிய சந்திரர்களோடும், திரிய - சுழல, காவல் விண் அகம் திரிய - (பூமி மலைகள் புனல், கால், கதிர்கள் அனைத்தையும் தன்னிடம் கொண்டு) பாதுகாத்துவரும் ஆகாயமும் சுழல, மேலை விரிஞ்சனும் திரிய - இவையனைத்தையும் படைத்தவனும் இவற்றிற்கெல்லாம் மேலான ஸத்தியலோகத்திலுள்ள பிரமதேவனும் சுழன்று நிலைதடுமாறிய தால், வீரன் - இரகு வீரனான இராமபிரான், எண் அரும் பொருள்கள் எல்லாம் என்பது - கணக்கிடமுடியா எங்கும் நிறைந்துள்ள

பல்வகைப் பொருள்களும் ஆவான் என்ற உண்மை, தெரிந்தது - அப்பொழுது தெரியலாயிற்று. அன்று, ஏ : அசைகள்.

இப்பாடல், 'வர்னின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப் பெங்கும், ஊனுமுயிரு முணர்வும்போ லுள்ளும் புறனு முளனென்ப' என்று, (அயோத். 1.) இராமபிரானது சர்வாந்தர்யாமித்துவத்தைக் கூறும் காப்புச் செய்யுளின் கருத்தை இங்கு உதாரணப்படுத்திக் காட்டியதாகும் என்னலாம். விரிஞ்சனும், உம்மை உயர்வு சிறப் பினது. இச்செய்யுளுடன் 964-5ஐ ஒப்பிடுக.

பி-ம். 2. கண்ணகன்புல்லுங் ; கதிரொடு திரியக், கனலொடு திரியக் ; திரிந்த மற்றைக்.

3. விண்ணகந் திரிந்த ; வேலை விரிஞ்சனுஞ்.

4. மென்பதுந் தெரிந்த. (200)

1007. குறித்தவெங் கோவம் யார்மேற்
கோளுறுங் கொல்லென் றஞ்சி
வெறித்துநின் றுலக மெல்லாம்
விம்முறு கின்ற வேலை
பொறிப்பிதிர் படரச் செந்தீப்
புகையொடும் பொடிப்பச் பொம்மென்
றெறிப்பதோர் முறுவ லூன்ற
விராமனு மியம்ப லுற்றான்.

குறித்த வெம் கோவம் - (இவ்வாறு இராமபிரான்) மனத்திற் கொண்ட கோபமானது, யார்மேல் கோளுறும் கொல் என்று - யார்மீது போய்ப் பற்றுமோ என்று, உலகம் எல்லாம் - எல்லா வுலகிலுள்ளோர்களும், அஞ்சி - பயந்து, வெறித்து நின்று - திகைத்து விறைப்புற்று நின்று, விம் உறுகின்ற வேலை - வருந்து கின்றபோது, இராமனும் - இராமபிரானும், பொறி பிதிர் படர, பொறிகளின் சிதைவுகள் (அல்லது துணுக்குகள்) எங்கும் பரவ- செம் தீ புகை ஒடும் பொடிப்ப - சிவந்த நெருப்பு புகையோடு தோன்ற, எறிப்பது ஓர் முறுவல் - தாக்கி உறைப்பதான ஒரு புன் சிரிப்பு, பொம் என்று தோன்ற - பொம் என்ற ஒலிக்குறிப்புடன் உண்டாக, இயம்பல் உற்றான் - பின்வருமாறு பேசத் தொடங்கினான், (பேசினவை அடுத்து வருவனவற்றிற் காண்க.)

கோளுறுதல் - பற்றிக்கொள்ளுதல்; 'பேய்கோட்பட்டார்' என்பதுபோல; கோளுறல் - துன்புறுத்தலும் ஆம்; 'கோளுறு மிவ்வூ ரெனக் கொண்டாள்' (சுந்தர. 182). வெறித்தல், திகைப்பால் விறைப்புற்று நிற்றல்; 'வெறித்தது வெருவி', (795); வெறித்து; கலங்கி, மயங்கி, என்றும் கூறுவர்; 918. பிதிர்-சிதைவு அல்லது துளி; 'தனிக்கதிர் பிதிருமாறும்'; 1009; "பிதிர்ந்து வீழ்ந்தது தன்னை யுஞ் சுமித்திரை தனக்கு நல்கினான்" (பால. திருவவதாரப்: 92); இது, பிதிர்வு எனவும் வரும். பொடித்தல் - உண்டாதல் அல்லது தோன்றுதல்; 238, 1144, 1168. பொம்: ஒலிக்குறிப்பு; பால. கார்முகப்: 22; நள. கலிநீங்கு: 43; வி-பா. அருச்சுனன் தீர்த்த; 9; எறித்தல், பரவுதலும் ஆம்; சீவக. 380.

பி-ம். 1. கொள்ளுதுங்.
3. பிதிர்ப்பட்ட செந்தீப், பிதிர்ப்படரச், புகையொடும் பொடிப்பச்.
4. நிறைப்பதோர். (201)

1008. பெண்டனி யொருத்தி தன்னைப் பேதைவா ளரக்கன் பற்றிக்
கொண்டன னேக நீயிக் கோளுறக் குலுங்கல் செல்லா
எண்டிசை யிறுதி யான வுலகங்க ளிவற்றை யின்னே
கண்டவா னவர்க ளோடும் களையுமா றின்று காண்டி.

'தனி பெண் ஒருத்தி தன்னை - துணையின்றித் தனியேயிருந்த ஒரு பெண்ணாகிய சீதையை, பேதை வாள் அரக்கன் - மூடனான கொடிய இராவணன், பற்றி கொண்டனன் ஏக - அபகரித்துக் கொண்டுசெல்ல, நீ இ கோள் உற-நீ இத்தகைய கொடுந்துன்பத்துக் குள்ளாக, குலுங்கல் செல்லா - (இவற்றைக்கண்டும்) நடுங்கி வருந் தாது இருக்கின்ற, எண் திசை இறுதி ஆன உலகங்கள் இவற்றை- எட்டுத் திக்குகளை முடிவாகக் கொண்டுள்ள (அதாவது எட்டுத் திக்குக்களின் எல்லைவரை பரந்துள்ள,) இவ்வுலகங்கள் அனைத்தை யும், கண்ட வானவர்களோடும் - இக்கொடுமையைப் பார்த்தும் வாளாவிருந்த தேவர்களோடும், இன்னே களையும் ஆறு - இப் பொழுதே யான் அழித்தொழிக்கும் விதத்தை, இன்று காண்டி - இன்று நீ காண்பாயாக!

இஃது இராமபிரான் சடாயுவுக்குக் கூறியது. வாளரக்கன் - வாளேந்திய அரக்கனும் ஆம். பெண் தனியொருத்தி - பெண் களில் ஒப்புமை கூறமுடியாத தனிச்சிறப்புடைய ஒருத்தியாகிய சீதை என்னலும் ஏற்கும். பேதை, ஆண்மையற்ற அலி போன்ற

வனும் ஆம். கோளுறல் - கொலையுண்ணலும் ஆம்; கோள் - கொலை; 'கோணிலை குறித்து வந்தான் கட்டியங்காரன்' (சீவக. 264.) இச்செய்யுண் முதல், 1011-ஆம் வரையுள்ளன இராமபிரான் சீற்றம் கூறியவை; ஒப்பு. சுந்தர. 575, 653.

பி - ம். 1. பெண்டெனு மொருத்தி.

2. கொண்டன னென்கை நீதி கோளுறக் குலங்கள் சொல்ல.

3. எண்டிசை யுறுதியான, எண்டிசை சுமந்த யானை; யிவற்றை யென்னே.

4. கண்டவ ரவர்களோடும், கண்டன னவர்களோடும், கண்ட வானவர் மற்றெல்லாங்; களையுமா றீண்டு காண்டி. (202)

1009. தாரகை யுதிரு மாறுந் தனிக்கதிர் பிதிரு மாறும்
பேரகல் வான மெங்கும் பிறங்கெரி பிறக்கு மாறும்
நீரொடு நிலனு மற்று நின்றவுந் திரிந்த யாவும்
வேரொடு பறியு மாறும் விண்ணவர் விளியு மாறும்,

'தாரகை உதிரும் ஆறும் - நக்ஷத்திரங்கள் உதிர்ந்து வீழும் விதத்தையும், தனி கதிர் பிதிரும் ஆறும் - ஒப்பற்ற சூரியன் துகளாகச் சிதறி விழும் விதத்தையும், பேர் அகல் வானம் எங்கும் - பெரிய இடமகன்ற ஆகாயம் எங்கிலும், பிறங்கு எரி பிறக்கும் ஆறும் - ஒளியால் விளங்கும் தீ உண்டாகும் விதத்தையும், நீர் ஒடு நிலனும் - நீரும் இப்புவியும், மற்றும் - மேலும் அவற்றில் உள்ளனவான, நின்றவும் திரிந்த யாவும் - தாவர ஜங்கமப்பொருள் களெல்லாம், வேர் ஒடு பறியும் ஆறும் - வேரோடும் பறிபட்டு அழியும் விதத்தையும், விண்ணவர் விளியும் ஆறும் - தேவர்கள் அழியும் விதத்தையும்,

இதுமுதல் அடுத்துவரும், இரண்டு செய்யுள்களும் குளகமாயியைந்து, 1011-இல் வினைமுடிவு கொள்ளும். பேரகல் ஒருபொருட் பன்மொழியும் ஆம். பறிதல் - நிலைபெயர்ந்தோடுதலும் ஆம்.

பி - ம். 2. பேரகல் வானமெங்கும்; கறங்கெரி பிறக்குமாறும்.

3. நிலனுங்காலு, நிலனுங்காற்றும், நின்றவுங் கிடந்த யாவும்.

4. வேரொடு மழியுமாறும். (203)

1010. இக்கண மொன்றி னின்ற வேழினே டேழு மேல்கீழ்
மிக்கன போன்று தோன்று முலகங்கள் வீயு மாறும்
திக்குடை யண்ட கோளப் புறத்தவுந் தீய்ந்து நீரின்
மொக்குளி னுடையு மாறுங் காணென முனித லோடும்,

'மேல் கீழ் மிக்கன போன்று தோன்றும் - மேலும் கீழுமாக மிகுந்து வியாபித்தன போல விளங்கும், நின்ற - நிலைபெற்ற, எழின் ஒடு எழு உலகங்கள் - பதினான்கு உலகங்களும், வீயும் ஆறும் - அழியும் விதத்தையும், திக்கு உடை அண்ட கோளம் - எட்டுத் திக்களைத் தமக்கு எல்லைகளாகக் கொண்டுள்ள இவ்வண்ட கோளத்தின், புறத்தவும் - வெளியேயுள்ள புற அண்டங்களும், தீய்ந்து - எரிந்து, நீரின் மொக்குளின் - நீரில் தோன்றியழியும் குமிழிகள் போல, உடையும் ஆறும் - உடைந்தழியும் விதத்தையும், இ கணம் ஒன்றில் காண் என - இந்த ஒரு க்ஷணநேரத்தில் நீர் காண்பீராக! என்று இராமபிரான் சடாயுவுக்குக்கூறி, முனிதல் ஓடும் - கோபித்தபோது,

செய்யுள் 1008-இல் ஒரு முறை 'காண்டி' என்று கூறி, அதன் விளக்கமாக 1009, 1010 செய்யுள்களை அமைத்து 'காண்'' என்று முடித்தமையை நோக்குக. முனிதலோடும் நிகழ்ந்தவை அடுத்த செய்யுளிற் காணப்பெறும். நீரின் மொக்குள் - நீர்க்குமிழி ; 'நீரின் முளைத்தெழுந்த மொக்குளே போல' 1174 ; மொக்குள் ; சுந்தர, 307; நாலடி : 27.

பி-ம். 1. இக்கணை யொன்றி நின்ற வேழினேடேழு காறும், வேழுடனேழு காறும்.
2. மிக்கனவாகித் தோன்றுலகங்கள் விளியுமாறும்.
3. புறத்தொடு தேய்ந்து, தீந்து நீரின், திறந்து நீரின்.
4. மொக்குளின் மடியுமாறுங் மொக்குளங்குடையுமாறும் ; காணென முற்றலோடும்.

1011. வெஞ்சுடர்க் கடவுண் மீண்டு
மேருவின் மறைய லுற்ருன்
எஞ்சலி றிசையி னின்ற
யானையு மிரியல் போன
துஞ்சின வுலக மெல்லா
மென்பதென் துணிந்த நெஞ்சன்
அஞ்சின னிளைய கோவு மயலு
ளோர்க் கவதி யுண்டோ.

வெம் சுடர் கடவுள் - வெப்பமுள்ள கிரணங்களையுடைய சூரிய பகவானும், மீண்டு மேருவில் மறையல் உற்ருன் - (இராமபிரான் முனிவுக்கு அஞ்சி), தான் செல்லும் வெளியினின்றும் திரும்பி (இடையே அருகில் உள்ள) மேருமலையில் போய் மறைந்து கொள்ளத் தொடங்கினுன்; எஞ்சல் இல் - விட்டு நீங்குதல் இல்லாது எப்பொழுதும் நிலைபெற்று நிற்கும், திசையின் நின்ற யானையும் - எட்டுத்திசைகளையும் சுமந்து நின்ற திக் கஜங்களும், இரியல் போன - நிலைகெட்டு ஓடுவன ஆயின; (இவ்வாருக), உலகம் எல்லாம் துஞ்சின என்பது என் - உலகத்தில் உள்ள எல்லாப் பிராணிகளும் செயலற்று அடங்கின என்று சொல்வதில் என்ன சிறப்புடையது? (சொல்லாமலே விளங்கும் என்றபடி); துணிந்த நெஞ்சன் இளைய கோவும் - எத்தகைய துன்பத்தையும் அஞ்சாது ஏற்றுப் பொறுத்துக்கொள்ளும் மனத்தினனுன இளைய பெருமான் இலக்குவனும், அஞ்சினன் - அச்சங்கொண்டான்; அயல் உளோர்க்கு - புறத்துள்ள மற்றவர்க்கு உண்டான அச்சத்திற்கு, அவதி உண்டோ - ஓர் எல்லை அல்லது அளவு கூறலாகுமோ? ஆகாது என்றபடி.

செய்யுள் 1006-இல், திரிந்ததாகக் கூறிய கதிர் இங்கு மேருவின் மறையலுற்றது; இது, சூரியாஸ்தமனத்தைச் சுட்டியதும் ஆம் என்க. சூரியன் மேருவில் மறைபவன் என்பது 1064-இல் காண்க. யானையும், இளைய கோவும்: உவமைகள் உயர்வு சிறப்பின. எஞ்சுதல் - தம் தொழிலைச் செய்யாது விட்டு நீங்குதல்; 'இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற் குறுதி பயப்பதாந் தூது' (குறள். 690). துஞ்சுதல் - இங்குச் செய லற்றடங்கி நிற்றல் என்ற பொருளில் உள்ளது; 'உலகு தொழிலு லந்து நாஞ்சி றுஞ்சி'; (அகநா. 141; 5.)

பி - ம். 1. வெஞ்சினக் கடவுண் மீண்டு மேருவை. 2. எஞ்சலிற்றிசையி.
3. மென்பது துணிந்த, மென்பன துணிந்த; நெஞ்சின்.
4. மயலுளார்க்.

(205)

சடாயுவின் சொற்களால் இராமபிரானின் சீற்றம் தணிதல் 1012–6.

**1012.** இவ்வழி நிகழும் வேலை யெருவைகட் கரசன் யாதும்
செவ்வியோய் முனியல் வாழி தேவரு முனிவர் தாமும்
வெவ்வலி வீர நின்னால் வேறுமென் றேமாக் கின்றார்
எவ்வலி கொண்டு வெல்வா ரிராவணன் செயலை யென்னா,

இ வழி நிகழும் வேலை - இவ்வாறு இராமபிரானின் கோபத்தால் உலகமெல்லாம் நிலைதடுமாறி அஞ்சியபோது, எருவைகட்கு அரசன் - கழுகுகளுக்கு அரசனான சடாயு, 'செவ்வியோய் - மேன்மைக் குணமுடைய இராமா! யாதும் முனியல் - ஒரு சிறிதும் நீ கோபங்கொள்ளாதே! வாழி - நீ நல்வாழ்வுறுவாயாக! வெவ் வலி வீர - (பகைவர்க்குக்) கொடுமை இழைக்கும் வலிமை மிக்க வீரனே! தேவரும் முனிவர் தாமும் - தேவர்களும் முனிவர்களும், இராவணன் செயலை - இராவணனின் அடாத செயல்களை, நின்னால் வேறும் என்று ஏமாக்கின்றார் - உன்னால் 'வெல்வோம்' என்று மகிழ்ச்சியடைகின்றனர்; (அப்படியிருக்க நீ அவர்களையே முனிந்தால்), எ வலி கொண்டு வெல்வார் - இராவணனை வேறு எந்தத் துணைவலி கொண்டு வெல்வார்கள்?' என்னா - என்று சொல்லி,

(இது, பின்வரும் செய்யுட்களோடு இயைந்து, 1016-இல் உள்ள 'என்றான்' என்ற வினைகொண்டு முடியும். வாழி, இஃது உபசார மொழியும், ஆசீர்வாத மொழியும் ஆம். வேறுதல் - வெல்லுதல்; *609*; சுந்தர. *132*. ஏமாக்குதல் - மகிழ்ச்சி யடைதல்; இறுமாந்து மகிழ்தலும் ஆம்; 'காமர் நெஞ்ச மேமாந் துவப்ப' (புறநா. *198*); ஏம் - மகிழ்ச்சி; ஏம - அரணும் ஆம். (இராமபிரானையே) தேவர்கள் தம் இரக்ஷகனாகக் கொண்டுள்ளனர் என்பதும் ஆம். தேவர்கள் இராவணனுக்கு அடங்கியிருந்தனர் என்பதை அடுத்த செய்யுளாலும், (*1013*) சடாயு விளக்குவது காண்க.

பி - ம். 1. யெருவைகட் கிறைவன்.

2. வீயுமென்; வென்றுமென்; றே முற்றுய்வார்.

4. கொண்டு காப்பா ரிராவணன் றன்னை; ரிராவணன்செயலை; யென்றான்;

**1013.** நாட்செய்த கமலத் தண்ண
 லல்கின நவையி லாற்றல்
தோட்செய்த வீர மென்னிற்
 கண்டனை சொல்ல வுண்டோ
தாட்செய்ய நளினத் தோனே
 முதலினர் தலைபத் துள்ளாற்
காட்செய்கின் றூர்க ளன்றி
 யறஞ்செய் கின்றூர்கள் யாரே.

'நாள் செய்த கமலத்து அண்ணல் - பிராணிகள் ஒவ்வொரு வருக்கும் ஆயுட்காலம் இவ்வளவினதென்று விதிக்கும் தாமரை மலர்மீது விளங்கும் மேலோனை பிரமதேவன், நல்கின நவையில் ஆற்றல் - வரமாக கொடுத்ததான குற்றமற்ற வலிமை வாய்ந்த, தோள் செய்த வீரம் - அவ்விராவணனுடைய தோள்கள் செய்த வீரச் செயலின் திறத்தை, என்னில் கண்டனை - இப்பொழுது யான் இறகுகள் அறுப்புண்டு சாகும் நிலையில் இருப்பதில் நீ நேரில் தெரிந்து கொண்டாய்; சொல்ல உண்டோ - அதைப் பற்றி வேறு சொல்ல வேண்டுவதும் உள்ளதோ? (இல்லை என்றபடி); தாள் செய்ய நளினத்தோனே முதலினர் - தாளையுடைய சிவந்த தாமரையி லுள்ள பிரமதேவனே முதலான தேவர்கள் யாவரும், தலை பத்து உள்ளாற்கு - பத்துத் தலைகளையுடைய இராவணனுக்கு, ஆள் செய்கின்றூர்கள் அன்றி - அடிமைத் தொழில் செய்கின்றனர் அல்லாமல், அறம் செய்கின்றூர்கள் யாரே - தத்தம் தருமங்களைச் செய்கிறவர்கள் யாரே உள்ளார்? (ஒருவரும் இல்லை என்றபடி).

நாள் - ஆயுள்; 'நாளொடு வான் கொடுத்த நம்பன்' (தேவாரம்). நாள் செய்த கமலத்து அண்ணல் - அன்று மலர்ந்தது போல எப் பொழுதும் புது ஒளியை உண்டாக்கிய தாமரை மலர்மீது உள்ள பிரமதேவன் என்னலும் ஒன்றும்; நாள் செய்த - இராவணனுக்கு மூன்றரைக் கோடி ஆயுளை அருளிய, எனலும் ஆம்.

பி - ம். 1. நல்கிய நவையிலாற்றல்; நல்கினை வையிலாற்றல், நல்கின வரத்தினூற்றல். 2. தோட் செய்ய வீர.
3. கமலத்தானே; தலைபத்துள்ளோர்க்.
4. யறஞ்செய்கின் றிலர்களம்மா, யறஞ்செய்கின்றூர்களியாரோ, யறஞ்செய்கின்றூரிலம்மா, யறஞ்செய்கின்றனர்களம்மா; யயற் செய்கின்றூரிலம்மா; யமர்ச்செய்கின்றூரினம்மா; ஏன்றேய லெயன் செய்வதம்மா. (207)

1014. தெண்டிரை யுலகந் தன்னிற் செறுநர்மாட் டேவல் செய்து
பெண்டிரின் வாழ்வ ரன்றே யிதுவன்றே தேவர் பெற்றி
பண்டுல களந்தோ னல்கப் பாற்கட லமுத மந்நாள்
உண்டில ராகி லிந்நா ளன்னவர்க் குய்த லுண்டோ.

'தெள் திரை உலகம் தன்னில் - தெளிவான கடல் சூழப்பெற்ற இவ்வுலகில், செறுநர் மாட்டு ஏவல் செய்து - தம் பகைவர்களான இராவணன் முதலான அரக்கர்களிடத்தில், அவர்கள் ஏவிய பணிவிடைகளைப் புரிந்து, பெண்டிரின் வாழ்வர் - (ஆண்மையற்று) மகளிர்போல வாழ்கின்றார்; தேவர் பெற்றி இது அன்றே - இது தேவர்களின் நிலைமை அன்றே? பண்டு உலகு அளந்தோன் - முன் உலகங்களைத் திரிவிக்கிரமனாகி அளந்தவனான திருமால், பால் கடல் அமுதம் நல்க - பாற்கடலில் உண்டான அமுதத்தை அத்தேவர்க்குப் பங்கிட்டு அளிக்க, அ நாள் உண்டு இலர் ஆகில் - அக்காலத்தில் அத்தேவர்கள் அதனை உண்ணாது இருந்தனரானால், இ நாள் - (இராவணன் வலி ஓங்கியுள்ள) இக்காலத்தில், அன்னவர்க்கு - அத்தேவர்களுக்கு, உய்தல் உண்டோ - அவனிடமிருந்து தப்பி உயிர் வாழ்தல் என்பது உண்டாகுமோ? (உயிர் வாழாது அழிந்திருப்பர் என்றபடி).

திரை - கடல்; சினையாகுபெயர். உலகம்: இங்கு இலங்கையைக் குறிப்பதும் ஆம். பெண்டிரின், கொண்டி மகளிரைப்போல; கொண்டி மகளிர் - பகைவர் மனையோராய்ப் பிடித்து வந்த மகளிர்; இவர்களை வெற்றிபெற்ற மன்னன் தன் ஏவலில் அமைப்பது வழக்கம்; பட்டினப். 246; அமுத முண்டமையால் தேவர்கள் இறக்கவில்லை, என்று கூறினான் என்க.

பி - ம். 1. யுலகந்தன்னுட்.
2. பெண்டிரும் வாழ்வ; பெண்டிருமானா ரன்னோர்க்.
3. களந்தான்நல்க, களந்தான்தந்த, லமுதமந்நாள், வமுதம் வாய்கொள்.
4. உண்டிலராயி னுயிருமுண்டோ, டுண்டிலராகி.

(208)

1015. வம்பிழை கொங்கை வஞ்சி
வனத்திடைத் தமியள் வைகக்
கொம்பிழை மானின் பின்போய்க்
குலப்பழி கூட்டிக் கொண்டீர்
அம்பிழை வரிவிற் செங்கை
யையன்மீ ராயுங் காலை
உம்பிழை யென்ப தல்லா
லுலகஞ்செய் பிழையு முண்டோ.

'அம்பு இழை - அம்பு பொருத்தப் பெறும், வரி வில் செங்கை - கட்டுக்கள் அமைந்த வில்லைச் சிவந்த கையிற் கொண்டுள்ள, ஐயன் மீர் - என் அன்புக்குரிய மக்களே! வம்பு இழை கொங்கை வஞ்சி - கச்சு அமைந்த கொங்கைகளையுடைய வஞ்சிக் கொடிபோன்ற சீதை, வனத்து இடை தமியள் வைக - காட்டிடத்தில் தனியளாய் இருக்க, கொம்பு இழை மானின் பின் போய் - கொம்புகள் பொருந்திய மானின் பின்னே அதனைப் பிடிக்கச் சென்று, குல பழி கூட்டிக் கொண்டீர் - நீங்கள் உங்கள் குலத்திற்கே ஒரு பெரும் நிந்தனையை உண்டாக்கிக் கொண்டீர்கள்; ஆயும் காலை - இதனை ஆராய்ந்து பார்க்குமிடத்து, உம் பிழை என்பது அல்லால் - இது உங்களுடைய குற்றமே என்பதல்லாமல், உலகம் செய் பிழையும் உண்டோ - இதில் உலகத்திலுள்ளார் செய்த குற்றம் என்பதும் உள்ளதோ? (இல்லை என்றபடி).

ஒருவர் பிறர்மீது குற்றங்கண்டு வெகுளும்போது, அவர்மீதே அக்குற்றம் சார்ந்ததாகக் கூறுவது அவ்வெகுளியைத் தணிக்கச் சிறந்த உபாயமாகும் என்ற உலக முறை இங்குக் கையாளப்பெற்றது காண்க. 'தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின், என்குற்ற மாகு மிறைக்கு' என்ற குறளின் (431) கருத்து இங்குக் கூறப் பெற்றது என்க. வஞ்சி: உவமையாகுபெயர். வம்பு; வாசனையுமாம் 'வம்புலாஞ்சோலை'. 'வம்பரு வரி வண்டு' என்பன நோக்குக. இழைத்தல் - பொருந்துதல் அல்லது அமைத்தல்;

பி - ம். 1. வம்பவிழ். 2. பூட்டிக்கொண்டீர்.
3. யையவி தாயுங்காலை. 4. லுலகு செய்பிழையு.

**1016.** ஆதலால் முனிவா யல்லை யருந்ததி யனைய கற்பின்
காதலா டுயர நீக்கித் தேவர்தங் கருத்து முற்றி
வேதநூன் முறையின் யாவும் விதியுளி நிறுவி வேறு
தீதுள துடைத்தி யென்றான் சேவடிக் கமலஞ் சேர்வான்.

சே அடி கமலம் சேர்வான் - (திருமாலின்) சிவந்த பாதத் தாமரை களையடையும் நிலையில் இருந்த அந்தச் சடாயு, (அவ்விராமபிரானை நோக்கி), 'ஆதலால் - ஆகையால், முனிவாய் அல்லை - நீ தேவர்கள் முதலினோரைக் கோபிக்காதே! அருந்ததி அனைய கற்பின் - அருந்ததி போன்ற கற்பின் நெறியில் உள்ள, காதலாள் - உன் அன்பிற்குரிய மனையாளான சீதையின், துயரம் நீக்கி - துன்பத்தைப் போக்கி, (அதாவது அவளை மீட்டுவந்து), தேவர்தம் கருத்து முற்றி - தேவர் களுடைய எண்ணத்தையும் நிறைவேற்றி, வேதநூல் முறையின் - வேத சாஸ்திரங்களின் முறைப்படி, விதி உளி நிறுவி - ஆன்றோர் கள் விதித்துள்ளவாறு (அறத்தை) நிலை நிறுத்தி, வேறு தீது உள துடைத்தி - மற்றும் உலகில் உள்ள தீமைகளையும் போக்கி யருள்வாக!' என்றான் - என்று உறுதி கூறினான்.

பிராட்டியை அருந்ததியனைய கற்பினள் என்பது; 284 குறிப்பு. தேவர்தம் கருத்து இராவணவதம். என்றான் சேர்வான், என்றும் இயைத்துப் பொருள் கூறலாம். சேவடிக்கமலம்; இராமபிரான் திருவடி, எனலும் ஆம்; அவன் திருமாலே ஆதலின். சடாயு சோர்வடைந்த நிலை இங்குக் கூறப்பெற்றது.

பி - ம். 1. ஆதலின் முனிவா.
2. காதலா ளுயருந் தேவர் துயருங் களைந்து; கருத்தை முற்றி;
3. முறையினாலே விதியுளி நிறுவி மற்றும்; முறையுள்யாவும், முறைகளியாவும்; விதியுளநிறுவி; வேறும்.
4. துடைத்தியென்று சேவடிக் கமலஞ்சேர்ந்தான். (210)

இராமபிரான் வெகுளி நீங்கலும், சடாயு விடடைதலும் **1017–20.**

**1017.** புயனிற வண்ண னுண்டப்
புண்ணியன் புகன்ற சொல்லைத்
தயரதன் பணியீ தென்னச்
சிந்தையிற் றழுவி நின்றான்
அயலினி முனிவ தென்னை
யரக்கரை வருக்கந் தீர்க்கும்
செயலினிச் செயலென் றெண்ணிக்
கண்ணிய சீற்றந் தீர்ந்தான்.

புயல் நிற வண்ணன் - மேகத்தின் நிறம் போன்ற அழகை யுடைய இராமபிரான், அ புண்ணியன் புகன்ற சொல்லை - அந்தப் புண்ணியாத்மாவான சடாயு சொன்ன அறவுரைகள் அடங்கிய புத்தி மதியை, ஆண்டு - அப்பொழுது, தயரதன் பணி ஈது என்ன - தன் தந்தையாகிய தசரதசக்கரவர்த்தியின் கட்டளை இது என்று, சிந்தையில் தழுவி நின்றான் - தன் மனத்தில் ஏற்றுக்கொண்டு, 'இனி அயல் முனிவது என்னை - இனி (யான்) பிறரைக் கோபிப்பதில் யாது பயன்? (பயனில்லை என்றபடி); அரக்கரை வருக்கம் தீர்க்கும் - இராக்கதர்களை அன்னோர் இனத்தோடு அழிக்கும், செயல் இனி செயல் - செயலே இனி யான் செய்வது' என்று எண்ணி - என்று தீர்மானித்து, கண்ணிய சீற்றம் தீர்ந்தான் - தான் கருத்திற் கொண்ட கோபத்தை விட்டொழிந்தான்.

வண்ணன் : வண்ணம்; அழகு ; 'மழை வண்ணத் தண்ணலே' (பால. அகலிகைப் : 82); இராமபிரான் திருமேனியழகுக்கு மேகத்தை ஒப்புமை கூறுவது இந்நூலிற் பல விடங்களிற் காணலாம். சடாயு வைப் புண்ணியன் என்றது, 'அறநெறி நின்று ளோர்க்கெலாம் ஆணியை' (983) என்று பிராட்டி முகத்தானும் சடாயு பாராட்டப் பெற்றது காண்க. தயரதன் பணி : இராமபிரான் சடாயுவைத், தன் தந்தை நிலையில் வைத்துச் சிறப்பித்ததால் என்க; 203 ஆம் செய் யுளையுங் காண்க.

பி - ம். 1, புகன்ற சொல்லிற். 2. றழுவி நின்றான்; றாங்கி நின்றான். 3. முனிவதென்னை; வருக்க நீக்குஞ், வருக்க நீங்குஞ், வருக்கந் தீய்க்குஞ், 4. செயலினைச்; கன்றிய சீற்றஞ்; தீர்த்தான்.

(211)

1018. ஆயபின் னமலன் றானு மையநீ யமைதி யென்ன
வாயிடை மொழிந்த தன்றி மற்றொரு செயலு முண்டோ
போயதவ் வரக்க னெங்கே புகலெனப் புள்ளின் வேந்தன்
ஓய்வின னுணர்வு தேய வுரைத்தில னுயிருந் தீர்ந்தான்.

ஆய பின் - அவ்வாறுதான் கோபந்தணிந்த பின்னர், அமலன் தானும் - குற்றமற்ற இராமபிரானும், (சடாயுவை நோக்கி), 'ஐய - ஐயனே! நீ - நீவிர், அமைதி - சாந்தமடைவீராக! வாய் இடை என்ன மொழிந்தது அன்றி - வாயினால் ஏது கூறப்பெற்றதோ அஃது அல்லாமல், மற்று ஒரு செயலும் உண்டோ - (அதனைக் கடந்து) யான் வேறு ஒரு செயலும் செய்வ துண்டாகுமோ? (செய்யேன்

என்றபடி); (இது நிற்க), அ அரக்கன் போயது எங்கே - அந்த இராக்கதனான இராவணன் சென்ற இடம் எங்கு? புகல் என - அதனை எனக்குச் சொல்வீராக!' என்று கேட்க, புள்ளின் வேந்தன் - பறவைகளுக்கரசனான சடாயு, ஓய்வினன் - ஓய்ந்து போனவனாய், உணர்வு தேய - அறிவும் குறைந்துபோக, உரைத்திலன் - மறு மொழி கூற முடியாதவனாய், உயிரும் தீர்ந்தான் - தன் உயிரும் நீங்கினான்.

வாயிடை............செயலுமுண்டோ: என்றது, 'தந்தை சொல் மிக்க மந்திர மில்லை' என்ற உறுதிமொழியின் உண்மையைக் கருதிக் கூறியது என்க. 'நீ அமைதி' என்ன, வாயிடை மொழிந்த அது - (என்னை) 'நீ அமைவாயாக' என்று நும் வாயாற் கட்டளை யிட்டது, எனலும் பொருந்தும். உணர்வும், உயிரும் என்பனவற்றின் உம்மைகள் எஞ்சியது தழுவிய எச்சவும்மைகள். சடாயு விடை கூறு முன் உயிர் துறந்தான் என்பது, பின் அநுமனாலும் பிராட்டிக்குக் கூறப்பெற்றது; சுந்தர. 569. சடாயு தன் உயிர் நீங்கு முன் இராம பிரானைப் பலவாறு துதித்தனன் என்று அத்யாத்ம ராமாயணம் கூறும். இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 2. மொழிந்ததன்றே.
4. னுயிருஞ் சோர்ந்தான்; னுயிர்கூர்ந்தான். (212)

1019. சீதங்கொண் மலரு ளோனுந் தேவரு மென்ப தென்னே
வேதங்கள் காண்கி லாமை வெளிநின்றே மறையும் வீரன்
பாதங்கள் கண்ணிற் பார்த்தான் படிவங்கொ ணெடிய பஞ்ச
பூதங்கள் விளியு நாளும் போக்கிலா வுலகம் புக்கான்.

சீதம் கொள் மலர் உளோனும் - குளிர்ச்சியைத் தன்னிடங் கொண்ட தாமரை மலரில் உள்ள பிரமதேவனும், தேவரும் - தேவர்களும், என்பது என்னே - (அப்பரம்பொருளான இராமபிரானைக் காணமாட்டார்) என்று சொல்வதில் யாது பயன்? (ஏனெனில்), வேதங்கள் காண்கிலாமை - வேதங்களும் கண்டறிய முடியாதபடி, வெளி நின்றே - அவற்றிற்கும் அப்பால் நின்றே, மறையும் வீரன் - மறைந்து நிற்கும் பெரும் வீரனான இராமபிரானுடைய, பாதங்கள் கண்ணில் பார்த்தான் - திருவடிகளைச் சடாயு அப்பொழுது தன் கண்களால் தெரிசித்த வண்ணமே, படிவம் கொள் - (பலவகையான) உருவங்களைக் கொண்டுள்ள, பஞ்ச பூதங்கள் - ஐம் பெரும் பூதங் களும், விளியும் நாளும் - அழியும் நாளாகிய ஊழி முடிவு நாளிலும்,

போக்கு இலா - அழிவில்லாததான, உலகம் - பரமபதத்தில், புக்கான் - போய்ச் சேர்ந்தான்.

இராமபிரான் வேதங்களும் அறிய முடியாத பரம்பொருள் என்பதாம். இக்கருத்து, இக்காண்டத்து ஆரம்பத்திற் கடவுள் வாழ்த்துச் செய்யுளில் கூறப்பெற்றது. பரம்பொருளாகிய இராம பிரான் சரபங்கர், சடாயு, சபரி ஆகிய நல்லோர்க்கும், விராதன், கவந்தன் ஆகிய தீயோர்க்கும் தானே நேரில் நின்று பரமபதமருளின மாட்சி இக்காண்டத்தில் கூறப்பெற்றமை காண்க. இவ்வாறு அருளப்பெற்றவருள் சடாயுவின் திறம் மிக வியக்கத்தக்கது. அவன் பெருமைக்கேற்ற முறையில் ஆசிரியர் இப்படலத்தை யாத்து இதனை இக்காண்டத்துக்கே உயிர் நிலையாக அமைத்த திறம் நோக்கி வியக் கற்பாலது. பின் இராமபிரானும். சுக்கிரீவனும் அவனைப் புகழ்ந் துள்ளமையும் காண்க. சடாயு இராமபிரானைப் பரம்பொருளே என்று முன் பல இடங்களிலும் கூறினமையையும், 1016-ஆம் செய்யுள் அவன் 'சேவடிக் கமலம் சேர்ந்தான்' என்று கூறினமையையும் கொண்டு இவ்வாறு பொருள் கூறப்பெற்றது. அன்றி, 'பாதங்கள்- திருமாலின் திருவடிகள்; பார்த்தான் - தரிசித்தான்' என்று வை குண்டபதிக்கே கூறுவாரும் உளர். பூதங்கள் விளியும் நாள்: பஞ்ச பூதங்களும் தனித்தியங்குதவதின்றி அப்பரம் பொருளிடத்தே ஒடுங் கிக் கலக்கும் ஊழி முடிவுக்காலம்; பூதங்கள் விளியுநாளும் போக்கிலா வுலகம் - அழியாத பரமபதம்; இது முன், "உறுகால் கிளர் பூத மெலாமுகினும் மறுகாநெறி" (93) என்னப்பட்டது காண்க.

பி - ம். 1. மலரோனுறி தேவர்க்குந் தெரிவுறுதே.
2. வேதங்களறிவுறுமல் வெளிநின்று மறையுமேலோன்; காண இல்லாத, காண்கிலாதான், காண்கிலாத; வெளிநின்ற.
3. படிவங்கணெடிய, படிவந்தன்னெஞ்சிற் கொண்டான்.
4. பேர்கிலா வுலகம். (213)

1020. வீடவ னெய்தும் வேலை விரிஞ்சனே முதல மேலோர்
ஆடவர்க் கரச னோடுந் தம்பியு மழுது சோரக்
காடமர் மரமும் மாவுங் கற்களுங் கரைந்து சாய்ந்த
சேடரும் பாரு ளோருங் கரஞ்சிரஞ் சேர்த்தா ரன்றே.

அவன் வீடு எய்தும் வேலை - அச்சடாயு மோட்சம் அடையும் சமயத்தில், ஆடவர்க்கு அரசன் ஓடும் - புருஷோத்தமனான இராம பிரானோடும், விரிஞ்சனே முதல மேலோர் - பிரமன் முதலாக உள்ள

வானோர்களும், தம்பியும் - அவன் தம்பி இலக்குவனும், அழுது சோர - வாய்விட்டு அழுது மெலிவுற, காடு அமர் மரமும் மாவும் - காட்டிலிருந்த மரங்களும் விலங்குகளும், கற்களும் - மலைகளும், கரைந்து சாய்ந்த - சோகத்தால் கரைந்து தளர்வுற்று வீழ்ந்தன ; சேடரும் பார் உளோரும் - பாதாள உலகில் வாழும் நாகர்களும், புவியில் வாழும் மானிடர்களும், கரம் சிரம் சேர்த்தார் - தங்கள் கைகளைச் சிரமேல் வைத்துத் துதித்தனர். அன்று, ஏ : ஈற்றசைகள்.

வீடு - உலகப் பற்றினின்று விடுபட்டோர் அடையும் நிலை ; அதாவது மோட்சம் ; வீடு - முதனிலை திரிந்ததொழிற் பெயர். அரும் பெருஞ்செயல் புரிந்த பெருந்தகையான சடாயு இறந்தது கண்ட தேவர், நாகர், மானிடர், கானகத்து விலங்குகள், புட்கள், கரையாத கற்கள், ஆகிய ஸ்தாவர ஜங்கமப் பொருள்கள் யாவும் வருந்தியழுதன. இது, இராமபிரான் பிராட்டியோடும், தம்பியோடும் வனஞ் சென்ற காலை அயோத்தி நகருற்ற இன்னலைக் கூறுமிடத்து, "ஆவு மழுதவதன் கன்றழுத வன்றலர்ந்த, பூவுமழுத புனற்புள்ளழுத கள்ளொழுகும், காவுமழுத களிறழுத கால்வயப்போர், மாவு மழுதவம் மன்னவனை மானவே" (அயோ. நகர் நீங்கு : 102) என்று நம் ஆசிரியர் கூறியுள்ள அரிய செய்யுளை நினைப்பிக்கின்றது. கரஞ் சிரஞ் சேர்த்தல் - தலைமேற் கைகளைத் தூக்கித் குவித்த நிலையில் துதித்தல். இவ்வாறு சடாயு மோட்சம் பெற்றதை 'தெய்வ மரண மென்றுதை பெற்றது' (உயுத்த. வீடணனடைக்கலம் ; 116,) என்று இராமபிரான் வாக்காலேயே பாராட்டிய முறையில் ஆசிரியர் அருளிய அருமை இங்கு நோக்கத் தக்கதாகும். இச்செய்யுள், சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 2. கரசனோடு நம்பியு ; சோர்ந்தார் ,

3. மாவும் புள்ளுங், மரனும்புல்லும், மரனுமானுங் ; கரைந்து சோர்ந்த, கரைந்து சாய்ந்த.

4. பாரினோரும், பாரினோர்க்குங்கர சிரஞ் சேர்ந்தவன்றே ; சேடன் மேற் பாருள்ளோர்களி யாவருந் தியங்கி னைந்தார். (214)

இராமபிரான் துயருற, இலக்குவன் அவனைத் தேற்றல் **1021-4.**

**1021.** அறந்தலை நின்றி லாத
வரக்கனா லாண்மை தீர்ந்தேன்
துறந்தனென் றவஞ்செய் வேனோ
துறப்பெனோ வுயிரைச் சொல்லாய்
பிறந்தனென் பெற்று நின்ற
பெற்றியாற் பெற்ற தாதை
இறந்தன னிருந்து ளேன்யா
னென்செய்கே னிளவ லென்றான்.

(அப்பொழுது இராமபிரான் இலக்குவனை நோக்கி), 'இளவல் - தம்பி! அறம் தலை நின்று இலாத - தருமத்தினிடத்து நில்லாத, (அதாவது, அறக்கேடனான), அரக்கனால் - இராக்கதனாகிய இராவண னால், ஆண்மை தீர்ந்தேன் - என் வீரம் கேடடைந்தவனானேன்; (அன்றியும்), பிறந்தனென் - தசரதருக்கு மகனாகப் பிறந்தேன்; (அவன் இறந்த பிறகு), பெற்றி நின்ற பெற்றியால் - (நண்பன் மைந் தன், தன்மைந்தனே என்ற) உரிமை பெற்று நின்ற சிறப்பால், பெற்ற தாதை - நான் அடைந்த தந்தையே ஆகிய சடாயு, இறந்தனன் - என் பொருட்டுப் போர்புரிந்து இதோ இறந்து போய்விட்டான்; இருந்து உளேன் யான் - நானோ உயிர் போகாது இன்னும் இருந்து கொண் டிருக்கிறேன்; துறந்தனென் - யாவற்றையும் துறந்து, இனி தவம் செய்வேனோ - தவத்தைச் செய்வேனோ? (அன்றேல்), உயிரை துறப் பெனோ - என் உயிரைப் போக்கிக்கொள்வேனோ? என் செய்கேன் - யான் இனி எதைச் செய்யக்கூடியவனாவேன்?' என்றான் - என்று வருந்திக் கூறினான்.

பெற்றதாதை, பெற்று நின்ற பெற்றியால் இறந்தனன் என இயைத்து, எனக்குப் பெற்றதாதை யென்ற உரிமை பெற்ற கார ணத்தினால் தன் மைந்தனாகிய எனக்கு நேர்ந்த அவமானத்தைத் தடுக்க வேண்டியும், தன் மருமகள் என்ற உரிமையால் சீதையைக் காக்க வேண்டியும், இராவணனோடு போரிட்டு இறந்தான் சடாயு என்பதும், அன்றேல், அவன் இறவான் என்பதும் இராமபிரான் கருத்துக்களாம். சடாயு, 'கற்பங்கள் பல கண்டுளான்; 184; உயுத்த. அங்கதன் தூது; 5. பழையவுரை, 'ஆதனேன்' என்ற பாடங்கொண்டு, 'குருடனேன் அறிவிலேன்' என்றும், 'பேரநின்ற பெற்றியால்' என்று கொண்டு, 'அயோத்தியைவிட்டு நான் வந்த தனாலே' என்றும் பொருள் கூறுகின்றது. இச்செய்யுளின் பாடம்

ஆராயத்தக்கது. இப்படலத்தில், இராமபிரானுக்குத் துயர்கள் ஒன்றன் பின்னொன்றாக மேன்மேலும் வருவது காண்க.

பி-ம். 1. அரக்கனிலாண்மை; ஞண்மையீய்ந்தேன்; யாதனேனுண்மை நீத்தேன்;

2. நயஞ்செய்யேனே துயரினுக்கொருவனாகப்;

3. பேரகின்ற பெற்றியால்; பெற்றியே பெற்றதாதை; பிறந்து நான் பெற்றுநின்ற, பிறந்தன பிறந்து நின்ற; பிறந்தனன் பிறந்து நின்ற. (215)

1022. என்றலு மிளைய கோவு
மிறைவனை யிறைஞ்சி யாண்டும்
வென்றியாய் விதியின் றன்மை
பழுதில விளைந்த தன்றே
நின்றினி நினைவ தென்னே
நெருக்கியவ் வரக்கர் தம்மைக்
கொன்றபி னன்றே வெய்ய
கொடுந்துயர்க் குளிப்ப தென்றான்.

என்றலும் - என்று இவ்வாறு இராமபிரான் மனந்தளர்ந்து கூறலும், இளைய கோவும் - இளைய பெருமானான இலக்குவனும், இறைவனை இறைஞ்சி - தலைவனான அவனை வணங்கி, 'வென்றியாய் - வெற்றியையுடையோனே! யாண்டும் - எப்பொழுதும், விதியின் தன்மை - ஊழ் விதியின் தன்மை, பழுது இல விளைந்தது அன்றே - பழுது இல்லாமல் நடந்தேறியது அல்லவோ? (ஆதலின்), இனி நின்று நினைவது என்னே - இனி நாம் இங்கு நின்று வீணே பலவாறு எண்ணுவது என்ன பயனுடைத்தாகும்? (தாமதித்தல் இனிக்கூடாது என்றபடி); அ அரக்கர் தம்மை - அந்த இராக்கதர்களை, நெருக்கி - அடர்த்து, கொன்றபின் அன்றே - கொன்ற பிறகு அல்லவோ? வெய்ய கொடு துயர் - நமக்கு உண்டாகியுள்ள கொடிய துன்பத்தில், குளிப்பது - ஆழ்ந்து வருந்துவது' என்றான் - என்று கூறினான்.

விதியின் வலிமை; *998-1001*. 'நம் தந்தையாகிய சடாயுவைக் கொன்ற அரக்கனைக் கொல்வதே முதற் காரியமாகும்; அதன்பின் தான் இறந்த சடாயுவுக்கு இரங்கி வருந்துவது;' என்று எடுத்துரைத்தான் இளையோன். இச்செய்யுள் ஒரு பிரதியில் இல்லை.

பி-ம். 1. என்ற பின்னிளைய வீரனிராமனை; மிளையகோவவ்விறையினை; மிளையகோவவ் விறைவனை; யிறைஞ்சியாணர்.
2. பழிபல விளைந்ததொன்றே, பழுதிலா விளைந்ததன்றே; விளைந்ததிங்கிவன் மாட்டொன்றே; பூதலம் விளைந்ததன்றே.
3. நினைவதென்னை, நினைவதென்றோ; நெருக்கியவரக்கர் தம்மை.
4. கொடுந்துய ரொழிப்பதென்றான். (916)

1023. எந்தையீ தியம்பிற் றென்னே
யெளிமையை யாகி யேழைச்
சந்தவார் குழலி ளைத்
துறந்தனை தணிதி யேனும்
உந்தையை யுயிருண் டோனை
யுயிருண்ணு மூற்ற மில்லாச்
சிந்தையை யாகி நின்று
செய்வதென் செய்கை யென்றான்.

(மேலும் இலக்குவன்), 'எந்தை - என் தந்தை போன்றவரே! ஈது இயம்பிற்று என்னை - இவ்வாறு (தவம் செய்வதாக) நீவிர் கூறியது ஏனோ? எளிமையை ஆகி - எளிதில், ஏழை சந்தவார் குழலிளை - அபலையான அழகிய நீண்ட கூந்தலையுடைய பிராட்டியை, துறந்தனை - பிரியலுற்றீர்; தணிதி எனும் - அதனால் உண்டான வருத்தத்தை ஒருவாறு பொறுத்துக்கொள்வீரானாலும், உந்தையை உயிர் உண்டோனை - உமது தந்தையாகிய சடாயுவின் உயிரைப் போக்கிய அந்த இராவணனை, உயிர் உண்ணும் ஊற்றம் இல்லா - உயிரை அழிக்கும் முயற்சி (அல்லது உறுதி இல்லாத), சிந்தையை ஆகி நின்று - மனமுடையவராய் நீவிர் இருந்து, செய்வது என் செய்கை - செய்யக் கூடிய காரியம் யாதேயாகும்?' என்றான் - என்று வருத்தத்துடன் கூறினான்.

இராமபிரானை இலக்குவன் எந்தை என்றது: மூத்த சகோதரன் தந்தைக்குச் சமம் என்ற நூற்பிரமாணத்தாலும், தான் வனம் வருமுன் தன் தாயாகிய சுமித்திராதேவி, தனக்கு உறுதிமொழி கூறி வழியனுப்பிய காலை இனி, 'மாகாதலிராமனம் மன்னவன்'' என்று அறிவுறுத்திய கட்டளையை மேற்கொண்டதாலும், இராமபிரானே, தனக்குத் தாய், தந்தை மற்ற சுற்றத்தினரும் என்ற (அயோத். நகர் நீங்கு: 136) உறுதிப்பாட்டை அவன் ஆதிமுதற் கொண்டுள்ளவனாதலாலும் என்க. ஈதியம்பிற்றென்னை: இவ்வாறு கூறுவது நியாயு

மன்று என்பதை மறைமுகமாய் அறிவித்த மரியாதையின் மேலது என்க. எளிமையையாகி - வலிபற்றவன் என்பதைக் காட்டிக்கொண் டனையாகி என்பதாம். ஏழை - மெல்லியல் என்ற பொருளில் பெண் என்பதைக் குறிப்பது. ஊற்றம் - உறுதி அல்லது வலிமையும் ஆம்; 'படையூற்ற மிலன் சிறியன்' (பால. கையடைப் : 12); புறநா. 366:9; தக்க. 685. செய்வதென் செய்கை; 'நீவிர் செய்வது என்ன காரியம் ஆகும்? அதாவது, இவ்வாறு வருந்தியிருப்பது நல்ல காரியம் அன்று' என்று ஒருவாறு இடித்துரைத்ததும் ஆகும். இவ்வாறு இலக்குவன் இராமபிரானை மீட்டும் இடித்துரைத்தது, உயுத்த. அங்கதன் தூது : 5-இலும் காண்க. மனைவியைப் பிரித்ததினும் தந்தையைக் கொன்றது பெருங் குற்றமாகும் என்பது இலக்குவனாற் சுட்டப்பெற்றதும் காண்க.

பி - ம். 1. எந்தைநீ; யியம்பிற்றென்னே யென்றின்னு மினையோன் சொல் வான்; யெளிமையே யாக வேழைச்; யெண்மையனுகி யேழை.

2. தனித்தியேனும்.

3. உந்தையை யுயிர்கொண்டானை. உயிருண்ண வூற்றமில்லா.

4. சிந்தையராகி நின்று, சிந்தையனுகி நின்று, சிந்தையனுகி நின்று, சிந்தையனுகிலன்றோ வுறுதவஞ் செய்வதென்றான்.

(217)

1024. அவ்வழி யிளவல் கூற வறிவனு மயர்வு நீங்கி
இவ்வழி யினைய வெண்ணி னேழைமைப் பால தென்னு
வெவ்வழி பொழியுங் கண்ணீர் விலக்கினன் விளிந்த தாதை
செவ்வழி யுரிமை யாவுந் திருத்துவஞ் சிறுவ வென்றான்.

இளவல் - இளையபெருமான், அ வழிகூற - அவ்வாறு சொல்ல, அறிவனும் - யாவற்றையும் நன்கு அறிந்துள்ள இராமபிரானும், இ வழி இனைய எண்ணின் - இந்தச் சமயத்தில் இவ்வாறு மனச் சோர்வுகொண்டு எண்ணினால், ஏழைமை பாலது என்னு - அது அறிவின்மையின் பாற்படும் என்று, அயர்வு நீங்கி - தான் கொண்ட தளர்ச்சியை விட்டு நீங்கி, வெம் வழி பொழியும் கண்ணீர் விலக் கினன் - நிகழ்ந்த கொடுமை கருதி அதனால் வெம்மையுடன் பொழி கின்ற தன் கண்ணீரைப் போக்கிக்கொண்டு, (இலக்குவனை நோக்கி), 'சிறுவ - தம்பி! விளிந்த தாதை - இறந்த தந்தையாகிய சடாயு வுக்கு, உரிமை யாவும் - உரிய பிதுர்க்கடன்கள் எல்லாவற்றையும், செம் வழி - சிறந்த முறையில், திருத்துவம் - தெளிவுறச் செய்வோம்' என்றான் - என்று கூறினன்.

பி - ம். 1. வறிருனு ; யறிவு நீங்கி.

2. இனையவெண்ணல் ; னேழைமைப்பாலதன்றே ; பாலதென்னே.

3. பொழியு நன்னீர் ; விளிந்தோன்றன்பால்.

4. யானே திருத்தவென் சிறுவ ; யுரிமையெல்லாஞ் செய்குதி.

(218)

### சடாயுவுக்கு ஈமச்சடங்கு புரிதல் 1025 - 8

1025. இந்தன மாக வேண்டுங்
காரகி லீட்டத் தோடும்
சந்தனங் குவித்து வேண்டு
தருப்பையுந் திருத்திப் பூவும்
சிந்தின னரணி தன்னுற்
தீக்கடைந் தியற்றித் தெண்ணீர்
தந்தனன் ருதை தன்னைத்
தடக்கையி னெடுத்துச் சார்வான்.

இந்தனம் ஆகவேண்டும் - விறகுகளாகக் கொள்ளவேண்டிய, கார் அகில் ஈட்டத்து ஓடும் - கரிய அகிற் கட்டைகளின் தொகுதி யோடும், சந்தனம் குவித்து - சந்தனக் கட்டைகளையும் குவியலாகக் கொண்டுவந்து சேர்த்து, வேண்டு தருப்பையும் திருத்தி - அவ் வீமச் சடங்களுக்கு வேண்டிய தருப்பைப் புற்களையும் கொய்து வந்து பரப்பி, பூவும் சிந்தினன் - மலர்களையும் மேலே தூவி, அரணி தன்னுல் தீ கடைந்து இயற்றி - அரணிக்கட்டைகொண்டு கடைந்து தீ உண்டாக்கி, தெள் நீர் தந்தனன் - தெளிந்த சுத்த நீரினுல் நீராட்டம் செய்வித்து, தாதை தன்னை - தந்தையாகிய சடாயுவின் உடலை, தட கையால் எடுத்து - இராமபிரான் தன் நீண்டு பருத்து விளங்கிய கைகளால் எடுத்துக்கொண்டு, சார்வான் - அந்த ஈமத்தை அடைபவனுன்.

தருப்பையும் திருத்தி: அச்சடங்குக்கு வேண்டிய கூர்ச்சம், பவித்திரம் முதலிய உபகரணங்களைத் தருப்பையால் அமைத்து என்னலும் ஒன்றும். அரணி - தீக்கடைகோல்; ஓர் அத்திக் கட் டைத் துண்டில் சிறு பள்ளம் செய்து, அப்பள்ளத்தில் மற்றோர் அத்திக்கோல் கொண்டு நிறுத்திக் கயிறுகொண்டு வலித்து, அங்கு உண்டாகும் தீயைக்கொண்டு நம்மனோர் வைதிகச் சடங்குகள் செய்வது மரபு. நீராட்டம் - குளிப்பாட்டுதல். 1025-28 செய்யுட்

களில், ஈமவிதி முறைகளும் அவற்றிற்குரிய கருவிகளும் கூறப் பெற்றன.

பி-ம். 1. இந்தனமனைய, இந்தனமெனைய, இந்தனமாக; காழகி.

3. சிந்தினன் மணலில் வேதி தீதறவியற்றி; தீர்தரவியற்றி; வேதி தீக்கடைந்தியற்றி; அரணி தன்னிற்றீக்கடைந்; மண லில் வெந்தீத் தீதறவியற்றி; வெந்தீத்தருக்கடிதியற்றி.

4. தடக்கை யாலெடுத்துச் சார்வான், தடைக்கையா னெடுத்துச் சார்வான், தடங்கை மீதெடுத்துச், தடக்கையினெடுத்துத் தாங்கி. (219)

1026. ஏந்தின னிருகை தன்னா
லேற்றின னீமந் தன்மேல்
சாந்தொடு மலரு நீருஞ்
சொரிந்தனன் றலையிற் சாரக்
காந்தெரி கனல மூட்டிக்
கடன்முறை கடவா வண்ணம்
நேர்ந்தன னிரம்பு நன்னூன்
மந்திர நெறியின் வல்லான்.

நிரம்பு நல்நூல் மந்திர நெறியில் வல்லான் - நிறைந்த சாஸ்திரங்களிற் கூறியுள்ள மந்திர முறையில் வல்ல இராமபிரான், இரு கை தன்னால் ஏந்தினன் - தன் இருகைகளாலும் சடாயுவின் உடலைத் தாங்கி எடுத்து, ஈமம் தன்மேல் ஏற்றினன் - அங்கு அடுக்கிவைத்திருந்த ஐதைமீது அச்சடாயுவின் உடலை ஏற்றி, சாந்து ஒடு மலரும் நீரும் சொரிந்தனன் - சந்தனத்தோடு புஷ்பம், தீர்த்தம் முதலியன தூவித் தெளித்து, தலையில் சார - தலைப்பக்கத்தில் சேரும்படி, காந்து எரி - ஒளிவீசும் நெருப்பை, கனல மூட்டி - நெருங்கிப் பற்றி எரியும்படிசெய்து, கடன் முறை கடவா வண்ணம் - ஒரு மைந்தன் செய்ய வேண்டிய பிதுர்க் கடனாகிய விதிமுறையில் தவறாதபடி, நேர்ந்தனன் - செவ்வையாய்ச் செய்து முடித்தான்.

சடாயுவுக்கு இராமபிரான் செய்தது பிர்ஹ்மமேத ஸம்ஸ்காரம் என்று முதனூல் ஸம்க்ஷேபராமாயணம் கூறும்; பிர்ஹ்மமேதஸம்ஸ்காரமாவது: வேதாத்யயனம் செய்து பிர்ம்மவித்தாய் விளங்கிய ஓர் அந்தணன் இறந்தால் அவனுக்குச் செய்யக் கூடிய அரிய ஈமக் கடனாகும். வேதமோதி அறிய முடியாத திவ்யஞானத்தைச் சடாயு அடைந்தவனாதலாலும், பரப்பிரமமே ஆகிய இராமபிரானே மைந்தன் முறையில் இருந்து உரிய கடன் செய்த பெரும் பேறு

பெற்றவனுதலாலும், சடாயு பிர்ம்மஞானியருள் தலை சிறந்தவன் என்பது சொல்லாமலே அமையும் என்பதாம். ஈமம் - பிணஞ் சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு; ஐதை, என்று கூறப்படுவது.

பி - ம். 2. ஏந்தினரிருவர்தாமங் கேற்றினரீமமீது; தலையிற்சாரற்; றமியற் சாரக்; தலைமேல் வைத்து.
3. கனல மூட்டிக், கனலி மூட்டி, கடன்முறை கமலக்கண்ணன்,
4. னிரப்பு நன்னூன். (220)

1027. தளித்தன தனைய மேனி
தாமரை கெழுமு செந்தேன்
துளித்தன வனைய வென்னத்
துள்ளிசோர் வெள்ளக் கண்ணன்
குளித்தனன் கான யாற்றிற்
குளித்தபின் கொண்ட நன்னீர்
அளித்தன னரக்கற் செற்ற
சீற்றத்தா னவலந் தீர்ப்பான்.

தளி தனது அனைய மேனி - மேகத்தினது போன்ற திருமேனியையும், தாமரை கெழுமு - தாமரை மலரிற் சிறந்து விளங்கும், செம் தேன் - செந்நிறமான தேன், துளித்தன அனைய என்ன - துளிக்கப்பெற்றன போன்றதென்று சொல்லத்தக்க, துள்ளி சோர் வெள்ள கண்ணன் - துளிகள் சிந்துகின்ற நீர்ப்பெருக்கை யுடைய கண்களையுமுடைய இராமபிரான், கான யாற்றில் குளித்தனன் - அங்குள்ள ஒரு காட்டாற்றில் நீராடினான்; குளித்த பின் - நீராடியபிறகு, அரக்கன் செற்ற சீற்றத்தான் அவலம் தீர்ப்பான் - (இராக்கதனான இராவணனால் தான் வெல்லப்பட்டதால்) கொண்ட கோபத்தை யுடைய சடாயுவின் மனத்துயரைப் போக்கும் பொருட்டு, கொண்ட - எடுத்துவந்த, நல் நீர் அளித்தனன் - (அந்த சடாயுவுக்கு) உதக கிரியைகளை (அதாவது நீர்க்கடன்களை), அளித்தான்.

தளி - மேகம் (பிங்). இராமபிரானுடைய மேனிக்கு மேகமும் அவன் கண்களுக்குச் செந்தாமரை மலர்களும், அவனது கண்ணீருக்கு அத்தாமரையில் துளிக்கும் செந்தேன் துளிகளும் உவமைகள். துள்ளி - துளி; 984. உரை. அவலந்தீர்த்தான், என்ற பாடங்கொண்டு, மனத்துயரைப் போக்கின இராமபிரான் என்பாரும் உளர். நீர்க்கடன் மூலம் இறந்தோரின் விருப்பங்கள் நிறைவேறும் என்பது நூற்பிரமாணமும், நம்மனோர் பின்பற்றிவரும் நெறியும் ஆகும் என்பது உணர்க. இராமபிரான் நீராடிச் சடாயுவுக்குத் தருப்பணம் முதலிய நீர்க்கடன்கள் கோதாவரிநதியில் செய்தனன் என்று வான்மீகம் கூறும். இச்செய்யுள், சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. இப்பாடலின் பதத்தொடர்புகள் பிரதிகளில் பலவாறு மாறுபட்டுள்ளன,

பி-ம். 1. இளித்தன களித்த மேனி......கெழுவு, இளைத்தமேனி, இளைத்தன இளர்ந்த பச்சைத் தாமரைக்கேழின் செம்பூத், இளித்தகை இளைத்தமேனி; இளர்ந்த பச்சைத் தாமரைகெழுமு; தளிர்த்தன, தளிர்த்தனவையன் மேனி, தளிர்த்தனன் கரிய மேனித் தாமரை மலர்ந்து செந்தேன்.

2. துளித்தன போல நீங்காத், துளித்தன வன்ன நீங்காத்.

3. குளித்தனன் கொண்ட லாற்றுக் குளித்தபின், குளிர்ந்தன கொண்டு நன்னீர்.

4. னரக்கர்ச் செற்ற, னரக்கன் செற்றற் சீற்றத்தின வலந்தீர்ந்தான், சீற்றத்தோட வலந்தீர்ந்தே. (221)

1028. மீட்டினி யுரைப்ப தென்னே விரிஞ்சனே முதல மேல்கீழ்
காட்டிய வுயிர்க ளெல்லா மருந்தின களித்த போலாம்
பூட்டிய கைக ளாலப் புள்ளினுக் கரசைக் கொள்கென்
றூட்டிய நன்னீ ரைய னுண்டநீ ரொத்த தன்றே.

பூட்டிய கைகளால் - ஒன்று சேர்த்த தன் இரு கைகளால், அ புள்ளினுக்கு அரசை கொள்கென்று - அந்தப் பறவைக் கரசனான சடாயுவை 'நீ ஏற்றுக் கொள்வாயாக' என்று, ஊட்டிய நல் நீர் - இராமபிரான் தர்ப்பணங்களின் மூலம் அளித்த அந்தப் புனித நீர், ஐயன் உண்ட நீர் ஒத்தது - பரம்பொருளாகிய இராமபிரானே பருகிய நீரை ஒத்து விளங்கியது; அதனால், விரிஞ்சனே முதல - பிரம தேவனை முதலாக, மேல் கீழ் காட்டிய - மேல் உலகங்களிலும், கீழுலகங்களிலும் உள்ள, உயிர்கள் எல்லாம் - எல்லாப் பிராணிகளும், அருந்தின களித்த - அருந்திக் களிப்புற்றன; மீட்டு இனி உரைப்பது என்னே - (இராமபிரான் செய்த கிரியைகளின் சிறப்பை) திரும்பவும் இனிச் சொல்வது ஏன்? (வேண்டா, என்றபடி). போல், ஆம், அன்று, ஏ, அசைகள்.

பூட்டிய கைகளால், என்றமையால் இருகைகளையும் சேர்த்து இராமபிரான் தருப்பணம் செய்தான் என்பது பெறப்படுகிறது. இனி, ஐயன் உண்டநீர் ஒத்தது என்றமையால், இராமபிரானின் பரத்வம் கூறப்பெற்றமை காணலாம்; அன்றியும், இறைவனுக்குரிய உபசாரங்களில் ஒன்றான நீரளிப்பினால், உலகம் குளிர்ச்சி யடைகிறது என்ற கருத்தும் இங்கு விளங்குவது காணலாம்; இவ்வுண்மை மகாபாரதம், வனபருவம், துருவாஸமுனி சருக்கத்தால் நன்கு விளங்கும். இனி, சடாயு இராமபிரான் கையால் நீர்க்கடன் செய்யப் பெற்றுப் பரமபத வாழ் வெய்தியதை, விரிஞ்சனே முதல் உள்ள பிராணிகள் ஒவ்வொன்றும் தாமே அப்பெருவாழ்வடைந்தன போலக் களிப்புறுவன ஆயின

என்னலும் ஒன்றும். 'ஐயனுண்ட நீர் - திருப்படிகத்து நீர்; திருப் படிகம் - வட்டில்' என்பன பழையவுரை.

பி - ம். 2. மருந்தியே களித்த போலாம்; வருந்தின களித்தபோலாம்.
3. கொள்ளென்று.

(222)

சூரியன் மறைதல்

1029. பல்வகைத் துறையில் வேதப்
பலிக்கடன் பலவு முற்றி
வில்வகைக் குமர னின்ற
வேலையின் வேலை சார்ந்தான்
தொல்வகைக் குலத்தின் வந்தான்
றுன்பத்தாற் புனலுந் தோய்ந்து
செல்வகைக் குரிய வெல்லாஞ்
செய்குவா னென்ன வெய்யோன்.

பல் வகையில் - சாஸ்திரத்திற் சொல்லிய பல வகை முறைப் படி, வேத பலி கடன் பலவும் - வேத விதிப்படியான, பிண்ட பலி முதலிய பிதுர்க்கடன்கள் பலவற்றையும், முற்றி - செய்து முடித்து, வில் வகை குமரன் நின்ற வேலையின் - வில்போரில் பல வகைகளையும் அறிந்து தேர்ந்த சக்கரவர்த்தி குமாரனான இராம பிரான் இருந்த சமயத்தில், வெய்யோன் - சூரியன், தொல் வகை குலத்தின் வந்தான் - பழமையான தன் காசிப குலத்தில் வந்த சடாயுவின், துன்பத்தால் - இறந்த துன்பத்தினால், புனலும் தோய்ந்து - நீராடி, செல்வகைக்கு உரிய - ஞாதியாகிய அவன் போய் அடையக் கூடிய நற்கதிக்கு உரிய, எல்லாம் - தருப்பணம் முதலிய சடங்குகளை யெல்லாம், செய்குவான் என்ன - தானும் செய்யும் பொருட்டுச் சென்றான் என்று சொல்லும்படி, வேலை சார்ந்தான். மேல்கடலைச் சார்ந்தான்; அதாவது, அஸ்தமயமானான்.

சூரியனும் சடாயுவும் ஞாதியர்: இது, 200-வது பாடலின் கீழ்க் குறிக்கப்பெற்றுள்ள அதிகப்பாடலால் அறியலாம். இராமபிரானைக் குமரன் என்று கூறியதன் பொருட் சிறப்பை ஓர்க. இச் செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. துறையும் வேதம்; வேலைப்பலிக்கடன். 2. வெல்வகைக் குமரர் நின்ற; சேர்ந்தான். 3. வந்த துன்பத்தின் புனலுட் டோய்ந்து. 4. குரிய தெல்லாஞ்.

(223)

சடாயு வுயிர்நீத்த படலம் முற்றும்.

---

# 10. அயோமுகிப் படலம்

அயோமுகி என்னும் ஓர் அரக்கியின் செயலைக் கூறும் படலம் என்று விரியும். அயோமுகி : வடசொற்றொடர் ; இரும்புபோல் வலி மையும் கருமையுமுடைய முகத்தினள் என்னும் பொருளது. இராம பிரான் சடாயுவுக்கு உரிய பிதுர்க்கடன்களைச் செய்தபின், சிறிதுதூரம் சென்று, அன்றிரவு ஓரிடத்தில் தங்கியிருந்து, பிராட்டியின் பிரிவுத் துயரால் வருந்திக் கொண்டிருக்கையில் நீர் வேட்கையுறவே, இலக் குவன், அந்நள்ளிரவில் அவ்வனத்தில் நீர் இருக்கும் இடம் நாடிச் சென்றனன். அப்போது அயோமுகி என்னும் ஒரு கொடிய அரக்கி எதிர்ப்பட்டு, அவ்விளைய பெருமாள் வடிவழகில் ஈடுபட்டு அவனைத் தன் வலியாற் பற்றியெடுத்துச் செல்லலுற்றாள். அஃதறிந்த இளை யோன் அவளுடைய மூக்கை அரிந்து அப்புறமோட வோட்டி மீண்டும் இராமபிரானை யடைந்தான் என்ற வரலாற்றினை, இப்படலம் விரித் துக் கூறும். அஜம் என்பது தமிழில் அசம், அயம் எனத் திரிந்தது எனச் சில பிரதிகளில் குறிக்கப்பெற்றுள்ளது. அது வடமொழி முதனூலின் பெயர்ப் பொருளுக்கு மாறுபடுவதோடு பின் இந்நூலி லும், 1068-இல் 'அயோமுகி என்னும் வெங்கணரக்கி' எனத் தெளி வுறக் கூறியிருப்பதற்கும் முரணாகும். இவ்வயோமுகி வரலாறு வான்மீகத்தில் மிகச்சுருக்கமாக நான்கு சுலோகங்களால் ஆரண்ய காண்டம் 69-வது சருக்கத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது ; அத் யாத்ம இராமாயணத்தில் இவ்வரலாறு கூறப்பெறவில்லை. இவ்வா றிருக்க, இந்நூலிலோ, இது, தனியே ஒரு படலமாக அமைக்கப் பெற்றுள்ளது. இது இளைய பெருமானது வீரத்தன்மையையும், உயர் நெறியையும், இராம லக்ஷ்மணர்களின் சகோதர உணர்ச்சியின் மேம் பாட்டினையும் செவ்வனே விளக்கி 101 செய்யுட்களில் அமைந்துள் ளது ஒரு தனிச் சிறப்புடையது. இனி, இது பிரிதுயர்ப்படலம், அயோமுகி மூக்கரி படலம் என்று சில பிரதிகளில் இரண்டு படலங் களாகக் காணப்பெறுகிறது. அயோமுகி வாழ்ந்த இடம் கிரௌஞ் சாரணியம் என்றும், அது மதங்காச்சிரமத்திற்கு அருகிலுள்ள தென்றும் வான்மீகத்தால் அறியப்படும்.

இராம லக்ஷ்மணர் ஒரு மலையையடைதலும் இருள் சூழ்தலும். **1030-2.**

**1030.** அந்திவந் தணுகும் வேலை
யவ்வழி யவரு நீங்கிச்
சிந்துரச் சென்னித் தாண்டோர்
மைவரைச் சேக்கை கொண்டார்
இந்திரற் கடங்கல் செல்லா
விராக்கத ரெழுந்த தென்ன
வெந்துயர்க் கூற்ற மான
விரியிருள் வீங்கிற் றன்றே.

அந்தி வந்து அணுகும் வேலை-அந்திநேரம் வந்துசேரும்போது, அவரும்-அந்த இராம லக்ஷ்மணர்களும், அ வழி நீங்கி-அவ்விடத்தை விட்டு நீங்கி, ஆண்டு - அவ்வனத்திலே, சிந்துர சென்னித்து - செந்நிறமான சிகரங்களையுடையதான, ஓர் மை வரை - ஒரு கரிய மலையினிடத்து, சேக்கை கொண்டார் - தங்கினர்; (அப்போது), இந்திரற்கு அடங்கல் செல்லா - இந்திரனுக்கு அடங்காத, இராக்கதர் எழுந்தது என்ன - அரக்கர்கள் மேற்கிளம்பினது போல, வெம் துயருக்கு ஊற்றம் ஆன - (பிரிவாகிய) துன்பத்திற்கு வலிமை யூட்டுவதான, விரி இருள் - பரந்த இருளானது, வீங்கிற்று - மிகுந்து நின்றது. அன்று, ஏ: ஈற்றசைகள்.

சிந்துரம் - சிவப்பு; (பிங்). சிந்துரச் சென்னித்து - செம்பொடிபடிந்த சிகரங்களையுடைய என்னலும் ஒன்றும். மை வரை - மேகங்கள் படிந்த மலையும் ஆம். சேக்கை - தங்குமிடம்: 'புற்றடங்கரவின் செற்றச் சேக்கை'; (மணி. 1: 17). இராக்கதருக்கு இருள்; 307, 389, 475. ஊற்றம் - பற்றுக்கோடும், வலிமையும் ஆம்; பால. கையடைப்: 12; கிட்கிந்தா. வாலிவதைப்; 97. வெந்துயர்க் கூற்றமான விரியிருள்: பிரிந்த தலைவன், தலைவியர்க்கு இரவு, துயரை மிகுதிப்படுத்தும் என்பது; "காலன் திறத்தை யஞ்சனத்திற் கலந்து குழைத்துக் காயத்தின், மேலுநிலத்து மெழுகியதோ விளக்கு மிருளாய் விளைந்ததுவே' (பால. மிதிலைக் 67); 'இரவே கொடியாய் விடியாயெனுமால்'; (பால. கடிமணப், 3); 'செல்லா விரவே, சிறுகாவிருளே' (சுந்தர. 492.); 'ஊழி பலவோ ரிரவாயிற்றோ வென்னும்' (நள. சுயம்வர; 108); என்பனவற்றாலும், பிறவாற்றாலும் விளங்கும். இனி, வெம்துயர் கூற்றமான எனப் பிரித்து கொடுந் துயரத்தைத் தரும் யமனைப்போன்ற இருள், எனவும் பொருள் கொள்ளலாம். இந்திரர்க்கு என்ற பாடங்கொண்டு, இந்திரர்-

தேவர்க்கு எனலும் ஆம்; புறநா. *182 : 1*; சிலப். *16 : 17*, அடியார்க்; சீவக. *173*. ஒரு பிரதியில் இச்செய்யுள் முன் படலத்தின் கடைசியில் உள்ளது; முன் படலத்தைச் சூரியாத்தமயத்துடன் முடித்து, இப் படலத்தை அந்தியிலிருந்து தொடங்குகின்றமை நோக்குக.

பி - ம். 1. தனுகு வேலே; யவ்வழி யவரு நீங்கி, சிந்துரக் காலீத் தாண் டோர்.
2. சேக்கை சார்ந்தார், சேக்கை சேர்ந்தார். 3. இந்திரர்க்கு,
4. வெற்றிறற் கூற்றமான; கூற்றமாய், கூற்றமன்ன; ணிமிர்ந்த தன்றே. (1)

**1031.** தேனுக வருவி சிந்தித் தெருமர லுறுவ போலக்
கானமு மலேயு மெல்லாங் கண்ணினீ ருகுக்குங் கங்குல்
மானமுஞ் சினமுந் தாதை மரணமு மமைந்த சிந்தை
ஞானமுந் துயருந் தம்முண் மலேந்தென நலிந்த தன்றே.

கானமும் மலேயும் எல்லாம் - இங்குள்ள காடு, மலே என்ற எல்லாம், தெருமரல் உறுவ போல - இராம லக்ஷ்மணர்களேக் கண்டு வருந்துவனபோல, உகு தேன் - மரங்களினின்று விழும் தேனேயும், அருவி - மலேகளினின்று வழிந்தோடும் அருவிகளேயும், சிந்தி - விழச்செய்து, கண்ணின் நீர் உகுக்கும் - (இவ்வாறு) கண்ணீரைச் சிந்தும், கங்குல் - இருளானது, மானமும் - தன்மானமும், சினமும் - கோபமும், தாதை மரணமும் - தந்தையாகிய சடாயு உயிர் நீத்ததால் உண்டான துன்பமும், அமைந்த சிந்தை - ஊன்றியிருந்த அவ்விராம லக்ஷ்மணர்களின் மனத்தில், ஞானமும் துயரும் தம்முள் மலேந்தென - அறிவும் துன்பமும் ஒன்ருேடொன்று போரிட்டுக்கொண்டு நலிந்தது போல, நலிந்தது - (கங்குல்) மிகுந்தது. அன்று. ஏ: அசைகள்.

கானமும் மலேயும் உகுக்கும்; கங்குல், மலேந்தென, நலிந்தது என இயைக்க. தேனும், அருவியும்; கண்ணின் நீருக்கு உவமை. கானமும் மலேயும் தெருமரல் உறுவபோலக் கண்ணீர் உகுத்த என்று கொள்ளப் பெற்றது; கங்குல், தெருமரல் உறுவபோல, கண்ணீர் உகுத்த என்றும் கூட்டலாம்; தெருமரல் உற்றது, இராம லக்ஷ்மணர்களின் துயர் கண்டு; ஒப்பு. கிட்கிந்தா. மராமரப் *12-14*. மானம் - பிராட்டியை இழந்ததாலுண்டான அவமானம்; மானம் - அவமானம், என்பதன் முதற் குறை; *949*. சினம், தம்மை வஞ்சித்த இராவணன்பால் எழுந்தது. மரணம் - மரணத்தாலுண்டான வருத்தத்தைக் குறித்தது; ஆகு பெயர். சிந்தையில் ஞானமும் துயரும் மலேந்தன; அவர்கள் தம்

அறிவால் சிந்தையை அடக்கிக்கொள்ளமுடியாமை கூறப்பெற்றது; இராம லக்ஷ்மணர்களின் மனம்போல, கங்குலும் தெருமாலுற்று நலிந்து கண்ணீர் உகுத்தது என்னலாம். அன்றியும், துயரத்தோடு இரவும் அவர்களை நலிவித்தது என்பதும் தொனிப்பது காண்க. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. வருவிரீத்தர், வருவிசிந்தத்; தேனுகு கமல மானைத் தேடிடுந் திறத்தோர் கண்டு; தெருமர லுருவல் போலக்.

2. கானுறு மலையோடாதி; மரனுமெல்லாம், மலர்களெல்லாம்.

3, மைந்தர் சிந்தை. 4. மலையென நலிந்த; மலைந்தென மலைந்த.

1032. மெய்யுற வுணர்வு செல்லா வறிவினை வினையி னூக்கும்
பொய்யுறு பிறவி போலப் போக்கரும் பொங்கு கங்குல்
நெய்யுறு நெருப்பின் வீங்கி நிமிர்தர வுயிர்ப்பு நீளக்
கையற வுறுகின் றாராற் காணலாங் கரையிற் றன்றே.

மெய் உணர்வு உற செல்லா - மெய்ம்மையான ஆன்ம ஞானம் நன்கு பொருந்தாத, அறிவினை - (ஒருவனுடைய) புத்தியை, வினையின் ஊக்கும் - வினைகளின் வழியே செலுத்தும், பொய் உறு பிறவி போல - அநித்யமான பிறப்பைப் போல, போக்கு அரும் பொங்கு கங்குல் - போக்க முடியாது மேன்மேல் வளர்ந்து மிகும் அவ்விரவு, நெய் உறு நெருப்பின் வீங்கி - நெய் சொரியப் பெற்ற நெருப்பைப் போல மிகுந்து, நிமிர்தர - ஓங்கி விளங்க, உயிர்ப்பு நீள - பெருமூச்சு நெடிதுண்டாக, கையறவு உறுகின்றாரால் - செயலற்ற தன்மையடைந்த அந்த இராம லக்ஷ்மணர்களால், காணலாம் கரையிற்று - காணுதற்குரிய ஒரு கரையில்லாததாயிற்று; (அதாவது முடிவில்லாததாயிற்று). அன்று, ஏ: ஈற்றசைகள்.

ஆன்ம ஞானமில்லாத அறிவு, மனிதனை வினைகளிலே புகுத்திப் பிறப்புக்களை மேல்மேலும் பெருகச்செய்யும்; அதைப் போன்ற கங்குல் என்க. பிறவி, கங்குலுக்கு உவமை. நெருப்பு, இருளுக்கு உவமை; நெய்யினால் நெருப்பு மிகுவதுபோலத் துயரினால் இருள் மிகுந்தது என்க. நெய், துயருக்கு. மெய்: ஸத்தியம்; அதாவது அழியாதது; பொய் - அநித்யம்; அதாவது, அழிவது. ஒருவன் புத்தியை வினையில் புகுத்த, அது அவனைப் பிறவித்துயரில் உய்க்கும் என்பதும், உண்மை ஞானம் பெற்றவன் பிறவிப் பந்தத்தினுட்பட்டு வருந்தான் என்பதும் இதனால் அறியப்பெறுவதாம். இதனால் இராமலக்ஷ்மணர்கள் தமக்கு

நேர்ந்த துயரத்தால் அன்று இரவைக்கடக்க முடியாது வருந்தினர் என்க. பிரிவுத் துயரால் வருந்துவோர்க்கு இரவு நீட்டிக்கும் என்பது 1030 செய்யுளிலும், அதன் உரையிலுங் காண்க. நெய்யுறு நெருப்பு நிமிர்தரல்; ஒப்பு. "பொழிந்த நெய்யாகுதி வாய்வழி பொங்கி, எழுந்த கொழுங்கனலென்ன வெழுந்தான்" (பால. கார்முகப்: 29). கையறவு - செயலற்ற தன்மை அல்லது துன்பமும் ஆம்; "யான் பட்ட கையறவு காணுயோ" (325); குறுந். 391; 6; மணி. 20 : 26. இராமபிரானுக்குற்ற துயரம் இலக்குவனையும் பீடித்ததால் இருவரையும் சேர்த்துக் கூறப்பெற்றது. இச்செய்யுளும் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. மெய்யுறு வகையிற் செல்லா வறிவைத்தம் வினையினூக்கும்; வுணர்தல் செல்லா; செல்லாவறிவினன்; வினையினூங்கும்; மெய்யுமயறிவு மேவாமதியிலன்.

2. புத்றெனப்பொங்கு கங்குல், போக்கரிதான கங்குல்.

3. வீங்க நிமிர்தர; நெருப்பின் மாந்தி.

4. கையுற யுறுகின்றாரால்; யுறுகின்றார்கள்; கரையிற்றம்மா. (3)

இராமபிரான் அவ்விரவு துயில் கொள்ளாது துன்புற்றமை 1033–5.

1033. யாமது தெரித றேற்ரு மின்னுயிர்ச் சனகி யென்னும்
காமரு திருவை நீத்தோ முகமதி காண்கி லாதோ
தேமரு தெரியல் வீரன் கண்ணெனத் தெரிந்த செய்ய
தாமரை கங்குற் போதுங் குவிந்தில தன்மை யென்னே.

தேமரு - தெய்வ மணம் பொருந்திய, தெரியல் வீரன் - மாலையணிந்த இராமபிரானுடைய, கண் என தெரிந்த - கண்களென்று விளங்கிய, செய்ய தாமரை - சிவந்த தாமரை மலர்கள், கங்குல் போதும் குவிந்தில - அவ்விரவுப்பொழுதிலும் கூம்பாது மலர்ந்தே இருந்தன; (அவ்வாறு குவியாது இருந்த காரணம்), இன் உயிர் சனகி என்னும் - தன் இனிய உயிர்போன்ற சானகி என்னும், காமரு திருவை நீத்தோ - தன்னிடம் உண்டான அழகிய திருமகளைவிட்டுப் பிரிந்ததாலோ? அல்லது, முகம் மதி காண்கிலாதோ - அத்திருவாகிய சானகியின் முகமாகிய சந்திரனை அன்றிரவு காணமையாலோ? என்னே - வேறு எக்காரணம் பற்றியோ? யாம் அது தெரிதல் தேற்ரும் - யாம் அதனையறியும் திறமையுடையேம் அல்லேம்.

இது கவிக்கூற்று. பிராட்டியைப் பிரிந்த துயரால் இராமபிரான் இரவில் கண்மூடாது வருந்திக்கொண்டிருந்த நிலையைக் கவி,

தாமரை மலருக்குவமையான அப்பெருமானின் கண்களின் மேலேற்றித் தற்குறிப்பேற்றத்தோடு உருவக அணியையும் கலந்து, அக்கண்களைத் தாமரை மலரெனக்கொண்டு, அத்தாமரை மலர், தன்னிடந்தோன்றிய திருமகளான பிராட்டியைக் காணாது பிரிந்த துயரத்தாலோ, அல்லது, அப்பிராட்டியின் முகமாகிய சந்திரனைக் காணாமையாலோ குவியாவாயின என்றனர். அன்றி, பிரிந்ததாலோ, மதி காணாமையாலோ என்ற மயக்க வணியையும் புகுத்திக்கூறி, அதன் உண்மையை அறிந்து கூறும் ஆற்றல் தனக்கில்லையென்ற எளிமையும் புலப்படுத்தி இச்செய்யுளைச் சிகரத்தில் ஏற்றிவைத்த கவிச்சக்கரவர்த்தியின் கற்பனாசக்தியை யாரே அளவிட்டுக் கூற வியலும்! உலகில் இல்லாத ஒரு நிகழ்ச்சிப் பொருளைக்குறித்த தால், முற்றும்மை ஏற்றது; 'இனைத்தென்றறிபொரு ளுலகினிலாப் பொருள் வினைப்படுத்துரைப்பி னும்மை வேண்டும்' (நன். பொதுவியல்: 48) என்றபடி; இனி, இதனை இறந்தது தழுவிய எச்சவும்மையாக கொள்ளலும் உண்டு; அதாவது பகலில் குவியாதது போல என்றதைத் தழுவி நின்றது என்க. இது முதல் 23 செய்யுட்கள் இராமபிரானின் பிரிவுத் துயரத்தைக் கூறுவன.

பி-ம். 1. தெரிய தேற்றும் தேரியரோ; இன்னகைச் சனகி. காமருந் திருவை ... கண்டிலாதோ;
2. நீத்தோர் முகமதி, நீத்தே முகமதி.
3. தேமதுத்தெரியல்; கண்ணெனுஞ் சிறந்த செய்ய தெளிந்த செய்ய; வீரன் செயலது தெரிந்த செய்ய.
4. குவிந்திலாதன்மை, குவிந்திலாத்தன்மை, குவியலாத்தன்மை, (4)

1034. பெண்ணியற் றீப மன்ன பேரெழி லாட்டி மாட்டு
நண்ணிய பிரிவு செய்த நவையின ரவர்கள் சிந்தை
எண்ணிய தறித றேற்ற மிமைப்பில விராம னென்னும்
புண்ணியன் கண்ணும் வன்றேட் டம்பிகண் போன்ற வன்றே

பெண் இயல் - பெண் தன்மையைக்கொண்ட, தீபம் அன்ன - ஒப்பற்ற விளக்கே போன்ற, பேர் எழிலாட்டி மாட்டு - மிக்க அழகையுடைய பிராட்டியின் திறத்து, நண்ணிய - ஏற்பட்ட, பிரிவு செய்த - பிரிவானது உண்டாக்கிய, நவையினர் அவர்கள் - பாவியர்களான அரக்கர்கள், சிந்தை எண்ணியது - மனத்தில் கருதியதை, அறிதல் தேற்றும் - நாம் அறியும் சக்தியுடையயோமல்லோம்; (அத்துயரால்), இராமன் என்னும் புண்ணியன் கண்ணும் -

இராமபிரான் என்னும் புண்ணிய புருஷனின் கண்களும், வன்தோள் - வலிய புயங்களையுடைய, தம்பி கண் போன்றது - அவன் தம்பியாகிய இலக்குவன் கண்களேபோல மூடி உறங்கா ஆயின. அன்று, ஏ : ஈற்றசைகள்.

தீபமன்ன பெண்ணியற் பேரெழிலாட்டி, எனவுமியைத்துப் பொருள் கொள்ளலாம். பிராட்டி, பெண்ணியல் தீபம்; அயோத். கங்கைப்: 16; சுந்தர. 427; 596. நவையினார் - குற்றத்தினரான இராவணாதி அரக்கர்கள். பிராட்டியை அபகரித்தலாகிய ஒரே கருத்துடைய இராவணாதியர் (மாரீசனையும் கூட்டி உரைத்தது) ; இனி, நவையின் ஆர் அரக்கர் எனப்பிரித்தும் பொருள் கொள்ளலாம். இராமபிரான் ; கண்களையும் உறங்கச் செய்யாமல் இயற்றியது ஏனோ ? என்பது கருத்து. இராமபிரானைப் புண்ணியன் என்பது; 993, உரையிற் காண்க. தம்பி இலக்குவன் கண்துயிலாதவன் ; 1048; அயோத் : கங்கைப் : 49; குகப் : 42 ; உயுத்த. வீடணனடைக்கலப் : 144. முன் செய்யுளில் இராமபிரான் கண்ணுக்குத் தாமரையை உவமை கூறி, இங்கு இலக்குவன் கண்ணைக் கூறினார். இருவரும் உறங்கவில்லை என்பது கருத்து.

பி - ம். 1. பேரெழிலாடன் மாட்டு.
2. பிரிவு நீண்டே தோன்றிட நவையினுள்ள ; நவையினார்வங் கொள் சிந்தை, நவையிலா நவையினுள்ளத் ;
3. எண்ணிய தெரிதரேற்ற, எண்ணிய தேரிறேற்ற ; மிமைத் திலவிராமன், மிமைப்பிலா, மிமைத்திலதிராமன்.
4. கண்ணுமன்னாட் ; போன்றமன்றோ, போன்றதின்றே, போவு மன்றே. (5)

1035. வண்டுளர் கோதைச் சீதை வாண்முகம் பொலிய வானில்
கண்டனெ னென்று வீரற் காண்டொரு காதல் காட்டத்
தண்டமிழ்த் தென்ற லென்னுங் கோளராத் தவழுஞ் சாரல்
விண்டலம் விளங்குஞ் செவ்வி வெண்மதி விரிந்த தன்றே.

'வண்டு உளர் கோதை சிதை-வண்டுகள் குடையப்பெற்ற (மலர்கள் சூடிய) கூந்தலையுடைய பிராட்டியின், வாள்முகம் - ஒளி பொருந்திய திருமுகம், வானில் பொலிய கண்டனென் என்று - ஆகாயத்தில் விளங்கக் கண்டேன்' என்று, வீரற்கு-ரகுவீரனான இராமபிரானுக்கு, ஆண்டு - அப்போது, ஒரு காதல் காட்ட - ஓர் ஆசையை உண்டாக்க, தண் தமிழ் தென்றல் என்னும், குளிர்ந்த இனிமையுடைய தென்றற் காற்று என்னும், கோள் அரா - கொடிய பாம்பு,

தவழும் சாரல் - தவழ்கின்ற மலைச்சாரலினிடத்து, விண்தலம் விளங்கும் - வானில் விளங்கும், செவ்வி - அழகிய, வெண் மதி விரிந்தது - வெண்ணிறமான சந்திரன், ஒளிவிட்டுத் தோன்றியது. அன்று, ஏ : ஈற்றசைகள்.

சந்திரோதயத்தையும் தென்றலையும் இச்செய்யுளிற் கூறினர். அத்தென்றல் வானத்திற் றோன்றிய முழுமதியைப் பிராட்டியென மயங்கி, அவள் பிரிவினால் வருந்தும் இராமபிரானுக்கு, அவள் இருப்பைத் தெரிவித்துச் சாந்தப்படுத்துவர்ன்போல் நல்லெண்ணத்துடன் வந்தனன் என்று கூறியது ஒரு நயம்; அவ்வாறு வந்த தென்றல் காமுகனான பிரானுக்குக் கோளரவாக ஆயிற்று என்க. தென்றலுக்கு அரா : 717; ஒப்பு. 293; பால. கடிமணப் : 7. கோதை - கூந்தல். (பிங்); மாலை என்னலும் அமையும். தண்டமிழ்த் தென்றல் - குளிர்ந்த தமிழ் தந்த அகத்திய முனிவர் இருக்கும் மலயமலையில் பிறந்த தென்றல் என்றும், குளிர்ந்த இனிமையைத்தரும் தென்றல் என்றும் கொள்ளலாம்; (தமிழ் - இனிமை). இனி, தண்ணிய தமிழ் நாட்டிற் பிறப்பதான தென்றல் என்றலும் ஒன்றும். உளர்தல்; குடைதல்; கோதுதல்; அயோத். கைகேசி சூழ்வினைப் : 6. இச் செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. வண்டுளார் கோதை; முகம்போலவானிற்; பொலியவானின்.
2. வாண்முகம் வானமீதிற் கண்டனனென்றும்; கண்டதுபோல வீரற்; காங்கொருகாதல்.
3. தண்டமிழ் வரையிற்றென்றல்.
4. விண்டலம் பிளக்குஞ் செவ்வி விண்மதி விளங்கிற்றன்றே; விளங்கு செவ்வி, விளங்குஞ் செவ்வி; விண்டமை விளக்குஞ். (6)

நிலவு இராமபிரானைத் துன்புறுத்தல் 1036–45.

1036. களியுடை யனங்கக் கள்வன் கரந்துறை கங்குற் காலம்
வெளிபடுத் துலக மெல்லாம் விளக்கிய நிலவின் வெள்ளம்
நளியிருட் பிழம்பென் றீண்டு நஞ்சொடு கலந்த நாகத்
துளையெயிற் றூற்ற லுற்ற கனலெனச் சுட்ட தன்றே.

களி உடை அனங்க கள்வன் - செருக்கைக் கொண்ட மன்மதனாகிய திருடன், கரந்து உறை கங்குல் காலம் - ஒளிந்துகொண்டு இருக்கும் அவ்விரவுப் போழ்தில், உலகம் எல்லாம் - உலகம் முழு

வதையும், வெளிப்படுத்து விளக்கிய - வெண்ணிறமாகத் தோன்றச் செய்த, நிலவின் வெள்ளம்-நிலாவின் மிகுதி, ஈண்டு - இப்பொழுது, நளி இருள் பிழம்பு என்று - பெரிய இருளின் தொகுதி என்று சொல்லத்தக்க, நஞ்சு ஒடு கலந்த - விஷத்தோடு கலந்த, நாக - பாம்பி னுடைய, துளை எயிற்று - துவாரமுள்ள பல்லினின்றும், ஊற்றல் உற்ற - பொழியப்பெற்ற, கனல் என - நெருப்பு என்னுமாறு, சுட்டது - எரித்தது : அன்று, ஏ : ஈற்றசைகள்.

இருட்டில் மன்மதன் ஒளிந்து துயர் தருவதால், கள்வன் எனப் பட்டான் ; தக்க. 95. ஈண்டு நஞ்சு - மிகுந்த விஷம் என்னலும் ஆம். வெளிபடுத்தல் - வெண்ணிறமாக்குதல் ; 'வெளித்துவைகுத லரிதென' (சுந்தர. 231) நிலவின் வெள்ளம் கனலெனச் சுட்டது என இயைக்க. முன் செய்யுளில் - முகம் போன்ற செவ்வி வெண்மதி' என்றதால், பூரண சந்திரனைச் சுட்டி, இங்கு அரவின் எயிற்றை உவமை கூறியது ஆராயத்தக்கது.

பி - ம். 1. கங்குற் கானம். 2. தலகமெங்கும்.
3. நளியிருட் கடுவை நீக்கி நறியவெண் ணஞ்சுண்நாகத்; பிழம் பொன்றீண்டு ; நஞ்சொடு கலந்த ; கவர்ந்து நாகத்.
4. துளையெயிற் றூன்ற வண்ணற் ; லூற்றுமனலென, லூறலுற்ற ; றுற்றதாமெனச், வனலெனச், றூன்றலுற்ற. (7)

1037. இடம்படு மானந் துன்ப
மிரண்டும் வந்துற்ற போழ்தில்
விடம்பரந் தனைய தாய
வெண்ணிலா வெதுப்ப வீரன்
படம்பரந் தனைய வல்குற்
பால்பரந் தனைய தீஞ்சொல்
தடம்படு கண்ணி னுடன்
றனிமையை நினைய லுற்றான்.

இடம்படு - பெரிய, மானம் - அவமானமும், துன்பம் - வருத்த மும், இரண்டும் - ஆகிய இரண்டும், வந்து உற்ற போழ்தின் - வந்த டைந்த போதில், விடம் பரந்து அனைய - விஷம் உடலிற் பரவியது போன்ற, வெள் நிலா வெதுப்ப-வெண்மையான நிலவு தன்னைச்சுட, வீரன் - இரகு வீரனான இராமபிரான், படம் பரந்து அனைய அல்குல்- பாம்பின் படம் விரிந்தாற் போன்ற பிராட்டியின் அல்குலையும், பால் பரந்த அனைய தீம் சொல் - பால் பரவி விளங்கியது போன்ற,

இனிய சொற்களையும், தடம் படு கண்ணினுள் தன் - விசாலமான கண்களை யுடைய பிராட்டியின், தனிமையை - (தன்னைப் பிரிந்ததால் உண்டான) அவள் தனித்திருக்கும் நிலைமையை, நினையல் உற்றான் - எண்ணுவானானான்.

இடம் படு - தன்னிடம் உண்டான, என்னலும் ஒக்கும், முன்னமே, மானம் துன்பம் என்ற இரண்டினால் வெதும்பிய இராம பிரானுக்கு, நிலவைக் கண்டதால் உண்டான பிராட்டியின் பிரிவுத் துயரமும் கூடலாயிற்று என்க. மானம், இராவணனால் உண்டாயது; துன்பம், சடாயு இறந்ததனால் உண்டாயது என்க. மானம் துன்பம்; *1124, 1042.*

பி - ம். 1. மானத் துன்ப மிருடர வெண்ணறீர்ந்தான்; வெண்ணிற்றீர்ந் தான்; துற்றபோது;
2. வெதும்ப வீரன், வெதுப்ப மேலோன்.
3. பால்பொழிந்தனைய வஞ்சொற்; தனையவின்சொற், தனைய சில சொற். 4. தடம் பெருங். (8)

வேறு

1038. மடித்த வாயன் வயங்கு முயிர்ப்பினன்
துடித்து வீங்கி யொடுங்குறு தோளினன்
பொடித்த தண்டளிர்ப் பூவொடு மால்கரி
ஒடித்த கொம்பனை யாடிறத் துன்னுவான்.

மடித்த வாயன் - இதழ்களை மடித்த வாயையுடையவனும், வயங்கும் உயிர்ப்பினன் - தோன்றும் பெருமூச்சினையுடையவனும், துடித்து வீங்கி ஒடுங்குறு தோளினன் - துடித்துப் பெருத்துப் பின் தளர்ந்து சோரும் தோள்களையுடையனுமான இராமபிரான், பொடித்த தண் தளிர் - அப்பொழுது தோன்றிய குளிர்ந்த துளிர் களோடும், பூவோடும் - அப்பொழுது மலர்ந்த பூக்களோடும் கூடிய, மால் கரி ஒடித்த கொம்பு அனையாள் - பெரிய யானை ஒடித்த ஒரு பூங்கொம்பு போன்றவளான பிராட்டியின், திறத்து - விஷயமாக, உன்னுவான் - சிந்தனை செய்வானாயினன்.

வாய் மடித்தது; - மானத்தால்; இராவணன் பிராட்டியை அப கரித்துப் போனான் என்ற சினத்தாலும் ஆம்: உயிர்த்தது - துன்பத் தால், ஏக்கத்தால் எனினும் ஆம். தோள் துடித்து வீங்கியது,

இராவணனோடு போரிடக் கருதியதால்; தளர்ந்தது, அவ்விராவணன் இருப்பிடமறியாமையாலும், பிராட்டியின் பிரிவின் ஏக்கத்தாலும் என்க. வயங்கும் உயிர்ப்பு-பெருமூச்சு. பொடித்த தண்டளிர்ப் பூவொடு கொம்பு, பிராட்டிக்கு உவமை; தளிர், மேனிக்கும், பூ, அவள் கண், வாய், கை, கால் முதலியவைக்கும்; கொம்பு, பிராட்டியின் திருவுருவுக்கும் ஒப்புமைகள். மால்கரி - பெரிய ஆண் யானை. கரியொடித்த கொம்பு; இராவணனால் பிரித்தெடுக்கப்பெற்ற பிராட்டி; ஒப்பு: 'பெருகளிறுவாங்க முரிந்து நிலம் படாஅ நாருடை யொசிய லற்றே' (குறுந். 112 : 3-4). இச்செய்யுள் இராமபிரானின் விரகதாபத்தை நன்கு சித்தரிப்பதாகும்; இனி, அத்தாபத்தால் விளைவனவான சோக நிலையும் செயல்களும் கூறப்பெறும்.

பி - ம். 1. முடித்த வாயின். 2. பொடுங்கின தோளினன்; ரோளினன்;
3. மால்களி(று). 4. ரொடித்த, மடித்த; யாடிற முன்னுவான்.

1039. வாங்கு வில்லன் வரும்வரு மென்றிரு
பாங்கு நீணெறி பார்த்தன ளோவெனும்
வீங்கு வேலை விரிதிரை யாமென
ஓங்கி யோங்கி யொடுங்கு முயிர்ப்பினன்.

வீங்கு வேலை விரிதிரை ஆம் என - பொங்கி எழுகின்ற கடலில் விரிந்து தோன்றும் அலைகளைப் போல, ஓங்கி ஓங்கி ஒடுங்கும் உயிர்ப்பினன் - அடிக்கடி மேற்கிளம்பி எழுந்து பின் தணிந்து அடங்கும் பெருமூச்சையுடைய இராமபிரான், 'வாங்கு வில்லன் - நாண் பூட்டி வளைத்த வில்லோடு, வரும் வரும் என்று - தன்னை மீட்டுக்கொள்ள வந்து விடுவான் வந்து விடுவான்' என்ற நம்பிக்கையில், இரு பாங்கும் - இருபக்கங்களிலும், நீள் நெறி பார்த்தனளோ எனும் - சீதை என்னை நோக்கி நெடுந்தூரம் வழி பார்த்திருந்தாளோ' என்று சொல்லி வருந்தினன்.

வேலை வீங்கு விரிதிரையென மாற்றிப்பொருள் கொள்ளலும் ஏற்கும். வரும் வரும்; ஓங்கி ஓங்கி - அடுக்கு, கள், பல முறைகளைக் குறிப்பன. ஓங்கி ஒடுங்கும் உயிர்ப்புக்குக் கடலில் வீங்கி ஒடுங்கும் அலை உவமை. வாங்குதல் - வளைத்தல்; அயோத். நகர்நீங்கு: 196; சுந்தர; 350; 893. 'வரும் வருமென்று......பார்த்தனளோ'; ஒப்பு.

'சுருதி நாயகன் வரும்வரு மென்பதோர் துணிவால், கருதி மாதிர மனைத்தையு மளக்கின்ற கண்ணுள்' (சுந்தர. 338).

பி-ம். 1. வாங்கும் வில்லன்.
2. பாங்கினீ ணெறி, பாங்கு னீணெறி ; பார்த்தனையோவெனும்.
3. வீங்கும் வேலை, (10)

1040. என்னி னைந்தன ளென்பது சாலுமோ
மின்னி னைந்த விலங்கு மெயிற்றினன்
நின்னி லென்று நெருக்கிய போதவள்
என்னி னைந்தன ளோவென வெண்ணுமால்.

'மின் நினைந்த - மின்னலை நிகர்ப்பூட்டிய, விலங்கும் எயிற்றினன் - இடம் விலகிய பற்களையுடைய இராவணன், 'நில் நில் என்று - நில் நில்' என்று அதட்டிக்கொண்டு, நெருங்கிய போது - (சீதையைப்) பற்ற நெருங்கி வந்தபோது, அவள் - அவள், என் நினைந்தனளோ என்பது சாலுமோ - என்னதுதான் நினைந்து அவள் வருந்தினள் என்று அறிந்து கூறுதல் இயலுமோ? (இயலாது, என்றபடி); என் நினைந்தனள் ஓ - என்னை நினைத்துக்கொண்டு வருந்தினளோ?' என எண்ணும் - என்று இராமபிரான் நினைத்து வருந்தினன். ஆல்: ஈற்றசை.

மின் நினைந்த - மின்னலை ஒத்த என்னும் பொருளில் வந்தது. நினைந்த என்பது, உவமவாசகம் எனவும் கொள்க. விலங்கும் எயிறு - இருக்கவேண்டிய வரிசையினின்று விலகிக் கோணலாய் உள்ள பல்; அதாவது வக்ர தந்தம். நில் நில்; அடுக்கு வெகுளியின் மேலது. என் நினைந்தனள் என்பது சாலுமோ - யான் வந்து தன்னை மீட்பேன் என்று நினைத்தாள் என்பது தகுதியாகுமோ? என்றும், அந்த மாயமானால் எனக்கு என்ன நேரிட்டதோ என்று எண்ணினளோ என்றும் கொள்வது இழுக்காது. அப்பொழுது, ஈற்றடியில் உள்ள என் நினைந்தனளோ? என்பதற்கு அவள் என்ன என்ன எண்ணினளோ என்று பொருள் கூறுவது பொருந்தும்.

பி-ம். 1. என்னினைந்தில ளென்பது, என்னினைந்தில னென்பது, தன்னினைந்தனனென்பது, தன்னினைந்தனன்.
2. மின்னினுந்து மெயிற்றின் விளக்கினன் ; விலங்கனுய், விலங்கென ; வெயிற்றின் வீங்கினன், வெயிற்றின் விலங்கனன்.
3. நெருங்கிய ; போதவண்.
4. வெண்ணுவான், என்னினைந்திடுமோ வென்றிரங்குவான். (11)

**1041.** நஞ்சு காலு நகைநெடு நாகத்தின்
வஞ்ச வாயின் மதியென மட்குவாள்
வெஞ்சி னஞ்செ யரக்கர்தம் வெம்மையை
அஞ்சி ஞன்கொலென் றையுறு மாலென்பான்.

'நஞ்சு காலும் - விஷத்தைக் கக்கும், நகை நெடு நாகத்தின் - பற்களையுடைய இராகு என்னும் பெரும் பாம்பின், வஞ்ச வாயின் மதி என - கொடிய வாயில் அகப்பட்ட சந்திரனைப்போல, மட்குவாள் - வலிகுன்றி அழிபவளாள சீதை, 'வெம் சினம் செய் - கொடிய கோபங்கொள்ளும் இயல்புடைய, அரக்கர் தம் வெம்மையை - இராக்கதர்களுடைய, கொடுமைக்கு, அஞ்சினன் கொல் - இராமன் அஞ்சி இருந்துவிட்டான்போலும்', என்று ஐயுறும் ஆல் - என எண்ணி என்பால் சந்தேகம் கொண்டனள் ஆவளோ?' என்பான் - என்று எண்ணி வருந்தினன்.

நஞ்சு காலும் நெடுநாகத்தின் வஞ்சவாயின் மதி; 296; பால. மிதிலைக்காட்சி: 47; சீவக. 1540; அகநா. 313 : 7; நாலடி. 148. மட்குதல் - ஒளிமழுங்கிச் சோர்தல்; அயோத். தைலமாட்டு: 5.

பி-ம். 1. நகையொரு, நகைபெறு, நகையொடு.
2. மதியென மாழ்குவான்; வட்குவாள்.
3. வஞ்சன் வாயின்; வெம்மைகண்(டு)
4. அஞ்சினர் கொலென்றையுறுவ ரென்பான்; மாலென்றான்.

(12)

**1042.** பூண்ட மானமும் போக்கருங் காதலும்
தூண்ட நின்றிடை தோமுறு மாருயிர்
மீண்டு மீண்டு வெதுப்ப வெதும்பினன்
வேண்டு மோவெனக் கின்னமும் வில்லென்பான்.

பூண்ட மானமும் - தான் கொண்ட அவமானமும், போக்கு அரும் காதலும் - பிராட்டியிடம் நின்று நீக்கமுடியாத அன்பும், தூண்ட நின்று - தூண்டுவதால் நிலைபெற்றதாகி, இடை - நடுவில், தோம் உறும் ஆர் உயிர் - வருந்தும் அரிய தன் உயிரை, மீண்டும் மீண்டும் - திரும்பத் திரும்ப (அதாவது அடிக்கடி), வெதுப்ப - வாட்ட, வெதும்பினன் - மனம் வதங்கி வருந்தின இராமபிரான், 'இன்னமும் எனக்கு வில் வேண்டுமோ என்பான் - இனியும் இந்த வில் எனக்கு வேண்டுவதாகுமோ?' என்று வருந்தினன்.

மானத்துக்கும் காதலுக்கும் இடையே ஊசலாடிக்கொண்டிருந்தது அவன் மனம் என்க. இவ்வாறு உயிர் வெதுப்பப்பெற்ற

அவன், தனக்கு வீரமின்மையை நினைத்து, 'எனக்கு இவ்வில்லும் வேண்டுமோ?' என்று மனமுளைந்து கூறினான் ; 'பல்லுடையா யுன்னைப் படையுடையான் கொன்றகல, வில்லுடையே னின்றேன் விறலுடையே னல்லேனே' என்று முன் கூறியது போல. பின்னும் அடுத்த செய்யுளில் 'வில்லை நோக்கி நகும்' என்பதையும் காண்க. தோம் - துன்பம் அல்லது வருத்தம் ; 1170; அயோத். நகர் நீங்கு : 7.

பி - ம். 2. தூண்ட நின்றவை, தூண்ட லால்மனர் தோமுற வேதுயர், தோமறு மாருயிர்.
3. நீண்டு மீண்டு வெதுப்பநின் றெஞ்சுவான் ; வெதும்ப.
4. வெனக்கிவ்வரிவில் லென்பான் ; வரிவில்லென்றான். (13)

1043. வில்லை நோக்கி நகுமிக வீங்குதோள்
கல்லை நோக்கி நகுங்கடைக் கால்வரும்
சொல்லை நோக்கித் துணுக்குறுந் தொன்மறை
எல்லை நோக்கினர் யாவரு நோக்குவான்.

தொல் மறை எல்லை நோக்கினர் - பழமையான வேதத்தின் முடிவை ஆராய்ந்துள்ள ஞானியர், யாவரும் - எல்லாராலும், நோக்குவான் - கருதி வணங்கத்தக்க பரம்பொருளான இராமபிரான், வில்லை நோக்கி நகும் - தன் கையில் உள்ள வில்லைப் பார்த்து இது பயனற்றதாக ஆயிற்றே என்று சிரிப்பான் ; மிக வீங்கு - மிகவும் பருத்து விளங்கும், தோள் கல்லை நோக்கி - தன் தோள்களாகிய மலைகளைப் பார்த்து, நகும் - இகழ்ந்து சிரிப்பான் ; கடை கால் வரும் - முடிவில் தனக்கு நேரிடக்கூடிய, சொல்லை நோக்கி - பழிச் சொல்லைக் கருதி, துணுக்கு எனும் - திடுக்கிட்டு நடுங்குவான்.

இது, முன் செய்யுளிற் காட்டிய கருத்தின் தொடர்பு. மறை யெல்லை - வேதாந்தம். இராமபிரான் பரம்பொருளே என்பது இங்குச் சுட்டியபடி. மனைவியை ஒருவன் அபகரித்துச் செல்ல, அவனை வென்று மீட்காமல் இருப்பது கருதி உலகம் கூறும் பழிச்சொல்லுக்குத் தான் ஆளானமையைக் குறித்துத் தன்னை நிந்திக்கும் முறையில் ஏற்பட்ட நகை என்பதாம். இச்செய்யுள் இகழ்ச்சியின் வந்த நகை யாகிய மெய்ப்பாட்டை அறிவித்ததாகும்.

பி - ம். 1. நகுமிகு வீங்குதோள். 3. துணுக்கெனும்.
4. எல்லை நோக்கின ராமென வேங்கினன், எல்லை நோக்கி யிரங்கிமற் றெண்ணுவான், எல்லை நோக்கினன் யாவரு நோக்கினன் ; வேங்குவான் ; (14)

1044. கூதிர் வாடைவெங் கூற்றினை நோக்கினன்
வேத வேள்வி விதிமுறை மேவிய
சீதை யென்வயிற் றீர்ந்தன ளோவெனும்
போத கம்மெனப் பொம்மெ னுயிர்ப்பினன்.

கூதிர் வாடை வெம் கூற்றினை - கூதிர்க் காலத்து வாடைக் காற்றுப் போன்று அப்பொழுது வீசிய குளிர் காற்றாகிய கொடிய யமனை, நோக்கினன் - கண்டு, போதகம் என - யானை போல, பொம் என் உயிர்ப்பினன் - பொம் என்ற ஓசையுடன் பெருமூச்சை விட்ட இராமபிரான், 'வேத வேள்வி விதிமுறை - வேதங்களிற் சொல்லப் பட்ட ஹோம விதி கூடிய சடங்கு முறையின்படி, மேவிய - மணம் செய்து அடைந்த, சீதை - சீதையானவள், என் வயின் - என்னிட மிருந்து, தீர்ந்தனளோ எனும் - நீங்கி விட்டாளோ?' என்று சொல்லி வருந்தினன்.

கூதிர் வாடைக் காற்று வருத்துதல்; 'ஊதையங் குளிரொடு பேதுற்று மயங்கிய, கூதி ருருவிற் கூற்றம், காதலர்ப் பிரிந்த வெற்குறித்து வருமே' (குறுந். 197 : 3-5.); 'வாடையாய்க் கூற்றி னுரு முருவினை மாற்றி வந்தார்' (கிட்கிந்தா. கார்காலம்: 60). கூற்று - கூற்றம்; உயிரை உடலினின்று கூறுபடுத்துபவன். போதகம் - யானைக் கன்று (பிங்.); இங்கு யானையைக் குறித்தது. பொம் - ஒலிக் குறிப்பு. நோக்கினன் : முற்றெச்சம். தீர்ந்தனளோ என்பதற்கு, இறந்தனளோ என்றும் பொருள் கூறலாம்; தீர்தல் - அழிதல், இனித் திரும்பிப் பெற முடியாமையைக் குறித்தது; பிராட்டியை இராவணன் அபகரித்தது மாசி மாதம் என்றும், சித்திரை மாதம் என்றும் பிற நூல்கள் கூறுவதாலும், (878 குறிப்.) அடுத்துக் கார் காலம் வருவதைக் கிட்கிந்தா காண்டம் கூறுவதாலும், கூதிர் இடையே வரக் கூடாமையாலும், 'கூதிர்க் காலத்து வாடைக் காற்றுப் போன்று' என்று இங்குப் பொருள் கூறப்பெற்றது.

பி - ம். 1. நோக்கினன், நோக்கலும், நோக்குறும், நோக்கியே.
2. விதிமுறை நோக்கிய.
4. போத மேவிடப் போக்கு முயிர்ப்பினால், (15)

1045. நின்று பல்லுயிர் காத்தற்கு நேர்ந்தயான்
என்று ணைக்குல மங்கையொ ரேந்திழை
தன்று யர்க்கட நீர்க்குஞ் சதிரிலேன்
நன்று நன்றென் வலியென நாணுமால்.

'நின்று - அரசனாய் இருந்து, பல் உயிர் காத்தற்கு - உலகில் வாழும் பல உயிர்களையும் காப்பாற்றுவதற்கு, நேர்ந்த யான் - அரச

குலத் திற் பிறந்த நான், என் துணை - என் வாழ்க்கைத் துணையாய் அமைந்த, குல மங்கை - நற்குலத் துதித்த மங்கையாகிய, ஓர் ஏந்திழை தன் - ஒரு பெண்ணின், துயர் கடல் தீர்க்கும் துன்பக் கடலினின்று அவளைக் கரையேற்றும், சதிர் இலேன் - திறமை யற்றவனானேன்! என் வலி நன்று நன்று என - என் வலிமை மிக நன்றாக இருக்கிறது!' என்று, நாணும் - (இராமபிரான்) வெட்க முறுபவனானான். ஆல்: ஈற்றசை.

நேர்தல் - உடன்படலும் ஆம்; நின்று பல்லுயிர் காத்தற்கு நேர்ந்த யான் - தந்தையாகிய தசரதசக்கரவர்த்தியின் விருப்பப்படி அரசனாய் முடிசூடி உலகிலுள்ள பலவகைப்பட்ட உயிர்களையும் காப்பாற்ற உடன்பட்ட நான், என்று பொருள் கூறலும் ஒன்றும். 'நன்று நன்று' அடுக்கு, இகழ்ச்சிப் பொருளில் வந்தது. 'உலகின் உயிரனைத்தையும் காப்பாற்றும் கடமை பூண்ட நான் எனக்குரிய மனைவியைக் காப்பாற்றாது போனேனே!' என்றும், 'இந்நிலையில் உள்ள யான் அரசனாய் இருப்பதற்கு எப்படி உரிமை உடையவனாவேன்?' என்றும் தன்னைப் பெரிதும் இகழ்ந்துகொண்டான் இராமபிரான் என்பதாம். ஒப்பு: 'தன்னுயிர் போலத் தழீஇ யுலகத்து, மன்னுயிர் காக்குமிம் மன்னனு மென்கொலோ, வின்னுயி ரன்னானைக் காட்டி யெனைத்தொன்று, மென்னுயிர் காவா தது' (கலித். 143 : 52-5).

பி - ம். 3. தன்றுயர்க்குந் தகைவிலெ னாயினேன், தகையல னாயினேன், தகைப்பில தாயினேன், தகைவில னாயினேன், தருக்கில னாயினேன், தடுப்பில னாயினேன்.
4. நாணுவான். (16)

இரவு நீட்டித்தலும் இராமபிரான் துயருறுதலும் 1046–55.

1046. சாயுந் தம்பி திருத்திய தண்டளிர்
தீயு மங்கவை தீய்தலுஞ் செவ்விருந்
தாயு மாவி புழுங்க வழுங்குமால்
வாயும் நெஞ்சும் புலர மயங்குவான்.

வாயும் நெஞ்சும் புலர மயங்குவான் - தன் வாயும் தொண்டையும் பிரிவால் மயக்கமுற்ற இராமபிரான், தம்பி திருத்திய - தன் தம்பி இலக்குவன் செம்மையாய் அமைத்த, தண் தளிர் - குளிர்ந்த தளிர்களின் மீது, சாயும் - சற்றுச் சாய்ந்து கொள்வான்: அங்கு அவை தீயும் - (அந்நிலையில் அத் தளிர்கள் அவன் உடலின் வெம்மை தாங்காமல்) காய்ந்து கருகிப் போய்விடும்; தீய்தலும்,

அவ்வாறு அத் தளிர்கள் தீய்ந்து பேர்கவும், செம் இருந்து - அப் படுக்கையை விட்டு எழுந்து நன்றாய் உட்கார்ந்திருந்து, ஆயும் - அதன் காரணத்தை ஆராய்ந்து பார்ப்பான்; ஆவி புழுங்க அழுங்கும் - தன் உயிர் வாடச் சோருவான். ஆல் : ஈற்றசை.

வாயும் நெஞ்சும் புலர்ந்தது, பிராட்டியின் பிரிவை நினைந்து பலவாறு சொல்லிப் புலம்பியதால். தளிர்களில் படுப்பது - விரக தாபத்தைத் தடுப்பதற்கு; "பொன்னின் வார்தளிரிற் புரண்டாளரோ" (301); "வீயரித்தளிர் மெல்லணை மேனியில், ஆயிரத்தினிரட்டி யடுக்கினுள்;" (பால. மிதிலைக்காட்சி : 81). விரகதாபத்தால் படுத்திருந்த தளிர்கள் காய்ந்து போதல்; பால. மிதிலைக்காட்சிப் : 50, 81. விரகதாபத்தால் ஒரு நிலையிலின்றித் தத்தளித்தல்; நள. சுயம்வர : 120.

பி - ம். 1. தேயுந் தம்பி,

2. பாயின் மற்றெதிர் பற்றறும் வல்விருள்; தீர்கெனுஞ் செவ்விருந், தீர்கலுஞ் செல்விருந்து; செப்பரிந், சேய்ப்பரந், சேய்ப்பிரிந்.

3. ஆவியு நெஞ்சு மழுங்கிட, மாயு மோவென நெஞ்ச மயங்கியுள்; புழுங்கு மழுங்குமால்.

4. வாயு நெஞ்சும் முலர்ந்து மயங்குவான்; புலர மயங்குமால்; ஓயுமோயு முயிர்க்கு முயிர்க்குமே, ஓயும் வெம்பு முயிர்க்கு முயிர்க்குமே.

1047. பிரிந்த வேதுகொல் பேரபி மானங்கொல்
தெரிந்த தில்லை திருமலர்க் கண்ணிமை
பொருந்த வாயிரங் கற்பங்கள் போக்குவான்
இருந்துங் கண்டிலன் கங்குலி னீறரோ.

திரு மலர் கண் இமை - அழகிய தாமரை மலர்போன்ற தன் கண்களில் இமைகள், பொருந்த - பொருந்துவதான சிறு நேரத்திற்குள்ளே, ஆயிரம் கற்பங்கள் போக்குவான் - பிர்ம்ம கற்பங்களான பல ஊழிக் காலங்களைக் கடக்கச் செய்பவனான பரம்பொருளாகிய இராமபிரான், இருந்து கங்குலின் ஈறு கண்டிலன் - அன்று எழுந்து உட்கார்ந்திருந்து அவ் விரவின் முடிவைக் (அதாவது பொழுது விடிவதை) காணாதவனானான்; (இச் செயல்), பிரிந்த ஏது கொல் - பிராட்டியைப் பிரிந்த காரணமோ? பேர் அபிமானம் கொல் - அப் பிராட்டிபால் தான் கொண்ட ஆசை மிகுதியோ? தெரிந்தது இல்லை - அதன் காரணம் இன்னதென்று எமக்குத் தெரியவில்லை. அரோ : ஈற்றசை.

இச் செய்யுள் கவிக்கூற்று. இராபிரான் துயிலாது விழித் திருந்தது பிராட்டியின் பிரிவாலும், அவள்பால் அப் பெருமான் கொண்டிருந்த பேரபிமானத்தாலுமே ஆம் எனக் கொள்ளற்பால தாம். பரம்பொருளாகிய திருமாலின் கண்ணில் இமை பொருந்தும் ஒரு கண நேரம், பல பிர்ம்ம கற்பங்கள் கழிந்துபோகும் பெருங் காலமாகும் என்பதாம். 'கண்கள் இமைக்கச் செய்தே ஆயிரங் கற்பங்கள் முடிவு காண்கின்றவன், இப்பொழுது இரா முழுவதும் இமைத்தும் இரவின் முடிவு கண்டானில்லை' என்பது பழையவுரை. இத்தகைய செய்தி சிவபெருமான் திறத்தும் நிகழ்ந்ததாக ஸ்ரீகாஞ்சிபுராணம் திருக்கண் புதைத்த படலத்திற் கூறப்பெறுள்ள தும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும். பெருந் துயருற்றூர்க்கும், பிரிந்த காதலர்க்கும் இரவு நீடிக்கும்; பால. கடிமணப் :9; சுந்தர. 333 : நள. சுயம்வர : 108. இச் செய்யுள் இராமபிரானது பரத் துவம் கூறியது.

பி - ம். 1. பிரிந்த வேதங்கொல், பிரிந்த பேதுகொல், பிரிந்த தன்மை, பிரிந்த பேது; பேரவிமானங்கொல்.
2. கண்ணிணை.
3. பொருந்த வாருயிர், பொருந்த வெண்ணில். (18)

1048. வென்றி விற்கை யிளையவ மேலெலாம்
ஒன்று போல வுலப்பில நாட்கடாம்
நின்று காண்டியன் றேநெடுங் கங்குலூன்
இன்று நீள்வதற் கேதுவென் னென்னுமால்.

(இராமபிரான் இலக்குவனை நோக்கி), 'வென்றி வில் கை - வென்றியைத் தரும் வில்லேந்திய கையையுடைய, இளையவ - தம்பி! மேல் எலாம் - முன் நாம் வனத்தில் இருந்த காலமெல்லாம், ஒன்று போல - ஒரு நாளைப்போல, உலப்பு இல நாள்கள் - குறைவுபடாத நாட்கள் எல்லாம், நின்று காண்டி அன்றே - நீ உறங்காமல் விழித்து நின்றுகொண்டிருந்து பார்த்து வந்திருக்கின்றாய் அல்லவா! இன்று நெடும் கங்குல் - இன்று இந்த நெடிய இரவுதான், நீள்வ தற்கு ஏது என் - நெடிதாய் வளர்வதற்குக் காரணம் என்னே?' என்னும் - என்று வினவினான். தாம், தான், ஆல் : அசைகள்.

இலக்குவன் உறங்காமை; 1034; குறிப். 'உறங்கா வில்லியாய் இருந்து, இராப்பொழுதை நீ நன்றாக அறிவாயன்றே' என்பது பழையவுரை.

பி-ம். 1. வென்றி வேற்கை; யிளவலை முன்னெலாம், யிளவலை நோக்கி நீ ஒன்று போன்ற.
2. வுலப்பரு நாட்கடாம், வுலப்பில் பன்னாட்கடாம், வுலப்பரு நாட்கடாம்.
3. காண்டியன்றோ நெடுங் கங்குலீின்று; நெடுங் கங்குலின்.
4. நீடுதற்கேது. (19)

1049. நீண்ட மாலை மதியினை நித்தலும்
மீண்டு மீண்டு மெலிந்தனை வெள்குவாய்
பூண்ட பூணவள் வாண்முகம் போதர
ஈண்டு சால விளங்கினை யென்னுமால்.

மாலை நீண்ட மதியினை - மாலைப் பொழுதில் தன் உருவத்தில் நீண்டு வளர்ச்சியுற்ற (அதாவது முழுவதும் வளர்ந்து விளங்கிய) முழுமதியை நோக்கி, (இராமபிரான்), 'நித்தலும் - நாள் தோறும், மீண்டும் மீண்டும் - அடிக்கடி, மெலிந்தனை வெள்குவாய் - சீதையின் முகத்திற்கு ஒப்பாகாமையால் உடல் குன்றி வெட்கமுற்று வருந் தும் நீ, (இப்பொழுது), பூண்ட பூணவள் - அணிந்த ஆபரணங்களை யுடைய அச்சீதையின், வாள்முகம் - ஒளி தங்கிய வதனம், போதர - தோன்றாது போக, ஈண்டு சால விளங்கினை - இங்கு மிக்க சிறப் போடு (அஞ்சாது) தோன்றுகின்றாய்' என்னுமால் - என்று மதியை நோக்கிக் கூறினான் இராமபிரான்.

சந்திரன நாளும் வளர்ந்து குறைவது பிராட்டியின் திரு முகத்திற்குத் தான் ஒப்பாகாமையால் என்றும், இப்பொழுது அவள் அங்கில்லாமையால், வெட்கமுற இடமின்றி அவன் முழு ஒளியுடன் வெளிப்பட்டான் என்றும் தற்குறிப்பேற்ற அணியிற் கூறப்பெற் றது. அங்கு அன்று தோன்றியது முழுமதி எனக்கருதற்பால தாம். போதர; போதரு, என்னும் வினை ஈற்றுகரங் கெட்டுப் போதர் என ஆயிற்று. 'போதர் கண்டாய் இங்கே போதர் கண் டாய்' (பெரியாழ்வார். 2. 9 : 6); பூண்ட பூணவள்; இது வடமொழி நடை. இச் செய்யுள் சந்திரோபாலம் பனம் என்னும் துறையது.

பி-ம். 1. நீண்ட வானின் மதியினை; நித்தமும்.
2. மதியினை வெள்குவான்; மெலிந்தற வெள்குவாய்.
3. பூண்ட பொற்பினள், பூண்ட பூண்முலை; பூநறுவாண்முகம்; வாண்முகம் பேர்தலால். 4. ஈண்டு காண. (20)

1050. நீணி லாவி னிசைநிறை தன்குலத்
தாணி யன்ன பழிவர வன்னது
நாணி நாடு கடந்தன ளுங்கொலோ
சேணு லாந்தனித் தேரவ னென்னுமால்.

'சேண் உலாம் தனி தேர் அவன்-வானில் சஞ்சரிக்கும் ஒப்பற்ற ஓராழித் தேரையுடைய சூரியன், நீள் நிலாவின் இசை நிறை - நீண்ட நிலவைப் போலக் கீர்த்தி நிறைந்து பரவிய, தன் குலத்து - தனது குலத்தினிடத்து, ஆணி அன்ன பழி வர - ஆணிபோன்ற (வலிய) பழிப்பு ஏற்பட, அன்னது நாணி - அந்தப் பழிக்கு வெட்கி, நாடு கடந்தனன் ஆம் கொலோ - இந்நாட்டைவிட்டு அப்பாற் போய்விட்டானே?' என்று இராமபிரான் ஐயமேலிட்டுக் கூறினன். ஆல்; ஈற்றசை.

தேரவன் கடந்தனனுங்கொலோ என்றியைக்க. ஆணி; 938; சுந்தர: 591. 'ஆணி - அஞ்சுரு ஆணி' என்பது பழைய வுரை. ஆணி, இங்கு, அழுத்தமாகத் தைக்கப்பட்டது என்ற பொருளில் அமைந்தது. பழிபட்டவரை நாடு கடத்தல் மரபு; நாடு கடந்து செல்லுதல் அவமானத்திற்கு அஞ்சினோர் செயலாகும். இங்குக் கதிரவன் தானே பழியஞ்சி நாடு கடந்தனன் என்று, தன்பழி தன் குலப்பழியாயினமைக்கு இராமபிரான் இரங்கினன் என்க. தேரவன் - சூரியன். கீர்த்தியைத் தண்ணிய வெண்மையெனக் கூறுவது கவிமரபு ஆதலின், நீணிலாவினிசை எனப்பட்டது; இராமபிரான் புகழுக்கு நிலா; சுந்தர. 155. சூரியவம்சம் இசையால் நிறைந்தமை: பால. ஆற்றுப்; 12; கிட்கிந்தா. வாலிவதைப்: 77. இச்செய்யுளும் தற்குறிப்பேற்றவணியில், ஐயப்பொருள் ஏற்றிக் கூறப்பெற்றது ஆகும். இச்செய்யுள் முதலடிக்கு, 'நீணிலாவு மிசைநிறை தன் குலத்' என்ற பாடங்கிடைப்பின் சிறக்கும்.

பி-ம். 1. னிசை நின்ற. 3. நட்புக் கடந்தன. (21)

1051. சுட்ட கங்கு னெடிதெனச் சோர்கின்ருன்
முட்டி ழந்த நெடுமுடக் கோனெடும்
கட்டி வாளரக் கன்கதி ரோனையும்
இட்ட னன்கொ லிருஞ்சிறை யென்னுமால்.

'சுட்ட கங்குல் - தன்னை எரி போலச் சுட்ட அவ்விரவு, நெடிது என - மிகவும் நீண்டதாக உள்ளது என்று, சோர்கின்ருன் - வருந்தித் தளர்வுற்ற இராமபிரான், வாள் அரக்கன் - கொடிய அரக்கனை

இராவணன், முட்டு இழந்த - இடைக்குக் கீழான கால் முதலான பொருத்துவாய் அற்ற, நெடு முட கோன் ஒடும் - நெடிய முடத் தன்மையடைந்த தேர்ப்பாகனாகிய அருணனோடும், கதிரோனையும் - சூரியனையும், கட்டி - பிணித்து, இரும் சிறை இட்டனன் கொல் - பெருஞ் சிறையில் வைத்துவிட்டான் போலும்!' என்னும் - என்று சிந்தித்தான். ஆல் : ஈற்றசை.

அன்று அருணோதயமும் சூரியோதயமும் ஆகாமையைக் கண்டு இராமபிரான் இவ்வாறு கூறினன் என்க. முன் செய்யுளில் கதிரவன் தானே நாடு கடந்தனனோ என்று கூறி, இங்கு இவ்வாறு ஐயுற்றான் என்க. முடக்கோன் - அருணன்; இவன் உடலில் தொடைக்குக் கீழ்ப்பாகம் இல்லாத பெருமுடமாய்ப் பிறந்தவனாதலின், நெடுமுடக்கோன் எனப்பட்டான். இவன் விநதை புத்திரன்; கருடனுக்குத் தமையன்; சடாயு, சம்பாதி இவ்விருவர்க்கும் தந்தை; 201; கிட்கிந்தா. சம்பாதிப்: 31. காசிபமுனிவரின் மனைவியருள் ஒருத்தியாகிய விநதை என்பாள். புத்திரப் பேற்றை விரும்ப, அம்முனிவர் இருபெரும் முட்டைகளை அளித்து அவற்றை உரிய காலம் வரைப் பாதுகாத்து வரப்பணித்தனர்; ஐந்நூறு ஆண்டுகள் ஆகியும் அம் முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளிப்படாமையால், அம்மாது பொறுமையிழந்து அம்முட்டைகளில் ஒன்றை எடுத்து உடைக்கவே, அதனின்று தொடைக்குக் கீழ்ப்பாகமற்ற முடமான ஒரு மைந்தன் தோன்றினான்; அவனே அருணன் எனப்படுவான் என்பர். இச்செய்யுளில் அமைந்திருப்பது ஏதுத்தற்குறிப்பேற்ற அணியாகும்; இவ்வணி இங்கு ஐயப்பொருளை யேற்று வந்தது. கதிரோனையும்; உம்மை உயர்வு சிறப்பாகவும், (அருணனையும் என்று) இறந்தது தழுவியதாகவும் கொள்ளலாம். இச்செய்யுள் சந்தேகமென்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 2. முட்டு மேழ்பரித்தேர், முட்டமைந்த நெடுமுடிக் கோனொடும்; நெடுமுடிக் கோனொடும். (22)

1052. துடியி னேரிடை தோன்றல ளாமெனில்
கடிய காரிருட் கங்குலின் கற்பம்போய்
முடியு மாகின் முடியுமிம் மூரிநீர்
நெடிய நானில மென்ன நினைக்குமால்.

'துடியின் நேர் இடை - உடுக்கையை ஒத்த இடையையுடைய சீதை, தோன்றலள் ஆம் எனில் - என்றால் காணப் பெறாத

ளானல், கடிய - வெறுக்கத்தக்க, கார் இருள் கங்குலின் - கரிய இருளைக்கொண்டுள்ள இந்த இரவாகிய, கற்பம் போய் முடியும் ஆகில் - கற்பகாலமும் கடந்து முடிவு பெறுமானல், இ மூரி நீர் நெடிய நால் நிலம் - இந்த வலிய கடல் நீராற் சூழப்பெற்ற நீண்ட உலகும், முடியும் - அழிந்து போகும்,' என்று, நினைக்கும் - இராம பிரான் எண்ணுவான். ஆல் : ஈற்றசை.

துடியின் ஏர் இடை எனப் பிரித்து, உடுக்கைபோல, அல்லது உடுக்கையைவிட, அழகிய இடை எனப் பொருள்கொள்ளலும் ஒன்றும். பிராட்டியைக் காணுமையால் இரவு நீட்டித்தலை இராமபிரான் கற்பம் என்றெண்ணி, அக்கற்பத்தின் முடிவில் உலகு அழிவது உண்மையாதலால், அவ்வாறே அதுவும் அழியும் என்று கருதினன் என்க. 'சீதை தோன்றுதிருந்தால் காரிருட் கங்குலானது கற்பம் போல் முடியும்; முடியுமானல் நானிலம் முடியும் என்று எண்ணினன்' என்பது பழையவுரை.

பி - ம். 1. தோன்றிலளாமெனில்,
4. நெடிய மாநில. (23)

1053. திறத்தி னுதன செய்தவத் தோருற
ஒறுத்து ஞாலத் துயிர்தமை யுண்டுழல்
மறத்தி னர்கள் வலிந்தனர் வாழ்வரேல்
அறத்தி னலினி யாவதெ னென்னுமால்.

'திறத்து - தம் வலிமையினல், செய் தவத்தோர் - செய்யத் தக்கதான தவத்தைப் புரியும் மேலோர், இனுதன உற - துன்பங்களை அடைய, ஒறுத்து - அவர்களை வருத்தி, ஞாலத்து உயிர் தமை உண்டு - உலகில் வாழும் பல்லுயிர்களையும் உண்டு, உழல் - திரிகின்ற, மறத்தினர்கள் - கொடிய அரக்கர்கள், வலிந்தனர் வாழ்வரேல் - இவ்வாறு அக்கிரமம் புரிந்து வலியுடையோர்களாய் வாழ்வார்களானல், இனி அறத்தினல் ஆவது என் - இனித் தருமத்தால் ஆகக்கூடிய நலன் யாதேயாகும் (அறத்தினல் பயனில்லை);' என்னும் - என்று சொல்லி வருந்தினன் இராமபிரான். ஆல் : ஈற்றசை.

செய்தவத்தோர் திறத்து இனுதனவுற என இயைத்தும் பொருள் கொள்ளலாம். 'தவம்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற் றல்லார், அவஞ்செய்வா ராசையுட் பட்டு' (குறள். 266) என்றமையால், தவமே செய்யத்தக்கது; மற்றவை கேட்டை விளைப்பன ஆதலின், அவை பாவமாகும். இதனல், செய்தவத்தோர் என்பதற்குச்

செய்யத்தக்கதான தவநெறியில் உள்ள மேலோர் எனப்பொருள் கொள்ளப்பட்டது. செய்தவர்; 'செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே' (பால. பாயிரம் : 5); திருவவதாரப் : 18; வேள்விப் : 16, 19; கார்முகப் : 50; அயோத். மந்தரை சூழ்ச்சி. 2. இச்செய்யுளிற் கூறிய கருத்தையே, இச்சொற்களிலேயே பிராட்டி முன் கூறினமை காண்க; 937.

பி-ம். 1. திறத்தினுயினன், திறத்தினுயின, திறத்தினுகவறத்தொடு வேரறுத், திறத்தி லாதவன் செய்தவத் தோடுற.

2. ஞாலத் துயர்தவ முண்டுமுன்; ஒறுத்தி ஞாலத்துயிர் தனை; துயர்தவ வுண்டுழல், துயிர்களையுண்டுழல்.

3. மலிந்துற வாழ்வரேல், வலித்தனர் வாழ்வரேல்; வாழ்வரே.

4. லாயதெ னென்னுமால். (24)

1054. தேனின் றெய்வத் திருநெடு நாண்சிலைப்
பூநின் றெய்யும் பொருகணை வீரனும்
மேனின் றெய்ய விமலனை நோக்கினுன்
தானின் றெய்ய கிலான்தடு மாறுவான்.

தேனின் - வண்டுகளாலான, தெய்வ திரு நெடு நாண் - தெய்வத்தன்மை வாய்ந்த அழகிய (வண்டுகளாகிய) நீண்ட நாணியை, சிலை - கரும்பாகிய தன் வில்லில், (பூட்டி), பொரு கணை பூ நின்று எய்யும்-காமப்போரைச் செய்யும் அரும்புகளை அம்புகளாகக் கொண்டு தூண்டும், வீரனும் - வீரனுகிய மன்மதனும், மேல் நின்று - வானில் நின்றுகொண்டு, எய்ய - அவ்வம்புகளைத் தூண்ட; விமலனை நோக்கினுன் - பரிசுத்தனுன இராமபிரானை நோக்கிக் குறிபார்த்த வன், தான் நின்று எய்யகிலான் - தான் துணிவுடன் எதிர்நின்று அவ்வம்புகளை எய்யமாட்டாதவனுய், தடுமாறினுன் - திண்டா டினுன்.

தொடுத்தாற்போற் கொண்ட வண்டுகளை நாண் கயிருகவும், செங்கரும்பை வில்லாகவும், மலர்களையே அம்புகளாகவும் கொண்ட வன் மன்மதன் என்பதும், அவ்வம்புகள் ஐந்து என்பதும், அவை தாமரை மலர், மாம்பூ, அசோக மலர், நீலோற்பலமலர், முல்லை, மலர் என்பதும் நுன்மரபு. 'கழையே வில்லும் கணை மலரைந்தே'; "வனசஞ் சூதம் அசோகம் முல்லை குவளை காமன் கொளுமைங் கணையே" (பிங். 55, 56) என்பனவற்ருல் அறியலாம்.

மன்மதன் தடுமாறியது, இராமபிரான் முன்னின்று எய்யும் துணிவின்றி என்க. தடுமாற்றத்தின் காரணம் அடுத்த செய்யுளால் விளக்கப்பெறுவது காணலாம்; இனி, மன்மதன் தடுமாறியது, இராமபிரானுக்கு உண்டான துயரம் தன்னையும் வருத்தியதால் எனக்கொள்ளவாரும் உளர். இது அடுத்த பாடலை நோக்குமிடத்துப் பொருந்தாமை காண்க. வீரனும் உம்மை உயர்வு சிறப்பினது; அவன் தேவர்களையும் முனிவர்களையும் தன் பூங்கணையால் மயக்குவிப்பவனாகையால், தெய்வநாண் என்றது; பறந்துபோகக் கூடிய வண்டுகளாலாகிய ஒரு தனிச் சிறப்புடைமை கருதியுமாம்; அத்தெய்வத்தன்மையை, மென்மை பொருந்திய கருப்புச் சிலைக்கும், மலர்க்கணைக்கும் கூட்டலாம். தெய்வ வீரனும் என்று இயைத்தலும் ஒன்றும்.

பி-ம். 1. நெடுநாட் சிலை. 3. மேனின்றெய்த.
4. தானுந்தேர்கி லான்றடு மாறுமால், தானொன் றெய்கிலனாய்த் தடுமாறுவான், தானுநின்றெய்ய லான்றடு மாறுவான். (25)

1055. உழந்த யோகத் தொருமுதல் கோபத்தால்
இழந்த மேனியு மெண்ணி யிரங்குவான்
கெழுந்து ணைக்கொரு வன்மை கிடைக்குமோ
பழந்து யர்க்குப் பரிவுறும் பான்மையால்.

உழந்த - உள்ளீடுபட்ட, (அதாவது ஆழ்ந்த), யோகத்து - யோக நிலையில் இருந்த, ஒரு முதல் - ஒப்பற்ற முதல்வனை சிவபிரானுடைய, கோபத்தால் - சினத்தினால், இழந்த மேனியும் எண்ணி - எரிந்து அழிந்துபோன தன் உடலையும் நினைந்து, இரங்குவான் - நாளும் வருந்துபவனான அம்மன்மதன், பழம் துயர்க்கு - பழமையாக உள்ள அந்தத் துன்பத்திற்கு, பரிவு உறும் பான்மையால் - வருந்துகின்ற தன்மையினால், துணைக்கு - தனக்குத் துணையாக்கொள்வதற்கு, ஒரு கெழும் வன்மை - (புதியதான) ஒரு சிறந்த துணிவு, கிடைக்குமோ - உண்டாகுமோ? (ஆகாது என்றபடி).

முன்பு சிவபெருமான் கோபத்துக்கு ஆளாகி, உடலிழந்த மன்மதன், தனக்குப் புதியதொரு துணை காணாமையால், இப்பொழுது இராமபிரானை எதிர்த்து நோக்கவும் அஞ்சினன் என்பதாம். இங்குப் பழையவுரை வேறு பாடங்கொண்டு கூறும் உரையும் சிந்திக்கத் தக்கது: அதாவது, 'இழந்த மேனியும் - உருவில்லாத மன்மதனும்;

கெழுந்துணைக்கு ஒருவாமை கிடைக்குமேல், பழந்துயர்க்குப் பரிவுறு மால் என எண்ணி இரங்கினன் (என்று அன்வயம்) ; மன்மதனும் நாம் இப்பொழுது பொருதால், துணையாகிய சீதையை நீங்காதிருக்கப் பெற்ற அன்று, நாம் செய்த குற்றத்தை எண்ணிக் கொல்வானென எண்ணினன்." 1054, 1055 ஆகிய இரண்டு செய்யுட்களும் இடைச் செருகலோ என்ற ஐயம் தோன்றுகிறது ; இஃது ஆராயத்தக்கது.

உழந்த - முயன்று செய்த என்னலும் ஆம். பழந்துயர் - முன் சிவபிரான் திறத்துத் தான் கணை ஏவி அதனால் உருவழிந்து வருந்தும் துயர் ; முன் தவநிலையில் இருந்த ஒரு தெய்வத்திறத்தில் அபசாரப்பட்டு உடலிழந்த துயரால் வருந்தும் மன்மதனுக்குத் தவ நிலையில் உள்ளவனும், மும்மூர்த்திகளும் ஒன்றாகி வந்துள்ளவனு மான இராமபிரானாகிய பரம்பொருளினிடத்துத் தவறிழைக்க வலிமை யுண்டாகுமோ? ஆகாது என்பதாம். சிவபிரான் திறத்து மன்மதன் அபசாரப்பட்டது ; (231) குறிப்பு.

பி - ம். 1. உழந்து யோகத். 2. யிரங்கினன்.
3. கிடைக்குமேல். 4. பான்மையான். (26)

இரவு கழிந்தமை

1056. நீல மான நிறத்த னினைந்தவை
சூல மாகத் தொளைவுறும் வேலையின்
மூல மாமலர் முன்னவன் முற்றுறும்
கால மாமெனக் கங்குல் கழிந்ததே.

நீலம் ஆன நிறத்தன் - நீல நிறத்தையுடைய இராமபிரான், நினைந்து - மேற் கூறியவாறு பிராட்டியின் பிரிவைநினைந்து வருந் திய, அவை - அந் நினைவுகள், சூலம் ஆக - ஒருசூலாயுதம் போல, தொளைவு உறும் வேலையின் - தன்னைத் தொளைத்துத் துன்புறுத் தியபோது, மூலம் - உலக சிருஷ்டிக்கே மூலமான, மா மலர் முன்னவன் - மாட்சிமை பெற்ற (திருமாலின் திருவுந்தித்) தாமரை மலரில் தோன்றிய முதல்வனான பிரமதேவன், முற்று உறும் - முடிவை (அதாவது அழிவை) அடையும், காலம் ஆம் என - பிரம கற்பம் எனும் ஊழிக்காலம் போல நீண்டிருந்த, கங்குல் கழிந்தது - அவ்விரவு நீங்கிற்று. ஏ : ஈற்றசை.

நீலம், கருமை, பச்சை இவை நிறத்தில் ஓரினத்தவை. தொளை யுறுதல் - தொளைத்து வருத்துதல். மூலமாமலர் முன்னவன் ; பால. அகலிகைப் : 31, 47. மூல மா மலர் முன்னவன் காலம் - பிரம

கற்பம் எனும் ஊழிக்காலம்; 966, 'ஓதிமத்தோன் இரா'; என்று கூறுவர்; திருவரங்கத்துமாலை : 19. இராமபிரானின் வருத்த நினைவுகள் சூலமாகிப் பிரமகற்பம் போல் நீட்டித்த இரவைத் தொலைத்ததால், அது கழிந்து விடியலாயிற்று என்றும் கூறலாம். இது தற்குறிப் பேற்றவணி. இச் செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி-ம். 1. நீலமாய்; நிறத்தை நினைத்தவை, நிறத்தி னினைந்தவை, நினைந்திவை; நினைப்பிடைச்.

2. ஆலகாலமெனத் துயரையன்முன்; தொலைவுறு தொல்லையின், தொளைவுறு வேலையின்.

3. மலர்க் கோயிலின் முன்னவன்; முற்றுறு. (27)

வேறு

சூரியோதயத்தில் நிகழ்ந்தவை 1057-60.

1057. வெள்ளஞ் சிலம்பும் பாற்கடலின்
விரும்புந் துயிலை வெறுத்தளியும்
கள்ளுஞ் சிலம்பும் பூங்கோதை
கற்பின் கடலிற் படிவாற்குப்
புள்ளுஞ் சிலம்பும் பொழில்சிலம்பும்
புனலுஞ் சிலம்பும் புனைகோல
உள்ளுஞ் சிலம்புஞ் சிலம்பாவே
லுயிருண் டாகும் வகையுண்டோ.

வெள்ளம் சிலம்பும் பால் கடலில் - மிகுதியாக ஒலிக்கும் திருப் பாற்கடலினிடத்து, விரும்பும் துயிலை வெறுத்து - தான் விரும்பிச் செய்யும் யோக நித்திரையை விட்டு நீங்கி, அளியும் கள்ளும் சிலம்பும் - வண்டுகளும் தேனும் ஒலி செய்யும், பூம் கோதை - அழகிய மாலை அணிந்த, கற்பின் கடலில் - சீதாப்பிராட்டி என்னும் ஒரு கற்பின் கடலினிடத்து, படிவாற்கு - நாளும் திளைத்து மகிழ்ந்த இராமபிரானுக்கு, (இரவுத்துயர் நீங்கிப் பொழுது விடிந்ததை அறிவிக்க), புள்ளும் சிலம்பும் - அவ் வனத்திலிருந்த பறவைகளும் ஒலித்தன; பொழில் சிலம்பும் - சோலைகளும் ஒலித்தன; புனலும் சிலம்பும் - அங்கிருந்த நீர் நிலைகளில் உள்ள நீரும் ஒலித்தன; புனை கோல உள்ளும் சிலம்பும் - மேற்கூறிய ஒலிகளால் மேற் கொண்ட புது அழகை யுடைய இராமபிரானது மனமும் ஊக்க மேலிட்டு ஒலித்தது; சிலம்பா வேல் - புள் முதல் இராமபிரான்

உள்ளம் வரை யாவும் அவ்வாறு ஒலி செய்யாவிடில், உயிர் உண்டாகும் வகை உண்டோ - இராமபிரானுக்கு ஓய்ந்த உயிர் மறுபடியும் கிளர்க்கும் என்று சொல்லுமாறு ஏற்படுமோ? (ஆகாது என்றபடி).

பால் வெள்ளம் சிலம்புங்கடல் என இயைத்துப் பாலின் பெருக்கு ஒலி செய்யும் கடல் (பாற்கடல்) என்றும் கூறலாம். அளி சிலம்புதல் - வண்டுகள் ரீங்காரம் செய்தல்; கள் சிலம்புதல் - தேன் பெருக்கெடுத்துப் பாய்வதால் உண்டாகும் ஒலி; பொழிலும் புனலும் சிலம்பியது, காற்றின் அசைவாலும் அலைகள் எழுந்தும் மோதியும் உண்டாக்கும் ஒலிகளாலானவை என்க. பாற்கடலில் துயிலை வெறுத்தான் கற்பின் கடலிற் படிவான் என்ற நயம் ஓர்க. கற்பின் கடல்: கடல் என்றது பெருமை நோக்கி; கடல் கரை காணமுடியாத பெருமை யுடைமையால்; 'கடல்கண்டோ மென்பர் யாவரே முடிவுறக் கண்டார், (கிட்கிந்தா. தானைகாண்: 34) என்றமை காண்க. இதனாலன்றோ, 'நன்மை கடலிற் பெரிது' (குறள். 103) என்று, பெருமைக்குக் கடலை உவமை காட்டினார் பொய்யாமொழியாரும். 'புனை கோலம் உள்ளஞ் சிலம்பும் - சீதை கோலத்தை மனத்துள்ளே நினைத்து உச்சரிப்பார்' என்பது பழையவுரை. புள், பொழில், புனல் முதலியன இராமன் துயருக்குத் தாமும் வருந்தினபோல ஒலித்தன எனக் கொள்க.

பி - ம். 1. வெறுத்தழியும், வெறுத்தளியின், வெறுத்தாறுங்.
2. சிலம்பு பொலன் கோதைக், சிலம்பு மலர்க்கோதை; கடலிற் பணிவாற்கு.
3. புள்ளுஞ் சிலம்பு மலர் செறிந்த; புனை கோதை. (28)

1058. மயிலும் பெடையு முடன்றிரிய
மானுங் கலையு மருவிவரப்
பயிலும் பிடியுங் கடகளிறும்
வருவ திரிவ பார்க்கின்றான்
குயிலுங் கரும்புஞ் செழுந்தேனும்
குழலும் யாழுங் கொழும்பாகும்
அயிரு மமுதுஞ் சுவைதீர்த்த
மொழியைப் பிரிந்தா லழியானோ.

மயிலும் பெடையும் உடன் திரிய - ஆண் மயிலும் அதன் பெட்டை மயிலும் ஒன்றுசேர்ந்து மகிழ்ந்து திரியவும், மானும் கலையும் மருவி வர - பெண்மானும் ஆண்மானும் சேர்ந்து வரவும், பயிலும் பிடியும் கடகரியும் - ஒன்று சேர்ந்து பழகும் பெண்யானையும்

மதங்கொண்ட ஆண் யானையும், வருவ திரிவ - வந்து அங்கு (மகிழ்ந்து) திரிவனவும் ஆனவற்றை, பார்க்கின்றான் - பார்க்கின்ற இராமபிரான், குயிலும் - குயிலின் ஓசையையும், கரும்பும் - கரும்பின் சுவையையும், செழும்தேனும் - செழுமையுற்ற தேனின் சுவையையும், குழலும் - புல்லங்குழலின் இனிய ஓசையையும், யாழும் - வீணையின் ஓசையையும், கொழும்பாகும் - செழிப்பான வெல்லப்பாகின் சுவையையும், அயிரும் - கற்கண்டின் சுவையையும், அமுதும் - தேவர் அமுதத்தின் சுவையையும், சுவை தீர்த்த மொழியை - தன் மொழியின் சுவையால் பயனற்றவையாய்ச் செய்த பிராட்டியை, பிரிந்தால் - பிரிந்திருப்பதனால், அழியானோ - உள்ளம் அழிந்து வருந்தாதிருப்பானோ? (வருந்துவனே ஆவன் என்றபடி).

மயில் முதலியன த்தம் பெட்டைகளுடன் கூடி மகிழ்ந்து அங்குத்திரிவன கண்ட இராமபிரானுக்கு அவை பிராட்டியின் பிரிவை நினைப்பூட்ட, அதனால் அப்பெருமான் மிகவும் வருந்துவனான் என்பதாம். இது ஸ்மிருதிமத அலங்காரம் என்னும் நினைப்பணியின் பாற்படும் கடகரி; வடசொற்றொடர். சுவை தீர்த்த மொழி, அன்மொழித் தொகையாய்ப் பிராட்டியைக் குறிப்பது. கரும்பு, தேன், கொழும்பாகு, அயிர், அமுது என்பனவற்றையும் குயில், குழல், யாழ் என்பனவற்றையும், சுவையாலும் ஒலியாலும் அடக்கிக் குறைவுறச் செய்த இனிய மொழியையுடையவள் பிராட்டி என்பதாம். குயில், கரும்பு, குழல், யாழ் என்பன, ஆகுபெயர்களாய்- அவற்றினிடமிருந்து உண்டாகும் ஒலியையும் சுவையையும் குறித்து நின்றன.

பி - ம். 1. முடன்றிரியும், ... மருவிவரும், முடன்றிரிவ; மருவவுடன்.
2. களிறும் பலவுந் திரிவ. 3. குயிலுங் கரும்புங்.
4. அயிலு; சுவை நீத்த. (29)

1059. முடிநாட் டியகோட் டுதயத்தின்
முற்ற வுற்றான் முதுகங்குல்
விடிநாட் கண்டுங் கிளிமிழற்று
மென்சொற் கேளா வீரற்காண்
டடிநாட் செந்தா மரையொதுங்கு
மன்ன மிலளால் யானடைத்த
கடிநாட் கமலத் தெனவவிழ்த்துக்
காட்டு வான்போற் கதிர்வெய்யோன்.

முடி நாட்டிய - கிரீடத்தைச் சூட்டிவைத்தது போன்று விளங்கிய, கோட்டு உதயத்தின் - சிகரத்தையுடைய உதயகிரியினிடத்து,

கதிர் வெய்யோன் - கிரணங்களையுடைய சூரியன், முது கங்குல் விடி நாள் கண்டும் - முதுமை வாய்ந்து நெடுநேரம் நீடித்திருந்த இரவு விடிந்து பகலானது பார்த்தும், கிளி மிழற்றும் மென் சொல் கேளா-கிளி போலக் கொஞ்சிப் பேசும் மென்மையான பிராட்டியின் சொல்லைக் கேட்காது வருந்தியிருந்த, வீரற்கு - பெரும் வீரனான இராமபிரானுக்கு, ஆண்டு - அப்பொழுது, அடிநாள் - முன்னம், செம்தாமரை ஒதுங்கும் அன்னம் - செந்தாமரை மலர்மீது தங்கிய அன்னப்பறவை போன்ற திருமகளான சீதாப்பிராட்டி, யான் அடைத்த-யான் நேற்றுமாலை மூடச்செய்த, கடிநாள் கமலத்து-மணம் பொருந்திய இந்தப் புதிய தாமரை மலர்களில், இலள் என - இப்பொழுது இல்லை (நீபார்த்துகொள்) என்று, அவிழ்த்து காட்டுவான் போல் - அம்மலர்களை மலரச்செய்து காட்டுகின்றவன் போல, முற்ற உற்றான் - முழுதும் பிரகாசமாகத் தோன்றினான். ஆல் : அசை.

இது, சூரியோதய வருணனை. தன் முன்னை இருப்பிடமான தாமரை மலருக்குச் சீதை போய்விட்டாளோ என்று இராமபிரான் சந்தேகம் கொள்ளலாம் என்றும், தான் தாமரை மலர்களை முன் இரவில் மூடியதால் அப்பிராட்டியை அம் மலர்களுள் ஒளித்து வைத்த தாக அவன் தன்மீது சினம் கொள்ளாமலிருக்கவும், அப்பெருமானே பார்த்துக் கொள்ளட்டும் என்றும், அம்மலர்களை நன்றாகத் திறந்து காட்டுவான் போலச் சூரியன் தோன்றினான் என்பதாம். சூரியன் தோன்றலும் தாமரை மலரும் இயல்பைக் கவி இவ்வாறு கூறியது, பிறிது நவிற்சியின் பால் வந்த தற்குறிப்பேற்ற அணி ஆகும். அன்னம் : உவமை ஆகுபெயர். பிராட்டியை இங்கு அன்னமாக உவமித்தது, தாமரைமலரில் அன்னப்புள் தங்கியிருக்கும் இயல்பு நோக்கியும் ஆம் ; தாமரையில் அன்னம் தங்குவது ; மூதுரை. 24 ; பால. நாட்டுப் : 13 ; நள. சுயம்வர : 37 ; நாச்சியார் திருமொழி. 7 : 7. அவிழ்த்து காட்டுதல், மூடி முடித்து வைத்திருந்ததை அவிழ்த்துத் திறந்து காட்டுதல். சில சுவடிகளில், இதுவும் அடுத்த செய்யுளும் முன்பின்னாக உள்ளன.

பி - ம். 1. கோடுதயத்து, கோட்டுதயவெற்பின் ; முற்றமுற்றான், முற்ற முரசமுதிர் கங்குல்.
2. மின்சொற்கேளா ; கேளான் விரைநாடன் ; வீரற்கியாண்(டு) வீரனுக்காண்(டு)
3. டடிநாட் பைம் பூமரை யொதுங்கு ; தாமரை யுறையும், மரை யிருக்கும் ; யிலளாளெனவடைத்த.
4. கமலத்திதழ் திறந்து, கமலத் தேனவிழ்த்துக், கமலத்தேன் வீழ்த்துக், கமலத்தாட்டிறந்து ; காட்டுவானிற். (30)

1060. பொழிலை நோக்கும் பொழிலுறையும்
புள்ளை நோக்கும் பூங்கொம்பின்
எழிலை நோக்கு மிளமயிலி
னியலை நோக்கு மியல்பாளுள்
குழலை நோக்கிக் கொங்கையிணைக்
குவட்டை நோக்கி யக்குவட்டின்
தொழிலை நோக்கித் தன்னுடைய
தோளை நோக்கி நாட்கழிப்பான்.

(இராமபிரான்), பூம்கொம்பின் எழிலை நோக்கும்-மலர்க்கொம்பின் அழகை ஒக்கும், இள மயிலின் இயலை நோக்கும் - இளமையான மயிலின் சாயலை ஒக்கும், இயல்பு ஆளுள் - தன்மையுடைய பிராட்டியின், குழலை நோக்கி - கூந்தலின் அழகை மனத்தால் எண்ணி, பொழிலை நோக்கும் - அவள் கூந்தலின அழகு ஒப்புமையுடைய அங்குள்ள சோலையைப் பார்ப்பான்; இணை கொங்கை குவட்டை நோக்கி - பிராட்டியின் இரு கொங்கைகளாகிய மலைச் சிகரங்களை மனத்தால் எண்ணி, பொழில் உறையும் - அங்குள்ள அச்சோலைகளில் தங்கியிருக்கும், புள்ளை நோக்கும் - (அவள் தனங்களுக்கு ஒப்பாகக் கூறத்தக்க) சக்கரவாகம், சகோரம் முதலிய பறவைகளை நோக்குவான்; அ குவட்டின் தொழிலை நோக்கி - அவள் தனங்களாகிய மலைச்சிகரங்களின் (தழுவப்பெறும்) தொழிலை எண்ணி, தன்னுடைய தோளை நோக்கி - (இப்பொழுது அவை ,தழுவப் பெருத) தன் தோள்களின் நிலையைப் பார்த்து வருந்தி, நாள் கழிப்பான் - அன்றைப் பொழுதைப் பயனின்றிப் போக்கினவனானன்.

நோக்குதல், இங்கு ஒத்தல் என்ற பொருளில் வந்தது. அன்றி, இது ஒன்றின் மேலொன்று சிறந்தது என்பதைத் தெரிவித்ததும் ஆம்; அவ்வாருகும்போது, இது, ஸாராலங்காரமென்னும் மேன் மேலுயர்வு நவிற்சி அணியின் பாற்படும். குழலை நோக்கிப் பொழிலை நோக்கியதும், கொங்கையிணைக் குவட்டை நோக்கிப் பொழிலுறையும் புள்ளை நோக்கியதும், அக் குவட்டின் தொழிலை நோக்கித் தன்னுடைய தோளை நோக்கியதும் நினைப்பணி. மகளிர் கொங்கைக்குச் சகோரம், சக்கரவாகம் என்னும் பறவைகளை உவமிப்பது கவிமரபு - 'வாளங்களுறைவகண்டு மங்கைதன் கொங்கை நோக்கும்' (223); 'மங்கைமார் தடமுலை யெனப்பொலிவன வாளம்' (கிட்கிந்தா. பம்பைப் ; 21.); கொங்கைக்குச் சகோரம்; உபமான சங்கிரகம். 'பூங்கொம்பின் எழிலை நோக்கித் தன் அழகைப்

பாக்கும் பிராட்டி குழலுக்குப் பொழிலும், தனத்திற்குச் சக்கரவாகமும் பார்ப்பான்' என்பது பழையவுரை.

பி-ம். 1. மயிலினியல்பை, மியலானூர்.
3. குழலை நோக்குங் கொங்கையெனக் குயட்டை நோக்குமக் குயட்டின்.
4. தொழிலை நோக்கும். (31)

இராம லக்ஷ்மணர் பிராட்டியைத் தேடி மேலும் செல்லுதல். 1061-3.

1061. அன்ன காலை யிளவீர
னடியின் வணங்கி நெடியோயப்
பொன்னை நாடா தீண்டிருத்தல்
பொருளோ வென்னப் புகழோனும்
சொன்ன வரக்க னிருக்குமிடந்
துருவியறிதுந் தொடர்ந் தென்ன
மின்னுஞ் சிலையார் மலைதொடர்ந்த
வெயில்வெங் கானம் போயினரால்.

அன்ன காலை - அப்பொழுது, இளவீரன் - வீரனுன தம்பி இலக்குவன், அடியின் வணங்கி - இராமபிரான் திருவடிகளில் வணங்கி, 'நெடியோய் - பெரியோனே ! அ பொன்னை நாடாது- அந்தப் பொன்போன்ற பிராட்டியைத் தேடிப் பார்க்காமல், ஈண்டு இருத்தல்- இங்கு நாம் (வருந்திக் கொண்டு) இருப்பது, பொருளோ - தகுதியான காரியமாகுமோ?' என்ன - என்று எடுத்துக் கூற, புகழோனும் - யாரும் புகழற்குரிய இராமபிரானும், சொன்ன அரக்கன் - சடாயு சொன்ன அந்த இராக்கதனுன இராவணன், இருக்கும் இடம் - இருக்குமிடத்தை, தொடர்ந்து - வரிசையாக, துருவி அறிதும் - ஊடுருவித் தேடிப்பார்ப்போம்,' என்ன-என்று கூற, மின்னும் சிலையார்-ஒளிவீசும் விற்களையுடைய அவ்விருவரும், மலை தொடர்ந்த- மலையை யடுத்ததான, வெயில் வெம் கானம் - வெயில் மிகுந்த கொடிய வனத்திலே, போயினர் - தேடிச் சென்றனர். ஆல்: ஈற்றசை.

பிராட்டிக்குப் பொன்னை உவமிப்பதும் 'பொன்னே' என்று கூறுவதும் இந்நூலில் ஆசிரியர் கொண்ட பெருவழக்காகும். பொருள் - காரியம் அல்லது அறம்; 'ஒரு பொருள் சொல்வதுடையேன்' (கலித், 8 : 7-8); 'துறத்தல் பொருளாமோ' (சீவக. 2960). பிராட்டியை இராவணன் எடுத்துச் சென்றதாகச் சடாயு கூறியது; 1004. மலை தொடர்ந்த வெயில் வெம் கானம் - மலைகளை அடுத்து

வெயில் மிகுந்து விளங்கும் பாலை நிலமும் ஆம்; இனி, இடை யிடையே மலைகள் தொடர்ந்துள்ள வெயில் வெங்கானம் என்னலும் ஆம். வான்மீகத்தின்படி, சடாயுவுயிர் நீத்தபின் இராம லக்ஷ்மணர்கள் கிரௌஞ்சாரணியம் என்ற காட்டைக் கடந்து, மிகக்கொடியதான மற்றொரு காட்டை அடைந்தபோது அயோமுகியைச் சந்தித்தனர் என்பதாகும். இக்கவியோடு சில பிரதிகளின்படி பிரிதுயர்ப்படலம் முற்றும்; அவற்றின்படி அடுத்த செய்யுள் முதல் உள்ளவை அயோ முகிப்படலம்.

பி - ம். 1. அன்ன காலையிள். 2. வென்னப் புங்கவனும்.
3 தொடர்ந்து மென; யறிந்து தொடர்ந்தென்ன.
4. சிலையர் மலைமரங்கள்; மேவுங்கானத் தேகினரால்; னிருக்கு நிலந். (32)

வேறு

1062. ஆசை சுமந்த நெடுங்கரி யன்னார்
பாசிலை துன்று வனம்பல பின்னாக்
காசறு குன்றினொ டாறு கடந்தார்
ஓசனை யொன்பதொ டொன்பது சென்றார்.

ஆசை சுமந்த - திக்குக்களைத் தாங்கி நிற்பனவான, நெடும் கரி அன்னார் - பெரிய யானைகளைப் போன்ற அவ்விராம லக்ஷ்மணர், பசுமை இலை துன்று - பசிய இலைகள் அடர்ந்த, வனம் பல பின்னா - பல காடுகள் தம் பின்னே கழிய, காசு அறு குன்றின் ஒடு - குற்ற மற்ற மலைகளோடு, ஆறு - நதிகளையும், கடந்தார் - தாண்டிச் சென்ற வர்களாய், ஒன்பது ஒடு ஒன்பது யோசனை சென்றார் - பதினெட்டு யோசனை தூரம் நடந்து சென்றனர்.

ஆசை - திசை; *28, 910.* ஆசை சுமந்த - பிராட்டியைக் காண வேண்டுமென்ற ஆசையைத் தாங்கிய, எனவும் பொருள் கொள்வர். நெடுங்கிரி அன்னார் எனும் பாடங்கொண்டு, நெடிய மலைகளைப் போன்ற இராம லக்ஷ்மணர் என்றும் கொள்வர்; நெடுங்கிரி - அஷ்டகுல பருவதங்கள்.

பி - ம். 1. நெருங்கிரியன்னார்.
2. வனம் பின்னாய், வனம்பலபோகிக்.
3. டாறு கடந்தே.
4. யோசனை யைம்பதோடைம்பது சென்றார். (33)

1063. மட்படி செய்த தவத்தினின் வந்த
கட்படி கோதையை நாடினர் காணுர்
உட்படி கோப முயிர்ப்பொடு பொங்கப்
புட்படி யுங்குளிர் வார்பொழில் புக்கார்.

மண் படி செய்த- அணுக்கள் செறிந்த இப்பூமி செய்த, தவத்தினில் வந்த - தவத்தின் பயனுல் அதனின்றும் தோன்றிய, கள் படி கோதையை - தேன் படிந்த மாலையையுடைய பிராட்டியை, நாடினர் காணுர் - அங்கெல்லாம் தேடிக் காணுதவர்களாய், உள் படி கோபம் - தம் மனத்தினுள்ளே பொருந்தியிருந்த சினம், உயிர்ப்பு ஒடு பொங்க-பெருமூச்சோடு வெளிப்பட, புள் படியும் - பறவைகள் தங்கியிருந்த, குளிர் வார் பொழில் புக்கார் - குளிர்ந்து விளங்கிய ஒரு நீண்ட சோலையிற் போய்ப் புகுந்தனர்.

மண்-அணு; ஒப்பு: 'மண்டிணிந்தநிலம்'; (புறம்; 2. உரை); சிலப்: *26: 42*; மணி: *11: 95*. படி-பூமி; பிராட்டி பூமிசெய்த தவப்பயனுய் அதனிடம் அவதரித்தவள்; *631*; பால; கார்முகப் : *17*. இனி மண் என்பதை இடவாகு பெயராகக் கொண்டு, இவ்வுலகில் உள்ள முனிவர் முதலான மேலோர் செய்த தவப்பயனுக, எனவும் பொருள் கொள்ளலாம்.

பி - ம். 1. தவத்தினர் வந்த. 2. கட்படு கோதையை.
3. உட்படுகோபம், உட்பொடி கோபம்.
4. புட்படியங்கார் பொழில்; குளிர்சோலை புகுந்தார். (*34*)

சூரியன் அஸ்தமித்தல்.

1064. ஆரியர் சிந்தை யலக்க ணறிந்தான்
நாரியை யெங்கணு நாடின ஞடிப்
பேருல கெங்கு முழன்றிருள் பின்னு
மேருவின் வெங்கதிர் மீள மறைந்தான்.

ஆரியர் சிந்தை அலக்கண் அறிந்தான் - போற்றற்குரிய இராமலக்ஷ்மணர்தம் மனத்துன்பத்தை அறிந்தவனுன, வெம் கதிர் - வெப்பமுள்ள கிரணங்களையுடைய சூரியன், பேர் உலகு எங்கும் உழன்று - பெரிய உலகமெங்கும் தானும் வருந்திச் சென்று, நாரியை எங்கணும் நாடினன் - பிராட்டியை எங்கும் தேடி, இருள் பின்னு - இருட்டு பின்னே (இவ் உலகில்) தொடர, மேருவின் மீள மறைந்தான் - மேருமலையில் திரும்பி மறைந்தான் (அதாவது அத்தமித்தான்.)

வெங்கதிரோன், அலக்கண் அறிந்து, பேருலகெங்கும் உழன்று நாரியை நாடி, மேருவின் மீள மறைந்தான் எனக்கூட்டி இயைக்க, மேருவின் மீள மறைந்தது. 'இது காறும் மேருவின் ஒரு புறமாயுள்ள உலகெங்கும் பார்த்தேன்; நாரியைக் காணவில்லை; ஆதலின் அம்மேருவின் மற்றொரு புறத்துலகங்களிலும் தேடிப் பார்ப்பேன்' என்று மறைந்தான் என்னலாம். மேருவைச் சுற்றிச் சந்திர சூரியர் வலம் வருவர் என்பதும், அச்சூரியன் இல்லாத புறத்து இருள் தொடரும் என்பதும் புராண வரலாறு; மேருவில் சூரியன் மறைவது; 1011.

பி-ம். 1. சூரியன் சிந்தை.
2. நாடினனுனிப்; நாடினர் நாடப், நாடினன் நாடிப், நாடுறு போதில்.
3. பேருலகெங்கும் விளங்கிய பின்னர்; முழன்றிருள் பின்பால் முயன்றனர் பின்னு, முழன்றிருள்மின்னு.
4. மேருவை; மீள்வன் மறைந்தான், வெங்கதிரோனும் விரைந்தான்.

(35)

எங்கும் இருள் சூழ்ந்தமை.

1065. அரண்டரு குஞ்செறி யஞ்சன புஞ்சம்
உரண்டன போலிரு ளெங்கணு முந்தத்
தெருண்டறி வில்லவர் சிந்தையின் முந்தி
இருண்டன மாதிர மெட்டு மிரண்டும்.

செறி அஞ்சன புஞ்சம் - அடர்ந்த மையின் தொகுதி, உரண்டன போல் - மாறுகொண்டு பகைத்தன போல, இருள் - இருளானது, அரண்டு- திகில்கொண்டு அஞ்சி, அருகும் எங்கணும் உந்த - பக்கங்களிலும் எல்லாவிடங்களிலும் ஊக்கிச் செலுத்த, தெருண்டு அறிவு இல்லவர் சிந்தையின் - தெளிவற்ற நல்லறிவு இல்லாத மூடர் மனம் போல, முந்தி - முன்னதாகவே, மாதிரம் எட்டும் இரண்டும் - திக்குக்கள் பத்தும், இருண்டன - இருட்டாயின.

புஞ்சம் - கொத்து அல்லது தொகுதி. உரண்டன - உரட்சியுள்ளன அதாவது உக்கிரமாயின என்பதாம்; முரண்டன என்றும் கொள்ளலாம்; வில்லி. குரு குலச் : 49. செறியஞ்சன புஞ்சம் உரண்டன போல் இருள் அரண்டு அருகும் எங்கணும் உந்த, தெருண்டு அறிவில்லவர் சிந்தையின், மாதிரம் எட்டுமிரண்டும் இருண்டன என இயைத்துப் பொருள் கொள்ளப் பெற்றது. மாதிரம் பத்தாவது; எட்டுத்திக்குக்களோடு மேல், கீழ் என்பன சேர்ந்தவை;

'ஆசைபத்திற்கு மின்றே பலியீவது பார்த்தியென்றான்'; (910). அறிவற்ற மூடர் மனத்திற்கு இருள் உவமை: இதுவும் அடுத்த செய்யுளும் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. அரண்டிசை மாதிடு மஞ்சன புஞ்ச, அருண்டகு குஞ்சரி யஞ்சினர் புஞ்சம், அரண்டிரு.
2. முரண்டன், முருண்டன பேரிருளெங்கணு முந்தித்.
3. சிந்தையின் மேலும், இருண்டது; மெட்டொடிரண்டும். (36)

இராம லக்ஷ்மணர் அங்கு ஒரு பளிக்கறையில் தங்குதல்.

1066. இளிக்கறை யிஞ்சொ லியைந்தன பூவை
கிளிக்கறை யும்பொழிற் கிஞ்சுக வேலி
ஒளிக்கறை மண்டில மொத்துள தங்கோர்
பளிக்கறை கண்டதில் வைகல் பயின்றார்.

இளிக்கு - இளி என்னும் இசைக்கு (ஸ்வரத்திற்கு), அறை - ஒப்புமையாகச் சொல்லத்தக்க, இன் சொல் இயைந்த - இனிய சொற்கள் பொருந்தினவான, பூவை - நாகணவாய்ப் புட்கள், கிளிக்கு அறையும் - கிளிகளுக்குப்பேச்சுச் சொல்லிக் கற்பிக்கும், பொழில் ஒருசோலையிடத்து, கிஞ்சுக வேலி - செம் முருக்க மரங்களை வேலியாகக் கொண்ட, அங்கு - அவ்விடத்தில், ஒளி - பிரகாசத்தில், கறை மண்டிலம் ஒத்துளது கறையாகிய இருளைத் தன்னிடமுடைய சந்திர மண்டிலம் போன்று விளங்கியதான, ஓர் பளிக்கு அறை கண்டு - ஒரு பளிங்குப் பாறையைப் பார்த்து, அதில்-அப்பாறையில், வைகல் பயின்றார் - (இராம லக்ஷ்மணர்); தங்குபவராயினர்.

இளி: ஏழு இசைகளுள் ஒன்று; மற்றவை, குரல், துத்தம், கைக்கிளை, உழை, விளரி, தாரம், என்பன; (பிங்). இன் சொற்களில் இயைந்தனவற்றைப் பூவை கிளிக்கு அறையும் எனவும் பொருள் கொள்ளலாம். கிஞ்சுகம் - செம்முருக்கமரம். ஒளி கறை மண்டிலம்: கறை என்ற குறிப்பால், சந்திரனைக் குறித்தது. பளிக்கறை - பளிங்குப்பாறை; ஸ்ப்டிக சிலாதலம்; 290; பால வரைக் காட்சிப்; 52; அயோத். சித்திரக்கூடப்: 15. (திருவெள்ளறை என்று ஒரு திருப்பதிக்குப் பெயருண்மையும் நோக்குக.)

பி-ம். 1. இளிக் கறையுஞ்சொல்; விளிக்கறையும் பொழின் மேவியபூவை.
2. கிளிக் கறையுங்குளிர், கிளிக்கறையுங்கிளர், பொழிற் கிஞ்சுக வேலி.
3. மண்டலம்; மொத்துள தாங்கோர். (37)

இராமபிரான் கட்டளைப்படி இலக்குவன் நீர் கொணர ஏகுதல்.

1067. அவ்விடை யெய்திய வண்ண லிராமன்
வெவ்விடை போலிள வீரனை வீர
இவ்விடை நாடினை நீர்கொணர் கென்றான்
தெவ்விடை வில்லவ னுந்தனி சென்றான்.

அ இடை எய்திய - அவ்விடத்தை யடைந்த, அண்ணல் இராமன் - பெருமைக்குரிய இராமபிரான், வெம் விடை போல் - சின மிக்க எருது போன்ற, இள வீரனை - வீரனான தம்பி இலக்குவனை (நோக்கி, 'வீர - வீரனே! இ இடை - இப்பொழுது, நீர் நாடினை கொணர்க - நீ பருகும் நீர் தேடிக்கொண்டு வருவாயாக;' என்றான் - என்று கூறினான்; தெவ் இடை வில்லவனும் - (அது கேட்டு), பகைவர்கள் பின்னிட்டோடும்படியான வில்லையுடைய அவ் விளையபெருமானும், தனி சென்றான் - அவ்விரவில் தனியே நீர் நாடிக் கொணரச் சென்றான்.

வீரனுக்கு விடை உவமை; அதன் வலியாலும், பெருமிதத் தோற்றத்தாலும், நடையாலும் என்க. இடைதல், பின்னிடல். இப் படலக்காட்சி கம்பநாட்டாழ்வார் தம் நூலுக்கெனப் படைத்துக் கொண்டதாகும். அயோமுகியின் வரலாறு அத்யாத்ம ராமாயணத்தில் இல்லை; வான்மீகத்தில் மிகச் சில சுலோகங்களில் அமைந்துள்ளது. இலக்குவனின் தனிச் சிறப்புக்களையும், உடன் பிறந்தரர் அன்பின் பெருமையையும் இப்படலம் எடுத்துக்காட்ட யாக்கப் பெற்றது என்னலாம்.

பி-ம். 3. தெவ்விட நாடினன், எவ்விடை நாடினை.
4. தெவ்விடை வல்லவனுந். (38)

அயோமுகி இலக்குவனைக் கண்டு காமுறுதல் 1068—71.

1068. எங்கணு நாடினன் நீரிடை காணான்
சிங்க மெனத்தமி யன்றிரி வானை
அங்க வனத்து ளயோமுகி யென்னும்
வெங்க ணரக்கி விரும்பினள் கண்டாள்.

எங்கணும் நாடினன் - எங்கும் தேடிச் சென்ற இளைய பெருமான், நீர் இடை காணான் - தண்ணீர் இருக்குமிடத்தைக் காணாதவனாய், சிங்கம் என தமியன் திரிவானை - ஒரு சிங்கம் போலத் தனியாகத் திரிந்த அவனை, அங்கு அ வனத்துள் - அப்பொழுது அந்த

வனத்தினுள்ளே, அயோமுகி என்னும் - அயோமுகி என்று சொல்லப்பெறும், வெம் கண் அரக்கி - கொடிய இராக்கதி, விரும்பினள் கண்டாள் - (அவ்விலக்குவனை) ஆசை கொண்டு நோக்கினாள்.

நன்னீர் என்றும் பாடங்கொள்ளலாம். சிங்கம் என; குடிக்க நீர் காணாது இரவில் காட்டில் அலைந்து திரியும் ஒரு சிங்கம் போல எனப்பொருள் கூறினாரும் உளர். இலக்குவனுக்குச் சிங்கம்; 982, 1078; தனியே இரவில் சஞ்சரிக்கும் வலிமையும், அஞ்சாமை முதலியன பற்றியும் இளைய பெருமானுக்கு இங்குச் சிங்கம் உவமையாகக் கூறப்பெற்றது. விரும்பினள் கண்டாள் என்றது; கண்டு அவன் மீது ஆசை மேற்கொண்டு அவனைப் பார்த்தாள் என்பதாம். வெங் கண் அரக்கி - பயங்கரமான கொடிய கண்களையுடைய அரக்கி என்னலும் ஒன்றும். அவ் வனத்து என்னற்பாலது, ஒற்று மிகாமல், இயல்பாயிற்று.

பி - ம். 1. நாடினனீரிடை; னீரிறைகாணான், 2. திரிவோனை.
3. எதோமுகியாமவ், எயோ முகியான, லயோமுகியென்றோர்.
4. விருப்பினள் கண்டாள். (39)

1069. நன்மதி யோர்புகல் மந்திர நாமச்
சொன்மதி யாவர விற்றொடர் கிற்பாள்
தன்மத னோடுதன் வெம்மை தணித்தாள்
மன்மத னுமிவ னென்னு மனத்தாள்.

நல் மதியோர் புகல் - நல்லறிவுடைய மேலோர் உச்சரித்துப் பிரயோகம் செய்யும், மந்திர நாமம்-மந்திரப்பெயர்கள் அடங்கிய, சொல்-சொற்களை, மதியா - மதித்து அடங்காத, அரவில் - இழிகுலப் பாம்பைப் போல, தொடர்கிற்பாள்-இளைய பெருமானைத் தொடர்ந்து பற்ற வந்த அயோமுகி, தன் மதன் ஓடு - தன் காம மதத்தோடு, தன் வெம்மை-தனது அக்காமத் தீமையையும், தணித்து ஆள் - தணியச் செய்து தன்னை ஆளக்கூடிய, மன்மதனும் இவன் - மன்மதனே இவன் ஆவான், என்னும் மனத்தாள் - என்ற எண்ணங்கொண்டவளானாள்.

நன் மதியோர் புகல் - நல்ல மந்திர சாஸ்திர அறிவிற் சிறந்த பெரியோர் உச்சரித்துப் பிரயோகிக்கும், மந்திர நாமச் சொல் - மந்திரமானதும் அச்சத்தைத் தருவதுமான சொற்கள் என்னலும் அமையும். உயர்குலப் பாம்புகள்தாம் மந்திரத்துக்கு அடங்கும்; இழிகுலப் பாம்புகள் அடங்கா என்பது. இதனால் அயோமுகிக்கு

மந்திரத்திற்குக் கட்டுப்படாத பாம்பு உவமை. மன்மதன் - காமக் கடவுள்; வடிவழகிற் சிறந்த ஆடவன் மன்மதன் ஆதலின், வடிவழகிற் சிறந்த இலக்குவனை மன்மதனாகக் கருதினாள் என்க. மதன் - மதம் என்பதன் போலி.

பி - ம். 1. புகன் மந்திர.
2. யாடரவிற் சுழலகிற்பாள்; சுடுதீயாள்; சுடுகிற்பாள், சுடர்கிற் பாள்.
3. ஈன்மகண்மேனி விளங்கு நலத்தாள்; தணிர்தாள்; தனித்தாள்.
4. மிவனென்ன மதித்தாள். (40)

1070. அழுந்திய சிந்தைய ளாகி யரக்கி
எழுந்துயர் காத லுழன்றெதிர் நின்றாள்
புழுங்குமென் னோய்கெடப் புல்லுவெ னன்றி
விழுங்கு வெனோவென விம்ம லுழன்றாள்.

அரக்கி - அந்த அயோமுகி என்னும் இராக்கதி, அழுந்திய சிந்தையள் ஆகி - இலக்குவனிடத்து ஆழ்ந்து பதிந்த மனத்தை யுடையவளாகி, எழுந்து உயர் காதலின் உழன்று - மேலே உயர்ந்து கிளம்பிய காதல் நோயால் வருந்தி, எதிர் நின்றாள் - அவ் விளைய பெருமான் எதிரில் வந்து நின்று, 'புழுங்கும் - என்னை வாட்டு கின்ற, என் நோய் கெட - எனக்குண்டான இக் காமநோய் தீரும் படி, புல்லுவென் - இவனைத் தழுவிக்கொள்வேன்; அன்றி - அது நடைபெறாவிட்டால், விழுங்குவெனோ - இவனை நான் தின்று விழுங்கி விடுவேனோ?' என - என்று, தனக்குள் எண்ணி, விம்மல் உழன்றாள் - துடித்து வருந்தினாள்.

விழுங்குவெனோ? ஆசை மிகுதியால் விழுங்கி விடுவேனோ என்று கூறியது; இனி மற்ற மானிடரை யான் எடுத்து விழுங்கு வது போல இவனை விழுங்கிவிட மாட்டேன் என்ற எதிர்மறை வினாவாகவும் கொள்ளலாம்.

பி - ம். 1. சிந்தையரக்கி மனத்தின், சிந்தை யளாக்கைகள் வீசி; ளாக்கையை வீசி; சிந்தையரக்கி யலக்கண், சிந்தையளாக வரக்கி,
2. காத லுழந்தெதிர், காதலின் யந்தெதிர், காதலுழந்த னளழன்றாள்.
3. புழுங்கிய மெய்யொடு புல்லுவனன்றி; மெய்யிடை புல்லுவ தன்றி, புழுங்குவனோ கொடு புல்லுவனென்கொல்.
4. விழுங்குவ தோவென, விழுங்குவனுமென, விழுங்குவனேயென. (41)

1071. இரந்தென னெய்திய போதியை யாது
கரந்தன னென்னிற் கொண்டுக டந்தென்
முரஞ்சினின் மேவி முயங்குவெ னென்று
விரைந்தெதிர் வந்தன டீயினும் வெய்யாள்.

தீயினும் வெய்யாள் - தீயைவிடக் கொடியவளான அவ் வயோமுகி, 'இரந்தனென் எய்தியபோது - யான் இவனை அடைந்து இரந்து கேட்டுக் கொள்ளும்போது, இயையாது - என் விருப்பத்திற்கு ஒப்புக்கொள்ளாமல், கரந்தனன் என்னில் - மறுத்து அருள் புரியான் ஆனால், நனி கொண்டு - என் வலியினால் இவனை நன்றாக எடுத்துக்கொண்டு, கடந்து - இவ்விடத்தைத் தாண்டிச் சென்று, என் முரஞ்சினில் மேவி - யானிருக்கும் குகையை யடைந்து, முயங்குவென் என்று - (இவனைத்) தழுவி மகிழ்வேன்' என்று முடிவு செய்துகொண்டு, விரைந்து எதிர் வந்தனள் - வேகமாக அவ் விலக்குவன் முன் வந்தாள்.

தீயினும் வெய்யாள்; பின் 1074 இல், 'ஊழி நெருப்பி னுருத்தனை யொப்பாள்' என்றமையும் நோக்குக. முரஞ்சு; முழைஞ்சு என்பதன் போலி; எதுகை நோக்கித் திரிந்தது; பாறை, எனறும் கொள்ளலாம்; பின் 1087 இல் 'என் முழை தன்னுளடைத்து' என வந்துள்ளமையும் நோக்குக. இச் செய்யுள் சந்தேகமென்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

இந்நூலில், பாலகாண்டத்தில் தெய்வீகக் காதலாகிய இராம பிரான், சீதாப்பிராட்டி இவ்விருவரின் காதலைக் கூறி, இக்காண்டத்தில், முன், இராக்கதக் காதலாகிய சூர்ப்பணகை இராமபிரான்பால் கொண்ட காதலையும், இப்படலத்தில் பைசாச இயல்பைக் கொண்ட அயோமுகி இலக்குவன்பாற் கொண்ட காதலையும் கூறினர். இவ் விரண்டினுள்ளும் அரக்க அரசர் குலத்தில் பிறந்த சூர்ப்பணகை இராமபிரானை இணங்கச்செய்தே அவனை யடைய முயன்றமையும், காட்டரக்கியான அயோமுகி இங்கு இலக்குவனை வலியச் சார முயன்றமையும் காண்க. இம் மூவிதமான காதல் தன்மைகளை நம்மனோர்க்கு எடுத்துரைக்க முன்வந்த புலவர் பெருமானின் திறம் நோக்கத்தக்கது.

பி - ம். 1. யெய்தியரக்கியை யாது, போதிசையாது, யெய்தியதற்கிசையாது
2. கரந்தன னேனனி கொண்டு, கரந்தனிலே நனிகொண்டு.
3. முயக்குவெனென்று; உரந்தனின்மேவியுமுய்கு வெனென்று.
4. விரைந்தென வந்தனள்.

அயோமுகியின் தோற்றம் 1072 – 77.

1072. உயிர்ப்பி னெருப்புமிழ் கின்றன வொன்ற
எயிற்றின் மலைக்குல மெண்ணில வுண்ணும்
வயிற்றள் வயக்கொடு மாசுணம் வீசும்
கயிற்றி னசைத்த முலைக்குழி கண்ணாள்.

உயிர்ப்பின் - மூச்சு விடுவதினாலே, நெருப்பு உமிழ்கின்ற - நெருப்பைக் கக்குகின்றனவான, எயிற்றின் மலை குலம் - (பெரிய) தந்தங்களையுடைய மலைபோன்ற யானைக் கூட்டத்தை, ஒன்ற - ஒருசேர, எண் இல உண்ணும் - எண்ணிக்கை யற்றனவாய் அருந்தும், வயிற்றள் - வயிற்றை யுடையவளும், வய கொடு மாசுணம் - வலிய கொடிய ஒரு மலைப் பாம்பை, வீசும் கயிற்றின் - சுற்றப் பெற்ற கயிறாகக் கொண்டு, அசைத்த - கட்டிய, முலை - தனங்களையும், குழி கண்ணாள் - குழிபோல் ஆழ்ந்த கண்களையும் உடையவளும்,

இது முதல் ஏழு பாடல்கள் குளகமாய்த் தொடர்ந்து, 1078-இல் உள்ள நின்றனள் என்ற வினை முடிவு கொள்ளும். எயிற்றின் என்பதற்கு, அயோமுகி தன் எயிற்றினால் என்று பொருள்கொண்டாரும் உண்டு ; ஆனால் எயிற்றின் மலைக்குலம் என்பதைக் குறிப்புப் பெயராகக் கொண்டு யானைக் கூட்டம் என்றே இங்குப் பொருள் கொள்ளப் பெற்றது ; இஃது இல் பொருளுவமை ; கைம்மலை, நடமலை, மதமலை எனப் பல பெயர்கள் யானைக்கு வழங்குவன போல என்க. அயோமுகி, பல யானைகளை ஒன்றாகச் சேர்த்து அருந்தும் வயிற்றையும், மலைப்பாம்பால் விசித்துக்கட்டப்பெற்ற தனங்களையும், குழிந்த கண்களையும் உடையவள் என்பதாம். வீசுதல் - விரிவாகக் கட்டுதலும், வரிந்து கட்டுதலும ஆம்.

பி - ம். 1. உமிழ்கின்றன வொத்த, போன்ற.

2. எயிற்றினிணக்குவை யெண்ணில தின்னும், னிணக்குல மெண்ணில தின்னும், மென்றின துண்ணும், மொன்றிய துன்றும்.

3. மறக்கடு மாசுணம், மயக்கொடு மாசுணம் வீசாக் ; மாசுணம் வீச.

4. கயிற்றினலைத்த, கயிற்றின் மறைத்த, கயிற்றி னிசைத்த. (43)

1073. பற்றிய கோளரி யாளி பணிக்கண்
தெற்றிய பாதச் சிலம்பு தரித்தாள்
இற்றுல கியாவையு மீறுறு மந்நாள்
முற்றிய ஞாயிறு போலு முகத்தாள்.

பற்றிய - தான் பிடித்துக் கொண்ட, கோளரி - சிங்கங்களையும், யாளி - யாளிகளையும், பணி கண் தெற்றிய - பாம்பினிடத்து மாறி மாறித் தொடுத்து அமைத்த, சிலம்பு தரித்தாள்-பாதத்தில் சிலம்பு என்னும் அணியாக அணிந்திருந்தவளும், யாவையும் - உலகு யாவையும், இற்று ஈறு உறும் அ நாள் - அழிந்து ஓர் முடிவை அடையும் அவ் ஊழிக் காலத்தில், முற்றிய - தன் வெம்மையில் முதிர்ச்சியடைந்த, ஞாயிறு போலும் - சூரியனை போன்று கொடுமையுடன் விளங்கும், முகத்தாள் - முகத்தையுடையவளும்,

கோளரி - கொடிய ஆண் சிங்கமும். ஆம். யாளி; 291, குறிப்பு. தெற்றுதல் - பின்னுதல் ; முடைதலும் ஆம் ; 'கடங்கலுழ் தடங்களிறுகை யொடுகை தெற்ற வடங்கொள, நுடங்குமிடையாள்' எனத் தாடகையைச் சிறப்பித்ததும் காண்க. (பால. தாடகைவதைப் ; 50). ஊழிக்காலத்தில் சூரியன் கொடிய நெருப்புப் போல உக்கிரமாகி, உலகைச் சுட்டு அழிக்கும் என்பது வரலாறு. ஒரு பெண்ணின் முகத்திற்குக் கதிரவனை (கொடுமையால்) உவமை கூறியது இங்குக் காண்க. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. யாளி பனைக்க.
2. தெற்றிய பற்றிச் சிலம்பு தெரிந்தாள் ; சிலம்பு திரிப்பாள், தெரிந்தாள்.
3. அற்றுலகி யாவையு மழிவுறு மந்நாள், இற்றுயி ரியாவையு மீறுறு மந்நாள் ; யாவையும வீயுறு, வீவுறு, மீவுறு.
4. முற்றுறு ஞாயிறு. (44)

1074. ஆழி வறக்க முகக்க வமைந்த
மூழை யெனப்பொலி மொய்பில வாயாள்
கூழை புறத்து விரிந்ததொர் கொட்பால்
ஊழி நெருப்பி னுருத்தனை யொப்பாள்.

ஆழி வறக்க - கடலும் வற்றிப் போகும்படி, முகக்க - மொள்ள, அமைந்த - ஏற்பட்ட, மூழை என பொலி - அகப்பை என்று சொல்லும் வண்ணம் விளங்கும், மொய் பில வாயாள் - வலிய பெரிய குகை

போன்ற வாயையுடையவளும், புறத்து கூழை விரிந்தது ஓர் கொட்பால் - பக்கங்களில் குட்டையான (அவள்) கூந்தல் விரிந்து விளங்கிய நிலையால், ஊழி நெருப்பின் உரு தனை - ஊழித் தீயின் உருவத்தை, ஒப்பாள் - ஒத்திருந்தவளும்,

மூழை - அகப்பை ; நாலடி. 321 ; கலிங்கத்துப். களம் பாடியது ; 96. கூழை - பெண்பால் தலைமயிரும் ஆம். 'கூழை - எரிகுஞ்சி' பழையவுரை. கொட்பால் - சுழன்று விளங்கும் தன்மையால் என்றும் பொருள் கொள்ளலாம்; 'கொட்புறு கலினப்பாய் மா' (பால. மிதிலைக் : 13). அயோமுகி வாய்க்கு மூழை ; அம் மூழை கொண்டு கடலை முகந்து அதனை வறளச் செய்வாள் என்பதாம். ஊழிக்கதிரவனை முன் செய்யுளிலும் ஊழி எரியை இங்கும் கூறியது காண்க.

பி - ம். 1. வறக்க வறுத்தவையுண்ணும் ;ஆழியிறக்க ; வமைத்த.
2. மோழையுடைப் பெருமொய்பில, யெனப்பயின் மெய்ப்பில.
3. விரித்த தோர் கொட்பால் ; விரிந்ததொல்.
4. ஊழி நெருப்பி னுழுங்கினை யொப்பாள் ; னுருத்திர னொப்பாள், னுருத்தனை யொப்பாள். (45)

1075. தடிதட வப்பல தலைதழு வித்தாள்
நெடிதடை யக்குடர் கெழுவு நிணத்தாள்
அடிதட வப்பட வரவ மசைக்கும்
கடிதட வத்தின ளுருமு கறிப்பாள்.

தடி தடவ - மாமிசங்களைத் தேடுவதற்காக, பல தலை தழுவி - பல இடங்களிலும் நாடித் துருவிச் சென்று, தாள் - அவளுடைய பாதங்கள், நெடிது அடைய - நெடுந்தூரம் செல்வதால், குடர் கெழுவு நிணத்தாள் - அவளது (இரைப்பையுடைய) வயிறு நிரப்பும் மாமிசத்தையுடையவளும், பட அரவம் அடி தடவ - படத்தோடு கூடிய பல பாம்புகள் தன் பாதங்கள் வரையும் தொங்கி அவற்றைத் தொடும்படி, அசைக்கும் - கட்டியுள்ள, கடிதடவத்தினள் - இடையையுடையவளும், உருமு கறிப்பாள் - இடிபோல் பற்களைக் கடித்து ஓசை செய்பவளும்,

தடி - மாமிசம், தசை : (பிங்); 445 ; பால. தாடகை வதைப் ; 75. அயோமுகி அவ்வனத்தில் பல இடங்களிலும் அலைந்து மாமிசங்களைத் தேடி அவற்றால் தன் வயிற்றை நிரப்புபவளும், பல பாம்புகளை அவற்றின் படங்கள் தன் பாதங்களிற் புரளுமாறு தொங்கத் தன் இடையைச் சுற்றிக் கட்டியுள்ளவளும், இடிபோல பற்களைக்

கடித்து ஒலி எழுப்புபவளும் ஆவள் என்பதாம். கடிதடம் என்பது கடிதடம் என அசரச்சாரியை பெற்றது; இதில், அத்து என்பது சாரியை எனவுங் கொள்ளலாம். கடிதடம் - அரை அல்லது நிதம் பமும் ஆம்; நூடா; நிவாநரம். உருமு கறிப்பாள் என்பதற்கு, இடியைப் பிடித்துக் கடித்துத் தின்பவள் என்றும் பொருள் கூறுவர்; இடி ஓர் உருவுடையபொருள் அன்றாதலின், அது சிறக்காது. 'தாள் ஆனை முதலான மிருகக் கால்களும்; நெடி தடவிக்குடர் - நெடிதான காடு போன்ற குடர்.' என்பன பழையவுரை. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. தடி தழுவிப் பல, தடி தடவத்தலைபல தழுவத்தாள்; தலை தடவித்தாள்; திசை பல தழுவத்தான், தடிதழுவத்தலை பல தழுவத்தாள்.

2. நெடி தடவிக்குடர் கெழுமு; கெழுமு நிணத்தூண்.

3. டடிதட விப்பட ரரவ; கடிதட விப்பட, படிதடவப் பலபாவ மிசைக்கும்; ணிடிதடவப் பட.

4. கடிதட முற்றவ. (46)

1076. இவையிறை யொப்பன வென்ன விழிப்பாள்
அவைகுளி ரக்கடி தழலு மெயிற்றாள்
குவைகுலை யக்கடல் குமுற வுரைப்பாள்
நவையில் புவித்திரு நால நடப்பாள்.

இவை இறை ஒப்பன என்ன - இவள் கண்கள் ஊழித் தீக்கு நிகர் என்று சொல்லும்படி, விழிப்பாள் - விழித்துப் பார்ப்பவளும், அவை குளிர - அக்கண்கள் குளிர்ந்து வெம்மைகுறைந்தனபோல் அடங்க, கடிது - கொடுமையாக, அழலும் எயிற்றாள் - நெருப் புப் போல ஒளி வீசும் பற்களையுடையவளும், குவை - மலை முதலிய மேட்டுப் பாகங்கள், குலைய - அதிர்ச்சியால் நிலைகெட்டு நடுக்கமுற, கடல் குமுற - கடல்கள் கொந்தளிக்க, உரைப்பாள் - பேசுபவளும், நவை இல் புவி திரு - குற்றமில்லாத பூமியாகிய தெய்வம் (அதாவது நிலமாது), நால-தொங்குதல் போலக் குழிந்து உட்செல்ல, நடப்பாள்- அழுந்த நடப்பவளும்,

இறை: ஊழித்தீ; சூரியனும் ஆம். குவை; குவிந்து உயர்ந் திருப்பது நோக்கி அவற்றுள் சிறப்பான மலை எனப்பட்டது. புவித் திரு; 'புவியெனுந் திருவும்' (அயோத். மந்திரப் : 38). புவி உட்குழிய நடத்தல்; 'நிலம்புக மிதித்தனள் நெளித்தகுழி வேலை'; (பால. தாடகை

வதைப் : 48); இதுபோல, உருவிலும் செயலிலும் இவ்வயோமுகிக்கும் தாடகைக்குமுள்ள ஒற்றுமைகளை, பால. தாடகை வதைப் படலத்துடன் ஒப்பிட்டுக் காண்க; 1079ஐயும் பார்க்க. 'இவையிறை-அத்தியாளி; என்பது பழையவுரை.

பி-ம். 1. எவையினு மொப்பின வெனின தழைப்பாள்; இவை பிறை யொப்பன யாளியோடி யாவும்; யொப்பன வெண்ணி விழிப்பாள்
2. சுவைபெருகத் தசைதருவு மெயிற்றாள்; அயையடையக்கடி.
3. குவை யலையக் கடல் குழறிய சொல்லாள், குமுறியசொல்லாள்; குமிழ மலைப்பாள், குமுர விசைப்பாள்,
4. புவித்தல மாழ நடப்பாள், மாள நடப்பாள். (47)

1077. நீளர வச்சரி தாழ்கை நிரைத்தாள்
ஆளர வப்புலி யார மணைத்தாள்
யாளியி னைப்பல தாலி யிசைத்தாள்
கோளரி யைக்கொடு தாழ்குழை யிட்டாள்.

நீள் அரவ சரி - நீண்ட பாம்புகளாகிய வளையல்களை, தாழ் கை நிரைத்தாள் - தொங்கிய தன் கைகளில் வரிசையாக அடுக்கி அணிந்திருந்தவளும், அரவம் ஆள் புலி ஆரம் - கர்ச்சனையைக்கொண்ட வலிய புலிகளைத் தொடுத்துக் கட்டிய மாலையாக, அணைத்தாள் - சேர்த்து அணிந்தவளும், பல ஆளியினை - பல யாளிகள் என்னும் கொடிய விலங்குகளை, தாலி இசைத்தாள் - தாலியாகத் தொடுத்துக் கட்டி யுள்ளவளும், கோளரியை கொடு - வலிய சிங்கங்களைக்கொண்டு, தாழ்குழை இட்டாள் - தொங்கும் காதணிகளாக அணிந்தவளுமான அயோமுகி.

1072 முதல் இச்செய்யுள்வரை ஒரு தொடராகி 1078இல் உள்ள 'நின்றனள்' என்பதனோடு பொருள் முடிவு கொள்ளும். சரி - கைவளை ; (பிங்); "படர் பொற்கைச் செறியக்குச் சரிபபத்தினரே" (தக்க. 100); 'சரியின் முன்கை நன்மாதர்' (தேவாரம்); ஆள் அரவம் - வலிய ஓசையும் ஆம். ஆள், வீரத்தன்மையும் ஆம். ஆளி - யாளி ; 1073. தாலி ; பாது காவலாகக் கழுத்தில் அணியும் ஒரு வகை அணி ; பால, நாட்டுப் ; 58 ; புறநா. 77 : 7' மணி. 3 : 138 ; 56. கோளரியைக் குழையாக இட்டமை ; தக்க 106, 370. இதுவும் முன் செய்யுளும் முன் பின்னாகச் சில சுவடிகளில் அமைந்துள்ளன. இச் செய்யுள், சந்தேகம் என்பது ஸ்ரீஐயரவர்கள் குறிப்பு. அயோமுகியின் காதலை முன் கூறி (1068-71), அவள் தோற்றத்தைப் பின் கூறினமை (1072-77) காண்க.

பி-ம். 1. நீளரவைச் சரி, தாழ்க நிரைத்தாள்.
4. ஆளி யெயிற்றுறுதாலி; தாளரவின்சரிதாலி; ஆளியெனப்பல தாலி; தாலி யமைத்தாள், தாலி யசைத்தாள். (48)

இலக்குவன் அயோமுகியைக் கண்டு வினவியது 1078-80.

**1078.** நின்றன ளாசையி னீர்கலு ழுங்கண்
குன்றி நிகர்ப்ப குளிர்ப்ப விழிப்பாள்
மின்றிரி கின்ற வெயிற்றின் விளக்கால்
கன்றிரு ளிற்றிரி கோளரி கண்டான்.

நீர் கலுழும் கண் - நீரைப் பொழியும் அவளுடைய கண்கள், குன்றி நிகர்ப்ப - குன்றி மணிகளைப்போல் விளங்க, குளிர்ப்ப - (இலக்குவனைக் கண்ட மகிழ்ச்சியால்) குளிர்ச்சியடைய, விழிப்பாள் - விழித்து நோக்குபவளான அவ் வயோமுகி, ஆசையின் நின்றனள் - அவன்பால் ஆசைகொண்டு அங்கு நின்றாள்; மின் திரிகின்ற - மின்னலைப் போல விட்டு விட்டு ஒளி வீசுகின்ற, எயிற்றின் விளக்கால் - அவளது பற்களில் உண்டான ஒளியாகிய வெளிச்சத்தினால், கன்று இருளில் திரி - முதிர்ந்த அவ்விருளில் அலைந்து சென்ற, கோளரி கண்டான் - சிங்கம் போன்ற அவ் விலக்குவன் அவளைப் பார்த்தான்.

கண்ணுக்குக் குன்றி; அவள் கண்கள் சிறுத்தும் உருண்டும் செந்நிறமும் கருமை விழியும் அமைந்தனவாய் இருந்தமையால் அடர்ந்த அவ் விருட்டில் கரிய உருவத்தினளான அவளை அறிய அவள் பற்களின் ஒளியே விளக்குக்களாயின என்பதாம். அயோமுகி குளிர்ப்ப விழித்தது; *1076* அவள் ஆசையின் நிற்றல்; *1081*. இலக்குவனுக்குக் கோளரி; *1068, 1080*. கோளரி: உவமையாகு பெயர். இங்கு, கோளரி கண்டான் என்பது அஃறிணை யெழுவாய் உயர்திணைப் பயனிலைகொண்டு முடிந்தது, திணை வழுவமைதி.

பி-ம். 1. நின்றனளாமயல்.
2. குளிர்ப்ப வொளிப்பாள், குளிர்ப்ப வொளிர்ப்பாள்.
3. மின்றெரிகின்ற.
4. குன்றிருளிற்றிரி, குன்றிருளிற்கிளர். (49)

**1079.** பண்டையி னாசி யிழந்து பதைக்கும்
திண்டிற லாளொடு தாடகைச் சீராள்
கண்டக ராய வரக்கர் கணத்தோர்
ஒண்டொடி யாமிவ ளென்ப துணர்ந்தான்.

பண்டையின் - முன், நாசி இழந்து - மூக்கு காது முதலியவற்றை (அறுபட்டதால்) இழந்து, பதைக்கும் - வருந்தின, திண் திறலாள் ஒடு - மிக்க வலிமையுடைய சூர்ப்பணகையோடு, தாடகை

சீராள் - தாடகை என்னும் அரக்கியர்க்கு ஒப்பானவளும், கண்டகர் ஆய அரக்கர் - முட்போன்ற கொடியோரான இராக்கதர், கணத்து - கூட்டத்தைச் சேர்ந்த, ஒண்டொடி ஆம் இவள் - ஒரு பெண்ணான வளும் ஆவள் இவள், என்பது உணர்ந்தான் - என்னும் உண்மையை இலக்குவன் அறிந்துகொண்டான்.

இலக்குவன், இவள் சூர்ப்பணகையையும் தாடகையையும் போன்ற ஓர் அரக்கி என்பது அறிந்தான் என்க. நாசி இழந்து பதைக்கும், என்பதைத் தாடகைக்கும் கூட்டலாம்; தாடகையும் இளையபெருமானால், நாசி முதலியன அறுப்புண்டவள் என்பது இந் நூலால் அறியப் பெறுவது காண்க; பால. தாடகைவதைப்: 72. இவ்வாறே இலக்குவன் இந்த அயோமுகியையும் மூக்கினைக் கொய்து தண்டித்தது, பின் 1107, 1120 ஆம் பாடல்களால் அறிய லாம். ஆனால் வான்மீகத்திலும், அத்யாமத்ம இராமாயணத்திலும் இலக்குவன் தாடகை மூக்கை அரிந்ததாக இல்லை. தாடகை சூர்ப்பணகை ஆகிய இருவரும் பெண்ணினத்திலே கொடுமையும் வலிமையும் வாய்ந்தவர்கள் என்பது பிரசித்தம்; இது 'சண்டாளி சூர்ப்பணகை தாடகையைப் போல்வடிவு கொண்டாளைப் பெண் டென்றுங் கொண்டாயே' என்று ஔவைப் பிராட்டியார் வாக்காக வழங்கும் ஒரு பழைய தனிப்பாடலானும் அறிக. பண்டை : ஐயீற் றுடை குற்றுகரம். திண்டிறல்: ஒருபொருட் பன்மொழி. அரக் கரைக் கண்டகர் என்று குறிப்பிடுவது; 734; சுந்தர. 318, 659, 1075; உயுத்த. அதிகாயன்வதைப்: 108. ஒண்டொடி: ஒளிபொருந்திய வளையல்களணிந்த பெண் என்ற பொருளில், அன்மொழித் தொகை யாய் அயோமுகியைக் குறிப்பது.

பி-ம். 1. பண்டையணுசி, பண்டையர் நாசி.
2. திண்டிறலாளொரு தாடகை போல்வாள்.
3. கண்டகர் வாழ்வி னரக்கர். ((50)

1080. பாவிய ராமிவர் பண்பிலர் நம்பால்
மேவிய காரணம் வேறிலை யென்பான்
மாவியல் கானின் வயங்கிருள் வந்தாய்
யாவள டியுரை செய்கடி தென்றான்.

'பண்பு இலர் - நற்குண மற்றவர்களும், பாவியர் ஆம் - பாவி களுமாகிய, இவர் - இவள் போன்ற அரக்கியர், பண்பு இலர் - நற்குணமற்ற தீயோராவர்; நம் பால் மேவிய காரணம் - நம்மிடம்

நாடி வந்த காரணம், வேறு இலை - (காம இச்சை கொண்டன்றி) வேறொன்றினால் இல்லை' என்பான் - என்று கருதிய இலக்குவன், 'மா இயல் கானில் - கொடிய விலங்குகள் திரியும் இக் காட்டில், வயங்கு இருள் வந்தாய் - விளங்கும் நல்லிருளில் நீ வந்துள்ளாய், யாவள் அடீ - நீ யாரடி, கடிது உரை செய் என்றான் - விரைவிற் கூறு' என்று சினந்து அவளை வினவினான்.

தன்பாற் கொண்ட காமத்தவள் என்பதை, வெளிப்படையாய்த் தான் கூறவும் விரும்பாத இலக்குவனது தூய நிலையை இடக்கரிடக்கலில், 'வேறில்லை' என்ற குறிப்பால் ஆசிரியர் உணரவைத்த சிறப்பு நோக்கத்தக்கதாம்; ஒப்பு. 'இந்து நுதலி யெழினோக்கி யேதோதான் சிந்தை கருதிச் சிலைவேடன்' (நள. கலித்தொடர்: 130). அடீ - பெண்பாலில் வரும் இழிவை யுணர்த்தும் விளி; ஆண்பால், அடா என்பது.

பி - ம். 1. பண்பிலர் நண்பால். 2. வேறினி.
4. எவளடீ. (51)

அயோமுகியின் வேண்டுகோள் 1081-2.

1081. பேசின னுக்கெதிர் பேசுற நாணாள்
ஊசலு ழந்தயர் சிந்தைய ளுந்தான்
நேசமில் வன்பின னாகிய நின்பால்
ஆசையின் வந்த வயோமுகி யென்றாள்.

ஊசல் உழந்து அயர் சிந்தையளும் - (தன் விருப்பம் முற்றுப் பெறுமோ, பெறாதோ என்று) ஊசலாடுவது போல அலைந்து வருந்தும் மனமுடையவளான அயோமுகியும், பேசினனுக்கு - தன்னை யாரென்று வினவிய இலக்குவனுக்கு, தான் எதிர் பேசுற நாணாள் - தான் மறுமொழி பேசுவதற்கு வெட்க மில்லாதவளாய், 'நேசம் இல் வன்பினன் ஆகிய - நட்புச் செய்துகொள்வதில் வலியவனான, நின்பால் - உன்னிடத்து, ஆசையின் - விருப்பத்தோடு, வந்த - வந்தடைந்த, அயோமுகி என்றாள் - அயோமுகி என்பவள் (யான்)' என்று மறுமொழி கூறினாள்.

ஒரு நிலையில் நில்லாது தத்தளிக்கும் மனநிலைக்கு ஊசலாடுதலை உவமிப்பது; 266 குறிப்பு. நேசம் இல்; சாரியை இன்றி வந்தது. 'இனி நேசமில் அன்பினளாகிய நின்பால்' என்னும் பாடங்கொண்டு, 'நின்பால் நேசமில் அன்பினளாகிய - நின்னிடம் நேசஞ் செய்துகொள்வதில் அன்புடையவளாகியவளாய், ஆசையின் வந்த

அயோமுகி' எனவும் பொருள் கொள்வர். வன்பு - உறுதி; இனி நேசம் இல் வன்பினன் ஆகிய பேசினனுக்கு, என்று கூட்டி, நேச மில்லாதவனும், மன வலிமை பெற்றவனும், பேசினவனுமான இலக்குவனுக்கு, என்று பொருள் கூறினும் ஆம்.

பி - ம். 1. பேசல எங்கவள் பெட்புறு நாஞல்.
2. ஊசலுழந்தழி, ஊசலுழன்றழி, உழந்தயர்; சிந்தையளுந்தான், சிந்தைய ளன்ஞள், சிந்தையள் பின்னும், சிந்தைய ளுய்ந்தாள், சிந்தை வருந்தா, சிந்தைய ளுன்ஞள், சிந்தைய ளாய்ந்தான்.
3. நேசமி லன்பினஞகிய, நேசமி லன்பின ளாகிய, நேசமிலன்பில ஞகிய, ஏசலி லன்புள தாயினி யன்பால். (52)

1082. பின்னு முரைப்பவள் பேரெழில் வீரா
முன்ன மொருத்தர் தொடாமுலே யோடுன்
பொன்னின் மணித்தட மார்பு புணர்ந்தென்
இன்னுயி ரைக்கடி தீகுதி யென்ருள்.

பின்னும் உரைப்பவள் - மேலும் பேசுகின்றவளாய் அவள், (இலக்குவனே நோக்கி), 'பேர் எழில் வீர! - மிக்க அழகமைந்த வீரனே! முன்னம் ஒருத்தர் தொடா முலேயோடு - இதற்கு முன் வேறு ஓர் ஆடவஞல் தொடப்பெருத என் கொங்கைகளோடு, உன் பொன்னின் - உன் பொன்னிறத்தோடு விளங்கும், மணி தட மார்பு புணர்ந்து - அழகிய பெருத்த மார்பு பொருந்துமாறு தழுவி, என் இன் உயிரை - எனது இனிய உயிரை, கடிது ஈகுதி - விரைவில் அளிப்பாயாக!' என்ருள் - என்று இரந்து கேட்டுக் கொண்டாள்.

முன்ன மொருத்தர் தொடாமுலே என்றது, தன் கன்னித் தன்மையை அறிவித்ததாகும். ஒப்பு. 258. பொன்னின் மணித்தட மார்பு என்றது, இலக்குவன் திருமேனி பொன்னிறமானமையால்: 1114, அயோத். நகர் நீங்கு: 126, 142. இன்னுயிரைக் கடிது ஈதி; அவன் தடமார்பு புணராவிடில் இப்பொழுது அவன்பாற்கொண்ட காம நோயால் உயிர் நீங்கும் நிலேயில் தான் இருப்பதைக் குறிப் பிட்டபடி. ஈதல் - இழிந்தோருக்கு உயர்ந்தோர் இரங்கி யளிப்பது; நன்னூல். பொதுவியல். 56.

பி - ம். 2. முன்னு மொருத்தர்.
3, மணித்திரு மார்பு, மணத்திரு மார்பு. (53)

இலக்குவன் மறுத்துரைத்தல்.

1083. ஆறிய சிந்தைய ளஃதுரை செய்யச்
சீறிய கோளரி கண்கள் சிவந்தான்
மாறில வார்கணை யிவ்வுரை வாயில்
கூறிடி னின்னுடல் கூறிடு மென்றான்.

ஆறிய சிந்தையள் - (இலக்குவனைத் தான் அடைந்து இன்புறலாம் என்ற எண்ணம் மேலிட்டுத் தன் மனக் கொதிப்பு ஒருவாறு அடங்கிய) அவ் வயோமுகி, அஃது உரை செய்ய - அவ் வார்த்தைகளைச் சொல்ல, சீறிய கோளரி - அதுகேட்டுச் சீற்றங்கொண்ட சிங்கம்போன்ற இலக்குவன், 'இ உரை வாயில் கூறிடின் - நீ (மீண்டும்) இவ்வார்த்தையை உன் வாயால் சொல்வாயேல், மாறு இல - தடை செய்ய முடியாதவையான, வார் கணை - நீண்ட என் அம்புகள், நின் உடல் கூறிடும் என்றான் - உன் உடலைத் துண்டு படுத்தும்' என்று சொன்னான்.

கண் சிவத்தல் : கோபத்தின் மெய்ப்பாடு. கோளரி கண்கள் சிவந்தான், கூறிடு மென்றான் : 1078 குறிப்பு நோக்குக. மாறில - ஒப்பில்லாதனவான என்னலும் அமையும். கூறிடில் கூறிடும்; என்பதிலுள்ள சொன்னயங் காண்க. இச் செய்யுள், சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. துரை செய்தாள் ; ளவ்வுரை செய்ய,
2, கண்கள் சிவந்தே.
3. மாறிலி வார்சிலை, மாறலில் வார்கணை, மாறிடு வாய்கணை.
4. கூறின நின்னுடல். (54)

அயோமுகி மீண்டும் வேண்டுதல் 1084-5

1084. மற்றவ னவ்வுரை செப்ப மனத்தால்
செற்றிலள் கைத்துணை சென்னியின் வைத்தாள்
கொற்றவ நீயெனை வந்துயிர் கொள்ளப்
பெற்றிடி னின்று பிறந்தனெ னென்றாள்.

மற்று - மேலும், அவன் அ உரை செப்ப - அந்த இலக்குவன் அச் சொற்களைக் கூற, மனத்தால் செற்றிலள் - மனத்தில் கோபங் கொள்ளாதவளாய், கை துணை சென்னியின் வைத்தாள் - (அவனை வணங்கிக் கேட்டுக் கொள்ளும் முறையில்) தன் இரு கைகளையும் தலையில் வைத்துக் குவித்துக் கொண்டவளாகி, 'கொற்றவ -

தலைவனே! நீ வந்து - நீ என்னை ஒரு பொருட்டாக நாடி வந்து, உயிர் கொள்ள பெற்றிடின் - என் உயிரை என்னிடமிருந்து நீ வாங்கிக்கொள்ள யான் பெறுவேனானால், இன்று பிறந்தனென் என்றாள் - இன்றே யான் பிறந்தவள் ஆவேன்' என்று நயந்து கூறினாள்.

செற்றம் - பகைமை. கை சென்னி வைத்தல் - கைகளைத் தலைமேல் வைத்துக் கூப்புதல்; இது வணக்கத்திற்கு அறிகுறி. உயிர் கொள்ளப் பெற்றிடின் இன்று பிறந்தனன் என்றது: உன் கை தீண்ட என் உயிர் நீங்கும் பேறு என் உடல் பெறுமாதலின் யான் பெண்ணாய்ப் பிறந்த பயன் எய்தினேன் என்பதாம். கடிமணத்திற்கு முன்பு மிதிலை நகர வீதியில் திருவுலாக் கோலத்தில் எழுந்தருளின இராமபிரானது திவ்விய சௌந்தரியத் திருமேனியைக் காணப்பெறுவதே பெண்மையின் பயன் என்று கருதியதாக அந்நகர மகளிர் கூறிய, 'கண்ணினாற் காதலென்னும் பொருளையே காண்கின் றோமிப், பெண்ணி னீர்மையினா லெய்தும் பெரும்பயன் பெறுது மென்பார்' (பால. உலாவியற்: 3) என்றதை ஒத்தது. இதன் பின் சில சுவடிகளில், அடியிற் காணும் பாடல் ஒன்று காணப் பெறுகின்றது. ('சில பாடல்க ளுண்டு' என்ற ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பும் காணப்படுகிறது; அவை ஏடுகளில் கிடைக்கவில்லை).

"என்றவள் கூறலும் மைந்தனு மின்னே
நன்றிய தாய நறும்புன னாடி
வென்றிகொள் வீரன் விடாயது தீர்ப்பான்
இன்றிவண் வந்தனெ னென்றுரை செய்தான்.

பி - ம். 1. மற்றவனஃதுரை செய்ய; செய்யமனத்தில், செய்யமனத்தாள்.
4. பெற்றனெ னென்னிற்; பிழைத்தனெ னென்றாள். (55)

1085. வெங்கத மில்லவள் பின்னரும் மேலோய்
இங்கு நறும்புன னாடுதி யென்னின்
அங்கை யினாலெனை யஞ்சலை யென்றால்
கங்கையி னீர்கொணர் வென்கடி தென்றாள்.

வெம் கதம் இல்லவள் - கொடிய பகைமை யில்லாத அவ்வயோமுகி, பின்னரும் - பிறகும், 'மேலோய் - உயர்குண முள்ளோனே! இங்கு நறும் புனல் நாடுதி என்னில் - இங்கு நீ இனிய நீரைத் தேடி அலைகின்றாய் என்றால், அம் கையினால் - உன் அழகிய கையால், எனை அஞ்சலை என்றால் - என்னை நீ அஞ்சி வருந்தாதே என்று ஆறுதல் அளித்தால், கங்கையின் நீர் - கங்கை நீரையே,

கடிது கொணர்வென் - விரைவில் கொண்டுவந்து தருவேன்' என்றாள் - என்று கூறினாள்.

கதம் - கோபம்; 21, 300, 494, 897. அஞ்சலை என்னல் - பயப்படாதே என்று கை கவித்து அபய மளித்தல். 'கங்கை நீர் கொணர்வென்' என்றது, அது தூய்மையும் தெய்வத் தன்மையு முடைய சிறப்பு நோக்கியும் அது தொலைதூரத்தில் உள்ளதாயினும், அதனை விரைவில் கொணரவல்ல தான் வலிமையுள்ளவள் என்பதோடு, அவன் விருப்பத்திற்கு எதையும் செய்யும் ஈடுபாடு உள்ளவள் என்பதையும் அறிவிக்கும் முறையில் கூறியது என்க.

பி - ம். 1. மின்னகு வேலோய். 2. நாடுதியேலுன்.
3. அஞ்சலை யென்னில். (56)

இலக்குவன் அயோமுகியை அச்சுறுத்தல்.

1086. சுமித்திரைச் சேயவள் சொற்றன சொல்லைக்
கமித்தில னின்னிரு காதொடு நாசி
துமிப்பதன் முன்னக லென்பது சொல்ல
இமைத்திலள் நின்றன ளின்ன நினைந்தாள்.

சுமித்திரை சேய் - சுமித்ராதேவியின் புதல்வனான அவ் விலக்குவன், சொற்றன சொல்லை - சொல்லிய அவள் வார்த்தைகளை, கமித்திலன் - பொறுத்து ஏற்றுக் கொள்ளாதவனாய், 'நின் இரு காதொடு நாசி - உன் இரு காதுகளோடு மூக்கையும், துமிப்பதன் முன் - யான அறுத்துப் போக்குவதின் முன்னே, அகல் என்பது சொல்ல - இவ்விடம் விட்டு நீங்கிச் செல்' என்னும் வார்த்தைகளைக் கூற, இமைத்திலள் நின்றனள் - கண்களின் இமைகள் கொட்டாமல் விழித்து நோக்கியவண்ணம் திகைத்து நின்றவளாய், இன்ன நினைந்தாள் - இவ்வாறு நினைப்பாளாயினாள். (நினைத்தவை அடுத்த செய்யுளால் விளங்கும்).

கமித்தல் - க்ஷமித்தல்; கமை - க்ஷமை என்ற வடசொல்லின் திரிபு; பால. மிதிலைக் காட்சிப் : 25; கார்முகப் : 12. தன்பாற் கொடுமையும், தகாத செயலையும் மேற்கொண்ட பெண்ணைக் கொல்லாது அவளது அழகைக் கெடுக்கும்படி அவளது மூக்கையும் செவிகளையும் அறுத்து விடுதலை மேற்கொண்டான் இலக்குவன் என்க; இதுவே முன் தாடகை, சூர்ப்பணகை திறத்தும் இவன் புரிந்த தண்டனையாகும்; 313; பால. தாடகை வதை: 72; இமைத்திலள் நின்

றமை, அவள் கண் கொட்டாது அசைவற்று நின்று என்ன செய்ய லாம் என்று கருதியதைக் குறிப்பிட்டபடி.

பி-ம். 1. சொற்றன சொல்ல; சொற்றனள் சொல்ல.
2. னுன்னிரு. 3. தமிப்பது முன்பகல்.
4. இமைப்பற நின்றனள்; ளின்னலுழந்தாள். (57)

அயோமுகி இலக்குவனை எடுத்தேகல். 1087—90.

1087. எடுத்தனெ னேகினெ னென்முழை தன்னுள்
அடைத்திவன் வெம்மை யடக்கிய பின்றை
உடற்படு மாலுட னேயுறு நன்மை
திடத்திது வேநல னென்றெதிர் சென்றாள்.

'எடுத்தனென் ஏகினென்-இவனை வலிதில் எடுத்துச் சென்று, என் முழை தன்னுள் அடைத்து - என் குகையுள் அடைத்து வைத்து, இவன் வெம்மை அடக்கிய பின்றை - இவனது கோபத் தாலாகிய கொதிப்பை அடக்கிய பிறகு, உடன்படும் ஆல் - (இவன்) எனக்கு உடன்படுவான்; ஆதலின், நன்மை - உடனே உறும் - இதனால் நான் கருதிய நன்மை எனக்கு உடனே வந்தடையும்; இதுவே திடத்து நலம் - உறுதியான இச்செயலே நன்மை தரத் தக்கதாகும்,' என்று - என்று தீர்மானித்து, எதிர்சென்றாள் - அவ் விலக்குவன் எதிரே அவள் செல்வாளானாள்.

என் முழை என்றது, அவள் வசிக்கும் இடமான மலைக்குகை; அரக்கியரும் அரக்கர்களும் கொடிய விலங்கு அல்லது பாம்புபோல, மலைக்குகைகளிலே மறைந்து வாழ்பவர் என்பது பெறப்படும்; அயோமுகி முழையில் வசிப்பது; *1071* ஆலும் அறியலாம். சூர்ப்ப ணகையும் ஒரு மலைக்குகையில் வசித்துவந்தாள் என்பது ஒருவாறு விளங்கும்; (*300*). உடன் படுதல், என்பது எதுகைநோக்கி வலித்தல் விகாரம் பெற்றது; உடல் படும் ஆல். என்றும் பிரித்தலும் ஆம். மால் உடனே உடன்படும் என்றும் இயைக்கலாம்; மால் - ஆசை.

பி-ம். 1. எடுத்தினி யேகுவ னென்னுழை தன்னில்; னேகினேனென்,
2. வன்மையடக்கிய, யடங்கிய பின்னை; வெம்மை யகற்றிய, மேன்மையடக்கிய.
3. உடற்படுமே லுடனேயுறு நன்மை, உடற்படுமேலுட லென வுறை தன்மை; லுடனே யுறைதன்மை;
4. திடத்திது தானலனென்றயல். (58)

1088. மோகனை யென்பது முந்தி முயன்றுள்
மாகநெ டுங்கிரி போலியை வவ்வா
ஏகின ளும்பரி னிந்துவொ டேகும்
மேகமெ னும்படி நொய்தினின் வெய்யாள்.

வெய்யாள் - கொடியவளான அந்த அயோமுகி, முந்தி - முன்னதாக விரைந்து, மோகனை என்பது முயன்றுள் - மயக்க உணர்ச்சியைத் தரும் ஒரு மாயைச் செயலை மேற்கொண்டு முயன்று, மாக நெடும் கிரி போலியை - ஆகாய மளாவிய ஒரு பெரிய மலைபோன்ற இலக்குவனை, வவ்வா - பற்றி எடுத்து, நொய்தினில் - விரைவில், உம்பரின் - ஆகாயத்தில், இந்து ஓடு ஏகும் மேகம் எனும்படி - சந்திரனோடு செல்லும் ஒரு மேகம் என்று சொல்லும்படி, ஏகினள் - செல்வாளானாள்.

மோகனை-மயக்கத்தை உண்டாக்கும் ஒரு மாயச் செயல்; அல்லது மந்திரமும் ஆம். இலக்குவனுக்கு நெடும்கிரி: அவன் அளக்கலாகத் தோற்றமும் துளக்கலா நிலைமையும் உடைமையால். மாக நெடுங்கிரி - ஆகாயமளாவிய மேருமலை என்னலும் ஏற்கும். உம்பரில் ஏகினள் என இயைத்து, வான்வழியே சென்றாள் என்னலும் அமையும். இந்துவோடு ஏகும் மேகம்; இந்து - இலக்குவனுக்கு ஒப்பு; ஒளியுடன் விளங்குபவனாதலின். மேகம்: அயோமுகிக்கு: அவள் கரிய நிறமுடைமையால். நொய்து - விரைவு; 'நொய்தாய வலாதவு நொய்தினவால்' (1092); 'நொய்தினுரைபொரு ளுண்டெனின் (சீவக. 1767.). இதுவும் அடுத்த செய்யுளும் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி-ம். 1. மோகமதென்பது மூண்டு முயன்றுள், போகலையென்பது முந்துபுகன்றுள்.
2. மாகலனுந்திறல் வீரனைவவ்வா; நெடுங்கரி; போலியள்வவ்வா, போலிவள் வவ்வா. (59)

1089. மந்தரம் வேலையின் வந்ததும் வானத்
திந்திர னூர்முகி லென்னலு மானாள்
வெந்திறல் வேல்கொடு சூரடும் வீரச்
சுந்தர னூர்தரு தோகையு மொத்தாள்.

(இலக்குவனைச் சுமந்து வான வழியே சென்ற அயோமுகி), மந்தரம் வேலையின் வந்ததும், - மந்தரகிரியைக் கொண்ட கடலும், வானத்து இந்திரன் ஊர் முகில் என்னலும் - வானில் இந்திரன் ஊர்ந்து செல்லும் மேகமும் என்று சொல்லும் வகையில், ஆனாள் -

ஆயினள்; (மேலும்), வெம்திறல் வேல் கொடு - கொடுமையும் வலிமை யுமுடைய வேலாயுதத்தைக் கொண்டு, அடும் - சூரபதுமன் என்னும் அசுரனைக் கொல்லும் வீர - வீரத்தன்மை மிக்க, சுந்தரன் - அழகிய குமாரக் கடவுள், ஊர்தரும்-ஏறிச் செலுத்தும், தோகையும் ஒத்தாள்-மயிலையும் போல்பவளானாள்.

அயோமுகிக்குக் கடல், மேகம், மயில் உவமைகள்; இலக்கு வனுக்கு, மந்தரம், இந்திரன், முருகன் உவமைகள்: இரண்டிடத்தும் பருமனும், நிறமும், வானிலுள்ளமையும் பொதுத் தன்மைகள். சுந்தரன் - முருகன்; குமாரன். முருகு - அழகு; குமாரன் - மன்மதன் நாணும் வடிவழகுடையவன். சூர் - சூரன் என்பதன் விகாரம். ஊர் தரு; தரு துணைவினை.

பி - ம். 1. இந்திரன் வேலையின் வந்தது மானத்.
2. இந்திரனூர்பிடி, இந்திரனூர்களிறு.
3. வெந்தொழில்வேல், வெந்திறலேகொடு. (60)

1090. ஆங்கவன் மார்பொடு கையி னடங்கிப்
பூங்கழல் வார்சிலை மீளி பொலிந்தான்
வீங்கிய வெஞ்சின வீழ்மத வெம்போர்
ஓங்க லுரிக்கு முருத்திர னொத்தான்.

ஆங்கு - அப்பொழுது, பூம் கழல் - அழகிய வீரக்கழல்களையும், வார் சிலை - நீண்ட வில்லையுமுடைய, மீளி - வீரனாகிய இலக்குவன், அவள் மார்பு ஒடு கையின் அடங்கி - அவ்வயோமுகியின் மார்பினோடு கைகளுக்குள் அடங்கி, பொலிந்தான் - விளங்கினவன், வீங்கிய - அதிகரித்த, வெம் சினம் - கொடிய கோபத்தோடு கூடியதும், வீழ்மதம் - பெருகி வீழ்ந்த மதப் பெருக்கையுடையதும், வெம் போர் - கொடிய போரிட்டதுமான, ஓங்கல் - யானையை, உரிக்கும் - உரிக்குந் தொழிலை உடைய, உருத்திரன் ஒத்தான் - உருத்திரனான சிவபிரானை ஒப்புடையவனானன்.

பூம் கழல் - பூப்போன்ற மென்மை பொருந்திய பாதமும் ஆம். கழல் இடவாகு பெயராய்ப் பாதங்களைக் குறிப்பது. ஓங்கல் - மலை; வீழ்மதம் என்ற அடைமொழிகளால், யானையைக் குறித்து நின்றது. இது, தாருகாவனத்து இருடியர் சிவபிரான் மீது சினந்து ஏவிய, ஒரு மாயயானை, சிவபிரான்மீது போரிட்டு எழ, அவர் அதனைப் பிளந்து தம்மீது போர்வையாகப் போர்த்துக் கொண்டு வெளிவந்த வீரச்செயலைக் குறிக்கும். இச்செயல் திருவழுவூர் என்ற தலத்

தில் நடந்ததாக அத் தலபுராணம் கூறும். உருத்திரன் - ருத்ரன் என்னும் வடமொழித்திரிபு.

பி - ம். 2. பூங்கணை வார்சிலை.
3. வெஞ்சின வெம்மத வெம்போர். (61)

இராமபிரான் இலக்குவன் வராமைகண்டு வருந்தியது. 1091—1102.

1091. இப்படி யன்னவ ளேகின ளிப்பால்
அப்பிடை தேடி நடந்த வெனுவித்
துப்புடை மால்வரை தோன்றில னென்று
வெப்புடை மெய்யொடு வீரன் மெலிந்தான்.

அன்னவள் இ படி ஏகினள் - (ஒருபுறம்) இவ்வாறு அந்த அயோமுகி இலக்குவனை எடுத்துச் செல்லலானாள்; இ பால் - இப் புறத்தில், வெப்பு உடை மெய் உடை வீரன் - தாபங்கொண்ட திருமேனியையுடைய இராமபிரான், அப்பு இடை தேடி - நீர் இருக் கும் இடத்தைத் தேடிக்கொண்டு, நடந்த - இவ்விடம் விட்டுநடந்து சென்ற, என் ஆவி - என் உயிர் போன்றவனும், துப்பு உடை மால் வரை - வலிமையுடைய பெரிய மலை போன்றவனுமான இலக்குவன், தோன்றிலன் என்று - இன்னும் காணப்படவில்லையே என்று, எண்ணி, மெலிந்தான் - மனம் வருந்தினான்.

இலக்குவனை இராமபிரான் தன் உயிராக மதிப்பது; 1095, 1097, 1099; அயோத். நகர் நீங்கு: 238. இலக்குவனுக்கு மால் வரை என்றது, 1088. துப்பு - மிடுக்கும் ஆம். இச்செய்யுள் சுந்தர. 996. ஐ நினைப்பூட்டுவது காண்க. 1092 முதல் 1102 முடிய இராமபிரான் இலக்குவன் வராமையைக் குறித்து வருந்தியவை.

பி - ம். 1. இப்படியின்னயவன்; இப்படியேகின னன்னய, இப்படியன்ன ளேகினள்.
2. அப்பிடைதேட; அப்படிதேய நடந்தனனுமத்; நடந்தயனுவித்.
3. தப்பிடை மால்வரை; தோன்றல னென்னு.
4. வெப்பிடை, வெப்படை; மேனியின் வீரம் விளம்பும்; வீரன் விரைந்தான். (62)

வேறு

1092. வெய்தாகிய கானிடை மேவருநீர்
ஐதாதலி னேவய லொன்றுளதோ
நொய்தாய்வர வேகமு நொய்திலனால்
எய்தாதொழி யானிது வென்னைகொலாம்.

'வெய்து ஆகிய கான் இடை - கொடிய இக் காட்டினிடையே, மேவு அரு நீர்-பொருந்திய அரிய நன்னீர், ஐது ஆதலின் ஓ-(கிடைப்பது) அருமையானதாலோ? அயல் ஒன்று உளதோ - வேறு நேர்ந்த இடுக்கண் ஏதேனும் ஒன்று உண்டோ? நொய்தாய் வர - விரைவில் வர, வேகமும் நொய்து இலன் ஆல் - வேகத்தும் குறைந்தவன் அல்லன்; எய்தார்து ஒழியான் - இங்கு வராமல் இருக்க மாட்டானே! இது என்னை கொல் ஆம் - இது என்ன காரணமாகும்?

ஐது - அரியது; பெருங். *1. 35 : 209*; கலி. *52 : 16*. இனி, ஐது என்பதற்கு ஐயப்பாடுடையது என்னும் பொருளும் கொள்ளலாம். 'அனந்தன் பாலுங்கருடன் பாலும் ஐது நொய்தாக'; இது திருவாய்மொழி; நொய்து - விரைவு, குறைவு அல்லது எளிமை என்னும் இருபொருள்கள் இங்கு வந்துள்ளன. "நொய்தாய் வரவேகமும் நொய்திலன்' என்றது, ஒருவராலே அவனுக்கு, எளிமை வந்தது என்று எண்ணுகிறேமென்றால், அவன் வேகத்தில் குறைந்தவனல்லன்; ஆகையால் அப்படியும் எளிமைப்பட்டவனல்லன்" என்பது பழையவுரை. இது வென்னைகொலாம்; ஒப்பு: 'உற்றதையின்ன தென்றுணர கிற்றிலேன்' *945*.

பி - ம். 1. கானிடையே விழுநீர்; மேல் தருநீர்,
2. வயலூறுளதோ, வயலூறுளவோ.
3. நொய்தாவரு வேகமும், நொய்தாயல தாயவு, நொய்தாயவலாகவு; நொய்தின்வரல்.
4. னியல்பென்னை, னிடரென்னை. *(63)*

**1093.** நீர்கொண்டனை யிவ்வழி நேடினைபோய்
சார்கென்றனெ னித்துணைச் சார்கிலனல்
வார்கொண்டணி கொங்கையை வவ்வினர்பால்
போர்கொண்டன னோபொரு ளுண்டிதென.

'இ வழி நேடினை போய் - இவ்வழியே நீ தேடிச் சென்று, நீர் கொண்டனை - நீரைக் கொண்டவனாகி, சார்க என்றனென் - வந்து சேர் என்று கூறி யனுப்பினேன்; இ துணை சார்கிலன் ஆல் - இந்நேரம்வரை அவன் வரவில்லை; ஆதலின், வார் கொண்டு அணி - கச்சைக் கொண்டு அணியப்பெற்ற, கொங்கையை - கொங்கைகளையுடைய சீதையை, வவ்வினர் பால் - அபகரித்த இராவணன் முதலிய அரக்கர்களிடத்து, போர் கொண்டனனோ - போர் மேற்கொண்டுள்ளானோ? இது பொருள் உண்டு - இவ்வாறு அவன் தாமதித்ததற்கு (ஏதோ) காரியம் உள்ளதாகும்,' என-என்று கருதி,

இது 1103 - வரையுள்ள பாடல்களோடு இயைந்து ஒரு தொடராகி முடிவுபெறும். வார் கொண்டணி கொங்கை; இது அடையடுத்த சினையாகுபெயராய்ப் பிராட்டியைக் குறித்து நின்றது. இது பொருள் உண்டு - இவ்வாறு கருதுவதில் நேர்மையுண்டு, என்றும் கொள்ளலாம். "நீர் கொண்டணை எவ்வழி நேடினை போய்ச் சார்க என்றது - எங்காகிலும் போய் நீர் கொண்டு இவ்விடத்திலே வருவாய் என்று நாம் உரைக்கப போன இலக்குவன், என்று அறிக; பொருளுண்டு இது எனு என்றது, இளைய பெருமான் இத்துணைப் போதும் வாராததற்கு இதுவே பொருள் எனத் தெளிந்தார்; என என்ற, எச்சம் வருவித்துக் கொள்க. பிராட்டியைக் கொண்டுபோன பேரைக் கண்டு, போர் செய்கிறுன் ஆகவேண்டும் என்றும் எண்ணினுர் என அறிக" என்பன பழையவுரை.

பி - ம். 1. நீர் கொண்டணை, நீர் கண்டவ னிவ்வழி, நீருண்டெனிவிவ்வழி.
2. சார்கின்றிலன்; சார்கொண்டெனவித்துணை; சார்கின்றலனத் துணை. 3. வார் கொண்டனை.
4. போர் கண்டனனே. (64)

1094. அஞ்சொற்கிளி யன்ன வணங்கினைமுன்
வஞ்சித்த விராவணன் வவ்வினனே
நஞ்சிற்கொடி யான்நட லைத்தொழிலால்
துஞ்சுற்றன னேவிதி யின்றுணிவால்.

'கிளி அன்ன அம் சொல் அணங்கினை - கிளியைப்போன்ற அழகிய சொற்களைப் பேசும் அழகிய சீதையை, முன் வஞ்சித்த இராவணன் - முன் அபகரித்துச் சென்ற இராவணன், வவ்வினனே - இவனையும் அபகரித்துச் சென்றுனே? (அல்லது), விதியின் துணிவால் - எம் ஊழ்வினையின் வலிமையால், நஞ்சில் கொடியான் - விடத்தினுங் கொடியவனுன அவ்வரக்கனது, நடலை தொழிலால் - ஏமாற்றும் வஞ்சனைச் செயலால், துஞ்சுற்றனனே - இறந்துபோய் விட்டானே?

அணங்கு - அழகு (பிங்); 'அணங்கினுக் கணங்கனுளே' (876). துணிவு - தீர்மானம்; முடிவு என்றலும் ஒன்றும். துஞ்சுதல் - தூங்குதல்; இஃது இறத்தல் என்னும் பொருளைக் குறிக்கும் மங்கல வழக்கு.

பி - ம். 3. நஞ்சிற் கொடியார்; கொடியார்க ணடைத்தொழிலாற்; ணயைத் தொழிலாற். (65)

1095. வரிவிற்கை யெனுருயிர் வந்திலனால்
தருசொற்கரு தேனொரு தையலையான்
பிரிவித்தனெ னென்பதொர் பீழைபெருத்
தெரிவித்திட வாவி யிழந்தனனே.

'வரி வில் கை - கட்டமைந்த வில்லேந்திய கைகளையுடைய, என் ஆர் உயிர் - என் அருமை உயிர்போன்ற இலக்குவன், வந்து இலன் ஆல் - வந்தானில்லை; யான் தரு சொல் கருதேன் - நான் அவன் சமயோசிதமாய்க் கூறிய வார்த்தைகளை மதிக்காதவனாய், ஒரு தையலை - ஒப்பற்ற சீதையை, பிரிவித்தனென் - பிரிந்து போகும் செயலைப் புரிந்தேன், என்பது ஓர் - என்றதான ஒரு, பீழை - துன்பம், பெருத்து எரிவித்திட - பெரிதாய்த் தன்னை எரித்திட, ஆவி - தன் உயிரை, இழந்தனனே - விட்டு நீங்கினனே ?

இராமபிரான் இலக்குவனை 'என் ஆருயிர்' என்பது; 1091 குறிப்பு. பலமுறை தடுத்தும் அதனை ஏற்காது மானை நாடிச்சென்ற தன் குற்றத்தைக் கருதியும், அதனால் பிராட்டியை இழக்கும் நிலை ஏற்பட்டதை நினைத்தும், துயர் தாங்காது மனம் எரிந்து பெரிதும் வருந்தி, உயிர் விட்டானே இலக்குவன்? என்று இராமபிரான் தனக்குற்றதை நினைந்து வருந்தினன் என்க. இதன்பின் ஒரு சுவடியில், 'தள்ளாவினையேன்' என்று தொடங்கும் 1097 - ஆம் பாடல் உள்ளது.

பி - ம். 1. வந்திலதால். 2. தருசொற் றருகேன்; தருசொற் கருதாதொரு.
3. பீழை பொரு, பீழை பொரு, பீழை பெரும், பீழை பெரு.
4. தனதாவி யிழந்தனனே; தெரியிற்புக வாவி யிறந்தனனே; தெரிவுற்றிட. (66)

1096. உண்டாகிய காரிரு ளூடொருவேன்
கண்டானவன் வேறொரு கண்ணிலனால்
புண்டானுறு நெஞ்சு புழுங்குறுவேன்
எண்டானில னெங்ஙன நாடுகெனே.

'உண்டு ஆகிய - ஏற்பட்டதான, கார் இருள் ஊடு - கரிய இவ்விருளின் இடையே, ஒருவேன் கண் தான் அவன் - தமியேனான எனக்கு அவனே கண்ணாவான்; வேறு ஒரு கண் இலென் ஆல் - நான் அவனை யன்றி வேறு ஒரு கண்ணை யுடையேன் அல்லேன்; ஆதலால், புண் தான் உறு - முன்னமே புண்பட்டுள்ள, நெஞ்சு புழுங்கு உறுவேன் - மனம் மேலும் வெந்து வருந்தும் நான், எண் தான் இலன் - (இனி யான் என் செய்வதென்று) எண்ணமும்

அற்றவனானேன்; எங்ஙனம் நாடுகெனோ - (இந்நிலையில்) நான் அவனை எங்கே சென்று தேடுவேனோ அறியேன்!

உண்டாகிய காரிருள் - தோன்றிய பெருந்துன்பங்களும் ஆம். ஒருவேன் - ஒதுக்கப்பட்ட யான் என்றலும் அமையும். இலக்குவனைக் கண் என்றது, தனக்குப் புலப்படாத நிகழ்ச்சிகளைத் தன் அறிவாகிய கண்ணால் முன்னதாக ஊகித்து அறிந்து இளையவன் அதுகாறும் கூறிவந்தமை கருதியும், இனி அவன் இலனாகில் தான் கண் அற்றவனே ஆவன் என்றும், வருந்திக் கூறியதாம்; 'கண்ணிற் சிறந்த உறுப்பில்லை' ஆதலின் என்க; சிந்தின நயனம், என்று இராமபிரான் இலக்குவனைக் கூறுவதும் காண்க; 1112. புண் தானுறு நெஞ்சு - முன் பிராட்டி பிரிவால் புண்ணுற்ற மனம். புழுங் குறுதல - இளையவன் பிரிவால் மேலும் அம் மனப்புண் வெந்து கொதித்தது என்பதாம். 'கண்ணும் இல்லை அறிவும் இல்லை; (எண் - அறிவு); ஆதலின் நான் இனி எப்படி யுன்னைத் தேடுவென்' என்று வருந்தினான் இராமபிரான் என்க.

பி - ம். 1. ரிருளோ டொருவென். 2. கண்டானயல்; கண்ணிலையாற்.
3. புழுங்குறவே, புலர்ந்துடையேன்.
4. எண்டானினி யெங்ஙன; எணடானியல்; எணடாசையி னெவ்விடை தேடுகெனோ. (67)

1097. தள்ளாவினை யேன்றனி யாருயிராய்
உள்ளாயொரு நீயு மொளித்தனையோ
பிள்ளாய்பெரி யாய்பிழை செய்தனையால்
கொள்ளதுல குன்னையி தோகொடிதே.

'தள்ளா வினையேன் - தடுக்க முடியாத கொடிய ஊழ்வினையை யுடைய எனது, தனி ஆர் உயிராய் உள்ளாய் - ஒப்பற்ற அரிய உயிராக இருப்பவனே! ஒரு நீயும் ஒளித்தனையோ - அப்படிப்பட்ட ஒரே துணையாகிய நீயும் என்னை விட்டு மறைந்து போய்விட்டாயோ? பிள்ளாய் - பருவத்தால் இளையோனே! பெரியோய் - அறிவாற் பெரியோனே! பிழை செய்தனை ஆல் - இதனால், நீ பெரும் பிழையே செய்துவிட்டாய்; ஆதலின், உலகு உன்னை கொள்ளாது - இவ்வுலகில் உள்ள மேலோர் உன்னை நன்று என்று ஏற்றுக் கொள்ளமாட்டார். (உன் இச்செயலைத் தவறு என்று மறுப்பர் என்றபடி); இது ஓ கொடிது - இந்த உன் செயல் மிகவும் கொடியது; ஏ, ஈற்றசை.

பிள்ளாய் பெரியோய் : இது முரண்தொடை. பெரியாய் பிழை செய்தனை என்றது; பெருந்தன்மை வாய்ந்த நீயும் பிழை செய்து விட்டாயே என்றதும் ஆம்; இது முரணணி. உலகு : இடவாகு பெயராய் உலகில் வாழும் மேலோரைக் குறிப்பது; 'உலக மென்பது உயர்ந்தோர் மாட்டே' என்றாராதலின். கொள்ளா துலகு; ஒப்பு. 'நள்ளாதிந்த நானிலம்'; (அயோத். கைகேசி சூழ்வினைப் : 26). இதுவோ கொடிது - நீ செய்த இச்செயலோ கொடியது என்ன லும் ஆம். ஒரு சுவடியில் இதுவும் அடுத்த செய்யுளும் முன் ன்பின்னாக உள்ளன.

பி-ம். 1. தனியேன்றனி யாருயிராய். 4. கொள்ளா வுலகுன்னை. (68)

1098. பேராவிடர் வந்தன பேர்க்கவலாய்
தீராவிடர் தந்தனை தெவ்வர்தொழும்
வீராவெனை யெங்ஙன் வெறுத்தனையோ
வாராய்புற மித்துணை வைகுதியோ.

'வந்தன - நமக்கு ஏற்பட்டனவான, பேரா இடர் - நீக்க முடியாத துன்பங்களை, பேர்க்க - ஒழித்தகற்ற, வலாய் - வல்லவனே! தீரா இடர் தந்தனை - (எனக்குற்ற துன்பத்தை அறிந்தும் நீ இப்போது என்னைப் பிரிந்தமையால்) நீங்காத பெருந் துன்பத்தை எனக்குக் கொடுத்துவிட்டாய்! தெவ்வர் தொழும் வீரா - பகைவர்கள் வணங்கத்தக்க பெரும் வீரனே! எனை எங்ஙன் வெறுத்தனையோ - என்னை நீ எவ்வாறு வெறுத்துவிட்டாயோ? (அது உன்னால் முடியாதே என்றபடி); இதுணை புறம் வைகுதியோ - இவ்வளவு நேரம் வெளியே தங்கியிருப்பாயோ? வாராய் - என் அருகே வருவாயாக!

பேராவிடர் பேர்தல்; முரண்தொடை. தெவ்வர் தொழும் வீரா என்றமையால், உனக்குப் பகைவரால் துன்பம் ஏற்பட இடமில்லை என்ற உறுதியைக் குறிப்பிட்டபடி. எங்ஙன் வெறுத்தனை என்றதால்; 'இஃது உனக்கு இயல்பனறே! இந்தத் துணிவு எப்படி உனக்கு இப்பொழுது ஏற்பட்டது?' என்று கூறினான். புறம் வாராய் - என் பக்கம் வராமலிருக்கிறாயே! என்றும் பொருள் கொள்ளலாம். வலாய் : என்பது வல்லாய் என்பதன் இடைக்குறை. எங்ஙன் : எங்ஙனம் என்பதன் கடைக்குறை.

பி-ம். 1. வந்தன பேரவலாய், வந்தன போக்கவலாய்.
2. தேவர் தொழும். 3. வாராவினை யெங்ஙன்.
4. வாராய் கடிதித்தனை வைகுதியோ; புறமித்தனி வைகுதியோ. (69)

1099. என்னைத்தரு மெந்தையை யென்னையரைப்
பொன்னைப்பொரு கின்ற பொலன்குழையாள்
தன்னைப்பிரி வேனுள னாவதுதான்
உன்னைப்பிரி யாத வுயிர்ப்பலவோ.

'என்னை தரும் எந்தையை - என்னைப் பெற்ற என் தந்தையையும், என்னையரை - என் தாயர்களையும், பொன்னை பொருகின்ற - திருமகளுக்கு ஒப்பான சிறப்புடைய, பொலன் குழையாள் தன்னை-பொற்குழை அணிந்த சீதையையும், பிரிவேன்-பிரிந்தவனான யான், ஆவது தான் - உயிருடன் இருப்பது தான், உயிர்ப்பு உன்னை பிரியாத அலவோ - என் உயிராகிய உன்னை விட்டு நீங்காத உடன் பிறப்பாகப் பெற்ற நிலையினால் அல்லவோ?

எந்தை, என்னை என்பன, என் தந்தை, என் அன்னை என்பனவற்றின் சிதைவான மரூஉச் சொற்கள். என்னையர் என்றது, கோசலை, கைகேசி, சுமித்திரை என்னும் மூவரையும் சேர்த்துக் கூறியது; ஐயர் - குருமார்களும் ஆம். பொன்னைப் பொருகின்ற பொலன் குழையாள் என்றலும் ஒன்றும். உயிர்ப்பு - மூச்சுவிடுதல்; அதாவது உயிர் வாழ்வு; ஒப்பு: சுந்தர. 525. இலக்குவன் இராமபிரானுக்கு உயிர்; 1091; 1095, 1097. இலக்குவனை எப்பொழுதும் பிரியாமை, இந்த அவதாரத்தில் மட்டுமன்றி, ஸ்ரீவைகுண்ட வாழ்விலும் ஆம்; இச்செய்யுளுக்கு ஒப்பு: உயுந்த. பிரமாத்திரப்: 206.

பி-ம். 1. மெந்தையை யன்னையரைப், மெந்தையை யாயரை.
2. பொலன்குழலாள்.
3. னுளனாயது தான், னுளனுமிதுதான், னுளனாயிதுதான்.
4, வுயிர் பலவோ; உன்னைப்பிரிதற்குயிர் வேறுளதோ. (70)

1100. பொற்றோடிவர் கின்ற பொலங்குழையாள்
தற்றேடி யிருந்து தயங்கிடுவேன்
நிற்றேடி வருந்த நிரப்பினையோ
எற்றேடினை வந்த விளங்களிறே.

'என் தேடிவந்த - என்னையே அடையத்தக்க இடமாகத் தேடி என் பின் கானம் வந்த, களிறே - இளமையான ஆண்யானை போன்றவனே! பொன்தோடு இவர்கின்ற - பொன்னாலாகிய இதழ்கள்மேல் விளங்குகின்ற, பொலன் குழையாள் தன் தேடி - அழகிய குழை

என்னும் காதணிகளை அணிந்துள்ள சீதை தன்னைத் தேடி, இருந்து தயங்கிடுவேன் - இங்கு இருந்து வருந்திக்கொண்டிருக்கும் யான், நின் தேடி வருந்த - உன்னைத் தேடி யான் வருந்தும்படியாக, நிரப் பினையோ - செய்துவிட்டாயோ?

ஏற்றேடிவந்த - என்பதற்கு மானின் பின் சென்ற என் நிலைமை யறிய என்னைத் தேடிக்கொண்டு வந்த, எனப் பொருள் கொண் டாரும் உளர். என்னைத் தமயனாக நாடி என்பின்வந்து பிறந்த, எனலும் ஆம். பொற்றோடிவர்கின்ற பொலன் குழையாள் என்பதற்கு, பொன்னால் ஆகிய தோடு மேலே விளங்க, அதன் கீழ் குழை என்னும் அணியை யணிந்த சீதை எனப்பொருள் கொள்ளலும் ஒன்றும்; தோடும் குழையும் அணிதல்; 'நெய்விலைப் பசும்பொற்றோடு நிழன் மணிக் குழையு நீவி' (சீவக. 488). தோடு என்பதற்குப் பூவிதழ் என்ற பொருளுண்மை, "தோடு துற்ற மலர்த்தாரான்" (பால. திருவவ தாரப்; 62).

பி - ம். 1. பொற்றோ டுயர்கின்ற, பொற்றோ டியைகின்ற.
2. தற்றேடி யுலைந்து தளர்ந்துளயான்.
3. நிரப்பினையே, நிரம்பியதோ, நிரம்பினையால், நிரம்பினையோ, நீக்கினையோ.
4. எற்றேறிட வந்த, எற்றேடிடவந்த, எற்றோடினையந்த; எற்றே டிறவந்த; விருங்களிறே. (71)

1101. இன்றேயிற வாதொழி யேனெமரோ
பொன்றுதொழி யார்புகல் வாருளரால்
ஒன்றாயினி வுன்கிளை யோரையெலாம்
கொன்றாய்கொடி யாயிது வுங்குணமோ.

'இன்றே இறவாது ஒழியேன் - (உன்னைக் காணாமையால்) இன் றைக்கே யான் இறவாது இருக்கமாட்டேன்; (இறந்து படுவேன் என்றபடி); புகல்வார் உளரால் - இச்செய்தியைப் போய்ச்சொல்லு வார் யாரேனும் உள்ளவராவர்; ஆதலின், எமர் ஒ பொன்றுது ஒழி யார் - எம்மைச் சேர்ந்த உறவினர் முதலினரும் (இச் செய்தி கேட்டு) இறவாமல் இருக்கமாட்டார்; (இதனால்), உன் கிளையோரை எலாம் - உன் உறவினராய் உள்ள யாவரையும், இனி ஒன்றாய் கொன்றாய் - இனி நீ ஒருசேரக் கொன்றவனாகிறாய்; கொடியாய் - ஆதலின் நீ கொடியவனே ஆனாய்! இதுவும் குணமோ - இந்த உன் செயலும் நற்குணத்தின் பாற்படுமோ? (இது தீயகுணமே யாகும் என்றபடி).

கொன்ருய்: துணிவுபற்றி வந்த காலவழுவமைதி. எமரோ: ஓகாரம், தெரிநிலை. குணமோ என்றதின் ஓகாரம் எதிர் மறைப் பொருளது.

பி-ம். 1, தொழியேனமரோ. 2. புகல்வாருளரேல். 3. ஒன்ருயினி.
4. யிதுவுன் குணமோ, யிவையுன் குணமோ, யிவையுங்குணமே. (72)

1102. மாந்தாமுதன் மன்னவர் தம்வழியில்
வேந்தாகை துறந்தபின் மெய்யுறவோர்
தாந்தாமொழி யத்தமி யேனுடனே
போந்தாயெனை விட்டனை போயினையோ.

'மாந்தா முதல் மன்னவர் தம் வழியில் - மாந்தாதர் முதலிய நம் குலத்து முன்னோரான அரசர்கள் பின்பற்றிய வழி முறைப்படி, வேந்து ஆகை - அரசனாக ஆதலை, துறந்த பின் - யான் துறந்த பிறகு, மெய் உறவோர் தாம் தாம் ஒழிய - இந்த என் பிறப்பால் உறவினராயிருந்தவர்கள் அவரவர்கள் என்னுடன் வராது என்னை விட்டு நீங்க, தமியேன் உடனே - வேறு துணையின்றித் தனியேனாக வந்த என்னுடனே, போந்தாய் - வந்தவனே! எனை விட்டனை போயினையோ - அத்தகைய நீ இப்பொழுது என்னை விட்டுப் போய்விட்டாயோ?

மாந்தா; மாந்தாதா என்ற சொல்லின் விகாரம்; இவ்வாறு குறுகுதலை, நாமைகதேசகிரகணம் என்பர் வடநூலார். மாந்தாதா: இராமபிரான் குலத்து முன்னோர்களுள் ஒருவன்; இவன் யுவநாசுவன் என்னும் சூரிய குலத்தரசன் குமாரன்; இவன் பசுவும் புலியும் உறவாடி ஒரு துறையில் நீருண்ண உலகாண்டவன் என்று, (பால. குலமுறை கிளத்து: 4.) பாடலும், சோழமன்னர் வமிசாவளியைக் குறிக்கும் கலிங்கத்துப்பரணி, மூவருலா, சோழமன்னர் கல்வெட்டுக்கள் முதலியனவும் சிறப்பிப்பன காணலாம். மெய் உறவோர் - தேகபந்துக்கள் எனினும் ஆம். மற்ற உறவினரொழிய, இலக்குவன் ஒருவனே இராமபிரானைத் தொடர்ந்து வனஞ்சென்றது; 'இருவரைப் பயந்தவ ளீன்ற காளைமுனை, ஒருவனே விவற்கிவ் வூருறவென்ருர் சிலர்' (அயோத். நகர் நீங்கு: 192). வழியில் - பரம்பரை முறையில் என்னலும் ஒன்றும்.

பி-ம். 1 தம் வழியின்.
2. வேந்தாதி யிறந்தபின், வேந்தாசை துறந்தபின்; மேவுறவோர்.
4. விட்டெனை, விட்டனையோ புகல்வாய்; புகழோய். (73)

கவிக் கூற்று

**1103.** என்னுவுரை யாவெழும் வீழுமிருந்
துன்னுவுணர் வோய்வுறு மொன்றலவால்
மின்னுதிடி யாதிருள் வாய்விளைவீ
தென்னுமெனு மென்றனி நாயகனே.

என் தனி நாயகன் - எனது ஒப்பற்ற தெய்வமாகிய இராம பிரான், என்னு உரையா எழும் - என்று கூறி எழுந்து நிற்பான்; வீழும் - மறுப்படியும் கீழே சோர்ந்து விழுவான்; இருந்து - விழுந் தவன் மறுபடியும் உட்கார்ந்திருந்து, உன்னு - தனக்குண்டான துன்பங்களை நினைத்து, உணர்வு ஓய்வு உறும் - தன் அறிவுணர்ச்சி அழியப்பெறுவான்; 'மின்னுது இடியாது - மின்னொளி வீசாமல் இடி உண்டாகாதே!, இருள்வாய் விளைவு ஈது என்னும் எனும் - இவ் விருட்போதில் இவ்வாறு துன்பம் ஏற்பட்டது என்ன காரணமாகும்?' என்று சொல்லுவான்; ஒன்று அல - அப்பெருமான் பட்ட துயர் ஒன்றன்று; (பலவாம் என்றபடி).

இது முதல் மூன்று கவிகள் இராமபிரான் துயர்நிலையைக் கவி கூறுவன. 'என் தனி நாயகன்' என்றது நூலாசிரியர் இராமபிரானைத் தம் தலைமைத் தெய்வமாய்க் கொண்ட சிறப்பைக் கூறியபடி; 'என்னை யாளுடைய வையன்' என்றதுபோல. 'மின்னு திடியாது'; இஃது ஒரு பழமொழி; ஒரு காரியம் நிகழுமுன் அந் நிகழ்ச்சியை முன்னதாகச் சில குறிப்புக்கள் அறிவிக்கும் என்ற கருத்தைக் கொண்டது; 'மின்னுமலிடித்ததென வீழ்த்த' (வில்லிபாரத. 13-ஆம் போர்ச். 143); 'மின்னு திடித்தென்ன வன்னை கொண்டாள்' (தஞ்சை. 225). என்னுமெனும்; இஃது, 'இன்ன மென்ன துன்பத் திற் கிடமாமோ?' என்று வருந்தினன் எனலும் ஆம். இராமபிரான் துயரால் வருந்திப் பலவாறு செயலாற்றியவை, அடுத்த செய்யுளில் காணப் பெறுவதோடு, உயுத்த. நாகபாசப்: 222; பிரமாத்திரப்: 221 இலும் காண்க. ஆல், ஏ: ஈற்றசைகள்.

பி-ம். 1. வெழு மேகு மிருந். 3. திருளாய் விளைவித். (74)

**1104.** நாடும்பல சூழல்க டோறுநடந்
தோடும்பெயர் சொல்லி யுளைந்துயிர்போய்
வாடும்வகை சோரு மயங்குறுமால்
ஆடுங்களி மாமத யானையனன்.

ஆடும் களி மா மத யானை அனன் - அசைந்து ஆடும் இயல் புடைய செருக்கும் பெரும் மதமும் கொண்ட யானைபோன்ற இராம

பிரான், பல சூழல்கள் தோறும் நடந்து நாடும் - பல இடங்களிலும் நடந்து சென்று இலக்குவனைத் தேடிப் பார்ப்பான்: பெயர் சொல்லி ஓடும் - இலக்குவ! என்று அவன் பெயரைக் கூவிக்கொண்டு (பல இடங்களிலும்) ஓடுவான்; உளைந்து உயிர் போய் வாடும் வகை - வருந்தித் தன் உயிர் நீங்கி வாடும்படி, சோரும் - சோர்வடைவான்; மயங்குறும் - மயக்கமுறுவான்; ஆல்: ஈற்றசை.

அனன்: அன்னன் என்பதன் இடைக்குறை. நாடும், ஓடும், வாடும் என்னும் வினைகள் திணை மயக்கத்தில் வந்துள்ளன. ஆடுங் களியானை; யானை எப்பொழுதும் கட்டிய இடத்து அசைந்து ஆடிக்கொண்டே யிருக்கும் இயல்பினது; இனி, ஆடுங்களி மாமத யானை, என்பதற்குப் போர் புரியும் மதங்கொண்ட யானை என்னலும் ஒன்றும்; ஆடல் - போர்புரிதல்.

பி-ம். 2. யுளைத்துயிர் போய், யழைத்துயிர் போய்.
3. வாடும் முடல் சோரு; மயக்குறுமால்.
4. மதமா வனையான். (75)

1105. கமையாளொடு மென்னுயிர் காவலினின்
றிமையாதவ னித்துணை தாழ்வுறுமோ
சுமையாயுல கூடுழ றெல்வினையேற்
கமையாதுகொல் வாழ்வறி யேனெனுமால்.

'கமையாள் ஓடும் - பொறுமை மேற்கொண்ட சீதையோடும், என் உயிர் - எனது உயிரையும், காவலின் நின்று - பாதுகாத்து வரும் தொழிலின் நின்று, இமையாதவன் - இமை கொட்டாது காத்து இருந்த இலக்குவன், இ துணை தாழ்வுறுமோ - இவ்வளவு நேரம் தாமதிப்பானோ? (மாட்டான் என்றபடி); உலகு ஊடு சுமை யாய் உழல் தொல் வினையேற்கு - உலகத்தினிடையே பெரும் பாரமாய் வருந்தி யலையும் பண்டைத் தீவினையுடைய எனக்கு, வாழ்வு அமையாது கொல் - நல்வாழ்வு இனிப் பொருந்தாது போலும்! அறியேன் எனும் - யான் ஒன்றும் அறியாதவனாய் இருக்கின்றேன்' என்று சொல்லி வருந்தினன் இராமபிரான். ஆல்: ஈற்றசை.

பிராட்டி கமையாள்; 877, 1131; சுந்தர. 499, 1271, 1273. இலக்குவன் இராமபிரானையும் பிராட்டியையும் இரவிலும் இமை யாது காத்திருந்தமை; 1160; அயோத். கங்கைப்: 48, 49; குகப்: 42; உயுத்த. விடண னடைக்கலப்: 144. உலகிற் பிறந்து செய்யத்

தக்க காரியங்களைச் செய்யாதவனை, பூமிக்குச் சுமையாகக் கருதுவது ; குறள். 570, 582, 1003. 'சுமையால் - உடலாகிய பாரத்தாலென்றும், பூமிதேவி சுமந்த பாரம் நீங்க வென்றுமாய்' என்பது பழையவுரை.

பி - ம். 1. னுயிர்காத் திருகண் ; காயலரின், காயலனென்.
2. னித்தனை தாழ்வுறுமோ ; தாழ்வுறுமே.
3. சுமையா லுலகூடுழல், சுமையா வுலகூடுழல் தொல்வினையேன்.
4. சுமையாதுயிர் வாழுத லாதலினால் ; லாருயிரே யெனுமால். (76)

இராமபிரான் தன் உயிரை நீக்கிக் கொள்ளத் துணிதல்.

1106. அறப்பாலுள தேலவன் முன்னவனாய்ப்
பிறப்பானுறில் வந்து பிறக்கவெனா
மறப்பால்வடி வாள்கொடு மன்னுயிரைத்
துறப்பானுறு கின்ற தொடர்ச்சியின்வாய்,

'அறம் பால் உளது எல் - தருமத்தின் தன்மை என்பது ஒன்று இருக்குமானால், அவன் - அந்த இலக்குவன், முன்னவனாய் பிறப்பான் உறில் - எனக்குத் தமயனாய்ப் பிறக்க ஏற்படுமானால், வந்து பிறக்க எனா - வந்து பிறக்கக் கடவானாக' என்று கூறி, மறம் பால்-வெற்றி (அல்லது வீரத்தன்மையின்) மேலிட்டு, வடி வாள் கொடு - தன் கூரிய வாளை எடுத்துக்கொண்டு, மன் - தலைவனான இராமபிரான், உயிரை துறப்பான் உறுகின்ற - தன் உயிரைப் போக்கிக்கொள்ளத் தொடங்கிய, தொடர்ச்சியின் வாய் - செயலில் ஈடுபட்ட நிலையில்,

இச்செய்யுளும், அடுத்த இரு செய்யுள்களும் ஒரு தொடராய் இயைந்து வினைமுடிவு கொள்ளும். அறப்பால் - தருமம் என்ற பாகுபாடு என்னலும் ஒன்றும் ; அறத்துப்பால் என்று திருக்குறள் வகுக்கப் பெற்றமையும் நோக்குக. அறப்பால் உளதேல் : இது, தருமத்தைச் சாக்ஷியாகவைத்து உறுதி கூறியதும் ஆம். இதுகாறும் தனக்கு அடிமைபோல் இருந்து அருந்தொண்டாற்றிய இலக்குவனுக்கு, அத்தகைய நிலை இனி யிருக்கக்கூடாது என்றும், மறுபிறவியில் அவன் தன் தமயன் என்னும் நிலையில் பிறக்கத் தான் அவனுக்குப் பணிபுரிந்து தன்கடன் கழிக்க விரும்பியும் இராமபிரான் இச் சூளுரையைக் கூறி உயிர் துறக்கத் துணிந்தான் என்பதாம் ; இவ்வாறே பின், அடுத்த அவதாரத்தில், ஆதிசேடனை

இலக்குவன், பலராமன் எனத் தமயனாகவும், திருமாலாகிய இராம பிரான், அவனுக்குத் தம்பியான கண்ணபிரானாகவும் அவதரித்த உண்மை ஸ்ரீ பாகவத புராணத்தால் அறியப் பெறுவதும் காண்க. 'மறப்பால் என்றது, (தான்) பரத்துவம் என்பது அறியாது' என்பது பழையவுரை. இராமபிரானுடைய இக் கூற்றிற்கு, 'இலக்குவனுக்கு முன்னவனாகத் தான் பிறக்கவேண்டும்' என்று கூறியதாகச் சிலர் பொருள் கூறுவர். 'அவன் முன்னவனாய்ப் பிறக்க; அவன் - இலக்குவன்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. இதுகாறும் இலக்குவனைக் காணாத இராமபிரான் வருந்தி இறக்கத் துணிந்தமை கூறியது; இனி, இலக்குவன் திரும்பியது கூறப்பெறும்.

பி - ம். 2. பிறப்பானுறின், பிறப்பேனெனில்.
3. மறப்பான் வடிவாள்.
4. துறப்பா னுறுகாத றொடர்ச்சியினான். (77)

இலக்குவன் அயோமுகியைப் பங்கப்படுத்தல்.

1107. பேர்ந்தானெடு மாயையி னிற்பிரியா
ஈர்ந்தானவ ணாசி பிடித்திளையோன்
சோர்ந்தாளிடு பூசல் செவித்தொளையில்
சேர்ந்தார்தலு மேதிரு மாறெருளா,

(இங்நிலையில்), இளையோன் - தம்பியாகிய இலக்குவன், நெடு மாயையினில் பிரியா - அயோமுகி செய்த பெரு மாயையாகிய மயக் கத்தினின்று பிரிந்து, பேர்ந்தான் - அவள் பிணிப்பை விட்டு நீங்கின வனாய், அவள் நாசி பிடித்து - அவ் வயோமுகியின் மூக்கைப் பிடித்து, ஈர்ந்தான் -(வாள்கொண்டு) அறுத்தான்; சோர்ந்தாள் - அதனால் சோர் வுற்ற அவள், இடு பூசல் - உண்டாக்கிய பேரொலி, செவி தொளை யில் சேர்ந்து ஆர்தலும் - தன் செவித் துவாரத்தில் சேர்ந்து நிறைந்தவுடன், திருமால் - திருமாலின் அவதாரமாகிய இராமபிரான், தெருளா - தான் கலங்கிய நிலையினின்று தெளிவுற்றவனாகி,

பின், 1120 இல் இளையவன் அயோமுகியின் மூக்கு, செவிகள் இதழ்கள் முதலியவற்றை அரிந்ததாக இராமபிரானிடம் கூறியது காணப்பெறுவதால் இங்கு, நாசி என்பது மட்டும் கூறியது அதன் சிறப்பு நோக்கி எனக்கொள்க.

பி - ம். 1. மாயையினிற் பெயரா; பிரியா(து). 2. தீர்ந்தானவளிடு.
3. சேர்ந்தாளிடு. 4. சோர்ந்தார்தலுமே. (78)

வேறு

இராமபிரான் அஃதோர் அரக்கி குரல் எனத்துணிந்தமை.

1108. பரற்றெகு கானகத் தரக்கர் பல்கழல்
முரற்றொரு வெஞ்சமர் முயல்கின் றூரெதிர்
உரற்றிய வோசையன் றொருத்தி யூறுபட்
டரற்றிய குரலவ ளரக்கி யாமெனு,

(அவ் வொலிகேட்ட இராமபிரான், 'கேட்ட இவ்வொலி), பரல் தொகு கானகத்து - பருக்கைக் கற்கள் நிறைந்த காட்டினிடத்து, அரக்கர் - இராக்கதர்கள், பல் கழல் முரற்று - தாம் அணிந்த பல வீரக்கழல்கள் ஒலிக்கின்ற, ஒரு வெம் சமர் முயல்கின்றூர் - ஒரு கொடிய போர் செய்வோர், எதிர் - தம் பகைவர் எதிரே, உரற்றிய - உரத்து முழக்கமிட்ட, ஓசை அன்று - ஒலி இஃது அன்று; (பின் யாதெனில்), ஒருத்தி - ஒரு பெண், ஊறுபட்டு - துன்பத்திற்குள் ளாகி, அரற்றிய குரல் - வாய் விட்டுக் கதறிய ஓசையே யாகும்; அவள் - அப்படிக் கதறியவள், அரக்கி ஆம் எனு - ஓர் அரக்கியே யாவள், என்று,

ஊறு : உறு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். முன் செய்யுளிற் கூறிய பூசல் கேட்ட இராமபிரான், தான் கேட்ட ஒலி பல அரக்கர்கள் போரிட்டு முழங்குமொலி யன்றென்றும், ஓர் அரக்கி துன்பத்துக் குள்ளாகி அரற்றிய ஒலியாகுமென்றும் அறிந் தனன் என்பது. இஃது, அடுத்த செய்யுளோடு இயையும்.

பி - ம். 1. பரற்றகு, பரற்றரு; பற்பகல்.
2. முரல்கின்றூளெதிர்; முரற்றுறும், முரற்றரு.
4. குரலின ளரக்கி; ளரக்கியே கொலாம், யரக்கியாமென்றே. (79)

இராமபிரான் ஆக்னேயாஸ்திரம் செலுத்தி, இலக்குவனை நாடியது 1109-10.

1109. அங்கியி னெடும்படை வாங்கி யாங்கது
செங்கையிற் கரியவன் றிரிக்கும் வேலையில்
பொங்கிரு ளப்புறத் துலகம் புக்கது
கங்குலும் பகலெனப் பொலிந்து காட்டிற்றே.

(இவ்வாறு எண்ணிய), கரியவன் - நீல நிறமுடைய இராம பிரான், நெடும் படை செம் கையின் வாங்கி - நெடிய தன் அம்பு ஒன்றைத் தன் சிவந்த கையில் எடுத்து, ஆங்கு - அப்பொழுது, அது - அவ்வம்பை, அங்கியில் திரிக்கும் வேலையில் - ஆக்னேயாஸ் திரமாகப் பிரயோகம் செய்த பொழுதில், பொங்கு இருள் - மிகுந்து

விளங்கிய அவ் விருட்டு, அ புறத்து உலகம் புக்கது - இவ்வுல குக்கு அப்பாலுள்ள உலகைப் போய் அடைந்தது; (அதனல்), கங்குலும் - அற்றை யிரவும், பகல் என - பகற்பொழுதே போல, பொலிந்து - விளக்கமுற்று, காட்டிற்று - தெரிவிக்கலாயிற்று. ஏ : ஈற்றசை.

அங்கியின் நெடும்படை வாங்கி - ஆக்நேயாஸ்திரம் என்னும் பெரிய படையை எடுத்து, எனப் பொருள்கொண்டாரும் உளர். ஆனல், ஆக்நேயாஸ்திரம் என்பது ஒரு மந்திரப் பிரயோகத்தால் விளைவதே யொழிய, அப்படி ஓர் ஆயுதம் கிடையாது. அதர்வது அம் மந்திரத்தை ஓர் அம்பின் மூலமாகவோ, பிறிதொன்றாலோ தூண்டுவதே ஆகும். இது காக வடிவில் வந்து பிராட்டிக்கு ஊறு விளைத்த ஐயந்தன்மீது இராமபிரான் முன் ஒரு புல்லைக்கொண்டு பிரம்மாஸ்திரம் தூண்டிய செய்தியால் அறியக் கிடக்கும்; சுந்தர. 693. இதுபோல் வாருணம், வாயு, பிரம்மம் முதலான பல தெய்வத் தன்மை வாய்ந்த மந்திர அஸ்திரங்கள் உண்டு. அப்புறத் துலகம் புக்கது - உலகின் மற்றொரு புறத்திற் போய்ச் சேர்ந்தது என்னலும் ஒன்றும். கங்குலும் பகலெனப் பொலிந்து காட்டியது; ஒப்பு. 'கங்குலும் பகல்பட வந்தான்' (சுந்தர. 407)

பி - ம். 1. அங்கித னரும்படை, அங்கிதன் மாப்படை யாங்கவன்; வாங்கி யங்கது. 2. திரிக்கு மெல்லையில்; மேல்வயில்.
3. பொங்கிருள் புறத்துள வுலகம்.
4. பகல்படத் தெரிந்து. (80)

1010. நெடுவரை பொடிபட நிவந்த மாமரம்
ஒடிபட நிலமக ளுளைய வூங்கெலாம்
சடசட வெனுமொலி தழைப்பச் சாலவும்
முடுகினன் காலின்வெங் காலின்மும் மையான்.

வெம் காலின் மும்மையான் - கொடிய காற்றைவிட மும்மடங்கு வேக முடையவனாய், (அவ் வெளியினூடே, ஒலி வந்த திசை நோக்கி, இலக்குவனை நாடிக்கொண்டு), நெடு வரை பொடி பட - நெடிய மலைகள் தூள்களாக உதிரவும், நிவந்த மா மரம் ஒடி பட - உயர்ந்து விளங்கிய பெரிய மரங்கள் ஒடிபட்டு வீழவும், நிலமகள் உளைய - பூமிதேவி நொந்து வருந்தவும், ஊங்கு எலாம் - பக்கங்களில் எல்லாம், சட சட எனும் ஒலி தழைப்ப - சடசட என்னும் ஓசை மிகவும், காலின் சாலவும் முடுக்கினன் - காலால் மிகவும் விரைந்து இராம பிரான் நடந்து சென்றான்.

சட சட : இரட்டைக்கிளவி ; ஒலிக்குறிப்பு. வெங்கால் - சண்ட மாருதமும் ஆம். பொடிபட, ஒடிபட, உலைய, தழைப்ப முடுகினன் எனக் கூட்டுக.

பி - ம். 1. நெடுவரை யொடிபட.
2. ஒடிவுற, ஒடியுற ; வுலைய ; வூங்கெலாம், வாங்கெலாம்.
3. தல்ழப்பத் தாக்குமா ; தாக்கவும்; தானுமே.
4. முடுகின னிராமன்வெங் ; முடுகுவெங் ; ஞங்குவெம் முரனும் வெங்கு. (81)

### இலக்குவன் இராமபிரானை அணைதல். 1111-5

1111. ஒருங்குயர்ந் துலகின்மே லூழிப் பேர்ச்சியுள்
கருங்கடல் வருவதே யனைய காட்சியான்
பெருந்துணைத் தம்முனை நோக்கிப் பின்னவன்
வருந்தலை வருந்தலை வள்ளி யோயென,

ஊழி பேர்ச்சி உள் - ஊழிக்கால மாறுபாட்டினுள், உலகின் மேல் - பூமியின் மீது, கரும் கடல் - பெரிய கடல், ஒருங்கு உயர்ந்து - ஒருமிக்க மேற்கிளம்பி, வருவது அனைய - பொங்கி வருவதே போல, காட்சியான் - தோற்றத்தை யுடையவனான, பெரும் துணை தம் முனை - தங்கட்குப் பெரும் துணைவனாயும் தமயனுமாயும் உள்ள இராமபிரானை, பின்னவன் - அப் பெருமானுக்குப் பின் பிறந்த தம்பி யாகிய இலக்குவன், (எதிரிலே கண்டு), 'வள்ளியோய் - வள்ளலே ! வருந்தலை வருந்தலை என - வருந்தாதே வருந்தாதே' என்று சொல்லி.

இஃது அடுத்த செய்யுளோடு குளகமாய் இயைந்து அதிலுள்ள, அறியக் கூறுவான் என்ற வினைகொண்டு முடியும். ஊழிக்கால முடிவில் கடல்கள் பொங்கி எழுந்து உலகை அழிக்கும்; அதனைப் போல் இராமனது வேக நடை இருந்தது என்க. வருந்தலை வருந்தலை : அடுக்கு விரைவுப் பொருளது. வள்ளல் : இங்குத் தன் தம்பியாகிய இலக்குவனின் பொருட்டுத் தன் உயிரையும் வழங்க நின்றவன் என்ற குறிப்பு. ஊழிக் கருங்கடல் இராமபிரானுக்கு உவமை.

பி - ம். 1. ஒழுங்குவர் துலகின்மே, ஒருங்கல னுலகின்மே, ஒருங்கெழுந் துலகின்மே.
2. யன்ன காட்சித்தன் ; வருவபோல் வந்த காட்சியில்.
4. வருந்தினன் வருந்தினன் ; வள்ளியோ யென்றான், வருந்தின னனிமிக வள்ளியோனென ; வள்ளியோ யென்றே. (82)

1112. வந்தனெ னடியனேன் வருந்தல் வாழிநின்
அந்தமி லுள்ளமென் றறியக் கூறுவான்
சந்தமென் மலர்புரை சரணஞ் சார்ந்தனன்
சிந்தின நயனம்வந் தனைய செய்கையான்.

சிந்தின நயனம் வந்தனைய செய்கையான் - (இராமனுடைய) இழந்த கண் மீண்டு வந்தது போன்ற செயலுடையவனான இலக்குவன், 'வந்தனென் அடியனேன் - வந்துவிட்டேன் அடியேனாகிய நான், வருந்தல் - வருந்தாதீர்; நின் அந்தம் இல் உள்ளம் - உமது (அன்பின்) அளவில் முடிவு இல்லாத திருவுள்ளம், வாழி - வாழ்வடைவதாக!' என்று அறிய கூறுவான் - என்று (அவ் விர்ரமபிரான் தன் வரவை நன்கு அறிந்து கொள்ளும்படி) சொல்லிக் கொண்டே, சந்த மென் மலர் புரை - அழகும் மென்மையுமுடைய தாமரை மலரையொத்த, சரணம் - இராமபிரானுடைய பாதங்களை, சார்ந்தனன் - அடைந்து வணங்கினான்.

செய்கையான் அறியக் கூறுவான் சார்ந்தனன் என இயைக்க. இலக்குவனை இராமபிரான் தன் கண்ணெனக் கொண்டது, 1096. இங்கு இழந்த கண் வருதல் கூறப்பெற்றது. அன்றியும், தசரதன் இராமபிரானைத் தன் கண்ணாகக் கருதியிருந்தான்; பால. கையடைப்: 11; அயோத். கைகேசி சூழ்வினை: 22. இராமபிரானோ தன் தம்பியாகிய இலக்குவனைத் தன் கண்ணாகக் கருதியிருந்தான்; ஆதலால் இலக்குவன், தசரதன் கண்ணுக்குக் கண்ணாவான் என்றும் சமத்காரமாகக் கூறலும் அமையும். நாலாம் அடி, 'சிந்தனை வந்தால் என்னும் செய்கையான்' என்ற பாடத்தைக்கொண்டு, 'என் உள்ளம் வந்தது' என்று பொருள் கூறும், பழையவுரை. கூறுவான் (இலக்குவன்), செய்கையான், (இராமபிரானுடைய), சரணஞ் சார்ந்தனன், என இயைத்துப் பொருள் கொள்ளலும் ஆம்.

பி-ம். 1. வாழியாய். 2. லுள்ளமொன் றறிய; லுளத்தினுக் கறியக்.
3. தாமரைச் சரணங்; தளிர்புரை சரணம்; சரணுற்றேறனெனுச்.
4. சிந்தனை மனமுயிர் வந்த; சிந்தினமன முயிர்வந்த; சிந்தனை வந்ததா லென்னுஞ் செய்கையான், சிந்தின நயன நீர் தேவ தேவனே, சிந்தனை வந்ததனைய செய்கையான். (83)

1113. ஊற்றுறு கண்ணினீ ரொழுக நின்றவன்
ஈற்றிளங் கன்றினைப் பிரிவுற் றேங்கிநின்
ருற்றலா தரற்றுவ தரிதி னெய்திடப்
பாற்றுறு பனிமுலை யாவின் பான்மையான்.

ஊற்று உறு - ஊற்று நீர்ப் பெருக்கைப் போற் பொருந்திய, கண்ணின் நீர் ஒழுக - கண்களினின்று நீர் ஒழுகி வழிய, நின்றவன் -

நின்ற இராம்பிரான், ஈற்று இளங் கன்றினை - தன் தலையீற்று இளங் கன்றை, பிரிவு உற்று - பிரிந்து போகப் பெற்று, ஏங்கி நின்று - அதனால் ஏக்கமுற்றிருந்து, ஆற்றலாது - அப் பிரிவைத் தாங்காததும், அரற்றுவது - வாய்விட்டுக் கதறுவதுமாகி, அரிதின் எய்திட - (பின் அக்கன்று) அருமையாகக் கிடைக்க, பால் துறு பனி முலை ஆவின் - (அப்பொழுது) பால் நிறைந்து ததும்பி நடுக்கமுறும் மடியையுடைய ஒரு பசுவின், பான்மையான் - தன்மையுடையவனாகி,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாகி, அதிலுள்ள தழுவினன் என்ற வினைகொண்டு முடிவுபெறும். தாய் தன் குழந்தையிடம் காட்டும் அன்பிற்குப் பசு தன் கன்றிடங் காட்டும் அன்பு உவமை; கன்றைப் பிரிந்த பசுவின் துயரம்; அயோத். நகர் நீங்கு : *14*; குகப் : *66*. கன்று கண்ட பசுவுக்குப் பால் பெருகுவது; அயோத். நகர்நீங்கு : *151*; உயுத்த மீட்சிப் : *337*; மேலும் இத் தன்மை, தாய் எருமையிடத்தும் காணப்பெறுவது; பால. நாட்டுப் : *13, 25*. அதிலும் தலையீற்றுக் கன்றிடம் பசு மிக்க அன்புடையதாகும் என்பதும், இதனால் பெறப்படும். இது, மகிழ்ச்சி என்னும் மெய்ப்பாடு. பாற்றல் - ஒழுகவிடுதலும் ஆம். இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. ரொழுக்கி நின்றனன். 2. ஏற்றிளங் கன்றினைப்.
3. ஆற்றல ளாற்றுவா னருத்தி யெய்திய; ஆற்றல தாற்றுவ, ஆற்றல தரற்றுவ; ஆற்றவி ளாற்றுவே னரிதினெய்திய.
4. பாற்றிய பனிமுலை, பாற்றிளம் பனிமுலை; பாற்றிளம் பான்முலை. (84)

1114. தழுவினன் பன்முறை தாரைக் கண்ணினீர்க்
கழுவின னண்டவன் கனக மேனியை
வழுவினை யாமென மனக்கொ டேங்கினேன்
எழுவென மலையென வியைந்த தோளினாய்.

(இராமபிரான்), ஆண்டு- அப்பொழுது, அவன் கனக மேனியை- அந்த இலக்குவனது பொன்னிறமான உடம்பை, பன்முறை தழுவினன் - பலமுறை தழுவி, கண்ணின் நீர் கழுவினன் - தன் கண்ணீரால் அவனைக் குளிப்பாட்டினனாகி, (அவனை நோக்கி), 'எழு என மலை என - திரண்ட தூண்போலவும், மலை போலவும், இயைந்த - பொருந்திய, தோளினாய் - தோள்களையுடையவனே! வழுவினை ஆம் என - நீ கைதவறிவிட்டாய் எனவே, மனம் கொண்டு -

என் மனத்தில் தீர்மானித்துக்கொண்டு, ஏங்கினேன் - ஏக்கமுற்று வருந்தினேனானேன்;

இச் செய்யுளும் அடுத்த செய்யுளும் ஒன்றாய் இயைந்து பொருள் முடிவுபெறும். இலக்குவன் திருமேனி பொன்னிறமானது; 38; குறிப்பு. கண்ணீரால் கழுவுதல்; பால. பரசுராமப் : 44; அயோத். குகப் : 39; கிளை கண்டு நீங்கு : 54; உயுத்த. மீட்சி : 343; பெருங். 4 - 14 : 154. நள. கலிதொடர் : 76. தோளுக்கு எழுவும் மலையும் உவமைகள்; 593.

பி - ம். 1. வழிமுறைத் தாரை, விழிமுறைத் தாரை; தாமரைக் கணீர்; பன்முறை தழுவிக் கண்ணீரால்.

2. கழுவினாண்டவன், கழுவின னங்கவன்.

3. வழுவினானமென; மனக்கொண் டேங்கினேன், மனத்துளேங்கினான்; வருந்தினே னென்றான்; மனக்கொண்டே னென்றான்.

4. எழுவன, மலையன; விசைந்த, வெழுந்த; எழுவினு மலையினு மெழுந்த தோளினாய். (85)

1115. என்னையங் கெய்திய தியம்பு வாயென
அன்னவ னஃதெலா மறியக் கூறலும்
இன்னலு முவகையு மிரண்டு மெய்தினான்
தன்னல தொருபொரு டனக்கு மேலிலான்.

தன் அலது ஒரு பொருள் தனக்கு மேல் இலான் - தன்னை அல்லாது தனக்கு மேலாக ஒரு பொருளும் இல்லாத இராமபிரான் (இலக்குவனை நோக்கி), 'அங்கு எய்தியது என்னை - நீ சென்ற அவ்விடத்தில் நிகழ்ந்தது யாது? இயம்புவாய் என - அதனைச் சொல்வாயாக!' என்று கேட்க, அன்னவன் - அவ்விலக்குவன், அஃது எலாம் அறிய கூறலும் - அங்கு நடந்த செய்தியனைத்தையும் இராமபிரான் அறிந்து கொள்ளுமாறு எடுத்துச் சொன்னதும், இன்னலும் உவகையும் இரண்டும் எய்தினான் - ஒருபுறம் துன்பமும் மறுபுறம் மகிழ்ச்சியுமாகிய இரண்டையும் அவ்விராமபிரான் அப்பொழுது அடைந்தான்.

தன்னல தொரு பொருள் தனக்கு மேலிலான்; 'எவர்க்கும் மேனின்றான்' பால. கையடைப் : 24; கிட்கிந்தா. தானைகாண் : 33; சுந்தர. 187. இன்னலு முவகையு மிரண்டும் எய்தியது; அயோமுகியால்

இளையவனுக்கு ஏற்பட்ட அவதியால் இன்னலும், அவளைவென்று ஊறுபடுத்தி மீண்டு வந்தமையால் உண்டான உவகையும் என்க. 34.

பி-ம். 1. என்னையீங், என்னவங்.
2. அன்னவ னுளமெலா, அன்னவ னவையெலா.
4. தன்னலா தொரு, தன்னதோர் பெரும்புகழ் தனக்குமேவினான்.
(86)

இலக்குவன் கூற்று.

1116. ஆய்வுறு பெருங்கட லகத்து ளாயினர்
பாய்திரை வருந்தொறும் பரியற் பாலரோ
தீய்வினைப் பிறவிவெஞ் சிறையிற் பட்டயாம்
ஒய்வறு துயர்வர வுட்க னோன்மையோ.

(இன்னலுற்ற இராமபிரானை நோக்கி, இலக்குவன்), ஆய்வு உறு - ஆராய்ந்தறியவல்ல, பெரும் கடல் அகத்துள் ஆயினர்-பெரிய கடலினுள் அகப்பட்டுக் கொண்டவர், பாய் திரை வரும் தொறும் - அங்குப் பாய்ந்து வரும் அலைகள் மேன்மேலும் பலவாக வரும் போதெல்லாம், பரியல் பாலரோ - அதற்காக இரங்கி வருந்தலாவரோ? (வருந்திப் பயனில்லையாதலால் என்க); (அது போல), தீவினை பிறவி வெம் சிறையில் பட்ட நாம் - முன் செய்த தீ போன்ற பாவச் செயல்களின் காரணமாகப் பிறப்பு என்னும் கொடிய சிறையில் அகப் பட்டுள்ள நாம், ஒய்வு அறு துயர் வர - ஒழிவில்லாத் துன்பம் நம்மை (மேன் மேலும்) வந்து அடைய, உட்கல் நோன்மையோ - அத்துன்பங் களை நினைந்து மனம்வருந்துதல் வலிமைக்கிடமாமோ? (ஆகாது என்றபடி.)

இன்னலுற்ற இராமபிரானை இவ்வாறு கூறிச் சமாதானப்படுத் தினான் என்க. கடலிடை யகப்பட்டுக் கொண்டவர் அங்குவரும் அலை களை கண்டு வருந்துவதாற் பயனில்லை; அதுபோல, பிறவி எடுத்தவர் அதனில் ஏற்படும் துன்பங்களைக் கண்டு வருந்துவது தகாது என்ப தாம்; இஃது எடுத்துக்காட்டு உவமை யணி. பரியல் - இரங்குதல்; புறநா. 172: 5; இனி, விட்டு நீங்குதல், விரைந்து கடந்து செல்லுதல், என்றும் ஆம்; 'பரியனு யொடு பன்மலைப் படரும் (அகநா. 28; 7). பிற விச்சிறை: அயோத். மந்திரப்; 22. உட்கல் நோன்மையோ என்றதால், அவற்றைப்பொறுத்திருத்தலும் வெல்ல முயலலும் வலிமையுடைய தாகும் என்றதாம். இச்செய்யுட் கருத்தை, 'வினைப்பயன் வந்தக்கால் வெய்யவுயிரா, மனத்தினழியுமாம் பேதை-நினைத்ததனைத் தொல்லைய தென்றுணர் வாரே தடுமாற்றத் தெல்லை யிகழ்ந்தொழுகு வார்' என்ற நாலடிச் (33) செய்யுளுடன் ஒப்பிடுக.

பி - ம். 1. ஆய்வுறப் பெருங்கட, ஆய்புனற் பெருங்கட, ஆய்வற, னகத்து ளெய்தினன், யெய்திய.

2. வருதொறும், பரிதற், பரித்தற் ; பாலனே, பாலதோ.

3. தீவினைப் பிறவி ; சிறைப்பட்டவர்.

4. நோவுறு ,பொருடொறு நடங்கு நோன்மையேன், நோயுறு துயரென நடங்க னேன்மையோ ; துயர்வரி னெழிக்கற் பாலதோ, வுட்கு நோன்மையேன். (87)

இலக்குவனை இராமபிரான் புகழ்தல் 1117–8.

1117. மூவகை யமரரு முலக மும்மையும்
மேவரும் பகையெனக் காக மேல்வரின்
ஏவரோ கடப்பவ ரெம்பி நீயுளை
ஆவதே வலியினி யரணும் வேண்டுமோ.

(அச்சொற்களைக் கேட்ட இராமபிரான் இலக்குவனை நோக்கி), 'எம்பி நீ உளை-என் தம்பியாகிய நீ என்னருகே இப்பொழுது உள்ளவனாய்; (அதனால்), இனி வலி ஆவதே - எனக்கு இனி வலிமை உண்டாவதே ஆயிற்று ; அரணும் வேண்டுமோ - உன்னையன்றி எனக்கு மற்றும் ஒருபாதுகாப்பும் இனித் தேவையாகுமோ? (ஆகாது என்றபடி); மூவகை அமரரும் - மூன்று வகையினரான பிரம, விஷ்ணு, சிவபிரான் என்னும் தேவர்களும், உலகம் மும்மையும் - சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும் மூவுலகத்தவர்களும், மேவு அரும் பகை எனக்கு ஆக - அடைதற்கரிய என் பகைவர்களாக, மேல்வரின் - என் மீது போர்புரிய வந்தாலும், ஏவரே கடப்பவர்-யாரே என்னைக் கடந்து இனி வெல்லக் கூடியவர் ஆவர் ?

இலக்குவனைப் பிரிந்தழிந்த இராமபிரான் அவனைத் திரும்பப் பெற்றமையால் மகிழ்ந்து கூறியது இது. உலகம் மும்மை - இடவாகு பெயராய் மூவுலங்களில் வாழும் தேவர் மானிடர் நாகர் என்பவரைக் குறித்து நின்றது. எவர் என்பது ஏவர் என நீண்டது விகாரம். எம்பி, என் தம்பி என்பது சிதைந்துவந்த மரூஉச்சொல். இனி வலியாவதே - இனி வலிமை என்று சொல்லப்பெறுவது தான் உனையன்றி வேறு யாதோ? என்னலும் ஆம். இது பாராட்டு. பின் இலக்குவன இந்திரசித்தைக் கொன்று வெற்றியுடன் வந்தபோது, ' தம்பியுடையான் பகையஞ்சான் ' (உயுத்த. இந்தரசித்து வதைப் : 69.) என்று இராமபிரான் அவனைப் பாராட்டியதற்கு இங்கு ஓர் அடிகோலிய தாயிற்று என்க.

பி-ம். 1. மூவருமமரு முலக மூன்றொடு.
2. யெனக் காக்கி மேல் வரின், யெனக்காகி மேல்வரின்.
3. எவரே தடுப்பவ.
4. யாவரே வலியினி, ஆவதெவ்வலியினி ; யாது வேண்டுமே. (88)

1118. பிரிபவர் யாவரும் பிரிக பேரிடர்
வருவன யாவையும் வருக வார்கழல்
செருவலி வீரநிற் றீரு மல்லது
பருவர லென்வயிற் பயிலற் பாலதோ.

(மேலும், இராமபிரான் இலக்குவனை நோக்கி), 'பிரிபவர் யாவரும் பிரிக - என்னை விட்டுப் பிரிபவர் யாவரும் பிரிவாராகுக ; வருவன பேர் இடர் யாவும் வருக - வரத்தக்க பெருந் துன்பங்கள் யாவும் வருவதாக ; செருவலி வார்கழல் வீர - போர்வலிமை பெற்றுள்ள நீண்ட வீரக்கழல் அணிந்த வீரனே ! பருவரல் - எனக்குண்டாகும் துன்பங்கள், நின் தீரும் அல்லது - உன்னால் தீர்ந்துபோம் அல்லாமல், என் வயின் பயிலல் பாலதோ - என்னிடம் அவை வந்து பொருந்துவன ஆகுமோ ? ஆகா என்றபடி.

பிரிபவர் யாவரும் - 1099-இல் கூறியதைச் சுட்டியதாம். அவை நிற்றீரும், என்றமையால், பிராட்டியின் பிரிவுத் துயரும் நீங்கும் என்பதும், அயோத்தியில், பரதன், முதலியோருக்கும தேவர் முனிவர் முதலினோர்க்கும் துயரம் நீங்கும் என்பதும் குறிப்பிட்டபடியும் ஆம். இச்செய்யுள், " திண்பொரு ளெய்தலாகுந் தெவ்வரைச் செருக்கலாகும், நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையும் நண்ணலாகும், ஒண்பொரு ளாவதையா வுடன்பிறப் பாக்க லாகா எம்பியை யீங்குப்பெற்றே னென்னெனக் கரிய தென்றான் " (சீவக. 1760). என்றதற்கு ஒப்புமையாக உள்ளமை காண்க. இச் செய்யுள் சந்தேகம் என்பது, ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி-ம். 1. பிரிக வெய்தினும்,
3. பெருவலி வீரநிற் பிரியினல்லது ; றீரிலன்னது ; நிற்பிரிவினல்லது.
4. பருவரன் ; பயிற்றற், பயிறற் பாலரோ. (89)

இராமபிரான் அரக்கிக்கு நிகழ்ந்தவற்றைக் கேட்டறிதல் 1119-21.

1119. வன்ருெழில் வீரபோர் வலிய ரக்கியை
வென்றுபின் மீண்டென னெனவி ளம்பினுய்
புன்ருெழி லனையவள் புரிந்த சீற்றத்தால்
கொன்றிலை போலுமாற் கூறுவா யென்ருன்.

(மேலும் இராமபிரான் இலக்குவனை நோக்கி), 'வல் தொழில் வீர-வலிய போர்த் தொழிலிற் சிறந்த வீரனே! போர் வலி அரக்கியை-போர் வலிமை வாய்ந்த அரக்கியாகிய அவளை, வென்று பின் மீண்டெனன் என விளம்பினுய் - வென்று பிறகு இங்குத் திரும்பி வந்தேன்' என்று சொன்னுய்; அனையவள் புன்தொழில் புரிந்த சீற்றத்தால் - அந்த அரக்கி உன்பால் இழி செயல் செய்த கோபத்தால், கொன் றிலை போலும் - நீ அவளைக் கொல்லவில்லை போலும்! கூறுவாய் என்ருன் - நீ அதன் காரணத்தைக் கூறுவாயாக' என்று கேட்டான். ஆல் : அசை.

கொன்றிலை போலும்; ஒப்பில் போலி. புன்தொழில்: காம விகாரத்தால அவனை மயக்கி எடுத்துச் சென்ற இழிந்த செயல். வன்ருெழில் வீர, என்றமையால் நீ வீர வலிமையிற் குறைந்தவ னல்லனே! அவளைக் கொல்லாதுவிட்டது ஏன்? என்று வினவியதாம்.

பி-ம். 1. வன்திறல்; வீரவோர் 2. விளம்பினை.
3. புன்ருெழிலுடையவள்; புகன்ற சீற்றத்தால். (90)

1120. தொளைபடு மூக்கொடு செவிது மித்துக
வளையெயி றிதழொடு மரிந்து மாற்றிய
அளவையிற் பூசலிட் டரற்றி ஞளென
இளையவன் விளம்பிநின் றிருகை கூப்பினுன்.

தொளை படு - பெருந் தொளைகளாக ஆகும்படி, மூக்கு ஒடு - அவள் மூக்கோடு, செவி - அவள் காதுகளும், இதழ் ஒடும் வளை எயிறும் - உதடுகளோடு வளைந்த பற்களும், துமித்து உக - துண்டு பட்டுச் சிந்தி விழும்படியாக, அரிந்து - வாளால் அறுத்து, மாற்றிய அளவையில் - அவள் உருவை விகாரமாய்ச் செய்த பொழு தில், பூசல் இட்டு அரற்றினுள் என - அவள் பேரொலியிட்டுப் புலம் பினுள் என்று, இளையவன் விளம்பி - தம்பியாகிய இலக்குவன் சொல்லி, நின்று இருகை கூப்பினுன் - இராமபிரான் எதிர் நின்று தன்னிருகைகளையும் குவித்து வணங்கினுன்.

தொளைபடு மூக்கு; முன் சூர்ப்பணகையைப்பற்றித் 'தோட்ட நுங்கிற் றுளையுறு முக்கு' (369) என்றபடி. அளவை-சமயம் அல்லது தன்மையும் ஆம்; குறுந். 66: 3; பெரும்பாண்; 464. பூசல்-பேரொலி; 852.

பி-ம். 1. தொளை பெறு மூக்கொடு முலையுந் தோள்செவி; துளைபடு, தலையுடை, துளையொடு, தொளையுடை செவிகளுந் தொள்ளை மூக்கொடு; செவிகடும்பென.

2. தளைவ யினகிலொடு தடிந்து நீக்கிய; துளையென வளையிதழ் மலைமுலை யரிந்து மாற்றிய, வளைய தளிதழொடு; அளவையுங் கடிதரிந் தாங்கு நீங்கிய; வளைய தரத்தொடு மரிந்து மாற்றினேன்.

3. உளைவன பூசலிட்ட, உளைவினிற் பூசலிட்.

4. இனைய னுரைத்தன னிருகை கூப்பியே, உரைத்து நின்றிருகை.

(91)

1121. தொல்லிரு டனிற்கொலத் தொடங்கி னுளையும்
கொல்லலை நாசியைக் கொய்து நீக்கினுய்
வல்லைநீ மனுமுதன் மரபி னேயெனப்
புல்லின னுவகையிற் பொருமி விம்முவான்.

(அதுகேட்ட இராமபிரான் இலக்குவனை நோக்கி), 'தொல் இருள் தனில் - முற்றிய இருளில், கொல - உன்னைக் கொல்ல, தொடங்கினுளையும் - தொடங்கிய அவ் வரக்கியையும், கொல்லலை - நீ கொல்லாது, நாசியை கொய்து நீக்கினுய் - அவளது மூக்கை அறுத்து அவளை உயிரோடு போகுமாறு விட்டாய்; மனுமுதல் மரபினேய் - வைவசுவதமனுவை முதலாகக் கொண்டுள்ள பரம்பரையில் உதித்தோனே! நீ வல்லை - நீ அம்மரபின் பெருமையிற் சிறந்தோனுய்;' என - என்று அவனைப் புகழ்ந்து கூறி, உவகையில் பொருமி விம்முவான் - மகிழ்ச்சியால் (உடல்) பூரித்து விம்மினவனுகி, புல்லினன் - அவ் விலக்குவனைத் தழுவிக்கொண்டான்.

தொன்மை - பழமை, முதிர்வும் ஆம். இலக்குவன் மனுவின் மரபினன்; பால. குலமுறை கிளத்துப் : 3. கொல்லத் தொடங்கினுளையும் கொல்லலை என்றதால், தன்னைக் கொல்ல வந்தவரைக் கொல்லுதல் தகும் என்ற மநுநீதியின் பொது விதியினும், பெண் கொலை கூடாது என்ற சிறப்பு விதியை மேற்கொண்ட சிறப்பு நோக்கி, இராமபிரான் இலக்குவனைப் பாராட்டினுன் என்க. இராமபிரான் தாடகையைக் கொன்றது இங்குக் கருதத்தக்கது. இலக்குவனை வல்லவன் என்றது, 802. உவகையில் பொருமி விம்முதல், மகிழ்ச்சியால் உடல் பூரித்து நடுக்கமுறல்; இனி, இம் மெய்ப்பாடு,

அச்சத்திலும், துன்பத்திலும் நிகழ்வதுண்டு; 724; அயோத். இளைகண்டு நீங்கு: 59.

பி-ம். 1. தொல்லிருடனைக், தொல்லிருட்டுனைக்.
2. கொல்லல ளுசியைக் குறைத்து நீக்கினன்; நீக்கினன்; நீக்கினே.
3. மரபினுயெனப், மரபினு னென்ன, மரபுக்காமெனப் (92)

இருவரும் அன்றிரவை ஒரு மலையிற் கழித்தது 1122–3.

1122. பேரருந் துயரிறை பெயர்த்து ளாரென
வீரனுந் தம்பியும் விடிய னேக்குவார்
வாருணம் நினைந்தனர் வான நீருண்டு
தாரணித் தாங்கொரு கிரியிற் றங்கினர்.

பேர் அரும் துயர் - நீங்குதற்கு அரிய துன்பத்தை, இறை பெயர்த்து உளார் என - சிறிது நீங்கியுள்ளார் போல, வீரனும் தம்பியும் - இரகு வீரனான இராமபிரானும் அவன் தம்பி இலக்குவனும், விடியல் நோக்குவார் - பொழுது விடிவதை எதிர்பார்த்தவர்களாய், வாருணம் நினைந்தனர் - வருண மந்திரத்தைச் சிந்தித்து ஜபித்து, வான நீர் உண்டு - அதனால் ஆகாய கங்கையின் நீரை அடைந்து அதனைப் பருகி, தாரணித்து - வேட்கை யடங்கி இளைப்பாறி, ஆங்கு - அவ் வனத்தில், ஒரு கிரியில் தங்கினர் - ஒரு மலையிற் சென்று தங்குவாராயினர்.

பேரருந்துயர்: முன் (1098) இப்பேரா விடர் என்றதைக் குறித்ததாம். இறை பெயர்ந்தமை; பிராட்டியைப் பிரிந்த துயர் பெரிதாமாகலின். வாருணம்: வருணஸூக்தம் அல்லது வருண மந்திரம் என்பது; வருணதேவன் சம்பந்தமான வேத மந்திரம்; மழை பெய்யாது உலகம் துயருறும்போது, மழைக்கு உரிய தெய்வமாகிய வருணதேவனைக் குறித்து மழையை வேண்டிச் செய்யும் வேத மந்திரங்களடங்கிய துதி அல்லது ஜபம். தாரணித்தல் - நிதான நிலை அடைதல்; அல்லது இளைப்பாறுதல். இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. பேர்வருந் துயரறப், பேரருந் துயரிடைப், பேர்வருந் துயரிடை; பெயர்ந்துளோரென, பேர்ந்துளாரென; பெருதற்கரும் பிரிதுயர் நீக்கிய; போர்வருந் துயரிறை பொருந்துளாரென.
2. விடிவு நோக்குவார், விடிவு நோக்கினர், விடியல் காண்கிலா.
3. வாருணத் தருவிகொள் வான நீரினல், வாரண நீரைத் தன் வலிகொ ளிரினன்; வாருணம் விடுத்தங்கண்; நினைவரும் வான நீரினல்.
4. தாரணித் தங்கொரு; தாரணி தாங்கிய, (93)

**1123.** கல்லகல் வெள்ளிடைக் கானி னுண்மணல்
பல்லவ மலர்கொடு படுத்த பாயலில்
எல்லையி றுயரினே டிருந்து சாய்ந்தனன்
மெல்லடி யிளையவன் வருட வீரனே.

வீரன் - இரகு வீரனான இராமபிரான், கானில் அகல் கல் வெள்ளிடை - அக் காட்டில் அகன்ற மலையாகிய வெட்ட வெளியி னிடத்து, நுண் மணல் - நுண்ணிய மணற்பரப்பின்மீது, பல்லவம் மலர் கொடு - தளிர்களையும் பூக்களையுங் கொண்டு, படுத்த பாய லின் - (இலக்குவன்) பரப்பிய படுக்கையில், மெல் அடி இளையவன் வருட - தன் மென்மையான பாதங்களை அத் தம்பி இலக்குவன் தடவிப் பிடிக்க, எல்லை இல் துயரின் ஒடு இருந்து - அளவற்ற துன்பத்தோடு கூடினவனாய் இருந்து, சாய்ந்தனன் - படுத்துக் கொண்டான்.

வெள்ளிடை - வெட்ட வெளி; பால. அகலிகைப் : *70* ; உலா வியற் : *18* ; கிட்கிந்தா. பில நீங்கு : *22.* கல் அகல் - கற்கள் பரந்து கிடந்த என்னலும் ஆம். எல்லையில் துயர் - பிராட்டியின் பிரிவால் நீங்காப் பெருந்துயர். வருடுதல் - தடவிப் பிடித்தல் ; 'நீர் பூத்த திருமகளும் நிலமகளு மடிவருட '; திருவரங்கக்கலம்பகம் *1.* பல்லவப் பாயல் - தளிர்ப்படுக்கை.

பி - ம். 1. கல்லிகல் வெள்ளிடை ; வெள்ளிடைக் கானகத்துள் ; கான கத்தினுள் ; கலந்தி வண்டல்மேல்.
2. மலரொடுபடுத்த ; பறித்த வாயிலின்.
3. எல்லையி னிடரினே. *(94)*

இராமபிரானது விரகதாபம் **1124–9.**

**1124.** மயிலியல் பிரிந்தபின் மான நோயினால்
அயில்வில னொருபொரு ளவல மெய்தலால்
துயில்வில னென்பது சொல்லற் பாலதோ
உயிர்நெடி துயிர்ப்பிடை யூச லாடுவான்.

மயில் இயல் பிரிந்த பின் - (சாயலில்) மயில்போன்ற அழகுடைய பிராட்டி பிரிந்த பிறகு, மான நோயினால் - அவமானமாகிய வியாதி யால், ஒரு பொருள் அயில்வு இலன் - ஒன்றும் உண்ணாதவனாய், அவலம் எய்தல் ஆல் - இராமபிரான் துயரம் மேற்கொண்டதால், நெடிது உயிர்ப்பு இடை - பெருமூச்சின் இடையே, உயிர் நெடிது ஊசல் ஆடுவான் - தன் உயிர் பெரிதும் ஊசலாடும் நிலையில் இருந்து வருந்திய அவன், துயில்வு இலன் என்பது - தூக்கம்

இல்லாதவன் ஆனுன் என்பதை, சொல்லற்பாலதோ - சொல்ல வேண்டியது ஆகுமோ? (சொல்லாமலே விளங்கும் என்றபடி).

மயிலியல் : வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. பிராட்டியின் பிரிவாகிய ஏக்கத்தில் உண்டான பெருமூச்சினுல் தன் உயிர் போவதும் மீள்வதுமாய் ஊசல் போலத் தத்தளித்த நிலையில் வருந்திக்கொண் டிருந்தான் இராமபிரான் என்பதாம். மனநோய் ; 1037 ; 1042. அயில்வு - அயிலுதல் ; உண்டல். உயிர் ஊசலாடல் ; 1071 ; குறிப்பு.

பி - ம். 1. மயிலியல் பிரிந்தன மான நோயினுல் ; மையல் நோய் பிடித்(து) அயர்வுற.
2. அயிலிலன் ; னயல மேயலால் துயில்லிலன்.
3. சொல்லின் பாலதோ, சொல்லல் வேண்டுமோ.
4. துயிர்ப்படை யூச. (95)

1125. மானவள் மெய்யிறை மறக்க லாமையின்
ஆனதோ வன்றெனி லரக்கர் மாயமோ
கானக முழுவதுங் கண்ணி னேக்குங்கால்
சானகி யுருவெனத் தோன்றுந் தன்மையே.

'கானகம் முழுவதும் கண்ணின் நோக்குங்கால் - இக் காடு முழுவதும் என் கண்களால் பார்க்குமிடத்து, சானகி உரு என தோன்றும் தன்மை - எங்கும் சீதையின் உருப்போலத் தோன்றும் விதம், மானவள் - பெருமைக்குரிய அச் சீதையின், மெய் - மேனியின் உருவத்தை, இறை மறக்கலாமையின் - சிறிதும் யான் மறக்க முடியாமையாலே, ஆனதோ - உண்டானதோ? அன்று எனில் - அஃது இல்லை என்ருல், அரக்கர் மாயமோ - இஃது இராக்கதர்கள் செய்த மாயைச் செயலோ? தன்மையே ஏ : ஈற்றசை.

இது முதல் 5 பாடல்கள் இராமபிரான் பிராட்டியை நினைந்து வருந்திக் கூறினவாம், சானகி : சனகன் புதல்வி யென்ற முறையில் வந்த தத்திதாந்தப் பெயர். மானவள் - பெருமைக்குரியவள் ; 861 ; மானவன், ஆண்பால். இனி, மான் அவள் எனப் பிரித்து மான் போன்ற அவள் என்பாரும் உளர். இதில் உள்ள ஓகாரங்கள் ஐயப்பொருளன. இராமபிரான் கண்களுக்குத் தோன்றியது உருவெளித் தோற்றம். 302 ; 695. ஒப்பு ; இது, 'நோக்குவவெல்லாமவையே போறல்' என்ற மெய்ப்பாடு.

பி - ம். 1. ஆனவன் மெய் ; ஆனவ டன்மையை.
2. லரக்கர் மாயையோ, 3. முழுதுமென் கண்ணி. (96)

**1126.** கருங்குழற் சேயரிக் கண்ணி கற்பினோர்க்
கருங்கல மருங்குவந் திருப்ப வாசையால்
ஒருங்குறத் தழுவுவெ னூறு காண்கிலேன்
மருங்குல்போ லானதோ வடிவு மெல்லவே.

'கரும் குழல் - கரிய கூந்தலையும், சேய் அரி கண்ணி - சிவந்த நுண்ணிய இரேகைகள் படர்ந்து விளங்கும் கண்களையுமுடைய, கற்பினோர்க்கு அரும் கலம் - கற்புடை மகளிர்க்கு அரிய ஆபரணம் போன்ற சிறப்புடைய சீதை, மருங்கு வந்து இருப்ப - என் அருகே வந்திருப்பவளாக, ஆசையால் - அவளிடத்து யான் கொண்டுள்ள ஆசையினால், ஒருங்கு உற தழுவுவென் - என்னுடன் ஒன்று சேர நின்றுய்த் தழுவும் யான், ஊறு காண்கிலேன் - அவளது ஸ்பரிச வுணர்ச்சியைக் கண்டேன் அல்லேன்; (ஆதலின்), வடிவும் - அவளுடைய திருவுருவும், மெல்ல மருங்குல் போல் ஆனதோ - அவள் இடையைப்போல மெதுவாக இன்மையாகி விட்டதோ? ஏ: ஈற்றசை.

பிராட்டி கற்புக் கருங்கலம்; சுந்தர. *1269*; உயுத்த. மீட்சிப்: *49, 60, 124.* பிராட்டிக்கு மருங்குல் இல்லை என்பது; *359*; குறிப். ஒகார வினா ஐயப்பொருளது. அருங்கலம்: அடையடுத்த ஆகு பெயர். இச் செய்யுளும் இராமபிரான் பிராட்டியின் உருவெளி கண்டு மயங்கிய நிலையைக் குறிப்பதாகும். மருங்குல்போல் வடிவு ஆனமை; ஒப்பு. 'மென் மருங்குல்போல் வேறுள வங்கமு மெலிந்தாள்' (சுந்தர. *832*).

பி - ம். 1. கண்ணி கற்பினுக், கண்ணின் கற்பினோர்க், கண்ணிற் கற்பினோர்க், கற்பினுக்கோர்.
2. அருங்கலம்வந் தயலிருக்கு மாசையான், அருங்கல மருங்குவந்; கருங்கல.
3. தழுவினெ னென்றுங் தழுவுவா னென்றுங், தழுவுவெ னென்றுங்; காண்கிலா.
4. மருங்குல்போற் றேய்ந்ததோ வடிவென்றுன்னினன்; வடிவு மெல்லப் போய், வடிவமென்னவே, வடிவு மென்னவே, வடிவு மென்னப் போய். (97)

**1127.** புண்ட ரிகப்புது மலரிற் றேன்பொதி
தொண்டையஞ் சேயொளித் துவர்த்த வாயமு
துண்டனெ னீண்டவ ளுழைய ளல்லளால்
கண்டுயி லன்றியுங் கனவுண் டாகுமோ.

'புது புண்டரிக மலரில் - சீதையின் முகமாகிய அப்பொழுது மலர்ந்த தாமரை மலரில், தேன் பொதி - தேன் நிறைந்த,

தொண்டை - ஆதொண்டைக் கனிபோன்ற, அம் - அழகிய, சேய் ஒளி - சிவந்த ஒளியுடைய, துவர்த்த - பவழம் போன்ற, வாய் அமுது உண்டனென் - அவளுடைய வாய் அமுதத்தைச் (சற்றுமுன்) உண்டேன்; ஈண்டு அவள் உழையள் அல்லள் ஆல் - (ஆனல்) அவள் இப்பொழுது என்னருகே இல்லை ஆதலின், கண் துயில் இன்றியும் - கண்களை மூடிக்கொண்டு தூங்காதிருக்கும் நிலையிலும், கனவு உண்டாகுமோ - கனு உண்டாகுமோ? (இது என்ன மாயம்? என்றபடி).

'நான் சற்றுமுன் சீதையின் வாயமுதை உண்டேன்; ஆனல் அவள் இப்பொழுது என் அருகே இருக்கக் காணேன். இது கனவோ? நானே கண்மூடித் தூங்கவில்லையே! தூங்காத நிலையிலும் கனவு உண்டாகுமோ?' என்று இராமபிரான் மயங்கிக் கூறினன் என்க. துயிலின்றிக் கனவுண்டாகாமை; 'துயிலிலை யாதலிற் கனவு தோன்றல' (சுந்தர. 258).

பி - ம். 1. தேம்பொதி. 2. சேயிதழ்த் துவர்த்த வாயமு.
3. னின்றய ளுழைய; னீண்டவ ளிருக்கை காண்கிலேன்.
4. கனவு காண்டுமோ, கனவுண்டோ வென்பான். (98)

1128. மண்ணினும் வானினு மற்றை மூன்றினும்
எண்ணினும் பெரியதோ ரிடர்வந் தெய்தினல்
தண்ணறுங் கருங்குழற் சனகன் மாமகள்
கண்ணினு நெடியையோ கொடிய கங்குலே.

'மண்ணினும் - இப்புவியினும், வானினும் - ஆகாயத்தினும் மற்றை மூன்றினும் - மற்ற பூதங்களான, வாயு, நெருப்பு, நீர் என்பவற்றினும், எண்ணினும் - எண்ணத்தைக் காட்டிலும், பெரியது ஓர் - பெரியதான ஒரு, இடர் வந்து எய்தினல் - துன்பம் வந்து என்னை அடையுமானல், கொடிய கங்குலே - கொடிய இரவே! (நீ), தண் நறும் கரும் குழல் - குளிர்ச்சியும் இனிய நன்மணமும் கருமையும் வாய்ந்த கூந்தலையுடைய, சனகன் மா மகள் - ஜனகராஜனுடைய சிறப்புற்ற மகளாகிய சீதையின், கண்ணினும் - கண்களைவிட, நெடியையோ - நீ பெரியை ஆவை போலும்!

இராமபிரான் தான் அடைந்துள்ள இடரின் மிகுதிக்கு உதாரணங்களாக, ஐம்பெரும் பூதங்கள் கூறப்பெற்றன. எண் - எண்ணம்; எண்ணத்திற்கு அளவில்லை யாதலின்; 'எண்பது கோடி நினைந்தெண்ணுவன' (நல்வழி. 28). இனி, எண்ணினும் என்பதற்கு

எண்களின் அளவைக்காட்டிலும், அதாவது, கணக்கிட முடியாதபடி பெரியது என்றபடியும் ஆம். சனகன் மா மகள் கண்ணினும்: உம்மை உயர்வு சிறப்பினது; கண்ணினும் என்றது, பிராட்டியின் கண்கள் கடலினும் பெரியன ஆதலின்; 623.

பி-ம். 2. எண்ணினு நெடியவா யிருளினீட்டத்தால்; நண்ணூறு பூங்குழற்.
3. சனகன் கோமகள்.
4. நெடியதோ, நெடியதிக் கங்கு லென்னவே; கண்ணெனு நெடியதோர் கொடிய கங்குலே; நெடுமையோ கொடிய. (99)

1129. அப்புடை யலங்குமீ னமரு மார்கலி
உப்புடை யிந்துவென் றுதித்த வூழித்தீ
வெப்புடை விரிகதிர் வெதுப்ப மெய்யெலாம்
கொப்புளம் பொடித்ததோ கொதிக்கும் வானமே.

'அலங்கு மீன் - சஞ்சரிக்கும் மீன்கள், அமரும் - தங்கிவாழும், அப்பு உடை ஆர்கலி - நீரையுடைய கடலின், உ புடை - நடுவே, இந்து என்று உதித்த - சந்திரன் என்ற பெயருடன் உதித்த, ஊழி தீ-யுகாந்த கால நெருப்பின், வெப்பு உடை-வெப்பத்தையுடைய, விரி கதிர் - விரிந்த கிரணங்கள், வெதுப்ப - வேகுமாறு வாட்ட, (அதனால்) கொதிக்கும் வானம் - கொதிப்புற்ற ஆகாயம், மெய் எல்லாம் - அதன் உடலின் மீது எங்கும், கொப்புளம் பொடித்ததோ - கொப்புளங்கள் தோன்றினவோ?

இஃது, உடுக்களைக் கொப்புளங்கள் என்றது. இச் செய்யுள் தற்குறிப்பேற்ற அணியின் பாற்படும். சந்திரனுக்கு இங்கு ஊழித்தீ; அஃது இந்துவடிவில் வந்து தன்னை எரித்துத் துன்புறுத்துவதாகக் கொண்ட இராமபிரான், வானில் தோன்றின நக்ஷத்திரங்களை அவ் விந்துவால் கொதிப்புற்ற வானம் அடைந்த கொப்புளங்களாகக் கருதினான் என்பதாம். இச்செய்யுளின் கருத்து, 'செப்பிளங் கொங் கைமீர் திங்கட் சுடர்ப்பட்டுக், கொப்புளங் கொண்ட குளிர்வானை - இப்பொழுது, மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ, தேன்பொதிந்த வாயாற் றெரிந்து'; (நள. சுயம்வரப்: 104) என்றதால் விளக்கம் பெறுவது காண்க. 'அம்புடை வலங்கல்மீன் - சலத்தையுடைய பிரகாசிக்கும் மீன்; கொப்புளம் பொடித்த போல், உடுக்கணம் தோன்றின எனக்கொள்க' என்பன பழையவுரை. உ புடை; உ: சுட்டு; புடை - இடம்.

பி - ம். 1. அப்பிடை பயிலுமீன்; அப்பிடை யலங்குமீ னமர்ந்த தாமென - அப்பிடை யிலங்குமீ னலர்ந்த தார்கலி; அலர்ந்த தாமென; னலர்ந்த தாமன்றே; மீன் வந்ததாமென.

2. உப்பிடை; ஒப்புடை.

3. விரிகதிர் விரிப்ப; வெதும்பிமே லெலாம்; வெதுப்ப மேவு றும்; மெய்யெழும்.

4. பொத்தயோ; கூறும் வானகம்; கொடிய வானமே. (100)

## சூரியோதய வருணனை.

**1130.** இன்னன வின்னன பன்னி யீடழிந்து
மன்னவர் மன்னன் மதலை மயங்கினான்
அன்னன கண்டன னல்கின னென்னத்
துன்னிய செங்கதிர்ச் செல்வன் தோன்றினான்.

இன்னன இன்னன பன்னி - இவ்விதம் பல முறை பிரலாபித்து, ஈடு அழிந்து - தன் வலிமை ஒடுங்கி, மன்னவர் மன்னன் - அரசர்க்கரசனான தசரதனுடைய, மதலை - குமாரனான இராமபிரான், மயங்கினான் - மதிமயக்கம் கொள்வானானான்; அன்னன கண்டனன்; இராமபிரானின் அத்துன்பங்களைக் கண்டு, அல்கினன் என்ன - அவன் மிக வருந்தினன் என்றெண்ணி, துன்னிய - நிறைந்த, செம் கதிர் செல்வன் - சிவந்த கிரணங்களையுடைய சூரியன், தோன்றினான் - (அவனைத் தேற்றும் பொருட்டு) உதயமானான்.

இன்னன இன்னன; அடுக்கு மிகுதிப் பொருளது. ஈடு-வலிமை 707, 912. மன்னவர் மன்னன் மதலை - இது இராமபிரானைச் சக்கரவர்த்தி குமாரன் என்ற கர்ரண விடுகுறிப்பெயரால் சிறப்பாக அழைக்கப் பெறும் மரபைத் தழுவி வந்தது. செங்கதிர்ச் செல்வன் தன் குலத்திற்றோன்றியவன் என்ற உரிமைபற்றி அவன் றுயரம் தன்னதாகக் கொண்டு அவ்விராமபிரானுக்கு ஆறுதல் கூறுவான் போலத் தோன்றினான் என்க. முன் பிராட்டியின் பிரிவால் வருந்திய இராமபிரான் துயர்கண்டு தாளாத மனத்தினனாய்ச் சூரியன் அத்தமித்தான் என்று (1064)-இல் கூறப் பெற்றதையும் இங்கு நோக்குக.

பி - ம். 1. வெய்தி யிடர்ப்படு.

2. மன்னவர் மன்ன வன்மதி, மன்னவர் மன்னவன் மதலை, மன்னவர் மன்மகன் மதி; மதலை வருந்தினான்.

3. னல்குவெனு மெனத், னல்கினனுமெனத்; மெனுத்.

4. துன்னு செங்கதிர்ச் செல்வனுந் தோன்றினான். (101)

## அயோமுகிப் படலம் முற்றும்.

# 11. கவந்தன் வதைப்படலம்

இது, கவந்தன் என்னும் ஒரு கொடிய அரக்கனை இராமபிரான் கொன்று அவனுக்கு நல்லுல களித்த செய்தியைக் கூறும் படலம் என்று விரியும். கபந்தன், வடசொற்றிரிபு ; கபந்தம் - தலையற்ற உடல் ; இத்தகைய உடலைப் பெற்றமையால் இவனுக்குக் கவந்தன் என்ற பெயர் வந்தது. இவன் ஒரு முனிவர் சாபத்தால் அரக்க உருவும், தலையற்று, வயிற்றினிடமே வாய், கண் முதலிய அவயங்கள் அமையப் பெற்ற உடலும் பெற்று, மிகக் கொடியனாய் இருந்து வந்தான். இது, சில பிரதிகளில், கவந்தப்படலம் என்றும், கவந்தன் மோட்சப்படலம் என்றும் காணப்படுகின்றது.

இராம லக்ஷ்மணர்கள் பிராட்டியைத் தேடிச் செல்லுதல்

**1131,** நிலம்பொறை யிலதென நிமிர்ந்த கற்பினாள்
நலம்பொறை கூர்தரு மயிலை நாடியே
அலம்புறு பறவையு மழுவ வாமெனப்
புலம்புறு விடியலிற் கடிது போயினார்.

நிலம் பொறை இலது என - பூமி பொறுமை இல்லாதது என்று சொல்லும்படியாக, நிமிர்ந்த - (அப்பொறுமையில் அப்பூமியினும்) மேம்பட்ட, கற்பினாள் - கற்புச் சிறப்புடையவளான, நலம் பொறை கூர்தரு - அழகின் பாரத்தை மிகுதியாய்ப் பெற்றுள்ள, மயிலை - மயில் போன்ற சாயலையுடைய பிராட்டியை, நாடியே - தேடினவர்களாய், அலம்பு உறு பறவையும் - அலைதலைக்கொண்ட பறவைகளும், அழுவ ஆம் என - அழுகின்றன என்று செல்லும்படி, புலம்பு உறு - புலம்புதலாகிய ஒலிகளைப் பொருந்திய, விடியலில் - விடியற் காலத்தில், கடிது போயினார் - (அந்த இராம லக்ஷ்மணர்கள்) விரைந்து மேலே சென்றனர்.

'நிலம் பொறை யீதென நிமிர்ந்த கற்பினாள்' என்ற பாடங் கொண்டு, உலகில் பொறுமை என்று சொல்லப் பெறுவது, இதுவே தான் என்று ஓர் எடுத்துக் காட்டாகச் சிறந்தோங்கிய கற்புடைய பிராட்டி எனக்கொள்ளலும் ஏற்கும்; இனி, நிலம் பொறுமையுடையது என்பர் ; அஃது இதுவேயாம் என்று சொல்லுமாறு உயர்ந்த கற்புடைய பிராட்டி என்னலும் அமையும். பொறுமைக்குப் பூமி : குறள். 151 ; நன்னூல், சூ. 27 ; பெருங். 1 ; 42 : 179 ; சிலப். 1. 36 : 9 : சீவக. 996. ந. உரை. பிராட்டி பொறுமையிற் சிறந்தவள்

என்பது; சுந்தர. 499, 1271. நலம் பொறை கூர்தரு - அழகின் பெருஞ் சுமையைக்கொண்ட; 'அழகிவளைத் தவஞ்செய்து பெற்றது காண்' ; (பால. கார்முகப்; 180); 'அழகெலாமொருங்கே கண்டால் யாவரே யாற்றவல்லார்'; (பால. கோலங்காண்; 20) எனப்பிராட்டியின் அழகின் உயர்வு சிறப்பிக்கப் பெற்றமை காண்க. ஒப்பு. 'அழகு சுமந்திளைத்த வாகத்தாள்' (நள. சுயம்வர : 72). இனி, நலம்பொறை கூர்தருமயிலை 'ஆடுகின்ற மா மயிலினு மழகிய குயிலே' (அயோத். சித்திரகூடப் : 12) என்றமை காண்க. பறவையும் நாடியே யழுவ வாமெனப் புலம்புறும் என இயைத்தும் பொருள்கொள்ளலாம். விடியற் காலையில் பறவைகள் ஒலிக்கும் இயல்பு அவை பிராட்டியைக் காணாத் துயரால் வருந்திப் புலம்புவனவாக ஆசிரியர், தன்மைத் தற்குறிப்பேற்ற வணியிற் சிறப்பித்தனர் என்க. அலம்புதல் - ஒலித்தலும் ஆம்; உயுத்த. முதற் போர்; 17. இச்செய்யுள் ஒருபிரதியில் இதன் முன்னர் உள்ள அயோமுகிப் படலத்தின் இறுதிச் செய்யுளாகக் கொள்ளப்பெற்றுள்ளது.

பி - ம். 1. நிலம் பொறை யில்லென.
2. கூர்தலுமயிலை, கூர்தரு கொம்பினுட்பட; நாடிய நலம்பெறு கருணையை; நாடி யின்னலாய்.
3. மழுவதாமெனப், மழுவ போன்மெனப்.
4. புலம்புற. (1)

வேறு

அவர்கள் கவந்த வனம் அடைந்தமை

1132. ஐயைந் தடுத்த யோசனையி
னிரட்டி யடவி புடையுடுத்த
வையந் திரிந்தார் கதிரவனும்
வானி னுப்பண் வந்துற்றான்
எய்யுஞ் சிலைக்கை யிருவருஞ்சென்
றிருந்தே நீட்டி யெவ்வுயிரும்
கையின் வளைத்து வயிற்றடக்குங்
கவந்தன் வனத்தின் கண்ணுற்றார்.

ஐ ஐந்து அடுத்த யோசனையின் இரட்டி - இருபத்தைந்து என்னும் எண்ணைச் சார்ந்ததான யோசனை தூரத்தின் இருமடங்கு, (அதாவது ஐம்பது யோசனை தூரம்), அடவி புடை உடுத்த வையம் - காட்டுப் பக்கங்களிற் பரவியிருந்த நிலப்பரப்பை, திரிந்தார் - இராம

லக்ஷ்மணர் பிராட்டியை நாடி அலைந்து திரிந்தனர்; கதிரவனும் வானின் நாப்பண் வந்து உற்றான் - சூரியனும் ஆகாயத்தின் நடு உச்சியை வந்தடைந்தான்; (அப்போது), எய்யும் சிலை கை இருவரும்- அம்புகளை எய்யும் வில்லேந்திய கையினரான அவ்விருவரும், சென்று - அவ்வாறு அவ்வனத்தில் நடந்துசென்று, இருந்தே நீட்டி - தான் வெளியே செல்லாமல் ஓரிடத்தில் இருந்த நிலையிலே தன் கைகளை நீட்டி, எ உயிரும் கையில் வளைத்து எப்பிராணிகளையும் (விடாமல்) தன் கைகளுக்குள்ளாம்படி வளைத்து, வயிற்று அடக்கும் - அவற்றைத் தன் வயிற்றுள் செலுத்தி அடக்கி உண்ணும், கவந்தன் வனத்தின்கண் உற்றார் - கவந்தன் என்னும் அரக்கன் இருந்த காட்டினிடத்தில் வந்தடைந்தார்.

ஐயைந்து, ஐந்தின் ஐந்து என்பதின் தொகுத்தல் விகாரம். அடவி - காடு; வடசொல். கவந்தன் பிராணிகள் அனைத்தையும் தன் கைகளால் வளைத்துப் பிடித்துத் தன் வாயிற் புகுத்தியுண்பவன்; 'வழங்கு முயிரனைத்தும் வாரிவாய்ப் பெய்து விழுங்குங் கவந்தன்', (நூற்றெட்டுத். *103*). திரிந்தார் இருவருஞ் சென்று கவந்தன் வனத்தின் கண்ணுற்றார் எனக்கூட்டி முடிவு செய்க.

பி - ம். 1. ஐயைந் திரட்டி யோசனையி னிரட்டி யடவிபுடை யுடுத்த; யளக்கர் புடையுடுத்த, புடைசூழ்ந்த, புடையடுத்த, புடைபடுத்த.

2. வையந் திரிந்த கதிரவனும், வையங் கடந்தார்.

3. எய்வெஞ் சிலைக்கை; யிருந்தே நுகர்ந்தாங் கெவ்வுயிரும்.

4. கையின் வாரி; கவந்தவனத்தைக் கண்ணுற்றார். (2)

வேறு

கவந்தனின் கொடுமை 1133—35

1133. எறுப்பினங் கடையுற யானை யேமுதல்
உறுப்புடை யுயிரெலா முலைந்து சாய்ந்தன
வெறிப்புறு நோக்கின வெருவு கின்றன
பறிப்பரு வலையிடைப் பட்ட பான்மைய.

(கவந்தன் தன் கைகளை நீட்டிச் சேர்த்தணைத்தபோது, அங்கு அகப்பட்ட), யானையே முதல் எறும்பு இனம் கடை உற - யானைக் கூட்டங்கள் முதலாய் எறும்பின் கூட்டங்கள் முடிவாக அமைய, உறுப்பு உடை உயிர் எலாம் - அங்கங்கள் அமைந்த பிராணிகள் யாவும், உலைந்து சாய்ந்தன - வருந்திச் சோர்ந்து அழிவன ஆயின;

வெறிப்பு உறு நோக்கின - வெறித்து நோக்கும் கண்களையுடைய, (சிங்கம் புலி போன்றவை), வெருவுகின்றன -(அவனைக் கண்டு) திகில் அடைவன ஆயின; (அவை), பறிப்பு அரு - பிறரால் பிடுங்கி வெளிப்படுத்துவதற்கு முடியாத, வலை இடை பட்ட - ஒரு வலையின் இடையே அகப்பட்ட, பான்மைய - தன்மையுடையனவாயின.

உயிர் வாழும் பிராணிகளைத் தொகுத்துக் கூறும்பொழுதி, பெரிதாகிய யானை முதல் சிறிதாகிய எறும்பு ஈறாக உள்ளவை எனக் குறிப்பது மரபு. ஒப்பு. 'அத்திமுத லெறும்பீறான வுயிர்' (தனிப் பாடல்); நீதிநெறி விளக்கம் 37-ஆம் செய்யுளும் காண்க. எறுப்பு - எறும்பு என்பதன் விகாரம். சாய்தல் - வருந்துதல்; 'கள்ளொற்றிக் கண் சாய்பவர்', (குறள். 927).

பி - ம். 1. எறுப்பினுங் கடையுற, கடையடல் யானை, கடையட்வி யானை; கடைபட யானை.

2. உறுப்படையு யிரெலாம்; முலைந்து சாய்ந்தவை.

3. வெறுப்புற; வெறிப்புற; நோக்கின, நோக்கென, நோக்குவ.

4. மலையிடைப்பட்ட; பான்மைபோல். (3)

**1134.** மரபுளி நிறுத்திலன் புரக்கு மாண்பிலன்
உரனில னொருவனாட் டுயிர்கள் போல்வன
வெருவுவ சிந்துவ குவிவ விம்மலோ
டிரிவன மயங்குவ வியல்பு நோக்கினர்.

மரபு உளி நிறுத்திலன் - குடிகளை அவரவர் மரபின் முறைப் படி நிலை நிறுத்தாதவனும், புரக்கும் மாண்பு இலன் - அக்குடிகளைப் பாதுகாத்து ஆளும் மாட்சி இல்லாதவனும், உரன் இலன் - வலிமை அற்றவனுமான, ஒருவன் - ஓர் அரசனுடைய, நாட்டு உயிர்கள் போல்வன - நாட்டில் இருந்து வருந்தி வாழும் மக்களைப் போன் றனவும், வெருவுவ - திகிலுறுவனவும், சிந்துவ - சிதறியோடு வனவும், குவிவ - ஒருங்கு கூடுவனவும், விம்மல் ஓடு இரிவன - துடிப்போடு நிலைகெட்டலைவனவும், மயங்குவ - மயக்க முறுவன வுமான, இயல்பு - (அங்குப் பிராணிகளின் பலவித வேறுபாட்டு) நிலைகளை, நோக்கினர் - இராம லக்ஷ்மணர்கள் கண்டனர்.

மரபு-குலமுறையின் ஒழுக்கம்: உளி, ஏழன் உருபு. உரன்-உரம் என்பதன் இறுதிப்போலி. கவந்தன் கையகப்பட்டு வருந்திய பிராணிகளுக்கு நெறிமுறையற்ற ஒரு கொடுங்கோன் மன்னன் நாட்டு வருந்திய குடிகள் உவமை. மரபுளி: கிட்கிந்தா. மராமரப்: 28; முருகு.

95; பெருங். 3. 6: 42. உளி, மூன்ருவதன் பொருள் படுவதோர் இடைச்சொல். இச்செய்யுளில் அரசநீதி யடங்கியுள்ளமை காண்க.

பி-ம். 1. மரபுளி யிறுத்தலன்; யிறுத்தி மண்புரக்கு மாண்பினர்; புகட்டு மாண்பிலன்.
2. உரனழிந் தொருவுநாட் டுயிர்கள் போலவே; உரனி லாஞெரு வன், உரனிலா வொருவன்.
3. சிந்துவ வீவ. 4. வியல்பி னேக்கினர். (4)

1135. மால்வரை யுருண்டன வருவ மாமரம்
காலறிந் திறுவன கான யாறுகள்
மேலுள திசையொடும் வெளிக ளாவன
சூன்முதிர் மேகங்கள் சுருண்டு வீழ்வன.

(அக்கவந்தனுல்), மால் வரை உருண்டன வருவ - பெரிய மலைகள் உருண்டு வருவனவும், மா மரம் கால் பறிந்து இறுவன - பெரிய மரங்கள் வேரற்று ஒடிவனவும், கான யாறுகள் - காட்டாறுகள், மேல் உள திசை ஒடும் - தமக்கெதிரே யுள்ள திசைகளோடு, வெளிகள் ஆவன - வெட்ட வெளிகளாக ஆவனவும், சூல் முதிர் மேகங்கள் சுருண்டு வீழ்வன - கருக் கொண்ட (அதாவது நீருண்ட) மேகங்கள், மடங்கிச் சுருண்டு கீழே வீழ்வனவும் ஆயின.

கவந்தன் கையிடைப்பட்டு நெருக்குண்டதால், இயற்கை மாறு பட்டதைக் கூறினர்.

பி-ம். 1. யுருண்டுடன் வருவ; வருமராமரம்.
2. கால்ப றித்திடுவன, யறிந்திறுவன, பறிந்திடுவன.
3. திரைவொடு, திசையொடு; வெளிபரப்பின.
4. சூன்முகின் மேகங்கள்; சூல்முழுமோகமும். (5)

இராம லக்ஷ்மணர் கவந்தன் கையினுட்பட்டுப் பல்வாறு கருதுதல்—1136-40.

1136. நாற்றிசைப் பரவையு மிறுதி நாளுறக்
காற்றிசைத் தெழவெழுந் துலக மெங்கணும்
ஏற்றிசைத் துயர்ந்துவந் திடுங்கு கின்றன
போற்றிசைச் சுற்றிய கரத்துட் புக்குளார்.

நால் திசை பரவையும் - நான்கு திசைகளிலுமுள்ள கடல்களும், இறுதி நாள் உற - ஊழிக்காலம் வர, காற்று இசைத்து எழ - அப் போது பெருங்காற்று ஒலியுடன் மேற்கிளம்பி எழ, உலகம் எங்

கணும் ஏற்று - உலகில் எல்லாவிடங்களையும் தம்மிடம் அடக்கிக் கொண்டு, இசைத்து - பேரொலி எழுப்பி, உயர்ந்து வந்து - மேற் கிளம்பிவந்து, இடுங்குகின்றன போல் - சுருங்கி நெருங்குகின்றன போல, திசை சுற்றிய - நாற்றிசையும் சுற்றி வளைத்துக்கொண்ட, காத்து உள் - கவந்தனின் கைகளுக்குள்ளே, புக்கு உளார் - (இராம லக்ஷ்மணர்கள்) புகுந்துள்ளாராயினர்.

ஊழிக்காலத்து உலகில் எழுந்து அழிக்கும் கடல்களுக்குக் கவந்தன் கைகளின் எழுச்சி உவமை. இடுங்குதல் - சுருங்குதல்; கண் இடுங்கியது என்ற வழக்கையும், ஒன்றை நெருக்கிப் பிடிக்க உப யோகிக்கும் குறடு என்னுங் கருவிக்கு இடுக்கி என்ற பெயருண்மை யையும் நோக்குக; இடுங்குதல் - சுருங்குதலும் ஆம். இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. நாற்றிசை யாவையும்; நாற்றிசைப் பகுதியும்.
2. காற்றிசைத் தெழுமுழுவுலகை, காற்றிசைத் துலகெலாம் வளைத் துக் கன்மலை; தெழ வெழுந்தனன்.
3. ஏற்றிசைத் துயிரெலா; துயர்ந்தவன்.
4. காற்றிற் புக்குளார்; புக்குளோர், கையுட்புக்கினர். (6)

1137. தேமொழி திறத்தினு லரக்கன் சேனைவந்
தேமுற வளைந்ததென் றுவகை யெய்தினர்
நேமிமால் வரையது நெருக்கு கின்றதே
ஆமென லாயகை மதிட்கு ளாயினர்.

நேமி மால் வரையது - சக்கரவாள கிரி என்னும் பெரிய எல்லைப் புறமலையானது, நெருக்குகின்றதே ஆம் எனல் ஆய - நெருக்கி வருகின்றது போல் ஆம் என்று சொல்லும்படி ஆன, கை மதிட்கு உள் ஆயினர் - கவந்தன் கைகளாகிய மதில்களுக்குள் அகப்பட்டவர்களான இராம லக்ஷ்மணர், 'தே மொழி திறத் தினால் - தேன் போன்ற இனிய சொற்களையுடைய பிராட்டியின் நிமித்தமாய், அரக்கன் சேனை வந்து - இராக்கதனான இராவணன் போர்ப்படைகள் வந்து, ஏம் உற வளைத்தது என்று - உற்சாகத் தோடு வந்து போரிடத் தம்மை வளைத்துக்கொண்டன' என்று, உவகை எய்தினர் - மகிழ்ச்சி கொண்டனர்.

நேமி மால் வரை : 1151; இஃது உட்புறம் ஒளியும் வெளிப்புறம் இருளுங் கொண்டு, இவ்வண்டப் பரப்பைச் சூழ்ந்துள்ளதாகக் கருதப்பெறும் ஒரு மலைத்தொடர். தே - இனிமையும் ஆம்;

தேம் என்பதன் மகரவொற்று தொக்கது எனலும் ஆம். எம் - களிப்பு, உற்சாகம், கர்வல் என்னும் பலபொருளது. இராம லக்ஷ்மணர் உவகை எய்தியது, அவ் வரக்கர்களை அழித்துப் பிராட்டியை மீட்கலாம் என்ற துணிவால்; இனி, போர் நேர்ந்தது கண்டு வீரர் மனம் பூரிக்கும் இயல்பு பற்றியும் ஆம். கவந்தன் கரங்கள் நெருக்குவதை அரக்கர் சேனை நெருக்குவதாகக் கொண்டமையால் இச் செய்யுள் மயக்க அணியின் பாற்படும். மதிள் என்பது மதில் என்றதின் போலி.

பி - ம். 1. லரக்கர் சேனை.
2. தோமுற; வளைத்ததென்; வந்ததென்; றுவகை யெய்தியே.
3. வரவர நெருங்கு; வரவரை, வரையொடு.
4. கைம்மதிட்; லாய தென்றமர் தொடங்கினர். (7)

1138. இளவலை நோக்கின னிராம னேழையை
உளைவுசெ யிராவண னுறையு மூருமிவ்
வளவைய தாகுத லறிதி யையநம்
கிளர்பெருந் துயரமுங் கீண்ட தாமென்றான்.

இராமனும் - (அப்பொழுது) இராமபிரானும், இளவலை நோக்கினன் - தம்பியாகிய இலக்குவனைப் பார்த்து, 'ஐய - அப்பனே! ஏழையை - சீதையை, உளைவு செய் இராவணன் - வருத்துகின்ற இராவணன், உறையும் ஊரும் - இருக்கும் ஊரும், இ அளவையது ஆகுதல் - இவ் வெல்லையிடத்தே இருக்கிறது என்பது, அறிதி - நீ அறிவாயாக! (இதனால்), நம் கிளர் பெரும் துயரமும் - நமது வளர்ந்தோங்குவதான துன்பமும், கீண்டது ஆம் - பெயர்ந்தது ஆகும்,' என்றான் - என்று கூறினான்.

இராமபிரான் தம்பி இலக்குவனை ஐய, என்று விளித்தது, அன்பினால் என்க; இது மரபு வழுவமைதியாகும். ஏழை - பெண்; இஃது அபலை என்னும் பொருளது. அளவை - எல்லைப் பிரமாணமும் ஆம். 'இந்தப் பிரமாணம் அரக்கருக்கென அறி' என்பது பழையவுரை. கீண்டது - பெயர்ந்தது; 878.

பி - ம். 2. னுளையுமூரு.
3. வளவைய தாதலா, வளவயி னுயதோ; லறிதுமையநம்.
4. கிளைபெருந்துயர; பெருந் துன்பமும்; கீண்டாதாகுமால், கீண்டதாமன்றே. (8)

1139. முற்றிய வரக்கர்த முழங்கு தானையேல்
எற்றிய முரசொலி யேங்குஞ் சங்கொலி
பெற்றில தாமெனிற் பிறிதொன் றாமெனச்
சொற்றன னிளையவன் றொழுது முன்னின்றான்.

(அதற்கு), இளையவன் - தம்பி இலக்குவன், 'முற்றிய - நம்மைச் சூழ்ந்து படையெடுத்து வளைத்தவை, அரக்கர் தம் முழங்கு தானை எல் - இராக்கதர்களின் முழக்கஞ் செய்யும் சேனை ஆனால், எற்றிய முரசு ஒலி - தாக்கிய முரசங்களின் ஓசையும், ஏங்கும் சங்கு ஒலி - ஒலிக்கும் சங்குகளின் ஓசையும், பெற்று இலது ஆதலின் - இது பெறவில்லை ஆதலால், பிறிது ஒன்று ஆம் என - இது வேறொன்றே ஆகும்' என்று, சொற்றனன் - சொல்லி, தொழுது முன் நின்றான் - வணங்கி இராமபிரான் முன் போய் நின்றான்.

முற்றிய - முற்றுகை யிட்ட; அதாவது சூழ வளைத்துக் கொண்ட என்னலும் ஆம். முரசையுஞ் சங்கையுங் குறிப்பிட்டது அவை, போர்ப் படைக்குரிய சிறப்பான வாத்தியங்கள் ஆனமையால் என்க. முன் நின்றது; இராமபிரானுக்குப் பாதுகாவலாக என்க. இராமபிரான் கருதியதைக் காரணங் காட்டி இலக்குவன் மறுத்துக் கூறியதால் இச் செய்யுள் ஏதுவணியின் பாற்படும்.

பி - ம். 1. மூரி நாடெனில்; தானைமேல் எற்றிய முரசொடு.
2. யெங்குஞ் சங்கிசை; யேங்கு சங்கொலி.
3. பெற்றில தாகலிற்; பெற்றிலதாதலிற்.
4. சொற்றரு மனையவன்; தொழுது முன்னினான், தொழுது முன்னின்றே. (9)

1140. தெள்ளிய வமுதெழத் தேவர் வாங்கிய
வெள்ளெயிற் றரவந்தான் வேறோர் நாகந்தான்
தள்ளரும் வாலொடு தலையி னால்வளைத்
துள்ளுறக் கவர்வதே யொக்கு மூழியாய்.

(மேலும் இலக்குவன் இராமபிரானை நோக்கி), 'ஊழியாய் - ஊழியிலும் அழியாத பரம்பொருளாகிய பெருமானே! தெள்ளிய அமுது எழ - தெளிவான அமுதம் மேல் எழுந்து வரும்படியாக, தேவர் வாங்கிய - தேவர்கள் கயிறாகக் கொண்டு முன் கடைந்த, வெள் எயிற்று அரவம் தான் - வெள்ளிய பற்களையுடைய பாம்பாகிய வாசுகியோ, வேறு ஓர் நாகம் தான் - அல்லது வேறு ஒரு பாம்போ தான், தள் அரு வால் ஒடு - பிறரால் தள்ளி நீக்கமுடியாத தன்

வாலோடு, தலையினால் வளைத்து - தலையையும் கொண்டு சுற்றி வளைத்து, உள் உற கவர்வதே ஒக்கும் - தன்னுள்ளே அடையப் பற்றிக்கொள்வதே போல இஃது உள்ளதாகும்.

இச் செய்யுள் தொடர்ந்து அடுத்த செய்யுளோடு இயைந்து முடிவுறும். வேறோர் நாகம் - அவ் வாசுகியினும வேறுபட்ட பாம்பாகிய கார்க்கோடகன் அல்லது பிறிதும் ஆம். தன்னிடம் அகப்பட்ட பிராணியைப் பாம்பு தன் தலை வால் உற இறுக்கிச் சுற்றிக் கொல்லும் இயல்பின தென்பதைக் குறிப்பிட்டபடி. உள்ளுறக் கவர்வது - பற்றித் தன் வயிற்றினுள் இழுத்து விழுங்குதலும் என்க. பாம்பை வலித்துக் கடைந்தவர் தேவர் அசுரர் ஆகிய இருதிறத்தாரேனும், அவர்களுள் சிறப்பின்பாலாய்த் தேவரைக் குறிப்பிட்டது என்பதாம். இச் செய்யுளில் கவந்தன் கைகளுக்குப் பாம்பின் வாலும் தலையும் உவமைகள்.

பி-ம். 1. தெள்ளிய வயிரத்தோட் டேவர். 3. வாலொடும்.
4. நகர்வதே ; துள்ளுறுங் கவர்வதே ; யொக்கு மாழியாய். (10)

இருவரும் கவந்தன் எதிரிற் சென்றமை

1141. என்றிவை விளம்பிய விளவல் வாசகம்
நன்றென நினைந்தன னடந்த நாயகன்
ஒன்றிரண் டியோசனை யுள்புக் கோங்கலுன்
நின்றென விருந்தவக் கவந்த னேர்சென்றார்.

என்று இவை விளம்பிய - இவ்வாறு இச் சொற்களைக் கூறிய, இளவல் வாசகம் - தம்பியாகிய இலக்குவன் பேச்சினை, நடந்த நாயகன் - முன்நடந்து சென்றுகொண்டிருந்த தலைவனான இராமபிரான், நன்று என நினைந்தனன் - நல்லது என்று எண்ணினான் ; (ஆதலின் அவ்விருவரும்), ஒன்று இரண்டு யோசனை - ஓர் இரண்டு யோசனை தூரம், உள் புக்கு - அந் நெருக்கத்துள் புகுந்து சென்று, ஓங்கல் தான் நின்று என இருந்த - ஒரு மலைதான் அங்கு நின்றது என்று சொல்லும்படி இருந்த, அ கவந்தன் நேர் சென்றார் - அந்தக் கவந்தன் என்னும் அரக்கன் எதிரே போனார்கள்.

ஒன்றிரண்டு - ஒன்றிய இரண்டு என வினைத்தொகையாகவும், ஒன்றும் இரண்டும் என உம்மைத் தொகையாகவுங் கொள்ளலாம். ஓங்கல் - குணவாகுபெயர் ; காரணப் பெயராகவுங் கொள்ளலாம்.

பி-ம். 1. என்றன னியம்பியா ; என்றவ னியம்பிய.
2. நன்றே நினைந்தவன் ; நினைந்தெதிர் நடக்கும்.
3. ஒன்றுமேழ் யோசனை யுள்புக் கார்மலை.
4. னேர் சென்றான், னேர் கண்டார். (11)

### கவந்தனது தோற்றம் 1142-49

1142. வெயிற்சுட ரிரண்டினை மேரு மால்வரைக்
குயிற்றிய வாமெனக் கொதிக்குங் கண்ணினன்
எயிற்றிடைக் கிடையிரு காத மீண்டிய
வயிற்றிடை வாயெனு மகர வேலையான்.

வெயில் சுடர் இரண்டினை - வெயில் எறிக்கும் இரண்டு சூரியர்களை, மேரு மால் வரை குயிற்றிய ஆம் என - மகாமேரு மலையில் பதித்துள்ளன என்று சொல்லும்படி, கொதிக்கும் கண்ணினன் - (வெம்மையால்) கொதிக்கின்ற கண்களை யுடையவனும், எயிற்று இடைக்கு இடை - ஒவ்வொரு பல்லுக்கு இடையிலும், இரு காதம் ஈண்டிய - இரண்டு காததூரம் அடங்கியதும், வயிற்று இடை - அவன் வயிற்றின் நடுவேயுள்ளதுமான, வாய் எனும் - அவனுடைய வாய் என்று சொல்லப்பெறும், மகர வேலையான் - மகர மீன்களை யுடைய கடலை யுடையவனும்,

இதுமுதல், 1150 வரை ஒரு தொடராய் அமைந்து, வினை முடிவு கொள்ளும். கவந்தன் கண்களுக்கு இரண்டு சூரியர்களும், அவன் வாய்க்குக் கடலும் உவமைகள்; வெம்மையாலும் ஒளியாலும் கண்களுக்கு இரு சூரியர்களும், பெருமையும் ஆழமுடைமையும் பற்றி அவன் வாய்க்கு வேலையும் என்க. வாயெனு மகர வேலை: உருவகம். இதில், இல்பொருளுவமையணியும், தற்குறிப்பேற்றவணியும், உருவக அணியும் விரவி வந்துள்ளமை காண்க.

பி-ம். 2. குயிற்றிய தாமென; கண்ணினன்.
3. எயிற்றிடைக் கடை, எயிற்றினுக் கிடை; யெழுகாதம்; காத மீட்டிய. 4. வாயென. (12)

1143. ஈண்டிய புலவரோ டவுண ரிந்துவைத்
தீண்டிய நெடுவரைத் தெய்வ மத்தினைப்
பூண்டுயர் வடமிரு புடையின் வாங்கலின்
நீண்டன கிடந்தன நிமிர்ந்த கையினன்.

ஈண்டிய புலவர் ஓடு - ஒன்றுகூடி வந்த தேவர்களோடு, அவுணர் - அசுரர்கள், இந்துவை - சந்திரனை, தீண்டிய - அடைதானகப் பிணைக்கப்பெற்ற, நெடு வரை தெய்வ மத்தினை - பெரிய மந்தர மலை என்னும் தெய்வத்தன்மை வாய்ந்த மத்தை, பூண்டு - கொண்டு, உயர் வடம்-சிறந்த வாசுகி என்னும் பாம்பாகிய கயிற்றை, இரு புடையின் வாங்கலின் - இருபுறங்களிலும் இழுத்துக் கடை

தலின், நீண்டு என - அப்பாம்பு, நீண்டு கிடந்தது போன்று, கிடந்தன - கிடந்தவையான, நிமிர்ந்த கையினன் - நிமிர்ந்து நின்ற கைகளை யுடையவனும்,

புலவர் - தேவர்; பாற்கடலைக் கடைந்தபோது சந்திரனை அடை தூணாக வைத்து, மந்தர கிரியை மத்தாக நட்டு, வாசுகியாகிய பாம்பைக் கயிறாகக் கொள்ளப் பெற்றமை; பால. அகலிகை: *21, 23.* வாங்குதல் - இழுத்தல்; 'மத்த மொலிப்ப வாங்கி' (பெரும்பாண். *156*). கவந்தன் உடலுக்குக் கடல் கடைந்த மந்தர மலையும், அவன் கைகளுக்கு, அம் மலையிற் சுற்றி இருபுறமும் இழுத்துக் கடையப்பெற்ற வாசுகி என்னும் பாம்பின் இரு புறங்களும், உவமைகள்.

பி-ம். 1. டவுணர் யாவரும். 2. நெறிவரைத் தெய்வ.
3. பூண்டுறு வடமிரு புடையும் வாங்குற; புடையும் வாங்கலின்.
4. கிடந்தென நிமிர்ந்த, கிடந்து நிமிர்ந்த. *(13)*

**1144.** தொகைக்கனற் கருமகன் றுருத்தித் தூம்பெனப்
புகைக்கொடிக் கனலொடு பொடிக்கு மூக்கினன்
பகைத்தகை நெடுங்கடல் பருகும் பாவகன்
சிகைக்கொழுந் தெனவெதிர் திருகும் நாவினன்.

கருமகன் - கருங் கொல்லனது, தொகை கனல் - மிகுதியான நெருப்பை யுடைய உலையிடத்து, துருத்தி தூம்பு என - துருத்தி யின் துவாரம் போல, கனல் ஒடு கொடி புகை - நெருப்போடு கொடி போன்று நீண்டு படர்ந்து வரும் புகை, பொடிக்கும் - வெளியே தோன்றச் செய்யும், மூக்கினன் - மூக்கை யுடையவனும், பகை தகை - பகைமைத் தன்மையுடைய, நெடும் கடல் பருகும் - பெரிய கடல் நீரைக் குடிக்கும், பாவகன் - வடவை என்னும் தீயின், சிகை கொழுந்து என - சுவாலைகளின் கொழுந்து என்று சொல்லும் படி, திருகும் - சுழன்றுகொண் டிருக்கும், நாவினன் - நாக்கை யுடையவனும்,

கவந்தன் உடலில் உள்ள பசிக்கனல் அவன் மூக்குத் துவாரங் களின் வழியே, கொல்லன் உலையிலுள்ள துருத்தியின் வாய் வழியே வெளிவருவன போலக் கனலும் புகையுமாக வெளி வந்தது என்க. கருமகன் - கருமான் (கொல்லன்). தூம்பு - மதகின் உட் டொளை; உட்டொளைவாயுள்ள பொருள். கோபத்தால் அல்லது துயராற் பெருமூச்சு விடுதலுக்குக் கொல்லன் உலைத் துருத்தி

நெருப்பையும் காற்றையும் வெளியிடுவது உவமை; 'கொல்ல ஞாதுலைக் கனலென்ன வெய்துயிர்த்தான்'' (அயோத். கைகேசி சூழ்வினை : 12); 'ஊதுலைக் குருகி னுயிர்த்து'; (மணி. 2 : 43). பகைத் தகை நெடுங்கடல் என்றது தீக்குப் பகை நீராதலின். பர்வகன் - அக்கினி; யாவற்றையும் எரித்துப் பரிசுத்தமாக்குபவன் என்பதாம். வடவைத் தீ: பெண்குதிரை வடிவை யுடையதும் கடலில் உள்ளதுமான ஒரு தீச்சுடர்; இது கடல்நீரை வறளச் செய்யும் வலிமையுள்ளது என்பது புராண வரலாறு; இதைப் பூத தத்துவ அறிஞர்கள் உஷ்ண ஓட்டம் என்பர்.

பி - ம். 1, தொலைக்கு நற் கருமகன் றுருத்தி தாங்குநர், தொலைத்தநற்.
2. புகைப்படுங் கால்வரப், புகைக்கொடிக் கனலெனப்; காலொடு பொடிக்கு; புகைக்கொடிக் கனலொடும் புகைக்கும் மூக்கினன்.
3. பருகு பாவகன், பருகு மூழித்தீய்ச்.
4. சிகைக்கொழுந் தெழுந்தெனத்; திரியும் நாவினன், திரிந்த நாவினன், தெரிந்த நாவினன். (14)

1145. புரண்டர விடைவர வெருவிப் புக்குறை
அரண்டனை நாடியோ ரருவி மால்வரை
முரண்டகு முழைநுழை முழுவெண் டிங்களை
இரண்டுகூ றிட்டென விலங்கெ யிற்றினன்.

அரவு புரண்டு இடை வர - (இராகு என்னும்) பாம்பு புரண்டு தன்னிடத்து வர, வெருவி - அதனால் அச்சமுற்று, புக்கு உறை - புகுந்து தங்குவதற்குரிய, அரண் தனை நாடி - பாதுகாப்புள்ள ஓர் இடத்தை நாடினதாய், ஓர் அருவி மால் வரை - அருவிகளோடு கூடிய ஒரு பெரிய மலையிடத்து, முரண் தகு - வலிமை யுற்ற, முழை நுழை - குகையுள் நுழைந்த, முழு வெண் திங்களை - வெண்மையான முழு மதியை, இரண்டு கூறு இட்டு என - இரண்டு பகுதியாகத் துண்டித்து வைத்தது போன்று, இலங்கு எயிற்றினன் - வாயில் இருபுறமும் விளங்கும் வக்ர தந்தங்களை யுடையவனும்,

கவந்தன் வாய்க்கு வலிய மலைக் குகையும், அவ் வாயில் இரு புறமு மிருந்த கோணப் பற்களுக்கு, பூர்ண சந்திரனை இரு கூறிட்ட பாகங்களும் உவமைகள்; இது தற்குறிப்பேற்ற வணி. இனி, விலங்கு மெயிற்றினன் எனக்கொண்டு இருக்கவேண்டிய வரிசை

விட்டு விலகி வெளியே தோன்றும் பற்களை யுடையவன் என்னலும் ஒன்றும்.

பி - ம். 1. புரண்டு பாம்பிடை வர.
3. முரண்டரும் புழையென முழுவெண் டிங்களாங், முரண் டொரு, முரண்டொகு.
4. இரண்டு கூறுற்றென ; றிட்டன. (15)

1146. ஓதநீர் மண்ணிவை முதல வோதிய
பூதமோ ரைந்தினிற் பொருந்திற் றன்றியே
வேதநூல் வரன்முறை விதிக்கு மைம்பெரு
பாதகந் திரண்டுயிர் படைத்த பண்பினன்.

ஓதம் நீர் - குளிர்ந்த நீர், மண் - பூமி, இவை முதல ஓதிய - இவற்றை முதலாகக்கொண்டு சொல்லப்பெற்ற, பூதம் ஓர் ஐந்தினில் - ஐந்து பூதங்களினாலும், பொருந்திற்று அன்றியே - (இவன் உடல்) அமைந்தது அல்லாமல், வேத நூல் - வேத சாஸ்திரங்கள், வரன் முறை - வரிசைக் கிரமப்படி, விதிக்கும் - அமைத்துள்ள, ஐம் பெரும் பாதகம் - பஞ்ச மகா பாதகங்களே, திரண்டு உயிர் படைத்த - ஒன்றுசேர்ந்து ஓர் உயிரைப் பெற்ற, பண்பினன் - தன்மையுடையவனும்,

இக் கவந்தன் யாவரும் அடைந்துள்ள பஞ்ச பூதங்களால் ஆன உடலோடு அமையாமல், ஐந்து மகா பாதகங்களாலே அமைந்த தன்மை வாய்ந்தவன் என்பதாம். பூதம் ஐந்து; நீர், பூமி, காற்று, கனல், ஆகாயம் என்பன. ஐம் பெரும் பாதகம் : கொலை, களவு, பொய், கள்ளுண்டல், குரு நிந்தை என்பன ; காதல், சூதாடுதல், கள்ளுண்டல், பொய் மொழிதல், ஈதன் மறுத்தல் என்பனவும் ஆம்; நள. கலிதொடர் : 39. 'பொருந்திற்றன்றி', என்பதற்குப் 'பொருந்துதலோடு' என்றும் பொருள் கூறலாம்.

பி - ம். 1. முதலவாகிய. 2. பொருந்திற் றின்றியே; பொலியுமாற்ற லான். 3. மைம்பெரும், மப்பெரும்.
4. படைக்கும் பண்பினன். (16)

1147. வெய்யவெங் கதிர்களை விழுங்கும் வெவ்வரா
செய்தொழி லிலதுயில் செவியின் றெள்ளையான்
பொய்கிளர் வன்மையிற் புரியும் புன்மையோர்
வைகுறு நரகையும் நகும்வ யிற்றினன்.

வெய்ய வெம் கதிர்களை - வெப்பமுடையதும் விரும்பத்தக்கது மான, (அதாவது குளிர்ச்சியுடையதுமான), சூரிய சந்திரர்களை

விழுங்கும் - உட்கொள்ளும், வெம் அரா - கொடிய இராகு கேதுக்கள் என்னும் பாம்புகள், செய் தொழில் இல - தாம் செய்யும் தொழில்கள் அற்றனவாய், துயில் - தாம்வந்தடைந்து தூங்குவதான, செவியின் தொள்ளையான் - செவித் தொளைகளையுடையவன்; கிளர் வன்மையின் - மேலோங்கிய கொடுமையால், பொய்புரியும்-பொய் பேசுதல் முதலான தீய செயல்களைச் செய்யும், புன்மையோர் - அற்பர்கள் (அல்லது பாவிகள்), வைகுறும் - தங்கி வருந்தும், நரகையும் - நரகத்தையும், நகும் - தன்னிற் குறைவுற்றதென்று (அதாவது ஒப்பாகாது என்று) இழிவுபடுத்தி நகைக்கும், வயிற்றினன்-வயிற்றையுடையவன்.

கவந்தன் - இராகு கேதுக்கள் தம் செயலற்றுத் தங்கியிருக்கும் இடமாகக் கொண்ட செவித்துவாரங்களையும், பஞ்ச மகாபாதகர்கள் போய்த் தங்குமிடமான கொடிய நரகத்தைவிடக் கொடியதான வயிற்றையும் உடையவன் என்பதாம். நரகில் பல பிராணிகள் விழுந்து தவித்தாலும், பின் ஒருகால் அவை மீள்வதுண்டு; ஆனால் இக்கவந்தன் வயிற்றிற் பல கோடிப் பிராணிகள் புகுத்தப்பெற்று அவைமீளாமல் இறந்தனவே ஆதலினாலும், தீமைசெய்த பிராணிகள் மட்டுமன்றி அகப்பட்ட எல்லாப் பிராணிகளும் பேதமின்றி ஒருங்கே அழிவுறும் இடமாகஉள்ளது ஆதலானும், கவந்தன் வயிறு நரகினுங் கொடிது என்க. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. பேய் அரக்கர் முதலியவர்களின் செவித் தொளைகளில் பாம்புகள் புகுந்து வசித்தல்; முருகு: 49-50; தக்க. 123; கலிங்கத்: 127. பொய் புரியும் புன்மையோர்; பொய்யைமட்டும் கூறி நிறுத்தியது, பொய்புரிதல் மற்ற பாவங்களுக்கு வித்திட்டது போன்றது ஆதலால்.

பி-ம். 1. வெய்யவெஞ் சுடரினை; விழுங்கு வெவ்வரா.
2. செய்தொழிலில, சென்னியான்; பையவே செவியினில் வாழும் பான்மையான்.
3. பொய்கிளர் நாவினிற் புகலும் புன்மையோர், புரியும் பொய்மையோர்.
4. கையுறு கவற்சியான், காயுமுள்ளத்தான்; நகுவயிற்றினன். (17)

1148. முற்றிய வுயிரெலா முருங்க வாரித்தான்
பற்றிய கரத்தினன் பணைத்த பண்ணையில்
துற்றிய புகுதரு தோற்றத் தானமன்
கொற்றவாய் தற்செயல் குறித்த வாயினன்.

(அக்கவந்தன்), முற்றிய - தான் சூழ்ந்து வளைத்துக்கொண்ட, உயிர் எலாம் - பிராணிகள் அனைத்தையும், முருங்க - அழிய, தான்

வாரி பற்றிய - தான் வாரிப் பிடித்துக்கொண்ட, கரத்தினன் - கைகளையுடையவனாய், பணைத்த பண்ணையில் - பருத்த தொகுதியாக, துற்றிய - திணிக்கப்பெற்ற பிராணிகள், புகு தரும் தோற்றத்தால் - (அவன் வயிற்றுள்) புகும் காட்சியால், நமன் கொற்ற வாய் தன் செயல் - யமனுடைய வலிமை (அல்லது காவன் மிக்க) நகர வாயிலின் செயலை, குறித்த - உவமையாகக் குறித்த, வாயினன் - வாயை யுடையவனும்,

கவந்தன் வாய்க்கு யமனது நகர வாயில் ஒப்பு. பண்ணை - கூட்டம்.

பி - ம். 2. பணைத்த வாக்கையாள்.

3. துற்றிய கரிகளைத் தூக்கி வாயிடை, துற்றிடப் புகுதரு, துற்றியுட் புகுதகு, புகுதரும் ; தோற்றத்தால் யமன்.

4. யுற்றுண்டு தேக்கிடுமூக்கம் பெற்றுளான் ; கொற்றவாயிற் செயல். (18)

1149. ஓலமார் கடலென முழங்கு மோதையான்
ஆலமே யெனவிருண் டழன்ற வாக்கையான்
நீலமால் நேமியிற் றலையை நீக்கிய
காலநே மியைப்பொருங் கவந்தக் காட்சியான்.

(மேலும் அக் கவந்தன்), ஓலம் ஆர் - ஆரவாரம் மிகுந்த, கடல் என - கடலைப் போல, முழங்கும் ஓதையான் - பேரொலி செய்பவனும், ஆலமே என - ஆலகால விஷமே என்று சொல்லும் படி, இருண்டு அழன்ற ஆக்கையான் - கருநிறமும் கொதிப்பும் கொண்ட உடலையுடையவனும், நீல மால் நேமியில் - நீல நிறமான திருமால் தன் சக்கராயுதத்தினால், தலையை நீக்கிய - தலையை அறுத்துத் தள்ளிய, கால நேமியில் - கால நேமி என்னும் அசுரனைப் போல, பெரும் கவந்த காட்சியான் - பெரிய கவந்தமான தோற்றத்தையுடைவனும்,

கவந்தன் உடலின் நிறத்திற்கு ஆலகாலம்; ஆலகாலம், நிறத்திற்கும் கொடுமைக்கும் உவமை; 372. கால நேமி; இவன் ஓர் அசுரன் ; நூறு கைகளும் நூறுதலைகளும் உடையவன்; இவன் திருமாலை எதிர்த்துப் போரிட அத்திருமால் தனது சக்கரப் படையை யேவி அவன் தலைகளை அறுத்துக் கவந்தமாக்கினார்; இக்கால நேமியே பின் கம்ஸனாகப் பிறந்தான் என்பர்; இச்செய்தியை முன் அயோத், சித்திரகூடப் ; 40; ஸ்ரீ பாகவதபுராணம்; திருச்சந்த விருந்தம், 31

முதலியவற்றிற் காண்க. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐய ரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. முழங்கு மோசையான்.
2. ஆலமாமென; வழன்றிருண்ட. 3. மேருவிற்றலையை.
4. காலமேனியிற் பொருங், காலமே மெய்ப்பெருங், கால நேமி போற். (19)

இராமலக்ஷ்மணர் கவந்தனைக் கண்டு வியத்தல் 1150—2.

1150. தாக்கிய தணப்பில்கா லெறியத் தன்னுடை
மேக்குயர் கொடுமுடி யிழந்த மேருநேர்
ஆக்கையி னிருந்தவன் றன்னை யவ்வழி
நோக்கின ரிருவரு நுணங்கு கேள்வியார்.

தணப்பு இல் கால் - நீக்க முடியாத பெருங்காற்று, தாக்கிய எறிய - தாக்கி வீசி யடிக்க, தன் உடை மேக்கு உயர் - தன்னுடைய மேலே உயர்ந்து விளங்கிய, கொடுமுடி - உயர்ந்த சிகரங்கள், இழந்த - முன் இழந்துபோன, மேரு நேர் - மேரு மலைக்கு ஒப்பாக, இருந்தவன் தன்னை - உடலோடு இருந்த அக்கவந்தனை, நுணங்கு கேள்வியார் இருவரும் - நுட்பமான அறிவியல்களைக் கேட்டுணர்ந்த அவ்விராம லக்ஷ்மணர் இருவரும், அ வழி-அவ்விடத்தில், நோக்கினர் - கண்டனர்.

கவந்தனது தலையற்ற உடலுக்குச் சிகரமற்ற மேருமலை உவமை. மேரு சிகரமற்ற வரலாறு :-முன்னொரு காலத்தில் ஆதி சேடனுக்கும் வாயு தேவனுக்கும் தம்முள் யார் பலவான் என்பதான போட்டி ஏற்பட, அன்னோர், வாயுதேவன் அம்மலைச் சிகரங்களைப்பூறித் தெறிவது என்றும், ஆதிசேடன் அச்சிகரங்கள் பெயர்க்கப் பெறுமல் தன் படத்தால் மறைத்துத் தடுப்பது என்றும் தீர்மானித்துத் தேவர் முன்னிலையில் அவர்கள் அப்போட்டியில் ஈடுபட்டனர், முடிவில் அம்மேரு மலைச் சிகரங்களில் மூன்று அவ்வாதிசேடன் காப்பினின்றும் வாயுதேவனால் பறிக்கப்பெற்றுத் தெற்கே கடலின் நடுவில் போய் விழுந்தன. விழுந்த அம்மூன்று மலைக் குவடுகளின் மீதே பின் இலங்கைத்தீவு உருவாயது என்பதும், அதனல் அதற்குத் திரிகூட மலையெனப் பெயர் வந்தது என்பதும் வரலாறு ஆகும்; இச்செய்தி, சுந்தர. 24, 28 செய்யுட்களில் உணர்த்தியுள்ளமை காண்க: நுணங்கு கேள்வி ; குறள். 419.

பி-ம். 1. தணிப்பில் கால். 2. யிருந்த மேருநேர், யிழிந்த மேருநேர்'
3. னிருந்தனன் றன்னை. (20)

**1151.** நீர்புகு நெடுங்கட லடங்கு நேமிசூழ்
பார்புகு நெடும்பகு வாயைப் பார்த்தனர்
சூர்புக வரியதோ ரரக்கர் தொன்மதில்
ஊர்புகு வாயிலோ விதுவென் றுன்னினார்.

நீர் புகு - பெய்யும் மழை நீர் ஆறுகளாய்ப் பெருகிவந்து புகுமிடமான, நெடும் கடல் அடங்கு-நீண்டு பரந்த கடல்கள் யாவும் தன்னுள் அடங்கும்படி கொண்ட, நேமி சூழ்-சக்கரவாளகிரி சூழப்பெற்ற, பார் புகு - பூமி புகும்படியான, நெடும் பகு வாயை - நீண்டு திறந்து விளங்கிய கவந்தனது வாயை, பார்த்தனர் - அந்த இராமலக்ஷ்மணர் கண்டார்கள்; 'சூர் புகல் அரியது ஓர் - சூரியன் புகமுடியாத ஒரு, அரக்கர் - இராக்கதர்தம், தொல் மதில் ஊர் - பழமையான மதில்கள் சூழப் பெற்ற இலங்கை நகரத்துள், புகு - புகுவதற்கு இடமாக உள்ள, வாயிலோ இது என்று-வாயில் இதுதானோ' என்று, உன்னினார் - அவர்கள் கருதினர்.

நேமி மால்வரை உலகைச் சூழ்ந்துள்ளது; 1137. சூர் - சூரியன்; சூரியனுக்குள்ள பெயராகிய சூரன் என்ற பெயர் இங்குச் சூர் எனக் குறைந்து வந்தது; இது தொகுத்தல் விகாரம். இலங்கையில் சூரியன் புகமுடியாமை; சுந்தர. 116, 118, 158, 169, 193, 687. இனி, சூர் என்பதற்கு தேவர் என்ற பொருள்கொண்டு இலங்கை, தேவர் பகைமையுடன் புகமுடியாத நகர் எனப்பொருள் கொண்டாரும் உளர். சூர் - அச்சமும் ஆம்.

பி-ம். 1. நெடு கடலொடுங்கு, நெடுங்கடலொடு நேமிசூழ்,
2. நெடும் பெருவாயைப் பார்த்தனன்.
3. லரியபோரரக்கர்,
4. வாயிலோ வீதென்றுன்னினார்; றுன்னினான், றுன்னுவார். (21)

**1152.** அவ்வழி யிளையவ னமைந்து நோக்கியே
வெவ்விய தொருபெரும் பூதம் வில்வலாய்
வவ்விய தன்கையின் வளைத்து வாய்ப்பெயும்
செய்வதெ னிவணெனச் செம்மல் செப்புவான்.

அ வழி - அவ்விடத்து, இளையவன் - தம்பியாகிய இலக்குவன், அமைந்து நோக்கியே (அக்கவந்தனைப்) பொருந்த நிதானமாகப் பார்த்து, (இராமபிரானை நோக்கி), 'வில் வலாய் - விற்போரில் வல்ல பெருமானே! வெவ்வியது ஒரு பெரும் பூதம் - கொடியதான இப் பெரியதொரு பூதம், வவ்விய - தான்பற்றிக்கொண்ட பிராணிகளை, தன் கையில் வளைத்து - தன் கைகளுள் வளைத்துப் பிடித்து, வாய்

பெயும் - வாயிற் போட்டுக்கொள்வது ஆகும்; இவண் செய்வது என் என - (ஆதலின்), நாம் இனிச் செய்யக்கூடியது யாது?' என்று, கூற, செம்மல் செப்புவான் - இராமபிரான் பின் வருமாறு மறுமொழி சொல்லலானன்.

இதன் பின் அடியிற் குறித்துள்ள ஒரு பாடல் சில சுவடிகளிலும் அச்சுப் பிரதிகளிலுங் காணப்பெறுகின்றது. அது சிறந்த பழைய எட்டுப் பிரதிகளில் இல்லாமையோடு, அவ்விடத்திற்குப் பொருத்தமின்றி முரண்பாடாகவும் காணப்பெறுவதால் அதனைப் பாடவரிசையிற் கொள்ளவில்லை.

பாரிட மேயிது பரவை சுற்றுறும்
பாரிட மரிதெனப் பரந்த மெய்யது
பாரிடம் வலம்வரப் பரந்த கையது
பாரிடந் தெடுத்தமா வனைய பாழியாய்.

பி-ம். 1. னயிர்த்து நோக்கியே, னமர்ந்து நோக்கியே; நோக்கினன், நோக்கிய.
2. வெவ்வழி யொரு பெரும்,
3. தன் வயிறடைய வாய்ப்பெய்யும்; தெவ்வழி தன்கையிற் றிருகி வாய்பெயின்.
4. செய்வதென்னி வனெனச், செய்வதென் மகியெனச், செவ்வழியிலதெனச், செய்வதையிது வெனச். (22)

இராமபிரான் கவந்தனுக்கு இரையாகத் துணிதல் 1153—6.

1153. தோகையும் பிரிந்தன ளெந்தை துஞ்சினன்
வேகவெம் பழிசுமந் துழல வேண்டிலேன்
ஆகலின் யானினி யிதனுக் காமிடம்
ஏகுதி யீண்டுநின் றிளவ லாண்டென்றான்.

'இளவல் - தம்பீ! தோகையும் பிரிந்தனள் - (மயில் போன்ற சாயலையுடைய) சீதையும் பிரிந்து போனாள்; எந்தை துஞ்சினன் - (அச்சீதையை மீட்கப் போர் புரிந்து) என் தந்தையாகிய சடாயுவும் இறந்துவிட்டான்; வேக வெம் பழி சுமந்து - விரைவில் தொடர்ந்து வந்துள்ள இக்கொடிய நிந்தனைகளைத் தாங்கிக்கொண்டு, உழல - திண்டாடி வருந்த, வேண்டலேன் - யான் விரும்புவேனல்லேன்; ஆகலின் - ஆகையால், யான் இனி இதனுக்கு ஆமிடம் - யான் இனி இந்தப் பூதத்திற்கு உண்ணும் மாமிசம் ஆவேன்; ஈண்டு நின்று ஏகுதி - நீ இவ்விடம்விட்டு (ஊருக்குத்) திரும்பிச் செல்வாயாக' என்றான் - என்று இராமபிரான் கூறினன்.

தோகை; இருமடியாகு பெயராய்ப் பிராட்டியைக் குறித்தது. எந்தையும் என்பதில், உம்மை தொக்கது. வெம்பழி சுமந்து வேக வுழல என இயைத்து, வேகவும் உழலவும் எனப் பொருள் கொள்ளலுந் தகும். ஆமிடம்; ஆமிஷம் என்ற வடசொல்லின் திரிபு; சுந்தர. 67: இனி ஆம் இடம் எனப் பிரித்துப் பொருள் கொண்டாரும் உளர்.

பி-ம். 1. அஞ்சினன். 2. வேண்டலென்.
3. ஆகுவதாக யானதனுட் புக்குவேன், ஆகலும் யானினியித னுக்; காகிடம், காயிடம்.
4. ஏகுதியிளவல்நீ யென்று கூறினன், நிளவ னீயென்றான், நிளவலாண்டென்றான். (23)

1154. ஈன்றவ ரிடர்ப்பட வெம்பி துன்புறச்
சான்றவர் துயருறப் பழிக்குச் சான்றுமாய்த்
தோன்றலி னென்னுயிர் துறந்த போதலால்
ஊன்றிய பெரும்படர் துடைக்க வொண்ணுமோ.

'ஈன்றவர் - என்னைப் பெற்ற தாயரும் தந்தையும், இடர் பட - துன்பத்திற்குள்ளாகவும், எம்பி - என் தம்பியாகிய பரதன், துன்புற - வருந்தவும், சான்றவர் துயர் உற - வசிட்டர் முதலான மேலோர்கள் துக்கத்திற்குள்ளாகவும், பழிக்கு - நிந்தனைக்கு, சான்றும் ஆய் - ஓர் எடுத்துகாட்டுமாகி, தோன்றலின் - யான் பிறந்துள்ளேன் ஆதலின், என் உயிர் துறந்தபோது அலால் - என் உயிரை நான் விட்டு நீத்தபோது அல்லாமல், ஊன்றிய - அழுந்தி நிலைபெற்ற, பெரும் படர் - எனக்கு ஏற்பட்டுள்ள இப்பெருந் துன்பங்களை, துடைக்க ஒண்ணுமோ - நீக்க முடியுமோ? (முடியாது என்றபடி).

பி-ம். 1. ஏன்றவ ரிடர்ப்பட.
2. தயருறத் தரிக்குஞ் சரதன் யான்; பழிக்குஞ் சார்வுமாய்த்.
3. தோன்றவே யென்னுயிர்.
4. யொழிக்க வொண்ணுமோ. (24)

1155. இல்லியல் புடையநீ ரளித்த வின்சொலாள்
வல்லிவல் லரக்கர்தம் மனையு ளாளெனச்
சொல்லிநன் மலையெனச் சுமந்த தூணியன்
வில்லினன் செல்வனே மிதிலை வேந்தன்பால்.

'இல் இயல்பு உடைய நீர் - இல்லற ஒழுக்கத்திற்கு உரிய தன்மையை, அளித்த - போற்றிப் பாதுகாத்துவந்த, இன் சொலாள் -

இனிய சொற்களையுடையவளும், வல்லி - கொடி போன்றவளுமான சீதை, அரக்கர் தம் மனை உளாள் என - (என்னிடமிருந்து அபகரிக்கப்பட்டு) இராக்கதர் வீட்டில் இருக்கிறாள் என்று, மிதிலை வேந்தன் பால் சொல்லி - மிதிலைக்கரசரான ஜனகரிடம் சொல்லிக்கொண்டு நல் மலை என சுமந்த - பெரிய மலையைப் போலச் சுமந்துள்ள, தூணியன் வில்லினன் - அம்புப் புட்டிலையும் வில்லையுமுடையவனாய், செல்வனோ-போவேனோ ?- (போகமாட்டேன் ; இப்பொழுதே இறந்து படுவேன் என்றபடி).

சுமந்த ; பகைவனை எதிர்த்துப் போர் செய்யமாட்டாது வலியின்றி வீணே சுமந்த. மலை, தூணிக்கும் வில்லுக்கும். தூணியும் வில்லும் பயனின்றிச் சுமந்ததாகக் கூறியது ; ஒப்பு : அயோத். நகர் நகர் நீங்கு : *139*. மிதிலை வேந்தன்பாற் செல்வனோ ; மனைவியைப் பகைவன் அகரித்துச் செல்லவிட்டு, வீரர்க்குரிய ஆயுதங்களைத் தாங்கி, அம்மனைவியின் தந்தைமுன் செல்வது மிக இழிவன்றோ என்பதாம். இனி, நீர் அளித்த என்பதற்கு, நீரோடு தாரை வார்த்தளித்த என்று பொருள்கொள்ளலும் ஏற்கும் ; மேலும் நீர் அளித்த என்பதற்கு, நீவிர் எனக்கு அளித்த எனலும் ஆம். நீர் - நீவிர் : *1166*.

பி-ம். 1. வின்சொலாம், வின்சொலின்.
2. வல்லியவ்வரக்கர், வல்லி வல்லரக்களுர் வாழ்கின் றாளெனச்.
3. சொல்லினன், சொல்லினென்.
4. வில்லினென். (25)

1156. தளையவிழ் கோதையைத் தாங்க லாற்றலன்
இளைபுரந் தளித்தன்மே லிவர்ந்த காதலன்
உளனென வுரைத்தலி னும்ப ரானென
விளைதனன் றாதலின் விளித னன்றென்றான்.

'தளை அவிழ் கோதையை - முருக்கவிழ்ந்து மலர்ந்த மாலையை அணிந்த சீதையை, தாங்கல் ஆற்றலன் - காப்பாற்ற முடியாதவன் ; (அப்படியிருந்தும்), இளை புரந்து அளித்தல் மேல்-பூமியைப் பாதுகாத்து ஆட்சி செய்வதின் மீது, இவர்ந்த காதலன் - மேல் எழுந்த ஆசையுடையவனாக, உளன் - உள்ளான்' என்று, உரைத்தலின் - பிறர் இழிவாக என்னைக் கூறுவதினும், உம்பரான் என விளைதல் - இறந்து வானுலகஞ் சென்றான் என்ற சொல் உண்டாதல், நன்று ஆதலின் - நல்லது ஆதலால், விளிதல் - (நான்)

இறந்துபடுதல், நன்று என்றான் - பெரிதும் நல்லதாகும்' என்று இராமபிரான் தன்னைநொந்து கூறிக்கொண்டான்.

இளை - பூமி; "இளையெனுந் திருவினை யேந்தினன்", (அயோத். கிளை கண்டு நீங்கு : 119); பூமிதேவியின் நாயகனான திருமாலுக்கு, இளாபதி என்ற திருநாமம் ஒன்றுள்ளமையும் நோக்குக. இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 1. லாற்றலென்.
2. இளைபுரந்த தனின்மேல்; காதலேன்.
3. வளனுடைத் தாதலின் மாள்கை நன்றென்றான்; விளிதனன் றரோ; (26)

வேறு

இலக்குவன் கூற்று 1157–64.

1157. ஆண்டா னின்ன பன்னிட வையற் கிளவீரன்
ஈண்டா யுன்பின் னேயின செய்தே யிடர்வந்து
மூண்டான் முன்னே யாருயி ரோடு முடியாதே
மீண்டே போதற் காமெனி னன்றென் வினையென்றான்.

ஆண்டான் - யாவர்க்குந் தலைவனான இராமபிரான், இன்ன - இவ்விதமாக, பன்னிட - வருந்திக் கூற, ஐயற்கு - தமையனான அப்பெருமானுக்கு, இளவீரன் - இளைய வீரனான இலக்குவன், 'உன் பின் - நும்பின்னே, ஈண்டு ஆய் - இவ்வனத்திற்கு வந்து, ஏயின செய்தே - நீவிர் கட்டளையிடுவனவான பணிகளைச்செய்து முடித்தே, இடர் வந்து மூண்டால் - இங்கு ஏதேனும் ஆபத்து பெரிதாய் வந்து சூழுமேல், முன்னே - உமக்கு முன்னதாக, முடியாதே - நான் இறந்திடாமல், ஆர் உயிர் ஒடு - அரிதாகக் கொண்ட என் உயிரோடு, மீண்டே போதற்கு ஆம் எனில் - திரும்பிச் செல்வதற்கே தகுதியுடையவனாவனேல், நன்று என் வினை - என் அடிமைத் தொழில் சிறப்புடைத்தாகும் அல்லவா?' என்றான் - (என்று வருந்திக் கூறினன்.

இச்செய்யுளில் ஆண்டான் அடிமையென்னும் வைணவ சம்பிரதாயக் கொள்கைப் எடுத்தாளப் பெற்ற சிறப்புண்மை காண்க. ஐயன் - தமயன் (பிங்); 'முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர்' (பு. வெ. 176). நன்றே; எதிர்மறை வினப்பொருளில் வந்தது. 'உன் பின்னேயின செய்தே யிடர்வந்து மூண்டான் முன்னே ஆருயிரோடு முடிதல்' என்றது, சுமித்திராதேவி வனம்புகுமுன் இலக்குவனுக்கு இட்ட கட்டளை; அதனை இங்கு இலக்குவன் எடுத்துக்காட்டித் தான்

மீள்வது தாய் சொற்றுறத்தலாகும் என்றும் குறிப்பிட்டதாகும்; *1160*; அயோத். நகர் நீங்கு: *160-51*.

பி-ம். 1. ஆண்டா னின்னன, ஆண்டா னன்ன; பன்னலு.
2. ஈண்டியா; றுன்பின்னேயெ பின்னிவ், ஈண்டா னுன்பின் னெய்தின செய்தே யிடர்வந்து.
4. ஈண்டே; னின்றென்வினை யென்றான். (27)

1158. என்று னன்னுன் பின்னு மிசைப்பா னிடர்தன்னை
வென்று ரன்றே வீரர்க ளாவார் மேலாய
தன்றாய் தந்தை தம்மு னெனுந்தன் மையர்முன்னே
பொன்று நின்று னீங்குவ தன்றே புகழம்மா.

என்றான் அன்னான் - என்று கூறிய அவ்விலக்குவன், பின்னும் இசைப்பான் - மேலுங் கூறுவானானான்; (அதாவது), 'இடர் தன்னை - தமக்கு ஏற்பட்ட துன்பத்தை, வென்றார் அன்றே - வென்று கடந்தவர் அல்லரோ, வீரர்கள் ஆவார் - உண்மை வீரர்கள் ஆவர்', (அவ்வாறின்றி), தன் தாய் தந்தை தன் முன் எனும் - தன் தாயார், தகப்பனார், தன் தமயன் என்று சொல்லப்பெறும், தன்மையர் - நிலையுடைய பெரியோர்கள், முன்னே - தனக்கு முன்னே, பொன்ற - இறந்துபோக, நின்றால் - தான்மட்டும் உயிருடன் வாழ்ந்து நின்றால், புகழ் நீங்குவதன்றே - அவ்வாறு நிற்பவன் புகழ் நீங்குவதாகும் அல்லவோ? அம்மா: இரக்கத்தை யுணர்த்தும் இடைச்சொல்.

இங்கு இலக்குவன் இரண்டு கருத்துக்களைக் கூறுவது காண்க. அவை, துன்பம் வரும்போது அதை எதிர்த்து நிற்பதே வீரலக்ஷணம் என்பதும், மூத்தோர்க்கு வரும் துன்பத்தை இளையோர் தாம் ஏற்றுநின்று அதைத் தடுக்காமலிருப்பது பழியாகும் என்பதும் ஆகும். அவ்வாறு கூறியதால் இறக்கத் துணிந்த இராம பிரானைத் தடுத்ததும், இலங்குவன் தான் முன் இறக்கச் சித்தமாய் இருப்பதும் வெளிப்படுவன காண்க. *1160* ஐயுங் காண்க. 'இந்தக் கவிக்கு, உலகத்தில் தன் தாய் முதலான பேர்க்கு இடர் வந்தால் சாராதவர்க்குப் புகழ் நீங்காதோவெனப் பொருள்' என்பது பழையவுரை.

பி-ம். 1. என்று னென்றும், என்று னென்னப், என்று னென்னுப், என்று னின்னே, என்றே யின்னே, என்றே னென்னே.
2. வென்று ரன்றே; வீரர்களாவார் விரவாரார், விரவாதார் விரவாரால்; மேலாய் நீ.

3. தம்முன்னெனுஞ் சொற்றகையோர் முன், தம்முடனென்னுர் தன்மையர்.

4. பொன்ருனென்ருல் ; நின்ருனென்றலின்மேலும் புகழுண்டோ. (28)

**1159.** **மானே யன்ன டன்னெடு தம்முன் வரையாரும்**
**கானே வைகக் கண்டுயில் கொள்ளான் றனிகாத்தற்**
**கானு னென்னே யென்றவர் முன்னே யவரன்றித்**
**தானே வந்தா னென்றபின் வேருேர் தவறுண்டோ.**

'மானே அன்னுள் தன் ஒடு - ஒரு மான் போன்றவள் என்று சொல்லத்தக்க பிராட்டியோடு, தம் முன் - தம் தமயனுன இராம பிரான், வரை ஆரும் - மூங்கில்கள் நிறைந்த, கானே வைக - காட்டில் போய்த் தங்கி இருக்க, கண் துயில் கொள்ளான் - கண்ணுறக்க மற்றவனுய், தனி காத்தற்கு ஆனுன் - ஒப்பற்ற பாதுகாப்பவனுக ஆயினுன்', என்னே என்றவர் - இது ஆச்சரியம் என்று சொல்லி என்னைப் பாராட்டியவர்கள், முன்னே - அன்னேர் முன்னே, அவர் இன்றி - அந்த இராமபிரானும் பிராட்டியும் இல்லாமல், தானே வந்தான் - தான் மட்டும் (நகருக்குத் திரும்பி) விட்டான், என்ற பின் - என்று சொல்லி இகழும் நிலை வந்த பிறகு, வேறு ஓர் தவறு உண்டோ - அதைவிட எனக்கு நேரக்கூடிய பிறிதொரு தவறும் உண்டாகுமோ ? (ஆகாது என்றபடி).

பிராட்டிக்கு மான். தம் முன் என்று பன்மையிற் கூறியது, பரத சத்துருக்னர்களையும் உடன் கூட்டியது என்னற்பாலது. வரையாருங் கான் - மலையடர்ந்த கானமும் ஆம். தன்னைப் பாராட் டியவரே இகழ்தற்குரிய நிலை வந்தால், அதனிலும் தனக்கு அவ மானமும், தவறும் பிறிதில்லை என்று இலக்குவன் கூறினுன் என்க. இலக்குவனை அயோத்தியில் உள்ளார் பாராட்டியது; அயோத். நகர் நீங்கு : *106, 192.* இலக்குவன் துயிலாமற் பாதுகாத்தமை ; *1048 ;* குறிப்.

பி - ம். 2. கொள்ளா தயர்வெய்த, கொள்ளா தயல் காத்தற்.

3. கானுனின்னே, கானுனென்னே, கானுனன்றே ; யின்றவர் முன்னே, யீன்றவர் முன்னே ; யின்றவர் தாமே வரவின்றி, யதுவன்றித்.

4. னன்றேேர் தவறுண்டோ, னென்றலின் வேருேர்தக வுண்டோ. (29)

1160. என்று முன்முன் னேயின யாவும் யிசையின்னல்
பின்று தெய்திப் பேரிசை யாளற் கழிவுண்டேல்
பொன்று முன்னம் பொன்றுதி யென்று ளுரைபொய்யா
நின்று லன்றே நின்றது வாய்மை நிலையம்மா.

'என் தாய் - என் தாயாகிய சுமித்திராதேவி, (என்னை நோக்கி), 'உன் முன் - உன் தமயனாகிய இராமன், ஏயின யாவும் - இட்ட கட்டளைகளை யெல்லாம், இசை - ஏற்று நடப்பாயாக! இன்னல் - அவனுக்கு ஏற்படும் துன்பங்களுக்கு, பின்றுது - நீ பின்வாங்கி யிராமல், எய்தி - அவற்றை நீ முன் ஏற்றுக்கொண்டு, பேர் இசை ஆளற்கு - பெரும் புகழுக்குரிய இவ்விராமனுக்கு, அழிவு உண்டேல் - அழிவு வரும் என்று உனக்குத் தோன்றினால், பொன்று முன்னம் பொன்றுதி - அவன் இறந்துபோகும் முன்னமே, நீ இறந்து போவாயாக!' என்றாள் - என்று எனக்குக் கட்டளை யிட்டுள்ளாள்; உரை பொய்யா நின்றால் அன்றே - அந்த என் அன்னையின் கட்டளை தவறாமல் நான் நடந்துகொண்டால் அல்லவோ, வாய்மை நிலைநிற்பது - எனது ஸத்திய விரதம் நிலை நிற்பதாகும்? (அம்மா: இரக்கத்தை யுணர்த்தும் இடைச்சொல், அல்லது அசை நிலையாகவும் கொள்ளலாம்.)

இராமபிரான் 'அயோத்திநகர் நீங்கி வனவாசம் செய்யப் புறப் பட்டபோது இலக்குவனை நோக்கி, அவன் தாய் சுமித்திராதேவி கூறியவை; அயோத். நகர் நீங்கு: 150, 151. இங்கு வாய்மை யென்பது, தாயின் வாய்ச்சொல்லாகிய கட்டளை எனலும் ஆம். இக்கருத்தையே இலக்குவன் முன், 1158 இலும் கூறியது காண்க.

பி - ம். 1. என்றுய் முன்னே சொல்வின ளெற்காங் கிடரேதும், என் றுயும் முன்; யேவிய யாவும், யேயுனயாவும்.
2. பின்று தெய்திற் பேரறிவாளற் கறிவுள்ளோன்; மிசையின்னல்; பின்று செய்தி, பின்று ரெய்திற்; கிழிவுண்டோ.
3. யுரை பொய்யால்; எது பொய்யா. (30)

1161. எற்பெற் றாளும் யானு மெனைத்தோர் வகையாலும்
நிற்பெற் றாட்கு நிற்கு நினைப்பும் பிழையாமல்
நற்பொற் றோளாய் நல்லவர் பேண நனிநிற்கும்
சொற்பெற் றான்மற் றுருயிர் பேணித் துறவேமால்.

'நல் பொன் தோளாய் - அழகிய பொற்றோளையுடைய பெரு மானே! என் பெற்றாளும் யானும் - என்னைப் பெற்ற தாயாகிய

சுமித்திராதேவியும் அடியேனாகிய யானும், நின் பெற்றாட்கும் - உன்னைப் பெற்ற தாயாகிய கோசலாதேவிக்கும், நிற்கும் - உமக்கும், எனைத்து ஓர் வகையாலும் - எந்த விதத்தினும், நினைப்பும் பிழையாமல் - எண்ணமும் மாறாது, நல்லவர் பேண - நல்லோர் விரும்புமாறு, நனி நிற்கும்-நன்றாய் நிலைபெற்றிருப்பதான, சொல் பெற்றால் - புகழை அடையப் பெறுவோமானால், மற்று - அதனையன்றி, ஆர் உயிர் பேணி - எங்கள் அரிய உயிரைப் பெரிதாக மதித்து, துறவோம் - உங்கள்பால் யாங்கள் கொண்டுள்ள கடப்பாடுகளை விட்டு நீங்கமாட்டோம். ஆல் : ஈற்றசை.

நினைப்பும் : உம்மை எஞ்சிய தழுவிய எச்சவும்மை ; அதாவது, பேச்சும் செயலும் உடன் தழுவிநின்றன ; இது, மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றிலும் மாறாதது என்றது. இதனை வடமொழியில் திரிகரண சுத்தி என்பர். சொல் : ஆன்றோர்களால் பாராட்டப் பெறும் சொல்; அதாவது புகழ். இதனால், சுமித்திராதேவியும் இலக்குவனும், கோசலாதேவி இராமபிரான் திறத்து, மனம், வாக்கு, செயல் ஆகிய மூவகையாலும் ஒருபோதும் மாறாத பேரன்பும், கடமையுங் கொண்டு அன்னோரைத் தம் அரிய உயிரினும் மேலாக மதித்துவந்தவர் என்பது பெறப்பெற்றது. ஆர் உயிர் - பொருந்திய உயிரும் ஆம்.

பி - ம். 2. நிற் பெற்றாற்கும் ; பிழையேமால் ; நிற்கு நிலத்தே பிழையின்றி.
3. நற் பொற்றாளாய் ; நம்மடிமைக்குத் தருமேவற் ; நல்லவர் பேண.
4. ராருயிர் பேணத் துறவேமால் ; பேணித் துறவேமால் ; தன்னைத் துறவாமால் ; ஆருயிர் தம்மைத் துறவாமோ. (31)

1162. ஓதுங் காலப் பல்பொருண் முற்றுற் றொருவாத
வேதஞ் சொல்லுந் தேவரும் வீயுங் கடைவீயாய்
மாதங் கந்தின் றுய்ந்திவ னத்தின் றலைவாழும்
பூதங் கொல்லப் பொன்றுதி யென்னிற் பொருளுண்டோ.

ஓதும் கால் - சொல்லுமிடத்து, பல் பொருள் முற்று உற்று - உலகத்தில் உள்ள பல பொருள்கள் எல்லாம் அழிவடைந்து, ஒருவாத - ஒருபோதும் அழியாத, அ வேதம் சொல்லும் - அந்த வேதம் புகழ்ந்து கூறும், தேவரும் - தேவர்களும், வீயும் கடை - அழியும் பிரளய காலத்து முடிவிலும், வீயாய் - அழியாத பரம்பொருளாகிய நீவிர், மாதங்கம் தின்று - யானைகளைத் தன் உணவாகக் கொன்று தின்று, உய்ந்து - உயிர்பெற்றிருந்து, இ வனத்தின் தலை வாழும் - இந்த வனத்தினிடத்து வாழ்ந்துவரும், பூதம் கொல்ல - இந்தப்

பூதமானது கொல்ல, பொன்றுதி என்னில் - நீவிர் இறந்து போகின்றீர் என்பதானுல், பொருள் உண்டோ - அது சொல்லத்தக்க விஷயமாகுமோ? (ஆகாது என்றபடி).

இலக்குவன் உலக நிலையில் முன் செய்யுட்களைக் கூறி, இங்கு, இராமபிரானுக்கு அவன் பரத்துவத்தை நினைப்பூட்டி ஊக்குகின்றான் என்க. மாதங்கம் தின்று என்று யானையைக் குறிப்பிட்டது, அவன் தின்னும் பிராணிகளுள் அது பெரியது ஆதலால் சிறப்பு நோக்கி அதனை முன்னிட்டுக் கூறியது ஆம்; மாதங்கம் : யானைகள் மதங்க முனிவரால் போற்றி வளர்க்கப் பெற்றமையால், தத்திதாந்தமாக வந்த பெயர் என்பர்; 1187-ம் பாடல் உரையையும் நோக்குக. இவ்வனத்தின் என்னற்பாலது, செய்யுளின் ஓசை நோக்கி, இ வனத்தின் என இயல்பாக நின்றது.

பி-ம். 1. ஓதுஞ் சொல்லே. 2, தேவரும் வீயா.
3. றுய்ந்நிவ் வனத்தின்; மலைவாழும்.
4. பொன்றுதி யென்றாற், பொன்றுதி யென்னப், பொன்றுதி யென்னும், பொன்றுதி போலும்; புகழுண்டோ. (32)

1163. கேட்டார் கொள்ளார் கண்டவர் பேணார் கிளர்போரில்
தோட்டார் கோதைச் சோர்குழ றன்னைத் துவளாமல்
மீட்டா னென்னும் பேரிசை கொள்ளான் செருவெல்ல
மாட்டான் மாண்டா னென்றலின் மேலும் வசையுண்டோ.

'கேட்டார் கொள்ளார் - நீவிர் 'இறப்பேன்' என்றதைக் கேட்ட பெரியோர்கள் இது நேர்மையானதென்று ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்; கண்டவர் பேணார் - நேரிற் கண்டோரும் இதனை விரும்பமாட்டார்; தோடு ஆர் கோதை - இதழ்கள் நிறைந்த பூமாலை யணிந்த, சோர் குழல் தன்னை - சரிந்து தளர்ந்த கூந்தலையுடைய பிராட்டியை, துவ்ளாமல் - அவள் துயரில் வாடி வருந்தாமல், மீட்டான் என்னும் - மீட்டு வந்தான் என்று கூறப்பெறும், பேர் இசை கொள்ளான் - பெரும் புகழைக் கொள்ளாமலும், செரு வெல்ல மாட்டான் - போரில் பகைவரை வெல்ல மாட்டாதவனும், மாண்டான் என்றபின் - தானே இறந்துபோனான் என்று உலகம் சொன்ன பிறகு, மேலும் - அதனிலும் அதிகமான, வசை உண்டோ - நிந்தனை வேறு உள்ளதாகுமோ? (ஆகாது என்றபடி).

இங்கு இலக்குவன் முன் செய்யுட்களில் கூறாத மற்றொரு வகையான மானந் தூண்டுதலாகிய முறையைக் கையாளுதலைக் காண்க.

பழியினின்று நீங்கக் கருதாது, அப் பழிக்கு அஞ்சி ஒருவன் தானே தன்னை மாய்த்துக் கொள்வானுனல், அது மேலும் பெரும்பழிக்கே இடமாகும் என்று இளையபெருமான் இராமபிரானுக்கு எடுத்துக் கூறினுன். இராமபிரான் தன்னுயிரைப் போக்கிக்கொள்ளக் கருதியது, *1153, 1156*-ஆம் செய்யுள்களிற் காண்க. சோர் குழல் : வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. கொள்ளான், மாட்டான் என்பன முற்றெச்சங்கள். உண்டோ : ஓகார வினு, எதிர்மறைப் பொருளது.

பி - ம். 1. இளர் போதில்.
2. தோட்டார் மாலை வார்குழ றன்னைத் துயராமல்; தன்னைத் துவளாமுன்.
3. பேரிசை கொல்லான், பேரிசை கொள்ளாய், பேரிசை கொள்ளுஞ்.
4. மாண்டா னென்றலின்; வகையுண்டோ. (*33*)

1164. தணிக்குந் தன்மைத் தன்றெனி லன்றித் தகைவாளால்
கணிக்குந் தன்மைத் தன்று விடத்திற் கனல்பூதம்
பிணிக்குங் கையும் பெய்பில வாயும் பிழையாமல்
துணிக்கும் வண்ணங் காணுதி துன்பந் துறவென்ருன்.

'விடத்தில் கனல் பூதம் - விஷத்தைப் போல அழன்று விளங்கும் இந்தப் பூதம், கணிக்கும் தன்மைத்து அன்று - நாம் பெர்ருட்படுத்தும் தன்மை யுடையதன்று; இ தகை வாளர்ல் - இந்த நம் சிறந்த வர்ட்களால், தணிக்கும் தன்மைத்து அன்று எனில் அன்று - (நம்மால்) அடக்கும் தன்மையுடையது அன்று என்பது அல்லாதது ஆகும்; (அதாவது தணிக்கக் கூடியதே என்றபடி); (ஆதலின்) பிணிக்கும் கையும் - நம்மோடு பல பிராணிகளையும் வளைத்துக் கட்டிப் பிடித்துள்ள இதன் இரு கைகளையும், பெய் பில வாயும் - அகப்பட்ட பிரர்ணிகளை வாரிப் போகட்டுக்கொள்ளும் இதன் பிலம் (அதாவது பாதாளக் குகை) போன்ற வாயையும், பிழையாமல் - தவருமல், துணிக்கும் வண்ணம் - வெட்டித் துண்டுபடுத்தும் விதத்தை, காணுதி - காண்பீராக! துன்பம் துற - கொண்டுள்ள துயரத்தை விட்டொழிப்பீராக!' என்ருன் - என்று இராம்பிரானுக்கு இலக்குவன் துணிவு எடுத்துக் கூறினுன்.

வாளால் தணித்தல் - வாள்கொண்டு அவனை முடித்து அவன் கொடுமையை இல்லாமற் செய்தல். தகை வாள் - வெட்டும் வாள்

என்னலும் ஒன்றும்; தகைத்தல் - வெட்டுதல், அழித்தல், நீக்குதல் என்னும் பொருள்களில் வரும். கணித்தல் - அளவிடுதல்; மதிப்பிடுதல், பொருட்படுத்தல். பிலவாய் என்றது, பிலம்போல் ஆழ்ந்து பெரிதாய் உள்ளமையால்; 'வயிற்றிடை வாயெனும் மகர வேலையான்' (1142); 'நமன் கொற்றவாய்' (1148); 'அரக்கர் தொன்மதி லூர்புகு வாயில்' (1151) என்றமையும் நோக்குக.

பி - ம். 1. தன்றென லின்றிக். 2. தல்ல விடத்தின்.
3. பேழ்பில வாயும். 4. துறமேலோய். (34)

அவர்கள் ஒருவரின் ஒருவர் முற்பட்டுக் கவந்தன்முன் சென்றது.

1165. என்ற முன்னே சொல்லு மிளங்கோ விறையோற்கு
முன்னே செல்ல முன்னவ னன்ற னினுமுந்தத்
தன்னே ரில்லாத் தம்பி தடுப்பான் பிறரில்லை
அன்னே கண்ட வும்பரும் வெய்துற் றழுதாரால்.

என்று - என்று இவ்வாறாக, முன்னே சொல்லும் - முன்பாகவே உறுதி கூறிய, இளம் கோ - இளைய பெருமானான இலக்குவன், இறையோற்கு - தலைவனான இராமபிரானுக்கு, முன்னே செல்ல - கவந்தனை நோக்கி முதலிற் செல்ல, முன்னவன் - மூத்தோனான இராமபிரான், அன்னனினும் - அந்த இலக்குவனிலும், முந்த - தான் முந்திச் செல்ல, தன் நேர் இல்லா தம்பி - தனக்கு நிகர் பிறர் இல்லாத தம்பியாகிய இலக்குவன், தடுப்பான் - இராமபிரானைத் தடுப்பானானான்; (இவ்வாறு ஒருவரை யொருவர் முந்திக்கொண்டு கவந்தனை அணுக), பிறர் இல்லை - அங்கு அவர்களைத் தடுத்து நிறுத்த வேறு ஒருவரும் இல்லாமையை, கண்ட உம்பரும் - கண்ட தேவர்களும், வெய்துற்று - துன்பத்தால் வருந்தி, அழுதார் - அழுதனர். அன்னே - அந்தோ! ஆல்: ஈற்றசை.

இலக்குவன் தன் சொற்களால் இராமபிரானின் சோர்வைத் தணிக்க முயன்றும், இராமபிரான் கவந்தனை நோக்கி அவனுக்கு இரையாக ஆகுமாறு முந்த, இலக்குவன் அவனைத் தடுத்தனன் என்க. இவ்வாறே பகைவன்முன் செல்வதில் ஒருவரோடொருவர் போரில் முந்தியது, உயுத்த. வேலேற்ற படலம்; 30, 31-இல் காண்க.

பி - ம். 1. முன்னே செல்லு.
2. முன்னே செல்லு; னினு முந்தா, னினு முந்தர்; முதல முந்தர்.
4. அன்னே, அன்னோர்க், அந்நாள் கண்ட வானவர் பேது றழுதாரால். (35)

வேறு

கவந்தன் அவர்களை யாரென்று வினவியது.

1166. இனைய ராகிய விருவரு முகத்திரு கண்போல்
கனையும் வார்கழல் வீரர்சென் றணுகலுங் கவந்தன்
வினையி னெய்திய வீரர்நீர் யாவர்கொ லென்ன
நினையு நெஞ்சின ரிமைத்தில ருருத்தனர் நின்றார்.

இனையர் ஆகிய - இத்தன்மையர் ஆன, கனையும் வார் கழல் வீரர் இருவரும் - ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த இராம லக்ஷ்மணர் இருவரும், முகத்து இரு கண் போல் - முகத்தில் உள்ள இரு கண்கள் ஒன்றையே நோக்குவன போல, சென்று அணுகலும் - கவந்தனை நோக்கி ஒருவரை யொருவர் முன்னிட்டுச் சென்று அவனைக் கிட்டியவுடன், கவந்தன் - அதுகண்ட கவந்தனும், 'வினையின் எய்திய வீரர் நீர் யாவர் கொல் - உங்கள் ஊழ்வினையின் பயனால் இங்கு வந்த வீரர்களாகிய நீவிர் யாவர்?' என்ன - என்று வினவ, நினையும் நெஞ்சினர் - ஆலோசித்த மனமுடையரான அவ்விராம லக்ஷ்மணர், உருத்தனர் - கோபங்கொண்டவர்களாய், இமைத்திலர் நின்றார் - இமை கொட்டாமல் அவனை விழித்து நோக்கி நின்றனர்.

இராம லக்ஷ்மணர்களுக்கு முகத்திரு கண்கள் உவமை; முகத்தில் உள்ள கண்கள் இரண்டாயினும் அவை யிரண்டும் ஒன்றையே நோக்கும் இயல்பினபோல; "நோக்குமாற் கண்ணிரண்டு மொன்றையே காண்" (நன்னெறி. 6). இருவரும் இமையாமல் கவந்தனை நோக்குவதொன்றையே நோக்கமாய்க் கொண்டனராதலின் என்க. கொல்; ஐயப்பொருளை யுணர்த்தும் இடைச்சொல். கொலென்ன; இங்கு ஒற்று இரட்டிக்காமல் இயல்பாய் நின்றது. பின் வரும் செய்யுட்களால் இராம லக்ஷ்மணர்கள் கவந்தனை நோக்கிச் சென்றமை அவனைக் கொல்லவே என்பது ஏற்படுவது காண்க.

பி-ம். 1. இனையராகிய வீரர்கள் செருமுகத் திருகண்போல்.
3. யாவர் கொலீரென; கொலீரென்ன.
4. நெஞ்சிலர் பதைத்தில ருருத்திலர்; பதைத்தில ரிமைத்திலர், பகைத்தில ரிமைத்திலர், துரைத்தில ரிமைத்திலர், துரைத்திலர் பதைத்திலர். (36)

இராம லக்ஷ்மணர் கவந்தன் தோள்களை வெட்டினமை.

1167. அழிந்து ளாரல ரிகழ்ந்தன ரென்னையென் றழன்றான்
பொழிந்த கோபத்தன் பொறிக்கனல் விழிதொறும் பொடிப்ப
விழுங்கு வேனென வீங்கலும் விண்ணுற வீரர்
எழுந்த தோள்களை வாள்களா லரிந்தன ரிட்டார்.

'அழிந்துள்ளார் அலர் - இவர்கள் என்னைக் கண்ட பிறகும் செயல் அழிந்தவர்கள் அல்லராய், என்னை இகழ்ந்தனர் என்று - என்னை அவமதித்தனர்' என்று, அழன்றான்-(கவந்தன்) அவ்விராம லக்ஷ்மணர் மீது கோபித்தவனாகி, தன் கோப பொறி கனல் - தனது கோபத்தில் உண்டான பொறிகளோடு கூடிய நெருப்பு, விழி தொறும் - தன் இரு விழிகளினின்றும், பொடிப்ப-வெளிவர, விழுங்கு வான் என வீங்கலும் - இவர்களை எடுத்து விழுங்கிவிடுவான் போல உடல் பூரிக்கவும், வீரர் - வீரர்களான அந்த இராம லக்ஷ்மணர், விண் உற எழுந்த தோள்களை - வானில் மிகவும் எழுந்து ஓங்கி வளர்ந்திருந்த அக்கவந்தனின் இருதோள்களையும், வாள்களால் அரிந்தனர் இட்டார்-தம் வாள்களால் வெட்டிக் கீழ் விழச்செய்தனர்.

என்னை யிகழ்ந்தனரென்று; இது என்ன என்று வியப்புற்று, எனவும் பொருள்கொள்ளலாம்; தன்னைக் கண்டாரனைவரும் தம் செயலடங்கியிருக்க, இராம லக்ஷ்மணர் இமைத்திலர் உருத்தலர் நின்றனராதலின், தன்னை இகழ்ந்தனரென்று கருதினான் கவந்தன் என்க. விண்ணுற - வானைப்போய் அடைய, என்றும் கொள்ளலாம். அரிந்தனரிட்டார் - அரிந்திட்டார் என்னலும் ஒன்றும். வெட்டினார் என்னாமல் அவன் தோள்களை அரிந்தனர் என்றமையால், வாழையிலை முதலிய வலியற்ற பொருள்களைப் போல எளிதில் அரிந்து வீழ்த்திலர் என்பதாம். இதனால், இராம லக்ஷ்மணர்களின் வாளாற்றலுக்குக் கவந்தன் தோள்களின் எளிமை குறிப்பிட்டபடி என்பதாம். கவந்தன் வலக்கரத்தை இராமபிரானும் இடக்கரத்தை இலக்குவனும் வெட்டினர் என்று வான்மீகம் கூறும். இவ்வாறே இராம லக்ஷ்மணர் விராதன் தோள்களையும் வெட்டினமை காண்க.

பி-ம். 1. இகழ்ந்துளாரலர்; ரென்னையென்ற கன்றான்
2. புதைப் பொறி மயிர்ப் புறம்பொடிப்ப; கோபத்தின் புதைப் பொறி, கோபத்தீ பிறந்திட.
3. விழுங்கு வெனென்னா, விழுங்குவேனென; வோங்கலும்.
4. எழுந்த தோள்களை வாள்களாற் சிதறிடவெறிந்தார்; லழித்தன ரிட்டார், வாளினா லரிந்தன ரிட்டார். (37)

கைகளற்ற கவந்தனது தோற்றம்.

1168. கைக ளற்றுவெங் குருதியா றொழுக்கிய கவந்தன்
மெய்யின் மேற்கொடு கிழக்குறப் பெருநதி விரவும்
ஐசய மாநெடுந் தாழ்தடத் தனிவரை தன்னோ
டைய நீங்கிய பேரெழி லுவமைய னானான்.

கைகள் அற்று - தன் கைகள் அறுக்கப் பெற்று, வெம் குருதி ஆறு ஒழுக்கிய கவந்தன்-வெப்பமுள்ள இரத்த வெள்ளம் நதிபோலப் பெருகியோடவிட்ட கவந்தன், மெய்யின் - தன் உடலின் தோற்றத்தால், மேற்கு ஒடு கிழக்கு உற - மேற்குப் புறமாகவும், கிழக்குப்புறமாகவும் போயடைய, பெரு நதி விரவும் - பெரிய காவிரிநதி பெருகிய, சைய மா நெடு தாழ் தட தனி வரை தன் ஒடு - சையகிரி என்னும் பெரியதும் தாழ்ந்து பரந்த அடிவாரங்களையுடையதுமான ஒப்பற்ற மலையோடு, ஐயம் நீங்கிய - சந்தேகமற்ற, பேர் எழில் - மிக்க அழகு வாய்ந்த, உவமையன் ஆனான் - உபமானமுள்ளவனானான்.

கவந்தன் உவமையன் ஆனான், என்றியைக்க. சையகிரி ; மேற்குத் தொடர்ச்சி மலைகளில் காவிரி உற்பத்தியாகும் ஒரு மலைக்குப் பெயர் ; காவிரிநதி மேற்கு மலைத்தொடரில் ஒரு பகுதியான சையகிரியின் சிகரத்தில் உற்பத்தியாகி, அம்மலையின் மேற்குப்புறமாய் ஒருபகுதியும், கிழக்குப் புறமாய் ஒரு பகுதியுமாகப் பிரிந்து ஓடும் தோற்றத்திற்குக் கவந்தன் இருதோள்கள் அறுபட, அவன் இருபுறமும் பெருகியோடிய இரத்த வெள்ளங்கள் உவமை கூறப்பெற்றன. இனி, சையமலையில் இவ்வாறு இருபுறமாய் பெருகியோடிய காவிரிப் புனலின், மேற்புற அருவியைப் பின் சோழ அரசன் ஒருவன், அம்மலையைப் பிளந்து அவ்வெள்ளத்தைக் கீழ்ப்புற அருவியோடு கலக்கச்செய்து சோழநாட்டை நீர்வளமுறச் செய்தான் என்று தமிழ் நூல்கள் கூறுவன காண்க ; விக்கிரம சோழனுலா : *14* ; தக்க. *549* ; தொல். புறத். *26*. நச். மேற் ; கலிங்கத்துப்பரணி : இராசபாரம் : *15*. இந்த உவமையால் ஆசிரியர் ஸ்ரீ கம்பநாடர் சோழநாட்டினராதலின், சோழர்குலக் கொடியாகிய காவிரிநதியின் உற்பத்தியையும், அது பிறக்குஞ் சைய மலையையும் தம் தேசாபிமானந் தோன்றச் சிறப்பித்த பெற்றி யிங்கு உய்த்துணரப் பாலதாம். 'கவந்தன் குருதிக்குச் சையத்திலிருந்துவரும் பொன்னி உவமை' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. கவந்தனுக்குச் சையமலையும், அவனுடலிலிருந்து பெருகிய குருதிக்குக் காவிரிப்புனலும் உவமைகள்.

பி - ம். 1. கைகளிற்றிழி, கைகளற்றுகு ; றெழுகிய கவந்தன், மெய்யின் மேலது கீண்டுறப் பொருந்தி யொழுகும் ;
2. மேற்கொடு கிழக்கொடு ; விளங்கும், யியங்கும்.
3. தாழ்வரைத் தனிவரை, தாளுடைத் திணிவரைத்திறலின்.
4. னுவமையே யன்னான், பேருருவ கையனானான், பேருருக் கொண்டவை யழிந்தான். (38)

கவந்தன் நல்லுருப் பெற்று வானில் விளங்கல்.

1169. ஆளு நாயக னங்கையிற் றீண்டிய வதனால்
மூளுஞ் சாபத்தின் முந்திய தீவினை முடித்தான்
தோளும் வாங்கிய தோமுடை யாக்கையைத் துறவா
நீள நீங்கிய பறவையின் விண்ணுற நிமிர்ந்தான்.

ஆளும் நாயகன் - எல்லா ஜீவராசிகளையும் படைத்து ஆண்டருளும் ஸர்வேச்வரனின் அவதாரமான இராமபிரானுடைய, அம் கையில் தீண்டிய அதனால்-அழகிய திருக்கரங்களால் தொடப்பெற்ற சிறப்பினால், மூளும் - மூண்டுள்ள (அதாவது அதிகமான), சாபத்தின் - தனக்கேற்பட்ட சாபத்தினால், முந்திய - முன்னிட்டு வந்த, தீவினை - பாவங்களை, முடித்தான் - ஒழித்தவனான கவந்தன், தோளும் வாங்கிய - தோள்களும் நீங்கப்பெற்ற, தோம் உடை யாக்கையை - குற்றம் மிகுந்த தன் பாவசரீரத்தை, துறவா - விட்டு நீங்கி, நீளம் நீங்கிய பறவையின் - (இறகுகள் முளைத்தவுடன்) கூட்டைவிட்டு நீங்கி வெளியே பறந்து செல்லும் பறவையைப்போல, விண் உற நிமிர்ந்தான் - ஆகாயத்தின் மேலே ஒரு திவ்ய உருவத்தோடு எழுந்து விளங்கினான்.

ஆளும் நாயகன், இஃது ஆசிரியர் தம் மதக் கோட்பாட்டைக் கூறியதுமாகும். என்றனிநாயகன்; (*1103*); 'ஆண்டான்' (*1157*) "என்னை யாளுடையவையன்" (பால. திருவவதாரப்: *26.*); 'எமையுடை யிறைவன்' (பால. திருவவதாரப் *135*); தோளும்: உம்மை; அவன் தலையில்லாமையைக் குறித்த எஞ்சியது தழுவிய எச்சவும்மை. நீளம்:- பறவைக் கூடு; சுந்தர. *1247*; இது நீடம் என்ற வடசொலின் திரிபு; ஒப்பு. அபோத், சித்திரகூடப்: *43*; நாலடி. *30*; திருக்குறள்: *338*. பரி. உரை. நீளம் - நெடுந்தூரமும் ஆம். கவந்தன் 'நான் விசுவாவஸு என்ற கந்தருவன்; ஸ்தூலசிரஸ் என்ற ஒரு முனிவர் சாபத்தால் அரக்கனானேன்' என்று இராமபிரானிடம் கூறியதாக முதனூல் கூறும். சபித்தவர் அஷ்டவக்ர முனிவர் என்று அத்யாத்மம் கூறும்.

பி-ம். 1. நாயகன் றன்கையிற்.

2. முற்றிய தீவினை, மூடிய தீவினை முடியத், மூர்த்தியன் றிவினை, முந்திய வினையின்.

4. தோளின் வீங்கிய தோமுடை யாக்கையைத் துறந்தே, விண்ணிடை.

### கவந்தன் இராமபிரானைத் துதிக்கத் தொடங்கல்.

**1170.** விண்ணி னின்றவன் விரிஞ்சனே முதலினர் யார்க்கும்
கண்ணி னின்றவ னிவனெனக் கருத்துற வுணர்ந்தான்
எண்ணி யன்னவன் குணங்களை வாய்திறந் திசைத்தான்
புண்ணி யம்பயக் கின்றுழி யரியதெப் பொருளே.

விண்ணின் நின்றவன் - அவ்வாறு வானில் திவ்ய உருவுடன் எழுந்து நின்ற கவந்தன், 'விரிஞ்சனே முதலினர் யார்க்கும் - பிரமதேவனே முதலாக உள்ள எல்லோருக்கும், கண்ணின் நின்றவன் - தியானத்தில் அறிய நின்ற பரம்பொருள், இவன் என - இவ்விராமபிரானே' என்று, கருத்து உற உணர்ந்தான் - மனத்தில் பொருந்த நன்றாக அறிந்து கொண்டான்; அன்னவன் குணங்களை எண்ணி - அப்பரம் பொருளான இராமபிரான் குணச் சிறப்புக்களைக் கருதி, வாய் திறந்து இசைத்தான் - தன் வாயாற் சொல்லிப்புகழ் வானானான்; புண்ணியம் பயக்கின்றுழி - நல்வினைப்பயன் வந்து அருளும் பொழுது, எ பொருளே அரியது - எந்தப்பொருள்தான் அடையக்கூடாதது? (யாவும் அடையலாம் என்றபடி.)

கண்ணின் நின்றவன் - தியானத்தில் எதிர்ப்படுபவன்; கண்ணுதல்; கருதுதல்; கிட்கிந்தா. மகேந்திரப்: *16*; உயுத்த: இரணியன் வதைப்: *1*; இனி, கண்ணினின்றவன் - கண்ணெதிரே நின்றவனெனப் பொருள்கொண்டாரும் உளர். புண்ணியம் பயக்கின் றுழி யரிய தெப்பொருளே' என்பது ஒரு நீதி.

பி - ம். 1. முதலியர் யார்க்கும், முதலவெவ்வுயிர்க்கும்.
2. னின்றவனுமென; கருத்துற யுணர்வான், கருத்திடையுணர்ந்தே.
3. எண்ணியாங்கவன் குணங்களை வாழ்த்தற்கிசைந்தான், எண்ணி லன்னவன், எண்ணியன்றவன்.
4. புண்ணியப் பயத்தின்வழி; பொருளோ, **(40)**

### வேறு
### கவந்தன் துதி 1171—1179.

**1171.** ஈன்றவனே யெப்பொருளு மெல்லைதீர் நல்லறத்தின்
சான்றவனே தேவர் தவத்தின் றனிப்பயனே
மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலமோ
தோன்றி யருவினையேன் சாபத் துயர்துடைத்தாய்.

'தோன்றி - என் முன் வந்து, அருவினையேன் - செய்தற்கு அரிய பாவங்களைச் செய்த என்னுடைய, சாப துயர் துடைத்தாய் -

சாபத்தினால் ஏற்பட்ட துன்பத்தை நீக்கியருள்செய்த பெருமானே! எ பொருளும் ஈன்றவனே - நீ சராசரமாகிய எல்லாப்பொருள்களை யும் படைத்தவனே? எல்லை தீர் நல் அறத்தின் - எல்லை அற்ற (அதாவது அளவிடமுடியாத) நல்ல தருமத்திற்கு, சான்று அவனே- சாட்சியாய் (அதாவது பிரமாணமாய்) இருப்பவனே? தேவர் தவத்தின் தனி பயனே - தேவர்கள் செய்த தவத்தின் தனிப்பயனாய் அவதரித் தவனே? மூன்று கவடு ஆய் முளைத்து எழுந்த - பிரமன், விஷ்ணு, சிவன் என்னும் மூன்று பிரிவுகளாய்த் தோன்றி விளங்கியுள்ள, மூலமோ - அம்மும் மூர்த்திகளுக்கும் மூலமான பரம்பொருளோ?

எப்பொருளும் ஈன்றவன்; படைப்புக்கு ஆதிகாரணமானவன். நல்லறத்தின் சான்றவன், நல்ல தருமத்திற்கோர் எடுத்துக் காட் டாக அவ்வப்போது அவதரித்து அதனைக்காப்பவன் என்பதாம். 'அறநெறி நிறுத்தவந்த அண்ணல்' என வாலி அங்கதனுக்கு அறி வுறுத்தியதையும் காண்க; (கிட்கிந்தா. வாலிவதைப் 132). மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலம்; இராமபிரான், மும்மூர்த்திகளுக்கும் மூலமாகிய பரம்பொருள்; பால. திருவவதாரப்: 137; கடிமணப்: 11; அயோத். மந்திரப்: 37; சுந்தர. 1117, 1122; உயுத்த. இராவணன் வதை; 135; திருவாய்மொழி. 3, 6: 2; ஆலும் பிறவாற்றானுமறிக. ஆரணிய காண்டம் ஒருவாறு விராதன் துதியை முதலிலும், கவந்தன் துதியைக் கடையிலும் கொண்டுள்ள தனிச்சிறப்பு நோக்கத்தக்கது.

பி-ம். 1. வெப்பொருட்கு மெல்லை; தொல்லறத்தின்.
4. யிருவினையேன்; சாபத்திடர், சாபத்தொடர். (41)

1172. மூலமே யில்லா முதல்வனே நீமுயலும்
கோலமோ யார்க்குந் தெரிவரிய கொள்கையவால்
ஆலமோ வாலி னடையோ வடைக்கிடந்த
பாலனோ வேலைப் பரப்போ பகராயே.

'மூலமே இல்லா - தனக்கு முந்திய மூலகாரணமான பொருள் வேறு ஒன்று இல்லாத, முதல்வனே - யாவற்றிற்கும் ஆதி காரணன் ஆகி உள்ளவனே! நீ முயலும் - நீ உன் சங்கற்பத்தால் எடுத்துக் கொள்ளும், கோலமோ - உருவங்களோ என்றால், யார்க்கும் தெரிவு அரிய கொள்கைய ஆல் - (அவை) ஒருவருக்கும் தெரிந்துகொள்ள முடியாத தத்துவங்களாக உள்ளன; ஆதலின், (அதனை யானுமறி யேன் என்றபடி); (உன் உண்மையான உருவம்), ஆலமோ - பிரளயத்

தில் தோன்றும் ஆலமரமோ? ஆலின் அடையோ - அந்த ஆல மரத்தின் ஓர் இலையோ? அடை கிடந்த பாலனோ - அந்த ஆலிலை மீது பள்ளிகொண்டு விளங்கிய பாலனோ? வேலை பரப்போ - அந்த ஆலமரமிருந்த கடலிடமேயோ? பகராய் - எது என்று எடுத்துக் கூறுவாயாக! ஏ: ஈற்றசை.

நீ மூலம் ஒன்றில்லாத பரம்பொருளாதலின், நீ பிரளயகாலத்தில் கடல் வெள்ளத்திடையே, ஓர் ஆலமரமாகவும், அவ்வாலமரத்தின் இலையாகவும், அவ் இலையில் ஒரு பாலகனாகவும், விளங்குவாய் என்ற உண்மையை உணர்ந்து இராமபிரானை முன்னிலைப்படுத்திக் கூறினான் கவந்தன் என்பதாம். இராமபிரான், மூலம் ஒன்றில்லாத பரம்பொருள் என்றதை, முன் 1171இல் மூன்றுக்வடாய் முளைத்தெழுந்த மூலமோ என்று கூறியதுங் காண்க. இவ்வாறு அறிவு பெற்றுக் கூறியது, இராமபிரானுடைய திருக்கரம் பட்ட ஸ்பரிச உணர்ச்சியாகிய திவ்ய தீட்சையால் கவந்தன் அடைந்த நல்லுணர்வால் என்க. ஆலம்: அம் சாரியை, திருமால் பிரளயகால வெள்ளத்தில் ஓர் ஆலின் இலைமீது பாலனாய்ப் பள்ளிகொள்பவர்; பெருமாள் திருமொழி: 8: 7: திருச்சந்த விருத்தம். 23.

பி-ம். 1. மூலமோ வில்லா முதலயனே, மூலமோவெல்லா.

2. கொள்கையாய், கொள்கையதால், கொள்கையதாம், கொள் கையால்.

3. வடைகிடந்த.

4. வெல்லைப் பரப்போ; வாதிப்பரனே பகராயே. (42)

**1173. நின்செய்கை கண்டு நினைந்தனவோ நீண்மறைகள்**
**உன்செய்கை யன்னவைதாஞ் சொன்ன வொழுக்கினவோ**
**என்செய்தேன் முன்ன மிச்செய்கை யெய்தினாய்**
**பின்செய்வ தில்லாப் பெருஞ்செல்வ நீபெற்றாய்.**

'பின் செய்வது இல்லா - பிறகு மேலும் சேகரிப்பது என்பது இல்லாத (அவ்வளவு பெரிய), பெரும் செல்வம் பெற்றாய் நீ - பெரிய மோக்ஷ ஸாம்ராஜ்யம் என்ற செல்வத்தைப் பெற்றவன் நீ; நீண் மறைகள் - அளவிற் பெரியனவான வேதங்கள், நின் செய்கை கண்டு - உன்னுடைய செயல்களைப் பார்த்து, நினைந்தனவோ - தாம் கருதிக் கூறினவோ? அன்றி), அன்னவைதாம் - அவ்வேதங்களே, உன்

செய்கை - உன் செயல்களையே, சொன்ன ஒழுக்கினவோ - கூறிய முறையை உடையனவோ? இ செய்கை எய்தினாய் - என்பால் இந்தச் செயலை நீ செய்தருளினாயே! முன்னம் என் செய்தேன் - (இவ் வருளை நான் ஏற்பதற்குத் தகுதி யுடையவனாக) நான் முன்பு என்ன நல்வினை செய்தேன்?

வேதங்கள் கூறுவனவும் இறைவன் செயல்களும் வேறுபட்டன வல்ல என்பதை முதலிரண்டடிகளாற் கூறினான் என்க. தன்பால் காரணமின்றிக் கருணைகாட்டியதை வியந்தது மூன்றாமடி. கடைசி அடி, கடவுளின் செல்வச் சிறப்பை வியந்தது.

பி - ம். 1. நான் மறைகள், நன்மறைகள்.
3. மறஞ் செய்கை யெய்தினார், மௌனச் செய்கையெய்தினார்.
4. பின் செல்வதில்லாய்; பின் செய்தாரில்லாய். (43)

1174. காண்பார்க்குங் காணப் படும்பொருட்குங் கண்ணாகிப்
பூண்பாய்போ னிற்றியால் யாதொன்றும் பூணாதே
மாண்பா லுலகை வயிற்றொளித்து வாங்குதியால்
ஆண்பாலோ பெண்பாலோ வப்பாலோ வெப்பாலோ.

காண்பார்க்கும் - காண்கிறவர்களுக்கும், காணப்படும் பொருட்கும் - காணப்படுகின்ற பொருள்களுக்கும், கண்ணாகி - இருப்பிடமாகி, யாது ஒன்றும் பூணாதே - நீ உண்மையில் ஒன்றையும் விரும்பிப் பூணாமலே, பூண்பாய் போல் - எல்லாப் பொருள்களையும் பூண்டு தாங்குபவன் போல, நிற்றி - நிற்கின்றாய்; உலகை - உலகங்களனைத்தையும், மாண்பால் - உன் மாட்சிமை பெற்ற தெய்வத் திறத்தினால், வயிற்று ஒளித்து - பிரளயத்தில் அவற்றை அழியாமல் உன் திருவயிற்றினிடம் மறைத்து வைத்துக் காத்து, வாங்குதி ஆல் - பின் அவற்றை மீளவும் உன் வயிற்றினின்றும் வெளியிடுகின்றாய்; (ஆதலின்), ஆண்பாலோ - நீ ஆண்மகனோ? பெண்பாலோ - பெண் மகளோ? அப்பாலோ - அவை யிரண்டு மல்லாது அப்புறத்ததான அலியோ? எ பாலோ - அல்லது வேறு எந்த வகையைச் சேர்ந்தவனோ? (அறியேன் என்றபடி).

காண்பார்க்குங்...........கண்ணாகி, காண்பதும் காணப்படுவதும் அவனே என்பதாம்; இதனால் அவனன்றிப் பிரபஞ்சம் வேறன்று என்ற அத்வைதமான பரம்பொருள் இராமபிரானே என்ற உண்மையை உணர்ந்து கூறினான் கவந்தன் என்க; கண்ணாகி -

காணும் அறிவாகி என்றும் கூறலாம்; 99; ஒப்பு. 'காட்டுவித்தர் லாரொருவர் காணதாரே கரண்பாரார் கண்ணுதனீ காட்டாக் காலே' (திருநாவுக். தேவாரம்.) பூண்பாய் போல் நிற்றியால் யாதொன்றும் பூணு தாய்; இதனைத் 'தோய்ந்தும் பொருளனைத்தும் தோயாது நின்ற தொல் சுடரே' (100) என்ற இந்திரன் துதியுடன் ஒப்பு நோக்குக; வாங்குதல் - உள்ளிருந்து வெளிவரச் செய்தல்; 'வாங்குமின் மனத் துயர் வாய்மையா லென்றான்' (உயுத்த. மீட்சிப். 278.)

ஆண்பாலோ...........வெப்பாலோ; ஐம்பால்கள் என்னும் இலக்கணப் பாகுபாட்டிற்கு அடங்காது நீ அப்பாற் பட்டவன் என் பதாம்; இங்குப் பாலைக் குறிப்பிட்டது, மற்ற திணை, எண், இடம் முதலிய பாகுபாடுகளையும் கூட்டி என்க. அப்பரம்பொருள் எல்லாவற் றையும் கடந்தும் அவற்றிற் கலந்தும் நிற்குந் தனிச் சிறப்பை யுணர்த்திய வாறென்பதாம். இப் பரத்துவ நிலைக்கு ஒப்பு. திருநெடுந். தாண்டகம்: 20; மூன்றுந் திருவந்நாதி; 8; திருவாய்மொழி 2, 5 : 10 "அப்பாலோ எப்பாலோ" என்பதற்கு 'உனக்கு இடம் பரமபதமோ பூமியோ" என்பது பழையவுரை.

பி - ம். 1. காணப்படு பொருட்கும்.
2. பூணுதாய்; நிற்றீ யொன்றும் பூணுதாய்.
3. தெளித்துக் காட்டுதியால்; என்செய்தன முன்னமிச் செய்கை யெய்தினாய்.
4. வப்பாலோ; விப்பாலோ, விப்பாலாய். (44)

**1175.** ஆதிப் பிரமனுநீ யாதிப் பரமனுநீ
ஆதி யெனும் பொருளுக் கப்பாலுண் டாயினுநீ
சோதிநீ சோதிச் சுடர்ப்பிழம்பும் நீயென்று
வேதமுரை செய்தால் வெள்காரோ வேறுள்ளார்.

'ஆதி பிரமனும் நீ - படைப்புக்குள் முன்னவனான பிரமதேவ னும் நீயே தான்; ஆதி பரமனும் நீ - அப்பிரமதேவனையும் படைத்த ஆதிப் பரம்பொருளும் நீயே தான்; ஆதி எனும் பொருளுக்கு அப் பால் உண்டு ஆயினும் நீ - ஆதி என்று சொல்லப்பெறும் ஒரு பொருளுக்கும் அப்புறம் உள்ளதாக ஒன்று இருக்குமேல் அப் பொருளும் நீயே தான்; (அவ்வாறு ஒன்று இல்லை என்று கூறப் பெற்றது); சோதி நீ - சோதி வடிவாய் உள்ள சூரியன் முதலிய எல்லாம் நீயே தான்; சோதி சுடர் பிழம்பும் நீ யென்று - (அச் சூரியன் முதலான சுடர்களுக்கு எல்லாம் ஒளியை வீசி யளிக்கும்) பரஞ்சோதியாகிய ஒளித்தொகுதியாய் உள்ளவனும் நீயே தான்

என்று, வேதம் உரை செய்தால் - வேதங்கள் கூறுமானால், வேறு உள்ளார் - அவ்வேத நெறிக்குப் புறம்பான பிற சமயத் தெய்வங்களென்று கூறப் பெறுபவர், வெள்காரோ - இதைக் கேட்டுத் தாம் தெய்வமாவது எப்படியாகும் என்று வெட்கமுற மாட்டார்களோ? (வெட்க முறுவர் என்றபடி).

பி - ம். 1. ஆதிப்பரமனு நீ யாதிப்பிரமனு நீ, ஆதிப்பிரமமு நீ.
2. ஆதிப்பரம் பொருளுக்கு கப்பாலுண்டாகினுந்; ஓதியுணர் பொருளுக் கப்பாலுணர்கினு நீ; ஓதியுறு பொருளுக்; லுண் டாகினு நீ.
3. சோதிநிறை சுடருநீ யென்று சொல்லிய நால்; சோதிச் சுடர்ப் பிழம்பு நீயென்று சொல்லுகின்ற; சொற்றுகின்ற, தோற்று கின்ற.
4. வேத முறை செய்தால், (45)

1176. எண்டிசையுந் திண்சுவரா யேழேழ் நிலையெடுத்த
அண்டப் பெருங்கோயிற் கெல்லா மழகாய
மண்டலங்கள் மூன்றின் மேனின்று மலராத
புண்டரிக மொட்டின் பொகுட்டோ புரையம்மா.

'எண் திசையும் - எட்டுத் திக்குக்களின் எல்லைகளும், திண் சுவராய் - வலிய சுவர்களாக, ஏழ் ஏழ் நிலை எடுத்த - பதினான்கு இடப்பரப்புக்களாக, (அதாவது உலகங்களாக), நிர்மாணஞ் செய்யப் பெற்ற, அண்ட பெரும் கோயிற்கு எல்லாம் - அண்டமாகிய பெரிய கோயில் முழுவதற்கும், அழகு ஆய - மேலான, அழகுடைத்தான, மண்டலங்கள் மூன்றின் மேல் நின்று - சந்திர, சூரிய, நக்ஷத்திர மென்னும் மும்மண்டலங்களுக்கு மேலாக நின்று, மலராத - (எப் பொழுதும்) மலராத, புண்டரிகம் மொட்டின் - தாமரை அரும்பின், பொகுட்டோ - கர்ணிகை யென்னும் கொட்டை வடிவான பரம பதமோ, புரை - உனக்கு இருப்பிடமாவது? அம்மா; வியப்பை உணர்த்தும் இடைச்சொல்.

இஃது இறைவனின் இருப்பிடம் கூறியது. அண்டமே ஒரு பெருங்கோயில்; அதற்கு எட்டுத் திசைகளும் சுவர்கள்; அவற்றினுள் பதினான்கு உலகங்களும் பதினான்கு நிலை மாடங்களாக ஒன்றன்மேலொன்றாய் அமைந்துள்ளன; அக்கோயிலுக்குத் தம் ஒளிகளால் அழகை அளிப்பவை சந்திர சூரிய நக்ஷத்திரங்களாகிய மூன்று மண்டலங்கள்; அம்மும் மண்டலங்களுக்கும் மேலே

என்றும் மலராத தாமரை மொட்டின் உள்ளே உள்ள பொகுட்டுப் போன்றதே ஸ்ரீ பரமபதம். அப்பரமபதமே திருமாலின் இருப்பிடமாகும் என்பது இக்கவியால் விளங்கும் பொருளாகும். பொகுட்டு பீடம் - அதாவது கர்ணிகை என்னும் தாமரைக்காய். புரை - வீடு; ஆச்சிரமம் அல்லது தேவாலயமும் ஆம்; ஐங்குறு ; *319* ; பரிபா. திருவவதாரப்: *42*; பதிற்றுப். *15 : 37*. "அண்டப் பெருங்கோயிலுக் கெல்லாம் மூன்றுலகத்தில், உற்பவித்து மலராது உந்தியிலே முளைத்த தாமரை உட்கொட்டையின் இடமெனக் கொள்க. இது ஒரு பொருள்; ஏழேழ்நிலை அண்டத்துக்குப் புண்டரிக மொட்டினிடம் படியெடுப்பாயது எனவும் ஒரு பொருள்; அழகாய என்ற பாடப்படி யெடுப்பாயது எனவுமொரு பொருள்." இவை பழையவுரை.

இச்செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. திண் சுவரா வேழேழ்; நிலை வகுத்த, நிலையடுத்த.
2. தெல்லா மழகுடைய, தெல்லாமுடைத்தால், தெல்லா முடைத்தாம், தெல்லா மழகுடைய.
3. மூன்றின் மேனின்று, மூன்றினினு; மேலொன்று மலராத, மேலன்று மலராத.
4. பொகுட்டின்புரை, பொகுட்டேபுரை. (*46*)

1177. மண்பா லமரர் வரம்பாருங் காணாத
எண்பா லுயர்ந்த வெரியோங்கு நல்வேள்வி
உண்பாய்நீ யூட்டுவாய் நீயிரண்டு மொக்கின்ற
பண்பா ரறிவார் பகர்வாய் பரமேட்டி.

'பரமேட்டி - யாவற்றினும் மேலான நிலையில் உள்ள பெருமானே! மண்பால் அமரர் - புவித்தேவராகிய அந்தணர்கள், ஆரும் - யாவரும், வரம்பு காணாத-எல்லை காண முடியாத, எண்பால் உயர்ந்த- எண்ணிக்கையின் மிக்க, (அதாவது கணக்கிட முடியாது மேம்பட்ட) எரி ஓங்கு நல் வேள்வி - (ஓமத்தால்) வைதிக அக்னிகள் ஓங்கி வளரும் சிறந்த யாகங்களில், உண்பாய் நீ - அளிக்கப் பெறும் அவியுணவை உண்பவன் நீயே ஆவாய்; ஊட்டுவாய் நீ - அந்த அவியுணவை மற்ற தேவர்களை உண்ணச் செய்பவனும் நீயே ஆவாய்; இரண்டும் ஒக்கின்ற - உண்ணல் உண்பித்தல் ஆகிய இரண்டு செயல்களும் உன்னிடம் ஒன்று சேர்ந்து அமைந்துள்ள, பண்பு - உன்னுடைய இந்த அதிசய குண விசேஷங்களை, அறிவார் யார்-யாரே

அறியும் திறமுடையவராவர்? (ஒருவராலும் அறிய முடியாது என்றபடி).

மண் பாலமரர் - பூதேவர்; அதாவது அந்தணர்; 'ஒருகோடி பூதேவருங்கை தொழுங்கோவை யுற வுன்னுவாம்' (வி. பா. விநாயகர் காப்பு.) உண்பாய் நீ; ஊட்டுவாய் நீ; திருமாலின் ஆயிர நாமங்களில் யஜ்ஞபுக்; யஜ்வா, யஜ்ஞகிருத், யஜமானன் என்ற பெயர்கள் உள்ளமை காண்க. (யஜமானன் - யாகம் செய்பவன் என்பது பொருள்) பரமேட்டி, பரமேஷ்டி என்ற வடசொல்லின் திரிபு; இது முன் 1173இல் பரம்பரனே என்றது போல.

பி - ம். 2. பண்பாளிமிர்ந்த.

3. பூட்டுவாயிரண்டும்; உண்பாய் மற் றூட்டிடுவாய் நீ யிரண்டு மொக்கநின்ற.

4. பகராய் பரமேட்டி, பரம்பர நீ. (47)

1178. நிற்கு நெடுநீத்த நீரின் முளைத்தெழுந்த
மொக்குளே போல முகுளித்த வண்டங்கள்
ஒக்கவுயர்ந் துன்னுளே தோன்றி யொளிக்கின்ற
பக்க மறிதற் கெளிதோ பரம்பரனே.

'பரம்பரனே - மேலானதற் கெல்லாம் மேலான கடவுளே! (அதாவது பராபரன் என்பதாம்); நிற்கும் நெடும் நீத்தம் நீரின் - நிலைபெற்ற பெருவெள்ளமாகிய நீரில், (அதாவது மகாப்பிரளய வெள்ளத்தில்), முகுளித்த - அரும்புபோலத் தோன்றி மேற் கிளம்பிய, அண்டங்கள் - அண்ட கோளங்கள், ஒக்க உயர்ந்து - ஒரே சமயத்தில், மேலெழுந்து, உன் உளே தோன்றி - உன்னிடத்திலிருந்து வெளிப்பட்டு, ஒளிக்கின்ற - பின் வரும் அம்மகாபிரளயத்திலேயே மீண்டும் உன்னிடமே வந்து ஒளிந்து அடங்குகின்ற, பக்கம் - தன்மை, அறிதற்கு எளிதோ - ஒருவரால் அறிந்து கொள்வதற்கு எளியதாகுமோ? (ஆகாது என்றபடி).

முகுளித்தல் - அரும்புதல்; 'பொன்னி வளநாடன் கைவேல் பொழிநிலவால், முன்ன மசைந்து முகுளிக்கும்' (தண்டி: 63. மேற்). பக்கம் - தன்மை; தகுகிலதென னும் பக்கம்' கிட்கிந்தா, வாலிவதைப்; 83: 'வாலிதாம் பக்கமிருந்தை கிருந்தன்று' (நாலடி. 258). அண்டங்களுக்கு முன்னர்ப்படைக்கப்பெற்றது, மகார்ணவம் என்னும் பெருங்கடல் நீர்; அக்கடலிலிருந்து பரமன் அருளால் அண்டங்கள் பல தோன்றிப் பின் பிரளயகாலத்தில் அப்பெரும் கடலினுள்ளே அவ்

வண்டங்கள் மறைந்து போகின்றன என்பது நூற்கொள்கை. இனி, 'சின்னூல் பலபல வாயாலிழைத்துச் சிலம்பி பின்னும் அந்நூலருந்தி விடுவதுபோல வரங்கரண்டம் பன்னூறுகோடி படைத்தவை யாவும் பழம்படியே, மன்னூழி தன்னில் விழுங்குவர் போத மனமகிழ்ந்தே' (திருவரங்கந்து மாலை; 12) என்ற பாசுரத்தால் ஆசிரியர் அழகிய மணவாள தாஸர் உதாரணமுகமாய் விளங்க வைத்தமை நோக்குக.

பி-ம். 2. முரணித்த வண்டங்கள், முளைத்தெழுந்த வண்டங்கள்.
3. வுயர்ந்துளுளே, வுயர்ந்துன்னிற்.
4. பரமேட்டி. (48)

1179. மாயப் பிறவி மயனீக்கி மாசில்லாக்
காயத்தை நல்கித் துயரின் கரையேற்றிப்
பேயொத்தேன் பேதைப் பிணக்கறுத்த வெம்பெருமான்
நாயொத்தே னென்ன நலனிழைத்தே னென்றான்.

'மாய பிறவி மயல் நீங்கி - வஞ்சனைக்கிடமான இவ்விராக்கதப் பிறப்பினால் உண்டாகிய மயக்கத்தைப் போக்கி யொழித்து, மாசு இல்லா காயத்தை நல்கி-குற்றமற்ற இந்தத் திவ்ய சரீரத்தை எனக்கு அளித்து, துயரின் கரை ஏற்றி - சாபத்தால் எனக்குண்டான துன்பக் கடலினின்றும் என்னைக் கரையேற்றி, பேய் ஒத்தேன் - பேய்க்கு ஒப்பான எனது, பேதை பிணக்கு அறுத்த - அறியாமையால் நான் கொண்ட முரண்பட்ட கொடிய வாழ்க்கைத் தொடர்பை அறுத்து என்னை விடுவித்த, எம்பெருமான் - எம்பெருமானே! நாய் ஒத்தேன் நான் - இழிந்த நாயைப் போன்றேனான நான், என்ன நலன் இழைத்தேன் - என்ன நல்ல காரியஞ்செய்தேன்?' என்றான்-என்று கவந்தன் இராம்பிரான் கருணையைப் பாரட்டிப் புகழ்ந்தான்.

என்ன நலனிழைத்தேன் என்பதை வியப்பின் பாலாய்க்கொண்டு 'நான் என்ன புண்ணியம் செய்துள்ளேன்!' என்று தன்னைப் பாராட்டிக்கொண்டான் என்றலும் ஒன்றும். ஒப்பு: 1173. பிணக்கு - பகையும் ஆம். இனி, 'பேதைப்பிணக்கறுத்த - அறியாமையால் எனக்கு ஏற்பட்ட இந்த இழிந்த பிறவித் தொடர்ரை அறுத்து நீக்கிய, எம்பெருமான் - எம்பெருமானே! நான் நாய் ஒத்தேன் என்ன நலன் இழைத்தேன் -நான் நாய்போல என்ன நன்றி மறவாமையை உன்பாற் காட்டினேன்? (இல்லையே என்றபடி); ஆனால் பேய் ஒத்தேன் - ஒரு பேய்போல என் வயிற்றுப் பசி தீர்ப்பதிலேயே என் காலத்தை

இதுகாறுங் கடத்தினேன், என்றான் - என்று தான் அது வரையில் புரிந்து வந்த செயலுக்கு வருந்தினன்' எனக் கொண்டுகூட்டிப் பொருள் கொள்ளலும் ஏற்கும்.

பி - ம். 1. மாயாப்பிறவி ; மாசிலாப்.
3. பேயொத்த பேதைப்.
4. ளுமென்றான், யானென்றான். (49)

கவந்தனை இராமபிரான் காணுதல்.

1180. என்றாங் கினிதியம்பி யின்றறியக் கூறுவெனேல்
ஒன்றாது தேவ ருறுதிக் கெனவுன்னாத்
தன்றாயைக் கண்ணுற்ற கன்றனைய தன்மையனாய்
நின்றானைக் கண்டா னெறிநின்றார் நேர்நின்றான்.

என்றாங்கு - என்று, இனிது இயம்பி - இனிமையாகத் துதிகளைக்கூறி, 'இன்று அறிய கூறுவெனேல் - அவதார இரகசியத்தை யர்வரும் அறியும்படி மேலும் வெளிப்படையாய் விளக்கித் துதிமுகமாய் நான் இன்று எடுத்துக் கூறுவேனானால், தேவர் உறுதிக்கு ஒன்றாது-தேவர்களுடைய நலத்திற்கு அது பொருந்தாதது ஆகும்'. என உன்னா - என்று நினைந்து, தன் தாயை கண் உற்ற தன்மையனாய் - தன்னை விட்டுப் பிரிந்த தன் தாய்ப் பசுவைக் கண்ட கன்று போன்ற நிலையுடையவனாகி, நின்றானை - மகிழ்ச்சியுடன் வானில் தன் எதிரே நின்ற கவந்தனை, நெறி நின்றார் நேர் நின்றான் - ஞானமாகிய நன்மார்க்கத்தில் நின்ற மேலோருக்கு அவர் எதிரில் காட்சியளித்தருள் பவனான இராமபிரான், கண்டான் - பார்த்தான்.

என்றாங்கு ; ஆங்கு, அசை நிலை ; 'ஊடலி னுண்டாங்கோர் துன்பம்' (குறள். 1307 ; பரி. உரை) என்பது போல. உறுதி - நலம் ; 874. இங்கு இராமபிரானைத் தாய்ப் பசுவாகவும், கவந்தனைக் கன்றாகவும் உவமிக்கப்பெற்றது ; இவ்வுவமை, விராதன் துதியில், 'தாய் தன்னை யறியாத கன்றில்லை' என்ற (55) செய்யுளால் ஒருவாறு விளங்குவது காண்க. தாய் தன்னைக் கண்ட கன்று; 122 ; உயுத்த. மீட்சிப் : 337. 'தேவருறுதிக்கு - தேவர்கள் காரியத்துக்காக வந்த வடிவத்துக்கு ; வெளியாய் நேர்நின்றான் - இராமன்' என்பன பழையவுரை.

பி - ம். 1. இனிதேத்தி ; யீதறியக் கூறுவெனே, யின்றறியக்.
3. கண்ணுற்றறிந்த தகைமைத்தால், கண்ணுற்ற கன்றின் ; தகைமைத்தால்.
4. நெறிநின்றார் நேரானான் ; நோக்கினான், நேர்நின்றான். (50)

இராமபிரான் இலக்குவனுக்குக் கவந்தன் உருவைக் காட்ட,
இலக்குவன் கவந்தனை நோக்கி வினவுதல்.

1181. பாரா யிளையவனே பட்டவிவன் வேறேயோர்
பேராளன் றானா யொளியோங்கு பெற்றியனாய்
நேராகா யத்தின் நிற்கின்றா னீயிவனை
ஆரா யெனவவனும் யார்கொலோ நீயென்றான்.

(இராம்பிரான் இலக்குவனை நோக்கி), 'இளையவனே - தம்பி! பாராய்-நீ பார்ப்பாயாக! பட்ட இவன்-நம்மால் கொல்லப்பட்ட இவன், வேறே ஓர் பேர் ஆளன் தானாய் - வேறான ஒரு பெருமைக்குரியவன் ஆகி, ஒளி ஓங்கு பெற்றியன் ஆய் - தேஜஸினால் சிறந்து விளங்கும் நிலையுடையவனாய், நேர் நிற்கின்றான் - நம் எதிரே நின்றுகொண்டிருக்கின்றான்; நீ இவனை ஆராய் என - நீ இவன் உண்மையை ஆராய்ந்தறிவாயாக!' என்று கூற, அவனும் - அந்த இலக்குவனும் (அவனை நோக்கி), 'நீ யார் கொலோ என்றான்-நீ யார்' என்று ஐயுற்று வினவினான்.

பட்ட இவன் - இறந்த இக்கவந்தன்; படுதல் - அழிதல், இறத்தல், பேராளன்; பெரிய திருமொழி; 7. 4: 4, 8; 1: 6. ஒளி, தேஜஸ்; ஒரு தெய்வீக காந்தி: 'உறங்கு மாயினும் மன்னவன் றன்னொளி கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்'; (சீவக. 248); கொல், ஐயப் பொருளையுணர்த்தியது. ஓ! வினாப்பொருளில் வந்த இடைச்சொல். இனி, நேராகாயத்தின் நிற்கின்றான்-யாவர்க்கும் கிடைக்காத திவ்ய சரீரத்தின் நம் எதிரே வானில் நிற்கின்றான் எனப்பொருள் கொள்ளலும் ஏற்கும். கவந்தன் இறக்கு முன் கேட்டுக் கொண்டதற்கிணங்கி, இராமலக்ஷ்மணர்கள் ஒரு பெரிய குழிவெட்டி அதில் உலர்ந்த கட்டைகளை நிரப்பி, அதில் அவன் உடலை இட்டுத் தீயிட்டு எரிக்கவே, அதினின்றும் அவன் ஒரு திவ்ய ரூபத்துடன் எழுந்து வானிற் றோன்றித் தன் வரலாறு கூறினான் என்று, வான்மீகம், அத்யாத்ம ராமாயணங்கள் கூறும்.

பி-ம். 1. பாரா யிளையானே; பட்டவனோ.
2. பேராளன்றானே; வெளியோங்கு, யொளியிறங்கு.
3. நேராகாயத்தின்; காயத்தின்மிசை.
4. யார் கொலாம் நீ.

வேறு

கவந்தன் தன் வரலாறு கூறுதல்.

1182. சந்தப்பூ ணலங்கல் வீரன் தனுவெனு நாமத் தேனோர்
கந்தர்ப்பன் சாபத் தாலிக் கடைப்படு பிறவி கண்டேன்
வந்துற்றீர் மலர்க்கை தீண்ட முன்னுடை வடிவுபெற்றேன்
எந்தைக்கு மெந்தை நீர்யா னிசைப்பது கேண்மி னென்றான்.

'சந்தம் பூண் அலங்கல் வீரன் - அழகிய ஆபரணங்களையும் மாலையையும் அணிந்து விளங்கும் வீரனான, தனு எனும் நாமத்தேன்- தனு என்னும் பெயரையுடையேனான நான், ஓர் கந்தர்ப்பன் - ஒரு கந்திருவன் ஆவேன்; சாபத்தால் இ கடைபடு பிறவி கண்டேன் - ஒரு சாபத்தினால் இந்தக் கீழ்ப்பட்ட அரக்கப் பிறப்பை அடைந்தேன்; வந்து உற்றீர் - இங்கு எனக்கு அருள்புரிய வந்தடைந்த உம்முடைய, மலர் கை தீண்ட - தாமரை மலர்போன்ற கைகள் என்மீது பட்ட மாத்திரத்தில், முன் உடை வடிவம் பெற்றேன் - யான் முன் அடைந்திருந்த அக் கந்திருவ உருவத்தை மீண்டும் அடைந்தேன்; எந்தைக்கும் எந்தை நீர் - என் தந்தைக்கும் தந்தையாகிய நீவிர், இசைப்பது கேண்மின் என்றான் - யான் கூறுவதைக் கேட்டருள்வீராக!' என்று (சுயரூபமடைந்த கவந்தன்) விண்ணப்பித்துக்கொண்டான்.

வான்மீகம் கூறும் கவந்தன் வரலாறு: இராமலக்ஷ்மணர்கள் கவந்தனின் இருகரங்களையும் வெட்டி வீழ்த்தியதும், அவன் தனது முற்பிறப்பின் நினைவு வரப்பெற்றுப் பின்வருமாறு கூறினான்; 'ஸ்ரீராமா! நான் தநு என்பவன் வம்சத்தில் ஸ்ரீ என்பவனுக்குப் புதல்வனாவேன்; அழகிய வடிவு படைத்த நான் கொடிய கோரரூபத்தை எடுத்துப் பலரையும் அச்சுறுத்தி வருகையில், ஒரு சமயம் ஸ்தூலசிரஸ் என்னும் முனிவரிட்ட சாபத்தால் அந்தக் கோரரூபமே எனக்கு நிலைபெறுவதாயிற்று. பின் யான் என் பிழையுணர்ந்து அம்முனிவரை வேண்டிக் கொள்ள, அவர் திருமால் இராமபிரானாக வந்து உன் கரங்களைத் துண்டித்து உன்னை எரிக்கும்போது இச்சாபம் நீங்குமென்று கூறிச்சென்றனர். பின் யான் கடுந்தவம் புரிந்து நெடுவாழ்நாளைப் பெற்று, அதனாற் பெரிதுஞ் செருக்குற்று இந்திரனை எதிர்த்தேன். இந்திரன் தன் வச்சிராயுதத்தால் என் கைகளையும் தலையையும் என் வயிற்றுக்குள் புகுமாறு செய்தான். பின் அவனை யான் வேண்ட, ஒரு யோசனை நீளும் இரு கைகளை யளித்தனன் என்றனன் என்பது. கவந்தன் ஒரு கந்தர்வ ராஜனென்றும், அவன் பிரமதேவரால் வரம்பெற்றவனென்றும் அஷ்டவக்ர முனிவர் அவனுக்கு அந்தக் கோர இராக்கத

உருவம் உண்டாகச் சபித்துப் பின், இராமபிரானல் அச்சாபம் நீங்குமென்று அருளினர் என்றும் அத்யாத்மராமாயணம் கூறுகின்றது. இக் கவந்தனுக்கு, முன் கந்திருவப் பிறப்பில் விசுவாவசு என்பது பெயர் என்றும் கூறுவதுண்டு. 'தனு - கவந்தனது முன்னைப் பெயர்' என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. இவ்வாறே பெயர்கள் நூல்களில் மாறி வருவன உண்டு. 'சந்தம் - அழகு : எந்தைக்கு மெந்தை - என் அத்தனான பிரமனுக்கும் அத்தன்' என்பன பழையவுரை. பிரமன், யாவர்க்கும் பிதா என்றமையால், கவந்தன் பிரமனைத் தன் பிதா என்றனன் என்பதாம். 'ஓர் கந்தர்ப்பன் சாபத்தால்' என்று இணைத்துப் பொருள் கூறுவர் சிலர்.

பி - ம். 1. சந்தப் பேரலங்கல் வீர ; சந்தப்பூ ணலங்கல் வீர ; வீரா.
2. கடைபடு பிறவி.
3. தீண்டா முன்னுடைய வடிவம் ; முன்னையின் வடிவம் ; வடிவம் பெற்றேன். 4. மெந்தை நீரே. (52)

**கவந்தன் இராம லக்ஷ்மணர்கள் துணை நாட வழி கூறுதல் 1183—6**

**1183.** கணையுலாஞ் சிலையி னீரைக் காக்குந ரில்லை யேனும்
இணையிலா டன்னை நாடற் கேயின செய்தற் கேற்கும்
புணையிலா தவர்க்கு வேலை போக்கரி தன்ன தேபோல்
துணையிலா தவர்க்கு மின்ருற் பகைப்புலந் தொலைத்து நீக்கல்.

(மேலும் அவன் அவர்களை நோக்கி), கணை உலாம் சிலையினீரை - அம்புகள் பயிலப்பெற்ற வில்லையுடைய உங்களை, காக்குநர் இல்லை ஏனும் - உதவி புரிந்து காக்கக்கூடிய (தகுதியுள்ள) துணைவர் (பிறர்) இல்லையென்றாலும், இணை இலாள் தன்னை நாடற்கு - தனக்கு ஒப்பு இல்லாத பிராட்டியைத் தேடுவதற்கு, ஏயின - பொருத்தமான காரியங்களை, செய்தற்கு - செய்வதற்கு, ஏற்கும் - சிலர் உதவி ஏற்கத் தக்கதாகும் ; (ஏனெனில்), புணை இலாதவர்க்கு - தெப்பம் இல்லாதவர்க்கு, வேலை போக்கு அரிது - கடலைத் தாண்டிக் கரை போய்ச் சேருவது முடியாததாகும் ; அன்னதே போல் - அதுபோல, பகைபுலம் தொலைத்து நீக்கல்-போர்க்களத்திற் பகைவரை அழித்து ஒழிப்பது, துணை இலாதவர்க்கும் இன்று - தமக்குப் பக்கத்துணை இல்லாதவர்க்கும் இல்லாததாகும் ; ஆல் : ஈற்றசை.

காக்குநர் இல்லை : இராம லக்ஷ்மணர்கள் தமக்கோர் துணை வேண்டாதவர் ; அதாவது அஸகாய சூரர்கள் என்பது ; 'நின்ற பேருலகெலாம் நெருக்கி நேரினும் வென்றிவெஞ் சிலையலாற் பிறிது வேண்டுமோ' ; 'கூட்டொருவரை வேண்டாக் கொற்றவ' (கிட்கிந்தா.

வாலிவதைப்: 25, 81.), அவ்வாறிருந்தும் துணை வேண்டும் என்றான் என்க. புணை யிலாதவர்க்கு வேலை போக்கரிது; 'நெடுநீர்ப் புணை யின்றி நீந்துத லின்னா'; (இன்னா நாற்பது : 4); பகைப் புலம் - போர்க் களம்; சிலப். 26 : 180; பெருங். 3, 22 : 23. சீவக. 2516.

பி - ம். 1. காக்குந ரில்லை யென்னா, காக்குந ரின்மை யேனும்.
2. செய்த ராலும், செய்த றேற்றும், செய்தற் கேற்றும்.
3. போக்கரி தென்பதேபோற்.
4. துணையிலாதவற்கு; மின்னா பகைப்புலஞ் மின்னாப் பகைப் புலஞ், மொண்ணாப் பகைப்புலம், மீண்டார் பகைப்புலம், மொன்னார் பகைப்புலம்; துணையில. (53)

1184. பழிப்பறு நிலைமை யாண்மை பகர்வதென் பதும பீடத்
துழிப்பெருந் தகைமை சான்ற வந்தண னுயிர்த்த வெல்லாம்
அழிப்பதற் கொருவ னான வண்ணலு மறிதி ரன்றே
ஒழிப்பருந் திறல பூத கணத்தொடு முறையு முண்மை.

பழிப்பு அறு - இகழ்ச்சி அற்ற (அதாவது குற்றமில்லாத), நிலைமை ஆண்மை - உங்கள் தன்மையையும் வீரத்தையும், பகர்வது என் - நான் சொல்லவேண்டியது யாது? (எனக்குத் தகுதியில்லை என்றபடி); (ஆயினும்), பதும பீடத்து உழி - தாமரையாகிய பீடத்தினிடத்து, பெரும் தகைமை சான்ற - பெருஞ் சிறப்பின் மிக்க, அந்தணன் உயிர்த்த எல்லாம் - பிரமதேவன் படைத்த எல்லாவற்றையும், அழிப்பதற்கு ஒருவன் ஆன அண்ணலும் - அழிப்பதற்கு ஒரு தெய்வமாய் அமைந்த ஒப்பற்ற சிவபெருமானும், ஒழிப்பு அரும் - நீக்குதற்கரிய, திறல் அ - வலிமைவாய்ந்த, பூத கணத்தொடும்-பூதங்களின கூட்டத்தோடும், உறையும் உண்மை - சேர்ந்திருக்கும் தத்துவத்தின் உண்மையை, அறிதிர் அன்றே-நீவிர் அறிவீரல்லவோ?

துணை இன்றியமையாமையைச் சிவபெருமான் துணையுடன் நின்றமையைக் கவந்தன் குறிப்பிட்டுக் கூறினான் என்க. இச் செய்யுள் சந்தேகம் என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு. அண்ணலும்: உம்மை, உயர்வு சிறப்பினது. திறல: குறிப்புப் பெயரெச்சம். சிவபிரான் பூதங்களை உடன்கொண்டுள்ளது; "வருவார் விடை மேன் மாதொடும் மகிழ்ந்து பூதப் படைசூழ" (சுந்தரர். கடவூர் மயானத் தேவாரம்); 'பூதமுந் திரிசூல மிட்டுடன் கலந்து' (தக்க. 367). இதனால் சிவபிரானுக்குப் பூதநாதன் என்னும் பெயர் உண்டாயிற்று.

பி - ம். 1. நிலைமை யேடே. 2. தழைப் பெருந்.
3. லண்ணலுந் துணையின் சேரால்; வண்ணலு மறிதிரன்றே.
4. திறற்பல் பூத, திறப்பல் பூத, திறன்கொள் பூத. (54)

### கவந்தன் பிராட்டியைத் தேட உபாயங் கூறியது

**1185.** ஆயது செய்கை யென்ப தறத்துறை நெறியி னெண்ணித்
தீயவர்ச் சேர்கி லாது செவ்வியோர்ச் சேரும் செய்கை
தாயினு முயிர்க்கு நல்குஞ் சவரியைத் தலைப்பட் டன்னாள்
ஏயதோர் நெறியை யெய்தி யிரலையங் குன்ற மேறி,

அற துறை நெறியின் எண்ணி - அறநெறி வழிகளை ஆராய்ந்து, தீயவர் சேர்கிலாது - தீயவர்களைச் சாராமல், செவ்வியோர் சேரும் செய்கை - நல்லோர்களைச் சாரும் செயல், செய்கை என்பது ஆயது - செய்யத்தக்க காரியம் என்பது ஆகும்; (அதன்பொருட்டு), உயிர்க்கு - பிராணிகளுக்கு, தாயினும் - பெற்ற அன்னையை காட்டிலும், நல்கும் - மேன்மையாக உதவும், சவரியை தலைப்பட்டு - சவரி என்ற தவமாதை அடைந்து, ஏயது - அவள் குறிப்பதான, நெறியை எய்தி - வழியை மேற்கொண்டு, இரலை அம் குன்றம் ஏறி - கலைமான் பெயரைக் கொண்ட ருசியமூகம் என்ற மலைமீது ஏறி,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய் இயைந்து வினைமுடிவு கொள்ளும். சவரி - வேடமாது; சபரி என்ற வடசொல்லின் திரிபு: ஆண்பால் சபரன். இரலை - கலைமான்; 'இரலையுங் கலையும் புல்வாய்க் குரிய' (தொல். பொருள்: 600). இரலையின் குன்றம் - ருசியமூக பர்வதம்; இதனைச் சிருங்ககிரி என்றும் கூறுவர்; சவரியின் வரலாறு பின்வரும் படலத்தால் விளங்கும். தீயவர் என்றது வாலியைக் குறித்தும், செவ்வியோர் என்றது சுக்கிரீவன், அநுமன் முதலியோரைக் குறித்தும் கவந்தன் சொன்னதாகவும் கருதலாம். சவரி அச் சுக்கிரீவன் இருந்த இடத்திற்கு வழி காட்டுபவளாவள் என்றது கூறப்பெற்றது. ருசியமூககிரி, சிருங்ககிரி என்பன மைசூர் இராஜ்யத்தில் இப்பொழுது இரு மலைகளின் பெயர்களாக வழங்குகின்றன. இங்குக் குறிக்கப்படுவது கிட்கிந்தைக்கு அருகிலுள்ள ஒரு குன்று; வடபெண்ணையாற்றி னருகிலுள்ள சந்திரதுர்க்கம் என்பதே இஃது என்பர் சிலர்.

பி - ம். 1. தகத்துறை நெறியி.
2. செவ்வியோர்ச் சேருஞ் செய்கை, செவ்வியோர்ச் சேர்ந்து செய்தல்; சேர்த்துச் செய்தல்.
3. யுயிர்க்கு நல்ல சவரி, யுயிர்க்கு நல்ல.
4. ஏயின நெறியே, ஏயின நெறியினெய்தி.

1186. கதிரவன் சிறுவ னான கனகவா ணிறத்தி னானை
எதிரெதிர் தழுவி நட்பி னினிதமர்ந் தவனி னீண்ட
வெதிர்பொரு தோளி னானை நாடுதல் விழுமி தென்றான்
அதிர்கழல் வீரர் தாமு மன்னதே யமைவ தானார்.

'கதிரவன் சிறுவன் ஆன - சூரியன் குமாரனான, கனக வாள் நிறத்தினானை - பொன் போன்ற ஒளிபொருந்திய உடலையுடைய சுக்கிரீவன் என்னும் வானரத் தலைவனை, எதிர் எதிர் தழுவி - நேருக்கு நேர் கண்டுசேர்ந்து, நட்பின் இனிது அமர்ந்து - நண்பராய் இனிமையுடன் அமர்ந்து, அவனின் - அவன் துணையினால், ஈண்ட - விரைவாக, வெதிர் பொரு தோளினானை - மூங்கிலை ஒத்த தோள்களையுடைய பிராட்டியை, நாடுதல் விழுமிது என்றான் - தேடுதல் சிறப்புடையது' என்று கவந்தன் கூறினான்; அதிர் கழல் வீரர் தாமும் - ஒலிக்கும் வீரக்கழல்களை அணிந்த வீரர்களாகிய இராம லக்ஷ்மணர்களும், அன்னதே அமைவது ஆனார் - அவ்வாறே உடன்பட்டுச் செய்வதானார்.

சுக்கிரீவன் பொன்னிறமானவன்; கிட்கிந்தா. 8: 19; 104. முதனூல், சுக்கிரீவன் பெருமைகளைக் கவந்தன் இராமபிரானுக்கு விரிவாக எடுத்துரைத்தனன் என்று கூறுகிறது. அவன் இராமபிரானைப் போலவே இன்னல் நிலையில் இருப்பவனும், தேவர்களுக்கு விருப்பமானவனுமாவன் என்று கவந்தன் கூறியதாகவும் அங்குச் சொல்லப் பட்டுள்ளது. சிறுவன்: இது மகன் என்னும் பொருளில் வருவது; 'உலகாளுஞ் சிறுவர்ப் பயந்து' (சீவக. 2606.) நிறம் - சரீரம் அல்லது உடல்; 'மெல்லியலைத் தன்னிற மொன்றி லிருத்தி நின்றோன்'; (திருச்சிற். 58.) ஈண்டல் - விரைதல்; 'இடுக்கண் களைதற் கீண்டெனப் போக்கி,' (சிலப். 13 : 101,) மகளிர் தோளுக்கு மூங்கில்; 284, 357, 620; நள. சுயம்வர : 39; 'வேயுறு தோளி' (திருஞான. தேவாரம்.)

பி - ம். 1. சிறுவனாய; சிறுவனான காவலன் றன்னைக் கண்டாய்; னிறத்தினோனை; கண்கயர் முகத்தினோனை.

2. தழுவிய நட்பின்; தவனி னீண்டு.

3. பொருஞ் தோளினானை, பெருந் தோளினானை; நாடுதி விரைவினென்றான்.

(56)

கவந்தன் வான் செல்ல, இராம லக்ஷ்மணர் மதங்காச்சிரமம் அடைதல்

1187. ஆனபின் றெழுது வாழ்த்தி யந்தரத் தவனும் போனுன்
மானவக் குமரர் தாமு மத்திசை வழிக்கொண் டேகி
கானமு மலையு நீங்கிக் கங்குல்வந் திறுக்குங் காலை
ஆனையி னிருக்கை யென்னு மதங்கன தடுக்கல் சேர்ந்தார்.

ஆன பின் - அவ்வாறு இராம லக்ஷ்மணர்கள் செல்ல அமைந்த பிறகு, அவனும் - அக் கவந்தனும், தொழுது வாழ்த்தி - அவர்களை வணங்கித் துதித்து, அந்தரத்து போனுன் - வானுலகு சென்றுன்; மானவ குமரர் தாமும் - மனுகுலத் துதித்த அவ்வரச குமாரர் களும், அ திசை வழி கொண்டு ஏகி - கவந்தன் கூறிய அத்திசை நோக்கி வழிமேற் சென்று, கானமும் மலையும் நீங்கி - (பல) காடுகளை யும் மலைகளையுங் கடந்து, கங்குல் வந்து இறுக்கும் காலை - இரவு வந்து தங்கும்போது, ஆனையின் இருக்கை என்னும் - யானைகளின் வாழுமிடம் என்று சொல்லப்படும், மதங்கன் அது - மதங்க மகருஷி யினுடைய, அடுக்கல் சேர்ந்தார் - மலையைப் போய் அடைந்தனர்.

இறுத்தல் - வந்து தங்குதல்; 'செக்கர்வந் திறுத்த தன்றே' 290; 'சேனையு மிறுத்த தன்றே' (பால. எழுச்சி : 82). மதங்கன் - ஓர் இருடி; இவர் யானைகளிடத்து மிக்க அன்புகொண்டு அவற்றைக் காப்பாற்றி வந்தவர்; அவர் தாமும் ஒரு யானை உருவோடு வாழ்ந்து வந்தார் என்றுங் கூறப்பெறும். ஆதலின், அவர் ஆச்சிரமத்திற்கு அருகே யுள்ள மலைகளில் யானைகள் பல கூடி இன்புற்று வாழ்ந்து வந்தன என்றும், அம் முனிவர் பெயரின் காரணமாகவே யானைக்கு மாதங்கம் என்ற தத்திதாந்தப் பெயர் உண்டாயிற்றென்றும் அறியப்பெறும். இம் மலைச்சாரலில் யானைகள் மகிழ்ந்து வாழ்ந்து வந்த சிறப்பை வான்மீகமும் விளக்கியுள்ளமை காணலாம். இம் மதங்கமுனிவர் கஜாயுர் வேதம் என்னும் யானைகளைப் பற்றிய ஓர் அரிய நூலை வடமொழியில் இயற்றியுள்ளார் என்பர். இந்த மதங்க முனிவர் ஆச்சிரமம் பம்பைப் பொய்கைக்கு மேற்கே இருந்ததாக வான்மீகம் கூறும்.

பி-ம். 1. யந்தர மெழுந்து போனுன். 3. கங்குல்வந் திறுத்த காலை. 4. யானையின் னிருக்கை யன்ன; யானையி னிரட்டை யென்ன மதங்கன திருக்கை சேர்ந்தார். (57)

கவந்தன் வதைப்படலம் முற்றும்.

---

# 12. சவரி பிறப்பு நீங்கு படலம்

இது, சவரி என்னும் ஒரு வேடர் குலத் தவ மகள் இராமபிரான் திருவருளால் பிறவி நீங்கி வீடுபேறு எய்திய வரலாற்றினைக் கூறும் படலம் என விரியும். [சவரி - சபரி என்ற வடசொல்லின் திரிபு; வேடர் குலமகள், சபரர் - வேடர்]. இவள், மதங்காச்சிரமத்தில், மதங்க முனிவரின் சீடர்களுக்கு உபசாரஞ் செய்துகொண்டு, துறவு பூண்டு, அவ்வாச்சிரமத்திலேயே தங்கியிருந்தனள். இது, சவரி மோட்சப் படலம் என்று சில சுவடிகளிற் காணப்பெறுகின்றது.

மதங்காச்சிரமச் சிறப்பு.

1188. கண்ணிய தருதற் கொத்த கற்பகத் தருவு மென்ன
உண்ணிய நல்குஞ் செல்வ முறுநறுஞ் சோலைச் சாலை
எண்ணிய வின்ப மன்றித் துன்பங்க ளில்லை யான
புண்ணியம் புரிந்தோர் வைகுந் துறக்கமே போலு மன்றே,

(சவரி தங்கியிருந்த ஆச்சிரமம்), கண்ணிய - கருதி அடைய விரும்பியவற்றை, தருதற்கு ஒத்த - கொடுப்பதற்கு அமைந்த, கற்பக தருவும் என்ன - கற்பக விருக்ஷமும் (அதுதான்) என்று சொல்லத்தக்க, உண்ணிய - (காய்கனி கிழங்கு முதலான) உண்ணத்தக்கனவற்றை, நல்கு - அளிக்கும், செல்வம் உறும் - செழிப்பை அடைந்துள்ள, சோலை - சோலை சூழ்ந்த, சாலை - மதங்க முனிவர் இருந்த தவச்சாலை, எண்ணிய இன்பம் அன்றி - யாவரும் கருதிய இன்பமே அல்லாமல், துன்பங்கள் இல்லை ஆன - துன்பங்கள் என்பனவே இல்லாததான, புண்ணியம் புரிந்தோர் வைகும் - நல்வினை செய்தோர் இருக்குமிடமான, துறக்கமேபோலும் - சுவர்க்கமே போன்றதாகும். அன்று, ஏ : ஈற்றசைகள்.

கண்ணுதல் - கருதுதல்; *1196* ; சுந்தர ; *308, 322, 849* ; உயுத்த. இரணியன் வதைப் : *1.* கற்பகத்தருவும்; உம்மை, உயர்வு சிறப்பினது. செல்வம்-செழிப்பு. துறக்க வாழ்வு, இன்பமே அன்றித் துன்பமில்லாதது போல, இம்மதங்காச்சிரமமும் இன்பச் செழிப்பு மிக்குள்ளது என்க. உண்ணிய : எதிர்கால வினையெச்சம். துறக்கம் புண்ணியம் புரிந்தோர் அடையும் வாழ்வு என்பது ; பால. நகரப் : *111* ; சுந்தர : *94* ; கலித். *118 : 2-3.* ஒப்பு : 'மண்ணியல் வாழ்நர்க்கும் வானுலகொப்பது, புண்ணியமில்லார் புகுதற் கரியது, கண்ணிய

கற்பகக் கானங் கலந்தது, விண்ணிய லின்பம் விரவிற் றினிதே' (தூளா. 279).

பி-ம். 1. கண்ணிய கருதற்கொத்த; கற்பக தருவேபோல, தருவா மென்ன.
2. உறுநறுஞ் சோலைச்சாரல்; சோலைசாரல்.
3. துன்பங்க ளில்லையானற்; ளில்லையாய.
4. போலுமன்றே, போன்றதன்றே. (1)

இராமபிரான் சவரியைக்கண்டு நலம் விசாரித்தல்.

1189. அன்னதா மிருக்கை நண்ணி
யாண்டுநின் றளவில் காலம்
தன்னையே நினைந்து நோற்குஞ்
சவரியைத் தலைப்பட் டன்னாட்
கின்னுரை யருளித் தீதின்
றிருந்தனை போலு மென்றான்
முன்னவற் கிதுவென் றெண்ண
லாவதோர் மூல மில்லான்.

அவற்கு முன்-அப்பெருமானுக்கு முன்னதாக உள்ளது, இது என்று எண்ணல் ஆவது ஓர் - இன்னது என்று கருதக் கூடிய ஒன்றான, மூலம் இல்லான் - மூலப் பொருள் (தன்னையன்றி வேறு) இல்லாத ஆதிமூலப் பரம்பொருளாகிய இராமபிரான், அன்னது ஆம் இருக்கை நண்ணி - அத்தகைய சிறப்பு வாய்ந்த மதங்காச்சிரமத்தை யடைந்து, ஆண்டு நின்று - அவ்விடத்தில் இருந்து, அளவு இல் காலம் - கணக்கிட முடியாத நெடுங்காலமாக, தன்னையே நினைந்து நோற்கும் - தன்னையே தியானஞ்செய்து தவஞ்செய்து வந்த, சவரியை தலைப்பட்டு - சவரி என்னும் வேடத் தவமாதைச் சந்தித்து, அன்னாட்கு - அவளுக்கு, இன் உரை அருளி - இனிய வார்த்தைகளைப் பேசி, 'தீது இன்று இருந்தனை போலும் - நீ யாதொரு துன்பமுமின்றி இருக்கின்றாய் போலும்' என்றான்-என்று அன்போடு நலம் வினவி அருளினான்.

முன்னவற்......மூலமில்லான்; ஒப்பு; 49, 53, 54, 56, 60, 101, 103. 1115; சுந்தர: 1122, முனிவர்கள் தம் உண்மை ஞானத்தால் இராமபிரானது பரத்துவ நிலையை அறிந்தவர்களாதலின், இக்காண்டத்தில் அவர்களைப் பற்றிக் கூறுமிடங்களிலெல்லாம் கவியரசர் அச்செய்தியை நினைப்பூட்டிக்கொண்டே செல்வது காணத்தக்கது. சவரி: இவள் பிராயம் முதிர்ந்த ஒரு வேடமாது. இவள் நெடுங்காலமாய்

மதங்காச்சிரமத்தில் இருந்து அந்த மதங்க முனிவர்க்கும், பின் அம் முனிவர் சிஷ்யர்களான தவசியர்களுக்கும் தொண்டு புரிந்து வந்து தவநியமத்தில் இருந்தவள்; அம்முனிவர்கள், 'இராமபிரான் இவ்விடம் வந்து உனக்கு அருள்புரிவான்; அவனது வரவை நீ எதிர் பார்த்திரு' என்று கூறிச் சென்றதற்கிணங்க, அவள் நெடுங்காலம் இராமபிரானது வரவை எதிர் நோக்கியிருந்து அவன் வரவு கண்டு உபசரிக்க, அப்பெருமானால் நன்கு மதிக்கப்பெற்று நற்கதியடைந்தனள்' என்று வான்மீகம் அத்யாத்மம் முதலிய நூல்கள் கூறும். சுருக்கமான ஸம்க்ஷேப ராமாயணத்தில் இவளது பெருமை பெரிதும் சிறப்பிக்கப் பெற்றமை காணலாம். மதங்காச்சிரமம் பம்பா ஸரஸின் மேற்புறத்திலிருந்தது என்னும் வான்மீகம். தீதின்றிருந்தனை போலும்; 'உனக்கு இடையூறுகள் நீங்கித் தவம் வளர்கின்றதா? உணவு சுருங்கிச் சினமும் அடங்கியுளவா? விரதங்கள் இடையூறின்றி முடிந்தனவா? உன் மனம் மகிழ்கின்றதா? நீ ஆசிரியர்க்குச் செய்த பணிவிடைகள் பயன்பெற்றனவா?' என்று இராமபிரான் வினவினான் என்று வான்மீகம் விளக்கும்.

பி-ம். 2. நினைந்து நோக்குஞ்.
3. நீயிங்கிருந்தனை போலுமென்ன; போலுமென்ன.
4, முன்னவர்க் கொருவர்வே றெண்ண லாவதோர் மூல மில்லான். (2)

சவரி இராமபிரானை உபசரிந்து விருந்தளித்தமை.

1190. ஆண்டவ ளன்பி னேத்தி யழுதிழி யருவிக் கண்ணள்
மாண்டதென் மாயப் பாசம் வந்தது வரம்பில் காலம்
பூண்டமா தவத்தின் செல்வம் போயது பிறவி யென்றாள்
வேண்டிய கொணர்ந்து நல்கி விருந்துசெய் திருந்த வேலை.

ஆண்டு - அப்பொழுது, அவள் - அந்தச் சவரி, அருவி கண்ணள் - அருவிபோல் நீர் ஒழுகிய கண்களையுடையவளாய், அன்பின் ஏத்தி - பக்தியாற் இராமபிரானைத் துதித்து, 'என மாயபாசம் மாண்டது - (உன்னை இங்கு யான் தெரிசித்ததால்) எனது பொய்யான உலகப் பற்று அழிந்தது; வரம்பு இல் காலம் - அளவற்ற நெடுங்காலமாக, பூண்ட - நான் மேற்கொண்டதான, தவத்தின் செல்வம் - தவத்தின் பேறு, வந்தது - எனக்குக் கைகூடி வந்ததாயிற்று; பிறவி போயது - என் பிறவித்துன்பம் நீங்கிப் போயிற்று,' என்னா - என்று கூறி, வேண்டிய கொணர்ந்து நல்கி - அவர்களை உபசரித்து உண்பிக்க வேண்டுவனவான கனி, கிழங்கு முதலியவற்றைக்

கொண்டு வந்து அளிந்து, விருந்துசெய்து - அதிதிகளுக்குரிய உப சாரங்களைச் செய்து உண்பித்து, இருந்த வேலை - அவ்விராம லக்ஷ்மணர் களைப்புத் தீர்ந்து இருந்தபோது,

இச் செய்யுள், 1192 வரை ஒரு தொடராய் இயைந்து வினை முடிவு கொள்ளும். மாண்டது, வந்தது, போயது என்னும் வினை கள் துணிவுப் பொருளில் வந்த கால வழுவமைதிகளின் பாற்படும். விருந்து செய்திருந்த வேலை - சவரி விருந்தளித்துக் கொண்டிருந்த போது என்று பொருள் கொள்வாரும் உளர். விருந்தளித்துப் பின் விருந்தளி இனிதிருந்த பொழுதுதான், வந்த விருந்தினர் நோக் கத்தையோ அல்லது தம் கருத்து அல்லது குறைகளையோ கூறிக் கொள்வது மரபு ஆதலின், இருந்தபோது என்பதற்கு இராம லக்ஷ்மணர்கள் அமர்ந்து இருந்தபோது என்று பொருள் கொள் ளப்பட்டது. ஒரு சுவடியில் இதுவும் அடுத்த செய்யுளும் முன் பின்னாக அமைந்துள்ளன. சபரி விருந்து செய்த தன்மையைப் பற்றி, அவள் உண்டு மீதிவைத்திருந்தவற்றை இராமபிரான் உண் டருளினான் என்று சிலர் கூறுவர்; 1192-இன் கீழுள்ள அதிகப் பாடலைக்காண்க. அதற்கு வான்மீகத்திலோ, அத்யாத்ம ராமாயணத் திலோ ஆதாரம் இல்லை. கம்பநாடருடைய நோக்குக்கும் அது ஏற்றதாகாது.

பி - ம். 1. யருவரை யருவிக்கண்ணாள் யழு தழியருவிக்; யழுதுசோரருவிக்; ஆனந்தக் கண்ணீர் சோர.

2. மாயா பாசம்; வந்தி யான்வரம் பில்காலம்.

3. பிறவி யென்பாள்.

4. கொணர்ந்து நல்க விருந்து கந்திருந்தவேலை; விருந்து செய் திருந்தவேலை, விருந்தின ரிருந்தவேலை, விருந்து நன் கிருந்த வேலை, விருந்தின னிருந்தவேலை; வேண்டிய துணர்ந்து நல்ல. (3)

சவரியின் கூற்று.

1191. ஈசனுங் கமலத் தோனு மிமையவர் யாரு மெந்தை
வாசவன் றானு மீண்டு வந்தனர் மகிழ்ந்து நோக்கி
ஆசறு தவத்துக் கெல்லை யணுகிய திராமற் காய
பூசனை விரும்பி யெம்பாற் போதுதி யென்று போனார்.

'எந்தை - என் தந்தையே! ஈசனும் - சிவபிரானும், கமலத் தோனும் - தாமரை மலரின் மேல் விளங்கும் பிரமதேவனும், இமை

யவர் யாரும் - தேவர் அனைவரும், வாசவன் தானும் - இந்திரனும், ஈண்டு - இங்கு, வந்தனர் - வந்து, மகிழ்ந்து நோக்கி - என்னை மகிழ்ச்சியுடன் பார்த்து, 'ஆசு அறு தவத்திற்கு எல்லை அணுகியது - குற்றமற்ற உன் தவத்திற்கு முடிவான நீ சித்தி பெறுங்காலம் வந்துவிட்டது; இராமற்கு ஆய பூசனை விரும்பி - இராமபிரான் வரவை நோக்கியிருந்து அவருக்கு நீ செய்பத்தக்க வழிபாடுகளை விருப்பமொடு புரிந்து, எம் பால் போதுதி - எமது உலகத்திற்கு வருவாயாக, என்று போனார் - என்று எனக்கு உரைத்துச் சென்றனர்.

ஈசன் முதற்றேவர்கள் சவரியிடம் வந்து, அவளைத் தம் தம் உலகம் வரச்சொன்னதாக உள்ள இச்செய்தி வான்மீகத்தில் இல்லை. மதங்க முனிவரது சிடர்களான தவசிகளே, 'நீ இராமபிரான் வரவை நோக்கியிருந்து அவருக்குப் பூசனைபுரிந்து அவரருள்பெற்றுப் பின் துறக்கம் எய்துவாய்' என்று உரைத்துச் சென்றூராக அம்முதனூல், கூறும். சரபங்க முனிவரிடம் இந்திரன் வந்து சொன்ன செய்தி இங்குக் கருதத் தக்கது. இச் செய்யுள் ஐயத்துக்கிடமானது.

பி - ம். 1. மிலயவர் தாமு. 2. வந்தனங் கிளர்ந்து.
3. தவத்திற் கெல்லை. 4. விரும்பிச் செய்து. (4)

சவரி இராமனைப் புகழ்தலும், இராமன் உபசாரங் கூறுதலும்.

1192. இருந்தனெ னெந்தை நீயீண் டெய்துதி யென்னுந் தன்மை
பொருந்திட வின்று தானென் புண்ணியம் பூத்த தென்ற
அருந்தவத் தரசி தன்னை யன்புற நோக்கி எங்கள்
வருந்துறு துயரந் தீர்த்தா யம்மனை வாழி யென்றான்.

'எந்தை - என் தலைவனே! நீ ஈண்டு எய்துதி என்னும் தன்மை - நீவிர் இங்கு வரப்போகிறீர் என்ற நிலைமை, பொருந்திட - ஏற்பட, இருந்தனென் - இங்கே உம் வரவை நோக்கி இருந்தேன்; இன்று தான் என புண்ணியம் பூத்தது - இன்றுதான் என் தவத்தின் புண்ணியபலன் மலர்ந்து பயனளிப்பதாயிற்று;' என்ற - என்று இராமபிரானை நோக்கிப் புகழ்ந்து கூறிய, அரும் தவத்து அரசி தன்னை - அரிய தவத்திற் சிறந்த அந்தச் சவரியை, அன்பு உற நோக்கி - (இராமபிரானும்) அன்பு பொருந்தப் பார்த்து, 'அம்மனை - தாயே; எங்கள் வருந்துறு துயரம் தீர்த்தாய் - எங்கள் வழிநடையால் உண்டான வருத்தமுற்ற துன்பத்தை நீ உன் உபசரிப்பினால் போக்கினாய்; வாழி - நீ வாழ்வாயாக' என்றான் - என்று இராமபிரான் சவரிக்கு அன்பு மொழி கூறினான்.

புண்ணியம் பூத்தல் - புண்ணியம் அதன் பயனைத் தருதல், அம்மனை - தாய்; திருப்பாவை 10; நாலடி. 14.

இதன்பின் சில சுவடிகளிற் பின் வரும் அதிகப் பாடல் ஒன்று காணப் பெறுகின்றது. இஃது இடைச்செருகல் எனவே கொள்ள இடந்தருகின்றது. (1190 ஆம் செய்யுளின் கீழுள்ள குறிப்பைக் காண்க.)

மாங்கனி தாழை யின்காய் வாழையின் கனிக ளோடும்
ஆங்கனி யாவ தேயென் றருந்திநான் விரும்பி வைத்தேன்
பாங்கினி லமுது செய்மி னென்றவன் பரிவி னல்கும்
தேங்கனி யினிதி னுண்டு திருவுள மகிழ்ந்தான் வீரன்.

பி - ம். 1. இருந்தபி னெந்தை யீண்டெய்த வையெனப் பலகாலம்.
2. பொருந்திய வின்றே யெற்கிப்; யின்றே யேகிப்; பொருந்திய வின்றெனக்கிப்; புரிந்தநற் றவத்தின் செல்வம் பூத்ததென்று வந்து போற்றும்.
3. இருந்தவத்தரசி தன்னை யின்புற; தன்னை யமலனு; நோக்கி நங்கள்.
4. யம்மை நீ வாழி; நீ வாழ்தி; வாழி யென்றார், (5)

சவரி சுக்கிரீவன் இருந்த இடத்திற்கு வழி கூறியது.

1193. அனகனு மிளைய கோவு மன்றவ ணுறைந்த பின்றை
வினையறு நோன்பி னாளு மெய்ம்மையி னோக்கி வெய்ய
துணைபரித் தேரோன் மைந்த னிருந்தவத் துளக்கில் குன்றம்
நினைவரி தாயற் கொத்த நெறியெலா நினைந்து சொன்னாள்.

அனகனும் - குற்றமற்ற இராமபிரானும், இளைய கோவும் - தம்பியாகிய இலக்குவனும், அன்று அவண் உறைந்த பின்றை - அன்றைக்கு அவ்விடத்தில் தங்கியிருந்த பிற்பாடு, வினை அறு நோன்பினாளும் - தீவினைகளை அழித்த தவ நியமத்தில் இருந்த அந்தச் சவரியும், மெய்ம்மையின் நோக்கி - உண்மையான நோக்கமோடு இராம லக்ஷ்மணர்களைப் பார்த்து, வெய்ய - வெம்மை மிக்கவனும், துணை பரி தேரோன் - விரைவிற் செல்லும் குதிரைகள் பூட்டப் பெற்ற தேரையுடையவனுமான சூரியனின், மைந்தன் - மகனான சுக்கிரீவன், இருந்த - தங்கியிருந்த, அ துளக்கு இல் குன்றம் - அந்த ருசிய மூகமென்னும் அசைவற்ற மலையின், நினைவு அரிது ஆயற்கு ஒத்த - நினைவினால் ஆராய்ந்து கொள்வதற்கு அரிதாய் உள்ள, நெறி எலாம் - வழிகளை யெல்லாம், நினைந்து சொன்னாள் -

தன் நெடுங்கால அனுபவத்தினால் ஞாபகப்படுத்திக்கொண்டு அவ் விராம லக்ஷ்மணர்களுக்கு எடுத்துக் கூறினாள்.

துளக்கில் குன்றம்; இது மலைக்குள்ள தன்மை; 'துளக்க லாகா நிலையுந் தோற்றமும்'; (நன். 28). வழி கூறிய இச் செய்தி சவரி கூறியதாக வான்மீகத்தில் இல்லை. அதில் கவந்தனே வழி கூறியதாக உள்ளது. முன் 1185ஆம் செய்யுளில் கவந்தன் சுக்கிரீவனிடம் செல்லும் வழிகளைச் சபரியிடங் கேட்டறியுமாறு கூறியபடி, இங்கு அவன் கூற்றாகவே அமைந்துள்ளமை காண்க.

பி - ம். 1. ஞுறைந்த பின்னை; பின்னர்.

2. மென்மையினோக்கி, மேன்மையினோக்கி, விமலனை நோக்கி மேலாம்.

3. துகளில் குன்றின்.

4. நினைவரிதாயற் கொத்த, நினைவொடு மியர்தற்கொத்த; நெறியெலா மறியச் சொன்னாள். (6)

1194. வீட்டினுக் கமைவ தான
மெய்ந்நெறி வெளியிற் றாகக்
காட்டுறு மறிஞ ரென்ன
வன்னவள் கழறிற் றெல்லாம்
கேட்டன னென்ப மன்னோ
கேள்வியாற் செவிகண் முற்றும்
தோட்டவ ருணர்வி னுண்ணு
மமிழ்தத்தின் சுவையாய் நின்றான்.

கேள்வியால் - ஆன்றோரிடம் கேட்ட நல்ல அறிவுரைகளால், செவிகள் முற்றும் தோட்டவர் - தம் காதுகள் நன்றாகத் துளைக்கப் பெற்ற பெரியோர்கள், உணர்வின் - தம் உணர்ச்சியால், உண்ணும் - நுகரும், அமுதத்தின் - ஞானமாகிய அமிர்தத்தின், சுவையாய் நின்றான் - சுவையின் வடிவாய் நின்ற பரம்பொருளாகிய இராமபிரான், வீட்டினுக்கு அமைவது ஆன - மோட்ச பதவிக்குப் பொருத்தமான, மெய் நெறி வெளி இற்று ஆக - உண்மை மார்க்கம் இது என்பதாக, காட்டுறும் - வெளிப்படையாக விளங்கக் காட்டும், அறிஞர் என்ன - ஞான ஆசிரியன்போல், அன்னவள் கழறிற்று எல்லாம் - அந்தச் சவரி சொன்ன வழிகளின் விவரங்களை யெல்லாம், கேட்டனன் என்ப - கேட்டறிந்து கொண்டான் என்று ஆன்றோர் கூறுவர்; மன், ஓ: ஈற்றசைகள்.

வீட்டு மார்க்கத்திற்கு உரிய நெறியை விளக்கிக் கூறும் ஒரு பரமாசாரியனிடத்து ஓர் உண்மை மாணவன் எப்படி விருப்பத்தோடும் உண்மை யுணர்ச்சியோடும் ஒழுகி அவர் கூறுவனவற்றைக் கேட்பானோ அப்படிச் சவரி கூறிய வழிகளை யெல்லாம் நன்கு கேட்டுத் தெரிந்து கொண்டான் இராமபிரான் என்பதாம். இங்குச் சவரியை ஆசாரியனாகவும், இராமபிரானை ஒரு மாணாக்கனாகவும் அமைத்தது, முறையில் உயர்வு தாழ்வு நிலைப்படுத்திக் கூறியது அன்று; பின், தெரிந்துகொள்ள வேண்டிய வழிகளை அவன் அமைவுறக் கேட்டுத் தெரிந்துகொண்ட முறையைக் காட்டவே இந்த ஆசிரிய மாணவ நிலைகளை உதாரணப் படுத்தியது என்க. இதனை, அவ்விராமபிரான், 'கேள்வியாற்.........சுவையாய் நின்றான்' என்ற தொடரால் விளங்க வைத்த சிறப்பினால் உணரற்பாலதாம்; மேலும், இராமபிரான் பரம்பொருளே யாயினும், அவதாரக் கிரமத்தின் உள்ள மானிடப் போக்குக்கு இணங்கக் கூறியதும் ஆம். இனி, என்ப, என்றமையால் ஆசிரியர் கம்பநாடர் இராமபிரான் பரம்பொருளே என்ற கொள்கை யுடையராதலின், வழிகேட்டுத் தெரிந்து கொண்டான் என்பதை ஆன்றோர் மேலேற்றினார் என்க. கேள்வி என்பது, கேட்க வேண்டிய நூல்களின் உண்மைப் பொருள்களை ஆன்ற அறிவுடையோர் கூறக் கேட்டல் ஆம். 'கேள்வியாற் செவிகண் முற்றுந் தோட்டவர்' என்றது, செவிகள் மனத்தினிடத்து நூற் பொருள்கள் நுழைந்து அமைவதற்கு ஏற்ற வழிகள் ஆயினும், இயற்கையாய்ச் செவிகளில் அமைந்த தொளைகள் போதா ஆதலின், கேள்வியாற் தோட்ட செவிகளே ஏற்றவையாம் என்பது அறிவுறுத்தப் பெற்றது. இக் கருத்து, "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால் தோட்கப்படாத செவி" (குறள். 418); 'கேள்வியாற் றோட்ட செவியை' (மணி. 18 : 135) என்பனவற்றால் விளங்குவது காணலாம். வெளியிற்று; இற்று - இத்தன்மையது என்பதாகும்; 'இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்' (தொல். பொருள்: 19) என்றது போல. இனி இற்று என்பதைச் சாரியையாக்க் கொண்டாரும் உளர்.

பி-ம். 1. மெய்ஞ்ஞெறி, மென்னெறி.

2. காட்டுவ மறிரு வென்ன; மறிநியென்ன.

4. தோட்டவ னுணவினுண்ணு; சுவையாகின்றான். (7)

## சவரி வீடு அடைதலும் இராம லக்ஷ்மணர் அப்புறம் போதலும்

**1195. பின்னவ ளுழந்து பெற்ற யோகத்தின் பெற்றி யாலே**
**தன்னுட றுறந்து தானத் தனிமையின் வீடு சார்ந்தாள்**
**அன்னது கண்ட வீர ரதிசய மளவின் றெய்திப்**
**பொன்னடிக் கழல்க ளார்ப்பப் புகன்றமா நெறியிற் போனார்.**

பின் பிறகு, அவள் - அந்தச் சவரி, உழந்து பெற்ற யோகத்தின் பெற்றியாலே - தவநெறியில் வருந்தி அடைந்த யோகத்தின் சிறப்பினாலே, தன் உடல் துறந்து - தனது உடம்பை விட்டு நீங்கி, அ தனிமையின் - அந்த ஒப்பற்றதான, வீடு சார்ந்தாள் - மோட்ச பதவியை அடைந்தாள்; அன்னது கண்ட வீரர் - அது கண்ட வீரர்களான இராம லக்ஷ்மணர்கள், அளவு இன்று அதிசயம் எய்தி - அளவிட்டுக் கூற முடியாதபடி வியப்படைந்து, பொன் அடி கழல்கள் ஆர்ப்ப - அழகிய தம் பாதங்களில் அணிந்த வீரக்கழல்கள் ஒலிக்க, புகன்ற மா நெறியில் போனார் - சவரி அச்சொன்ன பெரிய வழிகளிலே சென்றனர்.

பெற்றி - சிறப்பு; 'மாருதி வடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி' (உயுத்த. வீடண னடைக்கலப் : *108*). தனிமையின் வீடு : மற்ற பதவிகள் போலவன்றி அழியாததும், ஒப்பு இல்லாததுமான வீடு; இனி, தனிமையின் வீடு என்பதற்கு, பிறிதொன்றோடு இணைத்துக் கூறப்பெறுவது இல்லாததான பரம்பொருளின் நிலை; அதாவது அப்பரம்பொருளோடு இரண்டறக் கலக்கும் நிலை என்றும், ஏகாந்த மான நிலை என்றும் பொருள் கொள்ளலாம். பொன்னடிக் கழல்கள் ஆர்ப்ப, என்பதை அடிப் பொற்கழல்களார்ப்ப, என இயைத்துப் பாதங்களி லணிந்த பொற்கழல்கள் ஒலிக்க எனவும் கொள்ளலாம். சபரி அக்கினியிற் பிரவேசித்து வீடடைந்தாள் என்று வான்மீகமும், அத்யாத்மமும் கூறும்.

பி - ம். 1. பின்னவ ளுழன்று.
2. தன்னுட றுறந்தாள் வானத் தனிமையி னிது சார்ந்தான்; தனிமையில் வீடு சார்ந்தாள்.
3. ரதிசய மெய்தி யான்ற; மளவிற் றெய்தி.
4. கழல்க ளார்க்கப் புகலுமா நெறியிற் போனார். (8)

**1196.** தண்ணெனுங் கானுங் குன்று நதிகளுந் தவிரப் போனார்
மண்ணிடை வைக றோறும் வரம்பிலா தாடு மாக்கள்
கண்ணிய வினைக ளென்னுங் கட்டழல் கழித லாலே
புண்ணிய முருவிற் றன்ன பம்பையாம் பொய்கை புக்கார்.

தண் எனும் கானும் குன்றும் - குளிர்ந்து விளங்கிய காடுகளும் மலைகளும், நதிகளும் - ஆறுகளும், தவிர போனார் - கடந்து அவை நீங்கச் சென்ற அவ்விராம லக்ஷ்மணர்கள், மண் இடை - பூமியில், வரம்பு இலாது - எல்லை யற்றதாகி, (அதாவது அளவிட முடியாததாக மிகுந்து), வைகல் தோறும் - நாள்தோறும், ஆடும் மாக்கள் - அதில் வந்து நீராடும் பல மானிடர்கள், கண்ணிய -கருதிச் செய்த, வினைகள் என்னும் - பாவச் செயல்கள் என்னும், கட்டழல் - தீயின் தொகுதி, கழிதலாலே - அழிந்து ஒழிவதினாலே, புண்ணியம் உருவிற்று அன்ன - புண்ணியம் என்பது ஓர் உருக் கொண்டு விளங்குவது போன்ற, பம்பை ஆம் பொய்கை புக்கார் - பம்பை என்னும் பொய்கையை அடைந்தார்.

இச் செய்யுள் தற்குறிப்பேற்ற வணியின்பாற்படும். பம்பை நீர்நிலை யாதலின், அது பாவமாகிய தீயை அவிக்கும் என்னப் பெற்றது. பாவத்திற்குத் தீ உவமை; தீ கொடுமையும், நீரிற் படுவதால் அழியும் தன்மையும் யுடைமையால் என்க. நீர் நெருப்பை அவிப்பது இயல்பு; இதனால் பம்பைப் புனல், ஆடினோர் பாவங்களை அழித்தொழிக்கும் புண்ணியமே ஓர் உருவாகியது என்பதாம். பொய்கை வடமொழியில் ஸரஸ் எனப்படும். பொய்கை - மானிடராக்காது இயற்கையா யமைந்த நீர்நிலை; தடாகம் - மானிடரால் ஆக்கப்பெறும் நீர்நிலை; 'வாவியும் பொய்கையுங் கண்டீர்' (சீவக. 337) என்பதால் இவ் விரண்டிற்குமுள்ள வேறுபாடு விளங்கும். மாக்கள் என்றது, புண்ணியத்தின் சிறப்பு உணராது, விலங்குகள் போலப் பாவங்களைச் செய்தவர் என்ற இழிவு நோக்கிக் கூறியது. பம்பை புண்ணியமானது; பாவங்களை அழிக்க வல்லது; வைகல் தோறும் பலர் அதனில் நீராடுவர் என்பன கூறப்பெற்றன. கழிதலாலே ஆடுவர் என்றும், புண்ணிய வுருவிற்று என்றும் தனித்தனியே இயைத்துப் பொருள் கொள்ளலும் ஆம்.

பி-ம். 1. தண்ணுறுங் கானுங்; குன்றுந் திசைகளுந்.
2. வரம்பிலா மாக்க ளாட.
3. கதுவலாலே, யவிதலாலே, யவித்தலாலே, கழுவலாலே.
4. புண்ணிய மருங்கிற்றென்ன; முருகிற் றென்ன. (9)

சவரி பிறப்புநீங்கு படலம் முற்றும்.

---

ஆரணியகாண்டம் முற்றும்.

---

# செய்யுண் முதற்குறிப்பகராதி


அக்கணத்தவள் 313
அக்கணத்தினி 800
அக்காலமும் 766
அக்காலை 912
அங்க 383
அங்கியி 1109
அங்கை 596
அசும்புறு 414
அஞ்சிறை 949
அஞ்சினள் 285
அஞ்சுதற் 486
அஞ்சொற் 1094
அடங்கலில் 525
அடுத்தவு 790
அண்டமு 117
அணங்கினுக் 876
அணைமலர்ச் 673
அணைவி 296
அத்தலைத் 474
அதிகனின் 296
அதிசய மளிப் 572
அதிசய மொரு 997
அதிர மாநிலத் 315
அந்தகனு 524
அந்தமுற்று 735
அந்தம்வருதலு 1001
அந்திவந் 1030
அப்பிடை 1129
அம்பு 695
அயிர்த்தன 859
அயிருறக் 660
அரக்கனஃது 755
அரண்டகு 867
அரண்டரு 1065
அரவாகி 58
அரிதினெய்தின 518
அருக்க 145
அருகுறு 662
அருணன் 201
அருத்திய 270
அருமணிச் 681
அரைகடை 856
அல்லலுற் 937
அல்லாயிர 712
அல்லித் 212
அல்லிறுத்தன 214
அலக்கணு 999
அலங்கல் 553
அலங்கார 198
அலைக்கு 294
அலைமி 445
அவ்வயினவ் 256
அவ்வயினழக 108
அவ்வழிச் சிலத 665
அவ்வழி யணையன 846
அவ்வழி யிள 1024
அவ்வழி யிணை 1152
அவ்வழி யுழைய 719
அவ்விடை 1067
அவ்வுரை கேட் 335
அவ்வுரை கேட்ட 259
அவ்வுரைகேட்டு 430
அவ்வேலையினே 931
அழிந்த 291
அழிந்தன 467
அழிந்துளா 1168
அழுங்கு 363
அழுது 41
அழுந்திய 1070
அழைத்தார் 456
அழையென் 384
அளிக்கு 298
அளியினங் 675
அற்ற கரத் 732
அற்ற தாளொடு 496
அற்றவன்பகரா 785
அற்றவனுரைத்த 616
அற்றன 479
அறங்கொள் 517
அறத்தைச் 965
அறந்தலை 1021
அறந்தவா நெறி 136
அறந்தன்னு 824
அறப்பா 1106
அறுத்தானை 918
அன்றிடர் 529
அன்றியுந்நின் 151
அன்றியு மக்க 491
அன்று மூல 69
அன்ன காலையங் 648
அன்னகாலை யழ 301
அன்ன காலையி 1061
அன்னச் செலவி 76
அன்ன சாப 67
அன்ன தாதலி 142
அன்ன தாமிருக் 1190
அன்னபல பலவு 991
அன்ன மாமுனி 5
அன்னமாய 60
அன்னவ டன்னை 634
அன்னவளுரை 263
அன்னவ னடுவுற 475
அன்னவ னமைச் 563
அன்னுளது 705
அனகமா 845
அனகனு 1194
அனைத்துல 853
அனையதோர் 226
அனைய ராகிய 502
அனையவள்கரு 780
அனையவனிறுதி 118
அனையின்றுறை 78
ஆக்கரிய 343
ஆக்கினேன் 552
ஆகக் கொங்கை 303
ஆகு மன்னதே 971
ஆங்கவள் 1090

ஆசை சுழந்த 1062
ஆகை நீளத் 803
ஆடரம்பை 65
ஆண்டகைய 153
ஆண்டங்கிளை 775
ஆண்டப்பிறை 691
ஆண்டவ ளன் 1191
ஆண்டவ னனைய 758
ஆண்டவனீ 202
ஆண்டரயிடை 878
ஆண்டா னின் 1158
ஆண்டுற்ற 897
ஆண்டையா 839
ஆண்டையா னர 854
ஆணிக்கமை 711
ஆணிப்பொனி 773
ஆதலால் 1016
ஆதலின து 115
ஆதி நான்முகன் 22
ஆதிப் பிரமனு 1176
ஆதியி லருக்க் 397
ஆம தேயினி 968
ஆமாம தடுக்கு 706
ஆய்ந்த 512
ஆய்வரும் பெரு 122
ஆய்வரும் பெரு வலி 559
ஆய்வளை 483
ஆய்வுறு 1116
ஆய காலையி 446
ஆய சூழ லறிய, 218
ஆய து செய்கை 1186
ஆயபின் 1018
ஆயவ னனைய 759
ஆயிடை யமு தின் 284
ஆயிடை யறிஞ 110
ஆயிடை யன்ன 791
ஆயிடையெழுந்த 619
ஆயிர மடற்கை 749
ஆயிர மாயிரங் 398
ஆயிர யுகமுள 113
ஆர்த்தானை 321
ஆர்த்தெழுந்த 514
ஆர்த்தெழுந்தனர் 547
ஆரண மறை 269
ஆரவ ளென்ற 621
ஆர வாழ்க்கை 508
ஆரியர் 1064
ஆரிய னனைய 784
ஆவுக்காயினு 138
ஆழி வறக்க 1074
ஆளிகள் 391
ஆளிரண்டு 495
ஆளு நாயக 1170
ஆற்றலா 996
ஆற்றவெங் 870
ஆற்று ராகிற் 668
ஆற்று னிவனென் 922
ஆறிய 1083
ஆறிஞே 399
ஆறுமன 609
ஆன்ற கர்த 307
ஆன்றமை 413
ஆன தணைத்து 726
ஆனபின் 1188
ஆனவனுரை 761
இக்கண 1010
இங்கு 551
இங்கொர் 505
இச்சையிற் 678
இச்சொ 730
இடம்படு 1037
இடிபொத்த 911
இடைந்து போய் 814
இந்தன மாக 1025
இந்திரற் 847
இந்திரன் சசியை 628
இந்திரன் நாளின 114
இந்திரன் பால 581
இந்திரன் முதலி 402
இந்திர னு 326
இந்திரனெனி 132
இங்கிலை 951
இப்படி 1091
இப்புவன 173
இம்பருற்றி 64
இம்மானி 774
இம்மைக் 903
இமையவர் 261
இயக்கரிற் 408
இரக்கமென் 129
இரந்தன 1071
இருக்கின் 670
இருந்த மாக்கர 362
இருந்த மாரீச 724
இருந்தவன் 842
இருந்தனனுப 576
இருந்தனனெங் 1193
இருப்பனே 823
இருவர் 365
இருவினை 869
இரைத்த நெடும் 554
இரைத்த மறை 160
இல்லா 957
இல்லியல் 1156
இலங்கையில் 597
இலைகொள் 24
இவ்வழி 1012
இவையிறை 1076
இழிந்தன 641
இளவலை 1138
இளிக்கறை 1066
இளையவனே 826
இற்ற 28
இற்றெ 62
இறந்தார் 708
இறுதியைத் 186
இறைவ 216
இன்றே 1101
இன்னபோ 561
இன்னன பல 105
இன்னன வின் 1130
இனியதோர் 127
இனியொரு 587
இனையராகிய 1167
இனைய வாகலின் 434
இனையனவுலகினி 683
ஈசன் 748
ஈசனுண் 848

